




ஸ்ரீ

ஸ்ரீ கிருஷ்ணய நம:

இதிகாசமாகிய

# ஸ்ரீமஹாபாரதம்

வசன காவியம்

[ஐதீக பல கலர் திருவுருவப் படங்களடங்கிய சுத்தப் பதிப்பு]

வீஷ்டும பர்வம் - துரோண பர்வம் - கர்ன பர்வம்
சல்லிய பர்வம் - சவுத்திக பர்வம்.

இவை,

ஸ்ரீ வேதவியாசர் செய்த கீர்வாண பாரதத்தைத்
தமிழில் நல்லாப் பிள்ளை அவர்கள் செய்த பாடலுக்கிணங்க
அமைத்தெழுதியது.

3-வது புத்தகம்



பிரசுரித்தவர்கள் :—

B. இரத்தின நாயகர் அண்டு ஸன்ஸ்,

திருமகள்விலாச அச்சியந்திரசாலை,

சென்னை.

1933.

4-வால்யம் செட்] [விலை ரூபா 10.





174

ஸ்ரீ கிருஷ்ணாய நம:

# மூன்றாம் புத்தகத்தின் சருக்க அட்டவணை.

## வீ ஷ் ம ப ர் வ ம்



## து ரோ ண ப ர் வ ம்

17-1



சருக்கங்களும் அவற்றினுட்பிரிவுகளும். பக்கம்.



சருக்கங்களும்அவற்றினுட்பிரிவுகளும். பக்கம்.

## கர்ன பர்வம்

சருக்கங்களும் அவற்றினுட்பிரிவுகளும். பக்கம்.



## சல்லியபர்வம்

சருக்கங்களும் அவற்றினுட்பிரிவுகளும். பக்கம்.

## சவுப்திகபர்வம்

மூன்றாம்புத்தகத்தின் சருக்க அட்டவணை

முற்றிற்று



ஸ்ரீ கிருஷ்ணாய நம:





ஸ்ரீ ருக்மிணீ ஸத்தியபாமா ஸமேத ஸ்ரீ வேணுகோபால பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீ மஹாபாரதம்

ஆறாவது,

## வீஷ்மபர்வம்

### கண்ணன் துதி

மற்கொண்டு வகுத்தனைய சிகரத்திண்டோள் வாளரக்கன் குலத்தோடு மடியமுன்னம்
விற்கொண்டு சரந்தொடுத்துப் புரையில்கேள்வி விண்ணவர்தந் துயர்தீர்த்த வீரராமன்
கற்கொண்ட வகலிகைதன் னுருவமீளக் கவின்கொளக் கொடுத்ததிருக் கமலபாதஞ்
சொற்கொண்டு துதித்தெழுந்து துள்ளிநாளுந் தொழுமவரே யெழுபிறவித் துவக்கற்றாரே.

### சூதபுராணிகர் வாக்கியம்

ஓ சவுனகாதி முனிவர்களே! இவ்வாறு ஆதிபஞ்சகத்தில் ஐந்தாம் பாகமாகிய உத்தியோக பர்வதத்தைக் கூறிய வைசம்பாயன முனிவரை ஜெனமேஜெயமகாராஜன் பணிந்தெழுந்து, சுவாமி! பாண்டவர்கள் ஜெகப்பிரசித்தமாய் உபலாவியத்தி லிருந்து, தமது பாகத்திற்காகக் கௌரவரிடத்திற்கு உலூகரைத் தூதனுப்பி, கிருஷ்ணதேவரை படைத்துணைக்கழைக்க அர்ச்சுனன் செல்ல, அக்கால் துரியோதனனும் வந்தழைக்கத் தவறி, வழியிற் பாண்டவர்களைக் கருதிச்சென்ற சல்லியனை மறைவிலிருந்து விருந்திட்டுக் கண்டு தனக்குப் படைத்துணையாக ஸ்திரப்படுத்திக் கொண்டு, சஞ்சயனோடு மீண்டுங் காடுசென்று தவம் செய்வதே நன்மை என்று சொல்லி மறுதூதனுப்ப; பின்பு ஐவர் வேண்டுகோளின்படி சந்திபேசச் சென்ற ஸ்ரீ கிருஷ்ணதேவர், விதுரன் செய்த விருந்துண்டுபோய்த் துரியோதனாதியரோடு கலந்துபேசி கையேந்தி இரக்க, அதற்குத் துரியன் ஒவ்வாது பகவானையும் அவரைத் தரிசிக்கவந்து பற்பல நீதிகளை ஓதித் தெருட்டியமுனிவர் மூவரையுந் தூறிவிடுத்து, விருந்து செய்வித்த விதுரனை வில்லொடிக்கப் பேசி, ஓர் படுகுழி சமைத்து மீண்டுங் கிருஷ்ணதேவரை யழைப்பிக்க, அக்கால் குந்திதேவியைக் கண்டு கர்னன் வரலாற்றைக்கூற, விதுரன் வீட்டில் வந்திருந்த கண்ணன், உடனேபோய் அப்படுகுழியி னின்று விஸ்வரூபங்கொண்டு யாவரும் ஓலமிட்டுத் துதி செய்யும்படியாக விக்ரமித்து, மீண்டுத் தம் சுயரூபத்தோடுந் திரும்பித் தம்மை வழிவிடவந்த விதுரன் மனக்குறையை மாற்றி, அஸ்வத்தாமனுக்குச் சேனாதிபதி பட்டம் ஆகாதபடி அவனோடு சம்பாஷித்து உபலாவி

யஞ் சேர்ந்த பின்பு, இருவரும் படைத் துணைக்கூட்ட சகாதேவனால் நாள் வைத்துக் கொண்டு, இராவானைக் களபலிக் குடம்படுத் திய துரியோதனன் கருத்துமாற அமாவாசியைப் புரட்டிய கண்ணன், குருக்ஷேத்திரத் தில் வீரமாகாளி பூசையை விதிப்படி நிறை வேற்றிச் சுவேதனூற் சேனைகளை அணி வகுத்து நிற்க, அப்போது கர்னனுக்குத் தன்னை அர்த்தரதரிற் சேர்த்த வீஷ்மர்மேல் உண்டான த்வேஷத்தை ஒருவாறு மாற்றிய துரியோதனனுதியரும் அப்பூஜை யனைத்து முடித்து,வீஷ்மராற் சேனைகளை அணிவகுத்து நிற்க: துரியோதனன் பாண்டவர்கள் பாசறைக்கு உலூகியைத் தூது விடுத்து உயுத்த வாரம்பங்கேட் டனுப்பியதும், ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தி அதற்கு அவனிடத்திற்றனே நாளை உதயத்திற்கே உயுத்த வாரம்பம் என்று விடை கூறிவிட்டதும், இதுகாறுங் கேட்டு அளவிடற்கரிய ஆனந்தமடைந்தேன். இப்பால் உயுத்த பஞ்சகத்தின் முதற்பாகமாகிய வீஷ்ம பர்வத்தையும் கிருபைசெய்து திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்று கேட்க, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினூர்.

---

# முதற்போர்ச் சருக்கம்

---

துதி

அஞ்சன மேம மளித்திடு மாபோற்
பஞ்சவர் தேறல் பகிர்ந்திட வோதி
அஞ்சன மேனியு மைம்படை யுங்கொண்
டஞ்சன நடைபுரி யரியடி பணிவாம்.

ஓ மதிகுல நிதியாகிய அதிபதியே! கேளும்: குருக்ஷேத்திர பூமியிலே கௌரவர் படைகளும் பாண்டவர் படைகளுமாகிய பதினெட் டக்குரோணி சேனைகளும், சர்வாயுத பாணியராய்ச் சகல சித்திகளோடு நிறைந்து சூரியோதயத்திற் கெதிர்பார்த்துக் கொண்டு இருக்க, அதைக்கண்ட சூரியபகவான் இருதிறப் படைவீரர்கள் பேசிக்கொள்ளும் பிரபலங்களைக்கேட்டு, நாம் உதயமாகவில்லை என எல்லோரும் நம்பேரில் தோஷஞ் சொல்லுகிறூர்கள்; ஆதலால், நாமும் விரைவிற்போய் அவர்களைச் சந்துஷ்டிபெறச் செய்வோம் என்று எழுந்து வருவான் போலக் கடலின் உச்சியில் உதயமாயினுன். கலைக்ஞான முதலிய சாஸ்திரங்களைக் கற்று அதன் நுண்மை பொருளைப் பெற்று எல்லோரு மகிழ்கும் நல்லோராகிய வல்லவர்களும், அகப்பற்று புறப்பற்றுகளை அற்றவர்களாகிய சித்த சுத்தியையுடைய நற்றவர்களும், நித்தியவிதி முறைகளைத் தப்பாமற் செபம்செய்து தொழும்படியாகிய அச்சூரிய பகவான் கிழக்குத் திசையில் உதிப்பதற்கு முன்னமே இருதிறவர்களுடைய சேனு நாயகர்களும், அரசர்கள் முதலாகிய பேரும் காலைக்கடனை முடித்துக்கொண்டு ஆயுதங்களை கைக்கொண்டு ஆரபாரித்து நின்றூர்கள். அவர்கள் அப்படியிருக்க, அஸ்தினுபுரத்துக் கதிபதியாகிய திரிதராஷ்டிர மகாராஜன், தன் புத்ர மித்ர பௌத்திராதிய ரெல்லாரும் போர்புரியச் செலவு பெற்றுக்கொண்டு போனவுடனே, அடங்காத துக்கத்துடனே மடங்கிச் சுருண்டு முடங்கி, பூரித்ததோள்கள் வாட, கண்ணீர் ஆறுகவோட, ஐயையோ!தெய்வமே! என்பிள்ளைகள் போர்செய்யப் போனூர்களே? என்ன விளையுமோ? ஏதாய்முடியுமோ? இன்பச்சொல் கேட்பேனே? துன்பச்சொல் கேட்பேனே? என்றெண்ணங்கொண்டு வருந்தித் தன் பிதாவாகிய ஸ்ரீ வேதவியாச முனிவரைச் சிந்தையுள் நினைத்து வந்தனை செய்தான்.

### வேதவியாசர் திரிதராஷ்டிரனைக் கண்டு சில தேறுதல் சொல்லுதல்

அந்த வேளையில், திரிதராஷ்டிர மகாராஜனுக் கெதிரில் ஸ்ரீ வேதவியாசர் வந்து நின்றூர். அவரைக்கண்ட சஞ்சயனும் உயிச்சனும் திரிதராஷ்டிர மகாராஜனுக்கு சாடையினுற் றெரிவித்தார்கள். உடனே மகாராசன் அறிந்து தொண்டு பூமியில் விழுந்து புரண்டெழுந்து அவரடியிற் றூழ்ந்து, அர்க்ய பாத்திய ஆசமன்ய சந்தனுக்ஷதை தாம்பூல முதலாகிய உபசாரங்க ளெல்லாம் நடத்தி, முத்துக்களிழை லமைத்திருக்கும் ஆசனத்தில் எழுந்தருளச் செய்து, தாரை தாரையாய்க் கண்ணீர் சோரவிட்டுத் தேம்பித் துக்கத்தினுல் விக்கிக்கொண்டு வாயிற் கழறு மொழி குழறும்படியாய் ஸ்ரீ வேதவியாசரை நோக்கி, ஓ அருந்தவர்களுக் கரசனுகிய ஐயனே! என் பிள்ளையாகிய துரியோதனுதியர் யுத்தஞ் செய்யும்படியாய் என்னிடத்தில் விடை பெற்றுக் கொண்டு குருக்ஷேத்திரத்திற்குப் போய் விட்டார்கள். அவர்களை விட்டு இவ்விடத்தில் நான் தனியாய் இருக்கலாமென்றூலோ; பெற்ற மனம் பித்தென்னு முறைமையாலும் புத்திர வாஞ்சையினுலும் பிரிந்திருக்கப் பிடி

படவில்லை. நல்லது என் பிள்ளைகள் போய் இருக்கும் குருக்ஷேத்திரத்திற்கே போகலாம் என்றாலோ; இரண்டு கட்புலனும் அற்றவனாகையால், அவ்விடத்திற் போய் நாம் செய்யலாவதென்ன வென்று என் மனம் இளைக்குதே யொழிய துணிவு பெறவில்லை. ஐயனே! என் கதி இப்படியிருக்கின்றதெனத் திரிதராஷ்டிரன் சொல்லவும், அந்த வார்த்தையைக் கேட்ட வேதவியாசர் சொல்லுகின்றார். அப்பா திரிதராஷ்டிர பூபதியே! சர்வலோக சரண்யனாகிய சர்வேஸ்வரனுடைய செயல்களை ஒருவராலும் விலக்கக்கூடாது. ஆதலால், ஊழ்வினையாற் பரிக்கப்பட்ட மனத்தினையுடைய உன் பிள்ளைகள் செய்யப்போகிற யுத்தத்தைக் கண்டு களிக்கும்படியாய் உனக்கு இரண்டு கண்ணுந் தெரியச் செய்தேன். ஓ புஜக்கிருதி முதலிய பொன்னாகரங்களாற் சிறந்த புஜத்தையுடைய அரசனே! இருதிறப் பிள்ளைகளும் போராடும் விதத்தைப் போய்ப் பாருமென்று வேதவியாசர் அனுக்கிரகஞ் செய்தார்.

உடனே இரண்டு கண்களும் பிரகாசிக்க திசாதிசைகளுங் கடந்த கீர்த்தியையுடைய திரிதராஷ்டிர மகாராஜனானவன், மாடமாளிகை கூடகோபுர முதலிய அரண்மனைகளையும், அஸ்தினபுரத்தின் அலங்காரங்களையும், சாலைகளையும், சோலைகளையும், மலைகளையும், பலபல உயிர்களின் பேதங்களாகிய தலைகளையும், மண்டலத்தையும், விண்டலத்தையும், தாரகாகணங்கள் முதலிய எல்லாவற்றையுங் கண்டு, இரண்டு கண்களையும் மூடிக்கொண்டு தந்தையாகிய வியாசருடைய திருவடியிற் றிருமுடி நாட்டி நின்று, ஓ நாதனே! நான் பிறந்த நாள்முதல் இதுவரையில் யாதோர் களங்கமுமில்லாமற் பரிசுத்த இருதயத்துடன் பெருமை பெற்று என் காலமெல்லாம் கழித்துவிட்டேன். இப்போது இறந்து போகும்படியா யிருக்கிற கொஞ்சகாலத்தில் கண்களைப்பெற்று நான் என்னபயனை பெறுவேன்? என் பிள்ளைகள் செய்யும் யுத்தத்தைக் கண்டு சகியேன்? இந்த உலகத்தையும் பார்க்கேன்? உலகிலுள்ள உயிர் வருக்கத்தையும் நோக்கேன்? மரம் மலை முதலிய மற்றெவையும் பாரேன்? எதைப் பார்த்த போதிலும் எனக்குப் பயங்கரமாய் இருக்கிறது? இன்னுஞ் சற்றுநேரம் என் கண்களிருக்குமாகில் நான் இறந்துபோவேன்? உடலும் குடலும், படபடவென்று நடுங்குகின்றது. ஆகையால், ஓ தருமந்தப்பாத தவத்தினையுடைய தந்தையே! பழைய குருடாக்கச் செய்வதே என் பாக்கியமென்று திரிதராஷ்டிரன் வணங்கி வருத்தமுற்று வாழ்த்திக் கேட்டான்.

உடனே பெருமை தங்கிய முனிவரானவர் பழையபடி குருடாக்கச்செய்து, புத்திரனைப் பார்த்து, அப்பா குழந்தாய்! இப்போது நடக்கப்போகிற யுத்தத்தின் முயற்சிகளையெல்லாம் பூரணமாகத் தெரிந்துகொண்டு உனக்குச் சொல்லும்படியாகக் குற்றமற்ற இச் சஞ்சயனுக்கு ஞானக்கண் கொடுக்கிறேன். நாள்தோறும் நடக்கும் யுத்த முதலிய காரியங்களை அறிந்து இந்தச் சஞ்சயன் சொல்லத் தெரிந்துகொள்ளக்கடவை. மேலும், இந்தச் சஞ்சயன் சொல்லிக்கொண்டு வரும்போது, அங்கே தோற்றவர்களைப்போ விருப்பவர்கள் வென்றவராகவும், வென்றவர்களைப்போ விருப்பவர்கள் தோற்றவராகவும் நடத்தி வைக்கும் வினையின் பயனைச் சொல்லிக்கொண்டு வருவான். அந்த வார்த்தைக் கேட்டு நீ மெத்த விசனப்படாதே. அப்பால் கடைசி நாளையில் பார்க்கும்போது, எது நின்றதோ அதை இன்னதென்று சொல்லத் தெரிந்துகொள்ளலாம். அதுவரையிலுந் துன்புறாதே இன்புறாதே தைரியமாயிரு. உன் பிள்ளைகளை நம்பாதே. வெற்றியையும் ஆண்மிக்கையையும் பெறுவோர்கள் நீதிமுறைமை தப்பாமற் சத்தியமாக நடப்பவர்களேவர்களோ, அவர்களே இதனை நன்றாய் அறிந்து கொள்ளக்கடவை. என்று சில உறுதி வார்த்தைகளைச் சொல்லி ஆதரணை செய்து, சஞ்சயனை யழைத்து, அப்பா சஞ்சயனே! நீ பலமுகத்திலும் யுத்தஞ் செய்யும்படியாகிய போர்முகத்திற் சென்று, அவரவர்களுடைய மனக்கருத்தறிந்துவந்து சொல்லும்படியாகவும், சண்டை செய்யுமிடத்திற் செல்லும்போது இருதிறவர்களுடைய ஆயுதங்களொன்றுந் தேகத்திற் படாதிருக்கும்படியாகவும், உனக்கு வரங் கொடுத்தேனென்று சொல்லிச் செலவு பெற்றுக்கொண்டு, தமது தவச்சூழலுக் கெழுந்தருளினார் வியாசமகா முனிவர்.

## சஞ்சயன் திரிதராஷ்டிரனுக்கு அண்ட கோசவடுக் குரைத்தல்

இந்தப்பிரகார மநுக்கிரகஞ்செய்து வேதவியாசர் போனபிற்பாடு, திரிதராஷ்டிர பூபதி

யானவன் சராசரங்களுந் துதிக்கும்படியாகிய
தர்மகுண சீலனென்னும் சஞ்சயனைப்பார்த்து,
ஓ மதயானையின் வலிமையும், மதியூகரின்
திறமையும் பெற்ற சஞ்சயனே! ராட்சதர்க
ளும் தேவர்களும் யுத்தஞ் செய்ததைப்போல்,
என் பிள்ளைகளும் பாண்டவர்களும் போர்
புரியச் சென்ற குருக்ஷேத்திர மென்னும்
இடம் எவ்விடத்தி லிருக்கின்றதென்று கண்
ணில்லாதவன் கேட்க, சஞ்சயன் சொல்லு
கின்றான். ஓ அஸ்தினாபுரத்துக் கதிபனாகிய
திரிதராஷ்டிர பூபதியே! சகல பாவங்களையும்
போக்கி, நன்மைகளையும் புண்ணியங்களையும்
கொடுக்கும்படியாகிய புனித தீர்த்தங்கள்
நிறைந்த இந்த நாவலந்தீவிற், பூப்பிரதக்ஷி
ணஞ் செய்கின்றவர்கள் போற்றி வணங்கித்
தானங்கொடுத்து ஸ்நானஞ் செய்யாநின்ற
சிறந்த பஞ்சகமென்னு மகா மகத்துவமு
டைய பொய்கை நிறைந்த குருக்ஷேத்திரத்
தில், நமது இருதிறப் புதல்வர்களும் ஆசை
கொண்டு போர்புரியச் சென்றார்களாவென,
சஞ்சயன் சொல்லத் திரிதராஷ்டிரன் கேட்
கின்றான். ஐயா சஞ்சயனே! நாவலந் தீவா
கியது எது? அதற்கு நாவலந் தீவென்னும்
பேரெப்படி வந்தது? இந்திரன், குபேரன்
முதலிய தேவர்கள் வாழாநின்ற அமராவதி,
அளகாபுரி முதலிய பட்டணங்கள் யெங்கிருக்
கின்றது? இந்தச் சமுத்திரஞ் சூழ்ந்த
விசாலமாகிய உலகம் கீழேழு மேலேழதாய்
விளங்கும் விதமும், பிரமனால் விதிக்கப்பட்ட
அண்ட முதலிய வெல்லாவற்றையும் நான்
தெரிந்து கொள்ளும்படியாகச் சொல்லக்கட
வையென்று கேட்க, பொய்யிலா மனத்தோ
னாகிய புண்ணியன் யோசித்துத் தனக்குள்
புன்னகை கொண்டு, அனந்த கல்யாண குண
னுடைய திருநாபிக் கமலத்தி லிருந்து வந்த
பிரம்மாவானவர், ஆதியிற் படைத்த ஆயிரத்
தெட்டண்டத்தில், இந்த ஒரு பிரம்மாண்
டத்திற் குட்பட்ட யாவையும் பெரியோர்கள்
பேசியிருக்குஞ் சாஸ்திரப் பிரகாரஞ் சொல்
லுகிறேன் கேளுமென்று திரிதராஷ்டிரனை
நோக்கிச் சொல்லத் தொடங்கினான்.

இராஜாதிராஜனாகிய திரிதராஷ்டிர மகா
ராஜனே! அண்ட மென்பது முட்டையைப்
போல் விளங்கிச் சுவர்க்க மத்திய பாதாள
மென்னு மூன்று பிரிவாகி யிருக்கின்றது.
இந்த மூன்று பிரிவில் அளவிடப்படாத
ஏழுலகம் ஒரு கூறாய் நிற்கும். அவ்வுலகம்
யாதெனின், பூலோகம் - புவலோகம்-சுவலோ
கம்-சனலோகம்-தபோலோகம் - மகாலோகம்-
சத்தியலோகம்-என்னும் ஏழுலகம் பொருந்
தியிருக்கின்றது. இவைகளில் இப்போது
நாமிருக்கும் இந்த அண்டத்தின் மதிற்
சுவர் வரைக்கும் இப்பூலோகத்தின் விருத்தி
அளவு. இதற்குள் எல்லாம் வல்ல கடவுளு
டைய வலது கண்ணாகிய சூரியபகவானுதய
மாகு முக்ய கிரியும், சமுத்திரங்களும், சக்கிர
வாளகிரியும் பொருந்தி யிருக்கின்றன. அப்
பால் நிறைந்த பெரும்புறக் கடலளவும்
இருட்பூமி யென்று அறிந்து கொள்ளும்.
அரசனே! இப்போது சொல்லி வந்த சக்கிர
வாளகிரிக்குட்பட்ட இந்தப் பூமியைத் தேவ
பூமியென்றுஞ் சுவர்ணபூமி யென்றுஞ்சொல்
லுவார்கள். இந்தப் பூமியை சப்தத்தீவம்
என்று பிரித்திருக்கின்ற தன்மையின் படிக்கு,
புட்கரதீவமுதற் சொல்லுகிறேன் கேளும்.
புட்கரத் தீவமென்னும் அந்தப்பூமி பத்து
கோடி யோசனை விஸ்தீரணமா யிருக்கின்றது.
அந்தத் தீவில் தாமரைப் புட்பங்களே மிகு
ந்து மலர்ந்து சிறந்து வளர்ந்திருக்கின்றன.
பலம் பொருந்திய குமுதவரை யென்னும் ஒரு
மலை சூழ்ந்திருக்கின்றது. அந்தமலைக் குட்
புறத்தில் அறுபத்து நான்குலக்ஷம் யோசனை
யகலமும் ஆழமுமுடைய நன்னீர்க்கடல்
வளைந்திருக்கின்றது. சர்வதோபத்திர மிகுந்
திருப்பதால் அதற்குப் புட்கரத்தீவமென்று
பெயர் சொல்லப்பட்டது.

அதற்கிப்பால் அறுபத்து நான்குலட்சம்
யோசனை அகல நிகளமுடைய சாகத்தீவென்ப
தொன்றுண்டு. அந்த தீவை மந்திரகிரியென்
னும் ஒரு மலை சூழ்ந்துக்கொண்டு இருக்கின்
றது. அந்த மலைக்கு உட்புறத்தில் முப்பத்
திரண்டு லக்ஷம் ஆழமும் அகலமுமுடைய
பாற்சமுத்திரம் வளைந்துக்கொண் டிருக்கின்
றது. கீரைத்தண்டுகள் மிகுந்து வளர்ந்திருப்
பதினால், அதற்கு சாகத்தீவென்று பேராயிருக்
கின்றது. அதற்கு இப்பால் முப்பத்திரண்டு
லக்ஷம் யோசனை விசாலம்பொருந்திய கிரவுஞ்
சத் தீவமென்ப தொன்றுண்டு. அந்தத் தீவத்
தைக் கிரவுஞ்சகிரி யென்னும் ஒரு மலை சூழ்ந்
துக்கொண் டிருக்கின்றது. அந்த மலைக்குட்
புறத்தில் பதினாறுலக்ஷம் யோசனை அகலமும்
ஆழமுமுடைய தயிர்க்கடல் வளைந்துக்கொண்
டிருக்கின்றது. அவ்விடத்தில் அன்றில்முதலிய
பட்சிகள் மிகுந்து யிருப்பதினால், அதற்குக்

கிரவுஞ்சத் தீவென்று பேர் சொல்லப்பட்டது. அதற்கப்பால் பதினறுலக்ஷ யோசனை அகலமும் நிகளமுமுடைய கோமேதகத் தீவமென்ப தொன்றுண்டு. அந்தத் தீவத்தை நீணகம் என்னும் ஒருமலை சூழ்ந்திருக்கின்றது. அம்மலைக்குட்புறத்தில் எட்டுலக்ஷ யோசனை அகலமும் ஆழமுமுடைய நெய்க்கடல் வளைந்து கொண்டிருக்கின்றது. அவ்விடத்தில் கோமேதக மலைகளே மிகுந்திருப்பதினுற் கோமேதகத் தீவென்று கூறப்பட்டது. அதற்கு இப்பால் எட்டுலக்ஷ யோசனை அகலமு நிகளமுமுடைய சான்மலித் தீவமென்பதொன்றுண்டு. அந்தத் தீவத்தை மேரு மந்தரவரை யென்னும் ஒரு மலை சூழ்ந்திருக்கின்றது. அந்த மலைக்குட்புறத்தில் நாலுலக்ஷ யோசனை அகலமும் ஆழமுமுடைய மதுக்கடல் வளைந்திருக்கின்றது. அவ்விடத்தில் இலவமர மிகுந்திருப்பதினுல் சான்மலித் தீவென கூறப்பட்டது. அதற்கப்பால் இரண்டுலக்ஷ யோசனை விசாலமுடைய குசைத்தீவமென்ப தொன்றுண்டு. அந்தத் தீவத்தைப் பாரிசகிரி யென்னுமோர் மலை வளைத்துக்கொண் டிருக்கின்றது. அந்த மலைக்குட்புறத்தில் இரண்டுலக்ஷ யோசனை விசாலமும் ஆழமுமுடைய இக்கு சமுத்திரஞ் சூழ்ந்திருக்கின்றது. அவ்விடத்தில் தருப்பை புற்கள் மிகுந்திருப்பதினுல் குசைத்தீவென்று கூறப்பட்டது.

இப்பால் நாமிருக்கும் இந்தத் தீவும் லட்சயோசனை விசால முடையது. இந்தத் தீவத்தில் அயவரை என்னும் ஒரு மலை சூழ்ந்திருக்கின்றது. அந்தமலைக் குட்புறத்தில் ஜம்பு விருட்சமொன் றிருக்கிறது. லக்ஷயோசனை அகலமும் ஆழமுமுடைய உவர்க்கடல் வளைந்துக்கொண் டிருக்கின்றது. ஜம்புவிருட்சமென்னும் நாவல் விருட்சமொன்று இருப்பதினுல் இந்தத் தீவத்திற்கு ஜம்புத்தீவென்றும், நாவலந் தீவென்றுஞ் சொல்லுவார்கள். தெங்குங் கமுகு நிறைந்த இந்த நாவலந் தீவினுடைய மத்தியில் மகமேருவென்னும் ஓர் பொன் மலை இருக்கின்றது. ஓ புதனுக்கொப்பாகிய புத்தியையுடைய புண்ணியனே! மகமேருவென்று சொல்லும்படியானது இந்த ஜம்புத் தீவத்திற்கு மத்தியிற் பிரம்மபீடமா யிருப்பதினுல், அந்த மகமேருவினுடைய நான்கு திக்கும் இப்போது நான் சொல்லிவந்த ஏழுதீவமும், ஏழுமலையும், ஏழுபொருளும், ஏழுகடலும் இன்னுமுண்டான அளவற்ற வஸ்துகளோடு யாவராலுங் கொண்டாடப்பட்ட பலவித அதிசயங்களும் பொருந்தி யிருக்கும். அப்படி யிருந்தபோதிலும் ஜம்புநாவற் கனியின் றேறலினுல், அயப்பொடிகள் பொற்சன்னங்களாய் நதியின் கரைதோறும் வரம்பாக நிரம்பி யிருக்கும் வளங்களினுல், மற்றத் தீவுகளைப் பார்க்கிலும் இந்த ஜம்புத் தீவத்தை மிகவும் மேன்மையென்று நூல்கள் தோறும் பெரியோர்கள் பேசுகின்றார். மேலும், மகமேருவுக்கும் கவிந்திருக்கும் அண்டச் சுவருக்கும் மத்தியிலிரா நின்ற பூமியின் விசாலம் கிழக்கே ஐம்பதுகோடி யோசனையும், மேற்கு ஐம்பதுகோடி யோசனையும், வடக்கு ஐம்பது கோடி யோசனையும், தெற்கு ஐம்பதுகோடி யோசனையும், பூமியின்கீழாக நாற்பதுகோடி யோசனை தூரம் உருவியும், ஆகாயத்தின் மீதாக ஐம்பதுகோடி யோசனை தூர முயர்ந்தும் உடையதென்று பெரியோர் சொல்லுவார்கள். இதையுமுமது சிறந்த விவேகத்தால் தக்கபடியோசித்து அறிந்துக்கொள்ள கடவீர்.

இஃதன்றியும் மேற்சொல்லிய மகமேருவுக்கு வடமேற்கிலும், வடக்கிலும், வடகிழக்கிலும், நீலகிரி, சுவேதகிரி, ஸ்ருங்ககிரி, யென்று மூன்றுமலைகள் நிற்கின்றன. கீழ்த்திசையில் மாலியவான்கிரி யென்றொரு மலை நிற்கின்றது. மேற்றிசையிற் கந்தமாதனம் என்றொரு மலை யிருக்கின்றது. தென்றிசையிலும், தென்மேற்கிலும், தென்கிழக்கிலும் நிடதகிரி, ஏமகூடம், இமயவரை யென்று மூன்று மலையுள்ளது. இந்த எட்டு மலைகளைத்தான் அஷ்டகுலகிரி யென்று யாவரும் சாஸ்திரோக்தமாய் சொல்லுவது. இதல்லாமல் முன்சொல்லிய பொன் மலையாகிய மகமேருவுக்குக் கீழ்த்திசையில் நிலைபெற்ற மந்திரகிரியும், பருத்துத்தழைத்த கிளைகளையுடைய மாமரங்கணிறைந்த ஆம்பிரவனமும், பலவித புஷ்பச் செடிகளால் நெருங்கிய நந்தவனமும், க்ஷீரப்திக் கொப்பாகிய பாற்சுனையும், தேவர்கள் முனிவர்கள் முதலிய சகலருங்களிக்கப் பொருந்தியிருக்கின்றன. மேருவுக்குத் தென்றிசையில் மேருமந்தரமென்னும் மலையும், இந்த ஜம்புத் தீவமென்னும் பெயரைத்தந்த ஜம்பு விருட்சமும், சயித்திரதவனமும், பெருமைதங்கிய மதுச் சுனையும் அழகுபெற விளங்கிக்கொண் டிருக்கின்றது. மகமேருவுக்கு மேற்றிசையிற் பாரிசகிரி என்னும் மலையும், மலர்ந்து சிறந்த கடம்பு விருட்சமும், தலத்திற் கலங்காரமாகிய

பிரசப்பெயர் வனமும், கருப்பஞ்சாற்றுச் சுனையும், பரிசுத்தம்பொருந்தி மாதுரியத்துடனிருக்கின்றது. மேருவுக்கு வடதிசையிற் குமுதகிரி யென்னும் மலையும், வானமளாவு முயர்ந்த வடவிருட்ச மென்னும் ஆலமரமும், சர்வதோபத்திர மென்னும் பூந்தோட்டமும், நன்னீர்ச்சுனையும், எல்லாத் திசைகளினும் மிகவும் மேம்பாடாக யிலங்கிக்கொண் டிருக்கின்றது.

மேலும் அந்த மகமேருவானது, பதினாயிரம் யோசனை தூரம் நடுமத்திமி லோங்கி, முப்பத்திரண்டு யோசனை தூரம் வானத்தில் உயர்ந்து, எண்பதினாயிரம் யோசனை விசாலம் சுற்றிலும் பருத்துச், சந்திர சூரியர் முதலிய கோள்களுக்கு நடுநிலையாய் இவ்வுலகுக்கு அஞ்சூ ராணிபோற் பிரகாசித்துக் கொண்டு, அநேகங் கோடி சிகரங்கள் பொருந்தி மூன்று குவடாகப் பிரிந்து, அயனார் பீடம், அரியின் பீடம், ஐம்முகவராகிய அரனார் பீடமாக அமைந்திருப்பதென்று அத்தியான்மிகத்திற் சொல்லியிருக்கின்றது. மேலும் அந்த மகமேருவின் எட்டுத் திக்கிலும் இந்திரன்-அக்கினி-இயமன்-நிருதி-வருணன்-வாயு-குபேரன்-ஈசானன் என்னும் இவர்களோடு, அமரர்-சித்தர்-அசுரர்-தயித்தியர் கருடர்-கின்னரர்-நிருதர்-கிம்புருடர்-காந்திருவர் முதலிய பேர்களும், தங்களுக்கு நிவாசஸ்தலமாய்க் கேளீர் கூட்டம்போல் வீற்றிருப்பார்கள். மேலும், முன்சொல்லிய மகமேருவுக்குக் கீழ்த் திசையில் நிலைபெற்றிருக்கும் மந்திரகிரி யென்னும் மலையின்மீது பனைத்துத் தழைத்துத் தளிர்த்து விளங்கிய ஓர் மாமரமானது, ஆயிரம் யோசனைப் பரப்பும் உயரமு முடைத்தாய் இருக்கின்றது. அந்த மாம்பழத்தினின்றும் இழிந்துவரும் ரசங்களைப் புசித்த பேர்களுக்கு இடகலை, பிங்கலை யென்னும் சுவாசமானது பத்து யோசனை தூரம் பரிமளித்துக் கொண் டிருக்கும். மேற்சொல்லிய மாம்பழச் சாறுனது வழிந்து போய்ச் சேர்ந்து நிறைந்து நின்றதைச் சோதக நதியென்றுஞ் சொல்லுவார்கள். இதல்லாமலும் இடைகலை, பிங்கலை யென்னுஞ் சுவாசம் பரிமளித்திருப்பதி லென்ன பிரயோசன மென்றால், சுவாசம் பாழாகிப் போகாமல் நீடித்துப் பாய்வதினால் அவர்களுக்குத் தீர்க்காயு ளென்றும், அவர்களே நித்தியத்துவம் பெற்றவர்க ளென்றும் பெரியோர்கள் சொல்லுவார்கள்.

இதன்றியும், முதலாவது கிழக்குச் சமுத்திர முதல் மேற்குச் சமுத்திரம் வரைக்கும் மத்தியிலுள்ள பூமியானது குரு வருடம். இரண்டாவது குற்றமற்ற ஸ்ருங்க மலைக்குத் தெற்கு, சுவேதமலைக்கு வடக்கு, கீழ்க்கடல் மேற்கடலுக்கு நடுவிலிராநின்ற பூமி இரண்ய வருடம். மூன்றாவது சுவேத கிரிக்கும், நீல கிரிக்கும், கீழ்க்கடலுக்கும், மேற்கடலுக்கும் இடையிலிருக்கும் பூமி ரமிய வருடம். நான்காவது நீலகிரிக்குத் தெற்கு, மேருவரைக்கும் வடக்குமேற்கடல், கீழ்க்கடலின் மத்தியிலிருக்கும் பூமி இளாவிரத வருடம். ஐந்தாவது மேருவரைக்கும் தெற்கு, மாலியவான் பர்வதத்திற்கு வடக்கு, கீழ்க்கடல் வரைக்கும் பத்திர வருடம். ஆறாவது கந்தமாதனத்திற்கு மேற்கு, மேற்குச் சமுத்திரத்திற்குக் கிழக்கு கேதுமால் வருடம். ஏழாவது நிடதகிரிக்குத் தெற்கு, ஏமமலைக்கு வடக்கு, மேற்கடல் கீழ்க் கடல் தரைக்கு மிருக்கும் பூமி அரிவருடம். எட்டாவது ஏமமலைக்குத் தெற்கு, இமய மலைக்கு வடக்கு, கீழ்க்கடல் மேற்கட லளவுந் தேவபூமியாகிய கிம்புருவ வருடம். ஒன்பதாவது இமயமலைக்குத் தெற்கு, தென்கடலுக்கு வடக்கு, மேற்கடல் கீழ்க்கடலுக்கு நடுவாக நாமிருக்கு மிந்தப் பூமியைத்தான் பாரத வருடமென்று சொல்லுவது. ஐயா அரசனே! முன்னொருபோது நெருப்புப் பொரி பறக்கும் வேலாயுதத்தைத் தாங்கிய தீரகராகிய அங்கிதீர வரசன் பெற்ற ஒன்பது பிள்ளைகள் பேரால் அரசு செலுத்திவந்த இந்த ஒன்பது வருடத்தையும் நவகண்டம் என்று சொல்லுவார்கள். இந்த நவகண்டத்தின் அகல விசால வளவையுஞ் சொல்லுகிறேன் கேளும். ஓ அரசர்க்கணியாவரசே! நெருங்கியிராநின்ற மாலியவான் மலைக்கும் கந்தமாதன கிரிக்கும் மத்தியில், தனுக்கோடி முதல் வடகோடி வரையிலும் இந்தப் பாரதவருட முதலாயுள்ள மூன்று வருடமும் முப்பத்து நாலாயிரம் யோசனை தூரம் அகலம் நிகளமுடைத்தாய் இருக்கின்றது. அப்பால் நிடதகிரிக்கு வடக்குமுதல் நீலகிரி வரையிலும் மூன்றுவருடம் இருக்கின்றது. ஒவ்வொருவருடம் ஒன்பதினாயிரம் யோசனை அகல நிகளமுடையது. மேலும், நிடதகிரிக்குத் தெற்கு மூன்று வருடமிருக்கின்றது. ஒவ்வொரு வருடம் ஒன்பதினாயிரம் யோசனை அகல நிகளமுடையது.

இதல்லாமலும் இந்தப் பாரத வருடத்திற்குச் சிறப்பாகிய ஆறு குலகிரிகள் இருக்கின்

றன. ஒவ்வொரு மலைகளின் அகலம் இரண்டாயிரம் யோசனை விஸ்தீரணமும், அடிமுதற் சிகரம் வரைக்கும் பதினாயிரம் யோசனை தூரமுமுயர்ந்திருக்கின்றது. ஐயா! இப்போது சொல்லிவந்த ஒன்பது வருடங்களில் எட்டு வருடத்தில் சாரணர், சித்தர், கந்திருவர், வித்தியாதரர், கிம்புருடர், விஞ்சையர் முதலாகிய பேர்கள் ஒவ்வொரு வருடத்தில் ஒவ்வொரு குலத்தாராய் வாசமாக இருப்பார்கள். அப்படி இருந்தபோதிலும் மேலாகிய தருமம், அர்ச்சனை, பூசை, அருந்தவமிவை முதலிய யாவும் இந்தப் பாரத வருடத்தில் வந்திருந்து செய்து தவம் நிறைவேற்றிக் கொண்டுபோய்த் தங்கள் தங்கள் பதியிலிருந்து அநுபவித்துக் கொள்ளுவார்கள். அவ்வெட்டு வருடத்திலும் சஞ்சாரஞ் செய்துக் கொண்டு இருக்கும்படியாகிய பேர்களுக்கு ஆயுசு எவ்வளவென்றால், ஒன்றே கால் ஆயுதமென்று உரைப்பார்கள். ஒன்றேகால் ஆயுதமாவது பன்னீராயிரத் தைஞ்ஞூறு வயது என்று தெரிந்துக்கொள்ளும் ஐயனே! அப்படியிருக்க இந்தப் பாரதவருடத்தி லிருப்பவர்களுக்குச் சொல்ப ஆயுசு ஏற்படுத்தி யிருப்பானேன் என்றால், மகா வருத்தத்துடனே அவர்களைப்போல் வாயுவைக் கும்பித்து வாணாளை வளர்த்திக் கொள்ளுவதைப் பார்க்கிலும், இங்குள்ள மாம்பழ ரசத்தை புசித்து வாழ்நாளை நீடிக்க செய்துக்கொள்ளுவதே இவர்கட்கு மேன்மையாதலால், அவ்விடத்திலிருப்பவர்களுக்கு ஆயுசை அவ்வளவாய் நிருமானித்துச் சொல்லியது.

அப்பால், மேற்கூறிய மகமேருவுக்குத் தென்திசையில் மேருமந்திரமென்னு மலையினிடத்துப் பொருந்திய நாவல்மரமானது, இரண்டாயிரம் யோசனை பரப்பும் உயரமும் உடையது. அம்மரத்தினது நாவற் கனியானது அயிராவதத்தின் தலையத்தனை பருமன் உடைத்தாயிருக்கும். அந்தப்பழம் நைந்து விழுந்த தேன்கள் போய் நிறைந்துனின்ற நதியைத்தான் ஜம்பு நதியென்று சொல்லுவார்கள். அந்தச் சிறப்புவாய்ந்த நதியானது, மேற்சொல்லிய மகமேருவின் மேற்புறமாக சுற்றிக்கொண்டு கீழ்த்திசையிற் புகுந்து சமுத்திரத்தின் நடுமத்தியிற் போய்ச் சேரும்படியாய் பேரோசைகொண் டோடிவரும்; அந்தச் சம்புநதி தோய்ந்த இடங்கள் தோறும் ஒருவரால் எடுக்கப்படாத பொற்பாறைகள் நிறைந்திருக்கும். அந்தப் பாறையாகிய பொன்களினால் ஆபரணங்கள் செய்து தரித்துக் கொண்டாலும், அல்லது அந்தத் தீர்த்தத்தைச் சாப்பிட்டாலும் அவர்களுக்கு நரை-திரை-மூப்பு-வியாதி முதலிய நாசங்களில்லை. மேலும், மகமேருவுக்கு மேற்றிசையிலிருக்குங் கந்தமாதனச் சாரலில் பொருந்திய கடம்புமரமொன்று ஆயிரயோசனை அகலந் தழைத்துச் செழித்து, மலர்கணிறைந்து சொரியும்படியாகிய தேனானது, யாவர்களும் வணங்கும்படிக்குக் கடம்பா நதி யென்னும் பேர்கொண் டிருக்கின்றது. அப்படிப்பட்ட நதியில் ஸ்நானஞ் செய்தாலும், தாகத்திற்கு அருந்தினாலும், நூறுயோசனை தூரம் சுவாச மணமுந் தேகமணமுஞ் சூழ்ந்துக்கொண் டிருக்கும். இதன்றியும், மகமேருவுக்கு வடதிசையி லிருக்குஞ் சுவேதகிரிச் சாரலில் நூற்றுப்பத்து யோசனை யுயரமும், பருமனும், பரப்புமுடைய ஆலமரமொன் றிருக்கின்றது. அதினுடையக் கிளைகள்தோறும் நெருங்கிய கனிரசம் புசித்தால், பால்-தயிர்-தேன்-நெய் இவைகளை யொத்திருப்ப தல்லாமலும், அழகிய பொன்னுடை-இரத்தினாபரணங்கள் முதலிய யாவுங் கொடுத்து, ஆற்றைப்போலச் சுரக்கும் ஊற்றின்பெருக்கெடுத்து ஓடிக்கொண் டிருக்கும்.

இதல்லாமல் இன்னமும் சொல்லுகின்றேன் கேளும்; ஓ திரிதராஷ்டிர பூபதியே! சிருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மாவானவர் பூர்வத்திற் பெற்ற சுவாயம்பு மனுவென்பவர் மேற்சொல்லிய புட்கரத்தீவம் - சாகர்த்தீவம் - சான்மலித்தீவம்-கிரவுஞ்சத்தீவம் - கோமேதகத்தீவம் - குசத்தீவம்-ஜம்புத்தீவம் என்னும் இந்தச் சப்த தீவத்தையும், தமது புஜபல பராக்கிரமத்தினாலும் மிகுந்த தவத்தினாலும் ஆண்டு வந்தார். அப்படி அரசுபுரிந்துவரு நாளையில், அந்தச் சுவாயம்பு மனுவுக்கு நந்தன் சயித்திரதன்-பிரசன்-சர்வதோபத்திரன்-சுரதிரன் - மனுதாரன் - அங்கிதிரன் என்னு ஏழு பிள்ளைகள் பிறந்து கல்வியிற் சிறந்து வளர்ந்து, கருதலரைக் காய்ந்து, கடைக்கண் சிவந்து, காரியவல்ல ரானார்கள். அந்தக் காலத்தில், அச்சுவாயம்பு மனுவானவர் இந்த ஏழு பிள்ளைகளின் திறத்தையுங் கண்டு, ஏழு தீவத்தையும் ஒவ்வொரு பிள்ளைகளுக் கொன்றாக பகுந்துக் கொடுத்துப் பட்டங் கட்டி வைத்தார். அந்தத் தீவத்தை அந்தந்தப்

பிள்ளைகள் அரசாக்ஷி செய்து வந்தார்கள். அந்த ஏழுபிள்ளைகளில் அங்கிதிர னென்பவன் இந்த ஜம்புத்தீவத்தை செங்கோன் முறை குன்றாமலும், தருமங் குறையாமலும், மலைகளைப் பிளக்கும் வச்சிராயுத முதலிய ஆயுதங்களை யுடைத்தானவனாய் இராச்சிய பரிபாலனஞ் செய்துவரு நாளையில், குரு - இரணியன் - நிரமியன் - பத்திரன் - அளாவிரதன் - கேதுமாலன் - அரி - கிம்புருடன் - பாரதன் என்று சொல்லும் ஒன்பது பிள்ளைகளைப் பெற்று வளர்த்து, இந்த ஜம்புத்தீவத்தை ஒன்பது பங்காக்கி, ஒவ்வொரு பிள்ளைகளுக்கு ஒவ்வொரு பங்காகப் பட்டங்கட்டி, அந்தப் பிள்ளைகள் பேரால் நவகண்டத்திற்கு பேரும் ஏற்படுத்தி வைத்துப் பத்தினி புத்திராள் முதலிய ஈட்சணத்திரையங்களையும் வெறுத்து, ஆத்மார்த்தமாகக் கனங்குலவிய வனம் புகுந்து, மனங் குவிந்து, தவம்புரிந்து நிந்தியானந்தத்தை தருவதாகிய மோட்சவீ டடைந்தான்.

இப்பால், இந்த ஒன்பது பிள்ளைகளும் ஒன்பது கூறாகிய கண்டத்தை ஆண்டு வந்தார்கள். ஓ அரசனே! மலைகள்போலும் அலைகளடிக்கும் வடக்கு சமுத்திரத்திற்குத் தெற்காகவும், அணியணியாய் மணிகள் கொழிக்குஞ் சுனைப்பெருக்குடைய ஸ்ருங்க மலைக்கு வடக்காகவும், இதின்நடுவில் இருக்கும் பல வருடங்களிலும் பாரத வருடத்தி லிருப்பவர்களெல்லோருஞ் சீக்கிரத்தில் மோட்சம் அடையும்படிக்கு ஆயுள் நீடித்திருக்கச் செய்யாமல், நூற்றிருபதென்றே விதித்து இருக்கின்றது. என்று சஞ்சயன் சொல்ல, திரிதராஷ்டிர மகாராசன் கேட்டுச் சிந்தை களித்துச் சஞ்சயனைப் பார்த்து, மற்ற எட்டு வருடத்திலும் இருப்பவர்கள் இவ்விடத்தில் வந்து தவஞ் செய்து மேன்மை பெறவும், இவ்விடத்தி லிருப்பவர்கள் சீக்கிரததில் கதிசேர்வதற்காக ஆயுட் குறுக்கமென்றுஞ் சொன்னீர். அப்பேர்ப்பட்ட நலத்தைக் கொடுக்கு மகத்துவங்கள் இந்தப் பாரத வருடத்தில் என்னென்ன விசேஷ மிருக்கின்றது? அதுகளையுந் தெரிவிக்கவேண்டு மென்று கண்ணில்லா காவலன் கேட்க, சஞ்சயன் சொல்லுகின்றான்: ஓ இந்துகுலத் திந்திரனே! தெய்வ கங்கையானது, அழகிய பொற்றாமரை மலர்களுடனே ஆகாயத்தினின் றிழிந்து மகமேருவின் சிகரத்திற் பாய்ந்து, மூன்று பிரிவாகி அந்த மகமேருவுக்குச் சமீபமா யிருக்கின்ற சிகரங்களையுடைய கும்பகிரியி லிரண்டு பிரிவு விழுந்து, அதின் சிகரத்தைப் பிளந்துகொண்டு நான்கு பிரிவுகளாய்ச் சமுத்திரத்திற் போய்க் கலக்குமென்று சான்றோர் கூறுவார்கள். மகமேருவுக்குத் தென்புறத்திலிருக்கும் குலகிரியினுடைய சிகரத்தில் வீழ்ந்த ஒரு பிரிவானது, அம்மலையின் நடுவாகிய வயிற்றை கிழித்துப் பெருமைதங்கிய நிலத்தைப் பிளந்து தென்முகமாகத் திரும்பி வருவதால் இந்தப் பாரத வருடஞ் சிறந்ததென்று சொல்லுவதற்குச் சாக்ஷியா யிருக்கின்றது.

இதன்றியும், சரஸ்வதி-யமுனை-கோதாவிரி - நர்மதை - கௌசிகை - துங்கபத்திரை - சரையு - பாலி - பெண்ணை - காவிரி - கிருஷ்ணை - தாம்பிரபரணி முதலாகிய நதிகளோடு, கங்கையே முதலாகிய பல தீர்த்தங்களும்பொருந்திய இந்தப் பரதகண்டத்திற்கு ஒப்பாகிய கண்டமும் உண்டோ? ஓ உத்தமனே! இன்னும், திருக்கோயில் - திருவேட்களம் - திருநெல்வாயில் - திருக்கழிப்பாலை - திருப்பெருமணம் - திருமயேந்திரப்பள்ளி - திருமுல்லைவாயில் - வடமதுரை - தென்மதுரை - காசி - காஞ்சி - மாயாபுரி - துவாரகை - அவந்தி - அயோத்தி - திருக்கலிக்காமூர் - திருச்சாய்க்காடு - திருப்பல்லவனீச்சுரம் - திருவெண்காடு - கோகர்ணம் - இராமேச்சுவரம் - திருக்கயிலை - வடவேங்கடம் - திருக்காட்டுப்பள்ளி - திருக்குருகாவூர் - திருக்காரு - திருக்கோலக்கா - திருவாரூர் - புள்ளிருக்கும் வேளூர் - திரு ஆவினன்குடி - திருக்கேதாரம் - ஸ்ரீரங்கம் - திருவானைக்கா - திருக்கண்ணார்கோயில் - திருஞாயிறு - திருநின்றையூர் - திருப்புன்கூர் - அன்னியூர் - திருவேள்விக்குடி - திருக்குடந்தை - ஜகநாதம் - திரிசிரபுரம் - தற்பசயனம் - குருக்ஷேத்திரம் இவைகள் முதலாகிய திவ்விய சிவஸ்தலங்கள் ஆயிரத்தெட்டும், விஷ்ணு ஸ்தலங்கள் நூற்றெட்டு மிருக்கின்றன. இந்தப் பதிகட்கு ஒப்பாகிய திருப்பதிகள் எப்பாரினு மில்லை. இப்போது சொல்லி வந்த ஸ்தல விசேஷங்களினாலும், நதி விசேஷங்களினாலும், கண்காக்ஷியாகிய சிறப்பினாலும், தவங்களினாலும், சோடச மகா தானங்களினாலும், சிவார்ச்சனை - விஷ்ணு வார்ச்சனை முதலிய பூசைகளினாலும், சுசி சுத்தங்களினாலும், சகலவித வளங்கள் முதலிய நலங்களினாலும், இந்தப் பரதகண்டம் புனிதமாகிய விசேஷம் பெற்றது. இந்தப்

புனிதவிசேஷம் பெற்ற பரதகண்டத்திற் குருக்ஷேத்திரம் மேலாகிய பவித்ர முடையது. அநேகங் கோடி நற்குலத்தவர் நற்குணத்தவரெல்லாரும் நம்மை பெறச்செய்த யாக சாலைகள் கோடாகோடிக ளிருக்கின்றன.

இதல்லாமலும், உத்தம க்ஷத்திரியகுல போஜராகிய ராஜர்களெல்லாரும், விரோதத்தாற் பகை மேற்கொண்டு வெற்றி பெறும்படியாகக் கருதி யுத்தஞ்செய்த மேலாகிய ஸ்தலம் இந்தக் குருபூமி. இவ்விடத்திற் பரசுராமரானவர், இராஜ வம்சத்தைக் கருவறுத்து, அவர்கள் தேகத்தினின்றும் பெருகிய உதிரங்களினாற் சிவந்த பஞ்சகமென்னும் தீர்த்த மகத்துவ முண்டாக்கி, அந்த ரத்த தீர்த்தத்தில், தன் தந்தைக்குத் திலதர்ப்பணங்களைக் கழித்தார். இன்னமும் அநேகந் தகுதியையுடைய பெரியோர்க ளெல்லாரும், தங்களுக்குரிய கரும முதலிய காரியங்களை நிறைவேற்றிக்கொண்டார்கள். இப்பேர்ப்பட்ட மகத்துவமுடைய இந்தக் குருக்ஷேத்திரம் எவ்விடத்தில் இருப்பதென்றால், கல்வி வளமுஞ் செல்வவளமுந் தருஞ் சரஸ்வதி நதிக்குத் தெற்கிலிருக்கின்றது. அவ்விடத்தில் உமது பிள்ளைகள் நூறு பேரும், பாண்டவர்களும் யுத்தஞ் செய்யப் போயிருக்கின்றார்கள் என சஞ்சயன் சொல்ல, திரிதராஷ்டிர மகாராஜன் மகா சந்தோஷத்துடன் கேட்டுச் சஞ்சயனை நோக்கி, சகலமுந் தெரிந்த சாதுசங்கத் திறமுடைய சஞ்சயனே! நவகண்டங்களையும் பிரித்துச் சொல்லி, அவைகளினுடைய விசேஷங்களையும், இந்தப் பரதகண்டத்தினுடைய மகத்துவங்களையும், விசால முதலிய தன்மைகளையும் எனக்குச் சொல்லிவந்தனை. நான் அதைப் பூரணமாகத் தெரிந்துகொண்டேன். மேற்சொல்லிய ஏழு தீவுகளிலே இந்த நாவலந் தீவை நீக்கி, மற்ற ஆறு தீவுகளின் விபரங்களையுஞ் சொல்லக்கடவை யென்று திரிதராஷ்டிரன் கேட்க, சஞ்சயன் சொல்லத் தொடங்கினான்.

கேளுமையா ராஜனே! முன் சொல்லி வந்த சப்த தீவுகளில் இந்த ஜம்புத்தீவு நீங்க, மற்ற ஆறு தீவுகளையும் ஆறு பிள்ளைகள் அரசுசெலுத்தி வந்தார்கள். அந்தத் தீவங்களில் புட்கர மென்னுந் தீவத்தைச் சர்வ தோபத்திரனென்னும் ராஜன் ஆண்டு வந்தான். அவனுக்குப் பிராசீனன், சிவேதன் பிரத்தியக்கு, உத்தரன் என்று நாலுபிள்ளைகள் பிறந்தார்கள். அப்போதுதான் ஆண்டு வந்த புட்கரதீவத்தைக் கீழ்விதேகம், மேல்விதேகம், வடவிதேகம், தென்விதேகம் என நாலுகண்டமாக்கி, அந்தப் பிள்ளைகள் நால்வருக்குங் கொடுத்தான். அந்த நாலு பிள்ளைகளுந் துரைத்தனம் பண்ணிக்கொண்டு வந்தார்கள்.

இவ்வாறே மற்ற ஐந்து தீவங்களையும், மற்ற ஐந்து பிள்ளைகள் தங்கள் தங்கள் பாகப் பிரகாரம் புத்ரபௌத்ர பாரம்பரியமாகப் பிரித்து ஆண்டுவந்தார்கள். ஓ குருகுல சிகாமணியாகிய கோவே! பிள்ளைகளின் குணங்களையுந் திறங்களையுமறிந்து பூமியைப் பங்கிட்டுக் கொடுத்து விடுகின்ற தந்தையானவன், எல்லாத் தேவனிலு முதற்றேவன். அப்படிக்குச் செய்யாமல் இருந்து அவத்திலிருந்து போகும்படியாகிய தகப்பன் புத்திர மித்திரர் முதலியோரைக் கெடுக்கும் பகையாகிய கொடும் பாவி யென்று இராஜநீதியிலும் நீதிசாரங்களிலும் சொல்லி யிருக்கின்றபடியால், அந்தந்த அரசர்கள் பாபத்திற்குப் பயந்து உடனே பகுந்து கொடுத்துவிட்டார்கள். அந்த நீதி முதலிய தருமங்கள் அப்படியிருக்க, மேற்சொல்லிய ஆறு தீவுகளில் வசித்து வாழ்கின்ற மனிதர்களுக்கு ஆயிரம் வருஷம் ஆயுசென்றும், புட்கரத்தீவத்தோர் பிர்மாவைப் பூசிப்பார்கள் என்றும், கிரவுஞ்சத் தீவத்தோர் வருணனைத் தொழுவோரென்றும், கோமேதகத்தீவத்தோர் சூரியனை வணங்குகிறவர்கள் என்றும், சாகத்தீவத்தோர் வாயுவை யாராதிப்பார்களென்றும், சான்மலித் தீவத்தோர் சந்திரனைப் போற்றுவாரென்றும், குசைத் தீவத்தோர் அக்கினியைக் கொண்டாடுவார்க ளென்றும், நீர்வளம் நிலவளம் பொருந்திய இந்த ஜம்புத் தீவத்தோர் மேலாகிய விதி முறைகளுடன் கடவுளைத் தொழுதல், பூசை-சத்தியம்-சவுசம் - ஆசாரம் - விபகாரம் - ஞானம்-இரக்கம் - யாகம் - ஓமம்-ஔபாசனம் முதலிய மேலான வளங்களுடையவர்க ளென்றும், இத்தீவத்தையே தேவபூமியாகச் சொல்லுவார்களென்றுஞ் சஞ்சயன்சொல்ல, இதினுடைய தன்மைகளைக் கேட்டுச் சந்தோஷமடைந்து, கீழுலகம் ஏழென்று கூறிய கிரமத்தையுஞ் சொல்லென்று திரிதராஷ்டிரன் கேட்க, சஞ்சயன் மகா சந்தோஷத்தோடு அதனையுஞ் சொல்லத் தொடங்கினான்.

ஐயா! இயாவரும் வணங்கும் இந்தப் பூமியின் சம்பந்தமில்லாமல் அதோ முகத்திற்ருழ்ந்து சென்ருல், ஆயிரம் பணமகுடமுடைய ஆதிசேடனுடன் அஷ்டகஜங்களுஞ் சூழ்ந்திருக்கும். அப்புவனத்தை நீங்கி அப்பாற் சென்ருல், ஒப்பில்லாத பிலங்களாகிய அதலம் - விதலம் - சுதலம் - தராதலம்-இரசாதலம் - மகாதலம்-பாதாளம் என்னும் ஏழுலகங்களுண்டு. ஒவ்வொன்று ஒன்பதுலக்ஷ யோசனை விசாலத்தையுடையது. இவ்வேழுலகத்தின் கடையாகிய பாதாளத்தில், விவேகத்தில் மிகுந்த காண்டவரென்னும் மகானுபாவர் பொருந்தியிருப்பார். அவிடம் நீங்கிச் சென்ருல், அள்ளலம் - இரௌரவம் - கும்பிபாகம் - கூடசாலம் - செந்துத்தானம் - பூதி - மாபூதி என்னும் ஏழுநிரையமாகிய நரகபூமி. அந்த பூமியை நீங்கினுல் தேவர்கள் தொழும் உருத்திர சங்கமாகிய சிவபெருமான் கணேசர் முதலாகிய கூட்டமும், ஆதாரமாகிய ஆமையுமவ்விடத்தி லிருக்கின்றன. அவ்விடம் நீங்கினுல், இந்த அண்டத்தின் கீழ்ச்சுவர் தோன்றும். அரசனே! இந்தப் பூலோகமுதல் அண்டச்சுவர் வரையிலும் ஐம்பதுகோடி யோசனை தூரமென்று பெரியோர் பேசுவார்கள். ஆதலால், இப்பூலோகமுதல் மேலாகிய ஏழுலகத்தின் சீருஞ் சொல்லுகிறேன் கேளும்: இந்த மண்ணுலகத்தில் வாழுமவர்கள் அளவிறந்த யோனிபேதமாக வாழுமாக்களென்று உணர்ந்திருக்கின்றீ ரல்லவோ? அரசே! இவ்வுலகின் மேற் பத்துயோசனை வாயுமண்டலம்; பதினுயிரம் யோசனை தூரம் மேகமண்டலம்; இதுவரையிலும் பூலோகம்; அதன்மேலாகிய புவலோகத்தின் சிறப்பு கேளும்: அது கிம்புருடர்-கருடர் - விஞ்சையர் - இந்திரர் - இயக்கர் - சித்தர் இவர்கள் முதலிய பேர்கள் பொருந்தி வாழுமுலகம். அதன்மேல் ஆகாய கங்கை செல்லுகின்றது. அப்பால் லக்ஷ யோசனை தூரம் சூரியமண்டலம்; அதுவே முப்பத்து முக்கோடி தேவர்களும் வழிக்கூட்டி நடக்க மண்டலவீதியா யிருக்கும். அதற்குமேல் லக்ஷ யோசனை தூரத்திற் சந்திரமண்டலம்; அதன் மேல் இரண்டுலக்ஷ யோசனைதூரம் புதனுடைய மண்டலம்; அப்பால் இரண்டுலக்ஷ யோசனை தூரம் அங்காரகனுகிய செவ்வாய் மண்டலம்; அப்பால் இரண்டுலக்ஷ யோசனை தூரம் குருமண்டலம்; அப்பால் இரண்டுலக்ஷ யோசனை தூரம் சனிமண்டலம்; அதன்மேல் லக்ஷயோசனை தூரந் தவத்தையுடைய சப்தரிஷிகள் மண்டலம்; அப்பால் லக்ஷயோசனை தூரம் துருவமண்டலம்; இதுவரையிலும் பதினைந்துலக்ஷ யோசனை தூரம் தொகையினையுடையது புவலோகம்.

கேளுந் திரிதராஷ்டிர பூபதியே! இதன் மேலாகிய சுவலோக மென்பது எண்பத்தைந்துலக்ஷ யோசனை தூரமுடையது. அதைத்தான் தேவேந்திரன் வாழுந் தேவலோகமென்று சொல்லுவார்கள். அவ்விடத்தில் மார்க்கண்டேயர் முதலாகிய மகா முனிவர்களெல்லாரும் வீற்றிருப்பார்கள். அதற்கு மேல் எட்டுகோடி யோசனை தூரமுடையது சனலோகம்; அவ்விடத்திற் பிதிர்த்தேவதைகள் முதலிய புண்ணியர்கள் பொருந்தி வாழ்வார்கள். அந்த சனலோகத்தின்மீது பன்னிரண்டுகோடி யோசனை தூரமுடையது தவலோகம்; அவ்வுலகத்தில் சநகர் - சநந்தனர் - சநற்குமாரர்-சநார்த்தனர் முதலிய பேர்கள் வாழ்வார்கள். இந்தத் தவலோகத்தின்மேல் சிருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மதேவர் வாழும் சத்தியலோகம்; அஃது பதினுன்குகோடி யோசனை தூரமுடையது. இந்தச் சத்திய லோகத்தின்மேல் பிரம்மபதமென்பது மூன்று கோடி யோசனை தூரமுடையது. பரிமளங் கொண்ட துளவணி மாயன் பொருந்திய பதம் மூன்றுகோடி யோசனை தூரமுடையது. சிவ பெருமான் பொருந்திய சிவலோகம் நான்கு கோடி யோசனை தூரமுடையது. அதன்மேல் ஒருகோடி யோசனை தூரத்திற் குற்றமற்ற அண்டச்சுவர் வட்டங் கவிந்திருக்கின்றது. இந்தப் பிரகாரம் வேதவியாசருடைய வனுக்கிரகத்தால் வேத புங்கவர்களாகிய முனீஸ்வரர்கள் சொல்லி யிருக்கின்ற நான்முறையின் படி, இராஜ ராஜேஸ்வரனுகிய உமக்குச் சொன்னேன்.

சஞ்சயன் குருக்ஷேத்திர பூமியடைதல்.

இதல்லாமல் நூற்றெட்டு உருத்திரர்கள் வாழும் புவனங்களும், சமுத்திரமத்தியிலிரா நின்ற இலங்கை முதலிய தீவங்களும், பற்பலவாக இம்மேதினியி லிருக்கின்றன. மேலும், நெருங்கிய மலையருவி பெருகிவரா நின்ற ஏமகூடத்திற்குத் தெற்காகவும், இமயமலைக்கு வடக்காகவும் இருக்கின்ற கிம்புருட வருடத்தில், பரமசிவ னெழுந்தருளிய கயிலையங்கிரி யிருக்கின்றது. அந்தக் கயிலையங்கிரியினிடத்தில் அருச்சுனன சென்று, அரிய தவத்தி

னின்று, உமாமகேஸ்வரரருளினுற் பாசுபதாஸ்திரம் பெற்ருன். இப்போது நான் சொல்லிவந்த இந்த அண்டத்தை வளைந்து கொண்டிருக்கும் சக்கிரவாளகிரியின் எட்டுத் திக்கிலும், இந்திரன் - அக்கினி - இமயன் - நிருதி - வருணன் - வாயு - குபேரன் - ஈசானன் என்று சொல்லுகின்ற திக்குப் பாலகர்கள் தங்களரசரோடு பொருந்தி யிருக்கும் பட்டணங்கள் உண்டு. ஆகையால், இப்போது நாமிருக்கும் இந்தப் பூலோக முதற்கொண்டு; நான் சொல்லிக்கொண்டுவந்த அண்டகோள கைபளவும், பஞ்சா சதகோடி யோசனையளவென்று பண்ணவர் பகர்ந்திருக்கின்ருர்கள் என்று சஞ்சயன் சொல்லிக்கொண்டு வந்த போது, இருகண்ணுமற்ற இறைவன் அகமகிழ்ந்து அதிசயமுற்று, சஞ்சயனை ஆலிங்கனமாக அணைத்துக்கொண்டு அருணிறைந்த வேதவியாசர் அநுக்கிரகஞ்செய்த வரத்தினுல், நீஇந்த அண்டத்தினியற்கை முழுமையுமுணர்ந்து, இரண்டு கண்ணும் கியானக் கண்ணுமுடையவர்கள் அறிந்துகொள்ளுவதைப்போல் யான் தெரிந்துகொள்ளும்படியாய் எனக்குத் தெரிவித்தனை. ஐயனே! இனி மேற் குருக்ஷேத்திரத்திற்குச் சென்று, அவ்விடத்தில் இருதிறவர்களும் யுத்தஞ்செய்யு முறைமைகளும், அவர்களின் நினைப்பும் அவர்களின் கலப்பும், யாவுமுணர்ந்து எனக்குச் சொல்லவேண்டியதென்று விடைகொடுக்க, அப்படியே மகா பாக்கியமென்று செலவு பெற்றுக்கொண்டு, தேவர்களாலுமளவிடற்கரிய அந்த யுத்தபூமிக்குப் போவதாயினுன் சஞ்சயன்.

இவ்வாறு திரிதராஷ்டிர னுத்தரவைப் பெற்றுப் பிரயாணப்பட்ட சஞ்சயன், வேதவியாச முனிவரை மனதிற் றியானித்துக் கொண்டுபோய்க் குருக்ஷேத்திரஞ் சேர்ந்து, அங்கு இரண்டுபிரிவாக ஏற்படுத்தி அணிவகுத்திருந்த சேனைசைனியங்களை ஆகாயவீதியிற் சூழன்று சுற்றிப்பார்த்து, திடுக்கிட்டு சித்தப் பிரமைகொண்டு, இந்தச் சேனைகளை எவ்வளவென்று வகுத்துச் சொல்லுவோமென் றேங்கி, சொல்லுதற்கரிய ஏழுமேகங்களும் யானைகளாக உருவெடுத்து வந்தனவோ? உலகிலுள்ள மலைகள் எல்லாத் தேர்க்கூட்டங்களாக உதித்து உளுண்டு வந்தனவோ? சமுத்திரத்தின் அலைகளெல்லாங் குதிரையினங்களாகச் சமைந்தனவோ? பிரமசிருஷ்டியிலடங்கிய உயிர்வகைகளெல்லாங் கால்பலங்களாயுற்றனவோ? இவைகளை எவ்வகையாக அறியத்தக்கதென்று பெருமூச்சுவிட்டு, இந்த நால்வகை சேனைகளில் யானைகூட்டங்கள் திகமோ? தேரினங்கள் மிகுதியோ? குதிரைக்கும்புகள் திகமோ? பதாதிகள் மிகுதியோ? அந்தப்பாதாதிகளில் வில்லாளிகள் மிச்சமோ? வேலாளிகள் மிச்சமோ? வாளாளிகள் திகமோ? கதையாளிகள திகமோ? இதுகளினுடைய மிகுதியை எப்படி வகுத்துச்சொல்லுவோமென்று மனங்கூசி, ஐயோ! இத்தனைகோடி சேனைகளுமிந்தபூமியில் இறந்துபோவதற்கு ஈஸ்வரனுடைய அமைப்பிருந்த தல்லவரவென்று இரங்கி, அப்படி எல்லாரும் ஏககாலத்தில் மடியும்படியாக யிருக்குமா? ஆகிலும், எப்படிக்கேனும் அடங்கலு மடிந்துபோவதற்குக் காரணமும் காரியமும் எது எதுவென்று நமக்குள்ளே நாம் சற்று யோசித்துப் பார்க்கவேணும் என்று நிதானித்து, பின்பு இதற்குக் காரணமாயிருக்கின்றவர் ஸ்ரீகண்ணனே, காரியமாக யிருக்கிறவன் துரியோதனராசனே. ஆகையால், இந்த இரண்டுபேர்களாலே இந்தத் தளங்களெல்லா மடிந்துப்போம். இத்தனைகோடி சேனைகளுக்கும் இவர்களே எமனுக ஏற்பட்டிருக்கின்ருர்கள் என்று சிந்தித்து சிறிதுநேரம் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியை மனதிற்றியானித்து இவ்வாறு துதிப்பதாயினுன்.

ஓ சுவாமி! ஸ்ரீமந் நாராயண ஹரிவாசுதேவ பக்தவற்சல பரந்தாம பரமபத நாதனே! வேதபோதனே! கமலபாதனே! நவநீதசூதனே! ஆதிமூலவதீதனே! தேவரீர் திருப்பாற்கடலைவிட்டு எழுந்தருளிய வேலை நிறைவேறும்படியாகிய காலம் இதுவோ? என்று ஏத்தி வந்தித்து வாழ்த்தி, ஓ கருணையங் கடலேயென்று போற்றிப் புகழ்ந்து, அவ்விருதிறப் படைகளிலேயும் நாட்டியிருக்கும் பெரிய கொடிகளும், கைமிற்பிடித்து நீட்டி யிருக்குஞ் சிறிய கொடிகளும், இவைகள் மேகங்களை இடித்துப் படபடவென் றடித்து உட்காச்சல் கொண்டு ஆகாயகெங்கையில் வீழ்ந்து சலத்தையுறிஞ்சிக் குடித்து காற்றினுல் மழைகளைத் தூற்ற, அந்தத் தூரல்களைப் பூமியில் விழவொட்டாமல் தடுக்க விரிந்திருப்பதுபோல் இருக்கும் சிறிய குடைகளும் பெரிய குடைகளும், நிறைந்திருக்கிற நால்வகைச் சேனைகள் முழக்கும்படியாகிய ஓசையும், ஓதற்கரிய சர்வவாத்தியங்களினது முழக்கமும், ஆயுதங்களு

டன் ஆயுதங்களுரைபடும்பேரொலியும், அவைகளிற் சூடெழும்பிப் புறப்படும் அனற்பொறியும், சேனாதிபதிகளாகிய வீஷ்மர், சுவேதனன் முதலிய வீராதிவீரர்கள் வில்வளைக்கு நாணொலியும், அவ்வவர்கள் ஆகர்ணபரியந்தமிழுத்துவிடும் டங்காரத்தொனியும், அவர்களின் சிங்காரவீர ஓங்காரமும், பாணரீங்காரமும், அதிரதர் ஊதும் ஆண் சங்கினோசையும், மகாரதர் ஊதும் பெண்சங்கின் முழக்கமும், சமரதர் ஒலிக்கும் ஸ்ருங்கநாத வோசையும், இவைகளெல்லாங்கூடி ஒரே முகூர்த்தத்தில் முழங்கியபோது, திக்குகளெட்டும் திடுக்கிடப்பட்டும், திசையானைக ளெட்டும் திக்கு முக்கிட்டும், அஷ்டநாகங்கள் அலண் டழியப்பட்டும், அண்ட பகிரண்டமதிர்ந் திரையப்பட்டும், சத்த சாகரங்களினும் ஏககாலத்தில் பராக்கிரமத்தெழும்பும் திரையோசையுங் கேட்டுத் திடுக்கிட்டுத் தியங்கும்படியாகச் சேனைகள் நெருங்கி இருக்கின்ற குருக்ஷேத்திரத்தைக் கண்டு வந்து திரிதராஷ்டிரனுக்குத் தெரிவித்து, இனிமேல் நடக்கும் யுத்தமுதலிய அதிசயங்களையும் அறிந்துகொண்டு வருகிறேன் என்று செலவு பெற்றுக்கொண்டு, மீண்டும் யுத்தபூமியில் வந்திருந்தான் சித்த சுத்தியையுடைய சஞ்சயன்.

### கிருஷ்ணன் அர்ச்சுனன் சோகநீக்கிப் பகவத்கீதை யுரைத்தல்

இப்பால், ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியானவர் கால்களுக்குச் சல்லடந் தொடுத்து, கச்சைக் கட்டி, கபாயணிந்து, சிரமுடி தரித்து, சிந்தைகளித்து, பார்த்தசாரதியாய் மூர்த்தண்யத்துடன் இரதத்தைக் கொண்டு வந்து நிறுத்தி, அர்ச்சுனனை யழைத்து ஏற்றிக்கொண்டு, இருவரும் இருதிறச் சேனைகளையும் பார்த்துக் கொண்டு வரும்போது, அருச்சுனனானவன் வீஷ்மாச்சாரியார், துரோணாச்சாரியார், கிருபாச்சாரியார், அசுவத்தாமர், துரியோதனராகிய சகோதரராள், புத்திர மித்திராள், படைத்துணை கூடிவந்த பார்த்திபர்கள், தம்மை நம்பிப் பிழைக்கும்படியா யிருக்கிற வீரர்கள், ஏழைகளாகிய சேவகர்கள் இவர்களெல்லாரையுங் கண்டு, ஐயோ! இவர்களைக் கொன்று யமலோக மனுப்பிவிட்டு, அப்பாற் பிணந்தின்கிற பெரும் பூச்சியைப்போல் இந்தப் பூமியை யாண்டு கடைசியிற் மாண்டு போனார்களென்று வசை மொழி பெறுவதிலும், இச்சை நீங்கி லச்சை விடுத்துக் கொச்சையர்போலப் பிச்சையெடுத்துண்பதே பெருவாழ்வா யிருக்கின்றதே! ஓ என் மைத்துனராகிய அச்சுதனே! நாங்கள் ஐவரும் பிழைக்க வேண்டி அளவிறந்த பேர்களைக்கொன்று அரசாக்ஷி புரிந்து, அன்னமும் பாலும் உண்டு சாண்வயிறு வளர்க்குந் தன்மை எத்தன்மை போல் இருக்கின்றதெனில், பெரியோர் முதலிய உரியோருடைய உதிரத்திற் குழைந்த அன்னங்களுண்டு வாணாள் வளர்க்கு மகா பாவிகளுடைய தன்மைபோ லிருக்கின்றதே? ஐயையோ! ஆயினும், எங்களைவிட மகாபாவிகள் இவ்வுலகத்தில் வேறொருவ ருண்டோ? ஓ ஈசனே! இப்படியே வாழ்நாள் வளர்த்த போதிலும் எத்தனை நாளைக்கிருந்து வாழப் போகிறோம்? பனிப்பெருக்கிற் குப்பலை நடத்தும் பான்மைபோலொத்த தேகத்தை நம்பி, நீண்ட புகழினையுடைய துரோணாச்சாரியார், வீஷ்மாச்சாரியார் என்னும் ஆண்டவர்கள் எல்லாரு மாண்டுபோகச் செய்தார்கள் பாண்டவர்களென்னும் பழிச்சொல்லைப் பெற்றுப் பாவிகளாவதிலும், பழையபடிக்குக் காடே நாடாகக் கருதிச் சென்று, அவ்விடத்தில் இருந்து வாடாமல்வதங்காமல் காலங்கழிக்கும் இடமெதுவோ, அதுவே கடவுள் வீற்றிருக்கப் பொருந்திய வீடாகக் கருதி, அங்ஙனே போய் நம்முடைய அருவினைப் பயன்களையெல்லா மொழித்து ஆனந்தமுற்றிருத்தல் உத்தமம். அந்தோ! காரியா காரியந் தெரியாமலும், காலநுட்ப முணராமலும், முன்பின் எண்ணிப் பாராமலும், முதிர்ந்த புத்தி யில்லாமலும் யுத்தஞ் செய்ய வந்தோமே யென மனநொந்து, மெத்தவுநைந்து, மனநடுங்கி, மதிமயங்கி, அவ்வவர்கள் பராக்கிரமத்தை மதிக்குந்தோறும் மயிர் கூச்செறிய முன்செய்துக் கொண்ட சபதங்களை நினைத்து வெகுளுந்தோறும் வியர்வை வழிய, கரங்களுங் கால்களுந் தோள்களும் வாடக் கைவில்லுஞ் சோரக் கண்ணீர் ததும்பத் தேர்மீது மூர்ச்சையாகச் சோர்ந்து வீழ்ந்து தியங்கி மயங்கிய திடகாத்திர தேக தீர வீரப்பிரதாப சூரசிலைமாரனாகிய விஜயனை, தேவகி நந்தனன் திருக்கண்களாற்பார்த்து நகைத்து, எப்பேர்ப்பட்டவர்களாலும் அறியக்கூடாத நமது மாயையை இன்னது என்று இந்த அர்ச்சுனன் அறியத்தக்கவனோ? ஐயோ! இதென்ன இவன் பேச்சில்லாமல் வாயொடுங்கி மூர்ச்சை போயினான். இவனை இப்போதே தேற்ற வேண்டுமென்று திருவுள்ளத்தில் நினைத்து,

தமதுகரங்களினுல் அர்ச்சுனனை வாரி எடுத்து மார்போடணைத்து, ஆலவட்ட முதலிய உபசாரங்களினுல் மூர்ச்சை தெளிவித்து, அர்ச்சுனு! அர்ச்சுனுவென் றழைத்தார். அந்தக் கிருஷ்ண பகவானுடைய வாக்கியமாகிய அமுதம் விஜயன் காதிற்புகுந்தவுடனே, விடாய் நீங்கி விழிப்பவரைப்போற் கண்விழித்துப்பார்த்து, நாவிற்சலமூறி நல்லுணர்வுடனே தேறி நாரணனைத் தொழுது தானே காரணனென்று அழுது சொல்லத் தொடங்கினுன் நரனுகிய பற்குண மகாராஜன்.

ஓ ஆபத்பாந்தவனுகிய ஐயனே! என் கண்களோ இருளுகிறது, கருத்தோ அழிவுறுகிறது, கால் கைகளோ நடுங்குகின்றது, கண்ணீரோ கடற்போற் பெருகுகிறது, இரக்கமுந் தயையும் இப்போது தோன்றுகிறது, எண்ணுது மெண்ணுகிறது, என்மனங் குன்றுகிறது; என்னை இவ்விடத்தில்நிறுத்திவைக்காமற் பாசறைக்குக் கொண்டுபோம் பரமனேயென்று பரிதாபமாய்ப் பற்குணன் சொல்ல, அந்த வார்த்தையை வாசுதேவன் கேட்டுப் புன்னகை யுடையவராய், அப்பா அர்ச்சுனு! உனக்கிப்போது கண்டிருக்குந் திகிலானது, தேகத்தோடொத்த வியாதியோ? அல்லது தேசத்தோடொத்த பாசபந்த உபாதியோ? இதென்ன ஆச்சரியம் காண்டீபனே! அல்லது இன்னமும் வேறென்று நினைக்கிறேன். அது என்னவென்றுல், அங்கதேசாதிபதியாகிய கர்னன் உன் தலையை வாங்குகிறேனென்று அடிநாளையில் சபதம்பண்ணியிருப்பதல்லாமலும், உந்தனுக்கு பகையாகிய அசுவசேனனென்னும் பெரும் பாம்பை ஆதரித்து வளர்த்துக் கொண்டு வந்திருக்கிருனே. அதனுல், அந்த கர்னனையும் அவனிடத்திலிருக்கின்ற ஆலகால விஷத்தையொத்த நாகாஸ்திரத்தைக் கண்டு. ஐயோ! நம்மைக் கொல்லுமேயென்று பிராணபீதிகொண்டு பயப்பட்டாயோ? பார்த்தனே! மேலும், அறுபதினுயிரம் வெண்கலரதக்காரர் என்று வந்திருக்கிற சம்சப்தகாளென்னும் அரக்கர்கள் மிகுந்த பலசாலிகளும், தவமுதலியதிற் சிறந்த யோகசாலிகளுமாகிய பேர்களாதலால், அவர்களைக் கண்டு மூர்ச்சை போயினையோ? அன்றியும், சகல நலமும், சர்வ பலமும், தனக்கெதிரற்ற வரமும்பெற்ற சகஸ்திரவாகுவென்று சொல்லும் படியாகிய மகா திடவீரகாத்ர பராக்கிரமனுகிய தானவர் சிரேஷ்டனுடைய அடலாயிர பாகுவைக்கண்டு அடங்கி, யொடுங்கினையோ? ஓ அர்ச்சுனு! அன்றியும், சந்திரஜடா மண்டல தாரியாகிய சதாசிவத் தியானமோன மந்திரத்தை அனுசரித்து தவமிழைத்து சிவபெருமானிடத்தில் ஜெயம்பெற வாளாயுதமும் வரமும் பெற்று வந்திருக்கிற சிந்திதேசாதிபதியாகிய சயிந்திரதனைக்கண்டு சண்டைசெய்ய பயங்கொண்டு அண்டையி லிருக்கிற நான் உறுதிசொல்லி யுத்தம் பண்ணச் சொல்லுவேனென்று நடுங்கி, நாவறண்டு, நாவிரண்டு மூர்ச்சைபோய் விழுந்தாயோ? ஓ நரனே! அல்லது தாஷ்டீகராகிய வீஷ்மாச்சாரியார் சேனுதிபதித்துவத்திற்கு வந்து நிற்கின்றுரே, அவரை நாம் எந்தக் காலத்தில் வெல்லுவதென்று நினைத்து ஏங்கினையோ? என்று ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி இஷ்டமுடையவராய்க் கேட்க, பாராள வேண்டுமென்று இஷ்டமில்லாமல் பரிதாபத்துடன் மனவெறுப்பு கொண்டிருக்குஞ் சவ்யசாசிக்குக் கோபம் பிறந்து, கண்கள் சிவந்து மாலைகள் கருகிச் சருகாகவும், உடம்பு முழுவதும் வியர்வை யோடவும், பெருமூச் செறிந்து சற்று நிதானித்துக் கிருஷ்ண மூர்த்தியைப் பார்த்து, என் குலதெய்வமே! தேவரீரென்ன சொன்னீர்? என்ன சொன்னீர்? பளா! பளா! வெகுநேர்த்தி! வெகுநேர்த்தி! என்று யாவருந் திடுக்கிட நகைத்து இதனைச் சொல்வதானுன்.

ஐயனே! என்னுடைய அருமை பெருமை யாவுந் தெரிந்த அத்தனே! பரிசுத்தனே! தேவரீருடைய சித்தம் இப்படி பேசுவதற்கு இஷ்டங்கொண் டிருக்குமாகில், நான் செய்வதாவதென்ன? ஆகிலும், இறந்துபோவோமென்னுங் கவலை யெனக்கு எள்ளளவேனுமில்லை. யானைக்குச் சிங்க மிளைக்குமாகில், அடரவுக்குக் கருடனஞ்சுமாகில், ஆட்டுக்குப் பெரும் புலி யலறுமாகில், ஐந்து நன்னூல்ணைத்து முணர்ந்த மேலோர் அசத்தியவாக்கியக் குடியருக்கு அஞ்சுவாராகில், அழியாப் பொருள்பெற்ற ஸ்ரீமந்தர் அழிந்துபோகும் அற்பமாகிய பொருளைக் கண்டு, கண் தெரியாமல் அலையுங் கடையருக்கு அஞ்சுவார்களாகில், நானுமிந்தச் சத்துருக்களைக் கண்டு பயப்படவேண்டியதா யிருக்கும். ஓ தேவாதிதேவனுகிய மகாதேவனே! உத்தமகுல க்ஷத்திரியர்களுக்கு, ஞானம் - தவம் - விரதம் - கருமம் ஆகிய இவைகளைச் செய்து காலம் போக்கு

வது உத்தமம்; அப்படிக்கில்லாமல் வெகுளி மேற்கொண்டு யுத்தந் தொடுத்துப் பகைவரை வென்று பாராள நினைப்பது அஞ்ஞானமென்றறிந்தேன். ஐயனே! அது நிற்க, இந்தக் கர்ம பூமியிற் றோன்றியதெல்லாம் மாண்டு போகும் பொருளே யல்லது வேறில்லை. மேலும், தோலின் துருத்திபோலும், சூத்திரப் பொம்மைபோலும் விளங்குகின்ற தேகம் இது. எத்தனை நாளைக் கிருந்தாலும் இறப்பதே யல்லது, இறவாமலிருக்குஞ் சிறப்பென்பது இதற்கில்லை. ஈசனே! இன்றையதினம் நானிந்த ரணக்களத்திற்கு வரவும், வெகு ஜனங்களைப் பார்க்கவும், இவ்வளவுபேரும் மடிந்த அன்றைக்கல்லவோ நமக்குச் செயம் வருமென்றும், நாமே சொல்லுவோ மென்பதற்கு சாட்சியென்னவென்றும், இவர்களெல்லாரையு மடித்துக் கரத்திற் செங்கோற் பிடித்து மண்ணையாளலாமென்று நம்பி வந்த நாம் இறந்துபோனால் என்ன லாபமென்றும், அப்போது கானலை நீரென்று கருதி அலையுங் கலையினத்தைப்போ லாகுமேயென்றும், நாம் வெற்றியற்றிருந்தாலும், வீரம்விட்டிருந்தாலும், பாருள்ளவரைக்கும் பழியும் பாவமும் வளருமே யென்றும் நினைத்து, இந்தக் கரும வினைக் கீடாகாமல் தருமவினையை அனுசரித்துப் பெருமை தங்கிய வனத்திற் சென்று அருமையாகிய தவத்தினின்று காலங்கழிப்பதே நற்காரியமென்று கருதினேன். உடனே இரக்கமும், அதைரியமும், உறக்கமும், மனமடிவும், ஆகிய இவைகள் மேலிட்டு வருந்திச் சோர்ந்து வீழ்ந்துவிட்டேன். மாதவனே? தேவரீருடைய சித்தமெப்படியோ நானறியேனென்று அர்ச்சுனன் தேம்பிச் சொல்ல, அந்த வார்த்தைகளை யெல்லாம் அரிவாசு தேவன் கேட்டு அகமகிழ்ந்து, தமது திருக்கரத்தால் அர்ச்சுனனைச் சேர்த்துத் தழுவியெடுத்து அணைத்து ஆதரித்துத் தேற்றிச் சிந்தை தெளியச்செய்து, நீ கொண்ட சந்தேகம் நீங்கும்படியாய்ச் சில சொல்லுகிறேன் பயமீகற்றிப் பராமுக மில்லாமற் பட்சமாய்க் கேளும் பார்த்தனே யென்று பரந்தாமன் சொல்லத் தொடங்கினார்.

ஓ பாரமார்த்தியனாகிய பற்குணனே! மித்துரு வென்றும், சத்துருவென்றும், சுஜனங்களென்றும், வெகுஜனங்களென்றும், பாட்டனென்றும், பந்துக்களென்றும், ஆசாரியனென்றும், சீஷரென்றும், தமையனென்றும், தம்பிகளென்றும், புத்திர வர்க்கமென்றும், மச்சானென்றும், மாமனென்றும், சாகத்தக்க பேரென்றும், இருக்கத்தக்க பேரென்றும், கொல்லத்தகாத பேரென்றும், கொல்லத்தக்க பேரென்றும், ஊழ்வினைப் பயனைத் தள்ளிப் போகத்தக்க பேரென்றும், அதனைத் தள்ளவறியாது தவித்திருக்கும் பேரென்றும், உன் மனத்துட் கொள்ளத்தக்கதொன்றில்லை. வீணாகிய ஆசாபாசங்களினால் இவர்களெல்லாரையும் எப்படி கொல்லத் துணிவோமென்றும், கொன்றாற் பாவமும் பழியும் நமக்குச் சுமையாகுமே யென்றும், நீயேன் மயங்குகிறாய்? அர்ச்சுனா! (சுமைதாங்கி ஆயந்தீர்க்கப் போகிறதுமில்லை. சுவரி லெழுதிய சுந்தரச் சித்திரங் காக்கப்போகிறது மில்லை) என்பது போல், உன்னாற் சிலர் சாகிறதும்; நீ சிலரைக் கொல்லுகிறதும்; நீ சிலரை வெல்லுகிறதுமா யிருக்குமென்று யோசிப்பையாகில், மற்ற காரியங்களெல்லாம் உன்னால் நடத்திக் கொள்ளலா மல்லவா? அப்படியெல்லாம் நடத்த வல்லவனாக இருப்பாயேனும், முன்னால் நடந்த காரியங்களை யோசித்துப் பார்க்க வேண்டிய தல்லவா? இப்போதாகிலும் உனக்குத் தெரியவில்லையா? அப்பனே! ஒரு காரியத்தை முடிப்பவனார்? முடியத்தக்கது யாது? கொல்லுகிறவனார்? கொல்லப்படுவது யாது? எது சாகத்தக்கது? எது சாகாமற் போகத்தக்கது? எவர்கள் உறவினர்? எவர்கள் பகைவர்? இஷ்டரெவர்கள்? துஷ்டரெவர்கள்? சவுக்கியமெது? அசவுக்கியமெது? நன்மையெது? தீமையெது? அர்ச்சுனா! யான் சொல்லுவதைக் குறிப்பாக கேட்கக்கடவை. அஃதாவது, இவ்வுலகத்தில் நாமரூபங்களாகப் பேசப்படும் பொருள்களெவையோ, அவைகளுக்கெல்லாம் பழைமையா யிருக்கும்படியாகிய ஆதியை எங்கும் பரிபூரணமா யிருப்பதை, ஒப்பில்லாத் தன்மையுடையதை, நித்தியத்துவத்தை, நின்மலத்தை, நிர்விஷயத்தை, நிலைபெற்றிருக்கும் பேற்றை, ஐம்புலன்களாலும் அறியப்படாத நுட்பமாகிய அறிவை, தனக்குத்தானா யிருக்குந் தத்துவ சொரூபத்தை நீ இன்னதென்றுணராமல், சண்டைசெய்யப் புறப்பட்டு வந்ததனால், அவையெல்லாம் இறந்துபோமென்று நினைத்து வருந்துகின்றனை? அர்ச்சுனா! எது இறக்கத் தகுந்ததென்று இஷ்டராகிய ஸ்ரீ கிருஷ்ணர் கேட்க, அர்ச்சுனன் சொல்லுகின்றான்.

சுவாமி! தேவரீர் சொல்லிவந்த வஸ்துவானது, எப்போதொரு பெயரைப் பெற்றதோ? அப்போதே பலவித துன்பங்களினாலும், அதற்குக் கேடுண்டல்லவா வென்று கிரீடி கேட்க, கண்ணன் சொல்லுகின்றார்: கீர்த்திகொண்ட பார்த்தனே! நீ கேட்டக் கேள்வி ஞாயமே; ஆகிலும், நான் சொல்லப் போகிற பொருள் எப்பேர்ப்பட்டதென்றால், யுகாந்த காலாக்கினியினாலும் வேகாது. பிரசண்ட மாருதத்தாலுங் கலங்காது. ஏழுகடலும் பொங்கி வழியும் ஜலப் பிரளயத்தாலும் இறக்காது. ஆதிசேடனுடைய பணாமுடிகள் இடிய யிடிக்கும் பேரிடியாலும் உடைபடாது. ஒருபொருளையும்விட்டு நீங்காது. அது உருவென்பதுவும், அருவென்பதுவும், ஒளியென்பதுவும், வெளியென்பதுவும், உளதென்பதும், இலதென்பதுவும் அற்று, பேரறிவின் பெயரைத்தாங்கி, எங்குந்தன்மயமாய் எவற்றினுமழியாத வஸ்துவா யிருக்கிறது. அவ்வஸ்துவை நீ கைக்கொண்ட அல்ப ஆயுதங்களால் மடியச்செய்யுந்தன்மை உன்னிடத்திலுண்டோ? ஓ வாசவன் மகனேயென்று கேசவன் சொல்ல, அந்த வார்த்தையைக் கேட்ட விஜயன் சொல்லுகிறான்: ஓ சுவாமி! தேவரீர் திருவாய் மலர்ந்தருளிய ஜீவான்மாவென்னும் வஸ்துவானது அழிவில்லாதது என்றால், உயிர் போய்விட்டதென்று உலகத்தார் சொல்லுகின்றார்களே, அவ் வுயிர் நீங்கிப் போவானேன்? அழிவில்லாத ஆன்மாவை தாங்கிய உடலுக்கும் அழிவு வருவானேன்? இந்த ஸ்தூல தேகத்தை விட்டு நீங்கியவுயிர் எவ்விடஞ்சேரும். அதை அடியேனுக்குக் கட்டளையிடுமென்று காண்டீபன் கேட்க, கண்ணன் சொல்லுகின்றார்.

கேளப்பா அர்ச்சுனா! இவ்வுலகிலுற்ற மானிடர்கள் தேகாபிமான அலங்காரங்களுக்காக உடுத்திக்கொள்ளும் வஸ்திரங்கள் அழுக்கடைந்து கந்தையாகிப் போகுமாகில், பற்பல தினுசாகிய புது வஸ்திரத்தைத் தரித்து போர்த்துக் கொள்ளுவதைப்போல்; இந்த ஸ்தூலதேகமானது வியாதி முதலிய சோகாதிகளால் நொந்து நீங்கிவிட்டால், புதிதாகிய இன்னொரு தேகத்திற் புகுந்து விளையாடிக் கொண்டிருந்து அந்தத்தேகமும் வேறொன்றாற் கந்தையானால், இன்னொரு தேகத்தினுழைந்து கூத்தாடிக்கொண்டிருக்கும். அப்பனே! யாவருஞ் சித்திக்கும்படியாகிய உலக நிறைந்த உண்மைப் பொருளுக்கு ஒருக்காலும் அழிவில்லை. உடலுக்கு மாத்திரம் அழிவுண்டென்று மாதவனுரைக்க, அர்ச்சுனன் கேட்டு மனமகிழ்ந்து, நாதனே! அகப்பற்று புறப்பற்றும், நல்வினை தீவினையும்; ஷட்கர்மங்களும், உயிர்க்குரியதா? அல்லது உடற்குரியதா? என்று தனஞ்செயன் கேட்கப் பரந்தாமன் சொல்லுகின்றார். அப்பனே! நீயென்பதுவும் நானென்பதுவும், உன்னுடையதென்பதுவும் என்னுடையதென்பதுவும், உன்னுலென்பதுவும் என்னாலென்பதுவும் இரண்டு வினையும் ஆறுவிதக் கருமமும் உடலுக்கேயன்றி உயிருக்கொன்று மில்லை என்றுரைத்து, மேலுஞ் சொல்லுகின்றார். ஓ காண்டீபனே! இவ்வுலகத்திற் பிள்ளையை ஆர் பெற்றார்கள்? அந்தப் பிள்ளைக்குத் தனுகரண புவனபோகாதிமுதலிய செயல்கள் எவரால் நேரிட்டது? எவர் பெற்றுக்கொண்டார்கள்? எவரென்னும் அவர் பிரிந்தால் அவர் எந்தயிடத்திற் போய்ப் பொருந்தியிருப்பார்கள். இதுகளினுடைய காரியங்கள் முன்னுந் தெரியார். இனி பின்னால் நடக்கப்போகிற செயலுந் தெளியார். ஆதியும் அந்தமும் தெரியாமல் மத்தியில் தாமுயன்ற முயற்சியின் படி, தானே தகப்பனென்றும் தனக்கு அவன் பிள்ளையென்றும் நினைத்துக்கொண்டே யிருந்து தாமிறந்துபோனால் இந்தப்பூமியில்விழுந்து துக்கத்தை அனுபவித்து வருந்துவோர்களியார்? எங்களுக்குச் சொந்தமென்று என் மயங்கவேண்டும்? ஒருவருக்கு மொன்று மில்லை. அர்ச்சுனா! பிராரத்துவவினைப் போகத்துக் கீடாய்ப் பிறக்கும்படியானது உடல்; அந்த உடலிற் கடாகாசம்போற் றோன்றிக் கொண் டிருக்கின்றது உயிர். அதாவது, ஆகாயத்தில் உதித்த ஒரு சூரியன் தண்ணீர்க் குடங்கள்தோறும் பல சூரியனைக் காணப்படுமாப்போல் சொரூபமாகிய ஜீவான்மா ஒன்று பல தேகங்கடோறும் பிரதிபலித்துக்கொண்டு லவுகின்றது என்று உத்தமன் சொல்ல, வெற்றிபெற்ற விஜயன்கேட்டு, சுவாமி இயாவத் விஷயமும் உடலுக்கே யென்றால், ஆன்மாவுக்குச் சம்பந்தமொன்றும் இல்லையாவென்று அர்ச்சனன் கேட்க, கண்ணன் சொல்லுகிறார்.

ஓ அர்ச்சுனா! ஆன்மாவுக்குச் சம்பந்த முண்டு. அதெப்படி யென்றால், தேகவாசனை விஷயத்தாற் கருமங்க ளெல்லாந் தன்னு

டைய தென்று பார்ப்பதனுல், விதித்திருக்கின்ற இரு வினையின் பிரயோசனத்தைத் தானும் அனுபவிக்கும். அதற்காகவே பெரியோர்கள் பேசியிருக்கும் வாசகமென்ன வென்ருல், எதுவுந் தனக்குச் சம்பந்தம் இல்லாமல் எல்லாம் அவன் செயலென்று உரைத்து இன்ருெருவனிருக்கிரு னென்பது தள்ளி விட்டால், யாவத்துந் தன்னைச் சேருமென்பதுதான். ஓ விவேகத்திற் சிறந்த விஜயனே! மகா மாயைகளைத் தொலைக்க மகானுக்கள் அறிந்து நடக்குந் தூய்மை யென்பது யிதுதான். நீயும் அப்படி நீக்கிவிடாமல் யெல்லாம் உன்னுல் ஆகுமென்றுன்னி நலிந்து வருந்தினை. இந்திரன் மதலாய்! இன்னமுங்கேள். யார் பெற்றவர்கள்? யார் வந்து பிறந்தவர்கள்? நேசமானவர்கள் யார்? நேசமில்லாதவர்கள் யார்? நாசமானவர்கள் யார்? நாசம் இல்லாதவர்கள் யார்? உறவார்? பகையார்? உற்றுப் பார்க்குமிடத்தில் ஒன்று மில்லையே கற்றுணர்ந்த காவலனே? யாவத்தும் அவன் கட்டளைச் செயலென் றுட்கொண்டால், குற்றமென்பது ஒன்றும் விளையாது. கொடிய வினைக்கீடாகவு மாட்டார். மேலும், மாயையென்னும் பெண்ணுனவள், மனமென்னும் பிள்ளையைப் பெற்ருள். அந்த மனமென்பவன் அறிவென்னும் சுதனை நல்கினுன். இம்மூவருக்குள் தாய் தந்தையென்றும், பத்தினி புத்திரனென்றும், இவர்களிடத்தில் நாட்டும்படியாகிய ஆசா பாச நேசம் அம்மாயை யென்பவளாலும், மனம் என்பவளாலும் விளையா நின்றது. அந்தச் சமயத்தில், அறிவென்னும் பிள்ளை பிரவேசிப்பானுகி விவைகளையெல்லாம் நீக்கி விடுவான்; ஒருவரையும் சேரவொட்டான். அதனுல் அந்த மாயையும், மனமென்னும் பிள்ளையும், அறிவனைத்தள்ளி ஒரு கக்ஷியா யிருக்கின்ருர்கள்.

இதல்லாமல், மெய் - வாய் - கண் - செவி - மூக்கு என்னும் ஐம்பொறிகளி னுடனேயும், சத்தம் - பரிசம் - ரூபம் - ரசம் - கந்தமென்னுந் தன் மாத்திரைகளி னுடனேயும், ஞானம் - அருள் - தவம் - பொறுமை - சத்தியம் - வாய்மை - மேன்மை - மோனம் - ஐம்பொறி யடக்கல் இவ்வெட்டு முடைய சாத்வீக குணத்தி னுடனேயும், மன ஊக்கம் - ஞானம் - வீரம் - தவம் - தருமம் - தானம் - கல்வி - கேள்வி இவ்வெட்டு முடைய இராசத குணத்தினுடனேயும், பெருந்தீனி - நெடுந்தூக்கம் - கடுஞ்சோம்பல் - கெடுநீதி - துட்ட நடத்தை - வஞ்சகம் - மறதி - பொய் - கோபம் - காமம் - கொலை இப்பதினுறுமுடைய தாமத குணத்தி னுடனேயும், மற்று மறுவகைப் பயன்களுடனேயும் பழகி அரசாட்சி செய்யும் இந்த மாய உலகினை வணங்கித் துதித்து நித்திரை கொள்ளும்போது; ஒளித்து நின்ற அறிவனென்னும் அவ்வரசன் தோன்றுவான். இத்தன்மையாகிய நன்மை நிறைந்த அறிவனென்னும் அரசனை அறிந்தவ ரெவரோ? அவரைத்தான் அறிஞரென்று போற்றிப் புகழ்வது. அன்பனே! பிரம்மாவினுல் வருக்கப்பட்ட சராசரப் பொருள்கள்தோறும், பாலும் நெய்யும்போல் உயிர்க்குயிராகிப் பொருந்தி வாழ்வைப் பெற்றுக்கொண் டிருக்கும் இந்த பந்தங்களை யுணர்ந்து, நாசிமுனையி னடுநிலை நாட்டி நேரிற் பார்க்குமிடத்து, நமக்கு ஆர் உறவு? ஆர்பகைவர்? அப்பனே! ஆகையால், நீயும் நானும் மற்ற நிருபர்களும் பின்னுமுள்ள சகல வுயிரும் பிறந்து இறப்பதும் இறந்து பிறப்பதும் இல்லையென்று யோசிக்கக் கற்றுணர்ந்தோர்கள், ஒரு காலத்தினும் அம் மாயையினுற் கலங்கமாட்டார்களென மாயவன் கூற, அருச்சுனன் இந்த வசனத்தைக்கேட்டு, சுவாமி! ஒருவரும் இறக்கமாட்டார்களென்ருல், பார்த்தபேர்களை மறுபடியும் பாராதிருக்குங் காரணமென்ன? ஆர் நீங்காமலிருந்தார்கள்? அதினுடைய நிச்சயத்தை அடியேனுக்கு சொல்லவேண்டுமென நிருபன் கேட்க, ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சொல்கின்ருர்.

ஓ விஜயனே! இவ்வுலகத்திற் பிறந்து இறக்கும்படியானது, உடலுக்குற்ற விதியேயல்லது நித்தியமாய நினது சொரூபமாகிய ஆன்மா இறந்து பிறக்கத்தக்கதில்லை என சுவாமி சொல்ல, அர்ச்சுனன் கேட்டு, கர்த்தனே! என் சொரூபம் ஆத்மாவென் றுரைத்தீர். என் சொரூபமென்பது அங்கம் இந்திரிய முதலாகிய இவைகளா யிருக்குதே யல்லது நானென்பது வேறு பிரிந்துகாண வில்லையே. இந்த இடத்தில் நான் வேருகயிருப்பதைச் சொல்லுமென்று அர்ச்சுனன் கேட்க, மெய்ம்மையாகிய ஆன்மா அவயவமாகிய அங்கமும் இந்திரியமுமே யல்லது வேருகயில்லையேயென்று கேட்டவனெவனே அவனும், அவனுல் தானே அறியப்படாதவனும் நீயா யிருக்கின்ருயென்று கோபாலன் சொல்ல, அதை அருச்சுனன் கேட்டு நல்

லது; ஐயனே! தேகம் பிறந்து யிறக்குமாகில் அதைச் சேர்ந்த அறிவனென்பது எங்கே என்று விஜயன் கேட்க, துக்கமாகிய கரும வினைத் தொடர்ச்சிப் பொருளாவன் என்று சுவாமி சொல்ல, தேக வுற்பத்தி யாகுமுன் னமே கருமச்செயல் எப்படி வரும் விதமென காவலன் வினவ; வித்துள்ளொடுக்க மரமென் றும் மரத்துள்ளொடுக்கம் வித்தென்றும் சொல்லும் வகையாமென்று கண்ணன் பேச, நல்லது சுவாமி! தேகமும் ஆன்மாவும் வேர் என்றுரைத்தால் கருமவினையைச் செய்தவர் கள் யாரென்று காண்டீபன் கேட்க, தேகமே வினைத்தது அந்தத்தேகமே அவ்வினையின் கருமத்துக் குரியதன்றி ஆன்மாவுக்கு நிமித்த மில்லையென்று ஆண்டவன் சொல்ல, தேவரீ ருடைய வாக்கியப்படிக்கு உடலானது கரு மத்தை செய்தால் அதனால்வரும் பலனை ஆர னுபவிப்பதென்று அர்ச்சுனன் கேட்க, யாவத் துமாகிய பலனும் உடலுக்கல்லது உயிருக் கில்லையென்று உத்தமனுரைக்கவும்; அதைக் கேட்டு சுவாமி! வெவ்விய உடலே வினைப்போ கத்திற்குரியது என்றீர். அந்த உடலானது, எல்லாவற்றையும் செய்து இந்த கர்மபூமியில் மாய்ந்து வீழ்ந்துபோக ஜீவாத்மா நடுநடுங் கிச் சுவர்க்க நரகத்தை அனுபவிக்க வேண்டி யக் காரணம் என்ன சொல்லுங் கர்த்தனே யென்று காவலன் கேட்க, சுவாமி சொல்லு கிறார்.

அர்ச்சுனா! உலகத்தில் தனுகரண புவன போகச்செயல்களைத் தனதென்று சார்ந்திரு ந்த தன்மையைப்போல், நரக சுவர்க்க அனு பவமென்று சொல்லுவது மாத்திரமே யல் லது, ஆன்மாவுக்கு நரகசுவர்க்க அநுபவ மில்லை. உண்டென்று பேசுவது வீணாரோபித மென்று விளம்ப, இத்தன்மையாகிய உடலின் செய்கைகளெல்லாம் ஆன்மாவின்பேரில் ஏறும்படியாகிய மயக்கமென்னவென மாதவி கொழுநன் கேட்க, முற்று முணரும்படியாகிய நல்லறிவில்லாத மோகத்தினால் ஏறியதென்று கிருஷ்ணமூர்த்தி சொல்ல, அவ்வறிவானது தேகத்திற்கோ அல்லது ஆன்மாவுக்கோ வென்று அர்ச்சுனன் கேட்க, நீ கேட்ட கருத் தைப் பிரித்து சொல்லுவோமாகில், உடலா னது அசத்து. உயிரானது சத்து. இந்த உயிரினறிவானது தான் பிரமமென்று உல களந்தோனுரைக்க, அதை அர்ச்சுனன் கேட்டு, ஐயா! தேகம் அசத்தாகில் இந்தச் செயலெப்படிவருமென்ன ஏகமாகிய ஜோதி உள்ளிருத்தலாற் காந்தம் ஊசியை யிழுப்பது போல் இழுத்ததென்ன, தேவரீர் சொன்ன செயல் உடலுக்கானாற் சுகதுக்கமாருக்கென்ன, உடம்பினுக்கென்று கோவிந்தன் சொல்ல, சேதன ஆன்மாவைச் சேராத துக்கம் அசேதனமாகிய தேகத்தைச் சேருமாவென்ன, புலன் - பொறி - பூதம் - உயிர் - அந்தக்கரண மென்னும் ஸ்தூல சூக்கும மென்னும் ஈருடலாகிய மனத்துக்கே இன்பதுன்பமென்ன; ஆனால், ஸ்தூல சூக்கும மிருவகை யுடலுக்கு ஏது வென்று கேட்க, ஜன்மாந்திரக் காரணத் தால் ஸ்தூல சூக்கும காரணமென்று மூன்று உடலாமென; நல்லது மன மறியுந் துக்க சுகத்தை அவாவென்றுரைத்தீர். இந்த மனம் சேதனமா அசேதனமா சொல்லுமையாவென் றுக் கேட்க, கண்ணன் சொல்லுகிறார்.

அப்பா பார்த்தா! இந்த மனத்தில் ஆன் மாவானது பேதமறவிருக்குந் தன்மைபோற் றோன்றலால், சுகதுக்கத்தைச் சேதனமாகிய மனமே பெறுமென்ன; இந்த மனம் பெற்ற சுகதுக்கம் இதனிடத்தி னில்லாமல் ஆன்மா மருவவேண்டிய தென்னவென, வெப்பமும் தட்பமும் மேல்வைத்த பாண்டத்தி னுள்ளி ருக்குஞ் சலத்திற் றங்குவதைப்போல் என்று ரைக்க, சித்தாகிய பிராணனும் ஜடமாகிய சித் தமும் எப்படி ஒளித்திருக்கிறதென, இரும்பும் நெருப்பும் பொருந்தியதைப்போல் விவேகத் தின் பண்புகொண்டு, ஆன்மாவும் மனமும் அனுகூடித்ததென, இப்படிக்குக் கூடிய ஆன் மாவும் மனமும் எப்போதாகிலும் பிரியுமோ வென்ன, செம்பானது நிறங்காட்டிக் களிம் பேறுவதுபோலும், அடுத்ததைக் காட்டும் பளிங்குபோலும், க்ஷணத்திற்கு க்ஷணம் பிரி ந்து மறைந்து கலந்துக்கொண் டிருக்கத் தக்கது. மேலும், படிகம்போலொத்த சொரு பம் ஆசாமலின் மனோபந்தத்தால் வந்திருக் கின்றமையால், முத்தியில்லை யென்று முகுந்த னுரைக்க, பந்தமாவது ஏது? முத்தியாவது ஏது யென்று பார்த்தன் கேட்க, தேகாபிமான மென்பது பந்தம். அந்த பந்த மறுப்பதே முத்தியென்று பரமனுரைக்க, அபிமானம் வருவதும், அதை யொழிப்பதும் எவ்வித மென, அஞ்ஞானத்தால் அபிமானம் வரும். மெஞ்ஞானத்தால் அபிமானம் விட்டு முத்தி பெறும். அந்த மெஞ்ஞானந் துலங்குமா யின் எப்போதும் ஆனந்தமுண்டு யென்று

ஹரிசொல்ல; அந்தப்படிக்கு விளங்குவதற்கு வேதாந்த சாஸ்திரங்களினாலும், ஆசாரியராலும் கியானம் பெற்றபோதிலும், பொல்லாங்காகிய துக்கசுகந் தீராமலிருப்பது யாது காரணம் என்று கேட்க, சாஸ்திரங்களினாலுங் குரு உபதேசத்தினாலும் வந்த பரோக்ஷ ஞானநந்தம் பற்றமாட்டா. அநுபோகமான அபரோட்ச ஞானத்தாற் பற்றற வேண்டும்.

அதெப்படியெனில், ஓ அர்ச்சுனா! தீபமென்று வாக்கினாற் சொன்னால் இருள் நீங்குமோ? கேள்வியினாலும், மனனத்தாலும், யோகாப்பியாசத்தாலும், பிரமாநுபவத்தாலும் தீரவேண்டுமே யொழிய, மற்ற விதங்களால் அப்பற்று தீராதென்று திருமாலுரைக்க; அஞ்ஞானத்தை நீங்கத் தெரியாத நற்கருமம் மெய்ஞ்ஞானத்தைத் தாங்கும் விதமெப்படி யென்ன, இந்திரஜாலம்போல் தந்திரமாகு மிவ்வுலகத்தைக் கிளிஞ்சிலிற் றோன்றும் வெள்ளியின் கிரணம்போலும், கனவுபோலு மென்னிடத்திற் காட்டி யிருக்கின்றோம். அது சத்தியமல்லவென்று தாமரைக் கண்ணன் சாற்ற; ஐயா! உலகத்தைக் கனவுபோலென்றீர். இதோ பிரத்தியட்சமாய் விளங்குதே யென்று அர்ச்சுனன் சொல்ல, அஞ்ஞான மிருக்கும் வரையிலும் இப்படியே தோன்றும். மெய்ஞ்ஞானம் வந்தால் உலகமென்னும் மாயை விட்டோடிப்போம். அல்லாமலும், பிரமனென்றும்-ஈசனென்றும்-பெருமாளென்றும்-பலகோடி ஜீவனென்றும் - சொல் மயக்கமாகச் சொல்லுவதல்லது, ஆன்மா வொருவனே; இதை யுன்னிப் பார்க்குமிடத்து உலகம் மித்தையாம். அவாவினால் உன்னிப் பார்க்காதிருக்குமளவும் உலகம் மெய்யாகும். அவ்வற்றைப் பார்க்கும்போது உலகம் பொய்யாகும். அர்ச்சுனா? ஆகாயத்திற் றோன்றிய சூரியன் சலத்திலாடுந் தன்மைபோலும், ஓர் கடலிற் பலகுமிழி யுதித்ததைப்போலும், ஒன்றாய் நிறைந்தது. ஜீவபேதம் பலவாய் விரிந்து விளங்குவது ஆன்மாவாகையாற் சுழுத்தி யவத்தையை நோக்குவையாகிற் றோன்றுமென்று சொல்ல; இவ்வுலகம் பிரமமயமென்றறிந்தாலும், பூதமயமாய்த் தோற்றிப் போராடுதே. அறிவும், அறிபவனும், அறியும்படியாகிய பொருளும் என்றும் சொல்லப்பட்ட மூன்றாகி பேதமாகுதே. இந்தப் பேதங்களை நான் காணாதிருக்கத் திருவருளுண்டோ வென்று காண்டீபன் கேட்க,கண்ணன் கிருபையோடு இதனைச் சொல்லுகிறார்.

துரியயோகத்தால் மனம் லயப்படுமாகில், மூன்றுவகை விகற்பமும் அழிந்துபோகும். மேலும், சத்து - சித்து - ஆனந்தம் என்கிற மூன்றும், தனுவாதிகளுடன் அற்று ஐகமாகும். இம்மூன்றும் பிரம்மா யிருக்கையிற் றோற்றாது. ஸ்மரிக்கில் ஞானத்தால் யான் மாயை யறிந்துகொள்ளலா மென்று கோபாலன் கூற, சிறந்த ஆன்மா எனக்குத் தெரிசனமாமோவென்று தனஞ்சயன் கேட்க, முதன்மையாகிய விஞ்ஞானத்தால் அஞ்ஞானம் நீங்கினால், சிந்தையுட் சுயம்பிரகாசமாய் ஆன்மா துலங்குமென்றுசொல்ல, இன்பமாகிய மோக்ஷ சுகமென்பதெப்படியென்ன, அநுபவத்தால் விஷயானந்த மறிந்துகொள்ளக் கடவை. மேலும், மனோலயமுள்ள ஜனகாதி முதலிய ஜீவன் முத்தர்கள் அவ்வநுபவத்தி லிருக்கின்றார்கள் பாரென்று சொல்ல, ஜீவன் முத்தியடைந்தோர்களின் செயலும் குணமும் சொல்லுரையாலாகிய நல்லுரையும் சொல்லுமென்று சுவேதவாகனன் வினவ, உற்பவத்தில் வளர்தல், பருத்தல், குறைதல் முதலிய யாவும் உடலுக்கல்லது உயிருக்கில்லை. இதனால் யாவுந் தாமரையிலையி னீர்போல் ஒத்திருப்பவர்கள் ஜீவன்முத்தர்கள். தயிரிற்கடைந்தெடுத்த வெண்ணெய் அத்தயிரிற் கிடந்தாலுங் கலக்காதிருக்குந் தன்மைபோல், மயங்காதிருப்பார்களென்று சொல்லி மேலுஞ் சொல்கின்றார்.

விஜயனே! தேவர்களாலும் முனிவர்களாலும் அறியப்படாத ஆன்மாவென்னும் பொருளை, இப்போது நீ யறிந்து கொள்ளும்படியாக நான் சொல்லிக்கொண்டு வந்தேன். மேலும், யாவர்களுக்கும் பஞ்ச பூதங்களினால் உண்டாகியது தேகம். அந்தத் தேகத்தின் உள்ளே சிவனானவ னொருவன் ஞானியாக நின்று, சகல நன்மை தீமைகளையும் நடத்தி வருகின்றான். சூத்திரதாரியாகிய அந்த சிவனென்னும் ஒருவனாலேயே நடாத்து முண்மைகளை நீ உற்றுப்பார்த் தறியக்கடவை. அன்றியும், வருவதை விலக்கவும் வராததை வருவிக்கவும் எப்பேர்ப் பட்டவர்களாலும் கூடாது. ஆகையால் போர்புரியுஞ் செய்கையை நீ மேற்கொண்டு வருந்தி, எல்லாம் உன்னுடையதென்னும் பற்றுகளினால் வெவ்விய வினைக்குள் அகப்பட்டு வெந்து போகாதே. எல்லாம் நல்வினை தீவினை என்னு மிரண்டு மற்ற சிவபெருமானுடைய திருவிளை

யாடலென்று அவனுக்கற்புதம் பண்ணிப்போட்டு நீ பரிசுத்தனாக மகிழ்ந்திருக்கக் கடவை. ஓ மைத்துனா!. மேலும், ஆங்காலம் சாங்காலம் என்று சொல்லுங் காலங்களும், இடமும், கொல்லத்தக்க கருவியும், சமயமும், உடல் விழும்படியாகிய நிலமும், எவரெவர்களுக்கு எப்படி அமைந் திருக்கின்றதோ அப்படியே நேரிடுவதல்லாமல் வேறாக நடவாது. எவ்வளவு பலசாலிகளாய் இருந்தபோதிலும், தாங்களெண்ணியபடிக்கு ஒருவரை முடிக்கும்படியாகிய செயலுமுண்டோ; அரசனது வரம்பெற்ற நரனே! நீ வீணாகிய மயக்கத்தில் வீழாதே கடைப்பிடிக்கருமம் என்று சொல்லுகின்றேன் கேள்; அதாவது, ஆயுள்முடியாமல் அற்பவுடற்றாங்கிய கொக்கு முதலாகிய உயிர்களும் மடியமாட்டா இதினுடையஉண்மை இப்படியிருக்க:

பூர்வத்தில் சகல இராசர்களும் நெருங்கிய சபையில் நீங்களனைவரும் கையெடுத்து நீட்டி, அவரவர்களைக் காட்டி, ஆண்மிக்கையுடன் சொல்லிய கட்டுரைச் சபதந் தப்பிப் போகும்படியாக விட்டுக் காட்டுக்கு போவோமென்று திரும்பிவிடுவார்களாகில், இம்மைப் பயன் - மறுமைப்பயன் - உம்மைப்பயன் என்னும் மூன்று பிரயோசனங்களையும் இழந்து, எல்லோரும் பழிக்கும் படியாகிய எளிதம் பூண்டு கீழ்ப்பட்டுக் கொடிய நரகிற் குளித்து மூழ்கி, கண்ணீர் சோர வருந்தி, வெப்பமாகிய பிணியா லுழன்று சுவை-ஒளி-ஊறு ஓசை-நாற்றம் என்றுரைக்கும் ஐம்புலநுகர்ச்சியுங் கெட்டுப் போவீர்களே யல்லது, பிரயோசனம் பெறும்படியாகிய காரியமொன்றுமில்லையே. ஆகையால், நீ போர்முகத்தில் வந்தும் யுத்தஞ் செய்யாமற் போவேனென்பது புருஷதீரமன்று. கூறிய சபதங்களை நிறைவேற்றும் படியாகச் சத்துருக்களைக் கொல்லுவது தருமங்க ளெல்லாவற்றிலும் மிகுந்த தருமம்; அப்படியே முடித்தால் உங்களுக்குப் பழிபாவ முதலிய குற்றங்களில்லை. என்னுடைய வசனத்தை இருக்கு வேதமாக நம்பு; ஐயா அர்ச்சுனா! என் பகையாளிகளை வென்று நீ ஜெயம் பெறுவையாகில், இவ்வுலகமெல்லா வற்றிற்கும் ஏகசக்கிராதிபதியாக யிருப்பாய். ஒருவேளை இறந்து போவாயாகில் தேவர்கள் முதலிய அரம்பாஸ்திரீகள் எதிர்கொண் டழைக்கும்படியாகப் போய் சுவர்க்க லோகத்தை துரைத்தனம் செய்வாய். நித்திய பதவியாகிய மோட்சமும் உண்டாம்.

ஓ வீபற்சேனும் பெயரையுடைய வேந்தனே! என்று கேசவனானவர் இத்தன்மைய வாகிய உறுதி வசனங்களைச் சொல்லவும், இவைகள் எல்லாவற்றையுங் கேட்ட வாசவன் மகனை விஜயன், கேசவன் மொழியை விசுவாச நேசத்துடன் மகிழ்ந்து மனதுட்கொண்டு, மயக்க மகன்று, சிந்தை தெளிந்து திருமாலை நோக்கி, ஓ வண்டுகள் மொய்க்கும் மதுநிறைந்த வாசத் துளபமாலை யணிந்த வானவர் கோமானே! மலர்மகள் சீமானே! பூதங்கள் தோறும் பொருந்தி யிருக்கின்றவன் சர்வக்ஞனாகிய சிவனென்று புகன்றீர். அச்சிவனாகிய தேவன் எவ்விடத்தில் இருக்கின்றார்? அந்த உண்மையை ஏழையாகிய அடியேனுக்குத் தெரிவிக்க வேண்டுமென்று ஜெய விஜயன் கேட்க, பரந்தாமன் சொல்லுவதாயினன்.

ஓ பார்த்தனாகிய பார்த்திபனே! சத்திய லோகத்திற் றாமரை மலர்மேலிருந்து மன்னுயிர்களைச் சிருஷ்டிக்கும் பிரமனென்பவனும், வைகுந்தத்தில் இருந்து ரட்சிக்கும் விஷ்ணுவானவனும், தேவர் முதலிய யாவரும் வணங்கும்படியாகக் கைலாயத்தில் உமா மஹேஸ்வரியுடனிருந்து சம்ஹாரத் தொழில் செய்யும் வெள்ளை விடையேறிய விமலனும், வாசநிறைந்த கடப்ப மலர்மாலை யணிந்த சண்முகத்தேவும், பலம் பொருந்திய அயிராவதத் தலைவனாகிய தேவேந்திரனும், இவ்வுலகினிறைந்த சராசரப் பொருள்களை தேர்ந்துணர்ந்து அவைகளிற் சஞ்சரித்துக்கொண்டிருப்பவனாகிய சதாசிவனும், வேத புராணங்கள் முதலிய யாவற்றையும் இந்த உலகில் விரித்துரைத் தருளிய வேதவியாசனும், இரவிற் சந்திரனானவனும், பகலிற் சூரியனானவனும், உலகில் சிறந்த உயிரானவனும், மாதவர்களில் சிறந்த நாரதர் முதலிய முனிவரானவனும், திக்குப் பாலக ரானவனும், நவக்கிரகமானவனும், கற்பகத் தருவானவனும், மரங்களில் அரசானவனும், மனிதர்களில் அரசனானவனும், பசுக்களிற் காமதேனுவானவனும், இன்னுமுண்டான அளவற்ற மகிமையோடுங் கூடியவ னெவனோ? அவனே சிவன். அச் சிவனே நான். சிவன் பிரமஸ்வரூபி, நான் அருட்சொரூபி. நாங்களே சிவமும் சத்தியுமாய் நின்று பஞ்ச கிருத்தியத்தினால் ஆட்டிவைப்போம். இதன்றியும், எந்தத் தேசங்களில் எந்தத் திறங்களையுடைய எந்தச் சாதியார் எந்தக் காலத்தில் எந்த உருவமாகப்

பாவனை செய்து எம்மைத் துதித்து வணங்கு வார்களோ; அந்தத் தேசங்களில், அந்தத் திறங்களுடைய அந்த ஜாதியாருக்கு அந்தக் காலத்தில் அந்த உருவத்துடன் அவரவர் களுக்குப் பிரசன்னமாகி, அவர்களுக்கு வேண் டிய மநோபீஷ்டங்களை எல்லாங் கொடுத்து ரட்சிப்போம்.

### அருச்சுனன் விசுவரூபங்கண்டு தரிசித்தல்

அன்றியும், பிர்மா-விஷ்ணு-உருத்திரனு கிய மூவரும், சிருஷ்டி-திதி-சங்கார மென் னும் தொழில் மூன்றையும், சாத்வீகம்-இராச தம்-தாமதமென்னுங் குணம் மூன்றுமுடைத் தாய், அவைகளுக்குள்ளாகியும், அவைகளுக் குப் புறம்பாகியும், வேத முடிவென்னும் வேதாந்தத்தில், முத்திக்கு வித்தாகி முதன்மை பெற நின்ற தனி பரப்பிரமப் பழம்பொருளா யிருக்கின்றவன் யான். இதை நீ உண்மையாக உட்கொள்ளக்கடவை; ஓ உத்தமனாகிய பார்த் தனே! என்று கரிய திருமேனியை யுடைய கண்ணன் சொல்லக் காண்டீபன் அற்புத மடைந்து, ஐயனே! வசுதேவருக்குந் தேவகீ தேவிக்கும் புத்திரராகப் பிறந்து, ஆயர் வீட் டில் வளர்ந்து, வெண்ணெய் பால் முதலிய யாவுமுண்டு, எங்களுக்கு மைத்துனராகி, எங்க ளொப்பந்தமாய் இன்பதுன்பங்களை அனுப வித்து, அழுவாருடன் அழுது, தொழுவா ருடன் தொழுது, நகைப்பாருடன் நகைத்து, பகைப்பாருடன் பகைத்து, இப்படிக்கெல் லாம் விளையாடிக்கொண் டிருந்துவிட்ட நீர், எல்லாம் நான்தான்; என்னைவிடப் பிரபஞ்ச மில்லையென்று சொல்லுவது பெரிய ஆச்சரி யத்தை விளைவிக்கிறது. என்க்காகச் சொல்லிய வார்த்தையோ? அல்லது உண்மையாகிய காரியந்தானோ? அப்படி உண்மையா யிருக்கு மாகில், யாவரும் யாவும் தாமாயிருக்குந் தேவரீ ருடைய திருக்கோல வுருவத்தை அடியேன் கண்டு தெரிசித் துய்யும்படியாகத் தெரி விக்க வேண்டுந் தெய்வ நாயகனே யென்று கேசவற்றோழன் கேட்க, அப்படியே தரிசித் துக் கொள்ளென்று கியானக்கண் கொடுத்து, அர்ச்சுனனுடைய முகத்தைத் தடவி, அப் போதே உலகத்தை ஓரடியாக அந்த உருவம் போல் உயர்ந்து, பாதாளம் வரையிலும் தாழ் ந்து, அகண்டாகண்டப் பேரண்டச் சுவர் வரையிலும் மேலுங்கீழுமாகத் திணிந்து நெருங்கும்படியாக, சுயம்பிரகாச ஒளியாய் விராட சொரூபமாகி நின்றார் சர்வலோக ரட்ச கனாகிய கண்ணன்.

அந்தத் திருக்கோலத்தைத் தனது திவ் விய ஞானவிழியினால் விஜயன் கண்டு, வாய் பேசாமல் மௌனியாய், விற்பனமுடைய அற் புதகுண சீலனாக மயிர்க்குச் செறிய ஆனந்த சமுத்திரத்தில் மூழ்கி, தன்னைத்தானே மறந்து அசைவற்று நின்று விட்டான். அப்போது அளவற்ற தேவர்களும், நான்குவேத பாரா யணராகிய தவமுனிவர்களும் அந்த விராட்டி னுடைய திருவுருவத்தால் ஒரு பக்கமாயிரு ந்து, மழை மாரியும் மலர்மாரியும் வாரிவாரிப் பொழிந்தார்கள். இதரராகிய இருதிறப்படை களின் பகுதியோர்முன்னிருந்தபடியே கிருஷ் ணார்ச்சுனரைப் பார்த்துக் கொண்டிருந்தார்க ளன்றி, மற்ற வேறொன்றுங் கண்டதில்லை. இப்பால், வாசுதேவன் தனது நிலையெல்லாம் அர்ச்சுனன் செவ்வையா யறிந்துக் கொண்ட தன்மையைக் கண்டு, தான் கொண்ட விராட் டுருவத்தை மாற்றி முன்னின்ற நிலைப்படிக்குச் சாரதியா யிருந்து, வாசவ குமாரனுடைய தெளிவாகிய பிரகாசம் பெற்ற முகத்தைப் பார்த்து, அர்ச்சுனா! முற்றத்துறந்த சித்தத் தவர்களும் அறியப்படாத என்னிலையை நீ யறிந்துக் கொண்டாய். உன்னைப்போல் எவ ருணர்ந்தார்கள்? உத்தமனே! மலையினுயரம் மலைக்குத் தெரியவில்லை. ஆகையால் நீ கண்டு களித்த தோற்றமாகிய வெல்லாவற்றையும் நானறியும்படியாகச் சொல்லக் கடவை என்று நளினநாபனாகிய நாராயணன் கேட்க, நரன் மகா சந்தோஷத்தோடு பணிந் தெழுந்து சொல்லலுற்றான்.

சுவாமி! பிர்மாண்ட கோளகையைக் கிழி த்து, அதற்கு மேற்பட்டுப் பேரொளியாகத் தோன்றி, சிரம் - கரம் - உரம் - கால் - மேல்- இடை-தொடை யென்பது ஒன்றுந் தெரியா மல் உலகமெல்லாஞ் சகலமா யுள்ளதுபோ லிருந்த உருவத்தை நானெப்படி பகுத்துச் சொல்லுவேன் ஓ மாதவனே என்று இரண்டு பாதங்களையுந் தன் இருகரத்தாற் றழுவி, முடித் தலையைத் திருவடிக் கடியிற் சாய்த்து, இரு கண்களும் ஆற்றுநீரி னூற்றுப்போற் சுரந்து பெருக்கெடுத்தோட, திடகாத்திரமா கிய தேகஞ் சிலிர்க்க, மொழி குழற, நா நடுங் கத் தான் கண்ட காக்ஷியைத் தாக்ஷியிற் சொல் லத் துணிந்து, ஓ என் ஆண்டவனாகிய அற் புதனே! சரணம்; ஓ தாண்டவனாகிய தற்

பரனே! சரணம்; காண்டவமெரித்த கண்ணனே! சரணம்; பாண்டவர்கிசைந்த பாகனே! சரணம். ஓ சுவாமி! மாதவம் பெற்ற வேதவேதியராகிய முனிசிரேஷ்டர்கள் சூழ்ந்து வணங்கும்படியா யிருந்த பிர்ம்மதேவனைச் சரஸ்வதி முதலிய பேர்களுடன் உமது தேகத்திலிருக்கக் கண்டேன். சங்கு-சக்கரம்-கதை-கட்கம்-கோதண்டம் என்னும் பஞ்சாயுதங்களுடன் மகாலட்சுமியும் பொருந்த கவுஸ்துவாபரணத்தோடு துளபமாலையுடன் பரவாசுதேவனாகிய உம்மையும் ஒரு புறத்தில் வேறாக மருவக்கண்டேன். குளிர்ந்த பிறையணிந்த உருத்திரமூர்த்தியை நாராயணராகிய நாயகியுடன், தேவகணங்கள்-பூதகணங்கள் முதலியவைகள் சூழத் தேவர் திருமேனியிற் பொருந்தியிருக்கக் கண்டேன். பிரகாசமுடைத்தாய் மேலோங்கிய வேல்தாங்கிய பெருமாளாகிய சண்முகக் கடவுளை, வள்ளி தெய்வயானையுடன் தமதாகத்தில் இன்புற்றமர்ந்திருந்த இஷ்டமாகிய இடமுங் கண்டேன். தேவேந்திரனை முப்பத்து மூக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளுஞ் சூழ வர, அவன் பத்தினியாகிய இந்திராணியுடனும், மற்ற தேவமாதருடனும், இருடிபத்தினிகளுடனுந் தேவரீருடைய திருவுருவிற் றிகழக்கண்டேன். 4-வேதம், 6-சாஸ்திரம், 32-உபனிடதம், பதினெண் புராணம், இருபத்தெட்டு ஆகம முதலாகிய எல்லாவற்றையுங் கண்ணினாற் கண்டேன். பகைவராயிருந் தழிந்து மடிந்த அரக்கர் முதலிய அசுரர்களையுங் கண்டேன். சரம்-அசரம் என்னும் எல்லாப் பொருள்களையுங் கண்டேன். முத்தொழிலும் - முக்குணமும் - மூவுருவும் - முக்காலமும்-வாரம்-திதி-மதி-வருட முதலியவும், அவைகளின் தொழிற்குணங்களுங் கண்ணுற்றுத் தெளிந்தேன்.

இஃதல்லாமலும், இன்னுமோர் ஆச்சரியங் கண்டேன். ஓ இறைவனே! அஃதென்னவெனில், நாகக்கொடியோனாகிய துரியோதனன் முதலிய யாவரையும், அநேகம் அக்ரோணி சேனைகளையும், பாண்டவர்களுக்குச் சகாயமாகிப் படைத்துணை வந்த மன்னவர் முதலிய பெருஞ்சேனைகளையும், தேவரீருடைய திருவாயால் விழுங்கக் கண்டேன். இந்த எழுகடலையும் எழுகடலுக்குமுதலாகிய பெரும்புறக் கடலையும் வளைந்துகொண் டிருக்கும் அநேகங்கோடி கரங்களும், அநேகங்கோடி சிரங்களும், அநேகங்கோடி கண்களும், அநேகங்கோடி கால்களும், அநேகங்கோடி செய்கைகளும், அநேகங்கோடி திருமுகமண்டலங்களும் பிரகாசிக்கும்படியாகக் கண்டேன். தேவரீருடைய பூரணவுருவத்தைப் பார்ப்பதற்கு அனேகங்கோடி கண்களைப் பெறாமற் போயினேன். தேவரீருடைய திருவடிகளைத் தொழுவதற்கு அனேகங்கோடி கரங்களை அடையாமற் போயினேன். தேவரீருடைய திருநாமங்களைத் துதிப்பதற்கு அநேகங்கோடி நாக்களைப் படைக்காமற் போயினேன். இனி நான் சொல்லத்தக்க தொன்றுமில்லை என்னாண்டவனே யென்று விழுந்து பணிந்தான் ஜயவீர பராக்கிரமசாலியாகிய விஜய காண்டீபன். இப்படியாகச் சொல்லிய அருச்சுனனைக் கண்ணன் வாரி எடுத்தணைத்துக் கிருபையளித்து, நீ பிழைக்கும்படியாய் இவ்விடத்திற் கண்ணுறக் கண்ட அதிசயம் யாவற்றையும் எவர்களிடத்திலும் சொல்லாதே. கடைசியில் தருமராஜன் முதலிய நீங்கள் ஐவரும் பிழைத்திருக்கப் போகிறவர்கள். இதரமானவர்களெல்லாரும் அழிந்து போகிறவர்கள். இதை உன் மனதில் உறுதியாக வைத்துக்கொள்; அறியாமையாகிய இருளை நீக்கி விட்டுவிடு. ஓ மேலாகிய வல்லபத்தை யுடைய விஜயனே! நாமிருவரும் இவ்வுலகிலுள்ள எல்லாரையுங் கும்புகூட்டி மடிப்பதற்கே பிறந்திருக்கின்றோம். நீ வேறாகவே எண்ணிக் கலங்குவையாகில், நாம் வந்த காரியம் தாறுமாறாகும். ஆகையால், எந்தவேலை எப்படி யிருந்தாலும் நாம் வந்த வேலையை முடித்துச் சுகந்தமாலையை தரித்து வெற்றி பெறும்படியாகிய விதத்தை விதியாய் தேடிக்கொள்ளவேண்டும். இன்னும் உனக்கு மயக்க மிருக்குமாகில், இன்னும் உனது மனந்தேறித் தெளியும்படியாகச் சொல்லுகிறேன்.

ஓ அருச்சுனா! எல்லா யிடங்களும், அவ்விடங்களி லிருக்கின்ற எல்லாப் பொருள்களும் நாமேயானதன்றி, வேதமும் அவ்வேதத்தின் அந்தமுங்கூட நாமாகி யிருக்கின்றோம். உன்னை விட்டு நான் பிரிய மாட்டேன். என்னை விட்டு நீ பிரியமாட்டாய். அப்படியல்லவென்று பிரிந்தாலும் வேறுபடோம். அதெப்படியென்னில், முன்னொரு முறையில் நாமும் நாராயணனுமாகப் பிறந்து பூமிபாரம் போக்கினோம். இன்னொரு பிறப்பில் இராம லட்சுமணனென்னும் பேர்பெற்றுச்

சத்திய முதலிய நித்தியவிரத தவங்களை நிலை நிறுத்தினோம். இந்தப் பிறப்பில் கிருஷ்ணார்ச்சுனராக இவ்விடத்தில் நிற்கின்றோம். ஆகையால், உன்னுடைய மயக்கத்தையும், அவர்கள்பேரிற்கொண்ட நேசத்தையும், ஆசாரியர்மீதுள்ள விசுவாசத்தையும், உன்னை மயக்கிய மோக மோசத்தையும் விட்டொழித்தாவி டென்று சொல்லத் தன்னிலேக ளெல்லாவற்றையுஞ் சொல்லித் தத்துவந் தெரிவித்த சாமளவர்ணனாகிய சுவாமியாருடைய திருவாய்மொழி கேட்டுத் தெளிவுற்றுத் தேறி, ஓ தர்மம்-அர்த்தம்-காமம் என்னும் அறம்பொருளின்பத்தினது அனுபவத்தை யுணர்த்தி, அப்பால் தேவரீருடைய திருவடியைச்சேரும் பதத்தின் பயனையும் அடியேனுக் குபதேசித்தருளிய ஆரியனே யென்று செந்தாமரை மலரையொத்த திருவடியிற் றொழுது, அடியேன் விவேகசூனியத்தாற் றெரியாமற்சொல்லிய சொற்களிற் சொற்குற்றம் - பொருட்குற்றம்-மரியாதைக்குற்றம் - மானக்குற்றம் - குலக்குற்றம்-குணக்குற்றம் இவை நீங்குகளேதாகிலும் இருக்குமாகில், அவைகளை யெல்லாம் க்ஷமிக்கவேண்டும். ஓ அச்சுதனே! ஓ அரி வாசுதேவனே! ஓ ஆரணனே! ஓ நாரணனே என்று அடிமலர் வணங்கி யுத்தஞ் செய்வதற்கு வேண்டிய சருவிகளெல்லாம் ஏற்படுத்திக்கொண்டு, இதோ யாவரையும் முடிப்பேனென்று வீரப்பிரதாப தீரத்துடன் நின்றான் விஜய பராக்கிரமனாகிய அருச்சுன னென்று வைசம்பாயனர் சொல்லிக்கொண்டு வந்தார்.

இந்தச் சங்கதியைக் கேட்ட ஜெனமேஜெய மகாராஜன் மிகுந்த விக்ஞான முடைத்தாய்க் குரு முகூர்த்தங்கொண் டெழுந்தருளிய வைசம்பாயன முனிவரை வணங்கி, ஓ மாதவரே! இந்தப் பகவத்கீதை உபதேசித்து கடவுள் நிச்சயங்காட்டிய சங்கதி, விஜயனுக்கும் விஷ்ணுவுக்கும் நடந்த தேவரகசியம் என்று திருவாய் மலர்ந்தீர். இப்போது தேவரீர் தெரிந்து அடியேனுக்குச் சொல்லும்விதமெப்படியென்றுகேட்க, அம்முனிவர் மிகுந்த புன்னகை யுடையவராய், ஓ புத்திசாலியாகிய புரவலனே! ஸ்ரீ வேதவியாசர் சகல தேவரகசியங்களும், அதிசயமாக விருந்து தெரிந்து கொள்ளும்படியாகச் சஞ்சயனுக்கு அனுக்கிரகம் செய்தருளிய வண்ணம் அந்தச் சஞ்சயன் அறிந்து, திரிதராஷ்டிர மகாராஜனுக்குச் சொல்லியபடியால், ஓ சிவந்த வேல் தாங்கிய தீரனே! அதை அறிந்து உமக்கு யாம் சொன்னோமென்று வைசம்பாயனர் சொல்ல, மனம் களிகொண்ட ஜெனமேஜெய மகாராஜன் வபுஷ்டா தேவியுடன் மகிழ்ந்து, வைசம்பாயனரைப் புகழ்ந்து, பற்பல புட்பங்களால் அர்ச்சனை புரிந்து, தொழுத்திப் போற்றி, சுவாமி! மேல் நடந்த விர்த்தாந்தங்களையும் சங்கோபாங்கமாகத் தேவரீர் விளம்பவேண்டுமென்று வேண்ட, வைசம்பாயனர் மனமிக மகிழ்ந்து, மேல் நடந்த காரியங்களை விளம்புவதாயினர்.

### பாண்டவர் கண்ணன் முன்னிலையில் வீஷ்மரையுந் துரோணரையும் கண்டு பேசுதல்

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! தரும புத்திர மகாராஜன் முதலிய பாண்டவர்களும், துரியோதன மகாராஜன் முதலிய கௌரவர்களும், சேனைகணிறைந்து நிற்கும் யுத்தபூமி மத்தியில்வந்து நின்று, தங்கள் தங்கள் தளங்களை இமையா நாட்டத்தினராய் முற்றிலும் சுற்றிப் பார்த்துக்கொண் டிருக்கையில், பாண்டவராயினோர், வீஷ்மாச்சாரியார்-துரோணாச்சாரியார்-கிருபாச்சாரியார்-அசுவத்தாமர் முதலிய காலாந்த ருத்திரரை யொத்த கைக்காரர்களெல்லாங் கடுங்கோபங்கொண்டு, கையில் ஆயுதம் பிடித்துக் கண் சிவந்து தளகர்த்தர்களாகத் தூசிப் படையில் நிற்கின்ற தீரங்களைப் பார்த்து, அந்தோ! எந்தவிதத்தில் இவர்கள்பேற் கையெடுப்பது? இவர்களை எந்தக் காலத்தில் ஜெயிக்கப் போகிறோம்? நம்முடைய கடுஞ்சபதங்களை எல்லாம் எவ்வாறு நிறைவேற்ற வல்லோம்? எப்படியாகச் சத்துருக்களை யெல்லாம் வெல்லுவோம்? என்று துக்கமுடையவர்களாய், மறுபடியும் ஒருவாறு மனதைத் தேற்றிக்கொண்டு, நாம் அனைவரும் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியி னிடத்திற் சொல்லிப் பார்ப்போம். அவரிதற்குத் தகுந்த யுத்தி சொல்லுவார். என்று நினைத்தவர்களாய்த் தேரைச் செலுத்திக் கொண்டு போய் அக்கிருஷ்ண பகவானும் அர்ச்சுனனும் கலந்து பேசிக் கொண்டிருக்குஞ் சமயத்தைக் கண்டு களிகொண்டு தண்டஞ் சமர்ப்பித்தபோது, மிகுந்த உபசாரத்துடனே அவருமிவர்கட்கு வந்தனை செய்து என்ன காரியமாய் வந்தீர்கள் சொல்லுங்க ளென்று கேட்க, நாங்கள் எண்ணிவந்த காரியம் இன்னதென்று தரும ராஜன் சொல்ல, தயாநிதி கேட்டு சந்தோ

ஷித்து, நீங்கள் யோசித்துவந்தது நல்ல காரியம். இப்போது நமக்கென்ன பயமா? நேரே வீஷ்மருந் துரோணரும் இருக்கு மிடத்திற் சென்று ருசுவினின்று கண்டுபேசி, அவரவர்களுடைய மனக்கருத்தை அறிந்துக் கொள்ளுவோம் வாருங்களென்று அனந்த சயனன் சொல்ல; நல்லதென்று பாண்டவரியாவரும் பகவானோடு துரியோதனனுடைய படையிற் புகுந்து, சேனைகளுக்குச் சிரமாய்ச் சேனுதிபதியாக வஸ்திரம் பெற்று நிற்கின்ற வீஷ்மாச்சாரியரைக் கண்டு தெண்டனிட்டு, அவர் ஆசீர்வாதங் கொண்டு சிந்தை நொந்து முகம் வாடி நிற்க, அந்தப் பாண்டவர்களை வீஷ்மர் உற்றுநோக்கி, நீங்கள் இப்போது இவ்விடத்திற்கு வந்த காரியமென்ன சொல்லுங்கள் என்று காங்கேயன் கேட்க, கண்ணன் சொல்லுகின்றார்.

ஓ கெடிவஸ்தலாதிபதியே! கேளும்; திரிதராஷ்டிர மகாராஜனுக்கும், பாண்டு மகாராஜனுக்கும் சொந்தமாகிய பெரிய தந்தையாகி, தருமனுதியர்களுக்குந் துரியோதனுதியர்களுக்குங் கேட்டை நீக்கும் பாட்டனாராகும் வீஷ்மராகிய நீர்; இருதிறப்புத்திரர்களும்ஒரு திறப் புத்திரராகப் பார்த்துப் பக்ஷம் வைத்து நடத்துகின்ற நடுவு நிலைமையை விடுத்து, துரியோதனுதியர் பட்சத்திற்சேர்ந்து, அவர்களுக்குச் சேனுதிபதியாய் முனை முகத்தினின்று பாண்டவர்களைக் கொன்று துரியோதனனுக்குப் பட்டங்கட்டி வைக்கக் கங்கணங் கட்டிக்கொண்டு நிற்கின்றீர். பாண்டவர்களிடத்திலிருக்கும் நியாயம்-அநியாயம்-பாவம்-புண்ணியம் - சத்தியம் - அசத்தியம் இவைகள் யாவும் உமக்கு நன்றாய்த் தெரிந்திருக்க, பதின்மூன்று வருடம் வனவாசஞ் செய்து கஷ்டப்பட்டு வந்திருக்கும் பாண்டவர்களிடத்தில், உண்மைக் குத்தரமாகப் பக்ஷம் வைக்காமற் போவீராகில், ஐயா! உங்களை எந்த காலத்தில் வெல்லுவது? இருக்கிற சேனைகள் முதலிய துரியோதனுதியர்களை யெந்தக் காலத்திற் கொல்லுவது? எந்தக் காலத்திற் சபதம் நிறைவேற்றிக்கொள்ளுவது? எந்தக்காலத்தில் உங்கள் வீட்டு நாட்டுப்பெண் விரித்ததலை முடிக்கிறது? இது காரியங்களை எவ்வளவும் எண்ணிப் பார்க்காமல் எதிர்த்து யுத்தம் பண்ணும்படியாய் நீர்வந்தபோதிலும், உம்முடனே எப்படியெதிர்த்து யுத்தஞ் செய்வது? உம்மை எப்படிக் கொல்லுவது? என்று இப்பாண்டவர்கள் மெத்தவும் பயபக்தியாய்ப் பக்ஷத்துடன் தாக்ஷண்யம் எண்ணிப் பார்க்கின்றார்கள். நான் எத்தனை சொன்னாலும், உமது பேரில் வைத்திருக்கும் அன்பினால், என் சொல்லையுந் தள்ளித் தங்கள் வில்லையுங் கிள்ளி விசனப்படுகிறார்கள். அறியாதவர்களானாலுஞ் சொந்த பந்தம் நீங்காம லிருக்கின்றார்கள். எல்லாம் அறிந்த பெரியோராகிய நீரே முந்தி வந்து போர்புரியத் துணிவுகொண்டீர். ஆகையால், இதற்கென்ன யுத்தி சொல்லுகிறீர்? பாண்டவர்களோ மறுபடியும் வனத்திற்குப் போய் விடுகிறோமென்று மனஸ்தாப மடைந்து வருந்தினார்கள். உம்மைக் கண்டு வார்த்தையாடிய பிற்பாடு உத்தரவு சொல்லுகிறேனென்று அழைத்துவந்தேன். இதோ உமது பேரப்பிள்ளைகள் அவர்களுக்கென்ன சொல்ல வேண்டுமோ அதைச் சொல்லி யனுப்புமென்றுக் கபட நாடக சூத்திரதாரியாகிய கண்ணன் சொல்லி நின்றார்.

இந்த வசனங்களை யெல்லாங் கேட்ட வீஷ்மர் புன்னகையுடையவராய், ஓ ஜெகநாதனாகிய ஸ்ரீ கிருஷ்ணதேவனே! வசிஷ்டர் வாக்கினால் பிரமரிஷியாக வேண்டுமென்னும் வாக்கியம்போல், என் வாக்கினால் இனி எய்தவேண்டும் கடமையை நேமித்துக்கொள்ளுவதற்காகவா இவ்வளவு தூரம் நடந்து வந்தீர்களோ அறிகிலேன். ஓ நாதனே! நல்ல பாக்கியம், இப்பவும் பாண்டவர் சத்தியவான்கள் என்பதற்குச் சந்தேகமில்லை. தர்மம் அவர்களிடத்தி லிருப்பதினால் எப்படியும் ஜெயம் பெறுகின்றார்கள். அதர்மம் அழியுமென்று யாவருஞ் சொல்லுவார்கள். அந்த விவகாரம் அப்படி யிருக்க, எனக்கு இந்த இருதிறத்தவரும் பட்சமுடைய பேரப் பிள்ளைகளென்று ஒரு தரமல்ல, பத்து தரமாகச் சொல்மாட்டுவேன். ஆனால், துர்ச்சனுள் சற்சனுமென்று யோசிக்க வேண்டாமோவென்று கேட்பீராகில், ஞாயமே? கைவிரல் கண்ணிற் பட்டால் விரலைக் கொய்தெறிவார்களா? கெட்டவர்களானாலும், நல்லவர்களானாலும், நம் பிள்ளைகளென்கிற வாச்சல்லியம் விட்டுப் போகுமா? மேலும், நான் இந்த இருதிறப் பிள்ளைகளுக்குந் துணையாகாம லிருக்கவேண்டியதே: அப்படி யிருக்காமல் துரியோதனனுக்குச் சேனுதிபதியா யிருப்பானேனென்று கேட்டால், அதற்குக் காரணஞ் சொல்லுகின்றேன் கேளும்: ஓ கண்ணனே! எங்கள் சிறிய

தாயாராகிய பரிமளகந்தியின் பிள்ளை விசித்ர வீரியனுக்குக் கலியாணஞ் செய்ய வேண்டிக் காசிராஜனுடைய மூன்று பெண்களைச் சுயம் வரத்திற் கவர்ந்து கொண்டுவந்து விவாகம் நடத்தியபோது, மூத்த பெண்ணாகிய அம்பா ளென்பவள், சாலுவராஜனிடத்தில் இஷ்டம் வைத்ததாகச் சொல்லி என்னை விட்டு நீங்கிப் போய், அவன் விலக்கிவிட்டானென மறுபடி யும் என்னிடத்தில் வந்து தம்பிக்கு விவாகம் பண்ணிக்கொள்ளுமென்று வேண்டிக்கொண் டாள். நான் அவளை மறுத்து விட்டேன். அப்போது தன்னாலாகாத காரியத்தைப் பேத தந்திரத்தாற் சாதிக்கவேண்டும் என்னும் யுக் தியைக்கொண்டு என்னாசிரியராகிய பரசுராம ரிடத்திற் போய்ச் சரண்புகுந்து, அவரை யழைத்துக்கொண்டு வந்து பகையாக விடுத் தாள். அவரென்னால் இளைத்துப்போய்விட வே, அவளும் இளைத்துப் போய்க் காளிகா தேவியை நோக்கித் தவமிழைத்து பாஞ்சால ராஜனுடைய பத்தினி கர்ப்பத்தில் என்னைக் கொல்லக்கூடிய பகையாளியாகிய சிகண்டி யென்பவனாய்ப் பிறந்து, இந்தப் பாண்டவர் களுக்கு இப்போது படைத்துணையாகவும் வந்திருக்கின்றமையால், நான் அவன் நிற்கும் படைக்கு எதிர்ப்படையில் விரோதமாய் நிற் கும் படியாய் நேரிட்டது.

ஆகையால், ஓ ஐயனே! இனி நான் மெத்த நாள் இருக்கமாட்டேன். முதனாள் யுத் தமுதற் பத்தா நாள் யுத்தம் வரைக்கும் நடத் துவேன். அந்த பத்தா நாள் எனக்குப் பகை யாய் வந்து பிறந்திருக்கும் சிகண்டி என்னுந் தீரபராக்கிரமியாகிய அம்பை யென்பவளை எனக்கெதிரிற் கொண்டு வந்தால், இந்தச் சென்மத்தில் ஆணாயிருந்த போதிலும் முற் சென்மத்திற் பெண்ணானபடியால் நானவள் பேரிற் கையெடுக்க மாட்டேன். அந்தக் காலத் தில் எனக்கு அன்புள்ள பேரனாகிய இந்த அர்ச்சுனன் பாணத்தால் மூர்ச்சை யடைந்து விழுவேன். அப்பாற் சரசயனத்திலிருந்து தேவரீருடைய திருவிளையாட்டை யெல்லாம் பார்த்து இராச தர்மங்களை நிலைநிறுத்தி, ஓ செந்தாமரைக் கண்ணனே உன்னுடைய திரு வடி யடைவேனென்று சொல்லிய வீஷ்மர் வாக்கியத்தை, ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி முதலிய பாண்டவர்களுங் கேட்டு, சபத நிறைவேறி பட்டாபிஷேகம் பெற்றவர்களைப்போல் மகிழ்ந்து நமஸ்கரித்துச் செலவு பெற்றுகொண்டு, துரோணாச்சாரியாரிடத்திற் சென்று, அவரைக் கண்டு தெண்டனிட்டுத் தொண்டரைப் போல் நிற்கவும், அவர் அவர்களுக்கு ஆசீர்வதித்து, ஏன் பாண்டவர்களே க்ஷேமமா யிருக்கின்றீர் களா? இப்போது இவ்விடத்தில் என்னை நாடி வந்ததற்குக் காரணம் என்ன சொல்லுங்கள் என்று துரோணாச்சாரியார் கேட்க, ஸ்ரீ கிரு ஷ்ணபகவான் சொல்கின்றார். ஐயா துரோ ணாச்சாரியரே! நாடுநகர முதலிய யெல்லாவற் றையு மிழந்து நாணம் மேலிட்டுக் கானகந் திரிந்து நலிந்து வந்த பாண்டவர்களிடத் தில் நீர் நல்லருள் நாட்டாமல், துரியோதன ராசனிடத்தில் அன்பு கொண்டு, பாண்டவர் களோடு யுத்தஞ் செய்யும்படியாய்ப் பகை மேற்கொண்டு வந்திருக்கின்றீரே: பாரமார்த் தியராகிய நீர் உபயவாதிகளுக்கும் ஆசாரிய ராக யிருந்தும், இவ்விடத்தில் நடந்திருக் கும் நியாயா நியாயங்களெல்லாம் நன்றாய் தெரிந்திருந்தும், பாவபுண்ணியம் எண்ணிப் பாராமல் அந்தப் பக்ஷத்தின் நின்றபடியால், தனுர்வேத பாண்டித்ய முடைய உம்மைச் செயிக்க யாவராலும் முடியாதே: அப்படி யிருந்தால் இந்தப் பாண்டவர்கள் பிழைப் பது எப்படி? அவர்கள் கூறிய சபதம் எவ்விதத்தில் நிறைவேறும்? ஓ குண மேரு வாகிய குருவே இதற்கு நடக்க வேண் டிய காரியங்களை தேவர் கட்டளையிடவேண் டியதென்று கேட்கவந்திருக்கின்றார்கள் அவர் களுக்கு நீர் சொல்லவேண்டிய உத்தரஞ் சொல்லி அனுப்புமென்று உலகமுண்டோன் உரைத்தருளினர்.

அந்த மொழியைக் கேட்டலுந் துரோ ணாச்சாரியர் அகமகிழ்ந்து சொல்லுகிறார். ஐயா அரிவாசுதேவனே! கேளும்: என்போ லொத்த வீரர்கள் எத்தனை கோடிபேர்சேர்ந்து வந்தாலும், இசையைக் கொண்ட விஜய னிடத்திற் பசபசவென்று விழித்து வசையை பெறுவார்க ளல்லது, திசைகள் மகிழ செயம் பெறமாட்டார்கள். ஒருவர் செயலால் ஒன்று நடக்கமாட்டாது. உலகளந்தோராகிய உன் செயலன்றி வேறில்லை. ஓ உத்தமனே! அவ்வ வர்கள் சத்தியமே நித்தியமாகயிருந்து வெற் றியைத்தரும். மேலும் இந்த குருகுலக்குமா ரர்கள் இருதிறவரும் என் கண்மணிபோன்ற வர்கள். எனக்கு இவர்களென்றும் அவர்கள் என்றும் பேதமில்லை. இப்படியிருக்க, நான் துரியோதனராஜ னிடத்திற் சேர்ந்திருப்ப

னேன் என்று தேவரீர் கேட்பீராகில், அதற்கு தகுந்த காரணஞ்சொல்லுகிறேன் கேளும். ஓ காசாம்பூ வண்ணனே! எந்தனை செயிக்கும்படியாகத் துஷ்டத்தூய்மன் என்னும் புத்திரனை பெற்று வைத்துக்கொண்டிருக்கின்றான் பாஞ்சாலன். அந்தத் துஷ்டத்தூய்மன் பாண்டவர்களுக்கு மைத்துனனாகியும் உபசேனாதிபதியாகியும் எதிர்கட்சியி லிருக்கின்றமையால், நான் இவ்விடத்தி னிற்கும்படியாய் நேரிட்டது. அப்படி நின்றபோதிலும் பதினைந்தாநாள் யுத்த நடந்துவரு மத்தியான காலத்தில், இம்மை மறுமைப்பய னிரண்டும்பெறவிருக்கின்ற தருமபுத்திர மகாராஜனுடைய வாக்கில் ஒரு வாக்கிய முண்டாகப்போகிறது. அவ்வாக்கினைக் கேட்பேனாகில், உடனே புத்திரசோபத்தில் மெத்தவருந்தி, சமரசயோகத்தி லிருந்து தாரணை செய்து தனியன் ஆவேன். அந்தக்காலத்தில் உங்களுக்குப் பந்துவாய் வந்திருக்கின்ற துஷ்டத்தூய்மன் தான் பிறந்திருக்குஞ் சத்துருத்தனத்தை நிறைவேற்றிக் கொள்ளுவான். காலஹேது இப்படி யிருக்கிறதாகையால், யாது குறித்தும் இப்போது யோசிப்பதிற் பிரயோசனமில்லை. நீங்கள் சகல சந்தோஷ சாம்பிராச்சியங்களையுந் தாட்சியில்லாமற் பெற்று வாழக்கடவீர்கள் என்று தன்னு காலநிர்ணயமுஞ் சொல்லி ஆசீர்வதித் தனுப்பினார் திரிமூர்த்திகளுங் கொண்டாடத் தகுந்த துரோணாச்சாரியார்.

## உயுத்த வாரம்பம்

அப்பால், கிருஷ்ணமூர்த்தியும் பாண்டவர்களும் அத் துரோணாச்சாரி யிடத்தினின்றும் விடைபெற்றுக்கொண்டு, தங்களுடைய சேனை காட்டில் வந்து கலந்தார்கள். அப்போது பாண்டவர்களும் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியும் வந்து பேசிப்போனார்களென்று துரியோதனமகாராஜன் கேள்விப்பட்டு, தனதிஷ்டராகிய கர்னராதியரோடுங் கூடிவந்து வீஷ்மாச்சாரியரையுந் துரோணாச்சாரியரையும் வணங்கி என்ன சமாசாரமென்று கேட்டான். அப்பா துரியோதனா! பின்னை வேறொன்றுமில்லை. பாண்டவர்கள் வந்து பரிதாபப்பட்டுச் சகல விபகாரமுந்தெரிந்த பெரியோராகிய நீங்களே முனைமுகத்தில் வந்துநின்றால் நாங்கள் எப்படி பிழைப்போமென்று கேட்டார்கள். லோகத்தில் வாழ்வாரைப்போலச் சாவார். சாவாரைப்போல வாழ்வார். ஆகையால், எங்கள் பிராணனென்ன கல்லா? இரும்பா? ஒன்றுமில்லை; பத்துப்பதினைந்து நாளையில் செத்துப்போகத்தக்க நாங்கள் வெற்றிப்பெறுவோமென்பதெப்படி? தெய்வசித்த மெப்படியோ அப்படி முடியுமென்று சொல்லி யனுப்பலாமென்று சொல்ல, அதுகேட்ட துஷ்டசதுஷ்டாள் நால்வரும் மற்ற யாவரும் பாண்டவர்களுடைய பெருமையையுஞ் சிறுமையையுங் குறித்துப் பற்பலவிதமாய் பேசிக்கொண்டிருந்தார்கள். இவர்களிற் சில புத்திமான்கள் என்ன யோசித்தார்கள் என்றால், பாண்டவர்களுக்கு மிஞ்சிய பலசாலிகளில்லை; அதுவல்லாமல் ஆண்டவர் துணையுமிருக்கின்றது. இருந்தபோதிலும் பாட்டன் ஆசாரியர் இவர்களெல்லாம் வேண்டிய அனேகம் முதியோராகையால் வந்து வணங்கி, தாங்களடங்கி, அவர்களுடைய ஆசீர்வசனமும் யுத்தஞ்செய்வதற்கு உத்தரவு பெற்றுக்கொண்டுபோக வந்தார்களென்று பேசிக்கொண்டார்கள்.

இப்படியிருக்க, உபயவாதிகளின் தளங்களிலிருந்து சகலவித பேரோசையும் வீரப்பிரதாபக்கூச்சலும் வெகுளியு மேற்கொண்டு அட்டகாசஞ் செய்தார்கள். அந்த விற்குணத்தொனி குமுகுமுவென்று அஷ்டதிக்குகளுஞ் செவிடுபடும்படியாய் முழங்கிய விதமானது செவிடுபடும்படியாய்... 

எப்படியிருந்ததென்றால், ஓ பிரபஞ்சத்தவர்களே! பாண்டவர்களுந் துரியோதனாதியர்களும், பதினெட்டக்குரோணி சேனைகளோடு பதினெட்டுநாள் சண்டைசெய்யப் போகிறார்களென்று சமாசாரந் தெரிவிப்பதுபோ லிருந்தது. மேலும் இந்த குருக்ஷேத்திர நிறைந்த சேனைகளெல்லாம் மூன்னந் திருவிக்கிரம அவதாரத்தில் திருமால் வயிற்றிற் பொருந்தியிருந்த சராசரங்களைப் போலும் இருந்தன. அன்றியும் இவ்வுலகத்தைச் சுமக்கும் பூமிதேவியானவள், ஐயோ! பூமிபாரம் பொறுக்கமாட்டேனென்று நான் முறையிட்டுக்கொண்டதற்கா சுவாமி இந்த உபசாரஞ் செய்தார்? முதல்வராகிய இறைவர் இந்தச் சேனைகளையெல்லாம் ஒருதலைப்பாரமாயோரிடத்திற்சேர்த்து என் கழுத்தையொடிக்கலாமாவென்று வருந்தினாள். அல்லாமலும், பாதாளத்திலிருக்கும் ஆதிசேடன் ஆயிரம் பணமுடும் வருந்திப் பரிக்கவும், சூரியசந்திரர் முதலிய கோள்களெல்லாந் தங்கள் தங்கள் போக்கு வரவுக்கு வழியில்லாமல் நாம் நடக்குங் கதியாகிய நாள் குறையும்படி யாச்சுதே யென்று நடுங்கவும், திக்குப்பாலகர் முதலாகிய

திசையானைகளொடுங்கவும், தேவர் முதலிய யாவரும் ஏங்கவும், அஷ்ட குலகிரிகள் எட்டு திக்கிலுந் தங்கள் தங்கள் தலையை முட்டுக் கொடுத்து தாங்கவும், பாரைச்சூழ்ந்த கடல் பொங்கவும், பகைவர்கள் குடற்குலுங்கவும் இருபுயங்களும் பூரித்துச் சேனாநாயகர் பராக்கிரமிக்க, இருதிறப்படைகளுந் திரண்டு சமுத்திரம் புரண்டு வந்ததைப்போல் நிறைந்து நின்று ஆர்ப்பரித்தார்கள்.

இப்பால் பாண்டவச் சேனாதிபதியாகிய சுவேதனன், தங்களுடைய ஏழக்குரோணி சேனைகளையும் பிரித்து வகைத்தர மேற்படுத்தி ஐந்துதலை நாகம்போல் யூகம் வகுத்துச் சகல ஜெயமுந் தங்களுக்கு வரும்படியாய் வீரமாகாளி முதலிய ஜெயலட்சுமிகளைப் பூசித்து வீரத்துடன் எதிர்க்கவும்; கௌரவச் சேனாதிபதியாகிய வீஷ்மாச்சாரியர் தங்களுடைய சேனைகளை கருடயூகமாகக்கட்டி தானுந் தூசிப்படையில் வந்து நின்றார். அந்த சமயத்தில் துரியோதன மகாராஜனும் தருமபுத்திர மகாராஜனுமாகிய இவ்விரண்டுபேரும் முனைமுகத்தில் வந்துநின்று, ஒருவரை ஒருவர் பார்த்து தங்களுக்குத் தாங்களே விளைத்துக் கொள்ள வந்த ஊழ்வினையை நினைத்து, தங்களுடைய கரங்களிற் பிடித்திருக்குங் கொடியைத் தூக்கித் தாழ்த்தினார்கள். அப்படிக்கு தாழ்த்தியவுடனே, பிராணபிமானம்-தேகாபிமானம் - லோகாபிமானம்-மானாபிமானம் என்பனவற்றையெல்லாம் விடுத்து, இரண்டு கடல் திரண்டு புரண்டுவந்து கலந்ததைப்போற் தொந்த யுத்தஞ்செய்தார்கள். ஒரு தளத்தில் முரசக்கொடியும், மற்றொரு தளத்தில் நாகக் கொடியும் படபடாக் காரங்களுடன் ஆகாய வீதி அதிரும்படியாய் பறக்கவும், இருபடைகளிலும் பேரி-பாங்கா-முரசு முதலிய வாத்தியங்கள் முழங்கவும், பிரமுகாளுடைய கரங்களிற் பிடித்திருக்கும் விற்றொனியும் வீரகண்டத்தொனியும் மேலாகி அதிர்க்கவும், சகலவித வீரர்களின் சங்கத்தொனிகளொலிக்கவும், ஆயுதங்களிழையவும், யாவருடைய உள்ளங்களும் குழையவும், தேராளிகளுடன் தேராளிகள், வில்லாளிகளுடன் வில்லாளிகள், வேலாளிகளுடன் வேலாளிகள், யானையோடு யானை, குதிரையுடன் குதிரை, வீரருடன்வீரர், வாளுடனேவாள், கதையுடனே கதை, இவ்வாறாக; அரசருடனே அரசரும், பட்டவர்த்தனர்களுடன் பட்டவர்த்தனர்களும், மகுட வர்த்தனர்களுடன் மகுடவர்த்தனர்களும், மந்திரிகளுடன் மந்திரிகளும், தந்திரிகளுடன் தந்திரிகளும், தளகர்த்தருடன் தளகர்த்தரும், மண்டலாதிபர்களுடன் மண்டலாதிபர்களும், சாமந்தருடன் சாமந்தரும், யானைத்தலைவருடன் யானைத்தலைவரும், குதிரை முதல்வருடன் குதிரைமுதல்வரும், பதாதி நாயகருடனே பதாதிநாயகருமாய், கொடித்தலைவர்-குடைத்தலைவர்-அணித்தலைவர் - ஆயுதத்தலைவர் முதலிய யாவரும் ஒருவரோடொருவர் எதிர்த்துப் பற்கடித்து விற்பிடித்து, இரண்டுபுயமென்னும் வெற்பெடுத்து மற்றொடுத்து மண்டலங்கள் முதலிய விண்டலங்கள் அதிர நேருக்குநேராக நின்று சண்டை புரிந்தார்கள்.

அப்போது அர்ச்சுனனும்-வீஷ்மாச்சாரியாரும், வீமசேனனும் - துரியோதனனும், தர்மராசனும் - சல்லியராசனும், நகுலனும்-சிந்துபதியும், சகாதேவனும் - சகுனியும், துஷ்டத்தூய்மனும் - துரோணாச்சாரியாரும், சுவேதனும் - துச்சாதனன் முதலிய தம்பிமார்களும், விராடனும்-பூரியென்பவனும், கலிங்கராசனும்-யாகசேனனென்னும் பாஞ்சாலனும், அஸ்வத்தாமனும் - குந்திபோசனும், உத்தரகுமாரனும் - கிருபாச்சாரியாரும், கேகயனும்-கிருதவன்மனும், அபிமன்னனும் - இலக்கண குமாரனும், கடோற்கசனும் - பகதத்தனும், சாத்தகியும்-பூரிசிரவனும், சிகண்டியும்-கீசகனும், சோமதத்தனும்-காம்போசமகாராசனும், சேரனும் - சோழனும் - பாண்டியனும்-சகத்ரதேவனும், இராவானும்-அலம்புதனும், துருபதேயனும்-துன்மார்க்கனும், உத்தமோசாவும்-விகர்னனும், விடசேனனும் - உதார்மனும், சந்தனும் - உக்கிரவேகனும் ஒருவரையொருவர் எதிர்த்துக்கொண்டு பற்பலவிதமாகிய யுத்தங்களைச் செய்தார்கள். மேலும், கொங்கர்-கோசலர்-சிங்களர்-ஆரியர்-குரூரர் - கங்கர் - திராவிடர்-கௌசலக-குண்டலபோசர் - கலிங்கத்தவர்-வங்கர்-மாளுவர்-மகதர்-மக்கர்-சோனவத்தர் - மராடர் முதலிய பதினெண்பாஷை மன்னர்களுங் கைகலந்து கண்சிவந்து கடுமை கொண்டு சப்தமேகங்களும் அஷ்டகசங்களுந் திகைத்துத் திக்குமுக்கிட்டுச் சோர்ந்து செவிடுபடும்படியாய்ப் போர்புரிந்தார்கள்.

இந்த யுத்தங்களைப் பார்த்திருந்த தேவர்கள் பயந்து ஆச்சரியப்பட்டு கைகளை நெரித்துக்கொண்டு, இனிமேல் அண்டங்களும் பிளந்துபோமென்று நடுங்கவும், சிருஷ்டி

கர்த்தாவாகிய பிரம்மா தியங்கவும், இவ்விதமாக இருதிறப்படைகளும் ஒன்றுபட்டு யுத்தஞ் செய்யுங்காலையில், குதிரை யினங்களும் யானைக் கூட்டங்களுந் தரிபட்டு, சிற்சில முறிபட்டு, பற்பல நெரிபட்டு, கால்களால் மிதிப்பட்டு, மண்ணிற் புதைபட்டு போகவும், தேரினங்களெல்லாஞ் சக்கரமுதற் சிகரம் வரைக்கும் தும்புந் தூள்களுமாய்ப் போய்க் குவியவும், ஒருவர்பேரிலொருவர் தத்தியும், பாணங்களினால் மொத்தியும், வேல்களினாற்குத்தியும், வாள்களினால் எற்றியும், கரங்களினாற் பற்றியும், கறகறவென்று சுற்றியும் போர்புரியுங் காலத்தில், இறந்துபோன பதாதிகள் முதலிய வீரர்கள் இத்தனை கோடியென எவர்களுஞ் சொல்லமாட்டார்கள். இந்திரன் தனது ஆயிரங்கண்களாலும்பார்த்து எண்ணமுடியாது. இத்தன்மையாகத் தங்களைத் தாங்களே மறந்து இறந்தவர்களிற் சிலர் தலைகள் வெட்டுண்டு ஆகாயத்தி லெழுந்து பூமியில் விழுந்து கொழுந்துவிட் டெரியுந் தன்மைபோல் ரத்தங்கள் பீரிட்டடிக்கவும், அந்தத் தலையிழந்த உடலானது தரையில் விழாமல், இடசாரி வலசாரி சுற்றிக்கொண்டு இருப்பது எப்படி யிருந்ததென்றால், ஸ்ரீமந் நாராயணர் மோகினி அவதாரமாய்த் தேவர்களுக்கு அமுதம் பருகுங்காலத்தில், இராகு கேது என்னும் கிரகங்கள் மாறுபாடாகிய ரூபத்துடன் அமுதத்தைக் கரத்தி லேந்தியபோது, சந்திரர் சூரியர் சொல்லத் தெரிந்து கையிலிருந்த சட்டுவத்தால் அவர்களுடைய தலையை வாங்கிவிட்டபோது தலையற்று உடல்மாத்திரம் சுழன்றுடுந் தன்மையைப்போ லிருந்தது. இரண்டு முழங்கால்களும் முறிபட்டு தங்கள் ஒற்றைச் சக்கரங்களையுடையத் தேரை நடாத்தும்பாகரைப் பார்க்கில் எப்படி இருந்தார்களென்னில், சப்தமா வென்னும் பரிபூட்டிய சூரியனுடைய ரதத்தை யோட்டிய அருணனென்னுஞ் சாரதியைப்போ லிருந்தார்கள். மேலும், திடகாத்திர உன்னதத் தேகத்தினையுடைய படைத்தலைவர் பட்டவர்த்தனர்கள் முதலியபேர்களின்பேரில் பாணற் கும்புகள், நாணற்கொம்புகளைப்போலப் பாய்ந்துக் கேசாதிபாதம் வரையிலும் ரத்தங்கள் பெருகிக் கசிந்து பீரிட்டு வருந் தன்மை எப்படி யிருந்ததென்றால், உயர்ந்த உக்கும்பஸ்தக் கம்பபாணத்தின் ஐம்பங்களைப் போன்றிருக்கின்றது.

இன்னுந் தங்கள் தங்களுடைய அம்புறாத் தூணியிலிருந்த பாணங்களை நாணியில் வைத்துச் சேணுறுவோர் தியங்கப் பிரயோகஞ் செய்துபோட்டு, அப்பால் பாணங்களில்லாமல் தங்களுடைய தேகத்தில் தைத்துக்கொண் டிருக்கும். எதிரிவிட்ட பாணங்களைப் பிடுங்கி எறிந்து, அவ் வெதிரிகளை நோக்கிச் சிரித்துக்கொண்டு போய்ப் பிடித்துத் திரித்துவிடுகின்ற தீரர்களில் அனேகர் போர்புரிந்தார்கள். மேலும், இடதுகை யற்றபோது வலது கையைக் கொண்டும்; வலதுகை யற்றபோது இடது கையைக் கொண்டும் சிலர் யுத்தஞ் செய்தார்கள். இதன்றியும், ஒருவன் தலையை ஒருவன் வெட்ட, வெட்டுப்பட்டவன் தன் தலையைத் தன் கையில் பிடித்துக்கொண்டு தன்னை வெட்டினவன் தலை முறிபட்டு விழும்படியாய் எறிந்தான். உடனே அவனுந் தலையறுந்தாடினான். இவனுந் தலையறுந் தாடினான். மேலும், இரண்டு புஜங்களறுபட்டு இரத்தவெள்ளம் பெருகும்படியாய் இருந்த வீராதி வீரர்கள், இந்திரனால் இறகுகளறுபட்ட மலைகள்போ லிருந்தார்கள். சிலவீரர்கள் ஓடிவந்து தங்கள் தலைகளால் முட்டியும், புசங்களா லிடித்தும், அநேகந் தேர்களை அழித்தும், குதிரைப் படையிலும், யானைப் படையிலும் புகுந்து, அதுகளின் கால்களும், வால்களும், மேல்களும், சிதைந்திறக்கும்படியாகச் செய்து ஜெயம் நம்மதென்று குதித்தாடவும், ஒரு வீரனை யொருவீரன் வெட்ட, இவருள் தலைபோனவனும், ஓயாம லெதிர்த்து அவனைக்கிட்ட, மற்றொருவன் ஓடிவந்து வெட்டினவனைத்திட்ட, அவனுமிவனும்நெருங்கித்தலையுடன் தலையைமுட்ட, மேலெழுந்த தலைகள் வந்து விழுந்து இவர்கள் மூவரும் பட்டார்கள்; உயிரையும் விட்டார்கள். இன்னொரு வீரன் பின்னொரு வீரன்பேரிற் சின்னபின்னமாய்ப் பாதாதி கேசம் வரையிலும் பாணங்களைப் பொழிந்து வரும்போது, அடிபட்ட வீரனானவன் பேய்களுடன் கூட்டுறவாகக் கூடிக் கொண்டாடித் தன் பகையை முடித்துக் கொண்டான். மேலும், ஆயிரம் பாணங்கள் நுழைந்த துவாரங்களினின்று உதிரவெள்ளம் புறப்பட்டு வீசுந்தன்மையானது, அருணனால் நடத்துந் தேரில் வரா நின்ற ஆயிரங் கிரணங்களையுடைய சூரிய பகவானைப்போன்றிருந்தது.

இன்னுஞ் சிலரைப் பின்னும் பலர்கள் மின்னும், வாளாயுதங்கொண்டு வெட்டினார்

கள். அந்த வெட்டைத் தன் கையிலிருக்குங் கேடையத்தாற் றட்டிவிட்டுத் தலை காட்டாமலொட்டிப் பதுங்கியிருந்து, மீண்டும் சிங்கக் குட்டிபோல எழுந்து மேற்பாய்ந்து கட்டிப் பிடிக்க, இருவருங் காலுடன் கால், கரத்தொடு கரம், சிரத்தொடு சிரம், உரத்தொடு உரம் அணைத்து, உடலொன்று உயிரொன்றென்று சொல்லும்படியாக இணைத்துக் கொண்டு கீழே விழுந்து மல்யுத்தஞ் செய்தார்கள். இப்படியாகப் பற்பல காளையர் விற்போர்-மற்போர் - வேற்போர் - வாட்போர்-ஆட்போர் முதலிய யாவும் புரிந்து அழிந்தபோர்கள் எத்தனை கோடாகோடியென்று சொல்லுவேன். ஓ அரசனே! இந்தப்பிரகாரம் யுத்தஞ்செய்து வரும்போது, அர்ச்சுனனும் வீஷ்மாச்சாரியருமெதிர்த்துத் தேவதா அஸ்திரப் பிரயோகஞ் செய்து போராடுங்காலையில், யாவரும் நடுங்கும்படியாய் இருதிறப் படைகளும் எட்டுத்திக்கிலும் வளைந்து கொண்டார்கள். பூமியிலிருந்து மேலெழுந்த தூசிகளினால் வேடிக்கைப் பார்த்த தெய்வலோகத்தினராகிய மேலுலகத்திலிருக்கும் தேவருங் கண்களைப் பொற்றிக்கொண்டார்கள். பளுவைச் சுமக்கமாட்டாமல் ஆதிசேடன் முதலாகிய கீழுலகத்திலிருக்கும் நாகரும், கழுத்தொடியச் சுமந்து, இளைத்துக் களைத்தார்கள். அந்தச் சமயத்தில், துரியோதன மகாராஜனானவன் தங்கள் பாட்டனாராகிய வீஷ்மருக்கு உதவியாகச் சகுனி - சல்லியன் - தம்பிமார் முதலாகிய பேர்களை அனுப்பினான். இதைக் கண்ட தருமராசன் அர்ச்சுனனுக்குப் பின்பலமாக வீமசேனனையும், அபிமன்னனையும் அனுப்பினார். அவர்களை அர்ச்சுனன் கண்டு எனக்கும் படைதுணை அனுப்பவேண்டுமோ? இந்த வீஷ்மரைச் செயிப்பதும் அருமையோ என்று கடுகடுத்துப் பாட்டன் ஏறியிருக்குந் தேரிற் கட்டிய பனைக்கொடியின்பேரிற் பன்னிரண்டு பாணமும், கவசத்தின்பேரில் ஒன்பது பாணமும், அவர் தேகத்தின்மீது ஐம்பது பாணமும், அகமும்புறமும் நடுநடுங்கி ஒடுங்கும்படியாக விடுத்தான். அதனால் அந்தப் பெரியவரானவர் நிலைதளர்ந்திருக்க, அந்தச் சமயத்திற் சல்லியனுஞ் சகுனியுந் துரியோதனனுடைய தம்பிமார்களுந் தலைநீட்டிக் காட்டினார்கள். அவர்களை வீமசேனன் கும்பலாகக் கூட்டிப் பேய்போலோட்டிக் கோடி கணைகளைப் பூட்டி மாட்டியோட்டிவிட்டான்.

## பாண்டவர் சேனையில் விராடராஜ குமாரருள் உத்தரன் வதை

இப்பால் கர்னனுடைய பிள்ளைகளில் மூத்தவராகிய சூரியகேதென்பவன் இராவானுடனெதிர்த்து, அநேகவிதமாகிய தந்திர யுத்தங்களெல்லாவற்றையுஞ் செய்து அலுத்து, அவரிருவரும் ஒருவரையொருவர் விட்டு நீங்காமல் இருந்தபடி யுத்தஞ் செய்தார்கள். பலம் பெறும் அரக்கராகிய அலம்புதனுங் கடோற்கஜக்காளையும் எதிர்த்து, இருளாகவும் - மழையாகவும்-மின்னலாகவும் - வெருளியாகுதல் முதலாகிய மகாமாயைக் கோலங்களும், இந்திர ஜாலங்களுங் காட்டி அமர்புரிந்தார்கள். அந்த அலம்புதனுடைய தம்பிமாராகிய அசேயசூரனும், கடோற்கஜனுடைய குமாரராகிய அஞ்சனவர்மனும், மரம்-மலை முதலிய ஆயுதங்களைக் கொண்டு சரமாரியாகப் போர்புரிந்தார்கள். அப்போது அனேக குற்றமற்ற பல பராக்கிரம சாலியாகிய வாளபிமன்னனானவன், வெகு சேனைகள் மாளும்படியாகத் துணித்துக் கொண்டு வரும்போது, தன்னுடைய தந்தை மூதாதையாகிய வீஷ்மருடன் கைகலந்துப் போராடுஞ் சமயத்தில், தான் நாலு பாணங்களைத் தொடுத்து வீஷ்மருடைய ரதத்திற் பூட்டிய நாலு குதிரைகளையும் நாசப்படுத்தினான். அதைக் கண்ட காங்கேயன் சந்தோஷங் கொண்டு வேறு தேரேறி விரைந்து வந்து போர் புரிந்தார். அந்தச் சமயத்தில், உத்தரகுமாரன் தேரைச் செலுத்திக் கொண்டுவந்து மத்திர தேசாதிபனுடன் எதிர்த்து போராடி, குதையினையுடைய வில்லிற் சில பாணந் தொடுத்துத் தேகங்களிற் புதையும்படிக்கு மழைபோற் பொழிந்து விடுத்து மேக கெற்சிதம் போல் இறைந்து விரைந்து அச்சல்லியனுடைய வில்லற்று விழவும், கவசங் கிழிபடவும், துவசம் முறிபடவும், அழகிய ரதத்திற் கட்டித் தாவிவருங் குதிரைகள் அற்று விழவும், சாரதி செற்று விழவும், மற்றவர்கள் தலைசுற்றி விழவும், கொற்றவர்கள் சிலைப்பற்றியெழவும் யுத்தஞ்செய்த காலையில், சல்லியராஜனுடைய சரீரமெல்லாஞ் சல்லடைக் கண்ணாகி உதிரப் பிரவாகத்துடன் உடல் புண்ணாகி ஒன்றுந் தோன்றாமல் மனந் தளர்ந்து, இப்பாவிப் பயலாகிய உத்தரனுடன் வில்லெடுத்துப் போர்புரியக் கூடாதென்று மனங்கூசி வீர வார்த்தையைப் பேசி, இலைபோன்ற

வேலாயுதத்தை யெடுத்து இதயத்திற் பலவா
ருகச் செபஞ்செய்து விடுத்தான்.

அப்படி விடுத்த அந்தக் கூரிய வேலா
னது, குவலயத்தைக் குமுறச்செய்து வந்து
குபீரென்று மச்சதேச குமாரனுடைய மார்
பிற் பாயவே, தக்ஷணம் உத்தரகுமாரரானவர்
மருட்சிகொண்ட மான்குட்டிபோற் றுள்ளி
மார்படைந்து வானுலகடைந்தான். தன்
மகனாகிய உத்தரன் சல்லியனாற் கொல்லப்பட்
டானென்று கேட்ட விராடன்முதற் பாண்ட
வச் சேனை வீரர்கள் யாவரும் ஒன்ருகக் கூடி,
உகாந்தகாலத்தில் பொங்கியெழுங் கருங்கட
லைப்போற் புரண்டுவந்து போர்புரிந்தார்கள்.
அத்தனை பேர்களுஞ் சித்தங் கலங்கி வெற்றி
பெறமாட்டாமற் சுற்றியிளைக்குந் தருணத்
தில், வீரபட்டமணிந்த யானையைப் போன்ற
கதாபாணியராகிய வீமசேனன் வந்து விழு
ந்து விரசுவர்க்கத்திற்கு வரவு செலவு கணக்கு
சொல்பவனைப்போல் வெற்றிமாலை தரித்து,
பலபல வீரங்களைப் பேசிக்கொண்டு சண்ட
மாருதம்போற் சுழன்று யாவரையுஞ் சின்ன
பின்னப்படுத்திக் கொண்டுவர, அதில் வேல்
தாங்கிய அதிரதர் முதலாகிய அரசர்களெல்
லாம் நிலைபெறமாட்டாது குலை கிழியும்படி
யாய் அடிபட்டு, தாங்களு முடிபட்டு, உதிரங்
கள் வடிப்பட்டு, இவ்வாறு உள்நொந்து
கெட்டுஇறந்தவராட, இருந்தவரோட,எதிர்த்
தவர்வாட, இவர்களைத் தேவர் கொண்டாட,
இப்படியாக வீமசேனன் செயம்பெறுந் தன்
மையைத் துரியோதன மகாராஜன் கண்டு,
பூமியிற் றரிக்கப் பொருந்தாமற் பொங்கி,
நெஞ்சுழலக் கண்சுழல நெருப்புப் பொறி
யெழக் கோபங்கொண்டு, அஞ்சு சிரத்தினை
யுடைய அரன்மேற் பஞ்சபாணனாகிய மன்ம
தன் மலர்ப்பகழி யெடுத்து விடுத்ததுபோல்
மறப்பகழி தொடுத்தும், பல வீரர்களையும் ஓட்
டிக் கறுகறுத்துப் பின்னும் பற்கடித்து, விற்
பிடித்து, சொற்படித்து, இமயமலையின் சிக
ரம் போன்ற தண்டங்கொண்டு மண்டலமிட்
டுத் தேர் நிரைகள், சேனையணிகள், யானைக்
கூட்டங்கள், அரசனுடைய மணிமகுடங்கள்
முதலானவைகள் யாவற்றையுஞ் சாடிக்கொ
ண்டுவரும் அவ்வீமசேனன் பேரில் அநேகம்
பாணங்களையுந் தாக்கினன். அந்தக் கணைகளை
யெல்லாம் வீமன் முனைமழுங்க வடித்துக்
கதையுடன் தாவி, அநேகமாயிர விதங்களாக
விளையாடி மோதி முனைந்து, தாங்கள் இருவ

ருஞ் சாதிக்கத்தக்க தன்மைகளை யெல்லாங்
காட்டிச் சிங்கமும் சிங்கமும் எதிர்த்துப்
போர்புரிந்த தன்மையைப்போல் நெடுநேரம்
சண்டை செய்து திடவீர கர்த்தனாகிய தான்
அத்துரியோதன ராஜனுடைய வில் முறியும்
படியாய் ஓங்கி அடித்து, மீண்டும் பாங்கிற்குதி
த்து, ஒரு கரத்தை நீட்டி அவன் ஏறிவந்த
தேரைத் தூக்கி ஆகாயத்தி லெறிந்தான்.

அந்தத் தேரானது பூமியிலோடு வதைப்
போல் ஆகாயத்திலுங் கரகரவென்ருேடி, நில
த்தில் விழுந்து சக்கரங்கள் உடைந்து, அச்சு
முறிந்து, சிகர முதலிய குடைகளுங் கொடிக
ளுஞ் சாரதியும் அழிந்து, வன்னமாகிய
அந்தத் தேர்க் குதிரைகளுஞ் சின்ன பின்ன
மாகவே, துரியோதன ராஜனுந் தேரைப்
போற் சிதைந்துபோராரென்று அவனுடைய
சேனைகளெல்லாம் புறமுதுகிட் டோடிவிட்
டார்கள். அந்தச் சமயத்திற் படைத்தலைவர்
முதலிய அரசர்களெல்லாம் ஓடிய சேனைகளை
எல்லாந் தடைப்படுத்தி, இராஜனுக் கென்
னமோ அபாயமென்று கூட்டங்கூடி வந்து
பார்த்தார்கள். அந்த வேளையில், வீமசேனன்
பாரியாதத்தி லேறிக்கொண்டு ஒரு சூரியனைப்
பல சூரியர்கள் சூழுமாப்போல், அநேகம்
வேலாளிகள்-வாளாளிகள்-வில்லாளிகள் தன்
பக்கத்தில் நிறைந்து நிற்கவும், சுவேதக்ஷத்
திர நிழலைவிட்டு நீங்காத கிரீடாதிபதிகள்
முன்னும்பின்னு முறை வழுவாமற் சிறந்து
விளங்கவும், இவ்வாறு நடுநாயகம் போல்
வீமசேனன் நிற்கும்படியாகிய மேன்மையை
கண்டு மனந்தாளாமற் புகையுமனத்தினராய்
பகைமேற் கொண்ட சிந்துதேசத் தலைவரா
கிய விந்தரன் முதலியபேரும், சகுனி மைந்த
ராகிய மைத்துனரென்னு மாப்பிளைத் திரைக
ளும், இவர்களுக் கருகராகிய முடிமன்னவ
ரும் வந்து நெருங்கி வீமசேனனை வளைத்துக்
கொண்டு கூர்க்கணை பொழிந்தார்கள். துரி
யோதன ராஜனுக்காகப் பக்ஷமா யெதிர்த்து
வந்த மைத்துனர் முதலாகிய மன்னவர்க
ளைக் கண்ட வீமன், மரியாதை செய்வதற்குத்
தேரைவிட் டிழிபவனைப்போல் இறங்கி, இரு
கரத்தையுங் குவித்துப் பிடித்திருக்குங் கதை
யுடன் பூமியிற்றாழ்ந்து, பக்குவமாய் நுழை
ந்து, விஷ்ணுசக்கரம்போல் வேகமாய் விரை
ந்து சுழன்று, மகமேருவின் கொடி முடியா
னது வாயுவாற் பறிபட்டுப் போனதைப்போல்
வந்தவர்களின் மணிமுடிகள் யாவும் அவன்

சேயாகிய தன்னுற் றறிபட்டு மண்ணில் விழுந்ததிர, விண்ணிலெழுந்ததிர, மாறி மாறிக் கெதை கொண்டடித்துத் தேவர்கள் முதலியபேருந் திடுக்கிட்டுத் துடிக்கச் சேதித்து வந்தான். துரியோதனனுடைய படை வீரர்களும், பாண்டவச் சேனைகளிற் புகுந்து பற்றறக் களைந்து, பற்பல விதமாகப் பாரியோடி, அளவற்றபேரைச் சாரிசாரியாய்ச் சாய்த்தார்கள்.

இவ்வாறு இருதிறப்படைகளும் போர் புரியும்போது, பாண்டவச் சேனுதிபதியாகிய சுவேதனன், தனது தம்பியாகிய உத்தரனிறந்தானென்று கேட்டு மெத்த விசனங்கொண்டு, கர்த்தராகிய சிவபெருமா னளித்த வில்லை எடுத்துப் பிடித்து, வெற்றி மாலையை தரித்து, வீராவேசத்துடன் சங்கநாதம் - சிங்கநாதம்- தாரை-பூரி-முரசு-சின்னம்-காகளம் முதலிய வாத்தியங்கள்முழங்கவும்,ஆலவட்டம்-குடை- கொடி-மேற்கட்டி-விதானம்-சுருட்டி - மயிற்பீலி முதலிய இவைகள் பிடிக்கவும், தேர்வீரத் தலைவருக்கிறைவர், யானைவீரத்தலைவருக்கிறைவர், குதிரைவீரத் தலைவருக்கிறைவர், சேனை வீரத் தலைவருக்கிறைவர், இவர்க ளெல்லாந் திடமாக நாலுபக்கங்களில் வரவும், பல்லைக் கறகறவெனக் கடித்து வில்லைப் பரபரவெனப் பிடித்து யுத்தகளத்திற் புகுந்து, மத்திர தேயனுகிய சல்லிய னெங்கே? அவன் வில்லுக ளெங்கே? இப்போதே அவனைச் சல்லி வேருடன் கெல்லி விடுகிறேனென்று தொடர்ந்து, அவ்விடத்திற் படந்து பற்பல படைவீரர்க ளெல்லாரும் மாறிப்போகும்படியாய்ப் பாடுபடுத்தி, அவர்க்குக் கேடுநடத்தி, யாவருங் கலங்கி அலமலங்கிப் போகச்செய்து, சல்லியனுக் கெதிரிற்போய் நின்று நகைத்து, சிங்கம் போற் பேரொளியாக விரைந்து தனது வீரப் பிர தாபங்களைப் பேசி, ஆ! ஆ! புத்திரனே! பத்திரமாயிரு சற்று நேரத்தில் உன் தலை அற்றுவிழச் செய்கிறேன் பாரென்று கேசரி கெர்சிதம்போற் பலவித சபதங்களைப் பேச, சல்லியனும் நகைத்து, ஈட்டுக்கீடாகபேச மிகுந்த ரோஷத்துடன் இருவரும் பதைத்து, இமைக்கு முன் பதைத்து, பாரிய வில்லை வளைத்து, ஒருவருக்கொருவர் நிகரில்லையென்று சொல்லும்படி உடல்களைக் கண்டு ஊடுருவும் வாளிகளை ஒன்றனந்தமாக ஏவி, முன்றுணிந்து தாவி மலைந்தார்கள்.

இந்தப்பிரகாரம் இவர்களிருவருந் தங்களுக்கொருவர் நிகரில்லையென்று புருவம் நெரித்துப் புகையும் இறைத்துப் பொறியும் பறக்க ஐம்புலனுங் குறைந்து போகும்படியாய்ப் போர் புரியும்போது, சல்லியராஜன் இதென்ன சல்லியமென்று தளர்ந்து வருந்துந் தன்மையைக் கண்ட இந்துகுல ராஜனுகிய துரியோதன மகாராஜன், மலைபோன்ற புயத்திணையுடைய தன் தம்பிமார்களில் ஆறுபேர்களையும், அவர்களுடனே அனேகந் தீரர்களையுஞ் சேர்த்து மத்திர தேசாதிபதிக்குக் குற்ற துணையாகும்படியாய் அனுப்பிவைத்தான். அந்த அரசனுடைய உத்தரவின்படி வந்த தம்பிமார்கள், மயிலேறும் பெருமாளாகிய சுப்ரமண்யக் கடவுளைப்போல் மகுடமுடி மன்னவர்களுடன் வந்தெதிர்த்து மாருமல் வாளி தொடுக்குங் காலையில், மதுமலர் மாலையணிந்த சுவேதனனுகிய சேனுதிபதி மனக் கொதிப்புடன் மலைந்து, அவர்களுடைய அந்தக் கரணங்களெல்லாங் கெட்டழியும்படிக்குப் பல கணைகளைப் பொழிந்து, பலங்கொண்டெதிர்த்த மன்னவர்களின் ஒன்ருகிய வில்லுகளை இரண்டிரண்டாக முறித்து, திரண்டு வந்த படைவீரர்களெல்லாம் அரண்டுபுரண்டு முடித்தலை யுருண்டு மண்மேல் விழுந்தழிய வாளிமழைகளை மாருமற்றொடுத்தான். இதன்றியும், அவரவர்கள் ஏறிவந்த தேர்களையும், அந்தத் தேரில் பூட்டிய குதிரைகளையும், அக் குதிரைகளை நடாத்துஞ் சாரதிகளையும், மேகம் போன்ற யானைகளையும், வேலாயுதம் - சூலாயுதம்-வாளாயுதம்-சக்கராயுதம் - குத்தீட்டி-எறியீட்டி - பாலா - பல்லயங்கள் முதலியவைகளோடு, கவண்டுக் கற்களுங் கொண்டுவந்த காலாள் யாவரையும் இலவம் பஞ்சுபோல் பறக்கும்படியாகச் செய்து, தன்னுடைய ரதமுந் தானுமாய்ப் பெருங்காற்றைப்போ லுலாவிக்கொண்டு நின்ருன் சுவேதனனுனவன்.

இந்தச் சுவேதனன் தொடுக்கும் அம்புகளினுல் இறந்தவர்கள்போக இருந்தவ ரியாவரும், துரியோதனனுடைய தம்பிமார்களும், நெரிபட்டு- நிலைகெட்டு-நெறிவிட்டு - புறமுதுகிட்டுப் - பறிபட்டு ஓடிவருந் தன்மையைப் பார்த்த வணங்காமுடிபெற்ற மன்னன் வீஷ்மரைக்கண்டு, இன்று ஜெயங்கொண்டு பிழைத்தால், சகல சம்பத்தும் நமக்குண்டு இல்லாவிட்டால் பாண்டவர்களுக்கு நாம் தொண்டு என்று பற்பல வார்த்தைகள் சொல்ல, அந்த

வசனத்தைக் கேட்ட வீஷ்மாசாரியர் பாரிய வில்லைக் கைக்கொண்டு சுழற் காற்றைப்போற் பறக்க வடிக்கிறேனென்று யாவரையு முறிக்கி யடித்துக் கொண்டுவந்து எதிர்த்தார். இவரைக் கண்ட சுவேதனனவன், சல்லியனை ஒரு புறத்திற் றள்ளிவிட்டு ஓ ஏழு சமுத்திரம் போல் இரைந்துகொண்டு ஏழு மேகம்போல் விரைந்துவந்து எதிர்க்கும் வீஷ்மரே! நீர் ஒரு பெரியதலை யிருக்கிறீரென்று துரியோதனன் தள்ளிக்கொண் டிருக்கின்றான். பாண்டவர்களும் பாட்டனாராகிய வீஷ்மரை எப்படி ஜெயிப்போமென்று முன்பின் பார்த்துக் கொண்டு இருக்கிறார்கள். நீரும் மத்திர ராஜனுக்கு உபபலமாய் வந்தீர். வாரும் வாரும்; பெரியவரே! உமாமஹேசனைப் போற்றி, உம்முடைய ஒரு தலையை மாற்றி, ஐவர்களுக்கும் ஆறுதலைப்பேற்றிப் பதினோ ரக்குரோணி சேனைகளையுந் தூற்றிவிடுகிறேன் பாரும் பாருமென்று, ஒரு அஸ்திரத்தை விடுத்து, வீஷ்மர் கைக்கொண்ட பலமாகிய வில்லைக் கெடுத்துத், தேகத்திலும் ஆயிரங் கணைகளை நுழைத்தான். அப்போது வீஷ்மரானவர் சுவேதனன் அதிக வேகமாய் றெடுக்கும் கணைகளுக் கிளைத்து, சித்திரம்போற் றிகைத்து, திகிற் கொண்ட புலிபோ லிளைத்து, சற்றுநேரந் தரித்து, வேறு விற்கொண்டு விராட குமாரனுடைய சித்திர கிரீடம் அற்று விழும்படி தாக்கினார்.

## கௌரவர் சேனையில் ஜயவிஜயா ளென்னும் பஞ்ச சேனாபதியர் வதை

உடனே அந்தச் சுவேதனன் அழற் கணை தொடுத்துப் பனைக்கொடி யறுத்து அச் சுமச்சுகளுடன் தேரையு மழித்து, நச்சு நச் செனவரும் தேரையு மொழித்தான். மறுபடியும் வீஷ்மாரானவர் வேறுதேரேறி விரைந்து வந்து, சுவேதனனுடைய வீரபட்டம் அறுந்து விழுந்து நெற்றியுந் திறந்து போகும் படியாக நூறு கணைகளைத் தொடுத்தார். சுவேதனன், அந்த நூறுகணைகளைத் தாறுமாறாக்கி வேறு வேறாகப்-போக்கி, அவர் கையிற் பற்றிய வில்லையும், தேர் - குதிரை - சாரதியையும் இடிக்கணையால் முடித்து, வடிக்கணை தொடுத்து மார்பிலடித்தான். மறுபடியும் வீஷ்மரானவர் வேறு தேரேறிவந்து வில் வளைத்துச் சரமாரி பொழியும்போது, சுவேதனனவன் கடுகடுத்துக் காலாக்கினி கணைகளை விடுத்துக் காங்கேயன் கையும் மெய்யுங் கருகும்படியாய், உதிரம் பெருகும்படியாய் உடம்பெல்லாம் பொத்தி, உரனிற் குத்தி, உடனே யோடி, வில் ரதம் முதலியவைகளை எல்லாம் ஒடிக்கும்படியாகிய உக்ரசாயி யென்னும் ஒரு கணையை விடுக்க, அதைக் கண்ட வீஷ்மர் வெகுண்டு இவனுடனின்று இனி என்ன யுத்தஞ்செய்வதென்று மனந் தளர்ந் திருக்கச் சுவேதனனவன் மற்றப் படைகளை மடக்கி யடித்து, அவருடைய பதினொரு அக்ரோணி சேனைகளையும் ஒருதரஞ் சுற்றிப் பார்த்து, உலையச்செய்து வருகின்றான். இதற்குள்ளே துரியோதன ராஜனவன், வீஷ்மர் இளைத்த விந்தையைக்கண்டு விசனமடைந்து, சுவேதனனுடன் யுத்தஞ்செய்து வீஷ்மர் இளைக்கிறப்போ லிருக்கிறது. ஓ முடிமன்னவரே! ஓ கொடி மன்னவரே! நீங்கள் விரைவிற்சென்று வீஷ்மருக்குத் துணை செய்யக் கடவீர்கள். அன்றியும், எவ்விதமாயாகிலும் இளைக்காமல் அச்சுவேதனனை வெற்றி கொள்ளுங்களென்று சொல்லி கூட்டி விடுத்தான்.

அந்தப்படிக்கு அவரவர்களுந் துடிதுடித்து விரைந்துவந்து எங்கே சுவேதனனென்று வாய் திறந்தார்கள். இதோ வந்தேனென்று படையைச் சுற்றிப் பார்த்து வந்த சுவேதனனவன், வந்தவர்கள் வந்தவழியே நொந்து போகும்படியாகவும், அவர்கள் பிடித்த வில்லும் - ஆயுதங்களும் - கவசமும் - தேரும் அழியும்படியாகவும் கணைகள் பூட்டி, அவர்களைமாட்டி ஓட்டினான். அதனால், அவர்கள் வருந்திப் பின்னிட்டு வருவதைக்கண்ட துரியோதனராஜன் மனத் துணிவுகொண்டு, ஜயவிஜயாள் யென்னும் பஞ்ச சேனாதியர் ஐந்துபேரை யனுப்பி வைத்தான். அந்த ஐந்துபேரும் வந்து, ஆரவன் சுவேதனன்? அந்த ஆரவன் சுவேதனன்? என்று அதட்டிக் கேட்கும்போது, அங்குள்ள அக்ரோணி களை யெல்லாம் ஒரு சுற்று சுற்றி வருகிற சுவேதனன் இவர்களுக்கு நேரில்வந்துநின்று நான்தான் சுவேதன னென்று சொல்லி, அவர்கள் மலைபோன்ற தேர்களும், அவர்கள் கைக்கொண்டு தெரிவிக்கும் விற்களும், பொற்பிரகாசமுற்ற முடிதாங்கிய தலைகளும், படிமேல் விழுந் துருளும்படியாயப் பிறைமுகக் கணைகள் விடுத்து அழித்தான். அவர்கள் மீண்டுபோய்த் துரியோதனனுக்கு வெற்றி பெற்றோமென்று சேதி சொல்லாதபடி இவனே மாண்டுபோனார்கள். இதுகளைப் பார்த்

திருந்த கங்கா புத்திரன் கண் சிவந்து கடுமை கொண்டு, கார்முகம் வளைத்து நாணேற்றித் தெரித்து, உறுக்கிக்கருவி எதிர்சென்று நின்று ஓர் இலைமுகப் பகழி எடுத்துத் தொடுத்து விடுத்தார்.

அதைக்கண்ட சுவேதனன் கலீரென்று நகைத்து, ஐயா! எத்தனை ரதம், எத்தனை வில், இன்னும் எத்தனை வீரர்களுதவியுடன் எத்தனை தரம் வருவாய் பெரியோனேயென்று பேசி, கமலாஸ்திரக்கணை எடுத்து தொடுத்து விடுத்து. வீஷ்மர் கையிற்பிடித்த தாவ்ஷடீக வில்லைப் பக்கப்பட வொடித்து, ஒரு சுற்றுச் சுற்றி எதிர்த்திவந்து நின்று, அவரேறி யிருக்கும் இரதத்தையும் அழித்தான். அந்த வேளையில், சிந்தை நொந்து தியங்கி மனோத் தியானங் கொண்டிருந்தார் வீஷ்மரானவர். அப்போது, ஆகாயத்தில் வேடிக்கைப் பார்த் திருந்த தேவர்களெல்லாம் விராடகுமாரனைப் புகழ்ந்து, வெகுவாய் மகிழ்ந்து, அவனுடைய விஷயங்களைப் பேசிக்கொண்டு இல்லாட நேத்திரனாகிய நாதபிந்துகலாதீதன் என்னுஞ் சிவபெருமான் அளித்த வில்லைத் தாங்கிய இவ் வல்லவனைக் கொல்லத்தக்கினபேர்கள் எவர்களுமில்லை. ஆகையால், வீஷ்மாச்சாரி யர் அநேகந்தர மிளைத்தார். அந்த வில்லை அவன் கையில் பிடித்திருக்கும் வரையிலும் யாவராலுஞ் ஜெயிப்பதரிது. ஆனால், வஞ் சனை செய்து வேறு ஆயுதமெடுக்கப் பண்ணி னால் அப்போ தழிந்துபோவான் என்று தங் கள் குலத்தானாகிய வீஷ்மருக்கு நலத்தைச் செய்யும்படியாக வசுக்கள் முதலிய அவ் வான வர் பேசிக்கொண்டார்கள். அந்த வார்த்தை இந்த வீஷ்மருக்குத் தெரிந்தது. அஃதெப் படியென்றால், எட்டு வசுக்களிற் பிரபாசன வசுவே வீஷ்மாவதார மானபடியாலும், அவர்களை இவர் நெடுநாள் பிரிந்திருப் பதினாலும், இவர் சீக்கிரம் அந்த வசுபதத் திற்கு வரவேண்டு மென்னும் பக்ஷத்தினா லும், இந்த வீஷ்மருஞ் சற்றுநேரந் தியா னத்தி லிருந்தபடியாலும், அவர்கள் பேசிக் கொண்ட தேவரகசியம் இவருக்குத் தெரிந் தது. உடனே வேறொருதேர் ஏறிக்கொண்டு வெறுங்கையுடனே எதிரில்வந்து நின்று அடா பாவிப்பநுவானே உனக்கு இந்த வில் யுத்தம் ஒன்றுதான் தெரியும்போ லிருக்கிறது. அதை விட்டாற் கதியில்லை; அப்பாற்போனால் வழியில்லை என்பதுபோல், வேல்-வாள்-கதை முதலிய யுத்தங்களில் உனக்கொன்றுந் தெரி யாதல்லவா? அடா வெப்பமுடையவனே என்று வீஷ்மர் கேட்டார்.

### விராடராஜ குமாரநுள் சுவேதன சேனாபதி வதை

அப்படி கேட்கவே சுவேதனன் மிகுந்த வெட்கமுற்று, மேருவில்லாகிய ஈசன்கொடுத்த வில்லைப் போட்டுவிட்டு உடைவாளுருவிக் கொண்டு, ஓய் வீஷ்மரே! எனக்கா வேறுவித ஆயுதப்பழக்க மில்லையென்று சொன்னீர்? நல் லது உமது நிர்வாகத்தை விற்றிறமையிற் கண்டேன். இதோ வாளின் திறமையிலும் பார்க்கும்படியாய் வந்தேனென்று அவரது அக்ரோணிகளைச் சுற்றி அநேகம்பேரை எற்றி, உடனே ஓடிவந்து வீஷ்மர் பேரிற் றாவி, சாரதி குதிரைகளை தூவிக் கீழே குதித் துச் சக்கரம்போலச் சுழன்று உக்கிரங்கொண் டெழுந்த காலத்தில், வீஷ்மர் வேறு தேரேறி வில்லெடுத்து வளைத்து அர்த்தசந்திர பாணந் தொடுத்துச் சுவேதனனுடைய ஒற்றக்கை யற்று விழும்படியாகக் கொய்தார். அதைக் கண்ட சுவேதனன் மனமகிழ்வுகொண்டு, மற் றொருகையில் அவ்வடிவாளைத் தாங்கி வீஷ் மாச்சாரியரைப் பார்த்து ஐயா பெரியோனே! இப்படி வஞ்சகஞ்செய்து மடிப்பதற்காகவா இந்த யோசனை எடுத்தீர்? ஆகிலும் நீர் நினைக் குங் காரியமல்ல: போகட்டும், இப்போது உம் முடைய பதினொரு அக்ரோணி சேனைகளில் நாலக்ரோணி சேனைகள் மடிந்திருக்கின்றன. உமக்குக் கணக்குத்தெரியாது. நீர் போய்ப்பா ரும். பாண்டவர்களுக்கு ஏழக்ரோணி. துரி யோதனனுக்கும், ஏழக்ரோணியென்று சரிப் படுத்திவைத்தேன். இன்னும் வேண்டிய வேலைகளையெல்லா முடிக்கவிருந்தேன். இதற் குள்ளாக நீரென்னை மோசஞ்செய்து முடித்து விட்டீர். ஆண்டவனுடைய சித்தமிப்படியிருந் தது. அப்படி யிருந்தபோதிலும் உம்மைப் போலொத்த அதிரதனினைக்குங்காரியம் இது அன்று என்று வெகுவாய்ப்பேசி இடது கரத் திற்கொண்ட வாளையோங்கி வீஷ்மருடைய தேர் குதிரை சாரதிமுதலிய எல்லாவற்றையும் அழித்து, அவர்விடுகிற கோடாகோடி பாணங் களையுங் குறைத்து, யானைகளனேகம் பாதாதி கள் அனேகம், அரசரனேகம், புரசனரனேக மாய் மாளும்படிக்குவீசி மண்டலமிட்டு, வீஷ்ம ருடைய மண்டையைப் பிளக்கும்படியாய் எண்ணி அண்டையிற்பாய்ந்து வந்தான்.

அதைக்கண்ட வீஷ்மரானவர் சுடர்வாளி யொன்று சுறுக்கிற்றெடுத்துப் பகையாளியுயிரைப் பற்றறப்போக்கினர். உடனே சுத்தவீரனாகிய சுவேதனன், பூமியசையும்படியாய்ப் பொன்மயமாகிய மேனியிற் புழுதி தோயும்படியாய்ப் பூமியில்விழுந்தான். ஆகாயத்திலுள்ள மிகுந்த தேவர்கள் எல்லாரும் வாழிகூறி மங்களம்பாடி, மகிழ்ந்து புகழ்ந்து அந்தர துந்துமி முழக்கினர்கள்.

இப்பால் துரியோதனன் முதலிய சேனைவீரர் யாவரும், உகாந்தகால மடங்கி உலக முதலிய திசைகள் மீண்டுமுண்டாகிய காலத்தில், ஏழுசமுத்திரமும் பரந்து இறைந்தால் எப்படியோ? அப்படியே விரைந்தார்கள். இப்பால், அழிந்துபோன அளவிறந்த சேனைகளின் அம்புகள் பட்ட துவாரங்கள் தோறும் பெருகுகின்ற உதிரவெள்ளமானது பீரிட்டோடிவருந் தன்மை எப்படி யிருந்த தென்றால், ரணக்களத்திலிருந்த சுத்தவீரர் முதலிய சேனைகளுக்குச் சூரியமண்டலத்தின் மத்தியில் நுழைந்துபோகும் வழியின் சாயல்போலிருந்தது. மேலும் ரத்தவெள்ளத்தில் வெள்ளைக் குடைகள் காம்பற்று விழுந்துகிடப்பது எப்படி யிருக்கிறதென்றால், வேல்போன்ற கண்களையுடைய ஸ்திரீகள் குளித்த பரிமளச்செங் குங்குமநீரில் எழுந்த குமிழியையும், செந்தாமரை மலரையும் ஒத்திருந்தது. யானைகளின் உடலாகிய கலங்கல் வழியில் வழிந்துபோகுங் குருதிவெள்ளத்திற் கொடியாடைகள் தோய்ந்தசைந்து மிதக்குந்தோற்றம் எப்படியிருக்கிறதென்றால், செம்மண் கலங்கலாகிய புதுவெள்ளப் பெருக்கில் எதிரேறி துள்ளிப் பாய்ந்து விளையாடித் திரிகின்ற வாளைமீன், மடவை முதலிய மீன் கூட்டங்களை யொத்திருந்தது. இதன்றியும் மாலைகளணிந்த மன்னவர்களின் மகிடத்துடனே மதிகம் விழுந்து கிடப்பது எப்படி யிருந்ததெனில், சிவந்த ஜலத்திற் செந்தாமரைப் புஷ்பம்விரிந்தும், பொற்றாமரைப் புட்பங் குவிந்தும் இருப்பதைப் போலிருந்தது. அளவிறந்த உதிரமானது ஏரியாவும், அதற்கு இருபுறத்திலுங் கட்டிய கரைகள் யானைப்பிணம் - குதிரைப்பிணம் - சேனைப்பிணம் இவைகளாகவு மிருந்தன. அன்றியும், தோல் முதலிய வார் கிழிந்துடைந்த பறைகளும், தப்பட்டைகளும் பாதிபுதைந்து பாதிதெரிந்த அதின்வழியே செந்நீரோடு வது எப்படி யிருந்ததெனில், அந்த ஏரிக்குக் கீழ்க்கலங்கல் வீட்டிருக்கும் வாய்க்காலுக்குக் கட்டிய மதகினுடைய துவாரம்போலு மிருந்தது. மேலும், பூமியிலிறந்தொழிந்த அரசர்களுடைய ஆபரணங்கள் உதிரவெள்ளத்தில் விழுந்து கிடக்குந் தோற்ற மெப்படியிருந்ததெனில், ஆகாயபரியந்தம் அளாவி யெரிந்த அக்கினிக்குழம்பில் தாராகணங்கள் விழுந்து கிடக்குந் தன்மையை யொத்திருந்தது. இத்தன்மையவாகிய யுத்தகளத்தில் நிறைந்து நின்ற பூபாலரும், சேனைகளும், மன்னவர்கள் முதலியபேரும் மிகுந்த துன்பமுடையவர்களாய், பாண்டவர்களுடைய சேனாதிபதியாகிய சுவேதனராஜன் பட்டானதையால், இனிமேல் இன்றைக்கு யுத்தம் நடப்பது கஷ்டமென்னும் நினைப்புற்றவர்களாய், வீரகண்டைகளும், தீரதண்டைகளும், தரித்தவீரர்களும், பட்டவர்த்தனதியர்களும், மகுடவர்த்தனதியர்களும், சுடர்வடிவாளேந்தியரும், இன்னும் மற்ற மன்னர்களும், மகிபாலரும், பாசறைப் போய் சேர்ந்தார்கள். சூரியனுங் குடபாற்குன்றிற் சென்றுமறைந்தான். இந்த ரத்தங்களினால் மேற்றிசை சிவந்ததைப்போல் செவ்வானந்தோன்றப் பாண்டவர்கள் முதலாகியபேரும், பாசறையிற்சென்று பரிதாபங்கொண்டு விராடனிருக்கும்பாடி வீட்டுக்குப்போய் அவனைக்கண்டு உபசரித்தபோது, விராடனு மவன் தம்பி சதாநீகனும், மற்றப்பிள்ளைகள் முதலிய மச்சகுலத்தலைவரும் மிச்சமாகிய துன்பத்தில் ஆழ்ந்து வருந்த, அவர்களையெல்லாம் பஞ்சைமாலும் பாண்டவர்களுந் தேற்ற, தருமராஜனவர் விராடராஜனைக்கண்டு இதனைப் பேசுவதாயினர்.

ஐயா விராடபூபதி! உமது பிள்ளையான சுவேதனனும், உத்தரகுமாரனும் முதனாள் யுத்தத்தில் இறந்துபோனார்களென்று துன்புறவேண்டாம். உன்குமாரன் இன்று வீஷ்மரைப்பண்ணின ஆட்டமும், அதனால் அவருக்குண்டான வாட்டமும், உடனே புறமுதுகிட்டோடிய ஓட்டமும், ரணக்களமுழுதும் கோஷ்டமும் என்ன சொல்லுவோம்? இவ்வளவு அனர்த்தங்கள் உண்டாகுமபடியாய் வெற்றி கொண்டு வீரத்திறநாட்டி நிற்கிற காலத்தில், சூதாக வாளெடுக்கச்செய்து தான் மாத்திரம் வில்லையெடுத்து வஞ்சனையாகிய நெஞ்சத்தை கொண்டிருக்கும் வீஷ்மர் கொன்றுவிட்டார். இல்லாவிட்டால் இறக்கும்படியானவனோ? ஒ எந்தலே! உமதிளையகுமாரன் அந்தச் சல்லிய

ளைப் படுத்தியபாடுலேசாகியதல்ல, ஆகையால், இவர்களிருவரும் நல்லவீராள். வீரசுவர்க்கம் பெற்றூர்கள். நீர் அந்த பிள்ளைகளைக் குறித்து விசனப்படவேண்டாம். நீரெப்பேர்ப் பட்டவ ரென்ருல், பேய்கள்சூழும் வனத்தில் வாசஞ் செய்துவந்த பாண்டவர்களுக்கு, நேசவிசுவா சத்துடன் போஜனுதிமுதலிய உபசாரங்களும் நடத்திப் பெற்றதாயினும், பெரிய தாயைப் போற் காத்திரட்சித்த பூமானன்ரோ? அவ் வாறு நீர்செய்த உதவியைப்பார்க்கிலுமேலாக உமது பிள்ளைகள் யுத்தகளத்தில் உற்ருருக்கு உயிருதவி செய்தார்கள். ஆகையால், ஓ சத்திய ஞகிய உத்தமனே! உம்முடைய தவமே தவம். இப்படிக்கு உயிருதவி செய்யும்படியாகிய பேர் கள் உலகிலுண்டோ? ஐயா! தேவர்கள் முத லிய யாவரும் புகழும்படியாய் நீங்கள் செய்த உதவியைப்போல் ஆர்செய்தார்கள்? என்று சொல்லிப் புகழ்ந்து, அவ்விராடராஜன் மன தைத்தேற்றினுர். இந்த வார்த்தையைக்கேட்ட விராடராஜன் சொல்லுகின்ருன். ஓ மெய்யே மெய்யாகக்கொண்ட ஐயா!தேவரீருடைய பிரா ணனைப்போற் பாதுகாத்துவந்த உத்தர குமா ரனும், தீரவீரத்திற்சிறந்து நிறைந்த சுவேத னனும், உலகமெல்லாங் கொண்டாடும்படியாய் யுத்தஞ்செய்து வெற்றியடைந்தார்கள். இனி, இருக்கும் பிள்ளைகளினுயிரும், என்னுயிரும், இன்னமும் என்குலத்தோருயிரும், தேவரீ ருக்குச் சொந்தமேயன்றி வேறில்லை. ஓ பிர மனுல் ஆன்மகோடிகளையும் சிருஷ்டிக்கும் இவ்வுலகில் தன்னுயிர்போல் மன்னுயிரை காக்குந் தயாநிதியாகிய தருமவுருவே என சொல்லித் தாழ்ந்து வணங்கினுன் மச்சகுலா திபர்க்குச்சிதமாகிய வளமுறைந்த சுகநிறை ந்த பணமிகுந்த மாலையணிந்த விராடராஜன். இப்படிக்குச் சொல்லி வணங்கிய மாத்திரத் தில், அவனைத் தருமராஜன் வாரி யெடுத்து அணைத்து உபசரித்து அவ்விடத்தில் இருக் கச்செய்து, பாண்டவர்களும், கண்ணனும், தங்கள் பாடிவந்து சேர்ந்து போஜனுதி முத லியதை முடித்துக்கொண்டு சயனித்திருந்து, பொழுதெப்போது விடியுமென்று வீராவேச மிகக்கொண் டிருந்தார்கள் என்று வைசம்பா யனர் சொல்ல, ஜெனமேஜெய மகாராஜன் சந்தோஷத்துடன் வணங்கி, சுவாமீ! இந்த முதல் நாட்போரில் நடந்த சங்கதிகளைத் துங் கேட்டு மகா ஆச்சரியமாயினேன். இனி இரண்டாம் போரின் றன்மை யெப்படியோ அதையும் எனக்கு சொல்லவேண்டுமென்று கேட்க, வைசம்பாயனர் சொல்லத்துடங்கி ஞர்.

முதற்போர்ச் சருக்கம் முற்றிற்று.

---

இப்பால்,

## இரண்டாம்போர்ச் சருக்கம்

### கண்ணன் துதி

எந்தவெந்த யோனிபேத மெங்குமெங்கு முள்ளன, வந்தவந்த யோனிதோறு மாவி யான தன்மையைச், சிந்தையின்க ணெருகண த்தி னிகழுமாறு தேவர்கோன், மைந்தனுய் ந்தி டப்புகன்ற வள்ளருள் வணங்குவாம்.

ஓ அருணிதி மேவிய அதிபனே! கேள் மறுநாட் காலமே இவ்விரு திறப்படையில் நடந்த முதனுள் யுத்தத்தைப் பார்த்தோமே இனி இரண்டாநாள் யுத்தத்தையும் பார்ப் போமென்று வந்தவனைப்போற் கீழ்த்திசையி லுதயமாயினுன் சூரியபகவான். அப்போ துதித்த அவ்வருக்கனைக் கண்டமாத்திரத்தில், யாவரும் எழுந்து காலைக்கடனை முடித்துக் கொண்டு, போஜனுதி முதலியதுங் கொண்டு, ஆயுதபாணிகளாய் யுத்த சன்னத்தராகிக் குரு பூமிக்குவர எத்தனித்துக் காலமுரசு முதலிய பிரையாணபேரி முழக்கிய காலையில், பாண்ட வர்கள் தங்கட்குச் சேனபதி யில்லாமையாற் சேனைகள் தியங்கிகொண்டிருக்குஞ் சேதிகேட் டுத் தருமராஜனுனவர் திருமாலை யடுத்து, சுவாமி! முதற்சேனபதியாகிய சுவேதனன் இறந்துபோன பிற்பாடு விராடராஜன் முத லிய நாம் எல்லோரு மந்தவிசனத்திலிருந்து விட்டோமே; இன்றைக்குச் சேனபதிப் பட் டம் ஆருக்குக் கட்டலாமென்று கேட்க, ஸ்ரீயப்பதியாகிய திருநாராயணர் சொல்லு கின்ருர். ஓ முரச கேதனனே! கேளும்; இளவரசராகிய சேனபதிப்பட்டந் துஷ்டத் தாய்மனுக்குக் கட்டி யிருக்கிறபடியாலும், அவனே சோனைப்பேய்ச்சலைப் போலவும், ஊழிக் காச்சலைப்போலவும் பாணங்களைப் பொழிந்து சத்துருக்களழிந்து போகும்படி யாய் வெற்றிபெறத்தக்க வீரராகையால்,நமது எதிர்ப்படையி லிருக்கிற வில்லாசிரியருக்கு வைரியாய்த் துரோணகண்டகனென்று உதித் திருப்பதிலும், சகல நன்மை தீமைக் குரியவ ராக யிருந்து பாடுபடுந்தன்மை அவனிடத்

திற் சொல்லாமே யிருக்கிறபடியால், உமது மைத்துனனென்னு முறையில் இந்தத் துஷ்தாய்மனுக்கு சேனாபதிபட்டங் கட்டவேண்டுமென்று பீதாம்பரன் சொல்ல, அந்தப்படியே அந்த துஷ்டத் தாய்மனுக்கு மங்கள ஸ்நானஞ் செய்வித்து, மலர்ந்த மாலை முதலிய ரத்னாபரணங்கள் பூட்டி, சேனைகளுக்கெல்லாந் தெரியப்படுத்தி, அதிரதர் - சமரதர் - மகரதர்- அர்த்தரதர் முதலிய சகல ராஜாதிராஜர்களும் தங்கள் தங்கள் சதுரங்கச் சேனைகளும் புடைசூழ, ஜெய விருதுகளுடன் புறப்பட்டார்கள். இவ்விடத்தினின்றும் பாண்டவச்சேனை எழுந்து பேரோசையுடன் யுத்தகளம் வந்துசேரவும், அவிடத்திலிருந்து துரியோதனனுடைய சேனைகள் புறப்பட்டு மிகுந்த கோபத்துடன் இரண்டுகட லொன்றுபடுமாப்போற் வெவ்விதாகிய ரணக்களத்தில் வந்து நெருங்கி நிற்கவும், அந்தக்காலத்தில் ஐவர்சேனைத் தலைவனாகிய துஷ்டத்தாய்மன் தங்களுடைய சதுரங்கச் சேனைகளையுங் கோமுக வியூகமாகச் செய்து, கெடிவீரஸ்தலாதிபர் முதலாகிய பேர்களைக் கொட்டிலாக வளைத்து, அந்த வியூகத்தின் முனையில் உலைவிலா ஸ்தம்பம்போல நிலைபெற்று நிற்கவும், கௌரவகுல முதல்வனுடைய சேனாநாயகராகிய வீஷ்மாச்சாரியார் தங்களுடைய படைகளையெல்லாஞ் சேர்த்து வியாக்கிர யூகமாச்செய்து, மற்றச் சுத்தவீரர்களையெல்லாஞ் சூசிகக்குகைபோலு மமைத்து, போர்முனையிற்றுமும் ஓர் பெரும்புலிபோல் வந்து பராக்கிரமித்து நின்றார்.

இந்தப் பிரகாரம் துப்பெழும்படியாகிய குருக்ஷேத்திரத்தில், இருவர்படைகளையும் யூகமாகச்செய்து, இரண்டு சேனாதிபரும் எதிரெதிர்நிற்கவே, கரும்புவிற்றாங்கிய மன்மதனை கங்காதர னெதிர்த்து, காய்ந்தகாலத்தி லெழுந்த கனலைப்போற் கண்களினு மாயுதங்களினுமிருந்து அனற்பொறி எழும்பவும், விமானத்திற் சென்று வானத்தினின்று வேடிக்கைப் பார்க்கும் இந்திரன் முதலாகிய தேவர்கள் நடுங்கவும், கோடைக்காலத் திடியினாற் முடிபொடியாகுந் தன்மைபோற் பாதாளத்திலிருக்கும் நாகரொடுங்கவும், இவ்வுலகத்தா ரேங்கவும், முரசு-காகளம்-பேரி-பூரி-தாரை-கொம்பு முதலாகிய வாத்தியங்களை முழக்கி, மூவுலகும் நடுங்கும்படியாய் முரண்டு, முனை முகத்திற் றிரண்டு, சேனாதிபதிகளின் உத்தரவு பெற்றுக்கொண்டு இரண்டுபடைகளுங் கைகலந்து தொந்த யுத்தஞ்செய்யுங் காலத்தில், சகாதேவ ராஜனானவன், மகா வீரர்களேறிய பன்னீராயிரந் தேர்களுடனேயும், பன்னீராயிரம் யானைகளுடனேயும், அளவிறந்த குதிரைகளுடனேயும், தொகையிறந்த கால்பலங்களுடனேயும், இடது பக்கத்தில் வந்தெதிர்த்தான். ஏழுபத்திராயிரம் யானைகளும், எழுபத்திராயிரந் தேர்களும், நாற்பத்து நாலாயிரங் குதிரைகளும், லக்ஷத்தெழுபத் தாராயிரங் கால் பலங்களும் சேர்த்துக்கொண்டு நகுலராஜன் வலது பக்கத்தில் வந்து வளைத்துக்கொண்டான். இவ்வளவு என்று வகுத்துச் சொல்லுவதற் கரிதாகிய மிலேச்சர் முதலான வீரபடாள் பின் பக்கத்திற் பொருந்திப் போராடினார்கள். பீமன், அருச்சுனன், அபிமன்னு, தருமராஜன், கிருஷ்ணதேவன் முதலாகிய பேர்கள் கண்ணுக்கெட்டிய தூரங் கடல்போ னிறைந்தக் காரியஸ்தருடன் முன் பக்கத்திற் சூழ்ந்து நின்றார்கள். இப்படியாக நான்கு பக்கத்திலும் நான்கு சமூத்திரம்போல் வளைத்துக்கொண்டு, முன்பு கட்டிய கோமுக யூகத்தைக் கலைத்துக் கடக நாதனென்று சொல்லப்பட்ட யூகங்கட்டி நின்றார்கள். கடக நாதன் என்றால், யானைகளுக்கெல்லா முதன்மையாகிய தலையானையென் றருத்தமாம்.

## கலிங்க தேசாதிபதிகள் வதை.

இப்பால் வியாக்ர யூகமாக்கிய வீஷ்மாச்சாரிய ரானவர், அளவிறந்த சேனைகளைப் பேரணி வியூகமாக்கி, அந்த வியூகத்தின் நுாசி முனையினின்றார். உடனே மாறுப்பகைவர்களாகிய உபய தள கர்த்தர்கள் யாவரும் மறுபடியும் போர்புரிய வாரம்பித்தவர்களாய், விற்காரருடன் விற்காரர் எதிர்த்துப் பாணங்களைச் சொரிந்து அடரவும், வாட்காரருடன் வாட்காரர் முனைந்து வாள்களைவீசி மடியவும், வேற்காரருடன் வேற்காரர் சினந்து வேல்களாற் குத்தி முடியவும், வசைக்காரருடன் வசைக்காரர் எழுந்து வாய் வம்புகளைப்பேசி வதறவும், இவ்வாறு ஒருவரை யொருவர் அடர்ந்தும், முடிந்தும் மடிந்தும், வசைகூறியும் போராடிக்கொண் டிருக்கின்ற காலத்தில், பாண்டவச் சேனாதிபதியாகிய துஷ்டத்தாய்மனும், தனுர்வேத ஆசாரியராகிய துரோணாச்சாரியரும் எதிரெதிர் மலைந்து, ஒருவர் பேரில் ஒருவர் உருவும்படியாக உந்தும் பாணங்களினால் மனம்நொந்து, அஷ்டதிக்குகளும் அதிர்ந்து போகும்படியாய் அஸ்திரங்

களை யிறைத்து, நேருக்கு நேராகத் தேரைச் சுற்றிக்கொண்டு இந்த வீரர்களிருவரும் போர் புரிந்தார்கள். அந்த சமயத்தில் துரோணாச்சாரியரானவர், சுடுமுகப்பகழி, சுரிமுகப்பகழி என்னுங்கணைகளைவிடுத்து திஷ்டத்தூய்மனுடைய வில்லும், அவனேறிய தேரும், அவன் கட்டிய வீரபட்டமும்கெட்டு விழும்படிக்கு ஒட்டியடித்தார். அந்தஅடியினால்மெத்தவருந்திச் சித்தமுறிந்ததுஷ்டத்தூய்மன் பின்னிட்டு ஓட, அவனைச் சூழ்ந்துவந்த சேனைகளெல்லாம் வெந்நிட்டோட அதை வீமசேனராசன் கண்டு, பற்பலச் சேனைகளுடனே பாரிய தேர்தனை செலுத்திக்கொண்டு வந்து பார்ப்பாருக்குப் பக்ஷமென்ப திருக்காதல்லவா வென்று துரோணாச்சாரியாரை வளைத்துக் கொண்டு பாணங்களை யேற்றினான். அப்போது, துரோணாச்சாரியார் தன்னாற் கூடிய வரையிலும் யுத்தஞ்செய்து, வீமசேனனை வெல்லமாட்டாமல், வெழ்க்கத்தை வெளியிட்டுச் சொல்லவுமாட்டாமல், புறமுதுகிட்டுஞ் செல்லமாட்டாமல் (ஆற்றிலொருக்காலும் சேற்றிலொருக்காலும்) என்னும் பழமொழியைப்போல், ஓடிப்பார்க்கலாமா? இன்னமும் யுத்தத்தை நாடிப் பார்க்கலாமா? என்று யோசித்துக் கொண் டிருக்குங் காலத்தில், வடகலிங்கத் தேசாதிபதியாகிய சக்ரதேவன் இரதத்தைச் செலுத்திக் கொண்டுவந்து, இந்திர தனுவைப்போன்ற சுந்தரவில்லை வளைத்து, யிளைத்துக் களைத்துநின்ற துரோணாச்சாரியாரை பின்னிறுத்தி, தன்னுடைய தேரை முன்னிறுத்தி, வீமசேனன்பேரிற் கண்ணிறுத்தி வேண்டிய அஸ்திரமாரிகளை எண்ணிறந்தனவாக யிறைத்தான்.

அந்தக் கணைகளெல்லாங் கருங்கொண்டல்போற் கவிந்து வரக்கண்ட கதாயுதனை வன் கடுகெனத் தேரைவிட்டிறங்கி, இரண்டு கைகளையும் நீட்டிச் சக்ரதேவனிறைத்த கணைகளை யெல்லாம் பிடித்துக் கசகசவென்று கசக்கி, அவ்வரசன் கொண்டுவந்த யானைக்கூட்டத்தில், ஆண்சிங்கத்தைப்போல் நுழைந்து கரங்களா லறைந்து, கைகளாற்பற்றி, கால்களாலெற்றி, கரத்திற் பிடித்துக்குத்தி, துதிக்கையைப் பிடித்துச் சுற்றி, ஆகாயவீதியில் எறிந்து, மீண்டுந் திரும்பி வருவதற்குமுன்னமே, ஐந்து - ஐம்பது - ஐஞ்ஞூறு என்று சொல்லும் படியாய் மறுபடியும் யானைகளை வாரி யெறியவும், பின்னேபோகிற யானைகள் முன்னே போகிற யானைகள் கரகரவென்றுச் சுழன்று கதறிச்சென்று விழுதலு மொத்தி, இதுவு மதுவும் மறுபடி யெழும்பி இரண்டு தும்பிக்கையும், இரண்டு காலும், இரண்டு வாலும் ஒன்றோடொன்று பிணைந்து நிற்க, இந்த யானைகளைத் திரும்பிக் கீழே விழ வந்த யானைகள் விடாமற் பிடித்துக் கிழித்து மேலது கீழது, கீழது மேலதுவென்று சொல்லும்படியாய் வந்து, பூமியில் விழுந்து நொந்து நைந்து நொறுங்கிச் சிதைந்துப்போகவும், மேலுலகத்தில் அடித்து வீசிக்கொண்டிருக்குஞ் சுழற் காற்றுகள் இந்த யானைகளை ஆகாயவீதியி லுந்திக்கொண்டு போக, அங்கிருந்து விழுந்த யானைகளால் இவ்விடத்திலிருந்த யானைகள்-சேனைகள் முதலிய யாவும் முடியழிந்து - மூளை வழிந்து-உதிரம் பொழிந்து - உடலங்கிழிந்து-உயிரொழிந்து போகவும், இந்தப்படியாகச் சில யானைகளை நிலத்தில் அடித்தும், சில யானைகளை எதிராளிகளின் புயத்திலிடித்தும், சில யானைகளைப் பாரிலறைந்தும், சில யானைகளைச் சத்துருக்களின் பேரி லெறிந்தும், சில யானைகளைக் காலால் முடித்தும், சில யானைகளை மேலா லிடித்தும், சில யானைகளைக் கண்டங் கண்டமாய்த் தறித்தும், சில யானைகளைத் துண்டந் துண்டமாய் முறித்தும், மண்டலங் குலுங்க, எண்டிசை கலங்க, அண்டர்க ளொடுங்க, துண்டர்களடங்கக் கொல்லுவ தாயினான் வீமசேனன்.

இவைகளைப் பார்த்த யாவரும் பயந்து, இதென்ன ஆச்சரியமென்று வியந்து, பூர்வத்திற் சக்ரவர்த்தித் திருமகன் சமுத்திரத்தைத் திருவணைகட்டிய காலத்தில், அனேக மலைகளைப்போட்டு அநுமா ரடைத்ததைப்போல், இந்த வீமசேனன் இவ்விடத்தில் ரத்தக் கடலுக்கு யானைப் பிணங்களால் வாராவதி கட்டினான். ஆகையால், ஆஞ்சநேயரிலும் சிறந்தவன்; இந்த வாயு புத்திரனாகிய பீமனென்று சிலர் அகமகிழ்ந்தார்கள். இதன்றியும், வாயுவினாற் கலங்கி முன்னும் பின்னுமாய் கலந்தகன்ற மேகங்களைப்போல் இந்த யானைகள் கலந்து, தலைவிரிகோலமாய் தாறுமாறாய்த் தலைமாடு கால்மாடாய்ச் சிதரி பறக்கச் செய்த இந்த வீமசேனன் வாயு குமாரனதலால், தந்தையின் குணம் பிள்ளைக்கென வென்று சொல்லுந் தருமசாஸ்திரத்திற்கு இணங்கியிருக்கிறானென்று சிலர் சந்தோஷப்பட்டார்கள். இந்த வீமசேனன் எறியப்பட்ட யானை

கள் விண்ணுலக மெல்லாம் சுழன்று மண்ணில் விழும்போது, முகமானது பூமியிற் புதைந்து, உடலும் - பின்காலும் - வாலும் மேலாக உயர்ந்திருப்பது எத்தன்மையை யொத்திருந்த தென்னில், இந்தப் பூமியைப் பாயாகச் சுருட்டிப் பாதாளத்திற் சென்ற இரணியாக்ஷ னென்பவனைச் சங்கரிப்பதற் காகத் திருவுருக்கொண்ட ஆதிவராகமானது, பூமிக்குட் செல்லத் தன் முகத்தாற் பூமியைத் துளைத்ததுபோன்று இருந்தது. அன்றியும், சில யானைகளைப்பற்றி வீமனெறியும்போது, மேகமண்டலம் வரைக்கும் வீசிட்டுக்கொண்டு போன யானைகள் எப்படி சென்றதென்றால், பூலோகத்திலிருக்குஞ் சில மேகங்கள் மேலோகத்தி லிருக்குஞ் சில மேகங்களைப் பிடித்துப் பிணைபோட்டுக்கொண்டு இங்ஙனம் உருண்டு வருகின்றதைப்போலு மிருந்தது.

இந்தப்படி வீமனானவன், கலிங்கராசனுடைய யானைகளை யெல்லாங் கால்மாடு தலைமாடாக விழுந்து அழிந்து கலங்கிப்போகும் படியாய்க் கொன்று குவித்து, சேனைகளை எல்லாம் வென்று முடித்துக் கலக்கும்போது, ஒன்றொழியாம லொழிந்ததுமன்றி, நின்ற சேனைகளெல்லாம் புறமிட்டோடுவதை வீஷ்மாச்சாரியர் கண்டு மிகுகோபங்கொண்டு, கண் பொறி கதுவத் திண்சிலைதாங்கி மகாதவீரர்ள் மருங்கினிற் சூழ்ந்துவரும்படியாகச் சென்றார். அந்தவேளையில் தளகர்த்தரும், குசனைக் காவலரும், கலிங்கராசனும், கலிங்கராசனுடைய பிள்ளைகள் கேதுமாலன் முதலியபேரும் வெகு சேனைகளோடு சென்று வீமசேனனை வளைத்துக்கொண்டு போர்புரிந்தார்கள். அந்த வீமசேனன் இவர்களையெல்லாங் கண்டு பூமியில் நின்றபடி அவரவர்கள் விட்ட கணைகள் - பாணங்கள் - அஸ்திரங்கள் - ஆயுதங்கள் முதலிய யாவற்றையும் அறைந்து பிடித்து ஒடித்தெரிந்த தல்லாமலும், அவர்களேறி வந்த தேர் நிறைகளையும், அத்தேரிற் கட்டிய குதிரை நிறைகளையும் நேருக்குநேராக வாரி வாரி நிலத்தின்மோதிப் பலத்திற்கொன்று, நிகரொருவருமற்று நிற்கின்றதை கலிங்கராஜன் முதலாகிய வீரர்களெல்லாங் கண்டு கலங்கிக் கைபிசைந்திருக்க, அதை வீஷ்மாச்சாரியர் கண்டு விஷம்போல மனஸ்தாபங்கொண்டு, தேரைச் செலுத்திவந்து வில்லை வளைத்து நாணியிழுக்க, அதைக்கண்ட கலிங்கராசனும், அவன் புத்திர மித்திராள் முதலிய சகல வீரரும், இன்னுஞ் சில யானைக் கூட்டங்களோடு கடற்போற் பொங்கிவந்து வீஷ்மரைக் கலந்தார்கள்.

அந்தச் சமயத்தில், வீமசேனமகாராசன் சீரேறும்படியாய்த் தேரேறிக்கொண்டு சிலையைக் கரத்திற் பிடித்துக் குணத்தொனிசெய்து வீஷ்மருக் கெதிரில் தாஷ்டீகமாக வரும் போது, கலிங்கராசனும் அவன் புத்திரவர்க்கத்தாரும் அந்த வீமனைப் பார்த்துப் பற்கடித்துப் புருவநெறித்து, யானைக் கூட்டமும் - சேனைப் பெருக்கமும் - குதிரைப் பந்திகளும் - தேர்க் கும்புகளும் புடைசூழ, வீஷ்மர் துணை வந்தாரென்னுந் தைரியத்தில் வீமன்மேல் வந்து விழுந்து, கோபக்கொழுந்து விட்டெரியும்படியாகக் கொதித்து, அடா பாவி! வெகு காலமாய் நான் வைத்திருந்த யானைக் கும்புகள் யாவற்றையும் வாயிற் போட்டுக்கொண்டாயே இதோ உன்னை நாங்கள் வாயிற்போட்டுக்கொள்ளுகிறோம் பாரென்று பற்கடித்துப் பாணந்தொடுத்துப் பலவாறாகிய ஆயுதங்களையும் விடுத்தார்கள். அவர்கள் விட்ட பாணங்கள் முதலிய ஆயுதங்களை யெல்லாம் வீமன் பட்டழியும்படிக்குப் படுத்திக் கலிங்கனுமவன் புத்திரவர்க்கத்தார் யாவருங் கெட்டொழியும் படிக்குக் கெடுத்துப் பட்டைய பாணங்களை விடுத்து, மற்றொருவரும் அடுத்து யுத்தம் பண்ணமாட்டாம லோடும்படிக்கு முடுக்கிய தன்மையை வீஷ்மர் கண்டு, இந்திரனு விறகிழந்த மலைபோலேங்கி, ஐயோ! கலிங்கதேசாதிபன் முதலிய காவலரெல்லாம் இறந்து போனார்களே யென்று வடவைத் தீப்போற் பொங்கி, வீமசேனன்பேரில் வீரவாளிகள் தொடுத்துவந்தார்கள்.

அதைக் கேட்ட வீமசேனன் ஒரு வெற்றி வேலைப்பற்றி எடுத்துப் பக்குவமாகச் சுழற்றிப் பாட்டனுடைய தோளுருவிப் போகும் படியாய் எறிந்தான். அந்த வேலாயுதம் வருகிற உறட்டியை வீஷ்மர் கண்டு, ஒரு தோமராயுதமெடுத்துச் சுழற்றியெறிந்தார். உடனே தனது வேலாயுதமானது துண்டமாய்ப் போகக்கண்ட வீமசேனன் கொதித்து, ஒரு சூலாயுதந் தொடுத்தான். அதை வீஷ்மாச்சாரியர் ஒரு உருத்ராஸ்திரத்தாற் றடுத்து சிங்கக் கொடியையும் பங்கப்படுத்தித் தேரையுஞ் சேனைகளையும் போக்கடித்தார். அந்தக் காலத்தில் வீமசேனனுக்குக் கோபம்பிறந்து, ஆயிரத்தெட் டண்டமும் அனல் வீசின லெப்ப

டியோ? அப்பேர்ப்பட்ட கோபாக்கினியோடு கதையைக் கையிலெடுத்துக்கொண்டு, கிட்டிய சேனைகள் முட்டிய யானைகள் யாவற்றையும் கேட்டழியும்படிஜாடி, வீஷ்மாச்சாரியருடைய தேருக்குச் சமீபத்தில் வந்து, அவருக்கு மனதொத்த சாரதித் தலையை தவிடாய் நுறுக்கினான். இந்தப்படிக்கு ஜயபோகமும் புயவேகமுமுடையவனாக வீஷ்மரை மடக்கிக் கொண்டு, அவர் விற்பிடித்து யுத்தஞ்செய்ய, இவன் கதையைக்கொண்டு போர்புரிய, அவர் ரதத்தினின்று ஆரவரிக்க, இவன் நிலத்தினின்றும் பராக்கிரமிக்க, இவ்வாறு அப்பாட்டனாருடன் வந்திருக்கும் பார்த்தியர்களுடைய தலைகளும், மூளைகளும், மகுடரத்னங்களுஞ் சிந்தித் தெரிக்கும்படியா யடித்து, மலைகளைப் போலொத்த தேர்நிறைகளை வாரிச் சாரதிகளும், குதிரைகளுஞ் சாகும்படியாய் மோதி ஆகாயத்திலெறிந்து, ஒருநாழிகைக் குள்ளே ரணக்களத்தை யொழித்து, ஆகாயத்தி லிடிக்கும் மேகத்தின் இரைச்சலைப்போல் யுத்தகளமெங்கும் பெருங்கூச்ச லுண்டாகும்படியாய் பெருங் குரலிட்டுப் போர்புரிந்து திரிவதாயினான் வீமசேனன்.

இவ்வாறு வீமசேனன் பராக்கிரமித்தே திரிவதை வீஷ்மரானவர் கண்டு, தனது வினையைத் தானே வெறுத்துக் கொண்டு, மறுபடியும் ரதத்தைச் செலுத்தி அந்தப் வீமனைத் தகைத்து உறுத்து, எரியுங் கண்ணிலிருந்து நெருப்புப் பொறி யுதிரக் காளமேகத்தோடு கலந்து யுத்தஞ் செய்வதைப்போற்போராடி, யானைகளுஞ் சேனைகளும் நிலத்தில் மடிந்து விழும்படியாய் வீமசேனன் கதாயுதயுத்தமும் வீஷ்மாச்சாரியர் வில் யுத்தமுஞ் செய்துக் கொண்டிருந்தார்கள். அப்போது பாண்டவச்சேனைகள் மட்டும் பாழாய் விழுந்து இறப்பதை அபிமன்னன் பார்த்து, ஆ! ஆ! நம்முடைய சேனைகள் இப்படி நாசமாகு தல்லவாவென்று, வெற்றிவில்லை வட்டமாய் வளைத்து, ஆகர்ண பரியந்த மிழுத்து, வடிக்கணை தொடுத்து, வில்நாணி யிழுத்து, வெகுவிதமாகிய பாணம் விடுத்து யுத்தஞ் செய்யும்போது, தன்னையுந் தன் பெரிய தந்தையையு நோக்கி, எதிர்த்து வராநின்ற அவரவர்கள் நெற்றியிற் குறிவைப்பதுபோல் ஒவ்வொரு கூர்க்கணையை யுருவ விடுத்து, மகமேருவை வளைத்து, வாசுகியை நாணியாக மாட்டிச் சூற்கொண்ட மேகம்போற் கணைகளைச் சொரிந்து நிறைந்த நெருப்பினால் திரிபுரம்நீறெழ நகைத்தருளிய ஆதிசிவனுக் கொப்பாக நகைத்து, சத்துருக்களின் படையும், சேனாபதியாகிய வீஷ்மருடைய குடையும், அவருடைய வில்முதலாகிய கணைகளும் - தேர்களும் - வீரப்பட்டங்களும்-சாரதிகளும்-குதிரைகளும் தனித்தனி யழியும்படியாகத் தானும் அவ்வீமசேனனுமாக உலக முடிவிலெழும் உவர்க்கடல்போற் பொங்கி, தீயுங்காற்றுஞ் சேர்ந்து எரிப்பது போல நுங்கி, ஆழமாகிய கிணற்றினீரும் அனலாற் பொங்கி மேலெழும்பும்படியாகப் போர்புரிந்து நின்றூர்கள்.

அப்போது அக்கிணற்றின்றவளை நாட்டு வளப்பங் கண்டு கோபிக்குந் தன்மையைப் போல், அஸ்தினாபுரிக் கதிபதியாகிய அரவகேதனன் கடுங் கோபங்கொண்டு, கையோடு கைபறைந்து கண்பொறி கதுவக்கூவிக் காவலர்களை நோக்கி, அந்தோ! அந்தோ! வீஷ்மர் முதலிய படைகள் வெந்து போகின்றூர்கள்; மிகவும் நொந்து போகின்றூர்கள்; உடலசந்து போகின்றூர்கள்; குடல் நசிந்து போகின்றூர்கள். ஆகையால், நீங்களனைவருமொன்றுசேர்ந்து இந்த வேளை பிந்திப்போகாமல் முந்திப்போய் வீமன், அபிமன்னன் என்று சொல்லும் அவ்விருவரையும் மடக்கிக் கொண்டு கொல்லுங்கள்; அவர்களை வெல்லுங்கள் என்று துரியோதன மகாராஜன் சொல்ல, அவ்வார்த்தையைக் கேட்ட அநேகங் காவற்றலைவரும், அங்கர் முதலிய அநேகந் தேசத்தலைவரும், மராடமுதலிய பதினெண்பாஷைத் தலைவரும் ஒன்றாகக்கூடி, அவ்விரண்டுபேரையும் வளைத்துக் கொண்டு சளையாமல் யுத்தஞ் செய்தார்கள். அந்தச் சமயத்தில், காலகேய நிவாத கவசாளோடு இரண்யபுரவாசிகளாகிய இராக்கத ரெல்லாரையும் ஒன்றொழியாமற் கொன்று ஜெயங் கொண்டு, இந்திரனுக்குப் பட்டங் கொடுத்துத் தேவர்களுக் காதாரமாகித் திசைகள் முழுவதும் இசைகளெழுதும் அர்ச்சுனனனவன், மன்மதனுக்குச் சமானமாகிய அபிமன்னனையும், அண்ணனாகிய பீமசேனனையும் சத்துருக்கள் வளைத்துக் கொண்டார்க ளென்று வரிபொருந்திய கணைகளைக் காண்டிபத்தில் வைத்து இறைத்துக் கொண்டு, வியாக்கிரமத்தைப் போல் ஆக்கிரமித்து, விடாதீர்கள் விடாதீர்கள்; இதோ வந்தேன் இதோ வந்தேன் என தேரை நடத்திக் கூவிக்கொண்டு, அவர்களுக்

குப் பகையாகவும் இவர்களுக்குத் துணையாக வும் வந்து கூடினன்.

அந்தக் காலத்தில், இவர்கள் மூவருஞ் சேர்ந்து பாணங்களைத் தொடுக்க, அந்தப் பாணங்களானது சிவபெருமான் நகைக்கத் திரிபுராதிகளை எரித்த தீயைப்போலும், இலங்கை யழிய அநுமந்தர் கொளுத்திய நெருப்பைப்போலும், யுகமுடிவில் உலகை யழிக்கவெழுந்த ஊழித் தீயைப்போலும் திகு திகென் றெரிந்து, நால்வகைச் சேனைகள் கூடிய ராஜ ராஜர்களாகிய பெருங்கடலைச் சுவறச்செய்து, அப்பால், காளமேகம்போன்ற வில்லிலிருந்தெழுங் கணைகளாகிய துளிகளைப் பொழிந்து, திரண்ட சேனைகள் வெருண் டோடவும், தலையறுந்தாடவும், கரசரணாதி கள் அற்று விழவும், கருந்தூள் செந்து ளெழும்பும் படியாய்க் கலக்கிப் படைக்குட் புகுந்து வருங்காலையில், அருணனையுஞ் சூரி யனையு மறைத்தெழுந்த பனியைப்போல் அர சர்கள் முதலாகிய படை மன்னவர்கள் கவிந்து அர்ச்சுனன் முதலிய மூவர்களையுமூட, இம் மூவர் விடுக்கும் பாணக் கிரணங்களினால் மூடிய பனி விட்டோட, சேனைகள் வாட, உதிர வெள்ளங்களோட, பூதப்பிரேத பிசாசு கணங்களாட, படைகளைப் பொடியாக்கி, தேரணிகளைச் சிதறப் போக்கி, குதிரைப் பந்திகளைக் குறைத்து நீக்கி, பதாதி படை களைப் பாழாக்கி, விஷ்ணு சக்கரம்போல் திரி ந்துவரும் விஜயனையும், சண்டமாருதத்தை யொத்துச் சுழலும் வீமசேனனையும், செவ்வே ளுக்கிணையாகிய வாளபிமன்னனையும், சேனாதி பதியாகிய வீஷ்மாச்சாரியர் கண்டு மனஸ் தாபங்கொண்டு வில்லுமெடுக்காமல், கணையும் அதிகம் தொடுக்காமல் மவுனமாக விசனமேற் கொண்டிருப்பதை ரத கஜ துரக பதாதிக ளோடுங்கூடிய படைமன்னர்-பட்டவர்த்தனர்-மகுடவர்த்தனர் முதலிய யாவர்களுங் கண்டு, இனி இவ்விடத்தி லிருந்தால் எல்லோரும் முடிந்து போவேமென் றேங்கிப் பின்வாங் கினவர்களாய், ஒருவர்பின் னொருவர் தங்கள் பாசறையை நோக்கிப்போய்ப் பதுங்கினார் கள்.

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! இன்று யுத்தத்திற்கு வந்த வீஷ்மாச்சாரியரும், துரி யோதனன் முதலாகிய பல அக்ரோணி சேனைகளும், தேவாமிர்தம் புசிக்க வந்த தேவர்களானார்கள். சேனைகளைச் செயித்து ஆண்மிக்கையை நிலைநிறுத்திவரும் அர்ச் சுனன் முதலிய மூவரும், அந்த பாற்கடலிற் பிறந்த ஆலகால விஷம்போ லானார்கள். இத னுடைய தாற்பரியமென்னவென்றால், அமு தம் புசிக்கலாமென்று ஆசைகொண்டு வந்த தேவர்கள், ஆலகால விஷத்தைக் கண்டு அவஸ்தையடைந்து அலறிச் சென்றார்களே; அப்படிபோல் வாடிக் கலங்கி ஓடினார்க ளென் பது கருத்து. ஆகையினால், விண்மணியாகிய சூரியனும் இனிமேல் நாம் வெளியி லிருப் போமேயாகில், நம்மையுங் கொல்லுவார்கள் போலு மிருக்கின்றது இவர்கள் கொண்டிருக் குங் கோபம். ஆதலால், துரியோதன ராஜ னுடைய படைகளைப்போல் நாமும் ஓடிப் பிழைப்போமென்று போனவனைப்போற் சப் தமாவென்னும் புரவி பூட்டிய ரதத்தைச் செலுத்திக்கொண்டுபோய் மேற்குத் திசையில் மறைந்தான். அந்தச் சூரியன் மறைந்த திசையிலெழுந்த செவ்வானமோ வென்று சொல்லும்படியாக, ரத்தவெள்ளம் ரணக்கள முழுமையு நிறைந்து, திசா திசைகளிலும் பரந்து கருங்கடலைச் செங்கடலாக்கிக் கலந் தது.

இப்பால், திரண்டுருண்ட இருளானது, தங்கள் இனத்தைக் கும்புக் கூட்டிக்கொண்டு ரணக்களத்திற்கு வந்ததைப்போல் வந்து நிறைய, அந்த இருட்கூட்டங்கள் வரவே, அதைக்கண்டு யுத்த பூமியில் நிறைந்திருந்த தீரவீரர்கள் முதலிய யாவரும் நாம் வந்த யிடத்தில் இருள் வந்தபடியால், இனி நாம் இவ்விடத்திற் றங்குதற்கு இடமில்லை யென்று தங்கள் தங்கள் பாடிபோய்ச் சேர்ந்தார்கள். அப்பாற் கூளிகளுங்-காளிகளும்-பேய்களும்-பூதங்களும்-நாய்களும்-நரிகளுங் கூடி விளை யாடிக்கொண்டிருக்கும் குருக்ஷேத்திர பூமியை விட்டுப் பாசறை சென்ற பார்த்திபனாகிய துரி யோதன மகாராஜனும், துச்சாசனன் - கர் னன்-சகுனி-துரோணாச்சாரியார்-வீஷ்மாச்சாரி யர் முதலாகியபேரும், ஒருபேரவையிற்கூடக் கலந்த காலத்தில், வணங்கா முடியையுடைய மன்னவன் சேனாதிபதி முதலிய யாவரையும் பார்த்து, ஐயா! நீங்களெல்லாரு மிருந்தும் அறியாச் சிறுவனாகிய அபிமன்னு வென்பவ னுக்கும், அர்ச்சுனனுக்கும், வீமசேனனுக் கும் இளைத்து, என் சேனைகள் புறமுது கிட்டொழியவும், பிராணன்போ யழியவும் நேரிட்டதல்லவா? அந்தோ! தெய்வமே!

இதுவுமென் காலகெதி யல்லவோ வென்று நெடுமூச்செரிய, அக்குருகுல நிருபனை நோக்கிய யாவருந் தலையிறங்கிக் கொண்டார்கள்.

அந்தச் சமயத்தில் சேனாபதியாகிய வீஷ்மாச்சாரியார் விசனமுடையவராய்த் துரியோதனமகாராஜனைப்பார்த்து, அப்பாகுழந்தாய்! இன்றைய யுத்தம் எனக்குஞ் சம்மதமாயிருக்கவில்லை. ஏதோ இப்படிக்கு நடந்துபோய்விட்டது. இதைக்குறித்து நீ விசனப்படாதே; நாளை நடக்கப்போகிற யுத்தத்திற் பாண்டவச் சேனைகளைப் பாழாக்கி, அர்ச்சுனன் முதலிய மூவரையும் அழச்செய்து, ஆயுதம் எடுப்பதில்லையென்று சொல்லி அர்ச்சுனனுக்குச் சாரதியாக வந்திருக்கும் அவனையும் ஆயுதமெடுக்கச் செய்கிறேன். அப்போது நீ என்னுடைய வல்லபத்தைப்பார் என்று பேரப்பிள்ளையை நோக்கி பெருங்குரலாகக் கூவி, அவன் மனங்குளிரும்படியாகப் பல பவுரஷம் பேசிக்கொண்டு பாசறைக்கு போய்விட்டார். இப்பால் அத்துரியோதனன் முதலியபேர்கள் போஜனமுண்டு நித்திரை செய்தார்கள் என்று வைசம்பாயனர் சொல்ல, ஜெனமேஜெயமகாராஜன் கேட்டு உபசாரத்துடன் வணங்கி, சுவாமி! இரண்டாநாள் யுத்தத்தின் தன்மைகளை சொல்லக்கேட்டு இசைத்தற்கரிய சந்தோஷமடைந்தேன். மேல் நடக்கும் மூன்றாநாள் யுத்தத்தில் ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியை ஆயுதம் எடுக்கும்படியாகச் செய்கிறேன் என்று கூறிய வீஷ்மருடைய வாக்கியத்தின்படியே துரிதமாய் நடத்தும்படியாகிய முறைமையையும், போரினுடைய திறமையையுந் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று கேட்க, வைசம்பாயன முனிவர் வேதவியாச முனிவருடைய திருவடியிணைகளைச் சிந்தித்து சொல்லத் தொடங்கினர்.

இரண்டாம் போர்ச்சருக்கம் முற்றிற்று.

---

இப்பால்,

## மூன்றாம்போர்ச் சருக்கம்

---

### கண்ணன் துதி

பொய்யாத தவமுனிபின் போயருளித் தாடகைதன், மெய்யாவ நிகரென்ன வெஞ்சரத்தா லழுத்தியபின், மையாழி முகிழ்வண்ணன் வாங்கியன பூங்கமலக், கையாலு மொருசாபங் காலாலு மொருசாபம்.

ஓ கனமேவயமாகிய நேச ஜெனமேஜெய னாகியராஜாதாவலனே! கேளும்; இப்பாற் சூரிய பகவானானவன், இரண்டு படைகளையும் சேனா நாயகரையும் மற்ற மன்னவர்களையும் எழுப்பிவிட வந்தவனைப்போற் கீழ்த்திசையில் வந்து உதயமாயினான். உடனே இரண்டு சேனைகளுங் காலைக்கடனைத் தீர்த்துக்கொண்டு ஆயுதபாணிகளாய் யுத்தகோலங்கொண்டு யுத்த பூமிக்கு வந்தார்கள். அப்போது வீஷ்மாச் சாரியானவர், தங்கள் சேனைகளை யெல்லாஞ் சேர்த்துக் காருடயூகங் கட்டினார். காருடயூக மென்பது கருடப் பக்ஷியைப்போல் மூக்கு-ரெக்கை-வால்-கால் இப்படியாக யானை சேனை பரிவாரங்களையெல்லாங்கூட்டி அதிலே காரியஸ்தரை நிலைநாட்டிச் சேர்த்துவைப்பது. இவரிந்த யூகங்கட்டவும், பாண்டவச் சேனாபதியாகிய துஷ்டத்துய்மன் பயப்படாமல், திடங்கொண்டிருக்குந் தன் சேனைகளைச் சேர்த்து க்ஷத்திரயூகங்கட்டினார். க்ஷத்திரயூக மென்பது குடைபோற் கவிந்து, காம்பு முதலிய கம்பிகளைப்போற் சேனைகளை அமைத்து, விரிக்கவுஞ் சுருக்கவும் விலாசங்கொண் டிருப்பது. இந்தப்பிரகாரம் இரண்டு சேனாதிபதிகளும் யூகம்வகுத்துத் தாங்களுந் தூசிப்படை முகத்தினின்றார்கள். அந்த வேளையில், ஏழு சமுத்திர முழக்கம்போலப் பதினாலுலகும் பதறும்படியாகவும், அஷ்ட குலாசலங்களும்-சப்தமேகங்களும்-தலை சாய்க்கும்படியாகவும், முரசு-காகளம்-பேரிகை முதலிய வாத்தியங்கள் முழக்குங்காலத்தில், கங்காபுத்திரராகிய வீஷ்மர் - துரோணர் - அசுவத்தாமர் முதலிய அநேகம் அதிரதத் தலைவரும் நால்வகைச் சேனையும் மேகங்கவிந்து வருவதைப்போல வந்து, இரண்டாநாட் சண்டையிற் சேனைகளையும் எங்களையுஞ் செயித்த வீராள் இன்றைக்கு வெளிப்படுங்களென்று வீர வசனங்கள் புகன்று, அர்ச்சுனனையும் சிறுபோதிற்றானே புஜபல மல்லர்களைச் செயித்து திருவடி பதித்த பாதகராகிய கிருஷ்ணனையும் அபிமன்னனையுந்தேடி வளைத்துக்கொண்டு, தென்னலடிக்கத் திரிகித்தியங்கிய தேக்குமரம்போற் சிந்தை குழையும்படியாக ஒருவர்மேலொருவர் அம்புமாரிகளைப் பொழிந்தார்கள்.

### கடோற்கஜனால் துரியோதனன் மூர்ச்சையடைய வீஷ்மர் தெளிவித்தல்

அந்தச் சமயத்தில் சூரருக்கெல்லாஞ் சிறந்த தீரராகிய சுயோதனராஜனும், அவ

னுடைய தம்பிமார்களும், மாமா சகுனியும், சேனநாயகரும், படைத்துணைக்குவந்த பார்த்திபரும் ஒரு கும்பாகச்சேர்ந்து, சிங்கக்கொடியினைத் தாங்கிய தேர்மேற்கொண்ட தீரசிங்கமாகிய வீமசேனராஜனை வந்து வளைத்துக் கொண்டார்கள். இந்தப்பிரகாரம் இருதிறத்து வீரர்களும் எதிர்த்துக்கொண்டு, வரத்தினுலும் மந்திரங்களினுலும், தாங்கள் தாங்கள் பெற்றிருக்கும் வலிபொருந்திய மணிகள் கட்டிய வில்லுகளிற் கரங்களினின்று நாற்புறத்தும் இறையத் தொடுத்துவிடும் பாணங்களினுலும், கடைக்கண் கதுவும்பொறிகளினுலும் ஆகாய மறைந்துபோகவும், அந்தச் சரங்களால் அறுப்புண்டு விழுஞ் சிரங்களினுல் யுத்தபூமி மறையவும், அந்தச் சிரங்களிலிருந்து பெருகும் உதிரவெள்ளங்களிற் பள்ளம் படுகுழி நிறைந்து சேருகி நான்கு திசைகளு மறைந்துபோகவும், பெருக்கமாகிய நால்வகை சேனைகளுங் குறைந்துபோகவுமாயிருக்கும்போது, சிறப்பாகிய திடவீரங்கொண்ட துரியோதனனும் வீமசேனனும் பழம்பகையாகிய வைரம்பற்றிப் போர்புரியுங் காலையில், வீமசேனனுடைய குமாரராகிய கடோற்கஜனென்னுங்காளை இவர்கள் இருவருஞ் செய்யும் யுத்தத்தைக்கண்டு, பேய்பூட்டிய தனது ரதத்தை வாயுபோற் செலுத்திக்கொண்டு வந்து துரியோதனனுக்கு எதிரிலே நின்று, நவசந்திர பாணத்தை யெடுத்துப் பூசித்து அபிமந்திரித்துத் தொடுத்து விடுத்தான். அந்தப் பாணமானது பார்த்தவர்களுடைய கண்களை யெல்லாம் வேற்றுருவமாக மயக்கி, படபடா காரத்துடன் வந்து துரியோதன மகாராஜனுடைய பாம்புக்கொடியை முறித்து, தேரிற் பூட்டிய குதிரைகளையு மறுத்து, கௌரவகுல முதல்வனணிந்த கவசத்தையுங் கிழித்து, அவனுடைய பலமான மார்பையுந் துளைத்து, முதுகின் ஓர் புறமாய்ப் புறப்பட்டு யுத்தமுகத்தில் மிகுந்த வெற்றியையுடைய கொற்றவர்களையுங் குறைத்து வரும்போது, இந் நந்தியாவட்ட மாலையணிந்த ராஜாதிராஜன் தம்பிமார் முதலாகிய பேர்களுக்கு எதிரிலே முடிசாய்ந்து பரவசமாக வோய்ந்து விழுந்தான்.

இவ்வாறு ஒருவருக்கு மிளைக்காத பார்த்திபனுனவன், இந்தக் கடோற்கஜன் விட்ட கணைபட்டுக் களைத்துத் தேரிற் சாய்வதற்கு முன்னமே, கடவுளர்க்கு துணையாகசென்று காலகேய நிவாதகவசாளைக் கொன்று கிரீடியென்று பேர் புனைந்துக் கொண்டுவந்த பலவானுகிய அர்ச்சுனனுடைய புத்திரனென்ற அபிமன்னுவானவன், மன்னர் மண்டலேஸ்வரர் முதலிய யாவர்களும் வறுகிக் குழம்பி வாடியோடும்படியாகச் சகல சேனைகளையு மாட்டிவாட்டி வரும்போது, தனது பெரிய தந்தையாகிய வீமசேனனுந் துரியோதன ராஜனும் அமர்புரியும்படி யானதைக்கண்டு, ஒரு சமரவேலென்பதைக் கைக்கொண்டு சங்கார ருத்ரமூர்த்தியின் சூலாயுதம்போல் தேர்ச்சாரதியின் மார்புக்கு லக்ஷியம் வைத்துவிடுத்தான். அந்த வேலாயுதம் போய்ப் பாய்ந்தவுடனே, துரியோதனனுடைய ரதசாரதி யானவன், கையோய்ந்து பாய்ந்து நிலத்திற் சாய்ந்து மாய்ந்தான். இவ்விதமாகக் கடோற்கஜன் விட்ட நவசந்திரபாணத்தாற் துரியோதனன் சாய்ந்து, அபிமன்னன் விட்ட வேலினுற் சாரதி மாய்ந்து விழுந்த மாத்திரத்தில், துரியோதனனுடைய தம்பிமார் முதலாகிய பேர்களுங் கும்பு கூடிக்கொண்டு கோவென்றழுது, வீமன் - கடோற்கஜன் - அபிமன்னன் இவர்கள் மூவரும் பிரயோகம்பண்ணுநின்ற வீர பாணத்திற் கிடைந்து, கிட்ட நெருங்கித் தமயனைப் பார்க்கப் பயந்து, வீஷ்மாச்சாரியார் நின்று யுத்தம்பண்ணு மிடத்திற்கு வெகு பேரை யனுப்பி, ஐயா! அபிமன்னன் விட்ட வேலாயுதத்தாற் சாரதி யிறந்தான்; கடோற்கஜன் விட்ட வெஞ்சாயகத்தால் இராஜாதிராஜனுகிய துரியோதன மகாராசன் உயிர் மறந்தான்; சமீபத்தில் நெருங்கிப் பார்க்க யாவருந் தத்தளிக்கின்றூர்கள்; மாட்டாமல் சேதி தெரிவிக்கச் சொன்னூர் தேவரீருக்குச் கள். ஆதலால், நீர் சீக்கிரத்தில் வரவேண்டுமென்று சொல்லி மகா பரிதாபத்தோடும் அழைத்துவரச் செய்தார்கள்.

இந்தச் சேதியைக் கேட்ட மந்தரகினியாள் மைந்தனுகிய காங்கேயன் வருந்தி, அப்போது தான்வந்து தம்மோடு சண்டை போட்டுக்கொண் டிருக்கும் விஜயனையுஞ் செந்தாமரைக் கண்ணனையும் ஒருபுறமாக விடுத்து, துரியோதனன் விழுந்து விட்ட திசையை நோக்கிப் புறப்பட்டார். இளைத்த பேர்களுக்கு ஏழ் சுற்று மதிற்சுவர்போ லிருந்துக் காத்திரட்சிக்கும் இறைவராகிய வீஷ்மர், வண்டுகள் மொய்க்கும் மலர்மாலை யணிந்த மார்பினையுடைய துரியோதனராஜன் விழு

ந்து கிடக்கும் இடத்தில்வந்து, அவனுடைய மார்பிற் கணைபட்டுருவி யிருக்குந் துவாரத்தைப் பார்த்து, இரு கரத்தாலும் அணைந்தெடுத்துத் தமது இரதத்தின்பேரி லேற்றிக் கொண்டு காயம் பட்டபேர்களை வைத்துக் காப்பாற்றுங் காவணத்துட் சென்று, அங்கிருக்குங் காரியஸ்தராகிய ரணவயித்தியர்களை அழைத்துக் காட்டப் பிரேதம்போல் அசைவற்றுப் போட்டகாலும் போட்டகையுமாய் இருக்கவே, யாவரும் புலம்பி மீண்டும் வினையின் பயனென்று கலங்கித் தேரி, ராஜனுக்குப் பிராணன் வரும்படியாகிய சஞ்சீவி கரணியென்னும் ஔஷதங் கொடுத்து ஒத்தடமிட்டு மருந்துவைத்துக் கட்டினார்கள். பின்பு துரியோதன மகாராஜன் சற்று நேரத்திற் கண் விழித்துப் பார்த்து, பீமன் நிற்கின்றானா? ஓடிப்போனானா? என்றெழுந்து, தாகத்திற்குப் புசித்து இளைப்பாரி யுத்தமுனைக்கு மறுபடியும்வர யத்தனித்தான். அந்தச் சமயத்திற் சந்தன குமாரராகிய பாட்டன் தமது முகத்தைச்சுளித்து, ஓ அரவகேதனா! போர் புரியுந் தன்மை யெப்படியென்றால், நாயகரானவர் பேரணியில் நிற்கவேண்டும். மற்றப் படைகளிற் சில வீரர்கள் எசமானனைக் காத்துக்கொண்டிருக்கவேண்டும். மற்றச் சேனை முதலிய படைமன்னவர்க ளெல்லாம் யுத்தஞ் செய்யவேண்டும். அப்படி யுத்தஞ்செய்து எல்லோரும் அழிந்துபோய்விட்டால், முதலாளியாகிய ராஜன் அதை பிரியமுடையவராகில் ராஜியாய்ப்போகவேண்டும். தைரியசாலியாகில், தானே புறப்பட்டு எதிரிற்சென்று சளையாமனின்று யுத்தம்பண்ணவேண்டும். இப்படிக்கெல்லாம் ராஜதருமமுதலிய நீதிகளிருக்க, நாங்களெல்லோரும் உயிருடனிருக்க, நீ யுத்தஞ்செய்யப்போவது உத்தமமல்லவே என்று சொல்லிப் பின்னுஞ் சொல்லுகிறார்.

ஓ உத்தமனே! நீ மெத்தவருந்தி நொந்திருக்கின்றாய். இப்போது இந்தப் பேரணியிற் சென்று சற்றுநேர மிருப்பையாகில், உனக்குப்பதிலாக நான்போய் உன்னை யடித்தவர்களைப் பிடித்து யுத்தமுடித்து வெற்றிக் கொடிபிடித்து வருகிறேனென்று சொல்லித் துரியோதனராஜனைப் பேரணியி னிறுத்திப் பின்காவலும் அமைத்து மகமேருவென்று சொல்லும்படியாகிய வில்லெடுத்து நாணேற்றி, திரிபுரதகனனே இவனென்று சொல்லும்படிக்குத் தேரேறி, வீரகெண்டாமணி விளங்கி யொளிக்குங் காலினையுடைய வீமசேனனை யெதிர்த்து மிருபோர் விளைத்து, முன்னிட்டவர்களெல்லோரும் பின்னிட் டோடும்படியாகக் கூர்மைபொருந்திய வாளிகளினாற் குறைத்துச் சிதைத்து, அவ்வவர்களுடைய மார்பிலும்-தோளிலும்-முகத்திலும்- அகத்திலும்-கண்ணிலும்-காதிலும் சொருகிப் புதையும்படியாகக் கணைமாரிகளைச் சொரிந்து, சேனைகளினுடைய சிரமுங்-கரமும்-உரமும்- அறுபட்டுச் சிதறிவிழும்படி யறுத்து, தருமராஜனுடைய சேனாசமுத்திரத்தில் தான் ஒருவராகவே நின்று, பாற்கடலைக் குழப்பிய மந்தரகிரிபோற் கலங்கித் திரிந்து போர்புரிந்து, வீமன்-அபிமன்னு-கடோற்கஜன்-தர்மராஜன் முதலிய வேந்தர்கள் பலருங் காந்திப்போய்ப் பாந்திப்போகக் கண்ணுக் கெட்டியதூரம் ரணக்களம் புழுதி பறக்கும்படியாய்க் கறங்காகிய காற்றுடியைப்போலும், குயவனுடைய திகிரிகையைப்போலும், கரகரவென்று ரதஞ் சுழன்று வரவும், கால்மாடு தலைமாடாய்ப் பிணங்கள் குவியவும், பேய்களாடவும், உதிர வெள்ளம் பெருக்கெடுத்தோடவும், மதநிறைந்த மலைபோன்ற யானைக்கூட்டமும், பந்துபோல் விசைகொண்டு பாயுங் குதிரைக்கூட்டமும், காரைக்கிழித்தோடும் ரதபந்திகளும், பாரைக்குழித்தாடும் சேனைவெள்ளமும், தேசதேசத்தரசர்கள், ராஜராஜத்தலைவர்கள் யாவருங் குலைகுலைந்து, நடுநடுங்கி, விடவிடத்துப் படபடத்து எண்ணங்கள் மறந்து, இச்சைகள் துறந்து, திசாதிசைகளில் விழுந்தோடி இறந்துபோகும்படிக்குச் சுடுசுரந்தொடுத்து, அலைகணிறைந்த கடலிலுறைந்த வடவாமுகாக்கினிபோல வெறுத்து அழித்து, யாவருந் தமக்கு எதிரில்லாமலோட்டி, அவ்விடம் விட்டு வந்து கிருஷ்ணார்ச்சுனனை மடக்கிக் கொண்டு, சுவேதவாம்புரவி, அழியாதரதம், முடியாதசாரதி இவைகட்கு நாயகனாகிய அர்ச்சுனன்பேரிலும், அவனுக்குச் சாரதியாகிய கண்ணன்பேரிலும் சேரனைப்பேய்ச்சலைப் பொற்கணைகளைப் பொழிந்து கருக்கிக் காய்வதாயினார் வீஷ்மாச்சாரியார்.

## கிருஷ்ணன் அருச்சுனனை வெறுத்துக்கொண்டு சக்கர மேந்துதல்

அப்போது ஸ்ரீகிருஷ்ணன் தனது சரங்களுங் கால்களும் ஓயும்படியாய்க் கலகலத்து வருந்த, அக்காலத் தசைவற்றுத் திப்பிரமை கொண்டவன்போல் இருக்கும் அர்ச்சுனனைப்

பார்த்துக் கிருஷ்ணன் சொல்லுகிறார்; அடா
பாவி அர்ச்சுனா! காடாக்கினிபோற் சேனைகள்
முதலிய யாவரையு மெரித்து என்னையும் குதி
ரைகளையும் இப்படிக்குக் கொளுத்திக் கொல்
லும் வீஷ்மன்பேரில் வில்லெடுக்காமலும்,
ஒருசொல்லுரைக்காமலும், பாணம் விட்டுத்
தடுக்காமலுஞ் சும்மா யிருக்கின்றாயே: உனக்
கிது தக்கதுதானா? அப்பா! உன்னை நம்பிவந்
தேனே: நல்ல யுத்தத்தில் என்னைக் காட்டிக்
கொடுத்துவிட்டு அறியாதவன்போல் இருக்
கின்றாயே: இதென்ன மோசமோ? இதுவும்
ஒருநேசமோ? ஐயோ! இதுமெத்த ஆச்சரியம்?
ஆகிலும் என்பேரிலுனக்கென்ன ஆச்சரியம்?
அர்ச்சுனா! என்னைக் காக்காமற் போனாலுந்
தருமராஜன் முதலிய மன்னரைக் காக்கவேண்
டுமே; தன்மானம் பிறர்மானம் என்பது இல்
லாம லிருக்கின்றாயே; உனக்கென்ன மானமில்
லையா? ஈனமில்லையா? ஊனமில்லையா? வெட்க
மில்லையா? சிக்கில்லையா? அக்கறைக்காரனாகிய
நீயே இவ்வாறு ஆலசியப்பட் டிருந்தால்
மற்றையருக் கென்ன வந்தது? ஓ அர்ச்சுனா?
உன்னுடைய பாட்டனாராகிய இந்த வீஷ்ம
னால் இப்பேர்ப்பட்ட அடி படும்படி எனக்கே
னிந்தத் தலைவிதி; அப்பா? என் பெண்டு
பிள்ளைகளை விட்டுவிட்டு உன்னை நம்பி நான்
தேர்விட வந்தது என்னுடைய பொல்லாத
காலமாய் விட்டதே; விஜயனே? நீ நடுச்சமயத்
திற் கழுத்தறுக்க மாட்டாமற் செய்தது மகா
நல்லதாச்சு; அர்ச்சுனா! இனி என் ஜன்ம
ஜன்மத்திற்கும் உனக்கு நான் தேர் விடுவே
னென்று உன் மனதில் நீ செவ்வையாய்
மதித்துக்கொள்ளென்று விழி சுழன்று கடுங்
கோபங்கொண்டு, செவ்வாம்பலையும் - செம்மு
ருக்கையும் - செவ்வாக்கையும் - செம்புருக்கை
யும் சேர்த்துருக்கியதைப்போற் கண்ணும் மூக
முஞ் சிவந்து, கரத்திற் பிடித்த கடிவாளக்
கயிற்றையுங் குதிரை தூரத்துங் கோலையுஞ்
சுழற்றி யெறிந்துவிட்டு ரதத்தைவிட்டுத் திடீ
ரென்று பூமியிற் குதித்து, ஒருவன் மெச்சி
யெனக்கு ஒன்றுங் கொடுக்க வேண்டியதில்லை;
ஒருவனுறவு எனக்கென்ன உதவியைச் செய்
யும்; ஒருவன் பகை என்னை என்னபண்ணும்;
எவன் எக்கேடு கெட்டாலும் எனக்கென்ன?
இராமனாண்டாலென்ன? இராவணனாண்டா
லென்ன? எவனாகிலும் எனக்கென்ன ஆக
வேண்டியது? தன் ஆயுதமுந் தன் கையிற்
பொருளுந் தன்னிடத்திருந்தால், தருணத்
திற் குதவும் அன்னியரிடத்திற் கொடுத்து
அவன் கையைப் பார்த்திருந்தால், அந்தப்
பாவி அவசரத்திற் குதவுவானா? ஐ! ஐயோ!
அப்படி கொடுத்தவனுக்கு உடனே குறை
வந்து நேரிடுமென்று பெரியோர் பேசிய
வாசகம் நிசமாச்சே; நான் பேசியிருந்த நேச
வுரிமைக ளெல்லாம் வீண்பேச்சே; இவனு
டைய ஆயுதத்தையும் இவனையும் நம்பிவந்து
எனக் கிந்தக் கெதியாச்சே; இந்த வேளையில்
நாமும் சும்மாயிருந்தாற் பழியாச்சே என்று
சொல்லி மனநொந்து தமது சக்கராயுதத்தை
நினைத்தார்.

அப்படி நினைத்தமாத்திரத்திலே, தகத்த
காயமாய் வந்து சுழன்று நின்ற தமது சுதரி
சனத்தை வலது கரத்தி லேற்றிக்கொண்டு,
உகாந்த காலாக்கினிபோற் சீறி, வீஷ்மரைக்
கொல்லும்படியாய் மீறி, ஆதிசேடனுடைய
பணமகுடங்கள் கடகட படபட நடநட
வென்ன, அமரர் முதலிய பேர்கள் ஹரிஹரி
ஜயஜய நமநம வென்ன, கற்பகக் கையன்!
காசாம்பூமெய்யன்! அருந்தவர்க்கையன்! அய
னைப் படைத்த துய்யன்! இவ்வாறு தமது திரு
வடி பெயர்த்தருளிப் பையநடந்த பாண்மை
யைத் தேரிற் றிகைத்திருந்த விஜயன் கண்டு,
திடுக்கென்றெழுந்து, பூமியிற் குதித்துத்
தனக்குப் பகவற்கீதை சொல்லித் தரிசனங்
கொடுத்தருளிய பங்கயம்போன்ற அவர்
திருப்பாதங்களைப் பிடித்துக் கொண்டான்.
அந்தவேளையிற் கண்ணன் விடுவிடு காலை
யென்று வீசி நடக்க, உடனே அர்ச்சுனன்
நானென்றும், அவனென்றும், உவனென்றும்
சொல்லத்தக்கவையற்ற நன்னெறியை நாட்டி,
அவனருளாற் காட்டிய நன்குறியிட்டுப்பூட்டி,
இரு கரத்தாலும் அவர் திருவடிகளைப் பற்
றிக்கொண்டு தனது பத்தியை நீட்டி, அண்
டத்தவரு மெச்சும்படியாக அளவற்ற உரிமை
களைக் காட்டி, ஸ்தவுத்தியஞ் செய்கின்றான்.
ஓ ஆபத்பாந்தவா! ஓ அனாதரட்சகா! ஓ சர்வ
லோக சரண்யா! ஓ சார்வ பௌமா! ஓ கஜேந்
திர வரதா! ஓ ஹரிகிருஷ்ணா! ஓ ஹரி வாமனா!
ஓ ஆதிமதயாந்தரகிதா! ஓ யதுகுலசிரேஷ்டா!
தேவரீர் என்னை மன்னிக்கக் கடவது. தேவரீ
ருடைய திருவடித்துணைகள் வாழ்க்கடவது.
தேவரீருடைய திருவருட்கண்கள் செழிக்கக்
கடவது. தேவரீருடைய அநுக்கிரகம் பல்
லாண்டு பல்லாண்டாய் எங்கள்மீது பிரகாசிக்
கக்கடவது என்று பலவாறு துதிசெய்து, ஓ
சுவாமி! ஓ ஆதிமூலமே! அடியேனுடைய

விண்ணப்பம் ஒன்று கேட்டருளும். இந்த வீஷ்மரானவர் உமக்கொரு லக்ஷயமென்று நினைத்தோ? இல்லை அவரைக் கொல்லுவது அருமை யென்பது குறித்தோ? அல்லது, இரணியன் - இரணியாக்ஷன் - இராவணன் - கும்பகர்னன் முதலிய எல்லாருடைய உயிரினும் இவருடைய உயிர் வல்லுயிரென்று கருதியோ? தேவரீர் சகல தேவர்களாலும் பூசிக்கத்தக்க இச் சக்கராயுதங் கொண்டது. ஓ திருமாலே! பீதாம்பரப் பெருமாளாகிய உமக்கிவரோ ரீடோ? தேவர் சிருஷ்டியி லுண்டாகிய அநேகம் பேதங்களில் இவரெந்த அணுவோ? ஹரிஹரி! இதென்ன தந்திர கோலம்? இதென்ன இந்திரசாலம்? ஓ கோபிகா லோலனே என்று அர்ச்சுனன் துதித்து, சுவாமி! உம்மை நான் விட்டாற்றான் வீஷ்மரைக் கொல்லுவீர்? உம்மை விடாமற் போய் விட்டால் நீரெங்கே கொல்லுகிறது பார்ப்போம். என் உயிருள்ள வரையிலும் உம்மை நான் விடேன். ஓ ஆண்டவனே! இன்னும் ஓர் விசேஷ வார்த்தையைச் சொல்லுகிறேன் கேளும். நீர் ஆயுதம் எடுப்பதில்லையென்று சொல்லிவிட்டு, இப்போது ஆயுதமெடுத்துக் கொல்லுவீராகில், அது எனக்கு மிகுந்த குறை வைக் கொடுக்குமல்லவா? ஓ கோவிந்தனே! கையிலாகாமற் கலங்கி விழித்த விஜயனுக்குத் தான் சொன்னசொற் றப்பித் திருமா லுதவி செய்தாரென்று பழியாகிய இழிவு சொல்லுவார்கள். ஆகையால், தேவரீர் கண்காண இந்த வீஷ்மர் முதலிய படைகளை யெல்லாம் இந் நிமிஷத்தில் முருக்கி மாட்டுகிறேன். நீரே பாரும் சுவாமி யென்று பின்னு மனந்தமுறை துதித்துப் பாதாக்கிராந்தராக விழுந்து விட்டான் பார்த்தனானவன்.

### வீஷ்மர் சக்கராயுதத்தோ டெதிர்க்க வருங் கண்ணனை வந்தித்தல்

இந்தப்படிக்கு அர்ச்சுனன் வணங்கி வணங்கி உபசரிக்குந்தோறுங் கிருஷ்ணமூர்த்திக்குக் கோபம் அதிகமாய், ஆ அர்ச்சுனா! ஏன் வீணான வார்த்தையெல்லாம் பேசுகிறாய். 'முதற்கோணில் முற்றுங் கோணும்' என்கிற பழமொழி உன்னிடத்திற் கண்டேன். இனி என்னால் உனக்கு ஆகவேண்டுவ தொன்று மில்லை. ஆகையால், என் காலை விடுவிடென்று கூறி, மாறி, வீஷ்மனெங்குள்ளா னென்று சீறி வீறி வரலும், ஆதிகேசவன் கொண்ட கோபத்தை வீஷ்மாச்சாரியருணர்ந்து, நம்க்கு இன்று நாசகாலஞ் சமீபித்ததென்று நடு நடுங்கி, மாற்றுயர்ந்த அபரஞ்சியினா லியற்றிய மகமேருவைப் போன்ற தனது தேரை விட்டிறங்கி, இரு கரத்தையுஞ் சிரத்திற் குவித்து, ஏகாங்க தண்டமாகப் பூமியில் விழுந்தெழுந்து, "ஆரணகற்பித மாதவைச்சுத வாழியிடைத்துயிலுங், காரணசிற்குண ரூபமலர்க்கொடி காதன் மனத்துறையும், நாரணவற்புத வானவருக்கொரு நாயகநிற் பணியும், வாரணமுத்தி விசாலநலத்திடை வாழ்வுறை வைத்தவனே, ஆவியழித்தனை தூணிலுதித் திடலாடகனைத் தலைநாள், மாவலியைச் சிறு மானுருவத்துடன் வார்சிறை வைத்தனையால், ஏவிலரக்கனை வீழவடர்த்தனை யானுனிலைக் கெனவோ, நீவெளியின்சின மூளுமனத்தொடு நேமிதனையே. இயானரகித் தாமலைக்குயர் வானுலகைத் தருவான், நீ நினைவுற்றது போனபிறப்பிலென் னீடுதவப்பயனே, யானு மினிப்பிற வாமலளித்தரு ளாதியுனைப் பல கால், ஓ வேத உற்பத்திக்கு முதற் காரணமாகிய வித்தகனே! என்னை ரட்சியும்; ஓ மாதவனே! ஓ அச்சுதனே! ஓ பாற்கடலிற் பாம்பணையிற் றுயிலும் பரந்தாமனே! என்னை ரட்சியும்; ஓ நற்குணம், நற்சிந்தை, நல்லுருவாதிகளமைந்த மஹாலட்சுமிக்கு நாதனே! என்னை ரட்சியும்; ஓ நாராயணனே! ஓ அற்புதனே! ஓ தெய்வநாயகனே! ஓ தேவர்கள் தொழுதேத்துஞ் சீதரனே! என்னை ரட்சியும்; கஜேந்திரனென்னுங் காட்டானையை முத்தி வீடாகிய கொட்டாரத்தில் திருவடிக் கம்பத்திற் சேர்ந்து அருட்களை மூட்டி யாதரித்து வாழ்வுபெற வைத்த ஓ கஜேந்திர வரதனே! என்னை ரட்சியும்; சகல வரமுங் கொண்டு சாகாவரமுங்கண்டு மூவுலகாண்ட இரணியாசுரனை நரசிங்க ரூபமாய்த் தூணி லுதித்துக் கைநகத்தாற் கொன்ற ஓ காகுத்தனே! என்னை ரட்சியும்; அண்டங்களை யெல்லா மாண்ட மகாபலிச் சக்கிரவர்த்தியினிடத்திற் போய் வாமனரூபங் கொண்டு மூன்றடிகேட்டுப் பாதலத்திற் சிறைவைத்த ஓ பரந்தாமனே! என்னை ரட்சியும்; இராமாவதாரமாய் அரைகோடி ஆயுள் கொண்ட இராவணன் முதலிய அரக்கரை அம்பினாற்செற்ற ஓ சம்புவே! என்னை ரட்சியும்.

இந்தப்படிக்கு வரங்களிலும் - உரங்களிலும் - சிரங்களிலும் - கரங்களிலும் - புரங்களிலும் - தனங்களிலும் - இனங்களிலும் - ஜனங்

களிலும் - கனங்களிலும் - சிறந்து அழியா
வரம் பெற்றிருந்த தன்யர்களாகிய தாஷிடீ
காளை எல்லாம், தந்திரங்களாய் முடித்த சர்வ
சுதந்தரனாகிய சர்வேஸ்வர னெனும் உமக்கு
என்னைக் கொல்வ தருமையோ? ஓ சுவாமி!
நாயினுங் கடையேனாகிய என்னை ஒரு லக்ஷய
முள்ள பொருளாகப் பாவித்து, மேலாகிய
கோபங்கொண்டு சக்ராயுதமெடுத்து, செந்தா
மரைக் கமலம்போன்ற திருவடி பெயர்த்து
வரும்படியாகவுமானதோ? ஓ ஆண்டவனே!
இந்தப் பிரபஞ்சத்தில் யாவரும் முடியும்படி
யாகிய நிரியாணகாலத்திற் கடவுளினுடைய
திருநாமங்களைச் சிந்தை செய்து வந்திப்ப
தில்லை. அதனால் அப்படிக்குப் பெறத்தக்கவர்
கள் அரிய தவத்தை யுடையவ ராதலால், ஓ
கரிய வண்ணனாகிய கண்ணனே? அடியேன்
ஜனனமரண வேதையினாற் றுழாமலும்,
மாளாத துயரில் வருத்தம் மிணவாழ்க்கையில்
வாழாமலும்,மகத்தாகிய நரகத்திலாழாமலும்,
தேவரீருடைய திருவடி மணங்குலவும் பரம
பதக் கதியை எனக்கு உதவி செய்யும்படியாக
நினைத்துச் சக்ராதரனாகத் தரிசனந் தந்து,
நானிந்தப் பிறப்பிற்செய்த தவப்பயனாயிருக்
கில், அஃது உமது திருவருட்குத் தெரிந்தி
ருக்கலாமேயன்றி, என்னாற் றெரிந் துணரத்
தக்கதோ? ஓ தாமோதரனே! இனிமேலும்
நானிந்தக் கர்மபூமியிற் சுலக்காம லிருக்கும்
படியாய்க் கருணைசெய்தருளும். ஓ கருணைக்
கடலே, என்று கர நடுங்க, தோள் நடுங்க, நா
நடுங்கக் கண்ணீரோடத் தேகஞ் சிலிர்த்து
உண்மைக் கியான முணர்ந்து, இவ்வாறு
அநேகவிதமாய் ஸ்தவுத்தியஞ் செய்து, ஹரி
ஹரியென்று அவரது திவ்ய திருவுருவத்தை
நோக்கித் தெண்டனிட்டார்.

இந்தவேளையிற் பக்தவற்சலனாகிய பரம
தயாளனனவர், பக்ஷமுடையவராய்க் கோபந்
தணிந்து உள்ளங் குளிர்ந்து நிற்க, இடகாத்
திரனாகிய ஜெயவிஜயன் திருமாலைப்பணிந்து,
அவரது திருக்கரம் பற்றித் திரும்பி யழைத்
துக் கொண்டு வந்து, தேவர்கள் யார் தடுத்தா
லும், மூவர்கள் போர் தொடுத்தாலும், இப்
போதே இவ்வீஷ்மர் முதலிய சகலரையுஞ்
செயிக்கிறேன் பாரும். நீர் வாரும், தேரின்
மேலேறும், எளியனோடு உட்காருமென்று
தானுமேறிக்கொண்டு, விஜய காண்டீபத்தை
யெடுத்துப் பிடித்து நிறுத்தி வளைத்து இழு
த்து நாரிமாட்டிச் சுடர்த்தலை கொண்டதாகிய

கூர்க்கணைகளை ஆயிரம் - பதினாயிரம் - நூறா
யிரம்-கோடி என்னுங் கணக்கில்வாரி மாரிபோ
லிறைத்து வானத்தை மறைக்கவும், மறுபடி
யுந் தேரேறிக்கொண்ட கிருஷ்ண ரானவர்,
அத்தேரை வாயுவேக மனோவேகமாய்ச்
செலுத்தவும், வாசவ குமாரனாகிய சவ்யசாசி,
மகா உக்கிராவேசக் களிப்போடு சர்வ சம்மார
கால உருத்திரமூர்த்தியைப்போல் வீஷ்மர்
முதலிய சேனைப் படைகளையெல்லாம் உகாந்த
காலத்தி லழியும் உயிர்போலழித்துக் காடாக்
கினியால் எரியுங் காட்டைப்போல் எரித்துக்
கொண்டு வர, அதைக் காணுவதற்கு எவர்
களாலுங் கூடாமையாய்க் கலங்க, தேவர்கள்
கண்களை மூடிக்கொள்ள, சோம சூரியாக்கினி
யென்னும் மூன்றுகோள்களும் நிலைதடுமாறி
யசைந்தோட, தாரகாகணங்கள் பல பல
வென்றுதிர, இவ்வாறு சகல புவனங்களுங்
கலங்கும்படியாகப் பல படைகளைத் தாக்கிப்
போர்புரிந்து வந்தான் தனஞ்சயனனவன்.

இந்தப்படிக்குக் கௌரவசேனைக ளெல்
லாம் ஆலைக்கரும்புபோலும் வேலைத் துரும்பு
போலும் நைந்து நொந்தாடும் படியாகத்
தனஞ்செயன் வென்று வரும்போது, வீஷ்ம
ரானவர் வீரபட்டமணிந்த அனேகந் தீரர்
களை முடுக்கி விடுக்க, அவர்கள் இடுக்கெனவந்
தெதிர்த்துப் படுக்கென பாணங்களைத் தொடு
க்க, அவைகளை யெல்லாந் தடுத்து, ஐமுகப்
பகழிகள் விடுத்து, மகுடவர்த்தனராகிய படை
களை மண்ணோடு மண்ணாகக் கெடுத்து,
நீறெழச்செய்து, நெருப்பெழப் பெய்து, அள
வற்ற திவ்யாஸ்திரங்களால் மன்னர் மண்டலீ
கர் பட்டவர்த்தனராகிய படைக் கும்புகளைச்
சேறுபடுத்தி, அவர்கள் தலை யுடைபட்டுப்
பெருகு மூளைகளாற் றிக்குகளில் கரையேற்
படுத்தித் திசைகள் வரைக்கும் புரண்டு வழிந்
திருக்கும் உதிரங்களை ஆறுபடுத்தி, நிலைபெற்
றிருக்கும் யானை-சேனை-பரிவாரமாகிய படை
க்கு மொத்தத்தில் ஆயிரம் அம்புகளேவி, அந்
தக் கும்புகளையெல்லாம் அரைநொடியில் ஈறு
படுத்தினான் வீறுபடைத்திருக்கும் விஜயரான
வர். ஓ ஜெனமேஜெய மகாராஜனே! அந்த
வீஷ்மாச்சாரியர் அனுப்பிவைத்த பேர்களில்
எவர்கள் பிழைத்தார்களென்று என்வாய் கூறி
ரச்சொல்லுவேன். மறுபடியும் வீஷ்மரானவர்,
சமுத்திரத் தீராளாகிய இடவான்களையும்,
இராக்கதர்களையும் விரைவிற் செல்ல விடுத்
தார். அந்தத் துரைகளும் உடனே வந்தடுத்

து தாங்கள் கற்றிருக்கும் பற்பல வற்புத விற்றிறமை வேற்றிறமை முதலிய எல்லாத் திறமைகளையுங் காட்டினார்கள். அந்தக் கைக்காரரைத் தெரிந்துகொண்ட காண்டீபன் நகைத்து, கூர்மையாகிய வாயுக்கணை, பொறிகள்கக்கிய தேயுக்கணை, நீரைச் சொரியும் வருணக்கணை, காலமுகிலைச் செய்யும் முருதரக்கணை, கும்பாகக்கூடிக் கொல்லுந் தேவக்கணை. குவலய மெல்லாங் கவரும் இந்திரக் கணை முதலாகிய பல மந்திரக்கணைகளை இணையிணையாக இசைந்தெடுத்துத் தனது காண்டீபத்திற்றொடுத்து இழுத்து விடுத்தான். அதனால், முனைகொண்டுவந்த தேர் வரிசைகளெல்லாம் வெந்தழிந்து தீய்ந்தன. வாளணி வரிசைகளெல்லாம் நைந்தொழிந்து சாய்ந்தன. கம்ப மதயானைகளெல்லாங் கால்முறிந் தறுந்தன. காவலரியாவரும்பட்டு உயிர்விட்டார்கள். கருதலரென்று வந்தபேரெல்லாங் களைப்பட்டார்கள்.

அந்தச் சமயத்தில் காங்கேயரானவர், முன்வந்த பேர்களுக்குப் பின்றுணையாகச் சல்லியராஜன் முதலாகிய சேனை நாயகர்களையும், சகல வயப்படைகளையும், சமரதத் தலைவர்களையும் போக விடுத்தார். அவர்களைக்கண்ட அர்ச்சுனன் ஆசைகொண்டு பேசவேண்டுமென்று வந்தவிடத்தில் அந்தப் படைமன்னவர் ராஜ காரியத்திற்குக் குறைவுவருமென்று நாராச பாண முதலாகிய நானாவித அஸ்திரங்களை எடுத்து விடுத்து வீராவேசங்கொண்டு, நட நடவென்று பற்கடித்து நரனைக் காய்ந்து வந்தார்கள். அவ்வாறு வந்தவர்கள் தங்களுக்கு முன்னாடி வந்தவர்கள் படுகிறபாடுங் கெடுகிற கேடும் பார்த்து, முகம் வேர்த்து, இவர்களுக்குப் பின்றுணையாகத்தானே நாம் வந்தோம். ஆகையால், இவர்களுக்குப் பின்புறத்திற்றானே துணையாகப் பேசாமற் போய் விடுவது புண்ணியவசமென்று நினைந்து, அவ்வாறே சென்று போர் புரியும்போதும் அர்ச்சுனன் விடும் பாணங்களினால் பொறிகலங்கி, நெறி விலங்கி, அறிவழிந்து, செறிவொழிந்து நிற்க, நீர்களமுடைய அம்மந்திர பூபனாகிய சல்லியராதியோர் அஸ்திர முறிந்துதறிந்துகுவிந்து மலைபோனிறைந்து கிடக்கும் இடத்தைக்கண்டு, மறைந்து போவதற்குச் சுற்றிலு மிருக்கிறபேரைச் சேர்த்கொண்டு, உடனே திக்காலொருவராய் ஓடி ஒளித்துஉயிர்பிழைத்தார்கள். இதல்லாமலும், பாண்டவர்கள் காட்டிலிருந்த காலத்தில், தாங்கள் நாட்டி லிருந்துகொண்டு நானாவிதமாகத் தங்களுடைய வல்லபங்களைத் தாங்களே புகழ்ந்து சொல்லிக்கொள்ளும் நாவினையுடைய வயப்படை மன்னவர் கெடிரெல்லாரும் வாடிப் பாடியை நோக்கிப் போகாமல், வேறிடம்போய் நாடிப் பதுங்கிவிட்டார். போர் முகத்திற் போர்செய்யவந்த துரியோதனன் தம்பிமார்க ளெல்லாருங்கூடி, விஜயன் கணைகள் விசையாக வந்து தங்கள் தேகங்களிற் புதையப் போகுதென்று வெருண்டோடி மறைந்தார்கள். அப்பால், மாகதர் - சாகதர்-மாளுவர்-சாலுவர்-குச்சரர்-பப்பரர் - வடுகர்-படகர்-குடகர்-கன்னடர் - மராடர் - மற்றவர்-தொட்டியர்-ஒட்டியர் முதலாகிய பேர்களெல்லாம் பற்குனன் விட்ட பாணத்தால் அங்கம் பழுதாய் வருந்திப் போய்ப், பற்பல விடங்களைத் தேடிப் பறவைகளைப்போற் பறந்து புகுந்தார்கள்.

இந்தப்படிக்கு முடிமன்னர் முதலிய கெடிமன்னரையுந் தாறுமாறாக நீறுநீறாகச் செய்யுந் தனஞ்சயனென்னுந் தனுச்சிங்கத்தின் கைத்திறலைக் கண்டு, ஆநிம்படியாகிய அரவக்கொடி தரித்த அரசன் வியாகூலங்கொண்டு, அர்ச்சுனன்பேரில் யுத்தஞ்செய்யப் போவோமென்று நினைத்து, மீண்டும் அப்படி நினைத்த மனத்தை மறுத்து, நாம் முன்னமே போர்புரியப்போய் அச்சு-மச்சு-குத்துக்கால்-குடை - கொடி - குதிரை - சாரதியாவு நொறுங்கிப் புண்ணாயிருக்கின்ற நமது மார்பில், மீண்டும் பாணந்துளைத்துருவ அதனால் துன்பப்படுவதில் என்னலாபம்; இதைப் பார்க்கிலும் மரியாதையாய்ப் பாசறையை நோக்கிப் போய்விடுகிறதைவிட வேறு நன்மைகள் நாம் அறிந்தது ஒன்றுமில்லையென்றுன்னி, மறுவார்த்தைக ளொன்றுஞ் சொல்லாமல் வாய் மூடிக்கொண்டு தியங்கித் திரும்பினான். இப்பால் இந்த ரணக்களத்திற் பார்த்தன் படையினாற் சத்துருக்களின் படையாகிய சமுத்திரமுடையப்பட்டு உலர்ந்துபோகவே, கோபிகா ஸ்திரீகளுடன் குலாவி மகிழுங் கோபாலன் இனிமேற் சண்டைக்கு எதிர்த்து வருவா ரொருவருமில்லையென் றுணர்ந்து, அர்ச்சுனனை அன்புகூர்ந்து அருட்பார்வையாக நோக்கி, ஓ சற்குணமுள்ள பற்குனா! இப்போது சாயங்கால மாச்சுது; இவ்விடத்திலும் படைகள் இளைத்துப்போச்சுது; உனக்

கும் புகழ்வாச்சுது; இனி நமது வாகினியி னிடத்திற் றேரைக்கொண்டு போகலாமா வென்று ஸ்ரீ கிருஷ்ணன் கேட்க, திருப்பி விடுந் தேரைத் தீனதயாளுவேயென்று சிலை வல்லோ னுரைக்க, உடனே ரதத்தைத் திருப் பிப் பொங்கியிருக்குந் தங்கள் படையில் வந்து சேர்ந்தார்கள். இவ்விடத்திற் பனைக் கொடியோன் முதலிய பார்த்திபர்கள் பக்கங் களிற் படைநெருங்கத் தாங்களும் பாதுகாத் துக்கொண்டு, சர்ப்பக்கொடியோனாகிய தராதி பனைப் பாசறையிற் சேர்த்தார்கள்.

இத்தன்மையதாக யுத்த நடாத்திய போர்க்களத்தில், விஜயன்விட்ட வெவ்விய பாணங்களால் அறுபட்ட யானைத் துதிக்கை கள் எல்லாம் உதிரவெள்ளத்தி லசைந்தாடு வது எப்படி யிருந்ததென்றால், கருநிறங் கொண்ட மலைப்பாம்புகள்கவிழ்ந்தும், நிமிர்ந் தும் வளைந்தாடுவதைப்போ லிருந்தது. கொள்ளை கொள்ளையாகிய இரத்த வெள்ளங் கள் பள்ளங்களில் நின்று பளபளப்பெறிவது கிரணங்களைப்பரப்பிய சூரிய வட்டம்போன்று இருந்தது. இன்னுங்காக்கை, பருந்து, கழுகு கூட்டங்கள் மொய்த்துச் சுற்றிக்கொண்டு பறக் கும்படியாக யிரண்டு காதுகளும் அறுபட்டு செந்நீர் வடியும் யானைகள், தேவேந்திரனு டைய வச்சிராயுதத்தால் சிறகிழந் தசையும் மலைகள்போ லிருந்தன. மேலும் இறந்து வீழ்ந்த வெற்றி வீரர்களின் தலையிற் றறித்தி ருந்த பொற்குவளைகள் தாளமாகவும், வில் லோடுங் கூடிய நாணிகள் வீணையாகவும், யானைத் தலைகள் குடமுழா வாத்தியமாகவும், எறிசக்கர வளையம் பிரம்ம தாளமாகவுங்கொ ண்டு, அவ்வவ் வீரர்களுடைய கவச கேயூர கிரீட குண்டலங்களை யணிந்து, அர்ச்சுன னுடைய பெரும்புகழைப்பாடி ஆடும்படியா யிருக்கிற பேய்களனந்தம், போர்க்களத்திற் கிடைத்த பிணங்களைத் தானுமுண்ணாமல், தங்களினத்தாரையும் உண்ண வொட்டாமற் பொருமைகொண்டு, தனித்தனி குலைத்துக் கொண்டோடும் நாயினங்களனந்தம், கிடை த்த நிணத்தைத் தானேயுண்டு மற்றையருக்குக் கிஞ்சித்துங் கிட்டவொட்டாமற் கீழேமூடிப் புதைத்து அந்த யிடத்தைச் சுற்றிக்கொண்டு தன்னினத்தார் முதலாகிய யாவர்வந்தாலுங் கூவிக் கத்திக் குழிபறித்து மண்ணைத் தூற் றித்திரியும் நரியினங்க ளனந்தம் உண்டு.

இதல்லாமலும் ஜாதி பேதம் - தெய்வ பேதம்-தனபேதம்-ஜனபேதம்-இனபேதம் - மனபேதம் - கனபேத முதலியவையில் இறு மாப்படைந்து, ஓர் தலத்தில் ஓர் இடத்தில் கூடிய நாமென்று உணராமல், பத்துபேர்களை யாதரித்துத் தாமுந் தின்னாமல், (பறந்து பறந்து பாடுபட்டாலும் பகலுக்குச் சோ றில்லை) என்னும் பழமொழியைப்போற் பா ரப் பிணங்களைக் குவிக்கும் பூதமனேகம். தன் னடத்தையையும், தன் செல்வத்தையும், தன் பிறப்பையும், தானிருந்த கதியையும், தன் மோசங்களையும், தன் பசிக்கு ஒரு தவளை கிடைத்தாற் போதுமென் றிருந்த தற்கால வெண்ணத்தையும் தானெண்ணிப் பாராமல் இந்த ரணக்களத்திற் பத்து பிணம் அகப் படவே, தன்னைத்தான் மறந்து தனக்கு மிஞ் சிப் பிரபஞ்சமில்லையென்று தலையை குலுக்கி, யானைப்பிணங் குதிரைப் பிணங்களி லேறி, இரத்தவெள்ளத்திற் பாய்ந்து நீந்தி ஆடல் பாடல்களுடன் அயலவர் மனைவியர்மேல் ஆசைகொண்டு நால்வர் நகைக்க, நாலைவரப் போகிற அவமானந் தெரியாமல் அலைந்து திரிகின்ற குருட்டுக்கண் பேயினங்களனந்தம். தாய்-தந்தை - பெண்சாதி-பிள்ளை - தமயன்- தம்பி - தம்முறவினர் இவர்கள் முதலிய யாவ ரையுஞ் சேர்த்துப் பிடியாமல், (தான் வாழ் வதற்குத் தலைமகளறுத்தாற் போதும்) என நினைக்கும் தரித்திரரைப்போல் பேராசையை கொண்டு பாவபுண்ணிய மெண்ணிப் பாரா மற் றிரியும் போக்கிரித் தன்மையையுடைய முறட்டுப்பேய்க ளனந்தம். சொற்சோர்வினார் சோம்பித் திரிந்து துன்பப்படுந் துஷ்டக் கணங்களனந்தம். ஒன்றை ஒன்று வஞ்சித்து மாமிசங்களை வாயிற் போட்டுக்கொள்ளுந் திருட்டுக்கூளிக ளனந்தம். கொலுகொண்டி ருந்து சகல பூதப்பிரேத பைசாசகணங்களால் ஏவல்கொள்ளுங் காளிகளனந்தம். காளிக்குப் பூசையிட வைத்த கறியைத் தொட்டு முகந்து மூக்கறுப்புண்ட மூளிப்பேய்கள் அனந்தம்.

இதல்லாமலும், வெப்பமாகிய மனிதப் பிணம்-யானைப்பிணம் - குதிரைப்பிணம் முத லிய பல பிணங்களை யெல்லாம் ராசிராசியாக களஞ்சுத்தி செய்வோர் குவிக்க, அந்தக் குவி யிலிருந்து வழியும்படியாகிய ஊனீர், செந் நீர் முதலாகிய பல நீர்களெல்லாங்கூடி மலை யருவிபோற் பெருகி வழிந்து வரா நின்ற வாய்க்கால்க ளனேகம். மேலும், அர்ச்சுனன்

விட்ட பாணங்களினால் யானைவாயி லிருந்து செந்நீரும் நிணமும் திரண்டோடி வருவது பாலசுப்பிரமண்ய சுவாமியாரெறிந்த வேலாயுதம் புகுந்த வழியில், சிகரங்களையுடைய மலை கிழிந்து வரும் கங்கைப்போ லிருந்தது. இந்திர குமாரனாகிய கேசவற்றோழன் றொடுத்த பாணங்களினாற் றுண்டித்து விழுந்த அரசர்களுடைய மண்டைகளை நாய்கள் கவ்விக் கொண்டாடுவது எப்படி யிருந்ததென்னில், மனிதத்தலையும் நாயினுடலுங்கொண்ட மிருகங்களை யொத்திருந்தது. அன்றியும் பேய்க் கணங்கள் முதலிய யாவுங் கூடிக்கொண்டு, பெண்ணுக்குப் பிள்ளையும் பிள்ளைக்குப் பெண்ணும் பேசி கலியாணம் கச்சேரி முதலிய சம்பிரமங்களை யெல்லாம் அனுபவித்து விருந்துண்டு வேடிக்கைகளைப் பார்த்துக்கொண்டிருந்ததுகள். இப்பால், இந்த மூன்றும்நாள் யுத்தத்திற் சரங்களினால் அறுப்புண்டிருந்த சேனைகள் முதலிய வீரர்களின் மூளைகள்-நிணங்கள் - செங்குருதிகள் முதலியவைகளெல்லாந் தேகத்திற் றெறித்ததென்று சீக்கிரத்தில் மேற்குக் கடலில் மூழ்கப்போனவனைப் போற் சூரியன் அஸ்தமான மடைந்தான். உடனே முடிமன்னர் முதலிய சகல சேனைகளும் பாசறை புகுந்தார்கள். அவ்விடத்தில் துரியோதன மகாராஜன்- துரோணாச்சாரியார்-கர்னன் - துருவாசன் இன்னுமுள்ள மன்னவர்க ளெல்லோருங் கூடியிருக்குங் காலையில், அர்ச்சுனன்செய்த யுத்தத்திறங்களும், அவன் நடத்திய போரின் றிறமையும், செங்கண்மாலாகிய ஸ்ரீ கிருஷ்ணபகவான் ஆயுத மெடுப்பதில்லையென்று சொல்லியிருந்தவர் சக்கராயுத மெடுத்துத் தன்னைக் கொல்லவந்ததும், இதுகளை யெல்லாம் விஸ்தாரமாகப் பேசிப் புகழ்ந்து மகிழ்ந்துகொண் டிருந்தார் சேனாபதியாகிய வீஷ்மாச்சாரியர். துரியோதனனுடைய படைவீரர்கள் முதலிய பேர்களெல்லாம், இன்றைப்போரி லிறந்துபோன உரியவர்களையும் பெரியவர்களையுங் குறித்து அழுதிரங்கிக் கொண் டிருந்தார்கள். தருமராசன் முதலிய தளகர்த்தர்களும் சேனைவீரர்களும் தனஞ்செயன் செய்த சண்டைகளையும், வீமசேனனும் அபிமன்னனும் புரிந்த போர்த்திறத்தையும், புகழ்ந்துக் கொண்டாடிப் பாடிக்கொண் டிருந்தார்கள். இந்தப்படிக்கு இவ்விருதிறப்படைகளும் அன்றிராத்திரி முழுமையும் நித்திரையில்லாமல், அவர்கள் பட்டுக்கொண்டிருந்த பாட்டை இவ்விதமென்று நானெப்படி சொல்லுவேன்? என்று சொல்லியதைக்கேட்ட ஜெனமேஜய மகாராஜன் மிகவுஞ் சந்தோஷமடைந்து, வைஷ்டபாதேவியுட னெழுந்து, பூமியில் விழுந்து போற்றிப் பணிந்து, புகழ்ந்து மகிழ்ந்து ஓபுண்ணியசொரூபனே! நான் காம்போர் நடந்த திறத்தையும் நவில வேண்டுமென்று கேட்க, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினர்.

மூன்றும்போர்ச் சருக்கம் முற்றிற்று.

---

இப்பால்,

## நான்காம்போர்ச் சருக்கம்

---

### கண்ணன் துதி

சேலாகிச் சோமுகனைச் சிதைத்தவனை மகபதிக்காய், வேலாகி விருத்திரனை வீழ்த்தவனை மாற்றலர்பால், மாலாகிப் பாண்டவர்க்கு வழித்தூது நடந்தவனை, நாலாகிப் பழமறையு நவில்வானைப் பரவுதுமே.

ஓ அழியாத்தவங்களிற் சிறந்து பழியாம் பவக்கடற்றுறந்த அரசனே! அற்றை நாட் செல்ல, மற்றுநாள் மாற்றுயர்ந்த பொன்மயமாகிய மகமேருவைப்போல் உதயகிரியும் பொன்னிறமாக வேண்டுமென்று ஒளிபொருந்திய கிரணங்களை விரித்துக்கொண்டு, அதிசீக்கிரத்திலோடிவந்து உதயமாயினான் சூரியதேவன். அந்தச் சூரியன் தளதளவென்று பளீரெனச் சிவந்து பிரகாசமா யோடிவந்துதயமானது எப்படி யிருந்ததென்றால், யாதவகுலத்தில் அவதரித்த நீலமேனியையுடைய நிமலன் நேற்றைய்தினத்தில் நம்மை ஆகஸ்மீகமாய் நினைத்து அகங்கையிற் கொண்டருளினார். இன்றையதினமும் ஒருவேளை நம்மை நினைக்கும்படியா யிருக்கும். ஆகையால், நாம் அவருடைய திருக்கண்களுக் கெதிராகப்போயிருப்போமென்று பரிசுத்தமுடைய சுதரிசனமானது கீழ்திசையிலுதித்தெழுந்ததை யொத்திருந்தது. உடனே பாண்டவவீரர் யாவரும் எழுந்து காலைக்கடனை முடித்துக்கொண்டு சூரியனை தொழுதெழுந்து யுத்தகோலங்கொண்டு, வெற்றிமுரசு-வீரமுரசு-ஜயமுரசு - தீரமுரசு-கலியாணமுரசு-தியாகமுரசு-தாரை-பூரி-கொம்பு-தப்பட்டை-தவண்டை-மல்லரி-சச்சரி-பேரி சங்கு-பம்பை முதலிய வாத்தியங்கள் முழங்க ரணக்களம் வந்து சேர்ந்து, ஸ்ரீ நாதனுடைய

உத்தரவின் வண்ணஞ் சகல படைகளையுஞ் சத்திரயூகமாக வகுத்து யுத்தத்திற் கெத்தனமாக நின்றார்கள். அவ்விடத்தில் துரியோதனன் முதலியபேர்களும் யுத்தபூமிக்கு வந்து திஷ்டத்துய்மன் வகுத்த யூகத்தைப்பார்த்துத் தாங்களும் கருடயூகம் வகுத்துக் கண் சிவந்து நின்றார்கள். அந்தவேளையில், இரு திறச் சேனாதிபதிகளும் போர்புரியும்படியாய்க் கொடியுமுடியுஞ் சாய்த்தார்கள். அப்படி சாய்க்கவே, இரண்டு சேனைகளும் இறைந்து இருளைக் கூச்சலிட் டோட்டும்படியாகிய போர் முரசத்தை முழக்கிக் கடுங்கோபங்கொண்டு பொங்கிப் பேரிரைச்சலிட்டு கைகலந்து போர் செய்தார்கள். சக்ராதரராகிய சுவாமியையும், அவர் மைத்துனராகிய அர்ச்சுன ராஜனையும் சாஸ்திர விவேகத்திற் சிறந்த வீஷ்மாச்சாரியர் எதிர்த்துக்கொண்டார். பாண்டவச் சேனாபதியாகிய திஷ்டத்துய்மன் தனக்குக் காரணப் பகையாகிய துரோணாச்சாரியரை வளைத்துக்கொண்டான். அப்போது ஈரேழுலகிற்கும் அனேக ஆதாரமாயிருக்கின்ற மகமேருவை அநேகங்கோடி மலைகள் சூழ்ந்துகொண்டால் எப்படியோ? அத்தன்மைபோற் பலம் பொருந்திய புயமலைத் தாங்கிய வாயுபுத்திரனாகிய வீமசேனனை நிர்வாகசாலிகளாகிய பல தேச மன்னவர்கள் அநேக யானைக்கும்புகளோடுந் தேர்க்கூட்டங்களோடுஞ் சேர்ந்து எதிர்த்து வளைத்தார்கள். சிற்சிலவிதமாகிய வீரர்களும், பற்பலவிதமாகிய மன்னவரும், பலபலயிடங்களிலும் நெருங்கி அமர் செய்தார்கள்.

### வீமசேனன் யானைப்போர் விளைத்தல்

அந்த வேளையில் வீமசேன ராஜாவானவன், விற்பாண முடையவனாய் வெகுநேரம் வரையிலும் போர்புரிந்து அப்பால் ரதத்தை விட்டிறங்கி, ஆலகால விஷம் வெளிப்பட்டு முழங்கி அவனி முதலிய அண்டங்களை யழிக்கப் புகுந்ததுபோல் வெறுங்கையுடன் யானைப் படைக்குட் புகுந்து, யானைகளைவாரி ஒன்றோடொன்றை யறைந்து, எலும்புகளைக் கழற்றி விட்டபடியால், தோலினமென்று சொல்லப்படுகிற அந்த யானைகள் தோலாகவே விழுந்திறந்ததுகள். இன்னுஞ் சில அத்தோலினங்களை வீமன் பிடித்துக் கிழிக்குமிடத்துத் தும்பிக்கையும், மேல்வாயும், வீமசேனன் கரத்திலிருக்கக் கீழ்வாய் கீழே தொங்குவதால், நால்வாயென்னும் பெயர் மறையாமலசைந்தாடும் வாயுடன் அழிந்திறந்ததுகள். சந்திரவட்டக் குடைதரித்த வீமசேனன் குதித்துக் குதித்துக் குத்திக் கொல்லுகின்ற அந்நால்வாயென்னும் யானைகள் சிந்துரமென்னும் பெயர் மாறுமற் சிந்துரப் பொடியாய்ச் சிதைந்து வீழ்ந்திறந்ததுகள். மேலும், வீமசேனன் வெறுங்கையால் அச்சிந்துரங்களைப் பிடித்து ஒருகை மேல் வைத்து மற்றொரு கையாற் குடலற்று விழக் குத்துகின்ற குத்தால், தோல்-மாமிசம்-நிணம்-தசை முதலிய யாவும் அழிந்து வழிந்துபோய் அத்தியென வெற்றெலும்புகளாய் விழுந்திறந்ததுகள். மேலும், கந்தவகன் மைந்தனாகியவீமசேனன் கந்தடர்க்குந்தோளினுர் கலங்குகின்ற அவ்வத்திகள் தந்தாவளமென்னும் பெயர் மறையாமல், தாங்கள் பிறந்துலவுந் தந்தா வளமாகிய மலைப் பக்கங்களிற் போய் மறைந்ததுகள். சோகந் தீர்க்கும் வாயுபுத்திரராகிய வேகமுள்ள வீமசேனன், பலங்கொண்ட புஜத்தால் இடித்துக் கொல்லும் அத் தந்தாவளங்கள் வாரணமென்னும் பேர் மறையாமல் வாரண குழிகளைப்போற் குன்றியிறந்தது.

அன்றியும், மேகம்போன்ற நிறத்தினையுடைய பேராகிர்தியாகிய அவ்வாரணங்கள் உடல் குழுங்கிப்போய் உதிரவெள்ளங்களும் ஊனறணணியுங் கடகடவென்று கடைவாய் வழியே வழிந்தோடி வரும்படிக்கு வீமசேனன் தனது தாமரைக் கமலம்போன்ற உள்ளங்கையால் அமுக்கிப் பிடித்தெடுத்து ஆகாயத்திலெறிந்தபடியால், தும்பிகளென்னும் பெயர் குன்றுமற் றும்பிகளாகிய வண்டுகளைப்போற் பறந்திறந்து விழுந்ததுகள். மின்னலைக் கொண்ட பொன் மலைபோன்ற கதாயுதத்தைப் பொன்னாரமணிந்த புயத்திற்கொண்டு தன் முன்னாகவந்த அத் தும்பிகளையெல்லா மோதியடித்துக் கொல்லுவதினால், நாகமென்னும் பெயர்கொண்டதற்கேற்ப நாகமென்னும் மலைகளைப்போற் போர்க்களமெங்கு மடிந்து-புதைந்து - சிதைந்து - மிதந்து குவிந்ததுகள். மேலும், தந்தக் கொம்புகளுந் துதிக்கையும் பீமசேனன் கைகளாற் பிடித்துச் சுழற்றப் பிடுங்குண்ட அந்நாகங்களெல்லாஞ் சகல வீரர்களும் உதிர வெள்ளங்களால் நனைந்து உதிர வெள்ளத்தில் முழுகி யெழும்படியாக அமோகமாகிய உதிரங்களைத் தங்கள் தேகத்தினின்றுஞ் சரப்பிப்பதினாற், கயங்களென்னும் யானைகள் எல்லாரும் ஸ்நானஞ்செய்து முழு

கும் ஊறு கயங்களை யொத்தழிந்ததுகள். மேலும், அக்கயங்களை வாரிவாரி வீசுகின்ற வீமசேனனுடைய முகம் - கரம் - கால் - உடல்- மார்பு இவைகளெல்லாங் குழம்புகளாய் மூடிக் கொண்டிருப்பதினாற் களபமென்னும்பேரைக் கொண்ட யானைகள் உடலிற் பூசிக்கொள்ளுங் கலவைச் சாந்தாகிய களபமாகியதுகள். அன்றியும், மலைகளைப்போல் எதிர்த்து நெருங்கிப் போர் புரியவந்த அக்களபங்களெல்லாம் எட்பொரி நெற்பொரிபோல ஆகாயவீதியிற் பறக்கின்றமையால், பங்கமில்லாமச் சண்டை செய்யுஞ் சிங்கம்போன்ற வீமசேனனுடைய ஆண்மிக்கையானது, தர்மத்தைத் துணையாகக் கொண்டு எவர்களாலும் முடிப்பதற் கருமையாகிய சகல காரியங்களையும் வெற்றிபெறச் செய்துக்கொள்ளு மென்பதற்குச் சாக்ஷி இது தான் என்பதைப்போலக் கரியென்னும் யானைகளே கரியாய்க் குவிந்ததுகள்.

இந்தப் பிரகாரமாய்க் கோபங்கொண்டு வீமசேனன் கடற்போற் புரண்டுவந்த யானை கூட்டங்களை யெல்லாங் கலக்கித் தலையும்-குலையும் - உடலும் - குடலும் - காலும் - வாலும்- தும்பிக்கையும் - கும்பிப்பையும்- நிணமும்-மதமும்-ஊனும்-உதிரமும்-சிதைந்து வழிந்து, கூழுபோற் குழம்பிச் சேருகும்படியாய்க் கொன்று குவித்து, அண்டையில் யாவரையுநில்லவொட்டாமல் சண்டை செய்துக் கொண்டுவந்த காலத்தில், எதிராளிகள் மேலிட்டு எதிர்த்துப் போராடினார்கள். அந்த வேளையில், வாயு குமாரனாகிய வீமசேனன் கையாருமற் புகுந்து, சுடச்சுடக் கையாலறைந்து, தேரணிகள்-குதிரைப்பந்திகள் - படைவீரர்கள் - பட்டவர்த்தனர்கள் -மகுடவர்த்தனர்கள் மற்ற மன்னவர்கள் யாவரும் பின்னிட்டோட மடித்து, வெகு சனங்களைமுடித்து, வானததிலும் வாரி யெறிந்து, மசகமாகிய கொசுகுகளைப் போற் கையாற் பிசைந்துக் கொல்லுவதாயினன். அப்போது வந்தவர்களெல்லாம் வந்த வழி எந்தவழியென் றுணராமற் சிந்தை நொந்து வாடி முகம் வைத்தவாரே ஓடினார்கள். அப்படி ஓடுவதை அரவக்கொடியோன் கண்டு மனந் தாளாமல் விசனங்கொண்டு, தளர்ந்தோடிவந்த அந்த சேனைகளை கையமர்த்தித் தன்னுடைய தம்பிமார்களோடுஞ் சேர்ந்து, கொடி - குடை முதலிய விருதுகளுடன் முரசு-பேரி - பூரி முதலாகிய வாத்தியங்களு முழங்க, படைமன்னவரி லனேகர் தன்னைப் புடைசூழவந்து வீமசேனனை வளைத்துப் போராடினான். அவனைக்கண்ட திங்கட் குடையுஞ் சிங்கக்கொடியுமுடைய வீமசேனன் தென்பு கொண்டவனாய்த் தேரின்பேரி லேறிக் கொண்டு, பாரிய வில்லை வளைத்து அச்சத்தை விளைக்கும் நச்சுக்கணை தொடுத்து, துரியோதனராசன் கைக்கொண்ட வில்லை முறித்து, அவன் தரித்திருந்த மகா உன்னதமான சேமக் கவசத்தினையுஞ் சிதைத்தான்.

உடனே மறுபடியுந் துரியோதனன் வேறு வில்லெடுத்து நாணிமடுத்து பாணந் தொடுத்து வருவதற்கு முன்னே, வீமன் ஆறம்பைத் தெரித்து அரவக்கொடியை முறித்து கூரம்புகளிற் கும்பு கும்புகளாய் நூறம்பு செலுத்தித் துரியோதனனுடைய மார்பு முதலிய தேகத்தினுழைத்து வேறே அம்புகள் விடுக்காமல் இருந்தான். அந்தச் சமயத்தில், துரியோதன ராஜன் சுதாரித்துக்கொண்டு வீமன் விட்ட பாணங்களை யெல்லாம் விலகச் செய்து, பதிலுக்குப் பதிலாக ஆறம்பும் உடனே ஒரு நூறம்பும் வீமசேனனுடைய சிங்கக் கொடியிலுந் தேரிலுந் தேகத்திலுந் தெறித்தான். அப்போது துரியோதனன் விட்ட கணைகளினால் வீமசேனனுடைய சிங்கக்கொடி முறிந்து, தேருஞ் சிதைந்து, தேகத்திலும் புகுந்து துளைக்கும்போது, வெற்றி மிகுந்த கடக கங்கண வளையமணிந்த தோளைத் தட்டிக் கொண்டு, அண்டமுகடு வெடிபடும்படியாய் முழங்கி ஆக்ரமித்தான் வாயுமைந்தனாகிய பராக்கிரம வீமன். அந்தவேளையில், மகிபதி புத்திரனால் வீமனிளைத்தானென்று கூர்மைதங்கிய வேலாயுதத்தைத் தாங்கிய அநேகங்கோடி மன்னர்களும், மாலையு முடியுந் தரித்த அநேக மகுடவர்த்தனரும், நகுல சகாதேவரும், வீர குமாராளாகிய மற்றப் புத்திரர்களும், மித்திரர்களும், மைத்துனர் முதலாகிய பேர்களும், மகா அட்டகாச வீராவேசத்துடன் ஜயபேரி - ரணபேரி முதலிய வாத்தியங்களை முழக்கிக்கொண்டு வந்து வீமசேனனுக்குத் துணைகூடினார்கள்.

### வீமசேனன் துரியோதனனை மூர்ச்சிக்கச் செய்தல்

இப்படிக்கு விரித்த வெண்குடை தரித்த மன்னவர் முதலிய பேர்களெல்லோரும் வீமசேனனுக்குப் படைத்துணை வந்தார்களென் றறிந்து, நந்தியாவட்ட மாலையணிந்த நரா

திபனுக்குத் துணையாக ரதகஜதுரக பதாதிக ளுடன் பூபால ரனேகர், நவகோடி கோபால ரனேகர், அவன் தம்பிமார் முதலிய பேர்க ளோடுஞ் சேர்ந்து அடுத்தார்கள். இவ்விரு வருக்குந் துணையாக வந்த மன்னர் முதலிய பேர்கள் ஒருவரோ டொருவர் இளமறிந்தெ திர்த்து, ஒருவருக் கொருவர் இளையாமல் நிலைபெற்று நின்று அதிர்ச்சி விளைத்து தங் கள் தங்கள் வின்னாண் வலியாற் பேராசை விளைத்தார்கள். அந்த ஓசையினால் அகிலா ண்டமுற்று மதிர, மண்டலத்துடன் எண்ட லத்திக்குங் கலகலக்கும் படியாய் முதிர்ந்த யுத்தஞ் செய்தார்கள். இப்படிக்கு இருதிறப் படைகளும் போர்புரியும்போது, ஒருவர்பேரி லொருவர் தொடுக்கும் விஷக் கணைகளினாற் பலம் பொருந்திய ரதங்களழிந்து, சிரத்திற் றரித்த மகுடங்கள் துணிந்து, பூமியிற் றேக மயரவும், பிராணன் வானிலுயரவும், உடல் அபிமான மறந்து மடிந்தார்கள். இந்தப்படி க்கு சேனைகளும் - வீரர்களும் யுத்தஞ் செய் யும்போது, துரியோதனனும், வீமசேனனும் இரதத்தை இடசாரி வலசாரி, வலசாரி இட சாரியாகச் சுழற்றி, எதிரெதிராகப் பற்கடித் துத் திவ்வியாஸ்திரப் பிரயோகஞ் செய்து, நெடுநேரம் வரையிலுங் கடும்போர் விளைத் தார்கள். அந்த வேளையில், நந்தியாவட்ட மாலை யணிந்த நராதிபனுடையக் கணைகளை வீமசேனன் அரையாகக் குறைத்து அவனி யைமறைத்துப் பிறைமுகக் கணைகளை நிறைத் துக் கைக்கொண்டிருந்த வில் முறிபடவும், வேகங்கொண் டோடுங் குதிரைகள் தறிபட வும், தோத்தட் டொழியவும், மேற்றட்டழி யவும், சிகரமுடையவும், குடைக ளிடியவுஞ் செய்து அத் துரியோதனனுடைய மார்பு கிழித்து குழைந்து இழைந்து உதிரம் வழி ந்து தளர்ந்து விழும்படிக்குத் தாக்கி எதிரே நின்று நகைத்தான்; அந்த பிறைமுகக்கணை மார்பிற் பட்டமாத்திரத்தில், மறவட்டையை போல் சுருட்டிக்கொண்டு பூமியில் விழுந் தான் வணங்காமுடி பெற்ற மன்னனாகிய துரி யோதனன்.

அப்படி விழுந்தவுடனே, சகுனி-சல்லிய ராஜன் முதலிய மன்னவர்களுந் துரியோ தனனுடைய தம்பிமார்களும் பார்த்து முகம் வியர்த்து இரக்கமுற்றுத் தேக நடுங்கத் திடுக் கிட்டுத் துரியோதனனை யெடுத்தணைத்துச் சிந்தை கலங்கி நேற்றை யுத்தத்திற் கடோற் கஜனென்பவன் முகக்கணை யுய்த்து மார் பைக் கிழித்து முடங்கும்படி செய்தான். இன் றைய யுத்தத்தில் அந்த கடோற்கஜன் தந் தையாகிய வீமசேனன் பிறைமுகக் கணையாற் பூமியிற் றள்ளினான். ஐயோ! நமது அரசனு டைய பிராணனை அப்பனும் பிள்ளையும் நாள்மாற்றி நாள்பங்கு போட்டுக் கொள்ளு கிருப்போலு மிருக்கிறதே என்று கண்ணீ ரைப்பெருக்கிச் சேர்ந்து தமயனுக் குபசாரஞ் செய்யும்படியாய்த் தகுந்த பேரை அனுப்பி விட்டுத் தம்பிமார்க ளெல்லோருங்கூடி எங் கள் தமயனாகிய துரியோதன ராசனுக்குத் தேகம் வருந்தி யிருப்பதால் இப்போது யுத் தஞ் செய்வதற்கு வரமாட்டார். ஆகையால், ஓ அரசர்களே நீங்களெல்லோரும் ஒரே உறுதி யாய்ப் புறப்பட்டு நிலைத்து நிற்பீர்களாகில், அந்த வீமனை வளைத்து என் தமயன் பட்ட பாடு அவன் படும்படியாய் பாடுபடுத்திச் சந் தோஷங்கொண்டு வரலாமென்று சொல்லி, அநேகம் வீரர்கள் முதலிய யுத்த வித்தகரை யெல்லாம் அழைத்துக்கொண்டு கட கட வென்று தேரைச் செலுத்தி வின்னாணோசை செய்து கணைமாரி பொழிந்தார்கள். அவர்க ளெப்பேர்ப்பட்டவர்க ளென்றால், கோபால னாகிய கோவிந்தன் கோபாலனஞ் செய்வதற் காகச் சுண்டு விரலிற் கோவர்த்தன கிரியைக் குடையாக வெடுத்தும், அதனை ஆகவொட்டா மற் றடுக்கப் பொழிந்த காளமேகத்திற் கொப் பாகிய பேர்கள்.

துரியோதனன் சகோதரில் ஐவர் வதை

இப்பால் அவர்கள் எல்லோரும் ஒரே முகமாகக்கூடி யுத்தஞ் செய்யும்போது, வீம சேனன் வெகுண்டு, வில்லினிடத்திற் கடும் பாணங்களை விசையாகத் தொடுத்து, வந்தடுத் துப் போர் கொடுத்த வீரர்களைப் பார்த்து, இனிமே லென்ன யோசனை செய்யப் போகி றீர்களென்று அவரவர்க ளேறிவந்த இரதங் களை முற்றினு மிடியச் செய்து, அவரவர் கள் பிடித்திருந்த வில்லுகளையு முறித்து, உடல்களிலுங் கணைகளை நிறைத்துத் துளைக் கவே, ஒருவரும் எதிர்நிற்க மாட்டாம லிளைக் கவே, அந்த வேளையில் துரியோதனனு டைய தம்பிமார்களிற் சேனாபிந்து - சுஷேக்க ணன்-பிங்கலசன்-சலாசந்தன்-வீமவாகு என் னும் ஐம்பூதம்போன்ற ஐந்து பேர்கள் வந் தெதிர்த்து வீமசேனனை வளைத்து அலைகாற்றி லடிக்குஞ் சருக்கைப்போற் குலைந்தலையச்

செய்தார்கள். அப்போது வீமசேனன் ஆக்ர மித்துத் துரியோதனன் பேரிற் றெடுத்து விடுத்த தன்மையைப்போல் வெற்றியை யுடைய ஐந்து பிறைமுகக் கணைகளை எடுத்து விடுத்தான். அந்தக் கணைகள்போய் மருமத் திற்றைக்கவே, அச்சேனுபிந்து-சுதைக்கணன்-பிங்கலசன் - சலாசந்தன் - வீமவாகு என்னும் பலம்பொருந்திய தம்பிமார்கள் ஐந்து பேரும் முடி துணிந்தார்கள். வீமனவர்களைக் கூவி, தம்பிமார்களே! உங்கள் தமயனுகிய துரியோ தனன் எங்களை காஞளவிடுத்து கசக்கினன்; அவன் தெரியாமற்செய்தாலும், நாங்களதை குற்றமா யெண்ணிப்பாராமல், அந்தக் குறை களை மனதில் வைக்காமல், எங்களருமை பெருமைக்குங் குறைவில்லாமல் மேலாகிய இடத்திற் கனுப்பிவைத்தேன். நீங்கள் புத்தி சாலிகளாய் வானுலகத்திற் போயிருந்து மாற் காயாசந் தீர்த்துக்கொண்டு இனிவரப்போகிற உங்கள் தமயன் தம்பிகள்முதலிய பேர்களுக்கு நல்ல வாசஸ்தலமாக இட மேற்படுத்திக் கொண்டிருங்களென்று சொல்லிப் பின்னும் அவர்களைப் பார்த்துச் சொல்லுகிறுன்.

அப்பா எனது சகோதரர்களே! நீங்கள் அறியாதவர்களாகையால்,வீமசேனன் நம்மை பிரித்துவிட்டானே என்று என்பேரிற் கோபம் பண்ணுதீர்கள். அண்ணு அவர்கள் முதலாகிய பேர்களை இன்னம்பத்துப் பதினான்கு நாளைக் குள்ளாக அனுப்பிவைக்கிறேன். நானப்படி அருமை தெரியாதவனல்ல. நீங்கள் ஆயாசப் படாமற் போங்கள். ஐயா அவர்களுக்கும், அம்மா அவர்களுக்குஞ் சஞ்சயனுற் றெரிவிக் கிறேனென்று சொல்லி, அம்பாரமாகிய நூறு பேர்களில் ஐந்துபேரைக் கதாயுத மென்னும் அளவு கோற்கொண்டு இதுலாபம் என்று அளந்து, நாய்-நரி-கழுகுகளுக்குக் குடிவாரம் உடலாகவும், நமனுக்கு மேல்வாரம் உயிராக வும் அனுப்பிவைத்து, வளர்பிறைச் சதுர்த்தி யில் விக்னேஸ்வரப் பிரார்த்தனை செய்து முகூர்த்தங் கொண்டான் வீரகண்டாமணி பூண்ட தீரதண்டதரன். இந்தப் பிரகாரந் துரியோதனனுடைய தம்பிமார்களைப் போக்கி விட்டு மற்றப் படைகளின்பேரிற் றிரும்பி யுத் தஞ்செய்யும்போது, தம்பிகளிறந்தார்களென் னுஞ் சங்கதி தெரிந்துகொண்ட சர்ப்ப கேது தளதளவென்று கொதிக்குந் தாறுபோற் கொதித்து, நாலுவிதச்சேனைகளும் ஆறுவி தப்படைகளுஞ் சூழும்படியாக, மற்றத் தம்பி மார்களுந் தானுஞ் சகுனியுந் தாலக்கொடியின னுகிய வீஷ்மரும் மன்னர்முதலாகிய நராதிப ரும் வந்து சாகரம்போல் வளைந்தார்கள்.

அந்தக் காலத்தில், தருமராஜனுடைய படையிலிருந்துசகலவீரர்களும்கூடிக்கலந்து, ஒருபக்கத்தில் வீமன், ஒருபக்கத்தில் விஜ யன், ஒரு பக்கத்தில் அபிமன்னு, ஒரு பக்கத் தில் நகுலன், ஒரு பக்கத்தில் சகாதேவன், ஒரு பக்கத்தில் இராவான், ஒரு பக்கத்தில் கடோற் கஜன், ஒரு பக்கத்தில் அஞ்சனவர்மன், ஒரு பக்கத்தில் இளம் பஞ்சபாண்டவர்களாகிய இவர்களும்; ஒரு புரத்தில் பாஞ்சாலன், ஒரு புரத்தில் துஷ்டத்துய்மன், ஒருபுறத்தில் உத் தமபானு, ஒருபுரத்தில் விராடன் முதலாகிய இவர்களும்; ஒரு பாரிசத்தில் கீசகன் பிள்ளை யாகிய பிரிதீவன், ஒரு பாரிசத்திற் குந்திபோ சன் பிள்ளையாகிய மந்தன், ஒரு பாரிசத்தில் அவன் சகோதரராகிய சுமந்தன், ஒரு பாரிசத் தில் ஜராசந்தன் பிள்ளையாகிய சகதேவன், ஒரு பாரிசத்தில் காசிராஜன் பிள்ளையாகிய மல யத்துவஜன், ஒரு பாரிசத்தில் அவன் அருமை பிள்ளையாகிய பிரீதிபன், ஒரு பாரி சத்திற் சிசுபாலன் பிள்ளையாகிய துஷ்டகேது என்னு மிவர்களும்; ஒரு தானத்தில் கிராதாள்-அவுணுள்-ஆத்திராள்-புண்டரீகாள் முதலிய பேர்களும்; ஒரு தானத்தில் போஜாள்-பாஞ் சாலாள்-சோமுகாள்-சிரஞ்சேயாள்-மார்ச்சாள் மாகதாள்-திரிகால வாசுதேவாள்-திரிபுண்டிர வாசுதேவாள் முதலிய பேர்களும்; ஒரு தானத் திற் சேரர் - சோழர் - பாண்டியர் முதலாகிய பேர்களும் மொய்த்துக்கொண்டு போர் புரிந் தார்கள். இந்தப் பெருங் கும்புகளினுலும், இவர்கள் விடும் அம்புகளினுலும், துரியோ தன மகாராஜன் முதலிய பெருஞ் சேனைக ளெல்லா முடைந்து, புறமுதுகிட்டொழிந்து ஓடியொளித்தார்கள்.

### பகதத்தனேடு கடோற்கஜன் மாயப்போர் விளைத்தல்

இப்படி வாடியோடிய சேனைகளைக்கண்ட பகதத்த னென்பவன், அஞ்சாதீர்க ளஞ்சா தீர்களென்று அதட்டிக்கொண்டு வந்தெதிர்த் தான். அவன் எப்படிப்பட்டவ னென்றுல், தேவர்கள் பொருட்டில் அசுராதிபர்களை யெல்லாம் வென்று, மண்டலத் தரசர்க ளுக்கு மகுட சிகாமணிபோன்று சூரியனைப் போற் றுலங்கிப் பஞ்சகதிகொண்ட பஞ்சகல்

யாணிப் பசும்புரவி பூட்டிய தேரினையுடையவன். இவன் யாருடைய குமாரனென்றால், ஆதிவராக மூர்த்திக்கு பிறந்த நரகாசுரனுடைய குமாரன். இவன் பராக்கிரம மெப்பேர்ப்பட்டதென்றால், கொலைபுரியுங் கோபக் கண்ணினையுடைய யானைக்கும், அப்பேர்ப்பட்ட யானையைக் கொல்லாநின்ற சித்திற்கும், மானிட தேகமாகிய மன்னுயிர்களை வருத்தும் யமனுக்கும், யமனாகவிருக்கின்ற பராக்கிரமமுடையவன். இப்படிப்பட்ட பெருந் திறம் வாய்ந்த பகதத்தனானவன், காற்றால் அலைகள் எறிந்தாடுங் கருங்கடலைப்போற் கலங்கா நின்ற யுத்தகளத்தில், உலகத்திலுள்ள மலைகளெல்லாங் காலும் வாலும் பெற்று வருவதையொத்த பதினாயிரங் காட்டானைகளுடன், சுவர்க்கலோகத்து யானைகளைப்போன்ற அளவற்ற கொம்புகளைக்கொண்டு விளங்கும் ஓர் மதயானையின்மீ தேறிக்கொண்டு வந்து வில் வளைத்துத் தீமுகப் பகழி, திருமுகப் பகழி, திசைமுகப் பகழி என்பனவற்றைத் திருத்தி விடுத்துச் சத்துருக்களின் தலைகளைக் கொத்துக் கொத்தாய்த் தறித்தான். இந்தப் பகதத்தனுடைய தோள் வலிமையையும், வில் வலிமையையும், கணிவலிமையையும், வீரபட்டமும் வெற்றிமாலையும் பெற்ற பதினாயிரம் யானைப் பெருக்கத்தையும், யுத்தம் நடக்குந் திடத்தையும், அவரவர்களின் மனவுறுதியையும், பாண்டவர்களுடைய படைகள் பதர்போற் பறக்கும்படியான பாட்டையுங் கடோற்கஜன் பார்த்துப் பரிதாபங்கொண்டு, அப்போதே மதங்கொண்ட நூறாயிரம் யானைகளும், மகா காதகரைப்போற் கடுங்கோபமுடைய காலாள்களும், பாகராகிய மேலாள்களுந் திவ்யாஸ்திரங்களும், சிதையாத விற்களும், கெதை முதலிய ஆயுதங்களும், தானேயாகி மாயவேடங்கொண்டு, அப்போதுதான் மலைநாட்டிலிருந்து வருவதைப்போல் வந்து உலகமனைத்து மிருளும்படியாய், முன்புவந்த யானைப்படைகளெல்லாம் வெருளும்படியாய்ப் போர் மூட்டி, வலம்புரி முதலிய சங்குகள் முழங்க, வெற்றிமுரச மார்ப்ப, சச்சரியடிக்கத் தாரை பூரியு மூதும்படியாய்ப் போர்முகத்தில் புகுந்தபோது, யானையின் குப்புகள் வருங் காலையிலெழுந்த தும்புகள் தேவர்கள் பார்வை குறையும்படி கண்களை புதைக்கத் திரையாழிகள் நீர் வறளும்படி பள்ளத்தைச் சிதைக்கத் தாவி யெழும் ஒரு சிங்கமானது, மலைபோன்ற யானை மத்தகத்தி லேறிவருந் தன்மையைப்போல் எவ்விடத்திலுந் தானாகயிருந்து, பகதத்தனுடன் தகததவென்று எதிர்த்து மலைத்தான்.

இவ்வண்ணங் கடோற்கஜக் காளையானவன் காளமேகம்போ லெதிர்த்து, ஒவ்வொரு சரங்களை மும்மூன்றுதர மழைபோற் பொழிந்து, முஷ்டி நிலை காட்டி, ஈட்டிக்கீடாய் எதிர் எதிர் நின்று பெருமூச்சு விடுத்து, மெய்ம்மையைப்போற் கொடும்போற் செய்தான். அந்தப் பகதத்தன் விடுத்த பதினாயிரம் யானைகளும் பொய்யானைகளைப்போல் நின்று போர் புரிந்து பொடித்து ஒடிந்து மடிந்து குறைந்ததுகள். ஆனால், மெய்யானைகள் குறைவானேன் பொய்யானைகள் நிறைவானேனென்றால், (பொய்-பூரணச்சந்திரன், மெய்-விளக்கொளி மழுக்கம்) என்னும் பழமொழியைக் குறைந்ததுகள். இதன்றியும், நின்றார் நின்றபடி நேருக்கு நேராக வோடிக்கொன்றார்கள். பதினாயிரம் யானைக்குப் பாகனையும் வென்றார்கள். இந்தப்படிக்கு நடத்திய யுத்தத்தால், வெற்றிபெற்ற மன்னர்களி லனேகர் மடிந்தார்கள். அவ்வவர்களுடைய யானைக் குப்புகளெல்லா மழிந்து குவிந்ததுகள். இந்தப் பிரகாரம் பகதத்தனுடைய படைவீரர்களையும், யானைக்குப்புகள் யாவற்றையுங் கொன்று வென்ற வீமசேனனுடைய குமாரனாகிய கடோற்கஜன்செய்த மாயையாலாகிய வீரர்களையும், இவர்களால் மாய்ந்த யானைகளையும், பகதத்தன்கண்டு கண்கலங்கி, நல்லது இன்றைய யுத்தத்தில் நமது யானைகளெல்லாம் நாசமாயிற்றல்லவா வென்று நட நடவென்று பற்கடித்துப் போனதுபோகப் பிழைத்திருக்கும் பிள்ளைகளும் போர் மன்னர்களும் இத்தருணம் பின்னிட்டுப் போங்களென்று இறைந்துசொல்லித் தானும் விரைந்து சென்றான் மானம் - ஊனம் - ஈனம் என்பவை எண்ணிப் பாராத பகதத்தன். அப்போது அந்தச் சேனைகளும், அச்சேனைகளிலுள்ள வீரர்களும் திக்கா லொருவராய்ச் சிதறித் திரும்பி விட்டார்கள். அப்படி திரும்பிப் போகும்படியாகிய படைமன்னர்களைச் சூரியன் பார்த்துச் சரி தானே மெய்யைக் கொண்டால் வெல்லலாம் பொய்யைக்கண்டாற் செல்லலாமென்னும் பொருள்போற் கடோற்கஜனுடைய மாயைக்கு உத்திரிக்கமாட்டாமல் எல்லாரும் ஓடிப்போய்விட்டார்களே, நாமாத்திர மிவ்விடத்திலிருக்கப் போமோவென்று

ஓடினவனைப்போல் தானும் புறமுதுகிட்டுக் காந்தியாகிய சிவப்பு வஸ்திரத்தாற் றேகத்தை மூடிக்கொண்டோடி மலைச்சார்பிற் போய் மறைந்தான்.

இப்பால், அழகிய மலர்மாலையணிந்த பாண்டவர்கள் நமக்கு உதவியாகவந்த இந்த யானைக்கும்புகளேதென்று சந்தேகங்கொண்டு நாடியிருக்குஞ் சமயத்தில், கடோற்கஜனனவன் இந்த மாயைகளையெல்லாம் மறைத்து வந்து, தந்தைமார்களின் காலில்விழுந்து, பகதத்தன் பதினையாயிரம் யானைகளைக் கொண்டு வந்ததும், அதிற் சொந்தப்படைகளழிந்து வருந்தியதும், தான் பார்த்த மாத்திரத்தில் மாயவேடங் கொண்டுவந்து ஜயித்ததுஞ் சொல்லித் தாழ்ந்துநிற்க, அம்மைந்தனை யாவரு மணைத்துப் புகழ்ந்து மகிழ்ந்து வாழ்த்தி, ஜெயம் பெற்றோமென்று செங்கண்மால் முதலிய பாண்டவர்களும் சேனாபதி முதலிய சேனைகளும் பாசறைபோய்ச் சேர்ந்தார்கள். இப்பால், யானைக்கும்புகள் வம்பாய்மடிந்த தன்மையைக் கண்டுந் தம்பிமாரிறந்த துன்பத்தைக் கொண்டும் வருந்திய துரியோதனனையும், மற்றச் சேனைகளையும், சேனாபதியாகிய வீஷ்மாச்சாரியர் அழைத்துக்கொண்டு வாத்திய முதல் விருதுவட்டக் குடைகளுமில்லாமற் பாசறைக்குப்போனார். அந்தப் பாசறைக்குப் போனவுடனே தம்பியர்பட்ட தளர்ச்சியை நினைத்து அப்புவியாளும் அரசனும் அழுதான். பம்பியமேகம் பரவிய வாறுபோல் தம்பியர் மாமன் சகலருஞ் சூழ்ந்தனர். கதிரவன் புதல்வன் கண்ணீருதித்து எதிர்வரக்கண்ட எந்தலண்ணாவெனக் கட்டியணைத்துக் கண்ணீர் சொரிந்து நெட்டு குலைந்தேன், நெஞ்சமழிந்தேன், இட்டமாயுங்களை யென்மனங் கொண்டேன், நட்டமாய்த் தம்பியர் நலிந்துயிர்மாண்டார், கலையாக்கட்டைக் கலகலப்பாக்கினன் மலையாம்புயநேர் மாருதிமைந்தன்; இனி யெவ்விடம் போவேன், எவரை நான் நோவேன், கனிவுறுமன்பாங் கண்ணனே யென்று பூமியிற் சாய்ந்து புரண்டிடும் வேந்தை பூமனோர் சங்காபுத்திரன் தேற்றச் செம்பின் குழம்பெனச் சேந்தகண் தீயுக, அம்புயநாதன் அருள்மகன் கண்ணன் அரசனை நோக்கி, அண்ணலே கேளும்; எதிர்த்தவர் யாவரும் இறக்கச் செயிப்பேன் என்னை விலக்கித் தம் இஷ்டப்படியே மன்னனே புன்னை வஞ்சனை செய்யும் அன்ன பாண்டவர்பால் அன்புள்ள வீஷ்மன் தன்னையே சேனைத்தலைவனாக்கினீர்; அவரவர் திறத்தை யறியுமென்னரசே தம்பியரைவருந் தானையுமழிந்தார் எம்பெருமானிஃதிருவினைப்பகுதி யாரையும் விடாது; அரசனாயிருந்தாலும், அனேக அனுபவம் தாரசைமார்பா சஞ்சலமென்ன எனக் கொடையாளி இயம்பக் கேட்டு, சித்திரப் பாவைபோற் சித்தங் கலங்கிச் சற்று நேரத்திற் தைரிய துணையாய் வைத்தவை நிறைந்து வேந்தரைங் குருவைப் பார்த்துளங் கொதித்துப் பார்த்திவன் பகர்வான்.

இஃதென்ன வீரம், இஃதென்ன தீரம், இன்பமேன் - படையேன் - எழிலேன் - முடியேன்போம்; படையினரிலையே மதியுளீர்வெகுவாய் மன்னர் மடிந்தார்; கதிர்பெறுஞ் சித்ரவிற் கனிஷ்டர் முடிந்தார்; அந்தோ? நீங்கள் அரசரிற் பிறந்து, சந்திரகுலத்தோன் றனக்குறு துணையாய் வந்தும், நீர் சொந்த மனிதரோடலைந்து, பிந்தி வருந்திப் போயினீர். குறையே இறந்ததுவெழுவல் எதிரது தழுவல் என்னும் விதியா? இனிமேலாகிலும், மாயன் தேர்விட வருமர்ச்சுனனை மாயும்படிக்கு மனங் கொண்டு உறுதியாய் நாளை நரனை நலித்தவர் நமக்கு ஆளப்போமென் றவனியை அளிப்பேன்; என்பொருள் அவர்பொருள் என் சுகம் அவர்சுகமென்று சுயோதனனியம்பக் கேட்டு, வீஷ்மர் ஒரு சொல் விளம்பினீர் தெளிய ஐயனே! அரசே! அர்ச்சுனற்கெதிரில் கைவில்லுடன்பொரக் கருதுனருளரோ? கண்ணிலுங் காணேன், கதையிலுமில்லை. அண்ணலே! நாங்கள் ஆதியிற் சொன்னோம்; இன்னமுஞ் சொல்வோம். இனிமேலாகிலும் மன்னரைவர்பால் மனமொத்து வாழ்வோம் என்று காங்கேயன் இயம்பக்கேட்ட கர்னன் வெகுண்டு, கழறினனோர்சொல் விருத்தனே நின்பால், வீரமில்லாவிடில் ஒருத்தரை நிந்தித் துரையாதிருப்பீர்; வீணாய்ப் பேசில் விளையுமே பாவம், ஆணாய்ப் பிறந்தும் அவமாயினீரே; நீர் கொண்ட சேனைத் தலைமை யான் கொண்டால் காணாறு பாண்டவர் கால் சாய்ந்திருப்பார்; அதிபதி தம்பியர் ஐவரும் மடியார்; சதிசதியாகிச் சர்ப்பனை செய்யும் விதிமுறை தப்பிய வேசியர்போலும், பானைக்குங் காவல் பூனைக்குந் தோழன் என்னும் பழமொழிபோ லிருக்கின்றீர். ஐயோ! பாரமார்த்திகராகிய நீர் நடத்துங் காரியம் பகவானுக்குஞ் சரியாயிருந்ததல்லவா? ஏதோ அரசனுடைய துற்காலம்

என்னை நீக்கி விட்டார். ஆகட்டும் இப்பவும்
என்ன? நாளைக்கே வரும் நன்மை. அர்ச்சுன
னைக் கொன்று அரசனுக்குப் பட்டம் அடி
யேன் அளிக்கிறேன். ஆகாயவீதியி லிருக்குந்
தேவர்கள் கண்டு களிக்கும்படியாய் வெற்றி
யும் பெறுகிறேன். நீரே அதனைப் பார்க்கப்
போகின்றீர். ஓ வீஷ்மரே என்று அங்க
தேசாதிபனுகிய கர்னராஜன் சொல்ல, அங்
ஙனமிருந்த அரசர்கள் முதலிய யாவருந்
தகுந் தகுந் தகுமென்று சாற்றினுர்கள்.

அப்போது காங்கேயன் கலீரென நகை
த்து, கர்னனே! அர்ச்சுனன் விற்பிடித்து
வெளிப்பட்ட இதுவரையிலும் எத்தனை
தரம் போர்கொடுத்திருக்கின்றுன். நீ எத்தனை
தரம் அவனிடத்தில் அகப்பட் டிருக்கின்றுய்?
எப்பொழு தாகிலும் அவனைச் செயித்தா
யென்று ஒரு வார்த்தையுண்டா? எங்கே ஒரு
விரலை முடக்கு பார்ப்போம்? ஏன் வீணுகப்
பேசி சோவைஷபோகிறுய்? அப்பா! நாளை
நடக்கப்போகிற யுத்தத்திற்கு நான் போகா
மல் நின்றுவிடுகிறேன். எனக்குப் பதிலாக
நீ போயிருந்து ஐந்தாம்போரில் ஏதாகிலுங்
கொஞ்சம் நன்மை காட்டுவையாகில், நானே
உனக்கு வீரத்திறமுஞ் சேனுபதிப் பட்டமுங்
கட்டிவைக்கிறேன். ஓ விற்றிறமுஞ் சொற்றி
றமு முடைய வீரனே! நான் சொல்லிய இந்த
வார்த்தை உனக்குச் சம்மதமா யிருக்குமாகில்,
இப்போதே புறப்படென்று வீஷ்மாச்சாரியார்
சொல்ல, அந்தப் பேச்சைக் கேட்டுப் பெரு
மூச்சுவிட்ட மிகுகொடையாளன் வேறு வச
னஞ் சொல்லாதிருந்தான். அப்போது பக்
கத்தி லிருந்த அசுவத்தாமன் அக்கர்னனைப்
பார்த்து, இருந்தயிடத்தி லிருந்துக்கொண்டு
வெற்றியைப் பெற்ற உத்தமர்களைப்போல்
வெகுவாய் அளப்பாய் வாக்கினுற் சொல்லிய
வண்ணம் வெற்றியைப் பெறுவதற்குத் தெரி
யாமல் மயங்குவாய்; இவ்வளவு லக்ஷண முன்
னிடத்தி லிருந்தும், நேற்று விராடபுரத்தில்
விஜயனு லடிபட்டுப் பிணமலைக்குள் ஒளிந்தது
உன்னுள்ளத்தி லிருந்தும், பூரணமாகக் கற்று
ணர்ந்த புண்ணியராகிய வீஷ்மரைப் பற்பல
விதமாய்ப் பேசுகின்றுய். இதெல்லாம் பொல்
லாங்காகிய பாபமல்லவோ? நிழலோடு நிழல்
சாய மரம் பட்டுப்போமோ? நீ துரியோதன
மகாராஜனுக்கு எத்தனை விதமாய்ப் போதித்
தாலும், அத்துரியோதன மகாராஜன் உன்
சார்பாய்ச் சாய்ந்து எத்தனைவிதமாய்க் காய்ந்
தாலும், வீஷ்மர் முதலிய பெரியோர்களுக்கு
ஒரு தாட்சிவருமோ? கர்னனே! என்றைக்கு
இருந்தாலும் நீவேறு நான்வேறு அவர்கள்
ஒரு குளக்கமலம்போல் உற்றிருக்கு முரியோர்
கள். அந்தக் குடும்பத்தைக் கலைத்து கெடுக்
கும்படிக்கு நினைத்துச் சமயத்தில் இப்படிக்
கெல்லாம் பேசிக் குலமானம் குணமானம்
பாராமற் சொல்லுகின்றனை? உன்னை யின்னு
னென்று தெரிந்திருக்கும் இந்தச் சபையில்,
நீ பேசும்போது உன்னுடம்பானது சிறிதுங்
கூசாமலும் வெட்கப்படாமலும் இருக்கின்
றது. இது உனக்கு முறைமையல்லவென்று
அசுவத்தாமன் சொல்லினன்.

உடனே துரோணுச்சாரியர் சொல்லுகின்
றுர். இந்திரனுங் குபேந்திரனும் வந்திக்குஞ்
சந்திரகுலத்துதித்து, நற்குணம் நன்னடக்
கை முதலியவைகளைப் படைத்த பாண்டுபுத்தி
ரர்களைத் துரியோதன ராசனுக்குப் பகைவ
ரென்று அநேகம் விதத்திற் சொல்லி யிருக்
கின்றுய். கர்னனே! அவர்கள் ஒருக்காலும்
விரோதிகளல்ல. நல்ல குலத்திற் பிறந்த
கெடிலஸ்தலாதிபதியாகிய வணங்கா முடியோ
னுடைய நன்மனத்தையும், நற்செய்கையை
யும், நற்பிறப்பையும் என்னுளு மாறுபடுத்தி,
அண்ணன் தம்பிகள் ஒருவரோடொருவர்
கலந்து பொருந்தி வாழவொட்டாமற் சிறு
பிள்ளைகளாயிருந்த அந்நாள் முதல் இன்
னுள் வரையிலுங் கலகஞ்செய்து வைத்திருக்
குஞ் சகுனிமாமனும், நீயும் இந்த அரசைக்
கெடுக்க ஏர்ப்பட்ட கொடும் பகையாளிகள்;
முழுவிரோதிகள்; உங்களைவிட இவர்களுக்கு
விரோதிகளென்பவர்களில்லை. நீங்கள் இப்
போதிறந்தாலும் இன்று முதல் என்றென்
றைக்குங் கலகமென்பது இந்த அரசர்களுக்
குள்ளேயன்றி இந்த உலகத்தாருக்கும் விளைய
மாட்டாது. (மூக்குள்ள வரையிலுஞ் சளி
யறுது. முகமுள்ளவரையிலுங் களிப்பறுது)
என்பதுபோல், நீங்கள் இருக்கிறவரையிலுங்
கலகமறுது. இவர்கள் சுகப்படப்போகிறது
மில்லை என்று துரோணுச்சாரியர் சொல்ல
வே, அங்கிருந்த கர்னரானவர் ஆவேசம்
வந்தவனைப்போல் அங்கமெல்லா நடுங்கச்
சுறுக்கென்றெழுந்து, கடுக்கென்று வாளைக்
கையி லுருவிக்கொண்டு, கண்பொறி பறக்கக்
கடவாய் நுரைக்கப் பல்லைக் கடித்துப் பரக்க
விழித்து, அவனிவனென்று அவமரியாதை
யாய்ப் பேசி, என்னை யிகழ்ந்தபேர்களின் வாக்

கைக் கிழித்து நாக்கை யழிக்கிறேனென்று ஓரடி பெயர்த்து வைத்தான். அந்த வேளை யிற் சமீபத்திருந்த அசுவத்தாமன், காளை வாகன னளித்த வாளாயுதங்கொண்டு, மகா ருத்ரமூர்த்தியைப்போல் இரண்டடி பெயர்த் துக் கர்னனுக் கெதிர்சென்று நின்று குடும்பங் குலைத்துக் கலகஞ் செய்யுங் கொடிய பாவிக ளின் முடியைத் தரிப்பதன்றி, இப்போது அவனிவனென்றுங் கூறியெழுந்த நாக்கை யும் இந் நிமிஷத்தில் அறுக்கிறேன் என்று புகன்று எதிர்த்துக்கொண்டான்.

அம்மாத்திரத்தில், அவ் விருவரையுந் துரியோதனராஜன் கண்டு, பெருவரையைப் போலெழுந்து, இருவருக்கும் நடுவிற்போய் நின்று, தான் கொண்டிருந்த தம்பியர்களின் சஞ்சல முதலிய துக்கமும் விடுத்து, இருவர் எடுத்துப்பிடித்த வாளையுந் தடுத்து, அவ்விரு வரையும் இரக்கமாய்ப் பார்த்துப் பெரியோ ரையு நோக்கி, இது நல்லகாரியம்! இது நல்ல காரியம்! இறைவரா யுள்ளோர்களுக்கு இது வோ தைரியம்? இதுவோ வீரியம்? ஆ! ஆ! நால்வர் நகைக்கும்படியாய் நன்றாய்ச் செய் தீர்கள். ஓ எனக்கு நன்மையை யுண்டாக்க வந்தவர்களே! நான் என் தம்பிமார்களையும் படைத்துணை வந்த தாஷ்டிகர்களையு மிழந்து, மனந்தடுமாறிக் கவலைகொண்டு, என் துக்கம் உங்களாற்றீருமென் றெண்ணி என் மனக் குறைகளை யெல்லாஞ் சொல்லி இறந்தவர்கள் போக இருப்பவர்க ளெல்லோருஞ் சேர்ந்து, எப்படியாகிலும் நாளை யுத்தத்தில் அர்ச்சுன னைக் கொன்று முடித்து நமக்கு வெற்றிவரும் படிக்கு உபாயந் தேடுங்களென்று நான் கேட் டுக்கொண்டதற்கு அப்படி அவ்வளவு தூரம் ஏன்? இங்ஙனே கொல்லும்படியாகிய உபாய விதத்தை நன்றாய்ப் பாரென்று எனக்கெதி ரிலேதானே விளைத்தீர்கள். இது நல்ல உபா யந்தான். இனிமேல் நான் வேறுவித சூக்ஷி யோசிக்கவேண்டியதில்லை. உங்களைத் துணை யாகப் படைத்த எனக்கே ஜெயம் வரு மல்லாமல், எதிரிகள் ஜெயம் அடைவார்க ளென் றியம்பலாமோ? ஓ அங்கதேசாதிபதி! ஓ அஸ்வத்தாமா! வெகு நேர்த்தி என்று சொல்லி நகைத்து மனங்கூசி, தன்னைத்தானே வெறுத்துக் கொண்டான் தரணிபதியாகிய துரியோதனன். அந்த வேளையில் வீஷ்மாச் சாரியரெழுந்து, அப்பா துரியோதனா! நான் சொல்லுவதை இப்போதாகிலும் யோசிக்கக் கடவை. அஃதென்னவெனில், நீ இப்போது கொண்டிருக்கிற எண்ணப்படி அந்த விஜய காண்டீபனை மும்மூர்த்திகள் வந்தெதிர்த் தாலும் வெல்லமாட்டார்கள். இந்த மொழி யை என்னுயிருள்ள வரையிலும் உன்னுயிர் உள்ள வரையிலும் ஏமாராமற் கெட்டியாய் மனத்துட் பதித்துவிடு. அப்பால் என்னாலான வரையிலும் மன வஞ்சக மில்லாமற் போர் விளைக்கிறேன்; ஒருவேளை அர்ச்சுனன் மாளும் படியாகிய ஊழ்வினையு மொத்திருந்து முடிவா னாலாகட்டும். அப்பா குழந்தாய்! மனத்தைப் பற்பலவிதத்திற் சிதறவிட்டு வருந்தாதே. மற் றவர் கலக்கும் வார்த்தைக் குட்பொருந்தாதே என்று சொல்லித் தம்முடைய பாடிவீட்டுக்குப் போயினர் கங்கையின் புத்திரனாகிய வீஷ்ம ரானவர்.

இவ்வாறு சொல்லி அவர் போனபிற்பாடு துரியோதனனவன் அவ்விடத்தில் நெருங்கி யிருந்த படைமன்னர் முதலிய யாவர்களுக்கும் விடைகொடுத் தனுப்பிவிட்டு, போஜனாதி முத லியவைக ளில்லாமல் மிகுந்த விசனமென் னும் துணைவனுடன் தனித்துக் கண்விழித் திருந்தான். இப்பால் நான்காம் போரில் நடந்த தன்மைகளையும், ஐந்து பிள்ளைகள் இறந்த தன்மைகளையும், திரிதராஷ்டிர பூப தியுங் காந்தாரி யம்மனும் சஞ்சயன் வந்து சொல்லக்கேட்டு, உடனே இடிவிழுந்த புற் றர வேங்குந் தன்மைபோலேங்கி, இருகரங் களாலு முகத்தி லறைந்துகொண்டு இரைந் தேங்கிப் புலம்பி, ஐயோ மக்களா! சர்வாபர ணமும் நிறைந்த திடகாத்திர தீரசூரவீர் பராக்கிரமமுள்ள உங்கள் மார்பிற் செயமாலை யணிந்து, சிந்தை மகிழ்ந்து வந்து பணிந்து சிங்காதனத் திருந்து, செங்கோல் புரிந்து, சிதைவில்லாமல் நூறுபேறுஞ் சீர்பெறுவீர் என்று சிந்தை மகிழ்ந்திருந்தோமே; அப்பா செல்வர்களே! இப் பூமியாசையைக் கெடுத்து, எங்களைத் தெருவில் விடுத்து தேவ பூமியை ஆளவேண்டு மென்னும் ஆசைத் தொடுத்துச் சென்றீர்களோ? என் செல்வர்களே என்று இருகண்களிலும் ஜலம் பெருகும்படியாய் அழுது, அருகிருந்த தூணின்மேற் சாய்ந்து ஓய்ந்து சோர்ந்தார்கள். அவ்விடத்திலிருக்கும் உயிச்சன் முதலிய பேர்கள் உபசரித்துத் தேற்ற, அதனால் திரிதராஷ்டிரன் ஒருவாறு தேறியிருக்க, காந்தாரியானவள் சிறிதும் தேறாது மறுபடி எழுந்து வயிற்றிலறைந்து

கொண்டு, ஓ மைந்தர்களே! குந்திபெற்ற பிள்ளைகள் கூட்டங் குலையாதிருக்க, பாவிபெற்ற பிள்ளைகள் பாழில் மடியும்படி நேரிட்டதே; ஓ தெய்வமே! அப்பா குழந்தைகளே! (பந்திக்கு முந்தவேண்டும் படைக்குப் பிந்தவேண்டும்) என்னும் பழமொழி மறந்து மான்குட்டிபோற் றுள்ளி முன்னேபோய் விழுந்து ஏன் மடிந்தீர்களடா? ஓ என் மைந்தர்களே! இந்தக் காக்ஷியை காணவோ நான் பாவி இறக்கா திருந்தேன்? இந்தக் கேழ்வியைக் கேட்கவோ நானுங்களை வாழ்த்தி யனுப்பி மகிழ்ந்திருந்தேன். ஐயையோ! இப்படியுமிருந்ததா என் தலைவிதி யென்று மின்னலாகிய இடையும், பின்னலாகிய சடையும், அன்னமாகிய நடையும் சொன்னமாகிய தொடையும், வன்னமாகிய உடையும், கன்னலாகிய மொழியும், இன்னலாகிய விழியும், செங்கனியொழுகிய இதழும், குங்குமமெழுதிய நுதலும், பங்கயமாகிய கரமும், மங்குலுலாவிய சிரமும், திங்களுலாவிய முகமும், கொங்கை குலாவிய உரமும், அங்கிகுலாவிய அகமும் உடைய காந்தாரி தேவியானவள் மெய்குலைந்து, மண்மேல்வீழ்ந்தலைந்து என்ன செய்வேன் என்னசெய்வேனென்று இறைவனைக் கட்டிக்கொண் டழுது, இருகாலையு நீட்டிக்கொண்டு, இருபுறத்திலும் ஏரிக்கரை புரள்வதுபோற் கண்ணீர் பெருகும்படியா யிறைந்து, இறந்தவர்கள் தேவிமார்களாகிய மருமக்களையும், மற்ற சுற்றத்தினரையுஞ் சேர்த்துக்கொண்டு ஒப்பனையிட் டழுவதற்கு முகூர்த்தநாள் வைத்துக்கொண்டாள்.

அவள் எப்படிப்பட்டவளென்றால், குருமரபுக்குக் கோடாலிக் காம்பினை யொத்த துரியோதனனைப் பெற்றவளும், கெடுமதி கண்ணுக்குத் தோன்றாத காரணத்தினால் மதிகுலத்தில் வந்து புகுந்த அதிமதிமிகுந்த முதல் மருமகளை, அதிபதியாகிய ஐவர் தேவியை, பாஞ்சாலன் யாகத்தில் உற்பவமாகிய பத்தினியை, மேலாகிய கற்புக்கு வித்தாகிய பெண்கள் பெருமானை, தமயன் மனைவியாகிய தன் தாயை, மின்னற்கொடிபோன்ற திரௌபதியை அன்யாயமா யக்ரமமாய், அவமரியாதையாய் இழுத்துக் கொண்டுவந்து, ஏற்றக் கூடாத ராஜ சபையில் ஏற்றி ஊவ்யடா தம்பி யென்று உத்தரவுசெய் தனுப்பவும், அவ்வுத்தரவைக் கேட்ட துஷ்டசிரோன்மணியாகிய துர்ச்சாதனனவன், கொண்டா ஊடித்துக் கொண்டு சென்று, அரண்மனையிற் புகுந்து சிகையைப்பற்றி யிழுக்கவும், அக்காலத்தில் மாமி மாமி என்று வந்தடைந்த மருமகளைத் தகுந் தகாதென் றெண்ணமலும், பாவ புண்ணிய மெண்ணிப் பாராமலும், பச்சாத்தாபமில்லாமலும், நாளை விளையப்போகிற கால கதியை நாடித் தடுக்காமலும், தன்னைத் தஞ்சமென்று பிடித்த கையை யுதறிவிட்டு, அடைக்கலமாக வந்த அம் மருமகளைத் திடுக்கிடப் பார்த்து, என்னடி பட்டாங்கடிக்கிறாய் என்று யேசி, மைத்துனர் வாழுஞ் சபைக்குப் போய் வரத் தடை யென்னடி என்று பேசி என்னால் தடையில்லை; இழுத்துக்கொண்டு போடா வென்று அத் துர்ச்சாதனென்னுந் திருட்டுப் பட்டிக்கு வேலையிட்ட குருட்டு மாப்பிள்ளைக்கு மாலையிட்ட மகா கொடியவளாகிய காந்தாரி. கேளும் ஜெனமேஜெய மகாராசனே! அந்தக் காலத்திற் பத்தினியாகிய பாஞ்சாலியை ஒருநாள் அழச்செய்த துக்கமானது, இந்தக் காந்தாரியை உயிருள்ளவரையிலும் அழும்படியாய் வைத்துவிட்டதைப் பாரும். இந்தப் பிரகாரம் விசனம் அடைந்த இராசனையும், இராசபத்தினியையுந் தேற்றிச் செலவு பெற்றுக்கொண்டு மறுபடியும் போர்க்களத்திற்கு வந்துவிட்டான் சஞ்சயனனவன். கேளும் ஜெனமேஜெய மகாராஜனே என்று வைசம்பாயனர் சொல்ல, மகிழ்ந்துக் கேட்ட மகாராஜனனவன் எழுந்து விழுந்து வணங்கி, ஐந்தா நாளைய யுத்தத்தையும் அருள் செய்ய வேண்டு மென்று அடிவணங்கி கேட்க, வைசம்பாயனர் சொல்லலுற்றார்.

நான்காம்போர்ச் சருக்கம் முற்றிற்று.

---

இப்பால்,

## ஐந்தாம்போர்ச் சருக்கம்

### கண்ணன் துதி

கருமா முகிற்கோல நெஞ்சத் திருத்துங் கருத்தெய்துமே, லருமா தவன்றானு மவன் முத்தி தருகைக்கு மவனேகுருத், தருமாலை மணநாறு தாளானை வண்டேறு தண்ணந் துழாய், மருமாலை புனைகின்ற திருமாலை யல்லாது வல்லார்கள்யார்.

ஓ மாலைவாழும் சீர்பெற்றோங்கிய வேலை சூழும் பாரைத்தாங்கிய மகுடாபிஷேக மன்னனே! கேளும்: இப்பால் கெடிவஸ்தலாதிபதி யென்னுந் துரியோதனனுடைய தம்பிமார்

களின் பத்தினிகளும், மற்றவர்களும் அன்றி ராத்திரியெல்லாம் அழுதுக்கொண் டிருந்த பெருங்கூச்சலைக் கேட்ட, இந்த ரோதனத்தி லிருந்து நான் எப்படி பிழைப்பேன் என்று ஓடிப்போய் விட்டதைப்போல் இருளானது விடியுமுன் ஓடியொளிக்க, அந்தக்காலத்தில் தேவர்கள் சிரத்தி லணிந்திருக்குஞ் சூடாமணியைப்போற் சூரியபகவானுதயமாயினர். உடனே யாவருமெழுந்து நித்யவிதிகளை முடித்து யுத்தகோலங் கொண்டு, மேன்மையாகிய சங்கமெங்கும் கறங்கவும், தாரை பூரியாதிகளெங்குந்தொனிக்கவும், முரசுமுதலியவாத்தியங்கள் மூதண்ட மதிரும்படியாய் ஆர்க்கவும், முழவு முதலிய வாத்தியங்கள் மூவுலகும் நடுங்கும்படியாய் விம்மி முழங்கவும், கரைகளை யுடைக்கும் அலைகளை யடைக்கும் நுரைகளில்வெடிக்குந் துளிகளிற்றெரிக்குஞ் சிறிய திவலைக் கூட்டம்போற் நால்வகைச் சேனைகளோடு ராஜ ராஜர்களும் வீரபோஜர்களுஞ் சேர்ந்துவரத் தருமபூபதியுஞ் சேனாபதியும்புறப்பட்டு ரணக் களத்திற்கு வந்தார்கள். இப்பால், அநேகங் கோடி விருதுகளோடுகருடடால்-அனுமடால்-அரவடால் - சிங்கடால் முதலிய பலவகைப் பட்ட டால்களும், தோரணம்-கொடி-குடை-ஆலவட்ட முதலிய சின்னங்களும், அனேகங் கோடி சங்கநாதங்களும்,அனேகங்கோடி சிங்க நாதங்களும், அண்டபிண்ட மனைத்தும் அதிரும்படியாக முழக்கிக்கொண்டு, இப்பாராடப் போராடும் நால்வகைச் சேனைகளுடனே நேற்றுப் புறமுதுகிட்டோடிய பூபாலரனைவரும் பொங்கிப்பெருகி எங்குஞ் சேனைகளாக வந்து நிறைந்தார்கள். இந்த இரண்டுவகைச் சேனையுந் திரண்டு புரண்டெழுங் கடல்போல் நிற்கின்ற பெருக்கம் எப்படி யிருந்ததென்றால், தசக்ரீவனாகிய ராவணனுடைய கொடுஞ்சேனையும், ஸ்ரீராமமூர்த்திக்குப் படைத்துணை வந்த வானரமாகிய கடுஞ்சேனையும் எதிரெதிர் நின்றதைப்போற் பெருகிநின்று, அண்டர்கள் துன்றிய விண்டல மண்டல மெண்டிசை முதலிய கண்ட வகண்டமுங் கலங்கும்படியாய் அதிர்ச்சி பண்ணி ஆர்ப்பரித்துக்கொண் டிருந்தது.

அந்த வேளையில், அர்ச்சுனன் தேரில் அநுமக்கொடியாடியது எப்படி யிருந்ததென்றால், இராவண கும்பகர்ணாதிகளாகிய அரக்கரைச் செயித்த ஸ்ரீராமமூர்த்திக்கு அடிமைத் துணையாகவிருந்து வெற்றிபெற்ற எழுபது வெள்ளம் வானரப்படைகளும் எங்களவர்களே! நான் அந்தக் கோதண்டமூர்த்தியின் குறைகழற்றாதனாகிய அநுமந்தனே அந்த இலங்கைப் பெருக்காகிய அரக்கரைப்போல் உங்களையும் நாசப்படுத்தித் தொலைப்பதற்கு இங்குவந்தேன், என்னை நீங்கள் நன்றாயறிந்துகொள்ளுங்களென்று துரியோதனன் முதலாகிய பகைவருக்குச்சொல்லி தெரிவித்து நின்று ஆடியதைப்போல் அக்கினிதேவன் கொடுத்த அழியா ரதத்தின்மீதேறி நின்று, அந்தர முதலிய மந்தர நடுங்கத் தொந் தொந் தொந் தொந் தொந் தொந் தொந்தமென்று, படபடாகாரத் துவனியுடன் அசைந்தாடிக் கொண்டிருந்தது. இவ்விதமாக ஆடிக்காட்டிய அநுமக்கொடி நாட்டிய இரதத்திற் சுவேதவாம் புரவிபூட்டி அலங்காரஞ்செய்து, சர்வஜீவதயாபர நாதனாகிய ஸ்ரீ கிருஷ்ணன் கலங்காமனத்தோனாகிய காண்டீபனுக் கெதிரிற் கொண்டுவந்து நிறுத்த அந்த இரதத்தில் ஐவரை ரட்சிப்பதற்குக் கங்கணங் கட்டியிருக்கும் ஐயனுடனே காண்டீபக் கையானுங் கலந்தேறி வார்த்தை யாடிக்கொண்டு யுத்த பூமிக்கு வந்தார்கள். அவ்விடத்தில் திரிபுர தகனஞ் செய்வதற்காகத் திசைமுகன் முதலிய தேவர்களாலமைத்த தேவரீரின்பேரில் வீற்றிருந்த சர்வ சம்ஹாரகால சிவபெருமானைப் போற் பேரணியிற் சிறந்த தேரணியி லுயர்ந்த ஓர் பெருஞ்சயந்தனத்திற் பொருந்தியிருந்த வீஷ்மாச்சாரியருக் கெதிரில் தேரை கொண்டுபோய் நிறுத்தி, தேவதத்தத்தை முழக்குவித்துத் தானும் வலம்புரிச் சங்கை முழக்கி, உரம்பெற்ற விஜயனை யுத்தஞ்செய்யும்படிக்கு விடுத்து, ஓயாமற் சுழலுந் திகிரியைப்போல் மகா விரைவோடுந் தேரை நடத்தினான் ஸ்ரீ கிருஷ்ணதேவனாகிய தேர்ப்பாகன்.

இந்தப் பிரகாரம் இரதத்தை இடசாரி வலசாரி, வலசாரி இடசாரி; முன்னோட்டம் பின்னோட்டம், பின்னோட்டம் முன்னோட்டம் முதலிய ரதவேகக் கதிகளெல்லாங் காட்ட, விஜயன் கங்கை மைந்தனை யெதிர்த்தெதிர்த்துக்காண்டீபம்நாட்டிக்காலாகாலாந்தகக்கணைகளை கடுகிப் பூட்ட, அப்பாற் கலிங்கதேசாதிபரெல்லாம் புலிங்க சாலங்களைக் கண்களாலிறைத்துக் கணைகளைத் தெறித்து, அர்ச்சுனனை மறித்து யுத்தஞ் செய்தார்கள். அந்த விஜயனுந் தன்னோடு வெகுவாகிய போர்புரியுங்

கலிங்கேசரை வெறுத்து நோக்கி, அவரவர்கள் விட்ட வெங்கணைகளை யெல்லாம் குங்குமமாக்கி, அவரவர்கள்மீது சங்கர நெடுவாளிகளைத் தாக்கினான். அந்தக் கணைகள் போய்ப் பிளந்து கரகரவென் றளைந்த புண் வாய்கள் தோறுங் களகளவென்று மாமிசத்துடன் உதிரவெள்ளங்கள் கலந்தோடிவர அந்தக் கலிங்கதேசாதிபரெல்லாந் தளர்ந்தாடிக் கலங்கலாகி வருகின்ற இரத்தங்களில் கண்கலங்கி மூழ்கினார்கள். இந்தப்படிக்கு எதிர்த்துப் போர்புரிந்த கலிங்கதேச ரெல்லோரும் அலுத்து, ஒளித்து இளைத்தோடி வரும்போது, காளகண்ட ஈசனைப்போல் கண்சிவந்திருந்த காங்கேயன் கண்டு கடுங்கோபங்கொண்டு, பூப்பாணம்-தீப்பாணம் - பொறிப்பாண முதலிய பாணங்களை மேன்மேலாகத் தொடுக்க அதைக் கண்ட அர்ச்சுனரானவர், வீஷ்மாச்சாரியருடைய பிராணனுக்குத்தீங்காக ஐந்துபாணங்களையெடுத்து அனலேறிய மனக்கொதிப்புடன் அஜேய மந்திரஞ்சொல்லி அதட்டி விடுத்தான். அந்த ஐந்துபாணங்களும் பஞ்சாக்கினியைப்போற் சென்று வீஷ்மர் கைக்கொண்டிருந்த வில்லையும், அதிற்பூட்டிய நாணியையும், அவர் தொடுத்துக்கொண்டிருக்கிற.பலம்பொருந்திய பாணங்களையும் ஒரே தரமாய் ஒடித்து அறுத்துப்போட்டு இன்னமும் அந்தப் பாணங்களினுடைய வேகமடங்காமற் பூகம்பமாகும்படியாய்க் கடுகடுந்தெரிந்து புகைத்தெழுந்து யாவரையும் உருவித் துளைக்க, அதனாற் சேனைகள் தத்தளித்துக் களைக்க, இத்தன்மையாக இவ்விருவரு முனைந்து, அளவற்ற கணைமாரிகளை அபரிமிதமாகப்பொழிந்து, கடுங்கோபத்துடன் முனைந்து சந்தோஷமாய் யுத்தஞ்செய்தார்கள்.

இப்படிக்கு இவர்களிருவருங் கடுங்கோபத்துடன் முகமாறுமற் போர்செய்து கொண்டிருக்குங் காலையில், பெருங்காற்று எழுந்து பொங்கிய கடல்போற் பலதேய மன்னரும் வந்து, சாமர்த்தியமுடைய வீமசேனனை மொய்த்துக்கொண்டு,பலபலவிதமாகிய தேயுக் கணைகளைக் கலகலவென்று உதிர்த்தார்கள். அவர்கள் தொடுத்த கணைகளெல்லாம் பறந்திறைந்து வருவதை அளகாபுரிக்குச்சென்று மணிமாலனைக்கொன்று, அம்போருக மலரைக் கைக்கொண்டுவந்த மூர்த்தண்ய தாரதண்டனாகிய வீமசேனன் கண்டு, முனைபெற்ற முள்ளம்பாகிய கவ்வம்புகளைத் தொடுத்து, அடுத்துவந்த மன்னவர்களுடைய மார்புகள் உருவிவாட இரத்தவெள்ள மருவியோட விடுத்தபோது, அவர்கள் யாவருங் கிட்ட நெருங்கப் பயந்து, முகஞ்சுருக்கிக் குலைந்து, ரதமுதலிய சாரதிகளும் விலங்கித் தொலைந்து வேசாறினார்கள். அக் காலத்தில், துச்சாதனனும், அவனுடைய தம்பிமார்கள் முதலிய புத்திரவர்க்கமும், சகுனியும், சல்லியராஜனும், அதிரதத் தலைவர்களாகிய முடிவேந்தரும், மித்ரவர்க்கமும், கொற்றவர்களும், மற்றவர்களும் கூடிக்கொண்டு வீமனுக் கெதிரேறித் துன்னி, வன்னிக்கணைகளினாற் பின்னினார்கள். இப்படியாக அனற் கணைகளைத் தொடுத்த யாவரையும் வீமசேனன் பார்த்து மனந்தேறி,அசைவற பிடித்திருக்கும் வில்லில் அஸ்திரங்களைப் பூட்டி, அநேகஞ் சரங்களை அமோகமாகவிடுத்து, ஓடிப் பிழைப்பதற்கு ஒதுங்கி இடம் பார்க்கின்றீர்களோவென்று ஒல்லாமையாகிய பொல்லா இகட்சியைச் சொல்லிக் கொல்லாமனிற்கும்போது, பலத்துடன் வந்த படைமன்னர் யாவரும் உலைந்து வருந்தியோடினார்கள்.

அப்படி வீமனுடன் பொருந்திப் போர் புரிந்து அடிபட்டிளைத்து அலைந்தோடிவரும் அதிவீரருடன் தன் தம்பிகளையும் பார்த்த உரக்கேதனனாகிய துரியோதனன் மனம்பதைத்து மார்ச்சல்லியங்கொண்டு, உடனே உடலொடுங்கி உள்ளங் கலங்கினவன்போல் கடைகண்களிற் கனற்பொரி பறக்கச்சீறி, ஆ தம்பிமார்களே! உங்களை வாட்டிபோட்டி யுத்தஞ் செய்யும் வாயுவின் மதலையாகிய காளையை, மறித்து வளைத்து இன்றைக்கே அவன் பிராணனை வாங்குகிறேனென்று கோபித்து, உன்னதமாகிய ரதத்தைச் செலுத்தி உரியோர்களையுங் கூட்டிக்கொண்டு வந்தெதிர்த்தான். இப்படி சொல்லிவந்த துரியோதனனைக் கண்டமாத்திரத்தில், வீமசேனன் சந்தோஷங்கள் கொண்டு விற்பிடித்துப் பற்கடித்து விரைந்து வந்தான். அப்படி வந்த வீமனைப் பார்த்த வணங்காமுடியோனான மன்னவ னசையாநிலைகொண்டு நின்று, பாரியவில்லை நாரியிறுக்கி சோர்வுபடாத பத்து வீரவாளிகளை எடுத்துப் பேரொளியுடன் விடுத்தான். துரியோதனன் விடுத்த அந்தப் பத்து பாணங்களும் வீமசேனனுடைய மருமத்தைத் துளைத்துக் கலக்கி, தான்தரித்த மணிக்கவசத்தைக் கிழித்து விலக்கி, ஆண்மிக்கைடைத்த அதி

அதி தீரர்களுக்கெல்லாந் துதிவீரமணி மகுடாபிஷேகத் துங்கச்சிங்கம்போன்ற வீமசேனனுடைய அங்கத்தில் நுழைந்து உருவியபோது, சற்று வருந்திய வாயுபுத்திரன் உடனேதேறி யெதிர்த்து, ஏமத்திலும் சாமத்திலும் ஈமத்திலாடு முருத்திரமூர்த்திக்கு நேராக நேரிட்ட பஞ்சபாணங்களைப் பஸ்மீகரம்பண்ணிய நெற்றிக்கண்ணி நெருப்பையொத்த ஓர் கங்கபத்திரத்தை அங்கத்துடனெடுத்து அபிமந்திரித்து, நந்தியாவட்ட மாலையணிந்த நரேந்திரனுடைய மார்பிற் குளித்து உதிரந் துளித்து வருந்தும்படிக்கு பதிலுக்கு பதிலாகக் களித்துவிடுத்து, தன் முன்னராகிநின்ற மன்னரெல்லாருஞ் சின்னபின்னமாய்ப் பின்னேடும்படி பலமாரிக் கணைகளை வாரிப் பொழிந்தான். அப்படியாகப் பொழிந்த மேகாஸ்திரத்தினுல் யாவருமருண்டு வாட்டமுற்றுர்கள்.

பூரிசிரவனுக்குஞ் சாத்தகிக்குமுண்டான
போரி லிருதிறச்சேனைகளிலு மிருபத்தையாயிர
மன்னர் மடிதல்

அந்தத் தருணத்திற் பெரிய உலகனைத்தும் பிராகாரமாகவுடைய துரியோதன மகாராஜனுக்கு, வீமசேனன்விட்ட கணையானது போய்ப் பட்டமாத்திரத்தி லவன் கட்டைப் போற்றலை நட்டு நாக்கைத் துருத்திக்கொண்டு வாடியபோது, அந்த துரியோதனனுக்கு எதிரிலே நாணியுங் கணையும் நலம்பெறப் பூட்டி வில்லைப் பிடித்துக்கொண்டு இன்னும் வரத்தக்கபேர்கள் வாருங்களென்று வீமசேனன் நிற்க, அந்தவேளையிற் பூமிக்குரிய தீரர்களும், பேரம்பிற்குரிய வீரர்களும் போர் மதத்தனென்று புகழும்படியாக நீடிய சோமதத்தனீன்றுமகிழும் பிள்ளையாகக்கூடிய பூரீஸ்வரனென்பவன், சுயோதனனிளைத்ததைக்கண்டு, உடனே தன்மனமிளைத்து க்ஷணந்தரியாமல், தன் தேவருடன்சென்று எதிர்நின்று தரணிபர் முடியைத் தட்சணம் தறிக்கும் இலட்சயக் கணைகளி லிரண்டையெடுத்து தருமனுக்கிளையோன்பேரில் விடுத்துப் பராக்கிரமித்தான். இப்படி அவன்விடுத்த கணைகளிரண்டும் ஆலகாலவிஷம்போலுருண்டு அனற்கூட்டமாகப் புரண்டுவருவதை, வாயுவேகமும் மாயும்படிக்குத் தேரூர்ந்து வராநின்ற வாசுதேவனுடைய தம்பி சாத்தகியானவன் கண்டு, அவன்விட்ட இரண்டு கணைகளையும் அழித்து, அடாபாவி! இவருடைய ஆண்மிக்கை இன்னதென்றுணராமலும், இப்பேர்ப்பட்டவரென்று தெரியாமலும் இரண்டுகணைகளைவிடுத்தாயே; என்னடா துரோகி! இதோபார் என் திராணியை உன் பிராணனை வாங்குகிறேனென்று கலீரென நகைத்து, சிலீமுகமொன்றெடுத்துத் தொடுத்துவிட்டான். இப்படியாகப் பேசிவிட்ட கணையானது, விறுவிறெனச் சுழன்று வருவதை நான்குவேத பாராயணனுகிய பூரீஸ்வரனென்பவன் கண்டு இளைக்காமல் எதிர்க்கெதிராக வல்லவனுட்டிய பட்பரம்போலொத்த பல்லவங்களைப் பலமுகத்திலு நிறைத்தான். இந்தப்படிக்குப் பலம்பொருந்திய மலைபோன்ற புயத்தையும் மார்பையுமுடைய இவ்விருவர்களும் உடுபதியாகிய சந்திரனுந் தினபதியாகிய சூரியனும் ஒருவருவரெதிர்த்துப் போர்புரிவதைப்போல் யுத்தஞ்செய்வதைக்கண்ட தேவர்கள் முதலிய மூவரும், இந்த யுத்தம்போற் காண்பதற்கினி யருமையென்று கரக்கம்பஞ் சிரக்கம்பஞ் செய்தார்கள்.

அப்போது இவர்கள் இரண்டுபேருங் கொண்டலிடிக்குங் குமுறலுக்கொப்பாய் மண்டலமுதலிய வெண்டிசையடங்கச் சண்டப்ரசண்டக் கடுங்கார் முகமாகிய வில்லை வளைத்து, நாணிதொடுத்துக் கர்ணபரியந்த மிழுத்து, டங்கார ஓசைகாட்டி சிறிதுங் கலங்காமற் கருதாமற் கணைகளைவிடுத்து, கதிர்மதிமுதலிய கோள்களுமடங்க, அதிபதிமுதலிய ஆள்களுமொடுங்க, திரிபுவனங்களுநடுங்க, திசாதிசைகளுமுடங்க ஒருவரை யொருவர் வெல்லவேண்டுமென்று சத்துருமித்துருவாகிய பின்னும் பலமான பல்லவங்களைத்தூண்ட, அப்பால் ஒருவர்விட்ட பாணம் ஒருவர்பேரிற் படவொட்டாமல் யுத்தத்தினுலுஞ் சத்தியிலுந் தெய்வபக்தியிலும் வெற்றியிலுந் தடுத்துக் கிட்ட அடுத்துப் போர்செய்யுங்காலையில், மாதவப்பேர் சிறந்த சீதரனுக்குச் சோதரனென்னுஞ் சாத்தகி மன்னனுடைய நாணியையும் வில்லையும் பூரீஸ்வரனென்பவன் முறித்தான். உடனே, அந்தப் பூரீஸ்வரனுடைய வில்லையும் நாணியையும் சாத்தகிமன்னனறுத்தான். இந்தப்படி இருவரும் ஒருவருக்கொருவர் குறைவுபடாமற் போர்செய்துமீண்டும் பூமியிற் குதித்து வலதுகரத்தில் வாளாயுதமும் இடதுகரத்திற் கேடயமுங்கொண்டு, வாசனையணிந்த மாலைமார்பரிருவரு மண்டியிட்டுசக்ராகதியாய் சுழன்று சாகசஞ்செய்து, இடதுபக்கம் வலதுபக்கம், வலதுபக்கம் இடதுபக்கமாக பதுங்கி

பொதங்கி ஒட்டியிருந்தெழுந்து, ஒருவர்க்கு ஒருவர் கிட்டிவந்து விழுந்து வாளினால் வீசி, வஞ்சினங்கள்பேசி, சந்திரனுஞ் சூரியனும் எதிர்த்து செய்யுஞ் சண்டையைப்போல் வாட்போர்புரிந்து, ஒருவரையொருவர் வெட்ட வேண்டுமென்னும் இஷ்டத்தினால் வாளாயுதத்தை ஓங்கிவீசித் தட்டிக் கிட்டவரும் போது, வட்டணையென்னும் கேடயத்தில் மறைத்து ஒருவரை யொருவர் வெட்டவந்த வெட்டைத் தட்டிக்கொண்டு, மறுபடியுங் கோணம்-வட்டம்-வளைவுமுதலிய குந்துச்சாரிகை-முந்துச்சாரிகை-உந்துச்சாரிகை-குப்புறுசாரிகை-ஒப்புறுசாரிகை இதுகளை எல்லாஞ்சுற்றி உடனுக்குடனே கர்னமிட்டுச் சுழன்று ஒருவர் தலைக்கு ஒருவர் லட்சயம்வைத்து எற்றி, கஜ சிங்கவியாக்ர விர்ஷபகதியாய்த் தத்தி, சப்த மேகங்களுங் கத்திச் சிதற வான்மீன்களும் பல பலவென்றுதிர, ஆகாயமும் படபடவென் றதிரும்படிக்கு இவ்விருவரும் தோர்ப்பு கெலிப்பில்லாமல் நெடுநேரம் வன்ரயிலுஞ் சீறி சமராடினார்கள்.

இப்பால், தேர்களுடன் தேர்கள், யானைகளுடன்யானைகள், குதிரைகளுடன்குதிரைகள், காலாள்களுடன் காலாள்கள்,முடிமன்னருடன் முடிமன்னர், சேனைத்தலைவருடன் சேனைத்தலைவர், யூகத்தலைவருடன் யூகத்தலைவர், படைத்தலைவருடன் படைத்தலைவர், இப்படிக்குக் கைகலந்து போர்புரிந்தார்கள். இன்றிருந்த இருதிறப்படைகளிலு மிறந்தசேனைகளை இவ்வளவென் றியம்புதற் கெளிதரமன்று. இப்படியாக யுத்தஞ்செய்ததில் யானைத் துதிக்கைகள் அறுபட்டு உதிரவெள்ளப் பெருக்கத்தில் விழுந்தோடுவது, பெரிய வாளைமீனோடு கரிய பனை மீனுமோடும் பான்மைப்போல் ஒருபக்கத்திலிருந்தன. தலைக்குறைக் கவுந்தங்களின்றுடுகின்ற ரணக்களத்திற்பேய்க்கூட்டங்களும், அக்கவுந்தங்களுடன் எதிரெதிர் நின்றாடிக் கொண்டு ஒருசார்பிருந்தன. கும்பு கும்புகளாய் அம்பு பிடித்த கரங்களும், வேல்பிடித்த கரங்களும், சூலம்பிடித்த கரங்களும், பாலம்பிடித்த கரங்களும், மழுப்பிடித்த கைகளும், கொழுப்பிடித்த கைகளும், உலக்கையைப்பிடித்த வலக்கைகளும், இடக்கயம்பிடித்த இடக்கைகளும், சக்ராயுதம் தாங்கிய அத்தங்களும், உக்ராயுதமோங்கிய சித்தங்களும், வாகு வலயமணிந்த தோள்களும், வீரகண்டை பிகிந்த தாள்களும், இவைகளெல்லாம் பல பக்கங்களிலும் விழுந்து குவிந்து கிடந்தன. மேலும், உதிரவெள்ளங்களோடி பரவியிருக்கும் யுத்தபூமியானது, செவ்வானம்போல விருந்தது. அப்பூமியில் யானைத் தந்தங்கள் முறிபட்டுத் துண்டமாய்க் கிடப்பது மூன்றும்பிறைபோ விருந்தன. யானையினுடலங்க ளறுபட்டு மேடாய்க் கிடப்பது மேகசாலம்போ விருந்தன. கடலினிடத்திற் கதிர்விட் டொளிசெய்யும் பவளங்களைப்போல் தேர்ச்சக்கரங்க ளநேகம் இரத்தங்களில் மூழ்கி அலைகளினால் அசைந்துகொண் டிருந்தன. மழை பொழிந்து வரும் நல்ல ஜலப்பெருக்கத்திற் றிரண்டு வந்த நுரைகளைப்போல், உதிரப் பெருக்கத்தில் மிதந்து அலை யெறிந்து ஓடிவரும் மூளைகள், ஒருபுறத்தில் செறிந்துவிட்டன.

இதன்றியும், கூர்வேல் - கைவேல் - எறிவேல் - திருகுவேல் - சொருகுவேல் - கதிர்வேல் முதலிய அனேகம் வேல்களையும், மூட்படை - வாட்படை - முறப்படை - விறற்படை - புட்படை - புழுப்படை முதலிய அனேகம் படைகளையும், இரும்புக்கணை - சுரும்புக்கணை - மருந்துக்கணை - பருந்துக்கணை - பிறைமுகக்கணை - நரைமுகக்கணை - தசமுகக்கணை - விசைமுகக்கணை முதலிய அனேகம் கணைகளையும், ஒருமுகப்பகழி - இருமுகப்பகழி - இலைமுகப்பகழி - கொலைமுகப்பகழி - தலைமுகப்பகழி - வலைமுகப்பகழி முதலிய அனேகம் பகழிகளையும், இந்திராஸ்தம் - சந்திராஸ்தம் - மந்திராஸ்தம் - பர்வதாஸ்திரம் - திரிமுகாஸ்திரம் - மேகாஸ்திரம் - மோகாஸ்திரம் - நாகாஸ்திரம் முதலிய அனேக அஸ்திரங்களையும், முள்ளம்பு - முனையம்பு - முறட்டம்பு - தொறட்டம்பு - இடியம்பு - வெடியம்பு முதலிய அநேக அம்புகளையும், அயன்கங்கபத்திரம் - அரிகங்கபத்திரம் - அரன்கங்கபத்திரம் - சுரன்கங்கபத்திரம் முதலிய அனேகம் கங்கபத்திரங்களையும், தோமராயுதம் - சக்ராயுதம் - குந்தாயுதம் - வாளாயுதம் - எஃகாயுதம் - எகியாயுதம் - கார்த்திகையாயுதம் - கூர்த்திகையாயுதம் - தண்டாயுதம் - தடியாயுதம் முதலிய அனேகம் கையாயுதங்களையும், அவ்விரத்த வெள்ளம் பலவிடங்களிலும் கொண்டுபோய் ஒதுக்கியது. இவ்விதமான பற்பல வேல்களாலும், படைகளாலும், கணைகளாலும், பகழிகளாலும், அஸ்திரங்களாலும், அம்புகளாலும், கங்கபத்திரங்களாலும், கணக்கற்ற ஆயுதங்களாலும், துளைக்கப்பட்டிருக்கும் புண் வழியிற் கடலாகிய முந்நீர்போற் சென்னீ

பெருகி வழிந்தோட, தேகங்க ளனைத்தும் ஆயிரமாயிரம் விதமாய் சிதைந்தாட, இருவர் படைகளும் இத்தன்மையாய்ப் போர் புரிந்து, இவ்வைந்தாநாள் யுத்தத்தில் இருபத்தையாயிரம் முடிவேந்தர்கள் இவ்வுலகத்தை விடுத்து அவ்வுலகத்தை யடுத்தார்கள். அவர்களுக் குரித்தாகிய நான்குவிதப் படைகளிற் காலாள்கள் - மேலாள்கள் - பட்டவர்த்தனர் - படைத்தலைவர் முதலிய பேர்களிற் பலரும் இறந்தார்கள். இவ்வாருக யிருதிறச் சேனைகளும் எதிர்த்துப் போர்புரிந்திறந்து இந்திரனுலகிற் புகுதலும், இப்பெரும் கும்புகளுக்கு அவ்விடத்தி லிடமில்லாமல் ஒருவர்பேரி லொருவர் விழுந்து நெருங்கி நாமிருப்பதற்கு இடம் எங்கிருக்குதென்று தேடிக் கொண்டு வெற்றியையுடைய வீரர்களெல்லாம் முற்றிலுஞ் சுற்றிக்கொண் டிருந்தார்கள்.

அந்தச் சமயத்தில், தேவர்கள் வாழும் ஆலயத்தை வலமாய்ச் சுற்றிவரும் மார்க்கமுடைய சூரியன், அதுகண்டு நித்தியமும் நாம்போ யொடுங்கு மிடத்தை ஒருவேளை இவ்வீரர் கைக்கொண்டாலுங் கொள்வார்களென்று அதிசீக்கிரத்திலோடினவனைப்போல், செவ்வானமாகிய வஸ்திரத் திரையினுல் தன்னை மறைத்து மூடிக்கொண்டு மேற்குத் திசையி லிருக்கும் அஸ்தமான கிரியான பழையவிடத்தைப் போய்ப் பிடித்துக்கொண்டான். இந்தப் பிரகாரம் யுத்தங்கள் தோறும் மனக்களிப்படைந்துவரும் மகுடமன்னர் முதலாகிய பேர்களையும், அவர்கள் கைக்கொண்ட பற்பல விதமான ஆயுதங்களையும், இரத்த வெள்ளங்கள் கால்வாயா யடித்துக்கொண்டு போய்க் கடலிற் கலந்து கலக்கியது. இன்று நடந்த போரைக்குறித்து ஒப்பு சொல்ல வேண்டு மென்ருல், எப்பேர்ப்பட்டவர்களாலுஞ் சொல்லப்படாது. இத்தன்மையான சங்கிராம விநோதப்போர் நடத்தப்பட்ட ரணக்களத்தை இருதிறவரும்விட்டு நீங்கிச் சேனைகளுடன் இடமகன்று பாசறைக்கு போய்ச் சேர்ந்தார்கள். இவ்விடத்தில் யுத்தகளஞ் சுத்தி செய்யத்தக்க மனிதர்க ளெல்லாரும், உரிய பேர்கள் முதலிய படைவீரர்களை அவரவர்க ளந்தஸ்துக்குத் தக்கபடி பரண்களிலேற்றி, மற்றையவர்களைக் குவியலாகக் குவித்துப் புதைத்து, மறுநாள் யுத்தத்திற்கு அக் குருக்ஷேத்திரத்திற்ருமே வேறிட மேற்படுத்தி வைத்தார்கள். இப்பால், இராத்திரி யென்னுங் கரும்பாம்பானது, இருட்குழம்பா லேர்ப்பட்ட வாயைத் திறந்து இளம்பிறையான கோரைப்பல்லைக் காட்டிச் சூரியனை பிடித்து விழுங்க வந்ததைப்போல் இருள் மேலிட்டது. கேளும் ஜெனமேஜெய மகாராஜனே யென்று வைசம்பாயனர் சொல்ல, அம் மஹாராஜன் கேட்டு மகா சந்தோஷத்துடன் புகழ்ந்து தீர்க்கதண்டமாய் விழுந்து பணிந்தெழுந்து, இந்த ஐந்தாம்நாள் யுத்தம் நடந்த விநோதங்களைக் கேட்டு மகா ஆச்சரியமாயினேன். இப்பால், ஆரும்நாள் யுத்தத்தையும் அருள்செய்ய வேண்டுமென்று கேட்க, வைசம்பாயனர் மனமகிழ்ச்சியாய்ச் சொல்லத் தொடங்கினர்.

ஐந்தாம்போர்ச் சருக்கம் முற்றிற்று.

---

இப்பால்,

# ஆரும்போர்ச் சருக்கம்

### கண்ணன் துதி

கோயிலா ளுடையபங் கொண்டலார் கண்டுயில்
பாயலாய் வாழநீ பாக்கியஞ் செய்ததென்
றீயலா துவமைவே றில்லெனத் தீயநின்
வாயெலா நஞ்சுகால் வாளெயிற் றுரகமே.

ஓ கலியோட்டி வையங்காக்கும் நவநிதி நிலைநாட்டுஞ் செங்கோனீதிக் கதிபதியாகிய நிருபரேறே? கேளும்; ஐந்தாம்நாள் யுத்தம் முடிவான அந்திவேளையில் வெகுண்டு வந்த இருளென்னுங் கரும்பாம்பைக் கண்ட சூரியன் பயந்து ஓட்டமாயோடி, மேற்குச் சமுத்திரத்தி லொளித்துக்கொண்டிருந்து, பின்பு ஜலத்துக்குள்ளே மூழ்கி நீந்தி, அந்தக் கரும்பாம்பாகிய இருள் போய்விட்டவுடனே கிழக்குச் சமுத்திரத்தில் வந்து தலையெடுத்துப் பார்த்து மெதுவா யெழுந்து கரையிலுயர்ந்த உதயகிரி யென்னும் மலைமீதேறி, நேற்றுத் துரத்திக்கொண்டு என்னை விழுங்கவந்த இருளென்னுங் கரும்பாம்பைக் கொளுத்தி விடுகிறேனென்று யுத்தகோலங்கொண்டு தேரேறி, ஆயிரங்கிரணக்கைகளையும் விரித்துக் கண்கள் சிவந்து எழுந்தவனைப்போற் சூரியபகவான் உதயமாயினுன். உடனே பாசறையிற் றுயின்ற பாண்டவர்களும் படைமன்னவர்களும் எழுந்து, நித்தியவிதிகளைச் சற்றுநேரத்தில் முடித்துக்கொண்டு, பசுந்துளப மாலையணிந்த பரந்தாமனைப் பணிந்தெழுந்து, வாத்திய முத

லாகிய விருதுகள் முழங்க, மன்னுயிரெல்லாம் மடிவதற்காக நஞ்சுகளினுற்றுவைய விட்டேர்ப்படுத்திய அளவற்ற ஆயுதங்களையுந் தேவாஸ்திரங்களையுங் கைக்கொண்டு, துஷ்ட ஜனங்களையெல்லாம் மடிப்பதற்காகத் துஜங்கட்டிக் கொண்டிருக்கும் வீரமாகாளி வீற்றிருக்கின்ற குருக்ஷேத்திரம் பேர்ய்ச் சேர்ந்தார்கள். அவ்விடத்திற்சேர்ந்தவுடனே, பாஞ்சால குமாரராகிய சேனுபதியானவன், ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியின் திருவாய் மொழிகொண்டு, மும்மதங்களைப் பொழியும் யானைப் படைகளையும், சேனைப்படைகளையும் தந்திரமாகப் பிரித்து, நிரந்தரமாகச் சத்துருக்களினுல் புறமிடாத மாரயூகம் வகுத்தான். இந்தப் படிக்குப் பாண்டவ சேனுதிபதியாகிய துஷ்டத்தூய்மன் சேனைகளைச்சேர்த்து மகரயூகங் கட்டியிருக்கக் கண்ட வீஷ்மரானவர், தங்களுடைய படைகளையெல்லாந் தரம்பிரித்து, நான்கு திசைகளிலும் நடுப்பக்கங்களிலும் நிறுத்தி, அந்த மகரமீனுக்கு சத்துரு மீனுகிய கிரிஞ்சமென்னும் கனயூகங்கட்டினுர். இப்பால், சத்தியமும் தருமமும் தானனுபவிக்கும் போகமென்றும், அவைகளே விண்ணுலகெல்லாம் விரியும்படியான புகழென்றும், மற்றப் போகபாக்கியமெல்லாம் மண்ணில் மறைந்து போகும்படியான இகழென்று மனத்திற் பதித்த தர்மராஜனும், அசத்திய முதலிய பாபங்களினுல்பாக்கியமும் பெருமையும் படைக்கலாமென்னும் சத்தியத்தையும், புண்ணியத்தையும் சார்ந்தால், உடனே தரித்திர முதலிய சங்கடங்களனைத்தும் வந்து சேருமென்றும், எந்தக் காலத்திலும் இதுவே சற்புத்தியா யெண்ணி ஸ்திரத்தைக்கொண்ட துரியோதனனும், வீரவேசப்பெற்ற வெற்றிப்படைகளுற்ற விற்படைதாங்கிய வேற்படையோங்கிய வேந்தர்களும், நால்வகைச் சேனையாகச் சேர்ந்தவர்களும், அவைகளுக்குத் தலையாகிய மாந்தர்களும் யுத்தபூமியில் நிறைந்து; தாங்கள் தங்களுடைய சேனுதிபதிகளின் உத்தரவின்படிக்கு நின்று மேலாகிய சண்டையை விளைத்தார்கள்.

இப்படிக்கு இருதிறப் படைகளுங் கைகலந்து போர் புரியவே, ஆகாயத்தில் வேடிக்கைப் பார்க்கவந்த தேவேந்திரன் முதலாகிய பேர்கள், அவ் வாகாயத்தில் விசாலமாகிய இடம் பெருமல் ஒருவரோ டொருவர் நெருங்கி ஓடினுர்கள். பூலோகத்தார் யாவரும் வருந்தி வாடினுர்கள். இப்படி இருதிறப் படைஒரு மாறுபட்டுத் தேர்களைச் செலுத்தியும், குதிரைகளை நடத்தியும், யானைகளை முட்டவிட்டும், சேனைகளை எட்டவிட்டும் இப்படியாக எங்கும் பரவிய தல்லாமல், அப்படை வீரர்களிற் சிலர் ஒருவரோ டொருவர் ஒட்டிப் பதுங்கியும், சிலர் பக்கத்தி லொதுங்கியும், பலர் பாணங்களைப் பவுருஷஞ் சொல்லி யுந்தியும் யுத்தஞ் செய்தார்கள். அச் சமயத்தில் துரோணுசாரியரானவர், நால்வகைச் சேனைகள் நான்கு பக்கத்திலுஞ்சூழ, நான்கு வேதங்களையும் பரியாகப் பூட்டிய தேருக்கொப்பாகிய தன்னுடைய தேரை விரைவாக முடுக்கி, இருளுக்குப் பகையாகிய சூரியனைப்போல் விரைந்து வந்து, மாருதி குமாரனுங் கதாயுத பாணியுமாகிய வீமசேனன்பேரில் வந்தெதிர்த்து விற்குதை இரண்டும் ஒன்று படும்படியாய் நாணி யிழுத்துப் பாணம் தொடுத்துப் பற்பல வசனங்களைச் சொல்லிச் சீறினுர். அப்போது நிலைபெற்ற புகழும் மலையொத்த புயமுமுடைய அவ் வீமசேனன் ஆசாரியரென்னும் மரியாதைபற்றி நெஞ்சினில் அஞ்சலிசெய்து வணங்கி, அவரது மலையினும் பெரியதேரும், அத்தேரை யூர்ந்துவந்த வலனும், அவ்வலவனடத்துகின்ற குதிரைகளும், முடியுற்றுப் படியில் விழும்படி கெடி பெற்ற கூர்க்கணைகளை விடுத்து டங்காரங் காட்டி, யுத்தக்களத்தில் மெத்த நெருங்கிய நால்வகைப் படைகளையும் வீட்டி, அமோகமாக பாணங்களைத் திட்டி மாட்டி, அரசர் முதலாகிய யாவரும் அடிபட்டுப் புறமுதுகிட்டோட ஓட்டி, சேனுபதிதொடுத்த கணைகளையெல்லாம் நானுவிதமாக அறுத்து நாட்டி, அத் துரோணருடைய தேகத்தையும் துளைத்து மனஸ்தாபத்தையும் விளைத்தான்.

அச்சமயத்தில் துரோணுசாரியரானவர், தனது கொடி-குடை-தேர்-குதிரை-சாரதி முதலிய சகல சின்னங்க ளழிந்து போதலும், வீமசேனனுக் கெதிரில் நிற்க வெட்க முடையவராய்ப் பின்னிட்டுப் பதுங்கியபோது, எதிரிற் சல்லியனைக்கண்டு நாணமுற்று நீரும் போய் அவ்வீமனே டெதிர்த்து அடிபட்டு எனக்குத் தோழமை கொண்டு வாருமென்னுங் கருத்தினராய் அச்சல்லியராஜனைப் பார்த்து, ஓ என் தோழனே! இந்த வீமனை வளைத்தெதிர்த்துச் சற்றுநேரம் யுத்தம் பண்ணுவையாகில், இதோ நான் வருகிறேனென்று ஒரு திசையில்

நுழைந்து போயினர். இப்பால் உபசேனு பதியாகிய துரோணச்சாரியர், வெகு தானுபதியாகிய சல்லியனை வீமனுக்கெதிரில் விடுத்துச் சென்றவுடனே, இந்தச் சல்லியனுனவன் துரோணச்சாரியர் சொல்லிய வண்ணம் படைமன்னர்களெல்லாந் தன்னைப் புடைசூழ்ந்து கடகடவென்று தேரோட்டிக் கொண்டு வரும்படியாக வாயுபுத்திரனிடத்திற் சமர் புரிந்து ஜெயம் பெறும்படிக்கு வந்தான். அப்போது, தன்மேலெதிர்த்து வந்த அந்தச் சல்லியனைக் கொல்லும் வல்லிய வயப்புலிபோன்ற வீமசேனன் கண்டு, வாரும் வாரும் மாமா! என்னோடெதிர்த்துப் போர் புரிவதற்கு வல்லமையும் மனமுமிருக்குமாகிற் சீக்கிரத்தி லோடிவாரும்; மனமில்லாவிட்டால் இப்போது வந்துபோன எங்களாசாரிய சுவாமிகளாகிய துரோணமூர்த்தியைப்போல் முதுகுகாட்டி ஓடிப்போரும் என்று வீமசேனன் சொல்ல, அந்த வசனங் கேட்டு வெங்கடுப்பாகி வெகுண்ட சல்லியன் வில்லை யெடுத்து நிறுத்தினன். உடனே வீமசேனன் அந்த வில்லைப் புல்லாகச் செய்து போட வேண்டுமென்று, கல்லாகிய தன் வில்லிற் கணைகளைத் தொடுத்து முறித்து, மறுபடியும் அச்சல்லியன் வேறுவில் லெடுப்பதற்கு முன்னே சட்டென்று கீழே குதித்துத் தன்னை வெல்லவந்த சல்லியனேறியிருந்த ரதத்தை இந்திரவிமானந் தாங்கிய அயிராவதத்தைப் போல் தோள்மே லெடுத்துக் கரத்தாற் பிடித்துச் சுழற்றி ஆகாயத்தில் வீசிவிடுத்து, அவனோடு வந்த நால்வகைச் சேனைகளையும் அவனுக்கு அங்குந் துணைகொண்டிருக்க நினைத்து, சகல பொருள்களையும் வாரிவாரி தீயில் எறியும் அலைகளைப் போல் அநேகந் தேர்களையும்-யானைகளையும்-குதிரைகளையும்-பதாதிகளையும் வாரி வாரி ஆவ்வாகாயத்தி லெறிந்தான்.

அப்படி யெறியவே, முந்திப்போன சல்லியன் ஆகாயத்தின்மே லுயர்ந்துபோய் அங்கிருந்து கீழாகக் கிறுகிறென்று சுழன்று, தானும் தனது தேருமாகத் தரையில் வந்து விழுந்து வருந்திச் சல்லியமாகித் தாரகாகணவீதிவரைக்குஞ்சென்று விழுந்த தனது சேனுஜனங்களுடனே கூடப்புரண்டு சஞ்சலமுற்றான். அந்தத் தன்மையை உள்ளங்கை நெல்லிக் கனிபோல் தானே ருசுவிற் பார்த்திருந்த துரியோதன மகாராஜன் மன்னுயிரெல்லாந் தன்னுயிரைப்போல் மதிக்கு மனமுடையவனைப்போல் வருந்திச் சல்லியராஜனுக்குச் சகல உபசாரமும் நடத்தும் படியாய்த் தன் தம்பிமார்களை விடுத்து, அநேகங்கோடி வாத்திய முழங்கிவரத் திரண்டப் படைமன்னருடனெழுந்து, அகலிதழ்நிறைந்த நந்தியாவட்டமாலையணிந்த அரசர்க்கரசனுகிய தானும், வெற்றிமாலையணிந்த வீரர்களும், துருவாசர் முதலிய சில தம்பிமார்களும், சகுனி மாமனும், மத்திரதேசத் தலைவனும், வீமசேனனுக்கெதிரில் வந்து வில்லை வளைத்துக் கல்மாரி பொழிவதுபோல் வில்மாரி பொழிந்து, ஆயிரமாயிர மென்னுங் கொடுங்கணைகளினுற் கடும் போர் விளைத்தார்கள். அந்தச் சமயத்திற் சிங்கக் கொடிதரித்த வீமசேனன் இவர்களெல்லாம் ஒருமிக்கச் சேர்ந்துவந்து போர்கொடுப்பதைக் கண்டு உடல் பூரித்து மேலேறி, நகுல சகாதேவர் முதலிய தம்பிமார்களும், பிரதிவிந்தியன் முதலாகிய புத்ரவர்க்கமும், பாஞ்சாலாள் முதலிய மைத்துனர் நெருக்கமும், உடலைவிட்டகலா நிழல்போல் வருங் கடோற்கஜன் முதலாகிய அரக்கருந் தன்னை நெருங்கிக் கலந்து வரும்படியாய்த் திடுதிடெனத் தேரைச் செலுத்திச் சென்று எதிர் நின்று, திசைகள் மறையும்படியாய்த் திவ்வியாஸ்திரங்களைத் தொடுத்து, அவர்கள் விட்ட அநேகமாயிரங் கணைகளையும் முறித்த காலத்தில், இருவர் பிரிவிலு மிருந்த வீரர்கள் ஒருவரோடொருவர் நேருக்கு நேராகக் கைகலந்து போர் புரிந்தார்கள்.

அஃதெப்படி யென்றால், வேலாயுதங்களும், சூலாயுதங்களும், வாளாயுதங்களும், பாலாயுதங்களும், குந்தாயுதங்களும், சக்ராயுதங்களும், தோமராயுதங்களும், சேமன் கணைகளும், பூமன்கணைகளும், இந்திரப்பகழியும், சந்திரப்பகழியும், மந்திரப்பாணமும், தந்திரப்பாணமும், முள்ளம்பு - முறட்டம்பு-துறட்டம்பு-குறட்டம்பு-கவ்வம்பு - கறவம்பு - வளைதடி - குடுதடி - குண்டாந்தடி - சிலுக்குத்தடி-முறுக்குத்தடி-முள்தடி-பாணுத்தடி முதலாகிய ஆயுதங்களும், கணைகளும், பகழிகளும், பாணங்களும், அம்புகளும், தடிகளுங், கவண்களுங்கொண்டு அவரிவரென்று தெரியாமல், ஒருவர்படைக்கு ளொருவர் புகுந்து வருந்தப் போர்புரிந்து வரும்போது வில்லுக்குயர்ந்த வாளும், மல்லுக்கிசைந்த தோளும், வடிக் கணை முதலிய இடிக்கணைகொண்ட வீமசேனபோஜனுந், துரியோதன ராஜனும், விக்ரமத்துடன் உக்ரமங்கொண்டு கொக்கரித்து, ஒரு

ஒருவர்க்கொருவர் நேருக்கு நேர் நின்று யுத்தஞ் செய்தார்கள். அஃதெத்தன்மை யெனில், மந்தரகிரியும், மாவிந்த மலையும்போன்ற தம்முத் தேரை எதிரெதிர் செலுத்தி, வாயுதேவனும், வடவாமுகாக்கினியும் எதிர்த்ததைப்போலெதிர்த்து, இருவரும் வில் வளைத்து டங்கார மடித்துக் கணைகள் விடுத்து, ஒருவர் மார்பை யொருவர் கிழித்து, ஒருவர் தோளின் மேல் ஒருவரடித்து, ஒருவர் கொடியை ஒருவ்ர் கிழித்து, ஒருவர்முடியை ஒருவருடைத்து, ஒருவர் தேரை யொருவர் போக்கி போர் நடத்திவருங்காலையில், கதைப்போர்-கழுமுட்போர்-வாட்போர் முதலிய பலபோர்த் திறமையிற் சிறந்த வீமசேனன் வேறு தேரேறி விரைந்துவந்து கணக்கிறந்த கமலச் சரங்களைச் சொரிந்தான்.

அப்போது துரியோதனனும் வேறு தேரேறித் தொடர்ந்துவந்து சுரிமுகக்கணைகளைத் தொடுக்க, அந்தக் கணைகளை வீமசேனன் குறுமுகக் கணைகளாற் குறைத்து, அவனுடைய முன்பக்கத்தைத் துளைத்துக் கவசத்தையு நீக்கியகாலையில், சரவேகத்தினு மிஞ்சிய வேகத்தோடுந் தானேறிய தேர் நேரோட ஓடிய சர்ப்ப கேதுவைத் துரத்திச் சென்று, பொற்பமைந்த தன்னிரதத்தினின்று அவனுடைய பின்பக்கத்திலும் அழற்கணை யனேகந் துளைக்க விடுத்து, அவன் தம்பியர் முதலியபேர்களுக்குங் கும்பு கும்பாகக் கொலைக் கணை யேவி, அவர்களுடைய மார்பையும் தோளையும் உதிரம் வழியப் பல கண்ணாகிய குழிப்புண்ணாக்கி, இன்னும் பற்பல பகழிவிடுத்து பின்னுஞ் சிற்சிலபேரைத் துளைத்து, எவரெவர்களை யமலோகத்திற் கனுப்பவேண்டுமோ அவரவர்களைப்பொறுக்கி, அப்போதேயனுப்பி இவர்களல்லாமல் இன்னமும் பலரை இருந்தவிடம் விட்டெழவொட்டாமற்பெய்து, வேகங்கொண்ட குதிரைகளையும் பாகனேறிய யானைகளையும் சூதன்விடுத்த தேர்களையும் கூவி நெருங்கும் பதாதிப்பெருக்கையும் பாழ்படத் தரித்து, பலவாறுக முறித்து அடியுடன் முடிசாய நெரித்து, படியுடன் உதில்சாய உரித்துப் படாதபாடு படுத்தும்போது, குடைரையிழந்து, தேரழிந்து பாகர் சிதைந்து, யானையொழிந்து, வில்முறிந்து, சொல்மறந்து, வீரதீரப் புஜவலிமையுங் குறைந்து, ஆரவாரசேனைத்தலைமையு மறந்து, எவர்களும் முனைமுகத்தினில்லாமற் பறந்து முறிந்தோடச் செயங்கொண்ட வீமசேனனைத் தேவர்களெல்லாம் கண்டு ஜெயஜெயவென்று பூமாரி பொழிந்தார்கள்.



### வீமனைத் தேடிவந்த விகர்ணதியர் அபிமன்னனா லடிபட்டோடுதல்

இந்தப்படி யந்தப்படை நொந்துப்பட விந்தைச்சமர் புரிந்தகாலத்தில், அலக்கழிந்து அடிபட்டுக் கலக்கண்ணீ ருகுத்தோடிய காவலன் முதலாகிய சேனைகளைக்கண்ட கண்ணில்லாவரசன் பெற்ற காளையர்களில், விகர்ணன் முதற் சிலரும், வெற்றிவேல் தாங்கிய வேந்தரிற் பலரும், சிவந்த கண்களுடையவர்களாய் ஒன்றுகூடி, அதிக கோபங்கொண்டு முகிலெனத் திரண்டு அதிவேகத்துடனோடி வந்து வீமனெங்கே யெங்கேயென்று அதட்டினார்கள். அப்போது வீமசேனன் அவ்விடத்திலில்லாமையால், அவ்வதட்டுதலை அபிமன்னன் கேட்டு, பரிசுத்தமாகச் சாணைபிடித்துத் தயிலதுபஞ் செய்த பாணங்களும், வரிபொருந்திய வச்சிரக்கட்டுகளுடன் திட்டஞ்செய்திருக்கிற எட்டு விருதுகளும், சிறுமணிப் பொற் பட்டமுங் கட்டிய விஜய கோதண்டத்திற் கொப்பாகிய வில்லைக் கைக்கொண்டு விரைந்தெதிரில் நின்று, விஷச்சுவாலையாகிய பாணங்களைப் பொழிந்து உண்மைக் கியான நிலைபெற்ற விகர்னனுடைய திண்மைத் திரும்பும்படியா யடித்துத் தேர்-குதிரை-சாரதி-வில் முதலிய யாவற்றையும் ஒடித்து முடித்துவிட்டான். அந்தக் காலத்தில் அவ்விகர்னனுன் வன், அருகில் வந்துக்கொண்டிருக்கிற தன் தம்பியாகிய சித்திரசேன னேறியிருக்கும் தேரிற்போ யேற, உடனே மற்ற அண்ணன் தம்பிமார்களும் சிந்து தேசாதிபராகிய மைத்துனரும், மற்ற கஜங்களுக்கு அதிபதியாகிய பகதத்தனும் இன்னு மற்றுமுள்ள எல்லோருஞ் சேர்ந்துவந்தி, மறுபடியுமிந்த அபிமன்னனை வளைத்துக்கொண்டு அளவில்லாப் போர் கொடுத்து, அம்புகள் அனேகம் சரமாரியாய்த் தொடுத்தார்கள்.

அப்போது அவரவர்கள் விடப்பட்ட அஸ்திரங்களையெல்லாம் அபிமன்னனழித்து, அவரவர்கள் மார்பிற்போ யுருகும்படியாய் விசையம்புகள் விடுத்து, மொய்த்து வந்தவர் யாவரும் எய்த்து நொந்தவராகி மயங்கி தலைசுற்றி விழும்படியாய் மொத்தினன். இந்தப்படி யடிக்கவே அவரவர் பிடித்திருக்கும் வில்

லானது அடிக்கடி நாணியறுந்து நிமிறவும்; மளுக்கென்று விற்கள் தறிந்து குமுறவும், மேற்கணை தொடுக்க விரைந்தும், பாற்கடலினைப்போ விரைந்தும், மேகமுழக்கென முழக்கியும், சோக மிகுத்தெழக் கலக்கியும், அண்டமுகடிடிய வதிர்ந்தும், பிண்ட நிலை குலைய வெதிர்ந்தும், தாரகா கணங்களுதிர்ந்தும், நரகாதிபன் வந்தடர்ந்துங் கனற்றும் படியாய் வெவ்வேறு திண்சிலைகள் வளைத்துச் சரமாழி பொழிந்து மறுபடியுங் கடுங்கோபங் கொண்டு சண்டைக்கு வந்தார்கள். இப்படி முந்தி வந்தவர்களை அபிமன்னுவானவன் சிதறயடித்துப் பின்விடுத்துக் கொடுங் கணைகளைப் பொழிந்தெதிர்த்த கொடிய விகர்னனென்பவனைத் தகைத்து, அவன் தேகமுழுமையுஞ் சல்லடைக்கண்களாகி உதிரம்வடியத் துளைத்துக் கவசத்தையு மறுத்துக் குடல் கலங்கிக் குருதிநீரோடவும் இரண்டு தோளும் ஒடியும்படியாகவும் ஒரு நொடியினில் இடி மின்னலை விளைக்கும் வடிக்கணை யிரண்டு வலம் பெற விடுத்து மன்னர் மன்னர்கள் வந்து வணங்கும் வீரகண்டாமணித் தாளையும் மணி வாசலையுமுடைய வணங்காமுடியோன் தம்பியான அவ்விகர்னனை, மறுபடியுமடக்கி இடியாஸ்திர மெடுத்து மார்பினுழைந்து முதுகிலுருவிப் போகும்படியாய் விடுத்து, இன்னமும் வேலையுண்டோவென்று கேட்டு எவர்களையும் நிகர்படுத்தாமல் மகமேருவைப்போல் ஓங்கிய வாகு வலையந்தரித்த பணிப்புயங்களைத் தட்டி பின்னும் வூரத்தக்கபேர்கள் வாருங்களென்று யாவரும் திகைத்து நடுங்கி யொடுங்கும்படியாய் மதத்து நின்றான்.

அதைக்கண்ட விகர்னன் முதலாகிய சத்துருக்களெல்லோரும் விசனமடைந்து, ஒற்றை இரதத்துடன் ஒருவனாகயிருந்து உலைவாய் மெழுகைப்போல் நம்மை உருக்கி கருக்கிய உத்தமனுக்கொப்பாக ஆரைச் சொல்லுவோம்? இல்லை இனி எத்தனை நாள் யுத்தஞ் செய்தாலும் வெற்றிக்கும் நமக்கும் வெகுதூரமாயிருக்கும். அந்த வெற்றியாகிய புருஷன் அர்ச்சுனனுக்கும் அவன் பிள்ளைக்குமே மெத்தக் கூட்டாளியா யிருக்கிறான். ஆகையா லினி நாம் யுத்தஞ்செய்து என்ன பெருமையைப் பெறப்போகிறோம்? ஒன்றுமில்லை; இந்தமட்டுஞ் செத்தவர்கள்போக மற்றவர்கள் மரியாதையாய் தப்பிப் பிழைத்துப்போனாற் பெரியோர் செய்த புண்ணியம்; இப்போதே உயிர் பிழைத்தோமென்று ஓடிப்பிழைப்பதே உத்தமமென்று அனேகர் வருகிறார்; ஒருவரோடொருவர் சொல்லாமல் வெருவிப்பயந்தோடினார்கள். அப்படி ஓடினவர்களிற் கொஞ்ச மானமுங் கொஞ்ச வீரமுமுடைய அதிரதர் முதலாகியவர்கள் சற்று நின்று நிதானித்து, நல்லது இன்றையப் போரில் நாமெல்லோரும் ஒன்றாய்க்கூடி நெடும்பகழி குரும்பகழி முதலிய நெட்டிலை வேல்களும், பட்டயக் கோல்களும் விடுத்து சண்டை செய்தோமே, அனேகங்கோடி அஸ்திரங்களினாற் றாக்கினோமே, இந்த அபிமன்னுவினுடைய அங்கத்தில் ஏதாகிலும் கொஞ்சம் பங்கமுண்டோ? அல்லது அவனுடலில் எள்ளத்தனை காயங்கள் ஏற்படுத்தினதுண்டா? ஏன் வீணாய் உரலுங் கொடுத்துக் குரலும் போகவேண்டும்? ஐயையோ இம்மட்டு மவன் கொடுத்த உயிர்ப்பிச்சையாக வெண்ணி ஓடிப் பிழைப்பதே உத்தமமென்று முன்னோடினவர்களுக்கு முன்னாகப் பின்னோடின பேர்களுமோடித் தம் பாசறையைப் போய்ச்சேர்ந்தார்கள்.

அந்தச் சமயத்திற் கார்முகனை கொண்டதைப்போல் வந்து போர்முனைவென்று போர் புகழ்கொண்டு சீர்பெறநின்று தேர்விடுசென்று சாரதிக்குச் சொல்லிநின்ற அபிமன்னனுக்கு நேரெதிர் சென்ற மேலாகிய சந்தோஷநிறைந்த மனமும், வீரர்க்குட் சிறந்ததனமும், வேந்தருக்கு வேந்தாகிய பெரியதனமுமுடையத் தர்மராஜன் முதலிய பாண்டவரென்னுந் தந்தைமார்கள், அம்மைந்தனைக் கண்டு சந்திரனைக்கண்ட சமுத்திரம்போற் களித்து இறைந்து மகிழ்ந்து, இறுகத் தழுவியணைத்தும் முத்தமிட்டுக்கொண்டு உத்தமவித்தக பக்தியும் வித்தையுமுடைய அப்புத்திரனுடன் வெற்றி வார்த்தையைப் பேசி வியந்து, போர்க்களத்தின் வேடிக்கையையும் பார்த்து, பொம்மலாகிய எக்களிப்பா யிறுமாப்படைந்து பாசறை போய்ச் சேர்ந்தார்கள். இப்பால் இந்த யுத்த களத்தில் அநேகஞ்சேனைகள் அழிந்து உதிர வெள்ளம் வழிந்தோடவும், அவ்வெள்ளத்தின் அலைகளில் தத்திவிழுந்த தலைகளைக் கழுகும், பருந்துங் காக்கையுங் கொத்தி யெழுந்த காலையில், நரிகள் பறித்துக் கௌவிக்கொண்டு ஆடவும், அதைக்கண்ட சிறுபட்சிகள் மனமேக்கங்கொண்டு வாடவுமாகி யிருந்தது.

இப்படியாக விருக்கின்ற யுத்தபூமியில், மலையினும் பெரிய தலையினையுடைய யானைக

ளின் தந்தங்கள் பிடுங்குண்டு அங்கங்குலைந்து, டொங்குடொங்காகி மந்தரகிரிபோ லுயர்ந்து, தாரை தாரையாய்ச் செந்நீர் பெருகச் சாய்ந்து கிடப்ப தெப்படி யிருந்ததென்னில், துவாரகையிலிருக்கும் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியைத் தன் பட்டணத்திற் கழைப்பித்த கஞ்சனைவன், நரகக்கோட்டை வாசலில் மதம் பொருந்திய பட்டத்து யானையை நிறுத்தி வெளியிலிருந்து வருவோர்க ளெல்லோரும் யானையின் வயிற்றில் நுழைந்து போவதென் றேர்ப்படுத்திக் கிருஷ்ணர் நுழைந்து வரும்போது, யானையினல்நெருக்கிக்கொன்று போடச் செய்யென்று தன்னுடைய கருத்தை மாவுத்தனுக்குச் சொல்லி வைக்க, அக்காலத்தில் யானையை இரக்ஷித்த ஆதிமூலமான உளவறிந்த கள்வன் அநேகமாகிய இஷ்டருடன் யானைமுகத்துக்கு நேராக வந்த காலை, மணங்கமழ்ந்த குணம் தழைத்த வனம் நிறைந்த தேனுறைந்த திருத்துழாய் மாலை தரித்த சுவாமியை நெருக்கிக் கொல்லவந்த யானையின் இரண்டு தந்தங்களையும்பிடித்து அசைத்திழுத்து பிடுங்கியபோது, சந்தங் குறைந்து தந்தங்குலைந்து, கந்துஞ் சிதைந்து, நொந்து வருந்தி விந்தகிரிபோல் விழுந் திறந்த அக் குவலயா பீடமென்னும் கொம்புபோன யானையின் கோலமெப்படியோ அத்தன்மையாக யிருந்தது.

மேலும், சில யானைகள் ஓடிக்கொண்டிருக்கும் உதிரவெள்ளத்தில் பாதி தேகம் மறைந்தும், மற்றப் பாதிதேகம் வெளியிற் றெரிந்தும், துதிக்கையை மேலாகத் தூக்கிக் கொண்டும் வாய்விட்டலறியும் கால்களிற் சக் கரமாட்டிக் கொண்டிருக்க, அநேக யானைகள் பக்கத்திற் பட்டுக்கிடக்க, இத்தன்மையாய் விழுந்திளைத்த வீரப்பட்ட மென்னும் நுதலணிகளையுடைய யானைகள் எப்படி யிருக்கிற தென்றால், மலைச்சாரபி லிருந்த சுனையில் தினச்சாரியாய் நீருண்ணுவதற்கு அனேகம் பெண்ணானைகளுடன் வந்திறங்கிய யூதநாத னென்னும் யானையை முதலைப் பிடித்துக் கொண்டபோது பெருங் கூச்சலிட்டு, கரையிலிருக்கும் யானைகளின் துதிக்கையை அது பிடித்துக்கொண்டு 'முதலைக் கரையிலிழுக்க, முதலை யானையை சலத்தி லிழுக்க, அக்காலத்தில் தனக்குற்ற துணையாகிய கர்த்தனைக் கூவி பாதியுடல் ஜலத்தில் மூழ்கியும், பாதியுடல் மூழ்காமலுமிருந்த நீலகிரியைப்போன்ற அக் கஜேந்திரனைப் போலுமிருந்தது. இதன்றியும், மேகத்தைப்போல மதசலத்தைப் பொழியுங் கவுட்குழியும், சிறிய விழியும், இரண்டு செவியும், தந்தக் கொம்பும், மத்தகத் தலையும், தும்பிக்கையும், தோலும், வாலும், நாலு காலும் இவைகள் தவிர மற்ற மாமிசங்களையெல்லாம் பேய்கள் சுரண்டித் தின்றுபோட்ட யானைத் தோல்கள் எவ்வித மிருப்பதென்றால், நான்கு வேதங்களும் மோனமென்றும் அகல்வான மென்றும், முழுஞான மென்றுஞ் சொல்லிய இப்பொருளையே ஞானபீதித் திருவாய்க்கொண் டருளிய சிவபெருமா னென்னும் வீரெட்டேஸ்வரர் தாருகாவனத்து ரிஷிகளா லனுப்பிய யானையை யுரித்து அணிந்து கொண்ட அக்கரியினது உரியைப்போன் றிருந்தன.

இன்னும் அறுபட்டுக் கிடக்கும் இராக்கதர் முதலிய சேனைகளின் தலைகளையும், யானைகளின் தலைகளையும், தங்கள் தலையிற் கவிழ்த்துக்கொண்டும், வாய்களிற் கவ்விக்கொண்டும் வரும்படியான கண் தெரியாப் பூதங்களை ஆகாயத்தில் சென்ற வீரருடைய தலைகளைக் கைக்கொண்டு உள்ளிருக்கும் தசைநிண முதலிய யெல்லாவற்றையும் உறுமுறுமென்று உறுஞ்சிக் குடித்து வருகிற சில பூதங்கள் மடக்கி மேல்விழுந்து சண்டைகொண்டு ஒன்றுக்கொன்று விடாமற் போர்புரிவது எப்படி யிருப்பதென்றால், அனேகங்காலம் அரக்கரால் அவதிப்பட்ட அமரர்க் கிறையாகிய தேவேந்திரனும், முப்பத்து முக்கோடி தேவர்களும், கயிலாசபதியைக் குறித்து வருந்தித் தவமிழைத்த காலத்தில், அம் மகாதேவர் உமாமகேஸ்வரியுட னெழுந்தருளிச் சித்திர மணிமண்டபத்தில் ஓவியமாகத் தீட்டியிருந்த பிரணவாகார வடிவத்தைக் கண்டு, இதுவே எப்பொருட்கு மிறையென்னும் முதற்கடவுளாகிய விநாயகமூர்த்தியாகத் திருவுளங் கொள்ளவும், உடனே அச்சிவ சத்தினருளுருவாய் அமைந்த விநாயகக் கடவுளானவர், தேவர் முதலிய பேர்களின் குறை நீங்கக் கஜமுகாசுரனுடன் எதிர்த்து யுத்தஞ்செய்த காக்ஷிபோலிருந்தது. இப்பால், இரத்தங்களைக் குடித்துவெறியேறிசண்டைசெய்யும் நாய்களுடநரிகளும், பிரமாணந் தப்பிய பெருங் குடியரைப்போன்று திரிந்ததுகள். காக்கை-கழுகு-பருந்துமுதலிய பக்ஷிகள் மாம்சங்களை இச்சையடங்கத் தின்று அபிமன்னனுடைய ஜெயத்

தைப் படித்துக்கொண்டு மிகுந்த மாமிசங்களை நாளைக்கு வேண்டுமென்று புதைக்கும் உலோப நாய் நரிகளைப்போல் தாங்களும் புதைத்து மீண்டுமப் புதைத்தயிடந் தெரியாமல் அநேகநாள் சஞ்சலப்பட்டதுகள்.

இப்படியாகிய போர்க்களத்தில் இமயகிரி வரைக்கும் ஜெயஸ்தம்பம் நாட்டிய விஜய குமாரனாகிய அபிமன்னுவானவன், இன்றைய யுத்தம் உங்களுக்குப் போதுமல்லவாவென்று எதிரியின் சேனையைக் கேட்டுத் தன்னுடைய சேனைகளோடு இராவான் முதலிய பேர்களியா வருஞ் சூழப் பலவிருது மேளதாளங்களுடன் ஜெய்க்கொடி பிடித்துக்கொண்டு தந்தை முதலாயினோர் தங்கியிருக்கும் பாடி வீட்டிற்குப் போய்ப் பொருந்தி யிருந்தான். அப்போது அபிமன்னுவை வழிவிடுக்கப்போன வழித் துணைபோற் சூரியன் மேற்குத் திசையில் அஸ்தமித்தவுடனே, பாண்டவர்களுந் துரியோதனதியருஞ் சண்டை போட்டார்களே அதைப் பார்ப்போமென்று வந்ததைப்போல் இரவென்னும் பெண்ணோடு சந்திரன் இரைந்தோடிவந்து இரணக்களத்தைப் பார்த்துப் பேய்க் கூத்தாக யிருக்கக் கண்டு வேடிக்கை பார்த்திருந்தான் என்று சொல்லிய வைசம்பாயனரை ஜெனமேஜெயமகாராஜன் பணிந்து, இனி ஏழாம்போர் விநோதத்தையுந் திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்று கேட்க, வைசம்பாயனர் சொல்லுவதாயினர்.

ஆறும்போர்ச் சருக்கம் முற்றிற்று.

---

இப்பால்,

## ஏழாம்போர்ச் சருக்கம்

### கண்ணன் துதி

உரலும்வேதமுந் தொடர நந்தகோபனுடனசோதைகண் டுருகவாழ்வுகூர், தரணிமீது செங் கையுமாமுழந் தாளும்வைத்துவைத் தாடுமாயனர், விரவிநின்றமா மருதினூடுதா மெத்தெனத்தவழ்ந் தருளிமீளவும், புரியுநீள் கடைக் கண்ணும்வண்ணமும் போற்றுவார் கண்மெய் புளகமேறுமே.

ஓ தனமேவிய மாமதி நாவலனே! ஜெனமேஜெய பூபதி காவலனே! கேளும்; மறுநாட் காலமே நேற்று நடந்த ஆறும்போரிலும், இன்று நடத்தப்புகும் ஏழாம்போர் விசேஷித்திருக்கு மல்லவாவென்று ஆவலோடுட் பார்க்க வந்தவனைப்போல் சூரியபகவான் கீழ்த்திசையில் உதயமாயினன். உடனே இருவர் படையுமெழுந்து காலைக்கடனை முடித்துக்கொண்டு யுத்தசன்னுத்தராய் வீரம்பேசி எழுந்தவுடன், பாண்டவச் சேனையில் பிரயாணபேரி யுத்தபேரி முதலிய வாத்தியங்களெல்லாம் பெருங் கடல்போல் முழங்க, ஆயுதங்களுடன் ஆயுதங்கள் இழைய, அதிபதி முதலிய அனேக வீரர்கள், கொடி-குடை-சாமரை-பீலிக்குஞ்சம் முதலிய சின்னங்களோடு புறப்பட்டு நேற்றுப் போர் புரிந்த யிடத்தில் வரலும், மரகத மலைபோல் திருமேனி வாய்ந்த மாதவனைப் பணிந்து இன்றைக்கு என்னயூகங் கட்டுவதென்று உத்தரவு கேட்டுக்கொண்டு வச்சிராயுதம்போலழிவற்றதாய் பாம்பைபோற் படமும் உடலுமுள்ளதாய் கட்டுவதான வச்சிரமாகுண யூகங் கட்டினன் சேனுபதியாகிய துஷ்டத்தாய்மன். இப்பால், துரியோதனனுடைய படையில் சேனுபதியாகிய வீஷ்மாச்சாரியரானவர், தங்களுடைய நால்வகைப் படையுங் கொண்டு வந்து அவைகளைத் தொப்பைக் கட்டை-குடம்-பழு - இலை - மேல்வட்டகை - வளைவு-இருப்புக்கட்டு-சட்டம் - மத்தியிற்றுளை - உளிவாய்-கடையாணி இவைகளையுடைய வண்டியில் சக்கரம்போலமைத்து, அதிரதனரமுனையினிறுத்தி, நால்வகைச் சேனைகளையுஞ் சக்கரமாய் அமைத்து, நடுத்துளையில் நாயகனை வைத்துக் காப்பதாகிய சகடயூகம் வகுக்கவும்; யாவருஞ் சகல வாத்தியங்களு முழக்க, சகல அரசர்களும் நெருங்க, பல விருதுகள் பிடிக்க, பலவிதக் கொடிகளும் பிடிக்க, இந்த ஏழாம்போரை இனிது முடிக்க வேண்டுமென்னும் எண்ணத்தோடு பகையை மேற்கொண்டிருந்தார்கள்.

இந்தப்படி இருதிறப் படைகளும் யூகங் கட்டி வெற்றிக்கொடி நாட்டி விருது சின்னம் முழக்கிச் சேனதிபதி இருவரும் முனையில் வந்து நின்று முடிசாய்த்துக் கொடியாய்த்தார்கள். உடனே அந்த இருபடைகளுங் கைகலந்து எவர்களுக்கு எவர்கள்மீதில் பகையோ அவர்களை அவர்கள் போய் மடக்கிக்கொண்டு அண்டர்கள் யாவரும் ஓடுங்க, எண்டிசைப் பாலரும் நடுங்க, அவனி யனைத்துங் குலுங்க, சிவனும் விழித்துக் கலங்க விரைந்தோடி யுத்தஞ் செய்தார்கள். அதிரதர், மகரதர், முதலியபேருங் கண்களிற் றீப்பொறி யுதிர

அம்புகொண் டெய்தார்கள். தேர்களோடுந் தேர்களும், யானைகளோடு யானைகளும், குதிரைகளோடு குதிரைகளும், பதாதியரோடுப் பதாதியரும் இப்படி மாறிமாறிப் பகைவர்கள் சீறிசீறிப் போர்புரிந்து வருங்காலையில், சத்துருக்களழியவும், சகல வியாதிகளொழியவும், பூதப்பிரேத பிர்மராக்ஷதப் பைசாசகண முதலிய கிரகங்களெல்லாம் வாய் திறந்து மொழிந்து கழியவும், அரைத்துப் பூசினுல் அஸ்திபதற்றிய ஆருப்புண்களெல்லாமாறவும், இன்னும் அநேக காரியங்களுக்கு உபயோகமாகியிருக்கிற வாசனை பொருந்திய வேப்பம்மாலையையணிந்த மீனக்கொடியோன் வழுதி, பஞ்சவன் - மாறன் - உகிதன் - செழியன் - தமிழ்நாடன் என்று சங்கப்புலவர்கள் காரணப்பேர் இட்டழைக்கும்படியாகிய புகழ்பெற்ற பாண்டியராஜனுனவன், தனது அப்புப்படைகளும், வளைதடிக் கப்புப்படைக் கும்புகும்பாகக் கூடி, போராடும்படியாய் விடுத்துத் தானுஞ் சில கணைகளைத்தொடுத்து, துரோணுச்சாரியரை வளைத்து எல்லா அரசர்களிலும் மேலாகிய அக்கரை தனக்கிருக்கக் காட்டிக் கடும்போர் புரிந்தான். அது எதினுலென்ருல் பாண்டவர்களும், பஞ்சவர்தானும் பஞ்சவனுகையாற் பேர்ப்பங்காளி சம்பந்தம் வைத்துக்கொண்டு, பாண்டவர்கள் பொருட்டில் தன் பிராணனை எண்ணிப்பாராமல் அவர்கள் பகைவரை எல்லாம் படுகளப்படுத்தி யுத்தஞ்செய்து, தனது வில் - தேர் - சாரதி - குதிரை-மீனக்கொடி முதலிய யாவும் விருதாவிலிழந்து துரோணுச்சாரியினுலழிந்து, உதிரம் வழிந்து, உடலுடனுயிருமுலர உள்ளுடைந்து நாபிவரைக்கும் வறண்டுபோய் நாத்தடுமாறிப் பயந்து வியந்து ஓடினுன்.

## வீஷ்மருக்கும் விஜயனுக்கும் நடந்த விபரீதப்போர்

அப்பால் நான்காம்போரில் இராக்ஷசமாயையாற் கம்ப முறிக்கும் யானைக்கும்பாக வடிவெடுத்துப் பகதத்தனுடைய யானைக் கூட்டங்களை யெல்லாம் பதறக்கதறச் சிதறவுதறி மாய்த்துப் புறமுதுகிடாமற் ஜெயித்த விக்கிரமிகுந்த கடோற்கஜக்காளையான்வனும், நேற்றையப் போரில் மாயைபோலே வந்த வீராள் முதலிய யானைப்படைகளையெல்லாம் நிமிஷத்திற் செயித்துப் பின் வாங்காமல் வெற்றிகொண்ட அபிமன்னுவுங் கூடிவந்து துரோணுச்சாரியருக் கெதிரேறிச் சீறினுர்கள். இதன்றியும், நீலமேகம்போன்ற தேககாந்தியையுடைய நேடுமாலுக்குத் தம்பியாகிய சாத்தகியானவர் போர்முகத்திற் புகுந்து நேரிட்ட பேரைப் பிளந்து வருங்காலத்தில், சதாயுனென்பவன் எதிர்த்துக் கணைகளைத் தாக்க, அவைகளை யெல்லாம் பொடியாக்கி அவனுடைய கிரீடமுடியும், தேரின்கொடியும், பூமியிற்படியும் நெடிய அம்புகளினுல் அறுத்துத் தள்ளி, அவனுடைய தேகத்தையும் மோழையாக்கியபோது, சற்றுநேரமும் யுத்தபூமியில் நிலைத்து நிற்கமாட்டாமல், அந்தச் சதாயுவென்பவன் பதாதியாயோடினுன். மேலும், சகுனியும் அவன் சேனைகளும் வீமசேனனுடன் எதிர்த்துப் போராடி வீமனுல் அடிபட்டு ஓடிப்போனுர்கள். அப்போது சல்லியராசன் ஓடிவந்து அவ்வீமன்மேற் சமர் தொடுக்க, உடனே வீமன் அவனை வில்முதலிய வீரங்கள் விடுத்து வெறுங்கையோடு நிலம் பாய்ந்தோடும்படிக்கு வெற்றிகொண்டு வீரமாலையணிந்தான். இப்பால், மகமேருவையொத்த தேரை உலகளந்த தாளினையுடைய சாரதி செலுத்த, இந்திர குமாரனுகிய சயந்தனைப் போல் அந்த ரதத்திலேறிவரும் அருச்சுனனுனவன், நால்வகைச் சேனைகளுஞ் சூழும்படியாகச் சென்று திரிபுர தகனனைப்போல் நின்ற வீஷ்மரை வளைத்துக்கொண்டு சரமாரி விடுக்க, அவருங் கணைமாரிதொடுக்க, இருவருமெதிர்த்து இருதிறவிற்களும் வளைத்து ஒருவர் விட்டபாணம் ஒருவர்பேரிற் படாமற் றடுத்து ஒவ்வொரு சரத்திற்கு ஒவ்வொரு சரமாக விடுத்து கெடுத்து, லகுவம்பு-பிருவம்பு-முதலிய சத்துரு மித்துருக் கணைகளைத் தாக்கி, புத்திரமித்திரக் கிளைகளைப் போக்கி இவரிருவரும் புரிந்த போர்வல்லபத்தை இன்னவாறென்று எண்ணவும்படாது. ஒருவருக்குச் சொல்லவும்படாது.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராசனே! ஆகிலும் ஒருவாருகச்சொல்லி உவமிக்கலாமென்ருல், எனக்கு ஒரு நாவும் ஒரு வாயுமேயல்லது வேறில்லை. ஆனுலும் ஒரு உபாயமாய்ச் சொல்லுகிறேன்; எப்படியென்ருல், தேவசேனுபதியாகிய மயில்வாகனக் கடவுள் போர்புரிந்த காலத்தில், மும்மதங்கொண்ட யானை மீதேறிவந்த தாருகனைப் போலும், அப்பால் சுப்பிரமணிய சுவாமியைப் போலுமிருந்தது. மேலும் என்னுசையடங்க இன்னெரு உபமானஞ் சொல்லுகிறேன் கேளும்;

அதென்னவெனில், மேகநாதனாகிய இராவணியும் இலட்சுமணனும், தசக்கிரீவனும் ஸ்ரீ ராமரும் போர்புரிந்த தன்மைபோலிருந்தது. இப்படி போர் செய்கிறபோது யானைப்படைகளுக்குள் யானைப்படைகள் புண்பட்டுப் பிராணன் விட்டுப்போகவும், தேர் நிரைக்குள்ளே தேர் நிரைகள் சிதைந்து முறிந்து புதைந்து தாழவும், குதிரைக் கூட்டத்துக்குள்ளே குதிரைக் கூட்டங்கள் குற்றுயிர் குறையுயிராய்ச் சுற்றிலுங்கதறிச் செத்துவிழவும், சாரதிக் குட் சாரதிகள் தலைபோல் எழுந்து தனித்து வீழ்ந்தழவும், இவ்விதமாக ரணக்களத்திற் சேனைக ளிறந்துபோகும்படியாய் வீஷ்மாச்சாரியரும் விஜயனும் புரிந்த யுத்தத்தை விரிவாய்ச் சொல்லுவோமாகில், எட்டுத்திசைகளும் பசபசவென்று விழிக்கும். சொல்லவென்றாலோ நாவெழாது ஆனதாற் குருபூமியில் இருபக்கத்திலும் நிறைந்துநின்ற இருவர் படைகளிலும் பொருந்திய வீரர்களில், இவ்விருவருடைய பாணம் பட்டிறக்காத பேர்களில்லை எதிர்த்துப் போர்புரிய மாட்டாமல் ஓடினபேர்களும் ஒற்றைக்கையற்ற பேர்களும், இரண்டு கையற்ற பேர்களும், மார்பு கிழியப்பட்ட பேர்களும், புயமறுபட்ட பேர்களும், ஆயுதமற்ற பேர்களும், சிரமற்ற பேர்களும், கால்துணிந்த பேர்களும், வல்லமைகெட்ட பேர்களும், வில்லழிபட்ட பேர்களும், பிணமலைகளிற்போய் பதுங்கினபேர்களும், பயந்தோடினபேர்களும், அயர்ந்து வாடின பேர்களும் உயிரழிந்த பேர்களும், உடலழிந்த பேர்களுமாய்ப் போர்க்களத்தி லிறந்தார்கள்.

ஆனாலவர்கள் பட்டபாட்டைப் பலவாறாகச் சொல்லுவதிலும் ஒருவாறாகச் சொல்கிறேன் கேளும். அஃதெப்படியெனில், ஈரம் வற்றிய சருகைப்போன்றது அவ் விருதிறச் சேனைகள். அந்தச் சருகை யெறிக்கப்புகுந்த பெருநெருப்பையொத்தது இரண்டு வீரர்கள் தொடுத்த சரங்கள். ஆதலால் இனி வேறு யுத்தத்தின் பெருமையை நான் சொல்லத்தக்கதுமில்லை. நான் சொன்னபோதிலும் நீர் கேட்கவேண்டு மென்னும் ஆசையு மிராது. தேவர் முதலிய யாவரும் பார்த்துச் சலிக்கும்படியாய் விஜயதீரனும் வீஷ்மவீரனு முனைந்துப் போர்புரிந்த காலத்தில், திக்குகளெல்லாமிரத்தவெள்ளமாய் பாய்ந்து, சிதைந்து, வழிந்தோடியது. அவ்விடங்களில் தலையறுந்த கவந்தங்கள் தொகையிறந்தாடின. இத்தன்மையாகச் சொல்லிய வெம்போர்க் களத்திற் குறைவறச் சண்டையை நிறைவுறச்செய்து, அபரிமிதமில்லாமலழித்த ஏழாம்நாட்போரை எடுத்துப்பார்க்கிலும், ஆறுபங்கு அதிகமான பேரை இன்றழித்துக்கொன்றார்கள். ஓ அரசனே! இன்னும் கேளும். பாரிய வாளாயுதத்தாலும், கூரிய வேலாயுதத்தாலும், பகபகவென்றெரியும் பகழியின் முனையாலும், கரகரவென்றுழலும் கதிர் நேமியினாலும், அடிபட்டு முடிபட்ட வீரர் முதலாகிய பேர்கள் வீரசொர்க்க வழிநடந்து மேனிவருந்தி இளைத்து வேதனை மிகுந்து களைத்து யாவரும் ஒன்றாய் நெருங்கிப்போனார்கள், அதுகண்ட சூரியனானவன் போனவர்கள்போக மிகுந்திருக்கின்ற ஏனைய சேனைகளைப் பார்த்து, ஓ படைவீரர்களே! நீங்களும் மெத்தப் பிரயாசை எடுத்துக்கொண்டு உடல்வருந்தி யிருக்கின்றீர்கள். ஆகையால் உங்களுடைய பாசறைக்குப்போய் சேர்ந்து இளைப்பாறி, நாளைப்போருக்கு வந்துவிடுங்கள் நானும் போகிறேனென்று சொல்லி இருவகைப் படைகளுக்கு சாக்ஷிபூத யஜமானனாக விருக்குமோர் பெரியவன், அப்படைகட்காக்யாபித்துக் கரங்களைச் சாய்த்துக் காட்டிப் போகுமாறுபோல ஆரவாரங்கொண்ட மேற்றிசை யாழியிற் போயடைந்தான்.

இந்தப் பிரகாரஞ் சூரியன் அஸ்தமித்தவுடனே மாலைக்காலத்தைக் காட்டச் செவ்வானம் வந்தது. அந்தச் செவ்வானம் யுத்தகளத்திற் கொப்பா யிருந்ததென்று உவமிக்கலாம். அஃதெத்தன்மையெனில், சமுத்திரம் போன்ற செந்நீர்ச்சிவப்பாலும், அரசணிந்த ஆபரணகாந்திக் கற்களாகிய நக்ஷத்திரங்களாலும், கறுத்த யானைப் பிணங்களென்னும் மேகஜாலங்களாலும், யானைத் தந்தங்களாகிய வானப்பிறை நிலவினாலும், போர்புரியும் பூமி நெடுந்தூரப் பார்வையினாற் புகை சூழ்ந்ததுபோலத் தோன்று மாலைப்போதினால், யுத்தபூமி செவ்வானத்தை யொத்திருந்ததென்றுரைக்கலாம். அரசனே! இதன்றியும் ரணக்களத்தில் நிறைந்திருக்கு மிரத்த வெள்ளங்களே பாற்கடலாகவும், இறந்துபோன அரசர்களுடைய உயர்ந்த தேகங்களே வானமளாவிய மந்திரகிரியாகவும், யானைகளின் மணிக்குடர்களே வாசுகியாகிய கயிறாகவும், வெள்ளைக் கொடிகட்டிய ஸ்தம்பமே சந்திரனாகிய தூணாகவும், தேர்ச்சக்கரங்களே மந்

திரகிரியைத் தாங்கும் கூர்மமாகவும், மாமிச முதலிய நிணங்களே ஓஷதியாகவும், இருபுறத்திலும் நின்று இழுத்துக் கடைகின்ற பிசாசுகளும் பூதங்களும் ஆதியில் அமுதங்கடைந்த தேவர்களும், இராக்ஷசருமாகவும், அவ்வப் பிணங்களுடலிலுங் குடலிலும் பொருந்திய பிச்சாகிய நஞ்சைக் கண்டு அமரர் வருந்தியோடிய தன்மையைப்போல் அச்சங்கொண்டோடிய பேய்ப் பூதங்களாகவும் இருந்தது.

அப்போது பிச்சையெடுக்கும் பிரம கபாலங்கொண்டு துற்சினமாகிய பாம்புக்கச்சையுடுத்துப் பிச்சுப் பிடித்துத் திரியும் உருத்திரமூர்த்தியைப்போலொத்த வேதாளங்களோடிவந்து, அகங்கையால் வாரி அந்த நஞ்சையுட்கொண்டு அப்பாற் செல்லவும், மறுபடியும் அக்கடலை மத்திக்கும்போது மூளைகளாகிய அமுதங்களெழ, அந்த அமுதங்களை மோகினியவதார அரியைப்போலச் சில மோகினிகள் வந்து, பைசாசு பூதங்களுக்குப் பகுத்துக் கொடுக்க, அதிற் சில துஷ்டப்பேய்கள் கிட்டநெருங்கி அமுதங்களை கையேந்த, அப்போது சில குட்டப்பேய்கள் இவை துட்டப்பேய்கள் என்று சொல்ல, உடனே சட்டுவத்தாலடித்த அடியினுல் அவைகள் சொட்டைத்தலைப்பேய்கள் என்று பேர்கொண்டு துள்ள, அப்பால் மிகுதியாகிய அமுதமென்னும் மூளைகளை சிங்கவாகினியாகிய காளியிருக்கும் இந்திரலோகம் போலொத்த தலத்தில் வைத்து கெட்டிசெய்த உடனே அதைக்கண்டு சிலபூதப்பிரேத பைசாசங்கள் எனக்கமுதமில்லை யுனக்கமுதமில்லையென்று போர் புரிந்து, தோலுரிந்து, உடல் நெரிந்து, கண்பொரிந்து, கால்விரிந்து, ஆகவத்தில் விழுந்தழிந்த அக்ரமப்பேய்களனந்தமாய்த் திரிந்து நிணங்களருந்தி ஆடல் பாடலுடன் எங்கணும் பிரகாசித்துப் பேரொலி முழக்கிக்கொண் டிருந்தனுகள். பின்னுங்கடல் சரிந்த பிணங்களின் குத்துவாரத்திற் கூர்மையாகிய கோரப்பல்லுகளையுடைய நாய்கள், நரிகள் முகத்தைச் சொருகிக்கொண்டு பிடுங்கிக் கொள்ளமாட்டாமற் குரைத்துக் கூவுமுழக்கமும், அமர்க்களத்திலழிந்து கிடக்குந் தலைகளை எடுத்து அம்மானைுடி அதற்கு இசைந்த பாட்டுகளை பாடிக்கொண்டிருக்கும் பெண்பேய்களினுடைய கூக்குரலும், கொலுக்கொண்டிருக்கும் பகவதியாருக் கெதிரிலே பைசாசகணங்கள் கை கோர்த்துக்கொண்டு, விதம்விதமாகிய பவுரிக்கூத்தாடி வருமோசையும், துன்பத்தை விளைக்கும் நரிகளானது வீரர்களைப் புகழ்ந்து துதிகூறிக் கூவுங் கூச்சலும், உகாந்தக்கடல் முழக்கம்போ லிருந்தது.

அப்பாற் கழுகுகள்-கூகைகள்-காகங்கள்-பருந்துகள் இதுகளெல்லாஞ் சிறைவிரித்து நெருக்கமாய்ப் பறப்பது ஆகாயமளாவும்படி அமைத்த பந்தலைப்போலவும் அங்கங் கிறைந்து கிடக்கும் இரத்தினுபரணங்களே ஒளி மிகுந்த காடாவிளக்குப் போலவும், யானைக் காதுகளே தலைவாழையிலைபோலவும், யானை தும்பிக்கைகளே கெண்டிகைச் சொம்புபோலவும், வில்-வேல்-வாள் முதலிய ஆயுதங்களால் உழுத்துளைப் புண்வழியி லிருந்துவரும் வீரர்களுடைய மாமிசங்களே சட்ருசி பதார்த்த போஜனம்போலவும், மூளையு மினங்களுமே பருப்பு நெய் போலவும், கொள்ளிவாய்ப் பிசாசுகளே குத்துவிளக்கின் பிரகாசம்போலவும், அத்தக் களத்தி லுலாவிய பரிசனப் பைசாசகணங்கள் உபசாரஞ் செய்வது அர்ச்சுனராஜன் ஜெயம்பெற்றதைக் குறித்து வீரலட்சுமிக்கு விருந்து செய்வதைப்போலவு மிருந்தது. பேய்க்கணங்க ளருந்திய போர்க்களம் இன்னமு மெப்படியிருந்ததென்ருல், கிழிந்த பேரிகைக்குள்ளே சிவந்த இரத்தங்கள் ஓடும்போது குமுகுமு குங்குங் கும்மென்று முழங்கிய ஓசை முழவுவாத்தியம் போலும், பட்சிக் கூட்டங்க ளடித்துக்கொள்ளும் ரெக்கையினுசை, துருவதாளம்-மட்டியதாளம்-உருபகதாளம்-ஜம்பைதாளம் - திரிபுடைதாளம்-அடதாளம்-அருமையாகிய ஏகதாளம் என்று சொல்லும் ஏழு தாளங்களைப்போலும், கொள்ளிவாய்ப் பேய்கள் பந்தம் பிடிப்பவர்போலும், சில வெள்ளைவாய்ப் பேய்கள் தொந்தயுத்தஞ் செய்த வில்வீரர்கள் முதலிய போர்களின் ஆண்மிக்கையை எடுத்துப் புகழ்வது இசைப்பாடலைப் போலும், தலையற்ற கவந்தங்கள் கைநீட்டி யாடுவது முன்னே விருந்து சாப்பிட்ட வீரலட்சுமிக்குக் கச்சேரி வைத்துக் கணிகைமாதராடும் ஆட்டம்போ லிருந்தது.

இதன்றியும், தாய் தந்தையர் பிளந்து கொடுத்த தலைமூளைகளைத் தின்றுகொண்டிருக்கும் பேயின் பிள்ளைகளை உதிர வெள்ளத்தில் அடித்துக்கொண்டு போகாநின்ற யானைத் துதிக்கைகளை எட்டி யிழுத்துத் தவறிப் பள்ளத்தில் விழுந்து, இரத்தவெள்ளத்தி லழுந்திச் சுழலி லகப்பட்டுக்கொண்டு வருந்திய போது, கரையிலிருந்த அதன் தாய் தந்தை

கள் கைகொட்டிப் பார்த்துத் தேர்த்தட்டுகளை படகுபோல் விடுத்து, பாலா-பல்லயம் ஆகிய கொம்புகளை ஊன்றுகோலாகப் பற்றி, சுழியி லகப்பட்ட அப் பேய்க்குட்டிகளும், அவற் றின் தாய் தந்தையருங் கொஞ்சம் ஓசைகள் எல்லா முழக்கத்திலும் ஏழு பங்கு அதிகமா யிரைந்துகொண்டிருந்தன. அல்லாமலும், சில பேய்கள் இரத்தங்களை யள்ளி வாயாற் குடித்துக் கண்ணின் வழியே பெருகச் செய் யும் விஞ்சைகளைப் போன்ற விஞ்சைகளை அளவற்றனவாகச் செய்தும், சில பேய்கள் யானைத்தோலைக் கவசமாக வணிந்து, கேட யம் - வாள் முதலிய ஆயுதங்களைக் கொண்டு, நீங்கள் தேவர்களென்றும், நாங்கள் அரக்க ரென்றுஞ்சொல்லி, ஓரேற்பாடு செய்துகொண் டொன்றுடனொன் றெதிர்த்து ஆசையா யுத் தஞ் செய்தும், சில பேய்கள் நீ துரியோதன மகாராசன், நான் வீமசேனமகாராஜனென்று சொல்லிக் கையிற் கதாயுதமெடுத்துக்கொண்டு அக் கதாயுத்தமும், மல்யுத்தமும் புரிந்தும், சிலபேய்கள் வில்லைத்தாங்கி நாரிமாட்டி வெவ் விய கணைகளைப் பூட்டி அவ்விடத்தில் நிற் கும் வெறுந் தேரில் ஏறிக்கொண்டு நான் பிதாமகனாகிய வீஷ்மன், நீ நரனாகிய அர்ச்சு னன் நாமிருவரும் போர் விளைப்போம் வருக வென்று பொய்யாக விளையாடப்போய் அந்த வீரர் பேரைச் சொல்லவே மெய்யாக வினை மூண்டு, இருபக்கத்திலும் ஏராளமாய்ப் பேய் பசாசுகளைச் சேனைகளாக கூட்டிக்கொண்டு யுத்தஞ் செய்து, பேய்ப்பிணங்கள் போர் போ ராய்க் குவிய வெற்றி பெற்று, அன்று முதற் கொண்டு அவைகள் இரண்டு பிறிவாகவே யிருந்து சாயங்காலம் வரையிலும் பாண்ட வர்களும் கௌரவர்களும் போர்புரிந்து, பாச றைக்குப் போனபிற்பாடு. இந்தப் பேய்கள் பகைத்து, ஆயோதனம் புரிந்து கக்ஷி யிரண் டாகவே நிலைத்தும் இவ்வாறாகிய அந்தப் பேய்களின் விநோதமான காக்ஷிகள் பலவா யிருந்தன.

இதல்லாமலும், அலைகடலருந்திய அக ஸ்தியராற் கர்வ மடங்கிய விந்தகிரியைப் போல் மேலோங்கி வளர்த்து நின்ற ஒரு பெரிய டாகினியை ஒரு சிறிய டாகினி ஒரு சேதி சொல்லுகிறேன். ஒருவருமறியாமற் கேளென்று குனியச்செய்து, அதினுடைய தலைமயிரைப் பிடித்திழுத்துத் தரையிற்றள்ள, கீழே விழுந்த பெரியடாகினி மெள்ள வெழு ந்து கொழுத்துத்துள்ள, அது ஓடி உதிரப் பள்ளத்தில் அழுந்திக்கொள்ள, அது நெரு ங்கி இதை மெள்ளக்கிள்ள, இருவருக்கும் உடனே சண்டைமூண்டு அவ்விரண்டும் எதி ரெதிராகச் சாய்ந்துமாண்டன. வானவர் தான வர் முதலியோரும் இன்று நடந்த ஆர்ப்பாட்டக் கண்டு மனங்கூசி வருந்தினார்கள். காலதூதர் அவ்வவர்களுடைய உயிர்களை யோடியோடிப் பிடித்துக் கைசலித்தார்கள். இப்படி யிருந்த யுத்தகளத்தில், இருவர் படைகளும் மன்னர் முதலியபேரும் பெருங் கூச்சலுடனே போர் நிறுத்தும்படியாகிய பொம்மற் பேரிகையின் முழக்கங் கேட்டுத் தங்கள் தங்கள் சூலம் தோமரம் முதலிய படைகளை விடாமல், தேவ ரும் இராக்கதரும் ஒருவரோடொருவர் எதிர்த் துச் செயித்து திரும்பியதைப்போற் றிரும்பி, இன்று புரிந்த இகளைப்போ லென்றுமில்லை யென்றுசொல்லித் தேகவிடாய் தீர்த்துக்கொள் ளும்படியாய்த் திங்கள் குலத்திலுதித்த தங் கள் மன்னவர்களோடுங் கலந்து பாசறை போய்ச் சேர்ந்தார்கள். கேளும் ஜெனமே ஜெய மகாராஜனே என்று வைசம்பாயனர் சொல்ல, அரசன் வபுஷ்டா தேவியுடனெழு ந்து வணங்கிச் சோடச வுபசார பூசைகள் செய்து, எட்டாநாள் நடந்த யுத்த விபரத் தைச் சொல்லவேண்டும். வேதவேதியனே யென்று விசுவாசித்துக் கேட்க வைசம்பா யனர் சொல்லலுற்றார்.

ஏழாம்போர்ச் சருக்கம் முற்றிற்று.

---

இப்பால்,

## எட்டாம்போர்ச் சருக்கம்

### கண்ணன் துதி

கயம்படு மனதனுய் கண்ணிலா வரசன் மைந்தன், வயம்பட நினைந்துகங்குல் வகுத்த தோற்சூழ்ச்சிதன்னாற், பயம்படு மல்லரோடு பாதல மடிய நீண்ட, சயம்படு கமலத்தாளென் றலமிசை யகல்கிலாவே.

ஓ கடிகடிந்து செங்கோலைத் தாங்கிய கஜ துரங்க ரதமேலுற் றோங்கிய காவலனே! கேளும்: அந்தக் குருக்ஷேத்திரத்தை அடியிட் டளந்தவர்போற் சென்று, ஆகாயத்தி னள வையும் பார்ப்போமென்று மேருபக்கமாய்ச் சுற்றிக்கொண்டுபோன சூரியபகவானனவர்,

போன காரியங்களை முடித்துக்கொண்டு விரைவிற் கிட்டிசைக் கோடிவந்து, இனி நடக்கப் போகிறயுத்தத்தையும் பார்க்கவேண்டுமென்று இரவென்னுஞ் சந்தடியை விலக்கிக்கொண்டெழுந்ததைப்போ லுதயமாயினர். உடனே இருதிறப் படைமன்னரும் எழுந்து காலைக்கடனை முடித்துக்கொள்ள, சேனுபதியாகிய துஷ்டத்துய்மன் தனது சேனை மன்னர்கள் எல்லாருஞ் சேர்த்து ஜெயபேரி முழக்கிச் செருநிலத்திற்கு வரவும், செந்தூள் கருந்துளெழுந்து ஆகாய கங்கையி னரல்வரண்டு போகவும், அண்டர் முதலிய யாவருங்கண்டு ஏங்கவும், தரும பூபதி முனைந்து தூசி முனையில் வரவும், ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியி னிஷ்டப்படிக்குச் சகடயூகங்கட்டிச் சர்வ வாத்தியங்களும் முழங்க ஆயுதபாணிகளாய்ப் பாண்டவர்க ளிருந்தார்கள். இப்பால், ஐயா அவர்களாகிய வீஷ்மாச்சாரியார் ஏழாம் நாள் யுத்தத்தில் ஜெயித்த இறுமாப்பால் இன்றைக்கும் வெற்றி பெறுவோமென்று அளவிறந்த படைமன்னருடன் அமர்க்கள மடையவும்; இவர் அனுமதிப்படிக்குத் தூசி யூக மமைத்துத் தெரு நிறைந்த சுருல கெல்லாந் தயங்கும் படியாய் அரவக்கொடி தரித்த அரசரானவர், தானே முன்னிற்கவும்; தங்கள் தங்கள் படைகளோடு அதிரதர் முதலாகிய பேர் அணியணியாய் அமரவும்; அதுகண்டு சர்வாயுத பாணிகளாய் வீர சிங்கங்கள்போற் கெர்ச்சித்துக்கொண்டு சகல வாத்தியங்களும் முழங்கக் கௌரவர் வந்திருந்தார்கள். அப்போது இரண்டு சேனைகளும் அலையெறியுங் கடற்போற் புரண்டுநிற்குங் காலையில், சேனுபதிக ளிரண்டுபேருஞ் சேனையின் யூகத்தைப் பார்த்துச் சிந்தை களித்து, யுத்தபேரி முதலிய வாத்தியங்களை முழக்கிவைத்து, வீரர்கள் அனைவரும் வெற்றிக்கொடி யேற்றி யுத்தஞ் செய்யும்படி விளம்பினார்கள்.

### துரியோதனன் சகோதரரில் எண்மர்வதை

அந்த வேளையில் அரவக் கொடி பிடித்த துரியோதன மகாராஜனும், வீரகண்டைத் தரித்து, தீர விற் பிடித்து விஜயம் பெறக் கருதிய புஜபலத் தம்பிமார்களும், சுஜனத்திற் சிறந்து மிகுந்த துணைவராகிய வேந்தரும், சூறுவளிபோற் சுழன்றடித்து இறைந்து கொலை செய்யும் வில்லைத் தாங்கிப் பிறைமுகக் கூர்வாளிகளைக்கொண்டு கொடிமுடித் தேரேறி மார்பிலணிந்த மணிக்கவசத்தோடு மடமட வென்று தேர் செலுத்திவந்து வாயுபுத்திரனுகிய வீமசேனனை வளைத்துக் கொண்டு மலைப்பகழி - மலர்ப்பகழி - மணிப்பகழி - மதிப்பகழி - மழைப்பகழி முதலிய சரங்களால் உடலுருவ எய்தார்கள். அவர்கள் விட்ட அம்புகளை எல்லாந் தோள்வலியிற் சிறந்த அவ்வீமசேனனுனவன் தும்பு தும்பாகச் செய்து, எதிரில் நின்ற துரியோதனனை ஏறப்பார்த்து, ஓ அரசே! நீ என்ன ஆசையாக என்னைத்தேடி ஓடிவந்தாயோ? இவ்வளவு அன்பாக என்னை நாடி இத்தனைகாலையில்வந்த உன்னை வெறுங் கையோடு அனுப்பாமற் கொஞ்சம் போணி பண்ணி யனுப்புகின்றேன் இதோபாரென்று இருமுகமாகிய எட்டுச் சாயகங்களை எடுத்து, ஓ துரியோதனனே! நீயானபடியால் வெண்ணெய்யை நீக்கி மோரைக் குடித்தாய், நாமப்படி பேதகம் நினைப்பதில்லை. மேலும், இப்போது உன் தம்பியரென்றும் என் தம்பியரென்றும் வித்தியாசம் நினைக்காமலும், உன்னிஷ்டப்படி நாமெல்லோரும் ஓரிடத்திலேயே கும்பாகயிருப்பது உத்தமமல்லவென்றும், (தேட்டத்தின்மேல் நாட்டம் வைத்துத் தேசஞ்செல்) என்னும் வாக்கியப் படிக்கும், உனது சொந்தத் தம்பிமாரரய்த் தற்காலத்திலென்னெதிரில் நிற்குமிவ்வெட்டுப் பேர்களைச் சொர்க்கத்திற் கனுப்பி, அந்த ஊர்வளம், நீர்வளம், நிலவளம் தலவள முதலிய யாவுமறிந்து, நானை யுனக்கும் நல்லயிடம் பார்த்து வைக்கும்படிக்கு போக்கி வைக்கிறேனென்று ஆக்கிரமித்து அந்த அம்புகளைத் தாக்கினான்.

இப்படியாகச் சொல்லி விடுத்த எட்டுப் பாணங்களால் துரியோதனனுக் கருகில் நிற்கிற அவன் தம்பிமார் எட்டுப்பேர்களின் கழுத்தறுபட்டுத் தலைநட்டு, உயிர்விட்டு, நிலைகெட்டு விழுந்தார்கள். இப்படிக்கு வீமசேனனால் முடிந்த சுந்தரன், விசாகக்கண்ணன், வீரவாசி, வென்துண்டன், மகோதரன், மகாவிந்தன், அந்தனன், ஆதித்தகேது இந்த எட்டுப் பேர்களினுடைய தலைகளானது, உயிருட னுகாயத்தி லெழுந்து செல்லவும், கைப்பிடித்த வில்லுடன் உடல் பூமியில் விழுந்து துள்ளவும், அதைக்கண்டு மன்னர் மன்னனுகிய வணங்கா முடியுடையோன் தேர்விட்டிறங்கித் தம்பியர் உடலைத் தழுவி யழுது உள்ளுடைந்து, உரனழிந்து, உயிர் சோர்ந்து உபகாரத்தாற்றேறி, இரதமேறி, குருகுலத்கோமானுகிய வீஷ்மாச்சாரியார் நின்ற இடத்தை

நோக்கிச் சென்று, செங்கமலம் போன்ற அவருடைய திருவடியிற் றனது திகழ்முடிசூடித் தேம்பி தேம்பியழுது, ஓ என் தேவனே! ஓ தந்தையாகிய சந்தனுமகாராஜ னிமித்தத்திற் சிறிய தாய் என்னும் பரிமளகந்தி யம்மாள் பெற்ற பாலனாகிய விசித்ரவீரிய மகாராஜன் என்னுந் தம்பிக்குப் பட்டாபிஷேக பாக்கியமெல்லாங் கொடுத்தருளிய புண்ணியவானே! ஓ பாரமார்த்தியான! ஓ என் பாட்டனே! எனக்குத் தெய்வமும், தேசிகனும், செல்வமும், சீரும், தாயும், தந்தையும் நீரே என்று நிசமாக நம்பிச் சத்துருக்களைச் செயித்துச் சகல வாழ்வும் பெறலாமென்று இருக்கின்றேன். ஐயா! இப்படிக்கிருக்க, நாலாம்நாள் யுத்தத்திலே நாயகமணிபோ லிருந்த ஐந்து தம்பிமார்களை அமரருலகிற் கனுப்பியது போதாமல், இடும்பி கொழுநனாகிய வீமசேனனானவன், இன்று என் கண்ணுக்கெதிரே எட்டுப்பேர் தம்பியர்களை இவ்வுலகத்தைவிட்டு அவ்வுலகத்திற்குக் குடியாக்கினனே; ஓ மண்குலத்துதித்த என் குலத்தெய்வமே! இந்த போர்முகத்தில் தேவரீர் சேனாபதியா யிருப்பதினால், எனக்கும் என் தம்பிமார் முதலிய கும்புகளுக்குஞ் சாவென்பதுவே இல்லையென்று தயிரியமாய்த் திடங்கொண் டிருந்தேனே; ஐயோ! அத்தயிரியமுந் திடமுந் தண்ணீரில் விட்ட தயிலம்போற் சிதறிப் போயினவே? ஓ தாஷ்டீகமாகிய வீஷ்மனென்னுந் தன்யனே! என சித்திரப் பாவைபோற் றேம்பி ஓலமிட்டு, மெய்யுணர் வழிந்து, விசனமேலிட்டு, கடலிடத்திருந்து முத்துக்க ளுதிருந் தன்மையைப் போல் கண்களிலிருந்து கலகலவென்று கண்ணீருதிர்த்து மண்ணைத் துழாவி, மதிமயக்கங்கொண்டு மதிகுல மன்னனாகிய துரியோதன மகாராஜன் வாடினன்.

அதைக் கண்ட வீஷ்மாச்சாரியார் அவனைத் தமது வலது கரத்தா லணைத் தெடுத்து, மண்ணைத் துடைத்தவன் மதிவாட்டம் நீக்கி, அப்பா என் பேரனாகிய குருகுலச் சிந்தாமணியே! நீ இதற்காகக் கொஞ்சமேனும் விசனப்படாதே உத்தம க்ஷத்திரிய குலத்தில் பிறந்தவர்கள் பெறவேண்டிய செல்வம் ஒன்றுண்டு. அதாவது, படையெடுத்துப் பகைத்துவருஞ் சத்துருக்கள் பலங்குன்றி, உதிரஞ் சுண்டி, மறைவிலொன்றி, அப்பா! இப்போ பிராணன் தப்பிப் பிழைத்தாற் போதுமென புறமுதுகிட்டு ஓடும்படியாய் மேலாகிய அஸ்திர பாணங்களினாலும், இலையாகிய வேலாயுதங்களினாலும், முத்தலையாகிய சூலாயுதங்களினாலும், சாணைபிடித்த வாளாயுதங்களினாலும் செயித்து, மிகுந்த செயந்தைப் பெற்று புகழ் பெறத்தக்கது. அப்படி பெறுவதற்குந் தைரியம் விட்டு வாடாமல், தானையுடன் போரை விட்டோடாமல், திடவீரனாகச் சண்டை செய்து நின்று, படைவீரர்கள் தொடுத்து விடுஞ் சரங்களால் - உரம்வேறு-சிரம்வேறு - கரம்வேறு - புரம்வேறு என்னும் படிக்கு உடலுங் குடலும் வேறுவேறாய், தாளுந்தோளுந் தாறுமாறாய் முன்காயம் வாங்கிப் பின்காயம்நீங்கி, எவர்களுங்காண முனை முகத்தில் விழுந்துகிடக்கும் பெரும்பேறாகிய செல்வமும் புகழ்ச்சிகுன்றாப் பெருஞ்செல்வம் மற்றை செல்வமெல்லாம் இகழ்ச்சிமறையாக் கொடுஞ் செல்வம்.

ஓ இறைவர்க்கிறையாகிய என் பேரனே! இன்னுங்கேள்; இல்லாத பெருமைகளை இருக்க விளக்குந் திரவியத்தை விசேஷித்துப் பெற்ற மாந்தர்கள் எல்லா இன்பங்களையு மநுபவிப்பதற்குப் பயப்படமாட்டார்கள். வழித்துணையாகிவரும் மேலாகிய தர்மத்தைச் செய்வதற்கு நயப்படமாட்டார்கள். இதன்றியும், கொலை - களவு - கள் - காமம் -கோபம்-பாவம்-லோபம் - மாறுபாடு - வல்லபம்-போக்கிரிபாட்டம் - லக்ஷயமற்ற டம்பாசாரம் - பெரியோர் முதலிய உரியோரை இகழ்ந்து பேசுந் துற்குணம் இவைகள் முதலிய பொல்லாங்கு செய்வதற்கு மஞ்சமாட்டார்கள். அதேனப்படி புண்ணியவசத்தாற் பொருள்கிடைத் திருந்துந் தெளிவினால் அருளைப்பெறாமல் மருளைப் பெற்று மதிமயங்குவாரென்றால், (முந்திரை மேற்காணி மிகுமேற் கீழாந்தன்னை, இந்திரனாக எண்ணிவிடும்) என்றும், பொருளல்லவரைப் பொருளாகச்செய்யும் என்றும், இருந்தனம் படைத்தமாந்த ரின்பமு மறனுஞ்சார் என்றும், செல்வம்வந்துற்றகாலைத் தெய்வமும் சிறிதுபேணார் என்றும், அற்பரானவர்க்குச் செல்வம் அல்லது பகைவேறுண்டோ என்றும், பொன்னுலகக் காணியினாற் புரந்தரன் புன்கணானான் என்றும், தனமெச்சனு மதமிச்சினு என்றும், தான்கிடந்த கிடையும், வலியன் குத்தும், வணிகன்வீட்டில் தவிடுவாங்கித்தின்ற நிலையுமறந்து, பொன்னைக் கண்டு பொங்கினோர்க்குப் போமேவாழ்வு என்றுஞ் சொல்லுவார்கள். அதுபோற் கர்வத்திற்கு

முதற்காரணமாகிய திரவியம் வரும்போது, இல்லாத சிங்குநாதத்தைக் காட்டிக் கூடப் பிறந்தபேர்களையு மோட்டிவிட்டு, மதமாகிய துணைவரை எல்லாம் இதமுடனே கூட்டிக் கொண்டு வாழ்வார்கள்.

இதன்றியும், மூத்தவளாகிய மூதேவிக்கு பஞ்சகோசனென்று ஒரு பிள்ளையுண்டு. அந்தப்பிள்ளையானவன் சின்னம்மாளாகிய இலட்சுமியினிடத்தில் வளர்ந்துக்கொண்டு வருவான்; சின்னம்மாளானவள் ஒருவருக் கருள் செய்து செல்வந்தருங் காலத்தில், மேற்சொல்லிய பஞ்சகோசனுங் கூடப்போய் சின்னம்மாள் தயைசெய்த அம்மனிதனுடைய தோளிலேறிக்கொண்டு தனது பஞ்சகோசத்தை பிடித்து அவனுடைய இரண்டு கண்களில் இரண்டு கோசமும், இரண்டு காதில் இரண்டு கோசமும், வாயிலொரு கோசமும் வைத்து அடைத்து விடுவான். அதனால் செல்வம் வந்தவர்களுக்குக் கண்ணுந் தெரியாது; காதுங் கேளாது; வாயும் பேசாம லிருப்பதென்று முன் னூலினுஞ் சொல்லி யிருப்பதினால், அந்தப் பணக்கொழுப்பைப்பற்றி பாவ புண்ணிய மெண்ணிப் பார்த்துப் பயப்பட மாட்டார்க ளென்பது கருத்து. ஆனால், உலக மெல்லா மிப்படிதானோ வென்றால், (அடக்கம் அமரருளுய்க்கும்) என்னும் நீதியின் படிக்கும்; (சக்கரச் செல்வம் பெறினும் விழுமியோ ரெக்காலுஞ் சொல்லார் மிகுதிச்சொல்) என்னும் நீதியின்படிக்கும், செல்வப் பொருளுங் கல்விப் பொருளுஞ் சீர்பெறப் பெற்ற சீமானாகிய சத்திய நன்னெறியுந் தருமமும் உடைய கர்வமில்லாத உத்தமர்களுஞ் சிலர் உண்டாயிருப்பாரென்று ஒருவாறாகச் சொல்ல வேண்டியதே. ஆதலால், இவ்வகைப்பட்ட நீதிகளை எத்தனையோவிசை பெரியோர் சொல்லியுந் தேளாமற்போன காரியத்திற்குக் காரணப்பயன் இப்போது கைகூடி வருகிறது. என்ன செய்யலாம்? க்ஷத்திரிய குலத்திற் பிறந்த உத்தமர்கள் எத்தனை அபஜெயம் வாய்த்தபோதிலும், சாவுக்கும் பிழைப்புக்குந் தளராமல் ஒட்டி, யுத்தம் பண்ணுவதற்குப் பயப்பட மாட்டார்கள். அதேனென்றால், ஜெயம் பெற்றாலும் புகழுண்டு. அபஜெயம் பெற்று இறந்தாலும் வீரசொர்க்க முண்டென்பது கருத்து.

ஓ என் குலக்கொழுந்தாகிய இறைவனே! இவைகளெல்லாம் பெரிதல்ல. இன்னொரு காரியஞ் சொல்லுகிறேன் கேள். நான் சொல்லும்படியாகிய வாக்கியம் உன்னுடைய இரண்டு காதும் ஏற்றுக்கொள்ளாது. ஆயினும், "அரிந்ததொன் றறியானெனினு மூறுதியுழையிருந்தான் கூறல்கடன்" என்று நான் சொல்லவேண்டிய கடமையும், முறமையும், தர்மமும் இருப்பதினாற் சொல்லுகிறேன். அதாவது, பூர்வத்தில் அர்சாக்ஷி செய்துக் கொண்டுவந்த இக்குலத் தரசர்களிலும், மற்குலத் தரசர்களிலும், எவரேனும் முறைதப்பி நடந்தார்களா? அல்லது நடந்தவர்கள் உண்டா? அப்படி யிருக்க, விதிவிலக்குக்கு விலக்காகிய கருமங்களை நீ நடத்தி யிருக்கின்றனை. அஃதியாதெனிலோ, பல தேசத்தரசர்களும், பங்காளிகள் முதலாகிய பல பாஷை மன்னர்களும், உனக்குப்பின்னவருமாகிய தம்பியர்களும் நெருங்கி நிறைந்து நிமிடீகரித்திருக்கும் ராஜசபையில் குற்றமற்ற அருந்ததியாகிய குந்தி மைந்தர் மனைவியை, குருகுல பதியாகிய கோவேந்தன் மருமகளை, குமுதநாதகுல அதிபதிபெற்ற குவலயத்து வணங்காமுடியுற்ற துரியோதன மகாராஜனென்னும் விற்பன்ன குணவானாகிய உனக்குத் தாயைப் போன்ற அண்ணியை முன்பின் யோசியாமல் வெகு துராக்கிரதமாய்ப் பராக்கிரமித்து இழுத்துவந்து நிறுத்தி, அலமலக்க வலித்து வஸ்திர பங்கஞ் செய்தகாலத்தில், அந்தப் புண்ணியசாலியினுடைய வயிறெறிந்து, அவளழுத அக்கினிச் சலமானது நமது ராஜசபையில் விழுந்ததே. அந்தக் கண்ணீர் இது மாத்திரமா செய்யும்? அரசனே! இன்னம் எங்கே கண்டாய்? தேருக்குள்ள சிங்காரம் முன்னும் பின்னும் இருக்கிறது. இப்போது என்ன முடிந்தது? ஒன்றுமில்லை ஒரு மோர்ந்தைத் தண்ணீர் போச்சுது. இன்னும் ஒரு முடாத் தண்ணீரிருக்கின்றதே? ஓ முதல்வனே! இன்னும் அனேகம் விளையப்போகிறது. அதற்கெல்லாம் நீ என்ன செய்யப் போகின்றாய்? ஒன்றும் ஆலோசிக்க வேண்டாம்.

மேலும், வாய்வைப்போற் பறக்குங் குதிரைப் பூட்டிய தேரேறி நடத்துங் கொடைக் கதிகாரியாகிய கர்னனும், மதப் பெருக்கங் கொண்ட பட்டத்துயானை ஏறிவரும் மதியூகியாகிய சகுனிமாமனும், இளவரசாகிச் சகல கேள்விகளுங் கேட்டுணர்ந்த உன் தம்பி துச்சாதனனும், எல்லாத்திற்கும் பெருந்தலையாய்க் கனவானாயிருக்கிற நீயும், நீங்கள் நாலுபேரும்

யோசித்துக் கொண்டிருக்கும் உங்கள் எண்ணங்களெல்லாம் நாளைக்கேமுடியப்போகிறது. அவையெல்லாம் கஷ்டமில்லாமற் கைவல்யமாம். ஆனால், உனக்குச் சிறிய தந்தையாகிய விதுரன் அவனுக்கு அண்ணன் பிள்ளையாகிய நீ மரியாதை யில்லாமற் சொன்ன கொடுஞ் சொல்லைக் கேட்டுச் சகிக்கமாட்டாமல், வில்லை யொடித்தெறிந்து மனம் ரோசி விரக்தனாகப் போய்விட்டான். அஃதல்லாமலும், கர்னனனவன், நானிறந்துபோன பிற்பாடுதான் அதிரதத்தலைவனாகி யுத்தஞ் செய்வதன்றி இதன்மத்தியிற் போர்புரியேனென்று சபதம் பேசி, நான் சாகிறவரைக்கும் எதிர்பார்த்துக் கொண்டு பாசறையி லிருக்கின்றான். ஆகையால், நமக்குரியவர்கள் வேறே ஆரிருக்கின்றார்கள்? அப்பனே! மேலும், இப்போது போர் செய்யும் விஜயனும், வீமனும் வெகுண்டு எழுந்து வந்தகாலத்தில், எதிரிலிருக்கும் உன்னையும் என்னையும் விட்டுவிட்டு வேறு லக்ஷ்யம் வைக்கமாட்டார்கள். அன்றியும், சத்தியமே நித்தியம்; தர்மமே ஜெயமென்று வளர்த்துவரும் நீதியையுடைய பொய்யில்லாமெய்யைப்பெற்ற தருமதேவதையும் அவர்களிடத்தில் இருக்கிறார்கள். அந்தத் தருமத்திற்கும் சத்தியத்திற்கும் துணைக்காரணமாகிய துளபமணி மாலையைபணிந்த திருநெடுமாலும் அவிடத்திலிருக்கின்றார். வெற்றி பெறுவதற்கு முதன்மையாகிய பொருளிரண்டும் அவர்களிடத்தில் குடிகொண்டிருந்ததினால், இந்த யுத்தங்களிற்றப்பி உயிர்பெற்றிருந்து வாழ்பவர்கள் பாண்டவர்களென்றும், இவ்விடத்தில் வருந்தியழிந்து மாய்ந்து போகின்றவர்கள் மற்றவர்களென்றும் தெரிந்துக்கொள்ளுக.

ஓ மகாராஜனே! நானிப்போது உனக்கு சொல்லிய இவ்வாக்கின்வண்ணம் ஜீவன் முத்தராகவுஞ் சிரஞ்சீவிகளாகவு மிருக்கப்போகிற புண்ணியவான்க ளெவர்களோ? அவர்கள் அதைக் காண்பார்கள். அப்பனே! அப்படியிருக்க, உன் தம்பிமார்கள் இப்போ திறந்ததைக் குறித்து விசனப்படுகின்றாய்; உன் தம்பிமாரை இறக்கச்செய்து இவ்விடத்தி லினித் தப்பிப் பிழைத்திருக்க நினைத்தவர்கள் யார்? ஐயோ! பிழைப்பா ரொருவருமில்லையே; ஆதலால், துயரத்தை விட்டுவிடு; கவலைகொள்ளாதே; உனக்குறுதியாக வேண்டிய காரியங்களை யெடுத்துச் சொன்னேம்; நீ தைரியம் விடாதே; சாகிறவரையிலும் பிழைப்போமென்பது தேகசுவாபீகம். ஆகலால், உன்மனந் தளராமல், முந்திவந்தடிக்கும் பகைவருக்கு முன்சென்று நின்று, முனைந்து வரும்படியாகிய முனைக்காரரை முனைமுகத்தில் வென்று ஜெயம் பெறுவதொன்று; அல்லது அவர்களால் அபஜயமடைந்து அழியப்போகிற தொன்று; இவ்விரண்டையன்றி வேறொன்றுமில்லை. ஆகையால், அதிசீக்கிரத்தி லமர்க்கெழுந்துவா வென்றுசொல்லிப் படைமுகங் கலங்கப் பரிபூட்டிய இரதத்தைச் செலுத்திக் கொண்டு சூரியனைப்போற் றுலங்கிச் சென்றார் வீஷ்மாச்சாரியரானவர். அந்தச் சமயத்திற் கடோற்கஜக் காளையானவன் நிலைபார்த்து நெடுமூச்செறிந்து கோபித்து கறுவிப்பாணமுறித்துக் கொற்றவர் படைகளைப்பற்றி கிழிக்குங் கொடுமையையும், மதமாரிகளையுமுடைய யானைகளின்பேரி லேறிக்கொண்டுவரும் ஆயிரம் ராக்ஷசானும் அவர்களுக்கொரு தலைவனுமாக உருவமெடுத்து, துரியோதன ராஜனுடைய பேரணிகளையெல்லாந் தேய்ந்துறைந்த இருட்பிழம்பை போன்ற சேனைமேகத்தை யொப்ப வளைத்துக்கொண்டு ஆகாயத்திலிருந்து நக்ஷத்திரங்க ளுதிர்வதைப்போல் மணியணி மகுடமோங்கிய மன்னர் முதலிய படைகளை மாய்த்துவந்தான்.

### இராவான் வதை

இந்தப்பிரகாரம் இவனொரு பக்கத்தில் இராக்கத மாயையினாலாகிய யானைப் படைகளைக்கொண்டு அழித்துவரவும், இன்னொரு பக்கத்தில் நாககன்னி குமாரனாகிய இராவானனவன், காமரூபத் திறத்தினால் அநேகமாயிரம் பாம்பாக வடிவெடுத்து, பாம்புக்கும் எலிக்கும் பகையாகியதைப்போல் இருதிறப் படைகளும் எலிகள்போலேங்கி மயங்கும்படியாய் ரணக்களமெல்லாம் பாம்புமயமாய் நிறைந்து, துரியோதனனுடைய படைமன்னர் முதலிய வீரர்களெல்லாம் உருண்டு போகும்படியாய்ப் பாணப்பிரயோகஞ்செய்து ஒப்பற்ற யுத்தம் நடத்தினான். இவ்விடத்தில் இவர்களிந்தப்படி யுத்தஞ் செய்துகொண்டிருக்க, நந்தியா வட்டமாலையணிந்த நரேந்திரனனவன், வீஷ்மாச்சாரியர் கூறிய வார்த்தைகளைக் கேட்டு உடல்பதறி உயிரோய்ந்து உரங்கின்றி உகிர்ச்சுத்தியின்மேல் உரல்விழுந்த உபத்திரவம்போல் வருந்தி, ஒருவருடனு மொன்றுஞ் சொல்லாமல், வீமசேனனுக் கெதிரிற் சென்று மிகுபோர் விளைத்து, அவன் விட்ட

கணையாற் றுளைப்புண்டு யிளைத்து அயர்ந்த காலத்தில், வீமசேனன் வெகுண்டு ஒருபுறத்தினுழைந்து, அன்று பகற்போதைக்குள்ளாக எவரையும்வென்று முடிக்கிறேனென்று சமுத்திரத்தைக் காலிட்டு கலக்குந் தாளாண்மையுடையவனைப்போற் றராதலங்கலங்கித்தத்தளிக்க யுத்தஞ்செய்து வருங்காலத்தில், பப்பரதேசாதிபன் பிள்ளையாகிய மகுடவேந்தன், பல பெரும்படையுடன் கூடிவந்து, வீமனுடனெதிர்த்துக் கடும்போர்புரிந்து யிளைத்தோடிப்போனான். அப்படி ஓடினவனைக்கண்ட பகாசுரன் தம்பியாகிய அலப்புதனனவன் நீடிய கோபங்கொண்டு, துரியோதன மஹாராஜனையும்மற்றயிராக்கதச்சேனைகளையும்நோக்கி பூர்வத்தில் ஏகசக்ரபுரத்திலிருந்த என்தமையராகிய பகாசுரனைத் தருமனுக்கிளைய இவ்வீமன் கொன்றிருக்கின்றான். அந்தப் பழிக்குப்பழி இவனுடைய உடலை நான் பிளக்கிறேனென்று உறுதியாகச்சொல்லி, அரக்கப்படைகள் உரக்கக் கூவிக்கொண்டு வரும்படியாய் வீமசேனனுக்கெதிரில் வெருண்டோடி வந்து வளைந்த காலத்தில், மின்னலுடன் கூடிய மேகத்தைப்போல தான்கொண்ட பல்லுருவத்துடன் வந்து தகைந்து ஜாடினான் இராவானனவன்.

இந்த இராவானடித்த அடியில், துரியோதனனுக்குத் துணைப்பட்டுவந்த அலம்புதன் வருந்தி அவதிப்பட்டோ, அவனைச்சேர்ந்த அரக்கப்படைகளெல்லாருஞ் சிரக்கம்பஞ்செய்து இராவானை வளைத்துப் போர்புரியாநிற்க, அத்தருணத்தில் முன்னமிராவானால் அடிபட்டோடிய அலம்புதரானவர், மறுபடியுமெதிர்த்துவந்து பழுதற்றகுலத்துதித்த பாம்பின் குமாரனெடுத்த பாம்பாகிய பல்லுருவங்களுடன் பகைத்து போர்புரிந்து, அவ்விராவனெடுத்த மாயாரூபத்தை வெல்லவல்லபமில்லாமல் அஞ்சி நடுங்கி அபய ட்டோடி, இந்தப்பிரகாரம் பலவிதத்திலும் அடிபட்டு ஒடுங்கியோடிய அலம்புதனென்னுமிராக்கதரானவர் தனக்குள்தானே யோசித்து, இந்த இராவான் மாயையிற் பலகோடி பாம்புருவெடுத்து வந்து யுத்தம் பண்ணுகின்றானென்றுணர்ந்து இந்தப் பாம்புகளைக் கொல்லும்படியாகிய அநேக கருடரூபமெடுத்து வெப்பமாகிய வேகத்துடன் விண்ணெலாம் நிறைந்து, மேககர்ச்சிதம்போலிறைந்து விரைந்துவந்து, வட்டமிட்டுப்பறந்து, நிழலைப்பரப்பி, ரெக்கைக்காற்றில் மோதியடித்துக் கால்களிலுராஞ்சிச் சிதைத்துக்கொண்டு வந்தான். அப்போது கொடிய விஷங்களைக்கக்கிக் கோரைப்பற்களிற் கடித்துச் சேனைகளைக் கொன்று திரியுட புன்றலைப்பாம்புகளெல்லாங் கிறுகிறு விறுவிறுவென்று சுழன்று கறுகறுத்து, எரிந்து கரிந்து, பொரிந்து படம் விரித்து விடஞ்சொரிந்து, மேனிதிரைந்து ஒன்றுக்குள் ஒன்றடங்கும் பஞ்சபூதங்களைப்போலொடுங்கி, மாயை யடங்கிப் பாம்புக்கும்பெல்லாம் மடங்கிப்போயின. இராவானொருவன் மாத்திரம் அசைவற்று மிகுந்த பயங்கரமான நடுக்கத்துடனின்றான். அப்படி அடங்கி நிற்கும் இராவானை எதிரியான அலம்புதன் கண்டு கூர்மைகொண்ட வாளாயுதத்தைக் கைக்கொண்டு வீசிக்கொன்றான். அந்த அலம்புதன் இராவானை வெட்டியவுடனே, குருகுலாதிபன் முதலிய அக்ரோணி சேனைகளெல்லாம் வென்றோம் வென்றோமென்று கும்மிகள் கூத்தாடி தொந்தொந்தொந்தோமென துள்ளிக்கொண்டோடிச் சந்திரனைக்கண்ட சமுத்திர முழக்கம்போல் இறைந்தார்கள். ஓ அரசனே! இந்தத் துரியோதனன்படைகள் ஜெயித்துச் சந்தோஷத்தையடைந்தபோதிலும், இராவானனவன் அன்றையத்தினஞ் செய்த மாயாயுத்தம் போர் செய்ய வல்லவர்கள் யார்? அந்த யுத்த வல்லபத்தை இவ்விதமென்று எம்மனோராற் சொல்லுந் தரமன்று.

அது இப்படியிருக்க, கணுக்கள் வெடித்தோடிவருங் கரும்பின் ரசங்களால் நெற்பயிர் விளையும் நிலவளஞ் சேர்ந்த பாஞ்சால நாட்டார் பலரோடு துரோணாச்சாரியரும் அசுவத்தாமனுங் காலமே தொடங்கிய போர்முனை குலையாமற் கடுங்கோபத்துடன் போராடி, அப் பாஞ்சாலரில் வெகுபேர்பட்டழியும்படியாய்ப் பாணப் பிரையோகஞ்செய்து மடித்து, மற்றப்பேர்கள் புறமுதுகிட்டோடும்படியாக அடித்துக் கரங்களிற் கணையும் வளைந்தவில்லையும் பிடித்துப் போர்த்தலத்திற் புலிபோற் கண் சிவந்து புகுந்து வந்தார்கள். அந்தச் சமயத்தில், அலம்புதனால் இராவான் பட்டானென்று சேதி கேட்டவுடனே, பாண்டவர் பலரு மனநொந்து பதைக்க, அபிமன்னு ஒருவன் மாத்திரம் பிறப்பதும், இறப்பதும், புகழ்வதும், இகழ்வதும், பொங்குவதும், மங்குவதும், உடற்சுமைக்குரிய பெருமையென்று

தயிரியத்துடன் தமயன்மேலிருக்கும் பக்ஷத்தைத்தான் சொல்லிக் காட்டாமல், தான் செய்யுஞ் சண்டையாற் சொல்லிக் காட்டும்படியாய் தனது மணிததேரை விரைவாய்ச் செலுத்தச் சொல்லி வரிபொருந்திய வில்லை வளைத்துக் கொண்டு அரக்கப்படை முதலாயுள்ள அலம்புதன் மீதில் ஆயிரம் - பதினாயிரம் - ஐம்பது கோடி-எண்பதுகோடி என்றிசைக்கும்படிக்கு விசையுடளிருக்கும் வெகு பாணங்களை விதையைப்போல் விதைத்து, விளைவைப்போற் கதித்து மெலியச்செய்யும்போது, அசுரப்படைகள் பசலைபட்டழிந்து, அலம்புதனும் மாறவித்தை யொழிந்து, அலங்கழிந்து வாடி அரசர் முதலிய நால்வகைப் படைகளுங்கூடி, அபிமன்னன் விடும் பாணம்பட்டு யுத்தகளத்தை விட்டுப் புறமுதுகிட்டு ஓடினார்கள்.

### துரியோதனனுடைய சகோதரரில் எழுவர் வதை

அப்போது கேடில்லா வீரம்பெற்ற மாரனுக்கு நேரொத்த அபிமன்னுவானவன், சுழற்காற்றைப்போற் சுற்றி யடித்துக்கொண்டு வரும்போது, அலம்பதனால் இராவானிறந்தானென்னுஞ் செய்தியைக் கேட்டது முதலுண்டாகிய அடங்காத் துயரத்தை வீமசேனன் பொறுக்கமாட்டாமல், இரண்டு தந்தங்களுமிழந்து, முறண்டு கோபங்கொண்டெழுந்து விழுந்து, அழாநின்ற மும்மதம் பொழியுங் களிற்று யானைப்போல் நொந்து, தேகமுழுமையும் வெந்து, மனதிற்செநதீ யெழுந்து புளியமரப் பிரணியிற் பற்றிய பொறிபோற் பொறிகளைச் சிதறிச் செங்கல் சுழலச்சீறிச் சிங்கத்தைப்போல் நிலம்புதையவோடி அலம்புதனைத் தேடி வருகின்றான். அந்தவேளையில், துரியோதனமகாராஜன் கண்டு மிகுந்த கோபத்துடன் யுத்தஞ்செய்ய வருகின்றானென்றறிந்து, வேட்டையாட வந்தவர்கள் பேரிற் காட்டுப்பன்றி பல கும்பலைக் கூட்டிக்கொண்டு கோரப்பல்லைக் காட்டி எதிர்ப்பட்டால் எப்படியோ? அப்படிபோலத் தனது தம்பிகளையும் மன்னர்முதலாகிய படைக்கும்புகளையுஞ் சேர்த்துக்கொண்டு, பேரொளியுடன் ஆர்த்துச் சென்று சீறிப் புறப்பட்டான். இந்தப் பிரகாரம் விந்தகிரிக் கொப்பாகிய தேர்களும், யானைகளும், படைவீரர்களும் புற்றிலிருந்து ஈசற் பெரும்போர்க்கு புறப்பட்டதைப்போல் முன்னாதாக வந்து, பொன்மலை போன்ற வீமசேனனை வளைந்துக்கொண்டு பெரும் போர் விளைத்துப் பேருக்கொரு பாணம் விடுத்து அதிர்த்து வீமசேனனுடைய உடம்பைச் சல்லடைக் கண்களாய்த் துளைத்தார்கள். அப்போது வீமசேனன் அழலெழ நகைத்துத் தழலெழ விழித்து, தனுவை வளைத்து, கலை நாணிறுக்கி எண்ணிறந்த பாணங்களை எடுத்துத் தொடுத்து, விண்ணிறைந்த தேவர்கள் வியற்கவிடுத்துப் போர்புரியும் அவ்வெதிரிகளை இமைக்குமுன் கெடுத்து முடித்தான்.

அந்த வீமசேனனால் பெருபோர் விளைந்து, பலபேரழிந்து ஓடும்படியானதைத் துரியோதனனுடைய தம்பிமார்களாகிய தர்மவாக்கியன், குண்டலபோஜன், ஆதியக்கன், தீபநயனன், திம்மவாகு, குண்டலதரன், கருடத்துஜன் என்று சொல்லு மேழுபேர்கள் பார்த்து க்ஷாத்திரங்கொண்டு சங்கார கங்கபத்திரங்களை யெடுத்துத் தாக்கினார்கள். அந்தப் பகழிகளெல்லாம் நானாவித வழியாகப் பட்டொழியும்படியாய் வீமசேனனழித்து, பம்பிய நிருதிக்கணை யேழெடுத்துத் தொடுத்து அத்தம்பிமார்கள் எழுபேரைப் படுக்கவைத்தான். இந்தப்படி வீமசேனன் விடுத்த எழு கணைகளினால், அவ்வெழுபேர் தலைகள் துள்ளியெழுந்து ஆகாய வீதியிற் சுழன்று சென்றபோதவ்விடத்தில் வேடிக்கைப் பார்த்திருந்தத் தேவர்களைத் தேவேந்திரனோக்கி, இந்த தலைகளேழும் ஒன்றன்பின் ஒன்றாகவருந் தன்மையைப் பார்த்தீர்களா? இதற்கு உபமானமென்ன சொல்லுவீர்களென்று கேட்க, ஐயா அவைகள் மேன்மை தங்கிய விஜயலட்சுமியானவள் கைக்கொண் டெறிந்தாடுங் கழங்கெனச் சொல்லலாமென்று சொல்ல, அதற்கு இந்திரன் வியந்து அந்தரருடன் கண்களித்திருந்தான். இப்பால் துரியோதன மகாராஜனானவன் துயரக்கடலில் மூழ்கி, துன்பக்கரைமீதேறி மாளாவிசனமென்னு மலைமீதிருந்து மனக்கவலை கொண்டு, தம்பிமாருடனே நாமும் மடிந்துபோவதே சத்யமென்று சதுரங்க பலமுந் திரண்டு வரும்படியாகத் தேரேறி வந்து வீமசேனனுடன் எதிர்த்து வெகுண்டு போர் புரிந்தான். அப்போது வாயுகுமாரனாகிய கீசகாரியானவன், சில அஸ்திரங்களை விடுத்து அவனுடைய உடலைத் துளைத்தான். அந்த அடியினாற் களைத்துக் கண்கலங்கி நின்ற துரியோதனனைப் பார்த்து வீமசேனன் சொல்லுகிறான்.

அடா துரியோதனா! ஜன்மாந்திர வினை வசத்தால் வரும் பாவ புண்ணியத்தை அநுபவிப்பதற்காக எடுத்த உன்னுடலும், தர்மமாகிய செல்வத்தைக் கூடியவரையிலும் பெற்று வாழ்ந்த உன்னுடைய வாழ்வும், இப்போது கொஞ்சங் கொஞ்சமாகக் குறைந்து வருகின்றன. ஆச்சுது, இன்னுங் கொஞ்ச நாளையில் அனுபோக முடியப்போகிறது. அப்போது தான் நாவினால் ராஜ சபையில் கூறிய கண்ட அவிழ்தத்தை உனக்குப் பலிக்கும்படியாய் என் கதையினாற் கொடுக்கிறேன். நீ உன் தம்பிமார்களுடன் துணையாகப் போய்ச் சுகப்படலாம். உன்னால் இன்னுங் கொஞ்சம் வேலைகளிருக்கின்றன. அதனால் உன்னை இப்போது தானே அனுப்பப்படாதென்று அன்பினால் நிறுத்தினேன். அடா வம்பு செய்தப் பாவி! நீ இப்போது பாசறைக்குப் போகலாமோ வென்று சொல்லிச் சிங்கக்கொடியையும், தங்க ஸ்தம்பம்போன்ற புயத்தையு முடைய அவ் வீமசேனன் ஒரு மாசுணக்கணையினாற் சுயோதனனேறிய, தேர்-குதிரை-சாரதி முதலானவைகளைப் போக்கி, பாதசாரியாய்ப் பூமியினின்றுவருந்தும்படியாக்கி ஓட்டினன். அந்த மாசுணக்கணை பட்டுத் தன் தேகம் வருந்தித் தன் படைகளும் முறிந்தோடவே, தானும் புறந்தந்தோடினான் துரியோதன மகாராசன். இந்தப் பிரகாரம் யுத்தஞ் செய்த அமர்க்களத்திற் மாட்சிமையுற்ற மந்திரிகள் முதலிய மன்னர்களும், இரதகஜ முதலிய காற்படைகளும் முறிந்துவிழும் பெருக்கத்தைக் கண்டு, மதி மயக்கங்கொண்டு சாய்ந்தவனைப் போல் ஒற்றையாழித் தேரினையுடைய அருக்கன் மேற்றிசையில் வீழ்ந்தான். இந்தப்படிக்குச் சூரியனஸ்தமனமாகவே செவ்வானமு மிருளுஞ் சேர்ந்து போர்க்களம் பார்க்கப் புகுந்ததைப் போல் வந்து மிகுந்தன.

இப்பால், அந்த ரணக்களத்தி லழிந்த வீரமன்னர்களுடைய மகுடங்களும், இரத்தின ராசிகளும் நெருங்கி நிறைந்து கிடப்பது எப்படி யிருந்ததென்றால், தர்மதேவதையாகிய தர்மராஜன் வீரமிகுந்த போர் வென்று விஜயமடைந்து, முல்லை யரும்பைப்போன்ற பல்லையுடைய பூமிதேவியைக் கலியாணம் பண்ணிக் கொள்ளு நிமித்தமாகப் பரியத்திற் கொடுத்துக் காட்டிய பற்பலவித ஆபரணங்களையொத்திருந்தது. மேலும், யானைத் தந்தத்தில் நிறைந்திருந்த முத்துக்கள் முதலிய ரத்தினக்கொத்துக்க ளெல்லாம், யுத்த பூமியில் ராசி ராசியாகக் குவிந்து சிறந்திருப்பது எத்தன்மைக்கொக்கு மென்றால், பாணங்களினாற் பிளப்புண்ட யானைகளினுடைய வீரபட்டம் அணிந்த நெற்றி யென்னும் பெட்டியைத் திறந்து முத்துக் கொத்துக்களைப் பத்திபத்தியாய் வைத்திருப்பதை ஒத்திருந்தது. இதன்றியும், வாளாயுதங்கொண்டு வீசியபோது, வயிறு கிழிந்து விழுந்த வீரர்களுடைய ஈரல்களும், மணிக்குடல்களும், நாணி யறுந்து நிமிர்ந்து இரத்தவெள்ளப் பள்ளத்திற் கிடக்கும் வில்லுகளிற் சுற்றிக்கொண்டு பிரகாசிக்குந் தோற்றமானது எத்தன்மை யெனிலோ, பூமிதேவியாரை வதுவை செய்துகொள்ளுதற் பொருட்டு முரசப் பொற்கொடியுற்ற வரசர்க்குட் கெடிபெற்ற முதல்வன் அந்தக் கல்யாணப் பெண்ணுக்குச் சூட்டுங் குணங் கொண்ட மணமாலையை யொத்திருந்தது. பின்னும் வீராபிமானத்தாற் சிறந்த வீரர்களின் இரத்தவெள்ளமானது பலவித பள்ளக் குழிகளிலே நிற்கின்ற தன்மையானது எதிரிகளுக்குப் பயந்தோடாமல் அவ்விடத்திற்றானே நிலைத்து நின்று சத்துருக்கள் தடுமாறிப் பள்ளத்தில் விழுந்தால் உடனே பகையை முடித்துக்கொள்ளுவோமென் றிருக்குந் தகவினைப் போலு மிருந்தது.

மேலும், அந்த இரத்தப் பெருக்கங்கள் எல்லாம் அநேக முகமாகக் கால்விட்டோடி அலையடிக்குங் கடலிற் போய்க் கலந்தது எப்படி யிருந்ததென்றால், முகூர்த்தப் பெண்ணுக்கு நலங்கிட்ட சந்தன சுகந்த களபகஸ்தூரி-சாந்து-சவ்வாது - புனுகு முதலியவைகளோடு இங்குலிக குழம்புகளினால் நனைந்த அந்த வஸ்திரத்தை நீக்கி, ஓமத்தீமுன் வந்திருப்பதற்கு நவமணிப் பதித்த நீல புடவையை நாடியதைப்போலு மிருந்தது. இப்படியாகப் பூதப்பைசாச கணங்களுடன் நாய் நரிகளும் போராடிப் பிணங்களைத் தின்றுக் கொண்டு கலியாணச்சந்தடி வீட்டைப்போ லிருக்கும் போர்க்களத்தை விட்டுப் பாசறைக்குப் போனார்கள். வீமசேனனிடம் அடிப்பட்டுப் புறமுதுகிட்டோடிய காந்தாரி மைந்தன், இப்பால் மின்போ லிலங்கும் போர் வில்லுந் தாங்கிய வீமசேனனுடன் தமயராகிய தருமராசனும் தம்பியருங் கோபாலனுந் தமது கொடிப்படைச் சேனைகளோடு வீடு போய்ச் சேர்ந்தார்கள். பெரும்போரி லிறந்த மன்

னர்களெல்லாருந் தென்றிசையி லிருக்கும் யமலோகப்பாடி வீட்டில் அடைந்தார்கள். இருண்டுகவிந்த இருளானது குருக்ஷேத்திரத்திற் குடிபுகுந்தது. இப்படியிருக்க, ஒரு விநாடியில் இந்தப் படைகளை முடிக்கிறேனென்று விஜயங்கூறிவந்த இராவானனவன் மடிந்ததைக் குறித்துப் பாண்டவர்களும், அப்பாண்டவஸ்ரீ ஜனங்கள் யாவரும் அழுது வருந்தி, அன்னபானுதி அருந்தாமல் அயர்ந்து நித்திரை யொழிந்து நெடுமூச் செறிந்திருக்க, அந்நிலையை முன்னங் கோவர்த்தனத்தைக் குடையாகப் பிடித்துக் கோபாலனஞ் செய்தருளிய கோபாலனாகிய கோவிந்தன் கண்டு, தர்மராசன்முதலாகிய சகோதரர்களுக்கும், திரௌபதை சுபத்திரை முதலாகிய ஸ்திரீகளுக்குந் தைரியஞ் சொல்லி, நமதுபிள்ளை போனதைக் குறித்து நாம்விசனப்பட்டால் நமக்குத் துணைவந்தவர்கள் அவரவர்கள் பிள்ளைகளையுந் தம்பி தமயன்மார்களையும் பறிகொடுத்திருக்கின்றார்களே அவர்களுக்கு எவ்வளவு விசனமுண்டாகலாம்? ஆகையால், விசனத்தைக்காட்டாதீர்கள். சந்தோஷகரமாய் நாளை நடக்கப்போகிற காரியங்களுக்கு வேண்டிய யுத்திப்புத்திகளை யோசியுங்கள் என்று ஒரு வார்த்தை சொல்லித் தாமுங் கூடவிருந்து சாப்பிட்டுத் தாசர்களுக்கு நேரிட்ட துன்பபாசத்தை நீக்குந் தயாநிதியானவர் தானுஞ் சஞ்சலப்பட்டவரைப் போற் காட்டிப் பஞ்சவருடன் பஞ்சணையிற் படுத்திருந்தார்.

துரியோதன மகாராஜனவன், இந்த எட்டாம்போரிலிறந்த தன்னுடைய தம்பிகளை எண்ணியெண்ணித் துக்கப்படும்போது, வீஷ்மர்-துரோணர் முதலிய மேலோரெல்லாருங் கூடி, அந்த இறைவனைத் தேற்றி, நாமே துயரப்பட்டால் எதிரிகள் நகைத்துத் தனியே வந்து பகைத்து மேல்விழுவார்கள். நமக்குத் துணைவந்த ராஜர்களெல்லோருந் திகைத்துமனநைந்துபோவார்கள். ஆதலால், (ஊக்கமது கைவிடேல்) என்னும் வாக்கியப் பிரகாரந் தைரியம் விடாம லிருக்கவேண்டும் உரககேதனனே என்று ஒருவாறு விசனத்தை யாற்றி விடுத்தார்கள். இந்தச் சங்கதிகளையெல்லாஞ் சஞ்சயனுற் சொல்லக்கேட்ட திரிதராஷ்டிரனும், காந்தாரியும், காவலர் பத்தினிகளும், மற்றுமுள்ள பேர்களும் முகத்திலறைந்து நிலத்தில் விழுந்து, மூக்கைச் சிந்தியெறிந்து மோதி யடித்துக் கொண்டார்கள்.

இங்கே மறுபடியுந் துரியோதனராஜனவர் நித்திரையின்றி நெடுந்துயருற்று, ஐயோ! இன்றைய யுத்தத்தில் முடிமன்னர் முதலிய பேர்களும் நம்முடைய தம்பிமார்களும் புறமுதுகிட்டுப் போனதுமல்லாமல், அநேகம் பேர் இறந்தும் போனார்கள். நேற்றுப் பார்த்தவர்கள் இன்று பார்ப்பதற்கில்லையோ என்று விசனங்கொண்டு, தன்னைப்போற் றுயரப்படுஞ் சகுனியாகிய மாமனையும், கேட்டுத் துணைக் காரணமாகிய பாட்டையை கலிலிற் காட்டுந் துருவாசனையும் அழைத்து வைத்துக்கொண்டநேகம் யுத்திகளையெல்லாம் ஆலோசித்து, என்னண்ணராகிய கொடைத் தாதாவென்னுங் கர்னன் வராமல் என் மனந் தேறுதாகையால், அவரை அழையுங்களென்று சொல்ல; அப்படியே வீஷ்மர் சாகிறவரைக்கும் ஆயுதமெடுப்பதில்லையென்று பாசறையை விட்டுப் புறப்படாம லிருக்குங் கர்னனிடத்தில் தூதர் சென்று கண்டுவணங்கி, ஓ கருணைக்கடலாகிய இறையே! உம்மை யழைத்து வரும்படியாய் நமது காவலன் மனங்கொண்டா ரென்று சொல்ல, அந்த வார்த்தையைக் கேட்டவுடன் அதிசீக்கிரத்திலோடிவர, வந்தகொடையாளியைக் கட்டிக்கொண்டு கூகூவென்றழ, அக்கொடையாளி துரியோதன மகாராஜனைத் தேற்றி, அடாடா! தெய்வமே! ஐயோ? தம்பிமார்கள் இறந்தார்கள். ஆ! என்ன ஆச்சரியம்? என்று கேட்டுத் தானும் விசனப்படவும், அண்ணா! நான் என்னவென்று சொல்லுவேன்? இன்று பாரிய வில்லைப் பிடித்து, வீரியத்துடன் கணைதொடுத்து, வீமனெதிரிற் சென்று நின்று போர் கொடுத்தார்கள். அப்போது அவ்வீமசேனனனவன், சிவனுக்கெதிராக முந்திச் சிலசில மலர்ப்பாணங்கள் சிந்தி அழிந்த மான்மகனாகிய மன்மதனைப்போல மண்ணி லழியும்படியாய்ச் செய்தான்.

ஓ அண்ணா அங்கதேசத்தலைவனே! இனியென்ன செய்வேன்? இதுவரையிலும் என் தம்பிமார்கள் இருபதுபேர்வரையிலு மிறந்து போனார்களே; அவர்களைப் பறிகொடுத்து நான் இருந்தென்ன? இறந்தென்ன? ஓ இறைவனே! என் தந்தை தாய் முதலிய பேருஞ் சிந்தை வருந்துவார்களே! நான் நிந்தனைக்காளாகி நொந்தேனே! வெகு சிந்தனைக்காளாகி வந்தேனே! ஐயையோ? என்று சொல்லிச் சோர்ந்து விழுந்தான் துரியோதன மகாராஜன். அப்படி சோர்ந்த அரசனை எடுத்தணை

த்து, அதிசீதள சுகந்த பரிமளமுள்ள சந்தன பன்னீர்களுடன் ஆலவட்டஞ் சாமரை முதலிய உபசாரங்களுஞ் செய்து சோபமாற்றிய போது, அவன் பெருமூச்சுவிட்டுக் கண்ணைத் திறந்து கர்னனைப் பார்த்து, அண்ணா! சத்துருவைச் செயித்து வெற்றி பெறுவதற்காக வந்த உத்தமர்கள் முதலாகிய மித்திர புத்திரருடன் யுத்தஞ்செய்ய எத்தனித்த எனக்குத் துணையாகிய பேர்களில், முதன்மையாகிய எங்கள் பாட்டன் வீஷ்மாச்சாரியார் சேனாதிபதிப் பட்டங் கட்டிக்கொண்டு வில்லெடுத்து நிற்பதில் என்னதான்பிரயோசனம்? நான்குவேதங்களுந் தனுர்வேதங்களும் வல்லவர்களுக்குப் பின்னும் மேலுமேலுஞ் சொல்லவல்ல குருவாகிய துரோணாச்சாரியர் விற்பிடித்திருப்பதினால் என்னகாலம்? இந்த எட்டுநாள் வரையிலும் இவர்களுடைய நிர்வாகங்களையெல்லாம் பார்த்துவிட்டேன். இனிக் காரியமில்லை; அண்ணா! நானே முதற்கொண்டு நீர் வில்லெடுத்துப் போர்புரிவீராகில், போனவர்கள் போக இருக்கிற நாங்களெல்லோரும் பிழைப்போம். பாண்டவர்களாகிய சத்துருக்கள் ஒருக்காலும் வெற்றிபெற மாட்டார்கள். அதிரதர் முதல்வராகிய உம்மை நம்பி யிருந்ததற்கு உம்மாலாகும் ஆகாதென்று இப்போது தானே சொல்லிவிடுமென்று விளம்பினான். இவ்வாறு துரியோதனராஜன் விளம்பிய அந்தச் சொல்லானது, கர்னனுடைய காதில் நாராசம்போலேறவும், உடனே மனங்கொதிப்பேற, தேகம்படபடப்பேற, கண்களிற்றீயேற, வாயிலீயேற, சத்துருக்கள் மலையேற, கோபந் தலைக்கேற, நாத்தழும்பேற கதித்தப்புகையுங் கோபக் குறிப்புடன் சொல்லுகின்றான்.

அம்புவியிற் கொடியோங்கிய செம்பொன் முடியினைத்தாங்கிய துரியோதன மகாராஜனே கேளும். உங்கள் பாட்டன் வீஷ்மாச்சாரியார் அர்ச்சுனனைச் செயிக்க மாட்டாதவனென்று என்னை அர்த்தரதத்திற் போட்டதும், அதற்கு நான் சபதங்கூறி யிருப்பதும் உமக்குத் தெரிந்திருந்தும், எவ்விதத்தில் என்னை யுத்தஞ்செய்யச் சொல்லுகிறீர்? கொற்றவனே! உமக்கு நான் எப்போதும் வெற்றியைத் தருவதற்குச் சித்தமா யிருக்கிறேன். இந்த மொழியை நீர் சத்தியமாய் நம்பும். தேரும், வனங்களும் ஓடித் திரியும்படியாகிய விஜயம் திசைகண் முழுதும் இசையுடன் வரைக் பெறத்தக்க வில்லும், அண்டகூடம்



கும் உண்டுமிழும்படியாகிய கணையும், நான் வைத்திருக்கிறேன். இப்பவும், அந்த வீஷ்மாச்சாரியர் என்னைக் கண்டு ஏக்கங்கொண்டு போகும்படியாய் ஒரு விந்தை செய்கிறேன். அதாவது, இந்திரலோகம்-யமலோகம்-பிரமலோகம் இவ்விடங்களில் என் கணைகளை விடுத்து, இவ்வமர்க்களத்தில் இறந்துபோன உமது தம்பிகளை இப்போதே உயிர்த்து வரச் செய்கிறேன். நாளைப்போரில் பாண்டவரை மாளச்செய்து, உலக முழுமையும் நீராள உமது சொந்தமாக்குகிறேன். ஆனால், வீஷ்மன் சாகிறவரையிலும் யுத்தமுனையில்ஆயுதம் எடேனென்று சொல்லிய சபதம் வீணாய்ப் போமே யென்று எண்ணிப் பார்க்கிறேன். ஆகிலும், ஆபத்திற்குப் பாபமில்லை. அதற்கு ஒரு சாந்தியும் இருக்கிறது. அந்தப்படி வீஷ்மன் செய்வானாகில், நாளை இந்த நேரத்திற்கெல்லாம் பஞ்சா சதகோடி பூமண்டலம் முழுமையும் நாகக்கொடி பறக்கவும், எங்கும் நாண்மணித் தோரணம் விரித்துச் சிறக்கவும், சந்திர விம்ப மணிமுரசந் தயங்கவும், தரியலாதலை கிறுகிறென்று மயங்கவும் செய்கிறேனென்றான் கனகக் கொடியோனாகிய கன்னன். வேந்தர் வேந்தனாகிய பாந்தளங் கொடியோன், இம்மொழி கேட்ட சந்தோஷத்தால் விம்மிப்புடைத்து விசனம் நீங்கி, ஓ என் மித்திரனாகிய அண்ணா! அஃதெப்படி ஜெயம்பெறுவீ ரதனை எனக்கு விபரித்துச் சொல்ல வேண்டுமென்று கேட்க, குந்தி முதற்புத்திரனாகிய கொடையாளன் சொல்லலுற்றான்.

ஓ கௌரவகுல முதல்வனே! கியாபகமாய் கேளும்: இந்த யுத்தகளத்தில் கடல்போல் இறைந்து நிறைந்திருக்கும் நமது படை வீரர்களுக்கு எதிராகச் சேனாதிபதியாகிய வீஷ்மன் வந்து நின்று எல்லோரையும் நோக்கி, இரண்டுகரத்தையும் மேலேதூக்கித் தன்வாக்கினால், ஓ வீரர்களே! பலம்பொருந்திய பாண்டவர்களை நான் செயிக்கமாட்டேன்; இனி என்னால் முடியாது என்று சொல்லிக் குப்புறக் கவிழ்ந்து விழுந்து வில்லை ஒடித்துப் புல்லைக் கடிப்பானாகில், நான் நாளைப்பொழுது விடியுமுன் எழுந்து வந்து போர்புரிந்து உமக்குத் துன்பமும் பழிச்சொல்லும் விளைய வைத்த துஷ்டப் பாண்டவர்களையும், அவர்களுக்குத் துணைவந்திருக்கிற ஸ்ரீகிருஷ்ணன் முதலிய தோன்றல்களையுந் தேவலோக போகத்தை அநுபவிக்கும்படியாய்ச் செய்து விடு

கிறேன். நான் இதுவரையிலுஞ் சொல்லிக்கொண்டுவந்த வார்த்தையைப்போலெண்ணுநீர். இதோ நான் யுத்தத்திற்குச் சித்தமாயிருக்கிறேன். என்று கவசகுண்டலன் சொல்லவே, துரியோதனன் முதலிய உரியோர் காதுகளில் தேவாமிர்தஞ் சொரிந்ததைப் போலாகிச் சிந்தை மகிழ்ந்து, சகுனியையுந் துற்சாதனன் முதலிய தம்பிமார்களின் முகத்தையும் பார்த்து, ஓ எனது மித்திரர்களே! அங்கதேசாதிபர் சொன்னதைக் கேட்டீர்களா? தானும் பிழைக்கான் பிழைப்பவனையும் பிழைக்கவொட்டா னென்னுங் கதையாச்சுது நமது வீஷ்மர் செய்திருக்குங் காரியம். ஆனால், கர்னமகாராசன் சொல்லிய நீதி ஞாயமாயிருக்குதல்லவா? ஓ ஐயவீரர்களே! ஓ அதிசூரர்களே! அடா தம்பி துசுவாசனு! வீஷ்மாச்சாரியரிடத்திற்குப் போய் அங்கதேசாதிபன் சொல்லிய சங்கதிகளைச் சொல்லி, ஐயா! உம்மாலாகிலுஞ் செவ்வைப் படவேண்டும். இந்த யிரண்டும் இல்லாமல் திரண்டுவந்த சேனைகளெல்லாம் இறந்து நூறுபேர் என்னுங் கணக்கில் இருபதுபேர் குறைந்து, இப்படி நாளுக்குநாள் நொந்து போகும்படியான காலம் வந்திருக்குதல்லாமல் வேறொன்றில்லை.

மேலும் (முகத்துக்கஞ்சி முறைமை தப்பினால் குலத்துக்கீனம்) என்பதுபோல், உம்மைப் பாட்டனென்று நம்பிப் பட்டங் கட்டிவைத்து, நான் நாட்டமாய்ப் போவேனோ? மேலும், எந்தப் புண்ணியவானைக் கொண்டாகிலும் வெற்றி பெறுவது உமக்குச் சம்மதமா? அல்லவென்றால், நீரே யிருந்து முடித்துக் கொடுக்கிறே னென்று சொல்லுகிறீரா? இப்படி எந்த விதத்திலும் ஜெயம் பெறுவதற்கான ஏதுவில்லாமல் இரண்டாட்டிலூட்டிய குட்டி என்பதுபோல் நான் கெட்டுப்போகவா? உமது இஷ்டந்தான் எப்படியிருக்கிறது? இப்போதென்ன சொல்லுகிறீர்? என்று அவருடைய எண்ணத்தை அறிந்தோடி வாவென்று அரவகேதனன் அனுப்ப, அந்த க்ஷணமே ஒப்பில்லா ஆலகால விஷச்செந்துக் கொப்பாகிய துர்ச்சாதனனானவன் ஒரு நொடிப்பொழுதிற் பாசறைக்கு வந்து, வீரவாகை விற்பிடித்து நெருங்கிய வேந்தர் கண்டு வில் அஞ்சூராணிபோல் நடுநாயகமாக நின்று நாளைப் போருக்கு வேண்டிய யுத்தியைப் பேசிக்கொண் டிருந்த வீஷ்டுமாச்சாரியரைக் கண்டு, கர்னராஜன் சொல்லிய சங்கதி யாவுந் துரியோதன மகாராஜன் சொல்லச்சொன்னதாகப் புகன்றான். அந்த மொழியைத் தன் பேரப்பிள்ளையாகிய துச்சாதனன் சொல்ல, உரியோனாகிய பெரியோன் கேட்டுத் தன்கையினால் வாயை மூடிக்கொண்டு, கக்கட கக்கடநகைத்து, அப்பா? உப்பில்லாமல் மூக்கலக்கஞ்சி குடிக்கிறேனென்னும் என்னுடைய துப்பற்ற வீரத்தை, நீங்கள் மெச்சும்படியாக நான்சொல்லி வயிறு வளர்ந்து வாணாள் வைத்திருக்கப் போகிறதில்லை. ஆங்காலமெல்லாம் ஆச்சுது; போங்காலம் வந்துவாச்சுது; இன்றைக்கோ நாளைக்கோ சாருங்கால நேரிட்டிருக்கிறது; இனி நானுங்களிடத்தில் என்வீரத்தை எடுத்துப்பேசுவதில் லாபமென்ன? ஆதலாற் பாண்டவர்களின் அர்ச்சுனனை வெல்லவாவது, கொல்லவாவது என்னாலாகாது. அந்த விஜயனுக்கு நானீடல்ல. ஆனால் விந்தையாகிய யுத்தங்களெல்லாஞ் செய்கிறேன். நாளைப்போரில் நமது அரசனிடத் தன்பில்லாத மகுடாதிபர்கள் நூறுபேரை முடியறுத்து முடியவைக்கிறேன். ஓ என்பேரனே! அதைவிட்டு வில்லைத்தள்ளிப் புல்லைக்கவ்வி வீரமில்லையென்று சொல்லச்சொன்ன வாக்கியம் நல்லதல்ல நான் அப்படி செய்யப்படாது. இப்போது நீங்கள் நினைத்தகாரியம் இதற்கு இரண்டாநாளையில் நிறைவேறும். அதற்கொரு குறைவில்லை; இவ்விரண்டுநாள் மாத்திரம் நீங்கள் மனம்பொருத்து இருக்கவேண்டியது. ஓ குழந்தைகளே! அப்பால், உங்களை நாடாளவைக்க வரப்போகிறவர்கள் நான்சொன்ன உறுதி வாக்கியப்படிக்கு ஐவரைச் செயித்து, வெற்றிபெறுங்கைத்திறலை யுடையவர்கள்; அப்படியாக வெற்றிபெற்ற உத்தமருடைய பேருதவியில் நமது குருநாடும் சுற்றிலுநிறைந்த வளநாடுமுங்களுக்குக் கிடைத்து, நீங்கள் பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு புத்ரமித்ர களத்ர சுற்றத்தாருடன் கலந்து, அநேகநாளிருந்துமிகுந்த சம்பத்துடன் நீடூழி வாழக்கடவீர்கள் என்று துச்சாதனனுக்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டு, அசுரர்களுக்கும் உத்தரவு கொடுத்து தானும் விசனத்துடன் போய்ப் படுத்து நித்திரையில்லாம லிருந்துகொண்டு, அங்க தேசாதிபனுக்கு துரியோதனனுக்கு முண்டான துற்புத்திகளை நினைத்து வருத்தமுற்றிருந்தார் என்று வைசம்பாயனர் சொல்லிக்கொண்டுவந்தார். இந்த விர்த்தாந்தத்தை தம்பதி சமேதனாகக் கேட்டு, சகலவித உபசாரத்துடன் தன்னுடைய தர்மந்தீரும்படியாய்

தானந்தியாகம் ஓமமுதலாகிய சகல நற்கிரிகைகளுஞ் சாங்கோபாங்கமாக நடத்தி, மேன் நடந்த ஒன்பதாவது யுத்தத்தையுஞ் சொல்ல வேண்டும் என்னுயிர்த்துணையாகிய உயர்ந்தோனே என்று ஜெனமேஜெயராஜன் வணங்கிக்கேட்க, வைசம்பாயனமுனிவர் மனமகிழ்ந்து சொல்லலுற்றார்.

எட்டாம்போர்ச் சருக்கம் முற்றிற்று.

இப்பால்,

## ஒன்பதாம்போர்ச் சருக்கம்

### கண்ணன்துதி

பேராறுமூழ்கி மறைநூல்பிதற்றி மிடறும்பிளந்து பிறவித், தூராறுமாறு நினையாமலுங்க டொழிலேபுரிந்த சுமடீ, ரோராறுபேத சமயங்களுக்கு மொருவாகிநின்ற வொருவ, னீராறுநாம முறைசெய்துமண்கொ டிடுவார்கள் காணு மிமையோர்.

ஓ தரியலர்தாலித் தளையவிழ்த் துந்தத், தறிமதக் கயங்களாற் றளையவித் துவந்த, அரச குஞ்சரம் படைத்த ஐயா! கேளும்: எட்டாநாள் யுத்தத்தில் இரவி சாய்ந்த அந்திவேளையில் வந்து கூடிய இருட்டென்னும் பெண்ணனவள், இருகண்ணுமிலான் பிள்ளைகளிற் பதினைந்துபேர் ஒரு கண்ணராகி உம்பருலகஞ் சென்றதைக் கேட்டழுங் காந்தாரித் தாயின் கலக்கத்தினாலும், அவர்களின் மனைவியரின் துயரத்தினாலும் உண்டாகிய உபத்திரவம் பொறுக்கமாட்டாமல், உலகம் மெய்க்க ஒப்புக்கு அழவந்த உடம்பை வருத்தாத ஓர் உத்தமியானவள், தலைமயிரைச் சுருட்டி முடித்துக்கொண்டு சாளரக் கதவுகளைத் திறந்துவிட்டு சாடையாய் நழுவிப்போகுந் தன்மையைப்போற் கிழக்கு வெளுக்கப் பார்த்து அடிகெட்டேனென்று சொல்லி ஓடினாள். அந்தச் சமயத்தில், புத்திசாலியாகிய ஓர்விவேக விற்பனன் வந்து, "ஆண்டாண்டுதோறு மழுதுபுரண்டாலும் மாண்டார் வருவரோ மானிலத்தீர் வேண்டாம், நமக்குமதுவழியே நாம்போமளவும், எமக்கென்னென் றிட்டுண்டிரும்" என்னுஞ் சமாதான வாக்கியத்தைக்கூறி, அவ்வழுகின்றவர்களை அடக்கி ஒப்பபடுத்த வந்தவனைப்போற் சூரியபகவான் கீழ்த்திசையிற் றோன்றினன். உடனே கௌரவரெழுந்து காலைக்கடனை முடித்துக்கொண்ட பின்பு, வீஷ்மாச்சாரியர் தனக்குச் சமானமாகிய அதிரதத் தலைவரும், சக்கரரக்ஷகரும், இணைக்குதிரைகளும், மன்னர் மண்டலீகர் முதலிய நால்வகை படைகளுஞ் சூழ்ந்துவர, பஞ்ச மேளவாத்ய முதலாகிய விருதுந் தழைக்க, பாருங்குலுங்க, காருங்கலங்க, பர்வதங்களெல்லாம் வேரறுந்தாட, தூளிப்படலங்களெல்லாங் கண்மறைந்தோட, திக்குகளும் அஷ்டகஜங்களுந்தியங்க, சேடன்முதலிய பேர்களுமொடுங்க, திரண்ட சேனைகள்புரண்ட கடலெனப் பரந்துமிகுந்து குருக்ஷேத்திரத்திற்புகுந்து கலத்தலு மென்ன யூகங் கட்டலாமென யோசித்து, வெற்றிலையினுருவைப்போன்று சத்ருக்களை வெல்லும்படியாகிய செயபத்திரயூகங் கட்டினார். அஃதெப்படியென்றால், வெற்றிலையைப்போற் சேனைகளை நிறுத்தி வைத்து நாகக்கொடியோனாகிய ராஜாதிராஜனை வெற்றிலைக்காம்புக்கு மத்தியிலிருக்கும் பெருநரம்புக்குப் பக்கத்திலிருக்கும் மற்ற நரம்புகளுக்கெல்லாம் ஒருகோடி ராஜர்களை நிறுத்தி அந்த சேனைகளுக்கு முனைக்காரராகப் பகதத்தன், சோமதத்தன், வாகுலீகன் இவர்கள் முதலியபேர்களை யமைத்து மற்ற வீரர்முதலிய கைக்காரரை அந்த வெற்றிலையின் ஆகிர்தியாகச்செய்து, பூமி குலுங்கும்படியாய் அலம்புதன், அலாயுதன்முதலிய அரக்கரையெல்லாம் முனையாகப் போக்கி, யானை-தேர்-குதிரை இவைகளைச் சுற்றிலும் வரம்பாகவிடுத்து, அடிக்காம்பில் சம்சத்தகர்-மாளவர்-சீனர்-சோனகர்-திராவிடர்-தெலுங்கர் முதலிய பேர்களை கூட்டிக் கேடயம்போற் கவிப்பாயடைத்துத் தானுந் தூசிப் படைமுனையிற் நின்றார் வல்லமையுடைய மானுபரண னென்னும் வீஷ்மாசாரியரானவர்.

இப்பால், பாண்டவர்களு மெழுந்து நித்தியவிதிகளை முடித்துக்கொண்டு, யாவரும் யுத்த சன்னத்தராகி நேற்றியப்போரிற் சடாசுரனுடைய குமாரனென்னும் அலம்புதனைவன், இராவானாகிய தங்கள் பிள்ளையைக் கொன்றானென்கிற மனஸ்தாபத்தை அகத்தில் நிறுத்தித் திரியோதனனுடைய தம்பிமார்கள் பதினைந்து பேரைமடித்து, அரக்கப் படைகளையெல்லா முடித்து, பலபல அரசர்களின் ஆவியையுமழித்து, ஆராப் புத்ர சோபங்கொண்டு தேறாரடிபட்டோடச் செயங்கொண்டுநின்ற வீமசேனனும், தேவரின் பகைகளைக்களைந்த ஜெயதீர விஜயனும், நகுலசகா

தேவரும், சத்தியவிரத உத்தமராகிய தரும ராசனும், மற்றப் படைமன்னர் முதலாகிய பேர்கள் முன் பக்கங்களிலும் பின்பக்கங்களிலும் நெருங்கிவர, இடக்கை - உடுக்கை - தப்பட்டை - தாரை - பூரி - மேளம் - முரசு முதலிய வாத்தியங்கள் ஆகாயமதிர முழங்கிவர கொடி - குடை - சாமரம் - பீலிக்குஞ்சம் - மேற்கட்டி - மகரதோரணம் - விருது - டால் என்னு மிவைக ளெல்லாம் மேக மண்டலத்தை யளாவி நெருங்கிவரப் புறப்பட்டுவந்த மாத்திரத்தில், காசாம்பூ மேனியையுடைய வாசுதேவன், போஜகுல நேச விசுவாசர்களுடன் பேசிக் கொண்டு தாசானு தாசர்களாகிய அப்பாண்டவர்களும் புடைசூழ்ந்து வரும்படியாகவும், யானை - குதிரை - தேர் - பதாதிகள் ஆகிய இவைகள் துள்ளியோடி நடக்கும் வேகத்தாற் கொள்ளையாகிய தூசுகளெழுந்து மாசிகள் மறையும்படி யாகவும் வெளிக்கொண்டு யுத்த களம் வந்து சேர்ந்து, சிவந்தப் பத்மராக மணிகளாற் செய்த மகுடமும், பெரிய பதக்க மாகிய மதாணிகளும், முத்துத் தொங்கட்டங் களும், குண்டலங்களும், வாகுவலயங்களும், பொற்றாமரை வாசியாகிய மஹாலக்ஷிமியும் பொருந்திய திருமேனியையுடைய இப்புண்டரீகாக்ஷன் சேனாபதியாகிய துஷ்டத் தாய் மனை யழைத்துப் பத்மராகவரை யூகங் கட்டச்செய்து, வச்ராயுதனைப் போன்ற அர்ச்சுனனேறிய தேரிற் பச்சைவண்ண பரந்தாமராகிய தாம் சாரதியாயிருக்கச் சேனாபதியின் உத்தரவின்பேரில் இரண்டு படைகளுங் கைகலந்து தொந்த யுத்தஞ் செய்ய லானார்கள்.

## அலம்புதன் வதை

அந்தவேளையில் தேவேந்திரனும் தேவர் களும், ஆகாய முதலிய அகண்டமும் எட்டுத் திக்குகளும், அஷ்ட குலாசலங்களும், எட்டு நாகங்களும் படபடவென் றதிரும்படியாய் அலம்புதனென்னும் அரக்கனானவன், அநேகம் இராக்கதப் படைகளுடன் ஆகாய மளாவிய தேரைச்செலுத்தி ஆக்கிரமித்துக்கொண்டு, வெற்றிமாலை சுற்றிய கொற்ற வெம் புயத்தைப் பெற்ற வீமசேனனுடனே போர் புரியும்படிக்கு வந்தெதிர்த்தான். அப்படி வந்தெதிர்த்த அலம்புதனை, மல்யுத்தத்தாற் கொல்லவேணுமென்று மனங்கொண்டு பீமசேனன்வர, அதை அந்த வலம்புதன் கண்டு, இந்த வீமசேனன் மல்யுத்தத்தாற் வெகுபேரைக் கொன்றிருக்கின்றான்; நமது தந்தையாகிய சகடாசுரனையும் சடாய்த்துவிட்டான்; நம்மையும் அப்படியே வேலைமுடித்துப்போடுவான். ஆகையால், இவனுடன் மற்போர் புரியலாகாது. இவனுக்கதிக பழக்கமில்லாத விற்போர் புரிந்து வெல்லவேண்டுமென்று வீமசேனனை கண்சிமிட்டாமற் பார்த்து, மீசை முறுக்கிக் கனைத்துப் பற்கடித்து, அடா வீமா! நீ மற்போரிலுங் கதைப்போரிலுங் கைதேர்ந்தவனே யல்லது விற்போர் சிறிதுந் தெரியாத விழலப்பனே; அப்படியல்ல, விற்போரிலும் நான் வல்லவனென்று சொல்லுவையாகில், இப்போது என்னைப்போற் றேரேறி வில்யுத்தஞ் செய்யவாடா; அந்தப் பண்டவாளத்தையும் அறிகிறேனென்று சொல்லி வெகுண்டு வில் லெடுத்து நாணிபூட்டுவதற்கு முன்னமே, வஜ்ரக்கல்லுக் கொப்பாகிய புயவலிமையுடைய வாய்வுபுத்திரன் கார்முகமெடுத்து நாணிசேர்த்துக் கர்ணபரியந்த மிழுத்து, காளகோடி விஷாக்கினிக் கணைகளைக் கல் வருஷம்போல் வருஷித்து, அலம்புதன் கைக்கொண்ட கன மலைக்கு மேலாகிய வில்லை மளுக்கென்று முறித்து, அடா அரக்கனே! மல்யுத்தத்தில் இடும்பகனை, பகனை, ஒப்பில்லாக் கீசகனை, தப்பிலி வேலைசெய்த உன்னப்பனை ஒருகைக் குத்தினாலும், ஒருகா லுதையினாலும், உடல் சிதையச் செய்த வொருவனென்று நினைக்காம லிந்த ஒன்றனைப்போன்று வளையும் உதவியற்ற வில் லிற் செயிக்கவந்தாயே! உன் கைவில்லெங்கே? அடா துன்மார்க்கனேயென்று வீமசேனன் மேலுமேலும் நாலுகணைகளை விடுத்து உடலைத் துளைத்தபோது, அலம்புதன் ஆகாயத்திற் சென்று மறைந்து, மீண்டும் பூமியிற் சுழன்று வந்து, பலங்கொண்டிருக்கும் மந்தர மலைக் கொப்பாகிய கந்தர மலையென்னும் பர்வதத்தையும் பாரிய மரங்களையும் பிடுங்கிவந்தெதிர்த்து, வீமசேனனுடையதோளின்பேரில் வீசியெறிந்தான். அப்படியாக வீசிய மலையும் மரங்களும் பொடிப்பொடியாய்ப் போகும்படி வடிக்கணைகளால் மாற்றிப் பாலசுப்பிரமணியக்கடவுள் கிரவுஞ்சகிரியைக் கிழிக்க விடுத்த வேலாயுதமென்று மேலோர்கள் சொல்லும் படியாகிய ஓர் வேலைத்தாங்கிப் பூசித்து வணங்கி அபிமந்திரித்து விட்டான் வீமசேனன். அந்த வேலாயுதம்போய்ப்பட்ட மாத்திரத்தில், குமாரஸ்வாமியின் வேல்பட்டழிந்த சூரன் உடனே வுருக்கொண்ட மாமரத்தைப்போல

வீஷ்மாச்சாரியரோ டெதிர்த்துநின்ற சிகண்டியைத் துற்சாதனன் முடுக்கி யோட்டுதல்.



அபிமன்னன் தேரிழந்து வாஸ்தண்டம் சக்கரம் இவைகளைக்கொண்டு போர் புரிதல்.

இருகூறாய் பிளப்புண்டு விழுந்தான் அலம்புதனானவன்.

அப்போது வீமசேனன் கதையைக் கையிற்கொண்டு கரகரவென்று சுழற்றி அலம்புதனுடன் படை கூடிவந்த தொண்ணூற்று நாலாயிரம் அரக்கரும், மாறுபட்ட பாஷைகளையுடைய நூறுலக்ஷம் வடதேசத்து அரசரும், தலைகிழிந்து உடல்கிழிந்து அவர்கள் செந்நீரெல்லாம் தாரணியிற் சேறாய்ப் பெருக்கெடுத் தோடும்படியாகச் சாடினன். அநேக உறுப்புக்களினால் மண்மேல் மூடினன். இப்படிக்கு எலும்பொடிய அடித்து, வெகுபேர்கள் முடிய முடித்து, பூமிநெடிய நடித்து உக்ர திண்யனிவனென் றுரைக்குஞ் சிலாக்கிய அக்ரகண்யனென் றெவரையும் போக்கிய வீமசேனனுடைய வீரப்ரதாபத்தைக் கண்ட இரவுபகலில்லாத இந்திரலோகத்தி லிருக்கும் இமையா நாட்டத்தவராகிய தேவர்கள் எல்லாரும் ஒருவரோ டொருவர் முந்நாட் போரில் இராவானைக்கொன்ற அலம்புதனை பின்னாட்போரிற் பீறுண்டழிய கூர்கொண்ட வேல்கொண்டு கிழித்தான் சத்தியநெறி யுத்தமனாகிய தருமராஜனுக்கிளைய வீமசேனனென்று இரைந்து மதித்து விரைந்து துதித்தார்கள். இவ்விடத்தி லிப்படியிருக்கக் காசிதேசாதிபதி, போஜதேசாதிபதி, மாளவதேசாதிபதி, கலிங்கதேசாதிபதி, புளிந்ததேசாதிபதி, அஜபதி, கஜபதி முதலிய எழுபதாயிரம் அரசர்கள் ஒன்றாகச் சேர்ந்து, ரதப்படை-யானைப்படை - பரிகட்படை - பதாதிப்படை முதலியவைகளோடு, விற்படை - வேற்படை முதலிய படையுடன் பொங்கி அருச்சுனனையெதிர்த்து, அநேகங் கணைகளைத் தொடுத்து, அகில புவனங்கள் யாவும் நடுங்க, நிகில சராசரங்கள் யாவுமிரங்க, மட்டில்லாத யுத்தஞ் செய்து நின்ற கர்லத்தில், கேசவன் செலுத்துந் தேரினிற் கிளர்ந்த வாசவன் மகனுஞ் சுவேத வாசியான் பிளந்த வித்தகர் தேகம் வெதுப்பிறை சாய்ந்து, கொத்தழற் கணைகள் பற்றற மாய்ந்து, மற்றொரு பக்கத்திற் சுற்றி நெருங்கிய சேனைகளெல்லாம், வெற்றி பொருந்திய அவ் வீரவாகை விஜயன் சொரியுங் கணைகளாற் பற்றி யெறிந்து சாம்பலாய்ப் படிந்தார்கள். இன்னொரு பக்கத்தில் துரியோதனன் சேனைகள் வீமசேனனுடைய கதாயுதத் தாற் காற்றிற் சிதறிக் கலங்குஞ் சருகைப் போற் பறந்து மடிந்தார்கள்.

### வீஷ்மாச்சாரியரோ டெதிர்த்து நின்ற சிகண்டியைத் துற்சாதனன் முடுக்கி யோட்டுதல்

இந்தப்படி வீமசேனனும் அர்ச்சுனனும், நாலுபக்கங்களில் நால்வகைச் சேனைகளையும் நலியச் செய்யுங் காலத்தில், கங்கா புத்திரனாகிய வீஷ்மாச்சாரியார் கண்டு, கண்கள் சிவந்து, முகங் கருகிக் கடுமைகொண்டு, பாரைக் கிழித்தோடுந் தேரைச் செலுத்திப் பாணங்களை வாரி யிரைத்துப் பற்கடித்து வரா நிற்கவும், அதை இராஜபூச்சியனாகிய தருமராஜன் கண்டு, கலங்கியோடுஞ் சேனைகளைக் கையமர்த்தி, தன்னைச் சூழ்ந்த சதுரங்கச் சேனைகளுடன் வீஷ்மரைத் தகைத்து, வெற்றிமாலை சூட்டிய வில்லை வளைத்து, வீரபாணப் பகழி மழைகளைப் பொழிந்து, அவ்வீஷ்மருடைய குதிரைகளுஞ் சாரதியுங் குழைந்து போகும்படியாய் அழுந்த அடித்தார். இவ்வாறு தருமராஜன் தூற்றிய பகழிகளைத் தன் பேரிற் படவொட்டாமற் றடுத்து, அவர் கைப்பற்றிய வில்லையும் முறித்து, வீர தோரணத்தையு மறுத்தார் தந்தை பொருட்டில் இன்பம் விடுத்து விரதமேற்கொண்ட வீஷ்மாச்சாரியரானவர். அந்த வேளையில், வீரபட்டந் தாங்கி யுலாவும் யானைகளும், வாயு வேகம் பிற்படத் தாவியோடுங் குதிரைகளும், மேகஞ் சிதையக் கிழிக்குங் கொடி நாட்டிய ரதங்களும், விதவிதமாகிய வீரர்களின் பேதங்களும் உடைய பாஞ்சாலன்-திருஷ்டத்துய்மன்-சிகண்டி-உத்தமோகன் - உதார்மன்-விகர்மன் முதலாகிய பேர்களெல்லோரும் விரைந்து, வீஷ்மருக் கெதிர்வந்து போர் புரிந்தார்கள். அப்போது சந்திர வட்டக் குடையோங்கிய வீஷ்மாச்சாரியரும், துரியோதனனுடைய தம்பிமார்களும் இசைகள் பெற்று திசைள் எட்டிலுமிருந்து வந்திருக்கும் பல காவலரும் நேரிட்டுப் போரிட்டார்கள். அந்த வேளையில், வீஷ்மாச்சாச்சாரியானவர் தாஷ்டீகமாக வடிக் கணைகளை மந்திர பலத்துடன் வாரிவிடுக்க; அதனால், தேர்களும்-குதிரைகளும் - குதிரை வீராளும், வேற்படை - விற்படை - கதைப் படை-வாட்படை இவை முதலிய படைகளை தாங்கிய காலாளும் பட்டார்கள். அப்போது பாஞ்சாலர்களில் வீஷ்மர் விட்ட கணைகளுக்குத் தப்பிப்போனவர்களில்லை என்று தேவர் முதலாகிய யாவரும் சொல்லும்படியாய்ப் பிராணன் விட்டார்கள். சிலர் காயம் பட்டுப் புறமுதுகிட்டார்கள்.

இப்படியாக வீஷ்மாச்சாரியர் முனைந்து கணைமாரிபொழிந்து வருங்காலத்தில், சிகண்டியானவன் தன் தேர் எதிர்விடுத்து வீஷ்மரையடுத்து, ஓ வீஷ்மரே! உன்னுடல் பூமியில் விழவும், நீ விண்ணுலகங் குடியேறவும் ஒருகை பார்க்கவேண்டுமென்னும் ஆசைகொண்டு போர்செய்ய வந்தேன். இப்போது பாஞ்சாலாள்பேரிற் காட்டிய சேவகமெல்லாம் என்னிடத்திற் காட்டென்று அனேகம் வீர வார்த்தைகளை இழிவாகப் பேசி, கார்முகம் வளைத்து நேர்முகமாகக் காய்ந்த தீக்கணைகளை சிந்தினான். அந்தவேளையில், திரிலோகமுங் கலங்க மோகம் விளைக்கும் மன்மதனுடைய ஐந்துகணைகளுக்குங் கலங்காத வீஷ்மாச்சாரியாரானவர், தன்பேரில் விழும் பேதையின் பாணத்திற் கிலக்காகிச் சிகண்டியை நோக்கி நகைத்து, அவன்பேரிற் பாணந் தொடுக்காமல் வில்லைக் கீழேவைத்துவிட்டு வெறுங்கையாய் நிற்க, சிகண்டியின் பாணங்கள் தன் தேகமுழுதுந் தைக்க, அப்போது ஜன்மாந்திர வினையைச் சிந்தையினினைந்து வருந்திக் கொண்டிருக்கும் நிலையைத் துற்சாதனன் கண்டு துயரங்கொண்டு, சுடுசரங்களைச் சோனைமேகச் சொறிதலைப்போற் பெய்து, கோடைக் காச்சலைப்போற் காய்ந்து, பாஞ்சாலாள் சோமுகாள் முதலாகிய பல்லோருங் கெட்டழியப்படுத்தி, மேகமளாவுங் கொடி நாட்டிய சிகண்டி ஏறிவந்த தேரையும், அவன் கைப்பிடித்தெய்யும் வில்லையும் பொடிப்பொடியாய்ச் சிதறிப் போகும்படி சிதைத்தான். அந்தத் தெப்பலினாற் றேகம் வருந்திக் காலோட்டமாயோடி, உதயகிரிச் சாரலிலொடுங்கும் இருளைப்போல் ஒளித்தான் சிகண்டியானவன்.

இந்தப்படி துரியோதனனுடைய தம்பி துச்சாதனன் சிகண்டியைவென்று பாஞ்சாலப் படைகளைத் துரத்தி ஒருவர் போனவழி ஒருவர் போகாமல் பறக்கடித்துச் செயஞ்செய்யும் போது தன் வில்லையெடுத்துப் பிடித்து நாணி பூட்டினர். வீஷ்மாச்சாரியார், அந்தச் சமயத்தில் வீஷ்மருக்கு ஈடல்லாத சிகண்டியைத் துச்சாதனன் வென்று மேன்மை படைத்தானென்று தேவர் முதலிய யாவரும் சந்தோஷமடைந்தார்கள். அப்போது துச்சாதனராலும் வீஷ்மராலும், பாண்டவச் சேனைகளும் பாஞ்சாலன் படைகளும் படாதபாடு பட்டுக் கெடுவதைப் பார்த்தரானவர் கண்டு, முகம் வியர்த்து, கண்ணனுடைய முகத்தை நோக்கி, பவனவேகத்திலும் மிஞ்சிய ரதந்தை படைகளுக்கு நடுவில் விடச்சொல்லி சரமாரி பொழிந்து ஜாடுங்காலையில், சத்துருக்களியாவரும் பறந்து பறந்து தலைவிரி கோலமாய்ப் போய் விட்டார்கள். அப்படி அகஸ்மீகமாய் வந்த அர்ச்சுனன், அபாரியாய்த் தொடுத்துவிட்ட கணைகளினாற் பட்டுக்கெட்டபேரைச் சொல்லுவதற்குப் பிரமாவானவர் பலகோடி நாவைப் படைக்காமற்போனார். என்னொரு நாவினாற் சொல்ல என் தரமன்று. ஆனால், ஓர் கணக்குச் சொல்லுகிறேன். கேளும் அரசனே! வெற்றிமாலையும், வீரபட்டமணிந்த யானைகளும், குதிரைகளும், பதாதிகளும் அழிந்து, அவர்களுடலிலிருந்து வழிந்த இரத்த வெள்ளங்க ளோடி சமுத்திரத்திற் கலக்கவே, அக்கடலானது தீக்குணமுஞ் செந்நிறமுங் கொண்ட வடவாமுகாக்கினிபோல் பிரகாசித்து, அக்கடல் முழுமையுந் தன்னிறமாக்கிக் கொண்டது எவ்வளவு சேனைகளிறந்திருக்க வேண்டும் இறைவனே.

## சதானீகன் முதலிய எண்ணாயிர ராஜகுமாரர்கள் வதை

இப்படியாக அர்ச்சுனன் பாணங்களினால் அழியாநின்ற சேனைகளைக் கண்ட வீஷ்மரானவர், மறுபடியும் வில் நாணி யிழுத்துப் பகழி மாரி பொழிந்து, பாண்டவச் சேனைகளைப் பலபலவென்று நெல்லியிலைபோலுதிர அடித்துச் சிதைந்த காலத்தில், உபபஞ்சபாண்டவர்களும், தருமராஜன் புத்திரராகிய தேவகனும், வீமசேனன் புத்திரராகிய சர்வதேவன், கடோற்கஜன் இவர்களும், அர்ச்சுனன் புத்திரராகிய அபிமன்னனும், நகுலன் புத்திரராகிய விஜயன், நிர்மித்திரன் இவர்களும், சகாதேவன் புத்திரராகிய விரசுகோத்திரனும், பாஞ்சாலன் பிள்ளைகளாகிய துஷ்டத்தூய்மன், சிகண்டி, சுமித்திரன், பிரியதரிசனன், ஒத்திரகேது, சுகேது, துவசேனன், உத்தமோசன், உதார்மனு முதலியவர்களும், விராடராஜன் தம்பியாகிய சதானீகன், சங்கன், வராககேது இவர்களும், கீசகன் பிள்ளை பிரிதீவனும், குந்திபோஜன் குமாராளாகிய மந்தன், சுமந்தன், தூமகீர்த்தி இவர்களும், மலைத்துவஜ பாண்டியனும், இவன் பிள்ளை பிரதி பாண்டியன், ஜெயசேனன் இவர்களும், ஜராசந்தன் பிள்ளை சகதேவனும், சிசுபாலன் பிள்ளை துஷ்டகேதுவும், இன்னுமுள்ள கிராதாள்-அவுணாள்-ஆந்தராள்-வடமாள்-புண்ட

ரீகாள்-புருமித்திராள் முதலாகிய புத்திரவர்க்
கங்களும், தேகராஜ புத்திரப் பெருக்கங்
களுநம் ஒன்றுக எதிர்த்து, தங்கள் தங்கள் கைக்
கிசைந்த ஆயுதங்களால் அடித்து, பிரபல
மாகிய விற்களை வளைத்து, கற்களைப் பொழி
யுங் காளமேகம்போற் கமலாஸ்திரம்-நாகாஸ்
திரம்-கருடாஸ்திரம்-பிர்மாஸ்திரம் - நாராய
ணாஸ்திரம் - உருத்திராஸ்திரம் முதலாகிய
கணைகளைப் பொழிந்து, சிங்கக்குட்டிகளெல்
லாம் கிழச்சிங்கத்தைச் சுற்றி வளைந்துக்கொண்
டதைப்போல் வீஷ்மாச்சாரியை வளைத்துக்
கொண்டு, கரம்-சிரம்-கால்-மேல் என்று ஒன்
றுந் தெரியாமல் மூடுபனியைப்போல் மூடிக்
கொண்டார்கள்.

வீஷ்மாச்சாரியானவர், திக்குமுக்கிட்டுத்
தேம்பிச் செல்லெரிப்பி லகப்பட்டுக்கொண்ட
செத்தையைப் போற் சோம்பி, அடடா!
என்ன இந்த அறியாப் பசங்கள்கையி லகப்
பட்டுக்கொண்டோமென்று சற்று நிதானித்
துச் சாரதிக்குச் சவுக்ஞை செய்து, தேரை
நெடுந்தூரஞ் செலுத்திக்கொண்டு போய்த்
திரும்பிவந்து சிலையை வணங்கிச் சிலீமுகம்
விடுத்து, இளம்பஞ்ச பாண்டவர் எதிரினிற்கா
மல் இளைத்தோட அடித்து, பாண்டவர்களின்
உபபத்தினி புத்திராளாகிய தேவகன் முதல்
யாவருங் களைத்து விழும்படி பத்து பாணங்
களைத் தொடுத்து, பிரியதரிசன்-சித்திரகேது
இவர்களிருவரும் விண்ணுலகேற வீரவாளி
தாக்கி, சங்கனென்பவன் நிலத்தோடு சாயச்
சாயகம் விடுத்து, பிரிதீவன் பிராணன் போன
தும் போகாததுமாகப் புங்கம் விடுத்துப் புரட்
டிச் சாய்த்து, வருணக்கணையால் மந்தனென்
பவனை மாய்த்து, மலையத்துவஜனை மழைப்
பாணம்விடுத்து மடக்கி, ஜெயசேனனைச்
செயித்து சோதிக்கணை தூவி, ஆந்திராள் முத
லிய அவுணர்களை யடித்து, இராஜபுத்திராள்
முதலாகிய பேர்களையெல்லாம் ஒரு நொடியில்
நாசப்படுத்தி, திரிகாலவாசுதேவாள் - சாத்தகி
முதலாகிய யதுகுலத் தாயாதிகளை யெல்லாம்
புறமுதுகிட் டோடச் சாய்த்து, இரவுத்ரா
கார உருத்ரமூர்த்தியைப்போல் வீஷ்மாச்சாரி
யர் ரதத்தைக் கரகரவென்று குயவன் திகிரி
போற் சுழற்றிக்கொண்டு வந்தார்.

அக்காலையில், நகுல சகாதேவர்கள் இக்
கோலாகலங்களைக் கண்டு, தாஷ்டீகமாகிய
வீஷ்மாச்சாரியரைத் தகைந்து, ஏமாஸ்திரம்-
பாசுபதாஸ்திரம்-வருணாஸ்திரம்-முள்ளம்பு-
கிளையம்பு - துளையம்பு - திருகம்பு - கவ்வம்பு-
குதையம்பு - பிறையம்பு முதலிய பாணங்களை
விடுத்து, வீஷ்மருடைய மேனியை துளைத்து
வெலவெலக்கச் செய்தபோது; வீஷ்மரான
வர் வெகுண்டு, நகுல சகாதேவர்களுடைய
தேர்-குதிரை-சாரதி-வில்-பாணம்-வீரபட்டம்
முதலிய எல்லாவற்றையும் இடியாஸ்திரங்களி
ஞல் அடித்து-இடித்து-ஒடித்து-பொடித்து
பாண்டவச் சேனைகளையும், சேனாதிபதியை
யும், படைவீரர்களையும் பறக்க அடிக்கும்
போது; இராமமூர்த்திக்கு இளைய இலட்சும
ணர்க் கொப்பாகிய சத்தியவசன நித்தியவிரத
புத்திமானாகிய விராடராஜன் தம்பி சதானீக
னானவன், அவதிப்படுகின்ற தங்கள் சேனை
களைக் கண்டு, தனது தேரைச் செலுத்திக்
கொண்டு படைவீரர்களும், பட்டவர்த்தனரும்,
படர்ந்து தொடர்ந்து நெருங்கும்படியாய்ப்
பாரிய வில்லேந்தி நாணிபிகிந்து, எட்டுத்தி
சையும் பம்பரம்போ லாடவும், அம்பரமனைத்
துங் கூராழிபோலச் சுழலவும், வீஷ்மருடைய
பனைக்கொடிக்கம்பம் முறிபட்டு விழும்படியா
கக் கூர்மைதங்கிய அம்புகளும் பாணக்கொம்
புகளும் விடுத்து அலக்கழித்து, அழிந்த தன்
சேனைகளுக்குக் கடைக்கண்ணருளை நாட்டி,
கணைத்துணையும் உயிர்துணையும்போல் இரு
ந்து ஒரு நொடியில் யாவருக்குந் தென்புண்
டாகக் கூட்டி, சத்துருக்களை யெல்லாங் காற்றி
ஞல் மூண்டெழுங் கனல்போன்றழித்து, வீஷ்
மருடைய முனை முகத்தில் வந்து நின்று,
வெகுகோடி வீரர்களையும், சேனைகளையும்,
யானைகளையும் வெதும்பச்செய்து தனக்கொரு
வரு நிகரற்றவனாகச் சமர் பூமியிலுள்ளோர்
அனைவருந் தத்திக்கெட்டுத் தடுமாறச் செய்து
வந்தான். அச்செயலைவீஷ்மர் கண்டு வெருண்
டோடிய தன் சேனைகளைத் தகைத்து, அரவக்
கணையை எடுத்துத் தொடுத்து அதிர்த்து
எதிர்த்து வரும்படியாகிய சதானீகன்றலையை
யறுத்து அந்தரத்திலோடச் செய்து அரவக்
கொடியோன் முதலாகிய யாவரும் புகழ்ந்து
மகிழும்படியாய் வீராவேசங்கொண்டு நின்றார்.

அப்போது பாண்டவச் சேனைகளும்,
பாஞ்சாலன் தானைகளும், விராடன் படைக
ளும், யாதவபோஜர் தளங்களும் சதானீகனிற
ந்தானென்று மெலிந்து வருந்தி வாடியோடி
னார்கள். அப்படி இறந்த சதானீகனுடைய
தலையானது, மேற்குத் திசையிற் றெறித்து
விழுந்த தன்மையைப்போற் சூரியன் மேற்கு

சமுத்திரத்தில் போய் நுழைந்தான். இந்தப் பிரகாரஞ் சேனைகளெல்லாம் அழிந்து, சதானீகனும் விழுந்து, பகலோனு மறைந்து, செவ்வானம்போல் இரத்த வெள்ளமுஞ் சிவந்து, ரணக்களமும் இருண்டு போனபோது, இந்த அமர்க்களத்தைக் கண்ட பாண்டவர் கும்புகளும், விராடன், பாஞ்சாலன் முதலிய மாண்டவர் கும்புகளும் ஒன்ருகச் சேர்ந்து, சதானீக னிறந்ததைப் பார்த்துப் பலவாருக சோர்ந்து அந்தோ! இதென்ன காரணம்? இந்த வீஷ்மனுனவன், முதநாட் போரில் விராடனுடைய மூத்த பிள்ளையாகிய சேனுபதியென்னுஞ் சுவேதனுயிரை வாங்கி விட்டான். இன்று யுத்தத்தில் அந்த விராடனுடைய தம்பியாகிய சதானீகனை அழித்து விட்டான். இந்த மச்சகுலத்தவருக்கு இவனே எமன்போல் இருந்து மாய்க்கின்ருன். இது ஜன்மாந்திர பழியோ? அல்லது இதென்ன வழியோ! என்று ஏங்கி, எண்ணுயிர ராஜகுமாரர்களையு மின்று போக்கினனே யென்று துயரோங்கி, காலனை யொடுக்குங் கதிர்வேலைத் தாங்கிய காவலரெல்லாருங் கண்கலங்கி விராடராஜனுக்கு வேண்டிய தயிரியங்களைச் சொல்லித் தேற்றி, நல்லது இந்த மட்டும் போரை நிறுத்துங்களென்று பேரி முழக்கி வைத்து, புருவ நெரிய வெரிக்குஞ் சிவந்த கோபக்கண்களையுடைய துஷ்டத் தூய்மன் முதலாகியப் புத்திர வர்க்கத்தாரும், மித்திர வர்க்கமாகிய நிருபர்களும், போர்த்திறத்திற் க்ஷாத்திரம் மேற்கொண்ட ஐவர்களும், ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியும், சஞ்சலத்துடன் தங்களுடைய பாசறை போய்ச் சேர்ந்தார்கள்.

இப்பால் திங்கட் குடைகவிக்க, செம்பொற்கவரிவீச, விருது சின்னங்களூத, வீஷ்மாச்சாரியரும், துரியோதனமகாராஜனும், தம்பியர் பலரும், சேனைகளும், மற்ற வீராதிவீர வேந்தர்களுந் திரண்டு வரும்படியாகப் பாசறைக்குப் போய்ப் பலவித ஐயங்களையும் பேசி பாட்டனுரைப் புகழ்ந்துகொண் டிருந்தார்கள். இந்த ஒன்பதா நாள் யுத்தத்தில் மடிந்த ரதகஜதுரகபதாதி முதலாகிய சேனைப் பெருக்கத்தைக்கண்ட பூதப்பிரேதபிசாசகணங்களும், நாய் நரிகளுங் கும்பலாகக் கூடிக்கொண்டு, கூடிய வரையிலுந் தின்றுகளித்து ஜெயம் பாடி, நமதுவயிற்றை நிரப்பவோ இந்தஉயிர்களைப் படைத்தான் பிரமாவென்று கொஞ்சந் துயரமும் வெகுவாகிய சந்தோஷமு முடைத்தாய்ப் புதிதாய்ச் செல்வமனுபவிக்கப் புகுந்த திருடரில், முதற்றரமாகிய குருடரைப்போல் வேதாந்தம் பேசி, வீணுகிய டம்பங் கூறிக் காணுதுகண்ட சுகவாழ்விதுவென் றிருந்தார்கள். கேளும் ஜெனமேஜெய மகாராஜனே என்று வைசம்பாயனர் சொல்லிக்கொண்டு வர, அவ்வரசனும் அவன் மந்திரிகள் முதலாகிய யாவருங் கேட்டு அகமகிழ்ந்து, அமுதகிரணக் குலத்துதித்த அரசரானவர் தருமபத்தினியுடனெழுந்து சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து, மாளிகைக்குட் புகுந்திருந்து மறுநாட் காலமே எழுந்து ஸ்நான சந்தி, செபதப முதலாகிய நித்திய நைமித்யாதிக் கிரியைகளெல்லா முடித்துக்கொண்டு, யாக மண்டபம் வந்துசேர்ந்து, மகானுக்களுக்குள் முதல்வராகிய வைசம்பாயனரைப் புகழ்ந்து போற்றி ஆசீர்வசனங்கொண்டு, சிந்து முதவிற் கசிந்துவந்த இந்துமரபி லுதித்தெழுந்த தாஷ்டீகராகிய எங்கள் பாட்டன் வீஷ்மாச்சாரியார் வசுபதமடையப் போகின்ற பத்தாநாளிஃதாகையாற் சித்தசுத்தியுடன் தானதருமஞ் செய்யவேண்டுமென் றெண்ணி, பெரியோர்களுக் கெல்லாந் தவிசளித்தல், கைகழு நீர்தரல், கால்கழு நீர்தரல், முக்குடி நீரதரல், ஸ்நானஞ்செய்வித்தல், வஸ்திரஞ் சாத்தல், முப்புரிநூல்தரல், சந்தனம்பூசல், புட்பமணிதல், அக்ஷதை சாத்தல், விளக்கேற்றல், தூபங் காட்டல், கர்ப்பூரமேற்றல், நிவேத்தியம்வைத்தல், பாக்குவெற்றிலை அமைத்தல், மந்திரமலராலர்ச்சனை செய்தல் இவ்விதமாகிய பதினுறு வித உபசாரங்களும், அன்னதானம்-வஸ்திர தானம் - நவரத்னதானம் - பொன்பாத்திரதானம்-அஜதானம்-கஜதானம்-ரததானம்-பூதானம்-கோதானம்-கன்னிகாதானம்-கிரகதானம்-சயனதானம்-சத்திரசாமரைதானம் - பாதுகை தானம் இத்தியாதி சோடசமகாதானங்களும், ஆதுலர்க்குச்சாலை-ஓதுவார்க்குணவு - அறுசமயத்தாருக்குண்டி-பசுவுக்கு வாயுறை - சிறைச்சோறு-மகப்பெறுவித்தல் - மகவுவளர்த்தல் - மகப்பால் வார்த்தல்-அறவைப்பிணஞ்சுடுதல்-அறவைத்தூரியம்-சுண்ணம் - நோய்க்கு மருந்து-வண்ணுர்-நாவிதர்-கண்ணுடி-காதோலை-கண்மருந்து - தலைக்கெண்ணெய் - பெண்போகம்-பிறர்துயர்காத்தல்-தண்ணீர்பந்தல்-மடம்-தடம்-சோலை-ஆவுரிஞ்சுதறி விலங்கிற்குணவு-ஏறுவிடுத்தல்-விலைகொடுத்துயிர்காத்தல்-தர்மகல்யாணமென்று சொல்லப்படுகின்ற முப்பத்திரண்டறங்களுஞ் சற்பாத்திரங்களுக்கு குறை

வரச் செய்து, புண்ணிய தேக கண்ணியனு கிய அந்த ஜெனமேஜெய மஹாராஜன் மேனடந்த பத்தாநாள் யுத்தத்தைக் கேட்க, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினர்.

ஒன்பதாம்போர்ச் சருக்கம் முற்றிற்று.

## இப்பால், பத்தாம்போர்ச் சருக்கம்

### கண்ணன் துதி

வலியிலன்று தந்தைசெற்ற மைந்தனுக்கு வந்தபோர், நலிவெலாம் கற்றுநாம நாலிரண் டெழுத்துடன், பொலியுநாம மறைகள்சொன் ன பொருள்விளக்குநாமமுன், கலியனெங்கண் மங்கைபாதி கண்டுகொண்ட நாமமே.

வாக்கினுற் சக்ரவாளத்தைப்போன்ற ஆக் கினுசக்ரவாள் கொண்டாண்ட அரசனே! போர்க்களத்திற் பொருந்திய துரியோதன மகாராஜனினைவைப்போலிருண்ட இருட்கூட் டத்தை நீடித்து நிற்கவொட்டாமல் தர்மரா ஜன் சத்தியத்தைப்போன்ற சூரியனுனவன், வித்துவான்கள் வாக்கினின்றும் பிரகாசிக்குங் கற்பனை யலங்காரம்போற் கீழ்த்திசையிலுதய மாதலும், உடனே பஞ்சசயனத்திற்பொருந்தி நித்திரை நீங்கியெழுந்த குந்தி புத்திரராகிய தர்மராஜனுனவர், காலைக்கடன் கழித்து யுத்த கோலந்தரித்து சக்ராதரராகிய சநார்த்தனனு டன் பேசவேண்டிய வசனங்களைப்பேசி போர் திறங்கொண்ட பூபாலர்சூழ, யுத்தசன்னுத்த ராய்ப் பொங்கி எழுந்துவந்து, தன்னைப்பணி ந்த தம்பிமார்களுடன் புறப்பட்டு வருதலும், அவரோடுவந்த கடலோசையைக் காரோசை யைக் கலங்கச்செய்யுஞ் சேனைகளின் பேரோ சையும், தேவர்கள் செவிடுபடும்படியாய்முழங் கிய வாத்தியத்தொனியும் இமையவர் கண்கள் புதைத்து மெய்பதைக்கும்படியாய் அச்சேனை கும்புகளினுலெழுந்த புழுதித் தும்புகளும், மன்னர் மன்னராகிய துரியோதனனை முன்னு தாகச்சென்று கண்டு இதென்னவேலை இனிக் காரியமில்லையென்று அவனுடைய காதுகளை யடைத்துக் கண்களையு மறைத்ததைப்போற் கவிந்து கலந்து பறக்கும்படியாய், திரண்டு புரண்டு வந்துசெறிந்தன. இவ்வாறு செறி ந்த சேனைகளை யெல்லாஞ் சேனுநாயகராகிய துஷ்டத்தூய்மன், முன்னுட்கட்டிய பத்மராக வரை யூகமே அந்நாளுங்கட்டி அந்த யூகத் தைச்சுற்றிலும் மதிற்சுவர்போற் படைகளை யமைக்க, அண்டமுகடதிரும்படியாய்ப் பாண் டவசேனைகள் வெற்றிபெற நின்றூர்கள். கௌர வப்படையின் சேனுதிபதியாகிய வீஷ்மாச்சா ரிய ருதயத்திலெழுந்து அரண்ய நெருக்கம் போன்ற கிரணப் பெருக்கங்களையுடைய சூரிய பகவானைக் கைதொழு திருந்தபோது, வலம் புரிமாலையணிந்த மகாராஜனும், அவன் தம்பி மார்களும், சகுனி, சல்லிய, திரிகர்த்த, சிந்து தேசாதிபர் முதலாகிய படைத்தலைவரும் வீஷ் மாச்சாரியரைக் கண்டு வணங்கி, நாள்தோறும் அழைத்துக் கொண்டுபோகும் வழக்கப்படிக்கு அன்றைக்கும் வந்து சேனுதிபதியின் பாசறை வாச லிருபக்கத்திலும் மொய்த்து நின்றூர்கள்.

இப்படியாக வந்து நின்ற அரவ கேத னன் முதலாகிய அதிரத சமரத வரசர்களைக் கண்ட வீஷ்மரானவர், அதிசீக்கிரத்திற் சல்ல டந்தொடுத்து, தட்டிகட்டி குச்சுவிட்டு கச்சை பிகிந்து, பொற்கவசம் - மற்கவசம்-சித்திரக் கவசம்-வச்ரக்கவசம் முதலிய கவசங்களிறுக்கி, அண்டர்கோன் விதிக்கும் எண்டிசை மதிக்கும் விண்டலந்துதிக்கும் பண்டுபட்டிருக்கும் மகர குண்டலமணிந்து, முத்துவடம்-ரத்னவடம்- வச்ரவடம் - உத்தரசஞ்சம் - மோகனமாலை - தும்பிப்பதக்கம்-சரப்பிணி இவை முதலாகிய பல ஆரங்களும், தோளணி-வாகுவலயம்-கட கம்-கங்கணம்-விரற்சாடு - கரச்சாடு - மோதி ரங்கள் முதலிய ஆபரணங்களும், கொத்துச் சித்திரவேலையுடைய நவரத்ன கஜித கிரீட மும், வீரபட்டமும், பட்டையரஞாணும், வீர கண்டாமணியும் அழகுக் கலங்காரஞ் செய்வ தைப்போலணிந்துக்கொண்டு, கத்தி-கட்டாரி- சுரிகை-வாங்கு-வாள்-கதை-சூலம்-வேல்-எழு மழு முதலாகிய தனுர்ப்பாணங்களுங்கொண்டு விபூதிரேகையுஞ் செந்தூர திலகமுமணிந்து, சுகந்த பரிமள மலர்த்தாள் புனைந்து, தும்பை மாலை சூடிக்கொண்டு, அம்பைவிரத நிறை வேறுங்கால மிதென்று சம்பராரியைப்போல் இம்பர் நடுங்க-உம்பரொடுங்க - தும்பு தொட ங்க-வம்பர்மடங்க - சிங்கமடங்கல்போற் சிறந் தினி தெழுந்து, பங்கஜமெனமுகம் பளபளத் தொளிர்ந்து வெள்ளைக்குடை-வெண்சாமரை- யானைக்குடாரி-முரசு-சக்கரம்-கொடி - தோர ணம்-சங்கம் இவை முதலிய சின்னங்களோடு, மந்திரியர்-கருமாதிகர் - தந்திரியர் - கட்டியர்- பட்டுவான்கள்-வந்திப்போர்-புகழ்வோர் - சகு

ன றால் பார்ப்போர்- தூதுவர்-பரத நாட்டியப் பெண்கள் இவர்கண்முதலிய அரச சின்னங்க ளுடன் புறப்பட்டு, இன்றை யுத்தத்தை இனி தாக முடிக்கிறேனென்று வீரப்பிரதாப தீரத் வங்கள்பேசி, பனைக்கொடி நாட்டிய தேரிலே றிப் பலருஞ்சூழப் போர்முகத்திற்கு வந்து, நாணிபூட்டிய வில்லும், ஆணிப்பொற்கவசம் புனைந்த அம்புறுத்தூணியும், வெற்றியைத் தரும் வடிவாளும், சத்தியாற் சித்திபெற்ற கூர் வேலு முடையவராய் முரசுவாத்திய முதலிய வைகள் முழங்கவைத்து, தம்முடைய சேனை தனை நேற்றுவகுத்த ஜெயபத்திர யூகமாகவே இன்றுமமைத்து, தூசிமுனையில் மாசிலாமனத் தோடு மகிழ்ந்துவந்து நின்றனர்.

இவ்வாறு வந்துநின்ற அந்த கங்காபுத் திரனைக் கருணையண்ணலாகிய ஸ்ரீ கண்ணன் கண்டு மன்மகிழ்வு கொண்டு மதித்து முகமலர் ந்த காலத்தில், அதைப் பற்குணன் பார்த்துப் பரந்தாமனைப் பணிந்து, இந்தப் பத்தாநாட் போர்முனையில், தேவரீர் களித்து மகிழ்ந்த காரணமென்ன, அடியேனுக்குத் தெரிவிக்க வேண்டும் ஸ்ரீ நாதனே என்று இறைஞ்சிக் கேட்க, கண்ணன் ஓ இந்திரன்மதலாய்! வே ரோர் அதிசயமில்லை; இதோ யுத்தமுனையில் வந்திருக்கும் கங்காபுத்திரனாகிய வேத விரத னுக்கு வானவர் வணங்கும் பழைய வசுபதத் தை இன்றைக்குக் கொடுக்க விருப்புற்றிருக் கின்றோம். ஆகையால், நெடுநாளைய மனிதன் இந்தக் கர்மபூமியை விடவேண்டிய காலம் இன்று நேரிட்டதல்லவா வென்று விந்தை யாக நினைத்துச் சிந்தைகளித்தோம். ஓ வீர மோங்கிய விற்புயகரனே! இனிநீ நாரிவாங்கு தல் நற்செயல் நரனே: என்று நளின நாபி யான் உரைக்கக்கேட்ட காலகேய நிவாதகவ சாளைத் துணித்து, தேவர்களுக்கு சீரும் சிறப் பும் ஜெயமுமளித்த விஜய காண்டீப விற்றுங் கிய வீரன், பலம்பொருந்திய தேரின்மீது பட படாகாரத்துடன் ஜெயம் ஜெயமென்று பற ந்து முன்னே செல்லும்படியாகிய அனுமக் கொடிபெற்ற மேன்மையுற்ற தீரன், சூற் கொண்ட மேகம்போன்ற சுந்தரரூப மாரன், வனவாசஞ் செய்துவந்த மன்னர் * மன்னனு கிய அர்ச்சுனமகாராஜன் உடனே இந்ரவிமா னம்போன்ற ரதத்திலேறிக் கொண்டு, தாசரதி யென்னும் ஸ்ரீராமமூர்த்திக்கு ஒப்பாக யிருந் தான். அப்படியிருந்த அர்ச்சுனனை ஸ்ரீராம மூர்த்திக்கு ஒப்பாக எப்படிக்கு சொல்லலாம் என்றால், ஸ்ரீராமமூர்த்தியானவர் கடலைக் கடந்து அரக்கரையழித்து, அமரரைக் காத்த படி, இந்த அர்ச்சுனனும் கடலைக் கடந்து தோயமாபுரத்துக் காலகேய நிவாதகவசளாகிய அரக்கரைக்கொன்று அமரரைக் காத்த மையாலும், ஸ்ரீராமருக்குச் சீதை யென்னு மோர் கொடிநிமித்தமாக அநுமார் முன் னின்றபடி, இந்த அர்ச்சுனன் தேரிலுங் காந் தியையுடைய கொடி நிமித்தமாக அநுமார் முன்னின்றமையாலும், ஸ்ரீராமர் மேகம் போன்ற திருமேனியுடையவரா யிருந்தபடி, அர்ச்சுனராஜனும் மேகம்போன்ற திருவுரு வங் கொண்டமையாலும், ஸ்ரீராமர் சிறியதா யின் வாக்கியநிமித்தமாய் பட்டத்தை விடுத்து வனம்போய் மீண்டபடி, இந்த விஜயனும் பெரியதாயின் பிள்ளை நிமித்தமாய் பட்டத்தை விட்டு வனவாசம்போய் வந்தமையாலும், ஸ்ரீராமஜெயமே ஜெயமென்று உலகத்தினர் சொல்லு மியல்பின்படி, விஜயன் விஜயமே விஜயமென்று யாவரும் வியந்துகூறும் விசே டத்தினாலும், ஸ்ரீராமர் வில்லை வளைத்துப் பெண்கொண்டபடி, இந்த அர்ச்சுனனும் வில்லைவளைத்துப் பெண்கொண்டமையாலும், ஸ்ரீராமர் சிறுபோதில் விஸ்வாமித்திரரு டைய சபதம் நிறைவேற்றி யாகத்தை முடித்த படி, அர்ச்சுனராஜனுஞ் சிறுபோதில் துரோ ணாச்சாரியருடைய சபதத்தை முடித்தமை யால், அவருஞ் செங்கதிர்க்குல மாதலினு லும், இவனும் வெண்கதிர்க்குல மாதலினு லும், அவருக்கு விஜய கோதண்டம் கையில் இருப்பதினாலும், இவனுக்கும் விஜயகாண் டீப மிருப்பதினாலும், அர்ச்சுனன் ஸ்ரீராம ருக் கொப்பாய் நின்றானென்று சொல்லலுற் றார்.

இப்பால் அர்ச்சுனராஜன் அகங்களிகூர் ந்து, அநந்த கல்யாணனுடைய அருண்முக நோக்கி, ஓ என்னையனே! மூவுலகத்தாராலு மறியாதவில்லும், அழியாதரதமும், மாளாத அம்புறுத் தூணியும், அசையாத அனுமத்துஜ மும், களையாத சுவேதவாம்புரவியும் ஆகிய இவைகளெல்லாம் அக்கினிதேவன் கொடுக்கப் பெற்றிருக்கின்றேன். இதுவுமல்லாமல், இந்த அழியாதரதத்தைச் செலுத்துவதற்கு என்னை யாளவந்த தேவரீரைச் சாரதியாகவும் பெற் றேன். ஆகையால், இப்பூமியிற் பொருந்திய அரசர்கள் யாவரானபோதிலும், தேவரான போதிலும், இராட்சதரானபோதிலும், இன்

னும் மற்ற எவர்களானாலும், என்னுடன்வந்தெதிர்ப்பவர்களை இன்றையப் போரில் இறக்கச்செய்யாமற் பிழைக்கச் செய்யப்போகிறதில்லை. ஓர் மலையைக் குடையாகப் பிடித்த மாதவனே! அந்த வேடிக்கையை இன்று நீர் வியக்கப்பாரும்; இன்றைக்குத் தேவரீருடைய அனுக்கிரகத்தினு லுண்டாகப்போகிற என்னுடைய பராக்கிரமம் இலேசாகியதல்ல. களங்க ரகிதமாகிய மனமும் மிகுத்த உற்சாகமும் எனக்கு மேலிட்டிருக்கின்றபடியால், இந்தக்காலத்தில் என் தந்தையாரானாலும், சகோதரரானாலும், பிள்ளைகளானாலும், பேரர்களானாலும், பாட்டர்களானாலும், பந்துக்களானாலும், குருவானாலும், இன்னமெவர்களான போதிலும் இன்றைக்குக் கொல்லேனென்று ஒருக்காலுஞ் சொல்லேன். தேவரீர் திருவாய் மலர்ந்தருளினுற் கண்டதுண்டமிரண்டாகக் கொன்றுபோடுவேன். ஓ முதன்மையாகிய தத்வஞான வேதாந்தப்பொருளை என் சிந்தை நிரம்பச் செவிவழி புகுத்திச் செனனமரண முதலாகிய தீவினைக்கட்டறுத்த செங்கண்மாலாகி, எங்கள் பங்குத்தெய்வமா யமைந்தமர்ந்த தேசிகனே என்று வாசவன் மகன் வணங்கிச்சொல்ல, அதைக்கேட்ட மாயோன் மனதுவந்து பொன்மலைபோன்ற தேரை நடத்திப் போரை நடாத்தும் அர்ச்சுனனென்று தேவவிரதனென்னுங் காங்கேயனின்ற யுத்தபூமியிற் றேரைக்கொண்டுபோய் நிறுத்தினர். அப்போது அர்ச்சுனனுக்குப்பின்னு லவ்விடத்தில் இறைந்துவந்த வெற்றியையுடைய கொற்றவரெல்லாஞ் சுற்றிலுஞ் செறிந்து, ஒன்றுபட்டுக் கைகலந்து, எதிரியின் சேனைகளுந் தாங்களுஞ் சேர்ந்து போர் புரிந்தார்கள். அந்த வேளையில் அர்ச்சுனனென்பவன், அவர்களை யெல்லாம் அம்பரத்திலாட்டும் பம்பரம் போலாட்டி, அவ்விடத்தில் நிலைக்கவொட்டாமலோட்டி, தீரபோஜரிற் சிறந்த வீரகேசரிபோலிருந்து வீஷ்மரை வளைத்துக்கொண்டு பதாதிகேசம் வரைக்கும் பாணங்களை நிரைத்து, பலபல திசைகளினிற்குஞ் சேனைகள் விலவிலவென்று அசைவற்று விழும்படி பாராடப் போராடியபோது, அப் பார்த்தன் முதலிய பல வீரர் தொடுத்த பாணங்களெல்லாம், பரம்படித்த சேற்றில் விதைத்த விதைப்போலும், பள்ளத்தாக்கில் நட்ட நாற்றின் நடவுபோலும், வீஷ்மாச்சாரியருடைய மெய் முழுதுந் துளைக்கும்போதில், அவர் நாவுலர்ந்து, நாபி வரண்டு, கண் புகைந்து, கையசைந்து, கவலைப்படாத உள்ளமும் நொந்து, அவலப்படாத சிந்தையும் வெந்து, மிகுந்த பனியில் முகங்கருகி வருந்தி நிறமழிந்து குவிந்து வாடிய தாமரைக் கமலம்போல் மதிமுகம்வாடி நின்றார்.

அந்தவேளையில், ஆயுதமுனைகள் கருகிப் புகையவும், யானை குதிரைகள் கண்ணீர் சொரியவும், அணிந்த மாலைகள் சருகாகவும், அலகை முதலிய வெதிர்ந்தோடவும், அம்பரத்தி லுலாவுங் காக்கை கழுக்கள் அடித்து மோதிக்கொண்டு தேரின்மேல் விழவும், அந்தரத்தினின்றும் உதிரமாரி அமோகமாக விரைந்து தூற்றவும், குறைக்கொள்ளிக் கட்டைகளுதிர்ந்து குவியவும், கூக்குரலாக நாய் நரி கூவவும், தீப்பட்டெரிந்து சேனைகள் வேகவும், திகிற்பட்டெவர்களுஞ் சிந்தை தடுமாறவும், உள்ளம் பிரமிக்கவும், உயுத்தஞ் சிறக்கவும் இப்படியாகப் பலவித சகுனங்களைக் கண்ட சகுனநூல் வல்லோர் தடுத்தார்கள். அவர்களை வீஷ்மர் தடுத்து, இந்தச் சகுனங்களெல்லாம் எனக்கு நல்ல சகுனமென்று மனந்தெளிந்து, தமது பூர்வோத்திர சரித்திரத்தைத் தாம் எண்ணிப் பார்த்து, தம்மை நம்பிய மித்திரானுக்குச் சதாகாலமும் உதவி செய்துவந்த தாமரை மலர்போன்ற தமது கரத்திற் பிடித்த கணைகளை தொடுத்து, பகைவர் விடுத்த அஸ்திரங்களை யெல்லாந் தடுத்து, பாண்டவர்களையு முகமாறவடித்து வருங்காலையில், துருபதேசம் - மச்சநாடர் - கலிங்கேசர் - சோனகர் - கிஞ்சயர் - கராடர் - கௌசிகர் - சாலுவர் - சீனர் முதலிய தேசபாஷை மன்னவர்கள் வந்தெதிர்க்க, அவர்களை யெல்லாங் கலகலக்கச் செய்து, ஒருவர்போலவே அனைவரும் உடல் வருந்தி இறக்கும்படியாகவும், முதுகிட்டோடும்படியாகவும், வின்னுணி யிறுக்கியுருக்கினர் வீஷ்மாச்சாரியர். இவ்வாறு வீஷ்மாச்சாரியர் முன்னோடியடித்த அடியில் சுத்த வீரர்களின் தலை துணிந்து பின்னோடிவிழவும், அவர்களுடலானது முன்னோடிவந்து கொடும்போர் விளைக்குங் குறைத்தலைக் கவந்தங்களுடன் கூத்தாடவும், இன்னுஞ் சில சூரர்கள் இரண்டு பாதங்களும் அறுபட்டுப்போகச் சப்பாணிகளாய்க் குந்திக்கொண்டு, பூமாலைசூடிய வில்லை வணங்கிச் சரங்களைப் பொழியவும், கொடியறுபட்டுக் - குடைமுறிபட்டுக் - கோல் ஒடிபட்டுக் - கால் தறிபட்டு - வில்லொடிந்து - பல்லுடைந்து - சரங்கொண்ட கரங்குறைந்து -

னூல் பார்ப்போர்-தூதுவர்-பரத நாட்டியப் பெண்கள் இவர்கள்முதலிய அரச சின்னங்களுடன் புறப்பட்டு, இன்றை யுத்தத்தை இனிதாக முடிக்கிறேனென்று வீரப்பிரதாப தீரத்வங்கள்பேசி, பனைக்கொடி நாட்டிய தேரிலேறிப் பலருஞ்சூழப் போர்முகத்திற்கு வந்து, நாணிபூட்டிய வில்லும், ஆணிப்பொற்கவசம் புனைந்த அம்புறாத்தூணியும், வெற்றியைத் தரும் வடிவாளும், சத்தியாற்சித்திபெற்ற கூர்வேலு முடையவராய் முரசுவாத்திய முதலியவைகள் முழங்கவைத்து, தம்முடைய சேனைகளை நேற்றுவகுத்த ஜெயபத்திர யூகமாகவே இன்றுமமைத்து, தூசிமுனையில் மாசிலாமனத்தோடு மகிழ்ந்துவந்து நின்றனர்.

இவ்வாறு வந்துநின்ற அந்த கங்காபுத்திரனைக் கருணையண்ணலாகிய ஸ்ரீ கண்ணன் கண்டு மனமகிழ்வு கொண்டு மதித்து முகமலர்ந்த காலத்தில், அதைப் பற்குணன் பார்த்துப் பரந்தாமனைப் பணிந்து, இந்தப் பத்தாநாட் போர்முனையில், தேவரீர் களித்து மகிழ்ந்த காரணமென்ன, அடியேனுக்குத் தெரிவிக்க வேண்டும் ஸ்ரீ நாதனே என்று இறைஞ்சிக் கேட்க, கண்ணன் ஓ இந்திரன்மதலாய்! வேறோர் அதிசயமில்லை; இதோ யுத்தமுனையில் வந்திருக்குங் கங்காபுத்திரனாகிய வேத விரதனுக்கு வானவர் வணங்கும் பழைய வசுபதத்தை இன்றைக்குக் கொடுக்க விருப்புற்றிருக்கின்றோம். ஆகையால், நெடுநாளைய மனிதன் இந்தக் கர்மபூமியை விடவேண்டிய காலம் இன்று நேரிட்டதல்லவா வென்று விந்தையாக நினைத்துச் சிந்தைகளித்தோம். ஓ வீரமோங்கிய விற்புயகரனே! இனிநீ நாரி வாங்குதல் நற்செயல் நரனே: என்று நளின நாபியான் உரைக்கக்கேட்ட காலகேய நிவாதகவசானைத் துணித்து, தேவர்களுக்கு சீரும் சிறப்பும் ஜெயமுமளித்த விஜய காண்டீப விற்றாங்கிய வீரன், பலம்பொருந்திய தேரின்மீது படபடாகாரத்துடன் ஜெயம் ஜெயமென்று பறந்து முன்னே செல்லும்படியாகிய அனுமக் கொடிபெற்ற மேன்மையுற்ற தீரன், சூற்கொண்ட மேகம்போன்ற சுந்தரரூப மாறன், வனவாசஞ் செய்துவந்த மன்னர் * மன்னனாகிய அர்ச்சுனமகாராஜன் உடனே இந்ரவிமானம்போன்ற ரதத்திலேறிக்கொண்டு, தாசரதி யென்னும் ஸ்ரீராமமூர்த்திக்கு ஒப்பாக யிருந்தான். அப்படியிருந்த அர்ச்சுனனை ஸ்ரீராமமூர்த்திக்கு ஒப்பாக எப்படிக்கு சொல்லலாம் என்றால், ஸ்ரீராமமூர்த்தியானவர் கடலைக் கடந்து அரக்கரையழித்து, அமரரைக் காத்தபடி, இந்த அர்ச்சுனனுங் கடலைக் கடந்து தோயமாபுரத்துக் காலகேய நிவாதகவசாளாகிய அரக்கரைக்கொன்று அமரரைக் காத்தமையாலும், ஸ்ரீராமருக்குச் சீதை யென்னுமோர் கொடிநிமித்தமாக அநுமார் முன்னின்றபடி, இந்த அர்ச்சுனன் தேரிலுங் காந்தியையுடைய கொடி நிமித்தமாக அநுமார் முன்னின்றமையாலும், ஸ்ரீராமர் மேகம்போன்ற திருமேனியுடையவரா யிருந்தபடி, அர்ச்சுனராஜனும் மேகம்போன்ற திருவுருவங் கொண்டமையாலும், ஸ்ரீராமர் சிறியதாயின் வாக்கியநிமித்தமாய் பட்டத்தை விடுத்து வனம்போய் மீண்டபடி, இந்த விஜயனும் பெரியதாயின் பிள்ளை நிமித்தமாய் பட்டத்தை விட்டு வனவாசய்போய் வந்தமையாலும், ஸ்ரீராமஜெயமே ஜெயமென்று உலகத்தினர் சொல்லு மியல்பின்படி, விஜயன் விஜயமே விஜயமென்று யாவரும் வியந்துகூறும் விசேடத்தினாலும், ஸ்ரீராமர் வில்லை வளைத்துப் பெண்கொண்டபடி, இந்த அர்ச்சுனனும் வில்லைவளைத்துப் பெண்கொண்டமையாலும், ஸ்ரீராமர் சிறுபோதில் விஸ்வாமித்திரருடைய சபதம் நிறைவேற்றி யாகத்தை முடித்தபடி, அர்ச்சுனராஜனுஞ் சிறுபோதில் துரோணாச்சாரியருடைய சபதத்தை முடித்தமையால், அவருஞ் செங்கதிர்க்குல மாதலினாலும், இவனும் வெண்கதிர்க்குல மாதலினாலும், அவருக்கு விஜய கோதண்டம் கையில் இருப்பதினாலும், இவனுக்கும் விஜயகாண்டீப மிருப்பதினாலும், அர்ச்சுனன் ஸ்ரீராமருக் கொப்பாய் நின்றானென்று சொல்லலுற்றார்.

இப்பால் அர்ச்சுனராஜன் அகங்களிகூர்ந்து, அநந்த கல்யாணனுடைய அருண்முக நோக்கி, ஓ என்னையனே! மூவுலகத்தாராலுமறியாதவில்லும், அழியாதரதமும், மாளாத அம்புறாத்தூணியும், அசையாத அனுமத்துஜமும், களையாத சுவேதவாம்புரவியும் ஆகிய இவைகளெல்லாம் அக்கினிதேவன் கொடுக்கப் பெற்றிருக்கின்றேன். இதுவுமல்லாமல், இந்த அழியாதரதத்தைச் செலுத்துவதற்கு என்னையாளவந்த தேவரீரைச் சாரதியாகவும் பெற்றேன். ஆகையால், இப்பூமியிற் பொருந்திய அரசர்கள் யாவரானபோதிலும், தேவரானபோதிலும், இராட்சதரானபோதிலும், இன்

னும் மற்ற எவர்களானலும், என்னுடன்வந்தெதிர்ப்பவர்களை இன்றையப் போரில் இறக்கச்செய்யாமற் பிழைக்கச் செய்யப்போகிறதில்லை. ஓர் மலையைக் குடையாகப் பிடித்த மாதவனே! அந்த வேடிக்கையை இன்று நீர் வியக்கப்பாரும்; இன்றைக்குத் தேவரீருடைய அனுக்கிரகத்தின லுண்டாகப்போகிற என்னுடைய பராக்கிரமம் இலேசாகியதல்ல. களங்க ரகிதமாகிய மனமும் மிகுத்த உற்சாகமும் எனக்கு மேலிட்டிருக்கின்றபடியால், இந்தக்காலத்தில் என் தந்தையரானலும், சகோதரரானலும், பிள்ளைகளானலும், பேரர்களானலும், பாட்டர்களானலும், பந்துக்களானலும், குருவானலும், இன்னமெவர்களானபோதிலும் இன்றைக்குக் கொல்லேனென்று ஒருக்காலுஞ் சொல்லேன். தேவரீர் திருவாய் மலர்ந்தருளினற் கண்டதுண்ட மிரண்டாகக் கொன்றுபோடுவேன். ஓ முதன்மையாகிய தத்வஞான வேதாந்தப்பொருளே என் சிந்தை நிரம்பச் செவிவழி புகுத்துச் செனனமரண முதலாகிய தீவினைக்கட்டறுத்த செங்கண்மாலாகி, எங்கள் பங்குத்தெய்வமா யமைந்தமர்ந்த தேசிகனே என்று வாசவன் மகன் வணங்கிச்சொல்ல, அதைக்கேட்ட மாயோன் மனதுவந்து பொன்மலைபோன்ற தேரைநடத்திப் போரை நடாத்தும் அர்ச்சுனனென்று தேவவிரதனென்னுங் காங்கேயனின்ற யுத்தபூமியிற் றேரைக்கொண்டுபோய் நிறுத்தினர். அப்போது அர்ச்சுனனுக்குப்பின்னு லவ்விடத்தில் இறைந்துவந்த வெற்றியையுடைய கொற்றவரெல்லாஞ் சுற்றிலுஞ் செறிந்து, ஒன்றுபட்டுக் கைகலந்து, எதிரியின் சேனைகளுந் தாங்களுஞ் சேர்ந்து போர் புரிந்தார்கள். அந்த வேளையில் அர்ச்சுனனென்னவன், அவர்களை யெல்லாம் அம்பரத்திலாட்டும் பம்பரம் போலாட்டி, அவிடத்தில் நிலைக்கவொட்டாமலோட்டி, தீரபோஜரிற் சிறந்த வீரகேசரிபோலிருந்து வீஷ்மரை வளைத்துக்கொண்டு பதாதிகேசம் வரைக்கும் பாணங்களை நிரைத்து, பலபல திசைகளினிற்குஞ் சேனைகள் விலவிலவென்று அசைவற்று விழும்படி பாராட்டப் போராடியபோது, அப் பார்த்தன் முதலிய பலவீரர் தொடுத்த பாணங்களெல்லாம், பரம்படித்த சேற்றில் விதைத்த விதைப்போலும், பள்ளத்தாக்கில் நட்ட நாற்றின் நடவுபோலும், வீஷ்மாச்சாரியருடைய மெய் முழுதுந் துளைக்கும்போதில், அவர் நாவுலர்ந்து, நாபிவரண்டு, கண் புகைந்து, கையசைந்து, கவலைப்படாத உள்ளமும் நொந்து, அவலப்படாத சிந்தையும் வெந்து, மிகுந்த பனியில் முகங்கருகி வருந்தி நிறமழிந்து குவிந்து வாடிய தாமரைக் கமலம்போல மதிமுகம்வாடி நின்றார்.

அந்தவேளையில், ஆயுதமுனைகள் கருகிப் புகையவும், யானை குதிரைகள் கண்ணீர் சொரியவும், அணிந்த மாலைகள் சருகாகவும், அலகை முதலிய வெதிர்ந்தோடவும், அம்பரத்தி லுலாவுங் காக்கை கழுக்கள் அடித்து மோதிக்கொண்டு தேரின்மேல் விழவும், அந்தரத்தினின்றும் உதிரமாரி அமோகமாக விரைந்து தூற்றவும், குறைக்கொள்ளிக் கட்டைகளுதிர்ந்து குவியவும், கூக்குரலாக நாய் நரி கூவவும், தீப்பட்டெரிந்து சேனைகள் வேகவும், திகிற்பட்டெவர்களுஞ் சிந்தை தடுமாறவும், உள்ளம் பிரமிக்கவும், உயுத்தஞ் சிறக்கவும் இப்படியாகப் பலவித சகுனங்களைக் கண்ட சகுண நூல் வல்லோர் தடுத்தார்கள். அவர்களை வீஷ்மர் தடுத்து, இந்தச் சகுனங்களெல்லாம் எனக்கு நல்ல சகுனமென்று மனந்தெளிந்து, தமது பூர்வோத்திர சரித்திரத்தைத் தாம் எண்ணிப் பார்த்து, தம்மை நம்பிய மித்திரானுக்குச் சதாகாலமும் உதவி செய்துவந்த தாமரை மலர்போன்ற தமது கரத்திற் பிடித்த கணைகளை தொடுத்து, பகைவர் விடுத்த அஸ்திரங்களை யெல்லாந் தடுத்து, பாண்டவர்களையு முகமாறவடித்து வருங்காலையில், துருபதேசம் - மச்சநாடர் - கலிங்கேசர் - சோனகர் - கிஞ்சயர் - கராடர் - கௌசிகர் - சாலுவர் - சீனர் முதலிய தேசபாஷை மன்னவர்கள் வந்தெதிர்க்க, அவர்களை யெல்லாங் கலகலக்கச் செய்து, ஒருவர்போலவே அனைவரும் உடல் வருந்தி இறக்கும்படியாகவும், முதுகிட்டோடும்படியாகவும், வின்னணி யிறுக்கியுருக்கினர் வீஷ்மாச்சாரியர். இவ்வாறு வீஷ்மாச்சாரியர் முன்னேடியடித்த அடியில் சுத்த வீரர்களின் தலைதுணிந்து பின்னேடிவிழவும், அவர்களுடலானது முன்னேடிவந்துகொடும் போர் விளைக்குங் குறைத்தலைக் கவந்தங்களுடன் கூத்தாடவும், இன்னுஞ் சில சூரார் இரண்டு பாதங்களும் அறுபட்டுப்போகச் சப்பாணிகளாய்க் குந்திக்கொண்டு, பூமாலைசூடிய வில்லை வணங்கிச் சரங்களைப் பொழியவும், கொடியறுபட்டுக் - குடைமுறிபட்டுக் - கோல் ஒடிபட்டுக் - கால் தறிபட்டு - வில்லொடிந்து - பல்லுடைந்து - சரங்கொண்ட கரங்குறைந்து -

கரங்கொண்ட சரமுறிந்து - கலகலென் றெழுநயமறைந்து - வில்வேலென்றொரு பயம்பிறந்து - யாவரும் சோரி வெள்ளத்திற் சுழன்றலைந்து சிதைந்தார்கள்.

அல்லாமலும், விஷாக்னி கொண்டடிக்குஞ் சுழற்காற்றில் அகப்பட்டு உழலும் புழுதிபோல் சரந்தொடுக்கவந்தவர், சரந்தொடுத்து வந்தவர்; போர்கொடுக்க வந்தவர், போர்கொடுத்து வந்தவர் இவர்களெல்லோரும் அடங்கிப் பறந்தார்கள். பின்னுஞ் சிலர் இடிமுழக்கங் கேட்டுப் படியில் விழுந்திறக்கும் பாம்பைப்போல் தலையுடைந் திறந்தார்கள். மேலும், ஒருத்தன் ஓடுவதைக்கண்டு, ஏன் ஓடுகிறீரென்றுகேட்டுக்கொண்டு இருவரோடவும், இவர்களை இன்னுஞ் சிலர் வினவிக்கொண்டு முன்னும் பின்னுமோடும் அவர்களுடனோடவும், இந்த வேடிக்கையைப் பார்த்து நகைத்துக்கொண்டு ஓடிய பலபேர்களைச் சிலர் தடுத்தோடவும், தடுத்த பேர்களைப் பிடிக்கும்படியாய்ச் சிலர் அடுத்தோடவும், சிலர் ஆவிகுன்றியபேரைக் கூவிக்கொண்டோடவும், இந்தப்படி யுத்தமுனையில் நிற்கப் பயந்தவர்களாய் யாவரும் ஓடியாடி யொழிந்தார்கள். இவ்வாறு வீரப்பகழி விடுத்து அடித்து முடித்துவந்த வீரராகிய இந்த வீஷ்மாச்சாரியானவர், வில்லை வளைத்து இன்று புரிந்த போராண்மையானது விஜயனிடத்திலு முண்டென்று என்றைக்காகிலும் நினைக்கத் தக்கதுண்டோ? ஓ வெண்கதிர்க் குலத்துதித்த வேந்தனே! மேலும், வீஷ்மாச்சாரியார் விஸ்ரிம்பித்து விண்ணு மண்ணுங் கண்ணுவ கொண்ணுந் தெரியாதென்று சொல்லும்படியாய் யுத்தம் பண்ணி வரும்போது, அர்ச்சுனன் பேச்சு வைச்சுது வைச்சதேயாகி அச்சுப் பதித்தாற்போலாச்சுது; அந்தவேளையில் துரியோதனன் சந்தோஷமடைந்து, ஐயோ! என் பாட்டனாகிய ஐயாவானவர், இப்படி இரண்டு நாழிகை யுத்தஞ் செய்தால், நானீடேறிப் போவேனென்று கண்ணும் மனமுங்களித்து, இரண்டு மகமேரு வெழுந்ததையொத்த தடம்புய வீராஷ்டகமுள்ள வீஷ்மாச்சாரியார் நிலைநின்ற போர்செய்யும் முனைமுகத்திற்குச் சோழராஜனும், கிருபாச்சாரியும், துரோணாச்சாரியும், அஸ்வத்தாமனும், ஜயித்திரதனும், திரிகர்த்தனும், துசுவாசனன் முதலாகிய தம்பிமார்களும், சகுனியும், பகதத்தனும், சல்லியனும்போய் துணைகூடி யிருக்கும்படி யனுப்பிவிட்டுத் தானும்போய் அவர்களோடுகலந்த மேகசலம் பொழியும் இடத்திற் குளிரும், காற்றும், இடியுங்கூடக்கலந்துவீசி அடிக்குந் தன்மையைப்போல் வந்துகூடி, மனதிடங் கொண்டாடி, இரதகஜ துரகபதாதியருஞ் சேர்ந்து தனஞ்செயனென்னுஞ் சிங்கத்தை வளைத்துக்கொண்டு விண்ணுணி யேற்றி சரமாரி தூற்றி வெகுண்டு போர் செய்தார்கள்.

அந்தச் சமயத்தில் - சம்வர்த்தம்- ஆவர்த்தம் - புட்கலாவர்த்தம் - சங்காரித்தம் - துரோணம் - காளமுகி - நீலவர்ணம் என்றுரைக்குஞ் சப்தமேகமுஞ் சமுத்திர சலத்தை யுருஞ்சிக்கொண் டெழுந்துவருந் தன்மையைப்போல் நிறங்கொண்ட விஜயனானவன், தனக்கெதிரில் வந்து போர்புரிந்த வீராதிவீரர் யாவர்களையுங் கண்ணோட்டமிட்டுத் தன் கரத்திற்றரித்திருக்கும் ஒப்பற்றக் கார்முகம் வளைத்து, ஓரினமாகிய சரங்களை ஒவ்வொரு தடவைக்கு நூறுநூறு சரங்களாக வரிசை வரிசையாய் மாலிகாயோகம் பிடிக்குந் தன்மைபோல் விடுத்து, அவர்கள் கொடுத்த கொடும் பகழிகள் யாவையுந் தடியடிபோல் நொடியிற் பொடியாக்கிப் படியிற் படியச்செய்து, முடியினையுடையோர் முடியினை யடைந்து, மடியும்படியாய் வேருடனுதயமாகிய தினகரனைப்போற் றிரிந்து, சேனைகள் முதலிய யாவரையு மடைகிடந் தெழுந்து பொரிந்து, சீறுங் கருநாகம் போன்ற கணைகளைத் தொடுத்துப் பிளந்து வந்தான். அப்போது அவ் வர்ச்சுனனுடன் போர்புரிய வேண்டுமென்று இச்சைகொண்டு நின்ற அரசர்களாகிய சமுத்திரஞ் சுவறிச் சேனையென்னுஞ் சலசரங்க ளெல்லாந் தீயும்படியாகவும், ஆனை முதலிய மலைகள் சாயும்படியாகவும் இறைந்து வரும் சூறைக் காற்றைப்போலும், அந்தக் காற்றின் சகாயனாகி யெரிந்துவருங் காலாக்கினியைப் போலும், கடவுண் மாருதி மைந்தனாகிய வீமசேனன் கதாயுதத்தைக் கைக்கொண்டு குதித்து தான் ஒருவனாகவே புகுந்து முடிகளுடன் சுரங்களும், கொடிகளுடன் உரங்களும், தீரமணிகளுடன் றேர்களும், வீரமணிகளுடன் றாள்களும், கவசங்களுடன் மெய்களும், கங்கணதுவசங்களுடன் கைகளும், சிதைபட்டு அழிந்து வாடவும், முதுகிட் டொழிந் தகன்று ஓடவும், முடிக்கி யடித்து ஒடித்து முடித்து நடித்துக் கூத்தாடித் தநுக்கி விழுந்து அழியமாட்டினான்; மண்டை யொடித்து உதிரம்

வழியச் சிலரை யோட்டினான்; அவனாரென் னில், காமதகன னென்னுஞ் சிவனுக் கொப் பாகிய வீமசேனன்.

இதன்றியும், அதிரதர்-மகரதர்-சமரதர் முதலிய அவரவ ரேறிவரும் அணிமணிக் கோடிமுடியுடைய ரதங்களை ஆகாயத்திலெடுத் தெறிந் தாடியும், யானைப்பாகர் முதலாகிய வீர ருடன் யானைகளின் இரண்டு கொம்பையுந் துண்டத்தையும் பிடித்துக்கொண்டு, மண்ட லாகிர்தியாய் தும்பியை தும்பிசுற்றி அம்பரத் தில் வீசியோடியும், மல்லகதி-மயூரகதி-வியாக் கிரகதி - வானரகதி - விடபகதி ஆகிய இவ் வைந்து கதியும், பிந்திப்போகும்படியாக முந் திப்போகும் குதிரைகளை, குதிரை வீராளுட னெடுத்து வானுலகவீதி வலம் வரும்படி யாய்ச் சுழற்றி விடுத்தும், வஞ்சக மனத்தில் வெஞ்சினங்கொண்டு வஞ்சினம் பேசி அஞ் சாமல் மிஞ்சி வரும்படியாகிய வாளரச ரேறி வரும் ரதகஜ துரகங்கள் சாயும்படியாகவும், தனது இடது காலால் சிதைத்தும், வலது காலா லுதைத்தும், வலக்கரத்தாற் குத்தியும், இடக்கரத்தா லெற்றியும் வாட்டியபோது, (முதற்பட்டமீன் முடைகொளும்) என்னும் பழமொழிக் கிணங்க, மதப்பட்டு வந்த படை வீரரெல்லாம் வீமசேனனுக்கெதிர் நிற்க மாட் டாமல், தடைப்பட்ட பாம்பைப்போல பின் வாங்கி முதுகிட் டோடுவதைக் கண்ட வணங் காமுடியோனாகிய துரியோதன மகாராஜன் விசனமடைந்து நொந்து மிகுந்த கோபங் கொண்டு, விற்றிறமையில் அருச்சுனனுக்கு இணையாகிய பலவான்க ளென்னும் யானை வீரர்-குதிரைவீரர் முதலானவர்களில் ஐந்நூ றாயிரம் பேரை வீமசேனன்பேரில் முடுகி விடுக்க, அவர்கள் யாவரும் ஏழு மேகமும் ஊழிமுடிவிற் பொழிவதைப்போல் வாளி மழை-பாணமழை-சரமழை-சாயகமழை என் னும் இவைகளைப் பொழிந்து, அக்ரமங் கொண்ட பராக்கிரம சாலிகளாய்த் தடுத்துப் போர் தொடுத்தார்கள். அந்தவேளையில், அக் கினிதேவன் காண்டவவன தகனஞ் செய்வதற் காகச் சாரதியா யமைந்த சக்ரதரன் தேரைச் செலுத்த, திடவீர வில்லாளியாகிய விஜயன் எதிர்சென்று நின்று விஜய காண்டீபங் கொண்டு, அவரவர்கள் தொடுத்து விடுத்த கும்புகளாகிய அம்புகளுக்கு நேராக அந்தந்த அம்புகளை தொடுத்து அழித்து, பின்னும் அவர்களேறிய யானைகளும், யானையின்மீ தம் பாரிகளும், அம்பாரிகள்மீது பாவட்டாக்க ளும், குதிரையின்மீது கல்லணைகளும், கல் லணையோடு கடிவாளங்களும் கலங்கிப் பறக்கக் கணக்கற்றக் கூர்க்கணைகளைக் கை யோயாமற் றொடுத்து நின்றான் அக்கிரீடியானவன்.

இவ்விடத்தி லிப்படி யிருக்க, துரியோ தனன் தம்பிமார்களில் துர்ச்சாதனன் முதலிய ஐந்து பேர்களும், வீஷ்மாச்சாரிய ரிடத்தில் நின்ற வீரர் தவிர மற்றப் பூபாலரும், கிருத வன்மன் - கிருதவீரியன்முதலிய கோபாலருந் தேரேறிச் சென்று, தருமராசன் முதலிய ஐவ ரையும் இன்றே வென்றிடுவோ மென்று வில் வளைத்து நின்று அருச்சுனனையும், வீமசேன னையும் வளைத்துப் பற்பல வார்த்தைகளைக் கூறிப் போர் புரியும்போது, அர்ச்சுனனின் பாணங்களினாலும், வீமன் கதையினாலும் தலைவிரிகோலமாய்த் தளர்ந்து செத்தவர்கள் போக, மற்றவர் பின்கொடுத் தோடினார்கள். அப்படி ஓடத்தக்க சேனைகளை வீஷ்மாச்சாரி யர் கண்டு உள்ளம் வெதும்பி, கண்கள் சுழன்று, நெருப்பெழ விழித்து, நெடிய வில் வளைத்து, ஆலகாலம்போற் சீறிவருங் காலத் தில், ஆகாயத்தில் வேடிக்கைப் பார்த்திருந்த தேவர்களில், அனலன் - அணிலன்-ஆபச்சை வன்-சோமன்-தரன் - துருவன் - பிரத்திபூசன் என்னும் ஏழு வசுக்களும், எட்டாவது பிரபா சன வசுவாகிய வீஷ்மாச்சாரியரைக் கண்டு வருந்தி மனஸ்தாபங்கொண்டு, எங்களுக்கு எசமானாகி வசுபதத்தில் இருந்த நீர் பூலோ கத்தில் வந்து எத்தனை நாளாய் விட்டது. ஐயா! நீர் அப்பதத்திற் வந்து சேரும்; உமது பூர்வோத்திரத்தை உற்று நோக்கிப் பாரும் என்று சொல்லவே, அந்த தேவ ரகசியத்தை வீஷ்மர் கேட்டுக் கண்களி கூர்ந்து முகமலர் ந்து, நமக்கு இதுதான் கடைபடு காலமென் றுணர்ந்து வேறு விதங்களைக் கருதாமல், கவ லாமற், கரையாமற், கலங்காமற், கார்முகம் வணங்கிப் போர்முகங் குறுகி வெற்றிமாலைப் பூண்ட வித்தகரையும், சுற்றிலுஞ் சூழ்ந்த மற்றெவரையும், உத்தமப் பாண்டவராகிய கொற்றவரையுந் தகைத்துக்கொண்டு, யாவ ரையுங் கோலாகலமாக்கி பலவிதமான பாணங் களைப் போக்கி, ஒவ்வொருவரையுங் கூறு படுத்தி, மாமிசமழியத் தூறுபடுத்தி, பல துவாரங்களாக ஊறுபடுத்தி, உதிரவெள்ளத் தை ஆறுபடுத்தி, முகம்விட்டோட மாறுபடு த்தி, தருமன் முதலாகிய ரதத்தலைவர் யாவருந்

தளர்ந்து வருந்தச் செய்து, ஒருவரையும் விடாமற் றன்னுடைய பாணக்குறியானது எல்லாருடலினு மிருக்கக் காட்டிக் கொடிமர நாட்டி எவர்களையும் வீட்டினார்.

அப்போது எத்தனைகோடி முடித்தலைகள், எத்தனைகோடி தோள்மலைகள், எத்தனைகோடி கரக்கமலம், எத்தனைகோடி யுடற்சுமைகள், எத்தனைகோடி அவயவங்கள், எத்தனைகோடிக் குழிரிணங்கள், எத்தனைகோடிக் குடல் வகைகள், எத்தனை குவியல் மாமிசங்கள், எத்தனை வகைகள் நரம்பினங்கள், எத்தனை கிரிகளெலும்பு வகை, எத்தனைகோடி அடித்தொடைகள், எத்தனைகோடி மணிக்கால்கள் இந்தப்பிரகாரம் இரணக்களத்தில் அன்று துண்டித்து விழுந்த உடற் சின்னங்களை எத்தனைகோடியென் றியம்புவேன். இன்னுங் கிழிந்து பிளந்த மார்புகளும், வெருண்டுத் தளர்ந்த மனங்களும், கரைபுரண்டோடும் இரத்த வெள்ளமும், நெரிந்து முரிந்த எலும்புகளும், அழிந்து சிதைந்த கொழுந்தசையும், நிமிர்ந்து வலிக்கும் நரம்புகளும், சரிந்துக் கிழிந்த பெருங்குடலும், துண்டமிரண்டாகிய சிவங்களும், கடைபுரண்டு திரண்டு நெரியும் புருவங்களும், தணல்விட் டெரியுங் கண்களையுடைய முகங்களும், இடிந்து ஒடிந்த தொடைகளும், இறந்து மறந்த வீரப்படைகளுமா யெல்லாம் அழிந்தபோது, சோமகாள் - மச்சர் - மராடர் - துருபதேயாள் - சோழர்கள் - சேரர்கள் - பங்காளர்-குலிங்கர் - சிஞ்சயர்-பப்பரர்-மகதர்-குருதர் - மகுடவர்த்தனர் - பட்டவர்த்தனர் - மண்டலீகர் முதலாகிய பாண்டவச் சேனைகளெல்லாம் வீஷ்மரிடத்தில் எதிர்த்துப் போர்புரிந்து, இறந்தவரன்றி இருந்தவர்களில் வாயுவுஞ் சூரியகிரணமும் மருவாதவூருமில்லை. இவருடைய கணைக்குட் கலங்கி மயங்காதபேருமில்லை. இந்தப்படி வீஷ்மாச்சாரியர் பாண்டவப் படையுட் புகுந்து கொல்லுந் தன்மையைப் பரந்தாமன் கண்டு, இரக்கமுற்று கோபித்து வெண்ணெயுண்ட செப்பவள வாய்மலர்ந்து அர்ச்சுனனை நோக்கி, என் மைத்துனா! இன்னுஞ் சற்றுநேரம் நாம் சும்மாயிருப்போமாகிற் குருக்ஷேத்திரத்திற் கூடிய நமது படைகளெல்லாம் முடிந்துபோம்; நாமுங் குறைவுபடும்படியாய் இருக்கும். ஆகையால், நாம் முறண்டு எதிர் சென்று இந்தக் காங்கேயனை இன்று முடித்துப் போடுவோம். அப்படி முடிப்பதற்கு இதுவே நல்லகாலமா யிருக்கிறது வாருமர்ச்சுனராஜனே யென்று பாசந்தங்கிய துளபமணிந்த முகுந்தரானவர், சுவேதவாம் புரவி பூட்டிய சயந்தனத்தைத் நடத்தவென் றுச்செலுத்தி வீஷ்மருக்கெதிராகக் கொண்டு போகவே, பாரிய காண்டீபம் வளைத்துக் குணத்தொனி செய்து, அழகாகிய பாணங்களை ஏற்படுத்தித் தரந்தரமாக முடுக்கிவிட்டான் தனஞ்செயனானவன். அந்தக் கணைகளையெல்லாங் காங்கேயர் தவிடுபொடியாக்கி அவனுயுதத்தையுஞ் சாரதி தேகத்தையுஞ் சல்லடைக் கண்ணாக்கித் தனிச்சிங்கம்போல், திரிய அதை அர்ச்சுனனோக்கிச் சஞ்சலப்பட, அப்போது பக்தவச்சலனாகிய பகவான் சொல்லுகின்றார்.

### கிருஷ்ணார்ச்சுனர் வீஷ்மருக்கெதிற் சிகண்டியை விடுத்துச் சமர் செய்வித்தல்

ஓ அர்ச்சுனா! தயிலமற்ற தீபம் அத்தயிலத்திற் றேய்ந்திருந்த வத்தி யெரிந்து ஒளியெழுந் தணைவதுபோல் முடிவு காலங் கொண்ட உங்கள் பாட்டனாகிய முதியோன் பதை பதைக்கின்றான். ஆகையால், வேறாக எண்ணவேண்டா மென்று சொல்லி, மண்டலம் விண்டலம் ஒன்றுபடச் சுழலவும், தொண்டர்கள் முதலிய அண்டர்க ளுழலவும், புண்டரீகன்முதற் கண்டவ ரேங்கவும், கொண்டலாகிய எழு மேகமும் இடித்து முழங்கியிறைந்து பின் வாங்கவும், வேலை யேழும் அலையெறிந்து மறிந்துவிழுந்து எழுந்தலையவும், சர்வ சம்ஹார சலப்ரளய வூழிக்காலஞ் சார்ந்ததென்று தானவர் முதலிய வானவருலையவும், திக்கெட்டும் விக்கிட்டுச் செவிடு பட்டுப் போகவும், பேரண்டங் குலுங்கவும், பிரம்மாண்டங்கலங்க சக்கரவாளத் தகடு தத்தளிக்க, உக்ரவீரபத்ர ரெக்களிக்க, தனபதி யுலகஞ்சாய, சந்திரசூரியர்கதியோய, தானவரடங்கிமாய, வானவரொடுங்கித்தேய, திருவிக்கிரமராகிய ஸ்ரீ அரிபரந்தாமன்-பரப்பிரமன்-பக்தவச்சலன்-பக்தபராதீனன்-பங்கஜ பாதன்-பரமபதநாதன்-ஜகதீசன்-ஜகரக்ஷகன்-ஜகநாதன் ஜநார்த்தனன்-ஸ்ரீயப்பதி-ஸ்ரீதரன்-ஸ்ரீநிவாசன் - ஸ்ரீநாதன் - மாதவன்-வாசுதேவன்-கேசவன் என்று சொல்லும்படியாகிய பல்லாயிரங்கோடி நாமங்களையுடைய அக்கிருஷ்ணதேவரானவர், வீஷ்மருடைய போரைக் கருதி, இவனையின்று கொன்று மேலுலகத்திற் கனுப்பவேண்டுமென்று கொண்ட கருத்தின்படி,

தமது திருக்கரத்திற் பாஞ்சசன்யத்தை எடுத்துப் பவளமாகிய திருவாயில் வைத்து, திம் திம்திம்கிர்தக, தும்தும்தும் தும்கிர்த, பம்பம்பம் கிர்தக, பொம் பொம் கிர்தக, பொம்மென முழக்கினார். அந்தவேளையில், திடதீரமேரு புயகாத்திர தாஷ்டீகராகிய வீஷ்மரும், இதரமாகிய சேனை வீரர்களும், சங்கத்தொனி கேட்டுத்தயங்கி, அங்கத்தைவிட்டு ஆத்மம் வெளிப்படும் படியாய் மயங்கி அல்லலுற்றார்கள். அப்போது இரண்டணிப் படையிலு மிருந்த அதிரத அரசர்களுடைய சங்கநாதம், சிங்கநாதம், தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, மிடற்றுக்கருவி, கஞ்சக்கருவி முதலிய வாத்தியங்களெல்லா முழங்கிக் குமுறும்படியாக வீராவேசங் கொண்ட அர்ச்சுனராஜனானவன், தனது தேவதத்தத்தைப் பூரித்து, நால்வகைப் படைகளுங் கலந்துவருஞ் சேனா மண்டலங்களுடன் சிகண்டியை வீஷ்மருடைய கண்களுக்கெதிராய் முன்னணி முனையிற் கூட்டிக்கொண்டு போய், புராதனமாகிய உலகம் இன்று பொன்று மென்று பேசிக் கொள்ளும் படியாய்ப் போர்புரியச் செய்தான்.

இவ்வாறு ஆண்டொழின் மைந்தனாகிய அர்ச்சுனன் செய்த ஏற்பாட்டின்படி சிகண்டியானவன் கூசாமனின்று, கொடுமரமாகிய வில்லை வளைத்து, கொடுமைகொண்ட கொலைப் பகழிகளிற் கோமானாகிய வீஷ்மரை யடித்தான். இப்படிக்கு அநேக அஸ்திரங்களினால் அடித்த சிகண்டி நிற்குநிலையை வீஷ்மர் கண்டு குளிர்ந்த நகைசெய்து, அன்று அம்பையானவளுடைய பகையின்று முடிய வந்ததென்று தன் கரத்திலிருந்த தனுர்ப்பாணங்களைத் தேரின்பேரில் வைத்துவிட்டு, நிஷ்டாநிஷ்டரைப்போல் வெறுங்கையோடிருந்தார். அப்போது அச்சிகண்டியானவன் கை யோயாமல் அஸ்திரங்களில் அங்கந் துளைபட அடித்தபோது, பேரப்பிள்ளையாகிய துச்சாதனன் கண்டு, மனந்தாளாமற் பெருங்கோபங் கொண்டுபோய் பற்பலவிதமாகிய பாணங்களை விடுத்து, அடா பாவியென்று பல்லைக்கடித்து, வில்லைமுறித்து, அவன் மெய்யையுந் துளைத்து, அவனேறிவந்த தேர்குதிரை - சாரதி முதலியவையோடு குடை முதலாகியவையும் அழித்தான். அப்போது அந்தச் சிகண்டியானவன் சாகப்பயந்து யுத்தமுகம் விடுத்துத் தான் பிறந்துவந்த வேலைமுடியா திருப்பதினால்வந்தவழியின்மேற் சிந்தைகொண்டோடினான். அந்தவேளையிற் சந்தனுக்குமாரனாகிய வீஷ்மாச்சாரியார், சாக்கிரதையாய் மறுபடியும் வில்லைப்பிடித்து நாணியிறுக்கி, மின்னலாஸ்திரம்-இடியாஸ்திரம் முதலிய விசிதங்களைத் தொடுத்து, பாண்டவர் கட்டிய யூகத்தைப் பறக்கடித்து, பாஞ்சாலக் கும்புகளைப் படுபாழாக்கி, வீபற்சென்னும் விஜய ராஜனுடைய மேனிமுழுமையும் வேத்திர நிரைத்து, மெய் - வாய் - கை - கால் இவைகளாட வொட்டாமற் செய்ததுமன்றி, அவன் தேர்ப்பாகனாகிய செங்கணெடுமாலுடைய கருங்கடலும், கருத்தமேகமும், காசாம்பூவும், கருமணியும், கறுத்தமையும், கருவிளமலருங் கலந்து பரந்து சிறந்திருக்கு மேனியிற் காலாக்கினி உருமுகக் கணைகளைப் பொழிந்து, கால் முதற் சிறம் வரைக்குந் துளைத்து, செம்பவளமும்-செம்முருக்கின் மலரும் - செங்காவியும் - செவ்வல்லியும் நிகராகும்படியாய் சிவக்கச் செய்தார்.

அந்தச் சமயத்திற் பாண்டவச் சேனை வீரர்கள் திடுக்கிட்டு முடுக்கிட்டோட, தேவேந்திர குமாரனுந் திருமாலுஞ் சற்று நேரஞ் சித்தப்பிரமை கொண்டிருந்து, உடனே மனந்தேறித் திடங்கொண்டு, முன் வந்து நின்று, அடிபட்டோடிய சிகண்டியைப் பின்னும் அழைத்துக்கொண்டு வந்து, அவனுக்கநேகம் உறுதிகளையும் உபாயங்களையுஞ் சொல்லி, அந்தச் சிகண்டிக்கு மேற்றுணையாகத் தாங்களெல்லோரும் அடுத்துச் சமீபத்திலிருந்து பூசல்நடத்தியபோது, சிகண்டியானவன் அவ்விடத்தில் நிற்க மாட்டாமற் றிரும்பியோட நினைவு கொண்டிருக்குந் தீனத்தைத் திருமால் கண்டு, நீ யொன்றுக்கும் பயப்படாதே: அஞ்சாதே: ஓடாதே: வாடாதே:உனக்குப் பக்கத் துணையாக நாம் இருக்கின்றோம் என்று உண்மைவாக்கிய உருதிகூறி, கூர்மையாகிய கொழுக்கணைகளைக் கொண்டல் போற் பொழியச் செய்ய; அர்ச்சுன ராசன் அவனுக் கண்டையி லிருந்து கொண்டு, அக்கினிதேவனளித்த காண்டீபத்தை வளைத்து சண்டமாருதம்போற் செல்லும்படியாகிய தீமுகப்பாணங்களைச் சிகண்டி தொடுக்கும் அம்புகளுடன் இதுவோ? அதுவோ? வென்றுன்னும்படியாகப் பேதமில்லாமற் கலந்து, வேத மந்திரம் விளம்பி வந்தான். அப்படி விடுத்தமாத்திரத்தில் காண்டீபத்தை விட்டுப் புறப்பட்ட அந்தப் பாணங்களெல்லாம் பஞ்ச பாணத்திற்குத்

தப்பிப் பிழைத்துக் கொண்டிருந்த விவேக முள்ள வீஷ்மருடைய பொன் மலைபோன்ற அருமைத் திருமேனி யெல்லாஞ் சிறுமைப் படும்படியாகத் தைத்துத் துளைக்கும்போது, மேலுமேலுஞ் சில அர்த்த சந்திர பாணங் களை விடுக்க, அந்தப் பாணங்களும் போய்க் கரகரவென்றுருவ, இவ்வாறு வந்த பாணங்க ளெல்லாஞ் சிரத்திலும், கரத்திலும், நெஞ்சி லும்,மார்பிலும்புகுந்து, பின்புறத்திலும் தடா ரித்து வருத்தப்படுத்தி வாட்டிச் சாளரத் துவாரம்போற் சரீரத்தை யெல்லாஞ் சந்தாக் கியதுகள்.

### வீஷ்மர் பூப்பரிசமாய்ச் சயனித்து அருகிருந்த பௌத்திரருக் கறிவுறுத்தல்

இப்படி சந்தாக்கிச் சாரைப் பாம்பைப் போற் சரசரவென்று செல்லுகின்ற பாணங் களை வீஷ்மர் கண்டு, இதுவரையிலுஞ் சுத்த வீரனென்று பிழைத்த நான் பெண்பாலாகிய ஒருவன் கணையிலிறக்கும்படி நேரிட்டதல்ல வாவென்றூ ஊழை நினைத்துச் சற்று நேரந் துக்கப்பட்டு நமக்கு சமானமானவன் கையா லிறக்கப் பாக்கியம் பண்ணமற் போனேமே யென்றெண்ணி, நல்லது இப்பேர்ப்பட்ட பாணந் தொடுக்கும் வல்லபம் இந்த சிகண் டிக்கு எப்படி யுண்டாகும்? இவன் விடும்பா ணம் நமது தேகத்தை இவ்வளவு வருத்தப் படுத்தமாட்டாதே: ஆகையால் இதைப் பரி சோதிக்க வேண்டுமென்று தம்முடைய மாற் பிற்பட்ட அர்த்த சந்திர பாணத்தைப் பிடி த்து, அந்தப் பாணத்தின் அடியிலெழுதிய பேரைப் பார்க்கும்போது, தனஞ்செயனென் றெழுதி யிருப்பதைக் கண்டு, நான் செய்த தவத்தின் வாழ்வே வாழ்வென்று மனமகிழ் ந்து, உடலபிமான மென்பதை உதரி நிரி வாண வயிராக்கிய தீக்ஷை வகித்து பரிசுத்த வன்மா பிரியும்போது, பூமிப் பரிசமாய்த் தர்ப்பாசயனத்திற் சயனிக்கவேண்டு மென்று சான்றோரைத் திருக்குந் தன்மைப்படிக்குத் தாம் ஏறியிருந்த இரதத்தை விட்டு இறங்கி மிகுந்த இளைப்பினை யுடையவராய்ப் பூமியிற் சந்திரகலை பொருந்தச் சயனித்துக் கொண் டார்.

இவ்வாறு சயனித்துக் கொண்ட ஆண் சிங்கம்போன்ற வீஷ்மர், அரசர்க் சரசனாகிய துரியோதனனுடைய தம்பிமார்கள் சமீபத் தில் நின்று இரங்குகின்றதைப் பார்த்துக் கையமர்த்தி, அப்பா பேரப்பிள்ளைகளே! நீங் கள் விசனப் படாதீர்கள். நம்மாற் கூடிய வரையிலும் போர் புரிந்து, அநேகங் கோடி யரசர்களையும் படை வீரர்களையுங் கொன்று, அவர்கள் தொடுத்த பாணங்களினால் நமது படைகளும் நாமும் நொந்தோம். இதன்றி யும், எனக்குப் பகையாக யேற்பட்ட அம்பை யென்பவளுடைய பவுருஷம் நிறைவேறுங் காலமும் நெருங்கிய படியால், இனிமேல் என்னை நம்பவேண்டாம்; இதுவரையிலும் இன்றைய யுத்தத்தை நிறுத்தி, அதிசீக்கிரமத் தில் உங்கள் தமயனாகிய துரியோதனமகாரா சனை யடுத்து, அவனுடைய பாதத்தில் வண ங்கி, அந்த மயனுடைய வார்த்தைக் கிரண்டு சொல்லாமல் இருந்து எந்தக் காலத்தில் யுத் தஞ் செய்ய வேண்டியதோ? அந்தக் கால மும் சமயமும் பலா பல முதலியவற்றை யும் அறிந்து போர் புரிந்து, பூமியிற் புகழ் படைக்கக் கடவீர்கள். மேலும் எப்பேர்ப்பட்ட தந்திர யந்திர மந்திர யுக்திகளுடன் சதுர் வித உபாயங்களையுங் கொண்டு யுத்தஞ் செய் வீர்களானாலும் கைவல்யமாகுங் காரியமொன் றும் இல்லை. தங்களுடைய ஆண்மிக்கையும் பெருமையுங்கெட்டு உலகத்திற் பழிக்குடம்பெ டுக்கவேண்டுமல்லது, பின்னை வேறொன்றுநடவாது. காதுக்கினிமையாகச் சொல்லுவோர் வார்த்தையைக் களிப்பாய்க் கேட்டுக் கண்கலக் கப் படாதீர்கள். பூர்வத்திற் பேரிகையோசை கேட்டிறந்த பெருநரியின் கதைபோல் முடி யும். ஆகையாற் புத்தியாகப்போய்ப் பிழை யுங்களென்று செலவு கொடுத்தனுப்பினார் பனைகொடி தரித்த பாட்டனாகிய வீஷ்மாச் சாரியர்.

அந்த வேளையிற் பரமாத்மாவாகிய கிருஷ்ணன் பாஞ்ச சன்னியத்தை எடுத்துப் பவளம்போன்ற தமது திருவாயில் வைத்து முழக்கினார். அந்தத் தொனியானது வீஷ் மாச்சாரியருடைய செவிகளினாற் கேட்டவுட னே சிந்தை நிலைத்து, தத்துவ சுவானுபோக நிலையி நின்று, சர்வாந்திரியாமியாகிய சநார்த் தனனுடைய திருவடியைத் தனது உள்ளத் திருத்தி, சஞ்சல சித்தத்திற் கேதுவாகிய பிர பஞ்சமாயா விசித்திரத்தை மறந்து, இனி மேலும் ஜனனவேலதுவைச் செய்யாத அவர் திருநாமங்களை நாத்தழும்பேற ஸ்தவுத்தி யஞ்செய்து கொண்டிருந்தார். அப்போது

தேகத்தி லுருவியோடிய அம்புகள் போகத் தைத்துக்கொண்டிருக்கும் மற்றப் பாணங்களை எல்லாம் நிர்யாண யோகசயன மாகக்கொண்டு சாய்ந்த வீஷ்மாச்சாரியருடைய கிடக்கையை இந்திரன் முதலாகிய தேவர்கள் கண்டு உவந்து, தேவதுந்துமி முழக்கிவைத்து, தேவவிரதனென்றும், காங்கேயனென்றும், வீஷ்மனென்றும் இன்னும் பலவான் வியக் கத்தக்க பேர்பெற்ற சித்த சுத்தியையுடைய உத்தமன் தேகத்திற் செம்பொன் மலர்களை வாரி அம்புவிநிறையக் கும்பத்தாரையாய்ச் சொரிந்தார்கள். இந்தப்பிரகாரம் சமுத்திரஞ் சூழ்ந்த தாரணியையாண்ட சந்திரவம்சத் தரசனாகிய சந்தனுமஹாராஜனுடைய தன யன், சரங்கள் புதைந்த அங்கத்துடன் பூமியி விழிந்து சாய்ந்த தன்மை எப்படி யிருந்த தென்றால், அருட்சவம் உட்கொண்டு நிறைந்த மேகம் மலைவிட்டிறங்கியதைப் போலும், ஆகாயத்திலுலாவுஞ் சூரியன் ரதநீங்கி வழி வியதைப்போலும் கற்றூணைக் கிழித்துப் புறப்பட்ட உக்ரம நரசிங்கத்தைப்போலும் இருந்தது.

### கௌரவர் பாண்டவர் முதலாயினோர் வீஷ்மரைக்கண்டு துக்கிக்க, அதற்கவர் சமாதானங்கூறித் தேற்றுதல்.

அந்த வேளையிற் குருகுல புங்கவனாகிய தங்கள் குலக்குரவன் போர்முகத்தில் இளைத்து சரேலென்று பூமியின்மேற் சாய்ந்தாரென்று துளபமாலையணிந்த ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியும் அர்ச்சுன ராஜனுந் தியங்கி மயங்கி உள்ளம் வருந்தி, இரு கண்களிலுஞ் சலம் பெருகும் படியாய் வாயுலர்ந்து உடனே ரதம்விட்டிறங் கிப் பாட்டன் இடத்திற்கு வந்தார்கள். அப் போது ரணக்கள நிறைந்த இருவகைச்சேனை வீரர்களும் திரண்டுவந்து சேனாதிபதியாகிய பீஷ்மரைப்பார்த்து நெஞ்சழிந்து நொந்து வையகமெல்லாம் பேரோசை நிரையும்படி யாய் வருந்தி யிரங்கி வாய்விட்டுக் கதறினார் கள். உடல் பதறினார்கள். அந்தச் சமயத்தில் தர்மராஜன் முதலிய மன்னவர்களும், துரி யோதனன் முதலாகிய அரசர்களும்பேரொலி யுடன் பொங்கி உகாந்த காலாக்கினியால் உலகம் பொன்றுந் தன்மையைப்போற் றங்க ளைத் தாங்களே மறந்து தளர்ந்தோடி வந்து ஆண் சிங்கம்போன்ற ஐயாவுடைய பாதங் களைத் தங்கள் கரத்தாற் றடவிச் சிரமேற் கொண்டு ஆற்றற்கரிய வருந்துயரத்தோடு அனைவருங் கண்ணீர் வடித்து மண்மேல் விழுந்து புரண்டு அழத் தொடங்கினவர்க ளாய், "மறமும் வாகுவலியும் வவ்வின் முத லெப் படையின் றிறமுந் தேசும் வாழ்வுஞ் சீருங் கேள்விச் செலவு நிறமுமுண்மை யறிவு நெறியும் புகழுந் திகழ்பேரறமும் போன்று நின்னுடையா வந்தோ வந்தோ. தந்தை யின்ப மெய்தத் தவமே யின்பமாகிச் சிந்தை தெளியு ஞானச்செல்வா செஞ்சேவகனே முந்தை மரபுக்கெல்லா முதல்வா ஞாலமுழுது மெந்தையாள வைப்பாரினியா ரெங்கள் கோவே' என்று பிரலாபித்து, ஓ குருகுல பிதா மகராகிய எங்கள் கோவே! இதுகாறும் உங்க ளால் வீரத்திறம் - விஜயத்திரம் - அஸ்திரச் சாகரம் - திடதீரம் - அழகு - அஷ்டலக்ஷ்மி வாசம் - சீர்சிறப்பு - புகழ்-மகிழ்வு நற்கேள்வி இரக்கம்-தாதுர்த்துவம்-ஈகை-ஜீவகாருண்ணி யம்-உணர்வும்-பேரறிவு- நன்னெறி- நன்நீதி- சத்தியம் - வெற்றி - சித்தசுத்தி - அன்பு-அறம் இவைகளெல்லாம் இந்த சந்திரகுலத்தில் வளர்ந்து படர்ந்துக்கொண் டிருந்தனவே. ஐயா! அவைகளெல்லாம் இன்றைக்கே இருந்து தேவரீருடன் கூடத்திரும்பிப் போய் விட்டனவே. அந்தந்தோ!! அந்தந்தோ!! இதுவரையில் மூதாதையென்னும் வேலியி னால் வளையப்பட்டு விருத்தியடைந்த நாங்கள் இப்போது அவ் வேலியழிந்த பயிரானோமே: ஓ எங்கள் வம்சபாக்கியமே! ஓ இந்தக் குலக் கோட்டைக்கு மதிற்போ லிருந்தருளிய கோ வே! ஓ சத்தியநெறி படருங் கற்பகக்கோவே! ஓ எங்களுக்கு இஷ்டமாகிய தேவே! ஓ தாஷ் டிகமேருவாகிய தருமதேவதையே! ஓ தா யாய்த் தந்தையாய்த் தமராய்த் தாணுவாய்ச் சகலமுமா யடைந்தாண்ட தரியலரேறே! தேவரீருடைய தந்தை சந்தனுமகாராஜனு வர்,பரிமள கந்தியினிடத்தில் இன்பம் அனுப விப்பதற்காகத் தவமே தங்கட் கின்பமென்று சிந்தை தெளிந்து விரதமேற் கொண்டு, ஈக்ஷ ணத் திரையாதிகளையும் விடுத்து, மன்மத பாணத்தை மாற்றிய ஓ மாதவனே! ஓ ஞானச் செல்வமே! ஓ பழமையாகிய இந்தச் சந்திர மரபினுக்கு முதல்வனானவனே! இவ்வுலக முழுமைக்கும் எங்களை இறையாக்கிவைத்து இருகண்களுங்களிக்க விருந்து பார்ப்பீரென் றிருந்தோமே? ஐயையோ!! தெய்வமே! இனி எங்களுக்கு ஆதரவு ஆரிருக்கிறார்கள்? எந்தை யே! எங்கள் கோவே! இனி எங்களைப் பாரா ளச் செய்யும் பாக்கிய ரெவரோ? எங்கள்

பாவமே இப்படி பண்ணிற்ரே? என்று இப்படி பலவாருக முறையிட்டழும் பிள்ளைகளைப் பார்த்துக் காங்கேயர் சொல்லுகின்ருர்.

அப்பா குழந்தைகளே! கலங்காதீர்கள், பயப்படாதீர்கள், எனக்கொன்றுமில்லை, இப்போது நானிறக்கவுமில்லை; அதேனெனில், பாதாதிகேசம் வரையிலும் பட்டிருக்கும் பாணங்களில் வருந்தி நொந்து, அந்தப் பாணசயனத்தின்மீது சாய்ந்திருக்கிறேன். ஆனல், (காண்டீபன் கணைக்குக் கல்லுங் கரையும்) என்னும் பழமொழியைப்போல், இந்த அர்ச்சுனனுடைய பாணங்களில் எப்பேர்ப்பட்ட உயிரு மாறிப்போம்; அப்படி மாருமல் நானிருப்பது யோகாப்பியாசம் செய்த பழக்கத்தினுலும், என் தந்தையாகிய சந்தனுமகாராஜன் எப்போது உயிருடவேண்டுமென்று நினைக்கின்றையோ அப்போது உயிர்விடலாமென்று எனக்குக் கொடுத்திருக்கின்ற வரத்தினுலும், உத்தராயண புண்யகாலத்தி லிறந்தால்மோக்ஷமென்றிருப்பதினுலும் இந்தப் பூததேகத்தை விட்டுப் பிராணன் புறப்படாவண்ணம் நிறுத்திப் பூரண ஞானத்துடன் பொறி புலன் குன்ருமற் பொருந்தி யிருக்கின்றேன். குமாரர்களே! நீங்கள் எனக்காக வருந்தவேண்டாம். சிருஷ்டி கர்த்தாவாகிய பிர்மாவினுல் ஏர்ப்படுத்தி விதித்த 'தொல்லை வினையைத் தொலைப்பவ ரொருவருமில்லை. எந்தக் காலத்தில் எப்படி விளையவேண்டியதோ? அப்படிக்கெல்லாம் விளைத்து முடித்துவைக்கும் அந்த ஊழ்வினை. ஆதலால், வினைக்கு மிஞ்சியது ஒன்றுமில்லை. இதை வேருகக் கருதிடலோ மேல்வருந்தொல்லை; வினைக்குமிஞ்சிய தொன்றுமில்லை. வினை தனக்குத்தானே நிகராய்ச் சொல்லும்; மற்ற சாஸ்திர புராணுகமங்களை யும் வெல்லும்; கணித நூலையும் வயித்ய நூலையுங்கொல்லும்; திரிகாலக்கடலை யுணர்த்துஞ் சோதிடத்தைக்கொல்லும். ஆதலால், வினைக்கு மிஞ்சிய தொன்றுமில்லை. மேலும், "ஊழிற் பெருவலி யாவுளமற்ருென்று, சூழினுந் தான் முந்துறும் என்றும் வகுத்தான் வகுத்தவகை யல்லாற்கோடி, தொகுத்தார்க்குந் துய்த்தல் அரிது' என்று மிப்படிக்கெல்லாம் ஊழ்வினையைக் குறித்துப் பெரியோர் பேசியிருப்பதால், நாம் இனி ஒன்றுக்கும் விசனப்படலாகாது.

அப்பா குழந்தைகாள்! பார்த்தீர்களா? அப்பா குழந்தைகாள்! பார்த்தீர்களா? இதுவரை எனக்கு இவ்வளவு வயதுசென்ற இதுவரை யினும் ஒருவருடைய பாணம் என்மீது படாமலிருந்து காலங் கழித்தேன். இப்போது என்தேகத்தில் எருழும்படியாகிய கொழுப்போலொத்த பாணங்கள் மெத்தவைந்து விழுந்து தைத்து வருத்தமுறச் செய்ததினுல், உங்கள் கண்ணுக்கு எதிரே வீழ்ந்திருக்கின்றேன். நான் ஜன்மாந்திரத்திற்செய்த பாபத்திற்குத்தக்க பயனிதுவாக்கும் என்றுரைத்துப் பின்னையும் அவர்களை நோக்கிப் பரிதாபமடைந்து, அப்பா என் பௌத்திரர்களே! நான் சொல்லும்படியாகிய வாக்கியத்தை அந்தக்காலத்திற் கேளாமற் போனுலும், இந்தக் காலத்திலாகிலும் யோக்கியமாகக் கேளுங்கள். அதனுற் சிலாக்கியப் படுவீர்கள். நீங்களிருதிறத்தவர்களும் வெகு சேனைகளைக் கூட்டிக் கொண்டுவந்து செய்த யுத்தத்தில் என்ன நலத்தைக்கண்டீர்கள்? என்ன இன்பம் அறிந்தீர்கள்? என்ன பலன் பெற்றீர்கள்? இன்னமெத்தனை கோடிகாலம் யுத்தஞ்செய்தாலும் நீங்கள் அனுபவிக்கப்போகிறது துன்பமேயன்றி, இன்பம் என்பது எப்போதுமிராது. ஆகையால், வஞ்சகங்களைப் போக்கி, மனக்குறையை நீக்கி, பொய்யைக் கெடுத்து, பொருமையை விடுத்து, நீங்கள் நூற்றைவர்களும் நமதுபெரியோர்கள் கலந்துபொருந்தியிருந்த தன்மையைப்போல் ஒரு தன்மையாயிருந்து, நால்வரும்புகழ நாட்டைப்புரந்து, நாளைக்கழித்து நலம்பெற்று வாழுங்கள். ஓ நற்குலப் புத்திரர்களே! இனிமேல் நானென்றும் விசேஷித்துச் சொல்லவேண்டியதில்லையென்று வீஷ்மாச்சாரியர் அநேகவிதமாகிய தர்மங்களைப் போதித்தார். இப்படியாக ஒப்புரவொழுகென்னும் வாக்கியப்படிக்குத் தரும நீதி சொல்லி உண்மைப் பொருளைத் தெரிவித்த கங்காபுத்திரருடைய வார்த்தையைக் கேட்டுப் போகவாரிப் புணர்ப்பிற் பொருந்திய தர்மராசன் மூதற் சத்தியவான்களென்னும் பாண்டவர் வீஷ்மரை வணங்கி, ஆண்டவரே! தேவரீரிஷ்டப்படிக்கு ஒருமையா யிருக்கச் சம்மதித்தோ மென்ருர்கள்.

### அர்ச்சுனன் காங்கேயருக்குச் சரசயனஞ் சமைத்தல்

அப்போது துக்கசமுத்திரத்தில் மூழ்கியாதொன்றும் பேசாதிருக்கிற நாகக்கொடியோனென்னுந் துரியோதனனைப் பார்த்து, உன் கருத்தென்னவென்று வீஷ்மர் கேட்க, அவன் ஐயா! இந்தக் கர்மபூமியில் அனுபவிக்கும் ஆசைப்பெருக்கமாகிய மோகவாரியை

விரும்பேன். நான் பஞ்சவர்களுக்குப் பூமியைப் பகுந்து கொடுத்து, அவர்களுடன் கலந்து பொருந்தியிருந்து வாழ்வதற்கு எவ்வளவேனும் எனக்கு மனமில்லை. போதுமானவரைக்கும் போர்புரிந்து, இந்தப் போர் முகத்தில் முடிந்துபோனாலும் போவேனேயல்லது, இந்தப் பஞ்சைகளாகிய பஞ்சவர்க்குப் பயந்து இளைத்து, இப்பூமியை பகுந்து கொடுத்து அவரைப் பணிந்து வாழ்ந்தான் துரியோதன னென்று பாத்திபர் முதலாகிய பேர்கள் நகைத்துப் பழிக்கும்படியாகிய சொற்கேட்டு உயிர் வாழமாட்டேன். என்று புற்றரவக்கொடி தாங்கிய புரவலன் சொல்ல, சாந்த மூர்த்தியாகிய சந்தனுவின் றனையனான வீஷ்மரென்னும் பாட்டன் கேட்டுச் சிறுநகை செய்து சிரமசைத்து, இன்னாரின்னார் இந்தக் காலத்தில் இப்படி அநுபவிப்ப தென்றும், இவ்விதமா யிறப்பதென்றும், விதித்திருக்கும் வினையின் பயனை, யாவர் மடக்கத் தக்கவர்கள்? (விதியின்வழி மதிசெல்லும்) என்னும் மேலோர் வாக்கியப் பிரகாரம் ஊழின்பயிஷ்ட மெப்படி யிருக்கின்றதோ? அப்படி முடியும். உத்தமனே! உன்னை வெறுக்க வேண்டியதில்லை என்று சொல்லி சற்றுநேரம் உன்னிப்பார்த்து, ஏதேது? இனி நாம் சொல்வதிற் காரியமில்லை என்று தெரிந்துகொண்டு, குறைவில்லாத தாளாண்மை பூண்டு பூரித்த புஜபல பராக்கிரமசாலியாகிய வணங்கா முடியோனை நோக்கி, ஓ மன்னர்க்கு மன்னனாகிய மதிகுல வரசே? என்னுடைய முடியானது அடிக்கடி சாய்ந்து போவதினால், அந்தமுடி சாயாதிருக்க ஒரு உபாயஞ் செய்யவேண்டுமென்று வீஷ்மாச்சாரியாகிய பாட்டன் சொல்ல; அந்த மொழியைக்கேட்ட உடனே கிடைத்தற் கருமையாகிய இலவம்பஞ்சு, செம்பஞ்சு, வெண்பஞ்சு, மயிர், அன்னத்தூவி, இவைகளாற் செய்த பஞ்சணைகளும், பரியங்க மாகிய கட்டிலுங் கொண்டுவரும்படி உத்தரவு செய்தான்.

அந்த வார்த்தையை விரதசீலனாகிய வீஷ்மர் கேட்டு வெறுப்படைந்து, தமது உதட்டைபிதுக்கி, நந்தியாவட்டத் தாம் பணிந்த நரேந்திரனைப் பார்த்து, அடா குழந்தாய்! பரிமள கந்தியென்னுஞ் சிறிய தாய்க்காகத் தாசராஜனுடைய கழிக்கரை நகரிற் கையெடுத்து வீஷ்மம் பெற்றுக்கொண்ட பதினெட்டாம் வயது முதல், இதுவரையிலும் ஒழித்துப்போட்ட பஞ்ச சயன முதலாகிய சுகபோக இன்பங்களையெல்லாம் இப்போது நான் பெறத்தக்க மரியாதையு முண்டோ? அப்பனே! அப்படி நான் பெறுவேனாகில், ஆதியிற்கொண்ட என் வீஷ்ம விரதத்திற்கு பங்கம் வருமே. ஓ என் தங்கமாகிய சிங்கமே! இதுகளெல்லாம் எனக்கு வேண்டாமப்பா நான் கொண்ட வீஷ்மத்திற்கும் நிரியாண காலத்திற்குந் தகுந்திருக்கும் படியாய்ச் சரசயனங் கிடைத்திருப்பதினால், இந்தப் பரப்பானது, பஞ்ச சயனத்திலும் மேலாகிய சுகத்தைத் தரத்தக்கது. ஆகையால், வைதீகத்திற்குரிய இந்த இனமாகவே அமைத்து என் சிரமந் தாழாதிருக்கச்செய்; என் கண்மணியே என்று சொல்ல, அம்மொழி கேட்டு பாணங்களினாற் றலைசாயாமற் செய்வதெப்படியென்று துரியோதனன் விழித்துக் கொண்டிருக்கும்போது, வீஷ்மர் வீரகண்டை தரித்து அண்டையில் நின்ற திண்டோள் விஜயனைப் பார்த்து, ஓ என் குருகுலச் செல்வமே! என் முடியின் தாழ்வு நீக்கமாட்டுவையோ? என்று கேட்டமாத்திரத்தில், வரப்பிரசாதத்தாலுயிரை நிறுத்தி வைத்திருக்கும் மகானுபாவராகிய தேவவிரதன் சிந்தை களிக்கும்படியாய் யோகதண்டம் போன்ற மூன்றும்நாள் பிறைக்கொப்பாகிய அர்த்த சந்திர பாணத்தை யெடுத்து விடுத்து, அவருடைய தலைசாயாமல் உயரும்படியாய்ச் செய்து, உடனே சோமபாணந் தொடுத்துத் தலையுங் கழுத்து முறுத்தா திருக்கும்படியாகப் பக்குபவம் பண்ணினான் விக்ரமனாகிய விஜயன்.

அப்போது தருமபுத்திர மகாராஜனைவர் நாலுபக்கத்திலும் நவமணி கால்நாட்டி, மேலாகப் பந்தல் மேற்கட்டியா லமைத்து, திரைச்சீலையும் விடுத்து, காவல் முதலிய உபசாரத்திற்கு ஆள்களும் அமைத்தார். அந்த காலத்தில் வீமசேனனும், நகுல சகாதேவரும், தர்ப்பாசனம் அமைத்துத் தளர்வை நீக்கினார்கள். அப்போது வீஷ்மாச்சாரியானவர் துரியோதன மகாராஜனை அழைத்து, அப்பனே! நான் என்னசொன்னாலும் உன் புத்தியிற் படவில்லை; சொல்லாதிருப்போம் என்றாலோ என் மனங் கேழ்க்கவில்லை. இப்போதாகிலும், நீ யோசிக்கத்தக்கது; அஃதிருக்கட்டும். என் முடி சாயாமற் செய்யப்பாவென்று சொன்னதற்கு என்னுடைய விரத மறிந்திருந்தும் மெத்தையுந் தலைக்கு அணையுங் கொண்டுவரச் செய்தாய்; உன்னுடைய புத்தி இவ்வளவி லிருக்

கிறது. அருச்சுனனிடத்திற் சொன்னதற்கு ஒரு பிறைமுகப் பாணத்தினால் என் குறைகளை அகற்றினன். இப்போது நானிருக்குஞ் சவுக்கியத்தை நீயே அறிந்துகொள். இப்பேர்ப்பட்ட வீரராகிய பாண்டவர்களை நீங்களெப்படி செயிக்கப்போகிறீர்கள்? அவர்களில் ஒவ்வொருவனும் மகா பராக்கிரமசாலிகள். புருஷார்த்தமாகிய அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்குக்கும் நாயகமாகி யிருப்பவர்கள். பஞ்சேந்திரியம்போல ஐவரும் ஒரு வழிப்பட்டவர்கள். ஐயோ! புத்ரமித்ரச் சகோதராளுடன் மாய்ந்து போவீர்களே யல்லது ஒருக்காலும் வெல்லமாட்டீர்களே! மதி மரபிற்றோன்றியும் மதியற்றவரானீர்களே? என்று இரகசியமாகச் சொல்லவேண்டிய காரியங்களை வெகுவாகச் சொல்லியும், அந்த வார்த்தையைக் காதிற் கொள்ளாமற்போன பேரனைக் கண்மலர் திறந்து உறுத்திப் பார்த்து, வினையின் பயனே பயனென்று வெறுத்து, தருமராஜன் முதலியவர்களால் வகுத்த சயனத்தில் நோயில்லாமல், நொடியில்லாமல் தேகத்தி லுருவுகின்ற பாணங்களைப் பார்த்துக்கொண்டு, இந்த வேளையி லிறந்தால் முத்தி யில்லையென்று சூரியன் வடபால்வரும் உத்தராயண புண்யகாலம் வரைக்கு மிருந்தார். அவரா ரெனில், சிறுபோது முதற்கொண்டு கேள்வியென்னு மந்திரகிரியால் மதித்து வராநின்ற தெள்ளமுதமாகிய முனிஸ்வரர்களுடைய சொல் லமுதத்தைக் காதின் வழியாய் நுகர்ந்து களங்க ரகிதமா யிருந்த காங்கேய னென்னும் வீஷ்மாச்சாரிய முனிவர்.

### காங்கேயர் கலங்கிவந்த கர்னனை யாதரித்துச் சுயோதனனை அவன்கையி லொப்பிவித்தல்

அந்த வேளையில் அங்கதேசாதிபனாகிய கர்னன் ஓடிவந்து, அலறிக் கதறி மோதி விழுந்து, ஐயா! ஐயா! என்னையாவே! என்று சோனுமேகத் தூறலைப்போற் கண்ணீர் சொரிந்து, காலடியிற் பணிந்து, ஓ புருருவ குலப் பேரேறே! ஓ சகல சாஸ்திரங்களு முணர்ந்து பேரறிவிற் சிறந்த தாட்டீக மேருவே! ஓ சந்திரகுலத் தோன்றலே! நாயினுங் கடையேனாகிய நான் கல்லாத விவேக சூனியத்தினால், துன்பத்தை விளைக்குந் துஷ்ட அறிவைக் கொண்டு, தேவரீரை மதிக்காமலும், துதிக்காமலும், மனதிற் பதிக்காமலும், பலவாறுகச் சொல்லிய அற்பச் சொற்களை யெல்லாங் குற்றமாகக் கொள்ளாமல், நான் ஸ்தவுத்தியம் பண்ணினதாய்க் கொள்ளவேண்டும். ஓ குருகுலமணியே! அன்றியும், நான் செய்த குறைவாகிய பொல்லாங்குகளை யெல்லாந் தேவரீருடைய மனதில் வைக்காமற் க்ஷமிக்கவேண்டும். ஓ சாந்த மாணிக்கமே! என்று மலரடியில் முடிசூடி வணங்கினன். அந்த சமயம், கண்ணை விழித்துப் பார்த்த ஆராவமுதினுக் கொப்பாகிய அருள் நிறைந்த கருணைக்கடல் போன்ற வீஷ்மாச்சாரியர் கர்னனைத் தேற்றி, ஓ அங்கதேசத் தலைவராகிய என்னப்பனே! உன்னுடைய சொற்றிரமையாலும், விற்றிரமையாலும், துரியோதனனுக்குச் சொல்லா முறைமையினாலும், உன்னை அர்த்தரதனாகச் சேர்த்தேன். அப்படி நான் சேர்க்காமல் அதிரதத் தலைவனில் உந்தனை வைத்து, நீயும் விற்பிடித்து சத்துருக்களுக்கெதிரில் செல்லுவையாகில், உன்னை வெல்லத்தக்க வல்லமை பெற்றவர்களுண்டென சொல்லத்தக்க பேர்களுமுண்டோ? இப்பவுங் கௌரவகுல முதல்வனாகிய துரியோதனன் உன்னை வெகுவாக நம்பி யிருக்கின்றான். நீ எந்தப்பாடாகிலும் பட்டு ஏகச்சக்கர முடிசூட்டி இந்தப் பாராளச் செய்யுங்கடமை உன்னுடையதென்று சொல்லித் துரியோதனமகா ராஜனை அழைத்துக் கர்னன் கையில் ஒப்பித்து, அப்பா கொடையிற்சிறந்த கோமானே! இந்தத் துரியோதனன் வருவது போவது அறியாத வாலிபன். ஆதலால், இவனை கைவிடாது காப்பது உன்கடமையென்று உரைத்தார் காங்கேய முனிவர். அப்போது துரியோதனன் கண்ணீர் சொரிந்து கவலைக்கொண்டிருப்பதைப் பார்த்த ஐயாவானவர், தமது கையாலவன் கண்ணீரைத் துடைத்து, அப்பா துரைமக்களிற் சிறந்த துரியோதன மகாராஜனே! வரிவிற்றாங்கிய இந்தக் கர்ன மகாராஜன் அரசர்களுக்குத் தலை நோவச் செய்யுங் கோடைகாலத்து இடிபோன்றவன். அதிபராக்கிரம வியாக்கிரமம் போன்றவன். ஆகையால், காலமறிந்து சேனாபதிப் பட்டங் கட்டி, இவனைக் கொண்டு செய்யும்படியாகிய செய்கைகளை நாளையப்போர் முதற்கொண்டு நடப்பித்துக் கொள்ளுங்களென்று சொல்லி யருளினார்.

### துரோணராதிய மூவாசிரியரையும் வீஷ்மர் தேற்றுதல்

இப்படியிருக்கும்போது, துரோணாச்சாரியரும், கிருபாச்சாரியரும், அஸ்வத்தாமாவும்

வந்து வீஷ்மாச்சாரியரைக் கண்டு, மனது நொந்துக் கண்ணீர் வடித்து, அவருடையக் கருணைப் பிரவாக வியல்பைப் பலவாறு படித்து, ஐயா! வனத்தில் தவஞ்செய்து வைதீகனாகியிருந்த என்னை உங்களினத்தி லொருவனுக்கிப் பேரும் பெருமையும் பிரக்யாதியுங் கொடுத்து, துருபதேயனைக் கட்டுகிறேனென கூறிய என் சபதத்தையும் முடித்து, என்னருமை பாராட்டி அருளளித்தாண்ட சத்திய விரத அரசனே! இனி என்னை ஆதரிப்பவரெவரோ? இனி யார்முகம் பார்ப்பேனோ? ஓ சாந்தமூர்த்தி! இனி நான் அவனியிலிருக்கேன். இதோ அடியேனும் வந்தேன் வந்தேனென்று துரோணாச்சாரியர் தரையி லறைந்து முறையிட்டு விழுந்து, குறை மொழிந்தார். கிருபாச்சாரியருங் கிட்டி நிலத்திற் றலையை முட்டிக்கொண்டு ஓ நீதியையுடைய நிருபரேறே! உம்முடைய தந்தையாகிய சந்தனுமகாராசன் என்னை எடுத்துவளர்க்க, அவருடைய நினைவறிந்து என்னைக் காத்தருளிய நேயத்தை என்னென்று சொல்லுவேன். ஐயனே! நான் இப்போது உம்மைப் பிரிந்து பேயனாகிப் போயினேனே; ஓ பூசிக்கும் பூமானே! ஓ பொங்குமருளே! ஓ பொருமைக் கனியே! ஓ மலர்ந்த வதனனே! ஓ மணிப்பிரவாளனே! ஓ மதிகுலதிலகனே! ஓ மான பூஷணனே! ஓ வைராக்கியமலையே! ஓ சத்திய நெறியே! ஓ தருமசொரூபியே! ஓ உத்தமக் குணனே! உம்முடைய உடலும் வருந்தியதோ? உம்முடன் வராமல் இன்னு மிவ்வுலகிலுற்றிருக்கின்றேனே பாவியேனாகிய நானென்று கலங்கி ஏங்கிச் சோர்ந்தார். அப்பால், அசுவத்தாமாவும் ஆலைக் கரும்பென வுடைந்து, வேலைத் துரும்பென வலைந்து, சோலைச் சுரும்பென விரைந்து, சோபித்தரும்பெனக் கரிந்து துயரங்கொண்டார். இந்தப்பிரகாரஞ் சிந்தை நொந்த இவர்களைப் பார்த்து விசனமகற்றிக் காரண காரியகால நுட்பங்களைச் சொல்லி, எல்லாந் தெரிந்த நீங்களே இப்படி விசனப்படலாமா என்று அவர்களைத் தேற்றி, வணங்காமுடிபெற்ற மன்னனைக் காட்டி, உங்களா லானவரைக்கும் யுத்தஞ் செய்து வெற்றிபெற்று அரசனுக்கு முடிசூட்டக் கடவீர்களென் றுரைத்து, இன்னும் பற்பல தேசாதிபதிகளாகிய இராஜர்களையும், மன்னர் மண்டலீகர்களையும், மந்திர தந்திர தலைவரையும், பட்டுவான்கள் - கட்டியர் முதலிய அரண்மனை வேலைக்காரரையுங் கண்டு விசனப்படாதீர்களென்று அன்புடன் ஆதரவுகள் கூறி, ஐயோ! நீங்களனைவரும் போர்முகத்தில் வருந்திய தன்றியும் என்னாலும் விசனப்பட்டிருக்கின்றீர்கள். ஆகையால், அவ்வவர்கட்கு நிலைபெற் றிருக்கும்படியான பாடிவீடு போய்ச் சேருங்களென்று யாவருக்கும் விடைகொடுத்தருளினார் வீஷ்மாச்சாரியர்.

இப்பால், சந்தனுவாகப் பிறந்திருந்த மேற்றிசைத் தலைவரான வருணனைக் கண்டு, இன்று உன் மைந்தராகிய தேவவிரதன் பட்டானென்று சொல்வதற்காக விரைவிற் சென்றவனைப்போல சூரியன் மேற்றிசை அடைந்தான். அந்தச் சூரியனால் மகனிறந்த துயரத்தைக் கேட்ட வருணதேவன் பூமிமுழுதும் நிறைய இரத்தக் கண்ணீர் விடுத்து அழுந்தன்மைபோல், செவ்வானம்பறந்தது. வீஷ்மர் இறந்த விசனம் எல்லாருக்கும் நிறைந்ததுபோல, ரணக்களமெங்கும் இருட்கலந்துற்றது. கங்காதேவியானவள் களத்திற் சாய்ந்த தன் மகனைப் பார்க்க வந்ததைப் போன்று, சந்திர னுதயமாகினன். தாயாரான கங்கை தன் கரங்களாற் தன்குமாரன் தேகத்தைத் தடவிப் பார்ப்பதைப்போல், சந்திரக் கிரணங்கள் பரவின. அந்தப் பிள்ளையினது தேகத்திற்பட்ட பாணங்களைப் பார்த்து பெற்ற வயிறெரிந்து, தேக முழுமையும் பொங்கிக் கொப்புளங் கொண்டதைப்போல் நக்ஷத்திரங்கள் பிரகாசித் தரும்பின. சந்திரனை வெள்ளை மேக மறைத்த தன்மையானது, பாகீரதியானவள் கண்கள் வழியினும், மூக்கின் வழியினும், பெருகும்படியான ஜலங்களைத் துவட்டிக் கொள்ளுமாறு முகத்தில் வைத்த வெள்ளை வஸ்திரத்தை ஒத்திருந்தது. அந்த சந்திரனிடத்திற் களங்கந்தோன்றிய தன்மையானது, கண்ணினுக்கிட்ட மைகலைந்த களங்கம் போலிருந்தது. அன்றியும், நட்சத்திரங்கள் உதிர்வது, கங்காதேவியானவள் புத்திரசோபத்தால் மார்பி லறைந்துக் கொண்டபோது மணிவடமறுந்து உதிர்ந்தவாறுபோ லிருந்தது. சமுத்திர இறைச்சலானது, கங்காதேவி கூச்சலிட்டழுந் தன்மைபோ லிருந்தது. ரத்தங்களில் சிறந்த ரணபூமியானது, பாகீரதியானத் தாயார் மார்பிலறைந்துக்கொள்ளவும் அந்த அறையினாற் சிவந்த அங்கம்போலிருந்தது. இத்தன்மையாக அன்றிராத்திரியில் வெகுநேரம் வரையிலும் யுத்த பூமியைவிட்டு ஒருவரும் போகாம லிருக்க, அதைக் கண்டு

வீஷ்மர் விசனப்பட்டு, என்னே? என்னே? மன்னர்களே! முன்னே போய் இளைப்பாருங்கள் என்று விடைகொடுக்க, அது பெற்றுப் பாண்டு புத்திரரும், அவர்களைச் சேர்ந்தப் படைமன்னரும், பாசறைபோய்ச் சேர்ந்தார்கள். துரியோதன மகாராசனும் அவனைச் சேர்ந்த படைமன்னர்களும் பாடிவீடு போய்ச் சேர்ந்தார்கள்.

### திரிதராட்டிரனும் காந்தாரியும் வீஷ்மர் பட்டதைக் கேட்டுப் பிரலாபித்தல்

அச்சமயத்தில் சஞ்சயன் வந்து வீஷ்மரைக்கண் டழும்போது, அவனையவர் தேற்றி அப்பா சஞ்சயனே! கண்ணில்லாத காவலனாகிய திரிதராஷ்டிர னென்னும் மைந்தனுக்கு, என் முடிவை யுரைத்து, விசனம் வரவொட்டாமல் தேற்றி, அவத்திற் காலம்-போக்காமல் தவத்தைச் செய்யச் சொன்னார் வீஷ்மரென்று சொல்லுக. இப்போது நான் மரணத்திற் கேதுவானதைப் பற்றியும், இனி மேலாகப் போகின்றவர்களைப் பற்றியும், தான் கவலைப்படவேண்டுவ தொன்றுமில்லை. அவ்வவர்களுடைய பிராரத்வ கன்மங்களா லுண்டாகிய ஆட்டமனைத்து மாடியே தீரவேண்டும். நாம் வேண்டாமென்றாலும், அவைகள் விடா பல பசுக்களில் ஒரு இளங் கன்றைக் கொண்டு போய் விடுவோமாயின், அது தன் தாயையே நாடிச் செல்லும். அதுபோல, ஊழ்வினையும் அதனை யுடையோர் எத்தனைபேர் நடுவில் சென்றிருந்தாலும், தன் செயலுக் குரியவனையே நாடிச்செல்லும். தபோதனராயுள்ளவர்க்கும் உறும் பகுதியவான தீவினைகளை நீக்கிக்கொள்ளவும், பெறும் பகுதியவான நல்வினைகளைத் தாமே பெற்றுக்கொள்ளவுமியலா. பனையளவு பெருமையை வகித்த பார்த்திபரும், வினைவசத்தால் தினையளவு பெருமையுமில்லாதவராய்ப் பதுங்கி யொதுங்கி நிற்பார். மிருத்யுவும் நல்லோரை எல்லாஞ் சாரமாகவும், தீயோரை யெல்லாம் சக்கையாகவும் கொள்ளும் ஒருவரையுந் தனது காலபாசத்தினின்றும் தப்பவிடப் போகிறதில்லை. மேலும், இவ்வுலகத்தில் செல்வத்தை வேண்டாதார் யார்? நல்குரவை வெறுக்காதார் யார்? ஒருவருமில்லை. அவரவர் செய்த வினையால், அவரவர்களுக்குள்ள அனுபோகங்களை ஆதிகாலத்திற்றானே கற்பிக்கப்பட் டிருக்கின்றன. விளாங்கனியை யார் திரட்டினார்கள்? களாக்கனியை யார் கறுக்கச் செய்தார்கள்? சாதாரணமாய் யாவரும் நல்வினை யொன்றின் கண்ணே விருப்பம் வைத்துத் தீவினையைச் சிறிதும் பேணுவரன்றோ? ஆயினும், இந்த நல்வினையுந் தீவினையும், வேண்டினும் வேண்டாவிடினும், வரவேண்டுவது அது வந்தேதீரும். "ஒன்றைநினைக்கி லதுவொழிந்திட் டொன்றாகும், அன்றியதுவரினும் வந்தெய்தும் ஒன்றை நினையாமன் முன்வந்து நிற்பினு நிற்கும், எனையாளு மீசன்செயல்" என்றாற்போல யாமெல்லாம் பரசுதந்திரரேயன்றி, தற்சுதந்திர ரல்லோம். மேற்சொன்ன ஈசன் ஒருவனே சகலத்திற்குந் தற்சுதந்திரன். ஆகவே இவ்வுலகத்திற் தற்சுதந்திரங்கொண்டு வாழ்ந்தவர் யார்? இப்படி யாதொரு சுதந்திரமுமற்ற சீவர்களைக் கூற்றுவன் கைக்கொண்டு ஓடும்பொழுதில், அவ்வவர்கள் செய்திருக்கும் நல்வினை தீவினைகளே அவ்வவர்கட்குந் துணையாகப் போவதல்லாமல், பிறிதொன்றில்லை.

அப்பா சஞ்சயனே! அட்டமா சித்திகளை அங்கை நெல்லிக்கனிபோ லடைந்திருக்கு மகத்துக்களாயினோரும், அண்ட கோடிகளையெல்லாந் தமதருட் குடையொன்றின் கீழாளத்தக்க மண்டலேஸ்வரர்க ளாயினோரும், முடிவில் இறந்தார்களென்று சொல்லப்பட்டார்களே யல்லாமல், உயிரோடிருந்தார்களென்று சொல்லப்பட்டவ ளெவர்களுமில்லை. நம்முடைய வாழ்நாட்கு நாழிகை வட்டிலாயிருக்கின்றான் சூரியன். பெய்கின்ற மழையினது குமிழியைப்போலப் பலகாலமும் உண்டாகி யழிவதாகிய இந்த மெய்யென்னும் பேர்கொண்ட உடலைப் பொய்யென்று நினைத்து, இனிப் பிறவா நிலையைப் பெறத்தகுங் காரியத்தில் முயலுவதைவிட, நற்கதியடைய வேண்டும் ஆன்மாக்களுக்கு நாடுஞ்செயல் வேறொன்றில்லை. தீபம் பிரவேசித்த விடத்தில், முன்னங் குடிகொண்டிருந்த இருட்டானது, சிறிதுநில்லாகெடும்; அதுபோலத் தவத்திற்குமுன் எப்பேர்ப்பட்ட பாவமுஞ் சிறிது நிற்காது. பெரியோர்க ளாயினோர் செல்வமும் பருவமும் சரீரமும் நிலையாமை என்றும், வியாதியும் விர்த்தாப்பியமும் மரணமும் நிலைமையென்றுங் கருதி, தாமடைய வேண்டுங் காரணமாகிய கதிக்கு காரியமாகிய தவத்தைச் செய்து தருமங்களைத் தொலைப்பார்கள். அறிவுடையாளர்கள் தங்களுக்கு நல்லொழுக்கமாகக் கொண்ட தவங்களைப் பலதுயரங்களா

லழுங்க நேரிடுங்காலத்து மனஞ் சலியாது தழுவிநிற்பர். மெய்-வாய்-கண்-மூக்கு-செவி என்னு மிவ்வைம்பொறிகளையும், சத்தம்-பரிசம்-ரூபம்-ரசம்-கந்தம் என்னு மிவ்வைம்புலன்களிற் செல்லாமற்காக்கும் வல்லமையை யுடையவனெவனோ? அவனே சகல ஆயாசமுற்று நின்மலசித்தராய் மேலாகிய மோட்ச வீடடைவான். அறிவில்லாதவர்கள் அனித்தியமாகிய இகலோக வின்பத்தால் தமக்கு இடைவிடாது பலதுன்பங்கள் எதிர்கொண்டு வரப் பார்த்துக்கொண் டிருந்தும், அவ்வற்ப வின்பத்தையே மேலுமேலும் இச்சித்துக் கொண்டிருப்பர். அறிவுள்ளவர்கள் நித்தியமாகிய பரலோக வின்பத்தைச் சதாகாலமுமிச்சித்து அவ்வகைப்பட்ட யாதொருவின்பதுன்பங்களுமின்றிச் சுகித்திருப்பர். ஆதலால், அச்சுகத்தையே துணையாக நம்பி அது கிடைத்தற்கேதுவாகிய காரியத்தில் முயலச்சொல். இனிப் புத்திராதியர்களையும் பூவுலகவாழ்க்கையையும் நினைக்கவேண்டாம். அறுசுவைப் பொருள்களையு மாய்ந்து கூட்டி உள்ளூறப் புகட்டிச் சுமைக்கினும் பேய்ச்சுரைக்கு கைப்பறுது; அதுபோல அறிவில்லார்க் கெத்தனை கோடி உண்மை நியாயங்களை எடுத்தோதினும், “ஊழிற்பெருவலியா வுளமற்றொன்று சூழினுந்தான்முந் துறும்” என்றாற்போல, அவர்கட்கு அவர்கள் ஊழேவந்து முன்னின்று அவ்வுண்மை நியாயங்களைக் கேட்கவொட்டாது; அதற்கு நமது துரியோதனனே சாட்சி.

ஓ சஞ்சயனே! இகபர நியாயங்கள் இப்படி யிருப்பதால், இனி அவ்வவர்களும் அவ்வவர்க ளான்ம லாபத்திற்குரிய காரியங்களிலிச்சைவைத்து முயலவேண்டுவதே யல்லாமல் வேறொருலாபத்தி லிச்சைவைத்து முயலுவதிற் சிறிதும் பிரயோசனமில்லை. இதனை எல்லாம் நன்றாகச் சொல் மிஞ்சி நிற்பவர்கள் அடையவேண்டிய லாபத்தைத் தடையின்றி அடையட்டும். நீயும் இவைகளை யோசித்து இன்னும் உனக்குள்ள நாள்வரையில் பிரியா விடையாய்க் கூடவேயிருந்து, அவ்வவர்களுடைய கருத்துக்கிணங்க நடந்துகொண்டு எக்காலத்துஞ் சுகஜீவியாய் வாழக்கடவை யென்றுசொல்லி விடைகொடுத் தனுப்பினர். அப்போது சஞ்சயன், துரியோதன மகாராஜனிடத்தில் வந்து கண்டான். அந்த சஞ்சய முனியைக் கண்டவுடனே நாகக்கொடியோன் கண்கலங்கி, ஓ சஞ்சயனே! எமது வம்சமுதல்வனை பாட்டன் இறந்த மார்க்கத்தை எந்தையாகிய திரிதராட்டிர மகாராசனுக்குச் சீக்கிரம் போய்ச் சொல்லக்கடவை யென்று சொல்லி, அஸ்தினபுரத்துக்கு அனுப்பிவைத்தான். வழக்கப்படி சஞ்சயன் போய்ச் சொல்லத் தக்கவாரா யிருந்தாலும், இது பெருஞ் சாவாகையால், அதிசீக்கிரம்போய்ச் சொல்லும்படி அனுப்பியது. ஓ அரசனே! இந்தப் பிரகாரம் துரியோதனன் சொல்லி அனுப்பிவைத்த சங்கதிகளைத் தார்வேந்தராகிய திரிதராட்டிரனுக்கு சஞ்சயன் தனிமையில்போய்ச் சொல்லினன். இதைக் கேட்டவுடனே ஆதி நாயகனுடைய அடியார்களுக்கு அன்பிற் பெருகும் கருணை வெள்ளக் கண்ணீரானது ஆறாகப் பெருகி ஓடுவதைப் போல் அழுதலறி வீழ்ந்து, கடகடவென்று புரண்டு, ஓ என் ஐயா, ஓ என் ஐயா! தேவரீருடைய துணைப் பற்றி என் பிள்ளைகளை அனுப்பினேனே: நடுத்தெரு விளக்கும், நட்டாற்றுக் கோரையுமாய் விட்டிறந்தீரே? இனி என் பிள்ளைகளுக்கு உற்றதுணை எவரிருக்கின்றார்கள்? ஓ என்னப்பனே ஓ என்னையனே என்றேங்கிக் குளிர்ச்சி கொண்ட சந்திரனைக்கண்ட தாமரைக் கமலம் எப்படி முகங்கூசிக் குவியுமோ அப்படிப்போல முகங்கருகி, மொழிகுழறி அடிக்கடி மண்மேலடித்து மோதி விழுந்து, மறுபடியு மெழுந்து, ஐயையோ, குலமானம், குடிமானம், குணமானம் முதலிய மானங்கள் எல்லாம் போய்விட்டனவே; என் வயிற்றிற் கொடிய நெருப்பிட்டதே ஏன் பாழாகிய வினை என்று இருகண்களிலும், முகத்திலும் வயிற்றிலும், மார்பிலும் பளபள வென்று அறைந்துக் கொண்டு, இன்றுதான் என்னிரு கண்ணு மிழந்தேன். இது முதற்கொண்டே கண்ணற்ற பாவியாகினேன். அந்தந்தோ அந்தந்தோ எங்களையாவைக் கண்டவுடன் ஆகாயத்திலிருக்குந் தேவர்களெல்லோருஞ் செல்வமோங்கி வீடுபெற்று மகிட்சி யடைந்திருப்பார்களே என்று அளிந்த புண்ணினிடத்தில், அக்கினியிற்காய்ச்சிய வேலாயுதத்தை சொருகியதைப் போலப் பதை பதைத்து, துடி துடித்து, கைநெரித்து, நாவுலர்ந்து, நாபிவறண்டு நானிலத்திற் சேர்ந்தான் மேதினிக் கரசராகிய திரிதராஷ்டிரன்.

இப்படியாகச் சோர்ந்த வேந்தனை அருகிலிருந்தோர்கள் எடுத்தணைத்து உபசரித்து

தேற்றினர்கள். சஞ்சயனும் வீஷ்மர் கூறிய கருத்துக்களை யெல்லாம் விளங்கும் படியாக உரைத்துத் தேற்றினர். அப்போது பக்கத்திலிருந்த சவுபல ராஜகுமாரியாகிய காந்தாரியம்மனானவள், ஓ மாமா! ஓ மாமா! வென்று மண்மேல் விழுந்து ஐயையோ! தேவரீரை நம்பியிருந்த எங்களையும் எங்கள் சிறுவர்களையுந் தெருவில் விடுத்துச் சேணுலகஞ் சென்றீரோ? ஓ தெய்வசிகாமணியே! ஓ எங்கள் குலதெய்வமே! ஓ திங்கட்குலவிளக்கே! ஐயா இவ்வுலகாள வேண்டுமென்று ஆசைகொண்டப் பாண்டவரென்னும் பாவிகள் என் பிள்ளைகளிற் சிலரைக்கொன்று, மற்றப்பிள்ளைகளையும் வருந்தச்செய்து வென்று, எல்லாப்பிள்ளைகளுக்கும் ஆதாரபூதராயிருந்த பரிசுத்தமான உம்மையுங் கொன்று போட்டார்களே? மகா பாதகியான குந்தி மக்கள் என்ன சந்தோஷத்தில் இருக்கின்றார்களோ? அடி அம்மா அவர்களுந்தானென்னமோ வரந்தானென்னமோ? கரந்தானென்னமோ? சிரந்தானென்னமோ? தெய்வமே அவர்கள் என் மக்களைப்போலழியார்களா? ஒழியார்களா? அறுபடார்களா? தறிபடார்களா? என்பிள்ளைகளெல்லோரும் பேதமையுடைய ஏழைகளாச்சே; இதுவேது நாங்கள் பிழைப்போமென்பது வீண்பேச்சே; உலகத்திற்குப் பழிப்பாச்சே; பிள்ளைகளால் உற்றுரிமைக் கடன்பெறாமல் ஒண்டியாய் நிற்கலாச்சே என் வயிற்றெரிச்சல் அந்த குந்திக்கிடாதோ? என்பாவம் அவாளுக்கிடிக்காதோ? என் பெண்பாவங்கொண்டு பெருக்கத் தவிர்க்கார்களோ? என்று பற்பலவிதமான துற்பாஷைகளைப்பேசித் தொண்டை வறண்டு, கண்டங் கம்மி, காக்கைபோற்கூவி, அரசனும் அரசனின் றேவியும் வெந்துயரால் வெம்பிச் சோர்ந்து வீழ்ந்தார்கள். அவர்களை உயிச்சன், சஞ்சயன் முதலாகியபேர்கள் மீண்டுந்தேற்றி விசனத்தை மாற்றினர்கள். அப்பாற் சஞ்சயன் அவர்களிடத்திற் செலவைப் பெற்றுக்கொண்டுப் பொன்னாரமணிந்த மன்னர் பொருந்திப் போராடும் போர்க்களத்தில் அரசர்கள் வாசம் செய்யக்கட்டிய பாசறைப்போய்ச் சேர்ந்து துரியோதனமகாராஜனுக்குச் சங்கதி தெரிவித்திருந்தான்.

## பத்தாம்போர்ச் சருக்கம்

முற்றிற்று.



ஸ்ரீ கிருஷ்ணாயநம:





ஸ்ரீ ருக்மிணீ ஸத்தியபாமா ஸமேத ஸ்ரீ வேணுகோபால பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீமஹாபாரதம்

## ஏழாவது,

# துரோணபர்வம்

### கண்ணன் துதி

பேர்படைத்த விஜயனுடன் மும்மைநெடும் பிறவியினும் பிரியானாகிச்
சீர்படைத்த கேண்மையினாற் றேரூர்தற் கிசைந்தருளுஞ் செங்கண்மாலைப்
பார்படைத்த சுயோதனற்குப் படையெடே னமரிலெனப் பணித்தகோவைக்
கார்படைத்த நிறத்தோனைக் கைதொழுவார் பிறவாழிக் கரைகண்டாரே.

### சூதபுராணிகர் வாக்கியம்.

ஓ சவுனகாதி முனிவர்களே! இவ்வாறு உயுத்த பஞ்சகத்தின் முதற்பாகமாகிய வீஷ்ம பர்வதத்தைக்கூறிய வைசம்பாயன முனிவரை ஜெனமேஜெய மகாராஜன் பணிந்தெழுந்து, சுவாமி! கௌரவரும் பாண்டவரும் அணி வகுத்து, அமர்க்களம் புகுந்தபின் அஸ்தினா புரத்திற் சோகங்கொண்டிருந்த திரிதராஷ்டிரன் வேதவியாச முனிவராற் றேறுதல் செய்யப்பட்டுச் சஞ்சயனால் அண்டகோசவடுக் குரைக்கக் கேட்டதும், குருக்ஷேத்திரத்தில் இருதிறப் படைகளையுங் கண்டு சோகங் கொண்ட அர்ச்சுனன் வாசுதேவனாற் பகவற்கீதை யுரைக்கக்கேட்டு அவரது விஸ்வரூப முந் தரிசித்து மனந்தேறியதும், பின்பு பாண்டவர் கண்ணன் முன்னிலையில் வீஷ்மரையும் வில்லாசிரியரையுங் கண்டு அனுமதி பெற்று யுத்தவாரம்பஞ்செய்து இருதிறப் படைகளும் பகலில் உதயாஸ்தமனங்கொண்டு பத்துநாள் வரையிற் போராடியதும், பத்தா நாட்போரில் குருகுல பிதாமகராகிய வீஷ்மாசாரியார் தம்மைப் பகைகொண்டிருந்த அம்பையின் சபதத்தை அவளம்சமாய்ப் பிறந்த சிகண்டி யென்பவன் முன்னிலையிற் நிறைவேற்றிக் கொண்டதும், ஆகிய சரித்திரங்களோடு மற்றுமுள்ள சகல விநோதங்களையுஞ் சாங்கோ பாங்கமாகக் கேட்டுச் சந்தோஷமாயினேன். இப்பால் இரண்டாம் பாகமாகிய துரோணபர்வத்தையுந் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று கேட்க, வைசம்பாயன முனிவர் சொல்லத் தொடங்கினார்.

இப்பால்,

# பதினோராம்போர்ச் சருக்கம்

### கண்ணன் துதி

கலைகற்ற வர்க்குமது கல்லா தவர்க்கு, நிலைபெற்ற வர்க்குநிலை நில்லா தவர்க்குங், கொலைமுற்று வோர்க்குமுயிர் கொல்லாதவர்க் குந், துணைமுற்ற சான்ற னவன்றாள் துதிப் பாம்.

ஓ பற்றற்றாரைப் பணிந்து, சுற்றத்தாரைக் கனிந்து, கொற்றத்தாற் றெவ்வகன்று, வெற்றித்தாரைப் புனைந்த குருகுலக் கோமானே! கேளும்: இப்படி பத்தாநாட் போரிற் பட்ட வீஷ்மாச்சாரியருடைய தன்மையைச் சந்தனுவாகிய வருணனுக்குச் சொல்லப் போன சூரியரானவர், அர்ச்சுனனுடைய செய்கையைத் தேவேந்திரனுக்குச் சொல்ல வேண்டுமென்று வந்தவனைப்போல் இந்திர திசைக்குவந்து, சந்தேகமறப்புகன்று, இருள் களைவென்று, இரைந்து விரைந்து, தேர் தூண்டிக்கொண்டு, அநேகமாயிரங் கிரண கரஞ் சொலிக்கும்படியாய்க் கீழ்த்திசையில் உதயமாயினான். உடனே பாசறையிலுள்ள பாடி வீடுகளில் இருந்துகொண்டு, வீஷ்மர் சாய்ந்த விசனத்தினால் இராத்திரி முழுமையும் நித்திரையற்றிருந்த வீரப் பிரமுகாள் யாவரும் அக்கதிரவனுக்கு முன்னெழுந்து, காலைக்கடன்களை முடித்து, சதுரங்க சேனைத் தலைவர் முதலிய யாவரும் யுத்தகோலத்துடன் வெற்றி பெறும்படி யுத்தகளம்வந்து சேர்ந்தார்கள். அத்தருணத்தில், இருளைக்கெடுத்தெழுந்த சூரியனளித்த கர்னமகாராஜன், சமுத்திரஞ் சூழ்ந்த உலகமதிக்குஞ் சாமர்த்திய முடையனாய், மன்னர்-மண்டலீகர்-மகுடவர்த்தனர்-பட்டவர்த்தனர் முதலிய அரசர்களின் மத்தியில் மகமேருவைப்போன்ற ரதமேறி வந்து, நடுநாயகமாக நின்றபோது, அங்கிருந்த அரசர்கள் சிலர் பேசிக்கொண்டார்கள். அஃதென்னவெனில், வெற்றி பொருந்திய யுத்தமுறையைக்கற்ற விக்கிரமராகிய அர்ச்சுனனுக்கெதிரில் நிலைபெற்று நிற்கும் வல்லமையுடைய அதிரதத்தலைவர்கள், வீஷ்மாச்சாரியார், துரோணாச்சாரியார், அசுவத்தாமர் என்னும் இவர்கள் மூவர். இவர்களிற் பிரதாபவில்லைத்தாங்கிச் சத்துருக்களென்னும் யானைகளைச் சாடும்படியாகிய உக்கிரம நரசிங்கம்போன்ற வீஷ்மாச்சாரியர் நோய்ந்துவிட்டாரே, இனிமேல் நமக்குத் திக்காரென்று வெற்றிபெற்ற வேந்தர்களெல்லாரும் ஒடுக்கத்துடன் நடுக்கங்கொண்டு, கர்னமகாராசனை யடுத்து, அங்கதேசத் தலைவராகிய அரசே! எங்களுக்கு உம்மையன்றி வேறொருவருமில்லை. ஆதலால் நீரே சேனாதிபதியாயிருந்து, ஜெயம் பெறவேண்டுமென்று செப்பினார்கள். அப்போது அஷ்ட குலாசலம்போன்ற புஜ பல பராக்கிரமக் கர்னரானவர் அந்த அரசர்களைப் பார்த்து, நீங்கள் ஒன்றுக்கும் அஞ்சாதீர்கள். அதயிரியப் படாதீரென்று அவர்கள் கொண்ட அச்சத்தை நீக்கி, இன்றுமுதற் கொண்டு வீஷ்மருக்கு ஒப்பாகச்சென்று விஜயனைக்கொன்று அசைவர நின்று வீரவெற்றி பெறும்படியா இஷ்டங்கொண்டிருக்கிற என் இச்சைக்கு மாறுபாடாய் என்னைச்செயித்து, இளைக்கச் செய்கின்றவனெவனோ? அவனை நான் அறிகிறேனென்று வீரங்கள்பேசி, வீஷ்மாச்சாரியர் இருக்கும் இடத்தையணுகி தீர்க்க தண்டமாய்த் தொழுது, அவருடைய திருவடியை அர்ச்சித்துத் துதித்து, ஓ பரதகுல மணியாகிய விரதநிலையது நாடிய பரமகுரு முனியாகியபார்த்திவனே! தேவரீரைவதைத்த மகா பாவிகளைத் திரிபுராந்தகராகிய சிவபெருமானுக்கு எதிரிலெரிந்த அசுரர்களைப்போல் மணிமுடி சிதறிப் பணிமுடிப்பாரி லுருளச் செய்கிறேன். சத்தியமாகச் சொல்லுகிறேன். உத்தமராகிய தேவரீர் எனக்கு விடைகொடுமென்று விரதசீலராகிய வரதனுடைய பாதத்தில் வணங்கியபோது, அந்த வீஷ்மாச்சாரியார் குலுங்க நகைத்து, கர்னன் சந்தோஷிக்கும்படியாய் ஒரு வசனஞ் சொல்லுகின்றார்.

ஓ அங்கதேசாதிபதி நாகத்துவஜராகிய நராதிபன் உன்னை அதிரதத்தலைவர்களிற சிறந்தவனென்று தனது மனத்திற் சார்வதாய்ப் பதித்திருக்கின்றான். இப்படி முழுமனதுடன் நம்பியிருக்கிற இராஜனுக்கு அநுகூலமாகும்படியாய்ப் பனியைப்போலொத்த அர்ச்சுனனை வளைத்து, மகத்துச் சனியைப் போலப் பாணம் விடுத்து, சூரியகிரணம்போற் காய்ந்து முடித்து, தேசராஜர்கள் எல்லோரும் புகழ, தேவர் மாதவர் யாவரும் மகிழ, மகிபதியாகிய துரியோதன மகாராஜனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்துவைப்பது உன்னுடைய சாமர்த்தியம். அப்படியிருக்க, அதை விடுத்து என்னைக் கொன்றவர்களை எரித்து விடுகிறே

னென்று எனக்கிதமாகப் பேசவந்தது போர்
வீரர்கள் சொல்லுகிற வார்த்தையல்ல. இது
வச்சையர் பேசுகின்ற லச்சைகெட்ட இச்சக
வார்த்தை யாகையால், இந்த வார்த்தையைக்
கேட்பவனும் பதராயிருப்பாராகில், சொல்ல
வந்த பதர்போன்றவனுடன் கூடிக்கொண்டு
பழிக்குடம்படுவான். நான் அத்தன்மை
போன்றவனென்று நீ நினையாதே. என் கர்
மானுபவம் நான் அனுபவித்தேன். ஒன்
றிரண்டு நாளையில் உன் கருமத்தை நீ தொலை
த்துவிடு. மேலும், படை முனையில் அடிபட்ட
வருத்தத்தால் பூலோகத் தரசர்கள் முதலாகிய
படைவீரர்களெல்லோரும் பழுத்த மரத்தில்
பறவைகள் சேருமாப்போற் பலம் பொருந்
திய உன் வில்லினுடைய நிழலில் வந்து சேர்
வார்கள். நீ அப்போது வாடிய பயிருக்கு
மழை பெய்வதுபோல் அவர்களை ஆதரித்து
மூங்கில் ஒன்றோடொன்று உழைந்து பற்றிக்
கொள்ளும் நெருப்பினால் ஆரண்ய மெரிந்து
பொரிந்து கரியாகுந் தன்மைபோற் போர்
செய்து, வித்வான்கள் உன்பேரில் பொரணி
பாடும்படி செய்யாமற் புகழத்தக்க பரணி
பாடும்படியாய் சமுத்திரத்தை ஆடையாக
உடுத்த, தரணியைச் சந்திரகுலாதிபனாகிய
இந்திரவோலக்கங்கொண்ட என் பேரனுக்
குச் சுதந்திரமாக்கி வைக்கக்கடவை என்று பல
வாறாகிய நீதிமொழிகளைச் சொல்லுகின்றார்.

### கர்னமகாராஜன் தனக்குத்தானே சேனாபதி கோலங் கொள்ளுதல்

இவ்வாறு அவர் சொல்லிய வார்த்தை
களையெல்லாம் இருசெவி குளிரக்கேட்டு, அவ்
வார்த்தையின் பெருமை சிறுமையை மனத்தி
லுன்னாமல், இரண்டுபுயமுந் திரண்டோங்கி,
(துட்டுவந்து பெட்டியில் விழுகிறதோ? திட்டு
வந்து பெட்டியில் விழுகிறதோ?) என்றுரைக்
கும் மானமில்லாத தீனரைப்போல் மனமகிழ்
ந்து வணங்கி விடைபெற்றுக்கொண்டு, தனது
பாடிவீடாகிய மாளிகைக்குப்போய்க் கேயூர
மணி முதலிய குண்டல கிரீட புஜகீர்த்தியோடு
வாகுவலயம்-தோளணிமாலை-பாசுபந்து-கடக
கங்கணம்-கொடி-கொலுசு-தோடா-மோதி
ரம்-தம்பிப் பதக்கம் முதலிய சுந்தர அணி
மணிகளும், வீரகண்டாமணி-வச்ரகவசம்-வீர
கச்சை-வீரப்பட்டம்-வீரத்துவசம்-வெற்றி
மாலை-மணிகட்டிய வில்-அம்புறுத்தூணி-
வாள்-வேல்-கத்தி முதலாகிய ஆயுதங்களும்
விளங்க, (முழுமூடரை மூடர்கொண்டாடிய
முறைமை) என்னும் வாக்கியத்திற் கிணங்கத்
தங்களைத் தாங்களே பெருமை வைத்துக்
கொள்ளுஞ் சடையரைப்போலத் தானே
சேனாதிபதிக் கோலங்கொண்டு, பார்த்தவர்க
ளெல்லாம் இன்றைக்கே யுத்த முடிந்துபோம்;
நாளைக்கு நமனுக்கும் நமக்கும் வேலையில்லை
என்று மேகம்போல் விரைந்து விரைந்து எதி
ரோடி வந்து கர்னனைக்கண்டு கைதொழுது
புகழும்படியாய், சர்வ வாத்தியங்களும் முழங்
கக் கொடை-கொடி-பீலிக்குஞ்சம்-சாமரை
முதலாகிய விருதுகளுடனே துதிக்கும்படி
யான ராஜகூட்டங்களும், ரதகஜ துரகபதாதி
முதலான பேர்களும், பொன் மலையை வளை
ந்த சடல்போல் தன்னுடைய தேரைச் சூழ்ந்
துக்கொண்டு வர, தாமரைக் கமலம்போன்ற
கண்களில் நெருப்புப்பொறி பறக்க, நெற்றி
யில் வியர்வு பொடிக்க, குணத்தொனியுஞ் சங்
கத்தொனியுங்கூடி எழும்படி முழக்கிக்கொண்
டு, ஆலகால விஷம்போற் கோபமூண் டெரி
யும்படியாய் வேகமாக மேகமளாவிய பூந்தே
ரேறிப் போர்முனைக்கு வந்தான் கர்னமகா
ராஜனானவன்.

அப்படி வந்ததைப் பூமி முழுமையுஞ்
சந்திரவட்டக்குடை நிழற்படுத்திய நந்தியா
வட்டத்தாம வேந்தன் கேட்டு, அக்கர்னமகா
ராஜனிடத்திற்கு வந்து, அண்ணா! இப்போ
தாம் கொண்டிருக்கும் யுத்தகோலம் மெத்த
நன்றா யிருக்கின்றது. இன்றைக்கே எனக்கு
செயம் வருமென்பதற்குச் சந்தேகம் இல்லை.
ஆனால், தேவரீருக்கு வருத்தங்கொடுக்க எனக்
குச் சம்மதமில்லை. அதெதினாலென்றால், காடு
திரிந்து வேடரைப்போற் கசங்கி வந்தக் குடி
கேடராகிய பாண்டவரென்றும் பஞ்சை பசங்
களையோ நீர் செயிக்க நினைப்பது. எசமானன
தேவரீரே சுதாவில் ஆயுதங்கொண் டிந்தப்
பஞ்சவரைக்கொன்று தேவரீர் விஜயம் பெறு
வீராகில் மிகவு நன்மை. அப்படிக்கில்லாமல்
தெய்வீகத்தால் உமக்குயிர் நஷ்டம் வருமாகில்,
இந்தப் பஞ்சா சதகோடி ராஜ்யங்களையும்
பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு அரசாக்ஷி
செய்பவர்கள் யாரண்ணா! நமது கையின்கீழ்
இருக்கின்ற மனிதர்களைக்கொண்டு வென்று
விஜயம் பெறவேண்டும். அல்லது, நாமே
யுத்தஞ்செய்து பெறுவது நலமன்று. அப்
படி யுத்தஞ்செய்வதற்கு நாமெப்போது ஆயு
தம் எடுத்துத் தலைவராகப் புறப்படவேணு
மென்றால், நமது வீராள் முதலிய யாவரும்

போய்விட்ட பிறகு, இனி எவருமில்லையென்றுணர்ந்து அப்பால் நாம் புறப்படவேண்டும். ஆதலால், அல்பர்கள் நிமித்தம் நீர் வெளிப்படவேண்டாம்; இன்னும் அநேக யுக்திகளும், நடக்கவேண்டிய முக்கியமான அனேக காரியங்களும் பலவாறாக யிருக்கின்றன. அவைகளனைத்தையும் நான் தெரிவிக்கிறேன். தேவரீர் இப்போது கொண்ட சேனாபதிப் போர்க்கோலத்தை நிறுத்துமென்னண்ணாவே என்று கர்ணனைத் தழுவிக்கொண்டான். அந்தவேளையில், தன் உள்ளத்தி லுண்டாகிய கொதிப்பை வெளியிற் காட்டாமல், தானேறிவந்த இரதத்தை விட்டிழிந்து, சூரியன் போனபிற்பாடு முகங்குவிந்து முடிசாய்ந்து சலத்திற்றாழ்ந்து தேன்பராகமண முதலியவற்றை அகத்திலடக்கிக்கொண் டிருக்குந் தாமரைப் புஷ்பம்போலானான் மிகு கொடையாளனென்னும் அங்கதேசத் தலைவனாகிய கர்னமகாராஜன்.

இந்தப்படி வாட்டங்கொண்ட கர்னனுடைய காட்டத்தைத் தங்கள் கண்ணோட்டத்தாலறிந்த தாருவாசன் முதலாகிய தம்பிமார்களும், புத்திமானாகிய மத்திரராஜனும், மனதொத்த சகுனிமாமனுங் கூடிப்போய்த் துரியோதன மஹாராஜனிடத்தில் ஆலோசித்து, இந்தக் கர்னமகாராஜனை விலக்கி வைப்பீராகில் வீஷ்மருக்குப் பதிலாக நின்று போர்புரியும்படியாகிய விக்ரமர்கள் யாரிருக்கின்றார்கள்? வேந்தனே! இவரைவிட வேறொருவரையுங் காணோமேயென்று சொல்லினார்கள். அப்போது துரியோதனன் அவர்களைப்பார்த்துச் சொல்லுகிறான்: ஓ மித்திரர்களே! ஏன் அப்படி ஒருவருமில்லையென்று சொல்லவேண்டியது. முன்னமே இளவரசு பெற்று யுத்தமுனையில் வெற்றி பெறும்படியாகிய சமர்த்தர் விற்குருவாகிய துரோணாச்சாரியர் இருக்கின்றார். அவரைச் சேனாபதியாகக் கொண்டு ஜெயம்பெறுவோமென்று சொல்ல, யாவரும் அந்த வார்த்தைக் குடம்பட, தான் கர்னராஜனையும் அழைத்துக்கொண்டு துரோணாச்சாரிய ரிருக்கும் பாசறைக்குச்சென்று, அவரைப் பணிந்து, ஓ எங்கள் தேசிகராகிய தேவனே! இறந்துபோன எங்கள் பாட்டனைப்போற் சேனாபதிப் பட்டம் பெற்றுச் சத்துருக்களைச் செயித்து நாங்கள் வெற்றி பெறும்படியாகிய விதத்தைத் தேடும். ஒப்பொருவ ரில்லாத உம்மைவிட ஜெயம் பெறுவார் ஒருவருமில்லை. உத்தமனே! மேலும், தாங்கள் தனுர்வேத சதுர்வேத சாம்பிரதாயமுணர்ந்த சகலகலை நிபுணராகையால், தேவரீருடன் எதிர்த்து விற்பிடித்து மற்கொடுத்து வெற்றிபுனையும் வல்லமைசாலிகள் வேறொருவரையுங் காணோம். மனுவிக்ஞான முணர்ந்த ராஜராஜர்கள் மகிழும்படியாய்க் கண்ணிமைக்குமுன் வில்லை வளைத்து, கணைகள் விடுத்து, கருதலரைக் கால்சாய்ந்தோட வடித்து, காசினி முழுதும் எனக்களித்து, கருணைப்பிரவாக வருளளித்துக் கைகொடுத்துக் காக்குந் திறம் உமக்குத் தகுமல்லது, மற்றொருவருக்குந் தகாது. ஓ உண்மைப் பொருளோதுங் குருவேயென்று உரகக்கொடியோ னுரைக்க, துரோணாச்சாரியர் அந்த வார்த்தையைக் கேட்டுப் புன்னகை யுடையவராய், அங்களித்துப் பொங்கி, ஆகமப் பனுவலையுடைய தேவாதி தேவர்களும், பூவுலகப் பூபாலர்களாகிய ராஜராஜாக்களுஞ் சந்தோஷிக்கும்படியாய் ஒருவாக்கியஞ் சொல்லுகின்றார்.

## சேனாபதித்வங்கொண்ட துரோணாச்சாரியரைத் துரியோதனன் வரங்கேட்குதல்

ஓ மதிமரபுதித்த மாசிலாமணியே! ஓ வணங்காமுடிபெற்ற மகுட சூடாமணியே! ஓ ஜெகமெலாம் புகழுந் தெய்வ சிகாமணியே! ஓ சேர்ந்தோரைக் காக்குஞ் செல்வ சிந்தாமணியே! கேளும்; மையென்றறையப்பட கறுத்த மேகத்தைப்போ லிடித்து முழங்கிப் பாண வருஷங்களைச் சொரியாநின்ற எனது வில்லினால், ஏழுபுவியு மெரிய ககனமுடைப்பட்டுச் சரிய திக்கஜங்கள் கலங்கி முகங்கரிய, தேவர்கள் பூமாரிசொரிய, சேடன்முதலிய பாம்புகளினுடலுரிய, பகைபாளிகளின் மண்டைகள் நெரிய ஒரு நொடியிற் போர்புரிந்து, இப்பதியை உமக்கு முடிசூட்டிவைக்கும் பராக்கிரம முடையவனாக யிருக்கிறேன். எதிரியின் படைகளை மாய்ப்பது எனக்குப் பெரிதல்ல. ஆகையால், உன்னிஷ்டப்படிக்கு நராதிபர்களும், நால்வகைச் சேனைகளும் அறியும்படியாய்ச் சேனைக்கதிபதி யென்னும் நெறிமுறையைச் செய்யென்று தேசிகன் சொல்ல, உடனே காசினியாளுங் காவலன் பூசுரர்களை யனுப்பிப் புனிதமாகிய கங்கை-யமுனை முதலாகிய புண்ணியத் தீர்த்தங்களும், பால் - தயிர் - நெய் - தேன்-இளநீர் முதலாகிய அபிஷேகத் திரவியங்களும்; பல நிறமுங் குணமும் மணமுமுடைய புட்பம் - அட்சதை-தாம்பூலம்-கர்ப்பூரம்-சாம்பிராணி-தேங்காய் - வாழைப்பழம்

முதலான வஸ்துக்களுங் கொண்டுவரச் செய்து, மந்திராலோபங் கிரியாலோப மில்லாமற் கலசங்களமைத்து, வேதவேதியர்கள் வேத கோஷஞ் செய்யத் துரோணாச்சாரியருக்குத் திருமஞ்சனமாட்டி, உபசாரத்துடன் வழிபடு கடவுளையும், வீரமாகாளியையும் வழிப்பட்டுப் பூசித்து, நாதகீத வோசையும், நாதன் வேத பூசையு முழங்க, நவரத்னகசித பட்டங்கட்டி, அவரைச் சகல ராஜர்களும், சகல தேசர்களும், சதுரங்கசேனைகளுஞ் சரணகமலத்திற் சிரமுறப் பணிந்து நெருங்கி நிற்கத் துரியோதன மகாராஜனும் வணங்கியபோது, அவனைத் தமது இருகரத்தாலும் அணைத்தெடுத்து ஆசீர்வதித்து மகிழ்ந்து, ஐயோ வணங்கா முடிபெற்ற மன்னனுடைய மனம் என்னபாடு படுகிறது பார்த்தையா வென்று, துரோணாச்சாரியின் மனமானது அனலைக் கண்ட மெழுகைப்போ லுருகி, அரசன்பேரி லிரக்கம் பிறந்து அருட்பார்வையாகப் பார்த்து, ஓ கௌரவகுல முதல்வனே! உமக்கு வேண்டிய வரத்தைக் கேளும் தடையில்லாமற் றருகிறேனென்று சேனாபதியாகிய துரோணாச்சாரியர் சொல்லவே, அவர் தன்னைத்தானே மறந்து மகிழ்ந்த தரணீசனானவன் குருசுவாமியைப் பார்த்து, ஐயனே! எனக்கு வரமருளும்படியாய்க் கடாட்சம் வருமாகில் சண்டை முனையிற் றருமராசனை இளைக்கச் செய்து கைப்பிடியாய்ப் பிடித்துக் கட்டி என்னிடத்தி லொப்பிவிக்குங் கடமை தேவரீருடையது. நானிரு கரத்தையுமேந்தி விரும்பி வரமாகக் கேட்டுக் கொள்வது இதுவென்று நாகக்கொடியோனுரைக்க, இந்த வசனத்தைக் கேட்ட தனுர்வேதமுனியானவர், பலமுறைகளாலும் பல துறைகளாலும் பண்பாக யோசித்து, இது விருதாவான வீணாசையே யொழிய முடியத்தக்க தல்லவே என் மனநொந்து சிந்தித்து, மன்னர் பெருமானை நோக்கிச் சில்வார்த்தை சொல்லத் தொடங்கினர்.

ஓ பலகலையுணர்ந்தும் பலனறியாப் பதர் போன்ற பார்த்திபனே கேளும். அளவிலாப் பகைமேற்கொண்ட பலவான்களான பாண்டவரின் முடிகள் பொடிபட அமர் முடித்து சந்திரவட்டக்குடை நிழலில் இந்திரனைப் போல் என்னை யிருத்தி அரசாட்சி நடத்த வரங்கொடுத் தருளுமென்று ஒரு சொல்லைக் கேளாது, பிரகாசம்பெற்ற முரசக்கொடியுற்ற தருமபூபதியை உயிருடன் பிடித்துக் கொடுக்கும்படி வரங் கேட்டாயே. அப்பனே கமல சம்பவனான பிர்மா சிருட்டித்தருளின இவ்வுலகத்திற் சத்தமொழி விரதசீலத் தயாளுவான தருமராஜ னென்பவருக்கு மகாவிஷ்ணுவையும் ஒப்பாகச் சொல்லப் படாதே; அப்பேர்ப்பட்ட மேன்மைகொண்ட அருளாளனை எப்படிப் பிடித்துத்தரக் கேட்டனை? இறைவனே! நான்கு வேதம், ஆறுசாஸ்திரம், பதினெண்புராணம், முப்பத்திரண்டு உபநிடத முதலான சாஸ்திரக் கேள்விகளினாலேயும், அந்தச் சாஸ்திரக் கருத்துணர்வினாலேயும், அவருக்கு பிர்மனும் நிகரராகமாட்டார். சீவகாருண்ய முதலான கிருபைகளில் ரட்சகனான விஷ்ணுவும் நிகரராகமாட்டார். வில்லைப் பிடித்து யுத்தஞ் செய்து சத்துருக்களைக் கொல்லுஞ் சம்மாரகிருத்தியத்திற் சிறந்தவரான உருத்திரமூர்த்தியும் நிகராகமாட்டார். இப்படி யிருக்கப் பகைவரான நாம் அவரை செயித்து வெற்றிபெறுவோமென்பது இலேசான வார்த்தை அல்லவே; அதை ஒருக்காலும் நாம் நினைக்க வேண்டியதில்லை. ஓ செல்வப் பெருக்காருடையச் சீமானே! மகமேரு மலைக்கிணையான புயத்துணைகொண்ட தர்மராஜன் விதியை அனுசரிக்கும் மதி என்னும் வினைச்செயலால் ஒருவேளை என் கைவசப்படுவாராகில், உன்னிஷ்டப்படி அவரைக்கொண்டுவந்து உன்னிடத்தில் விடுகிறேன். அவரை என்ன செய்ய நினைவு கொண்டிருக்கிறாய் அந்தக் கொடுமையை இன்னதென் றெனக்குச் சொல்லக் கடவை. ஓ கொலைத்தொழிலை குடியாகக் கொண்டு கூர்மை பொருந்தின அழற்கணையா லசுரரைக் காய்ந்த அயிலேந்தின கரனே என்று ஆசாரியர் கேட்க, அடங்காப் பேராசைகொண்ட மனத்தோனான துரியோதன மகாராசன் சொல்லுகின்றான்.

ஓ ஆசாரிய புருஷனேகேளும், அழகிய முரசக் கொடியோனைப் பிடித்துக் கொண்டு வந்தால் அவனுயிரைப் போக்கிவிடவேண்டுமென்றும், அதனால் மற்றத் தம்பியர் நால்வரு மடிந்து போவார்களென்றும், அப்பால் நமக்கெப்போதுஞ் சல்லியமில்லை யென்றும், முதலில் நினைத்தேன்; அந்நினைப்பை நிதானிக்கும்போது, தலைமாட்டுக் கொள்ளியை தானே தேடிக் கொள்வதைப் போல வந்து முடியும். அதென்னவென்றால், தர்மராசனைக் கொன்றுபோட்டால் தம்பிமார்களுஞ் சாவார்களென்பதற்குச் சந்தேகமில்லை. அப்படிச்

சாகத்தக்கினவர்கள் சும்மாய்ச் சாகமாட்டார்கள். (போகிறபடி போகின்றேமென்று ஒரு புதுமை விளையாடினன்) என்பது போலும், (சாகிற பேருக்குச் சமுத்திரங் கால்வாய்) என்னுந் தன்மைப்போலும், (அதிசூரனுக்கு அரும்பிராணன் துரும்பு) என்பதைப்போலும் லக்ஷியங்கொண்டு, அருச்சுனன் குரூரதமென்னும் அடங்காக் கோபமூண்டெரியும் படியாய் தானே யுகாந்த காலாக்கினிபோல் ஓங்கிப் போர்புரிந்து, நமது சேனைகள் முழுமையுங் கால் பெயர்க்கவொட்டாமற் காய்ந்து, தீய்ந்து, சாய்ந்து, மாய்ந்துபோகத் தொலைப்பான். அப்போது நாம் சும்மா யிருக்காமல் எதிர்த்துப் பிறைமுகக் கணையால் அருச்சுனனைக் கொல்லுவோமாகில், அவனைக் கொன்ற மாத்திரத்தில் குறைவில்லாதப் பிரகாசம் பொருந்திய சக்கரந் தரித்த மாயோன் ஏர்ப்பட்டு, நமது புத்திர மித்திர களத்திராதிகளுடன் ஒன்றொழியாமல் நம்மையு முடித்து நமது ராச்சியத்தை யெல்லாம் பெண் காணியாகக் குந்திதேவி துரைத்தனஞ் செய்யும் படியாய் ஏகச்சக்கிர பட்டாபிஷேகங் கட்டி வைப்பானையா அந்தக் கோபால கிருஷ்ணன். ஓ மாசற்ற மரைக்குருவாகிய துரோணச்சாரியாரே! ஆகையால், தர்மராசனைக் கொல்லப் படாதென்று விலக்கி வேறு யோசனை ஒன்று செய்திருக்கிறேன். அதாவது தர்மராசனைத் தேவரீர் கூட்டிக்கொண்டு வந்தால், எங்களம்மானுகிய சகுனியைவிட்டுச் சூதாடச் சொல்லி, உரிமை முதலிய எல்லாவற்றையுங் கெலித்துக்கொண்டு, முன்னையைப்போல் பயித்தியக்காரதன்மாய் பன்னிரண்டு வருடம் வனவாசமும், ஒரு வருடம் அஞ்ஞாதவாசமும் செய்துவாருங்களென்று சொல்லாமல், இன்றுமுதலுங்களைவருக்கும், உங்கள் புத்ரமித்ர சந்ததியாருக்குங் காடே கதியென்று ஓட்டிவிட்டால், மறுவார்த்தை ஒன்றும் பேசாமல் தம்பிமார்களுடன் வனவாசம் போய்ச் சேருவான். நமது தம்பியரும், நாமும் நமக்கிஷ்டமாகிய பேர்களுடன் இவ்வுலகத்தைச் சஞ்சலமில்லாமல் ஆண்டனுபவிக்கலாம். நானிப்படி நீடூழியாக உலகம் புறக்கும்படி நீர் தயை செய்ய வேண்டுமென்று எனது சிரத்திற் கரத்தைக் குவித்து வணங்கிக் கேட்டுக் கொண்டேன். ஓ உரம்பொருந்திய சரத்தின் திறத்தைப் பெற்ற துரோணச்சாரியரே! நாயினுங் கடையனுகிய அடியேனுடைய எண்ண மிதுவென துரியோதனன் சொல்ல, அதைக் கேட்டு பரிசுத்தமாகிய ஆரணந் தெரிந்த பூரணனுகிய துரோணச்சாரியர் நகைத்து, இராசாதிராசனுடைய பேதமைப் புத்தியைச் சகிக்கமாட்டாமல் விசனமடைந்து, வேண்டிய வரத்தைக் கேளுந் தருகிறேனென்று தான் கொடுத்த வாக்குக்குத் தப்பு வராமல், காரண காரியங்களையும் வேறொரு தேவரகசிய வாக்கியச் சத்தியத்தையும் நினைத்துச் சொல்லுகிறார்.

ஓ வணங்காமுடியோனுகிய மன்னவனே! எது எப்படி யிருந்தாலும் நான் தருகிறேன் என்றவரந் தப்பக்கூடாமையால், நீ ஒரு காரியஞ் செய். அதாவது, இந்திரனுக்குப் பூந்தோட்டமாகிய காண்டவ வனத்தின் கட்டழித்த காளை, இளாவிர்த கண்ட முதலாகிய நவகண்டங்களிலுஞ் சென்று திக்கு விஜயஞ் செய்து வென்று வந்தவேளை; நாரணனல் வெல்லுதற்கரிய காலகேய நிவாத கவசாளை நமனூரிற்குடியேற்றிய தோளையுடைய அவ் விஜயனே சத்துருக்களுக்கெல்லா மாரணன். இப்பேர்ப்பட்ட தம்பியானவன் தருமராஜனுக்குச் சமீபத்திற் றுணையா யிருக்கிறவரையிலும், நீ கேட்டுக்கொண்ட வரம் நிறைவேறுமென்றும், நான் அப்பேர்ப்பட்ட விற்றிறமை யுடையவனென்றுஞ் சொல்லமாட்டேன். இதை நன்ருக உன் உள்ளத்தில் வைக்கவேண்டியது. உத்தமனே! மேலும், தென்றற்றேரும், இருட்டாகிய யானையும், ஸ்திரீகளின் படையும், தாழைமலர் வாளும், கருப்பு வில்லும், சமுத்திரபேரியும், சந்திர வட்டக் குடையுமுடைய மன்மதன் அவனுடைய மலர்ப் பகழியோடு மகாதேவருக்கெதிர்பட்டு எரிந்து மண்ணனதுபோல், தவசம்பன்னர்களாகிய தருமவான்களை எத்தனைவிதமாகிய வஞ்சகத்தைச் செய்ய நினைத்தாலும் அத்தனையும் பருத்திப்பொதிக்கு நெருப்பாகி நினைத்தவர்களைப் பாழாக்கிப் போடும். இந்த தர்மங்களை யெல்லாம் நீ சற்றும் யோசிக்காமல், தர்ம விருத்தமாகிய மார்க்க மில்லாத வகையை நினைத்தாய். ஆகிலும், உன்னெண்ணப்படிக்கு யுத்த முனையில் என்னுற் கூடிய வரையிலும் பாடுபட்டுச் சத்தியநெறி உத்தமனுகிய தர்மராஜனைக் கட்டிக்கொண்டு வருகிறேன். ஆனல், பூர்வத்தில் புராரியாகிய கயிலாசபதியுடன் விற்போரினேடு மற்போரும் புரிந்து பாசுபதாஸ்திரம் பெற்ற அஞ்சாத பஞ்சானனம் போன்ற அருச்சுனனுனவன், தருமராசனுக் கருகாமையில் நில்லாமலும்,

எனக் கெதிராகாமலும், அகன்றுபோகச் செய்வாயாகில், நான் சொன்ன வாக்கியம் ஸ்திரமென்று நீ தெளிந்துணர்ந்துக் கொள்ளலாமென்று விரக்தனும் வேத புங்கவன் சொல்ல, அந்த வார்த்தையைத் துரியோதன மகாராசன் முதலாகிய தம்பிமார்களுங் கேட்டுச் சந்தோஷங்கொண்டு, தாங்க ளெண்ணியக் கருத்து நிறைவேறித் தருமராசன் கைவசப் பட்டதைப்போற் களித்து, துரோணாச்சாரியருக்குங் கரங்குவித் திறைஞ்சி, கர்ன மகாராசன் முதலாகிய பலவான்க ளெல்லாரும் பக்கத்தில் நெருங்கி, முரச முதலாகிய வாத்தியங்களுடன் எழுகட லார்ப்பென்ன முழங்கி யுகமுடிவாகிய கால மிதுவென் றுரைக்கும்படியாய்த் துரோணரென்னுஞ் சேனுபதியுடன் ரணக்களம் வந்து சேர்ந்தார்கள்.

இவ்விடத்தில் நடந்த சங்கதிக ளெல்லாம் வணங்கி யுரைத்த தூதராற் தெரிந்துக் கொண்ட பலம் பொருந்திய முரசக்கொடி படைத்த தருமராஜனுனவர், வீமசேனன் முதலாகிய தம்பியர்களேயும், மித்துருவாகிய புத்திமான்களேயும், ஸ்ரீ கிருஷ்ண தேவரையுஞ் சேர்த்துவைத்து, இச்செய்திகளே யெல்லாம் அவர்களுக்குத் தெரிவித்து, அருச்சுனனே நோக்கி, அப்பா! துரியோதன மகாராசனுக்கு வரங்கொடுத்திருக்கிற சேனுபதியான துரோணுச்சாரியார் போர்புரிந்து என்னேப் பிடிக்க வரும்போதில், சோமசூரியாக்கினியான முச்சுடருஞ் சுழலும்படிக்கு நீ முனேந்து யுத்தம் செய்தால் மாத்திரம் நாம்பிழைப்போம், சபதமு முடிக்கலாம். நீ முனேயாவிட்டால் நமக்கு ஏதுவுமுடியாது. ஆகையால், அந்தத் துரோணுச்சாரியார் எதிர்த்துவந்த காலத்தில், ஆசாரியரென்னு மரியாதையும், முறைமையும் எண்ணிப்பார்த்து அச்சப்படாதே. என்னே விட்டுநீங்கி எங்கும்போகாதே தர்மசாஸ்திரந் தேர்ந்தவர்களுந் தன்னே கொல்லவந்த பசுவைக் கொல்லுவார்கள். ஓ என் சகோதரனே! இதை நீ யோசிக்க வேண்டியதென்று உதிட்டிரனுரைக்க, நானிலம்புகழும் நரன்சொல்லுகின்றுன். ஓ அறநெறிவழுவாத என்னண்ணுவே! தரித்திரன் குபேரசம்பத்தை யனுபவிக்க நினேப்பதுபோல, இராஜாதிராஜனுன துரியோதனன் தனக்குத் தானே நினேத்துக் கொண்ட காரியமல்லாமல் இதுமுடியுங் கருமமல்லவே. இந்த தனுர்வேத சம்பன்னரான துரோணுச்சாரியராலும் ஆகாது. முத்தொழில் நடாத்தும் முக்கடவுளாலு முடியாது. என் வார்த்தையைத் தேவரீர் மனதில் ஸ்திரமாக நம்பும். அண்ணு! என்பிராணனே நான் வைத்துக்கொண்டிருக்க உம்மை ஒருவர் கைக் கொள்ள வசமாமோ? நிர்மலனே! தேவரீரைக் கைவிடுவேனுகில், குருத்துரோகஞ் செய்து ஆசாரியனுயிரை வாங்குந்தோஷமும் உம்மை கைவிட்டுப் பிரிவதினுல் நேரிடுந்தோஷமும், ஆகிய இவ்விரண்டு மெனக் கொன்ருய் முடியும், எமது கர்த்தனே! இந்த துரோணுச்சாரியார் மாத்திரமல்ல, பாதலத்தி லிருப்பவர் எவராகுலும், பூதலத்திலிருப்பவ ரெவராகுலும், இவர்களனைவரும் ஒன்ருகச் சேர்ந்தாலும், தனித்தாலுந் தேவரீரைக் கவர்ந்துக்கொண்டு போகும்படியாய் வருவாராகி லப்போதே இந்த மண்ணுலகமனைத்தும் பொடிப்பொடியாகிய மண்ணும் வார்கடலேழும் வற்றி வறண்டு திடராய் வடவாமுகாக்கினியும் அவிந்து சிதைந்து நீருய், விண்ணுலகமும் நிலைகெட்டு தடுமாறி தலைகீழாய், சந்திரசூரியர்களுங் கதியோய்ந்து கால்சாய்ந்து வேறுய், மகமேருவுங் குயவத் திகிரிபோற்சுழன்று தளர்வதாய், இவ்வுலகைச்சுமக்கும் ஆதிசேடனும் உடல் நெரிந்து மெலிவடைந்து ஒன்றுமில்லாது வெட்ட வெளியாய்ப் போய்விடுமே: ஓ உதிட்டிரமகாராஜனே! தேவரீர் மனத்தில் இதைக் குறித்து எண்ணவே வேண்டாம் உமதிஷ்டப்படிக்குக் குறைவில்லாம லிருமென்று சொன்னுன் பகைத்தவரை அடக்குஞ் சக்கராயுதத்தைத் தாங்கிய கர்த்தனென்னுங் கண்ணனுடைய இருதயக் கமலம்போன்ற குற்றமற்ற பற்குண மகாராஜனுனவன்.

இப்படியாக அர்ச்சுனன் நீருண்டெழுந்த மேகம்போ லிறைந்துகூறிய வாய்மையை வெற்றிபெற்ற முரசக்கொடிக்கதிபனுன வீரன் கேட்டு, மகிழ்ச்சியினுல் இரண்டுதோளும் வலுவேறி வீங்கி மதந்து விண்ணில் ஓங்க சகல ஜெயமும்பெற்ற முரசங்களுடன் - தப்பட்டை - தாரை - பூரிமுதலிய வாத்தியங்களும் எங்கும் ஆர்ப்பரிக்க பிரகாசியாநின்ற ரதகஜதுரகபதாதிகளென்னும் பெருங்கடற் புரண்டுசூழ, வெற்றி பொருந்திய வெண்சாமரை, விருதுக் கொடி, வெள்ளைக்குடை, மயிற்பீலி, ஆலவட்ட முதலாகிய யாவுநெருங்க, இவ்வித ஆரவாரங்களோடு விசித்திரமான தேரேறி தம்பிமார்களுந் தானேகளும் புடைகவிந்துவரத் தாம்தாமென்று புறப்பட்டபோது, மைவண்ணம்

போன்ற மேகத்திற்கொப்பாகிய வடிவமைந்த மாதவன் உதிஷ்டிரனைப்பார்த்து, ஓ மெய் வீரத்துனை தருமநந்தனரே! கங்காபுத்திரரான வீஷ்மாச்சாரியார் உயிர்வேஷ்டையால் நீங்கி விட்டதினால் தனக்குச் சேனாதிபட்டம் வரும் என்று சந்தோஷித்திருந்த கர்னன் துரோணருக்கு அப்பட்டமாகவே மனமிடைந்து யுத்தஞ்செய்வதற்கு ஏனோதானோவென் றிளைத்துப் போய்விட்டான். துரோணாச்சாரியார் குமாரனான அசுவத்தாமாவானவர் நெடுநேரம் வரைக்கும் நிலைத்து முனிந்து முனைந்து போர்புரிய மாட்டான். ஆகையால், இனி மேற்கொண்டு நாமேவென்று ஜெயம்பெற்றோமென்று நினையும். என்று திருவாய்மலர்ந்தருளக் கேட்ட மலையைப்போற் குவிந்த தோளினையுடைய தருமனும், மற்றத் தம்பிமார்களும் மனமகிழ்ந்து போர் மலைவதற்கு ரணக்களம்போய்க் குறுகினர்கள். இப்பால், நவநிதி நிறைந்த மாதளக் களஞ்சிய அளகாபுரிக் கிறைவனான குபேரனென்றும், ஐந்தருநிறைந்த அருநிழலுறைந்த அமராவதி தலைவனான போக தேவேந்திர னென்றுஞ் சொல்லத்தக்க அவனிபர்க் கதிபதியாகிய துரியோதன மகாராஜனவன், விவேகத்திற் சிறந்த படை மன்னவர்களுடனும், வேதவிற் குரிசிலாகிய சேனாபதி யென்னுந் துரோணாச்சாரியருடனும், வெம்போர்க் களத்தில் வந்து மிகமகிழ்ந்து நின்றான்.

இந்தப்படிக்கு இருதிறவீரர்களும் பொருந்தி வீஷ்மரொருவரில்லாமல் நிறைந்திருந்த அமர்க்களம் எப்படி யிருந்ததென்றால், சந்திரசூரியர் மறைந்த வானம்போலும், அழகிய குணமும் மணமுங் கெட்டு நலங்கிய மலர்போலும், தெளிந்த நன்னீர் நிறைந்த ஆறில்லாத ஊர்போலும், அழகிய தந்தியற்ற நாதயாழ்போலும், திரவியமில்லாதார் செல்வம் போலும், சத்தியந் தப்பினோர் தளர்ச்சி போலும், இறக்கமற்றவர் இல்வாழ்க்கை போலும், நன்னினைப்பில்லார் நலிவுபோலும், வேதமந்திரமில்லா வேள்விபோலும், கியானமற்ற தேகம்போலும், கண்கள் கெட்ட முகம் போலும், தீபம் அவிந்த மனைபோலும், பரதனைப்போன்ற தம்பியைப் படைக்காத தமையன்போலும், குருவாக்கியங்கொள்ளா வித்தைபோலும், பொருமை மறந்த தவம்போலும், நற்குண நற்செய்கை கெட்ட பெண்ணுடன் கூடிவாழும் இல்லறத் தருமம்போலும், நீதியற்ற அரசுபோலும், யானையில்லாச் சேனைபோலும், தியானமில்லா நிஷ்டைபோலும், புத்திரன்கிட்டாப் பாக்கியம்போலும், மேகம் நீங்கிய பூமிபோலும், வித்வான்கள் பொருந்தாத சபைபோலும், ஆசார பூசாவிதிபொருந்தாத குலம்போலும், லவணம் ஆறைந்த ருசிபோலும், நாணி தளர்ந்த விற்போலும், நாதனிழந்த படைபோலிருந்தது. இப்படியாக யிருந்த ரதகஜதுரகபதாதி முதலாகிய நால்வகைச் சேனைகளையும், வண்டிற் சக்கரம்போற் சகடயூகமாகவகுத்து, சகலவித வாத்தியங்களுடன் தானுந் தூசிப்படையில் நின்றார் கவுரவ சேனாபதியாகிய துரோணாச்சாரியார். இங்கே பஞ்சவர் படைகளாகிய சதுரங்கச் சேனைகளையுஞ் சேர்த்து எதிரிகளேற்படுத்திய யூகத்திற்கு மாறாகக் கிரவுஞ்ச யூகமென்று பிரம்மாண்ட மலையைப்போல் வேர்ப்படுத்திப் பெரும்போர் முகத்தினின்றான் பாண்டவர் சேனாபதியாகிய துஷ்டத்தூய்மன்.

இவ்வகையாக யிருவகைப் படைகளுங் களித்துக்கொண்டு நிற்க, குளிர்ச்சிபொருந்திய சந்திரவட்டக் குடையினையுடைய அரசர்கள் தங்கள் தங்கள் சேனாபதிகளின் புடையிற் சூழ்ந்துவர அங்கே உலகமதிக்குந் துரோணாச்சாரியார் யாவரினு மேற்பட்ட பலமுடையவராய் தடதட படபட மடமடவென்று தாவிவருங் குதிரைபூட்டிய தடந்தேர் செலுத்திவந்து தேவர்கள் தியங்கி நடுங்கி மயங்கும் படியாய்ப் பத்திர புஷ்பாதி மாலைகளணிந்த வரிசைபெற்ற வாளிகளைச் சோனாமேகத்தைப் போற் சொரிந்து செவ்வரக்கைப்போற் கடைசிவந்து பற்பலகோடி சிலீமுகக்கணைகளினாற் குற்றமற்ற பாண்டுவின் புத்திராளுடைய வாசினியைப் பிளந்து சிதறவடித்து முடித்த மத்தியானச் சூரியனைப்போல் யாவருந் தமக்கு நிகரில்லாமல் நின்றார். இங்கே பார்த்தசாரதியாகிய வலவன் படபடாகாரத்துடன் தேரைச் செலுத்தப் பிரதாப உருத்திரனைப்போல் வந்த பற்குனன் துரோணாச்சாரியார் நடத்தும் பராக்கிரமத்தைக் கண்டு, மழுப்போற் காய்ந்து அனற்பொறி பறக்குங் கணைகளை அமோகமாக இறைத்தான். அந்தக் கணைகளைக் கர்னன் கண்டு அர்ச்சுனனைத் தகைந்து, தனது வில்லில் மேகாஸ்திரம், மோகாஸ்திரம், பிர்மாஸ்திரம் என்னும் இவைகளை விடுத்துப் போர்புரியுங் காலையில், எண்டிசை முதலிய இரவியும் நடுங்கி, இமையாநாட்டத் தவரு

மொடுங்கி, இருகரத்தாலுங் கண்களை மூடிக் கொண்டார்கள். இன்னொரு பக்கத்திற் சகாதேவனும் மாயச்சூதாடிய வஞ்சகமுடைய சகுனி மாமனும் நேர் நேராகப் புகுந்து கலந்து, ஒருவரையொருவர் வெல்லுவ தரிதென்றுரைக்கும்படியாய்ப் போராடி, வேகமுங் கூர்மையுங் கொண்ட சரங்களேவி, ஒன்றோடொன்று முனைந்து - தேய்ந்து - சாய்ந்து - ஒய்ந்துபோகும்படி வில்லை வளைத்தெதிர்த்தார்கள்.

இவ்விருவரும் நெடுநேரம் போர் செய்யும்போது, சகாதேவன் ஒருகணை விடுத்துச் சகுனியினுடைய சாரதியைப் போக்கி, இருகணை தொடுத்துக் கொடியை அறுத்து, நான்கு பாணம் விடுத்துக் குதிரைகளையுங் கெடுத்து, வஞ்சகனுடைய மார்பு கிழிய வடிக்கணையினாற் றுளைத்துக் காயப்படுத்திய போது, இளைத்து நின்ற சகுனியானவன், நிணச்சேற்றில் விழுந்து ஓடுவதற்கு எண்ணினவனைப்போல் தன் தேர் விட்டிறங்கி, செயங்கொண்டு வெற்றிமாலை யணிந்த வஞ்சமில்லா நெருஞ்சினனாகிய சகாதேவனை எதிர்த்துக் கைத்தண்டங்கொண்டு மதத்துவந்தான். அப்போது, நகுலனுக் கிளைய சகாதேவன் நகைத்து, பிரகாசிக்கும் வாகுவலய மணிந்த தன் றோளின்பேரில் யாவரும் பார்க்கும்படியாகத் தாங்கிய பலம்பொருந்திய கதையைக் கையிற் கொண்டெதிர்த்து, சகுனிமாமனைத் தாக்கிப் புரிமுதுகிட்டோடப் புரட்டி யடித்தான். மற்றொரு புறத்தில் மும்மதங்களைப் பொழியும் யானைகளும், குதிரைகள் கட்டிக் கவசங்களைப்போர்த்த தேர்களும், மனவேகத்தினுஞ் சிறந்த புரவிகளும், வெற்றி பெற்ற வீரவெள்ளப் படைகளும், நாலு புறமுஞ் சூழ்ந்துவர, இராஜவீர மகுடாதிப ரெல்லாருந் தன்னிழலைப்போற் றொடர்ந்துவர, பாட்டனாகிய வீஷ்மரிறந்த துன்பத்தி லாழ்ந்திருக்குந் துரியோதனன் வேங்கைப் புலி பொருந்திய மலைபோலொத்த ரதத்தை விடுத்துக்கொண்டு, கொடிய காலாக்கினிக் கொப்பாகக் கொதித்தெழுந்து, வாயுகுமாரனாகிய வீமசேனனை வளைத்தெதிர்த்து தாக்கினான். அப்போது, சிங்கக்கொடி தாங்கிய தேரினையுடைய வீமசேனன் அச்சிங்கம்போற் சினத்தெழுந்து, சரிக்குச்சரியாய் சாயகம் விடுத்துக் கருக்கி, தீமுகாஸ்திரங்களை யேவி, அவனரவக்கொடியும் இடிக்குப் பயந்த பெரும் பாம்பைபோலொத்த வில்லுமுறிந்து போகச் செய்ததுமல்லாமல், அரசனடுங்கிப் பயப்படவும், அமர்பொரத் துணிந்து அவனுடன் வந்த படைமன்னர் யானைகள் - குதிரைகள் - தேர்நிரைகள் - பதாதியர் முதலிய யாவும் அடியோ டொழியவும், வெவ்விய பாணங்களை மேலுமேலு முடுக்கிவிடுத்தான்.

இப்படியாக வீமசேனன்தொட்ட கணைகளினால் வாத்தியங்கள் முழங்கும்படி மகிழ்ந்துவந்த பட்டவர்த்தனரும், மகுடவர்த்தனரும், பரிபூட்டிய தேராளிகளும், வில்லாளிகளும், வாளாளிகளும், வேந்தர் வேந்தாகிய துரியோதனனும் வெந்நிட்டோடும் விரைவைக்கண்டு, யாவருந் துதிக்கநின்ற வெள்ளைக்குடைவிரித்த வீமசேனன்பேரிற் கோடையிடியைப்போ லிரைந்து விரைந்து முனைந்து சல்லியராஜன், வந்து வளைந்து, வீர சாயகங்களைச் சரமாரியாய்ப் பொழிந்தான். அந்தச் சல்லியன்விடுத்த பாணங்களை யெல்லாங் கெடுத்துப் போர்புரியும் வீமசேனனை நகுலன் அடுத்து, தேவரீர் யுத்தம் பண்ண வேண்டாமென்று தடுத்து, தன் தமயனோடெதிர்த்த சல்லியனைத் தானே தகைத்து என்னுடன் போர்செய்யக் கடவை என்று இமைக்குமுன் எண்ணிறந்த கொடுங் கணைகளைச் செலுத்தி, ரணக்கள முழுவதுந் தலையறுந்த முண்டங்க ளாடும்படியாய், சல்லியன் மனமுந் தடுமாறி வாடும்படியாய் வெம்முனைவென்ற வீரப்பிரதாப வெஞ்சிலைதாங்கி மிகுபோர் விளைத்து, மோகரித்து முனைந்து, ஒன்று - இரண்டு - மூன்று - நான்கு - ஐந்து இப்படியாக அம்புகளைப் பிரயோகஞ்செய்து, சாரதித் தலையை வீழ்த்தி, நாணியை அறுத்து, வில்லைமுறித்து, ரதத்தையுங் கொடியையும் அழித்து, நான்கு குதிரைகளையும் போக்கி, பாதாதிகேசமளவும் இலைத் துரப்பணம்போற் றுளைக்கும்படியா யெய்தான். அப்போது மத்திரராஜன் மனங்கூசி, அப்பா! இவன் அர்ச்சுனராஜனுக்குத் தம்பியல்லவா! வென்று புறங்கொடுத்துப் போய்விட்டான்.

இன்னொரு பக்கத்தில் திரண்ட இரண்டு மலைகள் முரண்டெதிர்த்ததைப்போற் சூரிய குமாரனாகிய கர்னராஜனும், வீரதீர பராக்கிரமனாகிய விராடராஜனும் வெகுளியுடன் எதிர்ட்டுப் போரிட்டார்கள். அப்போது பூமியும் பூமியைத் தாங்கிய ஆதிசேடனும் நடுநடுங்கிப் போகும்படியாய் அபரிமிதமில்லாமலெய்யுங்

கணைகளினால் ஆகாசமெங்கு மறைந்து, அனேகஞ் சேனைகளுங் குறைந்தன. இப்பால், துருபதராஜனும் யாகசேனனும் ஒன்ருகச் சேர்ந்து, வெற்றிமாலைபூண்டு மேலிட்டுவரா நின்ற சிங்கமனைய பகதத்தனை மயக்கி, ஒரு பகல் முழுவதுந் தங்கள் தங்களுடைய தயிரியமும்; பலமும், பிரகாசம் பெற்ற ஆயுதங்களின் வலிமையும், சிலைத்திறமும், கணைத்திறமுங் காட்டி யானைச்சண்டை யிட்டார்கள். இதல்லாமலும், வீரகண்டாமணி கட்டிய சோமதத்தனோடு மேலாகிய வலிமைபெற்ற பலவேந்தர்களெல்லாம், வாளாயுதம்-வேலாயுதம் - குந்தாயுதம் - தோமராயுதம் - சக்ராயுத முதலிய ஆயுதங்களைக்கொண்டு யுத்தங்கள் செய்து, புறந்தந் தோடினார்கள். அப்பால், பீஷ்மாச்சாரியரை வென்ற சிகண்டிராஜன் இன்றைய தினத்திற் செய்தபோரின் திறத்தை எம்போலியராற் சொல்லத் தரமல்ல; இப்படி ஒருவர்க்கொருவர் கைகலந்து போர் புரிந்து, அனேகர் இளைத்துங் களைத்துஞ் செயித்தும் அபஜெய மடைந்தும்போய், எங்குங் கணைமயமாயும் பாணமயமாயும் நிறைந்துவிட்டன.

## அபிமன்னன் இலக்கணகுமாரனை வளைத்துச் சிறையைப்பிடித்துக் கொள்ளுதல்

அக்காலத்தில், தேர்க் கூட்டங்களும், யானைக் கூட்டங்களும், சேனைகளி னெருக்கமும்; குதிரைக்கும்புகளின் பெருக்கமும், ராஜக் கூட்டங்களும், அம்புவி யசைதர அம்புகள் தெறித்துத் தும்புகளெழ மிகுவெம்புகள் வளைத்துவந்து, கொடி குடை முதலியவைகளோடு வாத்தியங்களு முழங்கும்படியாய் நெருங்கி, அர்ச்சுனராஜனுடைய குமாரன் அபிமன்னனுந் துரியோதன ராஜனுடைய குமாரன் இலக்கணனும் எதிர்த்து தொடுத்த பாணங்கள் மண்ணைப்பறித்து விண்ணை மறைக்கவுஞ் சரவேகத்திலுஞ் சர்ப்பவேகத்திலு மிஞ்சிப் போகும் ரதவேகமுடையவர்களாய்ச் சென்று விடுத்த மேலாகிய கணைகளுடன் கணை மின்னிப் பின்னிக்கொண்டு இவர்களுக்கெதிரிலே தானே வீழ்ந்தழியவும், கார்முகமாகிய வில்லைக் கரகரவென்று வளைத்து, பல்லை நெடநெடவென்று கடித்து, இடசாரி வலசாரியாய்ச் சாகசஞ்செய்து சண்டை யிட்டார்கள். இவ்வாறு அவ்விரண்டு ராஜகுமாரர்களும், அண்டிய அரசர் மண்டைகள் கிழிபட, எண்டிசை யதிபரும் தின்றதிசயமுற, மண்டலம் விண்டல மொன்றி வெம்பொடியெழக் கண்டவர் கண்கள் கலங்கி பொறிவிழப் போர் விளைத்தகாலையில், கருப்புச் சிலைபிடித்த மன்மதனுக் கொப்பாகிய இலக்கண குமாரனும், சிலைவீரத் திறம் பெற்ற அர்ச்சுனன் மகிழும்படியாகிய அபிமன்னனும் நெடுநேரம் வரையிலும் பூசல் விளைத்து, ஒருவரையொருவர் வெல்லவேண்டுமென்னும் ஆசை மிகுத்து, இலங்கணகுமாரன் கைக்கொண்ட வின்னாணியைப் படுக்கென் றறுத்து, மீண்டும் வேறு நாணிபூட்டு முன்னே மளுக்கென்று வில்லையும் ஒடித்தான் அபிமன்னன்.

இப்படிக்கு அபிமன்னன் மேன்மையாகிய பாணங்களை விட்டபோது, அந்த இலக்கணகுமாரன் மறுவில்லெடுத்து நாணிபூட்ட நாட்டங் கொள்ளுவதற்கு முன்னே, சகல பகையும் வெல்ல வல்லவனென்றுஞ் சகல கலையுஞ் சொல்ல நல்லவனென்று பேர் கொண்ட தந்தையாகிய தனஞ்செயனைப் போலத் தனது தேரைச் சமீபத்திலொருக்கி, ஜலத்தி லசைந்து தத்தளிக்குங் கப்பலி லகப்பட்ட இளஞ் சிங்கக்குட்டிபோன்ற தீரனை, துரியோதனனுதியர் நூற்றுவர்க்குரிய இலக்கண குமாரனை, மலர்பகழி தாங்கிய மாரனை, வாளாயுத மோங்கிய வீரனை, மகா திடங்கொண்ட சூரனை, திரிதராஷ்டிர மகாராஜன் பேரனை, தனதொரு கரத்தால் மார்போடு அணைத்து, உயிருடன் பிடித்தான் பாண்டவர்க்குத் திருமகனாகியும், பரந்தாமனென்னும் என்னுண்டவர்க்கு மருமகனாகியும் விளங்கிய அபிமன்னன். மேலும், மலர்க்கணையினால் வெல்ல வல்லபங்கொண்டு எதிர்சென்ற மன்மதனை நெற்றிக்கண்ணா லெரித்தருளிய சிவபெருமானைச் சிந்தையுளிருத்துந் திறங்கொண்ட சிவனடியார்க் கடிமையாகிய ஜெயவிஜயனுக்குச் சிறுவனானவன். இலக்கணகுமாரனுடைய நீண்ட தலைமயிரை கையில் சுற்றிக்கொண்டு, பொன்மயமாகிய தன் தேரை செலுத்திப் போகும்போது, சிந்து தேசாதிபதியாகிய ஜெயித்திரதன், தனது தேரை விரைவாகச் செலுத்திவந்து விருது பூட்டிய வில்லை வளைத்து, இறகு கட்டிய வாளிகள் விடுத்து, யானையைக் கைக்கொண்டு ஆண்மிக்கையுடன் செல்லும் ஆண் சிங்கத்தை ஒரு சிலம்பிப்பூச்சி நூல் வலையில் மடக்குமாப் போல் அபிமன்னுவைத் தடுத்து வளைத்த காலத்தில், அவ்வபிமன்னன் அயன்கணை-

அரிக்கணை - அரன்கணை முதலிய அனற்கணைகளை விடுத்து, அவனுடைய தோளும் தாளும் மார்பும் துளைப்படுத்தியபோது, உளைப்பெடுத்தோடி களைப்புடன் வீழ்ந்தான் சிந்துதேசாதிபனானவன். அந்த வேளையில், புயவலிமை கொண்ட கர்னன் முதலாகிய போர்வீரர்கள், முழுமைக்குந் திரண்டுவந்து அபிமன்னு வென்னும் ஒருவனைத் தகைந்து அண்டமுகடதிரும்படி அமர் புரிந்தார்கள். அப்படி அமர் புரிய வந்தவர்கள் யாவரும், உடனே நொந்து வெந்து சிந்தை வருந்தித் தாங்கள் விட்ட பல கணைகளுங் கெட்டு, தங்கள் தங்கள் நெற்றியில் சிந்தூரத் திலகமும் உண்டென்று சொல்லும்படிக்கு இரத்தப் பொட்டிட்டு, அவரவரும் நெட்டாகிய கட்டுகள் விட்டுப் பட்டுக்கெட்டொழியும்படியாய், அட்டமா சித்திகளும் வல்ல வீராதி வீரனாகிய விஜயன் குமாரனென்னும் அபிமன்னனானவன், அவர்கள்மேலளவற்ற பட்டயக் கணைகளைப் பாய விடுத்து, அவரவர்கள் நெற்றிக்ளில் ரத்தங்கள் பாயும்படியாய்ச் செய்ததுமல்லாமல், வேறுவேறு பாணத்தாலடித்துப் புறமுதுகிட்டோடும்படியாய்ப் பாடுபடுத்தினான்.

இவ்விதமாகத் தன்னை எதிர்த்துத் தடுத்த தேராளிகளையெல்லாம், அபிமன்னன் தனக்கொருவர் சகாயமில்லாமல் தானேறியிருக்கும் ஒரு தேரில் வென்று தரனிசனுடைய குமாரனைக் கைக்கொண்டுபோய் விட்டான். அத்தாஷ்டிகத்தைக்கண்ட சிலர் நாபியிலு நாவில் நீர்வறண்டு வாட, சிலர் பின்முன்னுங் கூவிக்கொண்டோட, சொந்தத்துள்ள சேனைகள் ஜெயம் ஜெயமென்றுபாட, துரியோதனன் சேனைகளபஜெயமென்றுவீட, அந்தச் சமயத்தில் வல்லியம்போன்ற சல்லியனானவன் ஆக்ரமித்து, அடடா!! குடி முழுகிப் போச்சுதென்று ஓடிவந்து அபிமன்னனையுந் தன் வில்லையும் வளைத்துப் பாண வருஷங்களைப் பொழிந்தான். இப்படியாகச் சிங்கவிரிந்து, புகைமலிந்து, அனலெழுந்து பொறியிறைக்குந் தீயைப்போலெரிந்து சீறி மலைந்துவரும் மித்திரார்ஜுனை விஜயன் புத்திரன் கண்டு, வாரும் வாரும் என் தாத்தாவே என்று தலையசைத்து, (வாய் வாழைப்பழம் கை கருணைக்கிழங்கு) என்னும் பழமொழிப்படிக்கும், (தேனொழுகப்பேசித் தெருக்கடக்க விட்டான்) என்னு மூதுரையின் படிக்கும் இனியவான வார்த்தைகள் பேசி, இந்திரக்கணை யிரண்டு, சந்திரக்கணை யிரண்டு, எமக்கணை யிரண்டு, சேமக்கணை யிரண்டு, ஆகக் கணைகள் எட்டையும் எடுத்துச் சல்லியன்மீதிற் றூக்கினான்: அப்போது தோளிரண்டிலிரண்டுபாணந் துளைக்க, மார்பிலூன்றி இரண்டுபாணம் வருத்த, முகத்தின்மீது நாலுபாண மொய்க்க அதனாற் சல்லியன் களைத்தபோது; மீண்டுந் தேரின்பேரிற் சிலவேலுந் தாக்கினான். அபிமன்னுவானவன் அம்மாத்திரத்திற் சல்லியன் தேருமழிந்து சாரதியு மொழிந்து, உயர்ந்த மலைக்குகையை விட்டிழிந்து வரும் யாளிபோல் ரதத்தை விட்டிழிந்து, தரையில் வீழுந்து ஏழு இருப்புக் கட்டுகளையுடைய கதையைக் கையிலெடுத்துக் கொண்டு, இந்திரக்கொலுவிலேறி வாழ்ந்த கோமானுடைய குமாராகிய அபிமன்னன்பேரிற் பாய்ந்து வந்தான்.

### அபிமன்னன் தன் போர் நடுவிற் புகுந்த வீமசேனனைச் சினந்து கொள்ளுதல்

அப்படிவருவதைப் படைமுகத்தில் தேர் நிறைகளை எல்லாம் பொடியாக்கித் துவைத்துக் கொண்டு வரும் வீமசேனன் பார்த்து உடல்பதறி, ஐயோ! அறியாத பிள்ளையின்பேரிற் சல்லியன் கதைகொண்டு தாவுகின்றானே: என்று காற்றினினுங் கடிய வேகமாய்ப் பாய்ந்து சல்லியனுடைய எலும்பும் நயமும் நவமணிபதித்த மகுடமும் நெரிந்து நொறுங்கிச் சாயும்படியாய்த் தன் கதையினால் வீசித்தாக்கினான். அந்த அடிபட்ட மாத்திரத்திற் சாவுக்குச் சரியான மூர்ச்சையடைந்து, பூமியில் விழுந்தான் சல்லியராஜன். அப்படி விழும்படியாக அடித்த தன் பெரிய தகப்பனாகிய வீமனைப் பார்த்து முகம் வியர்த்து அடங்கா விசனமும் ஆறாத் துன்பமுங் கொண்டு, ஐயா மகாராஜனே! சல்லியனும் நானும் யுத்தஞ் செய்யும்போது நீர் குறுக்கே வந்து விழுந்து கதையினாலடித்துத் தள்ளி விட்டீரே; இது தர்மந்தானா? ஒருவனும் ஒருவனும் போர்புரியும்போது இன்னொருவன் வந்து யுத்தம் பண்ணலாமா? ஒருவன் பேரில் இரண்டுபேர் கணைதொடுத்தெய்யலாமா? நல்லது அப்படி செய்தீரே; ஐயா! நானென்ன கையிலாகாதவனா? அவனால் நானிளைத்தபோது நீர் வந்து எனக்கு உதவி செய்தீரென்று பேரா? அல்லவென்று எனக்கு ஏதாகிலும்ஒரு பெருமையை உண்டாக்க வேணுமென்று நினைத்தீர்? அல்லது நானிறந்து போவனென்று கருதியோ? அப்படி இறந்தால்தான் என்ன வீரசொர்க்கம்

கிடைக்கு மல்லவா? அத்தனே! இப்போது நீர் செய்தவேலையில் என்னைப்போலொத்தவர்களும் நகைக்க, எனக்குக் கிடைக்கும் வீரசுவர்க்கமும் பகைக்க, என்னுண்மையுங் குன்ற அடியேனுக்கு அவமானந் தேடி வைத்தீரே என்னையனே யென்று கண்ணும், மனமும், மார்பும், கையும், முகமுஞ் சிவந்து உடல் கருகருத்து, இரதத்தின் பேரில் அயர்ந்து சாய்ந்தான் அபிமன்னனனவன்.

இப்படியாக அந்தப்பிள்ளை கூறியவார்த்தையைக் கேட்டு வீமசேனன் விசனமேற்கொண்டு, ஐயோ! புத்ரவார்ச் சல்லியத்தாற் போய்ப் புகுந்தேனே யன்றி வேறொன்றும் நினைக்க வில்லையே: செவ்வேளைப் போன்ற குமாரன் சிந்தை வருந்தி நொந்தானே? நாமென்ன காரியஞ் செய்தோமென்று இரு கண்ணு மிருண்டு இருந்தயிடம் விட்டுப் பெயராம லிருந்தான். அந்தச் சமயத்தில், அபிமன்னுவினுடைய கரத்திற் சுற்றிப் பிடித்திருந்த தன் தலைமயிரின் தளர்வும், அவனுடைய மனத்தளர்வுங் கண்டு, இது நல்ல சமயமென்று இலக்கணகுமாரன் இழிந்து இரைந்தோடிச் சென்று, தன்னிமித்தமாய்த் தரையிற் சாய்ந்து கிடக்குஞ் சல்லியனைத் தூக்கி பின் வந்துக்கொண் டிருந்த தன் தேரின்மேலிற்போட்டுத் தானுமேறிக்கொண்டு திருப்பினான். அப்போது கிரீடாதிபதியாகிய கிருதபன்மனனவன், அரசனுடைய குமாரனை உபசாரமாய் அநேகங் காவலுடன் அழைத்துக்கொண்டுபோய், நமன் கொண்ட உயிரும், நல்லபாம்பின் விடமுந் திரும்புந் தன்மை போற் றிரும்பினான். தேவரீருடைய செல்வனென்று துரியோதனராஜனிடத்திற்சொல்லி, அவன் சமூகத்திற் பிள்ளையை விட்டான். அந்தப் பிள்ளையைக் கண்ட துரியோதனன் வெள்ளமாகக் கண்ணீர் விடுத்து, வள்ளலே! இன்று உன்னை நான் உயிருடன் கொள்ளை கொடுக்கும்படியாய் நேரிட்டதல்லவா? அநேகம்பேரைக் கட்டிவிடத்தக்க அதிபதியாகிய நீ, ஒரு அறியாதவன் கையில் அகப்பட்டனையே? ஓ என்னப்பனே! என்று விசனப்பட்டு, அப்பவும் போர்செய்து அவனைப் பிடிப்போமென்று தானே முனையும்போது, போர் புரியும் இடங்கள்தோறும் புண்யசீலனுகிய தர்மராஜனுடைய சேனைகளிற் பேர்பெற்ற அரசர் முதலிய படைகள் வெற்றிபெற்று ஜெயம் பேசி வீரப்பாடலைப் பாடி யாடிக்கொண்டு மதோன் மத்தராய்த் திரியும் வேடிக்கையைப் பார்த்து, இன்று நாம் வெற்றிபெறத் தக்கதில்லையென்று மனத்துட்கொண்டு, அரவக் கொடிக் கதிபராகிய அரசன் படைவீரர் சேனைகளும் தானுந் திரும்பிப் பாசறைப் போய்ச் சேர்ந்தான்.

இப்பால் அபிமன்னுவுக்குஞ் சல்லியனுக்கும் யுத்தம் நடக்கும்போது, மேல் விழுந்து வந்த வீமசேனன் அசுவத்தாமாவுடனே யுத்தஞ்செய்து, தானேறிய ரதமுங் கைப்பிடித்த வில்லும்போய்க் கதையைக் கையிலெடுத்து, அசுவத்தாமனுடைய தேர் - குதிரை - சாரதி முதலியவைகளை யழித்து, புறமுதுகிட்டோடக் கண்டு படைஞர்போரிற் புகுந்து, பிரசண்ட மாருதம்போற் றுக்கிக்கொண்டு வெருவதினுற், பலம்பொருந்திய துரியோதனன் படையிலிருக்குந் தேவர்களெல்லாம் படபட மடமட வென்று சிதைந்து பொடியாகிச் சின்னபின்னமாக, அப்பான்மையைச் சூரியன் பார்த்து மன நடுக்கங்கொண்டு; ஐயோ! முன்னமே நமக்கிருப்பது ஒரே சக்கரத்தையுடைய தேர். அதிற் சப்தமாவென்னும் புரவிகளைப் பூட்டிக் காலம் கழித்து வருகிறோம். ஏதோ கோபம் பாவமென்னுந் தன்மையின்பேரில் ரதங்களை யழித்துவரும் வீமசேனராஜன் நம்மையும் வெகுண்டு மேற்கொண்டு, இவனுரடாமேலாக ரதத்தைச் செலுத்தி யோடுகிறவனென்று கதையினுல் மாட்டினுலும் மாட்டுவானே. அப்பா! அப்போது நாம் என்ன செய்யப் போமும். (முனைமுகத்து நில்லேல்) என்று நீதிவாக்கிய மிருப்பதினுல் நாம் நீங்கிப்போவது உத்தமமென்று, தான் போன வழியை யாவருங் கண்டுணர்ந்து கொள்ளாதிருக்கும் படியாய் இருளென்னுந் திரையில் உலகத்தை மறைக்க விடுத்து, மேற்குச் சமுத்திரத்திற் குதித்து மூழ்கினுன். இப்பால், எதிர்த்து வந்த அரசர்களெல்லாரும் புறந்தந்தோடச் செயித்த பூரித்த புஜத்தோடுங் கூடிய அபிமன்னுவானவன், பொங்கித் தணிந்த கடல் போல் தனக்குத்தானே கோபமாறி, தன் கரத்திற் பிடித்திருந்த லக்கணகுமாரனைக் காணமல், அடடா! தப்பித்துக்கொண்டு போய்விட்டானல்லவா உத்தம க்ஷத்திரிய குலத்திற் பிறந்த அரசன் பிள்ளையென்று அலட்சயமாக நினைத்து, வெற்றிபெற்றுவரும் வீரப்ரதாபர்களுடன் முழுவாகக் கூடிக்கொண்டு, பெருமை கொண்ட சேனைத்தலைவர் - படைத்தலைவர் -

பாண்டவர்கள்-திருத்துழாய் புனைந்த கிருஷ்ணமூர்த்தி மற்றுமுள்ள அரசர்கள் அநேகரும் பொருந்திய இடத்தை அணுகிப் பாடிவீடு போய்ச் சேர்ந்தான். இப்படியாக வந்த அபிமன்னனுடைய வெற்றிபெற்ற யுத்தத்திற முதலிய யாவற்றையுங் கேட்ட, இணையில்லாத் துணிவினையுடைய பாண்டவர்கள் மனம் மகிழ்ந்து, மங்களகரமாய் அறுசுவையோடுங் கூடிய உணவுகளையும், பானங்களையும் அன்பினரோடுண்டு, சந்தனபுஷ்பாதிகளை தரித்து, ஒவ்வொருவரும் அபிமன்னனை யணைத்து முத்தமிட்டு, மகா இன்பத்துடன் நித்திரை செய்தார்கள்.

### தருமராஜனைப் பிடிக்க எண்ணிய துரியோதனனுக்குத் திரிகர்த்தரும், சஞ்சத்தகரும் சபதங்கூறித் தேற்றுதல்

இவ்விடத்தில் இப்படியிருக்க, அவ்விடத்தில் துரியோதன மகாராஜன் பாதிராத்திரி வரைக்கும் நித்திரையில்லாமல் வருந்திக்கொண் டிருந்ததைக் கேட்ட உயிர்த்துணைவராகிய கர்ணன் முதலிய பேரும், நீதிமான்களாகிய தேசராஜர்கள் பலரும், அவனுடைய தம்பிமார்களும், சேனுபதியாகிய துரோணாச்சாரியரும் சபையாகக்கூடியிருந்து அரசனைத் தேற்றியபோது, ஐயா! தனுர்வேதியராகிய துரோணாச்சாரியரே! தர்மராசனைப் பிடித்துத் தாருமென்று நான் வரங்கேட்டிருக்க, இன்றைய தினத்தில் என் பிள்ளையாகிய இலக்கண குமாரன் அபிமன்னனிடத்தில் அகப்பட்டு வருந்தி வந்தானே; நாமொன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைத்ததே நானென்ன செய்வேனென்று இரக்கமுற்று நொந்து, மறுபடியுந்தேறி, ஆசாரியனைப் பார்த்துக் கண்ணீர் சொரிந்து, ஐயோ! என் கண்ணிருக்கும்போதே என் பிள்ளை கட்டுப்படும்படியாயிருந்ததே; ஓ காலமே! ஓ அவகாலமே! என் குருவாகிய தெய்வமே! தனுர்வேதத்தின் கேள்விக்கும், சதுர்வேதங்களிற் செய்யும் வேள்விக்கும் சொந்தமாகப் பிறந்திருக்கும் எந்தையே! எண்ணிய கருமம் நிறைவேற்றுவதற்கு வில்லைத் தாங்கிய தேவரீரைவிட வேறாகிய வல்லவன் ஒருவரும் இல்லையே. ஆகையால், நான் கேட்டுக்கொண்ட வரத்தின் பிரகாரமும், என் பிள்ளையைப் பிடித்துக் கட்டிய ஈடுக்கீடாகவும், நாளை யுத்தத்தில் எவ்விதத்திலாகிலும் மறுநீதிக் கொப்பாகிய தர்மராஜனைப் பிடித்துக் கொடுத்தா லொழிய, என் மனதில் விளைந்த மானமென்னும் வயிரம் நீங்காதென்று துரியோதனன் வேண்டிக்கொண்டான். இந்த வசனங்களை யெல்லாங் கேட்ட துரோணாச்சாரியர், அப்பா துரியோதனராஜனே! தர்மராஜனைப்பெற்ற யமதர்மராசனைப்போல் ஏழுபங்கு வலிமைகொண்ட வீமசேனன் பின் காவலாக நிற்க, விஜயம்பெற்ற புஜவழுகுற்ற அர்ச்சுனன் முன் காவலாக நிற்க, இதன் மத்தியில் ஒருவர் உதவியில்லாமற் சுதாவாக விருக்கின்ற அம்முரசக் கொடியோன் போர்முகத்தில் நேர் புகுந்து வில்லெடுப்பானுகில், உடனே கானரக் கருக்கிப் பாரைத்துளைத்து வேரைக் களையத்தக்க வலுவேறிய சிலைவீரனை நிலைமாறிடமலைவேனென்று வாக்கினுல் வதறுஞ் சில யீனர்களைப்போல் நானும் பிதற்றி, அவனுக்கெதிரில் வில்லை வளைத்துப் போர்கொடுத்து என் கையிற் பிடித் துன்கையிற் கொடுக்க என்னுல் இந்தப் பிறப்பில் முடியாது. இன்னொரு பிறப்பிலாவது நடக்குமோ? நடவாதோ அது யெனக்குத் தெரியாது.

அதேதெனனில், பவளம்போன்ற திருவாயில் வைத்து ஊதும் பாஞ்சசன்னியக் கரமும், அழகிய சக்கரமும், அஷ்டாக்ஷரமுமுடைய ஸ்ரீ கிருஷ்ணனுனவன் ரதசாரதியாயிருக்க், கொள்ளிவாய்ப் பாணங்களையுடைய வில்விஜயனும், வீமசேனனும் அச்சத்தியவானுகிய தருமராஜனை முன்னும் பின்னுமாய்க் காத்துக்கொண்டு, எவர்களையுங் கிட்ட நெருங்க வொட்டாம விருக்கின்றமையால், என்னு லாகாதென் றுரைத்தேன். அந்த அர்ச்சுனனையும், வீமசேனனையும், ஒரு இமைப்போது மாத்திரந் தர்மராஜனை விட்டுப் பிரியும்படியாய்ச் செய்து, நெடுந்தூரங்கொண்டு போய் மடக்குஞ் சேவகர் நமது படையிற் சிலரிருப்பாராகில், இன்றைக்காகிலுங் நாளைக்காகிலுங் கைப்பிடியாகப் பிடித்துத் தரவல்லேன். அந்த அர்ச்சுனராஜனும், வீமராஜனுந் தருமராஜனை விட்டுப் பிரியாதிருக்கும் வரைக்கும் அவனைப் பிடித்துத் தரலாமென்பது அசாத்தியமே யல்லது, சாத்தியமல்லவென்று துரோணாச்சாரியார் சொல்ல, அந்த வார்த்தையைக் கேட்ட திரிகர்த்த தேசாதிபரும், சஞ்சத்தகர் முதலாகிய சிலராஜர்களும், கடையுகத்தி லெரிந்தெழுங் கனல்போ லெழுந்து, நான் முந்தியென் நான் முந்தியென்னொருவருக் கொருவர் விந்தை வார்த்தையுரைத்து, ஓ துரியோதன மகாராசனே!

உமது சிந்தை வருத்தம் நீங்க இவ்வுலகமெல்லாம் புகழும்படியாகிய வாயுபுத்திரனையும், ஒப்பற்ற விஜயனையும், மக நட்சத்திரத்திற் சனி பிரவேசிப்பதுபோற் பிரவேசித்து வளைத்துக்கொண்டு, தர்மராசனுக்கு உதவியாக வொட்டாமல் சாடிவிடுகிறோம். பாரும் எங்களுடைய சாமர்த்தியத்தை என்று சபதங் கூறிப் பின்னுஞ் சொல்லுகிறார்கள். ஐயா! அருளே வடிவாகிய முரசக்கொடிபெற்ற தருமராசனை அநுமக்கொடி நாட்டிய தேராளியான தனஞ்செயனும், வீமனும் அணுகாமல் ஒரு நாள் முழுது மடக்கிப் போர் புரிகிறோம். அப்படி செய்யாமற் போவோமாகிற், பேராசை யென்னு மயக்கமேறிப் பெண்ணாசை மண்ணாசை பொன்னாசைகளைக் கொண்டு குடிபடைகள் வருந்தவும், மநுவிக்ஞானங் குன்றவும், வழக்கழிவு பேசிக் கொடுங்கோல் செலுத்தும் அரசர்கள் எவ்வித நரகத்திற் புகுவார்களோ? அந்தத் துற்கதியில் நாங்களும் போகக் கடவோம்.

இன்னமும் வீரத்திற் சிறந்த தோள் வலிமையுடைய மலைபோன்ற வீமசேனனையும் அர்ச்சுனனையுந் தருமராஜனுக்குத் துணையாக வொட்டாமற் றடுக்கிறோம். அப்படி தடுக்காமல் விடுப்போமாகில், உரியகுலத்திற் பிறந்த பெண்ணைக் குலதர்மப் பிரகாரம் அக்கினி சாக்ஷியாய், வேதம் சாக்ஷியாய், வேதியர் சாக்ஷியாய், சாலிலுங் கரத்திலு நிறைந்த கங்காதேவி சாக்ஷியாய், கிராமப் புரோகிதன் முதலாகிய தொழிலாளிகள் சாக்ஷியாய், பந்துஜனங்கள் சாக்ஷியாய், ஆகாயவாணி பூமிதேவி சாக்ஷியாய், பச்சைப் பந்தலில் தானியத்தின்பேரி லிருந்து கொண்டு, இந்தப் பெண்ணைக் கைவிடாமற் காக்கிறேனென்று தாராதத்தம் வாங்கி, (மாங்கல்யந்தந்துநாநேந மமஜீவனஹேதுநா) என்று திருமாங்கல்யதாரணஞ் செய்துக்கொண்டு பின்பு, தன் பெண்சாதியானவள் தனியே படுக்கையிலிருந்து திடுக்கெனவெழுந்து, வெடுக்கென அரவு கடுக்கென் கடித்த பயம்போல் ஏங்கி, அழுது இரங்கி வயிறெரிந்திருக்க, தான் அன்னிய ஸ்திரீயுடன் படுத்து, அவளையே கவனம்பண்ணி அலைந்து திரியும் பெரும் பாவிகளுக்கு அமைத்திருக்குங் கொடிய நரகத்தில் நாங்களும் அமிழக்கடவோம். இதன்றியும், அந்த வீமார்ச்சுனனைத் தர்மராசனை விட்டு விலக்காமற் போவோமாகில், விதவைகள் முதலிய ஸ்திரீகள் மோகத்தினாற் றாய் தந்தையரை விடுத்துப் பிரஷ்டத்துவ மடைந்து, பொய் பேசி, தன் சகோதரர் முதலாகிய பந்துக்களையுந் துன்பப்படுத்துங் கொடிய துஷ்டர்கள் அநுபவிக்கும் யம தண்டனையை நாங்களும் அநுபவிக்கக் கடவோம். மேலும், நம்பினவர்க ளொப்பும்படியாய்த் தப்பு வார்த்தையைச் சொல்லி நெடுநாள் வரைக்கும் அவர்களை யலக்கழித்து, முடிவில் ஒரு காசு முதலா உலுத்துப் பசாசுகளும், தர்ம சரித்திர முதலியவைகளைக் கேட்டிருந்துங் கடவுள் சந்நிதானத்திற் றபமுஞ் செபமும் செய்துக்கொண்டு சந்தடியாயிருக்கும் ஜனசமூகத்திற் சாராய், கள், அபின், கஞ்சாமுதலிய வஸ்துக்களை உட்கொண்டு மயக்கமேறித் திரிகின்ற தறிதலைப் பேய்களும், வெகுபேர் நிந்திக்கும்படியாய் மாடுமுதலிய விலங்குகளைப் பந்தயம் விட்டு, கவுண்கள் யெறிதல் முதலாகிய கலகங்களைவிளைத்து, செல்வமுஞ் சீருங்கெட்டு புண்பட்டு கண்கெட்டு கலங்கிய கடையரும் வீழா நின்ற நரகத்தில் நாங்களும் மூழ்கக்கடவோம். மேலும், பசுவின்கன்றால் விளாங்கனி எறிந்த பார்த்தசாரதி விடுக்குந் தேரிலடுத்த பார்த்தனையும், ஆஜானுபாகுவாகிய வீமசேனனையும், தருமனந்தனனிடத்தி னின்றும் பிரிந்து சண்டையிட்டு மறிக்காமற் போவோமாகில், ஆபத்துக்காலத்தில் தைரியஞ்சொல்லி ஆதரித்த பேர்களையும், ஆபத்தில்விடுக்கத் துணியும்அல்பருக்கு விதித்திருக்கும் அழுநரகமே நாங்களும் பெறக்கடவோமென்று இவ்விதமாகச் சொல்லிய இறைவர்களுக்குத் தீயமனத்தினராகிய துரியோதனன் சன்மானமுதலிய உபசாரச் சிறப்புகளைச்செய்து, எவ்விதத்திலாகிலும் எனக்கு வெற்றியைக் கொடுக்கவேண்டுமென்று பிரிய வசனங்களைச்சொல்லி விடைகொடுத்தனுப்பினான். அப்படியே நல்லதென்றுந் தனுர்வேதியராகிய துரோணாச்சாரியின் வீரகண்டாமணி பூட்டியபாதத்தில் வணங்கி விடைபெற்றுக் கொண்டு, வீராவேசத்துடன் பொழுது எப்போது விடியுமென்று பொங்கி புகைந்து சென்றார்கள். இந்தப் பிரகாரம் இவர்களுக்கு செலவு கொடுத்துவிட்ட மானத்திலும், வல்லபத்திலும், மனோதிடத்திலும், வாழ்விலும், வைராக்கியத்திலும், உலகத்தில் ஒருவருமொவ்வாத வணங்காமுடி பொறுத்த துரியோதனராஜன், தேவபோக சம்பிரம ராஜசின்னங்களுடன் மகா சந்தோஷத்தோடு தனது பாசறைபோய்ச் சேர்ந்தான் என்று

வைசம்பாயனர் சொல்ல, ஜெனமேஜெயரா ஜன் பணிந்தெழுந்து சுவாமி! இப்பதினென் ருட்போரினும் பன்னிரண்டாம்போர் விசே ஷித்திருக்குமல்லவா? அதனைத் திருவாய் மலர்ந்தருள வேண்டுமென வைசம்பாயன முனிவர் மனமகிழ்ந்து, தமது பரமகுருவா கிய வியாசபகவானைத் தியானித்துச் சொல்லத் தொடங்கினர்.

பதினோராம்போர்ச் சருக்கம் முற்றிற்று.

---

இப்பால்,

## பன்னிரண்டாம்போர்ச் சருக்கம்

---

### கண்ணன் துதி

பூத்தநாபியந் தாமரைப் பூவில்வந்து பல் பூதமுஞ், சேர்த்தநான்முகப் புனிதனு முனிவர்யாவருந் தேவரு, மேத்தநாலுவே தங்களுந் தேடநின்றதா ளெம்பிரான், பார்த் தன்மாமணித் தேர்விடும் பாகனுனெனதெப் பான்மையே.

ஓ புவிமன்னர் புகழப் புரக்குந்தீரேரின! அபிமன்னன் மகிழ வணக்கும் பேரனே! கேளும், பதினோராம் நாளிரவிற் சேனுபதியா கிய சிலைக்குருவினுடன் தருமராஜனைப்பிடிக்க வேண்டுமென்று துரியோதன மகாராஜன் சொல்லியதும், அதற்குத் துரோணுச்சாரி யார் வீமார்ச்சுனரைத் தருமராஜனிடத்தி னின்றும் பிரிப்போருண்டாகில் ஒருகை பார்ப்போமென்று சொன்னதும், அப்படியே அவ்வீமார்ச்சுனரை மடக்குகிறோமென்று சிலவீரர்கள் ஏர்ப்பட்டுச் சபதங்கள் கூறித் துரியோதனனிடத்தில் தாம்பூலம் வாங்கி வெகுமதி பெற்றதும், இதுகளையெல்லாம் அறிந்த சூரியபகவான் மெத்தவும் விசனப் பட்டுத் தன்னொளி மழுங்கி முகமுதலிய உட லுங் கறுத்து, சத்தியவிரத லோகோபகாரி யென்னும் அருட்குடிகொண்ட முரசக்கொடி யோன், துரோணர் கையில் ஒருவேளை அகப் படுவானென்று மனந்தாளாமல் மேற்குதிசை யிற் போனவன் அவ்விடத்திலுந் தரியாமற் கிழக்குத்திசையில் ஓட்டமு நடையுமா யோடி வந்து பாண்டவப்படையிற்புகுந்து நித்திரை செய்யாநின்ற நிருபர்களையெல்லாங் கிரணக் கரங்களாலெழுப்பி, வெப்பமான வார்த் தையைச் சுடச்சுடக் காதிற்போட்டு வந்தவ னைப்போற் காய்ந்து ஆறு குளம் ஏரிகளிலிருக் குஞ் சங்கு முழக்கங்களால் இருபாலையத்தா ரும் நித்திரைமயக்கம் நீங்கி எழுந்திருக்கவும், கருக்குருமான் முதலிய பட்சிகளெல்லாங் கத றிக்கதறிச் சப்திக்கவும், சாவற் கோழிகளெல் லாம் வயிற்றிலடித்துக்கொண்டு கூவவும், வண் டினங்களெல்லா மிரையவும், தாமரைகளெல் லாங் கையைவிரித்து என்னசெய்வோம் தரும ராஜனுக்கும் அபாயம் வருமோவென்று கண் ணீர் சோரவும், குமுதமுதலிய மலர்களெல்லாங் கொடும் பாவியாகிய துரியோதனனுடைய நினைப்பை யறிந்து, இனி குடிகெடுமென்று முகஞ் சோம்பி வாடவும், கிளைகளசைந்து இலைகளுதிருந் தன்மைகளின் சோலையிலுதய மாயினன். உடனே இருதிறச் சேனைகளுஞ் சேனைத்தலைவர்களு மெழுந்து காலைக்கடனை முடித்துக்கொண்டவர்களா யிருக்க, நேற்றிர வில் துரோணுச்சாரியார் முதலிய அரசர்க ளுடன் துரியோதன மகாராஜன் ஆலோசித்த சங்கதிகள் யாவுந் தூதர்களால் தருமராஜன் தெரிந்துகொண்டு அரவணை துறந்துவந் தவ தரித்திருக்கும் ஆபத்பாந்தவனையும், அர்ச்சுன ராஜனையும் பார்த்து, ஓ வண்டுகள் மொய்க்கு மதுமாலை தரித்து விளங்குந் தோளினையுடை ய துணைவர்களே! இத்தினம் என்னை எந்த விதத்திலேனும் பாதுகாத்துக் கொள்ளுங்க ளென்று பின்னுஞ் சொல்லவேண்டுவன வற் றையெல்லாஞ்சொல்லி வாழ்த்த, நல்லதென்று கறுத்த களாப்பழ வண்ணனுகிய கண்ணன் சொல்ல, மற்ற சேனைத்தலைவனும் சேனைகளும் வீரகண்டை தரித்த வேந்தர்களுடன் போர்க் களம்புகுந்து சத்துருக்கள் புறமிடும்படியாய்க் களிகொண்டு வராநின்ற நால்வகைச் சேனை யைக்கொண்டுபோய் மண்டலவியூகமாகவகுத்து, வீமசேனனைப் பின்னணியில் நிறுத்தி, பற்பல மன்னரையும் பேரணியாக வமைத்து, இரு பக்கத்திலும் நகுல சகாதேவரை ஏற்படுத்தி, மின்னொளி செய்யும் நெடுவாளியுடைய விஜ யனையும் அபிமன்னுவையும் முனைமுகத்தி லமைத்து, முதன்மையாகிய தருமராஜனை நடுவிலிருத்தி, கொடி குடை முதலிய சின்னங் கள் நெருங்கிக் காள முதலிய வாத்தியங்களு முழங்கும்படியாய் மமதையடைந்து, தரும ராஜனைப் பிடித்துக்கொண்டு போகத்தக்கபேர் தேவர்களானுலுஞ் சரி; அத்தேவர்கட் கெல் லாந் தலைமையாகிய பிரமன், திருமால், உருத் திரன் என்று சொல்லும்படியான மூவர்களாகி லுஞ் சரி; மற்றெவர்களாகிலுஞ் சரி; வரத்

த்க்கபேர் வரட்டுமென்று வலிமை பேசிக் கொண் டிருந்தார்கள்.

திரிகர்த்தாள் சஞ்சத்தகாள் முதலாயினோர் அர்ச்சுனனை வளைத்துக்கொள்ளுதல்

இவர்கள் இப்படியிருக்க, நேற்றிரவிற் சொல்லிய சபதந்தப்பாமல், திரிகர்த்த ராஜ குலத் தலைவரும், சஞ்சத்தகரும், துரோணாச் சாரியர் முதலிய சேனைகளும், வீரவிருது சின் னங்களுடன் வந்து மகரயூகம் வகுத்தார்கள். அப்பாற் சகல மேளங்களுமுழங்க இருபுறச் சேனையுமிரைந்து மனமகிழ்ந்திருக்குங் காலை யில், மேகக் கூட்டம்போன்ற யானைக் கூட்ட மும், மலைநெருக்கம்போன்றதேர்நெருக்கமும், வாயுவேகம்போன்ற குதிரைவேகமும், இவை கட்கு மன்னுயிர்போன்ற திரிகர்த்த தேசாதி பரும், சஞ்சத்தகாளும், நாரணகோபாலரும், அர்ச்சுனராஜனுக் கெதிராகவந்து, ஓ அர்ச் சுனராஜனே! எங்களை வெல்லுவதற்கு உனக்கு வல்லபமும், புருஷத்தனமும் உண்டாயிருக்கு மாகிற் புளப்படலாமென்று அறைகூவி யழை த்து, திறமாகிய வில்லில் அக்கினி நிறமாகிய பாணங்களைத் தொடுத்து அதிர்த்து ஆர்த்து வருவ தானார்கள். அவர்களுடைய தலை தெரியா நிலையை அர்ச்சுனன் கண்டு சாத்தகி முதலாகிய பிள்ளைகளை நோக்கி, தர்மராஜனை இமைப்பொழுது காத்துக்கொண் டிருங்கள் இதோ வந்தேனென்று காவலர்களுக்கு கட் டுரை வகுத்து, தர்மராஜனைப் பணிந்து உத் தரம்பெற்றுக்கொண்டு சங்கத்தொனி செய்து, விஜயகாண்டீபன் வில்நாணி யிறுக்கிப் பற் கடித்துறுக்கி அவர்களுக்கு நேர்சென்று நின் று பற்பல பாணவருஷங்களைப் பொழிந்தான். இத்தன்மையாகக் கைகலந்த காலையில், மண்ட பத்தி லிருந்தெழுந்த தூட்புகளானது அண் டத்தை மறைக்க, இருதிறவரும் பொழியும் வாளிகளானது, அவைகளைக்கரைக்க மலையை குழையச்செய்யும் வில்லை வளையவாங்கி ஆண் சிங்கம்போன்ற அர்ச்சுனனும், சஞ்சத்தகரர் முதலாகிய அரசர்களும், கவந்தங்கள்பாட, காளிகள்பாட, ஞாளிகள் தேட, கூளிகள் கூட, வீரமாகாளி நடனமாடப் போர்புரியுங் காலை யில், படர்கொடி யிலைபோன்ற முனைத்தலையி னையுடைய வேலாயுதத்தைக் கைக்கொண்ட சயித்திரதன், குண்டலன், சௌபலன் முத லாகிய முடிமன்னருடன், படையரசர்கள் முப்பதினாயிரம்பேர் சூழும்படியாய் மேககர்ச் சிதம்போல் இரைந்து கொண்டு, யானை, குதி ரைமுதலிய பரிவாரங்கள் நெருங்கிவரக் குதி ரைபூட்டிய பெருந்தேரேறி, கொடுமர மென் னும் வில்லை வளைத்து நாணையிட்டு, குருகுல சிகாமணியாகிய தர்மராஜனுடன் போர்புரி யும் படிக்குத் துரோணாச்சாரியர் துடுக்காய், சுறுக்காய், கருக்காய், வெகு முடுக்காய் வருவ தைப் பாஞ்சாலர்களும் பதினாயிரம் படை மன்னருஞ் சேனாதிபதியாகிய த்ருஷ்டத்தூய்மனுங்கண்டு எதிர்வளைத்து ஈரேழுலகமும் அதி ரும்படி பேரிகை முதலிய வாத்திய முழக்கி, சமுத்திரங் கொதிக்குந் தன்மைபோற் கதித் துச் சண்டை செய்தார்கள்.

இவ்வாறு இருவருடைய சேனைகளும் எதிர்த்து பலபல ஆயுதங்களுங் கொண்டு ஒரு வரை யொருவர் கொன்று உன்மத்தராய் ஒன் றுந் தோன்றாமல் யுத்தஞ்செய்ய, அந்த சம யத்தில் போர்ப்புலி போலொத்த திர்ஷ்டத் தூய்மன் பெருங் கோபங்கொண்டு, கொலைவா ளிகளைப் பலவாறாக வில்லிலிருந்து பொழிந்த போது, துரோணருடன் கூடிவந்து போர் புரிந்த ஜெயசிங்க வீரர்கள் பலபேர்மடிந்தார் கள். மேலும் துன்முகன் புறமுதுகிட்டோ டப் பாய்ந்து, துன்மருடன் யுத்தமுனை விட் டோடக் காய்ந்து, கற்போன்ற மனோதிடங் கொண்டு காந்தாரர்-கலிங்கர் - கௌசலர்-நிட தர் முதலாகிய தேசாதிபரெல்லாம் புன்முகமா கக் களைத்து இளைத்தோடப் பிளந்து பொரு ந்தியழித்த காலையில், துரியோதனனுடைய பெருஞ் சேனைகள் துரோணாச்சாரிய ரிடத்திற் போய் விழுந்து துடிக்க, அவைகளைக் கண்ட வேதபண்டிதராகிய வில்லாசிரியர் தனது படைகள் நிறைவழிந்து குறைவாய் அவதிப் பட்டு அபயமென்றோடி வந்ததைக்கண்டு உத ட்டைக் கடிக்க, இவ்வாறு அடங்காக் கோபங் கொண்டு அழகிய வில்லை ஆகர்ணபரியந்த மிழுத்து, பிறைமுகாஸ்திரத்தைத் தொடுத்து, பெருநெருப்பைப்போல் அடுத்துக்கடுகடுத்து திர்ஷ்டத் தூய்மனுடைய வில்லை நடுவறப் பிளந்து கெடுத்து, பிறையணிந்த கறைமிடற் றண்ணலைப்போல் நின்று ஒரு பெருங்கணை போக்கி, தர்மராஜனுடைய வில்லை முறித்து, சித்ர விற்றிறங்கொண்ட சிகண்டியினுடைய தேரையுமழித்து, உத்தமோசன் - உதார்மன்- முதல் வெற்றியையுடைய வேந்தரெல்லாருந் தங்கள் தங்களுயிரைக் காப்பாத்திக்கொண்டு போர்த்தொழிலைவிட்டு புறமிட்டோடவிடுத்து, சேனைகளையெல்லாஞ் சிதைத்து, நகுல சகா

தேவர்கள் நாணியறுந்து, நாணியோட வடித்து, பாண்டியராஜன் ஆண்டியாய் வாடவிடுத்து, பாஞ்சாலரோய்ந்து மாய்ந்தாற்போல் வெந்நிட்டோடக் காய்ந்து, தேரேறி புந்தி எதிரேறிவந்த வியாக்ரதுண்டனும், அவனைச் சார்ந்த உள்ளிட்டாரும், அநேகமாயிரம் அரசர்களும் போர்க்களத்தில் மடியும்படியாய்ப் போக்கி, எதிர்த்துவரும் பேர்களைத் தாக்கிக் கொண்டிருக்குந் துரோணருக்கெதிரில், வில்லுக் கொருவனென்னுஞ் சோழராஜன் ஆண்மிக்கையுடன்வந்து காவேரிப்பெருக்கம்போற் கணையைப்பொழிந்து, துரோணர் தொடுத்த கணைகளால் தன்கணைகள் காற்றுமழையுங் கலந்தடிக்கக் கலந்து, கறைந்தோடிய மண்ணுங்கட்டியும் வற்றியுலர்ந்த செத்தையும் போலாகி மனங்கரைந்து மதிகுலைந்து வாடி தன் மனம்போனவாறே நாடி, ஆத்திமாலையணிந்த அச்சோழன் போர்முகம் விட்டு வேற்றுமுகமாய் ஓடிவிட்டான்.

அந்தவேளையிற் குற்றமற்ற மச்சதேசாதிபன் வந்தெதிர்த்து, லச்சை கெட்டவனாய் ஒன்றுந்தோற்றாமல் மயங்கி குன்றிப்போனவனைப்போற் றியங்கி, பயங்கொண்டு வாடிப் பறந்தோடினன். அப்போது மாயமாகிய யானைப் படையுடன் வந்தெதிர்த்த கடோற்கஜன் பிள்ளையாகிய அஞ்சனவன்மனுங் கலக்கண்ணீருகுத்து அலக்கழித்தகன்றான். இன்னமுள்ள காவலரையுங் கைப்படை வீரரையுங் கடுங்கோபத்துடன் காய்ந்து, கணைமழைகளைப் பேய்ந்து, அவர்கள் கண்கலங்கி மாய்ந்து ரணக்களத்திற் சாய்ந்துபோகச் செய்தார் துரோணரானவர். அவரால் தங்கள் படைகள் தளருந் தாக்ஷியைக்கண்ட தருமராஜன் தனுவாசிரியரை யெதிர்த்து, இவருந் தளர்வில்லாம லெதிர்த்து, வடுவில்லாத வில் வளைத்து, அளவில்லாத பாணங்களைத் தொடுத்து இருவர் மனதிலுங் கோபமெழுந்து எங்கும் அக்கினிப் பொறிகளாய் விழுந்து, எவர்களாலும் ஒரு ஆயுதங்களை இடையிற் போடக்கூடாமல், எதிர்த்தவர்களாய் அறைக் கணப்போதும் வாடாமல், வேறெவராலுந் தடைபடக்கூடாமல் தேவர்கள்முதலிய யாவரும் நடுங்க மூவர்கள் முதலிய மோனருமொடுங்க, அங்கம் பணிப்ப, சங்கந்தொனிப்ப, காகளமறைந்து, வாகொடு மிஞறந்து அண்டகோளகை யதிரும்படி இமைப்போதுந் தளராமல் முறைப்படி எதிர்க்கவும், யானைகள், குதிரைகள், இரதங்கள் முதலியதுங் குப்பு கும்பாய்க் கூடி இரைந்து வீரைந்துவர, வாளாயுதம்-வேலாயுதம் - சக்ராயுதம் - குந்தாயுதம் - தோமராயுதம் முதலியவைகளைக் கைக்கொண்டு சுழற்றி கண்கள் விழித்துக் கனற்பொறி புகுந்து, தங்கள் தங்கள் சேனைகளுடன் ராஜபுத்திரர்களுமெதிர்த்து போர்புரிந்தார்கள்.

இதன்றியும், கஜங்களுடன் கஜங்கள் ஒன்றையொன்று மதித்து கர்னமதம், கபோலமதம், பீஜமதம், கோஜமத முதலாகிய மதங்களைப்பொழிந்து காளமேகத்தையொத்து உயர்ந்து பருத்த இருப்புலக்கை இருப்புச் சங்கிலி கொண்ட நீண்ட துதிக்கையைச் சுழற்றி முகபடாமணிந்து, கிம்புரிக்கொம்புக்குக் கத்திகட்டி வீரகண்டை யணிந்து, நக்ஷத்திரங்களையுதிர்த்து வானநடுங்க அதிர்ந்து வாரிதி கலங்கக் குழப்பி, ஆதிசேடனுடைய பணாமகுட மடமடவென்று நெரியமிதித்து, கோபங்கொண்டு கால்விலங்கைத் தரித்து, கட்டுத்தறியை முறித்து, கடைக்கண்களிற் கனலையுதிர்த்துத் தானே கறுவிப்பகைத்து, சந்திரனைக் கவளமென்று பிடித்து, கோபத்திற் செழித்த, சோபத்தைக்கழிக்க, மேகத்தை பிழிந்து தாகத்திற்குக் குடித்து, எட்டுத்திசைகளுமுலாவி, அஷ்டகஜங்களைச் சுலாவி கட்டுபடாமல் வீரபட்டமணிந்த அந்த யானைகள் மத்தகத்துடன் மத்தகந்தாக்கி எதிர்ந்து மலைத்தன. அனேகங்கோடி ரதங்கள் ஒன்றோடொன்று எதிரெதிர் மலைந்தன. அந்த ரதங்களை மலைகளுக் கொப்பாகச் சொல்லுவோ மென்றால், அந்த மலைகளுக்குப் பிரகாசிக்குஞ் சக்கரங்களும் இரிசுகளுமில்லை. வரிசைகளாக நாட்டுங் கொடிகளுமில்லை. அழகிய கொடிஞ்சிலாகிய தேர்மொட்டில்லை. முன்னும் பின்னும் மண்டல வளைவாக விரைந்தோடுதலு மில்லை. அதை செலுத்தும்படியாகிய சாரதியுமில்லை. அந்தப் பாகர் கைக்கிசைந்த பரியாகிய குதிரைகளு மில்லை. அலங்காரஞ் செய்யுந் தேர்ச்சீலைகளு மில்லை. இன்னமுந் தேர்களுக்கு வேண்டிய உறுப்புக்கள் பலவும் அம்மலைகளுக் கில்லாததாலும், இடம்விட்டுப் பெயராதிருப்பதாலும், புற்பூடுகள் காற்காடுகள் நெருங்கி யிருப்பதாலும், தேருக்கு நேராக மலையை ஒப்புசொல்லப்படாது. வேறோருபமானமும் இல்லாமையால், தனக்குத் தானே ஒப்பாகிய அதிரதரேறிய ரதங்கள் அனேகம் பொருந்திப் போர் புரிந்ததுகள். இதன்றி, உகாந்த

காலத்திற் பொங்கும் பெரும்புறக் கடல்போ விரைந்து அலைபோற் பாய்ந்து பந்துபோற் றுள்ளி கரும்புகையெழுந்து ககனம் வெடித் திடக்கனைத் தலைக்காட்டி கமரி விரிந்தெழும் நெருப்பைப்போற் கோபங் கொண்டு, சிகர மலைகள் சாயும்படியாய் எதிரேறி நடந்து, பிரசண்ட வாயுவைப்போற் கதிகொண்டுலாவி எதிரிகளைப் பகைத்து இருமாப் படைந்து கருந்தூள் செந்தூளெழும்பப் போர்புரிந்த வெற்றிபெற்ற குதிரைக ளனேகம் யுத்தஞ் செய்ததுகள். அப்பால், வீரர்கள் முதலிய சேனைகள் தொந்தயுத்தம் விளைத்து தங்கள் தங்களுடைய கரங்களை மேலாகக் காட்டி, ஒரு வரையொருவர் சண்டைக்கு வாருங்களென்று குறைகூவி யழைத்து, சரபசார்த்தூல சிங்கம் போலுருமி, ஆ! ஆ! ஆ! வென்று கருவி, எதிர்சென்று மேலிட்டு முடிக்கி சாணைபிடித்த சரங்களால் அங்கத்தைப் பங்கப்படுத்தி, ஒவ் வொருவரும் வெற்றி பெறும்படியாய் வீரா வேசங் கொண்டு நின்று யாவரையு மிளைக்கச் செய்து அமராடினர்.

### தருமராஜனல் துரோணசாரியர் முறிபட்டோடுதல்

இந்தப்படி ரணக்களமெல்லாம் தொந்த யுத்தம் நடந்து கொண்டிருக்க, இந்திரன் முத லிய யாவரும் நொந்திளைத்துப் பிந்தி வெளி வாங்க, துரோணச்சாரியரும், தர்மராஜனும் வீரமேற்கொண்டு அதிகரித்து வெற்றிமாலை தரித்து விஜயப்பட்டந் தரித்த முடியணிந்த சிரந்துளக்கிப் பற்கடித்துக் கோபச் சிரிப்பா கச் சிரித்து, சண்டமாருதம்போல் ஒருவர் தேருக்கெதிர் ஒருவர் தேரைச் சுழற்றி நடத் திப் பிரபலமான சண்டைசெய்து, விஷங்களை கக்கிக்கொண்டு வரும் பாணங்களை உடல் முழு மையுந் தைக்கவிடுத்து, இன்றைய யுத்தம் போதுமென்று கண்டவர் நடுங்கிச் சொல் லும்படி இடம் வலம் வலம் இடமென்று மாறிமாறிப் போர்புரிந்த காலையில், சிலைக்குரு வின் மறைக்கொடி மளுக்கென் றொடியவும், மனோவேகத்திலும் மிஞ்சிய வேகங்கொண் டோடிய குதிரைகள் நான்குந் துணிவுபட்டு வீழவும், விரைந்து செலுத்துஞ் சாரதி தலை குறைந்து மடியவும், சக்கரம் - குத்துக்கால்- அச்சு-மச்சு-கொடுங்கை-சிகரம்-குடை-கொடி- சட்டம்-ஆப்பாணி-சுள்ளாணி - கடையாணி- இரிசாணி-அஞ்சூராணியுடன் தேருடையவும் செய்து, ஜன்மாந்திர வினைகளிற் றீவினை வருந் தன்மைபோல் துன்பப் படுத்தும்படி யாகிய ஐந்து கணைகளை ஐம்பூதம்போல் தொடுத்து, உடல் முழுமையுந் துளைத்து, அனர்த்தம் விளைத்து நாணி தறித்து, வில்லை முறித்து, அதனல் வெதும்பி நிற்குந் துரோ ணரைப் பார்த்து, ஐயா! நீர் பிராமணகுல மென்றும், முதன்மையாகிய தனுர்வேதக் குரு வென்றும் பெரியோர்களால் மேன்மை பெற் றிருக்குந் தேவரீர் மெத்தவும் இளைத்திருப்ப தினல், உமது பேரில் ஒரு பாணமேனும் இனி தொடுக்கமாட்டேன். நீர் பயப்படாமல் போய் இளைப்பாற்றிக் கொள்ளுமென்று பூப தியாகிய தர்மராஜன் சொல்ல, அந்த வசன த்தை விற்குருவானவர் கேட்டு, தர்மராஜ னுடைய ஆண்மிக்கையை யழித்து உயிருடன் பிடித்து பேரிகை யடித்து, வீரப்பிரதாபத் துடன் கொண்டுபோகவேண்டுமென்று மனத் துள் மதித்து, மறுபடியும் எதிர்த்தபோது, சத்திய விரதன் தொடுத்த பாணங்களால் தன் நெற்றியி லணிந்த வீரபட்டமும் போய் உதி ரப் பிரவாகமு முண்டாகவே, அவரது நெரி த்த உரத்தையும் அவருடைய கைத்திறத்தை யும் கண்டு, நாணத்துடன் வெட்கமடைந்து, மெலிந்து வருந்தி தளர்ந்து மனமிளைத்து, இது உயிர் பொருந்திய தேகமல்ல; ஊன் சுமந்திடு முடலேனென் றுரைக்கும்படியாய் ஓடினர் துரோணச்சாரியர்.

ஓ மகாராஜனே! இந்தப்படி தர்மராஜ னுடன் தானினைத்த காரியம் பலிக்கும்படி யாய்ப் போர்புனைந் திளைத்து, அஞ்சியோடிய துரோணச்சாரியார், பின்னையும் யுத்தம் பண் ணித் தர்மராஜனைச் செயித்து கைப்பிடியாய் பிடித்துப் போவதற்கோ? அல்லது இன் னெருதரம் அடிபட்டு எல்லாரைப் பார்க்கி லுந் தான் முந்தி ஓடுவதற்கோ? எனக்கு ஒன் றுந் தெரியவில்லை. மறுபடியும் அதிவேகத் துடன் கோபங்கொண்டு வேறு தேரேறி விரைந்துவந்தார். அந்த வேளையில் தர்ம ராஜன் போர்முகத்திற் துரோணச்சாரியரை வென்ற திறமையும், தனுவாசிரியர் வெற்றி பெறுமல் அழிந்தோடிய முறைமையும், அப் பால் துரோண ருள்ளங்கொதித்து மறுபடி யுந் தமது அழகிய தேரேறி தருமராஜனுடன் யுத்தம்பண்ண வந்ததும், இவைகளை யெல் லாஞ் சிங்கக்குட்டிபோன்ற அபிமன்னு முத லாகிய சிறுவர்கள் பார்த்து, முகம் வியர்த்துச் சீறியுத்த முனையிலேறி, நான் முந்துவேன் நீ

பிந்திவா நீ பிந்திவா நான் முந்துவேன் என்று ஒருவரை யொருவர் வினவி எச்சரித்துக்கொண்டு, மத்ததேச ராசரோடு சேனாபதியாகிய திர்ஷ்டத்தூய்மனும், குந்திபோஜர் முதலாகிய மற்ற ராஜக்கூட்டங்களும், கும்பு கும்பாய், பந்திபந்தியாய், நிறைநிறையாய், அணியணியாய் நெருங்கி நிறைந்து, மதயானைகளின்மீது ஆண்சிங்கங்கள் ஆர்ப்பரித்து வருந்தன்மைபோல் வந்து, மறைமுனியாகிய துரோணரை வளைத்தார்கள். அப்போது கர்னராஜன், சகுனி, சௌபாலன், களிங்க தேசராஜன், துரியோதன மகாராஜன், அவர் தம்பிமார்கள் முதலாகிய இவர்களெல்லாரும், பெரும்படையாகக் கூடிச் சேனாபதியாகிய துரோணாச்சாரியருக்குத் துணையாயினார்கள். பாண்டியராஜன், நகுல சகாதேவர், பாஞ்சாலர், திர்ஷ்டத் தூய்மன் முதலாகிய பேர்கள் சேர்ந்து, தருமராசனுடைய முனைப்படை முகத்தினின்றார்கள். இப்படியாக நிலைத்து நின்ற மன்னர் முதலாகிய படைத்தலைவரும், அவரவர்களுடைய சேனைகளும் நின்ற விடத்திற்றானே நின்று நெடும்போர் விளைக்க, இவர்களுடன் கூடிச்சென்ற உதவிச்சேனை மன்னவர் முதலாகிய பேர்களும் ரணக்களமெல்லாம் ஓடி யாடி யுத்தஞ்செய்தார்கள். ஆனால், அவ்விடத்தில் அன்று நடந்தயுத்தத்தை இவ்விதமென்று நேருக்கு நேராகச் சொல்லுவதற்கு யாராலுமுடியாது. ஆகிலும், ஒரு தேர் பதினாயிரங் கூறாகவும், ஓர் உடல் நூறுகோடி துண்டமாகவும் உடைந்தொழிந்தகன்றன. மற்றவைகளும் பட்டுக்கலங்கின.

இதன்றியும், வேலாயுதங் களினாலும், வாளாயுதங்களினாலும், வில்லுகளினாலும், கவண் கல்லுக்களினாலும், நீண்ட பாணங்களினாலும், முடியமுறுந்திறந்த வெற்றியையுடைய மன்னர்கள் வெகுகோடியென்று சொல்லலாம். மேலுந் தனுர்வேதங்களினாலுந் தகுதியாகிய கேள்விகளினாலும் மேன்பாடுடைய வித்தகத்தர் வேகமாயிழுத்து விடுக்கும் பாணங்கள், விடுவிடென்று புறப்பட்டு மொய்த்துவந்து, ரதகஜதுரகபதாதியர் முதலாகிய பேர்களைக் காய்ந்தழிக்க, அதனால் மாய்ந்தொழிந்தவர் போக, மிகுதியாகிய பேர்கள் துரோணரால் விடும் பாணங்கள் ஓயாமல் தங்கள்மேல் விழுந்தும் வெறுப்பில்லாமல், ஈட்டி - எறியீட்டி-பாங்கு-சாங்கு - பல்லயம் - பாலா - கட்டாரி-மழு-கொழு-எழு - சூலம்-வேல் முதலாகிய ஆயுதங்களினால் ஒருவரை யொருவர் எற்றினார்கள். படைக்கல முதலிய பாணங்களைக்கொண்டு மொத்தினார்கள். முஷ்டி முத்வியதைப் பிடித்துக் கைகளை மடக்கிக்கொண்டு குத்தினார்கள். தேருடன் தேர் தாக்க முட்டவிடுவார்கள். மதத்த யானைமீதிருப்பவர்கள் ஆகாயத்திற் பாய்ந்து மார்புடன் மார்பையுந் தோளுடன் தோளையு மொத்தியடித்து, மற்றொரு யானையின் முதுகுநெளியத் தத்துவார்கள். குதிரையின்மேலிருக்கும் வீரர்கள் ஒரு குதிரையிலிருந்து மற்றொரு குதிரையிற்றாவி நூறு குதிரை, ஐந்நூறு குதிரை, ஆயிரங் குதிரை வரைக்குந் தாரைபோல் தவறாமல் வரிசையாய்த் தாண்டுவார்கள். இதன்றியும், வீரருடைய வெற்றி வாளினாற் றலையிழந்த குறைத்தலை முண்டங்க ளானபேர்கள் வாளாயுதத்தைக் கையிற் பிடித்துக்கொண்டு தாங்கள் கற்றிருக்கும் நெடுநாட் பழக்கமுள்ள இடசாரி வலசாரி முதலாகியவைக ளெல்லாஞ் சுழன்றாடுவார்கள். அப்படி ஆடும்படியாகிய முண்டங்களை அறுபட்டுப் போகுந் தலைகள் புகழ்ந்து பாடிப் பறந்து விழுவதைக் கண்டு சிலர் மகிழ்ந்து பாடுவார்கள். ஆயுதமற்று வெறுங்கையோடிருக்கும் வீரர்கள் தறிபட்டுக் கிடக்குங் கால்களையும், கரங்களையும், சிரங்களையும், தொடைகளையும், தங்கள் கைக்கு ஆதாரமாகிய ஆயுதங்களாக எடுத்து எதிரிகளின் பேரி லெறிவார்கள்.

பின்னும் தருமராசனுடைய படைமன்னர் முதலாகிய வீரர்கள், சேனாபதியென்னுந் துரோணாசாரியரை நோக்கி, உங்கள் சேனையு நீங்களுங் கெட்டீர்களென்று கலகலவென்று சிரித்து இகழுவார்கள். அப்போது அந்தத் துரோணருடைய சேனைகள் நிசந்தான் ஒருக்காலுங் கெடாத எங்கள் சேனையும் நாங்களும் உங்களிறைவராகிய தர்மராஜனுடைய வில்லாண்மையால் கெட்டோம். அனேக பாடுபட்டோம். உயிரையும் விட்டோம் என்று கூவிச் சொல்லி தங்கள் சேனாபதியாகிய துரோணச்சாரியர் தருமராஜனுக் கிளைத்தோடிவந்த தன்மையைக் குறித்துத் தங்களுக்குள் தாங்களே இரக்கப்படுவார்கள். இந்தப்படி இவர்கள் வாக்கிற்சொல்லிய வார்த்தையின்படிக்குப் பொறிவைத்துக் குறித்திட்டியதைப்போல் குதிரையுடன் குதிரைவீரர்களும், கன்னமதங்களைப் பொழிந்து உலாவிய யானையுடன் யானை வீரர்களும் அறுபட்டு, முறி

பட்டு, தறிபட்டு, நெறிபட்டு வீழ்ந்தார்கள். இவ்வாறே ரதங்களும், பதாதிகளும் ஒன்றின்மே லொன்ருய் விழுந்தழிந்து சின்ன பின்னப்பட்ட செய்கையை, இன்னவிதமாக இருந்ததென்று நிதானித்து மன்னர் முதலிய எவர்களாலுஞ் சொல்லப்படாது. போர்க்களத்தில் இரண்டு பிரிவாக நின்ற இருதிறச் சேனைகளும் நான்கு பிரிவாகப் பிரிந்து, இவை இத்திறவர் சேனையோ? அத்திறவர் சேனையோ வென்றையுற்று உம்பர் முதலிய யாவரும் உரைக்கும்படியாகக் கைகலந்து, அரசரிலும் இவர்களென்றும் அவர்களென்றுங் கண்டுணரக் கூடாமல், மெய்மறந்து தொத்தயுந்தஞ் செய்தார்கள். அந்தவேளையில், பாண்டவச்சேனைகள் அடிபட்டு மெலிந்தோடும்படியாய்த் தன் சேனைகளைத் துரோணர் முடுக்கி விடுப்பதைக் கடோற்கஜன்கண்டு விரைந்தோடிவந்து வாடியோடிய தங்கள் சேனைக்குத் துணையாகியபோது, அபிமன்னனுங் கலந்துகொள்ள, அவ்வேளையிலடிபட்டு மனம் வருந்தி நெஞ்சுழன்று தஞ்சமென்றோடிவந்த காவல் மன்னர்களும் ஒன்று சேர்ந்து, பரிசுத்த வேதபாராயணரென்னுந் துரோணச்சாரியரை மடக்கியபோது, சூரியனைக் கண்ட பனியைப்போல் எதிரியினுடைய சேனைத் தளங்களெல்லாம் பறந்து மறைந்தோடி அரவக்கொடிக் கிறைவனாகிய துரியோதன மகாராஜனுடைய பக்கலிற் சேர்ந்தார்கள்.

அந்த வேளையில், ரதகஜதுரக பதாதிகளுடன் விதுரன் வில்லைப்போல் முறிபட்டிறந்தரசர்கள்போக, நிலைத்து நின்ற மன்னவர்களும், சரத்துவந்த மகாரிஷியின் பிள்ளையாகிய கிருபாச்சாரியரும், வதிஷ்ட மகாரிஷியால் மதிக்குஞ் சத்திவாய்மை நித்திய விரத தத்வசீலராகிய துரோணச்சாரியரும் பெருங்கும்பாகக் கூடிக்கொண்டுபோய் போர் புரிந்தபோது, தருமராஜன் எதிர்த்து, சர சர சர வென்று கணைகளைப் பொழிந்துச் சண்டை செய்ய, அதனல் தளர்ச்சிகொண்ட தளங்களெல்லாந் துரியோதனன் அண்டையிற் சென்று, அரசனே! பாண்டவர்கள் மிஞ்சிப் பதறி விட்டார்கள். இன்று அவர்களுக்கு நல்லகாலம். அகண்ட சாம்பிராச்சியமும் ஐவரே பெருவார்கள்போ லிருக்கிறதென்று சொல்ல, அந்த மொழியை அவர்களாற் கேட்டும், அதிஷ்டங்கெட்ட துரியோதனன் முன் பின் யோசனை செய்யாமல், ஓ கையிலாகாதவர்களே! இவ்வளவுதானு உங்கள் தைரியம் என்று கொடிய நெருப்பிலுங் கடியவேகங்கொண்டு முன்னேபோ யிருக்கிற சதுரங்கச் சேனைகளும், முடிமன்னவர்களும், அவர்கள் கைக்கொண்ட வில்லும், பாணமும், தருமராஜனல் முறிபட்டுத் தறிபட்டு ரணக்களத்தில் விழுந்தழிந்து கிடப்பதல்லாமலும், இன்னுமிருக்கும்படியாகிய போர்கள் யாவரும் இறந்து போகப் பார்க்கவேண்டுமென்னும் இச்சைகொண்டவனைப்போல் விடாதீர்கள், விடாதீர்கள், முடுக்குங்கள், முடுக்குங்கள், போமின்கள், போமின்கள் என்று கொஞ்சமிஞ்சி யிருந்த சேனைகளையு முட்டவிட்டு, தானும் தன் படைக்கு முந்திச் சென்று, வெற்றி மாலைபெற்ற வீரர்களுடன் சுத்த வீரர்களையுஞ் சேனைகளையும், அநேக முகங்களிலும் அணியணியாக வகுத்து விடுத்து மகா பராக்கிரமத்தோடு முனைவதாயினன். அக்காலத்தில், அந்தந்த முனைமுகந்தோறும் வீரப்ரதாப விற்ருங்கிய அபிமன்னுவானவன், தானொருவனுக நின்று வந்த வீரர்களெல்லாம் வாருடைந்து, உடல் சிதைந்து, படையழிந்து, உயிர் மடிந்து, உதிரம் வழிந்து ஓடும்படியாய் வில் வளைத்து, வீசி யடிக்கும் பெருங்காற்றுடன் கூடிப் பொழியும் பிரசண்ட மேக சாலங்களைப்போல பாண மழைகளைப் பொழிந்து போர்புரியுஞ் சமயத்தில், யானை - சேனை - பரிவார முதலாகிய படைவீரர்களும் புறமுதுகிட்டு ஓடினர்கள். அந்த ரணக்களமானது உதிரப் பெருக்கத்தால் அந்திவான மென்னுஞ் செவ்வானம் போலிருந்தது. கால்வேறு, தலைவேறு, உடல் வேறு, குடல்வேறு, கொம்புகள்வேறு, தும்பிகள் வேருய் விழுந்து கிடக்கிற யானைகளெல்லாங் கருமேக வெண்மேக சாலங்களை யொத்திருந்தன. கொடிமன்னர்க ளணிந்துதிர்ந்த முடிமுதலிய ஆபரணங்களெல்லாந் தாராகணம்போ லிருந்தன.

### பகதத்தன் வீமசேனனைத்தேடி வளைத்துக் கொள்ளுதல்

இந்தப் பிரகாரம் இவ்விடத்தில் அபிமன்னனவன் யுத்தம் பண்ணிக் கொண்டிருக்க; தர்மராஜனுட னெதிர்த்துப் போர் செய்த துரோணச்சாரியரானவர் தேரழிந்து, வில் முறிந்து, தேகம் மெலிந்து வேறு தேரில்லாமற் பாதசாரியாய் நிலத்தினின்று துரியோதனனுகிய அதிபதியை நிந்தித்து, தன்

தலைவிதியைச் சிந்தித்து, தர்மராசனுடைய கணைகளுக் கிடைந்து புறங்கொடுத் தோடுங் காலையில், அநேக மாயிரங்கோடி தேராளிகள் துரோணாச்சாரியருக்குத் துணையாக வந்துக் காத்துக்கொண்டார்கள். அந்த வேளையில், துரோணாச்சாரியார் திடங்கொண்டு மறுபடியுந் தர்மராஜன்பேரில் யுத்தஞ்செய்யத் திரும்பிக் கோபங்கொண்டு முனைந்த காலத்தில், வீரப்பிரதாப விற்றுங்கிய அபிமன்னுவானவன் வேகத்துடன் முடுகிவந்த துரோணரையும், வேந்தரையும், பதாதிகளாகிய மாந்தரையும், யானை - சேனை - தேர் முதலிய வெல்லாவற்றையும், முகமாறும்படியாய் மார்பொடிய அடித்து வாட்டினான். அக்காலையில், மார்பு கொடாமல் முதுகு கொடுத்து வாடியோடிவருந் துரோணாச்சாரிய ரென்னுஞ் சேனாபதியையும், மன்னவர் முதலாகிய சேனைகளையும், இந்திரனுக்குச் சுதந்தர தோழனாகிய பகதத்தன் கண்டு, இனி நமக்கு நல்ல காலமென்று சீறி, அநேக தீர வசனங்களைக் கூறி, சமுத்திர பெருக்கம்போல் யானை படைகளைக்கொண்டு போர் புரியும்படியாய் இரணக் களத்திலெதிரேறி வருவதாயினன். அஃதெப்படியென்றால், ஓ அரசனே! இந்த பகதத்தன் ஏறிவந்த மதம்பொருந்திய தாவளயமான யானையானது, க்ஷீராப்தியிற் பிறந்த அயிராவதத்திற் கொப்பாகவும், இவன் கைப் பிடித்த வில்லானது இந்திர தனுசுக் கொப்பாகவும், தான் தேவேந்திரனைப்போல் வருவதைத் தேவர் முதலிய யாவருங் கண்டு, இவனுடனெதிர்த்துப் போர் செய்யும் பேர்களுமுண்டோ வென்று சொல்லும்படியாய் பதினாயிரம் யானைக் கொப்பாகிய புஜபலங்கள் பெற்ற அப்பகதத்தராஜன், பலவகை விருதுகளுடன் பற்பல வாத்தியங்களும் முழங்கப் புறப்பட்டு, இவனிலுஞ் சிறந்த வீரர்கள் இருபதினாயிரம் யானைகளைச் செலுத்திக் கொண்டு வரும்படியாய் அசுரகுலகாலனாகிய சுப்பிரமணியக் கடவுளைப்போலும், ராக்ஷச வயிரியாகிய சக்ரதரனைப்போலும் வருவதாயினான். மேலும், இவனெப்பேர்ப்பட்டவனெனில்: தெய்வலோகத்தின்பேரில் பகைத்து வந்த அரக்கர்களை யெல்லாம் பறக்க அடித்து, அவ்வரக்கர்களுக்குப் பயந்து ஓடி யொளித்துப் போன தேவேந்திரனுக்குச் சகாயமாகயிருந்து தெய்வலோகத்தை அவ்விந்திரனுக்கு நிலை நிறுத்திக் கொடுத்து, அவனுக்குத் தோழனென்று தேவர்கள் முதலிய யாவர்களாலும் பேர்பெற்ற திடவான்.

இத்தன்மையனாகிய பகதத்தன், அழகிய மகமேருவை யொத்த தனது யானையானது தலை யசைத்துக் காதின்காற்றினால் கடல்களை அலையச் செய்யவும், கோடையிடி முழக்கம் போல் முழக்குந் துதிக்கையை நிலத்தி லடித்து இரையவும், பூமிகுலுங்கக் கால்களால் துவைத்து மலைகள், மரங்கள் பொடியாகும் படி விரைந்து வேகமாக நடக்கவும், கோபாக்கினியினால் மனம் புழுங்கிப் புகைந்து பிரகாசிக்கும் வீரபட்டஞ் சிறந்த நெற்றியில் வியர்வை யழியவும், நெருப்புங் காற்றும் நேரிட்ட தன்மைபோற் சிறிய கண்களி லிருந்து பெரிய நெருப்புப்பொறி வீசவுமாக அம்மத்தகஜத்தின்மே லேறிக்கொண்டு, ஆரகேயூரகடக குண்டல வாகு வலய முதலிய பணிகளிலங்க, வீர கேசரிபோற் போர் முகத்திற்கு வந்தான். இப்படியாக வந்த பகதத்தனைக் கண்டவுடனே, அபிமன்னுவினாற் புறங்கொடுத்து ஓடிய சேனைகளெல்லாந் திரும்பித் திரண்டு வந்து பகதத்தனுடன் கூடிக்கொண்டார்கள். அந்தச் சமயத்தில், காகக்கொடியினையுடைய நரேந்திரனும், அவனுடைய தம்பிமார்களும், தேசபாஷைத் தலைவர் முதலாகிய நால்வகைச் சேனைகளும் போர் முகத்திற் கெதிர்சென்று, இரண்டு கைகளையுங் கொட்டிக் கொண்டாடித்துக்கொண்டு, ஜெயம் ஜெயமென்று கூத்தாடி எதிர்க்க, இருதிறப்படைகளுங் கைகலந்து யுத்தஞ் செய்தார்கள். இத்தன்மையாக யுத்தஞ் செய்யுங்காலத்தில், ராவணேஸ்வர னெடுத்த ஆதி கைலையங்கிரியும் இதற் கொப்பல்லவென்று சொல்லும்படியாகிய வெள்ளை யானையை வேகத்துட னடத்திக் கொண்டுவந்த பகதத்தனானவன், வீமசேனனென்பவனெவன்? அவனெங்கிருக்கிறான்? அவனெங்கே? அவனெங்கே? கொடுமுடி போன்ற அவனுடைய நெடுமுடியை வெட்டி வெற்றியுடன் திரும்புகின்றேன். அவனைப் பாருங்கள், அவனைத் தேடுங்கள், அவனை விடாதீர்கள் என்று பலவிதமாகிய வசைச் சொற்களை பிதற்றிப் பற்கடித்துக் கறுவிக் கொருவங்கொண்டு வந்தான், அப்படி வாரா நின்ற நிர்வாகசரலியாகிய பகதத்தனை வீமசேனன் கண்டு, அவனிறைந்து வருகிற சொல்லையு முட்கொண்டு, தன்னுடைய ரதத்தி லிருந்து கதாயுதபாணியாகக் கிளம்பி, அவன்

பட்டு, தறிபட்டு, நெறிபட்டு வீழ்ந்தார்கள். இவ்வாறே ரதங்களும், பதாதிகளும் ஒன்றின்மே லொன்றாய் விழுந்தழிந்து சின்ன பின்னப்பட்ட செய்கையை, இன்னவிதமாக இருந்ததென்று நிதானித்து மன்னர் முதலிய எவர்களாலுஞ் சொல்லப்படாது. போர்க்களத்தில் இரண்டு பிரிவாக நின்ற இருதிறச் சேனைகளும் நான்கு பிரிவாகப் பிரிந்து, இவை இத்திறவர் சேனையோ? அத்திறவர் சேனையோ வென்றையுற்று உம்பர் முதலிய, யாவரும் உரைக்கும்படியாகக் கைகலந்து, அரசரிலும் இவர்களென்றும் அவர்களென்றுங் கண்டுணரக் கூடாமல், மெய்மறந்து தொத்தயுந்தஞ் செய்தார்கள். அந்தவேளையில், பாண்டவச்சேனைகள் அடிபட்டு மெலிந்தோடும்படியாய்த் தன் சேனைகளைத் துரோணர் முடுக்கி விடுப்பதைக் கடோற்கஜன்கண்டு விரைந்தோடிவந்து வாடியோடிய தங்கள் சேனைக்குத் துணையாகியபோது, அபிமன்னனுங் கலந்துகொள்ள, அவ்வேளையிலடிபட்டு மனம் வருந்தி நெஞ்சுழன்று தஞ்சமென்றோடிவந்த காவல் மன்னர்களும் ஒன்று சேர்ந்து, பரிசுத்த வேதபாராயணரென்னுந் துரோணாச்சாரியரை மடக்கியபோது, சூரியனைக் கண்ட பனியைப்போல் எதிரியினுடைய சேனைத் தளங்களெல்லாம் பறந்து மறைந்தோடி அரவக்கொடிக் கிறைவனாகிய துரியோதன மகாராஜனுடைய பக்கலிற் சேர்ந்தார்கள்.

அந்த வேளையில், ரதகஜதுரக பதாதிகளுடன் விதுரன் வில்லைப்போல் முறிபட்டிறந்தரசர்கள்போக, நிலைத்து நின்ற மன்னவர்களும், சரத்துவந்த மகாரிஷியின் பிள்ளையாகிய கிருபாச்சாரியரும், வசிஷ்ட மகாரிஷியால் மதிக்குஞ் சத்திவாய்மை நித்திய விரததத்வசீலராகிய துரோணாச்சாரியரும் பெருங்கும்பாகக் கூடிக்கொண்டுபோய் போர் புரிந்தபோது, தருமராஜன் எதிர்த்து, சர சர சர வென்று கணைகளைப் பொழிந்துச் சண்டை செய்ய, அதனால் தளர்ச்சிகொண்ட தளங்களெல்லாந் துரியோதனன் அண்டையிற் சென்று, அரசனே! பாண்டவர்கள் மிஞ்சிப் பதறி விட்டார்கள். இன்று அவர்களுக்கு நல்லகாலம்; அகண்ட சாம்பிராச்சியமும் ஐவரே பெருவார்கள்போ லிருக்கிறதென்று சொல்ல, அந்த மொழியை அவர்களாற் கேட்டுக், அதிஷ்டங்கெட்ட துரியோதனன் முன் பின் யோசனை செய்யாமல், ஓ கையிலாகாதவர்களே! இவ்வளவுதானா உங்கள் தைரியம் என்று கொடிய நெருப்பிலுங் கடியவேகங்கொண்டு முன்னேபோ யிருக்கிற சதுரங்கச் சேனைகளும், முடிமன்னவர்களும், அவர்கள் கைக்கொண்ட வில்லும், பாணமும், தருமராஜனால் முறிபட்டுத் தறிபட்டு ரணக்களத்தில் விழுந்தழிந்து கிடப்பதல்லாமலும், இன்னுமிருக்கும்படியாகிய போர்கள் யாவரும் இறந்துபோகப் பார்க்கவேண்டு மென்னும் இச்சை கொண்டவனைப்போல் விடாதீர்கள், விடாதீர்கள், முடுக்குங்கள், முடுக்குங்கள், போமின்கள், போமின்கள் என்று கொஞ்ச மிஞ்சி யிருந்த சேனைகளையு முட்டவிட்டு, தானும் தன் படைக்கு முந்திச் சென்று, வெற்றி மாலைபெற்ற வீரர்களுடன் சுத்த வீரர்களையுஞ் சேனைகளையும், அநேக முகங்களிலும் அணியணியாக வகுத்து விடுத்து மகா பராக்கிரமத்தோடு முனைவதாயினான். அக்காலத்தில், அந்தந்த முனைமுகந்தோறும் வீரப்ரதாப விற்றுங்கிய அபிமன்னுவானவன், தானொருவனாக நின்று வந்த வீரர்களெல்லாம் வாகுடைந்து, உடல் சிதைந்து, படையழிந்து, உயிர் மடிந்து, உதிரம் வழிந்து ஓடும்படியாய் வில் வளைத்து, வீசி யடிக்கும் பெருங்காற்றுடன் கூடிப் பொழியும் பிரசண்ட மேக சாலங்களைப்போல பாண மழைகளைப் பொழிந்து போர்புரியுஞ் சமயத்தில், யானை - சேனை - பரிவார முதலாகிய படைவீரர்களும் புறமுதுகிட்டு ஓடினார்கள். அந்த ரணக்களமானது உதிரப் பெருக்கத்தால் அந்திவான மென்னுஞ் செவ்வானம் போலிருந்தது. கால்வேறு, தலைவேறு, உடல் வேறு, குடல்வேறு, கொம்புகள்வேறு, தும்பிகள் வேறாய் விழுந்து கிடக்கிற யானைகளெல்லாங் கருமேக வெண்மேக சாலங்களையொத்திருந்தன. கொடிமன்னர்க ளணிந்துதிர்ந்த முடிமுதலிய ஆபரணங்களெல்லாந் தாராகணம்போ லிருந்தன.

### பகதத்தன் வீமசேனனைத்தேடி வளைத்துக் கொள்ளுதல்

இந்தப் பிரகாரம் இவ்விடத்தில் அபிமன்னனானவன் யுத்தம் பண்ணிக் கொண்டிருக்க; தர்மராஜனுட னெதிர்த்துப் போர் செய்த துரோணாச்சாரியரானவர் தேரழிந்து, வில் முறிந்து, தேகம் மெலிந்து வேறு தேரில்லாமற் பாதசாரியாய் நிலத்தினின்று துரியோதனனாகிய அதிபதியை நிந்தித்து, தன்

தலைவிதியைச் சிந்தித்து, தர்மராசனுடைய கணைகளுக் கிடைந்து புறங்கொடுத் தோடுங் காலையில், அநேக மாயிரங்கோடி தேராளிகள் துரோணாச்சாரியருக்குத் துணையாக வந்தாக் காத்துக்கொண்டார்கள். அந்த வேளையில், துரோணாச்சாரியார் திடங்கொண்டு மறுபடியுந் தர்மராஜன்பேரில் யுத்தஞ்செய்யத் திரும்பிக் கோபங்கொண்டு முனைந்த காலத்தில், வீரப்பிரதாப விற்றுங்கிய அபிமன்னுவானவன் வேகத்துடன் முடுகிவந்த துரோணரையும், வேந்தரையும், பதாதிகளாகிய மாந்தரையும், யானை - சேனை - தேர் முதலிய வெல்லாவற்றையும், முகமாறும்படியாய் மார் பொடிய அடித்து வாட்டினான். அக்காலையில், மார்பு கொடாமல் முதுகு கொடுத்து வாடியோடிவருந் துரோணாச்சாரிய ரென்னுஞ் சேனாபதியையும், மன்னவர் முதலாகிய சேனைகளையும், இந்திரனுக்குச் சுதந்தர தோழனாகிய பகதத்தன் கண்டு, இனி நமக்கு நல்ல காலமென்று சீறி, அநேக தீர வசனங்களைக் கூறி, சமுத்திர பெருக்கம்போல் யானை படைகளைக்கொண்டு போர் புரியும்படியாய் இரணக்களத்தி லெதிரேறி வருவதாயினன். அஃதெப்படி யென்றால், ஓ அரசனே! இந்த பகதத்தன் ஏறிவந்த மதம்பொருந்திய தாவளயமான யானையானது, க்ஷீராப்தியிற் பிறந்த அயிராவதத்திற் கொப்பாகவும், இவன் கைப்பிடித்த வில்லானது இந்திர தனுசுக் கொப்பாகவும், தான் தேவேந்திரனைப்போல் வருவதைத் தேவர் முதலிய யாவருங் கண்டு, இவனுட னெதிர்த்துப் போர் செய்யும் பேர்களுமுண்டோ வென்று சொல்லும்படியாய் பதினாயிரம் யானைக் கொப்பாகிய புஜபலங்கள் பெற்ற அப்பகதத்தராஜன், பல்வகை விருதுகளுடன் பற்பல வாத்தியங்களும் முழங்கப் புறப்பட்டு, இவனிலுஞ் சிறந்த வீரர்கள் இருபதினாயிரம் யானைகளைச் செலுத்திக்கொண்டு வரும்படியாய் அசுரகுலகாலனாகிய சுப்பிரமணியக் கடவுளைப்போலும், ராக்ஷச வயிரியாகிய சக்ரதரனைப்போலும் வருவதாயினான். மேலும், இவனெப்பேர்ப்பட்டவனெனில்: தெய்வலோகத்தின்பேரில் பகைத்து வந்த அரக்கர்களை யெல்லாம் பறக்க அடித்து, அவ்வரக்கர்களுக்குப் பயந்து ஓடி யொளித்துப் போன தேவேந்திரனுக்குச் சகாயமாகயிருந்து தெய்வலோகத்தை அவ்விந்திரனுக்கு நிலை நிறுத்திக் கொடுத்து, அவனுக்குத் தோழனென்று தேவர்கள் முதலிய யாவர்களாலும் பேர்பெற்றதிடவான்.

இத்தன்மையனாகிய பகதத்தன், அழகிய மகமேருவை யொத்த தனது யானையானது தலை யசைத்துக் காதின்காற்றினால் கடல்களை அலையச் செய்யவும், கோடையிடி முழக்கம்போல் முழக்குந் துதிக்கையை நிலத்தி லடித்து இரையவும், பூமிகுலுங்கக் கால்களால் துவைத்து மலைகள், மரங்கள் பொடியாகும்படி விரைந்து வேகமாக நடக்கவும், கோபாக்கினியினால் மனம் புழுங்கிப் புகைந்து பிரகாசிக்கும் வீரபட்டஞ் சிறந்த நெற்றியில் வியர்வை யழியவும், நெருப்புங் காற்றும் நேரிட்ட தன்மைபோற் சிறிய கண்களி லிருந்து பெரிய நெருப்புப்பொறி வீசவுமாக அம்மத்தகஜத்தின்மே லேறிக்கொண்டு, ஆரகேயூரகடக குண்டல வாகு வலய முதலிய பணிகளிலங்க, வீர கேசரிபோற் போர் முகத்திற்கு வந்தான். இப்படியாக வந்த பகதத்தனைக் கண்டவுடனே, அபிமன்னுவினாற் புறங்கொடுத்தோடிய சேனைக ளெல்லாந் திரும்பித் திரண்டு வந்து பகதத்தனுடன் கூடிக்கொண்டார்கள். அந்தச் சமயத்தில், காகக்கொடியினையுடைய நரேந்திரனும், அவனுடைய தம்பிமார்களும், தேசபாஷைத் தலைவர் முதலாகிய நால்வகைச் சேனைகளும் போர் முகத்திற் கெதிர்சென்று, இரண்டு கைகளையுங் கொட்டிக்கொண்டா னடித்துக்கொண்டு, ஜெயம் ஜெயமென்று கூத்தாடி எதிர்க்க, இருதிறப்படைகளுங் கைகலந்து யுத்தஞ் செய்தார்கள். இத்தன்மையாக யுத்தஞ் செய்யுங்காலத்தில், ராவணேஸ்வர னெடுத்த ஆதி கைலையங்கிரியும் இதற் கொப்பல்லவென்று சொல்லும்படியாகிய வெள்ளை யானையை வேகத்துட னடத்திக்கொண்டுவந்த பகத்தனானவன், வீமசேனனென்பவனெவன்? அவனெங்கிருக்கிறான்? அவனெங்கே? அவனெங்கே? கொடுமுடி போன்ற அவனுடைய நெடுமுடியை வெட்டி வெற்றியுடன் திரும்புகின்றேன். அவனைப் பாருங்கள், அவனைத் தேடுங்கள், அவனை விடாதீர்கள் என்று பலவிதமாகிய வசைச்சொற்களைப் பிதற்றிப் பற்கடித்துக் கறுவிக் கெருவங்கொண்டு வந்தான். அப்படி வாராநின்ற நிர்வாகசரலியாகிய பகதத்தனை வீமசேனன் கண்டு, அவனிறைந்து வருகிற சொல்லையு முட்கொண்டு, தன்னுடைய ரதத்திலிருந்து கதாயுதபாணியாகக் கிளம்பி, அவன்

சொற்களுக்குப் பதிலுக்குப் பதில் விளம்பி;
கரகரவென்று அந்தரத்திற் சுழன்று, சரசர
வென்று சிந்தை மெத்தத்தழன்று, நீதானு
பகதத்தனென்று அவன் யானை மத்தகத்திற்
பாய்ந்து, நான்தானடா வீமனென்று நமன்
அஞ்சக் காய்ந்து, அவனுடைய இரண்டு
தோளு நெரிய ஒரு கையாற் இறுக்கிப் பிடி
த்து, மற்றொரு கையால் மார்பு கிழியக் குத்தி,
அடா மத்தா! பகதத்தா! என்னைத் தேடி வந்த
தற்கு என்னு லியன்ற மாத்திரம் உனக்குதவி
செய்தேனெனறு சொல்லி; அவனை முன்னுக்
கிழுத்துப் பின்னுக்குத் தள்ளித் திருப்பி,
இருப்புலக்கையைக் கொண்ட நீள துதிக்கை
யாற் படைகள் மாண்டுவிழ வீசிவராநின்ற
அவனேறிய வெள்ளையானையின் வீரபட்டம்
பதித்த நெற்றியிற் குழிபட வுதைத்து, மத்த
கங் கிழியக் கதையினுல் அடித்து, விரைவி
லோடாநின்ற புரவி பூட்டிய தன் ரதத்திற்
றிரும்பிக் குதித்துத் தனிச்சிங்கம்போ லிருந்த
காலையில், பகதத்தனேறிய யானை விலவில
வென் றுதைத்துக்கொண்டு, கலகலவென்று
கண்ணீ ருகுக்க, அந்த வேளையில், திப்பிரமை
கொண்டு களகளவென்று சேஷ்மங் கட்டிக்
கொண் டிழுக்கச் சாய்ந்த பகதத்தனவன்,
நமக்கிது ஒரு தத்தென்று தேறி யெழுந்து,
வீரர் முதலிய யாவரும் அஞ்சும்படியாய்,
நெஞ்சில் நெடுங்கோப மெறிய மடமட
வென்று வில்நாணி யிறுக்கி, பல பாணங்
களைப் பலபலவென்று வரிசை வரிசையாய்
வசிபோல் விடுத்தான்.

அந்தப் பகதத்தன் விடுத்த பாணங்களை
யெல்லாம், வீமசேனன் பாரிய கதையினு
லடித்து முறித்து, பலபலவிதத்திலுங் கோபங்
கொண்டு வில்லையெடுத்து நிறுத்தி வளைத்து
கிண்ணெனும்படி நாரிபூட்டிக் கெடிவீரரெல்
லாம் நடுங்க யிழுத்து, நாகாஸ்திர மேகாஸ்
திர முதலிய பாணங்களை நானில மேழுமதிர
விடுக்க, இந்தப்பிரகாரம் இவர்களிருவரும்
பர பர கர கர வென்று ஒரு நிலத்திற்றனித்து
ஒரு யுகம் போர்புரிந்தாலும் ஒருவரையொரு
வர் வெல்லுவது அருமையென்று தேவர்கள்
சொல்லிக்கொள்ளும்படிக்கு இவர்கள் பிடித்த
வில்லானது மளமளவென்று ஓசையுடன் வளை
யவும், இவர்கள் செய்த டங்கார நாணோசை
யால் நான்குதிசையும் செவிடுபடவும், இவர்
கள் பெருமழைகளைப்போல் ஒருவர்பேரில் ஒரு
வர்விட்ட பாணங்கள் தங்களுடைய தேகத்
தைத் துளைத்து உருவமாட்டாமல் முனைமழு
ங்கி நுனி முறிந்துபோகவும், இவர்கள் ஒரு
வருக் கொருவர்விடும் பாணங்களைத் தனுர்
வேத முறைமையின்படிக்குச் சத்துரு மித்தி
ராஸ்திரத்தை விலக்கிக் கொள்ளவும், ஆகாய
மறையும்படி அம்புகள் நிறையவும், இப்படி
யாக தப்பில்லாமல் நெடுநேரம் வரையில் தங்
களுக்கெவரும் ஒப்பெனபதில்லாமற் போர்
புரிந்துக்கொண் டிருப்பதானுர்கள். இவர்கள்
போரிவ்வா றிருக்க, பகதத்தனேறிவந்த யானை
செய்த கொடும் போரைக் கொஞ்சம் சொல்லு
கிறேன் கேளும். அரசனே! அவனேறிவந்த
யானைக்குப் பட்டுக்குச்சு முதலிய பூண்கட்டிய
நான்குகொம் பிருக்குமாகில், கீழ்த்திசை யானை
யாகிய ஐராவதம் இதற்கு நிகரல்லவென்று
சொல்லவேண்டியது. இந்த யானையின் பேர்
என்னவென்றல், பற்பலரும் கொண்டாடா
நின்ற சுப்பிரதீபமென்று நாமம் பெற்றது.
இதனுடைய பல பராக்கிரமத்தைச் சொல்லு
மிடத்துத் திக்குயானைகள் எட்டுத் திக்கென்று
திகில்கொண்டு நாணிப்போம். இதன்றியும்,
போர்முகத்தில் எதிரிகள் விடுக்கும் பாண முத
லிய ஆயுதங்களையெல்லாந் தெரிந்துகொண்டு,
எந்தவேளைக்கு எவ்விதம் பதுங்கி, ஒதுங்கி,
அடங்கி, ஒடுங்கித் தன்னையுந் தன் எஜமான
னையுங் காத்துக்கொள்ள வேண்டுமோ; அந்த
வேளையில் அவ்விதம் பதுங்கி ஒதுங்கி, அட
ங்கி ஒடுங்கிக்கொண்டு பகைவர்மேற் கடிந்து,
சுற்றிலும் பத்து நகமுடைய காலும், இருப்
புச்சங்கிலி, இருப்புலக்கை, இருப்புக்குண்டு,
முதலிய கைக்கொண்ட துதிக்கரத்தாலும்,
கரும்பின் இலையைப்போல் வரிசையாக சுத்தி
கட்டிய வாளாலும், கவசத்துடன் வீர பட்டங்
கட்டிய மத்தகத்தாலும், மதத்துப்போர்
புரிந்த யானையின் வல்லமையைச் சொல்லத்
தக்கதோ? மதிகுலநிதியே! அதெப்படியென்
னில், பகதத்தன் ஏறிவந்த அச் சுப்பிரதீப
மென்னும் யானையானது, தனது துதிக்கையி
னுல் தர்மராசனுடைய படையினின்ற யானை
களையெல்லாம் பிடித்துக் குயவன் றிகிரிபோல
விறுவிறெனச் சுழற்றி ஆகாயத்தில் எறிந்
தும், பிறைபோன் றிருக்குந் தந்தங்களினுல்
அவரவரேறிய ரதங்களையெல்லா முடைத்
தும், குதிரை கும்புகளெல்லாந் தும்பாய்க்
கதறிக் கனைக்கும்படி வாலினுலடித்து சாய்த்
தும், வீரர் முதலாகிய பதாதிப்படைகளெல்
லாம் அலறிக்கதறி அபய மபயமென சாய்ந்து
போகக் கூத்தாடியும், குட்டையைக் கலக்குந்

தன்மையைப்போற் குருக்ஷேத்திரத்திற் கூடிய பாண்டவர் சேனைகளைக் கொன்று குவிந்தது.

### தருமராஜன் ஸ்ரீகிருஷ்ண பகவானை நினைத்து வந்தித்தல்.

இந்தப்படி யுத்தஞ் செய்யாநின்ற பகதத்தனும் அவன் ஏறிவந்த மத மலையான யானையினுலும், அவனுடனே கூடிவந்த யானைப்படைகளினுலும் அணிபொருந்திய தனது சேனைகள் நொந்து நைந்து அழிந்தனவென்று தருமராஜனுணர்ந்து, இந்தப் பகதத்தனை மடக்க வகையொன்றுந் தோன்ருதவராய் வருந்தி, சஞ்சத்தகாள், திரிகர்த்தாள் பேரிற் சண்டைக்குப் போயிருக்குந் தம்பியாகிய தனஞ்செயனுக்குச் சாரதியாயமர்ந்தருளிய ஜநார்த்தனனை, மலரகிதனுகிய பாிசுத்தனை, பக்தவச்சலனை, பரந்தாமனைச் சிந்தையுள் நினைத்துத் திருவடியைச் சிந்தித்து, சுவாமி! என் கண்ணு! இந்தவேளை வந்து காக்கவேண்டும். என் படைகள் நொந்தவலங் கோலத்தைப் பார்க்கவேண்டும். ஓ ஈசனே! துவாரகாபுரிவாசனே! அன்பர்க்கருள் நேசனே! அகிலமுழுதும் விளங்கும் பிரகாசனே! என்று துதித்துப் பேசாதிருந்தார். ஓ ஜெனமேஜெய மகாராஜனே! அந்த வேளையில் ஒப்பில்லா விற்பனனுகிய பற்குனன் ஒரு மூலையிற்செய்த யுத்தத்தி னிர்வாகத்தையும் ஒருவாறுகக் கொஞ்சஞ் சொல்லுகிறேன் கேளும்; அர்ச்சுனனையும், வீமசேனனையும், தருமராசனுக்குத் துணையாக வொட்டாமல் ஜெயிக்கிறேமென்று துரியோதனனிடத்திற் சபதஞ் சொல்லித் தாம்பூலம் வாங்கிவந்த சஞ்சகர்த்தரும், திரிகர்த்தரும், நாராயண கோபாலருங்கூடி, தாரணியுந் தடங்கடலுங் குலுங்கி கலங்கும்படியா யுத்தஞ்செய்து தனஞ்செயனுனவன் விடுத்த பாணங்களினுல் எலும்புகளெல்லா நெரிந்து, மாமிசங்களெல்லாமுதிர்ந்து, மார்புகள் கிழிந்து, உதிரம் வழிந்து, அளவற்றபேர் தலைகளுமறுந்து, விழுந்து ஒழிந்ததல்லாமலும், அவர்கள் படைவீரர்களின் தேரிற்கட்டிய குதிரைகள் எல்லாந் தலையறுபட்டு, மலைக்கொப்பாகி, தேர்களெல்லாம் பொடிப்பொடியாக உடைபட்டு, சாரதிகளெல்லாம் அடிபட்டு, நெருப்பினுற் கருகியச் சருகைபோலும், இடியினுல் ஏங்கிய பாம்பைப்போலும் ஒடுங்கி, சூரியனுக்கு முன்னுகிய பனியைப்போற் றெலைந்து, பலதிசைகளிலும் புகுந்து, ஓடி யொதுங்கிப் போயினுர்கள். இவ்விதமாக முனைபுகுந்த திரிகர்த்தரும், அவர் சேனைகளும் யுத்தஞ்செய்யச் சத்துவமில்லாமல் திக்காலொருவராய் ஓடவும், மேக கூட்டம்போன்ற பஞ்சகர்த்தருமவர் சேனைகளும் எஞ்சி யிளைத்துப் பஞ்சுகளைப்போலப் பஞ்சைகளாகி வாடவும், நாராயண கோபாலர்களெல்லாம் ஆபரணங்கள் அறுந்து அருமையாகிய கவசங்கள் கிழிந்து, தலைதறிந்து, வில்முறிந்து, இரைந்து சாகவும், இன்னும் பலர் புறமுதுகிட்டுப் பறந்து போகவும்; உயர்ந்த மரத்தின் கிளைகள் சுழன்று மளமளவென்று முறிய பலங்கொண்டெழும்பி வீசியடிக்கும் பெருங் காற்றைப் போல் சுற்றித் திரிந்து, உக்கிரமாகிய பாணங்களைப் படபடாகாரத்துடன் தொடுத்து, வெற்றியை பெறும்படியாகிய யுத்தத்தைச்செய்த அர்ச்சுனன்பேரில் எதிர்த்து, வந்தவர்களுடைய கீர்த்தியெல்லா மழிந்து, குதிரைகள் எல்லாம் ஒழிந்து, இரதங்களெல்லாம் நொறுங்கி, வேகமோங்கிய பாணங்களெல்லா முறங்கி, ஆயுதங்களுடனே கரங்களற்றுவிழ அநேக இடங்களிலும் அம்புகள் உருவியெழ நெக்குவிட்டுத் திக்குகெட்டு அழிந்தவரும், உயிர் அற்று ஒழிந்தவரும், ஓடிய இரத்த வெள்ளப் பள்ளத்தில் விழுந்து, உட்கி மங்கினபேரும், மாம்சாதிகள்-ஊன்-நிணங்கள் முதலியதை கெடுத்து எலும்பைப்பற்றி உருவுகிற பாணங்களால் உயிர்போகாமல் நிலைத்து நின்றவரும், இதுவரையில் வெகுதூரத்திற் சென்று திரிகர்த்தர், சஞ்சகர்த்தர், நாராயண கோபாலர் முதலான பேர்களில், அளவிடற் கரிதான பேரைப் பஞ்சு பஞ்சாகப் பறக்கடித்து இறக்கச்செய்ததும் போதாமல், எஞ்சிநின்ற நமக்கும் எமனுய் வந்துவிட்டானே என்றழுபவரும், இப்படிக்குப் பற்பலவிதமாய் அர்ச்சுனனுக்கெதிர்ப்பட்ட வீராதிவீரத் தலைவர்களெல்லாரும் வெந்து வெதும்பிப் போகும்படியாய் கொடும்போர் விளைத்திருந்தனன் விஜயகாண்டீபதரன்.

### திரிகர்த்தராதியரிற் பதினெண்ணுயிரவரை வதைத்த அருச்சுனன் தருமராஜனிடம் வருதல்

அந்த வேளையில், முரசக் கொடியினையுடைய முன்னேன் செங்கண்மாலைச் சிந்தித்தவுடனே தேவகி நந்தனன் தெரிந்துகொண்டவராய் திரிகர்த்தாள் சஞ்சகர்த்தாள் முதலிய எல்லாரும் முனைமுகத்தி லொழியும்படியாக

யுத்தஞ்செய்து ஜெயங்கொண்டு மகா வீரசந்தோஷமடைந்த நீல நிறமேகத் தேகவடிவினையுடைய அர்ச்சுனன், இன்னமுந் தன் கையில் மின்னற்போற் பிரகாசிக்கும் விஜய காண்டீபத்திலிருந்து, மேலுமேலும் புறப்படும்படியாகிய இந்திராஸ்திரம், வருணாஸ்திரம், வாய்வாஸ்திரம், குபேராஸ்திரம் என்று சொல்லப்படும். இப்பேர்ப் பட்ட பாணங்களில் - ஒன்று-பத்து - நூறு-ஆயிரம், பதினாயிரமாக வெளிப்பட்டுக்கொண்டு எதிரிகளெங்கே? எதிரிகளெங்கேயென்று இரைச்சலிட்டு வரும்படியாக எட்டுதிக்கு மறையும் படி விட்டுக்கொண்டு வராநிற்க, அவனது முகத்தை நயமாகப் பார்த்து, அவன் கொண்டிருக்கும் மனக்களிப்பையு மறிந்துகொண்டு, ஓ அசைவற்ற மனத்தையுடைய விஜயனே! நாம் நெடுந்தூரம் வந்துவிட்டோம். நமது சேனைகளை அணிவகுத்து இருக்குமிடத்தில் உத்தமனாகிய தர்மராஜனைப் பகதத்தன் வளைத்துக்கொண்டு வினைமுற்றிய அரிய யுத்தத்தைச் செய்கிறான்போலு மிருக்கிறது. இவ்விடத்திற் சஞ்சகர்த்தர் சேனையிலும், திரிகர்த்தர் சேனையிலும் பதினெண்ணாயிரம் படைவீரர்கள் இறக்கும்படியாய் ஒரே வயிராக்கியமாக நின்று பகழி விடுத்து யுத்தஞ் செய்து வெற்றிபெற்று பகைவருடைய பலமடங்கச் செய்தாய். இனிமேல் உன்னுயிருக் குயிராகிய தர்மராஜனைப் பிடிக்கத் துரோணர் சபதஞ் செய்திருந்த சங்கதியை ஸ்ரீ கிருஷ்ணனும், தம்பியாகிய அர்ச்சுனனுந் தெரிந்திருந்தும் நம்மை விட்டுப் பிரிந்து போனார்களேயென விசனப்படுவார். ஆகையால், அதிசீக்கிரத்தில் உன் தமயனிடம்போய் சேர்ந்து மலைபோன்ற யானையேறிவந்து நமது படைகளை வருத்தும் பகதத்தனுடைப் பிராணனை ஒருநொடிப் போதில் வாங்குவோம் விரைவில் வாவென்று வேண்டி, காற்றிலுங் கடுவேக முடையதாய்த் தாண்டிச் செல்லுஞ் சுவேதவாம் புரவியைத் தூண்டி, தன் மனம்போன்ற அழியா ரதத்தில் இருக்கும் அவ்விந்திர குமாரனுடனே தாமும் நெருப்புங் காற்றும் நேரிட்டதைப் போல் நெடுநில நடுங்க, கடல்படை கலங்கத் தேரை செலுத்தி, தாங்கள் வருவதைத் தர்மராஜன் அறியும்படியாக சங்கத்தொனி செய்து, க்ஷணப்போதில் மலைகளின் சிறகை யறுக்கப் புறப்படும் வஜ்ஜிராயுதம் போலவும், உதயகிரியி லுதித்த சூரியனைப் போலவும், விகடதட கரடக் கைமலையாகிய சுப்பிரதீபமென்னும் யானையின்மீதி லேறிவந்து சேனைகளின்பேரிற் பாணங்களைப் பொழிந்து போர் புரியும் விக்கிரமனாகிய பகதத்தனை உக்கிரமத்துடன் வந்து வளைத்தார்கள்.

இப்படியாக வந்து வளைத்த அர்ச்சுனனுடைய தேரிற்கட்டிய அனுமக் கொடியானது, ஆகாயத்தை யளாவி அங்குள்ள மேகத்தை நிலை குலையச் செய்யும்படி படபடாத் தொனியுடன் பறக்க, சமுத்திரத்தி லோடுங் கப்பலைப்போல் தரையைப் பிளந்தோடி வரும் அவ்விரதத்தின் ஓசையைக் கேட்டமாத்திரத்தில், போர்முகத்திலுள்ள யாவரும் விஜயன் வந்தான்; விஜயன் வந்தான் என்று வொரு பெருங் கூச்சலிட, அந்தக் கூச்சலை அக்கிரகண்யராயிருந்த தருமராஜன் முதலானபேர்களறிந்து, ஜானகி நாயகனாகிய தாசரதியின் வில்லுக்கு மேற்பட்ட வில்லினையுடைய தனஞ்செயன் வந்துவிட்டபடியால், நமக்கொரு பயமுமில்லை. இனிமேல் யுத்தமும் முடிந்தது பகதத்தனும் மடிவானென்று இன்பமுற்றதல்லாமல், இளைத்துப் பயந்தோடிய பாண்டவ படைவீரர்களெல்லோருங் கூட்டமாகக் கூடி வந்து காண்டீபனைச் சேர்த்துக் கொண்டார்கள். அந்த வேளையில் வீமசேனன் பேரில் வயிரங் கொண்டு யுத்தஞ் செய்து வராநின்ற பகதத்தனைவன், அவ் வீமசேனனுடைய போர்முனையை விட்டு விஜயனை நோக்கி நகைத்து, அடடா அர்ச்சுனா! நீ எவ்விதமாக ஒட்டிக்கிட்டி யுத்தஞ் செய்தாலும் இன்றையப் போரில் என்னைச் செயிக்க உன்னாலில்லை என்னை வெல்லுவது உனக்கு மெத்த அருமையாயிருக்கும். உன்னைச் செயிப்பது எனக்கு மெத்தச் சுகமாய் இருக்கும். என்று சொல்லித் தானேறிய மும்மதக்களிற்றை நடத்தி வந்து அழல் நெருங்கிய மனமும், பொறி பறக்கும் விழியும், புகை புறப்படு மூக்கும், அனல்கள் வீசிய காதும், மேக முழக்கம்போல வெடித்த சொல்லும், கடித்தப் பல்லு முடையவனாய் வில்லை வளைத்து குணத்தொனி காட்டி, விதவிதமாகிய மின்னற்போன்ற பற்பல கணைகளை அற்புத-நிற்புத-பற்புத மென்னும்படியாக வசையில்லாப் புகழினையுடைய விஜயன் மீது விடுத்தான். அர்ச்சுனனும் அதிக பலமுள்ள தனது வில்லை வளைத்து டங்காரஞ் செய்து, சந்திராஸ்திரம், கருடாஸ்திர முதலியவைகளுக் கொப்பாகிய கொடியப் பகழிகளை யெல்லாந் தொடுத்து, வரமும் உரமும்

பெற்ற தாவள்யமாகிய மதவெற்பை நடத்தி வரும் பகதத்தனுடைய வில்லையும், கவசத்தையும், துவசத்தையும் அறுத்து, மேலும் மேலும் பற்பல விஷக்கணைகளையும் விடுக்கிறபோது, அந்த பகதத்தனனவன் சரிக்குச்சரியாய் சரம்விட்டழித்து, ஒப்பற்ற வேலாயுதத்தை யெடுத்து விஜயனுடைய தேர்ச்சாரதியின்மேல் வெகுண்டுவிடுத்தான். அவ்வேலாயுதமானது, ராக்ஷசக் கூட்டங்களை யெல்லாம் வென்று கொன்று மென்று தின்று மாமிச முதலிய உதிரத்தின் ருசியைக் கண்டிருப்பதாகையால், அதிகவேகங் கொண்டு அண்டமுகடு நடுங்க வருவதை அர்ச்சுனன் கண்டு, வச்சிரக் கணையால் முட்டவிட்டுத் தறித்து திரிபுர தகனனுகிய சிவ பெருமானைப்போல் நகைத்து, பகைத்துப் போர்புரியும் படிக்குப் பகதத்தனுடன் வந்த விகடதடகரட திடகாத்திர குஞ்சரங்களெல்லாம் பஞ்சாகப் பறந்திறக்கப் பகழிமழை பொழிந்தகாலையில், குடுகுடு குடுகுடு கும்கும் கும்மென, படபடபட பம்பம் பம்பம்மென வந்து விழுந்த அந்தப் பகழிகளினல் யானைக் கும்புகளெல்லாம் வம்பாயழிந்து, துதிக்கை தறிந்து, காதறுந்து, கால்முறிந்து, வாலொடிந்து, உடல்கிழிந்து, உதிரம்வழிந்து, குடலொழிந்து, தொடையொடிந்து, நாவழிந்து,வாயுங் கிழிந்து, கழுத்தறுந்து, மாலைகள் கரிந்து மணிகளுடைந்து, கொத்துச் சித்திர வேலை பெற்ற தங்கத்தாற் செய்த கிம்புரிப் பூண்கள் கட்டிய கொம்புகள் முறிந்து, மலைக்குகைப் போன்ற வயிறு பீறுண்டு, மண்மேலார்ந்து மாவாய்ப் பொடிந்ததுகள். இந்தப்பிரகாரம் போர்முகத்திற் பேர்பெற்ற யானைத் தலைவராகிய சேனைத் தலைவர்களும், வெற்றி வயவர்களும், பிணக்காடாய்க் குவிகிற ரணக்களத்தில் நிற்க மாட்டாமல் முனைகெட்டுப் புறமுதுகிட் டோடினர்கள்.

**அர்ச்சுனன் தன்மேலெதிரிவிடுத்த வேலைத் தடுத்துத் தாங்கிய கண்ணனை வெறுத்துக் கொள்ளுதல்**

அப்போது பூர்வத்தில் அரக்கரை வெல்லவேண்டுமென்று தேவேந்திரன் வந்துத் தன்னைப் படைத்துணை யிரந்தபோது, அவனிஷ்டப்படியே ராக்ஷசாளைக் கொன்று ஜெயஞ் செய்து அரசுகொடுத்த காலத்தில், அத் தேவேந்திரனனவன் சந்தோஷித்து தனக்குக் கொடுத்திருந்த உக்ராக்கினி வேலாயுதத்தை எடுத்து உபசரித்து பற்குணனுக்கு மகனம் வரும்படியாய் விக்கிரமனுகிய பகதத்தன் விடுத்தான். அப்படி விடுத்த வேலாயுதமாகியது நாலாவித காலாகோலமாய் அர்ச்சுனன் மார்புக்குநேரே லக்ஷயம்வைத்து வருவதை ரக்ஷகனறிந்து, அதிசீக்கிரத்தில் எழுந்து நின்று தனது வக்ஷஸ்தலத்திற் றூங்கினர். அவராரெனில், ஒருவேளை அடியார்களுக்கு ஆபத்துவந்து அழிவுற்ற காலத்தில், அந்த அறிவுக்கணியாகிய நண்ணறிவாய் இருந்து ஆண்டருளும்ஆபத்பாந்தவும்அழியாதமுத்தி முதல்வனுமாகிய அர்ச்சுனனருகில் பார்த்தசாரதியா யமைந்த அரவணைச் செல்வன். இப்பார்த் சத்துருக்களை ஸ்மரப் படுத்துஞ் சுப்ரதீபமென்னும் யானையை நடத்தி வந்த பகதத்தன் கரகரவென்று திரிந்து எறிந்த கொடும் பகைகளைத் தீர்க்குங் கொடிய வேலாயுதமானது, கோபாலனுடைய மார்பில் குபீரென பாய்ந்தவுடன், எல்லாம் வல்ல கண்ணன் எண்ணியபடி புதிதாகிய ரத்தின ராசிகளைப் பதித்த புஷ்பஹாரம்போல் பொன் மலைபோன்ற பூரித்த திருப்புயத்தின்மீது பிரகாசிக்கும்படி வீழ்ந்தது. இப்படியாகிய ஒப்பிலாக் கருணை யுருவத்தை, காரியா காரியங்களுக்குத் துணையாகி நின்று கைகொடுக்குங் கருமத்தின்முதலை, ஆரியர்போற்றும் அறிவை தேவர்கள் முதலிய யாவருஞ் சித்தசுத்தியுடன் பரிபூரணமாய்த் தொழுது, அர்ச்சுனனுக்குத் தாட்சியு முண்டோவென்று அளவிறந்த புகழைப் பாடித் துதித்தார்கள். அப்போது அநந்த கல்யாண குணமுடைய அனுத ரக்ஷகன், அந்த வேலாயுதத்தைத் தடுத்துத் தாங்கியபோது, அர்ச்சுனன் தன்னுடல் கெட்டதைப்போதைப்போலுந் தன்னுயிர் விட்டதைப்போலும் பதைபதைத்து, வடவா முகாக்கினியாற் காய்ந்து சிவந்த வாள்போ லிருந்த கடுங் கோபக் கண்களிரண்டினுங் கனம்பொறி பறக்க, ஹா! ஹா! வென்று உடல் பதறி, அன்பு முதலாகிய யாவு மறந்தவனுய்க் கடுகடுத்து, பகதத்தன் என்பேரில்விடுத்த வேலாயுதத்தை நீர் எப்படி தடுப்பீர்? நான் அவ்வளவு கையிலாகாதவனு? என்னை நான் மறந்துபோனபோ தல்லவோ நீரேற்பட்டுத் தடுக்கவேண்டும்? இவ்விடத்தில் நாலுபேரும் என்னை நகைக்கும்படியாய் செய்தீரே? நல்ல காரியம்; நல்ல காரியம். ஓ சொல்லற்கரிய சுகானந்த மூர்த்தியாகிய இறைவனே! ஆ! ஆ! என்ன காரியம் நடத்தினீர்? என்று தான்

கோபித்தெழுந்த காலையில், கருணை மேகம் போன்ற நெடுமாலானவர் காண்டீபனைப் பார்த்து, மைத்துனா! உனக்குக் கவலைவேண்டாம். இந்த உக்ரவேலாயுதம் மேகத்திலிருந்து, பிரகாசிக்கும் மின்னலைப்போன்றது. இதை யுத்தஞ் செய்தால், எப்பேர்ப்பட்டவர்களானாலும் அவர்களுடைய பிராணனை வாங்காமற் போகாது. இப்பேர்ப்பட்ட வேலை இந்தப் பகதத்தனுக்குத் தேவேந்திரன் கொடுக்கும்போது, நிராயுதம்பேரில் விடுவையாகில், மலர்ந்த புட்பமுங் குளிர்ந்த தண்ணீரும்போலாகுமென்று வரங்கொடுத்திருக்கின்றான். அந்த உளவறிந்தவன் நானாகையால், குதிரை நடத்திய உளாவு கோலையும் போட்டுவிட்டு என் மார்பிற்றாங்கினேன். மற்றபடி வேறொரு சூது வாது இல்லை. இந்தப் பூமி யுள்ளவரைக்கும் உன்னுடைய புகழுக்கும் உன்னுடைய் வெற்றிக்கும் யாதொரு கேடுமில்லை. இதனால் உனக்கொரு குறைவுமில்லை. இதனைக் குறித்து நீ விசனப்படவேண்டாமென்று பின்னுஞ் சொல்லுகிறார்.

## பகதத்தன் வதை

அப்பா கிரீடி! இப்போது வருத்தப்படுத்தும் இயமனைப்போலொத்த இந்த பகதத்தனைக் கொல்வதற்கு இது பக்குவமாகிய நல்ல காலம். ஆகையால், இந்தப்போரைச் சீராகப் பாரென்று உலகமுதலிய உயிர்ப்பேதங்களை கருப்பத்திற் குடியாகவைத்துக் காத்தருளிய கார்வண்ணன் காண்டீபனோடுரைத்து, நீ இப்போது அப்பகதத்தன்பேரில் விடுவதற்கு பக்குவமாகிய உக்குக்கணை இதுவென்று ஒரு துரும்பையெடுத்து அருட்கடலாகிய அரிவாசுதேவன் கொடுக்க, அர்ச்சுனனானவன் சிந்தை மகிழ்ந்து, சந்தோஷத்துடன் பிரதக்ஷணஞ்செய்து வணங்கி, இருகரத்தாலும் அந்தக் கணையை பெற்றுக்கொண்டு, பூமியதிரும்படியாய் மதயானையைச் செலுத்தி, தனக்கெதிரிற் போர்பொருதும்படி வந்த அந்தப் பகதத்தனுடைய மார்பில் உருவும்படியாய் ஒருநொடியில் வடியாகவிடுத்தான். அப்போது அந்த கணையானது, சிடசிடசிடக்காரத்துடன் விர்ரென்று புறப்பட்டுக்கூவி, தத்திவரும் பரிபூட்டி, தரியலர்விடு ரதத்தின்மீது தாவி, மண்டியிட்டு சண்டைசெய்யும் மன்னர் மண்டலீகரை கூட்டிக்கொண்டு வந்த பகதத்தனுடல் முழுவது மிகுந்த நெருப்பு பற்றியபொறி யுதிர்வதைப்போல் ரத்தந்துளித்து துள்ளித் தாழவும், பலம்பொருந்திய மந்தரமலைக் கொப்பாகிய அவன் தோள்களறுபட்டு, தாள்கள் தடுமாறிவீழவும், கிரீடத்துடனே அவன் தலையறுபட்டுச் சுழன்று சுற்றும்போது உதிரமானது, செவ்வானம்போற் றெறித்துச் சூழவும், வெள்ளிமலையானது சாய்ந்து வீழ்வதைப்போல் அவனேறிவந்த சுப்பிரதீபம் என்னும்வெள்ளையானையானது, கால்சாய்ந்து வீழ்ந்து உதிரவெள்ளத்தி லாழவும் செய்து, ஆகாயகங்கையில் மூழ்கி அர்ச்சுனனுடைய அம்புறுத்தூணியில் வந்தடங்கியது. பசாசு கூட்டங்களானவை, யானைப்பிணங்களை கண்டு சந்தோஷங்கொண்டு நடப்புரிந்து கொண்டானடித்து, விஜயன்விட்ட கணையைவாழ்த்தி மகிழ்ச்சி கொண்டன. இப்பாற் பகதத்தனிறந்து, அவனேறிவந்த யானையும் மடிந்து, இவனுடன் கூடிவந்த ரதகஜதுரக பதாதிகளும் அழிந் தொழிந்ததைப் பூபாலராகிய போர் மன்னன் கண்டு, வெற்றிக் கணையை விடுத்துச் செயித்த இந்திர குமாரனையும், அந்த விஜயனுக்குத் தேர் செலுத்துஞ் சாரதியையும் புகழ்ந்தார்கள். அந்தக் காலத்தில், கிருஷ்ணார்ச்சுனனாகிய இவ் விருவரையும் புகழ்ந்து துதித்து மகிழாதபேர்களொருவருமில்லை. அப்போது, துரியோதனனுடைய படை முறிந்து வாடி வருவதையும், பகதத்தன் முடி துணிந்து உதிரந் தாரை தாரையாய் ஓடிவருவதையும், அவன் சேனைகளிறந்ததையும், சகுனி முதலிய காந்தாரர் கேட்டுப் பயந்து பதைபதைத்து, விருதுகளும், வெற்றிக் கொடியும், வெள்ளைக் குடையும் பிடிக்க, வெண்சாமரை வீச, சங்கு-பேரி-தாரை-பூரி முதலிய வாத்தியங்களெல்லாம் வெகு விநோதமாய் முழங்க, இரதகஜதுரக பதாதிகளென்னும் நால்வகைச் சேனைகளையுங் கூட்டிக்கொண்டு, நட நட வென்று பற்கடித்து விற்பிடித் தெதிர்த்து, இன்றையப்போரில் நாங்கள் யுத்தஞ்செய்து இந்த அருச்சுனனைக் கொல்லாமற் போகமாட்டோமென்று நாலா பக்கங்களிலுங் கருங்கடல்போல் வளைத்துக் கொண்டு, மருதமரமுஞ் சகடாசுரனும் மாயும்படியா யுதைத்தருளிய மாயவனாகிய வலவன், வாயுவேகம்போற் செலுத்தாநின்ற சுவேத வாம் புரவி பூட்டிய இரதத்தின்மீது இருக்கும் வீரகண்டாமணி தரித்த விஜயன்மேல் மினற்பகழி, அனற்பகழி, மேகப்பகழி, நாகப் பகழி முதலாகிய வீரசாயங்களை யமோகமாகத் தொடுத்தார்கள்.

## கௌரவரில் சகுனியின் பிள்ளைகளி லிருவர் சஞ்சத்தகரிற் பலர் வதை

இந்தப் பிரகாரங் காந்தாரத் தலைவர்கள் யுத்தஞ் செய்யும்போது, சகுனியின் பிள்ளைகளில் விடன், சேயன் என்று சொல்லும் இருவரும், அக்காந்தார தேசத்தாருக்குக் காந்துகின்ற தங்கள் கோபக்கண்களினின்றும், உதிரும்படியாகிய அக்கினிப் பொறியைப்போற் றுங்களுஞ் சினப்பொறி சிந்தி, கண்கள் சிவந்து சுழலக் கடுகடுத்துப் பார்த்து, முகம் வியர்த்தெதிர்த்து வில்லை வளைத்து மேகசெற் சிதம்போல் வில்நாணி யிழுத்து, விந்தையாய் பற்பல பாணங்களைப் பூட்டி விட்டார்கள். அந்தப் பாணங்கள் வெளிப்பட்ட மாத்திரத்தில், ஆகாயவீதியி லுலாவி, அண்ட கடாகத்தைச் சுறுசுறுவென்று துருவித் துளைத்துத் திரும்பி, விடாமழைபோற் சடசடவென்று விஷத்தைப் பொழிந்த காலையில், அதைக் கண்ட விஜயன் நகைத்து, மெதுவாய் எதிர்சென்று நின்று விஷக்கணை தொடுத்து, சந்தன குங்கும கந்த கதம்பங்கள் மணக்குந் தோளினையுடைய சகுனியின் பிள்ளைகளாகிய அப்போரிற் புலிபோன்ற அவ்விருவரையும் போக்கி, சஞ்சத்தகாளிடித்து விண்ணுலகங் குடியேறத் தாக்கி, மண்ணை விண்ணாக்கி விண்ணை மண்ணாக்கி வராநின்ற அர்ச்சுனனை, இறந்தவர்களுடைய சதுரங்க சேனைத் தலைவர் கண்டு, திகில் கொண்டு; ஐயையோ! பகதத்தனையு மாய்த்தான், அவனேறிய யானையையுஞ் சாய்த்தான், சகுனி மைந்தரையு மாற்றினான், சஞ்சத்தகரையும் விண்ணிலேற்றினான். இத்தன்மை வாய்ந்த கூர்க்கணை கொண்ட விஜயனுக்கு இளைத்தோடத்தக்க நாமெல்லாரும் ஒரு லக்ஷியமோ? என்று படைமன்னர்கள் பலரு மேங்கி இரைந்து கரையருந்த ஆற்றைப்போ லோடினார்கள். அந்த வேளையில், வஞ்சகச் சகுனியானவன், புத்திர ரிறந்த செய்தி கேட்டு உள்ளமுருகி, கண்ணீர் பெருகி, உலைவாய் மெழுகென உடலுருகி, குடல்கருகி, மந்தரகிரிபோன்ற தேரைச் செலுத்தி, வில் வளைத்து, நாணோசை செய்து, நரனை யழைத்து, கரதூஷணாள் யுத்தம்போற் கணைகளை பொழிந்து, கண்ட துண்டமாக எதிரி பாணந் தறிந்து குவியும் படியாய்ப் போர்புரியும் போது, தேவராஜ குமாரனாகிய தனஞ்செயனானவன், சில கணைகளைத் தொடுத்து அவன் விட்ட பல கணைகளையுமறுத் தவன்தேரையும் அழித்து, வில்லையு மொடித்து, சாரதி குதிரையும் சாய்த்து கவசத்துடன் வீரபட்டத்தையும் போக்கி, மற்றொரு கணையைத் தாக்கி அவனுடைய மார்புருவ விடுத்தான். இப்படியாக அர்ச்சுனன் விடுத்த பாணங்கள் தைத்த துவாரத்திலிருந்து பெருகிச் சொரியும் உதிரவெள்ளத்தினால், அந்தச் சகுனியினுடைய தேகம் மறையவும், நீங்காத வெட்கத்தினால் கண்களை மூடிக்கொண்டு கலங்கிக் காலெழாமல் நிற்கின்ற மாமனாகிய சகுனியைக் காண்டீபன் நோக்கி, அடடா! மாமா! ஏனிப்படி நொந்தீர். புகழும் பவிஷுங்கெட்டு இருந்தீர். ஐயோ! ராஜசபையில் தருமராஜன் முதலிய தம்பிமார்களுந் தழலிற்பிறந்த துரோபதையும் மனம் புழுங்கி வருந்தும்படியாய், மன்னுயிரெல்லாந் துன்புறும்படியாய், தேவரீர் செய்த மோசச் சூதைப்போல் இதுவுஞ் சுளுவென்று யோசித்துச் செயித்துவிடலாமென்று வந்தீரோ?

ஓ சௌபலராஜனே! இது ஒருவரையொருவர் வஞ்சித்துக் கெடுக்குஞ் சூதல்ல. உயிர் நிலைகெட்டு, உற்றார் உறவின் முறையாரை விட்டு, உடல் துளையப்பட்டு, உதிரம் வடியும்படியாய்த் தலைநட்டு, பாண முகத்தில் நின்று போர்செய்யாநின்ற யுத்தமாக்களும், ஊரார் குடியைக்கெடுக்கும் வஞ்சகச் சூதில் நீர் சமர்த்தர்; உமது தலையையும் உம்மைச் சார்ந்தவருயிரையுங் கெடுத்து யமலோகத்தில் விடுக்க முடுக்கும்படியாகிய வாதில் நான் தான் சமர்த்தன். ஆகையால், இன்றே உம்மை முடிக்கவேண்டியதா யிருந்தாலும், (சுவரை வைத்துக்கொண்டு சித்திர மெழுதவேண்டும்) என்னும் பழமொழியைப் போலும், (பெருமாள் இல்லாமற் றிருநாள் நடவாது) என்னுந் தன்மையைப்போலும், உம்மை வைத்துக்கொண்டு எல்லா மன்னரையுங் கொல்லவேண்டி யிருப்பதினால், உம்முடலையும், உயிரையும் இந்தவேளை காத்துக் கொள்ளும்படியாய் யோசித்து மன்னித்தேன்; நீர் ஓடிப் பிழைக்கும் விதத்தை யுன்னிப்போமென்று அர்ச்சுனன் சொல்ல, அந்த வார்த்தையைக் கேட்டுப் போர்புரிந்திளைத்த சகுனியானவன், பார்த்தனாற் பங்கப்பட்டு, மறுபேச்சு பேசாமல் மௌனமாய்த் திரும்பி, மடியாதபோர்களுடன் மனஸ்தாப மடைந்து, ஒப்பற்ற ஆண் சிங்கம்போற் செம்பொற் றேரேறி நின்ற தருமராஜனுக் கெதிரில் மதத்த புலி

போற் சென்று நின்று, வாசாமகோசரமாய் பாணங்களை வாரிப்பொழிந்து போர்புரிந்தான். அந்தவேளையில் முரசக்கொடி முதல்வன் கண்டு நகைத்து, ஓ சகுனி! கும்பலிற் கோவிந்தம் போடுவதைப்போல அரசர்கள் சந்தடியிற் சேர்ந்து திருட்டுத்தனமாய்ச் சண்டைசெய்ய வந்தனையோ? அந்தோ! இது சூதல்ல, சூதல்ல. ஓ சூதனே! வீரப்பகழிகளினாற் றேகந்துளைப்பட்டு வேகச்செய்யும் போர் என்றறிந்துகொள். ஓ மேதகனே! இதோ என்து வெற்றி வில்லேந்திய கையைப் பார்! அதோ உனது உதிரங்குழப்பிய மெய்யைப் பார்; அப்போது சபையில் நடத்திய சூதாகிய பொய்யையும் இப்போது யோசித்துப் பாரென்று தயையினையுடைய தருமராஜன் சொல்லி, ஓ வடுவில்லாத சந்திரகுலத்திற்கு வடுவேற்றி வைத்த மாபாவீ! என்று வச்சிரக் கணைகளை மாட்டி அவன் வயிற்றிலுள்ள பிச்சுப் பிடுங்க விடுத்தார். அந்தக் கணைக்கு அட்சவித்தையாலாடுஞ் சூதிற் றப்பித்துக்கொண்டு, இத்தெப்பல் முந்திவரத் தக்கவர்களுக் காகட்டும் என்று பிந்தி வந்தவர்களோடு தேரைச் செலுத்தி, தனக்கு முன்னிட் டோடும்படியானவர்களைப் பார்த்து, வெந்நிட்டோடுபவரில் யானே கெட்டிக்காரனென்று சொல்லிக்கொண்டு எல்லாருக்கும் முன்னிட்டோடினான் சகுனியானவன். அந்தவேளையில் தருமராசன் வந்தவர்களை யெல்லாம் விடாமற் றொடர்ந்து தமது கணைகளாற் சேதிக்கும்போது, வாதைகள்பட்டு அழிந்தவர் போக, ஒழிந்தவரெல்லாரும், இனி யுத்தத்திற்கும் நமக்கு வெகுதூரமென்று தருமராசன் புகழைப் பாடி, அவரவர்கள் பாடிவீடு போய்ச் சேர்ந்தார்கள்.

## துரியோதனன் துரோணாதியரோடு வீமனால் அபஜயப்பட்டு முறிந்தோடுதல்

அப்போது அந்த யுத்தகளம் எப்படியிருந்ததென்றால், உதயகாலத்திற் செந்தாமரைப் புட்ப மலர்ந்த தடாகம்போ லிருந்தது. இவைகளைக் கண்ட சேனாதிபதியாகிய துரோணாச்சாரியரும், அசுவத்தாமனும், பலம் பொருந்திய கர்னராசனும், நாகக்கொடி நாட்டிய தேரேறி வந்த நராதிபனும், துர்ச்சாதனன் முதலிய தம்பிமார்களும் ஒன்றாகச் சேர்ந்து, பூமிநடுங்க அடிக்கும் பெருங் காற்றைப்போல் வேகங்கொண்டு எழுந்துவந்து, வீமசேனனை வளைத்துக் கொண்டு, கூசாமற் கொடும் பகழிகளைக் கோர்த்து, ஆகாயம் பூமி முதலிய யாவற்றையுந் தூர்த்தார்கள். வீமசேனனும் ஆ! ஆ! நல்லரவு கண்டேனென் றெழுந்து கடுங்கோபங்கொண்டு கைகலந்து போர்செய்யும்போது, ஓ ஜெனமேஜெய மகாராசனென்னுந் தீரவீர பராக்கிரமனே! பாம்புகளினாற் கருடனிளைக்குமோ? யானைக்குச் சிங்கந் தளருமோ? இராட்சதர்களுக்குச் சக்கராதரனாகிய நாரணன் இளைப்பாரோ? ஒருக்காலும் இளைக்கத்தக்கதல்லவே; அதுபோல் மகமேருவின் முச்சிகரத்தையு முறித்த உச்சிதமுற்ற வாயுதேவனுடைய குமாரன் வீமசேனன், இந்தப் பஞ்சைகளுக்குப் பயப்படுவானோ? ஆகையாலவர்கள் தொடுத்த அனேகங்கோடி பாணங்களெல்லாம் மலையின்பேரில் விழுந்த மழைத்துளி தெறிப்பதுபோல் வீமன்பேரிற் பட்டுத் தெரித்துவிழ, இந்த வீமன் அளவற்ற கணைகளைத் தன் வில்லிற் றொடுத்து, திரிபுர சம்ஹாரஞ் செய்வதற்காகச் சிவபெருமான் வளைத்த வில்லைப்போலொத்த அவ்விஜய புல்லினிடத்திலிருந்து மீண்டும் பல வீரசாயங்களை விதவிதமாகத் தகதகவென்று விடுத்து, அவ்வரசர்களேறிவந்த ரதங்களையும் வல்லவனாட்டிய பம்பரம்போல் வானத்திற் சுழலும்படியாட்டினான். இதுவுமன்றி, ஒருமுகப்பழி, இருமுகப்பழி, மும்முகப்பழி, நான்முகப்பழி, ஐம்முகப்பழி, அறுமுகப்பகழி, எழுமுகப்பகழி, எண்முகப்பகழி, நவமுகப்பகழி, தசமுகப்பகழி, சகஸ்திரமுகப்பகழி, தசசகஸ்திரமுகப்பகழி, சதசகஸ்திரமுகப்பகழி, ஆயுதசகஸ்திரமுகப்பகழி முதலாகிய கணைகளை ஒவ்வொருதரமாய்த் தனித்தனி தொடுத்து முதன்மையாகவிருந்து யுத்தஞ்செய்த படைமன்னரின் உடல்கள்தோறுந் தீப்பற்றி எரியுந்திறம்போல், அரவிந்தக்கணை, புரம்வெந்தக்கணை, கரம்வந்தக்கணை, கதிர்தந்தக்கணை இவைகளால் மூட்டித்தியங்கும்போது, அவர்களெல்லாம் இனி எங்கள் பிராணனுள்ளவரைக்கும் முனைமுகத்தில் முந்தோமென்று ஆணையிட்டுக்கொண் டோடும்படி யோசித்தவர்களாக, அதுகண்ட வீமன் அரவக்கொடி மன்னனாகிய துரியோதனனை மடக்கி, அக்கினிக் கணைகளாற் பாதாதிகேச பரியந்தந் துவையலிட்டுத் துளையிடுவதுபோற் றுடிதுடிக்கக் காய்ச்சி, அவனுடைய மனமுங் கொதிக்கச் செய்தான்.

அந்த சமயத்தில் துரியோதனன் மனந்தடுமாறி, மாற்றாருக் கிடம்விட்டு மிகைபடச் செய்த வேதனையால் இந்தத்தீவினை விளைந்த

தென்று மீதூணருந்துவதுபோல் மிக்க விசன மருந்தி, முனைமுகத்தில் நில்லாமற் றன்னோடுவந்த மூர்க்கரை விட்டு, எல்லா வல்லமையு மொடுங்கி மதிமயங்கத் தனிமையில் நின்றான். இவ்வாறு, "மாற்றானுக் கிடங் கொடேல் மிகைபடச் செய்யேல்" என்னும் விதிகளை ஆராயாது, "மீதூண் விரும்பேல்" என்னும் விதிக்குப் பதிலாகவும், மாறாகவும் மீதூருறு கண் விரும்பி, "முனைமுகத்து நில்லேல் மூர்க்கரோ டிணங்கேல்' என்னும் விதிகளை ஆராயுங் காலமடைந்தவனாய், அளவற்ற துக்கசாகரத்திலழுந்திய வணங்காமுடி பொறுத்த துரியோதனனைத் துச்சாதனன் முதலாகிய தம்பிமார்கள் கண்டு, அண்ணா! என்ன ஒருவிதமா யிருக்கிறீர். அஞ்சவேண்டாம் விஜயலட்சுமியாகிய மெல்லியாடோள் சேர்ந்து, மேன்மக்களாவோம் புறப்படு மென்று சொல்லி, உடனே அவர்களெல்லோரும் இனி வீமனை விடுகிறதில்லையென்று வரிகள் பொருந்திய வில்லைவளைத்து, அவ்வாயு புத்திரன்பேரிற் காயுங் கணைகளைத்தொடுக்க, அக்கணைகளைக் கண்ட வீமசேனன் ஆர்ப்பரித்து அதிர்த்துத் தன் கரத்தி லிருந்துவிடும் படியாகிய சரத்தினால், அவர்கள் பிடித்த வில்லையும் நாணியையும் அறுத்து, கொல்லத் தகுந்த பல்லவங்களையுங் கோடி கோடியாய் விடுக்க, துரியோதனன் தம்பிமார்க ளெல்லோரும் ஐயோ! ஐயோ! அனியாயமே அணியாயமே என்று அலறி ஒருவர்க்கொருவர் அளவற்ற துயர்மொழிகளைப் பேசிக் கொண்டார்கள். அதைக்கண்ட துரியோதனன், அப்பா தம்பிமார்களே! சிருஷ்டிகர்த்தாவாகிய பிர்மதேவன் நமக்குத் துணையாக வந்தாலும், இந்தவீமனுடன் வில்யுத்தஞ்செய்து வெல்லுவது மெத்தவருமையென்று சொல்ல, அதுகேட்ட தம்பியரனைவரும் தமயனோடு வீமசேனனையு நிதானித்து நினைத்துமதித்து, அடடா! வீமனென்றாலும் இவனுக்கே செல்லும். அப்பெய ரிவனுக்கே தகுமென்று வாடி ஓடும் வழிதேடி நின்றார்கள். அவர்கள் எப்பேர்ப்பட்டவர்கள் என்றால், தங்கள் தமயனாகிய துரியோதன மகாராஜன் எந்தக்காரியம் முடிக்கவேண்டுமென்று நினைக்கிறானோ? அந்தக்காரியத்தை அப்போதே முடிக்கத்தக்க சமர்த்தர்களாகிய வீரவிற்றாங்கிய தாஷ்டீகர்கள். அப்பேர்ப்பட்டவர்கள் வீமனால் மெத்தவும் வருத்தமுற்று வெற்றி நஷ்டமடைந்தார்கள்.

இவ்விதமாக நின்றவர் நின்றபடி நிலைகலங்கிவாட, கண்டவர் கண்டபடி கால்விட்டோட, துரியோதன மகாராஜனையும் அவன் தம்பிமார்களையும், வீரகண்டாமணி தரித்த விற்குருவாகிய துரோணரையும், அசுவத்தாமனையும், அங்கதேசாதிபனையும், பொன்னாரமணிந்த மார்பினராகிய மன்னரையும், படைமன்னரையும், கொடைமன்னரையும், நால்வகைச் சேனைகளையும் கோலாகல வெங்கொடுங் கணைகளாற் கொல்லாமற் கொன்றான் வாயுகுமாரன். இனி நமக்குப் பிழைப்பு இவ்விடத்திலில்லை. நாமொன்றுக்கும் யீடாகோமென்று சென்றவர்போக, நின்ற சேனைகள் முழுவது மிளைத்து, இந்தப்புரத்தில் வீமசேனன் வில்லை வளைத்துக்கொண்டு யமனைப் போலிருக்கின்றான். அந்தப்புரத்தில் மாயவனாகிய வல்லவனோடு அருச்சுன னிற்கின்றான். சேனாதிபதியாகிய துரோணாச்சாரியின் தேகத்தைத் துளைத்த கணை தரித்த தர்மராச னிதோ யிருக்கின்றார். நகுல சகாதேவர்கள் அதோ உலாவுகின்றார்கள். ஆதலால் எவ்விதங்களிலும் இவர்களை வெல்லப்படாதென அமர்க்களத்தை நீங்கிச் சென்றார்கள். அப்போது பேரறத்தின் குமாரனாகிய தருமராசனைப் பிடிக்கிறேனென்ற சொர்சோர்வு படாமற் சோம்பித் திரியாமற் சாதிப்பவரைப்போன்று கூடிய தன்யாளாகிய போரரசருடன் சேனாபதியாகிப் பொற்றேரேறி, விற்றாங்கிவந்த துரோணரும் புறமிட்டோடினார். பின் நந்தியாவட்டமாலையணிந்த நரேந்திரனும், வீமசேனனாற் பரிபவமாகிப் படாத பாடும் பட்டானென்று பாண்டவச் சேனைகளு மன்னர் முதலிய யாவரும் போர்க்களத்தினின்று பராக்கிரமத்துடன் ஜெயங் கூடி யாடினார்கள். துரியோதனனும், அவனுடைய சேனைகளுந் துக்கப் போர்வையால் மூடுண்டு வாடிப் பாசறை போய் சேர்ந்தார்கள்.

இப்பால் மேகம்பொழிந்த மழைகளினாலநேக காடுகளெல்லாங் குளிர்ந்து தளிராகிய கொழுந்துகள்விட்டுச் செழுமையுடன் அரும்பிப் பலவிதமாகிய புஷ்பங்கள் புஷ்பித்து உதிர்வதைப்போல், அனேகவித நிறங்களையுடைய சிறந்த குதிரைகளெல்லாம் போர்முகத்திற் புகுந்து, மடிந்து போர்போராய்க் குவிந்து போனதைச் சூரியபகவான் கண்டு, தன்னிரதத்திற் பூட்டிய சப்தமாவென்னும் குதிரைகளுக்கும் ஒருவேளை அபாயம் வரப்

போகுதென்று அஞ்சிப் பயந்து, தேரைச் செலுத்திக்கொண்டு புறந்தந்து போனவனைபோல் மேற்கு திசையிலோடி யொளித்தான். இவ்விதமாகச் சூரியன் மேற்றிசையில் மறைந்து பொழுது போனவுடனே, தருமராசனுலும், வீமனும், விஜயனும், அபிமன்னுவினும் அடிபட்டுப் பயந்து, புறங்காட்டியோடிய புயவீரர்க ளெல்லாருந் துரியோதன மகாராஜனுடைய பக்கத்திலிருந்து, ரணக்களத்தி லிறந்துபோய்விட்ட படைமன்னர் முதலிய வீரர்களைக் குறித்து இரங்கி விம்மி அழுது, ஏக்கங்கொண்டு தூக்கமில்லாமல், கொலைத்தொழிலில் நிலைத்த மலைத்திறங் கொண்ட மலைக்குயர்ந்த மதயானையுட னிறந்தப் பகதத்தனைக் குறித்து துக்கப்பட்டு, அவனுடைய பெருமையையும், சாமர்த்தியத்தையுமெடுத்து விசேஷித்துப் பேசிக்கொண்டு இருந்தார்கள்.

அக்காலத்தில், துரியோதனன் தன்னிடத்தில் வந்து சேர்ந்த துரோணாச்சாரியரை பார்த்து, ஐயா சேனாபதியே! யானைக்கூட்டங்களைக் கண்டு ஆண்மிக்கையையுடைய சிங்கம் அஞ்சிப் பயப்படுமோ; பயப்படா தல்லவா? அதுபோல் எங்களைப்போலத் தாங்களும் பாண்டவர்களுக்கு பயப்படத்தக்கதோ? தேவரீர் கைப்பிடித்திருக்கும் வில்லுக்குச் சரியான வில் உலகத்தில் உண்டென்று சொல்லக் கூடுமோ? அப்படியிருக்க, நீர் வேண்டுமென சண்டை செய்வீராகில், பாண்டவரென்னும் பூண்டும் நிற்குமோ? என்னுண்டவனே! உமக்கு அண்டையில் வேறேருதவியும் வேண்டுமோ? தாங்கள் பாண்டவர்மீது கொண்ட அன்பு நீங்காமையாற் தொண்டனாகிய என் பேரிற் றயவில்லாமல் கிம்புரிக் கோட்டினையுடைய பட்டத்து யானைபெற்ற தர்மராஜனை வென்று பிடித்துக் கட்டிக்கொண்டு வராமல், என் சேனைகளையுஞ் சாவக்கொடுத்து, என்னையுஞ் சிந்தை கலங்கச் செய்து, சகல கலையில் நல்லவரும், சமர் செய்வதில் வல்லவருமாகிய தாங்களும் அவராலடிபட்டுப் புறமுதுகிட்டு ஓடிவந்துவிட்டீரே; என்று கோபாக்கினி அதிகரிக்கக் கண்சிவந்து துரோணாச்சாரியரை வெறுத்துக்கொண்டான் துரியோதன மகாராஜன். அப்போது, வணங்கா முடியோனுடைய பக்கத்திலிருந்த கர்னமகாராஜனானவன் கலீரென நகைத்து, ஓ துரோணரே! நேற்றையதினம் இராஜாதி ராஜனாகிய துரியோதன மகாராஜனுக்கு முன்னிருந்து முன்பின் யோசிக்காமல், யாதொரு கலக்கமுமில்லாமல் உமது மனமார, உமது வாயார தர்மனைப் பிடித்து தருகிறேனென்று வாக்கை இன்று நிலைக்கச் செய்தீரோ? ஆ! ஆ! சபாஷென்று உல்லங்கனஞ் செய்து, துரியோதனனை நோக்கி கர்னன் சொல்லுகிறான்.

ஓ சந்திரகுலத்தார்கள் இந்திரனென்று வணங்குந் தார்வேந்தே? கேளும்: உலகத்தில் கிளிப்பிள்ளையானது எத்தனைவித வார்த்தைகளைக் கற்றிருந்தாலும், பூனை வாய்ப்படுகிறபோது, கீகீகீ என்று கூவத்தக்க தன்னுடைய சுவயஜாதீரம் வருமே யல்லது வேறில்லை. அதுபோல் எத்தனை விதமாகிய வித்தைகளைக் கற்றிருந்தாலுங் கல்லாதிருந்தாலும் உத்தமகுல க்ஷத்திரியன் மாத்திர முறுதியுடன் வெற்றிபெறுவானே யல்லது, வேதமே கதியென்று ஓதிக்கொண் டிருக்கும் பார்ப்பாருக்குக் கட்டாண்மை யென்பது எவ்விதத்தில் வரும்? திடதீர முதலிய மனவலிமை எப்படி யுண்டாகும்? வெறுவாயை மெல்லுகிறவனை வெற்றிலை தாவென்று கேட்ட சம்பந்தமாச்சுது. இந்த வேதியராகிய துரோணரை நீர் நம்பியதென்று மிகச் சிறித்தான் சத்துருக்களுக்குக் கோடையிடிபோன்ற கர்னனானவன். இப்படிசொன்னமாத்திரத்தில் தெளிந்த விவேகத்திற் சிறந்த சேனாபதியாகிய சிலையாசிரியருடைய சிந்தை நொந்து வருந்தி, செவ்வரக்கைப்போல இரு கண்ணுஞ் சிவந்து, தேகம் படபடப்புடன் துடிதுடிக்கவெழுந்து, மேக முழக்கமும் வேறாக இரைந்துக் கொதிப்பேறி, அங்கதேசத் தலைவனைப் பார்த்து ஆக்ரமித்துச் சீறி, ஒரு வார்த்தைக் கூறினார். ஓ கர்னா! நீ உத்தம க்ஷத்திரியன் தான், நீ வெற்றிபெற்றது வேணதுண்டு. அதுநிற்க, இந்த மன்னவன் பொருட்டில் அதிக பக்ஷத்துடன் கருணை தப்பாதவனாக கலந்து பேசவந்த நீயானால், அல்லது இன்னமும் வீரகண்டாமணியும், வீரபட்டமுங் கட்டிய விறல்வேந்தர்களில் யாவரானாலும், அத் தருமனுக் கெதிர் நின்று சண்டை கொடுத்து நிலைநின்ற வெற்றிபெறக் கூடாதோ? நீயல்ல, உன்னைப் படைத்த பிர்மாவல்ல, அப்பிர்மாவைப் படைத்த நாராயணனல்ல, அந்நாராயணனைப் படைத்த நாரிபாகனல்ல, இன்னு மெப்பேர்ப்பட்டபேர் இம்முச்சகத்தினு முளரோ. அப்பேர்ப்பட்டவர்களில் எவ

ணுவதாகட்டும், அத் தருமராசனைக் கையினுற் றீண்டவுஞ் சவுக்கியப்படுமோ? உனக்கு எப் போதும் இருந்த இடத்தி லிருந்துக்கொண்டு சட்டமுந் திட்டமும் பேசத் தெரிந்தவனே யல்லது, சமர்முகத்தில் நின்று சாதிக்கத் தக் கவனல்ல; உன்னோடு என் வீண்பேச்சென் துரியோதனனைப் பார்த்துச் சொல்லுகிறார்.

ஓ துரியோதன மகாராசனே! போனது போகட்டும்; இப்போது ஒன்றும் முழுகிப் போகவில்லை. இன்றைக்கு நான் தப்பிப் போனதுபோக, நாளை யுத்தத்தில் உன் சபையி லிருக்கும் உனக்குரிய திறவான்களைப் போகச் சொல்லி, தங்கள் வில்லாண்மையினுல் வேந்த ஞகிய தருமராஜனைத் துன்புறும்படியாகச் செயித்துப் பிடித்துக்கொண்டு வரச்செய்யும். அப்படி செயம்பெற்று லொழியத் திரும்பிப் புறமுதுகிட்டு வாடியோடிப் பதுங்கி வராத வீரர்க்கு விடை கொடுத்தனுப்பும். ஓ வெற் றியை யுடைய வேந்தனே! பாண்டவரிடத் தில் நான் பட்சம்வைத் திருக்கிறேனென்று கோரமாகிய இந்த யுத்தமுகத்தில் ஓர் வார்த் தைச் சொன்னீர். அது உமக்கு நன்மையல்ல; (வஞ்சகம் பேசேல்) எனும் நீதியை மறந்து பேசுகின்றீர். மன்னவரெதிரில் (வாதுமுற் கூறேல்) என்னும் வாக்கியத்தை நான் துறந் துப் பேசுகிறேன். மனஸ்தாபம் வேண்டாம். மேலும், கெலித்தவரிற் பாதியென்னுஞ் சில துஷ்டாளுடைய வார்த்தைகளைப்போல் நான் போகமாட்டேன். சேனுபதிப் பட்டங் கட்டிய காலத்தில், நீ ரென்னைக் கேட்டபோது, தர்ம ராசனைப் பிடிக்க என்னுலாகாது. இன்னொரு ஜென்மத்தி லென்னமோ? இந்தச் சென்மத் திற் கூடாதென்று ஆதியில் ஸ்திரமா யுமக்கு நான் சொல்லியிருக்க, நீரிப்படி பேசத்தகாது. மேலும், அத்தருமராசன் பக்கத்தில் வீமார்ச் சுனுளை சேரவொட்டாமல் அகலவைப்பா ருண்டாளுல், அப்போது ஒரு கை பார்க்கலா மென்றுஞ் சொன்னேன். அதற்குச் சம்ம தித்து சபதங்கூறிப் புறப்பட்ட திரிகர்த்தா ளுஞ் சஞ்சகத்தாளும் பட்டபாடுங் கெட்ட கேடுந் திரிலோகங்களு மறிந்து விட்டன. அவருள், ஏககாலத்தில் பதினெண்ணுயிரம் வெண்கலரதக்காரர் கங்கணங்கட்டி மாண்டார் கள். திரிலோக சக்ரேஸ்வரஞகிய தேவராஜ னுக்கு சகாயஞ் செய்த பகதத்தனே போய்த் தகதத்தவென வீமனோடெதிர்த்து, தானுந் தானேறி வந்த சுப்ரதீப யானையுமாக தக தத்தவென் கூத்தாடி மாண்டான். இப்படி யெல்லா மிருக்க, ஏன் வீணை வார்த்தை யாடுகிறீர் என்று மிகவுங் கோபமாகச் சொல் லிப் பின்னுஞ் சொல்லுகிறார். ஓ அரவகேத னனே? எனக்கு மாத்திரம் வில்லாண்மை யுண்டென்று என்னைப்போற் சபதங் கூறிச் சொல்லாமல், தங்க ளிஷ்டப்படி சென்றுப் போர் முகத்தில் வென்று தங்கள் புகழ்பெற்ற புயவலிமையால், தர்மநந்தனைக் கைப்பிடி யாகப் பிடித்துக்கொண்டு வரத்தக்க வல்லப முடைய பேர்க ளிருந்தால் புறப்படலாம்? இதற்கு யாதொரு தடையுமில்லை. அப்படி கொண்டுவந்த பேர்கள் இவ் வுலகத்திற்கு மாத்திரமல்ல. ஈரேழு பதினுன்கு லோகத்திற் கும் அவர்களே வீரர். அவர்களே சூரர். அநேக வரிசை முதலிய பாக்கியங்களும் அவர்களுக்கே யுண்டாமென்று சொல்லி மேலுஞ் சொல்லுகின்றார்.

ஓ அரசனே! இன்னுங் கேளும்; எனக்கு மிஞ்சினபே ரொருவருமில்லை. நானே வில் லாளியாகிய வல்லவனென்று சொல்லாநின்ற வீரன் எவனோ, அவன் வெவ்விய போர்புரியு மிடத்தில் வந்தால், ஓர் அணுவுக்கு முதவா மற் புறம்பிலோடித் தன்னுயிரைக் காப்பாற் றிக் கொள்ளுவானேயன்றி, போர்புரிய போகிறதில்லை. ஆகையால், காய்ந்த ஓலைக் கல கலவென்று சப்திக்கும். பச்சோலை அப்படிச் சப்திக்காது. வெண்கலத்தில் ஓசை மிகுந்து காட்டும். பொன் கலம் ஓசைப்படாது. இவை போல், வம்பாகிய பேச்சுகளை வம்பர் பேசு வார்களல்லது, நம்பத்தகுந்த பேச்சை பேசார் கள். அதைக் குறித்து நான் பேசுவதில் வரு கிற லாபமென்ன? அந்தத் தர்மராஜனுடைய திறம் யாருக்குத் தெரியும்? அக்கரைக்கிக்கரை பச்சென் றிருக்குதென்று திரிகின்ற பசுவைப் போல் வயிறுவளர்க்க, நாவுருசி பார்த்துக் கொண்டு திரிபவர்களுக்கோ தெரியும்? (கூடிப் பார் கூட்டுப்பயிரிட்டுப்பார்) என்றுரைக்கும் பழமொழிபோல், அந்த முரசக் கொடியினை யுடைய முதல்வன் கைக்கொண்ட வில்லாண் மையையும், அவன் தொடுக்கும் அம்பின் திறத்தையும், இராமனுடைய வில்லுக்கும் பாணத்திற்கும் மேற்பட்டதாக சொல்லவேண் டுமேயன்றி, அதற்கு ஒப்பாகவுஞ் சொல்லப் படாது. அந்த ராமமூர்த்தியின் வில்லுக்கும் பாணத்திற்கும் ஒப்பாகச் சொல்லுவோமாகில், அதிக பாவம் வந்துச் சம்பவிக்குமே யல்லது

வேறில்லை. பார்த்திபனே! அப்பேர்ப்பட்ட கைக்காரனாகிய தர்மராஜனை லேசாக நினைக்கக்கூடுமோ? அந்தத் தர்மராஜனுடைய பாணப் பிரயோகத்தை நூறு விதமாகச் சொல்ல வேண்டிய தில்லை. ஒருவிதமாகிய சூக்ஷியாய் உமது மனதிற் புலப்படும்படி சொல்லுகிறேன் கேளும்.

ஓ இறைவனே! நான் போய் தர்மராஜனை மடக்கிக் கொண்டு யுத்தஞ் செய்யும் போது, அவன் சில அஸ்திரங்களை விடுத்தான். அந்த அஸ்திரங்களானது எப்படி வந்த தென்றால், கொத்துக் கொத்தாகவும், பத்துப் பத்தாகவும், குத்துக் குத்தாகவும், வரிசை வரிசையாகவும், கும்பு கும்பாகவும், கூட்டங் கூட்டமாகவும், நிரை நிரையாகவும், நெருக்க நெருக்கமாகவும், கறைதுரை தெரியாமல், கொத்துமாலை - கோத்தமாலை - தொடுத்தமாலை-தொந்தமாலை முதலிய மாலைகளைப் போலப் பலவரிசையாய்ப் பலம்பெற்று உரங்கொண்டு, இறகுகளை யுடைத்தாய்க் குணத்துவனி கொண்ட வில் நாணியை உந்தி விடுக்க வந்து, ஒன்றோ டொன்றேக்க நான் விடும் பாணங்களின் முனையைக் கவ்வி பொறிமுகம் புகைமுக முதலாகிய பல முகங்களைக்காட்டிப் போராடியதன்றி, எதிர்க்கெதிராக நான் தொடுத்த பாணம் தடுத்தறிபட்டு விழும்படியாகப் பிரயோகஞ் செய்தான் வெற்றிபெறத் தத்திவரும் புரவி பூட்டிய தேரினையுடைய அம்முரசக்கொடி முதல்வன். இன்றையதினம் என்னோடு யுத்தஞ் செய்து சாதித்த திறத்தை நான் என்னவென்று சொல்வேன்? (சொன்னாற்றுக்கம் அழுதால் வெட்கம்) என்னுந் தன்மையினாற் பேசாமல் இருக்கிறேன். ஆகிலும் ஒரு வாக்கியங் கேளும். நான் விட்ட கணைகளெல்லாம் ஒரு விதைக்கு ஒரு முதல் முளைக்கு மென்பதைப் போல், ஒன்றுக்கொன்றுக்குப் பதினாயிர மென்பது போல் அபரிமித மில்லாமற் பெருகி வந்தன. ஆதலால், நான்றொடுத்த வாளி விதையாகவும், அவன் றொடுத்த வாளி விளையாகவும் இருப்பதெனக் கூறலாயிற்று.

"வன்மைக்கு வயவீமன் வின்மைக்கு முகிலூர்தி மகனன்றி வே, றின்மைக்கு மாவிந்தைகிரி கன்னிகரியென்ப ரெம்மன்னரும், வின்மைக்கும் வன்மைக்கு மிளையோரை யனையாரைமிக வெண்ணலான், தன்மைக்கு நிலையான தருமற்கு நிகர்யார் தனித்தெண்ணவே"

கேளும்; நற்நல சோமனே! நயவலிமைக்கு வீமசேன ராஜனென்றும், வில்வலிமைக்கு விஜயராஜனென்றும், இவர்களுக்கு மேலாகிய பேர் இவ்வுலகத்தில் இல்லை யென்றும் எல்லா அரசர்களிலுஞ் சொல்லுவார்கள். அப்பேர்ப்பட்ட விற்பயந்திறமைக்கும் வெகு பேரை ஒப்பாகச் சொல்லலாம். ஆனால், சாந்தமும், பொறுமையும், தயையுமுடைய தர்மராஜனது நன்னெறி நிலைக்கு நிகராகிய பேர் யோசிக்குமிடத்திலெங்குமிரார்கள். ஆதலால், வீணாகக் கூவத்தக்கபேர்கள் நீயிற் குதித்தார்கள். இப்பேர்ப்பட்ட வீண் வாய்பேச்சிற் காரியமில்லை. உலகங்குலையப் போர்புரியுந் தர்மராஜனுடன் எதிர்த்து யுத்தம்பண்ணத்தக்க பேர்களுண்டாயிருக்குமாகில், அவர்களை நாளைமுதல் நடக்கும் யுத்தத்தில் நான் பார்க்கவேண்டும்; வஞ்சனையில்லாமல் புறப்படுங்கள். உப்பு சப்பு ஒப்புவமையில்லாமற் பேசும் பேச்சுகளில் என்னபயன்? ஈதெல்லாம் விருதாவாகிய காரியமென்று வெகு நியாயங்களைச்சொல்லி, வெவ்விய சிலைக்குருவானவர் தன்னுடைய பாடிவீட்டுக்குப் போயினர். கிரீடாதிபதியாகிய கௌரவகுல முதல்வனும், அங்க தேசாதிபன் முதலிய அரசர்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டுத் தானுஞ் சயனத்திற்குப் போயினர். அப்படியே விடைபெற்றுக்கொண்டு மகத தேசாதிபரும், சூரதேசாதிபரும், சஞ்சத்தகரும், திரிகர்த்தரும், பகதத்தனைச்சார்ந்த பார்த்திவரும், காந்தாரத் தலைவனைச்சேர்ந்த காவலரும், அவரவர்கள் புத்திரமித்திராள் மாண்ட ரணக்களத்திற் சென்று, உயிரற்று வீழ்ந்து கிடக்கிற சரீரங்களையெடுத்து பதனம்பண்ணி, தங்கள் தங்கள் பாடிவீடுபோய்ச் சேர்ந்தார்கள். துரோணச்சாரியரும், கிருபாச்சாரியரும், மற்றுமுள்ள பேர்களுஞ் சவுரியத்துடன் தாங்கள் பட்டபாட்டுக்குப் பதிலாகப் பாண்டவசேனைகளைப் பாடுபடுத்த வேண்டுமென்னும் பவுரிஷமடங்காமல் வெகுநேரங் கண்விழித்திருந்து, அப்பால் நித்திரை செய்தார்கள். என்று சொல்லிய வைசம்பாயனரை ஜெனமேஜெயராஜன் பணிந்தெழுந்து, சுவாமி! அர்ச்சுனனுக்காக நம்பெருமானாகிய ஆதிமூலப் பெருமான் அன்புவைத்து நடத்தும் பக்ஷங்களைக் கேட்க இச்சையுண்டாயிருக்கின்றமையால், மேல் நடந்த பதின்மூன்றாநாட் போரையுந் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்ன, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினர்.

பன்னிரண்டாம்போர்ச் சருக்கம் முற்றிற்று.

# இப்பால்,
# பதின்மூன்றாம்போர்ச் சருக்கம்

### கண்ணன் துதி

சங்கை யிலாவகையம்படரா லுயிர் தளர் பொழு தத்தருகே, மங்கையர் சூழ விருந்தழு துள்ள மயக்கினும் யான்மறவேன், கங்கையு நான்மறை யுந்துள வுங்கமழ் கழலிணை யுந் திருமா லங்கையின் மீதொளிர் சங்குநேமியு மஞ்சன மேனியுமே.

ஓ ஆவிதத்தி யெழத்தரியலர் சீறிய தாவி தத்திவரும் பரிமிசையேறிய அண்ணலே! கேளும்: பன்னிரண்டாநாள் யுத்தத்தில் நிலை பெற்ற வயவீரர்க ளெல்லாருந் தேவர்களாய் வீரசொர்க்க மடைகின்ற நிலைமையைக்கண்டு, நாம் அவர்களுக்கு அமுதம் பருக்கவேண்டு மேயென்று பூரணமாகிய கலைநிறைந்த சந் திரன் மறைந்துபோக, அந்த ராத்திரியாகிய சமுத்திரத்தில் நீலமணிபோல் ஒளி மழுங்கிப் போன சூரியனனவன், நெருங்கிப் பிடித்திரு ந்த இருளை நீக்கிக்கொண்டு, மாணிக்கவட்டம் போன்ற கதிராயிரத்தையும் மலியக்காட்டி வார்கடல்சூழ்ந்த கீட்டிசையி லுதயமாயினன். உடனே, அன்றிராத்திரி முழுவதும் விசனங் கொண்டிருந்த நாகக்கொடியோனாகிய நராதி பன், பதின்மூன்றும்நாட் காலமே நித்தியவிதி முதலாகிய கடன்களை முடித்துக்கொண்டு, தனது படைகள் பிரயாணமாகும்படி பேரிகை முழக்கி வைத்தான். அப்போதே அரசனு டைய ஏவலின்படி அளவிறந்த சேனைசன் னங்களும், படைத்தலைவர்களும், மகுடமன்ன வர்களும், அர்ச்சுனனைத் தகைத்து போர்புரி யும்படியாய் திரண்டுவந்தார்கள். அந்தவேளை யில், நேற்றையப்போரில் நெஞ்சழிந்து வருந் திய விற்குருவானவர் நடந்துபோன முன்னை நாளைப் பார்க்கிலும், பின்னை நாளாகிய இன் றையத்தினம் அதிவேகமுங் கடுங்கோபமும் உடையவராய், பஞ்சவரில் முதல்வனாகிய தர்ம ராஜனை எப்படியும் கைப்பற்ற வேண்டும் என்று மனத்துணிவு கொண்டவராகி, சிலைக் கணைமனைத்தும் செங்கையிற்றாங்கிய துரியோ தனமகாராஜன் குமாரனாகிய இலக்கணகுமார னும், அத் துரியோதனனுடைய இச்சாசத்தி யின் வடிவமாயுள்ள துச்சாதனன் முதலா கிய தம்பிமார்களும், கோபக்கண்களிலிருந்து புலிங்கசாலம் புறப்படச் சத்துருக்களைக் கலங் கச் செய்யுங் கலிங்கதேசாதிபரும், வெற்றி வேலையும் வீரவில்லையுந் தாங்கி ஜெயப் பிர தாபங்கொண்ட சிந்துதேசத் தலைவரும், நயத் திரதமூறுஞ் சொல்லையுடைய செயத்திரத னும், இன்னும் பற்பலராகிய மற்புயக்காவ லரும் முதன்மையாய்ப் பேரணியில் நின்று, பூமியிலிருந்து பொடி யெழுந்து ஆகாயத்தை மறைக்கும் படியாய்ப் போர்பொரக் கருதி னார்கள். அந்தச் சமயத்தில், சேனாதிபதி யாகிய துரோணாச்சாரிய ரானவர் பத்மவியூகங் கட்ட வேண்டுமென் றெண்ணி, இயாவருங் கொண்டாடும் படியாகிய கர்ன்ன - அலம்பன் - சல்லியன் - அசுவத்தாமன் - அடலாயிரவாகு - அகம்பன் முதலாகிய பேர்களைத் தாமரைப் புட்பத்திற்கு நடுவிலிருக்குங் கருணிகையா யமைத்து, திசாதிசைகளி லு மிருந்து வந்த பதினெண்பாஷை மன்னவர்களையும்,கிருபாச் சாரி முதலாகிய வயவீரர்களையும், மேற்சொல் லிய கருணிகையின் சுற்றிலு மிருக்கும் அக விதழாய் நிறுத்தி, போர்த் திறத்திற் வல்ல வராகிய சுதாயு - சதாயு - நயுதாயு முதலிய மகாரதர்களை யெல்லாம் புறத்திலிருக்கும் புற விதழாய்ப் பொருத்தி, ஒவ்வொரு யிதழினு டைய உருவத்தைப்போல் யானை ஒருவரிசை, தேர் ஒருவரிசை, குதிரையொரு வரிசை, பதாதியொருவரிசை இந்தப்படி நால்வகைச் சேனைகளா லமைத்து, ஒவ்வொரு யிதழுக்கு மேற்கூறிய அதிரத மகரத சமரதாள் முத லிய வீரர்களைக் காரியத்தலைவராக நிறுத்தி, இவ்வுறுப்புக ளனைத்தும்மைந்த ஆயிரமித ழையுடைய தாமரை மலர்போற் செய்து, அளவில்லாத தேர்கள் - யானைகள் - குதிரை கள் - காலாள்கள் - இவைகளை யெல்லாம் பத் மயூகங் கட்டுவதற்கு ஏற்படுத்திக் கட்டியிருக் கிற சாஸ்திரத்தில் எப்படிச் சொல்லி யிருக் கின்றதோ? அப்பிரகாரம் இடைக் கிடை சேர்த்து; வெல்லுந் திறத்திற் செல்லுதற் குரிய உயிர்ச்சேவக வீரரோடன் பலம்பொருந் திய நாயகனாகிய துரியோதன மகாராஜனை நடுமத்தியி லிருக்குந் தாமரைப் பொகுட்டி லிருத்தி, வாசனை திணிந்த கற்பகமாலை யணி ந்த தேவர்களெல்லாருந் தியங்கித் திடுக்கிடும் படியாய்ப் பத்மயூகங் காட்டி, அந்த யூகத் தைச் சுற்றிலும் ஒருவித விசித்திரமாகிய சூசிகாயூகமொன்று ஏற்படுத்தினர். அதா வது, திவாரமும் நீளமுங் கூர்மையு முடைய ஊசியைப் போன்றது. அப்படிப்பட்ட யூக த்தை நால்வகைச்சேனைகளாலும் அமைத்து,

இரு கரங்களிலும் ஆயுதங்களைக்கொண்டு உலவாநின்ற மற்றைச் சேனை வீரர்களை யெல்லாம், அந்தச் சூசிகாயூகத்தைச் சுற்றிலும் மதிற்சுவர்போல விருத்தமாகிச் சக்ரவட்டயூக மியற்றி, பிராணவாக்ஷர வேத சாஸ்திரங்கள் யாவும் பூரணமாகத் தேர்ந்த சிலையாசானென்னுஞ் சேனாதிபதியானவர், இராக்ஷசானுக்கு மத்தியில் சுக்ராசாரி நிற்குந் தன்மைபோல் இரதமேறி நின்றார்.

அப்பால் பன்னிரண்டாம்போரில் வெற்றி வாகை யணிந்த தர்மராஜனானவர், பதின்மூன்றாநாட் காலையிலெழுந்து காலைக்கடனை முடித்துக்கொண்டு, சேனைகளெழுந்து பிரயாணப்படும்படியாகிய பேரிகையை முழக்கி வைத்து, தான் தனது தம்பிமார்களோடுஞ் சர்வாயுதபாணியராகி யுத்தகோலங் கொண்டார். அப்போதவர் பன்னிரண்டாநாள் யுத்த முடிவில் துரியோதன ராஜனானவன், இராத்திரி முழுவதும் விசனப்பட்டதும், பாண்டவரிடத்திற் பக்ஷமா யிருக்கிறா ரென்று துரோணாச்சாரியரை கோபித்துக் கொண்டதும், அதின்பேரில் இன்றைய யுத்தத்தில் எப்படியுந் தருமனை வென்று தருகின்றோ மென்று, சஞ்சத்தகர் முதலிய பேருந் துரோணரும் நெஞ்சில் நினைத்திருக்கின்றதுந் தூதரா லுணர்ந்து, தனஞ்செயனையுஞ் சாமளவர்ணனாகிய கிருஷ்ணனையும் பார்த்து, ஓ மித்திரர்களே! துரியோதனர் முதலாயினோர் நேற்றிராத்திரி இப்பேர்ப்பட்ட சங்கதிகளெல்லாம் பேசிக் கெட்டி செய்து வந்திருக்கின்றார்களாம். என்று சொல்லிக் கோடை இடியுடன் கலந்தெழுந்த கொடுங் கதிரோனென் றுரைக்கும்படிக்குக் கடுங்கோபமெழத் தமது சேனாசயினியங்களை நடத்திக்கொண்டு போர்க்களத்திற்கு வந்தார். அப்போது பாண்டவச் சேனாபதியாகிய துஷ்டத்துய்மனானவன், அஷ்டதிக்குகளு மஞ்ச வெளிப்பட்டு, அதிரதர் - மகரதர் - சமரதர்-அர்த்தரதர் எனனும் நால்வகைத் தேரினரும், கிரிசரம்-வனசரம்-நதிசரம் என்னும் மூவகை யானை வீரர்களும், காந்தருவ தேசத்தாரு மதிக்கும்படியாகிய குதிரைத் தலைவரும், பதினெண் பூமியிலுள்ள பார்த்திபரும், மற்றுமுள்ள பதாதிகளும் ஒன்றாகச்சேர்ந்து எட்டுதிக்குந் திக்குமுக்காடிப் போகும்படியாய் அளவிட்டுச்சொல்லப்படாமற் கடற்பெருக்கம்போல, அவ்வவர்களும் அளவற்ற ஆயுதங்களுடன் பரவிவர, அச்சேனைகளையெல்லாம் அச்சேனாபதி மகர யூகமாக நிறுத்த, அதுகண்ட அறக்குமாரனாகிய குருகுலபூபதியும், திருவிக்கிரமனாகிய திருமாலும், நமது சேனாபதிகட்டிய மகரயூகமாகிய மீனானது ஒருகரப்புரண்டடிக்குமாகில், எதிரிகட்டிய தாமரைபோன்ற பத்மயூகம் இதழிதழாய்ப் பெயர்ந்து அலக்கழிந்து போய் விடுமாதலால், இதுவரையிலுங் கட்டிய யூகம் இதற் கொப்பல்லவென்று மகிழ்ந்து சந்தோஷிக்க, அந்தவேளையில் அச்சேனாபதி யென்னுந் துருபதேய குமாரனாகிய துஷ்டத்துய்மன் இரதத்தைச் செலுத்திக்கொண்டு வந்து நின்றான். தேவதுந்துமி முதலாகிய வாத்தியங்களெல்லாந் திசாதிசைகளும் போர்த்தன. இவ்விதமாக இருபடைகளும்பொருந்தி சமுத்திரம் புரள்வதுபோ லெதிரெதிர் மலையும் படியா யிருந்தன. அவ்வேளையிற் சந்திர வட்ட முத்துக்குடை நீழலிலிருக்குந் தராபதியாகிய துரியோதனன்,என் இன்னுங் காலதாமதஞ் செய்கிறீர்களென்று சொல்லிச் சண்டை செய்ய ஆக்யாபிக்க, அப்பொழுதே நேற்றைய விதம்போ லேற்பட்டு, யானை - தேர் முதலாகிய நால்வகைச் சேனைகளுடன் சஞ்சத்தகரில் மடிந்தவர் போக மிகுந்திருந்தவர் வந்து அர்ச்சுனனைப் பார்த்து, ஆ! ஆ! அர்ச்சுனா! நாங்கள் நேற்றையத்தினம்போ லல்ல; இன்றைக்கு உன்னை வென்று செயங்கொண்டு போகும்படி வந்திருக்கின்றோம். உனக்குத் தயிரியமும் வீரமு மிருக்குமாகில், ஓடாமல் ஒளியாமற் புறப்படலாமென்று அறைகூவி அழைத்தார்கள். அவர்களுடைய வீரத்தைக் கேட்ட அர்ச்சுனனுக்குக் கோபம் பிறந்து, இப்படி முன்பின் றோன்றாமல் வீரவசனஞ் சொல்லிய அவர்கள்பேரிற் சண்டைசெய்யச் சென்றான்.

இந்தப்பிரகாரம் போர் புரியும்படியாய் மாயன் செலுத்துந் தேரில்வந்த அர்ச்சுனன் பேரில், இந்திரதனுவுட னெழுந்த காளமேகம்போல் வந்து வளைந்து தாரை தாரையாகப் பாணவருஷங்களைப்பொழிந்து போராடிய தேராள்களையும், வில்லாள்களையும், யானை வீரர்களையும், குதிரைவீரர்களையும் அர்ச்சுனன் கண்டு, தனது வீரகாண்டீபம் வளைத்து மல்லிகைக் கிளைகள் மலர்ந்ததைப்போல் வாயுக்கணை வருணக்கணை முதலிய பாணங்களை விடுத்து, வந்தெதிர்த்த சஞ்சத்தகருடைய மெய்யும் இருகையுந் துளைத்துருவும்படியாய்ச் செய்து,

வாடைக்காற்றுடன்கூடி மழைத்தாரையிலகப்பட்ட சருகைப்போல் மதிகலங்கிப் பறக்கும்படியாய் மாட்டினான். அந்த மாட்டலினால், துரியோதனனுடைய படையுடைந்து யாதொரு செய்கையில்லாம விரைந்தோடினார்கள். இப்படியாக வாடியோடிய பேர்களிற் கிரீடி தொடுத்த கொடுங் கணைகளினால், உயிரொழிந்து பட்டவ ரெத்தனையாயிரம்? உயிரொழியாவின்று முதுகிட்டவ ரெத்தனையாயிரம்? அர்ச்சுனராஜனே! உமக்கபயமபயமென்று யுத்தத்தைவிட்டவ ரெத்தனை யாயிரம்? தங்களுடைய குலத்தின் மேன்பாடும், வீரத்திறமும், மிகுந்த கீர்த்தியுங்கெட்டவ ரெத்தனையாயிரம்? பின்னு மதுவற்றபேர் துரியோதனனைக்கூவி, ஐயோ மூலையிலிருந்த எங்களை முனையுங்கள் முனையுங்களென் றேவினையே: நாங்கள் பற்குனனாற் படும்பாடு பட்டம்பகல்போற் றெரியுதே; விஜயன் பாணங்களினால் உடல் எரியுதே; என்று முறையிடுவோர் எத்தனையாயிரமென சொல்லுவேன். ஓ அரசனே! ஒவ்வொருவருடைய உடம்பிற் செங்குவளைபோன்றப் பாணங்கள் ஆயிரமாயிரமாகத் தைத்துத் துளைப்பதினால், இரத்த வருஷங்களைப் பொழியும் மெத்தையொத்தார் சிலபேர்; அவ்விரத்தங்களினால் தேகம் பாதிமறைபடவே மன்மதனை எரித்த மகாதேவருடைய வடிவம்போலிருந்தார் பலபேர்; இப்படி அவர்களடைந்த கேட்டை என்னாற் சொல்லத்தரமல்ல.

## துஷ்டத்துய்மன் துரோணாச்சாரியரால் முறிபட்டு ஓடுதல்

இவ்விதமாக இந்திரகுமாரனாகிய பற்குனன், மூன்றுயோசனை தூரத்திற் கப்பாற் சண்டை செய்துக்கொண் டிருக்க, இவ்விடத்தில் அணிவகுத்துச் சந்திர சூரியர் மண்டல வரைக்கும், குடை-கொடி-படை முதலியதுந் தாவும்படி யிருந்த இருவகைச் சேனைகளுஞ் சேனாபதிகளின் உத்தரவின் பேரிற் கைக் கலந்து போர்புரியுங்காலையில், சேனாபதியாகிய துஷ்டத்துய்மன் நாலுசக்கரம் பூட்டிய ரதத்தை நடத்திக்கொண்டு போய்த் துரோணாச்சாரியரை எதிர்த்து, தனது வலி பொருந்திய பிரமணியணிந்த வில்லைவளைத்து அஸ்திரப் பிரயோகஞ் செய்தான். அப்போது தனுர்வேதமுணர்ந்த துரோணாச்சாரியர் தமது வில்லை எடுத்து நாணேற்றி டங்காரம் பண்ணி, உக்கிரமமாகிய அக்கினியாஸ்திரத்தை தொடுத்து அவசரமல்லாமல் விடுத்தார். அப்படி விட்ட அக்கினியாஸ்திரஞ் சிவன் விடுத்த நாராயணாஸ்திரம் போல் நிமிடகரித்துக் கொண்டுவந்து எதிரி விடுத்த பாணத்தை மோத, பின்பு ஒன்றோடொன்று எதிர்த்துப் பகைத்து, அவன் தொடுத்த கணையும் இவர் விடுத்த கணையுங் கூர்மைகொண்ட முனையோடு முனை தொத்தித் தத்தி முனையற்று விழும்போது, வெற்றிபெற்ற உத்தமனாகிய பரிசுத்தனென்னுந் துரோணரானவர், சித்தியாகிய சில அஸ்திரங்களை விடுத்துத் துஷ்டத்துய்மனுடைய வின்னாணியை யறுத்தார். உடனே இருவரும் நெருப்பிடியு நீரிடியுஞ் சேர்ந்த இரண்டு மேகங்கள் நெருங்கி எதிர்த்ததைப்போல் தங்கள் தங்களுடைய தேரை எதிருக்கெதிர விடுத்து, சக்கரங்களுடன் சக்கரங்கள் முஷ்டிகரமாகத் தாக்க மகா உக்ரமத்துடன் விக்ரமித்து, காற்றுடியைப்போற் கரகரவென்று இடம் வலமாகச்சுழன்று செல்லச் செலுத்தி, நெடுநேரம் வரைக்கும் அமர் புரிந்தபோது; கவுரவசேனா நாயகர் பாண்டவச்சேனா நாயகனுடைய கவசத்தையுந் துவசத்தையும் அழித்துத் தேகத்தையுந் துளைத்துத் தேரை நேருக்கு நேராக முட்ட விட்டனர். கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! ஆதி வசிஷ்டரென்னும் அருமுனிக் கொப்பாகிய வீஷ்மரும், அர்ச்சுனனும், துரோணாச்சாரியரும், ஒரேயினமாக யுத்தஞ் செய்யத் தக்கவர்கள். அப்பேர்ப்பட்டவர்கள் செய்துவந்த யுத்தத்திற்கீடாக முற்காலத்திலும் இக்காலத்திலும் யுத்தஞ்செய்யத் தக்கபேர்கள் எக்காலத்திலுங் கொஞ்சமேனு மிரார்கள். இவர்கள் மூவரும் ஒரே கைக்காரர்கள். ஆகையால் போன வீஷ்மர்போக, இருக்கும் இவர்களுடனெதிர்த்து எவர்கள் முன்னுக்கு வருபவர்கள்? இதுவுமல்லாமற் பூர்வத்தில் ஒப்பற்ற முனிவராகிய அகஸ்தியர் உருத்திர செபத்தால் ஏழு சமுத்திரத்தையும் உள்ளங் கையி லடக்கி உண்டு விட்டாரென்று உலகத்தோர் கூறுவார்கள். இவர்கள் நினைத்தால் ஒரு கணையால் உலகிலுள்ள நீரெல்லாம் உறிஞ்சச் செய்வார்கள். மேலும், இந்தத் துரோணாச்சாரிய ரென்னு முனிவரானவர், தனக்குச் சத்துருவாகிய துருபதேய குமாரனையும் வென்றுவிட்டார். ஆதலால், முனீஸ்வரருக்கு தபஞ் - செபம் முதலாகிய மகத்துவமேலாயிருப்பதினால், அவர்களைச் சாப முதலிய பகைகள் ஒன்றுஞ் செய்யமாட்டா. முனீஸ்வரருட னெதிர்த்துப் போர்புரிந்து

வெல்லும் வல்லமையுடைய பேர்கள் தொல்லுலகிலில்லை. ஆதலால், இங்கே பாண்டவச் சேனாதிபதி இவருடனெதிர்த்து ஒருக்காலும் வெல்லமாட்டோமென்று தன்னுடைய தேரைத் திருப்பிக்கொண்டு, மானாபிமான முதலிய வீரத்தையுந் தீரத்தையும் விட்டு, வேறொரு செய்கையும் இல்லாமற் புறமிட்டோட்டினான். இப்படி பாண்டவர்களுக்குத் தந்திர நாதனாகிய பாஞ்சால குமாரன் போரழிந்து புறமுதுகிட்டு, ஓடும்படியானதை இருவகைச்சேனை மன்னவருங் கண்டு, கையைக் கொட்டிக் கலீரென நகைத்து, வண்மையில் மிகுந்த துரோணாச்சாரியருடைய ஆண்மிக்கையையும், விற்றிறமையையும் வெருவாய்க் கொண்டாடித் துதித்தார்கள்.

### தருமராஜன் அபிமன்னனை யுத்தத்திற்குச் செல்லும்படி ஆசீர்வதித்தல்.

அப்போது தனுர்வேதியன் விட்ட சரங்களினாற் சரீரம் நொந்து தயிரியங் குன்றிப் பயந்து, ஓடிவராநின்ற திஷ்டத்துய்மனாகிய சேனாதிபதியைப் புட்பராகத் திணிந்த மது மாலை யணிந்த மார்பினையுடைய தர்மராஜன் கண்டு, கட்டியணைத்துக் கலக்க மகற்றி, ஓ எனது மைத்துனனாகிய காவலனே! ஓ முனைமுகத்திற் கதிகாரியாகிய சேனாபதியே! நிருபர் சிகாமணியாகிய நீயே, நீதியும்-நிலையும்-வீரமுந் தவறி ஓடிவருவையாகில், பின்னை யார் நின்று யுத்தம் பண்ணும்படியானவர்கள். ஐயோ! பாவம்; மெத்தவும் போர் புரிந்து வருந்தி யிளைத்தனைபோலு மிருக்கின்றது. சற்றுநேரம் இவணிருந்து தேகவருத்த மாற்றிக்கொள்ளக் கடவையென்று தயவாக உபசாரஞ்சொல்லி நிறுத்தி, தன் படைகள் தத்தளிக்குந் தன்மை தன்னை யுறுத்த மனக்கொதிப்புடனே தனக்கு நேரில் மயில் வாகனனைப்போல் நின்ற தனஞ்செயன் குமாரனாகிய அபிமன்னுவைப் பொன்னொளிபோற் பிரகாசிக்கும் அருள்வடிவாகிய அத் தருமராஜன் கண்டு, பூரிப்புடன் மகிழ்ந்து, அடா குழந்தாய்! இங்கு வாடா என்னப்பனே! என்றழைத்து மகிழ்ந்து, ஆசையுடன் புகழ்ந்துச் சொல்லுகிறார்: அப்பா அபிமன்னு! இந்த யுத்தத்தில் உனக்கெதிர் நிற்பவ ரொருவருமில்லை. நீ முனைந்தெதிர்த்து போர்புரிந்தாலொழிய, துரோணாச்சாரியர் கட்டியிருக்கும் பத்மயூகத்தின் பலங் குறையாது. மேலும், நேற்றையத்தினம் என்னிடத்திற் சண்டை செய்து இளைத்து மெந்நிட்டோடிய விற்குருவானவர், இன்றையதினம் என்னைக் கைப்பிடியாகப் பிடித்துக்கொண்டு போகவேண்டுமென்று நல்ல பலவான்களாகிய அரசர்களையெல்லாஞ் சேர்த்துச் சக்ரயூகமாக வகுத்து மிகுந்த சண்டை செய்வதற்கு என்னெதிர் வந்து நிற்கின்றார். ஆகையால், அவராலேற்படுத்திய பத்மயூகம், சூசிகாயூகம், சக்ரயூகம் இந்த மூன்று யூகத்தையும் உடைத்து நாசப்படுத்தத் தக்கபேர்கள் உன் தந்தையாகிய அர்ச்சுனராஜ னொருவனும், உன் பெரிய தந்தையாகிய வீமசேனனொருவனும், குழந்தையாகிய நீயொருவனுமாம். உங்கள் மூவராலும் ஒழியவேண்டியதே யல்லது, விற்பிடித்து யுத்தஞ்செய்து சேதித்து வெல்லத் தக்கவர்கள் பின்னை வேறொருவருமில்லை. அடா கல்வித் திறங்கொண்ட என் காதலனே! உன் மாமனாகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியின் புயங்கள் பூரிக்கவும், உன் தந்தையாகிய அர்ச்சுனனுடைய மனங் களித்து முக மலர்ந்து தோள்கள் பூரிக்கவும், உன் பெரிய தகப்பனாகிய வீமசேனனுடைய மெய் புளகாங்கித முறவும், வெல்லுகிறேனென்று சபதங்கூறிக் கொல்லும்படியாகிய உன் சிறிய தந்தையரிருவருஞ் சிந்தை மகிழவும், திசா திசையி லிருந்துவந்த காவலர் யாவருந் தங்களைத் தாங்கள் மறந்து உன் தாளாண்மையை புகழவும், சத்துருக்களுடைய கூட்டங் கலைந்து வாட்டமடைந்து வானுலகேறவும், என்னிருகண் கண்டு களிக்கவும், நீ வெற்றிபெற வேண்டுமென்று விரும்பினேன். ஓ அரும்பை விரித்து கரும்புதே னருந்தும் மலர்மாலை யணிந்த தோளினையுடைய மதனசிங்காரனே! உசித ஓங்காரத் தோன்றலே! என்று முரசக் கொடியினை யுடையவராகிய பெரிய தந்தை சொல்லினர்.

அந்த வார்த்தை அயிலேந்துஞ் செவ்வேளைக் கொப்பாகிய அபிமன்னன் செவியில் இந்திரலோகத் தமுதுபோல் வந்து முன்னமே, வாட்படை - விற்படை - வேற்படை - கதைப்படை முதலிய யாவுங்கற்ற சித்தரசனுக் கொப்பாகி உத்தமகுண மைந்தன் மகிழ்ந்து, சிந்தை களித்து, பெரிய தந்தையைப் பணிந்து, எந்தையே! பகைவர் கூட்டமாகிய படைகளெல்லாம் இடியிற் பொடிபடும் பாம்பைப்போ லடித்து முடித்து நொடிப்போதிற் கெடிஸ்தலாதிபதியாகிய துரியோதனன் இடி

ந்து பொடிந்து போகும்படி வெற்றிகொண்டு வெற்றிமாலை தரிக்கிறேன். தேவரீர் சீக்கிரத்தில் விடை கொடுத்தருளும் என்று இந்திரனுக்குப் பேரனாகிய சுந்தரன் பெரிய தந்தையின் சந்திரவிம்ப முகத்தைப் பார்த்து, இரு கரத்தையுங் குவித்து, இரண்டு மலை திரண்டதைப்போன்ற புயம் பூமியிற் பொருந்த வணங்க, அடக்க ஒடுக்கத்துடன் வணங்கி வாய் புதைத்து நிற்கின்ற சித்தப் பிரதாபனாகிய புத்திரனைப் பார்த்து, என்னப்பா! கதாபாணியாகிய வீமசேனன் உனக்குப் படைத்துணையாகி, அமர் புரிந்து முன்னே நடக்க, நீ பின்னே தொடர்ந்து, சக்ரயூக முதலாகிய யூகங்களை யுடைப்பதற்கு முன்னே திட சாமர்த்தியமுள்ள தீர வீர மன்னர்களுடன் இதோ உன் பின்னாக நான் வருகிறேன். நீ முன்னதாகச் சென்று முதலிற் சக்ரயூக வட்டயூகத்தைச் சேதிக்கக்கடவை யென்று மேக முழக்கம்போ லார்த்து, என் கண்மணியே! என்னை இறுகக் கட்டித் தழுவடா என் தவப்பேறே யென்று தானுந் தழுவி மார்புற வணைத்து, கண்ணிமை கொட்டாமற் கால்முதல் சிரசு வரைக்கும் அப் புத்திரனைப் பார்த்து, தாமசமில்லாமல் க்ஷணப்பொழுதிற் செல்லென்றும், வலிமைபற்றிய யுத்தத்திற் சென்று தமது பகைவரைக் கொல்லென்றும், அப்படியே கொன்று என் புயத்திற் குடிகொண்ட கொற்றவையாகிய வீரலட்சுமியின் அருளால் விஜயத்துடன் வெல்லென்றும் வாழ்த்தி விடைகொடுத்தனர். கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! இவ்வுலகத்தினர் சாதாரணமாய்த் தம்மினத்தி லொருவன், யாத்திரை முதலிய யாதுகாரணத்தாலேனும் பிரியவேண்டிய பெரியோராயினோரைப் பணிந்து விடை கேட்கும்போது, அப் பெரியோர் அவனுக்குச் சொல்லவேண்டிய புத்திகளைச்சொல்லி, க்ஷேமமாய்ப் போய்வருக வென்று ஆசீர்வதித் தனுப்புதல் வழக்கம். அப்படியிருக்க, வில்லாசிரியராகிய துரோணாச்சாரியரை வென்ற பெருந்தகையாகிய இத் தருமநந்தனர் தனது செல்வக்குமாரனைத் தழுவி, நீ போய் விஜயத்துடன் வெல்லென்று வாழ்த்தி விடைகொடுத்து விட்டாரேயன்றி, நீ போய் விஜயத்துடன் வென்று வருகவென்னும் வாக்கியத்தைத் தீவினையின் வசத்தாற் சொல்லாமற் போயினர். இந்தப்படி நான் வருகின்றேனென்றும், வீமசேனன் முன்னடிப் போகட்டுமென்றும், சொல்லிய தனது பெரிய தந்தையின் வாக்கியத்தைக் கேட்டு, மனந்தளாமல் நமது திறமுதலியவைகளைத் தீரவுணர்ந்த அறக்கடவுளாகிய ஐயரவானவர் நம்மைப் படைத்துணை பற்றிப் போகும்படி சொன்னாரல்லவா வென்று சற்று நிதானித்து நின்று, அந்த வார்த்தைக்குத் தன்மனத்தி லிடங்கொடாம லகற்றிச் சிந்தைகளித்து, சூரசம்மாரக் கடவுளாகிய கந்தஸ்வாமி தனிமையிற் சென்று தாருகன் முதலிய சூரரை வென்றுவந்த தன்மையைப் போல், ஓர் உதவியுமில்லாமலே தான்போய்ச் செயம்பெற்று வரவேண்டுமென்று மனங்கொண்டு நின்றான். அப்படி நின்ற மைந்தன் குறிப்பைத் தருமபூபதி கண்டு, ஓ! ஓ! நாம் சொன்ன உத்தரம் புத்திரன் மனத்தை வருத்தியதுபோலு மென்றுணர்ந்து, சுந்தரனாகிய குழந்தை உச்சாகந்தப்பி யுத்தத்திற்குச் செல்லலாகா தென்று உடனே பலவித தன்மைகளைப் பகர்ந்து, சத்தியநெறி உத்தமனாகிய தர்மராஜன் பகைவர் மேற் சென்று வெல்லும் வெற்றிமாலையைப் புத்திரன் கழுத்திலணிந்து புகழ்ந்து, போர்புரியுந் திறங்களும், பாணங்கள் தொடுக்க வேண்டிய விதங்களும், பகைவரை முடிக்கத்தக்க திறமும் விற்பனமுள்ள புத்திரனுக்குப் பற்பலவிதமாகப் பகர்ந்து விடைகொடுத்தார்.

## அபிமன்னன் தேரூர்ந்து சாரதியை எச்சரித்தலும், அப்போதச்சாரதிகொண்ட கவலையை அபிமன்னன் தேற்றி யாற்றுதலும்

இப்படி அவருடைய செலவு பெற்ற யுத்திசாலியான புத்திரன் பெரிய தந்தையராகிய தர்மராசன், வீமசேனன் இவர்களின் திருவடித் தாமரையிற் பணிந்து, தட்டி சல்லடம் பிகிந்து, வீரகண்டாமணி யிறுக்கி கவசந் தொடுத்து, கொத்தாகிய மாலையணிந்த வீரமார்பில் முத்தாரமணிந்து, நாகரத்தினங்களினாற் செய்த வாகுவலயம் அழகுடன் பிரகாசிக்கத் தரித்து, இரண்டு சந்திரர், இரண்டு சூரியர், இரண்டு உருண்டதைப் போன்ற ஜீவரத்தினங்களினாற் செய்த மகர குண்டலங்களைக் காதிற் றொடுத்து, நவரத்தினகசித வுசிதமாகிய முடியணிந்து, அதில் வீரபட்டங் கட்டி, பலம் பொருந்திய நாணியுடன் விற்பிடித்து, தேர்ந்து தெளிந்த வீர வாளி நிறைந்த அப்புருத் தூணியைத் தோட்புறத்திற் சேர்த்து, வாளாயுதம் - கதாயுதம் - வேலாயுதம் - சூலாயுதம் - சக்ராயுத முதலிய

ஆயுதங்களுங் கொண்டு, முப்புரிநூற் பிரகாசிக்கு மார்பில் தும்பிப்பதக்க முதலாகிய ஆபரணங்களை யணிந்து, தனக்கென் றலங்கரித்துக் கொண்டு, இயாவரு மதிக்கும்படியாகிய சுமித்திரனென்னுஞ் சாரதியைப் பார்த்து, ஓ எனக்குரிய தேர்வல்லவனே! தநுர்வேத வன்மை பெற்ற துரோணுச்சாரியர், அசுவத்தாமா முதலிய பேர்கள் யாவரும் பொருந்தி முனைந்து நிற்கின்ற போர்முகம் நீறுபட்டும் பொடியாகும்படி திருந்திய நமது தேரை விரைந்து விடக்கடவை யென்று அண்டகடாக நடுங்க மண்டியிட் டிரைந்து சொல்ல, அப்படி சொல்லிய அபிமன்னுராசனை நோக்கித் தேர்ப்பாகன் வாய்ப்பாகப் பணிந்து சொல்லுகின்றான். ஐயோ அடியேன் தேவரீருடைய வசனத்தைச் சிரமேற் கொண்டு நடப்பவனே யானபோதிலும், தங்களுடன் வந்து சில சங்கதிகளைத் தடுத்துபேசுஞ் சுதந்தரத்தை யெனக்குத் தாங்கள் தந்திருப்பதால் எந்தன் மனதிற்றோன்றிய சிலவற்றைச் சொல்லுகிறேன். அதனைத் தாங்கள் சிந்தையிற் கொள்ளவேண்டிய தென்று மந்திரிக் கொப்பாகிய வலவன் சொல்லுகின்றான்: கேளும் என்னுண்டவனே! சொர்க்கமத்திய பாதலமென்று மூன்று லோகத்தையுங் கை காட்டிய யிடத்தில் நிற்கும்படியாகச் செய்து, வெல்லுந் திறவல்லமை பெற்ற உமது தந்தையாகிய அர்ச்சுனராசன் வீறிநிற்கும் இவர்களுடைய போர்முனை புகுந்து வீரவாளி தொடுப்பாராகில், அளவில்லாத வல்லமை கொண்ட அதிரதவீரர் முதலாகிய நால்வகைச் சேனை வீரர்களுடைய தேகமுழுமையுங் கிழிந்தழிந்து விழும்படி வென்று, ஜெயங்கொண்டு திரும்புவார். அவருக் கிவர்கள் லட்சயமில்லை. ஆகையால், ஐயா! பற்பலவிதமாகிய சாஸ்திரங்களைக் கரைகண்ட விற்பன விவேகியாகிய துரோணரும், கிருபர் - அசுவத்தாமர்-கர்ன மகாராஜன் முதலிய எண்ணிறந்த நிருபர்களும் நிலைபெற்றிருக்கும் யுத்தமுகத்திற்கு, நீர் தனிமையில் வென்று வருவேனென்பது லேசாகிய காரியமல்ல. ஓ நிருபர் சிகாமணியே! அவர்கள் இன்று ஏற்படுத்தி யிருக்கும் பூகமோ? பேதா பேதங்களாக வகுத்திருக்கின்றது. அந்த யூகத்தைப் பேதித்து நுழைவதற்குத் தேவர்களாலுங் கூடாது. அன்றியும், இப்படியாக யூகம் வகுத்த சேனுநாயகனுகிய தேசிகனும், மற்றப் பிரதாப வீரர்களும் உம்முடைய பாணங்களினுற் சாகமாட்டார்கள். அவர்களை வென்றாலல்லவோ உமக்கு வெற்றியுண்டாகும். வெல்லாமல் வெற்றி யெப்படி வரும்? ஓ வீராதிவீரனே! நீர் கொல்லாமற் போனுலுஞ் செல்லாமல் நின்று விடுவதே சிலாக்கியமென்று தெரிவித்தான் பலவித காரியங்களும் பகுத்துணர்ந்த சுமித்திரனென்னுஞ் சாரதியானவன்.

அந்த வார்த்தையைப் பற்குனன் புத்திரனுகிய விக்கிரம பராக்கிரன் கேட்டுச் சிறுநகை புரிந்து, சாரதியைப் பரிந்து நோக்கிச் சொல்லுகிறான்: அப்பா சுமித்திரா! என்னுடைய வில்லை எடுத்து நிறுத்தி அசைத்து இணக்கி இழுத்து வளைத்து நுணைத்தொனி செய்வேனுகில், அந்தப் பேரோசையினுல் நில முதலாகிய தலமெல்லாங் கலகலவென்று பயந்து, ஏழு சமுத்திரமும் வரண்டு, உகாந்த காலமு மடங்கி, முக்குணத் தேவராகிய மூவரு மந்நாணேசையால் முதுகு காட்டியோடுந் தன்மையைப் பெறுவார்க ளென்றால், போர்முகத்திற்கு நேர்முகமாக நானே புகுவனுகில், அப்போது என்னுல் நடத்தப்படும் யுத்த வலங்கார மிவ்வகைத்தென்று ஒருவராற் சொல்லுந்தரமாமோ? நீயே சொல்லும். சாரதி! இந்திரன் முதலாகிய அந்தரரோடு யமனும், மற்றெவனும் எனக்கு நேராவரோ? அல்லது நிகராவரோ? ஓ விந்தையாகிய வார்த்தைச் சொல்லவந்த எந்தன் வலவனுகிய வல்லவனே! ஆதிகாலத்திற் பாற்கடல் கடையும் நாளில், வாசுகி கக்கிய ஆலகால விஷமானது அண்டமுகடு முதலாகிய எல்லாவற்றையும் எரித்தழிக்குங் காலையில், சகல தேவர்களும் சங்கரமூர்த்தியைச் சிந்திக்க, அந்தத் தட்சணத்தில் அவர்களை ரட்சிக்கும்படியாய் சூலபாணி எதிர்த்தபோது, அந்த விஷாக்கினி தொலைந்துபோக வில்லையோ. சாரதி! எதிரிகள் மிகுந்த திறத்தினையுடைய வில்லாளிகளென்றும், அவர்களை வெல்லுவ தரிதென்றும், நீ யுரைத்த அவ்வாசான் முதலிய வாசாகைங்கிரிய ரெல்லா மிந்நிமிடத்தில் நிலைகெட்டுத் தலை நட்டுக்கொண்டு பலம்விட்டோடுவதை நீ கண்டு நகைக்கும்படியாய்க் கூர்க்கணை விடுத்துக் குலைகலையக் கொல்லுகிறேன். ஆதலால், நம்மைப்போலொத்த வீரர் நம்மையேசாமல், உன் மனங்கூசாமல், என்னுடன் றடுத்துப் பேசாமல், தேரைச் செலுத்தென்று பற்பலவிதமாகிய பராக்கிரமங்களை அர்ச்சுன குமாரனுகிய அபிமன்னன் சொல்ல, அந்த

வார்த்தையைச் சாரதி கேட்டு, தன்னை மறந்து மகிழ்ந்து பலம்பொருந்திய விற்விறத்தில் வல்லமைபெற்ற விர்ஷப விராட்டைப் போன்ற மலர்மாலை யணிந்த புயத்தினையுடைய அபிமன்னராஜனைப் பணிந்து, அன்பு மேற்கொண்டு முருக்கம்பூ மலர்ந்ததெனச் சிவந்த முகத்தினையுடைய அனுமக்கொடி யணிந்த தேரிற் கட்டிய குதிரைகளின் கடிவாளமாகிய குசைக் கயிறுகளைப் பிடித்து; முனைமுகத்தில் வினைபற்றி நின்ற வீரர்களெல்லாரும் விடவிடத்துப் படபடத்துக் கடகடத் தோடும்படியாய் உல்லாசத்துடன் தடதடவென தேரைச் செலுத்தினான்.

## அபிமன்னன் யுத்தகளம் புகுந்து துரோணாச்சாரியர் வகுத்த யூகங்களை உடைத்து அவரை மடித்துத் துரத்தல்

அந்த வேளையில், தனக்குரிய உரிவினராகிய துருபதேயக் கூட்டத்தாரும், அளவில்லாத கோடாகோடி அரசர்களும், கருமேக முழக்கம் போலும், வெற்றி முரசி னோசை போலும், கோபங்கொண் டிரைந்து, நெருப்புக் காற்றைப்போற் பெருமூச்சு விட்டுக்கொண்டு அபிமன்னனுடைய ரதத்திற்கு இருபக்கத்திலு நெருங்கிவரவும், பேரி முதலிய வாத்தியங்களெல்லா முழங்கவும், தேவதுந்துமி கறங்கவும், தேவமந்திரங்களுணர்ந்த தேவர்களெல்லாரும் அரண்டு வெருண்டு பயந்திளைக்கவும், நெருப்பு முனைபெற்ற நாராயணாஸ்திரம் பொருந்திய திரிபுரசம்ஹாரியாகிய சிவபெருமான் கைக்கொண்ட மேருமலை யென்னும் வில்லுக்கிணையான தன் வில்லை நிறுத்தி வளைத்து நாணியேற்றி ஷ்டங்காரஞ் செய்து, அவ்வோசையால் திசாதிசைகளு நடுங்க ஓங்காரமுஞ் செய்தான் தனஞ்செயன் பூர்வத்திற் செய்த புண்யபலமே உருவாகித் தோன்றிய தன்மையைப் போன்ற அபிமன்னு வானவன். இப்படி யுத்தமுனைக்கு வந்து காரொலியுங் கடலொலியும் அடங்கும் படியாகப் பேரொலி கொண்டு நின்ற கௌரவ சேனாபதி வகுத்த சக்கரயூகந்தளர்ந்து வருந்தித் தடுமாறும் படியாய், மணிகளினாலும், மலர்களினாலும், அணிபெற்றிரா நின்ற கூர்மை தங்கிய பாணங்களினாற் கூட்டமாகிய மன்னர்களின் மார்புகள் உருவும்படி பற்பல பாணங்களைப் பிரயோகஞ் செய்து, மர்மனாகிய சீதாபிராமனுக்குஞ் சத்துருக்களின் பிராணனைத் தென்றிசைக் கனுப்புந் தன் தந்தையாகிய அர்ச்சுன ராசனுக்குஞ் சரியாகிய வீரனென்று சொல்லும்படிக்கு இமைக்கு முன் எட்டுத்திக்குஞ் சுழன்றுவருந் தேரைச் செலுத்தி, அச்சுதன் என்னும் தன்னம்மானானவர், பூர்வத்தில் தனக்கு உபதேசித்திருந்த அருமையாகிய உச்சாடன மந்திரத்தை உச்சரித்து, ஒரு நொடியிற் பலகோடி பாணங்களைத் தொடுத்து நாலு பக்கங்களிலும் அடித்து முடுக்கி, எதிர் நின்றவர்களின் சிரங்களையும் புயங்களையுங் கரகரவென் றறுத்துக் கால்மாடு தலைமாடாகச் சாய்த்தான். அந்த வேளையில் தேவேந்திரன் மெச்சும்படியாகச் சிறந்து நின்ற சக்ரயூகம் அழிந்து முகமாறிப் பின்னிட் டோடுவதைச் சேனாநாயகனாகிய துரோணாச்சாரியர் கண்டு சீற்றங்கொண்டு, மல்யுத்தத்திலும் வில்யுத்தத்திலும் சிறந்த புயத்தினையுடைய அபிமன்னுவானவன் விடுத்த மழைபோன்ற சரங்களை யெல்லாம், பெருங் காற்றைப்போலொத்த பல்லவப் பாணங்களை விடுத்து விலகப், பின்னும் போரில் முனைந்துவந்து அபிமன்னனை வளைத்துக்கொண்டு அருஞ்சமர் விளைத்தனர். அப்போது அபிமன்னுவானவன், (அடிமேலடி யடித்தால் அம்மியும் நகரும்) என்னும் வாக்கியப்படி விடுத்த அர்த்த சந்திர பாணங்களினால், துரோணாச்சாரியருடைய பலமழிந்து, நலமழிந்து, வெல்லுவேனென்று வந்த சொல்லழிந்து, கைக்கொண்டிருந்த வில்லழிந்து, குருவென்னும்பேரழிந்து, ஏறிவந்த தேர் அழிந்து, கொடியழிந்து, முடிகிழிந்து மிகுந்த விசனத்துடன் படியிலிழிந் தோடினார்.

இவ்விதமாக சேனாதிபதியாகிய விற்குருவானவர் துன்பப்படுங் காலையில், பக்கத்திலிருந்த நால்வகைச்சேனை முதலாகிய வீராதிவீரர்களெல்லாம் நிலைதளர்ந்து, கலைகுலைந்து, தலைவிரிகோலமாய்த் தடுமாறிச் சக்கரயூகமுந் தத்தளிக்கும்போது, மனோ வேகத்திலு மிஞ்சிய தனது தேரை விடுத்து அந்நேமியூகத்துக்குட் புகுந்து, வளைத்த வில் நிமிராமற் பொழியும் அம்பு மாரிகளால் அநேக முகந்தோறும் பிணங்களாகிவிழ, நால்வகைச் சேனைகளையும் நாசப்படுத்தி, பல திசைகளிலுங் காவலிருக்கும் மன்னர்களை யெல்லாங் கடுங்கணையால் உடல் கிழிந்து சோரும்படி கலக்கி, கடலைக் கிழித்தோடுங் கப்பலைப்போல் தேர்ச் சக்கரஞ் செல்லுகின்ற வேகத்தால் யாவருஞ் சிதைந்து உயிரழியும்படியாய், உடல் சிதையும்படியாய் ரதத்தை நடத்தி, பின்னுமந்த

ர்தத்தைக் காற்ருடியைப்போல் இடசாரி வல சாரி, வலசாரி இடசாரியாகச் சுழன்று சாரிகை வரவிடுத்து, உயிர் பொருந்திய உடல்கள் தோறும் விபரீதமாகச் சாயகம்போக்கி, அவ ரவர்களுடைய பலாபலன்க ளெல்லாவற்றை யும் பாழாக்கி, மாம்சம் முதலிய குடல்களைக் கூழாக்கி, உதிரவெள்ளப் பள்ளங்க ளேழாக்கி, யாவரும் நொந்து மனம் வருந்தி வெந்து சிந்திப்போகும்படியாகிய சூரனுக் கெதிரில் ஜெயம் பெற்று நின்ற சண்முகக் கடவுளைப் போல் தன்யனாக நின்முன் திடதயிரிய காத் திர ஜெயவீரியமூர்த்தண்ய அபிமன்னுவான வன். ஓ ஜெனமேஜெய மகாராஜனே! கொலை புரியாநின்ற கொடுங்கணைகொண்ட கிரீடியின் குமாரனாகிய அபிமன்னன் ருெடுத்த கூர்ங் கணைகளானது, திறவான்களென்னும் வெற்றி வீரர்களுடைய தலைகளை யறுத்துச் சாய்க்குதல் எத்தன்மை யொத்திருந்த தென்னில், வாயு தேவனுக்கும் ஆதிசேடனுக்கும் நாரதர் கல கஞ் செய்துவைக்க, ஆதிசேடன் தள்ளியதைப் போன் றிருந்தது. மேலும், அச்சுதனென் னும் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியின் மருமகனாகிய அபிமன்னன் வீரவிற்ருங்கிய மகா வீரர்களு டைய இரண்டு தோள்களையும் அறுத்துத் தள்ளுதல் எப்படிக் கிருந்ததென்ருல், பூர்வத் தில் வானமளாவிய மலைகளெல்லாம் பறந்து போய் விழுந்து பதிகள் முதலாகிய பட்டினங் களைப் பாழ்படுத்திய நாள்களில், தேவேந்திர னவன் அந்த மலைகளின் ரக்கைகளை வச்சி ராயுதத்தால் அறுத்தகற்றிய பான்மை யொத் திருந்தது.

அன்றியும், உத்தரை யென்னும் இராஜ குமாரத்திக்கு நாயகனாகிய அபிமன்னுவான வன், பத்மயூகத்திற் செறிந்து நிறைந்து நிற் கின்ற மன்னவர்களின் தேர்களையும், அத் தேரிற்பூட்டிய குதிரைகளையும், சாரதிகளையும் நிலத்திற் புதையும்படியாகத் தகர்த்து வீழ்த் துதல் எதுபோன் றிருந்ததெனில், ஒருநாள் நாரதர் செய்த கலகத்தால் விந்தகிரியானது மகமேருவின்பேரிற் கோபங்கொண்டு, அந்தர முழுது நிறைந்து அண்டமுகடு வரையிலும் உயர்ந்து சூரிய சந்திரர்செல்லும் வீதியை அடைத்து நின்ற காலத்தில், சுப்ரமண்யக்கட வுளின் அடியார்களி லொருவராகிய சகலகலை வல்ல அகஸ்தியரானவர் தமக்கு வழிவிடச் சொல்ல, அந்த விந்தகிரி சிறிது தாழ்ந்த போது உச்சியிற் கைவைத்து ஒரேயிருத்தாகப் பாதலத்திற்படியும்படி அழுந்தியதைப்போன் றிருந்தது. பின்னுஞ் சுபத்திரையின் கர்ப்பத் திற் ருேன்றிய மாசற்ற மாணிக்கமாகிய அபிமன்னுவானவன், உந்தியிடுக்கும் கூர்மை கொண்ட பிரகாசம்பெற்ற சந்திர பாணங்கள் முதலாகிய ஆயுதங்கள், கூட்டமாகிய யானை களின் உடல்களை துளைத்து ஊடுருவிபோடுதல் எத்தன்மை யொத்திருந்ததெனில், வான மளவு முயர்ந்து யாவருக்கும் பயத்தைக்கொடு த்து தவத்தை கெடுத்துப் பாவத்தை விளைத் துக்கொண்டிருந்த கிரவுஞ்சகிரியைத் துண் டாகத் துளைத்த பால சுப்ரமண்யருடைய கொடிய வேலாயுதம்போ லிருந்தது. இன்ன முந் தேவேந்திரனுக்குப் பேரனாகிய அபிமன் னுவானவன், கூர்மையாகத் தொடுத்த வச்சிரக் கணைகளானது, துரியோதனனுடைய படையி னிறைந்த குதிரை கும்புகளையெல்லாம் வம்பர் எரித்துக்கரித்து தும்பாகப் பறக்கும்படிக்குச் செய்தலையோசிக்குமிடத்து, இமயமலைபோன்ற புயவீரனாகிய அர்ச்சுனராஜன் பிரயோகஞ் செய்த அக்கினியாஸ்திரங்களினுல் இந்திர னுடைய காண்டவவனம் எரிந்ததன்மையை ஒத்திருந்தது. இதல்லாமலும், மண்டல வில் லாளியென்னும் அபிமன்னுவானவன் விடுக் குங் கொடுங்கணைகளானது, அரசர்களுடைய சந்திரவட்டக் குடைகளைத் தகர்த்துச் சாய்க்கு தல் எதுபோல்வ தென்ருராயப் புகின், இரா வணனுடைய சிரங்களிற் கவிந்திருந்த சுவேத நிறக்குடைகளை ஸ்ரீராமர் பாணங்களினுல் துண்டித்ததை யொத்திருந்தது. புஜபலபராக் கிரமசாலியாகிய இணையில்லா அபிமன்னு வானவன், சங்கோபசங்க புங்கானுபுங்கமாய்ப் பிரயோகஞ்செய்யுங் கங்கபத்திரங்களால் ரத கஜதுரக பதாதிகளெனுங் கருங்கடற் றீய்ந்து போகா நின்றது எப்படி யிருந்ததென்ருல், சரசயனத்திலிருந்த சக்ரவர்த்தி திருமகனான வர், வெகுளி மேற்கொண்டு தொடுத்த அக்கினி யாஸ்திரத்தால் மகர முதலிய சலசர உயிர்க ளுடன் சமுத்திரமுந் தீய்ந்து காய்ந்ததன்மை போன்றிருந்தது. பின்னுந் தேவர் முதலிய யாவருந் துதிக்கும் பிளாபதி என்னுஞ் சந்திர மரபிலுதித்த வாநிசமன்னுவானவன், சகட யூகத்தையுஞ் சூசிகாயூகத்தையு முடைத்துச் சேனைகளை மாய்த்துப் பத்மயூகத்தையு முனை கெடச் சாய்த்து தேருடன் உல்லாசமா யுலா விக்கொண்டிருந்த பராக்கிரமத்தை என்னெ ன்று சொல்லுவேன்? க்ஷீராப்தியை கடைந்த காலத்தில் மத்தாகிச் சுழன்ற மந்தரகிரியைப்

போன்றிருந்தது. தன்னைச் சரணடைந்தார்க்குப் பிராணதாரனாகிய அபிமன்னுவானவன், தன் சாணைபிடித்துத் தயிலதூபஞ் செய்த சதமுகக்கணைகளால் அணிவகுத்திருந்த சேனைவீரர்கள் யாவருமழிந்து, யாவுமுடைந்து, பிராணனழிந்து, உதிரத்தில் விழுந்து, குழைந்து, அழுந்தி, சிதைந்து, புதைந்து, வதைந்து போகுதல், யானை விழுந்து கலக்கிய குளத்தில் அழிந்த நீலோற்பலம்போன்றிருந்தது.

இதன்றியும், அப்பத்மயூகம்-சகடயூகம்-சூசிகாயூகம் என்னும் இம்மூவகை யூகங்களினுமுள்ள அரசர்களின் சின்னங்களாகிய முரசு-பேரி-காகளம்-டமாரம்-பூரி - தாரை - சின்னம்-கொம்பு குடை-கொடி-முடி-கவசம்-பதக்கம்-ஆரம்-மாலை-வில்-வாள்-கேடயம் - வேல்-கதை-வாங்கு-ஈட்டி இவை முதலாகிய எல்லாவற்றையும் அபிமன்னன் சேதிக்கும்போது, அவைகள் ஒன்றனந்தமாகப் பொடிந்து திக்குகள் தோறுஞ் சிதறி வீழ்வது எதுபோன்றிருந்ததெனில், அந்தரத்திலுலாவி முழங்குகின்ற சத்தமேகங்களும், சந்திரசூரியர் முதலாகிய கிரகங்களும், நக்ஷத்திரங்களும், ஆகாயகங்கையிலுலாவிய மச்சங்களும், விண்டலத்தை விட்டு வழுவி மண்டலத்திலுதிர்ந்து விழுந் தன்மைபோன்றிருந்தது. இந்தப் பிரகாரந் தொந்தமாகிய பெரும்போர்செய்து எதிரிகளுடைய சேனையணிகளைக் கெடுத்து, ஆறுகள்-குளங்கள்-ஏரிகள்-மடுக்கள்-கயங்கள்-தடாகங்களைப்போல பற்பல விதங்களாக இரத்த வெள்ளங்கள் பெருகியோடுங் காலையில், மத்தியானச் சூரியனைப் போன்று எவர்களுக்கும் வருத்தமுண்டாக்கிக் குயவன் றிகிரியைப்போல் விறுவிறெனச் சுழன்று வராநின்ற அபிமன்னனை வண்டுகள் மொய்த்துச் சுற்றிக்கொண்டிருக்கும் நந்தியாவட்ட மாலையையும், மின்னலை விரட்டும் நன்னிலவைப் போன்ற வேலாயுதத்தையுமுடைய துரியோதன மகாராஜன் கண்டு, சோர்வுற்று மனம் எரிந்து, கண் பொறிசிதற நெருங்கிய பற்களை நறநறவென்று கடித்து, இருகரத்தையும் ஓங்கியறைந்து, நெற்றியிற் புருவமேறிய விழித்து, வியர்வைசிந்த முகங்கருகி, கலகலவென்றுச் சிரித்துக் கொதித்து வெறுத்து ஐயோ! சிறப்பிள்ளையுடைய பற்குணனுக்குப் பிறந்த ஒரு சிறுபையனுடைய பாணங்களின் வீரங்களினால் அளவிறந்த என்னுடைய சேனாசயின்யங்கள் கெடாத கேடும், படாத பாடும் பட்டு அதாகதமாயிறந்துபோவதென்றால், தர்மந் தப்பாத பேர்களும், வல்லமைப் பெற்ற நம்மைப்போலொத்த அரசர்களும், பாண்டவர்களாகிய பகைவரும், வலது பேசுவார்களே மகாபாவியென்று என்னை ஏசுவார்களே; அம்மம்மா!! அகண்டசாம்ப்ராச்சியன் திடகாத்திர தைரியத்தன குபேரன், வணங்காமுடியோன் என்றும் என்பெயர் இன்றோடிறக்கவாச்சுதே: இனி நாமென்னசெய்குவேன்? (தான் போகா வேலைக்கோ ராள்போனாற் சொட்டு) என்னும் பழமொழி மெய்யாச்சுதே; காரியவாதிக ளல்லாத விருதாவாகிய பேர்களை நம்பி என் காரியம் வீணாய்ப்போச்சுதே; இதென்ன கர்மம்? என்று அரவக்கொடியையுடைய அரசன் கோபங்கொண் டெழுந்து, கொலைபுரியாது நின்ற பேரணியைவிட்டுக் கூவிக்கொண்டோடுங் கொற்றவர்களையெல்லாங் கூவி உளக்களத்தில் எழுஞ் சுவாலையைப்போற் பெருமூச்சு விட்டுக் கையெடுத்தழைத்தான். அப்படி அழைத்தபோது படைமுகத்தி லடிபட்டிளைத்தோடிய சேனைவீரர்கள் வந்ததுமல்லாமல், எக்காலுமிளைக்காத தீரவீரர்களாகிய கர்னனும், கிருபாச்சாரியும், அசுவத்தாமாவும், ரத்தமாமிசந்தோய்ந்த வேலைத்தாங்கிய சயத்திரதனும், சல்லியராஜனும் போராடுந் திறத்தையுடைய கிருதவன்மனும், பூரிசிராவும், யாருமெச்சாநின்ற துச்சாதனன் முதலாகிய தம்பிமார்களும், சோமதத்தனும், நாமதத்தனும், ஏமதத்தனும், மாமன் சகுனியும், சுதாயுவும், சதாயுவும், அலம்பனும், அலம்புதனும், புலிமுகனும், அவ்வசேனனும் இன்னுமுள்ள தாமசகுணத்தாராகிய பல அரசர்களும் களையாமல் துரியோதனமகாராஜனுக்கு துணைவந்தார்கள். உடனே அத்துணைவர்களையெல்லாம் வணங்காமுடிபொறுத்த மன்னன் அளவற்ற தைரியங்களால் ஆதாரங்கூறி விடுத்தான்.

## கௌரவரில் சகுனி குமாரனாகிய உலூகன் வதை

இப்படியாகத் திரண்டுவந்த வெப்பமான படை மன்னரைப் புத்திரசிகாமணியாகிய அபிமன்னு பார்த்து, நான் பிரவேசித்த இந்த யுத்தமுனையில் வெல்லும் வல்லமை இவர்களுக் கில்லையெனச் சொல்லத் தகுந்ததென்று பெருமைபொருந்திய தேரை நடத்தி விரைந்தணுகி வந்தான். இப்படி இறுமாந்துவந்த அந்தச் சுபத்திரையின் சிங்கக்

குட்டியை மதம்பொழியும் யானைகளைப் போன்ற இவர்களெல்லோருங்கூடிச் சிந்தையில் நெருப்பெழச் சினந்து, முனைந்து, வளைந்து, சப்தமேகத்தி லிடிக்கும் பேரிடியைப் போல் நாணொலிகாட்டி, சிறப்புப் பொருந்திய வில்லுகள் தோறும் பாண வருஷங்களைப் பொழிந்து, பெருங்காற்றுடன்கூடிய தீயைப் போற் சிதறக்கலக்கி யெரித்து, தங்களாற் கூடியமட்டும் பார்த்துக் கடன்வாங்கியும் பார்த்தார்கள். இவர்கள் தொடுக்குங் கணைகளெல்லாங் கற்பாறைமேல் விழுந்து, தெறிக்குங் கடுமழைபோல் அபிமன்னன்பேரிற் பட்டுத் தெறித்துப்போயின தல்லாமல், அவனுடம்பிற் சிறிது மழுந்தாமற் போச்சுதுகள். அதேனெனில், சுமித்திரனென்னுஞ் சாரதி ரதத்தைச் சுழற்றுஞ் சாகசத்தினாலும், அபிமன்னுவினுடைய விற்றிறங் கைத்திறங்களினாலும், இப்போது நாமெல்லாரும் இந்த வீரனை விசேஷித்து, பேசிக்கொள்ளவேண்டியிருப்பதினாலும், அந்த மஹாவீரர்கள் தொடுத்த பாணங்கள் பிரயோசனம் இல்லாமற் றெறித்துப் போய்விட்டன. இந்த அபிமன்னன் ஒருவன்பேரில் எத்தனைகோடி மன்னனை எதிர்த்தார்கள்? அவர்கள் தொடுத்த பல்லவங்கள் எத்தனை ஆயிரங்கோடி யென்று சொல்லலாம்? அவர்கள் கற்றிருக்கும் வித்தைகள் எல்லாவற்றையும் நாட்டி எத்தனை விதமாகிய சேவகங் காட்டினார்கள்? இவைகள் இன்னவிதமாய் நடந்ததென்று எவர்களுணர்ந்து சொல்லத் தக்கவர்கள்? இறைவனே! இப்படிக்குப் போராடும்போது, சத்தியவாதியாகிய அபிமன்னுவானவன், எந்தெந்த அஸ்திரங்கள் எவரெவர்கள் தொட்டார்களோ? அந்தந்த அஸ்திரங்களுக்குத் தகுந்த அஸ்திரங்களை அவரவர்கள்பேரில் மிகுந்த கோபத்துடன் பிரையோகஞ்செய்து, நீர்மேலெழுத்தென்ன நிலைகெடச் செய்ததுமல்லாமல், வந்தவர்களில் ஒருவரையும் வஞ்சிக்காமல் ஒவ்வொருவருக்கு மும்மூன்று பாணம் உடல் புதையும்படியாய்ப் பெரியோர் சிறியோரென்னுமுறைமைபாராமல் மாட்டினான். அப்படிக்கு விடுத்த பாணங்கள் அவர்களுடைய இரண்டு புஜத்திலும் மார்பிலும் பாய்ந்து, அதனால் இரத்தவெள்ளம் பாயவே, யாவருங் கூட்டங்குலைந்து ஓட்டமெடுத்தார்கள். அந்த அலங்கோலத்தைத் துரோணாச்சாரியர் கண்டு ஆச்சரியங்கொண்டு, அபிமன்னனை யடுத்து மட்டில்லாத தேவாஸ்திரங்களையெல்லாம் பொழிந்தார். அதைக்கண்ட அந்த அபிமன்னுவானவன், ஒன்று-பத்து-நூறு-ஆயிர மென்னும் அம்புகளைப் போக்கி, அவர் விடுத்த பாணக்கொம்பிகளைத் தாக்கி நீக்கியது மல்லாமல், தீக்கணைகளை பொழிந்துக் கனல்மாரிபோற் றெரிக்கும்போது, புறங்கொடாத நாயோனாகிய துரோணாச்சாரியானவர் மனங்கொதித்து, தந்தையும், பிள்ளையும் இந்த வேலைக்கென்று வந்தவர்களோ வென்று ஆகிறவர்களுக்கு முந்தியோடினார். அந்த வேளையில், திரிபுர சம்ஹாரிக்கு மைந்தனாகிய கந்தஸ்வாமியைப் போன்ற அசுவத்தாமன் தந்தையாகிய துரோணாச்சாரியர் வந்தவழி நோக்கி பிந்தாமதைப் பார்த்துச் சிந்தை வருந்திக் கோபங்கொண்டு, தன் தேரைச் செலுத்தி நிதிகொடை வந்து வில்லைவளைத்து பல பக்கங்களிலும் உருவும்படியாய்ப் பாணங்களை விடுத்தான். அப்போது அபிமன்னன் அவன் றொடுத்த அம்புக்கிணையாக விடுத்த சரமாரியாற் பாதாதிகேச வரையிலும் முழுகி உதிரம் பெருகப் பரதவித்துப் பின்னிட்டான்.

உடனே உலகமெல்லாம் உன்னுங் கொடையாளியுங் கர்னனென்னும் பலசாலியுமாகிய வீரன், விஜயமன்னவன் பிள்ளையாகிய அபிமன்னுவை யெதிர்த்து, மேகத்திலிருந்தெழும் மின்னலின்னுழுங்கைப்போல் உருப்பேதமாகிய பாணங்களை ஒரு நூறுகோடி என்னத் தொடுத்து, அபிமன்னுவின் றேகந் துளைபட வடித்தான். அப்போது அந்த அபிமன்னுவானவன் பற்பல விதமாகிய பாணக் கூட்டங்களை அமோகமாகத் தொடுத்ததினால், கர்னனானவன் தான்றொடுத்த அஸ்திர சாஸ்திரங்கள் யாவுமிழிந்து, தேகங்கிழிந்து, உதிரம் வழிந்து, மதியழிந்து, மனமடிந்து இனி நாம் என்ன யுத்தஞ் செய்யப்போகிறோமென்று இளைத்து, ஏறிய தேருடன் ஓடிய பேருடன் மாறுமுகமா யோடினான். அதுகாலையிற் கிருபாச்சாரியரும், கிருதவன்மனும் எதிரேறிச்சென்று இறுமாந்துநின்று, இருவருடைய ஆண்மிக்கையும் நிலைபெறும்படியாய் ஒரு புறத்தில் வரும் அபிமன்னுவை இரு புறத்திலும் வளைத்துக்கொண்டு, பணித்தூறல்போற் பகழியைத் தூற்றினார்கள். அந்தச் சமயத்தில் ஒப்பற்ற அபிமன்னுவாகிய ஒருவன் வில்லிடத்திருந் தூந்திய ஒவ்வொரு கணைகளால், மேற்கூறிய இருவருந் தேர்-குதிரை - சாரதிமுதலாகிய யாவும்போய்,

பற்களுந்திறந்து விற்களுமுறிந்து, வெவ்று கைவிளைராயோடிப்பிழைத்தார்கள். அவர்களைக் கண்ட மாமனுகிய சகுனிவெகுண்டு, அவனுடைய சிரேஷ்டபுத்திரன் உலூகனும், இன்னுமுள்ள காந்தாரதேசத் தலைவரனேகரும் நால்வகைச் சேனைகளோடு பெருங்கடல் போலிறைந்து வந்து, இன்றையப்போரில் ஜெயம் எங்களுடையதென்று மங்களம்பாடிச் சொல்லும்படியாக வெல்லுகிறோமென்று வீரவார்த்தையைப் பேசினவர்களாய் அதியாப் பயலுக்கு யாவருமிளைக்கிறதாவென பேசிக்கொண்டு, அபிமன்னுக்கெதிரில் வந்தணுகினார்கள். வந்தவுடனே சகுனி குமாரனுகிய உலூகன்றலை பந்துபோல் விற்றென்று ஆகாயத்திற் கதறிக்கொண்டு போவதைக் கறுவிக்கொண்டு வந்தவர்கள் கண்டு, ஐயையோ!! கையில் வில்லெடுத் தேந்துமுன் உலூகன்றலை உம்பருலகிற் பறந்துபோகின்றதே யென்றேங்க, அதைச் சகுனிநோக்கி, அடாமகனே! என்னருகில் வந்தையே: உனக்கு எமன் எங்கிருந்து காத்துவந்தான்? அப்பா என் கண் மணியே! கைசலிக்க, மெய்சலிக்க யுத்தஞ்செய்துதான் காலங்கழித்தையா? அடா கண்ணே! எனது எண்ணை முன்னுக்கு வராமற் போயிற்றே: என்று ஏங்கி வில்லெடுத்தேங்கினன். உடனே அபிமன்னுவின் கணைகள் வந்து இதுதான் சமயமென்று மாமனுடைய மருமஸ்தானத்தைக் கிழிக்கவே, கெட்டவர்கள் கெட்டும் நட்ட நமக்கேனென்று போரை விட்டுவிட்டு மிகவும் நடுக்கமுற்று, பிள்ளை வாய்ப்பது புண்ணியவானுக் கல்லவோ? நாம் பேராசை கொள்ளுவது விருதாவல்லவோ? என்று பேசிக்கொண்டோடினன் சகுனியானவன். இவனை ஏசிக்கொண்டாடி வெகு மன்னர்களொழிந்து மடிந்தார்கள்.

## கௌரவரில் சல்லியராஜனுடைய சகோதரன் வதை

அவ்விடத்திலிருந்த ராஜாதிராஜனுகிய துரியோதனன் தம்பி விகர்ணனென்னும் நீதிமான் வின்னுனி ஏற்றி, அபிமன்னன் விடுக்கும் பாணங்களை மாற்றி, தங்கள் சேனைகளின் துன்பத்தையாற்றி, தன்னையுங் காப்பாற்றிக்கொண்டு வரும்போது, துன்முகன் முதலாகிய தம்பிமார்களும் வந்து கலந்து மலைந்து மிகுந்த சமர் தொடுத்தார்கள். அவர்களை விஜய குமாரனுகிய அபிமன்னு நன்முகமாக பார்த்து, ஓ ஐயன்மீர்! நான் உங்களுக்கு எதிரல்ல, உங்களுக்கெதிரி எங்கள் பெரியதந்தை இருக்கின்றார். ஆகையால், என்பேரில் நீங்கள் வந்ததும் போனதுந் தெரியாமற் புறமுதுகிட்டோடிப் பிழையுங்களென்று பூர்ண சந்திரோதய வாளிகளாற் றாக்கிப் போக்கினன். அதனுல், அடியுண்டு இடியுண் டோடும்படியாகிய தம்பிமார்களின் பாங்கிலிருந்தச் சல்லியராஜனும், அவன் தம்பியும் வில்லை வளைத்து, கொல்லவரும் வேங்கையைப்போலத் தாவித் தேருடன்மேவிப் போர் செய்யும் போது, கார்நிறக் கண்ணன் மருமகனுடைய கணைகளினுல் சல்லியன் தம்பி தலையறுந்தொழிந்தான். மலைபோன்று தன் மருங்கிருந்தமராடிய தம்பி மண்ணில் மாய்ந்ததை நோக்கிய சல்லியனெந்து சவ்வியசாசியின் பிள்ளையைக் கடுங்கோபத்துடன் வளைத்து தாக்கும் போது, அள்ளுகாளையாகிய அபிமன்னுவானவன் மழைக்கால வருஷங்களைப்போன்ற கணைகளை தொடுத்துச் சல்லியனுடைய வில்லையும், கவசத்தையும், வீரபட்டத்தையும் நொடியிற் பொடியாக்கினன். அப்போதே சத்துருக்களுக்கு இளையாத கோடையிடிபோன்ற சல்லியனனவன், இந்த வில்லாளியாகிய வாளபிமன்னனை வாழ்த்தி, பெரியோரைத் துணைக்கொள்ள வேண்டுமென்று மரியாதையுடன் திரும்பிப் போய்விட்டான். இந்தப்படிக்கு பின்னணி முன்னணி; முன்னணி பின்னணியாக முனைந்துவந்து போராடும்படியாகிய வாளாயுதம்-வேலாயுதம்-சூலாயுதம்-கெதாயுத முதலியவைகளை யுடைய வெற்றி வேந்தர்களின் தேகமுழுமையும், அந்த அபிமன்னுவின் தயில தூபம் பண்ணின வாளிகளானது, இலைத் துரப்பணம்போற் றுளைத்து உருவியோடுதலினுல், ஆயுதங்களெல்லாம் ஒடிந்து, பதாதிகளு மழிந்து, ரணக்களம் முழுவதும் நிறைந்து, செத்தவர்கள்போக மற்றவர்களுக்கெல்லாந் தேகம் வேறு, முகம் வேறு, சிந்தை வேறு, செயலும் வேருகக் கலங்கி, வந்தவழி பார்த்து நைந்தோடினுர்கள். இதுகளை யெல்லாஞ் சேனுநாயகராகிய துரோணச்சாரியார் கண்டு ஆச்சரியங்கொண்டு, நெருங்கி யுத்தஞ்செய்ய விரும்பிய மைத்துனனென்னுங் கிருபாச்சாரியார் முதலாகிய பேர்களுக்கு நேரே முகத்தைத் திருப்பிக்கொண்டு பூமண்டலாதிபனுகிய துரியோதன மகாராசனுடைய நவரத்தின கசித குண்டலங்களாடாநின்ற காதுகளிற் கேட்கும்படியாகவும், மந்திலன்புரு

கும்படியாகவும், மேகமுழக்கம்போ லிறைந்து சில வசனங்களைச் சொல்லத் தொடங்கினார்.

### அபிமன்னனுக்குப் புறந்தந்துவந்த துரோணரைத் துரியோதனன் வெறுத்து மற்றவரைத் தேற்றி மீண்டும் போர்க்கனுப்புதல்

ஓ பூமியாளும் நேமிதாங்கிய சாமியே! கேளும்: ஒருதவியுமில்லாமல் ஒரு வில்லும், ஒரு தேரும், ஒரு சாரதியுங் கொண்டுவந்து, அநேகம் பேர்களுதவியைப்பெற்ற பல வில்லும், பல்தேரும், பலபல சாரதியுமுடைய நமது படைகளை யெல்லாம் பாழாக்கி, பல வான்களாகிய வீரர்களெல்லாருந் திடுக்கிடும்படி செய்து நடுக்கமில்லாமற் றிரியும் முனை வீரனான அர்ச்சுன குமாரனானவனை, கந்தஸ்வாமி யென்று சொல்லத்தக்கதோ? அல்லது, முருகனென்று பேரிட்டழைக்க வேண்டியதோ? உமாபதியென் றுரைப்பதோ? எனக்கு ஒன்றுந் தோன்றவில்லை. மேலும், இன்னொருவன் வந்து யுத்தஞ் செய்யும்போதே நாம் ஊடுதாக்காம லலைகின்றோம்; இந்தப் பிள்ளையின் தந்தைமார்களும், சகோதர வர்க்கமும், மாமன் கும்பும், படைத்துணை வந்த மன்னரனேகரும், இவனுக் குதவியாய் வருவார்களாகில், திரிபுவனங்களும் என்னபாடுதான் படுமோ தெரியாதென்று தேசிகன் சொல்ல, இந்த வார்த்தை இராஜாதிராஜனுடைய இரண்டு செவிகளுக்கு மேர்க்காமல், கர்னகரேமுங் கடுங்கோபமுடையவனாய் விற்றிறமுணர்ந்த வேந்தரிற் சிறந்த விற்குருவாகிய வேதியனைப் பார்த்து, ஆ! ஆ! ஐயரே! ஒரு கொசுப் போன்ற சிறிய பையனை ஒரு பாணத்தாற் கொலைசெய்துப் போடாமல், அவனொரு வீரனென்று அதிரதவீர வருக்கத்திற் சேர்த்து உம்மைப்போலொத்த உத்தமன் துதித்துக் கொண்டாடுவது எல்லா நன்மைகளிலும் மேலாயிருக்குதென்று நகைத்து, தனது சமீபத்தில் வெகுவீரர்களோடு வீற்றிருக்குங் கர்ணனை நோக்கி, அண்ணா! நமது ஆசிரியர் சொன்ன வார்த்தையைக் கேட்டீரோ? மெத்த நன்றாயிருக்கின்றது. கலங்கி எண்ணமிட்டுக்கொண்டிருக்கும் மனதைப் புண்ணாகச் செய்யும் பெரியோர்கள் இவர்களைவிட இனி வேறொருவரைச் சம்பாதிக்க வேண்டியதில்லை. தலைமாட்டுக்குக் கொள்ளி தானே தேடி வைத்துக்கொண்ட தன்மையைப்போல் நாமிவர்களைச் சேர்த்து வைத்துக்கொண் டிருக்கிறோமென்று துரியோதனனுரைத்து, மற்ற தீர வீர திடவாள்களையும் பார்த்து மறுபடியுஞ் சொல்லுகின்றான். ஓ வேந்தர்களே! இப்போது நமது யூகத்தில் வந்து புகுந்த அந்த மைந்தனானவன், தனது தாய் தந்தையர் முகத்தில் மறுபடியும் போய் முழிக்கவொட்டாமல் உங்களுடைய கூர்மையுஞ் சுடருங் கூட்டுறவாகிய ஆயுதங்களைக்கொண்டு சாய்த்துச் சீக்கிரத்தில் உயிர்ப்பறித்து விண்ணுலகேற்றி விடுங்கள். விரைக்கணைகளுடைய வில்வேதியனை நம்பி மயங்கிக் கெடாதீர்கள். மன்னவர்களே! ஜாக்கிரதை; ஜாக்கிரதை என்றுத் தன்னுளடங்காக் கோபங்கொண்டு தரணிபனுஞ் சொல்ல, அந்தச் சொல் சொல்லி ஓயுமுன்னமே, ஒப்பற்ற சாமர்த்தியமுள்ள வீரர் போற் பொங்கியெழுந்து புறப்பட்டார்கள்.

அப்போது பார்க்கக் கண்கூசும் பத்தினியாகிய உத்தமி யுடுத்திய வஸ்திரத்தைத் தொட்டுரிந்த துஷ்டர்களையென்னும் துற்சாதனனானவன், அவர்களை மடக்கி நிறுத்தி தன் தமயனாகிய வணங்காமுடி மன்னனை நோக்கி, ஏனண்ணா, பத்மயூகங்கட்டிய நம் பராக்கிரம இராஜசேனைக்குட் புகுந்து செயித்துத் திரும்பி வரவேணுமென்று எண்ணங் கொண்டு வந்திருக்கிற அபத்தக்காரன் தங்கையாகிய சுபத்திரையின் பிள்ளையை, தேவரீர் சிந்தையில் நினைக்கு முன்னமே நொந்தானென்று ஒரு கணையால் அவனுயிரைத் தின்று விடுகிறேன். எனக்கொருவருடைய உதவியும் வேண்டியதில்லை. அதிவிதக் காச்சலுங் கருமாறப் பாய்ச்சலும்போல் அபிமன்னன் இறந்தானென்று நரனும் நாரணனுங் கேட்டுப் புத்திரசோபத் துய்பரால் உடனே செத்துப்போவார்கள். அப்பால் யுத்தமென்கிறதில்லை; நமக்கொரு சத்துருக்களும் இல்லை; நம்மைத் தொடர்ந்த எல்லாச் சனியும் இன்றைக்கு முடிந்துபோமென பிதற்றிக் கோபாக்கினியுடன் யுத்தமுனைக்குச் சென்று வெற்றி வில்வளைத்து, அநேக மாயிரம் அஸ்திரங்களைத் தொடுத்து, இடியும்-மழையும்-மின்னலும்-காற்றும் ஏககாலத்தில் நேரிடுந் தன்மை போலும், வடவானலம் வந்து வளைந்தவாறு போலும், மாறுமாறாக நூறுநூறாகப் பொழிந்து ஆக்ரமித்தான். அப்படி ஆக்கிரமித்துப் பொழிந்தவைகளாகிய அவ்வடிக் கணைகள் தாறுமாறாக வருவதை மாயன் மருமகனாகிய அபிமன்னு வுணர்ந்து, அகோரம் பொருந்திய பாணங்களினால் துர்ச்சாதனன் தொடுத்த

பாணங்களை இரண்டிரண்டுத் துண்டாக்கி,
அவன் கைக்கொண்ட வில்லைக் கண்டங்
கண்டமாய் அறுத்து இரண்டாக்கி, அவன்
தேகத்திலும் ஆயிரங் கணைகளைப் பாய விடுத்
தான். அப்போது சல்லடைக் கண்போலுஞ்
சாளரம்போலுஞ்சரீரமெல்லாந் துளைபடவே,
துர்ச்சாதனன் மாய்ந்தவனைப்போ லவச
மாய்த் தேரின்பேரிற் சாய்ந்தான். அந்த
வேளையில் அபிமன்னுவானவன் துர்ச்சாதன
னைப் பார்த்து, அப்பா சிற்றப்பா! நிறைவா
கிய தர்ம முதலிய சத்தியங்களையுடைய தரும
ராஜனை இராஜ சபையில், வறை - நிறை-
முறை- துறை இவைகளில்லாத கொடிய வாக்
கியங்களினால் மனம்வருந்தச் செய்தாயென்று
மதிமருண்டு கேட்டிருக்கின்ற யான், ஆ! ஆ!
உன்னுயிரை எமலோகத்திற்கு இப்போதே
அனுப்பிவைக்க எத்தனித்தேன். ஆனால், பழு
தில்லாத என் பெரிய தந்தையின் சபதத்திற்
குக் குறைவு வருமேயென் றெண்ணிக் கொஞ்
சம் கிருபைவைத்து உனக் குயிருதவி செய்
தேன். ஓ விவேகமற்ற மிருகமே! விரைவாய்
ஓடிப் பிழைபுமென்று கோபித்து அங்கிரம
மாகிய விக்ரமமுண்டய அப்பாதகன் பக்கம்
எரியும்படிக்கு அக்கினிச் சிலீமுகங்களை வீசி
னான் பராக்கிரமப் பார்த்திபன் பெற்ற பாலன்.
அந்த கணையடியாற் பிடிபட்ட வில்லும் ஒடி
பட்டு, உடலுங் கிழிந்து, உதிரம் வழிந்து,
வெல்லுகிறேனென்று விளம்பி யெழுந்த
சொல்லுமிழந்து, உண்டோ இல்லையோ
வென்னும் பிராணனுடன் ஒடுங்கி- அடங்கி-
மடங்கி வீழ்ந்தான். அவனைத் தேருடன்
சாரதி கொண்டுபோய்த் தேற்றினான்.

இப்பால், மலைகளைப் பொடியாக விடிக்கு
மத்தகத்தினையு மருப்பினையுங் கொண்ட பரு
த்த உடலையுடைய மதயானையினாலும் வெல்
லப்படாத வீர சிங்கத்தைப்போன் றிருந்த
னன் அபிமன்னனெனும் அதிசூரன். அவ்
வேளையி,ல் துர்ச்சாதனன் அபிமன்னுவினால்
அடிபட்டு அயர்ந்து வீழ்ந்தானென் றுணர்
ந்து சிந்தை தளர்ந்து, தேம்பிவாடித் துயரா
லுடைந்து, துன்பமடைந்து தளர்ந்த துரி
யோதனராஜனை கர்ணனெடுத்து, பற்பல வச
னங்களினாற் றேற்றி, உருக்கிய செம்பும் முருக்
கம்பூவிலுஞ் சிறந்து சிவந்த கோபக்கண்ணை
யுடையவனாகி, ஆ! ஆ! இத்தன்மையாக புத்
தஞ்செய்த அபிமன்னுவென்னும் புத்திரனை
ஒரு கணைக்கு இரையாக்குகிறேன். அவனுடன்
வந்தோரையும் உயிரைப் போக்குறேனென்று
தேரேறி வில்லை வளைத்து அபிமன்னுவென்
னும் ஒரு சிங்கக்குட்டியைக் கோபமுடைய
கர்ணனென்னும் யானை கொல்லப் புறப்பட்ட
தைப்போல் வந்து, கடுமையாகக் கொடுமை
கொண்ட கணைகளை நூறு நூறாக நொடிக்குட்
பிரயோகஞ் செய்தான். அவைகளை அந்த
அபிமன்னுவானவன், வேறுவேறாகத் துண்
டித்து வீழ்த்தி இலைமுகப்பகழி, எரிமுகப்பகழி
என்னும் இரண்டு பாணத்தையெடுத்து அங்க
தேசாதிபனுடைய மார்பு கிழியும்படிக்குப் பிர
யோகஞ்செய்தான். அப் பாணமானது செங்
காந்தம்போல் வந்து விழுந்த விசையினால்
மார்பு துளைபட்டு ஆற்றின் பெருக்கம்போல்
இரத்தங்களோட, அதனாற் களைபட்டு அயர்
ந்து பயந்து தேரின்மீது வீழ்ந்த கர்ணனை
அவனேறிவந்த தேருடன் சாரதி கொண்டு
போயினான். கேட்டீரோ ஜெனமேஜெய மகா
ராஜனே! அக்காலையில், கன்னிப்பருவத்திற்
குந்திதேவியினால் விடப்பட்ட பெட்டியானது
ஆற்றில் மிதந்துவர கண்டெடுத்து, அதிற்
குழந்தையா யிருந்த கர்னனைப் பிள்ளையாக
வளர்த்த தேர்சாரதிக்கும், அவனுடைய பெண்
சாதி இராதை என்பவளுக்கும் பிற்பாடு சில
பிள்ளைகள் பிறந்து வளர்ந்துவருகையில், அப்
பிள்ளைகள் கர்னனென்னும் அண்ணனுடன்
சேர்ந்து திரிதராஷ்டிரனுடைய அரண்மனை
யில் உத்யோகம் பெற்றிருந்தார்கள். அவர்
களின் மூத்தவனாகிய ராதனென்பவன் மற்
றோர் முகத்திற் போர்புரிந்து நின்றபோது,
அண்ணனான கர்னன் அபிமன்னனால் அடி
பட்டுச் சோர்ந்ததைக்கண்டு உடலு மனமும்
உருகிச் சகியாமல், அதிவேகமாகக் கோபங்
கொண்டு வெவ்விய போர்முகத்திற் சென்று
மேகம்போன்ற வில்லை வணங்கி நாணியிணைக்
கிக் கூர்வாளிகளை கார்வருஷம்போற் பொழிந்
தான். அதுகண்ட ஒப்பிலாச் சுப்ர தீபம்
போன்ற அபிமன்னன் கொதித்தெதிர்த்து,
ஒரு முகப்பகழி என்னும் ஒரு கணைதொடுத்து,
அவனுடைய அழகிய முடித்தலையை யறுத்
துத்தள்ளினான். அப்போது மானாபரணனாகிய
துரியோதன மன்னனும், அவனுக்கிசைந்த
கர்னனும், மற்றப் பேர்களுங் கும்பாகக்கூடி
வம்பாகப்பாடி போர்புரிந்து, அபிமன்னனு
டைய அம்புறாத் தூணியிலிருக்கும் பாணங்க
ளெல்லாந் தங்களம்பினால் அழியும்படி விடு
க்க, அக்கால் அர்ச்சுனகுமார னிடத்தினின்
றுஞ் சப்திக்காமற் பொன்வாளி யொன்று

புறப்பட்டு வந்து எதிராளிகள் மானமும் வெட்கமுமாற்றி உடலெல்லாம்பீறி உலர்த்த, அப்போது பிதற்றிவந்த கர்னன் புறமுது கிட்டோடும் பெரும்வீரருக்கு முன்னிட்டோடினன்; மற்றையரும் வாடினுர்கள்.

### வீமசேனன் தருமராசனிடத்தில் நின்றும் விடைபெற்று அபிமன்னனுக்கு துணைபோதல்

இப்படிக்குக் கர்னன் தாவரிக்கமாட்டாதோடும் பேதமையைச் சாம-பேத-தான தண்ட முதலிய யாவுமுணர்ந்த தனுர்வேதியராகிய துரோணச்சாரியர் கண்டு பின் தொடர்ந்து, ஐயோ! அப்பா! அரசனுக்கு உயிர்த் தோழனுகியகர்ண! அறியாத பையன் அபிமன்னனை செயிக்கமாட்டாமல் அவனுல் அடிபட்டு இளைத்தோடுதல் உங்களுக்குத் தக்கதா? உலகம் பழிக்கும்படியாகிய ஈனமல்லவோ? மானமுள்ளவர்களே! க்ஷத்திரியகுலத்திற் பிறந்த க்ஷாத்திரரே! என்று தூயவனுகிய சேனுபதி சொல்லி துடரும்போது, வெட்கமும் நாணமுமேலிட்டபடியால், அவரைத் திரும்பிப் பார்க்கக்கூடாமல், துரியோதனராஜன் இருந்து பிரிந்தோடி நின்ற இடத்திற்ருனுமணுகி, அங்கு பெரும் போர்முனையில் எதிர்த்துக் காயும்படியாகிய தீப்பொறிக் கணைகளைத் தொடுக்குஞ் சில மன்னர்களோடு ரதகஜதுரகபதாதிகளும் நாற்றிசையுஞ் சூழச் சென்று, யாவருமீண்டு மேலிட்டார்கள். அப்போது, (கனப்படவெண்ணுது உயருங் குடியரைத் தலையெடுக்க வொட்டாமற்ருழ்ந்துங் கடனும் பொய்யும்போல) இந்த வீரர்களை மேலிட வொட்டாமல், இவர்களெல்லாரும் வற்றியுலர்ந்த சருகாகவும், அபிமன்னன் தீயாகவுமிருந்து காய்ந்து கருக்கினுன். அதனுல் அனேகம்பேர்கள் மாய்ந்தார்கள். அக்காலையில், இதழ்விரிந்த பரிமள மிகுந்த மலர்மாலையணிந்த வீமசேன மஹாராசன் தன் தம்பி புத்திரனுகிய அபிமன்னனிப்படிக்குச் சத்துருக்கள் இளைத்துச் சாகும்படியாய் வெற்றிமிகுந்த யுத்தங்கள் செய்துவருதல் கேட்டு, வளைந்த விற்ருங்கி அசத்தியத்தால் இளையாச் சொற்ருங்கியிருந்த தர்மராஜனிடத்தில் திடுதிடுவென்று ஓடிப் பாதகமலத்தில் வணங்கிக் கண்கலங்கி சத்துருக்கள் எல்லாரும் வருந்தி இளைத்து மாயும்படிக்குப் புகுந்து, அமர் செய்யாநின்ற அபிமன்னுவின்பேரிற் பிறமை யுடையவனுகிச் சோபங்கொண்டிதனையுரைக்கலானுன்.

“தோலனேக மநேகநேகமி ரங்கமங்களநேகநீள், வேலநேகமநேகர் வாள்வரி வில்லநேக விதப்படக், கலநேக மெழுந்த தொத்தமாடுகின்ற சளத்திடைப், பாலனேகடி தேவி வெம்முனை பயிலுமா றெங்ஙன் பாவமே.” அண்ணு? யானைகள் அனேகம், தேர்களனேகம், குதிரைகளனேகம், பதாதியனேகம், வேல்களனேகம், வாள்களனேகம், வில்லுகள் அனேகமாய்க் கொண்டு சப்தபேதமும் பிரசண்ட மாருதமுங்கூடி விளையாடுந் தன்மைபோற் கொதித்து அமர்செய்கின்ற இந்தப் பத்ம யூகத்தில், அறியாத சிறிய பாலகனே வலிமையுடன் சென்று யுத்தஞ்செய்யத்தக்கவன்? அவனுலாகுமோ? ஐயோ! இது மஹாபாவம்! மஹாபாவம்! நாமெல்லாம் இருக்க ஏனண்ணு அந்த அறியாதக் குழந்தையை அமரில்விட்டுப் பார்க்கவேண்டும்? இப்போதே தேவரீரெனக்கு விடைகொடுத் தருளும் நான் அவனுக்குத் துணையாகப் போகிறேன் என்று சொல்லி, அந்தத் தர்மராஜனுடைய இருபாத பத்மங்களையும்பற்றி நெற்றியிலுங் கண்களிலு மொத்திக்கொண்டு ஸ்தவுத்தியமாகப்பேசி, அண்ணு எனக்கு ஒப்பானவர்கள் எவர்களும் இல்லையென்று தங்களுக்கு நன்ருய்த் தெரிந்திருக்கும். ஆதலால், எனக்குத் தடையற விடைகொடுமென்று அண்டர் புகழுந் தண்டாயுதத்தைக்கொண்டு செலவு கேட்க, உடனே வீமசேனன்பேரிற் றயைபிறந்து தர்மநந்தனன் உத்தரவுகொடுக்க, தன் மனதில் நினைத்தபடி முடிக்குங் காரியவாதியாகிய கதாபாணி யென்னும் வீமசேனன், மனேவேகம் போன்ற தேரைச் செலுத்திப் பற்பல மண்டலீகரும் மன்னவர்களும் பதாதி முதலாகிய சேனைகளுந் தன்னைச் சூழ்ந்து வரும்படியாய்ச் சகலவித வாத்தியங்களுடன் புறப்பட்டு, தன்னுருவின் சாயை போலச் சேனைவீராள் முதலிய பேர்களுந் தொடர்ந்து வர, நேரில் நேரிட்ட வீரர்களையெல்லாந் தலையுருட்டிக்கொண்டு சற்றுருவின் சேனைகளென்னுங் காட்டுக்கு வாய்ந்த வீமசேனனென்னும் அப்பெருந் தீயானது புகுந்து நிறைந்த திசாதிசைகளெல்லாங் கொளுத்தி மாய்த்தது. அக்காலையில், மாய்கையில் மயங்கின வறிஞரைப் போல் வேறொரு சிந்தையுமில்லாமல் நினைவற்று மயங்கித் தங்களைத் தாங்களே மறந்து நின்ற சக்ரயூகச் சேனைகளும் ஈயையொத்து இறக்கும்படியாயது. ஆண் சிங்கமனைய வீம

சேனன் கருடனைப்போன்று நின்று சத்துருக்
கள் வரவுக்கெதிர்பார்த்து இருந்தனன்.

அந்த வேளையில், கலிங்கர்-சோனகர்-மக
தர்-கன்னடர்-கங்கர்-கொங்கணர்-கௌசலர்-
தெலுங்கர்-ஆரியர்-பப்பரர்-துளுவர்-சீன
கர்-சாவகர்-சிங்களர்-குலிங்கர்-மாளவர்-கள
பர்-ஒட்டியர்-குகுதர்-கொப்பளர்-கூபகர்
இவர்கள் முதலாகிய தேசபாஷை ராஜர்க
ளெல்லாரும் நெருப்புப் பொறிபோற் சீறி
யெழுந்து, வாயு குமாரனாகிய வீமசேனனை
வளைத்து உறுத்துப் போர்செய்தார்கள். இப்
படியாகப் போர்புரிந்த பற்பல பாஷை மன்
னர்களெல்லாரும் வீரசொர்க்கஞ் சேரும்படி
யாய், விருது வித்தகனாகிய வீமசேனனுடன்
வந்த பல பாஷையைக்கற்ற வீராவேச வேட்
கையைப் பெற்ற மன்னவரெல்லாரும் பின்
னிடாமற் றுணிந்து புகுந்து வெட்டினார்கள்.
அதனால், நேமியூகங் கெட்டு, நெடிசேனை
யெல்லாந் தறிபட்டு, உயிர்விட்டு, அழிபட்
டன. அப்படி யிறந்த படைவீரர்கள் எப்படி
யிருந்தாரென்றால், இந்த வீமசேனன் வன
வாசஞ்செய்த காலத்தில், மந்தாரை மலருக்
காக அளகாபுரியிற் சென்று கோபமூக்கங் கொ
ண்டு உறுக்கிப் போர்புரிய மூறுக்கிய நாளை
யில், யக்ஷ ராக்ஷஸாள் முதலாகிய அசுரப்
படைகளெல்லாரும் எப்படி யழிந்தார்களோ
அப்படி யொழிந்தார்கள். உடனே மருத்து
மைந்தனானவன் நெருங்கிய காளமேகத்தை
போன்று முழங்கிக் கோபங்கொண்டெழுந்து
எழுகினாற் செய்த தண்டாயுதத்தை கைக்
கொண்டு சக்ரயூக மத்தியிற் புகுந்து கரகர
வெனசுழற்றிச் சாடும்போது, அங்குள்ள கௌ
ரவப்படை வீரர்கள் யாவரும் ஸ்ரீராமருடைய
விஷ்ணுவைச் சுமந்து ராக்ஷதப்படைகளைப்
பக்ஷணஞ் செய்தருளிய ஆஞ்சனேயர் இந்த
போரையும் ஒரு கை பார்ப்போமென்று இவ்
விடம் வந்தாரோ! அல்லது மற்றியாதோ!
ஒன்றுந் தெரியவில்லையே என்று அச்சங்
கொண்டவர்களாய், மறுபடியும் அநுமாரல்ல
இவன் வீமசேனனே யென்று அவரவர்கள்
தேறி, வெவ்விய கோபாக்கினி விரியும்படிக்கு
ஒருவாறு நிலைத்து நின்றபோது, எரிக்கும்படி
யாகிய பொறிகள் சிதறக் காயுங் கண்களை
யுடைய இராஜாதிராஜன் நைந்து, மன
நொந்து, ஆகாயத்தி லுலவா நின்ற மேகம்
நீருண்டிடித்து விழுங் கோடையிடியால் நடு
நடுங்கித் தலை நசுங்கி மாயும் பாம்புகளைப்போ
லும், ஆக்ரமித்தெழுகின்ற சிங்கம் அசைந்
தெதிர்வரக் கண்டு அழிந்து இடம்விட்டொ
ழிந்து ஓடுகின்ற யானைக் கூட்டங்கள் போல்,
நமது சேனைகளெல்லாம் ஒரு அபிமன்னு
விடுங் கைப்படையினால், அழிந்து-ஒழிந்து-
நெளிந்து-தெறிந்து-மூமிந்து தாமரை
யிலைச் சலம்போற் றத்தளித்துக்கொண்டிருக்
குஞ் சமயத்தில், இந்த வீமசேனனும் வந்து
சேர்ந்து அவ்வபிமன்னனுடன் கலந்து இரு
வரு மொன்றாய்க் கூடிப் புகுவார்களாமாகில்,
ஐயோ! ஐயோ!! பெருங் காட்டை யெரிக்குங்
காடாக்கினியுடன் பிரசண்டக் காற்றுங் கலந்து
வீசுவதைப்போ லாகுமல்லவா? ஆகையால்,
என் மாமா சகுனியும், சிந்துராஜனும், பூரி
முதலாகிய அரசராடங்களும் ஒரேமுகமாகச்
சென்று, வீமசேனன் அபிமன்னனுடன்வந்து
கலக்காதவித மெப்படியோ; அப்படிக்கெல்
லாம் வளைத்து, உயிருக்கொட்டி யுத்தஞ் செய்
யுங்கள். மேலும், மற்றப் படைவீரர்களாகிய
போர்களும், ஆண்சிங்கம்போன்ற விகர்ணன்
முதலாகிய தம்பிமார்களும், அடல்வீர பராக்
கிரமனாகிய அசுவத்தாமாவும் எதிர்த்துப் பல
மாகிய யுத்தஞ் செய்வீர்களாகில், இவ்விரு
வரையும் இப்போதே வென்று எளிதிற்
கொன்றுவிடலா மென்று, அரவக்கொடி
யோன் சொல்லினான். அந்த மொழி கேட்ட
வீரர்கள் யாவரும் அப்போதே அவனிடத்திற்
செலவு பெற்றுக்கொண்டு, கார்கால மேகம்
போல் முரசவாத்திய முதலியவை முழங்க,
முனையாகச்சென் றெதிர்த்துக் கோபங் கொ
ண்டு, இரதகஜதுரகபதாதி முதலிய பலபல
சேனைகளுந் தீப்பட்டெறியுஞ் செங்கனலைப்
போற் றிரண்டு வீமசேனனுடனேயும், வீம
சேனனுடன் வந்த படைமன்னர்களுடனே
யும் கை கலந்து போர் முடிக்கினார்கள். அப்
போது வாயுகுமாரனானவன் கண்கள் சிவந்து
அழகிய திருமுகம் வியர்த்து, இருதோளும்
பூரித்துக் கலீரென நகைத்து, மணி மகர
குண்டலங்கள் பிரகாசிக்க வசைத்து முழவு
முதலிய வாத்தியங்களுஞ் சிங்கநாதமு முழங்
கிவர விரைவிற் சென்று பாணப் பிரயோகங்
கள் பண்ணி, துரியோதனன் சேனைகள் வரு
ந்தி வாடும்படியாக அடித்து, அவரவர்களு
டைய தங்கம்போன்ற அங்கமெல்லாந் துளை
த்து, ரத்னமுடியுடன் தலைகளற்று வீழும்படி
யறுத்து, வாகுவலயங்களுடன் தோள்கள்
துணிபட முறித்து, ஆபரணங்களுடன் மார்பு
கிழிபட உதைத்து, வீரகண்டாமணியுடன்

கால்கள் முறிபடச் சிதைத்து, வேலாயுத முத
லிய ஆயுதங்களைக் கொண்ட கை ஒடிய அடி
த்து, உயர்ந்த ரதங்களுடைபட வொடித்து,
குதிரைகள் தறிந்து நடுவறவறுத்து, வளைத்த
விற்கள் முதலாகிய பாணங்களுந் துண்டந்
துண்டமா யழித்து, பொடியாகச் செய்து முடி
த்து பராக்கிரமித்து நின்றனன்.

### அபிமன்னனோடு வீமசேனனைச் சேரவொட்டாதபடி துரியோதனன் சயிந்தவனை யனுப்புதல்

அப்போது உடலையெல்லாங் கீறிப் பீறித்
தாறுமாறுகச் செய்யும் பாணங்களுக்கு எட்
டாமல் உதிரம்வழிய யுத்தபூமியை விட்டுத்
தளர்ந்தோடா நின்ற இராஜர்களை வணங்கா
முடியோன் கண்டு, பற்பல வசைகள் புகன்று
கலகலவென்று நகைத்து, முகங்கருகி, மன
திற் கோபாக்கினி யுடையவனுய்த் திணிந்த
மனத்துடன் நிமிஷமேனும் ஓரிடத்தினிற்
காமல் ஓடிவரும்போது, படைத்துணையாக
வேண்டி நாடிவரா நின்ற தன் மைத்துனனு
கிய சிந்துதேசத் திலகனைக் கண்டு, அபரிமித
மில்லாத இரக்க வார்த்தைகளை அநேகமா
கச் சொல்லி, பலவாராகக் கொண்டாடி, ஓ
வீராதிவீரனே! "மறனுடையை செம்பொன்
மேருகிரி நிகர் வலியுடையை வென்றி கூரும
ரசிய, லறனுடைய பஞ்சபாணனென வடி
வழகுடையை நின்ற சேனையரசரி, னிறனு
டையை திங்கள் சூடிவியனதி நிறைபுனல்பர
ந்துலாவுமவுலியர், திறனுடைய மன்ற ஞறு
மலரடி தெளிவோடுபணிந்தஞான முடியினை
வயவிசய னின்றதேர் கடவிவரும் வலவன்
மரு கன்றனோடு வரைபுரை, புயமுடைய
தண்ட்வீம னுறிலிரு பொருநரையு மின்று
பூசல் பொரவரி தயலிவரகன்றி போகிலமர்
பொர வறவுமெளி துண்டு பாயநுதலெரி,
நயனனருள் கொன்றைமாலை தனையிவர் நடு
விடி லிரண்டுபாலு மகல்வரே. அரன்முடிய
ணிந்த தாமமிதுவென வடிகொடு கடந்து
போக வெருவுவர், பரவைநிகர் நம்பதாதிய
பலருடன் வளைந்து கோலியமரிடை, வரமுற
வணங்குநாளி லருள் செய்து மனமகிழ மங்
கைபாகனுதவிய, வுரனுடைய கண்டினுலிவ்
வபிமனை யுயிர்கவர்த லின்று சாலவுமுறுதியே'
என்று சொல்லி, ஓ மைத்துனனே! இது நல்ல
சமயம்: புஜபல பராக்கிரம வீரமும், மகமே
ருவைப் போன்ற பலமும், எவரிலு மேலான
வெற்றியும், அன்போடரசாக்ஷி செய்யு நிதி
யும், தரமறிந்து செய்யுந் தர்மமும், மன்மதா
கார வடிவமும், மாறுபடாத சத்தியமும்,
சதுர்வித சமயோசிதமும், சாதுரங்கப் பழக்க
மும், தாராளமாகிய கொடையும், இவ்விடத்
தினிற்குஞ் சேனை மன்னர் முதலாகிய பட்ட
வர்த்தனரைப் பார்க்கிலுஞ் சிறந்த திடவீர
காத்திரத் தோற்றமும், யாவராலு மெண்
ணப்படுந்தோறுஞ் சிரகம்பிதஞ் செய்து சபா
சென்று மெச்சத்தகுந்த மதிப்பும் பெற்றிருப்
பதன்றி, துண்டமாகிய பிறையும், கண்ட
நிறம்பிய கறையும், வண்டலோடிய நதியுந்
தரித்தருளிய சிவபெருமானது பாதாம்புயத்
தைத் தெளிந்த மனத்தாற் சிந்தித்துப் பணி
ந்த திவ்விய ஞானமுடியும் பெற்ற எம தரு
மைத் துணைவனே! நீர் எங்களுக்கோர் உதவி
செய்யவேண்டும். அஃதியாதெனிலோ? வெற்
றிபெறும் விஜயனுடைய தேர்ச் சாரதியின்
மருமகனுகிய அபிமன்னனுடன் மலைக் கொப்
பாகும் கதை தாங்கிய தோளினையுடைய வீம
சேனன் வந்து கலந்து கொள்ளுவானுகில்,
அவ்விருவரையும் ஜெயித்து வெற்றி பெறு
வோமென்று உன்னுவது அருமை. ஆத
லால் ஒரு யுக்தி தோன்றுகிறது. ஒருவரோ
டொருவற் சேராமற் பிரித்து விட்டால் யுத்
தஞ் செய்து வெல்லுவதற்கு நமக்கு மெத்தச்
சுளுவாயிருக்கும். அதற்கு ஒரு தந்திர மிருக்
கின்றது; அஃதியாதெனில், மன்மதனை யெரி
த்த நெற்றிக் கண்ணினையுடைய மகாதேவ
ரின் அனுக்கிரகத்தினுல் நீ பெற்றிருக்கிற
பொற் கொன்றை மாலையை இருவர் நடுவி
னும் போட்டால், அது கண்டு சாம்பமூர்த்
யின் சடாபாரத்தி லணிந்ததா மிதுவென்று
அஞ்சி, இருவருமப்பாற் கடந்து போவார்;
அதனைத் தாண்டி வருவதற் கஞ்சுவார். அப்
படி செய்து ஒருவரை யொருவர் நெருங்க
விடாமல் யுத்த முயற்சியை நடத்தவேண்டிய
கடமை உம்முடையதா யிருப்பதினுல், ஆதி
பகவானுகிய அவ்வடியார்க் கெளியவன் உமக்
குக் கொடுத்த வரப்ரசாதத்தைக் கொண்டு,
முனைமுகத்தில் நீரே முதலாளியாக நின்று,
உம்மெதிரில் வரா நின்ற வீமனைப் புரளுஞ்
சமுத்திரம்போ லொத்த நமது பதாதிகளோ
டும், படையரசர்களோடுங்கூடி வளைந்து மடக்
கிப் போர் புரிந்துகொண்டு, நீர் இவ்விடத்தி
லிரும். நான் பலம்பொருந்திய பராக்கிரமத்
துடன் மலர்மாலை யணிந்த பல கைக்காரர்
களைச் சேர்த்துக்கொண்டு, சரவணேற்பவனைப்
போற் பிரகாசத்துடன் வந்து சமர் செய்யும்

பிரதாப அபிமன்னுவி னுயிரைச் சத்தியமாக இன்று வாங்கிவிடுகிறேன். என் சொல்லுறுதியைப் பாரும் வல்லவரேயென்று வணங்காமுடி மன்னன் சொல்லினான்.

அப்போது சயத்திரதன் அவனுடைய பாதங்களிற் பணிந்து, தேவரீர் திருவாய் மலர்ந்த வண்ணம் நானே போய் ஜெயம் பெறும்படியாய் வீமனையும், அவனுடன் பொருந்தி ஒரேயினமாக வராநின்ற துஜராஜர்களையும் வளைத்துப் போர்புரிந்து மாய்ப்பதுமல்லாமல், தப்பிப் பிழைத்தோரையும் மேற்பட்டு வருந் தானைகளையும் சூரியாஸ்தமாகிற வரையிலும் உள்ளே விடாமற் றடுக்கிறேன். ஆனால், தேவரீர் மாத்திரஞ் சபலசித்த மாகாமலுஞ், சொன்னசொற் சோர்வு படாமலும் எவ்விதத்திலாகிலும் அபிமன்னனைக் கொல்லவேண்டும் என்று துரியோதனனுக்கு உறுதி வார்த்தைச் சொல்லி, குளிர்ந்த சந்திரனை யணிந்த முடிபொறுத்த பரமசிவனைச் சிந்தித்து மிகவும் உருகித் தொழுது, வெற்றிமாலை பூட்டிய வில்லை யெடுத்து நாணிமாட்டி, சரங்களெருங்கிய அம்புறாத் தூணியுங் காட்டி, பன்றிக்கொடி நாட்டி, நாகரத்தினப் பணியணியா லமைந்த இரதத்திலேறி, தீரத்துவமாக வயிரங்கொண்டெழுந்து முனைந்த தேசராஜர்களும் பிரகாசிக்கும் படைகளை யுடைய சதுரங்கச் சேனைத்தலைவரும், குடங்கொண்டு சொரியும் நெய்யினால் வானமளாவும்படி தீயெழுந்து, வீசுங் கொடுஞ் சுவாலையைப்போல் இருபக்கங்களிலுஞ் சூழ்ந்து வளைந்தெதிர்த்துப் போர்புரியும்படியாக வெளிப்பட்டு வருவதாயினான். இப்படியாக பராக்கிரமித்துப் பக்கத்துணையுங்கொண்டு சயிந்தவன் புறப்பட்டு வருவதைத் தர்மராஜனுணர்ந்து இந்தவேளையில் நாம் சும்மாயிருக்க லாகாதென்று தனக்குக் காவலாகச் சூழ்ந்திருந்த சதுரங்கச்சேனையுந் தானும்போய் எதிர்த்தகாலத்தில், திறம்பெற்ற சிந்துதேசாதிப னானவன், ஈசனாற் கொடுத்த கொன்றைமாலையைக் குறுக்கேவீசி, எவ்விடத்திலும் உருத்திரமூர்த்திபோற் பிரகாசித்து, நாகாஸ்திரத்தை யெடுத்து அபிமந்திரித்து வில்லிற்றொடுத்து, முன்னொரு நாகாஸ்திரத்தாற் குண்டுக்கட்டாய்க் கட்டும்படிக்கு லட்சுமணர்பேரில் இந்திரஜித்துவிட்ட தன்மையைப்போல் விடுத்தான். அந்த நாகாஸ்திரமானது, சக்ரவானம்போல் தங்கள் சேனைகளைக் கோட்டைக் கட்டாகவளைத்து எதிராளி படையை வருத்தியபோது, திறமும் நிறமும் சிலர் கெட்டார்கள்; சிரமும் உரமும் பலர் விட்டார்கள்; தாளுந்தோளுஞ் சிலர் தரித்தார்கள்; வாளும் வேலும் பலர் முறிந்தார்கள். இவ்வாறு தேகமுழுமையும் பாணங்களூருவ, செந்நீருராகவழியத் தியங்கினாரனேகர்; மூர்ச்சைபோயொழிய மயங்கினாரனேகர்; அபஜயமென்பதை அறியாத வீரரெல்லாம்பயந்து வேசாரியானார்கள். அந்தவேளையில் நாகாஸ்திர கட்டுக்கு எட்டுப்படாத வாயுகுமாரன், யூகங்கட்டி இருக்குஞ் சேனையைச் சுற்றிச்சுற்றி, எங்கேயாகிலுங் கொஞ்சஞ் சந்தேகப்படுமாகில், உள்ளே நுழைந்து மைந்தனுக்கு உதவியாகலாமென்று வளைந்துவளைந்து ஓடிவந்தி, மகாசேனையெல்லாம் மாய்த்து மாய்த்து பொடியாக்கி, விருதுபெற்ற வில்லிலிருந்து வேணுமானமட்டும் பாணங்களைச்சொரிய அப்போது ஒப்பற்ற தருமபூபதியினுடைய தேரும், அவ்வீமசேனனுடைய இரதமும், மற்றப் பிரமுகாளுடைய வாகனங்களுஞ் சேர்ந்து நாலா பக்கங்களிலுஞ் சுழலும்போது, சிந்துதேசாதிபனானவன், இவர்களெந்த யிடத்திற் றிரிகிறார்களோ? அந்தயிடத்தில் அவர்களுக்கு நேராக முன்வந்திருந்து, அவர்கள் விடுத்த கணைகளையெல்லாம் வெட்டி, தருமராஜனுடைய வில்-தேர்-குதிரை-சாரதிமுதலிய யாவையுமழித்து, கருடனிழல்போற் பொருந்தித் தன்படைகளைக் காத்திருந்தான்.

இப்பால் வீமசேனன் கெதையைக் கைப்பிடித்து விறுவிறென்று சுழன்று படையின் பக்கங்களிலாவது நுழைந்து உள்ளே போவோமென்று ஒதுங்கிப் பதுங்கிப் பார்த்தால், கொன்றைமாலை குறுக்கே விழுந்திருப்பதன்றி, ஈசல்போலொத்த எண்ணிறந்த பாணங்கள் தேடிவந்து விழுந்து வளைத்து வருத்த முறுத்துகின்றதனால், வீமசேனன் தண்டத்தோடு திரும்பி மண்டலமிட்டோட, அதுகண்ட சாத்தகி மன்னனானவர் கூடிய வரையிலும் போர்புரிந்து, வில்லம்பு முதலிய யாவும்போய் ஏறிய தேருடன் திரும்பிவர, அவருடன் தானும்போய்ச் சேர்ந்து தனது தேரிலேறிக் கொண்டான் வீமசேனன். அப்போது தர்மராஜனும், இந்தச் சரமாரி தாளாமல் திரும்பிவிட்டார். இடும்பி குமாரனாகிய கடோற்கஜனும், அவன் பிள்ளைகளும் நாலு பக்கத்திலும் பயந்தோடினார்கள். இப்பிரகாரம் பாண்டவர் முதலாகிய சேனைகளெல்

லாம் பஞ்சாகப் பறக்கும்படியாய் முனைந்து சரமாரி பொழிந்தான் சயத்திரதனென்பவன். அந்தச் சிந்து தேசாதிபன் செய்த போரை விசேஷித்துச் சொல்லவேண்டிய தொன்று மில்லை. அப்படி சொல்வதானுலும் பாண்டவர்கள் விட்ட பாணம் விதை விதைத்ததைப் போலும், அவன் விடுத்த பாணங்களெல்லாம் அதினுடைய விளைவைப்போலு மிருந்தன. அந்தச் சமயத்தில் துருபதேயராஜனும் அவனுடைய பிள்ளைகளும் வந்து கலந்து அஸ்திரங்களைத் தொடுத்தபோது, அவைகளை எல்லாம் நொடியிற் பொடியாக்கி ஐந்து கணைகளினுல் துருபதேயனை நொந்துப்போக செய்து, அவன் குமாரனுகிய திர்ஷ்டத்துய் மனை இரண்டு சரங்களினுல் உதிரம் புரண்டு போகத் தாக்கி, மற்ற ராஜர்களுடைய சாமர்த்தியங்களும், ஆயுதங்களும், ரதங்களும், சாரதிகளும், குதிரைகளும், விற்களும் நிலைகெடச் செய்து, சாத்தகியின்பேரில் பத்துக் கணைகளை ஏவி, மார்புந் தோளும் புதையும்படியாக மாட்டி யோட்டினுன். அவனுரெனில், பூர்வத்தில் முகுந்தனென்னுந் திருநாமத்தையுடைய விஷ்ணுவானவர், ஆதிவராகமாகத் தேடி அறியப்படாத இரண்டு பாதங்களையுடைய சோமநிதி யென்னுஞ் சிவபெருமானை சிந்தையுட் கொண்ட பலம் பொருந்திய சிந்துராஜ புத்திரனுகிய செயித்திரதன் கைலாசபதி யென்னும் அரவாபரணனருளிய வரப்ரசாதமானது தன்னுண்மிக்கையை நிலைபெறச் செய்யவும், தேவர் முதலிய யாவரு மயங்கித் தியங்கவும், திக்குப் பாலர்களும், அஷ்டகஜங்களும், நடுங்கிச் செவிடுபடும்படியாகவும், தீரத்துடன் போர் புரிந்த செயித்திரதனென்னுங் காளை தொடுக்குந் தீக்கணைகளினுல், அவனை எதிர்த்த யாவரும் இடிமுழக்கத்திற் கெதிர்பட்டழிந்த பாம்புகளைப் போல் அடங்கிச் சென்ருர்கள். ஐயோ! இந்த வேளையில், அதிசயமாகிய நமது பிள்ளை அபிமன்னுவானவன் யூகமத்தியிற் புகுந்து புரியும்படியாகிய போர்க்கடுமைத் திறத்தைப் பார்ப்பதற்கில்லையே யென்னுங் கவலையும், அவனுக்குத் துணையாவதற் கில்லையே யென்றேக்கங் கொள்ளுந் துயரமும், ஸ்திரமாகிய தனதுள்ளத்தைப் பிளக்க வருந்தி, "இந்த மதுமாலையிட தந்தபிமனுருயிரையுந்திடவோ வெளிது, சிந்துபதிசேவகமே விரகுபடவெப்பொழுது முரணமா தொடக்கும்வலி, யுரகதுவசற்கொழிய வரசரிலெவர்க்குளதோ தன் மகனையுஞ்சமரில், வன்மையொடு கொன்ருெழிய மன்முனை திரண்டிடினு மென்மகன் மடிந்திடுமோ" என்று சொல்லி ஒருவாறு தேறி, இன்றிந்த யுத்தத்தில் யாவரும் நம்மால் மடிவதாயிருக்கினும், பரமனணியிப்போற் கொன்றையைத் தாண்டேனென்று கூறி, அதனைத் தொழுது சென்ருன் இடும்பியை மணந்த வீமசேனன்.

### தனித்துநின்ற அபிமன்னனுடன் துரியோதனனுதியர் ஒன்றுபடச் சென்றெதிர்த்தல்

இத்தன்மையவாக முனைந்து யுத்தஞ் செய்யச்சொல்லி, சிந்து தேசாதிபனை இவ்விடத்தில் நிறுத்திவிட்டுத் திரும்பிவருந் துரியோதன மகாராஜனும், கர்னனும், தன்னிஷ்ட ஜனங்களும், தம்பிமார்களும், வாயு வேகத்திலும் மிஞ்சிய தேரணிகளும், பற்பல படைகளும், தன்னுடைய சேனுநாயகனென்னுந் துரோணுச்சாரியரும் ஒரேமுகமாய்த் திரண்டு, உலகமழிய வெழுந்த ஊழித்தீயைப் போல்வந்து திரிபுராந்தகனைப்போல் நின்று அமர் புரியும் அபிமன்னனுகிய வீரனை நெருங்கி, நாற்றிசையினும் மேகம்போல் வளைந்து சோனைப் பேய்ச்சலைப்போற் சுரிமுகக் கணைகளைத் தொடுத்து துன்பப்படுத்துவதானுர்கள். வானமும்-பூமியும்-மதியும்-கதிருநடுங்க நிலைபெற்று நின்று போர்புரிந்த காலையில், அபிமன்னுவானவன் வெங்கணைகளில் நான்கெடுத்து அங்கதேசாதிபனுடைய தேரிற்கட்டியிருக்கும் நான்கு குதிரைகளும் மேகம்போலற்றுவிழ விடுத்து, அவன்றெடுத்த அஸ்திரங்களை யெல்லாம் அகற்றி, எத்தனை வில் அப்போது இன்பமேற் கொண்ட அபிமன்னன் சம்பிரமமாகிய அம்புகளைப் போக்கி; அவரவரணிந்து வந்த விருதுக்கொடி வீரபட்டங்கள் முதலிய யாவையு முறித்து, விற்களைத் தரித்து, கவசங்களைக்கிழித்து, தோள்களைச் சிதைத்து, துணைக்கரமறுத்து, மணிமுடியுடைத்து, சிரத்தையுருட்டி, திசாதிசைகளிற் போய்ப் பொடியாகிவிழ தேர்களையழித்து, அங்கமெலாம் வேகப் புங்கவங்கள் புதையவிடுத்து, அவ்வவர்களுடைய கத்தி-கட்டாரி-கதை-சூலாயுதம்-சூலாயுதமுதலிய ஆயுதங்களெல்லாம் சிதையக்கெடுத்து, வீராதி வீரர்கள் துண்டந்துண்டமா யிலக்கத் துண்டித்து, போர்த்தொழிற் றெரிந்த தேசத்தரசர்களுடைய புகழ்கெட வடித்து ஆளியைப்போல்

நின்றுன். அப்படி நின்ற வெற்றிவீர அபிமன்
னன் நேரில் அநேகம்வாளிகளை அவர்களும்
பொழிந்தார்கள். அப்போது ஆச்சுது: அபி
மன்ன னிறக்கப்போகிறுன்; அவனுடலைப் பிடு
ங்கித் தின்னலாமென்று ஆவென வாயைத்
திறந்து அநேகங்கூளிகள் நடம்புரியும்படி
யாய் சிற்சில சேனைகளும், பற்பல ராஜர்களும்,
மத்திரதேசாதிபரும் வில்லை மண்டலாகிர்தி
யாக வளைத்து, கொல்லத்தக்க வயம்பெற்ற
பகழிகளைப் பலவிதமாகத் தொடுக்க; அவைக
ளெல்லாம் இடையில் முடங்கிப் போகும்படி
யாய் தடைபடாத கூர்மையாகிய பல்படைக்
ளால் விலக்கி, நெருங்கி மொய்க்கும்படியாகிய
சிலபாணங்களை அவர்களுடைய தேகத்திற்
சென்று தைக்கும்படிக்கு உந்தினுன் அபிமன்
னன். அந்த பாணங்களானது, இந்தலோகம்
அந்தலோகமென்று பாராமல், தொந்தப்
பட்டுச் சுருசுருப்புடன் கொடிய காலாக்கினி
விஷத்தைக் கக்கிக் காலாகோலமாய் வரா
நின்ற அந்தவேளையில், அங்கதேசத் தலைவ
னுகிய அதரித்திரன் வந்து, மலைக்கொப்பா
கிய புயமுஞ் சிலையுமுடைய அபிமன்னுவை
யெதிர்த்து முகஞ்சுளித்து, போர்முனையிற்
களித்து, வலமிடமாக ரதத்தைசெலுத்தி வில்
லெடுக்கினும், அத்தனை வில்லையுமுறித்துக் கச்
சைக் கொடியையு மறுத்து, அநேகந்தரம்
லச்சைகெட் டோடும்படியாய்ச் செய்தான்.
அதனுல் இரவிகுமாரன் வருந்தி இளைத்
தோடுவதைக் கண்டு இரக்கங்கொண்ட அர
வக்கொடிக் கதிபனுடைய தம்பிமார்கள் மிகு
ந்த வேகத்துடன் தகுந்த புரவிகள் பூட்டிய
தேரைச் செலுத்திவந்து வில்லெடுத்தார்கள்.
உடனே அவர்க ளேறிவந்த தேரையும் வட்ட
மாக வளைத்துக் கையிற் பிடித்த வில்லையும்
துட்டத்தனைக்கு முதவியில்லாமற் போகும்படி
வெட்டிமுறித்து, வேறே எட்டுக் கணைகளெடு
த்து அவர்கள் பட்டுமடியத் தொடுத்தபோது,
யாவரும் உடனே கெட்டுப் புறமிட்டோடினுர்
கள்.

### கௌரவரில் துன்முகன் ஆதிபராசன் இவர்கள் வதை

அப்போது சுகப்பிரமத்திற் கொப்பாகிய
துரோணுச்சாரியரும், அவருடைய குமாரன்
அசுவத்தாமனும், தேரை நடத்திச் சென்று,
விஜயகுமாரனுகிய அபிமன்னனுக் கெதிரில்
இரண்டு திரிபுரத்தகனரென தெழித்துநின்று
வரிபொருந்தி மணிகள்கட்டிய வில்லை வளைத்
துத் தாராகாகணம்போற் பிரகாசம் பெற்ற
நூறுகணைகளை அபிமன்னனிற்கு நிலைகள்
தோறுந் தொடுத்தார்கள். அந்தக் கணைகளை
யெல்லாந் திரணமாக விலக்கி, ஒண்டியாய்
நின்று யுத்தஞ்செய்யும் விஜயன் குமாரன்,
இரண்டு சரோருகப் பகழிகளை யெடுத்து
இமைப்பொழுதிற் றொடுத்தபோது, அவர்க
ளிருவருந் தேரழிந்து, வில்முறிந்து, போர்
முகமொழிந்து, அபிமன்னுவுக்கு நேரே அக
மழிந் தோடினுர்கள். அவர்களைப் பார்த்த
துன்முகனென்பவன் துடிதுடித்துக் கோபங்
கொண்டு துரோணரை நோக்கி, ஓ சேனுதி
பதியாகிய ஐயா! இதோ நானே எதிர்த்துச்
சண்டை செய்து அப்பையலை முடிக்கிறேன்
என் தீரத்தைப்பாருமென்று சபதங்கூறி, மட
மடவென்று பூமிகுலுங்கக் கடகடவென்று
தேரை நடத்திச் சென்று, வில்லை நிறுத்தி
நாணேற்றி இடிக்கணைகளை அனேகமாயிர
மாக தொடுத்து நொடிக்குள் விடுத்தான். அத்
தனை இடிக்கணைகளும் அபிமன்னன் றொடுத்த
இரண்டொரு இடிக்கணையாற் பொடிபட்டுப்
போனதன்றி, மனுக்கென்று வில்லு முறிய
வேறுவில்லெடுக்கு முன்னமே யாவருந் திடுக்
கிடத் தலைதறிந்து செத்தான் அத் துன்முக
னுனவன். அவ்வேளையில், இதென்ன விபரீத
காலமென்று விசித்திர வில்லைப்பெற்ற வீர
னென்னும் மத்திரதேசாதிபனும், அவனு
டைய பிள்ளைகளில் ஆதிபராசனும், அவனுக்
குரிய அநேக மித்திரரும் வந்து தனுர்ப்பா
ணங்களைக் கொண்டு ஜாடும்போது; அவரவ
ரெடுத்த விற்களும், விருதுகளும், ஆயுதங்க
ளும் கண்டதுண்டமாகக் கணைகளைப்போக்கி,
அண்டையில் வந்து சண்டைபுரிந்த ஆதி
பராசனை ஒரு வாளியால் அந்தரம்புக அனு
ப்பிவிட்டு நீரென்ன சொல்லுகிறீரென்று சல்
லியனுக்கு நேர் திரும்பியபோது, தன் புத்தி
ரனிறந்த விசனத்தால் விஜய உத்தமனுடைய
குமாரனை வளைத்து - ஒன்று - பத்து - நூறு-
ஆயிரமென்னும் பாணங்களை அமோகமாக
விடுத்து அவனுடைய ஆக்கையிற் றாக்கிய
போது, அதை அர்ச்சுனனுடைய குழந்தை
கண்டு, குழந்தைவேற் கடவுள் கைக்கொண்ட
கூரிய வேல்போன்ற பலவாளிகளாற் படுகுழி
யாகிப் புண்படுத்த, அப்போது மத்திரராஜன்
மெத்தவு நொந்து புறந்தந்தோடினுன். அப்
பால் மகாரதத் தலைவர்களெல்லாரும் ஒருவா
ளபிமன்னனை மனங்கூசாமல் வலுவிற்போய்
வளைத்தார்கள். அப்படி வளைத்த அத்தனை

பேரும், மாயன் மருகன் ரெடுத்த கணைகளாற் றேரழிந்து, போரழிந்து, பேரழிந்து, காரிழிந்ததெனச் செந்நீரிழிந்தோட உள்ளுடைந்தார்கள். அரசனே! இந்தப் போரின் சிறப்பைப்புகழ்ந்து சொல்லுதற்கு யென்னுற்றராமோ? இந்தப் பாண்டுவின் பௌத்திரன் விட்ட படைகளாற் கெட்டழிந்தவர்கள் இன்னாரென்று கேட்டறியக் கூடாதபடி, இன்னுங்கொஞ்ச மெஞ்சியிருக்குஞ் சேனைகளை முழுமையுங் கெடுத்துவிடென்று வலுவிற் செலுத்தி வல்லுயி ரிளைக்கச் செய்யும் வளம் போல வந்தவர்களை யெல்லாம் வடிக்கணைகளை விட்டு மடித்தான்.

இந்தப் பிரகாரம் முதலிற் கட்டிய சக்ர யூகத்தைப் பிளந்துகொண்டு, பலரும் பொருந்திய விஷ்ணு சக்கரம்போலிருக்கும் பத்மயூகத்தையும் போதிக்கச்செய்து, பலதிசைகளினு நின்ற சேனைகளைப் பசைபறக்கொன்று, பொன்னார மணியணிப்பணி முதலாகிய வாசனைப்பெற்ற மாலைகள் பிரகாசிக்க இந்திர தநுசைப்போல வில்லைத்தாங்கி,விந்தையாகிய நவமணிகளாற் செய்த தேரின்மீது உல்லாசமாயிருக்கும்படியாகிய அபிமன்னுவானவன், அந்தப் பத்மயூக மத்தியினிற்பது எப்படியிருந்ததென்றால், இப்பேரண்டச் சுவர்க்குப் பெருமதில்போற் சூழ்ந்திருக்குஞ் சக்ரவாள மத்தியிற் றேரூர்ந்து செல்லுஞ் செங்கதிர்ச் செல்வனைப்போன் றிருந்தது. அன்றியும், அப் பத்மயூகத்து நாற்றிசைகளினு முள்ள நான்கு கோணத்திலுந் தனது இரதத்தை க்ஷணப்போதாகிலும் ஓயவிடாமற் செலுத்தி இங்கும் அபிமன்னன், அங்கும் அபிமன்னன், எங்கும் அபிமன்னனென்று சொல்லும்படி யாய்ப் பூரணமாக நிறைந்துநின்ற நாரணனுடைய மருகன், நதிமதிதங்கிய சடாமகுடம் பெற்ற திரிபுர ஸம்ஹாரியைப்போன்று மிருந்தான். அப்போது, விஜய காண்டிபத்தின் றிடத்தைக்கொண்டு காலகேய நிவாதக வசர்களைவென்ற விஜயவீரப் பிரதாபனுடைய மைந்தனுக்குச் சகல வீரர்களும் புறமிட்டார்களென்று துரியோதனன் வெட்கங்கொண்டு, இராஜகுமாரா ளென்னும் இளவரசர்களிற் பதினாயிருடன் தன் பிள்ளையாகிய இலக்கண குமாரனையுங்கூட்டியனுப்பிவைத்தான். அவர்கள் எல்லோரும் இன்னும் பல வேந்தர்களுடன்கூடி, ஊழியக் காலத்திலடிக்குஞ் சண்டமாருதமான து,விசாலமான கடலைக்கலக்குமாப் போல தநுர்வேதத்தைக் கைபழகிய தாஷ்டிகத்துடன் வில்வளைத்து நாணேற்றி, மதமேறிய யானைபோன்ற அபிமன்னனை வந்து வளைத்துக்கொண்டு, சோலை மின்னலைப்போல் இடியாஸ்திரங்கள், மின்னலாஸ்திரங்கள், வருணாஸ்திரங்கள், வாய் வாஸ்திரங்கள், குபேராஸ்திரங்கள், இந்திராஸ்திரங்கள், சந்திராஸ்திரங்கள், சூரியாஸ்திரங்கள், ஏமாஸ்திரங்கள், அனலாஸ்திரங்கள், கமலாஸ்திரங்கள், கருடாஸ்திரங்கள், பிர்மாஸ்திரங்கள், நாராயணஸ்திரங்கள், உருத்திராஸ்திரங்கள், நாகாஸ்திரங்கள், மேகாஸ்திரங்கள், விருக்ஷாஸ்திரங்கள், பர்வதாஸ்திரங்கள் முதலாகிய பகழிமாரிகளை, நான் முந்தித்தொடுத்தேன், நான் முந்திவிடுத்தேன், நான் முந்தி விட்டேனென்று வீரபாஷைகள் பேசிக்கொண்டு சொரிய, அப்பலம்பெற்ற பாணவருஷங்கள் எல்லாம் மன்மதன் றொடுத்த மலர்ப்பகழியானது, ஈசனுக்கு எதிரில் இறைஞ்சிச் சிதைந்த தன்மைபோல் இவ்வபிமன்னுவின் பாதங் களிலிறைத்துச் சிதறிவிழுந்தன.

அப்பால், அல்லோல கல்லோலஞ் செய்யும் அபிமன்னுவினுடைய வில்லிலிருந்து உந்தும்படியாகிய உரகக் கணைகளால், முன் வந்தவர் பின்னும் பின்வந்தவர் முன்னுமாகப் புரட்டிப் புரட்டிக் காய்வதினால், அநேககோடி சேனைகளுடன் இராஜகுமாரரும் பல பாடு பட்டுப் புறமுதுகிட்டோட, அப்படி யோடிப் பிழைத்தவர்கள் போக, இருப்பவர்களில் ஒருவரையும் ஒழியவிடாமற் பார்த்துவிட வேண்டுமென்று நாலுபக்கங்களிலுந் தேடி, ஒருவருமில்லையென்று தெரிந்து, கொய்யுளை பெற்ற குதிரைபூட்டிய தேரைச்செலுத்துஞ் சாரதியை அபிமன்னனுநோக்கி, ஓ சுமித்திரனே! என்பேரி லெதிர்த்துவந்த இராஜகுமாரர்களும், சொல்லுக் கடங்காப் பிரக்யாதியும் பேரும்பெற்ற வேந்தர்களும், வாடித்திகைத்து நிலைகெட்டு மயங்கி மடங்கி உயர்ந்தோம் உயர்ந்தோமென் றோடுவதைப் பார்த்தையாவென்று உத்தரை நாயகனுரைக்க, அவ்வார்த்தையைக்கேட்ட சாரதி சந்தோஷமடைந்து சொல்லுகின்றான்; ஐயா இளஞ்சிங்கமே! தேவரீர் யூகத்தை யுடைக்க வரும்போது, அடியேன் அவசரப் புத்தியால் யோசிக்காமல் அனேகம் வார்த்தைகள் சொன்னேன். அவைகளை நீர் மன்னிக்கவேண்டும். இவ்விடத்திய உம்முடைய கையோயாமல் யுத்தஞ்செய்து

வெகு சுத்தவீரர்களைப் போக்கி வெற்றிபெற்
றமையால், சூசிகாயூகம், சக்ரயூகம், பத்மயூக
முதலிய யாவு முடைந்து போய்விட்டன.
இதுவரையிலுஞ் சாகாதிருக்கும் சேனைகளுக்
குயிர்ப்பிச்சை கொடுத்து இந்தமட்டும் யுத்
தத்தை நிறுத்திவிட்டு தங்கள் தந்தையரிருக்கு
மிடத்தை நோக்கித் திரும்பிப்போவது உத்
தமமா யிருக்கிறது. ஓ குறைவுபடாத ஆண்
மைக்கு ஒருவரு மொவ்வாத ஜெயசிங்கமே!
இதன்றியும், உமக்குத் துணையாகவந்த தர்ம
ராஜன், வீமசேனன், நகுல சகாதேவாள்
இவர் முதலியபேர்களையும், மற்ற பந்துவர்க்க
வீரர்களையும், படைக்குதவியாகிய பராசர்களை
யும், உமக்குதவியா யுட்புக வொட்டாமல்
திரண்டு புரண்ட வெள்ளத்தை அணைகட்டித்
தடுத்த தன்மைபோல், உங்களத்தை புருஷ
ஞகிய சயிந்தவன் ஈஸ்வராநுக்கிரகத்தாற் சப
தங்கூறி, குறிவைத்து அடிப்பவருக் கொப்
பாய்த் தும்சப்படுத்திக்கொண் டிருக்கிறான்.
அவன்றொடுக்கும் பாணங்கள் எல்லாருடைய
மார்புகளிலும் உருவிபோகும்படியாய் இடங்
கொடுத்துக்கொண் டிருக்கிறார்களே யல்லது,
அக்கணைகளுடனே சயத்திரதனையு மழித்து,
உள்ளே புகும்படியாகியதிடம் நமக்குதவியாக
வந்தவர்களில் ஒருவருக்கு மில்லை. அவர்க
ளுக்கு துணைவரத்தக்க பேர்களுமில்லை. உன்
றந்தையாகிய அர்ச்சுனராஜனும் இங்கில்லை.
ஆகையால் நீரிவ்விடத்தி லிருந்து ஜெயஞ்
செய்து என்ன பிரயோசனம்? ஒப்பாகிய
வீரர்களைத் தப்பாமற் கொல்லுந் தோளாண்
மையையுடைய எங்களரசே! உமக்குத் துணை
யாகவந்த உன் தந்தையர் முதலியபேர்களுக்கு
நீர் துணையாக சென்று நின்று வெற்றிபெறு
வது வீரதர்மம் ராஜதர்மம் முதலிய எல்லா
விதங்களுக்கும் உத்தமமாய் இருக்கின்றது.
மேலும், இந்த முனையைச் செயித்த நீர் அந்த
முனையையுஞ் ஜெயித்து, எதிரிட்டோரை யம
லோகத்திற் குடியேற்றி, வெவ்விய வீரப்பிர
தாப சூரதீரதிடதயிரிய ஜெயங்காட்டி, உமது
தந்தையர் பேரானந்தத்துடன் இன்புற்றோ
ங்கி உடல் புளகாங்கிதமுற, மகன் போஞனே
என்னமோ ஏதோ வென்றிருக்கும் அவர்
களது கவலைதீரப் போகவேண்டியதே முக்கிய
மென மேகமளாவிய சிகரத் தேரை விடுக்குஞ்
சாரதி சொல்ல; அதைக்கேட்ட அர்ச்சுன
குமாரன் தேருடன் திரும்பிப் போகச் சம்மத
மில்லாதிருந்தாலும், அவ்விடத்திலும் வீரா
ளிருக்கின்றார்க ளாதலால், அவர்களையும் நீ
ஜெயிக்கவேண்டும் என்று சாரதி சொல்லிய
யுத்தமென்னும் ருசியினால், ஹா! ஹா! ஹா!
வென்று ஆர்ப்பரித்து, விரைவிற் றேரை
செலுத்துகவென விளம்பினான்.

### கௌரவரில் விடசேனன் பதாதிமன்னன் இவன் குமாரன் இவர்கள் வதை

உடனே தோழமையாகிய சாரதி மஹா
சந்தோஷமடைந்து, மண்டலம்-விண்டலம்-
எண்டிசை முதலிய அண்டகடாக மனைத்து
மரண்டு-புரண்டு-உருண்டிட ஓட்டுந் தேரா
னது, அங்கிறைந்து குவிந்துகிடக்கும் பிண
மலைகளி லுச்சியிலேறி, அருணனுடைய பச்
சைக் குதிரைகளோடுவதைக் கண்டு வீராவே
சங் கொண்டு வீறி, வெள்ளம்போற் பெருக்
கெடுத்துச் செல்லும் இரத்தவாரிகளை நீந்திச்
சென்று தேறி, நிணச்சேறு நெடுந்துகளாகக்
கண்டுபாறி, எதிரிகள் தொடுக்கும் பாணக்காட்
டுக்குள் நுழைந்து சீறி; வருவதாயிற்று. அப்
படி வருவதைத் தருமராஜன் முதலிய யாவ
ருங் கண்டு சந்தோஷங்கொண்டு, படைகளை
வென்று தனயன் வந்தானென களிப்படைந்
தார்கள். அப்பாலவர்கள் கொண்டிருக்கின்ற
களிப்பைச் சந்திரவட்டக்குடை தரித்த துரி
யோதன மகாராஜன் கண்டு, ஐயையோ! அர
சர்களே! படுகுழியிலும், பெருவலையிலுஞ் சிக்
கிய சிங்கந் திரும்பிப் போய்விடுகிறதே: விடா
தீர்கள் விடாதீர்கள் என்று வல்லவர்களுடன்
பின்னாகக் கூவிக்கொண்டு வந்து எதிர்த்ததை
அபிமன்னன் பார்த்து, பின்புறத்தில் வந்த
வீரர்கள் யாவரும் பேசாமற் போகும்படியாய்
மூட்கணைகளை வர்சா மகோசரமாகத் தொடுத்
தான். அந்தக் கணைகளால் தாசானு தாச
னென்று ஸத்வத்தியஞ் சொல்லிக்கொண்டு
போர்முனையிற் கெட்டழிந்தோடிய அரசர்க
ளும், நல்வினையில்லாத நந்தியாவட்டத்
தாரோனும், அவனுடைய குமாரனும், ஒரு
சிங்கக்குட்டியானது அந்த மானை விட்டுவிட்டு
மதம்பெற்ற காட்டானைக் கூட்டத்தின்பேரிற்
றிரும்பிய தன்மைபோற் றுவிவராநின்ற அபி
மன்னனை: விடாசனனென்னும் விடங்கதேச
த்து ராஜகுமாரன் பார்த்து, தனது தேரைச்
செலுத்தி ஆர்த்து, நேரே புகுந்து, தகுந்த
பகழிகளைச் சொரிந்து போர் புரியும்போது,
இணையில்லா உத்தரை குமாரத்திக்குக் கணவ
னாகிய திணிவான், ஒருமுகம்-இருமுகம் என்
னும் பகழிகளை ஒவ்வொரு கை வாரி வாரி
விடுக்க, அதனால் ஆகாயத்தைவிட்டு மேகம்-

வழுவி விழுந் தன்மைபோ லவ்விடசேனன் பிடித்திருந்த வில்லுடன் இருதோளு மறுந்து, தேருமழிந்து, குதிரையுமொழிந்து, கொடியு முறிபட்டு, முடியும் தறிபட்டு, வானை நீங்கி மறந்து விழுந்த குரு சுக்கிரானைப்போல் மண்ணில் வீழ்ந்து மடிந்தான். அப்பா லபிமன்னனவன், தன்னை நெருங்கிநின்ற வீரவேந்தரை லக்ஷியமில்லாமற் பாணவருஷங்களைப் பொழியும் கார்கால மேகமென்று சொல்லும் படிக்கு முன்பின் பாராமல் அஸ்திரங்களைத் தொடுத்தபோது, அந்த அரசர்களெல்லாருந் தலைவிரிகோலமாய்த் தத்தளித் தோடுங்காலையில், அளவிறந்த சேனைக்கதிபதியாகிய பதாதி மன்னனென்னும் ஒரு ராஜன் அபிமன்னனை வந்து வளைத்து அநேக யுத்தஞ் செய்தான். அப்போது நெருங்கிய மாலையணிந்த அபிமன்னுவானவன், ஒரு இடியாஸ்திரத்தைப் பிரயோகஞ்செய்து பேரிடியினாற் பிளப்புண்ட கருங்கல்லைப்போல் அவன் தலையை யுடைத்தழித்தான். அப்போது அவனுடைய குமாரன் கண்டு மனந்தாளாமல், தந்தையைக் குறித்துச் சற்றே சிந்தித்து தனஞ்சயன் குமாரன்மீது சண்டைக்கு வந்தான். அவனைக் கண்டமாத்திரத்தில், வச்சிரக்கணை யொன்றினால் தலை முண்டமாக மடித்துத் தள்ளி, மின்னல் வாளி யென்னுங் கூர்மை பொருந்திய அஸ்திரங்களைப் பலகோடி விடுத்து, மற்றுமுள்ள பேர்களை யெல்லாஞ் சுற்றிச் சுற்றி வெதுப்பினான். அப்போது முனையேறிவந்த வேந்தர் முதலாகிய சேனைகளெல்லாம் புறந்தந் தோடினார்கள்.

## இலக்கணகுமாரன் வதை

அப்படி ஓடுவதை அபத்தப் பஞ்சாங்கமாகிய துரியோதனன் கண்டு சகியாம லேங்கி முன்னேபோ யுத்தஞ்செய்து இளைத்து வந்திருக்கும் ராஜகுமாரர்களையுந் தன் குமாரனையுந் தட்டிக்கொடுத்துத் தைரியஞ் சொல்லி விடுத்தபோது, இளங்கன்று பயமுணராதென் பதுபோல் துடிதுடித்துச் சென்று ஆர்ப்பரித்தார்கள். சத்தியப்பெருமானை நித்தியமாய்க் கொண்ட சித்தவிர்த்தியை யுடைய பாண்டவர்களுக்குப் பிராணனாகிய அபிமன்னன்; அதுகண்டு, தன் வில்லை வளைத்து அம்புகளை சரமாரியாக அவர்கள்மீது விடுத்தபோது, கால்களறுந்தும், கைகள் முறிந்தும் இப்படியாகச் சில ரழிந்தார்கள். துரியோதனனுடைய குமாரனும், பலம்பொருந்திய சில ராஜகுமாரரும், சூரிய கிரணங்களைப் போற் சிறிய கண்களிற் பெரிய பொறிபறக்கப் பயந்து, திக்குத் திசைகளி லோடி யொதுங்கும் யானைகள்போற் கலங்கி யோடினார்கள். அவ்வேளையில், மத்தளம்போன்ற திணிந்த புயத்தையுடைய அபிமன்னனென்னுஞ் சமர்த்தனொருவனும், ஒப்பற்ற ஒரு தேரும், ஒரு வில்லுடனெருங்கி, யுத்தஞ்செய்யும் ரணக்களத்திற்கு அழகுண்டாகும்படியாய் வெற்றிபெற்ற வெம்புலியைப் போல் வீராவேசங்கொண்டு, நேரிட்ட போர்களெல்லாரும் வீறிட்டுப்போக முடுக்கி, குதைகணெருங்க, நாணி யிறுக்கும்போதெல்லாங் கணுக்களி லிருந்து முத்து உதிரும்படியாகிய வலிபொருந்திய மூங்கில்வில் கரும்புவில்லையுடைய மன்மதனுக்கு மைத்துனனாகிய அவ்வபிமன்னன் வளைத்துப் படை கூடிவந்த பார்த்திவரெவரையும் இளைத்தோ மென்று புறங்கொடுத் தோடும்படியா யடித்து, அநேக இராஜகுமாரர்களையும் வளைத்து அமர் புரியுங் காலையில், துரியோதனனுடைய குமாரன் தீரங்கொண்டு எதிரூன்றி வந்து அபிமன்னனை மறித்துத் தேரைச் செலுத்தவும், அபிமன்னுவானவன், கூர்மை தங்கிய முருந்து போன்ற தந்தங்கள் பிரகாசிக்கும்படி அண்டமுகடுடைபட நகைத்து, கழுத்து மயிரையுங் கடுங்காற்றின் வேகத்தையுஞ் செயத்தையும் இடைய பரிபூட்டிய ரதத்தை நேராகச் செலுத்தி, இரதத்துட னிரதந்தாக்கிச் சக்கரங்களுடன் சக்கரங்கள் மோதி உடைபடும் படியாய் விடுக்க, இலட்சுமணப் பெருமாளும், இந்திரஜித்துவும், ஒப்பென் றுரைக்கும்படி இருவருங் கண்கள் சுழல விழித்து, புருவநிமிர நெரித்து நெற்றிசுளிக்கப் பற்கடித்து, மேக முழக்கம்போ லிரைந்து, எழுகடலு மொகுமொகெனக் கலங்கும்படி கூவி, வாய்வோடு வாய்வெனும்படி தாவிச் சமர்செய்து, ஒருவருக் கொருவர் பற்பல வீரவார்த்தைகளைப் பேசிப் பகைமேற் கொண்டு, இழைந்த மரத்தில் இருந்தெழு நெருப்பைப் போல் இருவர் முகத்திலும் நெருப்புப்பொறி வீசும்படியாய்க் காட்டி, போர் கொடுக்க வந்த ரதகஜதுரகங்களும் மெலிந்து வருந்திப் புறங்கொடுத்தோட புழுதிபடுத்தி அமராடுங் காலையில், அவ்விருவருள் இலக்கணகுமாரனைப் பார்த்து அபிமன்னு சொல்லுகின்றான்.

அப்பா இலக்கணகுமாரா! ஒப்பற்ற என் வில்லாண்மையைத் தெரிந்த நீயும் என்னைச்

செயிக்க வேண்டுமென்று ரதஞ்செலுத்தி வந்தாயோ? அந்தோ! ஓசை யுண்டாகும்படியாய் இதோ நான் விடப்போகிற அக்கினிக் கணையின் முனையிலிருந் தெழுஞ் சுடர்களினால் இவ்வுலகம்விட்டு அவ்வுலகத்திற்குன்னை அனுப்பி விடுகிறேன். போச்சுது உன் பிராணன்; ஆச்சுது முழுக்கிராணம் என்று தன்னுடைய வல்லமையை உறுத்திச் சொன்னான் வச்சிரபேணி பேரனாகிய அபிமன்னன் அப்பொழுது துரியோதனனுடைய குமாரனும் வரையான தெதிரொலிக்கு மாறுபோலவும், கோவில்-மண்டபம்-மலைமுதலிய விடங்களில் ஓ வென்று கூவினாற்கூடக் கூவுகிறது போலவும் உலக நடுங்கக் கூவி, அர்ச்சுனன் குமாரனைப் பார்த்து, ஆ! ஆ! இந்த அரசரெல்லாருங் கண்டு கண்களிக்க ஒரு நொடிப்பொழுதில் உன்னுயிரை வாங்கிப் பொன்னுலகத்திற் கனுப்புகிறேன் ஓ முன்னவனாகிய அபிமன்னனே யென்று சீறி, சிவபெருமான் வளைத்த பொன் மலையைப் போன்ற வில்லை யெடுத்து நிறுத்தி இழுத்து வளைத்து நாணியேற்றி, கலகலவென்றசைத்து, வட்டமாகக் கையிற் பிடித்து, காதுபரியந்த மிழுத்து குணத்தொனிசெய்து, இருவரும் அண்டம் நடுங்க ஓங்கி யடிக்குஞ் சண்டமாருதமானது, சமுத்திரத்தி லிருக்கும் வடவாமுகாக்கினியைக் கோபித்துக் கலக்கும் பக்குவமொத்து படுகளம் முழுவதும் பாவைபோற் பறந்து உதிரவெள்ளங்களுவரிபோற் புரண்டோடும்படி அளவற்றனவாய் பாணப் பிரயோகஞ் செய்யுங் காலையில், குதிரைகள் தேகத்திற் சொருகிய சில கணை; கொடிகளை முறித்துக் குவித்தன பல கணை; முன்பட்டுப் பின்னுருவி யோடின சில கணை; பின்பட்டு முன்னுருவி ஏறின பலகணை; அழலின் பொறியுடன் அழன்றன சில கணை; ஆகாய கங்கையையும் உறுஞ்சின பல கணை; அம்பரவெளியை மறைத்தன சில கணை; அஷ்டதிக்கெங்கும் அதிர்ந்தன பல கணை; இந்தப்படியாக அபிமன்னுவும், இலக்கண குமாரனும் முடுகி அமரர் முதலிய யாவரும் நடுங்க, நெடுநேரம் வரையிலுங் கொடுமையாகிய அமர்புரிந்தார்கள்.

இப்படிக்குச் சிலநேர மானபின்பு, அவ்விருவருள் சூற்கொண்ட மேகத்தின் வடிவம் பெற்ற சுந்தரக் கிருஷ்ணமூர்த்திக்கு மருமகனென்னும் அபிமன்னன் பாணமுஷ்டி நிலையும், கரவேக சரவேகமும், மெய் வலிமையும், கைவலிமையும், மந்திர சக்தியும் பெற்றவனாகையால், இந்திராஸ்திரத்தை யெடுத்து அபிமந்திரித்துவிட்டான். அப்போது அவ்வஸ்திரங் குருகுலக் கோமான் குமாரனாகிய இலக்கண குமாரனுடைய சரீர மாதியந்த முஞ் சொல்ல யிடமில்லாமற் சல்லடைக் கண்களாய்த் துளைத்து, வீரகண்டை கட்டிய காலை தறித்து, அவனங்கத்தி லணிந்த தங்கக் கவசத்தையுங் கிழித்து, மலர்போன்ற கரத்தையும், மலைபோன்ற புயத்தையு மறுத்து, நவரத்தின கசித முடி தரித்த சிரத்தையும் வெட்டித் தள்ளியது. அப்போது செந்தாமரைக் கமல மலரெனச் சிறந்த நகைமுத்துடன் பூமியிற் சாய்ந்தான் இலக்கணகுமாரன். இப்படிக்குக் காண்டாவன மெரித்தக் காண்டீபன் குமாரன் றொடுத்த கூர்க்கணையாற் காசினி முழுவதும் ஆண்டான் குமாரன் அமர் புரிந்து போர்க்களத்தில் துன்புற்றிறந்தானென்று துரியோதன மகாராஜன் கேட்டு, அம்மாத்திரத்திற் கலக்கண்ணீர் சொரிந்தழுது கசிந்து விம்மி, தனக்கு வலக்கண் போன்ற துரோணாச்சாரியருடனேயும், மித்துருவாய் மன்னருடனேயுஞ் சொல்லி, ஓ தெய்வமே! தெய்வமே! என்றேங்கி, இது என்ன அனியாயமென்று சோங்கி, முடிவில்லாத துக்க சாகரத்தில் மூழ்கி மாழ்கினன். அப்போது அவன் அருகிலிருந்த சில அரசர் பற்பலவான உபசாரத்தால் தேற்றி, ராஜநீதிகளைத் தெரிவித்தபோது அவர்களைப் பார்த்து வணங்காமுடியோன் சொல்லுகிறான்.

### துரியோதனனோடு சபதஞ்செய்துவந் தெதிர்த்த அனேக அரசர்களும், அரசகுமாரர்களும் அபிமன்னுவினால் நாசமடைதல்

"மன்னவர் மைந்தரோடென் மைந்தனைக் கொன்றமைந்தன், றன்னையு மிமைப்பிற் கொன்று சயமுறச் செருத்திலீரேற், பின்னையிவ் வரசும்வேண்டேன் பெருமித வாழ்வும் வேண்டேன்; னென்னுயிர் தானும்வேண்டேன் னிகபர மிரண்டும் வேண்டேன்'' ஓ சேனாதிபதியே! ஓ என்னுயிர்க் குயிராகிய அரசர்களே! ஓ மற்றுமுண்டான வீரர்களே! அநேகம் இராஜ:குமாரர்களையும், என் குமாரனையும் துடிபிடியாய்க் கொன்ற அபிமன்னனென்பவனை இமைக்குமுன் கொன்று பழிக்குப்பழி முடித்து இன்று நமக்குச் செயமென்று வெல்லாமற் போவீர்களாகில், இனிமேல் ஆளவேண்டுமென்று ஆசைகொண்டு

இருக்கும் இந்த அரசாட்சியும் வேண்டேன்.
யாவரும் வணங்கும்படியாகிய பெருமித வாழ்
வும் வேண்டேன். இகபரமிரண்டுமற்று இறக்
கத் துணிந்தேனென்று இராஜாதி ராஜன்
வெறுப்பாகச் சொல்லிய வசனத்தைக் கேட்டு,
அரசர்களெல்லோருந் தனித்தனியாகத் துரி
யோதனனுடைய பாதங்களில் வணங்கி, கண்
ணீர் துளித்துக் கைநெரித்துக் கண் கலக்க
முற்றுச் சொல்லுகின்றார்கள்: ஓ காவலனே!
கேளும்; உமது குமாரனையும், மற்ற ராஜகுமா
ரர்களையும் யுத்த முகத்திற்கொன்று வெற்றி
யடைந்த பார்த்தன் குமாரனை சேர்த்து வளை
த்து க்ஷாத்திரத்துடன் நாங்க ளெடுத்து
வளைத்தவில் நிமிர்தற்கு முன்னமே அவனைக்
கொன்று உமக்குச் செயபேரிமுழக்கி வைக்
கிறோம், அப்படி அவனை இன்றைக்கி கொல்
லாமற் போவோமாகில், எங்களாயுள் வரைக்
கும் போர்முகத்தில் வில்லெடுத்துப் போர்
புரிவதேயில்லை. இஃதுண்மையாகிய சபதம்
என்று சொல்லிக் குன்றை வில்லாக உடைய
சிவபெருமானுக் கொப்பென்னும் அசுவத்
தாமனும், காமக்குரோத லோப மோக மத
மாச்சரியமென்னும் ஆறுபகையையும்வென்ற
சதுர்வேத முனியும், இன்னமும் பக்கத்தில்
இருந்த வீரசூராளாகிய வேந்தரும், மற்று
முள்ள வீரவிற் பிரமுகாளுஞ்சேர்ந்து, துரி
யோதன ராஜனுடைய குமாரனென்னும்
இலக்கண குமாரனைக்கொன்ற அபிமன்னன்
பேரிற்பெரும்புலியைப்போற்பாய்ந்து வளைத்
துக்கொண்டு யுத்தஞ்செய்யப் புகுந்தார்கள்.
இப்படி புகுந்தவர்கள் ஒருமுகமாய் இராமற்
பல முகத்திலும் வளையம்போல் வளைத்து,
ஏழு சமுத்திரத்தையும் எழுமேகங்கள் உறிஞ்
சித் தொகைவகை யில்லாமற் பொழியுமாறு
போல் வில்லை வளைத்து, ஒவ்வொரு வீரருங்
கோடிகோடி கோடாகோடியென்னும் பாணங்
களைத் தொடுத்து யாவருந் திக்குமுக்காடச்
செய்து, செந்தூளெழுப்பி ஸ்ரீராமரை மாரீ
சன் என்னும் மாயமான் கொண்டு போனதை
போல பழையயிடமாகிய பத்மவியூக மத்தியம்
வரையிலும் கொண்டுபோனார்கள். இத்தனைக்
கும் அசைவறநின்ற அபிமன்னுவானவன்,
பின்பு, அரிப்பிரமாதியரும் நடுங்கும்படியாக
ஜெயம்பெற்ற அக்ஷயபாணங்க
வில்லிறுக்கி, அவ்வரசர்கள் விடுத்த
ளைத் தொடுத்து, துகள்போற்றுணித்து
அம்புகளையெல்லாந் பருப்பதப் பகழி
விலக்கி, பலம்பொருந்திய பாதமுதற்
கனை விடுத்து, வந்தவர்களுடைய

தலைவரைக்கு நிறைந்து, அந்தக்கரணமும்
ஐம்புலனும் அங்கமுங்கலங்கி நமக்கு மரண
காலம் வந்து சம்பவித்ததென்று நினைத்து
மருட்பார்வை கொண்டு மயங்கி மடியும்
படி மாட்டிக்கொண்டு வாட்டும்போது, போர்
முனையில் வந்தகப்பட்டுக் கொண்ட அறுகுல
ராஜன் தலையறுத்தழிந்தான், கேகயராசகுமா
ரன் மாய்ந்தான், கிருபாச்சாரியர் வில்லொ
டிந்து சொல்லழிந்து புறமிட்டார், மகத
தேசாதிபன் மாண்டான், கோடி மகுடவர்த்த
னர் கொலையுண்டார்கள், இராஜ புத்திராள்
கோடிபேர்கள் வீரசொர்க்கஞ் சேர்ந்தார்கள்.
இதல்லாமலும், வில்லழிந்தவ ரனேகர், பல்
லுடைந்தவ ரநேகர், தேருடைந்தவ ரநேகர்,
மார்புடைந்தவ ரநேகர், தலைநெரிந்தவ ரநே
கர், புயமுறிந்தவ ரநேகர், தாளொடிந்தவ
ரநேகர், வாளொடிந்தவ ரநேகர், நிலைகெட்
டவ ரநேகர், கொலைபட்டவ ரநேகர், நெஞ்
சழிந்தவ ரநேகர், பிஞ்சிபோனவ ரநேகர்,
தூரத் தொலைவி லோடினவ ரநேகர், நேரிற்
றரையினின் றுடினவ ரநேகர், தோளறுந்
துத் துடை முறிந்தவ ரநேகர், மாளநின்று
மதியிழந்தவ ரநேகர்; இப்படி யானதல்லாம
லுந் துரியோதனன் மனதிற் கிசைந்த சகுனி
யினுடைய பிள்ளைகளில் முற்போர்களில்
போனவர்போக நின்ற மற்றையரும், அச்
சகுனியினுடைய தாயாதித் தம்பிமார்களும்,
பந்துவர்க்க முதலாகிய பேர்களும், அடி
வேரைப் பிடுங்கினால் படர்ந்திருக்கும் பல
கொடியும் வாடியழியுந் தன்மைபோல், ஒட்
டொழிய அழிந்தார்கள். எல்லோரு மிறந்த
தைக் கண்ட சகுனி மனந்துறந்து அபிமன்ன
னுக் கெதிர் போய்ப் போராடி, மடியும்படி
யான முடிவு காலத்திற்கு நேராகிய வருத்தப்
பட்டு, அப்பா! தப்பிப் பிழைத்தேனென்று
செப்பாம லோடிப்போயினான்.

### கர்னன் அபிமன்னனாற் பலமுறை முறிபட்டு துரோணாச்சாரியரோடுங் கூடி மோசப் போர் விளைத்தல்

இப்படி துரியோதனனுடைய தம்பிமார்
களுஞ் சகுனி முதலாகிய தங்களுக் கிச்சை
யான மைத்துனவர்க்கத்தாருங் குதிரை பூட்
டிய தேரைச் செலுத்திச் சென்று கோபாக்
கினியுடன் போர்புரிந்து நிலைபெற மாட்
டாமல், அபிமன்னுவினுடைய முனையாகிய
வெடிபாணங்கள் துளைத்து மூலாதாரம்வரைக்
கும் பேதித்ததினால், யுத்தத்திற்குப் பயந்து

புறமுதுகிட் டோடுவதையும், இந்தப் பிரகாரமே அரசர்கள் முதலிய யாவருந் தலைகாட்டாமற் போரி லிடைந்தோடுவதையுந் திரிதராட்டிர குமாரன் கண்டு, மனக்கொதிப்புக் கொண்டு கர்னனைப் பார்த்துச் சொல்லுகிறான்: அண்ணா! அரியாதபையன் செய்கின்ற அற்ப யுத்தமென்று அலக்ஷ்யமாக நினைக்காதீர். (சின்ன பாம்பானாலும் பெருந் தடிகொண்டு அடிக்க வேண்டியது) என்று பழமொழி யொன்றுண்டல்லவா? அதேனென்றால் பாம்பு சின்னதானாலும் விஷஞ் சின்னதல்ல; இப்பயலோ! ஆலகால விஷப்பாம்பின் வயிற்றிற் பிறந்த குட்டியாக்கும்; சம்மட்டி கொண்டு அடித்தாலும் உடைபடாக் கருங்கல், சிற்றுளியாலுடையும்; ஆதலால், இன்றைய யுத்தங் கேவலமானதல்ல. இதன்றியும், இதுவரையிலும் அர்ச்சுனனுக்குச் சமாசாரம் போயிருக்குமென்று நினைக்கிறேன். ஒருவேளை அந்தக் கிரீடிவந்து தன் பிள்ளையுடனே சேர்ந்துக் கொள்ளுவானாகில், திரிபுவனங்களும் நிலைக்க மாட்டா; அப்பொழுதும் உனக்கு வல்லமையிருக்குமாகில் நீயேதான் பிரயாசை எடுத்துக் கொண்டு அவ்விருவருடனும்போராடி செயம் பெறவேண்டிவரும்; இப்போதானால் வெறுங் கட்டென்று சொல்லலாம். அர்ச்சுனன் வந்து கலந்துவிட்டானானால் நனைந்து சுமக்குங்கட்டாகும். ஆகையால், அண்ணா! யாவரும் பார்த்துக்கொண் டிருக்கும்போதே நேரிற் சென்று மலைந்துக் கொள்ளக் கடவை என்று குருகுலக் கோமான்கூற, கொடையாளியாகிய கர்னன் அப்படியே நல்லதென்று கோபாலன் மருமகனாகிய அபிமன்னனைக்குறுகி, பரசுராமரிடத்தில் தான் கற்றவித்தைகளில் ஒன்றொழியாமல் உம்பர் மதிக்கவும், இம்பர் துதிக்கவும், அம்பரமதையப் பம்பரம்போற் சுழன்று அரிதாகிய யுத்தங்களைச் செய்யும்போது, இவன் விடுக்கும் பாணங்களை யெல்லாம் அபிமன்னன் எவ்வளவும் ஒரு பொருளாய் எண்ணாமல் இறுமாந்து, வச்சிரக்கணை முதலிய மற்றப் பகழிகளைப்பூட்டி மாட்டினான். அந்த பாணங்கள் தூறியவனற் றூறலினால் அவனேறிய தேரானது மேகஞ் சிதைந்ததைப்போல் முறிந்து விழவும், கைப்பற்றிய வெற்றிவில்லொடிந்து வீரப்பட்டந் தறியவும், இதனால் உள்ள முடைந்து ஒருபுறமாய் ஓட்டமெடுத்தான் வள்ளலாகிய கர்னன்.

இவ்விதமாகப் போரழிந் தோடிவரா நின்ற கர்னனைத் துச்சாதனன் கண்டு தேற்றிச் செம்பொற் றேர்கொடுக்க, அந்த தேரின் பேரி லேறிக்கொண்டு மறுபடியும் அபிமன்னன் பேரிற்றிரும்பி, பற்பலவாகிய திவ்வியாஸ்திரங்கள் தேவாஸ்திரங்களை யெல்லாமிறைத்துச் செயிக்க வேண்டுமென்று பேராசைகொண்டு திரியும்போதில், அளக்கரிய ஆற்றலைப்பெற்ற அபிமன்னனுடைய செங்கரத்திலிருந்து புறப்படும் வெங்கனற்றொடைகளினால் அந்த படைகளெல்லா மொழிந்து; அவனுடைய தேர்-வில் முதலிய யாவு மழிந்து, தேகத்திலும் உதிரம் வழிந்து பெருக்கெடுத்தன. அக்காலையில், அபிமன்னனுடன் எதிர்த்து போர்புரிவதற்கு அஞ்சி முகமாறியோடிய கர்னன் துரோணாச்சாரி முதலியபேர்களைப் பார்த்து, இதோ நான் வருகிறேன்; நீங்க ளெல்லாரும்போய் மடக்குங்களென்று அவர்களை அனுப்பிவிட்டு, இரண்டு குதிரை பூட்டிய மற்றொரு தடந்தேரேறிச் சென்று, மீண்டும் இந்திரக்கணை-சந்திரக்கணை முதலிய பாணங்களை பந்தி பந்தியாய் விடுத்துப் போராடினான். அப்போது அந்த அபிமன்னனால் மனநொந்து, தேரழிந்து, வில்முறிந்து, கொடியும் வீரபட்டமும்போய் காலாளைப்போலோடி மூர்ச்சையாய் விழுந்தான் கர்னனானவன். அவனைக்கண்ட காவலரும் தேவர்களுங் கலகலவென்று நகைக்க, உடனே மானத்திற் காற்றமாட்டாமல் மறுபடி தேறியெழுந்து வேறே தேரேறி நடந்து, துரோணர் முதலாகிய பேர்களிடத்தில் ஒரு சூசனையாகிய யோசனை செய்து, இவனை மோசத்தினால் வெல்லவேண்டுமே யல்லது சாகசஞ்செய்து கொல்லுவ தரிதென்று நிச்சயஞ் செய்துக் கொண்டவனாய், ஓ சேனாதிபதியாகிய தேவே! இப்போதுதானேபோய் யுத்தஞ்செய்து நாகாஸ்திரம்போல் நெளிந்து, பின்பக்கமாகப் போகிறேன். அவ்வபிமன்னு என் பக்கந் திரும்பிப் பாராமல் உங்கள் பக்கம் யுத்தஞ் செய்யும்படியாய் ஒருகணப்போது மடக்குவீராகில், இவனை அடக்கி முடித்துவிடுகிறேன் என்று சொல்லி எல்லாரையுஞ் சேர்த்துக் கொண்டுவந்து அபிமன்னனுக்கு முன்னே விடுத்து தானும் போர்செய்து, பின்பு அபிமன்றெடுத்த நாகாஸ்திரத்தால் அடிபட்டுப் புறங்கொடுத் தோடுகின்றவனைப்போல், அர்ச்சுன குமாரனுடைய தேருக்குப் பின்பக்கமாய் வந்து ஒதுங்கி, வில்லைக் கையிற்பிடித்து வீரசாயகந் தொடுத்துக் காதுபரியந்த மிழுத்துப் பிடித்துக்கொண்டிருக்க, முன்னே யிருக்கும்

சேனாபதியாகிய துரோணாச்சாரி, அசுவத்தாமன் முதலாகியபேர்கள் அபிமன்னனுடைய ரதமும், மனமும் அப்பாலிப்பால் திரும்பவொட்டாமல் முப்பத்து முக்கோடி தேவரும், இந்திரனும் பிரமிக்கும்படியாய் வீராவேசமும் ரோஷமுங்கொண்டு யுத்தம் பண்ணிக் கொண்டிருக்க, காலகதியினால் ஓயாமற்றிரும்பிச் சுழற்றிக் கொண்டிருக்கும் ரதத்தைச் சாரதி திருப்பாமல் தன்னை மறந்து நின்றுவிட்டான்.

அந்த சமயத்தில் கள்வனைப்போற் களிப்பாய் ஒளிப்பாயிருந்த கர்னன் பாணமழைகளைச் சுமைசுமையாக பெய்யும் மேகம்போன்ற அபிமன்னனுடைய வில்லை கருங்கல்லை முறிக்குந் தன்மையைப்போல் முல்லைக் கணையைத் தொடுத்து முறித்தான். இந்தப் பிரகாரங் கர்னனானவன், பின் பக்கத்திலிருந்து அபிமன்னனுடைய கெடாத பெரிய வில்லை முறிக்க, அவனுக்கெதிரிலே நின்ற சேனாபதியும், பேர்பெற்ற ஆயிரம் ரதக்காரரும், அந்த அபிமன்னனுடைய தேரும் - அச்சும் - சக்கரமும் - குதிரைகளும் - சுமத்திரனென்னு மனமொத்த சாரதியும் அழியும்படியாய்ச் சரங்களை விடுத்து வீழ்த்தினார்கள். இப்படியாக வில்லுந்தேரு முறிந்த மாத்திரத்தில், மேகமண்டலங் கிழியும்படியாக இறைந்து, இருகாதிலுங் குண்டலங்கள் பிரகாசிக்க, இருபுயங்களும் மலையினும் பெரிதெனவோங்க, உதயபானுவைப்போற் கிரீடம் ஜொலிக்க, நெற்றியிற் றிரிபுண்டரமும் அட்சதைப் பொட்டும் ஒளிசெய்ய, குளிர்ந்த சந்திரவிம்ப முகமானது குறுத்தையுட னிலங்க, அறுகுபோன்ற மீசை அனற்போற் றுடிக்கப் பெருமூச்சுவிட்டு, அரையிற் கட்டிய வாளாயுதத்தை உறைவிட்டெடுத்து கரத்திற்பிடித்து, செண்டெழும்புந் தன்மைபோல் விண்டலத்தெழும்பி, சிங்கக்குட்டிபோற் பூமியிற் பாய்ந்து, மானங்கெடப் பேசினாலும் ஏசினாலும் பிராணனிருந்தாற் போதுமென்று வாணாள் வளர்த்து வருங் கர்னனானவன், பின்னிருந்துத் தன் வில்லை முறித்தானென்று தெரிந்துக்கொண்ட வல்லமைசாலியானவன், ஆலகால விஷம் போலும் வடவாமுகாக்கினி போலும் சீறி, வட்டமிட்டுத் தத்திக் கேடையத்தைப் பற்றி மண்டலாகிர்தியாய்ச் சுழன்று, இன்றையப் போரில் நாம் சொர்க்கமடையத் தக்கதேயென்று மனமகிழ்ந்து மண்டியிட்டு, தன் புயத்திற் கொப்பாகாத மகமேருவைச் சுற்றிவருஞ் சூரியனைத் தொடர்ந்து செல்லுங் கேதுவாகிய பாம்பைப்போலத் தன்னுடைய தோள்களை வாளுங் கேடயமும் வலமுமிடமும் வரும்படியாகச் சுழற்றினான் இளவரசர்களென்னும் யானைகளைக் கொல்லும் ஆண் சிங்கம்போன்ற அபிமன்னன். இவ்விதமாக அபிமன்னனானவன் பூமியில் நிற்கக் கண்ட மாத்திரத்தில், முன்னம் அமர்புரிந்து அடிபட்டுப் பயந்தோடிய அரசர்களெல்லாரும் ஒன்றாகக்கூடி, ஓ! ஓ! வீராதிவீரர்களே! நம் பகைவனாகிய அபிமன்னனுக்குத் தேர்போய்விட்டது. குதிரை - சாரதி - வில் இவைகளும் போய்விட்டன. நமது நல்லகாலம் இந்தச் சிறியவன் செய்தபோரும் போய்விட்டது. இவனுடைய சிலம்பம் இனி நடவாது; இப்போது நாம் பின்னிடுவோமாகில், குடிகெட்டுது; இனிமேல் நமக்குப் பயமில்லை. ஆதலால், யாவரும் ஒன்றாய்ச்சென் றெதிர்த்து யுத்தம் பண்ணுவோம் வாருங்கள் வாருங்கள் என்று மேகமுழக்கம்போல் ஹே ஹேயென்று இரைந்து நகைத்து, உதடு மடித்து, அங்குள்ள அரசர்களனைவருங் கடற் பெருக்கம்போல் வந்து ஓர் களைத்த சிங்கத்தைப் பல கஜக்கூட்டங்கள் செறிந்தனவென்று சொல்லும்படியாக நாற்புறத்து மொய்த்தார்கள்.

### அபிமன்னன் வாள்யுத்தம் புரிதல்

அப்போது விரிந்த சமுத்திரம்போல் மூன்றுவிதமாகக் கட்டிவைத்த வீரர்கள் முதலாகிய சேனைகளெல்லாரும், மண்ணை விட்டு விண்ணிற் குடியேறும்படியாக ஒரு நொடிப்போதில் யுத்தஞ் செய்து வென்ற வெற்றி வீரனாகிய அபிமன்னனை, ஒப்பற்ற துரோணாச்சாரியர் கண்டு கனைத்து நினைத்துத் தலைநடுக்குற்று, அப்பா! இவனை எப்படி ஜெயிப்போமென் றேங்கி, பின்பு சிறிது தேரினவரா யோங்கி, ஹரிவோமென்னும் பிரணவமாகிய மந்திரங்களுடன் ஆயிரந் தேவதாஸ்திரங்களை எடுத்துத் தொடுத்து விடுத்தார். அந்தக் கணைகளையெல்லாம் பருக்கை கற்கள் கலகலவென் றொலியிடுஞ் சிலம்பணிந்தப் பாதங்களையுடைய அபிமன்னுவானவன், தன் பேரிற் படவொட்டாமற் கரத்திற் பிடித்த வாள் வீச்சினாற் கண்ட கண்ட துண்ட துண்டமாகக் கரணையாடி எழுந்து, பூமியிற் பதுங்கி ஒதுங்கி யிருந்து, தன்மீது சோனாமேகத்தைப்போல் அம்புகளைச் சொறியுந் துரோ

ணுச்சாரியருடைய தேரிற் பாய்ந்து, அவருடைய வில்லையும், சாரதியையும், நான்கு குதிரையையும், ஏறிய தேரையுஞ் சில சில துண்டமாகப் பலபலவென்று உதிரும்படியாய் வடிவாள்கொண்டு மோதி, உடனே வானில் உயர்ந்து பூமியிற் பாய்ந்து, மன்னர் மண்டலீகர் முதலாயுள்ள வயவீரர்களைக் கால்மாடு தலைமாடாக விழும்படி ஓட்டி வீசி வெட்டியெறிந்தான். இப்படிக்கு யாவரையும் வீசி வெட்டியெறிந்து மத்தியானச் சூரியனைப் போல் வடிவமெல்லாம் உதிரந் தோய்ந்து ஒளிரும்படி நின்ற விஜய குமாரன்மீது மறுபடியுந் தேரேறிச் சேனுபதியாகிய ஆசான் வந்து பூசாவிதிபெற்ற புரதகனுஸ்திரம் விடுக்க, அது வாசமகோசரமாய் வந்து நாசப்படுத்த, வந்தடுத்த அந்தக் கணையையுங் கிழித்து, அவருடைய தேர்-குதிரை-சாரதி-வில் முதலாகிய வீரப்பட்டத்தையுந் தட்டி வெட்டியபோது, மறுபடியும் வேறு தேரேறி வந்தார். இந்தப்படிக்கு ஒருதரம், இரண்டுதரம், மூன்றுதரம், நான்குதரம், ஐந்துதரம் இப்படி அனேகந்தரம் வந்தார். அவரெத்தனை தரம் வந்தாலும், அத்தனை தரம் வாளாயுதத்தால் அழித்து, அவருடைய வடிவத்தையுங் கீறி, அக்கீறல்களினின்றும் பெருகிய உதிரங்கள் ஆறுபோலோடும்படி அழகைச் செய்து, இளம்பிறைபோன்ற அபிமன்னன் செருக்கடைந்து சிலைக்குருவை நோக்கி, ஐயா சேனுபதியே! வெட்கமில்லாமல் இன்னும் எத்தனை தரம் வருவீர்? உமக்கு இன்னும் ஒன்று மறையுமாயுள்ள தேர்களையுங் கொண்டு வந்து ஒழித்துவிடவோ? ஐயோ! உடம்பு சாகவில்லையா? இதுவொரு வீரமா? உம்மைத்தானே விற்குருவென்றுரைப்பது? உம்மிடத்திலேயா அருச்சுனராஜனுந் தனுர்வேதங் கற்றது? ஆ! ஆ! போதும்; போதும். என்று சிரக்கம்பங் கரக்கம்பஞ்செய்து நகைத்தான். அப்போது இனி எப்படி இவனைக் கொல்லுமுபாயமென்று வேத புங்கவனுகிய துரோணுச்சாரி சிந்தித்திருக்கும்போது, அவர் வெறுங்கையுடனேடும்படி அபிமன்னன் வாள்கொண்டுவீச, அக்காலையில் மறுபடியுஞ் சிலைக் குருவானவர் இமயமலை போன்ற தேரேறிவந்து, நிலைபெற்ற வில்லைவளைத்துக் கதிரவன் கணையையும், பிறைமுகக் கணையையும் பூட்டி, அபிமன்னன் கைகொண்ட வாளாயுதத்தைப் பொடிப்பொடியாகப் போகும்படி ஒடித்தனர். சத்துருக்களுடைய பிராணவாயுவைப் புசிக்கும் பசியினையும், பிளப்பாகிய வாயையுமுடைய ராகுவென்னும் சர்ப்பம் போன்ற அபிமன்னுவின் வடிவானது, நொய்யுந் தவிடும்போல் நொறுங்கிப் பூமியில் விழுவதற்கு முன்னே, சூரிய குமாரனுகிய கர்னனானவன், மாட்சிமை தங்கிய வாயுக்கணைகளை விடுத்து, நவரத்ன கசிதக் குமிள் கட்டிய அவன் கேடையத்தை நடநடவென்றுப் பொடி செய்துதிர்த்தான்.

### அபிமன்னன் எறிச்சக்கிரமந்திர முச்சரித்துப் போர்விளைத்தல்

அப்போது வாளாயுதமுங் கேடயமும் பொடியாய் மண்ணில் விழுந்தவுடனே, மருதமாமா யிருந்த நளகூபரன் மணிக்கிரீவனென்னுங் குபேரனுடைய பிள்ளைகள் நற்கெதி பெறவேண்டி அம் மருதமரம் அடியுடனே சாய, உரலுடன் றவந்துந்திய மாயவனுக்கு மருமகனுகிய அபிமன்னனானவன், தன்னேடு விருதுபெற்று அமர் செய்யும்படியாகிய வீர வேந்தர்களெல்லாரும் வாசனை பொருந்திய தாமரைமலர் நிறைந்த ஒரு மடுவாகவும், இரண்டு துதிக்கையுடன் புகுந்து அம்மடுவைக் கலக்கும் பலம் பொருந்திய யானை தானுகவும் இருந்துக்கொண்டு, வெறுங்கையுடன் அம்மடுவில் நுழைந்து குழப்பும்போது, எட்டுத் திக்கிலு மிருந்து மட்டற்ற பாணங்களைச் சொரிந்து இடைவிடாமற் போர்புரிந்தார்கள். அவனேடு தேர்நின்று யுத்தவிதிப்படி போரினைச் செய்ய சக்தியற்ற புல்லாண்மையினையுடைய அனேக வரசர்கள்; அப்போது அபிமன்னுவானவன் இராஜவீரர்கள்பேரிற் கேசரீபோல் எதிர்த்து, தன் மாமனுகிய மாயனைவர், பூர்வத்தில் தனக்கு உபதேசத்தருளிய எறிச்சக்கிர மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு உடைந்த ரதங்களின் சக்கரத்தை யெடுத்து உச்சாடனஞ்செய்து விடுத்து, இந்திரனுற் பொழியச்செய்த கல்மாரியைக் கோவர்த்தன கிரியினுற் றடுத்த கோபாலனைப்போலச் சத்துருக்கள் தன்பேரிற் பொழியும்படியாகிய வில்மாரியென்னுங் கணைகளை விருதாவிலொழிய விலக்கி, அந்த வீரர்களையும் முடிதறித்து விழும்படி முறித்தான். இந்தப்படிக்கு ஒரு கையால் தேர்ச்சக்கரத்தை எடுத்துத் திக்குகள் தோறும் ஓடித் துரத்தித் திரிந்து தன்னேடு யுத்தம் பண்ணுஞ் சத்துருக்கள்பேரி லெறிந்து நாசப்படுத்துந் தன்மையில், முன்பு இராக்ஷசாள்பேரிற் சக்கரத்தை விடுத்துக்

கொல்லும் ஸ்ரீமந் நாராயண மூர்த்தியை ஒத்திருந்தான். அக்காலையிற் சிரத்தாலுங் கரத்தாலும் ஒருவரை வணங்காமுடிபெற்ற துரியோதன மகாராஜன் மதிமயங்கி, ஐயோ! இந்த அபிமன்னன் தேருடனும் வில்லுடனும் போர்புரிந்தபோது கொஞ்சஞ் சுமாராயிருந்தது. இப்போது தேரும் வில்லும் போனபிற்பாடும், நமது படைகள் தாறுமாறுகக் கெட்டழிகின்றனவே; இதற்கு நானென்ன செய்வேனென்று தன்னருகி லிருக்கும் படைகளை மூடுக்கி விடுக்க, அவர்களையு மவன் தலை காட்ட வொட்டாமற் சக்கரத்தாற் சதைக்கின்ற போது, அநேகம் யானைகளழிந்தன; கோடா கோடி குதிரைக ளிறந்தன; மலைபோன்ற கிரணமணித் தேர்க ளொடிந்தன; வல்லமைப் பெற்ற வீரர்களின் தேகந்தோறும் உதிரங்களுடன் அக்கினிப் பொறிகள் சிந்தின; பூமியிற் சோரிவெள்ளந் தோய்ந்தோடிக் காய்ந்தன. அப்படி தோய்ந்து புரண்ட இரத்த வெள்ளங்களிற் குருபதி சேனையிலுள்ள கோவேந்தர் பலபேர் மூழ்கிப் பிராண னிழந்தார்கள்; சிலரோடி யொளிந்தார்கள். இப்படியாக இந்த அபிமன்னனால் அல்லோல கல்லோலமாய் அவதிப் படுவதைக் கண்ட சேனாபதியாகிய துரோணாச்சாரியரும், அவருடைய குமாரன் அசுவத்தாமனும், சூரிய குமாரனான கர்னனும், இலையாகிர்தியாகிய வேலாயுதம் பிடித்த பலகோடி மன்னரும், முன்னம் படாத பாடும்பட்டு, இனி நாங்கள் தாளமாட்டோ மென்று எய்த்திளைத்து வாடி யோடிய பேர்களும், மதங்கொண்ட யானையைக் கொலைசெய்யக் குறுகுஞ் சிங்கங்கள்போற் றெழித்து உரப்பிச் சேர்ந்து, மலைமீது பொழியும் மழையைப்போலும், மரச்செறிவில் வீசும் பெருங் காற்றைப்போலும், அஸ்திரங்களைப் பொழிந்து, அபிமன்னன் கைக்கொண்ட சக்கரத்தையும் அழித்தார்கள்.

### அபிமன்னன் கதாயுத்தம் புரிதல்

இவ்வாறு அபிமன்னனுடைய கையிலிருந்த தேர்ச்சக்கரத்தை அழித்தொழித்தக் காலத்தும், அவன் சிறிது முகவாட்ட மில்லாமற் பிரகாசத்துடனே நகைத்துத் திரும்பி உலகம் மதிக்கப் பெருமையடைந்த கதையை கைக்கொண்டு, மேககர்ச்சிதப் பேரிடியின் முழக்கமாக முழங்கிப் போர்புரிந்து, ஆட்டுக்கூட்டங்களிற் புகுந்த தனி வேங்கையைப்போற் றிசாதிசைகளு முலாவி, மண்டலம்-ருவி, கோணம்-வட்டம்-ஒதுங்கல்-பதுங்கல்-தாவல் மேவல்முதலாகிய சாகசங்களால் முனைவிரரை யெல்லாம் முடித்து வருங்காலையில், அசுவத்தாமன் வந்து நகைத்து, ஆயிரம்-ஐயாயிரம்-ஐம்பதினாயிரமென்று சொல்லும் அஸ்திரங்களைத் தொடுத்து முடுக்கினான். அப்போது அபிமன்னன் வெகுண்டு கதையைக்கொண்டு உயரந்தூக்கினால் சப்தமேகங்களுநா் அஞ்சியோடவும், பூமியிலடித்தால் நிலத்துவாரங்களெல்லாம் அதிர்ந்து ரூடவும், சுழற்றினால் எதிர்த்தவர்கள் சிதைந்திறங்கவும், எறிந்தால் அண்டகடாக முடையும்படி யாகவு மிருக்கிற அபிமன்னுவின் கதையின் றிறத்தை யறிந்து சொல்லத்தக்க வதிசூராள் யாரிருக்கின்றார்கள். அப்பேர்ப்பட்ட கதையினால், தன்னையடுத்துப் போர்செய்யும் அஸ்வத்தாமனைத் தேர்-குதிரை-சாரதி முதலிய சார்புகளுடன் பூமியிற் றுடித்துவிழ, அந்த அடியினால் மெத்தவும் வருந்தி, உடல் நொறுங்கி, உயிர் பிழைத்தாற் போதுமென்று அவ்வசுவத்தாமன் கால் ஓட்டமாக ஓடும்படியாய் விடுத்து, நாலுபக்கங்களிலும் நெருங்கிய நரபாலரும் கவிந்து, போர்செய்யும் நால்வகைச் சேனையும் நாடிய வாறே ஓடும்படியாய் சாடி, தேவேந்திரனுக்குப் பௌத்திரனும், அர்ச்சுனனுக்குப் புத்திரனுமாகிய அவ்வபிமன்னன் முன்தாவுதல்-பின்தாவுதல்-பாடுதாவுதல் - ஊடுதாவுதல்-பாச்சல்-பதுங்கல்-இருத்தல் - எழுதல் முதலாகக் கைபழகி யிருக்குங் கதைப்போரின் சூழ்ச்சியைக்காட்டி, தன்னுடைய அகால சமயத்தைத் தன் தந்தையாகிய தனஞ்சயனுக்குத் தெரிவிக்கவேணுமென்று உரமாகக்கற்ற வரமாகப் பெற்ற பால்போன்ற வெண்சங்கத்தை வாயிதழில் வைத்துப் பம்பம் பம்மென்று ஊதினான். அப்போது ஈரேழு பதினான்கு லோகங்களுஞ் செவிடுபட்டுப் பட படவென்றும், விடவிட வென்றும், கடகட வென்றுங் கலங்கிப் பதறும்படிக்காயின. அந்த வேளையில், சஞ்சத்தகாள்பேரில் யுத்தஞ் செய்யும் அர்ச்சுனனுடைய ரதத்திலிருக்குஞ் சாரதியாகிய மாயன் என்னுஞ் செந்தாமரைக் கண்ணன் இவ்வபிமன்னன் குறித்த சங்கத்தொனியானது அர்ச்சுனன் காதில் விழவொட்டாமல், தன்னுடைய பாஞ்ச சன்னியத்தை யெடுத்து பொம் பொம் பொம்மென்று பேரொலி யுண்டாகும் படியாய் முழக்கி, லோகாலோகங்க ளதிரும் படிக்கு அபிமன்னன் குறித்த சங்கத்தொனியை மறைத்தார். அப்போது அர்ச்சுனன்

முகுந்தனுடைய முகத்தைப் பார்த்து, ஓ சுவாமி! இவ்விடத்தில் இப்போது யாதோ ரதிசயமும், யாதொரு விந்தையும் இல்லாது இருக்குங்காலையில் தேவரீர் சங்குமுழங்கிய சந்தோஷ தாற்பரிய மென்னவென்று கேட்க, அப்பா அர்ச்சுனா! உன்னைப்போல் யுத்தஞ் செய்யு முத்தமனில்லையென பார்த்த எனக்கே என்னை மறக்கத்தக்க சந்தோஷம் வந்ததினாலும், உன்னுடன் சண்டைபோடானின்ற இந்தத் துஷ்டர்களாகிய சஞ்சத்தகரும், திரிகர்த்தரும் மயங்கி தியங்கிப்போனதை, என்னமோ ஏதோவென் றிருக்குந் தர்மராஜன் முதலிய பேர்களுக்குத் தைரியமுண்டாகவுஞ் சங்கத்தொனி செய்தேனேயன்றி வேறு காரணமன்றென்று அந்த அர்ச்சுனனுக்கு சமாதானஞ் சொல்லி, சுவேதவாம் புரவிபூட்டிய தேரைத் தடதடவென்று சத்துருக்கள்பேரில் விடுவதைப்போல் இன்னுஞ் சற்று தூரத்திற் கொண்டுபோனார். அஃதப்படியிருக்க, இவ்விடத்தில் அபிமன்னன் சுவாமியினுடையபாஞ்சசன்னியத்தின் ஓசையைக்கேட்டு மகா தைரியமுடையவனாய், நாமுழக்கிய சங்கத்தொனிக்கு எதிர்முழக்க முழக்கினபடியால் நமது தந்தையும், மாமனாகிய மாயனும் வருகின்றார்கள் என்று மனமகிழ்ந்து, எண்காற் புள்ளினார் பதைபதைத் திறங்கும் கொடும்புலி முதலிய யானைக்கூட்டங்கள் போலுஞ் சண்டமாருதத்தாற் பறக்குஞ் சருகைப்போலுந் தியும்படியாகத் துரியோதனனுடைய படையடங்கலையுஞ் சாய்ந்து மாய்த்தான். இதைக்கண்ட துரியோதனராஜனும் ஏதேது நாம் தலையெடுக்கிறதாயில்லை என்று வயிற்றில் வாள்கட்டிக்கொண்டவர்களைப்போல் உறக்கங்கொண்டு வாடி வருந்த, அசுவத்தாமன் - துரோணாச்சாரியர் - கர்னன்முதலாகிய பேர்களெல்லாரும், கடுப்பென்னும் வயிற்றிற் கடுநெருப்பைமூட்டிக் கொண்டவர்களைப்போல் ஓட்டத்துடன் வாட்டங்கொண்டு தலைநட்டுக்கொள்ள, அபிமன்னனானவன் கொஞ்சமெஞ்சி யஞ்சியிருக்கின்ற வீரர்களுடைய தேர் முதலிய அங்கங்களை யெல்லாம் மளமளவென்று முறித்தேறிச் சென்று பளபளவென்று பாழாக்குங் கௌரவர் படைகள் வயித்தியன் கைவிட்டதைப் போலாயின.

### கௌரவரில் துச்சாதனன் குமாரனாகிய துச்சனிவதை

அந்தச் சமயத்திற் காலாந்தக னிவனென்று சகல தேசராசர்களுந் தொழும்படி யாயிருக்கிற துச்சாதனனுடைய குமாரனென்னுங் காலாக்கினி விடங்கொண்ட கடும் பல்லினையுடைய கடும் பாம்பைப்போன்ற துச்சனி என்பவன், உங்களையெல்லாம் பங்கப்படவென்ற சிங்கம்போன்ற இவ் வபிமன்னனை நானே கொல்லுகிறேனென்று பிரமசர முதலிய பேதக்கணைகளை விடுத்துத் தேரைச்செலுத்தி யடுத்தான். அந்தச் துச்சனியைக் கண்ட அபிமன்னனானவன், கடுகடுத்துப் படபடத்துக் குடுகுடு வென்றோடி, அவனேறி வந்த தேரினுடைய அச்சாணி-ஆப்பாணி-அஞ்சூராணி-குத்துக்கால்-கொடுங்கைச் சிகரப்-கொடி-குடை-குதிரை-சாரதி முதலிய யாவுங் குப்புற்று விழுந்தழியும்படிக்கு ஒரே பாச்சலாகப் பாய்ந்து கதைகொண்டடித்தான். அவ்வடியினால் அத்துச்சனியினுடைய ரத்தினமுடி முதலியதும் பொடியாய்ப் போய் பாதசாரியாய்ப் பூமியென்னும்படியிற் பாதம் படிய நின்று, தனது தேர்-குதிரை-சாரதி-வில் முதலிய வெல்லாந் தனக்கு உதவாமல் ஒரு நொடியிற் போனதைக்குறித்து விசனப்பட்டு, தலைக்கு மொட்டைக்குல்லா தரித்து முச்சகப்புகழும் வச்சிரக்கட்டணிந்த உச்சித கதையைக் கைக்கொண்டு, அவ்வபிமன்னனுக்கு நேரில்வந்து, அடா அபிமன்னா! உன் சாமர்த்தியத்தை இப்போது காட்டடா வென்று கதையாற்றட்டிக் கிட்டிவந்து கை கொட்டி நடநடவென்று பற்கடித்துச் சொற்படித்துத் தடுக்க, அபிமன்னனும் உகாந்த காலாக்கினிபோலோங்கி, கொலைத்தொழிலை குறைவில்லாமற் செய்யுங் கொடுங்கூற்றனும் பயப்படும்படியா யிருவருங் கதைப்போர்புரிந்தார்கள். அதெப்படியெனில், அபிமன்னனின் இடதுகாலுந், துச்சனியினுடைய வலது காலும் நாட்டி, ஒருவர் காலின் புறவடியை ஒருவர் மிதித்து, கணுக்காலுடன் கணுக்கால் தொடையுடன் தொடை, இடையுடன் இடை, கரத்துடன் கரம், சிரத்துடன் சிரம், ஒன்றுபட நெருங்கி, இடசாரி வலசாரி, வலசாரி இடசாரியாகச் சுழன்று, பின் பக்கமும் மின் பக்கமுங் குந்தி யெழுந்து, குனிந்து - நிமிர்ந்து - பாய்ந்து - பதுங்கி - பறந்து-வளைந்து-கோபங்கொண்டு குமாளமிட்டெழுந்து, ஆ ஆ வென்று மாறி மாறித் தோள்தட்டி மதத்து விழுந்து, ஒருவரை யொருவர்விட்டுத் திரும்பி, மீண்டுங்கிட்டி நெருங்கி, காலுடன் கால்மாற்றி முறைமுறையாக அடித்து, ஒருவர் அடிக்கும் போது மற்றொருவர் தடுத்து, தலையிலும்

உடலிலும் நாணி நடுங்கத் தாக்கி, விலாப்பக் கங்களில் மோதி, இவ்வாறு நீதியாகிய செருச் செய்வதினா லுண்டாகிய பேரொலியானது, கர்ரொலியால் விழுந்த அக்கினி தளைந்து பற்றிக்கொள்ளுங் காலையில், வாயுவுங் கூடிக் கலந்து குபீரென வீசியார்க்குந் தன்மையைப் போல் சமுத்திரங் கலங்கி, ககனமும் நடுங்கி, பளீர் பளீரென மின்னலெழும்பித் திக்குகள் ஒடுங்கி, திக்குப் பாலகர்களடங்கி, திக்குக் கஜங் கள் மடக்கி, அண்டச்சுவர் படபட படீரென வெடிக்கத் தக்கதாய்த் திடமுடைய இருவரு மனமழன்று விறுவிறெனச் சுழன்று, பொன் மலைக் கொப்பாகிய புயவலிமை காட்டி, புரத கன ரிவர்களெனக் கதையுடன் கதைமாட்டி, ஒருவரை யொருவர் வென்று, வெற்றிபெற வேண்டுமென்னும் விராவேசங் கொண்டு, பின்னும் பின்னும் பலமதிகரிக்கும் படியாகப் போராடுந் தருணத்தில், அருமையற்ற பெரு மை பெற்ற துச்சாதனனுடைய உரிமை மைந்தனுக்கு இரண்டுபுய மொடியவும், எலு ம்புகள் நெடநெடவென்று முறியவும், வயிற் றில் இருக்கும் பெருங்குடல் வாய்க்கு வரவும், மணிக்குடல் முதலாகிய கொடிவளையங்களெல் லாம் கொலை மார்பில்வந் திடிக்கவும், இரு தொடையுங் கடகட படபடவென்று நடுங்க வும், கால்கள் தடுமாறி முடங்கவும், கண்கள் சிவந்து கருப்புகையுடன் கனற்பொறி பறக்க வும், தலையிலணிந்த மொட்டைமுடியிலிருந்து விலையில்லா மணிகளுதிரவும், பெருமூச்செடு த்து பெதறும்படியாகவும், நெருப்புப் பறக் குங் கோபத்துடன் இருகையிற் பிடித்த கதை யை ஒருகையிற் பிடித்துச்சுழற்றி ஓங்கி அடித் தான் வீங்கிய புயத்தில் வெற்றிமா மாலை யணிந்த அபிமன்னனானவன். அந்த அடியி னால் துச்சனி இளைத்துத் துடிதுடித்து, அவ திப்பட்டுப் பிராணன் போனதைப்போல் மூர் சித்து உடனே பிழைத்து, ஆறித்தேறி யெழு ந்து வசையற்ற இசைபெற்ற குருகுல மணி யை மாசற்ற வம்சத்திற்குத் திலகமானவனை, இணையாகிய மருதமரத்தை யுந்திய மாயன் மருகனை, கணைபொழியுங் காண்டீபக் கரவிஜ யன் புத்திரனை, நான்மருப்பி யானையூர்தியா கிய தேவேந்திரனுக்குப் பேரனை, அசைவில் லாத் திடதீரத் திறலினையுடைய நிருபர்களை யெல்லாங் கருவறுத்த அழிவில்லாத அழகினை யுடைய அபிமன்னனை, கீர்த்திகொண்ட வல் லாண்மைபெற்ற வில்லாளியாகிய துச்சனியா னவன் எதிர்த்து, தன்னுடைய ஒரு கதையை இருகரத்தாலுந் தாக்கி ஓங்கியடித்தான்.

இப்படித் துச்சனியை யடித்து, அவனை இவனடித்து, காலிற்கட்டிய வீரகண்டாமணி கணகணவென்று சப்திக்கும்படி காலுடன் கால்பிணைந்து நெருக்கி, வாகுவலயஞ் சிதறும் படியாய் புயத்துடன் புயம் இறுகக்கட்டிப் பிடித்திடித்து, தலையிலணிந்த மகுடங் கலகல வென்றுதிர்ந்து உடைபடும்படிக்குத் தலையு டன் மலைமோதுந் தன்மைபோல்மோதி, அண் டங்கலங்கக் கண்டந்துலங்க அதட்டிக்கூவி, அஷ்ட கஜங்கள் தங்களுக்கிஷ்டமாகிய பெண் ணானைகளுடன் சொக்கி விக்கி முக்கி இரத்தங் கள்கக்கி மலைத்துவாரத்துக் குட்புக்கிப்போகும் படியாய்க் கதையுடன் கதையிடித்து நெருக்கி, கீழுலகமேழுங் குலுங்கி, ஆதிசேடன் தோள் மாற்றும்படியாய் குதித்துக்குதித்து, வேகமாக ஓடிவந்து வேர்த்து, சித்திரப் பாவைபோற் கண்சிமிட்டாமல் உறுக்கிப்பார்த்து, கண்களிற் பீரிட்டுத் தாரைதாரையாய் இரத்தம் வரும் படி நடநட நடநடவென்று பல்லைக்கடித்து, கிரமமாகக் கலந்து நெருங்கி யடித்து, இயா வரும் அதிசயங்கொள்ள ஒரு முகூர்த்த காலம் வரைக்குங் கதாயுதத்திற்கு உறவா கிய துச்சனியும், வில்லுக் கருச்சுனனென் னுஞ் சொல்லைப்பெற்ற வல்லவனுடைய குமாரன் அபிமன்னனும் யுத்தஞ்செய்யும் போது, ஒருவரையொருவர் இகழ்ந்து, ஒரு வரை யொருவர் புகழ்ந்து, இருவரும் யுத்த முறையில் மகிழ்ந்து, எனக்கிணை நீயல்ல வென்றும், உன்னை நானே கொல்லுவே னென்றும், எதிரொருவரில்லாத இருவரும் இணையொருவ ரில்லாமல், தங்களுக்குத் தாமேயொப்பாய் ஓர்மலையாய் நின்றார்கள். அக்காலத்தில் இந்தத் துச்சனியிலும் நூறு பங்கு அதிகமாகிய க்ஷாத்திரமுங் கோபமுங் கொண்டு சமயம்பார்த்துச் சாடிவரும்படியா கிய அபிமன்னுவின் புயவலிமையைக் கண்ட கடல்சூழ்ந்த நாட்டையாளும் அரசர்களும், தேவர்களும், மற்ற யாவர்களும், அண்டமுக டதிரும்படிக்கு புகழ்ந்து துதித்தார்கள். இதல்லாமல், தங்களுக்கு வயிறுநிறைய மாமி சங்கொடுத்த இவ்வபிமன்னனை ஏத்தி வாழ் த்தி ரணக்கள முழுமையுங் கழுகுகள் பந்த ரிட்டன; பைசாசக் கூட்டங்களெல்லாங் கை கொட்டிப் பாடிக்கொண்டு பலவிதக் கூத்தா டின; தலையறுந்த கவந்தங்களெல்லாஞ் சில

அபிமன்னன் நிர்யாண சம்பவம்.



நரநாராயணர் கைலேக்குச் சென்று பாசுபதாஸ்திரம் பெறுதல்.

டநடனம்புரிந்து வீழ்ந்தன; ஆயுத முதலிய பாணங்களெல்லாம் வேக மடங்காமற் றிரிந்தன; பெருகியோடும் உதிர வெள்ளங்களினாற் கருங்கடலுஞ் சிவந்தன; அந்த இரத்தப்பெருக்கத்தில் மூழ்கி அநேகம் வீரர் முதலாகிய சேனைகளுமிறந்தன; அச்செந்நீர் பெருக்கச்சுழியில் மேகம்போலிரைந்து யானைகளுங் குதிரைகளும் அழிந்தன; தேர்களெல்லாமுறிந்து முழுகிப்போயின; பதாதிகளுஞ் செத்தார்கள். இப்படியாக அமர்க்களங்கொண்டிருக்கிற சமர்க்களத்தி லரவக்கொடி பெற்ற துரியோதனனுடைய தம்பி புத்திரனும், முரசக்கொடிபெற்ற தருமராஜனுடைய தம்பி புத்திரனும் கதாயுதத்திற் கேற்பட்டிருக்குஞ் சாஸ்திரப்பிரகாரங் கதைப்போர் நடத்தி, பலம் பொருந்திய இருப்புக்கட்டுகள் கட்டிய கதையால் இருவர் தேகமுங் கொட்டிய பஞ்சுபோற் கூளமாய் நொந்து மல்லிகை மலர்போல் வாடிக் கசங்கப் போர்புரியுங் காலத்தில், அபிமன்னுவினுடையகதையடியால் துச்சனியானவன், தேகாபிமானம் விட்டுத் தன்னைத்தான் மறந்து, உயிரானது விண்ணுலகஞ்சேர உடலானது மண்ணுலகஞ் சேர விழுந்துவிட்டான்.

அபிமன்னன் நிரியாணச் சிறப்பு

இப்படி துச்சனியானவன் விழுந்தவுடனே, அவனோடுவிடாமல் விற்போர் மற்போர் கதைப்போர் முதலிய பல போர்களைச் செய்ததினாலே அபிமன்னுவானவன், சற்று சிந்தை மயங்கி மெய்தளர்வுடன் சோர்ந்து நிற்குஞ் சமயத்தில், அவ்விடத்திற் பதுங்கி யிருந்த சயந்திரதனானவன் சிகரதண்டமென்கிற ஒரு கதாயுதத்தினா லபிமன்னுவைக் கொன்றான். பின்னும் இராஜ நீதிக்குந் தர்மத்திற்குங் குறைவாகத் தக்கதாய் முறைமை யில்லாமற் பதினாயிரம் அரசர்கள் தூரநின்று கதாயுதங்களினாலும், வேலாயுதங்களினாலும், பாலா முதலிய குத்துப்படைகளினாலும், அபிமன்னுவை வதைசெய்தார்கள். அஃதெப்படியெனில், தாகவிடாயால் தண்ணீர் குடிக்கச் சுனையிலிறங்கி வகைமோசத்தால் முழுகிய யானையைக் கிராதகராகிய பல வேடர்கள் கூடிக் கொலைசெய்து துணிக்கும் நிலையைப் போல் அங்கவனுக் கஞ்சிப் பதுங்கியிருந்த அரசர்களெல்லோரும், கும்புகும்பாக கூட்டங் கூடிக் கொன்றார்கள். ஐயா மகாராஜனே! இத்தனை பேர்களாலும், இப்பேர்ப்பட்ட அடிபட்டிருந்த அபிமன்னுமானவன், மறங் குடிகொண்டிருக்குஞ் செவந்த விழிகளும், சிறிய முகத்தைப் பதித்ததையொத்த புன்னகையும், காந்தியையுடைய சுந்தரச் சந்திரமுகமும், கமல குண்டலந்தாங்கிய இருகாதும், பல திசையுஞ் சொலிக்கும் விலையில்லா நவமணியழுத்திய மகுடமும், பகைத்த பார்த்திபரைச் செயிக்கிறேனென்று பகுதிபோற் கட்டிய வீர பட்டமும் ஆகிய இவைகளெல்லாம் பிரகாசிக்கும்படியாய் பூமிப்பிராட்டியின் மடிமீது நித்திரை செய்கின்ற தன்மையைப்போ லிருந்தான். அவனிறந்து இரண்டு நாழிகைவரைக்குந் துரியோதனன் துச்சாதனன் முதலிய திறம்பெற்ற அரசரெவர்களுங் கிட்ட நெருங்கப் பயந்து, துச்சனி யிறந்த துக்கத்தையும் பாராட்டாமல், தூரத் தொலைவி லிருந்தார்கள். அதேனெனில், மாயன் மருகனுகையால், வாயுவைப் பந்தித்துக்கொண்டிருந்து நாம் கிட்டவரக்கண்டு மறுபடியும் பிழைத்தெழுந்து நம்மைப் பிழைக்கவொட்டாமற் கொல்லுவா னென்னுங் கலவரம் அவர்கள் உள்ளத்தில் குடிகொண்டிருந்தது. அந்த அபிமன்னன் அடங்கிவிட்டது எப்படி யிருந்ததென்றால், உதயகிரியிலுதித்துக் கிரணங்களை விரித்துக் காலவளவைக் காட்டவந்த சூரியதேவன் மாலைப்போதில் தன்னுடைய குணவீக்ஷண்யங்களை யெல்லாம் அடக்கிக்கொண்டு மேற்றிசையிருக்கும் அஸ்தமானகிரிக் கப்பால் ஒடுங்கியதைப்போலும், விசாலமாகிய அனேக வனங்களைக் கரியாயெரித்த அக்கினிதேவன் புகை முதலிய பொறிகளுங் கொதிப்பும் ஆறி அடங்கியதைப்போலு மிருந்தது. ஐயோ பாவம்! கணக்கில்லாத சேனைகளைக் காய்ந்து, அதிரதத் தலைவர்கள் தேய்ந்து, அநேக வீரர்கள் மாய்ந்து, எவர்களுந் தலை காட்டாமற் புறங்காட்டி ஓடும்படியாய்விட்ட ஆண் சிங்கமாகிய அபிமன்னன், நிலவுவளரும் இளம்பிறையானது வானத்தைவிட்டு வழுவி விழுந்து விட்டான்.

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! "மாயனுந் திருமாமன் றனஞ்சயனுந் திருந்தாதை வானோர்க்கெல்லா, நாயனும் பிதாமகன் மற்றொருகோடி நராதிபரா நண்பாய் வந்தோர், சேயனு மபிமனுவாஞ் சயத்திரதன் கைப்படுவான் செயற்கை வெவ்வே, றாயநா ளவனிதலந் தவ்விதியை வெல்லும்வகை யார்வல்லாரே" இவ்வுலகத்தை யெல்லாங் கர்ப்பத்

தில் வைத்து ரக்ஷிக்கும் ரக்ஷக கர்த்தாவாகிய மகா விஷ்ணுவானவர் அம்மானுகயிருந்தும், காலகேய நிவாதகவசரைச் சம்மரித்து இந்திரனுக்குப் பட்டங்கட்டி தானுந் தெய்வலோகச் சேனுபதியாயரசுபுரிந்து சிவசத்தியுடன் சோமசுந்தரக் கடவுளைக் காக்ஷியாகக் கண்டு தாக்ஷியில்லா அருட்கொண்டு பாசுபதம் பெற்று திசைகளில் வசையற்ற இசைபெற்ற விஜயனைச் சிறந்த தந்தையாகப் பெற்றிருந்தும், முப்பத்து முக்கோடி தேவர்களுக்கும் நாயகனுகி, காமதேனு கற்பகத்தரு முதலிய நிதிகளைப் படைத்து, இந்திராணி சமேத இந்திர விமான வைபோகங்களைப் பெற்ற தேவேந்திரன் பாட்டனுராகிக் கிடைத்தும், தருமமே ஜெயம், சத்தியமே நித்திய மென்னுந் தருமராஜனும், திரிபுவன தீரனுகிய வீமசேனனும் பெரிய தந்தையாக யிருந்தும், நகுல சகாதேவர்கள் சிறிய தந்தையராகியும், வெற்றிவேல் தாங்கிய ஒருகோடி ராஜகுமாரர்கள் உயிர்த்தோழமையாகவந்து பிரியாவிடையாய் யிருந்தும், இளஞ்சிங்கக் கன்றுகிய அபிமன்னுவானவன் இந்த ரணக்களத்தில் மடியலாமா? இது ஞாயமோ? ஐயோ! (தாந்தாமுன் செய்தவினை தாமேயனுபவிப்பார்) என்னும் வாக்கியப்படிக்கு எத்தனைபே ரிருந்தாலும், அவரவருடைய கர்மாநுபவத்தை அவரவரே அனுபவிக்க வேண்டுமல்லது, இதை தடுப்பதற்கு எவர்களாலுமில்லை. மேலும், ஒருவர்க்கொருவர் உயிர்த்துணை யென்பது ஒருக்காலுமில்லை. ஆகையால், ஆரிருந்தாலும் ஆவதொன்றில்லை, ஊழ்வினையே பெரிதென்பது கருத்து. இப்பால் புத்திரனை அபிமன்னன் பூமியில் விழுந்ததைப் பார்த்த அக்குருக்ஷேத்திரத்திலிருந்த பற்பல ராஜாக்களுஞ் சேனைகளும் கண்ணீர்விட்டழுது, ஐயையோ! அனியாயமே! யாவராலுந் துதிக்கும்படியாகிய பிர்மகுலத்திற் பிறந்து விற்குருவாகி மேலாகிய மறுமறை தெரிந்து மேன்மையான புத்தியையுடைத்தாயிருக்கின்ற புகழ்பெற்ற துரோணுச்சாரியும், மிகு கொடையாளனுகிய கர்னனும், அநேகங்கோடி யேமத்தேராகிய சேமத்தேரேறிய வீரர்களும், பூலோகத்திற் ஏற்படுத்தி வைத்த புண்ய முதலிய நீதிமுறை தப்பி அறியாத ஒரு சிறுவனுடைய உயிரை மாய்த்தார்களே? ஐயோ! இவர்கள் பழிக்கொலைக்கஞ்சாத பாவிகள் இப்போதுதான் அவனியாளும் அரசர்க்குரிய குளிர்ந்த முகமும், கோணுத வார்த்தையும், சத்தியமும், தருமமும், கிருபையும், பெருமையும், செங்கோலும், மநுநீதியும் கெட்டுப்போய்விட்டன. இனிமேல் நாம் இவ்விடத்திலிருந்து வாழ்வதிலுங் காடேகதியாய் செல்லுவது நன்மை. அல்லது, இறப்பது மேன்மை என்று ஏங்கி யுருகி விசனப்பட்டு பின்னுஞ் சொல்லுகின்றுர்கள்.

"சேடன்முடி நெளியவரு செம்பொற் றேரழிவதோ வந்தோ வந்தோ, கேடகவாளணிவலயக் கிளர்புயத்தோ ளறுவதோ வந்தோ வந்தோ, கூடகவெங் கதையொன்றுற் சிந்துபதி கொல்வதோ வந்தோ வந்தோ, வாடமரி லருகொருவர் வாராம விருப்பதோ வந்தோ வந்தோ, கன்னனையுந் தோழித்தான் கந்தனிலும் வலியனே யந்தோ வந்தோ, மன்னவரை வருமிருக்க மைந்தனுயி ரழிவதே யந்தோ வந்தோ, பொன்னுலகோர் வியந்துருகிப் புந்தியினுன் மலர்ப்பொழிந்தா ரந்தோ வந்தோ, வன்னளெடுந் துவசனிவற்காயுமிகக் கொடுத்திதனே யந்தோ வந்தோ, சரமறுத்தான் வில்லறுத்தான் தேரறுத்தான் கொடியறுத்தான் சமரபூமி, யுரமறுத்தான் முதற்பொருத வுதயதின கரன்மைந்தனுடன்றுசீறி, கரமறுத்தா னடுப்பொரு கார்முகத்தின் குரு விசயன் காளைதன்னை, சிரமறுத்தான் பின்பொருதசயத்திரத னிவன்வீரஞ் செப்பலாமோ"

ஆ! ஆ! ஆதிசேடனுடைய பணமகுடம் நெட்நெட மடமடவென்று ஒடியும்படிக்கு செலுத்திக்கொண்டுவந்த அபிமன்னனுடைய சேமத்தேரழிந்ததன்றி, அவனுடைய புஜபலபராக்கிரம முதலியவைகளும் ஒரு சிந்துபதியாலழியத்தக்கதோ? ஐயையோ! சர்வ சம்ஹார கால உருத்திர மூர்த்தியைப்போல் அமராடி சத்துருக்களை அழித்துவரும் பிள்ளைக்கு ஒருவருதவியுமல்லாமற் போச்சுதே; கந்தஸ்வாமியைப் பார்க்கிலும் வலிமையுடைய அபிமன்னுவானவன், அங்கதேசாதிபனுகிய கர்னனை அனேகந் தடவைத் தேரழித்தானே; ஈரேழுலகத்தையு மெரித்து, ஏழு கடலையும் வளறச் செய்து, ஏழு மேகத்தையுங் கருக்கி இசைபெறுஞ் சாமர்த்தியராகிய தந்தைமா ரைந்துபேர் பொன்மலைபோ லிருந்தும், அருமையான மைந்தனுயி ரழியத்தக்கதோ? ஆ! ஆ! என்ன பாவம்? இந்த மகாசூரனுடைய வீரத்தைப் பார்த்திருந்த தேவர்க ளெல்லாருந் தாளாமல் மனமுருகி, அன்புடன் புஷ்பமாரி பொழிந்தார்களே; ஐயையோ! இளமைப் பருவமும், சுந்தர உருவமும், இரு கண்களில்

மறமும், மின்னென ஒளிருநிறமும், எதிர்த்தோரைக் கொல்லுந் திறமும், ஈகையாகிய ஐயமும், ஐயந்திரியில்லாமற் கசடறக் கற்ற கல்வியும், விசனமில்லாமற் பெற்ற செல்வமும் இன்னும் வேண்டிய நன்மைகளை எல்லாம் இவனுக்குப் படைத்தருளிய அன்னக்கொடியோனாகிய பிரமதேவன், அதிர்ஷ்டமெழுதும்போது அதிகமாக ஆயுளெழுத மறந்தானோ? ஆ பாவி! அடாடா!! எத்தனை பேர் எத்தனை முகத்திலிருந்து, எத்தனைவிதமாகிய எத்தனைகோடி பாணந் தொடுத்தாலும், அத்தனையும் பொறுத்து, அத்தனையும் அறுத்து, அத்தனைபேரையும் அழித்தானே; ஐயையோ! எத்தனைகோடி வில்லை முறித்தான்? எத்தனைவிதமாகிய கொடியை வெட்டினான்? எத்தனைகோடி குடைகளைத் தள்ளினான்? எத்தனையாயிரந் தேர்களை அழித்தான்? ஆ தெய்வமே! இந்த குருக்ஷேத்திரமானது, பதினெட்டக்ரோணிப் படைகளைச் சுமக்கமாட்டாமற் பாரங்கொண்டிருந்த பளுவைத் தீர்த்தானே; சேனாபதியாகிய துரோணாசாரியரை அடித்துத் துரத்தியது ஒருதரமா? அம்மம்மா! காற்றிலோடு நூலோட்டம்போற் பலதரமுங் காலோட்டமாக ஓடவிட்டடித்தானே; அநேகம் ராஜகுமாரர்களுடன் போராடிப் பிள்ளைகளென்கிற பேரில்லாமற் றலைகளை யறுத்துத்தள்ளிய ஆரபார் அகோர தீர வீரப்பிரதாப சூரனாகிய வில்விஜயன் குமாரனென்னும் இவ் வபிமன்னனுக்குத் திரிபுர சம்ஹாரியாகிய சிவனொருவனை ஒப்புச் சொன்னாற் சொல்லாமே யொழிய, ஆயுதம் பிடித்து யுத்தஞ் செய்து வெற்றிபெற்று அவனியையாண்ட அரசர்களில் இந்த அபிமன்னுராசனுக் கொப்பாகிய பேர்கள் எவர்களுமில்லையே: தெய்வமே! ஒருவருக் கொருவர் ஈடாக இரண்டுபேர் முனைந்து நின்று யுத்தஞ்செய்வது மறுமுறைமை. அதை யநுசரித்து நடப்பது உலகியற்கை. அப்படியிருக்க, அதைவிட்டு நான்கு புறத்திலுங் கோடா கோடி ராஜர்கள் வளைந்துகொண்டு போராடி ஒருவனைக் கொன்றார்களே: ஐயையோ!! இவனேறிய தேர் அழிந்தவுடன் இன்னொரு தேரிருக்குமாகில், ஒருக்காலும் இந்தப் பிள்ளை இறக்கமாட்டானே: இவனுக்குச் சேமத்தேரொன்றில்லாத குறையல்லவா இந்தச் சிறுவன் ரணக்களத்தில் இறந்ததற்குக் காரணமென்று துஷ்ட துஷ்டர்ளாகிய நான்குபேர் தவிர, மற்ற அங்குள்ளபேர்கள் எல்லாரும் அழுதிரங்கிப் பட்டபாட்டை என்னென்று சொல்லுவேன்? ஐயா ஜென்மேஜெய மகாராஜனே! அதை நான் வாக்கினாற் சொல்ல என் தரமன்றென்று வைசம்பாயனர் வருந்திச் சொன்னார்.

## தருமராஜன் புலம்பல்

இப்பால் அஷ்ட குலா சலங்களுடன் ஜெயஸ்தம்பம் நாட்டிய புஜபல பராக்கிரமத்தையுடைய அர்ச்சுன குமாரன் பட்டானென்று கேட்டலும், முன்னே முதுகிட்டோடிய வீரர்களெல்லாரும் பறந்தோடி வந்து பார்த்து, இவன் பொருதிப் பொருந்திய பேரையும், தங்கள் தேகத்தை வருந்திய சீரையும் நினைத்து மனம்புண்ணாகி, கண்ணுக்குக் கலத்தண்ணீர் விட்டழுதார்கள். துரியோதனனுந் தம்பிமார் முதலிய வெல்லோரும் அபிமன்னன் இறந்தானென்று கேட்டவுடனே, ஜெயித்தோம் என்று சிந்தை களித்து, யமனுடைய கைக்குள் ளடங்கியிருந்த உயிர் வந்து மீண்டும் பொருந்தியினுழைந்ததைப்போற் பூரித்துந் தேகம் பாரித்து, தங்கள் பிள்ளைகளாகிய இலக்கண குமாரன் துச்சனி முதலாகிய பேர்களிறந்த புத்ரசோகத்தையு மறந்து, அபிமன்னனென்னும் ஒரு பிள்ளை யிறந்தது தங்களுக்குக் கோடிபிள்ளைகள் பிறந்த சந்தோஷம்போற் கொண்டாடிச் சிறந்து, அப்பா! இனி ஊர்சென்று தலைவைத்துப் படுத்து நித்திரை பண்ணலாமே என்று முகமலர்ந்து, வேதைதீர்ந்து வாதை யடங்கிற்றென் றிருந்தார்கள். இவ்விடத்தில் இவர்கள் இப்படி மகிழ்ந்திருக்க, தாளாண்மை கொண்டு முனைந்து களைந்து, சக்கரயூகம் பத்மயூகம் முதலிய யாவற்றையும் வளைந்து பிளந்து, தானொருவனாக நின்று சேனைக்கடலைக் கலக்கித் திரும்பிய மகரமச்சம்போன்ற பிள்ளையை; எப்போதும் இடைவிடாமற் கண்டு மனங்களித்திருக்குந் தந்தையருக் கெதிரில் வரவொட்டாமற் சயிந்தவன் மறிக்க, மற்ற வீராதிவீர வேந்தர்கள் எல்லாருந் தடுத்துப் பிரிக்க, ஓடுகிறான் ஓடுகிறான் என்று அவமானப்படுத்தி மீண்டும் பத்மயூகம் வரையில் மடக்கிக்கொண்டுபோய்ப் போர்புரிந்தனரன்றோ? அப்படி போர்புரிந்த மன்னவர் எவரையும் விண்ணுலகேற்றித் தேவர் முதலிய யாவரும் புகழ்ந்து கொண்டாடும்படியாய்ப் பேர்பெற்ற அபிமன்னன், நாம் இவ்விடத்தில் வெட்டிமாட்டி யனுப்பிவைத்த வீரர்கள் வீரசொர்க்கம் போய்ச் சேர்ந்தார்க

ளோ? இல்லையோ? நாம்போய் ருசுவிற் பார்த்து வருவோ மென்று ஆய்ப்போனவனைப் போல் மாய்ந்து விண்ணுல கேறினதை, வேள்வியிலும், கேள்வியிலும், வின்மையிலும், நன்மையிலும், தன்மையிலும், உண்மையிலும், திண்மையிலும், அருமையிலும், பெருமையிலும், வீரத்திலும், தீரத்திலுஞ் சிறந்து மிகுந்து மன்னுயிர்களுக் கெல்லாம் உறவாகிய உத்தமகுணப் புத்திமானாகிய தர்ம புத்திர மகாராஜன் காதில் நாராசஞ் சொருகியதைப்போல் கேட்டு, அடா செல்வனே! என்று சோர்ந்து, வயிற்றி லறைந்துகொண்டு வாடிப் புலம்புவதாயினர். "பிறந்ததினம் முதலாகப் பெற்றெடுத்த விடலையினும் பீடுந் தேகஞ், சிறந்தனை யென்றுனைக் கொண்டே தெவ்வரைவென் றுலகாளச் சிந்தித்தேனே, மறந்தனையோ வெங்களையு மாலையினால் வனைப்புண்டு மருவார்போரு, லிறந்தனையோ என் கண்ணே வென்னுயிரே யபிமாவின் றென்செய்தாயே. தேனிருக்கு நறுமலர்த்தார்ச் சிலைவிசயனிருக்கவரைத் திண்டோள் வீமன், றானிருக்க மாநகுல சகாதேவர் தாமிருக்கத் தமராய் வந்து, வானிருக்கின் முடிவான மரகதமா மலையிருக்க வாழ்வானெண்ணி, யானிருக்க வினையறியா விளஞ்சிங்க மிறப்பதே யென்னே யென்னே. நின்றனையே யெனைக் காத்து நீயென் றியானுரைப்ப நெடுந்தேரூர்ந்து, சென்றனையே யிமைப்பொழுதிற் கிரியையு முடைத்தனையே தெவ்வரோட, வென்றனையே சுயோதனன்றன் மகவுடனே மகவனைத்தும் விடங்காலம்பிற்,கொன்றனையே நின்னுண்மை மீண்டுரைக்க கூசினையோ குமரரேறே, உனக்குதவி யொருவரற வொருதனி நின் றமருடற்றி யொழிந்தமாற்றந், தனக்கு நிகர் தானான தனஞ்சயனுங் கேட்கினுயிர் தரிக்குமோதா, னெனக்கவனி தரலிதித்தனையோ மகனே மற்றினிமே லிந்தச், சனக்குவைகொள் தரணிமிசை தனக்குவை கொண்டிருப்பதென்னோ தமியனேனே.

அடா என் செல்வமே! நீ பிறந்த நாள் முதற்கொண்டு நமது குலத்துக் குரித்தாகப் பிறந்திருந்த பிள்ளைகளைப் பார்க்கிலும், உன் பெருமையும், தகுந்த அழகும், மிகுந்த கல்வியும், வளர்ந்த வீரமு முடைத்தாய், நாளுக்கு நாள் அபிவிர்த்தியாய் உலகமதிக்க, நமது உரியார் துதிக்க ஓங்கி வருகின்ற உன்னைக் கண்டு கண்ணேறுபடப் போகுதென்று உள்ளங் களித்து, (கல்லெல்லா மாணிக்கக் கல்லாமோ?) என்பதுபோல், நமது பற்பல பிள்ளைகளிலும், இந்த ஒரு பிள்ளையினால்தான் நாம் சவுக்கியப்படவேண்டு மென்றும், இவனைக்கொண்டு சத்துருக்களை வென்று உலகாளவேண்டு மென்றும் எண்ணங்கொண்டிருந்தேனே; என்னையனே! என் எண்ணத்தின் வாயில் மண்ணைப் போட்டு எங்களை மறந்தனையோ? அப்பா! பத்மயூகத்தைச் செயம் செய்துவந்த உன்னை ஒரு கணப்பொழுதில் வளைத்துக்கொண்டுபோன சத்துருக்களுடனே சமர் புரிந்து இறந்து விட்டாயோ? என்ன மோசஞ் செய்தாய் என் கண்ணே! என்னுயிரே! அபிமன்னு வென்னும் அரசே! ஆ! ஆ! தெய்வமே! தேனும் வண்டுஞ் செறிந்திருக்குந் திவ்விய மலர்மாலை யணிந்த உன்றந்தையாகிய சிலைவிஜயனிருக்க, மலைபோன்றத் திண்டோளினையுடைய வீமசேன னிருக்க, பெருமை பொருந்திய நகுல சகாதேவர்களிருக்க, இருக்குவேதத்தின் முடியில் அடிவைத்திருக்கும் பசுமைதங்கிய கதிர்களைவீசும் மரகத மாமலைபோன்ற மாயன் கோபால குலத்துதித்த ஆயன், நமக்கு பந்துவாகவந்தமைந்திருக்க, உன்னாலே வாழ்வுபெற்று முன்னுக்கு வரலாமென்னும் பேராசைகொண்ட நானிருக்க, முதியமர மிருக்க இளமர முறிந்ததைப்போல் விளைவது இன்னதென்றறியாத என்னிளஞ்சிங்கம் இறப்பதோ? இதென்ன விபரீதம்? அறந்தப்பிப்போச்சோ? அநியாய மிகவாச்சோ? ஈதென்ன காலம்? ஈசனே? அடா குழந்தாய்! உன்றந்தை செய்த உத்தரவின்படிக்கு என்னைக் காத்து நின்றனையே; நீ போய் வெற்றிக்கொள்ளென்று நானுரைக்க, என் வார்த்தையைத் தள்ளாமல் நெடிய தேரூர்ந்து சென்றனையே; இமைகொட்டுமுன் போய்ச் சூசிகாயூகம், சக்கரயூகம், பத்மயூகம் இவைகளை யெல்லாம் உடைத்துச் சத்துருக்கள் வாடியோட வென்றனையே; துரியோதனனுடைய பிள்ளைகளுடன் ராஜபுத்திரர்களை யெல்லாம் விஷாக்கினி பாணத்தாற் கொன்றனையே; துரோணாச்சாரி, கர்னன் இவர்கள் முதலாகிய பேர்களை யெல்லாம் குன்றச் செய்தனையே; இப்பேர்ப்பட்ட சுத்தவீரன் தன்னுடைய ஜெயத்தை தானே சொல்லிக் கொள்ளக் கூடாதென்னுந் தர்மத்தைக் கருதி, மர்மத்தை வெளிவிடாத உன்னுண்மையைத் திருப்பிவந்து உள்ளங் களிந்து எனக்குச் சொல்லக் கூசினையோ? தங்கமாகிய குமார சிங்

கமே! உனக்குதவியாக ஒருவருதவாமல் நீயே தனிமையாய் நின்று அமர்புரிந் திறந்த வசனத்தைத் தனக்குத் தானே நிகராகிய தனஞ்செயனும் கேட்கத் துணிவானோ? கேட்டுஞ் சகிப்பானோ? உயிர்பொறுத் திருப்பானோ? என்னுள்ளக்கனியே நான் போய் யாவரையும் முடித்து இவ்வகண்ட ராச்சியத்தை யெல்லாம் உமக்குப் பட்டங் கட்டுகிறேனையா வென்று எனக்கு உறுதி வார்த்தையைச் சொல்லிப் போன அருமை மகனே! எனக்கு அரசாக்ஷி கொடுக்கிறேனென்று சொன்னது இவ்வளவு தானோ? இனி யிக்கோடி சேனங்களோடுங் கூடிய இவ்வுலகைச் சகல சம்பத்தோடு மாள்வதில் தமியேனுக் கென்ன சந்தோஷம்? ஓ என்னிரு கண்மணியே! என்று ஏங்கி மயங்கி, மனக்கவலையுடன் சுவாசமடங்கி, அழகிய தேரின்பேரில் மன்னர்க்கு மன்னனாகிய தரும ராஜன் தன்னை மறந்து வீழ்ந்து விட்டார்.

### வீமன் நகுலன் சகாதேவன் இவர்கள் புலம்பல்

இவ்வாறே வீமசேனனும், நகுலனும், சகாதேவனும் பூமியில் வீழ்ந்து புரண்டு பதறி, விண்ணுலகமும் விம்மும்படியாய்க் கதறிப் புலம்புவதானார்கள். "சங்கலா ரிடைவளைத்த சக்கரத்தை யுடைப்பதற்குத் தமியேனெய்தி, யங்குலா வருமிரதத் தரசரையுந் தொலைத் துன்னையடுப்பான் வந்தேன், பங்கெலா மரகதமாம் பவளநிறப் பொருப்புதவு பைம்பொற் கொன்றைத், தொங்கலாற் கோறுவித்த சூழ்ச்சியையின் றறிந்திலனே தோன்றலே நான், மின்னும விடித்ததென வீழ்த்த பொலந் தொடையாலும் விடையோ னீந்த, பொன்னார்வெங் கதையாலு மல்லதபி மன்யம ரிற் றொரவல்லார் யார், தன்னுண்மை நிலை நிறுத்திச் சங்கமுழக்கிய வீர சிங்கசாம, வென்னுனை யிறந்து பட வின்னமுநா னிவ்வுயிர் கொண்டிருக்கின்றேனே. எடுத்தபடை யனைத்தினுக்கு மெதிரில்லையெனக்கலைக ளெல்லாம் உன்னை, யடுத்ததுகண் டையா நின் னுருயிர்க்குக் கரைந்துகரைந் தையுற்றேன்யான், விடுத்தபெருந் திருத்தாதை விழிகளிப்பப் பகைவென்று மீளாது என்னைக், கெடுத்தனையே பிழைத்தனையென் றினியொருவர் வந்துரைக்கக் கேளேன்கொல்லோ அப்பா என் தோன்றலே! உன்பெரிய தந்தையின் வசனத்தைக் கேட்டு நீ போர்செய்யப் புறப்பட்டு யூகத்தை யுடைத்துச் செல்லும்போது, இடைக்கிடையனைத்துக்கொண்டு சக்ரயூகத்தை யுடைத்து உனக்குச் சகாயஞ் செய்வதற்காக நான்வந்து அங்கு உலாவிக்கொண் டிருந்ததோ மன்னரையெல்லாம் போக்கி, உனக்குத் துணையாய் நெருங்கும்படி வந்தேன். அப்போது இடப்பாகத்தில் மரகதக்கொடி படர்ந்திருக்கும் பவளமலையெனுஞ் சிவபிரானருளிய வரத்தாற் பெற்ற மாலையாற் சிந்து தேசாதிபன் உரத்தாற் செய்த சூட்சி இன்னதென் றறியாமல் மயங்கி யிருந்து போர்புரிந்தேனே: மதியற்றேனே. (மின்னுமை விடித்தாற்போல் விடையூர்தியாகிய சிவபிரானளித்த மாலையா லுனக்குத் துணைவந்த பிதாவையு முன்னையுஞ் சேரவொட்டாமல் மோசஞ்செய்து பத்மயூகத்தினடுவிற் பதுங்கியிருந்து கதையினால் வென்றேன் என்று போர்கொண்ட தல்லது, உன்னெதிரில் நீதியின்படி நின்று போர்செய்து வெல்பவருமுண்டோ? ஓ தரியலரேறே! சூசிகாயூகம், சக்கரயூகமென்னு மிவைகளை இமைக்குமு னுடைத்துச் சென்று அதிரதா முதலிய வீராதிவீரர்களையெல்லா மதமாக்கி, செயசங்கத்தினை முழக்கிய வீரசிங்கம்போன்ற நீ பட்டனையென்று கேட்டும்; இன்னு மென்னுயிரை வைத்திருக்கின்றேனே) ஐயையோ தெய்வமே! ஓ என்னிளஞ்சிங்கமே! என்னுடைய குலக்கொழுந்தாகிய தோன்றலே! நீ எடுத்துத் தொடுக்கும் ஆயுதங்க ளெல்லாவற்றிற்கும் உனக்கொருவ ரெதிரில்லையென்று அந்தந்த ஆயுதங்களுக்குரிய சாஸ்திரங்களெல்லாம் உன்னையடுத்து, எனக்கென்னவேலை? எனக்கென்னவேலை? சொல்லுவீரென்று விட்டுப் பிரியாதிருக்கும் விதத்தைக்கண்ட யான், ஐயனே! உன்னுயிர் போய்விட்டதென்று கேட்டுங் கரைந்து கரைந்து சந்தேகங்கொண்டேன். நான்கொண்ட சந்தேகம் பொய்யோ? அல்லது மெய்யோ? நல்லது உன்பெரிய தந்தையானவர் யுத்தஞ்செய்ய உன்னை விடுத்திருக்க, நீபோய் பகைவரைவென்று பலவித ஜெயமுங்கொண்ட பிள்ளையாகிய நீ, அவருடைய கண்கள்களிக்க, திரும்பிவராமற்போன காரியமென்ன? இருந்தால் வருவையே: என் மகனே! நீ இறந்துதான் போனையோ? இறந்தானென்று கேட்கப்பெற்ற என் காதானது, அபிமன்னன் மறுபடியும் பிழைத்தானென்று இன்னொருவர் வந்து சொல்லக்கேட்கும் பாக்கியம் பெறுதோ? என்னிறையே இறையே என்று வீமசேனனும் நகுல சகாதேவரும் முறையிட் டழுதார்கள்.

ஓ மகாராஜனே! அப்போது அபிமன்னுடைய வீரமே வீரமென்று இருதிறப் படையினருஞ் சோர்ந்து பலபலவிதமாகப் பேசிக்கொண்டு பசிமுதலியதுந் தோணுமற் கண்ணீருகுத்து நின்ருர்கள். அந்த இரணக்களத்தில் வீழ்ந்துகிடந்த அபிமன்னுவின் புயமலையைக் கண்ட சூரியன் அஸ்தமானகிரி இத்தனை சமீபத்தில் வந்தது ஏதென்று திப்ரமை கொண்டு மனமருண்டு தடுமாறி, அபிமன்னனுடைய புயமென்று தேறித் தெரிந்துகொண்டு, தானு மவனைக்குறித்து வருந்தித் தன்திடமாகிய மேற்றிசையேறி அஸ்தமான கிரியைச்சார்ந்தான். பின்பு தருமராஜன் நமது மைந்தனிறப்பதற்கு சிந்துபதி காரணனுயிருந்தானென்று சிந்தைவருந்தி, சூரியனஸ்தங் கதனுகிய செயலும்பார்த்து, தன் சேனுசைனியங்களுடன் திரும்பினுர். பலவான்களாகிய பந்துமித்ராள் யாரும் மூன்ரும்பிறை முடித்த முக்கண்ணன் வரத்தாற் செயித்திரதனென்னும் யானையானது, பாண்டவரென்னுஞ் சிங்கங்களை செயித்ததல்லவா? தெய்வமே! தெய்வமே! காலந் தலைகீழாய் விட்டது. குப்பையுயர்ந்தது கோபுரந் தாழ்ந்தது; இனி நாம் என்ன செய்யலாம்? தெய்வச்செய லிப்படியிருந்ததென்று சிந்தை நொந்து, போர்க்களத்திற்கு வந்து உயிரை யொழித்துவிட்டுப் பிரேதமாகிய உடல் திரும்பிப்போகுந் தன்மையைப்போல், அபிமன்னனுகிய பிராணனை ரணக்களத்தில் உகுத்துவிட்டு வெறுங் கூடாகிய தேகத்துடன் தாங்கள் மருவும்படியாகிய பாடி வீடுபோய்ச் சேர்ந்தார்கள். இப்பால், வலம்புரி மாலையணிந்த துரியோதன மகாராஜனுனவன், மைத்துனனுகிய சயிந்தவனை எதிர்கொண்டு தழுவி முகத்துடன் முகம் வைத்து, இன்று உம்மாற் பிழைத்தோம். நீர் எங்களுக்குப் பிராணபிச்சை கொடுத்தீர். என்று சொல்லித் தன் பிள்ளைகள், தம்பிமார் பிள்ளைகள் முதலாகிய பதினுயிரம் ராஜபுத்திரர்கள் அபிமன்னனுல் இறந்துபோன துன்பத்தை எவ்வளவும் மனதில் வைக்காதவனுய், போர்மன்னனுகிய வாளபிம னிறந்துவிட்ட மகிழ்ச்சியினுற் புயங்கள் பூரித்து, விதரணயுடைய விற்குருவும், நன்னயமுள்ள கர்னனும், ஆமாம் என்னும் மாமனும், மற்றிதரமாகிய பேர்களுந் தன்னைச் சூழ்ந்துவர, அல்குஜா-புள்ளாங்குழல் முதலாகிய வாத்தியங்களுடன் மேல் நடக்கப் போகிற காரியங்க ளின்னதென்று யோசியாமல், அதி சீக்கிரமாகத் தன் பாசறை யரண்மனைக்குப் போய்ச் சேர்ந்தான்.

## வேதவியாச முனிவ ரெழுந்தருளிவந்து தருமராசனைத் தேற்றுதல்

இஃதிப்படி யிருக்க, தருமராஜனுந் தம்பிமார்களும் பாசறைக்குப் போய் பலவித வருத்தமுடையவர்களாய்ப் பரிதாபப்படும்போது, விராடராஜனும், துருபதேய ராஜனும், அவனுடைய குமாரராள் திஷ்டத்தும்மன் முதலாகிய பேர்களும், ஏனைய ராஜரும், சாத்தகியும், குந்தி போஜனுள் முதலிய பந்துவர்க்கத்தாரும், வெற்றிவீரப் படைஞர் முதலிய பேரும், சந்திரனைச் சூழ்ந்த தாரகாகணங்களைப்போல் தருமராஜனைச் சுற்றிக்கொண்டு, அவருடைய துயரத்தை அநேகவித பரிகாரத்தால் ஆற்றி அவரைத் தேற்றுவதானுர்கள். அப்படி தேற்றியும் அவரடைந்திருக்குஞ் சிந்தாகுலமானது சிறிதுஞ் சிதையாமல், ஐயோ! நாங்களொரு அநியாயமுஞ் செய்யவில்லையே: அதர்மம் விர்த்தியாகித் தருமங்குறையுமாகில், இனி இவ்வுலகத்தில் எந்த நெறிநிலை நிற்கும்? ஓ தெய்வமே! என்று முரசக்கொடியினை யுடைய உதிஷ்டிரர் நினைந்து நினைந்து இரங்கிக்கொண்டிருக்குங் காலையில், சிவந்த சடைமுடியும் - காவியுடையும் - கதிர் மறைக்குங் குடையும்-மரவுரியும்-தண்டுகமண்டலமும்-மிதியடியும்-விபூதிரேகையும் - முப்புரிநூலும்-ஒப்பிலாக் குண்டலங்களு முடையவராய், ஈரேழுலகும் புகழ்ந்தேற்றும் மாதவநேசராகிய ஸ்ரீ வேதவியாசர் வந்தார். அவரைக் கண்டவுடன் பொய்யில்லா மெய்யினையுடைய புண்ணியனும், வீமசேனன் முதலிய மற்றுள்ளோரும் எழுந்து எதிர்கொண்டு போய்ப் பணிந்து போற்றி, குற்றமற்ற ஆசனத்திலிருத்தி, அர்க்கியபாத்திய ஆசமன்னிய முதலிய உபசாரக் கடன்களெல்லாஞ் செய்து, விக்கிய விசனத்தால் அவருடைய பக்கத்தில் நின்ருர்கள். அடுத்துச் சூழ்ந்திருந்த அவ்வரசர்களுக்கு ஆசிபுகன்று, தருமராஜனைக் கிருபையுட னேக்கி, ஓ தருமநந்தனு! என்ன ஒருவிதமாயிருக்கிறீர்; உமது மனதில் விளைந்த துன்பமென்னவென்று வியாசர்கேட்க, உதிஷ்டிரர் சொல்லுகின்ருர். ஓ என் குலதெய்வமே! என்னுயிராகிய அபிமன்னன் உயிர் சோர்ந்தானென்றுசொல்லி, அச்சொல் முடியுமுன்னமே சோர்வுற்றவராய் பூமியில் வீழ்ந்தார். உடனே சமீபத்திலிருந்தவர்கள் எடுத்தணைத்து உபுச

ரித்து சாந்தி செய்து சோபந் தீர்த்தார்கள். மறுபடியும் அவர்படுங் கவலையே வேதவியாசர் பார்த்து, ஐயா தருமநந்தனு! எல்லாம் பூர்வவிதியின் செயலின் புணர்ப்பின்படிக்கு நடப்பதல்லாமல், அஃதின்றியா ரிறக்கத்தக்கவர்கள்? யார் கொல்லத்தக்கவர்கள்? ஓ எவர்களாலுந் தடுத்தற்கரிய புலன்களை நல்லறிவின் வழியில் நடத்திக் கொண்டிருக்குந் தருமபூபதியே! உமக்குத் தெரியாத காரியமொன்றுண்டோ? ஆயினுஞ் சொல்லுகிறேன் கேளும்; சிருஷ்டி கர்த்தாவாகிய முதற் கடவுளினால் ஏற்படுத்திய ஆத்துமகோடிகள் முழுமைக்கும் அமைத்திருக்கும் ஆயுவென்னும் ஓர் கணக்கின்படி இருந்து, நல்வினை தீவினைப்பயனை யனுபவித்து இறக்கத் தக்கதல்லது! அந்த ஆயுள் முடிவதற்கு முன்னும்பின்னும் மாயுமென்று நினைக்கத்தக்கது முண்டோ? அப்படி கிடையாது. போர்முகத்திற் றீயைப்போற் காயும்படியாகிய அபிமன்னனென்னும் உமது புத்திரன் சகல வீரர்களையும் வென்று வீட்டி, தனது நலத்தையும் பலத்தையும் நிலைநாட்டி, வீராவேசக் கோபாக்கினியுடன் வீரலட்சுமியைப் புணர்ந்து வீரசொர்க்க மடைந்தான்.

இப்பேர்ப்பட்ட பேறு கடல் புடைசூழ்ந்த உலகின்கண் எவர்களும் பெறமாட்டார்கள். என் பேரனுகிய இறைவனே! பலபல யாகங்களைச் செய்தும், வெகுவித அருந்தவமிருந்தும், அநேகங் கோதானம் பூதான முதலிய சோடச மகாதானங்கள் கொடுத்தும், யானெனதென்னுஞ் செருக்கறுத்தும், தருமந் தப்பாமற் சத்தியனெறியி லிருந்தும், நெடுங்கால நிலைத்திழிந்த மகானுக்களாலும் பெறுதற் கருமையாகிய நற்கதியை உமது சிறுவனுனவன் வெகு சுளுவிற்பெற்றுன். ஆதலால், அநேக யுகங்களழிந்தாலும் உங்கள் புத்திரனடைந்த உயர்ந்தகதிக்குழிவில்லை. உமக்கு இதைவிட வேறு நன்மையுமுண்டோ? ஓ மலையைப் புயமாகவுடைய மன்னனே! மேலும், உத்தமக்ஷத்திரிய குலத்திற் பிறந்தவர்களுக்கு உரித்தாகிய குணம் யாதெனில், இறந்தவர்களுக்கு மனம் வருந்தாமல், போர்முகத்தில் வாட்டங்கொள்ளாமல் புறங்காட்டாமல், சத்துருவின்பேரிற் பிறந்தகோபந் தளராமல், உடல்வருத்தம் பாராமல், உயிராசை வையாமலிருக்கவேண்டியது. இதுதான் குலத்துக்குரிமையென்று இராஜர்களுக் கேற்படுத்திய ராஜநீதி. இவைகளையெல்லா முணர்ந்த நீரும் இவ்வாறு சோபமுறுவது நியாயமா? என்று வேதவியாசர் சொல்ல, அதனுற் சோபமென்னும் அக்கினி சிறிது அவிந்து, சகல நலத்துக்கு முரித்தாகிய தருமராஜனுனவர் சொல்லுகிறுர்: ஓ வேதமுதல்வனே! பதினுன்கு லோகத்தை யாண்டவர்களும், திரிலோகத்தை யாண்டவர்களும், பூலோகத்தை யாண்டவர்களும், யாகாதிவிரதங்களைச் செய்தபேர்களும், அரசாக்ஷியாகிய மேலான செல்வத்தைப் பெற்றவர்களும், சாதாரணமான மானிடரைப் போல் மடிந்துபோனுர்களே: ஐயா! அப்பேர்பட்ட புண்ணியவான்கள் தங்களுயிரை விர்த்தி பண்ணிக்கொண்டும், ஊழ்வினையானது தங்களைத் தொடராமற் பண்ணிக்கொண்டும், நீடூழி யிருக்கும்படியாய்ச் செய்துகொள்ளலாமே: அவர்களுக்கு அது ஒரு அருமையல்லவே; அவர்களேன் அப்படி செய்துகொள்ளவில்லை? அவர்களெண்ணிய எண்ணம் இன்னதென்று எனக்குக் கட்டளையிட்டருளும் எந்தையேயென்று தருமநந்தனன் கேட்க, வேதமுனிவராகிய வியாசர் சொல்லுகின்றுர்.

### உதிஷ்டிரருக்கு வேதவியாசர் மிர்த்தியு தேவதையின் வரலாறுரைத்தல்

கேளும் தருமநந்தனு! கருங்கடற்சூழ்ந்த உலகமெல்லாம் ஒரு கவிகை நீழலிலாண்ட மநுமாந்தாதா முதலிய பேர்களினுலும் மாற்றுதற்கரிதாகிய மிருத்துவென்று ஒரு மாயையுண்டு. அதைக்கடக்க ஹரிபிர்மாதிகளாலும் ஆகாதென்றுல், இவர்களா லாகத்தக்கதோ? ஆகையால், மாயும்படியாகிய காரணத்தைக் குறித்து நாெனுரு கதை சொல்லுகிறேன். உம்முடைய பூரண நல்லறிவிற் பொருந்தக் கேளுமென்று முக்குற்றங் களைந்த மேலோனுகிய வேதவியாசர் சொல்லத் தொடங்கினுர். ஓ தர்மமே ஜெயமென்னும் தர்மநந்தனனே! மேகம்போன்ற கூந்தலும், பவளம்போன்ற வாயிதழும், வெண்டாமரை போன்ற மேனியும், செந்தாமரை போன்ற சீரடியுமுடைய வெள்ளைக் கலைமாதை, வேதரசம் பெருகிய தனது நாவிற் சுமந்த வேதரமென்னுந் தூயோனுனவர், கடங்கொண்ட அஷ்டகஜங்கள் தாங்குங் காசினியைப் படைத்து, இவ்வுலகில் மருவும்படியாகிய சராசரங்கள் யாவையும் முறைப்படி சிருஷ்டித்தருளினுர். ஆத்மகோடிகள் எல்லாம் நாள்தோறும் மிகுந்து உலகெல்லாம் நெருங்கி சாவில்லாம லிருந்தபோது, துவண்டு வளைந்து ஒசிந்த இடையினையுடைய

பூமிதேவியார் சுமக்கமாட்டாமல் வருத்த மடைந்து, இதென்ன காரணமென்று நிதானித்து, எப்பேர்ப்பட்ட துயரங்களையு மாற்றும் பாதங்களையுடைய பிர்மாவை யடுத்து, சுமர்ப்பவர்க்குத் தலையெரிச்சல் தோன்றுமல் லது சுமையேற்றி வைப்பவர்களுக்குத் தெரியுமோ? நிறைந்த ஆத்மகோடிகளைச் சுமப்பது சொற்பமல்லவே: அப்பனே! உன் கற்பனையால் மன்னுயிர்களைச் சிருஷ்டிக்குந் திறத்துடன்கூட லயமாகும்படியான காரியத்தையும் யோசிக்கவேண்டியது. இல்லாவிட்டால் நான் தாளமாட்டேனென்று பூமிதேவி சொல்ல, உற்பவக் கர்த்தாவாகிய பிரமன் அதனையோய்ந்து மன நந்தநேமாறி, எண்ணங்கொண்டு நிற்கும்போது, அதிக வாலோசனையா லுருகிய அவருடைய இந்திரியம் பூமியில் வீழ்ந்து, ஆலகால விஷம்போ லெரிந்தெழுந்து உயிர்களை யெல்லாம் கொல்லா நின்ற காலத்தில், ஆத்மகோடிகளெல்லாம் வருந்தி: ஓ பசுபதி! பசுபதி! என்று ஓலமிட்டார்கள். அப்போது மறைகளுணர்ந்த வேதநாயகியின் மணாளன் சூலம்போன்ற மூன்றுவிழியுடன் அன்னவாகனனுக் கெதிரிற்றுன்னி மன்னினர். அப்படி மன்னிய பூதநாதனை அயனுனவர் கண்டு, ஆசார உபசாரத்துடன் எதிரெழுந்து வந்து வணக்கமாக நிற்க, அப்பிர்ம்மாவைக் கிருபா முகத்தோடுஞ் சிவபெருமானேக்கிச் சொல்லுகின்றார்.

ஓ சதுர்முகனே! இவ்வுலகத்தையும் உயிரையும் படைத்த தந்தையாகிய நீயே அவற்றை யழிக்கத் தொடங்குவையாகில், பழி யாரைச்சேருமோ வதை நீ யோசித்துப்பார்த்தையா? இந்தப் பழிச்சொல் உனக்கு வேண்டாம், கொல்லுங் காரியத்தை நிறுத்திவிடு என்று கோமான்கூற, பிர்மாவானவர் கைலாசபதியை நோக்கி, தேவரீர் நிறுத்தென்று சொன்னல் நிறுத்திவிடுகிறேன். ஆனல் வருத்தம் பொறுமல் வருந்தி வாடி யழுது வந்த பூமிதேவியின் பாரம் எப்படி நீங்கும்! ஓ விடையேறிய சிவமே! இதற்கோர் உபாயஞ் சொல்லவேண்டுமென்று பிரமன் வேண்டிக் கேட்குங் காலையில், கங்காதரன் சொல்லுகிறார். ஓ பங்கேருகவாசனே ! உன்னிடத்திருந்து நிலத்திற் சிந்திய வீரியத்தை ஒரு பெண்ணுக ஏற்படுத்தி அழைத்து, அவளாற் சம்ஹாரகிர்த்தியம் நடக்கும்படி செய்வையாகில், அவள் நடத்துவாள். அது தகுதியுடையது என்று நிலைபெற்ற நிலவை முடித்த சடைமுடிப்பரன் சொல்ல, அந்த வாக்கியத்தின் சூட்சியைத் தெரிந்துகொண்ட மண்பொது தந்தையானவர் உயிர்ப்பிராணிகளைக் கொல்லா நின்ற வீரியக்கனலை ஒரு மாத்திரைப் போதிலழைத்துப் பெண்ணுருவாக்கி, அவ்வுருவாக்கிய லக்கினத்திற் கிசைந்தபடி மிருத்தியு தேவதை யென்னும் பேர்கொடுத்துப் பரமேஷ்டியின் பக்கத்தி லிருந்தினர். அந்தப் பெண்ணைச் சாம்பமூர்த்தி பார்த்து, ஓ பெண்பாவாய்! நீ இவ்வுலகத்திலிருக்கும் உயிர்களை வதைத்துச் சம்ஹாரத்தொழில் செய்துகொண் டிருவென்றுசொல்ல, அதைக்கேட்டு அவள் உடல் நடுங்கி, என் ஞண்டவனே! நான் அப்பேர்ப்பட்ட தொழிலில் இருக்கமாட்டேன். என்னைக்காத்து ரட்சிக்கவேண்டுங் கண்ணுதலே யென்று கைதொழுதாள். மறுபடியும் அவளுக்கு இனிமையான சிற்சில வசனங்களை இவர்களிருவரும் போதித்துப் போவென்றனுப்ப, அந்தப் பெண்ணனவள் அவர்களை நமஸ்கரித்து விடைபெற்றுக் கொண்டு பூலோகத்தில் வந்து உயிர்களை வதைப்பதை உன்னிப் பார்த்துக் குலைநடுக்குற்று, மனங்கூசி, சிருஷ்டி கர்த்தாவை குறித்து அருமையாகிய தவஞ் செய்தாள். குளிர்ச்சி பொருந்திய கமலாசனக் கடவுள் அந்தப் பெண்ணுக்கு பிரத்தியக்ஷமாகி, ஓ பெண்ணே வேண்டிய பெருமைகளெல்லாம் உனக்கு இன்பமா யுண்டாகுக. பூமியிற் பிறக்கும் உயிர்களைச் சம்ஹரிக்குந்தொழிலை உனக்குக்கொடுத்தேன்; ஆதலால், நீ சந்தோஷமாய் நடத்தென்று சொல்லிப்போட்டு, பிற்பாடு என்ன காரியமாய் என்னை நினைத்து இத்தனை நாள் தவமிழைத்தாய் சொல்லென்று கேட்டனர். அப்படி கேட்ட வாசம்பெற்ற தாமரை மலருளானை அவள் வணங்கிப் பணிந்து, எந்தையே! ஆசா பாசங்களி லாழ்ந்த ஆத்மகோடிகள் பதைபதைத்து உயிரிரக்கங் கொள்ளும்படியாய் நாசப்படுத்துந் தொழிலைச் செய்வதற்கு நான் துணியமாட்டேன்; நாதனே! பெற்றதா யேங்கியழ, பேணிய தந்தை புலம்பி விழ, புத்திராள் கதறியழ, மித்திராள் மெலிந்துதொழ, பெண்சாதி புரண்டு முறையிட, வளர்த்தோர்கள் வாடிக்குறைப்பட, கொண்டாரழ, கொடுத்தாரழ, சகோதராளழ, மற்றுமுள்ள பந்துஜெனங்கள் எல்லோரும் மார்பிலும் முகத்திலும் அறைந்துகொண்டு இறந்தவரைப்போற் பறந்தழத் தக்கதாய் என் கண்

கற்றீயெழ முனிந்து, என் மனத்தைக் கல்லாக்கி, எல்லா ருயிரும் வருந்த நாளுெருத்தியிருந்து உயிர்வதை செய்து என்னுயிர் வாழ்வதிலும், அக்கினிக்குழியில் விழுந்து என் ஜுவியை விடுப்பது மேலென்றுள்.

அப்படி சொல்லிய வல்லிக்கொடிபோன்ற மகளைநோக்கி, மகா சந்தோஷத்துடன் மகிழ்ந்த பிர்மாவானவர் ஒருவாக்கியஞ் சொல்லுகின்றூர். அம்மா! சம்ஹாரத் தொழில் மகா பாபமென்று சொல்லிய வுனக்கு யாதொரு சம்பந்தமுமில்லை. உடலிற் சம்பந்தப்பட்டு உலகிலிருக்கு முயிர்கள் அகலு மார்க்கத்தை புத்திமான்களாகிய பெரியோர்கள் கொண்டாடித் துதிக்கும்படியாகச் சில ஏற்பாடு செய்துவைத்திருக்கின்றேன். அதென்ன வென்றுல், ஆத்மகோடிகளுக்கு விதித்த ஆயுட் பிரமாணமென்பதும், தாயின் கர்ப்பத்தில் உடலெடுக்கும்போதே உற்பத்தியாக்கி வைத்த அநேகம் வியாதிகளும், தேகத்திற் குரித்தாய் அமைத்திருக்கின்றமையால், அதுகளின்பேரிற் பழி வைத்து, இன்ன வியாதியால் இன்ன காரணத்தால் இறந்தார்களென் றுலகத்தார் சொல்லிக் கொள்ளும்படியாகிய வழியை வழக்கமாயுண்டாக்கி வைத்திருக்கிறேன். இதனுல் உனக்கொரு தீமையுமில்லை. ஆனதால், இந்தச் சம்ஹாரத் தொழிலை நீ செய்யலாமென்று வேதனுர் சொல்ல, அன்று முதற்கொண்டு எல்லோருடைய பிடரியிலிருந்து அவரவர்களுக் கமைந்த ஆயுட் பிரமாணத்தைப் பார்த்துக்கொண்டு, தொடக்காகிய வியாதிகளென் னுஞ் சத்துருக்களைச் சமயம்பார்த்துக் காலைத் தட்டிவிடத்தக்க தூதராகக்கொண்டு வாயிற் போட்டுக்கொள்ளும் வல்லமையுடையவளாயிருக்கின்றுள். நீதிக்கு வழுவாக ஒருயிரிருக்க மற்றேருயிரை முடிக்கப்போகிறதில்லை. ஆளுக்குக் கொஞ்சம் ஆள்பார மென்பதுபோல், அந்த மிர்த்து தேவதையானவள், தன்பேரிற் பழி வைத்துக்கொள்ளாமல் இந்தத் தொழிலை நடத்தி வந்தாள். சிவந்த நிறம்பெற்ற அயனுனவர் சிருஷ்டித்தொழிலை நடத்தினுர். அதுமுதற் பூமிதேவியார் பூமிபாரந் தீர்ந்து சமனுக யிருக்கக் கண்டு சந்தோஷங்கொண்டாள். ஓ தருமசொரூபியே! எப்பேர்ப்பட்ட உயிர்களானுலுந் தோன்றி யழிவதே யன்றி, அழியாம லிருக்கும்படியாகிய தொன்றுமில்லை. அந்தரவாசிகளாகிய தேவர்களும், அளவிறந்த மனுமாந்தாதா முதலிய சக்ரவர்த்திகளும், உலகில் நிலைபெற்ற ஆத்மகோடிகளும் அழிந்துப்போவது ஞாயமே. ஆயுள் முடிந்தால் தாமரைவாசியாகிய சிருஷ்டி கர்த்தாவும், உடல்வீட்டு உயிர் மாய்வாரென்று உமக்குத் தெரியாதோ? குந்திக்கு முதற் புத்திரனுகிய கோவே! சொர்க்கமத்திய பாதாளத்தி லிருக்கும் யாவரிலும் ஆயுளை விர்த்தி பண்ணிக் கொண்டு நீடூழி நிலைகொண்டு வாழ்ந்தவர்களில்லையே. ஆகையால், நீரேன் துக்கசாகரத்தில் மூழ்கி வருந்துகின்றீர். தர்மநந்தனு! உமது சோபத்தை நீக்கிவிடும். உங்கள் புத்திரனுகிய அபிமன்னனுனவன், தன் சாரதியுடனே எவரும் விரும்பிய திரும்பாக் கதி புகுந்தான். நீர் சிந்தை நைய்ய வேண்டாம் என்று வேதவியாசர் தேற்ற, அந்த வேத வாக்கியங்களைப் பரிசுத்தவானுகிய பாண்டவர் முதல்வன் தேர்ந்து, வியாச முனிவரை நோக்கி, ஓ என்னகத்துணையே! ஆயுள் முடிவினுலும், வியாதி சம்பந்தத்தாலும் மிருத்து வென்பவள் முடிப்பா ளென்றும், இறந்தவரொருக்காலும் பிழைக்கமாட்டார்க ளென்றும், ஒருவரும் நீடித்திருப்பதில்லை யென்றுந், தேவரீர் திருவாய் மலர்ந்தீர். சுவாமி! இரத்தந் தோய்ந்த கூர்மை பொருந்திய வேலாயுதந் தாங்கிய சுவர்னடீவென்னும் ஒரு ராஜபுத்திரன் இறந்துபோய்ப் பிழைத்தானென்று மேலோர் பேசுகின்றூர்களே. அஃதென்னவென்று, இரு கரத்தையுங் குவித்து வணங்கிக் கேட்ட தர்மராஜனைப் பார்த்துத் திரிகாலமுந் தேர்ந்த வாதராயண முனிவர் சொல்லுகின்றூர்.

### உதிஷ்டிரருக்கு வேதவியாசர் சுவர்னடீவென்னு மிராஜகுமாரன் சரித்திர முரைத்தல்

அப்பனே! முன்னம் யான் சொன்ன மிர்த்யுதேவதை முடிவுகாலம் பார்த்திருந்து என் பேர் லொத்தவனைப் பிடித்தாலுந் தப்பமாட்டாது. அப்படி யிருக்க, ஆயுள் முடியாமல் அவமிர்த்துச் சாயை யென்னும் வேதையினுல் ஒருவேளை பிராணன் போமாகில், மணி மந்திரம் - ஔஷதம் - தவம்-பெரியோராசீர் வசனம்- நவக்கிரகசாந்தி-ஓமம்-தானம்-பாலக்கிரகதோஷ நிவாரணம் - குழையடித்தல் - நீரோதல் - நீறு பிடித்தல் - கிராம தேவதை பூசை - பலி இவை முதலிய காரியங்களெல்லாம் எந்தெந்த விதத்துக் கெப்படி செய்ய வேண்டுமோ அப்படி செய்து யாவத்தும்

ஈஸ்வரார்ப்பிதம் பண்ணினால், அந்த அவமிர்த்துச்சாயை நீங்கிப்பிழைப்பார்கள். இதற்காகவே ஆயுள்வேத முதலாகிய சாத்திரங்களும் மந்திரங்களும் ஏற்படுத்தி யிருக்கின்றன. மேலும், அந்தச் சுவர்னஷ்டிவினுடைய கதையைச் சொல்லுகின்றேன் கேளும். தர்ம சொரூபியாகிய தோன்றலே! திடதீர பராக்கிரமமும் இராஜமுறைமையுந் தர்மமுங் குறையாமல் அரசாக்ஷி செய்துவந்த சிஞ்சயனென்றொரு அரசன், தனது தர்மபுத்திர னில்லா வருத்தத்தால் மெத்தவும் நொந்து சித்தப்பிரமைகொண்டு, யாகம் - ஓமம்-ஜெபம்-கோவில் - குளம்-சாலை-சோலை-தண்ணீர்ப்பந்தல்-அன்னமே முதலிய தானம் - தர்மம் - பரோபகாரம் - விரதம் - நோன்பு - இவை முதலியவெல்லாஞ் செய்துவந்தான். அந்நாளையில், நாரதமுனிவர் வந்து இராஜனால் சகல உபசாரமும் பெற்று அவனுக்கு ஆசீர்வதித்து, உமாமகேசராகிய திகம்பரக் கடவுளைச் சிந்தையிலிருத்திச் சிவபூசை செய்து வாருங்கள் என்று உபதேசித்தருளினர். அந்தப்படிக்குச் சிவப்பிரதிஷ்டை செய்து அநேக நாள் வழிபட்டு வருநாளில், மறுபடி ஒரு நாள் தனக்கு அன்பராகிய வேதமுணர்ந்த நாரதர் வரக்கண்டு, அவருடைய சீர்பாதங்களைச் சிரத்தால் வணங்கி, என் காலமெல்லாந் தாங்கள் கூறிய நிலைமையில் நின்று கழித்தும் ஒரு காதலன் இன்னும் வரக்காணேமேயென்று கவலைகொண்டு பெருமூச்சு விட்டான். அப்படிப் பெருமூச்சு விட்டுப் பெருக்கத் தவிக்கு மன்னனை நோக்கி, மருதிடந்த செந்தாமரைப் பாதனுக்கு ஒப்பாகிய நாரதமுனிவர் சொல்லுகிறார்: ஓ சிஞ்சய மன்னவனே! உமக்கு எப்பேர்ப்பட்ட பிள்ளைவேண்டும், உமது கருத்திலுள்ள மார்க்கத்தைச் சொல்லும். அதற்குத் தகுந்த புத்திரனுதிக்கும்படியாய்ச் செய்வோமென்று அருந்தவன்கேட்க, அவரைத்தொழுதெழுந்து அரசன் சொல்லுகின்றான். ஐயா! நல்ல சுந்தர வடிவமும், ஆயுளும், நோயில்லாமையும், பொன்பொன்னுகப் பெறுகிற பிள்ளை ஒருவனை அநுக்கிரகஞ் செய்யுமென்று இறந்துகேட்க, அப்படியே உமது இஷ்டப்படிக்கு ஈஸ்வராநுக் கிரகத்தில் உமக்குப் புத்திர னுதிப்பானென்று சொல்லி, மகதியாழையுடைய அம்முனிவர் யதாஸ்தானத்திற் கெழுந்தருளினர்.

அன்று முதற்கொண்டு இந்த ராஜனுடைய கர்ப்பத்தில் ஜனித்து, உந்து பத்தினியின் கர்ப்பத்துக்கேறி, கருப்பில் முத்துப் பிறப்பதுபோல் ஒரு புத்திரன் பிறந்தான். அப்பிள்ளைக்கு புத்ரோச்சவம், சாதகன்மம் முதலிய சடங்குகளைச் செய்து மனங்களித்து வருங்காலத்தில், பிள்ளையினுடைய மலமும், அந்த மலம் ஒட்டிக்கொண்ட புட்டமும், பொன்மயமாக யிருக்கக்கண்டு, கடலைக் கடைந்து அமுதங்கண்ட தேவர்களைப்போற் சந்தோஷங்கொண்டு, அந்த மலங்களைச் சேதமாகாதபடி நாள்தோறும் வாரி மந்தரகிரி போற் குவித்து, பேராசையிற் சிறந்த அவ் விராஜனனவன், அந்தக் குழந்தைக்குச் சுவர்னஷ்டி வென்னும் பேர்வைத்து, அன்னப் பிராசனம், சவுளம், உபநயன முதலிய கடன்களெல்லாஞ் செய்து அகங்களித் திருந்தான். பொய்யில்லாப் பெருங்குதலை மொழியினையுடைய அரசிளங் குமரன் குற்றமற்ற பிறை வளருந் தன்மைபோல் வளர்ந்து, அரிய வேதங்களும், சாஸ்திரங்களும், கலைக்கியானங்களும், படித்துவருங் காலங்களில், இந்தப் பிள்ளையினுடைய மலமெல்லாம் பொன்னு யிருப்பதினால், எல்லோரும் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கும்போது, சில கள்வர் இவனைக் கொண்டுபோக வேண்டுமென்று கூடி நினைந்து, ஒருநாள் அவன் தனித்திருக்கும் இரவில் திருடர்கள் வந்து களவிற் கொண்டு போய், நித்தியமும் பொன் காய்க்கும் மரமென்று இந்தப் பிள்ளையை வதைத்து வயிற்றைப் பீறி, மலராத அரும்பை மணங்காண மலர்த்தின மதியீனரைப்போற் குடல்களைப் புரட்டிப் புரட்டிப் பார்த்து, திரவியங் காணமல் வீணாய்க் கொன்றோமே யென்று அவ்வறிவீனராகிய திருடர்கள் குளக்கரையிற் பிள்ளையை வீசி எறிந்துபோட்டுப் போய்விட்டார்கள். இங்கே சிஞ்சயனென்னும் ராஜன் மைந்தனைக் காணமற் சிந்தை வாடித் தூதுவராற் றேடவிடுத்து, மனங்கூசி வருந்தி யிருக்கும் போது, பாசி நிறைந்த குளக்கரையிற் கிடந்த பிரேதத்தைப் பரிசனர் கண்டுகொண்டு வந்தார்கள். இறந்த இளமைந்தனை வேந்தன் முதலிய யாவருங்கண்டு நெடுமூச்செறிந்து துக்கசாகரத்தில் மூழ்கி, பிள்ளைக்குச் செய்யுங் கரும விதிகளுடன் ஈமவிதிக் கடன்களு முடித்து, புத்ரசோபத்தால் வைதீக நெறியேற்றுச் சந்நியாசம் வாங்கிக்கொள்ள மனந் துணிந்தான். அப்படி துணிந்த மன்னவனை மந்திரியர் முதலிய பலருந் தேற்றச் சிறிது மனந்தேறி, மாளிகைக்கு வந்து தேவியுந் தானு

மாய்த் தேம்பி யழுது, குலத்திற்குப் பழுது வந்ததே யென்று வியாகூலப் பட்டுக்கொண் டிருந்தார்கள். அந்நாளையில், விழுதுபோற் சடையினையுடைய நாரதமகாமுனிவர் வந்தார். அவரைக் கண்ட மாத்திரத்தில், அவர் பாதங்களில் ஓடி விழுந்தெழுந்து தொழுது அழுது, தங்கள் பிள்ளைக்கு நேரிட்ட அநுயாச மரண சங்கதியைச் சொன்னார்கள். அதைக் கேட்ட ஞானபண்டிதனாகிய நாரதர் அந்த ராஜனுடைய கண்ணீர் துடைத்து, ஓ அரசனே! கண்கலக்கப் படவேண்டாம். போன வுயிர் மீளப்போகிறதில்லை. புலம்பி யழுவதா லொன்று மாகிறதில்லை. நீங்களேன் விம்மிப் பொருமுகிறீர்களென்று அநேக ஞாய உறுதிகளைச் சொன்னார். அப்படி சொல்லியும் அவர்கள் ஆறாப் பெருந்துயரில் ஆழ்ந்தவர்களாதலால், விசனசாகரத்தை விட்டுக் கரையேற மாட்டாமலுருக, அப்படி உருகுகின்றவர்கள் உளந்தேறும்படியாக் கருதிய மோனமுனியாகிய நாரதர் பெரும்பான்மையாய் பூர்வம் நடந்த சில தன்மைகளைச் சொல்லுகின்றார்.

நீலோற்பல நிறமும், வாள்போன்ற வடிவுங்கொண்ட கண்களையுடைய பரமேஸ்வரிக்குப் பர்த்தாவான பரமசிவ னெழுந்தருளி உபத்திர்ஷ்டியாய்ப் பார்க்க, சந்திர சூரியர் முதலிய தேவர்களுக்கெல்லாந் திருப்தியாகும்படி, பால்-தயிர்-நெய்-தேன் முதலிய யாவும் ஏழுகடலைப்போற் பெய்து அவிர்ப்பாகங் கொடுத்து, அநேகம் யாகங்களைச் செய்து, ஒன்பதுவகை இரத்தினங்களுந் திரவியங்களும் பொன்மலை ஏழெனக் குவித்து பிராமணருக் கீய்ந்து, விரதசீல நற்பரமஞானியாய்த் தன்னுயிர்போல் மன்னுயிரைக் காத்து உலகத்தை யாண்டுவந்த மருத்து மகாராஜனும் இறந்துபோனான்.

இதன்றியும், மாதம் மும்மாரி வருணன் பொழிய பூசை முதலியன நடத்தியும், பொன்னாசையுடைய வறியர்களுக்குச் சொர்ணாபிஷேகம் செய்து மறுபடியும் பொன்னென்னுங் கியாபகம் வரவொட்டாமற் கொடுத்தும், அளவில்லாத அஸ்வமேத யாகஞ்செய்தும், அருட்பார்வையாக உலகமெல்லாம் ரக்ஷித்தும், தர்மந் தப்பாமற் சத்தியங் குறையாமல் தேவரும் பிராமணரும் புருஷ சிலாக்கியமென்று கொண்டாடித் துதிக்கும்படியாய் நின்ற சுகேந்திரராஜனென்னும் நரபதியும் இறந்துபோனான்.

கரும்பைக் கடித்துப் பிடுங்கி முறித்துத் தின்று கட்டுந் தறியைப் பெயர்த்து மதங்கொண்டு பூண்கட்டிய கொம்புகளை யுடைத்தாயிருக்கும் பதினாயிரம் யானைகளும், நல்ல புத்தியும், குற்றமில்லா நிறமும், குணமும், ஜாதியு முடைய குதிரைகளும், பொற்பணி பூட்டிய கோடி கறவற் பசுக்களும், நற்குணமும், நற்செய்கையும், பெண்மையுங் குன்றாத் பெண்களனந்தமும் நித்தியதானமாகக் கொடுத்து, தேவர்களெல்லாரும் மிகுந்த ஆவலாக அங்கீகரிக்கும்படியாய் யாகங்கள்செய்து ஆகுதி கொடுத்து, வேதியர்க்கும் ஆதுலர் முதலிய யாசகர்க்கும் மேன்மேலாகிய திரவியங்களையும், முத்துக்களையும், ரத்தினங்களையும், மாரிபோல வாரிப் பொழிந்து மேன்மையடைந்த நங்கனென்னும் ராஜனும் இறந்துபோனான்.

பெய்யும் மழைத்துளியை எண்ணினாலு மெண்ணலாம், தானமாகக் கொடுக்கும் பசுக்கூட்டங்களை யெண்ணப்படா. அப்படி அளவிறந்த கோதானங்கள் கொடுத்து, அந்தத் தானங்களுக்கு விடுக்கும் தாரத்த்த சலமானது சமுத்திரம்போ லிரைந்து தடாகமாக நிற்க, ஏழுலகுந் தன் தேரைச்செலுத்தி, வீரத் துவஜம் நாட்டி, சத்துருக்களை வாட்டி, மற்ற மன்னுயிர்களைக் கூட்டி, வாழ்வினிலை நீட்டி, அஸ்வமேத முதலாகிய யாகங்களெல்லாம் நூறுநூறாகச் செய்து, புறாவுக்காகத் தன் தேகத்தை அறுத்து நிறுத்து மனம் பொறுத்து இவதுப் பரமசிவனுடைய அருள்பெற்று, இவனுக்கு நிகராகிய பேர்களெங்குமில்லையென்று யாவருங் கொண்டாடப் பேர்பெற்றுச் சிறப்புடன் உலகாண்ட சிபிச்சக்கிரவர்த்தியும் இறந்துபோனான்.

மாதுர்வாக்கிய பரிபாலனஞ் செய்வதற்காக இராச்சியத்தைத் தம்பிக் களித்து பத்தினியுடன் வனவாசஞ் சென்று, அசுரர்களைக் கொல்லுகிறேனென்று உத்தமர்களுக்கு அபயங் கொடுத்து, தர்மபத்தினியைப் பிரிந்து, சுக்ரீவனுக்குப் பரிந்து, வாலியின்பேரிற் பாணந் தொடுத்து, சீதையிருக்கும் நிலையை அறிந்து, சேதுபந்தன மெடுத்து இராவண கும்பகர்ன்ன் முதலிய அரக்கர் அழியும்படிக்கு இராமபாணம் விடுத்து, அவர்களைக் கெடுத்து,

பதினான்கு வருஷந் தொலைத்து, அயோத்தியாபுரிக்கு வந்து பட்டங் கட்டிக்கொண்டு, சகல உயிர்களையுந் தனது கர்ப்பத்தி லிருந்து பெற்றதைப்போல் ரட்சித்து, நீதிமுறை தப்பாமல் திக்குவிஜயஞ்செய்து, யாகங்களெல்லாம் முடித்து, ஐம்பத்தாறுதேசத்தரசர்களும் பணிய அரசாட்சி செய்து வாழ்ந்த சக்ரவர்த்தித் திருமகனும், இத் தரணிபர் காண இறந்துபோனான்.

சகராளாகிய அறுபதினாயிரம் மூதாதைகளும், மோக்ஷமடைய வேணுமென்று கருதி, செங்கோலும், முடியும், சந்திரவட்டக் குடையும் துறந்து, வெகுகாலம் வரைக்குந் தவம் மிகுந்து, பூமிதேவியாகிய தாயார் சவுக்கியம் பெறும்படியாய்த் தன் பேர்பெற்ற பகீரதியைக் கொண்டுவந்து, பாட்டன்மா ரெறிந்த பள்ளத்தில் விடுத்து, யாகம்-ஓமம்-ஜபம் முதலியவைகளினால், மேலோராகிய தேவர்களுக்கெல்லாம் அவிர்ப்பாகம் நடத்தி, பிதுர்க் கடன்களுஞ் செய்து, யானைகள்-குதிரைகள்-தேர்கள்-ஸ்திரீகள்-பசுக்கள்-பூமி முதலாகிய தானங்களும் பண்ணி, முப்பத்திரண்டு தர்மமும் நடத்தி, கீர்த்தியுடன் துரைத்தனம் செய்த பகீரதனும் இறந்துபோனான்.

காந்தருவராஜர் முதலிய பேர்கள் தேவகானம்பாட, ரம்பை - ஊர்வசி - மேனகை - திலோத்தமை என்னும் ஐம்பதுகோடி ரம்பாஸ்திரீகள் நடனஞ்செய்ய, தேவர் முதலாகியபேருங் கர்ப்பகமலரைக் கொண்டுவந்து தந்து கண்டு அண்டையினெருங்கி யிருக்க, முனீஸ்வரர்க ளெல்லாரும் ஆசி வழங்கி அருமையாகத் துதி செய்த, அஸ்வமேதம் தொண்ணூற்றொன்பது செய்து, நூறுவது யாகம் செய்யும்போது தேவேந்திரன் பயந்து நமது இந்திரப் பட்டம் போய்விடுமே யென்றேங்கி ஓடிவந்து, ஓ மஹாப் பிரபு! எனக்கு இந்த யாக பலனை யெல்லாங் கொடுக்க வேண்டுமென்று யாசித்த காலத்துத் தடை சொல்லாமல் மனக்களிப்புடன் தத்தஞ்செய்து பூரணாகுதிகொடுத்துப் பூசித்துப் பல பொருளும் மறையவர்களுக் களித்து, தேச ராஜர்களெல்லோரும் மலர்போன்ற பாதத்தில்வணங்கப் பரராஜபயங்கரனென்று புகழ் கொண்டு பாராண்ட திரிலீப ராஜனெங்கே? அவனும் இறந்தான்.

தருமத்தி லுயர்ந்த தகப்பன் வயிற்றிற் பிறந்த பன்னிரண்டு வயதிற்குள் சகலகலை சம்பன்னனாகிப் பட்டங் கட்டிக்கொண்டு, கிரணங்களை வீசுஞ் சூரியன்திரியும் உலகமெல்லாம் தன்னுடைய சுவேத க்ஷத்திரத்தை விரித்து நிழற்படுத்தி, உலகத்திலுற்ற வெகு ஜனங்களுக்கும் தாட்சியில்லா திருக்கும்படி அன்னஞ் சொர்ன முதலாகிய சகல பாக்கியங்களையும் உயர்ந்த பொன்மலைபோல் ராசி கட்டி அம்பாரமாக்கி வைத்து, ஒரு நாழிகையும் ஓயாமற் றானங்கொடுத்து, அயமேதம்-இராஜசூயம்-கருடபந்தம் - பௌண்டரிய மிவை முதலாகிய மகங்களெல்லாம் தர்மத்துடன் புரிந்து, மநுநீதிக்குத் தலைநிதியாய் வாழ்ந்த மாந்தாதா எங்கிருக்கின்றான்? அவனும் மடிந்தான்.

அசுரர்களும் தேவர்களுஞ் சண்டைபோடுங் காலத்தில், இளைத்த தேவர்களுக்குப் படைத்துணையாய்ச் சென்று, அசுரரை யழித்து, அமரருக்கு வெற்றி கொடுத்து, தானுஞ் ஜெயம்பெற்று பூலோகத்தில் வாழுஞ் சராசரங்கள் தழைத்தோங்கும்படியாய் மனுநீதிப் பிரகாரம் மக்களைச் சவரக்ஷணை செய்து, ஆறிலொரு கடமை கொண்டு வாணச்சிரமம் வழுவாமற் காத்து, அக்கினிட்டோமம்-வாசபேயம்-அஸ்வமேதம்-இராஜசூயம் - திரிதராத்திரம்-பவுண்டரியம்-நிரூடபசுபந்தம்-சௌத்திராமணி-பார்வனம்-ஆக்கிரசாயணி இவை முதலாகிய யாகங்களெல்லாம் பற்பல தேசத்தரசர்களும் மெச்சும்படியாய்ப் புரிந்து, அவனுக் கதிபதியென ஆண்ட அயோதிமகாராஜனெங்கே? எனக்குத் தெரியச் சொல்லும் அரசனே! அவனுங் காலங்கழித்தான்.

பல தேசங்களையுங் காத்து ரட்சிக்கும் வேந்தர்கள் யாவரும் எதிர்த்து ஆயுதம் எடுத்து யுத்தஞ் செய்யமாட்டார்கள். அப்படியொருவேளை போருக்கு வந்தால், உயிரை பொருளை தேகத்தை ஒரு பொருளாகப் பாராமல் யுத்தஞ்செய்து வென்று, மன்னரெல்லாம் தன்னை வணங்க ஜெயமாலைசூடி பூமித்தேவராகி பிராமணாள்முதலிய பெரியோர்கள் மனங்களிக்க நவமணிகளுங் கொடுத்து, சிவபூசை புரிந்து, தேவர்களுக் கவிர்ப்பாகமளித்து, கீழ்மேழுலகிலிருக்கும் யாவர்களும் பூமிதேவியாருஞ் சந்தோஷிக்கும்படியாய் அரசுசெலுத்திய பிரான் அம்பரிஷி மகாராஜனெங்கே? பேசுமையா அரசனே! அவனும் மாண்டுபோனான்.

இலக்ஷம் ஸ்திரீகளுடைய குயாசலமும் தன்னுடைய புயாசலத்திற் றேயும்படிக்குக் கலவியில் மகிழ்ந்து, கணக்கில்லாத பிள்ளைகளைப் பெற்று, தன்னை மறந்த சந்தோஷத்தாற் குறைவில்லாச் செல்வம்பெற்றுச் செங்கோல் செலுத்து நாளில், தன்னுடைய பிள்ளைகளெல்லாந் தனித்தனியே லட்சயமில்லாமல் அஸ்வமேத யாகஞ்செய்ய, தானும் பிராமணர் முதலியபேர்களுக்குத் திரவியங்களைக் குப்பை குவியும்படியாய்க் கொடுத்து, சத்துருக்களுண்டென்னுஞ் சப்தங்கேளாமல், அம்புவி புரந்த விந்தமகா ராஜனெங்கே சொல்லும்; அவனுமிறந்தான்.

அக்கினி தேவனுடைய திருவடியைப் பூசித்துச் சிந்தை செய்ததினால் அந்த அக்கினிதேவன் பிரசன்னமாக வந்து, அவரைத் தொழுது வணங்கி ஸ்திரீபோக விருப்பமில்லாமல், திடம்-உறுதி - சத்தியம் - இரக்கம்-ஈகை முதலிய நற்குணங்கள் எனக்குண்டாக வேண்டுமென்று வரம்பெற்றுக்கொண்டு கங்காதேவியைத் தொழுது கங்கைக்கரையில் முப்பத்தாறுகாதம் யாகசாலை நேமித்து, தருமம் புரிந்து வடவால விருட்சங்களை வைத்து சாலை ஏற்படுத்தி, அவ்விடத்திற் கங்கைக்கயமென்று தன்பேருண்டாக்கிக் கனதைபெற்ற கயனெங்கே? அவனு மிறந்துபோனான்.

ஒருநாளொன்றுக்கு இருபத்தையாயிரம் பிராமணாள் புசிக்க, அன்னதானஞ் செய்து முப்பத்துமுக்கோடி தேவர்களும் இந்திரன் முதலிய சந்திரசூரியருஞ் சேர்ந்து நாள்தோறும் அக்கினிதேவனால் அவிர்ப்பாகம் பெறவும், அரசர்கள் பணிந்து மணிமுடி வணங்கி ஏவல் கேட்டு நிற்கவும், யாசகர் முதலியபேர்கள் ஆசையுடன்பெற விசுவாசமாகத் திரவியமளித்து ஏவர்களாலுஞ் செய்யப்படாத சந்திரயாக முடித்துப் புகழ் கைக்கொண்ட புண்ணியசீலனாகிய மனோதிடங்கொண்ட சத்திய வாய்மையையுடைய அந்தித்தேவனென்னும் அரசனெங்கே? அரசனே! அவனுமிப்புவிக்கிரையா யிறந்தான்.

கண்ணுவருடைய ஆசிரமத்தில் வளரும்போது, புலி - சிங்கம் - சரபம் - சார்த்தூலம்-யானை - மான்-கரடி-வேங்கை முதலிய மிருகங்களையெல்லாம் பிடித்து, அதுகளின் முதுகிலேறி வையாளியிட்டுப் பழகி அம்முனிவரால் சகலசாஸ்திர பண்டிதனாகி, பின்பு தந்தையை வணங்கித் தான் வந்தவழி யுணர்ந்து, ஞாலமெல்லாங் கைக்கொண்டு, காளிந்தி - கங்கை-சரஸ்வதி இந்த நதிகளின் கரைகளில் தினந்தோறுஞ் சதமகம் புரிந்து, மண்டலமும் விண்டலமும் புகழும்படியாய்ப் பரதனென்று பேர்கொண்ட பாக்கியவானெங்கிருக்கின்றான்? பார்த்திவனே! அவனு மிறந்துபோனான்.

தான் அரசுசெய்யும் பூமியில் மலைமுதலாகிய கற்களினால், அல்லது மண்களினால் மேடுபள்ள மிருக்குமாகில், தன்னுடைய தேர் ஏறிக்கொண்டு விரைவாக விடுத்து, அந்தத் தேருருளாழியினாற் பூமியைச் சமமாக்கி, காடுகளை எல்லாம் நாடாக்கி, கரம்பு திருத்திப் பரம்படிப்பதுபோற் காட்டி, மலைகளெல்லாவற்றையுங் கோமுகமாகச் செய்து, இதழ்விருந்த மலரணிந்த தேவர்களுக்கும், பிதிர் தேவர்களுக்கும் நடத்தவேண்டிய யாக முதலிய உபசாரங்களை நடத்தி, இரப்போர்க் கில்லையென்னுமையில்ந்து, கடல்வளைந்த உலகத்தையெல்லாம் பிரிதிவென்று தன் பெயரிட்டழைக்கச் சீர்பெற்ற பிரிதிவென்னும் ராஜனுமிறந்தான்.

சிவந்த இரண்டாயிரங் கண்கள் பெற்ற கார்த்திய வீரியார்ச்சுனன், தன் தந்தையாகிய ஜெமதக்கினி மகாரிஷியைக் கொன்றானென்று க்ஷாத்திரங்கொண்டு, இனிமேல் க்ஷத்திரியாளுக்குத் தனுர்வேதஞ் சொல்லுவதில்லையென்றும், இராஜவம்சங்களை இருபத்தொரு தலைமுறை கருவறுத்துப் பிதிர்க்கடன் செய்வேன் என்று சபதம் பண்ணிக்கொண்டும், இராஜ வம்சங்களை அழித்து, அந்த அரசர்களுடைய உதிரங்களினால் குருக்ஷேத்திரத்திற் சமந்த பஞ்சக தீர்த்தமென் றேற்படுத்தி, கசியப் பிரமாவைக் கொண்டு பிதிர்க்கடனாற்றி, அந்தப் பிதிர்க்கடன்செய்த அக்காசிப மகாரிஷிக்குத் தன் வசப்பட்டிருந்த பூமியைத் தட்சணையாகக் கொடுத்து, காசிபர் சம்பந்தம், காசினியென்று பேரிட்டு, பலம் பொருந்திய யாகங்களைச் செய்து, அனந்த பத்மநாப ஸ்தலஞ் சேர்ந்து மும்மலமகற்றிய செம்மலமாகிய அவதார புருஷன் பரசுராமனும் இறந்தான்.

ஓ சிஞ்சய மகாராஜனே! இதுகாறுஞ் சொல்லிவந்த அரசர்களேயன்றி, இன்னும் எத்தனையோ அரசர்கள் அஷ்ட சித்திகளோடும், அஷ்ட ஐசுவரியத்தோடும் இவ்வுலகத்தையாண்டு மண்ணுக் கிரையானார்களே

யொழிய, இறந்த பேர்களில் மறுபடியும் பிழைத்தெழுந்து வந்தவரார்? நீரே சொல்லும். ஓ மன்னவனே! பற்பலவார்த்தை பேச வேண்டியதில்லை. நானொன்று சொல்லுகின்றேன் கேளும்; இவ்வுலகத்தில் நாமரூபத் தோற்றமாகிய தெல்லாம் அழியும், இன்றிறந்தவனுக்கு நாளை இறக்கப் போகின்றவன் அழும்படியாகிய காரியம் ஒன்றுமில்லை. அதினால் என்ன பிரயோசனம்? என்று நாரதர் சொல்லித் தேற்ற, இந்த வார்த்தைகளையெல்லாங் கேட்ட சிஞ்சயராசன் இருகரத்தையுஞ் சிரத்திற் குவித்திறைஞ்சிச் சொல்லுகிறான்: சுவாமி! தேவரீர் இப்போது சொல்லி வந்த சக்ரவர்த்திகள் முதலாகிய அரசர்களுக்கு நிகர் சொல்லமாட்டேன். அவர்கள் மகா புண்ணியவான்கள்; ஓ குணமேருவாகிய நாரத மகா முனியே! என் பிள்ளை பிழைக்கவேணுமென்பதைக் குறித்து நான் விசனப்படவில்லை. ஐயோ! என் வித்தர்லுதித்த சித்தசனுக் கொப்பாகிய மைந்தன் ஞாயமாய் புகழ் பெற்றிருக்காமல், திருடர்களால் உயிரிழந்து எனக்குப் பழியும் அபரோதனையும் வைத்தானே; மேலும் அவமிர்த்துச் சாயையா லிறந்தவர்களுக்கு விதித்திருக்குங் கொடுநரகிற் புகுவானே; கொடியோனாகிய அடியேன் நெடுநாள் வரைக்கும் புத்திரனில்லாமல் வருந்த, அப்படி வருந்திய எனக்கு என்மனோபீஷ்டப்படிக்கு ஆயுசுள்ள பிள்ளை வருவானென்று ஆசீர்வதித்த உமது வார்த்தையும், ஈஸ்வர பூஜாரிதேயனாக நானிருந்ததும், நன்னீதி செலுத்தியதும், தேவரீரைத் தரிசித்ததும், இப்போது தேவரீர் சொல்லிய உத்தமர்களின் சரிதத்தைக் கேட்டதும் இவையனைத்தும் விருதாவாய்ப் போய்விடுகின்றனவே; அப்படி போவது மல்லாமல், தந்தையே பிள்ளையென்னும் வேதவிதிப் பிரகாரம், அச்சிறுவனிறந்ததும், அவன் புகுந்த நரகமும் முடிவில் என்னுடையதா யிருக்குமேயென்றும் மனம் வருந்திக் குலைகிறேன். ஓ என்னிஷ்டதெய்வமே! என்று அந்த அரசன் புலம்பி யழும்போது, ஈஸ்வரா நுக்கிரகம் பெற்ற மகதியாழ் முனிவராகிய நாரதரான வர் அந்த இராஜனைப் பார்த்து, ஓ அரசனே! நீரேன் மெத்த வருந்துகிறீர்? இதோ உமது கான்முளையைக் கொண்டுவருகிறே னென்று சொல்லி, ஒரு கடிகைக்குள் யமலோகஞ் சென்று, யமதர்மராஜனுடன் வார்த்தையாடி, வியகாரப்படிக்கு அந்தப் புத்திரனைக்கொண்டு

வந்து, தன்னுசீர் வசனத்துக்குக் குறைவில்லாமற் கொடுத்தார். அப்போது சிஞ்சயராஜனும் அவனுடைய தேவியும் உள்ளங்களித்து, நாரத மகாமுனிக்கு நானாவித உபசார மரியாதைகள் நடாத்தி வணங்கி வாழ்த்திப் போற்றி, உலகமெல்லா மதிக்க வாழ்ந்து, அந்த ராஜனுங் கதியடைந்தான். அவன் பிள்ளையாகிய சொர்ணடீ வென்பவன் கணக்கில்லாத யாகங்கள் செய்து, அகண்ட ஐஸ்வரிய முடையவனாய்க் காசினியாண்டு மாண்டு மோட்ச மடைந்தான்.

ஆகையினால், ஓ தர்ம சுவரூபியே! எத்தனைகோடி காலம் இக் கர்மபூமியில் வாசம் பண்ணி இந்திர போகத்தைப்போல் அனுபவித்தாலும், துன்பம் மேலிட்டிருக்குமேயல்லது இன்ப மென்பது எள்ளத்தனையுமணுகாது. குற்றஞ் செய்தபேரை அரசன் தண்டித்துக் காவலில் வைத்துப் பரிசுத்தப்படுத்தி விடுக்குமாறுபோல், எப்பேர்ப்பட்டவர்களும் இக் கர்மபூமியில் வந்து, செபதபயோகவிர்த்தியால் வரும் இன்ப மென்னும் ருசியையும், சமுசார முதலியதினால் வரும் துன்ப மென்னுங் கசப்பையும், ஒரு நாவினால் ருசியறிந்து இதுவும் அதுவும் பிசறிக் கொண்டு கீழது மேலதாய் மேலது கீழதாய்ப் புரட்ட, வினையால் வினையும் நோய் முதலிய வெல்லா மருட்ட, சகலபாடும்பட்டு, சமஸ்த கேடுங் கெட்டு, மற்றெல்லாக் கொடுமைகளையும் இக்கர்ம பூமியைவிட்டு, மேலாகிய பதத்தைப் பெறக் கருதுவார்கள். ஆனால் எல்லோருக்கும் அப்படியே நினைத்த வண்ணங் கிடைக்குமோ வென்றால், கிடைக்கமாட்டாது. அது மெத்த அருமை; அப்பேர்ப்பட்ட அருமையாகிய பேரின்பக்கதியை உலகத்திற் கீர்த்தி நிலை நிறுத்திய உங்கள் அபிமன்னன் மெத்தவும் லேசாகப் பெற்றான். அவனுக்காக சந்தோஷப் படவேண்டுமே யல்லாமல், விசனப்படுவதுகாரியமன்று; இந்தமட்டும் விசனமும் புத்திர வாஞ்சையும் விட்டிருப்பதுவே மேலான நன்மை யென்று, இல்லறத்தை விட்டு நல்லறத்தைத் தொட்டு இருவினையுமற்ற சுகப்பிரமத்தை ஒரு தவமாகப் பெற்ற கிருபைக் கண்ணினையுடைய வேதவியாசர் சொல்ல, வேத மந்திரம் போன்ற அவருடைய வாக்கியத்தை தருமராஜன் மனதுட்கொண்டு, அருமறையின் அந்தமாகிய விதிமுறை யிதுதானென்று ஆசைப்பேயை அலறயோடவிட்டு, ஓடம் விட்

டுக் கரையேறினவரைப் போலிருந்து, அந்த மகாநுபாவருக்குத் தீர்க்கதெண்டஞ் செய்தார். உடனே வேதவியாசர் ஆசீர்வாதங் கொடுத்து விடை பெற்றுக்கொண்டு,கந்தமூலங்களிறைந்த சோலைபோய்ச் சேர்ந்தார். அவ்வேதவியாசர் போனவுடனே சொல்லுதற்கரிய பெருமையினை வாய்ந்த தர்மராஜனனவர், தம்பியாகிய விஜயனும் மைத்துனனாகிய மாயனும் வருவார்களே; அவர்களுக்கு நாமென்ன உத்தரவு சொல்லுவோ மென்று முன்னிருந்ததற்கு நூறுபங் கதிகமாகிய சஞ்சலத்துடன் பாசி மூடிய நீர்போற் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தார்.

### அருச்சுனன் பாசறைக்குத் திரும்பும்போது கண்ணன் சூழலால் அக்கினிப்பிரவேசமாக விருந்த ஆகண்டலயனை அவன்றேற்றி விடுத்தல்

ஓ ஜெனமேஜெய மகாராசனே? இப்பாற் சஞ்சத்தகராதியர் போிற் சண்டைப் போடச் சென்ற கிருஷ்ணார்ச்சுனனுடைய செய்கையைச் சொல்லுகிறோம் கேளும்; இவ்வுலகெல்லாம் தன்னை வணங்கத் தானொருவரை வணங்காமுடி பெற்ற வாழ்வைப் பூண்ட துரியோதனன் ஏவலினால், அர்ச்சுனன் போிற் சண்டைக்குச் சென்ற திரிகர்த்த தேசராசனும், சஞ்சத்தகரும் தென்றிசையினின்று சண்டப் பிரசண்ட உத்தண்ட தூர்த்தண்ட மூர்த்தண்டமாய் விஜயனுடன் யுத்தஞ் செய்ய, அப்படி யுத்தஞ் செய்தவர்களை யெல்லாந் தென்னிலமாகிய யமலோகத்தில் குடியேற்றி, எல்லாவுலகத்தினும் தன்னுண்மிக்கையை நிலையிட்ட இணையில்லா விஜயன் போர்முகத்தில் நடந்திருக்குங் காரியம் இன்னதென்று அறியாதவனாய், அவ்விடத்தை விட்டுத் தர்மராஜன் முதலிய பேர்க ளிருக்கும் இடத்தை நோக்கி வருவதற்கு ரதத்தைத் திருப்பச் சொன்னான். அப்போது, பூத பௌஷிய வர்த்தமானப் புணர்ப்பெல்லா மறிந்த சர்வக்கியானியாகிய துவாரகாபுரி வாசனென்னுஞ் சாரதியானவருக்குத் தன் மருமகனாகிய அபிமன்னன் பத்மயூகத்தை உடைத்துச் சென்றதும், சிந்து தேசாதிபன் அபிமன்னனுக்கு ஒருவரும் துணைபோக வொட்டாமல் தடுத்துப் போர் புரிந்து நின்றதும், இராசபுத்திரர்கள் முதலிய அநேககோடி படைகளை அபிமன்னன் வென்றுவீர சொர்க்கமடைந்து மிவைகளெல்லாந் தனக்கு நன்றாய்த் தெரிந்திருந்தும் ஒன்றுந் தெரியாதவரைப் போலிருந்து, அர்ச்சுனன் இஷ்டப்படிக்குத் தேரைச் செலுத்த எத்தனித்தவர், மெதுவாக நடத்திக் கொண்டு வரும்போது, இதனை நினைப்பதாயினார். ஐயோ! எல்லாச் சோபங்களிலேயும் புத்திர சோபம் பெரிதாகையினாலும், அர்ச்சுனனுக்கு இந்தப் பிள்ளையின்பேரில் அதிக பட்சமிருப்பதினாலும், அபிமன்னனிறந்ததை இவன் கேட்பானாகில், தன்னுடைய பிராணனை திரணமாக நினைத்து மரணமடைந்து விடுவானே; அப்படிக்கு நேரிட வொட்டாமல் ஒருபாயஞ் செய்ய வேண்டு மென்று நினைத்து, அக்காசாம்பூ வண்ணனானவர், அதற்கு வேண்டிய கருவிகளெல்லாந் தன் மனத்து ளமைத்துத் தேவேந்திரனை நினைத்தார்.

இவருடைய எண்ணப்படிக்குப் பஞ்சபூத முதலிய எல்லா பூதங்களும் ஆடத்தக்கதாகையால், இந்திரனும் மிகுந்த விர்த்தப் பிராமணனாக வடிவங்கொண்டு, இவர்கள் வருகிற வழிக் கருகாமையில் எரியத்தக்க பெரிய அக்கினிக்குண்டம் ஏற்படுத்தி, மஞ்சள் வஸ்திர முடுத்தி, மெலிந்த தேகத்துடன் வாய்விட்டழுது கண்ணீர் வடித்து, ஓ தெய்வமே என்று கூவி, தீக்குழியைச் சுற்றி வலம் வந்து கொண் டிருந்தான். அப்போது தேரைச் செலுத்தி வராநின்ற திருமாலதைத் தனஞ்செயனுக்குக் காட்டி, இதென்ன யிவ்விடத்திற் பெருந்தீ எரிந்துக்கொண்டிருக்கிறது. யாரோ ஒரு பிராமணன் அலறி அழுது அந்தக் குழியை வலம் வருகிறான். ஓ விஜயப்பிரதாபா! இதனைச் சற்று நின்று பாருமென்று மாய னுரைக்க, அதைப் பார்த்த அர்ச்சுனன் மெத்தவும் ஆச்சரியங்கொண்டு தாங்களிருவரும் அவ்விடத்திற்குப் போய்த் தீயில் விழப்போகிற அப் பிராமணனுடைய கையைப் பிடித்துக்கொண்டு, மிகுந்த வணக்கத்துடன் பணிந்து, ஓ பிர்ம சிரேஷ்டரே! தேவரீரெங்கிருக்கிறது? உமது பேரென்ன? இத் தீயில் விழப்போகிற காரணமென்ன? எங்களுக்கு அதனை தெரியப்படுத்து மென்று வேண்டிக் கொண்டனர். அப் பிராமணன் தேம்பித் தேம்பி யழுது, ஐயமீர்! அழுவா ரழுவது தன் துக்கத்திற் கல்லது பிறர் துக்கத்துக்கல்ல. ஆகையால், தெய்வம் என்னைச் சோதித்ததற்காக என் விதியை நானனுபவிக்கிறேன். நான் செய்துகொண்ட வினை என்னை மோசஞ் செய்தது. தளர்ந்த வயதில் ஆதரவில்லாப்

பாவியானேன். உங்கள் வேலையைப் பார்த்
துக்கொண்டு நீங்கள் போங்கள்; என் கையை
விடுங்கள். மகா ராஜாக்களாகிய உங்களுக்கே
ளிக்காமமென்றுசொல்லி கண்ணீர் சொரிந்து,
கடகட வென்று புரண்டு, வாயி லறைந்துக்
கொண்டு வயிற்றைப் பிசைந்து, கையை
நெரித்து கதறுவதானுன். அதனைக் கண்ண
னுங் காண்டீபனுங் கண்டு, இதென்ன விப
ரீதமா யிருக்கிறதென்று, இவர்க ளியாவரும்
அப் பிராமணனை தேற்றிச் சங்கதியைச்
சொல்லுமென்று பிடித்துக் கேட்டார்கள்.
அப்போது அப்பிராமணன் இதனைப் பேசுவ
தாயினுன்.

ஓ புண்ணியர்களே! என் வயிற்றெரிச்
சலை ஏன் கேட்கிறீர்கள்? நீங்கள் கேட்டதிஞ
லென்ன லாபம்? என் குறையைத் தீர்க்க உங்க
ளால் ஆகுமா? பொன் பொருளாலுற் கொடுத்
துக் காப்பாற்றுவார்கள். உயிர் கொடுத்துக்
காக்க ஒருவராலுமில்லை. நான் மகா பாவியா
யிருப்பதுமல்லாமல், உங்கள் காதிலேயும் இக்
கொடுமையான சங்கதியைச் சொல்லி நீங்க
ளும் விசனப்படச் செய்வதில் ஒரு பிரையோ
சனமுமில்லையே: ஓ உத்தமர்களே! என்றைக்
கிருந்தாலும் இறந்துபோகிற பிராணன்.
இன்றைக்கிருந்தால் அதனலே என்ன
தாட்சி? நீங்கள் ஏன் இப்பாவியை தடுக்கிறீர்
கள். ஒருவருஞ் செய்யாக் கொடுமையைச்
செய்த கொடியோனுக்கு துணை வருவாரு
முண்டோ? கோவேந்தரே! என்னை விட்டு
விடுங்கள் என்று சொல்லி, ஒரே நெட்டாகத்
தீயில் விழத்தாவினுன். அப்படி தாவத்துணி
ந்த தரணித்தேவனைப் பிடித்து நிறுத்தி, ஓ
சுவாமி! நீர் சொல்லுவதெல்லாம் நியாயந்
தான். ஆகிலும் இன்ன சங்கதியென்று எங்
களுக்குச் சொன்னுல் எங்களாற் கூடுமான
வரைக்கும் சகாயஞ் செய்கின்றேம். நீர் சந்
தேகப்படவேண்டாம். உற்ற காரணத்தை
உள்ளபடி சொல்லுமென்று நல்ல வசனமாக
வினவியபோது, அந்தப் பிராமணன் இவர்
கள் முகத்தை உற்றுப்பார்த்து, உங்களைப்
பார்த்தாற் சத்துருக்கள் இடத்தினில் மெத்த
வும் அலைச்சற்பட்டு அவதிப்பட்டு வேசாரி
வருகிற அரசர்கள்போலிருக்கிறது. அந்த
அவதியுடன் என்னவதியையும் கேட்கிறீர்
கள். சொல்லாமற்போனாலும் நல்லதல்ல.
சொன்னாலும் என் துயர்போவதல்ல. ஆன
லுஞ் சொல்லுகிறேன் கேளும்; நானிருப்பது
இந்திரபுரி அக்ராரம். என்பேர் ஆகண்டல
வையர்; நானிந்தப் பூலோகத்திற் பிறந்து
வளர்ந்து சகல கலைகளுந்தேர்ந்து விவாகம்
பண்ணிக்கொண்டு மேன்மையாக வாழ்ந்து
வருநாளையில், புத்திரனில்லாமல் மெத்த
வருந்திச் சித்தநொந்து, தேவதார்ச்சனை
செய்து ஈஸ்வரானுக் கிரகத்தினுல் ஒரு சற்புத்
திரன் பிறந்தான். அவனை மெத்தவும் பாது
காத்து வளர்த்து விவாகமுடித்து வேடிக்கை
யாக இருந்தேன். உத்தமர்களே! இருபத்
தைந்து வயதுவரைக்கு மிருந்து என்னை
மறந்து இறந்தான். அவனுடனேகூட இந்
தத் தேகத்தையும் மாய்த்துவிட வேண்டு
மென்று தீயிற்குதிக்கத் துணிந்தேன் இனித்
தேறேன்: தேறேன்: என்று திடுக்கிட்டயர்ந்
தான்.

அப்படி அயர்ந்த பிராமணனை அணைத்
தெடுத்து, ஐயையோ!! இட்டதெல்லாம் பயி
ராமா? இகத்திற் பிறந்ததெல்லாம் அழியாம
லிருக்கக்கூடுமா? இலைபழுக்காமற் போகுமா?
எமனுக்கு வேலையில்லாமலிருக்கலாகுமா? ஹரி
ஹரி ராமா! காய்க்குமரங் காய்க்கும் பூர்க்கு
மரம்பூர்க்கும் அத்தன்மைபோ லுமது பத்தி
னியும் நீரும் இன்னுமநேகம் புத்திரர்களைப்
பெற்றுக் கொள்ளலாம். இறந்தோருடன்
மடிந்தோர்களை இதுவரையிலுங் கண்டது
மில்லை கேட்டதுமில்லை போம்: போம்: பயித்
தியம்பிடித்த ஐயரென்று பலவிதமாகிய தர்
மங்களுஞ் சாந்திகளுஞ் சொல்ல, அதைக்
கேட்ட ஆகண்டல வையரானவர், ஓ அருள்
வடிவாகிய அரசர்களே! தர்மமும் தைரியமும்
பிறருக்குச் சொல்லுமிடத்து யாவரும் லேசாய்
சொல்லுவார். தங்கள் தங்களுக் கிருக்கமாட்
டாது; வயிற்றுநோயின் வருத்தம் வந்தவர்க
ளுக்குத் தெரியுமல்லது மற்றவர்களுக்கு தெரி
யுமோ? நீங்களெப்போதும் மகாராஜாக்கள்
செல்வஞ் சொல்லுக்கஞ்சா தென்பதுபோற்
சொல்லுகிறீர்கள். இப்பேர்ப்பட்ட துயரம்
உங்களுக்கு வந்ததானுல், அப்போது தெரி
யும் இப்போது நான்படும் அருமையென்று
பிராமணன் துக்கத்தினுல் விக்கிக்கொண்டு
சொல்ல, அதைக்கேட்ட கிருஷ்ணர்ச்சுனர்க
ளில் அர்ச்சுனன் நகைத்து, அல்லகாணும்
ஐயரே! தான்சாவ மருந்துண்பார்களா? எங்க
ளுக்கு இப்பேர்ப்பட்ட துன்பம்வந்தாலும்,
இன்னும் எப்பேர்ப்பட்ட பொல்லாங்கு வந்
தாலும், உம்மைப்போல் இளைக்கவு மாட்
டோம் நானுமக்கு உண்மையாய்ச் சொல்கிறே

னென்று பார்த்தன் சொல்ல, நல்லது நீர் சொன்னபடியே உண்மையாய் நிற்பவராகில், நானொன்று கேட்கிறேன் அதற்கு வயணஞ் சொல்லும். ஒருகாலத்தில் உமக்குரிய புத்திரர் களில் ஆராவது தெய்வீகராசீகத்தா லிறந்து போனால், நீர்விசனமில்லா திருப்பீராவென்று பிராமணன் கேட்டான்.

அதற்கு அர்ச்சுனன்சிரித்து, ஐயா பிராம ணோத்தமரே! ஒருக்காலும் விசனப்படேன் என்று சொல்லினான். இந்தச்சொல் யதார்த்த மானால் எனக்குக் கைபோடுமென்று ஐயர் கேட்க, இதுவே சத்தியமென்று கையறையப் போகச்சே காசாம்பூ வண்ணனாகிய கண்ணன் என்னத்திற்கு வீணான காரியம்? அர்ச்சுனா! இலேயும் பழுப்பும் எல்லவர்க்குமுண்டு: இப் போது நாம்செய்து வருவது யுத்தம். இதிற் சாவாரரோ? பிழைப்பாராரோ? நாமெ-டு னத்தைக்கண்டோம். நீ ஆத்திரப்பட்டு கைய டிக்க வேண்டாமென்று கபடநாடக சூஸ்தி ராவதாரியாகிய கிருஷ்ணமூர்த்தி தடுக்க, அந்த வார்த்தையைக் கிரீடிகேளாமல், அப் படி என்னவந்தாலும் சரிதான். சொன்ன சொற் றப்புவதில்லை என்று கையையறைந்து அக்கினிக்குழியை அவித்து, ஐயருக்கு நமஸ் காரஞ்செய்து விடைகொடுத் தனுப்பிவிட்டு, தான் கிருஷ்ணமூர்த்தியை யழைத்துக்கொண் டுந் தனது தேரேறினான். குற்றமற்ற விஜய காண்டீபன் தேரேறிய மாத்திரத்தில், தன்னு யிர்போன்ற ஆயுதங்களை யெல்லாந் தேரில் அவிழ்த்துவைத்து இளைப்பாறிக் கொண்டு வருகையில், மாசற்ற விளங்குந் துளவமாலை கழுத்தினிலணிந்த திருமேனியையுடைய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி அந்த ஆயுதங்களையெல்லா மெடுத்து ஒளித்துவைத்து, அவனுக்கு துன் பம் வராதிருக்கும்படியாய் அதற்கு வேண்டிய யோசனைகளை செய்து விஜயனைப் பார்த்து, பிராமணனுடைய பிராணனை காப்பாற்றி நல்லபலன் கைக்கொண்டாய் பார்த்தீபனே என்று வார்த்தை யாடிக்கொண்டு, தன்னை யடுத்தவர்களுக்கு அருளளிக்காநின்ற திருமா லாகிய ஒப்பற்ற ஒருவன் பொற்பிரகாசம் பொருந்திய தேரைப் பூமி யதிரும்படியாய்ச் செலுத்திவந்தார்.

## அருச்சுனன் தனது ராஜமண்டபத்திற்கு வரும்போது துற்சகுனங்கண் டையுறல்

அப்படி தமது மித்திரனாகிய விஜய னுடன் தேரைச் செலுத்திக்கொண்டு விரை ந்து வருகிற வழியினில், இதுவரையிலுங் குற்றங்க ளில்லாத சகுனங்கள் கண்டது போய், உடலும் உயிரும் நடுங்கும்படியாகிய துற்சகுனங்களைக் கண்டு, எந்தக்காரியத்திலும் அசையா மனத்தினையுடைய இந்திரகுமார னாகிய வில்விஜயன் மயங்கி மனமருண்டுவாடி னான். அதை ஸ்ரீ நாதனானவன் கண்டு, சூரி யன் மேற்றிசை யடைந்தபடியால் மாலைக்கட னாகிய சந்தியாவந்தனஞ் செய்துகொள்ளலா மென்று சொல்ல, உடனே யிருவரும் ஒரு குளக்கரையி லிறங்கிச் செபதப நித்தியவிதி முடித்துக்கொண்டு எழுந்தார்கள். அந்த வேளையிற் சுவேதவாகனனானவர், மைத்துன னாகிய ஸ்ரீ கிருஷ்ணபகவானை நோக்கி, ஓ என் னிதயத்தெளிவே! ஓ என் விழித்துணையே! வென்றுலுந் தோற்றுஞ் சமுத்திரகோஷம் போ லிரைந்து முனீஸ்வரர்களுடைய ஆசிர மம்போ லிருக்கின்ற நமது பாசறையானது, சந்தடி யில்லாமல் மாணிக்கதீப முதலிய மற் றத் தீபங்களு மில்லாமல், பிராமணர், மகா முனிவர் முதலியுவர்களின் வேதாகம தர்க்க மீமாம்ச முதலிய ஓசையு மில்லாமல், இராஜ சபைக் கூட்டமுமில்லாமல், குடிப்போன வீடு போல் ஓசை யடங்கி உச்சாகமில்லாம லிருக்க வேண்டிய காரணமென்னமோ? இன்னதென் றுத் தெரியவில்லையே; சுவாமீ! இதனை எனக் கியம்பு மென்று செந்தாமரைக் கண்ணனைக் காண்டீபன் கேட்க, வெண்ணெயுண்ட கள்வ னுஞ் சற்று யோசித்து எனக்குஞ் சந்தேக மாகத்தான் தோன்றுகிறது. என்ன நடந்தி ருக்கிறதோ அறியேன். காலமே முதல் இது வரையிலும் உன்னை விட்டுப் பிரியாதிருக்கும் எனக்கு எப்படிதெரியும் எல்லாம் போய்பார்ப் போம் வருகவென்று பாசறையை நோக்கி வரும்போது, அர்ச்சுனனுக்கு இடத்தோள் துடித்தலும், இடதுகண் துடித்தலும், மார் படித்தலும், கோட்டுவாய் வருதலும், சோம்ப லாதலும் ரதத்தில் வரும்போதே நித்திரை மயக்கம் கண்ணை மூடுதலும், புலால்நாற்றம் நாறுதலும், மாலைசரு காதலும் இது முதலிய தன்மைகளைக் கண்டு, ஏதோ வகைமோசம் வந்திருக்கிறது. அரசர்களுக்கு ஏதாகிலும் துன்பமுண்டோ? பெருமையையுடையபிள்ளை களுக்கு என்னமோ? பலம்பொருந்திய மூரசக் கொடி பெற்ற தமயனுக்கியாதோ? மற்ற சகோ தரர்களுக்கு என்ன துன்பமோ? அலைபோ லசையும் என்காதிற் கேட்கப்போகிறது என்ன வார்த்தையோ? ஓ தெய்வமே! என்று ஏக்கங்

கொண்டு சீக்கிரந் தேரைச் செலுத்துமையா சீமானே என்று இருமருங்கிய நீண்ட பாசறைக்குச் சமீபத்திற் போய்த் தேரைவிட்டிறங்கி வாசனைகளும் மலர்களும் மன்னவர்களும் கவிவாணர்களும் எப்போதும் வசமாய்ப் பொருந்திய தனது ராஜ மண்டபத்திற்கு வந்து, ஆ! ஆ! யுத்தமுகத்தில் நமது புத்திரனாகிய அபிமன்னிறந்துபோனானென் றுணர்ந்து ஒரு பாரியமரம் அடிவேர், ஆணிவேர், சல்லிவேர் முதலிய எல்லா வேறும் அற்றுப் பூமியிற் சாயாதிருக்குந் தன்மைபோல் தன்னை மறந்து மரம்போல் நின்று, அசைவற்ற கடல்போல் ஒடுங்கி உயிர்ப்படங்கி பசையற்ற பால்போலாகி வசையற்ற மைந்தனே என நின்று ஒருகடிகை சென்ற பிற்பாடு சுவாசம் வந்து கண்மலர் திறந்து, சில வார்த்தை சொல்லுவதானான்.

என்று வைசம்பாயனர் சொல்லி வர, ஜெனமேஜெயராஜன் சிரமேற் கைகுவித்துச் சிந்தை வருந்தி, என் சுவாமி! எங்கள் மூதாதையாகிய காண்டீபருக்கு எங்கள் பாட்டன் அபிமன்னனிறந்த சங்கதியை ஒருவரும் அவருக்கு சொல்லாதிருக்க, சபாமண்டபத்தில் வந்தவுடனே எங்கள் மூதாதை தெரிந்துக் கொண்டாரென்று தேவரீர் சொல்லி வந்தமையால், அவருக்கெப்படி தெரிந்தது? அதை விளங்க அடியேற் குணர்த்தவேண்டுமென்று கேட்க, வைசம்பாயனர் சொல்லுகிறார்: ஓ நிதிசேர் நிரைசார் மதிசேரரசே! கேளும்; இந்த யுத்தந் தொடங்கிய நாள்முதலிதுவரையிலும் யுத்தகோலங் கொள்ளும்போது, பிள்ளையுந் தந்தையும் ஒருவர்க் கொருவர் அலங்காரம் பண்ணிக் கொள்ளுகிறது வழக்கம். பின்பு விஜயகாண்டீபம் விற்றூணி வீரகண்டாமணி முதலிய யாவற்றும் விசயனாகிய தந்தைக்குத் தன் கையா லணிந்து தேரிலேற்றிவிட்டுத் தானுந் தேரேறிச் செல்லுகிறது. சாயங்காலந் தந்தை வருவதற்கு முன்னமே, தான் வந்து தேர்விட் டிறங்கிக் கவச முதலிய ஆயுதங்களைக் கழட்டிப்போட்டு நித்திய விதிகளை முடித்துக் கொண்டிருந்து, சுவேதவாம் புரவி பூட்டிய தேர் வந்தவுடனே எதிர்கொண்டோடி கருதினோர்க்குப் பெம்மானாகிய தன்னம்மானைப் பணிந்து, அர்ச்சுனராஜனுடைய திருவடியைப் பிடித்துத் தனது முடியில் வைத்துக் கொண்டு வீரகண்டாமணியை அவிழ்த்து தந்தைக்குக் கைகொடுத்து தேர்விட்டிறக்கி, தந்தை தனக்கு முத்தமிட்டவுடனே, வில்பாணக்கூடு முதலிய ஆயுதங்களையும் ஆயுதச் சாலையில் வைத்து கரம் கால் சுத்திசெய்து கொள்ள ஜலந் தருவித்துக் கொடுத்து, பின்பு தந்தசுத்தி செய்துகொண்டு இளைப்பாறிய போது, தன்னுடைய யுத்தத்தில் முதலான சங்கதிகளைச் சொல்லி, தந்தையினுடைய சாதுரிய விநோத வீரப்பிரதாபச் சண்டைகளைக் கேட்டுச் சதாகாலமும் அண்டையிலிருந்து அனந்தங் கொள்ளும்படியாகிய விசித்திரன், எப்பேர்ப்பட்ட காலங்களிலும் இந்த மரியாதை தப்பாதிருக்கும்படியான ஒப்பில்லாப் புத்திரன், தேரைவிட்டுத் தாளிறங்கும் போது வழக்கத்திற்கு முழு விரோதமாய் மகன் வராமற் போனதால், இருந்தால் வருவானே? ஆதலால், இல்லையென்னும் முறைமையினாலும், புத்தி சூக்ஷமத் திறமையினாலும் தெரிந்து கொண்டான். அல்லாமலும், சில கேள்விகளாலும் நிச்சயம் அறிந்து கொள்ளத் தொடங்கினான்.

### அபிமன்னனிறந்த தறிந்துகோண்ட அர்ச்சுனன் இராஜமண்டபத்துள்ள அரசரைச் சினத்தல்

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! இப்பால், இவ்விராஜ மண்டபத்துள் பிரமுகாளையெல்லாம் அர்ச்சுனன் பார்த்து, எல்லாத் திறங்களுந் தெரிந்த அரசர் முதலாகிய யாவரும் வந்து நெருங்கியிருக்க, என்னுயிரிலுஞ் சிறந்த புத்திரனாகிய அபிமன்னனொருவன் இல்லாமலிருக்கவேண்டிய குறையென்ன சொல்லுங்களென்று கேட்க, அதற்கு எவர்களும் உத்தரஞ் சொல்லாமல் அசைவில்லாச் சித்திரப் பாவையைப்போல் திகைத்து நிற்க, அதுகண்டு சத்தியமாக மைந்தன் இறந்துபோனானென்று வித்தகனாகிய விஜயன் சந்தேகமில்லாமற் றெளிந்து, அடா மகனே! மகனே! என்றலறி மண்மேல் விழுந்து, மடமட கடகடவென்று புரண்டு, மதியழிந்து நிறைகுறைந்து சுகஞானம்விட்டு அபிமானங் கெட்டு மரணமூர்ச்சை யடைந்து மறுபடியும் எழுந்து, கூர்மையாகிய வேலாயுதத்தால் கிழிபட்ட உடல்போற் பதைபதைத்து, நமது குமாரனுக்கும் ஆபத்து நேர்ந்த தல்லவாவென்று திடிதிடித்து, வடவா முகாக்கினியும், சடராக்கினியும், திரிபுராக்கினியும், வனசராக்கினியும், பெரியோர்களின் சாபாக்கினியும்

உரியோர்களின் கோபாக்கினியும், தவத்தினர்
தாபாக்கினியும், பதிவிரதைகளின் கோபாக்
கினியும் ஒன்ருகச் சேர்ந்துவந்து பற்றிக்
கொண்ட தன்மையைப்போல் வயிறெறிந்து,
வயிற்றைப் பிசைந் தடித்துக்கொண்டு, மார்
பில் மோதி வாயிறைந்து மண்ணைத் திழாவி,
தண்ணீர் பெருகுங் கண்ணிலறைந்து, தாழ்
ந்து வீழ்ந்து இருந்து சொற்றடுமாறி சுபாவ
மறந்து, துயர்க்கடலில் மூழ்கி, பள பள பள
பளவென்று கரத்தால் முகத்தில் மோதிக்
கொண்டு, அப்பா என் காதலனே! அடா என்
கண்மணியே! எனக்குப் பிள்ளையாகப் பிறந்து
பெருநூலெல்லா முணர்ந்து கலியாணம்
பண்ணிக்கொண்டு காரியவஸ்தனுகித் திரிந்து,
இந்தப் பூமியில் வாழ்ந்த வாழ்க்கை இம்
மட்டோ? இதற்கோ இந்தப்பாடு? இவ்வள
வுக்குத்தானே இந்தப் பீடு? நீ எந்தவிதமாய்
மாய்ந்து போயினையோ? ஐய்யோ! மகனே!
மகனே! என்று ஏங்கிவாடி ஏதுந் தோன்ரு
மல் நின்ருர்.

அப்படி நின்றவன் மறுபடியும் தன் பக்
கத்தில் நெருங்கி நிற்கும் வேந்தர்களைத் திரு
திருவென் றெரியும் வெகு கோபப்பார்வை
யுடன் தெழித்துப் பார்த்து, சுவாலா மாலிகை
யாகிய ஆலகால விஷம்போற் சீறி, கண்களில்
இரத்தநீர் வழியும்படியாக வழுது, என்
காலவழித் தோன்றலாகிய அபிமன்னனைப்
போர்க்களத்தில் இறக்கவிட்டு நீங்கள் உங்கள்
உயிருக் குறுதி தேடிக்கொண்டு உரம்பெற்று
வந்துவிட்டீர்களா? ஆ! ஆ! யோக்கியர்களே!
இந்த உலகத்தில், உங்களுக் கொப்பாகிய
பேர்களுமுண்டோ? இது மகா உத்தமம். மகா
உத்தமம். என்றுரைத்துப் பின்னும் நோக்கி,
வீர-கோர-சூர-தீர - ஆர - பார - விற்றிறம்-
வாள்திறம் - கதைத்திறம் - வேற்றிற முதலா
கிய இத்தியாதி திறங்களையும், மறங்களை
யும், அறங்களையு முடைத்தாய்ப் புறங்
களையும் போர்த்தொழிலிற் சிறந்து, சகல
விருதும் வில்லும் பரணமுங்கொண்ட தாஷ்
டீகமாகிய நீங்க ளெல்லோரு மிருந்தும்; என்
னுயிர்க் கிசைந்த குமாரனுகிய அபிமன்னனைக்
காக்காமற் போனீர்களே; நீங்கள் தானு தரும
ராஜனுக்குப் படைத்துணையாகச் சாதிக்கிறே
மென்று வந்தவர்கள்? நீங்களென்ன போர்
புரியப் போகிறீர்கள்? ஐயையோ! உங்களுக்கு
ஆயுதமேன்? வில்லேன்? கணைகளேன்?
தேரேன்? தேரேன்? முழநீளம்பேரேன்? வீரக்

கொடியேன்? மணியணிப்பணியேன்? வீர
கண்டாமணியேன்? முத்தணிக் குடையேன்?
ரத்தின முடியேன்? நான் கெட்டிக்காரனென்
னுஞ் சாமர்த்திய மொழியேன்? முனையேன்?
என்முன் நிற்காதீர்கள். அப்பாற் போங்கள்
என்று இப்படி பற்பல விதத்தாலும் பன்னிப்
பன்னிப் பேசி, சீ! சீ! உங்களுக்கு இதுவொரு
வீரமோ வென்று ஏசி, தீப்பொறி பறக்குஞ்
சிவந்த கண்ணைத் திரண்ட வெள்ளமெனப்
பெருகுங் கலுழியதிகரித்து, மறைக்கத் துக்
கித்து, தனக்கெதிரில் நின்ற வீமன் முதலாகிய
சகோதரர்களையும், மற்றுமுள்ள பரிசன மன்
னர்களையும் அண்டக் கூடாத அருந்துயரத்
தோடும் பார்த்து, என்சந்ததியை முடித்தவன்
ஆரென்று அந்தரம் படபடவென் றதிரும்
படி அதட்டிக் கேட்டான்.

தருமராஜன் அர்ச்சுனனுக்கு நடந்த
வாறுகூறி நலிவுறல்

அப்படி கேட்ட இந்திரன் குமாரனுகிய
அர்ச்சுனனுக்கு எவரும் மறுமொழி சொல்ல
நாவெழாமல் வாயில்லா ஊமைபோற் பயந்து
அயர்ந்து அடங்கி ஒடுங்கி நின்ருர்கள். அந்
தச் சமயத்தில், தம்பி கேட்கும் கேள்விக்கு
உத்தரஞ் சொல்லாமற் போனல் புத்திர
சோகக் கோபத்திலும் மேலாகிய வேகமுண்
டாமே யென்றெண்ணி, தர்மமே ஜெயஞ்
சத்தியமே நித்திய மென்னுங் கடப்பாட்
டினையுடைய தருமராஜன் சொல்லுகின்ருர்.
கேளப்பா என்னுயிருக்கு உற்றதுணையாகிய
சகோதரனே! இன்று காலமே நாமெல்லோ
ரும் படைமுகத்தில் நிற்கும்போது, சஞ்
சத்தகருந் திரிகர்த்தருஞ் சண்டைக்குவந்து
அழைக்கத் தென்றிசை நோக்கி நீயும் ஸ்ரீ
கிருஷ்ணமூர்த்தியுஞ் சென்றபிற்பாடு, துரோ
ணுச்சாரியரால் வகுத்திருந்த பத்மயூகத்தை
உடைத்து உள்நுழைவதற்கு எவர்களாலும்
கூடாத நிர்வாகத்தினுல், நமது படைகள்
தயங்கினுர்கள். அந்தவேளையில், மன்னர்யாவ
ரையும் உன்னைப்போல் வெல்லத்தக்கவனுகிப்
பொன்னைப்போ லிலங்கி நின்ற மைந்த
னுடைய வல்லபங்களை யுணர்ந்த நான் அவ
னைப் பார்த்து, அப்பா என்னிளஞ்சிங்கமே!
உன்றந்தையு மிவ்விடத்தி லில்லாமையால்,
நீயேபோய் செயிக்கவேண்டுமென் சொல்லி
விடுத்தேன். பாவியாகிய என் வார்த்தையை
கேட்டவுடனே சற்றுந் தரியாமற் சென்று,
இன்று அவன் செய்த வீரத்தை நானென்ன

வென்று சொல்லப்போகிறேன்? என்னையனே! போர்க்கோலங்களெல்லா மமைந்து தீர்க்க தண்டம் பண்ணிக்கொண்ட புத்திர பாக்கியனைத் தூக்கி எடுத்தணைத்து ஜெயம்பெறக் கடவையென்று என் வாக்கினாற் சொல்ல, அம்மாத்திரத்தி லாக்கினைச் சக்கரம்போற் புகுந்து எதிரிகள் சேனைகளையுங் காரியவஸ்தர்களையுந் தாக்கி, ஒருவரையும் உள்ளே நுழையவொட்டாமல் இருப்புச் சுவரென அமைத்திருந்த சக்ரயூகத்தைப் பிளந்து, சூசிகாயூகத்தை சிதறச்செய்து, துரோணாச்சாரியர்-கர்னன் - கிருபாச்சாரியர்-துரியோதனன் - அசுவத்தாமன் முதலாகிய பலகோடி வீரர்கள்வந் தெதிர்த்து தடுக்க, அவர்களையெல்லாம் ஒருதரமல்ல பலதரமும் நையக்கொட்டிப் பையப்பையப் பயந்து புறமிட்டோட முடுக்கியடித்து, மேலாகிய நால்வகைச் சேனைகளையுந் தரையிலரைத்து, இரத்தவெள்ளத்திற் கரைத்து, இலக்கண குமாரன் - பதாதிவேந்தன் - சல்லியகுமாரன்- மரகத ராஜமைந்தன் முதலாகிய அநேகம் ராஜ புத்திரரானையெல்லாங் கொன்று, கர்னனாலும் துரோணராலும் வில்லுந் தேரும் அழியப்பெற்றனன்.

அந்தக்ஷணம் உக்ரமத்துடன் அந்தச் தேர்ச்சக்கரங்களைக் கையிற்கொண்டு பூமியில் நின்று, யாவருந் துன்பப்பட்டஞ்சி எஞ்சியிளைத்துத் துஞ்சும்படியாய் முடித்து, துச்சனியுந் தானுங் கதாயுத்தஞ் செய்து, அவனையும் முடிசிதற அடித்துத் தள்ளி, தான் சிந்தை மயங்கி மெய்தளர்வுடன் சோர்ந்து நிற்குஞ் சமயத்தில், அங்கு பதுங்கிக்கொண்டிருந்த சயத்திரதனைவன் சிகரதண்டமென்கிற கதாயுதத்தால் அடிக்கவே: என்னருஞ் செல்வச்சிங்கம் வீழ்ந்துவிட்டானடா என்னப்பனே! இந்த அனியாயத்தை என்னென்று சொல்லுவேன்? நான் ஆருடனே சொல்லி ஆறுவேன்? என்னெய்ப்பில் வைப்பாயிருந்த ஏந்தலுக்கும் ஒருகுறை வருமோவென்று எண்ணியிருந்தேனே: பவ்வெண்ண மண்ணாய் விட்டதே: ஐயையோ!! இனி நானென் செய்யப்போகிறேன். ஒப்பில்லாத என் கண்ணாளன் சக்ரயூகத்தை உடைக்கப்போகும்போது, நாங்கள் யாவரும் உடற்சாயை நிழலைப்போற்றொடர்ந்து, நாலுபக்கத்திலும் படர்ந்து, விடாமலடர்ந்து புகுந்து அமர்புரிந்தோம். அந்த வேளையிலும் கயிலாசபதியின் வரம்பெற்ற ஊரத்தினாற் சயிந்தவன் வந்து வளைந்து, கரஞ்சுற்றிய சரந்துற்றிட சிரந்தத்திடு புரம் பற்றிய நெருப்பைப்போற் றிகைக்கச்செய்து, அபிமன்னனுக்கு எங்களைத் துணையாகவொட்டாமற் குறுக்கே கொன்றை மாலையினைவீசி, இதுவரையிலும் நாங்கள் பிழைத்த பிழைப்பெல்லாம் வீண்பிழைப்பென்று எம்போல் ஒத்த ராஜதீரர்கள் பேசி, நகைக்கும்படியாய் ஏசி, எங்களைச் செய்யவேண்டிய அவமானமெல்லாம் பொழுதுபோமட்டுஞ்செய்து மடக்கினான். ஆனபடியினாலே, போர்ச்சிங்கமாகிய அபிமன்னனுக்கு உதவி செய்யக்கூடாமற் போச்சுது. அதனால் நமது புத்திரன் வீர சொர்க்கமடைந்தான். சயித்திரதனென்னும் பாவியினுடைய உபத்திரவ மில்லாவிட்டால் நாங்களும் அவனை தனிமையில் விடமாட்டோம்; அவனும் எங்களைவிட்டு ஒண்டியாய்ப் பிரிந்து இறக்கவு மாட்டான்; என்னசெய்வோம். ஓ இந்திரசுதனே! வினைப் பகுதியினால் தெய்வம்சோதித்த சோதனையல்லது வேறல்ல. அப்படியிருக்க, ஏதோ நாம் முகத்தில் விழித்த நல்லவேளையினால், நமதுபேரில் இரக்கமும் அன்பும் வைத்து, தங்களுடைய இராச்சிய முதலாகிய புத்ர பௌத்ர களத்ராதிகளையும் விட்டு நமக்குப் படைத்துணை வந்து, நமது பக்ஷத்திற் பிராணனையும் அலக்ஷியமாக எண்ணிக்கொண்டு போர்புரியாநின்ற இந்த அரசர்களை வெறுக்கவேண்டிய தில்லையே: ஐயையோ!! பாவம்: பாவம்: அவர்களென்ன செய்வார்கள்? தம்பி அர்ச்சுனா! நமக்கு வரவேண்டியதாக வந்த ஆபத்தைக்குறித்து அயலாரை நோவதிற் பிரயோசன மில்லையென்று தருமராஜன் சொல்லினார். அதைகேட்ட நரனானவன், புத்ரவாஞ்சையாகிய கடலில்மூழ்கி, புத்ர சோகமென்னும் நெருப்பு மேலேமேலேறி, புத்ர வின்ப நீங்கிய பூமியிற் பாய்ந்திறக்கத் துணிந்தவனைப்போல், அடா என்னருமைத் திருமகனேயென்று பிராணவாயுவடங்கி பூமியிற்சோர்ந்து வீழ்ந்தான்.

## அருச்சுனனை கண்ணனுந் தருமராஜருந் தேற்றியாற்றுதல்

இவ்விதமாய் மூர்ச்சையாகி விழுந்த தனஞ்செயன் சற்றுநேரம் பொறுத்துக் கொஞ்ச மூர்ச்சைதெளிந்து, மறுபடியுந் தலையெடுத்துப்பார்த்து, அண்ணா! சிந்து தேசாதிபனா நமது மைந்தனைக் கொல்லுவதற்கு வந்திசைந்தானென்று கேட்டு, விரதனையுடைய தர்மராஜன் முன்சொன்ன வார்த்தைகளெல்

லாம் உருக்கக்காச்சிய இரும்பு நாராசம்போல் அர்ச்சுனனுடைய செவியிலேறத் துடிதுடித்துப் பதைபதைத்து உள்ளும் புறமுஞ் சுடச்சுட வேகும்போது; புத்திரசோப மென்னும் விஷமானது தலைக்கேறி, அதை ஆற்றுவதற்குப் போதுமான மருந்து அந்தத் தருணத்தி லில்லாமையால், தலைமயக்குற் றிறந்தவனைப்போல் விசாலமாகிய தன் அறிவு சோர்ந்து, மீண்டும் பூமியில் மூர்ச்சித்து வீழ்ந்தான். இப்படி அயர்ந்து வீழ்ந்தது ஒருதரமல்ல. அநேகந்தரமாக விழ்ந்து, புரண்டு-உருண்டு-அரண்டு-மிரண்டு-கதறி-அலறும்படியாகிய சமயத்தில்; ஸ்ரீகிருஷ்ணபகவானவர் தேரைவிட்டு குதிரைகளை அவிழ்த்துக் குதிரைச் சாலையிற் கட்டிப்போடச் சொல்லி, அர்ச்சுனனுடைய ஆயுதங்கள் முதலிய வெல்லாவற்றையும் ஆயுதச்சாலை சேர்ப்பித்து, இராஜமண்டபத்திற்கு வந்து விஜயனுக்குப் பின்புறத்தில் நின்றார். அவ்விடத்தில் தருமராஜன் முதலிய சகோதரர்களெல்லாந் தலையை யுடைத்துக்கொண்டும், மார்பில் அரைந்துக்கொண்டும், முகத்தில் மோதிக்கொண்டும் மண்மேற் புரண்டு கொண்டும், இப்படி பலபலவிதமாய்க் கூவும்படியாகிய பான்மையைக் கண்டு, தானும் அவர்களுக்குமே லெண்பங்கதிகமாக மட்டில்லாத் துன்பத்தைக்காட்டிக் கண்ணீர் குளமாகும்படியா யோட்டினார் சகலமுந் தெரிந்த கள்வராகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியானவர். ஓ ஜெனமேஜெய மகாராஜனே! ஒருவன் மெய்நித்திரைகொண்டா லெழுப்பலாம். பொய்நித்திரைகொண்டா லவனை யெழுப்ப ஆரால் கூடும்? இவ்வாறு துயரப்பட்ட பரமாத்மனைத் தேற்றுவா ரொருவரு மில்லாமையால், தனக்குத்தானே கொதிப்பாறிய வெந்நீர்போலாறி, தன்னுள்ளே தானே தேறி உறுதிகொண்டு, தருமராஜன் முதலியபேர்களுக்குத் தயிரியஞ் சொல்லி, சண்டையென்று ஏற்படும்போதே சாவுபிழைப்பு இரண்டுமுண்டென்று சொல்லியிருந்தேனே: ஓ தருமநந்தனரே! எல்லாந் தெளிந்த நீர்தானே இப்படி விசனப்பட்டால் இன்னமிருப்பவர்கள் என்னபாடு படமாட்டார்கள்? ஏதோ தெய்வச்செயல் இப்படியாச்சுது; போனது போச்சுது. மிஞ்சிப்போன காரியத்திற்கு நாமென்ன செய்யலாம்? இந்தமட்டும் போதும். இனி விசனத்தை நிறுத்துமென்று சொல்லி சோர்ந்து தரையிற் வீழ்ந்துகிடக்கிற அருச்சுனனிடத்திற்குத் தருமராஜனுங் கபடநாடகருஷ்திராவதாரியாகிய தானுஞ்சென்று, கிரீடியின் புயத்தை இருவருந் தழுவி எடுத்து மார்போடணைத்து, பன்னீர் முதலிய வாசனைகளை முகத்திற்றெளித்து, ஆலவட்டங்களாலுபசரித்துக் களையாற்றித் தேற்றினார்கள்.

## அருச்சுனன் புலம்பல்

அப்போது ஒரு குளத்தில் அநேகம் யானைகள் போயிறங்க அதனாற் கலங்கிக் குழம்பிய சேறுபோல் மனமறுக்கத்தாற் கலங்கிக் குழம்பி வாடிய அர்ச்சுனன், அந்த யானைகள் நீங்கியவுடனே குழம்பிக் கலங்கிய சலமானது தெளிவாகின லெப்படியோ? அப்படிபோற் றெளிந்து கண்திறந்து பார்த்து, தமயனையும் மைத்துனரையுங் கட்டிக்கொண்டிரங்கி, முகத்துடன் முகம்வைத்து, தோளுடன் தோளணைத்து, அவர்கள் கரமலரைத் தன் கண்மலரி லொத்திக்கொண்டு வாய்விட்டழத் தொடங்கினான். "போரினிற் றுணைவரோடும் புயங்கவே தன்னைவென்று, மாரெனக் களித்தநீயே யென்றுளம் பரிவுகூர்ந்தே, னேருனக் கொருவரில்லாய் நீகளம் பட்டாயாகி, லாரினிச் செருக்கவல்லா ரைவருக் குரியதோவே. சச்கரம் பிளந்தவாறுந் தரியலருடைந்தவாறுந், துக்கர மானகொன்றைத் தொடையலால் வளைத்தவாறு, மெய்க்கரந் துணிந்தவாறு மீண்டுமுந் தடர்த்தவாறு, முக்கரமுடனென் முன்னே யோடிவந் துரைசெய்யாயோ. பன்னக வரசன்பெற்ற பாவை மாமதலைதன்னை, முன்னுற முனையிற் றேற்றேன் மூர்க்கனேன் முடியாதுண்டோ, வுன்னையு மின்றுதோற்றே னுன்னுடன் றொடர்ந்தவாரா, தின்னமு மிருந்துதையா வென்னுயிர்க் குறுதியுண்டோ. கதிரவ னுதிக்கு முன்னே கண்டுயி லுணர்த்தி யென்னை, யதிரமாக் கோலங்கொள்ளா னறிவுறுத் துரைக்க வல்லாய், முதிரமர் முருக்கிமீண்டே னித்தனைப் போதுமுன்போ, லெதிர்வரக் காண்கிலேனிங் கில்லையோ வென்செய்தாயோ. தந்திர மியாவுமின்றித் தனித்துநீ தானேபோர் செய், தந்தரமமையு மென்றிவ் வகலிடந் துறந்தவையா, மைந்துட னம்மைக்காண மகன்மகன் வருகிறானென், றிந்திர னேவ வுன்னை யிமையவ ரெதிர்கொண்டாரோ. தேரழிந் தெடுத்தவில்லுஞ் செங்கதிர் வாளுமின்றி, யோருதவியும்பெரும லொழிந்துயிரழிந்தமைந்தா, போரமருடற்றி நீரிப் பொன்னகரழிந்தபோதுன், பேரம ராண்மைகேட்

டுப் பிதாமக னென்சொன்னுனே. மற்புயக் குன்றிலொன்று வாளுடன் 'வீழப்பின்னும், பொற்புறப் பொருதநீயப் பொன்னுல கடைந்தகாலை, யற்புதப் படைகள்வல்லா யபிமனே யமரருங், கற்பகக் காவும்வானிற் கங்கையுங் காட்டினுரோ. வளைத்தவின் னிமிராவண்ணம் வாளியான் மாவுந்தேருந், துளைத்து முன் காலாள்ாகத் துரோணரைத் துரந்தவீரா, திளைத்தவெஞ் சமரினுெந்து தனஞ்சயன் சிறுவன்மேனி, இளைத்ததென் றிந்திராணி பின்னமு தூட்டினளோ.''

ஐயோ என் காதலனே! இந்தப் பாரதப் போரில் துரியோதனனையும், அவனுடைய தம்பிமார்களையும் ஜெயித்து, இந்தப் பூமியை எங்களுக்கும் பட்டங் கட்டி ஆளச்செய்யும் ஆண் சிங்கம் நீயென்று என்னுள்ளத்தில் ஆநந்தங்கொண் டிருந்தேனே; ஒப்பில்லாத் தீரமேருவாகிய சுப்ரதீபமே! நீ இதுகளை மறந்து போர்க்களத்தில் இறந்துபோ யிருப்பாயாகிற் சத்துருக்களை ஜெயித்து எங்களுக்குத் துணைசெய்யா நின்ற வல்லவர்கள் உன்னை விட ஆருமில்லையே; ஓ பாண்டவர்களுக்குரிய பாக்கியமே! உன் பெரிய தந்தையார் சொல்ல, அந்த மொழிக்குப் பின் வாங்காமற் செல்ல வல்லவனுகிய நல்லவனே! நீ சென்று சக்ர வியூகத்தைப் பிளந்த சாதுரியமும், பத்மவியூகப் படைஞரெல்லாரும் பயந்து பறக்கக் காட்டிய பராக்ரமும், கொன்றைமாலையால் உனக்கொருவரு முதவாதபடி சயித்திரதன் செய்த வஞ்சமும், வேதபுங்கவனுகிய சேனுபதி துரோணுச்சாரியும், அங்க தேசாதிபனுகிய அதிரதன் கர்னனும், அலக்கழிந்து கலக்கமுற்று புறங்கொடுத்தோட ஆட்டிய விக்ரமும், இன்னும் பொருந்திப் பொரக்கருதிய வாளாயுதமுதற் பல ஆயுதங்களைக் கொண்ட வய வேந்தர்களெவரும் மரணமடைந்து வானிலேற வாட்டிமாட்டித் தொலைத்த வல்லமையும், வீர முஷ்கரத்துடன் என்னெதிரோடி வந்து நின்று, என் முகமலர, என் காதுகுளிர, என் மனமகிழ, என் புயம்வீங்க, புளகாங்கமுற, உன் ஜெயத்தைச் சொல்லமாட்டாயோ? சிறுவனே! என்னத்தனை பாவி இவ்வுலகத்திலொருவரு மிரார்களடா ஏந்தலே!

ஐயோ என்மகனே! நாகக்கன்னிகையின் பிள்ளையாகிய அரவானை முதற்பலியாக எட்டாம் நாள் யுத்தத்தி லிழந்து, இரும்பைப் போன்ற வன்மனத்தனுகிய யான் இறக்காமலிருந்தேன். இன்றைப்போரில் உன்னையுந் தோற்றேன். உன்னுடன்கூட மடியாமல் இன்னமும் இருக்கின்றேன். என்னையனே! கல் நெஞ்சமாகிய எனக்குஞ் சாவுவருமோ? நான் உனக்குரிய தந்தையல்லவடா உத்தமனே! அடா செம்மலே! சூரியோதயமாகுமுன்னமே என் பக்கத்தில் வந்து வெகு பக்குவமாய் நித்திரையி லெழுப்பி, என்னுடன்கூட நித்திய விதியை முடித்துக்கொண்டு, அதிரதக்கோலங் கொண்டு அமருக் கெழும்படியாய் என்னைத் துரிதப்படுத்தி, அறிவுறுத்தி ஜெயப்பிரதான நயங்களெல்லாஞ் சொல்லி என்னைத் தேரேற்றி விடுத்து, நீயும் யுத்தகோலங் கொண்டு தேரேறி எனக்குச் சமதையாய் புறப்பட்டுப் போர்முகம் புகுந்து, வீரர்களை யெல்லாம் அதோகதிப்படுத்தி, சாயங்காலம் பாசறைக்கு முன்னதாக வந்து ரதம்விட்டு கீழே யிறங்கி, எனக்கெதிரோடி வந்து வணங்கி எனக்குக் கைகொடுத்திறக்கி, என்னுயுத முதலிய கவச கிரீடங்களையும் வாங்கிவைத்து, ஜெயவிஜயங்களைப் பேசிக்கொண் டிருக்கும் நல்லவனே! அடா வல்லவனே! நான் சஞ்சத்தகர் திரிகர்த்தர் முதலானவர்களை யெல்லாம் வென்று ஜெயத்துடன் வந்து இத்தனைப் போதாகியும், வழக்கப்படிக்கு இன்னும் உன்னை எதிர்வரக் காணகிலேன். நீ இவ்விடத்தி லில்லையோ? அல்லது நான் வந்தது உனக்குத் தெரியாதோ? வேறுவேலையா யிருக்கின்றையோ? அடா என் வழித்தோன்றலே! இன்னும் என் செய்கிறுய்?

ஐயோ? என் செல்வனே! நமக்கு அளவிறந்த சேனைகளிருந்தும், அன்புடன் படைத்துணை வந்த அரசர்க ளிருந்தும், நீ தனிமையாகச்சென்று போர்வென்று இந்தப் பூலோக வாழ்க்கையை வெறுத்து, மேலோக வாழ்க்கையை விரும்பிப்போய் விட்டையோ? என் புதல்வனே! நீ அந்தப் பொன்னுலகை நாடிப் போகும்போது, நமது பேரப்பிள்ளை வருகிறுனென்று தேவேந்திரன் மகிழ்ந்து, தேவர்களை யனுப்பி உன்னை யெதிர்கொண்டு அழைத்து வரும்படிக்கு உத்தரவு செய்தாரோ? அந்தப் பிரகாரந் தேவர்கள் வந்து உன்னைக் கண்டு புகழ்ந்து, வரிசை முதலிய மரியாதைகளுடன் உபசாரஞ் செய்தார்களோ? இல்லையோ? எனக்குத் தெரியப்படுத்தடா என் தனயனே! பத்மவியூகமத்தியில் தேரருந்து, கையிற் பிடித்த வில்லும் முறிந்து, வாளுங்

கையு மொடிந்து, மனிதர் முதலிய ஒருதவி
யும் இல்லாமல் உயிரொழிந்த நந்தனனே!
பெரும்போரைப் பொருதி யாவரையும் புறங்
காட்ட வாட்டி நீ அந்தப் பொன்னுலகத்திற்
குப் போனபோது, உன்னுடைய பேராண்மை
யைக் கேட்டு உன் பாட்டனாகிய தேவேந்
திரன் என்ன சொன்னார்? அடா என்
சேயே; அடா மலையோங்கிய மற்புய மைந்
தனே! சத்துருக்களை ஜாடாவாய்ப் போக்கி
அழகாகிய புகழைக்கொண்டு சொற்கலோ
கஞ் சேர்ந்த தோன்றலே! உன் பாட்டனாகிய
தேவேந்திரன் தேவர்களை விடுத்து, என் பேர
னுக்கு இந்த இந்திரபுரியின் சிறந்த வளத்
தைக்காட்டி வாருங்களென்று சொல்லி யனு
ப்ப, அந்தப்படியே அமரர் உன்னை அழைத்
துக்கொண்டு போய்த் தேவர் கோவிலும்,
இந்திரபுரியும், அரம்பா ஸ்திரீகளின் வீதி
யும், கற்பகக்காவும், ஆகாய கங்கையும், தேவ
சிங்காசனமும், நிதிக்ஷேபமும், அயிராவத
மும், உச்சை சிரவ முதலாகிய இந்திரபோகங்
களை யெல்லாங் காட்டினார்களா? நீ பார்த்
தையா? என்னையனே? எங்கள் தந்தை வந்
திருந்தபோது, அவருக்கு விடுதி எங்கிருந்
தது? காலகேய நிவாதகவசாளைச் செயித்தது
எவ்விடம்? அவர்கள்பதி யெங்கே யென்று
விசாரித்தையா? வெள்ளையானையின் பிடரியி
லேற்றி இந்திர லோகங் காட்டினார்களா?

ஐயோ என் மதலாய்! சக்ரவட்ட யூகமத்
தியினின்று வளைந்தவில் நிமிராமல் ஓயாமாரி
போல் வாளிகளேவி, தேர்களையும் குதிரை
களையும் - யானைகளையும் - போர் வீரர்களையும்
பொடிப்பொடியாகப் போக்கி, சேனாபதியாய்
மேலாளாகி வந்து நின்ற துரோணரைக்
காலாளாகத் துரத்தித் துரத்தித் துரந்த திடர்
சூரா! திரைசெறிந்த கடல்நிறைந்த திர்வாகசாலியாய்
போற்கூடிய சேனைச்சமரில் நிர்வாகசாலியாய்
யுத்தஞ்செய்து வெற்றிபெற்று, உடல்வருந்தி
நொந்து இளைத்து வந்தான் கிரீட குமாரனா
கிய நமது பேரனென்று, இந்திராணியான
உன் பாட்டியார் மிகுந்த உபசாரத்துடன்
தேவாமிர்தங் கொண்டுவந்து உனக்கு ஊட்டி
உன்னுடைய ஆயாசத்தை நீக்கினாளா?
அடா சிறுவனே! அல்லது நீ வருவது தெரி
யாமல் அஜாக்கிரதையா யிருந்தார்களா?
அல்லது நீ வருவது தெரிந்தும் அல
க்ஷயமாய் இருந்தார்களா? இல்லை லக்ஷயம்
வைத்தார்களா? ஒரு வாக்கியம் எனக்குத்
தெரியச் செய்யடா என் சேயே! என்று பற்
பலவாறு வாயில்வந்த வண்ணமெல்லாஞ்
சொல்லிச் சொல்லிக் கதறிக் கதறிப் பதறிப்
பதறிக் குரலோசையுடன் முறைகூறி ஒப்பனை
யிட்டழவும், தர்மராஜன், வீமசேனன்,
நகுல சகாதேவர் முதலிய சமஸ்தமானபேருந்
தனித்தனியே மண்ணைத் துழாவிப் புலம்பித்
தலைமேற் கையைவைத்துத் தடதடவென்று
அறைந்துகொண்டு கண்ணீர்விடுத்துக் கலக்
கங்கொண் டயர்ந்தார்கள். அந்தக்காலத்தில்,
தானுங் கூடியவரையிலும் விசனப்பட்டவர்
போற்பட்டுப் பின்பு ஒருவிதத்தாற் றேறினவர்
போற் றேறினார் கறுத்த திருமேனியையுடைய
திருமாலானவர்.

### வியாசபகவான் மீண்டும் வந்து பாண்டவரைத் தேற்றுதல்

அப்போது முன்னந் தருமனாதியரைத்
தேற்றிச்சென்ற வேதவியாசமுனிவர் அருச்
சுனன் படுந்துயருக் கிரங்கினவராய் மீண்டுந்
தற்செயலா யங்கெழுந்தருளி, ஓ பாண்டவர்
களே! "தாயரொடு தந்தையர்க டாரமொடு
தனையோர், தூயதுணை வோர்களொடு சுற்ற
மெனநின்றோர், மாயையெனும் வல்லப மயக்
குறு மயக்கா, லாயவுற வல்லதவ ரார்முடிவில்
யார்யார். வந்துபிற வாதமனை யில்லைமூலை
மாறித், தந்துபரி யாமலொழி தாயர்களு
மில்லை, புந்தியுணர் வற்றவர் புலம்புறிவதல்
லா, லிந்தவுல கத்தறிஞர் யாதினு மயங்கார்.
உம்மையினும் யாருறவுணர்ந்தில மினிப்போ,
மம்மையினும் யாவருற வாவரென வறியே,
மிம்மையி னிகழ்ந்தவுற வித்தனை யிரங்கேன்,
மும்மையு முணர்ந்துவரு மூதறிவினீரே" ஓ
அறிஞர்களே! தெரிந்தவர்களென்றுந் தெரி
யாதவர்களென்றுஞ் சொல்லுவது என்னத்
தினாலென்றால், நல்லறிவுள்ள பெரியோர்க
ளுக்கு நன்மைவந்தாலும், தீமை வந்தாலும்,
இரண்டினிடத்திலும் ஒரே நிதானமாக யிரு
ந்துபலனை அனுபவிப்பார்கள். புல்லறிவுள்ள
கயவர் துன்பம்வந்தாற் புரண்டு புரண்டு
இரங்கியும், இன்பம் வந்தால் திரண்டு திர
ண்டு நெருங்கியு மகிழ்வார்கள். ஆதலாற்
கற்றவர்க ளென்றும், நற்றவர்களென்றும்
பேர்பெற்ற விக்ஞானவான்கள் எதுகாரியத்
திலுங் கண்ணீருகுத்துக் கவலைப்படார்கள்.
மேலும், தாய் - தந்தை - தாரம் - தனையர் -
சகோதராள் - சார்ந்த சுற்றத்தார் - சிநேகி
தாள் - இன்னுமிப்படி பலவிதமாகிய பந்

துக்க ளென்பதெல்லாம், வல்லமையுடைய மாயா சம்பந்தம்வந்து மயக்கிவைக்கு மயக்க மல்லது, யோசிக்குமிடத்தில் ஆருக்கார் துணை? ஒருவருக்கொருவ ரென்ன சம்பந்தம்? அழியாம லிருந்தவர்கள் யார்? இது வீணாகிய பழியே: எல்லாம் அழியத்தக்க வழியே.

அன்றியும், நாம் வந்துபிறக்காத இடங்களில்லை. விஸ்வாசமாய் நம்மை எடுத்தணைத்து மாறிமாறிப் பால்கொடுத்து வளர்க்காத தாய்களுமில்லை. பிறத்தலும், இரத்தலும், உடலுக்குச் சகஜமாதலால், இதைத் தெரிந்து கொள்ளாமல் விவேகமில்லாதவர்கள் புலம்பி வாடிப் புத்தி கெடுவார்கள். விவேகவான்களாகிய அறிஞர்கள், இந்தக் கர்மபூமியின் நல்வினை தீவினையென்னும் அனுபவத்தைக் குறித்து நேரிடுஞ் சுகதுக்க முதலான விதங்கள் யாவற்றிலும் மயங்கமாட்டார்கள். அல்லவென்று மயங்கினாலும் என்னலாபம்? இனி வரப்போகிற பிறப்பில் நமக்கு ஆர் உறவாகத் தக்கவரோ? அதை யறியமாட்டோமே: போன பிறப்பில் நமக்கு ஆர் உறவாயிருந்தனரோ அதுவும் அறியோம். இப்படியாயிருக்க, இப்போது இவ்விடத்தில் நமக்குறவென்றிருந்த இவர்களுக்காக இவ்வளவு இரக்கப்படவேண்டுமோ? இரங்கவேண்டாம்; (கன்றும் பசுவுங் காடேரிமேய்ந்தால், கன்று வழி கன்றுதான். பசுவழிப் பசுதான்) என்று பழமொழிச் சொல்லுவ தறியீர்களா? ஓ இம்மை, அம்மை, உம்மை என்னு மும்மையும் உணர்ந்திருக்கின்ற முதிர்ந்த அறிவினையுடையவர்களே. உங்கள் பிள்ளையானவன், வெற்றி பெறும்படியாகிய பலவித வல்லபங்களுடன் வேந்தர்களுக் கெதிர்சென்று வென்று ஜெயங்கொண்டான். இப்படி பூமியில் இன்ப துன்பத்தை அனுபவிக்கவேண்டி சிலநாளிருந்து, அனுபவிக்க வேண்டியதெல்லாம் அநுபவித்து விட்டான். இன்னமெத்தனை நாளைக் கிருந்தாலுங் கடைசியிற் கிடைக்குமோ கிடைக்காதோவென்று சந்தேகாஸ்பதமாய்க் காணப்போகிற நற்கதியை இன்றுபகலிற்றானே கண்டான். நல்ல ஆண்மிக்கையையும் பகழினையும் படைத்த மைந்தனைக் குறித்துக் கல்யாணம் போல் மனமகிழ்ச்சி யடையவேண்டியதை விட்டு, குடிப்பேர் - குலப்பேர் - கோத்திரப் பேரைக் கெடுக்குங் கோஜாப்பிள்ளைக் கழுகின் றதைப்போ லழுகிறீர்கள். ஐயோ! என்று சில வேதரகசிய வார்த்தைகளை மொழிந்து, அவர்களுடைய துன்பத்தையும் இரக்கத்தையும் ஒருவாறாக நீக்கி ஆசீர்வதித் தெழுந்தருளினார்.

## அருச்சுனன் அக்கினிமூழ்க யத்தனித்த போது இந்திரனாகிய அந்தணனாற் றடைப்பட்டுச் சபதஞ் செய்து கொள்ளுதல்

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! "புத்திரரிலாவிடர் பொறுத்திடலு மாமோ" என்றபடி, எத்தனைபேர் வந்து தேற்றியும் அர்ச்சுனனுக்குப் புத்திரசோகம் விடாமல், மேலும் மேலும் பெருகுதலால் என்னசெய்வான்? தன்றுயரத்தைத் தணித்துக்கொள்ள வேறொரு முகாந்திர மில்லாதவனாகித் தன் தம்பியரோடு விரைவில் அழல் மூட்டுங்களென்று ஆக்யாபித்தான். அதுகேட்ட மத்திரை குமாரர்கள் தமயன் சொல்லைத் தடுக்கக் கூடாதவராகி உடனே அக்கினி மூட்டுவிக்க, அதுகண்ட அர்ச்சுனன் எத்தனைமித்திரர் எத்தனை விதமாய்த் தணிவுகூறித் தடுக்கினுங் கேளாது, இவ்வில்லோடு என்னுயிரையும் மாய்ப்பேனென்று ஒரே வுறுதியாய் நின்றான். அப்போது துழாய்மாலை யணிந்த தூயோனாகிய மாயோன் இந்திரனை நினைத்தார். உடனே அவ்விந்திரன் முன்பு அழலின்கண் மூழ்க அந்தணன் வடிவமாய் நின்ற அக்கோலத்தோடு தற்செயலா யிவ்வர்ச்சுனனெதிரில் வந்து நின்று, ஓ மகாராஜனே! எனது புத்திரனிறந்த சோபத்தால் யான் அக்கினியில் மூழ்கி இறக்கத் துணிந்த போது, எனக்கு எவ்வளவோ நீதி வசனங்களைக்கூறி என்னிறத்தலைத் தவிர்த்தநீ, இப்போது உன் புத்திரனுக்காக அக்கினியில் மூழ்கத் துணிந்து நிற்பது முறைமையோ? ஆயினும் என்னைத் தடுத்ததற்குரிய முன்னதாகச் சொல்லிவிட்டுப் பின்பு, உன்னிஷ்டம்போல நடந்துகொள்ளுக வென்று சொல்லலும், அர்ச்சுனன் பதிலுத்தர மொன்றுஞ் சொல்லமாட்டாதவனாகி அசைவற்ற மரம்போல் நின்று, தான்கொண்ட அவ்வெண்ணத்தில் நின்றுமாறி, இருகண்களிலும் நெருப்புப் பொறி கட்டிக் கட்டியாய்க் குபீர்குபீரென்று குங்கிலியம்போட்ட அக்கினியைப்போற் பறக்கவெழுங் கோபாக்கினியால் தேவர்கள் முதலிய யாவருந் திடுக்கிட்டுத்தியங்கி உரத்துக் கூவி, இந்த சபையிலிருக்கும் மேலோராகிய முனீஸ்வரர்கள் ராஜராஜர்கள் முதலாகிய எல்லோரும் அறியும்படியாய் நான் சத்தியமாகச்

சொல்லுகின்ற சபதத்தை யாவருமிருந்து கேளுங்களென்று சொல்லுகிருன். "சிந்துபதியாகிய செயத்திரதனைத்தே, ருந்தமரினுளே யுருமேறென வுடற்ரு, வந்திபடு மவ்வளவினுவிகவரேனேல், வெந்தழலின் வீழ்வனிது வேதமொழிகண்டீர். இன்றபிமன் வாளமரின்னுயிரிழக்கக், கொன்றவனை நாளையுயிர் கோறல்புரியேனேல், மன்றிலொரு சார்புற வழக்கற வுரைக்கும், புன்ருெழிலர் வீழ்நரகு புக்குழலுவேனே. மோதமக னென்மகன் முடித்தலை துணித்த, பாதகனை நாளெதிர் படப்பொரு திலேனேற், ருதையுடனேமொழி தகாதனபிதற்றும், பேதைமக னெய்துநெறி பெற்றுடையனுவேன். சேயனைய வென்மதலை பொன்றவமர் செய்தோன், மாயமுன டர்த்துவய வாகைபுனையேனெற், ருயர்பசி கண்டுநனி தன்பசிதணிக்கு, நாயனைய புல்லனுறு நரகிலுறுவேனே. வஞ்சனையி லென்மகனை யெஞ்சமுன் மலைந்தோ, னெஞ்சமெரி யன்னமவர் னேர்பொருதி லேனேற், றஞ்சமென வடைந்தவர் தமக்கிடர் நினைக்கு, நஞ்சனைய பாதகர் நடக்குநெறி சேர்வேன். வினையிலென் மகன்றனுடல் வேறுசெய்வித் தோனைக், குனி சிலையு னாளையுயிர் கோறல்புரி யேனேல்,மனைவியுயிர் வீயநன் மகன்மனைவி கையாற், றினையளவு மோர்பொழுது சீவித்த னுவேன்."

ஓ மித்திரர்களே! இந்தப் பதின்மூன்று நாட்போரில் என்மகனுகிய அபிமன்னனுக்கு உதவித் துணையாக நின்றபேரைத் துணைபோக வொட்டாமல் தடுத்தும், அவர்களுடைய வல்லபத்தை யழித்தும், என்து கண்மணியான அபிமன்னுவைக் கதையினு லடித்துக்கொன்ற சிலைவீரனுகிய சிந்துராஜ குமாரன் சயிந்தவனை, நாளையப்போரில் நானே முனைந்து பொழுது போவதற்கு முன்னே அவன் தலையை வெட்டித் தள்ளுகிறேன். இது சத்தியம்: சத்தியம்: நாளையப்பொழுதுக்கு அவனுயிரை வாங்காமற் போவேனுகிற் கொடுமையாகிய இத்தீயிற் விழுந்திறப்பேன் இதுவே வேதவாக்கியம். மேலும் இன்று புரிந்த சண்டையில் என் மகனுகிய அபிமன்னனுடைய பிராண னிறக்கும்படியாய்ப் பத்மயூகமத்தியில் விடுத்து, அவனுக்கு உதவி போனவர்களைத் தடுத்து, வஞ்சனையாற் போர் கொடுத்து நின்ற அச்சிந்துதேசனை நாளைய தினத்திற்குள்ளே அவன் தலையை நீறுபட வாங்காமற் போவேனுகில், ஞாயஸ்தானமான யிடங்களிற் பக்ஷபாதமாய் லஞ்சம் பரிதானத்திற்கு இச்சை வைத்து ஒரு சார்பாக் வழக்கு தீர்க்கும் அற்பஜீவனஸ்தானாகிய அயோக்கியர் விழும்படியான நரகத்தில் நானும் புகுந்தழுந்தக்கடவேன். சுப்பிரமண்யக் கடவுளுக்கொப்பாகிய என் குழந்தை அபிமன்னு பத்மயூகத்தை ஜெயித்துத் திரும்பி வரும்போது விடாமல் மடக்கி, விரும்பிவந்த படைத்துணைகளை வீறவொட்டாம லடக்கி, என் மகன் உயிரழியும்படியாய் அடமலர் செய்த துரியோதனனுடைய மைத்துனனை, நாளைய சமரில் மாய்த்து வெற்றிமாலை யணியாமற் போவேனுகில், பெற்றதாய் தந்தையர் பசியால் வருந்தி வாதைப்பட பத்தினி முதலிய பரஸ்திரீகளுடன் சந்தோஷ சம்போக சையோகங்களை அனுபவித்து உலகமெய்க்கத் தான்தர்ம பரவுபகாரங்களைச் செய்து புகழ்பெற்று, அவர்களிறந்த பிற்பாடு கோடியாந்தரஞ் செலவழித்துக் கருமமுதலிய காரியங்களைச் சம்பிரமாய் நடத்தி மகிழும் நாய்க்கு ஒப்பாகிய அற்பர்கள் நடந்துகிடந்த நரகத்தில் நானும் விழக்கடவேன்.

அன்றியும், ஆயுதங்கொண்டு மோதி சேதிக்காநின்ற அமர்க்களத்தில் என் மகனுகிய அபிமன்னு முடியும்படிக்குச் செய்தசயிந்தவனென்னும் பாதகனை, நாளையப் பொழுதில் நான் எதிர்த்துக் கொல்லாமல் போவேனுகில், தாய்தந்தையரையும், ஆசாரியரையும், அண்ணனையும் எதிர்த்துப் பேசி, அவர்கள் சொல்லிய வார்த்தையைத் தள்ளித் தகாத மொழிகளைப் பிதற்றிய பேதை மக்கள் எந்த துற்கதி பெறுவார்களோ? அந்தக் கதியில் நானும் போகக்கடவேன். விந்தை தங்கும் புயத்தோனுகிய எனது மைந்தனைச் சிந்தை வருந்தச் செய்ததுமல்லாமல், துணை வந்தவர்களையும் நொந்துபோகச் செய்த துர்ச்சலை கணவனுகிய துஷ்டனை நாளையப்போரில் நஷ்டப்படுத்தாமற் போவேனுகில், சகோதரமாகிய அண்ணன் தம்பிகளில் ஒருவரையொருவர் வஞ்சித்துக் கஞ்சிக்கலைய விடுத்துப் பெரியவர்கள் வைத்த சொத்துக்களைபோக்கி அசத்திய வாதிகளாய்த் தூறிச் சத்துருவினிடத்திற் சேர்ந்து மித்துருபேதஞ்செய்து சாதிமானஞ் சமயமான மில்லாமல் தனிமையில் இருக்க நினைத்துக் குடும்பத்தைக் கலைக்குஞ் சற்பனைக்காரர்கள் விழும் நரகத்தில் நானும் போகக்கடவேன். போர்வஞ்சகத்தால் என்மக னிறக்

கும்படியாய்ச் செய்த செயித்திரதனும் அவன் தந்தையாகிய சிந்து ராஜனும் நொந்தழியும் படியாய் நாளையதினம் அமர்புரிந்து கொல்லு கின்றேன். அப்படி கொல்லாமற் போவேனு கில், அடைக்கலமென்று பொன்னை பொருளை வைத்தவர்களையும், அபயமென்றுவந் தடுத்த பேர்களையும், ஆதரவற்ற ஏழைகளை மோசஞ் செய்து அனியாயங்கண்டு, அவர்களை எதிரிட்டுக்கொண்டு அவர்களுக்குத் துயர் விளைத்துப் புறத்தியார் பொருளுக்கு இச்சை வைத்துக் கொண்டிருக்கும் விஷயத்திற் கொப்பாகிய அற்பர்கள் போகாநின்ற அருநரகில் நானும் சேரக்கடவேன்.

பருத்த கதைகொண்டடித்து என்சுதனை வதைசெய்த படுபாவியை நாளை நானே முடிக்கிறேன். அப்படி துடிதுடிக்க முடிக்காவிட்டால், கூலி முதலியதைக் கொடாதவரும், குளம், ஏரியிற் றண்ணீர் விடாதவரும், கோயிற் குளங்களை இடித்தவரும், நந்தவனச்சாலையை யழித்தவரும், நன்னீர்த் துறையைக் கெடுத்தவரும், நாவலர் சொல்லைத் தடுத்தவரும், நய வஞ்சகமா யடுத்தவரும், உணவில் நஞ்சைக் கலந்தவரும், உற்றாரைக் கெடுக்கப் புகுந்தவரும், குமரிமேற் றோஷஞ் சொன்னவரும், குடும்பத்தைக் கோளாற் கலைத்தவரும், பொய் சொல்லி வாழ்வை இழந்தவரும், புணர்ச்சியைச் சொல்லி மகிழ்ந்தவரும், தர்மமில்லா தறுகண்ணரும், கோபமுள்ள கொடியோரும், கொடுப்பதை விலக்கும் குருடரும், கொடுக்கிறேனென்று கொடாமற்போன திருடரும், கூத்திக் கிட்டுக் குரங்காகிய குடியரும், நல்லோர் பெரியோரை வணங்காத்தடியரும், பல்லோர் புகழுந் தர்மத்திற்கு இடையூறு செய்யும் பத்ரானமிடியரும், கைம்பெண்ணைக் கருதிய கடையரும், தன் பெண்ணை நாடிய சடையரும், மாமிவீட்டிற் சென்றிருந்த மடையரும், தெய்வமிகழ்ந்த சேதனரும், வையகம்பழிக்க வாழ்ந்தமாதனரும், குழவியை கொன்ற கோபியரும், பழகிவிடுத்தபாபியரும், தன்னைவிட்டுப் புறமனை நாடிய சழக்கரும், பொய்சாட்சி முதலியதைச் சொல்லி விலைகொடுத்து வாங்கும் வழக்கரும், பிச்சையிடாத லோபியரும், வைத்துக்கொண்டிருக்கும் ஆவியரும், இன்னும்பற் பலவிதமாகிய நீதிக்கு வழுவாக நடந்த பதிதர்கள் அடையுங் கதியை நானுமடைவேனென்று அந்தச் சபையிலிருந்தோர் யாவரும் நடுநடுங்கக் கூறினான்.

இவ்வண்ணமாக அர்ச்சுனன் சபதங்கூறி, தன் பக்கத்திலிருந்த ஒருவருடைய வில்லைப் பிடுங்கி, மடமடவென்று அவ்வில்லைவளைத்து, நறநறவென்று பல்லைக் கடித்து, கிடுகிடு வென்று லோகாலோகமுங் காலாகோலமாய்ப் பிதிரும்படியாய், இந்திரலோகம் எமலோக முதலிய அண்டங்களு மதிரும்படியாய் டங்காரஞ்செய்து, சப்தமேகமும், சப்தசமுத்திரமும், சத்ததீவும், அஷ்டகுலாசலமும் தாழ்ந்து பாதாளத்தில் வீழ்ந்துபோமென்று சொல்லத் தக்கதாய் வீரியம்பெற்ற பாரிய தேவதத்தத்தையெடுத்துப் பூரித்தான். இவன் தேவதத்த ஓசைக்குமுன்னே பத்துபங்கதிகமாய் மேலிடி விழுந்து பார்முத லிடிந்துபோனதைப்போற் பச்சைமேனி பரந்தாமனுடைய செம்பவள வாயில்நின்று அவர் பாஞ்சசன்யமும் முழங்கிற்று. அப்போது வீமன் முதலிய சகோதரானும், உற்றதுணை வந்த நரபாலர்களும், தங்கள் தங்களுடைய சங்கத்தொனியுங் கூடக் கலந்து முழக்கினார்கள். திரிபுவனங்களுஞ் சிதைந்ததென்று தேவர்கள் செவிடுபட்டுத் தியங்க, துரியோதனனுடைய படை முதலிய யாவருந் திடுக்கிட்டு பூமியில்விழுந்து மயங்க, ஏககாலத்தில் எல்லாருடைய சங்கமும் எண்ணற்ற பேராசைபோல் முழங்கியபோது, வளையப்போகிற காரியங்க ளின்னதென்று தெரிந்துக்கொள்ளும் விதரணையுடைய தருமராஜன், ஆபத்பாந்துவாகியும் தீனதயாளுவாகியு மிராநின்ற முகுந்தனைப் பணிந்து சொல்லுகிறார்.

ஐயனே! உமக்கு இது மெத்தப் பெருமையாயிருக்கிறது: எடுப்பார்க்கைக் குழந்தையாயினீர். இதென்ன காரணமோ? இதென்ன கண்காட்சியோ? நான் பட்ட பாடெல்லாம் போதாதா? எரியுங்கொள்ளியை ஏறத்தள்ளு மாறுபோல் இப்பேர்ப்பட்ட கேள்வியுங் கேட்க இருந்தேனல்லவா? இருக்கட்டும்: இங்கே வாரும். என்று தனிமையில் அழைத்துக் கொண்டுபோய்க் கண்ணீர்விட்டு, ஓ என்னையனே! நாளுக்குநாள் துன்பங் குறைவில்லாமல் ஒன்றுபோனால் ஒன்று மேலிட்டுவருவதேயன்றி வேறில்லை. நான் பிறந்தவேளையோ? என் வினையோ? தெய்வமே நானென்று மறியேன்; இருக்கட்டும். கூர்ங்கணைகோண்ட தம்பியான விஜயன், முன்பு ராஜசபையிற் கூறிய சபதங்களெல்லா முடியாமல் உனக்கோ? எனக்கோ? என்றிருக்க, எங்களை ரட்சிக்கவந்த துரோபதை இன்னுந் தலையை விரித்துக்

கொண்டு முடியாதிருக்க, இதுகளையெல்லாம் யோசிக்காமல் இப்போது இந்தச் சபதங்களை மொழிந்தானே. இவன் சொல்லிய சபதப்படி நாளைமுப்பது நாழிகைக்குள் சயித்திரதனை முடிக்கக் கூடுமோ? ஓ எங்களுக்குரிய இஷ்டமே! ஓ நாங்கள் பட்ட கஷ்டமெல்லாந் தீரும் படியாய்ச் சகாயஞ்செய்த கருணைக்கடலே! நாளையப்போரிற் சபதம் நிறைவேறாமல் அர்ச்சுனன் அக்கினிக்குழியில் விழுவானாகில், அப்பால் நாங்களுயிர் பொருந்தி வாழத்தக்கதோ? ஏதேது: இடிவீழ்ந்திறந்த பாம்பைப் போல் நாங்கள் நாலுபேரும் அர்ச்சுனனுடனிறப்பது நிச்சயம். ஓ பச்சைவண்ணனாகிய பரனே! அந்தச் சயித்திரதனைக் கொல்லுகிறேனென்று மொத்தமாக ஒருவார்த்தை சொல்லாமல், நாளைய முப்பது நாழிகைக்குட் பலசாலியாகிய சிந்துதேசனைத் தப்பாமற் கொல்லுகிறேனென்று சபதஞ்சொன்னானே? ஐயா! இந்தச் சேதியைக்கேட்ட துரியோதனன் தன்னுடைய அளவிறந்த சேனையை யூகமாக நிறுத்தி, அந்த யூகத்தில் இந்தச் சிந்துராஜனை இருத்தி, அதிரதத்தலைவர்களைக் காவலாக அழைத்துக், கெட்டிபத்திரஞ் செய்து போட்டால், திரிமூர்த்திகளுங் கிட்டி நெருக்கக் கூடாதே? அப்போது இவன் சபதம் எப்படியாம்? ஓ ஆதியேயென்று தருமராஜன் புகன்று, கோபாலனுடைய அடிமலர்மேல் வீழ்ந்து, ஹரிஹரி! முரஹரி! நரஹரி! அஞ்சினோம்: அஞ்சினோம்: என்று இருகரத்தையும் விரித்துக்கெஞ்சினார். அப்போது கஞ்சமலர் மடுவில் முதலைவாய்ப்பட்ட குஞ்சரத்திற் கருள் செய்த கொண்டல்வண்ணனன் தஞ்சமென்று தருமராஜனை மார்போடணைத்து, "இந்திரன் காக்கினு மீசன்காக்கினுஞ், சிந்துவின் தலைவனைத் தேவர்காக்கினுங், கந்தனிற் சிறந்தநின் கனிட்டனாளையே, மைந்துறப் பொருதவன் மகுடங்கொள்ளுமே" என்று சொல்லி, ஓ தருமபூபதி! நீர் ஒன்றுக்குமஞ்சாதீர்: அஞ்சாதீர்: என்று அவருடைய மனவருத்தத்தைத் திருத்தினார்.

இப்படியிருக்க, முன்பு எல்லோருஞ் சங்கத்தொனிசெய்து டங்காரம்பண்ணிய பேரொலியானது, ஆகாயத்தில் நிறைந்த தேவர்களுடைய செவிகளிற் புகுந்ததனால், கும்மென்று செவிடுபட்டுப் பயந்து, இந்திரப்பிரளயம் வந்ததோ? அல்லது ஊழிமடங்கலென்னும் உகாந்தகாலம் நேரிட்டதோ? என்று நடுநடுங்கிச் சற்றுநேரஞ் சந்தேகப்பட்டு, மறுபடி நிதானித்து, இந்திரகுமாரனாகிய அர்ச்சுனன் தன்னுடைய பிள்ளை நிமித்தமாய்ச் சபதஞ்செய்து முழக்குகின்ற சங்கொலியென்று மனந்தேறிச் சஞ்சலத்தை விட்டார்கள்.

அக்காலத்திற் பணப்பாம்பைப் பதாகையிலெழுதிப்படைத்த துரியோதன ராஜனிருந்த பாசறையிற் போர்த் திறங்களைப் பேசிக்கொண்டிருந்த பல பல வீரர்களெல்லாம், பாண்டவரிருக்கும் பாசறையிலிருந்தெழுந்த மீசுரமாகிய பேரொலியைக் கேட்டு பூமியிற் றலைநட்டு; தீமை விளைந்தது. திம்மை திரும்பிப் போங்கால மூளைத்தது என்று திடுக்கிட்டு, சரிதான்: சரிதான்: பலம்பெற்ற ஆதி வராகமூர்த்தியைப் போன்ற அபிமன்னனுடைய சாதலைக்கேட்டு யாவரையும் அடங்க முடிக்கிறேன் என்று அர்ச்சுனன் புறப்பட்டான். இனிக் கெஞ்சினாலும் விடான். அவனை தப்பி மிஞ்சினாலும் விடான் என்று பலர் அஞ்சினார்கள். மீண்டுந் துரியோதனனுடைய முகக் குறிப்பையும் மனோபீஷ்டத்தையும் அறிந்த நால்வகைச் சேனைசைனியங்களையுடைய சிலவய வீராள் ஒன்றாகக் கூடி, இப்படி சபதங் கூறிவருகிற அர்ச்சுனன் முதலிய பாண்டு புத்திராள் பேரில் எதிர்த்து ஒருகை பார்ப்போம். அடடா! அவன்தானா ஆண்பிள்ளை? நாமெல்லோருஞ் சாண் பிள்ளையோ? போங்காணும் போம். நீங்களெல்லாம் வீண் பிள்ளைகளே என்று சொல்லியெழுந்த அனேகம் வீரர்களுடனே சிலரெழுந்து ஒரு கூச்சலிட்டு, உச்சாகமுள்ளவராய் அப்போதே யுத்தஞ் செய்யப் புறப்பட்டார்கள். அவர்களை சிலர் இச்சென்று பொய்த்தும்மல் காட்டித் தடுத்து, இப்போர்ப்பட்ட வீரங்களை யெல்லாம் நாளைக்குக் காட்டுங்களப்பாவென்று பரியாசம் பேசினார்கள். இப்படி அநேகவித சவுரிய பராக்கிரமங்களைப் பேசியும், பேசுவோரை யேசியும், ஏசுவோரைத் தடுத்தும், தடுப்போரை யடுத்தும், இப்படி பலவிதமாய் யாவருந் தத்தளித்துக் கொண்டிருந்தார்கள்.

### அர்ச்சுனன் சபதத்திற்கஞ்சிய சயிந்தவனை துரியோதனன் தேற்றுதல்

அன்றிராத்திரி அயிராவதத் தலைவனுடைய பிள்ளையாகிய அர்ச்சுனன் கூறிய சபதச் சங்கதிகளை யெல்லாஞ் சிந்துதேசாதிபன்

தூதர் சொல்லக்கேட்டு மனம் நொந்து, ஐயோ! (உண்ணுமற் றின்னுமல் உடலுப்பி சங்கொண்டு ஊரம்பலமானேன்) என்னும் பழமொழிக் கொப்பாகவும், (காக்கையேறப் பனம்பழம் விழுந்தது) என்னுங் காகதாளீய ஞாயம் போலவும், வீணுயென் றலையில்வந்து விளைந்ததே; நானந்த அபிமன்னனுடன் எதிர்த்து யுத்தம் பண்ணி யிருப்பேனே? நானெங்கு நின்றேன்? அவனெங் கிருந் தான்? (பண்டமொருபக்கம் பழியொருபக்கம்) என்பதுபோல், கடைசியில் நான்விட்ட கதை யினுல் அவன் கீழ் விழுந்தான். நான் பழிக் குட்பட்டேன். ஐயோ என் பாவமே! என்று பரதவித்துக்கொண்டு, மகரதோரண முதலிய வாழைகள் கட்டிய துரியோதன மகாராஜன் பொருந்திய ராஜசபைக்கு வந்து சில சொல் லத் தொடங்கினுன். ஓ சம்பத்தைப் பொருந் தியோரும், ஐம்பத்தாறு தேசத்தாரும் வணங் கும் பதத்தினையுடைய மைத்துனரே! அபி மன்னனுக்குத் துணைவந்தாரையும் தடுத்து, அவனையுங் கெடுத்தேனென்று அர்ச்சுனன் வெகுண்டு, நாளை முப்பது நாழிகைக்குள் என்னைக் கொல்லுகிறேனென்று சபதம் பண் ணினுனும்; அப்படி அவன் சபதம் பண்ணின படியால், இனி நானிவ்விடத்தி லிருப்பதி லென்ன பெருமை; ஒரு லாபமுமில்லை. நீர் செலவு கொடுப்பீராகில் இவ்விடம்விட்டு அவன் கண்ணுக் கெட்டாத தூரத்திற்போ யிருந்து நாளையப் பொழுதைக் கழிக்கிறேன். வெள்ளம் வருவதற்கு முன்னமே அணை கோலிக்கொள்ள வேண்டு மென்னும் முயற் சியை செய்துக்கொள்ளாம லிருப்பேனுகில், எனக்காக மும்மூர்த்திகளுந் துணைவந்து மாமிசங்களும் உதிரங்களும் நிறைந்த பகழி களை விடுத்துக் காக்கினும், இந்திர குமாரனு கிய விஜயன் வாக்கினுற் சொல்லிய சபதம் முடியாமல் விடாது; எப்படியும் முடியும். மூதல்வனே! ஈரேழுலகத்திற் சென்றாலும், இரையுங் கடலுள் மூழ்கினுலும், மலைக்குகை யில் மறைந்தாலும், தாயின் கர்ப்பத்துட் சார்ந்தாலும் தனஞ்செயன் கணை எப்படியுந் தேடிவந்து ஜாடிச் சாதிக்கும். அப்படி யிருந் தாலும், ஆசை வெட்கமறியா தென்பதுபோல் ஒருயோசனை யிருக்கிறது. அதனைச் சொல்லு கிறேன் கேளும்.

ஓ மகாராஜனே! உமக்கு நல்லகால மிரு ந்து, நாளை யொருபொழுது நான் தப்பிப் பிழைத்தால், அர்ச்சுனன் அக்கினியில் விழு ந்து இறந்துபோவான். அவனை பறிகொடு த்தபின் மற்ற நாலுபேரும் பூமியிலிரார்கள். அவர்களும் உடனே மடிந்துபோவார்கள். அப்பால், திரௌபதையும் மற்றுமுள்ள இஷ்டர்களும், நீரும் நாமும் இருந்து சுகப் படலாம். ஆகையால், எனக் கிப்பொழுதே விடை கொடுத்தருளும் என்று நாவறண்டு வாய் புலர்ந்து, கண்கலங்கிச் சொல்ல, அந்த வசனத்தைத் துரியோதனன் கேட்டுக் கலகல வென நகைத்து, ஓய் மைத்துனரே! (வெந்நீ ரென்பதற்குள் வீடு வெந்துப் போச்சுது) என்னும் பழமொழிபோற் காச்சுமூச்சென்று பேச்சறியாமற் பேசி, பீச்சிப் பீச்சென்று பெரும் பேதி கொள்ளுகிறீர். சீச்சீ! இது நெடுநாளைக்கும் பெரிய வச்சலல்லவோ? இரா ஜாதிபதியாகிய நீர் இப்படி நடுங்கவேண் டாம். உம்முடைய உயிருக்கொரு சேதமு மில்லாமல் வெற்றிபெற்ற என் தம்பிமார்களு டன் நானும் புறப்பட்டு உம்மைக் காக்கின் றேன். நீரெதற்கும் அஞ்சவேண்டாம் என்று விளம்பி மேலும் சொல்லுகின்றான். கேளும் சிந்து தேசாதிபனே! நம்முடைய சேனுதிபதி யாகிய துரோணுச்சாரியர் - கிருபாச்சாரியர்- சல்லியராஜன் - அங்கதேசாதிபன்-அசுவத்தா மன்-சீர்பெற்ற பூரிசிரா முதலாகிய அதிரதத் தலைவர்கள் முனைந்து, அதிவீர பராக்ரம புரு ஷத்தனமாக இருந்து காப்பாற்றும்போது, இச்சபதத்தை முடிக்க அர்ச்சுனனுலாகுமா? அல்லது சர்வசம்மாரியாகிய உருத்திரமூர்த்தி யால்தானுமா? சயிந்தவனே இதுவீண்பேச்சு. அந்த அர்ச்சுனனுனவன் சொன்ன சொற்படி உன் தலையை வாங்கப்போகிறதில்லை. ஆனுல், அவனுடைய வாக்கியங்கெடாமல் நெருப்பில் விழுந்திறப்பது உண்மையே: நான் சொன் னேன் நீர் நன்றாக யோசியும்; உமக்கு பயம் வேண்டாம். சுகமாக என்னிடத்திலிருமென்று சொல்லித் தேற்றினுன் வருவதறியாத துரி யோதனமகாராஜன்.

### துரியோதனன் துரோணராதியரோடு தனித்து தன் குறைகூறி வணங்க அவர்களவனை யேற்றித்து ஆதரங் கூறுதல்

இப்படியாக இராஜாதிராஜனுகிய துரி யோதனன் சயிந்தவனுடைய மனக்கொதிப் படங்கிச் சொல்லி, செவ்வரக்கைப்போற் சிவ ந்த கண்களையுடைய கர்னராஜனுடனும், சத் துருக்களை யோட்ட வளைக்குந் தனுவைத்

தாங்கிய துரோணாச்சாரியருடனும், பரந்த கடல் வளைத்த பாரைப்புரக்குஞ் சீரைப்பெற விருக்கும் அத்துரியோதனராஜன் சில வார்த்தைகளை தனித்துப் பேசுகின்றான். ஓ எங்கள் சுகத்தை தங்கள் சுகமாகப்பார்க்கின்ற இஷ்டர்களே! விஸ்தாரமாகிய நமது சேனைகளை இரு பிரிவாகப் பிரித்து, முன்னும் பின்னுமாகக் காவல்வைத்து, நாளை முப்பதுந் தனஞ்செயனைத் தலைகாட்ட வொட்டாம லடித்து, என் மைத்துன னென்னுஞ் சிந்து தேசாதிபனைக் காப்பாற்றும் வல்லமை யுங்களுக் குண்டாயிருக்குமாகில், அவனும் பிழைப்பான். திவ்யமான புகையுடன் பயத்தை யுண்டாக்கும் அக்கினியில் அர்ச்சுனனும் விழுந்திறப்பான். நாம் பலநாளும் பாடுபட்டது பெரிதல்ல. நாளை ஒருநாள் கொடிய போர் விளைக்கவேண்டியதில்லை. ஆதலால், நான் பலவாறுகச் சொல்லவேண்டிய தில்லை. வேளுக் கொப்பாகிய காளைப் பருவத்தையுடைய வேந்தரெல்லாரும் என் மைத்துனனைக் காருங்கள்; காருங்கள்; பகைவரை ஒருவகை பாருங்கள்; பாருங்கள் என்று ஆளைக் கொல்லும் மும்மத யானையும், ஆக்ஞா சக்கரத்தையு முடைய அரவக்கொடிக் கதிபனானவன், ஆபத்துவந்து அவதிப்படுவோரைப் பார்க்கிலுங் கோடிபங்கு அதிகமாய்க் குன்றித் தீர்க்கதண்டமாகப் பூமியில் வீழ்ந்து, எல்லோரையும் படைகள் பல்லோரையும் வேண்டினான். ஐயோ! குலத்திற்கும் - குணத்திற்கும் - தனத்திற்கும் - ஜனத்திற்கும் - கனத்திற்கும் - மனத்திற்கும் மிக்கவாகிய தக்க காரியங்களைப் பக்குவமாகச் செய்யாமல், (அக்கிராமங்கள் தலைதெரியாச் சன்னதங் கொண்டு, தனக்கீடாகிய முழுப்பாய் சுருட்டிகளையுஞ் சேர்த்துவைத்து, தானடங்கத் தன் குலம் விளங்க வென்றிராமல் தன்னை மறந்து நிலைகெட்ட சடையர் சார்வபூமராக விருந்தும், யாவரையும் பணிந்து அவதிப்படுங் கடையராவர்கள்) என்று சொல்லிய நீதிக்குச் சரியாய் நிலைகெட்ட துரியோதனன் நிலத்தில் விழுந்து வணங்கினான்.

அப்போது துரோணாச்சாரியர் துரியோதன ராஜனை அணைத்தெடுத்து, ஓ செந்தாமரைவாழ் திருமார்புயனே! பைந்தாரணியும் பாதர்ம்புயனே! இசைமகிழ்ப் புகழ்ப்பெற்ற விஜயனும் நீருந் தனுர்வேத முதலிய சாஸ்திரங்களைப் பேதமில்லாமற் சொல்லி வந்த என்னிடத்திற் கற்றுக்கொண்டீர்கள். ஆசானுக்கு வழிப்பட்டு ஒருசாலை மாணாக்கரா யிருந்து கற்ற வித்தைகள் யெல்லாருக்குஞ் சரியாயிருக்கவேண்டும். அந்த அர்ச்சுனனோ அசஞ்சலனாக் அசைவற்றிருக்கும் அறிவிற் சிறந்தவனாகையால், உலகமெல்லாம் அவனைப் புகழும்படியாக இருக்கின்றது. நீர் செல்வச் செருக்கினாற் சுதாவிற் பிரயாச மெடுத்துக்கொள்ளாமல், ஆள்களைக்கொண்டு ஆகவேண்டிய வேலைகளை முடித்துக் கொள்ளுகிறதினால், முன் கற்றுக்கொண்ட தனுர்வேதத்தைப் பாராட்டுத லில்லாமற் போச்சுது. இப்பவுமென்னே? (சித்திரமுங் கைப்பழக்கம்) என்னுந் தன்மைக் கொப்பாகவும், ஆடிய காலும் பாடிய நாவு மலைக்கஞ்சாது) என்பதுபோலும், இனியாவது நீர் சாரதி-குதிரை-சர்ப்பக்கொடி பூட்டிய தேருடன், வில்-நாணி-ஆயுத முதலிய கணைகளுங் கைக்கொண்டு திடசித்தத்துடனின்று போர் செய்யும் வல்லமை கொண்டு வருவீராகில், ஆளைக் கண்டவுடனே ஐவர் சேனைகளெல்லாம் வியாகூல மடையும்; இராஜ கூட்டங்களெல்லாம் நேச விசுவாசத்துடன் உம்மைப் புகழ்வார்கள். என் சொல்லை நீர் உண்மையாய் நம்பும். இவ்வுலகம் மெத்தப் பேதமையுடையது. அஃதெதினாலென்றால்? (படாடம்பயங்கரஹா) என்பதுபோல் எப்போப்பட்ட கடையனாகிலும் படாடம்பத்துடன் கொஞ்சமுறுக்காக நின்றால், யாவரும் அவனைக் கண்டு பயந்து மதிப்பார்கள்; நயந்து துதிப்பார்கள். ஆகையால் இன்று நீர் முனையவேண்டும்.

ஓ முடிவணங்கா மூர்த்தண்ய முதல்வனே! இதன்றியும், பார்த்தனும் பரந்தாமனும் வெற்றி பெறுவதற்கு வெகு பாடுபட்டு வந்தாலுஞ் சேதிக்கக்கூடாத ஒரு யூகமிருக்கிறது அந்த யூகத்தை வகுத்து நாளைப் போரில் துர்ச்சலை நாயகனை நான் காக்கிறேன். இப்போது நான் சொன்ன யூகத்தை என்னமோ வென்று எண்ணாதீர். பெருக்கமுள்ள நமது சேனையைப் பிரித்து அந்தயூகத்தை அமைத்து, இடியும் நெருப்புங் குடிகொண்டிருக்கும் நெடிய வில்லைப் பிடித்துவருகிற நானுக்கு எதிர் நானிற்பேனாகில், முப்பத்து முக்கோடி தேவர்களாலும் அவர்களுக்கரசாகிய தேவேந்திரனாலும், மும்மூர்த்திகளாலும் அந்த யூகத்தை முடிப்பதற்கும் உடைக்கமுடியாது. இப்பேர்ப்பட்ட யூகத்தின்பேரில், வாயு-தேயு இவ்விரண்டு மருவக்கலந்து தொடுக்குங் கணைகளை

யுடைய சவ்யசாசி என்னுஞ் சாமர்த்தியன் வந்து சண்டை தொடுக்கும் வில்முனைக் கெதிரில் நின்று போர்புரிய நிர்வாகமில்லாவிட்டாலும் இறந்து போகாநின்ற நமது படையணியைப் பொருந்தித் திடஞ் சொல்லிக் கொண்டு இருக்கத் தக்கதே யல்லது, இந்த இடத்தை விட்டோடிப் பிழைக்கிறேனென்று உம்முடைய மைத்துனனாகிய சிந்துராஜபுத்திரன் சொல்லத்தக்க வாக்கியம் அவருக்கு யோக்கியமல்ல; செத்தாலும் பிழைத்தாலும் சேனைகளுடன் செருமுகத் திருப்பதே தீரலக்ஷணம். திரும்பியோடிப் போவதே அவலக்ஷணம். இதல்லாமலும் தனுர்வேத முணர்ந்து, வில்லும் பிடித்து, உத்தமக்ஷத்திரியகுல முறைமையின்படி மனுவிக் ஞானத்தையும் அனுசரித்திருக்கும் வண்மையாளர்; துணிவுகொண்டு கோபத்துடன் சத்துருக்களைக் கொல்லுகிறதொன்று; அல்லது அவர்களால்தாங்களிறப்பதொன்று; இவ்விரண்டு மல்லாமல் வேறு நினைப்பு கொண்டு யுத்தகளத்திற் புகுந்து, ஐயோ! அப்பா! தெய்வமே என்று பெண்டு பிள்ளைகளுக்காகவும், தன்னுடைய பிராணனுக்காகவும் இரக்கப்படுவது இராஜகுலத்திற்பிறந்த எவர்களுக்கும் இல்லை.

ஓ இறையே! அழகிய கோட்டைக்கு அரணாகிய மதிர்சுவர்போலும், இந்த அவனியை வளைந்த ஆழ்கடற்போலும், அந்தக் கடலுக்கு முகத்துவாரமாகிய ஆறுகள் போலும் நிலைபெற்ற நம் சேனையை அணியாக நிறுத்தி, என்னாற் கூடியவரையிலுங் கொஞ்சமேனும் வஞ்சகமில்லாமல் உண்மையாகக் கார்க்கிறேன். ஒருகை பார்க்கிறேன். எமது காவலனே! ஆனால், அவர்களுடைய பாவ புண்ணியமெப்படி யிருக்கிறதோ? அதை நானறியமாட்டேன். ஓ வெற்றிமாலை தரித்த வீரசிங்கமே! நாளை முப்பது நாழிகையில் அர்ச்சுனன்சொல்லிய சபதங் கெடும்படியாய்ச் செய்வது நமது வேலையாயிருக்க, ஒருவேளை அவன் கூறிய வஞ்சினந் தப்பாமற் பெரியோர்களிடுஞ் சாபம்போல் வந்து வளைத்துக் கொள்ளுமாகில், விஜயன் வில்லுக்கு மேலாகிய வில்லையுடைய வல்லவர்களில்லை. சயந்தவனுக்குத் துணையாகச் சிருஷ்டி கர்த்தா வந்து தடுத்தாலும், அவன் சொல்லிய சபதப்படி முடியத்தக்கதே யன்றி வேறில்லை. ஆகிலும் வினையின் பயன் எப்படியோ? அதனை இன்னவிதமென்று அறியேன். குவலையா பீடமென்னும் யானைக் கொம்பைக் கைக்கொண்டு, மல்யுத்தம் செய்வதற்கு கம்சன் ஏற்படுத்திவிட்ட மல்லரைக் கொன்றருளிய தந்திரமாயன் நிகமும் சதையும்போல் அவர்களைக் கலந்துக் கொண்டு இருக்கின்றான். அவன் இருந்தபோதிலும், இன்னும் ஆரிருந்தபோதிலும், அச்சிந்து தேசாதிபனை வில்லினால் வெல்லும்படியானது அரிது அரிது. நீரெதற்கும் யோசிக்கவேண்டாம் என்று மறையோதுவற் கிறையாகிய துரோணாச்சாரியர் சொல்ல, பக்கத்திலிருந்த கர்ணமகாராஜன் பாய்ப் புலியாகிய தாய்ப் புலிபோல் யெழுந்து, நாளை விளையப்போகிறது இன்னதென் றுணராமல், அனேகம் அரசர்கள்கூடிய சமுகத்திற் சயிந்தவனைக் குறித்துப் பலவித சபதங்களைப் புகன்ற அர்ச்சுனனுடைய வாழ்நாளை நாளையப் போரில் முடித்துச் சிந்துதேசாதிபனுடைய ஜீவனை நானே ரக்ஷிக்கிறேன் என்று சொன்னான். உடனே துரியோதனராஜனுடைய தம்பியாகிய துன்மருடனானவன் துடிதுடித்து, நாளை யுத்தத்திற் சூரியன் மறைந்து இருள் வருகிறவரைக்குங் கொந்தலர்மாலைபூண்ட சிந்துராஜனைக் கல்வருஷத்தைக் கோவர்த்தனத்தாற் காத்த கமலக் கண்ணனைப்போல் நான் காக்கக் கடவேனென்றான்.

இப்பாற் சேனாபதி யென்னுந் துரோணாச்சாரியின் பிள்ளையாகிய அசுவத்தாமன் எழுந்து, "விரற்புனை கோதைவல் வில்லின் வல்லவர், குரற்படச் சேவகங் கூறுகிற்பரோ, வுரற்புரை நீட்டி யோடையானையாய், சரற்புயலானது தனிதஞ்செய்யுமோ, பொருதொழில் விதம்பட புரிந்த காலையில், விருதர்களிருவரும் வேறல் கூடுமோ, வொருதலை நின்றவனுடற்றும் வின்மையுங், கருதலன் வின்மையும் காண்டி காவலா" ஓ உரலுக் கொப்பாகிய அடியையும், வீரபட்டத்தையு முடைய பட்டத்து யானை யேறி பவனிவராநின்ற பார்த்திவனே! இக் குவலயமெல்லாஞ் சென்று திக்குவிஜயமாக வென்று வீரமாலை தரித்த வில் வல்லப முடைய வீரவேந்தர்கள் வாய்விட் டிரைந்து தங்களுடைய சேவகவல்லமையைச் சொல்லுவார்களோ? நல்ல வீராள் எக்காலுங் கூறார்கள். சரருதுவென்னும் மழைக்காலத்து மேகமானது யாதொரு முழக்கத்தையுங் காட்டாமலே, ஆறு-குளம்-ஏரி-முதலிய வெல்லாம் பெருகிப் புரண்டோடும்படியாய் மழை பொழி

வது உண்டு. அதுபோல் எப்பேர்ப்பட்ட வீரர்களானாலுந் தங்களுடைய வல்லபத்தைச் செய்கைகளாற் காட்டி, வெல்லுவோமென்னுந் திறத்தைக் குறிப்பாலுணர்த்த வேண்டியதே யன்றி வாக்கினாற் சொல்லப்படாது. மேலும், போராடும்படியாகிய வல்லபம் ஒருவிதமல்ல. அநேகங் கோடியாய் விதம்விதமாயுள்ளன. அப்பேர்ப்பட்ட அருமையான யுத்தத்தை இரண்டு படைவீரர்களும், யுக்தியோசனைகளி லொன்றுமில்லாமற் சபதஞ் செய்துகொண்டு, வயிறு வளர்க்க வாழ்நாள் காக்குஞ் சேனைகளுடன் திரண்டு முரண்டு சண்டை பண்ணினால்; ஒருவரையொருவர் வெல்லக்கூடுமோ? ஒருபோதும் நடவாது. ஆனதால் இப்போது தங்களுடைய ஆண்மிக்கையினால் ஜெயிக்கிறேனென்று சொல்லிய உண்மைத் திறமையையும், பகைவருடைய விற்றிறமையையும், நாளைப் போரில் நீரே பார்க்கப் போகிறீர் என்று அசுவத்தாமன் சொல்ல, அண்டையி லிருந்த காவலர்க ளெல்லாருந் துரியோதன ராஜனைப் பணிந்து, எங்களரசே! தேவரீர் ஒன்றுக்கும் யோசிக்கவேண்டாம். பொழுதுவிடியுமளவும் மனம் பொறுத்துக்கொண்டிரும்; பொழுது விடிந்த வுடனே பல்முகத்திலும் பற்பல விதமாகிய சமர்புரிந்து, பாண்டவர் முதலாகிய பாலரையும் வென்று, சயிந்தவனைக் காத்து நின்று ஜெயங்கொண்டு மீளுகிறோம். தேவரீருக்குத் தேசகால மாய்விட்டபடியால் விடைகொடுத் தருளுமென்று செலவு பெற்றுக்கொண்டு, யாவருஞ் சள்ளைவிட்டதென் றெழுந்து தங்கள் தங்கள் பாசறைக்குச் சென்றார்கள்.

கண்ணன் துரியோதனனறிய ராலோசனையைக் கேட்டு வருந்திய தருமன் கருத்தைத் தனஞ்செயனாற் றேற்றுதல்

இவ்விடத்தில் நடந்த இந்தச் சங்கதிகளை யெல்லாம் இறைவாநெறிபெற்ற தருமபுத்திர மகாராஜன் தூதராற்றெரிந்து, தனது விசாலமாகிய புத்தியில் தீர்க்காலோசனை செய்து, மணிவண்ணத் திருமேனி வாய்ந்த மாயன் முதலாகிய வல்லவர்களின் செவிகளிற் பொருந்தச் சொன்னார். அதனை நீலகிரி போன்ற நீலமேனியன் கேட்டு, அங்ஙனம் நிறைந்த அருட்கடல்போன்ற அரசர்கள் எல்லாரும் இது எவ்விதம்போய் எப்படி முடியுமோவென்று கவலைப்படாநின்ற கருத்தையுந் தெரிந்துகொண்டு, எல்லோருங் கொண்டிருக்குங் கலக்கந் தீரும்படிக்கு ஒருவார்த்தை நிதானித்து, விஜயனுஞ் செவி தாழ்த்திக் கேட்கும்படிக்குச் சொல்லத் தொடங்கினார். ஓ என்னுயிர்த் தோழமைகொண்ட இந்திரன் மதலாய்! நாளையுதயமுதற் சாயங்காலத்திற்குள்ளாகச் சிந்துபதியைக் கொல்லுகிறேனென அதி தீவிரத்தாற் கூறிய சபதங்களைக் கேட்டுத் துரியோதனன் முதலாகிய எதிரிகள் சயிந்தவனை நாளை முப்பதுங் காக்கும்படியாயோசித்துக் கொண்டார்களாம். எப்படியும் அவர்கள் காக்கவேண்டிய கடமையே. ஆதலால், துரோணாச்சாரியும், அசுவத்தாமனும், அங்கதேசாதிபனாகிய கர்னனும், வெல்லும் வல்லமையுடைய சல்லியனும், சகுனியும், துரியோதனனும், கிருபாச்சாரியும், கிருதவன்மனும், இன்னும் பலவான்களாகிய பல வேந்தர்களும், பிராணனுக்கொட்டிச் சயிந்தவனை எப்படியுங் காப்பாற்றுவார்கள். இது உண்மைதான். இப்போது நான் சொல்லிய பெருந்திறற்படை வீரர்களெல்லாரும் நாளை ஒருபொழுதுதானேயென்று முக்கி முரண்டிக் கட்டுக்கொப்பாயிருந்து காத்துக்கொண்டிருப்பார்களாகில், இவர்களை ஜெயித்த பிற்பாடல்லவோ நீ சிந்து தேசனுடைய முடிச் சிரத்தைத் தள்ளவேண்டியது. அப்பனே! இவர்களை யெல்லாம் வெல்லுவதற்குக் காலதாமசமாகிச் சயித்திரதன் முடி வீழ்வதற்கு முன்னே சூரியன் மேற்றிசையில் வீழ்ந்து விட்டால், நீ சொல்லிய சபதம் முடிவதெவ்வண்ணம்? தெய்வ சகாயமிருந்தால் மாத்திரம் உன் சொற்படி சித்தியாமேயல்லது, தெய்வ சகாயமில்லாமற் போனால், மற்றெவர்களாலுஞ் சொன்னசொற்படியே சோர்வற முடியுமோ? அப்படி முடிப்பதற்குத் தமது வல்லமையாவது உண்டோ? அர்ச்சுனா! மனுஷயத்தனம் என்ன பிரயோசனப்படும்? என்று கேசவன் கிளர்த்தியதை அங்கிருந்த அரசர்கள் யாவருங்கேட்டு, ஓ சர்வக்ஞனே! கிருபாநிதியாகிய தேவரீர் கிருபை செய்வீராகில், மலையாகிய புயத்தையுடைய எங்கள் விஜயனுக்கிது எம்மாத்திரம்? சந்தேகமில்லாமல் விஜயன் திரிலோகத்தையுஞ் செயித்து ஜெயம்பெற்று வாழ்வானென்று செயங் கூறினார்கள். அந்த வேளையில் அர்ச்சுனனைப் பார்த்து, நீ என்ன சொல்லுகிறா யப்பாவென்று காள்மேகத்திற் கொப்பாகிய கருணாநிதி கடாட்ச வீக்ஷண்யு

மாய்க் கேட்க, வில்லாளியாகிய விஜயகாண்டீபன் சொல்லுகிறுன்.

ஓ மெய்த்தெய்வமே! மன்மத சம்ஹாரியாகிய மகாதேவருடைய அருளும், எங்களை ஆண்டிரக்ஷிக்குந் தேவரீருடைய கிருபையும் பூரணமாக விருக்கும்போது, யாம் நினைத்த காரியம் முடிவதற்குஞ் சந்தேகமா? ஓ தீனதயாளுவே! நாளையப் போரில் அந்தச் சயிந்தவனைத் தேவேந்திரனேவந்து காத்தாலும், அக்கினிதேவன் படைத்துணையாக வந்து காத்தாலும், இயமன் உதவியாக ரட்சித்தாலும், சிருஷ்டி கர்த்தாவாகிய பிர்மா காத்தாலும், பரிசுத்தவான்களாகிய மகா முனீஸ்வரர்கள் துணை செய்யினும், இவர்களைத் தடுத்துவிட்டு மிகுந்த தேசசிற் சிறந்த திவ்ய ரத்ன மாணிக்கமமைந்த கிரீடந் தரித்த அச்சிந்துபூபதியானவனை நாளையப் பொழுதில் நாசப்படுத்துகிறேன். இவ்விதஞ் சொல்லிய என்னுடைய நாவினுக்கு எவ்வளவேனும் நடுக்கமில்லை. உள்ளபடி சொன்னேன் வள்ளலே! அடியேன் விள்ளும் மொழியைக் கள்ளமில்லாமற் கேளும். கணகணவென்று மணிகள் கட்டி குணகுணவென்று குணத்தொனிசெய்து ஜெணஜெண ஜெணவென அட்சய பாணங்களைத் தொடுக்கும் அழியா விஜய காண்டீபத்தைக் கைப்பிடித்திருக்கிறேன். எப்பொருட்கு மிறைவராகிய யெல்லா வல்லமையுமுடைய செந்தாமரைக் கண்ணனுன திருமாலாகிய உம்மைச் சாரதியாகவும் பெற்றிருக்கின்றேன். பாண்டவர்களில் நடுப்பிறந்தோனென்னும் பலங் கொண்டிருக்கிறேன். அமரர் முதலிய யாவரும் புகழச் சமர் புரியுந் தனஞ்செயனென்று தயிரியப்போர் பூண்டிருக்கின்றேன். இத்தன்மை வாய்ந்த மேன்மையைப் பெற்ற எனக்கு இந்தச் சபதம் முடியாமல் எப்படி தப்பிப்போம். ஒருகாலுந் தப்பாது. அப்படியே நான் சொல்லிய சபதவாக்குத் தப்பிப் போய் கடுந்தீயில்விழுந் திறக்குங் காலத்தில், சந்திர சூரியர் முதலாகிய நவக்கோள்களும், மன்னுயிர்கட்கு நிலைத்துவாழும் வாழ்நாட்களும், அண்டரண்ட பிர்மாண்ட பகிரண்ட லோகங்களும், எனக்குப் பிற்பாடு மிருக்கத் தக்கதோ? ஓ என்னிருதயமே! துரியோதனனிடத்திலிருந்து நாளைப்போரிற் சிந்து தேசனைக் காப்பாற்றும் போர் வீரர்களாகிய வில்லாசிரியன், அசுவத்தாமன் கர்ணன் இவர்கள் முதலானவர்களின் வில்திறம் வேல்திறம் முதலிய போர்த்திறத்தை நானறிவேன். பகையினுல் அவர்களுக்கு என்பேரி லிருந்தும், அன்பை மறந்து ஏதேது சொன்னுலும், இவன் சொன்ன சொல்லைத் தப்பாது முடிப்பான் முடிக்கானென்றும், சாமர்த்தியச் சமர்த்தேறிய என்னுடைய புயவெற்பின் திறத்தை இவ்வளவென்றும் அவர்களறிவார்கள் என்று சில வார்த்தைகளை விஜயன் சொன்னுன்.

## பாண்டவர் கண்ணனேடு யுத்தகளஞ் சென்று அபிமன்னனைப் பார்த்துத் திரும்புதல்

இவைகளை யெல்லாஞ் சோகந்தீர்த்த மேகமேனியான் விரும்பிக் கேட்டு, ஒப்பற்ற விற்பெற்ற வில்லாளி என்பதற்குத் தகுந்த நரனிவனேயென்று மகிழ்ந்து, அகத்தில் அன்புடையவரா யிருந்தும், முகத்தில் அன்பில்லாதவராய் அர்ச்சுனனைப் பார்த்து, ஓ தோன்றலே! அந்தமட்டும் போதும் நீ கெட்டிக்காரன் தான் வீணுன காரியத்தை விளைவித்துக்கொண்டாய். சும்மா யிருப்பவர்க் கெல்லாந் துயரமுண்டாக்கினை. என்று கடுகடுப்பாய்ச் சில வார்த்தைகளைக் கண்ணன் சொல்ல, அண்ணலாகிய அர்ச்சுனன் கேட்டுக் கோபமாறி, ஓ கோபாலா! காபாலியருளினுல் வந்த மாபாலனை யொத்த பூபாலனுகிய என் புத்திரனை யுத்தகளத்திற் சென்று பார்த்து வருவேனென்று மூர்த்தண்யமா யெழுந்தார்த்த கார்த்தவீரியார்ச்சுனனைப் போன்ற பார்த்தனைப் பரந்தாமன்பார்த்து பொழுதுபோனுல் ரணகளத்தில் இருவகைத்தலைவரும் போகப்படாதென்று நம்மிருதிறவருக்குள் கட்டுப்பாடும் ராஜதர்மமு மிருக்க, அதற்கு விரோதமாய் நீ போக நினைப்பது தப்பாகிற முறைமையென்று கிருஷ்ணசுவாமி தடுக்க, அப்போது அர்ச்சுனன் வணங்கி, எங்கட் கொப்பாகிய இறையே! என் குழந்தையின் முகத்தைப் பார்த்தாலொழிய என் மனக்குறை தீராது. இன்னெருவேளை பார்ப்போமென்னும் ஆசை எனக்கில்லை: இது கடைசிப் பார்வை யாகையால் ரகசியமாய்ப் போய்வரலாமென்று புறப்பட்ட அர்ச்சுனனுடனே முரசக்கொடி படைத்த முதல்வனுதியபேரும், மற்றத்துணை அரசர்களோடு முகுந்தனும், தகுந்த தீவர்த்திகளுடன் வெளிவந்து; மகனுகிய அபிமன்னு தேரேறிச் சென்று, சேனைக்கெதிரில் நின்று, அடத்துடன் ஜெயித்து, திடத்துடன்போன இடத்தை யெல்லாம் பார்த்து புலம்பிக்கொ

ண்டுபோய்ப் பிள்ளையைநோக்கும்போது, இரு திறவர்களிலும் ரணக்களஞ் சுத்தி செய்யுங் காரியஸ்தாள் ராஜகுமாரர்களை எடுத்துத்தயில மாட்டி பரணேற்றிவைக்கும் பழக்கம் போல் வைப்பதற்குப் பக்குவஞ் செய்கின்றார்கள். அவர்களின் கைக்கு ளிருக்குங் குழந்தையை விக்ரமனாகிய விஜயன் கண்டு ஆக்ரமப்படும் போது, அவனுடன் கூடி யாவரும் விசனப் பட்டு அர்ச்சுனனைத் தேற்றி, அவன் குறை யை..ாற்றி, அவசரமாய் அவ்விடம் விட்டுத் திரும்பிப் பாசறைக்குச் சமீபத்தில்வர, அக் காலரசர் முதலிய யாவரையும் அஞ்சன வண் ணன் பார்த்து, நீங்களேன் நித்திரை பங்கமா யிருக்கிறீர்கள்? நாளை முழுவதும் நையவிருக் கின்றது வேலை. ஆதலால், யாவரும் பாடி வீட்டி லிளைப்பாறப் போங்களென்று செலவு கொடுத்துவிட்டு, தருமராசன், வீமன், நகுலன், சகாதேவன், அர்ச்சுனன் இவர்களைத் தனித் தழைத்துப் போய் சர்வலோக சரண்யன் சொல்லுகின்றார்.

சுபத்திரை புலம்பல்

ஓ பாண்டவர்களே! உங்களுக்கு நேரிட் டிருக்குஞ் சங்கடங்கள் தலைக்குமேல் வெள்ள மாயிருக்க, அதுக ளெந்தக்காலத்தில் நீங்கு மென்று நான் இரவும்பகலும் நித்திரையில் லாமலிருக்க, அருமைபுணர்ந்த அவசரக்கார ரைப்போல் ஆத்திரப்பட்டுச் சபதங்கூறினான் இந்த அர்ச்சுனனானவன்; இதற்கு வேண் டிய முயற்சியை ஈஸ்வரானுக்கத்தாற் பெற வேண்டிருக்கிறது. தெய்வச்செயல் எப்படி யோ அறியேன். ஆதலால், நீங்களும் பாச றைக்குப் போங்களென்று அனுப்பிவிட்டு, யோசனை தூரங் கமழுங் களப வாசனை யாரந் திகழுந் துளபவாசுதேவனானவர், தன துன்மைத் துனனாகிய விஜயனை அழைத்துக்கொண்டு உன் பத்தினி முதலிய பேர்களின் விசனத்தை யும் ஆற்றுவோம் வாவென்று, கந்தங்கமழும் அந்தப்புரமாகிய பாசறையை நோக்கி, இரு வரும் பிரயாணமாகி, சுபத்திரையும் - திரௌ பதாதேவியும், அபிமன்னன் பாரியளாகிய உத் தரையும் இன்னும் மற்றுமுள்ள பேர்களும் பெருமூச்சுவிட்டு, காரோசைக்கு நிகராகிய பேரோசையுடன் பதறிப் பதறிக் கதறிக் கொண்டு, சித்திரப்பாவை போன்று மற்றொரு செயலுமில்லாமற் சிந்தை வருந்தி, மைந்த னால் நைந்து பொருந்தி, ஒன்றுந் தோன்றா மல் நொந்திருப்பவர்கட் கெதிரில் அந்தோ வென்று, அந்நரநாரணர் வந்தார்கள். அவர் களைக் கண்டவுடனே அக்கினியில் வீழ்ந்த புழுப்போற் பதைபதைத்துத் துடி துடித்து, விரைந்து - தளர்ந்து-விழுந்து-புரண்டு-எழு ந்து - இருந்து - கரைந்து-திரைந்து-இரை ந்து - பரிந்து - கண்டங்கம்மி - கண்ணும் விம்மி - கருமழை பொழிவதைப் போற் கண் ணீர்விட்டு கதறினார்கள். இப்படி நேசமாய் வரு மாசனருடனே ஓசைகளிட்டு பாசறை யில் வேசாறும்படி அரோதனஞ் செய்யும் அனேகம் பேர்களிற் சுபத்திரை துக்கப்படு வது யாதெனில்: என்னொரு மதியும், என் னிரு செவியும், என்னரு பதியும் மகிழப் பிறந்த மைந்தனே! இந்திரச் செல்வம்பெற்ற ஐயந்தனே! உன் பெரிய தந்தையானவர் தன் னைப் பிடிக்க மீறி, சதுர்விதச் சேனைகளோ டெதிரேறி, தாறுமாறாக மாறி, வீறிப் போர் புரியுஞ் சத்துருக்கள்பேரில் உன்னை யனுப்ப, எதிரியின் படைவீரர்களை நீ எள்ளத்தனையும் மதிக்காமற் சென்று, சேனைகளைக் கொன்று, கணக்கிறந்த மேவலர் புயமலைகளைப் புரட்டி, காவலர் முடித் தலைகளையுருட்டி, இரத்தவெள் ளம் ஆறாக ஓடக்காட்டிச் செயித்த உன்னு டைய வல்லபத்தை அருமை தெரிந்த பல சாலிகளாகிய உன் றந்தையர்க்கு சொல்லவும், அவர்கள் கேட்டு விந்தை புல்லவும், நல்ல வாழை-கமுகு முதலியவைகளின் குலைகளால் அலங்கரித்த உன் தேரை நடாத்திக்கொண்டு வந்து சேதி சொல்லாமல்; இதுவரைக்கும் நீ தாமிசமாய் இருக்கவேண்டிய காரணமென்ன? நீ எங்கு இருக்கின்றாய்.

அடா என் மகனே! அர்ச்சுனற் குரிய சுதனே! அழகிய மன்மதனே! ஹரி! ஹரி! நான்முகனுக்கு நற்பிதாவாகிய நாராயணர்க்கு மருமகனாகியும், பான்முகனாகிய அக்கினி தேவ னாற் பல வரிசையும் பெற்ற பார்த்திபனாகிய பார்த்தனுக்குத் திருமகனாகியும், ஒப்பில்லாத வேத மந்திர சாஸ்திரங்களைப் பாராயணஞ் செய்து கற்றுப், படைத்திறம் பெற்றவனாகி யும் விளங்காநின்ற, விற்பத்தியுடைய பால னே! சிங்காரவேலனே! சம்பிரமலோலனே! போர்நிறைந்த யுத்தகளத்திற் புகுந்த உன்னை தேவர்களாலும் ஜெயிக்கப்படாதே; திடகாத் திர தீரவீரச் செல்வனே! திகழ் பராக்கிரம சூரத் துய்யனே! என் சிந்தையி லூறுந் தேனே! தெவிட்டற்கரிய குணவானே! போர்க் களத்தில் மானிடராகிய பஞ்சைகள் உன்னு

டன் சண்டைசெய்து உன்னுயிரைப் போக்கும்படிக்குக் காலம் நேரிட்டதல்லவா? மாற்றுயர்ந்த தங்கமே! மகா குணமலையேறிய சிங்கமே! தைரியமென்னுஞ் சரக்கு நிறைந்த வங்கமே! என்மனப் பொங்கமே! நான் அனுபவிக்கக் கூடாத இப்பேர்ப்பட்ட துன்பத்தை என் தீவினையே முதன்மையாக விருந்து விளைக்குமாகில், நானுரை நோவேண்டா? என் கண்மணியே! என் குலக்கொழுந்தே! நீ கொண்ட கோபமும், உன்னுடைய வல்லபமும், இளைத்துவந்த அரசர்களைப் பயப்படாதீர்கள் என்று தாங்கும் உன்னுடைய திறமும், எதிர்த்து வந்தவர்களை இமைக்குமுனிடியேற்றைப் போலத் தாக்கிக்கொல்ல வல்லமறமும், மற்றுந் தைரியங் குறையாமலும், மலை கலங்கினுங் கலங்காமலும் இராநின்ற உன் சிந்தையின் வலிவும், தீர்க்காலோசனை விவேகத்தெளிவும், இதுகளெல்லாம் எக்காலத்திலுங் குறைவுபடாதே; என்னுசைக் கண்ணே! என்னுவுக்கினிய அமுதமே! என் பாவியினுடைய கெற்பஞ்செய்த பாவத்தால் இதுகளெல்லாங் கெட்டுப்போனபோதிலும், சந்ததியிற் பிறந்தோரும் நினைக்கும்படியாகிய அளவில்லாப் புகழையும், பெருமையையும், ஆரணமாக் கொண்ட தருமபூபதியினுடைய தர்மந் தலைகாக்க வேண்டுமே; அந்தத் தர்மமும் பிசகிப் போச்சுதே; அடா என்னப்பனே! அடா என் கணுவில்லாக் கரும்பே! கல்விரசம்பாடுஞ் சுரும்பே! இப்பேர்ப்பட்ட தர்மமுஞ் சத்தியமுந் தப்பிப் போனபோது, இந்தப் பூமியில் என்னத்தனை கொடியபாவி எவர்களுமில்லையடா; என்னுயிர்க்குயிராகிய இன்பமே! ஆ ஆ என் சுதனே! வருந்தாமல், வாடாமல், பிரையாசமில்லாமல், யக்ஷாள் வாசமாகிய அளகாபுரிக்குச் சென்று, காவல் முதலியபேரைக் கட்டழித்து வென்று, ஈஸ்வரத் தோழனுடைய சேனாபதி என்னும் மணிமாலனைக் கொன்று, மந்தாரை மலர் கொண்டு வந்து, உங்கள் பெரிய தாயாகிய திரௌபதிக்குக் கொடுத்த உன் பெரியதந்தை வீமசேன் மகாராஜனிருக்க, ஒருகோடி வேந்தர்கள் புகழுடன் புடை சூழ்ந்திருக்க, உன்னை ஒண்டியாய் விட்டுப் பிரிந்துபோன உன் றந்தையைக் குறித்து நொந்து நோவது தர்மமல்லவடா என்சாமீ! பூர்வஞ் செய்த தீவினை புணர்ப்பைப்போல் அநேகம் பேர்கள் எதிர்த்துக் குருத்துக் குழந்தையாகிய உன்னுயிரைக் கொள்ளை கொண்டுபோன கொடிய தீய பாவிகளைக் குறித்தே நோவவேண்டுவது தர்மமடா

எனது குலமணித் தீபமே! சூரியனுற் பனி தீயுமென்று உலகஞ் சொல்லும். அப்படியிருக்க, பனிகளெல்லாஞ் சேர்ந்து ஒரு சூரியனை வெல்ல வந்த பான்மையைப்போல் உந்தனைச் செயிக்க வந்தார்களே: அப்படிப்பட்ட மன்னர்களுஞ் சின்னப்படும் படியாய் வென்று திரும்பிவந்த சேயே! ஆரிட்ட சாபமோ? என்னண்ணலாகிய கண்ணனுக்கென்ன கோபமோ? நானறியேனடா மைந்தா!

நல்லது: இதுகள் இப்படியிருக்க, உன்னுடைய உரிமை எப்பேர்ப்பட்டது மகனே! நமது தாய்க்கு நாம் ஒரு பிள்ளை. மேலும், அவளுடலும் அந்த உடலுக்கு நாம் உயிருமாக இருக்கின்றோம். உயிராகிய நாம் பிரிந்தால் உடலாகிய தாய் இறப்பாளே யென்று உன்னுள்ளத்தில் எள்ளத்தினையும் நினைக்காமல், கள்ளத்தனமாய் வானுலகடைந்தாயே; என் வள்ளலே! பேதையாகிய என்னை நீ யறிந்திருந்தும் எனக்கொரு மொழி விள்ளாமல் மோசஞ் செய்து போனபடியால், இனிமேல் எங்களுக்கு உன்னை யல்லாது வேறு என்ன செல்வமுண்டு? மெய்யனே! அடா என்னையனே: இனியென்ன இன்பம்? இனியென்ன வீரம்? உன்னைப் பறிகொடுத்து இனி யுத்தஞ் செய்து பெறப்போகிறது என்னவெற்றி? உன்னைக்கண்டு களிக்காத உற்சாகம்? என்ன உற்சாகம்? உன்னுடன் கலந்து வாழாத வாழ்வு இனி எனக்குத் தாழ்வேயடா மகனே! எனக்கோருறுதி ஓடிவந்து சொல்லடா. என்னெதிர்வந்து சற்று நில்லடா. என்னை யுன்னுடன்கூட அழைத்துச் செல்லடா. பெற்ற நான் இங்கிருக்கச் சற்று நினைக்காமல் என்னைப்பிரிந்த உன் மனமெத்தக்கல்லடா முதிர்ந்த மரமெல்லாமிருக்க, இளமரம் பட்டது முறைமை தப்பாகிய பிழையடா! என்போலொத்தவர்கள் எளிதமா என்னை யேசுவார்களே! வலக்காரம் பேசுவார்களே: ஐயோ மகனே! வல்லாண்மை பெற்ற வசுதேவர் வாழ்ந்த நல்லகுலத்திற் பிறந்து, எல்லா அரசரும் வந்து பணியும் வில்லாண்மை நல்ல குடியிற் புகுந்து, சக்களத்தி, நாத்தி, ஓரகத்தி முதலாகியப் பந்துக்களுடைய கும்புகளிலும் பிரியாமல் மரியாதையா யுலாவியிருந்து, யாவருட்புகழ நானுமகிழ்ந்து, யாதொரு குறையுமில்லாமல் சொல்லாண்மை பேசி, இன்ப மகிழ்ச்சியில் எனக்கீடாக ஒருவருமில்லையென்று இறுமாந்து, மணம்புரிந்துகொண்ட

புருஷகாதலன் வரும்போதும் குணஞ்சிறந்து கண்ட தநயகாதல னுறும்போதும் அகமகிழ்ந்து, முகமலர்ந்து, அருள் சுரந்து, விழிசிறந்து, ஆனந்தத்துடன் ஆலிங்கனஞ்செய்து முத்தமிட்டுக்கொண்ட மகா பாவியாகிய வஞ்சிக்கு நெஞ்சுக்கிசைந்த துணையாகிய நீயொருவன் இல்லாமையால், எல்லாமிருந்தும் இல்லாத் தனியளாயினேன். ஏ வித்வசிலாக்கிய விஜயன் மகனே! இனியேனும் இதோ வந்தேன் அம்மணி! இதோவந்தேன் அம்மணி! என்றோடிவந்து அங்கலாய்த்திரங்கும் என்னெதிர் வாராயோ? ஓ என்னிஷ்டபாக்கியமே! என் சிலாக்கியமே! குணபூஷணமே! கோதற்ற கனியே! இப்பூவிற் பெருமையாய் பிறந்த என்னைக் காவிற்கொடிபோற் காத்த கண்ணனே! அண்ணன் அலாயுதன் கருத்தை அகற்றி உன்னெண்ணம்போல் அர்ச்சுனற்கீந்த வள்ளலே! மாணிக்கமான மகனை யான் பெற்றேன்; காணிக்கிவனே காவலென்றுற்றேன். பாவியே னெண்ணம் பாழாய்விடினும், ஆவியே அண்ணு அருளுனக் கில்லையோ? மூலமுதலை வாய்ப்பட்ட சுதனை நல்கினையே: மூலமேயென்ற கரிபுரந்தனையே ஆபத்தால் வந்த அரசபுத்திரனை மேவித்துவரும் வீறனைத்தனையே; எவரிருந்தாலும் என்வினைக்கினையோ? மகனை யான் இழந்தேன் மகாபாவி வீழ்ந்தேன் என்று மலர்விழியி லறைந்துகொண்டு மண்மேற் சாய்ந்தாள் சுபத்திரையானவள்.

## திரௌபதை புலம்பல்

இப்பால் அக்கினியிற் பிறந்த பாஞ்சாலியானவள் அடித்துமோதி வீழ்ந்து, ஆருமற்ற பாவிக்கு அருந்துணை யென்றிருந்த ஆதரவாகிய சேயனைப் பிரிந்தேன்; என் கூந்தலை முடிக்க வந்தலாயமைந்த மாந்தரிற் சிறந்த மைந்தனை இழந்தேன்; கடலைக்கடந்து கரையேறுங்காலத்திற் படகுடைந்த திறந்த பாவியானேனே; அழகுஞ் சிறப்பும் ஆண்மையும் வீரமும், புகழும் பெருமையும் புண்ணிய நெறியும், சத்தியசவுசமும் தானமுந் தர்மமும், எய்த்தோர்க் குதவும் இரக்கமும் அன்பும், மெய்த்தவக் குணமும் மேன்மையும் பக்தியும், தந்தைதாயர்க் குகந்த தகுந்த நன்னடையும், அறிவும் சிறப்பும் ஆண்மையுங் குறிப்பும், பொறுமையுந் திறமையும் பூததயவும், கர்த்தனைப் பூசிக்கும் வித்தகப் பக்தியும், இத்தனையிருந்தும் இறந்தையோ மகனே! அப்பா சுதனே! அங்காடிக்கூடையை அதிரவிலை இட்டறியேம்; பங்கில்லாப் பங்கைப் பதறி எடுத்தறியேம்; வரியிறையாற் குடிகளை வதைத்தென்று மறியேம்; கொடுங்கோன்மை செய்து குதித்தென்று மறியேம்; தாலிகட்டும் கல்யாணத்தைத் தடுத்தறியேம்; வேலியிட்ட பயிரை மிதித்தறியேம்; ஏழைகள் பொருளை எடுத்தறியேம்; வாழ்குநரிற் பொறாமை வைத்தறியேம்; கோவிற் குளங்களைக் குலைத்தறியேம்; காவிற்பூஞ்செடிகளைக் கலைத்தறியேம்; பசுவைப் பட்டினி போட்டறியேம்; சிசுவைப் பட்டினி செய்தறியேம்; பாவமென்றும் பரித்தறியேம்; கோபமென்றும் குறித்தறியேம்; பெரியோர் தம்மை யிகழ்ந்தறியேம்; பேதையர் வாழ்வை அகழ்ந்தறியேம்; நோயினர் தம்மை நொடித்தறியேம்; பேயினர் துன்பம் பெறவறியேம்; பாவாணர் தங்களைப் பகைத்தறியேம்; யார் தம்மைக் குறைத்தறியேம்; மறுவேதத்தை மறந்தறியேம்; வஞ்சமனத்திற் கொண்டறியேம்; தஞ்சமென்றோரை விடுத்தறியேம்; அஞ்சலென்றோரை யடித்தறியேம்; கடனாளியை வாசல் காக்கவைத்தறியேம்; உடன்பிறந்தோரை யோட்டி யுலாவி யறியேம்; இனத்தைச் சனத்தை எதிர்த்தறியேம்; ஈசனை மாலைப் பழித்தறியேம்; பசித்தோர் கன்னங் கொடாதறியேம்; பாதையை வெட்டிப் பிரித்தறியேம்; தண்ணீர்த் தடாகந் தடுத்தறியேம்; சமயங்கெடுத்துச் சார்ந்தறியேம்; பொய்கோள் சொல்லிப் பிழைத்தறியேம்; பெண்களை சேரக் கண்டறியேம்; தீயோர் திருடரைச் சேர்த்தறியேம்; தீயிட்டு மோசஞ்செய்தறியேம்; குறைய மரக்கா னிறைத்தறியேம்; சொல்லிற் சோர்வு பட்டறியேம்; துஷ்டமந்திரியை வைத்தறியேம்; தாய் தந்தையரை யிகழ்ந்தறியேம்; சண்டாளர் தம்மைப் புகழ்ந்தறியேம்; கடையருறவைக் கண்டறியேம்; கற்றோர் தம்மை விண்டறியேம்; ஜீவயிம்சைகள் செய்தறியேம்; செய்தோரைச் சினவாமல் விடுத்தறியேம்; குடும்ப தோஷங் குறித்தறியேம்; குடியரைக் கனவில் நினைத்தறியேம்; தடியாற் பசுவை யடித்தறியேம்; தருவோமென் றலக்கழித்தறியேம்; நம்பவைத்து மோசஞ்செய்தறியேம்; நாய் போற் குரைத்து பகைத்தறியேம்; வம்புவழக்குத் தொடுத்தறியேம்; மாதவம் யாகம் விடுத்தறியேம்; வழக்கிற் பட்சபாதஞ் செய்தறியேம்; கணவற்குத் துன்ப மிழைத்தறியேம்; கழறியசொல்லைத் தடுத்தறியேம்; பச்சைமரத்தைப் பறித்தறியேம்; அச்சம் லச்சைவிட்டுப்

பிழைத்தறியேம்; இச்சகம்பேசித் தாழ்ந்தறியேம்; அனுதரக்ஷகனை பழுதுரையேம்; அரியரனல்லாற் றெழுதறியேம். இப்பேர்ப்பட்ட பொல்லாங்குகளை எப்போதுஞ் செய்தறியாத எங்களுக்கு இந்தக் கொள்ளை எப்படிவந்து முடிந்ததோ? என்னிஷ்ட தெய்வமான கர்த்தனே! அண்ணா கண்ணனே? நண்ணுப்புத்திரன் கிடைத்தும் போரினில் முடிந்தானே; உன்சித்த மிப்படியுஞ் செய்யத்தேறினதோ? ஐயோ! என்கண்ணே அபிமன்னு! பெற்றோர் வயிற்றிற் பெருநெருப்பிட்டையே; என்று இசைந்தழுது ஏங்கிக் கலங்கி, தரைமேற் சோர்ந்து சாய்ந்துடலமர்ந்து, ஒன்றுந் தோன்றாது வோய்ந்தயர்ந் துயிர்த்தாள் பாஞ்சாலியானவள்.

## உத்தரை புலம்பல்

கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜனே! இத் திரௌபத்தில் ஆறுமாச கர்ப்பத்தோடிருந்த மச்சவளநாடான் பாவையாகிய உத்தரையானவள், சூத்திரமிழந்த மரப்பாவை போலும், ரக்கையிழந்த பறவைபோலும் விழுந்து, தீயில் விழுந்த செந்தாமரை மலர் போல் தேகமும் முகமும் க்ஷணத்திற் கருகி, முத்துபோற் கண்ணீர் முகமறைந்தோட, அத்தா! அத்தா! அன்னையே என்று அர்ச்சுனன் பாதத்தில் அலறியே வீழ்ந்து, மாமா வெனவே வயிற்றைப் பிசைந்து, வாய்மேலறைந்து வாடியகொடிபோல் கையை நெரித்துக் கண்மேலறைந்து, தெய்வமேயென்று தியங்கிப் புலம்பினாள்: வீட்டில் வந்தெனக்கு நாட்டியம் பழக்கியமாமா! எந்தன் வேந்தனை யிழந்து நான் காந்திப் புலம்பவோ மாமா! வதுவையென்று யாரும் வாழ்த்தச் சிறந்தேனே மாமா! இப்போ விதவையென்று சொல்ல வெட்கி மறைந்தேனே மாமா! தந்தையைக் கொல்ல எந்தன் வயிற்றில் இந்தக் கருவே வந்துசார்ந்ததே; ஆறுமாதப் பூதவுருவே; சகல ராஜர்களுந் தாழ்ந்து வணங்கு மலர்ப்பாதா! சரசசல்லாபமாய்த் தழுவிக் களித்த பிராணநாதா! சந்தோஷ வானந்த வின்பமெனக்களித்த தேனே! நான் தந்தை தாயார் சொந்த பந்துக்களையும் பிரிந்தேனே; மருகி மருகியென்று வாய்குளிர்ந் தழைத்த வென் மாமா! நான் உருகியுருகிச் சேர்ந்து வுயிரை யிழந்திருக்கப்போமோ? ஹரி! ஹரி! நாமா! சின்னஞ் சிறுவயதிற் கன்னிகழியச் செய்த தேவனே! எந்தத் தீவினையாற் கணவ னிறந்தனனோ சகசீவனே! ஆருக்கு மனியாயம் நாங்கள் யாருஞ் செய்யவில்லையே; இந்த அவதி யிடித்தாற்போல் வந்ததே, வினைத்தொல்லையே: காய்த்துப் பழுக்குமாயிரங்காலப் பயிர் காய்ந்து போச்சுதே: நான் கண்கலங்கி வயிறெரிய விப்பருவத்தில் வாய்ச்சுதே: தேடிவந்து என்னைத் திருமணஞ் செய்த வின்னாயகன், இப்போது தேடவிட்டுப் பரலோகஞ் சேர்ந்தாரிது ஞாயமோ? என்று வானமும்-மண்ணும் - மரமும் - மலையும்-கல்லும்-கடலும்-புல்லும்-பூடும் உருவும்படியாய் உருகியழுங்காலையில், அர்ச்சுனன் வேரற்ற பச்சைமரம்போல் அசைவற்று நிற்க, மரகத மேனி மாயன் அவர்களை யெடுத்து உபசரித்துத் தேற்றி, அவர்களுடைய சோபந்தீரத் தமது திருவாய் மலர்ந்து சில தேறுதலான வார்த்தைகளைச் சொல்லுவதாயினர்.

## கிருஷ்ணதேவர் திரௌபதை, சுபத்திரை, உத்தரை இவர்களைத் தேற்றுதல்

ஓ என்னருமைச் சகோதரிகளே! "நிலத்தியல்பானீர்திரிந் தற்றுகுமாந்தர்க் கினத்தியல்ப தாகுமறிவு" என்றால், நிலத்தினுடைய குணம் அறிவுக்கேறுமென்று நீதி யிருப்பதினால், க்ஷத்திரிய குலத்திற் பிறந்த ஸ்திரீகள் க்ஷாத்திரங்கெடப் பேசமாட்டார்கள். அது என்னவெனில், சண்டைக்குப் போயிருந்த புருஷன் அபஜெயப்பட்டாலும், மார்புகாட்டி நின்றானென்று கேட்டால், மனமகிழ்ந்து தன் னாயகனை எதிர்கொண்டு தழுவுவார்கள். ஜெயஞ் செய்துவந்த தீரனாலும் புறமுதுகிட்டானென்று கேட்டால், அந்தப் புருடன் முகத்தில் விழிக்காமற் பிராணனை விட்டுவிடுவார்கள். ஆனதால், நீங்கள் விசனப்படுவதை பார்த்தால், நமது குலத்தின் பெருமையைக் குன்றச் செய்வதுபோலுமிருக்கின்றது. புத்தியறிந்த நீங்களே இப்படி யிரங்குவது நன்மையல்ல. குலத்தின் குணத்தை அனுசரித்துக் கொள்ளவேண்டும். உங்கள் புத்திரனை வதைத்த கொடியோர்களின் பலவித வளங்களை மாளும்படிக்கு மாய்த்து, வெற்றி கொண்டு சாய்த்து, நாளை முப்பது நாழிகைக்குள் தப்பில்லாமல் வருவோம். தீர்க்க புத்தியையுடைய நீங்கள் ஏக்கங்கொள்ளுவது தர்மமல்ல. அம்மா சுபத்திரா! உன் மகனை நினைத்து மனோதுக்கப் படுவானேன்? இப்பேர்ப்பட்ட வல்லமைசாலியாகிய பிள்ளையைப் பெற்ற உன் மாதவத்திற்குச் சந்தோஷப்பட

வேண்டுமே: உனக்கு மாத்திரந்தானா துக்கம்? எங்களுக்கில்லையா? பந்தபாசமுள்ள யாவரையுஞ் சொந்தமாக்கிக்கொள்ளும் இந்தவுடலை வந்தவழி தெரியாமற்போக்கும்படியாகிய வாணாள், அவத்திற்குப் பாடுபடுவதைப் பார்க்கினுந் தவத்திற்குப் பாடுபடுவது தகுதியல்லவோ? என் தங்கையே! வீணில் இறந்து மறைந்துபோகும் இந்தத் தேகத்தை, அழியாத காணியாகிய கீர்த்திபொருந்தி பெருமையிற் சிறக்கும்படி செய்தான் உன் கண்மணியாகிய விண்மணி. அம்மணி! அதெப்படியென்னில், எதிரிகளாகவந்த சுத்தவீரரெல்லோரும் உன் புத்திரனை மெத்தவுந் துதிக்க, தேவர்களெல்லோருங் களித்து மதிக்க, ராஜபுத்திரர்களுடைய ரத்னகிரீடம் பெற்ற தலைகள் யாவற்றும். பூமிதேவியார் அம்மானையாடுமாறுபோல் ஆகாயத்தி லெழுந்து பூமியில் விழுந்து மாயும்படிக்கு பந்து விளையாடி, எவர்களும் பெறுதற் கருமையாகிய வீரசொர்க்கம் அடைந்தான் உன் மைந்தனான அபிமன்னு. அவனைக் குறித்து நீநெஞ்சு தடுமாறி நொந்தாலும், அக்கினியில் வீழ்ந்து வெந்தாலும், விதி முடிந் திறந்தவர்கள் மீண்டும் பிழைத்து வருவார்களோ? காக்கைபோற் கத்திக் கருகி மனம் வருந்தி ஆக்கை யழிவதேயன்றி நோக்குங்கால் ஒரு பலனுமில்லை. அம்மா! உன் பாக்கியமே பாக்கியம். நல்ல குடியிற் பிறந்து தகுதியாகிய இளம் பருவத்திற் கண்ணுக்கு ரம்யமான மண்ணுக்குட் பெருமைபெற்ற விஜய வீரனை கைப்பிடித்து, காணத்தக்க சுகங்களைக் கண்டு, ஒரு பிள்ளையைப் பெற்றாய். ஆ! ஆ! அவனது ஆண்மைத் திறத்தை எவர்களாற் சொல்லி முடியும்.

ஓ சுபத்திரா! ஓ திரௌபதா! உலகத்திற் பெண்ணாய்ப் பிறந்தவர்களுக்கு வேண்டிய நன்மைகளென்னவெனில், மனதுக்கிசைந்த நல்ல புருஷனைக் கூடி வாழ்வதும், உலகம் மதிக்கும் புதல்வனைப் பெறுவதும், இவ்விரண்டைவிட மேலான நன்மையும், இனிமேல் அநுபவிக்கப்போகிற போகபாக்கியமும் வேறே யுண்டென்பது ஒன்றுமில்லை. நீங்களெல்லாம் அநுபவித்து விட்டீர்கள். மேலும், இன்னும் அநேக பிள்ளைகளைப் பெற்றுக்கொண்டு வாழும்படிக்குத் தாழ்வில்லாத நாயகனென்னும் முதலும்வித்தும் வைத்துக்கொண்டிருந்தும், ஏனோ மனம் வருந்தி வாடுகிறீர்கள்? ஐயோ! உங்கள் மருமகளாகிய உத்தரை யாதொரு சுகபோகத்தையும் பின்னுமுன்னும் அறியாத சின்னஞ் சிறிய குழந்தை; அந்தப் பெண்ணினுடைய நாயகனுடைய முதலும் வித்தும் முழுகிப்போய் விட்டபடியால், அந்த உத்தரையாகிய பெண்கொடி முதலிழந்த பேர்களைப்போல் மாறாத ஆறாத்துயர்கொண் டழுவது ஞாயம்; நீங்களுருகி அழுவதெல்லாம் மாயம்; இனிப் புலம்பி அழுவீராகில் அபாயம். நீங்களிருவரும் உங்கள் மருமகளுடைய துக்கத்தை நீக்கி, தயிரியமும் தெளிவு முண்டாகும்படிக்குத் தேறுதல் செய்யுங்களென்று இவர்களைத் தேற்றி, உத்தரை குமாரத்தியின் விசனத்தையும் மாற்றி, இங்குலிக நீர் கரைத்து, ஆறு எள்ளுப்பூவை அதில் விடுத்து, பந்துக்கள் முதலிய பேர்களும் வந்து காணும்படியாய் உலக வழக்கத்தை யடுத்துத் தாங்களும் அவ்விடத்தி லிருக்கும்போது, குந்தி போஜத்தலைவர் - போஜகுலத்தார் - யதுகுலத்தார் - மச்சதேசாதிபர் - பாஞ்சாலர் - சோமகாள் - துருபதேயாள் இவர்கள் முதலிய யாவரும் அப்பாசறை அரண்மனையில் வந்து, திரௌபதை - சுபத்திரை - உத்தரை முதலிய யாவர்களையுங் கண்டு, துக்கங்கொண்டு துயரத்தை நீக்கி, சொல்லவேண்டிய காரியங்களையும் பேசி ஸ்நான முதலிய தன்மைகளுஞ் செய்வித்து, தாங்கள் தாங்களிருக்கும் இடம் போய்ச் சேர்ந்தார்கள்.

## இங்குலிக நீர்விதி

என்று வைசம்பாயனர் சொல்ல, ஜனமேஜய மகாராஜன் வணங்கி, சுவாமி! இங்குலிகநீரில் ஆறு எள்பூவிட்டு தேக்கினார்களென்று திருவாய் மலர்ந்தருளிய வாக்கியத்தைச் சந்தேகமறத் தயவுசெய்யுமென்று இரங்கிக் கேட்க, ஓ அரசனே! இங்குலிக நீரென்பது ஸ்ரோணிதம். எள்பூவென்று சூட்சமாகிய சுக்கிலம். இவ்விரண்டுஞ் சம்பந்தப்பட்டு ஆறுமாசமாய் நிலைத்துக் கருவாய் உருக்கொண்டு நின்றதென்று எவர்களுங் குறிப்பினாற் சுளுவிற் றெரிந்துக் கொள்ளும்படி, லோகோபகாரமாய் என்னுடையவராகிய வேதவியாசர் யாவருக்கும் ஏற்படுத்திவைத்த விபரமாக்களும் அதேனென்னில், இந்தக் கர்ப்பம் இறந்துபோன எசமானிருக்கும்போதே அவனுக்குத் தரித்ததென்றும், அவனிறந்து போனபிற்பாடு இடைக்கொள்ளைக் காரனுக்குத் தரித்ததென்றுஞ் சந்தேகப்பட வொட்டாமலும், குடும்பதோஷம் சொல்லுஞ் சண்

டாளருடைய வாயடைக்கும்படி யாகவுஞ் செய்யவேண்டிய முறைமை. இந்தக் கர்ப்பந் தான் உன் தந்தையாகிய பரிக்ஷித்து மகா ராஜன் என்று வைசம்பாயனர் சொல்லுங் கால், விருப்பத்தினால் இதைக் கேட்ட ஜென மேஜெய மகாராஜன் வெறுப்புடையவனாய்த் தைரியம் நீங்கித் தன்னை மறந்து மூர்ச்சை போய், மறுபடியும் மன்னர் குலத்திற்குரிய தைரியத்தை வரவழைத்துக்கொண்டு, வபுஷ்டாதேவியுந் தானும் வைசம்பாயனரை வணங்கிப் பணிந்து, பொன்னூலணி மார்பனாகிய பூசுரனே! துஷ்ட நிக்கிரக சிஷ்டபரிபாலனஞ் செய்தருளும் எங்களிஷ்ட தெய்வமாகிய கிருஷ்ணமூர்த்தியும் என் சிரேஷ்ட மூதாதையாகிய அர்ச்சுனராஜனும், அப்பால் என்னாயினார்கள்? அதனைத் தேவரீர் திருவுளம் பற்றவேண்டுமென்று கேட்க, வைசம்பாயனர்சொல்லுகின்றார்.

## அருச்சுனனை கண்ணன் ஓராரண்யத்திலழைத்துப்போய்த் தன்னைச் சிவமாகப் பாவித்துப் பூசை செய்வித்தல்

ஓ எத்திசையும்பணி சீமானே! புத்தியில் விண்ணிகர் கோமானே! கேளும்; இப்பால் அந்த இராத்திரியில் ஹரிவாசுதேவனாகிய தேவகிநந்தனன் அர்ச்சுனனை அழைத்துக் கொண்டு, ஊழிகாலத்திருள் குடிகொண்டு குதிகொண்டிராநின்ற ஆரண்ணியத்தை நோக்கி, அதில், அரசு-ஆல்-வேல் - ஆத்தி - அத்தி- அனிச்சம் - அகத்தி - இத்தி - அசோகு- இலந்தை- ஆச்சா - இலவம் - இலுப்பை - ஈந்து- எட்டி-எலுமிச்சை - உசில் - ஓமை - கடம்பு- கடவு-கடுக்கை-கமுகு-கருக்கு-வாளி-கருங்காலி கள்ளி - காயா-குங்குமம்-கோரை - குருந்து - கூந்தற்பனை-கொன்றை-கோங்கு - சந்தனம்- ஜாதி-சிவந்தி-செண்பகம்-செருந்தி- தணக்கு- தேங்கு-தேக்கு-நறுவிலி - நாரத்தை - நாவல்- நெல்லி-நொச்சி-பச்சிலை - பலா-பனை-பாதிரி- பாலை-பிராய்-புளி-புன்முருக்கு - நன்முருக்கு- பேயத்தி-புன்முருகு-புன்னை - பூவரசு-மகிழ்- மஞ்சாடி-மருதம்-மாதுளை - மலைப்பச்சை-மலை மல்லிகை-தேமா-புளிமா-முருக்கு - முருங்கை- மூங்கில் - முன்னை - வன்னி - வாகை-வில்வம் - விளா - வெட்பாலை - வேங்கை - வேம்பு - தாழை - வாழை முதலாகிய ஈஸ்வர சிருஷ்டி பேதங்களான சகல விருக்ஷங்களோடு, வெகுவாகிய படர் கொடிகளும், குத்துச் செடிகளும், அநேகந் தீர்த்தங்களும், மிருகங்களும் பொருந்திச் செறிந்திருக்கக் கண்டு, அவ் வாரண்யத்துட் புகுந்து போகும் போது, அர்ச்சுனனுக்கு இன்று காலமே புசித்த அன்னமாதலினாலும், சஞ்சத்தகாள் முதலிய போர்களிடத்திற் கொடிய சண்டைப் போட்டு தேகம்வருந்தி மெலிந்திருப்பதினாலும், புத்திரனிறந்த சோபத்தினாலும், தன் பெண்சாதி-மருமகள் முதலியோர முத வியாகூலந் தன்னை வருத்துவதினாலும், நாளையப் போரிற் சயிந்தவனைக் கொல்லுகிறேன்; இல்லாவிட்டால் அக்கினியில் வீழ்வேனென்று கூறிய சபதத்தினாலும், தன்னுடைய மனம் ஒருவழி நிற்காமற் சஞ்சலமா யிருக்க, அந்த துன்பத்தினால் இன்பமில்லாமற் கை கால் ஓய்ந்து, காலுடன் கால் தட்டுபட்டு கண்ணீர் சொரிந்து, உற்சாகந் தப்பி ஒடுங்கி வராநின்ற வில்லுக்கிவனே வல்லவனென்னும் அர்ச்சுனனது நல்ல முகத்தை நாரணன் நோக்கிச் சொல்லுகிறார்.

ஓ விஜயனே! தேகமு மனமுந் தேம்பி இளைத்தாய்; வாட்டமில்லாத உன் முகம் வாடிக் கண்ணுக்குக் கையரிசி கொட்டலாம் போலிருக்கின்றது. நாம் போகிற காரியமோ பெரிய காரியம். அக்காரியத்தைப் பெற்றால் மாத்திரந்தான் நீ நரனென்றும், நான் நாரணனென்றும், நீ பாண்டவரில் நடுப்பிறந்தோனென்றும், நான் பாண்டவர் சகாயனென்றும், இதுவரையினும் பெற்றபேர் இன்னுங் கொஞ்சநாளைக்கிருக்கும். இல்லாவிட்டால், நாம் இல்லாமற்போன தன்மையா யிருக்கும். ஆகையினால், என் மைத்துனனே! நான் உற்ற வார்த்தையொன்று சொல்லுகிறேன். அதைச் சற்று நிதானித்துக் கேள். அதாவது, இவ்விடத்தில் அனேகம் பண்டுபலாதிகள் இருப்பதினால் உந்தனது இளைப்பாறும்படியாகக் கொஞ்சம் புசித்துப் புறப்பட்டால், நாம் நினைத்துவந்த வேலையு முடியும். சபதங்கூறிய வேலையும் நாளைக் காலையில் விடியும். ஆலஸ்யம் பண்ணாமற் செய்யுமென்று பாலகிருஷ்ணன் சொன்னார். அப்போது மாதவி காதலன் நகைத்து, ஓ மாதவா! எந்தக் காலம் எப்படி போனாலும், இராக்காலத்தில் மகாதேவருடைய பூஜாவிதி முடித்துக்கொள்ளாமல் ஜலபானஞ் செய்யேனென்று நான் கொண்டிருக்கு மனோதிடமும், என்னுள்ளத்தில் இருக்கும் விரதவுறுதியும், தேவரீருக்குத் தெரிந்திருந்தும், பண்டுபலாதிகள் புசித்து

இளைப்பாறிக் கொள்ளென்று ஏளனமா பண்
ணுகின்றீர்? இச்சா சுதந்தரனாகிய மச்சானே
யென்று காண்டீபன் கேட்க, அப்பா அர்ச்
சுனா! என்னுடைய அருமை மருமகனைப் பறி
கொடுத்து ஆவியும் உடலும் அலக்கலக்கா
யிருக்கின்ற நான் என்ன சந்தோஷத்தைக்
கண்டு உன்னை ஏளனம் பண்ணப்போகிறேன்?
[சிரிப்பு கெலிப்பின் பேரிலும், அழை ஆங்கா
ரத்தின் பேரிலும் வரும்.) என்று வையகஞ்
சொல்லுமே: ஐயனே! அதையறியாயா? இப்
போது உன்னைப் போஜனஞ் செய்யும்படி
என் சொன்னேனென்றால், தேகமானது
சேற்றாலெடுத்த சுவரைப்போன்ற சோற்றா
லடுத்த சுவர் - மானம்-குலம்-கல்வி-வண்மை-
அறிவுடைமை - தானம் - தவமுயற்சி- தாளாண்
மை - மேன்மை - கசிவந்த சொல்லியற்மேற்
காமுறுதல், என்று சொல்லும்படியான இப்
பத்தும் பசிவந்தாற் பறந்துபோமென்று
பழையோர் சொல்லியிருப்பதினால்; உன்னை
அப்பசியானது வருத்தஞ்செய்யுமே யென்
றும், மேலும், வீட்டிற் செய்யும் பூசையைப்
பார்க்கிலும் வனத்திற் பூசிப்பது கண்ணு
தலுக்கற்புதமென்றும்; நீ எப்போதும் இராக்
காலத்திற் பூசை செய்பவனாகையால், இது
நல்ல இராக்காலமென்றுஞ் சொன்னே னல்
லது; வேறில்லை. என்று நளின நாபன் சொல்
லக் கேசவற்றோழன் கேட்டு, ஓ வாசவற் கிறை
யே! தேவரீர் பேசிய வாசகம் நேசமா யுறுவ
தேர்டு, ஆசார பூசைக்கு இது உரிய தலந்
தான். ஆனால் ஈசன் திருவாராதனைப் பூசை
வீடு பாசறையிலிருக்கின்றதே: நானென்ன
செய்வேன்? தேவரீர் இவ்விடத்தில் அழைத்
துக்கொண்டுவருவீரென்றும், இப்பேர்ப்பட்ட
வனங்கள் இவ்வனத்தில் இருப்பதென்றும்,
எனக்கு முன்னமே தெரிந்தால்; சிவபூசையை
எடுத்துக்கொண்டு வருவேன். எனக்குத் தெரி
யாமற் போனபடியினால், இப்போது நான்
என்ன செய்வேன்? என்று வீபற்சுசொல்லக்
கேட்டு, சமயங்கள்தோறு நிறைந்துநிற்கும்
ஜநார்த்தனன் சொல்லுகின்றார்.

ஓ சுருதிகுரு சுபானுபவ மெனுந் தூய்
மையினாற் கடவுள் பேதநினையாக் கருத்தினை
யுடைய காண்டீபனே! எல்லாச் செய்கைக்கு
மனங்காரண மாதலினாற் கவலை யொழித்து,
உந்தனது மனத்தை ஒரு வழிப்படுத்தி, நன்
மைக்கு நாயகனான நம்பனை வன்மையான
உன் மனத்துட்பதித்து, க்ஷணப்போதேனும்
வழுவாமல், மாறுபடாமல், பேதமில்லாமல்
துணிபோடிருந்து சிவலிங்கத்தின் மூர்த்த
மாக என்னை ஏற்படுத்தி சிந்தித்து, என் தலை
யிலுந்தேகத்திலும் பத்திரபுட்பங்களைசாற்றி,
உருத்ர மந்திரத்தை உருவேற்றிச் சகஸ்த்ர
நாமார்ச்சனை செய்வையாகில், ஈஸ்வரனு
டைய திருவுளங்களித்து உன்மனோ பீஷ்டங்
கள் எல்லாம் நிறைவேறுமென்று மாதவன்
உரைக்க, அதைச் சுரேந்திரன் மைந்தன்
கேட்டு, ஓ யதுகுலத்தோன்றலே! தேவரீரை
சிவலிங்கத்தின் மூர்த்தமாக நான் சிந்திப்ப
தெவ்வண்ணமென்று பற்குனன் பணிந்து
வினவியபோது, பரந்தாமன் தன்னுடைய
இரண்டு காலையுங் குத்துக்காலிட்டு, அந்தக்
காலை இரண்டு கரத்தாலும் யோகப்பட்டை
போற்கட்டி, இரண்டு கரங்களின் பத்துவிரல்
களையுங் கும்பிடுந் தன்மைபோற் குவித்து
நீட்டி, சத்துச்சித்தானந்த சொரூபமாகிய சிவ
லிங்கத்தின் மூர்த்தமாக இருந்தார். ஓ ஜென
மேஜெய மகாராஜனே! அந்த இலிங்கமூர்த்த
மாயமைந்த தன்மையைக் குறிப்பாற் சொல்
லுகிறேன் கேளும்; குத்துக்காலிட்ட கால்களும்
புட்டமும் பாணவட்டமாகவும், அந்தக் கால்
களைக் கட்டிக்கொண்டு நீட்டிய இருகரமுங்
கோமுகமாகவும், கழுத்துஞ்சிரமும் இலிங்க
மாகவும், இந்தப்பிரகாரம் பிர்மா-விஷ்ணு-
உருத்திரனென்னும் மூன்றுருவுஞ் சிவலிங்
கத்தின் மூர்த்தமென்று சொல்லிய வேதாகமப்
பிரமாணத்தின் படிக்கு அமைந்திருந்தார்
ஆதிமூலப் பொருளாகிய கேசவன்.

இந்தச் சிவலிங்க உருவத்தை மாறுப
டாச் சிந்தையையுடைய வில்வல்லவன் கண்டு
மனதொருமித்து, தருப்பைகள் நிறைந்த
சுனையில் ஸ்நானம்பண்ணி, மாவிலை - தருப்
பை - பத்திரம் - புஷ்பம் - வில்வம் - அறுகு,
பஞ்சாமிர்தம்-பஞ்சகவ்வியம்-முப்பழம்-பால்-
தயிர்-நெய்-தேன்-இளநீர் - சந்தனம் - சாம்பி
ராணி - கர்ப்பூரம் இவை முதலிய பூஜாதிர
வியங்களைச் சேகரித்து, மலர்ந்த மலரை மாலை
யாய்க் கட்டி, சலந்தன்னால் அபிஷேகந்தான்
செய்து வைத்து, காட்டிற்பட்ட சந்தனக் கட்
டையைக் கூட்டி யுரைத்ததைக் கூந்தலுக்கு
அணிந்து, மாலையுமலருமம் மகதேவர்க்கிட்டு,
தூபதீபந் தன்பறக்காட்டி, நேயமாய்க் கனி
கள் நிவேதனம்பண்ணி, ஆயிர நாமத்தால்
அருச்சனை புரிந்து, தன் பிராணனாகிய ஹரி
யின் திருமேனியென்று மனத்தில் நினைக்கா

மத் சிவபெருமானுடைய திருமேனியாகச் சிந்தித்து, அளவிறந்த வேதாகமங்களைச் சொல்லிப் பிரதக்ஷிணஞ்செய்து, ஏகாங்க-திரியாங்க-பஞ்சாங்க - சப்தாங்க - அஷ்டாங்க - நவாங்க-தசாங்க - சாஷ்டாங்க நமஸ்காரங்களும் புரிந்து, ஹரஹர சம்போ ஆதியேபோற்றி! புரமதை யழித்த புண்ணியாபோற்றி! பிறவி நோய் தீர்க்கும் பிஞ்ஞகாபோற்றி! அறமிலா வினையே னடைக்கலம்போற்றி என்று, இவ்விதமாகப் பலவித தோத்திரங்களாற் பாடித் துதித்தான் அனுமக் கொடியோனாகிய அர்ச்சுனமகாராஜன்.

கண்ணன் அர்ச்சுனனோடொண்டு நித்திரை செய்வித்தல்

அப்படி துதித்து நிற்கும் பார்த்தனுடையபத்தியைப் பரந்தாம பாண்டவர்சகாயர் கண்டு மனமகிழ்வுகொண்டு, பத்தியினாற் சித்தி பெற்ற உத்தமனாகிய என் மைத்துனனே! அரன் அரியென் றுரைக்கும் இரண்டு பொருளும் ஒன்றன்றி வேறில்லை. வேறாகக் கருதினோர்க்கு வேறாகும். இந்த வுண்மை ஒன்றென உண்டென்று உன்னுடைய அன்பில் ஸ்திரப்படும்படியாய்த் தெரிவிக்கிறேன். அஃதெப்படியென்றால், என் சிரமுதற் கால்வரையிலும் நீ சாற்றிய புஷ்பத் தினுசுகளை யெல்லாம் மாறாமல் உன் சிந்தையிற் குறித்து வைப்பாயாகில், அந்தச் சிவலிங்க மூர்த்தமாகியகைலாசபதியினுடைய அவயவயங்களிலிருக்க உனக்குக் காட்டுகிறேன். நீ அர்ச்சித்த பத்திர புஷ்பங்களுடனே இலிங்கமூர்த்தியைக் கண்டு தரிசிக்கலாம் என்று வாழ்த்தி, நைவேதனஞ் செய்த, கனி - தேன் முதலிய எல்லாவற்றையும் அர்ச்சுனனுந் தானுமாகப் பங்கிட்டுப் புசித்து, கைகாற் சுத்தி பண்ணிக்கொண்டு, அப்பாற் சற்று தூரம் நடந்து, வாசனை நிறைந்த அம் மலர்த் தடத்தினின்றும் வரிவிற் றாங்கிய அவனுடைய கையைப் பிடித்துக் கொண்டு சென்று, உண்டிளைப்பு தொண்டருக்கு முண்டென்பதினாற் சற்றுநேரம் படுத்து ஆயாசந் தீர்ந்து இன்னுஞ் சிறிதுநேர மிங்குதானே யிருந்து அப்பாற் போகலாமென்று சொல்லி, தர்ப்பைப் புல்லுகளைப் பூமியிற் பரப்பித் தானும் அர்ச்சுனனும் அந்தத் தர்ப்பைப் பாயலின்மீது உட்கார்ந்தார்கள். அப்போது தீனதயாளுவின் தொடையின்பேரில் அதிக விளைப்போடுங் கூடிய அர்ச்சுனன் தலைவைத்துப் படுத்துத் தன்னை மறந்து நித்திரைபோக, அவ்வேளையிலே இந்திரன் முதலிய சிலபேர்கள் வந்து நந்த நந்தனனை வந்தித்து நிற்க, அக்கால் அருளாளனாகிய சுவாமியானவர் தன்தொடைக்குப் பதிலாக மணலைக் குவித்து நித்திரை செய்யுந் தனஞ்சயனுடைய தலைக்குயரமாக வைத்து, அங்குள்ள வாசனைபொருந்திய பல புஷ்பங்களை விஜயனுக்கு நாற்புறத்திலுந் தூவி, விற்படை - வேற்படை-கதைப்படை-வாட்படை என்னும் நான்குவித ஆயுதங்களையும் நான்கு பக்கங்களிலும் காவலாக, நட்டு-வனதேவதை-ஆகாயவாணி-பூமிதேவி என்னுமிவர்களைக் கைதொழுது காண்டீபனைப் பிராணபயமில்லாமற் காருங்களென்று வேண்டிக் கொண்டு, அநேகம் வீராளுடைய காவலிற் படுத்து நித்திரை செய்யுந் தன்மையிலும் பத்துபங் கதிகமாகிய பலமென் றுட்கொண்டு, இனி பயமில்லை யென்று கண்டு, தனக்குள் தானே சந்தோஷமடைந்து,அவ்விடம்விட்டு நீங்கி சற்று அப்புறம் போய், மல்லிகைமலர்-இருவாட்சிமலர் - சண்பகமலர்-கடம்புமலர் - கொன்றைமலர்-கோங்குமலர் - செருந்திமலர்-குருந்தமலர் - பாதிரிமலர் - புன்முருநகுமலர்-பூவரசுமலர்-மகிழமலர்-மருதமலர் - பாரிசாத மலர் இவை முதலிய தேனுறைந்த மலர் நிறைந்த அளவற்ற மரங்கள் முதலானவைகளும் உள்ளதாய், வெண்டாமரை - செந்தாமரை முதலாகிய நீர்ப்பூக்கள் மலிந்த தடாக நிறைந்ததாய் உள்ள ஒரு மேட்டின்பேரில் வந்திருந்தார்.

கண்ணன் இந்திராதி தேவர்கட் கினிமைகூறி தமது தாருகனென்னுஞ் சாரதிக்குத் திட்டஞ்சொல்லி யனுப்புதல்

அங்கே யவ்விந்திரன் முதலாயினோர் வந்துபணிய, அவர்களுக்குத் தகுந்த மந்திரமாகிய சில ஆலோசனைகளைச் சொன்னார். மந்திரமென்னும் ஆலோசனை என்னவெனில், நரனுக்கும் நமக்கும் பயமில்லை, நாரிபாகன் இடத்துக்குப் பாசுபதம் பெறப்போகிறோம், குறைவில்லாமற் பூபாரமுடியும். உங்கள்குறையுந்தீரும். ஆதலால் நீங்கள் போங்களென்று அவர்களை யனுப்பிவிட்டு, பரமபதத்திலிருக்குந் தன் சாரதியாகிய தாரகன் வரும்படிக்கு அச்சர்வஜீவ தயாபரமூர்த்தி நினைத்தார். உடனே தாரகன்வந்து அடிமலரின் அடிசூடி வணங்கிநிற்க, அதனை யம்மூர்த்திகண்டு, ஓ வலனாகிய தாரகனே! இப்பூபாரந் தீர்க்கும்

படியாய் பரமபதம்விட்டுப் பாண்டவர்குதவி செய்யப் பூலோகத்தில் வந்து, பாண்டவர் சகாயனென்று அவர்களுடன் பொருந்தி, அவர்கள் வருந்திய துயரங்களை யெல்லாந் திருந்தச்செய்து வரும்போது; காண்டாவன தகனஞ்செய்த காண்டீபனென்னுங்காளை தன் பிள்ளையாகிய அபிமன்னனிறந்த ஆயாசத்தால் நாளையபொழுதுக்குள் சிந்துராஜனைக் கொல்கிறேனென்றும், அவனைக் கொல்லாவிட்டால் அக்கினியில்வீழ்ந் திறப்பேனென்றும் சபதங் கூறி யிருக்கிறான். இந்தச் சேதிகேட்டு எதிரிகளும் பலங்கட்டிக்கொண் டிருக்கின்றார்கள். நாளைப்போரில் அந்தச் சபதம் நிறைவேறத் தக்கது லேசாகிய காரியமல்ல. ஆகையா லர்ச்சுனன்கூறிய சபதப்பிரகாரம் வெற்றி பெறுவானாகில் மெத்தவும் நல்லது. அந்தச் சபத முடிவதற்குக் கொஞ்சம் வருத்தம் நேரிடுமாகில், ஆயுதமெடுப்பதில்லை என்றுரைத்த அச்சுதன் ஆயுதமெடுத்து போர்புரிந்தா னென்று உலகத்தாரெல்லோரும் என்னைத் தூஷித்து வசை வார்த்தைகள் மொழிந்தாலும், மொழியட்டுமென்று துணிந்து தேரேறி சக்ராயுதங் கைக்கொண்டும், அரிக்கிடையாய் யாவரையு முடித்து அர்ச்சுனன் சொல்லை நிலைநிறுத்தி அவனையுங் காப்பாற்றவேண்டி யிருப்பதால்; இப்போதெங்களுக்கு இவ்விடத்திலாகவேண்டிய காரியங்களை முடித்துக்கொண்டு, நாளைய காலமே நானும் நரனும் போர்க்களம் வந்து ஆலைவாய்க் கரும்பைப்போலும், வேலைவாய்த் துரும்பைப்போலும், அணிகளலைந்து நைந்தழியா நின்றதை வீரமாகாளி கண்டு கண்களிக்கும்படி யுத்தஞ்செய்யவேண்டியதா யிருக்கும். ஓ நற்குணஞ்செறிந்த சாரதி! நாளைப்போரிற் காளைப்பருவ நரன் ஒருவேளை இளைப்பானுகில், தட்சணம் பாஞ்சசன்யத்தை முழக்குவேன். அந்த ஓசையைக்கேட்ட நொடிக்குள்ளாக சக்கரம் - சங்கு - தண்டு-வாள்-வில் என்னும் நம் பஞ்சாயுதங்களையுந் தேர்மேற் கொண்டு இமைக்குமுன் வந்து என்னெதிர் நிற்கவேண்டும். என்று திருமாலானவர் ஒரு தரஞ் சொன்னதல்லாமலும், பலதரமாகச் சொல்லி வற்புறுத்தி; வல்லமையுடைய சாரதியான தாருகனுந் தானுஞ் சகலசுப சந்தோஷங்களுடன் க்ஷேமாதிசயங்களைப் பேசிக் கொண்டு நள்ளிருள்வரும் வேளையை நாடிக் கொண்டு அவ்விடத்தி லிருந்தனர்.

## அருச்சுனன் சொப்பனத்திற் கண்ணனெழுந்தருளி ஆதரங் கூறுதல்

இப்பால் இவ்விடத்திற் புத்திர சோபாக்கினியாலுஞ் சபதாக்கினியாலும் உள்ளுடைந்து, காற்றிலு நெருப்பிலுங் கசங்கிய மலர்போற்காய்ந்து, தர்ப்பாசயனத்திற் சோர்ந்து துன்பமே இன்பமாகக்கொண்டு மனமயங்கி, சந்திரகலை தாவியோடச் சாகரத்திலிருந்து நானென்ன சபதத்தை எப்படி முடிக்கப் போகிறேன்? ஓ சம்புவே! ஓ சங்குசக்ரதரா! என்று நினைத்து அயர்ந்து சொப்பனவஸ்தையால் நித்திரை பேரயினன். அர்ச்சுனராஜன் இந்தப்பிரகாரம் நினைவுகொண்டு நித்திரை செய்யாமல் நின்றசுபத்திரை நாயகனுடைய கனவில்வந்து கருதியவண்ணங் கைகூட்டிவைத்தார் கருங்கடல் வண்ணனாகிய கமலக்கண்ணன், என்று வைசம்பாயனர் சொல்லி வரும்போது, ஜெனமேஜெயராஜன் திடுக்கிட்டெழுந்து, வைசம்பாயனரைப் பணிந்து, என்கருவேக வந்தகுருவே கமலைநாயகன் திடர்மேட்டின்பேரிற் சாரதியாகிய தாருகனுடன் பேசிக்கொண் டிருந்தாரென்று திருவாய்மலர்ந்த தேவரீர், எங்கள் மூதாதையாகிய அர்ச்சுனனுடைய கனவிலும் வந்து பிரவேசித்தாரென்றீர். எனக்கிது மிகுந்த ஆச்சரியத்தை விளைக்கிறது. அதனுடைய விதத்தைத் தேவரீர் விரித்துச் சொல்ல வேண்டும் என்று வேந்தன் கேட்க, சாந்தமாகிய வைசம்பாயனர் சந்தோஷங் கொண்டு, மாந்தரிற் சிறப்பு மன்னனே! கேளும்: இந்த இரண்டிடத்திலும் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி யிருந்தாரென்பது ஆச்சரியமல்ல. அவருக்கு இதுவொருபெரிதா? அவர் எப்பேர்ப்பட்டவரென்னில், கடல்சூழ்ந்த இவ்வுலகமெல்லாந் தன்னுடைய கர்ப்பத்தினின்றும் புஷ்பிக்கச் செய்து, அவ்வுலகினிறைந்த ஆத்மகோடிகள் தோறும் ஜீவாத்மாவுக்குப் பரமாத்மாவாய்த் தவழ்ந்து கொண்டிருக்குந் தனிமையாகிய பெருமையுடையவராய், பிரமானந்த ஸ்வரூபராய், சிரேஷ்டமானசுகத்தைச் சீவர்களுக்குக் கொடுப்பவராய், நிர்விகாரராய், ஞானவடிவராய், பிரபஞ்சாதீதராய், மகாவாக்கியங்களுக்கு லட்சியார்த்தரா யுள்ளவராதலால், அவர் எங்கும் இருப்பாரென்று அப்பாற் சொல்லத் தொடங்கினார்.

## கண்ணனும் அர்ச்சுனனும் கருடவாகன மூர்ந்து கைலாயத்திற்கு செல்லுதல்

ஓ அரசனே! உங்கள் முப்பாட்டனாகிய வில்விஜயன் சொப்பனாவஸ்தையிற் பூரண வுருவாகிய புண்ணியனைக்கண்டு, தான் கொண்டிருந்த சோகமெல்லாம் விண்டு, அண்டர் நாயகனுடைய புண்டரீகத் தாளைச் சிரமேற் கொண்டு, கண்ணீர் சோரவிடுத் தழுதகாலை யில் வணங்கிய விஜயனை யெடுத்து, மார்போ டணைத்து, ஐயனே! ஏன் விசனப்படுகிறாய்? உனக்கு ஏதாகிலுங் குறைவுண்டானாற் சொல்: நான் அந்தக் குறையைக் குறைவுடன் குறை யச் செய்கிறேன். என்று கமல நாபியன் கேட்க, விஜயகாண்டீபன் சொல்லுகின்றான். மனத்துயர் மாற்று மாதவனே! விண்ணிற் சிறந்த வேதவேதியனாகிய பிர்மாவானவன் நாளை யுத்தத்தில் நெருங்கிவருஞ் சயந்தவ னுக்குத் துணையாயிருந்து என் சபதம் நிறை வேறவொட்டாமற் றடுத்துப் போர் செய்யத் தலையிட்டுக்கொண்டு புகுவானாகிலும், சிந்து தேசாதிபனைச் செயித்து நான் கூறிய சபதத் தை ஸ்திரப்படுத்தி ஜெயத்துடன் வரும்படி யாய் என் சிந்தையிற் றுணிவுகொண் டிருக் கின்றேன். இதற்கு தேவரீர் சகாயம் பண்ண வேண்டும் என்று அர்ச்சுனன் சொல்ல, இந் தச் சங்கதிகளை யெல்லாங் கமலக் கண்ணன் காது குளிரக் கேட்டுக் காண்டீபனை நோக்கி, அப்பா மகனே! நீ குறித்துச் சொன்ன சொற் படிக்கு முழுவது மெத்த அருமை. ஆனா லும், நானுனக்கு வஞ்சமில்லாமல் மனம்விட் டுச் சொல்லுகிறேன் கேள். மெய் வருத்தம்-இளைப்பு-நித்திரை - மயக்கம் இவை முதலிய யாவற்றையும் விட்டுவிட்டு விரைந்தெழுந்து என்னுடன்கூட வருவாயாகில், உனக்கொரு நன்மையுண்டாம். அதாவது: புராதனனாகிய புராந்தகன் பொருந்திய கயிலையங்கிரியைக் கண்டு தெரிசித்துக் கொண்டு சூரியோதயத் திற்கு முன்னே யுத்தகளம் போய்ச் சேர வேண்டி யிருப்பதால், சீக்கிரம் புறப்பட்டு வா வென்று சொல்லினார். அது கேட்ட மாத்திரத்தில் அர்ச்சுனன் கண் விழித் தெழு ந்து, தன் கனவிற் கேட்ட வார்த்தையை நன ந்து, தன் கனவிற் கேட்ட வார்த்தையை நன விற் கேட்டதுபோல் மகிழ்ந்து அதற்குடம் பட்டு, வாசுதேவனுக் கருகில்வந்து சாஷ் டாங்கமாய் வணங்கி நின்றான். அப்படி நின் றதைக் கண்ட ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியானவர் புள்வேந்தனாகிய கருடபகவானை நினைக்க, அம்மாத்திரத்தில் அவன் வந்து மாயவனைத் தோளிலும், வலாரி மைந்தனைக் கரத்திலுமா யேந்திக்கொண்டு, தனது வெஞ்சிறை காற்றி னால் அக் கைலாயகிரியைக் கவிந்த யெழு வகை மேகங்களுங் கலங்கி விலங்கும்படியாய் விசைபெறச் சென்று, வெள்ளியங்கிரியிற் கொண்டுபோய் இரண்டு பேரையும் இறக்கி னான். அப்போது அவ் வெள்ளியங்கிரியில் இருக்கு மாம்பையர் வயினதேய னென்னுங் கருடபகவானை நோக்கி, குலமலைகளின் சிற கினை எல்லாங் குன்றவரிந்த வச்சிரபாணி, இம் மலையின் சிறகை யறியாத காரண மென்று சந்தேகித்தார்கள். அப்படி சந்தே கிக்கும்படியாய் மலைபோல் நின்ற கருடபக வானை அங்ஙனே நிறுத்தி, நரநாராயணர்க ளாகிய இருவரும் இமாசல இராஜபுத்திரி சமேதராய் எழுந்தருளி யிருக்குந் திருவோ லக்கத்தை நோக்கிச் சொல்லுவதாயினர். இவ் விரண்டு பேருங்கூடிக் கைலாயகிரிக்கு போன தெப்படி யிருந்ததெனில், பாற்கடலிலெழுந்த அமுதம்போலும், களங்கமறப் பிரகாசிக்கும் நிலவைப்போலும், ஒளிபெற்றிரா நின்ற சுத்த மாகிய வெண்மலையை இரண்டு நீலகிரியானது தேடிப்போகுந் தன்மைபோலும் இருந்தது. இவ்விதமாக நடந்து ஆலகாலம் நிறைந்த கண்டத்தினையுடைய ஐமுகன் வாழா நின்ற அழகிய திருவோலக்க மண்டபத்தின் வாயிலை ஆவலாய்க் கண்டார்கள்.

## கைலாயகிரிச் சிறப்பு

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! அந்த வெள்ளிமலையின் சிறப்பை யானென்னென்று சொல்லுவேன்? சராசரங்கள் யாவுக்குந் தாயா கும் பசுபதியாருடைய பாத பதுமங்களைச் சுமந்தருளிய கயிலையின் சிறப்பை கடையேன் சொல்லுந்தர மன்றாயினும், உடையானிடமா தலால் தடையில்லாமற் கூடியவரையிலுஞ் சொல்லுகிறேன் கேளும். ஓ அரசனே! சோட சகலை நிறைந்த சந்திரனுக்கொப்பாகிய நிறங் கொண்ட வெள்ளியங்கிரியால் திசா திசைகள் தோறும் வெண்மை தங்கிய பிரகாசத்தைப் பொழிந்து, ஜொலித்துக்கொண்டு இருக்கும் நிலாத் தோற்றமானது, தேனிறைந்த கொன் றையைச் சூடிய சிவபெருமானுடைய நீண்ட சடாமௌலியிற் பிரகாசித்துக்கொண்டிருக்கும் மூன்றாம் பிறையினும் மேலாகிய ஒளியைச் செய்து கிரணங்களை வீசிக்கொண் டிருந்தது. மேலும், அவ்விடத்தி லிருக்கும் வெட்டார

வெளிகள், காடுகள்-கமர்கள்-வெடிப்புகள் முதலிய இடங்கள் தோறும் அநேகமாயிரம் அக்கினிப் பொறிகளெனச் சீறுங் கண்களையுடைய பாம்புகளின் நாகரத்தினங்க ளானவை எங்கும் இருளில்லாமற் சூரியகிரணம்போற் சிவந்து ஜொலித்துக்கொண்டிருப்பதினால், இவர்கள் சொல்லுகின்ற இருட் காலமும் பகற்காலம்போ லிருந்தது. கொடி-செடி-முதலிய விருக்ஷங்களும், உளுத்த எலும்புகளும், தளிர்த்துத் தழைத்து உயிர் பெறும்படியாய் நாரதர், தும்புரு முதலாயினோர் பாடும்படியான நாதயாழி ஞோசையானது, பாரதவமர் புரியவந்த பசுமையாகிய நரநாரணர்கள் நடந்துவரும் மார்க்காயாச மென்னும் வழி விடாமையும் ஆற்றியது. இவையுமல்லாமல் சிவ சங்கருடைய புயமான மலைச்சாரலில், நவமணியால் அலங்கரித்த தன்மைபோல் அணிந்திருக்கும் பாம்பாபரணத்தின் சுவாசமாகிய காற்றானது, அவர் சிரமேலிருக்கும் இளம்பிறையினுடைய நிலவின் குளிர்ச்சியையும், செஞ்சடாமகுடமாகிய செவ்வானத்திற் பூந்தாது சொரியக் கட்டவிழ்ந்து மலரும் கொன்றைப் புஷ்பத்தின் வாசத்தையும், அச்சடாடவிச் செவ்வானத்தி லிராநின்ற கங்கையின் சிறியதுளித் திவலையையுங் கலந்து, மந்த மாருதம்போல் வீசிக்கொண்டிருந்தது.

ஓ அரசனே! நீடூழிவாழாநின்ற வெள்ளிமலையின் பக்கங்களெல்லாம் மலையருவிகள் வழிந்தோடுந் தன்மைகள் எப்படி யிருந்ததென்னில், விக்ஞானத்தாலாழ்ந்த மாதவர்கள் அக்கயிலாச பதியினுடைய கருணைவாரிதியின் கடாக்ஷ வீக்ஷண்யத்தைத் தெவிட்டும்படியாகப் புசித்து, தங்களுக்குள்ளே அடக்காமற் பெருகி வெளியிலோடும் பேரானந்த வெள்ளத்தை ஒத்திருந்து, பின்னும் வேதாதிகளினொலியும், மகானுக்கள் துதிக்கும்படியாகிய பேராசையும், உடுக்கை-டமரகம்-தவளச்சங்கு முதலிய வாத்தியங்களின் முழக்கமும், எப்போது மிடைவிடாமற் சப்திக்கும்படியாகவுஞ் சந்திர சூரியர்கள் வலம் வந்து தொழும்படியாகவு மிருக்கின்ற அக்கயிலையங்கிரியானது, பூமியில் அவதரித்து மருதமரத்தையுந்திய மாதவன் யோகநித்திரை செய்யும் பாற்கடலைப்போன் றிருந்தது. பிர்மா, விஷ்ணு, உருத்திரனென்னும் மூன்றுருவு மோருருவாகி யமைந்த அழகிய பரமசிவன் வாழாநின்ற வெள்ளியங்கிரியைத் திரிகாலமுந் தொழுதேத்துதற்குத் தேவர்கள் கும்பு கும்பாய்க் கூடிவருவது எத்தன்மை யொத்திருந்ததென்னில், முக்குண நீங்கிய மூளரித் தேனை நாடி மூன்றுலோகத்திலும் நிறைந்த அன்பென்னும் வண்டினங்க ளருந்திக் களிக்க வந்ததை யொத்திருந்தது. தாயினும் இனிய சாம்பவமூர்த்தி சங்கரியுடன் தங்கிய வெள்ளிமலையில் உடுக்கை முதலிய வாத்தியங்கள் அநேகமாயிரமாக அதிரும் பேரோசையானது, பூர்வத்தில் ஆதிசேடன் மகமேருவை மறைக்க வாயுபகவான் வீசியடித்த வலுவின் முழக்கத்தை யொத்திருந்தது. நிறைந்து நிலைத்து ஆத்மகோடிகள் தோறும் நடனஞ் செய்திராநின்ற பசுபதியாருக் கெதிரில் கணிகைக் கன்னியர் அசைந்து கை காட்டியாடுங் காக்ஷிகள், மின்னலைப்போல் அழகாகப் பிரகாசிக்கும் வல்லிக்கொடிகளானது காற்றினலசையுந் தகைமைக்கொப்பா யிருந்தது. கற்பனைக் கெட்டாத கண்ணுதல் நாராயணியுடன் களித்திருக்கும் அக்கயிலையி னுற்புறத்திலும், கோடிசூரிய சந்திரப் பிரகாசம் விளங்கும்படிக்கு ஆலயம் நிறைந்திருப்பது எப்படியிருந்ததென்னில், முதலேர்ப்பாடாகிய நான்கு வேதத்தின் முடிவையுணர்ந்த வேதாந்தச் சிற்பரானுடைய மலமற்ற இருதயத்துக்கு ஒப்பாயிருந்தது. இன்னும், ஓமென்னும் பிரணவத்துடன் சிவ பஞ்சாக்ஷரத்தையுஞ் சேர்த்து ஆறெழுத்தாக உச்சரித்து, தேவர்-முனிவர் முதலிய பேர்கள் எப்பொருட்கு மிறைவராகிய ஈஸ்வரருடைய சகஸ்திர நாமங்களை எவ்விடத்துந் துதித்துக் கூவிப் புகழாநின்ற ஆரபாரமானது, பெருமை பொருந்திய க்ஷீராப்தியைக் கடைந்தகாலத்தில், அமரரும்-அசுரரும்-வாசுகியும்-மந்தாரமாகிய மத்தும் கூச்சலிட்ட பேரொலிக்கு மேலிட்டிருந்தது. இத்தன்மையாக அளவில்லா மகிழ்ச்சியையுடையவர்களா யாவரும் வந்து சூழ்ந்திருக்கும் ஆலயங்களையும், அவ்வாலயங்களி லவர்கள் செய்யுஞ் செபதப முதலிய சிவபூசாதி காரியங்களையுங்கண்ட நரநாராயணு ளிரண்டு பேரும், மிகுந்த பிரகாசத்துடன் விளங்கும் நந்தவன முதலிய சூழல்களையும் நோக்கி, காந்தமிழுக்கும் இரும்பைப்போ லுருகி நயக்குஞ் சிந்தையராய்ச் சென்றார்கள்.

### கண்ணன் அருச்சுனனுக்கு வீமசேனனுடைய மானத் சிவார்ச்சனைத்திறங் காட்டுதல்

அந்தவேளையிற் சிவபூசையில் நம்மை விட ஸ்திரமான பத்திமான்க ளில்லையென்

றும், திருமாலைச் சிவனுகச் சிந்தை கலங்காம லிருந்து சிந்தித்தோமே யென்றும், தனக் குள்ளே தானே மகிழ்ந்தும், புகழ்ந்தும், கர்வ மடைந்தும் வருகிற தனஞ்சயனுடைய தன் மையைச் சர்வஜீவ தயாநிதியாகிய சகாய னுணர்ந்து, இவ்விடத்தில் இவனைக் கொஞ்ச கர்வபங்கம் பண்ணவேண்டு மென்று கருதி னூர். அப்போது அநேகஞ் சிவகணங்களும் பூதகணங்களுமாகிய பேர்கள் கோடா கோடி யென்று சொல்லும்படியாகிய பெரிய கூடை களில் தினுசுவாரியாகிய நிர்மால்ய புஷ்பங் களை வாரிக்கொண்டு, நெக்குவிட்டுத் திக்கு முக்காடும்படியாய் வந்து வெள்ளிமலை சார லிற் கொட்டும்போது அநேக புஷ்பங்கள் மலைபோற் குவிந்திருக்கும். இன்னும் ஓச்ச லொழி வில்லாமல் வரிசைவரிசையாய் வாரிக் கொண்டு வந்து வாசனை திரவிய முதலிய வஸ் துக்களுடன் மலர்களைக் கொட்டிப்போட்டு வருந்திப்போகிறபேர்கள், ஆகிலும் அப்பா! இப்படியுஞ் சிவபூசை செய்யுமனிதன் ஒருவ னிருப்பானு? என்று வேர்த்து விதிர்விதிர்த் துப் பெருமூச்சுவிட்டுப் பெருங்கூச்சலிட்டுப் பேசிக்கொண்டு போகும்போது, வாசவன் மகனுகிய அர்ச்சுனராஜன் நேசமாகிய வாசு தேவன் என்னும் மைத்துனனைப் பார்த்து, தாசானுதாசனையா காசாம்பூ வண்ணனுகிய ஈசனே என்று கண்கலங்கிக் கட்டுவிட்டுப் போய், ஓ சுவாமீ! இதென்ன விபரீதமாயிருக் கின்றது? இவ்வளவு புஷ்பம் எந்த லோகங் களிலுண்டு? ஈஸ்வரச் சிருஷ்டியிலேயும் இல் லாத புஷ்பங்களெல்லாம் இப்போது கண் டோமே: இவைகள் எந்தயிடத்தில் அடங்கி யிருந்தனவோ? சிவார்ச்சனை செய்வதற்கு இந்தப் புஷ்பங்களைக் கூடைகூடையாய்க் கொண்டு வாரிச் சொரிந்தாலும் எத்தனை கோடி காலஞ்செல்லும்? எத்தனை யுகம்பிடிக் கும்? எந்த மனிதன் இப்படி பூசிப்பான்? இவ்வளவு புஷ்பங்களை எந்த சுவாமி மூச்சு விடாமல் மனம் பொறுத்திருந்து ஏற்றுக் கொள்ளும்? என்னப்பனே! இதனது விப ரத்தை சொல்லுமென்று இறைஞ்சித் தனஞ் செயன் கேட்க, என்னுண்டவனுகிய செந்தா மரைக் கண்ணன் ஒன்றுந் தெரியாதவரைப் போல், அர்ச்சுனன் பட்ட ஆச்சரியத்திலும் நூறுபங்கு அதிகமாக ஆச்சரிய மடைந்து, நான் இதுவரையிலு மிப்பேர்ப்பட்ட சிவார்ச் சனைசெய்த பேர்களுண்டென்று என், நினை விலுங் குறியேன்; என் கனவிலு மறியேன்; இத்தியாதி புஷ்பங்களுடைய பரிமளங்களை காட்டினிடத்திலு மறியேன்; எந்தக் காற்றி னிடத்திலு மறியேன். என்று பாண்டவத் தோழனுரைத்து, அக்காண்டீபனை யழைத் துக்கொண்டு அங்கயற் கண்ணியுடன் ஆண் டகை யமர்ந்த வெண்பொன் மலையேறிப் போவதாயினர்.

இவ்வாறு யாதொன்றும் தெரியாற்போற் போகாநின்ற அவரெதிரிற் சில கணங்கள்வர, அவர்களைக் கண்ணன் பார்த்து, ஓ சிவகண மாகிய தம்பிமார்களே! ஐயோ! மெத்தவும் வருத்தப்படுகிறீர்களே; இப்பேர்ப்பட்ட சிவ பூசை செய்யும் அடியார்களாகிய அன்பர்களு முண்டோ? இல்லை; நீங்களே கொண்டுவந்து அர்ச்சிக்கிறதோ? என்று மாயவன் மிகுந்த உபசாரத்துடன் கேட்க, அக்கணங்களிற் சிலர் கள் சொல்லுகின்றூர்கள். ஆம்: ஆம்: ஐயா! பூமியில் அவதரித் திருக்கின்ற பாண்டவர்க ளில் மாருதி மைந்தனுகிய வீமசேன னென் பவன் மானத பூசையாகப் பூசிக்கும் வேலை யும், அவன் மனம் நிறைந்த அம்மணம் செறிந்த மலர்களை நாங்கள் வாரிக்கொட்டும் வேலையும், உள்ளநாளுள்ளமட்டும் எங்கள் தலையி லெழுதியிருக்கின்றது. ஆண்டவனே! பெட்டிமகன் ஒரு நாளாகிலும் ஏமாறுனு? நாலு கூடை இரண்டு கூடையேனுங் குறைக் கானு? ஓ பகவானே யென்று சொல்லிக் கொண்டு அவர்கள் போய்விட்டார்கள். இவ் விடத்தில் நரனுனவன் நாராயணனைப் பணி ந்து, கண்ணீர் சோரவிட் டழுது, ஓ ஸ்வாமி! எங்கள் அண்ணுவாகிய வீமசேனனுடைய அன்பு இப்பேர்ப்பட்டதோ? அடியேன் மெத்த அருமையாகச் சிவபூசை பண்ணு கிறேனென்று கொஞ்ச மமதை யடைந்திருந் தேனே: ஓ மாயவனே! இந்த உத்தமனுடைய மானத பூசையின் மகத்துவத்தைக் கேட்ட வுடனே, என்னுணவ முதலிய யாவுங் குன்றி மாய்ந்ததே; என்று மிகுந்த பயங்கொண்டு வருந்தினுன். அப்படி வருந்திய அர்ச்சுனனை அரிவாசுதேவன் தேற்றி, அப்பா! இந்தப் பூலோகத்தில், தவம்-அன்பு முதலிய சத்தியங் களில் இன்னுன் சிறந்தவனென்று எவனைச் சொல்லலாம்? இந்த ஈசனுடைய திருவிளை யாட லெப்படியோ நாமறியோம். அவரவர்க ளிருதயத்தி லிருந்து சிந்திப்பவனும், பூசிப் பவனும், சிந்திக்கத்தக்கவனும் அவனு யிருப் பானுகில், நாம் இன்னவிதமென்று எவரைச்

சொல்லலாம்? எல்லாஞ் சிவன் செயலென்று பேசிக்கொண்டு, அண்ணலாகிய நுதற்கண்ணர் எழுந்தருளிய வேதக்கொடி, விருஷபக்கொடி பொருந்திய பெரிய சபையினிடத்தில் ஸ்ரீ நந்திதேவருடைய அனுக்ஞைபெற்றுள்ளே புகுந்தபோது, மிகுந்த பெருமை பொருந்திய சூரிய சந்திராதிகளி னொளியும், மாணிக்கங்களி னழகும், மரகதமணியி னழகும், முத்துச் சரங்களும், பவளக்கால்களும், கோமேதகக் கொடுங்கையுமுடைய திருவோலக்க மண்டபத்தில், திரிநேத்திர தாரியாகிய சிவபெருமான் வீற்றிருந்து பிரகாசிக்குந் திருக்கோலத்தை நரநாரணர் கண்டார்கள்.

நரநாராயணர் கைலாசபதியைத் துதித்தல்

அங்கே ஆயிரஞ் சிரங்கள் ஆகாயத்தை யளாவும்படிக்கு ஓங்கியிராநின்ற இமயவல்லியாகிய ஈஸ்வரியார் வாமபாகத்தி லெழுந்தருளியிருக்க, இந்திரன் முதலாகிய மந்திர தேவர்கள் சமயம் பார்த்து அடிக்கடி வீழ்ந்து தாழ்ந்து போற்றிசெய்ய, சத்துவ முதலிய சத்திய நெறிகளையுடைய முனீஸ்வரர்களின் கூட்டமத்தியி லிராநின்ற தற்பரனை, நால்வகைத் தோற்றம், எழுவகைப் பிறப்பு, எண்பத்திநான்கு லக்ஷ சீவராசிகளையும் ஆக்கியளித்து அனுக்கிரகஞ் செய்தருளுந் தாணுவை ஆயிரம் பணமகுடமுடைய பாம்பின்படநீழலிற் செஞ்சடாமகுடந் திகழ்பொருந்திய திரியம்பகனை, செவியி லணிந்த கட்செவிக் குண்டலமானது, நிலவைத்தராநின்ற மூன்றாம்பிறையுடன் நகைத்து நயந்து மருவும்படியா யிருக்கிற மஹேஸ்வரனை, முத்தாசனத்தி லோர்பாதமுங் குறுகிய தேகமுயலகன் முதுகிலோர் பாதமும் பொருந்திய மூர்த்தியை மரகதக்கொடி படர்ந்த பவளமலை போன்ற மங்கைபாகனை, காண்போர்க்கு இனிப்பாகிய தேவாமிர்தத்தினு மினிக்கும் எண்டோளினையுடைய மானிடமேந்தியை, புலித்தோலாடையும், யானையுரிப் போர்வையும், சிரமாலையும், நருவெண்டலையும் ஆகிய பராக்கிரம சின்னங்க ளெல்லாம் தரித்தருளிய சங்கரப் பிரபுவை, தினமும் காலையு மாலையும் நான்கு வேதங்களினாலும், அறியப்படாத் ஆலமர் கடவுளை, பாலாக்ஷகாலாந்தகனை, காமத்தம் சியை வாடியபயிர் வானின் மிழியு மழையை கண்டதைப்போற் பலமுற்றுயர்ந்த தவத்தை பெற்ற இந்நரநாரண ரிருவரும் வந்து கண்டார்கள். உடனே திரிபுரத்தை நகைத்தெரித்த அத்திரிநேத்திரனுக் கெதிரில் நரநாராயணர் வந்து நெருங்கி, மிகுந்த அன்புடன் அவருடைய சரணபங்கயத்திற் பலதரம் ஆழ்ந்து, இருகரங்களையுஞ் சிரமேற் கூப்பி நின்று, "பொங்கரா வெயின்மணிப் பூணும் பேணுநீற், றங்கராகமு முவந்தணியு மேனியாய், சங்கரா மேருவெஞ் சாபம் வாங்கிய, செங்கரா சிவசிவ தேவதேவனே. விண்ணிடைத்திரிபுரம் வெந்து நீறெழப், பண்ணுடைச் செந்தழல் பரப்புமூரலா, வெண்ணுடைக் காமனை யெரித்த பேரழற், கண்ணுடைக் கடவுளே காலகாலனே. தருவது முயிரெலாங் காக்குந் தன்மையு, முருவற வொழித்தலு முன்றனுடலே, கருவறா தொழிந்தவர் கருத்திற் கண்டுதே, யொருவனே யெம்மனோர்க் குரைக்கற்பாலையோ. நித்தனே நிமலனே நிகழ நின்றுமனே, யத்தனே யடியவர்க் கெளிய வண்ணலே, பித்தனே யாதியுந் தங்கள் பேசொணு, முத்தனே யுயிர்தொறு மூலாய முன்பனே."

ஓ விஷச்சுவாலையுடன் பொங்கியெழும் பாம்புகளின் சிரோரத்தினப் பணியுஞ் சுகந்த பரிமளமிகுந்த சகல வாசனைத் திரவியங்களுஞ் சந்தோஷித் தணிந்து கொள்ளுஞ் சடாமகுடத் தாணுவே! ஓ சம்போ! ஓ சங்கரனே! ஓ மகமேருவை வில்லாக வளைத்த சங்கரனே! ஓ சிவசம்புவே! ஓ தேவர் தேவனாகிய தெய்வமே! ஓ விண்ணுலகிற் பராக்ரமித்திருந்து வீறுற்றுதிரியுந் திரிபுரமானது வெந்து நீறாகத் திகுதிகுவென் றெரியத்தக்க நெருப்பழலைப் பரப்பும் புன்னகையுடைய அதிபாண்ட ரங்கனே! ஓ கபாலகங்காளனே! ஓ திரிபுவனத்தையு மயக்கி அரசுசெலுத்தி வந்த காமனைப் பொடியெழ யெரித்தருளிய பேரழற்கண்ணனே! ஓ கடவுளே! ஓ எல்லா உயிரையுங் கொல்லாநின்ற வல்லவனாகிய யமனையுதைத்தருளிய காலகாலனே! ஆத்மகோடிகளைச் சிருஷ்டிப்பதும், அவைகளை ரக்ஷிப்பதும், அவைகட்குக் கன்மவொழிவில் தேகமில்லாம லருப்பதும் இம்மூன்று தொழிலுந் தேவரீருடைய திருவிளையாடலேயன்றோ? ஓ ஜனனமரண மில்லாமல் நீக்கிக் கொண்ட மெய்யடியாராகிய ஜீவன் முத்தரென்னும் பாக்கியவான்களுடைய உள்ளக் கமலத்தில் வள்ளலாயுறைந் தருளிய ஒப்பற்றவனே! உமது மகத்துவத்தை எம்போலியரார் சொல்லித் துதிக்கத்தக்கதோ? ஓ நித்ய

மாயுள்ள நித்தனே! ஓ மலரகிதஞகிய நிமல னே! ஓ எங்குந் துதிக்கும்படியான நாமங்க ளெல்லாவற்றையு முடையவனே! ஓ ஆதர மற்றோர் முதலிய யாவருக்கும் அத்தனே! ஓ அண்ணலே! ஓ பித்தனே! ஓ பிஞ்சகனே! ஓ ஆதியினாலும் அந்தத்தினாலும் பேசவடங் காத பெம்மானே! ஓ மோட்சகாரணனே! ஓ உயிருக்குயிரா யுலாவிய பசுபதி! ஓ மூல மென்று சொல்லப்பட்ட வஸ்துக்களுக்கெல் லாம் முதன்மையா யிருக்கின்ற ஆதிமூலமே! என்று பற்பலவிதமாகிய விற்பனஸ்துதியை எடுத்துப் பாடிநின்று உள்ளம் நெக்கு நெக் குருகி, உடல் முழுவதும் உரோமாஞ்சிதம் பூத்து, நேயமும் அன்பும் நெருங்கிய தன்மை யாற் கண்களினின்று சலங்களைத் தாரை தாரை யா யுகுத்து நரநாரண ரிருவருந் தாழ்ந்து வணங்கி நோக்கியபோது, அவ்விடத்தில் உமாபதியானவர் அவர்களைப் பார்த்துக் கிருபைசெய்து திருவாய் மலர்ந்தருளுவதாயி னார்.

### கைலாசபதி நரநாராயணருக்கு அநுக்கிரகம் புரிதல்

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! பிர்மா விஷ்ணுக்களினாலும் அறிதற் கருமையாகிய சிவபெருமான் தம்முடைய சன்னிதானத்தில் துதித்து நிற்காநின்ற நரநாராயணர்களைப் பார்த்து, இதுவரையிலும் நடந்த சுபம் நன் மையோவென்று குமுதம்போன்ற தமது மெல்லிதழ் திறந்து கேட்டருளினர். அதற்கு நரநாராயணர் சொல்லுகின்றார்கள். ஓ மோக்ஷ முதலாகிய முதல்வனே! தேவரீருடைய திருக் கண்ணருளினால் எங்கள் புத்திக்குப் போது மாகிய க்ஷேமத்தை அடைந்திருக்கின்றோம் என்றார்கள். இப்போது நீங்களிருவரும் இவ் விருட்டில் இளைப்பாகிய இவ்வளவு வருத்தத் துடன் இவ்விடத்திற்கு வந்த காரணத்தைச் சொன்னால் நீங்கள் விரும்பிய வரத்தை யாம் கொடுப்போமென்று விடையோன் விளம்ப, கறுத்த மலைபோன்ற காயமுடைய நர நாரணரிருவரும் புளகாங்கிதமுற்று செந்தா மரைக் கமலம்போன்ற திருக்கரங்களைக் குவி த்து வணங்கி, யானையுரித்த அரசனுக்கு முன்னின்று சொல்லுகின்றார்கள்: ஓ சத்துச் சித்தானந்தமாய் விளங்கிய சாம்பசிவமே! தேவரீர் முன்னால் அநுக்கிரகஞ் செய்தரு ளிய பாசுபதாஸ்திரத்தால், காலகேய நிவாத கவசர்களைக் காய்ந்து தேவர்கள் குறையைத் தீர்த்தோம். இப்போது தானவர்கட்கோட கிய அப்படையை மானவர்கள்மேல் விடுப் பதுமரபன்று. ஆதலால், வேறே தகுதியான ஓர் வில்லுந் தேவரீரனுக்கிரகஞ் செய்தால், பாரதயுத்தத்தில் துரியோதனன் முதலாகிய மன்னர்களின் படையை வென்று பூபாரந் தீர்ப்போம் என்று ஹரிவாசுதேவனும் அர்ச் சுனனுஞ் சொல்ல, அந்த வசனத்தைக் கொத் தாகிய கொன்றைமாலை புனைந்த கௌரிபாகன் கேட்டு, ஓ அப்படியே அருள்செய்வோமென் று கிருபை கூர்ந்து, ஓ அன்பர்களே! நமது வாயுமூலையிலிருக்குந் தீர்த்தத் தடாகத்திற் போய் மூழ்குங்கள்; நீங்கள் சத்திய சவுச ஆசாரமுள்ள உத்தமர்க ளாகையால், அங் கவை யுங்கட்குங் கிடைக்கும்; அவற்றை எடுத் துக்கொண்டு இங்ஙனம் விரைவில் வாருங்க ளென்று அனுப்பிவைத்தார்.

அந்த உத்தரவின்படி வில்லும் பாணமு மிருக்காநின்ற தடாகத்தை நாடி அதிவேகமாய் சென்று நோக்குமிடத்தில், சொல்லுதற்கரிய சிரோரத்தினக் கொண்டை தாங்கி, அநேக மாயிரம் படங்களை விரித்தோங்கி, ஓர் நாக சர்ப்பம் வாடைக்காற்றைப்போற் சீறி, வடவா முகாக்கினியைக் குளத்திற்கக்கி, வாலடித்துப் புரண்டுவந்தவர்களைக் கிட்ட நெருங்கவொட் டாமல் மருட்டும்போது; நரநாரண ரிரண்டு பேரும் நடுங்கி, இப்பவே இப்படி யிருந்தால், இது நமக்கு அடங்கி வசப்படுவதெப்படி யென்று தியங்கித் திரும்பும்போது, அச் சர்ப் பத்தினிடமாய் ஓர் முனிவன் வெளிப்பட்டு, இது நாகசர்ப்பமல்ல; ஆதிமூர்த்தியாகிய எமது அண்ணலாற் போடப்பட்ட போர்வில் இதுதானென்று புகன்று, நீங்கள் சுசி முதலிய ஆச்சாரங்கள் குறைந்திருப்பதினால் இப்பேர் பட்ட விபரீதமாய்த் தோன்றுகிறது. உங்க ளுடைய நித்தியவிதிகளை முடித்துக்கொண்டு அத்தனருளை நினைத்து பத்தியால் விரும்பு வீரென மூத்தராகிய அம்முனிவர் சொல்ல, உடனே சிவபெருமானுடைய சந்நிதானத் துக்கு இரண்டு விழிபோன்ற நரநாரண ரிரு வரும் அவர்கூறிய மொழிவழி தேறி, ஸ்நான முதலிய நியமங்களைக் குற்றமில்லாமல் முடித் துக்கொண்டு நின்றார்கள். அப்போது பாம் பாகத் தோன்றிய வில்லும் பாணமும் யதா ரூபமாய்ப் பலம்பொருந்திப் பிரகாசித்திருந் தது. உடனே நரநாராயணர் கண்டு வேக மாகச் சென்று சம்போ சங்கரவென்னும்

பெரிய ஓசையுடன் கூச்சலிட்டுத் தூக்கிக்
கொண்டு தங்களுக்கு உத்தரவுசெய்த சதாசிவ
மூர்த்தியின் சந்நிதானத்திற்கு முன்பாகக்
கொண்டுவந்தார்கள்.

அப்போது பவித்திரமாகிய கங்காதேவி
யைச் சடையிலணிந்த பரமசிவன் பூமியில்
வைக்கும்படியாய் அருள்செய்த அவருடைய
திருவாக்கின்படிக்கு சன்னிதியில் வைத்தார்
கள். அக்காலையில், அரவின்வாய் நின்றெழு
ந்த முனியை யழைத்து, நாம் திரிபுராதிகளை
எரித்த காலத்திற்கொண்ட இவ்வில்லினுடைய
முஷ்டி நிலை முதலிய யாவற்றும் இந் நரநார
ணர்க்கு முடித்துக் காட்டென்று மூக்கண்ண
னுரைக்க, அப்படியே பலம் பொருந்திய
வில்லையெடுத்து நிறுத்தி, வணங்கி இழுத்து
வளைத்து, நானிலநடுங்க நாணிபூட்டி, பொன்
னொளியு மின்னும் புறமிடும்படியாகிய பேர்
ஒளிபெற்ற முனைவாளியை நாட்டி, கரவேக
சரவேக சாகசங்களுங் காட்டிய காலையில்,
முஷ்டி நிலைமுழுவதும் நரநாரணு ளுணர்
ந்து, அக்கினி வடிவாகிய ஆதிபகவானை
வணங்கி, இதனுடைய மந்திரத்தையு மருள்
செய்யவேண்டும் ஐயனேயென்று கிருஷ்ணார்ச்
சுனுள் கேட்க, உடனே பச்சைக்கொடி படர்ந்த
பவளரூபமாகிய பரமசிவன் கிருபை பாலித்து,
பாசுபதம் தொடுக்கும் பிரணவத்தை பூபாரம்
தீர்க்கச்செல்லும் நரநாராயணுள் பிழைக்கும்
படியாய் அர்ச்சுனனுடைய செவியிலுபதேசித்
தருள, அதனுற் களித்து மகிழ்ந்து வணங்கிய
கிருஷ்ணார்ச்சுனுளைப் பரமமூர்த்திப் பார்த்து,
நீங்கள் பூலோகத்துக்குப்போய் பாவிகளாகிய
சத்துருக்களை முடித்தும் பலம்பொருந்திய
பாதத்தை நிறைவேற்றி வெற்றிபெற்று
மேன்மை யடையக்கடவீர்கள். மேலும், இந்
தத் தனுப்பாணத்தை முன்னிருந்த குளத்தில்
விட்டுப் போவீராகில், அது உங்களிடத்திற்கு
வருமென்று உரகபூஷண னருள்செய்தனர்.

அருச்சுனன் அரியை அரனுகப்பாவித்துப்
பூரித்த அடையாளங்களைக் கண்டு
விடைபெற்றுக் கண்ணனேடு
கருடாருடனுய்ப் பாசறை
யடைதல்

அம்மொழியைச் சிரமேற் சூடிக்கொண்ட
நரநாராயணர் அவ்வாறே அந்த வில்லை
யும் பாணத்தையும் முன்னெடுத்துவந்த குள
த்திற் கொண்டுபோய் விட்டுவிட்டு, மீண்டும்
பிறப்பிலியாகிய பற்றற்ற திரிபுர சம்மாரிக்
கெதிரில் வந்து பணிந்து, அநேகங்கோடி
செவந்த சூரியர் ஒருதிசையி லெழுந்து உதய
மாகிய தன்மையைப்போற் பிரகாசிக்கும்
அந்தி வண்ணனுடைய திருவுருவழகும்,
பவள்விதழும், செந்தாமரை யனைய திருவடி
களும், அங்கயற்கண் ணம்மை யமர்ந்த அலங்
காரமும், ஆகுமிவைகளை யெல்லாந் தேவராஜ
குமாரனுகிய தனஞ்சயன் தனது அகத்திற்
குடியாக நிலைக்கவைத்து, நீலமேகத் திருவுரு
வாய்ந்த நெடுமாலைச் சிவலிங்க மூர்த்தமாகக்
கொண்டு வனத்திற் பூசித்த காலத் தர்ச்சித்த
புட்பங்களில் எந்தெந்தப் புஷ்பத்தை எந்
தெந்த அவயங்களில் வைத்ததோ, அந்தந்த
புஷ்பங்கள் அந்தந்த அவயவங்களில் இருக்
கக்கண்டு, வேதங்கள் துதித்துக் கூவும்படி
யாகிய விடையேறி யென்னும் புராயும் முராரி
யும், தீங்கினராகிய தீயோருக்கும், கல்வீக்
கியான மில்லாத விவேக சூனியருக்கும், ஈருரு
வாக இருக்கத் தக்கதன்றி, மாசறக் கற்ற மகா
னுக்களுக்குப் பேதமில்லாத ஓருருவென்று
தனது புத்தியிற் பூரணமாய் யுணர்ந்து
தெளிந்து மகிழ்ந்தான். கேளும் ஜெனமே
ஜெய மகாராஜனே! முன்னே நான் தவஞ்
செய்தபோது, நம்பன் ஜகன்மாதாவுடனே
காடின்யமாகிய வேடருபங் கொண்டு வரக்
கண்டான். பிற்பாடு ரிஷபவாக ருடராய்த்
தேவர்கள் பூமாரி பொழியுங் காட்சியாக வரக்
கண்டான். இப்போது சகல உயிருக்குத் தாய்
தந்தையாகிய அவ்வுமாமகேஸ்வரரைக்கயிலை
யிலுங் கண்டு பணிந்தான். ஆதலால், நற்ற
வத்தோனென்று உங்கள் பாட்டனுகிய அர்ச்
சுன னொருவனைச் சொல்லவேண்டியதே யல்
லது, மற்றொருவரையுஞ் சொல்லப்படா
தென்று வைசம்பாயனர் சொல்லி, மேலுஞ்
சொல்லுகிருர். நீருண்ட காளமேகம்போன்ற
திருமேனியை யுடைய நரநாராயணுளைச்
சங்கர சங்கரன் மனத்துள் மதித்து, நீங்
கள் போயிருக்குங் காரியத்தை முடித்து
வரக்கடவீர் போங்களென்று விடைகொடுத்
தருள, சந்திரனைக் கண்டு சலசலவென்
றெழுந்து, பொங்குங் கடற்போ லிரைந்து,
மகிழ்ந்து களித்து வணங்கி, பசுவைப் பிரிந்து
போம் கன்றுபோல் நீங்கி நடந்து, மேக்ங்க
ளுலாவிக்கொண் டிருக்கும் ஆலயங்களை
யும், ஆகாயத்தை அளக்கும் தன்மைபோல்
அளாவும், நிலைகளையுடைய கோபுரங்களையும்,
அன்பாகக் கண்டு பிரதக்ஷணஞ் செய்து

கொண்டு, போதுமான வரைக்கும் தொழுது கயிலையங்கிரியை விட்டு நீங்கி, முன்பு வெளியில் நிறுத்திவைத்த வயினதேவனது தோளிலுங் கரத்திலு மாரோகணித்து, சூரியனுதயமாகும் திசையிற் சுக்கிர னுதயமாகும்போது பாசறையை நோக்கி வருவதானார்கள் நர நாராயணர்கள்.

தருமராஜன் கடோற்கஜனால் அர்ச்சுனன் சபதம் செய்து கைலாசபதியைத் தரிசிக்கச் சென்றமையைத் துரியோதனுதியர்க் கறிவித்தல்

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! இங்கு இவர்கள்செய விவ்வாருக, அங்கே தருமநந்தனரானவர், தன்னிடத்தினின்றும் ஸ்ரீகிருஷ்ணதேவர் விடைபெற்று அர்ச்சுனனை யழைத்துக்கொண்டு கயிலைக்கு போனபின்பு தான் நடத்திய காரியத்தைச் சொல்லுமிடத்து யாருக்கும் வியப்புண்டாக மாட்டாது? பற்குணன் சபதஞ் செய்துக்கொண்ட விதங்கள் பண்ணவர் மண்ணவர் முதலியோர்க்குப் பகிரங்கமாய்த் தெரிந்திருக்கினும், பகவானவனைப் பசுபதியிடங் கொண்டு போனதைப் பகைகொண்டிருக்கும் பார்த்திபருக் குணர்த்தாது வஞ்சகப் போர்விளைத்தல் வரைகடந்த பாவமென்று யெண்ணினவராய், உடனே கடோர்க்கஜனைக்கூவி, அடா குழந்தாய்! உன் சிறிய தந்தையாகிய அர்ச்சுனன் வாசுதேவனோடு கயிலைக்குச்சென்று, நாளை யந்திப்படுமுன் சயித்திரனைத் தலைசாய்க்குமாறு ஸ்ரீ சாம்பசிவமூர்த்தியால் வரமும், உரமும், சரமும், பெற்றுவர விருக்கின்றதைத் துரியோதனுதியர்க் குணர்த்தி வருகவென் ருக்யாபித்தனர். அதுகேட்ட கடோற்கஜன் நகைமுகனுய் அப்பெரிய தந்தையை வணங்கியெழுந்து, ஓ கொற்றவர் முடிகள் குலாவுங் குரைகழற்கோவே! நமக்குச் செற்றலராயுள்ளாரோடு உற்றதைக் கூறுதலுமோர் சேவகமோ? அந்தோ? இவ்வாறு தேவரீருக்கு தோன்றியது யாது காரணமோ? அவர்களைப்போல் நாமும் வினைவின் செயலையும் வெகுவாகக்கூறி வியத்தலழகோ? என்று மனமழன் றுரைத்த மைந்தனை மன்னர்பிரானேக்கி, அப்பா நீ உன் சிறு பிள்ளை த்ன்மைக்கொப்பத் திறனறியா துரைத்தனை; இஃதற நெறியன்று அவர்கள் வயிரங்கொண்டு மழங்குஞ்சொல் வஞ்சனையோ அல்லது வாய்மையையோ? நமக்கது வேண்டாம், மைந்தனே! அறத்தினெறியே சென்று அமர் செய்தலொழிந்து, அஃதல்லாத நெறியே சென்று அருஞ்சமராடி வெற்றிபெறுதலும் ஓர் வீரமோ? ஆதலால், சத்திய நெறியால் அடையும் ஜெயமேஜெயம் ஏனையவெல்லாம் இருமைக்கும் பயமென்றறிக என்று உண்மை நெறியை யுணர்ந்த உத்தமனுரைக்க, அது கேட்ட கடோற்கஜன் புன்னகையோடும் அவர் பொன்னடியில்வீழ்ந்து வணங்கிவிடை பெற்று, சத்துருக்களுடைய நிணங்களிற் றோய்ந்துகமழுந் தனது நெட்டிலை வேலோடு நேரலருற்ற பாசறைவீட்டை நிமைப்போதிலடைந்து, அங்கு தன்னிளவரசுக்குரிய இலக்கணமாரன் இறந்தனனென் றழுங்கி யுள்ளுடைந்துருகுங் கள்ளவிழ் மாலை புனைந்த கருதலன் கடைவாய்தலை நண்ணி, அங்குள்ளாரிலொருவனை விளித்தனன்: உடனே அவன் எய்தி நீயாரென்று வினவ, நெற்றியில் தனக்கு நிகரற்ற வீரக்கொடியினையுடைய வீமராஜன் புதல்வன்யான். அஷ்டதிக்கு மதிரு முரசக் கொடியோனால், அகிலமனைத்தும் புரக்கு மரவக் கொடியோனுக் குணர்த்தற் பாலதாய், என்னோடுரைத் தனுப்பிய மொழியொன் றுள்ளது. என்றுரைத்த மொழியை யுகாந்த காலாக்கினிபோற் றன்செவியி லேற்ற, அவ்வாயில் காப்பாளன் உடனே செம்மொழி என்பது சிறிதுமற்ற வணங்கா முடியோனுக் கறிவிக்க, அவன் இவனைத் தருவிக்க, இவனவனைக்கண் டஞ்சலித்து, ஐயா! யானிங்கு வந்த காரியத்தைச் சிறிது மதித்தருளி, தற்காலத்து நீங்கள் வசனித்திருப்ப தெம்மொழியாயினும் அதனை நிறுத்தி, என் பெரிய தந்தை கூறியனுப்பிய மெய்மொழியைச் சிறிது வினவல் வேண்டு மென்றனன்.

அதுகேட்ட நராதிப னவனை நோக்கி, உன் பெரிய தந்தையின் மெய்ம்மொழி யென் பதியாதென்று கேட்டனன். ஐயனே! என் தந்தைக் கிளவளாகிய விஜய மகாராஜன் தனது மைந்தனாகிய அபிமன்னுவின் முடியைத் துணித்த சயித்திரதனை, நீர் வெற்றி வாள்கொண்ட வெகுவீரர்களுடைய காவலின் கீழ்வைத்துக் காப்பினும், நாளை யத்திபடுமுன் அவனையான் கொல்லுவது நிச்சயமென்றும், இது தப்புமாயின் என்னுடலை யக்கினிக்காகாரமாக்குத லுண்மை யென்றுங்கூறிச் சபதமேற்றவர்; உடனே திண்மையோடு திருமாலுடன் கூடிச் சிவபிரானெழுந்தருளிய கைலாய கிரிக்கு வரமுஞ் சரமும் பெற்றுவரச் சென்றிருக்

கின்றனர். ஆதலால், என் பெரிய தந்தையான வர் பகைவருக்கிதனை யுணர்த்தாது வஞ்சனை யாற் போர்விளைத்து வெல்வது மகாபாதகம் என்று அஞ்சினவராய், இதனை வுமக்குணர்த்துமாறு என்னை யேவினர். என்றால், நானே உமது மைத்துனனாகிய சிந்துபதியே யென்றுணரக் கடவீர் என்று சொன்னான் வன்றிறலே தன்றிறலாகப் பெற்று நெஞ்சினில் வேறொரு சஞ்சலமுமற்ற நிசாசரன் மருமகனாகிய கடோற்கஜன். அதுகேட்ட துரியோதன மகாராஜன் சொல்லுகின்றான். "மன்மைந்தர் பலரொடும்போய் மறித்தொருவர் மீளாமன் மலைந்துவீழ, வென்மைந்த னிறந்திடவும் யாதொன்றும் புகலாம லிருக்கின்றேன், றன்மைந்த னிறந்தனனாந் தான்றழலின் மூழ்குவனாஞ் சபதங்கூறி, வின்மைந்தின் மிகுந்த தருக் கழுதிரங்கி யாற்றுவது வீரந்தானோ, பயத்திரவி நடுங்கியரன் பருப்பதம்புக் கவன் கொடுத்த படையும்வாங்கி, வயத்திரத மால் கடவ வந்தெதிர்த்தோன் றுவ்வனுகின் மகர மோதும், சயத்திரவி விழுவதன்முன் கையறு தன் புதல்வனைப்போற் றூன்படுத லுறுதியெனச் சாற்றுவாயே. என்னினும்பார் தனக்குரியன் சிலைத்தொழிலிற் சிலைக்குருவா யெவரும் போற்று, மன்னினுந்தான் மிகவலியன் றண்டெத் தாலுந்தையினும் வலியன்சால, வன்னினுந்தோ ளூரானுடையன் மதியாமலிப்படி நீயுரைக்கலாமோதன்னினும்போர்க்கெளியனோ சயத்திரதன் றானென்றுசாற்றுவாயே" என்று சொல்லி, ஓ கதாயுதன் காளாய்! ஆள் நிலை அளறிய வேண்டுவதல்லது மற்றறியத் தக்கபேர் யார்? எல்லாருடைய சேவகமும் நாளை யறியப் போகின்றோம். இதற்கு என்ன வீணாலோசனை? என்றுரைத்து நகைத்த துரியோதனனை அங்கர்கோனோக்கி, 'தாருர நின்மகன் றுச்சாதனன் மகன் சல்லியன் மகன்வேற் சகுனி என்னும், பேரரசன் மகன்முதலா வெத்தனைபேர் பட்டாலும் பெரிதன்றே' "பாரரசா ளுந்தற்கிருந்த பார்த்தன்மா மகனொருவன் பட்டானுகி, லாரரசுக் கினியுரியா ரந்தோமற் றினியழிந்த தகிலவாழ்வே. அங்கிருந்துசயத்திரத னுவிகவர்ந்திடுவலென வாண்மைகூறிப், பங்கிருந்த வுமாபதியாற் பணிந்துவரம் பெறச்சென்றான் பார்த்தனாகிற், கொங்கிருந்த தாராய்நின் குடைநிழற்கீ ழிதுகாலங் கூட்டங்கூடி, இங்கிருந்த வேழையரே மென்செயமற் றிருக்கின்றே மெங்கள்கோவே" என்று பரிகாசமாக பேசினான்.

இவ்வாறு பரிகாசமாய்க் கர்ணனிகழ்ந்துரைத்ததைக் கேட்ட கடோற்கஜனுளம் வெகுண்டு, ஓ அறிவிலீர்காள்! என் சொல்லினு மிதயத்தெண்ணாது, இனிமேலு மிவ்வுலகத் திருந் தரசாள்வோமென்னு மெண்ணத்தை யே! வகுத்திருக்கின்றீர்கள். ஆ! ஆ! வெகு நேர்த்தி! இக்கண முங்களனைவரையு மடுத்த வேறொருவீரனும் வேண்டுமோ! இவ்வண்டமாருதி மகன் சண்டமாருதனென்று சொல்லும்படி திரிபுரங்களி லு மழலூட்டி; உங்களையு முங்கள் சேனைகள்முதலிய வங்கங்களையும் நானே எதிர்த்து நீராக்குவேன். பெரியோர் ஆக்கினை என்னுங் கயிற்றாலன்றோ பிணிபட்டிருக்கின்றேன்? என்று கூறிப் பின்னுஞ் சொல்லுகின்றான். "தசைகுருதி மிசையொழுகத் தனித்தனியே எதிர்த்தவரைத் தலைகள் சிந்த, விசையன் வரவேண்டுமோ மற்றுமுள்ளார் திரண்டுவர வேண்டுமோதா, னிசைபுலரு முனமுனைந்து நீறாக்கிவிடுகுவனெந் நிருபன்சொன்ன, வசையின்மொழி மறுத்துடற்றலாகாதென் றிருக்கின்றே னறிகிலீரே. இருவரெதி ரெதிர்தம்பி விகல்பொருத லுலகியற்கை யாருங்கூடிப், பருவமுறாத் தனிக்குதலைப் பாலகனுக்காற்றாமற் பறந்துபோனீ, ரொருவனெடுந் தேரழிக்க ஒருவன் மலர்க்கை துணிக்க வொருவன் பின்னைப், பொருவனென்ன றறை கூவிப் பொன்றுவித்தா னிதுகொண்டோ புகல்கின்றீரே" என்றான். இப்படி வகையைப் பொருவும் வயப்புனத்தினையுடைய கேசரிகுமாரனொருவரையு மதியாமற் கூறிய உரத்த மொழிகளைக்கேட்ட உரகமணிக்கொடியோனவனை யுருத்து நோக்கி, இங்கிருக்கு மரசரவைக் கேற்றபடி ஆய்ந்து பேசாது ஆணவத்தாற் பேசுகின்றனையன்றோ? ஓ அரசர்களே! இவ்வரக்கி மைந்தனோ டொன்றும் பேசாதீரென்று கட்டளை யிட்டனன். அது கேட்ட கடோற்கஜன் அங்கங் குலுங்க நகைத்து, "அந்தண்மலர்த் தவிசிருக்கு மயன் படைத்த விவ்வுலகத் தரக்கரேனுஞ், சிந்தனையில் விரகெண்ணார் செருமுகத்தில் வஞ்சகமுஞ் செய்யாரையா, வெந்திறல்கூர் துணைவருக்கு விடமருத்தார் நிரைகழுவில் வீழச் சொல்லா, ருந்துபுன லிடைப்புதையா ரோரூரி லிருப்பகற்றா ருரையுந்தப்பார், செந்தழல்வாழ் மனைக்கொளுவார் செய்ந்நன்றி கொன்றறியார் தீங்குபூணா, நழுந்தமனைத் தழுக்குறா ரச்சமுமற் றருளின்றிப் பொய்சூதாடார், கொழுந்தியரைத் துகிலுரியார்

கொடுங்கான மடைவித்துக் கொல்லவெண்ணு, ரெழுந்தமரின் முதுகிட்டா ரிவையெல்லா மடிக ளுக்கே யேற்பதன்றே. தேனிடறிப் பாண் மூராலுஞ் செழுந்தாம விசயனுடன் செருவில் வந்தான், மானிடரிற் பொரவல்லார் சில ருண்டோ தெரியாது வானுளோரிற், கோனி டையுற் றருகிருந்த திறல்வேந்தர் காத்திடி னுங் குறித்தவீரன், ருளிடருற் றுயிரழிகை தப்பாது தப்பாது தப்பாதையா'' என்று சொல்லி மீண்டு பெரிய தந்தையின் பாடிவீடு சேர்ந்து, தானங்குசென்ற வண்ணமும், அங் கவர்கள் கொண்ட எண்ணமும் கூறி ஒரு புடையிருந்தனன். அப்போது துயிலுணர்த்த வருவோமென்று சொல்லி விடை கொண் டேகிய துழாய்முடி நாதனும், சுரேந்திரன் மைந்தனும்வந்து, தங்கள் பாசறைவீட்டைடைந் திளைப்பாறி இருந்தனர்.

பதின்மூன்றாம்போர்ச் சருக்கம் முற்றிற்று.

இப்பால்,

## பதினான்காம்போர்ச் சருக்கம்

### கண்ணன் துதி

ஈரொரு பிறப்பிலொரு சிறுகுறளா யாவ ருந் தேவரும் வியப்பக், காரொரு வடிவு கொண்டெனச் சென்று காவல்கூர் மாவலி யளித்த, நீரொரு கரத்தில் வீழுமுன்றரங்க நீனிற மகர நீருடுத்த, பாரொரு கணத்தி லள விடுங்கமல பாதனுர் நாதனுர் நமக்கே.

ஓ சிந்தைதங்கு நெறி செல்வக் குண ளனே! விந்தைபொங்குபுய மேன்மைக் கண ளனே! கேளும்: பதின்மூன்றாம் போரில் அபி மன்னுவி னிறத்தலை அருச்சுனனுக் கறிவிப் பான்போற் சென்ற செங்கதிர்ச் செல்வனாகிய சூரியன் அன்றிரவு கழிந்த பின்பு, அர்ச்சுன னே சபதஞ் செய்திருக்கின்றான். துரியோத னுதிகளோ சயந்தவனைப் பாதலத்திலாகிலும் வைத்துக் காப்பாற்றவேண்டுமென் றிருக்கின் றார்கள். கிருஷ்ணார்ச்சுனனைக் குறித்துத் தர்ம ராஜன், விசனப்பட்டுக்கொண் டிருக்கிறார். நரநாரணர் பாசுபதம்பெற்று வருகிறார்கள். இக்காரியங்க ளெப்படி முடியுமோ தெரிய வில்லை. நமது பேரிற் ச்ரேஷ்டமில்லாமல் நம் வேலையை நாம் செய்து நாளைக் கழித்து விடுவோமென, சப்தமா வென்னும் புரவி பூட்டிய தேரேறி இந்திரதிக்கில்வந் துதயஞ் செய்தான். உடனே தருமபுத்திர மகாராஜ னெழுந்து, ஸ்நானசந்தி செபதப முதலிய வெல்லா முடித்து, சூரியநமஸ்காரஞ் செய்து யாகசாலையி னிடத்தில் நவக்கிரக செபம் - ஓமம்-யாக முதலியதும் நடத்திவரா நின்ற தவமியாச்சாரியர் முதலிய வேதவேதியர்கட் கெல்லாங் கற்பகத் தருவைப்போற் சோடச மகாதானங்களுங் கொடுத்து, நேற்றிராத்திரி தன் தம்பியாகிய தனஞ்செய னுரைத்த சப தத்தை வழுவில்லாமல் முடிக்கும் மார்க்கம் எவ்விதமென்று மனத்துட்கொண்டு, சகல சேனைசைனியங்களு நெருங்க, சமுத்திர முழக் கம்போற் பலவித வாத்தியங்களு முழங்க, திருந்திய ராஜசபையிற் பொருந்தியிருந்தார். அந்தவேளையில் குணபூஷண வலங்கிர்த ராகிய தம்பிமார் மூவரும், இடும்பி புத்திர னகிய கடோற்கஜனும், அவன் பிள்ளை அஞ் சனவர்மனும், இளம்பஞ்ச பாண்டவர்களும் ஆபரண அலங்காரம், வீராதிவீர அரசர் களும், சேனுபதியாகிய திர்ஷ்டத்துய்மனும் துருபதேயன், சோமுகாள், பாஞ்சாலாள் முதலிய படைத்துணை வேந்தரும் யுத்தகோ லத்துடனிணங்கி, தர்மபுத்திர மஹாராஜனை வணங்கி, சோடசகலைகணிறைந்த சுந்திரச் சந்திரனை நக்ஷத்திரம் சூழ்ந்திருக்குந் தன் மைபோ லுறைந்து சிறந்திருந்தார்கள்.

### கிருஷ்ணார்ச்சுனன் கவலையுற்றிருக்கும் தரும ராஜனைக்கண்டு இராத்திரி நடந்த வர்த்த மானங்கள் அனைத்துஞ் சொல்லித் தேற்றுதல்

இதன்றியும், பரிசுத்தம்பெற்ற தவமியர் முதலாகிய வேதவேதியர்கள் அக்ஷதைகொடுத் துச் சொல்லும்படியாகிய மங்களாசனத்தை யும், வீரப்பிரதாப ராஜர்களெல்லாரும் இன் றையத்தினஞ் சயித்திரதனை முடித்து ஜெய பத்திரம் விடுக்கிறோமென்று சொல்லாநின்ற பேராண்மையையுங் காதுகொடுத்துக் கேட் டுக்கொண்டிருந்த முரசக்கொடிக்கதிபனான வர், சபை நிறைந்த தன்யர்களைப்பார்த்து, ஓ எம்மிடத்திலிஷ்டம்வைத்த அரசர்களே! நீங் கள் சொல்லிய ராஜவீரங்களெல்லாஞ் சரி தான். என் தம்பியாகிய அர்ச்சுனனும் ஸ்ரீ கிருஷ்ணனுமாய் நேற்றிரவு கைலாயகிரிக்குப் போய் சிவபெருமான் அருள்பெற்று வருகி றோமென்று போனவர்கள் பொழுதுவிடிந்து மிதுவரையிலும் வரவில்லை; எங்குபோய்

அலேகின்ருர்களோ? என்ன வருத்தப் படுகின்ருர்களோ? அது கெட்டது என்ன யுத்தமென்று மனம்வெறுத் திருந்துவிட்டார்களோ? எங்கே யாகிலும் வாடினுர்களோ? இப்பேர்ப்பட்ட மைந்தன் இறந்து போனுனேயென்று மனம்ரோசி வீடினுர்களோ? இவ்வுலகத்திற் கோபமோ பொல்லாதது; அதிலேயும் புத்திரசோப மகாபொல்லாதது; அது வந்தவர்க்கு உயிர் நில்லாது; எல்லாத்திற்குந் தெய்வமே கெதியென்று சொல்லிச் சத்தியவாஞகிய தருமராஜன் இடிந்த மனத்தினையுடையவராய் இளைத்திருக்குஞ் சமயத்தில், துவாரகாபுரிவாசன் மாத்திரந் தனித்து வருவதை மாசற்ற திறலினையுடைய வாசற் காவலோர் கண்டு தர்மராஜனிடத்துக்கு ஓடிச் சென்று, இருகரத்தையுங் குவித்து வணங்கி காயாம் பூப்போலும், காளமேகம் போலும், கருவிளமலர்போலும், கருநீலமணிபோலும் உருப்பெற்ற களங்கரகிதனுகிய மாதவன் இதோ வருகின்ருரென்று சொன்னுர்கள். அம்மொழிகேட்ட உடனே கிரணசூரியனைக் கண்டு மலருந் தாமரைபோலும், சந்திரனைக் கண்டுகளிக்கும் சமுத்திரம்போலும், அகமுமுகமும் அலர்ந்து மகிழ்ந்து, எதிரெழுந்து சென்று இன்பத்துடன் தழுவிக்கொண்டு, உற்சாயைபோற் பொருந்தி பிரியாமல் வந்து, தர்மராஜனும், சாத்தகியும், ஜநார்த்தனனும் சிங்காதனத்தில் வீற்றிருந்தபோது, காளிங்கமென்னும் பாம்பின் படத்திற் கூத்தாடிய கமலநாபனைப் பார்த்து முரசக்கொடி படைத்த தருமராஜன் சொல்ல வருகின்ருர்;

ஓ எங்கள் இருமைக்கு முரிய மூர்த்தியே! அரவக்கொடி தரித்த அரன் முதலான பகைவர்கள் நேற்றிராத்திரி பாடி வீட்டிற் பேசிக்கொண்ட விற்றிறமையும், சொற்றிறமையும், மிகுந்த களிப்பும், தகுந்த செழிப்பும், வீராவேசமும், தீராவேகமும், இன்னவிதமென்று நான் இனி நம்பமாட்டேன். ஓ பொன்னைத் தரித்த புண்ணியமார்பனே! அனற்கணையாற் காண்டவவனத்தை எரித்த அர்ச்சுனன் சொன்ன சபதத்தைச் சோராமல் முடிக்க என்னுலுமில்லை. இதுவும் உமது கடனே: ஏழைகள்மீது இரக்கம் வைப்பாய் என்னப்பா வென்று குந்திக்கு முதற் குமாரன் கூற, கோபாலன் இவ்வசனத்தைக்கேட்டு கீழ்க்கண்ணுல் நோக்கிப் புன்னகைகொண் டிருக்கும்போது, தன்னெண்ணத்திற் கிசைந்த காண்டீபனுனவன் காலைக்கடன் முடித்து, ஆரியனென்னுஞ் சூரியனைத்தொழுது, மையணிந்த மடமானுக்கியாகிய மரகத வல்லியையும் மகா தேவரையுஞ் சிந்தித்து, வேதாகமங்களால்வாயார வாழ்த்தி வணங்கி, ஹரி! ஹரி! கிருஷ்ணு! என்று மாதவனுடைய திருநாமங்களையும் போற்றிப் புகழ்ந்து, திருநேத்திரன், திரிபுரை நாயகன், திரிபுர சம்ஹாரி, திரிபுவன பாதனளித்த தித்தித்தா தித்தோமென நடனமிடும் பாசுபதம் நிறைந்த அம்பருத் தூணியையும் அரனருள் வில்லையுங் கிரமப்பிரகாரம் வணங்கி எடுத்துக்கொண்டு பாடிவீட்டையடுத்து ராஜசபைக்குட் புகுந்து, தம்பியைக் காணுமே யென்று மிகுந்த துக்கத்துடன் உழன்றுகொண்டிரா நின்ற தன்றமயனுகிய தர்மராஜன் முதலான பெரியோர்களை வணங்கி சந்தோஷ முகத்துட னின்ருன். இப்படியாகச் சிறப்புடன் வந்துநின்ற தன் தம்பியாகிய அர்ச்சுனனை அகம்புற மிரண்டும் ஒன்றெனத் திகழும் அறன்மகன் கண்டு, என்னப்பா பற்குனு! அருமையான குழந்தையை பறிகொடுத்து இனி பிழைப்பது அருமையென்று சொல்லும்படியாய் அழுத கண்ணீருஞ் சிந்தையுமாகச் சென்ற என்னுடைய இளவரசே! உன் துயரங்களை எங்கேகொண்டு போய்க் கொட்டிவிட்டாய்? எவ்விதத்தில் தேறுதல் அடைந்தாய்? உன்னுடைய முகத்தில் அமுத கிரணஞ் சொலிக்கிறதே: மிகுந்த தேயசு மூன்று பங்கு அதிகமா யிருக்கிறதே: மலைக்கொப்பாகிய தோளையுடைய வாசவன் குமாரா! இவ்வதிசயத்தை இன்னவிதமென்று எனக்குச் சொல்லவேண்டும் என்னுயிர்க் குயிராகிய தம்பியே என்று தருமராஜ னிரக்கமாய்க் கேட்டார்.

அப்போது விஜயன் சிறுநகை புரிந்து எல்லாம் விளைத்த மாயசக்கார னென்னும் வேயிசைக் காரனுகிய கண்ணன் முகத்தைப் பார்க்க, கபட நாடக சூஸ்திராவதாரியாகிய அக்கண்ணன் சாடைசெய்து கடைக்கண்ணுல் நோக்க, அந்தக் கருத்தைத் தெரிந்து கொண்ட காண்டீபனுனவன், சுவேத க்ஷத்திர குடை நிழற்படுத்திக் காசினியெல்லாம் புரக்குங் கருணைவள்ளலாகிய தருமநந்தனருக்குக் கட்டுரையை விட்டுரைக்கத் தொடங்கினுன். என் அண்ணலே! அநாதரக்ஷகனுகிய ஆபத்பாந்து வானவன் என்னை அழைத்துக் கொண்டு ஒரு பெரிய வனத்திற்குப் போய்

ழைப்பாரென்று தேற்றினார். சிவபூசை செய்துக்கொள்ளவேண்டுமேயென்று நான் சொன்னேன். அதற்குத் தன்னையே இலிங்கமூர்த்தமாகப் பூசிக்கச்சொல்லி, கனிந்த கனிகளும், திணிந்த தேன்களும், கிழங்கும், காய்களும் உண்பித்து, அப்பால் ஒரு திடர்நிலத்திற் படுத்து நித்திரை போகச் செய்தார். நான் நித்திரை போனேன். பின்னுஞ் சற்றுநேரந் தரித்து என்னிடத்திற்கு வந்து, என்னை எழுப்பி அழைத்துக்கொண்டு கயிலையங்கிரிக்குச் சென்று, கண்ணுதலாகிய அண்ணலாருடைய அருள் கைக்கொண்டு, பாசுபதாஸ்திரமும், வில்லும், முஷ்டிநிலை முதலிய மந்திரங்களும் பெற்றுக் கொடுத்த தல்லாமலும், இந்தப் பெருமான்மீது நான் அர்ச்சித்துச் சூடிய மலர்கள் யாவும் அப் பரமசிவனது அவயவங்களின்மே லிருக்கக்காட்டினார். அப்போது என் கண் குளிரப் பார்த்து, உமா மஹேஸ்வரரையும், மற்ற சிவகணங்களையும் வணங்கிக்கொண்டு வந்தோம். என்று படைமன்னவ ரெல்லோருங் கேட்கச் சொல்லவும், தர்மர் முதல் யாவருஞ் சந்திர பிம்பம்போன்ற முகக்கமலம் மலர்ந்து, அழகிற் சிறந்த மணிகளழுத்திய ஆபரணங்க ளணியுந் திணிபுயங்களெல்லாம் மேலாகப் பூரித்துப் புளகாங்கமுற்று, நாமெல்லோரும் பிழைப்பதற்கு சிவனருள் கிடைத்த தென்று சிவனுமங்களைச் சொல்லிச் சிவஸ்மரணை செய்து, அண்டமதிர ஆர்ப்பறித்துச் சந்தோஷங் கொண்டார்கள். அப்போது மலைக்கொப்பான ஆஜானுபாகுவையுடைய அர்ச்சுனராஜன் தருமராஜனைப் பார்த்து மறுபடியுஞ் சொல்லுகின்றான்.

அண்ணா! தேவரீர் எனக்குச் சிரேஷ்ட பிராதுவா யிருந்து செய்யவேண்டிய நன்மைகள் எவ்வளவோ? அவ்வளவுக்கு ஆயிரங் கோடி பங்கு அதிகமாக இந்த மாதவன் செய்த மூதற் காரணமான சமுத்திரம்போலொத்த சகாயப் பொருளுக்கு வரையறையத் தக்க கணக்கு முண்டோ? ஐயா! தெளிவில்லாத நாம் என்னத்தை அறிந்து சொல்லுவோம்; ஆகாயத்தி லிருக்கும் துணைக்காரணமான மேகங்களினால் உலகத்திற் பொருந்திய உயிரெலாம் சுகம் பெறும்படி யிருக்க, இந்த உயிர்களினால் மேகத்துக் கேதாகிலும் நம்மாலாகிய ஒருதவி யுண்டோ? அதுபோல் நமது இஷ்ட தெய்வம்போன்ற இந்த ஆண்டவனுக்கு நாமென்னத்தைச் செய்வது? என்று பற்பல விதங்களாற் பார்த்தன் துதிக்கும்போது, விற்பன விவேகியாகிய தருமராஜன் மேலாகிய சந்தோஷ முடையவராய், ஸ்ரீ தரனை மாதவனை நோக்கி, ஓ தாமோதரனே! எங்களுக்காக வருத்த மெடுத்துக் கொண்டு, திங்களை முடித்த செஞ்சடைப் பெம்மானமர்ந்த கயிலையங்கிரிக்குச் சென்று பாசுபதாஸ்திரம் வாங்கிக்கொடுத்த பக்ஷத்தைச் சொல்லுவதோ? அல்லது எங்கள் தந்தையை யிழந்து அறியாதவர்களாய் காட்டைவிட்டு நாட்டில் வந்த நாள்முதல், நாளது வரைக்கும் வணங்காமுடியோன் செய்த வஞ்சகத்தால் நாங்களெஞ்சி யிறக்காமல் எங்களுக்குப் பக்கத் துணையா யிருந்து காத்திரக்ஷித்த அன்பைச் சொல்லுவதோ? அன்றியும், அர்ச்சுனன் பேரிற் பகதத்தன், சுதாயு முதலிய சத்துருக்கள் தொடுத்த ஆயுதங்களைத் தேவரீர் திருமார்பிலேற்றுக் காத்தருளிய அருமையைச் சொல்லுவதோ? நான் எத்தனையென்று சொல்லப்போகிறேன்? ஓ என்னிறைவனே! என்று புகழ்ந்து துதிமொழிந்து, அர்ச்சுனன் கையை பிடித்து அருளான் கையிற் கையடையாகக் கொடுத்து, ஓ ஆபத்பாந்தவா! ஓ அநாதரட்சகா! அன்று குந்திதேவியின் கெர்ப்பத்திற் பிறந்திருந்தோம். இன்று தேவரீரது கெர்ப்பத்திற் பிறந்திருந்தோம். காக்கக்கடனுனக்கு கண்ணனே! நீலமேக வண்ணனே! முன்னம் ஆதிமூலமென் றழைத்த யானையைக் காத்தவனே! என்று கைகுவித்திருக்குங் காவலனை நோக்கி கண்ணன் சொல்லுகிறான்.

ஓ தர்மநந்தனரே! நீர் ஏதொன்றுக்கும் பயப்படவேண்டாம். இந்த அர்ச்சுனனைக் குறித்து மனக்கவலை யுமக்கு வேண்டியதில்லை. அந்த பாரம் நானெடுத்துக் கொண்டேன். சுவாமி சகாயத்தாற் சூரியன் அஸ்தமிக்கு முன்னே துரோணர் முதலான காரியஸ்தரால் அணிவகுத்துப் பந்திக்கப்பட்ட சயித்திரதனை அடிவேருடன் முடிதறிய முடித்துச் சபதம் நிறைவேற்றி உமதிடத்திற்கு வருவோம். அதை நீர் பாரும் என்று தாய்போற் பரிந்த அன்புடன் தகுதியான வசனங்களைச் சொல்லி தண்டேனிறைந்து வண்டுலவு மாலையணிந்த தார்வேந்தருட னெழுந்து, நகர் புகுந்து கார்நிறைந்த நீர்த்துறை யெல்லாம் வேர் நிறைந்ததைப்போற் கருந்தூள் செந்தூளெழுந்து மறைக்க, கடவுளர் முதலான

பேருங், கண்டுகலங்கி பயங்கொண்டு மலங்க,
ஆரபார தாரைபூரி வீரசின்ன முதலியவை
கள் மாரகாள சூரபூத பேரியென்ன மேலு
மேலும் விம்ம, அண்டகடாகமு மெண்டிசை
முதலாய் டுண்டுண் டுடுடுடு டுண்டென வதிர,
ஆகாயமும் பூமியு மிடமில்லாமற் சுருங்க,
வாகாய வன்னக்குடைகள் நெருங்க, வசவச
வென்னத் துவசங்கடுன்ன, மயிற்பீலிக்குஞ்
சங்கள், மேற்கட்டிகள், மகரதோரணங்கள்,
சிகரபூஷணங்கள், விருதுக்கொடிகள் இவை
முதலாகிய சகல சின்னங்களுடனே, பிரகாச
முற்ற வேலாயுதம் பெற்ற வீமசேனனும்,
நகுலசகாதேவர்களும், சேனாபதி முதலாகிய
ராஜவீரர்களும், நால்வகைப் படைகளும்,
இருபக்கத்திலும் நெருங்கி இறுமாந்துவர,
தன்னையடுத்த தேவர்களுக் கமுதமளித்த கரு
ணைக் கடலாகிய அத் திருமால் செலுத்தும்
அழியா ரதத்தின்மீதேறிய அர்ச்சுனன் நடு
நாயகமாய் வந்து அமர்க்களஞ் சேர்ந்து
அணிவகுக்கும்படியாய்ச்சொல்ல, அப்போதே
சோணமேகம்போற் கரிமுகக் கணைகளைத்
தொடுக்கும் வீரப்ரதாப பதாதிவேந்தரையும்,
யானை - தேர் - குதிரை முதலிய அளவற்ற
சேனைகளையுஞ் சேர்த்து, ராஜமண்டலங்களை
யும் நிலைக்கச்செய்து, பலம்பெற்ற பல உறுப்
புக்களோடும் யூக மேற்படுத்தி, நீரணிந்த
தேவர்களுஞ் சத்துருக்களும் ஆச்சரியப் படும்
படியாய்ப் பேரணி முனையிற் றேரணியுடன்
காரணிபோல் வீறணிந்து, தாரணிந்த மார்ப
னென்னுஞ் சேனாபதியான திர்ஷ்டத் தூய்
மன் நின்றான்.

அச்சமயத்திற் பூரணனாகிய நாரணன்
போன்ற வெள்ளைவாரணனின்ற மதலையான
அர்ச்சுனன் அணிந்திருக்கும் மகுடமானது,
பொன்னொளி-மின்னொளி-விண்ணொளி-கண்
ணொளியாகிய பிரகாசத்தைச் செய்யவும் இரு
செவியிலுந் தரித்த இந்திர குண்டலம் பாத
லத்துள்ளிருக்கும் இருளைப் பறக்கத் துறத்த
வும், ஒடிபடாமலும் ஒருவர் கைக்குப் பிடி
படாமலும், புகழ்தற்கு முடிபடாமலும்
திணிந் தமைந்த காண்டீபமானது, மக
மேருவை இகழ்ந்து விஜயன் தோளைப் புகழ்
ந்து களித்துக்கொண்டிருக்கவும், தேரானது
நேரோடி மலைகளை யுடைக்கவும், தேரிற் பூட்
டிய சுவேதவாம் புரவிகள் காற்றின் வேக
த்தை மாற்றி நகைக்கவும், ஒப்பில்லாச் சாரதி
யானவர் சப்த மேகங்களையும் பார்த்து என்
னுடைய அருள்வாரிக்கும் அழகுக்கும் ஈடாக
மாட்டீர்களென்று அலட்சியமாய் மருட்டி
வெருட்டவும், இவ்விதமாகப் பேரணி
கொண்டு, சர்வசம்ஹார காரணன்போல்
வந்து, பகைவருடைய சேனாசமுத்திரத்துக்
குத் தானொரு வடவாமுகாக்கினிபோற் பிரகா
சித்துக்கொண்டு, திசா திசைகளும் நடுக்கமெடு
த்து ஒடுக்கமுறும்படியாய் அமர் முடிப்போ
மென்று நர நாராயண ரிருவரும் நின்றார்கள்.
இவ்விடத்திலிவர்களிப்படியிருக்க, இராத்திரி
யெல்லாம் நித்திரை யில்லாமற் சித்தப்ரமை
கொண்டு மெத்தவும் ஆலோசனையி லிருந்த
துரோணாச்சாரியர் சூரியனுதிக்குமுன் னெழு
ந்து, காலைக்கடன் முடித்து, யுத்த பூமிக்குப்
படைக ளெழும்படியாய்ப் பேரிகை முழக்கி
வைத்து, தானுஞ் சேனாதிபதிக் கோலங்
கொண்டு எல்லாப்பெருமையும் பெற்ற வல்
லாளரெல்லாந் தன்னைச் சூழ்ந்து வரும்படி
யாய் யுத்த பூமிக்குச்சென்று, சப்த சமுத்தி
ரம்போல் எழுந்து பரந்து, சப்தமேகம்போ
லிரைந்து விரைந்து, நெருங்கிய படைகளைப்
பற்பலவிதமாகப் பிரிந்து, அற்புதமற்புதமாக
யூகங்கள் கட்டினார்.

துரோணாச்சாரியார் வகுத்த யூகச்சிறப்பு

அஃதெப்படியென்றால், மூன்றுயோசனை
முப்பதுநாழி வழிதூரம் வட்டமாக வளைத்து
சூசிகாயூக மென்பதை விதிமுறைப்படி வகுத்
தார். அந்தச் சூசிகாயூகத்திற்கு நிறைந்த கடற்
போலேற்படுத்திய யானைசேனை பரிவாரங்க
ளெவ்வளவென்றால், கார்மதத்தை சொரிந்து
போர்முகத்துக்குரிய நாற்பதினாயிரம் யானை
கள், அறுபதினாயிரந் தேர்கள், ஒருநூறாயிரம்
குதிரைகள், பத்துநூறாயிரம் பதாதிகள்,
இவைகளைச் சூசிகாயூகமாக அழைத்து, இத
னுடைய நடுவிற் சிந்துதேசாதிபனாகிய சயிந்
தவனை நிறுத்தி, சூரிய குமாரனாகிய கர்
ணன், துரோணாச்சாரியின் குமாரனாகிய அசு
வத்தாமன், வில்முனைபெற்ற கிருபாச்சாரியர்,
ஒப்பில்லாத மத்திரதேசாதிபனாகிய சல்லியரா
ஜன், வீரியராஜனாகிய பூரீசிரசு, திடங்கொ
ண்ட விடசேனன் இவர்கள் முதலாகிய அதி
ரதத் தலைவர்களையெல்லாம் பார்த்து, இந்தச்
சைத்திரத் ராஜனையும், சூசிகாயூகத்தையும்
காத்து ரக்ஷிக்கத்தக்கவர்கள் நீங்களேயென்று
அவர்களை அவ்விடத்தினிறுத்தி, துரியோத
னன் முதலிய ராஜர்களை நோக்கி, ஓ அரசர்
களே! சிந்துதேசனைப் புரக்கும்படியாய் இப்

போதமைத்த சூசிகாவியூகத்தையும் இந்த அதிரதத் தலைவர்களையும் பார்த்தீர்களா? இப்பேர்ப்பட்டவர்களுக்கு இந்தப் பஞ்சையாகிய அர்ச்சுனனெம்மாத்திரம்? அவனை விட்டுத் தள்ளும். தென்றிசைக்கதிபனாகிய யமனைப்போல் ஒத்தவனுக்கும் இந்தத் திசையை நோக்கி எதிர்த்துவரச் சக்தியுண்டோ? அவனல்லாமல் இன்னும் எப்பேர்ப்பட்டவர்களாலுஞ் செயிப்பதற் கருமையாகிய வியூகமாக்களு மிது வென்று சொல்ல; வியூகமமைந்த திறமையைக் குறித்துத் திரியோதனனுந் தம்பிமார்களும் மற்ற அரசர்களும் சந்தோஷமடைந்தார்கள்.

பின்பு அத்துரோணாச்சாரியரானவர், அச்சூசிகாவியூகக் காவலென்றமைத்த அதிரதத்தலைவர்களுக்கு நான்கு திக்கிலும் நான்குவிதப் படைகளைப் பத்மவியூகமாக நிறுத்தி, பலம்பொருந்திய கிருதவன்மன், கிருதவீரியன், காம்போஜன், கன்னடராஜன், கலிங்கேசன் முதலாகிய எண்ணிறந்த காவலர்களை யெல்லாம் மேற்குத்திசையிற் கட்டிய பத்மவியூகத்துக்கு ஆக்ஷியாகயிருந்து தாக்ஷியில்லாமற் காருங்கள் என்று தனுர்வேத முறைமைப்படியமைத்து, அந்த பத்மவியூகப் பந்திப்பென்று நின்ற அவிக்கு தேசாதிபன் முதலிய மகாரதத் தலைவர்களுக்கு மேற்காவலாக அம்மேற்குத் திசையிற் சகட துண்டம் வளைத்து, மேற்கூறிய பத்மவியூகத்துக்குத் தென்கிழக்குத் திக்கில் சர்ப்பக்கொடி தரித்த துரியோதனனையும், அவனுடைய தம்பிமார்களையும், நால்வகைப் படையாகிய அரண்மனைச் சேவகரையுங் காவலாக்கி அவர்களுக்கு மேற்றுணைக்காவலாய் அக்கினிகோட்டை அமைத்திருப்பதுபோற் சமரதத் தலைவராகும் விந்தன், அனுவிந்தன் முதலாகிய தேசராஜர்களைத் திருத்தி, வடகீழ்த்திசையில் அமைத்த பத்மவியூகத்துக்குப் பங்காளம்-யுகந்தரம்-மராடம் - மிலேச்ச முதலிய தேசத்தினராகிய மகாரதத் தலைவரென்னும் வல்லமைசாலிகளை நிறுத்தி, தென்மேற்றிசையி லமைத்த பத்மவியூகத்துக்கு மலையாளம் - சேரம்-சோழம்-பாண்டியம்-சீனம் முதலிய மன்னரையும் அர்த்தரதத் தலைவரையும் முன்னுறவமைத்து, இதல்லாமலும் அழகு பொருந்திக் குவிந்திருக்குந் தேர் - யானை - குதிரை-காலாள் இவைகளுடன் கலந்த கைத்திறனுடைய வித்தகரை எல்லாங் கொடுமுக வியாக்ர துண்டமென்னும் வியூகசாஸ்திரத்தின் வண்ணம்பிரித்து, கிழக்கு - தென்கிழக்கு - தெற்கு-தென்மேற்கு-மேற்கு - வடமேற்கு - வடக்கு-வடகிழக்கென்று சொல்லிய எண்டிசையிலுங் காவலாக நெருக்கி, தங்களிடத்திலிருந்த அதிரதர்-மகரதர் - மந்திரி-சாமந்தர் - பட்டவர்த்தனர் முதலாகிய சேனைகளையெல்லாஞ் சூசிகாவியூகத்தின் முன்னே நிறுத்தினார்.

கேட்டீரோ ஜனமேஜயமகாராஜனே! இவற்றுள் முதலாவது சூசிகாவியூகமென்பது துவாரமும், நீளமும், கூர்மையுமுடைய ஊசியைப்போன் றிருப்பது. இரண்டாவது சக்ரவியூகமென்பது, உருளையைப்போன் றிருப்பது. மூன்றாவது, பத்மவியூகமென்பது, தாமரைமலர் போன் றிருப்பது. நான்காவது சகட துண்டவியூகமென்பது, வண்டிற்சக்கரத்துக்குத் துண்டமாகிய வட்டைபோன் றிருப்பது. ஐந்தாவது கொடுமுக வியாக்ர துண்ட வியூகமென்பது, எட்டுத் திக்கினு நிறைத்து வைத்த கட்டுக்கோப்பினையுடையதாய் புலிமுகம் போன் றிருப்பது. இந்தப்படியாகச் சேர்த்து ஐந்துவகை வியூகமாக அமைத்து, அச்சேனைகளின் சிரசுக்கு நவரத்னகிரீடந் தரித்ததைப்போல் நந்தியாவட்டமாலையணிந்த நரேந்திரனானவன், அக்கினிமூலைக் கதிபதியாய் நின்று பிரகாசிக்க, அத்தென்கீழ்த் திசையிற் பாண்டவப் படைகள் சீறிக்கொண்டிருக்குந் தன்மையைச் சேனாநாயகனாகிய சிலைக்குருவானவர் அறிந்து, ராக்ஷசப்படையை வகுத்தமைக்குந் திறத்தை கொண்ட சுக்கிராச்சாரி இவர்தானென்று சொல்லும்படியாய் பதினாயிரந் தேராளிகள் தன்னைச் சூழ்ந்துகொண்டு நிற்க, அர்ச்சுனன் வருகிற வழிக்குநேராய்ச் சகடதுண்ட வியூகமுனையிற் சர்வசம்ஹாரிபோல நின்றார். இவ்விதமாகத் துரோணாச்சாரி இருக்குங்காலையில், துன்மருடனெனும் வன்மனத் தோன்றலானவன் குதிரைகளிலேயும், யானைகளிலேயும், ரதங்களிலேயும், கணக்கில்லா மன்னர்களிலேயும் மேலாக சிறந்துள்ளவன். வில்-வேல்-வாள்-கதை-கணை முதலிய ஆயுதங்களைக்கொண்டு ஊசி நுழைய விடமில்லையென்று சொல்லும்படியாக நெருக்கங்கொண்ட இரண்டுலக்ஷச்சேனைகளைச் சொந்தமாக வுடையவன். அவன் திரண்டு புரண்டு வரும்படியாகிய அச்சேனைகளுடன் வந்தான். அவனைத் துரோணாச்சாரியர் கண்டு, சந்தோஷங்கொண்டு அந்தத் துன்மருடனுடைய சேனைகளை அணியிற் சேர்த்துவகிக்க எத்தனித்தபோது அவன் கூடாது என்று தடுத்து, ஓ சேனாபதியே! கும்பலிற்

கோவிந்தம் போடுவதற்காகவா என் சேனைகளை அணியோடு சேர்த்து வகுக்கப்போகிறீர்; இஷ்டனாகிய துரியோதனராஜனுக்கு படைத்துணையாய் வந்த துன்மருடன் துரோணாச்சாரியருடைய ஒட்டிலிருந்து ஜெயித்தானென்னும்பேர் பெறுவதைப் பார்க்கிலும், (விழுந்தாலு மெழுந்தாலும் வேறு தொடக்காகாது) என்பதுபோலும், (கொள்ளைக்குப்போனாலும் கூட்டாகாது) என்பதுபோலும் உம்முடன் கலக்காமல், என் சேனைகளும் பாண்டவர்களை வென்று முனைமுகத்தினின்று சயிந்தவனைக் காக்கிறோம்; எங்கள் திராணியைப் பாரும் துரோணரேயென்று வெகு அலக்ஷியமாகப் பேசி சேனாபதி ஏர்ப்படுத்திய யூகத்தருகிற் போகாமல், அத்துரோணாச்சாரியரையும் பின்னாகச்செய்து, அவர்கட்டிய சகடதுண்ட யூகத்திற்கு முன்னேபோய் தூசிப்படையாய் நின்று சண்டைக்கு வருபவனெவனோ அவனெல்லாம் வாருங்கள், என்னிடத்திற் றப்பிப்பிழைத்துப் போனபோதல்லவோ துரோணாச்சாரி முதலியபேரிடத்தில் யுத்தஞ்செய்யப் போகிறீர்கள். இன்றைக்கு ஒருவருக்கும் வேலையில்லாமற் செய்துபோடுகிறேன் என்று வீராவேசத்துடன் நேராகிய சபதங்கள்கூறி, எல்லாரும் பின்னாகத் தான்மாத்திரம் முன்னாகி முனைமுகத்தினின்றான்.

அந்தத் துன்மருடன் இப்படி நிற்கவே, கிருதவன்மனும், துச்சாதனனும் மிகுந்தக் கோபமுடையவர்களாய் நமக்கென்ன பலமில்லையா? நரனை நாம்வெல்ல வல்லபமில்லையா? சத்துருவாகிய அர்ச்சுனன் வருவானாகிற் சூரியன் அஸ்தமிக்கிறவரையும் முனைந்து பாணப்பிரயோகங்களை விடுத்து இந்த யூகங்களுக்குள் அவனை நுழையவொட்டாமற் றடுத்து நிறுத்துவது எங்களுடைய பெரிதாகிய கடமையென்று வெற்றிபெற்ற கைக்காரராய் வீரர்களுடன் தேவர்களும் வெருவும்படிக்கு பின்வந்து, துன்மருடைய தூசிப்படையை முன்னாக்கிக்கொடிப் படையாய்க் கூடியிருந்தார்கள். இதல்லாமலும் சிலம்பத்திற் பலம்பற்றி நலம்பெற்றிருக்குந் தீரர்களிற்சிலர் சக்கரம் - முசண்டி - கப்பணம் - கவண் - கதை - கத்தி - தோமரம் - எழு - கொழு - மழு - கழு - தண்டு இவைகளை இருகரத்திலுங்கொண்டு எறியும்படியாகிய குணம் ஒவ்வொருவருக்கு முண்டானவர்களாய், கொலைபுரியும் வாள் குணத்தொனிகூடிய வில் - கத்தி - கட்டாரி - குத்தீட்டி - எறியீட்டி - வாங்கு - சாங்கு - பல்லயம் முதலிய ஆயுதங்களையெல்லாங் கரத்திற் பிடித்துப் பாய்ந்து, விக்ரமத்துடன் கொக்கரித்துக்கூவி, விதி விதிர்த்து நம்மோடு பயமில்லாமல் வந்து எதிர்ப்பவர்கள் இனி எவர்கள் இருக்கின்றார்களென்று தெழித்துப் பழித்து இருமாந்து சிறந்து, தங்களைத் தாங்கள் மறந்து செருவித்திருந்தார்கள். அக்காலையில் நேற்றிராத்திரி துரோணாச்சாரியார் இன்று முப்பது நாழிகையில் எவ்விதத்திலாவது சயித்திரதனை நான் காக்கிறேன் என்று துரியோதன மகாராஜனுடன் சொல்லியபடிக்கு, அத்துரோணரானவர் அவ்விடத்தில் அருமையாக அமைத்த யூகத்திறத்தைக் கண்ட ஆகாயவாசிகளாகிய தேவர்கள் எல்லோரும் ஆச்சரியம் அடைந்து, சந்தன குங்கும பாளித கடக கங்கண வலங்கிர்த சிகர மலைபோன்ற புயத்தினையுடைய சிந்துராஜனை நெருப்பைப்போற் சிவந்து, கொத்து கொத்தாகிய எதிரோமம் வாய்ந்த தனஞ்செயன் கூறிய சபதப்படிக்கு யுத்தஞ்செய்து வெற்றியடைவது மெத்தவருத்தம். இவனால் முடியத்தக்கதல்லவென்று சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

### அருச்சுனன் தருமராஜனுக்குச் சாத்தகியைக் காவலாய்வைத்து தான் யுத்த களம் புகுதல்

அந்தவேளையில் யுத்தத்திற்குப் புறப்படும்படியாக எத்தனித்து யுத்தகோலங்கொண்ட அர்ச்சுனராஜன், ஆழமு மகலமுமுடைய சமுத்திரவோசை வாயடங்கிப் போகும்படியாய் ஆரவாரித்துப் பெருக்க நெருக்கத்துடன் அணிவகுத்திருக்கின்ற எதிரிகளின் சேனைகளைக்கண்டு இருதயங் கலங்காது எழுமலைகளு மிணையல்லவென்று சொல்லும்படி எழுவைப்போன்ற புயவலிமைகொண்ட ஒப்பிலாச் சிங்கமாகிய அப்பற்குணன், பல்லாண்டு பல்லாண்டாகிய வாழ்வைப்பெற்ற பரந்தாமனுடைய தம்பியென்னுஞ் சாத்தகியைத் தன்னுடைய தேர்மேலேற்றி வைத்துக்கொண்டு தனுர்வேதரென்னுந் துரோணாச்சாரியருடைய வில்லின் டங்காரத் தொனியையும், ஐவித யூகபந்தியையும், அவர்களின் சிந்திப்பையும், அந்தச் சேனைகளின் சிறப்பையும், அவைகளின் முறைப்பையும் பார்த்தாயா சாத்தகியென்று காட்டி, சில வார்த்தைகளை நாட்டிச் சொல்லத்தொடங்கினான்,

அதாவது, என்னெண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணமாக அமைந்திருக்குஞ் சாத்தகியான் மன்னனே கேளும்: ராஜாதி ராஜனை துரியோதனமகாராஜன் துரோணாச்சாரியருக்குச் சேனாபதி பட்டங் கட்டியபோது, நமது தர்மரை பிடித்துக்கொடுக்கும்படியாய் கேட்க, அப்படியே கைப்பிடியாய்ப் பிடித்துத் தருகிறேனென்று வரங்கொடுத்திருக்கின்ற வாக்கியம் அவர் சேனாபதியாகி வந்த இம் மூன்று நாளிலுந் தப்பிப் போய்விட்டது; ஒருவேளை இன்றைக்கு நானில்லாத வேளையிற் போர் செய்யப் புகுந்து தர்மராஜனைப் பிடித்து தன்னுடைய சொற்பிரத்தை விற்பிரத்தால் எத்திறத்தினும் நிறைவேற்றுவார் போலுமிருக்கின்றது. ஆதலால், கொந்தலர் மாலையுஞ் சந்தனக்குழம்பு மணிந்து குவிந்த தோளினையுடைய சாத்தகீ! நான் இன்றையதினங் கூறிய சபத முடிப்பதற்காக வீறிய சேனைகளைக் கூறுபடுத்தும்படிக்குத் தேறிய விற்பிடித்து மீறிய ரதமேறிச் செல்லுகின்றேன். இவ்விடத்தில் தர்மராஜன் பேரில் வராநின்ற தனுர்வேதியனை ஓய்ந் தொடுங்கச்செய்யும் வில் வல்லமையில் ஆய்ந்துணர்ந்த அறிவாளியாகிய உனக்கொப்பாக எவர்க ளிருக்கின்றார்கள்.

ஓ எனக்குரிய உத்தமனே! இப்போது இரண்டு காரியங்கள் நடக்கவேண்டி யிருக்கின்றன. அவையாவெனில், சிந்துதேசாதிபனாகிய சயித்திரதனைக் கொல்லுதலும், தர்மராஜனைக் காத்தலும், இந்த இரண்டு செய்கைதான்; இவ்விரண்டு காரியத்தில் நம் நாயகனாகிய தர்மபூபதியைக் காப்பாற்றுதல் உன்னுடைய கடனும். அந்தச் சயிந்தவனை இன்றையப் போரில் முடிப்பது என்கடனும். என்று காண்டீபன் சொல்ல, அவ்வசனத்தைக் கேட்ட சாத்தகி மகிழ்ந்து, கட்டுத்தறியைப் பிடுங்கு மதம் பொழியும் யானைபோலெழுந்து விஜயனைப் பார்த்து, ஐயா! தேவரீர் தர்மராஜனைக் குறித்து யாதொன்றும் நினைக்கவேண்டாம். அவர் சேனையணிக்குள் அதிசீக்கிரமாகப் புகுந்து, தகுந்த போர் புரிந்து, சிந்துராஜன் றலையைக் களைந்து, சபதமொழி வகுத்திருக்குஞ் யிற் சிறந்து, சந்தோஷமாக வாருமென்று இன்னும் பலவித வீரப்பிரதாபங்களைச் சொல்லி விடைபெற்றுக்கொண்டு, தன்னுடைய தேரின்பேரிற் புலிபோற்றாவி ஏறிச்சென்ற சாத்தகியானவர், தர்மநந்தனருடைய நிழற்சாயைபோல் அவரைவிட்டுப் பிரியாமற் காத்திருந்தார். இப்பால் அர்ச்சுனராஜனானவன், வெற்றி பொருந்திய கொற்றவனாகிய தர்மராஜனுக்கும், உத்தமனாகிய வீமசேனனுக்கும், நமஸ்காரஞ்செய்து, தம்பியர்களைக் கட்டித் தழுவிக்கொண்டு, பந்துமித்திரர் மந்திரி முதலிய மன்னவர்களுக்கும், சேனாபதியாகிய மைத்துனர்க்கும், மெத்தவும் உபசாரஞ் சொல்லி, தமயனைக்காக்குங் காரிய வுண்மைகளைத் தெரியச்செய்து, அவர்கள் கையில் விடைகொண்டு, தன் கையில் படைகொண்டு, சகஸ்திரதன் கமலம்போல் முகமலர்ந்துமகிழ்ந்து உத்தமோசா உதார்மன் என்னும் மைத்துனரிருவருந் தன்னுடைய தேருக்கு சக்ராக்ஷதராய் இருபுறத்திலோடவும், அநுமத்துவசம் ஆடவும், ஜகத்காரண வித்தகனுமாகிய சாரதி நடந்தேர் செலுத்தவும், கழனிகளிற் சேற்கெண்டைகளும் வாளைகளுங் கலந்து பிணங்கும் நீர்வள நிறைந்த சிந்துதேசத் தலைவனைக் கைக்குள்ளடங்கும் பொருளைப்போற் பாதுகாத்துக் கொண்டிருக்குங் காவலரென்னுஞ் சத்துருக்கள் பேரணியாய்நிற்கும் அத்திசையை நோக்கி, திரிலோகங்களையுந் தாவித் தத்திவராநின்ற சுவேதவாம் புரவிபூட்டிய ரதத்தை செலுத்தி வந்து, துரியோதன மகாராஜனுடைய சேனைகள் காதவழிக்கப்பாற் கலங்கிக் கருகிப்போகும் படியா யெரிக்குங் காடாக்கினியைப்போற் கண் சிவந்து கடுங்கோபங்கொண்டு, விஜயகாண்டீப வில்நாணி தெறித்து திசைகள் மயங்கத் தேவதத்த முழக்கினான். அப்போது ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியானவர், உலகத்தை யழிக்கும்படியாய் எழுந்த ஊழித்தீயைப் பின்னும் ஓங்கிவளர்ந் தெரியச்செய்யும் உகாந்தவாடைக் காற்றின் பேரோசையைப்போல் அண்டர்களெல்லாந் துதிக்கும்படியான தமது பாஞ்சசன்யத்தை முழக்கினார்.

அருச்சுனனால் துரோணர் கட்டிய யூகங்கட்கு முன் தூசிப்படை கொண்டிருந்த துன்மருடனுந் துச்சாதனனும் முறிபட்டோடுதல்

ஓ மகாராஜனே! இவர்களிருவரு முழங்கிய சங்கத் தொனியினால் திசையானைகள் பொறுத்த திக்குகளிடிந்து வெறுத்து, தேவர்கள் ஒடுங்கிக் குறுகுறுத்து, குருகுலாதிபர் முதலாகிய சேனைகளெல்லாங் குப்புற்று வீழ்ந்து வியாகூலங்கொண்டு தாழ்ந்தார்கள். அந்தவேளையிற் பூமிதேவியின் பாரநீக்கப் பிறந்த பேரொளிபோன்ற அர்ச்சுனன், அநுமக்கொடி நாட்டிய தேரைச் செலுத்துஞ்

சாரதியாகிய ஆபத்பாந்தவனைப் பார்த்து, சுவாமி! துரோணாச்சாரியர் கட்டிய யூகத்தின் கொடிப்படையை நான் காக்கிறேனென்று இறுமாப்படைந்து வெற்றிக்கொடி பிடித்து வந்திருக்கின்ற துன்மருடனுடைய யானைப் படையின்மீது விடுந் தேரையென்று விரைந்து கோபித்து விளம்பினான். அந்தட்சணமே பெருமை பொருந்திய ஆப்தனாகிய மாதவன் அப்படியே ரதத்தைச் செலுத்துகிறேன் அர்ச்சுனா என்று சற்று நிதானித்து, பூமி கிடுகிடென்றசைய இடங்கொண்ட தேரைக் கடகடவென்று செலுத்தினார். உடனே தனஞ்செயனானவன், விகடதடகடகரிகளெல்லாம் படபடவென்றலையக் கடுங்காற்று மின்னலும் அடங்காமற் காட்டி, ஏழு மேகமும் ஊழியிற் பொழிவதுபோல் தேவாஸ்திரங்களைத் தீப் பொறிபறக்க விடுத்துச் சிதறவடிக்கும்போது, அந்தத் துன்மருடனுடைய நால்வகை சேனைகளும் அலைக்காற்றி லலைந்து முறிந்த மரம்போல் ஆவியழிந்தார்கள். இவ்விதமாக தன்னுடைய சேனைகள் தலைவிரிகோலமாய் அழிவதை துன்மருடன் பார்த்து சகியாதவனாய்த் தன் தேரைச் செலுத்தி, தனஞ்செயனை மறித்து சந்திரக்கணை - இந்திரக்கணை - மந்திரக்கணை முதலிய அனேக பாணங்களைத் தொடுத்து, அர்ச்சுனனுகமும், சாரதி தேகமும், குதிரைகளின் அங்கமும் நிறைத்து மறைத்து அவன் றொடுக்கும் கணைகளையுங் குறைத்து முறித்தான். அதுகாலையில், இதழ் விரிந்த தலர் நிறைந்த மணமாலை யணிந்த பற்குணனவன், அனலெரிந்து அழல் சொரிந்து வரும் அக்கினியாஸ்திரத்தை வீசி, முன்பின் பாராமல் பக்கத்துக் காயிரம் பகழிகளையேற்றி தாறுமாறாகத் தூறுசெய்தபோது, ஆறுபோலுதிரஞ் சேறுடியோட, சக்கரம் இருசி-குத்துக்கால்-கொடுங்கை முதலிய ரதமுமெரிய, சாரதிகளுங் குதிரைகளுஞ் சாய்ந்து மடிய, பன்முகத்திலும் வாடிய துன்மருடைய வில் முறிந்து யுத்தமுகம்விட்டுத் தன் முகத்திக்கு நேராய்ப் புறமுதுகிட் டோடிப் பதுங்கினான்.

உலகுக்கொரு சுடரா யுதித்தருளிய சூரிய பகவானை மூடி மறைக்கும் பனிபோல் வந்தடுத்து போர்கொடுத்த துன்மருடனானவன், புறந்தந் தோடுவதைத் துச்சாதனன் றெரிந்து கண்டு, அச்சாணிபோல் வந்து நின்று அர்ச்சுனனைத் தைந்து யாவரும் இப்போர்ப்பட்ட அஸ்திரங்களைத் தொடுக்க மாட்டார்களென தேவருங் கலங்கத் திக்குகளொடுங்கத் திருகம்பு-சொருகம்பு-உருகம்பு முதலிய தீக்கணைகளைப் பொழிந்தான். இப்படியாக துசுவாசனன் தொடுத்த இணையற்ற பாணங்களையும், அவன் கைப்பிடித்த வில்லையும், எரியில் வீழ்ந்து தீய்ந்த சருகைப்போற் கருக்கி, அவனுடன் கூடிவந்த சேனைகளின்பேரில் மலையருவிபோல் இரத்தவெள்ளம்பெருக்கி, அவனுடைய தலைமுதற் காலளவுஞ் சல்லடைக் கண்களாக்கி, வீரபட்டத்தைப்போக்கி, வில்லையுமுறித்து, தேரையழித்து, சாரதிகுதிரைகளையு மொழித்து, கவசத்தைக் கிழித்து கலங்கச் செய்யும்போது, காண்டீபனுக்கு முன்னிற்க மாட்டாமல் கசங்கிப் பயந்து காலோட்டங் கொண்டான். இந்தப் பிரகாரந் துரியோதன மகாராசனுடைய தம்பியானவன் மானம்போனாற் போகட்டும் பிராணனிருந்தாற் போதுமென்று உயிரைக் காப்பாற்றிக் கொண்டு ஓடிப்போன பிற்பாடு, செந்தாமரைக் கண்ணனாகிய திருமால் சமயமறிந்து அர்ச்சுனனுடைய தேரைச் செலுத்தவே, மழைசொரியு மேகம்போன்ற கிரீடியானவன் வாசாமகோசரமாய் வரிபெற்ற கூர்ங்கணைகளை வாரிச்சொரிந்து வாகினியைச் சேதிக்கத் தொடங்கினான். அப்போது கரங்களெத்தனை? கொடுமரங்க ளெத்தனை? நெடு நரம்புகளெத்தனை? எலும்புகளெத்தனை? கால்களெத்தனை? தோள்களெத்தனை? உடல்களெத்தனை? குடல்கள் எத்தனை? ஐயா மகாராசனே! நான் செய்யும் யுத்தத்திற் சரங்கள் கொய்தறுத்ததை இவ்வளவென்று அளவிட்டுச் சொல்ல முடியுமோ? ஒருக்காலு முடியாது. மேலும், வீரப்பட்டங்களையுடைய யானைகளெல்லாங் கெட்டழிந்து பட்டன; அட்டதிசையும் அரை நொடியில் வலம்வருங் குதிரைகளெல்லாம் எரிந்து கரிந்துபோய்விட்டன; வட்டமான சக்கரங்களையுடைய நவமணி யிழைத்த நீளமாகிய ரதங்களெல்லாம் பரிகளோட்டுஞ் சாரதிகளுடன் நெரிபட்டழுந்தன; விஸ்தாரமாகிய தசைகளும் நரம்புகளும் நிணங்களுடன் பிசறிக்கொண்டு கால்கொண்டோடும் இரத்த வெள்ளங்களிற் கலந்து களகளவென ஓசையுடன் காலாள்கள் சுழிசுழித்து சரிந்தன.

இவ்விதமாகத் தூசிப்படையை நாசப் படுத்திய கிரீடியானவன், மனமழன்று யுத்த முனையினின்றெழுந்து ஓடாநின்று துசுவாச

னைத் துரத்தி தொடர்ந்து அடர்ந்து முடுக்கி, ஓ சகல தர்மமுந் தெரிந்த சத்தியவானே! தரணீசனாகிய துரியோதனனுக்குத் தம்பியானவனே! போர்முகத்தில் நேராகநின்றுப் போர் புரியாமல் புறங்கொடுத் தோடலாமோ? இது என்ன புண்ணியமா? அல்லது புருடோத்தமமா? நல்லது உலகத்திலுள்ளோர் யாவரும் உங்களை நிந்திக்கும்படியாய் நீ ஓடுகின்றாயே இதனாலேதாகிலும் உனக்கு லாபமுண்டோ? நீ ஓடுகிறதினால் உன்னுயிர் தப்புமா? நீ பிழைக்கும்படியாகிய விதங்களு முண்டா? அப்படியுண்டானால் சொல்லு துசுவாசனா? சும்மாயிருந்த எங்களையழைத்து வம்புவிளைத்துச் சூதாடிய நாளையில், இரும்பைப் பார்க்கிலுஞ் சிறந்த எங்களை துரும்பைப் பார்க்கிலுந் துரும்பென்று அவமதித்துச் சொன்ன கொடிய குற்றமாகிய கோடாகோடி வார்த்தைகளையு மறந்து வில்லாயுதங்களாற் கொல்லும்படியாகிய போர்முகத்தில் வல்லமை யழிந்து சொல்லாமற் கலங்கிப் புறமுதுகிட்டு ஓடுதல் உன் பெருமைக் கடுத்ததோ? ஐயோ! அப்பா! ராஜசபையிற் கொள்ளிபோற் றுள்ளிய உன் புஜபல பராக்கிரமத்தை எங்கே கொட்டிப் போட்டாய்? எவ்விதத்தி லொழித்துவிட்டாய் சொல்லும் ஏந்தலே! ஒரு குலத்திற் பிறந்த சகோதரரானென்னும் அன்புகெட்டு உலகத்தினிறைந்த உயிரனைத்தையும் அழிக்கும்படியாய் உனக்கு முன்பிறந்த துரியோதனன் முன்னாக முடிந்து, நீயும் அவனுக்குப் பின்னாக மடிந்து, குலத்திற் பிறந்த அரசர் முதலிய யாவரையும் போரறக்களையப் பிறந்த பெரும் பாவியாகிய உன்பிராணனுக்கு என்னசௌக்கியங் கிடைக்குமென்று ஓடுகிறாய்? நீ எவ்வளவு தூரம் ஓடினாலும் தப்பிப் பிழைப்பாயா? அடா வைப்புருட்டிப் பேயா! ஓடாதே ஓடாதே யென்று; இரண்டு வச்சிரக்கணையெடுத்துத் துர்ச்சாதனனுடைய முதுகைத் துளைத் தோடும்படியாய் தொடுத்து, கடுகடுத்து நின்றான் அர்ச்சுனராசன். அது சமயம் துசுவாசனானவன், அர்ச்சுனன் கொல்லுவானென்னும் பயத்தினால் திரும்பிக்கூடபாராமல், இயக்கமும் மயக்கமுங் கொண்டு சேனாபதியாகிய தேசிகனிடம்போய்ச் சேர்ந்து, தூசிப்படையினின்ற தன்மருடன் அடிபட்டோடியதும், அவனுக்குச் சகாயமாகத் தான்போய் எதிர்த்து தன்னுடையகதி இப்படியாயதும், அத் துர்ச்சாதனன் சொல்லிக் கொண்டிருக்கும்போது, நீலமேகச் சாமளவர்ணனாகிய நெடுமாலானவர், தங்களுக்கு நேராகத் தேர்மீதிருந்த துரோணாச்சாரியருடைய பக்கத்தில் தன் தேரைக் கொண்டு போய்விட்டார்.

### அருச்சுனன் தனக்கு வழி விடமாட்டேனென்ற துரோணரை வளைத்துப் போர் செய்து மீண்டும் விடைதரப் பெற்றுக் கோடிப்படைக்குட் புகுதல்

அந்தவேளையில் அர்ச்சுனராஜன் ஆசாரியனைப் பார்த்து, இருகரத்தையுஞ் சிரத்திற் குவித்து வணங்கிச் சொல்லுகின்றான்: ஓ எங்கட் கிறையாகிய திங்கட்பிறைபோன்ற தேசிகனே! எனக்குத் தாயும், தந்தையும், குருவும், தெய்வமும் என் தமயனாகிய தருமராஜனும், தேவரீருஞ் சரியென்று ஒரே தன்மையாய் என்னுள்ளத்திற் கொண்டிருக்கின்றேன். ஓ தகுதியையுடைய தயாளுவே! சர்வஜீவ தயாபரனளித்த சுப்பிரமணியக் கடவுளுக் கொப்பாகும் வல்லமையிற் சிறந்த தீராகரனாகிய அசுவத்தாமாவும், யானும் ஒன்றென்று வேற்றுமையில்லாமல் தேவரீர் மனத்துடன் கொள்ளவேண்டுமென் சற்குருவே! என்று நவ வியாகரண பாண்டித்வ முடைய சூரியனைப் போன்ற அர்ச்சுனன் சொல்லித் துதித்து, சுவாமீ! தேவரீருட னெதிர்த்து யுத்தஞ் செய்யுந் திறத்தினையுடையவனல்லேன். மேலும், சிந்துராஜனைக் கொல்லவேண்டி யிருப்பதினால் காலதாமச மாகாதபடி தேவரீர் செலவு கொடுத்து விடவேண்டுமென்று வணங்கித் தனஞ்செயன் கேட்க, துரோணாச்சாரியர் வெகு சீக்கிரத்திற் புன்னகை நகைத்து, ஓ திடவானாகிய விஜயனே! ராக்ஷசப் படைக்குட் புகுந்து நாசப்படுத்துவதற்குச் சந்தேகமறச் செல்லுஞ் சக்ராதரனைப்போல், இப்போது நான் அணிவகுத்திருக்குஞ் சேனைகளெல்லாம் இறக்கும்படியாக வடித்துப் படைமுகம் புகுந்து போவதற்கு என்னைச் செயித்துப் போனாற் போகலா மல்லது, என்னை இரக்கமாகக் கேட்டுக்கொண்டு நீ போகவுங் கூடாது. உள்ளே நுழைவதற்கு நான் உன்னை உயிருடன் விடவுமாட்டேன் என்று வரமும், ஸ்திரமும், பலமும், நலமும்பெற்ற கல்லுக் கொப்பாகிய வில்லைவளைத்து, கனபடலங்கருகிப் பெருகும்படியாய்க் கணைகளைத் தொடுத்தார் துரோணாச்சாரியர்.

அது காலையி லவரை அர்ச்சுனன் பார்த்து, ஐயா! இத்தனை சொல்லியும் ஆசாரியனா

கிய தேவரீர்பேரிற் கையெடுக்கச் செய்கின்
றீரா காரணனேயென்று காண்டீபத்தைக் கல
கலவென்றசைத்து, கருக்காகிய கடுங்கணை
களைத் தொடுத்துவிடுத்து; நெடுநேரம் வரை
யிலவ்விற்குரு வியக்கும்படியாய்ப் போர்செய்
தான். அப்போது சேனைகளெல்லாம் அர்ச்சு
னனுக் கெதிர் நிற்கமாட்டாமல் மூலைகுலந்
தலைந்தழிந்து பறக்க, அந்தச் சேனைகளின்
மத்தியில் நின்ற துரோணாச்சாரியருக்கும்
விஜயனுக்கும் விஸ்தாரமாகிய யுத்தம் நெரு
ங்கி நடந்தது. இவர்களுடைய தேரிற்கட்டிய
குதிரைகளொன்றோடொன்று மேககர்ச்சிதம்
போல் இரைந்து கனைக்கவும், மலையுடன்மலை
கூடி மலையுந் தன்மைபோற்கொடிகள் கட்டிய
தேர் குலுங்கிச் சுழலவும், முஷ்டி நிலையாலும்,
கைபுஷ்டி நிலையாலும், மொய்ப்பாகிய பலத்
தினாலும், அன்பாகிய நலத்தினாலும், வளைத்த
வில் நிமிராமல், தொடுத்தபாணங் குறையா
மல், மனமிளைக்காமல், வாட்டமாய்க் களைக்கா
மல், ஒருவருக்கொருவர் கிட்டநெருங்கித்
தொட்ட பகழியாலும், முட்டவிட்ட கணைக
ளாலும், ஒன்றோடொன்று முட்டிக்கொண்டு
அஷ்டதிசைகளும் கெட்டி யுரும்படியாகிய
தல்லாமல், இவ்விருவர்பேரிலும் பாணம்படா
மற்றட்டிக்கொண்டார்கள். இதன்றியும், இவர்
களுடைய இரண்டு தேரும் இடசாரி வலசாரி
வலசாரி இடசாரியாகத் திரிந்து, முன்னோட்
டம் பின்னோட்டமாக முடுகி, இருவர்கரத்தி
லும் பிடித்த வில்லிலிருந்து புறப்படும் வாளி
கள் ஒரு கோடி-இருகோடி-முக்கோடி-நாற்
கோடி-ஐங்கோடி-அறுகோடியென்று வரவும்,
இரண்டுமேக மெதிர்த்துச் சமமாய்ப் பொழியு
மழையைப்போல் அஸ்திரங்களைப் பொழி
ந்து ஆக்ரமித்துப் பராக்கிரமங்காட்டி ஒரு
வருக்கொருவ ரொப்பாக நின்று யுத்தம்
பண்ணினார்கள்.

எகன் முதலிய தேவர் மூவருமயங்க, நா
கம் முதலிய லோக மூன்றுங் கலங்க, சாகர
முதலிய வேழுந் தயங்க, சக்ரவாளகிரியுங்
குலுங்க, தடதட படபடவென்னுஞ் சப்தத்
துடன் சண்டைசெய்து வரும்போது; சாக்ஷாத்
கார சாரதியானவர் தனஞ்செயனை நோக்கி,
ஓ போர்புரியும் பெரிய வில்லைத் தாங்கிய புகழ்
வீரா! திரிபுராந்தக னருள்பெற்ற செயசூரா!
இப்போது நாமிருக்கு மிடத்துக்குஞ் சயிந்
தவனிருக்கு மிடத்துக்கும் இருபது யோசனை
தூர மிருப்பதால், நீ எந்தக் காலத்திற் போய்
ஜெயிக்கப் போகிறாய்? இங்கேதானே வீண்
பொழுது போகுதே என்று சொல்லி மனந்
தாளாமல், சுவேதவாம் புரவியைத் தட்டி
முடுக்க, துரோணாச்சாரியருடைய தேர் குலை
குலைந்து போகும்படி கிட்டநெருங்கி, கொடிப்
படைக்குள்ளாகத் தேரைச் செலுத்தி, கண்மூ
டிக் கண்திறப்பதற்கு முன்னே இந்திரஜால
மாயம் இதுவென்னும்படியாய் எதிரில் நின்ற
விஜயனுடைய ரதத்தை வாயுகதிகொண்ட
வேகத்துடன் விண்ணவரு மயங்கக் கண்ணுக்
கெட்டாத தூரங் கொண்டுபோனார் மேகவண்
ணனாகிய கண்ணனவர். அப்போது துரோ
ணாச்சாரியர் பார்த்து, ஆர்ப்பரித் ததிர்த்து,
தன் தேரைச் செலுத்திப் பின்றொடர்ந்து
வளைத்து, ஆ! ஆ! நல்ல காரியஞ் செய்தனை
அர்ச்சுனா! திருடனைப்போ லோடிவந்து விட்
டாய். இதென்ன தீரமென்று மண்கொதிக்க
விண்கொதிக்கக் கண்கொதித்து மனமழன்று
மந்திரவாளிகள், சந்திரவாளிகள், இந்திரவா
ளிகள் முதலியவைகளைத் தந்திரமாக விடுத்
தெதிர்த்தனர். அவ்வாறு எதிர்த்த ஆசாரிய
ரைத் திரும்பிப் பார்த்து விரும்பிப் பணிந்து
என்னையனே! தேவரீருடனெதிர்த்து யுத்தம்
செய்யும் பக்குவம் தேவர்களாலு மாகாதென்
றால் நான் எம்மாத்திரம்? சுவாமி! தேவரீ
ருடைய செந்தாமரைக் கமலம்போன்ற திரு
வடிகளைச் சிரத்திற் றரித்துச் சீர்பெறும்படி
யாய்க் காத்திருக்கின்ற அறியாதவ னாகை
யால், என்னாண்டவனே! இன்று முப்பது நாழி
கைக்குள்ளாகச் சயித்திரதனை வென்று வரு
வேன் என்று நான் கூறிய சபதமொழிக்குப்
பழுது வராமல் ஆசீர்வதித்து அனுப்பவேண்
டும். ஓ அருட்குருவே! என்று அருச்சுனன்
துதிக்க ஆசானானவர் குலுங்கநகைத்து, ஜன்
மாந்திரக் குறையையும் நினைந்து, பாணப்
பிரயோகஞ் செய்பவந்த கோபமாறி, பார்த்தி
பன் என்னும் பக்குவனாகிய விக்கிரமனுக்குப்
போய்வாவென்று விடைகொடுத்து விட்டு
போனார் சேனாபதியாகிய துரோணாச்சாரியர்.

### அருச்சுனன் கொடிப்படையின் முன்னணியில் நின்ற கிருதவன்மனை முறிய அடித்தோட்டுதல்

அப்போது பரமேஸ்வரனால் பாசுபதா
ஸ்திரமுஞ் சத்துருக்களைச் செயிக்கும்படியா
கிய வரங்களும் பெற்ற பற்குணன் படபடா
காரத்துடன் தேரைச்செலுத்திப் படைகளை
சோதித்துப் புகும்போது, காம்போஜன் முத
லாகிய காவலர்வந்து தடுத்து கணைகளை விடுத்

துச் சண்டைசெய்ய, அக்காலேயிற் காண்டீப னும் அவர்களே வளேத்துக் காலாக்கினிக்கு ஒப்பாகிய கணேகளாற் கருக்குநிறங் குலேந்து இறக்கும்படியாய்க் கசக்கினன். அதனுற் கடும் போற்புரிந்த காண்டீபனுடைய கணேக்குத் தாளமாட்டாமற் பயந்தொடுங்கி யுள்ளங்கூசி போனர்கள். அப்பால் நான்கு புறத்திலும் நெருங்கி நின்ற நால்வகைச் சேனேகளேயுங் கொன்று, நாலுவீரரும் நடுநடுங்கும்படியாக வென்று, ஆங்காங்கு பேரணியாக நின்ற பிர பலவீரரை மடக்கிப் போர்புரிந்து, தனது தேருக்கு நேராக வந்து யுத்தமுனேக டோறு முந்திப் போர்செய்யாநின்ற மன்னர் மன்னர்க ளுடைய வில்லும் - வேலும் - வாளும் - சூல மும் சின்னபின்னப் படும்படிக்குச் சிலீ முகங்களாற் சேதித்து, அப்பால் நடக்குந் தனஞ்செயன் இன்னதன்மையை யுடையவ னென்று சொல்லவல்லவ ரெவர்களுமில்லே யென் றுரைக்கும்படியாய் வெற்றிகொண்டு வந்தான். அப்படிவரும் விஜயனேக் கண்ட கிருதவன்மனுங் கிரீடப்பிரகாசமுடைய மன் னரு மவனேடெதிர்த்துப் போராடும்போது, பன்னக சயனனுகிய பார்த்தசாரதியானவர், பற்குணனேக் கோபித்து இவ்விடத்திலொரு நாழிகை ஆய்விட்டது. இன்ன மென்ன தாமசமாக இருக்கின்ருய்? அர்ச்சுன! வேறு யோசனே செய்யாமற் பின்னமாகும்படி கொல் லென்று பெருமானுரைக்க, அவர் சொன்ன சொல் வாய்விட்டு வெளிப்படுவதற்கு முன் னமே சுடுசரந் தொடுத்துக் கிருதவன்மனு டைய மார்பைக் கிழித்தான்.

அந்தச் சுடுசரம்பட்டயர்ந்து துடிதுடித் துச் சோபித்து தேரின்மேல்வீழ்ந்து மூர்ச்சை போன கிருதவன்மனேக் கண்ட பச்சை மாலாகிய பரந்தாமன் உச்சைஸ்வரத்துக்கு ஒப்பாகிய சுவேதவாம்புரவி பூட்டிய தேரை முடுக்கி விடுக்கவும், அத்தேருருள்களினுல் வெகு சேனேகள் கெட்டழிந்து துடித்தன. அப்போது அர்ச்சுனன் அனேக பாணங்களே தொடுக்க, அதனுல் எண்ணில்லாத வெள்ள சேனேகளழிந்து இரத்தவெள்ளம் வழிந்தது. எந்தெந்த பாணங்களே எவரெவர்கள் விடுத் தார்களோ, அந்தந்தப் பாணங்களே அவரவர் களுக்கு தொடுத்து, மார்பு சிதையவும், தோள் கள் குழையவும், வயிறு கிழியவும், கரங்களழி யவும், சிரங்களொழியவும், ஈரற்குலுங்கவும், இருதயங் கலங்கவும், எலும்புக ளொடிந்து சிந்தவும், நரம்புகளறுந்து தொங்கவும், வாய் துளேபடவும், பேய் நிணஞ்சுடவும், இருபதங்கள் முறியவும், பொருமதங்கள் பறி யவும், மேலுமேலு மிலக்கணக் கணேகளேச் சொல்லக் கணக்கில்லாமல் கலக்கமுற்றழிதர அலக்கழித் தகற்றினன் அர்ச்சுனராஜன். அதனுல் அந்த சேனேவீரர்களெல்லாருங் கண் கலக்கங்கொண்டு, கால்சாய்ந்து - வேகமுற்ற குதிரையிறந்து-யளவில்லாதயானே குறைந்து- கொடிகள் முறிந்து-குடைகள் தறிந்து-தேர் ஒடிந்து-சாரதி முடிந்து-தனுவு மொடிந்து- சகலரு மிறந்துபோகும்படியா யிருந்தன. இவ்வாறு கொடிப்படையின் முன்னணியில் நின்ற சேனேகளேயுஞ் சேனே நாயகர்களேயும் சாடிக்கொண்டு சமுத்திர சலத்தைக் கிழித்து ஓடும் புகைக் கப்பலேப்போற் சதுரங்க சேனே கடலேக் கிழித்துக்கொண்டு வராநின்ற தனஞ் செயனேக்கண்ட தேவர்களெல்லாரும் செயங் கூறி துதித்தார்கள். அந்த வேளேயில், அர்ச் சுனன் சரத்தால் அடிபட்டு வீழ்ந்த கிருத வன்மனனவன், மறுபடியுந்தேறி எழுந்து செழித்து தேரேறி வந்து அர்ச்சுனனுக்குச் சக்ர ரக்ஷகளாகிய திவ்விய மணமாலே யணி ந்த உத்தமோசன், உதார்கன் என்னும் இரு வரையும் வளேத்துக்கொண்டு பெருவரைபோ லொத்த தேருடன் தேர்தாக்கி கொடியவேகங் கொண்ட அக்கினியாஸ்திரத்தினுல் மலேந்து, இரண்டு நாழிகை வரைக்குந் தகுதியாகிய யுத்தஞ் செய்தான். இப்படியாக யுத்தம் பண்ணிய கிருதவன்மனேப் பார்த்துக் கிரீடி முனேந்து எண்டிசை மண்டலம் விண்டழி தரவிவ் வண்ட மகண்ட மலேந் ததிரும்படி கொண்டல் நிறன்கணே ஆகண்டலன் கணே முதலிய போரம்புகள் தொடுக்க, அந்தக் கூரம் புகளானது வந்து விழுந்து கிருதவன்மனுட லேக் கெல்லிக் கொல்லத்தக்க தன்மைபோற் றகிக்கும்போது கிருதவன்மன் மனமடிந்து மாழ்கி வருந்தி இளேத்தோடினன்.

### அர்ச்சுனனேடு போர்செய்து சுதாரிவிடுத்த கதையைக் கண்ணன் தனது மார்பிற் ருக்கி வதைத்து அச்சூழ்ச்சியை அவனுக் கறிவித்தல்

இவ்வா றிளேத்தோடும் கிருதவன்மனேக் கண்ட வருணராஜ குமாரனென்னுஞ் சுதாயு வானவன் மனந்தாளாமற் கோபித்தெழுந்து, குவிந்த சேனேக் கூட்டத்துடன் வந்து வில் வளேத்து நாணேறிட்டுக் குணத்தொனி

பண்ணி, விகங்காஸ்திரம் - விடங்காஸ்திரம் - மோகாஸ்திரம் - விருக்ஷாஸ்திரம் - வாய்வாஸ்திரம் - தேய்வாஸ்திரம் - வருணாஸ்திரம் - அருணாஸ்திர முதலிய வாளிகளை விடுத்து, யாளியெனவடுத்து, கொற்றவைம்கிழ, மற்றவர் புகழ, கற்றவர்களிக்க, மத்தங்கமதமாப்போற் சித்தங் கலங்காமல் யுத்தம் பண்ணினான். இந்தப்பிரகாரம் யுத்தத்திலழிவில்லா வரம்பெற்ற வீரன் வந்தெதிர்த்துப் போர்செயுங் காலையில், வீராதிவீரரிற் சிறந்த விஜயன் பாரதியண்ட முகடுவரைக்கும் நிரம்பப் பாணங்களைத் தூவினான். இவ்விதமாக அர்ச்சுனன்றொடுத்த வேத மந்திர பலங்கொண்ட வெவ்விய பாணங்களையெல்லாம் முனைமுறிய அடித்துப் பூமியிற் றள்ளி உழுது சேறாகாத ஏரிப்பள்ளங்களில் நாற்று விடவிரைத்த செந்நெல் விதையைப்போற் சங்கோபசங்கப் புங்கானுபுங்கமாய் அம்புகளைப் பிரையோகஞ் செய்து, தனஞ்செயன்கணை தன்பேரிற்படவொட்டாமற்றடுத்து, பிரமாஸ்திர முதலிய அஸ்திரங்களை தொடுத்து, அர்ச்சுனனைக் கலங்கவடித்தான் சுதாயுவானவன். அப்போது தான் விடுத்த பாணங்களெல்லாம் தலையழிந்து விழுந்த தன்மையை தனஞ்செயன் நோக்கி தாஷ்டீகத்துடன் கணகணவென்று காண்டீபத்தை தெரித்து, கூர்மையுங் கொடுமையுங் கடுமையுங் கொல்லுதலையுங் குடியாய்க் கொண்ட நெடியோன் கணைகளை நேமித்துப் பூசித்து, உபசரித்து வணங்கியெடுத்து, ஒன்று - பத்து - நூறு - ஆயிரமென்னும்படி அப்பாணங்களைச் சுதாயுவின் தேகத்தி னிழலைப்போற் பொருந்தும்படிக்கு விடுத்தான்.

இப்படி தனஞ்செயன் றொடுத்த சகலாஸ்திரங்களையுஞ் சுதாயுவானவன், தன்னுடைய பாணத்தினால் வீழவொட்டாமற் றரித்து விலக்கும்போது, வீபற்சு வெறித்துக் கண்விழித்து முகஞ் சுளித்து வெகுளி மேற்கொண்டு, இடிக்கணை - எரிக்கணை - இலைக்கணை - எழுக்கணை - கொடிக்கணை முதலிய அளவற்ற கணைகளையும் அஸ்திரங்களையும் போக்கி, அச்சுதாயு பிடித்திருந்த பலம்பொருந்திய வில்லையொடித்தான். சுதாயுவானவன், ஒடிந்த வில்லைவிட்டெறிந்துபோட்டு, தன்னுடைய முகஞ்சுருங்க, தேகங்கலங்க, ஸ்திரம்பெற்ற மார்பு குழுங்க, மனந்தடுமாற உதடை மடித்துப் பற்கடித்து மகா கோபங்கொண்டு, ஒரு தண்டாயுதத்தை யெடுத்துப் பூசித்து தனஞ்செயன்மேலெறிந்தான். அத்தண்டமானது மலைகளெல்லாங் குலுங்க, மண்டலமெல்லாங் கலங்க, உகாந்தகாலப் பேரிடிபோல் விரைந்து விரைந்துவருதலும், அத் தண்டாயுதத்தைச் சர்வலோக சரண்யனாகிய சாரதியானவர் கண்டு எழுந்து நின்று லோகாலோகங்களெல்லாங் கலங்கும்படியாய் ஸ்ரீதேவியும், திருமணிப் பணியும் திருத்துழாயு மணிந்த தம் திருமார்பிற்றாங்கி யருளினர். இப் பெரிதாகிய போர்முகத்தில் விஜயன் பிழைக்கும்படியாய் அருள் சுரந்து தன்னுடைய மார்பிற்றாங்கியவுடனே, அர்ச்சுனன் அழிந்துபோவானென்று ஆசைகொண்டெறிந்த சுதாயுவின் மணிமுடி துணிந்து, தன்னைத்தான் மறந்து, தலைமுறிந்து, மண்மிசை வீழ்ந்து விண்மிசை வாழ்ந்தான். இந்த ஆச்சரியத்தைக் கண்ட தேவர்கள் முனிவர்களெல்லாரும், பூபாரந்தீர்க்கவந்த போர் விஜயப் புண்ணியன்பேரிற் சிவந்த கற்பகப் பொன்மலர் சொரிந்து, “வாழிவாழி குந்திமைந்தன் வலவன் வாழி வாழியே, வாழி வாழி யவனியுய்ய வந்த நாதன் வாழியே, வாழி வாழி காளமேக வண்ணன் வாழி வாழியே, வாழி வாழி வாசுதேவன் வாழி வாழி வாழியே.’’ என்னும்படியாக இக்குந்தி மைந்தனும், இவனுக்குச் சாரதியாகிய கோவிந்தனும், பல்லாண்டு பல்லாண்டாய் வாழக் கடவது. எம்முடன்கூட இவ் வுலகம் பிழைக்கும்படியா யவதரித் தருளிய நாரணனென்னும் நாதன் வாழக் கடவது. நீருண்ட காளமேகம்போன்ற நெடுமாலாகிய நீலமேனியான் வாழக்கடவது. வசுதேவ மைந்தனாகிய பரவாசுதேவன் வாழக் கடவது என்று பலவாறு வாழ்த்திப் போற்றியேத்தி மகிழ்ந்து புகழ்ந்து துதித்தார்கள்.

இவ்விதமாகத் தேவர் முதலாகிய யாவரும் தொழுது தோத்திரஞ் செய்யும் உபாயத்தை, ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியினுடைய பிராணனுக்குப் பிராணனான தனஞ்செயன் கண்டு அதிசயங்கொண்டு, கொண்டல் வண்ணனென்னுங் காபாலனைப் போற்றி, ஓ எங்கள் குலதெய்வமாகிய மாதவனே! என்னுடன் எதிர்த்து யுத்தஞ்செய்த சுதாயுவானவன், என்பேரிலெரிந்த கொடுங் கதையைத் தேவரீர் தம்முடைய திருமார்பிற் றாங்கவும், அக்கதையைப் பிரையோகஞ்செய்தபின்பு சுதாயு கெட்டழிந்து சாகவும் நேரிட்ட அபாயமாகிய இவ்வுபாயத்தை அடியேன் அறிந்துகொள்

ளும்படிக்கு திருவருள் புரியவேண்டும் திருமாலே என்று கேசவற்ருேழன்கேட்க, கருடகேதனன் சொல்லுகிறார்: கேளப்பா அர்ச்சுனு! யாவருங் கொண்டாடாநின்ற வாதையென்னும் தாய்க்கும், சமுத்திர ராஜனுகிய வருணனென்னும் தந்தைக்கும் பிள்ளையாகப் பிறந்த இச் சுதாயுவென்பவன், தன் தந்தையாகிய வருணனைக் குறித்து தவஞ்செய்து சகல வரமும் பற்பல ஆயுதங்களும் பெற்ருன். அவ்வாயுதங்களைக்கொண்டு அமர் செய்ய வருவானுகில், அலகில்லா பலத்துடன் யாவரையும் வெல்வதல்லாமல், ஒருவராலும் உயிரழியாத நிலைமையையும் வரமாய்ப் பெற்றிருக்கிருன். ஆனல், இவன் அழிவது எவ்வண்ணமெனிலோ, போர்புரியும்போது இவன் விட்ட ஆயுதம் நிராயுதன்பேரில் படுமேயாகில், தனக்குத்தானே அழிந்து போகும்படியாகிய பிரதிவரமும் பெற்றிருந்தான். அக்கெதை உன் பேரில் பட்டால், நீ எப்படியும் இறந்து போவாயென்று அந்த ரகஸ்ய உளவு தெரிந்த நான் எதிர்நின்று என் மார்பிற் ருங்கியவுடனே, அவன் உயிரிழந்து அந்தகனுலகடைந்தான். என்று அனேகமாகிய ஆத்மகோடிகளாய் அவைகளுக்கு ஆதிமூலமாய் அகப்பற்று புறப்பற்று முதலிய மமகாரணங்களை விடுத்து அடுத்த தாசர்களுக்கு நேசமாகிய விசுவாசமா யிருந்து அருந்துயர் போக்கி ஆண்டு ரக்ஷிக்கும் பாண்டவசகாயனுகிய ஐயனுரைக்க, அப்பால் ஆகாய மளாவிய வாகாகிய ஒரு மலையானது சிகர முறிந்து அடிவேர் தறித்து பறிந்து விழுந்தா லெப்படியோ? அப்படிபோற் சுதாயுவென்பவன் உடல் தறிந்து தலைமுறிந்து பூமியில் விழுந்தான். அவனைப் பார்த்த யாவரும் மனங் கலங்கி வியாகூலப்பட்டு வருத்தமடைந்து, சுவாமி செய்த தந்திரத்துக்கு ஆச்சரியப்பட்டார்கள்.

கௌரவரில், சுதக்கணராஜன்-சதாயு-நயுதாயு-நிதாயு-தீர்க்காயு இவர்கள் வதை.

அந்தவேளையில் காம்போஜனென்னுஞ் சுதக்கணராஜன் முகம்புழுங்கி, அகங்கலங்கி, ஜகங் குலுங்கும்படியாய்க் கையுடன் கையறைந்து, அர்ச்சுனன் செல்லுகின்ற முனையிற் புகுந்து வழிமடக்கி, அழற்கணை-அரன்கணை-அயன்கணை - அரிக்கணை - அரவக்கணை - அக்கினிக்கணை முதலாகிய அஸ்திரங்களைப் பிரயோகஞ்செய்து அருமையாகிய அமர் புரிந்தான். இப்படிக்கு அவன் தொடுத்த கணைகளெல்லாம் அர்ச்சுனன் பேரிலும், சாரதி முதலிய தேரின் பேரிலும் வந்து விழுந்தது. அந்தரமெழுந்து பந்தம்போற் கொழுந்துவிட்டு எரிவதை விந்தை தங்கிய தோளும் தெளிவாகிய திடச்சிந்தையுங் கொண்ட சுவேதவாகனன் கண்டு, மனங் கொதித்துச் சீறி, வாயுக்கணை நூறு - தேயுக்கணை நூறு-மாரிக்கணை நூறு-வாரிக்கணை நூறு - வயிரக்கணை நூறு-வசனக்கணை நூறு இவ்விதமான பற்பல அம்புகளை வகைதொகையன்றி மாருமற் ருெடுத்து, அவன்ருெட்ட வாளிகளையெல்லாம் ஒன்ருெழியாமற்வதைத்துவிடுத்து, அவனுடைய தேர்-குதிரை-சாரதி முதலாகியதெல்லாம் மருட்சியடைந்து மாயும்படியாய்ச் செய்து, திருமூர்த்தி சொரூபமாகிய மூன்று பாணங்களை எடுத்துத் தொடுத்து அவன் மார்பிற் றுளைக்கும்படி விடுத்ததுமல்லாமல், அவனுயிரை வாங்குவதற்கு ஒரு பிறைமுகக் கணையையும் பூசித்துவிட்டான். அந்த அஸ்திரம்பட்டு அலக்கழிந்து கெட்டு வெருண்டுருண்டு மருண்டு உயிர் விட்டு விண்ணளாவிய ஓர் மலையானது மண்ணுலாவிய வாயுவால் வீழ்ந்ததைப்போல் மண்மீது வீழ்ந்து மாய்ந்தான்.

இந்தச் சுதக்கணனைப் பார்க்கிலும் நூறு பங் கதிகமாகிய வலிவுள்ள சதாயு வென்பவனும், வெற்றிவீரங் குறையாத நயுதாயுவென்பவனுஞ் சுதற்கணராஜனைக் கொன்று செல்கின்ற அர்ச்சுனனை மடக்கிக்கொண்டு முனைந்து போர்புரிந்தனர். அவ்வேளையில்,இந்திரகுமாரனுகிய கிரீடி பிறைமுகாஸ்திரத்தைப் போக்கி, ஒருவர் போனவழி யொருவர் போகவொட்டாம லடித்து, உடல்வேறு தலைவேருயுடைத்துத் தள்ளினுன். அவர்க ளிருவருமிறந்ததைக் கண்ட துரியோதனனுடைய சேனைகள் பெருமூச்சுவிட்டுப் பெதறி தியங்கி, முன்னிட்ட வண்ணமே பின்னிட்டார்கள். உடனே முன்னிறந்துபோன சுதாயுவின் குமாரனுகிய நியுதாயு வென்பவனும், நயுதாயுவின் பிள்ளையாகிய தீர்க்காயு வென்பவனும், இருண்டகாரு மருண்டு போகும்படியாய் எதிர்த்தும் பற்பல வாளிகளை செலுத்தினுர்கள். அப்போது ஆழமாகிய பேரறிவினையுடைய அர்ச்சுனன்: அப்பிள்ளைகள் விடுத்த பாணங்களைக் கொள்ளை கொள்ளும்படியாய், முள்ளுக் கணைகளை வெள்ளமாகப் போக்கி,

இரண்டு கமலாஸ்திர மெடுத்து, இதயத்தில் வணங்கி உபசரித்துப் பிரணவ மந்திரங்களால் உச்சாடனஞ் செய்து, ஓ! ஓ! வீரர்களே! உங்கள் தந்தையர் போனவழியே நீங்களும் போய்ச் சேருங்களென்று தொடுத்துக் கழித்தான். அக்காலையில் அவர்களிருவரும் ஒரு க்ஷணத்தில் ரணக்களத்திற் பட்டார்கள்.

### கலிங்கர் முதலிய பல தேசாதிபர்க்கும் அர்ச்சுனனுக்கும் யுத்தம்

இதுகளையெல்லாம் இராஜாதிராஜனான துரியோதன மகாராஜன் கலிங்க தேசாதிபதியை யழைத்து, இந்தவேளை உங்கள் விற்படை-விறற்படையுடன் போய் போர் புரிய வேண்டுமென்று சொல்லி யனுப்ப, அப்படியே கலிங்கதேசத் தலைவராகிய அளவிறந்த மன்னர்களுங் கட்டுத்தறியை முறித்து, எட்டுத்திசையும் வெறுத்து, காந்துங் கண்ணிற் கனலை நிறைத்துக் கடுங்கோபங்கொண் டிரா நின்ற மும்மதக் கரடதட யானைப் படைகளை அநேக மலைகள் பெயர்ந்துவருந் தன்மையைப்போற் கூட்டிக்கொண்டு, அவனி மாது மாதிசேடனு நடுங்கும்படிக்கு வந்து எதிரொருவரு மில்லாமற் செல்லும் இராஜசிங்கம் போன்ற அர்ச்சுனனை வளைத்து சண்டை தந்தார்கள். இதன்றியும், யவனதேசாதிபர்-புவனதேசாதிபர்-சோனகதேசாதிபர் - கானகதேசாதிபர் - பப்பரதேசாதிபர் - உப்பரதேசாதிபர் - மிலேச்சதேசாதிபர் - துளுவதேசாதிபர் - சீனதேசாதிபர் ஆகியோருந் துரியோதனனுடைய வேண்டுகோளின்படி வந்து, ஆகாயத்திற் செல்லுகின்ற சூரியனுந் தடுமாறிப் போகும்படியாய் வில்லை வளைத்து டங்காரம் பண்ணி, நானாவிதக் கணைகளை சோனாமேகம்போற் சொரிந்தார்கள். அது வேளையில், வேகம் பொருந்திய சுவேதவாம் புரவி பூட்டிய வேணுகோபால னோட்டிய அனுமக் கொடி நாட்டிய தேரிலமர்ந்து வாட்டிய அர்ச்சுனன் கண்டு புன்னகை கொண்டு, பிரசண்ட வாய்வாஸ்திரந் தொடுத்துப் பூசித்து விட்டான்.

அந்த அஸ்திரமானது சமுத்திர ஜலத்தை வாரியிறைத்து, சந்தானத்தருவை வேருடன் பறித்து, சகலச் சூறவளிபோ லிரைந்து வந்து சுழற்காற்றி லகப்பட்ட இலவம்பஞ்சு படும் பாட்டைப்போல் அந்த பரிவார முதலிய சேனைகளை யெல்லாம் பறக்கடித்துப் பாழ்படுத்தியது. அதனாற் கொம்புகள் முறிந்து, துதிக்கை யறுந்து, மத்தகம் பிளந்து, கால் துணிந்து, காதறுந்து, உடல்கிழிந்து, குடல் சரிந்து, சிரங்களற்றுச் சில சிந்துரங்க ளிறந்தன. மார்பொடிந்து, தலைதறிந்து, கைக்கொண்டிருந்த, விற்படை-வேற்படை-வாட்படை-கதைப்படை முதலிய ஆயுதங்களெல்லாம் போய் பெருங்காற்றினால் இலையுதிர்ந்து தலைமுறிந்த மரங்களைப்போல் மிலேச்சர் முதலிய சேனைகளெல்லாரு முடிந்தார்கள். இதன்றியும் எண்ணிறந்த பேர்கள் பொடிப்பொடியாகும்படியாய்க் கொடிபெற்ற முடியினையுடைய இந்திராஸ்திரந் தொடுத்தக் காலையில் நாற்படைகளும்-வேற்படைகளும்-காற்படைகளும் போர்பட்டழிந்து ஏற்பட்ட வீராள் முதலியபேரும் பேர்பட் டொழிந்தார்கள். இறந்தவர்போக இருந்தவ ரெல்லாம் கரையழிந்த எரிநீரைப்போல் அச்சமுற்றோடும் படியானதைக் கண்டு, ஆகாயத்தில் வேடிக்கைப் பார்த்திருந்த தேவர்க ளெல்லோரும் நகைத்தார்கள். இவ்விதச் சமயத்தில் இன்று முப்பது நாழிகையுஞ் சிந்துதேசத் தலைவனை காக்கின்றோமென்று சபதங் கூறி, கோடையிடி இடிப்பதைப்போற் குடமுழாப் பேரிகை-யுத்தபேரிகை - ரணபேரிகை - ஜெயபேரிகை- முதலிய வாத்திய முழங்க, அவ்வோசையானது ஏழுகடல்போற் புரண்டு வரும்படியாகிய சேனை சையின்யங்களுடன் கூடுவதினாற் பூமிகுலுங்க, இந்திரதிசைமுதலிய எண்டிசை நடுங்க, ஆதிசேடன் முதலாகிய பாம்புகளெல்லாம் நெளிந்தொடுங்க, அண்டகடாகமு மதிரும்படிக்கு டுண்டுண்டென்று வீரப்பறை தொனித்து முழங்க, பட்டவர்த்தனர் - மகுடவர்த்தனர் - மன்னர் - மண்டலீகர் இவர்கள் முதலான பேர்களெல்லாந் திரண்டு ஒரு முனையாக எதிர் வந்து நின்று, சூரியனை சூழ்ந்து தோன்றும் ஊர்கோள் வட்டம்போற் பற்குனனை வளைத்து, பங்கயக்கணை - பரந்தாமன் கணை - அறுமுகக்கணை முதலாகிய சகல பாணங்களையு நிறைத்தார்கள்.

அப்போது அர்ச்சுனன் தனது காண்டீபத்தை எடுத்து நிறுத்தி இழுத்து வளைத்து குணத்தொனி செய்து, தேர்ந்து தெரிந்து தெளிந்த திசைமுக னஸ்திரங்களை யெடுத்து, சந்தனக்ஷதை பத்ர புஷ்ப தூபதீப நைவேத்தியங்கள் கொடுத்து, ஒவ்வொருவருக் காயிரம் ஆயிரங் கணைகளாகச் சிரமுதற் காலளவும்

விடுத்து, கொடி-குடை-சிகரம்-குதிரைகள்-சக்கரங்கள்-குத்துக்கால்கள்-சாரதி-அஞ்சூராணிகள்-ஆப்புகள் முதலிய தேருறுப்புகளை யழித்து, யானைக்கூட்டமும் குதிரையினங்களியாவும், பதாதிப்படை யடங்கலும் ஒரு நாழியிற் கண்ட துண்டமாய்ப் பிணிபட்டுத் துணிபட்டொழிந்து போகும்படி போக்கி, மண்ணோடு மண்ணாக்கி, தேர்களிலும் குதிரைகளிலும் யானைகளிலும் ஏறிவந்த தீரவீராளுடைய வாகனங்களையும் போக்கினான். அதனாலவர்கள் இரண்டு பாதங்களுஞ் செவப்பேறும்படியாய் வாடி ஓடி அயர்ந்து அலைந்து சோர்ந்து வியர்த்து வியாகூலங் கொண்டு கையிற் பிடித்த ஆயுதங்களையும் இழந்து, போர்புரிந்த வேஷ்டையால் தாகவிடாயுங்கொண்டு சிரமை தாளமாட்டாமற் காளமேகம் போன்ற யானைக்கூட்ட மறைப்பில் மறைந்து, தட்டு கெட்டுத் தடுமாறி வீழ்ந்தோடி இரத்த வெள்ள மடுக்களிற் சூழ்ந்து, பற்பல முறை அதிலாழ்ந்து மூழ்கி யெழுந்து, தாங்கள் வாழ்ந்த வாழ்வை எண்ணி வருந்தி கழுகுகள்-பருந்துகள்-கூளிகள்-ஆளிகள் இவைகள் சூழ்ந்து பறக்கா நின்ற ரக்கை நீழற் பந்தலிலொதுங்கி இளைப்பாறி பதுங்கி திசாதிசையிற்சென்று வதங்கினார்கள்.

இன்னுஞ் சிலர்பயந்து புறங்கொடுத்து ஓடாமல், மனமிளைத்து வாடாமல், நின்றயிடத்தில் நிலைத்துநின்று மானம் பெரிதல்லது பிராணன் பெரிதல்லவென்று யுத்தஞ்செய்யா நின்ற வீரதீரர்களெல்லோரும், அமர்கலைந்து குலைகுலைந்து உடல்வருந்தி மடிந்தனர். மன்னர் மண்டலீகர் முதலிய சேனைகளெல்லாம், தங்கள் தங்களெஜமான்களுக் கெதிரில் வீரவசனங்களைப்பேசி, விருதுகளும். வெகுமதிகளும் பெற்று, அர்ச்சுனனுக் கெதிரில் ஓடி வந்து அவசரமாய் முடிந்து இடிந்து போனார்கள். வெஞ்சினப் பொறிபறக்குங் கோபக் கண்களையுடைய யானைக் குன்றுகள் எல்லாங் குடற்றீய்ந் திறந்தன. ஒன்பதுவித தாளகதிகளையுடைய குதிரைகளெல்லாம் ஐம்பதுவிதமாய் ஒருங்கே யிறந்தன. இன்றையத்தின மிறந்த சேனைப்பெருக்கத்தை இவ்வளவென்று யானெப்படி சொல்லுவேன்? ஆகிலும், ஒருவிதக் குறிப்பாகச் சொல்லுகிறேன் கேளுமரசனே! மூதல்நாள் யுத்தமுதல் நேற்றுப் பதின்மூன்று நாள் வரையிலுஞ் செய்து வந்த யுத்தத்தில் இறந்தபேர்களெல்லாரும், இன்றையதினம் இறந்தவர்களுக்கு உறையிடப்போதாதென்றால், தேர்-கரி-பரி-பதாதி இவைகளில் நூற்றுக்கு ஒன்று உறையென்று இலக்கக்குறிப்பு வைத்தாலும், இதுவரையிலும் இறந்த சேனைகள் இன்றிறந்த சேனைகளுக்குக் குறையுமென்பது கருத்து.

## கௌரவரில் விந்தரன்-விந்தன் இவர்கள் வதை.

இந்தப்பிரகாரங் கோபந்தணிந்து கொடுங்கணையாற் றுணித்து வீழ்ந்த யானையினங்கள் - குதிரை யினங்கள் - பதாதி யினங்கள்- இரத்த வெள்ளத்தில் மிதக்கவும், அவைகளின்பேரில் தேர்ச்சக்கரங்களோடவும், சத்ருக்களைக் கொல்லும் வயவர்களுடைய உயிரிழந்த உடலானது, தலைகுலைந்து கலைகுலைந் தலையிலசைந்து சுழலமிட்டு வேகங்கொண்டாடவும், இவைகளை யடித்துக்கொண்டோடிய இரத்த ஆறுகளானவை சமுத்திரத்தோடெதிர்த்துச் சண்டைசெய்யப் போனதைப் போற் கூடிக்கலந்து அனேகங்கோடி தலையறுந்த முண்டங்களாயின. கழுகுக்கூட்டங்களிரையும் ஓசை சப்தமேகமுழக்கம்போலிருந்தது. அலகை, சோகுமுதலிய பசாசகணங்கள் இரண்டு கைகளையும் குவித்து கும்மியடித்தாற் பரித்தன. செக்கச் செவேலென்று பூமி செவந்த தன்மையானது, யுத்தகளமென்னும் பெண்ணானவள் சிவப்பு வஸ்திரம் தரித்ததைப்போலிருந்தது. அதிகாலையிற் போர்த்திறங்கொண்ட அனேகம் வல்லவர் முனைந்து போர்செய்து . ஆவிதீர்த் தழியும்படியாய்ப் பலம்பொருந்திய பாணப்பிரயோகம் செய்யா நின்ற பற்குணனை, வீரகண்டை தரித்த விந்தரன், விந்தன் என்னும் பேருடைய விஜயதீர வீராளிருவர் விரைந்தெதிர் வந்து வளைந்து, சினந்து சண்டைசெய்தனர். அவர்களைக்கண்ட அர்ச்சுனன் நெடுநேரம் வைக்காமல் ஒரு நிமிஷமாத்திரத்தில் முன்னோனாகிய விந்தரனை மூன்று வடிக்கணையால் முடித்து, அப்பா நீ மூத்தவனாகையால் முன்னே போவென்று முறையாயனுப்பினான். அதைக் கண்ட பின்னோனாகிய விந்தனென்பவன் பெருமிதப் போர்விளைத்து, தன்னுடைய ரத முதலிய சகல வங்கங்களுமிழந்து, தனூர்ப்பாணங்களும் போய்ப் பூமியில்நின்று பெருங் கதை கொண்டு, புருஷதீரனாகிய அர்ச்சுனன் பேரி லெறிந்தான்.

அக்கதையானது நெருப்புப் பொறிகளை நேராகக் கக்கி உருக்குக் கட்டுகள் பொருந்தி இருப்புக் கட்டுகளுடன் எதிர்த்து வரும்போது விஜயன் கண்டு, பட்டுக்குச்சுகள் கட்டிக்களித்த உச்சித புரந்தரன் மெச்சியளித்த வச்சிரக் கணையையும் இடியாஸ்திரத்தையும் எடுத்து விடுத்தான். விட்ட மாத்திரத்தில், அந்த அஸ்திரங்களானது நெருங்கி வருங்கதையை மடக்கிப் பொடிப்பொடியா யுடைத்து, அவனுடலத்தையுஞ் சின்னு பின்னப்படுத்தி, அவன் தமயன் இருக்குமிடத்திற் கொண்டுபோய்ச் சேர்த்தன. அப்போது தேவதத்தத்தை எடுத்து பம், பம், பம் என்று முழக்கிச் சுவேதவாம்பரி பூட்டிய தேர் மீதில் மண்டியிட்டிருந்த வீபற்சுவானவன், வளைந்ததலை நிமிராத வரிவிற் பிடித்து, ஓயா மாரிபோற் சரம் தொடுத்துப் போர்செய்து வரும் வேளையில், எங்குஞ் சேனை வெள்ளங்களினின்றும் எங்கும் பொங்கிப் பெருக்கங்கொண்டோடுஞ் செங்குருதி வெள்ளங்களில், அரவக்கொடி படைத்த அரசனுடைய அழியாச் சேனைகளெல்லாம் வீழ்ந்து வீழ்ந்து முழுகி யெழுவதினுல், மாலைப்போதிற் சூரியனை வளைக்குஞ் செவ்வானம்போற் கிரீடியை வளைந்து வளைந்து திரிந்தார்கள். கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! "முருகாரிரு சிறைவண்டின் மூளரிப்புது மலர்விட், டருகார் பொழு னிழலூடணி யலர் நாண்மல ருறவே, யிருகாலமு முக்கால்விடு கைம்மாரி யிருக்கா, லொருகாலரு மறையோர்விடு பதநண்ணின னுதயன்" அத்தருணத்தில் தாமரை மலர்னிறைந்த தேனைப்புசித்து பராகங்களிற் புகுந்து சிங்காரமாக பாடிக்கொண்டிருக்குஞ் சுகந்த பரிமள மிகுந்த சிறைவண்டினங்கள் பக்கங்களினிறைந்த நிழலுறைந்த சோலைகளிற் சென்று,அன்றலர்ந்தழகிய மலரிற் பொருந்தி மது வுண்ணும்படியாகச் செல்லவும், அக்காற் காலையு மாலையும் வேத மந்திரங்களினுல் மூன்றுகை ஜலமள்ளி அர்க்கியங் கொடுத்து வராநின்ற அந்தணராயினோர் இருக்கு வேத மந்திரங்களினுல் ஒருகை ஜலத்தை யள்ளிக் கொடுக்காநின்ற காலம்வரவும், அவ்வர்க்கியத் தக் காசைகொண்டு அந்த ஸ்தானத்திற்குச் சூரியன் வந்து சேர்ந்தான் என்றுல், வண்டுகளானது, காலையிலும் மாலையிலும் நீர்ப்பூவிலிருக்கும். மத்தியானத்துக்கு வனங்களிற் போய் கோட்டுப் பூவிலிருக்கும். பிராமணுள் மும்மூன்று யர்க்கியங் காலையிலும் மாலையிலும் விடுவார்கள். ஒருகை ஜல மத்தியானத்தில் விடுவார்கள். ஆகையால், சூரியன் மத்தியில் வந்தான் பதினைந்து நாழிகையாயிற்றென்னுங் கருத்து.

### கண்ணன் அஸ்வங்கள் களைத்ததென்று அர்ச்சுனனுக்கறிவிக்க, உடனே தடாக முண்டாக்குதல்

இந்தப்படிக்குச் சூரியன் உச்சிக்குவந்து வெவ்விய வெப்பத்தைத் தராநின்ற மத்தியானத்தில், வேத முதல்வனுகிய வித்தகன் விஜயனை நோக்கி, ஓ வேந்தனே! நாம் ஜெயிக்கவேண்டிய சயிந்தவ னிருப்பதற்கும் நாம் இருப்பதற்கும் அதிதூரமிருக்கின்றது. ஒரு பங்கு கடந்துவந்தோம்; இன்னும் இரண்டு பங்கு கடக்கவேண்டி யிருக்கின்றன. பாதிப் பொழுதாச்சு, உனக்கோ முகங்கருகிப் போயிற்று. எனக்கோ வேர்வையும் வேஷ்டியையும் வாய்ச்சுது. வெள்ளைக் குதிரைகள் நான்கும் வெதும்பிப்போயின. ஆதலால், கொஞ்சம் தண்ணீர்ப்பருகி இளைப்பாறினு லல்லது குதிரைகளெடுத்தடி வைக்கமாட்டா; அர்ச்சுனு! இவ்விடத்திலொரு தடாக முண்டாக்குவையாகில், எல்லாக் காரியங்களுக்கு மநுகூலமாயிருக்குமென்று கோபாலகிருஷ்ணன் சொல்ல, அருள்பெற்றவனுக்கு எப்பொருளும்பெரிதல்லவென்னும் தன்மைபோல் அக்ஷணமே அர்ச்சுனனுனவன்தேரைவிட்டிறங்கி, ஆதிசக்தியும் ஆதிசிவனும்ஆதியிற்கொடுத்திருந்தபகபேதி, பாதாளபேதி என்னும் பாணங்களை எடுத்து, ஆக்ர்ஷணமாகிய வருண மந்திரத்தை யுச்சரித்து பூமியை நோக்கி விடுத்தான். அப்படி விடுத்த ஒரு நாழிகைக்குள்ளாக அவ்விடத்திற் பிரபலமாகிய பெரிய தடாகமுண்டாயது. அத்தடாக மெப்பேர்ப்பட்டதெனில், சமுத்திரத்தைப் பார்க்கிலும் பேராழமும், கட்புலனுக்கெட்டாக் கரைபொருந்திய அகலமும், நிரம்பிய அனேக தளங்களோடுங் கூடிய வெண்டாமரை, செந்தாமரைகளும், ஏறவு மிறங்கவுமுள்ள துறைகளு மவ்விடங்களிலெல்லாம் நீலோற்பலம், செங்கழுநீர், குமுத முதலிய மலர்களும் மலர்ந்திருந்தன.

மேலும், அம்மலர்களி னிழலினில் நீரிலுலவாநின்ற வாளை - குறவை - வரால் - கயல் - சேற்கெண்டை - மயறை - தேளி - உளுவை - சேன்னல் - கெளிறு - ஆரால் - விலங்கு - அல்வன் - சங்கு - நத்தை முதலாகிய சலசரங்களும்,

நாற்புறக் கரையோரங்களிற் கின்னர மிது னப்பக்ஷிகளும், ஒருபுறத்தில் நாரைகளும், ஒருபக்கத்தில் தாராக்களும், ஒரு சார்பிற் சக்ர வாகங்களும், ஓரிடத்தில் உள்ளான் முதலிய சிறு பக்ஷிகளும், ஓர்பாலில் அன்னப் பக்ஷிக ளும், ஓர் துறையில் அரம்பா ஸ்திரீகளும், சிற்சில விடங்களில் மணல் மேடாகிய புளினங் களும், புளினங்களில் அன்றில்-அன்னம்-ஆந் தை - ஊர்க்குருவி - உள்ளான் - தூக்கணங் குருவி - எண்காற்பட்சி - கருடன் - காக்கை - காடை - கவுதாரி - கழுகு - அண்டங்காக்கை - நீர் காக்கை - மணிக்காக்கை - மயில் - கிளி - குயில் - கூகை - குருகு - கேகயம் - கொக்கு - மடையான் - கோழி - கானங்கோழி - சம்பங்கோழி - சக்கிர வாகம் - சாதகப்புள் - சிச்சிலி - சிவல - செம் போத்து - நாகணவாய்ப்புள் - ராமனுத்தி - நாரை - கருநாரை - பெருநாரை - வெண்ணுரை - பொன்னுரை - நிலாமுகி - பருந்து - புறு - கரும் புறு - மாடப்புறு - தவிட்டுப்புறு - ஆட்டப்புறு - பச்சைப்புறு - பொய்யாப்புள் - மீன்கொத்தி - வானம்பாடி - பாரத்வாச முதலாகிய பட்சி களும் அமர்ந்திருக்க, குளிர்ந்த சோலைகளைச் சுற்றிலுமுடையதாய் பூமிதேவியாருக்குத் திரு நாபிபோலும் விளங்கிய அப்பெரிய தடா கத்தை, மலையுடன் மலைமாறு கொள்ளும் வலி மைப்பெற்றுந் திரண்ட இரண்டு புயத்தை யுடைய விஜயன் கண்டு சந்தோஷங்கொண்டு, என்னுள்ளத்தில் வள்ளலா யெழுந்தருளிய உரகசயனு! இதோ வெள்ளப்பெருக்கமான தடாக மேற்படுத்தினேன். இத்தடாகத்திற் குதிரைகளை இளைப்பாற்றிக் கொள்ளுமென்று இசையையுடைய விஜயனுரைத்தான். அந்த வசனத்தைக் கேட்ட கூலமணியாகிய நீலமணி போன்ற கோவிந்தனுனவர் தேரைவிட்டுக் குதித்து, பலம் பொருந்திய நான்கு தவளக் கிரிபோன்ற குதிரைகளை யவிழ்த்து, குவளை யாதி மலர்வாசம் நிறைந்த தெளிந்த தடாகத் திற் கொண்டுபோய்க் குளிப்பாட்டி தண்ணீர் குடிப்பித்து, குர முதலிய யாவற்றையுந் துலக்கி, தாங்களுங் கை காற் சுத்தி பண்ணிக் கொண்டு சோகதாக விடாய் தீர்த்துக்கொண்டு இளைப்பாறி யிருந்தார்கள்.

### அருச்சுனன் வலிமைகண்ட துரியோதனன் துரோணரிடஞ் சென்று முறையிடுதல்

இப்பால் இந்த அர்ச்சுனனுடனே எதிர்த்து போர்புரிந்து அக்கினிக் கெதிர்ப்பட்ட சருகைப்போல் உடற் கருகி, யுதிரம் பெருகி, உள்ளமுடைந் தோடிய வீராதி வீரர்களும், அவர்க ளணிவகுத்திருந்த கரி - பரி - காலா ளாதிச் சேனைகளும, சூரிய வெப்பத்தாற் பாலை வனத்தி லகப்பட்டு வெதும்பிய விதம்போல் வெதும்பி, நிலைநிற்க மாட்டாமற் கலைந்து, காணமற் கண்டபொருளை நல்ல காலத்திற் கண்டு களித்த வாறுபோல் அத்தடாகத்தில் வந்து விழுந்து தாகவிடாயாறிய தன்மைகளை யும், சிலர் அக்காண்டீபனுடைய கையினின்று வெளிப்பட்ட கணைகளாற் கலங்கி நொந்து கண்ணுக் கெட்டியதூரங் கலைந்து ஓடிய கார ணத்தையும், இவ்விடத்தில் பூரணமான தடா கம் ஏற்படுத்திய புனிதத்தையும், வீரக்கழல் தாங்கிய வேந்தனிடத்திற் சில சோர்ந்த வீரர் களோடிச் சேர்ந்து சொன்னார்கள். இந்த வார்த்தையை அரவக்கொடியோன் கேட்ட மாத்திரத்தில், இரும்பு நாராசங்காய்ச்சிச் செவியிலேற்றிய தன்மைபோல் ஏக்கங்கொ ண்டு, சிங்கத்துடனெதிர்த்து யுத்தஞ்செய்யப் பயந்த யானையைப்போற் திரும்பி யோடி யும், தீயினலெரிந்த பட்டணத்தைப் போற் றியங்கி இளைத்துக் களைத்தும், ஆரண வேள்வியை யவன்பெற்றுச் சகலகலை புராண நிபுணனு யிவணுற்று இருக்கின்ற துரோணச் சாரியரென்றும் பேர்பெற்ற பெரியோனிடம் போய்ச் சேர்ந்து, அவருடைய பாதத்தில் வீழ்ந்து, ஓ பொறுமையுடைய புண்ணியனே! என் சிறுமையைக் கேளுமென்று சொல்லத் தொடங்கினுன்.

ஓ மல்லைவெல்ல வல்ல நல்ல வில்லை வல்ல வேதியனே! கேளும்: யாவரும் ஆச் சரியப் படும்படியாகிய சாமர்த்தியம் பெற்ற தனஞ்செயன் சத்துருக்கள் தொடுக்கு மம்புக் கெதிரம்பு விடுத்து, தனக்கெதிர் வந்துநின்ற தாஷ்டீகரை யெல்லாஞ் சாய்த்துமாய்த்தான். அவனுக் கெதிர்சென்று அமர்புரிந்த அர சர்களில் யார் பிழைத்தவர்கள்? ஐயோ! வெகு பேர் அனியாயமா யழிந்துபோய் விட்டார் களே! ஐயா! சூரியன் அஸ்தமாவதற்கு முன் எனக்குரிய மைத்துனன் றலைபோய் நமக்குப் பழிச்சொல் வருவதா யிருக்கிற தல்லாமல், அவனைப் பிழைப்பிப்பவர்கள் இல்லையே! எனக்குப் பெருமை தருவோர்களு மில்லையே! ஓ பெரியவனே! எதிரிகளைக் காணுதபோது தங்கள் தங்களுடைய ஆண்மிக்கையை எடுத் துப் பேசுகிறுர்கள். எதிரியைக் கண்டால் அவரெதிர் நின்று க்ஷணப்போது யுத்தம்

பண்ணமாட்டாமலும், வெட்கம் - மானம்-
ஈனம் - நாணம் இவை முதலியதில்லாமலும்
புறமுதுகிட் டோடுகிறார்கள். ஆதலால், நம்
சேனைகள் முழுவதுஞ் செத்துச் சேனாரும்
போலு மிருக்கின்றது. நாம் அநேக முயற்சி
செய்தும் வேறொரு செயலுங் காணமற்
போனோம். ஓ வேத வேதியனாகிய தேசிகனே!
என் மைத்துனனாகிய சிந்துராஜன் தேவரீ
ருடைய திருவடியிற் றாழ்ந்து நானெங்கே
யாகிலும் ஓடிப் பிழைக்கிறேனென்று சொன்ன
போது, நீ பயப்படாமலிரு; உன்னுயிரை
போக்குகிறவர்க ளொருவருமில்லை. அப்படி
க்கு உன்னுயிர் போமாகில் அதற்கு பதிலாக
என்னுயிரைக் கொடுக்கிறேன். நீ ஏதொன்
றுக்கும் அஞ்சாதே. என்று தேவரீருடைய
விற்றிறத்திற்குக் குறைவில்லாமற் சொற்றிறஞ்
சொன்னீரே! உம்முடைய உண்மை வச
னத்தை நம்பி என்றங்கை புருஷனானவன்,
நீர் அணிவகுத்துப் போராடும் சேனைகளின்
மத்தியிற் போயிருக்கிறானே! என்று வருந்தி
பின்னுஞ் சொல்லுகிறான்.

ஓ எங்கள் குலதெய்வமாய் வந்த குருவே!
இப்போது பகற் பதினைந்து நாழிகை யாகின்
றது. இந்தப் பகற் பதினைந்து நாழிகைக்
குள் பாதி சேனைகளை யழித்துப் பேரணிக்
குள்ளே பார்த்தன் வந்து விட்டான். ஐயோ!
தேவரீர் இனிமேல் என்னை யென்னமாய் ரட்
சிக்கப் போகிறீர்? ஓ ஆரியனே! சத்துருக்க
ளெண்ணப்படி நிறைவேறும்படியாக தேவ
ரீர் இஷ்டங் கொண்டிருப்பதாய் எனக்குத்
தோன்றுகிறதே: பெரியோனாகிய நீர் சொற்
பிசகமாட்டீரென்று உண்மையாய் நம்பி என்
மைத்துனனை இவ்விடத்தில் நிறுத்தி, அவ
னுக்குங் கேட்டை விளைத்து நானும் இந்தப்
பாட்டையடைந்தேன். எனக்குரிய பெரியோர்
கள் என் சத்துருக்களிடத்தி லன்புவைக்கார்
கள் என்று சத்தியமாய் நம்பினேன். தேவ
ரீர் மனவஞ்சகம் வைத்துச் சொல்லிய கைத
வப் பொய்யை கருதாமற் போனேன். அதற்
குச் சாட்சியாக எனது பகைவர் வந்து புகு
ந்து இப்போது சாடும்படியாகிய முனைமுகத்
திற் சிறிதுந் தலைகாட்டா திருக்கின்றீர். ஓ
சந்தோஷக் கருத்தினையுடைய சுவாமிகளே!
உம்மைவிட எமக்குரியோர் யார் இருக்கின்றார்
கள்? அல்லது அந்த அர்ச்சுனனுடன் எதி
ர்த்து யுத்தஞ் செய்ய என்னாலாகாமல் இளைத்
தேனென்று ஒருவேளை நீர் சொல்லுவீராகில்,

உமக்கீடாகிய வல்லவர்கள் யாராகிலும் உல
கத்தில் இருக்கின்றார்களென் றுண்மையாய்ச்
சொல்லும்; ஓ உத்தமனே! இனி நான் யாரை
யும் நோவத்தக்கதில்லை. அக்கறைக்காரனெ
வனோ அவன் பாடுபடவேண்டிய முறைமை
யாகையினால், வரிபொருந்தி மணிகள் கட்டி
வலுவேறியிரா நின்ற வில்லை யெடுத்து நிறு
த்தி வளைத்து நாணிபூட்டி, விஜயனுக் கெதி
ரேசென்று நின்று போர் புரிந்து, அவன்
பிராணனைக் கைக்கொள்ளுவதொன்று; அல்
லது என்னுயிரை அவனுக் கொப்பிவைப்ப
தொன்று. இவ்விரண்டு காரிய மல்லாமல்
வேறோர் சூட்சியுமில்லை. ஓ முனிசிரேஷ்டனா
கிய முதல்வனே! தேவரீருடைய கண்காணும்
படிக்கு நான் விரைவாகச்சென்று என்சேனைக
ளெல்லாம் நிலைக்கக்கண்டு அர்ச்சுனன் முதலிய
பாண்டவச் சேனைகளைக் கொல்லும்படியான
என் போர் திறத்தை யாகிலும் விரைந்து
வந்து பாருமையா வேதியர்க்கரசே என்று
வணங்காமுடியோன் வணங்கி மனமுருகி
மனஸ்தாபமாய்ச்சொல்ல, இந்த மன்னவன்
சொல்லிய சொற்களையெல்லாம் மறையவனா
கிய சேனாதிபதி கேட்டு மனமகிழ்ந்து மன்ன
னைப் புகழ்ந்து சொல்லுகிறார்.

### துரோணர் தன்னோடு முறையிட்ட துரியோதனனைப் பலவாற்றானும் வெறுத்துக் கொள்ளுதல்

ஓ நந்தியாவட்ட மாலையணிந்த நராதி
பனே! துன்பம்வந்த காலத்திற் சோர்வடை
யாமலும், இன்பம்வந்த காலத்தில் எழுந்து
மகிழாமலும், எப்போதும் ஒரே சீராகயிருந்
திப்போது சொன்னசொற் றப்பாமல், இனி
மேலும் எண்ணி யிளைக்காமல், நீ கொண்ட
துணிவு தணியாமற் சென்று, எதிரிகளை நா
சப்படுத்தி உன் மைத்துனனைக் காப்பாற்ற
வேண்டியது. உன் சேனாசயினியங்க ளெல்
லாம் அழிந்தொழிந்து போனாலும், உன்
னுண்மைக்கு ஒருக்காலும் அழிவில்லை. ஓ
அரசனே! நீ கொண்ட கருத்து நன்மையா
னதுதான். ஆகிலும் நான் ஒன்று சொல்லுகி
றேன் கேள். ஒப்பற்ற ஒரு தேரில் வராநின்ற
பலம்பெற்ற அவ்விருவரையும் நரநாராயணா
வென்று ஞானவான்களாகிய நலத்தோர்
சொல்லியிருக்கின்றார்கள். மேலும், அவர்கள்
எப்பேர்ப்பட்டவ ரென்றால், எப்பொருட்கு
மிறைவனாகிய ஈஸ்வராநுக்ரகத்தாற் சத்துருக்
களை வெல்லும் பாணங்களும், அதற்குத்

தருந்த மந்திரங்களும், சகல வறமும் பெற்றிருக்கின்றவர்கள். இவர்களைப்போல் எவரும் இப்பேர்ப்பட்ட வரம்பெற்றதில்லை. இவர்கள் திரிலோகரக்ஷகரென்னும் மகாபுருஷாள். வீர காண்டீபத்தைக் கைக்கொண்டு போர்முகத்துக்கு நேர்முகமாக நிற்பாராகில், சிருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மாவும் இவர்க்கு ஈடல்ல. அத்தன்மை வாய்ந்த வில்லாளருக்கு எதிரில் யுத்தஞ் செய்யத்தக்க இருதோள் வலியினையுடைய வல்லாளர் எவரிருக்கின்றார்கள்? இந்துகுலத் தோன்றலே! அது நிற்க, கடல் நிறம்போன்ற காயாம்பூ வண்ணன் கருணையுடன் தேர்ச்சாரதியாக வமைந்து இரதத்தைச் செலுத்திக்கொண்டு இருக்கிறார். அதனாற் சர்வ சம்ஹாரகால ஈசன் முதலிய எவராலும் இவர்களோடு எதிர்த்துப் போர்புரியும்படியானது இலேசானதன்று; அருமையான காரியம். ஓ அரவக்கொடி நாட்டிய அழகா! இன்னும் சொல்லுகிறேன் கேள்.

இராஜகுலத்திற் பிறந்தவர்கள் பரராஜருடன் பகைவைத்துக் கொள்ளுவது ஞாயம். அதைவிட்டு சொந்த பந்துக்கள் முதலான தாயாதிகளுடன் விருதாப்பகை வைத்துக் கொள்ளலாகாதென்று ராஜராஜர் நிறைந்த பேரவையிடத்து அநேக விதமான திருஷ்டாந்தங்களோடு ஆதியிற் போதித்தேன்; யான் சொல்லிய இஷ்ட நீதிவார்த்தையை இகழ்ந்து, உமக்குரிய துஷ்டர்கள் உரைத்த சேதியைப் புகழ்ந்து இந்தப் பாண்டவர்களை ஒரு துரும்பாக மதித்து எடுத்தெறிந்து நீ ஏதேதோ பேசிய வசைமொழியை நான் என்னவென்று உரைப்பேன்? ஆ இறையே! உங்கள் சிறிய தந்தையாகிய விதுரராஜன் வேண்டுமென்று பாடுபட்டு அநேகந் தர்மங்களை விளம்பினான்; அப்பேர்ப்பட்ட உத்தமனுடைய மனம் நோவப்பேசிய உன்னைப்போலொத்த பாவிக்கு உதவியாகக் கூடாதென்று மண்ணுக்கும் விண்ணுக்கும் கண்ணாகி ஒண்ணாக விருந்த தன்னுடைய வில்லை இரண்டு துண்டாக வெட்டி யெறிந்துவிட்டு யாத்திரை போனான். ஞானவிவேகத் திறமுணர்ந்த நுண்ணறிவாளருரைத்த பழிவழிக் கிடந்தேடி, கற்புக்கு ஓர் அணியாகிய மடமங்கையென்னும் திரௌபதா தேவியானவள், மதிகலங்கி மனங்கலங்கிக் கண்ணுங் கலங்கி வாடும்படியாய் இராஜ சபையிலேற்றி வஸ்திரபங்கம் பண்ணிவைத்து, அன்புடைமைக் காதார பூதராகிய பாண்டவர்களை அரசருக்கு எதிரில் அனேகமாக வரிசையில்லாம லிகழ்ந்தால், மலைக்கிணையாகும் புயத்தினையுடைய ஐவரை லேசாகநினைத்து, வடவாக்கினிபோலும் விஷ தீட்சணமாகிய மின்னலைப்போல சுடச்சுட நிந்தித்துச் சொல்லிய் கொடுஞ் சொல்லானது பிராணனை வாங்குகின்றது. அதற்கு நீ துயரப்பட வேண்டியது என்ன?

ஓ மன்னனே! இதன்றியும், பாண்டவர்களைச் செயித்து நானே பாராளுகிறேனென்று நீ சொல்லுங் காலங்கள் தோறும், அவர்களை வென்று ஜெயம்பெறுவது அருமை யருமை என்று அடிக்கடி தடுத்து எவ்வளவு சொல்லியும், எள்ளத்தனையும் உன் செவி பொருந்தக் கேட்டனையோ? என்னையனே! அப்படி பலவாறாகச் சொல்லிய என் வார்த்தையைத் தள்ளி, உனக்குரியோர் கூறிய புத்தியைக் கேட்டு உன்னிஷ்டப்படி நடத்தினாய். நீ அப்படி நடத்தியதில் இதுவரையிலும் என்ன பலனைக் கண்டாய்? உன் றந்தையாகிய திரிதராஷ்டிரன் தலையில் அடித்துக்கொண்டு சகல விதத்திலுஞ் சொன்ன சங்கதியையுங் கேளாமல் இழந்தாய்? வீஷ்மராகிய பாட்டன் விளம்பிய மேலான முறைமையும் விடுத்தாய்? எங்களெல்லாரையுங் கூட்டிவந்து இந்தக் குருக்ஷேத்திரத்தில் மாயக்கொடுத்தாய்? ஆகிலும் உன்னை வெறுக்க வேண்டியதில்லை. நீ என்ன செய்வாய் பாவம்; விதியை யனுசரிக்கும் மதி என்பதுபோல் வினைவசப்பட்டாய்; அப்படியிருக்க, இச்சமயத்தில் எங்கள்பேரினில் விழுந்து ஏன் மோதிக் கொள்ளுகிறாய்? எங்களை ஏன் தூறுகிறாய்? எங்களை இகழ்வதி லுனக்கு ஒரு புகழும் இல்லையே: நாங்கள் அன்றும் வேண்டாமென்று சொன்னோம். இன்றும் வேண்டாமென்று சொல்லுகின்றோம். ஓ இறைவனே! இன்னமுங் கேளும்: கர்னன், சகுனி, துசுவாசனன் முதலான பலவான்களுடைய போர்த்திறத்தைக் கண்டு களித்தாய்; தன் பலமும் எதிரியின் பலமும் யோசிக்காமல் வீண்பகையை விளைத்து பாண்டவரோடு சண்டை வைத்துக் கொண்டாய்; வெல்ல வல்லவரென்று சொல்லும்படியான சூராதி சூரரென்னும் திறவான்களாகிய பலகோடி படையைப் படைத்திருக்கிறாய். அப்பேர்ப்பட்டவர்களைத் துணையாகக் கொண்டு ஜெயங்கொள்ளாமல், விருதாவாய் எங்களை வெறுத்துக்

கொண்டு நிந்தை சொல்லுமுறைமை உனக்கு இன்னும் என்ன பழிபாவத்தைக் கொண்டு வந்து வைக்குமோ நாமறியோம்.

அப்பனே! எனக்கு சேனுபதிப் பட்டங் கட்டியபோது, முரசக்கொடி தரித்த தரும ராஜனை எவ்விதத்திலாகிலும் கைப்பிடியாக்க பிடித்துத் தரவேணுமென்று நீ கேட்டுக் கொண்டபடிக்கு நிறைவேற்றும்படியாய் ரத முதலாகிய பற்பல சேனைகளுடன் இவ்விடத் தில் இருக்கின்றேன். அதேனென்றால், சத் திய வான்களாகிய உத்தமருடன் சண்டை செய்யத்தக்க பேர்கள் இந்த மண்டலத்திலில் லாமையால், அர்ச்சுனன் முதலிய பேர்கள் சயிந்தவனைக் கொல்லவேண்டு மென்னும் ஆசையுடன் தருமராஜனை விட்டுப் பிரிந்து நமது யூகத்தில் வந்து நுழைவர். அத்தரு ணத்தில் தருமராஜனைப் பிடிக்கலாமென்னும் சமயம் பார்த்துக்கொண்டு வெகு சாக்கிரதை யாய் இங்கு நிற்கிறேன். இது தெரியாமல் உன் மனம்போன வழி வீணாகப் பேசுகிறாய். ஓ ஆணிப்பொன்னோ இரத்தினமோ வென சந்தேகப்பட்டுச் சூரியகிரணச்சோதி யென்று சொல்லி நிற்கும் மாணிக்க மழுத்திய மகுடந் தரித்த மகாராஜனே! உங்களிலொருவரையும் நான் நம்பமாட்டேனென்று நீ முன்னமே சொல்லியிருக்கின்றாய். அதுவுமன்றி நானே யுத்தஞ் செய்யப் புறப்படுகிறேனென்று இப் போது என்னுடன் சொல்லிய உன்னுடைய வீராவேசத்தை விட்டுவிடாமல், அது கெட் டுது போவென்று மனமுமிளைக்காமல், புத் தியை ஸ்திரப் படுத்திக்கொண்டு, தயிரியமும் பலமுந் தழைக்கச் சென்று அமர் புரிவையா கில்; உன்னை வெல்லத் தக்க வல்லமைசாலி களு முண்டோ?

துரோணர் துரியோதனனுக்குச் சாலிகவச மளித்து அருச்சுனனோடு போர் செய்ய செல்லும்படி விடுத்து தான் தருமனை வளைத்தல்

இது நிற்க, இன்றையத்தினத்தில் நான் ஏற்படுத்தி யிராநின்ற நிலைபெற்ற பேரணி யூகத்தை மதிக்காமல் அதின் மத்தியிலிராநின்ற வெற்றியை யுடைய சிந்துதேச வேந்தனை இன்றையப் பகற்குட் பிராணனை வாங்க அர்ச் சுனனுற் கூடுமோ? ஆகிலும், ஓ ஒளிபெற்ற வடிவேற்றாங்கிய உரக துவஜனே! விதியின் செயல் எப்படியோ? அதை நான் அறியேன்; ஆனாலும் என்னுற் கூடிய உதவியுஞ் செய்கி றேனென்று தன்னிடத்தில் இருந்த ஒரு கவ சத்தை ஆசீர்வதித்துத் துரியோதன் ராஜ னுடைய தேகத்தில் அணிந்து, ஓ நந்தியா வட்ட மாலையணிந்த நராதிபனே! உன்னு டைய அவசரத்தை விடுத்து இக்கவசத்தினு டைய பெருமையைக் கேளும். இக்கவசம் சிருஷ்டிகர்த்தாவாகிய பிரம்மதேவ னிடத்தி லிருக்கும்போது, இராக்ஷசர்ளால் அடிபட்டு வருந்திய தேவேந்திரன் அப் பிரமனை வணங்கி பணிந்து இக் கவசத்தை எனக்குக் கொடுக்கவேணுமென்று கேட்க, அப்படியே கொடுத்தார். அவ்விந்திர னிடத்திலிருந்து நான் பெற்றுக்கொண்டேன். நான் உனக்குக் கொடுத்தேன். நீ இக்கவச மணிந்துகொண் டால், எட்டு மலைகள் உன்மேற் பொட்டென விழுந்தபோதிலும், ஏழு மேகங்கள் இடிக்கு மிடியெல்லாம் ஒன்றாகக்கூடி விழுந்தபோதி லும், இக்கவச மிளைக்காமற் ருங்கும். இதற் குரிய பெயரென்ன வெனில், சிவந்த நிறத் துடன் வலுவேறிய சாலிகை என்னும் பெயர் பெற்ற கவசமாக்கும் என்று தெளியச் சொ ல்லி, அறிவில்லாமைக் கொருவரு நிகரில்லாத துரியோதன மகாராசனை அர்ச்சுனனுடன் யுத்தஞ்செய்யும்படியாய் துரோணச்சாரியர் அனுப்பிவைக்க, துரியோதனன் கறுத்தகாள கூட விஷாக்கினியைப் போற் கனன்று புயம் பூரித்துச் சென்றான்.

இவனை யிப்படி அனுப்பிவிட்டுத் தரும ராசனை யுத்தஞ்செய்து பிடித்து தான்சொல் லிய மடமையை முடிப்பதற்குத் திடங்கொ ண்ட மேகத்துக்கு ஒப்பாகிய வில்லைத் தாங்கிச் சென்ற துரோணச்சாரிய ரானவர், அப்பாரிய வில்லைப் படபடவென வளைத்து, கூரிய பாணங்களைக் குமுகுமுவென்று தொடுத்து, விரைவாகத் தேரை நடத்திக்கொண்டு அள விறந்த வீரப்பிரதாப மன்னரும் படைகளு மகிழ்ந்து சூழ்ந்து வரும்படியாய், உகாந்த காலாக்கினியைப்போற் சென்று எதிர்த்த காலத்தில்; தருமராஜ னனவர் சதுரங்கச் சேனைகளையும் ஆஜானுபாகுவை யுடைய அரசரையுஞ் சேர்த்து, துரோணச்சாரியரை வெல்லுவோம் வாருங்களென்று வெப்பமா கிய கோபத்துடன் உற்சாகங்கொண்டு அழை த்துவந்து, தன்னைப் பிடிப்பதற்காகச் சபதங் கூறி எதிர்த்து வராநின்ற தனுர்வேதியன் பேரிற் சண்டை செய்யத் தொடங்கினர். அப்

போது திக்குகளெல்லாம் அஞ்சி நடுங்கி ஒடுங் கும்படிக்குச் சேனைகள் ஆர்ப்பரித்து, அண்ட கடாகமும் குமுறும்படியாய் வாத்தியங்களை முழக்கி வந்தார்கள். அப்போது ஆகாயத் தில் வேடிக்கை பார்த்திருந்த தேவர்களெல் லோரும் பயந்தோம் பயந்தோம் என்று தங் களிற் றுங்களே தாவரிக்கமாட்டாமல் மயக்கங் கொண் டயர்ந்தார்கள்.

இப்பால் யானைகளுடன் யானைகளெதிர்த் துமோத, வேகமாகிய குதிரைகளுடன் குதி ரைகள் போர்கொடுக்க, பொற்பிரகாசமாகிய தேருடன் தேரிடித்துச் சண்டை தொடுக்க, கின்றுபோற் சுரக்கும் வேதச் சிறப்பினை யுடைய துரோணாச்சாரியருடன் பாண்டவச் சேனாபதியாகிய திர்ஷ்டத் தாய்மன் வந்து எதிர்த்தான். இதன்றியும், வெம்பிய கோபக் கும்பினையுடைய வீமசேனனை விகர்னன் முத லாகிய துரியோதனன் றம்பிமார்கள் வந்து வளைத்தார்கள். வாசனை தங்கிய மலர்மாலை யணிந்த வாகுலிக னென்பவன், இளம்பஞ்ச பாண்டவர்களை எதிர்த்துக் கொண்டான். துச்சாதனனனவன், திருநாபிக்கமலமுடைய ஸ்ரீமான் தம்பிசாத்தகியை வளைத்து சண்டை கொடுத்தான். நகுலனுடன் சகுனியும், சகா தேவனுடன் துன்மதியரசனுமாய் வந்து எதிர்த்தார்கள். புத்திமானாகிய அலம்பனென் னும் ராக்ஷசன், கடோற்கஜனுடன் கலந்து போர்புரிந்தான். திருந்திய சோமதத்தன் என்பவன், விற்றிறம் வேற்றிறங் கொண்ட ஒப்பற்ற சிகண்டியுடன் அமரியற்றினன். விண்ணில் நிறைந்து வேடிக்கை பார்த்திரு ந்த பண்ணவருங் கண்ணைமூடிக்கொண்டார் கள். இவ்விதமாகச் சமுத்திரஞ் சூழ்ந்த மண் சுழல விண்சுழல சண்டை பண்ணும்போது, இருதிறவர்களிலு மிருந்து எழும்பிய தும்பு களினலும், அம்புகளினலும், இட நிறைந்து நின்ற சேனைகளெல்லா மடங்கி, அநேக காத வழிக் கப்பாலோடி ஆவியிழந்தழிந்து விழுந் தார்கள்; சிலர் யுத்தமறந்து பறந்தார்கள்.

## சேனாபதிகள் யுத்தம்

இப்படியாகச் செய்துவரும் யுத்தத்திற் பாண்டவப் படைகள்மேலிட்டுப் பஸ்மீகரப் படலம் பண்ணும்போ தெதிர்த்து யுத்தஞ் செய்த எதிரிகளின் சேனைவீரர்கள் எல்லாம், பெரிதாகிய இகல் விளைத்து இளைத்து துன்ப மடைந்து, கோபமும் - உற்சாகமும் - ஆண் மிக்கையும்-வீரத்தன்மையும் விட்டு, மதிமயங் கிக் கெட்டு, வாயுவேகத்திலும் மிஞ்சிய வேக மாய் வலுக்கொண்டோடி, கைத்திறல் கணைத் திறலையுடைய துரோணாச்சாரியரின் காலிற் போய் விழுந்து, ஐயா! நம் படைகளெல்லா மழிந்து நாசங்களு மொழிந்து உயிர்தப்பி ஓடி வந்தோம்: பாண்டவர் படையின் செயிக்கப் படைவாடி நொந்தோம் என்று குறை சொல் லிக் கொள்ளும்போது, துரோணாச்சாரியர் மிகக் கோபமுடையவராய்ச் சேனைகளைத் தேற்றி நிறுத்தித் தேரைச் செலுத்தி ஜெயம் ஜெயமென்று சொல்லிக்கொண்டுவந்து பாண் டவ சேனைகளைத் தீய்க்கும்போது, பாண்ட வச் சேனைகளும் அவ்வாறே இளைத்தோடி சேனாபதியினிடத்திற் சொல்லி தியங்க, அத் தீனதிசையைக் கேட்ட திர்ஷ்டத்தாய்மனனு வன், மனகொதிப்புடன் முன் சென்று நின்று மாலியும் நடுங்கியொடுங்கும் வடிவேலைத் தாங் கிய துரோணாச்சாரியரை வளைத்துக்கொண்டு, மாரிகாத்து மேகம் பொழிவதுபோல பாண வருஷங்களை பெய்யா நின்ற பாரிய வில்லைப் பிடித்து நிறுத்தி எதிர்த்து, இரண்டு சேனா பதிகளுஞ் சோணமேகஞ் சொரிவதற் கொப் பாகக் கரிமுகக்கணை - துரிதனற்கணை - சுடுசரக் கணை - சுடர்விடக்கணை - அரிமுகக்கணை - அனில நற்கணை - அரனுருக்கணை - அயனருட்கணை முதலாகிய அஸ்திரங்களை தொடுத்து அமர் செய்தார்கள்.

அவ்விருவருஞ் செய்த யுத்தத்திறங்களை இவ்விதமென்று சொல்லவல்லவ ரொருவரு மில்லை. ஆயினும் இவர்கள் எடுத்துவிட்ட பாணங்கள் ஆகாயத்தை மறைத்து விட்டன. அப்பாணங்களினு லிறந்த நால்வகை சேனை கள் யுத்தகளத்தில் இடமில்லாமல் நிறைந்து விட்டனவென்று ஆச்சரியமாகச் சொல்ல வேண்டுமே யல்லாது வேறில்லை. ஆதலினால், தநுர்வேதத்திற் செவ்வையாகக் கைதேர்ந்த இருவருஞ் செம்பவளம்போலும், செங்கதிர் போலும், செம்பினுருக்குபோலும், செம் முருக்கின் மலர்போலும் சிவந்த கண்களி லிருந்து தீப்பொறி சிதறி திருதிருவென்று உதிர்ந்து, ஆவியுடன் புகையெழச் சிரித்து, உதடுமடித்து, புருவம் நெரித்து, உடல் வியர்த்து, உலைமெழுகொத்து, உரகருங் கதர, உவரியுஞ்சிதர, உம்பருங்கதற, அத் பருஞ்சிதற, திக்குக்கஜனங்கள் விக்கிமுகிரம் தக்க கட்டிகள் கக்கி யெக்கி, திக்கெட்டுந் திடுக்

கிட்டுப் போக, பொற்கட்டுப் பாணங்களும் வேகப் போர்புரியும்போது, இவர்கள் விடுக்கும் பாணங்களினால் மயங்கி மாளாதவரில்லை; ஜயங்கொண்டவருஞ் சொன்னவரில்லை; இந்தப்பிரகாரம் கடலுமலையுங் காரும் பாருமதிர்த்த தன்மைபோல், இடம் வலமாகத் தேரைச் சுழற்றி ஒருவரை யொருவர் கொல்ல நினைத்துக் கிட்டுங்காலையில், குற்றமில்லாத துஷ்டத்துய்மனுடைய தகடுகட்டிப் பெயர் பதித்து வளைவுகொண்டு பளபளென்று விளங்காநின்ற வரிபொருந்திய மணிகட்டிய வில்லை மளமளவென்று முறித்து வானிற் பறக்கும் பொடியாகத் தூற்றினார் மறைவல்லாளனான துரோணாச்சாரியர்.

அப்போது திர்ஷ்டத்துய்மன் தன்னுடைய விற் போய்விட்டதென்று விசனப்படாமல், க்ஷணப்போதிற் செயந்தராநின்ற கத்தி கேடயந்தாங்கி, கண்மூடிக் கண்திறப்பதற்கு முன்னே காலடிசேர்த்து நாலடிபேர்த்து ஒட்டிப் பதுக்கி யொடுங்கி யெழுந்து, துரோணாச்சாரியரின் தேரின்பேரிற் றிடுக்கிடப் பாய்ந்து, நான்கு குதிரைகளையும் ஒரே வீச்சாக வெட்டி, மலைமேல் விழுந்த இடியைப்போல் முழக்கிக் கிட்டித் தட்டிப் பூமியில் நிற்குந் தன்மையாக நின்றான். அப்படி நிற்குந் திர்ஷ்டத்துய்மனை ஆசான் கண்டு மவசரங்கொண்டு கோபித்து எதிர்சென்று, குவலயமெல்லாங் குலை குலையும்படியாகக் கொடுந்தணற் கொலைக் கணை ஒன்றை விடுத்தவன் கைக்கொண்டிருக்கும் வாளுங் கேடயமு மாப்பொடிபோ லுதிரச்செய்தனர். அப்படிச்செய்த மறைவல்லாளனைப் பாஞ்சால குமாரன் பார்த்து, மடமடவென்று பற்கடித்து சற்றுநேரம் நிதானித்து, வெற்றிபெற நெருங்கிய போர்த்திறங்களுடன் மேலான சத்தியும் - யுக்தியும் - சித்தியும் பூர்வ தவத்தாற் பெற்றதைப்போற் பழகிய துரோணாச்சாரியானவர், பெருங்கிலி காட்டிய கரும்புலிபோ னிற்குங் கம்பீரத்தையுங் கண்டு கலங்கி நிற்குங்காலையில், அக்காரணத்தைக் கண்ணன் தம்பியாகிய சாத்தகியானவர் கண்டு, கருதற்கரிய படையுடனிடைபுகுந்து அச்சேனாதிபதியைத் தன் தேரிலேற்றிக்கொண்டு, தீரத்துவமாய் தங்கள் சேனையை நோக்கிச் சிங்கம்போற் செல்லுங்காலையில், துரோணாச்சாரியரானவர் தனக்குப் பக்கந்தந்ததாக அடங்காக் கடுங்கோபங் கொண்டழன்று, எல்லா வீரருடைய கைக்கு மேலாகிய வில்லையெடுத்து நாணியிறுக்கி, உறுக்கிவிட நின்ற பாணவருஷங்களுட னெதிர்த்து, நூறு மலைகளுக்கொப்பாகத்தேறி மீறி வீறி சீறிய புஜபல பராக்கிரமக் கொற்ற வயம்பெற்ற மதமூற்ற விற்றுங்கிய சாத்தகி என்னும் பெயர்கொண்ட சிங்கத்தை மறித்து மடக்கி அடக்கினார்.

### சாத்தகிக்கும் துரோணருக்கும் யுத்தம்

அந்த வேளையில் சாத்தகியானவர், தன் தேரிலிருக்குந் திர்ஷ்டத்துய்மனாகிய சேனாபதியை வேறொரு சேமத்தேறி லேற்றி வைத்து, சில படைஞரைக் கூட்டிச் சேனைகளிருக்குமிடத்துக்குப் போகும்படியா யனுப்பிவிட்டு, தன்னுடைய ஒப்பற்ற தேரைத்திருப்பி, பலம்பொருந்தி நலஞ்சிறந்த வில்லை வளைத்து நாணிபூட்டி, குணத்தொனி காட்டி, மேதினியெல்லாங் கூட்டி, வெங்கனல் மூட்டி வேகச்செய்யுஞ் சாயகங்களை மின்னற் பிரகாசம்போல் மிதமில்லாமல் வீசவும், பின் யிருவரும் தங்களிரதங்களுட நேருக்குநேர் நின்று சாரதிகளுடன் சாரதி, குதிரைகளுடன் குதிரை, கொடியுடன் கொடி, இருசியுடனிருசி, சக்கரங்களுடன் சக்கரம் ஊடுதாக்கி, இணையில்லாத பாணமாரிகளை எங்கும்பொழியு மினிமையினால் விண்டலத்தில் வேடிக்கைப் பார்க்கும் விபுதர் முதலாகிய பேரும் வெருவி நடுங்கினார்கள். இருவரு மிப்படியாகத் தப்பிதமில்லாமற் கைப்படு கணைகளினால் வெப்பஞ்செய்யுங் காலையில், சாத்தகியானவர் ஆயிரம் பிறைமுகாஸ்திரத்தை யெடுத்து அனுசந்தித்து, ஆசார உபசார பூசை முதலிய மந்திரங்களும் புரிந்து, துரோணாச்சாரியார் பேரிற் றுணைபடத் தொடுத்தார். அந்தக் கணைகள் தொந்தோமென்று தூறிச் சீறிச் செந்தழற்போற் வருவதைத் துரோணாச்சாரி கண்டு, உலைக்களத்திற் காய்ந்துராவிய ஊஷ்ணங்கொண்ட ஆயிரம் பிறைக்கணைகளை எடுத்து, அந்தக் கணைகளுக் கீடாகவந்த வழியே மடங்கிப் போகும்படிக்கு உந்தியபோது, வந்த கணைகளுடன் இந்த கணைகளுஞ் சொந்தமாகப் பந்தப்பட்டு, இந்திரனுலகும் - சந்திரனுலகும் - யக்ஷனுலகும் - ஈசானனுலகும் - எமனுலகும் - எரியோனுலகும் - வருணனுலகும் - வாயுவினுலகும் - நிருதியினுலகும் - பரிதியினுலகும் - நெடுநிலமுழுதும் படபடென சுழன்று, சாத்தகி விடுத்த சரங்களெல்லாவற்றையுஞ் சருகுமுமியும் எனச் சாய்த்து, சதுமறையவன்வாழ் சத்தியலோகத் தூற்று திருப்பித் தன்னுடைய சரக்கூட்டில் வந்து அடங்கியது.

அத்தன்மையைக் கண்ட துரோணாச்சாரியரானவர் தனக்குத்தானே சந்தோஷங்கொண்டு, பலம்பொருந்திய குமுத முகாஸ்திரத்தை உலகங்குமுற வெடுத்துச் சாத்தகி மார்பிற் றைக்கும்படிக்குப் பின்னும் விடுத்தார். அந்தக் கணைவரும் வேகத்தையும், சோகத்தையும், பயத்தையும், தொடர விளைக்கும் வடிவேலைத் தாங்கிய சாத்தகி நோக்கி, நலம் பொருந்திய சூரியாஸ்திரத்தைத் தொடுத்து துரோணாச்சாரியர் விடுத்த அக்குமுதமுகாஸ்திரத்தைக் குறைத்து, மூன்று வாயுவாஸ்திரம் விடுத்துத் துரோணாச்சாரியினுடைய தேரையும், குதிரைகளையும், சாரதியையு மழித்து, நிலக்கிடை யாக்கினார். உடனே தனுவாசிரியர் வேறு ரதமேறிக்கொண்டு, துளப மணிந்த முகுந்தனுக்குத் தக்க தம்பியாகிய சாத்தகியின் பேரில் மூர்த்தண்யமாகிய முத்தலைக் கணையையேவி, அவர் கைப்பற்றிய வில்லை முறித்து; அந்தவில் முறியுமுன்னமே அரிக்கணையைப் பிரயோகஞ்செய்து, இரதம் - சாரதி - குதிரை இவை முதலிய யாவையும் போக்கினார். அக்காலையிற் சாத்தகியானவர் வேறு தேரேறி, பிரகாசத்தையும் பெருமையுமுடைய வேறொரு பாரிய விற்கொண்டு நவக்கிரகாதி முதலிய நக்ஷத்திரங்களும் அஞ்சி யதிர்ந்து அடங்கி யுதிரும்படியாய், ஆலகால விஷத்துக் கொப்பாகிய கடுங்கணைகளைக் கோடிகோடி யென்று சொல்லும்படிக்கு வில்லிற் றொடுத்துவிட்டார். அந்தக் கடுங்கணைகள் அநேக காலாந்தகரைப் போலக் கருநிறம், வெண்ணிறம், செந்நிற முதலிய பல நிறங்களைக்கொண்டு காந்தி வந்தபோது, திசைகளும் அத் திசைகள்தோறுமுள்ள தீவாந்தரங்களுங் கிறுகிறு விறுவிறெனச் சுழன்று தத்தளித்தன. இப்படியாகப் பற்பல பாணங்களை விற்பல விவேகிகளாகிய இருவருந் தொடுத்து போர்செய்யுங் காலையில், இடம் வலமாகத் தேர்கள் சுழன்றன; நடநலமாகக் குதிரைகள் சுழன்றன; தீப்பொறி யிறைத்துக் கண்கள் சுழன்றன; மாக்கணை தொடுத்து விற்கள் சுழன்றன; கதிர் சுழன்றன; மதிசுழன்றன; மனஞ்சுழன்றன; நிலஞ்சுழன்றன. இவ்விரண்டு படைவீரருஞ் செய்த யுத்தத்தில் துரோணாச்சாரியருடைய வில்லாண்மையையும், சாத்தகியுடைய வில்லாண்மையையும் பூங்கொத்தணிந்த தேவர்கள் கொண்டாடிப் புகழ்ந்தார்கள். போரின் திறத்தைப் பூரணமாக உணர்ந்த போர்வீரா ளனைவரும், இந்தப் பலவான்கள் புரிந்த யுத்தமுனையைச் செவ்வையாகப் பார்த்து அதிசய விரக்கமாக அநேகஞ்சொற்கள் சொல்லி மகிழ்ந்தார்கள்.

இவ்விதமாக யாவருந் துதித்த இயற்கையினால் துரோணாச்சாரியர் திடங்கொண்டு சீறி, தன்மனத்தி லெழுந்தெரிந்த கோபாக்கினியைப் பார்க்கிலுங் கோடிபங் கதிகமாக அக்கினியாஸ்திரத்தை யெடுத்து அநேக உபசாரமாகப் பூசித்து, வஞ்சினங்கொண்டு எதிர்த்துப் போர்புரியா நின்ற சாத்தகியின் பேரிற் றைத்து உயிரொழிக்கும்படியாய்த் தொடுத்தார். அந்தக் கணையானது கடலிற்றங்கிய வடவா முகாக்கினியைப்போற் படபடப்பாய் புகுந்து, விண்டலத்திற் பாய்ந்து, மண்டலத்தைக் காய்ந்து, நால்வகைச்சேனைகளும் நாசமாகும்படியாய் உருக்கிக்கருக்கித் தீய்த்து வரா நின்ற துரோணர் வலிமையை ஆய்ந்துணர்ந்த சாத்தகியானவர் கண்டு, ஒரு வருணாஸ்திரத்தைத் தொடுத்து மந்திரங்களைப் படித்து சுந்தரமாக விடுத்தார். அப்படி விடுத்த வருணாஸ்திரமானது, துரோணர் விட்ட அக்கினியாஸ்திரத்தை அவித்து கும்பத்தாரையாய் மழைபொழிந் தந்த யுத்தக்களத்திற் பறந்த வெவ்வழற்றீச் சுடர்களையும் வெண்தூள் - கருந்தூள் - செந்தூள் - பசுந்தூள் இவைகளையும் தணித்து நீக்கி, இரண்டு பாணமும் ஒன்றோ டொன்றுபற்றித் தாழ்ந்ததைச் சிவந்த கண்களையுடைய அவ்விருவரும் கண்டு மிக்க கோபங்கொண்டு, மேலுமேலுஞ் சில கணைகளை எண்ணற்றனவா யேவி, ரணக்களத்திற் றலையறுந்து கவந்தங்கள் ஆடும்படியாய் நிலைசிறந்து போர்செய்து கொல்வதானார்கள். அப்போ சாத்தகி விடுத்தகணைத் திறத்தையும், நாணேற்றி வில்வளைத்த கரத்திறத்தையும் துரோணரறிந்து தலையசைத்து சந்தோஷப்பட்டு, தம் சிஷ்யனாகிய அர்ச்சுனனிடத்தில் வில்வித்தைக் கற்ற பிள்ளையல்லவா இவனென்று மெச்சினார். அச்சமயத்திலநேக வரசர்களுடன் நகுல சகாதேவரிருவரும் நாடிவந்து முக்கண்ணனுக்கொப்பாகிய துரோணாச்சாரியை யடுத்து கணைகள் தொடுத்துவிடுத்தார்கள். அப்போ துரோணரானவர் சாத்தகியைவிட்டுத் திரும்பி நகுல சகாதேவரைக்கிட்டி எட்டிப்பழம்போற் கண்சிவந்து மட்டிலாக் கணைகளைத் தொடுத்து இவ்விருவருடனிருந்த அணிப்படைகளெல்லாம் அலக்கழிந்து போகும்படி யடித் ததிர்க்கும்போது, நகுலசகாதேவர் முதலாகிய நால்வகைப்படைஞரும்புறமுதுகிட்டோடினார்கள்.

## தருமராஜனுக்கும் துரோணச்சாரிய ருக்கும் யுத்தம்.

அந்த வேளையில், தருமராஜனெதிர்த்து தநுர்வேதியனை வளைந்து, காய்ச்சித் தோய்ச்சுக் கடைச்சற் பிடித்து விஷத்திலும் வசனுபித் திராவகத்திலுந் துவயற் செய்து, தங்கக்கட்டு-பொற்கட்டு-வச்சிரக்கட்டு-எழுகுக்கட்டு-பட்டுக்குச்சு முதலியவுங் கட்டிய பாணங்களை பிரையோகஞ்செய்து, எங்கு நடுங்கி, மங்குலொடுங்கி, அங்கிமடங்கி, அருக்கனிடுங்கி, உலகமடங்கி சலிக்கும்படியாய் உக்ரமத்துடனின்று விக்ரமமாகக் கொன்று ஜாடியகாலையில், வேதவிதியாகிய யாகங்களும், தர்மமும், வீரப்பிரதாபமும், நான்குவேதங்களிற் சொல்லிய நன்னெறிகளும், விர்த்தியாக வளர்த்துவரா நின்ற சிறந்த துரோணரானவர் தேவாஸ்திரங்களை தொடுத்து, தர்மராஜன் பிடித்த உடபாரியவில்லைப் படீரென்று ஒடித்தார். உடனே தர்மநந்தனர் மற்ற வேறொரு வில்தனை எடுத்துப் பிடித்து நிறுத்தியிழுத்து நாணிபூட்டி ஷ்டங்காரஞ்செய்து நாணோசைகாட்டி எதிர் இடியாஸ்திரப் பிரயோகஞ்செய்து, கொண்ட நின்ற குருவினுடைய வெள்ளை நிறங்கொண்ட தாங்கிய வேதக்கொடியையும், சிகரக்குடை குதிரைகளை தேரையும், வாயுவேகமுடைய கூறுயும், வண்மை நிறைந்த சாரதியையும் கூறுகப்போக்கி, வெற்றிப்போரில் வீறிசிறந்து வீரவிசையுடனடிக்கும் இசைமணி கட்டிய திரப்படைகளையுந் வில்லையுந் துண்டித்து, சேதிக்கும் தெண்டித்து எதிரேறிச்சென்று துரோணச்சாரியான போது, சிலையர்சனுகிய பாய்ந்தவர் துயரங்கொண்டு சேமத்தேரிற் வேறொரு தேறிநின்று மலையை நிகர்க்கும் தலை சிலையைவளைத்து, உலையை திகர்க்குந் வச்சிரக்கணைக்குத்யினையுடைய உச்சிதமான கொடுத்து விடுத்து தூபதீப நைவேத்தியம் தேரையும் கைப்முரசக்கொடிக் கதிபனேறிய பிடித்த வில்லையும் போக்கினர்.

அக்காலையில், எக்காலத்தும் உலகத்தில் நீதியை நிறுத்திய யோக்கிய இலாக்கியரான தர்மராஜனனவர், மற்றொரு தேரில் விற்பிடித் தேறி, பற்றலருயிரைப் பாழ்படச் சிதைக்கும் சத்திவேலை எடுத்துப் போற்றி கரத்திற் பற்றி, துரோணச்சாரியினுயிர் வெற்றியையுடைய ஆகாரை வாங்குகவென்று அபிமந்திரித்து, யத்தின் நிறைந்த பாரந்த விண்ணவர்களும், பூலோகத்தில் உறைந்து சிறந்த மன்னவர்களும், வேலாயுதத்தின் வெப்பத்தை பார்க்கமாட்டாமற் கண்களை மூடிக்கொண்டு, துரோணர் பிழைப்பாரோ சாவாரோவென்று சந்தேகப்பட்டுத் தளர்வுறும்படியாய், தன்னை ரட்சிக்கும் வழிபடு கடவுளினுடைய திருவடியைச் சிந்தித்து வந்தித்துப் போற்றி நாசி சுளித்து வீசியெறிந்தார். அந்த சத்திவேலானது தத்திச் சுற்றிக் கத்திச் சிரித்து புறப்படும்போது, மண்டல மெல்லாங் கரிந்து, விண்டலமெல்லாம் எரிந்து, திக்குகள் வீரிந்து, செந்தீச்சொரிந்து, விஷநிறைந்த புகையெழுந்து, மின்னல்மலிந்த பொறி விழுந்து, கனலில்வந்த புனல்வழிந்து, கலகலவென சிகைவிரிந்து, காரொடு கடன்மலை நேரொடு சரிய, பாரொடு பரிகரி தேரொடுவிரிய, படபட கடகட த்டதட மடமட படீரென வந்து விழுந்தது. அப் பர்ாக்கிரமச் சத்தியைத் துரோணச்சாரியர் கண்டு கவலைகொண்டு, பிர்மாஸ்திரமெடுத்து வேண்டிய பூசை கொடுத்து வேதமந்திரத்தை யுச்சரித்து விடுத்தார். அப்பிர்மாஸ்திரமானது, பூதலபாதல மாதல மீதல முதலிய யாவும் வாதனை மலியச் சேதனப்படுத்தி, அஷ்டதிக்குகளும், அஷ்டகஜங்களும், அஷ்டகிரிகளும், அஷ்டமா நாகங்களும் கஷ்டப்பட்டுக் கலங்க, நஷ்டப்பட்டு நலங்க, வட்டமாய்ச் சுழன்று சென்று, தர்மராஜன் விட்ட சத்தியின்மேல் விழுந்து, கொழுந்து விட்டெரியும் நெருப்பெனக் கொளுத்தி காய்ந்து, எங்கும் பாய்ந்து ஆரியனிடம் வந்து சேர்ந்தது.

அப்போது சேனுபதியாகிய சிலைக் குருவானவர், தர்மராஜனேவிய சத்தியழிந்த சந்தோஷத்தினுல், மெய்த்திறம்-கைத்திறம்-விற்றிறம்-மற்றிறம்-மதித்திறம் - யாவுங் காட்டி, எவர்களு மிவருக் கீடல்லவென்று சொல்லும்படியாய்த் தன்பேர் நிலைநாட்டி, மீளவுங் கமலாஸ்திரம்-கருடாஸ்திரம் - குமுதாஸ்திரம் - விருக்ஷாஸ்திரம் - பர்வதாஸ்திரம் என்னும் ஐந்தஸ்திரங்களை அபிமந்திரித்து அறக்குமாரனுடைய அங்கத்தில் விடுத்தார். ஆசிரியன் றெடுத்த அக்கணைகளைந்தும் அனற்புகை மலிந்து தருமராஜன்மீது தாவிவரும்போது, தர்மந்தவருப் பெரியோர்முதற் றேவர்களெல்லாருஞ் சஞ்சலமடைந்து, எதேது? இப்பாணங்கள் தப்பாது: தப்பாது: இந்தப் பூட்டுக்குத் தருமராஜன் தப்பிப்பிழைப்பது அருமை: அருமை: எப்படியு மிறந்துபோவார் சந்தேக

மில்லை. ஒருவேளை நல்வினைப்பயனுற் பிழைப் பாராகிற் சிறந்த சேனுபதியாகிய துரோணுச் சாரியின் கையிற் சிக்கிக்கொள்வாரென்று திய ங்கி மயங்கிப் பெருமூச்சுவிட்டு சந்தேகிக்கும் போது, குந்தியின் முதற் புத்திரனுகிய கோமான், நந்த நந்தனுக் கந்தரங்க பக்தனு கிய சீமான், சிந்தைவருந்தி, இந்திரக்கணை-சந்திரக்கணை இரண்டையும் அனுசந்தித்துப் பிரையோகஞ் செய்தார். அக்கணைகளால் துரோணுச்சாரியர் தொடுத்த கணைகள் ஐந் தும் முனைமுறிந்து, இறகறிந்து, உடல் கிழி ந்து, மளமளவென்று பொடிப் பொடியாய் உதிர்ந்தழிந்தன.

அந்தக்ஷணமே தருமநந்தனர் மனங் கொதித்து, முகங்கடுத்து, பற்கடித்து, சில சொற்படித்து, வலுவிற் பிடித்துக் காழாகிய வயிரங்கொண்ட எழுவாளிகளையுந்தி, அவ் வருமறையவன் கொண்ட வில்லையும் அவரே றிய தேரையும் அழித்து, யாவரும் திதிக்கா நின்ற சூரியனைப்போற் றருமராசன் றுலங்கி நின்றார். அப்படி நிற்கவுஞ் சேனுபதியாகிய துரோணுச்சாரியர் தேரும், வில்லுஞ் சீருங் குலைந்து, ஓட்டமும் நடையு மொன்று மில் லாமல் அசைவற்றவராய் பூமியினிற்கும்படி யானதைப் புண்ணிய சொரூபியாகிய தரும ராஜன்கண்டு, அத்துரோணுச்சாரியர் பேரிற் கையெடுத்து யுத்தம் பண்ணக் கருதாதவராய், செவ்வரக்கைபோற் சிவந்து தீப்பொறி சித றுங் கோபக் கண்ணிற் கிருபை சொரியும்படி யாய் புன்சிரிப்புடன் அத் துரோணரை யுற் றுப் பார்த்து, இப்போது உம்மைக் கைப்பிடி யாகப் பிடித்துக் கட்டுவதை மாப்பாக்விட்டே னென்று தேரைத் திருப்பி, அவருடன் கூட வந்த ஆலகாலவிஷத்துக் கொப்பாகிய படை வீரர்மேற் பாய்ந்துசீறி பாணங்களை யாய்ந்து தூறியபோது, சேனைகள் மெலிந்து தியங்கிய தைக்கண்டு மனந்தாளாமல் மாற்சரியங் கொண்ட இருக்குவேதச் சம்பன்னராகிய துரோணுச்சாரியரானவர், அந்தப் பாண்டவ முதல்வனை விட்டுக் கால் நடையாய் மீண்டு போனுர்.

அக்காலையில், தமயனுடைய கருத்துணர் ந்த தம்பியாகிய வீமசேனன் களங்க ரகிதனு கிய சூரியனைப்போற் பொன்மயமான தேரைச் செலுத்தி, அண்ணலாகிய தருமராஜன் செய் யும் யுத்தமுனைக் கணுகினன். அந்தத் தம்பி யைக்கண்ட தரும பூபதியானவர், யுத்தமுனை யைவிட்டு வெற்றிபெற்ற பிரகாசத்துடன் திரும்பினுர். ஐயா ஜெனமேஜெய மகாராஜ னே! எப்போதுந் தருமந் தவருத புண்ணிய வான்களுக்குப் பொல்லாங்காகிய பகைவந்து தொடராது. ஒருவேளை தீவினைவசத்தால் ஆர பாரப் பகைவந்த போதிலும், அவர்கள் செய்ததர்மம் வீரங் குரையாமனின்று வெற்றி பெறச் செய்யுமென்று மேலோர் சொல்லிய வாசகமானது சத்தியம். ஆதலால், தர்மநந் தனனைப் பிடித்துத் தருகிறேனென்று சபதங் கூறிவந்த துரோணுச்சாரியர் தான் சொல்லிய சபதத்திறமை தப்பாமல் ஒப்பாகும்படியாய் வந்து போர்புரிந்திளைத்தபோது, ஆசாரிய னென்னும் அன்புவைத்து அவருக்கு ஒரு வருத்தமும் இல்லாமற் போகும்படியாய் தரும ராஜன் செய்த பெருங் கிருபையானது, எல் லோராலுங் கொண்டாடும்படி சிறந்ததென்று தேவர்கள் எல்லாருந் தருமராசனுடைய புகழை எடுத்துப் பாடினுர்கள்.

### நகுலசகாதேவர் வீமசேனன் கடோற்கஜன் இவர்கள் யுத்தம், இதில் திரிகர்த்த ராஜன் புத்திரன் வதை.

இப்பால் நகுலராஜனும், அழகிய விகர் னராசனும், பெருமை பொருந்திய போரமர் விளைத்த காலையில், வீரப்ரதாப பரிசுத்தவான் கள் எல்லோரும் ஆச்சரிய மடைந்தார்கள். புராதனப் பூமியில் நிறைந்த ஆத்ம கோடி கள் எல்லாஞ் சலித்து, இதன்றியும் யானைப் படை குதிரைப் படையில் மிகுந்த துன்முக னும் சகாதேவனும் எதிர்த்து அருமையான போர் புரிந்தார்கள். அந்த யுத்த முனையில் நின்ற வித்தக வீரரெல்லாரும் வெருவிப் பயந்து கலக்கங் கொள்ளும்படியாய் யுத்தஞ் செய்து வருகையில், துன்முகனது தேரை யும்-வில்லையும்-பாணங்களையும், சகாதேவன் பொடியாகச் செய்தபோது, தேகம் வருந்திப் பூமியிலிழிந்து புறமுதுகிட் டோடினுன் துன் முகனுனவன். அந்த துன்முகன் ஓடியதைக் கண்ட சகாதேவன் திரும்பிவருங் காலையில், வில்முனை வீரனென்னுந் திரிகர்த்தனுடைய புத்திரன் வந்து வளைத்து யுத்தம் பண்ணி னுன். அப்போது சற்றுநேரம் அவனேடு போராடி, மற்றவர் நேரோடிப் போகும்படி யாய்ச் சாடி, வலிமையேறிய முனைவாளியால் திரிகர்த்தன் மைந்தனை மடித்து வானிலேற்றி னுன். அவனுரெனில், போர்செய்யாநின்ற ராஜாக்களுடைய வீரமுனைக்கு இவனெரு

எமனென்று சொல்லும்படியான வீர தீர விஜய பராக்கிரமங்கொண்ட சகாதேவன்.

இப்பால், குரு பக்கத்தில் கதாயுதனுகிய வீமசேனன் புகுந்து, மிகுந்த வேகத்துடன் வெகுண்டு வீசிவராநின்ற தந்தையாகிய பலத்தை மேற்கொண்டு, அந்தர மென்னும் மேலுலகளாவிய நீலமலையானது கால்முளைத்துப் பூமியி லுலாவுவதைப்போல் உலாவி, தனக்கெதிரி இன்னுனென் றில்லாமல் எதிர்பட்டவர்களை யெல்லாங் கதாயுதத்தால் மோதி யடித்துத் துவைத்து, ஓயாமல் யுத்தஞ்செய்து திரியுந்தன்மையால், திக்கஜங்களால் சுமக்கப்பட்ட இக் குவலயமாகிய பூமியானது இக்குமுக்கோடி வருந்தியது. இத்தன்மையவாகிய போர்க்கோலங்கொண்ட வீமசேனனுடைய புத்திரன் கடோற்கஜனனவன், மற்றொருபால் அலம்பாசுரனை வளைத்துக்கொண்டு, இரண்டு மகமேரு திரண்ட தோளினுடன் விரிந்த நிலத்தினின்று அமர் செய்ய நிற்பனபோல் நின்று அமர் செய்யும் ஆரபாரமானது, என்னைப்போலொத்தவர் நாவினுற் சொல்லத் தொடங்கினுலும் அருமையிலும் அருமை. ஓ ஜெனமேஜெய மகாராஜனே! இவ்வண்ணமாக அனேக யுத்தம் நடந்த விதத்தையும், துரோணரானவர் வடவாக்கினி போற் சீறிவந்து நேர் புகுந்து போர்புரிந்தகன்ற திறத்தையும் சொன்னேம். இனிமேல் ஆதவன் மாதவன் செலுத்துந் தேரின்பேரில் முறைபோலிருந்து, குறைவற்ற-நிறையுற்ற-அர்ச்சுனன் பெற்ற முனைவெற்றி கொள்ளும் திறத்தையும் சொல்லுவோம் கேட்பீராக.

## தடாகக்கரையில் அர்ச்சுனன் செய்த கால்நடைச் சண்டை

சேனாபதியாகிய துரோணாச்சாரியரால் ஆசீர்வதிக்கப்பட்ட சாலிகவசத்தை அணிந்துகொண்ட ராஜாதி ராஜனும், அவனுக்குடம்பட்ட பட்டவர்த்தனர் - மகுடவர்த்தனர்-மன்னர்-மண்டலீகர் முதலாகிய பலவிதப் படைஞரும் சேர்ந்து, திக்கஜங்கள் செவிடுபட்டுப் போகும்படியாய் ஜெயபேரி முதலாகிய வாத்தியங்கள் முழங்க, குடை-கொடி-பீலிக்குஞ்சம் இவைகளைத் தடித்து கூக்குரலிட்டார்த்து, தனஞ்செயனின்ற யுத்தமுனைக்கெதிரில் வந்து, முனைக்காரராகிய இம்முதலவர்கள் கிட்டி, முந்தி தங்கள் சேனைகளை மூட்டவிட்டார்கள். அவ்வேளையில் யுத்தம் பண்ணும்படியாகத் துரியோதனனுதியரால் விட்ட இச்சேனைகளும், அணிவகுத்திருந்த யானைகளும் குதிரைகளும், தங்கள் தங்களுடைய இளைப்பு தீரும்படியாய் தேவதத்தனுல் ஏற்படுத்திய மணங்குலாவு மலர் நிறைந்த பொய்கையிற் சென்று, பூரணமாகிய புனலைப்பருகி தாக விடாய் தீர்ந்து, அந்த தடாகத்தின் வளப்பங்களைப் பார்த்து, ஆ! ஆ! எம்முடைய நாவானது எந்தக் காலத்திலும் புசியாத ஜலமிது. இதைச் சலமென்று சொல்லப்படாது. அப்படிச் சொல்லிய பெயர்களுக்குச் சஞ்சலம் வந்து சம்பவிக்கும். அம்மம்மா! இது தேவர்களுக்கும் போக்கியமாகிய இன்னமுதென்று சொல்லவேண்டுமே யல்லது வேறல்ல, என்று சொல்லித் துதித்து தென்றற்காற்று வாசமாகிய அத்தடாகத்தைச் சூழ்ந்திராநின்ற சோலையின் கரைதோறும்போய்ப் படுத்து, தங்களுடைய விடாய் தீர்த்துக் கொண்டார்கள். மேலும் சிலபேர்கள், கன்னமதம்-கபோலமதம்-கரடமதம் என்னும் மும்மதங்களையுள்ள யானைகளைச் சேர்த்துக்கொண்டு வந்து செந்தாமரை மலர்ந்து, அத்தடாக ஜலத்தில் நீந்தலடித்து விளையாடினுர்கள். சிலர் தத்திப்பாயுங் குதிரைகளைக் கொண்டுவந்து ஜலங் குடிப்பித்து அதுகளைக் குளிப்பாட்டி நீரில் நீஞ்சல் ஆடித்து ஆழமாகிய ஜலத்தில் தாங்களும் மூழ்கினுர்கள். சிலபேர்கள் புட்பங்களில் பொருந்தி மொய்த்து ரீங்காரம் பாடாநின்ற வண்டினங்களைக் கண்டு சந்தோஷங்கொண்டு இருகையைக் கொட்டி எழுப்பினுர்கள். சிலபேர்கள் நீலோற்பலம் - செங்காவி-தெண்டாமரை-செந்தாமரை இவை முதலாகிய அன்றலர்ந்த புட்பங்களைப் பறித்துக் சூணங் கொண்ட மணங் கண்டார்கள். சிலபேர்கள் இந்த குளத்திலிருக்கும் புட்பத்தின் பரிமளங்கள் எவ்வுலகினுங் கிடையாதென்றுர்கள். சிலபேர்கள் கடலின் ஆழத்தை அளவிட்டாலும், இந்தக் கயத்தினுழத்தை அளவிடப்படாது என்றுர்கள்.

இப்படியாகப் பற்பல விதமாகிய பெருமைகளைப் பேசிக்கொண்டு சமுத்திரத்தைச் சூழ்ந்த சக்கரவாளத்தைப்போல் அளவில்லாத யானை குதிரைகளுடன் சூழ்ந்திருக்காநின்ற சேனைப் பெருக்கை இந்திரக் குமாரனுன காண்டாவதனன் கண்டு, அழியா ரதத்தினின் மிழிந்து, சுவேதவாம் புரவிக்குச் சலமூட்டிவைக்காநின்ற துளவணிந்த கோபா

லனைப் பார்த்து, ஓ சுவாமி! குதிரைகளைக் கொண்டுவந்து தேருடன் கட்டிவையும். இந்த தெய்வீக் வாவியிற் றண்ணீர் குடித்து நிறைந்து நிற்கின்ற சேனைகளை யெல்லாம் ஒரு நொடிப் பொழுதிற் றெய்வலோகத்திற் கனுப்பிவிட்டு வந்தபிற்பாடு தேரின்பேரி லேறிச் செல்லலாமென்று சொல்லி, கோபாக் கினி சொரியுங் கண்களையுடைய வீரகண்டை தரித்திரா நின்ற விஜயனனவன், கன்றிய மனத்தினை யுடையவனுய்ப் பாதசாரியாய்ச் சென்று ரதங்களின் பேரிலும், யானைகளின் பேரிலும், குதிரைகளின் பேரிலும், அலைகள் போல் வரிசை வரிசையாய் நிற்கின்ற வீரர்கள் பேரிலும், தனித்தனி பலகோடி கணைகளைப் பொழிந்து, குன்றுபோற் கொன்று குவிந்து, மரகத மலை நிற்குந் தன்மைபோல் நின்றுன். அந்தச் சமயத்தில், அதிரதத் தலைவராகிய சில வீரரளெதிர்த்து, அக்கினிக்கணை முதலிய எல்லாக் கணைகளையும் விடுத்துப் போர் புரிந் தார்கள். அப்போது சித்ராங்கத பாண்டியன் குமாரத்திக்கு நாயகனுகிய கிரீடியானவன் ஒரு கணைக்குக் கோடி கணை தொடுத்து, அவர்கள் விட்ட சரங்களைக் கெடுத்து அதமாக்கி, சில அஸ்திரப் பிரயோகஞ்செய்து அவ்விடத்தி லிரா நின்ற அரசர்களையும், அச்சு-மச்சு-குத் துக்கால்-கொடி-கொடிஞ்சில் முதலிய சக்கரங் களையுடைய தேர்களையும், சாரதி குதிரைகளை யும், அவர்கள் கைக்கொண்ட வில்லையும் துகள்பட்டொழிய வழித்து, அநேகந்தரம் அந்த குளத்தைச் சுற்றி சம்மாரகால உருத் திரமூர்த்தியைப்போல் வந்தான். தேர்மீதிரு ந்த அர்ச்சுனன்மேல்விட்ட பாணங்களானது, பாதாளத்தி லிருக்கும் பாம்புகளின் பேரில் மேகத்தில் இருந்து விழுந்த மின்னல்களை ஒத்திருந்தன. பூமியினின்ற விஜயனனவன், தேர்மீதிருந்த வீரர்கள்பேரிற் செலுத்திய கணைகளானது, ஆகாயத்திலிருக்குஞ் சூரியனை விழுங்குவதற்குப் பாதாளத்திலிருந்து எழு ந்த விஷச் சுவாலையையுடைய பாம்புகளை ஒத்திருந்தன. இதன்றியும், இந்த அர்ச்சுன ஞல் அடிபட்டு அவதிப்பட்டோடிய அதி ரதத் தலைவர்க ளெல்லாரும் ஒருமுகமாகத் திரும்பி அமர் புரிந்தபோது, விஜயன் தொடுத்த கணைகளிஞல், தேர்கள் உடைந்து, கொடிகள் முறிந்து, நாணிகளறுந்து, வில் லுகளொடிந்து, தாங்களும் நாசமடைந்து மேலுலகடைந்தார்கள்; அழியாதிருந்தவர் கள் அடைக்கழிந்து ஓடி இடைந்தார்கள்.

## துரியோதனுதியர்க்கும் அர்ச்சுனனுக்கும் யுத்தம்

இவர்களை யெல்லாம் அந்தக் குளத்தின் மேட்டில் முடித்து விஜயங்கொண்ட அர்ச் சுனனுனவன், வச்சிரச் சிகரக் கொடிஞ்சில் வட்டமும், அநுமத் துவஜமும், சக்கரமும் அமைந்த தேரில் மாயனைச் சுவேதவாம் புர வியைப் பூட்டச்செய்து, அச்சாரதியுடனே தானும் ஆரோகணித்துக்கொண்டு, சந்தோஷ கரமாகச் சேனைமுகத்திற் செலுத்தி யூகத்துக் குட்புகுந்து போகா நின்றுன். அப்படி போகா நின்ற அர்ச்சுனனைக் கண்டு, முன் யுத்தமுனைக் கழிந்தோடிய வீரரும், சகுனியும், துரி யோதனனுடைய தம்பிமார்களும் விசனங் கொண்டு, அநேக வாத்திய முழக்கத்துடன் திரும்பி எதிர்கொண்டு அவனை வளைத்தார் கள். அக்காலையில், தனுர்வேதியர் ஏற்படுத் திய சகடயூகச் சேனைக் கடலை அடியோடு அழித்து, அலக்கழித் தொழித்து, அப்பாற் கட்டிய யூகத்தின்மேற் செல்லா நின்ற பாரிய வில்லுக் கொருவனென்னும் வீரிய பார்த்த னனவன் போர்வில்லைத் தாங்கி, தன்னெதிர் வருகின்ற சகுனி, துரியோதனன், தம்பிமாரி லறுவர் இவர்கள் முதலிய பல பேர்களையும் நீறுசெய்யு நெருப்பைப்போற் சீறி, நேர் முகஞ்சென்று கூர்ங்கணை விடுத்துப் போர் மலைந்தெதிர்க்க நெருங்குவதானன். அதற்கு முன்னமே வலம்புரி யலங்கலணிந்து தலம் புரக்கும் தராபதியாகிய துரியோதன மகாரர் சன் துரோணுச்சாரியரிடத்தில் பெற்ற சாலிக வசமும், பனிரண்டு ரதமும், பனிரண்டு குதிரையும், பனிரண்டு யானையும், பனிரண்டு சக்ரஜெய வீராளும் தன்னைச் சேர்ந்து வரும் படியாய் தான் முந்திவந்தெதிர்த்து, நீண்ட மகமேருவை நெடுங்கடல்வளைந்ததைப்போல அர்ச்சுனனை மறித்து, மலைக்கொப்பாகிய வில்லைவளைத்து, கண்விழித்துக் கடும்புகை எழும்பிக் கனற்பொறி காட்டி, விஜய காண்டீ பத்துக்கு நேராகிய வில்லும், அவ்வில்லை யேந்தும் வீரனுக்கு நிகருமில்லை யென்று சொல்லும்படியான மேன்மைபெற்ற அவ் விஜயன் பேரிலேயே பாணப்பிரயோகத்தை செய்தான்.

இவ்விதமாகச் சேனு சயின்யங்களுடன் வந்தெதிர்த்து எண்டிசை மண்டலம் விண்ட லம் யாவும் நடுங்கும்படிக்குக் கொடிய போர் புரியாநின்ற வணங்காமுடி வேந்தனை வாச

வன் மைந்தன் கண்டு, திப்பிரமைக்கொண்டு ஆச்சரியமுடையவனாய், ஆ! ஆ! தீதிலாத வேணுகீத நாதப்பிரிய மதுசூதநாதனே என்று வணங்கி, இந்தத் துரியோதனன் யுத்தஞ் செய்ய ஆரம்பித்த நாள்முதல் இன்னாள் வரைக்கும் ஒரு யோசனை தூரத்துக்கப்பால் நிற்கிறதேயன்றி, எனக்கெதிர்வந்து நின்று யுத்தஞ் செய்ததில்லையே! சத்துருக்களைக்கொன்று வெற்றிபெற வேண்டுமென்னு நல்ல நினைப்பு இவனுக் குண்டென்று இதுவரையிலும் நான் கண்டறிந்த தில்லையே! இப்போது இவ்வளவு சுரவையாய் மோகரித்து எல்லாவுலகு மதிரும்படிக்கு வந்து போர் செய்யாநின்ற திறத்தைக் குறித்து இன்ன விதமென்று யான் சொல்லமாட்டேன். அப்பப்பா! என்ன வலுப்பெற்றானோ? மந்திரக்கத்தியோ? அஷ்டமாசித்தியோ? அநுக்கிரக வில்லோ? அழியாக்கவசமோ? ஒழியாத்துவசமோ? மற்றென்னமோ ஒன்றுந் தோன்றவில்லை. ஓ உலவாப் பெருங்குணத் துத்தமனே! இதென்ன விந்தையென் றுணர்ந்து நானறியும்படிக்குச் சொல்லவேண்டும் என்று கேசவனைத் தொழுது வாசவன் மைந்தன் கேட்க, சகதீசனென்னுஞ் சநார்த்தனன் சொல்லுகின்றார். ஓ சிங்கம்போலெங்கும் பிரக்யாதிபெற்ற தங்கம்போன்ற பற்குணனே! உலகத்தைச் சூழ்ந்த சக்ரவாளகிரியைப்போ லுடலையு முயிரையுங் காக்காநின்ற சாலியென்னுங் கவசம் பிரம்மாவினிடத்தில் இருந்தது; அந்தக் கவசத்தை இப்போதிருக்கின்ற இந்திரனுக்கு முன்னிருந்த இந்திரன் பிரம்மாவினிடத்திற் பெற்றுக் கொண்டான். அவ்விந்திரன் ஆங்கிரஷ மகாரிஷிக்குக் கொடுத்தான். அவர் துரோணாச்சாரியருக்குக் கொடுத்தார். அந்தத் துரோணாச்சாரியர் அரவக்கொடிக்கதிபனாகிய இந்த அரசனுக்குத் தரித்தனுப்பி யிருக்கிறார். இந்தக் கவசத்தின் மகத்துவ மெத்தன்மை யுடையதென்றால், வெற்றி முனைபெற்ற சித்திமுதலுற்ற எந்த வாயுதங்களினாலேயும் அழியத்தக்கதன்று. ஆனாலும் உன்னாற் கூடிய சக்திவரையிலும் இந்தக் கவசத்தை ஒழிக்கும்படியாகிய விதத்தைத் தேடலாம் என்றுரைத்து துரியோதனனுக் கெதிரில் தடதடவென்று சுவேதவாம் புரவிபூட்டிய ரதத்தைச் செலுத்தினார்.

அப்போது பூர்வத்திற் காண்டாவன மூண்டெரியும்படியாக விரதம் பூண்டெழுந்த காலத்தில், தீண்டாச் சுடரோனாகிய அக்கினி தேவன் கொடுத்த விஜயகாண்டீபத்தின் மெய்வலிமையைக்கொண்டு விஜயனெதிர்த்து, மனக்கோப முதிர்ந்து, குணத்தொனி காட்டி, கொடிய சரங்களைப்பூட்டி, யுத்தத்தி லெதிர்த்து வரானின்ற வீராதிவீரானுடைய மகுடங்களிலும், துரியோதனனுடைய கிரீடத்திலும், மகமேருவை யொத்துயர்ந்த புயங்களிலும், உந்தியிலும், முகத்திலும், மார்பிலும், இருதய ஸ்தானத்திலும் பிரயோகஞ் செய்தான். அந்த பாணங்களானது அந்தந்த ஸ்தானங்களிற் புதைத்துப் பின்புறமாக உருவிச் சூரியனுடைய ஆயிரங்கிரணங்களும்விரிந்து புடைபரந்ததைப்போல் இரத்தங்களைப் பீறிடச்செய்து, ஆகாயத்தின் வெளி தெரியவொட்டாமல் ஒளியை மறைத்துப் பந்தரிட்டதைப் போல் நெருங்கியது. இரதத்திற் பூட்டிய குதிரைகளின் நாக்கெல்லாந் துண்டித்துவிழ; விற்களுடைய நாணியெல்லாந் தறிபட்டற, தேர்ச்சங்கரக்களெல்லாம் பொடியாய் சிதைந்துதிர, யானைக்காளெல்லாம் முறிபட்டொடிய, சாரதிகளெல்லாந் தலையறுந்தோட, கொடிகளனைத்தும் பலகூறாய் முறிந்தாட, குடை முதலிய சிகரங்கள் தறிந்துவிழ, அடித்துக் கொல்லுதற் கெதிர்முனைந்த ராஜவீரானுடைய தலைகள் உடைபட்டு மூளைகள் செறிந்தழிய, படைவீரரென்று படர்ந்துவந்த அடல்வீரர்களின் உயிர்களொழிய, உதிரவெள்ளங்களுட நிணங்கள் வழிய, சுவேத க்ஷத்திர முதலாகிய பற்பல குடைகளெல்லாம் விழுந்து குழிய, இந்தப்பிரகாரம் அர்ச்சுனனுடன் யுத்தஞ்செய்ய ஆசைகொண்டெதிர்த்த வீராள் யாவரும் ரணக்களத்தில் வாடி வீடினோர்போக, மீதியாயிருப்போர்கள் எல்லோரும் புறங்கொடுத் தோடினார்கள். அந்தச் சமயத்தில், அங்கதேச மன்னனென்னுங் கர்னனானவன், துரியோதன மகாராஜனுக்குப் பரிந்து நிறைந்த போர்முகத்திற் செறிந்து, சிறந்த தீமுகக்கணைகளை சொரிந்து, அறத்தவன் அர்ச்சுனனாலடிப்பட்டு முரிந்து, முகங்கரிந்து, பொரிந்து, உதிரஞ் சொரிந்து, வெந்து, சோர்ந்து, நொந்து விஸ்தாரமாகிய வியாகூலத்துட னோடினான். நவரத்தின கசிதவீரகண்டை தரித்த மாமன் சகுனியும், துரியோதனனுடைய தம்பிமார்களும், புவனத்தை யழிப்போமென்று எதிர்த்து, அர்ச்சுனன் தொடுத்த புங்கவங்கங்களா லதிர்ந்து, உடல் பிதிர்ந்து முகமாறினார்கள். கலிங்க தேசாதிபர் முதலிய காவலரனேகரும் புலிங்க சாலம்போற் சீறியெழுந்து, தலைகலங்கி, புயமலை

குலுங்கி, துலங்கி வாடினார்கள். கிருதவன்மனும், கிருபாச்சாரியும், சேதி தேசாதிபனும், சண்டைசெய் திளைத்து, அஞ்சி யகன்றோடுங்கினார்கள். பூரீஸ்வரன் முதலியபேர்கள் புகுந்து உடல் கிழிந்து பிராணனைக் காப்பாற்றிக் கொண்டு போனார்கள். அணிவகுத்திருந்த பூபதிகளெல்லாரும் உயிர்விடப் பட்டார்கள். மற்றவர் யாவரும் புறமுதுகிட்டார்கள்.

உடனே மண்டல துரந்தரனென்னுந் துரியோதன மகாராஜனேறிய குதிரைகள் பந்தித்த இந்திரவிமானத்துக் கொப்பாகிய தேரைச் சாமார்த்தியத்துடன் சாரதி செலுத்த, அரவக்கொடி படபடென்றாட, அமர்க்களமெங்கும் அநேகஞ் சூரியர்களைப்போல் மகுடம் பிரகாசிக்க, வீரபட்டந் துலங்க, வெண்ணீறிலங்க, உடற்காப்பாக அணிந்த கவசபலத்தினால் அர்ச்சுனனுக்கு முன்வந்து வில்லினை நாட்டி, நாணிமாட்டி, அர்த்த சந்திரப் பிறைமுகக் கணைகளைப்பூட்டி, மந்திரங் கூட்டி, வெகுதாட்டியாய் மேகநிறம்போன்ற பார்த்தசாரதி தேகத்திலும், சுவேதவாம்புரவிபேரிலும், இந்திரகுமாரன் உடலிலும், அநுமத்துவசத்தின் பேரிலும், கடல்முழக்கம்போற் கடகடவென் றோடிவரானின்றச் சக்கரங்களையுடைய அழியா ரதத்தின்பேரிலும் விடுத்து, பின்னுஞ் சில கூடலாஸ்திரங்களை யிறைத்து விஜயன்றொடுத்த பாணங்களை யெல்லாங் கெடுத்து, எழுவைப்போன்ற புஜத்தையுடைய அத்துரியோதன மஹாராசன் முன்னும் பின்னும் மேன்மேலாகிய முழு கணைகளையுந் தொடுத்தான். அக்காலையில், ஒண்ணக்ஷயமாகிய தன் அம்புக்கூண்டிலிருந் தெடுத்து மிசைத்து இழுத்துவிட்ட அஸ்திரங்களையெல்லாம் அரவக்கொடியோன் அறுத்து விட்டதும், சாரதிபேரிலும், தன் பேரிலும், மற்ற ரதமுதலியவைகளின் பேரிலும், வாசமகோசரமாய் வருண சரங்களைப் பொழிவதும், ஆகிய இவைகளையெல்லாம் விஜயன் பார்த்து அநேகந் தீமுகக்கணைகளை தெரித்து எண்டிசையும் ஒன்றோடொன்று முட்டிக் கொண்டு போர்புரியும்படி யாக்கி, அந்த துரியோதனன் தொடுக்கின்ற அம்புகளையெல்லாம் போக்கி, அவன் தேகத்திலும், அகத்திலும், முகத்திலும், மகுடத்திலும், இடியாஸ்திரங்களைத் தன்னாலியன்றமட்டும் வாரியிறைத்தான். அப்போது வணங்காமுடி பொறுத்த அரசனணிந்த கவசத்தின்பேரில் அவ்விடியாஸ்திரங்கள் பட்டுக் கற்பாறையின்மீது மழைத்துளி விழுந்து தெறிக்குந் தன்மைபோல் தெரித்துப்போய் அவனுடைய தேகத்தில் எள்ளத்தனையேனும் காயம்படாமையால், துரியோதனன் மேலிட்டு வெகு கணைகளைத் தொடுத்து விஜயனுடைய சரீரமெல்லா மெலியச் செய்ததுமல்லாமல், பார்த்தசாரதி தத்தளித்து தடுமாறவும், குதிரைகள் துடிதுடித்து குண்ணிப்போகவும், அநுமத்துவசம் அலைவு கூரவும், அச்சு மச்சு குத்துக்கால் அசைந்தாடவு மாக்கியபோது, அருச்சுனனும் அசைவற்றிருந்து, தான் பிரையோகஞ்செய்த சரங்கள் எல்லாம் அந்த துரியோதனன் அணிந்த கவசத்தின்பேரிற் பட்டவுடனே, அப்பாற் றெரித்துவிழும் நிலைமை ஒரு நொடிப்பொழுதிற் கண்டறிந்து, பிரகாசமாகிய ரதத்தில் மண்டியிட்டு, சூரியாஸ்திரமெடுத்து சுருதி மந்திரம் படித்து, எல்லா வுபசாரங்களூ முடித்து, வில்லிற் றொடுத்து, துரியோதனனுடைய தேகத்தைப் பீறும்படியாய் மிகவுஞ்சீறி விடுத்தான். அக்காலையில், துரோணாச்சாரியருடைய குமாரன் அசுவத்தாமனானவன் கண்டு, அந்தச் சூரியாஸ்திரத்தை நாராயணாஸ்திரத்தாற் றுண்டித்துப் பாய்ந்து, தானுஞ் சிலநேரம் எதிர்த்துப் போர் புரிந்து ஒய்ந்து அப்பாற் கூடாமல் புறமுதுகிட்டுச் சாய்ந்தான்.

அந்த வேளையில், வெற்றிபெற்ற அருச்சுனன் விடுத்த இலையாகிர்தியாகிய முனைச்சரமானது அச்சுவத்தாமனுலழிந்துப்போகவே, போர்முகத்தில் நேர்புகாமலழிந்தோடிய பகைவீரர்கள் அடங்கலும் வேகமுற்ற குதிரைகள் பூட்டிய தேரைச் செலுத்திக்கொண்டு ஒரேமுகமாய் மோகரித்து மூர்த்தண்ணியத்துடன் வராநிற்க, அதை தூர்த்தண்ணிய விக்கிரம விஜயன் பார்த்து, முகம் வியர்த்து மூவருக்கும் தேவருக்குமரிய முதல்வனென்னும் முகுந்தனுடைய பாதத்தில் வீழ்ந்து, இரக்கமுடையவனாக இயங்கி மயங்கி யுத்தஞ் செய்வதை, எப்போதோ மறந்தவனைப் போல அப்போது அசைவற்றிருந்தான். அக்காலையில், முல்லைநில மாக்களாகிய கோபாலருடைய குலந் தழைத்தோங்க வளர்ந்தருளியும், புள்ளாங்குழ லோசைக் குறுகிக் கன்றும் பசுவுங் கலந்தோடி வரும்படியாய் நின்றருளியும், காமனைப்பெற்ற தந்தையாக யெழுந்தருளியும் இராநின்ற கரியமுகிலைப் போன்ற

கண்ணனானவர், கலங்காச் சமர்புரியுங் காதல் மைத்துனனாகிய காண்டீபன் கலங்கினிற்கும் நிலையைக் கண்டு, அநேகந் தாமரையிதழ் மத்தியில் ஒரு சந்திர னுதித்தெழுந்ததற் கொப்பாகிய தமது திருக்கரத்தின் விரல்களாற் பாஞ்ச சன்னியத்தை எடுத்து மணங்குலாவிய பவளம்போன்ற திருவாயில் வைத்து, வலம்புரிச் சங்குகள் அலம்புரிந் தேங்கும்படியாய்ப் பம் பம் பம்மென் றூதினார். அந்தரத்துயர்ந்த இந்திரத்தருவைச் சத்தியபாமைக்காகப் பூமியிற் கொண்டுவந்து நாட்டியருளிய புண்டரீகாக்ஷனானவர் முழக்கிய அப்பாஞ்ச சன்னிய ஓசையானது, சப்தமேகத்தின் முழக்கம்போலும், எண்டிசையிலும் அலையெறியா நின்ற சப்த சமுத்திரத்தி னோசைபோலும், ஈரேழு உலகமும் நடுநடுங்கும்படி பேரொலி எடுத்த காலையில், யுத்தகள முழுமையு மெலிந்து, சத்துருக்க ளெல்லோரும் நலிந்து, வெற்றிபெற வேண்டுமென் றெழுந்த கடுஞ்சின வேகமும் அடங்கி அவிந்து, மோகங்கொண் டெதிர்ந்த மன்னர் மண்டலீகரும் அதிர்ந்து, அண்டமுகடுந் தொண்டியாய்ச் சிதறிவிட்டதோ வென்று தேவர்கள் முதலிய யாவரும் நடுங்கும்படியாயது. அப்போது பால்போன்ற நிறத்தினையுடையச் சுவேதவாம் புரவிபூட்டிய தேரைச் செலுத்தும் பரமனானவர் பார்த்தனை நோக்கி, ஐயா அர்ச்சுனா! என்ன கலங்கிப் போய் விட்டாய்? இளைக்காதே பயப்படாதே என்று சில பாணங்களை தன் திருக்கரத்தால் தொட்டுக்கொடுத்து துரியோதனனுடைய நகக்கண்களில் தொடுக்கும்படியாய்ச் சொல்லி, மீண்டுமிந்த கவசம் தறிபடும்படியாய்ப் பூர்வத்தில் தேவராசன் ஒரு வேலாயுதங் கொடுத்திருக்கின்றானே, அதை மறந்து விட்டையோ அப்பனே யென்று ஞாபகப்படுத்தினார். அப்போது வச்சிராயுதன் மகனாகிய அர்ச்சுனானவன், விரைவாக மகிழ்ந்து மேலாகிய வாழ்வைப் பெற்றேனென்று மிகுந்த பரிவினையுடையவனாய், விவேகஞான பக்தியோடெழுந்து திருநாரணனை வலம்வந்து, செந்தாமரைக் கமலம்போன்ற திருவடியில் விழுந்து, அவருடைய திருக்கரத்தால் ஆசிகூறிக் கொடுத்த அஸ்திரங்களை யேந்தி வணங்கி, நாணியிற் பூட்டி இழுத்தோங்கி, இந்த துரியோதனன் அழிந்து போகும்படியாய், வேறே மந்திரக் கணையைப் பிரையோகித்து விடுவோமாகில், வாயுகுமாரனாகிய வீமசேனனுடைய சபதங் கெட்டுப்போமல்லவாவென் றுணர்ந்து, தன்னுடைய கோபாக்கினியை யடக்கி, இந்த துரியோதனனணிந்த கவசமழித்து, அவன் தேகமுங் கிழித்து, அமர்விட் டொழித்துப் புறமிட்டோடும்படி செய்விப்பது பெருமையென்று உட்கொண்டு, நூறுபேரிற் றலைவனாகிய துரியோதனனுக்கு மனநோவு வரும்படியாய்க் கண்ணன் கொடுத்த கணைகளையும், இந்திரன் கொடுத்த வேலாயுதத்தையும் எறிந்தான். அவ்வளவில் அந்த துரியோதனன் அணிந்து வந்த கவசமானது நீறுபட்டழிந்து, அவனும் யுத்தமுனைவிட் டொழிந்து, நகக்கண் கிழிந்து, உதிரம் வழிந்து, புறங்கொடுத்தோடினான்.

அப்போது எட்டு திக்கையும் வென்று மட்டில்லாப் புகழ்கொண்ட கிரீடியானவன், அதிவேகமாக ஐயாயிரம் பெரும் பகழிகளை ஒய்யாரமாக எடுத்து விடுத்து, சீர்பொருந்திய வில்லையும், தேரிற்பூட்டிய குதிரைகளையும், அரவத் துவஜத்தையும், பத்தரை மாற்றுப் பசும்பொன் கணிகளாற் புத்தம் புதிதாகச் செய்த எழுதட்டிரதத்தையும் நாசப்படுத்திப் பொடியாயழித்து அந்த துரியோதனனுக்கு உதவியாகப் பக்கத்திலிருந்து சீறிவரா நின்ற சிலைக்குருவின் மைந்தனும், தியாகியாகிய கர்னனும், மாமனாகிய சகுனியும், மற்றிதரமாகிய வெற்றிவீர வேந்தர்கள் பலருந் தங்கள் தங்களுடைய பெருமையின் வீறுகெட்டுப் படபடவென்று பாதசாரியாய் பூமியிலோடும்படி விரட்டி யடித்து முடுக்கியதுமன்றி, ஓ அரசனே! கண்களிற் கனன் றுற்றெழுந்து விண்களிற் சினந்துட் புகுந்து, மேகத்திற் கலங்குஞ் சலத்தை நாகத்திற் குறிஞ்சிக் குடித்து, மாகத்திற் படுந்தூள் கலக்கி, வேகத்திற் செழும் போர் விலக்கி, அவ்விஜயன் விட்ட கோபாவேசத்துடன் மோகரித்தெழுந்தக் கொடுங் கணைகளினால், அந்த ரணக்களத்தில் ஆரவாரித் தெதிர்வந்த பேர்களில் ஆர்தான் பிழைத்தார்கள்? இதன்றியும், யாவராலும் துதிக்கப்பட்ட பதினெண்பூமி அரசர்களில் பலவாறாகப் பற்பல வாயிரம்பேர் பட்டார்கள். துச்சாதனன் முதலாகிய தம்பிமார்களும் அர்ச்சுனன்விட்ட அம்பிலழிந்து, உதிரம் வழிந்து, ஆருயிராசைகொண்டு அமர்விட்டு கெட்டார்கள். பின்னும் மட்டுப்படாத அக்கினியாஸ்திரங்களை அமோகமாய்த் தொடுத்ததினால், அவைகள் அம்பரமெல்லாம் பம்பரம்போலாடிச் சுழன்று, வலம்வரும்படி ஓடிப் பறந்தபோது,

அதிரதர்-மகரதர்-சமரதர் முதலிய பேர்கள் சாரதிகளும் தாங்களுமாய் தலைகளிழந்தார்கள். நாரதாதி முனிவர்களும், இந்திராதி தேவர்களும், மடிந்தவரைப் பார்த்து நடு நடுங்கி, இன்றைக்கே பாரதம் பற்றறமுடிந்து போம் என்று கண்ணீரிறைத்து, மண்ணிற் படிந்தவரைப்போல் வருந்தி, திருந்திய அரசருடன் பொருந்தி, பரிந்து வார்த்தையாடா நின்றார்கள். அதாவது, நீண்ட காண்டீபதாரியாகிய நரனுக்கெதிர் நின்று வெல்ல நல்ல வல்லபமுடையபேர்கள் உலகமெல்லாந்தேடினும், அவனுக்கு எதிர் ஒருவருமிரார்களென்றார்கள். ஓ! ஓ! கோடாகோடிபேர் நின்று யுத்தம் பண்ணுகின்ற வெற்றி முனையினிடத்து நிற்பதற்கு முன்னே ஒரு பொய்கை யழைத்தானே இது என்னவிந்தை? இது எவரால் முடியுமென்றார்கள். போகட்டும், இந்த அர்ச்சுனன் உண்டாக்கிய தடாகத்தில் அளவிலாக் குதிரைகளும், எண்ணிறந்தயானைகளும், கண்ணடங்காச் சேனைகளும் தாகவிடாய் தீர்ந்து களையாறி சவுக்கியம் பெற்றும், நன்றியற்றவர்களாய் தண்ணீர் தடாக மேற்படுத்திய தர்மவானுடனே எதிர்த்துப் போர்புரிய நினைப்பது நல்லறிவுடையோர் செய்யும் நல்லமல்லவே: இது புல்லறிவாளர் செய்கையென்றார்கள். நல்லது தேவர்கட் கண்ணலாகிய மேகவண்ண னென்னுங் கண்ணன்; இவ்வண்ணமாய்ப் பாரத யுத்தத்திற் பார்த்தசாரதியாய் அமைந்து தேர்செலுத்தக் கிடைத்தது. இந்நரன் பூர்வஞ் செய்த புண்ணியம் யாதோ சொல்லுங்க ளென்றார்கள். இதுவன்றியும், அர்ச்சுனன் விடுத்த ஒரு முகவாளி, இருமுகவாளி, மும்முகவாளி முதலிய எல்லா வாளியும் படையினுழைந்து, எல்லோருடையப் பிராணனையு முண்டு, அந்தரத்திற் றிரிந்துக் கொண்டிருக்கிறதே யல்லது, பூமியிலிறங்கவில்லையே! ஆகையால், என்றைக்கிருந்தாலும் இது பொல்லாத பொல்லாங்காகி யப்பழுதை விளைக்கும் எச்சரிக்கையாக யிருக்க வேண்டும் என்றார்கள். இன்று முப்பது நாழிகையுஞ் சிந்து தேசாதிபனுடைய பிராணனைக் காக்கிறோமென்று வந்திருக்கு மன்னவர் யாவரும் இந்த நன்னய குணலய நரனைத் தடுப்பார்களோ? தங்கள் வீரத்தை விடுப்பார்களோ? இந்திர குமாரனாகிய அர்ச்சுனன் இன்னுஞ் சற்று நேரத்திற்குள்ளாகச் சயிந்தவன் தலையைத் தள்ளிச் சபதமுடிப்பானோ? அல்லது யாதாய்முடியுமோவென்று இவ்விதமாகயாவரும் மனதிற் கிசைந்த வண்ணம் சிற்சில வசனஞ் சொல்லிக்கொண் டிருந்தார்கள்.

### கண்ணன்செய்த பாஞ்சசன்ய முழக்கங்கேட்ட தருமராஜன் மதிகலங்கிச் சாத்தகியை அர்ச்சுனனிடஞ் செலுத்த, செல்லும்போது வழிமடக்கிய துரோணாதியரை வென்று நடத்தல்

இப்பால் பசுமைதங்கிய துளபமணிந்த பரந்தாமனும் பார்த்தனுஞ் சிந்து ராஜனைத் தேடித் தேரூர்ந்து போனார்கள்: ஓ தார்வேந்தனே! அக்காலத்தில் தர்மராஜனால் நடந்த சில சங்கதிகளை சொல்லுகிறோம் கேளும். தாசர்களின் கள்ளமில்லா உள்ளத்தி லுறையும் வள்ளலானவர், வெள்ளை நிறச் சங்கைப் பூரித்த நாதத்தின் தெள்ளமுதமானது, பேரணிமத்தியி லிருந்த தர்மராசனுடைய செவியிற்சென்று பட்டவுடனே, தளர்ச்சியில்லா மனதில் சந்தேகங்கொண்டு, தன்னருகி லிருந்த சாத்தகியை யழைத்து, என்னையனே! இன்றூமுப்பது நாழிகைக்குள் சயிந்தவனை முடிக்கிறே னென்று சபதங் கூறிப்போன சதுரனாகிய தனஞ்செயன் சண்டை முகத்தில் இளைத்தான்போலு மிருக்கின்றது. இல்லாவிட்டால், ஜநார்த்தனனானவர் பாஞ்சசன்ய முழக்கந் தனிமையாய் காட்டமாட்டார். ஆகையாற் சங்கத்தொனி கேட்டதுமுதல் என்னங்கத்தினில் உயிரோட்டமானது; அப்பனே! நான்கொண்ட சங்கை தீரும்படிக்கு நீ அங்கே போய் அறிந்துவரக் கடவையென்று தருமராஜன் உரைக்க, சாத்தகிகேட்டு, ஓ தருமசொரூபியாகிய தார்வேந்தே! உமது சகோதரராகிய தனஞ்செய ராஜன் போர்முகத்தில் முனிந்து, முனைந்து புறப்பட்டால், தேவர்கள்-காந்தருவர்-யக்ஷசாள் முதலாகிய விண்டலத்தவரும் அவர் கண்ணெதிர் நிற்கமாட்டார்களே: விஜய காண்டீபனுக்கு எதிரில் மண்டலத்தவர்கள் நின்று வெல்வதெப்படி? தேவரறிந்த மட்டுக்கும் விண்டலத்தவரில், மண்டலத்தவரில், இவருடன் எதிர்க்கு மன்னவர் யார் இருக்கின்றார்கள்? ஐயா தருமமுங் கிருபையும் தழைக்கு மனத்தோய்! இங்கு தேவரீரைத் துரோணச்சாரி கட்டக்கிட்ட வொட்டாமல் உமதணிப் படைக்குக்காவலாக என்னை நிறுத்தி, அங்கு ஏற்பட்டிருக்கும் யூகபந்திப் பணியின்மீது சயிந்தவ சம்ஹாரஞ் செய்யப் பெயர்த்துப் போனார் தேவரீருடைய தம்பியானவர். நான் இவ்விடம் விட்டுப்போய் மன்

னர் தன்னி முன்னம் நிறைந்த பேரணியிற் புகுவேனாகில், என்னை கண்டவுடனே விஜயனாகிய மன்னன் வெறுப்பார்; அது எனக்கென்னாளும் ஒறுப்பாம். ஓ அழகிய மணிப்பொன் மௌலி புனைந்த ஆண் சிங்கம்போன்ற அரசர்க்கரசே என்று சாத்தகி சொல்லவும், குற்றமற்ற குலவரைக் கொப்பாகிய புஜபலவலுமை பெற்ற கோவேந்தன் சொல்லுகிறார்.

அப்பா சாத்தகி! நீ சொன்னது ஞாயம்; ஆகிலும், நேரிட்டது அபாயம்; ஆபத்தாகிய து காயம். மேலும் சேனாநாயகனாகிய திரஷ்டத்துய்மன் இவ்விடத்தி லிருந்து என்னணியைக் காப்பான். உனக்கிந்த சிந்தனை வேண்டாம். நீபோய் அறிந்துவரக் கடவையென்று முரசக்கொடியோன் மொழிய, அந்த வார்த்தையைக் கேட்ட சாத்தகி சிறிது நிதானித்து, வலிய பலம்பெற்ற தேரரசர் அனேகரிருக்க, அவர்களுக்குச் சொல்லாமல் எனக்கிந்தக் கட்டளை யிட்டாரேயென்று அவருடைய வார்த்தையைச் சிரமேற்கொண்டு, மட்டார்ந்த மலரை வரிசையாய்க் கட்டிய மாலையணிந்த தருமராஜனுடைய மலரடியில் வீழ்ந்து விடை பெற்றவராய், தம் முன்னோனாகிய கிருஷ்ணமூர்த்தியையொத்த சாத்தகியானவர், அழியாச் சேமரதத்திலூர்ந்து, அதிரதர் முதலாகிய வீரதளங்களோடுஞ் சென்று, சத்துருக்க ணெருங்கிய தூசிப்படையைப் பிளந்து, தடதடவென்றேறி, விருதணியி லிருந்து விளங்கிய கிருதவீரியன் - கிருதவன்மன் - கிருபாச்சாரி இவர்கள் முதலிய பேர்களையும் எதிர்த்து, மதயானையைப்போல் அதிர்ந்து, பாரிய வில்லைத் திருந்த வளைத்து, பகலவன் பாணப் பிரயோகங்கள் முதலியதை விடுத்து, பரியும்-கரியும்-தேரும்-பேரும் பறக்கவடித்து, தில்லும்-பில்லும் சொல்லும்பேரை இமையிலழித்து, குமியவொழித்து, நில்லும் நில்லுமென்று வல்லபம்பேசி, அப்பால் நடந்து போகும்போது, பன்முகத்திலு மிருந்து குதிரை பூட்டிய நூறுயிரந் தேராளிகள் உகாந்தகால இருட்போல் வளைத்து மறைக்க, அவர்களையும், அவர்கள் தொடுத்த கணைகளையும், சந்திராஸ்திரம்-சூரியாஸ்திரம் முதலிய அஸ்திரங்களினால் போக்கி, பாக்கியில்லாமற் றுக்கிவருங்காலையில், ஜெயமாலையணிந்த சலசந்தனனவன், நிலைபெற்ற மதத்தையுந் துதிக்கையையுமுடைய மலைபோன்ற யானை மேலேறிவந்து சாத்தகியை வளைந்து மலைந்தான். அப்போது இருதிறவர்களும் அருமையாகிய கணைகளை எங்கும் பரவவிடுத்து, மன்குலுங் கங்குலுங் கருகும்படி போர் புரிந்து, வாயுவாஸ்திரங்களை யெடுத்து மழைபோற்றொடுத்து, புள்ளி பொருந்தி முகத்தினையுடைய மதயானையையும், அதன்மே லேறிவந்த சலசந்திரனையும், தீய்த்துக் கரிக்கித் திடர்நிலமாக்கி, அவன் சேனைகளையும் போக்கினார் சாத்தகி. இப்படி தடையறவருஞ் சாத்தகியை திரிதராஷ்டிரன் பிள்ளைகளிற் சிலர் கூட்டமாய்வந்து மடக்கி, நாலு பக்கங்களில் நாலுபேர் நெருங்கி, நாலுவித பாணங்களை தொடுக்க, அக்காலையி லந்தப் பாணங்களை யெல்லாம் பஞ்சுபோற் பறக்கச்செய்து, அந்தக் கொடிய தீயர்களை மடக்கிக்கொண்டு வேட்டம்போன வேந்தர்களுடன் வேடுவர்கையில் அகப்பட்ட யானைகள் படும்பாடெப்படியோ? அப்பாடு படும்படியாக்கி, ஒப்பாருமில்லாமலே தாக்கி, இப்போரில் எவரும் எதிர்ப்பதற்கு இல்லாமற் போக்கி, வீரவயிர வில்லையுந் தாக்கி, நேமித்தேரை நெட்டிடச் செலுத்தி, சுடுசரங்களைச் சுற்றிலும் விடுத்துப், படபடத்துத் துரிதமுடன் செல்லுகின்றார். அப்படி செல்லுகின்ற சாத்தகியைத் தனுவாசிரியராகிய துரோணாச்சாரியர் கண்டு, போகாதே: போகாதே: நில்லு: நில்லு: என்னுடன் யுத்தஞ் செய்யாமற் போவது ஞாயமன்றென்று ரதத்தைச் செலுத்திவந்து, சாத்தகிக்குச் சஞ்சலமுண்டாகும்படியாய்த் தனது வில் வளைக்கவும், மேகவண்ணனுக் கிளவலாகிய சாத்தகியானவர் கலீரென நகைத்து, ஓ ஐயரே! தனுர்ப்பாணங் கொண்டு பிராமணருடன் எதிர்த்து யுத்தஞ் செய்வது எம்போலொத்தவர்களுக்குத் தகுதியன்றென்று ராஜதர்மமிருப்பதினால், உம்மைவிட்டு அப்பாற்போனேன். அப்பேர்ப்பட்ட தர்மமில்லாவிட்டால், இப்போது எதிர்நின்று பேசும்படியாய் உம்மை இன்னமும் வைப்பேனோ? என்று சொல்லிக் கன்னமதமுடைய சுப்ரதீபம்போல் தேருடன் சுழன்று திரும்பியபோது, துரோணரும் எதிர்த்து மதித்து துரிதமாகப் பேசி, அவ்வளைத்த வில்லிற் சுடுவடிக் கணைகளைத் தொடுத்து வீசி விடுத்தார்.

இந்தப்படிக்கு இருவருந் தங்கள் தங்களுடைய வில்லை வளைத்து, கொடுமையாகிய பகழிகளை முறை முறை கோத்து, கடுமையாகிய பகடுகளுடன் துணையாகவந்த சேனை

கணை யழித்து, நெடுநேரம் வரையிலும் ஒருவரை யொருவர் விடாமல் அமர் புரிந்து, இருவருங் களைத்து இளைப்பாறி யெழுந்து, ஒருவரையொருவர் உறுத்துப் பார்த்து நின்றனர். அப்போது துரோணாச்சாரியர் மிகுந்த வருத்தமுற்று இளைத்திருப்பதைச் சாத்தகி கண்டு மநோதிடங்கொண்டு, கழுத்துமயிர் கத்தரித்துக் கலினமாட்டிய புரவிபூட்டிய தடந்தேரைச் சாரதிசெலுத்த, மாருதிவேகத்திலு மீறிய வேகத்துடன் ஓடிவராநின்ற அத்தேரின்மீது மண்டியிட்டிருந்து, பாரியவில்லை வளைத்து நாணிதெறித்து விண்மணி குலுக்கி மன்னணிப்படைகளைப் பின்னிடக்கலக்கி, யாவரையுஞ்சீறி வீறிவரும் அச்சாத்தகி வேந்தனனவர், அநேகங்கோடி கிரணங்களோடு உதயகிரியினின்று மெழுந்து அந்தகாரமான இருட்டைக் கரித்துவரும் மந்த்ஹாசமாகிய சூரியனைப்போற் பிரகாசித்தார். அப்படி பிரகாசித்து வரும்போது, அர்ச்சுனனால் அடிபட்டுக் கவசமழிந்து, த்வசமொழிந்து, அவசமடைந்து, சேனாநாயகனாகிய துரோணாச்சாரிய ரிடத்திற்போய்ச் சொல்லிக் கொள்ளுவோமென்று போர்முனையை நோக்கி வராநின்ற துரியோதன மகாராஜனனவன், சக்ராயுதம் போற் சாத்தகிவரும் உக்ரதிடத்தைப் பார்த்து ஐயையோ! இவனொருவன் இடைக்கொள்ளையாய் புகுந்து அணிகளையழித்து வொழித்து வருகிறுப்போலிருக்கிறதே, இதற்கு என்ன செய்யலாம்? என்று ஏங்கி இவனை விலக்கி வெல்லவேண்டு மென்னும் வினையை நினைத்து, வீரபட்டங் கட்டிய கெட்டிக்காரராய் ஒட்டிய வேந்தருடன்கூடி, சாத்தகிக்கு எதிரோடி தடுத்தான். அப்போது தேரில் வராநின்ற சாத்தகியானவர் கோபங்கொண்டு சீறியடுத்து, ஆயிரமாயிரங் கணைகளை அடுக்கடுக்காய்த் தொடுத்து விடுத்து, நால்வகைச் சேனைகளை நாசப்படுத்தி, நெற்றிப் பட்டங்களையுடைய அவ்வரசர்களையும் வேகச்செய்தார். அதுகாலையில், வீரகண்டையைக் கட்டி துரியோதனராஜன் மெத்தமருண்டு, இவனுடனே யுத்தஞ்செய்ய வல்லவராரென்று பயந்து பயந்துப் பாணங்களை தொடுத்தான். அதுகளையெல்லாம் சாத்தகியானவர் அணுவணுவாகப் பறக்கச்செய்து, அரசனுடைய அரவக்கொடியைத் தறித்து, தேர்ச்சக்கரங்களை யுடைத்து, நெருங்கியவில்லை முறித்து, சாரதி தலையைப்போக்கி, மோசநிலைப்பினையுடைய அத்துரியோதனன் உடலெல்லாங் கணைகளாற் ருக்கி, யாவருஞ் சந்தோஷிக்கும்படியாய் இன்னமும் எவராகிலும் எதிர்ப்பவர் உண்டோவென்று இறுமாந்து, படைவலியோடு எதிர்ப்பார்த்து நின்றார். அப்போ துரியோதனமஹாராஜன் தேரழிந்து போகவே, ஜலத்தைவிட்டு நீங்கிய தாமரை மலர்போல் இரண்டு பாதமுங் கருகிச் சிவக்கத்தக்கதாய் பூமியினின்று போர்நிலத்தைவிட்டு வெட்டார வெளிநிலத்தில் விழுந்தோடினான். அவன் ஓடுவதைக்கண்ட தேவர்களெல்லாரு மாறாமற் சிரித்தார்கள். சாத்தகி பார்த்துக் கைகொட்டி நகைத்தார். இப்படியாக துரியோதனமகாராஜனை அவமதிப்பாய் நகைத்த சாத்தகியை கிருதவன்மன் கண்டு, மனந்தாளாமல் உள்ளக்கொதிப்போடெழுந்து, சாத்தகிக் கெதிரிற் புகுந்து, உயர்ந்த வில்லைவளைத்து நெருங்கி, திருந்திப் பொருந்தியதாயுள்ளக் கணைகளை வரம்பில்லாமல் நிரம்பவிடுத்து நாணியிழுத்து டங்காரஞ் செய்தபோது, தாஷ்டீகமுள்ள சாத்தகியானவர் வெகு சொற்பத்தில் அவைகளை மாற்றி, அவன்பேரிற் கொழுமுனைப் பாணங்களை யேற்றினார். அப்பாணங்கள் தாக்கியவுடனே, கிருதவன்மன் தேரின் பேரில்சாய்ந்து அயர்ந்தான். அத்தன்மையை துஸ்வாசனன் பார்த்துப் பெருமூச்சு விட்டு, ரதகஜ துரகபதாதியாகிய நால்வகைச் சேனை வீராளுடன் அணிவகுத்திருந்த அளவில்லாத யானைப் படைகளுடனும் சேர்ந்துபோய்ச் சாத்தகியை அடுத்து சோனைமாரியைப்போல் சுடுசரங்களைத் தொடுத்தனன். அவைகளையெல்லாஞ் சாத்தகி கெடுத்து, தன்னுடைய வில்லிலிருந்து விடாமழைபோற் பொழிந்த கூர்ந்தொடைகளால் எதிரிகள் கலங்கி அலமலங்கிச் சேனைகள் விலங்கிப்போயின. அது கண்ட துச்சாதனனவன், தான் பூனைபோலொதுங்கிப் பூமியிலிழிந்து இருபதஞ்சிவக்க, இளைத்தோடிப்போய் சேனாபதியாகிய துரோணாச்சாரியர் நின்ற இடத்திற் சென்று அவரைக் கண்டு, தான்பட்ட குறையையும், சேனைகள் கெட்ட நிறையையும், தன் மனமிறையையும், சாத்தகி செல்லுமுறையையுஞ் சொன்னான். அவன் சொல்லிய வசனத்தை துரோணாச்சாரியர் கேட்டு, நந்தியா வட்டமாலையணிந்த நரேந்திரனுடைய தம்பியைக்கண்டு உள்ளம் வருந்தி, மணிசெறிந்த தேரும், அளிநிறைந்த வில்லுங் கொடுத்து, அப்பா துஸ்வாசராஜனே! இதுவரையிலும் உனது மைத்துனராகிய சயித்திரதன் க்ஷேமமா? இனி

மேலும் இன்றைய பொழுதை சாதிக்கலாமா? என்று பற்பல வார்த்தைகளைக் கேட்டிருந்து அப்பால் துரோணாச்சாரியர் அவனைப் பார்த்துச் சொல்லுகின்றார்.

அப்பா! குலமுங் குணமுமுள்ள அரசர் கூட்டங்களுக்கெல்லாம் எமனென உதித்து எழுந்த துஸ்வாசனென்னும் இறையே! என்ன இவ்வேளை சற்றிளைத்தாப்போ லிருக்கிறாய்? அநேகராஜர்கள் பெருங் கூட்டமாகக் கூடியிருந்த பேரவைப்புறத்தில், அருந்ததிக் கதிகமான கற்பினையுடைய திரௌபதை என்னுந் தெய்வப்பெண்ணை அலமருங்க யிழுத்து வந்த அந்த நாளிலிருந்த ஆத்திரமும், க்ஷாத்திரமும், உன்தோள் வலியும், இருதோள் வலியும், உன்னுரவலியும், இருகரவலியும், இந்த யுத்தகளத்திற் கண்டிலேம். அப்போது கண்ட அதிசயத்தை இப்போது பார்க்கவேண்டுமென்னும் பட்சங்கொண்டாலுங் காணோமே: ஐயையோ!! இதென்ன த்ப்பாகிய மப்பாயிருக்கிறதே: அப்பா! அல்பமும் அதிசொல்பமுமாகிய வில்வல்லமை தெரிந்த சாத்தகியுடன் போய் போர்புரிந்திளைத்து, யாவரும் நகைக்கும்படியாய் துன்பமென்பவை யாவும் பட்டீர்களே: இனிமேல் வாயுபுத்திரனாகிய வீமசேனனுந் தனஞ்செயனும் வரப்போகிறார்களே: அவர்களுக்கெதிரில் என்னசெய்ய இருக்கின்றீர்கள்? வேலாயுதந்தரித்த இளவரசராகிய வேந்தனே! சொல்லும்; இவ்வளவு நிர்வாகமுடைய நீங்கள் விரதபூஷண வீஷ்மரென்னும் மூத்தோர் வார்த்தையைக்கேளாமல் தடுத்துவிட்ட பாவத்தால், நீங்களெல்லோரும் உயிர் விடுத்து மாண்டுபோவது சத்தியம்: சத்தியம்: நீங்கள் இன்னுஞ் சிலநாளைக்கு பிழைத்திருக்கவேண்டுமானால், குந்திதேவியின் புத்திரனுக்குப் பாதிராச்சியத்தைக் கொடுத்து, உங்கள் வம்சஜனுபகனாகிய வீஷ்மாச்சாரியா ரென்னும் வரதனுடைய செந்தாமரைக் கமலம் போன்ற திருவடியில் வணங்கி, அவருடைய கடைக்கண்ண னருள்பெறுவீராகில்; சிந்தனையில்லாமல் ஜீவதிசையாய் உயிர்த்திருப்பீர்கள். என்று சுடச்சுட பற்பல வார்த்தைகளை துரோணாச்சாரியர் சொன்னார். அதைக்கேட்ட துஸ்வாசனனவன் நாணமென்னுந் துன்பமேட்டின்மேல் விழுந்து, திடதயிரிய பராக்கிரமுந் தாழ்ந்து, மறுமொழி யொன்றுஞ் சொல்லாமல், அந்த இடத்திலும் நிலைத்து நில்லாமல், மீண்டு வந்தவழியே திரும்பிப் போனான்.

அந்த வேளையிற் பாதியருள்பெற்ற சாரதியானவர், தேர்செலுத்த வீரவில்லைத்தாங்கி, போர் முகம்வேக நேர்முகமாகச் செம்பொன் மலை போன்ற தேரேறி அம்புவி நடுங்கும்படியாய் யதுகுலசாத்தகி வரும்போது, துரியோதனன் தம்பியாகிய துன்முகனனவன், அனேகவரசர்களையும் நால்வகைச் சேனைகளையுங் கூட்டிக்கொண்டு, சாத்தகிக்கெதிர் சென்று நின்று தடுத்து, ஆயிரமாயிரமென்னும் அநேகமுகங்களையுடைய அஸ்திரங்களை எடுத்து, விஸ்தாரமாகத் தொடுத்து, அண்டமுகடுத் தெரியாமல் நிறைத்து, மண்டலங்களின் வழியாவு மறைத்துப் பரப்பினான். அதைக்கண்ட கொண்டல் வண்ணனுடைய தம்பியாகிய சாத்தகியானவர் விண்டலங்குலுங்க வின்னாணி விட்டெழும் பொன்னான கணைகளால் அந்த துன்முகன் தொடுத்த தொடைகளைப்போக்கி வீரமீளி போற்சீறி மேலாகத்தாக்கி, தேர் - குதிரை - சாரதிமுதலிய யாவையு நீக்கி, சல்லடைக்கண்களாக தேகமெல்லாம் துளையாக்கினார். அதனால் களைத்துச் சோர்ந்த துன்முகனைப் பார்த்து நானொரு வார்க்கியஞ் சொல்லுகின்றேன் கேள் என்று எச்சரித்து மேகம் நடுங்கும்படி வின்னாணியடித்து, மின்னலொடுங்கும்படி கணைமழை பொழிந்து, சத்துருக்களெதிர் உக்ரநரசிங்கம்போல எதிர்த்தழிக்குந் திறலினைக் காட்டிய சிங்கக்கொடி நாட்டிய தேரினையுடைய பங்கமில்லாச் சாத்தகியானவர் பொங்கத்துடன் இதனைச் சொல்லத்தொடங்கினார்.

அடா துன்முகனே! மின்னற் கொடிபோல் ஒசிந்த இடையும், வன்னபணியால் இசைந்த உடையும், அன்னப் பேடைபோல் அசைந்த நடையும், சொர்னத் தூண்போற் பசந்த தொடையும், வன்னக்காவி வரிக்கட்டிடையுமுடைய திரௌபதியை ராஜசபைக் கிழுத்துவந்த நாளையில், மகமேருவின் சிகரத்தை முறித்த தன் தந்தையாகிய வாயுவின் பலத்தைப் பொறுத்த வீமசேனன், உங்கள் நூறுபேரையுங் கொல்லுகிறேனென்று சொல்லிய சபதம் ஒருக்காலுங் குறையாதல்லவா? அப்பா! ஆகையால், நானுன்னைக் கொல்லப்படாது. துடிதுடிக்கக் கொல்லும் பெருந்தெய்வமாகிய வீமசேனனுக்கு வேண்டிக் கொண்டு தண்ணீர் தெளித்துவிட்ட சண்டைக் கடாவைப்போன்ற நீங்கள், கேடுகாலம் வருகிற வரைக்கும் பீடுகோல லோபியர் பொன்னைக் காக்கும் தன்மைபோல், உங்கள்

உயிரைக் காப்பாற்றிக்கொண்டு ஓடிப் பிழையுங்கள் என்றுரைத்து, உடனே அவனை உரக பாணங்களை விடுத்து விரைந் தோட்டினுர் பொன்போற் பிரகாசிக்குஞ் சிங்கக்கொடிகள் நாட்டிய பூந்தேரினையுடைய சாத்தகி. அப்போது துன்முகனுனவன், அச்சாத்தகியின் பாணங்களினு லடிப்பட்டு மெலிந்தோடுகின் றதை அண்ணலாகிய அரவக்கொடிக்கதிபன் கண்டு ஆச்சரியங்கொண்டு, ஐயோ! என் தம்பியாகிய துன்முகன் சாத்தகிக் கிளைத்து தடுமாறி வருகின்றுனே! இதைப் பார்த்திருக்கின்றீர்களே? ஓ பப்பரர் முதலிய பார்த்திபர்களே! இவ்வேளை அச்சாத்தகியை வளைத்து யுத்தம் பண்ணுங்களென்று வேண்டிக்கொண் டனுப்பினுன். அவ்வரசனுடைய ஏவலினுற் பரித்துப் பூரித்த தோள்வலிபெற்ற பப்பரர் - யவனர் - சீனர் - ஆரியர் - வீரியர் - மிலேச்சர் முதலாகிய போர்களெல்லாஞ் சக்ரவாளத்தைச் சமுத்திரம் வளைந்ததைப்போற் போர் திறத்துடன் வந்து சாத்தகியை தகைந்து, காலாக்கினி உருத்திர கோலாகலமாலையாய் கடுஞ்சரங்களை தொடுத்து, கண்சிவந்து, எண்சிவந்து, விண்கலங்க, மண்குலுங்கப் போர் புரிந்தார்கள். அப்படி போர்விளைத்த அவர்களையும் அவர்கள் விடப்பட்ட அம்புகளையும் கண்ட சாத்தகியானவர் நிறமும் - பலமும் - திறமும் பெற்ற நெடுஞ்சிலை வளைத்து, நெறநெறென ஆயிரம் பதினுயிரங்கோடி நெருப்புக் கணைகளை வாரியிறைத்து, அவர்களாற் றெடுக்குங் கணை மாறிகளைக் குறைத்து, கிட்டிமுட்டிய பேர்களையெல்லாம் வெட்டி மடித்துக் கீழ்மேலாகப் புரட்டினுர். இப்படி புரட்டியபோது, சமுத்திரம்போலோடு மிரத்த வெள்ளத்திற்குப் பிணங்களினுற் சேதுபந்தனஞ் செய்துக்கொண்டு, போர்த்திறம் விட்டு குணங்கெட்டு ஓடிய பூபதிகளையெல்லாம் நிணச்சேற்றிற் குளிக்கப் படுத்தி, அழகிய பூமி முழுவதும் உதிரச் சிவப்பேறும்படியாய் நிதானமாகிய அமர் விளைத்து நெடுமாலுக்கிளைய அச்சாத்தகி வராநின்ற யின் நிர்வாகத்தை எவ்விடங்களிலும் நின்ற எரிபடை வீராளும், இருநிலத் தரசர்களும் பார்த்து, அவரை யெதிர்த்து போர்புரிந்து யானைக்குமுன் னெதிர்த்த பன்றி படும்பாடு பட்டினைத்தும், இடைக்கிடை கும்புகும்பாக வந்து வளைத்தார்கள். அவர்களை தொடை படும் அம்பாலடிக்க, அதனுலவர்கள் களைக்க, மறுபடியும் வெட்கமில்லாமல் மேலிட்டு வருவோர் பக்கத்து நீழல்போற் பட்டழிந்தொ துங்கப் பகைகளைந்து கடந்து, தடையிலாம னடந்து, தருக்கிச் செருக்கி மும்மதம்பொழியு முனைவேழம்போல் தனக்கு தமயனுகிய நாரணனும் நரனும் இருக்கும் இடத்தை நோக்கி தாராளமாய் வந்துக்கொண் டிருந்தார் ஜயவீரப்பிரதாப சாத்தகியானவர்.

### தருமராசன் சாத்தகி வராமையால் வருந்தி வீமனையேவ, அவன் பல வாய்மைகள் கூறித்தடுக்க, அதற்கு சமாதானங்கூற வீமன் சோல்லுதல்

இவர்சரித மிப்படியிருக்க, மறுபடியும் முரசக்கொடிக் கதிபனுகிய தருமராசன் மனம் வருந்தி, தனக்கெதிர்நின்ற தம்பியான வாயுகுமாரனது மதிமுகத்தைப் பார்த்து, அப்பா! துரியோதனன் கட்டிய அணிமுகத்தினிறைந்த மன்னவரென்று சொல்லாநின்ற சேனு சமுத்திர நடுவிற்சென்ற உன் தம்பியாகிய அருச்சுனனும், எம்பெருமானுகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியும் எப்படியானுர்களோ? அல்லது என்னபாடுதான் படுகின்றனர்களோ? எவ்விதமா யிருக்கின்றுர்களோ? ஒன்றுந் தெரியவில்லை. ஓ உத்தமனே! சாற்றுதற்கரிய சற்புத்திரனுகிய சாத்தகியை யனுப்பிப்பார்த்து வரச்சொன்னேன். அவன்போய் அவர்களைச் சேர்ந்து கண்டதும், காணுததும், நடுமத்தியிற் றியங்கியதும் இன்னவிதமென்று தெரியவில்லை. இன்று சாயங்காலத்துக் குள்ளாகச் சயிந்தவனைக் கொல்லுகிறே னென்று சபதங்கூறிய அர்ச்சுனனுடைய உறுதிமொழி நிறைவேறும் படியாய் யிருக்கவில்லையே: சூரியபகவான் மேற்றிசையிற் சாய்ந்தானே: இதுவரையிலும் ஜெயம்பெற் றிருப்பார்களாகில், கிருஷ்ணர்ச்சுனுளுடைய ஜெயசங்கமிரண்டும் முழங்கவேண்டுமே: அப்படிக்கில்லாமல், நம்பெருமானுகிய கிருஷ்ணமூர்த்தியின் பாஞ்சசன்ய மாத்திரம் ஏகதேசத்தில் முழங்கிற்றே: அவ்விடத்தில் அர்ச்சுனனுக்கென்ன அபாயமோ தெரியவில்லை. ஆகையால், என்மனதிற்கொண்ட சந்தேக நிவாரண மாகும்படிக்கு மேலிட்டபகைகளை வெல்லும் பலத்துடன் நீயுஞ்சென்று, சங்கதியறிந்து எனக்கு தெரிவிக்கக் கடவை தம்பீ வீமசேனனே! என்று தர்மநந்தன ருரைக்கவும், அந்த வசனத்தைக் கேட்ட வீமனுனவன், உடல்பதறி பெருமூச்சு விட்டு, பிரக்கினை தப்பிப் பெருங்கோபங் கொண்டு, ஓர் கொதிப் பெழுந்து, உடனே குளிர்ந்த சலம்போலாறி,

மனந்தேறி தர்மனைநோக்கி, அண்ணா! பிராமணராகிய துரோணாச்சாரியர் அளவிறந்த சேனைகளைக் கொண்டு தேவரீருடனெதிர்த்து நெருங்கிய ஜெயபேரி வாத்தியத்துடன் போர் புரிந்து வம்பாக உம்மைக் கட்டிக்கொண்டு போவாரென்று தம்பியானவன் என்னை நம்பி தமக்குக் காவலாக வைத்துப் போயிருக்க, எனக்கிளையவனுடைய வார்த்தையைத் தள்ளி உமக்கு ஆபத்துவரும்படியாய் நான் இவ்விடம் விட்டுப் போவது வீரமோ? அல்லது தர்மமோ? நானப்படி போகப்படாது. மேலும், நீர் ஏதொன்றுக்கும் விசனப்பட வேண்டாம். நம்து தம்பியாகிய வில்விஜயன் வல்லபம் உமக்கு நன்றாய்த் தெரிந்திருந்தும் நீரேன் சிந்திக்கின்றீர்? ஓ தருமசொரூபியே! நமது தம்பியாகிய காண்டீபனுடனெதிர்த்து போர் புரியும் இயல்பினையுடைய பேர்கள் ஈரேழு பதினான்கு லோகத்திலு முண்டோ? இறைவனே! அப்படியல்ல வென்றாலும், நமக்கு இஷ்ட தெய்வம்போன்ற கிருஷ்ணமூர்த்தி இருக்கிறவரைக்கும் ஒரு பொல்லாங்கு நடக்குமென்று சொல்லச் சொப்பனவஸ்தையிலும் நினைக்கக் கூடுமோ? ஓ தோன்றலே! மேலுஞ் சர்வலோக கண்டனாகிய சாத்தகியை மதிக்கப் போமோ? ஓ சர்வபூமா! வேறுசிந்தனை வேண்டாம். நமது தம்பிக்கு ஒருகுறைவுமில்லை; தேவரீரைவிட்டுப் பிரிவேனேயாகில், ஏதோ ஒரு குறைவு வரும்போலிருக்கிறது; அக்குறைவோ உம்மைவிட்டுப் பிரிவதனா லுண்டாகியதால் வரலாமேயல்லது, வேறொன்றினாலும் வரமாட்டாது. ஓ விஞ்ஞான வேந்தனே! ஓ வேதனெறியுணர்ந்த சாந்தனே என்று இன்னுமோர் திருஷ்டாந்தமுஞ் சொல்கிறான்.

அண்ணா! பஞ்சவடி தீரத்திலிருந்த ஸ்ரீ ராமமூர்த்தியானவர், மாயமானைத் துரத்திக் கொண்டு போகும்போது இளையபெருமாள் தடுக்க, அவரதைக் கேளாமற் சென்று அந்த மானையடிக்க, அம்மானானது லட்சுமணனுக் கபயமென்று கூவிய சொல்லினால் அண்டம் வெடிக்க, அதைக்கேட்ட சீதாபிராட்டியாருடைய மனந்துடிக்க, அவ்வம்மன் இளைய பெருமாளைப் போய்ப் பார்க்கச்சொல்லி சில வார்த்தைபடிக்க, அவர் சக்கரவர்த்தி திருமகனுக்கு ஒரு குறைவும் வராது தல்லியென்று தாயார் வார்த்தையைத்தடுக்க, இதனாற் கோபித்துக் கொடுமையாகிய பழிச் சொல்லினால் முடுக்க, அதுகேட்டு இளைய பெருமாளுக்கு இடதுதோள் துடிக்க, அப்போது ஹரி!ஹரி! என்று எழுந்து கண்ணீர் விட்டழுது, என் தாயே! இதுவரையிலுங் குறைவில்லை. தேவரீரைவிட்டு நான் பிரிவதினால் இனிமேல்வரப் போகிறதுதான் குறைவு என்று சொல்லி நடந்தபோது, இராவணனால் நேரிட்ட தன்மைத் தங்களுக்கு தெரியுமல்லவா? ஓ திங்கள் குலக்கொழுந்தே! அப்படியாக ஒரு வேளை விளைந்தாலும் விளையும். அப்படி நேரிடுமாகில், தம்பியாகிய அர்ச்சுனனானவன் என் முகத்தைப் பார்த்து, அண்ணா! என்னுடைய சாமர்த்தியத்தை நீரறியமாட்டீரா? செவ்வையாய் அறிந்திருந்தும் பெரிய அண்ணா அவர்கள் ஏதோ பச்சாதாபத்தாற் சொன்னபோதிலும், நான் சொல்லிவந்த வார்த்தையின் வண்ணம் பாதுகாத்திராமல் வந்து விட்டீரே: இப்போது இப்பேர்ப்பட்ட மோசம் வந்து விட்டதே: என்று கேட்பானாகில், நான் அவனுக் கெதிரில் தலைகவிழ்ந்து, தைரியங் குறைந்து, சகலமுமிழந்து, தாவெழுந்து உத்தரவு சொல்லுவதற்கும் வகையில்லாமல், மற்றவரும் நகைக்கும்படியாய் நேரிடுமல்லவா? ஓ புத்தியிலுயர்ந்த உத்தமனே! எனக்குக் கட்டளையிட்ட உத்தரவை மன்னிக்கும்படிக்குக் கேட்டுக் கொள்ளுகிறேனென்று அவருடைய திருவடியில் தன்னுடைய மணிமுடி படியும் படியாய் வைத்து வணங்கினான் விருகோதர ராஜன். அப்படி வணங்கிய வீமசேனனை எடுத்தணைத்து, அப்பா! நீ சொன்னதனைத்துஞ் சரியே: ஆயினும், தமயன் வாக்கியத்தைக் கேட்டு நடக்கும்படிக்குத் தர்மமிருக்கின்றதா? இதல்லாமலும், துரோணாச்சாரியர் வந்து என்னைப் பிடிக்கும்போது இத்தியாதி சேனைகளுக்கும், துரியோதனனுக்கும், சேனாபதியாகிய அவருக்கும் அஷ்டமத்துச்சனி பிடித்ததென்று நீ நிச்சயமாய் நினைக்கக்கடவை. ஐயனே! இன்னமுங்கேள்: நமது மைத்துனனாகிய சேனாபதி திர்ஷ்டத்துய்மன் முதலாகிய பேரும், இளையவர்களாகிய நகுல சகாதேவர்களும், எனக்குக் காவலாக இருக்கிறார்கள். இவர்கள் புரியும் போர்த்திறங்கள் இலேசாகியதல்ல; ஆதலால், எனக்கொருதாக்ஷியும் வராது. நீ ஆழியாகச்சென்று, சர்வசாட்சியாகிய கிருஷ்ண மூர்த்தியையும், மாக்ஷிமைபெற்ற கிரீடியையும், தாட்சியில்லாமல் உன் கண்ணாரக் காட்சியாகக்கண்டு சந்தேக நீங்கி, என்மனதிற்குச் சாட்சியாகும்படியாய்ச் சிங்க நாதகோஷமுஞ் செய்து என்னிரு செவிக்

கழு தூட்டுவையாகில்; அப்போது என் மனந்தெளியும் என் சிந்தைக்கிசைத்த சிலாக்கியனே! நான் சொல்லும் பேச்சுக்கு ஆக்ஷேபனை சொல்லாதே என்று அறன் மகனுரைக்க, அந்தமொழியை வீமசேனன் சிரமேற்கொண்டு, ஜன்மாந்திர வினைவழியெதுவோ? அந்தவழியே வரும் பழியென்று நினைத்தவனாய், கள்ளக்கமில்லா மனத்தினையுடைய அவ் வீமசேனன், பலம்பொருந்திய வீராதிவீர அரசர்களுக்கெல்லாந் தருமராஜன் பத்திரம்: பத்திரம்: என்றுபக்குவமாக வற்புறுத்திச்சொல்லி, மனோதிடங்கொண்ட சேனாபதியென்னு மைத்துனனுடைய சத்தியவசன உறுதியுங் கேட்டுக்கொண்டு, தம்பிகளாகிய நகுலசகாதேவ ரிருவரையுந் தமயனைச் சூழ்ந்து நீங்காதிருக்கும்படியாய்த் திட்டப்படுத்தி, தமயனுரைத்த வாக்கியம் பின்னிட்டுத் தள்ளத் தான் முன்னிட்டுப் பணிந்து பிரையாண விடைபெற்றுக்கொண்டு, தனக்கொப்பாகிய தோள்வலிபெற்ற தரணிபரநேகரும், நிலைபெறப்பொருந்திய ரதகஜதுரக பதாதிகள் முதலிய நால்வகைப் படைஞரும், ஒன்றாய்த் திரண்டு நெருங்கி இருபக்கங்களிலும் பின்னு முன்னுஞ் சாயைபோற் றொடர்ந்து அடர்ந்துவரும்படியாய்; கொக்குத் தளத்திற் ராஜாளிபுகுந்ததைப் போலும், யானைக்கூட்டத்தில் ஆண்சிங்கம் பிரவேசித்ததைப் போலும், ஆட்டுமந்தையிற் காட்டுப்புலி கலந்ததைப்போலும், ராக்ஷசப்படையில் ராமபாணம் நுழைந்ததைப்போலும், துரியோதனனுடைய சேனாமுகத்திற் பெரியோனாகிய பீமசேனன் புகுந்தான்.

### துரியோதனன் சகோதரரில் எழுவர்வதை

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராசனே! இப்படி வீமசேன மகாராஜன் மகா விக்ரமத்தோடு புகுதலும், அப்போது தகுந்த வீராதி வீரரெல்லா மெதிர்த்து, திகாந்தமதிர்ந்து போரும்படிக்கு யுத்தஞ்செய்தார்கள். அச்சமயத்தில், கலிங்கர் - குலிங்கர்-தெலுங்கர்-புலிங்கர்-கன்னடர்-கௌசலர் - கரசடர்-கர்ஞடர்-யவனர்-ஆரியர்-சோனகர்-சீனர் - குகுதர்-பப்பரர்-மரகதர்-மாளவர்-மராடர்-மலையாளர் முதலிய பற்பல பாஷைப் பார்த்திபரும், ஆர்த்துவேர்த்து விதிர்விதிர்த்துப் போர் புரிந்தார்கள். அக்காலையில், காற்றின் மகனாகிய வீமசேனன் முனைந்து, அவர்களைக் கால்மாடு தலைமாடாகப் பிளந்து மண்ணுலகில் நீக்கி, விண்ணுலகிற் போக்கி, வட்டமாமகிதலம் படீரெனவெடிக்க, அட்டநாகமுந் திடீரெனத் துடிக்க, திக்கெட்டும் உளகரி தபாலெனக் கக்கி விக்கிட்டு, மீன்கடல் குபீரெனக் கொதிக்க, கடகடதடதட படபடவென்று தேரைச் செலுத்தி, வயவீரரைத் துரத்தி, மேலாக விரைந்து, காலாளைக் களைந்து, கடுவேகங் கொண்ட காற்றைப்போற் கலக்கி ஆர்ப்பரித்து வந்தான். அப்படி வரும் வீமசேனனைக் கண்ட துரியோதனனுடைய தம்பிமார்களில், விந்தன் - விந்தரன்-சுசருமன்-சுதற்சனன் என்னும் நால்வரும், ரத கஜ துரக பதாதி முதலிய நால்வகைச் சேனைகள் சூழும்படியாக வந்து யுகமுடிவிலே ஓங்கி, இருவரையும் பெருங்கடல்போல் இறைந்து, இடையிடையே தனித்தனி தகைந்து, முல்லைப்பகழி-குல்லைப்பகழி-மல்லிகைப்பகழி - சில்லிகைப்பகழி - நற்பலப்பகழி-உற்பலப்பகழி-குமுதப்பகழி - அமுதப்பகழி - கூரிலைப்பகழி-ஈரிலைப்பகழி இவை முதலியவையும், சூலாயுதம்-வேலாயுதம்-வாளாயுதம்-தோளாயுத முதலாகிய ஆயுதங்களைப் பூசித்து வணங்கி யெடுத்து, வல்லமையில் வல்லவராகப் பழகியவரைப்போற் றங்கள் வல்லமையுடனே மல்லலந் தோளினையுடைய வாயுகுமாரனை யடுத்து, எல்லையில்லாமற் றொடுத்து அமர் கொடுத்தார்கள். அப்படிக் கொடுத்தபோது, குமர குருபரனுக் கொப்பாகிய கோமான் குந்தி புத்திரனாகிய வீமசேனனென்னுஞ் சீமான் குமாளமிட்டுக் கோபித்து, கொடுவிடப் பகழியைப் பூசித்துக் குறைவில்லாமற் றொடுத்தான். உடனே தன்பேரில் வந்த பாணமும், அவர்கள் கைபிடித்த வில்லும், அவர்களேறிய ரதமும், அதிற்பூட்டிய குதிரையும், அக்குதிரையை யோட்டியசாரதியும், தாங்களுமழிந்து, அவர்களுடைய தலைகள் சென்று மேகங்களைக் கலைத்தலைக்கவும், தேகங்களிலிருந்து வழியும் இரத்தவெள்ளம் பெருகியோடிப் பெருங்கடலை மலைத்தலைக்கவும் உலைந்தொழிந்தார்கள். இப்பாலிவர்களின் சகோதரராகிய குண்டலபோகி, தீர்க்கலோசனன், சித்திரசேனன் என்னும் இவர்கள் மகாபலசாலிகள். படையென்றால் முந்தி இடையாதிருக்கும் பராக்ரம வீரர்கள். எமதர்மராஜனும் இவர்களுக்கு எதிரில் என்றைக்கும் வரக்கூடாது. ஒருவேளை வழிதப்பி வந்தானாகில், அந்த எமனுக்கெமனாய் ஏற்பட்டு தோற்பில்லாமல் ஜெயம்பெறுநின்ற சுத்தவீரரான், தங்கள் தமயனார் நால்வருங் காலமகனாகிய வீமனாலிறந்து

தைக் கண்டு மிகவும் வெகுண்டு, வெற்றிமாலை பூண்டு விரைவாகத் தூண்டும் விதவிதமாகிய பாணங்களைக் கொண்டு வேண்டிய போர் மூண்டு, பாண்டுமகன் றொடுத்தக் கணையால் தேகங்கீண்டு புரண்டு அரண்டு மருண்டு வறண்டு தோன்றிய மூன்றுபேரும் ஈண்டு மாண்டு போனார்கள்.

### வீமசேனன் தன்னைத் தடுத்தெதிர்த்த துரோணாச்சாரியரைத் தேரோடுத் தூக்கி ஆகாயத்திலெரிதல்

இப்படி துரியோதனன் தம்பிமாரெழுவரால் முடிந்து வாயுபுத்திரன் விடுத்த வாளியால் மடிந்தபோது, தரணீசர்முதலிய சேனைவீராளுடன் கட்டுப்பாடாய்க் கட்டிய யூகங்கள் சட்டெனக் கலைந்து புறமிட்டோடிச் சாய்ந்தார்கள். இப்பாற் பெருங் காற்றுடன் கலந்த செழுந் தீயைப்போல் வீமசேனன் அப்பாற் செல்லும்போது, மறங்குலாவிய திறங்களையுடைய வயவீரர்கள் வந்து வளைத்து, வீமனுலிளைத்து, மண்ணும் விண்ணுமதிர்ந்து, கண்ணு மெண்ணுங் கலங்கி, ஒண்ணுந்தெரியாமல் நண்ணுயிருந்த தேகம் புண்ணாகி, மண்ணோடு மண்ணாய் மடிந்தார்கள். இவ்வாறிவர்களை வென்று வாள்விழி செவந்து வாகுவுயர்ந்து வாளரிபோலெழுந்து செல்லாநின்ற ஆளரியைக் கோளரியாக துரோணாச்சாரியர் பார்த்து, ஐயோ! இன்று நாம் கட்டிய யூகங்களைப் பிளந்து, முன்னேபோன அர்ச்சுனனை தேடிப் பின்னே போன சாத்தகியையும் நாடி இவனும் ஓடி பக்கத்திற் சேர்ந்து கொண்டானாகில், காற்று நெருப்புங் கலந்ததைப்போல் மூவருங்கூடி நமது படைமுழுமையும் நாசப்பட்டுப் போகும்படி நலித்து விடுவார்களே: என்று விசாலமாகிய வில்லை வணங்கி, சமர்முகத்தில் முந்தி வீமசேனனை வளைத்து, சப்த சமுத்திரத்தையுங் குடித்திடித்தெழுந்த சப்தமேகமும் பொழியுஞ் சலதாரையைப்போற் சரதாரை சொரிந்து, எங்கணும் விரைந்து, அங்கமர் புரிந்து வருந்துகின்ற தங்கள் படைவீரரைக் கண்டு, நீங்கள் துடியாய் வாருங்கள். வந்து நம்படையைக் காருங்கள். என்றிறைந்து பறந்து பறந்து பாடுபட்டார் துரோணாச்சாரியர். அவரை வீமன் கண்டு, நமக்கும் இவருக்கும் யாதொரு பகையுமில்லை. மேலும் இவர் நம்முடைய விற்குரு. ஆதலால், இவருடன் எதிர்த்துப் போர்புரிவது ஞாயமல்ல. என்று கோபமடங்கி ஆசாரியரை வணங்கி, ஐயனே! தேவரீரைப் பகைத்துச் சமர்கொடுப்பது அன்னீதியே யல்லாமல் நன்னீதியல்ல. எங்களுக்கு நீர் முதற்குருவானவர். உமது பாதத்தை உள்ளத்திலுஞ் சிரத்திலுங் கொண்டிருக்கிறோம். ஓ உத்தமனே! என்று அவர் பதாம்புயத்திற் கதாயுதன் வணங்கவும், இதனைக்கேட்ட தனுவேதியர் நகைத்து, இன்றையதினம் எவர்களாகிலும் ஏமாறக்கூடுமோ? ஒருக்காலுங் கூடாது. நீ எனக்கு எதவாகிய உபசாரஞ் சொல்லவேண்டாம். வஞ்சனையில்லாமல் நெஞ்சுறுதியாய் மிஞ்சி ஒருகை பார்த்துவிட்டுப் போகலாம். ஓ அஞ்சனுக்கிளைய மகனே! என்று கொஞ்சமேனும் இரக்கமில்லாமல் வெஞ்சிலையை வளைத்து, செஞ்சுடர் மாருதம்போல் அஞ்சரீகமென்னும் அடலாஸ்திரங்களை விடுத்து, அந்த வீமனுடைய தேகத்தைத் துளைத்துக் கெடுத்துப் படாத பாடு படுத்தினார். அப்போது வீமசேனனாகிய வீரதீரன், இவருடன் அமர் புரிந்தால் காலதாமிசமாய்ப் போகுமென்று கருதி, பதிலுக்குப் பாணங்களைத் தொடுக்காமல், வாய்திறந்தொரு மொழியுஞ் சொல்லாமல் மௌனமாயிருந்து, தன்மீது வந்து விழும் பாணங்களை எல்லாம் இருகரத்தாலும் அடித்து விலக்கி, பிடித்து நெறித்து, கசக்கி முறித்து, திசைக்குளெறிந்து, கண் சிவந்து கொதித்து, மீசை முறுக்கி யுறுக்கி நெறித்துப் பார்த்து, திடுக்கென்று தேரைவிட்டிழிந்து, கிடுகிடென நடந்து செழுஞ்சிலைக்குரு ஏறி நடத்திய தேருக்கருகாமையால் வந்து, தனதிரண்டு கையால் உருளையை வாரிக்கொண்டு, கதிர்மதியுடுக்கள் கதியழிந்தாடக், காரின மனைத்துங் கலைந்த கன்றோடக், கரகரவென்று ஆகாய வெளியில் வீசியெறிந்தான். அப்போது அவ்வாகாயத்தில் வேடிக்கை பார்த்திருந்த தேவர்கள் அஞ்சிப் பயந்து அப்பாலொதுங்கி யோடவும், முற்காலம்போல் அந்தர மளாவிய விந்தயகிரி வளர்ந்ததோ வென்று நவக்கிரகங்களுஞ் சிந்தை நையும்படியாகவும், அத்தேரானது விண்டலம் வரைக்கும் புகுந்து, கீழது மேலதாய்க் கவிழ்ந்து, மண்டலத்தில் விழுந்து, சாரதியங்க நெரிந்து, சக்கரங்களுடைந்து உதிர்ந்து, அச்சுடன் கடையாணியதிர்ந்து, ஆலவட்டங்களும் பறிந்து, குதிரைகளின் குடற்களுஞ் சரிந்து, குற்றுக்கால்களும் முறிந்து, கொடியுங் குடையுந் தறிந்து, கொம்பை

யும் பொம்மையு மழிந்து, வில்லும் பாணமு மறந்து, வேதியன் எலும்பும் ஒடிந்தது.

### வீமசேனன் சாத்தகியை வழியிற் கலந்து கூடிக்கொண்டு போய்க் கிருஷ்ணார்ச்சுனரைக் காணுதல்

இவ்விதமாக வீழ்ந்த துரோணாச்சாரியர் மெத்தென வெழுந்து, இத்தருணம் பின்னிட வேண்டுமென்று தன்னுடைய வேறு ரதத்திலேறி நின்று, குன்றுபோற் கட்டிய தமது படைவீடு தேடிக்கொண்டு போவதாயினர். அதை தூதர்களிலும் ஏழுபங்கு அதிகமாகிய பெரு வஞ்சக நெஞ்சினையுடைய போர்வீராள் கண்டு, துரோணாச்சாரியருக்கு உபருளாய் எண்டிசையையும் புடைசூழ்ந்து, ஈரேழு மண்டலமும் புதைந்து தத்தளிக்கச் சலப் பெருக்குமுடைய தரங்கநெடுங் கடலானது, சர்வசம்ஹார காலத்தில் எங்கும் பொங்கும் ஓசையைப்போ லிரைந்து, உள்ளும் புறமும் வெதும்பக் கொதித்த திரிகர்த்தன் சினங் கொண்டு வீமனைவளைந்து போர்புரிந்தார்கள். அவர்களையெல்லாஞ் சுழற்காற்றிற் சுழலுந் துரும்புபோற் போக்கித் திரும்பியபோது, ஆரபார வீரகாளம்-சுரிமுகச்சங்கு-கோணக் கொம்பு - தாரை - பேரி - பூரி - வீரசின்னம்-பம்பை இவை முதலாகிய வாத்தியங்க ளெல்லாம் மேககர்சித்ததினு மைந்துபங்கதிகமாக முழங்கும்படியாய், பூரீசனும் புகழப், பிரதாபராஜனும் போர்மல்லரும் வந்து, மாரிபோற் கூரிய வெங்கணைகளை வாரிச் சொரிந்து, விஷாக்கினி செறிந்து வேகும்படியாய் உலகஞ் சாகும்படியாய், நிலைபெற்று அமர் தொடுத்தார்கள். அந்த மலையொத்த புயத்தினை வாயுகுமாரனாகிய வீமசேனராஜன் கண்டு, ஆயுங்கணை, மழைகளைத் தேயுவெனத் தொடுத்து, அவரவர்களு முகமாறி அகமாறி ஒடுங்கியோடி யிளைக்க, ரதகஜதுரகமு மிழக்க, நாணியிற் பாணமுமிருக்க, யாவருங் கோகோ வென்னு மிரைச்சலுடன் கூட்டங்கூடி ஓட்டங் கொள்ளும்படிக்கு மாட்டிவிடுத்து, கடுங் கோபத்தாற் கடுகடுத்து, நீண்டபுயங்களிமிரச் சிரித்து, நீலவண்ண நிறங்கொண்ட நரநாராயணரிருவரையும் நேர்தேடி வராநின்றனன். அப்படி வரானின்ற அவ்வீமசேன மகாராஜனுடைய ரதமுமிவனுக்கு முன்னுடிவந்த சாத்தகி மகாராஜனுடைய ரதமும், ஆகிய இவ்விரண்டுந் திரண்ட மலைபெயர்ந்து வருவதைப்போற் சக்கரம் புரண்டுருண்டு முன்னும் பின்னுமா யோடிவருவதை, நச்சரவக் கொடியாடிய உச்சிதமாமுடி சூடிய ராஜராஜேஸ்வரனாகிய துரியோதனனுடி, மனந்தளர்ந்துவாடி, பற்கடித்து விற்பிடித்துப் பரதவித்து அஞ்சியிளைத்தான். அந்தவேளையில், அஷ்டமகா நாகங்களினுடைய விஷாக்கினி வெப்பமுஞ் சூரியனுடைய தீட்சண்யமுஞ் சாந்தமாகும் படியாய்க் குளிர்ச்சியுடன் உலகத்தி லுலாவிக் கொண் டிராநின்ற வாயுவின்வேகந் தலைசாய்ந்துபோகவும், திசைகளுக்காதாரமாக வமைந்த திக்கஜங்களெட்டுந் தேகாபிமானத்தை விட்டு மெத்த மெலிந்து நலிந்து வாடவும், அதிராமல் எதிரேறிய பதினென்பாஷை மன்னரும் ஆகங்கலங்கித் தேகம் விலங்கவும், குருக்ஷேத்திரத்தி லிராநின்ற யாவரும் விகாரங் கொண்டு தலைமயக்கேறவும், அளவிடுதற்கரிய ஆழமான கடலைக் கிழித்தோடுங் கப்பலுக் கொப்பாகிய கடிய வேகத்தேரைக் கதாயுதனுஞ் சாத்தகியுஞ் செலுத்திக்கொண்டு, கார் போற் கறுத்த கடனிற வண்ணனாகிய கண்ணனுங் காண்டீபனும் உலவிச் செல்லுமிடத்தை நாடி யோடிவந்தார்கள். அப்பொழுது உலக மயங்கும்படியா யோடிவராநின்ற இரண்டு தேரையும் நரநாராயண ரிருவருஞ் சமீபத்திற் கண்டு, தேவசங்கமுழக்கி, தேகம் பரவசத்தராய் மகிழ்ந்து, திணிந்த மலர்த்தாரணிந்த தீரவீரபுய புங்கவனாகிய தருமராஜனானவர், தமது க்ஷேமத்தை யறிந்துவரும்படிக்கு ஆக்ஞாபித்தனுப்பி வைத்ததென்று உணர்ந்து ஆனந்தங் கொண்டார்கள். அப்போது கதாயுதவீமனானவன் சூற்கொண்ட மேகம்போன்ற வடிவினரான கிருஷ்ணார்ச்சுனரைத் தன்னிரு கண்ணுங் களிக்கக்கண்டு, தன் தமயனாகிய தருமராஜனுடைய காதுகளுக்கு இவர்களின் க்ஷேமத்தை தெரிவிக்கும்படியாகப் பாரியசங்கத்தை வீரியமுடன் யிருகரத்தாலும் பிடித்து பம்பம்பம்மென முழக்கினான்.

### கர்னனும் விடசேனனும் பீமனால் முறிபட்டு புறங்கொடுத்தோடித் துரியோதனனிடத்து முறையிடுதல்

இப்பால், சோமன் - சூரியன் - அக்கினி- என்னு மூன்று சுடரும், உயிர்த்தீ - உதரத்தீ- கோபத்தீ என்னு மூன்றுதீயும், காருகபத்தியம் - தக்கணாக்கினியம் - ஆகவனீயம் என்னு மூன்றக்கினியும் ஓரிடத்திற் சேர்ந்ததைப் போல், இவர்கள் மூவருங்கூடி மகிழ்ந்து விளங்கி, அர்ச்சுன னொருபக்கம், வீமசேன

னொருபக்கம், சாத்தகி ஒருபக்கமுமாய் முனைந்து சென்று குதிரை செலுத்துஞ் சாரதித்தொழில்பூண்ட நந்த நந்தனனுடைய திருவடியைச் சிரத்திலும், உள்ளத்திலுந் தரித்துத் துதித்து, ஜெயிப்பதற்கரிதாகிய படைமேற்றாவி நெருங்கி சூழ்ந்து வளைத்து, வீரசிங்கம்-ஜெயபூரி-சிங்கநாதம் இவை முதலிய வாத்தியங்களை முழக்கி, ஆகாயத்தில் வேடிக்கை பார்க்குந் தேவர்களுடைய உள்ளம் மயங்கித் தியங்கி நடுக்குறும்படியாகி தீவரங்களுந் தெரிந்துகொண்டு, மண்ணும் விண்ணும் ஒன்றாகும்படி மனம்போனவழியே கலங்கி, சேனை நெருக்கத்தை விலக்கி வரும்போது, இந்தப் பாரைத் தாங்கும் ஆயிரம் பணாமுடிச் சேடன் போரைத் தாங்கமாட்டாமல், தலைநொந்து வலம்வந்து சுழன்றான். இவ்வுலகிற்கு எட்டாக ஏற்பட்ட திக்குகளனைத்து மருண்டு வெருண்டு கலங்கின. வடவாக்கினியின் வெப்பந் தணியும்படியாக ஓயாமல் அலையடித்துக்கொண் டிருக்கின்ற நதிபதியாகிய கடல் தளதளவென்று கொதித்து வெதும்பின. அப்போது மேலாகிய அண்டமும் பீறுண்டு திசைப்பாலர் முதலியபேரும் பசபசவென்று விழிக்கும்படியாய் போர் புரிந்து வாராநின்ற சாத்தகி வீமனென்னும் இவ்விருவரையும் அர்ச்சுனனுடன் சண்டை செய்து இளைத்தோடிய யாவருங் கண்டுசேர்ந்து, இவர்களுடன் போர்கொடுக்க நினைத்துவந்து வில்லெடுப்பதற்குமுன் தங்கள்மேல் ஓயாமற் பொழியும்படியாகிய சரமாரியினாற் களைத்து, திக்காலொருவராய் ஓடத் தலைப்பட்டார்கள். அக்காற் பிரதாப ருத்திரனைப்போல் நெருங்கி வந்த பேர்களையெல்லாம் நொறுங்க வடித்துத் தூறிப்போகாநிற்கும் வாயு குமாரனென்னும் வீமசேனனைக்கண்டசூரியகுமாரனாகியகர்னன், மனந்தாளாமல் முந்திவந்து சமர்கொடுத்தான்; வீமசேனனும் அவனுடனெதிர்த்துப் போர்புரிந்தான். இவ்விருவருங் கொடுமையுடையவர்களாய்ப் பகைத்து, கோபமதிகரித்து, வரிபொருந்திய வில்லை மளமளவென்று வளைத்து, வரத்தினாலுற்ற ஜெயமுற்ற, உரம்பெற்ற, அரம்வைத்த கூர்மையாகிய பாணங்களைப் பரிந்து தெரிந்தெடுத்து, ஒருவருக்கு ஒருவர் சமீபித்தடுத்து, விஷாக்கினி வெகுளியுடனெதிர்த்து, நேரோடுந்தேரும், தேரிற்பூட்டிய குதிரைகளும், அக்குதிரைகளை ஓட்டுஞ் சாரதியும், செங்கடப்பமலர் செவந்து மலர்ந்ததைப்போல் நெருங்கிய இரத்தவெள்ளம் நிரம்பிப் பாயும்படியாய் மெத்த முனைந்து அஸ்திரப் பிரயோகஞ்செய்து வருந்தியபோது, போர்முனைந்த போர்வீர பூபாலருடைய உடம்புஞ் சிவந்து, உதிரம் வழிந்து யுத்தபூமியில் இரத்தவாறுகள் அலையலைந்து, காடு - கரம்பு - மேடு பள்ளங்களிலும் வெள்ளமாய்ப் புரண்டோடியது. இப்படிக்குப் பலவிதமாக யுத்தங்களைச் செப்படிப்பவர்போற் செய்து வரும்போது, ஒப்புவமையில்லாத வீமசேனன், காமநாதன்போல் நின்று கொடுத்த கடுவேக அம்பினாற் சம்பிரமனென்னுங் கர்னனுடைய ரதத்திற்கட்டிய குதிரையிரண்டுந் துண்டித்துப் புரண்டு விழுந்தன. கச்சைக்கொடி முறியுண்டது. சாரதி தலைதறித்தது. தேருங் குலைந்து தெருப்பொடியாயது. சேமகவசமுங் கிழிந்தது. தேகமுந் துளையுண்டது. முழுமதிபோன்ற வெள்ளைக்குடை மூன்றாம்பிறைபோற் குறைந்தது. எந்தப் போருக்கும் அஞ்சாத அசஞ்சலனென்னுங் கர்னனுடைய நெஞ்சமழிந்து, பேரொழிந்து, சீரிழந்து, தார்குழைந்து, காலோட்டமாக வோடி, மிகவும் வாடி வீமசேனனுடைய பாணவேகத்திற் கெட்டாமற் புறங்கொடுத்துப்போவதானான். அதுகண்ட பலம்பொருந்திய விடசேடனென்னும் பால்யகுமாரனானவன், உள்ளங்கொதித்து, வள்ளலாகிய கர்னனுக்கெதிர்சென்றழைத்து, மனவருத்தத்துடன் தழுவி, நவமணியால் அலங்கரித்த விசாலமான தன்னுடைய தேரிலேற்றிக்கொண்டு, வீமசேனனாலடிபட்டழிந்த விதங்களைக்கேட்டு மேனிநடுங்கி, மிகக்கோபங்கொண்டு, ஆ! ஆ! விட்டேனா அந்த வீமனையென்று மிகுந்த திடங்கூறி, அணைகடந்த வெள்ளத்திற்குக் கரைகட்ட வந்தவனைப்போல் அந்த வீமசேனனுக்கெதிர்சென்றுநின்று, மீளவும் வெரித்து வெஞ்சிலைவளைத்து இருவரும் அவ்வொருவன்மீது அமர்புரிவதானார்கள். அப்போது பெருவயிரமுடைய வீமசேனன் அருவருப்புடனகைத்து, மலைபோன்ற தனது வில்லிலிருந்து உந்தும்படியாகிய பாணங்களினால் அவர்களேறி வந்த குன்றனையதேருந் துண்டுகளாயுதிர்ந்து, உடலதிர்ந்து, விழிபிதிர்ந்து, குடர்குலைந்து, தலைநடுங்கி, காலிலுள்ள கடுவேகங்காட்டி, வென்கொடுத்தோடும்படியாய் முடுக்கினான். அம்முடுக்கலுக்காற்றாதோடிய கர்னனும் விடசேனனுந் துரியோதனராஜனைக் கண்டு, அரசே! பெருமோசம் வந்தது. என்று தாங்கள் பட்ட

பாட்டையும், தங்கள் சேனைகள் கெட்ட கேட்டையும், வீமார்ச்சுன சாத்தகிகள் மூவரும் கூடிய பாட்டையுஞ்சொல்லி வருந்தினார்கள்.

துரியோதனன் துரோணனிடஞ் சென்று முறையிட, அவர் சில சமாதானங் கூறியனுப்புதல்

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! இவ்வாறு அவ்விருவரும் வந்து வருந்தியுரைத்ததை நாகக்கொடியோனாகிய துரியோதனன் கேட்டு, மனங்கன்றிக் கண்சிவந்து, கைத்திறலாசானென்னுந் துரோணாச்சாரியருக்கெதிர்சென்று பெருமூச்சுவிட்டு, விழிக்குழியிலிருந்து அனற்பொறி பறக்கும்படிக் குப் பற்கடித்து, ஐயா தனுர்வேதியனே! இப்போதென்னைச் சதிசெய்யுந் தன்மையோ? இதென்ன வன்மையோ? உகாந்த காலாக்கினி உருத்தெழுந்து அழகிய கானகத்தை எரித்தழிக்குஞ் சமயம்பார்த்து, அந்த அக்கினிக்கு வலுவேறும்படியாய் நெய்சொரிந்து, வாடைகாற்றுஞ் சகாயமாய்வீசி யடிக்கச் செய்து, தீயையதிகரித்து வளரச்செய்யு நற்றுணையைப்போல், தனஞ்செய னொருவனேதிர்த்து நமதுசேனைக் காட்டைத் தகிக்குங் காலத்தில், தண்டதரனென்னுங் காற்றும், சாத்தகியென்னு நெய்யும், அந்தத் தனஞ்செயாக்கினியுடன் கலந்து கொண்டார்களே? ஐயோ! அவர்களொருவருடனொருவர் சேராமற் றடுக்கவில்லையே: ஓ தனுர்வேதியனே! இனியென்ன காரியம்? முனைமுகத்துற்ற என் மைத்துனனாகிய சிந்துராஜன் இறப்பதற்குச் சந்தேகமில்லை: சுவாமி! தேவரீரை நம்பினதற்கா இந்தவஞ்சு விளைத்துவிட்டீர். என் மைத்துனன் அப்போதே எங்கேயாகிலும் ஓடிப் பிழைத்தாலும் பிழைப்பானே, அவனையும் போகவொட்டாமற் பத்மயூகமத்தியி னிறுத்தி, சாகாமற் செய்கிறேனென்று சொல்லி, விலங்கைவிட்டுத் தொழுவில் மாட்டிவைத்த தன்மைபோல் வற்புறுத்தி வைத்தீரல்லாமல், இந்தச் சமயத்தில் அந்த யுத்தமுனையை நீரெட்டிப் பார்க்கவில்லையே? நீரிங்கிருந்து செய்யுங்காரியம் யாதோ? இதுவரையிலு நடத்திய வீரப்பிரதாப மேதோ? என்னுண்டவனே! இனியாகிலும் அந்த அமர்த்தலைக்கு வந்து என்மைத்துனனுயிரைக் காத்தருளுமென்று ராஜராஜேஸ்வரனாகிய துரியோதனன் சொல்ல, அந்த வசனத்தைத் துரோணாச்சாரியர்கேட்டு, சிந்தையில் நெருப்பெழச்சிரித்து, இருகண்களிலும் பொறியெழவுருத்து, பெருங் கோபத்தைப் பொருளாகக்கொண்டு பேதிக்கா நின்ற வேலாயுதத்தையுடைய வீராதிவீரருந் திடுக்கிட்டுச் சிந்தைகலங்கிக் கேட்கும்படியாகத் துரியோதனனைப் பார்த்துச் சிற்சில வார்த்தைகள் சொல்லுகின்றார். ஓ புவனியோங்கும் விற்பூவார் தாருவே! அவனிதாங்கு மற்புயமார் மேருவே! கேளும்; உமக்குப் பிராணபதமாகிய கர்னமகாராஜன் அவ்விடத்தி லிருக்கின்றார்; சேமநிதிபோன்ற மாமா சகுனிராஜன் அவ்விடத்திலிருக்கின்றார்; மஹாபதிவிரதையின் வஸ்திரத்தை யுரித்த இளவரசாகிய துஸ்வாசனன் அங்கிருக்கின்றார்; இதற்கெல்லாங் காரணமாகிய நீரும் அவ்விடத்திலிருக்கின்றீர். நீங்களெல்லோருஞ் சூழ்ந்துகொண்டிருக்கும்போது, உமது மைத்துனனாகிய சிந்துராஜனுயிரை யாவர் கைக்கொள்ளத் தக்கவர்கள்? அரசே! இதுவல்லாமலும், நானிவ்விடத்திற் காவலிராவிடில் ஏழுகடலுமொன்றுவதுபோற் பாண்டவப்படை யாவும் வந்து கலந்து, பாரிய போர்புரிவார்கள். ஒருவருடன் இருவர் வந்து கலந்ததற்கே உலகங் கலங்குமாயின், அவர்களெல்லாம் வந்து விட்டால் அப்பால் எப்படி காப்பது? அப்பனே! அப்போது அதிகப் பிரயாசையைக் கொடுக்குமல்லவா? ஆகையாற் சமுத்திரம் புரளாமல் இருக்குந் தடையைப்போல் நான் இவ்விடத்திற் றடுத்துக்கொண் டிருக்கின்றேன். இதன்றியும், இன்னமொன்று சொல்லுகிறேன் கேளும், நான் இவ்விடத்திலேதோ சில சவுக்கியமடைந் திருக்கிறேனென்றும், யுத்தஞ்செய்யப் பயந்து ஒதுங்கி யிருக்கின்றேனென்றும் எண்ணவேண்டாம். ஹரி! ஹரி! இவ்விடத்தில் எனக்கு அநேக வருத்தங்கள் நேரிடவும், உடனுக்குடனே அவைகள் நிவாரணமாகவும், பாம்பின் வாய்ப்பட்ட தேரையைப் போலப் பரதவித்துக் கொண்டு இருக்கின்றேன். இத்தியாதி வருத்தத்துடன் இவ்விடத்தில் இருப்பானேனென்று கேட்பீராகில், நீர் என்னை வரமாகக் கேட்டுக்கொண்டவண்ணஞ் சத்துருவாகிய தர்மராஜனைச் சமயம் பார்த்துப் பிடித்துவர வேண்டுமென்று சகல சிறுமையும் அநுபவித்துக்கொண்டு இவ்விடத்தில் இருக்கிறேன். மேலும், நான் அவ்விடத்தில் வந்தாலும் என்ன பிரயோசனம்? சிருஷ்டி கர்த்தாவாகிய பிரமதேவன் நமக்கு புடைத்துணையாக வந்து நின்றாலும், விதி

யின் வழியே நமது வினையிநெறி முடியுமல்லாமல், வேருக நடப்ப தொன்றில்லை. அப்படியிருக்க சிந்துதேசத் திறைவன் அர்ச்சுனன்கையில் இறக்கும்படிக்கு விதி நேரிட்டிருக்குமாகில், அதை விலக்குவதற்கு உம்மாலும் என்னாலுங் கூடுமோ? இன்னும் மற்றொருவராலுந் தடுக்க நாடுமோ, உத்தமனே! ஆதலாலும்முடைய கருத்தும், சாமர்த்தியமும், திடதயிரிய வயிராக்கிய உறுதியுங் கெடாமல் ஒரே நிலையாக நின்று, உம்மாற் கூடியவரையிலும் யுத்தஞ் செய்து ஒருகை பாரும். போம்போய், ஓ உரககேதனனே! அப்பால் வினைச்செயல் எப்படியோ பார்ப்போமென் றுரைத்தார். அவராரெனில், நல்ல நான்கு வேதத்தையும், வில்வாங்கு வேகத்தையும் குற்றமறகற்ற வெற்றியையுடைய துரோணாச்சாரியார்.

### அருச்சுனனுக்குச் சக்கரரக்ஷகராய்ச் சென்ற உத்தமோசா, உதார்மன் இவர்களுக்கும் துரியோதனனுக்கும் யுத்தம்

இப்பால் ஆசர்னுரைத்த வசனத்தைக் கேட்டுப் பூசாவிதியுடன் தாசானு தாசனைப் பணிந்து, வாய் பேசாமல் ராசாதிராசன் திரும்பி வாசாமகோசரமாய் வழியில் வருகிற போது, அர்ச்சுனனுடன் கூடவந்த சக்கர ரக்ஷகாளாகிய உத்தமோசா, உதார்மன் என்னுமிருவரும் பக்கத்திற் பரசவேதியைப்போலப் பாரிசவேதைகளில்லாமல் தங்கள் தங்கள் தேரைச் செலுத்திக்கொண்டு வருங்காலையில், அர்ச்சுனனுடைய ரதம் முந்திப்போய் விட்டது. தாங்களிருவரும் அரை நாழிகை வழிதூரம் பிந்திப்போய், தங்களெசமானனை விஜயனிடத்தில் சேரவேண்டுமென்னும் விருப்பத்துடன் செருவைப் பொடியாக்கிக் கொண்டு வாயுவேக மநோவேகமாய்த் தேர் நடத்தி, பிரதாபவில்லை டங்காரம்பண்ணி, காயும்படியாகிய வாயுக்கணை, தேயுக்கணை முதலியவைகளைச் சொரிந்து, காண்டாவன தகனாக்கினிபோல் மூண்டெரியுங் கோபமுடையவர்களாய், தங்களிரண்டு தேர்களின் சக்கரங்கள் ஓடிய தாரிகளெல்லாஞ் சேறுநீறும் பீறிட்டு ரத்தாறுகளோடும்படி ராமபாணம்போல வரா நின்றார்கள். அவர்களை துரியோதன மகாராசன் கண்டு பெருமைகொண்ட வில்வளைத்து, நாணியிறுக்கி, மீசைமுறுக்கி அவர்களைப் பார்த்து, உறுக்கி தலையை யசைத்துப் பாணமுகைத்தான். அப்போது, (வெறும் வாயை மெல்லுகிறவர்களுக்கு வற்றலகப்பட்டது) என்பதுபோல், அவ்விருவரும் இவனை எதிர்த்து வளைத்து இரைந்து போர் புரிந்தார்கள். இந்தப் பிரகாரம் உத்தமோசாவும், உதார்மனும் துரியோதன ராஜனோடு யுத்தஞ் செய்யும்போது, வணங்காமுடி பெற்ற மன்னனவன், அவர்கள் தொடுத்த அஸ்திர சஸ்திரங்களை யெல்லாம் அறுத்துக் குவித்து, அவர்களேறிவந்த தேர்-குதிரை-சாரதி முதலிய யாவுங் கெட்டழியும்படியாய் நிலத்திற் படுத்தி, அவர்களுடைய தேகத்திலுஞ் சில கணைகளைச் சேர்த்து தொடுத்தான். அப்போதவ்விருவரும் பூமியிற் பாய்ந்து, எழுக்கட்டுகள் கட்டிய பாரிய கதையைக் கைக்கொண்டு, நந்தியாவட்ட மாலையணிந்த திணிந்த தோளினையுடைய துரியோதனனேறிய தேர்-கொடி-குடை-குற்றுக்கால்-சக்கரங்கள்-சாரதி-குதிரை இவை முதலிய யாவுந் தரையுடன் தரையாகும்படி ஜாடினார்கள். அதனாற் கொடுங்கோனுடைய துரியோதன மகாராசன் மிகவுங் கூன்வளைந்து, தேரோட்டம்போற் காலோட்டங்கொண் டோடினான். அப்படி யோடும்படியாகிய ராஜனை இவ்விருவருங் கண்டு குலுங்க நகைத்து, இப்பாற் றிரும்பி, அத்துரியனோடு வந்த சேனைகளை யெல்லாம் அலமலங்கச் செய்து, தாங்கள் வரும் வழியில் எதிர்ப்பட்ட வயவீரா ளிருவரை இருவரு மெதிர்த்துப் போர்விளைத்து, அவர்கள் கைகொண்ட வில்லையொடித்து, அவர்களங்கத்தைப் பங்கப்படுத்தி முடித்து, அவர்களேறிவந்த இரண்டு தேரிலுந் தாங்க ளேறிக்கொண்டு, இருள் நீங்கப் பிரகாசித்தெழுஞ் சூரியனைப்போல் நாலுபக்கமுந் தகித்துக்காய்ந்து ஆய்ந்த அறிவினையுடைய அர்ச்சுனன் பக்கத்திற் போய்ச் சேர்ந்து, வழியிற் பிரிந்தது முதல் வரம் பெற்று வந்தது வரைக்கு முரைத்து மருங்கிற் பொருந்தி யிருந்தார்கள். இவர்களிடத்தில் அடிபட்டோடிய துரியோதன மகாராசன் கால் நடையாக வருவதை மத்திரதேசாதிபதியாகிய சல்லியன் கண்டு, கதிர்மணிக்கிரணத் தேரைக் கொடுத்தான். அந்தரதத்தில் அரவக்கொடிக் கதிபனாகிய அரசனேறிக் கொண்டு, மைத்துனனென்னுஞ் சிந்துதேசத் தலைவனிருக்குமிடத்தை நாடிச் சென்றான்.

### கர்னனுக்கும் வீமனுக்கும் நடந்த கடும்போரில் துரியோதனன் தம்பியரில் இருபதின்மர் வதை

இஃதிப்படி யிருக்க, முன்னே வீமனிடத்தில் யுத்தஞ் செய்து தேர் முதலிய யாவு

மிழந்து இளைத்தோடிய கர்னனானவன், கூர் மைதங்கிய நகமோங்கிய பெரும்புலியெனச் சீறி, வேறொரு தேரிலேறி, அநேக வண்டுகள் பாடு மாலையணிந்த புயமீறி, வீமசேனனுடைய சிலையுற்ற பாணங்களா லழியும் நிலைபெற்ற தங்கள் சேனைகளின்பேரிற் பெருங் கிருபை யுடையவனாய் இரக்கங் கொண்டு, நேரிட்டவர் வீறிட்டுப் போகும்படி செயித்து வராநின்ற அழற்கோபாக்கினிக் கணைகளை யுடைய அவ்வீமசேனனுக் கெதிரிற் சென்று, செவ்வரக்கைப்போற் சிவந்த கண்களை விழித்து உருட்டிக்காட்டி, ஒப்பில்லாத முப்பது கூர்ங்கணைகளைப்பூட்டி, வீமன்பேரில் மாட்டி, அவனை பேய்போலாட்டி ஆர்ந்ததட்டினான். அப்படி யதட்டிய கர்னனை, வீமசேனன் தனதொரு கைவிரலாற்கொட்டி, அவனியிலுள்ளோர் யாவரும் புகழும்படியாய் அவன் கைப்பிடித்த வில்லையும், அவனேறிவந்த தேரையும், அத்தேரைவிடுக்கும் பாகனையும், அப்பாகன் செலுத்துங் குதிரைகளையும் வாட்டி மாட்டினான். அப்போது கூக்குரலிட்டெழுந்த கர்னனானவன், நிலத்தினின்று பலத்த வேலாயுதத்தை யெடுத்து, வீராதிவீர வேந்தரெல்லோருந் திடுக்கிடும்படியாய் வீமன்மே லெறிந்தான். அந்தக்கர்னன் வீசிய வேலாயுதமானது, கோலாகலமாய் வருந்திறத்தை வாயுகுமாரன் கண்டு, அது எட்டுத்துண்டாகும்படி சூலாயுதம் விடுத்து, உடனே வேறொரு தேவாஸ்திரமொன்று தொடுத்து, இதன்மத்தியில் மறுபடியுங் கர்னனேறிவந்த தேர் குதிரை முதலிய யாவுமடித்து, மேலுமொரு கூர்வாளி தொடுத்து திரிபுண்டரமணிந்த நெற்றியிற் பெரும்புண்டர விடுத்தான். அதனாற் குபீரென ரெத்தவெள்ளம் பெருகியோடவும், பரிசுத்த முகம் வியர்த்துவாடவும், அக்கர்னன் முதுகு காட்டியோடவுங் கண்ட கதாயுதனாகிய வீமசேனன் கக்கடக் கக்கடக் குலுங்கிக் கலீரென நகைத்து, அவனோடுவந்த மற்றப்பேர்களுமெத்த மனஞ்சலித்தாட விரட்டி அகைத்துத் துரத்தினான். அக்கால் வீமசேனனுக்கிளைத்து பின்னிட்டோடி வராநின்ற மிகு கொடையாளனாகிய கர்னனை, வேந்தனாகிய துரியோதனன் கண்டு சகிக்காமல், மனஸ்தாபமும் மிகுந்த கோபமுங்கொண்டு, வில்லாண்மைமுதலிய வல்லாண்மையுடைய துற்செயனென்னும் தம்பியையழைத்து, அடா தம்பி! நிற்மூடனாகிய வீமனாற் கர்னமகாராஜனிளைத்தோடி வருவதைப் பார்த்தையா? ஐயோ! நீயாகிலும்போய் அந்த வீமனை நாசப்படுத்திவரலாகாதா என்று உசுப்பேற்றி யனுப்பினான். தமையன் சொற்படியே துற்செயனென்னுந் தம்பியானவன் சென்று வீமனுக்கெதிரில் நின்று, அனந்தவிதமாய் வெற்றிகொள்ளும் போர்புரிந்தான். அப்பேர்து வீமசேனனானவன், பாம்பைக்கண்ட கருடனைப்போற் பகைத்து, ஒரு பெருங்காலாக்கினிக் கணையைத் தொடுத்து, வந்தவரைக் குங் கணக்காக்குவதே நமது மகிமையென்று அவனை மறுபடியுந் திரும்பிப்போக விடாமல் மடித்தான்.

அவனிறந்த செய்கை கர்னன் கண்டு காவலனுடன் சொல்லி இருவரும் மனம் நொந்து, உடனேகர்னன் துரியோதனனைத்தேற்றி, இதோபாரும் ஒரு நொடிப்போதில் அந்த வீமனைத்தேருடன் சாய்த்து வருகிறேனென்று சபதங்கூறி, மறுபடியுமொரு தேர்மிசையேறி, வெற்பென் றிரைக்கும் வில்லை வளைத்து, பற்பம்படப் பல்லைக்கடித்து, புகைத்தெழுந்த விஷாக்கினி பொருந்திய கடைக்கண்களிற் கடுங்கோபங்காட்டி, இவற்றால் உன்னுயிரழிய வேண்டுமென்று பதினைந்து பாணங்களை யெய்ய, இனி நீ தப்பித்துக்கொள்ளும் விதத்தைத் தேடடாவென்று சில சொற்களினால் வைதான்; அப்போது வீமசேனன் அந்த கர்னன் பேச்சைக்கேட்டுப் பெருமூச்சுவிட்டு, மிகுந்த பராக்கிரமத்துடன் முனிந்து, பங்கஜநாயகன் மைந்தனென்னும் கர்னன்பேரிற் கமலாஸ்திரம் மூன்று விடுத்து, அவனொருடுத்த பதினைந்து பாணங்களையுங் கொய்து கெடுத்து, உரமாகிய மார்பிலுந் துளைத்து வருத்தினான். அப்போது சுரத்திற்குப் புளி துணை என்பதுபோல், உரத்திற் பாணமுறுத்தி வருத்த வருத்த, உடல் துடிதுடித்து, உயிர் நிலை குலைந்து, உதடு காய்ந்து, உறுதியுந் தேய்ந்து ஒடுங்கினான் கர்னன். அந்நிலையை அவன் தேர்ச்சாரதி யாய்ந்து, விசாலமாகிய ரதத்தை திருப்பிக்கொண்டு வருவதை ராஜாதிராஜனோக்கி, கர்னனை யுபசரித்துத் தேற்றி, கையொடு கையறைந்து கூவி, தன் பக்கத்தில் நின்ற துன்முகனென்னுந் தம்பியை தட்டிக்கொடுத்து, வீமசேனனை மறித்து சற்றுநேரம் வழிவிடாமற் போராடிக்கொண் டிருப்பையாகில், இதோ கர்னமகாராஜன் ஆயாசமாற்றிக் கொண்டு வருவாரென் றனுப்பினான். அவன் சொற்படியே துன்முகனானவன் சென்று எதிநின்று வில்லையிழுத்து வளைத்தான். வெ

றியையுடைய வீமனானவன் இவனைக்கண்டு முல்லைக்கணை ஒன்றையெடுத்து முடுக்கினான். அக்காலையில், அத்துன்முகன் தலையானது பல்லை யிளித்துக்கொண்டு ஆகாயத்தி லெழுந்துபோவதைக் கர்ணனுந் துரியோதனனும் பார்த்து, நமது துன்முகன் தலையாவென்று சோர்ந்து வீழ்ந்தெழுந்து மன்னர் மன்னனானவன், மறுபடியுந் துன்மருடன், துன்மதன், விஜயன், ஜெயன்மாலி என்னுந் தம்பிமார் ஐவர்களை வாயுகுமாரன்பேரி லனுப்பினான். அவர்களை வீமசேனன் கண்டு, மனவருத்தமில்லாமல் அவர்களுடன் யுத்தஞ் செய்வதற்கும் ஆயாசப்படாமல் முனைந்து சினந்து முஷ்கரித்து நின்று, ஓ தம்பிமார்களே! நம்மிடமவர்கள் அதோ முன்னும்பின்னும் போய்க்கொண் டிருக்கிறார்கள். நீங்களும் முந்திப் போங்களென்று மந்திரித்துக் கடவுளாஸ்திரக்கணைகளை யுந்தி, அவ்வைவரையும் ஒரேதரமாக விம்மண்ணாட்டினின் வாழ்வை நீக்கி விண்ணாட்டுக் கனுப்பினான். அந்த பீமசேனனால் மன்னிளந் தம்பிமார்கள் ஐவர் மாய்ந்ததை ஆதவன் திருக்குமாரனாகிய அதரித்திரன்கேட்டு, கைபழகிய கார்முகம்வளைத்து நாணிமாட்டி, ஜெயமணி பூட்டிக் குணத்தொனி காட்டி, பொற்பிரகாசமுடைய தேரை வீமனுக்கெதிரில் செலுத்திப் பிரதாபம் பேசி நின்றான். அப்படி நின்ற கச்சைக் கொடியோனைக் கழனிகளிதந்து வரான்மீன்க ளுலவும்படியாகிய நீர்வளநாட்டுக் கதிபதியென்னும் பாண்டு பூபதியின் பாலனாகிய காலகாலன் கழலிணைமாருத வீமசேனன் கண்டு, பெரும்புலிபோற் சீறி, ஐயோ! அப்பா! இப்படியும் போர்புரிவாருண்டோ? இதுவுமொரு வீரமா? என்று பற்பலவாகிய உண்மை வார்த்தைகளைப்பேசி, சீ! சீ! என்றேசி, மாசிலா வில்லை யிறுக்கி, வாய்மடித் திறுக்கி கூசாமற் போர் கொடுத்தான்.

இவ்விதமாக யிருவரும் ஒருவரையொருவர் வெல்லவேண்டும்; அல்லது கொல்லவேண்டும் என்று பல்லவங்களை யுந்தினவர்களாய், வல்லவர்களுஞ் சொல்லப்படாத வயிரத்துடன் அமராடி வருவதானார்கள். அக்காலையில், இசைபெற்ற துரியோதனனுடைய நால்வகைச் சேனைகளுஞ் சேர்ந்து, பேரொளி போன்ற வீமசேனனென்னுந் தேராளியைச் சூழ்ந்து வீராவேசத்துடன் போர் கொடுக்க, அப்போது அந்த வீமசேனனுடைய கொடுமரத்தினின்றுங் கடுகடுத்து விடுஞ்சரத்தால் மிகுதியாகிய படைகளெல்லாங் குறைந்து, மெலிந்து, நலிந்து, உயிரழிந்து, கணக்கில்லாத பிணக்குவியலாகிக் கால்மாடு தலைமாடாய்வீழ, அவர்களுடைய சரீரத்தினின்றெழும் உதிரவெள்ளமானது சமுத்திரத்துடன் பகைத்தெழுந்ததைப்போற் புரண்டு ஓடும்படிக் காத்து அப்படி எவரையும் முன்பின்பாராமல் தும்சம் பண்ணிக்கொண்டு வருங் கடோற்கஜன் தந்தையுங் கர்ணனும் எதிர்ந்து உயர்ந்த வில்லைபிகிந்து, ஆகர்ணபரியந்தம் அதிரவிழுந்து, முனையாகிய வாளிகளை முகிற்கூட்டம் பொழிவதுபோற் சொரிந்து, ஒருவரை ஒருவர்பழித்து, ஒருவர்விட்ட பாணங்களை யொருவரழித்து, ஒருவருடைய தேரை ஒருவர் சுழற்றி, ஒருவர் சாரதியை யொருவரடித்து, ஒருவர்குதிரைகளை ஒருவரொழித்து, இளையாமல், சளையாமல், களையாமனின்று சமர்செய்யும் வேளையில், ஆகாயம் பூமி முதலிய எங்கும் பாணமயமாய்க் குவிந்து நிறைந்துபோகவும், இரத்தங்களுறைந்துகாயவும், இந்தப்பிரகாரஞ் செய்த யுத்தத்திறங்களை இவ்விதமென்று யார் சொல்ல வல்லவர்கள்? ஐயா ஜெனமேஜெயமகாராசனே! சத்தசாமர்த்தியராகிய இருவரும் நெடுநேரம் வரையிலும் சோராமற்போர்புரிந்து, ஊழ்வினைவசத்தால் விபாகரன் மைந்தனாகிய கர்ணனானவன், வாயுமைந்தனாகிய வீமசேனனால் அடிபட்டு உடல்வெதும்பி விழுந்து, தேரழிந்து இழிந்து ஓடினான். இப்படி யவதிப்பட்டோடி வரும் ஆதித்த குலத்தோன்றலை அம்புவிகுலத்தோன்றலாகிய அரவக்கொடியோன் பார்த்து, முகம்வேர்த்து, அக்கர்ணனை இறுகச்சேர்த்தணைத்து, அண்ணா! நன்றாய்ச் சமர்புரிந்து வந்தீர். சற்றிருந் திளைப்பாறும் என்று சொல்லினவனாய், மன்னர்முதலிய அன்னியர் பழிப்பார்களே, நகைப்பார்களே என்னுந் தாழ்வு தன்னுள்ளத்தில் எள்ளத்தனையும் நினைக்காதவனாய், மீண்டும் மன்னர்மன்னன் தனக்கெதிர் நின்ற சித்திரவிசித்திரன் - சித்திராங்கதன்- சித்திரசாருகன்-சித்திரச்சரன்-சித்திராயுதன்- சித்திரவன்மன்-சித்திரதரன் என்னும் தம்பிமார் ஏழுபேரை இடும்பி நாயகனாகிய கடம்பனை அடக்கும்படி யேவினான். உடனேயவர்களுமேவி, யுத்தத்திறங்களாற் கூவி, அடா பாவி பாவியென்று கோபித்தெதிர்ந்து, எட்டுத்திக்கும் பட்டுதிரும்படி மட்டில்லாப் போர்புரிந்து, கூரம்புகள் தொட்டு,

அந்த வீமன்விட்ட கணைகளாற் பட்டுயிர் விட்டு, விளைபயிர்ச் சாவிபோல் ஒரே முகமாக ஆவி போயினார்கள். இப்படி துரியோதன மகாராஜன் எழுபேர் தம்பிகளை உய்த்தும், அவர்கள் வீராவேசத்துடன் போய் வீமனை மொய்த்ததும், இவர்களைக் கண்டு அந்த வீமன் தகைத்ததும், இவர்கள் கணைமாரி பொழிந்து பதைத்ததும், அவனுஞ் சரமாரி பொழிந்து இவர்களை தகைத்ததும், கோமாரி கொண்ட கொட்டியம்போல அவர்கள் செத்ததும், இவைகளை யெல்லாம் வீமனுமடிபட்டுப் பாதசாரியாயோடி இளைப்பாறிய கர்னனை வன் கேட்டு, அண்டமுகடதிர ஆர்த்து, குடு குடுவென்றோடிவந்து, சுப்பிரமணியக் கடவுளானவர் வேலைமேற்றொடுத்த வேலாயுதம் போற் வீமசேனன் தோள் முறியும்படியாய் ஒரு தோமராயுதத்தை வீசினான். அந்தத் தோமரமானது, சந்திரசூரியரை விழுங்குவதற்கு எழுந்துவந்த ஆலகால மென்னுங் காலகோடி விஷமுடைய ராகு கேதுக்கள் உருக்கொண் டெழுந்து வருவதைப்போல் வீமனை நாடியோடி வரும்போது, சமயம் வாய்ந்தபொழுது தேடிய பொருளைச் சிக்கெனப்படுத்தாமற் செலவழிக்குந் தீராளைப் போற் பகாசுர வயிரியாகிய வீமசேனன், தேவதார்ச்சனைசெய்து சிந்தித்துப் பந்தித்து அறு சந்தித்து விட்ட கடல்மடை யனைய படை வகுப்புடைக்கும் பாணத்தினால், கர்னன்விட்ட தோமரஞ் சாமரம்போல் துகளாயொடிந் துதிர்ந்து, அவனேறிவந்த இரதமுந் தகர்ந்து, விண்ணிலும் மண்ணிலும் வேடிக்கை பார்ப்பவர் கண்ணிலும் படித்தழிந்தது. பின்பு தானெறிந்த தோமராயுதமுந் தானேறி வந்த ரதமுந் துகளாயழிந்து போனதைக் கண்ட சூரிய குமாரன் வேறு தேரேறி, சுவேதக்ஷத்திரம் - உபயசாமரம் - அச்சமகற்றும் கச்சைக்கொடி-வெற்றிமாலை - வீரபட்டம்-வச்சிரக்கவசம்-முரசு-பேரி - காகளம் - கொம்பு-கர்னை-தாரை-பூரி-வீரசின்னம் இவை முதலிய ஆரபாரத்துடன் பாரியவிற்றூங்கி, காளகூடம் போலுங் கறுத்த மேகமானது மின்னலிடி முழக்கத்துடன் விடாமழை பொழியுந் தன்மைபோல், அனேக விசிகங்களைத் தொடுத்து, அவ்வீமசேனனுடைய கரசரணாதிகளை ஒரே பற்றாகப் பற்றிக்கொள்ள பிரயோகித்த தல்லாமல், அவனுடைய தேர்-குதிரை-சாரதி இவை முதலியவைகளையும் அசையவொட்டாமல் ஸ்தம்பிக்கும்படி செய்தான். அத்தருணத்தில் வீமசேனன் சற்றே திக்குமுக்கிட்டு, மீண்டுந் தீரங் குன்றாமல் தேறித்தெளிந்து, கர்னன் தொடுத்த கணைமழைகளைக் களைந்து, தன் தேரைச் செலுத்தி யெதிர்த்து, மறுபடியிருவரு மலைவதானார்கள். அப்போது இருவருடைய தேரும் இடசாரி வலசாரியாய்க் குயவன் திகிரிபோற் கூசாமற்சுழல, இரண்டு மேகம் எழுந்திடித்த பேரொலிக்கு நேரொலியாக வில்லைவணங்கிக் குணத்தொனி செய்து கடலோசை யடக்கும்படியாய்ப் போர்வீரத் திறங்களைப் பேசி, நேருக்கு நேராகப் பொழியும் பாணங்களால் நிலமுதலிய தலமெல்லாங் காடாக்கினியைக் கக்கிக்கொண்டெரியத் தக்கதாய், இரண்டுநாழிகைவரைக்கும் இமை கொட்டாமல், சிறுமைதட்டாமல், பகைவருக் கெட்டாமற் சமர்புரிந்தார்கள். இவ்வதிசயங்களை மதித்திருந்த புலவரியாவரும் அற்புதமற்புத மென்றார்கள்.

இப்பாற் கர்னராஜன் கடுமைகொண்டு, என்னடாயிது விந்தையா யிருக்கிறது? நமக்கீடானவனுயிவன்? என்று வெறுத்து வெகுளி மேற்கொண்டு, வீமசேனனுடைய தோளின் மேல் ஐம்பதும், தேரின்மீது இருபதும், குதிரைகளின்பேரில் நான்கும், பற்றிய வில்லின்பேரிற் பத்தும், சுற்றிய கொடி யாடையின்மே லெட்டும், ஆகட்டுமென்று கருவி, கட்டில்லா பாணங்களைக் கைக்கெட்டிய மட்டும் விட்டான். அப்போது வீமசேனனானவன், துஷ்ட மிருகத்தைச் சிக்ஷை செய்யுஞ் சிங்கத்தைப்போல் திடங்கொண்டு, எப்படியப்பாவென்று சிந்தனைக் கிடஞ்செய்யாமல், தானொருவனால் அடிபட்டானென்னும் நிந்தனைக்கிடம் வையாமல், அங்கர்கோன் தொடுத்த புங்கவங்கள்யாவும் பங்கப்பட்டு மயங்கிப் போகும்படியாய், அச்சங்கக்கொடிக் கதிபனானவன் சோதித்துப் போட்டு, சங்கையில்லாமல் தலையசைத்து நமடுகடித்து, நாக்கைமடித்து, நானுவிதரோஷமாகிய வசனங்களை படித்து படபடத்து, துடிதுடித்து, இன்னல் விளைக்கும் மின்னலுக்கொப்பாகிய அன்னமுயர்த்தோன் கணைகள் முதலிய ஐம்பது பாணங்களை யெடுத்து, கர்னன் மார்பு கலங்கவிடுத்தான். அவ்வைம்பது பாணங்களுஞ் சம்புவிலுதற்கனல்போல் வெளிப்படத் தலைப்பட்டு, அங்கர்கோமான் மார்பில் தாக்கியபோது, அயர்ந்து பயந்து தீரத்துடன் தேறிய அக்கர்னமகாராஜன் வீமனை வியந்து புகழ்ந்து

மகிழ்ந்தான். அஃதெப்படியென்னில், மற்
போர் முதலிய கதாயுதத்திற்கும், வலுமைக்
கும், இவனையல்லது வல்லவ ரொருவரு
மில்லையென்னும் வாக்கியம், இவ்வுலகெல்
லாம் வசனித்துக்கொண்டிருப்பதுண்டு; நானு
ங்கேட்டதுண்டு பார்த்ததுமுண்டு. அப்படி
யிருக்க, இந்த விற்போருக்கும் இவனைவிட
வேறொருவருமில்லையென்று சொல்லும்படி
யாயிருக்கின்றானே; ஆ! ஆ! இவன் சமர்த்
தனே என்று சொற்பல உரைத்தான். அதைக்
கேட்டு மற்புயவீரராகிய பற்பல வேந்தரும்,
சிற்சில மாந்தரும், ஆச்சரியப்பட்டார்கள். அப்
பால் மலையொத்த புயத்தினையுடைய மாற்சரி
யக் கர்னனானவன், வீமசேனனுடன் எதிர்த்
துப் போர்புரிவதற்கு ஈடில்லாதவனாய், மேலு
மேலும் அவ்வீமன் தொடுக்கும் பாணங்களி
னால் தேகங்கிழிந்து பிளப்புண்டு, மல்வலி
மேவு மார்புடைந்து, சொல்வலியாவுஞ் சோர்
வடைந்து, தடந்தேர் - குதிரை-சாரதி - வில்
இவை முதலாகிய சகலமுமழிந்து, தாரணிந்த
புயமுமெலிந்து, நீறணிந்தமுகமும் வதங்கி,
காரணமானது இன்னதென்று கண்டுணரா
மல், வாரணமானது முதலைவாய்ப் பட்டது
போல் வாடிநின்று, இவனுக்கிளைத்து எத்தனை
தரமோடுவதென்று மானத்துடன் மனந்
தேறி, மீண்டும் எதிர்சென்று தானத்தடமாகிய
பூமித்தேரினின்று, வேறு வில்லெடுத்து நிறு
த்தி வளைத்து, பாறுகளடுத்த களத்தில் வீம
னைத் தடுத்து, மூர்த்தண்யமாகிய வெங்கணை
களைத் தொடுத்து, சீற்றமாயஸ்திரந் திறம்பட
விடுத் தமர்கொடுத்து வருவதானான். அப்
போது, ராஜகெம்பீரனாகிய துரியோதனரா
ஜன் கண்டு மிகுகோபங் கொண்டோடி, வாகு
வலயமணிந்த திணிந்த புயமிரண்டும் வாடி,
துணிந்த தம்பிமார்களை நாடி, அவர்களை
யனேகவிதமாய்க் கொண்டாடி, ஓ! ஓ! தம்பி
மார்களே! காரியதாக்ஷி வந்தது. நீங்களேழு
பேருங்கூடி, இந்தக்ஷணத்தில் கர்னனுக்குச்
சகாயமாயோடி, காற்றின்மகனைச்சாடி, கண்
ணுக்குத் தெரியாமற் கணைகளால்மூடி, வெற்
றிப் பாடல்பாடி, அவன் சமரை வேறுவேறா
க்கி, அவன் படையை நீறுநீறாக்கி, அவனுயி
ரைத் தாறுமாறாக்கி அவனுடலைக் கூறுகூறா
க்கி, சதைத்து-சிதைத்து-உதைத்து-வதைத்து
சீக்கிரத்திற் பிராணனை வாங்கி வாருங்களெ
ன்று அனுப்பினான். அம்மாத்திரத்தில் அந்த
மொழி தவறாத தம்பிமார்களாகிய
தமயன் [illegible]ஜயன், சத்துருமித்திரன், சுதே
அச்ச[illegible]

கன் மாமதனன், நற்றுருவன், சித்திரபானு,
விகர்னன் என்னும் பேர்பெற்ற ஏழுபேரும்
வீமன்மேல் அமர் செய்யச்சென்று, வெற்றி
மாலைபூண்ட தங்கள் விதவிதமாகிய வில்லை
வளைத்து பற்றி யெரியா நின்ற பாகவன் கணை
களைப் பெருமழைபோற் பொழிய நிறைந்து,
புழுதி யெழும்ப இறைத்து, பூமி நிரம்ப
மறைந்து, பாண்டு புத்திரனுடலைத் துளைத்
துப் போர்த்திறங் காட்டினார்கள். அதுகாலை
யில் வாயுகுமாரன் மகிழ்ந்து, வந்த தம்பிமார்
களைப் புகழ்ந்து, வரிவில்லை வளைத்து, அக
மகிழ்ந்து, சில வாக்கியஞ்சொல்லி இகழ்ந்து,
அவர்கள் விடுத்த அக்கினிக் கணைகளுக்கு
மாறாக வருணக் கணைகளைமாட்டி, வந்த கணை
களின் தீட்சண்யங்களை யோட்டி, ஆறு வாய்
வாஸ்திரங்களை, அவர்களூர்ந்து வந்த தேர்
களைச்சிந்தி, குதிரைகளை மாய்த்து, சாரதிமுத
லிய கொடிகளைச் சாய்த்து, சிகர முடிகளைப்
போக்கி, கவசங்களைப் பொடியாக்கி, வில்லை
முறித்து நீக்கி, விறுதாக் குறுந்தடியாக்கி,
மாறுவேறில்லாமல் வீறிய வீமசேனன் மிக
வுந் தேறிய, ஆறு பர்வதாஸ்திரங்களை எடு
த்து, அபிமந்திரித்து விடுத்து, வட்டமாய்
எதிர்த்துவந்த ஏழுபேர்களில் இட்டமாகிய
விகர்னனை மாத்திரம் நீக்கி, மற்ற ஆறுபேரும்
நாட்டமாகும்படியாய்த் தாக்கி, பட்டமாகிய
மகுடமுடி போக்கி, சட்டமாகப் போகாறுப
வஞ் செய்யுங்களென்று திட்டமாகத் தேவ
லோகக் குடியாக்கினான்.

### வீமசேனன் தன்னோடு போரவந்த விகர்னனை இரக்கத்தாற் றடுக்க, அவன் அறத்தாறென்று கூறி எதிர்த்திரத்தல்

இவ்வித கஷ்டமாகப் போர் செய்த தீர
பட்டமுடைய தெண்டாயுதனை வீரக்கழற்
கால் விகர்னன் பார்த்து, தன்னுடன் கூட
வந்த தமயன்மார் ஆறுபேரும் பாண்டு
மகன் கணையால் மாண்டுபோனதற்கு வெ
குண்டு, தீரங்கொண்டு, சினம்பூண்டு, சிலை
யைவளைத்து, கலகலெண நகைத்து, தெழித்
துப் பகைத்து, மதித்துக் குதித்து, வேணு
மட்டும் பாணங்களை எடுத்து விடுத்து, அவ்
வீமசேனனை யடுத்துக் கடுகடுத்து வந்தான்.
அக்காக்ஷியை வீமசேனன் பார்த்து மிகுந்த
இரக்கமுடையவனாய், அம்புலி மரபிலுதித்த
என் தம்பியாகிய விகர்னனே! நான் சொல்வ
தைக் கேள். "சுடுவுரைக்கன லன்ன துச்சாத

னன், வடுவுரைக்கவு மன்னுரைமன்றிடை, நடுவுரைக்கவு நன்னாவுடையாயுனைக், கொடுவுரைக்கணை யேவினுங்கொல்லுமோ; பாரறிந்து பழிக்குட்படாதநின், னேரறிந்தும்பொர நெஞ்சியையுமோ, போரறிந்து பெருகவென்றுனெடுஞ், சீரறிந்தவர் செய்நன்றிகொல்வரோ'' சகலராஜர்களும், சகல தேசர்களும், நெருங்கி யிருந்த ராஜசபையி னிடத்தில், உகர்ந்த காலாக்கினியை யொத்த துச்சாதனனவன், எங்களை யிகழ்ந்து சுடச்சுட வடுப்படும் வார்த்தைகளை வாய்க்கு நேர்ந்த வண்ணஞ்சொல்லவும், அந்தச் சபையில் நிறைந்த உரியோர் பெரியோர்கள் முதலாகிய மன்னர் மண்டலீகரெலாம் மறுவார்த்தை சொல்ல மாட்டாமல் வாயை மெல்லவும், இருடியரெல்லாம் எங்கள் முகத்தை நோக்கி இரங்கிப்பேசவும், யாங்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்கவும், எங்களுக்கு ஒருதவியுமில்லாமல் முகம் வியர்க்கவும், இவ்வாறு உயிரொழியும்படியான நிலையில், உள்ளம் வெதும்பியிருக்குஞ்சமயத்தில், (வார்த்தை பதினாயிரத் தொருவன்) என்னுந் தன்மை குறையாமல் ஆர்த்தெழுந்து கொடுங்கோல்மன்னனெனும் உன் தமயன் முதலிய ஒருவருக்கும் பயப்படாமல், நடுவு நிலைமையை எடுத்துச் சொல்லிய நல்ல நாவை யுடையவன் நீயாயிருக்க, நான் உன்னைப் பகைத்தாலும், உரம்பெற்ற கொடுங்கணைகளை விடுத்தாலும், அந்தப் பாணங்களினுடைய அதிதேவதையானது அதர்மமாக உன்னைக் கொல்லுமோ? தர்மமாக உனை வெல்லுமோ? சொல்லுந் தம்பீ! இவ்வுலகமுள்ளமட்டுக்கும் பேசிக்கொள்ளும்படியாய் நீடித்த பழியை வழியாகத் தேடிக்கொண்ட துஷ்ட சதுஷ்டாளைப்போற் பழிக் குடம்படாத உன்னுடைய நேர்ப்பறிந்திருந்தும் இப்போது யுத்தஞ் செய்வதற்கு என்னெஞ்சு உடம்படுமோ? ஓ நன்னெஞ்சுடைய நல்ல தம்பி! இப்போது நீ எனக்குக் கோபம்வரும்படிக்குப் பற்பல வாசகம்பேசி யுத்தமறிந்து வீமாவென்று யேசி, என் யுத்தஞ்செய்யடா பிதிர்த்து போகும்படியாய் முன்னெதிர்த்து பாணப்பிரயோகஞ்செய்து, சண்டைக்கு வாவென்று அழைக்கிறாயே; ஐயோ! நீ அப்படி அறைகூவி யழைத்தபோதிலும், (ஒரு நன்றி செய்தாரை யுள்ளத்தே வைத்துப் பிழை நூறும் சான்றோர் பொறுப்பர்.) என்று சான்றோர் உரைத்த நீதிவாக்கியத்தை சீரறிந்தமேலோர் நடத்தாமல், என்னன்றியிலும் அநுசரித்து செய்தநன்றி குன்றிய தீயரைப்போல் தீநரகடைவேனோ? என் சிந்தைக்கிசைந்த இளைய செல்வமே! நான் இப்போது ஒரு உறுதி வாக்கியஞ் சொல்லுகிறேன் கேள். முன்னர் மன்னர் சபையினில் உங்கள் நூறு பேரையுங் கொன்று துச்சாதனனுடைய உதிரத்தைக் கைநிறைய வாரிக்குடித்த பிற்பாடு, தாகத்திற்குச் சலமள்ளிக் குடிப்பேன் என்று நான் சொன்ன சபதந் தப்பிப் பொய்யனாகி உலகம் நிந்திக்கப் பேரெடுத்தாலும் எடுப்பேனல்லது, உன்னுடன் எதிர்த்து யுத்தஞ் செய்து என் சீர் கெடுக்கமாட்டேன். தம்பிவிகர்ணா! உன்னை இப்பாராளச்செய்து, என் கண்ணாற் பார்க்க வேண்டுமென்கிற பட்சங் கொண்டிருக்கிறேனல்லாமல், உந்தன் பேர்மாளச் செய்து உன்னைப் போக்குவது அறமன்று. ஹரி! அரி! மஹா பாவம்! மஹா பாவம்! ஆதலால், நீ திரும்பிப் போவதே புண்ணியம். போ? போ? என்று இப்படிப் பலவாறாக மிகுந்த தயையுடன் வீமசேனன் சொல்ல, விசாலமான வெற்றிமாலையணிந்த உத்தமதீர விகர்ணனானவன், அவ் வசனங்களைக் காதுகொடுத்து கேட்டுங் கேளாதவனாய்த் துஷ்டர்களோடும், பிறந்த கடனைத் தொலைக்க வெண்ணினவனாய், நவமணி பொருந்தியவில்லை நாணியிறுக்கி, திக்குகளனைத்து மெரியும்படியாய் அக்கினி முனைக் கணைகளைத் தண்டதரன் பேரிற் கண்டாவருஷம்போலுந்தினான்.

அந்தக் கணைகள் முந்திவருவதை விந்தமன்ன புயத்தினனாகிய வீமசேனன் கண்டு நொந்து, அந்தி வண்ணன் கணைகளினால் அவைகளைச் சிந்தி, விகர்ணனுக்கெதிர்வந்து, அப்பா விவேகத்திற்சிறந்த விகர்ணா! குந்திக்கு முதற்புத்திரன் முதலிய நாம் ஆறுபேரும் இந்தத் தேசத்திலிருந்து செந்திருமார்பனருளால் விந்தையாகிய நற்பேறு பெறலாம். எங்களுடன் வந்துசேர்; இனி நடக்கப்போகிற புகழைப்பார்; தமயனாகிய என் சொல்லைக்கார்; இப்போதுகொண்ட கோபந்தீர்ந்து, என் அருகில் வந்து உட்கார் என்று பரிவுடன் அழைத்து, தம்பீ! நான் உனக்கு உரிமைகூறியிருக்க, அந்தப் பெருமையை வகிக்காமல், எனக்கு சிறுமையுண்டாகும்படிக்கு கூரிமுக பாணங்களைத் தொடுத்தையே; என்னிளவலாகிய இன்பமே! என்பேரில் இஷ்டம் வைத்து, எனக்குப் பழிச்சொல் முதலிய கஷ்டம் வைக்காமல் திரும்பிப் போய்விடு என்று வேண்டி

வேண்டி, வேண்டிய விதத்தில் வீமசேனன் சொல்லினன். அதற்கு மானம்பூண்ட மதிவல்லோனகிய விகர்னனனவன், வாயுகுமாரனைப் பார்த்து, அண்ணு! தேவரீர் சொன்னதெல்லாந் தேர்ந்த மொழியாயிருந்தாலும், என்னுடைய கர்மாநுபவத்தால் நூறுபேருடன் பிறந்து, (இரும்புக்குப் படவேண்டிய சம்மட்டியானது நெருப்புக்கும் பட்டது) என்னு நீதிபோல், எங்கள் தமயன் தேடிக்கொண்ட பழிபாவமெல்லாம் இந்த லோகமுள்ளவரைக்கும் எங்கள் நூறுபேரையும் பீடிக்குமே யல்லது, ஒருவரைவிட்டு ஒருவரைத் தொடராது. மேலும், ஆவின்வாய்ப்பட்ட அருகம்புற் சுமைபோல் என் சகோதரர்களிற் பலபேர் உம்மிடத்தில் அகப்பட்டு, ஆவியிழந்து அழிந்திறந்தார்கள். அதுவுமன்றி, இப்போது நாங்கள் ஏழுபேர் வந்தோம்: வெப்பமாகிய உமது கைக்கணையால் நொந்தோம்; வந்தயெழுவரில் அறுவர் ஆவியொழிந்திருக்க, நான் ஒருவன் உயிர் கொண்டோடிப் பிழைப்பது உத்தமமோ? உத்தமனே! யுத்தபூமியிற்போய்த் தம்பி தமயன்மாரைச் சாவுக்கொடுத்துத் தான் மாத்திரம் பிராணனைத் தப்பித்துக்கொண்டு வந்தான் சண்டாளனென்று கண்டாருரைப்பது தருமமோ? எங்கள் ஜேஷ்டத் தமயன் உங்களளவில் தேடிக்கொண்ட பழியில், கனிஷ்டாளாகிய நாங்கள் அனைவரும் மூழ்கிப்போயிருக்க, இன்னும் எங்கள் கால்வழிக்கு நீடூழி ஆழிபோற் பழிதேடிக்கொள்வது ஞாயமோ? வாழி! வாழி! அண்ணு! உம்மால் எனக்கு இழிவாகிய ஒரு குறைச்சல் வந்ததென்று மூறைச் சொல்லவேண்டாம். சொன்ன சபதந் தப்பினன் வீமசேனனென்று என்னுல் உமக்கு ஒரு குறைச்சொல்லும் வேண்டாம். ஆசாபாசமாய் என்பேரில் உமக்கு விசுவாசம் இருக்குமாகில், வார்சிலை வளைத்துப் பூசலை விளைத்து, என்னை நாசப்படுத்துவதே எனக்கு நேசம். ஆதலினற் போர்கொடுக்க வாருமென்று தேர் முடுக்கிச் சாடினன். அப்போது வீமசேனன் தன் மனத்தில் தர்ம தேவதையை நினைந்து, சற்றுநேரமிருந்து, எல்லா மீஸ்வரச் செயலேயன்றி நம்மாலாவதொன்று மில்லையெனத்தேடித் தலையயசைத்து, ஊழ்வினையை வெறுத்து, உரக்க நகைத்து, உடலெல்லாஞ் சிலிர்த்து, திரிபுராந்தகனை [illegible] சோதியாகிய அவ்வீமசேனன் யொத்த வாயுகு[illegible] [illegible], பலம் விகர்னனுக் கெதிர்சென்று [illegible] பொருந்திய வில்லையிழுத்து பூ[illegible],

மாதேவக்கணை முதலிய பாணங்களை விடுத்தான். உடனே பரபரவென பகழிகள் ஒன்றோடொன்று இடிக்க, இடம் வலமாகத் தேரைக் கரகரவென்று களத்தில் முடுக்கி, ஒருவர்பேரிலொருவர் விடுத்தபாணங்கள் இருவர்பேரிலும் படாமற் றடுத்து, விட்டேனு உன்னையென்று வீராவேசங்கொண்டு, வெட்டிமடிக்கிறேன் சீக்கிரம்வா யுத்தத்திற்கென்று அறைகூவியழைத்து, அண்டங்குலுங்க வதிர்த்து, தங்களுக்குத் தாங்களே நிகர்த்து, மறுபடியுங் கிளைத்து, ஒருவரையொருவர் வளைத்து, முகஞ்சுளித்து - எக்களித்து - பற்கடித்து - விற்பிடித்து - உக்கிரமித்து - மற்கொடுத்து யுத்தம் புரிந்தார்கள். அப்போது விறற்படை தாங்கிய திறக்கரமாருதி அண்டமுகடு வெடிபட வெடித்து, மின்னலைசெய்யு மேகம்போலொத்த பிறைமுகாஸ்திரத்தை எடுத்துப் பிரயோகஞ்செய்யப் புகுந்தவேளையில், பெற்ற வள்வயிறு மெத்தவும் வருந்திவாடுமே? மற்றப் பிள்ளைகளைப் பார்க்கிலும் இந்தப் பிள்ளையை அருமையாகத்தேடுமே? அப்பாமகனேயென் றுவென்றழும்போது ஆவி போய்விடுமே? என்று வீமசேனன் வருந்தி, தன்னுடைய கண்களிற் றண்ணீர் ததும்ப, தர்மத்தை நினைத்துத் தன்மனம் வெதும்ப, ஓ என்வசனத்தை கேளாத தம்பீ! நானென்ன செய்வேன்? வினையின்பயனே பயனுகமுடிந்தது. என்று மேற்கூறிய பிறைமுகக்கணையை வெந்திறல்வீமன் மந்திரித்து விடுக்க, அந்தக் கடுங்கணை அந்தரத்துலாவி யதிர்ந்து, அவனிமேற் சுலாவியிவர்ந்து, விகர்னனுடைய வெற்றி மகுடமுடியை வெட்டியெறிந்து, மறுபடியும் வீமனிடத்திற் கிட்டியுறைந்தது.

### கர்னனுக்கும், வீமசேனனுக்கும் நடந்த கடும்போர்

அக்காலையில் ஆறுபேர் தம்பிமார்களுடன் தேறி, விகர்னனிறந்து வீறி, தெய்வலோகமேறிய விந்தையை துரியோதனனுங் கர்னனுங் கண்டு வெகுளி மேற்கொண்டு, வெகு படையுடன் சென்று வீமனை மடக்கினர்கள். அக்காலையிற் போர்புரிவதற்குப் பொருந்தித் திருந்திய புயாசலப் பிரகாசம்பெற்ற வீமசேனன் பொங்கி யெழுந்து, பற்பலர் ஆவியிழந்து, சிற்சிலர் கூவி விழுந்து, மறந்து மாய்ந்து போகும்படிக்கு மந்திரக்கணைகளை ஆய்ந்தெறிந்தான். அந்தவேளையிற் காய்ந்து

வீசுங் கோபியாகிய கர்னன் வந்தெதிர்த்துக் கொலைவாளிகளைத் தொடுத்த காலையில், அப்பாபியாகிய கர்னன் பதைத்தோடும்படியாய்ப் பருந்துக்கணை முதலியனதைத் தொடுத்துக் கலகம் விளைத்தான் சாதுரியனாகிய வீமசேனன். அப்போது ஒரு கர்ப்பத்தில் ஓர் உதிரசம்பந்தமா யுதித்த தம்பிமார்களிற் பலபேர் பலமுகத்தா லிவ்வொரு வீமசேனனாலேயே பட்டழிந்ததைக் குறித்துப் பரதவித் திரங்குந் துரியோதனனுக்கு மனஞ் சகியாமல், தானுமெதிரிட்டுச் சரத்தடி பட்டுத் தன்னை மறந்து, பிரபஞ்ச வாழ்க்கையை துறந்து தன்னுடைய வெண்ணமும் பறந்து, உரியாரிற்சிறந்த சிறிய தந்தையாகிய விதுரமகாராஜன் ரகசியமில்லாமல் ராஜசபையில் யாவருங் கேட்க விளம்பிய மதுர வாக்கியத்தை மனத்துனினைத்து மதித்து, மனமறுகி வதங்கி, ஊற்றமடங்கி, சூத்திரமிழந்த பாவைபோல் அசைவற்று நின்றான். அந்தச் சமயத்தில், தன் கண்ணுக்கு நேராகத் துரியோதனன் வருந்திப் பறந்ததையும், அவனுடைய தம்பிமார்க ளிறந்ததையும் அங்கதேசத்ததிபதியாகிய கர்னன் கண்டு, மனம் வருந்தி நொந்து, மேகவேகமாகப் போகுங் குதிரை பூட்டிய தேரேறி வந்து, சோகதாகமாகநிற்குந் துரியோதனனுடைய முகத்தைப் பார்த்து, யுத்தசன்னாகமாக பாகித்து வந்த மோகத் தம்பிமார்களை சாகக்கொன்ற வீமசேனனது முடித்தலையை யிதோ ஒருநொடிப்பொழுதில் ஒடித்தெறிகிறேன். அப்படி அவன் தலையை ஒடித்து முடிக்காமல் போவேனாகில், இப்போதே என்னுடைய அல்பமான தலையை அவன் கையிற் கொடுத்துவிடுகிறேன். நீர் அதுவரையிலும் விசனப்படாமலிரும் என்று உருதி வசனஞ்சொல்லிய சுஜனமித்திரனாகிய கர்னனானவன், பெருப்புகழ் தாங்கிய இரும்புக்கொர்ப்பாகிய வில்லைவளைத்து, வல்லவர்கள் மதிக்கும்படி நாணியிறுக்கி, எடுத்தகைசாயாமல், தொடுத்தபாண மோயாமல், நீலமலைபோல் நெருங்கியதோளும், வீரகண்டைபூண்டதாளும், சினங்கொண்ட மனமும், நெற்றியிற்சுருக்கி நெருக்கிய புருவமும், சுற்றைக்கற்றையாய்க் கனலெழுங் கண்களுங்காட்டி, கடுங்கணைகளைப்பூட்டி, தேரோடிப் பாராட்டிப் போராடிப் போர்கூட வேர்வாடிப் போர்செய்து வராநின்ற வீமன்மேற்றூவி, இனி இவ்வுலகமெல்லாந் துரியோதனனுக்கு சந்தேகமறச் சொந்தமென்று தேவர்முதலாகிய யாவரும் பேசிக்கொள்ளும்படியாய்ப் பலமாகிய யுத்தம் செய்தான் அப்பருதி குமாரனாகிய கர்னன். அவ்வேளையில், பாரிய ஆற்றைப்போலொத்த கால்வாயினீற்றில் அளறாகப்படிந்த சேற்றில் அழுங்கிப் பதுங்கி ஒதுங்கிக் கிடக்கும் ஆமையைப் பலம்பொருந்திய மல்லர்கள் மொய்த்திருக்கு முத்துக்களுடன் இருகையாலும் சேர் என்று வாரியெறியும்படியாகிய நீர்வள நிறைந்த செல்வக் குருநாட்டுக்கதிபனாகிய வீமன், தன்தந்தையாகிய வாயுதேவனுக் கொப்பான வல்லமைகொண் டெழுந்தான். அப்படி எழும்பிய வீமனை, இவ்வுலகத்துக்குப் பகலை விளக்கி இருளைக் காய்ந்தெரிக்குங் கிரணந்தரித்த கதிரவன் திருமைந்தனாகிய கர்னனானவன் கண்டு, எமனுக்கொப்பாகிய பலங்கொண் டெழுந்தான். கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜனே! இவ்வித வல்லமை விசேடத்தைச் சொல்லவேண்டிய கருத்தென்னவெனில், இவ்விருவரும் பிறக்கும்போதே ஓர் கருப்பத்தில் ஊறியுதித்த சம்பந்த முடையவராகையால், அதற்குத் தகுதியாகிய குணங்களுங் கொண்டிருப்பார்களன்றி வேறில்லையென்பது கருத்து. இறீங்காரம்பாடி யெழும் வண்டுக ணிறைந்த பங்கஜமாலையணிந்த பருதிக்குரிய குமாரனாகிய கர்னராஜன்முகத்தை கதாயுதன் பார்த்து, ஓ கர்னராஜனே! வலிமிகுந்த சேனைகணிறைந்த இந்த யுத்தபூமியில் என்னுடனெதிர்த்து யுத்தஞ்செய்யத் தொடங்கியதுமுதல் இதுவரையிலும் எத்தனை தரம் இளைத்தோடி யிருப்பாய்? கணக்கு பார்த்தையா? இன்னமுமுன்னை வெல்லுவதற்கு நான் பின்னிடவில்லை. உன்னை வென்று வெல்லக் கொட்டுகிறது எனக்குக் கடனாயிருந்தபோதிலும், உன்னை வெல்லுகிறதில் எனக்கொரு புகழ்ச்சொல்லும் வரப்போகிறதில்லை எத்தனை தரம் நீ என்னுடன் வந்து யுத்தம் பண்ணினாலும், நானுன்னைக் கொல்லப்போகிறதுமில்லை. நீ என்கையாற் சாகப்போகிறதுமில்லை. அதேனெனில், மன்னர்கூடிய மகாசபைதனில், சொன்ன சபதம் சோர்வுறுவண்ணம் உன்முடித்தலையை முடிப்பதற்கு என் தம்பியாகிய அர்ச்சுனனுடைய கணை காத்துக்கொண் டிருப்பதினால், உன்னை வெல்லத்தக்க திடனெனக்கல்லது கொல்லத்தக்க கடனெனக்கில்லை. என்றுகூறி, வாளரிக் கொடிபடைத்த அவ்வீமசேனன் வரிபொருந்தி மணிகள்கட்டி மலரணிந்து மகிமைகொண்ட வில்லை மளமளவென்று வணக்கி, நாணியிணக்கி, தூணிநிறைந்த பல்லவந் தொடுத்து, வல்லவ ரிருவருங் கொய்யுங்

குரோதமுடையவர்களாய் ஒருவரையொருவர்
வெல்லும்படியாக மலைந்தார்கள்.

இவ்விதமாக அளவிறந்த அம்புகளைப்
பிரயோகஞ்செய்து இருவரும் எதிரெதிராக
அமர்புரிந்து, ஒருவர் கணைகளால் ஒருவர்
கலங்கி, ஒருவரை யொருவர் விட்டு விலங்கி,
மறுபடியுங் கடுகடுத்து, இருவரும்படபடத்து
அடுத்தடுத்துப் பாணங்கள் தொடுத்துப்
போர்கொடுத்த காலையில், சூரிய குமாரனாகிய
கர்னன்மேலிட்டு, காற்றின் மைந்தனாகிய வீம
சேனன் துன்பங் கொண்டு அலக்கழிந்து
கண்கலங்கிப் போகும்படியாய்ச் சீறி, இலக்க
மற்ற பெருங்கணைகளாற் கலக்கி, வீமன்றொ
டுத்த விஷக்கணையாவும் விலக்கி, அவனேறி
வந்த வச்சிரத்தேரையும், உச்சிதப் பாவியை
யும், சிங்கக்கொடியையும், தங்க மயமாகிய
வில்லையும் பங்கப்பட்டொழிய அழித்தான்.
இந்தப் பிரகாரம் அங்கதேசாதிபனால் தன்
னுடைய ரதமுதலிய யாவும் அழிந்து போவ
தறிந்த வீமசேனன் ஆக்ரமித்து யெழுந்து,
பராக்கிரமத்துடன் பாய்ந்து, சேமத்தேரிற்
புகுந்து, திடங்கொண்ட வில்லை வளைத்து,
தினகரன் மைந்தனென்னுங் கர்னனுடைய
தேகத்தைத் துளைத்துத் தீரத்துடனெதிர்
நின்றான். அப்படி நின்ற வீமனைக் கனகக்
கொடியோனாகிய கர்னன் கண்டு கவலைகொண்டு
ரதத்துடன் மீண்டு, கல்லகக்கணை - கார்
முகக்கணை - காலகாலக்கணை முதலிய பாணங்
களை ஆலகாலம்போல் விடுத்து, வீமனேறி
வந்த சேமத்தேரையுங் கெடுத்து, அவனு
டைய மேனியெல்லாம் இந்திரன் கண்களைப்
போல் வடுபடுத்தினன். அப்போது வீம
சேனன் ஏறுவதற்கு வேறு தேரில்லாமையால்,
நிலத்திநின்று பலத்திற் சிறந்த தண்டினைக்
கைக்கொண்டு சாகசஞ்செய்து, சடசடசடாத்
காரமாகச் சுழற்றி யெறிந்தான். ஆச்சரியபரிய நந்த
னெறிந்த தண்டாயுதமானது, ஆகாயமளாவி வரு
முயர்ந்த விசாலமாகிய மலைபெயர்ந்து வரு
வதைப்போலும், ஊழ்வினையோடி வருந்தன்
மைபோலும் உரத்துவந்து, கர்னனேறிய
சனகரதத்தைப் பொடிப்பொடியா யுடைத்து,
சாரதி குதிரைகளையுஞ் சாய்த்து, கர்னனையுங்
கடுகடுத்து நோக்கிவரத் தலைப்பட்டது. இப்
படிக்கு வீமன் கதையானது தன்னை நோக்கிக்
கடுகடுத்துவருந் தன்மையைக் கண்ட கர்ன
னானவன், இனிக் காரியமில்லையென்று தன்
புகழ் முதலிய பெருமையுங் கெட்டு, போர்



புரிந்தபூமியையும்விட்டு புறமுதுகிட்டோடிப்
போனான். அப்படி ஓடிய கவசகுண்டலவீரன்
பின்னும் வேறு தேரேறி, இன்னும் வீமனை
விடாமற் சின்னப்படுத்த வேண்டுமென்று மன்
னன் முதலிய யாவரு மதிரும்படியாய் வன்ன
மாகிய சிலையை வளைத்து, இதோவந்தேன்
வீமாவென்று கூவி ஆரவாரித்து அவனெதி
ரில் வந்தான். அப்படி எதிரில்வந்த கர்னனை
வீமன் கண்டு, வாள்விழி சிவந்து, வாய்மடித்
துறுக்கி, வாளுங் கேடயமுங் கைக்கொண்டு
மண்டியிட்டு, சக்ராகிர்த்தியாகச் சுழன்று, தாவி
வரும் பெரும்புலியெனப் பாய்ந்து, மட்டில்லா
கொடையாளனாகிய கர்னன் கைக்கொண்ட
வில்லை பட்டென்று வெட்டினன். உடனே
கர்னனானவன் மோசம் வந்ததென்று கருதி,
கச்சைக்கொடிகட்டிய தேரின் கம்பத்தடிவாரத்
தில் ஒரு சமயாசமயங்களுக்கு மறைந்து
போகும்படியாய் ஏற்படுத்தி வைத்திருக்கிற
சுரங்கவேதிகைத் துவாரத்தி லொளித்துக்
கொண்டான்.

அப்போது வாசமிகுந்த மாலையணிந்த
வாயுவின் குமாரனானவன், சூரிய குமாரனாகிய
கர்னனைக்காணாமல் தேடிக்கொண்டு திரும்பும்
போது, மறைந்திருந்த கர்னன் வெளிப்பட்டு
மந்திராஸ்திரமிந்திராஸ்திர முதலிய பாணங்
களினால் வீமசேனனுடைய மெய்யெல்லாந்
தைக்கச் செய்து, அருவி பெருகி ஓடி வரா
நின்ற மலையைப்போல் உதிரம் பெருகி
யோடி வரும்படியாய் மாட்டி, மேலுமேலுஞ்
சொரியுங் கணைகளினா லவ்வீமசேனன் தன்
னுடைய கையிற் பிடித்திருந்த கேடயமும்
வாளுங் கேடுறும்படியாய்க் கெடுத்து, முனை
முகத்தி லிளையாமல் நின்று போர்புரியும் அக்
கொடுஞ் சேவகனுடைய தேகமெல்லாஞ் சல்
லடைக் கண்கள்போற் றுளைபடும்படியாய்த்
தாக்கினான். அப்போது வீமன் சிறிதுஞ் சகி
யாதவனாய் தள்ளாடிச் சஞ்சலத்தா லிளைத்து,
யுத்த பூமியிற் செத்து கிடக்கும் பரிகளையும்,
யானைகளையும் வாரியெடுத்துத் தேகத்தை
மூடிக்கொண்டு, கர்னன் றொடுக்கும் பாணங்
கள் தன்போரிற் படவொட்டாமற் சிந்தையிற்
கோபாக்கினி வெந்தெழும்படியாய்ச் சினங்
கொண்ட மனத்துட நிலத்திநின்றான். இவ்
வாறு ஊரும்படியாக ரதமில்லாமலும், வில்
முதலிய ஆயுதங்களில்லாமலும், ஆருமற்ற
தனியனாய் நிலத்தில் மறைந்து நின்ற வீம
சேனனைத் தேரின்மேலிருக்கும் கர்னன் நெரு

ங்கி, தன் கையிற் பிடித்த விற்குதையால் அவனுடைய வயிற்றிற் குத்திக் கொல்லும்படியாகிய கோபந் தனக்கிருந்தபோதிலுங் குந்திதேவிக்குத் தான் கொடுத்த வரத்தை நினைத்து, கயந்தடாக முதலியவைகளி லிருக்குஞ் ஜலமானது வெப்பகாலத்தில் மேலே சூடு காட்டி உள்ளே குளிர்ச்சியாயிருக்குந் தன்மைபோல் அகத்திற் குளிர்ச்சி நாட்டி, சுடுசுடுப்பாகிய வசனங்களைச் சொல்லி, அடா வீரமில்லாத வீமா! எருமைக் கிடாவைப்போற் காட்டிற்றிருந்து கிடைத்த பல பண்டத்தையும் பிரயோசனப் படும்படியாய் உறுதியாக தின்று பெருவயிற்றை நிரப்பிக் கொண்டு வெடுப்பாகிய பேச்சைப்பேசிக் காலங்கழித்துத் திரிய உனக்குத் தெரியுமல்லாமல், விற்பிடித்து மரியாதையாகிய சொற்படித்து யுத்தஞ் செய்வதற்கு உணர்வுண்டோ? எப்போதும் படியாத மூடனுக்கும், படித்த விசேடனுக்கும் அநேக பேதாபேதங்களுண்டு அதை நீயறிவையோ? முறட்டுத்தனமா யுத்தஞ் செய்து எத்தனை தடவை வென்றாலுஞ் சாஸ்திர சாம்பிரதாயப் பிரகாரம் ஜெயம்பெறுகிற சம்பிரமத்திற் கீடல்லவே; அடா சபலனே! உன்னுடைய கதியை இப்போது நீ யோசித்துப்பார். அப்பா! இப்பவுமென்ன? மேலாகிய சொர்க்க பூமியைச் சேரவேண்டும் என்னும் இச்சையுனக் கிருக்குமாகில், என்னுடனெதிர்த்து நின்று, அமர்மலையத் தக்கதல்லவென்று இந்தக் கர்மபூமியிலிருந்து இன்னுஞ் சிலநாள் கழிக்கவேண்டுமென்னும் இச்சையுடன் லச்சையற்றிருக்க துணிவையாகில், கரகரத் தொனியுடன் சக்கரங்களுருளும்படியாகிய தேரிற் பொருந்திய நரநாரணர் அதோ செல்லுகின்றார்கள்; அவர்களிடத்திற் போய்ச் சேரக்கடவை யென்று ஆய்ந்து தேர்ந்த அறிவாளனாகிய ஆதபன் குமாரன் சொல்லி அப்பாற் போனான். இப்பால், வீமசேனன் கவசமாகப் போர்த்துக் கொண்டிருந்த கஜகளேபரச் சருமங்களை யுந்தி, தேய்பிறையைப்போல் புயவலி சிந்தி, சிந்தை வருந்தி, கதையைக் கரத்திலேந்தி, மாய்ந்துகிடக்கும் பிணமலைகளையும் ரத்த வெள்ளங்களை நீந்தி, நிணச்சேறுகளைத் தாண்டி, கிருஷ்ணமூர்த்தி அர்ச்சுனன் செல்லும்படியாகிய யூகபந்தி யிடத்தை நாடி வந்து சேர்ந்தான். ஓ தராதிபரையாளும் நராதிபனே! யாம் இதுவரையிலும் வீமசேனனுக்கும் கர்னனுக்கும் விளைந்தபோரைச் சொல்லி வந்தோம். இனிமேல் சாத்தகி செய்து வந்த சண்டையில் சிலவற்றைச் சொல்லுகின்றோம் கேட்பீராக.

### சாத்தகி அலம்புதனைப் புறங்கண்டு பூரீசிரவனோடெதிர்த்தல்

தேவர்களும் மற்றியாவர்களும் புகழுஞ் சாமர்த்தியமுடைய சாத்தகியானவர், விற்றிர வேகமும், மற்றிரக் கோபமுங்கொண்டு, கடதடக் களிற்றினங்களின்பேரிற் றாவிவரும் ஆண் சிங்கத்தைப்போற் சத்துருக்களைக் குடியோட்டிய கெடிகாட்டிய முடிசூட்டிய கொடி நாட்டிய தன் தேரை யோட்டிக்கொண்டு வருங் காலையில், தந்திரப் படைகளை முந்திச் செயித்து முடுக்கி முடக்கிவிட்டு மூர்த்தண்யமாகச் செல்லுகின்ற அர்ச்சுனனால் அடிபட்டிளைத்து, அழகிய யூகமுடைந்து புறங்கொடுத் தோடிவராநின்ற வீராதிவீரருடன் வேந்தர் யாவரும் பந்தி பந்தியாய் வந்து, தனித்தனி எதிர்த்து சண்டை செய்தார்கள். அப்போது சாத்தகி வெகுண்டு, விடையேறிய பிரான் திரிபுர தகனஞ் செய்த தினமெனச் சென்று, எதிர்த்தோரை மறித்து, சிலையைக் கோலித் திசாதிசைகள்தோறும் சரங்களிறைத்து, தீப்பொறி மலிய வெறுத்து, நாற்படைகளும் இறந்தவியும்படி நெறிந்து, யாவரும் நாவிற்சொல்லி யடங்காத வீரங் காட்டினார். இவ்வாறு குற்றமில்லாத அச் சாத்தகியானவர் வெற்றிபெற மாட்டும்போது, எதிரிட்ட படைஞரெல்லாரும் மார்பு கிழிந்து, எலும் பொடிந்து, நரம் பறுந்து, நிணமுதலிய மாமிச மிதந்து, கரங்கள் நெறிந்து, கால்கள் துணிந்து, குடல்கள் சரிந்து, தலைகள் பிளந்து, மூளைசெறிந்து, உதிரம் வழிந்து உலைந் திறந்தார்கள். இவ்விதமாகக் கரியும்-பரியும்-தேரும்-கால்பலப் பந்தியுங் கால்சாய்ந் தழியும்படியாய் வென்று வராநின்ற உண்மைக் கொருவனாகிய சாத்தகியை, கடோற்கஜனுடன் போராடிக் கையிளைத்துக் கண்கலங்கி யோடிவருகின்ற அலம்புதன் கண்டு, குற்றமாகிய மனங் குறுகுறுத்துக் கறுத்து, கோபமாகிய விழி செவசெவக்கச் செவந்து, மலையை நிலைகுலையச் சாடுந் தோளிணையுடைய வாசுதேவன் தம்பியாகிய சாத்தகியை மார்புந் தோளும் உருவும்படியாய் வாளிகளேவி மதிமயங்கக் கலக்கினான். அதுகாலையில் சாத்தகியானவர், அமோகமாக அக்கினிக் கணைகளைத்தொடுத்து அந்த அலம்புதன் விடுத்த அஸ்திரங்களை

யெல்லாம் அழித்துப் போக்கி, அவன் கைப்
பிடித்த வில்லையும் நீறுநீறுக்கி, அவனுடம்பி
லுந் தாக்கி, உதிரம் வழிய உடல் கிழியச்
செய்தபோது, கார்முகமிழந்து, போர்முக
மழிந்து, நேர்முகமொழிந்து ஒரேமுகமாய்
விழுந்தோடினன் அலம்புதனைவன். அப்பா
லொருவருஞ் சாத்தகியைத் தடுப்பதற் கிட
மில்லாமையால், துரோணாசாரியர் கட்டிய
பற்பல வியூகபந்தியிற் கலந்து, தனிப் புலிபோ
லெதிர்ந்து, பகைவரை நோக்கிப் பற்கடித்து
நின்றனர். அத்தன்மையைப் பூரிசிராவென்
னும் புகழ்ப் பிரக்யாதிபெற்ற போர்வீரன்
பார்த்து, அச்சாத்தகிக்கு நேர்முகமாக வந்து,
அடா கார்முகம் பிடித்த காளையே! இந்தட்
சணத்தில் உன் பிராணனை வாங்குகிறேன்.
ஓடாமல் நில்லடாவென்று சொல்லித் தடுத்து,
பூமி அதிரும்படியாய்த் தனது தட்த்தேரைச்
செலுத்தி முனைத்தெதிர்த்தான். அப்படி
எதிர்த்த பூரிசிராவை முகுந்தனுடைய தம்பி
கண்டு, வாரும் வாரும் பூரிசிரவனே! இது
வரையில் ஒருவரிடத்திலுஞ் சாகாமல் தப்
பித்துக் கொண்டிருந்த உன்னை என்னு
லிறப்பிக்கும்படியாய் இப்போது மிருத்து
தேவதை உன் பிடரியிலிருந்து தள்ளிக்
கொண்டு வந்ததல்லவா? அந்தத்தேவதையே
உன்னை யுந்திக் கொண்டுவந்து என்முன் விடு
மாகில், உன்னைச் சிந்துசிந்தாயச் சேதிக்கா
மல் விடுவேனே? என்று தீரவார்த்தைகள்
சொல்லி தனக்குத்தானே யொப்பாகிய பூரிசி
ரனை ஊக்கமுடைய சாத்தகியானவர் தாக்கி
னர்.

சாத்தகியோடு பூரிசிரவனே திர்த்து மிஞ்சியதைக்
கண்ட கண்ணன் அருச்சுனனை எச்சரித்தல்

இந்தப்படிக்குச் சாத்தகியும், பூரிசிர
வீரவாளி
னும், வெவ்விய வில்லைவளைத்து, ஒன்
கனைத் தொடுத்து, தேருந்தேருங்கிட்டி,
றோடொன்று முட்டி, இடிபடும்படியாகச்
செலுத்தி, விண்ணுலகும் மண்ணுலகும் அதி
ரும்படியாய் மலைந்தபோது; இருவருடைய
பாணங்களி னுறுவடியால், இருவருடைய
தேரும், இருவருடைய பரியும், இருவரு
டைய பாகும், இருவருடைய வில்லும் அழி
ந்து பூமியில் விழுந்தன. உடனே இருவ
ரும் நிலத்திற் பாய்ந்து, வாளுங் கேடயமுங்
கைக்கொண்டு முனையொட்டிப் பதுங்கி,
யொதுங்கியிருந்து, அதிர்ந்து கிளம்பி, விள
ம்பி எழுந்து, மிகுந்தலகுவுடன் ஈரடி, மூவடி,
நாலடியிற் சுழன்று, இடியுடனிடி ஆர்த்திடிக்
குந் தன்மைபோல் இருவரு மறைந்து, விரை
ந்து கிட்டிக் கட்டிக் கீழுமேலுமாய் விழுந்து,
மறுபடி யெழுந்து, ஒருவரையொருவர் புர
ட்டி மகிழ்ந்து ஓங்கரித்து யுத்தமேலிட்டு ஆங்
கரித்தார்கள். அப்போது புண்டரீகாக்ஷனாகிய
பெருமான் அர்ச்சுனனைத் தூண்டி, சாத்தகி
யும் பூரிசிரனுஞ் செய்கின்ற செருமுனையைப்
பார்த்தையாவென்று காட்டி, காரிய மிஞ்சிப்
போவதற்கு முன்னே உன்சிஷனாகிய சாத்தகி
யைக் காத்துக்கொள்ளென்று கருணாநிதியா
கிய அக்கண்ணன் தருணோசிதமாய்ச் சொல்லி
னர். அந்தவார்த்தையை அர்ச்சுனன் கேட்டு,
சுவாமீ! இரண்டுபேரு முனைந்து ஒருவரை
யொருவர் வெல்லவேண்டுமென்று சமமாகச்
செய்துவரும் போரில், இளைத்தவனுக்குத்
துணையாகி நடுவிலொருவன் புகுந்து, யுத்
தஞ்செய்வது ராஜவீர தர்மமல்லவே; ஓநந்த
நாதனே! மேலும், இவன்பேரில் அவனும்
அவன்பேரில் இவனும் வாளெறிந்து விட்
டார்கள் படைக்கல மேலிட்டு விட்டது. அப்
படி மேலிட்ட ஆயுதங்களை மாற்றும்படியான
பெரிய சாமர்த்தியத்தன்மை இப்போப்பட்ட
தென்று ஓசிக்காமல், வாய்சுளுவாய்ச் சொல்லி
விட்டீர். நல்லது; நீர் சொன்னபடி செய்யலா
மென்றாலும், யாவருக்கு மிருக்குந் தன்மை
போல் எனக்கும் இரண்டுகர மிருப்பதல்லா
மல், அதிகமாகிய கரங்கள் பெற்றிருக்கின்
றனோ! சொல்லும்; ஓ திருமார்பனாகிய திரு
மாலே! ஒரு கரத்தில் விற்பிடித்து மற்றொரு
கரத்திற் பாணந்தொடுத்து, எனக்கு முன்
னிட்டு அவ்விடத்திற் பொருந்திய போர்
வீராள்பேரிற் போர்கொடுத்து, வருகிறவன்
பேரிற் பாணந் தொடுப்ப தெவ்வண்ணம்?
இது கூடாப்பட்சமா யிருக்கின்றதே கோவிந்
தாவென்று கிரீடிசொல்ல, அந்த சொல்லை ஸ்ரீ
கிருஷ்ணன் கேட்டுச் சொல்லுகின்றார்.

ஓ அர்ச்சுனா! தன்னுடைய பிராணன்
பேரில் ஆசைவையாமற் பெண்சாதி பிள்ளை
களைவிட்டுப் பெருங் கூட்டமாகிய போரிற் றலை
பட்டு உனக்கிணையாக வந்தவரைச் சத்துருக்
கள் மடக்கிக்கொண்டு கொல்லும்போது, நீ
அவர்களுக்கு உதவிசெய்து காக்காமற் பார்த்
திருப்பதுவோ காவலர் தர்மம்? ஆ! ஆ! இந்த
நன்மையாகிய தர்மத்தை எத்தனை நாளாய்க்
கற்றுக்கொண்டாய்? விற்றிறலானே! ஒரு
வேளை என்னை ஒருவன் மடக்கி அடித்தாலும்

நீ எனக்கு உதவிசெய்ய மாட்டாயல்லவா? இப்
பேர்ப்பட்ட தர்மவிசாரணையையுடையஉனக்கு
நான் சாரத்தியஞ் செய்ததைப் பார்க்கிலும்,
இப்போதே உயிர் பிழைத்துப் போய்விடுவது
உத்தமமாயிருக்கின்றது. இதல்லாமலும் எட்டு
திக்குப் பதினறுகோணத்திலு மிருந்து எதிரி
கள் வந்தடுத்துப் போர்கொடுத்தாலும், அப்
பேர்ப்பட்ட யுத்தத்தில் வலுக்குறையாமல்,
மனமிளையாமல், வாழ்நாள் பேரில் வாஞ்சை
கொள்ளாமல், மனைவி மைந்தர்பால் ஆசை
வையாமல், பின் பலந்தேடாமல், தன்னைக்
காத்து, தேர் - குதிரை - சாரதி முதலிய
வில்லைக் காத்து, சத்துருக்களை ஜெயித்து,
வெற்றி யடையும்படியானவன் எவனோ?
அவனை யல்லவோ அதிரத விஜயனென்று
பேரிட்டு அழைப்பது; அந்த விஜயனென்
னும் பேரை உரித்தாகப் பெற்றிருக்கின்ற நீ,
எனக்கிரண்டு கையேயொழிய அநேகங் கைக
ளிருக்க யில்லையேயென்று சொல்லத்தக்கதோ;
ஓ சுந்தரனே! இருவர் நேரிட்டுப் போர்புரி
யும்போது, அவருள் ஜெயிக்குந்திறம் யாரு
டையதென்று யோசிக்காமல், வாய்சுளுவாய்ச்
சொல்லிவிட்டீ ரென்றாய்; ஐயா! செயிக்குந்
திறம் உன்னிடத்திலிருக்குதென்று உணர்ந்து
தான் நான் சொன்னேன். அர்ச்சுனா! அந்த
மட்டும் நல்லகாரியம். நீ மகா புத்திசாலிதான்.
இப்பவுங் காலதாமசஞ் செய்யாமல் அப் பூரி
சிரனை ஒரு கணையாற் றடித்திடென்று அகில
சராசரங்களெல்லாம் அடக்கமா யடங்கும்
படிக்கு வயிற்றில் வைத்தருளிய மாயோ
னுரைக்க, வாசவன் மகன் மந்தகாசத்துடன்
விசுவாசமாக மனத்துட்கொண்டு, மணி
யடங்க ளணிந்து அரத்தாலுராவிக் கூர்மை
யிற் றிணிந்து, அதி தீக்ஷண்யமாக மூனிந்
திருக்கும் பயிரவாளியை விஜய காண்டீபத்
திற் பொருத்தி, தேவர்கள் கொண்டாடும்
போர்வலித் திறத்தையுடைய சாத்தகியும் பூரி
சிரனும் வாள்மர்தொடங்கிய வரிசைவகையை
அப்பக்கமாகத் திரும்பி பார்த்துக்கொண்
டிருந்தான் மாதவி கணவன்.

பூரிசிரவன் அருச்சுனனாற் றோளறுந்து
சாத்தகியா லிறத்தல்.

அந்தச் சமயத்தில் வலிமையும் வள்ளமை
யும் நிறைந்த தடந்தோளுடைய மரியன்
சகோதரனுகிய சாத்தகியைப் பூரிசிரா வான
வன், வில் யுத்தத்தில் வென்ற தன்மையைப்
போல் மல் யுத்தத்திலும் வென்று, ஆளைப்
பூமியில் வீழ்த்தி கல்லென்று வமிக்கிப் புயத்
தின்மீது தன்னுடைய காலமூந்த மதித்துக்
கொண்டு, கடககங்கணைத் தொடிவலய மணி
ந்த கரத்திற்றரித்த வாளாயுத்தை யோங்கி
அந்த சாத்தகி இறக்கும்படி தலைமீதில் வீசுவ
தானன். இதற்குள்ளாக எதிர்ப் பார்வையி
லிருந்த விஜயனானவன், வில்லிற்றொடுத்து
இருந்த பயிரவக்கணையை இமைகொட்டுமுன்
விடுத்து, பூரிசிரனுடைய தோளானது வாளு
டன் விழும்படியாக துண்டித்தான். உடனே
வேதமந்திரத்தை உருச்செபித்து விஷவிளை
வேற்றும் வாளினையுடைய பூரிசிரனானவன்,
அர்ச்சுனன் கணையால் தனது தோளும்
வாளுந் துணிந்ததென் றுணர்ந்து, அர்ச்
சுனனின்ற திக்கை நோக்கி, ஓ! ஓ! சவ்விய
சாசி! நான் உன்னுட னெதிர்த்து யுத்தம்
பண்ணவில்லையே; வேறொருவனுடன் போர்
புரிந்து, ஒருவருட னொருவர் பிராணன்
வரைக்கும் ஓட்டி, வாள்யுத்தமென்னும் வாரி
தியை நீந்திக் கரையேறப்போகிற சமயத்தி
லுன்னுடைய வாளியால் என் றோளைத்
துணித்தனை. நல்லகாரியஞ் செய்தாய்; ஓ தர்
மந் தப்பாமல் நீதியை நடத்துஞ் சூரியனுக்
கொப்பான வீரியனே! அதர்மமாகிய அன்னீ
திக் குடம்பட்டையே; ஐயோ! ஒருவரோ
டொருவர் க்ஷாத்திர மேலிட்டு சத்தியந் தப்
பாத சமர்பூமியில் நின்று போராடும்போது,
நடுவில் நீ வந்து செய்த நியாயம் உனக்கு
வில் வித்தைக் கற்பித் தருளிய துரோணாச்
சாரியராற் கற்றுக்கொண்டதோ? அல்லது
நீ யிந்திர லோகத்திற் போயிருந்தபோது,
உன்னுடைய தந்தையாகிய தேவேந்திர
னாற் றேர்ந்து வந்தனையோ? அல்லாமல்
அளவில்லாத ஆத்மகோடிகளைச் சிருஷ்டிக்
குங் காரண கர்த்தாவாகிய பிரமாவின் கால்
வழியில் வந்த காரியத்தலைவர்களாகிய பிரா
மணர்களாற் பயின்றதோ? அல்லது உன்னு
டைய ரதத்திலிருந்து சாரத்தியஞ் செய்யுங்
கமலநாயகனுடைய சிறந்த போதனையைக்
கொண்டு செய்ததோ? ஆ! ஆ! அர்ச்சுனா?
அளாவிர்தகண்ட முதலிய திக்குகளெல்லாம்
ஜெயஸ்தம்ப நாட்டிய உன்வீரியம் மாசடை
யும்படியாய், அறிவிலா விவேக சூரியரைப்
போல் தர்மவிருத்தமாகிய காரியத்தை மேற்
கொண்டு, நாணமில்லாமல், மானமில்லாமல்
என்ன காரியஞ்செய்தாய்? ஓ விஜயனே என்று
ஒப்பற்ற சிலையாண்மைபெற்ற பூரிசிரனான
வன் இப்படி சொல்ல, மிக்கோராற்புகழுந் தக்

கோணுகிய பற்குனன்போட்டு, இகணப்பேசுவ தாயினுன்.

ஓ புத்தியிற்சிறந்த பூரிசிரவனே! நீ கேட்ட கேள்விகளுக்குப் பற்பல விதமாகிய ஞாயம் உனக்குச் சொல்லவேண்டிய அவசரமில்லை. ஆகிலும் நீயே யோசித்துப் பார்க்க லாம் எனக்கு உயிர்த்துணையாக வந்தபேர்கள் பகைவர்கள் கையிலகப்பட்டு நடுங்கி உயிரிழக்குந் தன்மையைப்பார்த்த யான், அவர்களுக்குதவி செய்யாமலிருக்கலாமோ? நீயே சொல்; ஆதலால், அவர்களுக்குச் சகாயஞ் செய்து என்னுடன் சேர்த்துக்கொண்டேன். இதைக் குறித்து நீ பழிக்கத்தக்கதோ? இது பழிப்புக் கிடமோ? நீ வெறுத்துக் கொள்ளவேண்டிய பேர்கள் வேறிருக்கின்றார்கள். அவர்களாரெனில், துரியோதனனுக்குப் படைத்துணையாக வந்து, சுகதுக்கங்களுக்கு உடம்பட்டுப் போர்கொடுத்து வராநின்ற உன்னை, இந்தச் சமயத்தில் என் மனிதனுக்கு உதவியாகிக் காத்த என்னைப்போல் விற்படை வேற்படையுடன் வந்து, உனக்கு உதவிசெய்யாத பேர்கள் தான். ஆதலால், அப்படிக்கு உதவிசெய்யாத உங்கள் முதல்வராகிய துரியோதனுதியருக்கு முன்போய் வெறுத்துக்கொள்ளவேண்டும். ஓ பூரிசிரவனே! இந்த ஞாயம் இப்படியிருக்க, நேற்றுப் பதின்மூன்றும் நாள் யுத்தத்தில் மழலை வார்த்தை மாருச் சிறு குழந்தையாகிய அபிமன்னன் அதுலசங்கிராம விஜயனுகப் பொங்கிப் போர்புரிந்தபோது, பின்னுல் ஒருவன் வந்து நாணியறுத்ததும், முன்னே ஒருவன் நின்று வில்லை முறித்ததும், பக்கத்திற்பலபேர் இருந்து தேரை யழித்ததும் நீ பார்க்கவில்லையோ? நீ அவ்விடத்தி லிருக்கயில்லையோ? இப்போதறிந்து சொல்லிய பாவபுண்ணியம் நேற்று நடத்திய அனியாயத்தின்மீது மாறு சொல்லத் தெரியாமற் போச்சோ? அப்போது மறந்து விட்டையோ! அந்த மட்டும் நீ மகா யோக்கியன்ருன். அப்பா பூரிசிரனே! உன் சொந்தத்துக்கு ஆனபடியால் இப்போதாகிலும் பாவபுண்ணியம் பார்த்து சொன்னுய்; இதுவும் மெத்தமேன்மையான காரியந்தான் என்று பலபல தருமவாக்கியங்களை எடுத்துச் சொல்லி அவனுக்கருகிற்சென்று நின்று, ஒரு புஜமறுந்திருக்கிற அப் பூரிசிரனென்னுஞ் சிறுவனை அறிவாளியாகிய அர்ச்சுனன் பார்த்து, நம் குலங்களுக்கெல்லாம் நமனுக ஏற்பட்ட துரியோதனராஜன் நாளையே யழிந்து நரகத்தில் மூழ்கப்போகிருன். அவனுக்காகத் துணைப்பட்டு வந்த நீ துற்கதிபுகலாமல் நற்கதிசேரக்கடவை என்று இரக்கத்துடன் நயமாக வார்த்தை சொல்லிய அர்ச்சுனனுடைய அன்பை பூரிசிரன் அகத்திட்டுக்கொண்டு, அறுபட்ட தோளுடன் சாய்ந்துகிடக்கும் வாள் மேல் வீழ்ந்து, வெற்றிபெற்ற பிராணனை விடும் தன்மையனுகியிருந்தான். அவ்வேளையிற் சாத்தகி கண்டு, தன் பிராணன் போய்விடுமென்று நொந்திருந்த கிலிவிடுத்து, புயவலியடுத்து, கோபங்கொண்டுச் சீறி எழுந்து, தனது கையிற் பிடித்திருந்த வாளாயுதத்தால் ஓங்கி பூரிசிரனை வெட்டத் துணிந்தார். அப்போது மதமூன்றுடைய மால் யானை போன்ற நரநாரணரிருவரும், ஆ! ஆ! ஆ! என்றதட்டி கையமர்த்தவும் நில்லாதவராய், தன் கோபமடங்க ஒரே வீச்சில் தலைவேறு உடல்வேருக வெட்டித் தள்ளினுர்.

### கர்னனிழித்துரைக்கக் கேட்டுவந்த வீமசேனனை அருச்சுனனடக்கி ஆதரித்தல்

இந்தப்பிரகாரம் பூரிசிரனுடைய சிரத்தைவெட்டி வீழ்த்திவிட்ட சாத்தகியானவர் கால் நடையாக நடந்து சென்று, செத்துக் கிடக்கின்ற பிணமலைக் கணவாய்களெல்லாம் தாண்டி, ரெத்தவெள்ளங்களெல்லாம் நீந்தி, முடியாத காரியங்களை அதி சொற்பத்தில் முடிக்கும்படியாகிய கிருஷ்ணார்ச்சுனுளென்னும் முதல்வரிருக்குமிடத்திற் போய்க் கலந்தார். இவருடைய சங்கதி யிப்படியிருக்க, கர்னனுலடிபட்டு மரணமூர்ச்சை யடைந்து, தீப்பொறியெழ விழித்து, வசன்மாற்ற மொன்றுமில்லாமல், விசன ஆற்றலுடன் காலோட்டமாய்த் திரும்பி வருகின்ற வாயுகுமாரனுகிய வீமசேனனை நரநாரண ரிருவருங்கண்டு விசனங்கொண்டு, ஓ! ஓ! ஈதென்ன அதிசயம்? இப்படியாக நீர் வருவதற் கேதுவென்ன? என்று நரநாரணர் கேட்க, இடும்பிநாயகன் மனமிடிந்து மாயனைப் பார்த்துச் சொல்லுகிருன். ஐயா! தேவரீர் மூழக்கிய சங்கத்தொனி கேட்டவுடனே, தேவதத்தத் தொனியைக் காணுமையினுல், அர்ச்சுனனுக் கென்னமோவென்று தர்மராஜன் சந்தேகப்பட்டு சாத்தகியையனுப்பினுர். பின்னுஞ் சற்றுநேரம் தரித்து என்னையும் அனுப்பி வைத்தார். அவ்வருத்தாரப்படி புறப்பட்டு பற்ருர் முதலிய படையை பற்றறச் செய்து, பத்மவியூகமுனைக்கு வந்து உங்க ளிரு

வரையும் க்ஷேமமாகக் கண்டு, இந்த க்ஷேமத்தை எனது ஸ்வரிங்கநாதத்தொனி சென்று தர்மநந்தனருக்கு தெரிவிக்கும்படியாய் முழக்கஞ்செய்து உங்களை நோக்கி வரும்போது, காவலன்றம்பிமாருங் கர்னனும் வந்தெதிர்த்து மடக்கினார்கள். அவர்கள் மதத்தை யடக்கி, ரதத்தையழித்து பதத்தையளித்து, அதத்தை விளைத்துவந்த என்னை மறுபடியுங் கர்னன்வந்தெதிர்த்து, என் பாணங்களா லதிர்ந்து மடங்கி விசைகொண்டு ஓடினான். இப்படி யொரு விசை யல்ல; பலவிசையாம். அவமானப்பட்டோடினதுமல்லாமல், துரியோதனன் றம்பிமார்கள் இருபத்தெட்டுபேர் இறக்கும்படி செய்து விடுத்து, அவர்கள் சேனைகளையும் பறக்கும்படி கெடுத்தேன். இப்படியிருக்க ஒரு தடவை ரதமேறிவந்து என்னுடைய ரதமுதலிய வில்லை முறித்து, நான் றெடுத்த பாணங்களினால் தன்னுடைய தேரும், சீரும், பேருமழிந்து ஓடிப்போனான். அப்படி ஓடினவன் மறுபடியும் தேரேறிவந்து, நான்கைக்கொண்டிருந்த கதையை முறித்து, என்தேகம் சிதயவடித்து, யானைச் சருமங்களாற் புதைத்திருந்த என்னை விற்குதையா லடித்திடித்து, நங்கபங்கமாகப் பேசாத பேச்சும்பேசினான் என்று வீமன் சொல்லவே, அவ்வார்த்தையை விஜயன் கேட்டு வெதும்பித் துடித்து, வீமனைப் பார்த்து, அண்ணா நான் உம்மாலே மானமழியப் பட்டபாடுங் கெட்டகேடு மறந்து, இப்படிக்குப் பேசுவோமாகிற் பிற்படிக்கிப்படி விளையுமே என்னுங் கேடுமெண்ணிப் பாராமல், அக்கர்னனுனவன் உம்மை யிழிவாகப் பேசினனல்லவா? ஆகட்டும். அவனும்மைப் பேசியதல்ல. அவைகளெல்லாம் என்னைப்பேசிய வார்த்தையாக்கும். நீர் இதைக்குறித்து விசனப்படவே வேண்டாம். இதற்காகப் பரிந்து கோபங்கொள்ளவும் வேண்டாம். என்று தமயனின் கவலையைத் தணித்து, வனமாலை யணிந்த திருமாலை அர்ச்சுனன் வணங்கி, அவரருள் முகநோக்கி இதனைச் சொல்லுகின்றான்.

### சாத்தகி பூரிசிரவனுக்கிளைத்த காரணத்தை அர்ச்சுனன் கேட்க, ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி அறிவித்தல்

ஓ அநந்தகல்யாண குணங்கள் நிறைந்த கோபாலா! என்னண்ணாவாகிய வீமசேன மகாராஜன் சொன்னதெல்லாங் கேட்டீரா? நல்லது, அஃதப்படியிருக்கட்டும். சோமதத்தன் பிள்ளையாகிய பூரிசிரனும் சாத்தகியின் சாமர்த்தியங் குறைந்து போகும்படியாகிய தன்மை என்னவென்று வரிமுனை விரிந்த இந்திரதனுவைப்பெற்ற இந்திரன் மைந்தனுகிய சுந்தர விஜயன் கேட்க, தமக்கொருவரும் நிகரில்லாத முள்ளரைத் தாளினையுடைய செந்தாமரைக் கண்ணன் திருவாய் மலர்ந்தருளினார். அஃதென்னவெனில், கம்ஸனுடைய தந்தை உக்ரசேனனும், அவனுடைய தம்பி தேவகனும், நாடாண்டு வருநாளையில் தேவகனுக்குக் குமாரத்தியும் எனக்குத் தாயுமாகிய தேவகி தேவியைச் சுயம்வரம் நாட்டவேண்டுமென்று கல்யாண வோலையுடன் தூதனுப்பி வைத்தார்கள். அக்காற் சகலராஜர்களும் வந்தார்கள். அப்போது எங்கள் பாட்டன்மாராகிய சூரசேனனும், சினி என்பவரும் அச்சுயம்வரத்துக்கு போயிருந்தபோது எல்லா ராஜர்களையும் வஞ்சித்து, அந்தத் தேவகியம்மனைத் தூக்கிக்கொண்டு வந்து, தங்களுக்குப் பிள்ளையாகியும் எனக்குத் தந்தையுமாகிய வசுதேவருக்குக் கலியாணம் பண்ணிவைக்க வேண்டுமென்று எண்ணி எனக்குச் சின்னபாட்டனும் இச்சாத்தகிக்குச் சொந்த பாட்டனுமாகிய சினியென்பவரெழுந்து, சபைமேல் நடந்து, தாவி விழுந்து, தேவகியைக் கைக்கொண்டு திரும்பினர். அப்போது தேசராஜ போஜரெல்லாஞ் சேர்ந்து பகைத்துச் செருவிளைத்து, சினியென்பவரால் அடியுண்டு திசாதிசையிற் றெரிந்து போனார்கள். அக்கால், வாகுலீக குமாரனுகிய சோமதத்த னொருத்தன் மாத்திரம் மனம் வருந்தாமல், முடிவளையாமல், அஸ்திரங்களின் அடியாலிளையாமல், வாடிக்களையாமல் மெத்த வலுவேறிச் சினியுடனெதிர்த்து கலகமுதிர்ந்து ககனம்விதிர்ந்து உலகமதிர்ந்து உடலம்பிதிர்ந்து போகும்படியாய் இருவரு மம்புகள் விட்டு வம்பு புரிந்தார்கள். இப்படி நெடுநேரம் வரையிலும் ஒருவரோடொருவ ரோயாமல் யுத்தஞ்செய்து, எங்கள் பாட்டனுகிய சினியென்பவர் ஜெயங்கொண்டு தன்னுலிளைத்த சோமதத்தனைப் பூமியிற்றள்ளிப் புரட்டிப் புரட்டிக் காலாலுதைத்து உன்னுடையபொல்லாதகாலம் இவ்விதமாச்சுது நான் உன்னைக் கொல்லாமல் விட்டேன். நீ ஓடிப்பிழை என்று உதைத்தோட்டி விட்டு, நமது குலமுறைப் படிக்கு வேதவிதியை யனுசரித்து தேவகிதேவிக்கும், வசுதேவருக்குந் திருக்கலியாணங் கண்டருளி பந்து ஜனங்களுடன் சம்பிரமங் கொண்டாடி மகா சந்தோஷங் கொண்டிருந்தார்.

இப்பால், முன்னுலடிபட்டோடிய அரசர்
களெல்லாரும் முடிகெட்டோடிய சோமதத்
தனைக் கண்டு, ஐயோ! முன்னமே எங்களைப்
போல் ஓடிவந்து விடாமல் வீணுகிய வீரங்
கெட்டு கொஞ்ச மெஞ்சியிருந்த சேனைக்கும்
புகளெல்லாவற்றையுங் கூட்டியோட்டி எதிர்த்
ததில் என்னபலனென்று சொல்ல, அவர்கள்
பேசிய வாசகத்தால் வெட்கமடைந்து வெகுளி
யுற்று, அதுவே பயணமாய் நாட்டைத் துற
ந்து காட்டுக்குப்போய், விபூதிதுளித சடை
முடி மரவுரியுடன் அடயோகத்திலிருந்து எப்
பொருட்கு மிறைவனுகிய கைலாசபதியைக்
கருத்திலிருத்தி, வருத்தமாகிய தவத்தைப்
புரிந்தான். இப்படி நெடுநாட் சென்றபிற்பாடு,
அவனுடைய தவசுக்கிரங்கி சாம்பவமூர்த்தி
யானவர் பிரசன்னமாயினுர். அப்போ தவம்
விட்டெழுந்து வலம் வந்து சாஷ்டாங்கமாக
விழுந்து தொழுது, கண்ணீரைப் பெருக
விடுத்து அழுது போற்றியகாலையில், உனக்கு
வேண்டிய வரமென்னவென உமாமஹேசன்
கேட்டார். அப்போது சோமதத்தன் வணங்கி,
என்னுண்டவனே! என் பகைவனுகிய சினி
யென்பவனை நான் வெல்லும்படியாய் அருள்
புரிய வேண்டுமென்றிரக்க, அந்த வாக்கியத்
தைக்கேட்ட பரமசிவனுனவர், அப்பா சோம
தத்தா! நீ கேட்ட வரத்தைக் கொடுப்பதற்கு
உன்றவம் பயன்படாமற் காலாதீதமாய்ப்
போய்விட்டபடியால், உன் பகைவனுகிய சினி
யும், அவன் பிள்ளையாகிய விருஷ்டியுமிறந்து
போய்விட்டார்கள். ஆதலால், உனக்கும் அவ
னுக்கும் பகைபோய்விட்டது. அப்படி யல்ல
வென்று நீ செயம்பெற வேண்டுமாகில், சினி
கால்வழியிற் பிறக்கும் பிள்ளையானவன் வெல்
என்பவனுடைய பேரப் பிள்ளையை செல்லிக்
வான். ஆதலால், நீ போவென்று செழுந்தரு
கண்ணுதலானவர் கைலாசத்திற் கெழுந்தரு
ளினுர். இவ்விதமாகப் பரமசிவன் அநுக்கிர
கம் செய்த வரத்தைப் பெற்றுவந்த தன்மை
யால், இந்தச் சாத்தகியை அந்த சோமதத்த
னுடைய கால்வழியில் வந்த இந்தப் பூரிசிர
வன் வெல்லும்படியாக நேரிட்டது. இல்லா
விட்டால் வெல்லக்கூடுமோ? அர்ச்சுனு! காரண
மில்லாமல் ஒன்றும் நடவாது என்று கமலக்
கண்ணன் பூர்வீக கதையை எடுத்துச்சொல்ல,
வீமன், அர்ச்சுனன், சாத்தகி இவர்கள் மூவ
ருங்கேட்டு மனங்களித்து, முராரியாகிய முதல்
வனை வாழ்த்தி, நானிலங் குலுங்க, நாகருங்
கலங்க, நாற்றிசை நடுங்க, நால்வரும் ஏக
காலத்திற் சங்கத்தொனி செய்தார்கள்.

### வீமன்-அர்ச்சுனன்-சாத்தகி இம் மூவரும் சயிந்தவனை நாடிச் செல்லும்போது வழியிற்கண்ட கர்னனை அர்ச்சுனன் வாயாலுங் கையாலும் வாட்டி யோட்டுதல்

இவ்விடத்தி லிப்படியிருக்க, முன்னே
தர்மராஜனுக்குச் சந்தேகம் விளையும்படியாக
சநார்த்தனன் சங்கத்தொனி செய்தாரென்று
சொன்னேம். அந்தச் சங்கத் தொனியாற்
பதின்மூன்று நாள் ராத்திரி கிருஷ்ணமூர்த்தி
தாரகனிடத்திற் சொல்லிய சொற்படிக்கு, அத்
தாரகனுகிய சாரதியானவன், சங்கு சக்கர
கதாகட்க கோதண்டத்துடன் சுவாமியினு
டைய கனக ரதத்தைப் பரமபதத்திலிருந்து
கொண்டுவந்து, ஆகாயத்தில் வட்டமிட் டுலா
விக் காட்டினுன். அதை அஞ்சன வண்ண
னுகிய அமலவாநந்த ஆதிகேசவ னறிந்து
கையமர்த்தி, அர்ச்சுனனுடைய தேரை
செலுத்திக்கொண் டிருந்தார். அப்போது
தர்மராஜனுனவர் பெருங்கும்புகளிற் சண்டை
செய்யப் போயிருக்கிற நமது தம்பிமார் முத
லிய பேர்களுக்கு, ஒருவேளை ரதம் - நாணி-
அம்புறுத்தூணி-வில்-வேல் - வாள் முதலிய
ஆயுதங்கள் வேண்டியிருக்கு மென்று நினை
த்து, இரண்டு சேமரதமும், அதினிறைய
ஆயுதங்களும் அனுப்பி வைத்திருந்தார்.
அவை இந்தக் காலத்தில் வந்து நற்றவங்
கைகூடுமாப்போல் நல்ல சமயத்தில் வந்து
உதவியபோது, அதைக்கண்ட வீமனுஞ் சாத்
தகியும் அந்தத் தேரி லேறிக்கொண்டு, அர்ச்
சுனனேடு கலந்து, முத்தொழிற் கிறைவரா
கிய பிரம்மா - விஷ்ணு - உருத்திரன் இந்த
மூன்றுபேரும் உலகத்தின்மேல் விரோதித்
தெழுந் ததிர்த்ததைப்போற் சீற்றமேலிட்டு,
கண்ணுற் செங்கன லுமிழ்ந்துக்கொண்டு தங்
கள் தேர்களைச் செலுத்தி, தங்கள் தங்க
ளுடைய திறங்களைக் காட்டி, எட்டுத் திசை
யுந் திடுக்கிடக் கலக்கி, எதிரொருவரு மில்லா
மல் இடித்துப் பொடியாக்கி வரும்போது,
சூரிய புத்திரனுகிய கர்னனை கண்டவர்களாய்
சூற்கொண்ட மேகங் கவியுந் தன்மையைப்
போல் அவனைக் கவிழ்ந்து சூழ்ந்து சுடுசரங்
களைப் பொழிந்தார்கள்.

அந்தக் கர்னனும் பொற்பிரகாசம்
பொருந்திய விசாலமான தேரினின்று போரா

டும்படியாகப் புரியிறுக்கிய வில்லைத் தாங்கி, அவர்களுக் கெதிர்வந்து நின்று, இணைக் கிணையாகத் தானும் அளவற்ற கணைகளைப் பொழிந்தான். அக்காலையிற் சத்துருக்களுக்கு சரயிடிபோன்ற அர்ச்சுனனனவன் அந்தக் கர்னனை நோக்கி, மனஞ்சகியாமற் பற்கடித்து பக்கத்தில் நின்ற பலபேருக்குங் கேட்கும்படியாய் ஒரு வசனஞ் சொல்லத் தொடங்கினன். அடா கர்னா! நல்வினைப் பயனால் நலத்தைப் பெற்றோங்குதலும், தீவினைப் பயனாற் சிந்தை நொந் திருகுதலும், ஆத்மகோடிகளுக்கு இயல்பாக நேரிடுந் தன்மைபோல், ஒருவேளையில் ஜெயம்பெற வெல்லுவதும், ஒரு சமயத்தில் அபஜெய மடையத் தோற்பதும், ஆக நேரிடுவது சுத்தவீரர்களுக்கும் உத்தம தன்மையாக்கும். அதை நீ எவ்வளவேனும் யோசிக்காமல், தீரமற்ற தீனனைப்போல வீணாகிய வார்த்தைகளைப் பேசி, என் தமயனாகிய வீமசேனராஜனை ஏசினையாம். நல்ல குடிப்பிறப்பில்லாத கோமானே! உன்னுடைய சுபாவமான கெட்ட குணத்தைக் காட்டினாயல்லவா? நீ ஏறிவந்த தேர்-குதிரை-சாரதி-யில் இவை முதலியன யிழந்து, பாணங்களுமுறிந்து, எத்தனை தரம் புறமுதுகிட்டு காலோட்டமா யோடினாய்? நீ ஓடியபோது இந்த உத்தமக் குலத்திற் பிறந்த வீமசேனர் உன்னை ஏதாகிலும் எள்ளத்தனை வகை வார்த்தையுரைத்து ஏளனம் பண்ணியதுண்டா? அநேகந்தடவை உன்னைச் செயித்து யானைக்கும் அடிசறுக்கு மென்பதுபோற் சற்றிளைத்த காலையில், நீ வெட்கங்கெட்டு எதிரியாகிய வீமசேனரின் மனஞ் சுளுக்கும்படியாய் இப்படிக் கெல்லாம் பேசப்போமோ? நல்லது; நேற்று நடந்தப் பதின்மூன்றும் போரில் மஹா பாவியாகிய நீ வஞ்சகமாக என் பிள்ளைக்குப் பின் புறம்வந்து பதுங்கி, யொதுங்கி, அவனுடைய வில்லை ஒடித்துப் பலமுங் குறையும்படியாய் பாணந் தொடுத்த தன்மையினால், என் குழந்தை அநியாயமாக இறந்து போய் விட்டான்.

அந்தப் பழிக்குத் தகுந்த வழியாக இனி நடக்கும் போர்முகத்தில் உன் தவத்திற் பிறந்த சிரேஷ்ட புத்திரனாகிய விடசேனன் தலையை நீ பார்க்கும்படியாய் உன் கண்ணுக்கெதிரில் நானே அறுத்துத் தள்ளுகின்றேன். நான் சொல்லிய இந்தப் பேச்சை உன்னுள்ளத்தில் கெட்டியாகக் கொள்ளக்கடவை. இதுடன் போய்விட்டதென்று நினைக்காதே. இன்னும் எவரெவர் என் பிள்ளையைப் பேதித்து வாதித்துச் சேதித்தார்களோ? அவரவர்களும், அவரவர் புத்திரமித்திரருஞ் சின்னா பின்னப் படும்படியாகச் செய்வேனல்லாமல், ஒருவரையுஞ் சும்மா விடப்போகிறதுமில்லை. உன் மனத்தை உறுதியாய்த் தேற்றிக்கொள். என்று அர்ச்சுனன்சொல்லி, இருவிழியும் நெருப்புப்போற் சிவந்து, மண்ணும் விண்ணுஞ் சரிந்து, ஒண்ணாய்ப் பிதிரும்படியாக அதிர்ந்து, விஜய காண்டீபத்தை விறீலென் றிழுத்து நாணோசைகாட்டி, வில்லாளியான கர்னனுடைய உடம்பு முழுவதும் புதைந்து அழுந்தி உருவிப் போகும்படியாகக் கங்கபத்திரமென்னும் புங்கவங்களைச் செலுத்தினன். அப்போது அங்கதேசாதிபனாகிய கர்னன், பல பாணங்களினால் அர்ச்சுனன் விடுத்தப் பாணங்கள் மடியும்படியாய்ச் சங்கரித்து, மறுபடியும் அளவில்லாத வாளிகள் தொடுத்து, கிருஷ்ணார்ச்சுனனைத் தடுத்துப் போர்கொடுத்தபோது, அந்த கர்னன் விடுத்த கணைகளையெல்லாம், திரணமாகிய புழுதியாய்ப் போக்கி, க்ச்சைக் கொடியைத்தாக்கி, கைப்பிடித்தவில்லையும் இரண்டு துண்டாய்த்தூக்கி, அவனை புறங்கொடுத்தோடவாக்கி, அந்த இடத்தைவிட்டுத் திரும்பிப் பாராடப் போராடுங் காண்டீப புருஷனாகிய அவ்விஜயன், சிந்துவுக்கரசனாகிய செயித்திரதனிருக்கும் இடத்தைதேடி சாத்தகியும், வீமனும், உத்தமோசாவும், உதார்மனும் தனது சாயையி நீழலைப்போல தன்னை நெருங்கி வரும்படியாய் முந்திச்சென்று, வழியிற்கண்ட தானைப்படைகளையெல்லாந் தவிடு பொடியாக்கிப் போகாநின்றான். அப்போது துரோணாச்சாரியார் கல்வித்திறத்தாற் கட்டிய பத்மயூகப்பேரணி சிதைந்து, பறந்தோடுந் தன்மையை வாசங்குலாவிய நந்தியாவட்ட மாலையணிந்த துரியோதனராஜன் கண்டு கர்னனின்ற இடத்தில் வந்து சொல்லுகின்றான்.

### துரியோதனன் கர்னனைத்தேற்றி அளவற்ற படையோடும் விடுக்க, அவையனைத் தையும் அருச்சுனனழித்தல்

ஓ என் ஐயனே! என் அண்ணா! இன்றையதினம் நீர் மனம்விண்டு இளைத்திராமல், ஒரு க்ஷணத்தில் சிந்துராஜ புத்திரனான சயத்திரதனனவன் செத்துப்போயிருப்பான்; இதற்கு யாதொரு தடையுமில்லை. ஆதலால்,

இதுவரையிலும் நீர்காத்தது பெரிதல்ல. என்னைப் புரப்பதற்கு இது நல்ல சமயம். கொஞ்சம் பிரயாசை எடுத்துக்கொண்டு எதிர் சென்று நின்று போர்கொடுத்து தடுப்பீராகில், இன்னுஞ் சற்றுநேரத்திற் சூரியன் அஸ்தமித்துப் போவான். இன்றைப்பொழுது போய்விட்டாற் சொல்லிய சபதப்படிக்குப் பற்குணனாகிய அர்ச்சுனன் அக்கினியில் வீழ்ந்திறந்து போவான். இந்தச்சேதி கேட்டவுடனே பாண்டுநந்தனரெல்லோரும் மாண்டு போவார்கள். ஏதொரு வருத்தமுமில்லாமல் நாம் வெற்றியடையலாம். உத்தமனே! இவ்வளவு சுளுவாய் எனக்குச் செயங்கொடுக்கத் தக்கவர்களில் நீர் ஒருத்தரே யல்லால் எனக்குரித்தாகிய துணை வேறொருவருமில்லை; உம்மை நான் நம்பினேன். உமக்கு ஒற்ற துணையாய்த் துரோண புத்திரனாகிய அஸ்வத்தாமனும், சத்துருக்கு மித்துருவாகிய மிர்த்து தேவதையை யொத்த கிருபனும், மந்திரத் தலைவனுஞ் சேர்ந்து வரும்படியாய்ச் சேகரித்துக்கொண்டு, அமர்த்தலை சென்று, அர்ச்சுனாதியரை வளைத்துக்கொண்டு, போர்மலைந்து, சிந்துராஜகுமாரன் ஈண்டு மாண்டு போகாமல் ஆண்டு ரட்சிப்பீராகில், பேர்பெற்றிருக்கிற இப்பூமியும், கீர்த்தியும், பிரதாப வல்லமையும், உமக்குச் சொந்தமாகு மல்லாமல், மற்றெவருக்குச் சொந்தமாகும்? ஓ என்னுயிர்க்குயிராகிய துணையே! என்று துரியோதனன்சொல்ல, அந்த வார்த்தையைக் கர்னன்கேட்டு, ஓ புரந்தரபூபாலனாகிய காவலனே! கேளும்; வெற்றி பெற்ற வீமனோடு எதிர்த்து, விறல்காட்டி, அவனால் என்னுடலம் மெத்த மெலிந்திருக்கின்றது. இல்லாவிட்டால் நானென்னும் பெயருடைய உயிரும், இதுவரையிலும் ரும், [illegible] ! [illegible]? [illegible]னும், (கடுகு நிலைபெற் [illegible]) என்னுங் [illegible] சிறுக்கினுங் காரம்போகாது) நான் நிலைபெற்று நிற்கும் யோர்முகத் போல், நான் நிலைபெற்று நிற்கும் போர்முகத் திற்சிந்துதேச நாயகனாகிய சயிந்தவனுடைய பிராணனை வாங்குவதற்குச் சம்ஹாரகாலஉருத்திரன் சிந்தித்துவந்தாலு மிலேசில் முடியுமோ? ஒருக்காலுமுடியாது முடியாது; நீயுப் பார்க்கிலுஞ் சிவந்து சிதறும் பொறிகளையுடைய செங்கண்தாங்கிய எங்கணாயகனே! என்னுடைய வீரத்திறத்தை நீர்பாரும் என்று பாண்டவர்களுக்கு மூன் பிறந்தோனாகிய கர்னன் சொல்லி, எண்ணற்ற துணைப்படைகள் தனக்கு எண்டிசையும் புடைசூழ்ந்து வரச் சென்று, வீரபட்டங்கட்டிய நெற்றியில் வெயர் வெழ, அட்டமாகிரியைச் சூழ்ந்த வட்டமாகிய மலைகளெல்லாங் குட்டமாக நாணுற, வில்லைக் கோணுற வளைத்து, குணத்தொனி விளைத்து, குரலெடுத்துக்கனைத்து, யாவரும் வியக்கும்படியாகிய வலிபடைத்து, தனது மகாரதத்தை வாயுவேகமு மனோவேகமும் பிறப்பிடத்தக்கதாய்க் கரகரவென்று நடத்திக்கொண்டு வந்தான் அச்சூரிய குமாரனாகிய கர்னனவன்.

இதற்குள்ளே வீமார்ச்சுனர் சாத்தகி முதலாகியபேரும் வெகுண்டெழுந்து, விசையுடன் தங்கள் தேரைவிடுத்து, கொழுந்துவிட்டெரியுங்கணை மாரியுடனெதிர்த்துப் போர் புரிந்தபோது, அக்கர்னன் படைகளிலும், இவர்கள் படைகளிலும் யானைகளெத்தனை? தேர்களெத்தனை? குதிரைகளெத்தனை? படைகளெத்தனை? பாசமெத்தனை? மலைகளெத்தனை? தண்டுகளெத்தனை? உலக்கைகளெத்தனை? வச்சிராயுதமெத்தனை? வில்லெத்தனை? வாளெத்தனை? வேலெத்தனை? கணையெத்தனை? காலாயுதமெத்தனை? சூலாயுதமெத்தனை? கவணெத்தனை? சவளமெத்தனை? பாணமுனைகளில் கலந்தெரியும் நெருப்பெத்தனை? இவ்வளவுங் கலந்து நெருங்கி இருக்கும்படியானதை, அர்ச்சுனன் விடுத்த கணைமாரியானது விலக்கி நடுவிற்புகுந்து ஒரு நொடியில் எதிரியின் படைகளையும் பாணங்களையுந் தும்சப்படுத்திய தல்லாமலும், அவ்வெதிரியின்பேரில் எரியும்படியாக சக்கரம்-முஷ்கரம் - கதை - தோமரம் - பிண்டி - பாலம்-முசலம் - அங்குசம் - வேலாயுதங்கள் - சூலாயுதங்கள் - கலப்பைகள் - உலக்கைகள் முதலாகிய ஆயுதங்களை மூவருங்கைக்கொண்டு எட்டுத்திக்கிலு நின்று விடாமழைபோல் எறிந்து பொழிந்தார்கள். அந்த ஆயுதங்களி நடுவிற் புகுந்த விஜயனுடைய அஸ்திரமானது, ஒன்றுக்கு மூன்றாகப் பிரகாசித்து, எதிரிவிடு படைகளை ஒன்றொழியாமற்றுக்கிப் போக்கியது. அஃதன்றியும், தனஞ்சயன் விடுசரத்தால் எதிரியினுடைய சேனாசைனியங்களில், அனந்தம் பேர்களுக்கு கரங்களற்றன; தோள்களற்றன; கால்கள் வீழ்ந்தன! கிரீடசிரங்கள் தாழ்ந்தன; குடர்கழிந்தன; மார்புகிழிந்தன; நரம்புகள் அறுந்தன; பல்லுகள் நெறிந்தன; எலும்பு முறிந்தன; இடையொடிந்தன; தலைபிளந்தன; மூளைசிதறின; உதிரமோடின. இதல்லாமலும், துரியோதனனுடைய யூகபந்தியை இழந்து நிறைந்த யானைப்படைத் தொகுதியெல்லாம் பலதிசைகளிலும் வீறிட்டுச் சிதைந்து

சிந்தி வீழ்ந்தன. அந்தமாகச் சிந்துதேசத்திற்பிறந்து சொந்தமாகச் சயிந்தவன் வீட்டில் வளர்ந்து நடைபழகி வந்த மந்தமாருதம்போன்ற கந்துகங்களெல்லாம் கால்முறிந்து மறிந்து பின்பறிந்து தாழ்ந்தன. அச்சு-மச்சு - குத்துக்கால் - கொடுங்கை - முடிகொடி - குடை - படி - அடி - இரிசி - ஆணி - அஞ்சுராணி - குதிரை - சாரதி முதலியவைகளையுடைய தேர்களானவை, அந்தரத்திலெரிந்த பந்து சுழல்வதுபோல் அலைந்துலைந் துருண்டழிந்து ஒழிந்தன. இன்னமும் வீரலட்சுமி நின்று ஜெயம் ஜெயமென்று நடம்புரிந்து விளையாடுந் தேரேறிய வீரசிம்மம்போன்ற அர்ச்சுனன் கணைகளினால், துரோணாச்சாரியர் கட்டிய யூகபந்தியினின்றுங் கர்னன் படைகளினின்று அழிந்த கொடிகளெத்தனை? குடைகளெத்தனை? முடிகளெத்தனை? தொடிகளெத்தனை? துடிகளெத்தனை? படைகளெத்தனை? வாத்தியங்களெத்தனை? வெற்றிமாலைகளெத்தனை? குணத்தொனிகளெத்தனை? சாமரைகளெத்தனை? கவசங்களெத்தனை? துவசமெத்தனை? தோரணமெத்தனை? வாரணமெத்தனை? இவ்விதமாக அநேகங் கோடாகோடி சின்னங்களைப் பொடிகளாகப்படுத்தி அவனியிற்சாய்த்தும் வேகமடங்காமல், பூமியையுந் துளைத்துப் போய்க்கொண்டிருக்கின்றனவாம் அப்புரந்தர குமாரன் விட்ட பொற்பாணங்களானது.

## பீமார்ச்சுனாதியர்க்குந் துரியோதனாதியர்க்கும் பத்மயூகத்தில் மூண்டுக்கொண்ட விபரீதப்போர்

ஓ துரந்தர சுகுமாரனாகிய தோன்றலே! இப்படியாயிருக்கிற வேளையில், கெடிஸ்தலங்களுக்கதிபதியாகிய துரியோதனனும், மத்திரதேசாதிபதியும், விடசேனனும், குணசீலனுமுடைய குருபுத்திரனும், போராடுந் திறந்தெரிந்த கிருபாச்சாரியும், அழகாக இருபுறமும் நெருங்கித் தொடரவும், அநேகம் வீரத்திறமுடைய மன்னர்கள் ஆலகால விஷாக்கினிபோற் கொதித்தெழுந்து அடரவும், நமனை வசப்படுத்தும்படியாகிய உறுதி நெஞ்சமும் ஒப்பில்லா வீரமும், உலவாத தைரியமுடைய கர்னனானவன் வந்து துன்னி முன்னின்று, ஓ வின்னலமுள்ள வல்லவனென்னும் விஜயனே! இப்போது என்ன சொல்லுகிறாயென்று சொன்னலஞ் சொல்லி, மின்னலைப்போன்ற வன்னலப் பகழியை மாறாமல் விடுத்து எதிர்த்தான். அன்னவனைக் கண்டவுடனே முக்குணங்களும் மூர்த்திகரித்தெழுந்ததைப் போலொத்த வீமார்ச்சுன சாத்தகி இவர்கள் மூவருந் தேவரும் நடுங்கும்படியாய் வில்லை வளைத்து, நடநடவென்று பல்லைக் கடித்து நாணொலிசெய்து, மோகாஸ்திரங்களை விஷம்போற் றொடுத்தார்கள். அந்த கணைகளின் கொடியவேகத்தால் திசையெட்டும் பொரிந்து, திக்கஜங்களெட்டுஞ் சரிந்து, புணரியுந் தளதளவென்று பொங்கிக் கரிந்துபோனது அல்லாமலும், அக்கணைகள் பூசபந்தியிலிருந்த வல்லவர்கள் விடுத்தகணைகளையெல்லாம் வாரிக்குடித்து, மாரிபோல் இடித்து நுங்கி, சிலநேரந் தங்கி, அம்பரத்தின் மேல் எழுந்து வேடிக்கைப் பார்க்கும் தேவர்களின் மகுட கொடிகளின்மீது நெருப்புப் பொறிகளை ராசியாய்ச்சொரிந்து எங்குந்திரிந்தது. அனையகாலையில் இரவிகாதலனென்னுங் கர்னன், பார்த்தசாரதி மார்பையும், மூர்த்தண்யப் போறரங்கப் பார்த்தனுடைய தேகத்தையுந் துளைக்கும்படிக்கு, சன்னபின்னலாய் வலை வீசியதைப்போல் அருணநிறக் கிரணங்கள் பெற்ற ஐம்பத்தோரம்பைப் பிரயோகஞ்செய்தான். அந்த கணைகளை அர்ச்சுனனென்னுந் தனிச்சிங்கங்கண்டு, ஒப்பில்லாத பிறைமுகாஸ்திரமொன்றை யெடுத்து விடுத்து அவன் தொடுத்தக் கணைகளெல்லாவற்றையுங் கெடுத்து, அவனையும் மார்புகிழிய அடித்துப் போர்முகமழிந்து அயர் வெய்தும்படியாகப் பொருதினான். அப்போது கர்னன் தன் மார்பில் மூழ்கிய வாளியை ஒருலக்ஷயம் பண்ணாமல் நிற்க, பின்பு இருவருமெதிர்த்து வில்லை மண்டலமாக வளைத்திழுத்து, இருவர் மார்பிலும் ஒருவருக்கொருவர் எண்ணிறந்த கணைகள் துளைத்தேறும்படியாய்ச் செலுத்திச் சமர் புரிந்தனர். அச்சமயத்தில், கீர்த்திப்பிரதாபம் பெற்ற கிரீடியானவன், வஞ்சகத்துடன் சதபத்திரக் கணையை யெடுத்து இது கர்னனுயிரைக் கைவிடாமல் மாய்க்குமென விசாலமாகிய வில்லினிடத்து மேன்மையாக பூசித்து வைத்துத் தாராளமாக ஏவினான். அவ்வாளி அந்தரமெழுந்து, பந்தெனச்சுழன்று, செண்டெனப்பறந்து, கொந்தெனச்சிறந்து, சிந்தைகள் வருந்த வந்தவராதனைக் கந்தனுக்கொப்பான அந்தண குமாரனாகிய அஸ்வத்தாமன் கண்டு, அதற்குத் தகுந்த விண்டுவின் கணைகொண்டு துண்டுகளாக ரண்டுசெய்திட்டான். அதைக்கண்ட சண்டன் குமாரனென்னுங் கர்

னன் வீரியமுடன் ஆரியகுமாரனைத் தொழுது,
சூரியாஸ்திரங்களை உந்தி, காரிமைந்தனாகிய
கர்ணபனுடைய புயமெங்கு மூழ்குவித்துப்
புதியரத்தஞ் சிந்தி, அவனுடைய புத்தி
நைந்து நொந்து எஞ்சிவாடும்படிக்கு போர்
செய்து வந்தான்.

இவ்விதமாக இரவிகுமாரன் விட்டகணை
களும், இவனுடன் வந்த இதர மன்னர் முத
லிய வீராள் வீம சாத்தகி முதலானோர் பேரில்
தொட்டுவிட்ட சரங்களும், இவைகளை மாற்
றும்படியாக மானுபரணமென்னும் அவ்வீம
சாத்தகி முதலிய யாவருந் தொடுத்த படைக்
கல மாரியும், துரியோதனனுடைய நால்
வகைத்தானையும், ஒப்பற்ற ஒருவனாகிய திவ்ய
சவ்வியசாசி கண்டுவிட்ட சில செவ்வியக்
கணைகளினாற் சாய்ந்து, மாய்ந்து, தேய்ந்து,
ஓய்ந்து, குறைந்து மறைந்துபோன மாந்
தர்களும் மதித்துத் துதித்தார்கள். அவர்க
ளிப்படி துதிக்கும்படியாகிய துதியை நிதி
யாகக்கொண்ட மகபதி குமாரனும், மாதவி
கொழுநனுமாகிய அநுமக்கொடிதரித்த அர்ச்
சுனராஜன் பூஜாவிதி முதலிய மந்திர வுப
கரணங்களுடனே கூடிய மேகாஸ்திரங்களை
மோகாஸ்திரங்களைப்போல முடுக்கி விடுத்து,
குருபுத்திரனென்னும் அசுவத்தாமனுடைய
கேசரிக்கொடியையும், கிருபாச்சாரியனுடைய
ரிஷபக்கொடியையும், பச்சைப் புரவியோன்
மகனென்னுங் கர்னனுடைய கச்சைக்கொடி
யையும், அவனுக்குத் துணையாக காக்கவந்த
கர்னபுத்திரனென்னும் விடசேனனுடைய
மயிற்கொடியையும், பயமற்ற செயமுற்ற மத்
திர தேசாதிபனுடைய வெற்றிபெற்ற மத
யானைக்கொடியையும், இராஜாதிராஜன் துரி
யோதன மகாராஜனுடைய பாம்புக்கொடி
யையும், மற்ற முனைக்காரர்களுடைய கொடி
குடை முதலிய வெல்லாவற்றையும் ஒரு
நொடியிற் றுணித்துத் துண்டமாக்கி, அவ
ரவர் கையிலிருந்த வில்லை முறித்து, அவ்
வவர்களுடைய தேகமுழுமையுஞ் சிறு கண்
ணாகத் துளைத்து தன்னை எதிர்த்து அம்பு
தொடுத்த யாவரையும் உடலங் கிழிந்து, உதி
ரஞ் சரிந்து வழிந்து போகும்படியாகப் பின்
னுஞ் சில முனையம்பு முதலிய மின்னற்கணை
களை வாசா மகோசரமாய் விடுத்துக் கெடுத்
துத் தனது வெற்றியைத் தளர்வில்லாமல்
தாலத்திலெழுதி நாட்டினான். இப்படி வெற்றி
நாட்டிய தனஞ்செயன் பேரில், அங்கதேசா
திபனானவன் முனைந்து கனன்று வேறொரு
வில்லை வளைத்து, மின்னலென் றுவமிக்கும்
வன்னக்கணைகளைச் சன்னல் பின்னலாய் வாரி
வாரி மாரிக்காலத்திற் பொழியவந்த பெருந்
தாரையைப்போற் சலசலவென்று அந்தர
னுடைய தேக முழுமையும் மழையாகப்
பொழிந்துத் தகைத்தான். இந்தக் கர்னன்
தொடுத்த பாணங்களை யெல்லாம் கற்கொண்
டெறிவாரைப்போல் விற்கொண்டு பற்குணன்
கெடுத்து, அங்கதேசனைப் பார்த்து, அடா
கர்னனே! நீ பொழிந்த அம்புக் கும்புகளெல்
லாம் வம்புந் தும்புமாய் மடிந்துபோனதைப்
பார்த்தாயா? இனி நான் எய்யப்போகின்ற
வெய்ய கணைகளின் திறத்தை நீசற்றே கண்டு
கொள்ளென்று கயமுகக்கணை-அயமுகக்கணை-
கதிரவன் கணை-உதிரவெங்கணை-நனல்மினற்
கணை-மினலற்கணை முதலிய கணைகளைக் கல
கலவென்று அந்தரன் முடுக்கினான்.

அதைக்கண்ட கர்னன் அப்படியா?
அடா அர்ச்சுனா! இன்னும் என் கைத்திற
மும், மெய்த்திறமும், கணைத்திறமும், புயத்
திறமும் அறியமாட்டையா? இதோ நான்
தொடுக்கின்ற கணையின் கடுமையைக் கண்டு
அறிந்துக்கொள்ளென்று, புகையுடன் கன
லும், கனலுடன் புனலும், புனலுடன் மண
லும், மணலுடன் காற்றுங் கலந்த கணைகளைச்
சொரிந்து, பின்னும் பிரிந்து நானாபக்கங்களி
லும் இருந்து பகழி மாரி நறநறவென்று
தூறவும், இவைகளை யெல்லாம் பார்த்தன் கர
கரவென துறிமீறி, துரோணரேற்படுத்திய
பத்மயூகப்பெருகோட்டைக் கெடுக்க அடுத்து, விற்
பிடித்து-சொற்படித்து பற்கடித்து - முகங்கடு
த்து, அவ்விடத்தில் அதிவீரப்பிரதாப சூரதீர
கோர ஆரபார பரிவார முதலிய சேனைகளை
யும் முடுக்கினான். அப்போது காவலாகியக்
காவல ரணிப்படைகள் கலந்து, கொல்லு
வதற்கெளிதாகிய சமரம்விளைத்து, சொல்லுவ
தற்கரிதாகிய சொல்லை விளைத்து, அர்ச்சுனன்
முதலிய பேர்களை உள்ளே புகவொட்டாமல்
வளைத்துத் தடுத்து, இப்புவன முதலிய எப்
புவனங்களும் நிலைதளர்ந்து, தலை குலுங்கி,
படபடென்று, விறுவிறென்று, மாதிரங் கலங்
கிப் பருதிசுழன்று மேற்றிசையி லோடும்படி
யாய்ப் போர் விளைக்கும்போது, பத்மயூக
பெருகுட்டின் மத்தியிற் பதனம்பண்ணி வைத்
திருக்கிற சிந்துபதிபெற்ற சயந்தனானவன்
சங்கதிதெரிந்து, இனிக்காரியமில்லை; ஆரிய

உதாரன் பேச்சும், சூரியகுமாரன் வீச்சும்,
இனி யோசிக்குமிடத்தில் அவலம் அவலமே:
அநுமக் கொடியோனும், சிங்கக் கொடியோ
னும் இத்தனை தூரம் ஜெயித்துவந்து நாமி
ருக்கும் நிலையைக்கண்டு ஜாடும்போது, இனி
மேல் நாம் மூலையிற் பதுங்கி ஒதுங்கி முனை
யற்றிருப்பது ராஜ முறைமையல்ல; இனி
நம்மை யவர்கள் பிராணனோடு விடப்போகி
றதுமில்லை; வீறுதாவில் நாம் மறைந்திருப்
பது குறைவாகிய தொல்லை. என்று நினைத்த
வனாய், நற்சிலையைப் பிடித்து சிற்சில கணை
யைத் தொடுத்து, வேலிபோல் கோலிநின்ற
காவல ரணிப்படைக்குப் பின்புறத்தினின்று,
வாலி சுமாலிபோற் றாவிவந்த வீமார்ச்சுனன்
பேரிலும், பார்த்தசாரதி யுடம்பிலுஞ் சரமாரி
யைத் தணல்மாரி மணல்மாரி போற்றூவி
னான். அப்போது வீமார்ச்சுனன் முதலியோர்
இது நல்ல சமயமென்று ஒருவரும் இளையா
மல், வருந்திச் சளையாமல், மனநொந்து யிளை
யாமல், வாடிக்களையாமல், வலுவுடன் சில பல
கணைகளையேவி, செலவொரு இடமில்லையென
வடல்காவி, குலவிய பயிரினில் மணியறுசாவி,
குணமெனவழிதர தூறியெண்மேவி, ஜெயஞ்
ஜெயமென்று தீரருடன் போர்ப்பயன்பெற்று
வீரப்பாடல் பாடினர்; அவ்வேளையில் கயரத்
துரங்கக் காலாளுடனே, வயம்பெறு கர்னன்
வந்தெதிர்த்துன்னி, வாட்டமும் நாட்டமும்
ஓட்டமுமாக கூட்டமாங்கணையால் வாட்டிய
காலை, சுரேந்திரன்மகனாகிய சுவேதவாகனன்
குன்றக்குன்றக் கொன்று, அக்கணைகளையும்
படைகளையும் வென்று, ஒரு நாழிகைவரையி
லும் அந்தக் கர்னன் செய்யும் உபத்திரவத்
தால் மதிமயங்கி ஓய்ந்து சாய்ந்து நின்று,
பின்பு ஆய்ந்து உச்சாகங்கொண்டு, உடல்
கொதித்தெழுந்து, உரங்கதித்ததிர்ந்து, யுத்த
முனையை மெத்த வருத்திச் செத்த பிணமாக்
குந் திரங்கொண்ட வச்சிரக்கணையால் வள்ள
லாகிய அக்கர்னனுள்ளம் வெதும்ப, வாசமா
லையை யணிந்த புயத்திற் கூட்டி மாட்டினான்.
அப்படி மாட்டியபோது, உடல் வருந்தி அயர்
ந்து திருந்திய தேரிற் பொருந்திச் சாய்ந்த
னன் கர்னனானவன்.

அதுகண்டு மருண்ட எவர்களுக்கு மேலா
கிய வில்லைக் கைக்கொண்ட தனுர்வேத புத்தி
ரனாகிய அசுவத்தாமன் முனிந்து, கனிந்த
காலாக்கினியைப்போற் காண்டிபனுக்கு எதிர்
வந்து தகைந்து, அழகியமா நிலமும், குலவிய
வானுலகும், சுலவிய வாரிதியும், உலவியமாரு
தமும், நிலைகுலைய எஞ்சி அஞ்சும்படிக்குப்
பலம்பொருந்திய பங்கஜ பாணங்களைப் பல
வாறுகத் தொடுத்து, வெவ்விய முனைகளைத்
தீட்டி, வில்லிற் கணைகளைப்பூட்டி, விருதுநிலை
நாட்டி, மிகுபடைகளை வாட்டி, யுத்தஞ் செய்
யாநின்ற விஜயனுடைய மேனிமுழுவதும்
வெற்றிச் சரப்பணிகள்போற் றுளைத்துச் சாத்
தகி, வீமன் இவர்களிருவருடைய கேசாதி
பாத அங்கத்திலும் புங்கங்களைப் பொருத்திச்
செங்குருதி பாயச்செய்து, எப்புவனங்களுக்கு
மிறையாகி முப்புரங்களை யெரித்தருளிய சதா
சிவ மூர்த்தியின் மைந்தனாகிய சுப்பிரமணியக்
கடவுளைப்போற் றுலங்கி, அற்புத குணமேரு
வாகிய அருச்சுனனுடைய ரதசாரதி என்றுஞ்
செந்தாமரைக் கண்ணன் கைப்பற்றிய உழவு
கோலை முறித்து, தளர்வில்லாமல் வெறித்துப்
பார்த்து நெறித்து நிலைத்து நின்றான். அப்
படி நின்ற அசுவத்தாமனுடைய வில் திறத்தி
னைக் கண்டு மற்புயங்கள் வீறி, விண்மேற்
சென்று தேறி, வெகுகோபங்கொண்ட விஜ
யன்; ஜயமுகக் கொடுங்கணைகளேவி, அவனு
டைய வில்லைமுறித்து, கவசமழித்து மார்பைக்
கிழித்தான். அக்காலையிற் சோர்ந்து, அயர்
ந்து, சாய்ந்து மாய்ந்தவர்போற் பெயர்ந்து
போயினான் சிலைநூலாய்ந்த வேதியன் மைந்
தனாகிய அசுவத்தாமன். அவ்வேளையில், தன்
தந்தையைபோற் சிந்துதேசாதிபனைக் காக்க
வேண்டுமென்னும் திடத்துடன் விடசேனன்
வந்து, மடமடவென்று தேர்செலுத்தி, நேர்
நிறுத்தி, சிலையை வளைத்து, தினபதி-உடுபதி-
தனபதி-கணபதி முதலியோர் சிந்தைகலங்க,
வெருவித விந்தைதுலங்க, பலவாகிய இந்தி
ரக்கணைகளை உந்திச்சொரிந்து, மந்திரக்கணை
களை வாரிப் பொழிந்து பேரமரியற்றி நின்
றான். அப்படி நின்ற பெருங் கொடையாளன்
மைந்தனைப் பிரதாப ஜெயவிஜயன் பார்த்து,
தேவவாளிகளிரண்டு சேர்த்து, அவன் கோர்
த்த நெட்டிலைச் சரங்கள் அனைத்தையும் எத்
துணையேனு மில்லாமல் துட்டத்தனமாய்க்
கெட்டழியும்படியாக நட்டப்படுத்தி, வின்னா
ணிக்கட்டையு மழித்து, வீரபட்டமு மிரதமு
மொழித்து, பாகனைச் சாகப்படுத்தி, காலோடு
களத்திற் கிடத்தி, எட்டு பக்கங்களும் நடுக்கங்
கொண்டு கொட்டாவி கொள்ளும்படியாய்
அந்த விடசேனனுடைய மார்பில் மின்ன
லாஸ்திரத்தை விடுத்தான் விஜய வீரனான
வன். அப்போதந்த அஸ்திரமானது, துஸ்

தரமாக வந்து மெத்த வருந்தி உரத்தைச் சிதைத்தபோது, விடசேனன் உறக்கங்கொண்டு யுத்தமுனை நீங்கி ஓடாமலும், யுத்தஞ்செய்வதற்கு வாடாமலும், யுத்தவீரர் உதவியைத் தேடாமலும், அமர் விலங்கி மயங்கி ஒருபுறத்தில் அசைவற்று நின்றான். அக்கால், புயவலிமைப்பெற்ற கிருபாச்சாரியும், துரியோதனமகாராஜனும், காளையிடபங்கள் போன்ற இளைய தம்பிமார் அநேகரும், மத்திரதேசத்தரசருக்குத் தலைவனாகிய சல்லியனும், அவனைச் சுற்றி சூழுங் கொற்றவராகிய உத்தம வீரரும், அர்ச்சுனனைத் தடுத்து வளைத்துக்கொண்டு கொடுஞ்சமர் விளைத்து, கோபாலன் விடுக்குங் குதிரைகளு மிளைத்துக் குறுகுறுக்கும்படியாய் மலைத்து வரும்போது, அந்த அர்ச்சுனராஜனானவன் இணைக்கிணையாகத் தொடுத்த கோலாகலக் கோல் விசையினால், தங்கள் தேர் முதலாகிய சிலைகளு முறிந்து, மார்பைத் துளைக்கவிட்ட வடிக்கணைகளினால் மனம் வாடி-கண்மூடி - உதிரமோடி - வாயிற்கூடி - யுத்தபூமியைமூடி மெத்த வருந்தியோடினார்கள். இவர்கள் ஒவ்வொருவருக்குந் துணைவந்த மற்றயருந் தாழ்ந்து-வீழ்ந்து-அழிந்து-ஒழிந்து வாடும்படியாய் அஸ்திரங்கள் பலவாகக்கொண்டு மொத்தினான் அர்ச்சுனனானவன்.

### சயிந்தவனிருக்கும் நிலையறிந்து புகுந்த அருச்சுனனை யாவருமொன்றாகக் கூடி மடக்குதல்

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! இந்த மொத்தலிற் செத்தவர்போக மற்றவர் நின்று யுத்தம்பண்ண சத்துவமில்லாத தாஷ்டியை எத்திசைகளையு மூடி மறைத்த பெரும்பனியை வென்ற கிரண சூரியனைப்போற் குதிரை பூட்டிய தேரில் வராநின்ற பராக்கிரமனாகிய பார்த்தன் பார்த்து, சயிந்தவனைச் சாயங்காலத்திற்குள் வெல்லும்படியாக முனிவுகொண்டு மிகுந்த வேகமாய் வரும்பொழுது, இன்னும் எவ்வளவு தூரத்திலிருக்கின்றான் சிந்துபதி என்று முனைபெற்ற தன் தேரிலெழுந்து நின்று தலையை நீட்டிப் பார்த்தான். இப்படிக்குப பார்த்தன் பார்த்தபோது, ஆகாயத்திற் பிரகாசித்து, அசைந்தாடிக் கொண்டிராநின்ற சயிந்தவனுடைய பன்றிக் கொடியைக்கண்டு, விண்டுக்கணை ஒன்றிரண்டு கைக்கொண்டு, அண்டர் முதலிய மண்டலநடுங்க அழிந்தான் அழிந்தான் சிந்துபதியென்று கூவி, அகமகிழ்ந்து, முகமலர்ந்து, அடுத்த மன்னவர் யாவருந் தியங்க, வடுத்தவிர் சிந்துமன்னனு நடுங்க, அந்தப் பன்றிக்கொடியை துண்டாக முறித்துக்கெடுத்து, அவனுக்கண்டையிற் பரபரவென்று நெருங்குவதானான். அப்போது சூரியகுமாரனாகிய கர்னனும், அவனுடைய மைந்தனாகிய விடசேனனும், கிருபாச்சாரியும், குற்றமற்ற மத்திரதேசத் தலைவனும், அசுவத்தாமனும், விஷாக்கினியுள்ள சர்ப்பக்கொடி தரித்த துரியோதனனும், அவனுடைய தம்பிமார்களும், நெருங்கி நிற்கிற நெடுஞ்சிலை வீரரும், அர்ச்சுனனால் அடிபட்டோடிய அரசர்கள் யாவரும், சிங்கரர்-பப்பரர்-சீனர்-மராடர்-கிராடர்-கர்னடர்-கேகயர்-ஆரியர்-வீரியர் -பூரியர் இவர்கள் முதலாகிய அனைவரும், ஏககாலத்திற் பெரும்புறக் கடல்பொங்கி எழுந்தது போல் ஓவென்னு மிரைச்சலிட்டு நெருங்கி, தங்கள் தங்கள் பிராணனுக்கொட்டிச் சயித்திரதனிடத்திற்கு அர்ச்சுனனைப் போகவொட்டாது தகைந்தார்கள். இப்படி தகைந்த விஸ்தாரமான பெருங் கும்புகளைப்பார்த்த விஜயனானவன், இவர்களைக்கொண்டு சிந்துராசன் இடத்திற் சென்று அவனை வென்று வருகிற வரைக்கும் பொழுது நின்றிருக்குமாவென்று புத்தியில் மதித்து, மேற்றிசைசென்ற சூரியனைப்பார்த்து, ஏதேது? பொழுதிருப்பதாய்த் தோன்றவில்லை என்றுசொல்லி முகம்வியர்த்து பசுமைதங்கிய துளபமாலையணிந்த மேகநிறங் கொண்டவனாகிய பக்தவச்சலனைப் பார்த்தான்.

### அருச்சுன னயர்வுற்ற கருத்தை கண்ணனறிந்து தேற்றித் தனது சக்கராயுதத்தாற் சூரியனை மறைத்தல்

இவ்விதமாக மனோவிகாரமான எண்ணமிட்டு மயங்கித் தன்னைப்பார்த்த சவ்வியசாசியின் நினைவைத் தெரிந்துகொண்ட தீனதயாளுவானவர் அவனைப்பார்த்து, அர்ச்சுனா! தளராதே, தளராதே, என்று தைரியப்படுத்தி, நீ எண்ணின எண்ணஞ்சரிதான். வண்ணமாகிய ஏழு பச்சைப்புரவி பூட்டித் தன் தேரைச் செலுத்திக் காலங்கணித்து வருகிற சூரியன் மறையும்படியாய் அந்தியென்னும் மாலைப் பொழுது வந்துசூழ்ந்தது; இப்போது வந்து வளைத்த இவர்களுடன் அருஞ்சமர் விளைத்து வெல்லுவதற்குச் சாவகாசமில்லை. இனி நாம் வேறுவிதமெண்ணி பார்ப்பதினாற் காரியமுமில்லை. ஆனால் ஒரு தந்திரஞ் செய்யவேண்டியிருக்கிறது. அதாவது, போதுபோ முன்னே,

சூரிய கிரணத்தை என்னுடைய மாயையினால் மறைத்து போடுகிறேன். அவர்களெல்லாருஞ் சூரியன் அஸ்தமித்தானென்று மகிழ்ந்து மமதையடைவார்கள். அந்தச் சமயத்தில் வெல்லும்படியாக விரைந்து முனைந்து, யாவரையுங் களைந்து, விண்ணவரும் திடுக்கிடும்படியாய் திவ்வியாஸ்திரம் தொடுத்து, அந்தச் சிந்துபதி தலையை வந்தவேலை நிறைவேறியதெனச் சிந்திவிடக்கடவை என்று ஸ்ரீயப்பதியானவர் சமயோசிதமான யுத்திசொல்ல, அவ்வாசகத்தை தனஞ்செயன் கேட்டு அளவிறந்த சந்தோஷமுற்று, சரிதான் சரிதானென்று உறுதியாயுட்கொண்டு, மனோவேகத்திலும் மேலான வேகமாகிய பலவாளிகளால், பக்கநின்றவர் யுத்தமுனையிற் புக்கிநின்றவர், தொக்கிக் கணைகளை தொடுத்து வந்தவர், கைக்காரராய் நின்ற மிக்கோர் இவர் முதலிய யாவரையுஞ் சக்கை சக்கையாய்ப் பெயர்த்து, திரிநேத்திரதாரியாகிய முதல்வன் சர்வசம்மார காலத்தில் ருத்திராமிசங் கொண்டெழுந்து பஸ்மீகரப்படுத்து முறைமைக் கொப்பாகப் பாரெல்லாம் படபடத்து நடுங்கும்படியாய் எந்தெந்த வேளையில் எவரெவர்களை எந்தெந்தப்படிச் செய்ய வேண்டுமோ? அந்தந்தப்படி அந்தந்தவேளையில் அவரவர்களை யடித்து அல்லோல கல்லோலஞ் செய்து அலக்கழித்து வருங்காலையில், ஓ மகாராஜனே! ஆபத்பாந்தவாகிய அரிவாசுதேவன் அர்ச்சுனன் பொருட்டிற் செய்த தண்ணளியாகிய கிருபையைச் சொல்லுகிறேன் கேளுமென்று வைசம்பாயனர் சொல்லுகிறார். ஓ அரசுக்கரசாகிய அபிமன்னுவின் பௌத்திரனே! சமுத்திரத்தை ஆடையாக வுடுத்திய பூதேவியாருடைய வருத்த நீங்கும்படியாகவும், தெய்வத் தன்மையாயவதரித்த பாண்டவர்களின் இடருகிய துன்பம் நீங்கும்படியாகவும், சாயங்காலத்துக்குள் சயிந்தவனைச் சம்மரிக்கிறேனென்று சபதங் கூறி, அந்த் சபதந் தப்பிப்போய் தழலில் வீழ்ந்திறக்கும் விஜயன் சாகாமல் வாழும்படியாகவும், திருப்பாற்கடலையும் சேஷசயனத்தையும் ஸ்ரீதேவி முதலிய பெருமிதத்தையுந் துறந்து வசுதேவருக்கும், தேவகிதேவியாருக்கும் புத்திரனாகப்பிறந்த மாயோன், ஒற்றைச் சக்கரத்தையுஞ் சப்தமாவையுங் கொண்டரதம்பெற்ற சூரியனை மாய்கையினால் மறைக்கும்படியாகத் தமது கைக்கிசைந்த சக்கரத்தை அனுப்பினார். உடனே அந்தச் சுதரிசனமானது, சுவாமியினுத்தாரப்படி சென்று சூரியனை மறைத்து, அந்த ரணக்களத்தின் உதிரச் சிவப்பைப்போல் மேற்றிசை யெல்லாஞ் செவ்வானம் பரவத்திகழ்ந்தது.

### அருச்சுனன் கண்ணனாற் சிலமுறைமை கூறக் கேட்டுச் சயத்திரதனையும் அவன் தந்தையாகிய சிந்துராஜனையுஞ் சங்கரித்தல்

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! கரும்பொன்னாகிய அயத்தில் ரசத்தைப்பொருத்தப் பசும்பொன்னாகும் பான்மைபோல், அர்ச்சுனனிமித்தமாக உலகத்திலுள்ளோர் பலரும் விக்ஞானவந்தாளாகும்படிக்கு நாயகமாகிய பகவத்கீதையைத் திருவாய்மலர்ந்தருளிய நாரணன் இக்காரணஞ் செய்தறியாதவர்களாய், நாட்செய்யுந் தினநாதனாகிய சூரியன், இரதத்துடன் மேற்றிசையில் மறைந்து போனானென்று வலம்புரி மாலையணிந்த மன்னனும், அவனைச் சார்ந்த மன்னரும், படைவகுத்திருந்த நால்வகைச் சேனை மல்லரும் மகிழ்ச்சி கொண்டு ஆர்ப்பறித்தார்கள். சயத்திரதனானவன் இறந்து போவோமென்றிருந்த பிராணபய மொழிந்து போய்விட்டதென்று பூரித்து, இரதத்துடன் வெளிப்பட்டுத் தலைநீட்டி, செவ்வானமிருந்த குடதிசையாகிய மேற்குத் திசையைப் பார்த்தான். அந்தக் காலத்தில் திருமாலானவர், செயங்கொள்ளுந் தேவதத்தனைப் பார்த்து, உன் பகைவனாகிய சிந்துதேசனைக் கண்டையாவென்று எச்சரித்து, அதோ தலைநீட்டி வெளிவந்திருக்கின்றான் பாரென்று காட்டி, இது நல்லகாலம் அர்ச்சுனா! இதல்லாமல் இன்னொரு பொல்லாத பிரமாத மிருக்கின்றது. அஃதென்னவெனில், இந்தச் சயத்திரதன் தந்தையாகிய சிந்துபதியானவன், மதிப்பிற் சிறந்த தன் மகன் தலையைவெட்டி எவனொருவன் கையால் நிலத்திற் றள்ளுகிறானோ? அவனுடைய தலை அனேகஞ் சுக்கலாய்ப் போகக்கடவதென்று சத்துருநாசமாகிய சூரிய மந்திரத்தை உச்சரித்து மனவுறுதி கொண்டு, தன்னெண்ண நிறைவேறும்படியாய்ச் சிமந்தபஞ்சக மடுவில் தார்ப்பணஞ் செய்கின்றான். ஆதலால், பொழுதுபோச்சு தென்னும் பூரிப்புடன் உல்லாசமாய் வெளிப்பட்ட இந்தச் சயிந்தவன் தலையை நீ வாங்குவது பெரிதல்ல. அறுபட்ட இவன் தலையானது, சிமந்த பஞ்சகதீரத்தில் இருக்கின்ற இவன் தந்தையாகிய சிந்துராஜன் கையிற்போய் விழும்படியாய்

உன் கரத்திற் கிசைந்த கணையைக்கொண்டு ஜாடக்கடவை என்று நாரணன் சொன்னார்.

இவ்வாறு கிருஷ்ணமூர்த்தி சொல்லிய வார்த்தையை நரனானவன் கேட்டு, நமது சபதம் பலித்ததென்று நானாவித மகிழ்ச்சி கொண்டு வரத்தினாற் பெற்ற விஜயகாண்டீபத்தை உரத்தினாற் பிடித்து, ஆகர்ணபரியந்தம் வாங்கியிழுத்து ஷ்டங்காரம்பண்ணி, ஆதிபாண்டரங்கனருளிய பாசுபதாஸ்திரத்தைப் பணிந்தெடுத்து, பற்பலவாகிய பத்திர புஷ்ப சந்தனாக்ஷதையுங் கொண்டு பூசித்து, விசுவாசித்து, தன்மனநேசித்த விதத்தை யோசித்துத் தூபதீபங் கொடுத்து, சிந்துபதி தலைக்கு லக்ஷ்யமாகப் பிடித்துத் தொடுத்துவிட்டான். உடனே யப்பாசுபதாஸ்திரமானது உலகங்குலுங்க, உரகநடுங்க, உவரியொடுங்க, உம்பரடங்க, உம்பலமடங்க, ஓதிமமென்னு மலைகள் குலுங்க, உடுபதிகலங்க, உலகுள்ளோர் கண் பிதுங்கும்படியாயெழுந்து, கணித்தவன் றலையைத் துணித்துவந்தது. இவ்விதமாகப் பாசுபதாஸ்திரந் துண்டித்த தலையைப் பூமியில் விழவொட்டாமற் பிடுங்கித் தூக்கிக்கொண்டு போகும்படியாக வாயுக்கணை முதலாகிய சில சரங்களை மேலுமேலுந் தொடுத்து, சிமந்த பஞ்சக மடுவிலிருந்து சலத்தையள்ளிப் தர்ப்பணம் விடுக்கின்ற சிந்துராஜனுடைய இருகரத்திலும் வீழும்படியாகச் செய்தான். அப்படியே விழுந்தபோது அந்த சிந்துராஜன் திடுக்கிட்டு, தன் மகனுடைய தலையென் றுணராமல், ஐயமாய்க் கையை விரித்து நிலத்தில் மிகுந்த ஜலத்தில் விடுத்தான். அந்தத் தலையை நிலத்திற் போட்ட தக்ஷணத்திற் சிந்து தேசாதிபனானவன் தலைவெடித்துச் சாய்ந்து மாய்ந்தான். அந்தச் சமாச்சாரத்தை இங்கும் அங்கும் நடக்குஞ்சங்கதிகள் தெரிவித்துக்கொண்டிருக்குந் தூதர்களோடிவந்து, சயிந்தவன் தலையானது அவன் தந்தை கையில் வந்து விழுந்தது அந்தச் சிந்துபூபதியு மிறந்தானையாவென்று துரியோதனன் முதலிய அரசரிடத்திற் சொன்னார்கள். அவர்க ளம்மொழியைக் கேட்டு, பெருமைத் தங்கிய மாயோனுடைய மகாமாயமென்று தெரிந்துகொள்ளாமல், சூரியனஸ்தமித்தபின் பாதலாற் சபத நிறைவேறியதிற் சேர்க்கை யல்லவென்று முகமலர்ந்து, அகமகிழ்ந்து, உடல் பாரித்து, உள்ளம் பூரித்து ஆர்ப்பறித்தார்கள். அப்போது முகத்தெளிவும் அழகுங் கொண்ட துரியோதனன், ஐயோ! அர்ச்சுனன் அக்கினியில் வீழ்ந்திறப்பான்; அதைக்கேட்ட மற்றநால்வரு முடிவார்கள்; இனி நமக்கொரு பகையு மில்லையென்று எண்ணினவனாய், ஆ! ஆ! என்ன சந்தோஷப்பட்டான்; என்ன துள்ளினான். அந்தந்தோ! அவன் பட்ட சந்தோஷத்தை என்னொரு நாவினாற் சொல்லி முடியாது.

### கண்ணன் சக்கரத்தை மீட்டுக்கொண்டு சூரியன் பிரகாசிக்கவே, துரியோதனன் மருண்டு வினவுங் கேள்விக்கு அங்கிருப்பவர் விடைதரல்

இஃதிப்படியிருக்க, கர்னராஜன் சவுபலராஜன் துஸ்வாசனராஜன், துரியோதனராஜன், முதலாகிய பலருங் கலந்து, சூரியனஸ்தமித்தால் தீயில்விழுந்திறப்பேனென்று சொல்லிய மொழி தப்பிச் சிந்துராஜன் சிரத்தைத் தறித்துவிட்டான் சுவேதவாகனனாகிய அர்ச்சுனன். பார்த்தீர்களா? இந்த மொழி லேசாகப் போவதல்ல என்று ஆர்ப்பரித்துத் துள்ளினார்கள். அந்த வேளையில், எமது பெருமானாகிய அரவணைச் செல்வன் மாயமாகிய இருட்டுடன் கலந்து மறைக்கும்படியாய் ஆக்ஞாபித்த சக்கரத்தை நீக்கிவிட, உடனே பளிச்சென்று பிரகாசிக்குங் கிரணசூரியனை யாவருங்கண்டு, அடடா! இதென்ன விந்தையாயிருக்கிறது? சப்தபுரவி பூட்டிய சயந்தனமுடைய இணையில்லாத தபனனானவன், இன்னமொரு பனைப்பொழுதுண்டென்றிருக்கின்றானே: ஐயையோ! அப்பா! இது பெருமோசமாய் இருக்கின்றதே என்று துரியோதனன் முதல் யாவருங் கலங்கி ஒன்றுந் தோன்றாமல் மாண்டார்போ லிருந்து மீண்டார்போற் றெளிந்தார்கள். துரியோதனராஜன் மாத்திரஞ் சரியாகிய மதிகலங்கி, விதி மேவிய தலை குலுங்கி, அதிபதியாகிய நிலை விலங்கி சந்தேகாஸ்பதமாய்ச் சில மொழிகள் கேட்கத் தொடங்கினான். ஓ விவேகவேதியர் முதலாகிய மன்னவான்களே! இந்தச் சூரியன் மறைந்து பிரகாசித்ததற்குக் காரணஞ் சொல்லுங்கள். அல்லது நான் கேட்பதற்கு ஞாயம் விள்ளுங்கள். மிகுந்த விசாலமும்- ஆழமும் - அகலமும் - ஓசையுமுடைய மேற் கடலில் இந்தச் சூரியன் அஸ்தமித்து வீழ்வதற்கு முன்னே, கேதுவென்னுஞ் செம்பாம்பானது வெகுண்டெழுந்து விழுங்கி இருக்

குமாரென்று மிருந்த வேகமாய்க் கேட்டான். அவ்விடத்தில் இருந்த நூலாய்ந்த மேலோர் அவனைப் பார்த்து, ஓ மஹாராஜனே! தேவரீர் ரேணியபடிக்குச் சூரியகிரணமாயிருந்தால் கேது தொடருவான்; மற்றக் காலத்தில் தொடரமாட்டான். அப்படியே சூரியகிரண மென்று யோசிப்போமாகில், இந்தும் இரவியுங் கூடிய அமாவாசையா யிருக்கவேண்டுமே; அப்படி யிருந்தால், உமது இஷ்டப்படி நீணக்கலாம். அப்படிக்கில்லாமல், இன்று சதுர்த்தசியும், நாளை வரப்போகிறது பௌர்ணமியுமாதலால், சூரியகிரணமென்று சொல்லப்படாதென்றார்கள்.

அந்த வார்த்தையைத் துரியோதனன் கேட்டு நல்லது அப்படி யல்லவென்றால், தேவேந்திரனவன், தன் மகனாகிய அர்ச்சுனன் சபதம் தப்பி அக்கினியில் விழுந்து இறந்துபோகப் போகிறானென்று புத்திர வாஞ்சையினால் சப்த மேகங்களையு மனுப்பி, நீங்கள்போய் சூரியனை மறைத்துப் பொழுது போனதாகச் சமயங் காட்டுங்களென்று சொல்ல, அவனுத்திரவின்படி மேகங்கள் வந்து மறைந்திருக்குமாவென்று கேட்டான். அதற்கவர்கள், ஓ கின்னரர் பிரானையொத்த மன்னர்பிரானே! மேகங்களானது சூரியனை மறைத்தபோதிலும், சூரிய வெப்பமுங் கிரணமும் அடங்கி, இருட்டு காட்டுமே யல்லது போதுபோய் விட்டதாகச் செவ்வானமிட்டுச் சூரிய பிம்பம் மறையமாட்டாதென்றார்கள். அப்படியானால், நமக்கு வஞ்சமாகியும், பாண்டவர்களுக்குத் தஞ்சமாகியும் இராநின்ற கரியோன் அக்கறையாகச் சக்கரத்தினால் மறைத்திருப்பானோ? ஒருவேளை உண்டென நீணக்கிறேனென்று வணங்கா முடிபெற்ற துரியோதனராஜன் கேட்க, அதற்கவர்கள் ஐயா! கோடி சூரியப்பிரகாசமுள்ள சக்கரத்தை இந்த சூரியன் மறைக்கும்படிக்கு விட்டிருந்தால், இவ்வுலகமெல்லாம் கண்கூசும்படி இன்னும் மேலான பிரகாசத்தோடு சொலித்துக் கொண்டிருக்க வேண்டுமே; ஆதலால், சூரிய கிரணத்தை குன்றச்செய்து மாலைப்போது வந்து மறைக்க, அச்சூரியன் மலைவாயில் விழும் வண்மையைப்போற் சரியாகக்காட்டிய செவ்வானத்தின் வண்மையை யோசிக்குமிடத்தில் சக்கரத்தினால் மறைத்ததாக நினைக்கக் கூடவில்லை என்றார்கள். அவர்கள் சொல்லிய அதைத்தும் கேட்ட துரியோதன மஹாராஜனவன் மனங்கொதித்து, நல்லது நான் கேட்டக் கேள்விகளை யெல்லாம் ஞாயஞ் சொல்லி தடுத்து விட்டீர்கள். அப்படியானால், சூரியன் ஒரு பனைப்போதாக இருக்கும் போதே மாலைப்போது கவியச் செவ்வான மிட்டு இருள்வந்து சூழ்ந்ததற்குக் காரணம் என்ன சொல்லுகின்றீர்கள்? சொல்லுங்களென்று நந்தியாவட்டமாலையணிந்த நராதிபன் கண் கறுத்து, உள்ளம் வெறுத்துக் கொண்டான். அக்கேழ்விக்கு வெள்ளமாகிய வேதியர் முதல் சில வேந்தர்கள் கூடி, ஓ மகாராஜனே! உள்ளதை உள்ளபடி சொல்லுகிறோம். எங்கள்பேரில் எள்ளத்தனை வெறுப்புமில்லாமற் கேளும்: ஓ வள்ளலே! என்று சொல்லத் தொடங்கினார்கள்.

### கதிரவன் மறைந்தது கண்ணன் செயலென்றுரைக்கக்கேட்ட துரியோதனன் அவரைத் தூஷித்தல்

ஓ துரியோதன மகாராஜனே! "விரியோத நெடுங்கடலில் வீழ்வதன்முன் விரைந்துரகன் விழுங்கினனோ, வெரியோடி மகனிறக்கு மென மகவான் மறைக்கமுகி லேவினனோ, கரியோன் கைத்திகிரியினன் மறைத்தனனோ விருள்படரந்தக் கணக்கீதென்னோ" என்று தேவரீர் கேட்டதும், அதற்கு நாங்கள் விடைகொடுத்ததுஞ் சரியே; ஆனால், "பெரியோர்க டிருவெள்ளம் பேதித்தா லெப்பொருளும் பேதியாதோ" என்னுமுதியோர் வாக்கியப்படி, ஒருவன் நல்லோர் பெரியோர்களைத் திடுக்கிடச்செய்து அதனால் அவர்களுள்ளம் வேறுபட்டுப் பேதிக்குமாகில், எல்லாப் பொருள்களுந் தாறுமாறுபட்டுப் போவதும் அல்லாமல், இரவுபகலாகும். பகல் இரவாகும். இதைக்குறித்து வேறே தருமம் விசாரிக்க வேண்டியதில்லை என்று சொல்லி, மேலுஞ் சொல்லுகிறார்கள். ஐயா நாமெத்தனை மெய்மையாகப் பாடுபட்டாலுங் காரியமில்லை. ஏனெனில், "உந்திரதத் தனிவலவனுபாயத்தால் வருணன்மக னுயிரை மாய்த்தான், மந்திரமொன் றறிவித்து வயப்புயமாயிரத்தோனை மடிவித்திட்டான், றந்திர மெய்ம் மயங்கிவிழத் தன்சங்க முழக்கினான் றபனன் மாய, விந்திரசா லமுஞ்செய்தா னிந்திரன்சேய் வெல்லாமல் யார்வெல் வாரே" ஓ மகாராஜனே! அர்ச்சுனனுக்குத் தேருருஞ் சாரதியானவன், முன்னம் தன்மார்பில் ஆயுதத்தைத் தாங்கி உபாயத்தால் வருணகுமாரனுடைய பிராணனை மாய்ப்பித்தான். ஒரு மந்

திரத்தை உபதேசித்துத் துரோணாச்சாரியரால் நீ பெற்றணிந்து வந்த சாலிகவசத்தைப் பொடியாகமாற்றி வைத்தான். பத்மயூகப் பந்திப்பாகிய சேனைகளெல்லாம் மயங்கித் தியங்கி விழும்படியாய்ப் பாஞ்சசன்யத்தை முழக்கினான். பனைப்பொழுதிருக்கும்போதே சூரியன் மறையும்படியாய் இப்போதிவ்விந்திரஜாலஞ் செய்திருக்கின்றான். இப்பேர்ப்பட்டவன் பக்கத்துணையும் உதவியுமாய்க் கிடைத்திருக்கும்போது இந்திர குமாரனாகிய சுந்தரன் ஜெயம்பெறாமல், இன்னுமெவர்கள் ஜெயம்பெறப் போகின்றார்கள்? ஓ இந்துகுலத் தோன்றலாகிய எந்தலே! என்று எல்லோரும் நின்று ஏக்கங்கொண்டு உரைத்தார்கள். அச்சமயத்தில், இவ்வார்த்தைகளையெல்லாம் மனங்கொண்ட மன்னர்க்கிறையாகிய துரியோதனராஜன் மனமழன்று வயிறெறிந்து வாள்விழி சிவந்து, மகத்தாகிய துக்கத்துடன் பெருமூச்செறிந்து, வாய்விட்டிதனைச் சொல்லுகின்றான்.

கேளுங்கள் என்னிதயம்போன்ற இஷ்டர்களே! "முடையெடுத்த நவநீதந் தொட்டுண்டுங் கட்டுண்டு முதனாகக், குடையெடுத்து மழைதடுத்தும் வஞ்சனைக்கோர் கொள்கலமாங் கொடியபாவி, படையெடுத்து வினை செய்யேனெனப் புகன்ற மொழிதப்பிப் பகைத்த போரி, னிடையெடுத்த நேமியினால் வெயின்மறைத்தா னின்னமிவ னென்செய்யானோ" இந்த மாயக்கிருஷ்ணனானவன், கஞ்சனுடைய காராக்கிரகத்திற் பிறந்து, கானவராகிய இடையர்வீட்டில் வளர்ந்து, கன்றுமுதலாக மேய்த்து, ஆயர்மனைதோறும் பாலும் தயிரும் வெண்ணெயும் திருடியுண்டு, ஆச்சிமாரெல்லாம் அசோதையினிடத்திற்சென்று, என்னடி அம்மா இங்கேவந்தால் இந்தக் கிருஷ்ணன் பாச்சி சோச்சியென்றான். அங்கே வந்தால் பானைபானையாய்ப்பால்தயிர் வெண்ணெய்களைக் கொள்ளையிடுகிறான் என்று பிரியாது சொல்லிக் கொண்டபோது, அந்த யசோதையென்னும் இடைச்சி பிடித்து, அணைக்கயிற்றாலணைக்கக் கட்டும்பட்டு அடியும்பட்டான். இதல்லாமல், பூர்வத்தில் அந்த முல்லை நிலத்தாரெல்லோரும் முல்லைநிலத்தலைவனாகிய இந்திரனுக்கு வருஷந்தோறும் ரேவதிக சயிலத்தினிடத்திற் பொங்கலிட்டுப் படைப்பதை மாற்றி, கோவர்த்தன கிரியினிடத்திற் பொங்கலிடச் செய்து, தானுங் கூட இருந்து சட்டமாய்ச் சாப்பிட்டான். இந்த சேதியைத் தெரிந்துகொண்ட தேவேந்திரன் கல்வருஷம் வருஷிக்கும்படி மேகங்களுக்குக் கட்டளையிட்டபோது, அவ்வருஷத்தைக் காற்று மழையாற் கலக்கி, அவ்வண்டரெல்லோரும் விசனங் கொண்டு பெண்டு பிள்ளைகளுடன் கோவென் றலறி என்னடா அப்பா கிருஷ்ணாவென்று கேட்ட காலத்தில், உங்களிடத்திற் பொங்கற்பூசை வாங்கிக்கொண்ட தெய்வம் எப்படி உங்களை ரக்ஷிக்காமற்போகும்? பார்ப்போம் வாருங்கள் என்று அழைத்துப்போய் நிறுத்தி, கோவர்த்தனகிரியைக் குடையாயெடுத்து மழையை தடுத்து, இன்னும்பல வித்தைகளெல்லாஞ் செய்தான். உலகிலுள்ள வஞ்சனையென்னுஞ் சரக்குகளெல்லாம் நிறைந்த கப்பலையொத்த இப்பாவியானவன், நான் படைத்துணைக் கேட்கப் போயிருந்த நாளையில், அப்போது என்னை மோசஞ்செய்து, அர்ச்சுனனுக்குச் சாரதியாய் ஒத்துக் கொண்டேன். ஆயுதமெடுத்து அமர் செய்யேன் என்று எனக்கு உறுதி சொல்லி, இப்போது அவ்வார்த்தை தப்பி, உமக்கோ எனக்கோவென்று பகைத்து போர் புரியும் நடுச்சமயத்திற் சக்கரத்தை விடுத்துச் சூரியனை மறைத்து, என் மைத்துனனைக் கெடுத்து, அர்ச்சுனனை தப்பி விடுத்தானே! இனி மேலும் இவனென்ன செய்யமாட்டான்? இவன் சொல்லை நானெப்படி நம்புவேன்? தெய்வமே! இப்பேர்ப்பட்ட வஞ்சகத் தீயருக்கு நீ என்னகதி அமைப்பாயோ? நான் அறியேன் என்று இரைத்தெழுந்து விரைந்து சொல்கிறான்.

### துரியோதனாதியர் பாண்டவரைக் கொல்வது அவராற் கொல்லப்படுவது என்று சபதங்கூறிவந்து அருச்சுனனால் முறிபட்டோடுதல்

ஓ மித்திரர்களே! ஓராழித் தேருடைய சூரியனானவன் அஸ்தமானமாகு முன்னே, போர்விளைத்துப் பாண்டவரைக் கொல்வது; இல்லாவிட்டால் அவர்கள் கையால் நானும் இறந்து போகிறேன். இது நிச்சயமென்று சகோதரர்கள் முதலாகிய சேனைகளுடன் சென்று பாண்டவரை வளைத்துக் கொண்டான். இவ்விதமாகச் சொல்லி யெழுந்தத் துரியோதன மகாராசனுடைய வாக்கியத்தைக் கேட்ட கொடித்தடந் தேரேறிய கோவேந்தரெல்லோருந் தங்கள் தங்கள் மட்டிலும் ஒவ்

குமாவென்று மிகுந்த வேகமாய்க் கேட்டான். அவ்விடத்தில் இருந்த நூலாய்ந்த மேலோர் அவனைப் பார்த்து, ஓ மஹாராஜனே! தேவரீ ரெண்ணியபடிக்குச் சூரியகிரணமாயிருந்தால் கேது தொட்டுவான்; மற்றக் காலத்தில் தொடரமாட்டான். அப்படியே சூரியகிரண மென்று யோசிப்போமாகில், இந்தும் இரவி யுங் கூடிய அமாவாசையாயிருக்கவேண்டுமே; அப்படி யிருந்தால், உமது இஷ்டப்படி நினைக்கலாம். அப்படிக்கில்லாமல், இன்று சதுர்த்தசியும், நாளை வரப்போகிறது பௌர் ணமியுமாதலால், சூரியகிரணமென்று சொல் லப்படா தென்றார்கள்.

அந்த வார்த்தையைத் துரியோதனன் கேட்டு நல்லது அப்படி யல்லவென்றால், தேவேந்திரனைவன், தன் மகனாகிய அர்ச் சுனன் சபதம் தப்பி அக்கினியில் விழுந்து இறந்துபோகப் போகிறானென்று புத்திர வாஞ்சையினால் சப்த மேகங்களையு மனுப்பி, நீங்கள்போய் சூரியனை மறைத்துப் பொழுது போனதாகச் சமயங் காட்டுங்களென்று சொல்ல, அவனுத்திரவின்படி மேகங்கள் வந்து மறைந்திருக்குமாவென்று கேட்டான். அதற்கவர்கள், ஓ கின்னரர் பிரானையொத்த மன்னர்பிரானே! மேகங்களானது சூரியனை மறைத்தபோதிலும், சூரிய வெப்பமுங் கிரண மும் அடங்கி, இருட்டு காட்டுமே யல்லது போதுபோய் விட்டதாகச் செவ்வானமிட்டுச் சூரிய பிம்பம் மறையமாட்டா தென்றார்கள். அப்படியானால், நமக்கு வஞ்சமாகியும், பாண்டவர்களுக்குத் தஞ்சமாகியும் இராநின்ற கரியோன் அக்கறையாகச் சக்கரத்தினால் மறைத்திருப்பானோ? ஒருவேளை உண்டென நினைக்கிறேனென்று வணங்கா முடிபெற்ற துரியோதனராஜன் கேட்க, அதற்கவர்கள் ஐயா! கோடி சூரியப்பிரகாசமுள்ள சக்கரத்தை இந்த சூரியன் மறைக்கும்படிக்கு விட்டிருந் தால், இவ்வுலகமெல்லாம் கண்கூசும்படி இன் னும் மேலான பிரகாசத்தோடு சொலித்துக் கொண்டிருக்க வேண்டுமே; ஆதலால், சூரிய கிரணத்தை குன்றச்செய்து மாலைப்போது வந்து மறைக்க, அச்சூரியன் மலைவாயில் விழும் வண்மையைப்போற் சரியாகக்காட்டிய செவ்வானத்தின் வண்மையை யோசிக்குமிடத் தில் சக்கரத்தினால் மறைத்ததாக நினைக்கக் கூடவில்லை என்றார்கள். அவர்கள் சொல்லிய அனைத்துங் கேட்ட துரியோதன மஹாராஜ னனவன் மனங்கொதித்து, நல்லது நான் கேட்டக் கேள்விகளை யெல்லாம் ஞாயஞ் சொல்லி தடுத்து விட்டீர்கள். அப்படியானால், சூரியன் ஒரு பனைப்போதாக இருக்கும் போதே மாலைப்போது கவியச் செவ்வான மிட்டு இருள்வந்து சூழ்ந்ததற்குக் காரணம் என்ன சொல்லுகின்றீர்கள்? சொல்லுங்க ளென்று நந்தியாவட்டமாலையணிந்த நராதி பன் கண் கறுத்து, உள்ளம் வெறுத்துக் கொண்டான். அக்கேள்விக்கு வெள்ளமாகிய வேதியர் முதல் சில வேந்தர்கள் கூடி, ஓ மகா ராஜனே! உள்ளதை உள்ளபடி சொல்லு கிறோம். எங்கள்பேரில் எள்ளத்தனை வெறுப்பு மில்லாமற் கேளும்: ஓ வள்ளலே! என்று சொல்லத் தொடங்கினார்கள்.

### கதிரவன் மறைந்தது கண்ணன் செயலென் றுரைக்கக்கேட்ட துரியோதனன் அவரைத் தூஷித்தல்

ஓ துரியோதன மகாராஜனே! “விரியோத னெடுங்கடலில் வீழ்வதன்முன் விரைந்துரகன் விழுங்கினனோ, வெரியோடி மகனிறக்கு மென மகவான் மறைக்கமுகி லேவினனோ, கரியோன் கைத்திகிரியினன் மறைத்தனனோ விருள்பரந் தக் கணக்கீதென்னோ” என்று தேவரீர் கேட் டதும், அதற்கு நாங்கள் விடைகொடுத்ததுஞ் சரியே; ஆனால், “பெரியோர்க ளிருவெள்ளம் பேதித்தா லெப்பொருளும் பேதிபாதோ” என்னுமுதியோர் வாக்கியப்படி, ஒருவன் நல் லோர் பெரியோர்களைத் திடுக்கிடச்செய்து அத னால் அவர்களுள்ளம் வேறுபட்டுப் பேதிக்கு மாகில், எல்லாப் பொருள்களுந் தாறுமாறு பட்டுப் போவதும் அல்லாமல், இரவுபகலா கும். பகல் இரவாகும். இதைக்குறித்து வேறே தருமம் விசாரிக்க வேண்டியதில்லை என்று சொல்லி, மேலுஞ் சொல்லுகிறார்கள். ஐயா நாமெத்தனை மெய்மையாகப் பாடுபட்டாலுங் காரியமில்லை. ஏனெனில், “உந்திரதத் தனி வலவனுபாயத்தால் வருணன்மக னுயிரை மாய்த்தான், மந்திரமொன் றறிவித்து மேயப் புயமாயிரத்தோனை மடிவித்திட்டான், றந்திர மெய்ம் மயங்கிவிழத் தன்சங்க முழக்கினன் றபனன் மாய, விந்திரசா லமுஞ்செய்தா னிந் திரன்சேய் வெல்லாமல் யார்வெல் வாரே” ஓ மகாராஜனே! அர்ச்சுனனுக்குத் தேருருஞ் சாரதியானவன், முன்னம் தன்மார்பில் ஆயு தத்தைத் தாங்கி உபாயத்தால் வருணகுமார னுடைய பிராணனை மாய்ப்பித்தான். ஒரு மந்

திரத்தை உபதேசித்துத் துரோணாச்சாரிய ரால் நீர் பெற்றணிந்து வந்த சாலிகவசத் தைப் பொடியாகமாற்றி வைத்தான். பத்ம வியூகப் பந்திப்பாகிய சேனைகளெல்லாம் மயங் கித் தியங்கி விழும்படியாய்ப் பாஞ்சசன் யத்தை முழக்கினன். பண்டொழு திருக்கும் போதே சூரியன் மறையும்படியாய் இப்போ திவ்விந்திரஜாலஞ் செய்திருக்கின்றான். இப் பேர்ப்பட்டவன் பக்கத்துணையும் உதவியு மாய்க் கிடைத்திருக்கும்போது இந்திர குமார னாகிய சுந்தரன் ஜெயம்பெருமல், இன்னு மெவர்கள் ஜெயம்பெறப் போகின்றார்கள்? ஓ இந்துகுலத் தோன்றலாகிய ஏந்தலே! என்று எல்லோரும் நின்று ஏக்கங்கொண்டு உரைத்தார்கள். அச்சமயத்தில், இவ்வார்த்தை களையெல்லாம் மனங்கொண்ட மன்னர்க்கிறை யாகிய துரியோதனராஜன் மனமழன்று வழி றெறிந்து வாள்விழி சிவந்து, மகத்தாகிய துக்கத்துடன் பெருமூச்செறிந்து, வாய்விட் டிதனைச் சொல்லுகின்றான்.

கேளுங்கள் என்னிதயம்போன்ற இஷ் டர்களே! "முடையெடுத்த நவநீதந் தொட் டுண்டுங் கட்டுண்டு முதனுகைக், குடையெடு த்து மழைதடுத்தும் வஞ்சனைக்கோர் கொள் கலமாங் கொடியபாவி, படையெடுத்து வினை செய்யேனெனப் புகன்ற மொழிதப்பிப் பகை த்த போரி, னிடையெடுத்த நேமியினால் வெயின்மறைத்தா னின்னமிவ னென்செய் யானே" இந்த மாயக்கிருஷ்ணனனவன், கஞ் சனுடைய காராக்கிரகத்திற் பிறந்து, கானவ ராகிய இடையர்வீட்டில் வளர்ந்து, கன்றுமூத லாக மேய்த்து, ஆயர்மனைதோறும் பாலும் தயிரும் வெண்ணெயும் திருடியுண்டு, ஆச்சி மாரெல்லாம் அசோதையி னிடத்திற்சென்று, என்னடி அம்மா இங்கேவந்தால் இந்தக் கிருஷ்ணன் பாச்சி சோச்சியென்றான். அங்கே வந்தால் பானைபானையாய்ப் பால்தயிர் வெண் ணெய்களைக் கொள்ளை யிடுகிறான் என்று பிரியாது சொல்லிக் கொண்டபோது, அந்த யசோதை யென்னும் இடைச்சி பிடித்து, அணைக்கயிற்ரு லணைக்கக் கட்டும்பட்டு அடி யும்பட்டான். இதல்லாமல், பூர்வத்தில் அந்த முல்லை நிலத்தாரெல்லோரும் முல்லைநிலத்தலை வனாகிய இந்திரனுக்கு வருஷந்தோறும் ரேவதிக சயிலத்தினிடத்திற் பொங்கலிட்டுப் படைப்பதை மாற்றி, கோவர்த்தன கிரியி னிடத்திற் பொங்கலிடச் செய்து, தானுங் கூட இருந்து சட்டமாய்ச் சாப்பிட்டான். இந்த சேதியைத் தெரிந்துகொண்ட தேவேந் திரன் கல்வருஷம் வருஷிக்கும்படி மேகங் களுக்குக் கட்டளை யிட்டபோது, அவ்வருஷத் தைக் காற்று மழையாற் கலக்கி, அவ் வண்ட ரெல்லோரும் விசனங் கொண்டு பெண்டு பிள்ளைகளுடன் கோவென் றலறி என்னடா அப்பா கிருஷ்ணவென்று கேட்ட காலத்தில், உங்களிடத்திற் பொங்கற்பூசை வாங்கிக்கொண்ட தெய்வம் எப்படி உங்களை ரக்ஷிக்காமற்போகும்? பார்ப்போம் வாருங்கள் என்று அழைத்துப்போய் நிறுத்தி, கோவர்த் தனகிரியைக் குடையாயெடுத்து மழையை தடுத்து, இன்னும்பல வித்தைகளெல்லாஞ் செய்தான். உலகிலுள்ள வஞ்சனையென்னுஞ் சரக்குகளெல்லாம் நிறைந்த கப்பலை யொத்த இப்பாவியானவன், நான் படைத்துணைக் கேட்கப் போயிருந்த நாளையில், அப்போது என்னை மோசஞ்செய்து, அர்ச்சுனனுக்குச் சாரதியாய் ஒத்துக் கொண்டேன். ஆயுதமெடு த்து அமர் செய்யேன் என்று எனக்கு உறுதி சொல்லி, இப்போது அவ்வார்த்தை தப்பி, உமக்கோ எனக்கோவென்று பகைத்து போர் புரியும் நடுச்சமயத்திற் சக்கரத்தை விடுத்துச் சூரியனை மறைத்து, என் மைத்துனனைக் கெடு த்து, அர்ச்சுனனை தப்பி விடுத்தானே! இனி மேலும் இவனென்ன செய்யமாட்டான்? இவன் சொல்லை நானெப்படி நம்புவேன்? தெய்வமே! இப்பேர்ப்பட்ட வஞ்சகத் தீய ருக்கு நீ என்னகதி அமைப்பாயோ? நான் அறியேன் என்று இரைத்தெழுந்து விரை ந்து சொல்கிறான்.

துரியோதனதியர் பாண்டவரைக் கொல்வது அவராற் கொல்லப்படுவது என்று சபதங்கூறிவந்து அருச்சுனனல் முறிபட்டோடுதல்

ஓ மித்திரர்களே! ஓராழித் தேருடைய சூரியனானவன் அஸ்தமானமாகு முன்னே, போர்விளைத்துப் பாண்டவரைக் கொல்வது; இல்லாவிட்டால் அவர்கள் கையால் நானும் இறந்து போகிறேன். இது நிச்சயமென்று சகோதரர்கள் முதலாகிய சேனைகளுடன் சென்று பாண்டவரை வளைத்துக் கொண் டான். இவ்விதமாகச் சொல்லி யெழுந்தத் துரியோதன மகாராசனுடைய வாக்கியத்தை கேட்ட கொடித்தடந் தேரேறிய கோவேந்த ரெல்லோருந் தங்கள் தங்கள் மட்டிலும் ஒவ்

வொரு சபதங் கூறிக்கொண்டு, மற்றத் தேச ப்ரவைஷ் மன்னவராகிய ஜெயவீரானுடன் சேனைகளையும் அழைத்துக் கொண்டு, ஒரு க்ஷணப்போதிற்சென்று தனித்தனிச் சண்டை செய்தார்கள். அப்போதந்த யுத்தகளத்தில் ஆற்றுப் பெருக்கம்போல அலையெறிந்தோடு கின்ற ரத்தவெள்ளமானது, ஒரு நிமிஷத்தில் சேருகி வரண்டு திரண்டு உருண்டு பொடியா கும்படியாய் தேர்செலுத்தி வந்த வீமார்ச் சுன சாத்தகி மூவரும், தங்கள் சேனையை வளைத்து சண்டைக்கு வந்து தடுக்கும் துரோணாச்சாரியருடைய தண்டைக் கண்டு, தேருடன் தேர் நெருக்கி, செந்தழல் கக் கிய கொந்தலர்க் கணைகளைத் திசையெங்கு நிறைய இறைத்தார்கள். இவர்களுடனெதி ர்த்து மாறுடிப் போராடிவந்த வயவீரர்களை யெல்லாம் வாகனஞ் சேர்ந்து வாழும்படிக்கு அனுப்பி வைத்தான் பவ்ளமலைமேல் பாற் கடல்வழிந்த பான்மைபோல் திருநீற்றின் தூளித் திருமேனிச் செல்வனுகிய ஒப்பற்ற சிவபெருமானுடன் வில்யுத்தமும் மல்யுத்த முஞ் செய்து வென்று பாசுபத முதலாகிய பாக்கியங்களைப் பெற்ற பற்குணனென்னும் பராக்கிரமன். மறுபடியும் பின்னும் முன்னும் பாணங்களைப் பொழிவதினுற் கிருபாச்சாரிய ருடைய மார்பில் மூன்று கணைசென்று ஊன் றிப் பிராணவருத்தம் விளைத்ததின்பேரில், நிரி யாணம் நமக்கென்று முடிசோர்ந் தயர்ந்து தேரின்பேரில் வீழ்ந்தார். மாமனிளைத்ததைக் கண்டு பரிந்து வந்த அசுவத்தாமன், ஒரு கணைக்கு ஆற்றமாட்டாமல் வில்லை நிலத்தி லூன்றி யுத்தஞ் செய்யுந் தலத்தைத் தாண்டி புறங்காட்டி ஓடினன். அரவக்கொடி தரித்த துரியோதன மகாராஜனனவன், தன்னுடன் வந்த நரபாலருடன் தேரிழந்து வில்லிழந்து சபதஞ் சொல்லி வந்த சொல்லிழந்து, கல்லு றுத்தும் பூமியிற் கால் ஓட்டமாகத் தோற்றுப் போனன். கதிரவன் புத்திரனுகிய கர்னன் எதிர்த்துச் சண்டைசெய்ய வராமல், இருந்த இடத்திற்றனே யிருந்து நடந்த காரியங்க ளைத் தெரிந்துக் கொண்டோடினன்.

இப்படிக்குச் சத்துருக்களெல்லோரும் புறமுதுகிட்டோடச் சாடியும், அருச்சுனன் சந்தோஷமில்லாமல் முகம் வாடி, தன்னு டைய கணைபட்டு பொன்மலைபோற் சாய்ந்து அயர்ந்து தேரின்மேல் வீழ்ந்த கிருபாச்சாரி யாருக்கு என்னமோ ஏதோவென்று உள்ளந் தளர்ந்து வாடி கண்ணீர் வெள்ளமாயோடக் கலங்கினன். அப்படி கலங்கிய நிலையைப் பச்சைவண்ணப் பரந்தாமன் பார்த்து, ஓ என் மச்சினனுகிய அர்ச்சுனு! அந்த கிருபாச்சாரி யாருக்கு யாதொரு கெடுதியுமில்லை. அவர் சிரஞ்சீவி என்று காண்டீபனைத் தெளிவித்து, தன்னுடைய கையால் மார்புடன் அணைத்து தழுவி, ஓ கோதிலாப் பாக்கியக் கோமள மணியே! ஓ அநேகநாள் எண்ணிச் சொல் லினும் அளவிடப்படாத குருசேனைகளைக் குறைத்துக்குறித்த சபதத்தை முடித்து வென் றக்கோவே! உனக்கு நிகராரென்று உந்திபூத் தோனென்னும் உவணமுயர்த்தோன் சந் தோஷசித்தனுய்ச்சொல்ல, அர்ச்சுனன் அந்த வாசகத்தைக்கேட்டு நாட்புலர்ந்து, ஓ நாரண ஆரண பரிபூரண காரணனென்னுந் திருநா மம்வாய்ந்த எங்களுதனே! தேவரீருடைய திருவடிக் கிருபையினுல் ஜெயங்கொண்டதல் லது, என்னுல் வென்றேனென்னும் இறு மாப்பு மீஷத்துவுமில்லை. ஓ என்னுயிர்க்குயி ராகிய இறைவனே! என்று இறைஞ்சிக் கூற லுங் கிருஷ்ணமூர்த்தி மகிழ்ந்து, அப்பா கிரீடி! காலமேமுதல் இதுவரையிலும் என் ன்மோ ஏதோவென்று கலங்கியிருக்கும் உனது தமயனுகிய தருமராஜனிடத்திற்குப் போக லாம் வாவென்று புண்டரீகாக்ஷன் சொல்ல, நல்லதென்று வண்டணிமாலையான் உடம் பட்டு, நராதிபர்புகழுஞ் சாத்தகியும் வாயுபுத் திரனும் இருபக்கத்தில் நிறைமணிப் பதக்கம் போல் வரவும், தன் மனதுக்கிசைந்த உத்த மோசா உதார்மனென்னும் மைத்துனராகிய சக்கராக்ஷகாள் மேற்சொல்லிய பதக்கத்துக்கு முத்துத் தொங்கட்டம்போல் அருகோடி நடக் கவும், அனந்தகல்யாண குணபூஷண அலங் கார ஆனந்த சந்தோஷச் செருக்குடன் தான் நடுநாயகமா யிருக்கவும், ஆதிமூலக்கடவுள் முன்னணிமணியாய் தேரை நடத்தி வரவு மாகப் பிரயாணமாயினன் அருச்சுனராஜன்.

### தருமராஜன் வெற்றிபெற்று வந்த கிருஷ்ணர்ச்சுன ளாதியோரைத் தழுவிச் சன்மானித்தல்

அப்போது வழியிற் குறைந்த போரங்க முண்டத்துடன் சிறந்த கவந்தங்க ளோடு மிடமும், அரிதாகிய பிணங்கள் குவிந்த மேடும், மிகுதியாகக்கூடிய பைசாசு கும்புகள் பேராசையுடன் பாடியாடிய தடமும், காக்கை பருந்து, கழுகு முதலிய பல பறவைகள் கத்

திப் பறந்து சுற்றி பிணங்களைக் கொத்தித் தத்தித் திரியும் தானமும், சலசலப்பேரோசையுடன் சமுத்திரம்போல் ஓடுகின்ற உதிரப் பள்ளங்களின் சார்பும், ஆகிய இவைகளையெல்லாம் நாடிநாடி சத்துருக்களுண்டோவென தேடித்தேடி, கிழக்கு முதலிய எண்டிக்குகளையும் பார்த்துப் பார்த்து, அகப்பட்ட பேரை மிக்க யுத்தம் விளைத்து, அவரிடத்திற் போர்செய்த ஜெயமாகிய பூரிப்போசையுடன் புயமிரண்டிலும் லட்சுமியைக்கொண்டு நிற்கிற தருமராஜனுக்கெதிர்சென்று ரதம்விட்டிறங்கி, கிருஷ்ணார்ச்சுனர் முதலிய யாவரும் தீர்க்கதண்டமாகப் பணிந்து நின்றார்கள். தனஞ்செயன்சொல்லிய சபதப்பிரகாரம் சிந்துபதி யழிந்த செய்கையை இவர்களுக்கு முன்னமே வந்து தூதுசொல்லத் தக்கவர்கள் சொல்ல, அவ்வார்த்தையை இருசெவியிலும் அமுதசுரப்பதைப்போற் கேட்டு, சதுர்பெற்றோங்கிய இருபுஜங்களும்வீறி சேட்சென்று மகிழ்ந்திருந்த தருமராஜர் இவர்களைக் கண்டவுடன், சூரியனைக்கண்ட தாமரை கமலம்போல் அழகிய முகமலர்ந்து, கிருஷ்ணார்ச்சுனர் இருவரையும் மார்போடிறுக அணைத்துத் தழுவிப் புகழ்ந்து, தேகமுழுமையும் நிணச்சேறும் இரத்தமும் திவலைதிவலையாய்த் துளித்திருக்குஞ் செருக்காந்தியையுடைய பெருமானுக்கு அளவில்லா பிரிய வசனங்களைச் சொல்லி, ஓ! என்னனுசனைக் காத்துக்கொணர்ந்த என்னப்பா என்று பெருமையிற் சிறந்த அப்பின்னை கேள்வனும் பின்னும்பேசி வாயு புத்திரனை வீமசேனனை வாரிச்சேர்த்து, மாயனிளவலென்னுஞ் சாத்தகியை வயிற்றிலணைத்து, பக்கத்திற்காயும் தன்மையும் கனம்பொறியும் கக்காநின்ற கடுங்கட்கணையராய் நிற்கின்ற உத்தமோசா உதார்மன் இவ்வருவருக்கும் இங்கிதமாகிய இனிமை யுரைத்து சிந்தாகுலம் தீரும்படியாய்ச் செந்தாமரைக் கண்ணனுடனே சிற்சில வார்த்தைகளை நேசவிசுவாசமாகப் பேசி, இன்றைப்போரில் வெற்றிவயம் பெற்று வராநின்ற உம்மைப் பார்ப்பதற்கு என் கண்களானது பரிசுத்த பாக்கியமான தவங்கள் செய்திருந்ததென்று அத்தர்ம சொரூபியாகிய தரணீசன் சொல்லி, இன்னும் பலவாறாகிய இங்கிதவார்த்தைகளை இதயங்களிக்கப் பேசிக்கொண்டு இன்பத்துடன் இருந்தார்.

## துரியோதனன் துரோணாச்சாரியரிடஞ் சென்று முறையிட, அவரவனைத் தேற்றி மீண்டுஞ் சண்டைக் காயத்தப் படுத்துதல்

இஃதிப்படியிருக்க, அர்ச்சுனனால் அடிபட்டு, நிலைகெட்டு, முதுகிட்டோடிய அரசர்க்கரசாகும் துரியோதனராஜன் மேந்தய பலங்கெட்டு, யுத்தநிலம்விட்டு ஓடிய படைஞருடன் திரும்பி தனக்குச் செயம் வரவேண்டுமென்று சாலிகவசந்தரித் தனுப்பிய தனுவாரியனிருந்து சண்டை செய்யாநின்ற சதுரங்கப்படையின் பந்திப்பையுடைய சமர்முனைக்கு வந்து மனம்நொந்து, ஓ! சேனாதிபதியாகிய ஐயா! மின்னொளி போலும் பொன்னொளிகாலும் விதரண முடி சிறந்த சிந்துவேந்த னிறந்த விதத்தை கேளுமென்றுவிளம்பி, மதத்தயானை போல் மனநொந்து நின்றான். ஓ ஜெனமேஜெய மகாராஜனே! அவனாரெனில், நாடு முதலியவை கொடுத்தாலும் தங்கட்கீடல்லவென்னும் பெருமையிற் சிறந்த பாண்டவர்கள் தாங்களிருப்பதற்கு ஐந்து வீடாகிலும் கேளுமென்று ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியைத் தூதனுப்பியபோது, ஈயிருக்கு மிடமும் இல்லையென்றுரைத்த பெரும்பாவியானவன். இப்பாற் சிந்துபூபதி தலைவெடித்திறந்தானென்றுரைத்த செயல்களெல்லாம் ஆசானாகிய அந்தணன் கேட்டு, அரவக்கொடிக் கதிபனாகிய அரசனை நோக்கி, அரசே! உனக்கொரு மர்மஞ் சொல்கிறேன் கேள்: எப்போதும் தர்மம் வெல்லும்; பாவம் தோற்கும். எத்தனைவித பத்திரம் பண்ணினாலுங் காரியமில்லையென்று உன் மனதுக்கு நேராய்த் தெரிந்துக்கொண்டாயல்லவா? உங்கள் பாட்டனாகிய வீஷ்மருந் தூதுவந்த நந்த நந்தனன் முதலியபேர்களுஞ் சொல்லிய நன்மொழியெல்லாம் இகழ்ந்து, உன்னைப் பணிந்து தாழுந் தன்மைபெற்ற தாழ்ந்தபேர்களைச் சேர்ந்து, அவர்களுரைத்த உரைவழி நாடி, இவ்விதமாகிய பழிதேடிக்கொண்டாய்; ஓ உத்தமனே! ஆகிலும் உன்னை வெறுப்பதுந் தகுதியான காரியமல்ல. எதுவும் ஊழ்வினை முறையென்றுணரத்தக்கது. அப்படியிருக்க, நீ அதை சற்றேனும் யோசிக்காமல் என்னை வெறுத்துப் பேசுகிறாய். இதனால் உனக்கென்ன லாபமுண்டு. ஓ இமையவர் புகழும் ஏந்தலே! இப்பவும் நம்மை வென்று சென்ற நரன் முதலாகிய பேர்களை நாம்போய் வளைத்துப் பலத்துடன் மோதி, பாண்டவரில்

ஒருவரையேனு மடித்து, அல்லது கைப்பிடியாக பிடித்து, நமக்கு நேரிட்டிருக்கிற வெறுப்பைத் தவிர்த்துக்கொண்டு, அப்பால் நாம் வெற்றி பெறுவோம். ஆதலாற் புறப்படுங்களென்று துரோணாச்சாரியர் சொல்லினர்.

### துரியோதனன் கர்னனிடஞ் சென்று துரோணர் கூறியவற்றை வெறுத்துரைக்க, அவனவனைச் சிலவாற்றால் தேற்றி யுத்தசன்னத்தனாதல்

இதனாற் கொஞ்சந் தயிரிய மேலிட்டத் துரியோதன மன்னன் மனமெலிவு நீங்கி, தனக்குச் சமானமான கல்வியிற் சிறந்த கதிரவன் குமாரனிடத்திற் சென்று, அண்ணா! வில்வேதியனை யடுத்து என்கதி இப்படியாய்விட்டதேயென்று விளம்பினேன். அதற்கு அவர் சொன்னதாவது, மறுபடியும் அணிவகுத்துப் படையோடு சென்று ஐவரை வளைத்து காரணப்படி விற்போர் விளைத்து ஒருகை பார்த்து விடுவோமென்று உறுதியாய்ச் சொல்லுகின்றார். இவையெல்லாஞ் சரிதான்; இந்தச் சொல்லை நானெப்படி நம்புவது? இன்று காலைப்போதில் நெடுங்கடல்போல் நெருங்கிய பூரணச்சேனைகளைப் பிரித்துப்பிரித்து, ஐந்துவித யூகபந்தியமைத்து, அர்ச்சுனனை உள்ளே புகவொட்டாமல் அமர்புரிந்து சிந்துராஜனைத் தேறச்செய்கின்றேன் என்றார். இதோ ஜீவனுடன் தேற்றிவிட்டாரல்லவோ? இது பிரத்தியக்ஷமா யிருக்க, காட்டிற் கந்தமூல பலங்களைத் தின்று காலங் கழித்துக்கொண்டிருக்கும் அவ்வைதீக சாந்தஸ்த தேசிகன் வாய்மையை எவ்விதத்திற் றெளிந்து நம்பத்தக்கது? என்று வணங்கா முடிமன்னன் சொல்ல, அங்கதேசராஜனென்னும் ஈகையாளன் சொல்லுகின்றான். ஓ திங்களின் குலக்கொழுந்தாகிய மங்களாகரனே! கேளும்; நெட்டாயமாகிய வரிவில்லை வட்டாகாரமாய் வளைக்குங் குருவாகிய துரோணரால் ஏதொரு வஞ்சனையுமில்லை. அவர் நம் சேனையைப் பலம் பண்ணியதற்கு யாதொருகலனுமில்லை. அந்த அர்ச்சுனன் தான்கற்ற சாஸ்திர நுட்பங்களினாலும், அவன் பெற்றிருந்த மேலாகிய வரங்களினாலும், நமது கிரகசார காலத்தினாலும், வெப்பமாகிய போரிலொட்டி முனைந்து பூர்வவினையின் வல்லமையால் யர்வரையும் அசைவற்று நிற்கக்கண்டு ஜெயம் ஜெயமென்று தன் எண்ணம் நிறைவேற்றிக்கொண்டு போனான்.

மேலும், எந்நேரமு மெரிந்து மூடிக்கொண்டிருக்கு மக்கினிக் கிருப்பிடமாகிய ஆரணியத்திற் பனிரண்டு வருஷம் ஓட்டிவைத்தோம். வளப்பாகிய நல்ல நாட்டில் ஸவுக்கியமாக நலம்பெற்றிருந்த பாக்கியவான்களிலெத்தனைபேரோ செத்தார்கள். காட்டிற் கலங்கி வருந்தியிருந்த பாண்டவர்களில் ஒருவராவது சாகலாகாதா? முன்னமுன்னம் அன்னத்தில் விஷங்கலந்து ஊட்டிவைத்தோம், ஆற்றிற் கட்டிப்போட்டோம், வசிநாட்டி வைத்தோம், அரக்கு மாளிகைகட்டி குடியேற்றி அவ்வீட்டை நெருப்பிட வைத்தோம், பூதத்தை விட்டோம், நம்மாற் கூடியவரையிலுஞ்செய்து வஞ்சனையில்லாமற் பார்த்துவிட்டோம். இவைகளினாற் பாண்டவருக்கு ஏதாகிலும் ஒரு தீங்குண்டா! சாவுண்டா! கேடுண்டா! இப்படியிருக்க, நாம் கையிலாகாதவரைப் போல் ஒருவரை வெறுத்துக்கொள்ளலாமா? அது உலகத்தில் பழிப்பான காரியமல்லவா? ஓ உரகத்துவஜ அதிபதியரசே! ஆசாரியன் சொன்ன வாசகப்படி அவர்மேல் பொறுப்பை வைத்து, உம்மையே நம்பினோமென்று சொல்லி, இன்னுஞ் சண்டைசெய்துப் பார்ப்போம் விதிவழி தப்பினோ ரொருவருமில்லை என்று துரியோதனன் வெப்பமாறும்படி சொல்லி, தனுர்வேதியனோடு கலந்து, வேந்தர் யாவரும் விரைந்துவர நாலுபடையுடன் நடந்து, இனி இவ்வுலக நிற்குமென்று எல்லோருமேங்க, இங்கித சங்கீத மங்கள ஜய பேறிப் பறைமுதலிய வாத்தியங்களுமுழங்க, திரிலோகத்திலுந் தனது திருநாமப் புகழை முறைபெற நிறுவிய கிரணக் கதிர்விடும் அருணன் மைந்தனாகிய மிகுகொடையாளன், அலங்காரத்துடன் ஆரித்தெழுந்து, தேர் நடத்திச் சூழ்ந்தான். உடனே அரவக்கொடி படைத்த துரியோதனமகாராசனும், இனி நமக்குப் பயமில்லையென்று ஒருவாறு தேறி, தனது தம்பிமாரோடுஞ் சில தரணிபரோடும் வந்து சேர்ந்தான்.

### துரியோதனாதியர்களோடு துரோணாச்சாரியர் சபதங்கூறி மீண்டும் யுத்தஞ் செய்யப் புகுதல்

அந்தவேளையில், தன்பேரிற் சிந்தை நொந்து வந்து, துரியோதனனுடைய பந்தமுணர்ந்த சொந்தமாகிய துரோணாச்சாரியர் மனத்திற் கோபாக்கினி குடிகொண்டெழ, அவ்வக்கினியினது கொழுந்து முனையிற்

சிந்திய பொறியைக் குபுகுபு திகுதிகுவென்று இருவிழிகாட்ட, அவ்வக்கினியின் புகையை மூக்கிலிருந்து வாராநின்ற பெருமூச்சாக விட்டுப் பெருங்கோபங்கொண்டு, துரியோதனன் முதலாகிய தார்வேந்தருக் கெதிர் வந்து நின்று, தன் மனந்தாளாமல் ஒரு சபதங்கூறினார். அந்தச் சபதமானது, இவ்விடத்திலிருக்கும் பல்லோருமறியச் சொல்லுகிறேன் கேண்மின்கள்; நானெடுத்துப் பிடித்த என்வில்லுடனும் இப்போது ஏறிய தேருடனும் சத்துருக்களாகிய பாண்டவரைக் கொன்று, சமரற வென்று, நாகக்கொடிக் கதிபனாகிய நவமணி முடித்தநராதிபனுடன் இந்தத்தரணியை ஆளுகிறேன். இல்லாவிட்டால், அந்தப்பாண்டவர்கள் கையால் மாளுகிறேன். இஃதிரண்டில் ஒன்று தெரிகிறவரைக்கும் இந்த ரணக்களத்தில் இருப்பேனேயல்லது, ஆதரவாகிய பாசறை வீட்டுக்குப் போகேனென்று யாவரும் நடுங்க அருஞ் சபதம்புகன்று, சுப்ரமணியக் கடவுளென்று சொல்லும் அற்புதப்பிள்ளையாகிய அசுவத்தாமனை யழைத்து, அழகிய ஒளிமிகுந்த அவனுடைய முகத்தைப் பார்த்து, அப்பனே! நான்பேசிய சபதத் திறத்தைத் தெரிந்துகொண்டா யல்லவா? எனக்கு முதற்சத்துருவாயமைந்து முந்தியுந்தும் விற்றிறப் பாஞ்சாலர்களுடைய முடித்தலைகளையெல்லாம் அடியோடு கெடுத்துச் சிதைத்து விடுகிறேன். ஒருவேளை நான்செய்த யுத்தமுனையிற் பாஞ்சாலப் பூண்டுகளிற் சிலவற்றைப் பிராணனுடன் பிழைத்திருக்கும்படி மறந்து உயிரழிந்துப் போவேனாகில், அவர்களை வேறறக்களைந்து முடிப்பது யெனக்குப் பிள்ளையென்று வந்த உனக்கு அருங்கடனாக மனங்கொள்ளுவாய் என்று துரோணாச்சாரியார் சொல்லிய மொழியைக் கேட்ட அசுவத்தாமனானவன், வேறு சிந்தையில்லாமல், தந்தைதந்த மொழியைத் தலைமேற்கொண்டான். ஓ மகாராஜனே! தகப்பன் இறந்தானென்பதை அவன் நினைக்கவில்லையோவென்று கேட்குமிடத்தில், தான் இருக்கிற வரையிலுந் தனது தந்தையின் பிராணனுக்கு அழிவு வருமென்று எள்ளத்தனையுஞ் சிந்தையில் நினையாத செல்வனவன்; இந்தப் பிரகாரந் துரோணாச்சாரியராகிய சேனாதிபதி சபதங்கூறித் திரண்ட சேனைகளுடன் புரண்டு கடற்போற் பொங்கி வரும்போது, வில்லாளர் முதலிய வல்லாளர் [illegible]தெல்லாஞ் செவிடுபடும்படியாய்ப் [illegible] கொட்டிக் கொண்டாடிக்கும் பேய்கள் [illegible] ஓசையும், அப்பேய்கள் உறிஞ்சிக் குடிக்குங் கொழுப்பாகிய உதிரக்கூழினோசையும், இரத்தநதி பெருகி மடமடவென ஓடிவீழும் ஒலியும், கவந்தங்களாகி நெருங்கிவீழும் பிணவொலியும், பேயின்பிள்ளைகள் பேசிக்கொண்டாடும் பேச்சொலியும், பந்துபோல் அந்தரத்தில் எழுந்த தலைகள்வந்து விழுகின்ற வீச்சொலியும் அடங்க, யாவருமாசையுடன் வில்வளைக்க, அவ்வில்லினிருகுதைகளும் பொருந்தும்படி நாணிபூட்டிய குணத்தொனியும், கார்க்கரத் தொனியுடன் தேர்களோடுஞ் சக்கரத்தொனியும், குதிரைகள் அனுமானிக்கின்ற ஓசையும், துதிக்கைபெற்ற தும்பிகள் வீறிடுமோசையும், படைமன்னரின் ஆரவார வதிர்ச்சியும், பாண்டவர்களின் செவியடைக்கப் பரவியன. இந்தப் பேரொலியைக் கேட்டவுடனே பொழுதிருக்கிற வரைக்கும் யுத்தஞ் செய்வதற்கு மறுபடியும் வந்தாரகளென்று பாண்டவர்கள் இருதோளும் புளகமுற்று எழுந்து பார்த்து, முந்தி விரைந்து தாங்களுந் தங்களுக்குப் படைத்துணைவந்த வீரவேந்தர்களும் வாத்தியங்களுடன் இரதமுதலிய படைகளுந் தங்களைச் சூழும்படியாய் நெருங்கி எதிர்த்து நின்றார்கள். பூர்வத்திற் காண்டவவனத்தைக் கனலுக்களித்தக் காளையாகிய காண்டீபன், கண்ணன் விடுக்குந் தேர் ஏறிச் சென்று காண்டீபத்துடன் முன்னின்றான். இந்த இருவருடைய படைகளு மெதிரெதிராகக் குறுகியிரைந்து போர்புரியுஞ் சிந்தையராய்ப் பொங்கிச் சினந்து நின்றனர்.

### தருமராஜனால் துரியோதனனுங் கர்னனுதியோடு முறிபட்டு, இவர்கட்குத் துணை வந்த சிபிராஜகுமாரன் மத்திரராஜ குமாரன் இவர்கள் வதை

அச்சமயத்தில் அரவுயர்த்த கொடிதரித்த துரியோதனராஜன் மைத்துனனிறந்த மனஸ்தாபத்தால், இனி பிராணபயம் வைக்கவேண்டியதில்லை யென்றும், ஒருகை பார்த்து இவ்விடத்தில் என்னுயிரை யொழித்து விடுகிறேனென்றும் வீரமாகிய துணிவைக்கொண்டு, விடவிடவென்று வந்து, யாவருந் துதிக்கும் முரசக்கொடி தாங்கிய தருமராசனை எதிர்த்து மதர்த்த வயவரிப்புலிபோ லதிர்ந்து மலைந்தான். இவர்களிருவரும் புரிகின்ற சண்டையில், இருட்பிரகாசத்தால் பகலிராவாவதையும், ஒளிப்பிரகாசத்தால் இரவு பகலாவதையும் பார்த்து, ஆகாயத்திலொன்றி நின்ற

அண்டரெல்லாருங் கண்டவண்ணம் உபமானஞ் சொல்லும்படியாய் திண்டிறற் சாரதியானவர்கள் குதிரைகளை முடுக்க, அக்குதிரைகள் ஒன்றின்மேலொன்று காலெடுத் தடுக்க, எதிரெதிர் அலங்கரித்த ரதங்கள் ஒன்றோடொன்று இடிக்க, அந்தரத்தி லிருக்குஞ் சுந்தர் வில்வீரான் ஒருவரையொருவர் பகைத்துச்சினந்து விற்பிடித்து நாணோசை யடிக்க, அந்த நாணியிலிருந்து நட்ஞ்செய்து புறப்படும் விபரீதமாகிய அளவற்ற அம்புகள் ஆகாயத்தை மறைக்க, அவ்வாகாயமும், உலகமும், உவர்கடலும், உயர்ந்த ஓங்கல்களும் வருந்திக் கலங்கும்படியாய்த் தர்மனந்தனனுந் துரியோதனராசனும் யுத்தம் பண்ணினார்கள். அந்தச் சமயத்தில், இரவிகுலபதியாகிய ஸ்ரீராமன் சவி குலவிய சதகண்டனுடன் செய்த சண்டை சற்றேரக்குறைய இத்தன்மையாயிருந்ததல்லவா வென்று தேவர்களெல்லோரும் வியந்து நயந்தார்கள். இப்படி போராடி வரும்பொழுது தர்மராஜனவர், அக்கினி விளையும் அனல் முகக் கணைகொண்டு அமர்புரிந்து, விருது பெற்ற அரசனுடைய அரவத்துவஜமும், அவன் கைப்பிடித்த வில்லும், ஏறிவந்த ரதமும், இரதத்திற்பூட்டிய இவுளியும், அவ்விவுளியை யோட்டும் வலவனும், குடைசிகர முதலிய யாவும் பொடிபடும்படியாகச் செய்து, கமலமுகக் கணையொன்று கொண்டு பொன் மலையைப்போன்ற அவன் புயத்திற் உதிரம் பொழிய விடுத்துப் புரட்டியபோது, துரியோதனராஜன் அயர்ந்து பூமிமேற் சாய்ந்தான்.

அவன் சாய்ந்தவுடனே, அவனைச் சேர்ந்த முனைஞர்கள் பார்த்து, ஏதேது அரசன் மாய்ந்தவன்தான்; இனி தலையெடுக்கப்போகிற தில்லை. என்று கலங்கி யுத்தபூமிவிட்டு விலங்கிப் பின்னோட்டங் கொள்ளும்படி யிருக்கின்ற சமயத்தில், துரியோதனனுடைய தம்பிமார் முதலியபேர்கள் சஞ்சலங்கொண்டு சமீபத்தில் வந்து சயித்தியோபசாரஞ் செய்தார்கள். அதனால், அவன் சிறிது களைதீர்ந்து சுவாசந் திரும்பிக் கண்விழித்து சந்தேகந்தீர தலையெடுத்துப் பார்த்தான். இதற்குள்ளே முதன்மையாகிய ராஜர்களும், அங்கதேசாதிபதியு முனைந்து, அறக்குமாரனைச் சினந்து வளைந்து, அளவிறந்த அம்புகளைப் பொழிந்து கொடி, குடை முதலியவைகளைக் களைந்தார்கள். அப்போது தர்மராஜன் தன்வில்லைக் கணகணவென் றசைத்து தூண்போற்றிரண்டக் கணைபலவெடுத்து, வீண்போகாமற் கொல்லென்று விடுத்து, சமர்நிலைத் திறமையை அமரர்கொண் டாடும்படியாய்த் தகைத்துச் சிறந்திருந்தார். அவர்தொடுத்த அஸ்திரங்களினால் மிகவுங் கஷ்டிப்பட்டு, இனி நாம் செய்வதேதென்று அஞ்சி, கர்னன்முதலிய காவலரும் எஞ்சி இளைத்து திரும்பி ஓடினார்கள். அப்படியே ஓடிவருவதைச் சிலைக்குருவான சேனாதிபதி கண்டு கோபங்கொண்டு இருவிழியுஞ் செவேலெனச் சிவந்து, திகுதிகுவென்று பொறிகளெழுந்து தீயடர்ந்து எரியும்படிக்கு வந்து தர்மராஜனுக் கெதிராகுஞ் சமயத்தில், சிப்பியென்னும் ஒருதேசராஜகுமாரனானவன், தேர்செலுத்தி நெழித்தோடி வந்து, சித்திர விசித்திரமாகிய அஸ்திரங்களால் அவர் தேகத்தை மெத்தவருத்தி குற்றமில்லாத உத்தமனென்னும் வித்தகனாகிய அத்தர்ம புத்திரன் கணையாற் செத்துப் புத்தேளாகிய புரந்தரனுலகிற்புகுந்தான். அவனிறந்துபோனதைக் கண்ட மத்திரதேயனுடைய தவத்திற் சுபுத்திரனாகப் பிறந்த மாத்திரயன் சினந்து, மலர்ப் பகழிகொண்ட மன்மதனுக்கொப்பாக வடிவிற் சிறந்த முரசக்கொடி படைத்த முதல்வனையடைந்து, முனைவாளிகளைப் பலங் கொண்டு விடுத்து, அநேகவிதமாகிய அமரைக் கொடுத்து, அரன்மகன் சேனையை அலக்கழித்துக் கெடுத்து; அந்த யுத்தபூமிக்கு இவனொருவனே சுதந்தரமானவனென்று வானவர் சொல்லும்படியாக நின்று, அவ்வானவரும் மயங்க, தானவருந் தயங்கமுடுகினான். அதை மானாபரண மன்னனாகிய பாண்டு மைந்தன் கண்டு, மூண்டெரியு முளரிக்கணை கொண்டு, பாண்டவர் சகாயனை பரிந்துவேண்டி ரதத்தை விடுத்து பாணந் தொடுத்தனர். அப்போது நீண்ட தாண்டவமாடிய சல்லியன் மைந்தன் மாண்டு விழுந்து வானுல கடைந்தான்.

### தருமராஜனோடெதிர்த்த துரோணாச்சாரியை வீமன் பாஞ்சாலராஜனோ டெதிர்த்துப் புறங்கண்டதில், துரியோதனன் சகோதரர்க ளிருவர் வதை

இவைகளை யெல்லாம் அசைவற்றுப் பார்த்துக்கொண்டிருந்த ஆசானவர் அறக்கடவுள் மைந்தனுக் கெதிரடுத்து, அநேக மந்திரங்களை யுச்சரித்து, விருக்ஷாஸ்திரம், விகங்காஸ்திரம், பெற்பாஸ்திர முதலாகிய விசிகங்களை விடுத்து, மதங்களினால் அளவிடப்

படாத யானைகள் - குதிரைகள் - தேர்கள் - உயர்ந்த விருதுக்கொடிகள் - விரிந்த சுவேதக்குடைகள் - ஆகவப்படைகள் இவை யாவும் பொடிபடும்படியாய் முடுக்கி, வருவதாயினர். அப்படி வருகின்ற துரோணாசாரியரைப் பார்த்த வல்லமை மிகுந்த வாயுகுமாரனாகிய வீமசேனன் செங்கிரணக் கதிரவன்போல் ஒரு பக்கம் புகுந்து தாக்கி, துரோணருடைய ரதகஜதுரகபதாதிகளைச் சூரிய கிரணத்தாற் காரியமில்லாமற்போகின்ற பனியைப்போற் போக்கி, ஏமாஸ்திரத்தை யெடுத்து வந்தித்து விடுத்து, சேனாபதியாகிய கிலைக்குரு சண்டைசெய்யும் போர்முனை கெட்டுப்போகும்படியாகப் பிரளய கால ஓசையைப்போற் பெருங்கூச்சலிட்டுக் கொண்டு திரியும்போது, துருபதேயனும், அவனுடைய பிள்ளைகள் திஷ்டத்துய்மன் - சிகண்டி - சுமித்திரன் - பிரியதரிசனன் - சித்திரகேது - சுகேது - துவசேனன் - உத்தமௌசா - உதாரமன் இவர் முதலியபேருஞ் சாத்தகியுஞ் சேர்ந்து, வரங்களாகப்பெற்ற உரங்களுற்ற அரங்களைப்போன்ற தங்கள் சரங்களைவிடுத்து, மரங்களைப்போன்று கணைகளை வரிசைவரிசையாய்த் தொடுக்குங் குருவுடனெதிர்த்து, குவலயங் குலுங்கப் போர்கொடுத்தார்கள். துரியோதனராஜனும், அவன் தம்பிமார்களும், வெற்றிபெற்ற வேந்தர் பதினாயிரம்பேரும் ஒன்றாகக் கூடி வென்றோமென்று வீமனை வளைத்து, அவனுடன் அமர்புரிந்து, அவனுடைய தேரும் - பாகும் - குதிரையும் - வரிமணிபூட்டிய வில்லும் அழிந்துபோகச் செய்து, அவனங்கத்திலும் உதிரம் வழியும்படியாகப் புங்கவங்களை அங்கையாற்றொடுத்தார்கள். அங்கவனும் இவர்கள் விடுத்த பாணங்களினால் அடிபட்டும், வில்முதலிய யாவும் ஒடிபட்டும், பங்கமில்லாச் சிங்கம்போற் சங்கையில்லாமல், வெறுங்கையுடன் பூமியிற்றாவிப் புகுந்து, குதிரைகளின் காலைக் குறுக்கிப்பிடித்து, குதிரைகளின்பேரில் முறுக்கி யடித்து, தேர்களைவாரி நேருக்கு நேராகிய தேர்களில் மோதி, நாயகன் முடியுஞ் சாரதிமுடியும் நாகலோகத்தை எட்டிப்பார்க்கும்படியாய் வேகமாக எடுத்தெறிந்து விடுத்து, கொம்புகளையுடைய யானைகளைப் பிடித்து அம்பரத்திற் பம்பரம்போலாட்டி, மற்ற யானைகளின்பேரில் வீசிமாட்டி, காலாள்கள் காலாள்கள்பேரில் கடகடவென விழுந்துருளும்படிக்குத் தன் காலாலெற்றி, இவ்விதமாக நால்வகையாகிய படைக்கடலை கலக்கி, மந்திரகிரியாற் பாற்கடல் கடைந்த கேசவனாகிய மாயவனைப்போற் சிங்கக்கொடி நாட்டிய அச்செய வீமன் தோள்வலித் துணைகொண்டு கலக்கி சிங்கநாதஞ்செய்து யாவரு மதிக்கும் படியாகச் செழித்திருந்தான்.

அந்தச்சமயத்தில், தேசராஜர் பணியும் வீரகண்டாமணி யணியுங் காலினையுடைய திறங்கொண்ட ராஜராஜேஸ்வர னென்னுந் துரியோதனமகாராஜனுடைய தம்பிமார் சிலர் சேர்ந்து, பலமாகப் பலவிதமான படைகளாற் போர்புரிந்து, வாயுகுமாரனாற் செந்நீர் சொரிந்து வாடி யோடிப்போனார்கள். அவர்களில் நிர்வாகசாலிகளாகிய விருதனென்பவனும் சூசி என்பவனும் புறங்கொடாமல் நிலைத்து நின்று, நெடுநேரம் வரைக்குந் தோள்வலி, வாள்வலி, தேர்வலி, போர்வலி இவைகளின் வீரத்திறங்காட்டி, தங்களுடைய சொல்லுறுதி, வில்லுறுதியாகிய மறநிலைநாட்டி, தொடுத்தகணை மழை ஓயாமல் விடுத்து, அடுத்த அவ்வீமனை அயர்வுற அடித்து அலைத்த காலையில், கலையெல்லாங்கற்ற கதாயுதவீமன் மலைபோலொத்த மற்புயமோங்கிச் சம்மார ருத்ரனைப்போல் தானொருவனாக சமர்புரிந்து சீறி, ஒருவர் போனவழி ஒருவருக்குத் தெரியாமல் ஒழிந்து போகும்படியாய் உலைவாய் மழுப்போன்ற எழு வாயுதம்போக்கி, தம்பிமா ரிருவரையும் அம்பாக்கணத்திற் றுக்கலாக்கி விட்டான். இப்படி எல்லோரும் பார்த்துக்கொண்டிருக்கக் கல்லென்று மிக புயவலிமையையுடைய வீமனாற் காந்தாரி மைந்தரிருவர் யுத்தகளத்தில் மடிந்து ககனஞ் சேர்ந்தாரென்னும் நிந்தையையும், வீமன் பூந்தேரேறிப் போராடி வென்று வராநின்ற வித்தையையும், போர்முக வீரர்கள் யாவரும் பார்த்துக் கலக்கங்கொண்டு, ஐயோ தெய்வமே! ஆத்மகோடிகளைத்தேடி அழிக்குந் தொழில்பூண்ட எமனானவன், வீமனென்னும் உருக்கொண்டு பாண்டவருக்குத் துணையாக வந்திருக்கின்றானே யொழிய, வேறல்ல; இவனுடனெதிர்த்து எவர்கள் போர் விளைப்பார்கள்? என்று மனங்குறுகி நொந்து வில் வல்லவரும் மற்றெல்லவரும் யுத்தம்மழிந்து புறந்தந்தோடினார்கள்.

## சாத்தகி தன்னுடனே திர்க்கவந்த சோமதத்தனை மூர்ச்சிக்கச்செய்து, இவனுக்குத் துணைவந்த சகுனி முதலானோரையும் புறங்கண் டோட்டுதல்

இவ்விடத்தி லிப்படியிருக்க, இன்னொரு திசையில் வாகுலீகன் மைந்தன் சோமதத்த

ஞனவன், சாத்தகி யென்னுந் தோள்வலி பெற்ற சரபத்தினெதிர் நெருங்கி தன் பிள்ளையாகிய பூரிஸ்வரனுடைய பிராணனை போக்கிவிட்டதைக் குறித்து பெருங்கோபங்கொண்டு, மனந்தாளாமல் அடாபாவி! நீயுமிந்த அர்ச்சுனனுங் கூடிக்கொண்டு என் குழந்தையை விருதாவிலே மடித்துவிட்டீர்களே; இது நற்குலத்திற் பிறந்தார் செய்யும் நடத்தையோ? ஆதிப்பகை முடிப்பதற்கு நான் சமயம் பார்த்திருக்கும்போது, நீமுந்திக்குலப்பகைமுடித்துவிட்டாயே; ஆகட்டும். அந்தப் பழிக்குப்பழி தீர்க்கும்படியாய் இப்போது வழிதேடியிருக்கிறேன். ஆதலால், வாடா வெளியிலென்றுவாய்மதத்தாற் சில்மொழி மொழிந்து, மலையாகிய வில்லை வளைத்து, நிலையாகிய நாணிதொடுத்து, கண்களில் நெருப்புப்பொறி மிகுத்து, வாயில்விட துளிதுளித்து, முகங் கறுகறுத்து, திசைபொறுத்த கஜதிசைப் பாலர்களுங் கலங்கப்புரி, ஐயங்கைப்பெறு, கடுங்கட்கணை, தொடுங்கைத்திறல் காலாகோலமாகிய ஓர் யானையரனது, வேலாவலயம்போல் மதம் பொழிந்து, கண்டீரவத்தின்மேற் சண்டைசெய்யப் போனதைப்போற் புகுந்து அமர் புரிந்தான். இவனைப் பரிந்து கண்ட சாத்தகியானவர், அடா சோமதத்தா! அப்போது உன் பிள்ளையைக் கொன்றது பொய்; இப்போது உன்னைக் கொல்லுவது மெய்; அதை யிதோ பாரென்று எழிலோங்கிய வில்லை வளைத்து மின்னல்தாங்கிய நாணிதொடுத்து, நெற்றியார்ந்த புருவ நெரித்து, பற்றியார்ந்த பொறிகண் விழித்து எட்டுதிக்குங் கெட்டழிவாகக் கட்டழல் கொளுத்தி, கிட்ட கிட்டக் கட்டுப்படாத வாளிகள் செலுத்தி, அம்பரம் பம்பரம்போலசைந்தாட உப்பர்கள் கம்பமாய் ஒழிந்தோட இருவருஞ் சினந்து, சமரினில் முனைந்து, சோமதத்த னிளைத்த குறையும், வாமசாத்தகி வலுத்தமுறையும் வழக்குவழியாய்ப் பழியைச் சுமந்த வணங்கா முடியோன் கண்டு, மாமனுகிய சகுனியையும் நால்வகைச் சேனையையுஞ் சேர்த்து, தமக்கினிமையாகிய சோமதத்தனுக்குத் துணைச்சார்பா யனுப்பிவைத்தான். அவர்களும் அவன் பக்கத்துக்குத் துணையாய்வந்து சேர்ந்தார்கள். அந்தக் காலத்திற் குறைபடாப் பேராண்மைபெற்ற சேனாதிபதியாகிய திர்ஷ்டத் துய்மனும், மட்டில்லாப் பலங்கொண்ட மன்னரநேகருஞ் சேர்ந்து க்ர்ய்ந்து வருந்தாமற் கொல்லுங் கொடுங் கணையைப் பொழியும் விற்றுங்கிய சாத்தகிக்குத் துணையானார்கள். இருதிறவருந் துணைகூடிய பேர்களுடன் ஒருவரை யொருவர் மறித்து, ஒருவரை யொருவர் பகைத்து, ஆகாயமெங்கும் வாகாகப் பொங்கு நெருப்பானது ஓயாமல் நிரம்பும்படி யுத்தம் பண்ணும்போது, காயாமலர் வண்ணனுடைய தம்பியானவர், தனக்கிசைந்த கடுங்கணைகொண்டு ஓயாமர் சாடினார். அக்காற் சாயாத முடிசாய்ந்து, அயர்ந்து, தேரில் வீழ்ந்தான் சோமதத்தனானவன்; அவன் தேகஞ்சோர்ந்து, தேரில் வீழ்ந்த உடனே யுத்தத்தின் சூழ்ச்சி தெரிந்த சாரதி ஒரு க்ஷணத்தில் தன் தேரைச் செலுத்தி, மன்னர்மன்னனிருந்த இடத்திற் கொண்டுபோய்ச் சோமதத்தனுக்குவந்த ஆபத்தைச் சொன்னான். இவ்விடத்திற் போர்கொடுத்த சகுனி முதலிய சேனைகள் அழகிய மலைபோல் வளைத்துத் தகைந்து, கைசோர்ந்து, மழைபோற் பொழியுமுதிரம் வழிந்து, மலைபோற்செழியு முடலஞ்சாய்ந்து விஷத்திராவகத்திற் றேய்த்துவைத்திருந்த படைகளும் தீர்ந்து, விருஷபகுஞ்சர வியாக்கிராதிகளினடைபோன்ற இறுமாந்த நடைகளுஞ் சோர்ந்து வில்லாகிய கார்முகங்கள் தாறுமாறாய் உல்லாசச் சீர்முகங்கள் வேறுவேறாய் முன்னெடுத்த காலைப் பின்னிழுத்துக் கொண்டோடினார்கள்.

### அஸ்வத்தாமனோ டெதிர்த்துநின்ற சாத்தகியைக் கடோற்கஜனும் அஞ்சனவர்மனுந் தடுத்துக் கடும்போர்விளைத்து அஞ்சனவர்ம னிறத்தல்

கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜனே! இவ்விதமாக யாவரும் இளைத்தோடச்செய்து, ஆர்ப்பரித்து வருகின்ற பாற்கடல் வண்ணக் கண்ணன் தம்பியை அஸ்வத்தாமன் கண்டு சினங்கொண்டு போர்ப்புலிபோற் பாய்ந்து, அடா சாத்தகி! உன் புஜபல பராக்கிரமத்தை இன்றைக்கே போக்குகின்றேன் பாரென்று நேர்புகுந்த அளவில், தோற்பதைப் படிக்காமல் மறந்த சீர்ப்பெனும் வலிமேலிடச் சிறந்த வாயுதேவனுக்குப் புத்திரனுமாகிய கடோற்கஜன் இரைந்து பரிந்து விரைந்து நெருங்கி, ஐயா சாத்தகியாரே! இந்த அஸ்வத்தாமனுடன் நானெதிர்க்கின்றேன் சற்று நேரம் வேடிக்கைப் பாரும் என்று சண்டைக்குப்போன சாத்தகியைத் தடுத்துத் தடுத்து, தனதண்டக்கூடாத ஓ அசுவத்தாமனே! இதோ உன் மண்டைக்கு ஓலைவந்தது என்றுரைத்து, நான்கு படையும் நலிந்து மெலிய, ஈங்குவந்தெதிர்த்துப் போர்புரியா நிற்கும் இடும்பன்

மருமகனை, விலக்குதற்கரிய புயவலிமைபெற்ற வீமன் திருமகனை, அளவற்ற போர்த்திறங் கண்ட மேலாகிய வீரனை, மலைக்குயரமாக வளர்ந்த புயவானை, நந்தியாவட்ட மாலை யணிந்த நராதிபனும், களங்கமில்லாத தோள்வலி திணித்தக் காளையரும், பலகாவல ரோடுங் கலந்து சமுத்திர கோஷ்டம்போ லிரைந்து வந்து சூழ்ந்தார்கள். அவர்களைக் கண்ட இடும்பி மகனானவன், அஸ்வத்தாம னுக்கு உபபலாளாய் வந்தீர்களோ? வாருங் கள்! வாருங்கள்!! என்று கடைவாயைக் கசகச வென்று மென்று மந்தரகிரியாற் பாற்கடலை மதித்த வண்மையைப்போற் பூதவேதாள பிசாச கணங்கள் கட்டிய புவனமாய் தேரைப் படபடவென்று காற்றூடிபோற் சுழற்றிப் போக்கி, யாவரையுந் தாக்கி, எல்லோரையும் நீக்கி, தன்னுடைய கோபக் கொதிப்பை மேலாக்கி, குறுக்கு நெடுக்கும் பாழாக்கி வரு வதைக் கொடிப்படைச் சூரர்கள் பார்த்து, வீரப் போரில் விலங்காத கொடித் தேரையுடையக் கெடிவீரர்களும் முதுகுகாட்டி ஓட்டத்தில் வாட்டமில்லாமல் முன்னிட்டார்கள். அஸ்வத் தாமன் மாத்திரம் தனிமையில் நின்றான்.

அந்த அஸ்வத்தாமனைப் பலம்பொருந் திய இடும்பன் மருமகனுங் கடோற்கஜனுக்கு ஒரு மகனுமாகிய அஞ்சனவர்மன், தேவர் களுடன் ராக்ஷதர்களெதிர்க்குந் தன்மைபோ லெதிர்த்து, அந்தரமும் பூமியும் அனேகந் த்ரம் நிணச்சேறும் இரத்த வெள்ளமும் ஆகும்படியாக யுத்தம் பண்ணி வாளிகள் கோடி-வடிக்கணைகோடி-வச்சிரங்கோடி-மலை கள்கோடி-மரங்கள்கோடி என்னும்படி வந்து விழ, இக்கணை அக்கணை என்பதொன்றும் தெரியாமல் இகல்புரிந்து வருங்காலையில், அஸ்வத்தாமன் மனமெரிந்துப் பகலவன் பாணத்தை பார்த்தெடுத்துப் பூசித்து பிரயோ கஞ் செய்து, அஞ்சன வர்மனுக்கு அடைக்க லஸ்தானம் அமரர் லோகமென்று அரைநொ டிப்போதில் அனுப்பி விட்டான். கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! சத்துருசங்கார மூர்த்தியாகிய சரவணபவனுக் கொப்பான அஸ்வத்தாமனுடன் கடோற்கசன் குமாரனா கிய அஞ்சனவர்மன் என்னதான் போர்புரிந்த போதிலு மவனைத்தான் வெல்லத்தக்கவனோ? சூரியனுடனே இருள் பகைத்தாற் கெலிக் குமோ? அஸ்வத்தாமனால் தன் பிள்ளை யழிந் ததைக் கண்ட மலையைப்போன்ற பராக்கிரம சாலியான கடோற்கசன் அதிக விசனகர்த்தாற் கோபங்கொண்டு, ஆகாயபரியந்த மூலாவிய மலைகளையும் மரங்களையும் அடிவேருடன் பிடு ங்கி வந்து, விசாலமான வீரபட்டங்கட்டிய யானைபோன்ற அஸ்வத்தாமன்மேல் வீசியெ றிந்து, அண்டபகிரண்டமு நடுங்க ஆர்ப்பரித் தலங்கோலங்கள் செய்ய, அப்போது சுப்ர மண்யக்கடவுளின் வெற்றிபதம்பெற்ற துரோ ணாச்சாரியார் மைந்தன் மிகுந்த துரிதக் கணை களைவிட்டு பீமசேனன்கையிற் பகாசுரன் பட்ட பாடெவ்வளவோ? அவ்வளவு பாடுபடுத்தி, ஒரு கதாயுதங்கொண் டடித்து, தேர் முதலிய பூதங்களையு மடித்து, அக்கடோற்கசனை படி மேல் வீழ்த்தினான். உடனே அரக்கன்தேறி எழுந்து, சேனாதிபதியாகிய திர்ஷ்டத் தூய்ம னுடைய தேர்மேலேறிக்கொண்டு, மாயா வல் லபத்தினால் மாறிமாறி அருஞ்சமர் புரிந்து, ரூக்ஷசமயமாய் வல்லமை நாட்டி, துரியோத னன் படைகள் திடுக்கிட்டுத் திசைகெட்டோ டும்படியாய் ஜெயங்காட்டி வருகின்றான். அப் படி அவன் ஜெயங்காட்டி வருகின்ற போர் முனைதோறும் அஸ்வத்தாமனடுத்து, கோடை யிடிபோன்ற அயமுகாஸ்திரம் தொடுத்துத் தாக்கி, கடோற்கசனும் பாண்டவ வீரர்களும் விடுத்த கணைகளையெல்லாம் நொறுக்கி அணு ப்பொடியாக்கி, காற்றில் தூற்றிப் போக்கி, தீமை சுரந்த தேகம்வாய்ந்த அரக்கரையெல் லாம் ஒரு நொடிப்பொழுதில் ஆவி பறித்து ஆகாயஞ் சேர்த்தான்.

### சாத்தகியோடு மீண்டுமெதிர்க்கவந்த சோம தத்தன் வீமனால் மூர்ச்சிக்க, அதுகண்டு வந்த வாகுலீகனு மவனாற்சாக, அடு த்துவந்த துரியோதனன் சகோத தரருள் பதின்மர் வதை

இஃதிப்படியிருக்க, முன்னே சாத்தகியு டன் சண்டைசெய்து சாய்ந்தோய்ந்த சோம தத்தன் ஆயாசந்தீர்ந்து தேறி எழுந்து தேர் மேற் சிறந்து, மிகுந்தபடைகளுடன் திரும்பி, சாத்தகி எங்கே? எங்கே? என்று அவர்மேற் சண்டைக்கு வந்தான். அப்போதவனை வீம னெதிர்த்து, நெருப்பை கக்காநின்ற கூர்முனை பொருந்திய வச்ராஸ்திரத்தை அவனுடலிற் றைத் துருவும்படி விடுத்தான். அது வந்து விழுந்து கொழுந்தெழுந்தெரிந்து துளைத்து வருத்தத்தினால், மறுபடியு மாய்ந்தவனைப் போற் குதிரைபூண்ட தேர்மேலயர்ந்து சாய்ந் தான். அந்த வீமன் விட்ட வச்சிரக்கணை

செய்த வலுமையைக்கண்டு, தரணிபராயுள்ள வேந்தரெல்லோரும் தலைசாய்ந்தார்கள். அவ்வேளையில், தந்தையாகிய வாகுலீகன் சோபித்து வீழ்ந்த சோமதத்தனென்னும் தன் மைந்தனைப் பார்த்து, முகம் வேர்த்து, மனம் தாளாமல் உடனே அடங்காக் கோபத்தோடும் தனது வில்லை வளைத்து, செந்தழற் கக்கும் கூர்முகப் பாணங்களைச் செலுத்தினான். அவன் றொடுத்த அம்புகளை யெல்லாம் துப்புபறக்கச் செய்து ஆவேசங் கொண்டுவந்த வீமசேனனானவன், அவ்வாகுலீகனுடன் அநேகநேரம் போராடி, ஓர் தேவாஸ்திரத்தை யெடுத்துப் பிரயோகஞ் செய்து அவன் சிரத்தைத் துண்டித்தான். தக்ஷணம் தலையிழந்த வாகுலீகனைக் கண்ட படைஞரெல்லாரும், அஞ்சி-எஞ்சி-அடங்கி - ஒடுங்கி - ஒதுங்கி அவ்விடத்தை விட்டு திசைகளிலகன்றார்கள். அப்படி அகன்றவர்களை அரவக்கொடிக் கதிபதியாகிய முடியரசன் தம்பிகள் கண்டு, ஐயோ! நீங்களோடுவதற்கு இது காலமல்லவே யென்று அவர்களைத் தடுத்து, சந்திரனைக் கண்ட தாமரையைப்போல் விளங்கிய அவர்கள் முகங்களைப் பார்த்து மனம் தாளாமல், தங்கள் முகங்களிற் குறுவெயர் வரும்பக் கூட்டிப்போய்த் தேன்றுளிக்கு மாலையணிந்த திண்ணிய புய வீமனை வளைத்து, மண்ணெல்லாங் கணைமாரியாக வுதிர்த்து, விண்ணெல்லாம் தலைத்தலையாய்க் குவித்து, கண்ணெல்லாம் மிகுந்த விந்தைகாணக் கதித்து, அண்ணலாகிய வீமன் அகமெலிந்து, நலிந்து போகும்படியாய் அஸ்திர கூட்டங்களை அணியணியாய் இறைத்தார்கள். அதுகாலையில், வாயுகுமாரன் தன் ஆர்ப்பினால் அவர்கள் விட்ட பாணங்களை எல்லாம் போக்கி, அரவிந்தக்கணை - அனல்பிந்துக்கணை - அருமந்தக்கணை என்பவைகளை தொடுத்து, தன்னை எதிர்த்த அத் தம்பிமாராகிய, நாகநந்தன்-உக்ரசாயி-வேகதரிசி-அத்திரி-லோசனன்-விப்பிரதெரிசி - தண்டுலசாயி-உலூகநாதன் - பீமபிந்து - மக்குவாசி - தூர்த்தன் இவர்கள் பத்துபேரும் ஆவியிழக்க அவித்தான். அப்போது மாய்ந்த அரசன் தம்பிகள் அலறிக்கொண்டு விண்டுபோனது எப்படி யிருந்ததென்றால், இதுவரையிலும் போர் விளைத்துப் பார்த்தீர்களே? இனிமேலாகிலும் போனவர்கள்போக இருந்தோர்கள் இந்தமட்டும் சண்டையை விட்டுச் சமாதானமாய்ப் போங்களென்று சொல்லிப் போகின்றவர்களை யொத்திருந்தது.

## பாண்டவரில் குந்திபோசன் மைந்தருள் இருவர் வதை

இப்படி ஒருமுனையில் வாயு புத்திரனாகிய வீமசேனன் வென்று வரும்போது, மற்றொரு பக்கத்தில் குருபுத்திரனாகிய அஸ்வத்தாமனானவன், வெகு சேனைகளைக் கொன்று யுத்தம் செய்துக்கொண் டிருந்தான். அப்போது குந்திபோஜனுடைய மைந்தர் இருவர்வந்து அவனெதிரில் எதிர்த்து, இந்தக்கணை முதலிய கொந்தழற் கணை யாவும் உந்தி, அந்தணன் குமாரனாகிய அவ் வஸ்வத்தாமன் அடித்த வடிக்கணையால் கூவி, அரை நொடியில் ஆவி போக்கடித்தார்கள். இப்பால் வந்தவர் போனவரெல்லாம் அவ்வவ்விடங்களில் விந்தையாகிய சமரம் விளைத்துவரும் வேளையில், முன்பு உந்திபூத்தோனாகிய மாயன் அந்திப்போது செய்பவேண்டுமென்று தன் செந்திகிரியை உந்தியபோது, அதற்குள் தன் கிரணமடங்கி முடங்கிய சிறுமையை எண்ணி எண்ணி, ஜகதீசனுக்கொரு கண்ணாய் இவ்வுலகில் நின்று பிரகாசிக்கின்ற நாம் ஒரு சக்கரத்தால் மறைந்தோமே என்று நாணமடைந்து, அந்த நாணமே தன்னைக் குறைச்செய்ததைப் போலும், பெருமை யடைந்தவன் சிறுமையடையில் உயிர்வைத் திருக்காமல் உடனே வொழிவது உத்தமமென்பதுபோலும், ஒளி மழுங்கி, ஓராழித்தேரோனாகிய சூரியன் அலைகளைவீசி மேற்கடலில் ஒளித்திட்டான். உடனே இயற்கைக் குணத்தால் அபகீர்த்தியான வசையை ஆவிபோல் வளர்த்து வருகின்ற துரியோதன மகாராஜனை, சூழ்ந்த இழிவாகிய பாவத்தைப் பார்க்கினும் மேலாகக் கவிந்த இருட்பொழுதை நோக்கிய விருதர் முதலிய சகலரும், பொருட்படை யடங்க இருபடையிலுங் கடலுடைபடும் தன்மைபோல் தடதடவென்று பேரிகை முழக்கினார்கள். அப்போது தீபம் போன்ற நீண்ட வாளியையுடைய துரியோதனன் வெகுண்டு, இன்றிராத்திரியும் யுத்தஞ் செய்கிறேனென்று எதிரிகளிடத்தில் தூது அனுப்பி வைத்து, சேனாதிபதி முதலிய யாவரையுஞ் சேர்த்துக்கொண்டு, சத்துருக்களாகிய அப் பாண்டவர்களுக்கு நேர் கொடுத்து நின்றான். அவனாரெனில், அண்டமுகம் அசைந்தாலும், அதனுடன் மண்டலம் விண்டதிர்ந்தாலும், சண்டை முகத்தில் தான் கொண்ட கருத்திற் சற்றேனு மசையாத் திறலாண்மை பெற்றவன் என்னும் திட தீரவீர தைரிய

பராக்கிரமமும், வணங்காமுடியுங் கொண்ட துரியோதன மகாராஜன்.

## பதினாங்காம்நாள் இராப்போர்

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! இப்பால் துரியோதன மகாராஜன் தனது தொழிலாளிகளை நோக்கி, அண்டகூடம்வரை பரந்து நிறைந்த இருள் நீங்கும்படியாய், அநேகங் கோடாகோடி சூரியப் பிரகாச வெளிச்சம்போல் ஒளியுண்டாக்கும் விளக்கினமெடுங்களென்று விரைவாக ஆக்ஞாபித்தான். அவ்வுத்தரவின்படிக்கு யானைத் தீபம் - குதிரைத்தீபம் - தேர்த்தீபம் - ஏணித்தீபம்-கம்பத்தீபம்-மலைத்தீபம்-அகண்டதீபம் - கைத்தீபம்-மணித்தீபம் - சரத்தீபம் - அநேகமுக தீபவத்திகள் - பகல்வத்திகள் - காடாவிளக்குகள்-சந்திரபிம்பச்சோதி-சூரியபிம்பச்சோதி இவை முதலிய தீபங்கள் ஏற்றினார்கள். இச்சோதியைக் கண்ட தேவர் முதலிய யாவரும் தியக்கங்கொண்டு, இத் துரியோதனன் தன் பகைவர்களுக்குச் சகாயமாய் தேர்த்தொழில் செய்யும் ஆண்டவன் பகற்காலத்தில் ராத்திரியை வரவழைத்தாரென்று சூரியன் சினந்து மறைய, அதற்குப் பதிலாக இருள்வந்த ராத்திரியைப் பகற்காலமாக்கும் தன்மைப்போல் ஆக்கினான் பார்த்தீர்களா? என்று பற்பல விந்தையாய்ப் பேசிக்கொண்டிருந்தார்கள். இதல்லாமலும், இப்பூமிக்காதாரமாய் பொருந்தி விரிந்த படத்துடன் பாதலத்திலிருக்கும் ஆதிசேடன் முதலிய ஆடரவங்களெல்லாம்பொங்கி எழுந்து, சிரோமணிக் குவைகளால் அநேக விதமாகிய தீபவெளிச்சங்களை செய்ததென்று வீரப்பிரதாப வேந்தரும், மாந்தருஞ் சொல்லிக்கொண்டார்கள். இப்படி சொல்லிக்கொள்ளும்படியாய் தீபஜாலங்கள் ஏற்படுத்திய நாகக்கொடிபடைத்த நராதிபனுடைய நினைவை,நாரணனும் பாண்டவரும் நன்றாயறிவித்துக்கொண்டு, தாங்களும் இராச்சண்டைக்குப் பின்னிடாமல் முன்னிட்டவர்களாய், யுத்தபூமி முழுவதுஞ் சொல்லுதற்கரிதாகிய யானைப்பந்தம்-குதிரைப்பந்தம் - தேர்ப்பந்தம் - ஏணிப்பந்த முதலிய இவைகளும், ஒருமுகம்-பதுமுகம்-சதமுகம்-சகஸ்திரமுகம் என்று சொல்லும்படியான பலமுகங்கள் வாய்ந்த தீவத்திகளும், நீல்வத்திகளும், பகல்வத்திகளும் பிரகாசிக்கும்படியாய்ச் செய்துக்கொண்டு, மேள-தாள-காள-காகள எக்காளங்களுடன், சங்கு-தாரை-பேரி-பூரி-சிங்கநாத ஆரபாரம் எங்கு முழங்கும்படிக் கெழுந்து, சேனா சைனியங்கள் யாவும் வெம்பிக்குதித்து மகிழ, தம்பிமார் முதலிய யாவரும் துதித்துக் களிக்க, தர்மராஜன் சண்டைமுகத்திற் கெதிர்நின்றார்.

அச்சமயத்தில், எண்ணத்தின் வண்ணம் இசையைபெறும் விஜயன்மேல் அசைவற்ற அசேயனாகிய கர்னன் முன்வந்து பந்திபந்தியாய்ப் பலகணைதொடுத்துப் போர்செய்தான். படைத்திறம்பெற்ற விருதனென்னும் கிருதவன்மனானவன், முரசக்கொடி தரித்த தர்மராஜனோடு முடுகினான். தனுர்வேத சம்பன்னனாகிய துரோணாச்சாரியர் பழைய வஞ்சகப் பகைவனாகிய திர்ஷ்டத்துய்மனுடன் அன்னிநாள் யுத்தஞ்செய்ய இரண்டிலொன்று கண்டு உயிர் விடுகிறேனென்று சொல்லிய துரியோதனனென்னும் உலக துரந்தரனாகிய உரககேது, பீமனோடெதிர்த்து மிகுபோர் விளைத்தான். சல்லியராஜன் மிகு சல்லியத்துடன் சதானீகனை வளைத்துக்கொண்டு சமர்தந்தான். வலிகொண்ட புலிபோன்ற கடோற்கஜனுடன் முனிமைந்தனாகிய அஸ்வத்தாமன் தினந் தமர் புரிந்தான். தரணி பாலராகிய தார்வேந்தர்கள் தங்கள் தங்களுக்குரிய பகைவருடன் சண்டை செய்தார்கள். பந்த ஜோதிகளெல்லாம் பகலில் எழுந்து ஒளிவிடுஞ் சூரியனைப் பார்க்கிலும் ஏழுபங் கதிகமாய் எங்கும் பிரகாசிக்கவும், வாத்தியங்களெல்லாம் முழங்கவும், தேருடன்தேரும், யானையுடன் யானையும், குதிரையுடன் குதிரையும், காலாளுடன் காலாளும், வில்லுடன் வில்லும், வேலுடன் வேலுங்கொண்டு பதைத்துப் போர்புரிந்தார்கள். ஒருவர்பேரில் ஒருவர்விட்ட கணைகளானது, உடலினுருவி வேகமடங்காமல் ஓடுகின்ற ஓசையும், வில்லைவளைப்பதினா லுண்டாகிய அதிர்ச்சியும், அவ்வில்லிற் கட்டிய மணிகள் சப்திக்கும் அமலையும், வாளாயுதங்களைத் துவளவீசும் ஆர்வமும், வேலாயுதம் எறிந்துவரும் ஆரவாரமும், சூலாயுதஞ் சுழன்றுவரும் சும்மையும், சக்கரம்போற் சுழலும் படைவீரருடைய சத்தமும், ரதச்சக்கரங்களினொதமும், குதிரைகளின் கோஷ்டமும், யானைகளின் ஆர்ப்பும், வீரகேசரிகளின் வீரகண்டைத் தொனியும், உபகரணமமைந்த வாத்தியங்களின் ஓசையும், இருதிறப் படைஞரும் எதிர்த்து விளைத்திடும் போர்த்தொனியும், அசுரரும் அமரருஞ்

செய்த அமரைப் பார்க்கிலும் ஆயிரமடங்கு அதிகமாக முழங்கி, அம் முழக்கமானது எட்டுத்திக்கும் நிறைந்து முட்டிக்கொண்டு மூடியதுகள்.

### அருச்சுனனுற் கர்னனும், தருமராஜனுற் கிருதவன்மனு முறிபட்டோடுதல்

இவ்விதமாக அவரவர்கள் புஜபலத்துக்குத் தக்கபடி போர்புரிந்து வருங்காலையில், அர்ச்சுனனுங் கர்னனும் அமோகமான யுத்தங்கள் விளைத்தார்கள். அப்போது காலகேய நிவாதகவசரென்னு மசுரரைகடந்து வெற்றி பெற்ற அர்ச்சுனன் கர்னனைநோக்கிச் சொல்லுகின்றுன். ஆ! ஆ! கர்ண! நீ பிறப்பதற்குக் காரணமாயிருந்த சூரியன் மலைவாயிற் போய் விட்டான். நான் காண்டவவன தகனஞ் செய்தபோது, எனக்கு சுவேத வர்ம்புரவியும், தேரும், கொடியும், வில்லும், அட்சய தூணியுங் கொடுத்த அக்கினிதேவன் அமோகரித்து, அநேகஞ் சோதியாய் அமர்ந்திருக்கின்றுன். ஆகையால் உனக்கு பலமொடுங்கிப் போயது; எனக்கும் பலம் விசேஷிக்க ஆயது என்று அங்கதேசாதிபனுடைய வல்லமை குறையும்படியாகப் பேசி, தனது பொன்னிற மின்னலைத் துன்னிய செந்நிறத் தீச்சிகை மன்னிய சிலீமுகங்களாற் கர்னன்பற்றிய வில்லும்-நாணியும்-கணையும் - தேரும் - சாரதியும்-குதிரையும்-அற்றுவீழச் செய்து, அக்கர்னன் புறங்கொடுத்து வலுவேகத்துடன் ஓடும்படிக்கு மாட்டினுன். இஃதிப்படியிருக்க, தருமராஜனுங் கிருதவன்மனுந் தளர்வில்லாமற் சண்டைசெய்து, ஒப்பற்ற முரசக்கொடியினுன் தன் திருத்தோள் வலிமையினுலும், நீண்ட வில்லிலிருந்து தூண்டிய நெரிமுகக் கணைகளின் நிர்வாக நேர்ப்பினுலும், கால்முதற் கழுத்தளவும் உருவக்கொய்து, மேல்முகத்து திரவெள்ளம் பெருகச்செய்து புரட்டிய போது, கிருதவன்மனென்று கீர்த்திப் பிரதாபமாய் வந்த கேடில்லான் கெட்டு, குதிரை-சாரதி-இரதம் - வில் - பாணம் இவை முதலிய யாவுங் கைவிட்டு, முதனுட்போரிற் சக்ரவர்த்தித் திருமகனேடெதிர்த்த தசக்கிரீவனை யொத்து, சண்டைசெய்த நிலத்தில் எதிர் நிற்கத் தைரியமில்லாமல், அர்ச்சுனனுற் சூரியகுமாரனுன கர்னன் எந்தக்கதியானுனே? அவனுக்கொப்பாய் அந்தக்கதியாயினுன். விந்தையாகிய வெகுளிமேற் கொண்டுவந்த அக்கிருதவன்மன், அவன் முதுகுகாட்டி ஓடுவதை அரவெழுதிய உரககேதனன் கண்டு, சரசரவென்று தேரைச்செலுத்திச் சென்று, சேனுதிபதியாகிய ஆசாரிபருக் கெதிர்போய் நின்று, ஐயா! அப் பக்கத்தில் அர்ச்சுனனுடனெதிர்த்த கர்னனுமிளைத்தான். இப் பக்கத்தில் தர்மராஜனுடன் பகைத்த கிருதவன்மனும் இதோ கிலேசத்துடன் ஓடுகிறுன். அதைச்சற்று நீரே பாருமென்று அத்துரியோதனன் சொல்லினன்.

### துரோணுசாரியர் சுயோதனன் வேண்டுகோளால் தர்மராசனே டெதிர்த்து அபசேயமடைதல்

அவ்வார்த்தையை ஆசாரியர் கேட்டு, அரசன் சொல்லியடங்குவதற்கு முன்னே தானெதிர்த்து நின்ற திர்ஷ்டத்துய்மனை விடுத்துவந்து தருமராஜனை யெதிர்த்தனர். அப்போது மறங்குலாவிய தங்கள் மலைச்சிலையை இருவரும் வளைத்து, வாளிகள் பலவிடுத்து, இடம்வலஞ் சுழன்று, எதிரெதிமலைந்து ஒருவரையொருவர் புகழ்ந்து, உடனே இருவரு மிகழ்ந்து, தேர்களுங்குதிரைகளும் சிதைந்து, தங்களுக்குடன்வருஞ் சேனைகளு மழிந்து, உகாந்தகால மிதுவென்று சொல்லும்படி ஒரு பக்கத்தில் யுத்தம்பண்ணி இருவருங் கையிளைத்து மறுபடியுந் தேறினர்கள். அப்போது துரோணுச்சாரியர் மேலிட்டு, தனது வில்லில் இந்திராஸ்திரம்-சந்திராஸ்திரம் - சூரியாஸ்திரம்- அக்கினியாஸ்திரம் - வாயுவாஸ்திரம்-நிருதியாஸ்திரம்-வருணுஸ்திரம் - ஏமாஸ்திரம்-குபேராஸ்திரம் - ஈசனுஸ்திரம் - கந்தருவாஸ்திரம் - யக்ஷாஸ்திரம்-வசுவாஸ்திரம் - குருவாஸ்திரம் இவைமுதலிய தேவாஸ்திரங்களைத் தொடுத்து, குபுகுபுவென்னும் புகையும் திகுதிகுவென்னுஞ் சிகையும், செகமெலாம் நிரம்பப் பிரயோகஞ்செய்தார். அவருடன்கூட வந்தவர்களுங் கோடிகோடியாய் கூரம்புகளை இறைத்தார்கள். அக்காற் குவளைமலர் மாலையணிந்த தருமராஜனுனவர், அவர்கள் விடுத்த சரங்களையெல்லாம் தன்பேரிற் படவொட்டாமற் செய்துகொண்டு, செந்தழற் கதுவும்படிக்கு எவ்வெக்கணைகளை எவரெவர்கள் தொட்டார்களோ? அக்கணைகளை அவரவர்கள் பேரிலுந்தி யழிகவென்று நின்றனர். அப்படிநின்ற சத்தியவானுடைய மேன்மையைத் துரோணுச்சாரியர் எடுத்து, ஆசாரவுபசார பூஜாவிதிமுடித்து, அத்தரும பூபதிக்கு மேலாகத் தொடுத்தார். அந்தப் பிர

மாஸ்திரமானது, நான்முகத்துடன் நாதமொலித்து, வடவாக்கினியைப் பக்கத்துணையாகக்கொண்டு, கானெலாங்கொளுத்தி வானெலாந்தகித்து வருவதாயது, அப்படி வருவதைக் கருணையும் பொறுமையுங்கண்ட தருமராஜனென்னும் புண்ணியன்கண்டு, அக்கமலவூர்திக்கணைக்கிணையாகிய சிநேந்திராஸ்திரம் எடுத்து சிந்தித்து வந்தித்து, தூபதீபமேற்றி வாழ்த்திப்போற்றி, எதிர்வரு மிரண்ய கர்ப்பன் கணையைத் துண்டமெட்டாகக் கண்டு நாஸ்தியாக்குகவென்று யாவருந் துக்கித்து மதிக்கச் சூரங்காட்டி விடுத்து, பின்னுஞ் சிற்சில அஸ்திரங்களை செலுத்திநின்றார். அச்சிநேந்திராஸ்திரத்தாற் சிருஷ்டி கர்த்தாவாகிய வேதகாருண்யனளித்த பிர்மாஸ்திரம் விபூதிபோலழிந்துபோயது. அதைத் தனுர்வேத பாரகராகிய விற்சூருகண்டு மகராஜ சிரேஷ்டனாகிய மெய்விரதனுடனே பின்னுஞ் சில வல்லமையான வாளிகளைக்கொண்டமராடி, தர்மமூர்த்தியை எதினாலும் வெல்லாமல், ஒருவரோடுஞ் சொல்லாமல், முதுகிட்டோடுபவரைப் பார்க்கிலும் நாமே திரும்பிப் போவது நலமென்று போனார்.

## துரியோதனன் வீமசேனனால் முறிபட்டோடி வந்து கர்னனிடத்தில் முறையிட, அவன் பிரதாபத்தைக் கூறித் தேற்றுதல்

இப்பால் வீமசேனனுடனெதிர்த்துப் போர்விளைக்கப்போன வேந்தர் வேந்தனாகிய துரியோதனன் பேரிழந்து, சீரிழந்து, தேர் அழிந்து, தாரொழிந்து, வில்முறிந்து, கணைதறிந்து, கவசமறுந்து, வீரபட்டம் துறந்து, ஸ்மரமும்வரமுங் குறைந்து, சரீரம் யாவும் உதிரக்காற் பொழிந்து, வருந்திவாடி புறங்கொடுத்தோடி, திறங்கொண்ட தன் தோழனாகிய கர்னனைத்தேடி, அவனைக் கண்டு அவனெதிர்நின்று அதிக ஆசையுடன் தொடுத்த பூச்சரபம்போற் சோர்வில்லாமற் சொல்லத் தொடங்கினான். அஃதியாதெனில், ஓ அங்கதேசத் தரசே! கேளும்; அதிக ஜெயமுழக்கத்துடன் சஞ்சரிக்கின்ற பலம்பொருந்திய பாண்டவர்கள் நாலுபக்கத்திலும் ஏவும்படியாகிய அதிக உச்சாகம்பெற்ற பாண பலத்தினால், நமது படைகளெல்லாம் வெலுவற்று அடங்கிப் போய்விட்டன. ஆனதால், ஓ மலையென்று நிலையாகச் சொல்லுகின்ற புஜவினோதமுடைய வள்ளலே! என்னைக் காக்கவேண்டுமென்று நீர் கொஞ்சம் வலிமைகொண்டு மனவுறுதியோடு நின்று, போர்புரியும் இடங்கள்தோறும் உம் விற்றிறஞ் சொற்றிறம் வீரத்திற முதலிய போர்த்திற வல்லபத்தை முனையாக நாட்ட வேண்டும். அதற்குத் தருணம் இதுதான்; வேறு சமயமுங் காலமும் இல்லை. ஆகையினால், என் முகத்தைப் பார்த்து கோபித்து நின்று, சத்துருக்களைக் கொன்று விண்ணிற்குடியாக்குக என்று வணங்காமுடி வேந்தனுரைக்கவும், அம்மொழியைச் சாந்தமாய்க் கேட்ட பூங்கமல நண்பன் மகனாகிய புண்ணியன் ஆய்ந்து சொல்லுகின்றான். ஓ நல்ல குலக்கொழுந்தாகிய செல்வத் துரியோதனனென்னும் வல்லவனே கேளும்; வின்னலஞ் சொன்னலங்கொண்டு என்னுடனெதிர்ப்பவரும், தப்பி எதிர்த்துவிட்டால் உயிரொழியாதவரும், உயிர் பிழைத்தாற் புறங்காட்டி ஓடாத பேருமுண்டோ? உமதிஷ்டப்படிக்குப் பகைவர் நஷ்டப்படும்படியாய்ப் போராடவும் வல்லேன்; அம்மட்டில் விட்டுவிடாமல், பலம்பொருந்திய பாண்டவர்களுடைய பிராணனையும் வாங்கி, இப்பஞ்சாசதகோடி இராச்சியங்களும் உமக்குப் பட்டங்கட்டவும் வல்லேன். ஆகையால், நான் ஒருவனே உமக்கு மெத்தவும் நல்லவன்; நானிருக்கும்போது நீர் யாதொரு சஞ்சலமுங் கொள்ள வேண்டியதில்லை என்று சொல்லினன் கர்னனானவன்.

## தன்னைத்தான் புகழ்ந்துக்கொண்ட கர்னனைக் கிருபாச்சாரி பழிக்க, அவனவரைக் கடிதல்

அப்போது யாவரும் துதிக்கும்படியாய் அவர்கள் பக்கத்திலிருந்த கிருபாச்சாரியர் கர்னன் கூறிய வார்த்தைக்கு மனந்தாளாமல் சில வாக்கியஞ் சொல்லுகிறார். ஓ சூதகுமாரனே! நீ பலவாறாகிய சிங்காரப்பேச்சு பேசுதற்கு மெத்த வல்லவனேயல்லது, சத்துருக்களைச் செயித்து சாதிப்பதற்கு வல்லவனல்ல. அடா தம்பி! வெட்சிமாலை தரித்த வீஷ்மராகிய சாந்தரும்; சில வீராதிவீர காந்தரும், ஆயுதங் கைக்கொண்ட மாந்தரும், இத்துரியோதன வேந்தரும், இவருடைய தம்பிமார்களும், கூட்டமாகிய புத்திர பௌத்திராளும், துரோணரும், அஸ்வத்தாமனும், நானும், நீயும், முன்பு விராடபுரத்தெல்லையை மிதித்தபோது, இந்த நரனானவன் ஒரு தேருக்குமேல் வேறு தேருமில்லாமல், தன் பக்கம் ஒரு படைகளுந் துணையாய் வராமல், ஒரு வில்லுடன் வந்து யுத்தம்புரிந்து புடைத்த நாளையில், முல்லை மாலையணிந்த ஆயர்களையும்,

பசுக் கூட்டங்களையுங் கைவிட்டு, முதுகு காட்டி யோடிய முதன்மைத் திறத்தையோ? இப்போது நீ இவ்விடத்திற் சொல்லியது என்று கிருபர் சொல்லவும், உடனே அங்க பூபதியானவன், அவரை மென்று தின்று விடத்தக்க சினங்கொண்டவனாய், கண்பொறி கலங்க கனைத்து, இதழ்மடித்து, சிவ்வென் சினத்தையுமிஞ்சி பெருமூச்சுவிட்டு, அடடா! ஓ கிருபனே! எனக்கீடானவனோ அந்தநரன்? இம்மொழி இன்னொருவன் சொல்லி இருப்பானாகில், இந்நேரம் அவனுடைய நாக்கை இரண்டாய்த் துண்டித்துவிடுவேன். நீ புராதனனாகியும், பிராமணனாகியு மிருந்ததினால் இந்தப்பிழை பொறுத்தேன். இன்னொருக்கால் இப்பேர்ப்பட்ட தப்புவார்த்தை இசைப்பாயாகில், ஓ வெற்றிபெற்ற வேதியனே! பழைய விற்குருவென்றும் பார்க்கமாட்டேன்; இன்னும் எவர்கள் தடுத்தாலுங் கேட்கமாட்டேன்; ஒருவிசைக்கு பத்துவிசையாகச் சொன்னேன்; என்று பின்னுஞ் சொல்லுகின்றான். ஓ கெடி வீரத்தன்மை யுணராத கிருபனே! என்னுடைய விற்றிரமையைத் தேவாதிதேவர்களும் புகழ்வார்கள். இவ்வுலகத்தில் என்னைக் குறித்து உள்ளங்களிக்காதபேர் எவர்கள்? அப்படியிருக்க, உன்மனம் பாண்டவர்பக்ஷத்தி லிருந்தபடியால் என்னைக் குறைவாகச்சொன்னாய். நீ சொல்லவேண்டிய பெருமைதான்; நான் கேட்கவேண்டிய சிறுமைதான் என்று தனது மனத்தின் படபடப்படங்காமல் முகம்சிவந்து நின்று கர்னன் சொல்லவும், இவ்வசனத்தை அண்டையிற் பொருமையாய் கேட்டுக்கொண்டிருந்த பரிசுத்தம்பெற்ற சிலைக்குருவின் பிரதாப மைந்தனாகிய அஸ்வத்தாமன் மனந்தாளாமல் சொல்லுகின்றான்.

### கிருபாச்சாரியரோடு வாதித்த கர்னனை அஸ்வத்தாமா எதிர்த்துக்கொள்ள, அதுகண்ட துரியோதனன் அவர்களை உபசரித்தடககுதல்

அடா சூதனே! அடா தன்னைவிட வல்லவர் ஒருவருமில்லையென்று தன்னைத் தான் புகழ்ந்து மெச்சிக்கொள்ளுஞ் சவுங்கலே! அடா அற்பசந்தோஷி! உன்னிடத்தில் வீரமிருக்குமாகில் உன்மட்டி லிருக்கவேண்டுமேயல்லாமல், எவராகிலும் உள்ளத்தைச் சொன்னால் அவர்கள் நாக்கைத் துண்டிப்பேன் என்று புறப்பட்ட வல்லமை உனக்கெங்கிருந்துண்டாயது? என்ன பலத்தைக் கொண்டு சொன்னாய்? அடா இளந்தையே! யோசிக்குமிடத்திற் சவ்வியசாசியை எவ்வளவேணும் நீ வெல்ல வல்லவனென்று பத்துதரஞ் சொல்லியிருக்கிறேன். இப்பவுங் கோடியனந்தம் அந்த விஜயனை நீ அசைக்கமாட்டாயென்று இதோ உன் ருசுவிற் சொன்னேன். அடா! இசைகெட்டவனே! அடா! பசையற்றவனே! அடா! வசைபெற்றவனே! நீ இப்போது சொன்னசொல் வழுவாமல் என்னுடைய நாக்கைத் துண்டித்துவிட்டு மறுகாரியம் பார் என்று கண்டித்துப் பேசி, அக்கர்னனுக்கு அண்டையிற் சென்று நின்றான். அப்படி நின்றவனை காந்தாரியின் ம்கனாகிய காவலன் கண்டு, அதிக வேகமாய்ப்போய் இருவருக்கு மத்தியிலிருந்து, அவர்கள் முகத்தை நோக்கி, ஓ எனது அருமை மித்திரர்களே! சகல கலைக்கியானம், ஆகமம், புராணசாரம், ராஜதருமம், வீரதருமம், நன்னெறி, தந்நீதி, தநுர்வேதம் இது முதலிய சாஸ்திரங்களெல்லாம் பார்த்து, ஓர்ந்து தேர்ந்திருப்பவராகிய நீங்கள் ஒருவருக்கொருவர் உள்ளங் கொதித்துப் பகைத்து இஷ்டமாயுள்ள எந்தனுக்காகப் பாடுபடுவதை விட்டு, துஷ்டத்தனமாகப் பேசி எதிர்க்கத் தக்கதோ? நீங்களொருவரில் ஒருவர் மாறுபட்ட கொள்கையால் யுத்தமுனையை வென்று எனக்குக் கொடுக்கவேண்டுமென் றிருந்த அரசும் ஆண்மையும் போய்விட்டது. ஓ என்னிஷ்டர்களே! நாமெல்லோருங்கூடி இக்குருக்ஷேத்திரம் வந்தது, நம்மை மதிக்காமல் துதிக்காமற் பகைத்து நம்முடன் எதிர்த்த சத்துருக்களை வென்று கொய்யவா? அல்லது நாமொருவர்க் கொருவர் கோபமேற்கொண்டு சண்டை செய்யவா? இழிவாக ஒருவரையொருவர் வையவா? நாம் என்ன காரியத்திற்கு வந்தோம்? சொல்லுங்கள். ஓ எனக்குரியவராகிய பெரியோர்களே! நானோ? இத் துரோணாச்சாரியரும், கிருபாச்சாரியரும் மத்திரபுரி ராஜனாகிய சல்லியனும், மித்திரனுக்குரிய புத்திரனாகிய கர்னனும், நீரும், என்னுயிருக்குயிராகி என்னுடன் பொருந்திய பஞ்சபூதமென்று கருதி, கொஞ்சமேனும் நெஞ்சில் வித்யாசமில்லாமல் உண்மையாய் உறுதியுடன் ஆசைகொண்டிருக்கின்றேன். அப்படியிருக்க, போர்க்களத்தில் நீங்களொருவருக் கொருவர் பற்பல பேதமாகிய வார்த்தைகளைப் பேசிக்கொள்வது நீதியோ! இது என்னை விறுதாவில் விடுக்கிற சேதியோ? ஐய்யயோ!! ஓ மகா பெருமையுடையவர்களே

இன்றிரவு விடிவதற்குள்ளே நீங்களெல்லோருஞ்சேர்ந்து, எப்படியாகிலும் ஒப்பற்ற வில்லாளியாகிய அர்ச்சுனன் பிராணனை ஒரு விநாடிப்பொழுதில் வாங்கி, உத்தமக்ஷேமாபரணத்தை என்காதிற் போடுங்கள். ஓ என்னுரியவர்களே என்று மகா உபசாரத்தோடும் வேண்டிக்கொண்டான் துரியோதனராஜன்.

அருச்சுனனுக்கு கர்னன் அனந்தமுறை புறந்தரக்கண்டு முனையவெழுஞ் சுயோதனனைக் கிருபர் சம்மதப்படி அஸ்வத்தாமன் தடுத்து அமருக்கெழல்

இவ்வாறு உபசாரமாகச் சொல்லிய புவனசக்ரேஸ்வரனுடைய மொழியைக்கேட்ட ரவிகுமாரனாகிய கர்னன், இதோ உமதிஷ்டப்படி முடிக்கிறேன் பயப்படாதீரென்று தேரேறிச் சென்று, இந்திரகுமாரனாகிய காண்டீபன் பேரிலெதிர்த்தான். இவனைக் கண்ட அர்ச்சுனன் அதிக சந்தோஷங்கொண்டு ஆழிமால் வரைபோன்ற காண்டீபத்தை இறுக்கி, அழகிய நாணிமுறுக்கி, அம்பரக்கணைகளை நெருக்கி, அங்கர் பூபதியை உருக்கி, அம்புலிக் குடையும், அம்பருச்சிலையும், ஆணிற்பொற்றேரும், சரவேகக்குதிரையும், சாரதிதலையும், உச்சிதச் சிகரமும், கச்சையங் கொடியும் ஒன்றொழியாமற் போக்கி, வீரபட்டத்தையுங் கவசத்தையும் பொடிப்பொடியாய் அழியத்தாக்கிப் போர்புரிந்தான். அப்போது அளவற்ற சௌரியங்களோடும் வந்த அங்கர் கோமான், புறங்கொடுத்தோடி, மறுபடியும்நாடி, மேலும் மேலும் வோடி, மீளவுங்கூடி, மெய்குலைந்து வாடி, இப்படி அனேகவிசை அழிந்தோடிய அங்கதேசனனவன், அதி உக்ரவேலாயுதத்தை எடுத்து ஆஜாழி முதலிய மாலாழிகளும் அலையக்குலைய அர்ச்சுனன்பேரி லெறிந்தான். அவ்வேல்வரும் விந்தையைக் கண்டு, மிகவும் ஆச்சரியப்பட்டு, அவ்வேலை மால்தரும் வடிக்கணையால் தூளாகமடித்து, கால்தரும் இடியாஸ்திரத்தால் தேரையுமொடித்து, மணிக்கவசமார்பையும் துளைத்து, வனசக்கணையாற் போர்விளைத்துத் திருவும்போது, வள்ளலாகிய கர்னன் வெள்ளமாகிய சொர்னமேனி கசங்கிப் புறமிட்டோடினன். அவ்வண்மையை வணங்காமுடியையும் வூளரவக்கொடியையுமுடைய மன்னவன் கண்டு, மனஸ்தாபங்கொண்டு, ஐயோ! பாவம் நமக்குரிய தோழன் எத்தனையோதரம் பாடுபட்டும் நிறக்காமற் போகுதே, என்று நெடுமூச்செறிந்து, இவரைப்போல் அக்கரையாய் பாடுபடத் தக்கவர் ஆருமில்லை யென்றறிந்து, இனி நாம் சும்மாயிருக்கலாகாது. இந்த அர்ச்சுனனுடன் எதிர்த்துப் போர்புரிந்து, கூடியவரையிலும் பார்த்துப் பிராணனை விட்டுவிடுவோம் என்று மனத்துணிவு கொண்டவனும் மண்டலாகிர்தியாக வில்லைவளைத்து, குண்டலாகிர்தியாக தேரைச்செலுத்தி திரும்பினன்.

அப்போது வேதக்கடலாகிய கிருபரானவர் நிதானித்து, இந்தத் துரியோதனனுடைய கருத்து இவ்விதமென் றுணர்ந்து, அவனுடைய ஏழ்மையைக் குறித்து அதிக இரக்கமுங் கிருபையு முடையவராய்த் தர்ம சகாயனென்னும் தன் மருமகனாகிய அஸ்வத்தாமனை நோக்கிச் சொல்லலுற்றார். ஓ என்னருமை மருமகனே! சமுத்திர ஜலத்தை மீறவொட்டாம லடுக்கி மேம்பாடாக வீறிப்பிரகாசிக்கும் வடவாமுகாக்கினி பேரில், விட்டிற்பூச்சிவந்து விழுகின்ற மேன்மைபோல், நன்மார்க்கமில்லா மனத்தினனாகிய துரியோதனனென்னும் துன்மார்க்க நராதிபன், அர்ச்சுனனோடெதிர்த்து அமர்செய்ய யெத்தனித்தான். நாமெல்லோருஞ் சமீபத்திலிருந்தும் அவன் போய்ப் போர்புரியப் பார்த்திருப்பது அழகல்லவே; ஆதலால், யுத்தஞ் செய்யப் போகாநின்ற துரியோதனனைத் தர்மமாக நாம் தடுத்து, விஜயவீர கண்டீரவமாகிய சவ்யசாசியை யடுத்துச் சண்டை பண்ணுவோம் வாரும் என்று கிருபாச்சாரியார் சொல்லவே, விபூதி தூளிதத்தினாற் பிரகாசித்து விளங்கு மந்திவண்ணத் திருமேனியி னழகுவாய்ந்த அரனடியை நோக்கித் தவமிருந்து அவரருட்டரிசனங் கண்டடல்கொண்ட யஸ்வத்தாமன் அதற்குச் சம்மதியாகி, மாமா! தேவரீர் சொல்லிய புத்தி நல்ல காரியந்தான்; என்று சொல்லி வல்லமையுடன் ரதத்தைச் செலுத்திப்போய், தனக்கு முன்னுதாகச் சென்ற மன்னர் மன்னனாகிய தார்வேந்தன் முகத்தைப் பார்த்து, அரசனே! நாங்கள் எல்லோரும் இருக்க, நீர் அந்த விஜயன்பேரிற் போர் புரியப் போகவேண்டுமோ? நீர் அவ்வளவு பிரயாசை யெடுத்துக்கொள்ள வேண்டியதில்லை. அந்த நரனை யடுத்து சொல்லுதற்கரிதாகிய யுத்தத்திறத்தை நாங்கள் விளைத்து முடிக்குகின்றோம். எங்களுக்குச் சொல்ல வேண்டிய காரியங்களைச் சொல்லி நீர் படைக்குப் பின்னாகநின்று வேடிக்கைப்பாருமென்று

புரவித்தாமன் புகன்று, துரியோதனன் தேருக்குமுன்னே தன் தேரைச்செலுத்திச் சென்றகாலையில், பின்னாகநின்ற மன்னர் மன்னன் அவனுக்குச் சில மிருதுவான இனிமைசொற்களைச் சொல்லுகின்றான்.

ஐயா அஸ்வத்தாமனே! உன் தந்தையாகிய துரோணாச்சாரியரை என் தந்தையாகிய திருதராஷ்டிரனைப் பார்க்கிலும் எண்மடங்காயெண்ணி நம்பினேன். அந்த மகாராஜன் அர்ச்சுனன்பேரிற் பூரணமாகிய பக்ஷத்தை வைத்திருக்கிறபடியால், நீயுந் தந்தைகொண்டிருக்கும் தாக்ஷண்யத்தை பார்ப்பையே யல்லது, என் சிந்தைகொண்டிருக்கும் தீனத்தைக் கண்டு தனஞ்செயன்பேரிற் கோபஞ் சற்றும் பிறக்க மாட்டாதே, இப்பேச்சை நானுறுதியாய் சொல்லமாட்டுவேன். அதென்னத்தினாலென்றால், விஜயசங்கிர மமீளியாகிய நீ கோபாவீரங்கொண்டு யுத்தமுனையிற் பிரவேசித்து, வில்லைப்பிடித்து நாணியடித்து விசிகந் தொடுத்து நிற்பாயாகில், என் சத்துருக்களாகிய பாண்டவர்கள் பழையபடி வனவாசம் நுழையவேண்டும். அல்லது மண்ணுலகம் விட்டு விண்ணுலகடையவேண்டும். ஓ புண்ணியவானே! உன் எதிர்நின்று யுத்தஞ் செய்யும் பெருமைவாய்ந்த பேர்களுமுளரோ? மேகவாகனனாகிய இந்திரகுமாரனை வெல்வதுங் கொல்வதும் உனக்கொரு கணக்கோ? ஓ விந்தை தங்கு ஜெயப்பிரதாப வித்தகனே! சந்திரவிம்ப குடிலதரனருளிய வரமுள்ள நின்னை இம்மூவுலகத்துள்ளு மறியாதவருளரோ? ஐயனே! ஏதோ சிலகாரியத்தால் என் மனதை வாதித்துக்கொண்டிருந்த நினைவை வஞ்சனையில்லாமற் சொன்னேன். இப்பவும் நீங்களே தஞ்சமென்று நம்பினேன். என்று நெஞ்சிரக்கமாய்ச் சஞ்சலத்துடன் நிலையும் செயமுப்பெறாத நிருபனானவன் உரைத்தான்.

இவ்வசனத்தைக் கேட்ட அஸ்வத்தாமன் இந்துகுலத் தோன்றலைப் பார்த்து, அரசனே! என் தந்தையின்பேரில் மெத்தவும் நிந்தனை நினைத்துச் சொன்னீர். அது உமக்குத் தகாது. பெரியோர்களும் வீரர்களுமாய் உள்ளபேர்களின் செய்கை எப்படியென்றால், பாகமும், அன்பும், பக்ஷமும், மனத்திற்கொண்டிருந்த போதிலும், பகை நேரிட்டு அமர்புரியும் போர்க்களத்தில் முன் வைத்திருந்த நேசபாச பக்ஷ விசுவாச முதலியவைகளும் லக்ஷியம்வைக்காமற் சரியாகிய சண்டை செய்து எதிரியைக் கொன்று ஜெயம் பெற்றாலும் பெறுவார்கள். ஒருவேளை அபஜெயமுற்றிறந்தாலு மிறப்பர். எப்பேர்ப்பட்ட பகை நேரிட்டிருந்தபோதிலும், எதிரிகள் பூரணமாக நிறைந்த பலமுடையவரா யிருப்பார்களாகில், அவைகளையும் புகழ்ந்து மகிழ்ந்து கொண்டாடுவார்கள். அப்படி புகழ்ந்தபோதிலுங் காரியமே கண்ணாயிருப்பார்கள். விற்றிறமும் போர்த்திறமும் தெரிந்த நாங்கள் வேதியராகையாலும், வேள்வி நாயகன் மைந்தனென்னும் விசயனுடைய வில் வித்தையும், வீரசிந்தையையுங் கூடியவரையிலும் தெரிந்திருக்கின்ற விவேகமுடைய பேர்களாதலாலும், அவனுடனெதிர்த்த எல்லாருயிரும் நாசமடையுமென்று என் தந்தையானவர் அவன் கற்றிருக்கும் வித்தைத் திறத்தைக்கண்டு, பெரிய கிருபைகொண்டு, மகிநயமடைந்து, மலர்விழி சிவந்து, மகிழ்ந்து மேல்மேலாகச் சொல்லியிருப்பார். ஒருவருடைய கல்வியின் அருமை தெரிந்து பெருமைப்படுத்திச் சொல்வது, நல்ல நூல்களை யெல்லாம் ஆராய்ந்து வல்லவர்க்கேற்றச் செய்கையுற்றிருக்கும் பரிசுத்தவான்களினது நற்கடமையாக்கும். ஓ விக்கிரம வேந்தனே? அப்படி அவர்கள்பேரிற் பக்ஷமாய்ச் சொன்னதென்று நீர் நினைக்காதீர். கல்வித்திறத்தைப் புகழ்வதேயன்றி, கற்றவனைப் புகழ்வதல்ல. நல்லது அதிருக்கட்டும்; நானிப்போது விரைந்துசென்று எனக்குள்ள வல்லபமெல்லாங் காட்டுவதன்றி, கடன்வாங்கிப் போர்புரிந்தாலுஞ் சாகாமலிருக்குந் தலையெழுத்துடையவர்கள் சாவார்களோ? நமது சாமர்த்தியத்தால் அவர்களைக் கொல்லக்கூடுமோ? இதற்குமுன்னே உமது கையிலானவரைக்கும் பார்த்துவிட்ட காரியந்தானே? இது உமது தெளிவாகிய சிந்தையில் தோன்றவில்லையோ? ஆகிலும், இதோ நான் போர்புரியப் போகின்றேன். இந்த யுத்தமுனையையுமது கண்ணாற்கண்டு மனமாறத் தெரிந்துக் கொள்ளுங் காவலனே யென்று புகன்றனன்.

இவ்வாறு அஸ்வத்தாமன் பலவித முறையாலுந் துறையாலுந் துரியோதனனுடைய மனதைத்தேற்றி, தனது சாரதியை எச்சரித்தான். அந்தச்சாரதியுந் தேரைக் கர கர புறபற விறுவிறு கிறுகிறுவென்று முந்தி ரதத்தைச் செலுத்த, அஸ்வத்தாமன் அழகிய பொன்மயமமர்ந்த வில்லை வளைத்து, நாணொலிகாட்டி, திக்குகளெட்டுந் திடீரென

குமுங்க, உகாந்தகாலத் திடியென வோங்கி, கடல்சுவறக் குமுறுங் கதிமேவிய அடல் தாவிய புகையாஸ்திரங்களைப் புங்காநு புங்கமாகப் பொழிந்து, சேமத்தில் வைத்திருந்த செம்பொன்னைப் போன்ற அம்புயன்கணை, ஆதிசேஷன்கணை, அரிபரந்தாமன்கணை முதலிய பற்பல அஸ்திரங்களைக் கார்கால மழை சொரிதலைப்போல்மூட்டி, சந்திரகுலேச இந்திரபோக சுந்தரவதன நந்தியாவட்ட மாலையை அணிந்த விந்தகிரிப்புயனாகிய துரியோதன நராதிபனும், அவனுடனிருந்த வீரபூபாலரும் ஆச்சரியங்கொண்டு மதிக்கும்படியாய்ப் பாண்டவ படைகளையெல்லாம் பஞ்சாய்ப் பறந்து எஞ்சிச் சிதைந்து, இறக்கும்படிக்கு போர்செய்தான். அப்போது பலபல யானைகள் விலவிலவென்று உதைத்துக் கொண்டு ஓய்ந்தழியவும், கலகலவென்று சிறந்த வேகமுந்தீரமுங்கொண்டுயர்ந்த புரவிகள் தலையறுந்து சிதைந்து இறந்து மடிந்தொழியவும், சாரதியுந்துந் தேர்வரிசைகளெல்லாம் மாருதிசிந்திய மலைபோற்றகர்ந்து வீழவும், திரண்டுவந்த பதாதியர் யாவரும் உருண்டு மாய்ந்து ஒழிந்தனர். பல தேசத்தரசர்களும் வந்துவந்து, அஸ்வத்தாமனுடனெதிர்த்து முதிர்ந்து அமர்தொடுத்து ஆற்றமாட்டாது அழிந்துபோனார்கள். போனவர் போக சிலர் பதுங்கி, நீர் நிறைந்த ஏரிக்கரையுடைந்து சாரிப்போகின்றசலம்போல் வேசாறிப்போனார்கள். இவ்விதமாக ஒப்பற்ற அஸ்வத்தாமனுடைய கொடுங்கணைகளானது, எவ்வெவ்விடங்களிலும் நுழைந்து நுழைந்து, எல்லாவுயிர்களையும் பயிர்களைக் களைவது போலக் களைந்துகளைந்து பறிக்கின்ற தன்மையை, அவ்விடத்தில் அமர்புரிந்து கொண்டிருந்த பாண்டவராகிய ஐவரும், ஐவருக்குரிய அரசரும், அவ்வாசரைச்சேர்ந்த சேனைகளுங் கண்டு ஆச்சரியங்கொண்டார்கள்.

### அஸ்வத்தாமன் திர்ஷ்டத்தூய்மனைக்களைக்க விட்டு நகுலசகாதேவரையு நலித்தோட்டி அருச்சுனனோடு அரும்போர் விளைத்தல்

அந்தச் சமயத்தில், சேனாநாயகனாகியத் துஷ்டத்தூய்மன் பார்த்துத் தன்னுடைய தேரைத் திருப்பி, உகாந்த காலாக்கினியிலும் உயர்ந்த உரக்கணை முதலிய திரிபுரதகனக் கணைக்கொப்பாகிய புங்கவங்களை ஒன்றின் மேலொன்றாய் எங்கும் நெருங்கச் செலுத்தி, மதம்பொருந்திய ஒரு யானையைக் கொல்ல வேண்டுமென்று வந்த நகந்திருந்திய கொடும்புலியைப்போல் வந்தெதிர்த்து, அஸ்வத்தாமனுடன் கைகலந்து, மண்ணில் நிறைந்த மன்னுயிரெல்லாமு மயங்க, விண்ணினு நிறைந்த விண்ணவரெல்லாருந் தியங்க, அஷ்டகிரிகளுஞ் சிதறிக் குலுங்க, அஷ்டகஜங்களுங் கதறிக்கலங்க, புஷ்டியாய் நெய் கலந்த நெருப்பைப்போல் நெஞ்சில் கோபமூண்டெறிய நெடுமூச்செறிந்து, நீண்ட மழுவைத்தாங்கிய கரதூஷண திரிசிரரென்னு மூவரும், மூதண்டமுங்குலுங்க கோதண்டமேந்திய கோசலை மகனோடு பஞ்சவடி தீரத்திற் பகைத்து சண்டைசெய்த தன்மையைப் போல, இருவரும் வெகுநேரஞ் சமர்புரிந்து வரும்போது, தான் செய்யும் போர்முகத்துக்கெதிராகிய நேர்மூத மில்லையென்னும் பூரிப்பும் இறுமாப்பு முடைய அஸ்வத்தாமன், திர்ஷ்டத்தூய்மனைச் சினந்து பார்த்து, தீப்பறக்க உருட்டி விழித்து வேர்த்து, அடா பாண்டவச் சேனாதிபதியாகிய பழிகாரா! எங்கள் குலப்பகை நிமிஷத்தில் முடியும்படியா யுங்கள் குலத்தை யொழித்து, நினக்கு முன்னமே உன்னுயிரையும் நீக்கிவிடுகிறேன் பாரடாவென்று பற்கடித்து, விற்பிடித்துப் பல வாறாகிய போர்த்திர வீரங்களைப் பேசினான். அந்த மொழியை அக்கினியிற் பிறந்த திர்ஷ்டத்தூய்மன் கேட்டு, ஆ! ஆ! அஸ்வத்தாமனே! இதோ உறுதியாய்ச் சொல்லுகிறேன். இந்தக்ஷணத்தில் என் கைக்கணையால் உன்னை விண்ணிலேற்றி, அப்பால் உன்னப்பனாகிய துரோணனை ஆவிமாற்றுகிறேன் பாரென்று காரிடிபோற் கலங்கச் சில வார்த்தைகள் இசைத்தான்.

அவ்வேளையில், துரோணரென்னு முனி மைந்தனுக்கும், பாஞ்சாலனுடைய தனி மைந்தனுக்கும், உற்றதுணையாய் உதவியாகும்படிக்கு அநேகம் வெற்றி வீராள்வந்து, யுத்தமுனையிற் கலந்து சற்றுநேரமலைந்து, இவர்களிருவருங் கடுகடுத்துத் தொடுக்குந் தொடைகளால், படபடத்து அடிக்குமடிகளால் அவர்களெல்லோரும் படிமிசை நிற்கமாட்டாமல், முடிசாய்ந்து முகமாறி துடிதுடித்து ஓடிப்போனார்கள். அப்பாற் கலீரென்றசையும் வீரகண்டாமணி கட்டிய அழகிய அஸ்வத்தாமனும், திருஷ்டத்தூய்மனும், ஒருவரையொருவர் கிட்டிக்குறித்து, நீண்ட வில்லை வளைத்து,

நாணிமாட்டித் தெரித்து, கனைக்கும்படியான
ஓசையுடன் பலங்கொண்ட தேவாஸ்திரங்களை
கலங்கல்மாகக் கொண்டுத் தானியங்களை சொரி
வதைப்போற் சொரிந்தபோது, அந்த கணைத்
திறங்களால் இருதிறப்படைகளுநங் கால்மாடு
தலைமாடாகக் கவிழ்ந்து வீழ்ந்து அழிந்தார்
கள். இவ்விதமாக இளைக்காமற் போர்புரிந்த
யுத்தமுகத்தில், செவ்வியோனாகிய அஸ்வத்தா
மன் முனைந்து, திவ்வியாஸ்திரங்களை யுகை
ந்து, திஷ்டத்துய்மன் ஏறிய தேரும், குதி
ரைகளும், சாரதியும், எடுத்தகொடியும், பிடி
த்தவில்லும் தடுத்தறியும்படியாகக் கெடுத்து
அகற்றினான். அதனால், வெற்றிபெற்ற வீரா
னுக்கு கோடாலியாகிய ஐவர் சேனாநாயகன்,
அங்கந் தைக்கும் புங்கவங்களால் எங்குங்கா
யம் பட்டு மலையருவியைப்போல் உதிரம்
பெருகி யோடாநின்ற உடலோடோடி வாடி,
சற்றுநேரம் வேறு யோசனை கூடி, உடனே
வருத்தமொழிந்து, விடமாகிய கணைகளைச்
செலுத்தித் திடமாகிய வரிவிற்கொண்டு, இட
மாகிய வேறு தேரேறிச்சென்று, அஸ்வத்தா
மனுக் கெதிரே நின்று, அவன் தேரிற்கட்டிய
சிங்கக்கொடியைப் பங்கப்படுத்தினான்.

அப்போது அஸ்வத்தாமன் அகங்கரி
த்து அச்சத்தை விளைக்கும் அரியாஸ்திரம்,
அனலாஸ்திர முதலியவைகளை மேலும் மே
லும் விடுத்து, அந்தத் திருஷ்டத்துய்மனு
டைய வில்லைத் துண்டித்து, வெற்றிமாலை
யைக் கருக்கி, வீரபட்டத்தை யுருக்கி, கலினம்
பூட்டிய குதிரையையும், கதலி நாட்டிய தேரி
னையும், அந்தத் தேரையோட்டிய சாரதியை
யும், பக்கத்துணையாகச் சார்ந்த பார்த்திபரை
யுஞ் சதைத்துச் சிதைத்து உயிரழிந்து, சங்
கர சுயம்புவானவர், அங்கஜராஜனாகிய சம்ப
ராரியை முனிந்து, தகுந்தகாலத்திற் பொறி
யெழவிழித்த நெற்றிக் கண்ணுக்கொப்பாகிய
புகையும் அனலும் விரிந்த புங்கவங்களைப்
பூசித்து நேசித்து பாஞ்சால புத்திரனுடைய
அங்க முழுவதையும் அனலாய்க் கொளுத்தி
னான். அவ்வெப்பத்தால் மேனியெல்லாம்,
வெந்து-நொந்து - சாய்ந்து - வீழ்ந்த திண்
ணியனான ஐவர் படை நாயகனைச் சேமத்தேர்
வைத்திருந்த சாரதிகளை வேறுதேரி லேற்றி,
யுத்தமுனைவிட்டு அப்பாற் கொண்டுபோய்
உபசரித்தார்கள். அத் திர்ஷ்டத்துய்மனானை
வன் சவுக்கியமடைந்து மறுபடியுஞ் சண்
டைக்கு வருமுன்னே, மதமோகமு மதிவேக
முங்கொண்டு நெற்றிப்பட்ட மணிந்துவந்த
யானைகள்-குதிரைகள்-ரதங்கள்-கால்பலங்கள்
இவைமுதலிய வீரர்களை யெல்லாஞ் சேர்த்துக்
கொண்டு, அந்திவானம்போல ரத்தசிவப்
பேறிய யுத்தபூமிக்கு நகுல சகாதேவர்கள்
வந்து அஸ்வத்தாமனை எதிர்த்து அமர்தந்
தார்கள். அவர்களுடைய திறத்தைக்கண்ட
ஆசாரிய குமாரனாகிய அஸ்வத்தாமன், கவ்வ
மாகியக் கணைகளை யெறிந்து அவர்கள்
தொடுத்த செவ்வம்புகளைத் தடுத்ததுமல்லா
மல், சூரியனைப் பகைத்து உலகத்தை மறைந்
தெழுந்து பனியைச் சூரியகிரண வெப்பங்
கெடுக்குந் தன்மைபோல, அருணோதய வஸ்
திரங்களை யுந்தி, யானை - சேனை - பரிவாரங்
களைக் கொந்தி, தேர் - குதிரை - சாரதி-வில்
முதலியவற்றைச் சிந்தி, அவர்களிருவரும்
பிந்திக் காலோட்டங் கொள்ளும்படியாய்
முந்தி முனைந்து முடுக்கிவிட்டான்.

இப்பால், மரகத நிறங்கொண்ட மாயன்
செலுத்துந் தேரிற் பொருந்திய வாசவன்
மைந்தனிடம்போய், அவனைச் சிறிதும் மதி
யாது எதிர்த்தான். அப்போது தனஞ்செய
னும் அவனோடெதிர்க்கவந்த அவ் வஸ்வத்
தாமனுஞ் சமசூகத் தனுவளைத்து ஷ்டங்கா
ரஞ்செய்து சரவருஷம் வருஷித்தான். இவ்
வஸ்வத்தாமன் அடைந்திருக்கும் மமதையை
யும், இவர்களிருவரும் செய்யும் சண்டையின்
சமதையையும், தேவர் முதலிய யாவருங்கண்டு
பயங்கொண்டு, சிரோமாணிக்கத்தையுஞ் சீவ
ரத்தினத்தையுமுடைய தாகத்தைக் கொடி
யாய்ப்படைத்த நராதிபனுக்குச் சந்தேகமில்லா
மல் இவ்வுலகம் பட்டாபிஷேக மாய்விடு
மென்று கெட்டியாய்ச் சொல்லி, ஓரடி மேலே
பெயர்த்தொதுங்கிப் போகும்படியாய் யுன்னி
னார்கள். வாடைக்காற்றுடன்வடவாமுகாக்கினி
யுஞ் சேர்ந்து, புகைந்து, பொரிந்து, சொரி
ந்து உகாந்தகால பேரிடியைப்போல் முழங்கா
நின்ற மூர்த்தண்ய முவன்மையாகிய வேதனை
விளக்கு மஸ்திரங்களை யவ்விருவருஞ் செலு
த்துகின்ற கரவேகத்தையும், வச்சிரக்கட்டுக
ளுடன் மயிற்பீலி இறகுகள்பொருந்திய வடிக்
கணைகள் குறித்து விடுகின்ற நெருப்பிற்கு
ஒப்பாகிய சரவேகத்தையும், வலமு மிடமுஞ்
சுழலுகின்ற மகா ரதவேகத்தையுங் கண்ணு
ரக் கண்டு சகிக்கமாட்டாமல், விண்ணுடர் முத
லிய மன்னுயிரெல்லாம் மனமிளைத்து வாதை
யடைந்து வருந்தி வாடவும், பலம்பொருந்

திய இராஜராஜர்களெல்லாருஞ் சிந்தை கலங்கித் தியங்கித் திடுக்கிட் டகலவும், இவர்களைப் பெற்ற தந்தைகளின் பட்டம் இவர்களுக்கே தகுமென்று யாவரு மியம்பவும், இவரிருவரும் ஒருவரையொருவர் விடாமல் அமர் புரிந்தார். அவ்வேளையில், ஞாலமுழுமைக்கும் நரபதியாகிய துரியோதனராஜனும், துரோணாச்சாரியாகிய மெய்க்குருவும், இவர்கள் விளைக்குஞ் சண்டையைக் கண்டு, அற்புதம் அற்புதமென்று ஆச்சரியங்கொண்டு, அகங்காரகமாக அர்ச்சுனனுக்கு அருகிற் போனார்கள். அப்போது சர்வசம்மாரகால ருத்திரனுக் கொப்பாகிய அஸ்வத்தாமன், அர்ச்சுனனுடைய யுத்தமுனையைவிட்டு அப்பாற் புரிகின்றபோர் முனையிற் புகுந்து அலங்கோலங் கண்டான்.

### கௌரவரில் சோமதத்தன்-பூரி இவர்கள் வதை

அவ் அஸ்வத்தாமன் விஜயனை விட்டு அகன்று போகவே, அழகிய மேகம்போன்ற தேகங்கொண்ட அர்ச்சுனனானவன், பரிசுத்தமாகிய ஆசாரியரைக் கண்டு, அவர் பக்கத்தில் தன் தேரை நடத்தி, அவருடன் பகைத்து, அழலெழச் சிரித்து, ஆசானிடத்திற் கற்ற வித்தையை அப்போதேபோக்கடித்துக்கொள்ளாமல் எப்போதும் விர்த்தியாக்கி இசை பெற நிலையிட்டு வைத்திருக்கும் விதத்தை, அவருக் கறிவிப்பான்போல் தளர்ச்சியில்லாமல் நினைத்தற் கரிதாகிய பெருமையுடன் அமரியற்றினான். இவ்விதமாக இருவரும் இவ்விடத்திற் சண்டை புரிந்துக்கொண் டிருக்கும்வேளையில், வாகுலீகராச குமாரன் சோமதத்தனானவன், பொன் மலையினும் பெரிய மலைபோன்ற தேரைச் செலுத்தி, சாமர்த்தியமுள்ள தரணிபால ரெல்லோரும் தன்னைச் சூழ்ந்து வரும்படியாய்ச் சண்டைக் கெதிர்த்து, தழற்பொறி கொதித்துத் தழைத்துச் சிதறும்படிக்கு மன்னி, மேலாகிய வெற்றிபெற்ற சாத்தகியை வளைத்து அமர் விளைத்தான். அப்போது மாலினுக்கிளைய சாத்தகியானவர், வேலினுங் கொடிய கடுங்கணை விடுத்து, அவனேறிவந்த பவளக்காற் றேரும், அத் தேரிற் பூட்டிய நான்கு குதிரையையும், பக்குவசாரதியும், வெள்ளிக்கொடியும், வீரபட்டங்கட்டிய வில்லும் பாழாகும்படி விலக்கி, அவனுடன் மேவிவந்த படைஞரையுங் கலக்கி, அயிந்திராஸ்திரப் படையைத் தொடுத்து அச் சோமதத்த னுயிரைக் கொடுத்துவிட்டார். இதற்குள்ளே வாயுகுமாரனாகிய வீமன் மேலிட்டு, தேயுக்கணைகளைத் தீட்டிவிடுத்து, துரியோதனனுடைய சேனைக்கடலையெல்லாங் கலக்கி வரும்போது, அரசனுடைய சேனைவெள்ளமானது, சண்முகக் கடவுள் தொட்ட சத்துரு சங்கார வடிவேலினாற் சமுத்திரம் பட்டபா டெப்படியோ அப்பாடு பட்டது.

அதுகாலையிற் பூரீசன் தம்பியாகிய பூரியென்று பெயர்கொண்ட பூபதி யொருவன் பெருந் தேர் செலுத்திவந்து, போர் புரிந்த சாத்தகியின் பேரிலெதிர்த்து, விண்டலமும், மண்டலமும், எண்டிசையும், அண்டபடாததிர்த்துபோகும்படி சண்டை விளைத்து, சாத்தகி தொடுத்த சங்கிராமக் கணையால் தன் னுயிரொழிந்தான். இப்பாற் பூலோக புரந்தரனாகிய தருமராஜனுடன் போர்புரிந்து, பொங்குகடற்போ லெங்கு நெருங்கிக் கங்குல் பகல் தோன்றாமல் நிறைந்துநின்ற பூபாலரெல்லாம் புயவலி யிழந்து, தேரழிந்து, வில் முதலிய வீரபட்டமும் ஒழிந்து, உதிரம் வழிந்து, உடலங் கிழிந்து உயிரிழந் தோடினார்கள். இதல்லாமல், சதானீக னென்பவன் ஆதிகாலத்தில், ஆதிசேடனுக்கும் வாயுதேவனுக்கும் க்ஷாத்திரநேரிட்டு மகமேருவின் முடியைப் படலென நொடியிலொடித்த வாயுவின் தன்மைபோன்ற வலிமை கொண்டு வில்லை வளைத்து, பலம்பொருந்திய சண்டை செய்து, படைமன்னர்களுடைய மண்டை பிளக்கும்படியாய்ப் பல கணைக்கூட்டங்களைத் தொடுத்து வந்தான். அக் கணைகளுக்கு மத்திர ராஜனாகிய சல்லியன் சகிக்கமாட்டாமல், மனமடிந்து உயிர்வாடி, அறிவழிந்து உடலாடி, இதுவரையிலுந் தனது குலத்துக் கில்லாத பழியைத் தேடி, இருட்டில் வழியை நாடி ஓடினான். இஃதிப்படியிருக்க, அஸ்வத்தாமன் அல்லோல கல்லோலஞ் செய்துவராநின்ற அவதியினால், ஐவர் படைக்கலம் படுகின்ற அலங்கோலத்தை இடும்பி குமாரனாகிய பலம்பெற்ற கடோற்கஜன் கண்டு, சன்னல் பின்னலாகிய மின்னலையுடைய வன்ன வேலையெடுத்து அன்னோன் மார்புக்கு நேராக எறிந்தான். அந்த வேலாயுதம் வந்து அஸ்வத்தாமனுடைய மார்பில் தாக்கியபோது, பெருந் தூக்கங் கொண்டவரைப்போற் பேச்சில்லாமல் மூச்சில்லாமல் தேர்மேல் சாய்ந்துவிட்டான். அப்படி மாய்ந்தவனைப்போல் வீழ்ந்த அஸ்வத்தாமனை ஆய்ந்துணர்ந்த

சார்தியானவன், உடனே நெடுந்தூரங் கொண்டுபோய் உபசரித்துத் தேற்றிக்கொண் டிருந்தான்.

### கர்னனுக்கும் சகாதேவனுக்கும் யுத்தம்

இப்பால், செங்கதிர்க்கினிய குமாரனுகிய அங்கதேசாதிபனுடன் சங்கையில்லாமற் சகா தேவன் எதிர்த்து, உரம்பெற்ற பிரபலபாணங் களைத் தொடுத்து, இருதிறப் படைகளிலுள்ள வீராதி வீரர்களெல்லாஞ் சபாஷென்று மெச் சிக் களிக்கும்படியாக அளவற்ற யுத்தஞ் செய்து, ஸ்திரமாகிய பலம்பெற்ற வில்லுந் தேரும் வீணுய் முறியவிட்டு, பின்பு மண்மேற் குதித்து மண்டியிட்டு, சாணைபிடித்துத் தயி லந் தோய்த்தெடுத்த கத்தி கேடயத்தைக் கைக்கொண்டு, காற்றூடிபோற் கரகரவென்று திரிந்து, மீண்டுஞ் சுழன்றெரிந்து பரிந்து வந்து, சற்று குந்தியிருந்து பந்துபோல் எழுந்து, கர்னனுடைய தேரின்பேரில் போய்த் தாவினுன். அதைக்கண்ட கர்னனுன வன், கமலாஸ்திரத்தை எடுத்து, சகாதேவன் கைப்பற்றிய கத்தி கேடயத்தை துண்டுதுண் டாக்கினுன். அப்போது சகாதேவன் விண்ணி லெழுந்து மண்ணிற் பாய்ந்து, கண் கறுத்து கடுங்கோபங்கொண்டு ஓர் கதாயுதத்தை வீசி யெறிந்தான். அந்தக் கதாயுதம் வந்த காத் திரத்தைக் கர்னன்கண்டு, காலாக்கினிக் கணை யைத் தொடுத்துப் பொடியாயுதிர்த்தான். உடனே சகாதேவன் கனைத்து வேலாயு தத்தை எடுத்து வேண்டிய பூசை கொடுத்து விடுத்தான். அவ்வேலாயுதமானது, நாலாவித கோலாகலமாய் மேலாக எரிந்து வருவதை மிகுகொடையாளன் பார்த்து, சூலாயுதத்தை மந்திரித்துவிடுத்து,அவ்வேலாயுதத்தை இரு பிளவாக வெட்டியெறிந்தான். அவ்வேலாயு தம் அழிந்துபோனதைச் சகாதேவன் கண்டு வெகுண்டு, மாலாகிய சக்கிராயுதத்தை விறுவி றென்று சுழற்றி விடுத்தான். அச் சக்கிராயுத மானது உக்ரமான தழலைச்சொரிந்து, மின்ன லும் இடியும் இளைக்க வேகங்கொண்டு வரு வதைக் கர்னன் கண்டு கலீரென நகைத்து, அது பின்னமாகும்படியாய் பிறைக்கணை யொன்று தொடுத்து, அன்னவனைப்பார்த்து, அடா சகாதேவா! இன்னும் பற்பல விதமாகிய ஆயுதங்களை எத்தனை வகையாய் எறிந்தாலும் அத்தனையையுந் தூளாகும்படியா யழிக்கி றேன். உன் கையாலானதைப் பாரென்று கூரம்புகளைக் கும்புகும்பாய் விடுத்து, சகா தேவனுடைய அங்கத்தைப் பங்கப்படுத்தி னுன். அப்போது தங்கமிழந்த தரித்திரரைப் போற் சகாதேவனுனவன் சங்கடப்பட்டு அலைந்து ஆடிப்பாடி யடங்கி மெலிந்து வாடி வருந்தி நின்றுன்.

இப்படியாக ஒடுங்கிநின்ற சகாதேவனுக் குச் சமீபத்திற் கர்னனுனவன், தன்னுடைய வில்நாணியை மாட்டி முறுக்கி, இவனை வெட்டவேணுமென்று கிட்டி யிழுத்தபோது, தன்தாயாகிய குந்திதேவியாருக்கு முன்கொடுத் திருக்கும் வரத்தை நினைத்து அவனைக் கொல் லாமல் விடுத்து, அடா சகாதேவா! நீ இதற் குள் தனிமையிற் சென்று சண்டை செய்யும் படியாகிய கொண்டைக் காரனுனையோ? அதற் கானுலும் உனக்கு தகுந்தவர்களுடன் யுத்தம் பண்ணவேணுமே யல்லது, மலையுடன் மண் ணுங்கட்டி யெதிர்ப்பதுபோலும், மகாராஜ னுட னேழை மடிசூதாடுவது போலும் என் னுடனெதிர்த்தீர், இனி யில்லாத தலையறுந்த ஆட்டமெல்லாம் ஆடினையே; இதுவரையி லும் நீ என்ன பலன் கண்டாய், ஆகிலும்? இப்போது மெத்த சுளுவாக உன்னை நான் கொல்லலாமல்லவா? அப்படியே உன்னைக் கொன்றுலும், அதனுல் எனக்கொரு லாப மும் இல்லை. உன்னைக் கொல்லாமல் விட்டு விடுவதினுல் எனக்கொரு லாபமும் இல்லை. நீ அகப்பட்டதைப்போல் அர்ச்சுனன் அகப் படுவானுகில், ஆ! ஆ! அவனை இன்னேரமே கொன்று கசகசவென்று மென்றுதின்று ஏப்பமிடுவேன் என்று, தன் நாவானது தடிப் பேறும்படியாய் துடிப்பமாகிய பலபலவார் த்தைகளைச்சொல்லி இகழ்ந்து, ஓசகாதேவா! அதோயிருக்கின்றுன் அர்ச்சுனனுனவனவனி டத்திற்போய்ச் சேர்ந்து, நீபட்ட தொல்லையும் நான் உன்னை உயிருடன் விட்ட சொல்லையுஞ் சொல்லுபோ வென்று சொல்லி விடுத்தான். அவனுமதே போக்காய்த் திரும்பிப்போய் விட்டான்.

### இராப்போரிற் கர்னன் பராக்கிரமங்கண்டஞ் சிய தருமன் கருத்துணர்ந்தெழுந்த பற்குனனை கிருஷ்ணதேவ ரடக்குதல்

இப்பாற் பாண்டவச் சேனுதிபதியாகிய திர்ஷ்டத்தூய்மனும், அவனுடன் சேர்ந்து யுத்தஞ் செய்துவந்த அநேகமாகிய ராஜரா ஜர்களுங்கூடி தெய்வவாளிகள் தொடுத்து, அர்ச்சுனன்பேரில் எதிர்த்துவந்த துரோணுச்

சாரியை மாட்டி ஓடவிட் டடித்தார்கள். அச் சமயத்தி லவருடன் சென்ற யானைகளும், தேவர்களும், குதிரைகளும், காலாள்களும், எதிரணியாகத் துணிந்துநின்ற படைவீரர் முதலாகிய மன்னர்களும் பாண்டவப் படைகளுக்குடைந்து, புறமுதுகிட்டுத் துக்கத்திலாழ்ந்து, துரியோதனன் நிற்கின்ற பக்கத்தை நாடி ஓடிவந்து வீழ்ந்தார்கள். அந்தவேளையிற் சகாதேவனை அர்ச்சுனனிடத்திற் கனுப்பிய கர்னனுனவன், துரியோதன மகாராஜனிடத்திற்கு வந்து, தேர்விட்டிழிந்து சில வார்த்தைகளைப் பேசிக்கொண் டிருந்தான். அக்காற் பயந்தோடி வருகின்ற படைகளைக் கண்டு பயப்படாதீர்களென்று கையமர்த்தி, இருவிழியிலும் புலிங்கசாலப்பொறி யெழும்பும்படியாயுருட்டி விழித்து, போர்புரியும் வெஞ்சின மிகுந்தெழ சிரித்து, புரிமுறுக்கு வின்னுணியைப் புயமுற விழுத்து, அபயமிட் டோடி வந்த சேனைகளை அணிபெறநிறுத்தி, தன்பிள்ளையும், துரியோதன னுடைய தம்பிமாரும், துணையாகிய மன்னவரும், படைபெயர்ந்து வரும்படியாய் எதிரிகளினுயிரை ஒருக்ஷணத்தில் வாங்கி வருகிறேனென்று மீண்டுந் தேரேறிமுனை முகத்திற் புகுந்து, வெப்பமேற் கொண்ட வில்லைத்தாங்கி, ஒப்புவமையில்லாத தன்னுள்ளத்திற் கொப்பாகுந் துரியோதனனைப் பார்த்துச் சொல்லுகிறான். ஓ புஜபலபராக்கிரம பூபதியே! ஒன்று பலவாகவிளையும் விதையைப்போன்ற பாணங்களைக் கொண்டு உமது சத்துருக்கள் பேரில் இன்று கோபித்தெதிர்த்தேன். இன்னமொரு விஞடிப்போதில் இச்சத்துருக்களெல்லாம் அமுத நிறைந்துள்ள அகன்ற அந்தரத்திற்போக செய்கின்ற என்னுடைய திரர்ணித்துணிவை நீர்பாருமென்று சொன்னான்.

இப்படியாகச் சொல்லிய கர்னனுடைய வார்த்தையைக்கேட்ட துரியோதன மகாராசனும், பலவான்களாகிய அநேக மன்னவரும் கர்னராஜனுடன் கலந்துகொண்டுவர கோடைகாலத்துக்காளமேக கர்ச்சிதம்போல் மேள வாத்தியங்கள் முழங்க, விருதுபெற்ற வீரரௌல்லோரும் வெற்றிச்சங்கூத, காகளம்-பூரி-தாரை-வீரசின்னம் - பேரி - ஆரமணி இவை முதலிய அளவிறந்த வாத்தியங்கள் முழங்க, கணக்கில்லாத விருதுகளெடுக்க, தகுதியையுடைய தாஷ்டீகாள்கண்டு இனிமேல் யுத்தமென்னமோ வென்று ஏங்கித்தளர தன் வில்லைக் கையிலேந்தி நாணிபூட்டி, குணத்தொனி காட்டி, குறித்தெதிர் நாட்டி, கிரித்தேரோட்டி, படைமுனையிலே திரிந்து, கடைமுனை கூடிய கணைகள் கைக்கொண்டு காலாந்தகனை இக்கர்னனென்று சொல்லும்படியாய் எதிர்ப்பதாயினன். அக்காலையில், இவனுக் கெதிர்ப்பட்ட வீரவேந்த ரெல்லோரும் நெருங்கி சுருங்கி மடிந்தார்கள். இன்னும்பல வீரர்கள் இவனுக்கு முன்னுதாகச் சென்று, பின்னம்பலபூண்டு வெந்நிட்டோடினார்கள். இதுகளை யெல்லாம் மடைகொண்டொழுந்த தேனிறைந்த மலர்த்தொடை புனைந்த புயவள்ளலாகிய தருமராஜன்கண்டு மனத்துள் மதித்து அந்தோ இதென்ன அநியாயம்; ஒரு வில்லாளியாகிய அங்கதேசராசன் விடுக்கும் அம்புகளினால் நமது படைக்காவலருடையவும், பாணங்களும், வில்லுகளும், பலங்களும், பதாதிக்கும்புகளும் பங்கப்பட்டுப் போகவும் நேரிடுமாகில், இனிமேல் நாம் செய்யவேண்டிய திறமென்ன? இப்பேர்ப்பட்ட வேளையில் எதிர் நின்று யுத்தம் பண்ணாமல், விஷப்பரிக்ஷை பார்ப்பவரைப்போல் இடைந்து நிற்பது முறையோ? இஃதென் தவக்குறையோ? ஓ ஈசனே! என்றிரக்கங்கொண்டு இந்திரரை நாயகனாகிய சுந்தர மாயனுடைய இருசெவி கேட்கும்படிக்குச் சொல்லினர்.

அவ் வார்த்தையினுடைய நுட்பத்தை இளவலாகிய அர்ச்சுனனறிந்து, ஸ்ரீகிருஷ்ணனுடைய முகத்தைப்பார்த்து முகம் வியர்த்து, ஓ நாதனே! அக் கர்னன்பேரில் ரதத்தை விடும் இந்நிமிடத்திற்போ யவனுயிரை வாங்கி விடுகிறேன் என்று ஆக்கிரஷப்பட்டு, ஆக்கிரமித்த சிங்கம்போல் அதட்டிச் சொல்ல, அத்தோழன் சொல்லை அலர்நாயகி நாயகனாகிய அருளாழிவேந்தன் தடுத்து, அவன் முகத்தை கிருபையோடு நோக்கி, அப்பா! அர்ச்சுனா! அவசரப்படக்கூடாது; நெருங்கிய ராத்திரியில் யுத்தஞ் செய்வதற்கு ராட்சசாள் துணிவார்களல்லாமல், மற்றவர்கள் துணியமாட்டார்கள். இவ்விராக்காலம் மேற்சொன்ன ராட்சசாளுக்கு உரிய காலம்; இக்காலத்தில் தேவர்கள் யுத்தஞ் செய்வதற்குப் புறப்பட்டார்கள்; ஒருவேளை புறப்பட்டாலும் ஜெயம் பெறமாட்டார்கள். ஆதலினால், இக் கர்னன் ராக்ஷசாமிசம், நாம் எல்லோரும் தேவாமிசம்; இதை உனது புத்தியில் ஸ்திரமாக வை. ஓ புயவலிமைபெற்ற புண்ணியனே! இவ்விராக்

கால பலத்தால் மூர்த்தண்ய தசைகொண்டிருக்குங் கர்னனுடன் நாமெதிர்த்து போர்புரிவது முறைமையல்ல. ஆனாலும், நான் சும்மாயிருக்கிறேனென்று நினைக்காதே; இவ்விராத்திரியில் இவனுக்கு ஈடாக யுத்தஞ் செய்யும்படியாகிய பேரைத் தேடிக்கொண்டிருக்கிறேன். இவ்வேளையில், இவனுக்குத் தகுதியாகிய யுத்தத்திறங்களில் வெற்றியுணர்ந்த பலவானும், கைப்பற்றிய விற்றிறங்களிலும் திறவானும், வேலாயுதம் - சூலாயுதம் - சக்கிராயுதம் - குந்தாயுதம் - தண்டாயுத முதலிய ஆயுதங்களிற் றலைவானும், இவ்விருட்டை மருட்டும்படியான தேகமித்திரனும், வீமசேனனுடைய மோகபுத்திரனாகிய கடோற்கஜன்தான்; இம் மகானுபாவன் பிவேசிப்பானாகில் எள்ளுக்காய் முள்ளு தெரிப்பதுபோற் கொள்ளையாடி விடுவானென்பதாய் உள்ளபடி நான் யோசிக்கிறேன் என்று கோபாலன் சொல்லினார்.

## கர்னனுக்கும் கடோற்கஜனுக்கும் போர்

அவ் வாக்கியத்தை யண்டையி லிருந்து கேட்டக் கடோற்கஜனானவன், விண்டலம் வரைக்குங் கிளம்பி, மண்டலங்கிழிய குதித்து, சண்டைக்கு முன்னணியில் முனைந்து நின்ற மிகத்திறமாகிய ஊழ்வினையைப்போற் பகைத்து, வைரம்பற்றிய கதாயுதத்தைக் கொண்டு வாகைபெற்ற வாளாயுதத்தைக் கொண்டும், வலுவேறிய யுத்தஞ்செய்தான். கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! இம்பர் முதலாகிய வம்பரமுழுட்க இவ்விருவரும் போராடியக்காலையில், பெருங்கோபத்தையும், போர்த்திறத்தையும் பொருளாகவுடைய அலம்புதனானவன், பூமியிற் மண்டியிட்டுச் சுழன்று, கடோற்கசனுடைய ஒருகாலைப் பிடித்தான். அப்போது கடோற்கசன் அலம்புதன் பிடித்த காலைப் பூமியிலழுந்த வூன்றி, மற்றொரு காலைத் தூக்கி அவ்வலம்புதனுடைய மூளைசிதறும்படியாக முடிமீது வைத்து, அவனுடலை தரைமீது சாய்த்து, ஒரு காலைத் தனது காலினால் மிதித்து மற்றொரு காலைக் கையாற் பிடித்து இருபிளவாய்க் கிழித்து, முறுகுறு தலையை முடிசிதற மோதி, அதனைத்தனது கையிலெடுத்துக்கொண்டோடி, குருகுல நாயகனென்னும் துரியோதனனேறிய தேரின் மேல் வீசி, ஆ! ஆ! அரவக்கொடியோனே! உனக்குரிய அலம்புதனைப் பார்த்தாயா? சூரியகுமாரனாகிய கர்னன் தலையையும் இப்பிரகாரமே முறித்துக்கொண்டு இப்போதே வருகின்றேன். இவ்விரண்டு பேருடைய முகத்தையும் எக்காலத்தில் பார்க்கலாம். எங்கும் போகாமல் இங்கே தானே யிருவென்று சொல்லி, அவ்வரசனுடைய விருத்தணிப்படைகளெல்லாம் பிரசண்ட மாருதத்திற் பறக்குஞ் சரகைப்போல் வெருண்டு புறமிட்டோடும்படியாய் கலக்கினான். அப்போது படை வீரர்களெல்லாம் பறந்து, பதைபதைத்துப் பாராளுந் துரியோதனன் பார்த்து பரிதவித்து, தன் சேனைகளைக் கலங்காமற் றரிக்கச் செய்து, தயிரிய சாமார்த்தியத்துடன் தனுவளைத்து ஸ்டங்காரம்பண்ணி மின்னற்கணையை விடுத்தான். அவனெடுத்த மின்னற் கணையாகிய மூன்று பாணமுந் தாண்டவமாடி வருகின்ற தன்மையைத் தர்மராஜனுடைய படைகளுக்குத் தலைமையாகத்தோன்றிய கடோற்கஜனென்னுங் காளையானவர் கண்டு, தன் கார்முகத்தை வளைத்து ஓர் கடுங்கணை செலுத்தி அவை கத்தரித்தெறிந்தான்.

## அலாயுதனுக்கும் வீமனுக்கும் போர்

இவ்விதமாகப் போர் புரியும் இடும்பிகுமாரனுக் கிளைத் தேங்கிய ராஜேந்திரனும் சதகோடி வேந்தர்களைப் பார்த்து, ஓ! ஓ! வீரர்களே! உங்களை நோக்கி இவ்வார்த்தையைச் சொல்லாமல் என்னை மதித்துத் துதித்துச் சொன்னார். எப்பொருட்கு மிறையாகிய ஜனார்த்தனர் என்று விருதேறிய இருதோளையும் தட்டி, புயவலிமைகாட்டி, மின்னற் பிரகாசிக்கும் மேகம்போன்ற திருமேனியையுடையக் கிருஷ்ணார்ச்சுனை வணங்கி, தருமபுத்திரருடைய தாள்மேற் பணிந்து, பேய்கள் பூட்டிய கழுகுக்கொடி நாட்டியபெருந் தேரிலேறி, விருஷப விராட்டைப்போல் அநேக மரசர்கள் படைகொண்டு புடைசூழ்ந்து வரும்படியாய் விடைகொண்டு விரைவாகச் சென்று, கடையுகக் காலாக்கினிபோற் கருதலர் படையிற் கலந்து, கடுஞ்சிலை வளைத்து, காய்ச்சித் துவைச்சுக் கடைச்சற் பிடித்துத் தைலதூபமேற்றிய சரங்களை கோடாகோடிகளாக எங்கு மிறைத்து, அம்பர நிறைத்து, உக்கிரமாக பக்கத்தில் யுத்தஞ்செய்து வரா நின்ற சூரியகுமாரனாகிய வீரிய கர்ன்னை வளைத்து, மாரிபோற் பொழியும் வேரியங்கணைகளாற் றுளைத்து, அணிபடக்கூடிய மணிமுடிசூடிய மன்னவரெல்லாருஞ் சின்னபின்னமுற கொன்று, பின்னும் பலவாகிய வன்னப் பகழிளைச் சன்னப் பின்னலாய்த் தாக்கி வரா நின்றனன்.

இப்படி வராநின்ற கடோற்கஜனைத் திணி தோளினையுடைய செங்கதிர்ச் செல்வன் பார்த்து, சீறிப்பாய்ந்து, சிலையை வளைத்துத் தேவாஸ்திரங்களைச் செலுத்தி, அக்கடோற்கஜன் கைப்பற்றிய வில்லைப் புல்லெனமதித்திரண்டு துண்டாக்கினான். அப்போது கடோற்கஜன் கனைத்து, இரண்டாய் முறித்த தன் வில்லை வீரகண்டாமணிக் கட்டிய கர்னன்மேல் சுழற்றி யெறிந்து, மிகு துணிவினையுடையவனாய் கதாயுதங் கைக்கொண்டு அரவக்கொடி நாட்டிய துரியோதனனும் மற்ற அரசர்களும் மனமடிய மயங்கித் திகைக்கும்படியாய் தாழா வலிகொண்டு தானொருவனாகவே யெதிர்த்து ஜாடினான்.

## கௌரவரில் அலம்புதன்வதை

அப்போது சகடாசுரன் பிள்ளையாகிய அலம்புதன் கண்டு, வீமன் காளையாற் புலம்பிக் கலங்கும் போர்முகத் தெதிர்த்து, தனது பெருமைபெற்ற சாமர்த்தியத்துடனே பெயர்ந்து கடோற்கஜனைத் தகைத்து நகைத்து, வீரப்பிரதாப வேந்தர்களியாவரும் ஒன்றாகக் கலந்து, இக்கடோற்கஜனைக் கைப்பிடியாகப் பிடிக்கவேண்டுமென்று கவிந்து சூழுங்காலையில், அமுதங் கடைந்த நாளையிற் பாற்கடலிலுதித்த ஆலகால விஷம்போலகலந்து, அரவக்கொடியோன் முதலாகிய அரசர்களெல்லாரு மலக்கழிந்து மருண்டு, அவரவர்கள் பாட்டி லோடும்படியாய்க் கலக்கா நின்றவக் கடோற்கஜனுடைய பகைமேலிட்ட புஜபல பராக்கிரமத்தை சொல்லுதற்கரிதாம்; தேவர்களெல்லோரும் பூமலர்த்தூவிக் களித்தனர். காவலர் பல்லோருங் கருத்திற் றுதித்து மதித்தார்கள். அப்போ தரசனுடைய சேனைசயினியங்களெல்லா மந்திரத்திலாடும் பம்பரம் போற்சுழன்றவதிப்பட, அக்காலத்திலனேகங்கோடி அரக்கருடன் இவ்வித மென்றுரைக்கொணாத ஆண்மிக்கை பெற்றவனும், கர்னனுக்கும் சௌபலனுக்கும் உயிர்த்துணைவனானவனுமாகிய அலாயுதனென்பவன், உலகிலுள்ள இருட்டெல்லாங் கூடி ஓர் வடிவமாக நாடி வந்த தன்மையைப்போல் வந்து, பாண்டவர் முதலாகிய படை மன்னவரெல்லோரும் பயப்படும்படியாய் துரியோதனனுடையபாதத்தில் வீழ்ந்தெழுந்து, ஓபரராஜபயங்கரனே! பராக் தேவரீர் என்ன வொருவிதமாக யிருக்கிறீர்? ஏதொன்றுக்கும் பயப்படவேண்டாம்; இதோ நானிருக்கின்றேன்; இன்றிராத்திரிவிடியுமுன்னே நஞ்சங் கலத்ததுபோல் வெஞ்சமர் நடத்தி, பஞ்சவர் எஞ்சும்படி பாழாக்கி வென்று, அவர்களுக்குத் தெய்வலோக பதவிகொடுத்து, பணிமுடி பொறுத்த பார்முழுதும் நீராளும்படிக்கு உமக்குப் பட்டமுங்கட்டிவைத்து என் கண்களிக்கப் பார்க்கிறேன் என்று பலவாறாகிய சபதங்கள் கூறி, ஏற்றிய தீபங்களெல்லாம் இருண்டு, மண்ணும் விண்ணுமொன்றாகித் தும்பெறும்படியாக வந்து அர்ச்சுனனுடன் முனைந்தெதிர்த்து, அவனாலடிபட்டழிந்து, வலிமை கழிந்து, புறமிட்டொழிந்து, வீமசேனனுடனும் போர்செய்து சீறி, வேண்டிய யுத்தங்களை விதவிதமாகச் செய்து வீறினான்.

இவ்வாறு அலாயுதனென்னும் இராக்கதன், பூரித்தமலைபோன்ற புயங்கள்வளரவும், போராடு மெதிரிகள் பயப்பட்டு தளரவும், ஜெயம்பெறும் லாபமீங்கிய துரியோதனுதியர் திடங்கொண் டெழுந்து முடுக்கவும், தன் கடைவாயை நக்கிச் சுழற்றுகின்ற நாக்கிலிருந்து பொறிநெருப்பு பறக்கவும், துர்மாமிச நாற்றமுடைய கோரப் பற்களினுடைய பிரகாசத்தினால் நெருங்கிய இருளானது அகன்று ஓடவும், செம்பட்ட மயிரினால் திசைகளெரியவுமாகப் பகைத்திறங் கொண்டு, பகைவர்மேற் செல்லுமுன்னமே, இருபுறத்திலும் இவனைச் சூழ்ந்துவந்த இராக்கதச் சேனைகள் எக்களிப்புடன் பக்கங்களிற் பிரிந்தோலமிட்டு, மக்கள் முதலாகிய ஒக்கலுடன் பரிந்து மேலிட்டு, இருண்ட மலைக்கிடாகக் கறுத்த உடம்பும், இளகிய தசைகள் புகுந்து காட்டும் பற்சந்துகளும், வரிசையாய் ஒட்டிக் கொண்டிருக்கின்ற உரிசையாகிய மிருகமாமிசங்களின் கொடிய நாற்றமும், முருக்கம்பூ வைக்கருக்கிப் பிறக்கிடச் செய்யும் செந்தீக் கண்களும், மேக கர்ஜிதம் மெலிந்து போம்படிக்குக் கூவுகின்ற வெடித்த குரலோசையும், வஞ்சகப்பொலிவையுடைய மனத்திற் கொதித்தெழுங் கோபமும் உடையவர்களாய், மதம்பெற்ற யானைமுகங்களும், பூனை முகங்களுங் கொண்டு பாண்டவப் படைமேல் விழுந்து, அதிர்ந்து ஆர்ப்பரித்து, அவ்வவர்களையும் பிடித்துக் கசக்கி அலைக்கக்கண்டு, தங்கள் தங்கள் வில்லை வளைத்து கூரம்புகளைத் தொடுத்தெதிரிட்ட படைகளையெல்லாம் நெருக்கி, ஒருவரையும் லட்சயஞ் செய்யாமல் இறுமாந்து யுத்தஞ் செய்வதானார்கள். அக்காலத்திற் சூரியனை மறைத்த துளவணிமாயன் செலுத்தும்

தேரிற் பொருந்திய அர்ச்சுனன் முதலாகிய சகோதரரும், சாத்தகியும், சேனாபதி என்னுந் திரிஷ்டத்துய்மன் முதலாகிய மைத்துனமார்களும், ராஜபுத்திர வர்க்கங்களும், காவலாகக் காத்திருக்கின்ற யுத்தகளத் தலைவர்களு மெத்தவும் வருந்தி, சித்தப் பிரமைகொண்டு வெருக்கொண் டோடுவதானார்கள். அச்சமயத்தில், வாயுகுமாரனாகிய வீமசேனன் மனந் துடித்து, வில்லை குணத்தொனிசெய்து வடிக் கணைகளை வாரிவாரி அரக்கர் படைமேற்றூரி மாட்டும்போது, இரதத்தின் மீதிருந்த தூர்த்தனாகிய அலாயுதனுந் தூரத்திலே நீண்ட மேருத்தலைபோன்ற பாரவில்லை வளைத்து வீரமாகிய அந்தகாரக் கணைகளை அநேகமாயிரம் தொடுத்தான்.

இப்படியாக அவன்விடுத்த அம்புக்கும்பு களையெல்லாம் வாயுபுத்திரன் விட்ட வயிரக் கணைகளானது, மடக்கி யொடித்து மடித்து தடுத்து வாட்டியது மல்லாமல், அவ்வரக்கனால் வந்துகவிந்த இருட்டைக் கெடுத்தவன் தேரிற்கட்டிய கொடியை முறித்து, அத்தேர் குதிரைகளெல்லாந் திண்டாடியுருளத் துணித்து, பைசாசங்களைத் துண்டு துண்டாகத் தறித்து, திடத்துடன் தேர்செலுத்திய சாரதி தலையையுந்திப் பந்துபோலாடி தாஷ்டீகவில்லைச் சடைபோல் முறித்து, இருளாகிய உடலை எண்ணிறந்தத் தொண்டிகள் ஆக்கி, இமை கொட்டுவதன்முன் அவனுடைய திறத்தையு மழித்தது. அப்போதந்த அலாயுதனனவன், சரேலெனப் பூமியிற்பாய்ந்து, வடவைக்கனற் போற் பெருந்தீயெழ விழித்துப் பெருமூச்சு விட்டு, அலப்படை யெடுத்து அனற்படச் சிரித்து ஆர்ப்பரித்து, வலத்திலுயர்ந்த கலப்பையை எடுத்தெறிந்து, வல்லிரும்பனைய மலைப்படையை எடுத்ததிர்ந்து, வட்டமாய் வளைந்து முடுக்கி மலைந்த காலையில், இலக்கமற்ற தேவர்களுக் கிருப்பிடமாகிய மகமேருவின் முடியை யொடித்த வாயுகுமாரனென்னும் மறலியானவன், மனக்கொதிப்புடன் திரண்ட மலைபோன்ற புயநிமிர்ந்தோங்கி, தீரத்துவமாகிய விரத்திறங்காட்டி, ஒப்பற்ற கதையைச் சுழற்றியடித்து, அரக்கனெறிந்த மலையை ஒருநொடியிற் படியிற்பழியப் பொடிப் பொடியாக்கி உக்கிரமித்தெழுந்தான். அப்போது, பின்னொரு திக்கில் யுத்தஞ்செய்கின்ற கடோற்கஜனனவன், வீமனாகிய தன் தந்தையின்மீது அலாயுதனெதிர்த்துச் சண்டைக்கு வந்ததைக்கேட்டு, பரத்துவாச பௌத்திரனாகியுந் துரோணாச்சாரியார் புத்திரனாகியும் விளங்காநின்ற அஸ்வத்தாமனென்னும் அவ்வந்தண சிரேஷ்டரர்ப்புதனுடன் அனேகம் போர்புரிந்து, அந்த அஸ்வத்தாம னிறந்தானென்று சொல்லும்படியாய் வேலாயுத முதலாகிய பிறைக்கணைகளை விடுத்துக் கலக்கி, அவனைவிட்டுத்திரும்பும்போது, சிறுமலைபோலடுத்து சண்டைசெய்ய வந்த பராக்கிரமச் சூரியபுத்திரனாகிய கர்னனைத்தடுத்து, அவன் அன்னிமிடத்திற் சோம்பி இளைத்துப் புறமிடச்சாய்த்து, தூர்த்தண்ய மூர்த்தண்யமாகப் புகுந்து வீமசேனனிடத்திற் போய் சேர்ந்து பணிந்து, ஐயா! யான் வரத்தினாற் பெற்ற உரத்துடன் புகுந்து மலைந்து இந்த அலாயுதனுயிரை அரை நொடியில் மாற்றுகிறேன். நீர் சற்றிளைப்பாறிப் பார்த்திரும் என்று கோடையிடி கோபித்து எழுந்ததைப் போற் படைமேற் புகுந்து, பலவிதத்தாலும் மீறிய தன்னுறுதியானது தன் தந்தைக்குத் தெரியும்படியாகச் சண்டை செய்தான். இவனைக் கண்ட அலாயுதனுந் தொண்டை கிழியக் கொண்டல்போற் கூவிக் கறுவிக் குதித்து ஓடிவந் தெதிர்த்து, குலத்துக்குக் குலம் பலத்துக்குப் பலமென்று கூடிப் போர் புரிந்தார்கள்.

### கடோற்கஜனால் அலாயுதன் வதை

இவ்விதமாக, அரக்கனும் அரக்கனும் உரக்கக்கூவி அதிரப் போர் புரியுங்காலையில், இவரிருவரும் இடிமுழக்கம்போல் இரையும் பேரொலியால் நாகலோகத்திலிருக்கும் பாம்புகளெல்லாந் தலை நசுங்கி வாடவும், இவர்கள் கூவுங் கூச்சலுக்கு எதிரொலியாக மலைகளெல்லாங் கூவவும், மலைகளின்பேரில் உலாவுகின்ற மத்தகஜங்களெல்லாம் மண்டைகள் கிழிந்திறக்கவும், மண்டல முனைத்தும் படபடென் வெடித்து மண் பறக்கவும், அண்டமூகடு மடமடெனச் சரிந்து, வெடிம்வடிக்கவும், என்னமோ ஆபத்தென்று எண்டிசை யானைகளெல்லாந் தியங்கி மயங்கவும், இவ்வரக்கருடன் போர்புரிய நம்மாலாகுமாவென்று அமரர்கள் துணுக்கிட்டேங்கி அடிக்கடி கண்ணிமை கொட்டவும், திக்குப் பாலகர்கள் திக்குமுக்காடிட்டுத் திணறித் தேங்கி யொடுங்கவும், இருவர் போரடியிலும் எழும்புகின்ற செந்தூள் கருந்தூள்களினால் திரை யாழிகள் வளறவும், ஆர்த்து முகம் வியர்த்து,

இருவரும்நகைத்து, அப்போதைக்கப்போது கோபித்து உருத்து, அணுவுடலெடுத்து, மலையெனப் பருத்து, அதிர்ச்சியாய் மறைந்து, அந்தரமெல்லாம் பறந்து, மீண்டும் அரவுருக்கொண் டெதிர்ந்து, ஆங்கார ஓங்காரமிட்டெழுந்து, சூராவளிபோல் வாயினுலூதி, அக்கினிக் கொழுந்துகளா யெரித்து, அடுத்த படைகளை யுதிர்த்து, ஆகாயத்திற் கையெடுத்து, அரக்கன்மேற் படும்படியான அனேக மரங்களை ஆணிவேருடன் பறித்தெடுத்துப் பூமியிற் சுழற்றி யடித்து, நேமி போற் குமிய மிதித்து, படிமிசை குலவிய கொடிமுடி சிகரமுறித்து, இடியது நிகரென கடலொலிதர சிரித்து, வில்முதலிய பாணங்களை முறித்து, விருதனைத்தையும் துண்டாகத் தறித்து, அதிக்கைப் பற்றிய யானைகளையெல்லாந் துணிபோ லுரித்து, துரங்கமென் றுரைக்குங் குதிரைகளையெல்லாம் இலைபோற் பறித்து, சக்ரவாளமும் நெக்குவிடத் தக்கதாய் ஒருவரை யொருவர் தாண்டி, விரைவில் முடுகி யுத்தத்துக்கு வாவென்று இருவரும் வேண்டி, ரூபம்வேறுவேருகப் பூண்டு நுதல் வியாக்கக் கடுங்கோபம் மூண்டு, சிலைப்படையாலும், சிகைப்படையாலும், அயிற்படையாலும், அரப் படையாலும், வாட் படையாலும், தோட்படையாலும், வல்லபங்களென்பன எல்லாவற்றையுங் காட்டி, வினைவளைத்தபோது, கடோற்கஜனுனவன், தனது இருகரமென்னும் வலையைக் கட்டி நீட்டி, அலாயுதனென்னும் ஆண்சிங்கத்தை அடுத்து வளைத்து, வில் யுத்தம்-சொல் யுத்தம்-மல் யுத்தங்களெல்லாம் புரிந்து, தன் புயத்துடனணைந்து தரையிற்றள்ளித் தாக்கி, அலாயுதனுடைய உயிரை அந்தக்னூரிற் போக்க, விந்தையாகிய மனக்கடுமையின் வலியினை நாட்டி, சினப் பொறிகொளத் தீ யெழுவிழியினை காட்டி, உலைக்கள நெருப்பென, ஓங்குஞ் செருக்களத் துதிரப் பெருக்கெழ, உலகந் தரத்தெழ, ஒருவர்போற் பல அரக்கரை மடித்து, புகழப்பிரதாபம் படித்து, பேய்களோடு நடித்துத் திரியும் கடோற்கஜனைத் தேவர்முதலிய யாவருங் கொண்டாடினூர்கள். அஃதெப்படி கொண்டாடினூர்களென்ருல், திரிபுர சம்ஹாரியாகிய சிவபெருமா னெழுந்தருளிய கயிலையங்கிரியைத் திறண்டபுயத்திற் றூக்கிய திசை எட்டு மிசைபெற்ற தசக்கிரீவ னென்னும் பராக்கிரமன் தன்னுடன் எதிர்ப்பவர்கள் யாராகிலும் உண்டோவென்று தனிவனத்திற் றிரிந்த நாளையில், இந்த அலாயுதன் முதலாகிய சில பேருடன் எதிர்த்துப் போர்புரிய மாட்டாத வனுய் இளைத்துப் போய்விட்டான். அப்பேர்ப்பட்ட இராவணனுலுங் கொல்லப்படாத வல்லபமுடைய அலாயுதனை, வாயு புத்திரனுக்கு மைந்தனுகிய கடோற்கஜனுனவன், தானொருத்தனு மெதிர்த்து உறுத்திக் கொன்றதல்லாமல், இவனோடுவந்த அரக்கர் பற்பலருடனெதிர்த்து அவர்களையும் பற்றற முடித்துப் பொடித்தானென்று அதிசயித்துத் துதித்து வாழ்த்தினூர்கள்.



### கடோற்கஜன் மாயப்போர் விளைக்கக்கண்ட கர்னன் துரியோதனன் வேண்டுகோளாற் றனக்கிந்திரனளித்த சித்திவேலை யேவிக் கொல்லுதல்

இப்படி கடோற்கஜன் பதினுலாநாள் இராத்திரியிற் பற்பல கூட்டத்தினராகிய பதினுயிர மரக்கருடன் அலாயுதனையுங் கொன்று, அரவக்கொடி படைத்த அரசனுடைய சேனைகளையெல்லாங் குரங்கின்கையி லகப்பட்ட பூமாலையைப்போற் கசக்கி, ராக்ஷச மாயையினுற் பேத்துலட்சமாக உருக்கொண்டு, கீழ் ரெப்பையுடன் மேல்ரெப்பை மூடித்திறப்பதற்கு முன்னமே, ரதகஜதுரகபதாதி முதலாகிய நால்வகைப் படைகளையும் நாசப்படுத்தி, நமனுலகிற் குடிபுகச்செய்து, பின்னுந் தனக்குரித்தாகிய பலராக்ஷச மாயைகளனைத்துங் காட்டினுன். அந்த மாயை எத்தன்மையுடைய தென்றுல், பிரசண்டமாக வீசியடிக்கும்பெருங் காற்றைப்போற் புற்பூடுகள் முதலிய கற்காடுடன் கூடிய பூலோக புவலோக மெல்லாம் புரண்டு-மருண்டு - பூவுதிர்ந்து-வேர்பரிந்து-கிளைமுறிந்து வீழும்படியாக ஒருதரமெதிர்த்தான், பின்னெருதடவை சப்த சமுத்திரமும் அலையுடனெழுந்து, அதிர்ச்சியா யிருந்து, அவனிமேற் புரண்டு வருவதைப்போல் வந்தான். இன்னெருக்கால், பதினுயிர மேகங்களைப்போற் பளிச்சுப் பளிச்சென்று மின்னி, படபட கடகட படீரென்றிடித்து, பஸ்பமாய் பொடித்து, கல்மழை, கனல் மழைகளைப் பொழிந்து காட்டினுன். மற்றொருதரம் நின்றெழுந்து வானமளாவிய அநேகமாயிர மலைகளைப்போல் வந்து, யுத்தகளத்தில் இடமில்லாமல் நிறைந்து, திமிர்ந்து, நிமிர்ந்து நின்றான். மறுபடியும் வடவாமுகாக்கினி, சடராக்கினி, தாபாக்கினி, கோபாக்கினி முதலியவெல்லாமொன்ருய் கூடியதுபோல நெருங்கி,

கனன்று-பொரிந்து - புகைந்து - மிகுந்து - பரந்து தீய்க்குங்கொடிய சிகையுட னெழுந்தான். மேலும், மேலுலகத்தவரும் பூவுலகத்தவரும் வெருக்கொளும்படியாய் ஊழிக்காலத்தில் உண்டாகும் இருளைப்போல, எவர்க்கும் ஒன்றுந் தோன்றாமல் இருண்டு போகும்படி மறைத்தான். இஃதன்றியு மிந்தப்போர்க்களத்தில் இவ்விதமாக அநேக மாய்கைகளை விளைத்து, ஒருவரு மெதிரில்லாமற் களித்து, உலகமதிரச் சஞ்சரித்து திரிபுரத்தை நகைத்தெரித்த சிவபெருமானைப்போல் நின்ற வாளரக்கனாகிய கடோற்கஜன், விசாலமாகிய தன் வாயினாற் பேய்களைப்போல, அந்த இரணக்களத்தில் வீழ்ந்த பிணங்களையும், அப் பிணங்களின் நிணங்களையும், குதிரைவெள்ளக் கணங்களையும், உதிரவெள்ளக் குளங்களையும் வாரி வாரிக் குடித்து வயிறார விழுங்கினான்.

இப்பிரகாரம் அந்த யுத்தத்தில் இறந்த யானைகளையும், குதிரைகளையும், வீரர்களையும், இரத்தங்களையும் இக் கடோற்கஜனானவன் வாரி விழுங்காமற் போவானாகில், உண்மையாக நாம் சொல்லுமிடத்து இரத்தவெள்ள ஓட்டங்களினாற் கருங்கடலு நிறைந்து கிழிந்து, பிணமோடிட்ட கூட்டங்களினால் அண்டகோளமும் நெளிந்து பிளந்து, உம்பர் வாரியைக் கலக்கி உலரச்செய்யாமல் விடாது. இவ்விதமாகப் போர்புரிந்த அந்தகனாகிய கடோற்கஜனால் அளவிறந்திறந்தச் சேனைகள் போக, மெலிவடையக் குறைந்த சேனைகளெல்லாம் வேஷ்டை யடைந்து, மேனிவெதும்பி முதுகிட்டோடிய காலையில், பாம்புக்கொடியைப் பாங்குறப் பிடித்த பலமணி முடி பொருந்த துரியோதனனாகிய கொடியோன் துடி துடித்து, கண்கலங்கி, மருண்டிருண்ட அக் கடைக்கண்ணாற் கர்னனைப் பார்த்து சொல்லுகிறான்: ஓ அண்ணா! புண்ணாகிய மனங்கொண்ட நான் இன்றோடு விண்ணடையும்படியான நல்ல காலம் நண்ணாராகிய என்னுடைப் பகைவருக்கு நேரிட்டது. ஆகையால், அந்தரவாசியாகிய தேவேந்திரன் உமக்குக் கொடுத்த வேலாயுதத்தை யெடுத்து விடுத்து, வீமன் பிள்ளையாகிய கடோற்கஜனுடைய வல்லபத்தையும், மனநிறைந்த கோபத்தையும், மாளாத உயிரையு மழித்து, வேலை முடித்து, பூலோகம் விட்டு மேலோகஞ் சேரும்படியாய்க் கொல்லுவதைவிட, நான் சொல்லுவ தொன்றில்லை. ஓ வண்டுமொய்க்கு மாலையணிந்த மன்னனே! அதி சீக்கிரத்திற் கொல்லும் கொல்லுமென்று வாக்கிற் சுடரும், மனத்திற் சிகையும், நாக்கிற் பொறியும், மூக்கில் வியர்வும், விழிகளிற் புகையு மெழும்பும்படியாகக் கௌரவகுல முதல்வன் விளம்பினான். இவ்விதமாகிய சொல்லைச் சூரிய குமாரனாகிய கர்னனானவன் கேட்டுச் சோர்ந்து, மறுபடியும் தேர்ந்து, ஐயா துரியோதன மகாராஜனே! இப்பஞ்சையாகிய கடோற்கஜன் செய்யுஞ் சண்டையைக் குறித்து நீ ரெவ்வளவேனுங் கலங்க வேண்டாம். இப்போதிராக் காலத்திற் சூரிய இருட்காலமாதலால், அவனிஷ்டப்படி மாயப் போர் விளைக்கின்றான். இன்னஞ் சற்றுநேரத்திற் பொழுது விடியப்போகின்றது. உடனே வரும் பகற்போதிற் கூர்தங்கிய ஓரம்பினால் அவன் தலையைத் தப்பாம லுருட்டி விடுகின்றேன்; இதைக்குறித்து நீர் வேறு யோசிக்க வேண்டாம். மேலும், நாளை நடக்கபோகின்ற நரனுடையயுத்தத்தில் ஒருவேளை சமயந் தப்பிச் சங்கடங்கள் நேரிடுமாகில், அப்போது இக்கூர்மையாகிய வேலாயுதத்தை நேர்மையாகப் பூசித்து, இந்திர குமாரனாகிய அர்ச்சுனன் நொந்தழியும்படியாய் விடுத்து, இப்பூமி முழுவதும் உண்மையாக உமக்கு பட்டங் கட்டி, உமது குடைநிழலில் உலகத்தை வைக்கிறேன். ஓ உத்தமனே! என் பிராணபதமாய்க் காப்பாற்றி வைத்திருக்கிற இவ்விந்திர வேலை இப்போது விருதாவில் விட எனக்கு மனமில்லை என்று மிகுகொடையாளனானவன் சொல்ல, வணங்காமுடி மன்னன் மனங்கொள்ளாதவனாய், மணிமுடி யசைத்து வாய்விட்டு நகைத்து, ஓ அண்ணா! நீர் சொன்னது சுகமாயிருந்த போதிலும், இன்றைய தினம் இராத்திரி நானும் என்னுடைய நால்வகைப் படையும் பிழைத்திருந்தா லல்லவோ? நாளையப் பகலில் அர்ச்சுனனைவென்று எனக்குப்பட்டங் கட்டப் போகின்றீர். அது வரையிலும் இங்கார் பிழைப்பவர்கள்? (பசிக்குப் பனம்பழம் தின்றால் பின்பு பட்டபாடு படலாம்) என்பது போல், உயிரழியாநின்ற இவ்வேளைக்குத் தப்பினால் நாளைக்குப் பார்த்துக் கொள்ளுவோம். நீரிவனைக் கொல்லுவீராகில், பிற்பாடு வில்விஜயனை மிகுலேசாக விரைவிற்கொல்லலாம்; எனக்கு நீர் பட்டங்கட்டியது போலாம் என்று மனங்குன்றிக் கொதித்து, கமலமுகங்கறுத்து, தன்னைத்தானே வெறுத்துக்கூறி தலைகுனிந்திருந்த துரியோதனனுடைய தன்மையை கோடைக்குத் தென்றலும், குலவிய இருளுக்கு

நிலவும், குவலயத்திற்கு மேகமும் துணையான தைப்போல,தன்னையடுத்தவர்களுக்குத் துன்ப முதலான பயங்களைத்தீர்த்து இன்பமுதலாகிய இனிமையைத் தந்து இரட்சிக்கும் இரவி குமாரனுய சவுரியன்கண்டு தெரியாமல், கால காலனுடைய சூலம்போன்ற ஆலகால வேலாயுதத்தை அக்கணத்தெடுத்து, அதிக பூசைக் கொடுத்து விற்களிற்றொடுத்து வெல்லவேணு மென்று கோபங்கொண்டு எறிந்தான்.

அப்போது அவ்வேலாயுதமான தண்ட முகடு முதலாகிய மண்டலமும் எண்டிசையு மண்டி யெரிந்து, புகைந்து, விரைந்துப் பரிந்து வந்து, பகையாகிய கடோற்கஜன் மார்பைப் பிளந்து, பழையபடிக்குப் பாகசாதனனிடத்திற் போய்ச் சேர்ந்தது. இப்பாற் கடோற்கஜனனவன், பொறியழிந்து-உரமழிந்து-உடல்சிதைந்து - உயிரிழந்து, - உதிரம் வழிந்து - உணர்ச்சி யொழிந்து - வாயினால் மண்ணைக்கவ்வி - முகம் பூமியிற் கவிழ்ந்து மோதி, மலைசாய்ந்ததைப் போல வீழ்ந்து மடிந்தான். அவன் மடிந்த ஒருகடிகை வரைக் குஞ் சத்துருக்க ளெல்லாங் கடோற்கஜனைக் கிட்டிவந்து பார்ப்பதற்கு பயந்து, எட்டியிருந்து பின்பு கெட்டி கெட்டியென தெளிந்து சிந்தை கலக்கம் தீர்ந்தார்கள். அவ்வேளையிற் சொந்தமாகிய பாண்டுநந்தனர் முதலிய பேர்கள் அவ்விடம் வந்து அவனைக்கிட்டி, கண்ணீர் பெருகவிட்டுருகி, கரைந்து நைந்து நொந்து, தங்களுடலம்வருந்திக் கலங்குதுங் கலங்கப் பொங்கினார்கள். அப்போது சங்கு சக்கரதரசனார்த்தனனாகி, சங்கைகள்தீர சாஸ்திரமுணர்ந்த புங்கவர்க்கல்லது புலப்படாப் பெருமான், அங்கவர்துயரம் அகலும்மாறுக பங்கஜமலர்த்தும் பான்மைபோ லுரைப்பாதாயினார். கேளும் பாண்டவர்களே! தேவேந்திரன் கர்னனிடத்திற் கவசகுண்டலங் கவர்ந்த அந்த நாளையில், இவ்வேலாயுதத்தை அவனுக்குக் கொடுத்திருந்தான். இவ்வேல் எவர்கள்பேரில் விட்டாலும் தப்பாமற் கொல்லத் தக்க தரமும், உயர்ந்தசிரமும், பல பராக்கிரமங்கொண்ட உரமும் திரமுமுடையது. இவ்வாயுதத்தைப் பெரிய பொருளாகநம்பி, போதுமான ஆற்றல் நிறைந்த கூற்றினுங்கொடியக் கர்னன் பூரித்து, தேகம்பாரித்து, தேருந்திச் செல்லுகின்ற போர்முகத்தில் நாம் தப்பாமல் நரனைக் கொல்லுவதற்கு நாகாஸ்திரமிருக்கிறது; எப்படியு மவனை முடிக்கலாம். ஒருவேளை நாகாஸ்திரந் தப்புமாகில், இவ் வேலாயுதத்தால் அவனுயிரைச் சிந்தி முடித்து அந்தரலோகத்துக் கனுப்பலா மென்று சிந்தைகொண் டிருந்தான். இப்படியிருக்க, அலப்படையுடைய அலாயுதனும், அலம்புதனும், அநேகமாயிரம் அரக்கரும், அரை நொடியி லழியும்படி அமர்புரிந் தொழித்த அரக்கர் மாயத்திற் சிறந்த கடோற்கஜனுடைய உபத்திரவம் பொறுக்க மாட்டாமல், போதுவிடியு முன்னமே யாவரும் இறக்கும் படியா யிருக்கிறதென்று மனங் குன்றி வருந்திய துரியோதனன் தான்பிழைக்கவுங் கடோற்கஜ னிறக்கவும் தயவு செய்யென்று அக் கர்னனை வணங்கி, இவ் வேலாயுதத்தை விடுக்கும்படியாகச் செய்தான். அத் துரியோதனனுடைய வார்த்தைக்கு பழுதில்லாமல், இவ் வேலாயுதத்தை இவன்மேலேற்றவும் இவனை முடித்துப்போட்டுத் தன்னுண்டவனாகிய இந்திரனிடத்திற்குப் போய்விட்டது. இனி உங்களுக்கு கவலையில்லை. நான் கொண்டிருந்த கவலையு மொழிந்தது. இன்றையப் போரில் மண்டல முழுதும் பாண்டவராகிய உங்களுக்குக் கவசகுண்டலன் கொடுத்தான் என, பொங்கிய காளிங்கன் முடிமேனடித்து, மங்கையர் கோவியர் கொங்கையைப் பிடித்து, அங்கவரின்பமார்முடித்த சங்கணி காத்து ஜனார்த்தனன் படித்து சாற்றியபோது, மறமைந்தனாகிய தருமராஜனும், மருத்து புத்திரனாகிய வாயு புத்திரனும், மருத்துவர் மைந்தராகிய நகுல சகாதேவரும், மருதநிலத்திறை மைந்தனாகிய அருச்சுனனைத் தழுவிக்கொண்டு, பெருமையும், வலிமையும், புகழ்பிரதாபத்தையும் நல்வினைப்பயனால் இன்று பெற்றன மென்று, கன்றுகொண்டு விளவெறிந்த கண்ணனை மகிழ்ந்து, அருமையும் பெருமையுமாக அமுதளித்து வளர்த்தக் கடோற்கஜனை நினைந்து நினைந்துருகா நின்ற தங்கள் பெருஞ் சோகத்தையும் அருந்துயரத்தையு மாற்றி, அருச்சுனன் பிழைத்தானென்னுஞ் சந்தோஷத்தால் மகிழ்ந்திருந்தார்கள். ஓ ஜெனமேஜெய மகாராஜனே! புத்திரசோபம் இவ்வளவு லேசாய் நீங்கிவிடுமோ வென்றால், உலகத்தியற்கையுங் காலகருமமும்தெரிந்த கனவான்கள் எப்பேர்ப் பட்ட காரியங்களுக்குங் கலங்கமாட்டார்கள்.

## பாண்டவரில் மச்சதேயராஜன் - துருபதேய ராஜன் இவர்கள் வதை

இப்பால், சக்கிரவர்த்தித் திருமகனால் இராவணனிறந்த படிகளம்போ லிருந்த இப்

போர்க்களத்தில், மீண்டும் அரவக்கொடியோனாக்யாபித்தபடியே ஆசாரியரும், வரிவிற்றுங்குஞ் சேனாபதியுமானவர் நால்வகைச் சேனைகளுடன் நடந்து, பாண்டவப் படைகளுடன் கலந்திருந்த விராடன், துருபதேயன் முதலிய வேந்தர்களுட னெதிர்த்து போர்புரிய காந்திக் கமறுகின்ற கருங்கணைகளைத் தூண்டி, அநேகம் அரசர்களை யொழித்து, விராடன், துருபதேயன் இவர்களுடைய சிரங்களையறுத்து, கடுங்கோபத்துடன் வருவதாயினர். அக்காலையில், துரோணாச்சாரியரால் துருபதேயன் மடிந்தானென்பதை திர்ஷ்டத்துய்ம னறிந்து, உள்ளஞ் சுடச்சுட வெருண்டு, உலவாப் பெருங்கடற்போ லிரைந்து, தடதடவென்று அரசர்கள் முடிகள் இடிபடபடியும் அடியினையுடைய கடிகமழ்முனியைக் கண்சிவக்கக் கருவிப் பார்த்துச் சொல்கிறான். ஓ துரோணரே! என் தந்தையாகிய துருபதேயராஜனை, என் கண்முன்னாகச் சிரச்சேதம் செய்தாயல்லவா? நல்லதாகட்டும். நாளையப்போரில் இப்போது பார்த்திருந்த சகலராஜர்களும் பார்க்கும்படியாய் உன்மகனான அஸ்வத்தாமனுக் கெதிரிலே உன் தலையை வாங்குகிறேன் என்று கொடுஞ் சபதங்கூறிச் சலசலவென்று சரமாறி பொழிந்தான். அத்தருணத்தில் மன்மதனிற் சிறந்த அழகும், சுப்பிரமணியக்கடவுள் மதிக்கும் உரமும், காலகேய நிவாதகவசர்களைப் பாலலோசனப் பரமன் கணையாற் பாழாகும்படி வென்ற திறமுமறமுமுடைய விசயகாண்டீபகர அருச்சுனன் யாவரும் வணங்கும் தனுவாசிரியரைப் பார்த்து, நமது மாமனுடைய தலையை வாங்கினார் அல்லவாவென ஆருக்கோபங்கொண்டு அவரெதிரிற்சென்று நின்று வெவ்விதாகிய பிறைமுகக் கணைகளை விறுவிறென்று தொடுத்து அவன் துரோணாச்சாரியைக்காலசைக்காமல் ஸ்தம்பப் பிரமைகொண்டு தியங்கி மயங்கிப் புறமுதுகிட்டோடும் படிக்குத் தாக்கினான். இங்கு இவனிப்படி போர்புரியவும், இன்னொருதிக்கில் தானுற்பவமாகிய குந்திபோஜகுலமும், அஷ்டகுலாசலமும், திக்கசங்களின் பலமுங் கொண்டாடும்படியாய் பூமியைப் புகழ்பெறக் காத்து தன்பெயர் நிறுத்திய மிகு கொடையாளனென்னுங் கர்னன் பெற்ற விடசேனனானவன், அகிலும் சந்தனமும், புனுகு புஷ்பமுதலிய யாவும் பரிமளிக்க அணியுங் கொடும்புயமும், வெற்றிமாலையுமுடையச் சாத்தகியின் பேரிலெதிர்த்து சண்டைப்புரிந் தடிபட்டலுத்து, சிங்கத்தின்முன் எதிர்த்துப் பங்கப்பட்டோடிய யானையைப் போல்அவ்விடசேனன் தங்கப்பட்டோடினான். இப்பால் உலகை உலாவி வரும் குதிரையையும், அதிரும்படியான வில்லையும், அரியவல்லமையையும், யாவரும் நிகரில்லா ஆண்மிக்கையையுமுடைய நகுலராசனுடன் சகுனி வந்தெதிர்த்து அரும்போர் புரிந்து, அநேகந் தடவை தளர்ந்ததிர்ந்து, தன்னுடைய நால்வகைச் சேனைகளும், உயர்ந்த வில்லும் வெற்றிக் கொடியும், சுழன்றிய தேரும், துணையாகத் தேறிய வேந்தரும், ஒய்ந்து சாய்ந்து மாய்ந்து போகும்படியாய் ஒழித்து விட்டு தானொருத்தனு மீண்டு உடல் வருத்தி, கால் சிவக்கும்படிக்கு ஓட்டமாயோடி, எவ்விடத்திற் போய்ச் சேருவோம் தெய்வமே! இனி நாம் சேரப் போகின்ற யிடம் மேலுலகமல்லது வேறுலகமில்லையே என்றுபூர்வஞ்செய்த வஞ்சனைக ளெல்லாஞ் செஞ்சா மாருதம்போல் வந்து சஞ்சாரப் பிரேதம்போலோடும் தனது நெஞ்சைப் பிளக்கும்படியாய்த் தொஞ்சித் தொஞ்சி துவண்டு, அஞ்சியஞ்சி அகன்று போனான்.

### அருச்சுனன் யுத்த சமார்ப்பணஞ் செய்தல்

அக்காலத்தில் இரண்டுஜாமம்நீங்கி மூன்றுவது ஜாமத்திலும் மோகரித்துப் போர் புரியும்போது, இருதிறப்படையினு மோங்கிய நேபாளரும், பொருதிறப்படை தாங்கிய பூபாலரும், நித்திரை மயக்கத்தால் மெத்தவருந்தி கத்தி விழுந்து, ரெத்தத்தழுந்தி, அலுத்துக் கண் திறக்க மாட்டாமல் விழி சொருகிக் கொண்டு மூடுவதினாலும், தங்களுக்கு உடற் காவலாகிய ஆயுதங்கள்கைநழுவப்போவதினாலும், நித்திரை மப்பாற் சத்துருவைப்போல் தங்கள் படைகளைத் தாங்களே வெட்டிக்கொள்வதினாலும், நினைவுமறந்துதங்களிற்றாங்களே மாறுபட்டு இறக்கப்போர் செய்வதினாலும், இவ்விதமாக சண்டையின் எளிதத்தைச்செவ்விதமாகிய சிலை விஜயன்கண்டு, மேகமுழக்கம் போன்ற பெருங்குரலிட்டுக் கூவி, ஐயையோ! நமது மன்னர் முதலாகிய சேனைகளெல்லாம் நித்திரை மயக்கத்தால் ஒருவரா லொருவர் பின்னமாய் போகின்றார்களே: இன்றிரா விடிந்து சூரியோதய மாகிறவரைக்குந் துன்னிப்புரிகின்ற தொந்த யுத்தத்தை நிறுத்துங்கள். என்று இருவகைப் பிரமுகானுங் கேட்கும்படியாக இரைந்துசொன்னான். இச்சொல் சொல்லி வாய்மூடுவதற்கு முன்னே எப்போ

தெப்போதென்று காத்திருந்த இருதிறப் படைகளும் முராரி மைத்துனனாகிய நரனைச் சிரமேற்கரமெடுத்து வாழ்த்தி, உரமாக நடத்திய யுத்தம் விட்டு ஓய்ந்திருந்தார்கள். அப்போது துரோணாச்சாரியார், வெல்லுவது தோற்பதென்னும்இரண்டிலொன்றுதெரிந்து கொள்ளாமற் பாசறைக்கும் போகேனென்று சபதம்பண்ணிய பான்மையினால், பொழுது விடிந்தபின்பு போர் தொடுக்கவேண்டுமென்று பூரண வமிராக்யத்துடன் போர்க்களப் பூமியிலிருந்தார். வெற்றியையுடைய சேனாதிபதி யுத்த பூமியில் இருக்கும்போது, மற்ற அரச திறவான்களெல்லாரும் ஆசாரியரை விட்டுப் போக மனமில்லாதவர்களாய்ப் போர்க்களத்திலிருந்து, குடைச்சிகரங்களையுடைய இரதத்திலும்,வீரபட்ட முடைய யானையின்பேரிலும், மாசற்ற குதிரையின் மணியிழைத்த கல்லணையாகிய சேனியின்மீதிலும் நித்திரை செய்தார்கள். பதாதியரெல்லோரும் நிலத்திற்படுத்து உறங்கினார்கள். அமர்க்களத்தில் எதிரிகளிருப்பதினால் பாண்டவர் திலகனாகிய தருமராசன் தம்பிமார்களுடன்பதாதியரும் தன்னைச்சூழும்படியாய்ச் சமர் நிலத்திலிருந்து, தங்கள்படையில் இறந்து போனவர்களுக் கிரங்கித் துயரமுற்று, எதிரி படையிலிருப்பவர்கள் இறக்கும்படியான விதத்தை நாடிக்கொண்டு நித்திரையற்றிருந்தார். இப்படி சத்தியசந்தனாகிய தருமராஜனே விசனப்படவும், அங்கே துரியோதன ராஜனுந் தன் படையிலிறந்து போனவர்களைக்குறித்து விசனப்பட்டு, இனியிருப்பவர்களும் இறக்கும்படியான காலம் நேரிட்டிருக்கின்றதேயென்று ஏக்கங்கொண்டு பாடி வீட்டுக்குப் போகாமல் நித்திரை நீங்கி, பருந்துகளுங் கழுகுகளும் பறந்தலையாநின்ற ரணக்களத்தைப் பார்த்துக்கொண்டிருந்தான்.

## ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியினுடைய சக்கரம் பிரகாசிப்பதைவிட்டு இருளானதற்குக் காரணமுரைத்தல்

கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜனே! இந்தப்பதினான்கா நாட்பகல் யுத்தத்தில் ஒரு சூரிய னொளியைக் கோடி சூரியப்பிரகாசமுடைய சக்கரம் எப்படி இருட்காட்டிமறைத்ததென்று சிலர் ஆட்சேபிப்பார்கள். அதற்குப் பலர் ஒருவித சமாதானஞ் சொல்லுவார்கள். அஃதியாதெனில், சூரியவம்ஸ சிரேஷ்டனாகிய உருக்மாங்கத மஹாராஜனானவர், மிகுந்த பத்தியாய் ஏகாதசி விரதமிருந்து வருநாளையில், ஒருநாள் துருவாச மஹாரிஷி வந்து, உருக்மாங்கத மஹாராச சிரேஷ்டனைக் கண்டு, துவாதசி பாரணைக்கு நான் வருகிறேனென்று சொல்லி, ஸ்நானசந்தி ஜெபதப முடித்துக் கொண்டு வரப்போனவர் காலங்கழித்து வருவதானார். இவ்விடத்தில் உருக்மாங்கத மஹாராஜன் பாரணைகாலந் தப்பிப் போகிறபடியால், அந்தக்காலா தீதமாக வொட்டாமல் திருத்துழாயும் தீர்த்தமும் அருந்தி, துருவாசர் வருகிறவழியைப் பார்த்துக் கொண்டிருந்தான். அப்போது பொழுது விடிந்து ஐந்து நாழிகையாய் விட்டது. அதற்குமேற் பாரணை காலந்தப்பி வருகிற மஹாரிஷியை உருக்மாங்கதன் கண்டு எதிர்கொண்டு வணங்கி அழைத்த, அக்காலம் முனிவர் அரசனைப் பார்த்து, அப்பா! நீ இன்னும் பாரணைபண்ணாதிருக்கின்றையா? என்று மஹாரிஷி கேட்டனர். அதற்கரசன் சுவாமி! திருத்துழாயும் தீர்த்தமும் வாங்கிக்கொண்டு தேவரீர்க் கெதிர்பார்த்திருக்கின்றே னென்றுசொல்ல, அந்தச்சொல்லைக் கேட்டவுடனே, தீப்பொறி பறக்க விழித்து, இடுக்கிட்டப் பற்கடித்து, அடாபாவி! பாரணை உச்சிஷ்டம் பண்ணிப்போட்டு எனக்கு அன்னம் படைக்கப் போகின்றாயோ? மகாகாதகனாகிய நீ செல்வகர்வத்தால் இப்படி செய்தாயல்லவா? என்று வெகுண்டு பிடிசாபமென்றார். அப்போது அரசன் கலங்கி, ஓ ஆபத்பாந்துவாகிய ஐயா! ஓ அனாதரக்ஷகனாகிய துய்யா! ஓ ஆதிமூலப்பொருளாகிய மெய்யா! ஓ ஐந்தாயுதந் தரித்தகையா! ஸ்ரீஹரி! ஓம் நமோ நாராயணா என்று அலறி விழுந்தான். அப்போது அண்டரண்ட சராசரங்களு மொடுங்க, மண்டல விண்டல பிர்மாண்டமும் நடுங்க, அநேகபானுகோடிப் பிரகாசத்துடன் சக்ராயுதம் புறப்பட்டு, துருவாசமா முனியைத் துரத்துவதாயது. அப்போது பிராணபயங்கொண்டு காடுமேடு நாடு வீடு முதலிய இடங்கள் தோறும் வடியோடும்படியாகிய மஹாரிஷியானவர், சுதரிசனத்தைத் திகிலடைந்து, ஐயோ! உன்சோதி குன்றாதா? உன் சுடரவியாதா? உன் ஒளிமழுங்காதா? உன்னுர மொடுங்காதா? நீ கருகறுத்துப்போகாயா? உன் காந்தி சிந்தி மாயாயா! என்று இப்படிக்குப் பற்பல விதமாகச் சபித்துக்கொண்டு இந்திரனிடத்திற்சென்று அபயமபயம்: அடைக்கல மடைக்கலம்: என்று அலறினார். அப்போது ஆருக்காக அடைக்கலமென்று இந்திரன் கேட்க, ஸ்ரீமந் நாராயணனுடைய

சுதரிசனத்துக்காக வென்று துருவாசர்சொல்ல, அப்பப்பா!! நான் மாட்டேன் என்று அவனீக்கிவிட, உடனே அம்முனிவர் குபேரனிடத்திற் சொல்ல, அவனும் இப்படியே சொல்ல, அப்பாற் சகல தேவரிடத்தினும் விரும்பி, அடைக்கலக் காப்பில்லாமற் றிரும்பி, ஆதிபகவனுகிய கயிலாசபதியி னிடத்திற் சென்று சொல்லியடுக்க, அவரு நம்மாலாகாதென்று விளம்பிவிடுக்க, அதைக்கேட்டு, ஸ்ரீ வைகுந்த நாதனுகிய பரவாசுதேவனிடத்தில் வந்து, நான் பண்ணிய அபராதத்தைப் பொறுத்தருள வேண்டுமென்று கேட்டனர். ஓ முனியே! அதற்கதிகாரி நாமல்ல; உமக்கும் நமக்கும் பொறுமை கொடுப்பவன் பரம பாகவதனுகிய உருக்மாங்கதன். ஆகையாற் போட்டவிடத்திற்போய்த்தேடும் போம்போம்: என்று விடுக்கவும், அம்மகாரிஷியானவர் சாக்ஷிகாரன் காலில் விழுவதிலும், சண்டைக்காரன் காலில் வீழ்வது மேலென்று நினைத்து, உருக்மாங்கதனிடத்தில் வந்து அடைக்கலம் புகுந்தார். அப்போது அரசன் பார்த்து, மகாரிஷி வெகு மனமிரங்கி, ஓ மாதவா! ஓ கேசவா! ஓ வைகுந்தவாசா! ஓ வானோர்க்கீசா! ஓ மலர்மங்கைநேசா! ஓ மணியாழி துயின்றோய்! ஓ மண்ணுலகளந்தோய்! ஓ ஜநார்த்தனு! என்று விழிநீர் சொரிந்து, இருகரத்தையுஞ் சிரத்திற்குவித்து, இறைஞ்சியபோது, சக்கரத்தாழ்வான் துருவாசரை விடுத்து, அரிநாரணருடைய சன்னிதானத்திற்போய் நின்று சங்கதிகளை தெரிவித்து தொழ, இச்சக்கரத் தாழ்வானுக்குப் பின்னுக ஓரிருளானது கருமலைபோற் கலந்து, திரண்டு வந்திருப்பதைக் கமலக்கண்ணன் பார்த்து இதென்னவென்று கேட்க, அந்த துருவாசரிட்ட சாபமென்று, திகிரிநாதன் சொல்ல, ஸ்ரீநாதன் மகிழ்ந்து; அத் துருவாசனும் நமது தாசனுகையால், அவன் கூறிய சாபத்தை நாமே தள்ளிப் போட்டால் உலகத்தில் யாவரும் பெரியோரை மதிக்கமாட்டார்கள். ஆதலால், நாமே ஏற்றுக்கொள்ள வேண்டும். இச்சாபம் உன்னிடத்தி லிருக்கட்டும்; ஒரு சமயத்தில் உன்பேரிலேற்றி, உடனே அதை மாற்றி விடுவோம். என்று பூர்வஞ்சொல்லி வைத்திருந்த அச்சாபக் கறுப்பை இச்சக்கரத்துக்கேற்றி, பதினாலாம் நாள் யுத்தத்திற் சூரியனை மறைப்பித்தா ரென்று, சமாதானஞ் சொல்லுவார்கள். மேலும் சர்வ வல்லமையும், சர்வ சுதந்தரமும், சர்வ லோகசாரண்யமு முடைய சலசலோசன் ஜநார்த்தனனுகிய மாதவ முகுந்த வைகுந்த வாசனுனவர், எக்காலத்தில் எப்பொருளை எப்படியாக வேண்டுமென்று எண்ணங் கொள்ளுகின்றுரோ? அக்காலத்தில் அப்பொருள் அவர் எண்ணப்படிக்கு அமையும். என்று வைசம்பாயனர் சொல்ல, ஜெனமேஜெயராஜன் பணிந்தெழுந்து; சுவாமி! மேல் நடந்த சரிதையைச் சொல்லவேண்டுமென்று கேட்க, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினுர்.

பதினுன்காம்போர்ச் சருக்கம் முற்றிற்று.

---

இப்பால்,

## பதினைந்தாம்போர்ச் சருக்கம்

### கண்ணன் துதி

உருவென் றருவென் றுளதென் றிலதென்
றிருளென் றொளியென் றிகல்வார் முனிவோர்
மருதன் றிடறும் வரதா வுனைநின்
னருளொன் றிலவே லறிவா ரெவரே.

ஐயா! நந்தன் அடியிணைக் கடிமைசெய்யாநந்த ஜெனமேஜெயனே! கேளும் பதினுன்காநாட் பகற்போதிற் சக்கரத்தினுல் மறைபட்ட தாழ்வு நீங்கும்படியாய்ச் சூரியனுனவன் தனதாயிரஞ்சுடரும் அநேகமாயிரஞ் சுடராய்ப் பிரகாசமாகி, இது நல்ல பொழுதென்று யாவருங் கொண்டாடும்படியாய் நாகராலயத்தை வலமாகவத்து, நேற்றைய தினத்தில் நம்மை மறைத்த சக்கரத்தை இன்றைக்குக் கைப்பற்றவேண்டுமென்னும் இச்சையுடையவனுய் லக்ஷம் யோசனை தூரத்தில் அருணக்கிரண கொடி நாட்டி விண்ணுட்டவரு மண்ணுட்டவருஞ் சந்தோஷிக்கும் படியாய் அண்டத்திற்கு உரைபோட்டதுபோல அடர்ந்து மூடிக்கொண்டிருந்த இருள்களைக் குகையுற ஓட்டி, முகங்கவிந்திருந்த முண்டகமலர்கள் முகமலரத் தனது கிரணக் கரணங்களைக் காட்டி; இருதிறவரு மிராச்சண்டைக் கேற்படுத்திய தீபவரிசைகளா லுண்டான பெரும் பிரகாசங்களும், சூன்யமாக மூடிக்கொண்டு இருந்த பனிமாசுகளும், ஒழுங்கிலலாமல் மழுங்கிப் போகும்படியாய், ஒற்றையாழியுஞ் சப்தமாவுமுடைய தனது ரதத்தை முடுக்கிக்கொண்டு கீழ்த்திசையிலுள்ள உதயகிரியில் உதித்தான். அதுகண்ட இருவகைச் சேனைகளும் இராஜ வர்க்கமுங் காலைக்கடனை

முடித்து நமஸ்காரஞ்செய்து, ஜெயஞ்ஜெயமென்று யுத்தகோலம் பூண்டு உள்ளத்திற் கோபமூண்டெரியும்படிக்குக் கடுகடுத்து வெப்பமாகிய கண்கள் சிவந்து நிறைந்தார்கள். அப்போது விற்றலைமைக்கு நற்றலைகைபூண்டு கற்ற சுத்தவீரனாகிய சுயவல்லபம்பெற்ற நரனும், வீமனும், நகுலனும், சகாதேவனும் சதுரங்க சேனைகட்கு நாயகனாகிய திர்ஷ்டத்தூய்மனும் முதன்மையாக நின்று, தங்கள் சேனைகளை நாலுபங்காக்கிச் சதுர்த்துவார யூகங்கட்டி, நான்குவேத முடிவிற்கும் ஆதியாகிய நாரணன் தோரணநாட்டிய இரதஞ் செலுத்தப் பூரணவிவேக புண்யார்ச்சுனன் போர்செய்யப் புகுந்தான். அந்தவேளையிற் பார்வதிக்கும் ஆண்மையையுடைய ஜெயபால வீமனென்னு பன்னனோடு, சூலபாணியாகிய சுந்தரேசரையொத்த புராதனராசர்கள் ஆலகாலம்போலுருத்து, எரித்து, அடர்ந்து போர் கொடுத்தார்கள். அக்காலையில் அர்ச்சுனனெருங்கி இந்திராஸ்திரந் தொடுக்க அப்போது எதிராளிகள் சேனைமுதலிய வீரர்கள் எமலோகங் குடியானார்கள். இன்னுஞ் சில மன்னர்கள் முன் துள்ளிவந்து, என்முன்வா: என்று வீர பாஷைகள்பேசி, தீரத்துடன் வில் வளைத்துத் திரளாகிய கணைபோக்கினார்கள். அவர்களுக்கு முன்னின்ற அர்ச்சுனன் பலம்பொருந்திய காண்டீபத்தைக் குணத்தொனிசெய்து தலம் புதையைப் பலசரக் கணைகளைத்தூண்டினான். அப்போது இவ்வர்ச்சுனனுடைய வில்லுக்கு மிஞ்சிய வில்லுமில்லை, வெஞ்சமரில் மிஞ்சியடிக்கும் வீரத்திற்கிணை சொல்லத்தக்க வீரருமில்லை என்று யாவரு மிகவும் புகழ்ந்தார்கள்.

இவ்வாறு கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு என்னும் நான்கு திக்கிலுமிருந்து பாண்டவச்சேனைகள் பராக்கிரமித்து வளைந்து கவிந்து எதிர்க்கவே, வேதம், வேதாங்கம், மீமாம்சை, தார்க்கம், கலை, ஞானம், புராணம், இதிகாசம் இத்தியாதி விஞ்சைகளுங் கற்று விவேகம் விளைந்த துரோணாச்சாரியரானவர், அப்பாண்டவர்களுடைய நால்வகைச் சேனைகளும், அச்சேனை வீரர்களும் நாலுபக்கங்களில் முகம்விட்டவாறே முதுகிட்டோடும்படியாயடித்து, தனது வின்னாணியில் ஐந்து பாணங்களைப் பூட்டி, விதம்விதமாய் விடுத்து யுத்தம் விளைத்தார். அத் துரோணருக்கீடாக எதிர்நின்று யுத்தம் செய்யமாட்டாமல், யாவரும் புறங்கொடுத் தோடுவதை குந்திபோஜ மகாராஜன் அறிந்து, ஆயிரம் தேர் முதலிய யானைசேனைகளுடன் எதிர்த்து முடுகிப் போர் புரிந்தான். அக்காலையில், உதிரவெள்ளம் பெருகிய யுத்தகளமானது செவ்வானம்போல சிவந்திருந்தது. இப்பிரகாரம் விற்குருவும் குந்திபோஜனும் வில்லைக் குனித்து வேண்டிய சரங்களைத் தொடுத்து வெஞ்சமர் விளைக்க, மற்றொருபால் மகத்தாகிய சாமர்த்தியமுள்ள மத்திரதேசாதிபனானவன், மருமகனான நகுலனுடனெதிர்த்து மலைந்தான். பலம் பொருந்திய கோபாக்கினி பத்தியெரியும்படிக்கு வந்த மாளவபதியானவன், கருநிறமுள்ள அனந்த சாயிக்குக் கனிஷ்டனாகிய சாத்தகியுடன் சமர்செய்தான். குருபுத்ரனாகிய அஸ்வத்தாமன் அர்ச்சுனனுடனே அமர் புரிந்தான். கர்னனானவன் வீமசேனனுடன் வெகுண்டு சீறி வினை புரிந்தான். வில் வல்லபத்தின் மேற்பட்ட பாண்டியனைச் சகுனி மடக்கிக்கொண்டு சண்டை செய்தான். இப்படி ஒருவருக்கொருவர் கைகலந்து போர் புரியும்போது, அண்டரண்டபுவன சராசரங்களோடு எண்டிசைமுதலிய மண்டல மனைத்துங் குன்றும்படியாகிய ஊழிக்காலமென்று உரைக்கும்படியாய் யுத்தம் விளைத்து, எவரெவர்கள் எவ்வெவர்களைப் பகைத்து நின்று யுத்தஞ் செய்தார்களோ; அவரவர்களுடைய ஆண்மையின் நிலையைச் சொல்லி முடிவதன்று. மேலும், முதன்மையாகவந்து யுத்தஞ்செய்து வெற்றியடைந்து அமோகரிப்புட னிருந்த பகைவர்கள் வந்த வழிமடங்கியோடும்படியாக, அக்கினியாஸ்திரம் - வருணாஸ்திரம்-வாய்வாஸ்திரம்-குபேராஸ்திரம் இது முதலாகிய அஸ்திரங்களைக்கொண்டு துரோணாச்சாரியர் ஜாடுகின்றபோது, சிடசிட படபட மடமட கடகடவென்று வருகின்ற அத் தீட்சண்ய பாணங்களினால் சிந்தை நைந்து, தந்தை தாயைப்போல் அரசாட்சி செய்கின்ற தருமராஜனுடைய தானைகள் உருமாறி, உடல்நீறு-உயிர்பீறி-உரைமீறி, ஓ!ஓ!ஓ! என்னும் ஓசையுடன் ஓய்ந்தழிந்தார்கள்.

### துரோணாச்சாரியருக்குச் சப்தரிஷிகள் வந்து பூர்வக்யான முணர்த்திச் செல்லுதல்

இவ்விதமாக துரோணாச்சாரியும் துரியோதனனுடைய சேனைவீரர்களும் போர்க்களத்தினின்று இன்னும் வரத்தக்கபேர்கள் ஆராகிலு முண்டாயிருக்கில் வரட்டுமென்று ஜயமாலை புனைந்து தருக்கிச் செருக்கி தாரணி

யெல்லாங் கருக்கிப் பெருக்கி யிருக்குஞ் சமயத்தில், ஒருவருக்கொருவர் ஒப்புவமையில்லாத அகஸ்தியர், ஆங்கீரசர், கௌதமர், காசிபர், புலஸ்தியர், அத்திரியென்னு முனிசிரேஷ்டர்கள் எழுவருந் துருவனுக் கொப்பாகிய துரோணாச்சாரியைக் கண்டு, சுதரிசனம்போல் வந்து சூழ்ந்தார்கள். அவர்களைக் கண்டவுடனே மகத்துவமிருந்த ஜகத்திலுதித்து வலுத்த தவத்தை வகித்த உரத்தினனாகிய தனுவாசிரியன் எதிர்சென்றேற்றி, தீர்க்க தண்டமர்ச் சென்னியாலிறைஞ்சி, தேவரீர்களைப் பார்க்க என்னபாக்கியம் பண்ணினேன் என்று அணிபெறத் துதித்து, அழகுறப் பணிந்து நின்றனர். அப்போது சகல கலைகளிலும் வல்ல சப்தரிஷிகளாகிய தபோதனர்கள் அவருக்குச் சொல்லத் தொடங்கினார்கள். "மறைகெழு நாலுநதேசு மாசிலாத் தவமுஞான, முறைவரு முணர்வுமல்லான் முனிவரர்க்குறுதியுண்டோ, திறைகெழு கலைகள்வல்லாய் தின்னலர்ச் செருக்கும்போரு, நிறைதரு வலியும் வாழ்வு நிருபர்தம் மியற்கையன்றோ" ஓ துரோணாச்சாரியரே! கேள்; வேதியர்க்குரிய செய்கைகள் யாதென்றால், வேதபாராயணம், சாஸ்திரவிசாரம், ஔபாசம், பிர்மதேஜசு, மாசற்றதவம், கோதற்றஞானம், வழுவற்ற வாய்மை, அழிவற்றயாக மிவைமுதலிய நற்செய்கைகள் இவைகளே முனிவர்க் குறுதியல்லாமல் வேறு துணையுண்டோ சொல்லும்? ஓ நல்வழியாகிய கலைக்கியானங்களை நலமுறத் தெளிந்த வில்வல்லவனே! சத்ருக்களை வெற்றி கொள்ளும் வீரப்பிரதாபமும், மிகுஜயப்பேரும், அழிவில்லா சாமார்த்தியமும், மநுமுறை, நிலையாகிய நீதியும், நிதானமும், யோகமோகாதி யாகமோக சம்பத்கரமாகிய வாழ்வும் இவைகளெல்லாம் க்ஷத்திரியாளுக்குரிய இயற்கை யல்லவோ? ஆகையால், நமக்கேனிந்தப் பந்தம்? உம்மை நீர் மறந்திருக்கின்றீர். உத்தமனே! நீர் கைப்பிடித்திருக்கிற வில்லும், வேலும், வாளும் கணைகள் நிறைந்த அம்புறாத்தூணியும், யானை குதிரை முதலாகிய சேனையும், வீரகண்டை கேயூர மணிமகுட கிரீட புஜகீர்த்தி முதலிய வீரபட்டமும், வெவ்வியகோப க்ஷாத்திரமும் வேண்டாம் விட்டுவிடும். இந்திரன்முதலிய தேவர்கள் யாகாதி கருமங்களில்லாமல் இதயம்வருந்தி யிருக்கின்றார்கள். ஆதலால், அதிசீக்கிரத்தில் விண்ணுலகம் வரவேண்டும். ஓ பூசுரர் பிரானே! இப்போ நீர் சூழ்கியிருக்கின்ற பாசபந்தக் கலக்கமான இருளைவிடுத்து உமது புத்திபூர்வமாய் பழமையை உன்னிப்பார்க்க பூர்வக்ஞானம் பலிக்குமென்று கூட்டமாகிய தங்களின் உரிமை தோன்றும்படியாய்ச் சொல்லி செலவுபெற்றுக் கொண்டார்கள் நிர்தோஷபராளாமியப் பாவமற்ற அப்பக்குவசாலிகள்.

### தருமனுக்குக் கண்ணன் துரோணர்நிலையுணர்த்தி அஸ்வத்தாமனைப் பற்றியோர் பொய் சொல்லும்படி வற்புறுத்தல்

இப்படி சொல்லிச் செல்லவே, துரோணாச்சாரியருடைய மனதில் வேதாந்த சாரத்தாலாகும் வெறுப்பும், பூர்வக்ஞான விருப்பும் பிறந்து, பலவிதத்தில் வெற்றிபெற நடத்தும் பேராசையும் உலகத்திலனுபவிக்க உண்ணும் பேராசையு மறந்து, பரிசுத்தமாகப் பிரகாசிக்குஞ் சௌரியகுண மடைந்து, தேவவிமானமும் பல்லக்கும் எப்போதும் வருமென்னும் இஷ்டமுடையவராய் எதிர்ப்பார்த்துக் கொண்டு, அப்போது ஏறியிருக்கும் ரதமுதலாகிய வாகனங்களின்மீது விருப்ப மில்லாதவராய், கோடைகாலத்தில் வறண்டு மறுபடியும் மாரிகாலத்துக் கொண்டல் பொழிய; அதனால் நிறைந்து தெளிந்த நீரோடையைப் போல நின்றனர். அப்படி நின்ற துரோணாச்சாரியருடைய நிலையையும், சப்தமுனிவர் வந்துரைத்த தன்மையையும், முதனாள் யுத்தந் தொடங்குமுன்னமே பாண்டவர்கள் கேட்டுக்கொண்டபோது இத்துரோணர் சொல்லிய சொல்லையும், இவரை வெற்றி கொள்வதற்கு இதுதான் நல்லகால மென்பதையும், இந்திர நீல மணிமாலைமேற் பொற்கொடி படர்ந்ததைப் போற் பொன்னுடை தரித்தருளிய புருஷோத்தமன் தெரிந்துக் கொண்டு, சித்திராங்கதை புருஷனாகிய செஞ்சிலை விஜயனுக்குச் சங்கதி தெரிவித்து, ஓ சவ்வியசாசீ! இதுவே நல்ல காலம். நீமெத்த ஜாக்ரதையா யிருக்கவேண்டுமென்று சொல்லித் துரோணருக்கு சென்மப்பகையாக யாகாக்கினியிற்பிறந்த திர்ஷ்டதூய்மனையழைத்து, துரோணாசாரியார்பேரி லேவிவிட்டு, குற்றமாகிய கோள் மொழிகளைச் சித்த மறந்துஞ் செப்பமாட்டாத உத்தமகுண மேருவாகிய சத்திய சம்பன்னனான தருமராஜனைக் கண்டு, அடியவ ரிடுக்கண் தீர்க்கும் அருளாழிவேந்தன் சொல்லத் தொடங்கினார். ஓ முரசகேதன மூர்த்தண்யனே! கேளும்; நமது அர்ச்சுனனாகிய விஜயகாண்டீபனும்,

நானும் மந்திர மலைபோன்ற பிரகாசம் பொருந்திய தோள்பெற்ற மாளவத் தலைவன் மேற் சண்டைபோடச் சென்று அக்கினியாஸ்திரப் பிரயோகஞ் செய்தபடியால், அவ்வரசனேறி அஸ்வத்தாமா வென்னும் பெயரினையுடைய பட்டத்து யானையானது ரட்டமடைந்து நமனுலகடைந்தது. அவ் வானையைக் கொன்றது மெத்த அருமையாதலால், உம் வாக்கினால் அதனைச் சொல்லி ஜெயங்கூற வேணுமென்று செங்கண்மா லுரைத்தனர்.

இவ்வாறு செங்கண்மா லுரைத்ததை அங்கண்மா ஞாலம் அனைத்தும் புரக்கும் அரன்மகன் கேட்டு, ஆ! ஹரி கிருஷ்ணா! அதிக துஷ்டத்தனமுள்ள மாளத் தலைவனுடைய பட்டத்து யானையை வென்று விட்டால், நான் அந்த யானையின் பெயரை எடுத்துச் சொல்லவேண்டிய பிரகரணமொன்றுமில்லையே; இஃதென்ன விந்தை-என்று தருமராஜன் தடுக்கவும், அவர்களுக்குரிய கரியோன் மீண்டு மடுத்து, நீரென்ன மறந்து போனீரோ? ஓ தர்மநந்தனா! முதல்முதல் யுத்தத்துக்கு ஆரம்பிக்கும்போது நாமெல்லோரும் வீஷ்மரிடத்திலும் துரோணரிடத்திலும் போய் நமது குறைகளைச் சொல்லிக் கேட்ட காலையில், அம் முனிவரன் சொன்ன வாக்கியம் கியாபகமில்லையோ? தர்மராஜன் வாக்கினால் என் மகனாகிய அசுவத்தாமா இறந்தானென்று சொல்லக் கேட்பேனாகில், நான் புத்திர சோபத்தால் உயிர்விடுவேனென்று சொல்லிய அந்தக்காலம் இப்போது சமீபித்திருக்கின்றது. ஆனபடியால், நீரும் பொய் சொல்ல வேண்டியதில்லை. இந்தப் போரில் அவர் பிள்ளை பேர்கொண்ட யானை யிறந்ததென்று பேசுவீராகில், இந்தச் சொல் அந்த அந்தணன் செவியில் வீழ்ந்தவுடனே, தன்மனை மறந்து, வில் முதலாகிய பாணங்களைத் துறந்து, உயிர் குறைந்து இறந்து போவார். ஆதலால், நீர் அவருக்கு முன்சென்று நின்று சுறுக்கிற் சொல்லுமென்று காந்தியையுங் கருக்கையுமுடைய சங்குசக்கரக் கையனாகிய என்னையன் துரோணாச்சாரி இறப்பதற்கு உபாயம் பேசிய காலையில், மெய்யினாலேர்ப்பட்ட மெய்யாகிய மெய்யையுடைய வேந்தன்கேட்டு, ஹரி!ஹரி! என்று இருசெவியுமூடி, ஐயா! "அண்ணிய கிளையுமில்லும்மரும்பெரு மகவுமன்புநீ, திண்ணிய சீருமிக்க செல்வமுந் திறலுந்தேசு, மெண்ணிய பொருள்களியாவு மியற்றிய தவமுமேனைப், புண்ணிய மனைத்துஞ் சேரப் பொய்மையாற் பொன்றுமன்றே" என்றால், இப்போது நான் பொய்சொல்லி வாரிக்கொள்ளுவது இந்தப்பூமியாகிய மண்ணோ? என்று நகைத்தவராய், அப்பா உரகசயனா! ஒருபொய் சொல்வார்களாகில், அவர்களுக்கு நெருங்கிய சுற்றமும், பொருந்திய வீடும், வருந்திப் பெற்ற புத்திரபாக்கியமும், திருத்திய சீருஞ் சிறப்பும், திணிந்த மணமும், அணிந்த புகழும், கேள்விச் செல்வமும், தீரத்துவத் திறனும், மாசிலாத் தேயசும், எண்ணிய பொருளும், புண்ணியப் பொலியும், இயற்றிய தவமும், அவமாயழிந்து பவ்மாக முடியுமே? ஓ பங்கசலோசனா! என்று சொல்லிய பாண்டு மைந்தனை இந்திரனாற் பொழியவைத்த கல்வருஷ மாறும்படியாய்க் கோர்வர்த்தனத்தைக் குடையாகப் பிடித்துக் கோவினங்களையுங் கோபாலர்களையுங் காத்தருளிய கோவிந்தன் பற்பல விதத்திலும் புகன்று தேற்ற, அவைகளையும் தடுத்துப்பேசிய பார்த்திபனைப் பார்த்து, என்ன நீர் மெத்தச் சாந்தஸ்மாயிருக்கின்றீர்? ஓ தருமரே! இப்படி பேசினால் எப்படி போர்முடியும்? எவ்விதத்திற் சபத நிறைவேறும்? வீணாகிய அபரோதனை யாரைச்சாரும்?

"உம்மையின் மறுமைதன்னி லுறுபயனிரண்டும் பார்க்கி, னிம்மையில் விளங்கும் யார்க்கு மவரவரியற்கையாலே, மெய்ம்மையே யொருவர்க்குற்ற விபத்தினை மீட்குமாகிற், பொய்ம்மையு மெய்ம்மைபோலப் புண்ணியம் பயக்குமன்றோ" என்றபடி, கழிபிறப்பில் நின்ற பயனும், மறுபிறப்பிற்குரிய பயனும் யோசித்துப் பார்க்கில், அவ்வவர்களுடைய இயற்கையாற் இம்மையில் விளங்கும் அல்லாமலும், வெப்பமாகிய பொய்யைச்சொல்ல வேண்டுமிடத்தில் அவசியஞ் சொல்லலாம். அஃது ஒருவருக்கு நேரிட்ட ஆபத்தை மீட்டு விடுமாகில், அப்பொய்யானது மெய்யாகி மெய்யானது பெருகின்ற புண்ணிய பலனைத் தானே பெரும். மேலும், "பொய்ம்மையும் வாய்மையிடத்த புரைதீர்ந்த நன்மை பயக்குமெனில்" என்றிருப்பதால் தீங்கைத் தராத நடவாததைச் சொல்லுதலும், பொய்யாமையாம். நீர் நினைத்த வண்ணம் பொய்யானால்தானென்ன? வல்லவராகிய மகானுக்கள் அநேக வேதங்களை ஆய்ந்து லோகோபகாரமாய்ச் சொல்லியிருக்கின்ற வெகுவாகிய சாஸ்

திர தருமங்களெல்லாம் உமதுள்ளத்திற் சேறி ஊறி அறமே மயமாயிருக்கும்போது, ஒரு பொய் சொன்னால் என்ன முழுகிப்போச்சுது? பெருநெருப்புக்கு ஈரமுண்டோ? ஓபெரியோனே! நீரொன்றும் யோசிக்கவேண்டாம்; இது அப்படிக்குப் பொய்யாகிற காரியமுமல்ல; உமக்கு இதனால் ஒரு பழிபாவ முதலாகியதுஞ் சம்பவிக்கமாட்டாது; இது நல்ல சமயம். தாமதிக்காமல் விரைவிற்சென்று சொல்லும் என்று வேலையிற் றுயின்றோன் அது வேலையாய்ச் சொல்லியும், தருமபுத்திரர் அப்படி சொல்வதற்கு மனங்கொள்ளாதவராய் வருத்தமுற்று மாதவனை நோக்கி, ஓ மேகம் போன்ற மெய்யா! ஓ கன்று கொண்டு விளங்கனி யெறிந்த கையா! அஸ்வத்தாமாவென்னும் யானையிறந்த தென்பதாய்ச் சொல்லுகிறேன். இது உமக்குச் சம்மதிதானாவென்று தருமராஜன் சொல்ல, காளிங்கநடன நாயகனாகிய கண்ணன் கேட்டு கலகலவென்று நகைத்து, நீர் சொல்லுகிற வாக்கியம் முன் பின்னாகப் புரண்டிருக்கிறது. சொல்லழகாயிருக்கவில்லை. இப்படிதானா சொல்லுவீர்? இப்படி சொன்னால் துரோணருக்குக் கர்ண கடூரமாயிருக்கும் என்று கண்ணன் சொல்லவும், பின்னை எப்படி சொல்வதென்று தர்மக்கியான பூரணன் கேட்டார். அதற்கு கிருஷ்ணமூர்த்தி ஐயா! நீர்சொன்னது சரிதான்; ஆனால் இனப்படுத்தி முன்பின்னாக்கி, (அஸ்வத்தமா அதா குஞ்சரஹா) என்று சொல்லுவீராகில், தனுவேதியனுங் கோபங்கொள்ளார். சத்தியமும் குறைவுபடாது, நமது எண்ணமுந்திண்ணமாம் என்று கருங்கடல்வண்ணனாகிய கண்ணன் சொல்ல, நல்லதென்று அண்ணலுட் கொண்டார்.

### கண்ணன் கருத்தின்படி தருமனுரைக்க துரோணர் திர்ஷ்டத்தூய்மன்பகை யேற்றுச் சொர்க்காரோகணமாக அஸ்வத்தாம னரற்றல்

இஃதிப்படி யிருக்க, துரோணாச்சாரியரானவர், இனிமேல் இப்பேர்ப்பட்ட யுத்தம் செய்பவர்கள் இவ்வுலகத்தி லில்லையென்று சொல்லும்படியாய் யுத்தஞ்செய்து வெற்றியடைந்து, தத்வக்ஞான சித்தத்தால் தேவர் மக்கள் - விலங்கு - புள் - ஊர்வன - நீர்வாழ்வன இவை முதலிய ஜனன சாகரங்களேழையும் வேர்றக் களையத்தக்க மேதகுநிலையில் யோக மூர்ச்சிசையாய் நின்றார். அப்படி நின்ற தனுவேதியனுக் கெதிரில் தருமராஜன் சகல வீரா ளையும் வென்று தடந்தேர் செலுத்திச்சென்று சமீபத்தினின்று, குற்றமில்லாத தன்னாவிற் கோபாலன் குறித்தபடி பேசத்தொடங்கினார். "அத்தனே யச்சுவத்தாமன்னதாயடுவல்லாண்மை, மத்தவாரணத்துக்கையோ மாருதி சிங்கமானா, னெத்தனை கோடி சேனை யக்களத்திறந்ததிந்த, வித்தகன்மலைந்து செற்ற விரகையென் சொல்வதையா" இவ்வாறு தீதிலா மொழியையுடைய தர்மராஜனானவர், (அஸ்வத்தாமா அதா குஞ்சரஹா) என்று சொல்ல வேண்டிய சொல்லில், அஸ்வத்தாமா அதாவென்று சொல்லி மற்றக் குஞ்சரமென்னும் மொழி வெளிப்படும்போது, இது துரோணாச்சாரியருடைய காதில்விழாதபடிக்கு ஸ்ரீகிருஷ்ண தேவர் தம் பாஞ்ச சன்யத்தை யெடுதது பம் பம் பம் என்று முழக்கி மறைத்தார். அதனால் அஸ்வத்தாமா அதாவென்பது வரைக்குந் தருமராஜன் வாக்கால்கேட்ட துரோணாச்சாரியர், வில்லுங்கணையும் வீரமும் விடுத்து, எவர்களிடத்தும் பாசபந்தம் வைக்காமலறுத்து, அசைவற்ற நிலையில் மனத்தைநிறுத்தி, ஊத்தைத்துருதியிற் காற்றைக்கூட்டி, ஊர்த்த முகத்தில் மூலாக்கினி மூட்டி, ஒளியெழ இரண்டு திட்டியும் பூட்டி, உலகத்தாரிறக்கும் உண்மையைக் காட்டி, உலவாப் பெருங்கணத் துத்தமநாதன், மலைவாய்த் தேனை மாந்தவிரும்பி, பிரம சொரூபியாகிப் பிணிபடு முக்குறும்பகற்றி, மூல சக்தியால் இரேச பூரக வியல்பிரட்டித்து கூர்நடுநிலையிற் கும்பிக்குங்கால், சிற்றம்பலத்திற் ஜெய நிர்த்தனமென்னும், சுத்தபவித்திரச் சுடர்பரந்தோங்கி, மெத்தப் பிரகாசம் விளங்கிய சோதி, மத்தக வுச்சி வழிவந்தெழுந்து, சிற்றுருவாகி சேடனெனும் ஒளியை, சித்தர்முதலாஞ் சிவகணத் தலைவரும், மெத்தப்புகழ்ந்து வேண்டித் துதிக்க, கருமலைக்கொப்பாங் கண்ணனுண்டவனும், பருமலைக் கொப்பாம் பஞ்சபாண்டவரும், மறுவற்ற இருதய மாதவத்தோரும், கண்டு கண்களித்துக் கைதொழுதார்களே.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! வேதவித்தகராகிய துரோணாச்சாரியர் இவ்வாறிருக்கின்ற அவ்வேளையில், முள்ளறையுற்ற தாமரைப் புட்பக்கோவிலைப்பெற்ற பிர்மாவினுடைய நடுத் தலையைப் பூர்வங் கிள்ளிய பினகபாணியும், பிறப்பிலியுமாகிய கிரீசனுக்கொப்பாகிய திர்ஷ்டத்தூய்மனை வீரன்,

துள்ளிச் செல்லும் பரித்தேரினைத் துரிதமாக
யாட்டி, விண்ணுணிமரட்டி, நாணோசைகாட்டி,
வீரவாளிபூட்டி, ஆரவாரம் பகைபாராட்டி,
துரோணர்பேரிற் பாணம் விடப்போயினான்.
அச்சமயத்தில், அர்ச்சுனன் ஆ! ஆ! ஆ!
ஆ வென்று அதட்டி அதட்டி மறித்து
ஐயோ! ஓ திர்ஷ்டத்துய்மனாகிய மைத்துன
னே! இந்த மகானுபாவன் சுகானுபவத்தி
லிருக்கின்றார். இச்சமயத்தில் நீர் பாணம்
தொடுக்கவேண்டாம். என் சொல்லைத் தள்ளி
விடுப்பீராகில், உலகத்தில் உமக் குண்டாகிய
புகழும், தேஜசும், நேசமும், வீரப்பிரகாச
மும், குன்றிப்போம் குறைந்துபோம் என்று
விஜயன் தடுத்தும், திர்ஷ்டத்துய்மன் அந்த
வார்த்தையைச் சிந்தையிற் கொள்ளாமல்
அப்பாணத்தை உந்திவிட்டான். அந்தக்
கணைசென்று புத்தியிற் சிறந்த தவமுனிப்
பெருமான் கந்தரமறுத்து அந்தரத்தெழுந்
து பூமியிற்சிந்தியது. தனுவாசாரியன் தலை
யறுந்ததைத் தனஞ்செயன்கண்டு, அந்தோ!
அந்தோ! என்று கண்ணீர்விட்டழுது, உண்
ணீருலர்ந்து, இருகண்ணும் செவ்வரக்கைப்
போற் செவந்து கோபங்கொண்டு, இதோ
சிதைக்கிறேன் உன் தலையை யென்று சிலை
வல்லாளச் சேனாபதியாகிய திர்ஷ்டத்துய்
மனைச் சீறி நெருங்கினான். இப்படி யிருக்கத்
தனுவேத பாண்டித்யமுடைய துரோணாச்
சாரியரென்னுஞ் சேனாதிபதியானவர் இறந்
தாரென்று கெடிபெற்ற வீரங்கிளர்ந்த நாகக்
கொடியோனுடைய ரதகஜ துரக பதாதிக
ளோடுங்கூடிய வீரர்முதலிய யாவரும் புறங்
கொடுத்தோடினார்கள். இப்பால், வில்லாண்
மையிற் சிறந்த அஸ்வத்தாமா வானவன்,
பொல்லாத விசனங்கொண்டு போர்க்களத்தி
லோடி, வேத மந்திர வேள்விகளின் விதி
முறை தவராத தன் தந்தை யிறந்த தனிக்
களம்போய்ப் பார்த்து, தடாலென்று பூமியில்
வீழ்ந்து, அவருடைய பாதத்தைத் தலைமேல்
வைத்து, மறுபடியும் தரைமேல் வீழ்ந்து,
பளபள வென்று முகத்திலறைந்து கொண்டு,
துடி துடித்து, கண்ணீராகப் பெருக அழுது,
வாய்சோர மாலைசோர உடல்சோர மண்மேற்
புரண்டு, நெஞ்சமழன்று, நஞ்சை யுண்டவர்
போல் மதிமயங்கி, எண்ணமழிந்து, கண்
ணொளிகுறைந்து, உள்ளநொந் துருகி, என்
ஐயா! ஐயா! என் அத்தா! அத்தா! என்
அப்பா! அப்பா! என்று தாயிழந்த தனிக்
கன்றைப்போற் கதறிப் பதறி, ஓ தெய்வமே!
ஓ எந்தையே! "வன்பின்மிக்க வீடுமனுன்னை
மன்னுகென்றன்பினிப்பா ருளவுமன்றேயருள்
செய்தான், முன்பினெண்ண வுவமையிலா தாய்
முடிவாயோ, உன்பின் வந்தேனுன்னை யொழி
ந்து முய்வேனோ வில்லாய் நீ, வெம்போர்முனை
வெல்லும் விறலாய் நீ, சொல்லாய் நீசொல்
வேதியருக்குந் தொழிலாய் நீ, வல்லார் வல்ல
கலைகளைத்தும் வல்லானே, யெல்லாமின்றே
பொன்றின வுன்னோ டெந்தாயே" ஓ என
தருமைத் தந்தையே! வல்லமைமிகுந்த வீஷ்
மாச்சாரி யானவர், பேரன்புடனே தேவரீரை
யழைத்து, சிங்கம்போன் றெங்களைப் போல
நீருமொரு நீதியையுடைய இராஜனாக இரு
மென்று கேயூரமணிமகுட குண்டலபுஜகீர்த்தி
யோடு, வீரகண்டை சுவேதக்ஷத்திரமுதலாகிய
எல்லா வரிசையுமீந்து நாடாளும்படி நன்
மையே செய்தார். அந்த நலத்தைப்பெற்று,
அஸ்தினாபுர மென்னுந் தலத்திலுற்று, விற்
குருவாகி மேன்மை கொண்டிருந்த வேதியர்க்
கரசே! முன்பிறந் தோரிலும் பின் பிறப்போ
ரிலும் ஒப்புச் சொல்லுவதற்கு உவமை யில்
லாத உத்தமனே! நீர் செத்த தெவ்விதமோ?
தேவரீர் முடியும்படியான காலமும் நேரிட்
டதோ? தந்தையே! உம்மைப்பிரிந்து நானிவ்
விடத்திலிருந்து உய்வனோ இதோ உம்
முடன் வந்தேன், உம்மைப் பிரிந்துநொ
ந்தேன், உரை மறைந்தொழிந்தேன், உயி
ழேந்தழிந்தேன் என்றுஉலைவாய் மெழுகைப்
போலுருகி வீழ்ந் தேய்ந்து, பின்னும்
தேறியெழுந்து, ஓ வில்வேத புருஷனே!
வெம்போர்வெல்லும் வெற்றிதீரனே! சொல்
நிலையாகிய சுத்தனே! துய்ய வேதியர்க்கெல்
லாங் கர்த்தனே! வல்லவர்செய்த சாஸ்திரங்
களுக்கெல்லாம் தலைவனே! எல்லாத் தலைமை
யும் நீரிருந்தவரையிலு மிருந்து, நீரிறந்த
இன்றைக்கே உம்முடனேகூட இறந்து
மறைந்துபோய் விட்டதே. ஓ என்தாதையே!
என்று இளமைதங்கிய அஸ்வத்தாமனான
மைந்தன் சோகமுற்றுச் சோர்வடைந்துத்
துக்கித்தான்.

### அஸ்வத்தாமன் தன் தந்தை படச்செய்தோரை யெல்லாந் தறிபடச்செய்வே னென்றெழ கண்ட தருமனுதியர் தர்க்கத்தைக் கண்ணன் விலக்கிப் போர்க் கெழுவித்தல்

அது காலையிற் சத்துருவின்மேற் பகை
கொண்ட தரணீசனாகிய துரியோதனன் ஓடி

வந்து, அவ்வஸ்வத்தாமனுக்குச் சோபமாற்றிக் கண்ணீர் துடைத்து, மார்புடனணைத்து, பயப்படாதேயென்று தயவாகச் சொல்லினன். உடனே கிருபாச்சாரியுங் கிட்டிவந்து நஷ்டமாகிய மைத்துனனுக்காகச் சற்றுநேரம் நைந்துருகிநின்று, மறுபடியுந் தானே தேறினவராய் அம்மருமகனையுந் தேற்றினர். அப்போது, அஸ்வத்தாமன் மகமேருபோன்ற என் தந்தையைக் கொன்றவனாரென்று தன் மாமனைக்கேட்க, நடந்த காரியங்களை எல்லாம் அம்மானாகிய கிருபாச்சாரியார் சொல்லுகின்றார். அப்பனே! கல்மலையைத் தூக்கி கல் வருஷங்காத்த கண்ணனானவர், ரதசாரத்தியந் தவிர மற்றொன்றும் செய்வதில்லை என்ற விரதத்தை மறந்து சொந்த அக்கறையாய் கல்லைத்தடித்துப் பல்லைமுறித்துக் கொள்வாரைப் போல் மெத்த வருத்த மெடுத்துக் கொண்டு, சத்தியவானாகிய தர்மராசன் புத்தியை மயக்கித் தன்வழியிற் கொண்டுவந்து விட்டார். அவர் தந்திரத்துக் குடன்பட்ட முரசுயர்த்தோனானவர் சகலருங்கேட்க, அஸ்வத்தாமா ஹதாவென்று பொய் சொன்னார். அச்சொல்லைக் கேட்ட உன் தந்தையானவர் வில்லும் பாணமும்விட்டு வெறுங்கையுடன் நிருபாதிக நிஷ்டையில் இருக்கும்போது, திர்ஷ்டத்துய்மன் என்னுங் குருத்துரோகி கொன்றான். ஓ மேன்மையாகிய என் மருமகனே? இப்படிக்கெல்லா மில்லாமல் விற்கொண்டு யுத்தம் பண்ணி வெல்லுவதற் குன்னுவாராகில், பிரம்மாமுதலிய தேவர்களாலும் உன் தந்தையை வெல்லக்கூடுமோ? எவ்வளவுங்கூடாது என்று கிருபாச்சாரியார்சொல்ல, நான்குவேதங்களும் உணர்ந்த சிலைக்குருவின் மைந்தனானவன், மனமுருகிக்கேட்டு துன்பம்விட் டெழுந்து, கோபக்கொழுந் தெழுந்தோங்க கோபித்து, துரியோதன மகாராஜனை பார்த்து, ஓ உரககேதனனே! இக்கொடுமையைக் கேட்டிரல்லவோ? ஆதலால், மேகம்போற் பொழியுங் கிருபைக் கண்களையுடைய என் தந்தையானவர் வில்லையெறிந்து வெறுங்கையாய் நின்ற செளமிய காலமறிந்து சிரத்தைத் தரித்த திர்ஷ்டத்துய்மனையும், அவனை ஒரு சேனாதிபதியாய் நியமித்தனுப்பிய பாண்டவரையும் சேர்த்து, ஒருகணையால் உயிரை மாய்க்கிறேன் பாருமென்று போர்முகமாகிய வனத்திலிருமாந்துந் திரியுஞ் சிங்கம்போற்சீறி, கஜரத்தானை துரங்கமுதலிய படைமன்னர் யாவருங் கடல்போலிரைந்து விரைந்து துரியோதன மகாராஜனுடன் சூழ்ந்து வரவும், டுண்டுண்டென்னும் பேரிமுதலிய வாத்தியங்கள் எண்டிசைகலங்க முழங்கவும், வெற்றித்துவஜர், வீரக்குடை, வெண்சாமரை முதலிய விருதுகளோங்கவும், இந்திர தனுசுபோன்ற வின்னாணோசையால் திசையானைகளெட்டுந் திடுக்கிட்டேங்கவும், திரிபுவனமும் நடுங்கிப் பின்வாங்கவும், சேமத்தேர் முதலிய உதவிமுதலிய எல்லாஞ் சேகரித்துக் கொண்டு திடுதிடெனப் புறப்பட்டு வருவதானான். இப்படி பொருந்திய உலகெல்லாம் பொன்றிப் போங்காலம் நேரிட்டதென்று தேவர் முதலிய யாவருஞ் சிந்தைநைந்து நடுங்கி ஒடுங்கும்படி வந்த அஸ்வத்தாமனை தர்மராஜன் நோக்கி, மனத்தளர்வுடனே பசுந்துளபத்தாமனாகிய பரந்தாமனுடைய பங்கஜமுகத்தைச் சங்கையாய்ப் பார்த்து, ஓ எங்கள் சகாயனே! இவ்வளவு ஆரவாரத்துடன் இங்குவருகிற அஸ்வத்தாமனால் ஏதாகிலுந் துன்பம் விளையுமோவென்று கேட்க, சங்கு சக்கரந்தாங்கிய ஐயன் அவர் சங்கை தீரும்படி இதனை சொல்லுகின்றார்.

ஓ தர்மசொரூபரே! கேளும் இவ்வஸ்வத்தாமன் எப்படிப்பட்டவ னென்றால், கொன்றை-அறுகு-தும்பை-கூவிளம் இவை முதலியன முடிந்த செஞ்சடை முதல்வன் திருவடியருளால், மிஞ்சிய வரமும் மேன்மையும் புகழும் பெற்றோன். இதன்றியும், தேவாஸ்திரங்கள் யாவும் தெரிந்தோன். உரித்தாகிய தகப்பனிறந்த பிரிவாற்றாமையால் யுத்தஞ் செய்யவருகிறான். உள்ளபடிமுடியும் தெய்வச் செயல் எப்படியோ? ஒப்பற்ற உத்தமனே! நீர் ஒன்றுக்கும் அஞ்சாதீர் என்று உறுதி சொல்லிக் கொண்டிருக்கும்போது, அருச்சுனனானவன் ஆயாசங் கொண்டு, ஐயையோ! நீண்டவில்லும் பூண்ட அழற்கணையுங் கைவிட்டுப் பழையபடி தேவர்களுடன் மருவிப் பழகும்படிக்கு விரும்பி, பொறி புலனடக்கிப் பூரணத்திற் கலந்து ஆகாயத்திற் சோதிகாட்டி அமர்ந்தருளிய என்னாண்டவனாகிய துரோணருடைய சபச்சடலத்தை, நான் தடுக்கத்தடுக்க இத்துஷ்டத் துய்மன் என்னைத் தடுத்து தறித்து மாளாவசைக்கி எங்களை ஆளாக்கிவைத்தான். இதனாலிந்தப் பாவியென்னலாபம் பெற்றான்? அந்தோ! கொடிய வில்லாண்மை கொண்ட அஸ்வத்தாமன் ஆலகாலங் கொதித் தெழுந்து மேலுமேலும் வருவதைப்போல் வருகின்றானே! கொலைதொ

ழிலுக்குரிய எமனும் மற்ற எவனு மிவனுக்கு எதிர்நிற்க மாட்டார்களே! யாவருடைய பிராணனையும் கைக்கொள்ளு வானே! இனி இதற்கு நாமென்னசெய்யலாம்? என இந்திர குமாரன்சொல்ல, சேனுதிபதியாகிய திர்ஷ்டத் தூய்மன் செந்தழற்போற் சினந்து சொல்லு கின்ருன். ஓ மைத்துனனுகிய மெய்த்தவனே! இதழ்விரிந்த தாமரைமலர் மாலை யணிந்த துரோணுச்சாரியைக் கொல்லுவதற் கென்று என் தந்தை பாஞ்சாலராஜன் செய்த புத்திர காமேஷ்டி யாகத்தில் நான் பிறந்திருந்த படியால், இவன் தலையை வாங்கினேன். அப்படியிருக்க உனக்குத் குருவென்ன நீமெத்த உருகிப்போகிருய்; படுகளத்தி லொப்பாரி பார்ப்பவர்களுண்டா? நல்லது உன்னிஷ்டப்படியே ஆகட்டும். வேதியர் குலத்திற் பிறந்து தநுவாசிரியனு யிருக்கின்றவர் முனையேறிய கணையால் அளவிறந்தவர்களுடைய பிராணனைப் போக்கியது தர்மமா? அநேகம் பேருடைய ஆவியைக் கொள்ளைகொண்ட அழும்புக்காக வரோதப் ஐயனை உயிரழிக்கப் போகாதா? அழித்தால் அதனுல் ஏதாகிலும் வசையுண்டா? நீ இதைக்குறித் தேன் இவ்வளவுதூரம் பேசுகிருய்? உன் யோக்கியமென்ன ஒருவருக்குந் தெரியாதா? வம்மநாயகனுகிய வீஷ்ம ருயிரை நீ வாங்க வில்லையா? அதுமாத்திரந் தர்மமா? இப்போது நீ என்னைக் கடினமாய்ப் பேசியது கனவிரோத மல்லவா? என்று கண்ணிரண்டுஞ் சிவந்து கொதிப்பேறும்படியாய் நின்று பின்னுஞ் சொல்லுகிருன்: ஓ அர்ச்சுன ராஜனே! எங்களுடைய பாஞ்சாலகுல மனைத்தும் பற்றறக் களைந்து பாபமூட்டை கட்டிக் கொண்ட அத் துரோணரென்னும் பாவியைத் தலைவாங்கின தன்மையைக் கேட்டு, கரையேற மாட்டாத துயரக்கடலி லாழ்ந்து கலங்கிப் போர்புரிய வராநின்ற அஸ்வத்தாமனின் யுத்தமுனையில் நான்புகுந்துபோராடி அவனை வெல்லுகிறேன். அல்லவென்ருல், அவனுடைய கையால் நான் சாகிறேன். நீங்கள் உங்கள் பிராணனைக் காத்துக்கொண் டிருங்கள்; இப்போது நான் கூறிய பேச்சுக்கு யாதொரு திருகுமில்லை. இனி நடக்கப்போகிற யுத்தங்களை மாம்பழச்சாற்ருல் செஞ்சாலி வளரும் வயல்சூழ்ந்த வளநாட ரெல்லோருங் காணுவார்கள் என்று சொல்லி யடங்கினுன் திர்ஷ்டத்தூய்மனனவன்.

இப்படி சொல்லவே வனசநாபன் தம்பியாகிய சாத்தகி முனிந்து, தழலெனக் கனிந்து, ஓ திர்ஷ்டத்தூய்மா! என்ன சொன்னுய்? இன்னமொருக்காற் சொல்லு. ஐயோ! தன்னை மறந்து பேசுஞ் சர்வமூடரைப்போல் நீ உன்னை மறந்து பேசுகிருய். அஃதென்னவெனில், கங்காபுத்திரனுகிய வீஷ்மாச்சாரியரை உன் தமயனுகிய சிகண்டி வென்ருன். தநுவாரியனுன துரோணுச்சாரியை நீ கொன்ருய். நீங்களிருவரும் குருவைச் சுட்டு தின்னவந்த பெரும் பாவிகளாய்ப் பழிக்குடன்பட்டிருக்க, இந்திர குமாரனுகிய அர்ச்சுன ராஜன் கொன்ருரென்பது நீதியோ? பராகப் பொடி திணிந்த பசுந்தேனிறைந்த பூமாலை யணிந்த அரசர்களுக் கெதிரில் நீ சொன்ன படியால், உன்னைப் பொருமையுடன் மன்னித்தேன். இன்னெருவன் பேசி யிருப்பானுகில், அவனுடைய நாக்கு இதுவரையிலு மிருக்குமா? ஆ! ஆ! இன்னேரம் என்னபாடு பட்டுப்போம்? என்று உருத்துப் பெருமூச்சுவிட்டிரைந்து சொன்னுன். அச் சாத்தகி வார்த்தையை வீமன் கேட்டு மனவஸ்தாப மடைந்து, ஒரு பக்கத்திலிருந்த அர்ச்சுனன் முகத்தைப் பார்த்து, அடா தம்பி பற்குணு! நீ இச் சாத்தகியும் பூரிசிரரவும் போராடியபோது சாத்தகிக்காகப் பரிந்து பூரிசிராவினுடைய வலது கரத்தை வாங்கிய வல்லபமும், உன் தந்தையாகிய இந்திரனுக்கு இனிய நண்பனுன வில்லாண்மை பெற்ற பகதத்தனைக் கொன்றதுவும், மேலும் அதிகமான தர்மமல்லவோ? நீர் செய்த காரிய மிப்படி யிருக்க, கமல மாலை யணிந்த துரோணுச்சாரியரைத் திர்ஷ்டத்தூய்மன் வதைத்ததுவோ கொடும் பாவமாச்சுது என்று குவடுகள் பொடிபடச் செய்யுங் குவவுத் தோளினையுடைய வாயு குமாரன் சொல்லவும், புராதனப் பொருளாகிய தர்மராஜன் மிகுந்த பொறுமை யுடையவராய், அப்பா! ஒருவரையும் நொந்து கொள்ளாதீர்கள்? இந்த மண்ணுலகத்தில் நல்வினையைச் செய்தபேர்கள் நன்மையையனுபவிப்பார்கள். தீவினையைச் செய்தபேர்கள் தீமையையனுபவிப்பார்கள். ஜகதீசனுகிய கடவுளை நினைத்து எல்லாம் உனது செயலென்று பற்றற விடுத்த பாக்கியவான்கள், வேதவிதிப்பிரகாரம் வினையிரண்டையும் வென்று மேலாகிய மேன்மையடைவார்கள். ஓ தம்பிமார்களே! சொல்லப்படுவதெல்லாம் தீவினையா யிருந்த போதிலும், ஸ்ரீ கிருஷ்ணனுடைய திருமொழி

கொண்டு செய்வோமாகில் ஒரு தீங்குமில்லை.
நாம் செய்வதெல்லாம் பரிசுத்தம். அது முடி
வில் வேதமந்திரத்தை நம்பி வேள்வியில்
உயிரைபோக்குந் தன்மைபோலாகும் என்று
சத்யக்யான உத்தமன் சொல்ல, அவ்வாய்மை
யை முத்திவித்தாகிய முகுந்தன் கேட்டு பருந்
துங் கழுகும் பந்தலிடாநின்ற படுகளத்தில்
முன் பின் பாராமல் பலபேரைக் கொன்ற பல
வானுக்கல்லவோ வீரசொர்க்கம் விதித்திருப்
பது; இவைகள் அருச்சுனனுக்குத் தெரிந்
திருந்தும், தெரியாதவரைப்போல் சொன்ன
தெல்லாம் ஆசாரியர் இறந்தாரென்னு மாறு
மையாம். அவசரப்பட்டுச் சொன்ன சொல்லே
யொழிய வேறன்று. அது போகட்டும்; உல
கத்தார் தூறி நிந்தித்து ஏசும்படியாகவோ?
அல்லது தேறிச் சிந்திக்கும்படியாகவோ?
எவ்விதத்திலேயோ ஒருவிதந் தீர்ந்து முடிந்
துப்போன செய்கைக்கு இனி யோசிக்க
வேண்டிய தென்ன விருக்கின்றது. தன் தகப்
பன் இறந்த துக்கஞ் சகியாமற் சர்வ சம்ஹார
கால சதாசிவனுடைய மகனைப்போல் வரு
கின்றான் அஸ்வத்தாமனனவன். அவனை
வெல்லும் வல்லமையைக் குறித்து யோசிக்கா
மல் தலைக்குமேல் வந்திருக்குஞ் சங்கடத்தை
விட்டு, வீணான காரியத்தை யேன் யோசிக்கி
றீர்கள்? என்று மேகவண்ணனுரைக்கக்கேட்ட,
சுகபோக வண்ணனாகிய தர்மராசன் சொல்லு
கிறார். ஓ நவமேக அவதார நாராயணனே!
கேளும், அவயவங்களுடன் அழகாகிய உடலை
மெய்யென் றெடுத்தோம் இது வெறும்
பொய்யே இவ்வுடலால் நாம் உணர்த்திலேம்;
இனிமேலுந் தேறத்தக்கது ஒன்றுமில்லை;
இனிசொல்லுவதிற் கிடமில்லாமல் எல்லாந்
தெரிந்த சௌரியாகிய தேவரீருடைய திவ்ய
கடாக்ஷமே எங்களுக்குத் தீரத்துவமாகிய
திறமென்று ஸ்திரமாக நம்பி யிருக்கின்றோம்.
இஃது உண்மையாகிய சத்தியமொழி என்று
அகமும் முகமும் அலர்ந்து ஆனந்தமயமாய்ச்
சொல்லிய தர்ம புத்திரனுடைய முகத்தை
ஜநார்த்தனன் பார்த்துச் சிறுநகை விளைத்து,
நல்லது யாவரும் படையெடுத்து வாருங்க
ளென்று சொல்லி, நால்வகைப் படையுங் கட
லெனச்சூழ, விண்டலமெழுந்த கொடி குடை
முதலியதுங் கொண்டலை மறைக்க, முன்னும்
பின்னுமாய் முடிமன்னர் நெருங்க, அவ்வன்
னக் காசாமலர் மேனி மாலும், மன்னும் வில்
லாளியாம் வாசவ னைந்தனும் போர்புரியப்
போனார்கள்.

## அஸ்வத்தாமன் உக்ர நாராயணாஸ்திரம் விடுக்கக் கண்ணன் யாவரையுந் தேர் விட்டிறக்கி நிராயுதராய்ப் பணிவித்தல்

அப்போது சரற்காலத்து மேகம் பொன்
னிறம்போல் மின்னி யிடித்து மழைபொழி
யுந் தன்மைபோற் புங்கவங்களேற்றி, கண்
கள் சிவந்து, காந்தி மலிந்து, கனற்பொறி
பறந்து, கடுங்கோபங் கொண்டு, நுதற்கண்
ணுருத்திரன் போல் விண்ணதிரச் செய்து
மண்ணதிரவந்த வேதப்பரிந்தாமன் வணங்
காமுடி மன்னனைக்கூடி, அவன்பேரில் மிகு
ந்த பக்ஷநாடி, ஓ அரசனே! அரிய தவஞ்
செய்து என் தந்தைபெற்ற ஆலகால விஷத்
துக் கொப்பாகிய உலகழிக்கும் உக்ர நாராய
ணாஸ்திரத்தை எனக்குக் கொடுத்தார். மகத்
தாகிய பரிசுத்தமுள்ள அந்த அஸ்திரத்தை
தொடுத்து, சத்துருக்களைக் கெடுத்து, என்
றந்தை மடிந்த விசனத்தை விடுப்பேன்.
என்று பற்பல சபதவாக்கியங்களை அஸ்வத்
தாமன் சொல்ல, இராஜாதி ராஜன் கேட்டு,
உன் தகப்பனைக் கொன்றவர்களைக் கொல்ல
உனக்குக் கோப மிருக்குமாகில், அவர்கள்
முடியும் வகையைத் தேடவேண்டியதே நல்
லது; இவ்வஸ்திரத்தை விடுப்பையாகில், திரி
புவனமும் நிலைபெற்று நிற்பது அரிதரிது
என்று அரவக்கொடியோ னெடுத்துத் தடுத்
துச் சொல்ல, ஓ அரசனே! யான் கொண்ட
சபதத்தைத் திரிமூர்த்திகள் வந்து தடுக்கி
னுங் கேளேன். இந்நிமிடத்தில் என திரண்டு
புஜமும் திரண்டோங்கப் பாண்டவர்களுக்கு
எதிர்சென்று, பலம்பொருந்திய அக் குந்தி
மைந்தர் ஐந்து பேரையும், அவர் புத்ரமித்ர
வருக்கத்தையும் பாழாக்கித் தலை துணித்து,
என் தகப்பன் தலையை வாங்கின யாகசேனன்
மைந்தன் திர்ஷ்டத்துய்மனுடைய சிரத்தை
யும் துண்டித்து நாசப்படுத்துகிறே னென்று
சொல்லித் தன் தேரைத் திசாதிசைகளும் திடு
திடு கடகட படபடவென் றதிரச் செலுத்திக்
கொண்டு சென்று, வரிகல் பொருந்தி மணி
கள் கட்டி மாலைபுனைந்து வீறி யுயர்ந்த
வில்லை வளைத்து நாணி தொடுத்து சொல்லு
தற் கரிதாகிய வேதமந்திரங்களை விளம்பி,
பூசை முதலிய நைமித்தியங் களெல்லாம் புரி
ந்து, உலகழிக்கும் உக்ர நாராயணாஸ்திரத்தை
ஆகர்ணபரியந்தம் இழுத்து தொடுத்துவிட்
டான் சொற்சோர்வில்லாத துரோணாச்சாரிய

ருடைய புத்திரனாகிய அசுவத்தாமன். அவ
னது கரத்தைவிட்டுப் புறப்பட்ட அக் கணை
யானது, சந்திரமண்டலம் வரைக்கும் உந்திப்
பந்துபோலெழுந்து, ஊழிக்காற்றும், உகாந்த
காலாக்கினியும், ஒன்றுபட் டெழுந்ததைப்
போல் இரைத்து, கனன்று பொங்கி, காருஞ்
சுழல் - பாருஞ்சுழல் - மகமேருவின் வேருங்
கழல் மன்னவர்களுடைய போருமுழலப்
போர்க்களம் புகுந்து, தீர்க்கமாகிய ஐவரை
யும் வாயிற் போட்டுக் கொள்ளும்படிக்கு
வந்து திமிர்தண்டங் கொண்டு, அண்ட
ரண்ட முதலிய பிர்ம்மாண்டமும், அகில
புவன கர்ப்பாண்டமும், எண்டிசாதி சயி
லங்கொள்ளும் எண்ணில் சராசரங்களும்
மண்டலாதி திகழண்டமும், கொண்டலாதி
புறண்டமும், பிண்டு பிளந்து திரிந்து போ
கும்படியாய்ப் புதுமைகாட்டி வந்தது. அப்
படிவந்த புருஷோத்தமன் கணையைப் புண்
டரீகாட்சன் கண்டு, அண்டையில் நிற்கின்ற
யாவரையும் அழைத்து, அவரவர்கள் ஆயு
தங்களுடன் வாகனம்விட் டிறங்கி அடக்க
வணக்கமாய் கைகுவித்து நில்லுங்களென்று
கூறினர். அவ்வார்த்தையைக் கேட்ட அர்ச்சு
னன் மறுமொழி யொன்று மாடாமல் தேர்
விட்டிழிந்து, செங்கரத்தைச் சிரத்தின்மேற்
கூப்பி ஸ்ரீ நாதனைச் சிந்தை செய்திருந்தான்.
இவ்வாறு பாகசாதனன் பிள்ளையாகிய பார்த்
தன் பாகன் சொல்லிய பாகப்படிக்கு ஆயுதப்
படைகளை நீக்கி, தங்கள் சேனைக ணிறைந்த
திசையெல்லாமுஞ் சென்று, தீரவீர வேந்த
ரைக் கண்டு, வாகனங்களும், ஆயுதங்களும்
விட்டழிந்து விரைந்து வணங்குங்களென்று
மேகம்போ லிரைந்து விளம்பினன். அந்த
வார்த்தைக் குடன்படாத வீமசேனன் ஒரு
வன் தவிர மற்றப்பேர்க ளெல்லோரும், வில்-
வாள் - வேல் முதலாகிய ஆயுதங்களை யெல்
லாம் விட்டு மண்மீதிறங்கி, தலைமேற் கை
யெடுத்துத் தத்வக்ஞான யோகிகளைப்போல்
நின்று, இரசம்-இரத்தம் - சுக்கிலம் - மூளை -
தசை - எலும்பு-தோல் என்னும் தாதுக்களே
ழுந் தன்மயமற்று ஒடுங்கி யிருந்தார்கள்.

உக்கிர நாராயணாஸ்திரத்தோ டெதிர்த்துநின்ற
வீமனைக் கிருஷ்ணார்ச்சுனர் விலக்கித்,
தாழ்மைகூற அதுகண்டது
விலகுதல்

அப்போது அஸ்வத்தாமன் எடுத்துத்
தொடுத்த பெரும் வாளியானது, சுடரொளி
போலிலங்கிப் புறப்பட்டு சக்ரவாளச் சல
நிதிநேமியைக் கிழித்து, சமுத்திரஞ் சூழ்ந்த
பூமியைத் துளைத்து தந்திகளமைந்த திசை
களைப்பீறி, சகலமுமடங்கிய அண்டகூடத்
தைப் பிளந்து, சர்ப்பங்கள்பொருந்திய பாதா
ளத்தைப் பெயர்த்து, சத்தியலோகத்தைத்
தாங்கி தணலாகிய வடவாமுகாக்கினியைத்
தூக்கி, சகலமலைகளையுந் தவிடுபொடியாக்கி,
ஜகமெல்லா நிறைந்து பரந்து சீறிவீறி ஒவ்
வொருவருடைய மயிர்க்காலுக்கு ஒவ்வொரு
கணையாக வந்து யுத்தகளம் புகுந்து நோக்
கிய காலையில், ஒருவருந் தனக்கு நேர்வந்தெ
திர்த்து யுத்தஞ்செய்யாமல் நிராயுதபாணிக
ளாய் நிற்கா நின்ற தருமராஜனுடைய சேனை
களைக்கண்டு, வெறுங்கை வீணர்பேரில் நம்மை
விடுத்தானென்று கடுகடுத்துத் துடிதுடித்துக்
கவலையுற்றுப் படபடத்து அஸ்வத்தாமன்
இருக்குந் திசையை நோக்கி, ஆலகால
விஷம்போற் றிரும்பி, வழியில் வாகன
மடுத்து ஆயுதமெடுத்து அஞ்சாமல் நிற்கின்ற
வீமசேனனைக்கண்டு அவன்மேற் பாய்வதா
யது. அவ்வாளியைக்கண்ட வாயு குமாரன்
மனந்தளர்வில்லாமல்நேராகத் தேர்செலுத்தி
கண்கள் செவந்து, உருவமான வில்லை வளை
த்து, உலைவிலா வீரச்சொல்லை விளைத்து, எம
தர்ம ராசனைப்போலெதிர் சென்று நின்று,
கொடுங்கோபக் கண்ணனாகிய அசுவத்தாம
னுடைய நெடுங்கணையை மதிக்காது, மற்றவர்
களைப்போல் துதிக்காது, எந்தெந்த காலத்
தில் எந்தெந்த ரூபமாய் வருகின்றனவோ?
அந்தந்த காலத்தில் அந்தந்த ரூபமாகிய
வேற்றுரு அமைந்த அக்னியாஸ்திரம், வாய்
வாஸ்திரம், இந்திராஸ்திர முதலாகிய திவ்
விய தேவதாஸ்திரங்களால் மாற்றி ஒன்றுக்
கொன்று பின்வாங்காதபடி மண்டியிட்டடித்
தான். இதுவுமல்லாமல் வீமசேனன்விடுகின்ற
பெருமூச்சினால் அடியுண்டும், கடுங்கோபாக்
கினியினால் எரியுண்டும், கடுமையாகிய பாணங்
களினால் ஒடியுண்டும், விற்குதையால் உதை
யுண்டும் போனதல்லாமல், நாண் ஓசையால்
அறையுண்டலைந்தும், கடககங்கண மணிந்த
திணிந்தபுயத்தினாலிடியுண்டலைந்தும், தூறிக்
கூறிய வீரமாகிய பேச்சினால் வெருண்டுகுலைந்
தும், மாறிமாறித் தேரை முடுக்கி விடுக்கும்
விசையினாற் பொடியுண்டுத் திரிந்தும், இப்
படி வாயுபுத்திரனாகியவீமசேனனாலும்அவன்
விடுக்குங் கணைகளினாலும் மிகுந்த வருத்தத்
துடன் படாதபாடும்பட்டது அஸ்வத்தாமன்

விட்ப்பட்ட உலகழிக்கும் உக்கிர நாராயணஸ்திரமானது. ஐயா ஜெனமேஜெய மகாராஜனே! அவ்வீமசேனனுடைய திட்தைரிய வீரபராக்கிரமச் செயலை யென்னென்று சொல்லுவேன்? அப்பால் ஒருவன் எவ்வளவு பலசாலியாயிருந்து தன் வல்லமையால் இதம்பெற நடந்தாலுந் தப்பாமற்றுக்கும் ஊழ்வினையைப்போல் வீமசேனனானவன், தன்னுடைய புஜபலத்தினால் அவ்வத்தாமன் தொடுத்த அவ்வஸ்திர பலத்தினால் அவ்வத்தாமன் றொடுத்த அஸ்திரத்தை விலக்கியும், அது விலங்காமல் கலங்காமல் வந்து, அவ்வூழ்வினையைப்போல் வாசமாலையணிந்தவீமசேனனுடைய மார்பைத் துளைக்கும்படியாய் மேற்கொண்டு நேர்க்கி வருவதாயது. அப்படி வருகின்ற அஸ்திர தீக்ஷண்யத்தை எமது கர்த்தனாகிய அறிதுயில்மர்ந்தோ னறிந்து, ஆ! ஆ! மோசம் வந்ததென்று அர்ச்சுனனுந் தானும் வீமசேனனிடம் ஓடிவந்து தேர்விட்டிழியும்படிக்குப் பலதரஞ்சொல்லியும், அதைக்கேளாமல் அழியாத்திடங்கொண்டு போர் புரிந்திருந்த வீமனுக்கருகிற் றுங்கள் சென்று, அவன் கைப்பிடித்த வில்லையும் வாளியையும் பிடுங்கியெறிந்து, தேரைவிட்டிழிந்துபூமியிற் கவிழ்ந்து விழும்படியா யிழுத்துத்தள்ளி, ஓம் அரிநாராயணஸ்திரமே! இதோ உம்மைப் பணிந்தான் வீமசேனனென்று பணிமேற் றுயின்ற பரந்தாமன் சொல்லினர். உடனே அதிக வெட்கத்துடன் நாணமுற்று நாராயணஸ்திரந் திரும்பிப்போய் விட்டது. ஓ மகாராஜனே! தீர்க்காயுசுடனிருக்கத் திறம்பெற்றவர்களை இடையிலழிக்க எவர்களாற் கூடும்? ஒருவராலுங் கூடாது. மேலும் நால்வகைத் தோற்றமெழுவகைப்பிறப்பு எண்பத்தினான்கு நூறாயிரம் யோனி பேதங்களாயுள்ள சகலவுயிர்களையுஞ் சவரட்சணை செய்யும் பகவானே முன்னின்றால், அவர் பெயர் கொண்ட அஸ்திரமென்செய்ய வல்லது.

### அஸ்வத்தாமன் அக்கினியாஸ்திரம் விடுக்க, அதுவும் பயன்படாதுபோகவே சமர்க்களம் விட்டு தவக்களமேக நின்றவனை வியாசர் தேற்றி பாண்டவரையும் வாழ்த்திப்போதல்

அப்பால் லட்சுமி நாராயணனுடைய அஸ்திரமானது முகமாறி வரக்கண்ட அஸ்வத்தாமன் மிகுந்த கோபங்கொண்டு, இதழ் துடித்து, முகம் வியர்த்து, அனலெனச் சீறி ஆக்ரமபராக்கிரமத்துடன் அக்கினியாஸ்திரத்தை யெடுத்து ஆரோகணஞ்செய்துவிட்டான். ஒப்பில்லா அஸ்வத்தாமனாலேவிய அவ்வக்கினிக் கணையானது, ஆகாயத்திலுயர்ந்து பொங்கி, வடவா முகாக்கினிபோலெழுந்து வந்து, சந்திரமண்டலமும், சூரியமண்டலமும், அந்தரபதியும், மந்திரபதியும், தொந்தமாம் பதியும், விந்தமர்க்கெவியும், எட்டுத்திசையும், எட்டுப்பாலரும், எட்டுவசுக்களும், எட்டுக்கரியும், எட்டுக்கிரியும், எட்டுநாகமும், ஏழு மேகமும், ஏழு கடலும், ஏழு மண்டலங்களும், வெதும்பித் ததும்பி வெந்துருகும்படியாய் புலிங்கசாலங்களைப் பொழிந்து, செழுஞ் சோருகொண்டு வராநின்றது. அப்படி வருகின்றதைச் சிவபெருமானுக்கு தொண்டனாய்ப் பாசுபதாஸ்திரங் கொண்ட செஞ்சிலை விஜயன்கண்டு, ஜெபதப முதலிய உபசாரத்துடன் சிருஷ்டி கர்த்தாவின் பேர்கொண்ட பிரம்மாஸ்திரத்தைச் சிந்தித்து விடுத்து, தன்னை யடுத்துவந்த தீக்கணையைக் கெடுத்தான். இப்பிரகாரம் வில்வேதமுணர்ந்த குருபுத்திரன் விடுத்த வெம்பகழிக் கும்புகளெல்லாவற்றையும் வம்புப்படுத்தி முனைசாய்ந்து போகும்படியாய்ச் செய்த நரனுடைய திறத்தை அஸ்வத்தாமனுணர்ந்து மகாவாட்டமாய் மனமெலிந்து, தன் கையிலிருந்த வில் அம்புறாத்தூணி முதலானவைகளைப் போட்டுவிட்டு, தேர்விட்டிழிந்து, பற்றில்லார் வேதங்களையும் தனுவேத முதலிய மந்திர நெறிகளையும் உண்மையென்று நம்பப்படாது. இவைகள் பொய்யான மந்திரமேயல்லது மெய்யான மந்திரங்கள் அல்ல. இம்மந்திரங்களுக்குரிய மூவர்களும், தேவர்களும் ஆளைப்பார் முகத்தைப் பாரென்று பட்சபாதமா யிருக்கின்றார்கள். இதுகெட்டுது என்று மனநொந்து முனிந்து, பட்டத்துயானை மதமேறி கட்டத்தனமாய்த் துறிச்செல்லும் தன்மையைப்போல் போர்கொடுத்த யுத்தபூமியை வெறுத்து, முத்திக்குறிய தவத்தைக்குறித்து, காடேகதியாய்ச் செல்லுவதாயினன். அக்காரணத்தைக் கண்டு தடுப்பவரில்லாத காலத்தில், தண்டு கமண்டலம் முப்புரிநூல், மிதியடி, விபூதி ருத்ராக்ஷமாலிகாபரணம், காவியுடையும், கனத்த சடையும், மின்னற்பிரகாசமும் வேதமந்திரம் விளம்பிய நாவுமுடைய வேதவியாசர், சுப்ரமண்யக் கடவுளைப்போன்ற அஸ்வத்தாமனுக் கெதிர்வந்து நின்றார். பரமசிவனுக்கொப்பாகிய வேதவியாசரை கண்டவுடனே

அஸ்வத்தாமனின்று, சிந்தை மெலிவோடுந் தீர்க்கதண்டமாக விழுந்து நமஸ்கரித்தெழுந்தான். இப்படி சிந்தை மெலிந்து வருந்தியெழுந்த மைந்தனுக்கு அவராசீர்வதித்து இக்கோலத்துடன் எவ்விடம் போகிருயென்று வேதவியாசர் கேட்டனர். அதற்கவன் என்றந்தையிறந்த விசனத்தால் தவஞ் செய்யப் போகிறேன் என்று சொல்லினன். அதை வேதவியாசர் கேட்டு, அப்பனே! யாகசேனன் செய்த யாகத்தில் வரப்ரசாதமாக பிறந்த திர்ஷ்டத்துய்மனுல் உன் தகப்பனிறக்கும்படிக்கு அந்திவண்ணத்திறைவன் அநுக்கிரகஞ் செய்திருக்க, அவ்வழலேந்தியினுடைய ஆக்கினையின்படி வெற்றியடைந்த தல்லாமல், மற்றொருவிதத்தினுல் விற்பாணமுதலிய ஆயுதங்களைக்கொண்டு உன்றந்தையை வெல்ல நல்லவல்லவர்கள் தொல்லுலகிலில்லையென்று சொல்ல வல்ல நல்லவர்கள் பல்லுலகிற் பலருண்டு. ஆகையால், இதைக்குறித்து நீ விசனப்படலாகாது. ஓமயில்வாகனனையொத்த வல்லமைபெற்ற மாசிலாமணியே! உன்னுடைய உள்ளங்கொள்ளாக் கோபத்துடன் யுத்தத்தை விடுத்து, மெத்தப்படபடத்து, சித்தப்பிரமைகொண்டு வந்த சேதியைச் சொல் என்று காளிங்கன்மீது நடித்த கருணை கடலை நிகர்த்த கண்ணனைப்போற் சாந்தமொழியாற் கேட்ட சடைமுடி தரித்த வியாசரை, மங்கை பாகனென்னுஞ் சங்கர புத்திரனுகிய அஸ்வத்தாமன் பார்த்துச் சொல்லுகின்றுன். ஓ எமது கர்த்தாவாகிய ஈசனே! கேளும்; என்போலொத்த பிள்ளையிருக்க, எனக்கெதிரில் இறக்கப் போகாத என்னையன் இறந்ததைக் குறித்து மறந்துபோகா விசனத்தில் மாழ்கி யிருக்கின்றேன். அது ஒருபுரத்திலிருக்க, மேலுமேலும் வேடிக்கையாக நேரிட்டகுறை என் சிந்தை நிறைந்திருக்கின்றது. அது செப்பத்தரமல்ல. ஓ எங்கள் தேவனே! அஃதாவது யாவருக்கும் பொதுவாகியது வேதம். அதனுலாகியது மந்திரம். அம்மந்திரத்திற் குரியவர்கள் தேவர்கள் முதலிய மூவர்கள். அவர்கள் கொடுக்கும் திவ்வியாஸ்திர முதலியவைகளை எடுத்துத் தொடுக்குங் கைத்தந்திரமாகிய சாகசம், குறிப்பு, நிதானம் இதுகளெல்லாம் எல்லாருக்கும் ஒன்றேயொழிய, இரண்டில்லை. எங்களையாவாகிய துரோணர் தனுவாசாரியராயிருந்து, எங்களிருவருக்கும் ஒரேவிதமாய் அவைகளையெல்லாம் அநுக்கிரகஞ் செய்திருக்க, அம்மந்திர முதலிய வல்லமைகள் அர்ச்சுனனுக்கு துணைப்பட்டு உறிமைச் செய்வதுபோல எனக்குச் செய்யாமற் பாழாகிப்போய், நல்ல போர்முகத்தில் முனைமடங்கி என்னை மோசஞ்செய்தபடியால், வில் முதலாகிய யாவையும் எறிந்துவிட்டு, வேதமுதலிய மந்திரங்களும் தேவர்களும் பொய்யாய்ப் போனுர்களென்று வெறுத்து, இனிமேற் சொப்பனத்திலும் நினைப்பதில்லை யென்கிற மனச் சலிப்போடுஞ் சமர்விடுத்துத் தவமடுத்து வந்தேன் என்று அஸ்வத்தாமன் மெத்த வருத்தத்துடன் சொல்லவே, அம்மொழியைக் கேட்ட வேதவியாசர் சொல்லுகின்றுர்.

ஐயா அஸ்வத்தாமனே! கேளும்; திரிநேத்திரமும் மகமேரு வில்லையுங் கொண்ட சிவபெருமான் இவ்வுலக முதலிய சராசரங்களைப் படைத்தருளிய காலத்தில், மாதவனுகிய மாயன் மகாசேன னென்பவனைக் குறித்து, அவர் செந்தாமரைப் பதத்தை நினைந்து, சிந்தை செய்யும் தன்மையனுய் வந்திருந்து, வாட்டமில்லாத தவமுற் றிருந்தார். அம்மாதவனுக் கெதிரிற் கங்காதரன் பிரசன்னமாய் வந்து, நீர் என்னை வருந்தி யாது விரும்பித் தவஞ்செய்கிறீர் சொல்லுமென்று கேட்க, அப்படி கேட்ட ஈசனைக் கேசவன் வணங்கி, ஓ மலரகிதராகிய மகாதேவே! பிர்மசிருஷ்டியினு லேர்ப்பட்ட ஆத்மகோடிகளுக்கெல்லாங் குறைவில்லாமல் நிறைவாகிய திதியைச் செய்யுமென்று எனக்கு ரட்சகத் தொழிலைக் கட்டளையிட் டிருக்கின்றீர். நானப்படி நடத்தி வரும்போது, பூலோகத்திற் பலம் பொருந்திய துன்மார்க்கர் சிலரிருந்து, சாபானுக்கிரக சாமர்த்தியமும், ரட்சகத் தொழிலும், தங்களால் நடத்தப்படுமென தர்மவிரோதமாய்த் தாறுமாறு செய்கின்றுர்கள். அப்பேர்ப்பட்ட தீயருடைய தலையைத் தறித்து, உடலை முறித்து, தர்மத்தை நிலை நிறுத்தும்படி கருணைசெய்ய வேணுமென க்கண்ணன் கேட்க, கயிலைநாதர் சொல்கின்றுர். ஓ நாராயணனே! உமதிஷ்டபடி நீர் ஜெயங் கொள்ளும்படியாய் வரங் கொடுத்தோம். இதுவுமல்லாமல், இயாவரிடத்தில் அந்யாயமும், அமைந்திருக் கின்றனவோ? அவர்க்ளுக்கு வில்லின் வல்லபமும், மேலாகிய ஆயுதமும், மந்திர பலம் பெற்ற வாளிகளும், பிரயோசனப் படமாட்டா; உம்மைப் பகைத்து எதிர்ப்பவர்களின் வரங்களும், உரங்களும், மற்ற வல்லபம் யாவும் உம்மை யடை

யக்கடவன. நீர் முறைமையாக வுறைந்து தருமபரிபாலனம் புரிந்து, திதித்தொழிலைச் செய்யக்கடவீர் என்று சிவபெருமான் சொல்லித் திருக்கயிலைக் கெழுந்தருளினர். இப்பால் பச்சைவண்ணப் பரந்தாமனாகிய அச்சுதன் தன் னிச்சையின்படிக்கு நரநாரண ரூபமெடுத்து, இவ்வுலகம் துதிக்கவந்து பாவத்தொழிலையுடைய அக்கரைவோட்டி, தேவர்களைத் தர்மத்துடன் நிலைக்க நாட்டி, சத்திய கருமங்களை நித்தியமா யோங்கும்படி ரக்ஷிக்க வெழுந்தருளினர். இப்படி யெழுந்தருளிய இந்த ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியும், இந்திரகுமாரனாகிய நரனும், நரநாராயண சொரூபமாக்கும். ஓ நான்கு வேதமு முணர்ந்த நாவலனே! ஒளியுமொலியு மணமுங் கலந்த கங்கையும், திங்களும் பொங்கரவி முடித் தருளிய செஞ்சடை விநோத னென்னுஞ் சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளிய வரத்தின்படிக்கு, வஞ்சகமாகக் குரு குலத்தில் விளைந்த வெஞ்சமறை முடிப்பதற்கு இப்போதும் வந்து உதயமானார்கள். அவர்கள் எந்தப் பிறப்பிலுஞ் சந்திர சேகர சடாதாரியாகிய ஒப்பில்லாத உமாபதியை வணங்கி ஆராதனை செய்து வருகின்ற அன்பினையுடையவர்களாதலால், மதங்கொண்ட சத்துருக்களுக்குச் சிங்கம்போ லெதிர்த்துப் பங்கப்படுத்தி, மெத்தவேசில் யுத்தமுனை வென்று மேன்மை பெறுகின்றார்கள். ஆகையால், எதிரிகள் பிரயோகஞ் செய்யாநின்ற அஸ்திர சஸ்திரங்கள் யாவுமடங்கி, இந்நர நாராயணர்களுடைய எண்ணப்படி மேம்பாடாகவே நிறைவேறும். என்று உலகிலுள்ளோர் பலருந் தன்பேரில் ஆசைப்பட்டு வந்திருக்கும்படியாய் தானொருவர்பேரிலும் ஆசை வையாமல் நிராசைகொண் டிருப்பவராகிய வேத வியாசர் சொல்ல, அவ்வார்த்தையை அஸ்வத்தாமன் கேட்டுக் கும்பிட்டு வணங்கி, ஓ வேத முனிவனாகிய நாதனே! துஷ்டராகிய பேர்களை நஷ்டப்படுத்தி இஷ்டமாகிய பலத்தை நரநாரணர் பெறுவார்களென்று தேவரீர் சொன்ன வாக்கியம் யோக்கியமே; சிவபூஜாவிதேயராகிய சிஷ்டர்களைக் கஷ்டப்படுத்தி ஜெயம் பெறுவார்களென்பது எப்படி! பிரம்மகுலத்திற் பிறந்த அடியேன் மைப்படியுங் கண்ணிகளுளாகிய வேத வேதாந்த நாதமூர்த்தியைப் போற்றி, அவருடைய கிருபையினாலே நலம்பெறப் பெற்ற நல்ல படைகளெல்லாம் இந்நர நாராயணருடைய வில்லின் வல்லபத் திறங்களினால் வீரமழிந்து போகவேண்டிய தென்ன? என்று அசுவத்தாமன் கேட்க, வேதவியாசர் சொல்லுகின்றார்.

கேளும் அஸ்வத்தாமனே! மேற்சொல்லிய நரநாரணரிருவருந் தோகை பாகனாகிய சுந்தரேசனைப் பாணலிங்கமாகிய பேருருமயமாயேற்றிப்போற்றி இறைஞ்சிப் பணிந்து சிந்தித்து வருகிறார்கள். நீயோவென்றால்? உன்னுடைய கரத்தால் நல்லுருவொன் றுண்டாக்கி ஆகமமுறைப்படி பூசிப்பாய். இவ்விரண்டு திறங்களில் உத்தம மெதுவென்று உன் சித்தத்திலே யோசித்து உணரவில்லையோ? சிவபெருமானை உருவாகச்செய்து பூசிப்பதிலும் பாணலிங்க வடிவாகச்செய்து பூசிப்பது ஆயிரம்பங் கதிகமாதலால், அவர்கள் நினைத்தபடியே முடியும். என்று வேதவியாசர் விளங்க உரைத்தனர். இப்படித் தன்னிட மனோபாவங்களை அறிந்து சொல்லிய வேதவியாசருடைய பாதத்தில் அஸ்வத்தாமன் வீழ்ந்து, சுவாமி தேவரீர் சொல்லிய லிங்க பூஜாவிதியை அடியேனுக்கு உபதேசித்தருளினால் அவ்விதியின்படிக்கு இன்றுமுதல் அனுஷ்டிக்கிறேன் என்று அன்புடன் சொன்னான். அம்மொழியைக்கேட்டு வேதவியாசர் அனுக்கிரகஞ் செய்கின்றார். ஓ செந்தழல்வாணனே! நீ திரும்பி யுத்த பூமிக்குப்போய் வெற்றி பெறும்படியாய் பாடுபட்டு அரவக்கொடியோன் அழிந்த பிற்பாடு, என்னுடைய தபோவனத்திற் வருவையாகில், அப்போது உனக்குத் தெரிவிக்கிறேன் என்று வியாசர் சொல்லவும், அப்படியே வருகிறேனென உறுதியாகச்சொன்ன அஸ்வத்தாமனை வியாசர் ராஜாதிராஜனாகிய துரியோதனனுடைய பலம்பொருந்திய சேனையினிடத்திற் போய் கலக்கும்படியாய் அனுப்பிவிட்டு, பிற்பாடு பாண்டு புத்திரரிடத்திற்குச் சென்றார். இவரைக்கண்ட பாண்டவர்கள் தாழ்ந்தெழுந்துப் பூசனைசெய்து, புகழ்ந்து மகிழ்ந்து நின்றார்கள். அவர்களுக்கவர் ஆசீர்வதித்து, குரு புத்திரனாகிய அஸ்வத்தாமனுடைய சங்கதிகளையெல்லாம் அர்ச்சுனனுக்கு ரதசாரதியாகிய அருளாளனிடத்திலுரைத்து, அவருக்கருகாமையில் நின்றனர். அப்போது அர்ச்சுனன் வணங்கி, என்னாண்டவனே? இந்தப் போர்க்களத்தில் நான் எப்பாணங்களை தொடுத்தாலுந் திரிநேத்திரதாரியாய் ஒரு மகாபுருஷன் சூலப்படையுடன் தோன்றிச் சத்துருக்களைக்

கொல்லும்படியா யிருக்கின்றான். இந்தப்பிரகாரம் என் பாணங்கள்தோறும் விளையாடிக்கொண்டிருக்கிற காட்சியைக் கண்டு யான் களிகொண்டிருக்கின்றேன் இதென்ன காரணமென்று அர்ச்சுனன் கேட்க, வியாசர் சொல்லுகின்றார். அப்பா அர்ச்சுனா! நீ மகா தேவனைப் பாணலிங்கமூர்த்தமாய் மகா பத்தியுடன் பூசைசெய்கிற அன்பிற் சிறந்தவனாகையால், அச்சிவபெருமானானவர் உன்னிடத்தில் அன்புகொண்டு இரசியமாய் விளங்குகின்றார். இன்னமும் உன் சிந்தையினிடத்தில் வந்திப்புடன் அவரைவிடாமற் பந்திக்கக்கடவை என்று அருள்புரிந் தாசீர்வதித்து, தன் தவச்சுழலுக்கு போனார் வியாசர். இப்பால் அஸ்வத்தாமன் துரியோதனனுடைய சேனைகளிற் போய்கலக்க, அதுகண்ட அதிரதர் முதலாகிய சிலைப்படை வீரரெல்லாருஞ் சேர்ந்து மறுபடி யுத்தஞ்செய்ய, அப்போது இருபடைகளிலும் நெருங்கி நாலவகைச் சேனையு மிறந்து, மற்றைய ரங்கு நிலைத்துநிற்காமற் கலைந்து பறந்து போனார்கள்: முதனாள் யுத்தமுதற் பதின்மூன்றாநாள் வரைக்கும் இறந்தபேரை பார்க்கிலும், பதினான்காநாள் நடந்த பகலிராச் சண்டையிலும், இப்பதினைந்தாம் நாள் சண்டையிலும் இறந்தபேர்கள் பதின்மடங்கு தாஸ்தியா யிருந்தபடியாலும், ரத்தவெள்ளம் பூர்த்தியாயோடிய துடியாலும், நிலைபெற்ற சூரியன் நிற்கப்பயந்து; மேகமண்டல மளாவிய சோலையில் மறைந்து நீலநிறங்கொண்ட வேலையில் மூழ்கினான்: உடனே இருள் மூடியது. ஒருவர்முகம் ஒருவருக்குத் தெரியாமல் படி வந்து கவிந்த இரவைக்கண்ட தர்மராஜன், அக்ஞானத்தைக்கண்டு பயந்த விக்ஞானவந்தாளைப்போல் இளைத்து,இன்றையப்போர் இதுவரையிலும் போதுமென்று நிறுத்தி, மெலிந்துபோன நால்வகைச் சேனை வீராளுடன் வீரகண்டைத் தரித்த தம்பிமாரையும் அழைத்துக்கொண்டு வேசாறலுடன் பாசறையடைந்தார். இவ்விடத்தில் மதி மயக்கங்கொண்டமனத்தனாகிய துரியோதனன்,ரதகஜதுரகபதாதிகள் முதலாகிய தானைவீராளுஞ் சேனைவீராளுஞ் சூழ்ந்து வரும்படியாக, சஞ்சலசித்தனாய் வாடிப்பாடி வீட்டிற்குள் புகுந்தான். இந்த ரணக்களத்தினில் நாய், நரி முதலானதும் தின்றுக் கொழுத்து ஜெயம் பாடிக்கொண்டு இருந்ததுகள். பூதவேதாளங்கள் முதலாகிய அனைத்தும் பொங்கியார்த்தன.

## பதினைந்தாம்போர்ச் சருக்கத்தோடு

துரோணபர்வம் முற்றிற்று.



ஸ்ரீ கிருஷ்ணாய நம:





ஸ்ரீ ருக்மிணீ ஸத்தியபாமா ஸமேத ஸ்ரீ வேணுகோபால பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீ மஹாபாரதம்

எட்டாவது,

## கர்னபர்வம்

கண்ணன் துதி

மாதுல னாகியு மேதில னாகியும் வஞ்சன் கஞ்சன் வரவிட்ட
பூதனை தன்னுயிர் முலைபொழி பாலொடு போதர வுண்ட புயல்வண்ண
மாதவ யாதவ வாசவா கேசவா மாயா வாயா மதுசூதா
வாதியு மந்தமு மாகிய நின்புக ழல்லா துரையே னடியேனே.

### சூதபுராணிகர் வாக்கியம்

ஓ சவுனகாதி முனிவர்களே! இவ்வாறு உயுத்த பஞ்சகத்தின் இரண்டாம் பாகமாகிய துரோணபர்வத்தைக் கூறிய வைசம்பாயன முனிவரை ஜெனமேஜெய மகாராஜன் பணிந் தெழுந்து, சுவாமி! துரோணாச்சாரியார் சேனா பதித்வங்கொண்டு செய்த ஐந்துநாள் யுத்தத் தில், ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியானவர் பகதத்தன் விடுத்த உக்கிரவேலாயுதத்தையும், சுகாயு விடுத்த மகா கதாயுதத்தையுந் தமது மார்பிற் றாங்கி அர்ச்சுனனைக் காத்ததும், அவ்வர்ச்சுன குமாரனாகிய அபிமன்னுசெய்த அலங்காரயுத் தமும், அவனைப் பகைவர் சயிந்தவனால் மோசப்போர் விளைவித்து நாசப்படுத்திய தும், அதுபற்றிப் பற்குனன் செய்துகொண்ட சபதமும், அச்சபதம் நிறைவேற நரநார ணார் கயிலைபங்கிரி சென்று பாசுபதாஸ்திரம் பெற்று வந்ததும், அருச்சுனன் யுத்தபூமியிற் றடாகமுண்டாக்கிய விநோதமும், துரியோதன னுக்குத் துரோணரளித்த சாலிகவசத்தை விஜயன் பொடிபடுத்தியதும், கிருஷ்ணமூர்த் தித் தமது சக்கராயுதத்தாற் சூரியனை மறைப் பித்து அருச்சுனன் சபதத்தை நிறைவேற்றி யதும், அன்று இராப்போர் விளைத்ததும், துரோணாச்சாரி சப்தரிஷிகள் தரிசனங்கண்டு நிருபாதிக நிஷ்டையிலிருந்தும், அப்போது நாரணன் தருமனையோர் மடிவார்த்தைக்குடம் படுத்தியதும், அச்சமயமறிந்து திர்ஷ்டத் தூய்மன் தனது குடிப்பகை நீக்கிக் கொண்ட தும், அஸ்வத்தாமன் தந்தையின் மரணத் திற்குக் காரணமாயிருந்த யாவரையுஞ் சங்க ரிப்பதாய்ச் சபதங்கொண்டு, உக்கிர நாராயணா ஸ்திரம் விடுத்ததும், அஃதறுந்த கண்ணன் பாண்டவராதியரைத் தேரினின்றிழித்து நீரா யுதராக்கி அவ்வஸ்திரத்தின் வேகத்தை

யடக்கியதும், அஸ்வத்தாமன்கொண்ட யுத்த விரக்தியை வியாசர் விலக்கி விடுத்ததும், ஆகியவிச் சரித்திரங்களை உபசரிதங்களோடுங் கேட்டு மகிழ்ந்தேன். இப்பால் மூன்றும் பாகமாகிய கர்னபர்வத்தையுந் திருவாய் மலர்ந்தருளவேண்டுமென்று கேட்க, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினர்.

## பதினாறாம்போர்ச் சருக்கம்

### கவி

காராய் மணியாய்க் கடலாய்க் களிறுய்த்,
தாரா யுரைசெய் தருமே னியினுய், வாரா
யெனதுண் மருவும் படியாய், நாரா யணவோ
நமவே நமவே.

ஓ படமுறுஞ்சேடன் பரித்தபாராளும் அடலுறும் விசேஷ அரசனே! கேளும்: இது காறும் வீஷ்மாச்சாரியருந் துரோணச்சாரியருஞ் சேனுபதித்துவம்பெற்று, நடத்தியபோரின் திறத்தையெல்லாம் பார்த்தோமல்லவா? இன்று நமது குமாரன் சேனுபதியாகி யுத்த நடத்தப்போகின்றமையால், அந்த விசித்திரப் போருக்கு நாம் துணையாயிருந்து வெற்றி பெறச் செய்வோமென்று, சூரியபக்வான் கீழ்த் திசையி லுதயமாயினன். உடனே துரியோதன மகாராஜன் முதலாகியபோர்க ளெழுந்து, காலைக்கடன் முடித்துச் சூரியநமஸ்காரஞ் செய்து, வீரியமுடன் கொலுக் கொண்டிருந்து, சிறியயோசனை செய்யத் தொடங்கினர்கள். அஃதென்னவெனில், வீஷ்மாச்சாரியருந் துரோணச்சாரியருஞ் சேனதிபதியாய் இருந்து தங்களாற் கூடியமட்டும் போர் புரிந்து, நம்மைக் கைவிட்டிறந்தார்கள். இப்போது என் பிராணநேசகனுகிய கர்னமகாராசனை யல்லது வெல்ல நல்ல வல்லமையுள்ளோர் எவர்களுமில்லை. என்று துரியோதனனுட்கொண்டு, அங்கதேசாதிபனை யழைத்து, அண்ணு! இனி என்னை யாதரிப்பது உமது கடனேயல்லது வேறில்லை. நீரே சேனுபதியாக வேண்டும். என்றுரைத்துப் புண்ணிய தீர்த்தங்களால் அபிஷேகஞ் செய்வித்து, பொன்னுடை முதலிய வன்னப்பணிகள் அணிந்து, மானுபரணராகிய தானுபதிகளுஞ் சந்தோஷிக்கும்படியாய்ச் சேனுபதிப் பட்டங்கட்டி, வெற்றிமாலைசூட்டி, சிங்கார விருதுகளும், டங்காரமுதலிய பர்ங்கா வாத்தியங்களும், பொங்காரமாகிய ஓங்காரச் சங்குநாதங்களும், எங்கும் நிறையச்செய்து, அக்கர்ன மகாராஜனுடைய கச்சைக்கொடியுந் தனது விஷபுயங்கக்கொடியும் வானெழுந் தோங்கிப் பறக்கும்படியாகச் சகல பூபாலர்களுடனேயும், விருது சின்ன வாத்தியங்களுடனேயும் வெளிப்பட்டு யுத்தகளம்வந்து சேர்ந்தான். வெற்றிபெற்ற கொற்றவராகிய பாண்டவர்களுங் காலைக்கடன் முடித்து யுத்தகோலங்கொண்டு, வாகனுதிகளுடன் மோகனுதிகரான, பாஞ்சாலர்-பப்பரர்-சோமகர்-போசர்-திராவிடர்-மராடர் - கர்னுடர் - சாளுவர் - சாலுவர்-கோளர்-விராடர் முதலாகிய வீராதிவீரச் சேனை மன்னவரும், சாத்தகியுடன் கருடக் கொடிக்கதிபனுகிய கண்ணனும், ரதகஜதுரகபதாதிகளோடு யுத்தகளம் புகுந்தார்கள். அந்தவேளையில், துரோண வயிரியாகிய துஷ்டத் துய்மன் முனைந்து எதிர்சென்று நின்று, இன்றைய யுத்தஞ் செயிப்பது எனது கடனென்று இரைந்து சபதங்கூறி எதிர்த்தான். அவனைக்கண்ட கர்னனுனவன், வண்டுமொய்க்க மதமொழுகின்ற யானைகளையும் செண்டு போல் எழுந்து திசை திரிகின்ற குதிரைகளையும் அண்டமளாவி அசைந்தோடுந் தேர்களையும், மண்டலமதிர மதத்து வருகின்ற காலாள்களையும் வெற்றிமாலை யணிந்த, முடி-கொடி-கொடை - படை-தொடை முதலியன வாய்ந்த அடலுடைய பூபாலர்களையும், அவரவர்கள் நின்றநின்ற நிலைபெயராமல் நின்று போர்புரியும் படியாய்ப் பாரிய மகர மீனைப் போல் யூகம் வகுத்தான். அந்த யூகத்தைப் பார்த்துச் சந்தோஷித்த பனிரண்டு திருநாமமுடைய பரந்தாமனும், அர்ச்சுனனும்,சேனை நாதனுகிய துஷ்டத்துய்மனும், ஜெயிக்குந் திறங்கொண்டவர்களாய்; திரைகடல் போன்ற தங்கள் சேனைகளைப் பிரித்து, பகைவர் பயப்படும்படியாக நேமயூகம் வகுத்து, அவர்களை பார்த்து, ஓ வீராதி வீரர்களே! கேளுங்கள்: பானு புத்திரனுகிய கர்னன் திருதராஷ்டிர குமாரனுக்குச் சேனுபதியாயினன். ஆதலால், போனவர்போக இருக்கின்ற எல்லோரும் ஒருமுகமாயிருந்து அந்தக் கர்னனைக் கொல்லவேண்டும். என்று யாவருக்கும் உறுதியாகச் சொல்லவே, குதிரையின்மீதும், யானையின் மீதும், ரதத்தின் மீதும், பூமியின் மீதும் இருந்தவர்க ளெல்லாரும் அப்படி அப்படியே குபீரெனப் பாய்ந்து, கோபப்பொறி பறக்கக் காய்

ந்து, சர்ப்பக்கொடியோனும் சவிதாசுதனும், எங்குள்ளார்? எங்குள்ளார்? என்று ஆய்ந்து எதிரிகளுடன் வாய்ந்து போர்விளைத்தார்கள்.

### வீமசேனனுற் காசிராஜனுகிய கேம தூர்த்தி யென்பவன் வதை

அந்தச் சமயத்தில் வெற்றிபெறுந் தேரேறிவந்த வீமன் தேரைவிட்டிழிந்து, போர்திற வேழமாகிய யானைமேலேறிப் புகுந்து போர்செய்தான் என்று வைசம்பாயனர் சொல்ல ஜெனமேஜெயன் கேட்டு, ஓசுவாமியே! பதினாயிரம் யானை பலத்தையுடைய வீமனென்னும் எங்கள் பாட்டனை ஒரு யானை சுமந்ததென்று திருவாய் மலர்ந்தருளினீர். அந்த யானை எப்பேர்ப்பட்டதோ வென்று சந்தேகிக்கிறேன். என்று சந்திர குலோத்துங்கன் வினவ, வைசம்பாயனர் சொல்லுகின்ருர்; ஓ மகாராஜனே! அந்த யானையானது பனைமரம்போற் பருத்து நீண்ட துதிக்கையும், மலைச்சுனைபோற் பொழியு மதத்தையும், கடலின் அலைபோ லசைத்துப் பலதிசைக் காற்றையும் வீசுகின்ற ஆலவட்டச் செவியையும், மந்திரகிரி போலுயர்ந்த அளவையும், புள்ளிநிறைந்த அழகியமுகத்தையும்செவந்த திறங்கொண்டுதொங்கிய சிறுவாயையும், முழுமதியைப் பிளந்து, நவரத்தினகசிதப் பூண் கட்டிப் பட்டுக்குச்சுத் தொங்கவிட்டு, இரண்டு கடைவாயிலும் வைத்ததை யொத்த தந்தத்தையும், நெருங்கிப் பகைவரை நொறுங்க யிடிக்கும் மத்தகத்தையும், புன்னைமலரின் பூவிதழ்போற் சிறந்த இருகண்ணையும், நெற்றித் திலகத்தையும், வீரபட்டத்தையும், விதண்டைத் தொழிலையும், உலகஞ் சுமக்கும் ஆதிசேடனே இதுவென்று உவமிக்கத் தக்க உரத்தையும், வாய்வுக் கூட்டங்களினது வல்லபமுடைய மூச்சையும், சுருங்கிய கழுத்தோ டுயர்ந்த பொன் மலையை யொத்த கும்பத்தையும், மார்பில் மூன்று வலம்புரிச் சுழியையும், கனத்த கற்றூணுக் கொப்பாகிய நாலுகாலையும், உருட்டிவைத்த வெண்ணெய் மொத்தைபோன்ற நகங்களையும், குளிர்ந்த திருத்துளவ மணிந்த மாயோனுடைய நிலையையொத்த உறுதியையும், உக்கிரத்துடன் கிடந்த ஆமையைப்போன்ற புறவடியையும், திணிந்த தேகத்தையும், கனிந்த கோபத்தையும், மிகுந்த ஊக்கத்தையும், புகைந்த நோக்கத்தையும், பருத்த வயிற்றையும், இளங்கமுகு போற் றன்முழுத்த வாலையுமுடையது. மேலும், கட்டுத்தறியையுங் கால் விலங்கையு முறிப்பது பாகனையும் அங்குசத்தையுந் தூரத்திற் காணும்போதே, துடிதுடித்து நின்று கோபத்துடன் கொதிப்பது குலுங்கி நடப்பது தன் நிழலைக்கண்டு, தானே சீறித் தனக்கு எதிரியென்று மலைவது வளைவு-வட்டம்-அசைதல்-ஆடல்-ஓடல்-என்னும் வேக கதியினை யுடையது. அன்றியும், அந்தரம் வரைக்குங் கை நீட்டிச் சந்திரனைப் பிடித்துக் கவளமென்று உண்டு, மேகத்தைச் சேர்த்து முறுக்கிப் பிழிந்து தாகத்திற்குச் சலமென்று குடிக்குஞ் சத்துருசங்காரச் சினவேழமாகும். இப்பேர்ப்பட்ட பலம்பொருந்திய குற்றமற்ற யானையின் மேல் வாயுபுத்திரன் ஏறிக்கொண்டு, சேனைகளுடன் வந்தான். அவனைக் கண்டு, ஆண்மைக்கொரு வீரனுகிய காசிராஜனென்னும் கேமதூர்த்தியானவன் நவவித உறுப்பக்களோடு சப்தமேகம்போன்ற மதமாரியுமுடைய ராஜகுஞ்சரத்தில் ஏறிக்கொண்டு, தூசிப்படை முனையில் வந்து வீமனுடன் முனைந்தான். இவர்களேறிய இரண்டு யானைகளையும் ஒன்றோடொன்று போர்செய்யும்படியாய் விடுத்து, இரண்டு தேவேந்திராள் சிகரங்களுடன் இரண்ட மலைமேலேறிவந்து யுத்தஞ் செய்வதைப்போல் மலைந்தார்கள். அஃதெப்படியென்ருல், அங்குசக் கொந்தினலும், அல்லோ அல்லோவென்று அதட்டிய பேச்சினலும், வலிய கால்களை மடக்கவும் நடக்கவுஞ் செய்து, வேறுவிதமாகிய வேகமும், நடையும், ஓட்டமும், வெகுண்டுவராநின்ற குதிப்பும், வெவ்விய கோபக்கொதிப்பும், அங்கசாரி முதலிய யாவற்றையும் விதவிதமாகக் காட்டி, யானையேற்ற முதலாகிய அனைத்துங்கற்ற நன்னூலறிஞர்கள் கொண்டாடும்படியாய் அந்த யானைகளைச் செலுத்தி, செவந்த கரத்தால் வில்வளைத்துச் சிறு நாணெலிதெறித்து, சிலீமுகங்களைத் தொடுத்துச் சீறி எதிர்த்தார்கள்.

அப்போது கொம்பிரண்டு, துதிக்கையொன்று, கால் நான்கு, வாலொன்று, கோசமொன்று என்னும் ஒன்பது உறுப்புக்களினலும், பகைவரை வெல்லத்தக்க நீண்டுயர்ந்த கேமனேறிய யானையும், வீமனேறிய யானையும், நெருப்பெழ முனைந்து, நெடுமூச் செறிந்து, பெருங்கோபங்கொண்டு இருப்புலக்கை-நெருப்புக் குண்டு - சுருக்குச் சங்கிலி இவைகளால் அடித்துப் போர்செய்யவும், இந்த

யானையின் மேலேறிய இருதிறவீராளும் அளவற்ற பாணங்களைத் தொடுத்து, ஆதிசேடனுந் தேவர்கள் முதலாகிய இந்திரனும் பயந்து அயந்து வருந்தி நடுங்கும்படியாக யுத்தஞ் செய்தார்கள். இவ்விதமாக இருவரும் பிரபல யுத்தஞ்செய்து வருங் காலையில், வீமசேனன் விடுத்த விக்கிரமக் கணைகளுக்கு அஞ்சிப் பயந்து அலக்கழிவாகிய கேமதூர்த்தியென்னுங் காசிராஜன் வேலாயுதங்கொண்டு வீமன்பேரி லெறிய, அந்த வேலாயுதம் வந்த வேகத்துக்குத் தப்பிய வீமன் காலாகோலமாகச் செய்யுஞ் சூலயுத மெறிந்து அந்தக் காசிராஜனேறிய யானையையும், அவன் விட்ட வேலாயுதத்தையும், விரலிறைப் போதில் அழித்தான். அப்போது காசிராஜன் மலைவிட்டிறங்கிய யாளிபோற் பூமியிற் பாய்ந்து, தண்டாயுதங்கொண்டு வீமசேனனேறி வந்த யானையைப் புடைத்து வீழ்த்தினுன். அதுகாலையில், வாசனை பொருந்திய மலர்மாலை யணிந்த வீமன் வண்டைப்போ லெழுந்து, விண்டலத்தைக் காய்ந்து, பூமிமேற் பாய்ந்து, கதாயுதத்தைக் கொண்டுவந்தான். கேமனுங் கதாயுதங்கொண்டு நின்றுன். யானைப்போருக்கு வல்லவரென்னும் இவ்விருவரும் பூமிமேல் நின்று, கதாயுதப் போரில் சிறந்த பற்பல காவலர்களுங் கண்டு களிக்கும்படியாய் மலையுடன் மலையெதிர்த்து மாருடுவதுபோல் மாறிமாறிப் போர்புரிந்தார்கள். இவ்விரண்டு வீரரும் புரிந்த கதாயுத யுத்தத்தைப்போற் கடினப்போர் விளைக்கும் வல்லமையுள்ள காவலர்கள் காசினியில் எவர்களும் இல்லையென்று சொல்லும்படியாக, தண்டொடு தண்டொத்தி, இடசாரி வலசாரியாகச் சுழன்று சுற்றி, கட்லோசையென்றுங் காரிடியென்றுங் கேட்டவர்கள் கண்டவர்களெல்லாம் ஒடுங்கி-வாய்விட்டுச் சொல்ல நடுங்கி-ஆமைப்போல் ஐம்பொறிகளுமடங்கி - அசைவற்றுப் போகும்படிக்கு யுத்தம்விளைத்து, தத்திக் குதித்துத் தளரும்படிக்கு மெத்த அடித்து, கரகரவென்று காற்றூடிபோற் சுழன்று இடித்து, பரபரவென்று பற்றிப் பிடித்து, பலங்கொண்ட வீமனுனவன் காசிராஜனுகிய கேமனை நிலத்திலடித்து முடித்தான். இத்தன்மையாகக் கதாயுத்தம் விளைத்துக் காசிராஜனிறந்தானென்றவுடனே, கடிஸ்தலாதிபதியான துரியோதனனுடைய சேனைவீரர்களெல்லாங் கலங்கி, அலமலங்கிப் படைமுறிந்தோடத் தலைப்பட்டார்கள். அப்போது வெற்றியாக்ஷிபெற்ற கர்னன் கண்டு பற்றுகாட்சியாய் எதிர்சென்று நின்று வெள்ளைச்சிலை விசிறி முகம்விட்டவாறே ஓடியச் சேனைகளை யெல்லாங் கையமர்த்தி ஒன்றுகக் கூட்டி பேரணியாக நிறுத்தி, தானே அப்பேரணித் தலைவனுகி, திக்கெட்டும் பிரகாசிக்கும் ஆபரணங்களுடன் கடலைப் பார்க்கிலுஞ் சப்திக்காநின்ற சேனைக்கடல் மத்தியிற் பிரதாப உருத்திரனைப்போல் நின்றுன்.

## இருதிறவர்களின் படைச்செருக்கு

அப்படியாகநின்ற கர்னனை வெற்றிமாலை தரித்த தருமராஜன் முதலியபேர்கள் பார்த்து, தாங்களுந் தங்களுடைய சேனைகளும் பேரணியாகச் சேர்ந்து, அவனோடு யுத்தம் பண்ணும்படிக்கு மெத்தவுங் கிட்ட நெருங்கிப் போனுர்கள். அப்போது இருதிறவர் படைகளில் திலதமணிந்த நெற்றியும், தங்கப்பூண்கள் கட்டிய கொம்புகளும், மின்னற்போற் பிரகாசிக்கும் வீரபட்டமும், ஆபரணங்கள் விளங்கிய மத்தகமும், வண்டுகள் மொய்க்கும்படியாய் மழைகளைப்போற் குமிழிகளெழுந்து வழியாநின்ற கர்னமதமும், விசாலமான மார்பும், பெருமுதுகினுடைய இருபக்கத்திலுங் கணகணவென்று ஆடுறுமணியும், காளமேகம்போன்ற உருவமும், பேரிடிபோன்ற முழக்கமும், பெருங்காற்றை விளைக்குஞ் செவிகளும், மலைக் கரும்பாம்பைப்போன்ற துதிக்கையும், கருமானுடைய உலைகளக்கனல் வீசுங்கடைக்கண்ணும், காற்றினுங் கடுகியவேகமும், கண்டத்தினின்றுங்-கடைவால் வரையிற் கட்டிய தோரணங்களு முடைய வாரணங்களுடன் வாரணங்கள் எதிர்த்துப் பாரணங்கு நடுங்கி, வானமுந் தானமுமாறிக் கலங்கும்படியாய்ப் போராடவும், சரிகைவேலையிட்ட பட்டுகளினுல் அலங்கரித்த அலங்காரமும், ஒன்பதுநிற இரத்தினங்களும் இழைத்த நெடிய கொடிமுடிபோன்ற மகுடமும், மலையருவி பரவியதைப் போன்ற கவசமும், நெருங்கிய மேகங்களையொத்த துவசமும், தேனும் பராகமுந் திகழ்ந்துகமழும் பூமாலையின் அழகும், சமயாசமயத்தில் அரசர்கள் மறையும்படியாய் இருக்கின்ற சொரங்கத் தட்டுகளும், சூரியகாந்திப் பட்டுகளும், சுழலுஞ் சக்கரக்கட்டுகளும், ஆப்பாணி முதலாகிய அச்சுகளும், அடுக்காகிய மச்சுகளும், தொங்கவிட்டிருக்குங் குச்சுகளுமுடைய தேர்களானது, அநேகமலைகள் றெக்கையுடன் பறந்துதிரியுந் தன்மைபோற் றிரிந்து சுழன்று ஒன்றேடொன்று மோதி, சண்

டைச் செய்யவும், வெற்றியிலும் யுத்தியிலும்-
வல்லமையிலும்-வேகத்திலும்-சாகசத்திலும்-
சிறந்து, சிந்துதேசத்திற் பிறந்து, தேகாபி
மான மறந்து, ஒரு நொடியில் உலகை வலந்
திரிந்து, பொடிபறப்ப உடனடந்து, இடிபிற
க்க எதிரடர்ந்து, பரம அணுவினிற் பறந்து,
பரவிய சமுத்திர அலையுடன் சண்டை புரி
ந்து, எதிரிகள் விடுக்கும் ஆயுதங்களெல்லாம்
இடிந்துபோகும்படி நிமிர்ந்து, பூமியிற் கால்
வைக்காமல் வாயுகதியெனத்திரிந்து, திவ்விய
மலர் வாசனையைப்போற் சுவாசம் விரிந்து,
சுழி சுத்தம் பொருந்தித் தோகைவால் விரிந்த
குதிரைகள் ஒன்றோடொன்று கலந்து யுத்தம்
பண்ணவும், நிலையிலா விலைபெற்ற ஆபரணங்
களும், உலைவிலா வரம்பெற்ற கவசங்களும்,
சாணைபிடித்த நவமணியாரமும், மணிகட்டிய
வரிவில்லும், முனைதீட்டிய பாணங்களும், உற
ங்கொண்ட உடல்வலியும், தாமரைக்காடுபோற்
றழைத்த படைகளும், நெரியத்திரியு நடைக
ளும், வீராபரணமும் மானாபரணமும் வகித்த
திறங்களுடையவர்களாய் விரிந்த அலைசிறந்த
விசாலமாகிய கடலைப்போல் வெகு கூட்டங்
கூடி வேகங்கொண்டு வாராநின்ற படை மன்
னர் முதலிய வீராள் கைகலந்து பேராடவும்,
முரசு-கரடி-கைகணை-துடி-பெருமரம்-முருகு-
படுபறை-இடக்கை-உடுக்கை-உறுமி-பம்பை-
கொம்பு-சங்கு-பேரி-மத்தளம்-தாரைபூரி-வீர
சின்னம் இவை முதலாகிய வாத்தியங்களும்,
அரசர்கள் அமர்க்கெழும்போது முழக்கா
நின்ற வரிவளை - சுரிவளை-பெருநாதக்குழல்-
பெருங்கோடணை என்னுமிவைகளும், அர
வக் கொடி-முரசக் கொடி-ஆலவட்டம் - தால
வட்டம் மகரதோரணம்-நகரதோரணம்-இந்
திரவட்டக்குடை-சந்திரவட்டக்குடை இவை
முதலாகிய சின்னங்கள் முழுவதும், அதிர்
ந்து, ஆர்ப்பரித்து விளங்குவதினாலுண்டான
ஓசையானது, உலகமுடிவி லெழும் அலைகளை
யுடைய எழு கடலைப்போலும், பிரசண்ட
மாருதம்போலும், மேககர்ச்சிதம்போலும்,
ஒளிவெளியுடைய காலாக்கினிபோலும் பிர
காசித்தருர்ந்தன. முரசக்கொடி படைத்த முன்
னவன் சேனையும், அரவக்கொடி தரித்த அர
சன் சேனையும், யானைத் தலைவருடன் யானைத்
தலைவரும், தேர்த் தலைவருடன் தேர்த் தலை
வரும், குதிரைத் தலைவருடன் குதிரைத் தலை
வரும், படைத் தலைவருடன் படைத் தலை
வரும், அரக்கரைப்போன்ற காலாளுடன்
காலாளும், அமரரைப்போன்ற மேலாளுடன்
மேலாளும், வீராளுடன் வீராளும், நிருப
ருடன் நிருபரும், அதிரதருடன் அதிரதரும்,
மகரதருடன் மகரதரும், சமரதருடன் சமரத
ரும், அர்த்தரதருடன் அர்த்தரதரும் குற்றம்
விளைத்து, மெத்தப் பகைத்து, விதிர் விதிர்
த்து, பதை பதைத்துப் போர் செய்வதானார்
கள்.

### கர்னராஜனுக்கும் நகுலராஜனுக்கும் யுத்தம் இதில், மகாராஜன் விடதரன் இவர்கள் வதை

இப்பால், பத்துத் திசையிலும் கீர்த்தி
நாட்டுஞ் சூரியகுமாரனாகிய கர்னனும், தரும
னுக் கிளைய நகுலனும் குதிரைமேற்கொண்டு
எதிரெதிர் முனைந்து, வேகமாகிய தங்கள்
குதிரையை மச்சகதி - மல்லகதி - மற்கடகதி-
மயூரகதி - மாசுணகதி என்னும் பல கதிக
ளோடும், மனவேக - சரவேக - வாயுவேக
மாக இடசாரி வலசாரியாய் விட்டுச் சுழற்றித்
திரியுந் துரிதத்தினால் பூமி பிளக்க, அத
னால் ஆதிசேஷனுடைய பணமகுடமணிப்
பிரகாசமானது, பூதலத்திலிருக்கும் இருளைப்
போக்கிப் பிரகாசிக்க, உடனே கும்பல்
கும்பலாய் எழும்புந் தும்புகளானது, சூரிய
கிரணத்தை மறைத்துப் பழையபடி இருளை
யழைத்துப் படிமிசை நிறைக்க, கோணம்-வட்
டம்-வளைவு முதலாகியகதிகளைக்காட்டிப்போர்
செய்யாநின்றார்கள். அப்படி நின்ற இவ்விரு
வர் குதிரைகளும் எப்பேர்ப்பட்டதென்னில்,
அசைவில்லாத தொடையும், உடலதிர்ச்சியில்
லாதநடையும், திணிந்ததசையும், நிமிர்ந்த
கழுத்துமயிரும், உயிர்விடும்வரைக்கும் ஒடுங்
காத பலமும், உத்தமம்-மத்திமம் - அதமம் -
இவையறியத்தக்க சித்தமும், உயர்ந்த விவேக
மும், நினைப்பதற்குங் கேட்பதற்குந் தகுதியா
கிய வளமையும், குற்றமில்லாத சுழியும் பழு
தற்றவருணவடிவின் வழியும், இங்குரலோசை
யும், மனோதிடமிகுந்து, பலகதிவிசையிலுஞ்
சிறந்து, திசாதிசைகளையும் அளந்து, உச்சை
ஸிரவமென்னும் இந்திரன் குதிரையிலுஞ்
சிறந்து கீர்த்திபெற்றுள்ளது. இத்தன்மை
வாய்ந்த குதிரைமேற்கொண்ட முரசக்கொடி
யோன் தம்பியாகிய நகுலனும், அரவக்கொடி
யோன் அண்ணனாகிய சேனாபதிக்கர்னனும்
எதிர்த்து, கிரீடமுதற்சுவேதகக்ஷத்திரமும்உபய
சாமரங்களு முடையவர்களாய்த் தடையற
நெடிய வில்லை வளைத்து, நிரை நிரையாகப்
பாணங்களை முடுக்கி விரைத்து, கோடையிடி

யைப் பார்க்கிலும், ஏழுபங்கதிகமாக வாய்விட்டுக்கூவி, ரோஷத்துடன் கனைத்து மனஸ்தாபத்துடன் பகைத்துப் போர்விளைத்த காலையில், நகுலன்விட்ட நாராசக்கணையானதுகர்னனேறிய குதிரைக்குரத்தையும், அவன் கையில் வீறிய வில்லின் திறத்தையும்-நாணியையும்-கவசத்தையும்-வீர பட்டத்தையும் அழித்து, இரண்டு தோளையுந் துளைத்து, நெற்றியில் திலகப்புள்ளிபோல்நாட்டி, நிலைதளரமலைந்து வாட்டியது. அப்போது நகுலனுடைய வல்லமைக்குச் சந்தோஷ லாபமும், நாம் இவன் கையால் அடிபட்டோமென்னும்நாணத்தினால் நேரிட்ட லோபமும், இவ்விரண்டு குணமுமுடைய கர்னனானவன்மனமறுகி, தீரத்துவங்குன்றாத் திறத்துடன் குதிரை விட்டுப் பூமியிலிழிந்தான். அப்போதே அவன்சாரதி வேகத்துடன் ஒரு தேர்கொண்டுவந்து நிறுத்தினான். அந்த ரதத்தின் பேரில் இரவிகுமாரனேறிக் கொண்டு நகுலனுக்கு நேர்புகும்போது, நகுலனுங் குதிரைவிட்டிறங்கித் தேர்மேலேறி, அந்தரவாசிகளைப்போல் ஆக்கிரமித் தடுத்தான். அவ்வேளையிற் சண்டனுக்குச் சமானமாகிய அவர்கள் சாரதியுஞ் சாரதியுந் தங்கள் தங்கள் திறங்களைக் காட்டி, தேரைச் சக்ராகிர்தியாக ஓட்டி, யானைகளைத் தவிடுபொடிகளாக மாட்டி, தேருடன் தேர் கூட்டி, திருகுங் குயவன் திகிரிபோலாட்டி, கடுங்கோபக்கதி மூட்டினார்கள். அச்சமயத்தில், நாயகரிருவரும் எயிறுமடித்துக் கடித்து, நாரிக்கயிறு தொடுத்துப் பிடித்து, நொடியினிற் சிலையை யெடுத்து வளைத்து, கூர்மைதங்கிய கும்புக்கோல்களை வாசா மகோசரமாகத் தொடுத்து; பூமிமுதல் ஆகாயம் வரைக்கும் இடித்து, ஏழுமேகமும் பொழியுந் தன்மை போற் சாதாரைவிடுத்து, உடல்களைத் துளைத்து, உதிரவெள்ளத்தால் நனைத்து, உதவியாகவந்த தரணிபர் அனைவரும் உருண்டு போகக் கெடுத்து, மறுபடியும் யுத்தஞ்செய்ய அடுத்துக் கணைசொரியுங் காலையில்; இருவருடைய குதிரைகளுந் தத்தமார்புகிழிந்து வழிந்த இரத்தங்களில் மூழ்கிப்போகவும், இருவருடையசாரதிகளுந் தங்கள்தங்களுக்கு எதிர்விழுந் தழியவும், இருவருடைய தேரும் அரும்பொடியா யுடைபட்டழியவும், இருவருடைய கொடிகள் முறியவும், இருவருடைய கவச மிடைக்கிடை கிழியவும், இருவருடைய குடையும் மளுக்கென்று முறிபட்டுலையவும், இருவருடலிலும் பதாதிகேசம் வரைக்குங் கணைகளுருவவும், அதனால் வருந்திய அரியளிக்குங் கர்னனும் பரிவிடுக்கு நகுலனும் பதாதியாய்ப் பூமியில் நின்றனர். அப்போது இருவருடையவேறு சாரதிகள்போய்ச் சேமத்தேர் கொண்டுவந்தார்கள். அந்தத் தேரில் இவர்களேறி, தங்களுடன்வந்த மன்னர் மன்னவரும் எவ்வெவ்விடங்களிலும் நிறைந்து நிலைந்து மலைந்து போராடும்படியாய் பாரிய விற்கொண்டு சீறி, அகவிதழுடைய யரவிந்தங்களை அலர்த்தும் ஆதபன் குமாரனும் சுக மொழிச் சொற்களைப் பயிற்றும் ஆயுள்வேதியர் சுதனும் முன்செய்த யுத்தத்திலும் பத்தத்தனைப்பங் கதிகமாகத் தொலையாத அமர் புரிந்து, தெறித்த நாணியும்-வெறித்த பார்வையும்-வியர்த்த முகமும்-அயர்த்த சிந்தையுமாக ஆக்கிரமித்தார்கள். அப்போது நகுலன் கையிளைத்துக் கர்னன்கை மேலிடுங்காலையில், இப்போது இவனைக் கொல்வது நல்லதல்ல; கொன்றால் அப்போது நாம் அன்னைக்குச் சொல்லிய வாக்கு பின்னப்படும். எப்போதும் நாக்கைக் காப்பதே நலம். என்றெண்ணினவனாய்த் துப்போதும் பெரியோர் முப்போதும் வணங்குஞ் சூரியாஸ்திரத்தைத் தொடுத்து, அந்த நகுலனுடைய தேர்-சாரதி-குதிரை-வில்.இவை முதலிய எல்லாவற்றையும் அழித்து விற்குதையைக்கழுத்தில்மாட்டி யிழுத்து கடகடவென்று ஆட்டி நகைத்து, அடா நகுலா! உன்னையிப்போது ஓட்டிவிடுகிறேன். நீ ஓடிப்போ என்று உரத்துக்கூவித் துரத்திவிட்டு, அந்த நகுலனுக்குத் துணையாகிவந்த மகதராஜனையும் - செவ்வேளுக் கொப்பாகிய விகடதரனையும் - திடவிகடக் கணையினால் ஜெயம்பெறக் கொன்று சாய்த்தான்.

## கௌரவாதிகட்கும் பாண்டவாதிகட்குந் தொந்தயுத்தம்

அப்பாற் கர்னமகாராஜன் அர்ச்சுனனிற்கின்ற அமர்முனை நோக்கி, ஆண்சிங்கத்தைப் பகைத்து ஆணவத்துடன் சினத்தெழுந்து எதிர்த்த யானையைப்போல் வேறொரு விற்கொண்டு, விஷம்பூசிய நாணிமாட்டி நேர் வந்து நின்றான். அதை நல்லோர் முதலிய வில்லாளிகள் மெச்சும் விஜயன் கண்டு, உடனே மின்னற்கணை யிரண்டு பூட்டி விடுத்தான். அந்தக் கணையைக் கர்னன் தறித்து, வேறுசில பகழிகொண்டு குறித்து, பார்த்த சாரதி மார்பிற் படீரெனச் செறித்து, பெயரும் நிறமும் பேதமில்லாமற் பிரியாவிடை

யாய் நிலைத்திருக் கின்றார்களே இந்த நர
நாரணரென்று அதிசயமா யுட்கொண்டு,
தனக்குத் தானே சந்தோஷித்து நகைத்து
உரைத்துப் போயினான். அப்படி போகின்ற
சேனாபதியாகிய கர்னனென்னும் வீரனை,
இராட்சசகுல வைரியாகிய ஸ்ரீராமரைப்
போன்ற நரனானவன் கூவியழைத்து, இன்
றைக்குப்போய் இளைப்பாறி நாளைக்கு யுத்தஞ்
செய்யவா போவென்றான். இப்பாற் சாத்த
கியுஞ் சல்லியனுஞ் சேனாசயின்யங்களுடன்
அநேக வாத்தியங்கள் முழங்கும் படியாய்
மதத்த யானையுடன் புலியெதிர்த்துப் போரா
டுந் தன்மைபோல் வேறோரிடத்தில் மாறு
படாமல் மலைந்தார்கள். மன்மதனை வென்ற
வீஷ்மாச்சாரியரை மின்முகக் கணையாற்
கொன்ற சிகண்டியுங் கிருதபன்மனும் ஓரிடத்
திற் போர்விளைத்தார்கள். அகஸ்தியரருளிச்
செய்த அருந்தமிழும் அறிஞரும் பொருந்
தும்படி சங்கப்பலகை ஸ்தாபித்து வந்த
பாண்டியனும், சந்திரவட்டக் குடைதரித்த
துரியோதனனுடைய மாமன் சகுனியும்,
பொழுது போகிற வரைக்கும் பழுதில்லாமற்
சண்டை செய்தார்கள். பெரியோர் சொல்லைக்
கேளாமற் பூமியையாளுந் துரியோதனனுக்கு
உகந்த தம்பியாகிய துஸ்வாசனனும், மாசிலா
மனத்தோனாகிய சகாதேவனும், அமர் புரிந்
தார்கள். மறைவேதம் மநுவேதம் தநுவேதங்
கற்ற அஸ்வத்தாமன் வீமசேனன் இதைவிட
வேறு வேலையில்லையென்று வில்லைக்கொண்டு
சிறந்து, அநேக வாத்தியங்களும் அறைந்து
கலந்து தேவர்கள் மகிழும்படி அமர் மோதி
னார்கள். அப்போது தன்னையளித்த திரிபுராந்
தகனுக்கொப்பாகிய அஸ்வத்தாமன் நெட்
டிலைவேல்போன்ற எட்டுவாளிகள் தொடுத்து,
வீமனுடைய தேரினிருசி சக்கரம்- நான்கு குதி
ரை-சாரதி முதலியதும் அழிந்து விழப்
பொருதி ஆக்ரமித்துச் சீறினான். அதுகாலை
யில், வீமசேனன் வேறு தேரேறி, மேலு
மேலுங் கோபமீறி, புயவலியுடன் சீறி, பலம்
விளைந்த வில்வளைத்து, முனைவிரிந்த கோல்
தொடுத்து, அஸ்வத்தாமன் புறங்கொடுத்தோ
டத் தேர் - கொடி குடை -வேகப்புரவி-சாரதி
இவை முதலிய யாவையுந் தூள்படப் போக்கி
னான். இப்பாற் கேகயராஜனும், இளம்பஞ்ச
பாண்டவரிற் சுரதகீர்த்தியும், உடல்முனைந்து
உரஞ்சிறந்து யுத்தந் தொடங்கினார்கள். சிகண்
டியும்-கிர்தபன்மனும் சிலைத்திறங்கணைத்திறங்
காட்டிச் செருகச்செய்து, இருவருங் கொடி
முறிந்துரதமழிந்து,ஒருவர்க்கொருவர்முதுகு
தந்து பிராணனை நாடி ஓடி நாடினார்கள்.
தருமராசனுக்குச் சேனாபதியாகிய திர்ஷ்டத்
தூய்மனும்-கிருபாச்சாரியாரும் எட்டுத்திசை
யும் , வசைபற்றிசையுறும்படியாய்க் கொடும்
போர் புரிந்தபோது, யாகாதி கருமங்களை
யுடைய கிருபாச்சாரியார் முனையழிந்து, ரதம்
குதிரை-சாரதி-பாரியவில் இவை முதலாகிய
தும் பஞ்சுபோற் பறக்கவிட்டு, கொஞ்சமே
னுந் தைரியமில்லாமல் நெஞ்சுலர்ந்து உயிர்
பிழைத்தோடினார். இந்தப்படிக்குச் சந்திர
குலத் தோன்றல்களாகிய கௌரவர்களும்,
பாண்டவர்களும், இவர்களைச் சேர்ந்த சேனை
மன்னரும், சிநேக மன்னரும், ஒருவர்க்கொ
ருவர் எதிர்த்து, அகண்ட சாம்பிராச்சிய
பட்டாபிஷேகம் உங்களுக்கோ? எங்களுக்
கோ என்று புகைந்து அதிர்த்துக் கூவி
தேவர்களும் ராட்சதர்களும் பகைத்துச் செய்
யுஞ் சண்டைக்கு ஏழு பங்கதிகமாகப் போர்
விளைத்துப் புகழ்படைத்தார்கள். அப்போ
திருந்த ரணக்களப் பெருமையை என்னொரு
வனா லெப்படி சந்தோஷித்துச் சொல்லத்
தக்கது.

ஓ இறைவணங்கிய ஜெனமேஜெயனே!
ஆகிலும் இப்படியாக யுத்தம்விளைத்த போர்க்
களம் எப்படி யிருந்ததெனில், குருக்ஷேத்திர
முழுதும் பருந்தும்-கழுகும் பந்தர்போற் பர
விப் பறந்தன. அலகை கூட்டங்களெல்லாம்
ஆர்ப்பரித்திருந்தன. மன்னர் மன்னர்களு
டைய உடல்கள் திரைந்து, குடல்கள் சரிந்து
வழியும் உதிரங்களின் அலையினாற் சாமரம்
போல அலைப்புண்டிருந்தன. வெற்றிப்பறை
முதலாகிய மேளங்களும்-விருதுகளும்-விற்பா
ணங்களும் ஓசையழிந்து உலைந்து கிடந்தன.
மேகத்தைக் கிழித்துப் பிரகாசிக்கும் மின்ன
லைப்போல் விளங்கு நுதலணியாகிய வீரபட்
டங்களையுடைய யானைகளானவை, மததாரை
கள் பெருக்கங்கொண்டு நீரோடைகள் போல்
ஓடவும், இருபுறத்திலும் வீசிக்கொள்ளும்
வால்களுடன் புள்ளிபொருந்திய முகங்கள்
இரத்தவெள்ளத்தில் மூழ்கவும், உயர்ந்த மலை
யானது அடிவேர் பறிந்து சாய்ந்த தன்மை
போற் குப்புகும்பாக வந்து வீறிட்டு விழவும்,
பட்டமணிந்த நெற்றியில் பாணம்பட்டு வட்ட
மாகத் துளைக்கவுமாகி யிருந்தன. ஒட்டி யுத்
தம் பண்ணும்படி கிட்டி மத்தகத்தால் முட்
டிப் போர்முனையிற் சீறிய அத் தும்பிகளின்

பொங்காரமும், தர்மராசனுடைய சேனைகள் வெட்டிச் செயித்துக் களிக்குஞ் சிங்காரமும், துரியோதனனுடைய படைகள் மண்டை கிழிந்து மடியும் பிணமிகுதியின் ஓங்காரமும், மந்திரங்களினு லுந்திய வடிக்கணைகளின் ரீங்காரமும், மைக்கண் ணிழந்து கிழித் தொழிந்த முழவு வாத்தியங்களின் குங்கார மும், வெற்றிநேரிட்டாலுங் கொலை செய்வது மிகு பாதகமென்று சொல்லுஞ் சிங்காரமும், வீராளுடைய வாக்கியப் பொங்காரமும், மல் யுத்தம் வளர்ந்த மலைபோற் றோளிணையுடைய வயவர்கள் கைப்பிடித்த வாள்முனையில் வய வர்களுடைய தலைகள் வாய்விட்டரற்றும் ஊங்காரமும், யானை - சேனை-தேர்-குதிரை இவைகள் மாய்வுற்றிறக்கு மாட்சியும், பழு தற்று வீழ்ந்த படைமன்னருடலிற் பாய்ந்த பற்பல பாணங்களின் தோற்றமும், பொழியா நின்ற பெருங் குருதியில் மூழ்கிய பேர்க ளின் பேருடல் நாற்றமும், வலுவேறிய வீராள் தலையையும்-தழலை விழிவழி பொழி யானை மத்தகமலையையும்-சக்ராயுதந் திரிந்து தேடித்தேடி அறைகளுஞ் சல்லியும், அக்கி னியைக் கக்கிய அஸ்திரங்கள் அமர்க்களத் தைச் சுற்றிவராநின்ற அவசரமும், வீரர் முகத்தில் அழுந்திய வாளிகளால் வெண் ணிலவைப்போல விளங்கு நாட்டமும், கண் களிற் காலாக்கினிபொங்கக் கசங்கிக் கலீரெ ன்று நகைக்குங் காவலர் கூட்டமும், மழை பொழிவது போற் சல சலவென குலவிய படைகள் குமுகுமுகுமுவென நொடியிற் புகு ந்து படியிற்பறந்து உருவிப் பிரகாசிக்கும் வெய்யலிலும், அழியாத வருதினியை அழி க்குங் கையலிலும், அமோகமாக நிறைந்த அஸ்திரக்காடுகள் விஸ்தார நிறைந்த வன மென்று நரிநாய் முதலியவைகள் வந்துசேர் ந்து கூவுகின்ற ஓசையும், காக்கை கழுகு முத லிய பட்சிகள் பிணங்களைத்தின்று பசியாறி ஒன்றேடொன்று உறவாடும் ஆசையும், பற ந்து இறகற்று வீழும் பெருமலைகளைப்போல் உயிர்துறந்து இறந்துவீழும் யானைகளும், பூதங்களுறுமாட்டமும், பேய்கள்பெறும்பாட் டமும், ஜோகினி - டாகினி - யோகினி இவை கள்கூடி அழுகிறநாதமும், மோகினி-டோகினி- வாகினி இவைகளோதுகின்ற கீதநாத யாமள வேதமும், உதிரவெள்ளம்பரந்து நிறைந்து பள்ளம் பள்ளாமாயுறைந்து அதனுற் சிவந்த யுத்தபூமியின் பேதாபேதமும், தங்கள் வயிற் றைச் சுனையாகக்கொண்டு இரத்த வெள்ளங் களை மடுத்துறிஞ்சும் பூதவேதாள கணங் களும், வாளினுலும் வேலினுலுந் தறிபட்டு அந்தரத்தில் எழுந்தோடிய அநேகந் தலைக ளாகிய கந்தரங்களும், அதிரத-மகரத-சமரத- அர்த்தரதாளுடைய அறுந்த புயமந்திரங் களும், ஜெயந்திரக் கச்சை பூட்டிய யானைக் கழுத்தும், அம்புக்கூடுபோல் விழைந்து அநேக பாணங்கள் நுழைந்து பொருந்தி பூமாலையுடன் புயமலைவீழும் பொலிவுகளும், புருவைப்போன்று பிராணன்சாகின்ற உபாய மும், உடனே பொன்னுடு தேடிப்போகின்ற ஞாயமும், வீராள் முதலியோர் பாய்பரிகளின் தலைகளைத்தீ நாய் - நரி - பேய் - ஓரி இவை முதலியவைகளருந்த விருந்தாக அமைந்த மாயமும், பரணிபாடும் பாவாணர்க்குப் பரிசு கிடைத்தாற் போலிருந்தன.

மேலும், மூன்றும் பிறைபோன்ற கொம் பொடிந்து முன்படிந்த யானைகள் அநேக மும், படைமுறிந்து ஓட்டமாயோடிய யானைக ளனேகமும், உதிரக் கடலுக்குத் திருவணை கட்ட அடுக்கிய ஓங்கல்கள் அநேகம்போல் உயிரிழந்த உம்பல்கள் அநேகமும், யானைத் துதிக்கையாலும் - வாளாயுதங்களாலும்-வில் லிருப்புத் தடியாலும்-அடியுண்டழிந்த அரச வீராள் அநேகமும், வீரந்தாழ்ந்த பலசாலி களின் தலையை அறுக்குஞ் சரங்கள் அநேக மும், அந்தந்த வீராள்நொந்து வீழ்ந்திறந்த இரத்தத் தடாகம் அநேகமும், சப்தமேகங் களைப்போல் ஆகாயத்தை மறைத்து உலகத் தில் இருளைக்காட்டி ஒளியை மறைக்கும்படி யாய் எங்குமெழுந்த தும்புக்கும்புகளும், மிகு ந்த பசியினுல் வருந்திய குள்ளப்பேயும் பூதங் களுங்கூடி யுண்ணும் விருந்துகளும், கடல் போற் புரண்டோடிய இரத்த வெள்ளத்தில் அலைந்துகொண் டிருக்குங் கவந்தங்களும், கரசரணுதிகளைக் கொண்டு போர்புரிந்து முறி ந்த கையும்-நெறிந்தழிந்த மெய்யும்-குறைந் தொடிந்த காலும் - அறுந்தொழிந்த நாடி நரம்பும் - தறிந்துடைந்த தவள எலும்பும் உடையவர்களாய் மனம் வருந்தி வெகுண்டு மலைந்த வீரர்களும், நான்குவிதமாகிய குரலி லும் ஐந்துகதியாகிய வேகத்திலும் மிஞ்சிய புரவிகள் அநேகம் ஆவியிழந் தொழிந்த அதிசயமும், எண்ணற்றவீரர் தேகமெலிந்து சோகமிகுந்து தாகமலிந்து தாபமுழன்று தழற்கணைதொடுத்து தாமும்அடுத்து பூமியிற் படுத்து இறந்த தன்மைகளும், தாரைகள் கிடு

குகள் - ஒற்றைகள் - கோணக் கொம்புகள் - நீள் வயிரங்கள் இவைகளோடு பொங்குஞ் சங்கும், எங்கும் பம்பும் கொம்பும், டம்பை - பேரி - முரசு - காளம் - பூரி - வீரசின்ன முதலிய வாத்தியங் களும் முழங்கிக்கொண்டிருந்ததுகள். இஃதல் லாமலும், ஓரிமைப்போதில் யானை முதற் குதி ரைக் கூட்டங்களுஞ் சாக்குரலோசை முழக்கி னதுகள். அருதிறவரும் வளைத்த வல்லிலி ருந்து எழும்படியாகிய பாணங்கள் கோடா கோடி கோடாகோடியாய்ப் புறப்பட்டதுகள். உயிர்விட்டிறந்த வீரர்களுடைய முகமானது செந்தாமரைக் கமலம்போற் சிறந்திருந்தது கள். திடர்போன்ற இரத்தக்கடலில் திமிங் கலம் போன்ற யானைகள் துதிக்கையுடன் மிகவுமிரைந்தன. ஆகாய மெங்கும் வேடிக் கைபார்க்கின்ற தேவர்களுடைய விமானம் நிறைந்து நின்றன. பாணத்தா லழிந் திறந்து பூமியில் வீழ்ந்த வீராளுடைய கண் களிலிருந்து கருமேகம்போற் புகை புறப்பட் டன. அரிவாளுடன் அறுபட்டு வீழ்ந்த தோளினையுடைய வல்லவர்களின் கையானது, மீளவும் வாளை வீசி, விற்கணை பிடித்து எய்யா நின்றதுகள். துதிக்கை யிழந்து யிறந்து வீழ்ந்த யானைகளானது, மதத்த சீனுப்பன்றி போல் இருந்ததுகள். ஆங்காங்கு முறிந்து வீழ்ந்த வெள்ளைக் குடைகளெல்லாம் பூரண சந்திரனைப்போல் விளங்கியதுகள். இறந்த வீராளுடைய கருவிழிமணியைக் காக்கைகள் கொத்தின. உயிரிழந்த யானைகளினுடைய குடல்களைக் குள்ளநரிக ளிழுத்தன. பேய்க் கூட்டங்கள் உதிரங்களைத் தடுத்துக் குடித்தன. வீராளணிந்த அழகிய பூமாலைகளில் நிறைந்த தேன்கள் கரைபுரண்டோடின. பூமியை சுமக் கும் ஆதிசேடன் முதலிய பாம்புகளெல்லாம் பதறிக் கதறின. அநேக பாணங்கள் வீரா ளுடைய புஜங்களை அறுத்துத் தள்ளின. நிணங்களையும், மூளைகளையும், நெடிய குடர் களையும் பூதக்கூட்டங்கள் புசித்தன. கழுருக ளும், பருந்துகளும் குதிரைகளின் மணிக் குடர்களை இழுத்து ஒன்றோடொன்று மாட்டி ஆகாயத்திற் பறக்கும்போது, பெரிய பாக்கிய வான்களுடைய பிள்ளைகள் சண்டைக்காற்றாடி விட்டதுபோற் சட்டமா யிருந்தது. கொட்ட மடக்கும்படியாய் வெவ்விய யுத்தம் விளைத்த, வீராதிவீராளுடைய முடித்தலைக ளெல்லாம் வீரத்துடன் அறுந்து வீழ்ந்தன. கோடை யிடிபோன்று முழக்கும் பதாதியர்களுங் குறைந்து மாநிலத்தில் மடிந்தார்கள். வீர சூராள் பற்றிய வாள்களும், வாள் பிடித்த கரங்களும், மேகமுலாவிய தெய்வலோகத்தை முட்டி மறிந்து வீழ்ந்ததுகள்.

### அர்ச்சுனன் கண்ணனை வருந்திய சஞ் சத்தகர் நாராயண கோபாலர்களை முறியவடித் தோட்டுதல்

இவ்விதமாகிய யுத்தபூமியிற் பேராண்மை செய்து போர் விளைத்த பாண்டவச் சேனுபதி யானவன் ஜெயம்பெற்றுத் திரும்புவதற்கு முன்னே, தேர்த்திறமும் விற்றிறமுங்கொண்ட ஜெய விஜயன் சத்துருக்களை எதிர்நோக்கிச் சென்றான். அந்த வேளையில், வீரமாலை யணிந்த விசால மார்பினராகிய சஞ்சத்தகா ளும், நவகோடி நாராயண கோபாலர்களும், யுத்தஞ் செய்யும்படியாகச் சேர்ந்து சென்று, காளமேகமண்டலத்தை அளாவிய தேரேறி வருகின்ற சத்தியசேனனாகிய தனஞ்செயன் பேரிலும் கருடக்கொடியினுற் சிறப்புற்ற பார் த்தசாரதியின் பேரிலும் தோமராயுத மெடுத் தெறிந்து, குதிரை யோட்டுகின்ற முட்கோ லும், குதிரைபூட்டியஏர்க்காலும், குதிரைமாட் டிய தோல்வாரும் சிதைந்து அறும்படிக்கு முரண்கொண்டு மோதினார்கள். அவர்க ளடி த்த அடிபட்டு மனமுருகி வருந்திய நீலமேக வண்ணனாகிய நெடுமாலானவர் நகைத்து, வெற்றிமாலைதரித்த புயத்தினையுடைய சஞ்சத் தகாள் முதலியபேர்கள் கரைகீண்டு உடைந்து புரண்ட கடலைப்போல் தலைவிரிகோலமாய் ஓடும்படிக்குத் தடையற நிற்கின்ற விசாலமா கிய விஜயனுடைய தேரை அவர்கள் பேரிற் செலுத்தி முனைபெற்றார். அப்போது குறை யாத காளைப்பருவத்தினையுடைய அநுமக் கொடி தரித்த அர்ச்சுனனுடன் தாளாண்மை பெற்ற சித்திரசேனனும், மத்திரபாலனும் மற் றப்படைகளுங் கலந்து மிகுந்த போர்விளைத் திருக்க; அர்ச்சுனனானவன் தன் தந்தையாகிய இந்திரனளித்த பலம்பெற்ற பலவித பாணங் களினால் எதிரிட்ட வீரர்களையெல்லாம் வெகு விநோதமாக மோதிக்கொன்றது மல்லாமல், முதனாள் யுத்தமுதல் நாளதுவரைக்கும் நாள் தோறும் நடக்கின்ற யுத்தமுனைதோறும் போர் புரிந்து தன்னாலிறந்தவர்கள் போக, உயிர் பெற்றிருந்த இச்சஞ்சத்தகரையும், நாராயண கோபாலரையும் விண்ணுலக மேற்றும்படியா கப் பொன்னணிபூட்டிய வில்லைவளைத்து, எந் நாளு மிப்படை முகத்தைக் கண்ணெடுத்திட்டுப் பார்க்காது அவர்கள்கொண்ட எண்ணமும் பற்

றற முடியும்படியாய் முன்பின் பாராமற் பருத்த பாணங்களைக்கொண்டு ஜாடினன் புண்டரீகாக்ஷனுக்கு பிராணபதம்போன்ற காண்டீபதர பார்த்தனானவன். அவன்றொடுத்த கணைகளின் மாட்டுதலினால் எதிர்த்துவந்த அச்சஞ்சத்தகாள் முதலியோர் மிகவும் அஞ்சி, யுத்தபூமி முழுதுங் குறைத்தலை முண்டங்களுங் கழுகுகளுங் கூடிக்கொண்டு கூத்தாடும்படியாகவும், வயவீரர்களுடைய சின்னங்களாகிய பீலிக்குஞ்சமுங் குடைகளும் அற்று வீழும்படியாகவும், அளவற்ற பராக்கிரமங்களைக் கொண்டு நடத்திய அர்ச்சுனன் பேரைக் கண்டு பயங்கொண்டு, தேகம் விண்டு, சமர்த்தலம் விட்டு முதுகிட்டோடித் துரியோதன மகாராஜனுக்கு முன்பாகப்போய் அடித்து மோதி வீழ்ந்து முறையிட்டார்கள்.

### துரியோதனனுக்கும் தருமராஜனுக்கும் யுத்தம்

அப்போது தனக்கொருவரும் நிகரில்லாத சாமார்த்தியமுள்ள தரணீசனாகிய துரியோதன மகாராஜனானவன், இவ்விதமாக முறையிட்ட பேர்களைப் பார்த்து, பயப்படாதீர்களென்று திடஞ்சொல்லி, ஐயாயிரங் குதிரையும், நாலாயிர யானையும், அழிவில்லாத ஆயிரந் தேரும், அநேக பதாதிகளுங் கொண்டு, மிகுந்த கோப வார்த்தைகளைப்பேசி எதிரேறி வந்தான். இந்தப்பிரகாரம் வருகின்ற துரியோதனனை வளைத்துக்கொண்டு கொடுங் காரிடிபோற்சீறி யுத்தம் பண்ணுவோமென்று மன உறுதியுட னிச்சயித்து முனைந்து புகுந்தார் மனுநீதிக்கொரு நிலையென்றுந் தருமத்தினுக்கு உயிரென்றுந் தக்கோர் கொண்டாடும் மிக்கோனாகிய தர்மராஜன். இந்தத் தர்மராஜனும் துரியோதனராஜனும் எதிர்த்து யுத்தஞ் செய்யத் தொடங்கியபோது, வெப்பமாகிய மதக்கவுட் குழியினையுடைய யானைகள், வேகம்பெற்ற குதிரைகள், வானமளாவியதேர்கள், சோணைத்துளிபோன்ற சேனைகள் இவைகளெல்லா முடுகி, வேலாயுதம் - சூலாயுதம்-காலகோலமாகிய விற்கள் - கவுண்டுக் கற்கள்-வடிவாள் இவை முதலிய ஆயுதங்களைக் கொண்டு பகைத்து, புல்லாங்குழல்கள்-போர்ச்சங்குகள் - ஜெயதாரைகள்-ஊது கொம்புகள்-பெரும்பாரைகள் இவை முதலாகிய வாத்தியங்களெல்லாஞ் சப்த மேகங்களின் முழக்கம் போலும் சலசலப்புற்ற சமுத்திரக்கோஷ்டம் போலுமதிர்ந்தன. இப்படி வேகங்கொண்ட சேனைகளை அவ்விருவரு நடாத்தியபோது, கருந்தூள் செந்தூளெழுந்து ஆகாயத்தை மறைக்க, பிரசண்ட சூரியகிரணமு மிருள் மூடிக்கொள்ள, வாயுவேகத்தினால் மேகங்களலைய, பஞ்சபூதவடிவுபெற்ற பாரசைந்தாட, பெருக்கமாகிய ஆகாய கங்கை வரண்டுவண்டலாக, தேவர்களுறையுந் தெய்வலோக வீதி புழுதி நிறைந்துபடிய, பூரணச் சந்திரன் பொடிப் பொடியாய்க்கழிய, வரிசைவரிசையாயடுக்கிய அண்டமுகடும் இடிய, இவ்வாறு யாவுமல்லோல கல்லோலப்பட் டொழியும் படியாய்க் குதிகொண்ட குதிரைவீராளுடன், குதிகொண்ட குதிரைவீராள் குறுகி மலைந்தார்கள். துதிக்கையுற்ற யானை மறவர்களுடன் துதிக்கைபெற்ற யானை மறவர்கள் முனைந்தார்கள். அதிர்ச்சிகொண்ட பிரசண்ட வேகரதிகருடன், அதிர்ச்சிகொண்ட பிரசண்ட வேகரதிகர் அடுத்துப் போர் கொடுத்தார்கள். நெருங்கிய பதாதி வீராளுடன் நெருங்கிய பதாதிவீராள் பொருதினார்கள்.

அந்த வேளையில், செம்பொன்னினாற் செய்த சக்கரங்களின் கர்க்கரத்தொனி உக்கிரமத்துடன் முஷ்கரஞ்செய்ய வராநின்ற விக்ரம பராக்ரமராகிய தருமராஜனுந் துரியோதனராஜனும் பொன்மலை இரண்டும் போர் செய்ய பொருந்தியதைப்போல் இருவர் தேரையுஞ் செலுத்தியபோது, அந்தத் தேர்களிற் பதித்திருக்கும் நவமணிகளின் ஒளி விரிந்த சோதிப்படலம் மேலாகப் பிரகாசிக்கவும், அத்தேரைச் செலுத்தும் வல்லவர்கள் கறுவிச் சினந்து கசந்து, கண் சிவந்து கரும்புகை புகைந்து, கனற்பொறி மலிந்து, ரதத்தை முடுக்கி விடுக்கவும், படனாகக் கொடியும், படுமுரசக் கொடியும், படபடவென்று பரிந்து பறக்கவும், பயம் நீங்கிய வயவீராள் இருவரும் பலம் பொருந்திய வில்லிலிருந்து உந்தும் பற்பலபகழிகள் மேகமுறையும் வான முழுவதையும் மூடிவிடும் படியாகவும் போர் புரிந்தார்கள். இவ்வாறு தருமராஜனுந் துரியோதனராஜனும் ஒருவருடன் ஒருவரெதிர்த்து மாறுகப் பகைத்துச் சன்னபின்னலாய் வன்ன வன்னமாகிய கணைகளை மின்னலிடியுடன் கலந்த மேகம்போற் பொழிந்து, சேனைகள் மனஸ்தாபமாய் அழிந்து போகும்படியாய் நெடுநேரஞ் சண்டைசெய்து வரும்போது, தருமராஜன் தொடுத்த சாயகங்களானது, துரியோதனன் விடுத்த கணைகளைத் தாக்

கிப் பொடியாகப் போக்கி விலகச் செய்தது. உடனே துரியோதனன் கொதித்துத் துரிதமாய் விடுத்தடித்த வடிக்கணைகளானது தொ்ந்தமிட்டுச் சென்று, தருமராஜனேவிய அம்புக் கும்புகளை யெல்லாஞ் சாடியது. இந்தப்படி முறை முறையாய் ஒருவருக் கொருவர் இளையாமல் - சளையாமல் - உளையாமல் - களையாமல் - வளையாமல் எதிர்ந்து, சமனாக நின்று யுத்தம்பண்ணி, வீர க்ஷாத்திரமும், மிகுந்த ஆத்திரமும், அடங்காக் கோபமும் மேலாகிய புயவலிமையுங் கெடாமல், தேவர் முதலிய யாவருங் கண்டு அரிது அரிதென்று ஆச்சரியங் கொள்ளும்படியாய் அமர் புரிந்து, மாச்சரிய தீக்ஷண்யமுள்ள ஏழுவாளிகளைத் தருமராஜனெடுத்துப் பூசைகொடுத்து துரியோதனனுடைய மார்புகிழிந்து மாமிசங் கழிந்து ஊன்வந்து உதிரம்பொழிந்து சிதறும்படிக்கு விடுத்தார். அந்தக் கணைகளேழும் அந்தகன் அனுப்பிய சூலம்போற் பந்தெனச் சுழன்றுவந்து, முந்திய துரியோதனன் மார்பிற்றாக்கித் துளைத்தது. அப்போது விரிந்து உயர்ந்த நீலமலையினின்றுமெழுந்த இளஞ் சூரியனுடைய கிரண தாரைகளைப்போல அழகாய்ச் சொரிகின்ற இரத்த தாரைகளையுடைய வணங்காமுடியோன் முகம் சுளிக்காமல் அலங்கரித்து, அகங்களித்து, நெற்றியிற் புருவ நெறித்து, பற்கடித்து, ஸ்தானங்குறித்து, வில்லைவளைய- விழுத்து, நொடிப்பொழுதில் மின்னற்கணைகளை மேலாகவிடுத்து, தருமராஜனுடைய புஜகீர்த்தியும் வாகுவலயமுமணிந்த தோளைத் துளைத்து, மார்பையுங் கிழித்துத் துன்பப்படுத்தினான்.

இந்தப்பிரகாரம் இருவரும் எதிர்த்து, புயங்கள் அதிர்ந்து, உரங்கள்கிழிந்து, உதிரம் வழிந்து, தங்களுடலைத் தாங்கள் மறந்து பொங்கிய கோபப் பொருவனுடன் போர்புரியும்போது, வலிநிலைபெற்ற தருமராஜன் கலகலவென்று நகைத்து நாலுகணைகளைச் செலுத்தினார். அந்தக்கணைகள் நான்கும் இடியஞ்சும்படியாய்ப் படீலென்றிடித்து, எங்கும் மின்னற் பிரகாசமாய்ப் பொங்கியெழுந்து, நான்கு பாணமும் நான்குபிரிவாகப் பிரிந்து நாராசம் போலெரிந்து, ஒருபாணமானது துரியோதனனுடைய பாம்புக்கொடியைப் பாழாகமுறித்து, மற்றொருபாணம் ஓங்கிய தேரை உதிர ஒடித்து, இன்னொருபாணம் சாரதி தலையைச் சட்டென்றறுத்து, வேறொரு சதுர்முக வெங்கணையானது குதிரை நான்கையுங் கொன்று குவித்து, மாறுபடா வேகத்துடன் கூறுபாடு செய்தன. அப்போது துரியோதனராஜன் தேரழிந்து, உடனே பூமியிலிழிந்து வேறு தேரேறி, தருமராஜனுக்கெதிர்வந்து நின்று வீராவேசம் விளம்பி, இதோ உன்னுடைய வீரப்பிரதாபம் யாவும் ஒழிந்து நீயும் அழிந்துபோகப் போகிறாய் பார் என்று சூரசம்மாரவேலுக்கொப்பாகிய கைவேல்கொண்டு, கடுங் கோபத்துடன் கைப்பலங்காட்டி ஓங்கி எறிந்தான். அந்த வேலானது, செந்தழற் கதுவித் தீப்புகைமலிந்து, கொந்தனற்பொழிந்து, பந்தெனச் சுழன்று வந்தவாறதனைத் தர்மசிந்தையான் கண்டு, தான் கைக்கொண்ட வாகை சிறந்தவரி வில்லிலிருந்து வச்சிரக்கணை-முச்சிரக்கணை உச்சிதக்கணை-வெட்சியங்கணை முதலிய பாணங்களை ஒவ்வொன்றாய் விடுத்து, தன் பேரிலது வரவொட்டாமல் தடுத்துப் போர்கொடுத்துச் சீர்கெடுத்துப் பார்படுத்துக் கடுகடுத்துவந்த காலையில், துரியோதனனால் விடுத்த வேலானது தருமராஜன் விடுத்த பாணங்களுடன் டீக்கொடுத்து அண்டங்கலங்கப் போராடி, முடிவிலவ்வேலானது முனைமுறிந்து மோழையாய் முதல் தறிந்து கூழையாய, தரையில் வீழ்ந்த தாழையாய் குலைக்கழிந்த வாழையாய்ப் போய்விட்டது. தான்விடுத்த வேல் பிளந்து வீழ்ந்த விதத்தைக் கண்ட நந்தியாவட்ட மாலையணிந்த நராதிபன் யுத்தம்விட்டொழிந்து, வடுப்பட்ட யானையைப்போல் மெலிந்து, உள்ள நொந்து நாணமுற்ற காலையில், மறுபடியுந் தருமராஜன் சினமுதிந்து பத்து அஸ்திரங்களைத்தொடுத்து, அவனுடைய தேர்-குதிரை-சாரதி முதலியவும் பொடியாய்ப்போக அடித்து, பத்துமலைகளுக்கு மத்தியிற் சிகரமற்றிருந்த சிறுமலையைப்போல் தலைகுனிந்து நின்ற துரியோதனனை நெருங்கிப் பார்த்து, ஆகாயத்தில் நிறைந்த தேவர்கள் ஆனந்தப்படும்படியாய் ஒரு வார்த்தை சொல்லத் தொடங்கினார்.

"அளிதந்தமாலை யரசரவையிலுனதி
வஞ்சமா மனவணிகவர்வுற, வெளிவந்த சூது
பொருதவிரகரி தெளிதின்று பூசலென முன்
விரவினை, யொளிவிஞ்சு தேருமுடைய படை
களு முடையுண்டு நீயுமுறுதி தவறினை, தெளி
வென்பதாசு மிலதுன்மன முறுசெரு வென்ற
வீரமமையுமமையுமே. அணிலன் குமார

னரனரசரசனி யெனநுசன் சொல்வாய்மை பழுதுபடுமெனவு, வுனையின்று கோறலொழி வதலது நினுரமென் கோலாகுமெனது கணை யெதிர், புனை தும்பைமாலை சருகுபட வெழு பொடி மண்டவோடி மறைகவிரைவுட, னினி யெங்களாண்மையுரைசெய் தெதுபயனெதிர் வந்துநாளை யணிகவிகலியே' அப்பா தம்பி துரியோதனராஜனே! இப்போது நாம் நடத்திவந்த செய்கை எப்பேர்ப்பட்டதென்றால், வஞ்சநெஞ்சுடைய உன் மாமன் எங்கள் செல்வத்தைக் கைக்கொள்ள வேண்டுமென்று, வண்டுமொய்த்த மாலையணிந்த மன்னவர் கூடியிருந்த மகா சபையில் மண்டிபோட்டு வாதாடிச் செயித்த சூதல்ல; வில்லும் பாணமுங் கைக்கொண்டு யுத்தஞ்செய்து வெல்லும் படியாகிய சூக்ஷம். இது யாவருக்கும் அரிது அரிது. சூதுபோராடிச் செயித்த சந்தோஷத்தை இந்த பாணப்போரில் வந்த விசனத்துக்குச் சரிப்படுத்தி நிரவிக்கொள்ளுங்கள். அன்றையதினஞ் செயித்த அம்மானெங்கே? தம்பியெங்கோ ஐயோ! சுளுவாய்ச் செயிக்கலாமென்று எண்ணி வந்தாயோ? ஐயா! உன்னுடைய பிரகாசம்பெற்ற தேரும், பிரபலமாகிய சீரும், நால்வகைப் படைகளும் நாசமடைந்து போச்சுதே? நீயும் உத்தஞ் செய்யவந்த உறுதி தப்பிக் கலகலத்துப் போனாயே?உன்னுள்ளத்தில் தெளிவாகிய தீரமென்பது எள்ளத்தனையு மில்லையே?முதிர்ந்த போரில் ஜெயம்பெறும்படியாகவந்த உன்னுடைய திறம்போதும் போதும். ஓ பூமானே! ஆணிடிபோன்ற அனிலகுமாரனாகிய என் தம்பி வீமசேனன், உங்கள் நூறுபேரையுங் கொல்லுகிறேனென்று கூறிய சபதவாக்கியம் பழுதாய்க் குறைவுபடுமென் றெண்ணி, இப்போது உன்னைக் கொல்லாமல் விட்டேனேயல்லது,உன்னுடைய உரத்தினுக்குந் திறத்தினுக்கும் பயந்து விட்டவனல்ல. உன்னாலென்ன செய்யலாகும்; இதோ நான் தொடுக்கப்போகின்ற கணையினால் நீ அணிந்திருக்கிற தும்பைமாலையானது, சருகுபட்டெரிந்தே சாம்பராய்ப் பொடிந்து போய்விடப்போகின்றது. நீ மெத்த வருத்தமடைந் திருக்கிறாய். ஆகையால், இன்றைக்கு ஓடி மறைந்து, நாளைக்குவந்து பகைபாராட்டி யுத்தம் பண்ணலாம். அப்பா! இப்போது எங்களுடைய ஆண்மிக்கையை உன்னுடன் சொல்லி என்ன பிரயோசனம் என்று குந்திபோசனுக்குப் பௌத்திரனுங் குந்திதேவிக்குப் புத்திரனுமாகிய முரசகேதனன் சொல்ல, அந்தமொழியைக்கேட்ட துரியோதனன் அண்டம் அதிரும்படியாய்க் கரத்தைக்கொட்டி உரக்கச் சிரித்து,பருத்தகதையைப்பிடித்து,சத்தியவிரதத் தருமராஜனுடைய் மார்புக்கு லட்சியம் வைத்துப் பலங்கொண் டெறிந்தான். அந்தக் கதை பதைபதைத்துச் சுழன்று வருவதைப் பாண்டுவின் முதற் புத்திரனாகிய நீதிமான் கண்டு, பதறாமல் மேன்மைபெற ஒரு வடிவேலையெடுத்து, அந்தக் கதாயுதந் தறிந்து வீழும்படியா யெறிந்தார். இப்படி தருமராஜனென்னுஞ் சத்தியவிரதமெய்த்தவனெறிந்த வேலானது, உடனே ஊழ்வினை சூழ்ந்து பாய்ந்ததைப்போற் பாய்ந்து, சாரதி குதிரை முதலிய தேரையுமழித்து, அவனுடைய மார்பையுங் கிழித்து வாயில் உதிரம்வழிய வீழ்த்தியது.

இப்பால் அவனோடுவந்த நால்வகைச் சேனைவீரர்களுந் தங்கள் நாயகனுக்குநேர்ந்த விபத்தைநோக்கி, இவ்விடத்தில் மெய்த்தவவிரதனாகிய தருமராஜன் விட்ட வேலாயுதத்தினால், நமது வேந்தனாகிய துரியோதனன் மாய்ந்தார்போல் வீழ்ந்தான். இனிமேல் நமக்கு வெற்றியில்லை என்று யுத்தபூமிவிட்டு தங்கள் தங்கள் நால்வகைச் சேனைகளுடன் நிலையாய் நிற்பதற்கு நெறிநாடா தோடினார்கள். இந்தச்சேதி கேட்ட ஆழமாகிய கடல்போன்ற அன்பினையுடைய அங்கதேசாதிபன் மோசம்வந்ததென்று விரைந்து, கீழது மேலதாய்க் கலங்கி ஓடிவந்தான். இப்பால் நென்னற்போரில் தந்தையைப் பறிகொடுத்துத் தளர்ந்து மெய்வருத்தத்துடன் வேசாறியிருந்த அஸ்வத்தாமனானவன், கல்லடிபட்ட புண்ணில் தடியடிபட்ட தன்மைபோல் இச்சங்கதிகேட்டு, மலைகளைப்பொடியாக்கு மல்லுக்கிசைந்த விசாலமான உரம்பெற்ற தோள்களையுடைய துரியோதன மகாராஜன் தருமராஜன் வேலினால் வீழ்ந்ததற்காக மெத்தவருந்தி, விரைவிற் றேர்செலுத்தி இரவிலுதித்த சூரியனைப்போல் வந்தான். வேட்டையாடுங் காட்டில் வெருண்டோடுங் களிற்றானை போன்ற கெடிஸ்தலாதிபனானவன், தருமராஜன் கைவேலால் தேர் - குதிரை - சாரதி முதலிய சகலமும் அழிந்து, பொறிமறந்து, புலனிறந்து, பொடிமலிந்து, உரங்கிழிந்து, சிரம் வளைந்து உலைந்து வீழ்ந்தானென்று கேட்டுங் கேளாததற்கு முன்னே, வாட்டங்கொண்டு

ஓட்டமா யோடிவந்தார் கிருபாச்சாரி யானவர். மேலும், ஏகசக்கிராதிபதியாகிய உலகத்தைக் காக்கும் ஆக்கினைச் சக்கிரம்பெற்ற அரவத்துவஜாதிபனுடைய நந்தியாவட்ட மாலையணிந்தமார்பிற் சத்தியவிரதனேவிய கூர்மை வேலானது தாக்கியதென்று கேட்குமுன்னே, தானீன்ற சேய்ப்புலிக்கு இடையூறு வராமற் பாதுகாக்குந் தாய்ப்புலியைப்போற் பாய்ந்து, சாய்ந்து கிடக்குந் துரியோதனனுக்கு அருகிற் சல்லியராஜன் வந்தான். இன்னுமுள்ள தம்பிமார் முதலிய பேர்களும், பக்குவமாகிய எம்பெருஞ்சேனையும், எக்குலவேந்தரும், ஏகமாய்க்கூடி, ஒப்புவமை இல்லாத தருமராஜனை வளைத்துக்கொண்டு சரமாரி பொழிந்தார்கள். அந்தவேளையில், அர்ச்சுனராஜன் - வீமராஜன் - நகுலராஜன்-சகாதேவராஜன் ஒப்பற்ற தரணிபாலராகிய ராஜவீரச் சேனைகள் யாவரும் முரசுக்கொடி அரசனுக்குத் துணையானார்கள். இருபடைச் சேனாநாயகரும், இருதிறச் சேனைவீரர்களும் இருபாலாகப் பிரிந்து, அழற்படை முதலிய அஸ்திர சஸ்திர ஆயுதங்களைக்கொண்டு சொரிந்து, ஒருவரோடொருவர் கலந்து, வல்லவர் வல்லபடி போராடிப்பார்த்து, வாடியிளைத்து, நாகக்கொடிபடைத்த நராதிபனை இழுத்துக்கொண்டு, ஓங்கிய சேனைப்படை முதலாய் தாங்கள் கைக்கொண்ட ஆயுதங்களெல்லாம் அவ்விடத்திற் பறிகொடுத்து, மிகுந்த துக்கத்துடன் புறங்கொடுத்து உடைந்து பாடி வீட்டுக்குப் போனார்கள். இவ்விடத்தில் வீமனும், இந்திரகுமாரனாகிய அர்ச்சுனனும், ஆயுள்வேதியர் புத்திரர் நகுல சகாதேவர்களும், தர்மநீதிபதியாகிய தருமராஜனும், தங்களுக்குரிய சேனாதிபதியுடன் சேர்ந்த சேனைகளும், யானை-குதிரை-தேர் முதலாகியதும் அமர்க்களம் விட்டுச் செருக்கடைந்து பாசறைக்குத் திரும்பினார்கள். அப்பாற் சத்தியமேவயம்-தருமமேஜெயம்-நித்தியமேநயம்-நிஷ்டூரமே பயம் என்னுந் தருமராஜனுடைய ஆண்மிக்கையையும், சவுரிய பராக்ரமத்தையும், பின்னிலையையுங் கண்டு, வெருண்டு பயந்து புறங்கொடுத்தோடிய போர்வேந்தரைப்போல் ஓராழித் தேரோனாகிய சூரியன் பின்னிட்டுப் போகிற தன் குமாரனை நினைத்து வருந்தி, அலைகள் பொருந்திய மேற்குச் சமுத்திரத்தில் அவலமனத்தினனாய்ப் புகுந்து மறைந்தான்.

பதினாறாம்போர்ச் சருக்கம் முற்றிற்று.

இப்பால்,

# பதினேழாம்போர்ச் சருக்கம்

## கண்ணன் துதி

அகமமதை கொண்டொருமுன் றுலகினையு மொருகுடையி லரசுசெய்து, நிகழுமாவலிபாலோர் வாமனமாய்ச் சென்றுநிரப் புற்றான்போல, விகழுமொரு மூவடிமண் கொண்டவநெஞ் சகமடக்கி யிமையோர் போற்றச், சகமதனிற் பூமாதும் புவிமாதும் போற்ற வேழு தானுபோற்றி.

ஓ கனமேவிய சுகபோசனே! ஜெனமேஜெய மகாராஜனே! கேளும்: நமது குமாரன் சேனாபதித்துவங் கொண்ட பதினாறுநாள் யுத்தம் பயன்படாமற் பாழாகியதே யென்று வருந்திமறைந்த சூரியனானவன், இராக்காலமுழுதும் இளைப்பாறி யிருந்தும், விடியற்காலத்திலெழுந்து, இன்றைக்கும் யுத்த நடத்தப்போகின்ற தன்பிள்ளையாகிய கர்னன்மேலுண்டாகும் புத்திர வாஞ்சையினாலும், ஆசைப்பெருக்கத்தினாலும் சாமர்த்திய சந்தோஷம் அநுபவிக்கும்படிக்கு வந்தவனைப்போற் கீட்டிசைக்கடல் முகட்டிலுதித்து, தன் குமாரனைக் கண்ணாகிய கிரணங்களினாற் பார்த்து, தன்னைக் கைதொழும்படியாய்நேர்புகுந்தான். இவ்விதமாக யாவருந்தொழுதற் சூரியவனாகச் சூரியன் கீழ்த்திசையில் உதயகிரிமே லுதயமானவுடனே, நேற்று நடந்த நெடும்போர் முனையில் யுத்தஞ்செய்து நிறுவகிக்க மாட்டாமல் அமர் விட்டு அகன்றுபோன அரவக்கொடியோனைச்சார்ந்த அவனிப ரெல்லோருங் கமர்வெடிப்பான கடுஞ்சுரம்போற்கொதித்து, கடுங்கோபங்கொண்டு குதித்து, பதினேழாநாட் காலமே தங்கள் தங்களுடைய நித்திய கர்மங்களை முடித்துக்கொண்டு, அகிலபுவனமும் இன்றைக்கு அடியோடே அழியுமென்று அயன் முதலாகிய தேவரும் மற்றியாவரும் மயங்கி தியங்கும்படியாய், ஒருமுகச்சங்கு-கரிமுகச்சங்கு - வலம்புரிச்சங்கு - இடம்புரிச்சங்கு-தவளைச்சங்கு - குவளைச்சங்கு - நத்தைச்சங்கு-குடமுழச்சங்கு - வெற்றிச்சங்கு - வீரச்சங்கு-மங்களச்சங்கு - இடக்கை-உடுக்கை-தப்பட்டை-உறுதி - பேரிகை-பம்பை-மத்தளம்-முரசு-முருடு-முழவு-பெருந்துடி-தண்ணுமை-திண்டிமம்-சல்லரி- மல்லரி - தடக்கை-தடாரி-திமிலை-தூரியம்-குடமுழா-நெய்தற்பறை-பூரி

வீரகாளம் - மாரகாளம் - கோணக்கொம்பு - இவை முதலாகிய பலவகைத் தோற்கருவி, துளைக்கருவி, தரப்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக் கருவிகளினுலுண்டான வாத்தியங்கள் கடல் முழக்கம்போல் அதிர, பாற்கடலில் எழுந்து விழுந்த கொழுந்தலைபோன்ற கற்றையாகிய வெண்கவரிகள் வீச, ஆலவட்டம்-தாலவட்டம் - தொங்கட்டம் - அரசிலைவட்ட முதலியதும் அசைந்தாட, மகரதோரணம் மேற்கட்டி புட்பவிதானம் இவைகள் பிரகாசிக்க, பெரியசெண்டா-சிறியசெண்டா - வெள்ளைக்குடை-விருதுக்குடை இவை முதலாகிய பல தினுசுச் சின்னங்களுங் கவிக்க, பலவகைக் கொடிகளும் பிடிக்க, நாகத்துஜம் - வர்கைத்துஜம் - மேகத்துஜம் - தேர்த்துஜம்-போர்த்துஜம் - யானைத்துஜம் - சேனைத்துஜம் - குதிரைத்துஜம் - சதுரத்துஜம்-கம்நித்துஜம்-சம்பத்துஜம் - கச்சைத்துஜம் - பச்சைத்துஜம் - வீணைத்துஜம் இவை முதலாகியதுந் தழைக்க, பஞ்சமேள வாத்தியங்கள் தொனிக்க, பற்பல ஆயுதங்களுடன் யுத்தகளம் வந்து சேர்ந்து சத்துருக்களை அழைக்கும்படியாகிய சமர் பூமிக்கு வந்தார்கள்.

இதுகாறும் நடந்திருக்கின்ற பதினறு நாள் யுத்தத்திலும் இறந்து நீங்கிய பற்பல சேனைகளெல்லா மின்றைக்கு உயிர் பிழைத்து எழுந்து வந்ததென்று சொல்லும்படியாய், அளவற்ற வர்ணங்களையுடைய அநேகங் குதிரைப்பந்திகளும், பல தினுசாகிய பெரியதேர் நிரைகளும், கோடாகோடி மலைகள் போன்ற மதயானைகளும், ஈடாக யெவைகளையுஞ் சொல்லப்படாத பதாதிகளுஞ் சேர்ந்து, விண்டலமும் மண்டலமும் எண்டிசையும் ஒன்றுந்தெரியாமல் மேகசாலம்போற் கவிந்து, காக முதலிய கழுக்களார்ந்த வெங்கள முழுதும் நிறைந்து நின்றூர்கள். அந்த வேளையில், அஜானுபாகு வென்னுந் தாதாவாகிய கர்னனுனவன் பூஜாவிதி முதலியதும் முடித்துக்கொண்டு, சூரிய நமஸ்காரஞ் செய்து, பெரியோர்களை வணங்கி, அநேக தானதர்ம பர வுபகாரங்களை செய்து, மனமகிமையுற்ற புவனசக்ரேஸ்வரனுகை முடிபெற்ற துரியோதனமகாராஜனுடன் தேரேறி, போரேறுபோல் யுத்தகளத்திற்கு வந்தான். யுத்தகோலசிங்காரங் கொண்டுவந்த அந்தக் கர்னனுடைய அழகு எத்தன்மையாயிருந்ததென்னில், சிரத்திலணிந்த நவரத்ன கஜித மகுடமானது எட்டுதிக்கும் ஒளிவிட்டுப் பிரகாசிக்க, இரண்டு காதிலும் அணிந்திரா நின்ற மணிக்குண்டலங்கள் இரவிபோற் சோதிகாட்டி அசைந்தாட, புஜகீர்த்தி - கடக கங்கணம் - தோளணிமாலை - வாகுமாலை-பாஜீபந்து-விரலாழிகள்-விரற்சாடு முதலாகிய ஆபரணங்கள் மின்னிக்காட்ட, முத்தாரம்-ரத்னுரம் மோகனமாலை- தும்பிப்பதக்கம்-மகரகண்டிகை முகதாளிப்பதக்கம்-உத்திரசஞ்சம் - தும்பைப்பூமாலை- தாமரைப்பூமாலை-அரைப்பட்டிகை-உருக்குக்கவசம்-எழுகுகவசம் - வஜ்ரக்கவசம்-சரிகை வேலையிட்டு ரவைகள்பதித்த நடுக்கட்டுப்பட்டிகை இவை முதலியவும் ஜொலிக்க, பொன்னுலாகிய மணிகள் பதித்த வீரகண்டாமணி வெயில் வீசிச் சப்திக்க, தலைநிறைந்த கருங்குழல் பின்புறத்திற் பின்னலிட்டுச் சுருண்டு மெருகுகாட்ட, புஷ்டியாகியமீசைகளும்-கன்னப்பரிசையும்-செவிக்கறலும் - ராஜபயங்கரத்தை விளக்க, நெற்றியில் விபூதிரேகையும், ஜவாது திலகப்பட்டையும் செந்தூரப்பொட்டும் காந்திசெய்து சிறக்க, அணிந்திருக்கும் உத்தரீய முதலிய வஸ்திரங்கள் இந்திரப்பட்டென் றிலங்க, தன்னைப்பெற்ற தந்தையாகிய சூரியனைப் பார்க்கிலும் விந்தையாகிய செந்துகிர் வடிவம் விளங்கிச் சுடர் வெயிலெரிப்ப, இன்னும் பற்பலவிதமாகிய போர்க்கோல அலங்காரத்துடன் கர்னன் இருந்த அழகைக்கண்டு கண்களி கொள்ளாத பேர்கள் யார்? அந்தரத்தி லருஞ்சமர் வேடிக்கைப் பார்க்கும் வழக்கப்படி வந்த அமரர்களுங் கண்டு கண்களி கூர்ந்தார்கள். அவ்வவ்வமரர்களுந் தனித்தனி யூர்ந்துவந்த விமானங்கள் ஆகாயவெளி எங்கும் நிறைந்து பரவியிருந்தன. சுத்தவீரனையெல்லா மின்று காணலாமெனக் களித்திருந்தார்கள்.

**அங்கராஜனு மரவக்கொடியோனு மமர்க்**
**களத்துற்ற கெம்பீரங்கண் டையுற்ற**
**தருமராஜன் கண்ணனைத் துதிக்க**
**அவர்மேல் நடக்கு நிச்சயங்**
**கூறித் தேற்றுதல்**

இப்பால், இவ்வளவு தொகையென்று சொல்லுதற்கரிதாகிய பாண்டவர்களின் பதாதிக்கூட்டமும், உயிர்க்குயிராகிய வீமார்ச்சுன நகுல சகாதேவரென்னுந் தம்பிமார்களும், காசாம்பூவினிறம் பெற்றுக் களாம்பழத்தின் அழகுவாய்ந்த திருமேனியையுடைய ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியும், தர்மசொரூபியாகிய தர்மராஜனும், சகல வாத்திய விருதணி விசேஷங்க

ளுடனே பெருங்களப் பரப்பில்வந்து பெரிய கொடிகள் நாட்டி, படைகள் முதலிய மன்னரை அணிபெற நிறுத்திக்கூட்டி மகாபராக்ரமத்தோடு நின்றார்கள். அப்போது தர்மராஜன் தேர்விட்டிழிந்து, திருநீற்றின் ஒளியுஞ் செந்தூரத் திலகமும் பிரகாசிக்கும்படியாய் விளங்கி, முன்னந் தேவர்கள் முதலிய பெரியோர்களுஞ் சகலவாத்ம கோடிகளும் பிழைக்கும்படியாய்க் கடலிற் பிறந்த ஆலகால விடத்தை அமுதாக விழுங்கி, அதனாற் கறுத்த கண்டராகிய கறைமிடற் றண்ணலைக் கருத்திலிருத்தி, துரியோதனனின்ற பெருக்கத்தையும் கர்னனிருந்த கெம்பீரத்தையுநோக்கி, பலாஷ்டகனாகிய அர்ச்சுனன் தேர்மேற் சாரதித்தொழில் கொண்டிருந்த தண்ணிய நீலமேனி சாமளவண்ணனை, சாத்தகிக்கு அண்ணனை, வாசனையுதைத்த மதுநிறைந்த திருத்துளவ மணிந்த மாதவனை, கொத்தடிமை குடியடிமையாய் வழிப்பட்டு, தாசத்துவம் புகுந்தபேர்களுக்கு உற்றதுணையாகிய அப்பக்த வச்சலனைப் பார்த்து, விசாலமாகிய இருதயமுங் கண்களும் முத்துமுத்தாய் ஆனந்த பாஷ்பந் துளிக்கச் சுவாமிகள் திருவடிகளை மனதினால் வணங்கி, எனக்கிணங்கிய பேரின்பமே! இன்றையப்போரில் ரவிகுமாரனாகிய கர்னன் வானுலகம்சேர்வானா? எங்களைவாட்டி வெற்றிபெறுவானா? அதனை எனக்கு தெரியச் சொல்லும் என்று முரசகேதனன்கேட்க, ஓ தர்மஸ்வரூபியே!"இத்தினமிரவி சிறுவனும் விசயனேவினாலிறந்திடுநாளை, தத்தினபுரவித் தேர்ச்சுயோதனனுஞ் சமீரணன்றனயனான் மடியு, மத்தினாபுரியு மீரிருகடல்சூ ழவனியு நின்னவா மென்றான். அவனாரெனில்-சித்தின துருவாயகண்டமூந்தானுஞ் செய்யகட்கருணையந் திருமால்" இப்படி ஔதாரியனாகிய சூரியபுத்திரன் இன்றைய்தினம் அர்ச்சுனன் பாணத்தால் இறந்துபோவான். நாளையதினம் வாயுபுத்திரனாகிய உமது தம்பி வீமசேனனால் துரியோதனன் வெம்பிச் சாவான். அஸ்தினாபுரியும் நாற்கடல்சூழ்ந்த எண்டிசை அவனியும் உமக்குச் சொந்தமாம். என்று சிறிய வனுவும் பெரிய அகண்டமுந் தானாகின்ற அருள் நிறைந்த செந்தாமரைக் கண்ணனாகிய திருமால் திருவாய் மலர்ந்தருளிச் சொல்லிய இனிய சொல்லென்னும் அமுதந் தர்மராஜனுடைய காதினூறவே, மனந்தெளிந்து, மகிழ்ந்து, கவலை நீங்கி, கருணையோங்கிய காசாம்பூவண்ணனைக் களிக்கப் பார்த்து இதனைச் சொல்லுவதாயினார்.

ஓ கொடிய சர்ப்பக்கொடிபிடித்த துரியோதனன்றீசெய்த வஞ்சனையாகிய கடலில் வீழ்ந்து ஆழ்ந்து மாய்ந்து போகாமற் கருணையளித்து எடுத்து எங்களைக் கரையேற்றி, அழகிய பூமிமுழுது மாளும்படியான அகண்ட ஐஸ்வரியமும் அணிமணிப் பணியோடு குடை முதலிய கதிர்முடியுந் தந்த அத்தனே! ஓ எங்கள் தந்தையாகிய கர்த்தனே! எங்களுடைய அழியாமானமும், பழியா ஆண்மையும், அளவில்லாத பெருங் கீர்த்தியும், நிலைபெறச் செய்யுந் தெய்வந் தேவரீரேயல்லது வேறில்லை. நாங்கள் அனாதையா யிருக்கின்றோம் என்று பெரிய அறத்தின் புத்திரனாகிய தருமராஜன் சொல்ல, அதைக்கேட்ட அருளாழி முகுந்தன் புன்னகைகொண்டு, ஓ மன்னனே! கேளும்; என்னாலென்னமாகும்; நானென்ன செய்தேனாகும்; எல்லாம் உம்மாலாகிய சத்யமேயன்றி வேறில்லை என்று வேணுகோபாலன் சொல்ல, அந்தச் சொல்லைக் கேட்ட முரசகேதனன் மெத்தவருந்திச் சித்தம் பரிந்து, ஓ உத்தமனாகிய உரகசயனா! செத்து எழுபிறப்புப் பிறந்தாலும் உம்முடைய நற்றுணையை நாங்கள் மறக்கமாட்டோம். ஹரி!ஹரி! என்னப்பனே! என்னையனே! நாங்கள் பால்யாளாய் இருக்கும் போது தீக்காய்ந்த சிந்தைவாய்ந்த துரியோதனன் கங்காநதியிற் புனல்பாய்ந்து விளையாடும்படிவிட, அப்போதவன் வீமனைக் கொல்லும்படியாகச் சலத்துக்குட் புதைத்துவைத்த வசிமுனையில் ஒரு வண்டுபோற் சுழன்று அவ் வீமன் சாகாமல் ஆருயிர் பிழைக்க அருளளித்துக் காத்தீர். ஓ எங்களுயிர்க்குயிராகிய உத்தமனே! வீரகண்டை ஆர்ந்த அரசர்கள் திருந்திய இராஜசபையில் நாலுபேரைப்போல் நாங்களும் பார்த்திருக்கத் துரௌபதையை வஸ்திரபங்கம் பண்ணியபோது, துன்பத்தால் மெலிந்து, துயர்கூர்ந்து இரைந்து, மானமும் மனமுமறந்து, தேவரீருடைய திருவடிக் கடிமையாய்த் தேகாபிமானமும் நீத்துத் தியானம் பொருந்தி சிந்தித்த கர்ப்பூர தீபம் போன்ற பாஞ்சாலிக்கு, நாணமுந் துகிலும் நலம் பெற அளித்துத் திருவருணோக்கில் அருள் செய்து காத்தருளினீர். ஓ தேவாதி தேவனே! நாங்கள் பன்னிரண்டு வருஷம் வனவாசந் தொலைக்குங் காலத்தில், சத்துருவாகிய துரியோதனனுடைய உத்தரவினால்,

க்ஷுத்பாதையாகிய கடும்பசி வருந்துளதெனக் கவலைகொண்டு வந்த துருவாசனென்னுங் கடவுள் முனிவனுடைய கோபமும் அதிதாபமும் பசியுந்தணித்து, எங்களுக்கு வருத்தமாகிய சாபமும் வாராமல் தடுத்து மநோபயத்தை நீக்கியாண்டீர்.

ஓ பரமாத்மனே! எம்மை ஒருபொருளாக வெண்ணி, செம்மையற்ற துரியோதனனிடத்தில் தூதாக நண்ணி, விதுரராஜனுடைய நிகரற்றவில்லை முறிப்பித்து, சந்தேகத்தால் அஸ்வத்தாமனுக்குச் சேனாபதிபட்டம் ஆகவொட்டாமற் கெடுத்து, தேனலர்ந்த நந்தியாவட்ட மாலை யணிந்த துரியோதனனுக்குத் துணையாகிய பலங்களை யெல்லாம் அபலப்படுத்தி, அவன் நடத்தப்போகின்ற ரகசியங்களெல்லாவற்றையும் அறிந்து, அந்தக் காரியங்களுக்குத் தகுந்த சுள்ளாணிமைத்து, அநுகூலமாகிய சகல வினைகளும்புரிந்தீர். ஓகியான ஜோதியே! முதல்முதல் யுத்தத்திற்கு வரும்போது, பதினொரு அக்ரோணி சேனைகளையும் பெரியோராகிய பிரமுகாளையுங்கண்ட பயத்தினாலேயோ? அஃதெப்படியோ எனக்குத் தெரியாது. மெத்தவருந்தி ஆயுத முதலாகிய தநுர்பாணங்களைப் போட்டுவிட்டு இரங்கிய விஜயனுக்கு தத்வக்கியான போதகீதை உபதேசித்து, யுத்தஞ் செய்யமாட்டேனென்று பின்னிட்டவிஜயன் மறுபடியுந்திடங்கொண்டு தீரத்துடன் எல்லோரும் நாசப்படும்படியாய் நானே கொல்லுகிறேனென்று சொல்லிப் புறப்படும்படியாய்ப் போதனைசெய்துவிட்டீர். ஓ இந்திரஜால தந்திரனே! ஆயுதமெடுப்பதில்லையென்று அரசனுக்குச் சொல்லியஆணை மறந்து ஆழிதரித்து, ஐயாஅவர்களாகியவீஷ்மருடன் எதிர்த்து எங்களுக்காகப் பாடுபட்டு, பார்த்தசாரதியாகத்தேரூர்ந்து, சிகண்டிசெய்த தவம் வழுவாமல் நிறைவேறும்படியாய் முன்னிறுத்தி, மூதாதை முடிசாயும்படிக்கு முடிந்தீர். ஓ நித்யசத்தியனே! ஒருநாள் யுத்தத்தில் எழுமதம் பொழிந்து ஏழுறுப்புயர்ந்த யானைமேல் வந்த பகதத்தனெனவன், அர்ச்சுனனுடைய மார்பு கிழிந்து அதனால் அவனிறக்கும்படிக்கு எறிந்தவேலாயுதத்தை, திருத்துளவார்ந்த தேவரீருடைய மார்பிற்றாங்கி நிராயுதன் நானென்று ஞாயமெண்பித்து நிர்விக்கினமாக்கி வைத்தீர். ஓ நேசனே! போராடும் படைகளெல்லாம் பொரிந்து-கரிந்து-பொடிந்து-மடிந்து போகும்படிக்கும், பொருப்படையுடைய அரசரெல்லோரும் பொன்றிக்குன்றிச் சாகும்படிக்கும் யுத்தஞ்செய்து, வகைமோசத்தால் இறந்த வாளபிமன்னனைக்குறித்துப் புத்திரசோபத்தால் ஆத்திரப்பட்டு அர்ச்சுனன் கூறிய சபதமானது, அரசர்களுக்கு முன் பழுதுபட்டு அபஜெயமுறாமல் அதற்கு வேண்டிய பலங்கட்டும்படியாய் அர்த்தராத்திரியில் அர்ச்சுனனை அழைத்துக் கொண்டு கயிலையங்கிரிக்குச் சென்று, அளவற்ற பராக்கிரமத்தோடு கூடிய பாசுபதம்பெற்று, அகிலமனைத்துங் கொண்டாடும்படியாய் எங்கள் பாக்கியம்போலுற்றீர்.

ஓ சங்கரநாராயணமூர்த்தி! வருணன்மகனாகிய வல்லவன் அர்ச்சுனன்பேரி லெறிந்த வெவ்விதமாகிய உக்குக்கதையைக் கிருபையாகத் தேவரீருடைய மார்பிற்புதையும்படியாயேற்றபோது, அந்தக்கதையானது கல்லின் மேல்வீழ்ந்த பந்தெனஎழுந்து பலபலபொடியாய்த் தெறிந்துத் திரும்பித் தன்னையெறிந்த தாடாளன் பேரிலேயேவிழுந்துதாக்கி, அத்தனுலவன் அழிந்து சொர்க்க லோகம் புகும்படியாகச் செய்தீர். ஓ நிர்மலானந்தனே! நல்ல தருணமாகிய பதிநாலாநாள்யுத்தத்தில் மத்தியானவேளையில் தடாகமேற்படுத்தி, அந்தத் தடாகத்தில் தண்ணீர் குடிக்க வந்த சத்துருக்களின் சேனைசயின்ய முதலிய சகலருஞ் சந்தைக் கூட்டமாகக் கூடியிருக்கும் சமயத்திற் சங்க முழக்கி, வாளாயுதம்பிடித்த நிருபர் முதலிய போர்களெல்லாம் பங்கப்படும் படிக்குச் செய்தீர். ஓகாளிங்கநடனபாதனே! அபிமனைக் கொன்ற பழிக்குப்பழி வழியாய் முடிக்கும்படியாய்ப் பதிநாலாநாள் யுத்தத்திற் சூரியனை மறைத்து, இருளை அழைத்து, எதிரியைக் கெடுத்து, சபதமுடித்து, தனிப்பழியைத் தீர்த்தீர். ஓ சந்திரசூரியரென்னுஞ் சங்கு சக்ராயுதனே! இதோ நேற்றுப் பதினைந்தாநாள் யுத்தத்தில், இயாவரும் எஞ்சித் துஞ்சிக் கெஞ்சிப் பஞ்சாகும்படிக்குச் செஞ்சா மாருதம்போல் அஞ்சாமற் றெடுத்த அஸ்வத்தாமனுடைய ஓர் உக்ர அஸ்திரத்தினால், நாங்களைந்துபேரும், எங்களைச்சேர்ந்த உறவினரியாரும் அழியாம லிருக்கும்படியாய் யோசித்து, எங்களை வாகனங்களில் விட்டிறக்கி, கையிலிருந்த விற்படை வேற்படை விட்டு இருகரத்தையுஞ் சிரத்திற் குவித்து நிற்கும்படி செய்து, அந்த அஸ்வத்தாமன் விட்ட அஸ்திரத்தை அபலமாக்கி நீக்கிவைத்தீர். ஓ அமலவாநந்தனே!

போர் தொடங்கிய முதல்நாள் யுத்தத்தில், வீஷ்மர், துரோணர் இவர்களிடத்திற்கு எங்களை யழைத்துப்போய்க் குறைசொல்லி அவாளிறக்கும்படியாகிய நிரியாண நிச்சயங் கேட்டு, வீஷ்மரைப் பத்தா நாளிலும், துரோணரைப் பதினைந்தா நாளிலும் முடித்து வைத்தீர். ஓ மும்மூர்த்தியும் ஒன்ருகிய மூர்த்தியே! ஓ காலாதீதமானவனே! ஓவேதமுணர்ந்த வேதியனே! பாரிற்பொருந்திய மாந்தர் முதலான வேந்தரும், நற்றவத்தோராகிய உத்தமத் தேவரும் அறியக்கூடாத உமது செயலை, அற்பமாகிய எம்போலியரால் அறியத்தக்கதோ? ஓ ஆதியநாதியே! என்று அறன் குமாரனுகிய தருமராஜன் அன்பு நிறைந்த அநேகவித ஸ்துதிகளைச் சொன்னர். அந்த வேளையில், ஸ்ரீ கிருஷ்ண மூர்த்திக்குக் கருணைபிறந்து, கடாட்ச வீட்சண்யக் கண்ணனுகிய தருமராஜனைப் பணிந்து, இருகரத்தினுலுந் தழுவி, எந்தலே நீங்களனைவரும் இப்போது நடக்கிற யுத்தத்தில் இறக்கமாட்டீர்கள். உங்களுக்கொரு சிந்தனையுமில்லை, பயப்படாதீர்கள் என்று ஆசீர்வசனம் பலவாகச் சொல்லி, நடனமமைந்த குதிரைகள் பூட்டிய தேரையுடைய சேனுபதியென்னுந் திர்ஷ்டத்துய்மனைப் பார்த்து, நமது படைகளை யெல்லாம் அணிவகுத்து வையுமென்று உத்தரவு செய்தார். அண்ணலாகிய திர்ஷ்டத்துய்மன் அந்த அருளாளனுடைய அருள்வாக்கின் படிக்குச் சத்துருக்கள் பயப்படும் படியாய்ப் பேரணி வகுத்து நின்ருன்.

### சல்லியராஜனைத் தனக்குச் சாரதியாக்குவிக்கும்படி கர்னராஜன் துரியோதனராஜனைக் கேட்டுக்கொள்ளுதல்.

இவ்விதமாகப் பாண்டவர்களுடைய பதாகினி வெள்ளம் பேரணியாக ஏர்ப்படுத்திய பெருமிதத்தை, சொல்லவல்ல திறத்தை தேரையுமுடைய அங்கதேசத்தலைவன் கண்டு பட்டப்புகொண்டு, படம்பொருந்திய பாம்புக்கொடிபடைத்த துரியோதனனைப் பார்த்து, ஓ குருகுல நாயகமே கேளுமென்று குதிரை பூட்டிய தடந்தேரினையுடைய கோவேந்தர் பலருங் கேட்டுக் கொண்டாடும் படியாகச் சொல்லுகிருன். ஓகைதேர்ந்த பலவித ஆயுத வல்லபங்களில் வேறெருரு வீரனுக் கொப்பில்லாதிருக்குங் கட்டாண்மைபெற்ற துரியோதனனென்னுங் காவலனே! வாசமாலை யணிந்த புஜுபல வீரர்களுடைய தலைகளெல்லாம் உருண்டுபோய்த் தரையில் உடலாகிய கவந்தங்கள் கூத்தாடும்படியாய் இந்த க்ஷணத்தில் இப்போதே பாண்டவரை வென்று செயம் பெருகிறேன் பாரும். அல்லாமலும் - "கார்ப்பாகசாதனன்றன் மகனுக்கெல்லாக் கலகமுஞ் செய் வஞ்சனையே கற்றகள்வன், தேர்ப்பாகனுய் நின்ருனவனுக் கொப்பார் தேவருலகினுமில்லை திசைகளெல்லா, மார்ப்பாக மோதிவருங்கவனமா நெஞ்சறிவொனும் போரில்விரகறிவிப்பானும், போர்ப்பாகாய்த் தேர்கடவு செயல் வல்லானும் புனைதாமச் சல்லியனே புவியிலன்ருே. அவனின்னென் மணிநெடுந்தோர் கடவுமாகி லருச்சுனனுக் கடலாழியவனே யன்றிச், சிவன்வந்து தேர்விடினுங் கொல்வேனந்தத் தேர்நின்ரு ரிருவரையுஞ் செங்கோல் வேந்தே, பவனன்சேய் முதலான துணைவரோரோர் பகழிமுனை தனக்காற்ருர் பர்வை யாடைப், புவனங்களனைத்தையுநின் குடைக் கீழாக்கிப் புரிதிறல்வா கையுநினக்கே புனைவிப்பேனே'' கேளுந் துரியோதன மகாராஜனே! மேகவாகனனுகிய இந்திர குமாரனென்னும் அர்ச்சுனனுக்குத் துணைசெய்யும் படியாய் எல்லாக் கலகமும் விளைப்பதற்கு வஞ்சங்களை நெஞ்சுறச்கற்று உருவாகிவந்த மாயனுகிய கள்வன், அப்பார்த்தனுக்குச் சாரதியாய் அமைந்திருக்கின்ருன். அதனுலே அந்த அர்ச்சுனனுக்கு ஒப்பாகிய பேர்கள் மண்டல முதலாகிய விண்டலத்தினுமில்லை. அவனுடன் சண்டையிட்டு வென்று வரத்தக்கவரும் இல்லை. ஆகையால், அந்தப் பார்த்தனுக்குச் சமைந்த சாரதியைப்போல் எனக்கும் ஒரு சாரதி கிடைப்பானுகில், உமக்கு நான் அணிமுடி சூட்டி ஆசையாய்ப் பார்ப்பேன்.

ஆனதால், தஞ்சமென்றடுத்த அப்பஞ்ச பாண்டவருக்கு அஞ்சலென்றருளித் தேர்ப்பாகனுகப் பொருந்திய அஞ்சனமேனி வஞ்சகனைப்போல் தேர்விடுவதற்கு நம்மிடத்தில் ஆர் இருக்கின்ருர்களென்று கேட்பீராகில், ஓ அரசர்க்கரசாகிய வணியாய்ப் புரசைக்களிறேறிய மணியே! கேளும்; திசா திசைகளு நடுங்கி ஒடுங்கும்படியாக வார்ப்பரித்து வேகமாய் அரைநொடியில் வலம்வருகின்ற அஸ்வங்களுடைய மனத்தை அறியத்தக்கவனும், எதிராளிகள் செய்யும் போர்த்திறத்தை அறிந்து சமயோசித சூக்ஷியை எனக்குத் தெரிவிக்கத் தக்கவனும், குவிந்தசேனைகள்பேரிற் கவிந்து

தேர்விடுந் தொழிலிற் றிறவானும், மலர்ந்த மாலையணிந்த புயத்தோனாகிய சல்லியராஜனை விட இத்தாரணியில் வேறொருவருமில்லை. அந்த மகாராஜனாகிய சல்லியன் என்னுடைய மணிநெடுந் தேர் ஊர்வதற்கு உடன் படுவானாகில், இன்றையப்போரிற் சக்ராதரனாகிய திருமாலுஞ் சர்வசம்ஹார உருத்ரனாகிய பெருமானும் வந்து இந்த அர்ச்சுனனுக்குத் துணைப்பட்டாலும், அல்லது தேர் விட்டாலும், முந்திவந்த நரநாரண ரிருவரையுந் தப்பாமற் கொல்லுவேன். ஓசெங்கோல் ஆட்சி பெற்ற துரியோதனராஜனே! அப்பால் வாயு புத்திரனென்னும் வீமன் முதலாகிய நால்வரும், ஒவ்வொரு பாணமுனைக்கு நிற்கமாட்டாமல் மடிவார்கள். சமுத்திரத்தை ஆடையாயுடுத்த அவனிமுழுவதும் உம்முடைய சந்திர வட்டக்குடை நீழற்குள்ளாக்கி, போர்த்திற மாலையும் பூஷணமாலையும் நீர்பணும்படியாகச் செய்கின்றேன் என்று சொல்லிப் பின்னுஞ் சொல்லுகிறான். "நஞ்சோற்றம் பெற நுகர் உற்றிருண்டகண்டர் நற்றொண்டர் வடிவமென நண்ணும் வெண்ணீற், றஞ் சோற்றுமடற் கைதை கமழுங்கான லகன்குரு நாட் டரியேறேமானின்றீம்பால், வெஞ்சோற் றோ டினிதருந்தியமுதருந்தும் விண்ணவர் போல் இந்நெடுநாள் விழைந்து வாழ்ந் தேன், செஞ்சோற்றுக் கடனின்றே கழியேனாகிற் றிண்டோள்கள் வளர்த்ததனாற் செயல் வேறுண்டோ. ஒருருமொருகுலமு மில்லா வென்னை யுங்கள்குலத் துள்ளோரி லொருவனாக்கித், தேருருமவர்மனைக்கே வளர்ந்த வென்னைச் செம்பொன்மணி முடிசூட்டி யம்புராசி, நீரூரும்புவிபாலர் பலரும்போற்ற நின்னி னுஞ்சீர் பெறவைத்தாய் நினக்கே யன்றி, ஏரூருங் கதிர்முடியா யுற்றபோரில் யாக்கினி யென் னுயிரளிப்ப தியம்புவாயே.'

ஓ புரவலனே! திருப்பாற்கடலிற் பிறந்த ஆலஹால விஷத்தை யாவரும் பிழைக்கும்படியாய்ப் புசித்து, அதனாற் கறுத்த கண்டத்தையுடைய சிவபெருமானுக்குத் தொண்டாகிய சிவனடியார்களின் திருமேனியிற் றரித்தருளிய திருவெண்ணீற்றின் வடிவத்தைப் போற்சிறந்த சோறுநிறைந்த மடலையும், பூப்பொடி மிடைந்த புஷ்பத்தையுமுடைய தாழைகளானது, எங்கும் பரிமளித்துக்கொண்டிராநின்ற கழிக்கரைக் கானகம் பொருந்திய நெய்தநிலமானது, செழிப்பினையுடைய மருதநீலமாகி, திருந்திய கார்வளம்-நீர்வளம்-நிலவளம் - நெல்வளம் - போர்வளம்-பேர்வளங்கொண்ட பொங்கமுடைய குருநாட்டுக் கதிபதியாகிய சிங்கமே! உம்முடைய அன்னமும், புத்துருக்கு நெய்யும், ஆய்ந்த பருப்பும், தோயந்ததயிரும், காய்ந்தபாலும், வாய்ந்த வெண்ணெயும், நாவுக்குரிசையா யறுசுவை வாய்ந்த அமுதும், தேவாமிர்தமுண்ட தேவர்களைப் போல் தின்று இதுவரையிலும் உயிர்வளர்த்து வாழ்ந்துவந்த நான், இப்பேர்ப்பட்ட யுத்தகாலத்திற் செஞ்சோற்றுக் கடன் கழிக்காமற் போவேனாகில்; என்னுடைய திணிந்த தோள்களை வளர்த்து வந்ததற்குப் பிரையோசனமென்ன? ஓ துரியோதன மன்னனென்னும் அண்ணலே! இதல்லாமலும், இன்ன ஊரானென்றும்-இன்னகுலத்தானென்றும்-இன்ன தலத்தானென்றும்-ஏதொன்றுமில்லாமல், உங்களுக்குத் தேர்செலுத்துஞ் சாரதியாகிய சூதனுடைய வீட்டில் தளர்ந்து வளர்ந்துவந்த என்னை உங்கள் குலத்துள்ளவர்களில் ஒருவனாகக் காட்டி, அங்கதேசத் ததிபதியாக அணிமுடிசூட்டி, அழகிய குலக்கொடியை அணிமன்றல்கூட்டி, உம்மை வணங்குஞ் சமுத்திரஞ் சூழ்ந்த தேசதேசராஜர் பலரும் என்னை வணங்கும்படியாய் வைத்து, உம்மைப் பார்க்கிலும் என்னைச் சீர்பெறும் பதத்தில் உயர்வு செய்துவைத்த என்னுத்தமன் நீரன்றோ? ஓ அழகு செறிந்த கிரணக்கதிர் முடியாய்! இப்போது நேரிட்டிருக்கும் யுத்தத்தில் உமக்காகப் பாடுபட்டு என்னுயிரைக் கொடுக்காமல், இன்னும் யாருக்கு இன்னுயிரை வளர்க்கப் போகிறேன்? சொல்லும் ஓ என்னுயிர்க்குயிராகிய இறைவனே யென்று கர்னமகாராஜன் தணகலுழ்ந்து கரைந்துபரிந்து கருந்துவந்து சொன்னான்.

### கர்னன் வேண்டுகோளின்படி துரியோதனன் சல்லியனைவேண்ட, அவன் மறுத்துப் பின்ன ருடம்படல்.

இப்படிகர்னமகாராஜன் சொல்லியவார்த்தையைக் காந்தாரகுலக் கன்னியீன்ற மன்னர் பிரானாகிய அரவக் கொடியோன் கேட்டு, அகமகிழ்ந்து முகமலர்ந்து, அருணிறைந்து, ஓரிமைப்பொழுதிற் குற்றமற்ற மத்திரதேசவாச ராஜபோஜ விசுவாச நேசனாகிய சல்லியனை அழைத்து, அவனுடைய கையைப் பிடித்துக்கொண்டு, ஓவண்டுநெருங்கித் தென்னாவென்று பாடுஞ் செவ்விய மாலையணிந்த

திருத்தோளினையுடைய சிநேகனே! நான் உம்மைக் குறித்து நல்ல ஒரு காரியஞ் சொல்லப் போகின்றேன். நான் சொல்லப் போகின்ற வார்த்தை நல்லதா யிருந்தாலும், கெட்டதா யிருந்தாலும் அதை நீரின்பமாகக் கேட்டு, உடன் படுகிறேனென்று எனக்கொரு வரம் ஆணையிட்டுத் தரவேண்டும். உன் பேரில் ஆணையிருக்கிறது. நான் சொல்லும் பேச்சை நீர் தள்ளக்கூடாது. ஆனதால், எங்கே ஆணையிடுமென்று தன்னுடைய இருகரத் தையுங் குவிக்க, சல்லியராஜன் சந்தேகத் துடன் தாழ்ந்துசொல்லுகிறான். ஔதிர்த்துப் பகைத்த சத்துருக்களுடைய உயிரையுங் கொடுத்து, அடுத்துப் பிழைக்கவந்த பேர்கள் செய்த பெருங்கொடுமைக் குற்றங்களை யெல் லாம் பொறுத்து, அன்பாக ஆதரித்து, ஆசை வைத்து, ஆண்மையுற்று, உலக முழுதும் ஆக்கினைச் சக்கரஞ்செலுத்தும் பாக்கியவானா கிய வணங்காமுடிபெற்ற அரசனே! என்னை ஒருபொருளாக நினைத்து, உம்முடைய இரு கரத்தையும் விரித்து, வரமாகக்கேட்கும் வாய் மையைத் தடுத்து, ஒருபோதும் மறுத்துச் சொல்ல மாட்டேன். ஆனதால், உம்முடைய மனக்கருத்தைச் சொல்லுமென்று மத்திரபூ பதி மெத்த யிளைத்துக்கேட்க, துரியோதனன் சொல்லுகிறான். ஐயா சல்லியராஜனே! நீரு ண்ட காளமேக நிறத்தை வெளுப்பென்று சொல்லும்படியாகக் கருத்த திருமேனியும் பொறுத்த திருத்தகுகண்ணன்; என்னுடைய சத்துருக்களாகிய பாண்டவர்களை எப்படிக் காத்து ரட்சிக்கின்றானோ? அப்படிபோல நீரும் எங்களைக் காத்து ரக்ஷிக்கவேண்டிய பொறுப்பு உம்முடையதென்றான்.

இந்த மொழியை சல்லியன் கேட்ட மாத் திரத்தில், மிகவும் மனம் பிரமித்து வணங்கா முடி மன்னனை நோக்கி, ஓ வையகம் புரக்கும் மகாராஜனே! வேகத்துடன் தாவி நடக்குங் குதிரைபூண்ட நெடுந்தேர்களுடைய ராஜாதி ராஜர்க்கெல்லாஞ் சிரேஷ்டத்துவமா யிருக் கின்ற தேவரீர் எம்போல்வாரை இரட்சிக்க வேண்டியது; நாங்கள் உம்முடைய தயவுக்குக் காத்திருக்கத்தக்கது. அப்படியிருக்க,உமதேவ லின்படி உமது சந்திரவட்டக்குடை நிழலுக் குள் அடங்கி ஜீவனஞ்செய்து காலங் கழித்து வருகின்ற என்னைப்போலொத்த தீனனைப் பார்த்து, கர்ப்ப ஸ்ரீமந்தனாகிய நீர் காப்பாற்ற வேண்டுமென்று கேட்டது இயற்கையோ? இல்லை எங்களுடைய மனதை சோதிக்கும்படி யாகச் சொன்னதோ? இதென்ன காரணமோ? இதனைக்குறித்து எனக்கு யாதொன்றுந்தெரிய வில்லை. மேலும், கண்ணனைப்போற் காக்க வேண்டுமென்று கட்டுரைகூறினீர். ஓ எதிர் ஒருவருமில்லாத காவலனே! அந்தக் கருணைக் கண்ணன் எப்பேர்ப்பட்டவரென்றால், தேவர் களுக்குட் சிறந்ததேவுமாய், மானிடவர்களுக் குள் உயர்ந்த மானிடவுருவமாய், இன்னும் சொல்லுகின்ற பற்பலகோடி சராசரங்கள் யாவுமாய், அண்டரண்ட பிர்மாண்டமுமாய் நின்றருளிய ஆதிமூர்த்தியாகியவர். அப்படிப் பட்ட யாதவகுமாரனுக்கு நான் ஈடாவேனோ? அவருடைய வல்லமை எனக்குண்டாகிய தோ? ஓ அதைரியமில்லாத அரவத்துஜனே! எங்குநேரின்றி நடத்துந் தனிச் செங்கோலை யுடைய நீர் இப்போது சொல்ல வந்த காரியந்தானென்ன? அது இன்னதென்று உமது நினைப்பை வெளிப்படுத்துமென்று சல்லிய ராஜன் வினவினான். அப்போது, பெருஞ்சேனைகளின் சமுகத்தில் நிற்கின்ற அம்மத்திர தேசாதிபனுடைய முகத்தை நோக்கித் துரியோதனன் சொல்லுகின்றான். ஓ தாரணிந்த புயனாகிய ஓ சல்லியராஜனே! அர்ச்சுனனுக்குத் தேர் செலுத்துகின்ற அரி வாசுதேவனைப்போற் சூரியபுத்திரனாகிய கர்ன னுக்கு நீர் தேர்செலுத்தவேண்டும். அப்படி செலுத்தாமற் போவீராகில், இன்றையப் போரில் ஐவரையும் வென்று வெற்றியடை வது நமக்குத் துஸ்தரமாயிருக்கும். நம்மால் யுத்த நிறைவேறி யாவருமகிழப் புகழ்பெற மாட்டோம். நீர் என்சொல்லைத் தடுக்காமல் ஒப்புக்கொள்ள வேண்டுமென்று புகழ்ந்து வணங்கினான். இவ்விதமாகத் துரியோதனன் சொல்லிய அற்பச்சொல்லை ஒரு பொருளாய் மதிக்காமல் மனம் புழுங்கி, வாட்டமுற்று வருத்தமடைந்து, அவ் வணங்காமுடி மன் னனை நோக்கிச் சொல்லுகின்றான்.

"சதுர்விதத்தேர் வீரருக்குத் தடந்தே ருருஞ்சாரதி தன் றனயனுக்குத் தடந்தேரூர் தன், மதுமலர்த்தார் வலம்புரியா யிழிவன்றோ நீ மதித்த விறற்கர்னனுக்கு மெனக்குமிப்போ தெதிர்மலைக்குஞ் சேனை தன்னை, யிருகூறாக்கி யிகல்புரிந்தா லென்கூற்றை யிரியவென்றக், கதிரளித்தோன் கூற்றினையு மழித்திலேனேற் கடவுவன்றேரவற்கிது நீ காண்டமன்னா" ஓ வடிவேற்றாங்கிய மதிகுலபதியே! முன்பின்

பாராமல் என்னைப்பார்த்து இப்பேர்ப்பட்ட சொற் சொன்னீரல்லவா? அப்படியாகிறதாயிருந்தாலும், புனமாகிய வனத்திற் புல்லைத் தின்று உலாவுகின்ற புள்ளிமானுக்கு வேங்கைப் புலியானது தாழ்ந்து, ஏவற்றொழில் செய்யும்படியான பொல்லாத காலம் நேரிடுமாகில், அப்போதல்லவோ சல்லியராஜனாகிய நான் கர்னனுக்குச் சாரதியாகத் தக்கது; ஆ! ஆ! இப்பேர்ப்பட்ட வசனம் இன்னொருவர் சொல்லி யிருப்பார்களாகில், அவர்களுடைய நாக்கு இன்னேரம் என்னபாடு பட்டிருக்குமோ? அஃதுரைக்கவறியேன். சுயோதனனாகிய நீர் சொன்னபடியால் மனம் பொறுத்தேன் என்று மிகக் கொதித்துச்சொல்லி, மழுவைப்போல் மனமறுக்கங்கொண்டு, புருவ நெரித்தும், புகையெழச் சிரித்து, பொறிவர விழித்து, இருகண்ணுஞ் சிவந்து ஏறநோக்கி, சவுரியபராக்கிரம கோபமுடைய அச்சல்லிய ராஜன் வல்லியம்போற் குமிறிப் பின்னுஞ் சொல்லுகிறான். ஓ மதுநிறைந்த வலம்புரி மாலையணிந்த மன்னனே! நான் வருணத்தாருக்கும் ரதஞ் செலுத்தாநின்ற தேர்ப்பாகனுடைய வளப்புப் பிள்ளைக்குத் தேரோட்டுவது இழிவாகிய வேலையல்லவோ? அது உமக்கு எவ்வளவுந் தோன்றவில்லையே. மேலும் வீரமுதலிய தீரத்தில் அவனுக்கு நான் இளைத்தவனல்ல. அதை பரிட்சிக்க வேண்டுமாகில், இப்போது எதிர்த்து வந்திருக்கின்ற பாண்டவச்சேனைகளை இரண்டு பங்காக பிரித்து, எனக்கொரு கூறுங் கர்னனுக்கொரு கூறுமாக விடுத்து வெற்றிபெறச் செய்வீராகில், எனக்குப் பங்காகவிட்ட சேனைகளை முன்னுதாகச் செயித்து, கர்னன் பங்குக்குவிட்ட சேனைகளையுங் கொன்று முதன்மையாகிய ஜெயம் பெறுகிறேன். அப்படி ஜெயம்பெற போவேனுகில், உமது சொற்படியே அவனுக்குத் தேர் செலுத்துகிறேன் என்று நெருப்பெழக் கனன்று சொன்னான். இப்படிச் சல்லியன் உரைத்த வார்த்தையைக் கேட்ட அரவக் கொடிக்கதிபனானவன் மனஞ்சலித்து, முகம் வியர்த்து, உடல்மெலிந்து, மனமுறிந்து, சல்லியராஜனைப் புல்லியணைத்து, "செங்கோல் மலரி லிருந்தனைத்து மீன்றதிசை முகன்றானறம்வளர்க்குஞ் செல்வப்பாவை, பங்கோனுக் காதிமறைப்புரவி பூண்டபடிக் கொடித்தேர் கடவுதனிப் பாககனானன், பொங்கோதப் பாற்கடலா னிவனென்றியாரும் புகல்கின்ற வசுதேவன் புதல்வன் வந்து, வெங்கோப விஜயனுக்குச் சூதனானன் விஜயனுமன் றுத்தரன்றேர் விஜயனூர்ந்தான்" ஆனதால், ஓ அழகிய பூலோகமுழுமையுந் துதித்து மதிக்கும் ஆண்மிக்கையையுடைய மத்திர ராஜனென்னும் போர்வேந்தே! உம்மைப்போல் மிகுந்த கீர்த்திவாய்ந்து அமர்முனையில் ஜெயித்து அணிமாலைசூடிய வேந்தர்தொழும் வேந்தராயுள்ள வீராதி வீரர்களுக்குத் தேர் விடும்படியாகிய தொழில் மேன்மையல்லவோ? இந்தச் சாரதித் தொழிலான குறைவற்ற தவத்தையெடுத்து, நிறைவுற்ற பறத்தைக் கொடுத்து, மானிட ஜெனனமெடுத்து எவரிலுஞ் சிறந்து எல்லாக் கலைகளையுங் கற்ற வல்லவர்களுக்கு வருமேயல்லது, மற்ற லேசாகிய பேருக்கு வரத்தக்கதோ? இது குறைவாகிய வேலையல்லவோ? ஓ மதுநிறைவாகிய மாலையணிந்த சல்லியராஜனே! என்று விதுகுலபதியாகிய துரியோதனன் தன் னிருகரத்தைப் பணிந்து வேண்டிக்கொண்டான். அப்போது சல்லியன் என்னசெய்வான்? பாவம் (இப்படி பெரியவன் கைப்பிடித்தால் எப்படி சிறியவன் மாட்டேனென்பன்.) என்னும் பழமொழிபோல், ஒன்றும் பேசக்கூடாதவனாய் ராஜாதிராஜன் வரமாக கேட்டுக்கொண்ட சொல்லை மறுத்து, வேறொருவிதமாக வெறுத்துச் சொல்லுவதுந் தருமமல்லவே என்று யோசித்து, ஆகிலுமிந்த யுத்தத்திற் குதவி செய்ய உடம்பட்டோம். அவ்வுதவி எவ்வகைத்தாகினும் நிறைவேற்ற வேண்டுவதே என்று துணிந்து, துரியோதனன் கேட்டுக்கொண்ட காரியத்தைப்பற்றி ஒன்றுந் தடுக்காமல் உடம்பட்டான்.

### துரியோதனன் சல்லியனுக்குத் திரிபுரதகன சரித்திரங்கூறி அவன் மனத்தளர்வை மாற்றுதல்

ஓ ஜெனமேஜெயமகாராஜனே! இப்படிக்கு உடம்பட்ட சல்லியராஜனுடைய மனமானது, துடிதுடிப்படங்கி பூரணமாக இசையாமல் உள்ளத் தளர்ச்சி கொண்டிருக்கின்றானென்னும் உண்மையைத் துரியோதனன் அறிந்து, அவனுடைய விசனம் நீங்கும்படியாய் மெத்தவுநாடி, பூர்வத்தில் நமது பெருமானனவர் புரம்பொடி செய்த கதையைச் சொன்னான். அஃது யாதெனில், ஐயா சல்லியராஜனே! தாருகாசுரன் பெற்ற பிள்ளைகள் வித்துவமாலி-தாருகாக்ஷன்-கமலாக்ஷன். இம்மூவருங் கேயூர மணிகுண்டல கிரீட கவஜ

மணமலர் மாலைகளை நீக்கி, சடைமுடி மரவுரி காவிகாம்பர விபூதி முதலிய காப்பைத்தரித்து, தாருகாவனச் சார்பிலிருந்து, பிரமாவைக் குறித்து வெகுநாள் தவம்புரிந்தார்கள். எண்ணிறந்த நாள் தவஞ்செய்த இவர்களுக்கு எதிரிற் கோடிசூரியப் பிரகாசம்போற் பிரமதேவன் பிரசன்னமானார். அந்தத் தேவனைக் கண்ணிழந்தவர்கள் கண்பெற்ற தன்மையைப் போற் கண்டு, எதிர்கொண்டு சென்று தீர்க்க தெண்டஞ் செய்தார்கள். அவர்களைச் சதுர்முகன் பார்த்து, நீங்கள் என்னை வேண்டி என் தவஞ் செய்தீர்கள்? உங்களுடைய எண்ணமென்ன சொல்லுங்கள்? என்று இரணியகருப்பன் கேட்க, ஐயா! நாங்கள் கால்வழி கால்வழியாக அழியாதிருக்கும்படியாய் வரந்தாருமென்று அசுரர் உரைக்க, அவர்கள் கேட்டவரத்தை அவர்தடுத்து, நீங்கள் முறைமை தப்பித் தீதாகிய வரங்கேட்பது ஞாயமல்ல; இவ்வுலகத்திற் பிறந்த பேர்களிலும், மேலுலகத்திற் சிறந்த பேர்களிலும், சாவில்லாமற் பிழைத்திருந்த பேர்கள் யார்? நாமரூபம் ஏற்பட்டபோதே அழிவென்பது உடற்பிறப்பென்று அறியமாட்டீர்களா? அந்த ஒருவரந்தவிர மற்றெது கேட்டாலுந் தருகின்றேன் சொல்லுங்களென்று சரோருகத்தன் விளம்பினார். அசுரர் அம்மொழியைக் கேட்டு, சுவாமி! திரிலோகத்திலுஞ் சிறப்புப் பொருந்திச் சீர்வளந் திருந்திய செம்பொன், வெண்பொன், கரும்பொன்னாலாகிய மூன்று மதில்களையுடைய புரமூன்றும் நினைத்தவிடத்திற் சிறகப் பறக்கத் தக்கதாய் அருள்செய்ய வேண்டுமென்று கேட்டனர். அப்படியே திரிபுரமென்னும் பெயரை உடையதாகிய புரமூன்று தருகிறோம். அவைகளுக்கு அழிவெப்படி யென்று அயன் கேட்டனர். அதற்கந்நிசாசரர், ஐயா! எவர்களாலுஞ் ஜெயிப்பதற்கரிதாகிய அப்புரங்களைக் கொடுப்பீராகில், தன்னையொப்பாரு மிக்காருமற்ற ஒருவன் அம்மூன்று மதிலினுடைய குணத்தைக் கூட்டி, விற்குணத்தைப் பூட்டி, கண்ணிமை கொட்டுமுன் ஒரேபாணந்தொடுத்து அடிக்க அடுத்த காலத்தில்; இம்மூன்றுபுரமும் அழிந்துபோகக்கடவதென்று அனுக்கிரகஞ் செய்யுமென்று தொழுது வாழ்த்தினார்கள். அதனைக்கேட்ட வாசனையும் மணமும் நிறைந்த மலரோன், அவர்களுடைய கட்டுரையின்படி வரங்கொடுத்து, வந்த வழியே மறைந்து போனார்.

பின்பந்த மூவரும், அந்தப் பிரமாவை வாழ்த்தி வணங்கி, மயனை யழைத்து மால் மகன் சொன்ன வாக்கியத்தைக் கூறினார்கள். அம்மயனாகிய ராக்ஷசக்கம்மியனானவன், அந்தப்படியே குற்றமற்ற மூன்றுமதில்களைப் பெற்ற நகரமூன்றுபடைத்து, நல்வளங்களெல்லாஞ் சமைத்து, திரிபுரமென்று பேரிட்டு, அரிய தவம்புரிந்த அவ்வரக்கர் மூவருக்குங் கொடுத்தான். அவர்களந்த யிடத்திற் குடிபுகுந்து, நல்ல சம்பத் துடையவர்களாய், பெரியோர்களும் அருந்தவ முனிவர்களுந் தலைகுனிந்து தாழும்படியாகவும், தேவர்களும் மற்றயாவர்களும் வணங்கி நடுங்கி ஓடும்படியாகவும், அத்திரிபுரத்துடன் திரிலோகத்தையும்புரந்து, சூரியனுந்தோற்கும்படிக்கு மேற்குத்திசையில் ஓட்டி மாணிக்க முடியினையுடையவர்களாய்ப் பலப்பட்டுப்போய், பலவகை இன்பங்களும் அனுபவித்து, தங்களுக்கொரு குறைவுமில்லாமல், ஒருவருந் தமக்கு எதிரில்லாமற் சம்பிரமமாக யிருந்தார்கள். அச்சமயத்தில், இந்த மூவருக்கும் பிறந்தபிள்ளைகள் உயர்ந்த நான்முகக்கடவுளை நாடி, கோடிகாலந்தவம்புரிந்து தவங்கைகூடி, ஏழுலகங்களையும் வெல்லவும், சத்துருக்களைத் தாங்கள் செயித்துக் கொள்ளவும், எதிரிகள் தொட்ட வாளிகளினால் தாங்கள் சாகாதிருக்கவும், தங்களவர்களில் ஆராகிலும் ஒருவனைமடிந்தால் ஒன்று பத்தாகப் பெருகிப் பிழைத்து வரும்படியாகவும் வரங்கள் பெற்று, ஆணவம்-மாயை-காமியம் என்னு மும்மலத்தையுந்தீவினைக்கூட்டத்தை விளைவிக்குந் தன்மைபோன்று தங்களுக்குத் தாங்களே விளைத்து, மேலாய் விளங்கி, உரம்பொருந்திய மல்லாண்மையாலும், கரந்திருந்திய வில்லாண்மையாலும், வீரகண்டைதரித்த தாளாண்மையாலும், பாரதண்டு பொறுத்ததோளாண்மையாலும், கமலமலர் மாலையணிந்த பிரமதேவன் கொடுத்த வரத்தின் ஸ்திரத்தினாலும் சிறந்த ரதகஜதுரகபதாதிகள் முதலிய ராட்சசப் படைகள் மிகுந்து, கடல்போலிரைந்து, விரிந்த திரைசூழ்ந்த பூமண்டல முதலிய எண்டிசையெல்லாம் மிண்டுசெய் கண்டக துண்டர்களாகி, சண்டனும் இவர்க்குத் தொண்டு செய்யும்படியாய் மாலையிலங்கிய மார்பினராகி யிருந்தார்கள். இவர்கள் பலத்தால் யெங்கும் மாய்கை நிறைந்த வாளரக்கர் மயமானார்கள். இவ்விதப் பெருக்கமுடைய ராட்சசர்களையும், அவர்கள் செய்யாநின்றகொடியதீங்குகளையும், முனி

வர்களுந் தேவர்களுங்கண்டு, நடுங்கிப் பயங் கொண்டு, நெஞ்சு கலங்கி, அஞ்சி விலங்கி, தேவேந்திரனைக் கூட்டிக் கொண்டு சத்திய லோக வாசியாகியசரஸ்வதிநாயகனென்னுஞ் சதுமுகனிடத்திற் போய் சாஷ்டாங்கமாகப் பணித்து, தானவர்களால் தங்களுக்குநேரிட்ட சங்கதியைச்சொல்லி அபயஸ்தங்கேட்டார்கள்.

அந்த மொழியைக் கேட்ட தட்சணமே பிரமதேவன் அவர்களை யழைத்துக்கொண்டு, க்ஷீராப்தியில் யோக நித்திரையிலிருக்கின்ற திருமாலிடத்திற்குப்போய், அவரை இயாவருந் தரிசித்து வணங்கிச் சமீபத்திலிணங்கி, தங்கள் குறையைப் பகர்ந்தார்கள். அவை களைக் கேட்டுணர்ந்த மலரகிதனுகிய கேசவன், அரக்கரால் விளைந்த பொல்லாங்கை யெல்லாந் தன்னுட்கொண்டு, அந்த ராட்சதரை வென்றுலொழிய வேறொரு நன்மையுமில்லை யென்று எல்லோருங் கூடிக் கைலாசபதியினிடத்திற்கு முன்போகச் சமயம் வாய்க்காமல் அஞ்சிஅஞ்சிஒதுங்கி, அக்கயிலையினோர்சார்பிலிருந்து, ஆலாலமுண்ட அரனைக் குறித்து ஆயிரந் தேவவருஷம் அருந்தவம் புரிந்தார்கள். அப்போதும் அந்திவண்ணன்பிரசன்னமாகாததினுற் சிந்தை மெலிந்து, நொந்து வருந்தி, யாவரும் தவம் விட்டெழுந்து,உமாமஹேசன் உறைந்து வாழ்கின்ற மாசுமறுவற்ற திருவோலக்க மண்டபத்தின் தலைவாசலில் நின்று, அங்கு காவல் பூண்டிருக்கும் ஸ்ரீ நந்திதேவருடைய அருள்கொண்டு, பரமசிவம் எழுந்தருளியிரா நின்ற பவளக்கால் மண்டபத்தின் பக்கத்திற்போயிருந்து, பராபரை தழுவிய பராபரத்தை வாடிய பயிர் மழைகண்டவாறுபோற்கண்டுதேடியபொருள் சிக்கிய வீறிபோற்கொண்டு, தெண்டனிட்டுத் தொழுது ஏற்றிப் போயினர். அப்போதொப்பற்ற அன்புகனிந்தொழுக ஆநந்தமயமாகிய அயனுனவர், தனது ராங்கு நாவினுலும் இருக்கு-எசுர-சாமம்-அதர்வணம் என்னும் நான்கு வேதத்தை அநந்தமுறையாக எடுத்தெடுத்துப் பாடி, நடேசனுடைய பெருங் கீர்த்தியென்னு மலர்களை அலக்கலக்காய் ஆய்ந்து அவர் திருமேனியிற்சூடி, தமக்கு மோட்சவீடு கூடியதென்று மேலாகியஇன்பம் விளங்க நின்று அடிபணிந்தேற்றி ஆடி, ஓ ஐந்தொழிற்செய்யும் ஆனனமமைந்த அமலானந்தமூர்த்தி! தேவரீர் ஜீவன் முத்தர்களாகிய மெய்யர்களின் மெய்யில் மெய்யாகிய சத்தியமாக விளங்கி நின்றீர். வேதவேதாங்கத்திற் கூறிய நன்னெறி முறையின் வழியிற் செல்லாத பொய்யர்களின் பொய்மொழி வழியிற் பொய்த்திருக்கின்றீர். பொய்மை யென்றும் மெய்மையென்றுஞ் சம்பந்தப் புணர்ப்பில்லாமல் மாநிலத்தோர்களுடைய சந்தேக நீக்கி; பசுபதியென்னும் பான்மை குன்றுமல் யாவரையுந் தேவரீருடைய உயிராக இரட்சித்தீர். இனிவேறென்ன சொல்லத்தக்கது? என்னைப் போன்ற அல்பாளாகிய நொய்யர்கள் தேவரீரை மதித்தலும், மதித்துத் துதித்தலும், நிந்தித்தலும், சிந்தித்தலும் பிரபஞ்ச சுபாவமாயிருக்கின்றது. பிரம்மாகியதேவரீரோ? மூவிதமாகிய காலமாயினீர்; சூரிய சந்திரராயினீர்; யாவர்க்குங் கடவுளாயினீர்; முற்றுந் துறந்த முனிவராயினீர்வேதாகமங்களாயினீர்;பிரிதிவு அப்பு-தேயு-வாயு-ஆகாயம் இவைகளானபூத கோலமாயினீர்;பசுவாகியஉயிர்களாயினீர்அவ்வுயிர்களுக்கு மோட்சத்தையருளும் பசுபதியுமாயினீர்;சாத்விகம்-இராசதம்-தாமதம்என்னு முக்குணங்களாயினீர்; இம் முக்குணங்களைக் கொண்டு செய்யு முத்தொழில் வல்லோர்களுக்கு முதன்மூலமாயினீர்; பேதமாயினீர்; அபேதமாயினீர்; பேதாபேதமாயினீர்; சித்தியாயினீர்; பத்தியாயினீர்; முத்தியாயினீர்.

ஓ அத்தனே! ஓ கர்த்தனே! தேவரீரைக் கண்டவர் சிலபேர்; கண்டுவிட்டவர் சிலபேர்; காணுதவர் பலபேர்; பேணுதவர் பலபேர்; இயாவருங் கருதுகின்ற வேதவிதியின் வழிப்படியே கைக்கொண்டுள்ளார் சிலபேர்; அவ்விதியை அநுசரிக்காமற் கைவிட்டவர் பலபேர்; பொருந்திய அன்புள்ளார் சிலபேர்; அன்பில்லார் பலபேர்; புராதனமாகிய குறிகளையும் செய்கைகளையுங்கண்டு உண்மையோர்ந்து நெடுநாளிருந்தவர்கள் சிலபேர்; அவ்வாறில்லாதவர்கள் பலபேர்; பாசபந்தமாகிய நல்வினை தீவினைகளை நீக்கினோர் சிலபேர்; நீங்காதவர் பலபேர்; இவைகளெல்லாந் தேவரீர் நடத்தும் விதங்களல்லாமல் வேறொன்றில்லை. எல்லாம் உமதுசெயல் என்று புற்பல விதங்களாய்ப் பாடிப்படித்து, இறைஞ்சி ஏத்தி, எட்டுகண்களிலும் ஆனந்தபாஷ்பஞ் சொட்டிட்டோடும் படியாய்த் துதித்து, வாய்புதைத்து வணங்கி நின்றூர். அப்படி வணங்கிய மறையன்மால் முதலாகிய பேர்களின் முகத்தை மகாதேவர் நோக்கி, நீங்களெல்லோரும் இவ்விடம்வந்த காரணம்யாது

சொல்லுங்கள்? பயப்படாதீர்கள் என்று யா
தொரு பயமும் அற்றவராகிய அச் சுந்தரேசர்
கேட்கவும், அவர்களெல்லோருங்கூடிப் பேரா
னந்தக் கூத்தாடி, மனமகிழ்ச்சியாகி இனி
நமக்கு நற்காலமென்று சந்தோஷங் கொண்
டாடினார்கள். அப்போது அம்சவாகனனு
கிய பிரமதேவன் சொல்லுகின்றார். ஓ பிரம
மாக விளங்கா நின்ற பரமசிவனே! பாப
அரக்கர் குலத்திற் பிறந்தும் அழியாத தப்
பிய தாருகன்பெற்ற முதன் மூவர்களும்,
இவர்கள்பெற்ற பிள்ளைகளும் என்னை நோக்கி
அருந்தவ மிருந்தார்கள். அந்தத் தவத்
திற் கிரங்கிய தேவரீருடைய அருட்செய
லானது என்னைச் செலுத்துதலினாலே, நான்
அவர்களுக்குப்பிரசன்னமாகி அவர்களுடைய
கருத்தறிந்து, சிறப்பாகிய என்மனது உவந்து
அவாள் எண்ணிய வண்ணம் எல்லாவர
முங் கொடுத்தேன். ஆனால், திரிபுரமும்
அந்தத் தீயருஞ் சீக்கிரத்தில் அழியும்படி
யாகச் செய்தி யிருக்கின்றேன். ஓ உலவாப்
பெருங்குணத்து உத்தமனே! இது உண்மை
யான காரியம் என்று உந்திபூத்தோன் உரை
த்து மறுபடியுஞ் சொல்லுகிறார். ஓ சச்சிதா
னந்தப் பொருளே! அவர்கள் என்னைவேண்டி
வினையமாகத் தவம் இழைத்து தங்களுக்கு
வேண்டிய வரமெல்லாம் பெற்றுக்கொண்டு,
திரிலோகத்தையும் அடக்கி, தேவர்களைவணங்
கத் தக்கதாய் மடக்கி, தேவதாபூசை ஆசாரிய
பக்தியை ஒடுக்கி, பாபத்தொழிலிற் குடன்பட்டு
மேன்பாடா யிருக்கின்றார்கள். ஓ வேதமுதல்வ
னாகிய வெள்விடையாளனே! அப்பாவிகளால்
தேவர்களுக்கு உணவில்லாமல் யாகாதி தொழி
ல்களுந் தவமுதலாகிய தர்மங்களும் பொய்த்
துப்போய் விட்டன. அவர்களைக் கொல்ல
நல்ல வல்லபமுடையவர் தேவரீரையல்லது
வேறொருவர் மற்றெந்தப் புவனத்திலுமில்லை.
ஆகையால், தேவரீருடைய திருவடிக்கடிமை
யாகிய அடியேங்களெல்லாஞ் சிறுமை நீங்கிப்
பெருமை பெறும்படியாய் அந்த அசுரரைக்
கொன்று, அறத்தை நிலைநிறுத்தி எங்களைக்
காக்கவேண்டியது என்று அயன் முதலிய எல்
லாத் தேவருந் துதித்தார்கள். அவர்களுக்கி
ரங்கிய அஞ்சலாக்ஷி பங்கனாகிய அந்தி வண்
ணன் கிருபை பூரித்து, அவரையுந் தேவேந்
திரன் முதலான பேர்களையும் பார்த்துச் சொல்
லுகின்றார்.

ஓ அமரர்களே! சுரர்களாகிய நீங்கள் எப்
படியோ? அப்படியே அசுரர்களும் நமது
அடியார்கள்தான். சகல உயிரும் நம்பும்படி
யாகப் பொதுமையாயிருக்கின்ற பசுபதியென்
னும் நாமமுடையவன் நான் தேவர்களுக்காக
இரங்கி அசுரரை ஒறுத்துக்கொடுப்பது இயற்
கையல்ல. உங்களுக்குள்ளே நீங்கள் பகைத்
துச் சண்டை செய்வீராகில், வஞ்சகராகிய
அசுராள் தாழ்ந்து அபஜெயம் அடையவும்,
நீங்களெல்லாம் மிகுஜெயம் பெறும்படியாக
வும் உங்களுக்குப் புஜவலிமை யுண்டாகும்.
என்று கூற்றுதைத்தோன்கூற, அந்த வசனங்
கேட்ட அமரரெல்லாரும் அரவாபரணனு
டைய அடிமேல் வீழ்ந்து, அடைக்கலமென்
றிரைந்து, அஞ்சலிசெய்து தாழ்ந்து, சுவாமி!
உமது அருள் கிடைத்தபோதிலும் அவர்களை
வெல்லமாட்டோம். எங்களாலில்லை. மெத்தப்
பயந்திருக்கின்றோம். நாங்கள் செய்த தவவலி
மைப் பலனெல்லாந் தங்களுக்கே தந்தோம்.
எங்களை அடிமைகொண்டு ரக்ஷியும். தேவரீர்
கிர்பா நிதியாகிய பசுபதியா யிருக்கின்றமை
யால், வஞ்சகராகிய துஷ்டர்களைக் கண்டித்து
நிக்ரகித்து, சிஷ்டர்களைப் பட்சம் வைத்து
அநுக்கிரகிக்க வேண்டும். இப்படி செய்வ
தினால் தேவரீருக்குப் பெருமையே யல்லது,
சிறுமையாகிய வசையில்லை. ஓதேவாதி தேவ
னே! நாங்கள்யாவருந்தஞ்சமென்று அடைந்
தோம். எங்களைக்காப்பது உமதுகடன். அப்
படிக்குக்காக்க மனமில்லாவிட்டால், தேவரீரு
டைய கண்டத்தில் வைத்தருளிய நஞ்சத்தை
விட்டாகிலும் எங்களை நாசப்படுத்தி விடும்.
என்று நான்முகன் முதலாகிய பேர்கள் நாரி
பாகனுடைய திருவடியைச் சென்னியிற்சூடி,
நெடுநேரம் வரையிலும் நைந்துருகினார்கள்.
பிரம்மவிஷ்ணுக்களே முதன்மையாக வந்து
இரந்து துதித்தலால், இவர்கள்பேரில் அன்பு
வைத்து ரக்ஷிக்கவேண்டு மென்னும் இச்சை
யுடையவராகிய, அலைகடலிற்பிறந்த ஆலகால
விடம்போன்ற அசுரரை நாசஞ் செய்வதற்கு
யோசனைசெய்து, மீண்டும் அந்த விஷயத்தில்
விருப்பமில்லாதவராகி, தமதெதிரிற் பொரு
ந்தி நிறைந்த பூசுரன் முதலாயினோரைப்
பார்த்து, ஓதீனர்களே! நல்லது இன்னுஞ்
சிலநாள் வரைக்கும் நீவிர் யாவரும் பாசுபத
விரதங் கருதுங்களென்று சொல்லி, அந்த
மந்திரத்தை அவர்களுக்கு உபதேசித் தருளி
னார். அந்த மந்திரத்தை அமரர்முதலிய யாவ
ரும் உபதேசக் கிரமமாகப்பெற்று, கயிலையங்
கிரிச் சாரலையுற்று, அநேகமாயிர வருடம்
அருந்தவமிருந்தார்கள். அவர்கள் விரும்பிச்

செய்த பாசுபத விரதத்திற்குப் பவஞசன் மெச்சி, உச்சிதமாகிய விடைமே லெழுந்து பிரசன்னமாயினர்.

அப்போது வரந்தரவந்த அரனை எதிர்கொண்டுவணங்கி வாழ்த்தித் தோத்திரிக்கின்ற பேர்களை அக்கிருபாநிதி நோக்கி, ஓ தேவர்களே! அந்தத் திரிபுரமானது அழிந்து நீறெழும்படியாய் எதிர்த்துப் போடுகிறேன். நீங்கள் இதைக்குறித்து வருந்திச் சிந்தனை செய்ய வேண்டியதில்லை. ஆனல், அந்த அசுரர்கள்பேரில் யாம் சண்டைக்குப் புறப்படவேண்டி யிருப்பதால், அதற்கு வேண்டிய தேர்-குதிரை சாரதி-வில்பாணம்-இவை முதலியன கொண்டு வாருங்களென்று கொன்றை சூடிய கோமான்கூற, விண்டுமுதலிய யாவரும் பண்டு செய்த வப்பலன் கண்டோமென்று களியுட்கொண்டு, கங்கைவேணி நாதன் வாக்கியமாகிய வேதவிதிப்படி ரதஞ் சமைத்தார்கள். அஃதெப்படியெனில், அழகிய சக்கரவாளகிரி அச்சாகவும், சூரிய சந்திராள் சக்கரமாகவும், குழுமிய பூமி தேர்த்தட்டாகவும், அஷ்டகுலாசலங் குத்துக்காலாகவும், கொடுங்கைமுதலாகிய உறுப்புக்களும் சித்திரப் பிரதிமெய்களும், தேவர்களாகவும், செகதலபிம்பங் கலசமாகவும், அண்டகடாகங் குடையாகவும், பற்பலநிறம்பெற்ற சமுத்திரங்களெல்லாந் தேர்ச்சீரையாகவும், நீருண்ட சப்தமேகங்கள் கமழும் பசுமையாகத் தாறுவிட்ட வாழையுமாகவும், நிலைபெற்ற ஆறுசமயங்களும் அஸ்வங்களாகவும், மாறிலாத வேதநான்குங் குதிரைபூட்டுதற்கு வடமாகவும், கெடுதிபடாதகுடிலென்னும் மந்திரமானது குதிரை யோட்டுமுட்கோலாகவும், விவேகத்திற் சிறந்த விதியாகிய பிரமாவைச் சாரதியாகவும் அமைத்து, அலங்காரமாகத் தேரொன்று சமைத்து, மகமேருவினுடைய வலுமைகளை யெல்லாம் வில்லாகத் திரட்டி, இந்தப் பூபாரந்தாங்கிய ஆதிசேடனை நாணியாகப் பிகிந்து, அண்டத்தை அளந்தருளிய விண்டுவாகிய மேகவண்ணனை நாராயணஸ்திர வடிவாக்கி, அந்த அஸ்திரத்துக்கு தீக்ஷண்யமாகிய அக்நிதேவனைக் கூர்முனையாகக்கூட்டி, பிரசண்டமாக வீசுகின்ற பலம்பொருந்திய வாயுதேவனை அந்தநாராயண பாணத்துக்கு ரெக்கையாகக் கட்டி, நிறைத்து, இரதவடிவா யமைந்திருக்கின்ற நொடியோன் முதலிய பேர்கள் சந்திரசடாமுடியோ னிடத்திற்சென்று, ஓசம்போ! ஓசங்கரா! ஓமகாதேவா! ஓமகாப்பிரபு! தேவரீர் கட்டளைப்படி தங்களுக்குத் தேர்சமைத்து, அதில் விற்பாண முதலியன அமைத்துக் கொண்டுவந்தோம் என்று தாமென்னும் ஓர் மமதைகொண்டு சொல்லினர்கள். அப்போது மஹேசன் அத்தேரைத் தலைசாய்த்துப் பார்த்து, சடைமுடி யசைத்து, இந்தத் தேருக்குச் சாரதியாக அமைந்த பெருமை பெற்றவர்கள் எவ்வளவு சாஸ்திரங்களை ஆய்ந்துணர்ந்தோராலும், விவேகஞ் சிறந்த மேலானவர்களாயிருந்தால் மாத்திரஞ் சாரதித்தனஞ் செய்ய முடியுமே யல்லது, சாமானியர்களால் முடியமாட்டாது. அதற்குரிய காரியச் சொற்களைக்கேளுங்களென்று, அத்தேவர்களைப்பார்த்துக் கண்ணுதல் விளம்பி யருளுகின்றார்.

ஓ தேவர்களே! தேர்ப்பாகன் நேர்ப்பாகயிருக்கவேண்டிய திறங்கள் யாதெனில், சூழ்ந்துவரும் வேகம் பொருந்திய குதிரைகளின் இருதயமும், நாயகனுடைய சாமர்த்தியமும், தங்களுக்குரிய காலமும், தாங்கள் போகின்ற இடமும், தங்களுக்கு நேரிட்ட துணைவலியும், தங்களுடைய தோள்வலியும், நடக்குங் காரியங்களும், நடந்த காரியங்களும், நடக்கப்போகின்ற காரியங்களும், இவைகளுக்குக் காரணங்களும், எதிராளியின் பலமும், நமக்கும் அவனுக்கும் நேரிட்டிருக்கின்ற பகைத் திறமும், நூல்திறமும், விவேகத்திறமும் ஆகிய விவையெல்லாம் அறிந்திருக்கின்ற பாரமார்த்தியன் எவனே? அவனைத்தான் வல்லவனென்றுரைப்பது. அப்பேர்ப்பட்டவன் கிடைப்பது அருமை. மேலும், தேர்ப்பாகனனவன், இப்போது நாம் சொல்லிய வியல்புகளிற் பழக்கமும் - புத்தியும்- திறமும் உடையவனக இருப்பானகில், அப்பேர்ப்பட்ட சாரதியையுடைய எஜமானுக்குப் பிராணனும், மானமும்-அழகும்-கீர்த்தியும்-வாக்கின் வலிமையும்-புயவலிமையும்-வெற்றியும் இன்னுமுள்ள யாவும் பூரணமாக உண்டாகும். இத்திறங்க ளில்லாத சாரதியை உடைய எஜமானுக்கு மேற்கூறிய திறங்கள் கொஞ்சமிஞ்ச விருந்தாலும், உபயோகப்படாமற் கெட்டுப்போவது மல்லாமல், அபஜெயத்தையும் விளைக்கும். இந்த மொழியின்படி யோசிப்பதற்கு எனக்கிப்போது சாரதித் தொழில் செய்யும்படியாய் ஏற்பட்டவர்கள் ஆரென்று தங்களுக்கிசைந்த சந்திரசேகர நாயகன் கேட்க, சத்தியலோகவாசியாகிய சதுமுகத் தேவனென்று இயம்ப, அதைக்

கேட்டு உத்தமமென்றுரைத்து, காமக்கோட்டியுடன் விடையேறிக் கொண்டு கயிலையங்கிரி விட்டு நீங்கி ரதத்தண்டைக்கு வந்தார். அவ்விடத்திலிருந்த சிவகணங்களெல்லாரும் ஆர்ப்பரித்து, ஹரஹர சம்போவென்று அவர் மலரடியை வணங்கினார்கள்.

அப்போது எப்பொருட்கு முரித்தாய் எல்லாருடைய அன்பிலும் நிறைந்த அம்பிகை பாகன் ரிஷபவாகனம் விட்டிறங்கி, தேரின் பேரில் ஒரு திருவடியை ஊன்றினார். ஊன்று முன்னமே உரம்பெற அலங்கரித்த ரதமானது மளமளவென்று முறிந்தது. உடனே தேவர்கள் புத்தியற்றோம் புத்தியற்றோம் என்று தங்களுடைய கர்வத்தைத் தாங்களே அடக்கிக்கொண்டு தொழுது அழுதார்கள்.

அப்போது வஸ்திரவடிவாயிருந்த திருமாலானவர், தன்னது தலைவற்கு யாது குறை நேர்ந்ததோ வென்றஞ்சி விடையாயோடித் தாங்கினார். அதுகண்ட வண்ண லருள்சுரந்து அம்மால்விடை இவர்ந்து, தமது திருவருட் பார்வை தாங்கிய திருநீற்றினால் அத்தேரை ஸ்திரம்பெறச் செய்து, தேங்கமழ்ந்த கொன்றைப் பூமாலையுடன் அதிற் திருவடிபொருத்தி வீற்றிருந்து, துடிகறங்க, துந்துமி ஆர்ப்ப, தவளச்சங்கு முதலிய திருச்சின்னங்கள் ஓங்கி முழங்க, தேவகணங்களும், பூதகணங்களும் பூமியிடங் கொள்ளாமல் நெருங்க, விக்கின விநாயகர்-பாலசுப்பிரமண்யர் - வீரபத்திரர் - வைரவர் இவர்களாகிய பிள்ளைகள் இருமருங்கினுஞ் சூழ, அரிப்பிரம மேந்திரர்தி தேவர்கள் தங்கள் சுயரூபத்தோடு தத்தம் வாகனங்களிற் பக்கத்தில் நெருங்கிவர, பாம்புகளுக்கு எதிரிற் பேரிடியிடித்துச் செல்லுந் தன்மை போல், மகாவீர ஆரபாரத்துடன் ஒருநாழிகைக்குள் திரிபுரமாகிய மூவெயிலிருக்கும் இடம் நாடிச்சென்று, எதிர்நோக்கி நின்று இதிலோகத்திலுஞ் சிறந்த திரிபுரங்கள் ஓரிடத்திற் சேர்ந்திருக்குமாகில் ஒருமிக்க வெல்லலாம். அப்படி இராமல் வேறுபட்டுத் தனித்தனி இருப்பதினால் ஏககாலத்தில் ஜெயிப்பது அருமை யென்றுன்னினவராய், கலகம் விளைத்தாற் காரியமுண்டென்னும் பழமொழியைப்போல், மகம்மேருவென்னும் வில்லை வளைத்துப் பிடித்து நாராயணாஸ்திரத்தைப் பூட்டி விடுத்தார். உடனே மூன்றெயிலும் ஒன்றாகூடி வந்து அவர்க்கெதிராயின. அப்போது தன்பக்கத்தில் வளைந்த நுண்ணிடையோடிருக்கும் இமவான் புத்திரியை பார்த்து, பெண்ணே! இவர்களுடைய மமகாரச் சேட்டையைப் பார்த்தையா? என்று இளநகைப் பாக நகைத்தருளினார். அந் நகையினால் க்ஷணத்திற் குள்ளாகத் தீப்பொறி மலிந்து, திகிரெனவெறிந்து, திரிபுரம்பொறிந்து, தீயராகிய அசுரருங்கரிந்து சாம்பராய்க் கழிந்தார்கள். இப்பால், தேவர்கள் குறைதீர்த்த திரிபுராந்தகன் திரும்பி கயிலையங்கிரிக்கு வந்து, தம்மை அடிதொழுதேற்றிய அரி-அயன்-அமராவதியோன் முதலாகிய அமரர்களுக்கு அருளளித்து, இனிமேல் உங்களுக்குத் துன்பமில்லை; உங்கள் பதமாகிய எதாஸ்தானத்திற்குப் போங்கள். என்று விடைகொடுத்து, தாமும் விடைவிடுத்து உமையுடன் கயிலாயத்தில் உவந்திருந்தருளினார். அவராரெனில், தம்மை வேண்டியிருந்த பேர்களுக்கு விழைந்தவை யனைத்தும் வெறுப்பவளித் தாட்கொள்ளும் விமலன்.

### துரியோதனன் கர்னன் பெருமையுஞ் சாரதித்தொழிற் சிறப்பையுங்கூறிச் சல்லியனைச் சம்மதி செய்வித்தல்

கேட்டீரோ சல்லியராஜனே! வாசமுற்ற மலர்மாலை பெற்ற என் தந்தையாகிய திரிதராட்டிரனுக்கு இந்த சரித்திரத்தை மார்க்கண்டேயர்சொன்னார். நான் பக்கத்திலிருந்து கேட்டுணர்ந்த வண்ணம் உமக்குச் சொன்னேன். ஓ கொக்கினங்கள் பொருந்திக் குலாவுங் கழுகஞ்சோலைகள் சூழ்ந்த மத்திரதேசத் தலைவனே! சாரதித் தொழில் செய்யாநின்ற சாமார்த்தியத் தன்மையானது, அநேககாலந் தவமிருந்த பேர்களுக்குக் கிடைக்குமேயல்லாது மற்றச் சாமானியர்களுக்குக் கிடைக்கத் தக்கதோ? ஆதலால், தேர்செலுத்துந் தொழிலானது மெத்தவுஞ் சின்னத்தொழிலென்றும் அதனால் மிகவுஞ் சின்னத்தனமென்றும் உமது சிந்தையில் எண்ணாதீர். இது ஆர் செய்கிறவேலை? இது ஆருக்குத் தெரியும்? இந்தத் தொழில்முறை தெரிந்தவர் யார் என்றால், வல்லவராயனாகிய கிருஷ்ணனுந் தேவரீருமே கீர்த்திபெறும்படியாய்க் கற்றிருக்கின்றீர்கள். உங்களையல்லாது வேறொருவரைச் சொல்லவெனக்குத் தெரியாது. இப்படிக்கு அருமைபெறக் கற்றவித்தையை அர்ச்சுனனுக்குக் கிருஷ்ணன் உபகாரப் படுத்துகிறாப்போல், என் பொருட்டில் நீர் உபயோகப் படச் செய்யாமல் தடுப்பது என்னகாரணம்?

என்று பற்பலவிதங்களாகப் பேசி மேகத்துளி
யைப்போன்ற மின்னற்கணைகளை விடுக்கும்
துரியோதன மகாராஜனனவன் மறுபடியுஞ்
சொல்லலுற்றான். ஓ மத்திர பூபதியாகிய மன்
னனே! அங்க தேசாதிபனாகிய கர்னனுக்குத்
தேர்விடுஞ் சாரதியாக ஏற்படுவது நமது
தீவினைப்பயன் என்று உமது மனத்தில் வருத்
தங்கொள்ளாதீர். அந்தக் கர்னன் எப்பேர்ப்
பட்டவனென்றால், ஒப்பில்லாத உறம் பெற்ற
வன், தப்பில்லாத தருமறை கற்றவன், அடல்
புரியாநின்ற தடக்கையை யுடையவன், மிகு
கொடையாளன், கவசகுண்டலத்தோடு பிறந்த
வன், சுடர்மேனி யுடையவன், சொற்சோர்வு
படாத நிலையுள்ளவன், ஒரு காரணத்தினால்
சவ்வியசாசியைக் கொல்லும்படியாய் வந்து
பிறந்திருக்கின்றவன், நாரணனுக்கு இணை
யானவன், கல்விப் பயிற்சியிற் பூரணக்ஞான
புண்ணியன், புகழ் பிரதாபனாகிய கண்ணியன்,
போர்மழுவாளியென்னும் பரசுராமனானவன்,
தனக்குற்ற துணையாகிய ஆரண மந்திரங்க
ளுடன் திவ்வியாஸ்திரங்களெல்லா மிவனுக்
களித்திருக்கின்றான். இதுவே போதுமாகிய
சாட்சியாயிருக்கிறது.

ஐயா சல்லியராஜனே! அஃதெப்படி
யென்றாற் சொல்லுகிறேன் கேளும்: பரந்த
புகழிற் சிறந்த சமதக்கினி முனிவருடைய
தவத்தாலுதித்த சிரேஷ்ட புத்திரனாகிய அந்த
இராமனானவன், கயிலாசபதியைக் குறித்து
சிலநாள் தவமிழைத்தபோது, பார்வதி பங்க
னாகிய பரமன் சீரணிமலரணிந்த செஞ்சடை
யிலங்க வீரியவிடைமேற் காக்ஷியாய் வந்து,
உனக்கு வேண்டிய வரங்கள் சொல்லென்று
கேட்டனர். உடனே வேதியனாகிய இராம
னெழுந்து, தொழுந்தன்மையிற் சிறந்த துதி
யெல்லாமோதி, திங்கள் - கூவிளம் - எருக்கு-
தும்பை-கங்கை-அறுகு இவை முதலிய மண
மாலை தரித்தருளிய சடைமுடிப்பரனே! ஆகா
யத்திலிருக்குந் தேவர்களும், சூரியசந்திரர்
கால்வழிதோன்றிய ராஜாக்களும், சாமார்த்தி
யம்பெற்ற என் தந்தையைச் சிந்தை நோவச்
செய்து சேதித்துப் போட்டார்கள். அந்த
அவனிபர் யாவரையும் நான்வென்று தந்தை
யின் கடனை முடிப்பதற்கு நிர்வாகமில்லாத
வனா யிருக்கின்றேன். தேவரீருடைய கிருபை
யினாற் செப்புதற்குத் திவ்யாஸ்திரங்களோடு
வில்லும் ஒப்பில்லாத வல்லமையும் அருள்
செய்யவேண்டும் என்று பலவிசை தாழ்ந்து,
வீழ்ந்து, வாழ்ந்தேனென்று மகிழ்ந்து, அம்
மானி மேந்தியின் மலரடியைத் தனது முடி
மேற் றரித்து வந்தித்தான். அப்போது
அந்திவண்ணன் தந்தைபோல் மகிழ்ந்து
தருவோமென்று, செந்துவர் வாயாள் சுந்
தர உமையொடு நந்திமேலேறி நடந்து
விண்போனார். வந்தரன் மறைந்தவா றறி
யாமல், அன்பு மேற்கொண்டு அநேகநாள்
நின்று, அருந்தவமாற்றி அலந்தலை யுருநாள்
அடியாரின்புருவாகிய நாதன் கடிசேர்பச்சைக்
கொடியுடன் வரவும் படிமேல் வீழ்ந்து பாடித்
துதித்து, உருகிக் கண்ணீர் பெருகிக் கரைய,
வேதியன் றவத்தை வியந்து, பாதியாளு
டனே பக்ஷமாயணைத்து, துன்பங்கள் தீர்த்
துச் சுடர்மழுவளித்து, இன்பமார் படைகள்
இருக்குடன் கொடுத்து, உத்தமன்பேறு ஒரு
வர் பெறுமையால்; கற்றவர் நற்றவர் ககனவா
ணரும், மெத்தப் புகழ்ந்து மிகுஜெயங்கூற,
ராமனைப் பரசிராமனென் றுரைத்து, வாமாங்
கதன் வெண்மலைக் கெழுந்தருளினர். கொற்ற
மார் பரசிராமனுமிப்பால், பற்றலர் தம்மைப்
பாழ்கடக் களைந்து, அத்தனுக்குரிய அருங்
கடன் முடித்து, வெற்றிசேர் படையும் வில்
லும் அகற்றி, மறுமைப்பயனை மனந்தனில்
நாட்டி, சிறுமைப்பயனை செறுத்தய லோட்டி,
நற்றவம்புரியு நாளையிலோர்நாள், கொற்ற
மார் கர்னன் குறுகிப் பணிந்தான், அத்தனு
மணைத்து ஆதவகுமார, தத்துவக்ஞான சம்
பன்னாவென்று, அடைவுடன் படையெலாம்
அளித்தருள் புரிந்து, விடைகொடுத் தனுப்ப
மீண்டனன் கர்னன்.

ஓ சல்லியபூபதி! இந்த அங்கதேசனாகிய
கர்னமகாராஜன் சாரதிபெற்ற தநயனாமெனில்
ஆரணமுனிவன் அருள்செய்யானையா! உற்ப
வத் துண்மை ஒருவரும் அறியார் கற்பனை
யாண்வக் கர்மிகள் தூறுவார். விற்பன
விவேக வேந்த சல்லியனே! அற்பமாயிழி
வாய் அகத்தினில் நினையேல். நமக்கெலாம்
மேலாம் நற்குலப்பாலன். உமக்கு நானினி
மேல் உரைப்பதொன்றில்லை. கர்னன் புகழுங்
கருதுமென வாழ்வும் உம்மாலியன்று உயர்
வரவேண்டும். கர்னனால் விஜயன்கால் சாய்ந்து
மாளவும், மன்னனாய் முடிகொடு வையகம்
ஆளவும், உம்மைநான் அடுத்தேன் உரிமை
யுங்கொடுத்தேன். வன்னமாஞ் சல்லியமா வீர
ரேறே! ஆர்க்கிது கிடைக்கும் அவ்வழூர்
நற்றொழில்? பார்க்குள் முன் வெகுபேர் பாக்

கியம் பெற்றார். முப்பானிரண்டுடன் முதறம் வளர்க்கும், அப்பாவை பாகற் கருமறையினமாம், புரவித்தேரினைப் பொற்புடன்செலுத்த பரவுநான்முகன் முன்பாகனானான். பாற்கடற் றுயின்றோன் படிமேற்பிறந்து, பாற்கடல்வண்ணன் கண்ணனெனும் வசுதேவன் மைந்தனாய் மாதவிக்கிசைந்த, விஜயன்தேர் தூண்ட மிகு சூதனானான். மாடுபிடிக்க மச்சநா டுற்றநாள், பேடியாய் தனஞ்சயன் பிள்ளைதே ரூர்ந்தான். சுபத்ரையாளை சோரமாய்க்கொணர்ந்த விபத்தில், விசயற்கம் மெல்லிதேர்விட்டாள். உய்வாசித்தேரை உம்பரூருய்த்த, கைகேசி தன்னாற் களித்தான் தசரதன்; நளன் ரிதுபர்னன் நற்றேரூர, அளவிலாப்புகழமோட்டவன் மகிழ்வுற்றான். ஆதலாற் றேர்விடும் அலுவல் இகழ்ச்சியாய், ஓதுறேனையா உயர்ந்தோர் செய்கை, இஃதென்றுந்தன் இதயத்தில் வைப்பீர், சுகமதி மந்திரத் தோன்றலே என்னும், கார் கொட்டதேரை நீர்விட்டவேளை, சீர்பெற்ற கர்னன் சிலைவிஜயன் றன்னை, வென்றுயிர் அழித்தல் விண்ணோர் மண்ணோர், நிறுமைத்து நிர்மலர் தூற்றுவர். இசையுமக்கல்லது எவர்க்குறும் ஐயா! மன்னரும் வாழ்வும் இருநிலப் பரப்பும், என்னுமென்னு உயிரும் மானிடயாக்கையும், உம்மதே யும்மதே உரைத்தேன் மூக்காலும். மன்னனே போற்றி மகிழ்ந்தென்னை யாளும் என்று வணங்கிய இறைமேற்றயலாய், நன்று நன்றென்று என் மனம் இரங்கி, மணிமுடி வாகுவலயமு நீக்கி, திணிவுறுகுல்லாச் சிறுசட்டை அணிந்து, பார்த்தசாரதிபோற் பாகனானான். போர்த்தனன் பீதாம்பரம் புவிக்கிறைவன். அப்போதந்த அருஞ்சமர்க்களத்தில், உற்றமராட உதவியாய் வந்த, மன்னரு நால்வகை மருவியசேனையும், தன்னிகரில்லாச் சயவீராதாமும், அந்தரத்திறைமகன் அர்ச்சுனன்றனக்கு, மந்திரப்புயத்தோன் வசுதேவ் கிருஷ்ணன், தேர்ப்பாகனாகிச் செலுத்துந்திறம்போல், மார்த்தாண்டனீன்ற மகன் கர்னனுக்கு, வல்லியப்பேரான் மந்திரத்தலைவன், சல்லியபூபதி சாரதியானான். சொல்லுதற்கரிய தும்பையும் வெற்றியும், வில்லுறும்வாகையும் வீரமும்புனைந்து, வலம்புரிமாலை வணங்காமுடியோன், புலப்புறு கடல்சூழ் புவியெலாம் ஆள்வான். அவனதே முடியும், அவனதே கொடியும், அவனதே செல்வம் என்றறைந்து ஆர்த்தனரே.

## கர்னன் சல்லியனோடு தன்னைத்தான் புகழ்ந்துபேச, அவனதை மறுக்க இருவரும் வாதிடல்

இந்தப்பிரகாரந் துரியோதனனுடைய சேனாசயின்யங்களெல்லாஞ் சிந்தை களித்து மகிழ்ச்சியிற் சிறந்திருந்தார்கள். அந்தவேளையில், அருக்கன்பெற்ற பிள்ளையாகிய கர்னன் தேவேந்திரனுக்குத் தானமாகக் கொடுத்த கவசகுண்டலமானது, மீண்டுந் தன்னுடன் கூடப் பிளந்து தனக்கு உற்றதுணையான தன்மைபோற் சந்தோஷமடைந்து, சுத்த வீரர்களில் முதன்மையாகிய மத்திரராஜ சல்லியனைக் கண்டு, மார்போடணைத்துத் தழுவி, தனக்குரிய மணித்தேர் கொண்டுவாருமென்று சொல்லினன். அந்தச் சல்லியனானவன் கர்னன் சொல்லியபடியே போருக்குத் தகுந்த வீரப்பரிபூட்டி கடிவாளமுங் குதிரையோட்டும் உளுவுகோலுங் கைக்கொண்டு, பாகர்வலையிற் பக்குவமாயிருந்து, ஆதபன் சாரதியாகிய அருணனுக்கு ஒப்பாகும்படியாய்த்தேர் கொண்டு வந்து நிறுத்தினான். அந்தத் தேரின்மீது சேனாபதியாகிய கர்னன் ஏறிக்கொண்டு, படைமுகத்திற் சென்று நின்று, அரவக்கொடி நாட்டி அழகுபெறுந் துரியோதன மகாராஜனையும், அவன் தம்பிமார்களில் இறந்தவர்போக இறவாதிருக்கும் பேர்களையும், சில சேனைகளுடனே பாற்கவப் பேரணியாக நிறுத்தி, அடுபோர் புரியும் அரசர்களையும், கிருபாச்சாரியையும், இருபக்கத்திலும் அணியாய் அமைத்து, சகுனிமுதலாகிய வல்லவர்களை எல்லாம் முனையில் இருத்தி சொல்லுதற்கரிய பூரணையில், நட்சத்திரங்களுக்கு நடுவில் வான்மணியாகிய சந்திரனை நாட்டிவைத்ததுபோற் சேனாசமுத்திர மத்தியில் தன் தேரைச் செலுத்தி வாயுவின் வேகத்தைத் தாங்கி, உலகெங்கு மகமேருவைப்போல் வண்மையிற் சிறந்த அக்கர்னன் வாகையோடு நின்று வேதப்பிராமணாள் - வித்துவான்கள் - இரப்போர் - கர்மிகள் - மிடியர் - வினையர் - இளைத்த ராஜாக்கள் - அதிதிகள் இவாள் முதலாகிய பேர்களுக்கும், தேவாலயம் விஷ்ணுவாலயங்களுக்கு, தானமும் - தியாகமும் - சிறப்புஞ் செய்து, சிந்தைகளித்து ஆறுமுகத் தெய்வமே ஓர் முகமாய்வந்து அவதரித்ததென்று, சந்தனபாளித குங்குமமணிந்த விரிந்த மலர் மாலை புனைந்த குலிந்ததோள் பறந்தவாள்

சிறந்த சல்லியராஜனை நோக்கிச் சில வசனங்களைச் சொல்லத் தொடங்கினான்.

ஓ துல்லியமதிச் சல்லியனே! கேளும்; தேவேந்திரன் பிடித்திருந்த இந்திர தனுவென்னும் வில்லைச் சூரியன் பெற்றான். அந்தச் சூரியன் இடத்திலிருந்து மதங்கமாமுனிவர் பெற்றார். அவரிடத்திலிருந்து பரசுராமர் பெற்றார். அந்த மகாபுருஷனானவர் எனக்குக் கொடுத்தார். இத்தன்மைவாய்ந்த அரியவில்லையும், அதற்குத்தக்க பழிகளையும் பெற்றிருக்கின்றேன். ஆரணகாரண பூரணனாகிய நாரணனுக்கு ஒப்பான உன்னைத் தேர்ப்பாகனாகவும் பெற்றேன். நான் ஜன்மாந்திரத்திற் செய்த நல்வினைப்பயனால் பெரும்பாக்கியம் பேறுடையவனானேன். உரியமித்திர நேசனாகிய மத்திரராஜனே! எனக்குப்பகை அர்ச்சுனன் அல்லாமல் வேறொருவரும் இல்லை. அந்த அர்ச்சுனனுக்கு எதிர் என்னை அல்லாமல் இந் நிலத்தையாளும் அவனிபாலரில் ஒருவரும் இல்லை. ஆகையால், என் மனதுக்கு இசைந்த தோழனாகிய துரியோதன மன்னன் மண்டலமுழுதும் ஆளும்படியாய்ச் செய்யப் போகிற என் ஆண்மிக்கையைப் பாரும் என்று கர்னராஜன் சொல்ல, இவன் சொன்னவார்த்தைகளையெல்லாம் மத்திரராஜன் கேட்டு, இளநகையாக நகைத்துச் சொல்லுகிறான். ஓ கர்னனே! உன்னுடைய வெற்றியும், சாமார்த்திய சக்தியும், வலிமையும், நீக்ற்ற விற்றிறமையும், சொற்றிறமையும் இவைகளை யெல்லாம் நீ எனக்குச் சொல்லவேண்டாம். உங்களிருவருடைய தேரும் ஒன்றோடொன்று கிட்டி நோக்கி, உருள்களுடன் உருள்கள் முட்டித் தாக்கி, எதிர்க்கெதிர் சென்று யுத்தம் பண்ணும்போது, உங்களுடைய சேவகத்திறந் தெரியும். என்று சல்லியன் சொல்லிப் பின்னையும் பேசுகின்றான். ஓ அங்கதேசாதிபனே! கர்னார்ச்சுனர் என்னும் நீங்களிருவரும் ஒருவருக்கொருவர் ஏடுதாழ்த்தியில்லாத வரமும்-உரமும்-திரமாய்ப்பெற்ற வீராள் தான். இதுவரையிலும் நீங்கள் இரண்டுபேரும் யுத்தம் பண்ணிய இடங்கள்தோறும் நாங்களும் பக்கத்திலிருந்து பார்த்திருக்கின்றோம். போர்முகத்தில் மறந்தும் பயப்படாதே மகாவீர விஜயனை ஒரு காலத்திலாவது நீ செயிக்க நாங்கள் கண்டறியோம். ஓ செல்வக் கொடையாளியாகிய தீரனே! நீங்களிருவருங் கூடிக் கொண்ட சப்தம் முடிக்கும்படியாய் மனம் இளைக்காத வயிரங்கொண்டு, யுத்தம் செய்யுங்கள். அப்படி அமர்விளைத்தால் ஆர் ஜெயிப்பார்களோ? ஆர் தோற்பார்களோ? எவர் கெலிப்பார்களோ? அஃதிப்போதெனக்கொன்றுந் தெரியவராது. இன்னாற் வெல்லுவார்களென்றும், இன்னாற் தோற்பார்களென்றும், ஆர்தான் எப்படி சொல்லலாம்? அப்படி துணிந்து சொல்லுவதற்கு நாங்கள் சந்தேகப்படுகிறோம். என்று சாரதியாகிய சல்லியன் இயம்ப, அதைக்கேட்டு அங்கதேசாதிபன் பெருமூச்சுவிட்டுப் பற்கடித்து, மனம் பதைத்துப் பின்னுஞ் சொல்லுகிறான்.

ஓ சல்லியராஜனே! ஆகண்டலன் மகனாகிய காண்டீபனுக்கு நானே எதிராளியல்லது வேறொருவரும் இல்லையென்று நிச்சயமாக எண்ணிக்கொண்டிருக்கின்ற வில்லின் வல்லபம்பெற்ற தந்திரபாலராகிய தராதிபர்களுக்கு முன்னே, என்னை நீ இகக்ஷியாய் பேசவேண்டாம். குதிரை பூட்டிய தேரைத் தந்திரமாகச் செலுத்தும் வல்லபம் உனக்குண்டாயிருக்குமாகில், உன் சொந்தமாகிய அந்தத் தொழிலை மாத்திரஞ் செய்வாயல்லது; மிகுந்த சாமர்த்தியத்துடன் செய்கின்ற யுத்தத் திறங்களுக்கும் உனக்கும் என்ன சம்பந்தம்? தோற்பதும் ஜெயிப்பதும் நீயா எடுத்துச் சொல்லுகின்றவன்? இதற்கு நீ அருகனல்ல; உன்வேலை எதுவோ அந்த வேலையைச் சாக்கிரதையாகப் பார்க்காமல், மற்ற வீரத்திறங்களையும் ராஜதந்திரங்களையும் நீ எடுத்துப் பேசவேண்டிய நிமித்தமில்லை; உன் வேலையைப்பார் என்று புல்லியூ மனிதனைச் சொல்லிய வாறுபோல், அலக்ஷயமாக அங்கர்கோன் சொன்னான். இப்படி பெரும்புலிபோன்ற கர்னனானவன் லேசாகச் சொல்லிய வசனமானது, சல்லியனுடைய காதிற்கேட்டுக் கேட்காத தன்முன் அவன் நெய்சொரிந்து, விறகுபோட்டு மூட்டுந் தீப்போல் எரிந்து முனிந்து கொதித்து, முறுகிப் பொங்கி, கடுங்கோபத்துடன் கர்னனைப்பார்த்து, தகுதிபெறக்கற்ற சாமர்த்திய முற்றவர்களை அல்பபலம்பெற்ற அறிவீனர்கள் வெற்றி பெறுவார்களா? அப்படியிருக்க நான் ஜெயிப்பேன் நான் ஜெயிப்பேன் என்று வாய்மதமாகச் சொல்லும் வார்த்தையாருக் கொப்பும்? அந்த அர்ச்சுனனைப் புகழ்ந்து, நான் மாத்திரஞ் சொல்லுவதல்ல; இந்த உலகத்தில் நீல நிற வண்டுகள் மொய்த்த வெற்றிமாலை பெற்ற விஜயனைத் துதிசெய்யாத பேர்கள் யார்? கால

கேய நிவாத கவசர் முதலிய மூன்றுகோடி அறுபதினாயிரம் பேர்களைத் தேர்க்கால் ஊன்று முன்னமே, ஓர் கணையால் மாண்டுபோகும்படி யழித்த அப்பாண்டு குமாரனைப் பனைமரக்கொடி நாட்டியவீஷ்மர் முதலான பண்ணவர்களும், விண்ணவர்களும், மற்ற மன்னவர்களும், இந்த பலசாலியர்களும் தங்களுக்குள் தாங்களே மகிழ்ந்து, தனித்தனிப் புகழ்ந்து, பாலகேசரியென்று பேரிட்டழைத்து, மங்களகரமாய் ஆசீர்வதித்து, மிகவும் அவன் புகழைக் கொண்டாடிய செயலை நீ அறிந்ததில்லையோ? ஓ அங்கதேசராஜனே! மாக்ஷிமைபெற்ற நாற்பத்தெண்ணாயிர முனிவரும், முப்பத்து முக்கோடி தேவரும். அமரர்-சித்தர் முதலாகிய தேவர்கணங்களும், சப்தமேகங்களும், அஷ்டவசுக்களும், திக்குப்பாலரும், ஏகாதச ருத்திரரும், துவாதச ஆதித்தரும் தேவேந்திரனுடன் சென்று முனிந்து, செருச் செய்ய எதிர்ந்து, விண்ணும் மண்ணும் அதிர்ந்து, அண்டகூடம் பிதிர்ந்து, நட்சத்திரங்களுதிர்ந்து போகும்படியாய்ப் பார்த்தனை வளைத்த நாளையில்; அவனிவர்களெல்லோரையும் பஞ்சாய்ப்பறக்க அடித்து, அக்கினிதேவனுக்கு அஸ்திரக்குடை கொடுத்து, சகல உயிர்களோடு காண்டாவனத்தை அழித்து ஜெயங்கொண்டு திரும்பிய கதையை நீ கேட்டறியாயோ? அஸ்திரசஸ்திர ஜாலங்களில் வல்ல மன்னனாகிய கர்னனே! இவைகளெல்லாம் நீ அறியாமலும், நீ கேளாமலும் போனாற் போகட்டும்;ஒருநாள் வனவேடிக்கை பார்க்கப் போனவிடத்தில், நீ அருகிலிருக்கும்போதே உனக்கு உரிய சிநேகமித்திரனாகிய துரியோதனனையும், அவன் தம்பிமார்களையும், பெண்டுகளெல்லாரையும் ஒருமிக்கப் பிடித்துப் புயமொடித்து மடலொடிய இறுக்கித் தாமணிப் பிணையலாகக் கட்டிச் சிறைகொண்டு போன கந்தருவ ராஜனாகிய சித்திரசேனனை, ஒருவரேனும் வெல்லமாட்டாமல், சில வீராளோடிவந்து பாண்டவர்களிருந்தவனத்திற் புகுந்து மெல்லவுமாட்டாமல், விழுங்கவு மாட்டாமல், சொல்லவுமாட்டாமல் நின்ற சோர்வைத் தர்மராஜன் அறிந்து சங்கதிதெரிந்து, தம்பியென்று பரிந்து, வீமார்ச்சுனனை நோக்கி, விரைவில் துரியோதனாதியரைக் கொண்டு வாருங்களென்று உத்தரஞ்சொல்ல; அப்போதே பத்தரைமாற்றுப் பசும்பொன் போன்ற தம்பிகள்சென்று கந்திருவன் போரைவென்று மீட்டுக்கொண்டுவந்து அத் தர்மராஜனுக்கு நேரில் நிறுத்திக் கட்டவிழ்த்து விட்ட காரியத்தைத் நீயோசிக்கவில்லையோ? இதோநேற்றுப்பெரியதேர்கள் அநந்தம், குதிரைகள் அநந்தம், யானைகள் அநந்தம், போராடும் போர்த்திறவீராள் அநந்தம் இப்படி சூழும்படியாக பெருமுழக்கப் பேரிவாத்தியத்துடன்போய் விராடனுடைய பசுக்களைமடக்கிய காலத்தில், வீரவிற்கொண்ட விஜயக்காளையொன்றித்தேருடன் தோன்றி, ஒருபெருங்கணத்தின் முன்னே வென்று, மச்சநாட்டில் லச்சையாக அச்சத்தைவிளைத்துத் தலைத்துணிகளைக் கைக்கொண்டு பிராணதாரைவார்த்து அனுப்பியதும், நீகாலோட்டமா ஓடும்போது, அஸ்வத்தாமன் உனக்கெதிர் வந்து நின்று தடுத்துக் கேட்டதும், நீ அவனை அடுத்துச் சொன்னதும் மறந்துபோனாயோ? உள்ளத்தில் இல்லையோ? ஓ உதாரனே! பற்பல காரியங்களிலேயும், சிற்சில யுத்தங்களிலேயும் இந்திர குமாரனாகிய சந்திரமுகவிம்ப தனஞ்செயன் ஜெயம்பெறும் புகழ்ச்சியும், உன்னுடைய புயவலி இகழ்ச்சியும், கேட்பதுவும் பார்ப்பதுவும் எங்கள் வேலையாயிருப்பதேயன்றி, வேறுமாறிச் சொல்லுவதற்கு இடத்தைக் காணோம்.

ஓ கச்சைக்கொடி படைத்த கர்னனென்னுந்தோன்றலே! இன்றைக்கு நடந்து வருகின்ற யுத்தத்திலும் நீபெறப்போகிறது அதுதான். ஆகிலும், பலம்பொருந்திய மேருமலையானாலும், வச்சிராயுதத்துக்கு முன்னே அந்த மலையின் சிலம்பம் என்ன நடக்கும்? அதுபோல், இந்த விஜயனுக்கு முன்னே எவர்களுடைய சமர்த்துந்தலைகாட்டாது. மேலும்வேந்தர் பெருமானாகிய துரியோதன மகாராஜன் என்னிடத்தில் உற்றுப்பொருந்திய நண்பினால், அவர் சொல்லைத்தள்ளாமல் உனக்குத் தேர்செலுத்தி, சமயோசிதமான காரியங்களைக் குறித்தும் உறுதிவார்த்தைசொல்லவந்தேனேயல்லாமல், விறுதாவில் நான் உனக்குசொல்லவேண்டியது ஒன்றுமில்லை. இப்பவுமென்ன? துள்ளிக்குதித்துச் சண்டை தொடுக்கச் சென்றாயாகில், நீ பட்டுப்போவாய் என்னுஞ் சொல்லுக்கு யாதொரு நஷ்டமில்லை. தீர்க்காலோசனை செய்து உன்னிஷ்டப்படிக்குச் செய்துகொள்ளக்கடவை. விதி தப்பிப் பிழைத்து வாழ்ந்தோர் மேதினியிலில்லை. விதியை அநுசரிக்கும் மதியென்பது மேலோர் வாக்கியம். இதை நீ அறிந்து கொள் என்று சொல்லிய சல்லியன் பேச்சைக் கர்னன் கேட்டுக்கடையுகம்

போற்கமறி, படை படையாய்ப் பொரியெழ விழித்து, மத்திராஜனைக் குத்திக் கொரே மாய்ப்பார்த்து, ஆ! ஆ! நீ சொன்ன உத்தரம் மெத்த நன்றாயிருக்கின்றது எனக்கு நல்லுறுதி காட்டி நாட்டினை. ஓ சல்லியராஜனே! நான் அந்த அர்ச்சுனன் முன்னே சென்று வெற்றி கொண்டு வரும்படியாகிய வல்லபம் எனக்கொரு அதிசயமல்ல. அப்படியிருக்க, அவனைக் கொல்லுவதற்கு உன்னாலுமாகாது, மற்றெவர்களாலு முடியாதென்று நீ சொல்லுகிறாய். போகட்டும்; என்னாலேயே ஜெயம்பெறக்கூடாதென்று சொல்லும்போது, உன்னைப்போலொத்தவனால் அல்லது உன்னால் அந்தக் கிரீடியை ஜெயிக்கக்கூடுமென்று எந்த வீரன் சொல்லுவான்? நல்லது: இச்சொல்லை உன்னைப்போல் யென்னெதிரிற் சாமான்யாளாவது மனந்துணிந்து வாயெடுத்துச் சொல்லுவார்களா? ஓ மத்திரனே! நான் வெகு ஜனங்களும் அறியும்படிக்கு விஜயகாண்டீபம்பிடித்த விஜயனுடைய பிராணனை வாங்குவதற்கு நெருப்புப்பொறிகளைச் செருக்கும் பிரகாசக் கண்களைப்பெற்ற நாகாஸ்திரம் படைத்திருக்கின்றேன். ஒருவேளை யாதவ புத்திரனாகிய மாதவன், அந்த நாகாஸ்திரத்தைக் கெடுத்து அர்ச்சுனனைப் பிழைக்கச்செய்வானாகில், வேறொரு விதத்தாலேனும் அத்துட்டத்தனம் பகைவரின் கொட்டம் அடக்கி, பட்டத்து யானைகட்டி எட்டுத்திசையும் புரக்கும்விருஷபவிரட்டாகிய துரியோதனமகாராஜனது பிராணனுக்குத் துன்பமில்லாமற் காக்கவேண்டுமென்னும் எண்ணமே என்னெஞ்சிற் குடிகொண்டிருக்கிறது.

ஆனதால், அர்ச்சுனனை வெல்லுகிறதொன்று, அல்லது அரவகேதனனைக் காக்கிறதொன்று, இந்த இரண்டில் ஒன்றாகிலும் என்னால் முடியாமற்போகாது. இந்த உலகமெல்லாம் ஒன்றாகச் சேர்ந்து பற்குணனுக்கு உதவி வந்தாலும், எப்பொருட்கும் இறையாகிய ஈசன் துணைப்பட்டு இவனுக்குத் தேர்செலுத்தினாலும், பலகலைத்திறன்களையுடைய இந்திரன் முதல் தேவர்களெல்லாஞ் சகாயமாய்த் தாங்கள் கற்ற மந்திர தந்திர எந்திரங்களால் என்னைத் தடுத்து எதிர்த்தாலும், குலமலை போன்ற அழியாத்தேருடைய அர்ச்சுனன் பிராணனை நான் வாங்குவேனென்பதற்கு யாதொரு சந்தேகமும் இல்லை. இதன்றியும், காலம்-இடம்-வலி இவைகளை நோக்கியிரா நின்ற கருத்தினர்கள் கோபித்துப் பகைத்து ஜெயம் பெறுகிற வரையிலும், தங்களுடைய வீரகுணத்தையும் வல்லபங்களையும் வெளியிட்டார்.

அதுபோல், சமயம் வருகிற வரைக்கும் எதிர்பார்த்துக் கொண்டு கொஞ்சம் மாறுபட்டிருக்கின்றேன். இப்படியாயிருக்கிற என்னுடைய குணத்தையும், நான் கொண்டிருக்குங் கோலத்தையும், நீ நிதானித்து உட்கொள்ளாமல், ஞாலமும் விசும்பும் நகைக்கும்படியாய்ப் படியாத கொடியர்களைப்போற் குறைவாகிய காரியங்களை யெடுத்து மனம்விட விடப் பேசினாய். ஓ குற்றமற்ற மந்திரத்தலைவனே! இஃது உனக்குத் தக்கதா?, என்று கர்னன் சொல்ல, அந்த வார்த்தையைக் கேட்டுத் தீர்க்கபுத்திமானாகிய சல்லியன் தீங்கறப்பேசலுற்றான் ஓ கர்னனே! நானுன் கைத்திறத்தை அறியாதவனன்று. நேற்றுப்பதினைலா நாட்சண்டையில் ஓங்கிய புயந்தாங்கிய ஜெயசிந்து ராஜனை உயிர்போகாமல் நீரக்ஷித்ததைக் குறித்து அழகிய கிரணங்கள் பொருந்திய திரிலோகத்திலுங் கொண்டாடினார்களே: அந்தக் கொண்டாட்டம் உன்னைத்தான்போலு மிருக்கிறது. அப்பா! எக்காலத்திலும் வெற்றிமுனைபெற்ற சுவேதவாசியும் அநுமக் கொடியுமுடைய அர்ச்சுனன், தேருந்திக்கனை சிந்திப் போர்முகத்தில், சளையாமற்சென்று நின்று வஞ்சமில்லாமல் நீயுங் கூடியவரையில் யுத்தஞ்செய்கிறாய்; அப்படி யுத்தஞ்செய்த போதிலும், ஒருநாளாகிலும் நீ வெற்றிப் பெற்றதில்லையல்லவா? விஜயனை நான் வெற்றி கொண்டேனென்று விளம்புவையாகில், கால்ந் தலைகீழாய் க்ஷத்திரிபத்திரி யாகும். களிற்றானையை முசல்வெல்லும்; சிங்கத்தை யானை கொல்லும்; வேங்கைப்புலியை மான்புல்லும்; வெவ்வியகருடனைப் பாம்புகொல்லும்; அல்லவா? அதற்கு ஒருகதை சொல்லுகிறேன் கேள்.

### கர்னனுக்குச் சல்லியன் வாயசக்கதை கூறிப் பழிக்க, உடனே யொருவர்மீதொருவர் வாள் கொண்டோங்கி நிற்றல்

ஓ கொடையாளனென்னுங் கோவே! உத்தர தேசத்தில், சந்திரவாசத்தில், மித்திர தேசத்திற் பொருந்தியது ஒரு சிற்றூர். அவிடத்திலிருக்கும் வாணியர் எல்லோரும் நல்ல மகாராஜர்கள். அவர்களிருக்கும்நாட்டிற்கருங் காக்கை யொன்று தவிர, பசுபட்சி முதலாகிய

ஈஸ்வர சிருஷ்டியில் உண்டான ஜெந்துக்களெல்லாம் உண்டு. இவ்வுலகத்தில் அன்னப்பட்சியைக் காணாமல் நாமெப்படி ஆசை கொண்டு அவதிப் படுகின்றோமோ? அதுபோற் பல்லோரும் புகழும் பாக்கியவான்கள், காக்கையைக்காணக் கவலை கொண்டவர்களாய் எங்கேயோ ஒரு தேசத்தில் இருக்கின்றதாமே. மெத்தச் சுந்தரவடிவு பெற்றதாமே: ஆ! ஆ! அதை நாம் பார்க்கக் கிடைக்குமா? அவ்வளவு பாக்கியம் பண்ணியிருப்போமா? என ஏக்கங் கொண்டு இருந்தார்கள். அப்படி யிருக்கும் நாளையில், ஒருநாள் வாடைக்காற்று வாகாய் அடித்து மரங்களசைந்து தென்றற் காற்று செடிகளை முறித்துத் திரும்பியபோது, அந்தக் காற்றின் வேகத்தால் அகப்பட்ட ஒரு காக்கையானது, மேற்சொன்ன சிற்றூரிற் போய் விழுந்தது. அதைக்கண்ட அந்த ஊரார் யாவரும் வந்து கவிந்து, மேளதாளத்துடன் பல்லக்கின்பேரில் அந்தக் காக்கையை எடுத்துப் போய் பக்குவமாக ரெக்கையை உருவி யுலர்த்தி, பால்புகட்டி நெய்யருத்தி, குங்குமச்சம்பாவி னரிசிகுத்தி கொழியலில்லாமற் குழையப் பொங்கி, கற்கண்டு கூட்டிக் கவளமூட்டி, காலுக்கு நவரத்தினத் தண்டை கொலுசு கிண்கிணியார முதலிய ஆபரணங்கள் பூட்டி, தங்கள் தங்களின் பணப்பை நிறைந்த கோட்டி வீட்டைக்காட்டி, பஞ்சணை மெத்தை கூட்டி, மிகுந்த பக்ஷமாய்த் தங்களுடைய பணங்களை லக்ஷம் லக்ஷமாய்ச் செலவழித்துப் பாராட்டி, விடியற்காலத்தி லெழுந்து, அதனுடைய காலில் எல்லோரும் வந்து விழுந்து கட்டியணைத்து, பட்டு மெத்தையினுற் கையிலேந்தி முத்தமிட்டு, முகத்துடன் முகம் வைத்து முதுகைத்தடவி, மகாநேசத்தோடுபசரித்து வந்தார்கள். அக்கால், மிக நேர்த்தியாய் வீட்டுக்கொருநாள் விருந்து செய்யப் பொருந்தி இருந்து அருந்தி, பறந்து போகமாட்டாமல் எச்சிற்சோற்றுக்கு ஏக்குற்றிருந்த காக்கைக்கு யோகம் பிடித்து, மாமிச பர்வதமானுக்களைப்போல் ஊதிப்போயது. அந்த ஊரிலிருக்கும் அன்னப் பட்சிகளெல்லாம் வறுமையடைந்து, நம்முடைய ஊரில் இந்தக் காக்கைகளென்ன கதியடையுமோ? அந்தக் கதியை அடைந்து அடங்கி, இதுவும் வினைவசந்தானென்று பிர்மானை யெண்ணிக் கொண்டிருந்ததுகள்.

இப்படியிருக்குங் காலத்தில் தின்று மதத்த அக்காகமானது தெருவெல்லாந் தாவி, அன்னம்போலுலாவி, இறகுகளை நீவி, இறுமாந்து மேவி, புதுவாழ்வு பெற்றவரைப்போற் கண்மறைந்து, குனியமாட்டாமல் மேற்பார்வையாய்ப் பார்த்து நிமிர்ந்து, பெருமூச்சு விட்டு, காதடைப்பட்டு, களையும் ஆயாசமும் உடைத்தாய் வேறுவேறு ஒழுங்குகள் ஏர்ப்பட்டு, பெரிய அந்தஸ்துடன் பொருந்தி, தானிருந்த பழையகதியையும்-தான் சாதியையும்-தன் குலத்தையும்·தன் கோத்திரத்தையும்-தான்வந்த வழியையும்-தன் தந்தைதாய் யழியையும் - முன்விதியையும் - பின்மதியையும் - தான் உண்டிருந்த இரையையும் நினையாமல், ஆகாயத்திலிருந்து இறங்கிய யோக தேவேந்திர சம்பத்தை அனுபவித்த புராதனத்தன்மைபோல் ஒன்றுந் தோன்றாமல், எதிரிலிருக்கும் பேரை இன்னாரென்று உணராமல் இறுமாப்படைந்து, கொழுத்து கர்வம் பிடித்துக் கவலையற்றிருந்தது. அப்படி யிருக்குங் காக்கையானது அன்னப் பட்சிகளைப் பார்த்து, ஓவெண்குட்டம் பிடித்தஜாதியே! உங்களுக்கு ஜீவனம் எப்படி? நீங்கள் நெடுந்தூரம் பறக்கமாட்டுவீர்களா? மெத்த நீட்டுஞ் சொகுசுமாயிருக்கின்றீர்களே: தாம்ரையிலையைச் சாப்பிடுகிறீர்களே: என்று இப்படிக்கெல்லாம் ஏளனமாய் வாய்மதம் பேசும்போது, அந்த அன்னங்கள் நொந்து மெத்தவும் மனவருத்தப்பட்டு, புல்லோருக்கு நல்லகாலமும், நல்லோர்க்குத் தீயகாலமுமா யிருக்கின்றதே யென்று யேங்கி, காக்கையின் சொல்லை வாங்கி, ஐயா நாங்களென்ன பஞ்சைகள்; உங்களுக்குச் சரியாய் நாங்கள் 'பறப்போமா? எங்களால் முடியாது, என்று அன்னங்கள் தீனத்துவமாகத் திடுக்கிட்டுச் சொல்ல, அப்படியல்ல - நீங்களும் நாமும் பறந்து பார்ப்போமென்று காக்கைகூப்பிட எங்களுக்குச் சோறேது? தண்ணீரேது? என்று அன்னங்கள் சொல்ல, இவ்வளவுதானோ உங்கள் பவுசென்று காக்கைபேச, அதன்பேரில் நல்லதுபார்ப்போமென்று அம்சங்கள் உடன்பட்டு, காடு-கரை - நாடு - மேடு இவைமுதலாகிய இடங்களை நோக்காமற் கடல் நடுவை நாடிப்பறந்து போயின. அப்போது கூடப்பறந்த காக்கையானது இளைப்பாகி, உளுக்கார வேறோராதரவில்லாமல் நிராதரவாகிய கடலின்மேற் பறந்து, விசுக்கு விசுக்கென்று மூன்னுதாகப் பறந்துபோய் மறுபடியுந் திரும்பிவந்து, பறக்கும் போதே நித்திரை-இளைப்பு-ஆயாசம்-இவை முதலியவைகளைத் தீர்த்துக்கொண்டு மெதுவாய் வட்டமிடும் படி

யாகிய அன்னத்தினிடங்கிட்டி, ஐயையோ இம் மட்டா நீங்கள் பறப்பதென்றுபேசி உங்களுக் கும் ஒரு பட்சியென்று பெயரா? மானமில்லே யா? ஈனமல்லவா? என்றுபேசி, மீண்டுமுன்னு டிப்பறந்துபோய்ப் பின்னுடித் திரும்பிவந்து இப்படி இரண்டுமூன்றுவிசை போகவுந் திரு ம்பி வரவுமா யிருந்தபோது விசையொடுங்கி, உடலிலுற்ற பசையடங்கி, அசைவற்று, சிற கை சுருக்கிக்கொண்டு தலேக்ழாய்க் கடலில் விழுந்திறக்கும்படியாகியகதி நேரிட்டது. அப் போதக் காக்கையானது அன்னத்தைக்கூவி, ஐயா அன்னப்பட்சிகளே! அயனுக்கு வாகன மாகிய அறிஞரே! நல்லோர்பெரியோருடைய நலந்தெரியாமல், நயமுணராமல்வாய்மமதை பேசி வழிகெட் டழிந்தவன் நான் தான். ஓ நல்ல குணவான்களே! வீதிதோறும் மலந்தி ன்னுகிற சாதியாகிய எனக்குப்பலமாகிய அமு தங் கிடைத்தும், அதைப் போற்றிக் காத்துக் கொள்ளாமல், உங்களைப்போ லொத்த பெரி யோருடன் வீம்புபேசிப் பிராணன் இழந் தேன் என்று சொல்லிக் கடலில் வீழ்ந்து இறந்துபோயது. இந்தப்படி ஒரு கதை சொல்லுவார்கள்.

ஆதலால், ஓ கர்னமகாராஜனே! இளைக் காதபலம்பெற்ற அர்ச்சுனனுடனே எதிர்த்து வெல்லுகிறேனென்று நீ சொல்லும்படியான வெல்லப் பேச்சானது, இப்போது நான் சொன்ன கதைக்கு ஒப்பாயிருக்கிறது. சிற் றாரார் துரியோதனன்; காக்கைக் கர்னனு கிய நீ; துரியோதனன் வீட்டுச்சோறு தின்று வயிறு வளர்த்துக் கொழுத்திருந்த நீ, அன் னப் பட்சிபோன்ற அர்ச்சுனன்பேரில் யுத்தத் துக்குப் போகிறேனென்று சொல்லுவதினுல், காக்கை அடைந்தகதி உனக்கும் உண்டா மென்பதை கருதுக. இதனை நன்ருயோசித் துக்கொள் என்று இவ்விதமாகப் பற்பல வசனங்களைச் சல்லியன் சொல்ல, கர்னன் சற்று யோசித்து, நீர்வளம் நித்தில வளஞ் சிறந்த இந்தமத்திரதேயத்தனுனவன், நமது ராஜனிடத்தில் அன்புடையவனைப் போல் நடித்துக்காட்டி, இவனுக்கு மருமக்களாகியும் நமக்குச் சத்துருக்களாகியும் இரா நின்ற பாண்டவர்களுக்குப் பலமாகவேண்டிய உறுதி செய்கின்ருனென்று அறிந்து, ஆக்கிரஷத் துடன் உதிரம் பொங்கி, வாளாயுதத்தைக் கையி லுருவிக்கொண்டு, ஓ புல்லிய சல்லிய னே! இப்பேர்ப்பட்ட அற்பச் சொற்களை இனிமேலுஞ் சொல்லுவையாகில், ஒரே வெ வெட்டாக வெட்டி வீசிப்போடுவேன். விரை வில் என் தேரைச் செலுத்துங் காரியத்தைப் பாரென்று செழித்தான். இப்படியாக வலிமை யுடன் கர்னன்சொன்ன வசனத்தைச் சாரதி யான சல்லியன்கேட்டு, தழலிலுங்கொடிய அழ லெழக் கொதித்து, தடாலென்று தேர்விட்டுக் குதித்து, கர்னனுக்கெதிர் குறித்து, கத்தியை உறைநீக்கிப் பிடித்து, அடா சூதன் மகனே! அநுமானிக்குங் குதிரைபூட்டிய தேரை உன க்கு நான் விடத்தக்கதோ? எலியானது சண் டைசெய்வதற்கு இருந்தயிடத்தில் நடக்குமே யொழிய, பூனைமே லெதிர்த்துப் புறப்படுமா கில் என்னபாடு பட்டுப்போம்; எவ்வளவும் நினையாமற் போனுயல்லவா? என்று நீரிடி நெருப்பிடி பேரிடிபோலிரைந்து, விரைந்து சீறி எதிர்த்தான். அக்காலத்திற் சூரிய புத்திர னுகிய வீரியனுந் தேர்விட்டிழிந்து, வாளாயு தத்துடன் மண்ணிற்குதித்து, ஒருவரையொ ருவர் துண்டிக்கும்படி நிச்சயித்து அவ்வாளா யுதங்களை ஓங்கினுர்கள்.

துரியோதனன் கர்னனுக்குஞ் சல்லியனுக்கும் நேர்ந்த வாட்போர் விலக்கி, மீண்டுமவ்விரு வரையும் புகழ்ந்து சமாதானஞ் செய்வித்தல்

இப்படி யிவர்க ளொருவரை யொருவ ரெதிர்த்து இவர்களுடைய தேகத்திற் காயம் படுவதற்கு முன்னே, அல்லது அவர்கள் காயம் விட்டு ஆகாயம் அடைவதற்கு முன்னே, சர் பக்கொடி தரித்த தார்வேந்தன் கண்டு பயங்க ரங்கொண்டு சிந்தைகலங்கிச் சீக்கிரஞ்சென்று, இருவருக்கு மத்தியில்நின்று, என்னை முன்னு தாய்க் கொன்றுபோட்டு அப்பால் நீங்கள் எப் படியாகிலும் போங்களென்று விலக்கினுன். இவ்வாறு ராஜாதிராஜனுகிய துரியோதனன் வெருண்டோடி வந்து விலக்கவும் இருவரும் விலங்க, பின்பு அரவக்கொடியோன் அவர்க ளுடைய வாய்மொழிகேட்டு மனமூண்ட வெஞ்சினத்தை மாற்றி, உடனே பலமாகிய சிநேக சம்மந்தம் உண்டாகும்படியாய் இருவ ரையுங் கலக்கப் பார்த்து, மறுபடியும் ரதத்தி லேற்றி, எப்படியாகிலும் யுத்தம் விளைத்து, வெற்றிபெற்று வாருங்களென்று விடை கொடுத்து அனுப்பினுர். கேட்டீரோ ஜென மேஜெய மகாராஜனே! பாண்டு மைந்தர் ஐவரும் மாண்டு மாளவும், வையகமுழுவ துந் தானே ஐயனுகவேற்று ஆளவுங் கருத்து கொண்டு, எல்லா அசுரர்களையும் அழிப்ப

தற்கு ஏற்பட்டிருக்கும் ஊழ்வினைக்குரிய குண
த்தையுடைய துரியோதன மகாராஜன் இவ்
வாறு விடைகொடுத்தனுப்பவும், அந்தவேளை
யில் அழகிய வீரகண்டை பூட்டிய கிருதபன்
மன், வரிவிற்றாங்கிய கிருபன், தனக்குத்தானே
ஒப்பாகிய சகுனி, வாசமாலையணிந்த சாலுவ
ராஜன், தேசமெங்கும் புகழ்பெற்ற திரிகர்த்த
ராஜன் இவர் முதலிய பொற்றடந்தேர் வேந்
தர்களும், அளவிறந்த சேனை மாந்தர்களும்
அதிர்ச்சிகொண்ட பெருங்கடல்போல் நெருங்
கிச் சூழ்ந்து கர்னனைக் காத்து நின்றார்கள்.
இவ்வித உபபலத்துடனின்ற கர்னனைத் துரி
யோதன மகாராஜன் மனப்பூர்வமாய்க் கண்
களிக்கக் கருணைபூத்து மகிழ்ந்து நோக்கி,
இன்றைய யுத்தம் நாமேவென்றோம்; இதற்கு
யாதொரு தடையுமில்லை. பிரபலஸ்தனென்
பது பேர்கொண்டிருக்கின்ற விஜயனும், தன்
தந்தையாகிய இந்திரனிடத்திற்கு இன்று
போய்ச் சேருவான். ஆச்சுது; அவனுக்குப்
போங்காலஞ் சமீபத்தில் வாய்ச்சுது என்று
மனந்தேறினவனாய்ப் படை மன்னர்களைப்
பார்த்து, கேட்டீர்களா எனக்குரிய இஷ்டர்
களே! தேவேந்திரகுமாரனுக்குத் தேர்ச்சாரதி
யாகிய ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் வைத்திருந்த
நட்பாகிய உறவுக்குக் குறைவு வரப்போகு
தென்று அஞ்சி, என்னிடத்தி லன்னபானாதி
முதலியவைகளைத் தின்று வளர்ந்த விதுர
னானவன், இந்தத் தருணத்தில் எனக்குதவி
யாக நின்று யுத்தஞ்செய்யாமல், தன் கையி
லிருந்த வெஞ்சிலையை வெட்டி யெறிந்து
போட்டு, எனக்குத் துணைவந்த யதுகுலமுதல்
வனாகிய பலராமனையுங் கலைத்து, அவரைத்
தன்னுடன் கூட்டிக்கொண்டு உலகிலுள்ள
தீர்த்தங்கள் முழுமையும் ஒருங்கே ஸ்நானஞ்
செய்யும்படியாகிப் போய்விட்டான்.

அஃதிருக்கட்டும்; எங்கள் பாட்டனாகிய
வீஷ்மாச்சாரியர் கங்காதேவியாருடைய கர்ப்
பத்திலுதித்து, தன் தந்தையாகிய சந்தனு
மகாராஜனுக்குக் காதல் தீரும்படியாய்ப் பரி
மளகந்தியைக் கலியாணஞ் செய்துவைத்து,
அந்தக் கால்வழியிற்பிறந்த எங்கள் நிமித்தத்
தில் அரசும் வாழ்வும் இருநிலப்பரப்பு முழு
மையுங் கொடுத்துவிட்டு, விவாகமென்ப தில்
லாமல் வீஷ்மம்பெற்ற விக்ஞானதீரன் இப்
படிப்பட்டவர் வெவ்விய போர்களத்தில் எனக்
குச் சேனாதிபதியாயிருந்து சண்டை செய்து
வெங்களத்தையெல்லாம் உதிரம் வழிந்தோடு
கின்ற செங்களமாக்கி, மங்களமாகவந்த பகை
வருடைய வீராதிவீரர்களை யெல்லாம் அமங்
களமாக்கி, தானும் தேவரில் ஒருவராகச் சேர்
ந்துபோனார். மேலும் யானைமுகக் கடவுளுக்
கொப்பாகிய அஸ்வத்தாமனென்னும் தார்க்
கிய சிலாக்கிய வாக்கியபாக்கிய வீரகண்டாமணி
வீக்கிய தாள்களையுடைய சிங்கக் குட்டியைப்
பெற்ற தந்தையென்னுந் துரோணாச்சாரியர்,
வேதபாராயணத்திற் பிரகஸ்பதி குமாரனாகிய
கயனுக்கொப்பானவர், பலம்பொருந்திய வில்
வல்லபத்தில் நலந்திருந்திய நந்தீச்சுரனை
ஒத்தவர். சிறந்த கிருபைக்கு ஜெகரக்ஷகனாகிய
விஷ்ணுவைப் போன்றவர். இப்படிப்பட்ட
வர் எனக்காகச் சேனாதிபதியாயிருந்து, அடி
யேனுக்கு மகுடாபிஷேகப் பட்டங்கட்ட சித்
தங்கொண்டு ஐந்துநாள் வரைக்கும் யுத்தம்
செய்து, அந்த யுத்தத்திற் பகைவர் முதலா
கிய வீரரை எல்லாம் பிணக்காடாக மொத்தஞ்
செய்து, அழகிய போரில் தன் பிராணனைத்
தத்தஞ்செய்து, அவனி வாழ்க்கையை விரும்
பாமல் விடுத்து, இரும்புண்ட நீர்போல்
திரும்பாதிருக்கும் பான்மையை யொத்த நிரு
பாதிக நிஷ்டையை அடுத்து, மோக்ஷவீடு
சேர்ந்தார். ஓ என் அண்ணாவாகிய ஔதாரிய
கர்னமகாராஜனே! பசுங்கலாபச் சாயலாற்
சிறந்த தோகைமயிலேறி நடாத்துஞ் சேயா
கிய சிவசுப்ரமண்யக் கடவுளானவர், போரங்க
ராய்ச் சூரசம்மாரஞ்செய்து தேவர்களுக்குத்
தீங்கில்லாமல் வாழ்வைக்கொடுத்தாரல்லாமல்,
மற்றெந்த தேவர்களாலும் வாழ்வு தந்த
துண்டோ! அதுபோல் இப்போது சமர்
நேரிட்டிருக்கின்ற அந்த வேளையிற் உம்மை
யல்லாமல், என்னை நிலைபெறச் செய்வதற்கு
வேறே உரியவர்கள் ஒருவரில்லை.

ஓ மறையாய்ந்து தோய்ந்த நயத்தாற்
பயந்த தந்தையாகிய கிரணசூரியனை போன்ற
சூரர், இந்த மத்திரதேசாதிபனாகிய வில்லியற்
சல்லியராஜன் தன் சகோதரி புத்திராளாய்ப்
பந்துக்களிற் சிறந்த மருகர்களாகிய பாண்ட
வர்கள், தனக்குரியர்களென்றும் பாராமல்,
தன்னுடைய சத்தியவாக்குச் சோராமல், என்
னுடன் கலந்த சிநேக தர்மத்தினால் எனக்
குதவி செய்யும்படியாய்ப் படைத் துணை
யானார். வஞ்சநெஞ்சுடையவரல்ல. செவ்வை
யாகிய தீரத்துவமும், வீரத்துவமும், பெரு
மையும் உடையவர். தநுர்வேதத்தில் மிகுந்த
சரஜாலங் கரஜாலங்களில் தாஷ்டியான வல்ல

கர்னன் கெம்பீரங்கண் டையுற்ற தருமனைக் கண்ணன் தேற்றுதல்.





வீமன் துற்சாதனனைத் தூக்கி அந்தரத்திலெறிதல்.

வர். போரின்கண் முனைவராகில், இவருடன் எதிர்த்து ஆர் சண்டைசெய்பவர்கள்? ஓ இணையில்லா வீரத்திறம் வாய்ந்த அண்ணா கர்னராஜனே! இந்தச் சல்லியபூபன் என் வார்த்தையைத் தள்ளாமல் உமக்குச் சாரதியானார். காலமறிந்து நமக்கு அநுகூலமாகிய தாறுமாறாகிய பொல்லா மொழிகளை நாவில் நாறும்படி வைத்துப் பேசமாட்டார். நமது லாபலோபந் தனதென்றெண்ணிப் பாடுபடும்படியாகிய தனாட்டியன். இவர் சொல்லுகின்ற உறுதிப் பேச்சுகளெல்லாம் நமக்குச் சுகத்தையும் நலத்தையும் பலத்தையுந் தருமென்று உண்மையாக நினைத்து, நகமுஞ் சதையும்போலும், பூவும் மணமும்போலும், சொல்லும் பொருளும்போலும், உடலும் உயிரும் போலும், பாலும் நீரும்போலும் கலந்து கைகொண்டு காரியங்களை நடத்தாமல், விரோதமாய்ப் புன்மொழிபேசி வீரியங்காட்டி விருதாவில் உங்களுக்குள் நீங்களே பகைவைத்துக் கொண்ட விவேக சிலாக்கியமும், அநேக சாஸ்திரங்களை ஆராய்ந்த அன்பராகிய உங்கள் வாக்கியமும், என்னுடைய தவுர்ப்பாக்கியமும் யோசிக்குமிடத்தில்; மெத்தப் புதுமையும் பூர்ப்பியமுமான யோக்கியமாயிருக்கின்றது. இஃதல்லாமலும், குதிரைகளின் மனமும்-பலமும் - தேசமும்-இயற்கைக்குணமும்-பற்பல வேககதியும் சுழிசுத்தமுமாகிய விந்நலங்களை யுணர்ந்து, இன்னகாலத்தில் இன்னதேருக்கு இன்ன குதிரை பூட்டலாமென்று தெரிந்து பூட்டவும், ஓட்டவும், எதிராளிகளின் வீரங்கள் மிகுதிபற்றி யிருக்குமாயின், அவர்களுடைய புஜபலதிடத்தை எடுத்து எஜமானுக்குத் தடுத்துச் சொல்லவும், சிலவிஷயங்களை சொல்லுங்காலையில், எஜமானானவன் அந்த விஷயத்தைக் கேளாமல் தடுப்பானாகிற் சொல்லுகிறதற் குரிமையை வகிக்கவும், யுத்தங்களின் குறைவு-மலிவு-காலம்-இடம்-தன்வலி-எதிரிவலி இவைகளையெல்லாம் எண்ணிப் பார்க்கவேண்டிய கடமையுஞ் சாரதிகளுக்கு இயல்பாகிய முறைமையாக்கும். ஓ அண்ணா கர்ன ராஜனே! இனிமேலுஞ் சல்லியபூமான் சொல்லத்தகுந்த சொற்களை யெல்லாம் நமக்கு குரோதமாகிய தவறுதலை விளைப்பிக்குமென்று எவ்வளவும் நினையாமல், அவருநீரும் மனங்கலந்து என்னிருவிழிபோன்ற நீங்களிருவரும் அன்புபூண்டு, நாமெடுத்த காரியத்தை முடித்து என்னை நிலைநிறுத்திவைப்பீர்களாகில், சமுத்திரத்தை யுடுத்த இத்தாரணியிற் சகல செல்வத்துடன் யானும் என் தம்பிமார்களும், என் புத்திர மித்திர களத்திராதிகளும், உங்கள் கைக்குளடங்கியிருக்குங் குற்றமில்லாத நெல்லியங்கனியென்று நீங்கள் நிச்சயமாய் நினைக்கக்கடவது என்று இருவருக்கும் மனங்கனிந்து களிக்கும்படிக்குச் சொல்லி உபசரித்து, யுத்தத்துக்குப் போகும்படியாய்ச் செலவு கொடுத்து விடுத்தான் கலவை அணிந்த புயத்தோனாகிய துரியோதன மகாராஜன்.

## கர்னன் சல்லியனோடு தனக்கு நேர்ந்த சாபக் குறைகள் கூறி ஆகுலித்து பின்னிருவருந் தேறி மனம் ஒத்துப் போருக்கெழல்

அப்போது சல்லிய சாரதியுங் கர்னனாயகனுந் தேரேறிக்கொண்டவர்களாய், மலையிளைக்கக் கிளைத்த திணிந்த புயத்தினையுடைய சாரதியாகிய மத்திரதேயராஜனை, மணமாலையணிந்த வாகுவலி நிறைந்த மார்த்தண்டன் தந்த மகனாகிய கர்னன் அருட்பார்வையுடன் பார்த்து, ஓ சல்லியராஜனே! நீர் என்னை இவ்வளவு அவமதிப்பாகப் பேசலாமோ? இது உமக்குத் தர்மமா? என்று உலகமதிக்கப் பலவித நன்மொழிகளைப்பேசி, மறுபடியுந் தன் வரலாறு சொல்லத்தொடங்கினான். ஐயா சல்லியர்க்கிறையே! கேளும்; பூர்வத்தில் மகேந்திர மலைச்சாரலிற் பொருந்திய அருந்தவத்தொருவனான பரசுராமரிடத்திற்குப்போய், அத்திருத்துளவ முடியினானுடைய வீரமணியணிந்த திருவடிமிசை தாழ்ந்தேன். அவர் எனக்கு ஆசீர்வதித்து அருளுதவி செய்தார். அவருடைய கிருபைகொண்டு அவரை பூசித்திருக்கும் நாளையில், நீ எந்தக் குலத்தானென்று வினவினார். அப்போது ஏழையாகிய யான் உயர்ந்த மறையவர் குலமென்று புகன்று நின்றேன். என்ன விரும்பி என்னிடத்திற்கு வந்தாயென்று கேட்டார். வில்வித்தை கற்கவந்தேனென்று விளம்பினேன். தகுதியாகிய காரியந்தானென்று தயைபுரிந்தார். தனுர்வேதமுதலிய யாவற்றும் பூரணமாகக்கற்றேன். அளவிறந்த அம்புகளும் பெற்றேன். மதிக்கப்படாத பேரருளுடையவராய் பிர்ம்மாஸ்திரமுதலிய மோகாஸ்திரங்களுந் தந்து வேண்டிய வேதமந்திரங்களும் அநுக்கிரகஞ் செய்தருளினார். இப்படி நடந்த நாளையில், தேவர்களுந் தேவேந்திரனும் பொறாமைகொண்டு, மனம் பொறாமல் ஆச்சரியப்பட்டு, என்னைக் கெடுக்க நினைத்து ஒரு சூது பண்ணினார்கள். அந்த அநியாயச் சூது

என்னவெனில், ஒருநாள் மந்திரவடிவனாகிய பரசுராமர் என்மடிமீதுமுடிவைத்து நித்திரை பண்ணிக்கொண் டிருக்கும்போது, தேவேந்திரனும் அவனுடன் சேர்ந்தவர்களுமொன்றாய்க்கூடி, வண்டுகளாய் உருக்கொண்டு பறந்து, அந்தரம் விட்டுப் புறப்பட்டு வந்து என்னுடைய தொடையைத் துளைத்து, விஸ்தாரமாக இரத்தவெள்ளம் பெருகிப் பூமியில் தோயும்படியாகச் செய்து, இந்தப் பக்கத்திலிருந்து அந்தப் பக்கம் வரையில் உருவிப் போயினர். இப்படி யிருபக்கத்து மூடுருவத் துளைத்தபோது, எனக்கு மெத்தவும் பிராண வருத்தமாய் இருந்தது. அந்தப்படி யிருந்த போதிலுந் தேகத்தையாகிலுந் தொடையையாகிலும் அசைந்து ஆட்டுவேனாகில், ஆசாரியர்கொண்ட நித்திரைக்குப் பங்கம் வருமே என்று அசையாமல் மனம் பொறுத்துக் கொண்டிருந்தேன்.

அந்தவேளையில்என் தொடைவழி வந்த உதிரமானது, படுத்திருந்த பரசுராமருடைய தேகத்திற்சில்லென்று பிரிசப்பட்டு, அதனால் அவர் திடுக்கிட்டெழுந்து, இளஞ் சூரியனைப்போன்ற அப் பரசுராமரானவர் என் முகத்தை ஏறநோக்கினார். நான் பயந்து நடந்த காரியங்களை யெல்லாம் நயந்து வணங்கிச் சொன்னேன். அவையாவு முணர்ந்து சற்றுநேரம் நிதானித்து, அப்பா! நீ பிராமணனென்று சொன்னையே; பிராமணனால் இப்பேர்ப்பட்ட காரியங்களுக்கு மனத் துணிவுகொண்டிருக்க மாட்டார்களே: ஆதலால், நீ பிராமணனல்ல; பின்னை யென்னகுலத்தான் உள்ளபடி உரையென்று கேட்டார். நான் மிகவும் அச்சப்பட்டு, கைகால் நடுங்கி, உத்தகனுடைய மெல்லடிமேல் வீழ்ந்து, சூதநாயக னென்பவன் என்னை யெடுத்து வளர்த்த வரலாறு சொன்னேன். அதைக் கேட்ட மழுவாளியானவர், தன்னுடைய கியானத்தால் அறிந்து, என்மேல் முனிந்து, அடாகர்ணா! நான் உணர்ந்த தநுவேதத்தைப் பிராமணருக்கு உபயோகமாகும்படி செய்வதல்லாமல், மற்றப்பேருக்குச் சொல்லுகிறதில்லையென்று ஒரு காரணத்தாற் பிரமாணம் வைத்துக் கொண்டேன். அப்படியிருக்க, நீ என்னை ஏமாற்றி என் பிராமண விரதத்தையுங் கெடுத்தாய். வேதியர் அறியத்தக்க பிரம மந்திர முதலியதும் பிரம சாஸ்திரங்களும் உனக்குக் கொடுத்திருக்கிறேன். மாணமான பொய் பேசிய உனக்குக் கொடுத்தபடியால், எனக்கு அசுசமாகிய இடர்வந்துநேரிட்டது. அதனால் நான் மெத்தவுந் துன்பம் அடையலானேன். ஆகையால், நீ என்னிடத்திற் பெற்ற மந்திரமும் கணைகளும் யுத்தமுகத்தில் உனக்கு உதவாமற் போகக் கடவதென்று சபித்து, பொய் வார்த்தை கூறிய புன்மையால், நீ எந்த யுத்தஞ் செய்வதற்கு எதிர்த்தாலும், நல்ல நல்ல சமயங்களாகிய அந்தப் போர்முனையில் உனக்கு மறதிவருமென்று சத்தியவாக்கினையுடைய உத்தம னுரைத்து விடுத்தார். இதனாலே நாலுபேரும் என்னை இழிவாகப்பேசும்படி இளைக்கலாயது. ஓசெய்தவத்தொருவனாகிய சல்லியனே! உமக்கு உண்மையாய்ச் சொன்னேன். இஃதன்றியும் இன்னுமொரு சாபம் வந்திருக்கின்றது; அன்னவரலாறையுஞ் சொல்லுகிறேன் கேளும்.

ஓமத்திரபதி! திங்கள் மரபினனாகிய துரியோதனமகாராஜனால் துங்கமுடிசூடி அங்க தேசத்தைப் பொங்கமாய் ஆண்டுவந்த நாளையில், ஒருநாள் ஊர்வலஞ் செய்யவேண்டுமென்று உவகையும் உற்சாகமுங்கொண்டு, சகல வாத்திய சம்பிரம ராணுவத்துடன் சீர்திருத்திய தேர்மேலிருந்து கார்பொருந்திய மதில்சூழ்ந்தவீதியில்வரும்போது, இராஜாதிராஜனாகிய துரியோதன மகாராஜன் தேடிக் கொண்ட கொடுமையோ? இந்தவுலகம் புகழா நின்ற சத்துருக்களாகிய பாண்டவர்களுள் நற்றவ நன்மையோ? அல்லது என்னுடைய முற்பவத்துண்மையோ? எந்த பாவமோ நான் என்னவென்றுசொல்லுவேன். ஊர்வலம்வரும்படியாய் ஏறிச்செல்லுகின்ற தேர்ச் சக்கரத்தில் சிவந்த நிறத்தினையுடைய ஒரு பசுவின் கன்றானது ஓடிவந்து விழுந்து, உடல் சிதைந்து உயிரொழிந்து விட்டது. அந்த வேளையிற் பாபிகளுடைய நிரியாண காலத்தைக்குறித்துக் கோபாவேசங்கொண்டு வருங் கூற்றம்போல் ஆலகாலத்தீயெனப் பொருந்தி நிறைந்த அழற்கண்ணராகிய ஒரு முனிவர் சிவந்த தனது திருமேனியின்தோற்றம்போற் சினங்கொண்டு, என் தேருக்கு நேர் வந்து நின்று, என் முகத்தைப் பார்த்து, அடாபாவி! நான்மெத்த அருமையாகவும் ஆசையாகவும் வளர்த்த என்னுடைய இளமையாகிய பசுவின் கன்றைக் கொன்றாயே: இன்று இந்தக் கன்றைச்சிதைத்துக்கொன்ற உன்னுடைய தேரும் - விருதும் - படையும் - தேகமும்-சத்

துருக்கள் விடுக்கும் வெவ்விய பாணங்களினால் அடிபட்டு அழிந்து சிதைந்து போவதுமல்லாமல்; நல்ல யுத்தசமயத்தில் நீ ஏறிய தேர்ச்சக்கரங்களும் பூமியிற்புதைந்து போகக் கடவது என்று சபித்தார். இவ்விதமாக உரைந்த சாபச்சொல்லானது கடுந்தழற்கம்பி போல் என்காதில் நுழைந்தவுடனே, நான் வேகமாக ஏறிச்சென்ற தேர் விட்டிழிந்து, விரைந்து தாழ்ந்து வேதியன் திருவடியில் வீழ்ந்து, கோவென்றுஇரைந்து, காவென்று கரைந்து, ஆண்டவனே! இது எனக்குத்தெரியாமல் விளைந்த குற்றம். ஆகையால், இதை நீர் மன்னிக்கவேண்டியது. தேவரீர் கூறிய சாபாக்கினியைத் தவிர்த்துத் தீனனைக் காத்தருளும். ஓ தீனரக்ஷகனே! ஓ செந்தாமரை மாலையணிந்த தேவனே! என்று பலவிதமாகிய இனிய சொற்களைச் சொல்லிப் பணிந்து, ஓ சுவாமி! பாற்குடம்போல் மடிசுரந்து உயர்ந்து பருத்த பசுக்கள் ஆயிரமும், பூமியைக் கிழித்து ஓடுகின்ற பொன்னுருள் பொருந்திய தேர்கள் ஆயிரமும், மான்குதிக்குந் தன்மைபோல் திருந்திய நான்கு கதியிலுஞ் சிறந்துமான்குதிக்கும் ஓங்கிக்குதிக்குங்குதிரைகள் ஆயிரமும், சுபலட்சண குணமுடைய யானைகளாயிரமும், மிகுந்த தொழிலாளரும் கடல்சூழ்ந்த காசினிமுழுவது மாளுகின்ற என்னிறைவனாகிய துரியோதனமகாராஜனுடைய கையினாற் கொடுக்கச் செய்கிறேன். ஓகோ முனியே! என் குறையைத் தீர்த்தருளும் என்று கூறித்தொழுதேன்.

இப்படி நான் இரங்கித்தொழுது அழுத இரக்கத்துக்கு எவ்வளவும் என்னை ஏறெடுத்துப் பாராமல், நான் சொல்லியதையும் ஓராமல், எள்ளளவேனும் இரக்கமில்லாமல், அவ்விரு பிறப்பாளராகிய மேற்குலத்தோர் உரக்கக்கூடி, நிகண்டிதமாகிய கோபத்துடன் என்னைப்பார்த்து, அடா அரசனே! கொடுப்பிக்கிறேனென்று சொல்லிய பாற்பசுக்கள், நால்வகைச் சேனைகள், அணிபணி மணிமுதலாகிய அநேகம் பொருள்கள், இவைகளினால் இறந்துபோன பசுவின்கன்று உயிர் பெற்றுவருமா? நீ கொடுக்கும் பாக்கியம் என் பசுவின் கன்றைப்போல் எனக்குச் சந்தோஷந்தருமா? இதனால் எனக்கொரு ஆனந்தம் வருமா? ஆகையினால், நான் கொடுத்த சாபம் நீங்கமாட்டாது. உன்னைச் சூழ்ந்த தீவினை வசத்தால் நீ அனுபவித்தே தீரவேண்டும். என்று சொல்லிப்போட்டு அந்த அந்தணர் போய்விட்டார். இப்படி நான்பெற்ற இந்தச் சாபமும், ஆசாரியராகிய பரசுராமராற் பெற்ற அந்தச் சாபமும், ஒருவேளை நேரிடுமாகில், நல்ல தவத்தையுடைய பாண்டு புத்திராள் வெற்றி பெறுவார்கள். அவர்களுக்கு நல்லகாலம்; ஓ மத்திரப்பூபதி! இதுமாத்திரந்தான் என்னை வாதித்துக்கொண் டிருக்கின்றது. இல்லாவிட்டால் எனக்கு நேர்நின்று போர் புரிந்து ஜெயிக்கத் தக்கபேர்கள் திரிலோகத்திலுமுண்டோ? கிடையாது. ஆகிலும் தேவர்களிற் சிறந்த திருமாலும், தேவர் பகையை வென்ற விஜயனும் என்னுடன் பகைத்து எதிர்த்து முட்டப்போகின்ற யுத்தங்களை நீரும் இருந்து பார்க்கப்போகின்றீர். என்று மிகுந்த ஆசையாய்ப் பூரணமான மனத்துடன் பொருந்தி நல்ல வார்த்தைகள் சொன்ன பிற்பாடு, காயுங் கண்ணினையுடைய கடும்பரி பூண்ட கயிறுபிடித்து, காரியங்களிலும் கலங் காமனத்தினையுடைய காவலரெல்லாங் கலங்கித் திடுக்கிடும்படியாய்ச் சாரதிதொழில் செய்தான் சல்லியராஜன். வாள்போற் சிவந்த கோபக் கண்களையுடைய வயவீராள் முதலிய பேரும் புடைசூழ்ந்துவர, புரசையானை முதுகின்மீது முரசவாத்தியமுழங்க, குற்றமில்லாத வெண்சங்குகள் பொங்கியார்க்க, சகல வித்வான்களுஞ் சூழும்படியாய்ச் சூரியகுமாரனாகிய கர்னமகாராஜனானவன், பாரிய விற்பிடித்துப் படைமுகம் வந்து, இராஜாதிராஜனுடனே கலந்து, ஒருவரையொருவர் தழுவிப் புகழ்ந்து, சத்துருக்களைப் பகைத்து யுத்தஞ் செய்யாநின்ற கோபக்கண்கொண்டு, குருட்சேத்திர பூமியிலே நின்றான்.

இவனைக்கண்ட உடனே, தருமராஜனுடைய படைக்கதிபனாகிய திர்ஷ்டத்துய்மன் திணிந்த பலங்கொண்ட துருபதேயன்-சோமகேசன்-குந்திபோசன் முதலாகிய சூராளும் தேறிய தீராளும், கர்னனின்ற யுத்தமுனையை கலக்கும்படியாய்த் தங்கள் தங்கள் மனோவேகத்திலுமிஞ்சிய வேகமான தேரைக் கடவி வந்து வில்லோசை-நாணோசை-விசிக ஓசை முதலியவைகளைக் காட்டி, உரங்கொண்ட சரங்களை உருத்துத்தொடுத்து விடுத்தார்கள். அவ்விடத்தில் நிலைத்துநின்ற துரியோதனனுடைய சேனைக்காவலர்கள் வில்வளைத்து நாணிபூட்டி, விஸ்தாரமாக நீண்ட பாணங்களை நிமிர விடுத்து அமர் கொடுத்தார்கள். அப்

போது திசைகளிலிருந்து ஓசை பிறந்து பிரஜைகள் பெயர்ந்து பிரமித்தோடும்படியாக மேலே எழுந்து வட்டமிட்டுச் சுழலும் பெருங் காற்றைப்போல் வருகின்ற பேராண்மைக் கணைகளைக்கண்ட தேவர்கள் திடுக்கிட்டுத்தியங்கிப் போனார்கள். ஓ ஜெனமேஜெய மகாராஜனே! இன்றைய்தினம் நடந்த போர்த்திறத்தைச் சொல்லுமிடத்தில் யாரையார் வென்றார்கள்? யாரையார் கொன்றார்கள்? இதனுடைய விபரத்தை எப்படிச்சொல்லி நாம் அதிசயிக்கத்தக்கது? இறைவனே! இன்று நடந்த யுத்தம் அதற்கருமையாயிருந்தது. அஃதெப்படி யென்றால், அதிரதராதியர் தேர்கள் முறிந்தும், வீரியகுதிரைகள் அழிந்தும், சாரதிகள் சாய்ந்தும், ஒவ்வொரு வீரர்கள் மீது கணக்கற்ற கணைகள் உடம்பெல்லாம் நுழைந்தும், அதனால் மெய்வருந்தியும், நொந்தும், புறந்தந்தும், இப்படிக்கெல்லா மிருவர்படைகளினும் வருந்தினார்கள். முந்திப்பொருந்தி யுத்தஞ் செய்யவந்த வீரர்கள் நைந்த அந்த வேளையில், பிந்திச் சிறந்துவந்த வேறுவேறாகிய பலகோடி வீரர்பேரிற் சூரியகுமாரனானவன், மகமேருபோன்ற வில்லை வளைத்து சுழற்காற்றாகிய சூறாவளிபோல் தன் தேரைச் சுழற்றிவந்து முனைமுகத்தில் முட்டவிட, திர்ஷ்டத்தும்மனும் பின்கொடாமற் பற்பலமுமாக விற்போர் நடாத்தி, மேலெழுந்து விழுந்த கணைகளினால் வெகுகோடி படைகளும் அடிபட்டு உயிரழிந்து ஒழிந்து பதைபதைத்துப் பறக்கும்படியாக, இவ்விரண்டு சேனாபதிகளும் முரண்டு ஜெயம்பெறக் கருதி சண்டையிட்டார்கள். இருவர்விட்ட பாணங்களு மிறைந்தெழுந்து, ஆகாயத்தில் இடமில்லாமல் அடைந்தன. இவ்வாறு இவர்கள் தேகங்கள் கிழிந்து உடைந்து கிடந்தப்புப்படியாய் வின்னாணி யிறுக்கி, முறுக்கிப் போர்புரிந்த காலையில், திர்ஷ்டத்தும்மனானவன் கர்னனுக்கு முன்னிற்கமாட்டாமல் அமரழிந்து, இடம்விட்டொழிந்து, ஏறுதேருடன் மாறி ஓடினான்.

### விடசேனனுக்கும் விஜயக்ஷேத்ரனுக்கும் இவர்கள் பிதாக்களாகிய கர்னனுக்கும் வீமசேனனுக்கும் யுத்தம்

இப்பாற் சோமதேசத்தலைவராகிய பாஞ்சாலர் வருக்கத்தில் அழிந்து ஒழிந்த சூரர்போக, இன்னும் இருப்பவர்பேரிற் பகைகொண்ட அஸ்வத்தாமனானவன், காமபாணத்துக்கு மேற்பட்டுக் கருத்தை வாட்டும்படியாகிய எண்ணில்லாக் கணையெடுத்து தீமுகந்துடன் தேகத்தைக் கருக்கத் தெறித்து விடுத்து, சில சில அஸ்திரங்களைப் பலபலவென்று செலவு செய்தான். அந்தவேளையில், தர்மராஜன் ஆவேசங்கொண்டவரைப்போற் பரவேசங் கொண்டு, ஐயோ! இதென்ன விபரீதகாலம்? அப்பா வீமசேனனே, நீயாகிலும் அஸ்வத்தாமனுக் கெதிரிற்போய் நிற்கமாட்டாயா? என்று மிகவும் மனஸ்தாபம் அடைந்து விளம்ப, மணங்குலாவும், மலர்மாலையணிந்த முடிபொருந்திய அத்தமயனது உத்தரவின் பேரிலும்; தனக்குச் சரியான கையுடன் சண்டை செய்யக்கொண்ட சந்தோஷத்தினாலும் உடனே வீமசேனன் புறப்பட்டு, அஸ்வத்தாமனுடன் எதிர்த்து, அந்த ஆசாரிய குமாரனையும் மற்றப் பேர்களையும் யுத்தத்தில் வென்ற ஆரபாரத்தை நான் எவ்விதமாகச் சொல்லுவேன்? இவன்போய் நுழைந்தமாத்திரத்திற் பகைவர்படைகளை ஒன்றுக்கொன்று சம்மந்தமில்லாமல் ஓடிவாடி யிறக்க உலைவாய் மெழுகாய் உருகச்செய்யுங் காலையில், அத்துரியோதனனுடைய படைகள் சாய்வதையும், அஸ்வத்தாமன் இடைவதையுங் கர்னனுடைய குமாரனாகிய விடசேனன் பார்த்து மனந்தாளாமல், கடகடவென்று மிகுந்து விரைவாகத் தேர்செலுத்திப் போர் கொடுக்கும்படியாய் எதிர்த்து வந்தான். அப்போது வாயுகுமாரனாகிய வீமசேனனுக்கும் இவன் மனைவி விஜயாளுக்கும் பிறந்த மைந்தனாகிய விஜயக்ஷேத்திரனும் சூரியகுமாரனாகிய கர்னனுக்கும் இவன் மனைவி பொன்மாலைக்கும் பிறந்த மைந்தனாகிய அவ்விடசேனனும் முனைந்து, பெருமையுடன் கலந்த யானை-சேனை-ரதம்-குதிரை இவைகளோடு ஆயுதம் படைகளுந் திவ்விய வாகனங்களு முடையவர்களாய், வில்லை வளைத்து, சொல்லை விளைத்து, மிகுபாணங்களை விடுத்து, வேல்கொண்டெறிந்து, வாள்கொண்டுவீசி, விற்பிடித்தடித்து, விற்பனங்கள் படித்து, விருதுக்களாகிய குடை கொடிகள் பிடித்து, விதம்விதமாக விநோதத்தேர் விடுத்து, விறுவிறெனச் சுழன்று வெம்போர் விளைத்தார்கள். இவ்வாறு மைந்தர்கள் செய்த யுத்தங்களைத் தந்தையராகிய வீமசேனனுங் கர்னனுங் கண்டு களித்து, புஞ்சமாகிய உடல்பாரித்து, வாசமாலை பொருந்திய தோள்கள் பூரித்து, தங்களுடைய ரதத்தை வேகமாக விடுத்து, மநோவேகத்திலும்

மிஞ்சிய வேகமாய் வலம் இடம் சுழன்று குதிரை காலடியினுலுந் தேர்ச்சக்கங்களினுலும் எழும்படியாகிய தும்புகளானது, அம்பரத்தை மூடிமறைத்து இம்பராகிய மண்ணுலகாக்கவும், உலகமெல்லாம் அஞ்சிப் பயந்து மிஞ்சிப் போச்சென்று விவேகம் விடுத்து அவ்விவேக் மபக்கமடுத்துச் சிந்தை நொந்து தியங்கும்படியாகவும் எட்டுத் திக்கும் அண்டரண்டமுஞ் செவிபட்டுப் போகும்படியாக வில் வளைத்தார்கள்.

இவ்வாறு இரண்டு திசைகளிலுந் திரண்டு உயர்ந்த இந்திரவில்லைப் போன்ற தங்கள் வில்லை இடிமுழக்கத்துடன் வணங்கிய இருதிறவருங் கரசரணுதிகள் தெரியாமற் கடுஞ்சமர்புரிந்த காலையில், பொன்மலையாகிய கல்லை வில்லாக வணக்கி எப்புவனத்துக்கும் இடையூறு செய்துவந்த முப்புரத்தை எரித்தருளிய தற்பரனை முகக்கண்ணனுடைய வலக்கண்ணுன சூரியன் அருளிய குமாரனுனவன், வீமசேனனுடைய மார்பிலும் தாம மாலை நிறைந்த தோளிலும் அளவிறந்த அம்புகளை விடுத்து, முன்னும் பின்னும் உருவும்படியாய்த் துளைபடுத்தினுன். அப்போது வீமசேனன் செஞ்சுடர்ப் பொறிபறக்குங் கண்ணோடு மிஞ்சிய வீரபாகுவும் படபடவென்று துடிக்கும்படியாய் ஆகுலப்பட்டு, கலக்கண்ணீற் பொழிந்து மெத்தவுநைந்து வருந்தினுன். அக்கால் ஒளதாரியாகிய கர்னன் கல்லடிபட்ட புண்ணியல் தடியடிபடுந் தன்மைப்போல், மேலும் மேலும் இலக்கமற்ற கணைகளை கலக்கமற் றெறியவும், அதன் பேரில் வீமன் ஈரிரண்டு நாலிரண்டு எண்ணிரண்டு என்று சொல்லாநின்ற அஸ்திரங்களைத் தனது வில்லிற்பூட்டி அக்கர்னனுடைய மார்புந் தோள்களுஞ் சின்னுபின்னமாய்க் கலங்கும்படி விடுத்து, தநுர்வேத உருவாகிய அங்கதேயனைப் பார்த்துப் பகைத்து நகைத்து, அடாகர்னு! இப்பவும் நீ நல்லவில்லாளி அல்ல; உன்னை நாசமாக்குவதும் எனக்கொரு பெரிதல்ல என்று பொல்லாத வார்த்தையை சொல்லாமற் சொல்லி, அவனுக்குத் தேர்ச்சாரதியாகிய சல்லியனை நோக்கிச் சொல்லுகிருன். ஓ மாமா பார்த்தீரா? இந்தக் கர்னனை ஒரு நொடியில் மூடிசாய முடித்துப் போடுவேன். அப்படி முடித்துப்போட்டால், என் தம்பியாகிய அர்ச்சுனர் சபையிற் கூறிய சபதம் மாறுபட்டு வீணுய் போகுதென்று எண்ணி, பெரிய மனது பண்ணி, இப்போது பிராணபிச்சை கொடுத்தேன். இப்பேர்ப்பட்ட சூதனுகிய சூதன் பிள்ளைக்கு நீர் சூதனுகி வந்து தேரைச் செலுத்திக்கொண்டிருக்கிற உம்முடைய சூதைக் குறித்தும், தொலையாத் தோள்வலி கூடிய போர்வலியைக் குறித்தும், நானும் என்போ லொத்தவர்களும் என்ன சொல்லவேண்டியது? ஐயோ! உம்முடைய வில்வண்மை சொல்வண்மை யெல்லாம் நிஷ்பிரயோசனமாயினவே; உமது முகத்தில் இனி யாங்கள் விழித்தற்கில்லாமல் போவதே ஒன்று நிஷ்டூரமாக நிந்தித்து, நிமிஷத்தில் அப்பாற்போய் மறுபடியுந் திரும்பி, அவ்வீமசேனனும், சில ராஜபுத்திரவர்க்கமும், நால்வகைப் படையும் நான்கு புறத்திலும் வளைந்து, ஊழிக்காலத்து இருளாஸ்திரங்களை எடுத்து தொடுத்து ஏகமாய் விடுத்து அமர் மலைந்தார்கள். அப்போது அங்கதேசாதிபக் கர்னனும், அங்கதேசத் தலைவரும், ஐஸ்வரியமுள்ள அங்கதரும் முனைசாய்ந்து, மனம் ஓய்ந்து, வாய்காய்ந்து, வலிதேய்ந்து, வாகனுதி முதலிய படைகளு மாய்ந்து, வர்கானடலசின்னங்களுந் தீய்ந்து வீய்ந்து போனுர்கள். அந்தவேளையில், யாரினு மேலாகிய வீரத்திற் மிஞ்சிய விடசேனன், விருதுபெறப் பிடித்தவர் வில்லை யிருகால்வளைய நாணியேற்றி, தன் தந்தையை வருத்திய வீமன் முதலியோர்கள்பேரிற் கொந்தனற் கணைகளைத் தூற்றி, விந்தகிரிக்கொப்பாகிய தேரை மேலாகப்போக்கி, சிந்திக்கும் அன்பர்க்குமுன் வந்து காக்குஞ் செங்கண்மாலுக்கிளைய சாத்தகியுடன் சீறி எதிர்த்துச் செருப்புரிந்தான்.

### காவிரிநாடனுகிய சோழனுக்கும் மகதநாடனுகிய சகாதேவனுக்கும் யுத்தம்

இப்பால், இன்றைக்குப் புதுவெள்ளம் வரும் நீங்கள் வயலை உழுங்களென்று ஆற்று மணல் குறிப்புக்காட்ட, அந்தக் குறிப்பின் பிரகாரம் அப்போதே வெள்ளம் புரண்டு வரா நின்ற காவிரிநாடனுகிய சோழனும், அழகிய பொன்முடி பொறுத்த மகததேசனுகிய சகாதேவனும் பகைத்து யானை யேறினுர்கள். அந்த யானைகள் எப்பேர்ப்பட்டன வெனில், மலையருவிகள்போல் மந்தாரைகளைப் பொழிந்து, வானமும் மண்ணும் ஒண்ணுக எழுந்து, வாரிதி நீரிற்றுளைந்து, வலியபகைகளைக் களைந்து, மேகங்களைப் பிடித்துப் பிழிந்து, வேறு வழி புகுந்து, தாறுமாருகத் திரிந்து, உதிரச்

சேறுபட யுத்தம்புரிந்து, என்றும் நிகரில்லாமல் திரியுங் குன்றுபோன்ற யானைகள் இவைகளின் மீது அவ்விரு மகாதீரர்களு மேறி, இணையற்ற திடங்கொண்டு அடல்தேறி, சிற்சிலகணைகளை விடுத்துச் சீறி, இரண்டு கருங்கடல் முகட்டில் உதித்த சூரியர்களைப்போற் பிரகாசித்து வீறி, பலம்பொருந்திய வில்லை வளைத்து நாட்டி, பல திசைகளுஞ் செவிடுபட நாணொசை காட்டி, இந்த ஓசையுடனே கூட பிராணங்களும் ஓடும்படியாய் உந்தி, உற்று வந்த சேனைகளின் உயிரையெல்லாஞ் சிந்தி, ஒருவர்க்கொருவர் முந்தி, உடல் வருந்திப் பிந்தி, ஓயாது யுத்தஞ்செய்து வரும்போது; மாவினையாளனாகிய சோழராஜன் பிறைமுகக் கணைகளாகிய ஒன்பது பிரபலவாளிகளைப் பலமாகப் பூசித்து விடுத்தான். அந்த வாளிகள் சென்று அம் மரகதனுடைய மலர்மாலைகள் நிறைந்த மார்பமும், வாகாகிய திண்ணிய புயமு மறைந்து போகும்படியாய்த் துளைத்தபோது சரீரமெல்லாங் காயநிறைந்து, ரத்தங்கள் உறைந்து, உயிர்நிலை குறைந்து, தான் ஏறிய யானைமுறிந்து, வெற்றிக்குடையும், விருதுக்கொடியும், யானைப்பாகன் முதலிய படையும் அழிந்து, பின்பறிந்து வீழ்ந்தொழிந்ததுகள். அப்போது மகதராஜனானவன், தான் ஏறிய யானையை திடப்படுத்தி திரும்பி வந்து சோழராஜனை வளைத்தான். அந்தச் சோழன் எப்பேர்ப்பட்டவ னென்றால், கங்காநதியில் மூழ்கி ஆழம் அறிந்து, கட்டுத்தறியையும், மூங்கிற் கட்டையும், பாகனையும் உலரடி போன்ற காலால் முறித்து, விலங்கையும் - தொழுவையும், விலங்க எறிந்து, மும்மதம் பொழிந்து, ஏழுறப்புயர்ந்து, காவிரியைக் கலக்கிக்குடித்து, கடலைக்காவிட்டளந்து, இடரைக் கின்றாய்ப்பறித்து, திருகுத லில்லாமல் இறுமாந்துதிரியும்பட்டத்து யானையையுடையவன். மேலும், கப்பலோடும்படியான கடல் சூழ்ந்த காசினியெல்லாஞ் சிவப் பிரதிஷ்டை செய்து, பரணிப்பிரபந்தங் கொண்டு பாரெல்லாஞ் செயித்துப் பவனி வலம் வந்த மநுகுலச்சோழன். அந்தராஜனை வளைந்த மரகதனானவன், கட்க்னல் உதிர்த்து அதிர்த்து, மேலுமேலும் விர்த்திக்கும்படியாகிய மின்னலாஸ்திரம்-இடியாஸ்திரம் - மேகாஸ்திரம்-மோகாஸ்திரம் இவை முதலியவைகளைத் தொடுத்து, இளமைதங்கிய அங்கனைமார்களின் முலைதோயும் புயத்திலும் மார்பிலும் ஊடுருவும்படிக்கு விடுத்து, அந்திவெய்யிலைப் போன்ற சோரியில் மூழ்கப்படுத்தான்.

அதுகாலத்தில், கருவூர்-மதுரை-காவேரிப்பூம் பட்டின முதலிய கடிஸ்தலங்களையுடைய செம்பியன், வடதேசத்திலிரா நின்ற மன்னர் மண்டலீகர் திறையிட வாரிப்போர் கட்டிய நேரியன், தேவர்குலபதியாகிய ரிஷிப வாகன மூர்த்தருளும் பரமசிவனது அழகிய பொன் மலரடியை நிலவிய மின்மணி முடியிற்பதித்த சென்னியன், எட்டுதிக்கும் மநுநீதிச் செங்கோற் செலுத்தி எல்லா வுலகையுஞ் சுவேதக்ஷத்திர நீழலில் அடக்கியாளும் வளவன், நெருங்கிய கிரணமணி முடியோங்கிய வண்டுமொய்த்த ஆத்திமாலை தாங்கிய அபயன், மதங்கொண் டுலாவிய ஆண் புலிக்கொடி பொறுத்து அன்னவளம் பெற்ற மன்னவரேறாகிய சோழமகாராஜன். இவனொருகாலத்தில் இந்திரனுக்குத் துணையாயிருந்து, அவ்விந்திரன் பேரிலெதிர்த்த இராக்க தாளைப்போற் முனை தோற்றும் வென்று தேவர்களுக்குப் பயமொழித்த பொழுதில், தேவேந்திரன் மகிழ்ந்து நஞ்சுக்கும் முனைவிஞ்சிய அஞ்சரீக மென்கிற பாணங்களைக் கொடுத்திருந்தான். அந்த பாணத்தை யெடுத்து மரியாதையுடன் பூசித்து, விரிதலையினிடத்து எரிகுலவும்படியாய் நீண்ட வில்லை வளைத்து, அவ்வெங்கணை விடுத்து, மரகதனேறிய மகமேரு போன்ற மதயானையானது மடிந்து சாகவும், அம்மரகதன் முடி சாய்ந்து, உயிர்மாய்ந்து போகவும் மாட்டினான். அவனுடைய கைவில்லிலிருந்து உந்திய அவ்வாஞ்சரீகக் கணையினால் மோதப் பட்ட மகதர்கோமானாகிய அச் சகாதேவன், நிலத்தை முகம்பார்த்த வண்ணந் தலைகவிழ்ந்து வீழ்ந்தான். அதைக்கண்ட அவன் சேனைகளுந் துரியோதனராஜனுடைய தானை வெள்ளங்களும் புறங்கொடுத் தோடினார்கள். இவ்விதமாக சேனைப் படைகள் புறந்தந் தோடியநிலையை ஜோதிவிற்பிடித்த துரோணாசாரியர் குமாரனாகிய அஸ்வத்தாமன் கண்டு மனங்கன்றி, மகிழ்ச்சிகுன்றி, மென்மேலும் வீரவாளிகளைப் பலவாறாகவிடுத்து வெகுண்டு போர்விளைத்தான். அத்தன்மையைத் தருமராஜனுடைய தம்பிமார்களில் இன்றையப் போர்வினையை வென்று முடிப்பேனென்று சீற்றங்கொண்டு ஒரு பொற்குன்றில் இரண்டு இந்திர நீலக் குன்று பொருந்தியதை யொத்த

திருமாலுந் தானுமாகிய ஜெயவிஜயனை வன் கண்டு, தேர்செலுத்தி நேர்புகுந்து அஷ்டதிக்கும் அதிர்ச்சி விளைத்து, அங்கு லீகமென்னுங் கணையைச் செங்கையாலுந்தி, அஸ்வத்தாமனை வென்று முதுகுகண்டு வெறுங்காவலுடன் ஓட்டி விட்டான்.

## தருமராஜனுக்குங் கர்னராஜனுக்கும் யுத்தம்

அப்போது துரியோதனன் தம்பியாகிய சுதர்க்கண்ணனானவன், பெரியோனாகிய குரு புத்திரன் புறங்கொடுத் தோடியதைக் கண்டு, பரிதேர் பதாதிகளுடன் யானைகளும் நெருங்க வந்து, முறிந்தோடிய சேனைகளுக்குப் பின்புபோய் நின்று, கொடுந் தீக்ஷண்யமாகிய அக்கினியைக் கக்குங் கணைகளை யுடையவனாய்க் கனன்று கோபித்து, மேகம்போன்ற வில்லை வளைத்து, கூர்மை பொருந்திய அஸ்திரங்களை விஸ்தாரமாக விடுத்துப் போர் கொடுத்தான். இப்படி போர்கொடுத்த சுதர்க்கண்ணனென்னுங் காளையை நகுலன் பார்த்து நகைத்து, இருமாந்து கோபித்துப் பகைத்து, பிரகாசிக்கும் பாணங்களை அமோகமாக ஏவி, அவன் ஆவி துடிக்கும்படியாய் அலட்டி அஞ்சசகச் செய்தான். அந்த வேளையில், அளவிடக்கூடாமல் வருகின்ற தருமராஜனுடைய யானைகள் அஷ்ட திசைகளிலும் பரவி அலையும்போது, யுத்தமுகத்தில் தட்டுப்படாமல் திரியுந் துரியோதன ராஜனுடைய சேனைகளிலுஞ் சேனைவீரர்களிலும் இறந்தவர்போக இறவாதிருந்த வடிவேற்றாங்கிய வீராதிவீரர்கள் பலருந் தன்னை சூழும்படியாக போர்முகப் புலிபோன்ற பலசாலியாகிய கர்னன் முனைந்து வந்து எதிர்த்தான். அதுகண்ட வாசமாலையணிந்த தோள் திருந்திய தருமராஜன் தங்கள் சேனைகளாகிய பாஞ்சாலர்களிலும், பற்பலதேசத்துப் பாவைமன்னர்களிலும் அன்றையப்போரில் மாய்ந்தவர் நீங்க, மற்ற மன்னர்களுஞ் சுற்றத்தார் முதலிய மாப்பெரும்படைகளும் தன்னைச் சூழும் படியாய் வந்து எதிர்த்து அலைந்தார். அக்காலத்தில், கர்னராஜனுடைய சேனைகள் தர்மராஜனுடைய சேனைகளின் தாஷ்டீகத்தைக் கண்டு, எதிரே சென்று, சேனைகளுஞ் சேனைகளுங் கைகலந்து உதிரச்சேறுடும்படி போராடினார்கள். அப்போது தருமராஜனும் எதிர்த்துப் பொன்மலையிரண்டும் பொருதப் புகுந்ததைப்போல் தேருந்தேருந் திருகலித்து, தங்களுக்குத் தாங்களே நிகரென்றடித்து வெம்போர் விளைத்தார்கள். அந்த யுத்தத்தில் உதிஷ்டிரர் கைக்குதை அம்பினால் கர்னனுடைய பெருஞ்சேனைகளிற் காலமாண்டழிந்த பேர்களை இன்னார் இன்னாரென்று சொல்லுவதற்குக் கூடாமையாயிருந்தது. மாசற்ற மனத்தோனாகிய தருமராஜனுடைய சேனைகளிற் கர்னன் கையம்பால் உதைப்பட்டு இறந்த பேர்களை சொல்லத் தொடங்கினாலும் சொல்லி முடியாது. இதுதான் நல்ல யுத்தமென்று சொல்லத்தக்கதாய் யுத்தம்பண்ணி, அழிந்தும் ஒழிந்தும் மறுபடியுந் தேறியெழுந்து; மல் யுத்தம் கவண்கல் யுத்தமுதலிய கனசண்டைகளை விளைத்து, பிரகாசிக்கும் மகுடமணிந்த அந்தந்த அரசர்கள் தங்களுக்குள் தாங்கள் முனைந்து பலமுகத்திலும் பராக்கிரமிக்க, முதன்மையாகிய இவர்களிருவரும் அண்டருமதிரக் கோதண்டங்கொண்டு அனேக அஸ்திரங்களைச் சண்டப்பிரசண்ட வேகமாக விடுத்து, அண்டமுகடு விள்ளும்படிக்கு அமோகமான சண்டை விளைத்தார்கள்.

அப்போது, மண்டல முழுதும் வில் வேத வல்லவனென்னும் பேர்கொண்ட கர்னனும், மறுமுறை யனைத்திலு மனந்தேர்ந்த புண்ணியனென்னும் பேர்கொண்ட தருமராஜனும், கொலைபுரியும் பாணங்கள் நிறைந்த அம்புறுத்தூணியும், வெல்லுந் திகழ்ந்த இரண்டு மலைபோன்ற திரண்ட தோளோடு நிலைத்து நிற்கும் நிலைப்பும், குறிப்பும், சிறு நாணொலிப்பும், செங்கணை வீசுஞ் சிறப்பும், இருவரும் எதிர்த்து சண்டை செய்யும்படியாகிய அறமும், இடைக்கிடை பவுரிஷங்கொண்டாடிச் சீறும் மறமும், இவர்களைவிட்டு நீங்காதிருப்பது கண்டு தேவர்கள் எல்லோரும் புகழ்ந்து மகிழ்ந்து வாழ்த்தினார்கள். அக்காற் கர்னனானவன் மிஞ்சி, பாதாளம் வரைக்கும் ஆழ்ந்து அலையுயர்ந்து வீசுஞ் சமுத்திரம் வளைந்த ஏழுலகத்தையுந் தனிச் செங்கோற் செலுத்தி ஆளுதற்கிருக்கின்ற தருமராஜனுடைய மார்பில் ஏழு பாணமும், அம்பொன் மாலைபூண்ட விம்பமாகிய கம்பம்போன்ற இரு தோள்களிலும் எட்டுப் பாணமும் எய்தான். இப்படி தன் தோள்களிலேயும் மார்பிலேயும் கர்னன் தொடுத்த கணைகள் வந்து மூழ்கிய வுடனே, வாய்மை நிலைநின்ற மன்னவரேறென்னுங் கலங்காமனமுடைய காம்பீரன், வேகம்பெற்ற வில்லை வணங்கி, வீரவாளி இரண்டு முடுக்கி, கர்னனுடைய புயமும் மார்புங்

கலங்கச் செய்ததுமல்லாமல், அவனுடைய வில்லையு முறித்து வீழ்த்தினர். அப்போது கர்னன் வேறொரு வரிபெற்ற வில்லைத்தாங்கி, இருகுதைகளும் வளையவாங்கி, முனைபெற்ற முள்ளம்புகளை நூறு நூறாகத் தொடுத்தான். அவையனைத்தையுந் தருமபூபதி கூறுகூறு கும்படி வேறு வேறம்புகளை இதைத்தார். இப்படி இருவரும் கைகலந்து ஒவ்வோருடனும் இருகூறுகும்படிக்கு ஒருவர் படைகளை ஒருவரோங்கிச் சினந்துகொன்ற காலத்தில், இவ்விருவருடைய சேனைகளின் தேகத்திலிருந்து பெருகியோடிய இரத்தங்களானது ஆறுபோலோடி, அங்கங்கே குளங்குளமாய் நிறைந்து உறைந்திருந்தன.

## இருதிறச் சேனைகட்குங் கைகலந்த யுத்தம் இதில் துரியோதனன் சகோதரரில் எழுவர் வதை

இவ்விதமாகத் தர்மராஜனுக்குங் கர்னனுக்கும் போர் நடந்து வரும்போது, இன்னொரு பக்கத்தில் வீமசேனன் பகைத்து, மேற்கோள்போற் சினந்து, துரியோதனன் சேனைகளைத் தகித்து, திகிரிவட்டம்போற் சுழன்று திரிவதானன். அப்போது துரியோதனனுடைய தம்பிமார்களிற் சகதேவன்-தண்டகன் - சித்திரதேவன்-சாத்தகி-சித்திரகீர்த்தி-தண்டநாதன்-தண்டதரன் என்று சொல்லுகின்ற தாதேறிய மாலைபுனைந்த மார்புனைந்த மார்பினர் ஏழுபேர் தங்களுடைய தேரைச் செலுத்தி, வீமனைச்சுத்தி. தீமுகக் கணைகளைத் தெறித்து விடுத்து, தீப்பொறி பறக்கக் கண் விழித்தார்கள். அவர்கள் தொட்ட அம்புகள் முதலிய யாவற்றையுங்கண்ட வீமன் சினங்கொண்டு நொந்து, எதிர் சென்று நின்று, அவர்கள் ஏறிவந்த தேரும் ராஜ செல்வச் சீருங்கெட்டுப் போகும்படியாய்த் தாக்கி, உயிரையும் போக்கி, சேனைகளையும் மண்ணாக்கி வருவதானன். அப்போது, துரியோதனனுடைய சேனநாயகன் முதன்மையாகிய தன் படையுடன் கவிந்து, வல்லபமிகுந்து, மூர்த்தண்யமாக ஆர்த்து, அரிவாளிகளை மேகம் போற் சொரிந்து, பாண்டவப்படைகளை மூடு பனிபோல் மூடுங்காலையில்; இப்படைகட்குச் சேனுபதியாகிய திஷ்டத்துய்மனும், மற்றத் தேச ராஜாக்களும், நால்வகைச் சேனை முதலிய யாவுந் தளர்ச்சிகொள்ளுந் தன்மையைப் போராடுந் தோள்வலிபொறுத்த தண்டதரன் கண்டு, தாளாமற் கோபங்கொண்டு, தன்னுடைய நால்வகைச்சேனைகளும்உடன்சூழ்ந்து வரச்சென்று, கர்னனுக்கெதிராக வந்தான். இப்படி வீமசேனன் எதிராக வந்ததை அங் கர்பெருமான் கண்டு பொங்கிப் பொரிந்து போர் செய்யப் புகுந்தபோது, துரியோதனன் பார்த்து முகம்வியர்த்து, ஐயோ! தர்மராஜனைக் கர்னன் மடக்கி விடுவான் என்றல்லவோ யிருந்தேன். இந்தவேளையில் வீமனாகிய கண்டகன்வந்து நேரிட்டானே என்று என் தம்பிமார் ஏழுபேரை எமலோகஞ் சேர்த்து விட்டானே என்று துடிதுடித்து, கிருபாச்சாரியார், கிருபதன்மன் இன்னும் உறவினராகிய வேந்தர் பல்லோருடன் அஸ்வத்தாமனையுஞ் சேர்த்துக் கர்னனுக்குத் துணையாகக் கூட்டி அனுப்பிவைத்தான். அவர்களுங்கடுங்கோபத்துடனும் மிகுவேகத்துடனும் வந்து, வீமனை வளைத்துச் சிற்றெறும்புபோற் சுற்றிக்கொண்டார்கள்.

அந்தவேளையிற் பகாசுரனுக்கு எமனெனத்தோன்றியபங்கஜமுகம்போன்ற வீமசேனனுக்கு படைத்துணையாக, காண்டீபதரனாகிய நரனும், நகுலசகாதேவரும், சாத்தகியும் பற்பல தேசத்துப் பார்த்திபரும் பக்க பலங்கொண்டு படைசேர்ந்து, உறுதியாக வந்து அமர்மூண்டு நின்றார்கள். சத்துருவாகிய துரியோதன்படை அடங்கலும் பலகோடி பாணங்களை உய்த்தார்கள். பாண்டவப் படை வீராள் யாவரும் ஈடுக்கீடாகிய கணைகளேவி, அவர்கள் விட்ட பாணங்களையெல்லாம் அழித்து, அவர்கள் பேரில் அநேகம் அஸ்திரங்களைப் பிரயோகஞ்செய்து, திரிபுரம் எரித்த நாளைப் போற் பொங்கித் தெழித்துக் கொக்கரித்துப் பேரோசை செய்து நின்றார்கள். இவ்வுலகம் என்னமாய்ப்போமோ? இன்று பிறந்தது உகாந்தகாலமாக்களும் என்று தேவர்களெல்லாம் உட்கிமக்கிக் குகைகண்டயிடங்களிற்புக்கி யொளிந்திருந்தார்கள். இப்பாற் படைமுனையில் வீராள்செய்த போர்த்திறங்களாற்குதிரைகளிறந்தன. யானைகள் பூமியில் வீழ்ந்து மிதிபட்டு நெரிபட்டன. வீரர்களெல்லாரும் பட்டொழிந்துபொடியானார்கள். இவர்களுடைய மார்பில் இரத்தவெள்ளஞ் சொரிந்து தோய்ந்து காய்ந்து, அவர்கள் சரீரமெல்லாங் காடு பற்றியெரியுங் கருநிறச் சிவப்பினைப்போல் இருந்தது்கள். சூராளுடைய கைகளெத்தனை? வீராளுடைய மெய்களெத்தனை? மணிமகுடச் சிரங்களெத்தனை? அணிமணிப்பணி உரங்க

ளெத்தனை? வாகுவலயத் தோள்களெத்தனை? வீர மணியுந் தாள்களெத்தனை? தீர மேற்கொண்ட தீரரெத்தனை? காரமேற்கொண்ட காரரெத்தனை? இவ்விதமாக ரணக்களமுழுதும் நிரம்பிக்கிடக்குமாகில், ஒவ்வொரு வில்லினிடத்திலிருந்து புறப்படுஞ் சரங்களெத்தனையென்று சொல்லலாம்? இவ்வாறு இருபடைச் சேனைமன்னரும் பகைத்து முனைந்து உக்கிர முகக்கணைகளைச் சொரிந்தும், வெவ்வேறு கைப்படைகொண்டு மோதியும், பற்பலவிதமாகச் சேதிக்கும்பொழுது; உதிரக்கடல்பெருகி, சூரியன் அஸ்தமித்தபோது தோன்றுகின்ற செவ்வானச் சிவப்புப்போற் பூமி முழுதுஞ் சிவந்து விட்டது. சுழன்றாடுங் கொடிகளையுடைய தேர்களும், மதயானைகளும், குதிரைகளும், கீழ்மேலாகிக் கலந்து கிடந்தன. வயவர்களுடைய உடல்களையுங்குடல்களையும் இரத்த வெள்ளங்களினுடைய அலைகளானது அடித்துக்கொண்டோடி, நாடு முதலிய காடுமேடெல்லாங்கடந்து, பல நதிகளின் முகத்துவாரம்போல் ஒருமுகமாகச் சென்று கடலூடு கலந்து, கப்பல் கப்பல் முதலாகிய படகுகளுஞ் சமுத்திரமும் புலால் நாறும்படியாக்கின.

## தருமனையும் வீமனையும் புறங்கண்டு பாஞ்சாலரிலெழுவரைவதைத்த கர்னனையு மவனுக்குத் துணைவந்த அஸ்வத்தாமனையு மருச்சுனனயரவடித் தடக்குதல்

அந்தச்சமயத்திற் பொய்யோ மெய்யாக வுடைய துரியோதனனும், அவன் தம்பிமார்களும், இவர்களுக்குரிய வாகினியுஞ் சூழப்போய் வீமனை வளைத்து, அவனுடைய உடல் முழுதும் பீறும்படியாக அநேகங்கோடி அஸ்திரங்களைப் பிரயோகஞ் செய்தார்கள். அந்த வேளையில், அருச்சுனன் கையில் அகப்பட்டு அவதிப்பட்டு ஓடிவராநின்ற சஞ்சத்தகர் துரியோதனனுக்குத் துணையும் வீமனுக்குப் பகையுமாக வந்து வளைத்து, வலுதவறிய கணைகளை வாயுவேகமாக விடுத்தார்கள். இன்னுமுள்ள வீராதிவீராளும், எவரெவர்களுடன் எவரெவர்கள் எதிர்க்க வேண்டுமோ? அவரவர்கள் அவரவர்களுடன் திறங்கொண்டு எதிர்த்து, தாங்கள் தாங்கள் ஜெயம் பெறவும், வீரமாலை புனையவும், புகழ்நாட்டவும், தங்களாற் கூடியவரையிலும் போர் பொருந்தினார்கள். இஃதிப்படியிருக்க, நால்வகைத் தானைசூழ படைத்துணை வந்த பார்த்திபர்கள் நெருங்க, வரிபொருந்திய வில்லைக் கைக்கொண்டு, மலைவாளி-மழைவாளி முதலிய வாளிகளைப் பூட்டி, அமரர் முதலாகிய யாவருங் கலங்க ரதஞ் செலுத்தி வந்தார் சத்தியவாக்கியாகிய தருமராஜன். அதுகண்ட இசைபெற்ற முனியாகிய கிருபாச்சாரியும்-கிருதவன்மனும்- விரகுடைய சகுனியும், இன்னுஞ் சில அங்கமாகிய சிங்கம் போன்ற நிருபரும், அங்கங்கும் நிரை நிரையாய் நின்று, எட்டுத்திசையும் மட்டுப்படாத விற்பிடித்து, இலைத்துறப்பணம்போல் துளைக்கும்படியாகிய இந்துமுகப் பாணங்களை இறைஞ்சி ஏத்தி வாழ்த்தி யெடுத்து, ஐம்பது-அறுபது-எழுபது-எண்பது என்னுங் கணக்கிற் கும்பற்கும்பலாய் முடுக்கிவிடுத்தனர். இவ்வாறு தருமசொரூபியாகிய முரசக்கொடி நாட்டிய முதல்வனை வளைத்து இந்திரனை யெதிர்த்துப் போர்புரியும் ராக்ஷதரைப்போல் விளைந்து சண்டைகளைக்கவும், அத்தனைபேரையும் அறத்தின் மைந்தனான தருமராஜனனவர் அடித்து, அவர்களெண்ணத்தையும் அவமாக்கி, தனது ரதத்தைத்துரத்தி பருதிமைந்தனை பார்த்திபக் கர்னனைக்குறித்துப் பகைத்துப் பாணம்விடத் தொடங்கினார்.

அஃதெப்படியென்றால், முரசக் கொடியினன் கச்சைக்கொடியினைக் குறித்து இடியோங்கிய இருகணைகளை யேவி, கர்னன் கைப்பிடித்த கட்டுகளார்ந்த வில்லையும் பாணங்களையுந் துணித்தார். அதுகண்டு அருளுடைய கர்னனனவன், தருமன்விட்ட இரண்டு கணையைத்தடுத்து, தானிரண்டு கணையுந்தி முரசக்கொடியைமுறித்து, மேலும் இருகணைதெறித்துத் தர்மராஜனுடைய தேர்ச் சிகரத்தைப் போக்கி, மற்றொரு கணைவிடுத்து சாரதி அங்கத்தைப் பங்கப்படுத்தி, வேறொரு சரம்பூட்டி வேகமாகிய குதிரைகளைமாட்டி யழித்து வரம்பெற்று, வலுவேறிய சிலசரங்களைக் கொண்டு தர்மராஜனுடைய தோளிரண்டும் துளைபட்டு உருவத்தொடுத்தான். அதுகாலையில், தர்மநந்தனன் சாணைபிடித்துத் தயில தூபஞ் செய்த சரங்களைச் சரமாரியாகத்தாக்கி, கர்னனுடைய இருபுயத்திலுங் காகரவென் றேறவிட்டு, வடகலிங்கர்-தென்கலிங்கர்-மேற்கலிங்கர்-நடு நாட்டுக்கலிங்கர்-குருதர்-எட்டியர்-மராடர்-கர்னடர்-சௌராஷ்டகர்-பப்பரர்-சுப்பிரதீபர் - ஒப்புவமையில்லாத களமர் முதலாகிய காவலரும், வெள்ளைக்குடை நீழலில் மேதினியை ஆள்கின்ற மகுடமுடி வேந்தரும், உலகம்நிறைந்த மாந்தரும், பைம்பொன்முடி மகுடவர்த்தன

ருடன் வீரபட்டத்தலைவரும்; இடி முழக்கங் கேட்டுக் கிலிகொண்டு தலைநசுங்கித் பிலத்துவாரத்தில் இறங்கி ஒளிந்துகொள்ளும் விஷஜெந்துவாகிய பாம்புகளைப்போல் ஒடுங்கிப் படபடப்படக்கி, ஒருவருக்கொருவர் நடை தளர்ந்து, அடியோய்ந்து அஞ்சலிசெய்து, முதுகிட்டு அவதிப்பட்டோடவும், அநேகம் பேர் உயிர்மாறவும், தெய்வலோகங் குடியேறவும், அணிகொண்ட படைகள் அடியோடே அழிந்துபோகவும், அழகிய சங்கத்தைப் பவளம்போன்ற மணிவாயல் வைத்து பம்-பம்-பம் என்று ஊதினார். அக்காலத்தில் கர்னமகாராஜனுமீறி, அண்டங்களெல்லாம் உடைந்து போகவும், திசா திசைகள் செவிடுபட்டுமாறவும், தெய்வலோகங் குன்றி தத்தளிக்கவும், ஆதிசேடன் முதலாகிய அரவினங்கள் மடிந்ததைப்போல் மண்டலாகிர்தியாய் மண்மேற்படிந்து பாதாளத்தில் மறைந்துபோகவும், பூமி குமுங்கிக் குலுங்கவும், உலகிலிருக்கும் மனிதரெல்லாம் மடிந்துபோவார்களென்று வார்த்தை பிறக்கவும், கறுத்த கடலானது கடையுகக் கலகம்போற் பொங்கி வடவைக்கனலோடு கலந்தெரிந்தெழுந்து பிரசண்டவேகக் காற்றினுடன் பேரோசைகொண்டு, கலக்கும்படியாய் பொம்-பொம்-பொம் என்று சங்கநாதத் தொனிகாட்டிச் சதுரங்கப்படைகளுடன் கூடிச் சண்டையாடினார்.

இப்படியாகப் பொருந்தி நெருங்கிய உகாந்தகாலக் காற்றைப்போல் வீசியடித்து அடுத்துப் போர்கொடுக்காநின்ற கவசகுண்டலதரனாபரனாகிய சர்னன், தனது நான்கு வீதப் பொற்கலசம்பெற்ற தேரும், நான்குகதிபெற்ற ஓங்குகுதிரைகள் நான்கும் தர்மராஜனுடைய கணைகளினால் இளைத்துக்களைக்க, மதுமாலையணிந்த சாரதியாகிய மத்திரத் தலைவனோடு தானும் மெத்தவருந்தினான். அப்போது அந்தரவாசிகளனைவரும், தும்-தும்-தும் எனப் பம்மை முதலிய வாத்தியங்களாற் கம்பலை செய்தார்கள். இப்பாலிருந்த யாவரும் இதென்ன வம்பாய் முடிந்ததென்று அம்பு முதலியதுந் தொடாமற் கூம்பலாய்க் கூடி வார்த்தையாடினார்கள். அப்போது, செம்மலாகிய சல்லியன்தேறி, சபதங்கள்கூறி, கோபமேறி, கோல்கொண்டுமீறி, குதிரைகளைத் தட்டிக்கொடுத்துத் தேர்செலுத்தினான். அப்போது கர்னனானவன், தைரியத்துடன் அவனியெல்லாங் குலுங்கி அவற்றிலுள்ள சீவராசியடங்கலுங் கலங்கும்படியாய்த் தனது மேருவையொத்த வில்லைவளைத்துக் குணத்தொனிகாட்டி, சமர்முகமாகிய முனைமுகத்தில் தர்மராஜனுக்கு எதிரில் வந்து, சிகைவிரிந்த சரோருகாஸ்திரங்களை விடுத்து, முரசக்கொடியோனுடைய மார்பும், திண்ணியபுயமும், அவர்தொடுத்த கூர்மையாகிய பலசுடர்ப்பகழிகளும் - தேர்த்தட்டும் - கலசச்சிகரமும்-குச்சிக்குடையும் - குவிந்த கொடுங்கையும் - கவிந்த தேருருளைகளும்-குற்றுக் கால்களும்-அச்சும்மச்சும்-நடுநாயகப் பீடமும்-குதிரைகளும்-கைபிடித்த வில்லும்-நாணியும் அழியும்படியாகச்செய்து, சாரதி உடலைச் சங்கடப்படுத்தி, அவனை முகமாற விடுத்து முரசமெழுதிய பொற்கொடியை சின்னபின்னமாக்கி, தர்மநந்தனுடைய தேகத்தையுஞ் சல்லடை கண்ணாக்கி, மனத்தை புண்ணாக்கி, விண்ணை மண்ணாக்கி, படைகளை ஒண்ணாக்கி வருத்தினான். இத்தியாதி உபத்திரவங்களுக்குங் குருகுல வேந்தர்கோமானும், குந்திதேவி முதற்புத்திரசீமானுமாகிய தர்மராஜனென்னும் பூமான் இளைக்காமல், வேறுவில்லெடுத்து நாணேற்றி வளைத்து, சண்டைவிளைத்துத் தாக்கி, மூண்டகக்கணை முதலாகிய கண்டகக் கணைகளைப் போக்கி, கர்னனுடைய கவசத்தையும்-நவமாகிய தேரிற்பூட்டிய நான்கு அயத்தையும்-உரத்தையும்-விற்பிடித்த கரத்தையும்-மணிக்கலச முடியையும்-அணித் தேர்த்தட்டாகிய அடியையும்-அவ்வடிமேலிட்ட நிலையையும்-எதிரேறிய பேரையும்-இகலேறிய சீரையும்-அவனுடலையும் - சேனைக்கடலையும் - சல்லிய சாரதியினுடைய அடலையுங்கொல்லி, வில்லை நடுவறவெட்டி, இப்படி பலவாறாகப் படுத்தினார்.

உடனே கர்னனும் வேறுதேரேறி விற்கொண்டு, தர்மராஜனைச் சரமாரி பொழிந்து தவிக்க விடுத்து, அவருடைய தேரையுஞ் சின்னாபின்னப் படுத்தினான். இப்படியாகக் கர்னனுந் தர்மராஜனுங் கைகலந்து பலம் பொருந்திய போர்க்களத்தில் செய்த கலகத்தை இவ்விதமென்று எவர்களும் உரைக்கக் கூடாது. இவர்களுடைய திறத்தையும் மறத்தையும் உபநிடத சிரேஷ்டர்களான பெரியோர் முதல் அவனிபரான அனேக ராஜருங் கண்டு, இவர்கள் இருவருங்கற்ற தநுசாஸ்திர முதலிய சகல சாஸ்திரவலுமையையும் மேலாகிய விவேகத்தையுஞ் சொல்லிக் கொண்டாடி

னார்கள். அப்போது, தருமபூபதி மனஉறுதியுடன் மற்றோர் தேரேறி, ஒரு கரத்தில் வில்லும், இன்னொரு கரத்தில் வடிக்கணையுங் கொண்டு, வருஷகாலம்போற் றூறி, தடந்தேர் ஊர்ந்து சென்று, தானுபரனை ஓர்ந்து நின்று எதிர்த்த காலையில்; கிருபையும்-அருள்மொழியும்-விதரணகுணமும் நிறைந்த கொடையாளனாகிய கர்னன், திறனோங்கிப் பிரகாசிக்குஞ் செங்கதிர்க் கணைகளைத் திடுக்கிடவிடுத்து, அங்கவர் தொடுத்தபாணங்கள் அனைத்தையுங் கெடுத்து, பொடிபொடியாய்ப் போக்கி, பிடிப்பிடியா யாக்கி, தேனிறைந்த பூமாலையணிந்த அவர் மார்பையுந் தோளையுங் குழிக்குழியாய்க் காணும்படி துளைத்து வருத்தினான். அக்காலையில், தருமநந்தனர் சக்ராயுதம்-குந்தாயுதம்-தோமராயுதம்-சூலாயுதம் - வேலாயுதம்-மாலாயுதமுதலாகிய எறிபடைகளை யெடுத்து எறிந்து, தனதிரதத்தின்மீது களைத்துப் புறமுதுகிடும்படியாகிய தருணமாயிளைத்து சாய்ந்திருக்கவும், அதனைக் கர்னன்கண்டு என் ஓட நினைக்கிறீர்? நில்லும்: நில்லும்: என்று சிற்சில சொல்லைச்சொல்ல தொடங்கினான். "உரையுடையை கற்றகலை யுணர்வுடையை தக்கமதியுளமுடையை மிக்ககிளை யுறவுடையை சத்யகுண, வரையுடையை எத்திசையும் வழுவற வளர்த்தபுகழ் வரிசைகொளத் திளைஞர்வழிபடு மதிப்புடையை, தரைமுழுது முத்தநிலவுமிழ்குடை நிழற்றவொரு தனிநனிபுரக்குமுயர் தலைமைபெறுகிற்றிபனை, கரையழிய வுற்றபொழு துயிர்கொடு புறக்கிடுதல் கடனலவுனக்குநிலை கருதியணி நிற்றியெனவே.''

ஓ! ஓ! தருமராஜனே! தருமத்துக்கு மிகு நேசனே! யுத்தத்தில் மிகுந்த விசுவாசனே! நீரோ! சத்தியவாக்கினையுடையவர். அநேகஞ் சாஸ்திரங்களைக் கற்றவர். கற்றநெறியின் படிக்கே நல்லுணர் வுற்றவர். "அந்த நல்லுணர்வுக்கிணங்க நன்னடத்தை படைத்தவர். நல்ல விவேகமுள்ளவர். தகுதியாகிய பிள்ளைகளையும் பந்துக்களையும் பெற்றவர். தர்மத்தைக் கைப்பிடித்தவர். குணமேருபோன்றவர். கருணைக் கடலானவர். ஜீவகாருண்யமுடையவர். எல்லாத்திசைகளிலும் வழுவில்லாமல் வளர்ந்த புகழை யுடையவர். யாவராலும் வரிசை பெற்றவர். பூமியைப்போன்ற பொறுமை பூண்டவர். தருமவிதிப்பிரகாரந் தம்பிமார் வணங்கி வழிபடும்படியாகிய வரிசையையும் மதிப்பினை யுடையவர். பூமிமுழுதும் முத்தின்குடை நீழற்படுத்தி ஆளும்படியாகிய புண்யதேகர். புஜபல யோகர். எல்லாஅரசருக்குள்ளுந்தலைமைபெற்றவர். இப்பேர்ப்பட்ட நற்குணமுற்று நாவலராற் புகழப் பாடல்பெற்றிருக்கின்ற நீர் யுத்தஞ்செய்து, சமுத்திரங் கரைபுரண்டழியுந் தன்மைபோற் பிரமுகாள் முதலாகிய வீராதிவீர சேனாசயின்யங்களெல்லாம் ஒழிந்து உலகம் உனக்கோ? எனக்கோ என்றிருக்கின்ற நல்ல சமயத்தில், மகாகேவலமாய் உமது பிராணனைக் காப்பாற்றிக்கொண்டு புறங்கொடுத்தோடுதல் பெருமையோ? உமது மகிமைக்கு இது கடமையல்ல. உம்மைப்போலொத்த சாந்தமூர்த்தியானவர் ஆர்கெட்டாலும் ஆர் செத்தாலும் நாம்பிழைத்தாற் போதுமென்று போவது; நீருணர்ந்த கல்விக்குத் தவறாகிய காரியமேயாம். ஆகையால், இதுவரையிலும் பிழைத்த பிழைப்புக்குக் குற்றநேரிடாமலும், ஒருவர் குறை சொல்லாமலும் ஒரே நிதானமாயிருக்கும்படியாய் யோசித்து, யுத்தத்தின் அணிமுனையில் நிலைபெற்று நின்று, இனிமேலும் நடக்குங் கதியைக் கண்டுணர்வது காரியம் என்று நவின்று, எதிரில் நில்லுமென்று அவரை வழிமறித்துத் தடுத்து, முகமலரைப் பார்த்து மகிழ்வுபூர்த்துப் போர் கொடுத்தான். மிகுந்த கருணையாளராகிய தருமராஜன், அந்தக் கர்னனுடைய முகத்தைப் பார்த்து, அவனுடைய வல்லபத்தை மதித்துக் கவலைகொண் டிருந்தார்.

அக்காலத்தில், விருதுகட்டிய விருதர் தலைகளெல்லாம் அறுபட்டு மேலுங் கீழுமாக உருளவும்,வீரபட்டங்கட்டிய மதயானைகளெல்லாம் வாதுமலைந்து காதுடன் தலையறுபட்டுத் தீதாகி யுருளவும், குதிரைகள் பாதமறுபட்டு மேனிதுணிந்து தலையறுப்புண்டு கிடக்கவும், தேர்களெல்லாம் அச்சொடிந்து சிகரமுங் குடையுமுறிந்து சாய்ந்து குற்றுக்கால்கள் கொடுங்கை சரிந்து சக்கரங்களெல்லாம் உக்ரமாயோடவும், தலையிழந்த கவந்தங்கள் நின்று கூத்தாடவும், உதிரப்பெருக்கம் ஓடவும், பறந்துவரும் அஸ்திரங்களெல்லாம் பஞ்சு பஞ்சாய்ப் பறக்கவும், மிகுந்த பலத்தோடு கதாயுதங் கைக்கொண்டு அடித்து, எதிரேறி வெகுபேரை முடித்து, யானை மத்தகத்தோடிடித்து, வீரப்பாடல்கள் படித்துவரா நின்ற குற்றமற்ற வீமசேனனானவன், ஓரிமைப்பொழுதில் ஓடிவந்து தம் முதல்வனாகிய தருமராஜனுக்கு உற்றதுணையாய் அடுத்தான்.

இந்த வீமசேனன் வருவதற்குமுன்னே வெந்நிட்ட தருமராஜனைப் பின்னிட்டுத் துரத்தி யுத்தம் செய்யவந்த முடிவேந்தர் முதலாகிய அதிரதர்களும், மற்றையாவர்களும், நடுக்கமில்லா வைரமனத்தோனாகிய வாயுவின் புத்திரனைக் கண்டு நடுங்கி, நமக்குச் சத்துருவாகிய நமன் வந்தானென்று கலங்கி, எத்தனை நாள் போர்புரிந்தாலு மிவனை வெல்லுகிறது அருமையென்று யாவரும் பின்னுக் கிடைந்தார்கள். அதுகாலையிற் பாகனாகிய சல்லியராஜனவன், அழகிய தேரில்வாய்ந்த ஆதபன் குமரனென்னும் அங்கதேசனைப் பார்த்து, அப்பனே! இப்போது நான் சொல்வதைக் கேள். நமதுபடையோ முறிவாயிருக்கின்றது. உன்னால் அடிபட்டு இளைத்த தருமராசன் தேறிக்கொண்டார். அவருக்குப் பின்பலமாக வீமசேனனும்வந்து ஒத்துக்கொண்டா னிப்போது நாம் வெற்றிபெறுகிறது கொஞ்சம் அருமை போலு மிருக்கிறது. ஆகையால், தேரைத் திருப்பிவிட்டு ஒருசுற்று சமர்க்களத்தைச் சூழ்ந்துவருவது உத்தமமாக நினைக்கிறேன். என்று சல்லியசாரதி சொல்ல, மன்மதாகிர்தியாய் நின்ற வடிவமைந்த கர்னன் கேட்டு, பொன்மலைபோன்ற வில்லை வணக்கி நாணியிணக்கி, வாகைமாலைபுனைந்த சல்லியன் முகத்தைச் சரசமாய்ப்பார்த்துக் கர்னன் சொல்லுகிறான்.

"காமனைவென்ற முக்கட் கடவுளேயாக வன்றி, வீமனேயாக வென்றி விசயனேயாக வெற்றித், தாமனே காண்டியுற்றைச் சமரிலென் றழல்வாயொற்றைத், தூமநேர் பகழிக் காற்றூர் தூண்டுதியிரத மின்னே." ஆ! ஆ! சல்லியராஜனே! காமனை யெரித்த முக்கண் படைத்த சோமனானாலும், இந்த வீமனானாலும், வெற்றியிற் சிறந்தோனென்று சொல்லும் விஜயனானாலும் ஆகுக, என்கைப் பாணத்தால் இன்றையப்போரில் இவர்கள் படப்போகின்ற பாட்டை நீரே பார்க்கப் போகின்றீர். புகையும் நெருப்பும் பொறியும் புறப்படாநிற்க நான்விடப் போகின்றஒரேகணைக்கு ஆற்றமாட்டாமற் காற்றாய்ப் பறக்கப்போகின்றார்கள்; நீரிருந்து காணலாம். ஆதலால், இப்பொழுதே தேரை அவர்கள்பேரில் விடும்: விடும்: என்றான் கர்னனவன். இப்படி கர்னன் சொல்லுவதற்கு முன்னே மருத்தின் குமாரனாகிய வீமசேனன், உருத்து கோபச் சிரிப்பாகச்சிரித்து, இரதத்தைமுடுக்கி துரத்தி, வரிவில்லை வளைத்து, அரியம்பு தொடுத்து, அங்கதேசன் சொல்லிய சொல்லும் அவன் கைப்பிடித்த வில்லும், ஒரு க்ஷணத்திற் சிதைந்து போகும்படியாய் அடித்து, பின்னுங் கர்னன்பேரில் மின்னற்றுன்னிய சென்னிறக் கணையை வீசினான். அதைக் கர்னன்கண்டு, வீமன்தொட்ட கணைகளை வெறுங்கணையாக்கி பன்னிரண்டு சூரியாஸ்திரத்தை அபிமந்திரித்து வீமன்மார்பிலுந்தோளிலும் பரப்பினான். அந்தப் பாணம் பன்னிரண்டுந் துவாதக்ஷாமத்திற்காயுங் காச்சலைப்போலவும், சரீரிதுக் காலத்திற்பேயும் பேச்சலைபோலவும், மழையும்-இடியும் - வெயிலும் - நிலவும் - இருளுங் காட்டிக்கொண்டு, மூதண்டம் அதிரும்படியாய் பாய்ந்து காய்ந்துவரா நின்றன. அப்படி வராநின்ற பாணங்களை வீமன் பார்த்து, ஐயப்படாமல் தன்கையால் அறைந்து, முறிந்து போகும்படியாய்க் கசக்கியெறிந்து, தீக்காயும்படியாகிய கடுங்கொடும்பகழி யென்னுந் தாளவாளியை எடுத்து மந்திரித்து வணங்கி, சூரியன் குமாரனாகிய வீரியன்மார்பு விரியும்படி விடுத்தான். அம்மாத்திரத்தில் தடதடவென்றுகாய்ந்துவந்த அந்தப்பாணமானது ஆய்ந்த மலர்மாலைவாய்ந்த கர்னன்மார்பில் தட்டுருவிப் பாய்ந்தவுடனே, ரதத்தின்மீது சாய்ந்து பிணத்தைப்போல வீழ்ந்துமாய்ந்து அசைவற்று ஓய்ந்தான் சேனாதிபதியான கர்னன். வானோர்பதி போனதுபோற் சேனாபதிவீழவும் மானாதிபதியாகிய ராஜாதி ராஜனென்னுந் துரியோதனனுடைய படைமன்னர்களெல்லோரும் வெந்நிட் டோடினார்கள்.

அப்போது, பிழைக்குந் தன்மையாக பிராணசோஷைபோய்வாடியகர்னன்சீரறிந்த தேர்விடுக்குஞ் சாரதியென்னும் மத்திரத்தலைவன் நேரறிந்துதேறி நான் சொன்னதிப்போதுதெரிந்ததாயென்று நடந்தகூறறிந்துசெப்பினான். அப்போதும் அந்தச்சொல்லை கேளாமற் சப்தமாம்பூட்டிய தேரோன் மைந்தனாகிய விற்பனக் கர்னனென்னுஞ் சதுரன் களைதெளிந்தெழுந்து, பலம் பொருந்திய சாபம் வளைத்து நலந்திருந்திய நாணியிறுக்கி, அலங்கல்தங்கிய தோள்புடைத் தார்த்து தலங்களுங் கடலும்பொங்கி எங்குமங்கவிடுக்கும் அக்கினிச் சுவாலையை யுடைய மேலாகிய விஷக்கணைகளைச்செலுத்தி, வீமனைச்சார்ந்த படைவீராள் யாவரையுந் தண்டித்து, சோமசேகரனுடைய நெற்றிக்கண்ணாற் சாம்பராகிய காமனை

போற் பஸ்மீகரப் படலமாக்கினான். இந்தப் பிரகாரங் கைத்தல வன்மையுடைய கர்னன், வில்லிலிருந்து பொழிந்த பற்பல வகையாகிய பாணங்களினால், எத்தனை அரசர்களிறந்தார்கள்? எத்தனை பட்டவர்த்தனர் துறந்தார்கள்? எத்தனை அதிரதத்தலைவர் மாய்ந்தார்கள்? எத்தனை மகுடவர்த்தனர் சாய்ந்தார்கள்? எத்தனை மந்திரிகள் மடிந்தார்கள்? எத்தனை தந்திரிகள் முடிந்தார்கள்? எவ்வளவு வீரான் அற்றார்கள்? எவ்வளவு சதுரங்கச்சேனைகள் செத்தார்கள்? பாஞ்சாலவம்சர்களிற் சிங்கசேனன் முதலாகிய உள்ளிட்டார்கள்? ஏழுபேரும் அவர்களுடன் கூடிய அநேகரும் இந்திரலோகஞ் சேர்ந்தார்கள். இதுவல்லாமலும் வீமசேனனும் தன்னுடன்கூடவந்த நால்வகைச்சேனைகள் தளர்ந்து முதிர்ந்து வீழ்ந்திடக்கண்டு முதுகிட்டோடினான். கர்னனால் அடிபட்டோடிய காற்றின் மகனைக் கருத்துளவணிந்த காயாம்பூ வண்ணன் கண்டு கடுமைகொண்ட வேகம்பெற்ற குதிரை பூட்டிய நெடுந்தேர் தூண்டி, யானைமேல் ஆர்ப்பரித்துச் செல்லுகின்ற ஆண்சிங்கம் போல் அர்ச்சுனனைக் கொண்டுவந்து அங்க தேச ராஜனுக்கெதிரில் நிறுத்தினார். அப்போது, வானவர்க் கரசனுடைய மைந்தன் கர்னனை கனன்றுநோக்கி, பலம் பொருந்திய வரிவிற்குனிங்கி ஆகர்ணபரியந்த நாணியிழுத்து அமலை விளைத்தான். அப்போது, இருதிறவர்களின் சேனைப்படைகளும், தீரநிருபரும், காரியத் தலைவரும், காலணிப் படைஞரும் கைகலந்து செருச்செய்தார்கள். சூரியனுடைய மைந்தனு நேர்ந்து தேவாஸ்திரங்கள் பலவாக விடுத்துத் திடுதிடுக்கப் போர்புரியுங் காலையில், விஜயனு முனைந்து ஈட்டுக்கீடாக விட்ட விசிகங்களானது, யுகங்கள் முடிவிலெழுந்த ஊழித்தீப்போலுறுத்து வந்து விழுந்து கலந்து அண்டமுதலிய மண்டலங்களிலும் நெருங்கிப் பரவியதுகள்.

இந்தச் சமயத்தில், இமைகொட்டுவதன் முன்னே கர்னனுக் குபகாரமாக அஸ்வத்தாமன் தேர் செலுத்திவந்து, சுடுசரங்களைத் தொந்தமாகச் செலுத்தி, அரவணைச் செல்வனாகிய பார்த்தசாரதியினுடையமெய்யும் அர்ச்சுனனுடையமெய்யுந் துளைப்பட்டுருவி இரத்தங்களினால் திருமேனிவருந்திய திருமாலுஞ் சிலைவிஜயனுந் தியங்கி மயங்கி, பின் ஸ்திரம் பெற்று திவ்யாஸ்திரங்கொண்டு, கோபமேற் பூண்டு, கொடி முடித் தேர்செலுத்தி எதிர் சென்று நின்று, அஸ்வத்தாமனுடைய வில்லும், அவனேறிய தேரும், அயர்ந்துலையும் படிக்கு அவ்வம்புகளை முடுக்கி விடுத்தான். அந்தஅம்புகளினால்தேரழிந்து சிலைமுறிந்து தீனத்துவமாகிய அஸ்வத்தாமனானவன், குதிரைபூட்டிய வேறுதேரேறி கொடுஞ்சிலை கைக்கொண்டு வளைத்து, குருந்துக்கணை - மருந்துக்கணை - பருந்துக்கணை - முதலிய கோல் கொண்டுமாட்டி, இருளைபோக்குஞ் சூரியனொளியைப்போல் தான் தொட்டுவிட்ட அஸ்திரங்களை பொறுக்கமாட்டாமல் அர்ச்சுனனும் அரிபரந்தாமனும் நிலைதளர்ந்து நெடுமூச்செறிந்து புயலலைபிளந்து பிராணநிலைதளரச் செய்தான். அதனாலே தளர்ந்து வருந்திய தனஞ்செயனை ஜநார்த்தனன் கண்டு அநேக வித தயிரியஞ் சொல்லித் தேற்றி, அர்ச்சுனா! பிரகாசத்துடன் எதிர்த்துப் போராடுகின்ற அஸ்வத்தாமனை லேசாக நினைக்காதே. அவன் செய்கிற யுத்தமானது கேவலமல்ல; ஆகிலும் நீ அஞ்சவேண்டாம். உடனே அவனுடலைக் கிழித்துப் பிளந்துவிடென்று லட்சுமி மோகனாகிய தேர்ப்பாகன் சொல்ல, அந்தச் சொல் சொல்லி முடியுமுன்னே சுவேதவாகனன் தேரேறித் திடங்கொண்டு, பிறைமுகக் கணையொன்றெடுத்துப் பிடித்துப் பெரும்பூசை கொடுத்து, அஸ்வத்தாமனுடைய நெஞ்சுக்கு நேராய்த் தொடுத்தான். அந்தப் பகழியானது அகிலமெல்லாங் கிழிய ஓடி அஸ்வத்தாமன் எங்கே? எங்கே? யென்று தேடி, அவன் நின்ற நிலையை நாடி, ஆங்கார ஓங்காரமாய்க் கூடி, அவனுடைய மார்பிற் றுறிக் கரகரவென் றுருவிப்போயிற்று. அதனால் அவ்வஸ்வத்தாமன் உதிரவெள்ளத்தில் மூழ்கி உரங்குலைந்து மாழ்கி உரக்கக் கூவி, உடலை விட்டு ஆவிபோன தன்மைபோற் சுவாசம் மேலிட்டுச் சோர்ந்து தேர்மேற் சாய்ந்தான்.

## அஸ்வத்தாமனோடு பாண்டியன் அமோகப் போர் விளைத்திறத்தல்

இப்படியாக வீழ்ந்த அஸ்வத்தாமனை மகா பாபமாகிய செய்கையிற் பயங்கொள்ளாதவனாகிய துஷ்வாசன் கண்டு, தர்மந் தலைகாக்கும் என்னும் தன்மை குறையாமற் பூர்வஞ் செய்த தவப்பயன் ஆபத்காலத்தில் வந்தாதரிக்கும்வாறுபோ லருகில் வந்து, அந்த அஸ்வத்தாமனை அயர்ந்து வீழ்ந்த தேருடனே கொண்டு போய்த் தேற்றினான். இப்படி இளவரசாகிய துஷ்வாசனாலேதேறிய அஸ்வத்தா

மனுனவன், வேறு தேரேறி, வீரவிற்கொண்டு மறுபடியும் வந்து போர்தொடங்கினான். அக்காலையில், நால்வகைச் சேனைகளுடன் சேற்கொடி யசைந்தாட நின்றவனும், மீனவன்-வழுதிமாறன் - கௌரியன் - உசிதன் - கூடற்கோமான்-தென்னவன் - பஞ்சவன் என்னும் பல நாமங்களையுடையவனும், வளைதடியினால் இந்திரன் தலைமேல் அடித்தும் மகமேரு முடியைச் செண்டாலெறிந்தும், ஜெயம் பெற்று மீண்டோனுமாய் விளங்கும் பாண்டியகுலத் தோன்றலாகிய சித்திரவாகனனென்னும் பாண்டியன், சுப்பிரமண்ணியக் கடவுளைப்போன்ற அஸ்வத்தாமனுக்கு நேர் சென்று நின்று அம்பனந்தம், வளைதடிக் கொம்பனந்தம் விடுத்து, அஸ்வத்தாமனுடைய தேரைஅழித்து, சாரதியைப்புடைத்து, குதிரைகளை யறுத்து, வில்லையு முறித்து, அவன் மேனியையுந் துளைத்து, வேந்தன் தம்பிமார் முதலிய யாவரையும் வருந்தி, போராடும் பூமியைத்திருத்திச் சமப்படுத்தினான். இதுவரையிலும் யுத்தம் செய்துவந்த அரசர்களில் இவனைப்போற் செய்யத்தக்கவல்லவர்கள் யாவரென்று சொல்லலாம்; தேவர்களும் மாச்சரியப்படும்படி செருவிளைத்தானப்போது பிரமன் மரபில்வந்த அஸ்வத்தாமன், வேறொரு தேரேறி பாரிய வில்லைப்பிடித்து வளைத்து, சீறிய தேவாஸ்திரங்களை நூறு நூறாகத் தொடுத்து, திருமந்திரங்களினால் உபசரித்து முடுக்கித்தாக்கி வைகையாருடைய மன்னனை, மதி மரபில்வந்த தென்னனை, வம்படங்கு வாட்டி, பம்பரம்போலாட்டி, மிகவும் பயப்படும்படியாய்ப் பயங்காட்டிச் சண்டை விளைத்தான். இப்படி அஸ்வத்தாமனை ஆசாரியகுமாரன் தொடுத்த அநேகவிதமாகிய அம்புகளையெல்லாம் பாண்டியன் பார்த்து எந்தெந்தக் கணைகளை ஏவவேண்டுமோ? அந்தக் கணைகளை யறிந்தெடுத்து, அதிதேவதைகளைப் பூசித்துத் தொடுத்து, அஸ்வத்தாமன் சிந்திய கணைகளையெல்லாஞ் சிந்தி, மும்மூர்த்திகள் சொரூபம்போன்ற வேறுமூன்றுபாணங்களைப் பூட்டி, மோகன மந்திரங்களை யுச்சரித்து, தங்களுடைய மூவகைத்தமிழைப்போல் அஸ்வத்தாமனுடைய சிந்தையில் மூழ்கும்படியாய் உந்தினான்.

ஆனால்: அஸ்வத்தாமனுடைய கைத்திறனுக்கு பாண்டியனுடைய கை மேலிட்டதோவென்று கேட்குமிடத்தில், ஓ ஜெனமேஜெய மகாராஜனே! தந்தையாகிய துரோணாச்சாரியைப் புறங்கொடுத்தோட அடித்த ஒருவன் பிள்ளையாகிய அஸ்வத்தாமனுக்கு இளைப்பானோ? இளைக்கான். இப்படியிருக்க, இப்பால் வீரகண்டை கட்டிய காலினாற் கடல்சுவறச் செய்தவன் பூர்வத்தில் வேலாயுதத்தை விடுத்து ஏழுகடலையும் வறளச்செய்தவன் வெற்றி பெற்ற மீனக்கொடியுற்ற பாண்டியன். ஆகிய வ்வீரன் மாயாஸ்திரமென்னும் ஒரு கணையைத் தொடுத்து துரியோதனனுடைய நால்வகைச் சேனைவெள்ளங்களை ஒரு நிமிஷத்தில் வறளப்படுத்தினான். அப்போது சங்கரபுத்திரனாகிய சதுர்வேத சம்பன்னனென்னும் அஸ்வத்தாமனனவன், பாண்டியன் புரிந்த படுகளத்தைப் பார்த்து தாளமாட்டாமல், முகம் வியர்த்து, போராடுஞ் சிலையை வளைத்து பூரித்து நாணியை இழுத்தெறிந்து, பொங்கழற் கடவுளைப்போன்ற அங்கனற்கணைகளை அபிமந்திரித்து, மேகம்போற் பொழியாநின்றான். அக்கணைவாளி மழையினாற் பாண்டியராஜனுடைய சேனைகள் மடிந்து செம்பொற்றேர் ஒடிந்து, தேற்கொடியு முறிந்து வீழ்ந்தது. உடனே ஆண்சிங்கம்போன்ற பாண்டியன் முறிபட்ட தேர்விட்டிழிந்து, பட்டத்து யானைமேல் ஆரோகணித்து உயர்ந்தான். அந்தயானை எப்பேர்ப்பட்டதென்றால், கடல்மழை பொழிந்து திடமலை அழித்துப் பொங்கி, தங்களுடைய பொதிகையிலிருக்குந் தமிழ் முனியாகிய அகஸ்தியரைப்போல் அலையெறியுங் கடலேழையுங் கையால் அள்ளிக்கொள்ளும் வெற்றி பெற்ற மதயானையாம். இவ்வித பல லட்சணமுடைய யானையின்பேரில், பொதிகையிற் பிறந்த வாசனை செறிந்த பூஞ்சந்தனந் திமிர்ந்து, தங்களுடைய அலைகடலின் முத்துமாலைகளை மெத்த அணிந்து, அதனால் அழகு செறிந்த தோளிணையுடைய பாண்டியனனவனேறிக்கொண்டு, சத்துருக்களைக் கொல்லுங் கொலைத்தொழில் வாய்ந்த கொம்புகளையுடைய தானேறிய அந்த யானையை நடத்திவந்து, திருவின் மகனாகிய பஞ்சபாணன் போன்ற இப்பஞ்சவன் வில்யுத்தத்திற் போர் கொடுக்கவும், அஸ்வத்தாமன் தன்னுடைய தேரைச் செலுத்தித் தானும் போர்புரிந்தான்.

இப்படி இருவரும் அமராடியபோது, அஸ்வத்தாமனென்னும் வித்தகன் விடுக்கும் அஸ்திரங்களை யெல்லாம் பாண்டியன் ஏறிவந்த யானை தன்னுடைய மத்தகத்தால்மோதி,

மததாரையை மாருமற் சொரிந்து, கண் சிவந்து, செவ்வானச் சோதிகாட்டி, செம் பொறி சிதறிச் சேனைகளைமாட்டி, தழைந்து விரிந்த காதுகளைத் தடாம் தடாம் என்று ஆட்டி, அதனிடத்திலிருந்து உண்டாகுங் காற்றுனது, உயர்ந்த பொதிகையிலிருந்து வரும்பெருங்காற்றைப்போல் ஓசைபடமோதி, தனுவாரியன் மைந்தனுகிய அஸ்வத்தாம னுடைய தேரிற் கட்டியிருந்த அம்சக்கொடி யை மளமளவென்று முறித்து அறுத்து, அஸ்வத்தாமனை தேருக்கு உட்புறத்திற் றுனே விழச்செய்து, மேலுஞ் சும்மாயிராமல் திரிந்து, எமனைப்போலுஞ் சப்தமேகம்போ லும் பெருங்குறலிட்டு நாலுபுறத்திலு முழ ங்கி, சப்தசமுத்திர முழக்கம்போலும் பெருங் காற்றைப்போலுங் கொடிய வேகத்தையுங் கோபக்கடுமையையுங் காட்டி ஊற்றெழா நின்ற வெள்ளக்கரட மதங்களேழையும் பெருக விடுத்து, அதனுல் மண்குழைந்து கலந்த சேற்றிடை அஸ்வத்தாமனுடைய தேர்ச் சக் கரங்களைப் புதையச் செய்துவிட்டது. அப் போது, அஸ்வத்தாமனுடைய தேர் அப்பால் இப்பால் ஓடமாட்டாம லசைவற்று நின்று போயிற்று. அந்த வேளையிற் பாண்டியனை வன், தருமறைபவனுடைய செம்பொற்றேரை வளைத்து ஓட்டி, மண்டலாகிர்தியாகச் சுழட்டி, பிறைமுகக் கணைகளினுற் பூரித்து அடித் தான். அக்கால் நிறைந்த மதியினையுடைய அஸ்வத்தாமன் கொஞ்சங் கலங்கி, நெஞ்சந் துலங்கி, உடனே பல சதுமுகாஸ்திரங்களை விடுத்து, பாண்டியன் தொட்ட பிறைமுகாஸ் திரங்களை விலக்கிப் பொடியா யகற்றி, தன் கையிலிருக்கின்ற றெக்கை கட்டிய வெச்சிரக் கணை யொன்றை எடுத்து வாழ்த்திப் போற்றி விடுத்து, மீனவன் ஏறிய யானையைக் கருமலை வீழ்ந்த தன்மைபோல் வீழக் காட்டினன். யானை வீழ்ந்தவுடனே பாண்டியராஜன் பதா தியாய்க் கைவில்லுடன் நின்று கடுங்கோபங் கொண்டு, ஆலகாலப்பகழி முதலாகிய அநே கங் கணைகளைச் செலுத்தி, நெருங்கிய அஸ் வத்தாமனுடைய இருதடந்தோளும் மாலை யுற்ற விசாலமார்பும் வேண்டியபடி கிழிந்து, மலையருவிக் கால்போல் உதிரம் வழிந்து போகும்படி செய்தான். அப்போது அஸ்வத் தாமன் அயர்ந்துதேறி, தென்னனுந் தானும் நீருடிப்போற் சில நேரம் போருடி, அஸ்வத் தாமன் மிஞ்சி ஒரு அக்கினியாஸ்திரத்தை யெடுத்து அபிமந்திரித்துத் தூண்டினன். அந்த அஸ்திரம் புறப்பட்டு ஜோதிக்காட்டி, அகண்டாகாரமா யெரித்து, அநேகம் பொறி களையிறைத்து, அனற்சுவாலைகளைச் செறித்து, பாண்டியன் பிராணனைப் பறித்துப்போட்டு பாற்கடலிற் செறிந்தது. ஆசாரிய குமாரனுற் பாண்டியன் அழிந்தான் அழிந்தான் என்று கேட்டவுடனே தர்மராஜனுடைய படைவீரர் களும் வீரவேந்தரும் ஓட்டமா யோடிப் போனுர்கள்.

### அஸ்வத்தாமனுக்கும் சோழனுக்கும் யுத்தம், இதில் கௌரவரில் துன்மருடன் குமாரர் சுவாகு, துன்முகன், கர்னன் குமாரன் சங்கன் இவர்களோடு அளவற்ற படைவீரரள் வதை

அந்த வேளையில், இராஜாதிராஜனுகிய துரியோதனனுடைய சேனைவீராள் இதுதான் சமயமென்று மேலேறி, வரிபொருந்திய வில் லையும் வேலையுங்கொண்டு, வேண்டியவரைக் குங் கிட்டிக்கிட்டி அடுத்தடுத்துத் தொடுத்து மேலிட்டார்கள். விற்குருவின் மகனுகிய அஸ் வத்தாமன் விட்ட ஒழுங்காகிய அனல்வாளி யினுல், ஆகாயத்திலிருந்து எரிந்த கொற்கை யானென்னும் பாண்டியன் மாளிகையைச் சத்திய நெறியுற்ற மொழியைப்பெற்ற கோழி யானென்னும் மநுகுலத்தோன்றலாகிய சோழ ராஜன் கேட்டு, மிகுந்த ஆரபார வீரமேளங் களுடன் வந்து அஸ்வத்தாமனைத் தகைந்து, ஆ! ஆ! ஆ! "தேரின்மேனின்று நீ சிறுகட் செம்புகர்க், காரின்மேல் வீரனைக் கணையிற்காய் வதே, பாரின்மே லார்கொலிப் பாதகஞ்செய் தார், நீரின்மேலெழுத்தென நிலையிலாண்மை யாய். ஆர்ப்பன மறைமொழிந்தனைபவர்பாவ முந், தீர்ப்பனவேள்விகள் செய்வதன்றியே, கூர்ப்பன படைகொண்டு போர்செயப், பார்ப் பனமாக்களும் பாரின்வல்லரோ. தாதையைக் கொன்றவெஞ்சாபவீரனைக், கோதைவிற்கணை களாற் கொன்றிலாதநீ, யூதைமுற்சருகுபோ லோடலல்லதை, மோதயிற்படைகொடுமுனைய வில்லையோ' ஓ பின்புத்திபெற்ற பூசுரா! நீ தேர்மேல் நின்றுகொண்டு, திரண்ட தந்தத் தையும் சிறுத்த கண்ணையும் புள்ளிபொருந் திய செம்முகத்தையுமுடைய கறுத்தயானைமே லிருந்த பாண்டியனுகிய வீரனைக் காயுங்கணை செலுத்தி மாயச் செய்தனை. இவ்வுலகத்தில் யாரேனும் இப்பேர்ப்பட்ட பாதகஞ் செய் தவர்களுண்டோ? நீ ஆசாரிய புத்திரனு யிருந்தும், தேர்மேலிருந்தவனுக்கும், யானை

மேலிருந்தவனுக்கும், ஈடு சரிதானோவென்றாய்ந்து யோசிக்காமற் போயினையே; ஓ நீர் மேலெழுத்தென்று சொல்லும் நிச்சயமுடைய நிலையில்லாத வாழ்க்கையும் ஆக்கையும் பெற்ற நிஷ்டூரனே! ஓராண் ஓர் வழியாய் ஓசையிட்டுக் கற்பிக்கும்படியாகிய வேதங்களைக் கற்றும், ஒருவருக்குக் கற்பித்தும், காயத்திரி சொல்லித் திரிகாலமும் அர்த்தியங்கொடுத்தும், மகாமந்திரங்களை யெல்லாஞ் செபித்தும், பாபங்களைப் பரிகரிக்கும்படியாய் வேள்விகளைச் செய்தும், தேவர்களுக்கு அவிர்ப்பாகங் கொடுத்தும், ஆசார பூசாவிதேயங்கள் தப்பாமலிருக்கும் பிர்மகுலாசாரக் கருமங்களை விட்டு, க்ஷத்திரிய குலாசாரக் கருமங்களாகிய தனுர்வேதங்களைக் கற்று, கூர்மைபெற்ற ஆயுதங்களைப் பலமாகப் பலவாறாகக் கொண்டு தநுர்வேதத்துள்ள தர்மாதர்மமும், புண்ணியாபுண்ணியமும் பாராமல், பழிக்கஞ்சாமற் சண்டை செய்யச்சொல்லி எந்த நீதியிலிருக்கிறது. க்ஷத்திரியகுல வீரமானது பிராமணனுக்கு வருமோ? (உயரப்பரந்தாலும் ஊர்க்குருவி கருடனாமோ?) ஓ உபயோகமற்ற அஸ்வத்தாமனே! உன் தந்தையாகிய துரோணாச்சாரியரை வெகு விந்தையாகக் கொன்ற பாஞ்சாலன் மைந்தனாகிய திர்ஷ்டத் துய்மனென்னும் வில் வீரனை விற்பிடித்த உன் விசாலக் கையாற்கொன்று, அப்பனைக் கொன்ற அரும் பழியை முடித்துக் கொள்ளாத நீ ஊதைக் காற்றில் ஓடுஞ் சருகுபோல் ஓடவேண்டியதேயல்லது; ஆயுத முதலாகிய சேனைகளைக் கொண்டுவந் தெதிர்த்து யுத்தம் விளைத்து வெற்றிபெறவில்லையே? ஓ சத்திசெத்தவனே! ஓ புத்தியற்றவனே! என்று சிற்சில மொழி புகன்று கனன்று, அவ்வஸ்வத்தாமன் மேற்சென்று, தான் கைக்கொண்டிருக்கும் வில்லைக் கொண்டல் முழக்கம்போல் அண்டர் நடுக்குறும்படியாக வளைத்துக் கணைகளை விடுப்பக் குறித்தான்.

அப்போது, அஸ்வத்தாமன் ஆலகால விஷம்போல் ஆர்ப்பரித்து எழுந்து வந்து எதிர்வளைத்தான். இவ்வாறிவ்விருவரும் குன்றுங் குன்றுங் குறுகியவாறுபோல் நெருங்கி, இவர்கள் தேருந்தேரும் எதிரெதிர் செல்லச் சுழன்று, இருவர் செங்கரங்களிலும் ஒவ்வொரு விற்கொண்டு வளைத்து, இரண்டுமேகம் இரண்டு புறத்தில் இடிக்குமாறு போல் நாணியிறுக்கி முறுக்கி, தங்கள் தோள்பரியந் தம் இழுத்தடித்து வில்லும் வில்லுங் கிட்டி, விரைவுடன் கணைகளை நாட்டி, வெகுவிநோதமாக மாட்டியப் போர் புரிந்தார்கள். அந்த வேளையில், அஸ்வத்தாமன் சர்வசம்ஹார கால வுருத்திராஸ்திரம் - நாராயணாஸ்திரம் - சூரியாஸ்திரம் முதலாகிய தேவாஸ்திரங்களை யெல்லாம் எந்தெந்த தேவர்கள் எந்தெந்தக் கட்டுப்பாட்டின்படி கொடுத்தார்களோ? அந்தந்தப்படியே அபிமந்திரித்து பகைவனுடைய முனைமுகத்தில் முடுக்கினான். இதற்குள்ளே சோழராஜனானவன், சரபாஸ்திரம் - சரோருகாஸ்திரம் - சங்கராஸ்திரம் முதலாகியதைத் தாழ்ந்து பூசித்து விடுத்தான். இந்த இருவருடைய அம்புகளும் ஒன்றையொன்று ஒடித்து முடித்து எள்ளித்தள்ளி அம்பரமாகிய ஆகாயவெளியைப் புதைத்து விட்டன. இவ்விதமாகிய அமர்புரிந்து வரும்போது, தெய்வலோகம் போகிற துரோண புத்திரனாகிய அஸ்வத்தாமனுடைய இருபுயத்தில் இருகணையும், மார்பில் இரண்டுகணையும், வில்லில் ஒருகணையும் உருவும்படியாக விடுத்தான் வாசம்பெற்ற ஆத்திமாலையை யணிந்த சோழராஜனானவன். அதுகாலையிற் பிறைமுடிச் சடையன் பிள்ளையாகிய அஸ்வத்தாமன் பல முகப்பழி தெறித்து, அரிவாள் போன்ற நகம் பெற்ற புலிக்கொடி படைத்த சோழராஜனுடைய தேகமுழுமையும் புறுவுக்காகச் சரீரத்தை அறிந்த சிபிச்சக்கிரவர்த்தியின் தேகம் போல் அறிந்து, உதிரம் வடியும்படியாகச் செய்தான். அப்போது சோழராஜனானவன் துடித்து, ஒரு வேலாயுதத்தை எடுத்துப் பிடித்து, விளாமரத்திற் பசுங்கன்று கொண்டெறிந்த துளவமணிச் சுருள்முடியோனாகிய ஸ்ரீ கிருஷ்ணனைப் போல் எவருமஞ்சி இளைக்கும் படிக்கு மயூரவாகனனுக்கு இளவலாகிய அஸ்வத்தாமன் பேரில் வீசியெறிந்தான். அந்த வேலாயுதமானது, வேலாவலய முதலிய எல்லாவற்றையுங் கோலாகலப்படுத்தி நாலாவிதமாகிய காலாகோலமாய் வந்து, லீலாவிபூதியாகிய உருத்திரமூர்த்தியின் சுக்கிலத்தால் தற்பவமாக உற்பவித்த விவேகவீரனாகிய அசுவத்தாமனை மெய்கலங்கச் செய்து, மேனியிற் புகுந்து உழக்கிப் பொறியெழ வீழ்த்தியது.

அந்தவேளையிற் சிறந்த சகுனியுஞ் சிற்சில வேந்தரும் மிகுந்த வருத்தமடைந்து, அஸ்வத்தாமனை எடுத்துக் கொண்டுபோய் அவிழ்தாதி முதலியதுங் கொடுத்து அவன்

தன்னை மறந்து அடைந்த ஆயாச வருத்தங் களை ஆற்றினார்கள். உடனே அஸ்வத்தா மன் தேறித் தேரேறிப் புறப்படும்போது, அவனுடன் கர்னன் முதலாகிய காவலருஞ் சேர்ந்து, சிவனுடன் சென்று போராடவெ ழுஞ் சிற்சில தேவர்களைப்போல் முரசவாத்திய முதலியது முழக்கச்செய்து, முடுகி வந்து நெருங்கிப் போர்விளைத்தார்கள். அவர்களைக் கண்டு அதிக கோபங்கொண்டு ஆக்ரமித்த பராக்ரமசாலியாகிய சோழராஜன், அநேகம் ஆனைக்கும்புகளில் ஒரு ஆண் சிங்கம் புகுந்த தைப்போற் புகுந்து, உடல்களை வகுத்து, உயிர்வதை புரிந்து, குயவன் திகிரிபோற் றிரிந்து வருவதாயினன். அக்காலையில், துன் மருடனுடைய குமாரராள் சுவாகு, துன்முகன் என்னுமிவர்கள் சோழனை வளைத்து, காழகிற் கணைதொடுத்துக் கலகம் விளைத்தார்கள். அவர் கள் விட்ட அம்புங்கெட்டு, உருளையுடைய தேர்க்கட்டும்விட்டு, வில்லுமுறிந்து, அவ்விரு வரில் துன்முகனென்பவன்உயிரழிந்தொழிந் தான். அப்பால் வில்லாளியாகிய சுவாகுவென் பவன், பின்னும் பலருடன் சேர்ந்து வந்து பகைத்து, ரதம்-குதிரை-சாரதி முதலியவை களுமுறிந்து, அவனும் ஆவியழிந்து போயி னன். உடனே சூரியனுக்கு பேரனும், கர்ன னுக்கு குமாரனுமாகிய சங்கனும், அங்கதேசா திபர் அனைவரும் வெகுவாகிய ராஜகுமாரர் களும் இன்னும் பலரும் எதிர்த்துப் போர் விளைத்து, ஜகத்திற்போர்தழைத்து, அவத்தில் உயிர்விடுத்து அந்தரம் அடைந்தார்கள். பண் ணுடபாடும் வண்ணவண்டுகள் நாடுங் கண் ணகன்ற சோலை சூழ்ந்த காவிரிநாடாகிய சோழராஜன் தொடுக்குங்கணைகளானது மண் ணுலகத்தினிடர் நீங்க மலைந்து, மன்னர்மன் னரை அவர்களுடைய மைந்தரை அவர் களுக்குரிய நால்வகைப் படைகளை விண்ணு லகத்திலிடமில்லை மிகநெருக்கமென்று உரைக் கும்படியாய் மிதமில்லாமல் ஏற்றிவைத்தன. இந்த வெற்றிபோரைப் பார்த்து மெத்தவும் யோசித்திருந்த வேதியன் சுதனாகிய அஸ்வத் தாமனும், தன்னிகரில்லாத சகுனி மாமனும், பொன்மாரி பொழியும் புண்ணியக் கர்னனும், இன்னும் அநேகர் நிருபர் முதலாகிய நெடும் படை வீராளும் சோழராஜனைப் பார்த்து, ஓ சுத்த நித்திய உத்தமகுணம்வாய்ந்த நற்றவச் சிவபக்தனே! பராக்கிரமப் போர்புரியுந் திறத் தில் நீயே சென்னியாயிருப்பதால், உனக்கு சென்னியென்னும் பேர் தகும்.

### அருச்சுனனாற் சஞ்சத்தகாளாதியரிற் பதினாறாயிரவர் வதை

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! மேற்சொல்லிய வீரர்களெல்லாருஞ் சோழ ராஜனைவிட்டு முனைமடங்கி இன்னொரு திசை யிற் போய்ச் சத்துருக்களடங்கிய தேராளிக ளுடன் போராடி, ஆற்றமாட்டாதவர்களாய் ஓடி, மீண்டுந் தேறிவந்து கொற்றம்பெற்ற வெற்றிவில்லைப் பிடித்த விஜயனைச் சூழ்ந்து கொழுங்கணை யேவினார்கள். அந்தவேளையி லவர்களிற் சஞ்சத்தகாள் முந்தியோங்கி; வளை ந்த வில்லைத்தாங்கி, திணிந்த நாணிவாங்கி, தகுந்த பாணந்தேங்கி நிறையப் போர்விளைத் தார்கள். அப்போது கொல்லவந்த யானை களுக்கெதிரில் மெல்லவந்த ஆண் சிங்கம் போன்ற அர்ச்சுனன், பலபல்லவக் கணைகளை விடுத்துச் சாடி, அவர்கள்விட்ட கல்லகக்கணை களையெல்லாம் விலக்கி, அவர்களுடைய சிர மும்-உரமும்-கரமும்-கழலும்-தோளும்-தாளு ம்-மேலும்-காலும் வெவ்வேறாகிச் சிதைந்து விழப் போக்கினான். அந்த அர்ச்சுனன் தொடுத்த அம்புகளினால், சிலர் காலற்றார்கள்; சிலர் கரமற்றார்கள்; சிலர் முடியற்றார்கள்; சிலர் அடியற்றார்கள்; சிலர் வேலற்றார்கள்; சிலர் மாலற்றார்கள்; சிலர் வில்லற்றார்கள்; சிலர் விரலற்றார்கள்; சிலர் முப்புரியாகிய முன்னூலற்றார்கள்; முழுவீரங் கொண்ட முக மற்றார்கள்; சிலர் கடகம்-கங்கணம் - தோள் வளை புஜகிர்தி-வாகுவலயம் இவை முதலா கிய ஆபரணங்க ளற்றார்கள்; சிலர் கொடி- குடை- ஆலவட்டம் - தாலவட்டம் - சாலவட் டம் - சாமரை இவை முதலாகிய சின்னங்க ளற்றார்கள்; சிலர் சாரதியற்றார்கள்; சிலர் குதிரைக ளற்றார்கள்; சிலர் யானைக ளற்றார் கள்; சிலர் சேனைக ளற்றார்கள். இப்படி அதிரதத் தலைவராகிய மிகுந்த பலவான்க ளெல்லாம் அற்றுச் செத்தார்கள். இதன்றி யும், மதயானைகளெல்லாந் தங்கள் முதுகிரு ந்த தரணிபர்களோடு அதிக்கர மிழந்தன; வேகமாகிய குதிரைகளெல்லாந் தங்கள் எஜ மானையும் குரங்களையும் இழந்தன; வெற்றி வீரப் படைஞர் முதலாகிய பேர்களெல்லா ரும் பலமற்றார்கள்; வயவீரரள் சிரமுதலிய உறுப்புக்களற்றனர்; வானுலகம் இடமற் றன; அங்குள்ள தேவர்கள் வேறிடந்தேடி னார்கள். அந்த யிடங்களையும் பகைத்து அர்ச் சுனன் புரிந்த யுத்தத்திடங்களை என்னென்று

சொல்லுவேன்? ஐயா மகாராஜனே! வஞ்சகமாகிய சாமர்த்தியவான்களென்னுஞ் சஞ்சத்தகள் பதினாயிரம்பேர்கள் பலவாறாக இறக்கும்படியாய், அவர்கள் ஏறிவந்த வெண்கலத் தேர்கள் அனேகந் தூளாய்ப் பொடிந்து போகும்படியாய், அவர்கள் தொட்ட அஸ்திரங்களெல்லாம் மண்ணாய் மடிந்துப் பொடிந்து படிந்துப் போகும்படியாய், அழித்து அடர்த்துப் படபடத்து நின்றான் மேகநிறத்தான் விடுந் தேரினையுடைய அர்ச்சுனனானவன்.

### கர்னன் தன்னோடெதிர்த்த நகுலசகாதேவரைப் புறங்கண்டு பாண்டவப்படையைப் பாழ்படுத்திநிற்க, அர்ச்சுனன் கௌரவப் படையை யலக்கழித்தல்

அந்த வேளையிற் சஞ்சத்தவர்களிலும் மற்றவர்களிலும் இறந்தவர்கள்போக, சகலமான வீரர்களும் அர்ச்சுனனுக்குப் பயந்திளைத்து, ரணக்களத்தில் நிற்கமாட்டாமல் வாட்டமுற்று ஓட்டமிட்டார்கள். இப்படியோடவே, ஓடா துறத்துநின்ற துரியோதனனுடைய தம்பிமார்களிற் சிலரைக் கண்டு, அவர்களையு மாட்டி வாட்டி மிகுந்த தாட்டியாய் வரா நின்ற விஜயகாண்டீபவீரன் கதிர்மகனாகிய கர்னனைக்கண்டு, அக்கினி சொரியும் அருங்கணை பலவாகக்கொண்டு, திசாதிசைகளுங் கலங்கிச் செவிடுபடும்படியாகக் கைக்கிசைந்த காண்டீபத்தில் நாணேசை செய்து, ஆதிசேடனாகிய சீரைக்கருக்கி, அவனைப் புடைசூழ்ந்த வீராதி வீரர் முதலிய யாவரையும் உருக்கி, உதிரம் பெருக்கி, கர்னனை காலோட்டங் காணவேண்டுமென்று கருதி அவனுடைய போர்முகத்துக்குத் தாவுவதாயினான். அதற்கு முன்னமே மத்திராதேவி புத்திரனாகிய நகுலசகாதேவர்கள் இருவரும், இந்தக் கர்னனை வெல்லாமல் மீள மாட்டோமென்று தடதடெனச்சென்று, தாதாவாகிய கர்னனுக் கெதிரிற்புகுந்து கணைமாரி சொரிந்து, யுத்தமுனையைப் பிளந்து, வல்லாடல் செய்யும் வில்லாளியாகிய அக்கர்னன் வடுப்படவும், மனந்திடுக்கிடவும், அவனுடைய வாகினிகளெல்லாம் மடிந்து முடியவும், பூதப்பிரேத பைசாச கணங்கள்கூடி அருந்தவம் போர்புரிந்து, குதிரைக் கும்புகளை வீழ்த்தி, யானைக்கூட்டங்களைச் சாய்த்து, வாத்தியங்களை தாக்கி, விசாலமாகிய தேர்களை தூளாக நெரித்து தேர்க்கொடிகளை முறித்து, விற்சுழிகளைத் தறித்து, புதுமதிக்குடைகளைப் போக்கி, ஆயுதப்படைகளைத் தாக்கி, அடர்ந்த வீரர்களைச் சின்னாபின்னஞ்செய்து உயிர்போக்கி, இவ்வாறச் சமர்நிலத்தில் வீரப்பயிரேற்றித் தூற்றி, எவரையுந் தெய்வலோகத்திற் குடியேற்றி வாதிக்கா நின்றனர். இவ்விரண்டு சிங்கங்களாற் கர்னனுடனேவந்த கடுங்கோடக் களிறுருத்த காவலர்களி லனேகர், கால் சாய்ந்து ஓய்ந்து மாய்ந்துபோனார்கள். இவ்வாறு நகுலசகாதேவர்களினால் அடிபட்டு மடிவதை ஆயிரங்கிரணங் கதிரவன்றந்த அங்கதேசாதிபன் கண்டு கோபங்கொண்டு, இரு கண்களுஞ் சிவந்து கனற்பொறி கொட்டும்படிக்கு முனைந்து வண்டுமொய்த்த வாசமாலை யணிந்த மார்பினராகிய பாண்டவச் சேனைகளையெல்லாம் மாய்த்து, நகுல சகாதேவருடைய திணிந்த தேகமெல்லாம் அவிந்த புண்களாகி மோழை மோழையாய் விளங்க வழிகாட்டி தாரைதாரையாய் உதிரஞ் சொரியும்படியாக மேலுமேலுங் கணைகளைப் பொழிந்து, அவர்களுடைய தோளும் ஒப்பற்றமார்புந் துளைபடவும் வளைத்துப் பிடித்த வில்லானது தறிபடவும், நீண்டகொடிகள் முறிபடவும், உன்னதத் தேர்கள் உடைபடவுமாக நிமிராத விற்கொண்டுஜாடி, அவர்களோடுவந்த நால்வகைச் சேனைகளும் வாடி ஓடிப்போகும்படியாய் அழித்துவருவதானான். இவ்வாறு காலாந்தகன்போ லழித்துவருகின்ற கர்னன் செயலை நகுலசகாதேவர் பார்த்து, இவனைச் செயிக்குந்திறம் நம்மிடத்தில் இல்லை. திரும்பி ஓடிப்போவதே திறம் என்றுன்னி இருவரும் யுத்தத்தைவிட்டுப் புறங்கொடுத்து ஓடினார்கள்.

இப்படி அவர்கள் ஓடுங்காலையில், ஒருவரும் நிகரில்லா வலிமைபெற்ற கர்னனானவன், அவர்களோடு மறுபடியும் யுத்தஞ்செய்யும்படியாகிய எண்ணங்கொண்டு, சின்னாபின்னமாகத் துளைத்து ஊடுருவாநின்ற கொடுங்கணைகள் ஐந்துகண்டு முந்திநொந்து போகாநின்ற நகுலசகாதேவரைப் பின் தொடர்ந்துபோக எத்தனப்பட்டா னவனை மிகுந்த பலத்திலும் தகுந்த நலத்திலும் உயர்ந்த குலத்திலும் பிறந்த தலத்திலுஞ் சிறந்த சல்லியனாகிய சாரதி எடுத்துச் சொல்லுகின்றான். ஐயா கர்னனே! குதிரைகட்கும் எனக்கும் ஏன் வீணாகிய பிரையாசங் கொடுக்கின்றாய்? முன்னே தருமராஜன் வந்து எதிர்த்தார்; அவரைச் செயித்தாய்? இரண்டாவது வீமசேனன் வந்து போர்தந்தான்; அவனை முதிர்ந்த போரினில் வென்

ருய்? சிறுவராகிய நகுலசகாதேவர்களை இது வரையிலுஞ் ஜெயிக்காமல் விட்டுவிட்ட நீ இப்போது ஜெயிக்க எத்தனிக்கிருய். இத்தருணம் நீயவனை ஜெயிக்கப் போகின்றதில்லை. அப்படி அல்லவென்று ஜெயித்த போதிலும், அவனால் உனக்கொருபுகழுமில்லை. நெருங்கிய பிரகாசம்பெற்ற கிரீடியுடன் போர்புரிந்து வெல்லுவையாகில், உன்வில்வல்லபத்தையும், போர்த்திறப் புகழையும் யாவருஞ் சொல்லித் துதிப்பார்கள். இவர்கள் மெத்தவும் அறியாதவர்கள். இவர்களுடன் எதிர்த்து ஜெயம் அடைந்தாலும், அபஜெய மடைந்தாலும், உனக்கு யாதொருபெருமையும் இல்லை. ஆகையால், நகுல சகாதேவர்கள்பேரிற் போர்செய்யப்போகிற கோபவேகத்தை அடக்கித் திரும்பிவிடுகவென்று விளம்பினுன். அப்போது கர்னனுனவன், குந்திதேவிக்குத் தான்கொடுத்த வரமாகிய வாக்கியநெறியுஞ் சாரதிசொல்லிய குறியும் யோசித்து, அந்த நகுலசகாதேவரை விட்டுத் திரும்பி நல்லமத்தியானத்திற் காயுங் கத்தரிகால சூரியனைப்போல் ஆர்ப்பரித்து, முந்திப் பகைத்து வந்த பலமுடி மன்னரையும் அடிமுடி அறச்சாய்த்து, அகோராஸ்திரங்களை அநேகமாகப் பொழிந்தான். அவன் தொடுத்த கணைகளில், திசாதிசை முழுமையும் வளைந்து அளவிட்டு அறியச் சென்றதாஞ் சில கணைகள். ஆகாயமுதலிய அண்டத்தை யளந்து அளவிடுகின்றதாம் பல கணைகள். ஆசைகொண்டு நாகலோகத்திற்புகுந்து நாலு பக்கத்திலுந் திரிந்து நாடிவருகின்றதாஞ் சில கணைகள். ஆகாயத்தில் நேரே உருவிப் போகின்றதாம் பலகணைகள்.

இதல்லாமல், உடலைநெருக்கிப் புகுந்து மாமிசம்-தோல்-குடல்-நரம்பு-தாரைகள் முதலிய இடங்கள்தோறும் நுழைந்து தீச்சிகை கொளுத்துதாம் பற்பல காண்டவங்கள். பகைவருடைய தேகத்திற் கண்டயிடங்களிற் பாய்ந்து சக்கையாகப் பிளக்குதாஞ் சிற்சிலபாணங்கள். வசையற்று இசைபெற்று காற்றுடன் கூடி அசைவற்றுத்திரியுதாம் பற்பல அஸ்திரங்கள். வகையேறி சிகைமீறி வன்னியுடன் கூடியுலாவுதாஞ் சிற்சில வேத்திரங்கள். இடிபட்டன; பல மலைகள் பொடிபட்டன; சில தலைகள் எரிபட்டன; பல வனங்கள் முறிபட்டன; சில ஜனங்கள் கொதிபட்டன; கடல் நீர்கள் மிதிப்பட்டன; அடல்தேர்கள் இடிபட்டன; மஞ்சினங்கள் பொடிபட்டன; குஞ்சரங்கள் தூசிகளெழுந்தன; பூமியினுல் வாசிகளழிந்தன; நேமியினுல் விண்ணூடெழுந்த கரும்புகைகள். மண்ணூடெழுந்த செம்புகைகள், அப்போது பாதலவாசியாகிய ஆதிசேஷனுற் ருங்கும் அகிலம் பிளப்புண்டு, அவனுடைய ஆயிரந்தலைகளும் வளைப்புண்டு, அதனுல் மிக இளைப்புண்டு போனுனென்று சொல்லும்படியிருந்ததாயின் காயத்திற் காயம்படாதிருந்தவர்கள் இன்னுரென்று ஸ்திரமாக எவர் சொல்லமாட்டுவார்கள். உடல் கெட்டவர் பலபேர். உயிர்விட்டவர் சிலபேர். வில்லைக்கொண்டு பதறி யெய்தவர் பலபேர். பல்லைக்காட்டிக் கதறி வைதவர் சிலபேர். தங்கள் கீர்த்தியுடன் மானத்தையுங் கைவிட்டுக் கலங்கினேர் பலபேர். தங்கள் விரதத்துடன் யுத்தகளத்தையும் விட்டு விலங்கினேர் சிலபேர். ஆச்சரிய வாச்சரியமென்று அகன்ருர் பலபேர். ஆகட்டும் மாகட்டுமென்று கருவி வெகுண்டார் சிலபேர். இப்படியாக பற்பல விதத்திலும் வருத்தப் பட்டார்கள். இவர்கள் யாரெனில், தருமராஜன் விடுத்த சதுர்வித புருஷார்த்தமுமடுத்த சேனுசயின்ய வேந்தர்கள். இவ்வாருக கோலாகலமாய் அமர்மோதிவரா நின்ற கர்னனுக்கு எதிர்நின்று போர்கொடுக்கும் வீரமுள்ள பேர்கள் ஒருவரும் இல்லாமையால் யாவரும் பிராணபயங்கொண்டு, நீலமலைபோல் நிற்கின்ற அர்ச்சுனனிடத்தில்வந்து மிகநொந்து மனம்வெந்து வருந்தினுர்கள். அதைத்திருத்திய மனத்தோனுகிய சிலைவிஜயன் கண்டு, கல்லென்று நகைத்து, சில்லென்று வியர்த்து, ஓ பையாடரவணை விட்டெழுந்த மெய்யா! ஓ பொற்சிகரத் தேர்க்கிசைந்தகையா! நமது சுவேத வாம்புரவியினை முந்தச்செய் ஐயாவெனக் கனல்படு கண்ணனுய்க் கடுகித் தாட்டியாய்ப் புகன்ருன். அவன் புகன்ற வசனப்பிரகாரம் வாசுதேவனுகிய வல்லவனுனவர், உசித ரதத்தை உயர்விலோட்டி, கர்னனுக்கு எதிர் காட்டி, கணகணவென மணிகளாட்டி, அண்டமுகடு அதிரும்படியாய் நாட்டினுர். உடனே செந்தீப்பொறி செறிந்து பறக்குங் கண்ணையுடைய வில்விஜயனுனவன், கடுங் கோபாக்கினிக் கணைகளை எடுத்து, கார்பொழிவது போற் ரெடுத்து, கரகரவென்று தேரினை விடுத்து யாவரையுங் கால்மாடு தலைமாடாகத் துடித்திடப்படுத்தி, வலசாரி இடசாரியாகச் சுழன்று உகாந்த காலாந்தகனைப் போன்று திரிந்தான். அப்படி திரியுங் காண்டீபனைக் கண்ட கௌரவச்சேனைக் காவலர்களெல்லோ

ருங் காலூன்றிப் பூமியில் நிற்கப் பயந்து, ஓட்டங்கொள்ள நயந்து ஓடமாட்டாமல், அயர்ந்து, ஒருவருந்தப்பாமல் அழிவதற்குக் காண்டாவனம் போலசைவற்று நின்றார்கள். அப்போது ஒருவரையும் விடாமல் ஒழிப்பதற்கு அர்ச்சுனன் ஒருவனாக ஒப்பற்று நின்றான்.

கர்னனோடருச்சுனன் கடும்போர் விளைக்குங்கா
லவனைத் தருமனென்றையுற் றமர்விடுக்க
அதுகண்ட கண்ணன் நகுல சகாதேவ
ராற் றருமன்பாற் சில வேதங்
கேட்டவர் பாசறைக்கேகல்.

அதுகாலையிற் கௌரவப் படைகளும், அப்படை வீரர்களும் இளைத்து அழிந்து வருஞ்செய்கையைத் தெரிந்த கர்னன், அர்ச்சுனனுடன் எதிர்க்க உடனே இருவரும் அமரிளைந்தார்கள். இருவரும் எதிர் புகுந்தார்கள். இருவரும் எதிர்முனைந்தார்கள். இருவரும் வில்லை வளைத்தார்கள். இருவரும் நாணியிழந்தார்கள். இருவரும் ஷ்டங்காரந் தெறிந்தார்கள். இருவருஞ் சங்குதூறித்தார்கள். இருவருந் தெழித்துச் சினத்தார்கள். இருவரும் மீசை துடித்தார்கள். இருவரும் புருவநெறித்தார்கள். இருவருஞ்சரங்களடுத்தார்கள். இருவரும் கெடுத்தார்கள். இருவரும் மந்திரம் உச்சரித்தார்கள். ஒருவருக்கொருவர் எச்சரித்தார்கள். ஒருவர்மீதொருவர் பெருங்கணை விடுத்தார்கள். ஒருவரையொருவர் புகழ்ந்தார்கள். ஒருவரையொருவர் மகிழ்ந்தார்கள். இவ்வாறிவ் விரண்டுபேர்களும் அகிலபுவன சராசரங்களெல்லாம் அசையும்படி போர்புரிந்து வருங்காலையில், அர்ச்சுனனானவன் அருணக்கணை, வருணக்கணை முதலிய அஸ்திரங்களை அங்கதேசராஜன்மேற் றொடுத்தான். கர்னனானவன், அந்தக்கணைகளை இடையிற்றடுத்து சரோருகப்பகழி சதுமுகப்பகழி முதலிய பாணங்களைத் தநுவிற்கோத்து சரேலென விடுத்துப் பகைத்தான். இந்தப் பிரகாரம் வெற்றிவீராளிருவரும் ஒருவருக்கொருவர் போராடவிட்ட கணைமாரியினால் உலகெல்லாம் அலறவும், அநேகமாயிரம் புஜவீரதீராள் பிரமலோகங்குடியேறவும், அழகிய சமுத்திரங்களேழும் நீலகிரி முதலிய மலைகளேழும் நொந்தகைந்தாடவும், வானஞ்சலிப்பெய்தவும், குதிரைகள் யானைகள் - தேர்கள் - காலால்கள் இதுகளெல்லாஞ் சிந்திச் சிதையும்படிக்காயின. பின்னுங் கல்லைப்போன்ற வில்லை வளைத்துக் கணைத்துக் கணக்கற்ற கணை தெறித்தார்கள். இப்படி ஒருவர்பேரிலொருவர் ஓயாமல் ஆயிரமாயிரமாகப் பலம்பொருந்திய வாளிகளை விடுத்து பின்னு முன்னும்பாராமல் ஒருக்ஷணத்துக்குக் கோடாகோடியாய் அடுத்து அடிக்குங் கடுங் குரோதத்தையும், கன்றிய விரோதத்தையும் மற்ற முடி வேந்தரும் முனைவீரருங் கண்டு முதற்றேவராகிய மூவரும் புகழாநின்ற வாணாசுரன் முதலாகிய பேர்களுடன் சண்டை செய்யத்தக்க சமானஸ்கந்தாளென்று கர்னார்ச்சுனாளாகிய இவ்விருவர்களின் புகழைக் கொண்டாடினார்கள்.

இப்படி தேவர்கள் முதலிய யாவருங் கொண்டாடும்படியாய், அண்டமு மண்டர் அகண்டித விண்டல மண்டல மெண்டிசை பிண்டருண்டெழ தண்டலை கொண்டல்கள் செண்டென விசைகொடு டுண்டுடு டுண்டுடு டுண்டுடு வெனவெழ சிறுபறை அறைதர, முரசொலி நிறைபெற, அரசர்கள் குறைவுற, அமரர்கள் கிடியுற, திறவர்கள் முடிவுற, தினகரர் திகிலுற, ககனர்கள் கவலுற, கருதலா மிகையுற, இருவிழிகனலுற, வெவர்களுமுனலுற, பொருவருமிமையவர் புனல்விழியுகுதர, சரசர சரவென பரபர பரவென, விறுவிறு விறுவென, வெழுகணை யெதிர்படு, கதித்த பொன்முடி காவலரோடிட, பதித்த நன்மணி வார்சிலை நீடிய, விதித்த நீள்கணை மேலவர் தூவிட, எதிர்த்தபேர் அபயச் சொல்லிசைத்திட, எட்டுத்திக்குட டட்டக்கிரிகளும், வட்டத்திட்டுட் பட்டக் கரிகளும், விட்டத்துட்பட் டிட்டப்புரிகளும், பட்டுக்கட்டிட் டட்டப்பரிகளும், பதறிக் கதறிச் சிதறிக்கதலுற, அதறிப் பெதறி மெய்யுதறிச் சிதைவுற, பாரொடுபுவனம் படீரென வாட, ஆறுபோலுதிரம் அணைபுரண்டோட அமராடிய காலையில், அர்ச்சுனன் கர்னன் இவர்களிருவரும் ஒருவருக்கொருவரிளையாமற் களையாமற் சளையாமல் மேலிட்டு மாயக்கணை யேவினார்கள். அந்தக் கணைகளானது பந்தெனச் சுழன்றெழுந்து, கொந்தழற் சொரிந்து வந்து, அந்தெனப் புகுந்து நொந்து, தத்தெனக் குழைந்து வெந்து அதிவீர பராக்கிரமசாலிகளாகிய இருவருடைய தேகத்திலுந் தைத்திட்டதினால், வலைக்குளகப்பட்ட வீரசிங்கம்போல் மடங்கி, சாயாபதி மைந்தனாகிய கர்னன் சலித்து நின்றான். அவனுக்கெதிர் நின்ற தனஞ்சயனுந் தேகந் தளர்ந்து, அகமெலிந்து, தன்னைத்தானே மறந்திருந்தான். பின்பு கர்னன் ஒருவாறு

தேறித் திருப்பி, தருமராஜன் படைக்குட் புகுந்து, சரவருஷம் பொழிவதானான். இங்கே தன்னை மறந்திருந்த அர்ச்சுனனைக் காயாம்பூ வண்ணனாகிய கண்ணன் கண்டு, ஆ! ஆ! ஓ போர்த்திற வியாக்கிர பராக்கிரம சாலியாகிய அர்ச்சுனா! கூர்செறிந்த-கோல் பொழிந்து-போர்முனைந்து-நேரடர்ந்து-கார் சொரிந்து-நேர்மொழிந்து- போர்புரிந்து-சீர் பொருந்திவந்த நீ; இப்போது ஜெயம்பெறா மல் இப்படிக்கு இளைப்பானேன்? மெத்தக் களைப்பானேன்? ஐயோ! அப்பா! சம்பயஞ் சாடி என்பதில்லாமல் என் பெண்சாதி பிள்ளை களையுமறந்து வாக்கை விற்றுவிட்டோமே என்னு மேக்கத்தால், வலவனாக வந்திருக் கின்ற என்னை இங்கே கொண்டுவந்து, கர்ன னுக்கு எதிர்சென்று போர்தந்து, இப்போது யாதுகாரணத்தினாலேயோ மனம் நொந்து, வன்னமேறிய சித்திரம்போல் வாய்பேசாமல் அமர்ந்து அசைவற்றிருக்கின்றாயே? இது என்ன மிகு நேசமோ? அல்லது பெருமோச மோ? கர்னனிடத்தில் வைத்த ஆவேசமோ? கணை பட்டுருவுமாயாசமோ? அதனால்நேரிட்ட பிரையாசமோ? நான் உனக்குச் சாரதியாய் அமைந்த விசுவாசமோ? என்றலையிலிட்டிருக் கும் விதிவசமோ? அடா ஐயனே! காண்டீபக் கையனே! மரகதமணிபோன்ற மெய்யனே! உன்னுள்ளக் கருத்தை மெய்யாகச் சொல் என்று செய்யாள் பதியாகிய துய்யன் என்னை யடிமையாகக்கொண்ட ஐயன் கேட்டருளினார்.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாரா ஜனே! இவ்வாறு மாயன்கூறிய மாயவாசகங்க ளனைத்துங் கேட்ட அநுமக்கொடி தரித்த அர்ச்சுனனனவன் கண்ணீர் சோரவிட்டு, இரு கரத்தையும் உச்சியிற் குவித்து, ஓ ஆபத் பாந்தவாகிய அண்ணலே! என்னுடன் போர் புரிகின்ற வெங்கணைதரித்த அங்கர்பிரானாகிய கர்னராஜனானவர், சாயலில் தருமராஜனைப் போல் விளங்குகின்றார். இதனால் என்னு டைய எண்ணம் வேறுபட்டது. துக்கமே விட்டது; துயரம் நேரிட்டது; கலவரமாய் விட்டது; கடுமை போய்விட்டது; கண்கள் மறைகிறது; கவனங் குறைகிறது; கதம்ப கஸ் தூரி முதலிய மாலைகளெல்லாம் புலால் நாற்றம் நாறுகின்றன; காண்டீபமோ வளையவில்லை; நான் தொடுத்த பாணங்களோ அவர்பேரிற் செல்லாமல் முகங்கூசி முகமாறி விடுகின்றன. என்னுடைய மனம் மெத்தவும் இரக்கங் கொள்ளுகிறது; இனி நான் இவரோடு யுத் தஞ் செய்வது அரிது; ஐயோ! நானென்ன செய்யப் போகிறேன் என்று வேலை நிகர்த்த பார்த்தன் வெய்துயிர்த்து வெறிபிடித்து, வேறு தோன்றாமற் பரதவித்தான். இப்படி தருமராஜன்போ லிருக்கிற தென்னுஞ் சொல் செவியிலேறின மாத்திரத்தில், தானுமவனை யொப்பச் சந்தேகித்தவர்போல் அக்கேசவ நாமக்கிருஷ்ணன் முகஞ்சுளித்து, கரமுறுக்கி வாசவன் மகனை அர்ச்சுனனோடு தேரைத் திருப்பி வேகமாக முடுக்கி, தடதட படபட மடமட கடகடவென்று புரவி நெரியச் சென்று, தங்களுடைய போரணிப் படைக் குட் புகுந்து முரசக்கொடி மன்னனாகிய தரும ராஜனைத்தேடி; நாலுபுறத்திலும்நாடி முகம் வாடினார். அப்போது நகுலசகாதேவ ரிரண்டு பேரும் வந்துகூடி, ஐயா! நமது அண்ணவா கிய தருமராஜன் கர்னனுடன் எதிர்த்து, நெடுநேரம் போர்விளைத்து, அவனேவிய கணையால் மெத்தவருந்தி, சித்தமழன்று, சத் துவங் குறைந்து, துன்பமடைந்து சோர்ந்து கிருஷ்ணார்ச்சுனனுக்கு என் சங்கதி சொல் லுங்களென்று சொல்லி, சண்டைமுகத்தை விட்டு நீங்கிப் பாசறைக்குப் போகவேண்டு மென்றார். நாங்களே கொண்டுபோய் விட்டு இதோ வந்தோம் என்று இளையோர் சொல்ல, அந்தச் சொல்லைக் கேட்டவுடனே, ஒப்பில் லாத புஜவலிமைபெற்ற அர்ச்சுனன் சொல்லு கிறான்: என் தமையனாகிய தருமராஜன் சத் துருவினிடத்தில் அகப்பட்டுப் பயப்பட்டுப் பரிதாபப்பட்டு வருந்தி யிளைக்க, நான் மாத் திரம் அசைவற இன்று பகைவரை வென்று, இசைபெற நின்று எதிர்முனை சென்று, பூபா லரைக் கொன்று புகழ் கைக்கொண்டேன். தமயன் வருந்தத் தம்பி ஜெயம் பெறுவது மிகவும் நன்றாயிருக்கிறது. ஆ! ஆ! நானிருந் தும் என் தமையன் இப்படி வருத்தப்பட்டா ரல்லவா? என்று வருந்தி, இப்போதே அவரை நான் காணவேண்டும். அப்பா! தம்பிமார்களே? அண்ணா வீமராஜனே?மைத் துனர் முதலாகிய மற்ற மன்னர்மண்டலீகரே? கால்தலை தெரியாமற் கர்னன் யுத்தம் நடத்து கிறான். நீங்களெல்லோருஞ் சற்றுநேரம்அவ னெதிர் நடந்து, அவனையும் அவனுடன் வந்த சத்துருக்களையு மடக்கிப் போர் புரிவீர் களாகில் இதோவந்துவிடுகிறேன் என்று ஒரு வருக்கொருவர் துணையாகச் சேர்த்தனுப்பி, துவாரகாபுரிவாசனுந் தானும் மனக்குறை

வோடு துறையாகத் தேர் விடுத்து, தருமராஜனிருக்கின்ற பாசறைக்குத்தாமரையிற்றண்ணீரொப்பத் தவித்துக் களைத்து வந்தார்கள்.

### தருமன் விஜயன் வரவை வெற்றிவரவென் றேற்றத்தைக் கண்ணன் மறுத்துற்ற துரைக்க அதுகேட்ட வனுசனைச் சினக்க, அவரை யவன் தன் சபதங்கூறி எதிர்த்தல்

அப்போது இவர்கள் வரவைக் கண்ட வாசற்காவலாளிகள் சென்று, முரசக்கொடியோனை வணங்கி எதிர் நின்று, சுவாமி! பராக்; தேவரீருடைய திருவாய்தலின் முன்பு நரநாரணர் வந்தார்கள் என்று சொல்லவும், அந்த சொற்கேட்டபோதே அகண்டசாம்பிராச்சியப் பெற்றதைப்போல் அகமகிழ்ந்து, முகங்குளிர்ந்து, அதிசீக்கிரமாக யெழுந்து எதிரோடி இரவிகுமாரனை முடித்துவிட்டு இங்கு ஜெயம்படித்துவிட்டுப் போகும்படியாய் வந்தார்களல்லது, இப்போது நாமிருக்கும் பாசறையைத் தேடி வரும்படியாகிய காரியம் வேறொன்றுமில்லையென்று மிகமகிழ்ச்சிகொண்டு வந்து வாய்தலில் வந்திருக்கின்ற வரதன் மீதும், வாள்விஜயன்மீதும் அருட்கண்ணூட்டிக்கிருபைபூண்டிருந்தனர். அக்காலையில், நரநாரணரிருவருந் தேர் விட்டிழிந்து, சிரேஷ்டனைப்புகழ்ந்து தீர்க்கமாய் வணங்கினார்கள். அப்போது தருமராஜன் சீக்கிரத்தில் இருவரையுமெடுத்து, சந்தனமணிந்த கொந்தலர் புனைந்த தனது திணிந்த புயத்திற் பொருந்தத் தழுவி, தம்பிமுகத்தைப் பார்த்துத் தென்பாகச் சொல்லுகிறார். ஓ எனது அன்பிற்குரிய அநுசனே! தம்பி! முன்பு அக்கினிதேவனுக்குக் காண்டாவனத்தைப் பசியடங்கக்கொடுத்த பலனானது, ஆகாய வாசிகளாகிய காலகேயரென்னும் அறுபதினாயிரம் அரக்கரை ஜெயித்து அழகுடைத்தாகிய புகழ்படைத்தனை. அல்லாமலும் கடல்மத்தியிலிருந்த நிவாதகவசாள் மூன்றுகோடி பேரை வென்று, இந்திரபட்டத்தை நிலைநிறுத்தினாய். இந்தப் பலனானது அசுரகண்டகனென்னும் பேரைகொடுத்துச் சீரும் அடுத்தது. இன்று சூரிய குமாரனாகிய கர்னனைக் கொன்றமையால், ஈரேழுலகத்தையும் வென்ற இறைவனென்றும் ஏந்தலென்றும் இயம்பப்பட்டவனை என்னப்பனே! உன்னுடைய திறத்தை உன்னப்பனாகிய உம்பர் பிரானே யறிவார். என்று சொன்ன மன்னப்பனை பொன்னப்பனாகிய புயல்வண்ண நோக்கிச் சொல்லுகின்றார். ஓ சாந்தமூர்த்தியாகிய தருமநந்தனா சூரியபுத்திரனாகிய வீரியனுடனே ஆரியர் முதலிய சீரியகாரியரும் அகமகிழும்படியாகிய போர்புரிந்து, அவன்றொடுத்த அம்பகளினால் இந்தவிஜயன் நொந்து சிந்தை பிரமித்து யுத்தமுனைவிட்டு விலங்கி, தேவரீரைக் கண்டு வார்த்தை பேசித்தரிசித்து மறுபடி போகலாமென்று நமது சேனைப் படைக்குள் வந்து தேவரீரை நாடியபோது, தாங்களுங் கர்னனுந் தருமந்தப்பாமற் சண்டை புரிந்து அச்சண்டையிற்றாங்கள் உதிரம் வழிந்து, ஊற்றமொழிந்து, தேக மெலிந்து திரும்பி வந்து பாசறைக்குப் போனீரென்றும், நாங்கள் கொண்டுபோய் விட்டு வந்தோமென்றும் நகுல சகாதேவர்கள் சொன்னார்கள். அந்தச் சொல்லைக்கேட்கவே, எனக்குக் கூட மெத்த மனவருத்தம் உண்டாயது. அந்த பாதகரத்தால் தேவரீரைப் பார்த்துவிட்டுப் போகும்படியாய் இவ்வளவு தூரம் இவ்விடம் வரவேண்டியதாயது. இல்லாவிட்டால் இதுவரையிலுங் கர்னன் மாண்டிருப்பான். ஆகிலும் இப்போதென்னமுழுகிப்போயது? நமக்கு நல்லகாலம் வாய்த்தது என்று திருத்துளவமணிந்த செங்கண்மால் சொல்லினார்.

இவ்விதச் சொல்லானது தருமராஜன் செவியிற்பட்டமாத்திரத்திற் பதறிச் சினந்து பற்கடித்து, அக்கினிதேவன் அழலைக் கக்கி ஏழுநாக்குடனெழுந்த தன்மைபோலெழுந்து, கண்களிற் பொறிபறக்கக்கனைத்து, கவலைகொண்டு பதைத்து, கையைத்தேய்த்து, கனக்க அமர்ந்து, கலீரென நகைத்து, ஆ! ஆ! கிருஷ்ணா! கர்னன் இன்னும் உயிர்பெற்றிருக்கின்றானா? உடல் வைத்திருக்கின்றானா? இஃதென்னவாச்சரியம்? ஓகண்ணா! இது மெய்யா? அல்லது பொய்யா? எனக்குற்றது சொல்லையா? வெற்றிவிற்கையாவென்று முகங் கடுத்து, முனிவடுத்து, உடல் படபடத்து, மனம் விடவிடத்து, முன்னின்ற விஜயன் முகத்தை வெறித்துப் பார்த்து, பூர்வந் தொடங்கி இன்னாள்வரையிலும் அங்கர்கோமானாகிய கர்னனை ஒரே கணையால் மாளச்செய்து வானாளச்செய்வேனென்று மெத்த வலுவாகச் சொன்னவாக்கியம் அபாக்கியமாகி, சொற்சோர்வுபட வந்தாயே! இந்தச் சோர்வைக்குறித்து நம்போலொத்த அரசர்கள் என்ன நினைப்பார்கள்? அவர்கள் மனம் என்னமாய் வருந்தும்?

ஆகாயவாசிகளாகிய தேவர்கள் என்ன யோசிப்பார்கள்? எவ்விதமாகிய ஏளனம் விளைப்பார்கள்? கானகவாசிகளாகிய கலைகற்ற முனிவோர்களுடைய மனம் என்ன பாடுபடும்? இக்கடல் சூழ்ந்த புவிக்கிறையாகிய கலைநெறி பெற்ற காவலனே! துரோணாச்சாரியாரிடத்தில் ஓடிஓடி தநுர்வேதமெல்லாஞ் சம்பூரணமாய்க் கற்றனையே! அக்கினிதேவன் கொடுத்த அழியாத வில்லும், அறுத நாணியும், அக்ஷயத்தூணியும், களையாத சுவேதப் புரவியும், இணையாத தேரும் பெற்றனையே! தேர் செலுத்துவதில் மிகுதிறவானென்று சிகைதெரியாச் சன்னதங் கொண்டு இம்மண்ணைத் தின்னும் மாயவனைத் தேர்வலனாகக் கொண்டனையே; பிறைமுடிச் சடை பெற்றுப் பிறவாநெறியுற்ற பெம்மான், திறமுடனளித்த சிவாஸ்திர மென்னும் பாசுபதப் பெயர்கொண்ட தழற்கணை யொன்று தாங்கி யிருக்கின்றனையே; ஜெயமாகிய தீரவீர அனுமக்கொடி நாட்டினையே; பத்துபேரும் புகழப் பத்துவிதப்பேரை பரிவுபெறப் பூண்டனையே; ஓ எந்தலே! இவைகளெல்லாமிருந்தும் என்ன பிரயோசனம்? போர்முனைக்கு அஞ்சும்படியாகிய நெஞ்சுள்ளபேருக்கு ஒருவன் சொல்லி, அதனால் வருவதொன்றில்லை. இவைகளெல்லாம் அவரவர்கள் வினைப்பகுதியின லுண்டாகிய பிறவியின் குணமாகும். அப்பனே! சூதாடக்கூறிய ஆண்மைப்பயிரேறிய அரசர்கள் நிறைந்த சபையிற் பஞ்சையாகிய மனத்தையுடைய நாம், மனத்திற் கஞ்சாமற் சபதமாகிய வஞ்சினங்கூறியது என்ன லாபம் அடையவோ தெரியவில்லை.உன்னைவிட திறத்தையுடையவர்கள்எவ்வுலகத்திலுமில்லையென்று மெத்தவும் புகழ்ந்தேன். என் சித்தமுமகிழ்ந்தேன். ஓ செழுந்தேனிறைந்த செந்தாமரை மாலையணிந்த தீரனே! இப்படி மானமிழந்து போவதற்காகவா நான் புகழ்ந்ததும் மகிழ்ந்ததும். ஐயோ! நான் இக்கண்ணனைத் தூதனுப்ப நிச்சயித்தபோது, அவர்களுக்கொருதூதா? நானொருவனுமே பிளந்து விடுகிறேன். நானொருவனே களைந்து விடுகிறேன். என்று தளர்ந்திருக்கும் என்னுடன் போராடினீர்கள். உங்களை நம்பித்தானே பதினெட்டு நாளைப் போரென்று வைத்துக் கொண்டேன். அப்பா பற்குணா! இப்போது வேடிக்கைபார்க்கின்ற தேவர்களுக்கு முன்னே கர்ணனைக் கொல்லாமல் இன்னும் பொழுதை போக்கிக் கொண்டிருப்பையாகில், எந்தநாளையிற் போர் முடிவது? எந்தக் காலத்திற் சீர்பெறுவது? எந்த வருஷத்திற் சபதமுடிவது? எந்த யுகத்தில் நமக்கு வந்தவள் கூந்தல் முடிப்பது? நீ பிடித்த வில்லும் ஒருவில்லா? இந்த வில்லுக்கும் உனக்கும் ஒரு பெருமையுண்டா? என்று பலவாறாய் நிந்தித்தனர்.

இப்படி தமயன் சொல்லானது, அருச்சுனனுக்கு ஆலகால விடம்போற் சுறீரென்று செவியிலேறவே, ஒருதரம் உயிர்போய் உயிர்ப்படங்கி, மீண்டு முயிர்த்தெழுந் தாக்கக்கூவி, ஆ! ஆ! ஆ! என்றேங்கிப் பெருமூச்செறிந்து, அனல்காய்ச்சிய வேலாயுதத்தை அளிந்த புண்ணிற் சொருகினால் எப்படியோ? அப்படி போல் அலன்று, அதிர்ந்து, மிகு வேகமாய் வெகு கோபங்கொண்டு, முரசக்கொடி படைத்த முன்னோனை முறுக்காய் முறுக்கி முனிந்து, பார்த்து, முகங் கடுகடுத்து இதனை மொழியலுற்றான். ஐயா! நீரும் வீமனும் நகுல சகாதேவருங் கர்ணனை எதிர்த்துக் கனயுத்தம் விளைத்தும் அந்தக் கர்ணனைச் செயிக்காமல் உங்கள் பிராணனை நீங்கள் காப்பாற்றிக் கொண்டு ஓடிவந்து விட்டதும் உமது மனதுக்கே தெரியும். அப்படி தெரிந்திருந்தும், யுத்தத்தின் பெருமை உணர்ந்திருந்தும், எதிரியின் பலாபலம் அறிந்திருந்தும் இரக்கமில்லாமல், கிருபை யில்லாமல், யோசிக்காமல் ஒரு கீழ்மக்களைப் பேசும் பேச்சைப்போல் என்னை யிகழ்ந்து பேசியது உம்மைப் போன்றவர்களுக்கு இயல்பல்ல; காரியமல்ல; வீரியமல்ல. நான் பிரவேசித்த போர்முகத்தில் என்பாணங்களினால் எதிராளிகளுடைய விருது முதலியன அன்றையுண்டு சிதைந்த காலத்திலும், அவர்களது உயிர் போய்விட்ட காலத்திலும், இன்னும் எப்பேர்ப்பட்ட பொல்லாங்குகள் நேரிட்டபோதும், என் வில்லைக் குறித்து நிந்தித்த சத்துருக்கள் ஒருவருமில்லை. என்னைக் குறைத்துப் பேசின பேருமில்லை. ஆ! ஆ! கோமானே! கூர்மையாகிய பாணங்களைக் கொண்ட என்னுடைய விஜய காண்டீபத்தைக் குறைச்சலாக எனக்கெதிர் கூறிய பேர்கள் எவரானபோதிலும், அவர்களுடைய ஆவியைத் தாவி வாங்குவேனென்று சபதங் கூறி இருப்பது தமக்குத் தெரியுமல்லவா? அப்படி யிருந்தும், நீரிப்போது என்னையும் என் வில்லையும் இழிவாகத்தூறிப் பேசினபடியால், நான் சொல்லியிருக்கின்ற சபதப்படிக்குத் தாக்ஷண்யம் பாராமல் உமது தலையை வாங்குவேன் என்று மாதண்டஞ்சென்று,

வேதண்டங்கண்டு, தீதண்டாத் தவங்கொண்ட
காண்டீபன், மூதண்டங்கலங் குங் கோதண்டம்
போன்ற தீரகாண்டீபச் சிலையைவளைத்து,
நாணிமாட்டிப் பாணம்பூட்டி; ஆகர்ணபரியந்
தம் இழுப்பதானான்.

### கிருஷ்ணன் அருச்சுனனுக்குக் கௌசிகமுனிச் சரிதமுங் கடுஞ்சபத நிவாரணமுங்கூறி, தம்பியரை வெறுத்த தருமனையுந் தேற்றி, வீமனோடுகலந்து விளாகமடைதல்

அந்தவேளையிற் சொந்தமான பந்துவா
கப் பந்திருந்த நந்தநந்தனன் சிந்தைவரு
ந்தி, பெருங்கோபங்கொண்ட இந்திரன்மைந்
தனை இருகையாலு மணைத்து இறுகத்தழுவி,
சற்று அப்பாலழைத்துப்போய், ஓ நரநாமனே!
இது நல்லநெறி; மெத்த நல்ல காரியம்; நீ
கூறியிருக்கின்ற சபதம் வழுவாமற் காக்க
வேண்டியதே. ஆகிலும், அன்னியரிடத்தில்
மாத்திரம் நீ செப்பிய சபதஞ் செல்லுமல்லது,
தாய்-தந்தை-தமயன்-ஆசாரியன் இவர் முத
லாகிய பெரியோர் உரியோர்களிடத்திற்
செல்லுமோ? ஒருக்காலுஞ் செல்லாது.
மேலுந் தருமமுமல்ல. ஓ குணமேருவே!
இதை நீ அறிந்துகொள்ளக்கடவை. அதைக்
குறித்து ஒரு கதை சொல்லுகிறேன் கேள்.
என்று கோவர்த்தனகிரியைக் குடையாக எடுத்
தும், விளாங்கனி அடிப்பதற்கு இளங்கன்
றைக் கல்லாகக் கொண்டும், காரியாகாரியங்
களைத் தெரிந்து நடத்தியும், காலிகளுடன்
திரிந்தும், புள்ளாங்குழ லூதியுந் திரிகின்ற
மேகவண்ணனாகிய கண்ணன் விளம்புகின்றார்.
ஓ கற்பகக்காவுக் கிறையீன்ற காண்டீபதரனே!
வேதவேதாந்தந் தெரிந்த விப்பிரர் மெய்த்த
வர் கௌசிக மகாமுனிவனென்னும் பேர்
பெற்றவர். இவர் சித்தசுத்தியாய் நற்றவ
மிருந்து, கற்றவருடன் மெத்தநாட் கலந்து,
உத்தமத் தலங்களெல்லாந் திரிந்து, ஜீவன்
முத்தர் முதலியபேரெல்லோரையு முணர்ந்து,
இத்தனை நாள் பூரிப்பிரதக்ஷணஞ் செய்தோம்!
இனிமேல் ஓரிடத்தில் நிலைத்திருக்க வேண்
டும் என்று நினைத்து ஒரு நகரத்துக்கு அரு
காமையில் மடமொன்று கட்டிக்கொண்டு,
பொன்றுதலில்லாப் புண்ணியத்திற்கு ஏது
வான பொய்சொல்லாமை ஒன்று; கோபத்தி
னைக் கொல்லு நிலைமையாங் குணமான மௌ
னம் ஒன்று; இந்த இரண்டையும் விரதமாக
மேற்பூண்டு, பாபத்தினைத் தொடராமல், பரி
சுத்த இருதயத்துடன் தவம்புரிந்துவந்தார்.
அவருடைய நற்செய்கைகளைக் குறித்து உலக
மெல்லாங் கொண்டாடிப் புகழ்ந்து, சத்திய
வாய்மையில் இவருக்குமிஞ்சி எவர்களுமில்லை
என்று மகிழ்ந்து வணங்கித் தொண்டுபட்டு
இருந்தார்கள். இந்தப் பெரியவருக்குந் தவம்
நிறைவேறி நீடித்துவந்தது. இப்படி யிருக்கு
நாளினில் ஓர்நாள் சில திருடர்கள் சேர்ந்து,
இவருடைய மடத்துக் கருகாமையிலிருக்கும் ஒரு
பதியிலுள்ள வர்த்தகனுடைய வீட்டிற் கன்
னக்கோல் வைத்து, திரண்ட பொருள்களை
யும் நகைகளையுங் கொள்ளைகொண்டு, அவர்
கள் வருந்தி அழும்படி விட்டுப்போனார்கள்.
அப்போது தலையாரிகளுக்குச் சங்கதி தெரி
ந்து, அந்தத் திருடர்கள் போயிருக்கின்ற
காலடியைப் பிடித்துப் பின்தொடர்ந்துவர,
அதை அந்தச் சோரர்கள் தெரிந்து, மிகவும்
பயந்து, ஓட்டமும் நடையுமாயோடி ஒளிந்
துக் கொள்வதற்கு வேறிடமில்லாமையால்,
அந்தக் கௌசிகமுனியை வணங்கப்போகிற
விரதிகளைப்போல் மடத்துக்குள்ளே நுழை
ந்து பதுங்கினார்கள். அப்போது அடியை
மிதித்தாற்போல் வந்த காவலாளிகள் பார்த்து;
எங்குங் காணாமையால் மெத்தவும் யோசித்து
ஏங்கி, ஆயுதபாணிகளாய் அந்த மடத்துக்
குள்ளே நுழைந்து, அவ்விடத்தில் மௌனி
யாயிருக்கின்ற கௌசிக முனியைக் கேட்டார்
கள். அதற்குப் பாபந்தொடராமற் பொய்
பேசா விரதம்பூண்ட புண்ணியன் சற்று நிதா
னித்து, திருடர் இங்குவரவில்லை யென்று
சொன்னால் முழுப்பொய்யாகிறது. வந்தார்க
ளென்று சொன்னால் மகாபாவமாகிறது. இதற்
கென்ன செய்வோம் என்று யோசித்து வாக்கி
னாற் சொல்லாமல், அந்தத் திருடர் ஒளித்த
யிடத்தைக் கையினாற் குறிப்பு காட்டினார். அந்
தக் குறிப்பின்வழியே காவலர் சென்று திருட
ரைக் கண்டு, மடலொடித்துக் கட்டி வவ்விய
பொருளையுங் கைக்கொண்டுபோய் அரசனால்
அவர்களைக் கண்டித்துத் தண்டித்தார்கள்.
அப்பாற் சிலகாலஞ் சென்று அந்த கௌசிக
முனிக்குக் காலமாகி நிரியாணநேர, அக்காலவ
ருக்கு மீளா நரகங் கிடைத்ததென்று மேலோர்
சொல்லி யிருக்கின்றார்கள். இவ்விதிகாசத்தை
நீ கேட்டதில்லைபோலும்.

ஓ விஜயராஜனே! அதேன் மீளா நரகங்
கிட்டிய தென்றால், பொய்யுஞ் சொல்லலாம்.
அந்தப் பொய்யானது அநேகம் பேருக்குத்

துன்பத்தை விளக்காதிருக்குமாகில், அது சத்
தியமொழியிலும் மெத்த முக்கியமாம். மெய்ச்
சொல்லானது ஒருவருக்குப் பொல்லாங்கை
விளக்குமாகில் அது மகா பாவமாகிய பொய்
மையிலும் பொய்மையாம். ஆகையால், உன்
னுடைய சபதம் உத்தமனாகிய தருமராஜன்
பொருட்டில் தப்பிப் போனாலும் போகலாம்;
அதனாற் பாதகமில்லை. நீ இப்படி செய்யத்
தகாது. மேலும் நீ கூறிய சபதங்களெல்லாஞ்
சத்துருக்கள் நேர்ந்த யுத்தகளத்திலல்லது
மற்றோரிடத்திலுந் தலைகாட்டப்படா. அப்படி
யிருக்க தமயனாகிய தருமராஜன்பேரிற் கோபங்
கொண்டாய்; அக்கோபத்தினாற் பாபம் விளை
ந்து விட்டது; கைப்பிடித்த காண்டீபத்தை
வளைத்து கணைதொடுக்கிறே னென்று கடு
மொழி புகன்று முனிந்தாய். இதனால் நீயாய்த்
தேடிக் கொள்ளாமல், தனக்குத் தானே வினை
வந்து மூண்டது என்று அரிவாசுதேவன்
சொல்ல, அதைக்கேட்ட விஜயன் மெத்தவும்
மெலிந்து சுவாமியை நோக்கி, ஓ எமது பெரு
மானே! நான் என்ன செய்வேன் இப்போப்
பட்ட சபதம் முன்னே சொல்லி யிருக்கின்
றேன். தேவரீர் அந்தச் சபதமுந் தப்பாமல்,
தமயனு நோகாமல் நிறைவேற்ற வேண்டும்;
அண்ணா அவர்களை எதிர்த்துப் பேசிய வார்த்
தையால் வந்த பாவமும் நீங்கவேண்டும்
இதற்கெப்படி? என்று கிரீடி கிலேசப்படும்
போது, ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி அக்கிரீடியைப்
பார்த்து, அப்பா அர்ச்சுனா! நானொரு மர்ம
மாகிய தர்மஞ் சொல்லுகிறேன். அந்தப்படி
நீ நடத்துவையாகிற் சபதமும் நிறைவேறிய
தைப் போலாம் பழிபாவமும் நீங்கும்.
என்று பரந்தாமன் புகல, அஃதென்ன
என்னையனே யென்று தொழுது அருச்
சுனன் கேட்க சுவாமிசொல்லுகிறார். ஐயா சவ்
வியாசாசீ கேளும்; இவ்விதபாவங்கட்கு பிரா
யச்சித்த சாஸ்திரத்திற் சொல்லி யிருக்கிறது
என்னவென்றால், கொலைசெய்தற்கு பதிலாய்
அவர்கள் மனங்குன்ற பேசினாலே போது
மென்றிருக்கிறது. தருமசாஸ்திரத்தில் என்ன
சொல்லுகிறதென்றால், பெரியோர்களை மரியா
தைக் குறைவாய் ஒன்று சொன்னாற் கொலை
செய்வதைப்பார்க்கிலும் மிகக்கொடியதென்று
சொல்லி யிருக்கின்றது. இதுவே உயர்ந்த
கேள்வி நூல்; வல்லவர்களுடைய கருத்தும்
ஆகையால், நீ யிழிவாக சிலபேச்சை பேசுவை
யாகில், இந்தத்தருமராஜனாகிய உன் தமயனை
உன்சபதப்படிக்குத் தலைவாங்கியதற்கு ஒப்பா
யிருக்கும்; இது உண்மையென்று உந்திபூத்
தோனுரைத்தார். அந்தச்சொல்லுக் கிணங்கிய
அர்ச்சுனன் பார்த்து இளைத்து இருகரத்தை
யுஞ் சிரத்திற்குவித்து, இப்படியு நேரிட்டதல்
லவா இறையேயென்று வணங்கி, நராதிபனா
கிய தர்மராஜனைதிரிற் சென்று நோக்கி, தன்
னுடைய நாவானது இதுவரையிலும் யாரை
யும் பேசியறியாத பேச்சுகளைத் துச்சனமாகப்
பேசி, தேவர்கள் முதலிய யாவருந் திகைக்கும்
படியாக வார்த்தை ஏசி, தனது கரணங்கள்
மூன்றுந் தடுமாறத் தளர்ச்சி கொண்டு நின்
றான். அப்போது பேறன் குமாரனாகிய பெரி
யோன் யாதுசெய்வார்? பாவம் இதனந்தரங்
கந் தெரியாதவராய் ஒன்றுந்தோன்றாமல், ஓ
ருத்திரமுஞ் சொல்லாமல் சோர்வடைந்து,
மனந்துறந்து எனக்கு நாடுநகரம் - பட்டாபி
ஷேகம் - பெண்டுபிள்ளை இவை யொன்றும்
வேண்டா மென்று கூறித் துறவடைந்து
வனத்திற்போய் தவஞ்செய்வே னென்று
ஆடையாபரண மணிகுண்டல கிரீடாதிகளை
மாற்றி கானகநோக்கி நடந்தார்.

அவர் துறந்து போவதைக்கண்ட நர
நாரணர்களிருவரும் பறந்து போவதுபோற்
சென்று; சிறந்த தர்மராஜனுடைய செந்தா
மரைத்தாளில் வீழ்ந்து, நாங்கள் விசனத்தி
லாழ்ந்தோம்; தேவரீர் எங்கள்பேரிற் கிருபை
வையும் என்று இரக்கமாகவேண்டி, நடு நாய
கம் போன்ற சத்தியவானைச் சமாதானஞ்
செய்து, அழைத்துவந்து ஆசனத்திலிருத்தி,
அவருடைய மனோதுக்க மாறும்படியாய் மிகு
ந்த எழ்மையுந் தாழ்மையுமாக அநேகம்
வார்த்தைகள் படித்து, ஓ தரும சொரூபியா
கிய ஐயா! நீர் திரிபுரசம்ஹாரியான சிவனைப்
போல இவ்விடத்தில் நின்று எங்களை விடு
விப்பீராகில், நாங்கள் அக்கினிக்கணைபோல
அரைநொடியிற் சென்று திரிபுராதியர்களா
கிய நயித்தியரை அழித்தவர்போற் கர்ணனைக்
கடுகப்போக்கி, அவனுயிரைக் கைக்கொண்டு
வருவோம் என்று பலவாய்மை விளம்பினார்
கள். அப்போது பொங்குங் கிருபைக் கண்
ணுடைய புண்ணியத் தருமராஜன் கோபம்
விடுத்து புயம்பூரித்து, நரநாரணர் இருவரை
யும் நோக்கி, நீங்கள் சென்று படைமுகம்
வென்று ஜெயங்கொண்டு வாருங்களென்று
திருவாய்மலர்ந்தருளினார். முரசகேதனுடைய
அருள்கொண்ட இருவரும் அவருடைய சர
ணங்களில் தலைசாய்ந்து வணங்கி, ஆசீர்வச

ணம்பெற்று, விடைகொண்டு சென்று ரதமேறி பட்டப்பகலிற் சந்திரனுதயமானானென்னும் படியாய் விளங்கும் வெள்ளைக்குடை விரித்துப் பிடிக்க, இருபுறத்திலும் வெண்சாமரை குளிர்ச்சியாய் வீச, மயில்விசிறி முதலானவைகளாலுண்டாகுங் காற்றுகள் திருமார்பிற்றாக்க, ஜெய்பேரி பூரி முதலிய சின்னங்கள் கடலோசைபோல் முழங்க, வன்னக்கொடிகள்-விருதுகள்-டால்கள், வகைவகையாயெடுத்துவர புகழ்வோர்-வந்திப்போர்-கட்டியர்-பட்டுவான்கள் இவர்கள் துதித்துக் கீர்த்திப்படிக்க, விசேஷ அரசர் பக்கங்களில் எக்களிப்புடன் கைகொட்டி ஆர்ப்பரித்துவர, அழகிய யானைகள்-குதிரைகள்-தேர்கள்-பதாதிகள் இவை முதலிய சேனைகளைக்கொண்டு, துஷ்டத்துய்மனுந் தம்பிமார்களும் நின்று சண்டைசெய்யும் போர்முகத்துக்கு வந்து, அப்போது நடந்து வருகிற போர் வீரத்திறங்களைப் பார்த்து, புண்ணியனான புண்டரீகாக்ஷன் கண்ணியமான திறத்தை அர்ச்சுனனுக்கு சொல்லுகின்றார்.

ஐயா நரனே! இன்றைய யுத்தத்தில் நம்மெல்லோரையும்வென்று ஜெயம்பெற வேண்டுமென்று எண்ணிவந்திருக்கின்றான் கர்னனவன். அவன் இன்றைக்குவென்று வெற்றிகொடுக்கவும்; அதைப்பெற்று அவனிமுற்றும் தன் குடைநிழற்படுத்தி ஆளவேண்டுமென்னும் ஆசையினால், ஆஜராய்க் காத்திருக்கின்றான் விவேகமில்லாத துரியோதனன். இது அவர்கள் எண்ணிவந்திருக்கிற கருத்து; இன்றையப்போது வெற்றியை நாம் கொள்வோமாகில், தப்பாது கர்னன் போய்விடுகிறான். அப்பால், இந்தத் துரியோதனனுக்கு உற்றதுணை ஒருவருமில்லை. இப்பால், இருப்பவரெல்லாம் பதினேழு நாளிலுங் கழிபட்ட மோண்டி-முடம்-சப்பாணி-கூன்-குருடு ஆகிய இவர்களே. ஆகையால், ஓ சத்துருக்கள் புகழும்படியாகிய தோள்வலிமை பெற்ற தோன்றலே! இதுகாறும் நமது சிந்தையெல்லாம் நையும்படியாகச் செய்துவந்த பலவித பாசங்களுஞ் சிலவித மோசங்களுந் துரியோதனனால் விளைந்ததென்று தேறாதே. இந்தப் பாவமாகிய கைதவங்களெல்லாங் கர்னன் விளைவித்தவனென்று நீ தாராளமாய் நினை. இஃதன்றியும், அரசர்களுக்கு முன்பாக பெருஞ் சூதினில் உங்களைவென்று திரௌபதியைச் சபையேற்றிப் பிழைசெய்த நாளையில், இந்தக் கர்னன் அந்தவேளையிற் சொன்னசொல் மிகவுங் கொடுமையுடையதென்று உன் மனதிற்றோன்றவில்லையோ? அர்ச்சுனா! அதை மறந்து போனாயோ? மறக்காதே; வேண்டுமானால் நான் உனக்கு கியாபகஞ்செய்கின்றேன் கேள். நமது திரௌபதியானவள் பல அரசர்கள் கூடியிருந்த மகாசபையிற் கோவென் றழுது நின்றபோது, இக்கர்னன் அந்த மாது சிரோமணியைப்பார்த்து, உனக்குரிய பாண்டவர்கள் துரியோதன மகாராஜனுக்கு அடிமைவேலை செய்யும்படிக்குச் சொக்கட்டானில் தோற்றுப் போனார்கள். இனிமேல் உனக்குக் கிடைக்க மாட்டார்கள். நீ அவர்கள்பேரினில் ஆசை வைக்காதே; ஆகையினால், இந்தச் சபைநிறைந்தபேர்களில் ஆராகிலும் உன் கண்ணுக்கிசைந்த ஒரு புருஷனைப் பார்த்து கைகோர்த்துக்கொண்டு போடி. வாடி,அடி குடிகேடி. என்று புகன்றானே; ஓ புயவலிவாய்ந்த புருஷதீரனே! அப்பேர்ப்பட்ட மகாபாவியாகிய கர்னனை துரியோதனனுக் கெதிரிற் புரட்டிப் புரட்டி அடித்து, இந்தத் துரியோதனன் கண்கலங்கி அழுது எஞ்சி இளைக்கும்படியாய் முன்னுதாகச் சென்று கொல்லுவது தகுதி. மானாபர்ணனாகிய நீ, தானாகரனை அக்கர்னனை இன்று வாட்டி வதைத்தொழிக்க வேண்டுவது உனக்குக் கடமையாக்கும் என்று கண்ணன் சொல்லியருளினர்.

இப்படி அர்ச்சுனனுக்கு அரிபரந்தாமன் கோபமுண்டாகும்படி கூர்சீவிச் சொல்லவும், அத்தனஞ்செயனுக்கு எரியுங் கொள்ளியை ஏறத் தள்ளியதைப்போல், இருகண்களும் எரிமூண்டு, தீப்போற் செவந்து, மனமழன்று, இப்போதே பகையொழித்து வெற்றிபெறுகிறேனென்று முனைந்து, படைமுகத்திற்கு புகுந்து தடைபடாமற் செல்லுவதானான். அப்போது, வாயுகுமாரனாகிய வீமசேனன்கண்டு தருமராஜனுடைய க்ஷேமத்தை விசாரித்தான். அதற் கருச்சுனன் வீமனுக்குச் சமீபத்தில் வந்து, அவன் சந்தோஷிக்கும்படியாய் மூத்தோனுடைய சௌக்கியங்களைச் சொல்லி, கர்னனைக் கொல்லாமல் வந்ததைக் குறித்துத் தன்னை நிந்தித்த தன்மைகளையுஞ் சொன்னான். அதைக்கேட்டவுடனே வீமனுஞ் சினந்து, மறுபடிதேறி, அவரைத் தியானித்து அமர்க்களம் புகுந்தான். பின்பு அவ்விடத்திலுள்ள மன்னர் முதலாகிய பேர்கள் முனைந்து முன்னே செல்ல, பின்னே அர்ச்சுனன், அவன் பின்னாக நகுலசகாதேவர்,மேற்

புறஞ் சாத்தகி, வடபுறம் உத்தமோசன், இடபுறம்உதார்கன் இப்படியாக வருமிவர்களோடு துரோணவயிரியாகிய திர்ஷ்டத்துய்மன் இடமும் வலமுந் நெருங்கி இடை விடாமல்வர, அசுரேசரைச் செயிப்பதற்குச் சிவபெருமானெழுந்த திரிபுர சம்ஹார காலம்போல் வந்த அர்ச்சுனன், கர்னனுக் கெதிரிற்போய்க் கலந்து திடங்கொண்டிருந்தான். இவனுக்கு முந்திச்சென்றவீமசேனன் கதாயுதங்கொண்டு மதாசல முதலிய பதாதிகளைக் கலக்கும்போது, கர்னன் பெரிய விற்கொண்டு உயர்ந்த கணைகளை அளவறவிடுக்க, வீமன் அக்கர்னன் விடுக்குங் கணைகளையும், அவன் சேனைகளில் இருக்கும் ரத கஜ நராள்முதலிய யாவற்றையும் வடவாமுகாக்கினியைப்போல் எரித்துத் தகித்து, கொற்றவர்களுடைய மொய்த்த மெய்ப்புதைய உருத்து, சாரிகைக்கொண்டு திரிந்து, சரபஜால மெனப்படர்ந்து, தனக்கெதிரொருவரு மில்லாமல் உலகம் அதிர்ந்து போகும்படி உக்ராவேசங் கொண்டுலாவினன். அப்படியுலாவும் வாயுகுமாரனை நாணிமாட்டிய விற்பிடித்த நராதிப ரெல்லாமதித்து, மனம் பொறுமல்நடுங்கி, அங்கதேச ராஜனுடைய படைக்கும் நமது பிராணனுக்கும் புதுசாய் ஏற்பட்டுவந்த அந்தகன் இவனே என்று குலைகுலைந்தார்கள்.

### வீமனுக்குந் துச்சாதனனுக்கும் யுத்தம் இதில் துரியோதனன் சகோதரரிற் பதின்மர் வதை

இப்பேர்ப்பட்ட சமயத்தில், துச்சாதனனும் அவனுடைய தம்பிமார்களும் உச்சிதமாகிய வில்லை வளைத்து நாணிதொடுத்து, சோனமேகம் பொழிவதைப் போன்று வாளி சொரிந்து, வானுலகம் போவதற்கு வழிதேடி வருபவர்களைப்போல் வந்து, பூர்வத்தில் ராஜ சபையில் மொழிந்த சபதங்களை முடிக்கும்படியாய்க் கங்கணங்கட்டிச் செயம்படப் பயப்படாமல் அமர்க்களத்தில் ஆர்ப்பரித்துத் தேர் மேற்கொண்டிருக்கும் வீமசேனனுக்கு நேராக நின்றடுத்து, இன்றைக்கே பாண்டவர் ஐவரையும் படைகளுடனே முடிக்கின்றோமென்று பலவாறாக உருத்து நினைத்துக் கோபித்து, மநோவேகத்திலும் மிஞ்சியோடுகின்ற துரிதப்புரவி பூட்டிய தேராளிகள் தன்மைப் புடைசூழவும், வீரபேரி-யுத்தபேரி-ரணபேரி முதலாகிய வாத்தியங்கள் அண்டங்களதிர முழங்கவும் வந்தார்கள். நேத்தியாகச் செங்கோற்றாங்கிய துரியோதனன் தம்பிகளாகிய இத்துஸ்வாசனன் முதலாகிய தம்பிமார்களை வாயுபுத்திரனாகிய வீமன் கண்டு, மழைமேகம் போல்யிடித்து இரைந்து அதிர்ந்து, அண்டம்பிகிர்ந்து எண்டிசையுமொழிந்து போகும்படியாய்ச் சில வசனங்களைப் பேசுகிறான்.

"துச்சாதனனே யுனைப்போலுஞ் சூரருளரோ சூரரெலா, மெச்சாநின்றார் வேத்தவையின் மேனாளீ செய்விறலாண்மை, யச்சாரிரதப் போர்க்கு முனைக்கார் வேறெதிருண் டம்மவி ரைந், திச்சாபோசன மாகவிருந் தின்றோ மற லிக்கிடுநாளே. இன்றோவுன்றன் சென்னி துணித் திழிசெம்புனலிற் குளித்திடுநா, ளின்றோவழலி னுற்பவித்தா ளிருளாரளக முடித்திடுநா, ளின்றோதாகங் கெடநாவுக் கிசைந்த தண்ணீர் பருகிடுநா, ளின்றோவுரைத்த வஞ்சினங்க ளெல்லாம் பயன்பெற் றிடு நாளே. வென்றேயவனி முழுதாளும் வீரோ தயனின்றம் முனையுங், கொன்றேநாளை யமர ரெதிர்கொள்ளக் கடிதின் வரவிடுவ, னின்றே நீ போயிடம் பிடிப்பா யெண்ணவெண்ண மெண்ணிமன்றி, லன்றே கலகம் விளைத் தென்று மழியாவரசை யழித்தோனே."

ஓ துச்சாதனனே! உன்னைப் போலொத்த சூரானு முண்டோ? உலகிலுள்ள சூரர்களெல்லாம் உன்னை மெத்தவும் மெச்சுகின்றார்களோ? பூர்வம் ராஜசபையினிடத்தில் நீ செய்த ஆண்மை யுத்திக்கும், நீ நடத்திய வெற்றி மேன்மைக்கும், நீ பேசிய கெருவப் பேச்சிக்கும், நீ ஏசிய அற்ப யேச்சுக்கும், ரத கஜங்களுடன் சேர்ந்து வந்து இப்போது நீ கொடுக்கப்போகிற கொடும்போருக்கும் எதிரி; என்னைவிட வேறே யாரிருக்கிறார்கள்? அம்மம்மா! உன்னை இச்சாபோசனமாக எமனுக்கு விருந்திடப் போகிறநாள் இன்றுதானோ? அப்பா! உன் தலையை அறுத்து, அதனிடத்திலிருந்து பெருகிவராநின்ற இரத்த வெள்ளத்தில் வீழ்ந்து, என்னுள்ளச்சூடற அதில் மூழ்கிக் குளித்து, என்னுயாசந் தீரப் போகிற காலம் இன்றுதானோ? துருபதேயன் செய்த யாகாக்கினியிற் பிறந்த திரௌபதா தேவியினுடைய இருள்போன்ற கூந்தல் முடிக்கப் போகிற சுபதினமாகிய நல்லகாலம் இன்று தானோ? உன்னுதிரத்தை வாரி என்னுவுக்கு ருசியாகிய தண்ணீர்போலக் குடித்துத் தாகந் தணியுங்காலம் இதுதானோ? ராஜசபையில் நாங்களைவருஞ் சொல்லிய சபதங்களெல்லாம்

பிரயோசனப்பட்டுப் பலிக்குங்காலம் இன்றைக்கு நேரிட்டதோ? ஆ! ஆ! இது மெத்த நல்ல நாளாக்கும்.

ஓ வீரோதயமுள்ள வேந்தனே! எங்களைச் செயித்து ஏகசக்ராதிபதியாய் உலகத்தையாளவேண்டுமென்று எண்ணங்கொண்டிருக்கிற உன் தமையனாகிய துரியோதன ராஜனை நாளை யுத்தத்தில் நாசப்படுத்தி, அரம்பா ஸ்திரீகள் முதலாகிய அமரரும் எதிர்கொண்டு அழைத்து உபசரிக்கும்படியாய் அனுப்பி வைக்கிறேன். இன்றையப்போரில் உன்னைக் கொன்று முன்னாடி அனுப்புகிறேன். நீ முந்தி முன்னதாக விரைந்துபோய், செவ்வையாகப் பிழைத்த உன் அண்ணனுக்கும் அவனுடன் கூடக் கூட்டமாக வரப்போகின்ற மன்னருக்கும், மற்றத் தம்பிமார்களுக்குஞ் சீராகிய இடந் தேடிவைக்கக் கடவை ஓ சீமானே! ஓ சஞ்சித பாவத்தால் எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணிக் கிஞ்சித்து போகத்திற் சந்தோஷம் அடைந்து மகிழ்ந்து, அப்போதே கலகமும் விளைந்து என்றைக்கும் அழிவில்லாத சந்திர குல அரசாட்சியை அனியாயமாய் அழித்த பாபி! ஓ குலமுறை உணராத கோபி? ஓ குருத்துரோகி! என்று இப்படிப் பலவாறாகப் பேசினான். இப்படி பேசிய வீமசேனனைப் பார்த்து மறுவார்த்தை ஒன்றும் பேசாமற் சுரமடங்கி, ஊமைபோல் நின்றான் துற்சாதனன். அந்தச் சமயத்தி லத்துஸ்வாசனை வீமன் ஏசிய சொல்லெல்லாங் கேட்டிருந்த விசுத்திரவீரன்-விசித்திரபாகு-விசித்திரன்-விநோதன்-அகண்டதரன்-விஷையன்-ஆகண்டிகன்-சுசிநாதன்-சுகிர்தன்-போரங்கன் என்னும் இந்தப் பத்து பேர் தம்பிமார்களுக்கும் மனந்தாளாமற் புறப்பட்டு, பயம் விளைக்கும் வில்லும் கணையுந் தேரினையுமுடையவர்களாய் நானாமுகத்திலும் பரவி, தேர்ச்சக்கரம் போனவழி யெல்லாஞ் செந்தீப் பொறியும், பெருங் கரும்புகையுங் குவிந்தோங்கும்படிக்கு ஓடிவந்து, செழுங் கணைகளைத் தொடுத்து எதிர்வந்தடுத்தார்கள். அவரவர்களுக்கு இச்சையானபடி கணைகளைத்தையும், சுத்த வீரனாகிய வீமசேனன் தன் கணையாற் றடுத்து, மறுபடியும் ஆளொன்றுக்கு ஒவ்வொரு அஸ்திரத்தை எடுத்து அபிமந்திரித்து வில்லிற் பூட்டி விரைவில் விடுத்தான். அந்த வீமன் தொட்ட கணைகள் பத்தும் மொத்தத்துக்கும் பற்றி, குத்திக் குத்திச் சுற்றி, கொத்திச் சித்திரமொத்து, திக்கும் பக்கென் துக்கத்தாக்கி, ஒரு கணத்திற் றலையைப் போக்கி அவர்கள் பிராணனையும் நீக்கி யொழிந்தன. ஐயோ! தம்பிமார் பத்துபேருந் தங்கள் தங்கள் இரதத்திற்றானே மாய்ந்து சாய்ந்தார்கள். இவ்விதமாகச் செத்த பத்து பேரையும் ஆகாயத்தி லிருக்கும் அழகார்ந்த அரம்பா ஸ்திரீகளும், மற்றத் தேவர்களும், ஆசையுடன் வேகமாக வந்து, தேவதுந்துபியோடு முந்தி புகுந்து, புட்பச் சந்தனாதிகளைக் கையிற்றந்து, விமானத்தேற்றி வீரசொர்க்கங் கொண்டுபோனார்கள். ஒரே காலத்தில் உயிருக்குயிராகிய தம்பிமார் பத்துபேர் வீமன் கணையாற் சிரந் துணிந் திறந்ததைக் கண்ட துற்சாதனனுக் குண்டாகிய கோபவழலானது, பாரெல்லாம் நிறைந்து ஊரெல்லா முறைந்து பரிக்கமாட்டாமற் படபடத்து, உடல் பதைபதைத்து, பயிரின் பருவகாலம் அறிந்து பொழிந்துவரும் மேகங்களைப்போல் வீமசேனனுடைய மயிர்க்கால்தோறும் உருவும்படியாய் வச்சிரக்கணைகளைப் பொழிந்து, முகம்மாறுமல் மலைந்தான். அப்போது துற்சாதனன் விட்ட சரங்களெல்லாம் கல்லின்மேல் வீழ்ந்த மழைத்துளி சிதறுமாப்போற் சிதறும்படியாய் வீமசேனன் பல கடுங்கணைச் செலுத்திக் காய்ந்து, வாய்ந்த நூல் ஆய்ந்த வலிமைகொண்டு, தோள்வரைக்கும் நாணியிழுத்து, பின்னு மேன்மேலாக வேண்டிய சரங்களை உரம்பெற விடுத்துக் கொடும்போர் விளைத்தான்.

/ கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! இந்தத் துச்சாதனன் எப்போது நமது கையில் அகப்படுவானென்று காத்துக்கொண்டிருந்த வீமனுக்கெதிரில் வலுவில் வந்து அகப்பட்டபோது, சும்மாவிடுவானா? பெரும் பிரக்யாதிபடைத்த இவ்வீமசேனன் இந்தப் பிரகாரம் போர்புரியுங்காலத்தில், இவ்வீரன் தொடுத்த பாணங்களை யெல்லாம் ஒன்றொழியாமல் முறித்து, ஓயாமற் கணைகளை விடுத்து, தன் தேகத்திற் படவொட்டாமல் தடுத்து, ஏழு அக்கினியாஸ்திரம் எடுத்து மந்திரித்து எய்தான் துச்சாதனனானவன். அந்த ஏழு கணைகளும் எரிந்து, ஈரேழுலகத்தையும் எங்கச்செய்து, வந்து விழுந்து வீமனுடைய தேரிற்பூட்டிய குதிரை நான்கையும், சிங்கக்கொடியையும், மணியுற்ற தேரையும், அணிபெற்ற வில்லையும், துண்டந் துண்டமாகத் துணித்து வீழ்த்தின. தேர் அழிந்தவுடனே, வீமசேனன் வேறொரு சேமத்தேரிற்பாய்ந்து,

க்ஷீராப்தியில் மத்தாகச் சுழன்ற மந்தரகிரி போன்றவேறொரு வில்லை வளைத்து, துச்சாதனன் தொடுத்த பாணங்களுக் கொப்பாகிய பத்துப் பாணங்களைப்பூட்டி, ஆராதித்துத் தொழுது, அதட்டி, ஆக்கிரமித்து, அவனுடைய தேரழியவும், கொடி துணியவும், வலவன் வாயவும், குதிரை நான்குங் குறைந்துருளவுமெய்து, அவனது இருபுயத்திலுந் துளைக்கும்படி பின்னுஞ் சில இடிபாணங்களை விடுத்தான். அதுகாலையில், திரௌபதாதேவியின் கறுத்த அளகத்தைத்தீண்டி இழுத்து வந்து வஸ்திரபங்கஞ் செய்த மாபாதகனாகிய அக்காளையானவன், தேர் - சாரதி முதலியவைகள் சிந்தியவுடனே பூமியிற்பாய்ந்து, தோற்படையாத கதைப்படைகொண்டு, காற்றுடிப்போற் சுழன்று, மேலெழுந்து, வீமனுடைய தேர்மேற்றாவி மோதினன். அந்தக் கதையடியால் வீமனுடையரதமொடிந்து, சாரதி மடிந்து, குதிரைகளும் பொடிந்து, வேலைமுடிந்து போகவே, ஆ! சபாஷ் என்று வீமன் பூமியிலிழிந்து, சற்றுநேரம் நின்று நிதானித்து, ஆ தம்பி! இனிமேலும் உன்னுடைய சிலம்பஞ் சாயுமா? ஒருக்காலும் நினைக்காதே என்று சிலமொழி மொழிந்து, கைப்பிடித்த வில்லை நாணி தளர்த்தி வைத்துவிட்டு, தேருக்குள்ளிருந்த போருக்குச் சிறந்த வீரக்கதைக் கொண்டு; காது நெறித்து வாலைமுறுக்கித் தண்டிடத் தெகிறுந் தனிப்புலிபோ லெழும்பி, துஸ்வாசனனுக்கு எதிரிற்குதித்து மண்டலமிட்டு, இருவரும் எதிர்த்து, இடதுகால் முன்னும் வலதுகால் பின்னும், வலதுகால் முன்னும் இடதுகால் பின்னுமாக வைத்து, இடது பக்கத்திலும் வலது பக்கத்திலும் முனைகாட்டி முனைந்து, இருந்து, பதுங்கி, ஒதுங்கி, ஒளிந்து, கரமாட்டி, தலைநீட்டி, கதையுடன் கதைபூட்டி, மிகுந்த தாட்டியான புஜங்களைத்தட்டி, மீசை முறுக்கி, புருவநெரித்து, புயல்போலிரைத்து, ஒருவர்தோளில் ஒருவர் அடித்து, ஒருவரையொருவர் இறுகப்பிடித்து, அண்டம் அதிரச் சிரித்துக் கனைத்து, பிண்டங் கலங்கப் பிரித்துப் பகைத்து, கெதையைக் கெட்டியாய்ப் பிடித்து மடித்து, அக்கினிப் பொறியெழ அடித்துத் தடித்து, மண்டலாகிர்தி கொண்டு வளைவு வட்டமாகச் சென்று, மறுபடியுங் கிட்டிநின்று, ஒருவரடியை ஒருவர் மிதித்து, ஒருவரையொருவர் உதைத்து, உதிரம்வடியச் சிதைத்து, காயத்தைக் காயத்தால் மறைத்து, தூரத்துலேயில் ஓடிப்போய் நின்று இமைகொட்டுவதன்முன் எப்போதும்போல நெருங்கிக்கிட்டி, தலையினால் முட்டி, கதையினாற் குட்டி, கோபம்வரப் புடைத்து, கொதித்துக் கிடுகிடுத்து, விதவிதமான விசித்திரங்களாகிய யுத்தம்புரிந்து, ஒருவரையொருவர் பலவிதமாக வருத்தப்படுத்தி, வெவ்விய விஷம்போல் வெகுளி கொண்டெதிர்ந்து, கண்பொறி கதுவக் கரும்புகை புகைந்து, பலிச்சட்டி எடுத்து இரையும் பக்குவர்போல் எக்களிப்புடன் கொக்கரித்து, விசையுடன் ஓடிக்குதித்து, மேற்பாய்ந்து கூடிமதித்து, ஒப்புவமையில்லாமற் கிறுகிறெனச் சுழன்று, கைமாறிக்கைமாறி விறுவிறெனக் கதையைச் சுழற்றி மேலெறிந்து, அதனை மீண்டும் ஒருவகையாற் பிடித்து முகமலர்ந்து, அகிழ்ந்து சற்றுநேரம் இளைப்பாறி நின்று, போர்க்கள வீரர்கள் அறிந்து பின்னு மின்னு நின்று நகைக்க, முதிர்ந்த சபதங்களைப் பலவாறாக உரைத்து, வேடிக்கை பார்க்குந் தேவர்களும், வீராளாகிய பூபர்களுங் கண்ணாரக்கண்டு, உயிர்விண்டு - சித்த மடங்கி - தீர மொடுங்கி தியங்கி மயங்கி வாடும்படியாய் மலையுடன் மலை மலைந்து மல்யுத்தங் கற்பதுபோல் இடமாறிப் பகைத்து, கொடுங்கதை எடுத்துப் புயங்களிலூன்ற மொத்தி, கோடைகாலத்திடிபோல் குமுகுமுவென்று ஓசையுண்டாகும்படி மோதி, அடா துர்ச்சாதனா! இனி யென்ன சொல்லுகிறாய் சேதியென்று ஒருவரையொருவர் உரக்கக்கூவி உடன்று, மாதலம் பிளந்து, பாதலங்கிழிந்து, அஷ்டநாகமும்வயிறழன்று நெஞ்சினில் விக்கி, நஞ்சினைக் கக்கி, எஞ்சி இளைக்கும்படியாகவும், சக்ரவாளகிரி பக்-பக் யென்று நெக்குவிடவும், திசை யெட்டுஞ் செவிபட்டுக் கெடவும், திக்குக் கஜங்கள் தியக்கப்படவும், அண்டமுகடு விண்டு நவகண்டமும் நடுங்கவும், சப்த மேகங்களும் பறந்தோடிச் சென்று பரியகுகை புகுந்தொளியவுமாகப் பகை பாராட்டி இருவருங் கொதித்து, செம்புருக்கின செயல்போலும், செம்முறுக்கை மலர்போலும், செம்பவள நிறம்போலும், செம்பரத்தம் பூப்போலும், செங்காந்தளிர் போலும், செம்பாறைக் கற்போலும், தீப்பறக்கும்படியாய் இருவர் கண்களுஞ் செவந்து, இப்பி முத்தினைப்போல் நெற்றியிற் பொடிவியர் வரும்ப இறுமாந்து ஆகாய நடுவில் இடிக்கும் இடியைப்போ லதிர்த்து, அண்டகோளகைகள திர எதிர்த்து, பொரிபொரிந்து.

முரிமுரிந்து-கரிகரிந்து- விரிவிரிந்து-புருவச் சிலை வளைய, அழகாகிய புயமலை உளைய, நமடு கடித்து, உதடு மடித்து, இமயம்-மந்திரம் என்னும் இவ்விருமலைபோன்ற இருவருந் தங்கள் புயங்களைக்கொண் டொருவரை யொருவர் இடித்து, மெலியக்கொட்டிய பஞ்சு போல் நஞ்சுபோயும், அஞ்சாமல்-எஞ்சாமல்-இளைக்காமல் - களைக்காமல் கதைகொண் டடித்து, கதாயுத்த சாஸ்திரப்படிக்கு எதிர் மலைந்து, தல்மதிர்ந்து போகும்படி வலமும் வந்து, மேலும் மேலும் நெஞ்சுரமும் வஞ் சினமும் உதிரத் தேகத்திலும், கழுத்திலும், மார்பிலும் தோளிலும், தாளிலும், அங்கங்க ளெங்கினும் பங்கமாகும்படியாய், மாமிசஞ் சிதைந்து உதிரம்பெருகி ஆறுக ஓடும்படியாய் அதிரப் போராடியகாலையில், இருவருடைய கதைகள் பிளந்து-முறிந்து-தறிந்து-பொடிந்து தூசியாய்ப் போகிறவரைக்குஞ் சாடி, இருவர் கரங்களுங் கண்ணிப்போய்க் கருகிச் சிவந்து, இந்தப் பசையால் நெட்டிட நின்று, மூண்டெறியும், முதிர்ந்த கோபத்தால் முறிந்த கதையைத் தரையிலெறிந்து, பிராணபரியந்தமும் விடுவதில்லையென்று கராளங் கொண்டு, திரண்ட புயத்தில் முரண்டுபற்ற வெறுங்கை அறைந்து, விரல்களை முடக்கிக் குத்துச் சண்டையாகிய முஷ்டியுத்தஞ் செய்வதானார்கள்.

### வீமசேனன் துர்ச்சாதனனைப் பிடித்து அவனை விடுவித்துக்கொள்ளீ துரி யோதனாதியரை யழைத்தல்

இவ்வாறு, வீமசேனன் துர்ச்சாதனன் இருவரும் ஒருவரை யொருவர் கங்குவைத்து காலடிபிசகாமல் நாட்டி, விரல்கள் ஐந்தையும் முடக்கி நெருக்கிக் குவித்துக் குத்தினார்கள். மேலும், வெண்மையாய்ப் பிரகாசிக்கும் நகங்கள் இருவர் தேகத்திலும் புதையும்படியாக அங்கையுடன் அங்கை அறைந்தபோது, மலை சிகரத்திற் நிறைந்த கறுத்த மேகம் நெருங்கி விலங்கவும், பொறுத்த பூமி பிளந்து கலங்கவும், பேரிடி இடிக்குந் தன்மையாய் இடித்து, காலுடன் கால்-கணுவுடன் கணு-முழந்தாளுடன் முழந்தாள் - தொடையுடன் தொடை - இடையுடன் இடை - கரத்துடன் கரம் - சிரத்துடன் சிரம் - மார்புடன் மார்-தோளுடன் தோள் இவ்விதமாக முட்டி மாட்டி மடமடவென்று இழுத்துக் காட்டி, குஸ்தி முதலிய பிடிகளும் போட்டு, டிங் கடித்து, பலாஷ்டிகஞ் செய்து டங்கொடுத்து, எலும்பு நரம்பு முதலிய யாவுங் கலகலத்துப் போகும்படியாய் மல்யுத்தஞ் செய்துவந்தார்கள். அந்த வேளையில், தருமராஜனுக்குச் சகோதரனாகிய வீமசேனன் அடித்த அடிகளினாலும், உதைத்த உதைகளினாலும், பூர்வ வினை வசத்தினாலும், துரியோதனனுடைய தம்பி துர்ச்சாதனன் அழன்று-அலன்று-அயர்ந்து - பயந்து-மயங்கி அவதிகொண்டு நின்றான். அப்போதவனைக் கொன்றுவிடும்படியாயிருந்த வீமசேனன், அந்த துர்ச்சாதனனைக் கைப்பிடியாகப் பிடித்து, அவனுடைய இரண்டு காலையும், திரண்ட மலைபோன்ற இரண்டு கையுடன் சேர்த்து பிடித்து, பன்றிக் குட்டிபோல் வாரித் தூக்கிக்கொண்டு, சூரிய குமாரனாகிய கர்னனையும், பாம்புக்கொடி ஓங்கிய துரியோதனனையும், அவனுக்குரிய தோழரையும், அவனுடைய மற்ற தம்பிமார்களையும், விற்குருவின் பிள்ளை யென்னும் அஸ்வத்தாமனையும், கரவிட மனத்தராகிய பட்டவர்த்தனர்களையும், கதிர்வாளேந்திய மகுடவர்த்தனர்களையும், போர்மிகுந்த யுத்தகளமும் வாய் பேசாமல் அடங்கிப் போகும்படியாய்க் கூவிச் சூதாடும்வலிமைபெற்ற சகுனியையும், இன்னுமுள்ள வெற்றிவீரர்களையும், கொற்றப் புயம் படைத்த கொற்றவர்களையும், உற்றுற்று உறுக்கிப்பார்த்து, அவர்களுக்கு அருகாமையிற்சென்று, இதோ பார்த்தீர்களா இளவரசாகிய துஸ்வாசனனை யென்று தூக்கி, கையால் ஒரு அறைதாக்கி, அவர்களுக்கெதிரில் நீட்டி, குண்டுகட்டாகக்கட்டி மாட்டி, அவர்களுடைய காது கேட்கும்படியாகக் கிட்ட நெருங்கி, ஆஹா! வென்று ஆங்காரங்கொண்டு இரைந்து, ஓ! ஓ! ஹோ! வென்று ஓங்காரமிட்டு விரைந்து, இயாவரும் வெருண்டு-திரண்டு-புரண்டு - அரண்டு போகும்படியாய் வெற்றி முற்றிய வீரப்பிரதாப வார்த்தைகளைப் பேசுகிறான் வீமசேனனானவன்.

ஓ வீராதிவீரர்களே! ஓ சூராதிசூரர்களே! நானொன்று சொல்லுகிறேன் நன்றாய்க் கேளுங்கள். இந்தத்துச்சாதனனை இப்போது கொல்லுகிறேன். எமலோகத்துக்கு அனுப்பி வைக்கப் போகின்றேன். இவனுக்கு நேரிட்டிருக்கிற இடையூறைநீக்கி, என் அடலையும் போக்கி, நடலையாகப் போர்செய்து உடலை மதித்துக்காக்கும் வல்லமை கற்றிருக்கு முகங்களில் யாரேனும் உண்டானால் வெளிப்படுங்

கள். இது நல்லசமயம். இதைவிட வேறு புகழில்லை. இந்தக் காலந்தப்பினுல் துச்சா தனனைக்காணமாட்டீர்கள். விருதாக்காலத்தில் வீண்பேச்சுப் பேசுவதினுல் இலாபமென்ன? சமயம்வந்த போதல்லவோ சமர்த்தைக் காண் பிக்கவேண்டும்? நான்உங்களைப்போல் வஞ்சக முள்ளவனுய் நெஞ்சிலொன்று வாக்கிலொன் ருகப் பேசவில்லை. இரகசியமாகக் குசு குசு வென்றுபேசி மோசஞ்செய்ய வரவில்லை. எல் லோருக்குங் கண்ணுக்கெதிரில் தெரியும்படி யாய்க் காட்டி, உங்களுங்களுடைய செவி களும் புதையும்படியாய் உரக்கக் கூவிச்சொன் னேன். ஒருவேளை நான் பார்க்கவில்லை: நீ பார்க்கவில்லை: பார்த்தாலல்லவோ வீமனைப் பாழாக்கித் துச்சாதனனை மீட்டுக்கொள்ளு வோம். என்று ஒப்பற்ற துப்பில்லாப் பேச்சுப் பேசப் போகின்றீர்கள். இதோ நால்வருக் குந்தெரிய நன்ருய்க் காட்டுகிறேன் என்று அநேகங் கோபவார்த்தைகள் கூறி, எட்டுத் திக்கிலுந் தூறி, அவரவர்களுக்கு எதிரிற் கொண்டுபோய்ப் போட்டு, காலாலுங் கையா லும் உதைத்து அறைந்து, வாருங்கள்: வாருங்கள்: பாருங்கள்: காருங்கள்: காருங்கள் என்று அநேகம் யானைகளுக் கெதிரில் ஒரு சிங்கங் கற்சித்துவருந் தன்மைபோற் களமுழு துஞ் சுழன்று சுற்றிவந்தான். அந்த வேளை யில், அங்கதேசாதிபனும் அதிரதத் தலைவர்க ளாகிய விக்கிரம பராக்கிரமமுடைய வீராதி வீரரும், துரியோதனனுங் கண்டு நெஞ்சழி ந்து, தாராளமாய்க் கண்களிற் சலம் பெருக நின்று, வாயிலும் வயிற்றிலும் அறைந்துக் கொண்டு, அவ் வீமசேனனுக்கு எதிர்வந்து போராடி இசைபெறமாட்டாமல் அசைவற நின்றுவிட்டார்கள். அப்போது வீமசேனன் அவர்களை நோக்கி, ஏனையா சுத்த வீரர்களே! என்ன சொல்லுகின்றீர்கள்? இந்தப் பதிதனை மீட்டுவிட உங்களுக்குப் பலமில்லையா? இவன் பிழைக்கவேண்டுமென்னும் நலமில்லையா? பவிருஷமாகிய மானமில்லையா? பழியாகிய ஈனமில்லையா? உள்ளத்திற் பாஷமில்லையா? உடலில் ரோஷமில்லையா? இந்தப்பவிஷுக்கு வாயொருகேடா? ஓ பந்தபாச மில்லாத பேய் களே? ஆளில்லாத இடத்திற் பிதற்றுகிற அண்ணு! அடா கர்னு! துற்சாதனன் அனி யாயமாய்ப் போகின்ருனே; என்று சொல்லிக் கையிற் கலங்கியிருக்குந் துஸ்வாசனனைப் பார்த்து, அடா துரோகி! அடா பாவி! உனக் குத் துணைவருவார் ஒருவருமில்லையே: என்று பல்லைக் கடித்தான். உடனே காலைச் சேர்த் துக் கொல்லப் பிடித்தான்.

### வீமசேனன் துரியோதனுதியருக் கெதிரில் துற்சாதனனைச் சித்திரவதைசெய்து தன் சபதத்தை நிறைவேற்றிக் கொள்ளுதல்

கேளும் ஜெனமேஜெய மகாராஜனே! இப்படி துரியோதன மகாராஜனுடைய சிரே ஷ்டத் தம்பியாகிய துற்சாதனனைக் கொல்லப் பிடித்த வீமசேனன் ஒரே விசையிற் கொல்லா மல், அவனைத் தனது இடது கையில் தாங்கி, வலது கையை ஓங்கி, குபீலென்று அக்கினி எழும்படிக்கு அவன் தலைமேல் ஒரு குத்து வைத்தான். அந்தச் செங்குத்தானது, ஈயப் பாத்திரத்தில் இரும்புக்குண்டு விழுந்தாற் போல் சப்பென்று இருத்தியது. அந்தக் குத் தினு லிரண்டு தவடையும் நெரிந்து நெருங்கி, ஆமைத்தலைபோல் உள்ளடங்கியது. இரண்டு காதும் உள்ளே புகுந்து என்ன சேதியென்று கேட்டது. வீரியமுனை சிதைந்து மார்புடைந் தது. பல்லெல்லாங் கல்லெனத்தெறித்தது. சல்லென வியர்த்தது. சில்லெனக்குளிர்ந்தது. வாய் வறண்டது. வார்த்தையுந் தளர்ந்தன. அழகுங்குலைந்தது. ஆண்மையுந்தொலைந்தது. செவ்வரக்கினுந் தீக்கனலினுஞ் சிறந்து சிவந்து பரந்து நிறைந்த பருத்த கண்களா னது வாழைப்பூவினைப்போற்பிதுங்கின. இரு கரத்திலும் அணைத்துப் பிசைந்து கசக்கிய போது நவத்துவாரங்களுந் திறந்து, முகத் துவாரம்போல் மலமூத்திராதிகளும்-உதிரங் களும்- நிணங்களும்-கொழுப்புகளும் - சீதங்க ளும்-கப முதலிய வளுப்புகளும் கசிந்தோடி யதுகள். இதன்றியும், அந்தத் துர்ச்சாதன னைப்பூமியின்மேற்போட்டுமேலேறிக்கொண்டு இரண்டு காலினுலுந் துவைத்து மிதித்தான். கால்விரல்கள் கைவிரல்களைப்பிடித்து நெரித் தான். நரம்புகளின் விசைபார்த்து எடுத்து இழுத்துத் தெறித்துப் பொம்மைக் கூத்தைப் போல் உடலெல்லாம் அசைய ஆட்டினுன். எல்லோருக்குங்காட்டினுன், எலும்புகள்முறிய எறிந்துயெற்றினுன். எலும்புவேறு மாமிசம் வேருகக் குத்தினுன். உதறி உதறி எடுத்தான். கதறி கதறிப்பிடித்தான். விந்தை விந்தை யாய் அடித்தான். வேடிக்கை வேடிக்கையாய் இடித்தான். புரட்டிப் புரட்டி உதைத்தான். விரட்டி விரட்டிச்சிதைத்தான். வீணையினிசை நரம்புகளைப்போலுள்ள சிலவிசை நரம்புகளை

முறுக்கி அறுத்தான். குதிகால் நரம்பையும் பிடரி நரம்பையுஞ் சேர்த்துப் பிடித்துக் கொண்டு, நனநனா-நனநனா என்று கின்னரி கொட்டினான். மடங்கல்போல் மமதையடைந்திருந்த அவன் தடம்புயமலைகளிற் பலமலைகளுடன் மோதுவதுபோல்மோதி, உரமேறிய தலை சிறிய கழுத்தானது அளங்கித் தாழ்ந்து வாயுந் தாளும் இருத்திக்கொண்டு போகும் படியாய்த் தாக்கி, மூக்கினுள் நரம்புகளைப் போக்கி, தீர்த்தாரை நரம்புகளோடு வீக்கி, எல்லா நரம்புகளையும் இறுக்கி முறுக்கிப்பிடித்துக்கொண்டு, முன்பக்க முகமிருப்பவரைப் போலாது இவன் பின்பக்கமுகமுடைய பின்புத்திக்காரன் பாருங்களென்று இரு விரலால் தலையைப்பிடித்துக் குயவன் திகிரிபோல் முதுகின் புறத்தில் திருப்பி, அத்திருப்புகலுக்கேற்ற அழகுற வைத்து, தலைநிறைந்த மயிரையும் வலிமிகுந்த கையையுஞ்சேர்த்து இறுகப் பிடித்துக் கொண்டு, அச்சாணியுடைய தேரின்பேரில் இந்தத் துச்சாதனனை விட்டெறிவான். அப்போது சேனைகளெல்லாம் ஒரு புரள்புரண்டு, பெருமருள் மருண்டு, உகாந்த ஓசைபோற் சாக்குக்கல் இடுவார்கள். மறுபடியுந் தன் கைமேல் வந்திருக்கும்படியாய்ப் பிடித்த நரம்பை இழுத்துக்கொள்ளுவான். அக்காற் பிழைத்தோம் பிழைத்தோம் என்றெழுவார்கள்.

அஃதெப்படி யென்றால், துருக்கர் செய்யும் அல்லாச்சாமி பண்டிகையில் ஒரு பெரிய மூங்கிலிற் கயிறுகட்டிக் குப்பலிற்றள்ளி யாவரும் பயப்படச்செய்து, மீண்டு மதனைத் தன்கையிற் பிடித்திருக்குங் கயிற்றுடனிழுத்துக் கொள்பவனைப்போற் செய்தான். மேலும், அந்தத் தேகத்தைப் பூமியிற்போட்டுத் தும்புதும்பாகும்படிக்கு இரண்டுகாலையுஞ்சேர்த்துவைத்து மிதிப்பான். கோபத்துடன்தாவி, ஆ! ஆ!ஹா! என்று இரைந்து கூவி, தொடையைப் பிடித்து இழுப்பான். தூக்கித் தலை கீழாய்ப் பிடிப்பான். இன்னும் இப்படி பற்பல விளையாட்டெல்லாம் புரிந்து, இரணியனுடைய பிராணனை வாங்கிய விக்கிரம நரசிங்கத்தைப் போல மண்டியிட்டுக் கடித்து, மகா உக்கிராவேசத்தோடும் மருமத்தைப்பிடித்து, புவனா புவனங்கள் குலுங்கச் சிங்கநாதம் பூரித்து ஆர்ப்பரித்து, அவனைப் புரட்டித் தூக்கித்தன் மடிமீது போட்டுக்கொண்டு, நெட்டிட்டு-தங்கக்கட்டிட்டு-செந்தூரப்பொட்டிட்டு-உறையாகிய பட்டிட்டு - சாணை பிடித்த சொத்தை போன்றிருக்குந் தன் கைநகத்தினால் அவனுடைய அங்கத்தை அச்சிங்கத்தைபோற் பங்கப்படுத்தி, அந்நகமவன் சிங்காரமார்பில்உருவும்படியாயேற்றிக் களைந்து, மாங்காய் கீற்றைப்போற் பிளந்து, நீண்ட வட்டமாய்ப் பிதுங்கிவந்தகுடல்தொங்கவும், உதிரம்பொங்கவும், அவனைத் தூக்கித் தன் தோளின்பேரிற் போட்டுக்கொண்டு, வஸ்திர முதலிய மேனியெல்லாம் உதிரஞ்சொரியவாழ்முனிபோன்று நின்றான். அப்படி நின்ற வீமசேனனைப்பார்க்குமிடத்தில், பகீரதன் கொண்டுவந்த கடவுட்டீர்த்தத்தில் மூழ்கியெழுந்த அசைவற்றஇதயமுங் காவிகாம்பரமுமுடைய மேலோர்களின் தன்மையைப்போன்றிருந்தது. அதைக்கண்ட வீராதி வீரப் பெருஞ் சேனைகளெல்லாங் கர்னன் முதலாகிய காவலர்தடுத்து மவர்களால் தடைப்படாமல், நெடுங்கட லுடைப்பட்டு மடைவிட்டோடுந் தன்மைபோற் புறமிட்டோடினார்கள். வண்டாரவாரம் நீங்காத துளவத் தண்டாரமணிந்த சாரதியும், காண்டீபக் கரத்தோனாகிய தனஞ்செயனும், இக்கோலாகலங்களையெல்லாம் பார்த்தார்கள். இன்னுமுள்ள காவலருங் கண்மலர்ந்து கைகலந்தார்கள். வெண்மையாகிய நக்ஷத்திரங்கள் பரவிய ஆகாயத்தை ஒத்திருந்த யுத்தபூமியில் எங்குந் தன்மயமாயிருந்த வீமன் துற்சாதனனுடைய பிரேதத்தை தூக்கிக்கொண்டு, அவரவர்களுக்குங் காட்டி, பாஞ்சாலராஜன் வளர்த்த செந்தீயில் அவதரித்த பாக்கியவதியாகிய திரௌபதையினுடைய அளகத்தையும் வஸ்திரத்தையுந் தொட்டிழுத்த தோளும்-கையும்-விரல்களும் இவை யல்லவாவென்று அவைகளைக் கொத்தித் தறித்து, எங்களைத் தூஷணித்த வாயல்லவா இதுவென்று அவ்வாய்மேலறைந்து, அவனுடலைப் பிளந்து இடித்து நெரித்து, அவன் தலையை அடிக்கடி திருப்பி இன்னுங் கோபம் ஒழியாமற் கோவென்றிரைந்து குதித்து, அதிக உக்கிரத்துடன் ஆவென்று வாயைத் திறந்து, தான் சொல்லிய சபதப்படிக்குத் துற்சாதனனுடைய தேகத்தில் ஓடிவருகின்ற செந்நீரைக் கையேந்தி, யாவருந் துண்ணென்று கண்ணீர்விட் டழும்படியாய்த் தண்ணீர் விடாய்தீரச் சாப்பிடப்போயினான். அச்சமயத்திற் கறுத்த காளமேகப்போன்ற கண்ணனானவர், வெகு பக்குவமாய் வீமனிடத்திற்குப் போய் அவ்வுதிரத்தைக் குடிக்கவொட்டாமல் நிறுத்தினார். அவர் எல்லா வல்லமையு

முடைய ஈசனுன திஞல், அச்சமயத்தில் அந்த வீமனிடத்திற் போய்ச் சமாதானமாகப் பேசி மீண்டுவந்தார். இவரல்லாது இன்னொருவ ராஞல், மாண்டுவருவாரென்பதற்கு மடங்குத விராது. அவனுக்கிரத்தத்தைக் குடிக்கப்படா தென்று இவர் சொல்ல, நான் சபையிற்கூறிய சபதம் எப்படிப் போகிறதென்று அவன் கேட்க, அந்த இரத்தத்தை வாயில்விட்டுக் கொப்பளித்து அவன்மேற்றுனே துப்பென்று சொல்ல, அந்தச் சொல்லே ஒப்பென்று உட் கொண்டு குடிக்காமற் கொப்பளித் துமிழ்ந்து, என்னெண்ண முடிந்ததென்று அவ்விடத்தி லிருந்த அரசர்களுக்கெல்லாம் நடுக்கமுண்டா கும்படி தன் கொடியிற் பொருந்திய சிங்கம் போற் கூத்தாடி நின்று, உருத்திராமிசங் கொண்டு ஆர்த்து, இக் குவலயத்தையெல்லாம் இன்று கொள்ளை கொள்ளுகிறேனென்று கொதித்திருந்தான்.

கர்னனுக்குச் சல்லியன் வீமன்செயலை யோதிப் பரிகாசிக்க, அவனதற் கலக்ஷியங் கூறிச்சென்று வீமனை வளைத்தல்

கேட்டீரோ ஜெனமேஜெய மகாரா ஜனே! துன்பம் விளைக்குந் துற்குணத்தையுந் துர்நடத்தையுமுடைய துச்சாதனன் முனை ந்து யுத்தம்பண்ணித் தன்னுடைய தம்பிமார் பதின்மர்களுடன் தானும் உயிரிழிந்து போன தைக்கண்டு, இன்பமுற்றிருக்கும் வீமசேன னுக்கு எதிரில்வந்து யுத்தஞ்செய்யத் திறத் தையுடையவர்கள் அங்ஙனம் ஒருவரு மில்லா திருக்கும் வலுமையைக்கண்ட கர்னனுக்குத் தேர்விடுஞ் சாரதியாகிய சல்லியஞனவன் சொல்லுகிறுன். ஓ கர்னனே! தாளாண்மை பெற்ற ஒப்பற்ற வீமசேனன், இவனை மீட்டுக் கொள்ளுங்களென்று நேரிற்காட்டிச் சொல்லி யும், அவனுக்கு நேரிற்சென்று வெற்றி கொண்டு, துச்சாதனனை மீட்பதற்குச் சாமர்த் திய மில்லாமல் வெறுங்கை வீணனைப்போல் ஒதுங்கி நின்றுய். உன்னுடைய ஆண்மையை யும், வீரத்திற மேன்மையையும் இதுவரையி லும் கண்டறிந்தது போதாமல், இவ்விடத் தில் இப்போதும் நான் கண்டுகொண்டேன். இந்த வீமனை வெல்லமாட்டாத நீ, இந்திர குமாரனுகிய இகலாண்மை வலியைக்கொண்ட அர்ச்சுனனை எப்படி ஜெயிக்கப்போகிறுய்? இந்தப் பாம்புக்கொடிபடைத்த துரியோதன னுகிய பயித்தியக்காரன், பெரியோராகிய மூத் தோர் மொழிந்த எதார்த்தமொழிகளை உள் ளத்திற் கொண்டு செவ்வைபடாமல், உன்னை நம்பி, உன் புயத்தைப் புகழ்ந்து, உன் வல்ல மையை வியர்ந்து, தன்தனையர், தம்பியர், சுற் றத்தினர் முதலானவர்களோடு தன் பிராணனை யும் போக்கடித்துக் கொள்ளுகிறுன். இனிக் காரியமில்லை; இனிமேலும் படைகொண்டு நெருங்கி, யுத்தஞ்செய்ய எத்தனிப்பதில் என்ன பிரயோசனம்? எல்லாரும் மடிந்தார் கள். கண்ணுகிய தம்பியும் போய்விட்டான். இனியென்ன யுத்தம்? இனியென்ன வெற்றி? இனிமேற் சண்டைசெய்து, வெற்றிபெறுவ தைப் பார்க்கிலும், தங்கள் தங்கள் கையிலிருக் கும் வாளாயுதத்திஞல் தாங்களே கழுத்தை அறுத்துக்கொண்டு, இறந்து போகிறது எல்லாவிதத்திலும் மிகவு மேலாகிய வெற்றி? அதஞல் ஒரு தாக்ஷியுமில்லை. கீர்த்தியும் ஆட் சியாயிருக்கும். ஓ! மாட்சிமை பெற்றவனே! காற்றின் மகனுகிய வீமசேனன், துச்சாதன னைப் பிடித்துக்கொண்டு அதிரதாளாகிய தேர ரசருக் கெதிரில்வந்து, அவரவர்கள் பேரைச் சொல்லி அழைத்து, இதோ இவனை கொல்லப் போகிறேன்; உங்களுக்கு வல்லபமிருந்தால் வாருங்கள் காருங்களென்று வலுவில்வந்து காரிடிபோலிரைந்து அவன் அழைத்தும், திரண்ட தோளும் வீரகண்டை தாளுமுடைய அரசவீரர்க ளெல்லோரும் அவனுக்கெதிர் புகுந்து போர் கொடுக்கமாட்டாமல், போற் றிப் போற்றியென்று வணங்கி அஞ்சிக்கெஞ்சி ஒதுங்கிப் போஞர்கள். இவ்வுலகத்தார் நிந் திக்கும்படி இப்போது பரவிய இந்த மொழி யானது அழியத் தக்கதோ? இன்னும் வீரம் வேண்டுமோ? மானுஷியம் வேண்டுமோ? கேயூர மணிமகுட குண்டலாதிகள் பூட்டிக் கொண்டு வெட்கமில்லாமல் வெளிப்புறப்பட லாமோ? சொல்லு கர்னனே? நமது சேனை மேலிட்டுச் சூழ்ந்திருக்க,பாண்டவச்சேனைகள் பதறிச் சிதறி நிற்க, கைச்சாரராகிய நீங்கள் எல்லோரும் கருங்கற் சுவர்போற் காத்திருக்க, அனியாயமாய் மயக்கந் தலைக்கேறினவனைப் போற் சென்று யாவராலும் ஈண்டுமீண்டு மீட் டுவராமல் மாண்டுபோனுனே: ஆ! ஆண்ட வனே! என்றுசலித்து, தாற்றுக்கோல்கொண்டு தனியச் சக்கரங்களுடைய தேரைச் செலுத்தி னுன். இந்தப்படி அந்தச் சல்லியனுரைத்த சொல்லைக் கேட்ட கர்னன், பதிலுத்தரஞ் சொல்லத் தொடங்கினுன். ஓ சல்லியராஜனே! கேளும்; கெடிஸ்தலாதிபதியாகிய துரியோ

தன மகாராஜனுடைய மனதுக்கொத்த தம்பியாயும், இளவரசராகிய இறைவனுமிருந்தும், அத்துச்சாதனராஜன் வீமன் கையில் மாய்ந்த நிலையைக் கண்டு ஒன்றுந் தோன்றாமல் மனத்தளர்வடைந்து இருந்தேனே யல்லது; வீமனுக்குப் பயந்து இருந்தவனல்ல. ஓ! அன்பினையுடைய மத்திரர்கோலே! பாம்புபடமெடுத்தாடினால் அதற்கு நேர் செல்லக் கருடன் பயப்படுவனோ? யானை மதங்கொண்டெழுந்தால் அதைக்கண்டு சிங்கம் பயந்து தியங்குமோ? என்று கர்னன் சொல்லியது மத்திரத்தானுக்குத் திருப்தி யில்லாவிட்டாலும், ஒருவிதமாய் மனம்பொறுத்து, மலையற்று மயிர்க்காலிற் றெருங்குகிறபோது நாமேன் வயிற்றெரிச்சலை விளைவிக்க வேண்டுமென்று சும்மாயிருந்துவிட்டான்.

இப்பால்,கர்னராஜன் யுத்தமுனை விட்டுப் புறங்காட்டியோடிய மன்னர்களையும் ராஜாதிராஜாவையுங் கூட்டிப் பேரணியாகக் காட்டி, பொற்கொடியாடிய பொன்னெடு மலைபோன்ற தேரைச் செலுத்தி, பாரிய வில்லைப் பிடித்து, காயுங்கனல்போன் றன்று, பகைவருடைய படைமுகத்தின் முன்னே வந்து நின்றான். அந்தக் கர்னனை கண்டவுடனே வீமசேனனானவன், பாண்டவ சேனாபதியாகிய திர்ஷ்டத்தூய்மனும், நட்சத்திரங்கள்போல் நிறைந்திருக்கின்ற போர்வேந்தரும், தன்னை யொத்த சமானனும், சிகண்டி முதலிய மைத்துனமார்களும், ரதகஜ துரகமுதலிய நாற்படையுஞ் சூழ்ந்துவர, மாநிலமுதலிய மேனில நடுங்க வாத்திய முழங்க எதிர்நோக்கி நடந்தான். அப்போது, பாண்டவர்களுடைய படைஞர்கள் பூரணச் சந்திரோதயங் கண்ட சமுத்திரம் போற் பொங்காரங்கொண்டுபூரித்து, மகிழ்வாகிய அலைகொழித்து ஆர்ப்பரித்து, காண்டவ வனத்தை எரித்த கனல்போற் செருக்கி, மிகவுந்தருக்கி, காமாந்தகனைப்போல் நின்றார்கள். இத்தன்மையாகிய பாண்டவச் சேனைகள் மூண்ட நிலையைக் கர்னன்கண்டு, முன்பு முதுகிட்டோடிய தன் சேனைகளோடும், முன்னணி கூட்டிய தானைகளோடுந் திரும்பி யுத்தஞ் செய்ய விரும்பி, எதிரேறிய வீமனை வளைந்தான். இப்படியாக வளைந்த கர்னனை வாயுகுமாரனாகிய வீமசேனன் கண்டு, மன்னர்களின் பொன்னுருள்களுற்ற தேர்களெல்லாம் உடைபடும்படியாய்த் தன்னுடைய தேரைச் செலுத்திக் கொண்டு வந்து, வில்லை வளைத்து, நாணொலி தெறித்து, நாகர்கோன்கணை - நான்முகன்கணை - நாரணன்கணை முதலிய நானாவித பாணங்களைத் தொடுத்தான். அந்தப் பாணங்களாற் கொடையாளியாகிய கர்னனும், அவன் தேருங் குலைகுலைந்து, கொடுந் துயரடைந்து, புறந்திரும்பி முகமாறி, மறுபடியும் வேறு தேரேறி, சிம்ம ஏறுபோற் சீறி, வீரவசனங்களைக் கூறி, மனந்தேறி, வீமசேனனுடனே கடும்போர் செய்வதற்குக் கோபித்தெழுந்தான். அப்போது, அஸ்வத்தாமனுஞ் சஞ்சத்தகருஞ் சேர்ந்து அக்கர்னனுக்குத் துணை வந்து, வீமனை வளைத்து அமர்திளைத்தார்கள். கற்பகக்காவுக்கு மன்னனாகிய இந்திரனுடனே காண்டாவனப் போராடிய காளை யென்னும் அர்ச்சுனனும், காவலர்களும், ஏமத்தேராளிகளும், வீமனுக்குத் துணைவந்து, அக்கர்னனோடெதிரெதிர்போய் வளைத்துப் போராடினார்கள். பொன்மயமாகிய முரசவாத்தியங்களுடன் பேரி முதலிய வாத்தியங்கள் முழங்குகிற பேரோசையாலும், வில்லினுடைய நாணோசையாலும், தேர்களினுடைய கர்க்கரத் தொனியினாலும், கையிலிருந்து விடும்படியாகிய முஷ்கரத் தொனியினாலும், அநேகம் பேர்பெற்ற அதிவேக அஸ்திரங்கள் முழங்கும் ஆர்ப்பரிப்பாலும், ஆகாயவாசிகளாகிய தேவர்கள் அருண்டுவெருண்டு செவிடுபட்டார்கள். படைவீராள் முதலிய பேர்கள் ஆயுதப் பிரதாபங்களினாலும், வீராவேசங்களினாலும் தங்கள் தேகத்தை தாங்களே மறந்து மனங்கல்லாய்ச் செறிந்து விழித்தகண் விழித்தபடியே வெறியேறி விட்டார்கள்.

### அர்ச்சுனனால் நகுலனோடெதிர்த் தடல் பெற்றுநின்ற விடசேனன்வதை

இஃதிப்படியிருக்க, இவ்வுலகத்தில் எவ்வுயிர்களும் நித்திரை செய்யாநின்ற இராத்திரியை நீக்கி, இரைந்தட வினிதோடித் திரியும் பகற்காலத்தை அளந்துவருஞ் சூரியனுக்குப் பேரனும், கர்னனுக்குக் குமாரனுமாகிய விடசேனனானவன், நவமணிபதித்த நவரத மேறி, குநலராஜனை வளைத்து, மதலை மாலையணிந்த மகதேவன் மழுப்போன்ற வயவாளிகளைத் தழப்பொறிபோல் தாக்கும்படியாய்த் தெறித்தான். அப்போது சுவேதவாம்பரி பூட்டிய தேரேறிய அருச்சுனனுக்கு நேரிளையவனாகிய நகுலராஜன் செந்தாமரை மலருக்கு ஒப்பாகிய தனதங்கையினால் வில்லை வளைத்து,

நாணிபூட்டி, சிறுநாணோசைகாட்டி, கம்பக் கும்பக் களிற்றுனையுடைய கன்னகுமாரன் தொட்ட கடுங்கூரம்புகளை யெல்லாம், தான் விட்ட பாணங்களினால் அறுத்தறுத்துத் தரையில் வீழ்த்தினான். அந்தவேளையில், தேவேந்திரனுக்குக் கவசகுண்டலங் கொடுத்த மாவேந்தனாகிய கர்னகுமாரன், கடுவிடக் கொடுங்கணைகளைத் தெறித்து, நெருங்கிய நெருப்பெழ விழித்து, நகுலராஜன் ஏறிய தேர்ச்சக்கரங்களை அழித்தான். உடனே நகுலராஜன் வேறொரு தேரேறி, வீரசாயகங்களைவிட்டு கச்சைக்கொடியோனுடைய காதலன் லச்சைப் படும்படியாய் அவன் கைப்பிடித்த வில்லையும், வெற்றிகொடியையும் வெட்டினான். இந்த நகுலராஜனுடைய ஆண்மைக்கு ஆர் எதிராவார்கள்? மறுபடியும் அந்த விடசேனனவன், மகமேருவைப்போன்ற வில்லை எடுத்து, நாணிதொடுத்து, நாராசக்கணைகளை விடுத்து, நகுலராஜன்முடி சாய்ந்துவிழும்படியாய் அடித்தான். அந்தக் கணைகள் செந்தழற்கணையெனக் கொந்தாகவந்து நகுலனுடைய மார்பிற் பாய்ந்தவுடனே, தேர்மேற் சாய்ந்து வீழ்ந்தான். வீழ்ந்த நகுலனை மூண்டெறியுங் கோபக்கண்களையுடைய வீமசேனன் கண்டு சமீபத்தில்வந்து உபசரித்துக்கொண்டு போயினான். அந்தவேளையில், நகுலனும் விடசேனனுஞ்செய்த போர்த்திறத்தை காண்டாவனத்தை நீறுபடுத்திய அருச்சுனன் கண்டு மிகு கோபங்கொண்டு, சந்திரனைத் தறியாய்க் காட்டி-மந்தாரகிரியை மத்தாகநாட்டி-வாசுகியைக் கயிறுகப்பூட்டி-சுராசுரர்கள் இடம்-வலமாக ஆட்டிக் கடைந்தெடுத்த அமுதத்தைத் தேவர்களுக்கு அளித்தருளியதிருமாலானவர், சாரதியாகயிருந்து செலுத்தாநின்றதேர்மேற் சென்று, மின்னற் கணையாகிய தூண்டிவிட்டு, விடசேனனென்னும் மீனைப் பிடிப்பதற்கு வந்த மீன்படுப்போனைப்போற் பலவன்னக் கணைகளை வலைபோலும் வீசினான். அதைக் கண்ட விடசேனன் கலீரெனநகைத்து, உன் தம்பி என்னுற்பட்ட தளர்ச்சியை நீ வரும்வழியிற் பார்க்கயில்லையோ! ஆனால் உன்தம்பிபட்ட பாடு நீயும் படும்படியாய்த் தெரிவிக்கிறேன். நீ யென்னோடு போராடவல்லையோ? இதோ அரிக்கணையை விடுக்கிறேன் பார்! என்று வில்லைவளைத்து நெருங்கிவந்த பார்த்தனையுங் காசாம்பூமேனிப்பாகனையும் அம்புக் கும்பினால் மூழ்கவைத்து, காசரணுதிகள் ஆடவொட்டாமற் சமர்செய்தான். அப்போ திவனுக் கொப்பானவர் யாருமில்லையென்று அமரர் புகழ்ந்தார்கள். அக்காற் பாண்டுகுல மைந்தனாகிய பார்த்தனானவன், கருமேகமானது பேரிடிகளை யிடித்துப் பொழியுங் கணக்கைப்போற் சரமாரி பொழிந்து போர்த்தபோது, அவ்விடசேனனுடைய மலைபோன்ற தேரும் - குதிரையும்- சிலையும் அழிந்து, அவன் தேகத்திலும் உதிரம் வழிந்தது. அப்போதும் அவ் விடசேனன் தியங்காமல், மறுபடியுந் திறமாகிய வேறு தேரேறி, வெகுண்டெழுந்து சீறி, வண்ணச்சிலை தாங்கி, வின்னாணிவாங்கி, எரிபறந்து-புகைசெறிந்து - பொறியுதிர்ந்து - புனல்வறண்டு-புடைபெயர்ந்து - புகழ்நிறைந்து - புகைமலிந்து விறுவிறென்று வரும் பகழிமழை சிந்தினான்.

இவ்வாறு விடசேனன் விடுத்த அஸ்திரங்கள் கடுத்துவருகின்ற திடத்தை பகைவரை வென்ற காண்டீபன் கண்டு, கண்கலக்கங் கொண்டு புற்றிலிருந்து புறப்படுங் கிருஷ்ண சர்ப்பம்போல் அக்னியாஸ்திரங்களை அநேகமாகச் செலுத்தி, அந்தவிடசேனன் உந்திய சரமாரியைத் தடுத்து, மத்தியில் முறியக் கெடுத்து, மேலும் பிறைமுகமாகத் தேறிய மாறுகோல்களை நூறு நூறாக வெடுத்துத்தொடுத்து, விடசேனன் பிடித்திருந்த வில்லை நடுவில் ஒடித்து, வின்னாணியைப் படலெனத்தறித்து, விற்பிடித்த ஐந்துவிரல்களையு முறித்து, முதன்மையாகிய வெற்றிமாலைபூண்ட அவ்விடசேனனுடைய முடித்தலையையும் இடியிடித்து விழுந்ததைப்போல் ஒரு நொடிப்பொழுதில் மற்றோர் பெருவடிக்கணையால் அறுத்துத்தள்ளினான். விடசேனன் விழுந்தவுடனே, சில வேந்தர்கள் பயந்து தத்தளித்து, கொஞ்சமேனுந் தைரியமில்லாமல் வெஞ்சமரை விட்டு எஞ்சியிளைத்து, பஞ்சையாய் பஞ்சுபோற் பறந்து புறந்தந்தோடிப்போய் விடசேனன் தந்தையாகிய கர்னமகாராஜனுடைய தேர்க்காலை சூழ்ந்து தியங்கி அழுதார்கள். சிலவேந்தர்கள் இளைக்காமல் தயிரியத்தூடநெதிர் நடந்து என்றைக்கிருந்தாலும் இறப்பே யொழிய, இருப்பதில்லையென்று மனோதிடங் கொண்டு, இந்த விடசேனன் சாவானென்று நாம் ஆராகிலும் நினைத்தோமா? ஆருக்காகிலுந் தெரியுமா? அவன் அழியத்தக்கவன்தானா? அப்பேர்ப்பட்ட அழகன் அழிந்தபோது நாமெல்லாரும் எம்மாத்திரமென்று அர்ச்சுனன்பேரிலெதிர்த்து, உலகமதிர்ந்து போகும்படிக்கு

அமர்புரிந்து, அர்ச்சுனன் விடுத்த அந்தக் கணையாலழிந்து, அரம்பாஸ்திரீகளின் ஆகத்திற்கலந்து, அமரர்புகழ மகிழ்ந்து அந்தரம் புகுந்தார்கள். இவ்விதமாக விஜயன் எறிந்த அக்கினிக்கணை - பிறமுகக்கணை-பிரமனற்கணை முதலிய கணைகள் விடசேனன் முதலாகிய வேந்தர்களை இறந்துபோகும்படி முடித்தும் வேகம் அடங்காமல், வெகொள்கரிகள் கோடி, பொங்குபரிகள்கோடி, துங்கரதங்கள் கோடி, தங்குபடைகள்கோடி என்று சொல்லும்படியாயுள்ள பலகோடி சதுரங்கபடைகளும் வாடி மடியும்படியாக சாடின. அதுவுமல்லாமற் பார்த்தனுடைய பாணக்கனலாற் பல பகைப் பூடுகளெல்லாங் காட்டுத்தீயா லெரிபடுஞ் சரகைப்போலப் போர்க்களமெங்கும் எரிந்து கொண்டிருந்தன. அந்தவேளையில், அர்ச்சுனன் கையினுல் அடிபட்டிறந்தான் உன் மைந்தனை விடசேனனென்று வேந்தர் முதலாகிய வீராள் சொல்லக்கேட்ட கர்னனவன், காதடைபட்டு-கண்பிதுங்கிட்டு - கண்ணிருண்டிட்டு - கருத்தழிந்திட்டு - தலைநட்டிட்டு, ஆ! ஆ! ஆவிபோன்ற குமாரனே என்றுகூவி, சாவிபோனவன்போற் சப்பிட்டுப் பூமியைத் தாவினுன். அப்போது தேர்ச்சாரதி யென்னும் ஆழ்ந்த சல்லியராஜன் புல்லியெடுத்து புத்திர சோபந் தீரும்படிக்குப் பற்பல வாக்கியங்களினுல் தேற்றினுன்.

துரியோதனன் தனக்கறிவுறுத்திய அஸ்வத்தாமனுக்குத் தன்கொள்கைகூறி கர்னனிடஞ் சென்றுதேற்ற அவன் சபதங்கூறுதல்

அந்த வேளையில், அஸ்வத்தாமன் எந்தெந்த இடங்களிலுந்திரிந்து, நொந்துநும் படியாய் அமர்புரிந்து சிந்தை வருந்திய கொந்தலர் மாலையணிந்த துரியோதனவேந்தனின்ற இடத்தை நோக்கி வந்தான். அந்த அஸ்வத்தாமனை நாகக்கொடியோனுேக்கி, எப்படி யிருக்கிறது யுத்தமும் வெற்றியுமென்று கேட்க அஸ்வத்தாமன் சொல்லுகிறுன். ஓ அரசர்க்கரசே! உத்தம க்ஷத்ரியகுலத்துக்கு உரித்தாகிய தப்பிதமில்லாத யுத்தம்விளைத்தீர். சகல யுத்திகளுந் தெரிந்தீர். பற்பல காரியங்களும் புரிந்தீர். பாரெல்லாங் கொண்டாடும்படியான கீர்த்தியிற் சிறந்தீர். அப்படியிருந்தும், இப்போது தர்மராஜன் புகழ்பெறும்படியா யிருக்கிற இந்த குருக்ஷேத்திரத்தில்,வீஷ்மர்-துரோணர் முதலாகிய பெரியோர்களும், வீராதிவீரர் முதலாகிய பெரியோர்களும், மற்று உரியோர்களும்-படைத்தாஷ்டிகரும், மற்றுந் துணைவந்த விளைஞரும், பந்துக்களாகிய கிளைஞரும், இன்னுமிதரமாகிய மன்னரும்-மைந்தரும், தம்பிமார்களும் ஒப்பற்ற சதுரங்கப்படைகளும் போர்கொடுத்து புகழடுத்து பிராணனை விடுத்தார்கள். இப்போது சொல்லிய பேர்களுடைய பலங்களெல்லாம் போய்விட்டன. ஐயா! பெரியோர்கள்சொல்லிய தருமவாக்கியங்களைப் பலமுறை கேட்டிருக்கின்றீர். இனியேனும் நமக்கு நற்காலம் வருதற்கான வேதுவை ஆய்கிலீர். இருப்பவர்களேனும் பிழைப்பதற்கான வகையை யெண்ணுகிறீர். பூர்வாசாரியார் சொல்லிய நீதி வாக்கியங்களையுந் தரும வாக்கியங்களையும் உட்கொள்வீர். சங்கு முழக்காமல் தாலி கட்டுதலும், கட்டுப்பாடில்லாத குடிமரபும், நன்செய்புன்செய் விளையாத நிலமும், திரியாக்கினி யில்லாத பிராமணர்களின் மனையும், துவாரமில்லாத முத்தும், ஆற்றுக்கால் பாய்ச்சலில்லாத வளநாடும், கியானமில்லாத உள்ளமும், பந்துஜனக் கிளையில்லாத அரசியற்கையும், பெருமை அடையுமென்று இதுவரையிலும் நீர் கேட்டது உண்டா? ஓ மதிகுலபதியே! பிரையோசனமிலேயே: ஐயா! நமக்குண்டாயிருந்த திக்கை மாவாகிய யானைகள்,பரிமாவாகிய குதிரைகள், தேர்கள், சேனைகள் இவைகளனைத்துங் குறிகின. சம்பிரம்மாகிய உமது தம்பியார் கும்புகளில் வெகுபேர் இம்பர்பதமாறி உம்பர்பதம் பெற்றனர். பேர்சொல்லும் புத்திர பௌத்திராதி வர்க்கங்களின் கால்மாறிச் சாய்ந்தன. உலகத்திற் பெரும்பழி வாய்ந்தது. இன்னுங் கொஞ்ச மிஞ்சியிருக்கின்ற பேருக்குங் குறுகிப் போயது. ஆகையால், போனவர் போக இன்னு மிருக்கு முமது சகோதரர்களோடு சொல்லுதற்கரிய பல கேள்விகளுஞ் சாஸ்திரங்களுந் தேர்ந்த வீமார்ச்சுனுள் முதலாகிய தம்பிமார்களுடனும், உமது தமயனுகிய சத்திய நெறிபெற்ற உத்தம ஆசாரமுள்ள தருமராஜனுடனுங் கலந்து பரிந்து உபசாரம் புரிந்து, நன்னெறி தெரிந்து அரசுபுரிந்து வாழ்வதே கடன். என்று துரியோதன மகாராஜனுக்கு அஸ்வத்தாமன் சொல்லினுன்.

இவ்வாறு அஸ்வத்தாமன் சொல்லிய வார்த்தையை அரசன்கேட்டு, இப்போது நீர் சொல்லிய காரியங்களெல்லாஞ் சரிதான். ஆனுல், இது யாருக்கு வேண்டிய தென்றுல்; பதியை ஆளவேண்டு மென்னுங் கருத்தை ஆட்சியாக உடையவர்கள் யாரோ? அவர்க

ளுக்கு வேண்டியது. எனக்கு வேண்டியது என்னவென்றால், வீரமுரசவாத்திய முழங்கா நின்ற போர்க்களத்தில் என் தேகமானது விழவும், உயிரானது வீரசொர்க்கம் அடையவும், பகைவரோடு போராடி வென்று வீரியம் பெறுவதே எனக்குப் போதுமான பிரயோசனம். இதைவிட வேறொன்றுமில்லை என்று வேல்தாங்கிய துரியோதனன் சொன்னான். இந்த மொழியை முனிமகனாகிய அஸ்வத்தாமன் கேட்டு, நம்புகின்ற கட்டுறையை நாடாமலும், இதற்கு வேண்டிய புத்திகளைத் தேடாமலும், வீணே மறுத்தானே மன்னனென்று கோபங்கொள்ளாமல், துரியோதனனுடைய மனதின்படி கலந்துகொண்டு, யுத்தஞ் செய்வதற்குத் தகுந்த இனிய வார்த்தைகளைப் பலவாறாகப் பேசி நயந்திருந்தனன். அதன்பேரில் நந்தியாவட்ட மாலையணிந்த நராதிபனானவன், அஸ்வத்தாமனைப் புகழ்ந்து, கொண்டாடி மகிழ்ந்து, இருவரும் இருப்பவர்க்கில்லை யென்றளிப்பதில் உள்ளங்கை நெல்லிக் கனிபோன்ற சந்திரவட்டக் குடை பெற்ற கர்னனிடஞ்சென்று, அவனை கட்டியணைத்து, அவனது கண்ணீர் துடைத்து, புத்திர சோபத்தைப் பிடித்து, குளிர்ந்த கடல் சூழ்ந்த குவலயத்தை ஆளுங் கோமான் சிற்சில விபகாரங்களினால் அவன் மனதைத் தேற்றி, விடசேனனை முடித்த அர்ச்சுனன் உயிரைக் கொல்லுதற்கு வேண்டிய யுத்தி செய்து சொல்லுகிறான்: ஓ அண்ணா கர்னராஜனே! உம்முடைய வல்லபம் உமக்குத் தெரியவில்லை. நீர் ஒரு கணை தொடுப்பீராகில், அந்தக் கணையின் உரத்தாற் சப்த மலையும், சப்த சமுத்திரமும், சப்த பூமியும் தடுமாறிப் பயந்து சாய்ந்துபோம். அப்பேர்ப்பட்ட சாமர்த்தியமுடைய நீர், எதிர்த்த சத்துருக்களின் வெற்றியைப் பறித்துக் கைத்தனுவு மெய்த்தனுவுந் தகர்த்துத் தாரணியில் வீழ்ந்திறந்த துஸ்வாசனென்னுந் தாரணிந்த என் தம்பியைக் குறித்தும், குழந்தையாகிய விடசேனனைக் குறித்துங் கண்கலங்க வேண்டாம். எண் விலங்கவேண்டாம். நம்மைவிட்டு நீங்காதவர்கள் நீங்கினால், அதற்காக தாம் ஏங்கலாமா? துயரப்படலாமா? என்று ஆற்றல் சொல்லி, புத்திர விசுவாசத் துயரத்தையும் மாற்றினான் வலம்புரி மாலையணிந்த திணிந்த தோளானாகிய துரியோதனராஜன். அந்த அரசனுடைய வார்த்தையைக் கேட்ட கர்னனானவன், கண்களை விழித்து உருட்டிப் பார்த்துச் சொல்லுகிறான்: "மலைமலங்கினு மாதிரங் கலங்கினு மாதிரங்களில் விண்ணோர், நிலை கலங்கினு நெடுங்கடல் கலங்கினு நிலங்கலங்கினுஞ் சேடன், றலைகலங்கினும் பேரவை மூன்றினுந் தளர்விலாதவர்கற்ற, கலைகலங்கினும் போர்முகத்தென் மனங்கலங்குமோ கலங்காதே" ஓ துரியோதன மகாராஜனே! மலை கலங்கினாலும், திசாதிசை கலங்கினாலும், திக்குப் பாலகர் கலங்கினாலும், தேவர்கள் கலங்கினாலும், நீண்ட சமுத்திரங் கலங்கினாலும், நெடியபூமி கலங்கினாலும், ஆதிசேடனுடைய பணமகுடங் கலங்கினாலும், அளவிடற்கரிய மும்மூர்த்திகளின் பேரவையில் தளர்வில்லாமற் கற்ற பலகலை கலங்கினாலும், போர் முகத்தில் என் மனங்கலங்குமோ? ஒருக்காலுங் கலங்காது. ஆதலால், ஓ அரவக்கொடி படைத்த அண்ணலே! என் குமாரனாகிய விடசேனனுடைய தலையானது, என் கண்ணெதிர் துணியும்படிக்கு அம்புப்பிரயோகஞ் செய்த இந்திரன் மகனாகிய அர்ச்சுனன் தலையை இப்பொழுதொரு கணத்தில் ஒரே பாணத்தில் துணிப்பேன். அதை நீர் பாரும் என்று சபதவார்த்தைபேசி, தனது ரதத்தைச் செலுத்துகின்ற சாரதியாகிய சல்லியராஜன் முகத்தை நோக்கி, தன் மனமகிழ்ந்து ஓர் சொற் சாற்றினான் சூரியகுமாரனாகிய வீரியக் கர்னன்.

### கர்னன் சல்லியன்கூறிய துற்சகுனங்களையுங் கருதாது சென்று அர்ச்சுனனை வளைக்க, அவனுமெதிர்த்தல்

ஓ மத்திரராக்கரசனே! கேளும்; இன்றைய தினம் உதயமாகிய சூரியன் அஸ்தமிக்கிறதற்குள்ளே, சாமர்த்தியமுள்ள அருச்சுனன் தலையை அருமையாகிய எனது விஷாக்கினி வெங்கணையாற் விண்ணுலகிற் சேர்க்கிறேன். இந்த வேளையில் உன் வல்லமையை நான் பார்க்கவேண்டியிருப்பதால், பகைமேலிட்ட பார்த்திபரெல்லாரும் புகழ்ந்து கொண்டாடும் படியாய்ச் சல்தியில் விசாலமாகிய வீரரதத்தைவிடும் பார்ப்போம் என்று கர்னன் கூறலும், அந்தக் கர்னனைப் பார்த்து மத்திரதேசாதிபனாகிய சல்லியராஜன் மித்திரனாகச் சொல்லத் தொடங்கினான். ஐயா அங்கராஜனே! நீஇப்போது சபதங்கொண்டு புறப்பட்ட வீரியத்திற்கும், உன்மனதின்படி தேர் செலுத்த விருக்குங் காரியத்திற்கும் யாதொரு தாழ்ச்சியுமில்லை. ஆனால், நீபுறப்பட்ட இத்

தருணம் பூமி அதிர்கின்றது. இரத்தமழை பொழிகின்றது. கச்சைக் கொடிமேற் காக்கைகள் அடித்து மோதி விழுகின்றன. மேகமெல்லாம் ஆகாயத்தில் இடி உண்டாகின்றது. ஆயுதங்களின் முனைகள்தோறுங் கரும்புகை புகைகின்றது. வாசனை பொருந்திய மாலைகளெல்லாம் வாடி சரகாய்க்கரிந்து புலால் நாற்றம் நாறுகின்றன. இடது தோளும் இடதுகண்ணும் துடிக்கின்றன. யானைகளுங் குதிரைகளுங் கண்ணீர் விட்டழுகின்றன. பைசாசுகள் எதிரெதிர் கூத்தாடுகின்றன. ஓரி ஊளமிடுகிறது. நவரத்தின கஜித ஆபரணங்களெல்லாஞ் செம்பைப்போலும் - இரும்பைப் போலும்-பித்தளையைப் போலும் ஒளிமழுங்கி அழகழிந்து காண்கின்றன. ஓங்கிய விரதம் புதைந்து ஒலியெழா திருக்கின்றது. ஓடங்களையுடைய கடல் ஒலிமிகுந்து கரைபுரண்டுவருந் தன்மைபோலிருக்கின்றது. பகலில் நக்ஷத்திரங்கள் பலபலென்றுதிரத் தோன்றுகின்றன. வயிற்றிற் பகீரென்று எரிச்சல் உண்டாகின்றது. இதுகளெல்லாம் நீகாணவில்லையோ? இப்போது இதோ நேராகப்பார். இப்பேர்ப்பட்ட துற்சகுன விபரீதந் தோன்றுவதினால், இன்றையப் பொழுதை உபாயமாய்ப் போக்கிவிட்டு நீ உயிர் பிழைத்துப்போய் நாளைய தினத்தில் வந்து போர்புரிவையாகில், உன் சபதப்படி இந்த அர்ச்சுனனைச் செயித்துக் கொல்லுவாய். மற்றப்போரையும் எதிர்த்து வெல்லுவாய். துரியோதன மகாராஜனுக்கு அகண்ட மண்டலாதிபத்தியப் பட்டாபிஷேகமும் பண்ணி வைப்பாய். உண்மையாக இன்றையத்தினம் நீ சண்டைக்குப் போகவேண்டாம். என் பேச்சைத்தள்ளி வெஞ்சிலை விஜயனுடன் வீண்சண்டைசெய்யப் போவையாகில், அவன் தன்னுடைய அம்பினால் உன்னை மாய்த்துச் சாய்ப்பது சத்தியம். இன்றைக்கு நீ எப்படியும் அவனாற்பட்டுப்போவாய் என்று எதிர் நின்று குன்றுபோன்ற தோளினையுடைய மத்திரராஜன் சொன்னான்.

இந்த வார்த்தைகளைத் தனக்குத்தானே ஒப்பாகிய கொடையாளன் கேட்டு, கலீரென நகைத்து, ஓ சல்லியராஜனே! என்னிடத்தில் வளர்ந்து வராநின்ற நாகாஸ்திரத்தை விடுப்பேனாகில், தனஞ்செயனுடைய தலைதப்புமோ? நான் விடுக்கும் பாணம் அவனுக்கு அமுதமும் உறவுமாகிறதும், அவன் தொடுக்கும் அஸ்திரம் எனக்கு விஷமும் விரோதமும் ஆகிறதுமா? அப்படியா? நல்லது அதைப் பார்த்துக் கொள்ளுவோம். யானையினுடைய தவ வலிமையைச் சிங்கம் வியந்து சந்தோஷப்பட்டு அந்த யானைமேற் செல்லாமல் திரும்பிவிடுமாகில் உன் சொற்படிக்கு நானுந் திரும்பிவிடுவேன். யானையைக் கண்டு சிங்கமுந் திரும்பப் போகிறதில்லை. உன் சொல்லைக்கொண்டு நானுந் திரும்பப்போகிறதில்லை. ஆகையால், உபயோக மில்லாத பேச்சை ஏன் பேசவேண்டும்? அதனால் பிரயோஜனமில்லை. உமது உத்தியோகப்படிக்கு அந்த விஜயனுக்கு நேரில் என் ரதத்தைச் செலுத்தென்றான் கர்னனானவன். அதைக் கேட்ட தடந்தேர்ச் சூதனாகிய சல்லியன் மனஞ் சலித்து, நமது சொல்லுறுதியைக் கேளாமற் றள்ளி இவனெண்ணப்படியே பேசுகிறானே; வீணாகச் சாகிறானே என்று சற்றுநேரம் நிதானித்து நின்று, விசனங் கொண்டு வியர்த்து, கண்ணீர்பெருகக் கலங்கி, மனமறுகி வெறுத்து, சரிதான் இவ்வுலகத்தைத் தருமராஜன் ஏக சக்கிராதிபதியாய் ஆளுகிறதற்கு நாள் சமீபித்தது என்று தன் மனதில் நினைத்து, வினைப்பயன்படி முடியுமென்று கனைத்து, சத்துருக்களின் மனம் உடையும்படியாய் முட்கோல்கொண்டு குதிரைகளை உந்தி, நீயே வெற்றிக்கொள்ளென்று கர்னனுடைய மனவேகம் பின்னாகவுந் தேர்வேகம் முன்னாகவும் போகும்படியாய் ரதஞ் செலுத்தினான் சாரதித் தொழிற்குச் சமர்த்தனாகிய சல்லியனானவன்.

அப்போது, அங்கதேசாதிபன் சிங்கம்போல் தெளிந்து, தன் கைவில்லை வட்டமாக வளைத்து, மழைகளைப்போற் பலகோடி பாணவருஷங்களை வருஷித்து, பாண்டவச் சேனைகளை முனைசாய அடித்து மடித்தான். அநேக வாத்தியங்களின் முழக்கமும், அம்பினோசைப் பெருக்கமும், யானை சேனை பரிவாரங்களினுடைய ஆர்ப்பும், ஆகிய இவ்வோசைகளினால், திக்கு யானைகளினுடைய கர்னமதச்சுவடு அடைந்து போயதென்று சொல்லுவோமாகில், ஓ ஜெனமேஜெய மகாராஜனே! அப்போர் வீரத்தை எடுத்துப் பேசும்படியானவனெவனோ அறியேன். கர்னராஜனானவன், காலாக்கினி உருத்திரனைப்போல் தான் முன் சிந்தித்தபடி முந்திவந்து அமர்புரியும் அந்த வேளையில், தேனிறைந்த மலைமாலை யணிந்த புயவீரனாகிய அர்ச்சுனன் மாயனூர்ந்த தேர்

மிசைவந்து, பாரிய காண்டீபத்தில் நாணி பூட்டி, சக்ரரட்சகராளாகிய உத்தமோசா உதார் மனுடனும், கரிபரி முதலாகிய வாகினிகளுட னும், மெய்மையாகிய தம்பிமாரிருவர், வீம சேனன், அளவற்ற அரசர்கள் இவர்களுட னும் நின்று, கதிரவன் குமாரனாகிய கர்னன் பேரில் கடுமையாயிருந்தான். இவனு மவனும் போராடத் தொடங்கியபோது, கருங்கட விரண் டுங் கலந்து அலைமோதுவதுபோலும், உகா ந்த காலாக்கினி இருபங்காய்ப் பிரிந்தெழுந்து ஜாடுவதுபோலும், சண்ட மாருதமானது அண்டபிண்ட சராசரங்களடங்க அடிப்பது போலும், பகைத்து முனைந்து, பலத்தெழு ந்து வரும் பெருஞ்சேனையை இருதிறவேந் தரும் அணிபெற அமைத்து, கர்க்கடகச் சந் திரோதயம்போற் கணைமழை தூற்றி,விண்ணு மண்ணுங் கலங்கக் குதித்து விலகுவதற் கரு மையா யுத்தந்தந்து மெத்தக் களித்தார்கள்.

ஆகாயத்திற் பிரமனாதிய தேவர்கள் பரமேஸ் வரனைக் கர்னார்ச்சுனர்போரிற் ஜெயாப ஜெயம் யாருடையதென்று வினாவுதல்

இவ்வாறு போர்முனையிற் சிறந்த புஜ பல கர்னராஜனும், கார்முகஞ்செறிந்த காதல விஜயபோஜனும் கைகலந்து செய்கின்ற சண் டையின் திறத்தைக் காணுவதற்கு, சிருஷ்டி கர்த்தாவாகிய பிர்மாவும்-தேவர்களும்-தேவே ந்திரனும்-வசுக்களும்-பூதகணங்களும்-தேவ கணங்களும் - சந்திரசேகர மூர்த்தியாகிய கைலாசபதியும், உயர்ந்த ஆகாயத்தில் விமான நிரைகள் நிறையும்படிக்கு அதிசீக்கிரமத்தில் வந்து நிறைந்தார்கள். அப்போது பரிசுத்த மாகிய கமலசம்பவனென்னும் பிர்ம்மாவான வர், செஞ்சுடர்க் கண்களையுடைய சிவபெருமா னது சிவந்த திருவடியில் விழுந்து தொழுது, ஓ திரிபுராந்தகனே! இவ்விடத்தி லிப்போது நடக்கின்ற யுத்தத்தை நிறுத்திக் கௌரவரை யும் பாண்டவரையுஞ் சமநேசமாக்கிப் பகை யில்லாமற் கலந்து வாழச் செய்வதற்குக் கருணையுண்டா யிருக்கின்றதோ என்று கேட் டார். அதுகாலையில், முகந்திரும்பிய மான் மழுதாங்கிச் சகந்தழைத்துள சகல உயிர்கள் தோறும் நிறைந்து, அவரவர்க ளிழைத்த நல்வினை தீவினைகளின் பயன்படி அநுபவிக் கச் செய்யுந் திருவடிகளையுடைய வேத முதல் வனாகிய வெள்ளைவிடையோன் கிருபை சுர ந்து, சிறுநகை காட்டிச் சொல்லுகின்றார். ஓ சதுமுகனே! ஆகாயத்தி லெறிந்த கல் பூமி யில் விழாமலும், பூமியினின்று மெறிந்தகல் ஆகாயத்தி லெழாமலும், இருக்குங் காலம் எந்த காலத்தி லெப்போதோ? அப்போதும் இந்த யுத்தத்தை நிறுத்திச் சமாதானப் படுத்துவது அரிது. நாமெல்லாஞ் சென்று நிறுத்த முயலினும், அப்போது மேதாமோ? அல்லது தீதாமோ? யாமறியோம்: எல்லாந் தெரிந்த நீ பொல்லாத சமரத்தை ஒருக்க லாமா வென்று கேட்டது பெரிய ஆச்சரியமா யிருக்கிறது: இது உன்னாலாகுஞ் செயலல்ல. மற்றெவர்களாலு நடக்கும் பயனல்ல: நாம் எல்லோரு மறிய நம்மிலொருவனே போய் நடத்தப் போயிருக்க, இந்தப் போர் நடவா மன்முடியுமோ? என்று உமாமஹேசனுரைக்க, உடனே தேவேந்திரன் அவ்வீசனைப் பணி ந்து நோக்கி, ஓ சர்வக்ஞமூர்த்தி! பாற்கடற் பள்ளியான் நாற்கடற்றிசையு நடுங்கச்செலுத் துகின்ற தேரிலிருக்குந் தனஞ்செயனும், பிர காசிக்கும் விசால மார்பினையுடைய சூரிய குமா ரக் கர்னனும், ஒருவருக்கொருவர் பகைத்தெ திர்த்துத் தொடுக்குஞ் சரதாரைப்போரில் ஆர் ஜெயம் பெறுவார்கள்? ஆர் அபஜெயம்பெறு வார்கள்? புத்திர பாசநேச விசுவாசமாகிய என்மனம் சந்தேகமா யிருக்கிறது? நான் கொண்ட சந்தேகம் நிவாரணமாகும்படி யாய்த் திருவாய் மலரவேண்டும் நிமலனே என்றான். அந்த மொழிகேட்ட சுந்தரேஸ்வ ரர் இந்திரனைப் பார்த்து, ஓ புரந்தரா! வில் லெடுத்த போர்வலிக் கொருவனாகிய விஜய னுக்கு யாதொரு இடறுந் துன்பமுங் கிட்டா திருக்கும்படியாய் பூர்வம் நல்ல வரங்கொடுத் திருக்கின்றோம். மேலும், நாரணன் காப்பா யிருக்கின்றான். அதனால் அந்த அர்ச்சுனனே ஜெயம் பெறுவான். இதன்றியும், பராக்கிரம வீரரண குணசீலனாகிய கர்னன் ஆவி நீங்கி அகன்று, அரிவாசுதேவனுடைய அருட்பார் வையினால் நற்கதி புகுவான் என்று அருள் சுரந்துரைத்தார் பார்வதிசமேதராகிய பரமே ஸ்வரரானவர். அப்போது, சதாஸ்து: சதா ஸ்து: என்று இந்திரன் முதலாகிய தேவர்க ளெல்லோரும் அர்ச்சுனனை ஆசீர்வதித்து, அவனேறிய அழகிய அழியாத் தேரின்மீது பொற்பூமாரி பொழிந்தார்கள். தேவேந்திரன் தன்மகன் ஜெயம் பெறுவானென்று கேட்ட சந்தோஷத்தால் விந்தகிரிபோற் புயம் பூரி த்து, உடல் பாரித்து, உரோமாஞ்சிதம் பூத் தான்.

### அருச்சுனராஜனுக்கும் கர்னராஜனுக்கும் உயுத்தம்

இப்பாற் கர்னராஜனும் அருச்சுனராஜனும் நேர்ந்து, யுத்தபூமி மெத்தவு நொந்து வருந்தும்படியாய் அடுபோர் புரிந்தார்கள். அந்தக் காலத்தில் எழுந்த பேராசையானது, இவ்விதமென்று இசைக்கும் நாவலர்கள் எவர்களுமில்லை. அப்போது, சங்கு-பம்பை-தப்பட்டை-பேரி-பூரி-காகளம்-தாரை - சின்னம் இவையாகிய வாத்தியங்களின் ஓசையால் அண்டபகிரண்டம் நெரிந்து சரிந்துபோமே. அவைகள் சரிந்துபோனால் மறுபடியும் படைக்க வேண்டுமே என்று அயன் திடுக்கிட்டு அஞ்சினன். சேனா சமுத்திரங்களின் நெருக்கத்தினால் மலைகளெல்லாம் நொறுங்கிப் போமே: அதுகளுடன்கூட நமது கயிலையங்கிரியும் நொறுங்கிப் போனால், நாமிருக்க இடமெங்கே யென்று கயிலாசபதியுங் கலங்கினார். இந்தச் சேனைக் கும்பலிலிருந்து எழுந்த தூம்புகளினாற் சமுத்திர மெல்லாந் தூந்து போமே: அப்படி தூந்துபோனால் நாம் பள்ளிகொண்ட பாற்கடலும் வறண்டு திடராய்ப் போமாகில், நாமப்பா லெங்ஙனஞ் சென்று துயில் கூடுவோம்? என்று சக்கராதரனாகிய திருமாலுந் தியங்கினார். இம்மூவரும் ஏக்கங் கொள்ளும்படியாக குதிரைகளுடன் குதிரைகள் கலந்து நெருங்கின. ஆயுதங்களுடன் ஆயுதங்களிழைந்து புகைந்து உராய்ஞ்சின. மதவாரணத்துடன் மதவாரண மதர்ந்து அதிர்த்துப் பகைத்தன. ஓடுந் தேர்களுடன் ஊடு தாக்கின. விரிந்த குடையுடன் பரந்த குடைகள் மிகக்கலந்தன. பலதினுசுக் கொடிகளுடன் பலவகைக் கொடிகள் காற்றினால் வலம் வந்துழன்று பின்னித் துன்னின. குதிரைவீராளுங் குதிரைவீராளும்வயப்படைகொண்டெறிந்து மாரிமாரிப் போர் புரிந்தார்கள். வெற்றிபெற்ற யானைவீராளும் மதமுற்ற யானைவீராளு மேன்மேற் கடுகி அமர் முடுகினார்கள். சாளரங்களையுடைய மலைபோன்ற தேர் வீராளுந் தெழித்துக் கிட்டினார்கள். வெற்றிமாலையணிந்த சுத்தசாரி வந்த பாதசாரியாகிய பதாதிவீரரும் பதாதிவீரரும் விதியாகிய செருவிளைத்து முட்டினார்கள். எடுத்தவேலினரும் பிடித்த வேலினரும் அடுத்துக் கடுத்து முனைந்தார்கள். சிலர் லட்சயமாய் விடுக்குங் கொடும்பகழிகளைத் தொடுக்கும் வில்லைத் திடும்பிரவேசமாய் வளைத்தார்கள். சிலர் கடகமணித் தொடிகளை அணிந்த கரங்களி லெடுத்த வாளமும் வாளமும் மாட்டிப் பொருதினார்கள். சிலர் விரற்களிற் றுங்கிச் சுழற்றி விடுத்த சக்கரங்களுஞ் சக்கரங்களும், முஷ்கரங்களும் முஷ்கரங்களும், உக்கிரத்துடன் பக்கென் றெரிந்திடவிட்டு, வீராளுடைய தலைகள் வீழத் துண்டித்தார்கள். வெகுபேரைக் கண்டித்தார்கள்.

இவ்வாறு அறன்மகனாகிய தருமராஜனுடைய பெருஞ்சேனை நிருபர்களும், திறன்மகனாகிய துரியோதனராஜனது பெருஞ்சேனை நிருபர்களும், ஒருவர்க்கொருவர் மிஞ்சி வெஞ்சினம்பேசி, திறமிகுந்த தங்கள் தங்கள் சேனைகளுடன் எதிரெதிர் சென்று, போனபோன இடங்கடோறும் புகுந்து பொருந்தி, ஒருவருக்கொருவர் தோள்பலமும் - தாள்பலமும் - வாள்பலமும் - ஆள்பலமும் - வீராவேசமும் - கோபாவேசமு முடையவர்களாய் மலைந்தார்கள். நகுலசகாதேவராதி தம்பிமார்களும், பெருஞ் சேனைகளும் இரண்டு புறத்திலுந் திரண்டுவர, பந்துக்களும் படைத்துணை வந்த பார்த்திபர்களும், இன்னுமுள்ள யாவருஞ் சக்ரவாளகிரிபோற் சூழ்ந்துவர, வெவ்விதாகிய வெஞ்சினச் சபத நீர்பாய்ந்து கோபப் பயிர் விளைவேறித் தழல்மூளும் மனத்தோனாகிய வீமசேனன் முன்னே போக, இவ்வித ஆடம்பரத்துடனே நெருங்கி நடுமத்தியில் அருச்சுனராஜன் விஜயகாண்டபத்தை நிறுத்தி வளைத்துக் குணத்தொனி பண்ணி ஜெணஜெணத்காரச் சிலீமுகங்களை மாரிபோல்வாரிப் பொழிந்து வந்தான். அஸ்வத்தாமனும், கிருபனும், கிருதவன்மனும், மாமன் சகுனியும், இன்னுமுள்ள மறவர் முதலாகிய பேர்களும், எரிந்து பொறிபறந்துவிழும்படியான கோபக் கண்களையுடையவர்களாய் மதில்சூழ்ந்த தன்மைபோல் வளைந்துவர, யாவரும் மெச்சும்படியாகிய உச்சித வில் தாங்கி, இன்றையப் போரில் இந்திர குமாரனை இமையவருலகத் தேற்றுகிறேனென்று மனோ நிச்சயங்கொண்டு சரமாரி பொழிந்து நின்றான். இவ்வாறு அர்ச்சுனனுங் கர்னனும் எதிர்த்து, மல்லயுத்தங்களைப் புறம்போக வொட்டாமல் வல்லமையுடன் குடிவைத்துக்கொண்ட தங்கள் தங்கள் புஜபலத்துக்குத் தகுந்ததாகிய வில்லை வளைத்துக் குணத்தொனி தெறித்து, வெல்ல அடித்துக் கொல்லத் துடித்து, நல்ல சிலீமுகங்களை மெள்ள தொடுத்து

விடுத்து விறுவிறென் றேற்றுவதானார்கள். அப்போது, சக்ரவாளமுஞ் சமுத்திரமும் வளைந்த இந்தப் பூமிக்குப் பந்தலமைத்து நிழல்காக்கச் செய்யுந் தன்மைபோற் பாணங்களை இறைத்து, பாரிடத்தைநிறைத்து, அந்தரத்தை மறைத்து, ஆக்ரஷித் துரைத்துக் கொண்ட தங்கள் தங்கள் சொல்லுக் கிளைக்காமல் ஆவேசங்கொண்டு போர் புரிந்தார்கள். இந்தப்படிக்குப் போர் வெற்றிமாலை புனைந்த புயத்தாரிருவரும் மருவிச் செபமாறி உருவேறிய மந்திரங்களைச் சொல்லிப் பூசிக்கும்படியாகிய நிலைமையாலும், இருவருஞ் சமமாக வில் வளைத்தாக்ரமிக்கும் விரகினாலும், தகுந்த பாணங்களைச் சமய மறிந்து எய்து வருஞ் சாமர்த்தியத்தினாலும் யாவருமிளைத்து; இவர்களுடைய சூழ்ச்சி இப்போர்ப்பட்டதென்று சிறிதேனும் அறியாமற் போனார்கள். தேவர்கள் முதலிய யாவருந் திகிலடைந்து, உகாந்தகாலம் இன்று குறுகியதோவென்று வெருவிப் பயந்து பின்னு மேலாகச்சென்று விசனமேற் கொண்டார்கள்.

இப்படியாகக் கர்ணார்ச்சுனன் செய்த யுத்தத்திறங்களைச் சொல்லுமிடத்து இவர்களிருவரும் எதிரெதிர் மீறி வாய்மடிந்து மண்டியிட்டு, வாள்விழிசிவந்து,வாய்ப்புகைமலிந்து, வாயுக்கணை - தேயுக்கணை - வருணைக்கணை - அருணைக்கணை - நாகக்கணை - மேகக்கணை - இந்திரக்கணை - சந்திரக்கணை - மந்திரக்கணை - அந்தரக்கணை - மோகனக்கணை - பாகனக்கணை மருந்துக்கணை - பருந்துக்கணை - உருத்திரக்கணை - உபத்திரக்கணை - சஞ்சரிக்கணை - அஞ்சரிக்கணை - அரிக்கணை - கஜக்கணை - கலைக்கணை முதலாகிய ஆலாலக் கணைகளை விடுத்து ஆர்ப்பரித்துப் போர்புரிந்தார்கள். இவர்கள் இருவரும்விடுத்த பாணங்கள் ஒன்றோடொன்று எதிர்த்து,முனையுடன் முனை உராய்ந்து, ஒன்றையொன்று விழுங்கி, ஒன்றையொன்று கக்கி, ஒன்றையொன்று உமிழ்ந்து, ஒன்றையொன்று இமிழ்ந்து, ஒன்றையொன்றுதுரத்தி,ஒன்றையொன்று விரட்டி நெடுந்தூரம்பின்னாலோடி, விசைகொண்டு அந்தரத்திலாடி, ஒன்றனந்தமாகப்பிளந்து ஒன்றாலொன்று அழிந்து ஒன்றுடனொன்றுமோதி, ஒன்றுடனொன்று காதி, கும்பலில் வீழ்ந்து புதைந்து, குபுகுபுவென்று புகைந்து, பாதிபாதியாய்த் துணிபட்டு, வீதிவீதியாய்ப்பிணைபட்டு, துண்டந்துண்டமாய்க் கிழிபட்டு, கண்டங்கண்டமாய் அழிபட்டு, குமுகுமுவென்று கூவி இரைந்து, கமகமவென்று நாறி கழன்று, சடசடவென்று தாவிவிழுந்து, மடமடவென்று மாறி விரைந்து, ஒன்றையொன்று கீட்டுகளை அழித்து, கூர்மையையொழித்து, இறகுகளைப் பொடித்து, எழுதிய வீரப்பேரைக் கலைத்து, எந்த உலகிலும் புகுந்து, எதிர் வந்தவர்களின் சிந்தையைப் பிளந்து, எதிரெதிர் ஓடிக்கூடி, பகைவரிருக்கும் இடபநாடியோடி, ஒருகணை இடம்புரி வந்தால் பலகணை வலம்புரி திரிந்து, பலகணை வலம்புரி வந்தால் சிலகணை இடம்புரி வந்து, மண்டலமாக வளைந்தோடி வெந்து, விண்டலமளாவி விரைந்தாடிநொந்து, அளவிறந்த முறைமையாய், பளபளென்ற நிறமையாய், கொண்டல்கள் குழைந்தொதுங்கவும், எண்டிசை இழைந்து நடுங்கவும், தத்தத்திமியென நடனம் புரிந்தும், திகிதித்திமியென திடஞ்செறிந்தும், பவுரிசுத்திப் பறந்து திரிந்தும், பசைவாற்றுப் பதுங்க விரிந்தும் போராடின. இதன்றியும், இடசாரி வலசாரியாகக் குயவன் திகிரிபோற் சுழலுந்தேர்கள், மண்டலம் - கோணம் - வட்டம் - வளைவு என்று சொல்லும்படியாகி ஒன்றோடொன்று கர்க்கரத்துவனியுடன் இரைந்து கலகலவென்று மணியசையவோடி, ஒன்றையொன் றெதிரெதிர் முட்டி, சிங்கமுகந்தாக்கி, சிங்கமுகத்துடன் ஏர்க்கால் நுகத்துடன் ஏர்க்கால் நுகம்போக்கி, சக்ரங்களுடன் சக்கரங்கள் இடிபட்டுடைந்து, குதிரைக் குர்றுக்கால் - கொடுங்கை அலன்று, குதிரைகளனைத்துங் கூச்சலிட்டயர்ந்து போகும்படியாய் மொய்த்திருக்கும் யுத்தகளத்திற்கு சாரதியுஞ் சாரதியும் வீரவேஷத்துடன் சமர்த்துகூறி, ஒருவர்க்கொருவர் தேரை மாறி, நான் முன்னே நீ முன்னே, நான் பின்னே யென்று பராக்கிரமித்தனர். இச்சாரதிகளிருவரில் தங்கள் திறத்தினாலும், நிறத்தினாலும், வாசுதேவன் இன்னான், மந்திரதேசன் இன்னானென்று தேவர்களாலுங் கண்டறியக் கூடாமையால், எல்லாருடைய கண்களுஞ் சுழன்று கலங்கி, மனமும் மயங்கிப் போய்விட்டன. இத்தேர் வலவர்கள் திறமுதலிய செய்கைகளில் வேறுபடாமலிருந்தா லெப்படியோ, அப்படியே இவர்களுடைய ரதத்தில் பூட்டிய குதிரைகள் பேதமில்லாத வீரமும், அபேதமான கழியும், அனேக பரதசாமர்த்தியமும், நல்ல குரலோசையும், பற்பலவித வேக கதியும், பால்போன்ற நிறமும் உடைத்தாய், உயரமும் - பருமனும் - நிகளமும் - தேக வலிமை

யுங் கூடி ஒன்றையொன் றெருத்திருந்தன. வல்லவராகிய கர்ணர்ச்சுனருடைய தேரைச் சூழ்ந்த சிலை மன்னவரெல்லாரும், இருபிறிவாகப் பிரிந்து இரண்டு நிலையாக நின்று ஈடு தாழ்த்தி இல்லாமல் போர் புரிந்தார்கள்.

அப்போது சர்வசம்ஹாரகால உருத்திரனுக் கொப்பான கர்ணர்ச்சுனர் திரண்ட இரண்டு மலைகள் எதிரெதிர் எதிர்த்து வளைந்ததைப்போலும் வளைந்து, நிறைந்த இலைகளைப்போலும், நறிய தளிர்களைப்போலும் இரா்நின்ற பாணங்களைத் தொடுத்து, அண்டமுகடனைத்தும் அதிரும்படியாய்ப் போராடி, தாங்கள் கைப்பிடித்த விற்களிரண்டு நிமிராமல், அற்பகலின்னதெனத் தெரியாமல், விற்பன விவேக வினைமொழிகளோடு, கற்பனலங்கார உற்பனக் கணைகளை மேலுமேலுங் கலகலவென்று சிந்தினார்கள். இப்படி போராடுங் காலையில், அர்ச்சுனராஜன் தேவதத்தத்தை எடுத்து உலகந்திடுக்கிட முழக்கி, மேலாகிய நூலாய்ந்த வெகுபோர்களாலு மதிக்கும்படியாய்ப் பாரதப் போருக்கென்று பற்பலவாக முன்னமே பெற்றிருந்த மும்மூர்த்திகளின் வடிவமும் பண்பும் பெற்ற நற்பழிகளை நாடியெடுத்து பூசை கொடுத்து, முதல்வனாகிய சூரியனது மெய்ப்புத்திரனென்னுங் கர்னன் பேரில் கள்ளுண்ட வண்டினங்கள் மொய்க்குந் தன்மைபோல் நிரைநிரையாய், திரைதிரையாய், பரபர - சரசர - கரகரவென்று போதுமானமட்டுந் தீதுசெய்ய விட்டான். அதைக் கண்ட அங்கதேசாதிபன் தன் தந்தையாகிய சூரியபகவான், விந்தையாகிய அன்புடன் சிந்தைமகிழ்ந்து மைந்தனாகிய தனக்குக் கொடுத்திருந்த பராபரமென்னும் பாரியவலம்புரிச் சங்கத்தை யெடுத்து பையவாயில் வைத்து வையகமெல்லாம் நையவும், மேகங்கள் மழைகளைப் பெய்யவுமாக முழக்கி, வரிநெடுஞ்சிலை தாங்கிய வலாரி மகனாகிய அருச்சுனனால், மழைபோல் பொழிந்த வடிக்கணைகளை யெல்லாம் பதிலுக்குப் பதில் மந்திராஸ்திரங்களைத் தொடுத்து முறித்துத் தறித்துக் கொய்தான். இவ்வாறு இவ்வதிரத வீராளிருவரும் வெற்றிமாலைதரித்த நீண்ட வில்வளைக்கும் ஓசையும், அவ்வில்லில் மாட்டிய சிறு நாணோசையும், அவரவர்களின் கொடி முதலாகிய விருதுகளின் ஓசையும், தேவதத்தம் பராபரமென்னும் இவருடைய சங்கோசையும், அண்டம் பிதிர்ந்து போகும்படியாக முழங்கும் வாத்திய ஓசையும், நால்வகைச் சேனை சமுத்திரங்களின் பொங்கோசையும், தேர்ச்சாரதிகளின் திடவோசையும் ஒன்றாகச் சேர்ந்து, அண்ட முடைத்திட் டப்புறமும் போய் வீணாகாமல் மீண்டுவந்து, ஈண்டிருக்கும் யாவர்களுடைய செவிகளுஞ் செவிடுபடவடைந்து, கண்விழி பிதுங்கக்கலக்கி, இன்னுமுள்ள பேரிடிமுதலாகிய ஓசைகளைப் பெருக்கச் சேர்த்துக் கொண்டு திரிலோகத்தையுங் கலக்கிக் கருக்கப் புறப்பட்டன. அப்போது இமையாவிழியோராகியதேவர்களுந்தேவேந்திரனும்பயந்து அயர்ந்து பாறினார்கள்.

அக்காலையில், அக்கினிதேவனாற்கொடுத்த காண்டீபத்தைப் பிடித்த அருச்சுனனானவன், அதனைக் குணத்தொனிபண்ணி பலம்பொருந்திய அக்கினியாஸ்திரத்தை யெடுத்து அடல்பெறப் பூசித்து, கர்னன் அஞ்சும்படியாகக் கொடுத்து ஒரேநிலையாக நின்று ஏவினான். அந்தக்கணை வெளிப்பட்ட மாத்திரத்திற் கடுவேகங்கொண்டு பொங்கி அனலெழுந்து, அழல்தழைத்து,புகைமிகுந்து,பொறிபறந்து புனல்வரண்டு புழுதிமண்டும்படியாய்த் தாவி, ஆகாயகங்கையை வறட்டி இருள் நீங்குஞ் சந்திரனைப்போல் எங்கும் பிரகாசமாகி, நக்ஷத்திரங்களின் கூட்டம்போல் எரிந்து, பலபல பலவென்று மீண்டும் பூமியிற்பாய்ந்து இணையில்லாமல் எழுந்து, விநோத ரதங்களும் வேகக் குதிரைகளும், மும்மத யானைகளும், வீரபதாதிகளும், இவர்கள் விடுங் கூர்மையாகிய சூலாயுதம், வேலாயுத முதலாகிய எல்லா ஆயுதங்களும்,வெங்கணைகளும்-வீரவிற்களும் கரிகரியாய் கரிந்து, பொறி பொறியாய்ப் பொறிந்து போகும்படி யடித்து, சிலவற்றை ஒடித்து போர்முடித்து வருவதாயது. இவ்வாறு அருச்சுனன் தொடுத்த அக்கினிக்கணையை யமனுக்குச் சகோதரனாகிய கர்னன்கண்டு, இரண்டு புஜங்களும் வளர்ந்து மேற்கொளநின்று, நெற்றிசுளித்து நீண்ட புருவங்கள் துடித்திடச்சென்று, வாத்தியங்களி னோசை மகாயுகம்போல்முழங்க கோப மேற்கொண்டு, சமுத்திரராஜன் கொடுத்த வருணாஸ்திரத்தை எடுத்துவந்தித்து, மந்திரஞ்சிந்தித்து, நாணியிற்பந்தித்து அநுசந்தித்துவிட்டான். அது வுடனே கணகணவென்றுபுறப்பட்டு ஆகாயத்திலெழுந்து, சமுத்திரசலத்தை வறளக்குடித்து வலுவேறிய மேகங்களைக் கருக்கிக் கலக்கி விலக்கி மலைக்குப்போகும்படி மாட்டி, மாதிரங்

குடிபோகவோட்டி,வானத்தில்நின்றுசிரங்காட்டி, தனக்குச் சப்தமேகத்தின் பேரை நிலைநாட்டி, இடி - மின்னல் - இருள் - இரைச்சல் இவை களைக்கூட்டி, நறநற நறநறவென்று வெள்ளஞ் சொரிந்து, பள்ளம் படுகுழி நிறைந்து, சேனசயின்னியங்களைச் சிதைத்து, இரத்த வாரி யோடும்படியாய் கதித்து, செவ்வானம் போன்ற யுத்தகளத்திற் புகுந்து, தருமராஜனுடைய தம்பி அருச்சுனன் தொட்டுவிட்ட அக்கினிக்கணையை அடக்கி அவித்து அறுத்துத் தள்ளியது. உடனே அருச்சுனனுடல் படபடெனத்தேறி தடபுடலாகச்சீறி, சபதங்கள் பலவாறுகக்கூறி, வாயுக்கணையைக்கோறி மந்திர உபசாரம் பூசித்து, அங்கர்கோன் பேரில் ஏவினன். அந்தக் கணையானது ஒளியைப்போற் செவந்து, வெப்பமாகிய நிறத்துடன் முகமலர்ந்து, வெவ்வேறு கணைகளை விளைத்துத் திகழ்ந்து,பிரகாசமிகுந்து பேரோசைமலிந்து வருவதாயது. அப்போது, வான்மணி மகனுகிய கர்னன், அர்ச்சுனன் பிராணனை அகற்றவேண்டு மென்னும் எண்ணங்கொண்டு, நாகேந்திரன் கொடுத்திருந்த திணிந்த பலநிறைந்த அரவக்கணை எடுத்துப் பிரையோகஞ் செய்தான். அந்த நாகக்கணையானது புறப்பட்டு அருச்சுனன்விடுத்த கணைகள் யாவற்றையுங் கொன்று, முதன்மையான வாயுக்கணையையும் வாய்ப்பேச்சில் வென்று விழுங்கியது, தக்ஷணமே விஜயன் பார்த்து, வெகுண்டு வியர்த்து, இதோ விடப்போகிற என் அம்புக்கு எதிரம்பு எங்குமில்லை என்று சொல்லி, ஒரு மேகாஸ்திரத்தை யெடுத்துத் தூபதீபங் கொடுத்துப் பலமாக விடுத்தான். அதைக் கர்னன்கண்டு, கலீரென நகைத்து, கடுமைகொண்ட காற்றின்கணையை ஏவினன். அந்தக் கணையானது, கடலுந்திடலுங் கடும் போரடலுங் கலங்கக் கெடுத்துவந்து விஜயன் உந்திய மேகக்கணையைச் சிந்துசிந்தாய்ச் சிதைத்துச் சிந்தியது. அதைக்கண்ட அர்ச்சுனன் கண்மூடிக் கண்திறப்பதற்கு முன்னே விண் மூடும்படியாய், மேலுமேலுங் கோலாகல நாலாவித மேலாகிய சுவாலாமாலிகை போன்ற லீலாவிநோதக் கோல்களை ஆலாலமொத்துப் பாயத் தொடுத்தான். அவைகளையுங் கர்னனுனவன், அரைநொடியிற் பிலத்துவாரத்தில் நுழைந்த பெரும்பாம்புபோற் பின்னிட்டு அகன்றுபோகக் கெடுத்தான். இப்பாற் சுரேந்திரன் மைந்தன் தன்தந்தையாகிய தேவேந்திரன் கொடுத்த இந்திராஸ்திரத்தைச் சிந்தித்து வந்தித்து அபிமந்திரித்துப் பிடித்து அடித்தான். அந்த அஸ்திரமானது புறப்பட்டு அம்பரத்திற் பம்பரம்போற் சுழன்றுவருவதை, சப்தமாவென்னும் பச்சைப்புரவி பூட்டிய தேரினையுடைய சூரிய பகவான் மகனுகிய தியாகபாராயணக் கர்னன் கண்டு தன்பிதாவாகிய அச்சூரியன் தந்திருந்த சூரியாஸ்திரத்தை எடுத்துநாட்டி, ஆரியர் காட்டிய மந்திர வவிர்ப்பாக மூட்டிவிடுத்தான். அக்கால், தகுதிபெற்ற இருவர் வாளிகளும் ஒன்றுடனென்று முனைநெருங்கி, ஒன்றுக்கு ஒன்று தாழாமல், அடிபட்டு வீழாமல், உதிர வெள்ளத்தில் ஆழாமல், ஒன்றையொன்று கீறிப்போகாமல், ஒன்றுக்கொன்று உயராமல், அயராமல், பெயராமல், சமமாக சமர்பொருந்தித் தாரணி சலிக்கும்படியாய் தழல்காட்டி தாக்கும்போது, கர்னன் வேறொரு கடும்வாளி விடுத்து அர்ச்சுனன்தொடுத்த இந்திராஸ்திரத்தை அழித்துச் செழித்திருந்தான். அர்ச்சுனன் வேறொரு அடல்வாளிவிடுத்துக் கர்னனேவிய சூரியாஸ்திரத்தை ஒழித்து தழைத்திருந்தான். கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! இவர்களிருவரும் ஒருதாய்க்கு ஒரு கருப்பத்தில் ஓரினமாயிருந்துள்ள சசிதேவி மணளனுக்குஞ் சாயாதேவி மணளனுக்கும் பிறந்த புத்திரசிகாமணிகளாதலால், ஒருவருக்கொருவ ரிளைப்பார்களோ? இளையார்கள்.

## கர்னன் பராக்கிரமித்து நிற்பதைக்கண்ட வீமன் அருச்சுனனைத் தூண்டிப் பிரம்மாஸ்திரப் பிரயோகஞ் செய்வித்தல்

இவ்வா றிவர்கள் செய்யும் போர்முனையில், இன்னும் இப்படி எத்தனைகோடி அஸ்திரங்கள் வந்தபோதிலும், அத்தனைகள் இவ்விதமாகவே எதிரெதிர் மோதப்பட்டழிந்தன. நாகக்கொடி படைத்த நராதிபனும், அவன் தம்பிமார் முதலிய படைஞரும் உள்ளங் களித்து, தங்கள் வலிமையை யாவரும் கொண்டாடும்படியாய் நின்றார்கள். அப்போதவர்கள் நிற்கின்ற ஜெயநிலையையும், பகலோன் பிரயோசனமாகப் பெற்ற வாளையாகிய கர்னன் செய்து வருகின்ற போர்த்திறத்தையும், சிலைவிஜயன் விடுக்கின்ற தேவதாஸ்திரங்களெல்லாம் பயன்படாமல் முனை துணிந்து முதலொழிந்து முடிசிதைந்து மூன்றாயழிந்து வேகங்குறைந்து வீழ்வதையும், அதனை பாண்டவச் சேனைகள்கண்டு விசனத்தில் ஆழ்வதையும் வாயுகுமாரனுகிய வீமன்பார்த்து, மனஸ்

தாபமடைந்து, தனது தேரைச்செலுத்தி சீக்கிரமாயோடி, அர்ச்சுனனுக் கருகினிற்சென்று, அவனுக் கெதிர்நின்று ஆத்திரத்துடன் சில வார்த்தை சொல்லத் தொடங்கினான். ஆ! ஆ; தம்பி அர்ச்சுனா! மும்மூர்த்திகளாலுஞ் ஜெயிக்கப்படாத காலகேய நிவாத கவசாளென்னும் அசுரேசரைவென்று மூன்றுலோகமும் புகழும்படியாக விஜயனென்னும் பேர்படைத்த நீ, இந்தக் கர்னன்பேரில் தகுந்த வாளியைத் தொடுத்து அவனைச் செயிக்க நினைக்காமல் உனக்கு ஈடாக அவனை எதிரில் நிறுத்திக் கொண்டிருக்கின்றாயே: இன்று நான் கதையைக் கைக்கொண்டு ஒருக்ஷணத்தில் இந்தக் கர்னனைக்கொன்று பிராணனை நீக்கி அவன் தலையைப் போக்கிவிடுவேன். ஐயோ! அப்படி செய்தால் நீ சொல்லியிருக்கிற உன்னுடைய சபதங் கெட்டுப்போமேயென்று தடையாய் இருக்கிறேன். அடா தம்பி! நீ என்னசொல்லுகிறாய்? ஆலந் தளிரின்மேல் அருந் துயில் கொள்ளும் ஆயன், உனக்கு சாரதியாய் அமைந்த இந்த மாயன் அந்தக் கர்னனுக்கு மெத்தவு மச்சப்பட்டிருக்குந் தகைமை யுடையவர்போல் ஒடுங்கியிருக்கின்றாரே யல்லது, ரதத்தைச்செலுத்தி உனக்கு திடஞ் சொல்லி யுத்தஞ்செய்ய விடுக்கும் அக்கறை இவருக்கு இல்லைபோலு மிருக்கிறது. ஆயினுங் கூலிப் படைகளைக் குறித்து பேசவேண்டிய காரியம் இல்லை. எவன் அக்கரைக்காரனோ? அவனே பாடுபட்டுத் தன்னுடைய காரியத்தைத் தக்கபடி நிறைவேற்றிக் கொள்ளவேண்டுமே யல்லது, ஒருவர் சொல்லவேண்டுமென்னும் காரியம் என்ன? நீயோ? போதுமான வரைக்கும் புகழும் பெருமையும் பெற்று, ஒருவரும் நிகரற்று வில்வேதங்கற்று மேன்மையுற்றிருக்கின்றாய்? நமது தமயன் மனவருத்தமடைந்து பாசறையிலிருப்பதை தெரிந்திருந்து மிப்பேர்ப்பட்ட சண்டைமுகத்திற் சத்ருவைக் கொல்லாமல் ஏனோதானோவென்றிருப்பது காரியமல்ல. நம்போலிய காவலருங்கண்டு மகிழத்தக்கதல்ல. ஆகையால், இப்போதேமுனைந்து சூரசங்கார வெற்றி வேலாயுதத்திற் கொப்பாகிய பிர்ம்மாஸ்திரத்தைக்கொண்டு இந்த கர்னனை வீழ்த்திவிட்டு மறுவேலைபார் என்று மிகபொருமையாகவும், அருச்சுனனுக்குப் பெருமையாகவும் விளம்பினான் வீமசேனன்.

இவ்விதமாக வீமசேனன் சொல்லிய வார்த்தையை வெற்றிபெற்ற வில்வீர சிகாமணியாகிய விஜயன்கேட்டு, கொவ்வைப்பழம் போன்ற வாய்மலர்ந்து நகைத்து, அண்ணா! தாங்கள் சொல்லியது நிசந்தான். இனியவரைக் கணைபோதிலாகுங் காரியத்தை நீரேபாரும் என்று சொல்லிக் கர்னனைக்கொல்ல வேண்டுமென்று கடுங்கோபங்கொண்டு, தீர்க்கவயிர மனவுறுதி பெற்று, சத்தியலோகநித்திய வாசியாகிய சதுமுகன் கணை தாங்கி, உயர்ந்தபூசை முதலிய உபசாரங்களெல்லாஞ் செய்து அபிமந்திரித்து, கர்னனைக்கொன்று இன்றையப் போரை இனிதின் முடிக்கவேண்டுமென்று தேவதாஸ்திர மாசாரிய வணக்க முதலியனவற்றைப் புரிந்து பிரையோகஞ் செய்தான். அந்த பிரம்மாஸ்திரமானது, நான்குமுகத்துடன் நானாவித கோலமாய் வெளிபட்டு, முகிலேழையுங் கருக்கி, கடலேழையுஞ் சுருக்கி, புவியேழையுமுருக்கி, தீயேழையுந் தியக்கி, மண்டலமேழையும் வாட்டி, மருத்தெழுவரையுமோட்டி உலகமொடுங்குங் காலத்தில், உரத்தெழும் வடவாமுகாக்கினிபோல் அனல் வீசி, சிடசிடவென் றெரிந்துவந்து கர்னனைக் காய அடுத்தது. அதனை உரமாகிய மந்திரகிரியினுமுயர்ந்த புயமார்ந்த மார்பினையுடைய கர்னராஜன்கண்டு கடிந்து, அப்பிரமாஸ்திரம் பெருங்கோபத்துடன் வருவதையுணர்ந்து, மிகவிரைந்து, உடனே தானொரு பிரமன் கணையெடுத்து, வந்தித்துச் சிந்தித்து வாழ்த்தி முறமையாக விடுத்தான். இந்தக் கணை அந்தக்கணைமேல்விழுந்து அண்டங்களெல்லாம் பிதறவிட்டு முனைந்து எதிர்ந்து, இதனை அதுவிடாமல் அதனை இதுவிடாமற் கட்டிப்புரண்டு விழுந்து, முனையோடு முனை முட்டித்திரண்டு எழுந்து, தீவுதீவாரங்களிற் பாய்ந்துசாய்ந்து அகன்று, அகோரமுற்றிருந்ததுகள். அப்போது இந்தப்பிரம்மாஸ்திரங்களைத் தொடுத்துத் துடிதுடித்து நொடிப் பொழுதில் ஒருவரையொருவர் கொல்லவேண்டுமென்றிருந்த போர்த்திறம்பெற்ற கொற்றவரிருவருந் தேர்தூண்டி, மூண்டெழும்போர் செய்யாமல், வேறுபாணங்களுந் தொடாமல், கையிற்பிடித்த வில்லையும் வளையச் செய்யாமல் இருந்தார்கள். இப்பால் மணநாறிய மலரேறிய மணிமகுடமுடியோராகிய கர்னார்ச்சுனாள் இருவருந் தேவர்கள் தந்த வரங்களினால் உருச்செபித்திருந்த மந்திரங்களை உச்சரித்துவிடுத்த பிர்ம்மாஸ்திரமாகிய வெவ்வாளிகளிரண்டும் எங்கும் ஓடி ஓடி, யாவுளுநுழைந்து, நுழைந்து,

பெருங்கோபங் காட்டிப் போராடுவதினால், இருவர் படைஞரும் இருதிறச் சேனையும் நடுங்கி அடங்கி மடங்கி முடங்கி ஒடுங்கினார்கள். அப்போது, கறுத்த யுத்தகளமுந் திக்குகளும் இரத்த மடுவாயெழுந்து வழிந்தோடி, பூமி தேவியாருக்கு வெள்ளைப் புடவையாகிய ஏழு சமுத்திரத்தையுஞ் சிவப்புச்சாயந் தோய்த்தது போற் கலந்து சிவந்த நிறமாக்கிய படியால், செவ்வையாகிய அலங்காரத்தைப் பூமி தேவியாகிய மேதினிமாதினுடைய திருமேனி அணிந்து சிறந்தது.

கர்னன் காண்டீபன் கழுத்துக்கிலக்காய் நாகாஸ்திரம் விடுக்க, அது கண்ணன் செயலாலவன் முடியை யிடறிச்செல்ல, பின்னதைக் கருடப்படையாற் கிரீடி யழித்தல்

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! மறுபடியுந் தினகரன் மைந்தனாகிய அங்க தேசத் தலைவன் செழித்து, மகபதி மைந்தனாகிய கிரீடியைக் கொல்லவேண்டுமென்று மதித்து கதித்தகோபம் மிக மிக விளைய நாணி மாட்டி, ஷ்டங்காரம் காட்டி இதனை யோசிப்பதாயினன். அஃதென்னவென்றால், இவ்வர்ச்சுனனோடு எத்தனை நாள் எத்தனை அஸ்திரங்களை கொண்டு அமரரிடினும் ஒன்றினுமிளைத்து இறக்கத்தக்கவனல்லன். ஆதலால், வெகு வாகிய கிளைகள் செறிந்தபழங்களுடன் அடர்ந்த இலைகள் நிறைந்த மரங்களையுடைய காண்டாவனத்தை இவன்எரிபடுத்தியபோது, புகையும்-சிகையும்-பொறியும்-நெருங்கியெழுந்து சீறித் தழல்மண்டிய காலத்தில், அந்த வெப்பஞ் சகிக்கமாட்டாமற் கூரிய அம்புவேகம்போல் அம்பரத்தில் எழுந்து, இவனால் அடிபட்டு விழுந்து, இந்திரனாற் பிழைத்தெழுந்து, நம்மிடத்தில் அடைக்கலம்வந்து, விஜயனைக்குறித் துப்பகைமேற்கொண்டு வெம்பகுவாய்கள் ஐந்தினையுடையதாகி யிருக்கின்ற நாகாஸ்திரத்தை விடவேண்டும். என்று யோசித்தவனாய், அதற்குத் திருமஞ்சன மாட்டி, நீர்துவட்டி, பரிமளத்திரவியம் சந்தனபாளிதம் குங்குமாக்ஷதை இவைகளைச் சாத்தி, தூபதீபங் கொடுத்து தேன்றுளிக்குந் குளிர்ந்த புட்பமாலைகள் சூட்டி, ஆசாரவிதியாய்ப் பூசைபுரிந்து, ஆகமவிதிப்படி அருச்சனை செய்து, அநேகங் கலப்பானூட்டி அனந்தமுறை பிரதக்ஷணம்வந்து, அன்புடன் மிகு பக்தியாய் அடங்கி ஒடுங்கி தீர்க்கதண்டமாக வணங்கி, வழிபடு கடவுளைத் தொழுது, ஆசாரியரைப் பணிந்து, கரத்தாலெடுத்து நாணியிற்றொடுத்து, கலங்காதிழுத்து, கழுத்தைக் குறித்து, நீ இன்னிமிடத்திற் கனன்று வெறிந்துக் காண்டீபனுயிரைப் பிரித்துவிட வேண்டியதென்றுரைத்து நெறித்து, பற்கடித்து, இதழ் மடித்து, வியர்வெழ விழித்து, மார்புரளத் தாங்கி, காதுபரியந்தம் கைசேர்த்து வாங்கி, ஓங்கி மண்டியிட்டு விடுவதாயினன். அச்சமயத்திற் பலப்பொருந்திய சாரதியென்னுஞ் சல்லியராஜன் தடுத்து, ஓ அங்கராஜனே! அவசரப்படாதே: இப்போ திப்பாணத்தை அருச்சுனனுக்கு எங்கே குறிவைத்து விடப்போகிறாய்? என்று கேட்கவும், அருச்சுனனுடைய கழுத்துக்குக் குறிவைத்து விட்ப்போகிறேனென்று கர்னன் சொல்ல, ஐயோ! இப்பேர்ப்பட்ட அஸ்திரத்தை விருதாவிற் கெடுத்து விடாதே; நான் சொல்லுவதைக்கேள் என்று சல்லியன் சில வார்த்தைகள் சொல்லுகிறான். ஐயா அங்கதேச ராஜனே! நேசவிசுவாச பாசப்பரிவினையுடைய நறைவிரிதுளவணிந்த ஜகன்மோகன மாயனாகிய கபடநாடக சூத்திரதாரி மகா வஞ்சகநெஞ்சன். அவனருச்சுனனுடைய தேரின் முன்னே அமர்ந்திருக்கின்றான். அவன் ஏதாகிலும் ஒரு தந்திர எந்திரம் பண்ணுவான். ஆதலால், விஜயனுடைய கழுத்துக்கு லக்ஷயம் பிடிப்பதை விசாலமாகிய மார்புக்கு நேராகப் பிடிப்பையாகில், அந்த மதுசூதனன் செய்யும் பித்தலாட்டத்திற்குத் தப்பிப்பட்டால் அம்மார்பிற் படட்டும். அல்லவென்றாற் கழுத்திற் பிடிக்கட்டும். அதுவுந் தப்பினால் மண்டையில் தாங்கட்டும். இந்த மூன்றுந் தப்பிப் போகமாட்டாது. எப்போதும் எதிரியிருக்கும் நிலையையறிந்து ஒரு காரியஞ் செய்யவேண்டும். ஆகையாற் பார்த்தனுடைய மார்பு புதையும்படியாய் பாம்புக் கணையைப் பிரயோகஞ் செய்யென்று சல்லியராஜன் சொல்ல, உறுதி வார்த்தையை வினைவசத்தினால் உணராமலும்-யோசிக்காமலும்-உட்கொள்ளாமலும் போனான் ஆதபன் குமாரனாகிய கர்னனானவன். இப்பால் மழுவாயுதந் தாங்கிய செங்கையோங்கிய பரசுராமனென்னுந் தனுவாசிரியன் மனப்பூர்வமாய்த் தனக்குக் கொடுத்திருந்த வரிபெற்று மணிகட்டி வயிரங் கொண்டிரா நின்ற வீரவில்லானது மண்டலமாய் வளைய, அதிற்பூட்டிய நாணோசை மிகுந்து மலிய, கர்னபரியந்தம் இழுத்து முனைந்து, தறுகணெடுங் கோபமுண்டு, எதிர்வந்த நெடுங் கணையை அதஞ்செய்யும் இடிக்

கொடியையும் மதஞ்செய்யும் மேகவானத்தை யுமுடைய தேவேந்திரன் மைந்தனுகிய சிலே விஜயனது அழகுபெற விளங்குங் கழுத்து அறுந்து விழும்படியாய் மிகமொழிந்து, அழல் புழுங்கி, மகிழுடைந்து, எதிர்செறிந்து நின்று பிரயோகஞ் செய்து விட்டான் வண்டு சென்றுநின்று மதுவுண்டு உளங்களிகொண்டு பாடும் நளினநாயகன் மகனுகிய கர்னன்.

அப்போது வெளிப்பட்ட அந்த நாகாஸ்திரமானது பம்பரம்போற் சுழன்று, அம்பரத்திலுயர்ந்து, விம்பமெனச் செறிந்து, கம்பமென வளர்ந்து ககனவாணருங் கண்புதைத்தொதுங்க, அகனிலத்தவர் கண்களும் பிதுங்க,மூழைகொள் பாதலத்தவரும் பதுங்க, விழைகொள் போர்முகத்தவரும் வதங்க, அழலெழுந்து தாவிட, விஷமுமிழந்து மேலிட, அலேகடல்பொங்கிப் புரண்டிட, மலேகள் குறுக்கிச் சுருண்டிட, ஆதபன் சுடர்மறைய, சேடனன்றுயிர் குறைய, ஆரியர்துயர் நிறைய, அம்புலிக் கலேமறைய, தாராகணங்கள்விழ, நேரார் பிணங்களெழ, தாராதிபுத்திரர் அழ, பாரோர் தெய்வங்கள் தொழ, நந்திகளெட்டுஞ் சிந்திச் சிதற, புந்திகலங்கிப் போரிற் பதற, பந்தித்தெட்டுப் பாலர்கள் பிதற, தொந்திப்பாகிய தொடுகடல் கதற, வாள்விழி வழியே வண்பொறிபறக்க, வையகமெல்லாம் வாடியிறக்க, வாயைத்திறந்து வரும் விஷஞ்சிறக்க, வளரும்பதுநா நீட்டிக்கறுக்க, மறுக்கமுண்டாம்படி படபட நடநட படீரென்று வெடித்து, நெருக்கமுண்டாகும்படி திட்திட கடகட திமரென்று தெறித்து, அண்டச்சுவர் விண்டுபிண்டு போகும்படியாய் வடவாமுகாக்கினி போல் வளர்ந்தெரிந்து, ஆலகால விஷம்போல் அழலெழுந்து, அகண்ட மாருதம்போல் தழல்சொரிந்து வருவதாயது. அப்படி வராநின்ற நாகாஸ்திரத்தைக் கண்டு காவலர் - பூவலர் - நாவலரெல்லோருங் கலங்கி, அலமலங்கி, தலேகுலுங்கி, விலங்கி நைந்து நொந்தார்கள். துரியோதனனுடைய சேனேயிலுள்ளார் சிரித்துக் களித்து, காண்டீபன் இன்று ஆவிபோன்றினுனென்று நாகாஸ்திரத்தை புகழ்ந்து அகமகிழ்ந்து, கெலித்தோமென்று முகமலர்ந்தார்கள். வஞ்சமற்ற தருமராஜன் முதலாகிய படைமன்னரெல்லாருங் கலங்கி விசனமுங் கலந்துபெருகி, உண் கண்ணீரும் விசனமும் உலர்ந்து உருகி, மனமும் ணீரும் உடலும் வாடிக்களுகி, இனமுமுண்டோ இர முகமும் யோர்போலத் தியங்கி வெறியேறி, வேறு வகையில்லாமல் வினேயே கெதியென்றிருந்தார்கள். இவ்விதமாகப் பாண்டவராதியர் கலங்கிப் பிரமாதங்கொண்டு ஏக்கமுற் றிருக்குங் காலத்தில், சாரதியென்னுந் திருமாலாகிய பெருமான், யாவருடைய உள்ளமும் நையும்படிக்கு நரன்கழுத்தை நாடிவராநின்ற நாகாஸ்திரத்தைக் கண்டு, தாமேற் கொண்டிரா நின்ற தேரிற்பொருந்திய சக்கரங்களானது, சரசரவென்று பூமியிற் புதையும்படியாகத் தம்முடைய திருவடிப் பெருவிரலினுல் அத்தேரை யுறுத்தி ஊன்றினுர். அப்போது அக்கினிதேவனுற் கொடுத்த அழியாத தேர்ச்சக்கரங்கள் கண்ணன் எண்ணிய வண்ணமப்படிக்கு பன்னிரண்டங்குலம் பாரிற் புதைந்து, அக்காற் கர்னராஜன் விடுத்த தாம்புபோன்ற பாம்பாஸ்திரமானது, ராமபாணம்போல் ஒரே ஒழுங்காகவரும்போது ரதந்தாழ்ந்தமையால், தனஞ்செயனுடைய மார்பையுங் கழுத்தையும் விட்டுக் குறிதப்பி, அவன் தெய்வலோகத்திற்குப் போயிருந்தபோது அவன் தந்தையாகிய தேவேந்திரனுற் சூடிய ஜோதிமயமான மகுடத்தின்பேரில் வந்து விழுந்து மோதி இடறி பின்புறத்தோடியது.

இப்படி கிரீடியின் கிரீடத்தை இடறிய நாகமானது, தனது வேகமடங்காமற் பின் பறிந்தோடவும், அந்த நாகாஸ்திரத்தைத் தான் நேருக்குநேர் போர்புரிந் தழிக்கும்படியாய் விஜயகாண்டீபத்தை வளைத்து, வச்சிரக் கருடபாணத்தைப் பூட்டிக்கொண்டு, தேவர் முதலிய யாவரும் இந்த அர்ச்சுனனுக்குப் பிடரியிலுங் கண்களுண்டோவென்று மிக மகிழ்ந்து கொண்டாடிப் புகழும்படியாய்; வலிமைபெறும் நிலேமையுறநின்று இருதோளும் பரிவுறநாணியிற் பூட்டிப் பிடித்திருந்த அவ்வச்சிரக் கருடபாணத்தைப் பின்புறமாக இழுத்து விசையாகவிட்டான். அப்படிப் பின்புறமாகத் தொடுத்த அவ்வச்சிரக் கருடஅயின் முகாஸ்திரமானது, பூர்வங் காண்டாவனதகனத்தில் இந்தப்பாம்பினுடைய தாயையுந் தொலேத்து, இதன் வாலேயுங் குறைத்த பெரும்பழக்க வழக்கத்திறுற் பின்தொடர்ந்து போய், அந்த நாகத்தின் பருத்த தேகத்தை இரண்டு கூறுகக் கிழித்து அலமரச்செய்தது. உம்பர்பிரானீன்ற குரிசிலாகிய தனஞ்செயன் முதுகின்புறமாய் அபிமந்திரித்து விட்ட அயின்முகப்பிறை வெங்கணேயால் இறுகூறுய்

கிழிந்த தக்ஷகன் பிள்ளையாகிய அச்சுவசேன னென்னும் நாகமானது, திடதைரியத்துடன் கிழிபட்ட உடலோடும் பழிபட்ட ஐந்துதலை யோடுந் திரும்பிக் கர்னனிடத்தில் வந்து, ஓ என்னுண்டவனே! இந்தத் தடவை நீர் வைத் தனுப்பிய குறி தப்பிப்போயது. இன்னொரு விசை என்னை விடுப்பீராகில், தப்பாமல் அவன் தலையை வாங்குகிறேனென்று கூவிக் கூவிச் சொல்லியது. அப்படி சொன்னபோது, தன் தாயாகிய குந்திதேவியாருக்குத் தான் கொடுத்த வரத்தையும், தான் சொல்லிய சொற் சோர்வில்லா ஸ்திரத்தையும்; தன்னுடைய வலுமை மிருந்த உரத்தையும் நினைத்து, நாகத்தைப் பார்த்து, ஓ நாகேந்திரனே! எனக்கு எப்பேர்ப்பட்ட இடறுகள் வந்தா லும், நீங்காத வியாகூலம் நேரிட்டாலும், நான் அதிரத தலைவனென்பதற்குப் பழுது வராதபடி ஒரு கணை தொடுப்பதே ஒழிய, மறு கணை தொடேன். இஃதென்னுடைய மதம். ஆனதால் இன்னொருதரம் முனைந்து உன்னை விடுக்கமாட்டேன். என்று வீரகண்டையார்ந்த அங்கர் குலாதிபன் சொல்லவே, அந்த மொழி கேட்ட அச்சுவசேன னென்னும் நாகம் மெத்தவருந்தி, ஔதாரியாகிய அங்கர்பிரானை நோக்கி, அரசனே! காண்டாவன தகனத்தில் அகப்பட்டு உடல்வெந்து வால் தறிந்து என் தாயையு மிழந்து இனியில்லா இடர்பொருந் திய நாயேன், அந்த இடரையும் என் மனோ துக்கத் தொடர்வையும் நீக்கிக்கொண்டு பிழை க்கவேண்டுமென்று பேராசைகொண் டுமக்கே அடைக்கலமென்று விரைவுடன் ஓடித்தேடி நாடிவந்து என்னைப் பாணமாக எடுத்துக் கொள்ளுமென்று உம்மை யடுத்தேன். நீர் என்னை ஆதரித்து தினத்துக்கு ஆயிரங்கலப் பாலூட்டி வளர்த்து வந்தீர். உம்மிடத்திற் பூரணமாகப் புசித்து வளர்ந்த என் பகை யும், உமது பகையும் முடியும்படிக்கு விஜ யனை வெல்லலாமென் றிருந்தேன். நான் எண்ணிய எண்ணத்திற்குப் பழுது வந்து, ஐயோ! உம்முடைய வில்லானது சமனுகவளை யாமல், ஒருமுனைக் கொருமுனை ஈடுதாழ்த்தி யாக உதறியதோ? குறிபார்க்குமுன்னே உமது கை பதறியதோ? நாணிக்கு மெருகில்லாமற் குதறியதோ? நேராகச் சென்ற எனக்கு புத்தி சிதறியதோ? மற்றியாதோ? அதையறியேன்: ஒருவிசை பிழைபோனேன். இன்னொருவிசை தப்பாமற் பார்த்து விடுகிறேனென்று நானெத் தனையோ வேண்டிக்கொண்டும், என்னை மறு படியும் விடுவதற்குச் சம்மதியாமல் நீர் தடுத் துச் சொன்னமையால், இவ்வுலகத்தில் மலை யையுங் கோபுரத்தையுமேந்தித் தூக்குகிறே னென்று அநேக காலம் பூரணமாயுண்ட ஒரு வன் எல்லோருங் கூடித் தூக்கிவையுங்க ளென்ற கதைபோலும், கோலமிடுகிறேனென் று நாலுவருஷ காலமாய்ச் சாப்பிட்டு, அவ சரக்கோலம் அள்ளித்தெளித்த அம்மையார் அகந்தைபோலும் பழிச் சொல் விளைத்து, நானும் இளைத்து, துயராற்களைத்து, இந்தப் பூமியில் உயிர் பிழைத்து இருக்கமாட்டேன் என்று அங்கர்பிரானுடன் சொல்லி மிகவு மெலிந்து, மெத்தவுநொந்து, அந்தகனிடஞ் சேர்ந்தது; அருச்சுனனால் பிளக்கப்பட்ட அச் சுவசேனனென்னும் நாகாஸ்திரம்.

### சல்லியன் கர்னனை வெறுத்துச் சாரதித் தொழிலை விட்டேக, உடனே வேறு சாரதிகொண்டு அருச்சுனனோடு போர் விளைத்தல்

இப்பால், உதயகிரியினுச்சிலெழுந்த சூரி யனது ஒளிபோற் பிரகாசித்து வெற்றி பெற் றிருந்த கிரீடமானது நாகாஸ்திரத்தால் நீங் கவே, குந்திதேவி தருங்கோவாகிய அருச்சு னன் இதயம் வெதும்பி, சிறந்த நிலைக் கோபு ரஞ்சிகரம் போயிருந்தால் எப்படியோ? அப் படிபோல் முடியிழந்து, தேர்ச் சக்கரங்கள் புதைந்த தேரின்மீது வெற்றி பெற்ற வெம் புலிபோ லிருந்தான். அப்போது செஞ்சுட ராகிய சூரியன் மேற்குக் கடலில் மூழ்குவதற்கு முன்னமே கிழக்குக் கடலிலிருந்து வெண்சுட ராகிய சந்திரன் சோடசகலைகளோடு உதித்தா லெப்படியோ? அப்படி போலும், (பிழைக் கடை வாசலா லொருத்திபோனாள் தெரு வாசலா லொருத்தி வந்தாள்.) என்று கூறும் பழமொழி போலும், கறுத்த காளமேகம் போன்ற கண்ணனனவர், வைர மணிகளினா லாகிய ஓர் வச்சிரமுடியைத் தமது மைத்துன னுக்காக மதுமலர்க் கரத்திற்கொண்டு, முன் னிருந்தமுடி பின்னே தாழ, பின்னிருந்தமுடி முன்னே தாழ கிரீடியானவன் சுவாமியை வணங்கி இணங்க, இந்த அகண்ட சாம்பி ராச்சிய முழுது நீயே ஆண்டு அரசு செய்யக் கடவதென்று ஆசீர்வதித்து, அவன்முடிமேல் முடி விசேஷமாய்த் தந்தருளினார்; அந்த லட்சுமிபதியாகிய முகுந்தன் கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜனே! நாகாயுதந்தப்பி நாணுய்ந்த பொழுதத்து நாகக் கொடிச்,

சேகான் நெஞ்சத்தவன் சேனையிற்றன் செருச் சேனையிற், பாகார்கடா யானைகரபாலர் மகிழ் வோடு பரிவெய்தினு, ரேகாதசநந்தன்னி லெக் கோனு நிகரென்ன விகலன்றியே. இப்படி நாகாஸ்திரந் தப்பிப்போய் நாணுகிய அர்ச்சு னன் பிழைத்தபோது, நாகக் கொடியோன் முதல் அவனைச்சார்ந்த வயிரமனத்தோராகிய சேனைகளும், மன்னர்களும், வாடிய கமலம் போல் முக மூடித் திகைத்திருந்தார்கள். வானுறுபோற் பொழிகின்ற மதமுற்ற பட் டத்து யானைபெற்ற பாண்டவர்களும், அவர் களுக்கு வேண்டினவர்களும், மற்றச் சேனை மன்னர் முதலாகிய பேர்களும், ஏகாதசஸ்தா னத்திற்குருவிக்குந் தன்மைபோற் பரிவுடன் மகிழ்வுற்றுச் சண்டையற்றுநின்றூர்கள். இவர் கள் சரித மிவ்வாருக, மத்திரதேசாதிபனுகிய சத்திரூபநி யென்னுஞ் சல்லியன் அங்க தேசனை நோக்கி, தனக்குள் தானே சிலகருதி விசனப்பட்டான். அஃதென்னவெனில் நாமிவ னுக்கு அங்கே மாயனிருக்கின்றுன், வகை மோசஞ் செய்வான், நீ மார்புக்கு நேராய் லட் சம் வைத்து விடுமென்றும், அப்படிவிட்டால், ஒருயிடந் தப்பிவிட்டாலும் மற்றோரிடத்து மாட்டிக் கொள்ளுமென்றுஞ் சொல்லியுப்; நமது சொல்லை அலட்சியஞ் செய்து அங்கி தரியாமற் போனான். அவனுடைய ஆங்கா ரத்தை என்னென்று சொல்லலாம்? மறுபடி யும் நாகாஸ்திரம் வந்து எத்தனையோ வித உபசாரம் புரிந்து, ஐயா! ஒருதரந் தப்பிப் போயினேன். இன்னொருதரம் விடுவீராகில், தப்பாது பயன்படுவேனென்று வேண்டியும், அதை மீட்டும் விடாமல் மறுத்தான். இது வென்ன கர்வம்? யுத்தஞ் செய்யுங் காலத்திற் சமயோசிதமான யுத்தியை நான் சொன்ன லுங் கேளாமல், தானும் அப்போதைக் கப் போது மறந்து நினைவற்றுவிடுகிறான். இது களை யெல்லாம் யோசிக்குமிடத்தில் இவனுக்கு சாரத்தியஞ் செய்வதில் நமக்கிழிவே யன்றி, சிறப்பில்லை. என்று திருமாலுக்கொப்பாகிய சல்லியராஜன் மனம்நொந்து, அருச்சுனனுக் கெப்போதும் ஒப்பான போர்ச்சிங்கமாகிய அக்கர்னனைப் பார்த்துச் சில வாக்கியஞ் சொல்லுகின்றான்.

"என்னுனுமரிதித்தடந்தேர் விரைந்தூர் தலினியென்றுமற், முன்னுனுமரிதந்தவிசயன் றனுயிர்கொள்ள லுன்னித்தபோர், பன்னுத வைத்துரு மரிதாலுனைக்கொண்டு பாராளு கண், மின்னுக பங்கத்தை வீணேபடுத்திட்ட விறலோசையே." ஓ நாகாஸ்திரத்தை வீணே நாசப்படுத்திய நல்வெற்றியோனே! உனக் கிஷ்டமானபடிக்கு உன்னுடைய தடந்தேரை சல்தியாய்ச் செலுத்துவதான சக்தி என்னிட த்திலில்லை. இனி என்றைக்குமிந்த அர்ச்சுன னுடைய பிராணனை வாங்கபோகிற வல்லமை உன்னிடத்திலுமில்லை. இது உன்னுலாகாது. அது என்னுலாகாது. அப்போது நேரிட்டிருக் கின்ற இந்தப் போரை உன்னாலே வென்று தான் பாராளக் கநேகமான ஆவல்கொண்டி ருக்கும் நாகத்துவஜனுகிய துரியோதன மகா ராஜனுக்கு அந்த எண்ணம் ஒருக்காலும் நிறைவேறப் போகிறதுமில்லை. இது கெட்டி யாயிருக்கட்டுமென்று சொல்லி, அழகிய குந்தி தேவி வயிற்றில் முதற்பிள்ளையாகப் பிறந்த ஒப்பற்ற யானிபோன்ற கர்னனுடைய தேரைக் கண்ணனைப்போல செலுத்தவும், பெரும்போ ரைப்புகழ்பெறமுடித்துப் பெருமையைவளர்த் துத் துரியோதனனைச் சுடர்முடிபெற வைக்க வேண்டுமென்னவும், எண்ணங்கொண்டிருந்த மேலாகிய கீர்த்தியையுடைய சல்லியராஜன் காரியமில்லாத கர்னனுடைய தேரிற்றன்கைக் கொண்டிருந்த சாரதித் தொழிலையும், அதற் குத் தகுந்த வேடத்தையும் விட்டு, தேனெழு கிப்போன மலரைவிட்டு, நீங்கிய சிறைவண் டைப்போல் தடாலென்றிறங்கி, ராஜவீர அல ங்காரம் பூண்டு, நீண்ட தன்னுடைய வில்லை மறுபடியுங் கைக்கொண்டு, அந்தரமாகத் தன் சொந்த ரதமேறி, யாவருக்கு முந்திவந்து இருந்தான். இப்பால் வெற்றி வீரமிகுந்த கர்னமகாராஜன், சல்லியனுகிய சாரதி போய் விட்டவுடனே, பழைய சாரதியை அழைத் துத் தனது தேரை விடும்படியாய் அமை த்து, வேங்கைப் புலியானது மேகம்போன்ற தும்பிக்கை யானையுடன் வெம்போர் பொருந் தப் புறப்பட்டதுபோல் தேர்செலுத்தி நின்று ஆர்ப்பரித்து அருமையாகிய வில்லைவளைத்து, அண்டங்குலுங்க நாணிதெரித்து, ஆகாயத்தி லிருதத தேவர்கள் ஆச்சரியப்படும் படிக்குத் தேகமுழுவதுந் தீபம்போல் எரியும்படியான கோபங்கொண்டு, அனல்வீசுகின்ற அஸ்திரங் களை வாரிவாரி மாரிக்கால மாரிபோற்றூவி னன். அதுகாலையில், வெற்றிப் பெண்ணுகிய வீரலட்சுமியின் திருக்கண்ணோக்கத்தை தன திரு தோளிலும் பொருந்தும் படியாய்ப் புனைந்திருக்கின்ற விஜயன், தனது விஜய காண்டீபத்தைப் பிடித்து, அளவில்லாத பகழி

கூட்டங்களை எய்து, பருந்துங் கழுகும் பறக்கும்படியாகிய போர்முகத்தை வெற்றிகொண்டு சூரியபுத்திரனாகிய கர்னன் கொடுத்த கணைகளின் முனைமுகங்களெல்லாம் பிளந்து கட்டுகள் தளர்ந்து போகும்படிக்கு முனைகாட்டி அவனுக்குத் துணைவந்த பகைவரை யெல்லாஞ் சிதைத்து உதிரமுழுக காட்டினான்.

## கர்னன் தனது தேர்புதை பட்டெடுக்கும்போது கணையேவிய அர்ச்சுனனையுந் தருமத்தையும் நிந்திக்க, கண்ணன் சில நியாயங்கூறித் தேற்ற, மீண்டு மவனோடமர் விளைத்தல்

ஓ ஜெனமேஜெயராஜனே! இந்த அர்ச்சுனன்புரிந்த வீரவெற்றிப் போரைவிட இன்னொருவர் யுத்தம்பண்ணினா ரென்று எவர்களைக்குறித்து எவர்கள் சொல்லுவார்கள்? செப்புதற்கரிய ஒப்புவமை யில்லாத இப்பேர்ப்பட்ட சண்டையை இருவரும் விளைத்துவரும்போது, சகல உலகும் அதிரும்படியாய் நடந்துவருகிற பெரும்போரின் மத்தியில் அருச்சுனன் நின்று, மேக முழக்கம்போல் யாவருக்குங் கேட்கும்படியாய் முதிர்ந்தகோபத்துடன் கர்னனைப் பார்த்து, ஓ அங்கராஜனே! உனக்கு ஆசாரியனாகிய ஒரு பிராமணனிட்ட சாபமானது வந்து இப்போது உன்ரதத்தை மூழ்கப்போகின்றதே: உன்கழுத்தை அறுக்கப்போகின்றதே: என்று ஆக்ரமித்துச் சொல்லி, பராக்கிரம பாணங்களைச் செலுத்தி எதிர்வந்தான். இந்தவார்த்தை சொல்லி வாய்மூடுமுன்னே எதிர்த்துவந்த கர்னராஜனேறிய தேர்ச்சக்கரங்கள் புதைந்தவுடனே, சமரவீரக்குணங்களையுடைய குதிரைகள் நடையற்று நின்றுவிட்டன. அப்படி நின்ற குதிரைகளை ஓட்டி ஓட்டிச் சாரதியுங் கைசலித்து சல்தியாய்ப் பூமியிற் குதித்து, ஐயா! சக்கரங்கள் நிலத்திற் புதைந்த தென்று சொன்னான். அந்தச்சொல் சொல்லிமுடியுமுன்னே கர்னன் வில்லையும் பாணத்தையும் நிலத்திலெறிந்து, தலத்திலிறங்கி, தானேறிய தேரைப்போல் தனது மனமேறிய சீரு மெலிவடைந்தவனாய், ஐயோ! நமக்கு மனப்பூர்வமாய்ச் சகலவித்தையுங்கற்பித்தருளிய பரசுராமர் யுத்தசமயத்தில் மந்திரங்கள் உதவாமல் மறந்துபோகச் சாபமிட்டார். அதனுடன் கூட தேர்புதையும்படியாய் ஒரு பிராமணனிட்ட இந்தச்சாபமும் இப்போது நேரிட்டதே: என்று பழமை பாராட்டி நினைத்தான். இந்தப் பொல்லாத சாபக்கொடுமை யில்லாவிட்டால், அங்கராஜனாகிய கர்னன் எப்பேர்ப்பட்ட பலம்பெற்ற யுத்தத்திற்கும் பின்னிடைந்து நின்று பயப்படுவனோ? அப்பால்தனது தெற்றியும் முகமும் வியர்க்க, இருகண்ணுஞ் செவ்வரக்கை போற் சிவப்பேற, மனது வெம்பிக் கும்பி பெரிய மயக்கமடைந்து தேர்புதையச் சபித்த சீரியோனை வாழ்த்தித் திக்குநோக்கிப் பணிந்து எழுந்திருந்து, பூமியைக் குனிந்து பறிந்து, அடிச்சட்டத்தில் தன் தோளைக் கொடுத்து நெக்கி முக்கி, பூமியும் பெயர்ந்து கிளம்பும்படியாய்த் தூக்குவதானான். அவனாரெனில், தான் ஒருதவியு மில்லாமல் தன்னியற்கையால் வெற்றிக் கொற்றம் படைத்த வில்வல்லமையைக் காட்டுவதேயல்லது, ஒருவருதவியாகிய செயற்கைப் பலன்களினால் திறம்பெற நினையாத செல்வன்; மேலும் செங்கதிர்ப் புதல்வனாகிய கர்னன்.

அந்தத்தருணத்தில் அருச்சுனனானவன் கரவேக சரவேகங்களைக் கொண்டு, தனதுவில்லாகிய விஜய காண்டீபத்தைச் சரநாணோசை கொடுத்து, எண்ணிறந்த கணைமாரிகளை ஏகமாகப்பொழிந்தான். இந்தக் கணைகளெல்லாம் வெறுங்கையோடு நின்ற கர்னனுடைய மேனியைத் தவிட்டுச் சல்லடைக் கண்களாய்த் துளைத்துச் சல்லியாக்கி இந்தப்புறத்தி லிருந்து அந்தப்புறத்திலும், அந்தப்புறத்தி லிருந்து இந்தப்புறத்திலும் உருவி யோடவும், உதிரங்கள் வழிந்து நிலமீது சொரியுந் தாரைகளானது, ஆகாயத்திற் செல்லுகின்ற இவன் தந்தையாகிய சூரியனது கிரணங்கள் கடலூடுபாய்ந்து தாக்குந் தன்மைபோன்றிருந்தன. இத்தன்மையாகிய வருத்தம் அடைந்த கர்னன், தனது ரதத்தைத் தோள்கொடுத்துத் தூக்கியதை விடுத்து, அர்ச்சுனனுடைய தயையற்ற முகத்தைப்பார்த்து, அப்பா அர்ச்சுனா! அடா அதிசூரா! ஆ! ஆ! புகழ்வீரா! ஐயோ எழில்மாரா! அந்தோ திகழ்தீரா! ஓ! ஓ! மலர்த்தாரா! இஃதுனக் குறத்தக்க சீரா! எப்பேர்ப்பட்ட இகல்வீர ராஜாவும், யுத்தகளத்தில் ஆனைக்கும் அடிசரக்கு மென்பதுபோல் அபாயம் வந்து தேர்விட்டிழிந்து ஆயுத முதலிய தில்லாமல் அவதிப்படுங் காலத்தில், நிராயுதர் பேரிலும், அபாயம் அடைந்தவர் மீதிலும், பாணங்களைப் பிரயோகஞ் செய்வது உத்தமந்தானா இப்படிசெய்யச்சொல்லி எந்த நூலிற் பேசியிருந்ததோ? இதுதானோ உன்

னுடைய சிறந்த ஆண்மிக்கை என்று சில வார்த்தைகள்பேசி, வேறொரு சேமத்தேரேறி பத்திக்குஞ் சப்திக்கும்படியாய் வில்லை வளைத்து, வெற்றிவிற்கொண்ட விஜயனுக்கு முன் வந்து நின்று விசாலமாகிய கண்கள் நிமிர விழித்து புகைந்தெரிந்து பொரிந்து புலிங்கசாலப் பொறிபறந்து அஸ்தமான காலத்துச் செவ்வானம்போற் செவந்து ஆக்கிரம பராக்கிரமத்துடன் வியாக்கிரம் போற்சீறி, பெருங் கும்பாகிய வீரவேந்தர்களை பார்த்து ஒரு வாக்கியம் பேசத்தொடங்கினான். ஓ திறமாகிய நீதிநெறி நிறைந்துநின்ற தேர் வேந்தர்களே? வாழ்ந்தாலுந் தாழ்ந்தாலும் மனமடியாமல் ஒரு நிலையாகிய உண்மை பாராட்டி வீரத்திறத்தைக் கைக்கொண் டிருந்தவர்கள், எவ்விதத்திலும் வெற்றி பெற்று வெகுமானம் பெறுவார்களே யல்லது; சத்தியற்று அவமானம் அடைய மாட்டார்கள். இந்தப்படிக்கு ஆதிநூலோர் சொல்லி யிருக்கின்ற தர்மநீதியை உண்மையென்று உன்னுயிருக்குள் உயிராகநம்பி, நிலைபிசகாமல் நின்று என்னாற் கூடியமட்டும்பாடுபட்டு விட்டேன். பெரியோர்கள் பேசிய அவ்வாக்கியம் என்ன பிரயோசனத்தைத் தந்தது? அந்தோ! அதை நம்புவதில் இனியென்ன காரியம்? இவ்வளவு உறுதியாக மாறாமலிருந்து நான் பெற்ற பேறும், நானடைந்த காட்சியும் இயாவருங் கண்ணார மனமாரக்கண்டீர்கள். என்னைபோல் தர்மத்தை நம்பி ஏமாறிப்போகாதீர்கள் பிரத்தியக்ஷமாய் தர்மத்தை நம்பிசமயத்தில் மோசம் போனேன்பார்த்தீர்களா? ஓபால்மாறாதபக்குவசாலிகளாகிய பெரியோர்களே! இப்போது நான் சொன்னதைச் சிந்தையிற் றெளிந்து தேறுங்கள்; நேரிட்டவரைக்கும் அநுபவித்துக் கரையேறுங்கள் என்று மகா மனோ துக்கத்துடன் கூவிக் கூறிய காலையில், பசுவின் கன்றுகொண்டுவிளாங்கனி எறிந்தகருங்கடல் மேனியையுடைய கண்ணன்; கெடாத வெற்றி பெற்ற கர்னனுடைய இருசெவியிலும் நுழையும்படிக்கு ஒரு வசனம் பேசினார்.

ஓ மங்களவாசம்பெற்ற அங்கதேச ராஜனே! நீ நான்குவேதம்-ஆறுசாஸ்திரம்-அறுபத்துநான்கு கலைக்கியானம் - அந்தணர் தருமம்- அரசர்தருமம்-ஆச்சிரமதருமம்இவைகளையறிந்திருந்தும், இப்படி யாதுந்தெரியாதவர்போற் பேசுதலழகன்று. தருமத்துக்கு ஒருக்காலுங் குறைவில்லை. தருமந் தலைக்காக்கும் என்பது சத்தியமே. அப்படியிருக்க நீ இவ்விடத்தில் தருமத்தை ஏன் நிந்திக்கிறாய். அதருமம் ஆறுபங்குந் தருமம் ஒரு பங்குமா யிருக்குமாகில், இங்ஙனந் தருமமென்ன செய்யமாட்டும்? நீ சத்துருக்களை யெல்லாம் வெல்ல வல்லவனேயன்றி அல்லாதவனன்று. உன் தருமத்துக்கு ஒருக்காலுங் குறைவில்லை. நீ எப்படியும் வெல்லுவாய். அப்படியே வென்றாயாகில், வெற்றிமுடி சூடிக்கொண்டு பலன் அனுபவிக்கப் போகின்ற துரியோதனன் எப்போதெப்போதென்று காத்துக்கொண் டிருக்கின்றான். வெற்றிபெற்ற லாபத்தை அவன் அனுபவிக்கப் போகிறவனானதால், அவன் தேடிக்கொண்ட பாவமானது அவனையுங் கெடுத்து, அவனுக்கு உதவிசெய்வதற்கு அடுத்த உன்னைப்போலொத்தவனையுங் கெடுத்தது. இதற்கு ஆரென்ன செய்யலாம் அப்பனே! கருமஞ் செய்தவன் கருமத்தை அனுபவிப்பான் தருமஞ் செய்தவன் தருமத்தை அனுபவிப்பான். இதற்கு யாதொரு திருகுமில்லை. திருகுண்டானால் நீ ஞாயஞ்சொல்லு; விருதாவாய்த் தருமத்தை நிந்தித்துக் குறைவாக ஏசி வெகுபேருடையமனம் ரோசும்படிக்குப் பேசுகிறாய். அப்படி உலகவிரோதஞ் சொல்லாதே. அது மிகபொல்லாதே என்று சுவாமிசொல்ல வீரனாகிய கர்னன் இது உண்மையென்று உட்கொண்டு தருமத்தின்பேரில் தான் கொண்டிருந்த ஆத்திரந் தணிந்து, அநேகங்கோடி கூர்மையாகிய கடுஞ்சரங்களை மனோவேகத்திலு மிஞ்சிய வேகமாய்த் தன்னெதிர் நின்று போராடும் வீராள் முதலிய சேனைகளின் பேரில் எய்தான். அவன் விட்ட கணைகளினாலே எதிர்த்த சேனைகளும்,எழில்பெறும் யானைகளும், வேகக் குதிரைகளும், வெகுவித ரதங்களும், சிந்திச் சிதைந்து உயிர் மாய்ந்ததுகள். உடனே தனது தடந்தேரைச் செலுத்தி அருச்சுனனை மறித்து, இடக்கை வில்லும் வலக்கை, நாணியும், ஈர்த்துச் சீறி கோடி கோடியாய், கும்பு கும்பலாய், நிறை நிறையாய், வரை வரையாய், திரைமேலலையாய், அலைமேற் றிரையாய், மலைமேற் சுனையாய், சுனைமேற் பனியாய், வரிசை வரிசையாய், பந்தி பந்தியாய், கூட்டம் கூட்டமாய் நாட்டம் நாட்டமாய், சுமை சுமையாய், மூகிலூர்தியின் மகனாகிய பார்த்தன் மேனி மூடும்படிக்குக் கடுங்கணைகளை மூடுக்கினான்.

## தருமம் கர்னனைத் தலைகாத்தல் கண்ட கண்ணன் ஓரந்தணனாய்ச்சென்று அத்தருமப் பலனைத் தானம் வாங்குதல்.

அந்தப் பாணங்களினால் அர்ச்சுனன் காரியம்வைத்து வைத்தபடியாயது. சாரதிக்குமயிர் கூச்சுற்றது. பாண்டவ சேனைகள் பெருமூச்செய்தினர். மற்றவீரர்களெல்லாம் அர்ச்சுனன் பேச்சு ஒய்ந்து போவதென்று சொல்லிக் காச்சுமூச்சென்று கதறுங்காலையில், பார்த்தசாரதி பார்த்து அவர்களைக் கையமர்த்தி, ஆ அர்ச்சுனனே! என்று கனைத்து அருட்சினத்தோடுங் கனன்று, கறுளமிடும் கடும்பாரிகள் தாண்டி, கருணைக் கடலாகிய அக் கண்ணன் ஈண்டி, அருச்சுனன் கையில் பிடித்திருந்த கணைகளைத் தீண்டி, வழிபடுங் கடவுளை மிகவும் வேண்டி, கர்னனுக் கெதிர் தூண்டி, தாக்கென்று கொடுத்தனர். உடனே அருச்சுனன் இணங்கி சீக்கிரம் எழுந்து அவரை வணங்கி, குறைவற்ற உயர்வுற்ற நிலைபெற்ற மலையொத்த காண்டீபத்தை வளைத்த கிருஷ்ணமூர்த்தி ஆசீர்வதித்து, தமது கரத்தால் தொட்டளித்த சரத்தைக் களங்கமற்ற சந்திரனைப்போல் பிரகாசித்திலங்கும் முத்துமாலை யணிந்த வீரகண்டை தரித்த அருச்சுனன் வாங்கி வின்னாணியிற்றொடுத்து, சிறகற்ற மலைபோல் நிற்கின்ற தினநாதன் குமாரனாகிய கர்னனுடைய தேகமெல்லாம் நிறைத்து, அவன் மனங்கொண்டிருந்த திறமெல்லாங் குறைத்து, மயிர்க்கால்கடோறு முதிரம் நிறைத்து, மாமிசமனைத்துமிறைந்து வழியும்படிக்குக் கெடுத்தான். இவன்றொடுத்த எண்ணிறந்த பாணங்களும் தப்பாமல் கர்னன் பேரிற்பட்டுப் புண்ணாக்கி, அவன் சரீரத்தைச் சென்னீரொழுகுஞ் சலதாரை யொப்பச் செய்தன. அவன் எண்ணிய எண்ணத்தையு மண்ணாக்கி இளைக்கப்பண்ணின. கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! எந்த ஸ்தலங்களிலும் இவனுக் கொப்பாகியபேர் எவர்களுமில்லை யென்னும் ஈகையும்-ஓகையும் சந்தோஷ வாகையும்-ஜெயமும்-எதிரொருவரில்லாத நயமுமுடைய அங்கதேசராஜன் அர்ச்சுனன்விட்ட அம்புக்கும்புகளினாற் சரீரமெல்லாங் கிழிந்து, வாய்திறந்து பெருகிச்சுரந்து ஓடிவராநின்ற குருதியாகிய இரத்தவெள்ளஞ் சூரிய கிரணங்களைப்போற் கம்பிகம்பியாய் பீரிட்டொழுகி, கொத்துக்கொத்தாகிய புஷ்பங்களைக் கோர்த்துத்தொடுத்தும் பிணைந்துவராநின்ற மாலைகளும், மகுடமும் - கவசமும்-குண்டலங்களும், மற்ற ஆபரணங்களும் இடமாறி உருமாறி தடுமாறி ஒன்றின்மேலொன்றேறி உம்பருலகிற்கு வழிதேடி உன்னத தேர்மேற் சாய்ந்து உடல் ஓய்ந்து கிடக்குந் திசையற்றிருந்தும்; சமர்முகம் வளைப்பதும், கடுங்கணை தொடுப்பதும், நாணி தெறிப்பதுமாகிய வேலைகளைத் தான் மறந்தாலும், தன் கரங்களிரண்டும் அவ்வேலைகளைத் தங்கள் வேலைகளாக இடைவிடாமற் செய்து கொண்டிருந்தன. அக்காரியத்தை அர்ச்சுனன்பார்த்து, கர்னனின்னுஞ் சண்டை செய்கிறானென்று கடுங்கோபங் கொண்டு, கனற்பாணமுதலிய கணைகளைக் கடையுகமாரி போல் விடாது பொழிந்து பாய்ச்சுக்கொண்டிருக்கின்றான். பிரக்கினைதப்பித் தேர்மேல் விழுந்த கர்னனுடைய தேகத்தில் அர்ச்சுனன் விடுகிற கணைகள் ஒன்றாகிலும் படவொட்டாமல் தருமதேவதை பிரசன்னமாய் நின்று வாசாமகோசரச் செஞ்சாமாருதம்போல் வருகின்ற பாணங்களையெல்லாந் தான் கவளீகரித்துக்கொண்டிருந்தது.

அந்தக் காக்ஷியைச் சர்வசாக்ஷியா யிரா நின்ற தற்பரனறிந்து, அஸ்தமான கிரியைச் சூரியனடைவதற்கு இன்னும் இரண்டு விரற்கடைப்பொழுது இருப்பதையுங் கண்டருளி, ஜீவன் முத்தர்களுக்கெல்லாம் ஆதிமூலமாய், வேதங்களுக்கெல்லாம் முனைக் கொழுந்தாய், லோக விரோதிகளைக் காயுந்தோறுங் காயாய், தரசாளுக்குப்போக வீடருளுந்தோறுங் கனியாய், பிரசங்கத்தில் உன்னிப்பன்னுந்தோறும் இன்சுவையாய் எழுந்தருளிய அம்முகுந்தன், விசித்திர வில்லைத்தாங்கி விஜயன் பேரோங்கி விற்போர்தாங்கி விளைத்து வராநின்ற விஜயனைப் பார்த்து, அப்பா அர்ச்சுனா! நீ எத்தனைகாலம் நின்று எத்தனைகோடி பாணங்களைப்போட்டாலும், அவைகள் அந்த கர்னனை ஒன்றுஞ் செய்யமாட்டா. அதேனென்றால், இந்தக் கர்னனுக்காகத் தருமதேவதைக் கண்ணருள் சுரந்து எதிர்வந்து நின்று, நீ விடுக்கின்ற கணைகளைக் கவளீகரிக்கின்றது. ஆகையால், பாணங்களையெல்லாம் என்வீணாக நஷ்டப்படுத்துகின்றாய்? சற்றுநேரம் சண்டைவிட்டிருப்பையாகில், நான்போய்க் கண்டறிந்து வருகிறேன் என்று ரதத்தின்பேரிற் பார்த்தனை இருக்கச் செய்து, குதிரைகளை யோட்டுங் கோலையுங் கடிவாளக் கயிற்றையுந் தேர்க்காலுடன் மாட்டிவிட்டு, மெய்ம்மையாகிய பிரம

தேயசு நிறைந்த தவவடிவமைந்த வேதியனாக ரூபமெடுத்து, அசைவற்றுக் கிடக்குஞ் சூரியகுமாரனாகிய கர்னனிடத்திற்கு வந்து, ஓ அங்கதேசாதிபதி! "தாண்டியதாங்கக் கடலுடுத்த தரணியிற்றளர்ந்தவர் தமக்கு, வேண்டிய தளிருதிநீயெனக் கேட்டேன் மேருவினிடைத்தவம்புரிவே, னீண்டிய வறுமைப் பெருந்துயருழந்தே னினைந்தனோன் றிக்கணத்தளிப்பாய், நுண்டிய கவனத்துரகதத் தடந்தேர்ச் சுடர்தரத்தோன்றியதோன்றல்" அலைகள் தாவி யடிக்கின்ற கருங்கடல் வளைந்த பூமியில் தளர்வாகிய ஏழைகளுக்கு இஷ்டப்பட்டவைகளையெல்லாந் தடையறக் கொடுப்பதுமல்லாமல், இன்னும் வேண்டியவைகள் ஏதாகிலுமுண்டோ வென்று உபசரித்துக் கேட்டு அளிக்கின்ற தாதா நீயென்று கேள்விப்பட்டேன். நானோ மகமேருவினிடத்தில் தவஞ்செய்து கொண்டிருப்பேன். நெருங்கி வருத்திய தரித்திரமென்னும் வியாதியால் உழன்று நொந்தேன். உன் கீர்த்தி கேட்டு இங்கோடி வந்தேன். (ஐங்காதம் போனாலுந் தன்பாவந் தன்னோடே) என்பதைப்போல், நானுவந்ததற்கும், நீ நொந்ததற்குஞ் சரியாயிருக்கிறது. இது நான்செய்தபாவம் போகட்டும். எப்படியும் உன்னை வந்து கண்டுவிட்டேன். இனி எவ்விதத்தாகிலுஞ் சரிதான். இப்போது என் சிறுமை நீங்கும்படியாய் நாளை பின்னை என்று சொல்லாமல், இந்த வேளையில் உன்னாலியன்ற பொருள் ஏதாகிலும் ஒன்று இப்போதே தந்தனுப்புவாய். ஓ ஒப்பற்ற உயர்வேகக் குதிரைபூட்டிய ஒற்றையாழித்தேர் ஒளியோனளித்த உலகமூன்றுமதிக்குந் தோன்றலே! எப்படியுங் கிடைக்குமென்கிற மகிழ்ச்சிகொண்டு வந்தேன். என்னைக் கைவிடவேண்டாமென்றார். இப்படியாக அந்தணன் சொன்ன மொழியைக் கர்னமகாராஜன் தனதிரண்டு செவிகளிலும் அமிர்தரசம் பிழிந்ததைப்போலக் கேட்டு, தான் வெற்றிகொண்ட விஜயன் விசைகொண்டு தொடுத்த விஷக்கணைகளினால் மெய்தளர்ந்து, தேரின்மீது யாதொரு செயலுமற்றுச் சாய்ந்திராநின்ற மெலிவையுங் கருதாது, ஆ! ஆ! இதுவுமொரு சோதனைதான். நல்லது என்று நகைத்தவனாய், விருத்தப் பிராமணனைப் பார்த்து, ஐயரே! மெலிவாகிய இந்தத் தசையிலிருக்கின்ற நான் இப்போது உமக்குத் தரத்தக்க பொருள் யாதோ? அதனைச் சொல்லுமென்று கேட்டான். அதற்கந் நான்மறையவனாகிய நாரணன் மனங்களித்து, அப்பா கர்னமகாராஜனே! இப்போது உன் கைக்காவலாயிருக்கும் உன் புண்ணியமெல்லாங் கொடுவென்று கேட்டார்.

அந்தச் சொல்லைக் கேட்டவுடனே உள்ளமகிழ்ந்து, ஆநந்தவெள்ளத் தழுந்தி, ஐயரே! என்னுடைய பாக்கியமே பாக்கியம். என் கையிலில்லாத வஸ்துவைக் கேட்டு எனக்கு லோபத்துவம் நாட்டி, நீரும் பிரையோசனமடையாமல் எங்கே வீணாய்ப் போகின்றீரோ? இப்போது என் கையிலில்லாததைக் கேட்பீரோ? என்று எண்ணங்கொண்டிருந்த எனக்கு இச்சை விளையும்படியாய் என்னிடத்திற் பெரும் பொருளாயிருந்த பேரறத்தைக் கேட்டீரோ? இதுவோ போதும். ஓ சுவாமி! "ஆவியோநிலையிற் கலங்கியதாக்கை யகத்ததோபுறத்ததே வறியேன், பாவியேன் வேண்டும் பொருளெலாநயக்கும் பக்குவந்தன்னில் வந்திலையா, லோவிலாதியான்செய் புண்ணிய மனைத்து முதவினேன்கொள்க நீயுனக்குப், பூவில்வாழயனுநிக ரலவென்றாற்புண்ணிய மதனினும்பெரிதோ" ஆ! ஆ! என் பிராணனை நிலைவிட்டு மேனோக்கி யெழுந்து கலங்கிப் பிரிந்து போயிருக்கிறது. அது உடலுக்குள்ளே இருக்கின்றதோ? அல்லது வெளிபட்டுவிட்டதோ? நானறியமாட்டேன். ஆனால் வேண்டினவர்களுக்கு வேண்டிய பொருள்களைக் கொடுத்துக்கொண்டிருந்த அந்தப் பக்குவ காலத்தில் நீர் வராமற்போனீர். அப்பேர்ப்பட்ட காலத்தில் உமக்குக் கொடுத்து நன்மையைப் பெறுவதற்குப் பாக்கியம் பண்ணாத பாவியாயிருந்தேன். சுவாமி உம்முடைய சுந்தரத்தையும் பிர்ம்ம சொரூபத்தையும் பார்க்கும்போது சத்தியலோக வாசியாகிய சதுமுகனும் உமக்கு நிகராகமாட்டானென்றால், திருவடி வருந்த வந்த தேவரீருக்கு நான் கொடுக்கப்போகின்ற சொற்பமாகிய இந்தப் புண்ணியம் உமக்கொரு விஷயமோ? ஆகிலும் உமதிஷ்டப்படி தாமசஞ் செய்யாமல் நான்செய்த புண்ணியமனைத்தும் இதோ கொடுக்கிறேன் பெற்றுக்கொள்ளும் என்று சொல்லி இருகரங் குவித்து இறைஞ்சினான் அப்படி யிறைஞ்சிய கர்னனை மேகம்போன்ற திருவுருப் பொலிந்த பிராமணன் உவகைக் கருத்துடன் நோக்கி, அப்பா கர்னராஜனே! நீ நிதானமாயிருந்து கொடுப்பையாகில் நான் பெற்றுக்கொள்ளலாம். உலகம் என்னை ஒன்

றுஞ் சொல்லமாட்டாது. நீ உடல் வருந்தியிருக்கின்ற இந்தச் சமயத்தில் நான் பெறுவனே யாகில், சுபாவந்தப்பிய காலத்தில் என்னமோ ஏமாற்றிக் கொண்டுபோய் விட்டானென்று என்னை இழிவாகப் பேசுவார்கள். ஆகையால், நீ எனக்குக் கொடுக்கப் போகின்றதை, நல்ல கியாபகத்துடன் உன்னுடைய திரிகரண சுத்தியாய்த் தத்தஞ்செய்து கொடுப்பையாகில், உனக்கும் பலனுண்டு; எனக்குஞ் சொந்தமுண்டு; எவர்களாலும் யாதொரு நிந்தையுமில்லை என்று அரவணைச் செல்வன் கேட்க, ஆ! சுவாமிகளே! மஹாபாக்கியம் மஹாபாக்கியம்: தங்கள் சித்தமெப்படியோ? அப்படியே என்று தாரைவார்ப்பதற்கு உடன்பட்டவனுய், தண்ணீர் வரவழைத்துத் தத்தம் பண்ணிக் கொடுப்பதற்கு முன்னே அநாதரமாகிய மனதும் அனித்தியமாகிய பிராணனும் பிரிந்துபோமோ? அல்லது எப்படியாமோ? என்று அவநம்பிக்கை யடைந்து உடனே அருச்சுனனுலடித்த அம்புகளுள் தன்னிருதய ஸ்தானத்திற் பாய்ந்து துளைத்துப் புதைந்திருப்பதுகளில் ஒரு அம்பைப் பிடுங்கி, அந்த அம்பு நுழைந்த வழியால் வெழிந்துவராநின்ற உதிரத்தைப் பிடித்து, நான்செய்த புண்ணிய மெல்லாம் மனப்பூர்வமாய்த் தத்தம் பண்ணினேனென்று தாரை நீர் வார்த்தான். தானுமந்த உதிரத்தைத் தாரைநீராக உள்ளங்கையில் ஏற்றுர். கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! இப்படி ஒருவன் சாகும்போது, அவனிடம்போய்த் தருமங்களை யெல்லாந் தானங் கேட்கிறவனும், அத் தருமத்தை இரத்தத்தைக் கொண்டு தாரைவார்த்தால் மனங்கூசாமல் தாரைவாங்கிறவனும், ஆகிய இப்படிப்பட்ட ஒரு பிராமணனும் இருப்பானு? அவனெப்பேர்ப்பட்ட பிராமணனையா வென்று கேட்பீராகில், பூர்வத்தில் மகாபலியென்னும் ராக்ஷசனிடத்தில் மெள்ளச்சென்று, குள்ளமாக நின்று, மூன்றடி மண் தானமாக வேண்டுமென்று தாரை யேற்றுக்கொண்டு, அந்த மகாபலியினுடைய பெரியவாள் தன்னை வெகுவாய்ப் பூசித்திருந்த நன்மையையும் யோசிக்காமல், மூன்று லோகத்தையும் மூன்றடியாக அளந்து வாயிற் போட்டுக்கொண்டு, முன்பின் கொஞ்சமேனும் எண்ணிப் பாராமல், தனக்குத் தானங் கொடுத்தவனையுந் தலையெடுக்க வொட்டாமல், ஒரே மிதியாக மிதித்துப் பாதாளத்தி லொடுக்கிவிட்ட திருவிக்கிரம னென்னும் பிராமணனல்லவா?

இப்பால், புண்ணியப் பொருளை தானமாகப்பெற்ற முனிவன் கர்னராஜனை நோக்கி, மகிழ்ந்து புகழ்ந்து, அப்பா கர்னமகாராஜனே! உனக்கு ஏதாகிலும் வரங்கள் வேண்டியிருந்தாற் கேள். தடையின்றித் தருகிறேன். என்று சொல்லவும், சூரியகுமாரனுகிய கர்னன் சொல்லுகின்றுன்: ஓ வேதவேதியனுகிய சுவாமி! எனக்கொரு குறைவுமில்லை. நான் இனிமேற் பிறவிக்கப்போகிறதுமில்லை. ஒருவேளை, அல்லல் படுத்தும் வெவ்வினையின் பலிஷ்டத்தால் உற்பவம் உண்டாகிறதாக விருந்தாலும், அவ்வப்பிறப்பிலும், இல்லையென்று என்னிடம் வந்து இரப்போர்க்கு, இல்லையென்று சொல்லாமல் இரக்கத்துடன் ஈயும்படியாகிய மனம் எனக்குண்டாகும்படியாக அளித்தருளல் வேண்டும். இதுவே யான் கருதிய வரமென்று இரந்து கேட்டான். இப்படி மைத்துனனுகிய கர்னன் சொன்ன வாய்மையை மெய்த்துணையாகிய கண்ணன் கேட்டு, மேலாகிய சந்தோஷத்திஞல் இருதயகமலம் இலர்ந்து புளகாங்கிதமுற்று, கமலமலராகிய இருகரங்களிஞ லவனைத் தழுவி மார்போடணைத்து, செந்தாமரை மலர்போன்ற கண்களாற் கருணை நீர் பொழிந்து, அந்நீரிஞற் கர்னனுடைய தேகத்தை நனைத்து முழுமையும் முழுக்காட்டி, ஓ உத்தமக்கொடையாளனே! நீ எத்தனைப் பிறவியெடுத்தாலும் அந்தப் பிறவிகள்தோறும் உன்னை அடுத்துக் கேட்பவர்களுக்கு இல்லையென்னுமற் கொடுக்கும்படியாகிய மனமும், அதற்குத் தகுந்த கனமும், மகா பெரிய தனமுமுண்டாய் பெண்டு பிள்ளைகளுடன் மண்டலத்திற் பெரும்போகம் அனுபவித்து, முடிவில் முத்தியும் பெறுவை என்று மூவுருவும் ஒருருவாகிய கிருஷ்ணமூர்த்தி அனுக்கிரகஞ் செய்தருளி, "போற்றிய கர்னன் கண்டு கண்களிப்பப் புணரிமொண்டெழுந்த கார்முகிலை, மாற்றிய வடிவும் பஞ்சவாயுதங்கள் வாங்குகைத் தலங்களுமாகிக், கூற்றுறழ்மடுவிற் கராப்பொரு புழைக்கைக் குஞ்சரராஜன் முன்முன்னந், தோற்றியபடியே தோன்றிஞன் முடிவுந் தோற்றமுமிலாத பைந்துளவோன்" ஓ ஜெனமேஜெய ராஜனே! தன்னைப் போற்றிப் புகழ்ந்து நிற்கின்ற கர்னன் தனதிருவிழியாலுங் கண்டு களிக்கும் படியாய்க் கடல்நீரை உண்டெழுந்த காள

மேகத்தின் வடிப்பத்தைக் குறைவென்று இக
ழ்ந்து மாற்றிய கறுத்த வடிவும், சக்கரம்-சங்
கம்-தனுசு-வாள்-தண்டம் என்னும் பஞ்சா
யுதங்கள் பிரகாசிக்குங் கரதலகமலங்களுமாகி
கொல்லுந் தொழில்பெற்ற எமன் குடியாகிய
தாமரை மடுவில் முதலை பிடித்துப் போராட
நின்ற துவாரம் பொருந்திய துதிக்கைபெற்ற
கஜேந்திரனுக் கெதிரில் முன்னம் பிரசன்ன
மாகிய வாறுபோலத் தோன்றினர். அவரா
ரெனில், ஆதியும் அந்தமும் இல்லாத பைந்
துளவணிந்த பரந்தாமன். அப்போது
தேவர்களும், தேவயோகிகளும், தேவர்களுக்
கிறையாகிய தேவேந்திரனும், கமலோற்பவ
னாகிய நான்முகனும், முனிவர்களும், தேவ
கணம், பூதகணம் முதலிய சகலமானபேரும்,
ஜெயாவிஜீபவா வென்று கண்டு, கற்பகக்
காவின் கனகநாண்மலர் கொண்டு அர்ச்சித்
துப் பணிந்து பூமாரி பொழிந்தார்கள். அது
கண்ட கர்னமகாராஜனனவன், ஆனந்த பர
வச முற்றவனாய், வாளாயுதம் - வேலாயுதம்-
சூலாயுதம் முதலிய கணைகளைக்கொண்டு யுத்
தஞ் செய்கின்ற போர்முனையில் தனஞ்ஜெய
னாகிய தன்னியன் பாணத்தால் என்னுயிர்
மாய்ந்து போகவும், செந்தாமரைத் தாள
னாகிய நிமல நாரணனை என் கண்ணாரக்கண்டு
தெரிசிக்கவும் பெற்றேன் என்று அகக் களிப்
பும் முகக் களிப்புமுடையவனாய் ஆநந்தக்
கண்ணீர் சொரிந்து, உள்ளம் பரிந்து, உரை
யாற் புகழ்ந்து இதனைச் சொல்லுகின்றான்.

### ஸ்ரீ கிருஷ்ணபகவானைக் கர்னன் துதிசெய்தல்

"அருந்தழகன்மா மகம்புரிந்துங் கடவுட்
கங்கை யாதியாம்புனல்படிந்தா மனிலயோகத்,
திருந்துமணி மலர்தூவிப் பூசை நேர்ந்து
மெங்குமாகிய வுன்னை யிதயத்துள்ளே, திருந்த
நிலை பெறக்கண்டும் போகமெல்லாஞ் சிறுகி
யனைத்துயிருக்குஞ் செய்யவொண்ணாப், பெரு
ந்தவங்கள் மிகப்பயின்றும் பெறுதற் கெட்
டாப் பெரும்பயனின் றிருவருளாற் பெறப்
பெற்றேனே. நீல நெடுங்கிரியு மழைமுகிலும்
பவ்வநெடு நீருங்காயாவு நிகர்க்கு மிந்தக்,
கோலமும் வெங்கதை வாளஞ் சங்குநேமி
கோதண்ட மெனும் படையுங் குழைத்தவாச,
மாலைநறுந்துழாய் மார்புந் திரண்ட தோளு
மணிக்கழுத்துஞ் செவ்விதழும் வாரிசாதக்,
காலமல ரெனமலர்ந்த முகமுஞ்சோதிக் கதிர்
முடியுமிம்மையிலே கண்ணுற்றேனே. தரு
மன்மகன் முதலான வரிற்காதற் றம்பியரோட
மர்மலைந்து தறுகணாண்மைச், செருவிலென
துயிரனைய தோழற்காகச் செஞ்சோற்றுக்
கடன்கழித்தேன் றேவர்கோவுக், குரைபெறு
நற் கவசமுங்குண் டலமுமீந்தே னுற்றபெரு
நல்வினைப்பே றுனக்கேதந்தேன், மருதிடை
முன் றவழ்ந்தருளுஞ் செங்கண்மாலே மாத
வத்தா லொருதமியன் வாழ்ந்தவாறே. வான்
பெற்ற நதிகமழ்நாள் வணங்கப் பெற்றேன்,
மதிபெற்ற திருவுளத்தான் மதிக்கப் பெற்
றேன், றேன்பெற்ற துழாயலங்கற் களபமார்
புந் திருப்புயமுந்தைவந்து தீண்டப்பெற்றே,
னூன்பெற்ற பகழியினா லழிந்துவீழ்ந்து
முணர்வுடன் றிருநாம முரைக்கப் பெற்றேன்,
யான்பெற்ற பெருந்தவப்பே றென்னையன்றி
யிருநிலத்திற் பிறந்தோரில் யார் பெற்றாரே''
ஓ கருநிற வுருவாங் கருணைவா ரிதியே!
அருமையாகிய அக்கினி ஹோத்திர முத
லாகிய மகங்களைப் புரிந்தும், தெய்வீகம்
பெற்ற சிரேஷ்டமாகிய கங்கை முதலாகிய
புண்ணிய தீர்த்தங்களெல்லா மூழ்கியும், வாசி
யோகத்திலிருந்தும், மணிமுதலிய ரத்தினங்க
ளாலும் மலர்களினாலும் அர்ச்சித்துப் பூசை
புரிந்தும், எங்குநிறைந்த உன்னை இருதயக
மலத்தில் திருந்திப் பொருந்தும்படிக்கு நிலை
பெறச்செய்து மோன திருஷ்டியினால் அறிந்
தும்போகபாக்கியங்களை யெல்லாம் வெறுத்து
ஈஷணைத்திரை யாதிகளை அகற்றி அநேகர்
ஆத்மகோடிகளாலுஞ் செய்தற்கரிய வான்பெ
ரிய தவங்களில் மிகவும் பயின்றும், விரதம்-
நோன்பு-அனுஷ்டானம் இவை முதலியது
கள் இருந்தும் பெரும்பயனாக பெறுதற்
கருமையாகிய ஓரரும்பயனைத் தேவரீருடைய
திருவருளாற் பெறப்பெற்றேன். ஓ கண்ண
னாகிய புண்ணியனே! நீண்ட நீலகிரியும், மழை
பொழியு மேகமும், சமுத்திரஜலமும், சாசாம்
பூவும், நீலமேனியும், கருவிளமலரு நிகராகிய
உமது திருமேனிக் கோலமும், வெங்கதை-வடி
வாள்-சங்கம்-சக்கரம்-கோதண்டம் என்னும்
ஐம்படையும், வாசங்கலந்த நறுந்துளவணி
ந்த திருமார்பும், திரண்டதோளும், அழகிய
கவுஸ்துவாபரணமுடைய சங்கமணிபோன்ற
கழுத்தும், பவளத்துண்டம்போன்ற சிவந்த
இதழும், அபிராமங் குலாவிய பாரிஜாதமல
ரைப்போற் சிறந்த திருமுகமண்டலமும்,
சோதியைவீசுங் கதிர்மணிமுடியும், பிறவித்
தோற்ற மகற்றுந் திருவடியும் இம்மையி
லேயே செம்மையான கியானத்துடன் நான்

நன்மையாகக் காணப்பெற்றேன். ஓ மருத மரத்தினடியில் உரலுடன் தவழ்ந்தருளிய செங்கண்மாலே! அருமையான தருமன் முதலாகிய என் நம்பிமாருடன் எதிர்மலைந்து கோபக்கனலாகிய ஆண்மிக்கையுடன் சண்டைசெய்து, என்னுயிர்க்குயிராகிய துரியோதன மகாராஜனென்னுந் தோழனுக்காகச் செஞ்சோற்றுக் கடன்கழித்தேன். தேகி என்று கேட்ட தேவராஜனுக்கு மதிக்கத்தக்க கவச குண்டலமும் ஈய்ந்தேன். ஆத்மலாபமாக இருந்த நல்வினைப்பேறாகிய புண்ணியத்தை உமக்குத் தந்தேன். ஓ சுவாமி! ஆருமற்ற ஒண்டியாகிய தனியேன் மாதவத்தால் வாழ்ந்த வாழ்வுக்கு மீந்த மிகுதி இஃதே அன்றியும், எது எப்படிபோனாலும் பிரம்மாவினால் திருமஞ்சனம் ஆட்டிவைக்கும் ஆகாய கங்கை பொருந்திக் கமழுந் தமது திருவடிகளை வணங்கப்பெற்றேன். நாயினுங் கடையனாகிய சிறியனைத் தாயினு மிகுதியாகிய கருணை சுரந்து மேன்மை சிறந்த தமது திருவுளத்தால் மதிக்கப் பெற்றேன். தேனிறைந்த துளபமாலையணிந்த களபமார்பினாலுந் திருப்புயங்களினாலும் ஆலிங்கனித்து, அழகிய கமலம்போன்ற கைநீட்டி என்னைத்தீண்டவும் பெற்றேன். அருச்சுனன் விடுத்த ஊனாகிய மாமிசந்திணிந்த பகழிகளினால் அடிபட்டழிந்து ஆன்மா ஒழிய வீழ்ந்த இந்தக் காலத்திலும், நல்ல கியானத்துடன் உமது திருநாமங்களாகிய திருமந்திரத்தைச் சொல்லவும், தேவரீர் திருவாய் மலர்ந்தருளிய வாக்கியத்தை உட்கொள்ளவும் பெற்றேன். நான் பெற்ற பெருந்தவப் பேற்றைப்போல், இந்த பெருமைதங்கிய கர்மபூமியிற் பிறந்தோரிலும் இறந்தோரிலும் யார்பெற்றார்கள். ஓ இறைவனே! பேறுபெற்றபேர்களில் என்னைவிட ஒருவருமில்லை என்று மகிழ்ந்து வணங்கினான் சூரிய குமாரனானவன். அப்போதவன் இன்பமடையும்படிக்கு காளிங்க நர்த்தனஞ் செய்து கன்றுகொண்டு விளாங்கனி யென்றறிந்து விளையாடிய கண்ணன் சில கட்டுரைகளைவிட்டுரைக்கின்றார்:

### கண்ணன் அர்ச்சுனனிடம் வந்து எச்சரித்துக் கர்னனைப் பரமபத மடைவித்தல்

ஓ கன்னயமிர்துவசன மன்னனாகிய கர்னனே! நான் சொல்லுவதைச் சற்றுன்னிக் கேள். தேவேந்திரனை விடுத்து உன்னுடைய கவசகுண்டலத்தைத் வாங்கச் செய்தவனும், குந்திதேவியைக் கொண்டு உன் உற்பவத்தின் தன்மையை உனக்கு உணர்த்திவைத்தவனும், நாகாஸ்திரம் ஒரு தடவையொழிய இரண்டாந்தரம்விடாமற் குந்திதேவியைக் கொண்டு வரங்கொள்ளச் சொன்னவனும், தக்ஷகன் பிள்ளையாகிய யச்சுவசேனனென்னும் நாகாஸ்திரந் தனஞ்செயனைக் கொல்லாமல் தப்பிப் போகச்செய்தவனும் நான்தான். அதேனென்றால், உன்னிடத்தில் விசுவாசமாகிய எனக்கு எல்லாரிலும் எந்தக் காலத்திலும் அன்பு மிகுந்த பரிபூரணக் கருணையிருப்பதினாலுன்னைச் சீக்கிரம் என்னிடத்திற்கு வருவித்துக் கொள்ள வேண்டுமென்று உன்பொருட்டில் நான் இவ்வளவு பிரயாசை எடுத்துக்கொண்டு வெகுவேலைகள் செய்தேன். இல்லாவிட்டால், உனக்கு இவ்வளவு காரியங்கிட்டாது என்று கூறி அந்தர்த்தியானமாகி, முன்போல் விஜயனுடைய தேரிலேறித் தேர்ச்சாரதி யாயினர். அவராரெனில், எல்லாக்கடலும், எல்லாக்கிரியும், எல்லாவுலகும், எல்லாத்தேவரும், எல்லா மானிடரும், எல்லாவுயிரும், யாவுந்தானாகி, மைதீட்டிய கருங்கண்களையுடைய இளங்கோவியர்களின் வஸ்திரங்களையும், வரிவளையல்களையும், நாணத்தையும், அவளுடையமடநெஞ்சையும் வாங்கும்படியாகிய மாமாயன். இப்படி பழையபடி பார்த்தனுடைய தேரிற் சாரதியாயிருந்து அப்பார்த்தனைப் பார்த்து, அப்பா கிரீடி! சூரியன் மேற்குச் சமுத்திரத்தில் வீழுமுன்னமே கர்னனை கொல்லுகவென்று சொல்லினர். அதனைக்கேட்ட பார்த்தன் சுவாமியின் வார்த்தையை உறுதியாகக்கொண்டு அஞ்சரீகமென்னும் அஸ்திரத்தை யெடுத்து, அனேக உபசார ஆசாரவிதி யாவுமுடித்து, வழிபடுகடவுளை துதித்து, ஆசாரியரை மனதில்மதித்து, கர்னனுடைய இதயத்துக்கு லக்ஷயம் வைத்து, விசாலமாகிய உலகிலுள்ள அரசர்களெல்லாம் அதிசயித்து மதிக்கும்படியாக எய்தான். அந்தக் கணையானது வந்து, தகவுடைய பெரியோர்களின் சாபச்சொல்லைப்போல், அங்கதேசாதிபனுடைய இதயத்திலுருவிப் புகுந்து, தீயருக்குரைத்த நல்லோர் மொழிபோல் அப்பால் ஓடிப் பூமியைத்துளைத்து, பாற்கடலிற் குளித்து, பின்னுந் தன்வேகமடங்காமல் வீபற் சுவினிடத்திற்போய் அடங்கியது. இப்பாற் கர்னமகாராஜன் பூமிமேற் சாய்ந்தவனாய், கருடபகவானுடைய திருத்தோளின் மீது காயாம்பூ வண்ணனாகிய கரியமாலைச் சற்று நேரத்துக்கு முன்னே காசினியிற்கண்ட கண்

காட்சிபோல ஆகாயத்திலுங்கண்டு தரிசித்து, அவரைப்போற் கிருபை செய்யும்படியாய் அவ்வானத்தி லெழுந்தருளி இருந்த ரிஷப வாகனரூடராகிய உமாபதியையும், இந்திரன் முதலாகிய அந்தரவாணரையும், தந்திமுகனை யும்,சண்முகக்கடவுளையும்,தேவகணங்களையும், முந்திய மந்திரமுனிவரையும் நெருங்கிப்பார் த்து, ஆரும் பெறுதற்கரிதாகிய அன்புடன் போற்றி வாழ்த்தி, அடிவணங்கி ஏத்தி, புருஷ சிலாக்கியனாகிய அக்கர்ன மகாராஜன் இரும்புண்ட திரும்பாநீர்போல் விரசுவர்க்கம் அடைந்தான். மீனுபரணனாகிய சேனாதிபதி சாயவே, ஜெயம்பெறக்கருதிப் போர்க்களத்தி லிருந்த புரவலர்களும், நால்வகைப் பொருநர் களுந் தாவரிக்கமாட்டாமற் பயந்து, உடலு லைந்து உயிர்கலைந்து நாலுவிடங்களிலும் புறங்கொடுத்தோடினார்கள்.

### துரியோதனனுதியர் கலுழ்ச்சி

இந்தச் சேதியை வேவுக்காரராற் கேள் விப்பட்ட குருடன் மகனாகிய குருகுலவேந்தன் வாடி ஓடிவந்து, அண்ணாவோ!அண்ணாவோ! என்று தாயிழந்த சேய்போற்கதறி, பெரு மூச்சுவிட்டு, உயிர்சோர்ந்து, உடல் தாழ்ந்து, மலைமேல் மலைவிழுந்த தன்மைபோற் கர்னன் பேரில் அடித்து மோதிவீழ்ந்து, முகத்திலும் மார்பிலு மோதிக்கொண்டு, அரண்டு புரண்டு மருண்டு, தெருண்டு எழுந்து விழுந்து, ஆ! ஆ! என்று வாய்விட்டரற்றி ஆவிசோர்ந்தான். அப்போது பக்கத்திலிருந்த உரியோர் பெரி யோர் முதலியபேர்கள் வணங்கா முடியோனை தேற்றி, விசனமாற்றி, அடிபணிந்து போற்றி, ஐயா! தேவரீர் இப்படி இளைக்கலாமா? மனங் கனைக்கலாமா? வணங்காமுடி வளைக்கலாமா? இது கடைசியாகிய காலம். இந்த வேளையிற் களையாதீர். என்று வேண்டிய உறுதிகளைக் கூறி, தேறச் செய்தார்கள். அதுகாலையிற் சோபம் ஆறி, விசன மாறினவனைப்போல் தேறி, கர்னனுடைய திருமுகத்தையும், அவ னது தேகத்தையுமே, தனது இருகரத்தால் தட வித் தடவிப்பார்த்து, விசனப்படத்தொடங்கி னன். "அணையார்தம் படைக்கடலி னருநிலைக் குக் கரையேறலானகோலப், புணையாயெத் திறங்களினும் பகிராமலுற்றதெலாம் புகலத் தக்க, துணையாயென் னுயிர்க்குயிராந் தோழ னுமாகியவுன்னை தோற்றேனாகி, இணையாரு மிலாவரசே யாரைக்கொண் டரசாள விருக் கின்றேனே. சூழ்வேலை யுலகாளுஞ் சூழ்ச்சியு மிப் பெருஞ்செல்வத் துவக்குநெஞ்சால், வீழ்வேனோவமராட வீமனொடு தலைநாளில் விலைந்தசெற்றந், தாழ்வேனோ வுனையொழி ந்து தம்பியரை யொழிந்துமினித் தனித்து நானே, வாழ்வேனோ வாழ்வேயென் மன வலியே வருகின்றேன் வருகின்றேனே" ஓ அண்ணா! சத்துருக்களுடைய சேனாசைனிய மென்னும் ஆழமாகிய கடலில் அகப்பட்டு ஆழ்ந்து நிலையில்லாமல் நீச்சலில் நின்று ஆதரவற்று அவதிபட்டுக்கொண்டு ஆயாச மடைந்து அழுந்திப் போகாநின்ற என்னைக் கரையேற்றி வைப்பதற்கு அழகிய தெப்பமா யடுத்து, எல்லாத்திறங்களிலும் வல்லாமாய் இருந்ததல்லாமல், எதையும் நான் வாய்விட்டு சொல்லுமுன்னே என் மனக்கருத் தறிந்து வன்மைப்படுத்தியும், வளம்பெறச் செய்தும், உண்மையுரைத்தும், உற்றது அற்றது சொல் லிக் கொள்ளுவதற்கு உகந்த துணையாகியும், உயிர்க்குயிராகியும், உடற்குடலாகியு மிருந்த உன்னை இன்று தோற்றுவிடுவேனாகில்; ஓ எங்கு மிணையில்லாத அங்கராஜனே! உன்னை விட்டு இனி யாரைக்கொண்டு அரசாளயிருக் கின்றேன். ஐயோ! அந்தோ! அச்சோ! அன்னோ! ஆ! ஆ! ஆ! ஓ! ஓ! ஓ! இது மகா ஆச்சரியம். அண்ணா! இந்தச் சமுத்திரம் வளைந்த உலகத்தை ஆளும்படியாகிய சூட்ச மும், இந்தப் பெருஞ்சேனைகளினுடைய சம் பந்தமும், மற்ற உபாயங்களும் ஆகிய இவை களை யெல்லாம் ஈதீது இன்னின்னபடிக் கென்று என்னெஞ்சிலடக்கிவைத்த மன்னனே உன்னை நினைந்து நினைந்து, வருந்தி வருந்தி வாடிவாடி, துணையற்றவர்போல் மாய்ந்து வீழ்வேனோ? அல்லது அமராடவே புகுந்து தலைநாளில் விளைந்த க்ஷாத்திரங்கொண்டு போர்புரிய வராநின்ற வீமசேனனுக்கே யான் தாழ்வேனோ? உன்னை யொழிந்தும், என் தம்பிமார்களைப் பிரிந்தும், புத்திர வர்க்காதி களை இழந்தும், உரியோர் முதலிய பெரியோர் கள் அழிந்தும், நான் தனித்திருந்து இனி வாழ்வேனோ? ஓ என் வாழ்வே! ஓ என் மன வலியே! ஓ என் மதியே! ஓ கர்னா! உன்பின்னே தானே நானும் வந்தேன், வந்தேன்; வந் தேன்; வந்தேன் என்று ஏங்கித் தளர்ந்து, பேரிரக்கமுடையவனாய்ப் புரண்டு வீழ்ந்து அழுதான் இந்தக் கடல்சூழ்ந்த நெடிய உல கைக் கர்னனு லாளவேண்டுமென்று எவரை யும் மதிக்காமல் இணையுற்றிருந்த வணங்கா முடியோனாகிய துரியோதன மகாராஜன். அக்

காலத்தில், பக்கத்திலிருந்த பார்த்திபரெல்லா
ரும் மனங்கொள்ளாத வருந்தி, ஐயோ! எங்
கள் வலிமை இன்றிழந்தோம். இனி நாங்கள்
இருந்தென்ன காரியம்? இஃதென்ன வீரியம்?
என்று இரைந்து கண் கலுழந்தார்கள். அவ்
வேளையில், மிகுந்த துயரப்பட்டுத் தேறிய மத்
திரதேசாதிபனாகிய சல்லியராஜன்; அக் கர்ன
ராஜனுடைய வில் வீரங்களையும் வெகுவாய்
எடுத்துப் பற்பலவாகப்பேசி, மேகம்போல்
இரைந்தழா நின்ற துரியோதன மகாராஜ
னுடைய துயரத்தையும் போக்கினான். என்ன
சொல்லித் தேற்றினாலுந் துரியோதனன்
தேருது ஆர்த்து, முகம் வேர்த்து, கர்னனை
ருசுவிற் பார்த்து, விசனமும்-துக்கமும்-விக்க
லும்-மூக்கலும்-கக்கலும்-பெருமூச்சும் உடை
யவனாகி இருந்தான். அதைச் சகுனியாகிய
மாமன் கண்டு, எதிரில் இருக்கத் துக்கமே
லிடும். துயரம் ஆகலாது. என்று யோசித்த
வனாய் மருமகனாகிய வணங்காமுடி அரசை
மிகவுந் தேற்றி, இங்குள்ளபேரோடு அவனை
யும் அழைத்துக் கொண்டுபோய் பாடிவீடு
சேர்ந்தான்.

### தருமனாதியர் மகிழ்ச்சி

அக்கால், ஆகாயத்தில் நிறைந்து சகல
ஆட்டங்களையும் வேடிக்கையாய்ப் பார்த்திரு
ந்த கங்கைவேணியனும், பிர்ம்மாவும், தந்தி
முகனும், சண்முகனும், தேவேந்திராதியர்க
ளும், தனஞ்செயனுக்கும் கர்னனுக்கும் நடந்
தேறிய யுத்தத் திறங்களைக் கண்டு மன
மகிழ்ந்து, தங்கள் தங்களுடைய சார்புக்
கெழுந்தருளினார்கள். அங்கதேசாதிபனாகிய
கர்னமகாராஜன் தனஞ்சயன் கைக் கணையால்
தரையில் வீழ்ந்த மாத்திரத்தில், ஒரே ராசி
யான முழக்கங்களைப்போல் அந்தர துந்துமி
துந் துந் துந் தும்மென்று முழங்கியது.
இமையோர் எண்ணிறந்த புகழ்பாடி ஆர்த்த
னர். இருதிறப்படைஞருந் தத்தளித்துக்
கொண்டிருந்தனர். இப்படியாகிய சமயத்தில்,
மிகக் கொடையாளனென்னும் அக்கர்னனைப்
புத்திரனாகப்பெற்ற மித்திரனென்னுஞ் சூரிய
பகவானானவன், தேகமெல்லாம் அக்கினிச்
சுவாலையாக எரிந்து, உள்ளும் புறம்பும் ஒரே
நிலையாய்க் காய்த்து கரிந்து, புத்திர சோபத்
தால் திரிந்தி, பிராமணர் முதலிய பேர்கள்
அள்ளிக் கொடுக்குஞ் ஜலத்தை இளைப்பாற்
அருந்தி, அழகிய கிரணக்கரங்கள் ஆட்டமில்
லாமற் சுருங்கி, ஆழியிற்பொருந்தி, ஆ! என்
னுயி ரழிவதேயென்று மனம் வருந்தி மேற்
கடலூடு மூழ்கினான். இப்பால், முதன்மை
யாக எதிர்த்துப் போர்புரிந்த விஜயனானவன்,
தனது வெற்றியைக் கண்டு மற்றைய ரெல்லா
ரும் மெத்தப் புகழ்ந்து மகிழ்ந்து வரவும்,
முனைவீரான் முதலிய பேர்களெல்லாரும் புடை
சூழ்ந்து சர்வாயுதபாணியராய் மொய்த்து
நெருங்கவும், பலம்பொருந்திய மலைபோன்ற
புஜபலசாலியாகிய வீமனானவன், பல படை
மன்னருடன் தனக்குச் சேமமாகச் சூழ்ந்து
நடக்கவும், நகுல சகாதேவராகிய இளையவர்
கள் நாற்புறத்தும் வளைந்து வளைந்துலாவி
மகிழ்வு கூறவும், ஒக்கல் முதலாகிய பந்துக்
கள் பக்கங்களிற் பரிந்துபோகவும், திருமால்
தேர்செலுத்தவும் ஆகிய இவ்வித வாடம்பரத்
தோடு இருள்சூழ் முன்னமே புறப்பட்டு,
அநேக வாத்திய கோஷையுடன் ஜெயபேரி
முழங்கும்படியாய்த் தருமராஜ னிருக்கும்
பாசறையைப் போய்ச் சேர்ந்தான். உடனே
கிருஷ்ணார்ச்சுன ளிருவரும் இரதம்விட்
டிறங்கி, தருமநந்தனனுக் கெதிரோடி, அவ
ருடைய திருவடியில் திருமுடிசூடி வீழ்ந்து,
அவரது மங்களாசனம் பெற்று, அம் முரசக்
கொடியோனுடைய மனம் மகிழும்படியாய்த்
தாங்கள் போராடிய போராட்டையுங் கர்னன்
உயிர்விட்ட பாட்டையுஞ் சொன்னார்கள்.
இதைக்கேட்டவுடனே பொறுமையையுடைய
புண்ணியனாகிய தருமநந்தனன் புளகாங்கித
முற்று, தம்பியாகிய தனஞ்செயனுடைய மலை
போன்ற தோளை நோக்குவர்; அத் தோளி
லேறிய விஜயகாண்டீபத்தை நோக்குவர்;
இதழலர்ந்த செந்தாமரைக் கண்ணனுடைய
திருமுக மண்டலத்தை நோக்குவர்; தனது
தம்பி முன்னம் வெம்பி கர்னனை முடிக்கிறே
னென்று சொல்லியிருந்த வஞ்சினங்களை
நோக்குவர்; சூரிய குமாரனாகுங் கர்னனுடைய
வல்லமையை நோக்குவர்; அவனது மறத்தின
திறத்தை நோக்குவர்; இவ்விதமாக விளைந்த
வினை செயலை நோக்குவர்; செம்பைக் காய்ச்சி
யுருக்கியதைப்போல் தீப்பொறி மலிந்து
செவந்திருக்குந் தம்பியினுடைய கோபக் கண்
களை நோக்குவர்; தங்கள் ஜன்மாந்திரத்தின்
தபோபலனை நோக்குவர்; பலம் பொருந்திய
ராஜ ராஜேந்திரனாகிய துரியோதன மகாராஜ
னுடைய வஞ்சனைபோய் இவை முதலாகிய
தீவினைகளை நோக்குவர்; தனஞ்செயனை தான்
கோபித்த சமயத்தை நோக்குவர்; இப்படிக்
கெல்லாம் எண்ணியெண்ணிப் பார்த்து, இந்

திரஜெயத்தை ஜெயித்துவந்த இளையபெருமாளைக் கண்டு மிக மகிழ்ச்சிகொண்ட இராமனைப் பார்க்கிலும் பதின்மடங்கு அதிகமாகிய களிப்புற்று ஆனந்தங்கொண்டார் தருமராஜன்.

குந்திமாதேவி புலம்பல்

இவ்விடத்திலிப்படியிருக்க முன்னங் கர்னனிடத்திற் புண்ணியதானம் வாங்கிக்கொண்ட புருஷோத்தமன், அருச்சுனனிடம் வந்து சேர்ந்து இனிமேற் கர்னனை கொல்லும்படியாகிய உன் வேலையை நீ பாரென்று சொல்லி அவ்வேலையை முடித்தவுடனே, குந்திதேவி முதலாகிய பேர்களிருக்கும் பாசறையினிடத்து அசரீரியாகபோய் சபதங்கூறியபடி முதன்மையாக பகைத்தெதிர்த்துபோர்புரியும் விஜயபராக்கிரமன் தொடுத்த அஞ்சரீகமென்னும் அஸ்திரத்தால், ஐவருக்கு முன்னோனாகிய அங்கதேசாதிபன் இன்று நெஞ்சங் கிழிந்து முடிசாய்ந்து வீழ்ந்தான் சூரியன் அஸ்தமானமாய் அந்திப்போது வருவதற்கு முன்னே பிராணன் போய்விடுமென்று ஆகாயத்தில் நின்று உரத்துச் சொன்னார். இந்த வாக்கியங் கேட்டவுடனே, மயில்போல் ஒயிலும், குயில்போல் குரலும், வெயில்போல் சுடரும், அயில்போல் விழியுமுடைய ஐவர்களின் அன்னை குந்திதேவியானவள், மனமுருகி கண்ணீர் பெருகி குழல்கரிய ஆடையாபரண முதலாகிய அந்தங்களுங் குலைய, வயிற்றிலும் முகத்திலும் அறைந்துகொண்டு கைநெரித்து என்செய்வேனென்று முடிமேல் அடித்துக் கொண்டு தலைமேற் கைவைத்து கோகோவென்றழுது போர்க்களத்துக்கு வந்து, முதற் பிள்ளையாகிய கர்னன்மேல் மோதி விழுந்து, ஓ மகனே! மகனே! என்றலறி, "என்றேயென் றுதையுழைக் கன்னிமாடத் தெழிலிரவி திருவருளா லீன்றேனீன்ற, வன்றேபொற் பெட்டகத்திற் கங்கையாற்றி லாமுறைமா லுனை விடுத்தே னருளிலாதேன், வென்றேமண் கவர்தருமன் மதலைக்கா விமித்திரனா 'னது கேட்டு வீரங்கேட்டு, நன்றேயென்றவப் பயனென் றுன்னி வாழ்ந்தே னுகமுரி யரசாள நடக்கின்றாயோ. ஒரைஞ்சுபேருளரா லறந்தவாத வுதிட்டிரனாதியருரகக் கொடியோனாதி, யீரைஞ்சுபதின்மருளர் தம்பிமார்களிங்கிதங்க ளறிந்தடைவே யேவல்செய்யப், பாரஞ்சு மொருகுடைக்கீழ் நீயேயாளும் பதமடைந்தும் விதிவலியாற் பயன்பெறுமற், காரஞ்சு கரதலத்தா யந்தோவந்தோ கடவுளர்தம் சாயையினாற் கழிவுற்றாயே" அப்பா மகனே! குந்திபோஜ குலத்திற் பிறந்து என் தந்தையாகிய சூரசேனனிடத்தில் வளர்ந்து, கன்னிமாடத்தில் கன்னிகையாயிருந்து, சூரியபகவானைப் பரிந்து, அவருடைய திருவருளால் உன்னைப் பெற்றேன். அடா என்னைப் பெற்றவனே! நீதி செலுத்தி உலகத்தையாளும் அரசனுடைய பெண்ணானவள், கன்னி கழிவதற்கு முன்னே பிள்ளையைப் பெற்றாளென்று உலக நிந்திப்பாகிய பழிச்சொல் வரப்போகிறதென்றஞ்சி எள்ளத்தனையும் இரக்கமில்லாத பாவியாகிய நான் உன்னை பெற்ற அப்போதே ஓர் பொற்பெட்டகத்தில் வைத்துக் கங்கையாற்றில் விட்டுவிட்டேனடா காதலனே! அப்பால், நீ திரிதராஷ்டிர பூபதியின் குமாரனாகிய துரியோதனனிடத்தில் சேர்ந்து, அவனுக்கு உகந்த மித்திரனாயிருந்து சத்துருக்களாகிய பாண்டவரைவென்று பூமியை கவர்ந்து, அகண்ட சாம்பிராச்சிய பட்டாபிஷேகங்கொண் டன்புகூர்ந் திருக்க போகிறாயென்று நான் கேள்விப்பட்டேன். உன்னுடைய வீரத்திரங்களை விசாரித்தும், உனது நாமப்பெருக்கினை நன்றாய்ந்தும், மெத்தவும் மேலாகிய நன்மை பொருந்திய நமது தவப்பயனென்று நினைத்து எங்கிருந்தாலுஞ் சுகமாயிருக்கட்டுமென்று மனமகிழ்ச்சியாய் வாழ்ந்தேன். ஆ! ஆ! இது என்ன மகிழ்ச்சியோ?

அடா என்னப்பனே! இவ்வுலகத்தை ஏகசக்ராதிபதியாய் ஆண்டுவந்து மனம்வெறுத்து, இவ்விடத்திலிருக்கும் பொருளில் எல்லாப் பொருள்களின் பேரிலும் இச்சை நீக்கி, அம்பரத்தை ஆளவேண்டுமென்னும் ஆசைகொண்டு, எங்களையெல்லாம் விண்டு, அமரரைக்கண்டு அவ்விடத்தில் அரசாளச் சென்றனையோ? ஆ! என்னருந்தவமே! சத்தியப் பொருளாற் சிறந்த தருமராஜன் முதலாகிய தம்பிமார் ஐவர். துரியோதனன் முதலாகிய தம்பிமார் நூறுபேர். ஆக இந்நூற்றைந்து பேரும், என்னுடைய இங்கிதகுணங்களையறிந்து குற்றேவல் செய்யும்படி, இந்த வார்கடல்சூழ்ந்த வையகமெல்லாம் ஒரு குடை நீழலில் நீ ஆளப்பதம்படைத்தும், நல்வினை வழியாய்ப் பயன்பெறுமற் போய்விட்டனையே: மேகமும் அஞ்சும்படியாய்க் கொடுக்கா நின்ற காதலனே! அப்பா கர்னனே! தேவர்கள்

உன்னை ஏமாற்றிய மாய்கையினால், மதிமயங்கிக் கலங்கிப் போய்விட்டனையோ! அர்ச்சுனன் உறுக்கி உறுந்திவிட்ட அஞ்சரீகமென்னுங் கணையினால் நீ மாண்டுபோவதை அறியாமல், அருச்சுனன்பேரில் நீ விடுக்கப்போகிற நாகாஸ்திரம் ஒருதரமொழிய மறுதரம் விடாதொழியும்படியாய்க் கடிய மனத்தையுடைய உன்னிடத்தில் உறுதியாய் வரம்பெற்றேன். அடா மகனே! உன்னுயிருக்கு நானே உலை வைத்தேனடா! உன் தம்பிமார்களின் பிராணனை ரக்ஷிக்கும்படியாவும் வரம்பெற்றேன். இந்தப் பாவியானவள் பெற்றும் பெருக்கொடும்பாவி என்று எண்ணாமல், என்சொல்லைத் தள்ளாமல், பெற்றதாயென்று என்னைப் பூரணமாய் நினைத்தோ? கோடிகோடி கோடா கோடியாய்ச் சேதிக்குங் கணைகளைச் செலுத்திப் போர்முகத்தில் வீராதிவீரரெல்லோரும் மதிக்கும்படியாய்ப் பகைவரைவென்று ஜெயங்கொண்டு, பின்பு அமரர்களுந் துதிக்கும்படியாய்ச் சிதைந்து சிந்தி மாளுகிறவரைக்கும், எனக்குக்கொடுத்த வரமும் வாக்கும் பிசகாமல் நிலைநின்று, உடல்கின்று உயிரோடும் வரைக்குஞ் சத்தியந் தப்பாமல் தருமத்தைக் காத்தனையே: அடா தநயனே! தேவர் முதலிய யாவர்களுந் துதிக்கப்பெற்ற தேவேந்திரனுக்கு உன்னுடன் பிறந்து உன்னுயிர்க்குத் துணையாயிருந்த கவசகுண்டலத்தைக் கழற்றி மனமடியாற் கொடுத்து, இப்போது நீ மடிந்தனையே: இப்படி உயிரையுங் கொடுக்க உவந்த உன்னுள்ளச் செயலையும் வள்ளற்றன்மையையும் என்னென்றுரைப்பேனடா என்னப்பனே!

அடா என் மதலையே! பூர்வத்தில்உன்னை பிள்ளையாகப் பெறும்படிக்கு விதிபெற்றேனல்லாமல், உன்னை வளர்க்கவும்-இடுக்கவும்-எடுக்கவும்-அணைக்கவும்-முத்த மிடவும் - கொஞ்சவும்-குலாவவும்-தொட்டிலேற்றவும் - தாலாட்டவும்-பாராட்டவும்-சீர்காட்டவும்-செந்தூரத்திலகமிடவும் - திருமஞ்சன மாட்டவும் - சிற்றாடை கட்டவும்-நீ தெருவில் விளையாடி அம்மாவென்று அழைத்தோடி வந்து அணைக்கவும்-என்னருகிற்படுக்கவும-அமுதுண்ணவும்-அன்னம் ஊட்டி வைக்கவும்-கண்ணுக் கலங்காரமாய்ப் பார்க்கவும் பாக்கியம் பண்ணாத மகா பாவியானேன்; தவம்பெறாத தரித்திரியானேன். தேறித்தெளிந்த மாதவருமடைதற்கரிதாகிய மோக்ஷம்பெற்ற பாண்டு பூபதியுடன் கூட நானுமுடிந்து போகாமல் இக்கோலங்களைக் கண்டிருந்தேன். உயிர் வைத்திருந்தேன். அடா என் கானமுளையே! நாயகனுடன் செல்லும்படியாகிய பேறு என்போலொத்த பாவிக்குக் கிடைக்குமோ? கிடைக்காதடா! அப்பா கர்ணா! கல்லினுங் கொடிய கெட்டி மனம்பெற்ற காதகிக்கு உன்கையினால் நீரும் நெருப்புங் கிடைக்குமென்று நேசம் வைத்திருந்தேனே: அதை மோசமபண்ணிப் போயினையே. ஐயோ மகனே! நீ என் பிள்ளையென்றும், நானுன் தாயென்றும், பலரும் புகழப்பெறாத பாவியை, நீ ஆவி விடும்போது சிந்தனை செய்தனையோ? அல்லது நிந்தனை செய்தனையோ? அடா ஐயா! என்னையும் உன்னுடன் அழைக்க எண்ணாயோ? இதற்குத் தகுந்த யோசனை பண்ணாயோ? அன்னாய் துயரப்படுவானேனென்று ஓடி வந்து ஒரு ஆறுதலை சொல்லாயோ? அடா நீதிபரனே நான் விசனப்பட நீ மறைந்திருப்பது ஞாயமோ? இல்லை, நரனால் நேரிட்ட அபாயமோ? உடலிற் பாணங்கள்தைத்த காயமோ? பக்ஷம் பறந்தோடிப்போன மாயமோ? அல்லது என்பேரில் நீ வைத்த நேயமோ? நீ எங்கேயிருக்கின்றாயடா! நானெப்படிமனந்தேறி வாழ்வேனடா! ஐயையோ!! அந்த சங்கு சக்கரக் கையன் உன்னைச் சதித்தானோ? எனக்குமூத்த பிள்ளையென்று உன்னைக் கொஞ்சமு மதித்தானோ? பஞ்சணை பட்டுப் பரப்பித் துயின்றனையே; இந்தப் பாரிற் புழுதிமேற் புரண்டனையே: உன் பொன்னான மேனி கறுத்ததே: நீ செய்த புண்ணியமெல்லாம் இதைப் பொறுத்ததே: என்று கன்றையிழந்து நினைந்து நினைந்து மறுக்கங்கொண்டழும் பசுவைப்போற் கதறிக்கதறி, கனத்த பாடுபட்டுக் கலங்கினாள். அவளாரெனில், காரைக்கண்டு கலாபம் விரித்து வீசி இளமயிலாடுகின்ற மலைகணெருங்கிய குரு நாடானுக்குத் திருத்தேவியாகிய குந்திமாதேவி.

## பாண்டவர் கர்னன் வரலாற்றைக் கண்ணனாற்கேட்டுக் குந்திதேவியைக் கண்டு வெறுத்துக் கொள்ளுதல்

இப்படி பலவாறாகப் புலம்பிக் கண்ணீராற் கையலம்பிக் கவலைப்பட்டழுகின்ற குந்திதேவியை, அமர்க்களத்தில் நிறைந்து நின்ற அரசர்கள் யாவருங்கண்டு, மதிமயங்கி அதிசயித்து, எங்கியேங்கிச் சென்று இருபாளையங்களிலுஞ் சொன்னார்கள். இச்சொற் கேட்ட

வுடனே, பேரறத்தின் புத்திரனாகிய தரும
ராஜன்-வீமசேனன் - அருச்சுனன்-நகுலன் -
சகாதேவன் இவ்வைந்து பிள்ளைகளுந் தங்க
ளைப்பெற்ற தாயானவள், கண்ணீர் சொரிந்து
வந்து கர்னன் பேரில் வீழ்ந்து, அழவேண்
டிய காரணமென்ன வென்று மனமறுக்கங்
கொண்டு, சமீபத்தி லிருக்கின்ற மாயவனைப்
பார்த்து, ஐயா! இதென்ன ஆச்சரியம்!
இதென்னவிந்தை? இமைப்போதிற்சொல்லு
மென்று இறைஞ்சிக்கேட்டார்கள். அப்போது
கண்ணன் அவர்களை நோக்கி, அடடா! எனக்
கென்னதெரியும்? நான்உங்களைவிட்டுப்பிரியா
திருக்க என்னைக் கேட்டால், உங்களுக்குத்
தெரிந்த அவ்வளவு தான் எனக்குந் தெரி
யும் என்று சொல்லவும்; வீமனுக்குக் கோபம்
வந்து, கதை கொண்ட கையுடன் ஓடி
வந்து, ஓ நீலமேனியாய்! நீ அறியாத ரக
சியமுண்டோ? உள்ளபடி சொல்லுகின்றீரா?
அல்லது எங்களையெல்லாம் ஒருங்கேகொல்லு
கின்றீரா? வந்த பாவம் வரட்டு மென்று
உம்மை ஒரேயடியாய் அடிக்கட்டுமா? என்று
கதையைக் கையிற்றூக்கினன். அவனை அக்
கண்ணன் பார்த்து, அப்பா வீமா! இதோ
நான் அறிந்தமாத்திரஞ் சொல்லுகிறேன்.
என்று உண்மையாகிய காரியத்திற் சில முக்
கியமானவற்றைச் சொல்லினர். அதைக்கேட்ட
பாண்டவரைவரும் பசபசவென்று முழித்து,
கோடையிடிவிழுந்த நாகப்பாம்புபோற் குலை
குலைந்து சோபித்துப் பூமிமேற் சாய்ந்தார்
கள். இப்படி நாலாய்ந்த கேள்வியினுற்றமுங்
கொற்றமாகிய வெற்றியின்தேற்ற முடையோர்
வீழ்ந்து புரண்டு அலறி, கண்களிலிருந்து
ஒழுகிவரா நின்ற வெள்ளத்துடன் தள்ளாடி,
வெற்றிமுற்றுந் தாழ்ந்து, உயிர் தளர்ந்து,
உடல்வருந்தி, உறக்கமாகிப் பொங்கியபோது;
சில மகாவாக்கியங்கள் உரைத்து மாயோன்
தேற்றினர். அந்தச் சக்கிராதரனுடனே சமுத்
திரம் வருவதுபோல் அநேகம் இராஜர்கள்
சூழ்ந்துவர, அஸ்தமானமாகிய சூரியன் மறு
படியும் உதயமாய் வந்தானோவென்று பிரமித்
துச் சொல்லுந் தன்மைபோல், ஆயிரமாயிரந்
தீபங்கள் அயலார் ஏந்திவர, பகல்வத்தி முக
லாகிய வெளிச்சங்களுடனே பாண்டவரை
வரும் புறப்பட்டு, உயிரோடிருந்த காலத்திற்
பெற்றிடாத பெருமையை இறந்த இப்போது
பெற்ற வண்மைமேற்கொண்ட திண்மையாள
னாகிய கர்னராஜன் உடல்கலங்கி, உயிரொடுங்
கிக்கிடந்த இடத்தைச்சேர்ந்து, கொடிபோ
ன்ற இடையினையுடைய தங்கள் தாயாகிய
குந்திதேவியார் வேடரால் எய்ட்ட கணைபட்ட
மான்போற் பரதவித்துத் தனக்குஞ் சூரியனுக்
கும் பிறந்த புத்திரன்மேல் வீழ்ந்து புரண்டு
கதறியழுதுகொண்டிருக்குஞ் செயலை நோக்கி,
அந்தப்புரதையினுடைய கால்மேற்பணிந்து;
சத்தியகீர்த்தியாகிய தாயின் முகத்தைப் பார்த்
துத் தருமராஜன் சொல்லுகின்றார்.

அம்மணி! இஃதென்னகோலம்? இஃ
தென்ன ஜாலம்? இஃதென்ன காலம்? ஆல
காலம்போல் எங்கள் செவியை உருகுதே:
சங்கதியென்ன தாயே! என்று தருமராஜன்
கேட்க, அப்பிள்ளை ஒளிக்காமல் ஆதிநாள்
நடந்த வெல்லாம் உண்மையாகச் சொன்
னாள். அதைக்கேட்டு, வியாகூலமடைந்து
தாயைப்பார்த்து "கன்னியிளம் பருவத்திலரி
யமா வெனுங் கடவுள் காதல்கூற, மன்னிய
மந்திரம் எமக்கு மின்றளவு முரைத்திலையான்
மறந்தாய் கொல்லோ, பின்னிய செஞ்சடைக்
குழலா யீதென்னபேரறிவு பெற்றதாயி, னன்
னியர் நன்றாயிருந்த திப்படியே பிழைப்பிப்
பதறிந்திலேமே.'' அன்னையே நீர் கன்னி
கையா யிருந்த இளம்பருவத்திற் சூரியபக
வான் காதல்கொண்டு வரும்படியாய்க் கற்றி
ருந்த மந்திரத்தையும், அந்த மந்திரத்தினு
லாகிய பிரயோசனத்தையும், எங்களுக்குத்
தெரிவிக்காமலும், சொல்லாமலும் வன்பணத்
துடனிருந்தீர். அப்படி யிருந்தது சொல்லப்
படாதென்னு நியாயத்தினாலேயோ? அல்லது
மறந்துபோய் விட்டதினாலேயோ? ஏதொன்
றுந் தெரிகிலேம். ஓபின்னலாகிய செஞ்சடைக்
குழலாய்! இதென்ன விவேகம்? உமக்கு இரு
க்கவேண்டிய பெரிய அறிவு இது தானோ?
உம்மைப் பெற்ற தாயென்றும் பேசவேண்டி
யதுதானோ? அன்னியர்களைத் தாயென்று
உறவுபிடித்தால் அவர்கள் மகனென்று விசு
வாசத்தை மாறாமல் வைப்பார்களே: பெற்ற
தாயாகிய உம்மைவிட ஒப்பாரித்தாய் மேலெ
ன்று நினைக்கின்றேன். பிள்ளைகளுக்குத் தாயே
சத்துருவா யிருந்து சதிசெய்யக் கேட்டது
மில்லை. நான் கண்டதுமில்லை. தேவரீரைக்
கண்டேன். அம்மா! எங்களை அனியாயஞ்
செய்து கெடுத்தீரே: என்று அலறிக்கதறி
அறைந்து மோதி, தரைமேற் றடாலென்று
வீழ்ந்து, ஊறுகயம்போற் சலபெருகுங் கண்
ணினை யுடையவராய் அழுவதாயினர்.

### தருமன் வீமன் இவர்கள் புலம்பல்

"ஊற்றிருந்த விழியினளா யுணைப்பயந்
தாண் மனமறுக வுயிராய்நின்ற, காற்றிருந்த
விடந்தேடிக்கணைபலவு முடல்குளிப்பக் கர்ணு
வின்று, கூற்றிருந்த பதிதேடிக் குடியிருக்க
நடந்தனையோ கொற்றவேந்தாய், வீற்றிருந்
திங்கைவேமு மடிவருடப்புவியாள விதியிலா
தாய்'' ஓ அண்ணு கர்னமகாராஜனே! குந்தி
தேவியென்னும் உம்மைப் பெற்ற தாயார்
ஓகோவென்று இங்கழுது அரற்ற, நீருமது
பிராணவாயு பொருந்தி யிருந்த விடத்தைப்
பூராயமாய்த் தேடி குடியிருக்கப் போனீரோ?
வெற்றிமுற்றும்பெற்ற வேந்தனே! ஓ மிகவும்
பொறுமைவகித்த சாந்தனே! நீர் சிங்காசனத்
தில்வீற்றிருந்து புவியாளவும், நாங்களைவரும்
உமது திருவடி வருடி ஊழியம் பண்ணவும்
விதிப்பயன் பெறுமற் போயினோம். ஓ வீர
ரேறே! மாமிசத்தையும் உதிரத்தையும் மாரு
மற் கவ்விய நீண்ட பாணங்களை எத்தனையாயி
ரமோ தொடுத்தேன். நீர் கொடுத்த பாணத்
திக்கெல்லாந் தப்பினேன். எப்படியுஞ் செயிக்
கலாமென்று சந்தோஷித்தேன். ஓ தேனி
றைந்த மலர்மாலை யணிந்த திணிந்ததோளா!
ஓ சிலம்பணிந்த வீரகண்டைத்தாளா! தின
கரன் குமாரனுகிய செல்வமே! தேவரீருக்குத்
தொண்டுசெய்து சீருஞ் செல்வமும் பெருத
தீங்கினராேனுமே; என்று தருமராஜன் தலந்
தெரியாமல் தன்னை மறந்து தாரணியில் வீழ்ந்
தார். அப்போது வீமசேனனும் மேனி மெலி
ந்து முகஞ் சுளிவடைந்து, ஓ அங்கதேசராஜ
திலகனே! ஆ அண்ணு! தேவரீருக்கு யான்
கண்ணுக்குண் மணிபோல் அடிமைசெய்து
காத்திருப்பேன். ஐயோ! கைதவப்போரில்
வீணுகிய கணைகளை விட்டேனே; கலகம் விளைத்
தேனே; காரியமுணரேனே; கசங்கிப்போனே
னே; எந்தப் பாவியும் எள்ளத்தனை தெரிவிக்
காமற் போனுர்களே; ஓ எங்களிறையே! ஒருவ
ருக்கும் உண்மை சொல்ல வேண்டாமென்று
கட்டுச்செய்து வைத்தீரோ? அல்லது உமக்
குத் தெரியாதோ; எங்களுடைய தீவினை
யானது தாயென்றுருக்கொண்டுவந்து தமய
னைச் சதிப்பதற்குச் சகாயமா யிருந்ததே; ஓ
அண்ணு! சந்தோஷம் அனுபவிக்கயிருந்த
நாங்கள் சங்கடம் அனுபவிக்கும்படி நேரிட்
டதே; ஐயோ! ஓ வினையால் விளைந்த சஞ்ச
லமே; என்று வீமசேனன் புலம்பி, மெத்த
வெறிகொண்டவர்போற் கர்னனுடைய தேகக்
குறியிற் கண்வைத்தபடி நின்றுன். அப்போது
அருச்சுனன் அக்கர்னன்மேல் வீழ்ந்து கதறி
நெடுமூச்செறிந்து பிரலாபிப்பதாயினுன்.

### அருச்சுனன் புலம்பல்

"ஊன்றொடுத்த வயவாளி யெத்தனையாயி
ரந்தொடுத்தே னுரகந்தர்னீ, தான்றொடுத்த
கடுங்கணைக்குத் தப்பினேனென மகிழ்ந்தேன்
சஞ்சரீகந், தேன்றொடுத்த மலரலங்கற்றின
நாதன் சேயேநின் றிருமார்பத்தில், யான்
றொடுத்த நெடும்பகழி யெனைக்கெடுப்ப தறிந்
திலேனென் செய்தேனே" "யாயுரைத்ததல்
லாது வேறுரைத்த தசரீரியென்னுந்தேவின்,
வாயுரைத்த தின்றளவுங் கேட்டிலேங் கேட்
டனமேல் வாட்டமுண்டோ, பேயுரைத்துத்
தாலாட்ட முலைப்பாலோடுயிருண்ட பித்தா
வீண்டை, நீயுரைத்தபிறகறிந்தோ மெம்முனை
யின்றெமைக்கொண்டே நேர்செய்தாயே'' ஓ
சிரேஷ்ட ப்ராதுவாகிய என்தேவே! தேவரீர்
மீது நானுவிதமாகிய முனைக்கணைகளை நான்
தொடுத்தும், நீர் தொடுத்த நாகாஸ்திரத்திற்
குத் தப்பிப் பிழைத்தோமென்று சந்தோஷம்
அடைந்தேன். ஓ தேன்வண்டு மொய்த்த
செண்டாகிய வெண்டாமரை மலர்மாலை யணி
ந்த திண்டோளுடைய தினகரன்சேயே! உம்
முடைய தீரமார்பகத்தில் யான்விடுத்த பாணங்
கள் என்னைக் கெடுப்பதை அறியாமல், உம்
மைக் கெடுத்ததாயெண்ணி உடல் பூரித்தேன்.
ஓ உலவாப் பெருந்திறலுத்தமனே! இனி
நானென்ன செய்வேன்? ஐயோ! பூமியில் ரதம்
புதைந்தபோதும், இந்தப் பூமி பனிரண்டங்
குலம் மேலெழும்பும்படியாய் தோள்மடிங்கித்
தூக்கிய தோன்றலாகிய உமக்கிணை யாரிருக்
கின்றுர்கள்; என்னையனே! உம்முடைய வாழ்
நாளை மடியச்செய்யுமென்று அஞ்சரீகத்தி
னுல் மிகவறியேனுகிய சிறியேன் அறியாமைக்
கொண்டு குறியாமற் கொன்றேன்; கொன்
றேன்; கொன்றேன். கொடும்பாவியாகிய நான்
கொலைசெய்தேன்; சகோதரத் துரோகியா
னேன். ஐயையோ! இவ்விடத்தில் இந்த அம்
மாளாகிய தாய் சொல்லவல்லவோ தெரியவந்
தது. இதன்றியும், இந்த அசரீரியென்னுந்
தேவும் இப்போதல்லவோ தெரிவித்தது. இன்
றைய வரைக்கும் நாங்கள் கேட்டறிந்ததில்
லையே; தெய்வமே! கொஞ்சமேனும் அறிந்தி
ருப்போமாகில் எங்களுக்கு வாட்டமுண்டோ?
வருத்தமுண்டோ? ஒரு நஷ்டமுமில்லையே; ஓ
உத்தமனே! ஓ பூதகியென்னும் பேயானவள்

மடிமீது வைத்துக்கொண்டு தாலாட்டி முலையூட்ட, அம்முலைப்பாலுடன் அவளுயிரையும் உண்டருளிய பித்தா! ஓ வஞ்சகநெஞ்சுடைய அஞ்சமேனிச் சித்தா! ஆ பாவி! இப்போது நீர் சொல்லவந்த இந்த ரகசியத்தை நாலு நாழிகைக்கு முன்னே சொல்லப்படாதா? ஓ கபட நாடகமுடையவனே! இதனால் உனக்கு என்னலாபம்? நீர் என்னவாரிக்கொள்ளப்போகின்றீர்? பாவபுண்ணியம் பார்க்கவில்லையே; தன் கையைக்கொண்டு தன் கண்ணைக் குத்திக் கொள்ளச் செய்ததுபோல், எங்கள் தமயனை எங்களைக்கொண்டே முடித்துப்போட்டீரே என்று அருச்சுனன் புலம்பினான். அப்போது நகுல சகாதேவர்கள் நடுங்கி யொடுங்கி நாவுலர்ந்து, வாய் விட்டலறி, கண்ணைக் கண் கலங்கப் பார்த்து இதனைப் பேசுவதானார்கள்.

### நகுல சகாதேவர்கள் புலம்பல்

"ஆடகனைப் புதல்வனைக் கொண்டழிப்பித்தா யிலங்கைநகர்க் கச்சையன்று, வீடணனைப் பகையாக்கி கிளையுடனே வீழ்வித்தாய் வேலைசூழ்ந்த, நாடறியப்புகுந்தெமக்கு நாயகமாங் கன்னனையு நரன்கையாலே, யீடழியப் பொருவித்தாயிமையவநீ வல்லவிரகியார் வல்லாரே" ஓ கிருஷ்ணமூர்த்தி! பூர்வம் இரணியாசுரன் என்பவனை அவன் பிள்ளையைக் கொண்டு கழித்துவிட்டீர். இலங்கைக்கிறையாகிய இராவணனுக்கு அவன் தம்பியராகிய விபீஷணனைப் பகைப்படுத்தி வைத்து, அவனை நீர் உளவாக்கிக் கொண்டு புத்ரமித்ரகளத்திராதிகளுடன் போக்கிவிட்டீர். இந்த லோகப் பிரசித்தியாய் குருகுலனாயகக் கோமானாகிய கர்னனை, நரனாகிய அருச்சுனன் கையினால் ஈடழியப்பொருதி வைத்து யிறப்பித்தீர். பெரியோனென்று நம்பும்படியாக யிமையோனாகிய நீர்செய்யுஞ் சூதாகிய விரகைப்போற் செய்வதற்கு யாவர் வல்லவர்கள்? என்று நகுல சகாதேவர்களும், மற்ற பந்து வர்க்கங்களும், திரௌபதையும் விசனமடைந்து, கோபால கிருஷ்ணனை நோக்கி, ஆளுக்கொரு பேச்சு பேசி, கர்னனுடைய அடிமலர்மேல் வீழ்ந்து அழுது அரற்றித்துன் புற்றார்கள்.

### அமர்ப்புறத்தில் துரியோதனாதியரும் அஸ்தினாபுரத்தில் திரிதராட்டிர னாதியரும் வசித்தல்.

இவ்வாறு குந்திதேவியும் பாண்டவர்களுங் கர்னனைக்குறித்துத் துயரப்பட்ட சங்கதிகளை யெல்லாம் பாம்புக்கொடி படைத்த துரியோதனன்கேட்டு, அநேகம்மத்தாப்புவெளிச்சத்துடன் வந்து, யுத்தகளத்தைப் பார்த்து, மரம்போல் நின்று, வாயைத் திறவாமல், மறுவார்த்தை பேசாமல், ஐயையோ! ஆ தெய்வமே! இதென்ன சூது? நாடாண்டவனுங் கர்னன், காடாண்டவனுங் கர்னன். அடடா! எங்கும் அவர்களாகவே முடிந்ததே: என்று அதிசயமடைந்து, நாமேன் உலகத்துக்கு விருதாவாய்ப் பழிசுமந்தோம்? சர்னனுடன் பாரதஞ் சரியாய் விட்டது. இனிமேலென்ன யுத்தம்? அதுகெட்டுது. என்று மனம்ரோசி விரைவில் மாள்வதற்கான 'வழியைத்தேடி, அடங்காத துக்கமுடையவனாய்ப் பாசறைபோய்ச்சேர்ந்தான். மற்றத் தம்பிமார்களும் பந்துக்களும் வியந்து, அவனோடு வருந்திக் கொண்டு சென்றார்கள். இவ்விடத்திற் குந்திதேவியாகிய தாயும், பாண்டவர்களாகிய சேயும், மனந் தேறாமல், ஆகுலத்தில் மூழ்கினவர்களாய்த் திகிலடைந்து தங்கள் பாடிவீடுபோய்ச் சேர்ந்தார்கள். அந்த வேளையிற் சஞ்சயனானவன், துரியோதனனைப் போய்க் கண்டான். அந்த துரியோதனனவனைப்பார்த்து, ஓ சஞ்சயனே! இனிக்காரியமில்லை. என்னுடைய க்ஷேமத்தை ஐயா அவர்கள் திரிதராட்டிரனுக்குந் தாயாகிய காந்தாரியம்மனுக்குஞ் சொல்லிப்போடென்று சொல்லி அனுப்பினான். அப்படியே சஞ்சயன் அஸ்தினாபுரம் போய்ச் சொல்ல, அதைக் கேட்ட பெரிய அரசன் இனிமேல் நமது புத்திரன் பிழைக்கமாட்டான். அரிது: அரிது: என்று பெருமூச்சு விட்டு உயிர்ப்படங்கி, செத்துப் போனவர்கட்குச் சரியாயிருந்தான். இச்சேதிகேட்ட காந்தாரி கண் கலக்கப்பட்டு கதறி யழுதாள். கர்னனுடைய பத்தினியும், இன்னுமுள்ள மற்றப்பேர்களின் பத்தினிமார்களும், புத்திரவர்க்கத்தாரும் மெத்தக் கலங்கி, விசனப்பட்டார்கள். இதுவரையிலும் இழிகுலத்தானுக்கு வாழ்க்கைப் பட்டாளென்று தன் தாயுந் தகப்பனுந் தள்ளிவிட்டிருக்க, தான்மாத்திரம் பதிவிரதா மகத்துவப்படிக்கு இவரே தெய்வமென்று நம்பியிருந்த கர்னன் பெண்சாதியாகிய பொன்மாலையானவள், பாண்டவர்களுக்குத் தன் புருஷன் மூத்தவனென்றும், குந்திதேவியாருக்கு முதற் புத்திரனென்றுங் கேழ்விப்படவே: ஐயையோ தெய்வமே என்று தியங்கிப் பெருமூச்சு விட்டுக் கலங்கினாள். அவளைத் தாதியர் தேற்றியாற்றினார்கள். காந்தாரியும், திரிதராட்டிர

னும், மற்றப்பேர்களும் கர்னனுடைய பிறப்பு வளர்ப்பு அறிந்து, மெத்தவும் முழித்து உத்தரஞ் சொல்லமாட்டாமல் வாயைத்திறவாமல் வயிற்றைப் பிசைந்துகொண் டிருந்தார்கள். இப்படியாக வருத்தப்பட்ட இவர்கள் துயரத்தைச் சஞ்சயன்மாற்றி மறுபடியும் ரணக்களம் வந்தான். இவையனைத்தையுங் கேட்ட ஜெனமேஜெய மகாராஜன் ஆசாரிய மூர்த்தங் கொண்டெழுந்த அன்புருவாகிய வைசம்பாயன முனிவரைத் தன் பத்தினியோடு மும்முறை பிரதக்ஷணம் வந்து, அவர் திருவடியிற் றீர்க்கத்தெண்டஞ் செய்து விழிவழியே ஜலம் பெருகும்படியாய் விசனமடைந்து என்னுடைய தீவினையைப் பொடிபடுத்தவந்த தெய்வமே! கூட்டமாகிய குதிரைபலங்களும்-ஓட்டமாகிய தேர்ப்பலங்களும் - நாட்டமாகிய மதயானைப் பலங்களும் - தேட்டமாகிய பதாதிப் பலங்களும்-வாளாயுத பலங்களும்-வேலாயுத பலங்களும் எல்லாப் பலங்களும் உண்டாயிருந்தபோதிலும், எப்பொருட்கும் இறைவனாகிய தெய்வத்தின் பலம் அணுவத்தனையேனும் இல்லாமற் போகுமேயாகில், மற்றப் பலங்களெல்லாம் இருந்தும் என்னபலம்? அபலமோ சபலமோ: சுவாமி மேல்நடந்த சல்லிய பர்வத்தின் சரிதத்தைச் சாங்கமாய்ச் சொல்ல வேண்டுமென்று கேட்க, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினர்.

## பதினேழாம்போர்ச் சருக்கத்தோடு

கர்னபர்வம் - முற்றிற்று.



ஸ்ரீ கிருஷ்ணாய நம:







ஸ்ரீ ருக்மிணீ ஸத்தியபாமா ஸமேத ஸ்ரீ வேணுகோபால பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீமஹாபாரதம்

ஒன்பதாவது,

## சல்லிய பர்வம்

கண்ணன் துதி

தந்தமுறியின் வாய்வைத்த தயிர்பால்வெண்ணெ யெட்டாமற்
குந்தியுரலின் மீதேறி யிளங்கோவியர் முன்கூத்தாய
நந்தன்மனையி லசோதையிரு நயனங்களிக்க விளையாடும்
மைந்தனிருதா ளொருநாளு மறவாதாரே பிறவாதார்.

### சூதபுராணிகர் வாக்கியம்

ஓ சவுனகாதி முனிவர்களே! இவ்வாறு உயுத்தபஞ்சகத்தின் மூன்றாம்பாகமாகிய கர்ன பர்வத்தைக் கூறிய வைசம்பாயன முனிவரை, ஜனமேஜெய மகாராஜன் பணிந்தெழுந்து சுவாமி! அங்கதேசாதிபனாகிய கர்ன மகாராஜன் சேனாபதியாகி நடாத்திய இரண்டுநாள் யுத்தத்தில் அவன் பராக்கிரமங் கண்டு, ஐயுற்ற தருமராஜனைக் கண்ணன் தேற்றியதும், கர்னன் வேண்டுகோளின்படி சல்லியனைச் சாரதியாயமைத்த துரியோதனன் பின் படைவர்கட்குண்டான வாதை விலக்கச் சமாதானஞ் செய்வித்த பிரையாசமும், அருச்சுனன் கர்னனைத் தர்மனென்றையுற்று அவர் பாசரைக்கேக, அவரினும் கர்னனைக் கொல்லாது தாழ்த்தனனென்று அவனையும், அவன் காண்டீபத்தையும் நிந்திக்க, உடனே அவன் தன் சபதத்தை யவர்பாற் சாதிக்கவெழக் கண்ட கண்ணன், அச்சபத நிவாரணத்திற்கேதுகூறி, இருவரையுஞ் சன்மானித்ததும், வீமசேனன் துச்சாதனனை வதைத்து தன் சபதம் நிறைவேற்றியதும், அருச்சுனன் கழுத்துக்கிலக்குவைத்துவிட்ட கர்னனுடைய நாகாஸ்திரங் கண்ணன் செயலாற் றப்பியதும், உடனே அக்கர்னனிரதம் ஓரந்தணன் சாபத்தாற் பூமியி லழுந்தப்பட்டுத் தான் அருச்சுனன் கணையா லடியுண்டிளைத்தும், அக்கால் கண்ண னவனிடஞ் சென்று தருமத்தைத் தானம் வாங்கி மீண்டு அருச்சுனனாலவனை பரமபத மடைவித்ததும், கர்ன புத்திரனிரியாணத்தை அசரீயாற்கேட்டு வரந்தராற்றிய குந்திதேவியின் பிரலாபத்தால் அவன் ஜனன வரலா றின்னதென்று இருதிறத்தினரு மறிந்து வருந்தியதும், ஆகிய சரித்திரங்களை எல்லாஞ் சாங்கோபாங்கமாகக் கேட்டுச் சந்தோ

ஷமாயினேன். இப்பால் நான்காம்பாகமாகிய சல்லிய பர்வத்தையுந் திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்று கேட்க, வைசம்பாயன முனிவர் சொல்லத் தொடங்கினர்.

---

இப்பால்,

## பதினெட்டாம்போர்ச் சருக்கம்

கவி

ஆரா வமுதா யருளாய் மருளாய்த்
தீரா நிலையாய்ச் செனனக் கடறன்
பேராம் புணையாற் கரையைப் பெறவே
நாராயணனுய் வருநன்மைகளே.

ஓ தினமேதகு செழுமுகவாசனே! ஜெனமேஜெயனெனு மகாராஜனே! கேளும்: நேற்றையப் போரில் தன் மைந்தனுகிய கர்னன் நொந்துபோகும்படியாய் பகைவர் செந்தழல் வாளி செலுத்தி மாய்த்த தீங்கினைக்கண்ட சூரிய பகவான் புத்திரசோபத்தாற்றியங்கி, மெத்தவு நேரிட்ட விசனமனத்தால் மயங்கி, வேறு செய்கை யொன்றுந் தோன்றுமற் சாய்ந்து, தானுந்தன் குதிரைகளும் ஓய்ந்து, தர்ம சாஸ்திரங்களை ஆய்ந்து, தன் காந்தி முதலிய கதிர்களுங் குறைந்து, வடமேற்குத் திசைகண் மறைந்து போதலும், கர்னனுடைய தகப்பன் இதோ ஓடுகிறுனென்று அராத்தி வந்து வளைத்துப் பகைத்து எதிர்த்த தன்மைபோல் எதிர்ந்து, மறித்த மாலைப்போதென்னும் அவுணர்களெல்லோரும், அஞ்சியோடும்படிக்கு அடித்து வென்று அருமையான தன் மேனி சிவந்து, புத்திரனைப் பறிகொடுத்தவர்கள் மனவெறுப்பினுல் பூப்பிரதக்ஷணஞ் செய்யும் பான்மைபோல் மகமேரு முதலிய வடதிசையைச்சூழ்ந்து, கீழ்த்திசையில் வந்து, பாசபந்த விசனகரத்தால் மூடிக்கொண்டலைக்கும் அக்ஞானம்போல் உலகத்திற் புதைத்திருந்த வல்லிருளைவாட்டி, நாகலோகத்திற் குடியோட்டி, உதயகிரியானது, பத்மராகக்கிரியென்று புலவர்கள் உவமிக்கும்படியாய் அம்மலைமீதேறிபிரகாசித்து, கிரணங்களாகிய கரங்களை நீட்டி, கர்னனை நினைந்து, உள்ளும்புறம்பும் ஓரே காய்ச்சலாய்ப்புழுங்கி, தன் பிள்ளையைக் கொன்றவர்களையும், அவனைக் கொல்லும்படியாய்ப் பார்த்திருந்தவர்களையும், மற்ற எல்லோரையுங் கருக்கிக் காய்ந்து, முருங்கிப் பாய்ந்து, எவர்களுந்தன் முகத்தைப் பார்க்கக் கூசும்படியாய்க் கடுங்கோபத்துடன் கண் சிவந்து, கக்னமுகட்டையளாவி உதயமாயினுன். இருகண்ணு மற்ற திரிதராஷ்டிரனுடைய பிள்ளையாகிய துரியோதனன் இராத்திரி முழுதும் நித்திரையில்லாமல், மித்திரனுகிய கர்னனை நினைந்துநினைந்து உருகி, இனிமேல் எவரைக்கொண்டு யுத்த முடித்து ஜெயம்பெறப் போகின்றேனென்று மாமனுகிய சகுனியுடன் கிலேசித்துயோசித்து, இரவு நீங்கிய விடியற் காலத்தில் எழுந்து, ஜாதி மல்லிகை முதலாகிய கொடிப்பூ-கோட்டுப்பூ-நீர்ப்பூ-நிலப்பு இவைகளி லிருக்குந் தேன்களை உண்டுகளித்து, ஓசையுடன் பாடாநின்ற வண்டுகளுஞ் சுரும்பினங்களும் மலர்ந் தடங்களுக்கு வரும்படியாய் வரவழைத்துக் கொண்டு வரா நின்ற சூரியனைக்கண்டு, நித்திய விதியுடன் வந்தனைசெய்து வணங்கினுன்.

### கிருபாசாரி இனியேனும் யுத்தத்தைநிறுத்திப் பாண்டவரோ டொன்றுபட் டிருத்தல் நலமென்று துரியோதனனுக்குரைக்க அவனதை மறுத்தல்

அந்த வேளையில், வில்லின் வல்லமைக்கு ஒருவரு நிகரில்லாமல் அஞ்சூராணி போற் சிறந்த கிருபாச்சாரியர், துரியோதனமகாராஜனிடத்திற்குவந்து கலந்து பேசி கவலைப்படு மனத்தைத் தேற்றி, ஓ கௌரவ முதல்வனே! இனிமேலாகிலும் யுத்தஞ்செய்து வெற்றி பெற வேண்டுமென்று, திண்ணமா யெண்ணியிருக்கும் எண்ணத்தை விட்டுவிடு சொற்பனத்திலு நினைக்காதே. அதேனிப்படி சொல்லுவதென்றுல், மலை முதலாகியதுக்கும் மக்கும்படியாய்ச் செய்கின்ற புயவலிமைபெற்ற, வீராதிவீராள் ஒருவருமில்லை. நீ படைத்திருந்த சாமர்த்தியவான்களெல்லாருந் தங்கள் காலத்தைப் போக்கிக்கொண்டு, போய்விட்டார்கள். மேலாக மிகுந்திருப்பவர்கள் நீயும் நானுந் தான். நாமிருவரும் இருந்ததினுல் என்ன பிரயோசனம்? வாயுகுமாரனுக்கும், விஜய காண்டீப வீரனுக்கும், ஒப்பாகியபேர் இவ்வுலகத்தில் எவரிருக்கின்றுர்கள்? எதுகாரியம்எப்படியாயினுலும், அவர்கள் நிற்கின்ற யுத்தமுனையில் நான் போகமாட்டேன். ஓ சகல நலங்களுடைய சற்கீர்த்தி படைத்தவனே! உன் தந்தையாகிய திரிதராஷ்டிர மகாராஜனும், அருந்ததியையொத்த உன் தாயாகிய காந்தாரியம்மனும், இன்னுமுனக்குரிய பந்துக்களும், வியாகூலம் பெற்று அழும்படியாய், இன்

னும் பாண்டவர்களுடன் பகைத்துச் செய்கின்ற பெரிய சண்டையால் நொந்து, புறங்கொடுத்தோடி, பிராணனை யிழந்துவிடுவது மேன்மையானதல்ல. இதுவரையிலும் நடத்திவந்த யுத்தத்தால் நாம் அடைந்தபலன் யாதொன்றுமில்லை. ஆகையால், உலகமெல்லாம் உன்னைப் புகழவும், உன் அன்னை தந்தையாகிய பேர்களுடன் மன்னர் மகிழவும், பாண்டவர்களுக்கு முன்கொடுத்த பரிசைப்போல் இந்திரப் பிரஸ்தத்தைக் கொடுத்து, அவர்களுடன் கலந்து மருவி, முறையாக விழைவுடன் வாழ்வது மேன்மை; இதுவே நல்ல அரசர்களின் திறமை.

ஒருவேளை அந்தப் பாண்டவர்கள் தாங்கள் சொல்லிய சபதங்கள் வீணாகப்போகுமே யென்று கருதி, அந்தச் சபதத்தை நிறைவேற்றாமல் விடமாட்டோமென்று தீர்க்கவயிரமாகப் பேசுவார்களாகில், அவர்களையான் எவ்விதத்திலாகிலுஞ் சமாதானப்படுத்தி, அவர்களுடைய சபதமும் பழுதுபட வொட்டாமல் நிறைவேற்றி, உங்களிருதிறவர்களுக்கும் பழிபாவமில்லாமற் செய்து போடுகிறேன். ஓ மின்னொளிபோன்ற வேல்தாங்கிய மன்னவனே! இதைக்குறித்து நீ வெட்கப்படவேண்டாம் எழுந்திரு. என் பின்னேவா என்று கிருபாச்சாரியர் சொல்லியருளினார். விதியின் வழி மதியைச் செலுத்துஞ் செயலையுடைய துரியோதனமகாராஜன், அவர் சொல்லிய அந்த வார்த்தையைக் காதில் ஏற்றுக்கொள்ளாமல், காரெனக் கறுத்திடித்து, கனலெனப் புகைந்திரைத்து, ஆ! ஆ! என்ன சொன்னீர்? என்று நிலத்திற் கரத்தையோங்கிப் புடைத்து, ஐயா! பழமையாகிய கிருபரே! தேவர் முதலிய யாவரும் புகழும்படியாய் வெம்போரைச் செய்து, யுத்தகளத்தில் விழுந்து செத்தாலுஞ் சாவதேயன்றி, அவர்களுடன்கூடி உயிர்வைத்து வாழேன். அவர்களுக்குத் தாழேன். அற்பமதியால் ஆழேன். மேலும், எல்லாந்தெரிந்த அனுபவசாலியாகிய நீர் எப்படி மனந்துணிந்து சொன்னீர். எனக்காகத் துணைப்பட்டு என் பொருட்டிற் படைத்துணை வந்து பிராணன்கொடுத்த பேர்களையெல்லாம் நீர் நன்றாய் அறிவீர். என் நிமித்தம் இகல்கொண்டு மடிந்த பலபேர்களுடைய பிராணனைப் பார்க்கிலும் என் பிராணன் பெரிதோ? நூறுபேராகப் பிறந்திருந்த என்னுயிர் சகோதரர்களெங்கே? இப்போதுதானா நான் உயிர் பெற்று பகைபற்று சுகமுற்று வாழவேண்டியது? நல்ல காரியம். ஓ உத்தமனே! உமது வசனத்துக்கு நானுடம்பட மாட்டேனென்று தடுத்தான். அவனுறெனில், பூர்வ நண்ணிய ஊழ்வின்படி மதியுந்த, தான்பிறந்த மரபுக்கு வசைமூந்த, பேருலகத்துக்குப் பழிதந்த, பேசும்பேச்சைப் புரட்டி மொழிந்த துரியோதனமகாராஜன்.

## துரியோதனன் சல்லியராசனை வேண்டிச் சேனாபதியாக்குதல்

இப்பால், தனக்குள் இன்றையப் போர்க்குச் சேனாபதிவேண்டுமே யென்று நினைத்தவனாய், பழமையாகிய ஆண்மிக்கையிற் சிறந்து பிறந்துவளர்ந்து, முதிர்ந்த நமது பாட்டனாராகிய வீஷ்மருக்கும், வில்வேத சிகாமணியாகிய துரோணாச்சாரியருக்கும், ஒருவரு நிகரில்லாத வண்மையனாகிய கர்னனுக்கும் ஈடாக எண்ணத்தக்க திறம்பெற்றவனும், வில்லாண்மைகளிலும், வேலாண்மைகளிலும், வாளாண்மைகளிலும், தோளாண்மைகளிலுஞ் சரிப்பட்டவனும்,மத்திராராஜனாகியசல்லியனை யல்லாமல் வேறொருவரும் இல்லையென்று, ஸ்திரமாக மனோதிடங்கொண்டு, அச்சல்லியராஜனை மிகுந்த ஆசையுடனழைப்பித்து, அவனெதிர்சென்று நின்று தழுவிக்கொண்டு, "நீயேயெனக்குயிரு நீயேயெனக்குளமு நீயே யெனக்குநிதியு, நீயேதுணைப்புயமு நீயே விழித்துணையு நீயேயனைத்துநிலையு, நீயே முனைச்செருவி லதிரதரின் மாரதரினிகரற்ற கோவுமதனை, நீயேமுடித்தியென தெண்ணத்தை யின்றுனது நினைவின் படிக்கிலகியே'' ஓ மகாராஜனே! என் மனதுக் கிசைந்த இஷ்டனும் நீ; என்னுயிரும் நீ; என்னுள்முநீ; என்னுள்ளத் துணர்ச்சியும் நீ; என் செல்வப் பெருக்கும் நீ; இவ்வுலகிற் கதிபதியும் நீ; என்னிரு தோளும் நீ; என்னிரு தோட்டுணையும் நீ; அதிரதர் மாரதர் முதலாகிய பேர்களில் ஒப்பில்லாத சுப்பிரதீபம்போன்ற விஜய பராக்கிரமக் கோவேந்தனும் நீ; மூவேந்தனும் நீ; தேவேந்திரனும் நீ. ஆகையினால், நீயே துணிந்து முனைந்து இத்தினப் போரை உன்னெண்ணப்படி நிறைவேற்றி, என்னெண்ணத்தை முடித்து என்னைக் காக்கத் தக்கது. என்று புகன்று, புகழ்ந்து மகிழ்ந்து, நிலையாகிய பட்டவர்த்தனரும், தலையாகிய மகுடவர்த்தனரும், முறைமையாகிய வணங்கும் வேதநீதி விதிப்பிரகாரம் நவரத்தின

கசித பட்டந் தன் கரத்தாற் றரித்து, நான்கு
படைகளுக்கும் இவனே நாயகனென்று கூறி
மின்னலைப்போல் பிரகாசிக்கும் வீரபட்ட
மணிந்த இராஜ குஞ்சரமென்றிருந்த பட்
டத்து யானைப் பிடரியிலேற்றி, சகல மேள
வாத்திய சம்பிரம சந்தடியுடன் படைக்
கோலங் காட்டி, வீரவாகு பூட்டி, சேனாபதி
யாய் விடுத்தான்.

இவ்விதமாகச் செய்த துரியோதன மகா
ராஜனென்னுந் தோழனுடைய வார்த்தைக்கு
அம்மத்திரராஜன் இரண்டு பேசாமற் படைக்
கோலங்கொண்டு வருதலும், அந்தச் சேனா
பதியாகிய சல்லியராஜனைக் குருகுலாதிப
னுடைய சேனைகள் கண்டு மெய்ப்புளகமேறி,
கண்களிலிருந்து முத்துமுத்தாய் ஆனந்த
பாஷ்பஞ் சொரிந்து, இனிப் பாண்டவர்களை
ஜெயிப்போமென்று களிப்படைந்தார்கள்.
இந்தப்பிரகாரஞ் சேனாபதிப் பட்டங் கட்டிய
சல்லிய மகாராஜனுக்கு வரிசைக ளெல்லாங்
கொடுத்து, தெய்வீகமாகிய புண்ணிய தீர்த்தங்
களினால் ஸ்நானஞ் செய்வித்து, மறைவாண
ராகிய பார்ப்பாருக் கெல்லாஞ் சோடச மகா
தானங்களுஞ் செய்து, அவனைப் படைமுகத்
துக்கு அனுப்பிவைத்து தானும் நல்ல வஸ்
திராபரணங்க ளெல்லாந் தரித்து வரிந்து,
தேனிறைந்த மாலைகளும் அணிந்து, செந்
தூரத்திலகந் தரித்து, திகழும் பிரகாச மகிழ்
வுடனோங்கிப் போராடுந் தேரிற்புகுந்து, வரி
சையாகிய மன்ன ரநேகர் பின்னு முன்னுஞ்
சூழ, வானுடர் முதலாகிய மானுடருங் கண்டு
கண்களிக்க, மேக கெர்ச்சிதப் போல் மேளவாத்
தியங்களை முழக்கிக்கொண்டு போர் முனைக்கு
வந்தான் துரியோதன மகாராஜன். அந்த
வேளையிற், கிருபாச்சாரி-அஸ்வத்தாமன்-திரி
கர்த்த தேசாதிபன் - சாலுவராஜன்-கிருதவீரி
யன்-கிருதவன்மன் இவர்கள் முதலாகிய அர
சர்களெல்லாம் வலம் இடமாகிய இரு புறத்தி
லும் மொய்த்து வர, முன்னும் பின்னும்
நெருங்கிய பெருஞ் சேனைகள் எங்கணுங்
கவிந்துவர, ராஜாதிராஜனாகிய துரியோதன
மகாராஜன் தன் சேனாபதியாகிய சல்லியராஜ
னுடன் கலந்து, நீண்ட இரணக்களத்தில்
இன்றையோடு பாரதயுத்த முடிக்கின்றோ
மென்று யாவரும் விருது முதலிய சபதங்க
ளைக் கூறிக்கொண்டு பிரவேசித்தார்கள். இவர்
களைக் கண்ட தேவர்கள் முதலிய யாவர்களுங்
குடிகெட்டதென்று கூவி ஆவி குன்றினார்கள்.

சேனாபதியானவன் சகல மன்னர்களையுஞ் சது
ரங்கப் படைகளையுஞ் சலிப்பில்லாமல் அணி
வகுக்கும்படி எத்தனித்து, சாமர்த்தியவான்க
ளாகிய சகலரையுங் கூட்டி, துரியோதனனை
யும் நடுமத்தியில் நாட்டி, சர்வதோயத்திர
மென்னும் யூகம் வகுத்து, மந்திரி - சாந்தர்
மண்டலீகர்-முடிமன்னர் இவர்கள் முதலான
பேரைத் துரியோதனனுக்குக் காவலாய்ப்
பின்னுமுன்னு நிற்கும்படி செய்து நின்றான்.

### தருமராஜன் தன் படைக்குறைவைக் கண்ணனுக்குணர்த்த, அவரதற்குத் தக்க விடை கூறக்கேட்டு யுத்தமுகஞ் சென்றமர் தொடங்கல்

இங்கே கௌரவாதியர்செய லிவ்வாறாக,
அங்கே மாசறை சேர்ந்த பாண்டவரைவருஞ்
சஞ்சலச்சித்தராகி, செவந்த கிரணக்கணவா
னென்னுஞ் சூரியகுமாரனாகிய பாலகனை, ஜெக
ரட்சகனாகிய காவலனை, இரப்போர்க்கு இல்
லாமை யென்னு மிருள் விடியச்செய்யும் இர
ண்டு கரத்தையுடைய வள்ளலை, குருகுலத்துக்
கிறையாகிய கோமானை இழந்தோமே என்று
புட்பநிறைந்த பூமாலையணிந்த தருமன் முத
லிய யாவருங் கண்ணீர்சொரிந்து, அன்றிராத்
திரி முழுதும் இமையுட னிமைபடத் தூங்கா
மல் ஏங்கிவிழுந்து, அலறி அழுது அலம்வந்
தார்கள். சூரியனும் அவனுடைய பத்தினி
யாகிய சாயாதேவியும், புத்திரனைக் குறித்து
மெத்த வெறுத்துப் புத்திமயங்கினார்கள். அந்
தச் சாயாதேவியின் துயரத்தைப் பார்க்கிலும்,
நூறுமடங் கதிகமா யிந்த பூமிதேவி புலம்பி
மெலிந்தனள். மற்ற தேவர் முதலிய யாவரும்
புலம்பி வாடினார்கள். தருமராஜனானவர் தன்
னைத்தான் வெறுத்துக்கொண்டு, ஐயோ! சூரிய
குமாரனை நமது தமயனென்றறியாமல் மெத்
தவு நிந்தித்துப் பிராணனை வாங்கும்படியாய்
தீமுகமாய் நின்றோமே யென்று தன் சிந்தை
யை நொந்து வருந்தி, சம்பந்தமாகிய உறவு
தெரியாமல் ராக்ஷசனைப்போல் முடித்துவிட்
டானே இந்த அருச்சுனனென்று உலக மாய
கையிற் பொருந்தி மயங்கினார். வீமசேன
னானவன் மனங்குன்றி, எல்லாந் தெரிந்திருந்
தும், யாவு மறிந்திருந்தும் இப்போர்ப்பட்ட
கொடிய துன்பவேலையை முடித்து வைத்தா
னல்லவா இந்தக் கபடநாடகனென்று மாயோ
னைப் பார்த்து, ஓ மாதவா! உமது மனக்கல்
திட்டென்று வீழ்ந்ததா! இனி நீர் கடலில்
வீழ்ந்து கண்ணுறக்கங்கொள்ளுவீரா? என்று

திணிந்த கஞ்சனை முனிந்த அஞ்சன வண்ணனாகிய அவ்வஞ்சகனை வெறுத்தான். வலிமை பெற்ற கல்மனமாகிய குந்தியென்னுந் தாயை வெறுத்தான். இனி யாரை வெறுத்தும் எவரை யொறுத்தும் ஆவதொன்றில்லையென்று ஜன்மாந்திர விதியை வெறுத்தான். அன்றிரவு விடியுமளவும் அர்ச்சுனனும் நகுல சகாதேவருந் தனித்தனித் துயரங்கொண்டாடி, தங்களுக்குத் தாங்களே தேறி, விடியற் காலத்தில் தங்கள் மூத்த சகோதரர்களுந் தாங்களுமாகக் காலக்கடனை முடித்துக்கொண்டு, மன்னர் அநேகரும், நால்வகைச் சேனைகளும் ஒருங்கே ஒழுங்காக மருங்கு சூழ்ந்துவரத் தாங்களைவரும் ரதாரூடராய்ப் புறப்பட்டு, இன்றைப் போரிற் சப்தவஞ்சினக் குறைகளையெல்லாம் முடிக்கவேண்டுமென்னும் இருதயத்துடன் பராக்ரமித்து, எங்கும் பல விதசங்கங்களும், தாரை-துத்தாரி-மத்தளம்-பேரி-பூரி-வீரமணி இவை முதலிய வாத்தியங்களு முழங்கும்படியாய் யுத்தகளம்போய்ச் சேர்ந்தார்கள்.

அப்போது தருமராஜனனவர், தன் பிதாவாகிய எமதர்மராஜனுடைய உத்தியோகத்தைப் பூரணமாகக்கொண்டு வீரம்பெற்று நின்றார். இருதிறப் படைகளின் முழக்கமாகிய வாத்தியங்களின் பேரோசைகளினால், அண்ட முகடு விண்டுபோய் விட்டதோவென்று தேவர்கள் நடுங்கி, ஓடி ஒதுங்கி அஞ்சும்படியாக, மதம்பெற்ற யானை முதலாகிய கடுஞ் சேனைகளுடைய பாஞ்சால புத்திரனாகிய திரஷ்டத்யும்மன் எந்த முகங்களிலுந் தானாகி யிருந்து இரதஞ் செலுத்தி, அழகிய அத்திரயூகமாகிய அணிவகுத்தான். தன் தம்பிமார் முதலியபேரும் வந்து தமயனாகிய தன்னுடைய பாதத்தில் வீழ்ந்து வணங்கி, மனஞ் சலிப்பில்லாமல் புடைசூழ்ந்திருந்தார்கள். எதிரிகளின் சேனைகள் முனைந்து முரண்டு நிற்கச் சேனாதிபதியாகிய சல்லிய ராஜன், மகா வல்லமையுடன் இறுமாந்து நிற்கின்ற வலியைத் தருமராஜன் நோக்கி, அதிசயித்து, கிருஷ்ணமூர்த்தியைப் பார்த்து, ஓ எங்கட் கின்றியமையாத் துணையாகிய இறையே! நமக்கெதிரில் எதிர்ந்து மதர்ந்து ஸ்திரமாக நிற்கின்ற துரியோதனன் சேனைகளுடன் இன்றிருக்கும் நமது சொற்பப் படைகளைக்கொண்டு எப்படி யுத்தஞ் செய்வது? என்று வஞ்சனைகள் முதலாகிய பாவங்களெல்லாந் தனதுளத்திற் குடிபுகுந் துளவாமற் செயித்தருளிய தருமராஜன் கேட்க, அந்த மதுசூதனன் சொல்லுகின்றார்: "வீடுமனைச் சிலைகுருவாம் வேதியனை நும்முனைமுன் வீடு சேர்த்த, நீடுமணிப் பொங்கழலோர் நின்னருகே நிற்கின்றார் நிகரிலாய்கே, ளாடுதிரைக் கடனீந்தி யேறினர்க்குங் கழிகடத்த லரியதன்றே, தோடவிழ்தார்ச் சல்லியனுக் கிளைப்பரோ விளையார்நற் றேர்ரதத்தின்றே" ஓ முரசக்கொடியையுடைய முதல்வனே! வீடுமனையும், சிலைக்குருவையும், உமது தமையனாகிய கர்னனையும், இன்னும் அநேகந் திடகாத்திர தேகமுள்ளாரை யெல்லாம் மோக்ஷவீட்டிற் சேர்த்துவிட்ட மணிப்பொற் கழலணிந்த உமது தம்பிமார்களெல்லாரும் உமது பக்கத்திலேயே நிற்கின்றார்கள். ஆழமாகிய சமுத்திரத்தை நீந்திக் கரையேறியபேர்கள் ஒரு சிறிய கழியைத் தாண்ட பயப்படுவார்களோ? அவர்களுக்கு ஓர் குறுகிய கால்வாயைக் கடத்தலருமையோ? இன்று இந்த இதழ்விரிந்த மாலை பொருந்தும் புயாசலச் சல்லியனைச் செயிப்பதற்கும் இளைப்பார்களோ? ஒருபோதும் இளைக்கமாட்டார்கள். என்று துளபமாலாகிய சுந்தரேசர்சொல்லி மேலுஞ் சொல்லுகின்றார்.

விந்தகிரிக் கொப்பாகத் திணிந்த தோளினையுடைய தருமநந்தனரே! அதிக சொற்பத்தில் சல்லியனைச் செயித்து முடிக்கிறதாயிருந்தபோதிலும், வில்லாள்களிலும் - வேலாள்களிலும்-மேலாகிய வேந்தர்களிலும் - யானை வீரர்களிலும்-குதிரைவீரர்களிலும் -தேர்வீரர்களிலும் சிறந்த சல்லியனோ டெதிர்க்கத்தக்க பேர்கள் உமது தம்பிமார்களிலும், மற்றப் பேர்களிலும் ஒருவருமில்லை. அவனுக்கொப்பாகவுமாட்டார்கள். ஆகையால், அரியபெரிய மலைகள் திரண்டு இரண்டு பக்கத்திலும் அமைந்ததற் கொப்பாகிய தடந்தோளினைக் கண்டு, அரசர் முதலிய யாவரும் வெருண்டு மருண்டு ஓடும்படிக்குப் போர்புரியாநின்ற அம்மத்திரதேசாதிபனாகிய வித்தகன் யுத்தஞ் செய்வதற்கு, உம்மைவிட்டு இன்னொருவர் பேரிலும் போகான். அப்போதவனை நீங்களனைவரும் முனைந்து, கீழ்க்கடல் முகட்டில் வந்த சூரியன் மேற்கடல் முகட்டில் விழுந்து போமளவும் ஓயாமற் சண்டைசெய்யினும், இன்றைப் போரில் ஒருவரை யொருவர் வெல்ல வல்லமைப்படுவது அசாத்தியமாகும். ஆனாலும், அருச்சுனன் ஒண்டியாய்ச் சென்று

அஸ்வத்தாமனுடன் மலைவான்; மாத்திரை மைந்தரிற் சகாதேவனானவன் படைஞருடன் சென்று சௌபலனை வெல்லுவான்; நகுலராஜனானவன் சகுனியின் தந்தை முதலிய பலவான்களாகிய மன்னரைக் கொல்லுவான்; வீமசேனன் துரியோதன மகாராஜனுக்கு நேராகி நின்று மலைவான். ஓ இறையாகிய தருமநந்தனரே! நீர் மத்திரராஜனுடனெதிர்த்து அவனுடைய பிராணனைக் கவரக்கடவது என்று அன்பினால் அருள்மொழிகூறி அனுப்பினார்.

இந்தப் பிரகாரங் கிருபையைப் பொழியுங் கிருஷ்ணபகவான் சொல்ல, அந்த வார்த்தையைச் சிரமேற்றாங்கி, நாவலர் புகழும்படியாகிய காவலரும், வர்ணங்களையுடைய மணித்தேர்களும், மதம்பொழிகின்ற யானைகளும், தாவிச் செல்லுகின்ற குதிரைகளும், ஐயம்பெற்றவைவீரர்களும், மற்றப்படைவீரர்களும் பற்பல பிரிவாகப் பிரித்து கூட்டமாகக் கூடி, ஓட்டமும் நாட்டமுமாகச் செல்லும்படி தானு மற்றத் தம்பியர் நால்வருமாக நடத்திக்கொண்டுசென்று அமர்முனைக்கணின்று, முரசமுதலாகிய வாத்தியங்கள் முழங்க, சமயோசிதமாகிய தருணத்திற் செயங்களைத்தரும் ஆயுதங்களெல்லாஞ் சுழல, கடலொலி போலிரைந்து, கரைபுரள விரைந்து, சாணைபிடித்துக் கூரேறிய தழற்கொடுங் கணைகள் வாரிவாரி மாரிபோற் பொழிந்தார்கள். அப்போது அங்கே துரியோதனனுடைய வாகினிகளும் எதிர்மலைந்து, கொடிநாட்டிய தேர்களுடன் தேர்களும், கொடிகாட்டிய யானைகளுடன் யானைகளும், வெடிகூடிய குதிரைகளுடன் குதிரைகளும், முடிநீட்டிய கயவர்களுடன் வயவர்களும், எண்டிசை யதிரச் சண்டை விளைவித்தார்கள். இவ்வாறு யிருதிறப்படைகளுங் கைகலந்து வில்லிலிருந்து உந்திப்பொழியுங் கணைமாரிகளினாலும், கட்டுகள் பொருந்தி வயிரம் பற்றிய கதாயுதங்களினாலும், நாம்பைப்போலும் வரம்பெழுந்த இலையார்தியாகிய வேலாயுதங்களினாலும், முச்சுடரையும் முத்தலையாகவுடைய சூலாயுதங்களினாலும், இன்னமும் பற்பல ஆயுதங்களினாலும், ஒருவரையொருவர் பகைத்து மிகுத்திச்செலுத்தி வருத்துந் தன்மைகளில்; ஒன்றையொன்றிகலி யெதிர்ந்த நாற்படைகளும் இறந்து குறைந்து சிந்தி, திசாதிசைகளிற் பயந்து பறந்தோடி நொந்தழிவதினால், முந்திவழியா நின்ற இரத்த வெள்ளமானது பெருகிக்கால் கொண்டோடி, கடலுடன் மலைந்து அலைத்தது. எங்கணும் பிணமலைகள் மிகுந்து நிறைந்தன. கழுக்கள்-காக்கைகள்-கூளிகள்-ஞாளிகள் இவைமுதலியவைகள் பலவிடங்களினுங் கூடிக்குலாவின.

## சல்லியசேனாபதி தருமனையும் அவர்க்குச் சக்கரரக்ஷகனாய்வந்த வீமனையு மெதிர்த்துப் புறங்காணல்.

இவ்விதமாகப் போர்புரியுங் காலையில், தருமராஜனுக்குக் கிருஷ்ணமூர்த்தி முன் சொல்லி யிருந்தபடியே அரவக்கொடியோனுடைய பெருஞ்சேனைகளுக்கு அதிபதியாகிய சல்லியராஜன், துதிபதியாகிய தருமராஜனுக்கு எதிர்வந்து நேர்ந்து சார்ந்து கலகம் விளைத்தான். அந்தவேளையில், மகாரதத்தலைவரென்றும், அன்பர்க்கு நேயரென்றுஞ் சொல்லத்தக்க எமதருமராசனுக்குச் சேயனாகிய முரசகேதனனான தருமராசனானவர், தன்னோடு சல்லியன் சண்டைக்குப்போய் புல்லிய தன்மையைக் கண்டுணர்ந்து, தாள்வல்லமை-தோள் வல்லமை - வாள் வல்லமை கொண்ட ஆள்வல்லபத் தம்பியாகிய வீமசேனனை தனக்குச் சக்கரராக்ஷகத் துணையாகக் கொண்டு, காயுங் கனற்பொறி கதுவவும், கண்கள் சிவக்கவும், கார்முகமாகிய வில்லைப்பிடித்து, வளைத்து, நாணேடியலித்துக் கிளைத்து, தேரிற்பரிதியெனச் சென்று, போரிற் பெரும்புலியெனப் போய்நின்றார். இவ்விதமாக முனைந்த இருவர்களுடைய கொடித்தடந் தேர்களிரண்டும் எதிரெதிர் நெருங்கி, இடம்வலம் ஒதுங்கி, இமைக்குமுன்பதுங்கி, இகன்றெதிர் முழங்கி நேர்நேராகவும், நிரைநிரையாகவும், பார்மேலோடவும், கார்மேலோடவும் துவசங்கள், பறக்கவும், தோகைகள் சிறக்கவுமாகிய பல ஒழுங்குகளைக் காட்டி, சாரதிகளின் வட்டம் - வளைவு - கோணம் - சாரிகை இவை முதலிய திறங்களை மூட்டி, ஒருவருக்கொருவர் போட்டிவிளைத்து, ரதங்களை முன்னோட்டம் பின்னோட்டங்காட்டி முடிக்கினார்கள். மகாரதிகளிருவருங் கைப்பிடித்த திண்சிலைவளைத்து, தாணேற்றித் தெரித்து, நாகலோக மிரண்டும் வெருண்டு போகும்படிக்கு கனல்வாளி - கதிர்வாளி - கார்வாளி - கூர்வாளி - கல்லகக்கணை - பல்லவக்கணை - கால காலக்கணை - ஆலகாலக்கணை இவை முதலிய அஸ்திரங்களை விடுக்கும்போதில், கற்பக நிறைந்த ககனவாசிகளெல்லாஞ் சலித்துக் கலங்கினார்கள். திசையானைகளெல்லாம் அலுத்து திடுக்கிட்டன.

திக்குப்பாலர்கள் தியங்கினார்கள். இந்த சண்டையைப்போன்ற சண்டை இதுவரையிலும் நாங்கள் பார்த்ததில்லை யென்று சொல்லாதவர்களில்லை. இவர்களிருவருந் தங்களுடைய பெருவில்லினிடத்தி லிருந்து எய்யப்பட்ட பலகணைகளானவை கும்பற்கும்பலாய்-வரிசை வரிசையாய் - மாலைமாலையாய் வரும்போது, சப்தசமுத்திரத்தின் சலமும் வறண்டுபோயது. சப்தமேகங்களும் விண்டலத்தை விட்டு நீங்கி மலைகளின் குகைக்கு ளொளித்தன. ஆகாய பரியந்தம் உயர்ந்த சிகரங்களையுடைய சப்த மலைகளுங் கிடுகிடுவென் றதிர்ந்தன. ஏழுலகங்களும் இடிபடலாயின. அமரர்களுடைய கண்களெல்லாம் அதிர்ந்து பிதுங்கின. வடவாமுகாக்கினியும் வருந்திப் புகைந்தது.

இவையல்லாமற் சுவாலா மாலிகையாய் அக்கினியைப் பிரகாசிக்கச் செய்து, பொறி பறக்கும் விசையோடு ஊழிக்காற்றையும் உலையப்பண்ணி வருகின்ற உரத்த அஸ்திரங்களின் வஸ்திரத்தினால் ஆயிரங் கிரணங்களையுடைய சூரியனும், அவனேறியதேரும், அந்தத் தேரிற் பூட்டிய சப்தமாவென்னுங் குதிரையும், அந்தக் குதிரையைச் செலுத்துகின்ற அருணனென்னுஞ் சாரதியும், அனுபவித்த இடரை யாவர் சொல்லுவார்கள்? ஆதிசேடனுடைய ஆயிரம் வாயாலுஞ் சொல்லி முடியாது. இந்தப்படி கொடும்போர் புரிந்துவரும்போது சத்தியநிலை யுத்தமனாகிய தருமராஜன் அபிமந்திரித்துக் கொடுக்குங் கணைகளெல்லாஞ் சென்று, சல்லியராஜன் விடுக்குஞ் சரங்களை யெல்லாந் தப்பாமல் ஒடித்து முறித்துக் கெடுக்கும் ஓசையும், சூரிய புத்திரனாகிய கர்னனுக்குச் சாரதியாயிருந்த சல்லியன் சரங்களை விடுத்துத் தன் கணைகளை மாய்க்குந் தருமராஜன் கணைகளைத் தவிடுப்பொடியாக்கும் ஒலியும், அநுக்கிரகசாலிகளாகிய இருவரும் ஒருவரை யொருவர் மெச்சாநின்ற பேரிரைச்சலும், இருவரு மடிக்கடி படைமுகத்திற் பவளம்போன்ற தங்கள் வாயில் வைத்து ஊதுகின்ற சங்குகளின் அமலையும், சக்கரங்களையுடைய தேர் உக்கிரப்பட்டுக் கர்க்கரத்தொனியிட்டுப் பாத நடையுடன் கரகரவென்று சுழன்று வருகின்ற ஆர்ப்பும், வீரங்கள் மொழிகின்ற வீரர்களின் கூச்சலும், ஆகிய விம்முழக்கங்களெல்லாம் யுத்தகளத்தில் மெத்த நிறைந்து மற்ற ஓசைகளை மாயச் செய்திருந்த தல்லது, வேறுபட்ட ஓசையென்பது கிடையாது.

இப்படி யிருக்க, மத்திரராஜன் மனங் கடுகடுத்து, மகாகோபம் அடுத்து, வாளிகள் பல வாய்த் தொடுத்து, ஒரு கணையால் தருமராஜனுடைய உயர்ந்த முரசக்கொடியையும், இரு கணையாற் பாயும்படியான குதிரை நான்கையும், மற்றொரு கணையாற் பாரிய வில்லையும், மூன்று கணையால் தேரையும், நான்கு கணையால் தேகத்தையும் அழித்தான். அப்பொழுது முரசக்கொடியுடைய தருமராஜன் உதிரப்பிரவாகமாகப் பூமியில் நின்று, கண்களிற் சலமுங் கனற்பொறியுங் கதுவப்பிரகாசித்து வருந்தி யிருந்தனர். அப்பொழுது இவருடைய பக்கத்திற் குலகிரிக்கொப்பாகிய ரதத்தில் மேருமலைக்கொப்பாகிய வில்லைக்கொண்டு, யானைகளுக் கெதிரில் ஆண்சிங்க மிருக்கின்ற ஆண்மிக்கையைப்போல் ஆக்கிரமித்து நிலைமை கொண்டு நிற்கின்ற வாயுபுத்திரனாகிய வீமசேனன் அந்தச் சல்லியன்பேரிற்றாவி, வில்லுடன் மேவி, அடாபாவியென்று கூவி, ஒரு பகழியால் அவனுடைய யானைக்கொடியை முறித்து, ஒருபகழியால் வலவனுயிரை மாய்த்து, சிலபகழிகளா லவன்தேரை இடித்துப் பொடியாக்கி, அவன் புயங்களையுந் துளைக்கப் பல புங்கவங்களைத் தொடுத்தான்.

இவ்வாறு நினைத்தற்கரிய புயவலியினை யுடைய வாயுகுமாரன் மாட்டிய அஸ்திரங்களால், துரியோதனனுடைய சேனாபதியாகிய சல்லியராஜன் புயமுருவி, உடலுருவி, உயிர் வழுவி போராடுகின்ற சமர்முனையிற் பொருந்த மாட்டாமற் போரொழிந்து, பூமியாகிய தேர்மேல்நின்றான். சாரதிகள் உடனே வேறு தேர்கொண்டு வந்தார்கள். அந்த வேளையிற் சல்லியன் சாரதிகள் கொண்டுவந்த நவமணி ரதத்திலேறி, ஒப்பற்ற வில்லைவளைத்து, கூர்மையாகிய முனைப்பகழிகளை மழைபோல் முடுக்கி, வீமசேனனுடைய ரதத்தையும்-வில்லையும்-சிங்கக்கொடியையும்-தேர் வலவனையுஞ் சாடி, தேகத்திலுஞ் சிற்சில பாணங்களைத் தெரித்தான். அப்போது காற்றின் மகனாகிய கூற்றுவர், அர்ச்சுனனுக்கு மூத்தவன், குபேரலோகம் வரைக்கும் ஒருகை பார்த்தவன், கோபத்தால் முகம் வேர்த்தவனாய்க் கதாயுதங் கைக்கொண்டு, அந்தச் சல்லியன் கதிசேரும் படியாய் அவன் தரித்திருக்கு மகுடஞ் சிதறி விழும்படியாய் ஒரேவீசாக வீசி ஓங்கியடித்து, தன்னைப்போற் பூமியில் நிற்கும் படிக்குச் செய்து புகழை நிலைநிறுத்தினான். அதைக்

கண்டு தேவர்களும் மற்ற யாவர்களுந் துதி செய்தார்கள். இந்த வீமனைத் துதித்து மதிக்காத பேர்களில்லை. அதுகாலையில், சிறிய அரவக்கொடியும் அறியாமையுங் கொண்ட அரசர்க்கரசனுடைய சேனாபதியென்னும் சல்லியராஜனலுத்து இளைத்து, உடம்பு உளைத்து களைத்து நிற்கும்போது, அவனுக் கருகாமையில் வீமசேனன் சென்று, ஆ! ஆ! சல்லியராஜனே! துரியோதனனென்னும் இந்தப் பாவிக்குப் படைத்துணையாக வந்த நீ இனி உன் பெண்டு பிள்ளைகளைக் கண்டு களிக்கவும், பெரும் போகங்களை யெல்லாந் திளைக்கவும், இந்த யுத்தத்தினின்றுந் தப்பிப் பிழைத்துப் போகலாமென்று எண்ணி யிருக்கின்றையோ? நமன் பிடிக்கவும், நற்சேர் பிழைக்கவுமா? என் கண்ணெதிர்ப்பட்டும் பிழைப்பாயோ? ஐயோ! அனியாயமா! அப்பாவிவைத்த தண்ணீர்ப்பந்தலால் ஏமாந்த நீ இன்றுகூவி ஆவியிழக்கப்போகிறுயே; இனி தேறுயே என்று அந்த சல்லியன் பயந்து மருளும்படி பல வசனங்களைப்பேசி தன் கதையை கைக்கொண்டு, இப்போது சண்டைசெய்வது தங்கள் கடமையென்றுவந்த விற்சுரப்படைஞர் முதலாகிய சேனைகளையும், அநேகம் யானைகளையும், சிந்திச் சிதைபட மாட்டி, நாலுதிசையிலும் ஓட்டி, தடமகுட நிருபர்கள் சாய்ந்து மாயும்படி தாக்கி, அவ்வவர்களையும் விண்ணுலகத்திற் குடியாக்கி, இரதகஜ துரகபதாதிகளின் முடிகள் திக்குகள்தோறும் உருளச்சேர்த்து, பூமி கிடுகிடுவென்று நடுங்க அண்டச்சுவர் மடமடவென்று சரிய, குயவன் திகிரிபோற் கிறுகிறுவென்று சுழன்று உலாவினன்.

இவ்வாறு, விருதுபெற்ற சிங்கத்தைக் கொடியி லெழுதிவைத்த பலம்பெற்ற பூமகனுகிய வீமன் கதைகொண்டு கொல்லுகின்ற போர்முனையில், எங்கும் பயந்து வெருவி நிலைபெறமாட்டாமல் முதுகிட்டு ஓடுகின்றபேர்கள் அல்லாமல், எதிரிட்டு ஆயுதங்கொண்டு அமர் கொடுக்கவரும் அறிவாளிகள் ஆருமில்லாமல் அருமையாய்ப் போனதினுல், இன்னுமுள்ள சுத்தவீரர்கள் யாவருமில்லையா? இருந்தால் யாவரும் வாருங்கள். வந்தொருகை பாருங்கள். என்று வீமசேனன் இரையுமளவில், விற்போர்புரிந்து வல்லடிபட்டுப் பூமிமேல் நின்ற சேனுபதியாகிய மத்திரதேசாதிபன், வீமன் சொல்லுஞ் சொல்லைக்கேட்டு, பல்லை நறநறவென்று கடித்து, புயங்கள் அதிரப்புடைத்து, புருவநெறித்து, விழிப்பொறிபறக்க வெருட்டிவிழித்து, நெற்றியில் வியர்வு நிலத்திலோட நெரித்து, இதழ் மடித்து, இருகை யடித்து, எதிர் துடித்து, அதிவிரைவாகக் கதாயுதனை வந்து அடுத்து, அடாவீமா! இதோ நான் வந்து எதிர்த்த இந்த யுத்தமுனையில் உன்னை முன்னே எமலோகம் அனுப்பிவிட்டு மறுவேலை பார்க்கிறேன். இனி என் வல்லமையை நீயே அறியத்தக்கது என்று வீரவிருதுவார்த்தைகளை பலவாறுகப்பேசி, ஒரு தோமராயுதமெடுத்து இடும்பி நாயகனுடைய இரு புயத்திலுந் தாக்கும்படிக்கு எறிந்தான். அந்தத் தோமராயுதம் வந்து வீமசேனனுடைய தோளிற் பட்டவுடனே, ஒரு நிமிஷமாத்திரத்தில் அவசமுற்றுத் தன்னைமறந்து, தனது நிலைதளர்ந்து, சற்றுநேரத்திற்றேறி அமராழிந்துபோனுன். அப்போது சல்லியராஜன் ஒரு பெரிய கனகமணி விமானத்தேறி, புரவலர் முதலாகிய பேரும் புகழ்கூறிக் கொண்டாடிப் பின்றொடர்ந்து வரச்சென்று, பாண்டவச் சேனைகளிற் புகுந்து, தன்விற்கொண்டு படைஞரைத் தடுத்துப் படுத்துப் போர் கொடுத்து வந்தான். சல்லியனெறிந்த தோமராயுதத்தால் வாயுகுமாரன் அமராழிந் தோடியபோது, மூடச்சிந்தைகூடிய துரியோதன ராஜனுடைய சேனைவீரர்கள் யாருந் தெழித்துச்செழித்துப் பொங்கிவிடாதீர்கள் விடாதீர்கள் என்று எதிரேறிச் சென்று, நெருப்பானது மரங்களைப்பற்றி எரிக்குந் தன்மைபோற் கணைகளைச் செலுத்தி, தங்களுடைய கொடி-குடை-சாமர முதலாகிய வாத்தியங்கள் ஓங்கி முழங்க, எதிரிகளின் குடை - படை-கொடி-முடி-முதலாகிய யாவும் அழிந்து வீழப் புகுந்து தகுந்த அமராடினுர்கள்.

நகுலனுற் கர்னன்பிள்ளைகள் சித்திரசேனன் சூரியவர்மன்-இவர்களும், அர்ச்சுனனுல் திரிகர்த்தர்-சாளுவர்-சஞ்சத்தகாள் இவர்களும் வதைபடல்

இந்த வேளையிற் சூரியனுக்குப் பௌத்திரர்களும் கர்னனுக்குப் புத்திரர்களுமாகிய சித்திரசேனன் சூரியவர்மன் என்று சொல்லாநின்ற இருவரும், அருஞ்சமர்க் கிளையாதவர்களாய் வந்து பெருஞ்சமர் விளைத்து, தமது தந்தையிறந்த குறை நீங்கும்படியாய் வீராதி வீரர்களை யெல்லாங் கணையாற் காய்ந்து ஆய்ந்து போராடிய காலையில், பாண்டவப் படை வீரர்களில் வெகுபேர் மாய்ந்துபோனுர்கள். யானைசேனை முதலிய தானைகள் வெகு

வாய்ச் சாய்ந்து போயின. அக்கால், விஜயத் திறங்கொண்ட வெம்பரிக் கதிபனாகிய நகுல ராஜ-னவர்களைக்கண்டு வெகுண்டு அமராடி, அணிமுகங்கலங்கி, அமர்த்திற முடுக்கி, அவர்கள் பலத்தை யொடுக்கி, அஸ்திரங்களைச் செலுத்தி, அம்பாவாணர் முதலாகிய யாவருங் கலங்கி அலக்கழிந்து போகும்படியாய் இருவர்க்குங் குறிபார்த்து இரண்டு நாராசக் கணைகளை விடுத்தான். அக்கணைகள் வந்து விழுந்து பட்டமாத்திரத்தில் அவ்விருவரும் நொந்து, தங்கள் தந்தைபோன அந்த வழியை நாடிச் சாய்ந்து மாய்ந்தார்கள். அவர்கள் மாய்ந்ததைக் கண்ட மாம்சம் வளர்ந்த தோள்களையுடைய சகுனியின் பிள்ளைகளாகிய உலூகன்-சயிந்தவன் என்று சொல்லப்பட்ட கீர்த்தியுடன் வளர்ந்த வீரர் இருவரும்-இரதமேறி, சூரியனாகிய நெருப்புக் கெதிரில் இருளெதிர்ந்ததைப் போல் நகுலராசனை முன்னிட்டு எதிர்த்து, நானாவித யுத்தம் புரிந்து, ரதங்-குதிரை-சாரதி-கொடி-குடை முதலியவைகளழிந்து, தாங்களும் ஒழிந்து ஓய்ந்துப் பின்னிட்டபடி வெந்நிட் டோடினார்கள். பெருமைப் பிரதாபம்பெற்ற திரிகர்த்த ராசனும், பிரகாசிக்குந் தோளினையுடைய சஞ்சத்தகானும், சாலுவராஜன் முதலாகிய தரணி பாலர்களும், ஒரேமுகமாகத் திரண்டு அருச்சுனன்மேற் புரண்டுமுரண்டு அடர்த்துப் போர் புரியும்போது, அதுகண்ட இந்திரன் மைந்தனாகிய இசைபெற்ற அவ்விசயன் வெகுண்டு, கோடி பாணங்களைக் குபீலென்று விடுத்து, அவர்களனைவரும் வாடி மாயும்படிக்குப் படுத்தி, மற்றப்போர்களையுந் துண்ட துண்டமுங் கண்ட கண்டமுமாக்கி வீழ்த்தி, குலப்பெருங் பகையாய்ப் பகைத்துக் கூசாமற் கொடுஞ் சமர் புரிந்து, நாள்தோறும் வெகு துன்பப் படுத்தி அயர்ச்செய்வதுமல்லாமல், அநேகந் தடவை விசயகாண்டீபதரனாகிய தன்னுடன் அடப்போர் செய்த கணக்கிறந்த சஞ்சத்தகாளென்னுந் தேராளிகள் யாவரையுந் தேடித் தேடி முடித்து, இனிமேலுந் தனக்கெதிர் வரத் தக்கவர்கள் எவர்களும் இல்லையென்று சொல்லும்படியாய் எதிரற்று நின்றான்.

### தர்மராஜன் சல்லியனோடு வெற்றிப்போர் விளைக்கும்போது வீமசேனனுமவனை முனைந்து வெற்றிபெறுதல்

இவ்விதமாக இருபெருஞ்சேனை மன்னர்கள் கைகலந்து கடிந்து அரும்போர் செய்து அனர்த்தப்படுஞ் சமயத்தில், வல்லமைக் கொப்பில்லாத சல்லியராசன் தனிப்புலிபோலெழுந்து, மீண்டுந் தருமராஜனைத் தகைத்து, அவருடைய தேகமும், அவரேறிய தேரும் பாகும் மறைந்து போகும்படிக்குக் கொடுங் கணையால் மூடி, வாடிவருந்தச் சாடிக் கண் கலங்கத் தியங்கக் கண்டான். அந்தவேளையிற் குந்தியின் முதற் புத்திரனாகிய தருமராஜன் கதித்து, தன்மேல் வரும்படியாகிய கணைகளை மதித்து, இரதத்தைச்செலுத்தி எதிர்த்து சல்லியனைப் பதைத்து, நூறுநூறு பாணங்களை ருக்குவேத மந்திரப்பிரகாரம் உக்கிரமாக விடுத்து மதித்தற்கரிய ஆண்மைமிகுந்த மத்திரராஜன் தொடுத்த விதிக்கும் விதிக்கொப்பாக முடிக்குங் குத்திரமாகிய அஸ்திரங்களையெல்லாம் நிமிஷ மாத்திரத்தில் விலக்கி, வெட்ட வெளியாய்த் துலக்கி, சல்லியனையும் அலமலங்கக் கலக்கினார். அந்தச் சமயத்தில், வீமசேனன் தனக்கு வாசுகியாற் கொடுக்கப்பட்ட தேரேறி, எமனை செலுத்தும்படியாக எழிற்கணைகொண்டு மீறி, பிர்ம்மாவின் விதியை நடத்தும் வில்லை வளைத்துச் சீறி, சதுரங்கத்தனையுந் தரணி மன்னரும் இருபுறமுஞ்சூழச் சபதங்கூறி, எதிரி தளத்திலுள்ள தேச மன்னர்-பாளை மன்னர் முதலிய யாவருந் திசாதிசை, கலிரித்தோடவும் பிராணன் பிரிந்து வாடவுந் தாக்கி, வெகுசனங்களைப் போக்கி, தரும நந்தனருஞ் சல்லியராஜனுஞ் சண்டை செய்யுமுகத்தை நோக்கி வந்து மத்திர ராஜனைக் கண்டு மனமெலிவு கொண்டு, என் தகப்பனாகிய தருமராசனுடன் சண்டை செய்ததைப்போல் என்னுடன் சண்டை செய்வதற்கு வாருமென்று மேல்விழுந்து வலுவிற் போர் விளைக்க வந்தான். அவனெவ்வெனில், எப்பேர்ப்பட்டவர்கள் எத்தனை கணைகளைத் தொடுத்தாலும், அத்தனை கணைகளையும் அலட்சியம் பண்ணி அதிரவடித்து உதிரச் செய்கின்ற வீமசேனன். இப்பால், தனக்குத்தானே சரியாகிய சல்லியராசன் தன்மேல் எதிர்த்து வந்த வீமனைப்பார்த்து, கோபாக்கினி மூண்டெரியும்படியாய்க் கொதித்து, இந்திர தனுவைப்போன்ற வில்லை வளைத்து, எழுமுகமும் ஏகமுகமாகச் சேர்ந்து எங்குந் தலைகாட்டவொட்டாமற் பொங்குமழைகளைப் பொழியுமாறு போற்கொடு முனைக்கோல்களைக் குபீர் குபீரென்று விடுத்து, வீமசேனனுடைய தேகமெல்லாம் மோழையாகும்படியாய் மூழ்கச் செய்தான்.

அக்கால், வீரகண்டையார்ந்த வாயுபுத்
திரனாகிய வீமசேனன்சல்லியன்விட்ட பாணங்
களினாற்சலித்து, மறுபடியும் மனங்கெலித்து,
அகங்கரித்து, நூறு நூறாகிய கோல்களைக்
கொண்டு மாறுமாறாக விடுத்தான். இப்படி
யிருவரும் முறைமுறையாகப் புரிந்த போர்த்
திறத்தை இன்னபடி யென்று சொல்லுவ
தற்கு எவர் வல்லவர்கள். இவ்விதமாகக் கடும்
போராடி வருஞ்சமயத்தில், தேன் சொரிந்த
தும்பமாலையணிந்த நகுல சகாதேவர்களும்,
செங்கண்மாலுக் கிளையவராகிய சாத்தகியும்,
திடுதிடெனத் தேரோட்டிவந்து,சல்லியனுக்கு
எதிர்சென்றுநின்று, வெஞ்சிலைகளை வளைத்து,
ஒன்றுபோற் பலவாகிய வேதசாஸ்திரங்களை
மேன்மேலாகப் பூட்டி, தேருறுப்பு தேக
உறுப்புகள்தோறும் விடுத்து, மூவரும் ஒரு
முகமாகிப் போர்புரிந்து, இந்தச் சல்லியனாவி
யை இன்று முடிக்கிறோமென்று, தங்கள் தங்க
ளுடைய வல்லமைத் திறங்களைக்காட்டி,
தேரோட்டி-நாணிமாட்டி-பாணம்பூட்டி மூக
மாறுமற்போர்புரிந்தார்கள். அப்போது, வில்
லுக்கும்-சொல்லுக்கும்-மல்லுக்கும் - பாணத்
துக்கும் ஸ்ரீராமனென்று சொல்லும்படியாய்
மேன்மைபெற்று மதப்பட்ட யானைக்கு ஒப்பா
கிய மத்திரராஜன், தன்மேற்றிரண்டு எதிர்
த்து, பலவிதமாகிய பாணங்களை விடுத்துப்
போர்புரியவந்த நகுல சகாதேவ சாத்தகி முத
லிய வீராதி வீரர்களுடைய மெய்யெல்லாந்
துளைக்கும்படிக்கு நூறுநூறாகப் பகழிகளைத்
தூண்டி, அவர்கள் கைப்பிடித்த விற்களை
யொடித்து, துரியோதன மகாராஜன் சந்தோ
ஷிக்கும்படியாய் நகைத்து நின்றான். அது
காலையில், சல்லியராஜனால் தம்பிமார்கள்
தளர்ந்த தளர்ச்சியைச் சமீரணன் புதல்வனா
கிய வீமன் கண்டு, வெம்பரிபூட்டிய வேகத்
தேர் தூண்டி, வில்லை வட்டமாக வளைத்து,
சம்பாசுரனுக்குப் பகைவனாகிய தேவேந்திர
னைப்போன்ற சல்லியன்மே லெதிர்த்துச்
சென்று, கொத்தாகிய பத்துபாணங்களைவிட்டு
மத்திரனேறிய தேரும், அவனுக்கு மித்திர
னாகிய பாகும் பூமியிற் புரண்டுவிழத் தாக்கி
னான். அந்த வீமனெய்த பத்து பாணங்களி
னாற் பாகனுடன் தேரழிந்த சல்லியனனவன்
வேறொரு தேரேறிச் செலுத்தி மீண்டு வீமனை
வளைப்பதற்கு முன்னே அந்த வீமனனவன்,
தனது தேரைக் கிறுகிறு-விறுவிறு என்று
சுழலச்செலுத்தி, ஆகாயத்திற் பேரிடி யிடிக்கு
மேகங்களைப்போற் பெருங்கூச்சலிட்டு, துரி
யோதனனுடைய தேர்கள்-யானைகள்-குதிரை
கள்-காலாள்கள்முதலிய சேனைகளெல்லாஞ்சீர்
குலைந்து - போரழிந்து - பேருலைந்து-புறங்
கொடுத்து ஓடும்படிக்குப் போக்கி, சிலரைத்
தாக்கி, சிலரை மண்ணோடு மண்ணாக்கி, சிலரை
விஷாக்கினிக் கணைகளைப்பெய்து கசக்கிப்
பிழிந்து, இப்படி பாசறை எல்லாம் பலவித
கோலாகலமாக்கி எங்கும் பிணமலைகளாய்க்
குவித்து இரத்தவெள்ள மோடச்செய்தான்.

### அஸ்வத்தாமன் அர்ச்சுனனோடமராடிப் புறந்தந்தோட, அதுகண்டு முனைந்த கிருபாச்சாரியு மவ்வாறுதல்

இவ்விதமாக வணங்காமுடி மன்னனு
டைய சேனைகளை மடித்துவரா நின்ற வீம
சேனனால், தனது தேரழிந்து வருந்திய அஸ்
வத்தாமன் செவந்த கோபக் கண்களையுடைய
வனாய்த் தெழித்து, சேமத்தேர்மீ தேறிக்கொ
ண்டு பாண்டவர்கள் படைமேற் சரமாரி பொ
ழிய வந்தான். அப்படியாக வந்த அஸ்வத்
தாமனைப் பிர்மாவுக்கு ஒப்பாகிய தருமராஜன்
முதலான வெற்றிவேந்தர்கள் எல்லாரும்
வளைத்து, தீமனத்தராய்த் தெழித்து, தேர்களை
முந்தவுந்திவந்து செருச்செய்தார்கள். அன்
பும் அருளுந்தங்கிய மனத்தோரான துரோ
ணாச்சாரியர் புத்திரனாகிய அஸ்வத்தாமன்,
தன்பேரி லெதிர்த்தவர்களைக் கண்டு, சமுத்தி
ரம்போற் புரண்டு வருகின்ற தங்கள் சேனை
களுடன் பூமிகுமுற ஒடிவந்து, தேருடன்
நேர்புகுந்து, இம்மாலை தாங்கிய வில்லைக்கொ
ண்டு, பாண்டவப்படைகள் அனைவரையும்
இன்று பொழுதுபோவதற்கு முன்னே துன்
பப்படுத்தி வெற்றிகொண்டு வருவேனென்று
வஞ்சினம்பேசி; தேவேந்திரர் குமாரனான
அர்ச்சுனனென்னுஞ் சூரியனுக்கெதிர் சந்தி
ரன்வந்து புகுந்து மலைந்த தன்மைபோல்வந்
தான். அந்த அஸ்வத்தாமனைக்கண்ட அர்ச்
சுனராஜன் போர்விற்கொண்டு, புகழ்பெற்ற
நாணிமாட்டி சூர்கொண்ட மேகஞ் சுரப்பிட்
டும் பொழியுமாறுபோல், உரித்தாகிய கணை
களை உருத்தெடுத்து முனிமைந்தன் பயப்
படும்படிக்குத் தொடுத்தான். அந்தக் கணைகள்
வேகங்கொண்டு வருகின்ற அதிர்ச்சியை அஸ்
வத்தாமன் கண்டு, இது நன்று நன்றென்று
நகைகொண்டு, தன் வில்லில் அக்கினிதேவ
னுடைய ஏழு நாவைப்போன்ற ஏழு பாணங்
களை இதம்பெறத் தொடுத்து விடுத்தான்.
அஸ்வத்தாமன் விட்ட ஏழு கணைகளையும்

அர்ச்சுனன்கண்டு, தானும் அதற்குப் பதிலா
கப் பாணம்விட்டு வெட்டொன்று துண்டு
ஐம்பதாகப் பொட்டென்றுபின் டுதிரும்படிக்
குக் கண்டு, பின்னும் பற்பல பல்லவங்களுஞ்
சிற்சில பாணங்களுந் தொடுத்துத் திடத்து
இருவரு மிளையாமல் அமராடினார்கள். சிலே
வல்ல அர்ச்சுனனுங் கலேவல்ல அஸ்வத்தாம
னும் இணைக்கிணையாக முனைந்து மாறுமற்
செய்த போர்த்திறங்களினாற் ககனங்குலேந்து,
கனமலேகளும்பிளந்து,பூமிமுழுதுந்தளர்ந்து
வனமெல்லாங் கணைகளின் கனமாயெரிந்து,
கடற்சலமெல்லாங் குறைந்து, திசைகளிருக்
கும் யானைகளெல்லாங் கலங்கி, திக்குப் பாலகர்
களும் அலமலங்கி அயர்ந்து போயினர்.

இப்படி அமராடுங்காலேயில், முனி மைந்
தனாகிய அஸ்வத்தாமன் எரிமுந்திய கூரம்பு
களைக்கும்பாகப்போக்கிகுதிரைபூட்டியதேரின்
பேரிலும், விவேகம் பெற்ற சாரதி பேரிலும்,
அடல்பெற்ற அநுமத்துஜத்தின் பேரிலும்,
வீரனாகிய விஜயன் பேரிலும், அவன் கைக்
கொண்ட வில்லின் பேரிலும்; அவ்வில்லின்
மாட்டிய நாணியின் பேரிலும், வேகமாகநடக்
குஞ் சுவேதவாம் புரவியின் பேரிலுந் தாக்கி
னான்: ஐயா! ஜெனமேஜெய மகாராஜனே!
அந்த அருமையை யாவர் கண்டு சொல்லுதற்
குரியராவர். இத்தன்மையாக விடுத்த அம்பு
களையெல்லாம், இந்திர குமாரனாகிய சுந்தரன்
தந்திரமாக மந்திரித்து, விடுத்த கணைகளா
னது,செந்தூட்பொடியாக்கிச்சிதறச்செய்தன.
மறுபடியும், மாதவி நாயகனாகிய காண்டீபன்
கனைத்து, இதழ் மடித்து, செஞ்சிலே சிலீமுகம்
ஐந்தினால் ஆசாரிய குமாரனாகிய அஸ்வத்தா
மன் ஏறிய ரதமும், நான்குவீரகேசரிப்பாணங்
களினாற் அந்தத்தேரிற் கட்டிய குதிரைகளும்,
குமுறுங் கோடைக்கணை ஒன்றினால் அவன்
தரித்திருக்கின்ற பலம் பொருந்திய கவசமும்,
இரண்டாகிய இந்திரனைக் கணைகளாற் கைப்
பிடித்த வெற்றி வில்லும் படுசூரணமாகும்
படிக்குப் போக்கி, அவ்வஸ்வத்தாமனும்
பயந்து இடம்விட்டகன்று போகத்தக்கதாய்த்
தாக்கி, அந்தர வாசிகள் முதலிய அனைவருங்
கண்டு கொண்டாடும்படியாகவென்றுகொண்டு
இணையில்லாத தேவதத்தமாகிய சங்கத்தை
முழக்கி, ஒப்பொருவருமில்லாமல் அங்ஙனே
நின்றான். அப்போது, வில்முதலாகிய சகலமு
முறிபட்ட அஸ்வத்தாமன் கண் கலங்கி,
கனற்பொறியிறைந்து, இசைகள்திர சினந்து
நிலேபெற்ற வெற்றிமலேபோலாகிய வேறொரு
வீர ரதமேறி மன வேகத்திலுமிஞ்சிய வேக
மாக வந்து யுத்த முனையிற் பிரவேசித்து, மற்
றொரு வெஞ்சிலேயின் பலம்பற்றி எதிர்புகுந்து
அஸ்திரங்களைப் பூட்டி இழுத்து விடுத்து
அடிக்கும்படிக்குக் கை நீட்டினான். அதற்கு
முன்னே கவிக்கொடிகொண்ட காண்டீபன்
நொடியிலிடிக்கணைவிட்டு அஸ்வத்தாமன் புதி
தாய் கைபிடித்த கொலேசெய்யும் வில்லேயு மவ
னூர்ந்துவந்த நூதனத் தேரையும், சாரதி
குதிரைகளையும் நொடிப்பொழுதிற் பொடிப்
படுத்தினான்.

அந்தவேளையில், வில்லுமிரதமுஞ் சிந்தி
கவறுங் கையுடன் சண்டை யொழிந்து தலே
யிறக்கமாய் நிலத்தில் நிற்கின்ற அஸ்வத்தா
மன் ஆயாசமடைந்து, தேர்ச்சாரதியாகிய ஸ்ரீ
கிருஷ்ணனும் அர்ச்சுனனுஞ் சமர்முகத்தி
லோய்ந்து சாய்ந்து மாய்ந்து போவார்க
ளென்று உலகமுட்கி உதிரவும், உம்பர் முதலி
யோர் விக்கி அதிரவும், உற்ற பகைவர்கள்
சிதறவும், மற்ற மன்னர்கள் பதறவுமாக ஓர்
மந்தரக்கதை யென்பதை எடுத்து விறுவிரெ
னச் சுழற்றி விசையாய் விடுத்தான். உடனே
விஜயன், ஒரு அந்தரக் கணையைப்பூட்டி தன்
பேரில் விசைகொண்டு வருகிற மந்தரக்கதை
யைச் சுழற்றிக்காட்டி வில்லின்மணியையாட்டி
வேகத்துடன் விடுத்தான். அருச்சுனன்விட்ட
அந்தரக்கணை சென்று அஸ்வத்தாமனெறி
ந்த மந்தரக்கதைமேல் விழுந்து பிளந்து,
திசை நடுக்குறத் தூளாக்கிப் பறக்கச் செய்
தது. அந்தக்கதை பிளந்த ஒலியானது, தேவர்
களுடைய காதுகளைச் செவிடுபடுத்தி தரும
ராஜனுடைய படைகளுக்குத் தைரியத்தைக்
கொடுத்தது. அப்போது கோபமுற்றெழுந்த
கொடுஞ்சாப குருவாகிய துரோணாச்சாரியாற்
பெற்று வளர்த்த குலக்குமாரனாகிய அஸ்வத்
தாமன், அருச்சுனனாற் றனது கதாயுதம் அழி
பட்டதைக் கண்டு, கண்க ளிரண்டுங் கனற்
பொறிகக்கக் கடுமைகொண்டுநின்று, கலீரென
நகைத்து, உயர்ந்த கதநிறைந்த வல்லமை
யுடன் கனகமலேபோன்றிருந்த எழுவாயுதத்
தை இருகையிலுந் தாங்கி நிதானித்து, விஜய
னுக்கு நேராகக் காட்டி, சீராக ஆட்டி, குறிப்பு
வைத்து நெருப்புடனெறிந்து, ஆ அர்ச்சுனா!
இதோ உன்பேரில் வருகிற எழுவாயுதத்தைத்
தடுத்துக்கொள் பார்ப்போமென்று ஒரு சந்
தோஷ இரைச்சலிட்டுச் சொன்னான். இந்த

மொழி சொல்லி வாய்மூடு முன்னமே, வச்சிரா யுதன் மனமகிழும் பிள்ளையாகிய கிரீடி பலவித உச்சிதக் கணைகளையேவி, அந்த எழுவாயுதத்தை எங்குமில்லாமல் மோதி, வெறுந் தூசியாய்ப் போகும்படிக்கு உடைத்துப் புடைத்துப் பறக்கப் பண்ணினான்.

இந்தப் பிரகாரந் தான் விட்டெறிந்த எழுவைத் தடிந்து எதிர்புகுந்து இணையில்லாக் கணைகளை விடுத்து, அடுத்துச் சண்டை போடும்படிக்கு வராநின்ற சவ்வியசாசியை அஸ்வத்தாமன் பிரமித்துப் பார்த்து, அப்பப்பா இவன் ராக்ஷதனாயிருக்கின்றான். கிருஷ்ணனாகிய துஷ்டன் சாரத்தியஞ்செய்யுமளவும் இந்த அர்ச்சுனனுடன் யுத்தம் புரிவது அருமை என்று நினைத்து, இவனுக்கு எதிர்நிற்க மாட்டாமல், காட்டுமானானது கடும்புலிக்கு எதிர்நிற்கப் பயந்து ஓட்டங்கொள்ளுமாறுபோல் யுத்தமுனையை விட்டுவிட்டு ஓடினான். இவ்வாறு அருச்சுனனுடன் சண்டையிட்டு அலுத்து இளைத்து, ஆயுதமுதலாகிய யாவும் அழிந்துப்போய் அடிபட்டோடுகின்ற அஸ்வத்தாமனை, அவனுக்கு மாமனாகிய கிருபாசாரியர் கண்டு மனக்கூச்சங்கொண்டு வழுவில்லாத வில்லை வளைத்து, பழுதில்லாத கூர்மையாகிய கொடுங் கணைகளைக் கூட்டமாகிய மேகம் பொழிவதுபோற் பொழிந்து, பார்த்தனுக் கெதிர்வந்து பகை பாராட்டி, இருபக்கத்திலும் பெரும்படை குறுகி வரும்படிக்கி நெருக்கி முடுக்கி, பேரிசங்க முதலிய வாத்திய முழங்கப் பெரும்போர் புரிவதாயினர். அது காலையில், கடுங்கணைகளைக் கைதேர்ந்து கண்டுகொண்ட அண்டர்பிரான் பிள்ளையாகிய காண்டாவனத் தகன விக்கிரமன், மூண்டெரியுந் தனது காண்டீபமிழுத்து ககனமுகடனைத்துங் கணகணவென்று எதிரொலி செய்யும்படியாய் ஷ்டங்காரங் காட்டினான். அப்போது பசுக்களப முதலாகிய பார்த்தசாரதியானவர் கவனவேகப் புரவிகளைத் தூண்டி, கிருபாச்சாரியாருக்கு எதிரில் கொண்டுபோய் நிறுத்தினர். அப்போது தாமரை மலர் போன்ற தடங்கண்கள் பெற்ற தனஞ்செயனவன், தாராளமாய் ஏராளமாய் கார்வியாளமென்னுங் கருங்கணைகளைச்செலுத்தி, கவிந்து வந்த படைஞர்களை இடைஞ்சல்பெறக்கலக்கி, மண்டலீக ரெல்லாரும் மனமடிந்து பொடிந்து, பூமியிற் படிந்து பயந்து புறந்தந்து போகும்படிக்கு முடித்து, கிருபாச்சாரியார் கைப்பற்றிய வில்லையும் ஏறிய இரதத்தையும் நொடியிற் பொடிசெய்து, அவரையும் நோகப் பண்ணினான். இவ்விதமாக இந்திர குமாரன் விட்ட எரிமுகப் பகழிகளினால் கிருபாசாரியரானவர், உட்கி யொடுங்கி உயங்கி மயங்கித் தியங்கி, மலை கலங்கினாற்போல் நிலைகுலுங்கித் திரும்பித் தனது திறமனைத்து மழிந்து புறமுதுகிட்டு விலங்கிப் போயினர்.

### அர்ச்சுனன் தன்னோடெதிர்க்கவந்த கிருதவன்மனை முறிய வடித்தோட்டி அவன் தம்பிமார் எழுவரையும் வதைத்தல்

அதுகாலையில் கிருதவன்மனானவன், தனது சகோதரர்க ளெழுவரோடு யாதவ குமாரர்கள் முதலாகிய படைகளுடன் அமோகமாய்த் திரண்டு இரதமுதலிய வாகனங்களிலேறி வந்து கடுங் கணைகளை வாரியிறைத்து, அரிமைத்துனனாகிய அர்ச்சுனனுடைய உடலெல்லாம் மூழ்கும்படியாய்த் தூர்த்துத் திமிர்ந்து, காலாக்கினி உருத்திரனைப்போல் கனன்று, போர்க்களம் அதிர்ந்துபோகத் தக்கதாய்த் திரிந்து, பரிந்து பொருந்துச் செறிந்து இருந்தான். இவ்வாறு யுத்தகளம் அதிரும்படியாகக் கிருதவன்மன் திரிந்து, இளையாச் சமர் புரியாநின்ற உக்கிரத்தை அர்ச்சுனன் தெரிந்து, அப்போதே செவ்வரக்கைப்போல் இரு கண்ணுஞ் சிவந்து, சீறி முதிர்ந்த கோபங்கொண்டு தீமூட்டுங் கொடும் பாணங்களைத் தடையில்லாமல் விடுத்து, அவன் தொடுத்த முனையம்புகளை யெல்லாம் பிளந்து, பலமுடி தரித்த பார்த்திபர் முதலிய மன்னமண்டலீகருடைய தேகமெல்லாங் கிழிய, உதிரம் வழிய, ஆவி யொழிய, கவசங்களுந் துவசங்களுங் காலகோலமாய் அறுந்து, நக்ஷத்திரங்கள்போ லுதிர, வெற்பாகிய வில்லுகள் கற்பாறைகள்போல் பிளவுற, சுழன்றோடுங் குதிரைகளின் குரங்கள் கழல, தேர்ச் சக்கரங்கள் சிதறிப்போயுழலச் சாடி உலாவினான். இப்படிக்கு விஜய கர்ண்டீபனானவன் ரணக்களமெல்லாம் உலாவி, தடங்கிரிகள் போன்ற யானைகளும், கடற்றிரைபோன்ற குதிரைகளும், திடற்கரைபோன்ற தேர்களும், மணற்குவைபோன்ற பதாதிப் படைஞரும், அவரவர்கள் கைக்கொண்ட ஆயுதங்களுடன் மாய்ந்து பிணமாய்க் குன்றுபோலக் குவியவும், இரத்தங்களும் மாமிசங்களும் எங்கெங்குங் கருவி, அக்குன்றினின்று வீழும் அருவியை

ஒப்பக் கிடக்கவும், காக்கை - கழு - நாய் - நரி பேய் - பூதகணங்கள் முதலாகியதும் ஆங்காங்கு நெருங்கவும் செய்தான். இப்படி யாவரும் வருத்தப்படும்படியாய் அப் பார்த்தனானவன் எடுக்கும் வடித்த கணைகளையும், அந்தக் கணைகளைத் தொடுக்குந் திறங்களையும், அவனது பராக்கிரமத்தையும், பாடிப் புகழ்ந்து படியாதவரில்லை. ஆகிலும், அன்று பட்டபாட்டைச் சொல்லுமிடத்து கொடுமரங்கொண்ட திடமன்னவரெல்லாருஞ் சூரிய கிரணத்துக் கெதிர்ப்பட்ட பனிபோற் பறந்து குறைந்து, புலர்ந்து, உலர்ந்து, கலைந்து, குலைந்து, தலைந்து போனார்கள்.

மேலும், தண்டுளவமணிந்த கொண்டல் வண்ணன் விடுக்குந் தேர்மேல் வருகின்ற தனஞ்செயன் தொடுத்த சரசாலங்கள் மண்டு தீயோடு மெழுந்து, யதுகுலச் சேனைகளோடு யானைகள் முதலிய யாவற்றையு மாய்த்து மாற்றி, கிருதவன்மனையும் அவன் ஏறிய தேரையுங் கீற்றுகீற்றாகக் கீற்றி வடுப்படச் செய்தன. அக்காற் கிருதவன்மனுடைய தம்பிமார் ஏழுபேருந் தங்கள் தேரை விரைவில் முடுக்கிவந்து யுத்தம் விளைத்தார்கள். உடனே மற்றொரு தேர்மேற்கொண்டகிருதவன்மனுங் கலந்துவந்து கொடும்போர் தந்து, கிருஷ்ணார்ச்சுனாள் சிரங் கிறுகிறுக்கும்படி அருணைக் கணை முதலாகிய பல வருணக் கணைகளை வாரி வாரித் தூவினான். அந்தக் கணைகளையெல்லாம் அகக்கடுப்பும் முகக் கடுப்புங்கொண்ட அருச்சுனனானவன், அரைநொடியி லழித்து அந்தக் கிருதவன்மனென்று பெயர் பெற்ற பூர்வம் பிறந்த தம்பிமார் ஏழுகாளையுடன் - பேரையும் ஆருயிர்போக்கி அப்பரத்திலாக்கி, கிருதவன்மனை மாத்திரம் அடுகளத்தைவிட்டு நீக்கினான். இப்படி தனஞ்செயன் கணைகளினால், தம்பியரேழுவரு மிறக்கக்கண்ட கிருதவன்மன் மனந்தாளாதவனாய், தன்னோடு வாளுற உயர்ந்த மலைபோன்ற தேரைச் செலுத்திவந்த தம்பிமாரேழுபேருந் தன்னோடொரு வார்த்தையும் பேசாமற் கம்பி காட்டிய தாற் கும்பி வெம்பிக் கொதித்து, அம்புவியதிர வதிர்த்து, பம்பியமேகமும் பருவரையேறி யொளிக்கும்படியாகப் பெருவரை போன்ற வில்லை வளைத்து, மறுபடியும் அருச்சுனனோடு கோபங்கொண்டு போராடினான். இப்படியாகப் போராடவந்த முடிமன்னனாகிய கிருதவன்மனை வில்லாளியாகிய விசயன்

கண்டு வெகுண்டு, அவன் வில்லைத் துணித்து குதிரைகளுஞ் சாரதியு மேலுங் கீழாக வீழ்ந்து தாழ்ந்தொழிய வழித்து, அவனூர்ந்த தேரையு மொடித்து, தேகத்தையுந் துளைத்து, அப்பா கிருதவன்மனே! துரியோதனனுக்குத் திர்ப்தியாகும்படியாய் நீ ஒருத்தன்மாத்திரம் உயிர்கொண்டு பிழைத்துப்போவென்று சொல்லி அனுப்பிவிட்டான்.

### பாண்டவரோடு பராக்ரமித்து நின்ற சல்லியனைப் பருங்கதையாற் புடைத்துச் சாய்த்த வீமனோடு துரியோதனனெதிர்க்க, அவனையும் புடைத்துப் புறங்காணல்

இவ்வாறு விஜயகாண்டீபதரனானவன், சத்துருக்கள் பலபேர் ஆவியிழந்து அவிந்து வாடவும், யுத்தகளமெல்லாம் ரத்தவெள்ளங்கள் மிகுந்து ஓடவும், ராஜாதிராஜனாகிய துரியோதனன் கண்டு திகைத்துக் கண்ணீர் நீடவும், குறைத்தலைக்கவந்தங்கள் கூத்தாடவும், பிணமலைகளைப் பூமிமூடவும், பூமியைப் பிணமலைகள் கூடவும், தான் தாக்கிய சரங்கள் ஒருபுறத்திற் ஜாடவுமாகவிருக்கும். அந்த வமர்க்களத்தில் தன்னோடெதிரேறி மலைந்து அமராடுவதற்கு ஆரும் நேரிட்டுவரக் காணாதவனாய், நன்னலமாகிய ஜெயத்தைத்தருந் தேவதத்தத்தை நாதித்து, திசைகளிற் கலகமூட்டி, சற்றுநேரங் கருப்புவிற்கொண்ட காமனைப் போல் நின்று பார்த்து, ஒருவரும் நேரிடாமையால், தன் தமயனாகிய தருமராஜன் நிற்கின்ற இடத்தை நோக்கித் தடதடவென்று தேர் செலுத்திவந்து அவ்விடத்தில் இருந்த சாத்தகி- வீமசேனன் - நகுலன்-சகாதேவன்-உத்தமோசன்-உதார்மன் - துஷ்டத்தூய்மன் - சிகண்டி இவர்களுடன் பெரும்படைத் தலைவரும், போர்வீராளும், சதுரங்கச் சேனைகளும், தானும் ஒருங்குசேர்ந்து ஒரு முகமாகப் பெயர்ந்து உவரி முழக்கம்போல் வாத்தியங்கள் முழங்க, ஆயுதங்களின் ஒளியும் ஒலியுங் கண்களையுங் காதுகளையும் கலக்க, யாவருந் திரண்டெழுந்து மேலிட்டு வருவதானார்கள். இப்படி வரும்படியானதை வீரகண்டாமணி தாங்கிய சல்லியராஜன் கண்டு, தனது பெரும் படைகளுடனும், பேரி வாத்தியங்களுடனும் முந்திப் புகுந்து வந்து எதிர்த்து போர் தந்தான். அந்தவேளையில், யானைகள்-குதிரைகள்-தேர்கள்-பதாதிகள் இதுகளெல்லாம் பக்கங்களிற் சார்ந்து யானைகளுடன் யானைகள், குதிரைகளுடன் குதிரைகள், பட்டவர்த்தனருடன்,

பட்டவர்த்தனர்கள், மணிமுடித்தேசருடன் மணிமுடித்தேசர்கள், அணிகெடிராஜருடன் அணிகெடிராஜர்கள் பகைத்து எதிர்த்துப் போராடினார்கள். அக்கால், விந்தகிரிக் கொப்பாகிய தோளிணையுடைய சல்லியராஜன், தன் தேகத்தின் சிவப்பினும் பத்து பங்கு அதிகமாகும் படியாய்க் கண்கள் சிவப்பேரிச் சீறி, முனை முகத்தில் முனைந்து நின்று வில் வளைத்து, அடுங்கொடுங் கணைகளை ஆயிரம் ஆயிரமாகத் தூற்றி, திக்குகளெல்லாம்பக்கென் றெரிய ஏற்றி திசைகள் மறையமூடி மாற்றினான்.

அதைக்கண்ட தண்டுளவோன் தம்பியாகிய சாத்தகி மன்னனெதிர்த்து, தேர்த்திறம்-போர்த்திறம்-கோற்றிறம் ஆகியபலதிறங்களைக் காட்டித் தெழித்து போராடிய காலையில், வில்லியற் சல்லியனாகிய வேந்தன் முனைந்து பலகோடி சாபகங்களைப் பலபலவென்று பலமாகத் தொடுத்து, தேர் - குதிரை-சாரதி வில் இவை முதலானவை யெல்லாமழித்து, மெய்யையுந் துளைத்து, எங்குங்குருதி கொப்பளித்துக் குளித்திடும்படி செய்தான். அந்தச் சல்லியன் நடத்துகின்ற யுத்தத்தைக்கண்டு எதிர்த்து வந்தடர்ந்த பரிநகுலராஜனை மருமகனென்றும் பாராமல், சிறிதும் ஓராமல், மேகத்தினிடத்தில் மின்னலெழுந்த தன்மைபோல் வாயில்நெருப்பைக்கக்கி வராநின்றஅடலாஸ்திரங்களை அநேகமாகத் தொடுத்து அடித்து, எரிமுகமாகிய ஒருகணை விடுத்தான். அந்தக் கணையால் நொந்து வருந்திய நகுலனைக் கண்டு சகாதேவனெதிர் சென்று தனிக்கணை யென்னுந் தழற்கணை ஏவினான். அவைகளையுமச் சல்லியன் அகற்றி, அயின்முகாஸ்திரம் ஒன்றை யெடுத்து அபிமந்திரித்துப் போக்கினான். அவ்வயின் முகாஸ்திரத்தாற் சகாதேவன் புறந்தந்தோடினான். அப்பால் மருத்தின்மைந்தனாகிய வீமசேனன் உருத்துவந்து போராடினான். அவனையும் வெறுத்துக் கறுத்துவந்து, திரண்ட இரண்டு மருத்துக்கணை தாக்கி, இருதோளிலுந் துளைபோக்கி யுத்த பூமியைவிட்டு நீங்கினான். அந்தவேளையில், அருச்சுனன் குறித்து, அம்புயக் கணைகளை அநேகமாகத் தெறித்து அதிவேகமாக வந்தான். அப்போதே சல்லியன் திரிமுக மென்னும் மூன்று பாணங்களைச் செலுத்தி, பற்குணனுடைய தோளும் மார்பும் துன்புறப் புண்படுத்தி, அந்த அருச்சுனனுக்குச் சமீபத்தில் நின்ற தருமராஜனுடைய நெற்றியின் பேரிலும், மணிகளைப்பதித்த வீரபட்டத்தின் பேரிலும், நான்காகிய வான் கணைகளையுந்தி உதிரஞ்சிந்த தலித்தான். அந்தச் சல்லியன் தொடுத்த நான்கு கணைகளுந் தருமராஜனுடைய நெற்றியிற்றுக்கி உதிரம்பெருக்கிவழிந்தோடியபடியால், அவருடைய முகமானது சூரிய மண்டலம்போற் சுடர்ப்பிரகாசமான நிறந்தந்த துன்பத்தைப் பக்கத்தில் நின்ற வாயுகுமார னென்னும் வீமசேனன் கண்டு, உடனே கதாயுதங்கொண்டு, மறமுந் திறமுஞ் சிலையுங் குலாவிய தடப்புயச் சல்லியராஜனுடைய மணிமுடிசுழன்று பறந்தோடி விண்மேலெழுந்து மண்மேல் விழுந்து போகவும், கண்ணொளியுடன் விழிபிதுங்கவும், புண்மேற் பேரிடி வீழுந்தவாறுபோல் அக்கதையைச் சுழற்றித் தலைமேலோரடி தாக்கினான். அந்த அடியாற்சல்லியராஜன் தேர்மேற்சாய்ந்தான்.

அவன் சாய்ந்து வீழ்ந்ததை அழகிய தரர்தல முழுதும் ஒருகுடை நீழற்படுத்தி அரசரியாவரும் அடிவணங்கும் படியாகத் தானொருவரையும் வணங்காமுடி பொறுத்த நாகராஜன் பார்த்து முகம்வேர்த்து, செய்குருதிபோல் இருகண்ணுஞ் சிவந்து கடுங்கோபங்கொண்டு, தீரதைரிய திடமேற்கொண்டு, தாண்டிப்பாயுங் குதிரைகள் பூண்ட தேர்மேற் சென்று பற்பல தேசாதிபர் முதலாகிய படைஞரும், விற்படை வேற்படை தாங்கிய வேந்தரும், தன்னை நாற்புறத்துஞ் சூழ்ந்து வரும்படியாகப்போய், எடுத்துப் பிடித்த வில் லைத்திடத்து இழுத்து, அதிற்றடித்த நாணி தொடுத்து, எண்ணிறந்த கணைகளை இடவிடா தேவி, தருமராஜனையு மற்றத் தம்பிமார்களையுந்தகைத்து, பேர்சொல்லிக் கூவிப்பகைத்து, பேராண்மையோடும் அடுத்து ஜாடுகிறான். இப்படி அரவக் கொடியோன் ஆக்கிரமித்ததைச் சிங்கக்கொடி யிணையுடைய தீரமேறு இடியேறென்று சொல்லுகின்ற வீமசேனன் கண்டு, முகங் கடுகடுத்து, அகம் படபடத்து, கண்ணிரண்டுங் கனலெழ விழித்து, கட்கடை புரட்டி, அத்துரியோதனனுக்கு எதிர்போய் நின்று, மோகம்போன்ற வில்லை வளைத்து, மிகைபடு சொல்லால் அவனைத்தடுத்து, அரி முகக்கணை முதலாகிய அநேகங் கணைகளைத் தொடுத்து அமராடினான். ஈடாகிய இவர்கள் இருவரும் உயிர்க்குக்கேடாகு முதன்மைதங்கி முந்திய அம்புகளை ஒன்றிேனொன்று முனை செறிய விடுத்து, ஊழிச்செந்தீ உறுக்குமாறு போற்பேரிரைச்சலுடன் நின்று பெரும்போர்

புரியத்தொடர்ந்து, இருவருங் கோடையிடி போற் கொடுஞ்சபதமுதலாகிய பற்பலபாஷைகளைப்பேசி ஒருவரை யொருவர் ஏசி, எதிரெதிர்நிலை பெற்று நின்று, எண்ணற்ற பகை மேற்கொண்டு, ஒருவரேறிய தேரை யொருவர் உதைத்து உடைத்து நீறுபடுத்தி, ஒருவர் சேனைகளை ஒருவரடித்துக் கெடுத்துத் தாறுமாறுபடுத்தி, இருவர்தேரும் அழிந்து, இருவர் சேனையு மொழிந்து, பொருகைவில்லும் ஒடிந்து, பொருகணைகளும்மடிந்து, வீராளிருவருந் தெழித்து, வீரத்திறங்களைப் பழித்து, பூமிதோர்மேற் பொருந்தி, போர்வாள்கொண்டு திருந்தி, வட்டமாகச் சுழன்று, அட்டமாகக் கிளம்பி, கெட்டணையாக நின்று, நேருக்கு நேர்சென்று, ஆளுக்குள்வெட்டி, வாளுடன் வாள்கிட்டி, கருக்குமழுங்கிப் பெருக்கஞ் சுருங்கி இருவர் வாளும் உருக்குவெட்டைபோல் ஒடிந்து உதிர்ந்துபோகவே, ஒப்பில்லாத இருவருந் தப்பில்லாமற் பொருந்துங் கதாயுதங்கொண்டு, ஒன்றேடொன்று இடித்து, உயரனெறிந்து பிடித்து, அழுந்து மடிகள் அடித்து, அமலையார்த்து நடித்த காலையில், இருதிறச் சேனைகளோடு சகல சராசரங்களுஞ் சங்கடப்பட்டுச் சஞ்சலப்பட்டதுகள். ஆகாயவாசிகளாகிய புலவரெல்லாரும், இதென்ன சண்டை அப்பப்பா அம்மம்மா என்று ஆச்சரியப்பட்டு அபிநத்தார்கள். அனையகாலையில், வாயுகுமாரன் மூர்ச்சுதாங்கி தன் கதையை வாங்கி, துரியோதனனை யோங்கி, ஓரடி வாங்கினன். அவன் அடித்த அடியால் தலைவீங்கி, அணிந்த தணிமுடிமகுடம் நீங்கி, புனைந்திருந்த தும்பைமாலை யுதிர, புயங்க ளிரண்டும் அதிர, புயங்க கேதனனுகிய துரியோதன மகாராஜன் முனையழிந்து எல்லோரினும் முன்னிட்டு வெந்நிட்டோடினன்.

### சல்லியசேனாபதி வதை

இவ்வாறு வீமசேனனாலடிபட்டு ஓடுகின்ற முதல்வனாகிய வேந்தனைச் சேனாபதியாகிய சல்லியன் கண்டு சஞ்சலங்கொண்டு, மீண்டும் பாண்டவருடன் மூண்டமர் தருவதானான். அந்த வேளையில், ஒப்பில்லாத கிருபாச்சாரியரும்-அஸ்வத்தாமனும்-சகுனிராஜனும்-கிருதவன்மனும்-ஆரபாரப்போரில் தலைமைபெற்ற தேசராஜநிருபரும் ஒன்றாய்ச்சேர்ந்து, ஊருஞ் சக்கரங்களையுடைய தேர்களைச் செலுத்தியும், பெருமலைகள்போன்ற யானைகளைக் கடாவியும், அலைகள்போலத் தாவும் அஸ்வங்களைத் தூண்டியும், படைப்பெருக்கமுள்ள பதாதிகளை நடத்தியும், மலைவாரி முழங்கி வழிந்து வருந் தன்மைபோல் திரண்டுவந்து, மத்திரராஜனுக்கிடாக மனது ஒத்து அவனோடு பொருந்தி மொய்த்துப் படைத்துணையாக நெருங்கினார்கள். இங்கே அளகேசனுடைய சேனாபதிகளை மாட்டிய வீமசேனனும், வானவர்குலப் பகையைக் கலைத்துமுடித்த விஜயராஜனும், ஏமகூடத்துக்கீடாகிய இருதோளுடைய பரிநகுலனும் அவனுக்கிளைய தத்துவ ஞானமுணர்ந்த சகாதேவனும், சகஸ்திரநாமதரனாகிய ஐனார்த்தனனுடைய தம்பியாகிய சாத்தகியும், கிரணசூரியனை உவமிக்குஞ் சுந்தரக்காந்திபெற்ற மற்றச்சிலைவீர வேந்தர்களும் சூழ்ந்து, வட்டமாக வளைந்த மாநிலத்தைப் பட்டமாகப் பெறக்கருதி அட்டமாக நின்று அமர்புரியச்சென்ற நீதிமானென்னும் அறன் மகனாகிய தருமராஜனுக்கு அருந்துணையானார்கள். இப்படியாக இருதிறைப்படைகளும் சேர்ந்து, மல்லகதி - மயூரகதி-வியாக்கிரகதி முதலிய நன்னடைகளையுடைய குதிரைகளும், கன்னமதம்-கபோலமதம்-பீஜமத முதலியவைகளைச் சொரிந்து மலைகளுக்கொப்பாகி யிருக்கின்ற மதயானைகளும், சக்கரங்கள் பூட்டிப் பூமியின் விசாலம்போன்ற நாயகத் தட்டினையுடைய பொற்றேர்களும், தோண்டத் தோண்டச் சுரக்கு மணற்கேணிபோற் பெருகினராய் நின்ற பதாதிவீரப் படைக்கடலும் நெருங்கி அமர் விளைத்தார்கள். அதிரதர் முதலாகிய அதிவீரபராளெல்லோரும் ஓடி ஓடி எதிர்த்து பகைவற்பேரிற் கோபமுதிர்ந்து ஒருவர் தலைகளையொருவர் அறுத்துத்தள்ள, அந்த தலைகள் மெத்த இரத்தவெள்ளப் பள்ளத்திற் கொள்ள, தலையிழந்த உடல்கள்தாழ விழுந்துள்ள, முகம்வியர்த்து, பகைத்து, உருத்து, உறுமிக்கறுவி உலாவினார்கள். பட்டவர்த்தனர் மகுட வர்த்தனராகிய பேர்கள் கோடாகோடியாய் தமரப்பபடை முழங்கவும், கோடாகோடியாய் சங்கினங்கள் தழங்கவும், இருபக்கமுங் குறித்து வெறித்து, தேரைத்தேர்களும், ஆளை ஆள்களும், யானையை யானைகளும், குதிரையைக் குதிரைகளும் மறித்துக்கொள்ள விடுத்துக் கோணமற் கொடும்போர் புரிந்தார்கள்.

இவ்விதமானபோது இருவர் படையிலு மிகுந்த விறலாளராகிய வல்லமைசாலிகள், தங்கள் தேகத்தில் அணிந்திருப்பது மானமென்னுங் கவசமேயல்லது, மானங்கெட்ட ஈனக் கவசமல்லவென்று சொல்லும்படியாக ஒருவருக் கொருவர் வரிபொருந்திய மலைக்

கீடான வில்லும் - வாளும் - வேலும் மற்று முள்ள வெற்றிப்படைகளுங் கரங்களில் உறம் பெறக்கொண்டு ஸ்திரம்பெற நின்று, அவ ரவர்களுடைய மேனிகளில் ஊடுருவ விடுத் தும்-அடித்தும் - குத்தியும்-எத்தியும் - குறை படுத்தியதல்லாமல்,ஒருவரையொருவர் தாவுத லும்-ஏவுதலும் - முட்டுதலும் - திட்டுதலும் ஆகிய போரைப் புரிந்தார்கள். இவர்கள் செய்தயுத்தமானது,ராக்ஷசாளுந்தேவர்களும் செய்கின்ற திடத்த சண்டைபோலிருந்தது. அப்போது, வீமசேனன் - அருச்சுனன்- நகு லன்-சகாதேவன்-மாயன் தம்பியாகிய சாத்தகி இவர்களெல்லோரும் ஒன்று சேர்ந்து, கிரு பாச் சாரியாரையும், அஸ்வத்தாமனையும் வளைத்துக்கொண்டு போராடினார்கள். சோம குலபதியாகிய பாஞ்சாலனுடைய மெய்ப் புதல்வனென்னுந் திர்ஷ்டத் தூய்மனும், இன்னுமுள்ள தம்பிமார்முதலாகிய சூராளுஞ் சேர்ந்து, மத்திர ராசனை மடக்கிப் போர் கொடுக்கும்வேளையில், தருமராசன் அவர்கள் யாவரையும் விலக்கி, நீங்க ளெல்லோருஞ் சற்றுநேர நின்று வேடிக்கை பாருங்கள்; இவ் ரோடு நான் கொஞ்சஞ் சண்டை புரிகிறேன் என்று உல்லாசத்துடன் சல்லாபமாய் நல் லாண்மை கூறி, வில்லாண்மை வீறி, காமனுக் குச் சரியாகியமாமனாகிய சல்லியபூபனைநேரிற் கண்டு, ஐயா மிகைத்துப் பகைத்து வருகின்ற அம்மானே இந்தாரும் என்னுடன் சிலநேரம் போராடிப் பாரும். எனக்கு எதிர் வாரும். பேருஞ் சீரும் பிசகாதவண்ணங் காரும். என்று ஆரம்புனைந்த யாருங்கண் டஞ்சும்படி அமர் தொடங்கினர். அவனுஞ் சமர் தொடங்கினான். இப்பாலிருவரும், இமைக்கு முன் வீரவில்லை வளைத்து, வீறு நாணேவி மடுத்து, எறிக்கணைகளை எடுத்து, ஏகமுகத்திற் றொடுத்து, ஆரப்பாரமுறக் கடுக்கடுத்து, அடம் பிடித்தார்கள். திசைக்கரிகளெல்லாந் தியங்கித் கித் திடுக்கிட்டு, ஆகுலமடையவும், திரைக் கடல்களெல்லாம்றுகிக் கொதிப்பெழுந்து தீய வும், அதனுள்ளாகியசலசரங்களெல்லாம் உரு கிக்காயவும், அனேக மேக முழக்கங்கள் வாய் அடக்கி ஓயவும், மலைமரங்கள் முழுதும் அடி வேருடன் சாயவும், மட மடென்றவனி மண் டலமனைத்தும் வீயவும், உதிரப் பிரவாகம் உறைந்து தோயவும், உரத்தகணைகள் உராஞ் சித்தேயவும், ஒன்றையொன்று உறுக்கிப்பாய வும், ஒன்றையொன்றுக் குத்திக்காயவும், இவ ரிருவருஞ் செய்கின்ற சண்டை எப்படியாமோ வென்று அந்தரவாசிகள் சிந்தை நைந்தாய வும், இனியிவ்வுலக மெப்படியாமோவென்று ஈரேழுலகுமிரைந் தேயவும், சூராகிய, சுத்த வீரர்களிற் சிறந்த திறமிகுந்தவீரனும் மத்திர னென்று யாவருமெய்க்கும்படியாகிய மத்திர ராசனும்,சத்தியசவுச தர்மத்தையேஉருவாகப் பெற்றவனென்று உவமிக்கும் உத்தமனாகிய தருமபுத்திர ராசனும் ஆகிய இவ்விருவரும் ஈடுதாழ்வில்லாமற் பலவித் கோலாகல அஸ் திரங்களைப் பாய்ச்சினார்கள்.

அப்போது, மத்திரராசன் உலகமுற்றும் அழிக்காநின்ற, உருத்திரக்கணைகளை எடுத்து, பத்தும் எட்டுமாக விடுத்து, முரசக் கொடி யோனை அடித்தான். அக்காலையில், ஆரபாரத் துடன் அசைந்தாடுகின்ற முரசக் கொடி முறிந்து, ஒப்பற்ற ஆழி பொருந்திய ரதமு முடைந்து, மேற்சிகர முதலாய நடுநாயகத் தட்டு மழிந்து, கைப்பிடித்திருந்த வில்லு நாணியுமுறிந்து, தேகத்தில் அணிந்திருந்த சோகவினாச கவசமுங் கிழிந்து, நடையுடைய குதிரைகளுந் துணிந்து போய் விட்டன. உடனே, கதிர்முகக்கணை யொன்றேவித் தரும ராசனுடைய வீர பட்டத்தை விலக்கி, நெற்றி யிலுந் தைக்கச்செய்து கலக்கினான். அப் போது, வீரம் பொருந்திய வில்லு நாணி முறிந்து, பூமிமேல் நின்ற வண்டாரபாரஞ் செய்கின்ற, தண்டாரணிந்த அழகியபுயத்தை யுடைய அண்ணல் சற்று நேர நிதானித்து நின்று, கோபம்வராத கண்கள்கொதிப்பேறப் புகைந்து, சிவப்பேறச் சிவந்து, உருத்துக் கோபித்து, சிரித்துச் சீறுற்று, பருத்துயர்ந்த இமய மலைமேற் பாய்ந்து, எக்கி எகிறி ஏறிய இளஞ் சிங்கம் போல வேறொரு தேர் மேற் கொண்டு, பலரும் புகழ்ந்து மகிழ்ந்து, ஆச் சரியப்படும்படியாய் முடிவில்லாததிரிபுரத்தை எரித்தருளிய முகக்கண்ணீர்போல் முனிந்து முனைந்து, சல்லியராசனுக் கெதிர் புகுந்து, தடைபடாத ஒரு சத்தியை எடுத்துச் சம்பிரம பூசைகொடுத்து, வழிபாடுபட்டு வணங்கிவிடுத் தார். அந்த சத்தியானது, வெற்றிமிகச்சுற்றி, மேலுலகத்தைப்பற்றி, வாய் விட்டுறக் கக்கத் தில்,மலையருவிபாயுமகமேருவின் முக்குவமொடி டித்த வாயு தேவனைப்போல், மத்திரராசனு டைய முடித்தலையை ஏற்றியது. இப்படியாக வரிச்சிலைப்பிடித்து, வளைத்து பற்பல பாணங் களை தொடுத்தேவியசல்லியனுக்குத்துணைசேர்ந் திருந்த தங்களுக்குப் பகையாகியவேந்தர்களை யெல்லாம்உடல்பிளக்கவும்-உயிரிழக்கவும்-கவ

சம் அழியவும்-மார்கிழியவும்-தாளொழியவும்-ஆள்மடியவும்-இடைமுறியவும்-தொடை தறியவும்-நடையோயவும் - படைசாயவுமாக ஓங்கிய வாசனை தாங்கிய மாலையணிந்த தருமராஜன்விட்ட ஒப்பற்ற அவ்வடிவேலானது, சுப்பிரமண்யக்கடவுளிடத்தி னின்றும் வெளிப்பட்ட சுயம்பிரகாச வேலாயுத மெவ்விதச் சுரவையோடு சூரனைத் தேடிச்சென்று சிதைத்ததோ, அவ்விதச் சுரவையோடுஞ் சென்று வாகுவலிபெற்ற மத்திரேசனை மடித்துவிட்டதென்று பாம்புக்கொடிபடைத்த பாவியாகிய துரியோதனன் சேனைகள் அணி குலைந்து முதுகிட்டோடி, படாதபாடும்பட்டு வருத்தமுற்றன. சந்திரோதயங்கண்ட சமுத்திரங்கொண்ட சந்தோஷம்போற் குந்தி மைந்தருடைய நால்வகைச் சேனைகளுங் கும்பற்கும்பலாய்க் கூட்டங்கூடிக் கொண்டானடித்து, கோவென்றிரைந்து யார்ப்பரித்து ஆனந்தத்தில் வீழ்ந்தார்கள். துரியோதனனுடைய நால்வகைப்படைகளும் நெருப்புமுனைப் பாணங்கள் தங்கள் இதயந்தோறு நுழைந்து தைத்து வருந்திய தன்மைபோற் றயங்கிச் சஞ்சலத் தாழ்ந்தார்கள்.

## துரியோதனன் சகோதரருள் இருபத்தோருவர் வதை

இவ்விதமாக வருத்தப்படுகின்ற இளக்கரத்தை வேகங்கொண்ட குதிரைபூட்டிய விசாலத் தேரினையுடைய சல்லியராஜனென்னும் மத்திரனுக்குச் சமான மித்திராளாகிய எழுநூறு தேர்வீரர்பார்த்து, சத்ருக்களை வேர்களையும்படிக்கு வீரமேற்கொண்டு, பிரமப்பிரளயகாலத்தெழும் வடவா முகாக்கினிபோற் கொதிப்போங்கி தோள்வீங்கி, வில்வாங்கி, திரண்டு, வெகுண்டு தருமராஜனுக் கெதிர்வந்து தடுத்துச் சூழ்ந்தார்கள். இப்படிவந்த இவர்களைப்பார்க்கிலும் எட்டுப்பங்கு அதிகமாகிய கோபம் நாகமணித்துவஜனாகிய துரியோதன னுக்கு மூண்டு, அருஞ்சமர்க்களத்தில் ஆண்சிங்கம்போல அதிர்ந்து உபயசாமரம் இருபுறத்திலும்வீச, தவளமாகிய சந்திரவட்டக்குடை நிழற்ற, கங்குகரைகாணாத கருங்கடல்போன்ற நெடும்பெருஞ் சேனை வெள்ளமானது எங்கு நிறைந்து சூழ, உயிர்க்குயிராகிய மாமன் சகுனியும், தம்பிமார்களும் புடை பரந்து மொய்த்துக்கொள்ள, புலவர்கள் மதிக்கப் பொங்காரங் கொண்டு போர் தொடங்கிய புயல்போற்குவிந்து, தவபொரத் தொடங்கிய முனிவர்கள் புகழுந் தருமராஜசிரேஷ்ட னுக்கு நேர்வந்துவளைந்து மலைந்தான். அது காலையில், வீமன் முதலாகிய தம்பிமார்களும், இணையில்லாத் துணையாளராகிய வெம்படைத் தலைவர்களும், போர்வெற்றி பூணுகின்ற சோமகத்துரைகளும், தீக்கண்ணராகிய திடவீராளும், மற்றப் போர்வேந்தரும், தேர் மாந்தருஞ் சேர்ந்து, யானைக் கூட்டங்களைச் சிங்கக் கூட்டங்கள் சீறித்தொடருந் திறம்போல் தொடர்ந்து, கௌரவ வீராளுடைய மாலையணிந்த மார்பும், புஜகீர்த்தி பொருந்திய தோளும், தண்டையணிந்த தாளும், வீரபட்டமணிந்த நெற்றியும், பாணப்பயிரேறிய பான்மைபோல் மூழ்கும்படியாய் நற்சிலை வளைத்து நாணிமாட்டிப் பாணங்களை இறைத்தார்கள். அதனால் வாரிபோலெழுந்த சோரிகளானது மலையருவிபோற் பரந்து வழிந்து பூமி முழுதுங் குழிந்தும் பாணங்கள் பெருகி போகும் படியாயது. தம்பிமார்கள் இன்னும் ஒழியவில்லையா? இப்படி நாலும் ஐந்தும் ஆறும் ஏழுமாய் வருவது நமக்குஞ் சுளுவுதான்? ஒருமிக்க வந்தாற் பளுவுதானே? இஃதறிந்துதான் நம்மீதிறக்கங் கொண்டு கொஞ்சம் கொஞ்சமாயனுப்புகிறான் நமது குலநாசனாகிய துரியோதன மகாராஜன். எனக்கு இப்படி வருவதே போதும் என்று சொல்லி அவர்களைப்பார்த்து, அப்பா தம்பிமார்களே! புறமிடாமல் நின்று போர் புரியுங்கள் என்று பாணங்களைப் பூட்டினான். அவர்களும் இந்த வீமன் செய்யும் யுத்தம்போல் நிலைத்துநின்று கணைகள் செலுத்திக் கடும்போர் விளைத்தார்கள். அப்போது வீமசேனனானவன், குதை பூட்டிய வில்லை வீக்கி, நமனஸ்திரத்திற்குச் சமனஸ்திரங்களைத் தாக்கி, ஐவருடைய ஆவியை அகற்றி, சுத்தபவித்திர மேனிகுலுங்கத் தலையசைத்து, ஒப்பில்லாத ஒருவனாக நின்று தோளடித்து, அம்-இம் என்று அலறி ஆர்த்தான். முன்போன அவ்வேழுபேருடன் பின்போன இவ்வைந்துபேரும் பொறிபுலன்கள்போற் பிரியாமற்சேர்ந்துபொன்னுலகில்குடிபுகுந்தார்கள்.

உடனே இந்தத்தம்பிமார் ஏழுபேரையும் அவ்வீமசேனன் ஏககாலத்தில் ஏழு வாளிகளால் அடக்கி நீக்கி, அவருடல்களை மண்மேலாக்கி, அவருயிர்களை விண்மேற்போக்கினான். அக்கால், ஆகாயத்திலிருக்குந் தேவர்களெல்லாரு மதிசயத்தயர்ந்து, இன்றைக்கு இம்மாத்திரஞ் சண்டைபோதும், இனிமேற் சண்டை கண்டால் நமக்குப் பாவம். என்று அதிசயிக்கும்படியாய் ஏழு மதங்கொண்ட யானைமேல்

ஒரு மதங்கொண்ட யானை கோபத்துவேஷங் கொண்டு கொன்றதுபோற் கொன்ற வீமன், மீண்டு நிலத்திற்றெருத்துக் களித்து நின்று, வலம்புரிச் சங்கத்தை வாயிற்பொருத்தி முழக்கினான். இப்படி முழக்கி நிற்கும் வாயு குமாரனை வெண்கதிர்க்குல மைந்தனாகிய வலம்புரித் தார்வேந்தன் கண்டு, வயிற்றெரிச்சல் கொண்டு, தம்பிமார்கள்மேற் றூபங்கொண்டு சோர்ந்து பூமியிற் சாய்ந்தான். ஐயா ஜெனமேஜெய மகாராஜனே! என்னதான் மனத்துணிவிருந்த போதிலுஞ் சகோதரான்பேரில் யாவருக்கும் அன்பிருக்கு மல்லவா! (தானுடா விட்டாலுந் தன் சரீரமாடும்) என்று பழமொழி சொல்லுகின்றார்களே; ஐயோ என்ன செய்வான் அந்தத் துரியோதன மகாராஜன்; எவர்களாலும் ஆற்றப்படாத ஆயாசங் கொண்டு அருந்துயர் பூண்டான். அந்த வேளையில், தனக்குத்தானே நிகராகிய கிருதவேந்தனானவன், துரியோதனனுடைய தம்பிமார்களில் ஏழுபேரிறந்த தன்மையைக் கண்டு மனக்கவலைகொண்டு, மீண்டும்பெருஞ்சேனைக் கும்புகளைச் சேர்த்து, துரியோதன மகாராஜனுடைய தம்பிமார்களிற் சித்திரவாகு-பிலசேனன்-செயசூரன் - சித்திரவுத்தமன் - விந்தன் என்று சொல்லுகின்ற ஐந்து பேர்களைக் கூட்டி யனுப்பினான். அவர்களுக்குத் தங்கள் சகோதராளிறந்த பச்சாதாபத்தை தாளமாட்டாதவர்களாய்ச் சினந்து, கோபக் கதிர்வேல் தாங்கிய வீமனைக் கொல்லும்படியா யெண்ணமுற்று, எதிர்த்துப்போய் போர் புரிந்தார்கள். இவர்களைக் கண்ட வீமசேனன் எக்களிப்புடன் உக்களித்து, எனக்கு மெத்தவும் வேண்டியதில்லை; நான் பேராசைக்காரனல்ல; ஆயினும், இப்போர் புரிந்த சூட்சியை இவ்விதமென்று அறிந்து சொல்லத் தக்க வல்லவர் யாவருமில்லை. இப்படி பேர்பெற்ற போர் புரிந்து வருகின்றபோது, வாயுதேவனுக்குப் புத்திரனாய்ப் பூமிதேவியாருடைய பெரும்பாரத்தை நீக்கப் பிறந்த புகழ்பெற்ற வீமசேனனானவன், தன் தமயனாகிய தர்மராசனை யெதிர்த்துப் போர்பொருந்தி வெல்ல வந்த தானைகளை யெல்லாந் தாறுமாறாக்கி, நீறு நீறாக்கிப் போக்கினான். அப்போது தரணீசனாகிய துரியோதன மகாராஜனுக்குத் தம்பிமார்களில், ஜெயகந்தன்-ஜெயவர்மன்-ஜெயசேனன்-சேனாவிந்து-சயித்திறன்-திறல் விந்து - ஜெயவிக்கிரமன் என்று சொல்லும்படியான இவ் வேழுபேரும் பகையுடன் கூடி வந்து, வீமனை மடக்கிப் பாணத்தைத் தொடுத்தார்கள்.

இதுகளையெல்லாம் இறுமாந்த நாகக்கொடியோன் கண்டு, விசனங்கொண்டு, மறுபடியுந்தேறி, இருகண்களும் பொறி எழுந்து பறக்கச் சீறி, திண்ணிய புஜபலஞ் சேர்ந்த எண்ணிறந்த அரசவீராள்சூழச் சேர்ந்து வீமசேனனுக்கு முன்வந்து அடர்ந்து, உலகம் அழியாநின்ற யுகமுடிவைப்போல் உரத்து நான்கு திக்கிலும் ஓடி, பெரும்புறக் கடலையும், அந்தக் கடலினுடைய நடுவிலிருக்கும் வடவைக் கனலையும் அவித்து, மலைகளைச் சாய்க்கும் பெருங்காற்றைப்போற் பற்பல கணைகளை வீசி, பாண்டவர்களின் தேகந்தோறும் பாணமயமாக அழுத்தி, படைகளையு முழுத்தி, வில் விஜயங் காட்டி, இன்னமும் மேலாகிய கணைகளைத் தீட்டி, நாணியிற்பூட்டி, நால்வகைப் படைகளையுங் குடியோட்டி நின்றான் துரியோதனமகாராஜனானவன். அவன் செய்கின்ற அரும்போரைக்கண்ட சகாதேவன்வெகுண்டு, பற்பல பாணங்களைப் படபடவென்று ஏற்றி, அவன் தொடுத்த பாணங்களை யெல்லா மாற்றினான். அக்காலையில், வீரப்பிரதாப துரியோதனவேந்தன், அச் சகாதேவன் திடத்தைப் பார்த்து, வீரச்சயங்களை விடுத்து; அவன் கைப்பிடித்த வில்லை முறித்து, வெறித்துக் குறித்துச் சிரித்தான். அந்த வேளையில், தன் கையில் முறிந்தவுடனே சகாதேவன் தாளாமல் தனிச்சிங்கம்போற் சீறி, வேறொரு வில்லைத் தாங்கி, துரியோதன மகாராஜனுடைய வலிய கரத்திற்கொண்ட வில்லை முறித்து, மார்பிலும் முகத்திலும் வாயுவாளி விடுத்து மாட்டி, உதிரங்களில் உடல் குளிக்கச்செய்து, மேலுமேலும் ரணக்களத்தில் எதிர்ந்த முதன்மைப்பட்ட நிர்வாகசாலிக ளெல்லாருஞ் சிரங்கள் சிந்தி, மூளைசொரிந்து, சிந்தை நலிந்து, திடுக்கிட் டழியும்படியாய்க் கணைகளை மூட்டி மூட்டி, பின்பக்கத்தில் ரெத்தவெள்ளம் புரண்டோடச் செய்து, முன்பக்கத்தில் பிணமலைகளேற்படுத்தி, வானத்தி லெழுந்த சூரியனும் மத்தியானத்தி லிறங்கி இளைப்பாறும்படிக்குச் செய்தான். இவனிப்படி சண்டை செய்து கொண்டிருக்க, காத்துங்கனலு மிழுங் கோமான், கதிர்மிகுவடிவேற்றாங்கிய சீமான், காந்தார தேசத்தாருக்கு காவலனாகிய பூமான், கனமூள சகுனிபேர்கொண்ட மாமன், தனக்குச் சொந்தமாகிய அளவிறந்த சேனைகளை சேர்த்துக்கொண்டு வேந்தர்களுடன் பல வீராளும்

நெருங்கப் புறப்பட்டு, பதினாயிரம் வெம்ப ணைக்கை யானைகளும் - தேர்களும் - குதிரைக ளும்-காலாள்களும் ஒரு கணத்திற்பட முனை ந்து வென்று பூரித்த புயாசலப்போர் வீமனு டன் எதிர்த்துப் பகைத்துப் போர் மலைந்து; அந்த வீமன் முனைந்து செலுத்தும் வெஞ்ச ரங்களால், அவர்கள் பஞ்சு பறக்குந் தன்மை போற் பறந்து இறக்கச் செய்தான். சகுனி மாத்திரம் ஒன்றியாய் ஒருபுறத்தில் ஒதுங்கிப் பதுங்கி, தனதுட் குழிந்த கண்கள் உதிரஞ் சிதறப் பிதுங்கி நின்றான். அந்தச் சமயத்தில், ஊரும் பாம்புக்கொடி பெற்றபேரும், பிரக் யாதிமுற்ற துரியோதனனுடைய தம்பிமார் கள், உத்தமன்-உதயன்-பானுகீர்த்தி-பிலவன் மன்-பலவீமன்-பிரபலதானன்-விக்கிரமவாகு-சுகிலன்-சீலன் இந்த ஒன்பது பேர்களுந் தென்புடனெருங்கி, வம்பு விளைத்து வீமனுக் கெதிரோடிவந்து பிரபல யுத்தம் பண்ணினார் கள். இந்த ஒன்பது பேரையும் வீமன் கண்டு, தம்பிமார்களே! அண்ணாவாகிய துரியோதன மகாராஜனைத் தனித்து விட்டுவிட்டாப் போகி றீர்கள். ஐயோ அனியாயமே! ஆகிலும், நீங் கள் விசனப்படவேண்டாம். இன்றைக்கு உங் கள் பின்னாலேயே கணக்கு பார்த்து அனுப்பி விடுகிறேன். நீங்கள் முன்னே போய்க்கொண் டிருங்கள். என்று வெகுவாய்ப் பக்ஷங் கொண்டு பேசி சிலைக்கால் வளையவிழுந்து தீக் கொண்டிராநின்ற செங்கணைகளைத் தூண்டி, அவர்க ளுடல்கள்கீற, உயிர்கள் வானேற, தங்கள் சபதம் நிறைவேற, உலகத்திற் புக ழேற, அவர்கட்குத் துணைவந்து உடன்று நிற்கின்ற இரதகஜதுரகபதாதிகளு முடல் பீறி, ஒருகணத்தில் அவியும்படியாய் கரகர வென்று சுழன்று, மனமழன்றுமாட்டி மாற்றி னான் வீமசேனன். இதை யோசிக்கு மிடத் தில் இவனுடைய கட்டாண்மைக்கு இது வொரு பொருளே யல்ல. ஆதலால், லட் சியமில்லை; பாண்டவ ரைவரில் வீமசேனனு டைய கைப்படையாற் பட்டழிந்த தொண் ணூற்றொன்பது தம்பிகள்போக, இன்னும் படாது உபதம்பிமார்களா யிருக்கின்ற பேரும், தாக்கிய் வாக்கிய சிலாக்யரும், அம்புவியாளும் அரசர் பலரும் அதிக சாமர்த்தியங் கூறி, பார்ப்பதற்கரிய பிரளயகால பஞ்சானனம் போன்ற வெஞ்சாபங் கொண்ட விக்கிரமார்த் தாண்ட கதாயுத வீமனை வளைத்து, குருக்ஷேத் திர பூமியெல்லாங் குமுங்கக் குமுறக் குறையப் புந்தயச் சிந்தையச் சிதறக் கடும்போர் விளைத் தார்கள். உடனே வீமசேனனானவன், நாகக் கொடி தரித்த நரேந்திரன் கண்டு நாணும் படிக்கு அவர்களை யெல்லாம் பூணும் புகழ்ப் போரில் முனைந்து, சிலர் பூமிமேல் வீழ்ந்து மாயவும், சிலர் தேர்மேற் கவிழ்ந்து சாயவும், படாதபாடு படுத்தியபோது, அத்திகழ் மணி முடிகளையுடைய தீரர் யாவருமாய்ந்து, அரம் பாஸ்திரீகளின்மே லாசைமேலிட்டு அந்தர மடைந்தார்கள்.

சகோதரர் நட்டங்கருதி வருந்திய துரியோதன னைச் சகுனிதேற்றி மிகுந்துள்ள படையோடுங் கூட்டித் தானும் போருக்கெழல்

இப்பால், துரியோதன மகாராஜன் தானொருவனல்லது தமக்கிளைய தம்பிமார்கள் ஒருவருமில்லாமல், வீமசேனனுடைய சரங் களினாலும், தண்டாயுதங்களினாலும், விண்ட லத்தில் ஆவியேறவும், மண்டலத்தில் ஆக்கை வீழவுமானதைத் துரியோதன மகாராஜன் எண்ணி எண்ணிக் களைத்து, சரங்கள் தாழ-கால்கள் வீழ - உரங்கள்வாட - ஊக்கமோடக் கலங்கி, அலமலங்கி உடல் மறந்து, உணர் வொழிந்து, ஐயோ தெய்வமே! ஆதியில் எனக்குப் படித்து படித்து இடித்து, பல விதங்களும் உறுத்திச் சொல்லிய உரியோர் பெரியோர்களின் உரையைக் கேளாமல் என்னவேலை செய்துவிட்டோம்; ஆ! ஆ! ஐயோ! இனிமேல் உலக அரசாக்ஷியும் இழந் தோம். என்று மனக்கவலைகொண்டு மறுகா நின்ற வணங்காமுடி மன்னனை மாமனாகிய சகுனி நோக்கி, ஓ என்னருமை மருமகனே! என்ன ஒருவிதமாய் இருக்கின்றீர்? புரசைக் களி யானையிலேறி அரசர்க்கரசாகிய வீறை உமது சாயைப்போல் மாறாமல் படைத் திருந்த தம்பிமார் முழுமையும், மீனேறிய மாலை திணிந்த வானேறிவிட்டார்கள். அவர் களுக்காக உள்ளம் உருகிக் கண்ணீர் பெரு கிச் சோகமடைந்தீர். இப்படிச் சோகமுறி னும், மாண்டவர் மீண்டும் வரப்போகிற தில்லை. அவர்களைக் குறித்து நாம் வதங்கி வாடி மனம் வருந்துவது சம்பந்த விசேடத் தொல்லையேயன்றி வேறில்லை. சென்றுபோன அவர்களை சிந்திக்கவேண்டியதில்லை, ஓ என் மனமகிழு மருமகனாகிய மன்னவனே! நீர் நீடூழிகாலம் வாழி வாழி; என்னுடைய வசனத் தைச் சிறிது கவனித்து மனமுவந்து கேளும்; போரில் மடிந்துபோனவர்கள் மடியாமலிருக் கும் நால்வகைச் சேனைகளும், அச்சேனை



சல்லிய சேனாதிபதி வதையும், சகுனி வதையும்.

நாயகராகிய மன்னவர்களும், வேதமுதல்வனு கிய கிருபாச்சாரியரும், கிருதவன்மனும், அஸ் வத்தாமனும் நமக்கு முன்னும் பின்னும் மொய்த்து வரும்படியாக முருகக்கடவுளைப் போற் சென்று தைரியம்விடாமல் எதிர்நின்று முனைவீரனைப் பொருது, விருதுடன் சீறு போர் மாளாமல் வாகை புனைவோம்; மனஸ் தாபம்விட்டு வாரும். என்று ஒருகோடி உறுதி வசனங்களையும், திருஷ்டாந்தங்களையும், இதி காசங்களையும், எடுத்துச்சொல்லித் தேற்றினன் சகத்தை யழிக்கவந்த சகுனிமாமன். இப் படிக்கு விசனங்களையெல்லா மாற்றிய சகுனி ராஜனும்,மருமகனுகிய துரியோதனராஜனும் உடனே மனமகிட்சியுடன் தேரேறி, தங்கள் மனதுக்கு இசையும்படி வாத்திய முழங்க வலிமைகூறி, சகலவித சேனு சமுத்திரங் களுந்திரண்டுவரப்போய்ப் போர்முகமடுத்து, வீடீனவளைத்து, புரிநாணிழுத்து, புங்கவம் விடுத்துப் புயம் பூரித்தார்கள். அப்போது முனைந்துநின்ற சிறப்பினையுடைய கதாபாணி யாகிய வீமன், நிலவெனப் பிரகாசிக்கச் சிறு நகை நகைத்து மனவேகத்திலுஞ் மிஞ்சிச் செல்லுகின்ற வேதமாகிய தேரைவிட்டு, ஏக மாகிய பூமிமேலிறங்கி, பெருவரத்திஞல் ஒரு கரத்திற் ருங்குநேர்சீவிய, சீர்மேவிய, போர் தாவிய தனது தண்டாயுதத்தாற் சத்துருக் களுக்குக் கண்டாரி கண்டத்தை விளைவித்து, அண்டத்தை அதிரச் செய்விக்கும்படிக்கு ஓயாமல்,இருகைகொண்டு சாயாமல், ஒருபக்கத் துக்கு ஒரு பக்கம் ஒதுங்காமல், யுத்தத்தைக் கண்டு பதுங்காமல், தெப்பல்களினுல் வதங்கா மல் போராடும் இருப்புச்சங்கிலி பிடித்த துதிக்கைபெற்றயானைகள்-இரதங்கள்-குதிரை கள்-காலாள்கள்-மேலாள்கள் இவைகளெல்லா மாய்ந்துபோகும்படி நேர்புகுந்து ஜாடி, இவைகளிலுண்டாகிய ஓசையானது, ஈரேழு லகமும்போய் மூட்டும்படியாய் இரைந்து விரைந்து வருகின்றுன். அது கண்டு மனம் பொருத மாமனுகிய சகுனி, துரியோதனமகா ராஜனைப்பார்த்து முன் சொன்னதுகளெல் லாம் போதாமல் இன்னமுஞ் சொல்லுகிருன். ஓ வணங்காமுடி பெற்ற மருமகனே! கணக் கிறந்த கடல்போலொத்த சேனைகளும், இந் தச் சேனைகளுக்கு அதிபராகிய அரசர்களும், நாமெல்லோரும் ஒரே முகமாகயேகி மேன்மே லெழுந்து விழுந்து வரும் வாயுகுமாரனைக் கால்சாயவடித்து, பிரகாசிக்கும் வாள்-வேல்-சக்கரம்-சூலம் இவை முதலிய வாயுதங்களைக் கைக்கொண்டு, ஓயாம லொரேதரமாய் உருத் தெறிந்து, ஆளைமுடித்துப் போடுவோம் என்று சொன்ன சொல்லைத் தலைவனுகிய நராதிபன் கேட்டு, இது நல்ல சூட்சிதான் என்று மாமனைமெச்சி, அவன் சொல்வழியே நடக்கும்படிக்குச் சகல வேந்தர்களிடத்து மோடி உத்தரவுசெய்தான். அப்போதவ்வேந் தர்கள் போனதுபோக கொஞ்சமிஞ்சி யிருந்த விருதுபெற்ற ஒருகோடி சேனைகளோடு நாகக் கொடியோனுடன்கூடி முனைமுகத்திற் புகுந்து வரத்திஞலும் உரத்திஞலும் ஸ்திரத்தினு லும் பெற்றிராநின்ற வேலாயுதம்-சூலாயுதம்-சக்ராயுதம்-குந்தாயுதம்-தோமராயுதம்-வாளா யுதம் இதுகளையெல்லாம் வீமன்மேலெறிந்து சிறந்த வாது புரிந்தார்கள் அது காலையில், அந்நாககொடியோனுடன் கலந்துவந்தெதிர் ந்த அவ்வுரம்பெற்ற விருதுபெற்ற வீரானு டைய மேனியெல்லாம் உலர்ந்த சரகாகவும், வாயுகுமாரனுகிய வீமனடித்த தெண்டாயுதத் தெப்பலானது பொறிகிளர்ந்த தழலாகவும் புதைந்தெரித்து விரிந்திருந்தது.

## சகுனிராஜன் வதை

அந்தவேளையிற் சகாதேவன் தடந்தே ரேறித் தனித்து, வீரவில்லைக்குனித்து, வெங் கணைகளை தொடுத்து, வெகுசூதகமுள காதக மிகுதோதக ஜகபாதகனுகிய சகுனிமார்பிற்ருக் கினுன். அதைக்கண்ட துரியோதனனுகியமரு மகன் சகுனிக்குத்துணைப்பட்டு அந்தப்பாணத் தைத்தடுத்து, உடனே சமுத்திரத்தை யுண்ட வேல்போன்ற ஒரு வேலாயுதத்தை எடுத்து மந்திரித்து, சகாதேவனுடைய மார்பில் உரு வும்படியாய் வீசினுன். அந்த வேலாயுதம் வந்து சகாதேவன் மார்பிற் பாய்ந்தது, உடனே எதிரொருவரு மில்லாத தோளாண் மைபெற்ற இளவலாகிய சகாதேவன் இளை த்து ரதத்தின்பேரில் களைத்து வீழ்ந்தான். அவன் வீழ்ந்ததைப் பாதாளத்திற்சென்று, வாசுகியளித்த விஷாமிர்தம்புசித்த வாயனுகிய மாயாவீமன்பார்த்தாதரித்துத் தேற்றி, சகுனி க்கு உதவியாகத்தலைப்பட்ட வணங்காமுடியோ னுடைய மார்பில்தைத்து, முதுகிலுருவி யோ டும்படிக்குத் தேறிய நூறுதீக்கணைகளை மாற்றி ஏற்றினுன். அந்தத்தெப்பலினுல் வெஞ்சமரில் விருதா வீரங்கூறிய துரியோதனமகாராஜன், தலை நடுக்குற்றுக் குப்புற வீழ்ந்தான். எஜ மான் வீழவே, தேவர்கள் மெச்சாநின்ற அஸ் வத்தாமன் மனந் திடுக்கிட்டு, ஒரு வேலாயு

தத்தையெடுத்து பூசை கொடுத்துத் தாங்கள் யாவருஞ் சாகாதிருக்கவும், வீமசேனன் ஒருவன் மாத்திரம் முடிதுணிந்து போகவுமெண்ணி வேகமாய்விடுத்தான். அந்த வேலாயுதஞ் சுழன்று முனையுடன் வருவதை வீமன் கண்டு, வச்சிரவாளிகளை யேவிக் கோடி துண்டாகக் குறைத்து, மறுபடியும் அஸ்வத்தாமன் மார்பில் அழுந்தும்படியாய் வெவ்வேறான நூறு கணைகளை முடுக்கினான். அதனால், அநேகம் அரசர்கள் ஆவி மாய்ந்தார்கள். அஸ்வத்தாமனும் அரைநொடியில் அறிவழிந்து தேரின்பேரில் தியங்கி வீழ்ந்தான். இப்படியாக அஸ்வத்தாம னென்னும் மருமகன் வீழ்ந்த இடுக்கத்தைக்கண்டு ஏக்கங்கொண்ட விற்குருவாகிய கிருபாச்சாரியார் வெகுண்டு, தானேறிய தேரைச் செலுத்திவந்து விதரணனாகிய வீமசேனனுடன் போராடி, வேதமந்திரங்களுடன் கூடி, தன்பேரில் வருகின்ற வெஞ்சரங்களால் வாடி, கிருபர் புறங்கொடுத்தோடினார். அவர் பக்கத்தில் சூழ்ந்திருந்த மகா சூரர்களெல்லோரும் பறந்தோடினார்கள்.

அந்தச் சமயத்தில், அரவத்துவஜந் தரித்த அரசனுடைய மாமன் ஆத்திரப்பட்டு மகா அவசரத்தோடும் வந்து, ஓடுகிறவர்களையெல்லாம் நிறுத்தி, முன்னந் தன்னுடன் உடன்று உறுத்திப் போர் செய்யவந்த சகாதேவனிடம்போய் எதிர்த்தான். அப்படிவந்த அந்தச் சகுனியைக்கண்ட சகாதேவன் சீற்றங்கொண்டு தன் மனந்தரியாமல் அவனோடு இவனுமெதிர்த்து அருஞ்சமராடி, வெகு சீக்கிரத்தில் அவனுடைய ஆவியை அகற்றிவைக்கும்படியாய் நினைத்து, தான் சபையிற் கூறிய சபதங்கெடாமல் ஒரு வேலாயுதத்தை எடுத்து மிகவும் வணங்கி வந்தித்துச் சிந்தித்து, மந்திரங்களைப் பந்தித்து சூரன்மேற் றொடுத்த சுப்பிரமணியருடைய வேலாயுதம் போற் சென்று அகில புவனேஸ்வரனாகிய அரவகேதனனுக்கு அம்மானாகிய சகுனியின் ஆவியை அடர்த்திடென்று பணிந்து துணிந்து விடுத்தான். இவ்விதமாக நகுலனுக்கிளைய சகாதேவனென்னும் போர்மீளிபோக்கிய வீரவேலானது பெரிதாகிய ஆணிடிபோல் இடித்து, மலைகளையெல்லாம் பொடித்து, பெருங்கடல் போலிரைந்து யருமையாகிய அம்மானுடைய வஞ்சகம்-பொய்-பொறாமை - கோள் இவை முதலிய நன்செய் பயிரேறிய நெஞ்சமாகிய மார்பிற்புகுந்து கரகரவென்று உருவி உள்ளே தங்காமல் அம்மாமனுடைய மார்பை இருபிளவாய்க் கிழித்துப் புறமுதுகில் உருவிச் சென்றது. உடனே சகுனியானவன் உதிரம் வழிய, உயிர்நிலைகுலைய, உடல் பூமிமேற்சாய உயிர் வானமடைய ஒழிந்தான். இவ்வாறு தாவிய வெம்புரிபூண்ட இரதத்திலுற்ற சகாதேவராஜன் ஏவிய வேலாயுதத்தினால், வெகுநாளைய பாவியென்னுஞ் சௌபலராஜனாகிய சகுனி ஆவியொழிந்தானென்று கேட்ட மாத்திரத்தில், வெஞ்சமராடுகின்ற பூமியிலுள்ளோர் யாவரும் அசைவற்று நின்றுவிட்டார்கள். சிலர் பாவி தொலைந்தானாவென்று பரிந்து பேசத் தொடங்கினார்கள். அந்த வேளையிற் பார்முழுதாளும் பார்த்திபனாகிய துரியோதன மகாராஜன் பிராணநீங்கிய பிரேதமாகிய பேர் உடலைப்போல் வண்மையும், உண்மையும், வலுமையும் அழிந்து, ஓ எனதருமை பெருமைத் தெரிந்து வாழ்விக்கவந்த என்மாமா! எல்லாயுத்திக்கும் பூமானாயிருந்து அநேகம் பொருளைத் தெரிந்து என் புத்திக்கிசையப் பொருந்தி, இதுவரையிலும் என்னைவிட்டு நீங்காதிருந்து, இப்போது பிரிந்துபோவது ஞாயமாமா? நான் தனியாயிருக்கலாமா? உங்களையெல்லாம் நலிவித்த பாவிகளுக்கு இந்தப் பழிபிடிக்காமல் வீண்போமா? என்று கோமானாகிய பூமான், துரியோதன னென்னுஞ் சீமான், நானாவிதமாகப் புலம்பி வருந்தி வாடிப்போனான். அதுகாலையிற் பகற்போரை செலுத்துஞ் சூரியன் நடுவானத்தில் வந்தான் என்று வைசம்பாயனர் சொன்னதைக் கேட்ட ஜெனமேஜெயமகாராஜன் திகிலடைந்து, தெளிவுமாறி, ஆ தெய்வமே! இந்த மேலான மதிமரபிலுதித்த வெகுகோடி மன்னர்களில் இத்தன்மையாகிய ஆச்சரியச்செயல்களை விளைத்தவர்கள் ஒருகாலத்து மொருவருமில்லையே. ஆகிலும், நேருக்குநேரே தெரிந்தும், உடனுக்குடனே மறந்து போகும்படி நேரிடுவதென்னகாரணமோ; ஐயா! எப்பேர்ப்பட்ட செல்வம்; எத்தன்மைவாய்ந்த பலம் என்னவிசாலமாகிய ஸ்தலம்; எத்தகையான மேன்மைபெற்றவரம்; என்னென்ன புகழாகிய உரம். ஆ! இவைகளெல்லா மிருந்தும், (ஆயிரங்குணம் ஒரு லோபகுணத்தால் அழியும்) என்பதுபோல், அன்யாயமாயவைகளைப்போக்கிக்கொண்டு தாங்களும் போய்விட்டார்களல்லவா? ஆனாலிதுகளெல்லாம் நமது செயலல்ல. ஜன்மாந்திர நல்வினை தீவினைக்கீடாய் நடத்திவைக்குந் தெய்வச்செயல் என்று தனது மனதைத் தானே தேற்றிக்கொண்டவனானான்.

**சல்லியபர்வம் முற்றிற்று.**

ஸ்ரீ கிருஷ்ணாய நம:





ஸ்ரீ ருக்மிணீ ஸத்தியபாமா ஸமேத ஸ்ரீ வேணுகோபால பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீமஹாபாரதம்

## பத்தாவது,

## சவுத்திக பர்வம்

### கண்ணன் துதி

மருந்தை வானவர்க்களித்து வையமுண்டு செய்யசெம்
பருந்திலேந்தி மாதவத்தார் மணியவாயற் பாடியிற்
பொருந்துகின்ற பொதுவர்மாதர் பூந்துகிற் தவர்ந்துபூங்
குறுந்திலேறு கின்றகொண்டல் குரைகழல்க டுதிசெய்வாம்.

### சூதபுராணிகர் வாக்கியம்.

ஓ சவுனகாதி முனிவர்களே! இவ்வாறு உயுத்த பஞ்சகத்தின் நான்காம் பாகமாகிய கர்ன பர்வத்தைக்கூறிய வைசம்பாயன முனிவரை ஜெனமேஜெய மகாராஜன் பணிந்து எழுந்து, சுவாமி! கிருபாசாரியர் இவ்வளவிலேனும் போரை நிறுத்திச் சமாதானமாதல் நன்றென்று சொல்லியும், அதைத் துரியோதனன் மறுத்து மத்திரதேசாதிபனை சல்லிய ராஜனை சேனாதிபதியாக்கியதும், அந்தச் சல்லியன்செய்த அரைநாட்போரில் தருமராஜன் தன் படையினது குறைவுகண்டு வருந்தியதை கேட்ட கண்ணனவர்க்குத் திடங்கூறித் தேற்றியதும், சல்லியன் தருமனுதியரைப் பலமுறை புறங்கண்டதும், தருமனுதியர் அச்சல்லியனை பலமுறை புறங்கண்டதும், அர்ச்சுனனால் கிருபாச்சாரியும் அஸ்வத்தாமனும் அலங்கழிந்ததும், தருமராஜனாற் சல்லியன் விண்குடி புகுந்ததும், சகோதரர் தொண்ணூற்றொன்பதின்மரு மிறந்ததைக்கருதி வருந்திய துரியோதனனைத் தேற்றி, மிகுந்துள்ள சேனைகளைக் கூட்டி யழைத்துக்கொண்டு மீண்டும் யுத்தத்திற்குவந்த சகுனியைச் சகாதேவன் சாய்த்ததுமாகிய விச்சரித்திரங்களை யெல்லாஞ் சாங்கோபாங்கமாகக் கேட்டு ஆனந்தித்தேன். இப்பால் ஐந்தாம் பாகமாகிய சவுத்திக பர்வத்தையுந் திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்று கேட்க, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினார்.

முதலாவது,

## சுயோதனன்வதைச் சருக்கம்

உயர்வற வுயர்நல முடையவ னெவனவன்
மயர்வற மதிநல மருளின னெவனவன்
அயர்வறு மமரர்க ளதிபதி யெவனவன்
துயரறு சுடரடி தொழுதெழன் மனனே.

ஓ இனமேவயமென்றவை தாவுறு, ஜென மேஜெய னென்றுலகேத்துறு, மகாராஜனே! கேளும்: பதினெட்டா நாள் பகல் பதினைந்து நாழிகைக்குமேல் தனக்கு ஒருவருந் துணையில்லாமற் போகவே, மனம் வருந்திச் சென்ற வேந்தர்கள்வேந்தனாகிய வணங்காமுடியோன் மீண்டும் ஒருவாறு தேறினவனாய், மனங்கன்றி வருந்தாதவனாய், வாடாமல் - வதங்காமல் - புறங்கொடுத் தோடாமல், மதியை நிலைக்க நாட்டி, விதியை நலக்க நீட்டி, மேலுமேலுங் கோபம் வீறுகவெகுண்டு, பாண்டவரைவரையும் இன்று நானே முடிக்கிறேன். ஈரேழு பாரையும் நானே ஆளுகிறேன். இனி நிலை பெற்று வாழுகிறேன் என்று நினைத்துக் கொண்டு, தானே சுயம்பிரபுத்துவ முடையவனாய்ப்பெயர்ந்து, அப்போது தனக்கு மிகுந்திருக்கின்ற சேனைக ளெவ்வளவென்று கணக்கிட்டான். இயானைகளாயிரம்-தேர்களாயிரம்-குதிரைகள் நானூறு-படைகளேந்தும் பதாதியர் நாலாயிரம் இவ்வளவுதான் சேனைகளிருந்தன. இவைகளை யெல்லாஞ் சேகரித்துக் கொண்டு, அவர்களுக்கு வேண்டிய தயிரியங்களைச் சொல்லி, சக்ரவாளமென்னுந் தேர்மேலேறி, சங்கு-தாரை-தப்பட்டை முதலாகிய வாத்தியங்கள் கோஷிக்கச் சென்று சண்டை தலைப்பட்டு நின்று சகல ஆடம்பரத்துடன் எதிர்ந்து, கோபமுதிர்ந்து, மீசைதுடிக்க தெங்கரம் பதைக்க, புருவநெறிக்க, புகைமலிந்து கதிக்க, பொறியெழுந்திறைக்க, நமடு கடித்து, நாக்கைக் குதப்பி, பல்லைக் கடித்து, பரக்க விழித்து, உறக்கக்கூவி, உறுமிக்கறுவி உற்ற சேனைகளைச் சுற்றிலும் நிறுத்தி, வெற்றி வீரரை மேலுறச் செலுத்தி, முத்துக் குடைக்கீழ் முதல்வனிருந்து, சித்தமகிழ்ந்து, தேவ ணைப் புகழ்ந்து, அத்தனை பேரையும் அன்புடன் பார்த்து சற்றினிலைவர் தலைகளை வாங்கி வெற்றியைப் பெற்று விற்றிறங்கொண்டு, முத்தலம் பரவிய பற்றலர் யாரும் கைத்தலம் விதிர்த்தென் கால்மேற்பணிய நற்றவப் பயனால் நானுலகாள்வேன், செத்தவரெல்லாஞ் சீர்பெறச் செய்வேன், பஞ்சையர் தமக் கஞ்சி அடங்கேன், செஞ்சுடர்ப் படைகொளுந் தீரரே வாரும் என்று அமர்செய்ய எதிர்த்தான். அப்படியெதிர்த்து வருகின்ற வேந்தர் வேந்தனாகிய துரியோதன மகாராஜனைக் கிருஷ்ணமூர்த்தியும்,பாண்டவர்களும், இன்னுஞ் சில அரசர்களும்பார்த்து, ஒருவருக்கொருவர் கைகளை நீட்டி இதனைச் சொல்லுகின்றார்கள்.

### துரியோதனனிளைத்துங் கிளைத்துப் போருக்கெழுதலை அருச்சுனன் கண்டு வியப்ப கண்ணனதற் குத்தரங் கூறுதல்

ஐயனே! இவன் பூர்வந்தொடங்கி அணிவகுத்திருந்த பதினொரு அக்குரோணியாகிய பதாகினியாவும் பற்றற்றுப்போனது போதாதென்றோ, இன்னுங்கொஞ்சம் மிஞ்சியிருக்கிற சேனைகளைக்கொண்டு யுத்தஞ் செய்யவந்தான் இத்துரியோதன மகாராஜன். இவ்வளவோடு நின்றுவிடலாகாதா? முப்பது முழத்தில் முடியப்படாதது மூன்று முழத்தில் முடியப்போகிறதா? இந்த விரல்வேந்தன் இப்போது மேலிட்டுச் சண்டை செய்வதினால் இவனுக்கென்ன லாபம்? இன்னம் வெற்றிபெறப் போகின்றானோ; என்று பலருஞ் சொல்லிக் கொள்ளுங் காலையில், அருச்சுனனானவன் கிருஷ்ணமூர்த்தியின் முகத்தை நோக்கிச் சொல்லுகின்றான். ஓ ஆபத்பாந்தவாகிய ஆதியே! இந்தத் துரியோதனனுக்கு என்ன புத்தியென்று இயம்புவேன். வேலாயுதப்பிரயோகஞ் செய்யாநின்ற முருகக்கடவுளுடைய வெம்போரிற் சாகாமல் தப்பிப் பிழைத்திருந்தவர்யார்? இங்கே சகல சாஸ்திரங்களையுந் தனுவேதங்களையும் கற்ற வீராளாகிய தன்னியா ளெல்லோருங் காடாக்கினியாற் பற்றியெரியுங் காட்டைப்போற் கனலால் மெலிந்து கணத்தில் மடிந்து போனார்கள். அதுகளை யெல்லாம் பிரத்தியக்ஷமாய்க் கண்ணாரப் பார்த்திருந்தும் கொஞ்சமேனுமிவன் நினைக்கவில்லை. பார்த்தீரா ஆ கண்ணனே? போர்புரிவதற்காகத் தனக்குத் துணைப்பட்டு வந்தோர்கள் யாவருமே இறந்தவர்கள் போக, இருந்தவர்கள் இளைத்துப் பலங்குறைந்து எங்கேனும்போய்ப் பிழைக்கலாமென்று ஓடினாலும்,அவர்களையெல்லாந்தேர்வயுடைய துரியோதனனோடி வழிமடக்கி, வளையக்கட்டி, மறித்துத் தடுத்து, உக்கங்கொடுத்து அழைத்து வந்து மீண்டுக் குருக்ஷேத்திர பூமியிற்

சேர்க்கின்றான். அப்படி யிவன் சேர்ப்பது சண்டை செய்வதற்கென்று நினைக்கின்றீர். ஐயையோ? ஓ அனந்தசயனா இந்த யுத்தபூமிக் கிரையாக அவர்கள் ஆவியைகொடுத்து அரும் பழியை முடித்துத் தானும் படுவதற்கல்லவோ அவன்சேர்ப்பதும்ஓடிவருவதும் ஆ? ஆ? என்ன அனியாயக்காரன்; அந்தோ இவ்வளவு தாழ்மையான காலங்கிட்டியுஞ் சற்றேனும் நாண மில்லாமல் - வெட்கமில்லாமல் - மான மில்லாமல் வந்தானே? இது என்ன துணி வென்று சொல்லலாம்? என்று இந்திர குமாரன் சொல்ல, அந்த வார்த்தையை மாயவன் கேட்டுச் சொல்லுகின்றார்.

அப்பா அருச்சுனா! முன்னமுங்கள் பொருட்டினால் நானொரு தூதாளாகி வில்லாளிகளாகிய வீஷ்மர்-விதுரர் - துரோணாச்சாரியர்- கிருபாச்சாரியர் இவர்கள் முதலிய மேலோரெல்லோரும் பொருந்திய மேன்மைப்பெற்ற அஸ்தினா புரத்திற்குப்போய் வேந்தரை சேர்ந்து இதுவரையிலும் நடந்திருக்கின்ற சங்கதிகளையும், இனிமேல் விளையப் போகின்ற காரியங்களையும், வீரம் பெற்றிருக்கும் உங்களுடைய விற்றிறங்களையும், வெகு நயமாகப் பலவிதத்திலுஞ் சொன்னேன்; முனிவர் மூவர்களுஞ் சொன்னார்கள்; பெரியோர் முதலாகிய உரியோர்களும் பேசினார்கள்; இப்படிக் கெல்லாங்கூறிய அந்தநாளையிற் சற்றேனுமுடன் பட்டானா? இந்த நாளையில் உட்படுவதற்கு? ஓ அருச்சுனா! இது வல்லாமலுமவனுக்கு நானு நேரே சொன்னதாவது, நீ பொருக்காலுஞ் ஜெயம்பெற மாட்டாய். அதேனென்றால், வஞ்சகம்-பொய் - பொறாமை குற்றம் இவை முதலிய வுற்ற உன்மனக் கெடுதியினால், உனக்கு படைத்துணை வரும்படியாகிய விறல்வேந்தர்களியாவரும் உயிரிழந்து உன்புத்திர மித்திர களத்திராதிகளும் போய் நீ தனித்து நிற்பாய். உன்னைக்கண்ட பாண்டவர்கள் புற்றிலிருந்தெழும் பாம்பை கண்டதுபோல் அடி அடி யென்று தடியெடுத்து வரும்படியாகும். அக்கால் நீ கண்கலங்கி, நிலைத்து நிற்க இடமில்லாமலோடி, துஷ்ட ஜெந்துக்கு ஒருவரும் உதவி செய்யாமற் கொல்ல சொல்லுவது போல் உன்னைக்கொல்லத் துரத்தும்போது, நீ வாடி, ஒருத்தனுகஓடி, நிலைத்து நின்றுபோராடி தலைநசுங்கி இறங்கிப்போவாய். இப்படிக் கெல்லாமில்லாமல் எவ்வுலகுங் கொண்டாடும் படியாய் இந்தக்குலத்தின் பேரை நிலைநிறுத்தும்படியாய் உன்னாலே உன் குலத்தாருக்குப் பெருமை வரும்படியாய் செவ்வைப்பட வேண்டுமென்று உனக்கு மனதிருக்குமாகில், இப்போது உனக்குப் புத்திசொல்லுகின்ற யுத்தத் திறங் கண்டிருக்கும் நற்புத்தியை யுடைய நல்லோர்களாகிய எம்போலொத் தவர்களின் சொல்வழி நிற்பாய். எங்கள் மார்க்கத்தில் நிற்பையாகில் இந்தபலன் உனக்கு உடனே தெரியும். அப்போது, குற்றமற்ற கோவேந்தனாகி நல்ல வாழ்வைப்பெறுவாய் என்றுபல நயத்திலுங் கரைத்தேன்; வெகுபயத்திலு முரைத்தேன்; நான்சொல்லியதி லொன்றும் அவனுடைய மனத்துக் கிசையாமல், எல்லாருடைய பேச்சையுந்தள்ளி, பாண்டவராகிய உங்களை மிகவும்எள்ளி, அந்தச் சபையிடத்தில் இவன் துள்ளி, அன்றுபேசிய விற்றிறவீர முதலியவைகளை இப்போது உள்ளி உரைப்பது அருமையானகாரியம். அப்பா அருச்சுனா! நானென்ன சொல்லப் போகின்றேன்; இவன் குதித்த குதிப்பும், இவன் தம்பி துச்சாதனன் பதைத்த பதைப்பும் நான் சொல்லமாட்டேன். இனிமேலவனுக் கென்ன சத்திருக்கின்றது. நானுமற்றப்பெரியோர்களுஞ் சொன்னவைகளைஎல்லா மப்போது கேளாது விடுத்தாலும் இப்போதாவது உன்னி பாராமலின்னும் போருக்கென்றே வந்தெதிர்க்கின்றான். இன்னுமிருக்குஞ் சில பேர்களை யெல்லாரும் பிழைத்துப் போகவொட்டாமல் முடித்துவிட எண்ணங் கொண்டிருக்கிறான். அவனெண்ணப்படியே முடிவாகட்டும், அப்பால், இவனைத் தனிமைப்படுத்தி இவனுக்கு நான் முன்பு சொன்ன சங்கதிகளை எல்லாந் தெரியப்படுத்தி பிற்பாடு இவன்பிராணனை முடிக்குமாறு யோசிக்க வேண்டியதே; வேறு பேச்சென்ன யிருக்கிறது. ஓ வீற்பசுவாகிய வேந்தனே! இவன் பிறந்தபோதே வேதப் பொருளாய்ந்த முனிவோராகிய முதல்வோர்கள் இவனுக்குச் சாதகன்மஞ் செய்தார்கள். அந்தச் சாதகத்தில் என்னபல னிருந்ததென்றால், சொல்லுதற்கரிதாகிய இந்தப் பூமியிலுள்ள பேர்களையெல்லா முடித்து, பின் தானு மிறப்பானென் றிருந்தது. அதனாலிவனுக்கு நராந்தக னென்று பேரிட்டார்கள். (பெரியோர் வாக்கு பிரணவம்,) என்று (வெகு ஜனவாக்கியம் வேத சிலாக்கியம்.) என்றுமுள்ள மூதுரைக்கு, இப்போது சரியாய் முடிந்தது. இனி நாம் பேசவேண்டிய தொன்று மில்லை என்று கைத்திறங்கொண்டு காளையாகிய காண்டீபனுக்குக் கருமேகவண்ணக் கண்

ணன் ஓதினர். இந்த வார்த்தையைக் கேட்ட
அருச்சுனன் நகைத்து, அவருடைய இஷ்
டத்துக்கு ஏற்றமாக ஒத்து இருந்தான்.

### துரியோதனன் கொணர்ந்த மிக்கச்சேனைகளைப் பாண்டவர் பற்றறக்கொல்ல, அதுகண்டவ னஞ்சியோடி யொளித்தல்

அந்தச் சமயத்தில், புட்பங்களின் இதழி
னிடத்தி லுறைந்த தேன்களை வண்டுகளுண்டு
பாடும்படியா யிருக்கிற மாலை யணிந்த மார்ப
முந் தோளுங்கொண்டு, விற்போரிலும் மற்
போரிலும் விதரணசாலியாகிய வீமசேனன்
தேர்விட்டிழிந்து, கதாயுதங் கைக்கொண்டு
விரைந்து, துரியோதன மகாராஜனுக்கு எதிர்
வந்து குதித்து, ஆளைப் பார்த்து மதித்து,
ஆண்மையோங்க மதர்த்து, பொறி பறக்க
விழித்து, பேரோசைபடச் சிரித்து, கதையை
கரகரவென்று சுழற்றிச் சேனைகளின்பேரில்
வீசினன். அப்படி வீசியபோது, வெற்றிமாலை
புனைந்த வேந்தர்களும், நால்வகைச் சேனை
மாந்தர்களும், ஆகாயமளாவிய தேர்களும்,
மலைகள்போன்று பாரித்த யானைகளும்,
காற்றையொத்த குதிரைகளும், பயமில்லாத
வயவர்களும் பட்டார்கள். முகமாறிக் கெட்
டார்கள். இவர்கள் பட்ட பாட்டைப்போல்
இதுவரையிலும் எவரும் பட்டதில்லை. யாவ
ரும் இப்படி கெட்டதில்லை. அவ்வீமனை
மடக்கி எதிர்ப்பவர் ஒருவருமின்றி அனியாய
மாய் அழிந்தார்கள். மலைக் குன்றுகளுக்
கொப்பாகிய மதயானைகளெல்லாங் கொம்புக
ளொடிந்தும், தும்பிக்கை யறுந்தும், கால்
கள் முறிந்தும், வால்கள் தரிந்தும், உடல்க
ணெறிந்தும், குடல்கள் சரிந்தும், செவிக
ளிழந்தும், புவிமேல் விழுந்தும் பொன்றும்
படிசெய்து, தனக்கொருவரும் நிகரில்லாமல்
தேவர்களுக்கு நாயகனாகிய தேவேந்திரன்
வானமளாவிய மலைகளின் இறகுகளை யறுத்த
போது, அம்மலைகளை வீழச்செய்த வச்சிரா
யுதத்தின் வல்லபத்தை ஒத்திருந்தான் வாசம்
பொங்கிய மலைதாங்கிய மாவீரனென்னும்
அவ்வீமசேனன். இதன்றியும், தேர்கள் முழு
துஞ் சிகரமுறிந்து மொட்டையாய் நிற்கும்
படி இடறி, மேகமண்டலத்துக்கு மேற்பட்ட
மகமேருவினுடைய முடிகளைக் கத்தரித்த பிர
சண்ட வாயுவைப்போல் நின்றான் எண்டிசை
யும் பேர்பொருத்த பெருந்தகையாகிய அவ்
வய வீமன். இவ்விதமாக வீமசேனனனவன்,
பண்டகளுள் நுழைந்து பற்றறக் களைந்து

வரும் வேளையில், மேகவாகனன் பிள்ளையாகிய
வீரவில் விஜயன், தனது வெற்றிகொண்ட
விஜய காண்டீபத்தை வளைத்து, நாறுநூறா
யிரம் அம்புகளைக் கும்பலாய் விடுத்து, தேகத்
தையும் மார்பத்தையுந் துளைத்து, சூரியன்
புறவிக் கொப்பான வேகமாகிய குதிரைகளை
யும், மன்னர் மண்டலீகர் முதலாகிய மன்னர்
களையும் மண்மேல் அடித்துத் தள்ளினன்.
நகுல சகாதேவர்கள் ஒரு பக்கத்தில் புகுந்து
குறுநிலமன்னர் முதலிய கோவேந்தர்களைக்
கொன்றார்கள். இப்படி பாண்டவர்கள் பல
முகத்திலும் ஏர்ப்பட்டுப் பாழ்படுத்தி வரும்
போது, துரியோதன மகாராஜனுடைய
பாசறையாகிய பாளயத்திற் காவலிருந்த காவ
லரும், பூவலரும், மறுதேசபாஷை மன்னர்
களும், மந்திரத்தலைவர் - தந்திரத்தலைவர் -
வாகனத்தலைவர் முதலிய வீராளடங்கலும்,
ஒரேமுகமாய்த் திரண்டு மேகங் கவியும் பரிசு
போல் வந்து குவிந்தார்கள்.

அப்போது அம்முடிமன்னர்களும், அவ்
வவர்களுடைய பாயும் பரிகளும், சக்கரங்க
ளுடைய தேர்களும், அத்தேர்க் குதிரைகளும்,
அக்குதிரைகளோட்டுஞ் சாரதிகளும், பலம்
பொருந்திய காலாள்களும், கால்மாடு தலைமா
டாகி, உரமாறி-உடல்மாறி-உயிர்மாறி-உரை
மாறி-உள்மாறி-சிரமாறி-கரமாறி-கால் மாறி-
மேல்மாறி - தோள்மாறி - தாள்மாறி - தடு
மாறிக் கெட்டழியுங் கேட்டை எட்டுத் திக்கும்
அரசாட்சி செலுத்திய வணங்கா முடி இறை
வன் கண்டு, மனக்கிலேசங்கொண்டு, எல்லா
ரும் போய் விடுகின்றார்களே; இனிமேல் நமது
பேரில் திரும்புவார்களே என்று ஏக்கங்
கொண்டு, தனது முடிமேற் கவியப் பிடித்தி
ருந்த சந்திர வட்டக்குடையும், நவரத்தின
கசித உசிதமுடியும், பிரகாசக் கதிரொளிச்
சொலிக்கும் ஆபரணங்களையும், அழகிய உபய
சாமரைகளையும், மெத்த விலையுயர்ந்த மின்னு
பரணமணிந்த மலைபோலுயர்ந்த லட்சணங்க
ளமைத்த பலந்திணிந்த சுத்தபவித்திரமாகிய
பட்டத்து யானைகளையும், பட்டத்து குதிரை
களையும், பட்டத்து தேர்களையும் விட்டுவிட்டு,
இவ்வுலகத்தை ஏக சக்ரேஸ்வரனாக ஆள
விருந்தஎண்ணத்தை ஒருபால் துறந்து, ஆருக்
குந் தெரியாமல் ரதம் விட்டிறங்கி, ஆமை
போற் பதுங்கி, ஒருபக்கமா யொதுங்கி, உடல்-
உள்ளம்-உயிர் இவை முதலியவும் நடுங்கி,
கைக்கொண்ட கதாயுதமும் மாண்டு போவோ

மென்று மனத்திற்கொண்டாட பயமும், ஆகிய இவ்விரண்டோடு தானொருவனுமாய்ப் புறங் கொடுத்தோடினான். இவன் இன்னசமயத்தில் இன்னகாலத்தில், இன்னபடிக்கு மறைந்து போய் விட்டானென்று இவ்விடத்தி லிருந்த பாண்டவர் முதலிய படைகளுக்குந் தெரியாது. துரியோதனனுடைய ரதம், யுத்த பூமியில் மெத்த தூரத்தில் நின்றிருப்பதைக் கண்டு, அரசன் இருக்கின்றா னிருக்கின்றான் என்றே எண்ணி, யுத்தத்தின் பேரில் மனம் நண்ணி யிருந்து விட்டார்கள். இப்படியிருக்க, எல்லாச் சேனைகளையுந்தீர முடித்துத் துரியோதனனுடைய தேரை நாடித் தீன் தீனென்றுசென்று, யாவருஞ்சூழ்ந்து வளைந்து நின்று பார்க்கும்போது, அவனது கேயூர மணிகுண்டல கிரீட கடக கங்கண தோளணி மதாணி தனுர் பாண முதலிய யாவருமிருக்கக் கண்டனர். ஆளை மாத்திரங் கண்டிலர். உடனே யாவரும் ஆச்சரியப்பட்டு, ஆ! ஆ! அராப்பதாகை வேந்தன் இராப்பெருச்சாளியைப்போற் எப்படி போனான்; என்று யோசித்து சரிதான்; தாரணிந்த மார்பனாகிய அத்தராதிபன் எல்லாப் படைகளும் இறந்து போகவே, இனி யிருந்தால் நமது பிராணனும் போய்விடுமென்று நினைத்து பயந்து, தன்னுயிர்க்கு உதவி யாகும்படியானதைத் தேடக்கருதி ஓடிப்போய் விட்டானாக வேண்டும் என்று நானாபக்கத்திலும் நாடித் தேடினார்கள். பிணங்களையெல்லாம் புரட்டிப் புரட்டிப் பார்த்தார்கள். இரத்த வெள்ளப்பள்ளங்களெல்லாம் இறங்கிக் கலங்கினார்கள். தேர்த் தட்டுகள், நாயகத்தட்டுகள், சுரங்கத்தட்டுகள், யானை-சிங்கங்கள்-குதிரை வலைகள் இவைகளெல்லாஞ் சோதித்து, எங்குங்காணாமையால் ஓ! ஓ! வென்று ஐவர்களுடைய படைக்கலப் பாணியராகிய சேனைகள் ஆர்பரித்தார்கள்.

அப்பால் யாவரும்ஒன்றாகக்கூடி, கொடுங்கோல் கொண்ட பாண்டவனாகிய துரியோதனனுடைய மீதியிருந்த சேனைகளையெல்லாந் தேடித்தேடி, ஒன்றொழியாமற் கொன்றார்கள். ஒப்பற்ற வீராளாகிய பாண்டவர்கள் அன்று செய்த யுத்த களத்திற் பிராணனழிந்து வீழ்ந்த உடல்களானது, பெரியமலைகளைப் போற் பெருக்கமாய்க் குவிந்திருக்க, அந்தப் பிணமலைகளி லிருந்து பெருகிவரா நின்ற இரத்த வெள்ளங்களானது மலையருவிகளைப் போல் வழிந்து, குறைவற்ற அநேகங்கோடி ஆறுகளாய் அநேகமுகமாயோடின. அவ்வாறோடவும், வெகுவாகிய காக்கை கழு முதலிய பட்சிகளும், நரி-நாய் முதலிய மிருகங்களும், டொங்காகிய வயிறுகளையுடைய பேய் பூதகணங்களும், குடியானவர்களைப்போற் பூமியைக்கிளறி, அபகீர்த்தியை ஆஸ்தியாகப் பெற்ற அயோக்கியர்களுடையஉடலையும், குடிவாரமாகக்கொள்ள, வெற்றியென்று சொல்லுகின்ற பயிர்களைத் தழைக்க விளைத்த பாண்டவர்கள், அந்த வெற்றியாகிய விவிவிற்சத்தியமென்னுங் காவலமைத்துக்கீர்த்தியாகிய மேல்வாரங்கொண்டு, பறந்தலையாகிய யுத்த பூமியை அரசு செய்யுந் தன்மைபோலிருந்தார்கள். அப்போது, பாண்டவர்களிடத்திற்சாகாமல் தப்பியிருந்த சேனைகள் எவ்வளவென்றால், இரண்டாயிரந் தேர்களும், இரண்டாயிரங் குதிரைகளும்; எழுநூறு யானைகளும், பதினாயிரங்காற்பலங்களும், பரதகுலம்உய்யும் படிக்குப் பிறந்த பாண்டுமகாராசன் பூர்வஞ்செய்த நல்வினைப்பயனால், இவ்வுலகத்திற் சத்தியத்தையுந் தருமத்தையும் நிலை நிறுத்தப் பிறந்த தருமராசனிடத்தில் தங்கியிருந்தன. இதல்லாமலும், துருபதேயராஜனுடைய குமாரன் திர்ஷ்டத்துய்மன், சிகண்டி, பாண்டவச்சேனைகட்கு இந்தபதினெட்டுநாளும்போசன குறைவில்லாமல் நடத்திகொண்டுவந்தபெரும்படைக்குரிய சோழராஜன், சாத்தகி, பாண்டவர்கள் ஐவர். இளம்பாண்டவர் ஐவர். திருமேனிபடைத்த கண்ணன் இவர்களுந் துன்னி விளக்கமா யிருந்தார்கள். ஆகாயவாசிகளாகிய தேவர்கள் இந்த அதிசயங்களை யெல்லாங் கண்டுகளித்து, அப்பொன்மாரியும் அலர்மாரியும் பொழிந்தார்கள். வெவ்விய விஷம்பெற்ற நாகர்களாகிய பாதலத்தவர்களுஞ் சந்தோஷித்து, இன்னும் என்ன நடக்கப்போகிறது என்று மேல்விளையும் விளைவைப் பார்த்திருந்தார்கள். திக்கெட்டிலும் நிறைந்த மலைக்கம்பத்திற் கட்டப்பட்டிருக்கின்ற எட்டு யானைகளும் மதசலங்களைப் பொழிந்து கலித்தன. இந்தப் பூமியின்கணுள்ள பல்லாயிர முயிர்களும் எக்களிப்புடன் இரைந்து மகிழ்ந்தார்கள். உலகத்தில் தருமம் நிலைபெற்றதே என்று தேசுநிறைந்த தருமதேவதை கையெடுத்து ஆர்த்தனள். ஓசைபெற்ற நான்கு வேதங்களும் நம்மிடத்திலிருக்கிற வேள்விதிமுதலிய முறைமைகள் இனி தப்பாமல் நடக்குமென்று உவகையுடன் முழங்கின. மாசற்ற பலம்பெற்ற பூமிதேவியானவள், நமது பாரம் நீங்கிற்று

என்று ஜகதீசனாகிய தற்பரனையும் பாண்டவ ராகிய ஐவரையுங் கொண்டாடிப் புகழ்ந்து வாழ்த்தினாள். நீலமேக சாமளவர்ணனாகிய நெடுமாலும், ஜெகமெங்குஞ் சீர்நிறைந்து பேர்சிறந்த வார்கைச்சிலைத் திறத்தையுடைய பாண்டவர்களும் ஜெயபேரி முழக்கத்துடன் குருக்ஷேத்திர பூமியிலிருந்தார்கள்.

### துரியோதனன் தனித்தவிடந் தேடியிருந்து தன்னைத்தானே நொந்துகொண்டு மீண்டுந் தேறித்திடங்கொள்ளுதல்

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! இப்பால் மாலைபுனைந்த வஞ்சகனாகிய மாமன் சகுனியுடனும், தம்பிமார் முதலாகிய கொடிய துஷ்டர்களுடனும் உலகாண்டு வந்த உரகக்கொடியோனாகிய துரியோதன மகாராஜனுடைய தன்மையை எடுத்துச் சொல்லுகிறேன் கேளும்: அப்பாந்தளங்கொடிசேர் பார்த்திப நரேந்திரன், மாந்தரிற்சிறந்த மாமுடி பெற்றும், தீவினை வசத்தாற் சீரெலாந் தொலைந்து; மேவிய சமர்நிலம் விட்டகன்றிட்டு, தாவிய புலிவாய் தப்பியமான்போல், சாவியாம் பதர்கள் தான்பறப்பதுபோல், காவியங்கண்ணார் கலனழிதால்போல், ஆவிபுரப்பான் அறிவழிந்தேங்கி, பூவியல் பொருந்திய பூதபைசாசுகள், கூவிய களத்திற் கூன்வளைந்தோடி, பாவியாய்க்கானிற் படர்ந்தனன்றோ? ஐயோ வெல்லுந் தருமம் விறலழிக்கும் பாவமென்னுஞ், சொல்லுந் தலைநிறுவித் தோற்றந் தொலைவெய்தி, கல்லுங்கடறுங் களத்திற் பல கடந்து, கொல்லுமரிகைப் பிழைத்த குஞ்சரம்போ லோடினான். ஆ! ஆ! என்ன ஆச்சரியம். ஐயா மகாராஜனே! நல்லோர் மகிழுந் தருமமானது பொல்லாக் கன்மங்களெல்லாவற்றையும் போக்குமென்றும், புல்லோர் நினைத்த எல்லாவர்மத்தையும் பாவமென்பது கூடிப் பொன்றுவிக்குமென்றுஞ் சொல்லிய மேலோர் வாக்கியம் பழுதுபடாமல், இக் கௌரவகுல முதல்வனாகிய துரியோதன மகாராஜன் அதனை நீயாக நிறுத்தினான். இதற்குச் சாக்ஷி தருமத்தையுடைய முரசக்கொடியோன் விருத்தியடைந்ததும்; அதர்மத்தையுடைய அரவக்கொடியோன் அழிந்து அடங்கிப்போனதே போதுமல்லவா? இவன் தன்னை யாவரும் மதிக்கும்படி இருந்த பெருமைத் தோற்றத்தைத் தூரத்துலையிலோடிப்போகச் செய்து, கல்லுங் கடறுமாயுள்ள காட்டை நோக்கி, இந்த யுத்தகளமுதல் நெடுந்தூரம் வரையிலும் பலவாறுயுள்ள மேடுபள்ளங்களிலுங் குண்டு குழிகளிலும் விழுந்தெழுந்து, ஓடி கடிந்து கொல்லவந்த சிங்கத்தினது கைக்குள் அகப்பட்டுத் தப்பிப் பிழைத்தோடுகின்ற தனியானையைப்போல் ஓடினானே? ஐயோ இந்தத் துரியோதனன் ஓடுங்காலத்தில் எப்படியிருந்தானென்றால், இன்னும் எங்கேயாகிலும் ஒன்றியாய்ப் பிழைத்து ஆத்மகோடிகளிருக்கின்றனவோவென்று தேடி ஓடுகின்ற உகாந்த காலாந்தகனுடைய இயற்கையைக் காட்டிக் கொண்டோடினான். எமனுக்கும் இவனுக்கும் உவமானம் எப்படியென்னில், எமனுக்கும் நீலவுடல்; இவனுக்கும் நீலவுடல். எமனுக்கு நெருப்புப் பொறியும்படியாயிருக்கின்ற வாள் விழி; இவனுக்கும் நெருப்பு எரியும்படியாயிருக்கிற வாள்விழி, எமன் கையிற் சூலமுந் தண்டும் எப்போதும் இருப்பன; இவன் கையிலுஞ் சூலமுந் தண்டும் இப்போது யிருக்கின்றன. எமனுக்குக் கருஞ்சுருட் கேசமானது பின் பக்கத்திற் நெருங்கிக்கொண்டு இருப்பது; இவனுக்குத் தலைமயிர் பின்பக்கமாய்ச் சுருண்டு அலைந்துகொண் டிருக்கின்றது. அந்த எமனுங் குருக்ஷேத்திர பூமி முதலிய புறம்பெல்லாம் ஓடிக்கொண்டிருக்கிறான்; இவனுங் குருக்ஷேத்திர பூமியை விட்டுப் புறம்பிலோடிக் கொண்டிருக்கிறான். எமன் வெகுபேரைக் கொல்லச் சிறந்தவன்; இவனும் வெகுபேரைக் கொல்லப் பிறந்தவன். ஆகையாற் காலனை இவனுக்கு ஒப்பாகச் சொல்ல என்ன தாழ்ச்சி.

ஓ மகாராஜனே! இப்பால் இப்பாவி ஆருக்குந் தெரியாமற் குருபூமியை விட்டு நெடுந்தூரம் ஓடினான். வாகன நீங்கி நடந்தறியாத இரண்டு தொடையும் - குதிகாலும் - உள்ளங்காலும், அயர்ந்து ஓய்ந்தான். சத்துருக்களுக்குத் தெரியாமல் தானிருப்பதற்கு ஒழிந்திருக்குந் தனித்த யிடமும், சந்தடியற்ற யிடமும், தருக்கணிறைந்து சூழ்ந்து மறைந்து தண்ணென்று கும்மென் றிருக்கும்படியான யிடமுந் தேடினான். அப்படிப்பட்ட யிடங்களில் ஒன்றும் அப்போது அவனுக்கு அகப்படாமையால் திகைத்தான். மலைத்தான். நாலாகிய திக்கிலும் புகுந்து புகுந்து குளிர்ந்த சோலைகளெல்லாம் நாடினான். இப்படிப் பார்த்துக் கொண்டு வரும்போது, அவ்விடத்தில் அடர்ந்த காடுகளினாற் குளிர்ந்த சூழலும்-சலநிறைந்த ஒரு மடுவும் - மனுற்றடமும் இருக்கக் கண்டான் கொடுங்கோல் கொண்ட கோவேந்

தன். உடனே அந்த மடுவின் அருகிற்சென்று நான்கு திசைகளையும் நன்றாய்ப் பார்த்து, சத்துருக்களாகிய பாண்டவர்கள் கண்ணிற் படமாட்டோமென்று நாம் இங்கிருப்பதை அவர்கள் கண்டு பிடிக்க மாட்டார்களென்றும், நினைத்து கனைத்து ஆர்த்து தன் கையில் இருந்திப் பொருந்திய பெருங் கதையுடன் இருந்து வேர்த்தான். அச்சத்தால் உடல் போர்த்தான். பழைமை பாராட்டி நினைத்தான். வெதும்பினான். வெய்துயிர்த்தான். பெருமூச்சு விட்டான். சத்துருக்கள் கையில் அகப்பட்டுப் போவோமோ வென்று பெரிய பயங்கொண்டான். மனம் புழுங்கினான். முன்னே எண்ணாத யெண்ணங்களை யெல்லாம் இப்போது எண்ணியெண்ணிச் சிந்தித்தான். எனக்குரித்தாய் உறுத்தி உறுதியாகச் சொல்லிய உத்தமர்களுடைய நற்புத்திகளைக் கேட்டு, அந்த வழி நடக்காமல் அவர்களுக்குத் துக்கமுண்டாக்கி, நமது பேரில் வெறுக்கவுஞ் செய்து, ஐவர்களாகிய பாண்டவர்கள் வெகு லேசாக உயிர் அழிந்துபோவார்கள். அவர்களிறந்து மேலுலகஞ் சேர்ந்துவிட்டால், நாமும் நமது தம்பிமார் முதலாகியபேரும், பந்துமித்திர சொந்த மனுஷாளும் இந்த மண்ணுலகத்திலிருந்து வல்லபத்துடனே ஏகச்சக்கிராதிபதியாய் அரசாட்சி செய்யலாம் என்று துணிந்து, சும்மாயிருந்த நல்ல பாண்டவர்களைத் தூண்டியில் இழுத்துக் கொடிய சூதாடி, அவர்களை மனங்குன்றச் செய்தோம். அக்கைதவங்களாகிய பாபங்களே ஒன்றாகச்சேர்ந்து நம்மைக் கெடுத்து இக்கோலங் கண்டதேயொழிய, அந்தப் பாண்டவர்களுக்கு நாளதுவரைக்கும் ஒரு கேடுமில்லை; அவர்களும் நமக்கொரு கேடு செய்ததில்லை; நாம் தேடிக்கொண்ட வினையே நம்மை யழித்தது.

ஆ தெய்வமே! ஈதென்ன தீவினைப்பயன்; மேலும், பூர்வத்திற் புத்தியிற் பெரிய உரிய சிறிய தந்தையாகிய விதுரராஜன் மொழிந்த மொழியும், மலரகிதராகிய முனிசிரேஷ்டாள் புகன்ற பொருள் நீதியும், மேலாகிய விவேகவான் என்னுஞ் சஞ்சயன் உபலாவியத்திற்குத் தூதுபோய் வந்து தான் உணர்ந்ததை உண்மையாய் அறைந்த அருமை வார்த்தைகளும், தேனுறைந்து தேன்பாடுந் திருத்துளவ மணிந்த திருமார்பினையுடைய செங்கண் மால் திவ்விய முனிவர் மூவருடன் வந்து தெரிவித்த திறனும்-விறலும்-சூட்சியும், என் தந்தை எனக்கிசைந்த சொந்தமாகிய பாச பந்தநீதியும் மறுத்து பாவத்திற் கேதுவாகிய மனங்கறுத்துப் படிறிழைத்த எனக்கும் வீரம் வருமோ, வெற்றிகிடைக்குமோ, கொடியபாவிக்குக் கோரியகோரிக்கை கூடிவருமோ, கைவல்ய மாமோ; ஐயோ ஏன்வரும்; இனிப் பிராணனுக்கு இடர்வந்த தென்பதற்குச் சந்தேகம் இல்லை. நாம் உயிர்தப்பி யிருக்கலா மென்னுந் திண்ணம் எவ்வளவுமில்லை. அனித்தியதேகத்தையொழித்து அழியத்தக்கதே. கர்னனுடைய வல்லமையும் கொடும்பாவ நிறைந்த கபடனாகிய சகுனியின் வஞ்சகத் துன்ப முதலாகிய பொய்மையையும் அனேக மன்னவர்களின் படைத்துணையையும் சேனைகளின் மிகுதியையும் நம்பி செயிக்கலாமென்று உறுதிகொண்டு தடுமாறி, யாவராலுந் துதித்தற்குரிய மதித்தற்கரிய மேலோர்களாகிய வீஷ்மாச்சாரியர், சிறிய தந்தையென்னும் உரிய விதுரராஜன், சிலைக்குருவாகிய துரோணாச்சாரியார், பூர்வாச்சாரியாகிய கிருபாச்சாரியார், அஸ்வத்தாமா இவர்கள் முதலாகிய பெரியோர்கள் படித்துப்படித்துப் பன்னிய சொற்பயனையும், பொருட்பயனையுங் கேட்டு ஒப்புக்கொண்டு உண்மையை நாடி நடக்காமல், இந்தகண்ட சாம்பிராச்சியமாகிய அரசாட்சியை யெல்லாம் பந்துமித்திர புத்திராதிகளுடனே பிராணனையுந் துறக்கலானேனே. ஓ தெய்வமே! இதல்லாமலும், என் தந்தையான திரிதராஷ்டிர பூபதியானவர், அடா மைந்தனே! நான்சொலுகின்ற இந்த மொழியைக் கேள்; இரண்டு கண்ணுமில்லாத என்னை தெடிஷ்தலாதிபதியாக்கிக் கீர்த்திபெறச் செய்து, மேல் விசாரணையெல்லாம் நடத்திக்கொண்டு பாராண்டு வந்த என் தம்பியாகிய பாண்டு பூபதியின் பாக்கியமே யல்லது வேறில்லை. ஆகையால், என் தம்பி பிள்ளைகளாகிய பாண்டவர்களுக்குப் பேர்பாதி ராச்சியம் பிரித்துக்கொடுத்து, அவர்களுடன் பொருந்திக் கலந்திருந்து உலகத்தைப் புரந்துகொள்ளுக என்று சூரியனைபோன்ற விவேகநிறைந்த எனது தந்தை யுரைத்த மொழியையுந் தட்டிவிட்டு, இந்தப் பாண்டவர்களைத் துன்பசாகரத்தில் மூழ்கும்படியாய்ப் பண்ணினோம்.

இதுவுமல்லாமல், எனக்கு நற்புத்தியை யுரைத்த நால்வரையும் விசனத்தில் மூழ்கி வெந்து போகும்படியாக்கி, எனக்குரியோர் முதலிய யாவரையும் போக்கி, என்னை நம்பி

யிருந்த ஏழைமாதர் முதலாகிய பேர்களும், இரங்கிக் கரைந்து யேங்கித் தியங்கும்படிக்கு விட்டுவிட்டு, ஐயோ! இப்போது கவனவேகப் புரவிபூட்டிய தேர்மேற்கொண்ட வீமசேனனுடைய கதாயுதத்தால் ஆவி நீங்குவேனோ? அழிபுங்கால மிதுதானோ? இது ஏனோ இருவினைப்பய னெளிதுதானோ. ஆகிலும், அது கெட்டுது. கக்கைக் கொடிபெற்ற கர்னன், வேதக்கொடி கட்டிய துரோணாச்சாரியர், யானைக்கொடிபூண்ட சல்லியன், பனைமரக்கொடி தரித்த வீஷ்மாச்சாரியார், இளவரசென்னுந் துர்ச்சாதனனுகிய தம்பிமார்கள், பன்றிக்கொடி தாங்கிய சயிந்தவன் அவர்கள் முதலானபேர்களல்லாமல், உச்சியில்வந்த சூரியனைப்போற் பிரகாசிக்கு முடிதாங்கிய கொடியோங்கிய குடைவீங்கிய வேந்தர்கள் பலபேர் எனக்குத் துணையா யிருந்தவர்கள். இவர்கள் யாவரும் நமக்காக உயிர்விட்டு மடிந்துபோயிருக்க, இப்போது நமது பிராணனைக்குறித்து நாம் வருந்துவது நன்மையான அழகல்ல. நமதுயிர் மாத்திரமென்ன கருப்பட்டியோ? கீர்த்திபெறுகிறது பெரிதே யொழிய அபகீர்த்தியடைந்து, பூமிக்கும் பொருளுக்கும் பிராணனுக்கும் ஆசைப்படுவது புகழல்ல; இவ்வுலகத்தில் யாவருங்கீர்த்திக்குப்பாடுபடுவாரேயன்றி, அபகீர்த்திக்குப் பாடுபடுவோர் எவர்களுமில்லை. ஆனதால், இனிமேல் உயிருடனிருந்து வாழமாட்டேன்; குந்திமைந்தருடன் கூடி அவர்களுக்குத் தாழவுமாட்டேன்; அவர்களுக்கு நான் தளர்ந் திளைக்கவுமாட்டேன்; என்னுற்கூடிய வரையிலுஞ் சண்டைசெய்து பார்த்து இளைத்துவிடுவேனுகில், அப்போது தகுதியான மேலுலகஞ் சேருவேன்; என் சகோதரராள் போன இடத்திற்கு நானும் போய் கூடுவேன்; இஃதொழிய அவர்களை விட்டுப் பிரிந்து நான் தனித்திருக்கமாட்டேன்; அப்படி நான் ஆவி அழிந்து போங்காலையில், ஆதியிற் கற்றிருக்கின்ற மிர்த்யு சஞ்சீவி மந்திரத்தைச் செபித்து படுகளத்திற்பட்ட பார்த்திபர் முதலாகிய சகலமான பேர்களையும் பிழைக்கச்செய்து இந்தப் பூமியில் மறுபடி வருவிக்கிறேன்; இன்னமும் விட்டேனு? இந்தப் பாண்டவர்களை ஒருகை பார்த்து விட்டுத்தான் உயிர் விடுவேன். சும்மா லேசில் விட்டுவிடக் கூடாது; நாம் கற்றிருக்கின்ற அந்த மந்திர பலத்தினுல் இறந்த பேர்கள் யாவரையும் மீளச்செய்து, மறுபடியும் பாண்டவர்களுடன் அமர்மலைந்து அவர்களைக் கொன்று வென்று பட்டாபிஷேகங்கொண்டு ஏகச்சக்கிராதிபதி பத்தியம் பண்ணுகிறேன். அப்படி யென் எண்ணப்படி முடியாமல், இந்தமந்திரத்துக்கு இடையூறுநேரிடுமாகில், யாவரும் போர்புரிந்து முடிந்த யுத்தகளத்தில் நானும் போராடி ஆவிவிடுகிறேன். என்று கன்றிய மனந்தேறி பூரணமாக நிறைந்த வல்லபமானது வளர்ந்தோங்கி புயமோங்கப் பூரித்து தடாகத்தி லிறங்குவதற்கு யோசித்துக்கொண்டு எழுந்து நான்கு திக்கும் நன்ருகப் பார்த்து நின்றுன்.

### துரியோதனன் சஞ்சயனைக் கண்டு தன் செய்தியைத் தாய்தந்தையர்க் கறிவிக்கச்செலுத்தி, தான் தடாகத்துள் மூழ்கி மிர்த்தியு சஞ்சீவி மந்திர முச்சரித்தல்

அந்தச்சமயத்திற் பொறுமையா லுயர்ந்தும், பேரறிவாற் சிறந்தும், விரதத்தால் மேன்மை யடைந்தும், ஒப்பற்ற வுண்மைக் கொருவனுக விளங்கிய சஞ்சயனென்பவன், திடீலென்று துரியோதனனுக்கு எதிரில்வந்து நின்றுன். தனக்கு முன்வந்து நின்ற சஞ்சயனைத் துரியோதனன் கண்டு, மனதில் நாணங்கொண்டு, மேன்மேலும்வெட்கப்பட்டு வண்டு நெருங்கிய மாலை பொருந்திய வாகுவையுடைய சஞ்சயன் முகத்தைப் பார்த்து, ஓசஞ்சயனே! இன்று தேவர்கள் முதலிய யாவரும் எட்டிப் பார்க்கக்கூடாத அமர்க்களத்தில் நீ தப்பி பிழைத்தாயே என்று தரணீசன் கேட்டான். அதற்குச் சஞ்சயன் சொல்லுகிறுன்: ஐயா! மகாராஜனே! ஸ்ரீ வேதவியாசருடைய அநுக்கிரகத்தால் இதுவரையிலும் உயிர் பிழைத்திருந்து தீங்கில்லாம லிங்கு வந்தேனென்றுன். இப்படிப் பாங்காகச் சொல்லிய சஞ்சயன் வார்த்தைக்கு சந்தோஷப்பட்ட கொடுங்கோல் மன்னனுகிய கோமான் சில மொழிகள் கூறுகிறுன். ஆ! சஞ்சயனே! இந்தப் பூமியை ஆளவேண்டுமென்று பேராசை கொண்டு அவதிப்படுகிற பாண்டவர்களை இவ்விடத்திற் புரட்டி யுருட்டி விடுகிறேன் பார். இன்னுஞ் சற்றுநேரத்திற் கேட்கப் போகின்ருய். ஆதியிலே நான் கற்றுக்கொண்ட மந்திரம் ஒன்றுண்டு. அந்த மந்திரத்தைச் செபித்து, மாய்ந்த படைகளை யெழுப்பிப் பாண்டவர்களைப் பாழாக்குகிறேன். ஒருவேளை அது தப்பிப் போகுமாகில், என் பிராணனை விட்டு விடுகிறேன். இனிமேலிந்த உலகத்தி லிருந்து உயிர்பெற்று வாழமாட்டேன். இதை நீ உறுதியாக நம்பு. இதுவரையிலும் என்னை



துரியோதனன் தடாகத்துள் மூழ்கி மிர்த்தியு சஞ்சீவி மந்திர முச்சரித்தல்.

நம்பி யிருந்த பேகம்போன்ற அளகத்தை யுடைய எனது அன்னையாகிய காந்தாரியம்ம னுக்கும், எந்நேரமும் என் கியாபகமுள்ள எனது தந்தையாகிய திரிதராஷ்டிர ராஜனுக் கும் மனத்துயர் வராமலும், வாட்டம் நேரிடா மலும், இடர்ப்பட வொட்டாமலும், நீ கிட்ட யிருந்து தகுதியான மொழிகளையும், நீதிகளை யும், தருமங்களையுஞ் சொல்லித் தேற்றக்கட வை. ஓ சஞ்சயனே! இனி யென்னைப் பிள்ளை யென்று நினைக்கவேண்டியதில்லை. என்னு சையை இன்றேயே விட்டுவிடச் சொல்லுக; நானிவிடத்தில் உன்னுடன் பேசிக்கொண்டு நிற்பேனேயாகிற் பகைவர் தேடிக்கொண்டு வருவார்கள். சீக்கிரம் நான் மந்திரத்தைச் செபிக்கவேண்டி யிருக்கிறது. ஆதலால், நீ அஸ்தினபுரம் போய்ச்சேர். என்று சொல் லிச் செலவுகொடுத்து அனுப்பிவிட்டு, கதா யுதத்துடன் மேலிருந்து பாய்ந்து மடுவுக்கு மத்தியிற் குதித்தான். அவன் குதிப்பினால், அந்த மடுவானது மந்திரகிரியாகிய மத்தினால் வார்கடல் கலங்கியவாறுபோற் கலங்கி, அலை யெறிந்து கரைபுரண் டொதுங்கிக் கொதித் தது.

அப்படி குதித்த துரியோதனனானவன், இருபதத்தையும் இரண்டு குதத்தின் கீழாக யிருத்திப் பத்மாசனமிட்டு, இருகரத்தாலும் மூக்கைப் பிடித்து, உச்சியைத் தொட்டு இந்த யஸ்தானம்-மார்பு - நாபி இவைகளை யணைத் துப் பரிசித்து, அனுஷ்டிப்பு யாவு முடித்து, சங்கற்பஞ்சொல்லி கரத்தைச் சிரத்திற் குவித் துச் ஸ்தாம்பாகிர்தியாய்ச் சாயாதிருந்து, இரண்டு திட்டிவாசலாகிய கண்களை மூடி, இரண்டு மேற்கோட்டை வழியாகிய காதுகளை அடைத்து, இரண்டு அதோ முகத்துவார மாகிய முக்கினலோடுகின்ற குதிரையாகிய வாசியை அடக்கி நேசித்து, கண்டத்திற்கு மேலாகிய பிரமரந்தத்திற் புகுத்திவிட்டுத் தாக்கிக் கும்பிக்கப்பண்ணி, பெருங்கோட்டை வழியாகிய வாயைமூடி மௌனத்தி லிருந்து, எட்டிரண்டென்னும் அக்ஷரத்தை நாட்டி, உண்மணியை ஊமையென்னும் ஓரெழுத்தா லாட்டி, கண்மணியைக் கபாலச் சுழிமுனையிற் கூட்டி, கண்டத்தில் ஒலியெழுத்தைக் கலகல வென்று சப்திக்கும்படியாய் அடக்கி, இது வரையிலுந் தன்னை உலகவாழ்க்கையுள் மூழ் த்தி, ஆசாபாசங்களை யேற்றி அலக்கழித்து வந்து ஐம்புலன்களையும் நொந்துறும்படி கட்டி, அதனால் விளைந்த கலக்கங்களைவெட்டி மாற்றி, வெப்பமாகத் திரிந்து வேசாறிப் பாய் ந்து, வெகுவித விந்தையை விளைக்குஞ் சிந் தையை யடக்கி மனமானது சித்துடன்மேவிப் பொருந்தப்படுத்திக் கம்பித்து, மூலத்தீ மூட்டி மோனஞானத் தீபங் கொளுத்தி, உதயப் பார்வை - உச்சிப்பார்வை - நிலப்பார்வைகள் பார்த்து, பலநாளும் யோகஞ்செய்து பழகிய பேர்களைப் பார்க்கிலும், பத்துப்பங்கு அதிக மாய் தனது தேகமுழுமையும்மெலிவில்லாமல், நலிவில்லாம விரும்படியாய் - மூலநாளத்தை யுடைத்தாய் - ஆகாயத்திற் பூர்த்த மூலக்கமல முளரியை அலர்த்தி, அதிற்பெருகிய வமுதை உண்ணக்கூடா அண்ணநாவினால் உண்டு, இன்பங்கொண்டு, உருகாமலுருகி நிரந்தரா னந்த சுகத்தை அடையாம லடைந்து, அசை வற்று இருந்து, மிர்த்யு சஞ்சீவி மந்தி ரத்தை ஓதி உருச்செபித்து, தான் சிறிதுங் கலங்காமல், அம் மடுச்சலத்தோடு சலமாய் மான்னியிருந்தான். அப்போ தமர்க்களத்திற் குறைபட்டு - சிதைபட்டு - புதைபட்டு - வதை பட்டுப்போன பிரேதங்களுக் கெல்லாந் திடி திடிப் புண்டாயது.

### பாண்டவர்க்குப் பயந்தெளிந்த கிருபர் முதலிய மூவர் துரியோதனனை நாடிச்செல்லும் போது, வழியிற் சஞ்சயனைக்கண்டு விசாரித்துணர்தல்.

இவிடத்திலிவனிப்படியிருக்க, இனிமேல் நடக்கப்போகின்ற பாவனைகள் முன்னுதாகத் தெரிந்த திரிகாலக் கியானமுள்ள சஞ்சயன், துரியோதன னிடத்திற் செலவு பெற்றுக் கொண்டு திரும்பி வரும்போது, இப்பாற் பாண்டு மைந்தராகிய பாண்டவர்கள் இந்த வண்மையாகிய உலகத்தைத் திண்மையாக ஆளப் போகிறதும், துரியோதனன் விறுதா வில் மாளப்போகிறதும் நித்திய சத்தியமே யென்று நிச்சயங்கொண்டு வருகின்றான். அக் கால், முன்பு நடந்த யுத்தத்திற் போர்முக மாறிப் புறங்கொடுத்து திசாதிசைகளில் ஓடிப் போன ஒவ்வொருவரு மில்லாத கிருபாச்சாரி யார்- அஸ்வத்தாமன் - கிருதவன்மன்- இவர்கள் மூன்றுபேருந் தங்கள் தங்கள் களைதெளிந்து இளைப்பாறி, உடலிற்பட்ட காயங்களுக்கு உபகாரஞ் செய்துகொண்டு, தனித் தனியாய்த் திரும்பி, துரியோதனன் என்ன கதியடைந் தானோவென்று இரக்கமாகநாடி, தீரமுடைய வர்களைப்போற் றிடங்கொண்டு வந்து யுத்த

பூமியிற் புகுந்து, பாண்டவர் கண்களிற் படாதபடி, யானைப்பிணம் - குதிரைப்பிணம் - தேர்க்கூட்டம் - இவைகளின் மறைப்புகளிலிருந்து பார்த்து, எங்குமந்த நந்தியா வட்டமாலையணிந்த நரேந்திரனைக் காணுதவர்களாய்ச் சற்றுநேரம் யோசித்து, செருக்குடனேசெருக்களத்திற் பாண்டவர்கள்ஜெயம் பெற்றதாயும், அப்பாண்டவர்களால் துரியோதன மகாராஜன் மாண்டதாயும் காணவில்லையே. அமர்க்களம் அசைவற்றிருக்கின்றதே என்று பெருமூச்சுவிட்டு, வெண்மையாகிய நக்ஷத்திரங்களுஞ் சந்திரனுஞ் சூரியன் மேற் பகைத்தெழுந்த ஜோதிபோற் பலவகை ரத்தினபரணங்களினுற் பிரகாசித்துக் கொண்டிருந்த அப்போர்க்களத்தில், எல்லோர்க்குந் தோற்றமாகும்படியாய் ஆகாயத்திற்றிற் சூரியன் பிரகாசித்து இருபது நாழிகையை அளந்து விளங்கிய காட்சியைக்கண்டு, கொற்றமுற்ற வெற்றிபெற்ற அக்கிருபர் முதலாகிய மூவர்களும், நம்மைப் பாண்டவர்கள் எங்கே காண்கின்றார்களோவென்று மருண்டு வெருண்டு, அமர்க்களத்தைவிட்டு அப்பாற் செல்கின்றார்கள். அப்போது, இவர்கள் மூவரும் ஒருவரையொருவர் சந்தித்து, துரியோதனராஜனைக் காணேமே யென்று சந்தேகித்து, தாய்நீங்கிய சேய்போற் றளர்ந்து, தாங்கற்கரிய நாணத்தினலயர்ந்து, மானமேற்கொண்டு மயங்கி, மதிதடுமாறி நடுங்கி, ஐயையோ? இந்தப் பாட்டுக்குத்தானு இப்பாடு பட்டது என்று நெடுந்தூரத்திற் சென்று, பலகோடி எண்ணங்களெல்லாம் எண்ணி எண்ணி நொந்து, நின்று நின்று வெறுத்து, யுத்தபூமிக்குப் புறம்பிற் குறுகிப்பார்த்தும், அங்கேயும் ராஜனைக்காணுமற் போனார்களேயல்லது, அவனையும் அவனைப்பெறாராகிய பாண்டவர்களையும், அவர்களுக்கிருக்குஞ் சேனைப்பெருக்கத்தையும் பார்க்கவில்லை.

இந்தக் கிருபாச்சாரியர் - அஸ்வத்தாமா - கிருதவன்மன் இவர்கள் மூவரும், பதுங்கிப் பதுங்கிப் போவதைப் பலம்பொருந்திய பாண்டவரைவரும் பார்த்து, இவர்களுடன் யுத்தஞ்செய்து கொல்ல வேண்டுமென்றும், அல்லது வெல்லவேண்டு மென்றும், எண்ணங் கொள்ளவில்லை. ஆனல், சேனதிபதியாகிய திர்ஷ்டத்துய்மன் முதலாகிய பேர்களுங் கண்டு, அதோ போகின்றார்கள் கிருபாச்சாரியார் முதலியபேர்களென்று சொல்லி, அவாள் பேரிற் போராடுவதற்கு எழுந்தார்கள். அப்போது ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியும், பாண்டவர்களுந் தங்கள் சேனபதி முதலிய சேனைகளைத் தடுத்து, இவர்களுடன் எதிர்த்து யுத்தம் பண்ணுவதில் நமக்கு என்ன பிரையோசனமுண்டு; முதல்வனுகிய ராஜனைக்காணேமே என்று வேர்த்து, இவர்களைப்பார்த்தும் பாராதவர்களைப்போற் பராமுகமாயிருந்தார்கள். இப்பாற் குளிர்ந்த தாமரைமாலையணிந்த மார்பினராகிய கிருபர் முதலான மூவரும் மறைந்துபோனார்கள். இத்தன்மையாக மறைந்து மதிகுறைந்து வாடிவருகின்ற இவர்களுக்கு எதிரில், இருள் வழியில் மாணிக்க நேரிட்டதையொப்ப வெற்றிபூண்ட மாசற்ற இருதயங் கொண்ட சஞ்சயனுனவன், வாடையாலடிபட்டு வருந்திய மரம்போல் இரங்கிய தலை நிமிராமல் ஏங்கிய எண்ணத்துடன் வருகின்றான். அந்தச் சஞ்சயனை விந்தம்போன்ற தேர் மேல்வந்த இந்த மூவருங்கண்டு, துயரமேற்கொண்டு, துன்பமாகப்பேசி, முகங்கூசி, ஓ தேசிற் சிறந்தவனே! ஓ திரிகாலமுந் திரிந்தவனே! ஓ சஞ்சயனே! நமது துரியோதன மகாராஜனைக் காணேமே; நீர் ஏதாகிலும் அறிந்திருப்பீராகிற் சொல்லுமே; அல்லது நிகழ்காலத்தின் காரணத்தையாவது விள்ளுமே என்று கிருபர் முதலிய மூவருங்கேட்க, குற்றமற்ற சஞ்சயனுனவன், இவர்களுடன் தானுங்கலந்து விசனப்பட்டு, இராஜாதிராஜனுகிய துரியோதன மகாராஜனுடைய உண்மைகளையெல்லாம் எடுத்துச் சொல்லுகிறான். ஓ உத்தமர்களே! இதுவரையிலும் நெருங்கி யுத்தஞ்செய்து இறந்துபோன யாவர்களும் இன்றைக்கு மறுபடியும் பிழைக்கவும், பாண்டுபுத்திரர்கள் அடியோடே மாயவும் நினைத்து, தேவ யுத்தியாகிய ஒரு சூட்சிகருதி ஜலத்துக்குள்ளிருந்து ஸ்தம்பன தவம்பூண்டு, மிர்த்யுசஞ்சீவிமநுவை உச்சரிக்கும்படி உத்தேசித்து, நாம் நிற்குநிலைக்கு வடகிழக்கிலிருக்கும் பொய்கையினிடத்தில் மூழ்கியிருக்கிறான். இதுவரைக்கும் நமது அரசனுக்கு யாதொரு பொல்லாங்குமில்லை. நீங்கள் மகா புத்திமான்களும் - தக்கோர்களும் - மிக்கோர்களும் ஆகையால், அரசனைக்குறித்து சிந்தை தளராதிருங்கள், இப்போது நான் அஸ்தினபுரத்திற்குப் போய், கறுத்த வயிரம்பற்றிய மனத்தோனுகிய திரிதராஷ்டிரனுக்குங் காந்தாரிக்கும் இந்தச் சங்கதிகளையெல்லாஞ் சொல்லிப்போட்டு இதோ வருகிறேன் என்று அவர்களிடத்தில்

விடைபெற்றுக்கொண்டு, மனந்தாளாமல் மன மறுகிப் போனான்.

சஞ்சயனும் உயுச்சனுந் தருமனுத்தரம் பெற்றுத் துரியோதனாதியரின் ஸ்திரீகளை அஸ்தினபுரம் விடுத்துச் சேதிகூறி மீளுதல்

இவ்விதம்பேசி அஸ்தினபுரத்தைநோக்கிப் போகின்ற சஞ்சயன், துரியோதனனுடைய பாசறைக்குப்போய் அவ்விடத்திலிருக்கின்ற தேசோமயப்பிரகாசம் பெற்ற ராஜஸ்திரீகளைக் கண்டான். அவர்களெல்லோரும் ஓடிவந்து சஞ்சயனைப்பார்த்து, மாணிக்க முடிதரித்த துரியோதன மகாராஜனுடைய பாடும், சேனைப்பெருக்கங்களின் கேடும், வணங்காமுடி மன்னன் யுத்தபூமியை விட்டு விலங்கிய விலக்கமும், அவனுக்கு நேரிட்ட கலக்கமுங்கேட்டு, மிகவுந் தேம்பி வெம்பி விசனப்பட்டு, தலைவிரிகோலமாய்த் தவித்து நின்றழுதான். மேலும், திட்டமாகக் கட்டிய தரைகளுமதகுகளு முடைந்து வழிந்தோடிய சலம்போல் விஷத்தையும் அமுதத்தையுங் குடிவைத்துக்கொண்ட கண்களையுடைய ராஜஸ்திரீகள் கண்ணீர்விட்டு கோகோவென்றுகதறியழுது கரைந்து வருந்தி வெதும்பினார்கள். அதைச் சஞ்சயன் பார்த்து சஞ்சலப்பட்டுத், தானுஞ் சங்கடமுடையவனாகி அந்த ராஜஸ்திரீகளிடத்திற் காவலாயிருக்கிற வைசியமைந்தனாகிய முத்தாரம் பூண்ட உயுச்சனை அழைத்து, ஓ உயுச்சனே! மன்னர்க்கு மன்னனாகிய மகாராஜன்; மாணிக்கச் சிங்காசனாதிபதி வணங்காமுடி பெற்றவன்; நந்தியாவர்த்த மாலையணிந்த நரேந்திரன்; கௌரவகுல முதல்வன்; பணிக்கொடி தரித்த பார்த்திபன் என்று சொல்லும்படியான கீர்த்திவாய்ந்த துரியோதனமகாராஜன் முதலிய தம்பிமார்களுடன் கலந்தணைந்த காதலிமார்களாகிய இந்த ராஜஸ்திரீகளெல்லோரும், சத்துருக்கள் மொய்த்து யுத்தஞ் செய்யாநின்ற வெற்றி வீரக்களத்திலிருந்து மெத்தப்பயந்து சித்தப்பிரமைகொண்டுதியங்குகிறார்கள். இவர்களைப் பார்த்துவிட்டு நாமெப்படி போகலாம். அல்லது இவர்களை நகருக்கு அழைத்துக் கொண்டுபோய்ப் பெரியோர்களாகிய மாமன் மாமி என்னுந் திரிதராஷ்டிரன் காந்தாரியிடத்திலொப்புவித்து விடலாமென்று யோசித்தால், எப்பொருட்கும் இறைவனாய் எண்சாணுடம்புக்குஞ் சிரசே பிரதானமென்பது போல தருமபுத்திர மகாராஜனிருக்கின்றார். அவருக்கில்லாத சுதந்தரமும் சொந்தமும் அக்கறையும் - துக்கமும் - நமக்கில்லை. இவ்விடத்திலிருக்குங் காரியங்களை அவருக்குத் தெரிவித்து, ஒருவேலை செய்வது உத்தமமென்று நினைக்கின்றேன். ஆகையால், காவலாய்க்கோவலனுடனிருக்கிற பூவலனாகிய முடிபெற்ற தருமபுத்திர மகாராஜனிடத்திற்கு நீ போய் இங்கேயிருக்கிற சங்கதிகளை ஆவலாய்ச் சொல்லுவையாகில், இதற்குத் தக்கபடி நடப்பதற்கு அருளளிப்பார். அவரிஷ்டப்படிக்கு அரசர் மாதரைத் திரிதராஷ்டிரனுடைய நகரத்திற்கு அனுப்பிவிடலாம் என்று சஞ்சயன் கூற, உயுச்சன் அப்படியே மகா பாக்கியமென்று விடைபெற்றுத் தருமராஜனிடஞ் சென்று, அவரைக்கண்டு தீர்க்க தண்டமாக வணங்கி, சிரமேற் கரங்குவித்துக்கொண்டு ராஜஸ்திரீகளின் சங்கதிகளையும், அவர்கள் படுகின்ற கன்கலக்கங்களையும், பொங்கரவைப் போல் பொங்கி அழுகின்ற பொருமலையுஞ் சொல்லி, சஞ்சயன் அஸ்தினபுரிக்குப் போகவிருக்கின்ற செய்தியையுந் தெரிவித்து, தேவரீர் கட்டளைப்படி நடந்து கொள்ளுகிறேனென்றான்.

அந்தச் சொல்லைக் கேட்டவுடனே, நல்ல பாம்பின் விஷத்தை நடுச்செவியி லூற்றியதைப்போல் நடுநடுங்கி, ஐயோ! நம்முடைய அந்தப்புர ஸ்திரீகளுக்கும் இப்போப்பட்ட அலக்கண் வந்ததல்லவா? இதெல்லாந் தெய்வச்செயல் என்று சிந்தை வருந்தி, உடனே பரிந்து அருள் புரிந்து, உயுச்சனை நோக்கி, அப்பா குணவானே! நீயும் சஞ்சயனுமாக அவர்கள் சமீபத்திலிருந்து முறைமை குறையாமல், சிறுமை யடையாமல், பெருமை தளராமல், அருமை தொலையாமல், வெகு சாக்கிரதையாய்க் கொண்டுபோய் அஸ்தினபுரஞ் சேர்த்துவிடுங்களென்று உத்தரவு கொடுத்தனர். உடனே உயுச்சனனவன், பாசறைக்கு வந்து பார்த்திபனுடைய பத்தினியோடு, மற்றுமுள்ள ஸ்திரீகள் யாவரையுங் கூட்டமாய் அழைத்துக்கொண்டு சஞ்சயனுந் தானுமாக அதிசீக்கிரத்தில் அஸ்தினபுரம்போய்ச் சேர்ந்தான். இவர்களைக் கண்டவுடன் மாமன் மாமி முதலாகிய பேர்கள், மனம் மெலிந்து வருந்த அவர்களைப் பார்த்தபோது, இந்த மருமக்கண்மார் முதலிய பேர்கள் கட்டிமுட்டிக் கொண்டு, ஓ மாமா! மாமா வென்றும், இ

மாமி! மாமி என்றும் வாய்விட்டரற்றினார்கள். இவர்கள் செயலிவ்வாறாக, முன்பு பெருக்கமும், பிரபலமும், புண்ணியமுமுடைய பெருந்தீர்த்தங்களெல்லாம் போய் ஆடிவருவோமென்று சில தினமடிவினால் மனம் வெறுத்து, பலராமரோடு போயிருந்த விதுரமகாராஜன் பலபல தீர்த்தங்களும் பார்த்து ஸ்நானஞ் செய்து மகான்களுடைய ஆச்சிரமங்களும், தவச்சூழல்களும், சிவஸ்தலங்களும் கண்டு தரிசித்து மீண்டுந்திரும்பிவந்து பலராமரையுத்தகளத்திற்கு அனுப்பிவிட்டு, தான் தனியே சில தூரத்திற் கப்புறத்தில் ஒரு சிற்றூரிலிருந்து, எப்படி யிருக்கின்றது யுத்தமென்று விசாரித்தான். இவ்விடத்தி லிதுவரையிலும் நடந்து வந்த காரியம் இப்போது நடந்திருக்கிற சங்கதியையும், இனிமேல் நடக்கப்போகின்ற விபரங்களையுங் கண்டவர் விண்டார்கள். அவையனைத்தையும் கேட்ட விதுரன் அருந்துயர் பூண்டு அங்கலாபித்து, அரவக்கொடியோன் மடிகிற வரைக்கும் அவன் நகரத்தில் அடிவைக்கமாட்டேனென்று அப்பாலிருக்குஞ் சில மருதநிலப்பதிகளில் வாசமாயிருந்தான். இப்பால், துரியோதனனிடத்தி னின்றுஞ் சேதி கொண்டுவந்த சஞ்சயனானவன், பெரிய அரசனுடைய அரண்மனைக்குப்போய் செம்பஞ்சுக் கொப்பாகிய சீரடிவாய்ந்த காந்தாரியுடனும், பாராளபதியாகிய திரிதராஷ்டிரனுடனும், இவ்விடத்தில் நடந்த சங்கதிக ளெல்லாவற்றோடு துரியோதனன் சொல்லியனுப்பிய சேதிகளையுஞ்சொன்னான். அவையனைத்தும் அவர்கள் இருவருடைய காதுகளில் நாராசங்காய்ச்சி ஏற்றியதைப்போலிருந்தமையால், நாக்கு நடுங்கி, மூக்கு வெயர்த்து, முகங்கருகி, அகமெலிந்து, அல்விழிபெருகி, மனமயர்ந்து, மதிகயந்து, சிந்தைதளர்ந்து, சீவனமாழ்கி, இனி இன்னுமென்ன விளையப்போகின்றதோ? இனி இன்னுமென்ன கேட்கலாகின்றதோ? என்று விழியற்றவனாகிய வேந்தன் வெறுப்புற்றுச் சோர்ந்திருந்தான். ஏந்திழையாகிய காந்தாரியென்னும் வாள்போன்ற விசாலக் கண்ணியும் மனமடிந்து மாழ்கினாள். இவர்களுக்கு நேரிட்ட துன்பங்களையெல்லாம் ஒரு வழியாக மாற்றி, அநேக தர்மங்களை போதித்துத் தேற்றி, இன்னமும் துரியோதன மகாராஜனுடைய சங்கதியை விசாரித்துக்கொண்டு வருகிறேனென்று சொல்லி விடைபெற்றுக் கொண்டு சஞ்சயன்மீண்டு குருக்ஷேத்திரத்திற்குப் போயினான்.

## கிருபாதிய மூவருந் துரியோதனனிருக்குமிடஞ் சென்றழைக்க, அவனவர்க்குரைத்தல்

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராசனே! முன்பு சஞ்சயனை வழியிற்கண்டு சமாச்சாரங் கேட்டுக் கொண்டுபோன கிருபாச்சாரியரும்-அஸ்வத்தாமனும்-கிருதபன்மனும், துரியோதனமகாராஜன் துன்பமில்லா திருக்குஞ் சுத்த நீர்த்தடத்தின் கரையினிடத்தி லடைந்து பொருந்தி யிருந்து இதனைப் பரிந்துசொல்லலுற்றார்கள். "போதுமோ கரப்போர் வென்று முடித்துமோ வொன்றிலென்றிச், சாதுமோ விரண்டுமல்லாற் றரணிகர்க்குறுதி யுண்டோ, யாதுமோ தெளிதினின்போல் ஏற்றமுள்ள வர்க்கிவ்வாறு, போதுமோ பூண்டபூண்ட புகமெலாம்போய்விடாதோ, நின்கிளை யாகிவந்த நிருபருந் துணைவர்யாரும், வன்களிறு வுளி பொற்றேர் வான்முதற் படைகள்யாவும், புன்களமதனிற்சேரப் பொன்றின விம்பரன்றே, வென்கரு தினைகொலையா வொன்பெறற் கென் செய்தாயோ'' ஓ அலகிலாப் புகழ்படைத்த அரசனே! உலகெலாம் ஓர்சுவேத நட்சத்திரத்தின் நீழலுட்படும்படியாகச் செய்து, பற்பல தேசத்தரசரும் வணங்கும்படியான புகழினை யுடைத்தாயினீர். இதுகாறுஞ் செய்துவந்த போர்முகத்திலும் மேன்மைபெற்றீர் யாகினுந் திடதைரிய வீரத்திறமுமுற்றீர். அப்படிக்கெல்லாமிருந்தும், சத்துருக்களாகிய பாண்டவர்களை விட்டுவிலகி, இந்த மடுவில் மறைந்திருக்கும்படிக்கு நீர் விரும்பியது விபகார மார்க்கமோ; எங்களுக்கெல்லாம் மெத்தவும் வருத்தத்தை விளைக்குதே, உள்ளம் உளைக்குதே. ஓ உத்தமனே! வேந்தர்குலத்தின் தன்மை எப்படியென்றால், பகைவர்மே லெதிர்த்துப் படுகளம் புகுந்தால், பொங்கிய சிங்கம் புழைக்கை யானைகளைக் கொல்லுவதற்குப் பிரவேசிக்குந் தன்மைபோற் கூடிக் குறைக்க வேண்டியது. கூடாவிட்டால், நமதுயிரை விட்டுவிடவேண்டியது. இது முக்கிய தருமமாயிருக்க, நடுமதியற்றுக் கெடுமதியினால் மடுவிற் றுன்னைந்து மூழ்கி, இவ்வாறு துங்கிப் பதுங்கி யிருப்பது உம்மைப்போலொத்த கெடிவஸ்தலாதிபனுக்கு அடுத்த தல்லவே; ஓ அரசர்க்கரசனாகிய அண்ணலே! உமது மதி இப்படியாகலாமோ; ஒருவேளை வீரங்கெடாத வில்வீரத்திற்கொண்ட வேந்தர் முதலாகிய மோலோரிருந்தார்கள். அவர்களெல்லோரும் இப்போது இறந்துபோனார்கள்

சிறந்த சத்துருக்களாகிய பாண்டவர்களுடன் எதிர்த்து யுத்தம்பண்ணுவதற்கு இனிமேலாயிருக்கிறீர்களென்று நினைத்து மனம் வருந்தி இளைத்தீரோ? ஓ நிறங்குன்றாத நிருபனே! நீர் அப்படி ஒருகாலத்திலும்நினைக்காதீர்; எங்களுடைய ஆற்றல் நிறைந்த சுத்தசாமர்த்ய ஆண்மிக்கையை நீரறிந்திலீர்போலும் என்று மூவருஞ்சொல்லி வரும்போது, ஆசாரிய புத்திரனாகிய அஸ்வத்தாமன் சொல்லுகிறான். வீரியம் விளம்பல்போதா தாயினும் விளம்புகின்றேன், போரியலமரி லெனனோர் பொருசிலை யெடுத்து நின்றாற், றேரியல்விசயனோடு நால்வருஞ்சேர வென்கை, மூரிவெங்கணைகளாலே முடித்தலை துணிவர்கண்டாய். எல்லவன் வீழுமுன்னம் யாரையிந் தொலைத்தவேலை, தொல்லைமண்ணளத்திலேனேற் றுரோணன்மா மதலையல்லேன், வில்லெனும் படையுந்தீண்டேன் விடையவன் முதலோர்தந்த, வல்லியகணையும் பொய்த்தென் மறைகளும் பொய்க்குமாதோ. பாண்டவர் முடியவென்றிப் பாரெலாமுனக்கே தந்தான், மாண்டவா தம்மைநின்வாய் மறைமொழி தன்னைக்கொண்டு, மீண்டவராக்கிப் பின்னை வேறொரு பகையுமின்றி, யாண்டவரிவரேயென்னத் துணைவரோ டாளலாமே. ஓ அரசனே! இப்போதுமென்ன என் வீரியத்தை யானே சொல்லிக்கொள்ளக் கூடாததாயினும், ஒன்றுமாத்திரம் உமக்குச்சொல்லுகின்றேன். இந்த யுத்தகளத்தில் நானே சேனைபதியாயிருந்து என் வில்லை எடுத்து நிறுத்துவேனாகில், அந்த அருச்சுனனோடு மற்ற நால்வரும் யான் விடுக்கின்ற மூரிவெங்கணையால் தலைதுணிந்து போவார்களென்பதற்கு சந்தேகமில்லை. மேலும், இன்றைய்த் தினத்தில் இந்த சூரியன் மேற்றிசையில் வீழ்ந்து பொழுதுபோ முன்னமே, வீரியத்துடன் சென்று சீரிய மனத்தோராய்த் திடங்கொண்டிருக்கின்ற பாண்டவர்கள் முதலாயினோருடைய தலைகளை நானே கொண்டுவருகிறேன் என் சொல்லுறுதியை நல்லதென்று நம்பி சமர் செய்வதற்கு எழுந்துவாரும். ஓ நாயகனே! இப்போது சொன்ன சொற்படி நடத்தாமற்போவேனாகில், தனுர்வேத பாண்டித்வ முடைய துரோணாச்சாரிய ரென்னும் பிராமணனுக்குப் பிறந்தவனல்லேன். அப்பால் வில்லையுங் கையிலெடேன். இது தப்புமாயின், எனக்கு கயிலாசபதி முதலாயினோர் தந்த கணைகளும், அக் கணைகளுக்குரிய மறைகளும் பொய்க்காவோ? அன்றியும், பாண்டவர்களை அறவென்று இப்பாரனைத்தையும் உமக்கு தந்தபிற்பாடு,உமதிஷ்டப்படி பாண்டவர்களை யெல்லாம் நீர் பயின்றிருக்கு மறையாலெழுப்பி, எத்திக்கினுஞ் சத்ருக்களென்பதில்லாமல் நீரே ஏகசக்ராதிபதியாய் பழையபடி தம்பியர் தொண்ணூற்றென்பதுபேரோடும், மற்ற துணைவரோடும், சகலலோகங்களையும் ஆளலாமேஎன்று பற்பலவாக்கியங்களை யோக்கிய சிலாக்கியனாகிய அஸ்வத்தாமன் சொல்லி எழுந்து வாருமென்று யழைத்தான். இந்த மொழியை மந்திர மோகவழியில் நிற்கின்ற துரியோதனமகாராஜன்கேட்டு, சிந்தை நைந்துச் சினந்தெழுந்து, மனந்தளர்ந்து கனம் பிளந்து, ககனங்கிழிந்து போகும்படியாயிரைந்து, அன்னீரினின்று முழங்கி எழுந்து, அவன் முகங்கண்டு நின்று சிற்சில மொழிகளைச் செப்பத்தொடங்கினான்.

ஓ அஸ்வத்தாமனே! ஆற்றலுக்கு வேற்றொருவருந் தோற்றமாக இணை சொல்வதற்கு இடமில்லா திருக்குஞ் சீற்றமுந் திறமுங் கொண்ட திடதீரன் நீயென்று எனக்கு செவ்வையாகத் தெரியும்: நீ அமர்புரிய புகுந்தால், அமரர்களேயானாலும் உன்னுட னெதிர்த்து யுத்தம் பண்ணி வெற்றிபெற மாட்டார்கள். உன்னை எதிரிட் டெதிர்த்தவர்கள் பிராணன் பிழைக்கப் போகிறதில்லை. நீ இப்பேர்ப்பட்ட உண்மையாகிய வல்லமைசாலியென்றும்,மற்ற இவர்களுடைய சாமர்த்தியத்திறம் இவ்வளவென்றும் ஸ்திரமா எனக்குத்தெரிந்திருந்தும், நானிந்த மடுவில் மூழ்கியது என்னத்திற்கென்றால், யுத்த பூமியிற் சத்துருக்களுடைய அடியினால் மெத்தவருந்தி மாழ்கினேன். ஆகிலும், ஐயோ அந்த அனியாயப் பேச்சை இப்போது குறித்து சொல்ல வேண்டியதில்லை. இன்னுங் கொஞ்சநேரம் இந்தத் தண்ணீரில் மூழ்கியிருந்து தேகத்திற் குண்டாகிய சிரமையைத் தீர்த்துக்கொண்டு உங்களுடன் கூடவந்து அப்பலங்கொண்ட பாண்டவரைக் கொன்று வெற்றி கொள்ளுகிறேன். நீங்கள் மூவரும் இவ்விடத்தில் வந்திருப்பதைச் சத்துருக்க ளறிந்தால், உடனே இங்ஙனம் வருவார்கள். அப்படி வந்து விடுவார்களேயானால், யான் கொண்டிருக்கு மபிப்பிராயமெல்லாம் முற்றிலுங் கெடும். ஆனதால், அவர்கள் என்னிடத்திற்கு வந்து என்னை வெளியி லிழுத்து என் எண்ணத்தைத் தடைசெய்யாதிருக்கும்படியாய் அதோ யிருக்கின்ற சோலையில்

உள்ள ஆலமரத்தி னிழலிற் கொஞ்சநேரம் இளைப்பாரிக் கொண்டிருங்கள்; இதோ நான் வந்து விடுகிறேன் என்று சொல்லி அவர்களை யனுப்பி விட்டான். அவர்கள் அப்படியே போய் ஆலமரத்தின் நிழலில் ஆயாசந்தீரப்படுத்துக்கொண்டு இந்தப் பதினெட்டு நாளும் பட்ட சிரமைகளெல்லாந் தீர அயர்ந்து நித்திரை போய்விட்டார்கள். இப்பால், துரியோதனராஜன் மறுபடியுஞ் சலத்துக்குள்ளே மூழ்கி முன்போல மந்திரங்களை சேர்த்துக் கூட்டி, அதில் முதிர்ந்த சிந்தையை நாட்டி, மூலத் தீமூட்டி தன்செயலிற் சிதறு மற் செபஞ் செய்து கொண்டிருந்தான்.

பாண்டவர் துரியோதனனைக் காணாது வருந்தீப்பின் சில வேடரா லவனிருப்புணர்ந்து பிரயாண மாகுதல்

இப்பாற் குந்திமா தேவியின் குமாராளாகிய கொற்றவர்கள், சேனைக்கூட்டத்துடன் சேர்ந்து, விசாலமான யுத்த நிலங்களெல்லாம் புகுந்து தேடித் தேடி ஆராய்ந்து, தப்பி பிழைத்திருக்குஞ் சனங்களையெல்லாம் ஒன்றொழியாமற் சேனுலகிலேற்றியேற்றி வெற்றியைக் கைக்கொள்ளவேண்டுமென்று வீணாசை கொண்டிருந்த துரியோதனனென்னும் வேந்தனை நாடினார்கள். பாடிவீடும், போர்க்களமும், அந்த யுத்த பூமியை சார்ந்த பக்கங்களும், யானை தேர் முதலாகிய யாவும் வீழ்ந்தழிந்து குவிந்து கிடக்கிற மேட்டிடங்களிலும், புறம்பாகிய காட்டிடங்களிலும், இன்னு முள்ள எல்லா விடங்களிலுந் தேடியுங் காணாதவர்களாய் மனோ வியாகூலமடைந்து, எங்குமோடித் திரிந்து உலாவி பார்த்து, வேவு சொல்லுகின்ற தூதுவர்களால் எட்டுத் திக்கும் பார்க்க விடுத்து, எங்கணுமில்லாதது தேர்ந்து வதங்கிய தாமரை மலர்போல் முகம்வாடி, பிரதானமானவனை விட்டுவிட்டுப் பெசகிப்போய் விட்டோமே யென்று ஐவரும் ஆலோசிக்கத் தொடங்கினார்கள். வேந்தனாகிய துரியோதனராஜன் இந்த பிரபஞ்சவாழ்க்கையை துறந்து போயிருப்பானோ? அல்லது பவளம் போன்ற இதழினையுடைய ராஜஸ்திரீகள் பட்டினத்திற்கு போனார்களே, அவர்களுடன் சேர்ந்து வேடமாறிப் பெண் வேடம்பூண்டு அவ்:தினபுரத்திற்கு போயிருப்பானோ? ஒருவேளை எல்லோரும் இறந்து போய்விட்டார்களே, இனி நாமிருந்து என்ன வாரி கட்டிக் கொள்ளப் போகிறோம் என்று மனம்ரோசி எதிரிகளால் இறப்பதைவிட நாமே இறப்பதுமேலென்று கருதி, இறந்து போய்விட்டானோ? இவ்விடத்திற் பேசிய வீரங்களையெல்லாம் மறந்து விட்டானோ? நல்லது அருஞ் சமர்புரியமாட்டாமல் அஞ்சியோடி அமர் செய்யுந் தருமந் தப்பி ஒளித்தானோ? அந்தமட்டும் அமுக்கியமான யாவரையுங் கொன்று, முக்கியமாக இவனை மாத்திரம் உயிருடன் விட்டு போட்டோமே? நாம் மேலாகிய கிருபையுள்ளவர்கள் தான் பசியாத்தாபமானவர்கள் தான் என்று இப்படிக்கு பலவாறாகத் தங்களுக்குத் தாங்களே வெறுத்துப் பேசி யோசித்து, பின்பு பலருங் கூடி, நான்கு திக்கிலும் நாடி, அச்சிரேஷ்ட நிருபனைத் தேடி, எங்கும் திரிந்து கொண்டிருக்குஞ் சமயத்தில், வாயு புத்திரனாகிய வீமசேனனுக்கு, மிருக வேட்டமாடி வந்த சில வேட்டைக்காரர்கள் வேகமாயோடி வந்து, பிழைக்கும் மருந்தை கொண்டு வந்து காதிற் பிழிந்ததுபோல், ராசனை காணாத வெறுப்புடனிருக்கும் வீமனிடத்தில் ரகசியமாக இதனை வெடித்து வெளிப்படுத்துவதானார்கள்.

அதிவீர சுகுமார அதிகார ஜயதீர
அணில சுதபதி சரணம்-யாம் ஆயவெள்ளா
டோடு குறும்பாடு-வரையாடு-வடல் செம்மறி
யாடு-கணையால் வதையுமான் - புள்ளிமான்-
கடமை மா - னெடியகலைமான் - சௌரிமானி
ரலைமான்-வஜ்ரதந்த பன்றி - முட்பன்றி-மட்
பன்றி-வருசினைப்பன்றி-கேழல்கதி செய்முதல்
கொக்கு-நாரையான் - கோழி-கினைவை - நீர்க்
காக்கை-புறாவொடுள்ளான் - காணுமிருகம் -
பக்ஷியாவுநின் பக்ஷணைக்காக பக்குவப்படுத்தி,
நதிமொண்டுவர கலசமொடு கொண்டு மடு
வண்டை நண்ணினோம். நாகத்துவஜன் நாடி,
நீருடுசிச்சை செய்திருந்தான். மூன்று ரதம்
வந்த வரவத்தினால் நாங்களோர் புறமொளி
துற்றன மடுக்கரையில், நாடு கிருபாரீயன்
முதல் நால்வருங்கூடி கலந்து, பாண்டவரை
யின்னாளே முடித்து மெனவே நனி வீரியங்
கொண்டு மூவர்போனார். சுயோதனனன் னீருட்
புகுந்தான் நாள்கிழமை கோள்கணிலை நாடா
மல் நாடியே நாதனை வெளிப்படுத்தி, நண்ணு
மந்திர செபமழித்து மதுசபமத நடத்தியரு
ளெங்கள் கோவே, இவ்விதமாக சொல்லிய வேடர்களை வீமசேனன் அழைத்துக்கொண்டு, இருதயம் பூரித்தெக்களித்து, தருமராஜனுக்கெதிர் சென்று நின்று வணங்கி, அண்ணா! சங்கதி கேட்டீர்களா? நாமிருக்கும் இடத்திற்கு

ஈசான்ய பாதத்தில் ஒரு மடுவிருக்கின்றதாம்; அந்த மடுவில் துரியோதனன்போய்புகுந்து, செபம்பண்ணுகின்றானும், கிருபன், அஸ்வத்தாமன், கிருதவன்மன் இம்மூவரும் வந்து, அவனிடத்திற் சில ரகசியம்பேசி, பாண்டவர்களை இன்றைக்கே முடித்துவிடவேண்டுமென்று சொல்லி அவர்கள்மூவரும்அகன்றார்களாம். அவன் மாத்திரம் மறுபடியும் மடுவி லிறங்கி விட்டானாம். இதோ யிவ்வேடர் வந்து சொன்னார்கள் என்று அன்புள்ள தரும வேந்தனை வணங்கி மொய்ப்புள்ள வீமன்சொல்ல, அந்த வேடர்களைத் தருமபுத்திரர் சமீபத்திலழைத்து அவர்கள் வாக்குமூலத்தைக் கேட்டு மகா சந்தோஷமடைந்து, இது தருமதேவதையும் நமது பங்குத் தெய்வமுமாகிய சுவாமி கூட்டி வைத்ததென்று மனமகிழ்ந்து, ஓ பரமதயாளுவே என்று கிருஷ்ணசுவாமியைப்புகழ்ந்து, இந்த உளவு வந்து சொல்லிய வேடர்களுக்கு வேண்டிய வெகுமதியைச் சகல வளங்களுமுண்டாக்க கொடுத்து தாங்கள் அவ்விடத்திற்குப் போகப் பிரயாணமானார்கள்.

### பாண்டவராதியர் துரியோதனன் மூழ்கிய மடுக்கரைசேர்ந்துசூழ வீமசேனனவனை யலர்தூற்றி யழைத்தல்

இதற்குள்ளாகக் காமனைப் பெற்ற மாமனான கண்ணன் பாண்டவர்களைநோக்கி, ஓ சத்திய சீலர்களே! மிர்த்யுசஞ்சீவி மந்திரமென்பது ஒன்றுண்டு. அது இந்தத் துரியோதனனுக்கு உபதேசமா யிருக்கிறது. அந்த மந்திரத்தைச் செபித்து இறந்து போனவர்களையெல்லாம் எழுப்பிக் கொள்ளும்படி நினைத்து சலத்துக்குள் நுழைந்திருக்கின்றான். அதற்குத் திருஷ்டாந்தம் ரணக்களத்தில் மடிந்த பிணங்களைப் பாருங்கள் என்று சொல்லித் தானும் போய்ப்பார்த்தார். அக்காற்சிதைந்து சதைந்து அழுந்து முறிந்து குறைந்து போன உடலெல்லாம் நகர்ந்துவந்து ஒன்றோடொன்று ஆடி, குற்றுயிரா யசைந்து கூடும்படி யிருந்தன. அதையவர்கள் கண்டு, ஓ! ஓ! மோசம் வந்ததே; ஓமுகுந்தனே! இஃதென்ன ஆச்சரியமென்று கையறைந்து கனைத்து கருங்கடலுங் கலங்க, இரைந்து விரைந்து தாங்களெல்லோருஞ் சேர்ந்து அரைக்கணத்தில் ஓடிவந்து மடுவை நெருங்கினார்கள். வானமளாவிய தேர்களும், வாரி மதம்பொழி யானைகளும், மேகமண்டலம் வரைக்கும் விரைந்துலவா நின்ற குதிரைகளும், மிகுந்த கூட்டமாகிய சேனைத்திரள்களுஞ் சென்று கோட்டைக் கட்டாக மடுவைச் சூழ்ந்து கொண்டார்கள். மேகநிறம் பெற்ற திருமாலும், மேதினி காவலராகிய அரசர்களும், பாண்டு புத்திரராகிய பஞ்சவரும், அப்பஞ்சவர் பெற்ற இளம்பஞ்ச பாண்டவரும் ஒன்றாகச் சேர்ந்து சலத்துக்குள் மூழ்கி யிருக்குந் துரியோதன மகாராஜனைக் கண்டு பேசும்படிக்குத் தடாகக் கரையை முழுமையும் வளைந்து மூண்டு முரண்டு நின்றார்கள். இவர்களிப்படி வளைந்துக்கொண் டிருந்தது எப்படி யிருந்ததென்றால், ஆதிகாலையில் தேவேந்திரனோடெதிர்த்துப் போர்புரிந்து வச்சிராயுதத்திற்கு இளைத்து ஓட்டமா யோடிக் கருங்கடலிற் பாய்ந்து புகுந்து மறைந்து ஒளித்த முதன்மைப் போரிற் சிறந்த விருத்திராசுரனென்னு முதலவனை, முப்பத்து முக்கோடிதேவர்கள் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள் இன்னு மற்றுமுள்ள பேர்கள் எப்படி சென்று வளைத்துக் கொண்டார்களோ அப்படிக்கிருந்தது. இப்படி எல்லோருஞ் சூழ்ந்து நிற்கிறசமயத்தில், அமரர்க்குபகாரியாகிய ஆயன், ஆம்பலை நிகர்த்த செவ்வாயன், அகிலங்காக்குமாயன், அரிபரந்தாமத்தூயன் வீமனைப் பார்த்து, ஏனப்பா சும்மா யிருக்கின்றாய்; பொழுதுபோகுதே; உன் காரியத்தை நீ பார். உன் சபதமுடியும் விதத்தை நீதேடிக்கொள் என்று திருவாய் மலர்ந்தருளினார். அனந்தகல்யாண குணமுடைய ஆதிகேசவனது அருள்மொழியைக் கேட்ட மாத்திரத்தில், விந்தகிரிக் கொப்பாகாமல்மேற்பட்ட தோள்வலிமைபெற்ற வீமசேனன், நீருண் மூழ்கி யிருக்குந் துரியோதனனுக்குக் கேட்கும்படிக்கு மகா உரத்த தொனியோடும் வாய் திறந்து சொல்லத் தொடங்கினான்.

கங்கைமகன் முதலாகக் காந்தாரர் முடிவாகக் களத்தில்வீழ்ந்த, துங்கமணி முடிவேந்தர் சொல்லி முடிப்பதற்கடங்கார் துரகமாவுஞ், செங்கனக மணிக்கொடிஞ்சித் திண்டேரும் பெரும்பனைக்கைச் சிறுத்த செங்கண், வெங்கயமு மேறுமல் வீழ்கயத்தி றேறினையோ வேந்தர் வேந்தே. நீ யெமக்கு நிலைநின்ற பழியாக நெடுநாட்செய்த, நெஞ்சரிய வஞ்சகமும் பொய்மொழியு மனுநீதி தவறியது மறந்தாய் கொல்லோ, துஞ்சியநின் சேனை யெல்லா மீண்டுவர நீ யறையுஞ் சுருதியிற்றை, வெஞ்சமர முடித்தன்றோ வறைவதினை வீரருக்கு வீரமாமோ. அடிமாறி நீரிடைபுக் கருமறை

நீபுகன்றுலு மரவப்பைம்பொற், கொடிமாறிக்
குருகுலத்தார் கோவேநின் பேர்மாறிக் குலாவு
மாலை, முடிமாறி யொருதனிமா முத்தநெடுங்
குடைநிழற்கீ ழாளுமுந்நீர்ப், படிமாறி
யொழியவிடேன் புறப்படையாய் மறைபட
விப் பகல்போ முன்னே. ஓதப்பைங்கடல்
புடைசூ ழுலகாளுமுடிவேந்த ருறுபோ ரஞ்
சிப் பாதத்தில் வீழ்வரோ பாரரசர் கேட்
டாலும் பழியேயன்றோ, மேதக்க வரமகளிற்
கைப்பிடிக்க விந்திரனும் விண்ணோர் தாமும்,
காத்தி லெதிர்கொள்ளக் கற்பகநீ ழலில்
வைப்பன் கலங்கலம்மா. களந்தனிலெத் தனை
கவந்தங் கண்களிக்கக் கண்டனை நீ கைத்தண்
டோடிக், குளந்தனிலிக் கவந்தமுங்கண் டேகு
தற்குப் புகுந்தனையோ கொற்றவேந்தே,
வளந்தனிலிக் கோபமுமென் வஞ்சினமும்
போகாதுவந் துன்பாவி, யுளந்தனிலிக் கவ
லையைவிட் டுடற்றுதலல் லதும்மற்றோ ருறுதி
யுண்டோ. இனத்திடைநின் றொருபதியின்மே
லெழுநாளு மொருவருட னிகல்செய்யாமற்,
றனத்திடைநின் றுளமகிழும் புலையுரைப்
போன்மதத்துடனே தருக்கிவாழ்ந்தாய், சினத்
திடைவெம் பொறிபறக்கச் செயிர்த்திருகண்
சிவப்பேறச் செருச்செய்யாமல், வனத்திடை
சென் றொளிப்பாரோ மண்முழுதுந் தனி
யாளு மன்னரானோர். திரிபுவனங்களுஞ்சேரச்
செங்கோன்மை செலுத்தியநின் சீர்த்தியிந்த,
விரிபுவனந்தனி லொளித்தான் மிகுவசை
யாய்ப் போகாதோ வெருவலாமோ, புரிபுவன
முண்டுமிழ்ந்தோன் போரிலங்கை வழிகாணப்
பொருதவாளி, யெரிபுவன நுகர்ந்ததுபோ
லித்தடமும் புகையாமு னெழுந்திராயே. ஓ
ராஜாதிராஜனாகிய துரியோதனமகாராஜனே!
கங்கா புத்திரனாகிய வீஷ்மாச்சாரியார்- துரோ
ணாச்சாரியார் முதலிய கனவான்க ளியாவரை
யும் யுத்தகளத்தில் அவிந்துபோன மற்றவர்க
ளெல்லாரையும் நினைத்து எண்ணி எண்ணிப்
பார்த்து கவலைபூண்டு, கருத்தழிவு கொண்டு,
நம்மைப்போன்ற மாசற்ற மணிமுடிபெற்ற
வேந்த ரெல்லோரும் நகைப்பார்களென்று
நாணத்தால், தலைகாட்டித் திரியப் பயந்தும்,
குதிரையின்மே லேறக் குறைந்தும், சிவந்த
பொன்மயமாகிய சிகரத் தேரேறித் திரியத்
தியங்கியும், நீண்ட துதிக்கையையும் சிறுத்த
கண்களையுமுடைய யானையென்னும் வெங்கய
மும் புகுதாமல், ஆழமாகிய மடுக்கயத்திற்
புகுந்து ஒளித்தனையோ.

அடா பாவி! உன்னெஞ்சறிய எங்கள்
மனமெரிய எங்களுக்கு நெடுநாள் வரைக்கும்
நிலையாக நிற்கும்ப ழிவிளைத்தாய்; நீரில் வசி
நாட்டி வைத்தாய்; விஷங்கலந்து அன்ன
மூட்டி வைத்தாய்; அரக்குமாளிகை கட்டி
நெருப்புமூட்ட நினைத்தாய்; நாங்களெஞ்சும்
படியாய் வஞ்சகச் சூதாடினாய்; யாவரும் அஞ்
சும்படியாகிய வஞ்சனைகளுள்ள எல்லாவற்றை
யுஞ் செய்து பார்த்தாய்; அஞ்சனமேனியா
னைத் தஞ்சமென்றிரந்து தூதுவிட்டு ஒரூரா
கிலும், ஒரு மனையாகிலுங் கொடுக்கவேண்டு
மென்று கெஞ்சிக் கேட்டக் காலத்திலுங் கீழ்
வெட்டாகப் பேசினாய்; அவைகளை யெல்லாம்
இப்போது மறந்துவிட்டு இளைத்துச் சோர்ந்
தாற்போலு மிருக்கிறது. நல்லது அப்படியே
உண்மையாய் நீ இளைத்தது மெய்யானால்,
அஞ்சிப் பயந்து அமரிலிருந்த சேனைகள்
முதலாகிய யாவரையும் பிழைக்கும்படியாய்ச்
சலத்தில் மூழ்கி மந்திரம் பண்ணுவையோ?
ஓ விஷத்துக்கொப்பானவனே! ஆகிலும், நீ
பிழைத்த பிற்பாடல்லவா மற்ற பேர்களைப்
பிழைப்பூட்ட வேண்டும். முதல்வனாகிய உன்
பேச்சே காற்றுடிக்கொண் டிருக்கும்போது, நீ
எங்கே மிர்த்யு சஞ்சீவி மந்திரஞ் செபிக்கி
றது? அடா அண்ணா! முன்னே உன் பிராண
னைக் காப்பாற்றிக்கொள்ளும் வகையைத்
தேடிக்கொள்ளடா மூடா! அடா குடிகேடா!
இந்த மடுவின்ஜலத்தில் நீ நுழையும்போது,
மாறுபாடான அடிவைத்து குளத்திலிருந்து
கரையேறுகிறவர்களைப்போற் பின்னிட்டு நட
ந்து போயிருக்கிறாய்; அந்தச் சூதும் நான்
கண்டறிந்து கொண்டேன். இப்பேர்ப்பட்ட
மாறுபாடுகளெத்தனையாயிரஞ்செய்து அரிய
மந்திரங்களை நீ உருகிச்செபித்தாலும், ஏதாகி
லும் ஒரு காரியம் உனக்குக் கைவல்யமாமோ?
ஓ குருகுலத்தைக் கெடுக்கவந்த கோவே! நீ
மாறிவைத்த அடிமாறி, உன்னுடைய நாகக்
கொடிமாறி, உன் பேர்மாறி, உன் மாலைமாறி,
அம்மாலை யணிந்த உன் முடிமாறி, உன்னுரு
மாறி, உன்னுயிர்மாறி, முத்துக்குடை நிழலில்
நீயாண்ட கடல் வளைந்த உலகம்மாறி, நீ பூமி
மேற் சாய்ந்து வீழ்கிற வரைக்கும் உன்னை
நான் விடப்போகிறதில்லை. ஆகையால், மரி
யாதையுடன் யுத்தத்திற் கெழுந்துவர வேண்
டியதே; சீக்கிரம் சீக்கிரம் பொழுதுபோகிற
தற்கு முன்னே வெளியேவா.

அடா சொற்புரட்டனே! ஓசைபெற்ற
உவர்க்கடல் சூழ்ந்த உலகங்களை யெல்லாம்

ஆளுகின்ற கொடிஸ்தலாதிபராகிய கிரீடாதிபதிகள் யுத்தஞ் செய்வதற்குப் பயப்பட்டு பாதலத்தில் ஒளித்துக் கொள்ளுவார்களோ? ஐயோ! இதைக் கேட்டாற் பண்ணவர் விண்ணவர் மண்ணவர் முதலிய பேர்களின் பெரிய சபையினிடத்திற் பழிப்பல்லவோ? அடா பாவி! நீயாகிலும் இரக்கமில்லாதவனாய் எங்களைப் பரதேசியாக்கி நாட்டைவிட்டுக் காட்டி லோட்டிவிட்டாய். நான் அப்படி செய்யமாட்டேன். மேன்பாட்டினை யுடைய ரம்பா ஸ்திரீகள் உனக்கு எதிர்கொண்டுவந்து மரியாதை செய்து கைகொடுத்துத் தழுவி யணைக்கவும், தேவேந்திரன் முதலாகிய தேவர்களுங் காதவழிதூரம் எதிர்கொண்டு வந்து, உன்னைக் கண்டு உவந்து கைக்கொண்டுபோய் கனவரிசைகளுடனே கற்பகக்காவு நீழலில் வைக்கவுஞ் செய்வேன். நீ இவ் வுலகத்தி லிருந்த செல்வத்திலும் எட்டுப்பங்கு அதிகமாகிய செல்வத்தில் வைப்பேன். நீ கண் கலங்கவேண்டாம்; பயப்படாதே திடங்கொண்டெழுந்து வா. ஓ தீரமன்னனே! உன்னைச் சேர்ந்த சொந்தமாகிய இனத்தோடும், மிகுந்த பந்தமாகிய ஜனத்தோடும் உன் மாமனாகிய சகுனியானவன், உனக்கு மெத்த உரியவனாய் நின்று உயிரழிந்து இறந்துபோனபிற்பாடும், எங்களை வெல்லவேண்டுமென்று நினைத்து, எண்ணாத யுத்தியெல்லாம் எண்ணினாய். ஓ பணத்தைப் புதைத்துவைத்துத் தருமம்பண்ணாமல் வீணாலோசனைபண்ணி மதங்கொண்டிருந்து மாண்டுபோகும் புல்லர்களாகிய அற்பர்களின் பிரயோசனமற்ற போக்கைப்போல், மகத்துவவுகின்ற மன்னனே! உனக்குச் சொந்தமா யிருந்தபேர்களும் மிகுந்தசேனைப் படைகளுஞ் சாய்ந்து மாய்ந்து போனபிற்பாடு உனக்கென்னயிருக்கிறது. இன்னமும் உனக்கு எண்ணமெண்ணத்திற்கு. அடா பயித்தியக்காரா! இப்பவும் மகா கோபங்கொண்டு நேரே வந்து போர்க்களத்தில் உன் பிராணனைவிட்டு விடாமல், இன்னும் பிழைக்கலா மென்னும் எண்ணமும் பேராசையுங்கொண்டு சலத்திற் புகுந்து ஒளித்திருந்தால் சந்திரசூரிய ருள்ள மட்டுக்கும் வசைச்சொல் அல்லவோ. அடா கீர்த்தியை நினைக்காத தூர்த்தனே! அடா வஞ்சநெஞ்சையுடைய வம்பனே! சிறிதும், மானம்-ஈனம்-வெட்கம் - மரியாதை இவைகளில்லாதவர்களைப்போல் மறைந்தாயே; வீரங் குலைந்தாயே; நீ மறைந்ததினால் நான் விடமாட்டுவேனோ.

அடா நாணமற்றவனே! இப்போது நீ செய்துகொண்டிருக்கும் இந்த மந்திரம் உனக்குச் சித்தியாகமாட்டாது. அதேதனென்றால், கங்கா ஸ்நானம்பண்ணுகிற பலனும், மேகம் பொருந்திய மலைமேலிருந்து யோகஞ் செய்யும் மேன்மையும், அக்கினிசாட்சியாய் யாகங்கள் செய்வதும், மந்திரசத்தியும் இதுகளெல்லாம் மனத்தூய்மைபெற்ற பரிசுத்தவான்களுக்குக் கைவல்யமாய் நன்மையைக்கொடுக்கும் அல்லாமல், உன்னைப்போலொத்த பெரும் பாவிகள் மூக்கைப் பிடித்துக்கொண்டு சலத்தினுள் மூழ்கி மூக்கிக்கொண்டிருந்து, வேத மந்திரங்களை அநேகம் அநேகமாயெடுத்துப் படித்து வலுப்பிடித்து உருச்செபித்தாலும், வசைமேலிட்டு நல்ல சமயத்திற் பங்கப்பட்டு, கெடுதிநேரிட்டு, கேடுமேலிட்டுப்போமே யொழிய, ஒரு காலத்திலும் பிரையோசனப்படாது. அடா பழுப்புக்குடன்பட்டுப் பருவுடலெடுத்த பதிதனே! அடா பெற்றூர் பிறந்தாரைப் பீடழிக்கவந்த பேயனே! நீ யிப்போதிருக்கு நிலைமையை உலகையாளுந் தேசராஜ பாவை மன்னர்கள் எல்லோரும், உன்னை வணங்கும் போஜராஜ வீரர்களெல்லோரும் கண்டால் வந்திப்பதைவிட்டு, சுவர்க்கமத்திய பாதலமென்னும் மூன்று லோகத்தாரும் பிரசித்தமாய் அறியும்படியாகிய பெயர்பெற்றும், இன்னாட்டிற் கொடுங்கோல் செலுத்தி அரசபுரிந்து வாழ்ந்தும், விசாலமாகிய இந்தக் குருக்ஷேத்திரத்தில் யுத்தஞ்செய்ய மாட்டாமற் பயந்து சலத்தில் ஒளித்திருந்து உயிரிழந்தான் இத்துரியோதனனென்று நிந்திப்பார்களே; அதை நீ சிந்திக்காமற் போனதென்ன ஐயோ! அவர்கள் பழித்தாலும் பெரிதல்ல. தண்டை-சிலம்பு-சதங்கை இவைகள் கொஞ்சுந் தாளினையுடைய பிரதிமெய்போன்ற ஸ்திரீகளெல்லோரும் பழிப்பார்களே! கோணக்கோணவலிப்பார்களே! இதைப் பார்க்கிலும் வேறு பழிப்பு வேண்டுமோ. கரி-புரவி-தேர்-காலாள் என்னுஞ் சதுரங்கப்படையாகிய பதினொரு அக்குரோணி யென்னுஞ் சேனைக்கடல்கொண்டு, முன்செய்த தந்திரவஞ்சனை செய்ய நினைத்து இம்மடுவிற் பதுங்கினையோ. அடா தீயவனே! எத்தகைவாய்ந்த மொழிகளைச் சொன்னாலும் உனது சித்தக்கல் சிதையுமா! ஒருக்காலுஞ் சிதையாது. மரியாதையாய் வெளியிற் புறப்படுவையென்று, நான் இவ்வளவு சொல்லியும், நீ யின்னும் வெளிப்படவில்லை. ஒருவேளை நான்சொன்ன சொற்க

ளெல்லாம் உன் காதிற் கேட்டுங் கேளாதவனைப்போல் இருந்தாலும், அல்லது சலத்தை விட்டெழுந்து வருவதற்கு நீ அச்சப்பட்டிருந்தாலும், உன்னை வெளிப்படுத்துவதற்கான வழி தேடுகிறேன். அஃதெப்படி யென்றால், பூர்வத்தில் ஸ்ரீராமமூர்த்தியானவர், சமுத்திர தீரத்தையெடுத்து தர்ப்பசயனம் பண்ணிக்கொண்டு வருணசெபம்புரிந்து வருந்தியழைத்தும் வாராத வருணன்பேரில் கைத்திறங் காட்டவேண்டி, ஓர் கடுங்கணையேவிக் காயச் செய்தபோது, கடலேழுங் கலங்கிச் சலம் வறண்டு வருணன் கதறிவந்த தன்மையைப் போல், விசித்திரம்பெற்ற விஜயகாண்டீப வில்லாளியாகிய என் தம்பியைக்கொண்டு அழற்கணையொன்று பிரையோகஞ் செய்வித்து, அந்த தீட்சண்யஸ்திரத்தால் நீ இப்போதிருக்கிற சுத்தமான தடம்புகைந்து தண்ணீர் சுவறிக் காய்ந்துபோகும்படி செய்து உன்னை வெளிப்படுத்துவேன். ஒருவேளை நீயிப்போது பதுங்கியிருக்கிற இத்தடாகத்தினின்று மப்படியே நாகலோகஞ் சென்று பதுங்கினாயினும், அங்கேயுமுன்னை ஆராய்ந்து கொண்டுவரத்தகுந்த பாணங்களை விடுவித்துச் செந்தூக்காய்த் தூக்கிவரச்செய்வேன். ஒருக்காலும் விட மாட்டேன். இதையுணர்ந்து சீக்கிரமெழுந்துவரக் கடவாய். அடா தெளிவில்லாதவனே! அடா அறிவில்லாதவனே! ஒருவேளை அதுவரைக்கு நான் தாளமாட்டேன். இதோ நடுக்குளத்திற் காலைநாட்டி உன் குடுமியைப் பிடித்துத் தூக்குகிறேன் என்று கூக்குரலிட்டு ஆக்கிரமப்பட்டு விருகோதர னென்னும் வாயுகுமாரன் சொல்லினான்.

### துரியோதனன் வீமன் கொடுமொழிக் காற்றாது வெளியாகி யாரோடு மெய்ப்படையாலெங்ஙனம் பொருதுவதென, அதற்கவ் வீமனுங் கிருஷ்ணதேவரும் விடைதரல்.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராசனே! பாவன்னிப்படியுரைத்த பழமொழியுந் தனது செவிப்பட்டகாலைச், சீவன்முற் றறையும்விடுவோனிருக்குமோ மறைவிடனே சேரவிட்டா, னனமற் றறியாமணினையு நினைவுக்குவமை வேறிலாதான். இப்படி வீமசேனன் பகர்ந்த பல மொழிகளெல்லாந் துரியோதனனுடைய காதிற் நாராசம்போ லேறவே, படபடத்து மனந்தாளாதவனாய், தன்ஜீவன் முற்றறையுந் தொலைக்க விருப்பவன் சும்மாயிருப்பானோ; தான் பெற்றிருந்த ஜீவன மந்திரஞ்சோர, அதைச் செபஞ் செய்திருந்த வாய்சோர, யோக பட்டைபோற் கட்டிக்கொண்டிருந்த கைசோர, அசைவற்றிருந்த மெய்சோர, செய்கைசோர, ஆவதென்றும் அழிவதென்றும், ஆய்ந்தறியாத அறியாமையாகிய அறிவு சோர, இதுவரையிலும் உறுவேற்றிய மந்திரபலத்தால் மேவிவந்த நன்மையுஞ்சோர கோபமேற் கொண்டு, அந்தக் கோபத்தின் வசப்பட்டுக் கோவென் றிரைந்து, வீமசேனனால் தான் அழியவேண்டிய விதி வச மிருப்பதினால் விரைந்தெழுந்து, எவர்களும் பார்ப்பதற் கரிதாகிய நீளமும் அகலமும் ஆழமுமுடைய அத்தடாகத்திற் பொருந்திய சயித்தினின்றுஞ் சக்கிரவாளகிரி சூழ்ந்த பூலோகத்தில் வாழ்கின்ற அரசர்களெல்லோரும்வாடிமனமுறுகி நடுங்கியொடுங்கும்படியாய் ஒரு காளமேகமானது, பெருங்கடலில் மூழ்கிச் சலமெல்லாங் கவர்ந்து கருநிறங்காட்டி அண்டகோளத்தி லெழுந்தது போல், ஆரபாரத்துடன் ஆர்ப்பரித்து, ஆகாயத்தில் ஆபரணமின்னலுடன் பாய்ந்து, அங்கிருந்து சிரோரத்தினக் கொண்டையினையுடைய பாம்புக்கொடி தரித்த துரியோதன மகாராஜன் விசாலமாகிய மடுக்கரை மேல் வந்துநின்று, புஜந்தட்டிகரநீட்டிப்பற்கடித்து, தண்டாயுதத்தை விறுவிறெனச் சுழற்றிப் பூமியிலூன்றி, நெருப்பெழ விழித்து, அவ்விடத்திலிருக்கின்ற யாவரையும் மதிக்காது அலட்சியமாக நோக்கி, சுற்றத்தார்-பத்தினி-புத்திரர்-மித்திரர் முதலாயினோர் பற்றற்றவனாய்த் தன்னுமனோதிடங்கொண்டு, மகமேருவின் மூன்று சிகரத்தை முறித்தருளிய வாயுதேவனது குமாரனாகிய வீமசேனன் முகத்தை நோக்கி, ஆ! ஆ! வீமா! என் கையிலிருக்கிற ஆட்சிபெற்ற கதாயுதத்தின் அடி யொன்றால் முடிந்து போய்விடுவாய். சீக்கிரமத்தில் உன் பேச்சு அடங்கிப்போம். நீமுடிந்து போவதற்குத்தானோ சகுதியில் என்னை யழைத்தாய். உன் பொல்லாதவேளை என்னைக் கூப்பிட்டதல்லவா. ஆனால், இதோ வந்தேன் என்று மீசைமுறுக்கி, மதாளித்து நிதானித்து நின்றான்.

இப்படி நின்றவன், தனக்குநேரில் நிறைந்து குளத்தைச் சூழ்ந்து நிற்கின்ற பெருஞ்சேனைகளையும், தன்னை விடாமற் கவிந்துகொண்ட நிருபர்களையும், கெடாத வல்லமை

கொண்டு தேனிறைந்தமாலை புனைந்ததிணிந்த தோள் பொருந்திய பஞ்சபாண்டவரையும், செங்கண் மாலாகிய திருமாலையும் உறுத்துப் பார்த்து, உறப்பாசச் சில வார்த்தை சொல்லுகிறான். ஓ என்னை அறைகூவி நின்ற அடல்வீரர்களே! நீங்களோ யானைசேனை முதலிய பரிவாரங்களுடன் இருக்கின்றீர்கள். விஷாக்கினியின் காந்தியாக அனலுமிழ்கின்ற ஆயுதங்களெல்லாங் கைக்கொண்டு இருக்கின்றீர்கள். நானோ தனியனாய் வேறு ஆயுதமில்லாமற் சதாயுத மாத்திரங் கைக்கொண்டிருக்கின்றேன். இவ்விதமாக என்பேரில் நீங்கள் பலருமடுத்துப் போர்தொடுத்து சண்டை கொடுத்திடுவதோ! அல்லது ஒருவருக்கொருவரே எதிர்த்து யுத்தஞ் செய்வதோ! எப்படி ஏற்பாடு சொல்லுங்கள். என்று காந்தாரியின் ஜேஷ்டகுமாரன் கேட்டான். அப்போது அண்டர்கள் மகிழும் விண்டலங்கமழு தண்டுளவணிந்த கொண்டல் மேனியனும், மண்டலந்தழைக்க மலருகின்ற நளின நாபனுமாகிய நாதன் சிறுநகைகாட்டி, இளம்பருவமுதலுனக்கு மிவனுக்கும் வயிர்ப்பெண்ணி லெண்ணெணா வுளம்புகல வரசவையில் வஞ்சினமும் பலபடநின்றுரையா நின்றான், களம்புகுது நின்னொழிந்த துணைவரையு தனதுதடக் கையாற்கொன்றான், விளம்புவதோ வேறொருவர் நின்னுடன்போர் மலைவரோ வேந்தர்வேந்தே. வில்லாலும் வாளாலும் வேலாலும் பரிநெடுந்தேர்வேழத்தாலுந், தொல்லாண்மைதவறுமற் செருமலைந்தோர் சான்றாகச் சூழ்ந்துநிற்ப, புல்லாரை புறங்காணும் போர்வேலோ யிருவருநீர் பொருதுநும்மில், வல்லார்கள் வென்றிபணிந்தவனிதலம் பெறுமிதுவே வழக்காமன்றே. அப்பா துரியோதனா இப்போது ஏற்பட்டிருக்கின்ற இவ்வடுமுனை பதிமூன்று நாட்போரில், அபிமன்னனென்னும் அழகனை, அரன்பூசை மறவாத அருச்சுனனுக்கு குழந்தையை தனியாகிய ஒருவனை அநேகம்பேராய் மடக்கிக்கொண்டு, பின்னும் முன்னுந் திருட்டுப்பூனைபோ லொளித்துவந்து மாறுபடுத்தி, அபிமனையுங் கூறுபடுத்திக் கொன்றுவிட்ட கொடிய துஷ்டாள் கூடியிருக்கிற கெடுமுனையல்லவே, ஐயா மநுநூலின் வண்மையுணரும்படியாயிருக்கிற தருமமுனையாக்களும், சத்திய தருமமே தழைத்து புட்பித்து மணத்துக் கொண்டிருக்கும் இந்த பாண்டவர்களிடத்தில், அசத்தியத்திற்கு பாத்தியப்பட்ட உன்னுடன் யாவரும் பகைத்து எதிர்த்து போர் புரியமாட்டார்கள். இதோ நிற்கின்றானே வீமசேனன், இவனொருவன்றான் உன்னுடன் அமர் செய்வதற்கு ஆயத்தப்பட்டிருப்பவன். ஆனால், உனக்கு இவனெதிராக இப்போது நாங்களேற்படுத்தவில்லை. அதிபால்ய முதற்கொண்டு, உனக்கும் இந்த வீமனுக்கும் மனவயிரமேறி இருக்கின்றதுமல்லாமல், நீங்கள் கூடியாடிய வஞ்சகச் சூதினால் உள்ளம்புழுங்கி, வெகு ஜனங்கள் சேர்ந்திருந்த ராஜசபையில் வெகுவாகிய சபதங்களை பலவாறாகப் பேசியிருக்கின்றானல்லவா? அதுபோலவே, இப்பவும் யுத்தகளம்புகுந்து உன்னொருவனை மாத்திரம் உயிருடன்விட்டு, மற்ற தொண்ணூற்றொன்பதுபேர் தம்பிமார்களையுந் தனது தடக் கரத்தால் கொன்றிருக்கின்றான். பூர்வசம்பந்தங்களிப்படிக்கெல்லாமிருக்க, இப்போது நீ கேட்கவேண்டியதுமில்லை; நான் சொல்ல வேண்டியதுமில்லை; வேறொருவர் உன்னுடன் எதிர்த்து போர் செய்யவேண்டிய அவசரமுமில்லை; அக்கறையுமில்லை; க்ஷாத்திரமுமில்லை. ஓ ராஜாதிராஜனே! வில்லாலும், வாளாலும், வேலாலும் இரதகஜ துரகபதாதிகளாலுந் தருமமாகப் போர் புரிந்து, ஆண்மை குன்றாமல் கீர்த்தியுந் திறமுங்கொண்ட முனைவீராள் முதலிய அரசர்கள் சாக்ஷியாக, நீதிநிறையாக, அமரர் முதலிய அந்தர வாசிகளும் அங்ஙனம் நின்று நோக்கும்படியாக சத்துருக்களை புறங்கொடுத்தோடச் செயிக்குந் தாஷ்டீகராகிய நீங்களிருவரும் போராடி, உங்களிருவரில் வல்லவர்களாயிருக்கின்றவர்கள் வெற்றிபூண்டு இவ்வுலகத்தை அரசாக்ஷி செய்யுங்கள். சுகமாய் வாழுங்கள். இதுவே தருமம். இதுவே சத்தியம் என்றார் கொண்டலுக் கீடாகிய திருமேனி வாய்ந்த கோபாலன். இப்படி சொல்லவே, வண்டு மொய்த்த வலம்புரி மாலையணிந்த வயவேந்தன் மனங்களித்து, துணிந்த பலமணிந்த தோளினையுடைய வீமனைப்பார்த்து, ஏனப்பா! என்ன சொல்லுகிறாய்? வில் முதலிய ஆயுதங்களைக்கொண்டு யுத்தம் பண்ணுகின்றையோ? அல்லது தண்டாயுத மென்னும் மால்வரை தாங்கிப் போர் புரிகின்றையோ? சீக்கிரஞ் சொல்லு. எது உனக்கு சம்மதம். எந்த ஆயுதம் உனக்கு மெத்தப் பழக்கம். உன் கருத்தை வெளிவிடு. என்று துரியோதனன் கேட்டான்.

ஓ மகாராஜனே! இவ்வாறு கேட்டவன் எவ்வாறானவனென்றால், போர் திறத்தினாலும்,

சகோதர பெருக்கத்தினாலும், தான் செய்கிற பாவமுதலாகிய வஞ்சகத்தினாலும், உலகத்தை யாளுகிற ஐஸ்வரியத் தன்மையான்து தன்னை விட்டு ஒருக்காலும் பழுது வராதென்றும், இளமை செல்வமாகிய சம்பத்காமும், ஆயுளாகிய வாழ்க்கையும் சாஸ்வத கல்பமாயிருக்குமென்றும் நிசமா யெண்ணி ஏமாந்து போன பேர்வீரன், வணங்காமுடி பொறுத்த பூபாலன். இவ்விதமாக வீமசேனனை கேட்கவே, வாயுகுமாரன் சொல்லுகின்றான். ஓ அறிவாளியாகிய அண்ணா; இப்போது நாமிருவருங் கதாயுதங் கொண்டு எதிர்த்து யுத்தஞ் செய்யத் தக்கதேயல்லது, மற்ற ஆயுதங்களைக் கொண்டு யுத்தஞ் செய்வதற்கு யோக்கமாட்டாது; இசையாது; இதுகாலமல்ல, நீ அதற்குத் தகுதியுடையவனாகவு மிருக்கவில்லை என்றான்.

இவ்வாறு வீமசேனன் சொல்லியதைத் துரியோதனமகாராஜன் கேட்டு, நல்லது அப்படியே கதாயுதங்கொண்டு யுத்தஞ் செய்வதனால் இந்தயிடம் இரத்தமும் நிணச்சேறும் பிணக்காடும் பெருக்கங்கொண் டிருக்கின்றது. ஆனபடியால், எங்களுக்குத் தகுதியாகிய இடத்தைச் சொல்லுமென்று பொய்மையாகிய விஷயங்களை ஒழித்தருளிய கோபாலனை பார்த்துக் கேட்க, அந்தச் சொல்லைக்கேட்ட புள்ளாங்குழலைப் பூரித்தருளிய செல்வத் திருமால் சிந்தை களித்தருளி, வீமசேனனுந் துரியோதனனுங் கதாயுதத்தஞ் செய்வதற்காக இடத்தை குறித்துச் சொல்லுகிறார். ஓ குருகுலக்கோவே! தாவிச் செல்லுகின்ற சப்தமாகப்பூட்டிய தடந்தேரை செலுத்திப் பகற்போதை யளந்துவருஞ் சூரியனை போன்ற மருப்படையோனாகிய பரசிராமனானவர், பூர்வத்திலமர்தொடுத்து முடிவேந்தர் யாவரையும் மூவேழு தலைமுறை முடித்து, அவர்களுடைய உதிரங்களினால் ஏழுநாவினையுடைய அக்கினிதேவன் சந்தோஷிக்கும்படியாய் நரமேதயாகஞ் செய்த ஸ்தலமொன்று உண்டு. அது ஈரேழுலோகத்தினுஞ் சிறந்த பரிசுத்தமாகிய ஸ்தலம். அங்கே அரசர்களை கொல்லும்போது, அவர்களுடைய தேகத்திலிருந்து பெருகி வழிந்த இரத்தங்களானது நிறைந்து ஓர் மடுவாகி பிரகாசிக்கின்றது. அந்த மடுவினுடைய பெயர் சமந்தபஞ்சக தீர்த்தமென்று செப்புவார்கள். அந்தயிடமே நீங்களிருவரும் போர்புரிவதற்கான இடம். அதற்கொப்பாகிய நல்ல ஸ்தானம் வேரில்லை. அதுவே நல்ல ஸ்தலம். அந்தயிடத்தில் உயிர்விட்ட பேருக்கும், யாகாதி கிருதுக்களை செய்த பேருக்கும் மேன்மையாகிய சுவர்க்கங் கிடைக்கும். ஆதலால், அந்த திக்கை நோக்கி புகுந்து சண்டை செய்யுங்களென்று கொண்டல் வண்ணனாகிய அனுதாகஷகன் சொல்லியருளினார்.

## பாண்டவருந் துரியோதனனுஞ் சமந்த பஞ்சகம்போய்ச் சேருதல்

இவ்வாறு கிருஷ்ண மூர்த்தியும் வீமசேனனுங் கூறிய வார்த்தையைக்கேட் டசைந்தாடும்படியான அரவக்கொடி வேந்தன், தன்னுடைய பிரதாபவாகனயோக பெருமைகளெல்லாம் அழிந்து கால்நடையாக நடந்தான். சேனாபதியாகிய திஷ்டத்யும்மன் முதலாயினோர் தங்கள் தங்களுடையவாகனங்களிலேறிக் கொண்டு பரிசுத்தமாகிய திறத்துடன் நான்கு புறமுஞ் சூழ்ந்து, ரதகஜ துரகபதாதிகளாகிய நான்கு படையும் ஆயுதவருக்கங்களோடு ஒன்றோடொன்று இழைத்து ஒளிவிட்டுத் தழைந்து, செரசுக்கும்படிக்கு விரைந்து பெருங் கூச்சலிட் டிரைந்துவரத் தீயவனாகிய துரியோதனனை நடுமத்தியில் நடத்திக் கொண்டு அவனுக்கிரு மருங்கும் எமகிங்கிலியரைப் போற் சென்றார்கள். தருமராஜனுடைய தம்பிமார்களும், பாஞ்சால ராஜனுடைய மற்ற மைந்தர்களும், இளம்பஞ்சபாண்டவர்களும், இன்னுமுள்ள வீரர்களுங் கும்பி வெம்பி பம்பி ஒன்றாய் நெருங்கிப் பரந்து புடைபெயர்ந்தார்கள். பற்பல விதமாயுள்ள வாத்தியங்களை அலைகடல் சோரும்படி அதிக முழக்கத்துடன் முழக்கி, அணிக்குடைகவரி இவை யாவுந் தழங்க நடந்தார்கள். அப்போது, முதலிய அந்தரபதியாகிய இந்திரனுக் கொப்பாகிய பூலோக தேவேந்திரனென்னும் புண்ணியன், சகல தேவர்களுந் துதிக்கும்படியான கண்ணியன், பூமாது கொண்டாடும் பொறையாளன், புகழ்வீரர்கொண்டாடு நிறையாளன், துவமுந்தேர்ந்த சத்தியவான், சகல தத்முணர்ந்த நித்தியவான், தக்க மெய்யறிவுள்ளோர்க்கு மிகுநேசன், சாதுக்கள் மகிழுஞ் சுக போசன், விரோதமாயினாரிடத்தும்விசுவாசன், தருமபுத்திரனென்னு மியற்பேருடைய மகாராஜன். துரியோதன மகாராஜன் கால்நடையாய் நடப்பதை பார்த்து, மனங் கரைந்து நைந்து, வயிறு பொரிந்து நொந்து, மனந் தாளாமல் வெம்பி தம்பியைத் தணியப்

பார்த்து, வினை வழியையும் விதிவசத்தையும் நினைத்து வெறுத்து, ஐயோ வெற்றிப்போர் முடிக்கும் வேந்தர்கள் யாவரும் பொன்முடி திருந்தப் பொருந்தி வணங்குந் தோறும், அவர்களுடைய கிரீடம் பட்டு சிவப்பேறும் படியாய் இருந்த பாதம், பூமியில் நடந் தறியாத பொன்னடி; தாயார் மடிமேலுலாவிய சரணம்; தந்தை தோள்மேலேறிய தாள்கள், கருதலர் வணங்குங் கால்கள் கற்றவர் புகழுங் கழல்கள் இத்தன்மையவாகிய என் தம்பி துரி யோதன மகாராஜனுடைய தாமரை கமலம் போன்ற சரணம்; பாவியாகிய என் கண் காணும்படியாய் பூமிமேல் நடந்து வருந்தி சிவந்து புண்ணாகத்தக்கதோ? ஆ! ஆ! தெய் வமே! என்று இறங்கி வாடிய அறவேந்தன் தானேறிச் செல்லுகின்ற தேர்விட்டிறங்கி, இராஜாதி ராஜனாகிய துரியனும், தவத்தினா லாகும் நல்வினைகளுக்குக் காரணமாகிய வாயு தேவன் குமாரனும், கைக்கிசைந்த தண்டாயு தங்கொண்டு கடுஞ்சினம் எதிர்தூண்டப் புகுந்து, இடங்குறித்து நின்று சண்டை செய்வதற்குத் தங்கள் தங்களுடைய தடப் புயங்களைப் பார்த்துத் தட்டிக் கொட்டிக் கொண்டு நின்றார்கள்.

### கண்ணன் வீமசேனனுக்கு வேகுளிமூட்டி யுத்தசன்னத்த மாக்குதல்

அந்த வேளையில், செழுந்துளவணிந்த திருமார்பமைந்த ஸ்ரீகிருஷ்ணரானவர், ஊழி கால நெருப்பைப்போல் உருத்துச் சிவந்து பொறியிறைத்துக் கொண்டிருக்குங் கண்களை யுடைய திடபலசாலியாகிய பொற்பமைந்த வீமன் முகத்தைப் பார்த்து, சண்டைக் கடா வைத் தட்டிவிடுவதுபோல், பண்டை நடந்த விதண்டையை அண்டையிலிருந்து கிண்டி விடுகின்றார். ஐயா வீமசேன மகாராஜனே! நஞ்செனக் குடிகெடுக்கும் வஞ்சனைக் குடி யிருக்கும் மனத்தனாகிய இந்தத் துரியோதன மகாராஜன், அன்னத்தில் பின்னமாக விஷங் கலந்திட்டு பாம்பினால் கடிக்கவுஞ்செய்து விஷந் தலைக்கேறிய காலத்தில், காலுங் கையுங் கட்டிக் கங்கையிற் போட்டானன்றோ. அந்நாளில், மேன்மை யோங்கிய பாதாளத் தில்போய் அமுதருந்தி விடந்தெளிந்து, அவ்விடத்தில் ஏழுநாளிருக்க, நீ இவ்விடத்தி லிறந்துபோனாயென்று எண்ணியிருந்த உன் பகைவர்களின் எண்ணத்தில் பெருங் கல்லைப் போட்டதைப்போல், எட்டாநாள் திரும்பி உயிர் பிழைத்துவந்த உத்தமனாகிய உனக் குச் சமமாய்ச் சொல்லத்தக்கவர்கள் யார்? தனது கொடியில் எழுதியிருக்கிற நெடிய பாம்பைப் பார்க்கிலுங் கொடிய கோமகன் அரக்கினாலும், மெழுக்கினாலும், குங்கிலி யத்தினாலும் அழகிய வீடுகட்டி, அதில் குடியேற்றி குடிகெடுக்கும் புரோசனனைக்கூட வைத்து நெருப்புமூட்ட நினைத்த நாளினில், உடுக்கைபோன்ற இடையினையுடைய உங்கள் தாயாருடனும், உன் தமயன் முதலிய தம்பி மார்களுடனும் பிழைக்கும்படியாய்ப் பிராண னைக் காப்பாற்றி, நெருப்பிடவிருந்த நீசனை நெருப்பிலிட்டு, பாண்டவர்களுந் தாயும் எரி ந்து போனார்களென்று எண்ணிய பேர்களில், வயற்றில் அவியாத பெரு நெருப்பாகிய வடவாயைமூட்டி, எங்களுமிசைபெற்றயேந் தலாகிய உன்னை எவர்கள் வெல்லத் தக்கவர் கள்; எவர் கொல்லத்தக்கவர்கள். ஓ! எதிரற்ற வனே! இடும்பாசூரனென்று எல்லோரையும் ஏமாற்றிக் கொண்டிருந்தவனை உயிர் நீக்கி யொழித்ததல்லாமல் நிதம்,ஒரு பிராமணப்பிள் ளையையும், ஆயிரம் எருமைக்கடா கட்டிய சகடா வண்டிச் சோற்றையுந்தின்று, தவசிகள் முதலான பேர்களையுங் கொன்று நின்ற பக்கா சுரனுடைய பிராணனையுமகற்றி, வேத்திரகீய மென்னும் அக்கிராரத்துப் பார்ப்பார் பட்ட துன்பத்தையுமாற்றி, யாவர்க்கு மின்பத்தை யேற்றிய உன் குணத்தை நோக்கிய எமதரும ராஜனுடைய நெஞ்சமுங் குலைகுலைந்து கூசுமே.

ஓ சந்திரகுலக்கோமானே! நான் இருபத் தொருவிசை எதிர்த்து, இளைத்து, இரங்கி நின்று வெல்லமாட்டாமல் தென் மதுரையை விட்டு, வடமதுரையை நாடி, வலசைவாங்கி, ஓடச்செய்த மலைக்கீடாகிய ஒரு ஜராசந்தனை, ஓரிமைப்போதில் இரு பிளப்பாகக் கிழித் தெறிந்து என் கவலையைப் போக்கிய ஆண் சிங்கம் நீயல்லவோ? அப்பனே! கேடில்லாவர மும் பீடில்லா உரமுமுடைய கிம்மிராசுரனை, சடாசுரனை, குபேரனுக்குச் சேனாபதிகளாகிய மணிமாலன் முதலாகிய பேர்களை, இன்னு மெத்தனையோ கொடி வீரர்களையெல்லாந் துடி துடித்து மாளப்படுத்திய உனதாள்வினையை நான் எடுத்துப் படிக்குந் திறமில்லாதவனான போதிலும், நேற்று விராடபுரத்தி லிருந்த போது, கீர்த்தியுடைய கீசகனைக் கேடுபடுத்திக் கொன்ற உன் பெருமையை, ஆ! ஹா! ஹா!

நானென்ன பேசுவேன். இவைகளெல்லாம் இப்படியிருக்க, நெருநல் நடந்த பதினேழா நாட்போரில் உன் மத்தனைப்போல மயங்கி, உலகஞ் சிரிக்கும் பழிப்பெயர் பூண்ட, துச்சாதனனென்னுந் துரியோதனன் தம்பியைத் துடிக்க வடித்துத் துவளப் பிடித்து, குத்தி நெரித்து இரத்தங் குடித்து, சொல்லற்கரியவான சித்திரவதை செய்து, அவரவர்களுக்கு முன்னே போட்டு அலைத்து இடித்து, ஆராகிலுங் காத்துக் கொள்ளுங்களென்று அநேக நேரம் ஆட்டிக்காட்டினை. அப்படிக்குக் காட்டியும் தம்பியென்கிற விசுவாசம் வைத்து உன்கிட்ட நெருங்கித் தன்னுடைய சகோதரனை மீட்டுக்கொள்ளுஞ் சக்தியில்லாமற்போன வஞ்சக மனத்தோனான இத்துரியோதனனைக் கொல்லுகிறவிஷயம் உனக்கு மெத்தவும் சுலபமாக யிருக்குமென்று நானினைக்கிறேன். நீ ஆர்க்குமடங்காத ஆர்படைக்குந் தோற்காத அஜேயன்; உனக்கு ஒப்பு துரியோதன மகாராஜனுக் கெதிரிற்சென்று நின்று கோவென்றிரைந்து கூச்சலிட்டமுது மேகமுழக்கம் போற் கூவி சிலவசனஞ் சொல்லத்தொடங்கினர்.

என்றுணைவருடன்யானு மேவியநின்றொழில்புரிந்து, வன்றுணையாய்ச் சேவிப்ப மடங்கலாசனமேறி, இன்றுணைவர் குருகுலத்தார் எனுமிசைபோய்த் திசையேற, நன்றுணைவா வாளுதியோ னாலமெலா நின்குடைக்கீழ். அப்பா என்னுயி போன்றவனே! என் தம்பிமார்களும் யானும் நீயேவும்படியான உன்னேவலைச் செய்து; நீகைகாட்டிய விடத்திற் காத்திருந்து உனக்கு உரிய துணையாய்ச் சூழ்ந்திருக்கின்றோம். நீ எவ்வுலகிற்கு மிறையாய் எல்லோருக்கும் மேற்பட்டவனாய் வீரசிங்காசனமேறி, மேதினியெல்லாம் ஒரு குடை நீழலிற்புகுந்து, குருகுலத்தார் யாவரும் மற்ற எட்டுத்திசையும் நம்மை மெத்த நல்ல துணைவர்களென்று புகழும்படிக்கு இனிதாகிய வாழ்வைப்பெறுக. ஐயோ நீ கால்கொண்டு நடப்பதைப்பார்க்க என்கண் விண்டு கிழிகின்றதே? ஓ எனக்கினிய இளவலே! நான் சொன்ன வாக்கியம் ஒருக்காலுந் தப்பாது; சத்தியமாகச் சொன்னேன். மேலும் இப்போது இவ்விடத்திலிருக்கிற இந்தத் திருமாலாகிய ஸ்ரீகிருஷ்ணனும், செல்வ சம்பன்னராகிய ராஜர்களுஞ் சாக்ஷியாக இவர்கள் முன்னிலையிலுஞ் சொல்லுகின்றேன். உன் சித்தத்தைச் சமாதானப்படுத்தி எனது ரதத்திலேறிக்கொள் என்று பூரணமாகிய கிருபைமேலிட்டு மகாதயையுடனே சொல்லற்கரிய பலவிதநயத்தினாற் சொல்லியருளினார். அம்மொழிகேட்ட வன்னெஞ்சனாகிய துரியோதனன், அவர்கூறிய முறைகளனைத்தையுங் கர்னகடோரமாகக் கேட்டுக்கசந்து நகைத்து வெறுத்து மறுத்து அகற்றி மனமூப்பிச் சொல்லுகின்றான். ஓ தருமராஜனே! மூண்டு எழுந்த கோபத்தால் எங்களைமுடித்து, இந்த உலகமுழுமையும் அரசாள வேண்டுமென்று நினைத்து ஆசைகொண்டு வந்தாய். உன் எண்ணப்படிக்கே ஆயது. ஆகிலும், நான் மண்ணை மாத்திரம் வைத்தேனே யொழிய; மனுஷ்யாளை வைக்கவில்லை. ஆருமில்லாம லிருக்கிற வெறும் பூமியாகிய மண்ணை உங்கள் தலைமேற் கட்டிக்கொண்டு நீங்கள் மயங்குங்கள். இனி நான் சொப்பனத்திலும் நினைக்கமாட்டேன். நெடுநாளுஞ் சாப்பிட்ட எச்சிலை உமிழ்ந்துவிடாமல் மறுபடியும் விரும்புவோர்கள் யார்? நான் நன்றாய்த் தின்று துப்பிப்போட்ட எச்சில் சக்கையாகிய இந்தத் திப்பிக்கு யார் காத்திருக்கின்றார்களோ? யார் எதிர்ப்பார்த்திருக்கின்றார்களோ? அவர்களே தின்னட்டும்.

இதன்றியும், எங்கிளைஞரென்றுணைவரென்பொருட்டா லிறந்தேகவுங்க ளருள்பெற்றிருக்குமுயிர் வாழ்வினினிதன்றே, வங்கவமலாம் வேறுபடவாறுபடு குருதியின்வாய்க், கங்கமுங்காகமுங் கொத்தக்களத்தவிந் தானெனும்பெயரே. என்னுடைய பந்துக்கள், என் சகோதராள், எங்கள் புத்திராள், எனக்குரிய மித்திராள் இவர்களெல்லாரும் என்னிமித்தத்தில் இறந்துபோயிருக்க, அவர்களை யெல்லாம்பறிகொடுத்து இழந்துவிட்டு, இப்போது நீங்கள் தயவுசெய்து மனதிரங்கி மன்னித்துக் கொடுக்கிற நாட்டைப் பெற்று, உங்கள் அருளுற்று உயிர் வைத்து வாழுகின்ற வாழ்வைப் பார்க்கிலும், என்னுடலெல்லாம் வேறுபட்டுச் சிதைந்து வதைந்து ஆறுபோலோடிவருகிற இரத்த நிணச்சேற்றினுடன் காக்கையும் கழுவும் கொத்திக் கொத்தித் தின்னவும், நாயும் நரியும் நரம்புகளை இழுக்கவும், தேசத்தினர் முதலாகிய சில வீரர்களெல்லோருந் துரியோதனன் ஒரே நிலையாக விருந்து யுத்தஞ்செய்து போர்க்களத்தில் மடிந்து முடிந்து போனானென்று பேசிக்கொள்ளும் புகழ்தழைக்கவும், முதலிற்கொண்ட எற்பாட்டின் படிக்கே முழுமையும் யுத்தஞ்செய்து உயிர்

துரியோதனன் கால்நடைகொண்டு செல்லுவதை தருமர் கண்டிரங்கல்.



வது மெத்தவும் உத்தமமாக இருக்கிற
வா? ஆதலால், இனி யாகவேண்டுங்
யம் இதனையன்றி வேறில்லை. என்று பல
விதங்களாகப்பேசி, தருமராஜன் பேச்சுக்
ங்காமல் ஆழ்ந்த தீரத்துடன் அசைவற்
றுகி, மேகத்தை விட்டுப் பிரிந்த இடியா
படிமேற் படர்வதென்று சொல்லுதற்
கதாயுதத்தை தோள்மேற்கொண்டு,
னருத்தனுந் திருத்தமாக நடந்து, திரு
குறித்த இடம்போய்ச் சேர்ந்தான்
ரங்கா முடி வேந்தனுகிய துரியோதன
ராஜன். அப்போது, பாண்டவர்களும்
கு ஜனஞ்சூழத் தங்களுக்கு வேண்டிய
ரத்துடன் அந்த இடத்தை யடுத்தார்கள்.
கே விண்ணோர்,மண்ணோர் முதலிய யாவ
மகிழ்ந்து, புகழாநின்ற தூய்மையாகிய
ந்தபஞ்சகமென்னு மடுவுக்குச் சமீபத்தி
க்குஞ் சிறப்பினையுடைய நல்ல தலத்திற்
ந்து, சேனைத்திரள்களை யெல்லாங் கோட்
மதில்போலும், சக்கிரவாளகிரிபோலும்,
ரத்துக் கொண்டிருக்க வைத்து, தீவினை
க்கு மூலமான கண்ணற்ற திரிதராஷ்டிர
டைய மகன் இன்னுரென்று எவர் சொல்
தக்கவர்கள். எந்தலே! இதன்றியும்,பூர்வத்
ராஜ சபையிற் சில சபதங்களும் பேசி
க்கிருய். அதுகளையும் நிதானித்து, ஆத்
ப்படாமல், அவசரமில்லாமல், ஆல்சியஞ்
ய்யாமல், இதுகாறும் உன் மனத்தில்
டைத்து வைத்திருக்கின்ற வேகவெப்பத்
யும், துஷ்ட சதுஷ்டாள் கூடிச் செய்த
ன்பம், வஞ்சனை, பொய்மை இவைகளையும்
னத்து, இன்றையோடு கைகழுவிவிடும்படி
ய்க் கருதி, மண்ணும் மலையும் மரமுங்
லுமதிரும்படியாய் ‘விண்ணும் எண்ணும்
ங்கதிர் தண்கதிர் உள்ளநாள் வரைக்கும்’
கீர்த்தி நிலைக்கும்படியாய் பாபத்தையும்,
யையும் மலையாக விளைத்து நிறைத்துக்
ண்ட இந்தப் பநுபாவியாகிய வஞ்சக
ரை மாற்றி, நீங்களைந்துபேரும் வெங்க
கீர்த்தி புனைந்து, இம்மேதினி யாண்டு
ன்மை பெற வேண்டியதென்று புகழ்ந்
. அவராரெனில் மேலோரும் பலநூலோ
போற்றுகின்ற மேக மேனியனுகிய
ஷ்ண மூர்த்தி.

### தீர்த்த யாத்திரை சென்ற பலராமர் மீட்சி

இவ்விதமாக வீமசேனனைப் பெருமை
ப் புகழ்ந்த மாத்திரத்தில், வீமனுக்கு
இயற்கையாலே விளங்கிய வீரமான துபின்னு மேலாகி, பொற்பிரகாசமாகிய நற்புயங்கள் புளகித்துப் பூரித்துப் பாரித்து மேலோங்கி, வீரகண்டை தரித்த கால்கள் பூமியிற்பொருந்தாமல், காட்டானைமேற் ருவுகின்ற மோட்டாண்மைச் சிங்கம்போன்ருன். இப்பால் வீமசேனனுந் துரியோதனனும், சகல வாபரணங்களையுந் துலங்கத்தரித்த அலங்கிர்தத்துடனே சிவந்த கைகளிற் ருங்கிய ஒப்பில்லாக் கதாயுதத்தைப் புரட்டிப் புரட்டி திருப்பித் திருப்பி விண்ணதிர வெண்சங்கத்தை முழக்கி, திசாதிசைகளைத் திடுக்கிடப்படுத்தி, மகா சீற்றமனத்தராய் ஊற்றங் கொண்டுவந்து ஒருவருக்கொருவர் நேருக்குநேர் நின்ருர்கள். அந்த வேளையில், தீர்த்தயாத்திரைக்குப்போயிருந்து வந்த வெள்ளை நிறம்பெற்ற பலராமனுனவர், ஒரு தேரேறிக்கொண்டு இவர்கள் நிற்கின்ற போர்க்களத்துக்கு வந்தார். அவரைக் கண்ட மாயனும், மன்னரும், மற்றத் தருமனுகிய பஞ்சவருந் தேர்விட்டிழிந்து மிகுந்த நேச விசுவாச ஆசபாசமாய் எதிர்கொண்டு சென்று கைகொடுத்து உபசரித்து அழைத்துவந்து தரும்ராஜனவரைத் தழுவிக்கொண்டார். மற்றப்பேரெல்லோருந் துதித்து மதித்து பாதத்திற் றெழுதார்கள். அவர்களை யெல்லா மப் பலராமர் கிருபையுடநோக்கி மகிழ்ந்து, உவந்து ஆசீர்வதித்து, வீமனுந் துரியோதனனுங் கதாயுத்தஞ் செய்வதற்கு எத்தனப்பட்டிருக்கு மிடத்தில் வந்து சேர்ந்து, ஆ! ஈதென்ன சமாச்சாரம் முடிவி லிப்படியாகவா முடிந்தது என்று யேங்கி விசனந் தாங்கிய போது, மொய்துள் வணிந்த முகுந்தன், தன்னுடைய தமயனுகிய பலராமரைப் பார்த்து, அவர் காது நிறையும்படிக்கு ஒன்றொழியாமற் சொல்ல வாரம்பித்து, பாண்டவர்களுந் துரியோதனுதியரும் பதினெட்டக்ரோணி சேனைகளுடன் பதினெட்டு நாளாகச் சண்டை செய்த பான்மையும், மூண்டமர்புரிந்து மாண்டுபோன முதல்வர்களுடைய பாடும், புத்திர மித்திராதியர்களுக்கு நேரிட்ட கேடும், கடைசியிற் றலைக்கே வந்திருக்கிற கேடும், இதுகளெல்லாம் இன்னின்னபடிக்கென்று விபரமாகச் சொல்லி, அவைகட்குப் பலராமர் மறுபேச்சு கேட்கா திருக்கும்படியாய் ஒரு யுக்திபண்ணி, அண்ணு! வெகு சீக்கிரத்தில் தீர்த்தபலன் பெற்று வந்ததுபோலு மிருக்கிறது; இவ்விடம்விட்டுப் புறப்பட்டு விதுரமகாராஜனேடும் வெளிப்பட்ட தாங்கள் இதுகாறுங் எங்

கெங்கே போனீர்கள்; எந்தெந்த தீர்த்தத்தில் மூழ்கினீர்கள்; எந்தெந்த் ஸ்தலங் கண்டீர்கள்; எந்தெந்தப் பெரியோரைப் பார்த்தீர்கள்; அவ்வவ்விடங்களில் நீங்கள் கண்ட அதிசயமென்ன? நீங்களாடிய தீர்த்தங்களின் பெயரென்ன? அவற்றினுடைய சிறப்பென்ன? பரிசுத்தமென்ன? மகத்துவமென்ன? இவைகளை யெல்லாம் எங்களுக்குச் சாங்கோபாங்கமாய்ச் சொல்லவேண்டும். அண்ணா! தேவரீர் சொல்லுவதினால் எங்களுக்கும் அத்தீர்த்தமாடிய பலன் சித்திக்கவேண்டும். என்று நீர் நெருங்கிய மேகம்போன்ற நெடியோன் கேட்க, பெரியோனாகிய பலராமனானவர் தருமராஜனுடைய முகத்தைப் பார்த்துச் சொல்லத் தொடங்கினார்.

கேளும் தருமநந்தனா! சந்தனவிருக்ஷங்களும்-அகில் விருக்ஷங்களும்-தேக்கமரங்களும் கொன்றை மரங்களும்-முத்துக்களும்-இரத்தினங்களும் - தேன்களும் - பல மலர்களும் முதன்மையாக அலைகள் தோறும் உந்திவராநின்ற சரஸ்வதிநதி தீர்த்தத்திற் பெருகிவருகிற பிரபாசமென்னுஞ் சிறந்த பெயர் படைத்த தீர்த்தம் ஒன்றிருக்கின்றது. அதனுடைய மகத்துவத்தை என்னாற் சொல்லத்தரமன்று. ஆனபோதிலும்,ருக்குவேதங்கள் அதனை மகாமுக்கியமாகச் சொல்லுகின்றன. அந்தத் தீர்த்தத்தில் வேதவிதியின் வண்ணம் ஸ்நானஞ் செய்து, தேவர்களான பேர்களையும், முனிவரான பேர்களையும் மனத்திற் நெருக்குத்துச் சொல்லப்படாது. அந்தத் தடத்தில் மண்டல ஸ்நானஞ்செய்து சந்திரனானவன் தனக்கு நேரிட்ட சாபந் தீர்ந்ததாலும், ஆதலால் அந்தத் தீர்த்தத்திற் படிந்து ஸ்நானஞ்செய்து, அக்கம்பக்கங்களில் இன்னமுமுள்ள முன் வினைகளை வேரறுக்கும் பல புலன்களிலும் விரைந்து தோய்ந்து அவ்விடம்விட்டு நீங்கி அழகிற் சிறந்து சுத்தமாகிய சரஸ்வதி நதியானது ஏழு பிரிவாய்ப் பிரகாசிக்கின்ற ஓசை பெற்ற மடுவோரத்திலுற்று அவ்விடத்தி லிருந்த அங்கணனென்னும் ஒரு கலைமுனியைக் கண்டு, அவருடைய திருவடியிற் பணிந்தேன். அந்த மகானுபாவர், கிழக்கு-மேற்கு-தெற்கு-வடக்கு மேல்கீழ் பலயொனி யுயிரென்னும் ஏழு மருத்துக்களென்று பெயர்பெற்றவர்களை ஆதரித்து ரட்சித்த முனியென்பார்கள். இத்தன்மைவாய்ந்த அங்கணமா முனிவருடைய சூழலிற் சிலநாளிருந்து அவரைத் தரிசித்து, அவ்விடத்தில் விஸ்தாரமா யிருக்கின்ற [illegible] தீர்த்தங்களில் மூழ்கி, அப்பாற் செ[illegible] கௌசிகமுனிவரானவர் சித்தி பெறு[illegible] யாய்ச் சத்திய தவம்புரிந்த கௌசிக தீர்[illegible] திற் றேய்ந்து, வசிஷ்டமுனிவருடைய [illegible] லடைந்து தரிசித்து, அவர்பேரால் ம[illegible] வசிஷ்ட தீர்த்த முதலாகிய மகாநதிய[illegible] மூழ்கிக் கரையேறி சோமதீர்த்தந் துளை[illegible] பூர்வத்திற் சண்முகதேவனைத் தேவர்கள் [illegible] ருஞ் சென்றிறைஞ்சி வழிபட்டுப் பழிவி[illegible] பேர்பெற்ற சரஸ்வதி யாற்றின் கரையை [illegible] யாக அணிந்து, மலர்கள் மலர்ந்து மண[illegible] ளிய சரவணப் பொய்கையில் மாசிலாப் பு[illegible] படிந்தேன்.

ஓ தருமநந்தனரே! இன்னுமந்த [illegible] கப் பெருமாளுடைய ஆலயங்கள்தோ[illegible] புகுந்து, அவ்விடத்தி லிருக்குந் தீர்த்தங்[illegible] மாடி பலபல ஸ்தலங்களுந் தீர்த்தங்க[illegible] ஆச்சிரமங்களுங் கண்டுவந்தேன். அக்[illegible] பகவான் பூர்வந் தவஞ்செய்த சாலையும், [illegible] யானவர் தவம்புரிந்த சோலையும், மங்[illegible] கிய கௌசிகை மாநதியாய்ப் படர்ந்தயிட[illegible] தேவேந்திரன் தவஞ்செய்த வனமும், இ[illegible] இடங்களிலெல்லாம் வாசம்பண்ணி, அ[illegible] குள்ள நதிகளில் மூழ்கி இந்த அஸ்தின[illegible] வெல்லையை படைந்தேன். அங்கு நாரத[illegible] முனிவர் வந்தார். அவரை நான் வண[illegible] இருகரத்தையுஞ் சிரத்திற் குவித்து இங்[illegible] நடந்த போர்திறத்தைச் சொல்லவேண்[illegible] என்று விரும்பிக் கேட்டேன். அப்போது [illegible] தர் மனமகிழ்ந்து, ஓபலராமா! இப்பதினெ[illegible] நாள் நடந்த யுத்தபராக்கிரமத்தை என்னெ[illegible] றுச் சொல்லுவேன்; கங்காபுத்திரனும் [illegible] யாசிரியனாகிய துரோணனும், கர்னனும், [illegible] திராஜனும், சகுனியாகிய சௌபாலனு[illegible] அவன் பிள்ளைகளும், ஏனைய வேந்தர்களு[illegible] துரியோதனராஜனுடைய சகோதரர்களும், திராதியரும், மித்திராதியரும், பௌத்ரா[illegible] ருந் தொலைந்தார்கள். அந்த வருத்தத்தி[illegible] மாழ்கி வருந்தி ஓங்கிப் பொங்கும் பா[illegible] கொடி படைத்த துரியோதன மகாராஜனு[illegible] பூமான், இப்போது சமந்த பஞ்சக தீர்[illegible] தருகில் வீமசேனனோடு கதாயுத்தம் புரிவ[illegible] குப் புகுந்திருக்கின்றானென்று சொல்[illegible] போயினர். அதையும் என்னோடிருந்த வி[illegible] ராஜன் கேட்டு, மற்றக் காரியமும் முடி[illegible] கின்ற வரையில் அஸ்தினபுரமும் போ[illegible]

அமர்க்களத்திற்கும் வாரேன் என்று அங்கோர் மருதநிலச் சார்பில் மருவிவிட்டனர். நான் மாத்திரம் அறிந்து போகும்படியாய் இவ்விடத்திற்கு வந்தேன் என்று வெள்ளை மேனியனாகிய பலராமர் சொல்லினர். இப்படி பன்னாள் திரிந்தவர்களைப்போற் சின்னாளிற் பலன்பெற்றுவந்த பலராமருடைய திருமொழிகளெல்லாவற்றையுங் கேட்ட பாண்டவரைவரும், பரிமளத்துழாயோனாகிய பாண்டவர் சகாயனும் அற்புதமடைந்து, பதினெட்டு நாளும் நடந்த யுத்தத்தன்மைகள் யாவற்றுள் ஒன்றேனுஞ் சோராமற் சொல்லி, வாயுகுமாரனையும், அழகிய சௌபலன் பாவை யளித்த ராஜாதிராஜனையும், கமலக்கர நீட்டிப் புகழ் பெறக் காட்டி, அவ்விடத்தில் அவர்க ளப்போது யுத்தஞ் செய்யப்போகின்ற செய்கையின் துணியையுஞ் சொன்னார்கள். அந்த மொழியைக் கேட்ட பலராமரானவர் மன்னர்க்குரியது அன்னதே உறுதியென்று சொல்லி, கதைகொண்டு நிற்கின்ற அவர்களுடைய முகத்தைப் பார்த்தார். அப்போது அரசர்க்கரசனாகிய அரவக்கொடியோனும் வாயுபுத்திரனாகிய சிங்கக்கொடியோனும் நீலாம்பரனாகிய பலராமரைப் பார்த்து, சிரத்திற் கரங்கள் குவித்து வணங்கினார்கள். அவர்களுக்கு உடனே ஆசீர்வசனம்பண்ணி, நீங்களுங்கள் வேலையைப் பாருங்களென்று திருவாய் மலர்ந்தார்.

### துரியோதனனுக்கும் வீமனுக்கும் கதா யுத்தம்

இப்பா லவருடைய பூரண திருஷ்டியாகிய நல்லருளைப்பெற்ற வீமசேனனுந் துரியோதனனும் ஒருவரையொருவர் பார்த்து, ஏறநோக்கி எரியவிழித்து, வெஞ்சினமும், பெருமையும் வெற்றியும் உண்டாகத்தக்கதாய் ஒருவருடன் ஒருவர் பேசினார்கள். ஒருவரை ஒருவர் ஏசினார்கள். தவளைக்குதிப்பு-குரங்குத்தாவல்-ரிஷபக்குமாளம் - வேங்கைநோக்கம்-சிங்கப்பாய்ச்சல்-யானை ஓட்டம் இப்படியாகப் பாய்ந்தார்கள். பதறினார்கள் - கதறினார்கள்-உடலுதறினார்கள்-தெறித்தார்கள்-செழித்தார்கள்-யுத்தத்துக்கு அறைகூவி யழைத்தார்கள். ஒருவருக்குள் ஒருவர் நுழைந்தார்-ஒருவரிடத்தில் ஒருவர் குழைந்தார்கள் - பூமியிற் குனிந்தார்கள் - பூரித்தெழுந்து நிமிர்ந்தார்கள் - இடதுகரம் வலதுகரஞ் சுழற்றினார்கள்-வலதுகால் இடதுகால் மாறிமாறி அடிவைத்தார்கள்-டிங்கடித்து மல்லாந்தார்கள். சக்கரம் - பாய்பு-தவளை-அரணை-அட்டை - முன்னேக்கம்-பின்னேக்கம் - பக்கம் - பாரிசம் - சுழற்சி இவை முதலாகிய தண்டா லெடுத்தார்கள். இன்னும் பலவாறாகிய சிலம்படிகளெல்லாம் நடத்தி உடம்பின் திமிர்மாற்றி, கரணமிட்டு பூமியும் ஆகாயமும் பிளந்து நடுங்கச்செய்தார்கள். இப்படியாக இவ்விருவர்களுஞ் சிலம்பங்கள் புரிந்து வலமிடங்கட்டி ஒட்டி நிற்கின்ற காலையில், வாசனைபொருந்திய நறுமலரணிந்த கூந்தலையுடைய காந்தாரி புத்திரனாகிய துரியோதனன் முகத்தைக் குந்திதேவி புத்திரனாகிய வீமசேனன் பார்த்து, பலவாறாகிய கொடுஞ்சொற்களைச் சொல்லுகிறான்.

"கந்தநறு மலர்க்கூந்தற் காந்தாரி புதல்வா நீ, எந்தமதிகொண்டிங்ஙனெய்தினையோ வறியகிலேன், கந்தருவரன்றுன்னைக் கட்டிய தோள்வலிகொண்டோ, சிந்தைதனின் வலிகொண்டோ செருச்செய நீ புகுந்தாயே. இடிப்பதுமின் றிருகதையுமென்கதையாலிடியுண்டு, துடிப்பதுமின் றதற்பிறந்தான் முகிலோதி முகில்பொழிநீர், குடிப்பதுமின்றொருவேனின் குருதிநீர் குடித்தாலே." அடா துரியோதனா! கதாயுத்தஞ் செய்யவாவந்தாய்? ஐயோ! திருதராஷ்டிரனுடைய மைந்தா! உள்ளம்மெத்த வெந்தாய், இதோ என் கதையால்நொந்தாய் என்று எகிறி, இந்தப் பக்கத்திலிருந்தவன் அந்தப்பக்கத்திற் குதித்து நின்று, அப்பா என்ன பலங்கொண்டு யுத்தஞ்செய்ய வந்தாய்? உன்னையும் உன் தம்பிமார்களையும், உன் பெண்சாதிமார் முதலிய பெண்களையும், உனக்குரிய யாவரையும் ஒன்றாய்ச்சேர்த்து இறுகக்கட்டிக் கந்திருவராஜன் கடக்கக் கொண்டு போன காலையில், அவனைச் செயித்துக் கொண்டுவந்த உன்தோள் வல்லமையைக் கொண்டோ, அல்லது நீ பிறந்த நாள்முதற் கொண்டு உன் சிந்தைவிட்டு, நீங்காதிருக்கும் வஞ்சகபாவ முதலிய கைதவவலியைக்கொண்டோ இப்போது இங்கே செருச்செய்வதற்குத் துணிந்து புகுந்தாய்? அடா மகாபாதகா? வாவா இன்றைதினம் உன்னைக்கொன்று, கொடிய எமனுக்கு நீராகார போஜனமாக உண்ணும்படியாய் விருந்துசெய்து, நான் தலைநாளிற்கூறியசபதங்களையுமுடித்து, கறுப்பார்ந்தகுழலை முடிக்காமற் கண்கலக்கப்பட்டுக் கொண்டிருக்குங் கருங்கண்ணியாகிய கற்புடைய திரௌபதாதேவியின் கூந்தலும்

முடித்து, என் சகோதரர்களுடன் களித்து இந்தப் பூமியையும் ஆளுகிறேன். இதற்கு யாதொரு சந்தேகமுமில்லை. நீ மாத்திரம் இதுவரையிலும் பிழைப்போமென்றிருந்த புத்தியெல்லாம் விட்டுவிட்டு, இப்போதாகிலுஞ் சீக்கிரமாய் வந்து ரணக்களத்திற் பட்டுப் போவதற்குக் கடிகிவா கடிகிவா என்று அழைத்தான்.

இப்படி வீமசேனன் ஆவேசங்கொண்டு கூறியமொழிகளைத் துரியோதனன் கேட்டு, அவ்வீமனை ஏறநோக்கி, (இனிவிடு மேன்மேலுரைக்கும் வாசகமெனதுயிர் நீகோறலிற்றை நாளிடை, யுன்துயிர் வானேறவிட்டு நானுலகொருகுடை மாநிழல் வைத்தலே துணி, வனிகமுமர்யோ னடத்து தேருடைய நூரனும் வாளாண்மையற்ற மூவரும் நினைவுடனேகரண வச்சிராயுத நிகர்கதை வீமாவெடுத்தி நீயினே.) ஏனப்பா குதிக்கிறாய்? இவ்வுலகத்தில் தங்கள் தங்கள் மட்டுந் தாங்கள் பிழைக்கும்படியாய் நினைப்பார்கள். ஒருவரும் தான்சாக மருந்தருந்தார்கள். அப்படித் தின்ன நினைத்தபோதிலும், அவர்களுடைய பூர்வ வினையின்படி முடியுமல்லது வேறொருவிதமாய் முடியமாட்டாது. ஆகையால், மின்னற்கொடிபோன்ற அந்தத் திரௌபதையின் கருத்தும் உன்னுடைய எண்ணமுங் கேட்டு, என்னுடைய நல்வினைப் பயனுனது, உன்னுடைய திடத்தையுந் திறத்தையும் அழித்து, இந்தக் கதாயுதத்தினால் என் கருத்தின்படி முடித்து நிறைவேற்று விடுமாகில், நீ அப்போது எங்கிருப்பாய்? கூந்தல் முடிக்கப் போகிறவள் எங்கிருந்துமுடிப்பாள்? இதை யெனக்குச்சொல். அடாவீமா! நீ அவல புத்தியுள்ளவனகையாற் சந்தோஷப் படுகிறாய். ஆனால், தெய்வச்செயல் எப்படியோ? ஊழ்வினைப்பயன் எப்படியோ? உன்பக்கத்தில் நெருங்கியிருக்குஞ் சகோதரர்களுடைய உற்சாகத்தினாலும், சிலசேனைகளின் பெருக்கத்தினாலும் உன்னை நீமறந்து உன்சிந்தை மயக்கத்தினாற் பொங்கிவழிந்து மகிழ்ந்து இம்மொழி சொன்னாய். நல்லது வீமா! உங்கள் ஐந்துபேரையும் என் கையிலிருக்கும் இந்தக் கதையாற் புடைத்து உங்கள் கருத்தனைத்தும் போகும்படி முடித்து, ஒருங்கே முடிந்து இந்தப் பஞ்சாசதகோடி பூமண்டலத்தையும் நானே ஆளுகிறேன்; தப்பாதாளுகிறேன், எதிர்த்துவந்து நில்லு விரைந்து விரைந்து வா என்று புரவலர் கோமானாகிய துரியோதனனென்னும் புயங்கேதனன் புகன்றான்.

இப்பால், ஓயா நடையோனாகிய வாயுகுமாரனென்னும் வெற்றிபெற்ற வீமசேனனும், கண்ணில்லாக் காவலனாகிய திரிதராஷ்டிரனுடைய முதற்குமாரன் துரியோதனனும், ஒருவர்கொருவர் அடங்கொண்டு ஆகாயத்திற் பலத்துடன் மேகங்களிடிக்கு மாறுபோல் அதிர்த்துமுழக்கி, நெடுக்குங் குறுக்குமாகவோடி, மதங்கொண்ட யானைபோலும், விருஷபம் போலும், ஆண்சிங்கம் போலும் மதர்த்து எதிர்த்துப் பிரதர்பம்பேசி, விஜயம் புகழ்ந்து மிகுந்து மேலிட்டு, கடையுகத்திற் சப்திக்குங் காற்றின் முழக்கம்போற் கதையுடன் கதை மோதிப் போரதிகரித்து, ஒருவரை யொருவர் மறித்து, பாரிய மலையுடன் மலைபகைத்து எதிர்த்ததைப் போற் பதைத்து, ஆகாயத்தில் வேடிக்கைப் பார்க்க நிறைந்த தேவர்களெல்லாரும் இவர்களுக்கு ஒப்புச் சொல்லுவோமென்றுயோசித்து,வேறொருவமை யில்லாமல் தங்களுக்கு தாங்களே நிதானித்து கொள்ளும்படியாய் இவரிருவரும் விஸ்தாரமாகிய அமர் புரிந்து, மனம்மெலிந்து கோபமாகச் சிரித்து, மேலுமேலு மூலாதாரங்காந்தி வெம்பொறியெழுந்து பறக்கப்பதைத்து, இளைக்காத வீராளிருவரும் ஆகாயத்தின்மேற் பாய்ந்தார்கள். அந்தரத்திலுலாவினார்கள். மறுபடியும் பூமியிற் குதித்தார்கள். வெகுளிமே லிட்டார்கள். திசாதிசைகளிற் றாவினார்கள். விசையுடன் போராதரித்துப் பொருதலுற்றார்கள். சந்தோஷத்தினால் ஒருவரையொருவர் பார்த்துக் கலகலவென்று நகைத்தார்கள். நீண்டகோபமேற்கொண்டு உதட்டை மடித்தார்கள். வாயிலும் - காதிலும் - மூக்கிலும் - புகை யெழும்பும்படி உருட்டி கண் விழித்தார்கள். அலங்கரிக்கபட்ட மலையைப்போல் மார்பைக் காட்டித் துடி துடித்தார்கள். இருதோளையுந் தட்டினார்கள். இப்படி கதாயுத்த சாஸ்திரங்கற்ற கல்விமான்களாகிய கடுஞ்சூரர் மெச்சும்படியாய்ச் சாரிகை யிட்டார்கள். இடம் வலம்வலம் இடம் சுழன்றார்கள். வாயைமடித்து நறநறவென்று பல்லைக்கடித்து, கையைத்தட்டி யடித்து ஒருவர்மீதொருவர்மேலாகத்தாண்டினார்கள். ஒருத்தர் முதுகில் ஒருத்தர் குதித்தார்கள். பூமியிற் சுழன்று குயவன் றிகிரிபோலாடி மூர்ச்சைக் கும்பித்துக் குமாளித்தார்கள். ஒரு கையினாலே கதையைப் பிடித்துக் கரகரவென்று சுழற்றி

ஆகாயத்திலெறிந்தார்கள். அந்தக்கதாயுதமானது அண்டமுகடு உடைபடும்படியாய் மேலே சென்று அங்கிருந்து யதிர்த்து பூமிமேல் வீழவரும்போது, மற்றொரு கையாற் பிடித்து உடனே வானத்தில் விடுத்து, அஃதம்பரவாணர் கலக்கிய கலக்கெடுத்து, மறுபடி திரும்பி கனத்த தலையைப் பூமியினுட்டி விழும்போது, பின் பக்கமாகிய சிறுத்த நுனியை கையிற் பிடித்து சிரித்தார்கள். ஒரு பக்கத்துக்கு ஒரு பக்கஞ் சார்பாக அடுத்து வீரவிருதுகளைப் பேசி நிருத்தமாடினார்கள். வேகமாகக் கிட்ட நெருங்கிக்காலுடன்கால் பிணைத்து இணைத்து மடமடவென்று சாரைப்பாம்பும், நாகப்பாம்பும் பின்வாங்குந் தன்மைபோல் இழுத்து கொழுத்து பழுத்தபனைபோற் பகைத்தார்கள். பொருபடை நாலாய்ந்த மேலோர்களும், போர்ப்படைகளை கையிற்றாங்கிய குலக்குமாரர்களும் இவரின் மிக்காரில்லையென்று புகழும்படிக்கு நேருக்குநேர் குதித்து நெடுந்தூரம் உலாவிச் சுலாவினார்கள். இவ்விருவருங் குறுகிப் பதைபதைத்துக் கதையுடன் கதை இடிக்கும் ஓசையும், ஒருவர் வீரங்களை யொருவர் பழித்தும் பேசிப் பகைத்து நகைக்கு மோசையும், எதிரெதிர் நெருங்கிப் போர்புரியும் போது, வாதுபேசும் ஓசையுங் கீர்த்தியுடன் மேலிட்டு ஒருவரையொருவர் அடிக்குமோசையும், பதயுகங்களைப் பாரில் உறுத்திவைக்கு மோசையும், பலவித சங்கங்களைப் பாரித்துப் பூரிக்கு மோசையும், அதலவிதல சுதலமுதலிய யாவற்றும் நுழைந்து அண்டாண்ட முதலிய வானுலகத்தனும் பெருகி கடல்சூழ்ந்த வையகமெல்லாம் வியாகூலமடைந்து கலங்கும்படி யாக்கியது.

அந்தவேளையில், வணங்காமுடி மன்னன் பூமிமேற் புரண்டு, சுவாசமில்லாமல் அடுக்கி, கண்களைத் திறவாமல்மூடி கைகால்பதற உழைந்து வழியுங் குருயிற்றோய்ந்து வாடிய மனத்தால் நீடிய பெருமூச்சுவிட் டெழுந்து, உரங்களையும் மணல்களையுந் துடைத்துக்கொண்டு இகழ்ந்து உக்கிரமாகக் குதித்து விக்கிரமம் பாடிக் கதித்து இடியோசைகேட்ட பாம்பைப்போல் யாவரும் ஏங்கிப் பின்வாங்கிப் பெருந்தூக்கந் தூங்கிப் போகும்படியாய்க் கையைத் தூக்கி, தன் தேகத்தைப்சைத்து உதறியாட்டி ஒரு பக்கமாய் மனோவீரமுற்று நிற்கின்ற வீமசேனனை முறமையாக தேர்குறுகி, கிட்டிமுட்டி மோதினான். அந்த மோதலைத்தட்டி வீமசேனனும் நெட்டினான். இந்த பிரகாரம் ஓமாக்கினியில் அவிர்ப்பாகங் கொள்ளவந்த அக்கினியும் வாயுதேவனும் பகைத்து சமராடிய வாறுபோலும், வாக்கினாலு மனத்தினாலுமதிக்கப்படாத வல்ல நிகர் ஒருவரையொருவர் மதியாமற் போர் புரியும்வாறுபோலும், வீமனுந் துரியோதன நாமனும் வேகம் பொருந்திய வீரியராய் முனைந்து சேமமாகிய வெங்கதையால் நீடிய அமர் கூடி இந்நக் கதாயுதத்திற்றேறி, இருக்குந்திட வீராளெல்லோருங் கண்களை மூடிக்கொண்டு கலங்கும்படியாய்ப் போர் செய்தார்கள்.

இந்தப்படி சிங்கக்கொடியோனும் நாகக்கொடியோனும் வீசுகின்ற கதாயுதத்தின் ஆரவார ஓசையானது அதிகரிக்கவும், தாவிச் சொல்லுஞ் சபதமாய் பூட்டி ஒற்றைச்சக்கரத்தையுடைய தேராளியான சூரியன் கதிமாறி, விதிமாறி, இடமாறி, தடமாறி, குடைவே கொதிப்பேறி, குலையேறி, குறைவேறி நின்றான். வானவர்களுந் தானவர்களும் நாவடங்கி, தசையடங்கி, நலமடங்கி, வாயடங்கி, ஒடுங்கி, ஒதுங்கி நின்றார்கள். மகத்தாகிய யோகர்களும், நாகர்களும் பஞ்சுபோலஞ்சிப் படித்தார்கள். பிர்ம்மா, விஷ்ணு, உருத்திரன் என்னும் மும்மூர்த்திகளும் இனி நடக்கப் போகிறவழிஎப்படியென்றுகியானத்தால் நாடினார்கள். மூடிக்கவிந்திருக்கும் அண்டரண்டமானது, படீரென வெடித்துத் தொண்டியாய் போகும்படியாயது. இவ்விதமாகப் போராடியகாலையில், துரியோதனன் அடிக்கிற அடியெல்லாம் வீமசேனனுடைய உயிர் நிலையான முடிமேற்சாடுகிறான். அப்படிச்சாடியும் இவனுடைய நற்றவப் பலத்தினால் அவனுடைய அடி இவனைக் கொல்லுதற்குரித்தாகிய கொடுமை விளைக்கச் சக்தியில்லாமற் போச்சுது. அப்படிபோயும் உயிர் நிலையானதாற் பிராணன் போகும்படியான மூர்ச்சை கீடாக மகா பாடுபடுகின்றான். வீமசேனன் துரியோதனனுக்கு எத்தனை அடி தலை மேலடித்தாலும், அவனுக்கு உயர் நிலை அந்தயிடமல்லாமையால், அத்தனையும் அவனை வருத்தப்படுத்தி, உயிர் வாங்காமற்போனாலும், இந்த வீமன் அடிக்கும் உறுதியினால் அவனுக்குப் பிராண கண்டத்துக்கு வந்து, அதனாலவன் அடிக்கடி சேஷைபோய் பிழைப்பானோபிழையானோ என்று சந்தேகிக்கும்படியாகின்றது; ஆனால் பிராணன் போகவில்லை.

### அருச்சுனன் கண்ணன் கிருபையால் துரியோதனனுயிர் நிலையறிந்து வீமனுக்குணர்த்த உடனே யவனை யடித்துச் சாய்த்தல்

கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜனே! நந்தியாவட்ட மாலையணிந்த நராதிபனுடன் போர்செய்துவந்த வீமசேனன் எத்தனை பல சாலியாயிருந்த போதைக்கும் உயிர்ஸ்தானத்தில்அடிவிழுமாகில், அவன்என்னபாடுபடான் எவனும் உயிர்நிலைகுலைந்து நடுநடுங்கி வருந்துவானல்லவா? அதனால் வீமசேனனுறங்கி உழன்று தாழ்ந்து தளர்ந்துவாடி வதங்கி வருகின்றான். அப்படியிருந்தபோதிலும், எதிரிக்கு இளைக்காமற் பிராணனைக் கையிற் பிடித்துக்கொண்டு அந்த பிராணனுக்கு மானமென்னுங் கவசமணிந்து, வீரமென்னுங் கொழுமை கொண்டு, பலவிதத்திலும் பாடுபட்டு, தன்னாற் கூடியமட்டும் போராடி வருகிறான். இப்படி வீமசேனன் படுகின்றபாட்டை விஜயன்கண்டு வெம்பி, ஓ! ஓ! அண்ணனுக்கு ஆபத்து வந்துவிட்டது; காரியம் பிசகாச்சுது என்று சீக்கிரத்தில் தனது தேர்விடுந்திருமாலுடைய திருவடியில் திருமுடிகொண்ட சிரத்தைத்தாழ்த்தி,ஸ்ரீநாதா,தீனரட்சகா, தீனபந்து, தீனதயாளுவே விரைவிற்றிருக்கநோக்கம்வையும். ஆச்சுது; உமது பேருக்குக் குறைச்சல் நேரிடுமாறு போல் வாய்ச்சுது; மிகுமோசமாக இருக்கிறது. சீக்கிரம் வீமசேனனாகிய எங்கள் அண்ணா பேச்சு நண்ணத்தளர்ந்து, ஓ மேகவண்ணா ஓ தாமரைக்கண்ணா இனி யாதோ உமது செயல் இதற்கோருபாயம் உடனே நீர் பண்ணவேண்டும் என்று அர்ச்சுனன் சொல்ல; அதைக் கேட்ட முராரியும் நராரியுமாகிய முகுந்தன் அர்ச்சுனனுடைய காதில் உபதேசம்போற் சொல்லுகின்றார்.

ஓ ஆண்டவனளித்த அர்ச்சுனா! நீ மெத்தவும் நயந்து பயந்து விசனப்படுகிறாய், நான் சொல்லுகிற உறுதியைக்கேள். இப்போது நடக்குங் கதாயுத்தம்போல் நேருக்கு நேர் நின்று போர்புரியும் பலவீரர்களிலும் வாயு குமாரனாகிய நமது வீமசேனன் மிகுந்த பலவான். இவனைப்பார்க்கிலுஞ் சிறந்தபலவான் திரிதராஷ்டிரன் பிள்ளையாகிய துரியோதனன். இவர்க ளிருவரும் இவனினைக்கமாட்டான். மற்றெவ்வுலக இவ்வுலகமும் அவ்வுலகமும் அநேகமாயிரமும் புகழும்படியானவர்கள். அநேகமாயிர நாள் இவ்விதமாகிய யுத்தஞ்செய்தபோதிலும் சாகார்கள். ஒருக்காலு மடிந்து வானகம்புக மாட்டார்கள். ஆனால், மாறுகொண்டு பகைத்து அந்த துரியோதனனுடைய ஆவியை சுவர்க்க லோகத்துக்கு அனுப்பிவிட வேண்டுமென்று இறக்கமில்லை. ஏனென்றால், விதியின் உறுதியினாலும், வினையின் பலிஷ்டத்தினாலும், மெய்மையின் உதவியினாலும், வாயுதேவனுடைய உபசார சகாயத்தினாலும், அங்கங்களுக்கும் புறம்பாகிய ஆதிமூலப்பொருளின் அனுக்கிரகத்தினாலும், பூமியில் வீழ்ந்த வீமன் கலக்க மாறித்தேறி, மீண்டும் வீறிமீறி எழுந்து பல வாய்மைகூறிச்சீறி, துரியோதனனுக்கு முன் னூறிச் சொல்லுகிறான். ஓ விவேகம்பெற்ற வேந்தனே! நீ கேட்டபடி என்னுடைய உயிர் நிலையைச் சொன்னேன். இப்போது நான் நிதானிக்கும்படியாய் உன்னுடைய உயிர் நிலையைச்சொல் பார்ப்போமென்று வீமசேனன் கேட்டான். எதிரியான துரியோதனன் உண்மையைச் சொல்லாமல் மறைத்து, எனக்குத் தலையில்தான் உயிர்நிலையென்றான். என்று சொன்னவுடனே வீமசேனன் முனைந்து, முதிர்ந்த கதாயுதத்தைக் கைக்கொண்டு மதித்து நிதானித்து, துரியோதனனுடைய தலைமேல் மோதினான். இவனடித்த அடியானது, முடிபொறுத்த தங்கள் தலைமேல் வீழ்ந்ததைப் போல் வானிலுள்ளோர் யாருந் திடுக்கிட்டார்கள். நாகலோகத்தார்களும் இந்த நானிலத்தோர்களும் அவ்வாறே எண்ணிக் கலக்கினார்கள்.

ஐயா அரசே! துரியோதனனுக்கு உயிர் நிலை தலையிலில்லாமற்போனாலும், இந்த வீமனடித்த உறுதியினால் அவனுக்குப் பிராணன் போய், மறுபிராணன் வந்து, பூமிமேல் வீழ்ந்து, கருத்துமாறி மயங்கி, அந்தக்ஷணம் எழுந்து புத்திபூர்வமாய் நிதானித்து, தன் கதாயுதங் கைக்கொண்டு வேகமாகச் சென்று, வீமனுக்கு எதிர்போய் நின்று, மறுபடியும் அவன் தலைமேலோங்கி அடித்தான். அந்த அடியினால் வீமன்தலை பிளந்து போச்சென்று சந்தேகித்து, அயிர்த்துக் களைத்து, சண்டை செய்யும் பூமிமேற் சாய்ந்து சலித்து, ஓய்ந்து மாய்ந்தவரைப்போல் நின்றான். அப்படி அயர்ந்து நிற்கின்ற வீமனைத் துரியோதனன் பார்த்து, இப்போது நிற்கக் கூடாது. சுடச்சுட ஓடிவா என்று பெருமூச்சு விட்டுக்கறுவி, உறக்கக்கூவி எதிர்புகுந்தான் அவன் வருவதைப்பார்த்த வீமசேனன் திட

தைரியத்துடன் எதிர்த்து, முன்னடித்த அடி வசந் தப்பிப்போச்சோ, என்னமோ வென்று பின்னுந் துரியோதனனுடைய தலைமேலோர் அடி வாங்கினான். உயுத்தாகிய கதாபாணிகளுக்குள்ளே, இணை சொல்லுவதற்கு ஈடில்லாத வீமசேனன் அடித்தபோது, துரியோதனனுடைய உயர்ந்த தலையானது பிளந்துகிழிந்து, எட்டுத் திசையினும் பெருகிப் பீரிட்டொழுகு முதிர் மருவி, அருவி பெருகிய நீலகிரி இது தானென்று சொல்லும்படியாய்ப் பூமி மேல் உடல் சாய்த்தான். அப்படி அவன் அயர்ந்து வீழ்ந்ததைப் பார்த்த வீமசேனன், மிகுந்த விசாலமான தன்னுடைய ஆண்மையை விருத்தர் முதலாகிய வீரர்கள் கண்டு புகழும்படியாய், ஆ! ஆ! வென்று ஆக்கிரமித்துக் கொக்கரித்து, மகா எக்களிப்புடையவனாய் இறுமாந்து வத்தான்.

### துரியோதனனும் வீமசேனனும் ஒருவர்க்கொருவ ருயிர் நிலைக் கேட்டுப் போராடல்

இப்படியாகும்படியாய் இவர்களிருவரும் நேருக்கு நேராய் நின்று புரியா நின்ற போரில், ஒருவரை யொருவர் மாறிமாறிக் கதையினால் அடித்தபோது, மேனியும்-தோள்களும்-கன்னங்களும் - மார்பும்-சிரமும்-அடிகளும் - தொடைகளும் - விலாப் புறங்களும்- ஆகிய அவயவங்களெல்லாம் நெரிந்து, பிதிர்ந்து, அதிர்ந்து, வழிந்து, இரத்தங்கள் பாய நரம்புகளறுந்து, அங்கங்கேநெருப்புப் பொறி பறக்க, எங்கெங்கு முறித்த நிணந் தெறிக்க, இதுவரையிலுமித்தகைய கொடுமைகளைக் காணாத பேர்கள் கண்டு சலிக்க, கண்ட பேர்கள் களித்து, வேறு விதமாய்ச் சொல்ல வல்லமையில்லாமல் வெறுக்க, இந்தச் சண்டையின் பெருமிதத்தைத் தேவர்களினுஞ் சொல்லத்தக்கவர்களில்லாமற் பிணையல் மாலை பூண்ட போர் வீரர்களெல்லோருந் திடுக்கிட்டுத் துணுக்கமானார்கள். சிங்கத்தைக் கொடியிலெழுதிப்படைத்த வீமனும், நாகேறு தீட்டிய நற்கொடி நாட்டிய துரியோதனனும், உரித்தாகிய யுத்தத்தை ஆதரித்து, ஒருவரோடொருவர் உடல் பதறியற-உயிர் குமரியுற - யுத்தஞ் செய்து, மகமேருவின் முடியை மேனாளொடித்த வாயுவின் மதலையை ஈரேழுலகுக்கும் ஏக சக்ராதிபதியாகிய இறைவன் சற்றே யிளைத்தவனாகிச் சோர்ந்து, தனக்குள்ளே ஓர் வஞ்சக நினைவு கொண்டு பெருமூச்சு விட்டு, தன் சொல் தடுமாறும்படியான நிலையில் வீமனைப் பார்த்து, ஆ! வீமா! நல்லது இனி நாமிருவரும் உயிர் நிலை சொல்லிக் கொண்டு யுத்தம் பண்ணுவோம். அதுதான் சுத்த வீரனுக்கு லக்ஷணம். அதுதான் இப்போருக்கு வீரத்திறம். இதிலேதான் நம்மிருவர் திராணியுந் தெரியவேண்டும். எங்கே நீ ஒளிக்காமல் உன்னுயிர் நிலையைச் சொல் பார்ப்போமென்றான்.

இப்படிச்சொல்லி வாய்மூடுமுன்னே, இருவினை யுணர்ந்த தருமகுமாரனுடைய இளவலாகிய வீமசேனன் துரியோதனனைப் பார்த்து, அடாபாவி நாமிருவரும் எதிர்த்துப் போர் புரியும் உண்மையில் நான் ஒளித்துச் சொல்லுவேனா? உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டு மென்னும் இச்சையையுடைய நீ மறைத்துச் சொன்னாலுஞ் சொல்லுவாய். இருந்தாலும் இறந்தாலும் சத்தியமே நித்தியம். அப்பா துரியோதனா! என்னுடைய தலையிலுள்ளதெனக்குயிர் நிலையென்று சொன்னான். அவன் சொல்லி வாய் ஓயுமுன்னே பெருமானாகிய சுயோதனன் பெருங் கதையை யோங்கி வீமனுடைய முடிமேல் மோதினான். அப்போது பிரளயகாலத் திடிபோல் ஓசை பட்டு விழுந்த தெப்பலினால் வீமசேனன் ஆகுல் மடைந்து, உடலயர்ந்து, உயிர் பயந்து, விசாலமான பூமியின்மேல் விழுந்தான். ஆனாலும் இஷ்டம் உனக்கிருக்குமாகில், ஒரு சூக்ஷியிருக்கின்றது. அதை வாக்கினாற் சொன்னால் மகாபாவம். நான்பொய்ச் சொல்லுவது நன்மையல்ல. இதுதான் மகா வஞ்சகமென்பது. ஆகிலும், அழகிய மாருதியாகிய வீமன் மகா புத்திசாலிதான். ஆனபோதிலும், முன்னே தான் கூறிய சபதத்தை மறந்து, எந்தக் காரியத்திற் பிரவேசிக்கின்றானோ அந்தக் காரியத்திலேயே கியாபகமிருத்திக்கொண்டு, ஒரே பிடியாய் முறட்டுத்தனங்கொண்டிருக்கிறான். இது வாகாரியம். அர்ச்சுனா! அப்படிக் கில்லாமற் சூக்ஷ்மா விருக்ஷங்கள் கண்டு கொண்டு போர் செய்வானாகில், திரிதராட்டிரனுக்குப் பிறந்த நூறுபிள்ளைகளிற் சிரேஷ்டாதி முதல்வனாகிய இந்தத் துரியோதன மகாரசஜன் பிராணனை எப்போதே முடித்துவிடலாம். ஓ பூணணிமார்பினையுடைய புண்ணியனே! இதனை நன்றாய் யோசித்துப் பார் என்று கண்ணன் சொல்ல, அண்ணலே அஃதெப்படி யென்று அருச்சுனன் கேட்க, அப்பனே பின்னை வேறொன்று

மில்லை. கதாயுத்தஞ் செய்யவேண்டிய விதி தப்பிச் செய்தால் அது குற்றமாச்சே யென்று பயப்படாமலும், பழைய கியாபகத்தை மறக்காமலும், இந்தத் துரியோதனனுடைய தொடையில் மோதினால், பெருங்கடலுடன் ஏழு கடலும் வளைந்த பூமிபாரம் ஒரு கணத்தில் நீங்கும். நீங்களைவருங் குற்றமில்லாமல் ஏழு உலகத்திலுங் கீர்த்தி நிறுத்திப் பட்டாபிஷேகராய் வாழும் வாழ்வைப் பெறுவீர்கள். வலிய துயரங்களெல்லாம் மாறிப்போம். என்று திருநாரணனார் தமது திருவுள்ளத்திற் கொண்டிருந்த திருப்தியைத் திருவாய் மலர்ந்தருளினார்.

அந்தத் திருவாய் மொழியைச் சிலவிஜயன் கேட்டு மகிழ்ந்து, பழமையாகிய மறையிலும் பதின்மடங் கதிகமாகிய பகவானது வாய்மையின்படிக்கு வீமசேனனுடைய வாள் விழிக்கு நேராகச்சென்று நின்று, அவன் பார்க்கும்படியாகக் கரத்தையுஞ் சிரத்தையும் அதட்டி, அன்றலர்ந்த அரவிந்தம்போன்ற தனது உள்ளங்கையைக் கூட்டி, தொடைமீது அடிக்குந் தன்மையாய் நாட்டி, கியாபகமூட்டினான்.

கேளும், ஜெனமேஜெய மகாராஜனே! இப்படி நாரணனுடைய தயவினால், தம்பியாகிய அருச்சுனன் மௌனக் குறியாகக் காட்டிய குறிப்பை ஞானபண்டிதனாகிய வாயுகுமாரன் அறிந்து, ஆ! ஆ! வென்று ஆங்காரமிட்டெழுந்து, துரியோதன ராஜனுக்கு எதிரில் போய் நின்று, அவனுடைய தொடையின் பேரில் ஓங்கி ஓரடி வாங்கினான். அப்படி அடித்த ஓரடியுடன் நிருத்தாமல் தாண்டித் தாண்டி மீண்டு மீண்டு மாறிமாறி மோதினான். அவனாரெனில், மானாபரணமும் மான கஞ்சுகமும் மாறாமல் தரித்த வாயுபுத்திரன். இந்த வேடிக்கையைப் பார்த்த இந்திரன் முதலிய தேவர்களெல்லோரும் ஆநந்தமடைந்து, தேவ துந்துமி முதலாகிய வாத்தியங்கள் முழங்கி, மாந்தாரம் - பாரிசாதம் - தேவதாரம்-அரிச்சந்தனம் - கற்பகம் இதை முதலிய புஷ்பங்களை வாரி வாரி மாரிபோல் தூவினார்கள். இப்படியிருக்க, இந்த வீமசேனனால் அடிபட்டு முகம் மாறி- இடம்மாறி- தடுமாறி - பால்மாறி நின்ற சுயோதனன் ஒரு வீதந் தேறி, மீளவும் போர்செய்ய எதிரேறி, வீமனைப் பார்த்துச் சீறி, சண்டைக்கு வாடா வென்று அடல் கூறி, தன் கதையைச்

சுழற்றி முற்றிலும் வீறித் திரிந்து, வீமனுடைய விசாலமாகிய தோள்களிலும் மார்பிலும் நீரெழும்படியாய்ச் சாடினான். அந்த அடியினால், வீமசேனன் சிறுகிறென்று சுழன்று, விறுவிறென்று பறந்து, தன்னை மறந்து, உடல் சோபமுற்று பூமியில் வீழ்வதான அவதியையுடையவனாயினான். அப்படியாகியுங் கீழே விழாமல் சுதாகரித்து, நிதானித்து நிலைத்து நின்று, திடமுந் தைரியமுங் கொண்டு, காயம்பட்டிருக்குந் தன் காயமாகிய தேகத்துடன் எதிரில் ஓடிவந்து மோகரித்து, துரியோதனனுடைய தொடை முறியும்படியாய் மறுபடியுஞ் சாடினான். அப்படி சாடியபோது, எவர்களையும் மதியாமல் இறுமாந்திருந்த புஜமலைகளிரண்டும் வாடும்படியாய், பூமி யசையும்படியாய், வீராதி வீரனாகிய வணங்காமுடிபெற்ற துரியோதன மகாராஜன் மேல் வீழ்ந்தான். அப்போது சிங்கக்கொடியோங்கிய வீமசேனன் பாம்புக்கொடிபடைத்த பார்த்திபனைப் பார்த்து அதிர்த்து, மேலுற்றடர்த்து, நெடுமூச்சு விடுத்து, எவர்களும் அதிசயிக்கும்படியாய் அவன் தொடையை ஒடித்து, நெடுநாளாய் நிலைத்திருக்கின்ற கோபத்தைச் செலுத்தினான்.

### வீமன் துரியோதனன் முடியைக் காலால் உதைக்க, அவனை தருமனும் பலராமனுங்கடிய, அதற்கு கண்ணனும் அவனும் சில உண்மைகள் கூறி ஆற்றுதல்

அப்போது துரியோதனராஜன் கண்களில் நெருப்புப்பொறிபறக்க விழித்து, செவ்வரக்கிலுஞ் சிறக்கச் சிவந்து, புருவம் நெற்றியிலேற உருத்துப் பார்த்து, நான்கு கொம்பினையுந் தாழ்ந்த கையினையுமுடைய. அயிராவதத்தைப்போல் மதர்த்துக் கிடந்த கிடக்கை விட்டுக் கிளம்பி, வீமனுடைய மார்பு கலங்கக் குத்தினான். அந்தக் குத்தைத் தாங்கியுந் தாங்காமலுந் தடாரித்துக்கொண்டு தாவிய வீமசேனன், துரியோதனனுடைய கன்னமும் வாயும் நெரியும்படியாய்த் தனது கரத்தால் மொத்தி, அவனது புத்தியைக் கலக்கிக் கீழே வீழ்த்தி, மதர்த்து எதிர்த்த யானையை அடர்த்து அடித்து, வீரகேசரியாகிய சிங்கப்போல் சீறி, அவனுடைய தலைமேலிருந்த மௌலி முடியை இடித்து உடைத்து உதைத்து அழுந்தச் செய்தான். இரண்டு காலினாலும் அவனுடைய மேனியைத் துவைத்தான். மீண்டும்

வீமன் துரியோதனன் முடியைக் காலாலுதைக்க அவனை தருமனும் பலராமரும் கடிய
அதற்கு கண்ணன் சில உண்மைகள் கூறி ஆற்றுதல்.



ஒருகால் அவன் மார்பில் உதைத்துக் கலக்கி ஞன். மற்றொருகாலால் அவனுடையபுஜத்தை யுதைத்து ஒடித்து வெறுத்து முறித்தான். இவ்விருநிலப் பரப்பாகிய பூமிமேல் அவன் சரீர முருளும்படியாகத் தனதிரு தாளால் மாறிமாறிப் புரட்டினன். இவ்வாருகப் பற்பல விக்கிரமச் சேட்டைகளை வீமன் செய்தும் உயி ரழியாமல், உரமும் வரமுங்கொண்ட துரியோ தன மகாராஜனானவன், வீமசேனனுடன்மீண் டும் போர் புரியும்படிக்கு மெதுவாய்த் தலை யெடுத்துப் பார்த்து எழுந்தான். அதைக் கண்ட அக்கினி சகாயனாகிய வாயுகுமாரனும் ஆருக்குமடங்காத காளையுமாகிய வீமசேனன் ஆக்கிரமித்து, அடா துரியோதனா! இன்ன மும் யுத்தம் பண்ணியா வெல்லப்போகிருய்? நீ பிழைப்பதற்கும் உனக்கும் வெகுதூரமா யிற்றே? இனி பிழைக்கவும் போகின்ருயா? என்று தனது பலம்பொருந்திய பாதங்களி ஞல் மீண்டு முடித்தலைமேலுதைத்து, தலை யைத் தாழக்கிடத்தி, மூளைகள் சிதறி யழியத் துவைத்தான். அந்த வருத்தத்தைக் கண்ட யாவரு மனந்தாளாமற் கலங்கினர்கள். தரும புத்திரரானவர் கோபங்கொண்டு, உடல்வெயர்த்து, முகங்கருகி, மனந்தளர்ந்து, தம்பியாகிய வீமனைச் சினந்து, மெத்த வருத்தத்துடன் சிலபேச்சு பேசுவதானர்.

அப்பா வீமா! நம்மட்டில் இவனுடைய மனது வஞ்சம் வைத்துக் கறுத்தானே யல்லது, விரிந்த இவ்வுலகத்தையாண்ட இராஜர் களெல்லோரும் வணங்கி யிணங்கிப் பணியும் பாதத்தை யுடையவன். கடல்வளைந்த ஈரே ழுலகமுங் கொண்டாடித் துதிக்கும்படியாகிய கீர்த்திபெற்ற பெயரோன். மகதைஸ்வரியமாகிய வாழ்வில் மிகுத்தவன். கெர்ப்ப ஸ்ரீ மைந்தன். களித்துமதத்த பட்டத்து யானைகட்டிய தலைவாயலையுடைய குருகுலத்தில் அவதரித்தவன். வணங்காமுடியோன். வையகந் தாங்கும் பையரவக் கொடியோன். தேனிறைந்து தூங்கிய நந்தியாவட்ட மாலையான். திருவோங்கிய நவநிதிச்சாலையான். வானேங்கு வளரும் வண்டருச் சோலையான். வெண்மணியாரமுஞ் சங்கும்பொருந்திய வேலையான், மன்னர்துதிக்கும் மாமதிக்குடையான். மறுவலரையறுக்கும் வடிவாபடையான். இத்தன்மைவாய்ந்த கௌரவகுல முதல்வனாகிய துரியோதனனென்னும் இராஜச் செல்வன், பூர்வ கர்மவினையினல் உன்னாலழிய நேரிட்டிருந்தாலும், ஐயோ! ஏதோ அவனை கொல்லும்படியாகக் கொண்ட சபதப்படிக்கு நிலத்தில் வீழ்த்தி விட்டாய். அதைக்குறித்து நான்பேசவில்லை. அது தீவினைப் பலிஷ்டமென்று சிந்தையுட் கொண்டேன். கீழே வீழ்ந்துபோன கெடிவஸ்தலாதிபனைத் தலைமேலுதைத்தனையே இது தர்மமா? எந்த நூலில் இப்படியாகச் சொல்லி யிருப்பது. அப்பா வீமா! பாவபுண்ணிய மெண்ணிப் பார்க்கவேண்டாமா? தெய்வத்துக்காகிலுங் கணக்கு ஒப்புவிக்கவேண்டுமே; ஓ திடவானே! இப்படிச் செய்தால் மாத்திரந்தானு நம்மை வீரனென்று யாவருஞ் சொல்லிப் புகழுவார்கள்; இல்லாவிட்டால் வீரமில்லாதவனென்று இகழ்ச்சி விளப்புவார்களோ? எப்படியு மிறந்து போவதற் காளானன். இனி யவனை இப்பேர்ப்பட்ட அவமரியாதை செய்வது அழகல்லவே. அதனல் நமக்கென்ன வுண்டு? அவனாரவன்? அவனைப் படுத்திய அன்னீதமெல்லாம் நாம் நாளை யனுபவிக்க வேண்டுமே; அவனையா நாம் பார்ப்பது? அவனுக்கு மேலிருப்பவர்களைப் பார்க்கவேண்டாமோ? (பாலைப்பார்ப்பதா? பானையை பார்ப்பதா?) ஆ வீமா! தெரியாப் புத்தியினல் யோசிக்காமல் இப்படி செய்துவிட்டாய். ஆகிலும், இப்பேர்ப்பட்ட அகந்தை இனி யெப்போதும் எந்தக்காலத்திலும் வேண்டாம் என்று இரங்கி இருவிழிகளிலுந் தாரையாய்ச் சலம் பெருகியோட நின்று வாடித் தளர்ந்தார் தருமராஜன்.

இந்தப் பூமிக்குரியவனாகிய பெரிய புண்ணியன் இவ்வண்ணஞ் சொல்லவே, நடந்த அதிசயத்தை அவ்விடத்திற் பார்த்திருந்தபலராமர் மனம்பொருமல், மதிதாளாமல், உடல் தரியாமல், ஆருக்கோப மீளா நெருப்பாய் அண்டிக்கொண்டு, அடடா! கொடும்பாவியாகிய வீமா! இன்னுட்டிலும், மற்றப் பன்னுட்டிலும், சுத்தப் பொன்னுட்டிலும், கற்ற தென்னுட்டிலும் கதைப்போர் விதியைச் சாஸ்திர நீதியாய்க் கற்றுணர்ந்த வல்லவர்கள் பழித்து ஏசித் தூஷிக்கும்படிக்கு, தர்மந் தப்பி முறை புரண்டு இடுப்பின் கீழாகிய தொடையி லடித்தாயே; ஒருவேளை கைதப்பிப் பட்டதோ வென்று நினைத்தால், இல்லை: இல்லை: வேறுமென்றே ஒரு நாழிகைபரியந்த மோதினை, கதை சாஸ்திரத்தில் என்ன விதித்திருக்கிற தென்றால், இரண்டுபேர் கதாயுத்தம்பண்ணுங் காலையில், அரையின்கீழ் அடிக்கலாகாதென்

றும்; சோர்ந்து நின்றுவிட்டால் அப்போது தந் தொடலாகாதென்றும் நீதிபேசி யிருக்கிறது. ஞாயமாக இந்நூல் அறிந்தவர்கள் மார்க் கந் தப்பிய துன்மார்க்கஞ் செய்யக் கூசுவார் கள், செய்யவு மாட்டார்கள். நீயோ அச்சங் கூச்ச நாணமில்லாமல், குறைவில்லாதபடி வேலைமுடித்தாய். அப்போதே எனக்கு வந்த ஆவேச கோபத்தை அடக்கிப் பொறுமையா யிருந்தேன். இப்போது அந்தத் துரியோ தனராஜன் கீழே விழுந்தபோதும், அவனு டைய நவரத்தின கிரீடமணிந்த வணங்கா முடிமீது உன் தரித்திரம் பிடித்த காலால் உதைக்கலாமோ? இப்படியாக உனக்கு எவன் வித்தை கற்றுக் கொடுத்தான்? என்ன பலத் தைக் கண்டு இப்படிச் செய்தாய்? அடா வீமா! இதோ அந்தத் துரியோதனனுக்கு பதிலாய் நானே யெதிர்த்து யுத்தம் பண்ணி உன்னைக் கொல்லுகிறேன். அப்பால் துவாரகைக்குச் செல்லுகிறேன் என்று கோபமூண்டு, கலப் பையைக் கையிலேந்திக்கொண்டு, வலைப்பையி லகப்பட்ட மான்கன்று துள்ளுமாப்போற் றுள்ளிப் பகைத்து, கோபத்துடன் வாடா வெளியே யென்று வலுக்கொண்டு திடுக் கென்று வந்தார். இந்தப் பிரமாதத்தைக் கந் தங் கமழுந் திருத்துளவணிந்த கமலநாயக னாகிய கண்ணன் கண்டு, அண்ணென்றெதி ரோடி அண்ணன் முன்னின்று, மண்ணின் மேல் வீழுந்து வணங்கி யெழுந்து, வெள்ளை வண்ணனாகிய அம்மூத்தோனுக்கு இதனை விளம்புவதாயினர்.

ஓ அண்ணா! யான் சொல்வதைக்கேட்டரு ளுங்கள். (பாத்திரம் பார்த்து அன்னமிடு, ஷாத்திரம் பார்த்துக் கன்னமிடு, கோத்திரம் பார்த்துப் பெண்ணையெடு, சூத்திரம் பார்த் துச் சொல்லைவிடு) என்று உலகிற் பெரியோர் பேசுகின்றார்களே; இதை யோசியுங்கள். இவ் விடத்தில் வீமனடித்த கதையடியால் வீழ்ந்து விட்ட துரியோதனமகாராஜன் இந்தப் பாண் டவர்களுக்குச் செய்த பொல்லாங்குகளை இவ் வளவென்று எண்ணவே முடியா. ஏட்டிலெழு தவுமடங்கா. அதுவுமல்லாமல், அக்கினியிற் பிறந்த பேதையாகிய திரௌபதையைச் சபை யேற்றி, அவளுடைய துகிலை யுரிந்து பங்கப் படுத்தி வைத்தான். அந்தக் காலத்தில், உங் களைப்போல ஒத்தவர்களிருந்து கண்ணாற் பார்த்திருப்பீர்களாகில், இப்போது இவ்விடத் தில் வீமன் உதைத்த உதையிலுங் கோடிபங் காக உதைத்து அன்றைக்கே உயிரையும்வதை த்து விடுவீர்கள். அப்பேர்ப்பட்ட கொடிய வேலையைச் செய்தான் முடிவிலா நரகத்தை யனுபவிக்கும் இந்தக் கொடிய பாதகன். அந் தக் காலத்தில் வேறு திக்கில்லாமல், ஆ! தெய் வமே யென்று இரைந்தழுத அந்த உத்தமி யானவள், அங்கிருந்த ராஜகூட்டங்களெல் லாரு மறியும்படியாய் வீமனுடைய கதையால் உன் தொடை முறிந்து இறக்கக்கடவையென் றுச் சபித்திருக்கின்றாள். அந்த உத்தமியாகிய பத்தினியினுடைய சாபச் சொல்லானது வீண் போமோ. அண்ணா! இதுவன்றியும் பூர்வத் தில் ஒரு முனிவனானவர், இவன் தொடைமுறி ந்து இறக்கும்படியாய்ச் சபித்திருக்கின்றார். இவனுக்குச் சாபங்கள் வினைப்பயன்படி அனு பவிக்கக்கூடின; ஆகையால், வீமசேனனை வெறுப்பதிற் காரியமில்லை. மேலும், இன் னுஞ் சொல்லுகிறேன் கேளும்; அண்ணா! இப் போது செய்த யுத்தத்திற் பாண்டவர்களுக்கு இந்தப் பாவியாகிய துரியோதனன் செய்த கொடுமைகளை ஆர்சொல்லத் தக்கவர்கள்; எவர் கூறமிக்கவர்கள்; ஏந்தலே இந்தப் பூமியைத் தாங்கும் ஆதிசேடனும் ஆயிரம் நாவினாற் சொல்லி ஆறமாட்டான். ஆறித்தேறவுமாட் டான். ஓ கோபமாகக் கூறிய பாலவண்ணரே! இந்தத் துரியோதனன் மகா வஞ்சகனாகிய பஞ்சமாபாதகன். இவன் செய்த சங்கதிகளிற் கொஞ்சம் சங்கதி சொல்லுகிறேன் கேளும்.

இக்காண்டாவன தகனனாகிய காண்டீ பன் மைந்தனும், நமது மருமகனாகிய அபி மன்னுவை ஒன்றியாயிருக்கும்போது வளைத் துக்கொண்டு பலமுகத்தினுங் கோடிவீரராய்க் குவிந்து நின்று, நல்ல கைக்காரராகிய கர் னன், துரோணாச்சாரி இவர்களெல்லாரும் மறைந்திருந்து, மாறுபாடாகப் பின்பக்கம் வந்து, வில்லையுந் தேரையுமழித்து, ஆளை முழுக்காட்டி உயிர் கவர்ந்து விழிக்காட்டியது தர்மமோ? மேலும், இப்போது இவ்விடத்தில் மாய்ந்த துரியோதனன் விதிகிழிந்து மாளா மல், வீமன் தொடைமேல் அடித்ததினாலேயா செத்தான். வேறொரு வித்தினாலுஞ் சாக மாட்டானோ? அண்ணா! பலபத்திரரே! தேவ ரீர் கொண்ட கோபத்தை மாற்றிவிடும். இப் போது நடந்த காரியங்களனைத்தையும் யோசிக்கும்போது,(பெண்ணின் குணமும் அப் படித்தான்; சம்மந்தி வாயும் இப்படித்தான்) என்னும் பழமொழிக்கு இணங்க யிருக்கிறது.

நமக்கென்ன பள்ளமுள்ள விடத்தில் தண்ணீர் நிற்கிறது; உப்புத்தின்றவன் தண்ணீர் குடிப்பான், யார் எப்படிப்போனாலும் நம்முடையவழியை நாம்பார்ப்போமென்று வணங்கிப் போற்றினர். இப்படி மகா மாயனாகிய வாசுதேவனென்னுந் தம்பி யொருவன் தலைப்பட்டு, இந்த வேலைக்கென்றே தலையிட்டு நின்று சகலத்தையுந் தானே மேற்போட்டுக் கொண்டு, மூத்தவனாகிய தனக்கும் ஆற்றல் சொல்லவே, இவை யனைத்துங் கேட்ட பலராமரானவர் கொதிப்பாறி, குளிர்ந்த ஜலம் போற் கோபமாறி, உடனே தனது நெடிய தேர்மேலேறி யுத்த பூமியைவிட்டு நீங்கித் துவாரகைக்குப் பிரயாணமாயினர். அவரைச் சற்று தூரம்போய் வழிவிட்டுவந்த பத்மநாபன் தர்மராஜன் முகத்தைப் பார்த்து இதனைச் சொல்லுகின்றார்.

ஓ முன்னோனாகிய முரசகேதனரே! குடையுங்கொடியும் குணமும் பண்ணுமோங்கிய உரம் பெற்ற தோள் தாங்கிய துரியோதனனை, அநிலமைந்தனாகிய வீமசேனன் காலா லுதைத்ததற்காக நீர் மெத்தவும் வெறுத்தீர்; மனங் கறுத்தீர்; சும்மாயிருந்த பலராமரும் நீர் கொண்ட கோபத்தைப் பார்த்துத் தானுங் கோபங் கொண்டார். போகட்டும்; அந்தப் பாம்புக் கொடியோன் செய்த பொல்லாங்குகளையும், பேசிய பேச்சுகளையும், ஏசிய ஏச்சுகளையும் மனத்தில் வைக்காமல் நீக்கிமறந்தீரோ? இப்போதுதான் அவனோடு நீர் கூடப்பிறந்தீரோ. ஐயோ! அரக்குமாளிகை கட்டி உங்களைக் குடியேற்றி வைத்து ஆருயிரோடுங் கொள்ளி வைப்பதற்கு அங்கோராளும் வைத்தானே; விஷத்தைப் புகட்டி ஜலத்திற் கட்டிப் போட்டானே; பொய் சூதாடிப் பொருளெல்லாங் கவர்ந்து, அருளில்லாமல் அண்ணன் தேவியை அவையேற்றி வைத்து ஆடாதும் ஆடி, பாடாதும் பாடி, ஏசாதும் ஏசி, பேசாதும்பேசி தவத்திற் பிறந்த சிறந்த பதிவிரதை யென்று சற்று மெண்ணிப் பாராமல், வஸ்திரபங்கம் பண்ணினனே; பன்னிரண்டுவருடங் காட்டிலோட்டினனே; நீங்கள் வனவாசம் பண்ணும் போது, செவந்த மயிர்ச்சடையும் விரிந்த சூலப்படையு முடைய கரும்பூதத்தை மாரண ஓமத்தில் வரவழைத்து, உங்களைக் கொல்லத் தொடுத்து, அதர்வண வேதமுடைய காளமாமுனியைக் கெடுத்தானே; துருவாசனைச் சோறு கேட்க விடுத்தானே; இப் போரில் வீழ்ந்து இருக்கிறவரைக்கும் பாண்டவர்களுக்கு நாடு கொடுக்கேனென்று ஒரே பிடிவாதமாகப் பிடித்து என்னிடத்தில் வாதிட்டானே; உலகிலுள்ள பலபேரையுங் குருக்ஷேத்திரத்திற் கூட்டிவந்து கொள்ளைகொடுத்தானே; இவைகளை யெல்லாம் நீர் மறந்து போனீராக்கும். சாந்தஸ்தானுடைய மனம் அப்படி யிருந்தாலும், வீமசேனன் மறப்பானோ? ஈட்டுக்கும், பாட்டுக்கும் டீக்கொடுத்தவன் எவனோ? அவனுக்கல்லவோ அந்த வருத்தந் தெரியும். இத்தியாதி பொல்லாங்கை விளைத்த துரியோதனனாகிய பாவியை வீமன் காலால் உதைத்ததினால் என்ன முழுகிப்போச்சுது. அந்த துரோகியானவன் செய்த காரியத்திலும் இந்த வீமன்செய்த காரியம் பொல்லாததோ? ஓ பெரியோனாகிய தருமராஜனே! இவற்றையெல்லாம் உமக்குள்ளே சற்று நிதானித்துச் சொல்லும் என்று இதழ்விரிந்த முல்லைமாலையுந் திருத்துளவத்தையும் அணிந்த திருமாலாகிய திருமருமார்பினன் செப்பவும், வீமசேனனுக்குங் கோபமேலிட்டு, அண்ணனுடைய அடிமலர்மேற் றொழுது கண்ணீருகுத்துக் கதறிச் சொல்லுகின்றான்.

ஓ சிரேஷ்டப்பிராதாவாகிய தருமதேவே! தருமசிந்தையையுடைய சற்சனருக்கு ஒரு பொல்லாங்கு நேரிடுமாகில், எல்லாரும் இரங்க வேண்டியதே! அரக்கொடிய பெரும்பாவிக்கு ஆர் இரக்கப்படுகிறார்களோ! அவர்களுக்குப் பாவஞ்சேருமே அண்ணா! இவனுக்கும் இரங்கலாகுமா? இந்தப்பாவி மனத்துரோகி, இனத்துரோகி, குலத்துரோகி, குணத்துரோகி, குருத்துரோகி, பிதுர்த்துரோகி, வெகுசனத்துரோகி, இப்படியாகிய வேந்தனுக்காக இரங்கி அருள்பூண்டு, தேவரீருடைய கிருபையை அவன்மீது நிலைநாட்டி, அவனைச் சிலாகித்தும் இவ்வாறு புகழ்ந்து பேசுவீராகில், திறமிகுந்த செங்கோலின் இயற்கை பொய்த்து ஜெகத்திலுள்ள வளங்களெல்லாந் திறம்பி, நாசமடைந்துபோமே? ஐயோ! இதுவரையிலுஞ் செய்த சூதெல்லாம் போகட்டும். இவ்விடத்திற் கதாயுத்தம் பண்ணும்போது, உயிர் நிலை சொல்லென்று கேட்டான். சத்தியத்தை யனுசரித்து நான் உண்மையைப்பேசினேன். நான் சொல்லி வாய்மூடு முன்னே, தலைமேல் அடித்தான். சுவாமி தயவினாலுந் தங்களுடைய தருமத்தினாலும் அந்த அடிக்குத் தப்பிப் பிழைத்து, உன்னுடைய உயிர்நிலை

சொல்லென்று நான் கேட்டேன். தன்னுடைய தொடையென்று உண்மையைச் சொல்லாமல் தலையென்று பொய் சொன்னான். அவன் வஞ்சனை அவனையே கெடுத்தது. ஓ சாணை பிடித்து தயிலதூபஞ்செய்த வடிவேற்றாங்கிய முரசக்கொடியினையுடைய வள்ளலே! இப்பேர்ப்பட்ட கொடிய துஷ்டனைத் தலையிலுதைத்தது மாத்திரமல்ல; இன்னும் என்ன செய்தாலும் என்மனத்துளிருக்கும் ஆருத்தீயானது நீங்காது என்று நெடுமூச்சு விட்டு உரக்கச் சொன்னான்.

இவ்விதமாக அழகிய கதாயுதனாகிய வீமசேனன் சொல்லிய வார்த்தையைத் தருமராஜன்கேட்டு குளிர்ந்த முகமாக நகைத்து, கோவர்தனத்தைக் கரத்திலெடுத்துக் கோபாலனப்பண்ணிய துளபமாலையணிந்த கோவிந்தனுடைய கமலவாண் முகத்தைக் கருணையுடன் பார்த்து, ஓ கமலக்கண்ணா! நீரும் வீமசேனனுடன் கூடிக்கொண்டு குதிக்கின்றீர். அநேகங்கோடி பாவங்களைச் செய்த பேர்களுக்குநீங்காத நெடும்பழியுண்டு அவர்களென்றைக்கும்பாவிகளே? அவர்களையுலகமெல்லாம் அறியும்; அவர்கள் சுத்தகருப்பாகிய எருமைக்கடா மாட்டைப் போன்றவர்கள்; கருப்பில் அழுக்குபட்டாற் கறுப்புடன் கறுப்பாய் கலந்துகொண்டே யிருக்கும்; கறுப்பு என்றுங் கறுப்பே; அதையாவரும் ஒரு பொருளாய்ப் பேசமாட்டார்கள். பாவமற்றபுண்ணியவான்களாகிய செம்மையோர் பரமாணுவிலுஞ் சிறிதாகிய குற்றத்தைக்கூட ஒருக்காலுஞ் செய்யப்படாது. செய்வார்களாகிற் பரிசுத்தமாகிய வெள்ளைப்பசுவில் கறுப்புப்புள்ளி விழுந்து பைரங்கக் காக்ஷியாய்த் தெரிவது போலும்; சோடசகலைகணிறம்பிய பூரண சந்திரனில், ஓர் சிறிய களங்கஞ் செழுமையுறத் தோற்றுவது போலும் யாவருக்கும் பளிச்சென்று தெரியும். இதை யெல்லோரும் எடுத்துப் பேசுவார்கள். ஆகையால், இந்தக் கொடுமைதான் நமக்கென்னத்திற்கென்று சொல்லவந்தேன். ஓ கருத்தின்மிகுந்த கருத்தனே! நாம் என்ன செய்வோம்: இவையனைத்தும் அவரவர்களுடைய ஊழ்வினையிருந்து நடத்தும்படியான காரியம்; ஊழ்வினையைக் கடந்து நடந்தவர்களொருவருமில்லை. இந்தவீமசேனனை வெறுத்துக் கொள்ளுவதிலும் பிரயோசனமில்லை. முன்செய்த தீவினைப் பயன்படியே முடிந்து விட்டது. இப்போது மூன்றுலகமுங் பாழ்பட்டுப் போகும்படியாக நாமுனைந்த போரில், யாவும் நமதுசெயலால் முடிந்ததென்றுசொல்லுஞ் சுதந்தரம் ஒருவருக்குண்டோ? ஐயா! எங்கள் மூதாதையாகிய வீஷ்மரென்ன? ஜேஷ்டபிராதாவாகிய கர்னமகாராஜனென்ன திரிலோகமு நடுங்கப் போர்புரியுஞ் சல்லிய மகாராஜனென்ன? இவர்களெல்லாந்திரிமூர்த்திகளேவந்து போராடினுமிளைக்கத் தக்கவர்களோ? இதுவரையிலும் இறந்து போனவர்களுக்கு ஈடானவர்களோ? இப்போ திருப்பவர்கள், கூனியைக்கொண்டு கோரிக்கை நிறைவேற்றிக் கொள்ளுவதுபோற் புல்லாடவருக்கொப்பாகிய எங்களை வைத்துக்கொண்டு, சர்வசாட்சியாகிய நீர் தாட்சியில்லாமல் உமது வேலையை முடித்துக்கொண்டீர். ஓ செகநாயகைக்கு முகமாகியதேவே! உமது சித்திரவிசித்திரச் செய்கைகளை எவரறியத் தக்கவர்கள் என்று இவ்வுலகத்தை வரம்பு கடவாது நிலைநிறுத்திச் செங்கோற் செலுத்திச் சீர்செய்யப் பிறந்த ராஜசிங்கமாகிய தருமராஜன் சொல்லியருளினார்.

### தருமனுக் காறுதல்கூறிய கண்ணனையும் வீமனையுந் துரியோதனன் தூஷிக்க, அதற் கவ்வரியானவ ருத்தரங் கூறுதல்.

இப்படி இவர்கள் பேசிக்கொண்டிருக்கும் போது, வீமன்கதையால் அடிபட்டுச்சோர்ந்து வீழ்ந்த இராஜராஜனாகிய துரியோதனன்களை தெளிந்து கண்விழித்துநோக்கி, தருமராஜனுடைய வாக்கியத்தையும், வீமசேனன் பகர்ந்த யோக்கியத்தையும், கண்ணன் கூறிய சிலாக்கியத்தையுந் தெரிந்து கொண்டு சிந்தைதளர்ந்து சொல்லுகிறான். ஆம் ஆம் நான் ஒருவன்தான் நீதிதப்பிய அன்னீதன்; நீங்களெல்லாரும் நீதிமுதலிய தருமந் தப்பாதவர்களல்லவா? அந்த மட்டும் போதும் வாயை மூடுங்கள். ஆராகிலுங் கேட்டாற் சிரிக்கப் போகின்றார்கள். ஆ! ஆ! உத்தமர்களே குலக்குரவனாகிய வீஷ்மாச்சாரியார், விற்குருவாகிய துரோணாச்சாரியார் இவர்களெல்லாருஞ் சந்தோஷமாய்ச் சாகும்படியாத் தானே கொலைசெய்தீர்கள்? ஆனதால், நீங்கள் மகா நல்லவர்கள்தான். ஐயோ விதரண குணனாகிய கர்னன் பூமியிற் புதைந்துபோன தேரைத் தூக்குவதற்குத் தாழ யிறங்கியபோது ஜாடித்து விட்டீர்களே; சிந்து தேசாதிபதியாகிய சயிந்தவனை மோசம்பண்ணி மாய்கையினாற் சூரியனை மறைத்துத் துலைத்து விட்டீர்களே;

சாத்தகி யுயிரைக்கொல்லச் சமைந்த பூரிசிரா வைவாளியுடன் கையும் பூமியில் விழமாற்றி விட்டீர்களே; துரோணரிறப்பதற்குத்தொல்லுலகம்பழிக்கும் படியாகிய பொய்பேசினீர்களே; இதோ இப்போது நடந்த கதாயுத்தத்தில் தொடையிலடிக்கக் காட்டி என்னுயிரிறக்கும்படி மூட்டினீர்களே; இறையாகிய தருமராஜன் எப்படிபோனாலும் விதியெப்படியானாலும் தருமந் தப்பமாட்டாரென்று, சகல உலகத்தாருங் கொண்டாடும்படியாய் இருந்தனர். இப்பேர்ப்பட்ட சாதுசங்க சாஸ்திர விசாரணையுடைய சத்தியவானை அசத்தியவானாக்கி, அவருக்கு இல்லாததும் பொல்லாததும் போதித்து, அவர்பேரையுங் கெடுத்து, என்சீரையு முடித்துவிட்டீர்கள். ஓ நீருண்ட காளமேகம் போன்ற கறுத்த கபட நாடகனே! நீ நினைத்த காரியம் நிறைவேறிற்றல்லவா? இனிமேலாகிலும் உன் செங்கண் ணுறங்குவையோ? இப்போதாகிலுந் தூக்கம் பிடிக்குமோ? இனி என்றைக்குங் கவலையற் றிருப்பாயோ வென்று கனன்று கருவி, பற்கடித்து, இதழ் மடித்து, ஆஹா! கிருஷ்ணா! நீ தப்பிப்போனா யல்லவா என்றுசொல்லி அடங்கினான்.

அந்த மொழியைக்கேட்ட முகுந்தன் அவனருகிற்சென்று நின்று, அடப்பா துரியோதனா! எய்தவனிருக்க அம்பை நோவதுபோல் என்னை நொந்துகொள்வதில் என்ன லாபம்? இன்னமும் பாவமூட்டை கட்டப்பார்க்கின்றையோ? அடாபாவி! வீமனுக்கு உயிர்நிலை சொல்லிய மாறுபாடான உன் சூதுமொழியை அருச்சுனன் கேட்டு, மோசம்பண்ணினாயென்று ஆத்திரப்பட்டு, தன் தமையனாகிய வீமனுக்காக வருந்தி, சகோதரனானதால் மனந்தாளாமல், அவ்வீமசேனனுக்கு எதிரில் வந்து வாக்கினால் சொல்லுவது தருமமல்லவென்று குறிப்பினால் காட்டினான். உன் சூது உன்னை யழித்திருக்க, என்னையேன் நிந்திக்கின்றாய் என்று வாசுதேவன் சொல்லி வாய்மூடு முன்னமே, துரியோதனன் மீண்டுஞ்சீறி, ஆ! கிருஷ்ணா! என் கதாயுதத்தால் குந்தி மைந்தர் ஐவரையுங்கொன்றுஉயிர்த்துலைத்து, உன்னையுஞ் சிறையிலடித்து, நெடிய கடல் சூழ்ந்த இவ்வுலகத்தை என்தாயின் வாக்கியப்படிக்கு நானே அரசுசெய்ய விருந்தேன். ஆனால் படுபாவியாகிய மதுசூதனா உன் சூதால் என்னெண்ணம் நிறைவேறாமற் கெட்டழிந்துவிட்டதென்று தளர்ந்துசொன்னான். இப்படியாகக்கூறிய இந்துகுலாதிபனாகிய துரியோதனனைத் தேவர்களும் நான்கு வேதங்களுந் தேட நின்ற நெடியமாயன் நெருங்கி, அருகணைந்து நோக்கிச் சொல்லலுற்றார். அப்பா துரியோதனா! உனதெண்ணம் உன்னை கெடுத்ததென்று உணரக்கூடாதா? நல்லது; நான்முன்னம் உன்னிடத்திற்கு தூதுவந்தபோது இப்படிக்கெல்லாம் நடக்குமென்று தெரிவித்தேனல்லவா? அப்படிக்குத் தெரிவித்தும் அதை லக்ஷியஞ்செய்யாமல், அக்கால் மேலாக வுணர்ந்தபேதையோர் மொழியையும் விதுரராஜனுடைய சொல்லையுங்கடந்து, ஈன்றளித்த தந்தையின் வாய்மையையும் விடுத்து, தற்போதனையாளர் கூறும் வார்த்தைகளை உன் துற்புத்தியிற் றொடுத்து நடந்த உன் குற்றமானது, உன்னை இப்போது கெடுத்துவிட்டது. இதற்கு ஆரென்ன செய்யலாம்? வீஷ்மரையுந் துரோணரையும் நாங்கள் கொன்றதாகச் சொன்னாய்; அவர்களிறந்ததைக் கேள்.

ஓ கொற்றவனே! இப்போருக்கு முன்னே மேதானே பாஞ்சாலராஜனுடைய அருந்தவத்தாற் சிகண்டியென்றும், திர்ஷ்டத்தும்மனென்றும், உலகந்தொழும்படியாகிய அழகிய சாயலையுடைய திருமேனியோடும் பிறந்து, அவ்வீஷ்மர் துரோணருடைய உயிர் கொள்ளும்படிக்கு வளர்ந்து வந்து, நீஞ்சக்கூடாத நெடுங்கடல்போன்ற சமரிற்புநிதராகிய இருவராவியும் நீங்கினார்கள். நின்மலன் கற்பித்த நிர்ணயப்படிக்கு ஆசையற்ற அவர்களும் காலங்கழித்துப் போய்விட்டார்கள். நீயோ பேராசை பிடித்துப் பெருக்கத்தவித்து, இந்தப் பாண்டவர்களைப் பறக்க அடித்து நாம் பிழைத்தாற் போதுமென்னும் ஆசையால் அந்தப் பெரியோரையும், மற்ற உரியோரையும், இன்னும் பலபேர்களையும் முடித்து, நீயும் முடிந்தாய். அந்தப்பாவமும் பழியும் வசையும் உனக்கேயல்லாமல் எமக்கொன்றுமில்லை. ஓ நந்தியாவட்ட மாலையணிந்த நரேந்திரனே! பூரிசிராவைக்கொன்றது பிழையென்றாய். அதற்கு ஞாயங்கேள். தனக்குத் துணையாகவந்த ஒருவனுக்கு இடையூறு வருமாகில், அவனுக்குதவிசெய்து காக்க வேண்டுமோ வேண்டாமோ? நீயே சொல். நீ சும்மா யிருப்பையா? ஆகையால், அர்ச்சுனனுக்கு உறுதிப் படைத் துணையாய் வந்தவன் சாத்தகி. மேலும் தன் பிள்ளைபோன்ற சீடன். அப்பேர்ப்பட்டவனைச் சத்துருவானவன் போர்

திரித்து வளைத்து முடிக்கும்போது, காண்டீபதரனாகிய அர்ச்சுனன் கண்ணாரக்கண்டும் போருக்குப் பயந்தவர்களைப்போல் இருக்கலாகா அப்படியிருந்தால் அது தருமமாமா; அபகீர்த்தி வாராமற்போமா; ஓ மதிகுலாசார்வபூமா; அதற்காக உதவிசெய்தால் அதுபிழையாமா; இதுவுமல்லாமல் கர்னன் தேர் புதைந்தபோது அவனுயிருண்டீரென்றனை. அக்கர்னனுக்கு ஒரு முனிவனுடைய சாபம் வந்து முன்னமே மூண்டிருக்கிறது. அந்தச் சாபத்தால் தேர்மணலிற் புதைந்து போயது. அப்போது முனைப் பகழியையுடைய அர்ச்சுனன் பாணங்கொண்டு அடிக்காமல் நிற்பானாகில், ஓ மனக்கவலைபூண்ட மகாராஜனே! அந்த மாமுனிவனிட்ட சாபந்தொலைந்து மண்ணிற் புதைந்த ரதம் மறுபடியெழுந்து வருமோ சற்றே சொல்லு. எப்படியும் முடிவுகாலம் வந்துவிட்டது. நிலத்தில் நிற்கும்போது அடித்தால் தானென்ன, ரதத்திலிருக்கும் போது தொடுத்தால்தா னென்ன. இல்லை பிழைப்பான் அதற்குள்ளே அருச்சுனன் அடித்தான் என்றாகிலும் பேசு. போபோ பமித்தியக்காரா! இறந்து போகிற கட்டைக்கு ஒரு பேச்சா.

இதல்லாமல், வீமனுக்கு நான் உளவு சொல்லித் தொடையிலடிக்கக் காண்பித்ததாகச் சொன்னாய். அதற்கு ஞாயங்கேள். உன் பிராணனுக்கும் அவன் பிராணனுக்கும் முடிபோட்டுக்கொண்டு போர்புரியுங் காலையில், நீ யவனை உண்மையாக உயிர்நிலைகேட்டபோது, சத்தியமாகச் சொல்லிய மன்மத வடிவாகரனாகிய வீமசேனனைப் பலமுறை தலைநிறையக் கதையால் அடித்தனை; சர்வசம்மாரகால உருத்திரனுக்கு நிகராய்ச் சீக்கிரத்தில் வீமனை முடித்துவிடலாமென்று தெழித்தனை; உன்னுயிர் நிலையை அவன் கேட்டபோது ஒளித்துப் பேசினை. இந்தச் சோமகுலமாகிய சந்திரவம்சப் புறங்கடையிற் பிறந்தபேர்களிலும், உன்னைப்போற் சூதுரைத்தோர்கள் ஒருவருமில்லை. இந்த உலகத்திலுள்ள எந்தச் சாதியிலும் இல்லை. உண்டானா லொருவனைச்சொல்லுக. நீயும் உள்ளபடி உண்மையாகிய பேச்சைப் பேசுவையாகில், எவரும் நடுவிற் புகுந்து மொழியார்கள். எச்சூட்சியுஞ் சொல்லமாட்டார்கள். உனது வாயச்சொற் கள்ளத்தனமே வீமனுக்கு விள்ளுமாறாகக் காட்டியதல்லவா. நல்லது: அப்படி காட்டாமலிருந்தாலும் நீ பிழைப்பாயோ, வீமனிறப்பானோ! ஓ காவலனே! முன்னடந்திருக்கின்ற முறைகளையெல்லாம் நீ மறந்துபோயினையோ? வெள்ளப் பள்ளத்தால் அள்ளலார்ந்த குள்ளக்கிய லூரும் வள்ளையெற்சூழ்ந்த குருநாட்டுக்குரிய திருநாட்டை நீ ஆண்டுவரும் நாளையில், அரிய தவத்துக்குரிய பெரிய மயித்திரியர் உன் தொடையொடிந்து இறக்கும்படி கொடுத்த சாபத்தைத் தள்ளுகிறதற்கு உன்னாலாகுமோ? அக்கினியிற்பிறந்த திரௌபதா தேவியாகிய மகா பதிவிரதை யானவள் வயிறெரிந்து வீமன் கதையால் உன்தொடை முறியவென்று மொழிந்த சாபந் தப்புமோ? இதைச்சொல். துரியோதனா! எல்லாத் தீவினையுந் திரண்டுருண்டு வந்துசேர்ந்து ஆளைப்பிடித்து அழுத்தும்போது, இனி ஆரால்முடியும்; உன்னால் தான் என்னாகும்; (காலன் பகைக்கவும் பாலன் பிழைக்கவுமா?) ஏன் வீணாய் ஊரார்பேரில் தோஷம் பேசுகின்றாய் என்று இனைய பல மொழிகளெல்லாம் எடுத்துச்சொல்லி, மீண்டுந் திருமால் சொல்லுகின்றார்.

ஓ வாகைசிறந்த மாலைபுனைந்த மன்னனே! நீ இந்தப் பாண்டவர்களை நாசப்படுத்திவிட்டு ஞாலமுழுதும் நாமே ஆளவேண்டும் என்று நினைத்து, அதற்காக என்னென்ன யுக்திகள் கெடுதிகள் நினைத்துச் செய்தனையோ, அதுகளெல்லாம் பெருமூட்டையாய் திரண்டு கடைசியில் தீவினையாகி உன்னையே பழிக்க வந்துவிட்டன. இது நாமே தேடிக்கொண்ட வினைமூட்டையென்று நினைத்துக் கொள்ளுக. எங்களையெல்லாம் ஏன் வீணாய் வெறுக்கிறாய்; நாவிற்போட்டு ஏன் வறுக்கிறாய்; கொஞ்ச நஞ்சமிருக்கும் புண்ணியத்தையுங் குறுக்கிறாய்; குணமுதலானதைச் சுத்தமாய் வேராறுக்கிறாய். இன்னொன்றுகேள்: வீமசேனனுடைய கதையடியில்லாமல் நீ செத்து போவையாகில், கொடிதாகிய ரவுரவாதிநரகத்திற் குளித்துக் கொண்டு, கோத்திரத்தோர் யாவருக்கும் நலமில்லாமற் குமுங்கிப்போய்விடுவாய். அப்படிக்கில்லாமல், ஆரிழைத்த நோன்போ, ஆர்செய்த தவமோ, ஆரிருந்தவிரதமோ, அவைகளின் பலன்கள் எவ்வகைப்பட்டனவோ நானறியேன். இந்த வீமனாலும் அவன் கதையினாலும் நீ பட்டபடியால், நீ சிறுபோது முதல் இதுவரையிலுந் தேடிக்கொண்ட தீமைகளையெல்லாந் தொலைத்துவிட்டாய். இப்போது உனக்குப் பாபமில்லை. (கெட்டவர்களுடைய

உறவைப்பார்க்கிலும் நல்லவர்கள் பகை நல்லது) என்பது மேலோர்வாக்கியம். இதையும் நன்ருகயோசித்துப்பார். இனி நீ தாராளமாய் நற்கதியடையலாம். மகாராஜனுப் போய்ச் சுகமாய் வாழ்ந்திரு என்று திருக்கண்ணரும் நோக்கத்துடன் புகன்று, திருமாலாகிய புதிதன் திரும்பினர். இப்படி கேசவனுகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி திருவாய்மலர்ந் தருளித் திரும்பு முன்னமே, ஆகாயத்தில் வேடிக்கைப் பார்த்துக்கொண்டிருந்த இந்திரன் முதலாகிய தேவர்களெல்லாருங் களித்து, போர்புரிந்து வீழ்ந்து தாழ்ந்த துரியோதன மகாராஜன் பேரில் மிகுந்த சீக்கிரமாய்ப் பூமழை பொழிந்தார்கள்.

### கண்ணன் பாண்டவரை பாசறைக்கணிருத்திச் சென்று, திரிதராஷ்டிரனையும் காந்தாரியையும் வியாசராற் றேற்றி வருதல்

இப்பால், வாசனை நிறைந்த செந்தாமரைமலர் வண்மையொத்த செங்கண்ணுகிய மாதவன் பொருபடை பூட்டிப் பூபாலரும், புனிதராகிய பாண்டவர்களும் இருபக்கத்திலும் பெயர்த்துவர எழுந்து பாசறையை நோக்கித் திரும்புவதற்கு முன்னமே, பருதியாகிய சூரியன் மேற்குக்கடலில் மூழ்கினன். அக்கணம் செங்கண்ணுடைய திருமால் ஐவர்களுடன் தனக்கிளைய சாத்தகியுடனும், துரியோதன மகாராஜனுடைய பாசறையைக் கண்டு கிட்டினர். அக்குறிப்புணர்ந்த பாண்டவர்கள் அப்பாசறைக்குட் புகுந்து, ஆங்காங்குள்ள பலவிடங்களிலுஞ் சென்று சேர்ந்து, இறந்துபோனவர்களுடைய நவமணிப் பணிகளின் குவியல்களையும், திரவியப் பொருள்களையும், ரதகஜதுரகபதாதிகளையும், ஊழியங்கள் செய்யும் உத்தமர்களாகிய தொழிலாளரையும், பாசறையில் காவலாயிருந்த யாவரையுந் தங்கள் பொருளென்று சந்தோஷமாய்க் கைக்கொண்டு காவற்படுத்தி, திருமாலுடைய கட்டளையின்பேரில் தேர்விட்டிழிய வேண்டுமென்று இரதத்தின்மீது இருந்தார்கள். அந்த வேளையில், நந்தநந்தனனுகிய நாதன் சிந்தையிலொன்றை நினைத்து, கொந்தலர்மாலை புனைந்த ஐவரைப்பார்த்து, கேளும் பாண்டவர்களே! திரிதராஷ்டிர மகாராஜனேடுங் காந்தாரியோடுஞ் சஞ்சயன்போய் மூத்தமைமகனுகிய துரியோதன மகாராஜன் இறந்தானென்று சொல்லுமுன்னமே நான்போய்ச் சொல்லி, அந்த இருவர்களுடைய வருத்தத்தையும்-மனேதுக்கத்தையும்-புத்திரசோபத்தையும், அவர்களுக்கு நேரிட்ட ஆபத்தையும், உங்கள்பேரில் விளையப்போகின்ற கோபத்தையும், தீராத குரோதத்தையுந் தீர்த்து மாற்றி, அவர்களைத் தெளியச் செய்வது தருமந் தப்பாமல் கிரமமாக உங்களிடத்திற்கு மறுபடியும் ஒரு நொடியில் வருகிறேன். அதுவரையிலும் நீங்கள் இந்தத் தேர்விட்டிறங்கா திருங்களென்று சொல்லினர்.

இப்படி சொல்லக்கேட்ட கைத்திறல் வல்லவராகிய காவலரைவரும் கருணையங்கடலாகிய கண்ணனைப் பார்த்து, ஓ அண்ணலே! இன்றையத்தினம் தேவரீர் அஸ்தினுபுரத்திற்குப்போய்த் திருதராஷ்டிர மகாராஜனையும், காந்தாரியம்மனையுங் கண்டு சங்கதிகளை விண்டு, மேல் நடக்கவேண்டிய காரியங்களையுங் கைக்கொண்டு வருவீராகில் உத்தமம். இல்லாவிட்டால், புத்திர சோபத்தினுல் தாங்கள் வருந்துவது மல்லாமல், வீணுய் எங்களைச் சபித்துப் போடுவார்கள். ஆதலால், தேவரீர் சென்று அதற்குத் தக்கபடி தடுக்குபோட்டு வரவேண்டும் என்று உத்தமராகிய பஞ்சவர் உரைத்து வணங்கி விடைகொடுத்து, நீர் வருகிறவரைக்கும் இப்படியே ரதத்தி லிருக்கின்ரேம். உத்தரம் வந்து சொன்னுல், பாசறை வீட்டி லிறங்குகிறோம். பொல்லா மொழிவந்து சொன்னுல், இதேகதியாய்ப்போய் காட்டில் இறங்குகிறோமென்று சொல்லினர். அதைக் கேட்ட ஒப்பற்ற ஒருவனுகிய உவணகேதனன் ஒரு நொடியிற்சென்று திரும்புங் குதிரை பூட்டிய தேர்மேலேறிக்கொண்டு, அஸ்தினுபுரத்தை நாடி யோடினர். இப்படி யோகிற ஸ்ரீ கிருஷ்ணனுனவர், அவ்விடத்தில் வேத வியாசர் வந்திருக்கும்படிக்கு நினைத்து, மாடமாளிகை பெற்ற நீண்ட வீதிகளெல்லாம் பார்த்து, ஆங்காங்கு இலட்சுமி விலகிப் போகிய எழிலும், குப்பை கூளம் நிரம்பிய பொழிலும், துக்கத்தினுல் அழுகிற குரலும், அத்துக்க ஸ்திரீகள் காலிலணிந்திருக்கிற தண்டைச் சிலம்புகளில் ஓசைப் படும்படியாகிய பரலும், அவ்வவர் வாட்டமும், அவ்வவர் கோஷமுங் கண்டு, பெரிய அரசனிருக்கும் அரண்மனைக்குட் சென்று, தோடலர்ந்த மாலை யணிந்த தோள் திணிந்த சௌபல ராஜகுமாரியாகிய காந்தாரியுடன் தனக்கு எவரும் ஈடில்லா திருக்குந் திருதராஷ்டிர பூபதியினுடைய இருக்கைக்குப்போனர். இந்

தக் கிருஷ்ணபகவான் போவதற்கு முன் ஸ்ரீ வேத வியாசபகவான் அவிடம்வந்து பொருந்தி யிருக்கின்றார்.

அப்போது அவ்விருவருடைய துன்பத்தையும் நீக்கி விடலாமென்று எண்ணங்கொண்டுபோன மேகவண்ணனாகிய கரியமாலானவர் நேர்புகுந்து, முன்பனாகிய வேதவியாசரையும், எதிரிலிருக்கிற திரிதராஷ்டிர பூபனையுங் கண்டு வணங்கிக் கவலைகொண்டிருந்தார். அக்கால், திரிதராஷ்டிரன் வந்து வணங்கினவன் மாயனென்றோர்ந்து, வாயுபுத்திரனாகிய வீமனைக்கொண்டு என் மக்களாகிய நூறுபேரையுங் கொன்று வானிலேற்றி என்க்கு வயிற்றெரிச்சல் விளைத்துத்தன்வயிறு குளிர்ந்த தூய்மையாளனாகிய கிருஷ்ணனோ வந்தது? இன்னும் என்னகாரியத்திற்கு வந்தானோ? என்று சோகமும் அந்தச் சோகத்துடன் உல்லங்கனமுமாகிய சொற்களைச் சொன்னான். அதுகாலையிற் கிருஷ்ணமூர்த்தியானவர் அவனருகிருந்து, ஓ மாமா! நமஸ்காரம், நமஸ்காரம், எல்லாத்திற்கும் பாத்திரன் தானென்று ஆத்திரமாகச் சொல்லவேண்டாம்; நீங்கள் விவேகத்திலுயர்ந்த மேலோர்கள். உங்களுக்குத் தெரியாத காரியமொன்றுமில்லை. மேலும், வானுலகமும் மண்ணுலகமுந் துதித்துப் போற்றும்படியாகிய தூய்மையை யுடையவர்கள். நீதிமான்கள். நீங்கள் அறியாததும் ஒன்றுண்டோ? பரிசுத்த இருதயமுள்ள தூயவராயினும் விதியின் செயலைக் கடக்கொணாதென்று மேலவர் விதித்திருக்கும் வாக்கியங்களைத் தமது மனதிற் பதித்திருந்தும், இப்போது மறைந்து பேசுகின்றீர்கள்போலு மிருக்கின்றது. ஓ மாண்பினையுடைய மாமா! உமது தவத்திற்பிறந்து சிறந்த புத்திரமித்திர பௌத்திராதியர் யாவருந் தீர்க்காயுசுட னிருக்கவேண்டிய விதியிருக்குமாகில், நான் தூதுவந்தபோது மேல்விழுந்து வேண்டிவேண்டிச் சொல்லிய தூய நல்லுரைகளையும், நீங்கள் எவ்வளவோ பாடுபட்டுக்கூறிய பட்சமான வார்த்தைகளையும், தாயபோன்ற பெரியோர்கள் சாற்றிய வாக்கியங்களையும், உமது பிள்ளைகள் மறுத்துத் தங்கள் கருத்தின் வண்ணம் நடப்பார்களா! நீங்களே யோசிக்கவேண்டியது. எப்போது பெரியோர் உரியோர் சொல்லைக் கடந்தார்களோ, அவர்களிவ்வுலகத்தில் இருக்கவேண்டிய விதியில்லை. அதனால் மறுத்துப் போட்டார்கள்.

ஓ மாமா! புரசைக்கயிறோடு கிம்புரிப்பூண் கட்டிய கோட்டுமால் யானையின்மீது இராஜவீதிதோறும் அழகாகப் பவனிவந்து வாழும்படியாகிய வாழ்வு விரும்பியபேர்கள், அருந்ததிக்கொப்பாகிய கற்புடையாளை ராஜசபையில் இழுத்துவந்து அவமானப்படுத்தி துணியை உரிவார்களா? ஈதொன்றை மாத்திரம் நீங்கள் சொல்லுங்கள். எமலோக வாழ்வைப் பெற வேண்டினோர்கள் செய்யும்படியாகிய கொடுமையைச் செய்தார்களே: இவர்களிருப்பவர்களா? இறப்பவர்களா? என்னத்திற்கு வீணான பேச்சு? பேசப்பேச பெரும்பிழைதான். அவர்களிந்த காரியங்கட்கெல்லாங் காரணமாய்ப் பிறந்தார்கள். வந்தவேலைதீரும்படி விளையாடினார்கள். காரணப்படி இறந்தார்கள். இனியவர்களைப் புத்திரரென்று நீங்கள் நினைக்கப்படாது. உங்கள் பிள்ளைகள் அதோயிருக்கின்றார்கள். பலம்பொருந்தியபாண்டவர்கள் குணவான்கள். கீர்த்தியுடையவர்கள். இவர்களைப் பிள்ளையென் றெண்ணும். இவர்கள் தான் இப்போதிறந்தோர்க்கும் இனி யிறப்போர்க்குங் கருமக்கிரியைக் கடனுக்குரியவர்கள். இவர்களை நம்பினால் பெருவினையகன்று பெருங்கதி சேருவீர்; பெருமையாய் வாழ்வீர்; உங்களுக்கொரு குறைவுமிராது. உங்கள் குழந்தைகளாகிய பாண்டவர்கள் உங்களைக் காணும்படியாய் வரவேண்டுமென் றிருக்கிறார்கள். எப்படியும் வருவார்கள். அப்படியே வந்தாற்பவளம் போன்ற இதழினையுடையமாமியுந்தாங்களுந் துயரமில்லாமல் அவர்களை வரவழைத்து, அரவணைத்து, ஆசீர்வதித்து, உவகையுடன் வாழ்த்துங்கள். இப்போதென்னைப் பேசியதுபோற் கொடுமொழியாகவும், கோபமாகவும், குரூரமாகவும்பேசவேண்டாம். இனி இருப்பது அவர்கள்தான். அவர்களை நாம் நமது நற்குணத்தால் நடத்திக்கொண்டு நல்வழித்தேடிக்கொள்ள வேண்டியது. எல்லாந் தெரிந்தஇறையவருக்கு நானென்னசொல்லப் போகிறேன்? இதோ வியாசப்பிர்ம மிருக்கின்றார். இந்த உத்தமனாலே தத்துவ வேதங் கற்றுக்கொண்டு முத்தியங்கரையைப் புத்தியினாற் பெறுங்கள் என்று சிநேகமாகப்பேசி, பாண்டவ ரிடத்திலும் பட்ச முண்டாகச் செய்து, ஏன் வியாசமகாமுனியே! நான் சொல்லுகிறது தங்களுக்கெப்படி யிருக்கிறதென்று கேட்டு அவரைத் தூண்டினார். அந்தச் சொல்லை ஒட்டிக்கொண்டு வியாசருஞ் சொல்லத் தொடங்கினார்.

ஓ எனதன்பிற்குரிய திரிதராஷ்டிரனே! இந்தக் கேசவனை லேசாக நினையாதீர். தாசர் வணங்கும் பூசனைக் குரியவன். முண்டகாசனுக்குகந்த முதல்வன். இவருடைய வாக்கியம் நம்போலியர்க்கெல்லாம் இதுவே சிலாக்கியம். உம்மிடத்தில் வந்து இவ்வளவு சமாதானஞ் சொல்லவந்தது உமது தலைமுறை யார் செய்த பாக்கியம். ஆகையால், இவர் கூறியது உண்மையே வண்மையென்று கொண்டு மனந்தேறி மேன்மையைக்கொள்ளு மென்று வியாசனாகிய சாந்தனுஞ் சொல்லவே, திரிதராஷ்டிரன் அவர் சொல்லிய விதியிலே மதியைச் செலுத்தி, அதியினு லவரை மதித்து, இனி தனக்காகவேண்டுங் கதியைக் குறித்து ஆலோசித்திருந்தான். இப்பால், கிருஷ்ணதேவர் காந்தாரியினுடைய கண்கலக்கத்தையுந் தீர்த்து, மாமனிடத்திலும், மாமியிடத்திலும், வேதவியாசரிடத்திலும், விடைபெற்றுக்கொண்டு, பாண்டவரைவரும் இருக்கின்ற பாசறையை நோக்கி வந்தார்.

## கண்ணன் அர்ச்சுனன் தேரழன்றுபோகக்கண்டையுற்ற ஐவர்க்கவ் வையந்தீர்த்து உடனே அவர்களைக் கானகத்தழைத்துப்போதல்

அப்போது அவ்விடத்திருந்த ஐவரும், இவருக்கு எதிர்கொண்டுவந்து மிகுந்த உபசாரந்தந்து, தேவரீர் போனயிடத்தில் நடந்த காரியம் என்னவென்று வினவினார்கள். அவர்கட்குக் கண்ணன் அவ்விடத்தில் நடந்த காரியங்களை யெல்லாம் ஆச்சரியப்படும்படியாய்ச்சொன்னார். அந்த மொழிகளைப் பாண்டவர் கேட்டு, ஜன்மாந்திரங்களிற்செய்த தபோபலன் கைகூடி வந்ததைப்போல் சஞ்சலம் நீங்கினார்கள். அப்போது, நீண்ட மாலையணிந்த நெடுந்தோளினையுடைய முராரியானவர், அஸ்தினாபுரத்திற்குத் தான்போய் வந்த தேர்விட்டிழிந்து, இந்திர குமாரனாகிய அர்ச்சுனனை நோக்கி, அப்பா பற்குனா! உன்னாயுதங்களை யெல்லாம் எடுத்துக்கொண்டு உன் தேர்விட் டிழிந்துவிடென்று திருவாய் மலர்ந்தருளினார். அவ்வண்ணம் அந்த அர்ச்சுனனானவன், அஸ்திர சஸ்திரங்களை யெல்லாம் எடுத்துக்கொண்டு பூமியிலிறங்கினான். அப்போது மேலாகிய அழகு விரிந்து சொலிக்கும் அருச்சுனனேறிய அழியா ரதமானது குபீரென்று பற்றிக்கொண்டு, திகுதிகுவென்று எரிந்து, கரிந்து, பொரிந்து, பொடிந்து, பிடிசாம்பலா யிடிந்து, மண்ணோடு மண்ணாய் மடிந்து படிந்துபோயது. அந்த அதிசயத்தைக் கண்ட பாண்டவ ரைவரும், பரவாசுதேவனைப்போற்றி, ஓ பக்தவச்சலனே! இஃதென்ன மாயம்? இதென்ன உபாயம்? ஐயோ! இது மெத்த அபாயம்? எங்களைத் தப்பவைத்ததுவே சகாயம்? இந்தச் சங்கதியை விபரமாய்ச் சொல்லவேண்டும் என்று கேட்கவே, அப்போது பகவான் சொல்லுகின்றார். ஓ பாண்டவர்களே! கேளுங்கள்: இந்த அருச்சுனனுக்கு அக்கினிதேவன் தேர் கொடுத்த காலத்தில், நான் இத்தேர் சத்துருக்களுடைய பாணங்களினால் அழியாதிருக்கும்படி வரங் கேட்டேன். அதற்கு அவ் வக்கினிதேவன், மகா கொடுமையையுடைய பாரதயுத்தந் துலைகிறவரைக்கும் இந்த ரதம் அழியாமலிருக்கும். அப்பாற் பஸ்மீகரமா யெரிந்து, என்னிற் கலந்துபோமென்று ஒரு வரங் கொடுத்திருந்தார். ஆதலால், இந்தப் பதினெட்டு நாள் யுத்தத்திலும் மகா வரப்பிரசாத மகத்துவமிகுந்த மந்திரஜெபதப உரங்கள்பெற்ற மகானுக்களுடைய அஸ்திரங்களும், பகைத்த இராஜாக்கள் தெறித்த படைக்கலங்களும், கெடாத வல்லமையுடன் இந்தத் தேரின்பேரிற் பல கோடியாகப் பொருந்தியும், சத்தியத்திற்குச் சமுத்திரம் நிற்கின்றாற்போல் நின்றிருந்தது. இப்போது பாரதப்போர் முடிந்து நமது மனத்திலிருந்த சபதத்தையு மீண்டு போனதால், நாளைமுதற் சண்டை யில்லையென்று தெரிந்துகொண்டு, தான் கொடுத்திருந்த வரத்தின்படிக்கு, இந்தத் தேரழியுங் காலம் இன்றைக்கென் றுணர்ந்து, தீ மூண்டெரித்துத் தன்னிடத்திற் சேர்த்துக்கொண்டார் அக்கினிதேவன். என்று கண்ணன் கூறலும், வாகுமாலையினையுடைய தோள்வீரம் பெற்ற பாண்டவர்கள் அற்புத மிகுந்தார்கள். மாதவனாகிய மாயனைப் புகழ்ந்து மகிழ்ந்து வாழ்த்தினார்கள். அப்போது மறுபடியும் பச்சைமாலானவர், பாண்டவர்களை யழைத்து நீங்களைந்துபேரும், என் தம்பியாகிய சாத்தகியும் என்னுடன்கூட வாருங்கள். இவ்விடத்தில் தீவினைவிளைவாகிய ஓர் தீங்கு நடக்கப்போகின்றது. மேலும் யுத்தமுடிந்த காலமாகையால், எதிரியை சேர்ந்த மேற்படைகள் வந்து வீழ்ந்தாலும் விழும், மேலோருரைத்த ராஜதந்திரப்படிக்கு நாம் இருக்கிறயிடந் தெரியாமல் இருந்து இன்றிராப்பொழுதைக் கழிக்க வேண்டியிருக்கிறது. என்றுரைத்து எல்லோ

ருக்கும் முன்னுத்தாய் முந்திக்கால் நடையாகச் சென்றார் கண்ணனவர். அந்த ராத்திரியில் மற்ற அறுவரும் அவரைப் பின்றொடர்ந்து போனார்கள். இப்படி அவரைத் தொடர்ந்து போகின்றவர்கள் இருண்டமழைக்கால் மருட்சியினாலும், தங்களுடைய புத்தி தங்களுக்கு வசமில்லாத மயக்கத்தினாலும் ஒன்றுந்தோன்றாதவர்களாய், ஓ சுவாமி! நாமாத்திரம் போவோமாகிற் பாசறையினிடத்தில் இளம்பஞ்ச பாண்டவரும், மைத்துனராகிய திர்ஷ்டத் துய்மன் முதலான காவலரும்-பூவலரும்-மாவலரும்-கோவலரும் நிறைந்திருக்கின்றார்கள். அவர்களுக்கு ஏதாகிலும் அபாயம் வருமோவென்று அயர்ந்து கேட்டார்கள். அவ்வாறுகேட்ட ஐவரைக் கிருஷ்ணமூர்த்தி நோக்கி, ஓ பாண்டவர்களே! கவலைப்படாதீர்கள். தனக்கு மிஞ்சியல்லவோ தருமம்; இது சாஸ்திரங்களிற் சொல்லியமருமம்; இதுகளைக் குறித்து யோசிக்காதீர்கள். நீங்கள் பிழைக்கும் வித்தைத் தேடிக்கொள்ளுங்கள். நானிந்தப் பாசறையினிடத்தில் ஒரு பூதத்தைக் காவல் வைத்து, யாதொரு பொல்லாங்கும் நடவாமல் நன்மையே நடக்கும்படிசெய்து வருகிறேன். அப்பால் தெய்வச்செய லெப்படியோ என்று இவர்களுக்குத் திடஞ்சொல்லி, அழைத்துக் கொண்டு நெடுந்தூரம்போய், ஒரு மலையடிவாரத்திலிருக்கும் வெட்டார வெளியில் இருகரையும் ஒரு கரையாய்ப்பெருகி, யோடிவராநின்ற ஒரு ஆற்றின்கரைப் பள்ளத்தாக்கிற்றங்கினார். மற்றையரும் அங்ஙனமே நின்றார்கள். பின் னெழுவரும் இராத்திரி முழுதும் நித்திரையில்லாமற் சீவனமந்திரஞ் செபஞ் செய்துகொண்டு பொருந்தி யிருந்தார்கள்.

### கிருபாசாரியர் முதலிய மூவருந் துரியோதனனைத் தேடிச்சென்று காணுதல்

ஐயா ஜெனமேஜெய மகாராஜனே! இந்த மட்டும் இவர்களுடைய கதையைச் சொல்லி வந்தோம். இனிமேற் கலங்கி வீழ்ந்திருக்கின்ற ராஜாதிராஜனுடைய சங்கதிகளை விளம்புகிறோம் கேட்பீராக. வீமசேனனுடைய கதையடியால் துரியோதனன் தொடைமுறிந்து பூமியின்பேரிற் சாய்ந்து கிடக்கின்றான். அந்தச் சமயத்திற் சப்திக்கும் வீரகண்டாமணி தரித்த ஆசாரிய புத்திரனாகிய அஸ்வத்தாமன், மணங்கமழ்ந்த மாலையணிந்த கிருபாச்சாரியார், கேடில்லாப் புயவலிமைபெற்ற கிருதவன்மன் இவர்கள் மூவரும், இந்தப்பதினெட்டு நாளையிலும் பட்ட வருத்தந்தீர ஆலமரத்தடியிற் படுத்துச் செவ்வையாய் நித்திரைபிடித்துச் சாயங்காலம் வரைக்குந் தடித்து நித்திரைபோ யெழுந்து, துரியோதனமகாராஜன் வருவான் வருவான் என்று கருதியிருந்து பார்த்து, போதுபோகிற வரையிலும் வராமையாற் பொருந்திய உயிரனைத்தையும் புரந்துரட்சிக்கும் ஈசனுடைய செயலை நினைந்து, எப்படியோ என்னமோ வென்று ஏக்கங்கொண்டு, துரியோதன மகாராஜனுடைய செயலை அறிவோமென்று ரதமேறிமேகம்போன்றவில்லைவளைத்து நிறுத்திய வண்ணமாய்த் துரியோதனன் செபஞ் செய்திருந்த மடுக்கரைக்கு வந்துபார்த்தார்கள். அவ்விடத்தில், அநேக ரதங்களும்-யானைகளும்-குதிரைகளும்-கால்பலங்களும் நெருங்கி மிதித்து மடுக்கரையெல்லாஞ் சிதைத்து புதைத்து துந்துபோ யிருக்கக்கண்டு, இதென்ன பெருமோசமா யிருக்கின்றது. பாண்டவர் கண்டு, வளைத்துக்கொண்டார்கள்போலு மிருக்கிறதே யென்று, அந்தச் சேனைகள் முதலானவைகளோடு தேர்கள் போயிருக்கும் வழியை பிடித்துக்கொண்டு போவதானார்கள். அப்போது சேனைகள் சூழ்ந்து சென்றதும், துரியோதனனுடைய அடிமத்தியில் நடந்ததும், அந்த அடிச்சுவட்டிற் பத்மரேகை பதிந்திருப்பதும் பார்த்து வரும்போது, சமந்தபஞ்சகந் தீர்த்தமாடிவராநின்ற வேத நன்னூலாய்ந்தவராகிய சிலவேதியர்கள் இந்தமூவரையுநோக்கி, எங்கு போகின்றீர்களென்று வினவினார்கள். அதற்கு அவர்கள் துரியோதனமகாராஜனைத் தேடிக்கொண்டு போகின்றோமென்று சொல்ல, ஐயோ! வேந்தாகிய துரியோதனன் வீமன் கதையால் தொடைமுறிந்து வீழ்ந்தான். அவன் சரீரத்தைப் பார்த்துவரலாம் என்று புகன்று வேதியர் அகன்றான்.

அம்மொழியைக் கேட்டவுடனே, காதிற் சுறீரென்று சுடக் கனந்து, நெஞ்சயர்ந்து, இடியோசைகேட்ட பாம்புபோற்சாய்ந்து, கைகாலோய்ந்து மாய்ந்தவரைப்போல் வதனம் வாடி, தேரின்பேரிற் றள்ளாடிவீழ்ந்து, வேசாறிசற்றுநேரந்தரித்துஉயிருமாறி, மீண்டுஞ் சாரதிகள்செய்த உபசாரத்தாற்றேறி, உயிர்ப்போங்கி உயிர்தாங்கி, தேரை யுருட்டிக்கொண்டோடி, துரியோதனன் வீழ்ந்த யிடத்தை நாடி, நிலத்திலிழிந்து சிவக்க வருக்கிவிட்ட திர்க்க கம்பியைப்போற் செந்தொடை சிதற வடிப்பட்டுத் தரைமீ திருண்டு கிடக்கிற துரி

யோதன மகாராஜனுக்கு எதிரிற்போய் நின்று, தேம்பித் தேம்பிக் கரைந்து, ஓங்கி ஓசைவிட்டிரைந்து, வாய்விட்டழுது வயிற்றி லடித்து மோதி, அவன்மேல் வீழ்ந்து தளர்ந்து, உள்ளுடைந்து புரண்டு, முகத்திலும் அகத்திலும் மோதிச் சுருண்டு, நிலத்திற் றலையை முட்டிக்கொண்டு, நெஞ்சு பிஞ்சுபோகும்படி மிஞ்சிக் கதறி, கொஞ்சிக் குளறிப்பேசி, ஓ செஞ்சுடர் மாரா! ஓ சேவகத்தீரா! ஓ கலங்கா மனத்தோய்! ஓ கருணையம் புயத்தோய்! ஓ அருளரு மதியாய்! ஓ அலகிலா நிதியாய்! ஐயையோ! ஈதென்ன விதியோ. ஓ அரசே! உம்முடன் கூடி பொருங்கு வீழ்ந்திலேம்; எம்மனோருடனும் ஏகாதிருந்தேம்; அம்மம்மமற் றீதரு வினைப்பயனேன் என்று வெய்துயிர்த்து விழி மாரி சொரிந்து, மென்மலர்போல் விளங்கிய அவன் கால்மேல் வீழ்ந்து தாழ்ந்தெழுந்து, அந்தோவே! அந்தோவே என்று அழுது, இம்மட்டோ விதியின் தன்மையென்று தளர்ந்து அசைவற்றவர்களாயடங்கினார்கள். அக்காலையில், உயிர்வதையால் ஒடுங்கி, கண்ணை மூடிக்கொண்டு, ஓய்வாகவிருந்து உணர்வைச் செலுத்தும் வாழ்வைப்பெற்ற ஒப்பற்ற துரியோதன மகாராஜன், இவர்களிட்ட கூச்சலினாலும், கண்ணீர்ப் பாச்சலினாலும், மேல் விழுந்து அலட்டிய வேகத்தினாலுங் கொஞ்சந் தெளிந்து, இன்னதென்று புத்தியாலறிந்து, நல்ல கியாபகம்வந்து, வறண்டுப்போன நாக்கையுந் தொண்டையையும் நனைத்து ஈரமாக்கிக்கொண்டு, கண்ணைத் திறந்து பார்த்து அவர்களை இறுகக் கட்டியணைத்து, முகத்தோடு முகம்வைத்து, உடலோடுடல் பொருந்தி, கனைத்துக் கிளைந்துச் சில சங்கதிகளைச் சொல்லுவதானான்.

ஆ என் மித்திரர்களே! நீங்கள் மூவரும் மடுவிலிருந்த என்னுடன் வார்த்தை தந்து, நான் சொல்லிய வசனங்கொண்டு நீங்கள் மறைந்த அந்தக்ஷணமே, கட்டுக்கோப்புடன் பாண்டவ ரைவரும் பலவிதத் தானைகளோடும் வந்து, மடுக்கரையை வளைத்து நின்று வெகு விதமாகிய வம்புரைகளுந், தீயமொழிகளும் பாடினார்கள். அது என் காதுக் கிசையாமற், கடுகெனக் கரையேறி வெகுண்டு கதை தாங்கிய கையுடன் காலால் நடந்து இவ்விடத்திற்கு வந்து வீமனுடன் எதிர்த்து இகல் விளைத்தேன். அவனுடைய உயிரானது உள்ளுடைந்து ஊற்றமழிந்து திடந்தப்பி அந்தோர் வென்றலரி அவனிமேல் வீழும்படிக்கு அடித்து அனந்தமுறை ஜெயம்பெற்றேன். அந்தத் தருணத்தில், அரியாகிய கிருஷ்ணன் அர்ச்சுனனை விட்டுத் தன் தொடையைத் தொட்டுக் காட்டச்சொல்ல, அவனவ்வாறே வீமனுக்குக் காட்டி என் தொடையை மோதச் சவுக்கினை பண்ணினான். உடனே அந்தக் குறிப்பை வீமன் அறிந்துகொண்டு என் தொடைமேல் அடித்தான். கதாயுதசாஸ்திரத்தின் முறைமை தப்பி அடித்ததுமல்லாமல், என்னுயிரடங்கி முடிந்து போகும்படியாய் நான் தரையில் வீழ்ந்த பின்பும், அதிகமாகிய கோபத்துடன் என் தலைகுறைய உதைத்து தனது வாய் நிறைய சொல்லாத சொல்லெல்லாஞ் சொல்லி அண்ணன் தம்பிகள் சந்தோஷிக்கும் படியாய் அடர்த்தான். குறைவற்ற செல்வம் பொருந்தி நிறைபெற்ற நிருபர் சூழ நின்றொழ வாழ்வுற்ற யான், அப்பாவிகளாற் குலைகுலைந்து கலைகுலைந்து நிலைகுலைந்து என்போலொத்த கொற்றவர்களும், இன்னுமுள்ள மற்றவர்களும், ஏழிலுடைய நற்றவர்களும் வசைபேசிக் கொள்ளும்படியாய், மாறாத பழிக்காளாய், ஆறாத் குறைக்காளாய் நிலத்திற் கிடக்கின்ற எனக்கு இனிமேற் பேச்சென்ன பாசபந்த வைராக்கிய சம்மந்தபக்ஷம் என்ன யிருக்கிறது. இனிப் பேசவாயில்லை. என் அன்பிற்குரிய ஆரியர்களே! என் ஆண்மைக்குரிய வீரியர்களே! அவர்கள் கொண்ட சபதங்களைக் குறைவற முடித்துக் கொண்டார்கள். இனிப் பேசவேண்டிய தொன்றையுங் காணேன் என்று துரியோதன் மகாராஜன் சொல்லவும், அந்த மொழியை வந்த மூவருங் கேட்டுச் சிந்தை இரங்கி, இரு கட்புனலும் ஆறுபோலோட அழுது அவசமுற்றார்கள். அதுகாலையிற் கிருபாசாரியர் துரியோதனனைப் பார்த்து, "அருளுறவழக்கழிவுறுதடோர் மாற்றமு மறனுடனழுக்காறனுகுறுவேற்றமு, மிருநிலமதித்திட வினிது கோலோச்சுத வியல்பு நிருபர்க்கெனு முறைமையோ பார்த்திலை, நரைகெழு முடித்தலைவில் வேதியன்மீப்படு நதிமகன் முறித்தவில் விதுரனே போற்பல, குருவரு முறைத்த சொ லுறுதி நீ கேட்டிலை குருமரபினுக்கொரு திலகமா மூர்த்தியே" என்று சொல்லி மனஸ்தாபப் பட்டார்.

## துரியோதனன் அஸ்வத்தாமனுக்குச் சேனாபதிப்பட்டங் கொடுத்தனுப்புதல்

அப்போது, அஸ்வத்தாமன் அவரைப் பார்த்து, ஓ மாமா! இவ்வித நீதிகளைப் பேச

இது தருணமல்ல. சற்று நீர் சும்மாயிரும் என்று கையமர்த்தி, வணங்காமுடியோனைப் பார்த்து, ஓ அரவக்கொடிக்கரசே! முதனாள் யுத்தத்திற்றானே எனக்குச் சேனாபதி பட்டங் கட்டி யிருப்பீராகில், எனக்கொப்பாருமில்லை. எனக்கெதிர் நிற்பாருமில்லை. இந்தப்பாண்டவர்களை வென்று உமக்கு முடிசூட்டி வைப்பேன். நீர் அப்படிச் செய்யாமல் மற்ற பேர்களை வியந்து, புகழ்ந்து, மகிழ்ந்து, உமக் கிஷ்டமாயினோருக்கெல்லாஞ் சேனாபதி பட்டங் கட்டினீர். என் பேரில் வீண் சந்தேகங் கொண்டு நீக்கிவிட்டீர். இப்பவுமென்ன? இன்றிப் பகற்பொழுது போவதற்கு முன்னே, உமது சத்துருக்களாகிய பாண்டவர்களின் உயிர்வென்று, உறுதிகொண்டு, இன்னுமோர் க்ஷண நேரத்திற்குள் உம்மிடத்திற்கு வருகிறேன். எனக்குச் செலவு கொடும். இப்போதே போய்ச் சத்துருக்களை யடுத்து, சங்கரன் கொடுத்திருக்கிற வாளாயுதத்தால், அவர்களுடைய தலைகளை வெட்டி, பாசறையையும் பாழாக்கிச் சுடுகாடாகச் செய்து வருகிறேன்; அப்படி கெடுத்து வாராமற் போவேனாகில், நான் உயர்ந்த பிரமகுல சிரேஷ்டனாகிய துரோணாச்சாரியருடைய புத்திரனல்ல. ஓமல் யுத்தத்திற் கைதேர்ந்த புயங்களையுடைய மன்னர் மன்னனே! நவரத்தின மணிமகுடந் தரித்த உமது தலையின் மீது, வீமன் கால் கொண்டு உதைத்தானென்பது கேட்டும், நானும் உம்முடன் கூட உயிர்விடாமற் பிராணனை இதுவரையிலும் வைத்துக் கொண்டிருப்பது பெரிய அழகாயிருக்கிறது. ஓ பெருமானே! இப்போதாகிலும் உமது சேனாநாயகனென்று என்னை நியமித்து அனுப்புவீராகில், பழிக்குப் பழியாகிலும், வழிக்குவழியாய்முடிக்கிறேன் என்று அஸ்வத்தாமன் அக்கறையாய்ச் சொல்லவும், அவன் சொன்ன வார்த்தையாலுண்டாகும் பெருமையுஞ் - சிறுமையும்- நன்மையும்-தீமையும்-முன் பின் நாடிப் பாராதவனாய், (காளை கன்றீன்றது வென்றால் நாளைப் பார்த்துத் தோழத்திற்கட்டு, என்று சொல்லுகின்ற அவசரக்கார எசமானைப்போல் ஆசைகொண்டு, அஸ்வத்தாமனுக்கு மாலையணிந்து, தலையின் மீது முழுமாமணிப் பட்டஞ் சூட்டி, நீ என் சேனாபதியாகப் போய்ப் பாண்டவர்களைப்பற்றற முடித்துவாவென்று முடிக்கி விட்டான் துரியோதன மகாராஜன். இப்பாற் பொன்மலை போன்ற வில்லைத் தாங்கிய, கிருதபன்மன் - கிருபாச்சாரி- அஸ்வத்தாமன் இவர்கள் மூவரும் பாண்டவர்களுடன் போர்புரிந்து கொல்லுதற்காகத் துணிந்து விரைந்து போனார்கள்.

அப்பாற் சஞ்சயன் வந்து, தரணிமேல் விழுந்துகிடக்கின்ற தராதிபனைக் கண்டு, அவன்மேல் அலறி வீழ்ந்து, கண்ணீர்க ஆழ்ந்து கவலைகொண்டான். அக்காலையில், துரியோதன மகாராஜன் கண் திறந்து பார்த்து, அப்பா சஞ்சயனே! எழுதாப்பொறிக்கி அழுதாற்றீருமா? விபகாரந் தெரிந்த நீ தானே விசனப்படப்போமா? ஊழ்வினை விட்டு விடுமா? விடாது விடாது; எனது தந்தையுந் தாயுஞ் சிந்தை நொந்து மெத்த நைவார்கள். அவர்களுக்கு இந்த பந்த நீங்கத்தக்கதாக மேலோருரைத்த சாந்த நூலெல்லாம் விரித்து, அவர்களைத் திருத்து. நான் விசேஷித்துச் சொல்ல வேண்டியதொன்றுமில்லை. நான் இவ்வுலக வாழ்க்கையை கைவிடுங்காலம் நேரிட்டது, நீ போய் வருக என்று விடை கொடுத்து விட்டான். அவனிடத்தில் விடைபெற்றுக்கொண்ட கலைக்கியான வல்லவனாகிய சஞ்சயன் காலத்தையும்-விதிச் செயலையும் - வினைப் பயனையும் நினைத்து, கசிந்து, திரும்பிகவலையுற்று, அதுவே பயணமாய் அஸ்தினாபுரத்திற்கு வந்து, திரிதராஷ்டிரனையுங் காந்தாரி முதலாகிய பேர்களையுங் கண்டு, மகனுரைத்த வசனங்களெல்லாஞ் சொன்னான். இந்தச் சொல்லைக் கேட்குமுன்னமே, ஆ வென்றலரி பூமியில் உடல் சாய்ந்தார்கள். பொருமி விம்மி இவ்வுலகில் ஒருவராலுந் தாங்காத பெருந்துயராகி தளர்ச்சி யடைந்தார்கள். வானமுமிரங்க வாய்விட்டுப் புலம்பினார்கள். அடா மைந்தா! சிந்தாகுல மூட்டிவிட்டுச்செத்தாயோ? உந்திய விதியின் செயலால் உலைந்தாயோ? ஊழின் பயனால் ஒடுங்கிவிட்டாயோ? ஒரு பேச்சாகிலும் பேச வொண்ணாதோ? உற்றார் பெற்றார் இருக்கின்றார்களே என்று உன்னப்படாதோ? உயிரிழந்தாயோ? அந்தோ? மைந்தா இந்தா சற்றேவந் தாதரியாயா? சார்ந்துன் சிந்தை பரியாயா? அடா கொந்தாரமணிந்த கோவே! எங்கள் குறை தீர்க்கவந்த காவே! பாண்டவர் பகை வேண்டாமென்று பலகாலுஞ் சொன்னேமே. இப்போது பரந்தாமன்வந்து சொல்லிய பேச்சைப் பரியாலோசனை பண்ணாமற் போனேமே. கர்னனை நம்பிக் கனமோசம் போனாயே. கடைசியிலவன் சார்பினர்க்கே

களப்பலியானுயே. ஐயையோ! என்று கண்ணீர் சொரிந்து கவலை கொண்டார்கள். ராஜஸ்திரீகளெல்லோரும் உடலுடனுயிலா ஒழிப்பவர்போற் கடலெனயிரைந்து கடகடெனப் புரண்டு, கண்ணீர்பெருகிப் பரிந்து, உண்ணீர் வறந்து உரிந்து, கருகிக்கரைந்து, களைமேவிட்டு, கணவருயி ரடங்கியதைப்போற் கருத்தழிந்து சாய்ந்தார்கள். அப்படி சாய்ந்த அவர்களையெல்லாஞ் சஞ்சயன் தேற்றி, பிராமணுள் முதலிய பெரியோர்களைப் பக்கங்களில் அமைத்து, அநேக தர்மநீதிகளை எடுத்துச் சொல்லச் சொல்லி விடுத்து, இக்கவலையுடன் வலைபோன்ற பாசமாகிய கடலையு நீந்தி ஞான மலை யேறும்படியாய்ப் போதித்துக் கொண்டிருங்களென்று வைத்துவிட்டு, தான் குருக்ஷேத்திரப் பூமிக்கு யதாப்பிரகாரம் வந்து சேர்ந்து விட்டனன்.

சுயோதனன் வதைச்சருக்கம் முற்றிற்று.

---

இரண்டாவது,

## அஸ்வத்தாமன் பாசறைப்போர்ச் சருக்கம்

---

கண்ணன் துதி

தீமோக னஞ்செய்முலை மானுர்நிதம்ப வலை தேருதழு ந்து முலையும், மாமோக மைந்தர்பொருள் வாழ்வா லயர்ந்துதடு மாருமய ங்கு மிடையுந், தாமோ தரன்கமல மாதாள் பவன்சுருதி சார்பா னவன்ற னதுதாள், நாமோ தவுந்தொழுது ளேகாண வும்பெறுகி ஞமே யனந்த விழியோர்.

கேளும் கிருதார்த்தனுகிய ஜெனமேஜெய மகாராஜனே! முனிமைந்தனுகிய அஸ்வத்தாமன்-கிருபாச்சாரியர் - கிருதபன்மன் இவர் மூவரும் வந்து ஒரு மடுவைக்கண்டு, தங்கள் தேரிற் பூட்டிய குதிரைகளை யவிழ்த்து அந்த மடுவில் நீருண்ணவிடுத்து, தாழ்ந்திலங்கும் முப்புரிநூலையுடைய தடமார்பசையச் சந்தியாவந்தனம் முடித்துக்கொண்டு, சந்தனமரத்தின் நிழலிலிருந்து காயத்ரி செபஞ்செபித்து, போதுபோகிற வரைக்குஞ் சமயம் பார்த்துக் காத்திருந்தார்கள். இப்படி யிருக்கும்போது, குளிர்ந்த மாலையணிந்த குரு குமாரனுகிய அஸ்வத்தாமன் அவ்விடத்தி லிருக்கிற ஒரு ஆலமரத்தைக் கண்டான். அந்த ஆலமரத்திற் பொருந்தியிருந்த அநேகங் காக்கைகளை பெருங் கூகையானது வந்து மாறிமாறி யடிக்கவும், அப்போது அக்காக்கைகள் அம்மரத்தைவிட்டு அப்பாற் பறந்துபோகக் கண்டெரியாமற் கீழ்வீழ்ந்திறக்கவுங் கண்டு, சந்தோஷத்தாற் பூரித்து, பகையாளிகளைக் கொல்ல வேண்டுமென்று கோபத்துடன் தேடிவந்த நாம் இராத்திரி யென்றும், நித்திரைக் காலமென்றும் தருமமென்ணிப் பார்க்கலாகாது. எப்போது சமயம் ஏற்பட்டதோ? அப்போதே அடர்ந்து தொடர்ந்து படர்ந்து அடல் புரிந்து, அவ்வவர்கள் தலைகளை அறுத்தெறிதல் வேண்டுமென்று மனத்தில் நினைந்து, பகற்காலத்தில் காக்கையினுல் அடிபட்டகூகை இராக்காலத்தில் தன்னுடைய பகையை முடித்துக்கொள்ளுகிற தல்லவா? இதுவே நமக்குப் போதுமான திருஷ்டாந்தமுஞ் சகுனமென்று சங்கரஸ்தவுத்தியம் பண்ணி, இது நல்ல சமயமென்று போராட எழுந்தான்.

அஸ்வத்தாமன் போர்க்கெழக்கண்ட கிருபாச்சாரியர் சில நீதிகளைக்கூறித் தடுக்க, அதற்கு அவன் சமாதானஞ் சொல்லுதல்

அப்போது அஸ்வத்தாமனுடைய கருத்தை, அம்மானுகிய கிருபாச்சாரியர் ஓர்ந்து, ஓ எனது மருமகனுகிய அஸ்வத்தாமாவே! இங்கே வாரும்; என்னிடத்தில் உட்காரும்; என்று பூமிமேலிருத்தி, உமக்கு நாளெரு வசனஞ் சொல்லுகிறேன். அதை நீர் தள்ளாமல் உட்கொள்ளவேண்டும். அதேதெனனில், நீர் ஆசாரிய புருஷனுடைய புத்திரனுதலாலும், உயர்ந்த பிரமகுல சிரேஷ்டராகையாலும், எனக்கு மருமகனுயிருக்கிற சுதந்தரத்தினுலும், உமக்கு நான் வற்புறுத்திச் சொல்ல வேண்டிய மார்க்கமுங் கடமையு மிருப்பதாலுஞ் சொல்லுகிறேன். அண்ணன் தம்பிகளிருவருஞ் சண்டைபண்ணி, அக்கிரமம் ஆரிடத்தி லிருந்ததோ? அவர்கள் தம்மை யடுத்தவர்களுடன் தாங்களும் அழிந்துபோனுர்கள். நமக்கென்ன வந்தது, நாமுங் கூடயிருந்து வஞ்சனையில்லாமற்பாடுபட்டோம், பழவினைப்படி முடிந்துபோச்சுது; இது நாம் நற்றவஞ்செய்து ஆத்மலாபத்தைத் தேடவேண்டியதே; யொழிய, இன்னமும் பழிபாவத்துக் குட்பட்டுப் பிறவிக்கிடந்தேடிக் கொள்ளலாகாதே; ஓ புகழுலாவிய அருள் குலாவிய பூசுரனே! இப்போது நீர் மேற்போட்டுக்கொண்டு ஏற்

பட்டுப்போகிற காரியத்தால் எவருக்கு என்ன லாபம் வரும்? உமக்குத்தானென்ன பலன் உண்டு? ஓ உத்தமனே! ஓ மீதலத்தவராகிய தேவர்களும், பாதலத்தவராகிய நாகர்களும், பூதலத்தவராகிய யாவர்களும், மாதலத்தவராகிய மகான்களும், ஏத்தித் தோத்திரம் பண்ணும் நற்குலக் குணம் வாய்ந்தவனே! ஓ நன்னூலாய்ந்தவனே! ஓ பாவமுதலிய வஞ்சகங்களைக் காய்ந்தவனே! ஓ பக்குவமான ஞானமோன வழியிற் சாய்ந்தவனே! மேற்கூறிய யாவரும் பழித்து நிந்திக்கும்படியான பழியை ஏற்கலாமோ? உன்னைப்போலொத்தவனுக்கு இந்தக் காரியம் உரியதல்லவே; ஓ உண்மையானவனே! இராத்திரியில் நித்திரை செய்யும்போதும், கையில் ஆயுதமில்லாமல் நிராயுதரா யிருக்குங் காலத்தினும், அடைக்கலமென்று சரணடைந்தோரையும், யுத்தத்திற்குப் பயந்து ஓடுகிறவரையும், வில்லை எடுத்து புல்லைக் கவ்வினோரையுங் கொல்லப்படாது. கொன்றால், அவனுக்கும் அவன் கால்வழிக்கும் ஆறுக் கொடும்பாவஞ் சம்பவிக்கும். அந்தப் பாவத்தை அனுபவித்துத் தீர்க்கவேண்டும் என்று மேலோர் கூறியிருக்க, இவ்விதியைத் தப்பியதனால் வெகு இடரை வெகுபேர் அனுபவித்துமிருக்க, நீரும் அனுபோகசாலியாய் அறிந்திருந்தும், இந்த ராத்திரியில் பாண்டவர்களைக் கொல்லப்போவது பாரமார்த்தியமல்லவே; பொழுது விடிந்தபிற்பாடு பிரவேசித்து உமக்கு இஷ்டமானவரைக்கும் போராடலாம். அது பாவமில்லை. நீர் இப்போது போவதை நிறுத்தி விடுமென்று அம்மானாகிய கிருபாச்சாரியார் தடுத்தார்.

இப்படியாகத் தடுத்தவரை அஸ்வத்தாமன் நோக்கி, ஓ மாமா! தேவரீர் திருவாய் மலர்ந்தருளிய மொழியை அடியேன் தடுத்தேனென்று தியங்கவேண்டாம். நான் உரைப்பதைக் கேளும். வையமுழுதுஞ் செய்ய கோலோச்சும் ஐபனும், அரசர்க்கரசனுமாகிய மன்னன் முன்செய்த வினையால் முடிந்தான். அது போகட்டும். அம்மன்னன் பூமிமேல் விழுந்து புரண்டு உயிர் துறக்கும்போதினில், இரக்கமென்பது எள்ளளவில்லாமற் குரங்கின் சேஷ்டையாய் அவனுடைய பரிசுத்த முடி பொறுத்த தலைமேற் காலினாலுதைத்துத் துவைத்தது தருமமா? அப்படியாக உதைத்த அந்த வீமனையும், அவனுக்குரிய யாவரையுங் கொல்லுதற்குத் தருமம் சொல்லாமலிருக்கிறதோ? தயைதாட்சண்யம் எண்ணிப் பார்க்கலாகுமோ? சொல்லும். ஓ பரமசிவனிடத்தில் அன்புமிகுந்த பரிசுத்த இருதயமுடைய கிருபாச்சாரியரே! யாகாதி கிருதுக்களுக்கெல்லாந் தலைவராகிய தனுர்வேத குருவென்னும் என் தந்தை துரோணாச்சாரியார் வெறுங் கையுடனின்று மேனோக்கங்கொண்டு தன்னுயிரை விட்டு விடும்படியா யிருக்கும் வேளை கண்டு, உவர்க்கடல் களைந்த உலகத்தார் பார்க்கும்படிக்குத் தலையைத் தரித்துவிட்ட சண்டாளப் பாவிகளைத் தலைவாங்குவது பாவமோ? சொல்லும். ஓ என் மாமா! கங்கா புத்திரனாகப் பிறந்து காசினியாளும் ஆசையுற்றிருந்த தங்கள் மூலமுதல்வனாகிய வீஷ்மாச்சாரியரைப் பிராணமூர்ச்சை போகும்படியாய்ச் சாய்த்த பஞ்சமாபாவிகளை என் கையிலிருக்கும் பாணங்களினுடைய நெருப்பினாற் புரட்டிப் புரட்டிச் சுட்டு வேகச்செய்யாமல் விடுவேனாகில், தவமும்-மேன்மையும் - குணமும்-சால்பும்-தருமமும் நம்மிடத்தில் பொருந்துமோ? நமக்குப் பழியும் பாவமும் உண்டாகாமற் போகுமோ? ஓ மாசில்லாதவனே! என் தகப்பனை முடித்த தீயனானவன், நர்சமடையாமல் இன்னும் பூமியில் இருப்பானாகில், நானொரு வீரனென்று பேர்வாங்கி பிராணனேங்கி புகழ் தாங்கி இப்பூமியில் இருப்பதைப் பார்க்கிலும் இறந்துபோவது மெத்தவும் மேன்மை.

ஓ குற்றமில்லாத குணவாரியனே! மேலும், என் தந்தை இறந்துபோவதன் முன்னே என்னை யழைத்து உரைத்த சொல்லுறுதியை, இப்போதேனும் நினைத்து முடியாதிருப்பேனாகில், என்னைவிடத் தீயவன் இவ்வுலகத்தில் யாரிருப்பார்கள்? தந்தை சொல்லைத் தடுத்து நடந்தபேர்களல்லவோ சர்வ சண்டாளராய்ப் பிறப்பது? ஓ கிருபாச்சாரியரே! இராக்காலமென்றும், பிராணவாயு ஒடுங்குகிற சுழுத்தியென்றும், எவ்வளவும் எண்ணி மனங் குண்ணவேண்டாம். எப்போது சமயம் நேரிட்டதோ, அப்போதே போர் விளைத்துப் பொட்டெனச் சத்துருவை முடித்து, புகழையும் வெற்றிமாலையையும் பூண்டு மகிழ்வதே புகழாய்க் கொள்ளும். ஓ புண்ணியனே! வஞ்சம்-பொய்-பொறுமை - கரவடம் - கபடம் இவை முதலியனவற்றை கருணைக் கடலே! பொல்லாங்கு நினையாத புனிதனே! சாத்திரங்கற்ற அறிஞர்களும், அமரர்களும் ராட்சசானுடன் போராடிக் கொல்லுந்தோறும், இரவென்

றும், பகலென்றும், ஏக்கமென்றும், தூக்க
மென்றும், இளைத்தலென்றும், களைத்தலென்
றும், அஞ்சினேரென்றும், கெஞ்சினேரென்
றும், அடைக்கல மடைந்தாரென்றும், பிணக்
களம் மறைந்தாரென்றும் எண்ணிப் பார்ப்ப
துண்டோ? அது சற்றுமில்லை. ஐயனே!
நாகங் கடிக்க வந்தால் நல்லநாள் பார்த்துக்
கொல்ல வேண்டுமென்பது போலிருக்கிறதே
தேவர் சொல்லிய நீதி. இது நல்லசேதி. ஓ
மாசில்லாத தேசிகனே! பாண்டவர்கள் இது
வரையிலுஞ் செய்துவந்த சண்டையில் நடந்
திருக்கும் அநியாயங்களைத் தேவரீர் யோசிக்க
வில்லையோ? ஐயோ! பலவாருகிய மோசமே
யல்லது தருமமாகச் சண்டை செய்தார்கள்
என்றோ நினைக்கின்றீர்? அதுகளெல்லாம்
போகட்டும்: இந்த முதல்வனுகிய துரியோத
னனைத் தொடையிலடித்துக் கொன்றது சுத்
தந்தானே? கதாயுத சாஸ்திரத்தில் அரை
யின்கீழ் அடிக்கச் சொல்லி யிருக்கிறதோ? இது
தருமந்தானே? இப்பேர்ப்பட்ட காதகரை,
கொடியபாதகரை, இந்த வேளையிற் கிட்டி
அவர்களைக் கொன்று, என் கணையாலும்
வாளாலும் வென்று மீண்டாலொழிய உயிர்
வைத்துத் தாளமாட்டேன்; நான் வாழமாட்
டேன் என்று வேகமுங்கோபமும் மேன்மேலு
முண்டாக விளம்பினுன் அஸ்வத்தாமன்.

### பாண்டவர் பாசறையை நோக்கிச் செல்லும் அஸ்வத்தாமன் அங்குபரமனேவலால் வந்தெதிர்த்த பூதத்தோடெதிர்த் திளைத்தல்

இவ்வாறு கூறிய மருமகனுடைய வார்த்
தையைக் கேட்ட கிருபாச்சாரியார் மனமுருகி,
ஐயா! விவேக சிலாக்கியனே! உம்முடைய
கருத்து இவ்வண்ணமாக உறுதிப்பட்டு விட்
டது. இஃது உம்முடைய செய்கையல்ல. உம்
மையும் எம்மையும் உலவச் செய்திருக்கின்ற
உமாமகேசனுடைய செயலென்று உறுதியா
ய்க்கொண்டேன். இனி வேறெண்ணமில்லை
என்று சொல்லி மருமகன் மனதின்படி உடன்
பட்டு, குதிரை பூட்டிய இரதத்தில் ஆரோக
ணித்துக் கொண்டனர். அதுகண்ட கிருதவன்
மனும் ரதாரூடனுனன். உடனே இவ்விரு
வருந் தன்னிருபுறமு மருவிவரும்படி அஸ்
வத்தாமன் அழகிய தேரேறி, ஆண்சிங்கம்
புறப்படுந்தன்மைபோற் பாண்டவர்களுடைய
பாசறையை நோக்கிப் போனுன். இந்தப் பிர
காரம் பாண்டவர்களுடைய பாசறைக்குச் சமீ
பத்திற்போய் மூன்று தேராளிகளும் நின்று,
தாங்கள் நாடிய செயல்களையும், நடத்தப்
போகின்ற செய்கைகளையும், செவ்வையாக
நினைத்து, ஸ்திரங்கொண்டு வில்லெடுத்து,
வெற்றி பெற்ற அம்பறாத்தூணிகட்டி வில்
நாரிபூட்டி ஏழுலகத்தை எரிக்கும்படியா
யெழுந்த வடவாமுகாக்கினி-உகாந்த காலாக்
கினி ஜடராக்கினி என்னும் மூவக்கினி
போன்று வந்து நின்றார்கள். அப்போது,
வரிசிலைக்கொரு மாமுனிவனுகிய துரோணச்
சாரியருடையவரத்தினு லவதரித்த அஸ்வத்
தாமன், அந்தப் பெரிதாகிய பாசறைவலைக்
கிட்டினுன். அக்கால், திரிபுரம் நீருகச் சிரித்
தருளிய தேவர்கள் தேவனென்னுஞ் சிவ
பெருமான், இந்த அஸ்வத்தாமனுடன் சில
திருவிளையாடல் செய்ய வேண்டுமென்னும்
இச்சை யுடையவராய், அழகிய பாசறையின்
முன் முகப்பில் வருகின்றவர்களுக்கு நேராக
மாயப் பூதமொன்று ஏற்படுத்தி நிறுத்தினர்.
அப்பூதமோ கறுத்தமேனியும் திருத்தமாகப்
பொறி பறந்து, கருகிச் செவந்த வாள்விழி
களும், மேற்போர்வையாகிய யானைத்தோலும்,
குள்ளமாகிய காலும், வெண்பிறை போன்ற
கோர தந்தங்களும், நெருப்புக் கொழுந்தை
யொத்த செம்பட்ட மயிரும், தீ நிற வடிவும்,
அண்டமளாவிய உயரமும், அகண்டந் தட
விய கைகளும், ஆயுதப் படைகளுமுடைய
தாய், ஏழு மலைகள் ஏகமாய்த்திரண்டு எதிர்
நின்றதைப்போன்ற ஓர் பெருங்காத்திர உருவ
மாய் நிலைபெற்று நின்றது. அந்தப்பூதத்தை
அஸ்வத்தாமன்கண்டு, இது கண்ணுதலாகிய
கடவுளின் செயலென்று கருத்திற் கொள்ளா
மல், உகாந்தகாலத்திற் சீறி, நெருங்கிய செந்
தீயைப் பார்க்கிலும் மேலாகிய நெருப்புப்
பொறிகள் திசா திசைகளும் படியும்படிக்குக்
கண்கள் செவந்து, வளைத்த வரிவில்லைக்
கொண்டு, அந்திரபாணம்-தந்திரபாணம்-இந்திர
பாணம்-மந்திரபாணம் இவை முதலிய வடிக்
கணைகளைக் கோடி கோடி கோடா கோடி
யென்று சொல்லும்படியாக மேல் மேலாகச்
செலுத்தினுன்.

கேளும் ஜெனமேஜெய மகாராஜனே! அத்
தனை பாணங்களும் அடிபட்டு-உடைபட்டு-
ஒடிபட்டு-அலங்கழிந்து-பிளந்து-தளர்ந்து-
பலபலவென்று உதிர்ந்து போகும்படிக்குப்
புறங்கையாற் தட்டி முறித்தது வெற்றி விற
லுடைய அப்பூதம். அதைக்கண்ட மாதவத்

தோனுகிய அஸ்வத்தாமன் ஆவேசமும், அகங்காரமும், அதிக கோபமுங் கொண்டு, செங்கண்ணி லிருந்து தீப்பொறி சிதறச் சினந்து, அக்கினியாஸ்திரம்-இந்திராஸ்திரம் - தேவாஸ்திரம் - வாயுவாஸ்திரம் - வருணஸ்திரம் - நாராயணஸ்திரம் - பிர்மாஸ்திரம்-நாகாஸ்திரம் - மேகாஸ்திரம் - மோகனஸ்திரம் இவ்விதமாகிய வானவர் படைகளை யெல்லாம் அடைவை யெடுத்துப் பூசை கொடுத்து, ஆக்கிரமித்துப்பராக்கிரமத்துடன் முறைமுறையாய்த் தொடுத்தான். அந்த அஸ்திரங்களை யெல்லாம் பிடித்து, ஆவென்று வாயைத் திறந்து அரை நொடியில் விழுங்கியது மூன்றும் பிறையை முடித்தருளிய முத்திமுதல்வன் வெற்றி பெற விடுத்த வெம்பூதம். இந்தப்படிக்குச் சரசரவென்று சரற்காலத்து மேகம்போற் சரங்களைப்பொழிந்து, தன்னுடைய அம்புறுத் தூணியிலிருந்த அஸ்திரங்கள் யாவும் அற்றுப்போகவே, வட்டமாக வில்வளைத்த அஸ்வத்தாமன் மனம் புழுங்கி, மதிமயங்கி, முகம்வாடி நின்றான். அப்போது அந்தப்பூதமானது, அவன்கையிலிருந்த வில்லை எட்டிப் பறித்து, மளமளவென்ன முறித்து, தூரத்திலேயில் தூக்கியெறிந்து, அந்த அஸ்வத்தாமனுக்குச் சமீபத்திற்கிட்டி, அவனுக்கு நேராகக் குறுகி, சங்கு - சக்கரம் - கதை - கோதண்டம்-கடகம் என்னும் பஞ்சாயுதங்களுடன் பிரகாசிக்குங் கிருஷ்ண மூர்த்தியாகிய கேசவனைப்போல் திருவுருக்கொண்டு நின்று, உச்சியில் வருஞ் சூரியனைப்போல் உருத்தெழுந்துஉருக்காட்டியிருந்தது. அப்போது இந்த அஸ்வத்தாமனைச் சேர்ந்து வந்த நஞ்சுறைந்த வேலினராகிய கிருபாச்சாரி-கிருதபன்மன் இவர்களிருவருமெதிர்த்து, தங்கள்வல்லமையைக் கொஞ்சங் காட்டினார்கள். அவர்களையும் அந்த அஸ்வத்தாமனைப் போலாட்டி, அவர்களுடைய வில்லையுமுறித்து அவனுடன் சேர்த்துக்கூட்டி, பச்சை மாலைப்போற் கொண்ட ஒருருவைப் பதினயிர வுருவாகக்கொண்டு, அந்த பாசறை யிடங்களெல்லாம் பரந்து நின்று, அண்டமுக டிடியும்படியாய் அசனியேறென விடுத்துச் சிரித்தது. அந்த நகைப்பைக்கண்ட, மாவலராகிய மூவரும்மனக்கருத்தழிந்து, வாள் கொண்டு போர் புரிந்தார்கள். அப்போரில், அந்த வாளும் பொடிப் பொடியாய்ப்போய் அவர்களுடைய வாழ்நாளும் போகும்படியாகிய காலம் வந்தது. அதை

அம்மூவரு முணர்ந்து, அடடா! இவ்விடத்திற் காவலாயிருந்த ஒரு சிறு குறட்பூதத்தால் இவ்வளவு கலகம் விளைந்ததே: இன்னுமிதனுல் ஏதேது சம்பவிக்குமோ என்று கண் கலங்கி கவலையுற்றார்கள். அப்பொழுது ரிஷப வாகனமுடைய நின்மலனேவிய பூதம்; மறுபடியும் ஆகாயத்தில் வளர்ந்து, வாகாகிய புயம் விரிந்து கைகளை நீட்டி இவர்கள் மூவரையுந் தேரோடுவாரிக் குயவன் திகிரிபோற் சுழற்றி வானத்தி லெறிந்து விட்டது. அதுகாலையில், அவர்கள் மூவருந் தேருடன் தியங்கிப் போய் ஆகாயத்தை யளந்து, மீண்டுந் தளர்ந்து வருபவர்களைப்போற் றலைகீழாக வந்து மண்மேல் வீழ்ந்து, குதிரைகளும் சாரதிகளும்-பெரிய தேர்களும் தூள்தூளாய்க் கழிந்து பொடியாய்ப் போயின. இவர்கள்மாத்திரஞ் சிந்தை மெலிந்து பிரதிக்கினை தப்பிச் சற்றுநேரம் நிலத்திற் கிடந்து, பின்னும் பிழைத்துய்ந் தெழுந்து, ஒருபுறம் போய்ச் சேர்ந்து, ஆச்சரியமு மாச்சரியமுங்கொண் டிருந்தார்கள்.

## அஸ்வத்தாமன் அரனைநோக்கித் தவஞ்செய்ய, அவர் கோடிபூதங்களை யேவிக் குணசோதனை புரிதல்

அந்தவேளையிற் கிருபாச்சாரியாகிய மாமனும் - கிருதபன்மனும், முனிமகனுடைய முகத்தை நோக்கி, ஓ போர்திறப் புலியாகிய புனிதனே! இந்தவிறலுடைய பூதமானது, அந்த மட்டும் நமக்குப் பிராணபிச்சை கொடுத்தது. காரியம் பெரிதேயொழிய வீரியம் பெரிதல்ல; மேலும், நாம் க்ஷாத்திரமுள்ள க்ஷத்திரியாளல்ல; யுத்தமுனைகெட்டு ஒடுங்கி யழிந்தோமென் றுன்னுதீர். நமது உரங்கெட்டுப் போச்சுதென் று நீர் உருகாதீர். அதனுல் மனங்குண்ணுதீர். திரும்பிப் போகும்படியான விதத்தை தேடும். நாம் உயிருடன் போய்விடுவதே உண்மையான முறைமை யென்று சொன்னுர்கள். அவர்கள் மொழியைக்கேட்ட அஸ்வத்தாமன் சிறிதேனுஞ் சஞ்சல மில்லாதவனுய்த் திடங்கொண்டு, ஓ மாமா கிருபாச்சாரியரே! காமனை யெரித்தருளிய கண்ணுதற் கடவுளின்கருணை என்னைவிட்டு நீங்கிப் போங்காலம் நேரிடுமாகில், அப்போ தொருவேளை உமது பேச்சைக் கேட்டுத் திரும்பிப் போனுற் போவேனேயொழிய, இதன்மத்தியில் இளைத்துப்போவேனென் றெண்ணுதீர். இன்னமுஞ் சொல்லுகிறேன் கேளும்; கந்தவேளைத்தந் தருளிய கறைமிடற்றண்ணலைச் சிந்தையுட் கருதி, அவரு

டைய அனுக்கிரகத்தால் என் னெண்ணப்படி நிறைவேற்றுகிறேன். நீங்கள் கவலைப்படாமல் வேறொன்றுங் கருதாமல், இந்த மரத்தடியிற் ருனேயிருங்கள். இதோ நான் வருகிறேன் என்றுசொல்லி அவர்களை உயர்ந்த ஓராலவிருட்சத்தின்கீழிருக்க நிறுத்திவிட்டு, பரமசிவனை த்துதித்துத் தொழுதற்கு அப்பாற்செல்லுவதானுன். இப்பாற் கிருபாச்சாரியரும், கிருதவன்ம னம்மரத்தடியி லிருந்தார்கள். அஸ்வத்தாமன் அருங்காடடைந்து, பரிசுத்தமாகிய நீரில் ஸ்நானம்பண்ணி, சகல சுபத்தையுஞ் சுகுண ஜெயத்தையுந் தரும்படியாகிய திருவெண்ணீரணிந்து, மெய்ஞ்ஞான விளக்கமாயிரா நின்ற ஐந்தெழுத்தென்னும் பஞ்சாட்சரத்தை அன்புடன் பிரணவமூலமாய்ப் பற்பல முறையாக உருச்செபித்து, மாயாப் பிரபஞ்ச மாய்கைகள் தொடராமல் மபக்கமறுத்து, வாசனுவிஷயாதிகளை மாய்த்து, மமகாரமுதலிய கட்டறுத்து, திரிகரணசுத்தியாய் சிவபூசை பத்தியாய் ஒன்ருகிய சிந்தையை ஒரு வழிப்படுத்தி, யானெனதென்னும் இரண்டு பற்றையும்விட்டு, மூன்று குணத்தையு மூலையிலடக்கி, நான்கு கரணத்தை நலியச்செய்து, ஐந்து அவத்தையை அணுகாது ஒடுக்கி, ஆறு தாரத்தை அறிவைத்தேடி, ஏழுதாதும் ஏங்கவிடுத்து, எட்டுவிகாரமும் இறக்கக்கெடுத்து, ஒன்பதுவாயிலும் ஒருங்குடனடைத்து, பத்து வாயுவும் பாயத்தேக்கி, சதாசிவப்பெருமான் தாளிணை விரும்பி, தாயைக்கருதுந் தனிசேயைப்போற் சுப்ரமணியசுவாமிக் கொப்பாகிய அஸ்வத்தாமன், வட்டணைபத்மாசன மிட்டிருந்து சிவபெருமானை சிந்தையில் உன்னினுன்.

இவ்விதமாகிய யோகநிஷ்டையிலிருந்து தவம்புரிந்துவரும் அஸ்வத்தாமனுடன் திருவிளையாடல் செய்வதற்கு விரும்பிய கறுத்த கந்தக் கடவுளென்னுஞ் சுந்தரன், என்னை அடிமைகொண்ட விடையேறிய விமலன், அந்த அஸ்வத்தாமனுக்கு எதிரில் ஒரு அக்கினி திப்பைப்போல் வந்திருந்து, கொடிய நெருப்பின் வடிவாய்க் குறுகிய கால்களையுடைய கோடிபூதங்களை இந்த அஸ்வத்தாமன்பேரி லேவினுர், கேட்டீரோ ஜெனமே ஜெய மகாராஜனே! அந்தப் பூதங்களெல்லாங் கன்னங்கரேலென்று கறுத்து, வாயல்கள்தோறும் நெருப்புக் கட்டிகளைக் கக்கிக்கொண்டு, நெருப்பு மூச்சு விட்டுக்கொண்டு, அண்டமதிரவந்து வளைந்துகொண்டு, ஒரு முகத்தையுடையது, இருமுகத்தையுடையதும், பல முகத்தையுடையதும், ஒருபுயத்தை யுடையதும், இருபுயத்தையுடையதும், பல புயத்தையுடையதும், பிறைபோன்ற கோரப்பல்லையுடையதும், கோடையிடிபோலதிருங் குரலோசை யுடையதும், மிகுதியாகிய நெருப்புப் பொறிகளைக் கக்கியதும், பலவிதமான உருவமானதும், பல திசையினின்றுங் கலகலவென்று வருவதுமா யிருந்தன. மேலும், அப்பூதங்களானது, சிங்கமுகத்தையும்-யானைமுகத்தையும் - கலைமான்முகத்தையும் - மரைமுகத்தையும் - குரங்குமுகத்தையும் - குதிரைமுகத்தையும் - மான்முகத்தையும் - கரடிமுகத்தையும்-புலிமுகத்தையும் - பூனைமுகத்தையும்-நாய்முகத்தையும்-நரிமுகத்தையும் - பசுமுகத்தையும்-எருதுமுகத்தையும் இன்னும் பலவிதமாகிய மிருகங்கள் - பட்சிகள் இவைகளின் முகத்தையும் உடையன. அன்றியும், ஆடுகின்றன. சில பூதங்கள் பாடுகின்றன. பல பூதங்கள் காலா லொற்றின. சில பூதங்கள் வேலாற்குத்தின. பல பூதங்கள் தேடுகின்றன. சில பூதங்கள் ஓடுகின்றன. பல பூதங்கள் கையை ஆட்டுவன. சில பூதங்கள் மெய்யைக் காட்டுகின்றன. பல பூதங்கள் அருகில்வந்து கூடுவன. சில பூதங்கள் பெருகிவந்து மூடுகின்றன. சில பூதங்கள் உலகமெல்லாஞ் சுற்றி ஓடுவன. சில பூதங்கள் ஒன்றினுென்று வந்து நயந்து கூடுவன. பல பூதங்கள் நீளுகின்றன. சில பூதங்கள் மீளுகின்றன. சில பூதங்கள் அங்குசபாசங்களை அங்கையிற் பிடித்து, ஆரடா மனிதன்? ஆரடா புனிதன் என்று அதட்டி அதட்டி அடர்ந்து வருவன. சில பூதங்கள் சங்கிலி வெங்கதைகளைத் தடக்கையிலேந்தி தவம் புரிபவனெங்கே? செபம் புரிபவனெங்கே என்று தட்டிக்கொட்டித் தகைந்து வருவன. சில பூதங்கள் இதல்லாமலும், வாளெடுப்பன; சில காலெடுப்பன; சில வந்துவந்து இடிபோ லிடிப்பன; சில வெந்து வெந்து வெடிபோல் வெடிப்பன; சில வேலாயுத மெடுப்பன; சில சூலாயுதம்பிடிப்பன; சில வில்லெடுப்பன; சில கல்லெடுப்பன; சில அஸ்திரந் தொடுப்பன; சில சஸ்திரம் விடுப்பன; சில கொம்பு பிடிப்பன; சில அம்பு அடிப்பன; சில குணியெடுத் தெறிவன; சில மணியெடுத் தாட்டுவன; சில குந்தம் உந்துவன; சில பந்தங் கொளுத்துவன; சில வாள் வீசுவன; சில தோள் கூசுவன; சில மழுவெறிப்பன; சில கொழுதரிப்பன; சில வட்டம் வருவன; சில

கொட்டமிடுவன; சில ஆழிமடுப்பன; சில
தாழியெடுப்பன; சில வாயைத் திறப்பன; சில
பேயிற் பறப்பன; சில வலுமை பேசுவன; சில
விருதுபேசுவன சில.

### அஸ்வத்தாமனுடைய கலங்கா நிலையைக் கண்ட பரமன் அவனுக்கு அனுக்கிரகம் புரிதல்

இப்படியாகிய பூதங்கள் ஏழு சமுத்திரத்
தையும் ஆகர்யத்தி லெழச்செய்து, ஏழுலகத்
தையும் வாயிலிட்டு விழுங்கி, அருஞ்சுடர்கள்
மூன்றும் அஞ்ச, அமரர் யாவரு மயர்ந்து
கெஞ்ச, கையோடு கையறைந்து, காலோடு
கால்விரைந்து, சர்வசம்மார இருட்பிரளயம்
போல் எழுந்து, சப்தமுனிவரும் பயப்பட
வாயைத் திறந்து, களகளவென்று சலப்பிரள
யங் கக்கி, பளபளவென்று வடவாமுகாக்கி
னியை விக்கி, எட்டுத்திக்குந் திக்குமுக்கிட்டுப்
போகும்படிக்குச் செய்தனவாம். இவ்வண்ண
மாக நெருங்கி நெருங்கி, வந்து வந்து, சேர்
ந்து சேர்ந்து, பார்த்துப் பார்த்து, வேர்த்து
வேர்த்து, ஆர்த்து ஆர்த்து, தொடர்ந்து
தொடர்ந்து, படர்ந்து படர்ந்து அடர்ந்த
போதிலும், அஸ்வத்தாமன் மனங்கலங்கா
மல்-மகிழ்வொடுங்காமல் - தேசார்மதி கலையா
மல்-பூசாவிதிகுலையாமல்-மகேசருடைய அன்
பை மறவாமல் ஆநந்தத் தெளிவெய்தி யிருந்
தான். இவ்விதமாக யிருந்த அருந்தவக் குமா
ரனை ஒரு கரும்பூதம் புறப்பட்டுவந்து, பிடரி
யிற் கைகொடுத்துந்தித் தள்ளி, ஒரு பெரிய
மேடையிற் றழைத்தெழுந் தெரிகின்ற அக்
கினிகுண்டத்துக் கெதிரிற் கொண்டுபோய்
விட்டது. அப்போதவன் திடுக்கிட்டு விழித்
துச் சிந்தை வருந்தி, ஆ! ஆ! என்னையாளு
மீசனுகிய வெந்தையை இடைவிடா துன்
னிய சிந்தையை அக்கினியாயமாய், இவ்
வொரு பூதம் வந்து அயரச்செய்ததே. உல
வாப் பெருங்குணத் துத்தமனைக் கண்டு, அவ
ருடைய அருள்கொண்டு எண்ண நிறைவேற்
றிக் கொள்ளாமற் போனேனே. உயிர் இருந்
தென்ன? இறந்தென்ன என்று ஏங்கி எழு
ந்து, அந்த அக்கினிக்குழியில் வீழ்ந்து உயிர்
மாய்ந்து போவோமென்று வீழ்வதற்கு தாவி
னன். அந்த அக்கினிக் குண்டமான து
உடனே மறைந்து, பாலையோதியாகிய பர
மேஸ்வரியுடன், பரமேஸ்வரரானவர் அவ
னுக்குக் காட்சியாக எதிரேதான்றினர். உடனே
அஸ்வத்தாமன் அவரடிமேற் றொழுது, கண்
ணீர் சொரிந்து, கருத்துவந்தேற்றி, பாடிப்
படித்து பகைத்துத் துடித்து தனது ஆருமை
யால் அன்போடுருகித் துக்கித்துத் துதிக்கின்
றான். ஆதியே முதலே எவர்க்கும் அனுதியே
மறைகாணுணுச், சோதியே சுடரே யனந்த
சொரூபியே மலைவல்லியார், பதாதியே புல
னைந்தும் வென்றவர்பற்றி நின்ற பதத்த நன்,
னீதியே குணமூன்று நீங்கிய நின்னையருணர்
வார்களே. விச்சையாயினை ஞானமாயினை
வேதமாயினை யமுதொடும், நச்சுமாயினை ஞான
மாயினை யருளுமாயினை யவரவர்க், கிச்சையாங்
கதியாவுமாயினை யுணர்வல்லவ ரியாவரே.

ஓ எப்பொருட்குமிறைவனே! ஓமுழுமுத
லே! வேதங்களினுலுங் காணப்படாத சோதி
யே! அந்த சோதியின்சுடரே! ஆநந்த மயமா
கிய ரூபமே! மலைவளர் மரகதக்கொடியாகிய பார்
வதி தேவியாரை அர்த்தசரீரமாயுடைய அங்
கமே! மாசற்றதங்கமே! ஐம்புலன்களைந்த அறி
ஞர்கள் அன்பாற்பிடித்த அடியிணைகளையுடைய
அத்தனே! உண்மையான பரிசுத்தனே! முக்கு
ணங்கடந்த முதற்குணனே! அனகனே! அது
லனே! அமலனே! அசலனே! தேவரீரை அறி
யத்தக்கவர்கள் சகலவித்தையும் ஆயினை. அவ்
வித்தையாற் பெறுங்கியானமாயினை. அந்தக்
கியானத்தால் அறியும்படியாகிய நான்குவேத
மாயினை. தேவர்கள் முதலிய யாவருக்குந் திவ்
விய அமுதமாயினை. அந்த வமுதுடன் பிறந்த
விஷமுமாயினை. இவ்வுலகமாயினை. இவ்வுல
கிற்பிறந்த சராசர உயிருமாயினை. அந்த உயிர்
களில் நால்வகை யோனியுமாயினை. அந்த
நால்வகை யோனிகட்கு மச்சுமாயினை. அந்த
அச்சிலுதித்தபேர்களுக்கு பழவினையுமாயினை.
அவ்வினை யகற்றியாளுதற்கு அருளுமாயினை.
அவரவர்களுக்கு இச்சையாகிய மோட்சம்யா
வுமாயினை. இப்பேர்ப்பட்ட உம்மை உணரவல்
லவரியாவர்! ஓ உமாபதியேயென்று பலவிதமா
கத் துதிசொல்லிக்கொண்டு ஏற்றிப் போற்றி
இறைஞ்சிவாழ்த்தி இருகரத்தையுஞ் சிரமேற்
கூப்பி வணங்கி நின்றான். அப்படியாக நின்ற
அஸ்வத்தாமனை சர்வேஸ்வரன் பார்த்து சந்
தோஷம்பூர்த்து குன்றுதோருடிக் குன்றமெரி
த்த குமரக்கடவுளைப்போல் ஆசையோடணைத்
தப்பா அஸ்வதாமாவே! இன்று நான் உன்னு
டன் விளையாடிக் காட்டவேண்டுமென்று வந்
தோம். உன்னுடனெதிர்த்துப் போராடி வெற்
றிபெற்ற பூதங்கள் யாவும் நமது லீலாவிபூதி
யின் திருவிளையாடல் விநோதமென் றறியுக்

கடவை. இத்தியாதி விபரீத விரோதத்தினாலும், எழுந்தெரிந்த தீப்பொறி மலிவினாலும் சிந்தைவருந்தி மையலால் மயங்காமல் நிலைகொண்டு நின்ற நெரியோன் நீயாதலால், நாமுவந்தனம். நல்லது உனது கருத்தென்ன சொல்லுக என்று ஈசன்கேட்டலும், அஸ்வத்தாமன்சுவாமி! என்கருத்துவேறொன்றுமில்லை பாரதப்போரில் மிகுந்தபேரை முடிக்கவேண்டினேனென்றுசொல்லி அடிக்கமலந் தொழுதான். அதுகாலையில், அம்மையப்பராகிவந்த எண்ணையன் மெத்தமகிழ்ந்து ஒரு வாளாயுதமொன்று கொடுத்து, சேனைக்கடலி யாவையும் இந்தவாளினால் முடிப்பையென்று அருள்சுரந்தளித்து, இன்று ராத்திரியில் உனக்கெதிரில் வந்து யுத்தந்தந்து உயிர் பிழைப்பவர் ஒருவருமில்லை; எல்லோரு மிறப்பார்கள். ஆனால், உன்கண்ணிற் படாமல் ஓடிப்போனவர்களுக்கு உயிருண்டு; அவர்கள் மாத்திரப் பிழைப்பார்கள். ஓ வெவ்விய வில்லைத் தரித்த வீரனே! இன்றிராப்போரில் வாகைபுனைந்த உவகையுடன் மீளக்கடவையென்றுரைத்து, பூதங்களுடன் போர்புரிந்தபோது, உங்கள் மூவரிடத்திலிருந்தபோது பறித்த கணைப்புட்டிலும், முறித்தெரிந்தவில்லுகளும், நிலத்தில் விழுந்து நொருங்கிப்போன தேர்-குதிரை சாரதிகளும், தேவர்கள் கொடுத்த பலவித பாணங்களும் உங்களுக்குப்பின்னாலே கைகூடி வருமென்றுஅருளளித்து, தோகைபாகனாகிய அச்சூலபாணியர் தமது கைலாயகிரிதலத்துக்கெழுந்தருளினார்.

### பாண்டவச்சேனாபதியாகிய திர்ஷ்டத் தூய்மன் வதை.

இப்பால் அஸ்வத்தாமன் அரன் போனதிக்கு நோக்கிப்பணிந்து திடீரென்றுவீழ்ந்து சிரமேற் கரங்குவித்து தேம்பித்தேம்பி யழுது தொழுது திரும்பினான். அப்போது முன்னே பூதங்களாற்போன தேர்-குதிரை-சாரதி-வில்-பாணம் இவை முதலியவெல்லாம் அஸ்வத்தாமனுக்கு நேராக யிருக்கக்கண்டு அற்புதமடைந்து, நின்மலனாடலைப் புகழ்ந்து, தேற்மேற்கொண்டு நிமிஷத்தில்வந்து, மாலையணிந்தமற்புயத் தோராகிய கிருபாச்சாரியாரையுங் கிருதவன்மனையுங்கண்டு, அவர்களை யழைத்து அவர்களுடைய தேரையுங் கணைகளாதியவையுங் கொடுத்தான். அதற்கவர்கள் அதிசயித்து இஃதென்ன மாயமென்று கேட்க, கங்காதரக் கடவுளின் கிருபை இப்பேர்ப்பட்டதென்று கூறி, தான் தவமிருந்ததும், தாணுவானவர் வந்து அருள்புரிந்ததும், மற்றெல்லாவற்றையுஞ் சொல்லி, அவர்களுடைய கண்ணும் காதும் களிப்போங்கி நிறையச்செய்தான். பின்பு அவ்விருவரும் மலையாகிய தோள்கள் பூரித்து, மகாதேவருடைய மலரடியை மனத்தினாற் பூசித்துப்போற்றி, அவருடைய அருளைப்புகழ்ந்து வாழ்த்தி, மிகவும் வியந்து, அநேக விதமாக நயந்து அஸ்வத்தாமனுக்குப் பயந்திருந்தார்கள். அப்போது அஸ்வத்தாமனானவன், சிற்பரனுடைய திருநாமங்களை யெடுத்துத் துதித்து, திவ்விய தரிசனத்தை நினைத்துக் களித்து, திடத்தாற்றேறி சிந்தைநோய்மாறி, சத்துருக்கள் நிறைந்திருக்கின்ற அலங்காரமாகிய பாசறையை நாடி நடந்து, சந்தடி செய்யாமற் புகுந்து, அப்பாசறை வாசலிற் கிருபாச்சாரியரையுங் கிருதவன்மனையுங் காவல் வைத்து வெளியே யிருந்து உள்ளே வருகிறபேரை விட்டுவிடுங்கள்; உள்ளே யிருந்து வெளியே ஓடுகிறபேரை விடாதீர்கள். இன்று நல்ல பிரயோசனம் பெறுவோம் என்றத்துணைத் தேராளிகளை நிறுத்தி, ஞானவரோதயனாகிய அஸ்வத்தாமன் தனது தேரை ஓசை படவொட்டாமல் நடத்திக்கொண்டு பாசறைக்குட் புகுந்தான். இப்படி கூடவந்த அவ்விருவருஞ் சஞ்சலம் போக்கிப் பாசறை வாசலிற் பத்திரமாக வைத்துத் தாமரைமாலை தரித்த அஸ்வத்தாமன் உள்ளே புகுந்த மாத்திரத்திற் தேர்விட்டிழிந்து வாளாயுதத்தை வலக்கரத்தி லெடுத்து, கதம்பமாலை யணிந்து களிப்படைந்து போராடுதற்குரிய இராஜராஜர்களுக் கெல்லாஞ் சேனாபதி யென்று நின்று புறங்கொடுத் திளையாமற் பதினேழு நாளும்போர்தந்த துருபதேயன் மைந்தனும், வரிசிலைக்குரிய வல்லவனும், தங்களுக்குக் குலப்பகையானவனுமாகிய துஷ்டத்தூய்மனானவன் அயர்ந்து நித்திரை செய்யும்படியாகிய சித்திர மாளிகைக்குள்ளே போய்ப் புகுந்தான். அங்கே பள்ளியறை மத்தியில் இரத்தினத் தீபங்கள் பிரகாசிக்கும்படியாய் செப்புதற்கரிய ஒப்பில்லாத ஜெயசிங்கம்போன்று நித்திரை செய்யாநின்ற துஷ்டத்தூய்மனை அஸ்வத்தாமன் கண்டு, எதிர்புகுந்து பகைத்து, இருகண்களிலு மிருந்து நெருப்புப் பொறி யெரிந்து விழும்படியாய்ச் சினம் புரிந்து, அந்தணர்புகழுந் தன் தந்தையாகிய துரோணாச்சாரியரைப் போர்முகத்தில் தலை போக்கிய தீயமா பாதகனல்லவா இவனென்று

தெளிந்து, இணையில்லாத தன்னுடைய வில் நாணியை துஷ்டத்தூய்மனுடைய கழுத்தில் மாட்டி முறுக்கி யிழுத்தான்.

இப்படி நித்திரைவேளையில் திடுக்கிடத் தக்கதாய்க் கழுத்தில் மாட்டி யிழுத்தபோது, துஷ்டத்தூய்மன் தூக்கந் தெளிந்து, ஊக்கமோடெழுந்து, வந்தவன் தனக்குப் பழைய பகைவனாகிய அஸ்வத்தாமனென்றறிந்து, மகத்தாகிய திடங்கொண்ட தடஞ்சிலை தாங்கிய தோளுங் கரமுந் துடிதுடித்து, ஓவென்று வாய்விட்டு உரக்கக்கூவிப் பெருமூச்செறிந்து, உயிர்கலங்கி, எமன் கைக்குள் அகப்பட்ட ஏழையுயிர்போற் காத்திர க்ஷாத்திரமெல்லாங் கலங்கி யொடுங்கிக் கவலைபடர்ந்திருந்தான். அப்படியிருந்த ஐவர்கள் சேனாபதியை அவ்வஸ்வத்தாமன் யாகத்திற்குக் கொண்டுவரும் பசுவைப்போற் பறபறவென்று பாயோடிழுத்து வீதியிற் கொண்டுவந்து, பார்த்தபேர் யாவரும் பயந்து-அயர்ந்து-பதுங்கி-யொதுங்கி-தியங்கி-மயங்கி மருளும்படிக்குப் பரமசிவன் கொடுத்த வாளினால் அவனை சிலிர்க்கச் சிலிர்க்கவெட்டி, தேகமுழுதுஞ் சிதைத்துச் சித்திரவதை செய்கிறான். அப்போது துஷ்டத்தூய்மன் வருத்தமடைந்து, அஸ்வத்தாமனாகிய அந்தணனது அம்புலிபோன்ற முகத்தைப் பார்த்து, ஐயா? என் தலையை ஒரே வெட்டாக வெட்டிவிடும். பல வெட்டாக வெட்டி வதைக்கவேண்டாம். தேவரீர் கையாலிறந்தால் நானிப்போதே பரகதியடைவேன். என்று சொன்னதைக் கேட்ட மாண்டுபோன துரோணாச்சாரியருடைய மைந்தன் பின்னுங் கடுகடுத்து, உடனே தனது வாள்விழி சிவந்து நீள் பொரி சொரிய, வன்னி நின்றெரிய, மதிமுகங்கரிய, வஸ்திரஞ்சரிய, மனங்கொள்ளாப் பெரிய வயிரம் யாவருக்குந் தெரிய, மாறாக் கோபம் மேற்கொண்டு வாய்விட்டுச் சொல்லுகிறான். அடா குருத்துரோகி! நான்கு வேதங்கள் உணர்ந்தும், நற்றவங்களெல்லாம் புரிந்தும், நானுமுகங்களிற் றிரிந்தும், நல்ல மகமெல்லாம் நயந்தும், யாவருந் தொழச் சிறந்தும், ஆசாரிய புருஷனாகயிருந்த என்னத் தன் சிரத்தை, ஊனும் உதிரமும் உறைந்து தோய்ந்து காய்ந்த வாளினால் உருட்டிவிட்ட பாதகனாகிய உனக்குப் பரகதியும் உண்டோ? அடா பாவி! என்று புகன்று முன்னிலும் மிகுந்த கோபமேற்கொண்டு, பிற்பாடு தக்கோனாகிய அசுவத்தாமன் அந்தத் துஷ்டத்தூய்மனுடைய சென்னியைத் தறித்து விண்ணினில் வீசி யெறிந்தான். இப்படிகூற்றினுங்கொடிய அசுவத்தாமனனவன், வாசனை பொங்கிய மாலைகள் தாங்கிய மன்னரோங்கிய மகுடகோடிகள் வணங்கிய மணிப்பாதங்களையுடைய திர்ஷ்டத்துய்மனை வதைத்து, இஷ்டமேற்கொண்டு அப்பாற் சென்று, அன்றிராத்திரி முழுதுந்தெழிந்து, பாசறை எங்குநாடி, பாண்டவர்களைத் தேடி, படைமன்னர் முதலிய பேரைக்கலக்கி அலமலக்கி வருகின்றான். அப்போது யதேச்சையாய்த் தூங்கிய பேர்களெல்லோரும் ஏங்கி அலக்கணுற்றெழுந்து, இன்னதென்று தெரியாதவர்களாய் கண்ணைக்கசக்கி, ஆர்! ஆர்! என்று அவசரத்தி லோடிவந்து பார்த்தார்கள். அக்காலவ்வசுவத்தாமன் திங்களணிந்த சிவபெருமானளித்த வாளைக்கொண்டு வழியில் நின்று, வந்தபேர்களுடைய தலைகளைத் துணித்து, பார்த்தவரெவரும் பயப்படும்படியாய் மாற்றினான்.

### உத்தமோசா-உதார்மன்-சிகண்டி-இவர்கள் முதலாயினோர் வதை

அந்தவேளையில், தொங்கிய வீரகண்டாமணிதங்கிய தாள்வலியுந் தோள்வலியும்வாள்வலியும்பெற்ற துரோணாச்சாரியாகிய தந்தை கண்ணை மூடி யோகத்திருந்து உயிரை விண்ணிலெழுப்பிவிட்ட பதினைந்தா நாட் போரில் விருதாவாய் அவர்தலையை வெட்டிய திர்ஷ்டத்துய்மனாகிய வீரன், நித்திரைசெய்யுஞ் சமயத்திற் பாளயத்திற்குள்ளே புகுந்து பழிக்குப்பழியாக உடலைச்சிதைத்துக் கொந்தி முடியை முடித்தான் அத்துரோணாச்சாரியார் மைந்தனை அசுவத்தாமனென்று பாசறையிற் படுத்திருந்த அரசர்கள் பலருங் கேட்டுணர்ந்தெழுந்து பயப்படாமற்சென்று, சண்டைசெய்வோமென்று நயமுங்கொண்டு உத்தமோசா-உதார்மன்-சிகண்டி இவர் முதலாகிய பாஞ்சாலரும், சோகமுகத் தலைவரும், வில் வீராள்பலரும், வேந்தரனைவரும், படையாட்சி முதல்வரும் பரிந்துவந்தெதிர்ந்தார்கள் அப்படிவந்த பேர்களை அசுவத்தாமன் வழிமடக்கி, அருச்சுனன் காண்டாவன தகனத்தில் ஆருயிரை யெல்லாம் அடக்கிமடக்கிய வாறுபோல், அப்பாலிப்பாற் போக வொட்டாமல் அடக்கி அடித்துமடித்தேறுங்காலையில், உத்தமோசா - உதார்மன் இவர்கள் முதலாயினோர் எதிர்த்துவந்து எதிர்த்துப் போர்புரிவ

தானார்கள். அதுகண்ட அசுவத்தாமன் கண்டு வந்து,கரத்திலிலங்கும் வாளைக் கறகறவென்று வீசி,யானை-குதிரை-தேர்-காலாள்முதலாயுள்ள காவலரை யெல்லா முடித்து, அஸ்திரவல்ல பத்திற் உத்தமோசா-உதார்மன் என்னு மிவ் விருவரையுஞ் சேதித்துச்சென்னியறுத்தான். அன்னகாலையில் அசுவத்தாமனுக்குமுன்னிற்க மாட்டாமல் யாவரும் ஓடியோடிப்பறக்க,அவர் களையும் ஒரு நொடிப்பொழுதிற் கோடிகோடி அஸ்திரங்களையுஞ் சஸ்திரங்களையும் விடுத்து அடுத்துச் சண்டை செய்யவல்ல அனேக மன்ன மண்டலீகரையும் விடா துவதைத்தது. காங்கேயருடைய வீழ்தலுக்குக் காரணமாய் நின்ற சிகண்டியையுஞ் சிதறவீசிப் பார்மேல் வீழ்த்திப் படுகொலை புரிந்தான். இப்படி அசுவத்தாமன் யாவரையுந் துரத்தித் துரத்திக் காலெடுத்து வைக்கும் அதிர்ச்சியினாற் பாதலங் குலுங்க தூக்கியோடுங் காலவேகத்தினால், ஆகாயம் நடுங்க கையிற்பிடித்து அசைக்கும் வாளாயுதத்தின் பிரகாசத்தினால் இருள் நீங்கி ஒளிவிளங்க, எட்டுத்திசையுங் கட்டுவிட்டுக் கலங்க, அலமலங்கி விலங்கிய அதிவீரரை யெல்லாமழித்து, அகமிகமகிழ்ந்து செழித்து, பாரதமுடித்த பாண்டவரெங்கே? பார்த்தனுக்குச் சாரதியாகிய பரந்தாமன் யெங்கே? அந்தப்பாவி இவ்விடம்விட்டு, அவ்விடந் தொட்டுக் கடல்மேலோடினானோ? அல்லது காடு சேர்ந்தானோ என்று பறந்துபறந்து கூவி, ஐயோ? அவனே எனக்கு வசனாவி, இப்போ திருந்தால் அவனாவி, ஆ! ஆ! என்னசெய்வேன் நான் மிகுகோவி, என்று பாசறை வீடுகள்தோறும் புகுந்துபுகுந்து பார்த்து, வீசிய வாள் வேகத்தால் உடலெல்லாம் வேர்த்து ஆர்த்து வரா நின்றான்.

## இளம்பஞ்சபாண்டவர் வதை

இப்படி வருகின்ற அஸ்வத்தாமனை இளம்பஞ்ச பாண்டவருங் கண்டு, அலறி எழுந்து இந்த உலகத்தை இனியாளக் கவர்ந்த நமது தந்தை யைவருந்தாண்டினார் கள். தனித்து நித்திரை செய்துக்கொண்டிருந்த அம்மானாகிய திருஷ்டத்துய்மன முதலாகிய பேரும் இவ் வஸ்வத்தாமனுடைய வாளால் அழிந்தார்கள் என்று ஆய்ந்துணர்ந்து, ஆயுதபாணிகளாய் அடர்ந்து, முனி மைந்தனைத் தொடர்ந்து அமர்புரிந்தார்கள். அவர்கள் யாரெனில், முதிர்ந்த யாகாக்கினியிற் பிறந்தபிதிர்ந்த முலைசிறந்த திரௌபதா தேவியின் கர்ப்பத்தில் தாமரையில் முத்துப் பிறந்த தன்மைபோல் ஜனித்து வளரும் இளம் பஞ்சபாண்டவர்களாகிய ஐவர், அவர்களைத் திண்டிறலுடைய தீரர்களுக்குச் சிகாமணியாகிய அஸ்வத்தாமன் கண்டு, அவர்கள் கைக்கொண்ட வில்லை வாளினாலழித்து, மேகம்போல் கர்ச்சித்து, மீண்டுபோன பாண்டவர் குலம் விளங்கக் கொளுத்திய தீபச்சுடர் போன்ற அவ் விளம்பாண்டவரை பாண்டவரென்று கருதி, கள்ளுண்டவரைப்போல் கலங்கி, மெத்தவுஞ் சித்தப்பிரமைகொண்டு, ஒரு நொடியில் தனது வடிவாளினால் முடி துணித்துப் படியில் வீழ்த்தினான். அதைப் பொன்னியாகிய காவேரியும், நேரிமலையும், காவேரிப்பூம் பட்டினமும் படைத்த சோழ ராஜன் கண்டு, அவனுடைய சேனைகளுஞ் சேனாபதிகளும் சோர்வுற்று, பின்பவர் யாவரும் ஒன்றாய் சேர்ந்து நெருங்கி, அம்முனி மகனாகிய அஸ்வத்தாமனுடன் எதிர்த்துப் போர் புரிந்து, அவன் வாளினால் யாவரும் ஒருமிக்க ஆவிமாண்டார்கள். கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! பின்னற் சடைப்பரமன் பிரியமுடன் அளித்தருளிய வாளாயுதத்தால் அந்தப் பாசறையில் பிழைத்தவர்கள் யார்? ஒருவரும் பிழைக்கவில்லை. பதினெண் பூபாலரிற் பதினெட்டுநாள் யுத்தத்தில் போனவர்கள் போக, பாசறையினிடத்தில் மிகுந்திருந்த ஓரக்குரோணியாகிய சேனை சைனியங்களையும், மற்றுமுள்ள காவலரையும், பகற் சண்டையைப் பார்க்கிலும் பத்து பங்கு அதிகமாகப் புரிந்து, பாதி ராத்திரிக்குள்ளே தாதுபிரா தில்லாமற் நீதுசெய்து கொன்றான் அஸ்வத்தாமனனவன். ஒன்று ஒழியாமல் இத்தனை பேரை மடித்தானென்றால், பலவித யுத்த சாஸ்திரம் பார்த்துத் தேர்ந்த விவேக பக்குவம் மிகுந்த குமரனாதலினாலும், மலரகிதனாகிய மயேஸ்வரனுடைய மைந்தனாதலினாலும், பாரதயுத்தத்தில் இன்னார் இன்னாரால், இவ்வளவுபேர் முடியவேண்டியதென்று முன்னமே கணக்கு முடித்திருப்பதினாலும், இவனால் முடியவேண்டிய பேர்கள் எப்பேச்சும் பேசாமல், இப்போது முடிந்தார்கள்.

அப்பாலந்தப் பாசறையில் உதிரவெள்ளமானது ஆறுபோல் பெருகித் தாறுமாறாய் ஓடவும், சேறுபட்டு உலர்ந்து நீறுநீறாய்ப் போகவும், மாறுபட்ட உடல்கள் கூறுகூறாய்க்

குவியவும், வீறுபட்ட பேய்கள் நூறுநூறாய்க் கவியவும், பாசறையிலிருந்த சில மாதர்கள் அழியவும், பல மாதர்கள் தங்கள் தங்களுக்குரிய தலைவர்கள்மேல் இழியவும், பட்சிகள் சிலம்பவும், பாரிடம் புலம்பவும், நிணங்கள் குழியவும், பிணங்கள் வழியவும், தலை மலையாய்த் துலங்கவும், பதைத் தெதிர்த்தவர்கள் பாசறை முழுதும், இடம் வலம் வலம் இடம் வரும்படியாய்ச் சுழலவும், வீட்டில் பலவிதங்களிலும் வளைத்து மறித்து மாட்டி அவரவரைக் குறித்து, நீறுபட்டழியத் தறித்து, நிருபர் ஒருவருமில்லாமல் உயிர் நீங்கி மாய்ந்ததை மதித்து, தேர்மேல் குதித்து, திடமுடன் சிந்தைகளித்துப் போனான் சிலையாசிரியன் மைந்தனாகிய அஸ்வத்தாமன். இவ்வாறு சிவபெருமானுக் கினியோனாகிய அஸ்வத்தாமன், வெட்டி வீரங்கொண்ட அரசர்களுடைய தலை இழுத்துக்கொண் டோடுவதற்கு நாய்களோடின. பேய்களாடின. நரிகள் கூடின. குட்டிப் பேய்களுக்குத் தாய்ப்பேய் உணவுகளை ஊட்டிப் பராக்கு காட்டின. அநேக பூத பைசாசங்கள் ஆணும் பெண்ணுங் கலியாணம் முடித்துக்கொண்டன. சுபசோபனம் பாடின. ஆணுடன் பெண்ணும், பெண்ணுடன் ஆணும் ஊடின. உடனே சமாதானமாய்க் கூடின. ஒன்றையொன்று கொண்டாடின. ஒன்றோடொன்று கொண்டானடித்துக் கூத்தாடின. குலமுறை பேசின. போர்வீரங் கூறின. இரத்தத் தீர்த்தத்தில் மூழ்கி எழுந்தன. இறைவன் செயலை ஏத்தியேத்தித் தாழ்ந்தன. இத்தன்மையாக விருந்த பாசறைச் சிறப்பையும், அஸ்வத்தாமன் வருகிற சுருக்கையும், முருக்கையும் பாசறை வாசலிற் காவலாக யிருந்த கிருபாச்சாரியரும், கிருதவன்மனும் நடுக்கத்துடன் கண்டார்கள். அவர்களை அஸ்வத்தாமன் நோக்கி நடந்த திறங்களைப்பேசி, பாண்டவர்களையும், பார்த்தசாரதியையும், சாத்தகியாகிய பேர்களையுங் காணேமே; போர் கொடுக்கப் பொய்த்துப் போனார்களோ? அல்லது பயந்து செத்துப்போனார்களோ? எவ்விடம் ஓடிப் போய்விட்டார்களோ? உமாபதியாகிய திருநடனமூர்த்தியென்னுந் திரிபுராந்தக சிற்றம்பலருடைய அருளினை நான் பரிபூரணமாகப் பெற்றுவந்து நடத்திய வாட்போருக்கு அவர்களெப்படியோ தப்பிப்போய் விட்டார்களே; கபடநாடகனாகிய கண்ணன் செய்த மாயமோ? மற்றியாதோ? என்று சொல்லி நின்றான். பின்பு இனி நடக்குங் காரியங்கள் இன்னவிதமென்று சிவகிருபையினாலே தெரிந்துகொண்டு அப்பால் நீங்கினார்கள்போலு மிருக்கிறதென்று வல்லவராகிய நல்லவர் மூவருமதித்து, தோத்திரம் புரியும் விதிமுறைப்படிக்கு ஆறுதலையுடைய சிவபெருமானது திருவடியைச் சிந்தித்து வந்தித்துத் துதித்து மதித்திருந்தார்கள்.

### அஸ்வத்தாமன் செய்த பராக்கிரமங்களைக் கேட்ட துரியோதனன் அவனைவியந்து, மற்றையரை நயந்து விண்ணுலகடைதல்

அக்கால், அஸ்வத்தாமனானவன் பழமையாகிய பகையை முனைந்து முடித்தேனென்று ஆர்த்து, அனலாகிய கோபம் ஆறித்தணிந்து திணிந்த தோளோங்கச் சிரித்தான். அந்த அஸ்வத்தாமனைத் தேராளிகள் இருவரும் பார்த்து, இராஜாதிராஜனாகிய துரியோதன மகாராஜன் என்னமா யிருக்கின்றானோ? சீக்கிரம் போவோம் வாருமென்று சொல்ல, அப்படியே நல்லதென்று அருந்தவத்தோனாகிய அஸ்வத்தாமன் உடன்பட, உடனே அம்மூவரும் பாகனுடனூர்ந்த தேரைச்செலுத்திச் சென்று, பாரெல்லாம் புகழ்ப்பிறந்த புரந்தரனைப்போன்ற பணிக்கொடியோனாகிய துரியோதன மகாராஜனை மகா வியாகூலத்துடன் பார்த்துத் துதித்தார்கள். இவர்கள் துதிக்கப் படுகிற துன்பத்தைத் துரியோதிரன் கேட்டுக் கண்விழித்துப் பார்த்து நாக்கை நனைத்துக் கொண்டு, நீங்கள் போய்வந்த காரியமென்ன பூரணமாய்ச் சொல்லுங்களென்று கேட்டான். கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! இப்படி வினவிய அரசனை அஸ்வத்தாமனோக்கி, பாசறையிற்போய்ப் புகுந்து யுத்தஞ் செய்து இன்னாரின்னாரைக் கொன்றேனென்றும், இவர்களுடைய பெயர்கள் இன்னின்னதென்றும், கலகம் விளைத்த கண்ணனாகிய மாதவனும், அவன் தம்பியாகிய சாத்தகியும், மன்னரைவரும் நான் போகுமுன்னமே தப்பித்துக்கொண்டு இடம்விட்டு நீங்கி ஓடியொளித்துப் போனார்களென்றும், மற்றவர்கள் எல்லோரும் பற்றில்லாமல் இறந்துபோனார்களென்றும் விபரமாகச்சொல்லி, ஓ அம்புவிக் குலத்தோனாகிய வெம்புலியே! இப்போது தேவரீரைப் பார்த்துச் சேதிசொல்லும்படியாய் மீண்டு வந்தோமென்று சொன்னான். அம்மொழியைக் கேட்ட வணங்காமுடி படைத்த வள்ளலென்னுந் துரியோதன மகா

ராஜன் புளகாங்கிதங் கொண்டு பூரித்து, பூரணமாகிய கிருபை கரந்து, அஸ்வத்தாமனை நோக்கிச் சொல்லத் தொடங்கினன். ஓ ஆழ்ந்த பேரறிவையுடைய ஐபனே? உன்னுடைய உண்மையையும் - உன்னுடைய திண்மையையும் - உன்னுடைய அன்பையும் உன்னுடைய ஆண்மிக்கையும் யோசிக்காமல், இந்த மண்டலத்தில் நான் வாழ்நாளெல்லாம் மார்த்தாண்டன் மைந்தனுகிய கர்னனையும், மத்திராராஜனுகிய சல்லியனையும் நம்பி, அவர்களுடைய வல்லமையை விரும்பி, அவர்களால் நாம் சவுக்கியப் படுவோமென்று எண்ணி, என் காலத்தை விருதாவிற் கழித்துப் போட்டேன். கடைசியில் யோசிக்குமிடத்திற் பாண்டவர்களுக்கு அண்ணன் கர்னனுகவும், மேற்படியாருக்கு மாமன் சல்லியனுகவும் நேரிட்டிருந்தார்கள். இனிமேல் அதை நினைப்பது காரியமல்ல: ஆகிலும், அவர்கள் என்மட்டிற் கூடியமட்டும் பாடுபட்டதற்குக் குறைவில்லை. எனக்கோ? தவறிறைவில்லை. ஆகையால் என் கெதி இப்படியாச்சுது. என்னெண்ணம் வீண் போச்சுது. நானிளைத்துப் போனேன். இந்த வேளையில் இன்றையப் பொழுதில் நீ போய் முடித்து வென்றுவந்த தன்மை, போதுமான வரைக்கும் வீரத்திறமா யிருக்கின்றது. நான் நம்பிய அவர்களால் இவ்வளவுபயனைப் பெருமற் போயினேன். அடிநாள் முதல் உன்னை நம்பாமற்போன அனியாயத்தால் நான் அனியாயமா யிறந்தேன். இனியென்ன செய்வேன்? என்று வருந்திச் சொல்லிய வணங்கா முடியோன் சொல்லை அசுவத்தாமனுகிய மூவருங் கேட்டு, அடங்காத் துயரமேற்கொண்டு நின்ருர்கள்.

அந்தச் சமயத்திற் சஞ்சயன்வந்து தராதிபனுடைய தாள்மேல் வீழ்ந்து, அடியில் முடிசூடி, அலறிப்பதறிக் கதறி, உடனுதறி எழுந்து ஒருபுரத்தி லொதுங்கி நின்றனன். அவனை துரியோதனன் பார்த்து; அப்பா! இனிமேலென்ன யிருக்கிறது? நீங்கள் போங்கள் என்று சொல்லிய காலையிற் சஞ்சயன், அசுவத்தாமன், கிருபாச்சாரியார், கிருதபன்மன் இவர்கள் நால்வரும் விக்கி, துரியோதனனைப் பார்த்துத் துக்கித்து, ஓ எமது அரசனே! நீர் இவ்விடத்தில் இடருழன்று இளைத்துத் தனித்திருக்க, உமக்கு முன்னே நாங்களிறந்து முடியாமல் உம்மை விட்டுப் பிரிந்து உலகத்திலிருப்பதோ? இதுதானே யெங்கள் முறமையென்று நொந்தார்கள். அவர்களைத் துரியோதனன் பார்த்து, ஓ மித்திரர்களே! எனக்குரியோர் பெரியோரியாவரும் எனக்கு முன்னே போய்விட்டார்கள். அவர்களுடன் நான் போனேனு? அவர்களைப் பிரிந்து இன்னுமிருந்து இப்போதுதானே போகப்போகின்றேன். ஓ எனக்குப் பிரியமானவர்களே! ஆருக்கார் துணை? ஒருவர்க்கொருவர் சம்பந்தமில்லை; வேறேஎன்று நினையாதீர்கள். (கன்றும் பசுவும் காடேறி மேய்ந்தால், கன்றோர் புறமே பசுவோர் புறமே) அவர்களுடைய நல்வினை தீவினைகளின் பயன்படி முடியும் என்றுரைத்துப் பக்கத்தினின்ற சஞ்சயனைப் பார்த்து, ஓ சற்குணனே! பாரமார்த்தியனுகிய நீயும் இவர்களுஞ் சஞ்சலப்பட்டீர்களே? அதனுல் ஆவதேதாகிலுமுண்டா? அப்பனே என் தந்தைக்குந் தாயுக்குந் தேறுதல் சொல்லி; இனி அப்பாண்டவர்களுடைய சொல்லுக் கெதிர் மறுத்துச் சொல்லாமலிருந்து நல்ல பயனை அனுபவிக்கச்செய்யும்; நான் மெத்தவும் இணங்கி, வணங்கினேனென்று சொல்லும்; என் சிறிய தந்தையாகிய விதுரராஜருக்கு என்னுடைய வணக்கஞ் சொல்லி, உங்களுடைய மொழியை மறுத்து இணங்காத நான் பிணக்குவியுங் களத்தில், அணங்குழந்தே னென்று சொல்லும்; என் மீதுபடைத்த அபராதமெல்லாம் க்ஷமிக்கச் சொல்லும்; கெடிஸ்தலாதிபனுகிய திருதராஷ்டிர மகாராஜனைக் காத்துக்கொள்ளும்; ராஜஸ்திரீகளுக்கெல்லாங் குலமுறை தருமங் குன்ருமற் குதூகலப்படி நடத்திவையும்; என் பாவமும், என் வினையும் இப்படி விளைந்தாலும், இனிமேல் வேறென்றும் யோசிக்க வேண்டாம். நான் சொந்தப் பிள்ளையென்றும், அவர்கள் தம்பிப் பிள்ளைகளென்றும் நினைக்க வேண்டாம்; இனிமேல் அவர்கள் தான் பிள்ளைகள்; அவர்கள்தான் சுகதுக்கத் துக்குடையவர்கள்; நானே மகா பாபமுடையவன்; ஆனதால், மாதுர்பிதுர் கருமத்துக்குரிமையில்லாமற் போகிறேன்; இனிக் கூடயிருந்து சகல சுபாசுபமும் அனுபவித்து உத்தரிமைக்கடன் செய்யப்போகின்றவர்கள் அவர்கள்தான்; அவர்கள் நற்பலன்கொடுத்து வைத்தார்கள்; நான் கொடுத்துவைக்கவில்லை; ஆகையால் அவர்களைத்தழுவி, அவர்களுடன் கலந்து உலகமெல்லாம் புகழ உத்தமமாக இருக்கும்படிக்குச் சொல்; நீ என் தாய் தந்தைக்கும், பாண்டவர்களுக்கும் உறவு மூட்டி

வைக்கக்கடவை; ஓ உத்தமனே! எல்லோருக்குஞ் சரணஞ் சொல்லுக.

என்றிவ்வாறு விளம்பிய துரியோதனன் அருகில் நிற்கின்ற அஸ்வத்தாமன், கிருபாச்சாரி இவர்களை நோக்கி, இனிமேல் நீங்கள் என்ன செய்யப்போகின்றீர்கள்? இதுவரையிலும் அநுபவித்த சுகமேயொழிய வேறில்லை. ஆதலால்,இனி மேலாகிய அருந்தவம் புரிந்து ஆத்மலாபந் தேடிக்கொள்ளுங்கள்; என்னிடத்திலிருந்து என் சுகத்தை விரும்பினவர்கள் நீங்களாகையால், பாண்டவர்களிடத்திற் சேரவேண்டாம் என்று இன்னும்பலவாறாகிய வார்த்தைகளெல்லாம் பேசி, (காலம் வந்துற்றார் கணித நூலினருங் கணத்தில் மரய்குவர்) என்று மேலோர் விளம்பியபடி, உயிருடன் உடல் வீதலாகிய சாதலென்னும்மெய்மையை நான் நாடிப்போகின்றேன்; நீங்கள் நீடூழி இருப்போமென்னும் பொய்மையை நாடிப் போங்கள் என்று விடை கொடுத்தான். இப்பால், "வயிரஞ் செறிதரு மனனும் வாய்மையும் வலியும் பொருபடை வினையு மேல்வரு, செயிருந் திகழ்தரு குருகுல மகிபதி திறல் வெஞ்செருமுனை யதனின்மேதகு, மயிர்நுண் குழலா மடநல்லார்பல ரளிகொண் டெதிர்கொள வமரனான பின், னுயிர் கொண்டவு சுர ருறையும் வானுல குடல் கொண்டது தனதுடைய பூமியே. கிடந்த வுடல் வானவர் தங்கிளை சொரிந்த பூ மழையாற் கெழுமுற்றோங்க, நடந்தவுயிர் புத்தேளிரரமகளிர்விழி மலரா னலவற்றோங்க, வடர்ந்தளிகண்மொகுமொகெனுமா மோதவலம் புரித்தா ரண்ணல்யாரு, மிடைந்திமிடைந் தெதிர்கொள்ள வீரருறை பேருலகமேவினனே." ஐயா ஜெனமேஜெய மகாராஜனே! இராஜ ராஜேஸ்வரன் - இராஜப் பிரபுடீகன் - இராஜவுல்லாசன் - இராஜவீர துரந்தரன் - இராஜபுரந்தரன் - இராஜநிரந்தரன் - இராஜசுதந்தரன் - இராஜாதிராஜன் - நாகத்துவசன் - வணங்காமுடியோன் - நந்தியாவட்டமாலை புனைந்தோன் - கௌரவகுல முதல்வன் - சந்திரகுலத் தோன்றல் - மதியிற் சிறந்த மன்மரபோன் என்னும் மகா பிரக்யாதிகளனைத்தும் வாய்ந்த இத் துரியோதன மகாராஜன். வயிரம் பற்றிய மனத்தையும் வலியையு முண்டானவனா யிருந்தும், மூடிவி லவனுடைய உயிரை விண்கொள்ளவும், உடலை மண்கொள்ளவு மானவனாய், செகதீசனைச் சிந்தையு ளிருத்தி வழுத்தினான்.

ஆகாயத்திலிருந்து தேவர் முதலாகிய சகல கணங்களுஞ் சேர்ந்து பூமாரி பொழிந்தார்கள். தேவதுந்துபி முழக்கினார்கள். அரம்பா ஸ்திரீகள் ஆலவட்டஞ் சாமர முதலிய உபசாரஞ் செய்ய இந்திர விமானந்தேறி, சகலவித சம்பிரம மரியாதையுடன் சுவர்க்கம்போய்ச் சேர்ந்தான். இவ்வித கோலாகலமாய் வருகிற பூபதியை இவனுடைய தம்பிமார்களெல்லோரும், உரிய வீராதிவீரரும், புத்திரமித்திராள் யாவருங் கண்டு ஆனந்தித்தார்கள். முப்பத்து முக்கோடி தேவர்களுடனும் தேவேந்திரன் எதிர்கொண்டழைக்க, உவந்து மகிழ்ந்து அம்பொனுடடைந்து, அருங்கதி பெற்று ஆனந்தமுற்றான் துரியோதன மகாராஜன். இப்பால், அவ்விடத்திலிருந்த கிருபாச்சாரியர், அஸ்வத்தாமன், கிருதவன்மன்,சஞ்சயன் இவர்கள் நால்வரும் இரங்கி ஒருவருக்கொருவர் தேற்றிக்கொண்டு மகா வியாகூல சித்தத்துடன் அவ்விடம்விட்டு நீங்கிப் போனார்கள்.

அஸ்வத்தாமன் பாசறைப்போர்ச் சருக்கம்

முற்றிற்று.

---

மூன்றாவது,

## அஸ்வத்தாமன் சிரோ மாணிக்கங்கவர்ந்த சருக்கம்

---

### கண்ணன் துதி

இரணிய மகனுமுன்ன ரிழிபுடைக் கேதங்கண்ட, தரணியன் மகனுமற்ற யானையுஞ் சரணென்றேற்றி, முரணிய சிறியோர்வெஃக முதன்மைகொண் மாதுங்கண்ட, பிரணவப் பொருளையின்னும் பேணுவார் காணுவாரே.

ஓ நித்தியவிதியினோர்ந்த வாரிதியே! பந்தியாம் ஞானம்பரந்த பாரதியே! கேளும். பதினெட்டாநாள் இராத்திரி நடந்த பான்மையைக்கேட்ட யாவரும் ஆருத்துயரை யுடையவர்களாய்த் திகிலடையும்படிக்குச் சத்துருக்களைப் பற்றறக் களைந்து அன்றிரவிற்றானே அகன்றுபோனானல்லவா? அஸ்வத்தாமன். இப்பேர்ப்பட்ட கொடிய மனத்தோனாகிய அஸ்வத்தாமனைக் கண்டறியவேண்டுமென்று அநேகங் கரங்களுங் காலும் அசைய அசைய ஓடி வருபவனைப்போல், அழகிய சப்தமாவென்னும் புரவிபூட்டிய தேரைச் செலுத்தி,

ஆயிரங்கதிரோனாகிய சூரியன் கீழ்த்திசையிலுதையமாயினான்.

### பாண்டவர்கள் பாசறைக்கு மீண்டு இறந்து கிடக்கு மெல்லோரையுங் கண்டிரங்குதல்

பத்தொன்பதா நாட் காலமே, பாண்டவரைவரும், கிருஷ்ணமூர்த்தியும், சாத்தகியும் இராத்திரிமுழுதும் நித்திரை யற்றிருந்து, பொழுது விடிந்தவுடனே காலக்கடனை முடித்துக்கொண்டு பாசறையைநோக்கிவருவதானார்கள். அந்தச்சமயத்தில், திர்ஷ்டத்துய்மனுக்குத் தேர்ச்சாரதியானவன் சிதைந்துஞ் சிதையாதவனாய்ச் சிந்தை மெலிந்து அருந்துயருடன் ஓட்டமு நடையுமா யோடுகிறான். அவனப்படி யோடும்போது, வழியில் வருகின்ற பாண்டவர்களைக்கண்டு அலறியிரைந்து கால்மேல்வீழ்ந்து, அவர்களுடைய காதில் ஆலகாலவிடத்தையும் அக்கினிக் குழம்பையுங் குலுக்கி வார்த்த கொள்கைபோல், அஸ்வத்தாமனால் இராத்திரி மாண்டபேர்களுடைய செயலனைத்தும் உரைத்தான். அந்தச் சாரதி சொல்லிய சொல்லானது காதுக்குள் நுழையுமுன்னமே, இடிமுழக்கங் கேட்டிறந்த பாம்பினம்போல் இரைந்து ஏங்கி நடுநடுங்கி அயர்ந்து அரற்றி வாட்டிரங்கொண்ட மைத்துனரையும், மன்னர் மன்னரையும், மக்களையும் ஒக்கலையும் நீங்கி உயிர்தாங்கி இருக்கமாட்டோம். இத்தனைபேர்களையு மாய்த்த அசுத்தனாகிய அசுவத்தாமனைக்கொன்று நாங்களு மிறப்போம் என்று ஸ்திரமாய் உறுதி விளம்பி வந்தார்கள்.

திருமாலாகிய கிருஷ்ணமூர்த்தியும், பாண்டவர்களெப்படி பகைத்துச் சொல்லுகிறார்களோ, அப்படியே தானுஞ் சபதஞ்சொல்லி, அவர்களைவிட ஆயிரம்பங்கு அதிகமாகத் துயரங்கொண்டு, ஐயோ! இதென்ன மகா மாய்கையாய் இருக்கின்றதே; இப்படி வருமென்று தெரிந்தால் நாம் பாசறைவிட்டு நீங்காதிருக்கலாமே; புத்தி மோசம்போனோமே: ஓ பாண்டவர்களே! நாமொன்று நினைக்கத் தெய்வந் தானொன்று நினைத்ததே; இனிமேல் நாம் விசனப்பட்டு ஆகத்தக்க காரியமென்ன? கவலையை விட்டுவிடுங்கள் என்று தேற்றியுந் தேறாதவர்களாய்க் கண்மலர்களிலிருந்து கார்மாரிசொரியக் கசங்கி கைத்திறலுடைய காவலர் பாசறையைச் சேர்ந்து, பூலோகத்திற்பிரகாசிக்குஞ் சூரியனைப்போற் பலதிக்கும் புகுந்து ஒளிவிளங்கப்பார்த்து, பேரழிந்து மாண்டுக் கிடக்கின்ற பிணமலைகளைக் கண்டு, வேரறுந்து வீழ்ந்த மராமரம்போல் மைத்துனனாகிய திர்ஷ்டத்துய்மன் பேரில் வீழ்ந்து புரண்டுமோதி முட்டிக் கட்டிக்கொண் டழுதார்கள்.

இப்படி வீழ்ந்து அழுத ஐவர்களை ஆழ்ந்த அறிவினையுடைய கிருஷ்ணமூர்த்தியுஞ் சாத்தகியும் எடுத்து அணைத்து, கண்களில் வழிந்தோடிய கண்ணீர் துடைத்துத் துயர் நீக்கினார்கள். அப்பால், மற்றப் பேர்கள் செத்துக் கிடக்கிற பல இடங்களெல்லாம் போய்ப் பார்த்து, எல்லோரும் விசனப்பட்டு இறந்து கிடக்கும் இளம் பஞ்சபாண்டவரை நோக்கி, ஐயோ மக்களே! நாங்கள் உங்களுடன் கூடி வாழ்கிறதற்கு இதுவரையிற் பட்டபாடும், இப்போது நாங்கள் மேன்மையடைந்தும், பாரதயுத்தத்திற் செயம் பெற்றதும் போதும்போதுமென்று மனஞ்சலித்து மடிந்தவர்போற் பூமியிற் படுத்தார்கள். மறுபடியுமெழுந்து பிள்ளைகளின் தேகத்தைக் கட்டிக்கொண்டார்கள்; மேல்வீழ்ந்தார்கள்; கதறினார்கள்; உடலுடன் தலையை ஒட்டவைத்துப் பார்த்தார்கள்; கண்ணீருகுத்தார்கள்; மார்புடனணைத்தார்கள்; சோர்ந்தார்கள்; சலித்தார்கள்; துடித்துப் பதவித்தார்கள்; கையைப் பிசைந்து நீட்டி, ஐயையோ! அருமையான மக்கள் இப்படி ஆருயிரற்றுக் கிடக்கின்றார்களே என்று காட்டினார்கள். பிராணனை விடவேண்டுமென்று நினைத்தும் பிராணன் போகாதவர்களாய்ப் பெருக்கத் தவித்தார்கள்.

### திரௌபதி அஸ்வத்தாமன் றலைக்குச் சபதங் கொள்ள, தருமர் சலிக்க, கண்ணனொருவாறு தேற்றி வீமசேனனை விடுத்தல்

இவ்விதமாகப் பார்த்து முகம் வியர்ந்து ஆர்த்துப் பாண்டவர்கள் துயரங்கொண்டிருக்குஞ் சமயத்தில், உபலாவியத்தி லிருந்த திரௌபதையானவள், இந்தச் சேதியை தூதராற் கேட்டு, துயரால்மூழ்கி அண்ணன் தம்பி முதலானவர்களும், இளம் பஞ்சபாண்டவராகிய மைந்தர்களும் இறந்துகிடக்கும் பாசறைக்கு வந்து, அவர்களைக் கண்டு மார்மேலறைந்து, முகத்திலடித்துக்கொண்டு, நிலத்திற் புரண்டு நெடுங்கண்ணீர் சொரிந்தாள். கணவராகிய காவலரைவரையுங் கண்ணனையுங் கண்டு, கசிந்து கரைந்தாள்; நிலத்தில்

மோதி முட்டினாள்; வணங்கித் தாழ்ந்தாள்; எழுந்தாள்; பூமிமேல் விழுந்தாள்; அயர்ந்தாள்; ஆதிமூலப்பொருளினுடைய காலைப் பிடித்தாள்; சபதங்கூறிப் படித்தாள்; பல பேரையுட் பார்த்துச் சுற்றிச் சுற்றி சூழன்று வந்தார்கள். ஐயோ மகாராஜனே! அவள் பட்டபாட்டை நானென்னென்று சொல்லுவேன்? ஐயோ! இனி உயிர் மாய்ப்பேனென்று சொல்லுவாள். என்ன காரணத்தால் என்னுயிர் போகவில்லையென்று இரைவாள்; இடிவாள்; இருப்பாள்; வயிற்றில்இடிப்பாள்; வாயை மடிப்பாள்; கையை நெரித்துப் பிடிப்பாள்; ஐயோ மக்களே! மக்களே! என்று எஞ்சுவாள்; கெஞ்சுவாள்; ஒவ்வொரு பிள்ளையையும் நோக்கிக் கொஞ்சுவாள்; துயர் துஞ்சுவாள். இப்படி இன்னும் வெகுவாய்ப் புலம்பியாவர்க்கு முன்னவனாகிய முகுந்தன், பொன்னடி மேல் வீழ்ந்து நெருங்கிய குழலாளாகிய திரௌபதை வாடி யழுதாள். இப்படி யழும்போது பாண்டவரைவரும், சாத்தகியும், சக்கிராதரனாகிய சுவாமியும், மின்னற்கொடி போன்ற திரௌபதையைத் தேற்றி, மேலோருரைத்த சாஸ்திரங்களையுஞ் சாற்றித் துயரை மாற்றினார்கள். அப்போது பொய்த்த இடையாளாகிய பாஞ்சாலி, பச்சைமாலின் வசனத்தினாலும், பாண்டவர்களுடைய விசனத்தினாலும் புலம்புஞ் செய்கையைவிட்டு, அச்சமில்லாமலெழுந்து, என் சகோதரரையும், ஐந்து புத்திரர்களையும் யார் கொன்றவர்கள்? நீங்களிருந்தும் இப்படி நடக்கத்தக்கதோ? இஃதென்ன தீதோ? இதென்ன சூதோ? மற்றயாதோவென்று விசனப்படுகின்ற மெல்லியை நோக்கி வேணுகோபாலன் சொல்லுகின்றார்.

அம்மா திரௌபதா! இந்தப் பதினெட்டு நாளும் இராத்தூக்கம் பகற்றூக்க மில்லாத பாண்டவர்களை யழைத்துக்கொண்டு வனத்துக்குப்போய், அவ்விடத்தில் இவர்கள் அச்சமில்லாமல் நித்திரை செய்யும்படிக்கு ஆவலாயமைத்து நான் இவர்களுக்குக் காவலாயிருந்தேன். அந்தச் சமயம் பார்த்து அஸ்வத்தாமன் இப்படிக்கெல்லாஞ் செய்தானென்று அரிவாசுதேவனாகிய அமலனுரைக்க, அதை மயில்போன்ற சாயலையுடைய திரௌபதாதேவி கேட்டு, ஓ மன்னர்பிரானாகிய தருமராஜனே! என் பிள்ளைகளையும், என் சகோதரர்களையுந் தூக்கத்திற் கொன்று தலையறுத்த பாவியாகிய அஸ்வத்தாமனுடைய கொழுத்த தலையை தாமரை மலரென்று சொல்லுகின்ற என்னுடைய பாதத்திற் போட்டு மிதித்த பிற்பாடு இந்தத் தலைமயிரை முடிப்பேனே யல்லது, இதன் மத்தியில் முடியேன் என்று சபதங்கூறினாள். அவள் கூறிய சபதத்தைக் கேட்ட தருமராஜனவர், திரௌபதையைப் பார்த்து, ஓ பைந்தொடியே! நீ ராஜசபையிற் கூறிய சபதமுடித்து உன் கூந்தலை முடிப்பதற்கு, உன்னைப்பிடி என்னைப்பிடி ஊர்ப்பிடாரி மயிரைப்பிடி யென்றாயது. இன்னும் உன் கூந்தல் முடிந்ததும் முடியாததுமாயிருக்கின்றது. அப்படியிருக்க, இப்போது இதுவொரு சபதஞ் சொன்னையே; ஐயோ! தெய்வமே! இந்த அஸ்வத்தாமன் சாகாவரம் பெற்ற சிரஞ்சீவியாச்சே! இதற்கு பதில் ஆர் தலையை வாங்க இந்தப் பேச்சைச் சொன்னாய்? அந்தோ! அந்தோ! அந்தப் பாதகன் தலையை எந்த விதத்தில் வாங்கப் போகின்றாய்? என்று இடிந்து இரைந்து சொல்லும்போது, ஸ்ரீ கிருஷ்ணனவர் அத்தருமராஜனைப் பார்த்துச் சொல்லுகின்றார்.

ஓ அத்தான்! என் தங்கை ஏதோ புத்திர சோப ஆத்திரத்தாற் சொல்லிவிட்டது. ஆகிலும், எண்சாணுடம்புக்குச் சிரசு பிரதானம். அந்தச் சிரசைப் பார்க்கிலுஞ் சிரமேலணிந்த பொருள் பிரதானம். ஆகையால், அந்த அஸ்வத்தாமன் தலைமேற் சிரோமாணிக்க மொன்றிருக்கிறது. அதை வாங்கிக் கொடுத்துவிட்டால், அது அவனுடைய தலைக்கு மேலானது. இந்தம்மாள் கூறிய சபதமும் நிறைவேறும்; அவனுக்குங் கர்வமடங்கிப்போம். இப்பேர்ப்பட்ட அனியாய யுத்தஞ் செய்த அவனை இவ்வளவு வேலை செய்யாவிட்டால் நமக்குப் பெருமையிராது. நமது பிழைப்பும் பிரயோசனமற்ற பிழைப்பாய்விடும்; பேருங் கெட்டுப்போம் என்று பெருமானுரைக்க, பாண்டவருள் நால்வரும், பாஞ்சாலியும் அந்தச் சொல்லுக்கு உடன்பட்டார்கள். அப்போது முதல்வனாகிய தருமநந்தனர் முகமாறி, அவனுடைய சிரோமாணிக்கமென்ன? இளப்பமானதா? அதைத் தான் வாங்க ஆரால் முடியும்? என்று சலித்து சொல்ல, அதைக்கேட்ட வாயுகுமாரனாகிய பெருமைபெற்ற வீமசேனன் இதோ நான் போய் எனது கொடுங்கதையால்மோதி அவன் தலையைப் பூமியிலுருட்டிச் சிரோமாணிக்கங் கவர்ந்து வருகிறேன்; உள்ளங்கையிற் றருகிறேன்; அப்படிச் செய்யாமற் போவேனாகில்,

அக்கினியில் வீழ்ந்திறந்துபோகிறேனென்று
ஆர்த்து ஆயாசத்துடன் வேர்த்து விளம்பி
னன். அதுகாலையில், மாலாகிய கிருஷ்ணன்
வீமனைப் பார்த்து மதித்துத் துதித்து, ஆ! ஆ!
வீமா! உன்னாலாகாத காரியமும் ஒன்றுண்டோ?
இப்போதேபோய்ச் செயித்துவரக்கடவையென்
றுச் சொல்லவும், அவ்வீமசேனன் தனக்கிசை
ந்த தேரேறி, சகாதேவன் சாரதித்தொழிற்
செய்யவமைத்து, வீரபாணமும், வெற்றி வில்
லும், விஜயந்தருங் கதையுங் கைக்கொண்டு
விரைந்துசென்று, ஆலகாலவிஷமானது வட
வாமுகாக்கினிமேற் புகைத்துப் பாயுமாறுபோ
ற்போனன். இப்படி கைதேர்ந்த கதைக்காளை
யாகியவீமசேனனானவன் விண்கலங்கவும்மண்
குலங்கவுமாகப் போனபோது, கறுத்த திரு
மேனியிற் பசுமைபாகிய துளபமாலை மணக்
கும்படியாய் அறிதுயிலமரும் ஆயிரம்பண
மகுடமுடைய ஆதிசேடனென்னும் அணை
யைத்துறந்து ஆய்ப்பாடியிற் பிறந்து ஐவரை
ஆளவந்தெழுந்தருளிய புரந்தரன், யுதிஷ்
டிர மகாராஜனைப்பார்த்துச் சொல்லுகின்றார்.

### கண்ணன் அஸ்வத்தாமனடைந்திருக்கின்ற அஸ்திர பலங்கூறித் தருமனுதியரையும் பிரயாணப்படுத்துதல்

கேளும் தருமநந்தனு! சண்டைசெய்யப்
போன வீமசேனன் வெற்றி பெறும்படியாய்
மகா கொடும்பாவியாகிய அஸ்வத்தாமன்
அடங்கி இவனுக்கு இடங்கொடுக்கமாட்டான்.
அதேனென்றால், அந்த அஸ்வத்தாமனு
டைய தந்தையென்னுந் துரோணாச்சாரியார்
பிரமசிரமென்னும் ஒரு அஸ்திரங் கொடுத்தி
ருக்கின்றான். அந்த அஸ்திரத்தின் வல்லமை
யை எவர்களாலும் அளவிடப்போகாது. அதி
னுடைய உறுதிகொண்டு, அஸ்வத்தாமன் கர்
வந்தாங்கி யிருக்கின்றான். அந்த அஸ்திர
மூஞ் சிரோமாணிக்கமும் அற்றுப் போய்விட்
டாற் கொட்டியவாயில் விஷமடங்கிப் போ
மென்னுங் கொள்கைபோலாவான். அந்தக்
கணை அவனைவிட்டுப் போகிறவரைக்கும்
ஆருக்கும் அஞ்சான்; ஆர்ப்படைக்குந் தோற்
கான்; நெடுநிறத்தை நீறுபடுத்துவான்; மே
லண்டத்தை வேறுபடுத்துவான்; மன்னுயிர்
களைக் கூறுபடுத்துவான்; மறலியன்றெழிலை
மாறுபடுத்துவான்; அந்தக்கணையின் பெரு
மையைச் சொல்ல என்னாலில்லை. ஒருவேளை
அந்த அஸ்திரத்தை நமது வீமன்பேரில்
விட்டுவிடுவானாகில், அப்பால் வீமனை நாம்
காணப்போகிறதில்லை. எப்படியும் உயிரை
மாய்த்துவிடும். அப்பால் உலகம் என்ன பாடு
மோ நாமறியோம் மறந்து செத்தோன் பிரா
ணனை வாவென்றால் வாரது. ஓ வாட்டிறம்
படைத்தமன்னனே! இன்னமொன்றுகேளும்.
சில நாளைக்கு முன்னே இந்த அஸ்வத்தாமன்
துவாரகைக்கு வந்து என்னைக்கண்டு பேசி
பிரமசிரமென்னும் அந்தக் கணையின் பிரதா
பத்தையுஞ் சொல்லி உமக்கு இந்த அஸ்தி
ரத்தைத் தருகிறேன் இதற்கு ஈடாக உமது
சக்கரத்தைக் கொடுமென்று தைரியமாய்க்
கேட்டான்.

கேட்டீரோ தருமநந்தனு! இப்படி கேட்
டவனுக்கு நான்சொன்ன தென்னவென்றால்,
ஐயா குருபுத்திரனே! உமதுகணை யெனக்கு
வேண்டாம், என்து சக்கராயுதம் உமக்கு
வேண்டுமானால் தருகிறேன். இதோ யிருக்கி
றது தடையின்றி எடுத்துக்கொண்டு போகலா
மென்றேன். அதற்கவன் வெகு சந்தோஷ
முற்று, சக்கராயுதத்தை வெகு லேசாக எடுத்
துக்கொள்ளலாமென்று நினைத்து ஒரு கையி
னல் தூக்கினன். அது தூக்கக்கூடாமையால்
இருகையாலுந் தூக்கினன். அப்பவுந் தூக்
கப்படாமையால் மிகவும் கடுகடுத்து தனது
பலங்களையெல்லாங் கூட்டித் தூக்கினன். அப்
போது மிகுந்த பளுவாக யிருக்கக்கண்டு, தன்
னுற் கூடியவரையிலும் கார்த்து, அந்த
ஆசையை விட்டுவிட்டு சிறுநகையாய் நகை
த்து என் முகத்தில் விழித்தான். அப்போது
நானும் அவனைப்பார்த்துச் சிரித்து, ஓ சிறந்த
முனியாகிய துரோணாச்சாரி பெற்ற குழந்
தையே! இந்தச் சக்கராயுதத்தை எடுப்பதற்
குத் தகுந்த காரியமும் வீரியமும் இல்லாத நீர்
சத்துருக்களை எப்படி வெற்றிகொள்ளப் போ
கின்றீர். இந்தச் சக்கராயுதத்தின் திறம் இப்
பேர்ப்பட்டதென்று நீரறியாமற் போனீரே!
தெய்வீகத் தன்மையோடு என்னிடத்திலிருக்
கும் இச்சக்கராயுதமானது, திரிலோகத்திலும்
பொருந்திய மனுஷர்களுக்குக் கிடைக்குமோ?
அவர்கள் கையிற் கிட்டுமோ? இங்கே வாரும்,
உட்காரும். இதுவரையில் ஆரும் இந்தச் சக்
கரத்தை இச்சித்ததில்லை. நேரே நீர் பாரும்
என்று சொல்லி அவ் வஸ்வத்தாமன் பார்க்
கும்படியாய் நான் கையை நீட்டினேன்; என்
கைமேற் சக்ராயுதம்வந்து நின்றது. அதை
அதிசயமாக அஸ்வத்தாமன் கண்டு உபசரி
த்து, தெரியாமற் கேட்டேனென்று தியங்கி
னன்.

உடனே அவனுக்கு ஆபரணாதிகளோடுங் கூடிய வரிசைகளும், அரிசை முதலிய சுயம்பாக உரிசைகளும் அன்பாகிய அருளுடன் கொடுத்து, அவனுடைய ஸ்தானத்துக்குப் போகச் செலவு கொடுத்தனுப்பி விட்டேன். இது காரியத்தைப் புத்திமானாகிய நீர் தெரிந்துகொள்ளும். அவன் கணைக்கும் என் சக்கராயுதத்துக்குஞ் சரியென்று அவன் கொண்டிருந்த நினைப்பைக்கண்டீரா? ஓ தருமநந்தனரே! அவனிடத்தி லிப்போர்ப்பட்ட கணையிருக்கிறதென்று அப்போது நான் தெரிந்துக் கொண்டேன். அஃதிப்போது எனக்கு நினைவு வந்தது. அந்தக் கணைக்கு யாதொருகணையும் எதிரில்லையென்று அநந்தநாம குணனாகிய அரிபரந்தாமன் விளம்பி, நாம் யாவருமே இப்போ தவனிடத்திற்குப் போகவேண்டியதென்று சொல்லி யருளினார். உடனே தருமராஜனும், நகுலனுந் தகுதியாகிய தேர் புகுந்தார்கள். ஒப்பொருவருமில்லாத மாதவன் வேறுதேர் செலுத்த, அந்தத் தேரின்பேரில் அர்ச்சுனன் ஏறிக்கொண்டு வெற்றி வில்லைத் தாங்கிவந்தான். இவர்களிப்படியாகி வருமுன்னமே, சாவுக்கிடக்கிற துரியோதனனிடத்திற் செலவு வாங்கிக்கொண்டுபோன அஸ்வத்தாமன் கிருபாச்சாரியரை அஸ்தினபுரத்துக்குப் போகச்சொல்லி, மோகவிற் கொண்டலாகிய கிருதபன்மனை அவனுடைய ஊருக்கனுப்பி வைத்து, தான் சதுர்மாமறை தேர்ந்த தன் தந்தையாகிய துரோணாச்சாரியாரிருந்த பூர்வனத்துக்குப்போய்த் தவஞ்செய்வதற்கு எத்தனங் கொண்டிருந்தான்.

### வீமசேனனறை கூவவந்த அஸ்வத்தாமனும் அர்ச்சுனனும் தங்கட்குத் துரோணரளித்த பிரமசிரக்கணையேவிப் போர்புரிதல்

அக்காலத்திற் கடுங்கோபங் கொண்டு சென்ற பலம்பொருந்திய வாயுகுமாரனான வீமசேனன், அஸ்வத்தாமனை எங்குந் தேடிப் பார்த்து, பின்பு கண்டுபிடித்து இருகண்ணுஞ் சிவந்து வண்டுலாவிய மாலைவாடி முகங் கருகி பெருமூச்செறிந்து, அடா எமது பிள்ளைகள் முதலாகிய பேர்களைத் தூக்கத்திற் கொன்ற துரோகி! அடா மக்களுக்கு ஏக்கமற்ற மகா பாவி! அடா கொடும்பாவி? நீ பிழைக்கப் பார்க்கின்றையோ? நீ தவஞ் செய்வதற்கு இந்த யிடந்தகுமோ? அடா சிசுவத்தி செய்த தீயனே! அடா அஸ்வத்தாமா? ஒரு கணப்போதில் என்னுடைய தண்டாயுதத்தால் உன்னைக் கொன்று எமலோகத்துக்கு அனுப்புகிறேன். வெளியிலே வாடா என்று சஞ்சலத்தாற் சலங்கொண் டழைத்தான். இவ்விதமாக வீமசேனன் பலபல வாய்மைகளைப் பகரவே, அவைகளை யெல்லாஞ் சிவசுதனாகிய அஸ்வத்தாமன் கேட்டு, அவனோடு எதிருத்தரமொன்றும் பேசாமல், இந்த ஈரேழுலகையும் ஒரு நொடியிற் பொடித்துப் பொரித்து நொறிக்கி நோவச் செய்கிறேனென்று இலக்கார்ந்த வில்லைவளைத்து, துரோணாச்சாரியார் உபதேசித்தருளிய ருக்குவேத மந்திரத்தை உறுதியுடன் உச்சரித்து, பிரமசிர நாமக் கணையை நாணியிற் பூட்டி, வணங்கித் தொழுது வாழ்த்தி, தன்னுடைய சங்கல்பத்தைச் சிந்தித்து, இப்போது தப்பியிருக்கும் பாண்டவருயிர் மாண்டு போகும்படி பண்ணென்று வேண்டி துண்ணென்று தூண்டினான், அம்மாத்திரத்தில் மிகுந்த அகோரத்துடன் புறப்பட்ட பிரமச் சிரக்கணையானது, அநேகமுகம், அநேகங் கை, அநேகங் கால்களுடன் பெயர்ந்து, உலகெங்கும் விரைந்து பரந்து மலர்ந்து பலம்புரிந்து நெருப்புமயமாய்ப் பொறிகள் சிதறப்பறந்து நிறைந்து சிறந்து பூமி முழுதும்போர்த்து ஆர்த்துவேர்த்து பார்த்து நிமிடகரித்து நிறைந்து கருக்குவதாயது.

அக்காலையிற் சாமர்த்தியமிகுந்த வாயுதனயனான வீமசேனன், பாரியவில்லை வளைத்து ஷ்டங்காரம் பண்ணி, பண்ணவன் பதத்தை மனதிலுன்னி, பரமன்கணைகொண்டு பார்வை மாறாமல் நின்றான். அந்தச்சமயத்தில், தருமராஜனும் காண்டீபனும் கண்ணனும் சாத்தகியும் நகுலனும் வந்து இவர்களில் விளைந்த சண்டையைக் கண்டார்கள். அப்போது பச்சைத் திருமாலாகிய பரந்தாமன் அஸ்வத்தாமன் தொடுத்துவிட்ட பிரமச்சிரக்கணையின் வல்லபமும், அந்தக்கணையினால் உம்பர் முதலிய உலகினர் படும்பாடும் இன்னவிதமென்று தெரிந்த அனுபவசாலி யாகையால், இச்சையுடன் தேரிலிருக்கிற அருச்சுனன் முகத்தைப் பார்த்து, ஓ உச்சிக்கதிர் போன்ற உத்தமனே! நீ சும்மாயிருப்பையாகில், நம்மால் உலகழிந்ததென்று வீண்பழிவந்து விளையும். மகமேருவுந் தலைவளையும். விருதாப்பழி நாம் சுமப்பானேன்? ஓவிஜயனே! உன்னிடத்திலிருக்கும் ஆல்காலத்தைத் தலையெடுக்க வொட்டாமல் அடக்கும்படியாகிய பிரமச்சிர நாமக்கணையை வெளிப்படுத்தி விட்டு, அமரர் சித்தர் முத

லாகிய எண்டிசைப் பாலரையும் மண்டலபூப ரையுங் காத்திரக்ஷிக்கக் கடவது. ஓகாவலனே! ஓ காண்டீபக்கையனே! இல்லாவிட்டால் நாம் இதுவரையில் பாடுபட்டதெல்லாம் பாழாகிப் போம். ஆதலாற் சீக்கிரஞ் செயிக்கக்கடவை என்று திருவரதன் சொல்ல, அதை மெய்விரத ஞகியவிஜயன்கேட்டு, சிலைக்குருவாகிய துரோ ணச்சாரியார் தனக்கு அனுக்கிரகஞ் செய்த வேறொரு பிர்மச்சிர நாமக்கணையை யெடுத்துப் பிடித்து, ஆசாரிய வணக்கம்புரிந்து, அர னடி பூசித்து, அன்புடன் வாச நைமித்தியங் கொடுத்து, பரதகுலத்தோராகிய பாண்டவ ருயிரைப் பட்சமுடன் இரட்சிக்கக் கடவ தென்று இரதத்தைவிட்டெழுந்து ருக்குவேத மந்திரத்தைப் படித்து, வில்லிற் றெடுத்து, நாணியை யிழுத்து முடுக்கி முறுக்கி உறுக்கி சுறுக்கில் நெறிப்பிற் குறித்து விடுத்தான்.

வியாசர் கண்ணன் முன்னிலையில் அஸ்வத் தாமனையு மருச்சுனனையு மோரேற்பாட் டில் நிறுத்தி முடித்து ஒருவர்க்கொரு வர் சாபம்விளைத்துமீண்டு பாஞ் சாலியை மகிழ்வித்தல்

அம்மாத்திரத்திற் சத்தியமாகிய உத்தம மந்திரத்துடன் எழுந்த தனிவான் கணையா னது சிவ்வென்று நேருக்கு நேராகச்சென்று, அஸ்வத்தாமன் உந்திய கணையைப்போய்ப் பிடித்துக்கொண்டு, இரண்டு கணைகளும் ஒன் றோடொன்று கட்டிப்புரண்டு போராடுவ தாயின. அப்பொழுது நிலத்திற் பொருந்திய ஆத்ம கோடிகளெல்லா மிகுத்தலுத் திளைத்து வெந்துவெடித்து வெதும்பி, சிந்தைமிகுந்து மெலிந்து, யாருஞ்சிதையுங்காலமென்று பதை பதைக்கும்போது, மீதல நேசிகளாகிய தேவ ரும், பாதளவாசிகளாகிய நாகரும், பிர்மா முதலிய மூவரும், மற்ற யாவரும் இதென்ன காலமென்று எண்ணவும், இரதமானவர்களு டைய மனங்கண்ணவும், எதிர்ப்பட்டோ ரெல் லாருங் குண்ணவும் வியாகூலம் விளைந்தது. அப்போது வேதப்பயிர்விளைத்த வேதவியாச மகாமுனிவர், நாரதாதிய முனிவர்களோடு சடைமுடி மரவுரி மிதியடிதுலங்க, ஸ்ரீகிருஷ் ணன் முதலாயினோரிருக்கும் இடத்திற்கு வந் தனர். அவரை இவர்கள்வணங்கி உபசரிக்கும் போது, அவர் இவர்களை ஆசீர்வதித்து, ஐயா! ஒவ்வொருவருந் தங்கள் தங்களுடைய சவுக் கியத்தைக் கருதி, உலகங்களை யழித்துவிட லாமா? ஜீவகாருண்யம் பச்சாதாப முதலிய வைகளில்லாமற் போகலாமா? இப்பேர்ப் பட்ட கொடுஞ்சமர் புரியப்போமா? இதனுல் முத்திபெறலாமா என்றுகேட்ட காலத்தில், துரோணபுத்திரனுகிய அஸ்வத்தாமன் வாய் பேசா மௌனிபோலும், பேச்சில்லா ஊமை போலும் நைந்துருகி நின்றான். அவனுக்கு வியாசமுனிவர் சிந்தை கூர்ந்து சொல்லத் தொடங்கினர்.

ஓ மகத்தாகிய வேதவித்தியறிந்த பரிசுத்த மாகிய விப்பிரனே! உன்னைப்போலொத்த உத்தமன் இப்பேர்ப்பட்ட கொடிய தொழி லுக்குப் பிரவேசிப்பானுகில், தயை தாக்ஷண்ய மில்லாத பேர்கள் தருமத்தை எண்ணிப் பார்ப்பார்களா? நீ யல்லவோ உலகத்துக்குத் தருமம் போதிக்கவேண்டும். நீதானே இப் படிச் செய்யப்போமா? போகட்டும்; இனியே னும் உலகம்அழிந்துபோமுன்னமே நீவிட்ட கணையை மீட்டு ஆத்ம கோடிகளை இரட்சித்து விடுக என்று கூற, அஸ்வத்தாமன் அவரைப் பணிந்து, ஓ சுவாமி! இந்தக் கணையைவிடத் தெரிந்து கொண்டேனே யல்லாது, மறுபடி யும் மீட்க நான் கற்கவில்லை. இந்த கணைக்கு ஏதாகிலும் ஆகுதி காட்டுவீராகில், இதனு டைய வேகமடங்கி ஆறிப்போம் என்று அஸ் வத்தாமன் கொதிக்கு நெஞ்சினனுகச் சொன் னன். அதைக்கேட்ட முனிவர் அருச்சுன னுடைய முகத்தைப் பார்த்து, இந்திரன் மத லாய்! நீ உத்தம குலத்திற் பிறந்த உண்மைய னச்சே; நீயாகிலுந் தயவுசெய்து உன்கணையை அழைத்து விடுக என்று உபசரித்தார். அதற் கவன், ஓ கருணையுங் காந்தியும் பொறுமை யுங் கனமுமுடைய கடவுளே! தேவரீருடைய அனுக்கிரகத்தினுலும், ஆசாரியர் அருளினு லும் விடவும், அழைக்கவும் கற்றிருக்கிறேன். ஆனல், நான் விட்ட கணைக்கு இந்த அஸ்வத்தாமனுடைய சிரோமாணிக்கத்தைக் கொடுப்பானுகில், ஒரு நொடிப்போதிற்பாணங் களை அழைத்து உலகம் உய்யச் செய்வே னென்றான். அந்த சொல்லையுணர்ந்த மாதவ சிரேஷ்டராகிய வேதவியாசர் அஸ்வத்தாம னுடைய முகத்தைப் பார்த்து, அப்பா! ஆசா ரிய புத்திரனே! இந்த அஸ்திரத்தை விடுப் பதற்கு மாத்திரம் ஆசையாய்க் கற்றுக்கொண் டாய்; மறுபடி அதை அழைக்கச் சாந்தி கற் காமற் போனுய்; ஆகிலும், மகா பாதகத் தொழிலைப் பூண்டாய்; மண்ணுள்ள வரையி லும் மகா நரகந்தேடிக்கொண்டாய்; அருச்சு

னன் அழைக்கிறேனென்கிறான்; அவன் தொட்ட கணைக்கு ஆஹுதியாக என்னலட்சியங் காட்டுகிறாய்? அதை எனக்கு விரைவிற்சொல் லென்று முனிவர் கேட்க, முனிசுதனாகிய அஸ்வத்தாமன் சொல்லத் தொடங்கினான்.

ஓ சுவாமி! பாண்டவர்களுடைய பிராணனை வாங்கும்படி நாடி விடுத்தேன். என்னெண்ணமும் என் வாய்ச் சொல்லும் பழுது படாதபடி இப்பாண்டவக் குல மாதர்களுடைய கர்ப்பங்களையேனும் முடிக்காமற் போகாது. அவ்வளவாகிலும் என் கணைக்கு ஆஹுதி செய்ய வேண்டும் என்று அஸ்வத்தாமன் சொல்ல, அந்த மொழிகேட்ட முனிவர் தியங்கும்போது, சுத்தமாகிய தாளினால் மூன்று லோகத்தையுமளந்தருளிய முகுந்தன் சொல்லுகின்றார். ஐயா! அப்படியே சம்மதியானால், அபிமன்னுவினுடையதேவி உத்தரையின் கர்ப்பத்தில் இப்போ திற்பத்தியாயிருக்கின்ற கரு ஒன்று மாத்திரம் இப்பூமியை யாளும்படிக்கு விட்டுவிட்டு, மற்றக் கருக்களையெல்லாம் வாயிற்போட்டுக் கொள்ளும்படி தனது அஸ்திரத்தைப் பரவச் செய்யச் சொல்லுமென்று மாதவனுரைத்தனர். அதற்கு அவ்வஸ்வத்தாமன் அவரைநோக்கி, ஓ மாயனே! அது கூடாது. முதல் அவளுடைய கருவைத்தான் அழிப்பேனென்று புகலவுந் திருமணாயகனாகிய சீமான் சினந்து, ஆ! அஸ்வத்தாமா! நீ அப்படி சம்மதியாமற் போனால், உன் கணையானது செய்யவேண்டிய சக்தியான காரியங்களைச் செய்யட்டும். நான் அதற்குத் தடை சொல்லவில்லை. அந்தக் கருவானது, உன் பாணத்தால் வெந்து சாம்பலாய்ப் போனாலும், உருமாறினாலும், மறுபடியும் உருவாகச் செய்து, காலத்திற் பிறக்கும் புத்திரனைக்காட்டி, ஸ்திரமாகநிலைக்குநாட்டி, அவனுக்கு மணிமுடி சூட்டி வைப்பேனேயல்லாது, ஒருக்காலும் அந்தக் கருவுக்குக் குறைவருமென்று நீஎண்ணாதே; நான்பிடித்த பிடி தப்பாது; நான் வைத்த குறி குலையாது; அடா! கருவபகாரியாகிய அஸ்வத்தாமனென்னுஞ் சிசுஹத்தி யுடையவனே! உன்னாலான காரியத்தை நீ பார்; என்னாலான மட்டும் நான் பார்த்து உத்தரையின் கர்ப்பத்திலாகிய புத்திரனைக் காக்கிறேனென்றார். அப்பால், நல்ல தாகட்டுமென்று குற்றமற்ற துரோண புத்திரனவன் மந்திரத்தை மாற்றி, உருவேற்றி, அருங்கணைக்குப் பத்திர புஷ்பஞ் சாற்றி, இலட்சியமேற்றி, இகழ்ச்சியில்லாத புகழ்ச்சியடைந்தபாண்டவர்களின்பத்தினிமார்களும், உத்தரை முதலாகிய மற்றப் பெண்களும் ஆசையாய்க் கொண்டிருக்கும் கருவையெல்லாம் நீறுநீறாகச் செய்யக்கடவதென்று சொல்லிச் செலுத்தினான்.

அப்படியே அஸ்வத்தாமன் விடுத்தபாணமானது, ஐவர்க்குரிய மாதர்களின் கருக்குலையச்செய்ய பெயர்த்து வந்தது. இப்பால் அர்ச்சுனனைப் பார்த்து, அஸ்வத்தாமனுடைய பாணம் உங்களுக்குரிய இராஜஸ்திரீகளின் கருவை ஆஹுதியாகக்கொண்டு போம்படிக்குப் போய்விட்டது. அதினுடைய உபத்திரவந் தீர்ந்து இனி உன்னுடைய பாணத்தை வரவழைத்துவிடு அர்ச்சுனாவென்று வியாசரும் நாரதருஞ் சொல்ல, என் பாணத்துக்கு அஸ்வத்தாமனுடைய சிரோமாணிக்கத்தை நான் கேட்டபடி ஆஹுதிகொடுத்தால் நான் வரவழைக்கிறேனென்று விஜயன் பேச, அப்படியே அஸ்வத்தாமனை அழைத்து அவனுக்குச் சம்மதிவாரி சொல்லி, அவனுடைய சிரோ மாணிக்கத்தை வாங்கி அருச்சுனனிடத்திற் கொடுத்தார்கள். அந்தத் தேசுடைய சுருள்தருங் கேசமணிக் கைக்கொண்ட காண்டீபன் தான் கொடுத்திருந்த பிரமச்சிரநாமக்கணையை வரவழைத்துவிட்டான். வேதவியாசர் முதலிய யாவரும் பார்த்தனைக் கொண்டாடினார்கள். இப்பால் துரோணபுத்திரனன் அஸ்வத்தாமனுந்திய பாணமானது, பாண்டவகுல பத்தினிகளின் கருக்களையெல்லாங் கருக்கும்போது, பச்சைமாலானவர் பஞ்சாயுதத்துடன் உத்தரை கருப்பத்திற் பிரவேசித்து, அவ் வுத்தரைக்கு யாதொரு துன்பமுமில்லாமற்செய்து, அவளுடைய கருப்பத்திற்செனித்த சிசுவுக்கு சொற்பமேனும் பிராணதோஷம் வராமற் காத்து, அஸ்வத்தாமனைப் பார்த்து, அடா குலத்துரோகிக்கு மேலாகிய கருத்துரோகி! நீ இன்று முதல் மூவாயிரவருஷம் பெண்சாதி யில்லாமலும், அன்னந்தண்ணீர் முதலாகிய இன்ப போஜனங்கள் ஏற்றுக்கொள்ளாமலும், கருமகாண்டப்படிக்குக் கருவபகாரிகளுக்கு காணுகிற பெருப்வியாதி பிடித்து, சீழ்-இரத்தம்-தசை-நிணம்-வெடிப்பு-பிளப்பு-களைப்பு-இளைப்பு-பூச்சி-புழு இவை முதலியவைகளுடனே பிராணகண்டமாய் அநுபவிக்கக்கடவதென்று சபித்தருளினார். அஸ்வத்தாமனுக்கு இப்

பேர்ப்பட்ட சாபங்கொடுத்த கிருஷ்ணமூர்த்தியை, வேதவியாசர் நயந்து வியர்ந்து மெத்தப்புகழ்ந்து நன்றாய்ச்சொன்னீர்: நன்றாய்ச் சொன்னீர்: என்றுவாழ்த்தி, உள்ளம் அழன்று அஸ்வத்தாமனைப் பார்த்து, நீ இவ்வளவுக்கு இடந்தேடிக்கொண்டாய் உனக்கு இதுவேண்டும் என்று விளம்பினார்.

அந்த மொழியைக் கேட்ட அஸ்வத்தாமன் சிந்தை வருந்தி, யுந்திநொந்து, கோபங்கொண்டு, வேதவியாசரையுங் கோபாலனையும் நோக்கி, எனக்கு நேரிட்ட சாபத்தை நான் அனுபவிக்கும்போது, நீங்களிரண்டுபேரும் என்னைவிட்டு நீங்காதிருந்து, அந்த வியாதியின் துர்க்கந்தத்தை அனுபவிக்கத் தக்கது. மேலும், உங்களை உலகத்தில் யாவரும் நிந்திக்கும்படியாகவும், நீங்கள் செய்யுந் தொழிலெல்லாங் கட்டுப்பாடென்றும், அசத்தியமென்றும், பழியாகப் பேசிக்கொள்ளும்படியாகவும், தெய்வத்தன்மை யில்லாமல் மனிதத்தன்மையாய் மகத்துவமற்றுப் போகக்கடவதென்று அஸ்வத்தாமன் பிரதி சாபங்கொடுத்து தபோவனம் நாடிப்போனான். இப்பால் அக்கினியைக் கக்கி அனலைச் சொரிந்து வந்த பிரமசிரக்கணையினால் அயர்ந்து பயந்து வாடிப்போன இராஜஸ்திரீகள் முதலாகிய உயிர்களெல்லாம் மாயவனுடைய அருளினால் மனக்களிப்படைந்து மகிழ்ந்திருந்தார்கள். தங்களுக்கு ஒப்புவமை யில்லாத தவச்சிரேஷ்டராகிய வேதவியாசரும், நாரதரும் உலகத்திற்கு உபகாரஞ்செய்து கிருஷ்ணதேவரிடத்திலும், பாண்டவரிடத்திலும் விடைபெற்றுக்கொண்டு அவர்களுக்கு ஆசீர்வதித்து தவச்சூழல் புகுந்தார்கள். அர்ச்சுனன் தான் பெற்ற அஸ்வத்தாமனுடைய சிரோமணிக்கத்தை வீமசேனன் கையில் கொடுத்து, அஸ்வத்தாமன் சிரஞ்சீவியாதலால், அவன் சாகமாட்டான். அவன் செத்ததைப் பார்க்கிலும், பத்தத்தனை பங்கு இந்த முடிமணியை வாங்கினது என்றுசொல்லி யாவரும் அவ்விடத்தினின்றுந் திரும்பிப் பாசறையி னிடத்துக்கு வந்து, அக்கினியிற் பிறந்த பாஞ்சாலியின் கையிற் கொடுத்து, இவ்விடத்தில் நடந்த யுத்தமும், இவ்வுலகம் அழியும்படியா யிருந்த நிமித்தமும், வியாசர் நாரதாதியர் வந்த பரிசுத்தமும், கருவிகளுக்கு நேரிட்ட வருத்தமும், பகவான் காத்திரட்சித்த திருத்தமும், அஸ்வத்தாமன் சிரஞ்சீவி யென்னும் அருத்தமும், அவன் தலை வாங்காமல் மயிர் முடிவாகிய மணிவாங்கிய பொருத்தமுஞ் சொன்னார்கள். அதைக் கேட்டு வாசனைப் புகை தங்கிய பைங்குழலாள் சிந்தைமேற்கொண்ட துயரந் தீர்ந்திருந்தாள்.

### ஐவர் அசுவத்தாமனிடங்கொண்ட ஐயந் தீரக் கண்ணன் கூறிய தக்ஷகப் பிரமன் சரித்திரம்

இப்பால், ஜோதியிற் பிறந்த திரௌபதையும், பாண்டவரைவரும் ஓரிடத்தில் பொருந்தி, ஐயா! பிராமண குமாரனாகிய அசுவத்தாமனுக்கு நமது பேரில் இவ்வளவு அடம் வருவானேன்? இப்பேர்ப்பட்ட கொலைகள் செய்வானேன்? இவனுக்கென்ன வந்தது பங்காளியா? பகையாளியா? இவனாரவன்? இவனுக்கு இவ்வளவு க்ஷாத்திரமென்ன? மேலும், யாவரையும் வெல்லத்தக்க வல்லபமும் பூரணமா யிருந்ததே; இவ்வளவு ஆற்றல் வந்தது எவ்விதமென்று பாண்டவர் கேட்க, கட்டுத்தறியைப் பெயர்க்கும் பட்டத்து யானையையுடைய வஞ்சகக் கஞ்ச மாமனுயிரை எஞ்ச அடித்து முடித்த அஞ்சன மேனியான் அருளிச் செய்கிறார்: ஓ கடல் சூழ்ந்த காசினிமுழுவதும் வெண்குடை நிழற்படுத்தியாளும் பூவலராகிய காவலரே! எல்லாருடைய பலமுங்குன்ற வென்றானென்று எண்ணுதீர்கள். அந்த வல்லமை இவனுடைய ஆண்மையால் விளைந்ததல்ல. சுடரம்பகச் சோமசுந்தரர் அருளால், இவன் வென்றதன்றி வேறில்லை. இதுவே துணிபாயுணரமின்கள். அவனருள் புரிந்தால், ஆர்தான் திருந்தார். ஓ ஐவர்களே! அப்படி யிருந்தபோதிலும், முடியும்படியாகிய ஆயுசு முடிந்தாலொழிய, ஒருவருக்கும் அனுக்கிரகம் பண்ணமாட்டார் உலோக நாயகனாகிய உமையாள்பாகன். ஆனதால், அச்சிவபெருமானைப் போற்றிப் பூசிக்காத பேர்கள் யானையைச் செயிக்குஞ் சிங்கம்போ லிருந்தாலும், சிவபூசா விதியினுடைய புண்ணியர்களின் கண்ணெதிர் நிற்கமாட்டார்கள். பெருமையால் உயர்ந்த பிரமாதிகள் முதலியபேரும் அறியப்படாத வேத முதல்வனாகிய சிவபெருமானைப் பேணிக் காணுதவர் பொன்னகரானும் மன்னர்களெனினும் அவர்கள் சின்னவர்களே; நேரே கண்காட்சியாகக் கண்டு தரிசித்துப் போற்றிய பேர்கள் கீழ்மையோராயினும், அவர்கள் நினைத்த காரியம் முடிக்குஞ் செயலினையுடைய இமையவர்களே.

ஆலகால விடத்தைக் குடிவைத்த கண்டத்தையுடைய அரன், அபிராமியை இடப் பாகத்திலுடைய ஆதிசிவன், சூலாயுதம் பிரகாசிக்குஞ் சங்கரனுகிய சுடர்கங்காளன், எமனுவிதொலைத்த காலகாலன், ஆதிமத்யாந்தமற்ற தனிமுதல் முக்குணவடிவோன், பிரபஞ்சத்தை விளைவிக்குமூர்த்தி, முத்தொழிலை நடத்தும்பெருமான், முடிவில்லாதவன், வடிவில்லாதவன், அதீதப்பொருளானவன், மூளைக்குஞ்சுடர்போன்றவ னென்றாலும் அடியார்க்கெளியவனுதலினால், ஆசான்மகனுகிய அஸ்வத்தாமன் மனோபக்தியினுலும் அன்பினுலும் பூமியிற்படிந்து தொழுதுபோற்றி, அவருடைய அநுக்கிரகக் கருணைவளத்தினால், ஒரு வாளாயுதம் பெற்று, அதனுடைய பலத்தினால் யாவரையும் மடிவித்தான். அரனளித்த அந்த வாளுக்கு எந்தப் பெரியவாளும் எதிர்த்து நிற்கமாளாது. எதிர்நின்று, உயிர்மீண்டு பிழைப்பவர் இவ்வுலகத்தில் இயாவருமில்லை. அந்தப் பரம்சிவனுடைய செயலினால், இராத்திரிப்போது உங்களை இவ்விடம்விட்டு, நீக்கப்பட்டது. அவனருளினால் இயாதொரு துன்பமுமில்லாமல் நீங்களைவரும் பிழைத்தீர்கள். அப்படிக்கில்லாமல் இராத்திரி தினம் இந்த அஸ்வத்தாமனுக் கெதிர் நேரிட்டிருப்பீர்களாகில், அணிமணியணிந்த திணிந்த புயமுடைய ஐவர்களே! விருதாவாயுங்களை நாசப்படுத்தி விடுவான். நீங்கள் தப்பிப்பிழைத்தது நீரணிந்தோன் கிருபையென்று நினையுங்கள். குற்றமற்றவர்களே! பொன்மலையை வில்லாக் கொண்டருளிய சந்திர சடாமண்டலதாரியானவர் பூர்வத்தில் திருவருள் பூரித்தருளிய சில விளையாடல்களைசொல்லுகிறேன். அவைகளை உங்களுடைய காது குளிரவும், கண்கள் ஆனந்த பாஷ்பம் சொரியவும், நெஞ்சம் களிகூறவுங் கேளுங்க ளென்று கோவர்த்தனகிரியால் மழை தடுத்தருளிய கோபாலன் சொல்லத்தொடங்கினர்.

ஓ என்னிருதயம்போன்ற ஐவர்களே! பிரம கர்ப்பந்தோறும் ஸ்ரீமந்நாராயணனுடைய உந்தியிலிருந்து ஒரு தாமரைமலரானது புஷ்பிக்கும். அந்தக் கமலமத்தியிற் பொன்வண்டு வாசஞ்செய்யுந் தன்மைபோற் பிரமதேவன் உட்புலன்களை யடக்கி, சிற்பரனுகிய சிவபெருமானை சிந்தையுளிருத்தி, நெடுநாள் நீங்காத் தவஞ்செலுத்திக் கற்பனையாகிய இவ்வுலக சிருட்டியைத்தொடங்கி நடத்துவான். இப்படியே பிரம கர்ப்பந்தோறும் நடந்துவரத்தக்க முறைமை. இது பழமையாயிருப்பது இதை நீங்களறியுங்கள். அப்படியிருக்க, ஓர் பிரமகற்பத்தில் அரிவாசுதேவனுடைய உந்தியந் தாமரைமலர்ந்து அதிலுதித்தெழுந்த பிரமன் செந்துவர் வடிவாஞ் சிவனை மதித்து உள்ளத்தில் நினைத்து, வேதவிதிப்பிரகாரந் தவஞ்செய்து வந்தான். இவனுடைய தவத்துக்கு எந்தையாகிய ஜெகதீசன் வெளிவந்ததில்லை; அதனால் இந்தப் பிரமன் வெகுகாலந் தொழுதுஞ் சிவபெருமான் தரிசனமாகவில்லை யென்று மனம்வேசாறி, தவம்விட்டெழுந்து, தனது வலதுகாற் பெருவிரலில் தக்கனென்று ஒரு மகனைத் தந்து, அவனுடைய சார்பினால் உயிர்த்தொகைகள் உண்டாகும்படியாய் நடாத்தி, அந்த உயிர்களுக்கு உணவு முதலியதுந் தக்கபடி ஏய்ந்து, உலகத்தை விர்த்தி செய்துகொண்டு தாமரைத் தவிசேறி யிருந்தான் அந்தச் சதுர்முகனுனவன். அப்படிக்கிருந்த பிரமன் இவ்வுலகத்திற் பெரிய உடலெடுத்த பிராணிகளுக்கும், சின்ன உடலெடுத்த பிராணிகளுக்கும், கிழங்கு இலை காய்கனி இவைகளைப் புசிப்பாகப் புரிந்து வருநாளையில், ஜெகமெல்லாங் கும்பாகிய உயிர்த்தொகை நிறைந்தன. அப்படி யிருக்கு நாளில், தக்கனுனவன் குற்றமில்லாத ஒரு வேள்வி செய்ய வேண்டுமென்று கருதி, சகல தேவர்களுடனுஞ் சேர்ந்து ஆலோசித்து, தந்தையாகிய பிர்மாவைப் புரோகிதனுக வமைத்து அந்த யாகத்தைச் செய்து வந்தான்.

அந்த யாகத்தில் எல்லாத் தேவர்களையும் வேத மந்திரங்களால் அழைத்து, அவிர்ப்பாகங் கொடுத்து, முக்கண்ணுடைய அண்ணலை நீக்கி முடித்தான். அக்கால், தேவர்களெல்லாரும்விரைந்து அவிர்ப்பாகம் பகுந்துகொள்ள அப்போது எல்லாக்கடவுளும் எல்லா பூலையும் எல்லாவுயிருந் தானுகியிருக்குஞ் செஞ்சடைக் கடவுளாகிய சிவபெருமான் இந்தச் சங்கதி தெரிந்து, உள்ளம்அழன்று உருத்தெழுந்து, பூவுலகம் பிளக்கும்படியாய் விழுந்த ஆணிடியைப்போல் அயன் முதலாயினேரோடுந் தட்சகன் செய்யும் யாகத்தி லெய்தி, மூவுலகத்தையுந் தாங்கிய கனகாசலமென்னும் மேருவை வில்லாக வளைத்து, தேவவுலக முதலியவும் அயர்ந்து மயங்கி அஞ்சும்படியாய் நாணொலி செய்து, இயாவரும் அவனுடன் சேர்ந்து இயற்றிய மகச்சாலைக்குட் புகுந்தார். தக்கனை

யும், எச்சனையும், இன்னுமுள்ள பேர்களையும் முனைச்சிலைப் பாணங்களினால் அக்கணமே உயிரகற்றி, மிகுந்த திறலுடைய தேவர்களையும், விரிஞ்சனையும் வெகுண்டு, அந்த யாகத்தில் தமது திருவடிவாகாரமாய் நின்று முளைத்தருளிய இலிங்கத்தை ஆண்டோர் புவியிலழுந்தவெடுத்து வீசினார். அப்பால், மாண்டுபோன தக்கன் தவிர மற்றஎச்சனையும் வானவர் முதலாகிய பேர்களையும் வாரிவாரி யாகாக்கினியிலெறிந்தார். நீங்கள் என்னையல்லாது வேறுவினைசெய்ய உரியவரானீர்களல்லவா? எனக்கு அவிர்ப்பாகங் கொடுக்காமல் யாகஞ்செய்தீர்களல்லவா? என்று இயாவரையும் உயிர் நடுங்கும்படியாய் மருட்டி, ஒட்டுபற்றில்லாமல் எவரையு முடித்திடுவேன் என்று கையிலிருந்த வில்லைக் கணகணவென்று அசைத்து, கடுவேகத்துடன் ஒரு க்ஷணத்துக்குள் நாணிபூட்டி மீண்டும் ஷ்டங்காரஞ் செய்தார்.

இப்படி திகாந்தவரைக்குங் குப்புற்று கவலைகொண்டு வெப்புநோய் கொள்ளத்தக்கதாய்க் குணத்தொனி பண்ணியபோது, சூத்திரகயிற்றெழிந்த பொம்மைப்போல் ஆத்மகோடிகளெல்லாம் அசைவற்று அயர்ந்து, இயற்கையாகிய உலகசக்கரங் க்ரகரவென்று சுழன்று, சந்திரசூரியர் தாராகணங்களாகிய இவைகள் எல்லாஞ் சஞ்சரித்தலில்லாமல் ஒட்டி வைத்ததைபோற் கலங்கியதுகள். மலைகள் முதலிய சக்கிரவாளமும் நெக்குவிட்டு தெரிந்ததுகள். அலையுடன் கூடிய கடலுஞ் சுவறிப்போயது. அங்குள்ள பிர்மா முதலிய தேவர்களியாவரும் நடுநடுங்கி யொடுங்கினார்கள். அண்டகடாக மனைத்தும் வாய்விட்டன. அப்போது தேவரனைவரும் எந்தமலைகளானாலும், எந்தக் கடல்களானாலும், எந்த உலகுகளானாலும், எவ்வுயிர்த் தொகைகளானாலும் இப்பெருங் கடவுளினுடைய கோபத்தினால் அழியாது நிற்குமோவென்று எண்ணி எஞ்சியிளைக்க, அவருட் பெருந்தேவராகிய திருமாலும், நான்முகனும், மற்ற முனிவர்களும் இருக்குவேத முதலிய உபநிடதங்களையுஞ் சாஸ்திரங்களையு மெடுத்து மொழிந்து, துதித்து வழுத்தி, சிவபெருமானுடைய திருவடியை சிரத்திற்சூடி, தப்பில்லாமல் ஸ்துதி பாடி, ஓ ஆண்டவனே! ஏழைகளாகிய எங்களுடைய பிழைகளையெல்லாம் பொறுத்துத் தேவரீருடைய கண்ணளியாகிய கிருபைபுரிந்தருளி ரக்ஷிக்கவேண்டுமென்று போற்றிப் புகன்றார்கள். இப்படி திருமால் முதலிய மேலவர்கள் வீழ்ந்து வீழ்ந்து இறைஞ்சுதலை கங்காதரன் பார்த்து, நாளநளின நாபனாகிய நாரணன்மீது அருள்புரிந்து, அசரீரி வாக்கியமாக ஒன்று விளம்பும்படிக்கு எம்மையாளுடைய பெருமான் அருளிச்செய்தார்.

அதாவது ஓ நாரணனே! ஆதிபகவானாகிய ஐமுகன் அனல்மயமாயிருக்கிறபடியால், அதிசீக்கிரத்தில் நீ ஒரு மூஷிகத்துருவு கொண்டு, அவருடைய கையிலிருக்கும் நாணியைக் கடித்து அறுத்துவிட்டு, மூண்ட சினத்தை மாற்றி விடுகவென்று ஓர் வாக்குண்டாயது. இப்படி அந்தரத்தெழுந்த வார்த்தையை மந்திரம்போல மாதவன்கேட்டு, மகா தந்திரமாய் அப்போதே மூஷிகத்துருவெடுத்து வின்னாணியை அறுத்தனர். உடனே பரமசிவனுக்கு அரிதாகிய கோபமகன்று, அந்தக் கோபத்தைச் சமுத்திரப் பாங்கரின் விடுத்து, கிருபையுடன் முகமலர்ந்து அருணகைகாட்டி, தக்கனுக்குத் தலையருளி, மெய்யாகிய தேகமிழந்தவர்கள், அவயவமற்ற பேர்கள், இவர் யாவர்களையும் மறுபடி உய்ந்தெழச்செய்து அருள்புரிந்து, கறுத்த கடல்சூழ்ந்த உலகத்தை முன்போற் கலங்காதிருக்கவருளி, மாலும் அயனும் மகிழ்ச்சி பெறும்படி செய்தார். அப்பாற் செம்மையுளத்தோராகிய முனிவர்களெல்லாம் நெருங்கி, புனிதனாகிய புராந்தகனுக்கு உள்ளமகிழ சிறக்கும்படியாய் வேறொரு யாகஞ்செய்து, தேவாதி தேவனாகிய அப்பெருமானுக்கு அவிர்ப்பாகங் கொடுத்தார்கள். அதனாற் பரமசிவன் உள்ளமகிழ்ந்து, இம்மைப்பயனும் மறுமைப்பயனும் அவர்களுக்குக்கொடுத்து, அவர்களுடைய அன்பையும் பத்தியையும் வியந்து, அக்கரைக்கண்டராகிய கண்ணுதல் ஓர் சிம்மாசனத்தினடுவில் வீற்றிருந்தனர். பக்கத்தில் நிறைந்திருந்த வானவரெல்லோரும் புளகாங்கிதங்கொண்டு போற்றிப் புகழ்ந்தார்கள். வேள்விசெய்த முனிவர்கள் யாவரும் வேதாகமங்களாற் றுதித்தார்கள்.

அரிபிரமர் சரித்திரம்

அப்பால் ஆண்டவையாகிய ஆதிசிவன் ஆசனம்விட்டு எழுந்து, நான்மறை கறங்க நாரணன்முதலிய நாகருநெருங்க அந்த யாகத்தினின்றுமெடுத்து வீசிய இலிங்கமிருந்த

திசையை யடைந்தனர்; அந்த இலிங்கத்தை
யாவருங்கண்டுக்கண் களித்துப்பார்க்கும்போது,
அக்கினிவடிவாய் அகண்டமூடுருவி, பாதல
மெல்லாங் கடந்து அநேகங்கோடி சூரியப்பிர
காசம்போல் ஒளிதிகழ்ந்திருந்தது. அந்தத்
திருவுருவை நாரதர் முதலிய பேருங் கண்டு
நடுங்கிப் பயந்து, துதிக்கப்பெற்ற யானை யுரி
யைத் தரித்த வீரட்டேஸ்வரரைப் பணிந்து,
அவர் திருவடியைப் பூசித்துத் தொழுதனர்.
அப்போது கருத்த முகில்வண்ணனாகிய நாரா
யணனும், அயனும் அவ்விடத்தில் இந்தக்
கொழுங்கனல் ஏதென்று காலகாலனைக் கேட்
டார்கள். அதற்கு ஆதிபண்டாரங்கள் அவர்
களைப் பார்த்து, ஓ அன்பர்களே! அதனுடைய
வரலாற்றைப் பின்னால் உங்களுக்குச் சொல்கி
றேன். இந்த இலிங்கத்தின் அடியையும் முடி
யையும் அறிந்து வருபவரெவர்களோ அவர்
களே தகுந்த பிரம முதன்மை யுடையவரா
குவர். ஆனதால் எங்கே பார்ப்போம்? நீங்கள்
அடிமுடி உணர்ந்து உரையுங்களென்று திரு
வாய் மலர்ந்தனர். உடனே மைக்கடனிறத்தோ
னாகிய மாயன், வராக வுருவெடுத்து இலிங்கத்
தின் மலரடியைக் காணும்படியாய்ப் பாதலம்
புகுந்தார். பிரமதேவன், அன்னப் பக்ஷியாய்
ரூபிகரித்து அந்த இலிங்கத்தின் முடியைக்
காணும்படியாய் உயரப்பறந்தான். பொன்னு
லகத்தோர் முதலிய பேர்களுடன் புராரியான
வர் அவ்விடத்திற் பொருந்தி யிருந்தார். ஓ
பாண்டவர்களே! அடிமுடி தேடப்போன விஷ்
ணுவும் பிரம்மாவும் அளவில்லாத நெடுந்தூ
ரஞ் சென்று எத்தனையோ யுகங்கள் எத்த
னையோ ஊழிமடங்கல் கழிந்துங் காணமாட்
டாமல், அலுத்து கலகலத்து விலவிலத்து
அடிமுடி அறியாதவர்களாய் வாடி வதங்கி,
சொற்சோர்வுபட்டுத் திரும்பிவந்து தியக்கங்
கொண்டு, சிவன் முன்னின்று மயக்க நீங்கிய
மனத்தராய் இதனை யுரைத்தார்கள்.

ஓ திரிநேத்திர தாரியாகிய தேவாதிதே
வனே! தேவரீர் ஸ்வரூபத்தின் அடிமுடியும்
அறியப்படவில்லை. இனிமேற் றேடிப்போக
வேண்டிய இடமுமில்லை என்றார்கள். அவர்க
ளுடைய சொல்லை ஆதிசிவன் கேட்டு, அருள்
நகைபுரிந்து அந்த இலிங்கத்தை அண்டமுட
னளாவிப் பிரகாசிக்கும் படியாகிய அக்கினி
மலையாக்கி, இம்மலையை நினைக்கமுத்தி என்று
பிரம்மாவுக்கும் விஷ்ணுவுக்கும் அருளளி
த்து, இவ்விடத்தில் மலையாக முளைத்து விளங்
கிய இந்த இலிங்கம் மெத்தவும் உறுதியுடை
யது. இந்த இலிங்கத்தைப் பூசனை புரிந்த
பேர்களுக்கு இம்மைப்பயன் மறுமைப்பய
னோடு சகல நன்மைகளு முண்டாம் என்று
உமாபதியார் அனுக்கிரகஞ் செய்தருளினார்.
இப்பால், இந்திரன்-பிர்மா-விஷ்ணு-திக்குப்
பாலகர்-சந்திர சூரியர்-மற்றத் தேவர்கள் முத
லாயினோர் தற்பரனுரைத்த திருவாய்மொழி
யைச் சதுர்வேதாந்த சித்தாந்தமொழியாகத்
தலைமேற்கொண்டு, அம் மலைவடிவத்தை அன
ந்தமுறை பூசித்து, தங்கள் தங்க ளபிமானத்
தால் வெவ்வேறான பல இலிங்கங்கள் அமைத்
துப் பூசித்து; பின்னும் வேறு வேறு ஸ்தல
மும், தீர்த்தமும் ஏற்படுத்தி வைத்தார்கள்.
இவ்வண்ணம் அரிப்பிரமர்களாலும், மற்ற
அமரர்களாலும் பூசித்த அந்தச் சிவமூர்த்த
மாகிய பெருலிங்கம் எவரெவர் எந்தெந்தத்
திசையை நாடினார்களோ, அவரவர்களுக்கு
அந்தந்தத் திசையிற் காட்சியாய், ஐந்து
வாண்முகமுஞ் செவ்வண்ண மேனியுங் கொ
ண்டு, பிரகாசமுந் தீபச்சுடர்போலோங்குறும்
படிக்குத் திரியம்பகத் தோற்றமாகி, துன்ப
மில்லாத சிந்தையையுடைய தூயோருக்கு,
அவர்களிஷ்டப்படி நல்லவழி யீய்ந்து, அவ்
வழி பிரமாதி அமரர்களுக்கும், மற்ற உயிர்
வருக்கங்களுக்குங் காட்சியாகும்படி தாட்சி
யில்லாமற் சர்வசாட்சியாய் எல்லாப் பிரளயங்
களிலும், ஆட்சியாய் அமர்ந்து வாழ்ந்திருக்
கின்றதென்று மகதியாழ் முனிவராகிய
நாரதமகாமுனியும், வேதங்களை விரித்தருளிய
ஸ்ரீ வேதவியாசரும், மார்க்கண்டேயர் முதலா
கிய மாதவத்தோருஞ் சொல்லுவார்கள்.

## சந்திரன் சரித்திரம்

ஓ வீரலட்சுமிமருவுந் தீர புயத்தையுடைய
பாண்டவர்களே! ஒருவராலும் அறிதற் கரு
மையாகிய உமாபதியின் பராக்கிரமத்தைப் பிர
சங்கஞ் செய்வதற்கு என்னைப்போலொத்தவர்
களால் மெத்த அருமையா யிருக்கும். ஆயி
னும், அவரருட்டிறத்திற் சிலவற்றைச் சொல்
லுகிறேன் கேளுங்கள். சிருட்டி கர்த்தாவாகிய
பிரம்மதேவருடைய வலதுகாற் பெருவிரலிற்
பிறந்த அச் சிறுவிதியாகிய தக்ஷகன், சிறந்த
சம்பத்திற் சீர்பெற்று வாழ்ந்துவரு நாளை
யில், யாவரும் மெச்சும்படியான உச்சித அழ
கினையுடைய இன்சொற்றிருவுக் கொப்பான,
அச்சுவினி - பரணி - கார்த்திகை - உரோ
கணி-மிருகசீரிடம்-திருவாதிரை- புனர்பூசப்-

பூசம்-ஆயிலியம்-மகம்-பூரம்-உத்திரம் - அஸ்
தம்-சித்திரை - சுவாதி-விசாகம்-அனுஷம் -
கேட்டை - மூலம்-பூராடம்-உத்திராடம்-திரு
வோணம்-அவிட்டம்-சதயம்-பூரட்டாதி-உத்
திரட்டாதி - ரேவதி-என்று சொல்லப்பட்ட
இருபத்தேழு பெண்கள் பிறந்து வளர்ந்து
சிறந்து, குறைவற்ற நிறைவுற்ற முறையுற்ற
பொறைகற்ற கற்புடைமை யுள்ளவர்களா
யிருந்தார்கள். அதுகண்ட விற்பன விவேகி
யென்னும் அற்புத சுதாகரனாகிய சந்திரன்,
அவர்களை மணஞ் செய்துகொண்டு மருவிவா
ழ்ந்து இன்பம் நுகர்ந்துவருங் காலையில்,
அழகில் அளவிடப்படாம லடைந்த உரோ
கணியினிடத்தில்ஆழ்ந்து,மையலாற்றுழ்ந்து,
மோகக்குழியில் வீழ்ந்து மற்றப் பெண்களி
னுடைய முகத்தை நோக்காமல் மருவி வாழ்
ந்து வருகிறான். அதை மற்ற இருபத்தாறு
பெண்களுங்கண்டு மனந்தாளாமல்முகம்வாடி
புருஷனை வெறுத்துவிட்டு, தங்கள் தந்தையை
அடுத்து சிந்தைநொந்து மெலிந்துமுனிந்து,
தங்களுக்கு நேரிட்ட முறையாகிய குறையை
மொழிந்தார்கள்.

அந்த வார்த்தைக்கேட்ட தட்சகன் கோ
பங்கொண்டு, இட்சணம் பட்சணம் பண்ணிப்
போடுகிறேனென்று அந்தபெண்களை அழைத்
துக்கொண்டு தட்சணம் அத்தட்சகன் வந்து
தண்மதியாகிய மருகன் முகத்தை நோக்கி,
ஓ மேலாகவுயர்ந்த நூலாய்ந்தவனே! நான்
தாராதத்தம் பண்ணிக் கொடுக்க, நீ அக்கினி
சாட்சியாகத் தாலிகட்டிக்கொண்ட கருங்குழல்
மடவார் யாவரையுஞ் சமமென நினைத்துப்
பேதமில்லாமல் ஆண்டு அனுபவித்து வர
வேண்டியதேயன்றி,யாவரையும் விலக்கிவிட்டு
ஒருத்தியின் பேரில் மாத்திரம் ஆசைவைத்து
நேசமாய் யின்பம்நுகர்ந்துவருவது நீதியோ?
நெறியோ? சொல்லுக என்று பலவாறாக
வெறுத்து கோபமடங்காமற்குதித்து பின்னும்
நிதானித்து நல்லதாகட்டும்; இன்று முதற்
கொண்டு இருபத்தேழு பெண்களும் இன்
புறும்படியாகச் செய்து ஒருமையுடன் வாழ்
வையாகில் நன்காகிய பெருமையாம். நான்
சொல்லிய வார்த்தையைத் தள்ளி நடப்பை
யாகில் நீ துன்புறும்படியாய் நான்கொடிய
சாபமிடுவேன் என்றுரைத்துப் பெண்களுக்
கும் புத்திமதி சொல்லி விடுத்துப்போயினான்.
அவனப்படி சொல்லியிருந்தும் வெற்றியை
யுடையசந்திரனானவன், புத்திமயங்கி அந்தத்
தட்சகனுடைய பேச்சை யோசித்து நிதானிக்
காமலும், தன் புத்தியைக்கொண்டு தானே
தெளிந்து தெரிந்து கொள்ளாமலும் பழைய
மாமூற்படியே உரோகணியினிடத்திற் பட்சம்
பாராட்டி வந்தான்.

அப்போது முருந்தென்றும், முத்தென்
றும், முல்லையரும்பென்றுஞ் சொல்லும்படி
யாகத் திருத்திய பல்லையுடைய நகை, நல்லா
ரெல்லோருஞ் சிலநாள் வரையிலும் இருந்து
பார்த்து திங்கள் நாயகன் தங்களைச் சேராமை
யால் வாடி, பழைய கலகத்தைத்தேடி, இருபத்
தாறுபேரும் ஒன்றாகக்கூடி கறுத்து வெளுத்த
கண்களிலிருந்து ஓடிவருங்கண்ணீரை முத்து
முத்தாய்க் கனத்த தனத்தில் உகுத்து உதிர்
த்து, தந்தையிருக்கும் இடத்தைநாடிப்போய்
முறையிட்டுச் சொன்னார்கள். இவர்களின்
வசனத்தை தட்சகன் கேட்டு மனம் புழுங்கி,
கனலெனக்கனிந்து, காரென இடிந்து, கட
லெனமிரைந்து, கால்கடுகிவந்து,கலைமதியைச்
சினந்து என்பேச்சைக் கடுகத்தனையுங் கருதா
மற் போனையல்லவா? நீ தாம் வடிவழகிற்
சிறந்திருக்கின்றோ மென்னும் ஆங்காரத்தினா
லல்லவா என்னை மதிக்காமற்போனாய்? உன்
னுடலில் மருவியகலையானது தேய்ந்து தேய்
ந்து, நாள்தோறுங் குறைந்து உலையக்கடவ
தென்று சபித்தான். அந்தத் தட்சகனிட்ட
சாபத்தினாற் சந்திரன் ஓய்ந்து சாய்ந்து, நிலை
தளர்ந்து,கலைகுறைந்து, தலைவளைந்து,ஆகாய
மெங்கும் புகுந்து புகுந்து உலாவி வருவ
தானான். அதைத் தேவர்கள்கண்டு, தங்கள்
பத்தியாற்றெளிந்து; சந்திரனுக்கு இதனைச்
சொல்லுவதானார்கள். ஓ உடுபதீ! உன் மாம
னாகிய அந்த தட்சகன் புகன்ற சாபத்தை
நீக்கும் நிர்வாக முடையவர் சிவபிரானன்றி
வேறொருவரையுங் காணோம். ஆதலால், தீன
ரட்சகனும் அன்பர்க்கெளியவனுமாகிய நீல
கண்ட மூர்த்தியைத் தியானித்து விரதமநுட்
டிப்பையாகில், உனக்கு வந்தசாபம் நீங்கிப்
போகுமென்று சொல்லிப்போயினர். பின்னர்
அந்தப்படியே நீங்கிய தோள்வாய்ந்த சந்தி
ரன் விரைந்து, அந்த அரன்றாள்போற்றி
விரதம் அனுஷ்டித்து வந்தான்.

இப்பால் அவ்விரதபலத்தினால் பரமசிவ
னானவர், பார்வதியாருடன் ரிஷபவாகன ரூட
ராய், சமஸ்தான தேவகண பூதகண சேவித
ராய் சந்திரனுஞ் சூரியனுங் கூடிய அமாவா
சையிற் பிரசன்னமாய் அநுக்கிரகஞ் செய்தரு

ளினர். ஒரு கலையுடனிருந்த சந்திரனானவன், அன்றுமுதல் உமாபதி கருணைசெய்த உரத்தினால், தன்னை பொறுத்து நீங்கிய கலைகளெல்லாம் ஒன்றொன்றாய் நிரம்பவும், மறுபடி ஒன்றொன்றாய்க் குறையவும் நேரிட்டன. முழுமையுங் குறைந்த கலைகள் இப்படி வளரவுங் குறையவு நேரிட்டதே தனக்குப் போதுமான சந்தோஷமடைந்து வெற்றிகொண்டு, மேலுலக முதலிய ஏழுலகத்தையும் விளக்கிக்கொண்டிருந்தான் விதுவென்னும் பெயர்பூண்டவன். இந்தச் செய்தியைச் சிறுவிதியாகிய தட்சனறிந்து, ஓ! ஓ! மோசம் வந்தது; சிவபெருமானுடைய அருளைப் பெற்றமையால் இனி நம்மை மதிக்கான்; நாமிட்ட சாபமும் பழுதாகும். சீக்கிரத்தில் நாம்போய்க் கலந்து கொள்வது உத்தமமென்று, சில தேவர்களையுமழைத்துக்கொண்டு தன் பெண்களுடனே திங்களிடத்திற்கு வந்து, மருமகனை யழைத்துத் தழுவி ஆசிபுகன்று, அவன் மனதில் ஒருத்தி பட்சமாயிருந்த மையலை உற்ற மற்ற இருபத்தாறு மாதர்களிடத்தும் இடையறு திருக்க இனிய மொழியா லிசைவித்து, நன்னெறியின்படியே ஒவ்வொரு நாளைக்கு ஒவ்வொரு ஸ்திரீயுடன் கலந்து இன்பநுகரென்றிசைத்து, மறுவில்லாத மாதர்களையும் அவனிடஞ் சேர்த்து, மரியாதை மகிழ்ச்சி மகத்துவங்களையுங் காத்துக்கொண்டு விடைபெற்று மீண்டு தன்னகரம்போய்ச் சேர்ந்தான்.

## அங்கணமுனிவர் சரித்திரம்

ஓ என் மைத்துனர்களே! அந்தச் சாம்பவ மூர்த்தியினுடைய கிருபையின் விநோதத்தைப்பற்றி மற்றொரு சரித்திரங் கூறுகிறேன் கேளுங்கள்: அழகிற் சிறந்த சரஸ்வதி தீரத்தில் அங்கணனென்னும் ஓர் அருந்தவமுனிவருளர். அந்த மகானுபாவர், கிழக்கு-மேற்கு-தெற்கு-வடக்கு கீழ்மேல் பல யோனியுயிர் என்னும் ஏழு மருத்துக்களென்று பெயர் பெற்றவர்களை அறிந்து ரட்சித்த மௌனி யென்பார்கள். அப்பேர்ப்பட்ட முனிவர் இந்தக் கர்மபூமியில் தருப்பையைப் பிடித்துத் தவஞ்செய்திருந்தார். அவருடைய தபாக்கினியினால் ஏழுலகமுந் தேவர்களும் வெதும்பி வெந்து, வெகுண்டு பயந்து, வேதபுராதனனாகிய வெள்ளியங்கிரி விமலருடைய பாதத்தில் வீழ்ந்து தாழ்ந்து தபாக்கினியில் வருந்திய சஞ்சலத்தைச் சொல்லி முறையிட்டார்கள். அவர்கள் கூறிய முறைக்கிரங்கிய பரமசிவன் ரிஷபவாகனருடராய் தவச்சாலைக்கு வந்து, அங்கணனாகிய வேதமுனியை நோக்கி, தவத்தைவிட் டெழுமென்று சாற்றினார். அதற்கத் திரிகாலக்கியானியாகிய முனிவர் மௌனமாக யிருந்தார். அதைக்கண்ட மைக்காள விஷத்தை மணிகண்டத்தடைத்த மகாதேவர் மனங் கறுத்து, அவ்விடத்தி லிருந்த அழகிய ஒரு கல்லைத் தமது விரலினாற் தட்டினார். தமது விரலுங் கல்லுஞ் சம்மந்தப்பட்டபோது, அங்கணமா முனிவருடைய தேகமும், வெவ்விய கனலால் வெந்த நீறுபோலாகி, வெதும்பி வீழ்ந்து மறுபடியும் எழுந்திருக்க மாட்டாதவராய்க் கண்ணைத் திறந்து கங்காநதி பெருக கெடுத்தொலிக்கும்படியாகிய கொன்றை மலரணிந்த சடையானைப்பாடி, அவருடைய திருவடியில் முடிபொருந்தவும், உடலம் பூமியிற் படியவுங் கண்ணீர் வடித்துருகி இதனைக் கழறுவதாயினர்.

ஓ கருணாகரக்கடவுளே! தேவர் சிந்திப்பீராகில் உலகுண்டாம்; அநேக உயிர்களுமுண்டாம்; அழகிய முத்தொழிலு முண்டாம்; அடியேன் தேவரீருடைய குழந்தை வேதாகமாதிகளாற் சொல்லும்படியான தவமும், அத்தவத்தின் பயனும், அப்பயன்களெல்லாம் உதிக்குமிடமும், ஒடுங்குமிடமுமாகி யிருக்கின்றீர். உம்மையும் உமது திருவட்டிறத்தையும் ஒருவரால் நிதானித்தற் கெளிதோ? என்று இப்படி பலவாறாகப் புகழ்ந்து, ஏத்தி வாழ்த்தி இறைஞ்சி, தேவரீரை இவ்விதமென்று தெரிந்துக் கொள்ளப்படாத தீவினைக்குச் சொந்தமாகிய விவேகமற்ற உன்னைக் காருண்ணியத்துடன் சந்தோஷித்து ஆண்டருளக் கடவதென்று அங்கணமுனிவர் அரற்றவும், அருவி பொங்கும் அணிமுடிப் பரமன் அனுக்கிரக முடையவராய்க் கருணைகூர்ந்து, சிறுநகைசெய்து உன்னுதற்கரிய முன்னைய தவத்தை அன்னவன்றனக்கு அருளமீண்டுரைப்பார். ஓ அன்பனே! நீ புரிதவத்தால் நிலத்தில்வாழ் உயிர்கள், காருறைப்பதியோர் கருது மெய்ச்சுத்தர், யாவுந் தீயால் அலுத்துச் சலித்தார், துன்றிய துன்பத் தொடக்கினை நீக்கி, இன்றவர்க்கெல்லாம் இன்ப மளித்தோம், இன்று முதலாய் இயற்றுக தவங்கள், ஒன்று நூறாக ஓங்கும் விருத்தி, வாழ்தியென்றருமறை வாசகமோதி, ஊழி வாழ் பெருமான் ஊர்ந்தனவிடையே.

## சண்முகதேவர் சரித்திரம்

கேட்டீர்களோ பாண்டு நந்தனரே! அச்சிவபிரானுடைய பெருங் கீர்த்திப் பிரதாபத்தைப்பற்றி மற்றொரு திவ்விய சரித்திரஞ் சொல்லுகிறேன் கேளுங்கள். ஆத்திமாலையும், கங்கையு மம்புலியும் புனைந்த சடா மகுடத்தினையுடைய சாம்பவமூர்த்தி, ஓர்கால் ஆறுமுகத் திருக்கோலங்கொண்டு உமாதேவியுடன் கயிலாயவரையி லெழுந்தருளி இருக்கும்போது, அவரது நெற்றிக் கண்களாலினு மிருந்து எழுந்தருளிய வரூர்ந்த தீப்பொறியாறு மீதார்ந்து, உலக முடிவாகிய சம்ஹார கிர்த்தியத்தைக் காட்டி எரிப்பதாயின. அப்போது அம்பரவாணர் முதலாகிய யாவரும் புகைந்து கரிந்து பொரிந்து எரிந்துபோங் காலத்தில், புண்ணியர் முதலிய யாவரும்வந்து புராரியைப் பொறுமை கேட்டார்கள். அப்போது, சாம்பவ மூர்த்தியாகிய அனகனவர் அருளுடனிரங்கி, அந்த ஆறு பொறியையும் அதிசீக்கிரத்தி லழைத்து, அவற்றின் வேகத்தை அமர்த்தி, அக்கினிதேவனுடைய சிரசிலேற்றி நிறுத்தி, ஒரு மொழியும் சொல்லாதிருந்தார். அந்த ஆறு பொறிகளையும் ஏற்றுக்கொண்ட அக்கினிதேவன் தாளாதவனாய், தானெல்லா வஸ்துக்களையுஞ் சுடுவதுபோல தன்னைச் சுடுகின்ற தற்பரன் பொறியால் தத்தளித்து, உலகமெல்லாமோடி, உய்யுமிடந்தேடி, திருமலர்மேலுற்ற ஒப்பற்ற வேதியனாகிய பிரம்மாவினுடைய திருவடியில் வீழ்ந்து பெருமையுடன் பணிந்து, இச்சிவாக்கினிப் பொறிகளை என்னால் சகிக்க முடியாது. நீர் என் பிராணனைக் காப்பாற்றிவிடும் என்று மெத்தவுமிரங்கி வேண்டினான். அப்போது பிரம்மா தியானத்தால் உணர்ந்து, சிவபெருமானருளிய சிறு வெம்பொறிகளாறையும் யோசித்து, பகீரதி நதியினிடத்துச் செலுத்திவையென்று பகர்ந்தான். இப்படி அயன் சொன்னவுடனே, கலைக்கியான முதலிய யாவற்றையுங் கற்றபேரறிவோர் வழிபட்டு அறியும்படியாகிய கனற்கடவுள் அப்போதே சென்று அலைமிகுத்து சிறந்த நதியினிடத்து ஆறு பொறிகளையும் விட்டு இளைப்பாறி, தானிருக்கும் ஸ்தானத்துக்கு வந்துவிட்டான். யாவருக்கும் பரிசுத்தத்தைத் தராநின்ற அந்த நதியானது தட்சணமே சலமுதலியதும் வறண்டு பொசுங்கிதள தளவென்று கொதிப்பெழுந்து சற்றுந் தாளமாட்டாமற் சங்கடப்பட்டு, அந்த ஆறு பொறிவந்த வரலாறுணர்ந்து, தன்கால் வழியிற் கொண்டுபோய் சரவணப் பொய்கையில் விட்டது. பொன்கொழிக்குந் தரங்கக் கைகளையுடைய பாகீரதி அழகுடன் செலுத்திய பொறிகளாறும் பல கிரணங்களுடன் கூடிய சோதிமின்னல் உருப்பட்டதைப்போல் ஒளியிட்டு, பலவித முழக்கத்துடன் அந்தச் சரவணப் பொய்கையில் படர்ந்து வந்தன. அப்போது எட்டுத்திசையும் இமையவருலகமும் ஏழு மேகமும் என்னபாடுபட்டதென்று சொல்லுவேன்; ஐயோ! யாவரும் மிகவும் பயந்திருந்தார்கள்.

அப்படியிருக்க, பரிசுத்தமாகிய பரமசிவனனுக்கிரகித் தருளிய விழிப்பொறி ஆறுஞ் சில நாட்சென்றவுடன் ஞானத் திருவுருவாகி, இன்பமாகிய முகங்களாறும், ஈராறுகரமும், இரண்டுசேவடியும் விசாலமார்புமுள்ள மாசற்ற முருகவேளாய்த் திருவருளுடன் அவதரித்தருளினார். கோடாகோடி சூரியகிரணங்களையுடைய கோடிசூரியப் பிரகாசம் போன்ற அழகிய திருமேனியில்முப்புரிநூலும், பொன்மலைபோன்ற அழகார்ந்த புயங்களும், அப்புயங்கள் தோறுஞ் சொலிக்கும் நவமாமணி வடங்களும், செவிகளிற் குண்டலங்களும், பொன்னுடையும், ஜனனமரணங்களை மாற்றும் முனிவர் முதலியோர்களேற்றும் இணையடிகளிற் சாற்றும் தண்டை-சதங்கை - கிண்கிணிச்சிலம்பு-ஆரற்றுங்கூத்துமாக தோற்றி, பனிவரைப் பாங்கரினடைந்து, ஒரு மணியாசனத்தின் மீதமர்ந்து, மூதன்மையாகிய பற்பல போதகங்களைப் பயின்று, பரிபூரண கடாட்சங் கொண்டிருந்தனர். அப்போது சப்தரிஷி பத்தினிகளில் அழகிய கச்சணிந்த குயாசலமுற்ற கார்த்திகைமாதரென்னு மாறுரிஷிப் பத்தினிகள் அந்த மலைச்சாரிற் றவஞ் செய்திருந்தார்கள். அவர்கள் கொத்தார்ந்த குழற்காலையாகிய இந்த பிள்ளையைக் கண்டு பேராசைகொண்டு, உற்று பார்த்துச் சமீபத்தில் வந்து, ஒருவர்க்கொருவர் உனக்கெனக்கென்று கிட்டி, ஆசைவளரும் உச்சாகத்தால் தங்கள் தங்கள் கைகளைநீட்டி கையுடன் கைகொட்டி எங்கள் ஐயாவாடா! என் அப்பா வாடா! எங்கள் அத்தா வாடா! ஓவேதவித்தா வாடா! என்று அழைத்தார்கள்.

அக்காலையிற் கருப்பைக்குட் புகாமலும், அயோனி சம்பந்தமாயுமிருக்கின்ற திருமேனி

படைத்த கருணையாளனாகிய கந்தன் சிறுநகைகாட்டித் திருவாக்கருளி, தனதோருருவை ஆறுகூறாக வேறுபடுத்தி, அந்த மாதர் அறுவர் கையிலும் ஆறு குழந்தை வடிவாய் அணுகினார். இப்படி அகங்கையிற் கொண்ட சுகந்தரும் பாலனை ஆசையோடணைத்து பாசமாய் எடுத்து, ஒப்பற்ற அவ்வாறு மாதரும் புகழ்ந்து மகிழ்ந்து கடம்பாடவிக்குக் கொண்டு போனார்கள். பொற்கடம்போனிறைந்த மூலை யமுதூட்டினார்கள். அன்புடனுபசரித்துப் பாதுகாத்து வந்தார்கள். இந்தப் பிள்ளைகளுஞ் சிலுகில்லாமல் வளர்ந்து மிகுந்த சிறப்புடனே அவர்களுக்கு உகந்த விளையாடல் புரிந்து சிறந்ததுகள். இளையோன் இப்படியிருக்கும் நாளினில் ஒருநாள் கறுத்தமேகம்போன்ற குழலையுடைய மாதர்கள் ஆறுபேரும், இது என்னமோ காரணமென்று கலந்து பேசிக்கொண்டு போய், முன்னிருந்த ஆசனத்தில் இந்தப் பிள்ளைகளாறையும் வைத்தார்கள். அப்போது மீண்டும் ஒருருவமாயினார். என்னையாண்டிரட்சிக்கும் இளைய பெருமானாகிய பால சுப்பிரமணியர். அக்காலையில்தேவேந்திரனும், தேவகுருவும், தேவர்களும், சப்தரிஷிகள் முதலாகிய சமஸ்தமான பேர்களும் அடுத்துவந்து அடியிணையைத் தொழுது ஆனந்த வுருவத்தைப் பார்த்து ஆச்சர்யம் பூர்த்து, அகமுழுவதும் வேர்த்து உள்ளமுருகும்படியானார்கள்.

அப்போது மேலாகிய பிரகஸ்பதியானவர் சமீபத்தடைந்து, திருவுருவின் இலக்கணங்களை யோர்ந்து, இவர்தான் நம்மைக் காக்குங் கடவுளென்று மனத்துட்கொண்டு, திரிகாலமுந் தெரிந்த திருமுகம் ஆறுடைய சண்முகத்தேவருக்கு, இவ்வுலகம் அறியும்படியாய் கருமவிதிகளியற்றி, அந்தக் கதிர்மகனென்றும், அருங்கங்கைபெற்ற புத்திரனென்றும், புங்கத்திறம்பூண்ட புனிதகார்த்திகைச் சுதனென்றும் உரைத்து ஆசீர்வதித்தனர். இப்படியாக அந்த மலைச்சாரியின் கண்ணே சண்முகதேவர் அருளுருவமைந்து, எந்தத் திசையோரும் வந்து சிந்தித்துத் தொழும்படியாய் எழுந்தருளி யிருக்கின்றார். அப்படியிருக்கின்றபோது, லோகமையகன்ற முனிவோர்கள் யாவரும் இந்தக் குகனிடத்தில் வந்து உகந்து தொழுது, வேதாகமங்களிலுள்ள உண்மைப் பொருளை அடியேங்களுய்யும்படியாக உபதேசித்தருள வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். அப்படியே அவர்கட்கு நிதானிக்கப்படாத அவ்வேத வேதாங்கத்தின் உட்பொருளை ஐயந்திரிபில்லாமல் அருளி, அந்தக் குகப்பெருமானானவர் யாவருக்கும் ஆசானாக அமர்ந்திருந்தார். இப்படியிருக்குங் குருமுகூர்த்தமானது எங்கும் பிரகாசமாகியது. இதைக்கேட்ட கங்காதரச் சடிலராகிய சிவபெருமான் கார்குழல் படைத்த பார்வதி தேவியாருடன் விடைமேலேறி, எவர்களாலும் அளவிடப்படாத அருள் நெருங்கிய தனது சண்முகக் குமாரனைப் பார்க்க வேண்டுமென்னும் ஆசைமேற்கொண்டு எதிர்வந்து தோன்றினார்கள். அதுகாலையில், ஒரு பொன் மலையின்மீது நீலமலைபோன்று பிரகாசிக்கும் மேன்மைபெற்று நிகரற்றுவிளங்கும் அழகை விளக்கிய கொள்கையைப்போல் மகாலட்சுமியுடனே கருடன்மீதேறி நல்லருட் கடலாகிய திருமால் அவ்விடத்தில் வந்தார்.

இதல்லாமல் கவிவாணருடைய கூட்டத்திற் கலந்து அவர்களை பெருமைபெறச் செய்யும் அருணமானோக்கமுடைய சரஸ்வதி என்னுமின்னைப் பக்கத்திற் கொண்டு அன்னவாகன் மேலேறி, பழமா மறைமொழி பகர்ந்து துதித்துப் பாங்கரில் வந்தார் சிருஷ்டி முதல்வனாகிய அம்புயன்; அயிராணி சமேதனாய் வெவ்விய வச்சிராயுதனானவன், அயிராவதமென்னும் யானைமேல் வந்தான். சுவாகா தேவியுடன் ஆட்டுக்கிடாவேறி இயலார்ந்த அக்கினிதேவன் வந்தான். மற்ற இதர திசைப்பாலர் முதலியோரும், சப்தரிஷிகளும், ஞானவான்களும், அஷ்டவசுக்களும், நவக்கிரகங்களும், அஷ்ட நாகங்களும், பதினெட்டு தேவகணங்களும், ஏகாதசருத்திராளும், துவாதசாதித்தர்களும், தும்புரு நாரதாதியரும், அரம்பாஸ்திரீகளும் இன்னுமுள்ள வானவரியாவரும் இடங்கொள்ளாமல் அணுகி, முற்றிலுஞ் சோக நீங்கி மௌனத்தி லிருந்தார்கள். வேத முழக்கமும், மங்கள வாத்தியமும், தேவதுந்துபியும், யாழ்வீணை யோசையும், சங்கத்தொனியும் பொங்கி முழங்கின. சிவபெருமானுடைய திவ்விய பராக்கிரமங்களையும், கிருபையையும் வேதாகமங்களினால் அனேக முனீஸ்வரரால் துதிக்கும் பாடலினோசையும், அந்நின்மலராகிய பரமசிவனுடைய சேயாகிய சண்முகத் தேவரினது புகழையும் அருளையும், பேசிக்கொண்டாடும் ஆடலினோசையும், விண்டல மண்டல முதலெண்டத்திலும் பரவின. இப்படியாகவந்து வந்தித்துச்

சிந்தித்து ஒருவருடனொருவர் நெருங்குறுந் தன்மையை நோக்கி மகிழ்ந்து, புன்னகை கொண்டருளினர் உமாபதி தந்தருளிய சண்முகக் கடவுளானவர்.

அதுகாலையிற் பந்தார்த்த ஸ்தனமுள்ள உண்ணாமுலையாளுடன் பரமேஸ்வரனும் பாயும் விடைவிட்டிழிந்து வேகமாக நடந்து மகவாகிய பிள்ளைக்கருகில் ஓடினார்கள். ஆ என் செல்வமே! என்று கையேந்தி நின்றார்கள். மேலவரான அக்கினி தேவனும் மாசற்ற கங்கையும் வந்து நேசம்பெறநின்று, அருகினிற் சென்று, எங்கள் அரசே! எங்கள் அறிவே! எங்கள் அப்பா! எங்கள் சாமி! வருக வருக! என்று கர நீட்டினார்கள். இவ்விதமாகிய பார்வதி தேவியும், பரமசிவமும், அக்கினி தேவும், கங்காதேவியும் ஆகிய இவர் நால்வருந் தன்னருகில் வந்து நின்று கொண்டு, வருக வருகவென்று வருந்திக் கை நீட்டி அழைப்பதினால், இவர் நால்வருக்கும் ஆனந்த முண்டாகத்தக்கதாய் திருமால் மருகன் சிந்தை செய்து, தனது உருவை நால்வகையாகப் பிரித்து, அவரவர்கள் சந்தோஷிக்கும்படி கைக்கொரு குழந்தை வடிவாய் நீட்டிய கைகளில் நேர்ந்தமைந்தருளினர். அவ்வவர்களும், முகத்தோடு முகமுங் கரத்தோடு கரமும் ஒத்தி, பதத்தில் முத்தி தந்து, சிரத்திற் பொருந்தப் பொருந்திப் பூரித்து மகிழ்ந்தார்கள். அதுகாலையில், வெள்ளருக் கணிந்த சடைமுடிப் பரமனார் கர நீட்டியழைத்த தங்கள் நால்வருக்கும் மனவருத்தமில்லாமல், விரைந்து புகுந்த தன் குமாரனுடைய விரகைப் பார்த்து, உள்ளிருக்கும் பேரன்பு வெளியே பொங்கி வழிந்து, பரந்ததைப்போல் மகிழ்ந்து நகைத்து, தேவர்களெல்லோருந் தரிசித்து நோக்கும்படியாய்த் தேனிறைந்த மலர்ந்த கடப்ப மாலையணிந்த திணிந்த புயாசலச் செவ்வேளைப் பேராசையுடன் தமது மார்பிற்சேர்த்தணைத்துத் தாங்கி, தெளிந்திருக்குங் கருணை முகத்தைத் தமது திருமுகத்தினோடொத்திச் சீர்பாராட்டிப் பூமிமேல் விட்டனர்.

பாலாம்பிகையுந் தன்னுடைய கரத்தில் வந்த மகவினைக்கண்ணருள் சுரந்து பார்த்து முகத்தோடணைத்து பொன்னொளி மணியொளி பொருந்திய சூரிய பிம்பமானது, நிகரில்லாத பரிசு மேகத்திற் கலந்த பரிசு காட்டியணைத்து நெருங்கிய தனது கிருபை யெல்லாம் பரிவுடன் கொடுத்து மீளவும் பூமிமேல் விட்டாள். இப்பாற் கங்காதேவியும் அக்கினி பகவானும் அவ்வண்ணமே உச்சி மோந்து உள்ளம்பூரித்து பூமிமேல் விட்டார்கள். இவ்வாறு நம்பன் முதலிய நால்வரும் பூமியில் விட்ட அந்த வேளையில், நான்கு உருவாகிய நாலு பிரிவும் ஒரே திருவாய் விளங்கிஇரண்டு பதாம்புயங்களும், பன்னிரண்டு தோள்களும், செந்தாமரைக் கமலங்கள் தோற்கும்படியாகச் சிறந்த ஆறுமுகமும், நேராகிய ஈராறு கண்மலர்களும் பொருந்த இருந்தருளினர். வாட்டிறங்கொண்ட திருமாலும், பிரமாவும், ஏனையோர்களும் அற்புதமலிந்து ஆனந்தக் கண்காட்சி பெற்றார்கள். அப்பால் முருகக் கடவுளானவர், முருக்கி தழையுஞ் செவ்வாம்பலையும் வெண்மையாக்குஞ் செவ்வாயும், மருந்துக்கும் முல்லை யரும்புக்கும், கருமை கொடுக்கும் வெண் தந்தமும், கமல மலரைக் கடிந்து குவிந்தொடுங்க விடுக்குஞ் சந்திரனை அந்தரத்திலோட்டிய முகமலர்ச்சியும், அம்முகத்தார்ந்த அருட்கலமாகிய அருள் விழிநோக்கும் ஆகிய இவைகளால் ஈரேழுபாரையும் ஆக்கி அளித்தருளிய பராபரையினுடைய அருகிலடைந்து போற்றி தாயினது திருமுக மண்டலத்தைப் பார்த்தனர். அப்போது பராசத்தியார் சிறப்புப்பொருந்திய தனது ஸ்தனஞ் சொரிந்த செழுஞான அமுதினை வள்ளத்திற் சேர்த்து, சேயினுடைய நெருங்கிய செவ்வாய்கள் தோறும் அருத்திவைத்தார்.

எப்புவனங்களிலுந் தனக்கு ஒப்புவமையில்லாத உலகீன்ற உண்ணாமுலைத் தேவியார் தனது திருஞானவமுதூண்டு தெகிட்டிய பின் குழந்தை வேலாகிய திருமதலையை ஒப்பற்ற ஞான முதல்வனாகிய உமாமஹேசனது திருவடியிற்றாழ்ந்து பணியச் செய்து, இந்தச் சண்முகக் குழந்தைக்குத் திருநாமந் தரித்தருள்கவென்று செப்பினர். அதற்குத் திரியம்பகன் உவந்து, மறைமுறைப்படியே பெயர்களெல்லாமெடுத்திய நம்பி, சகலமான பேர்க்கும் நற்பேறு தரும்படியாகிய தனியெழுத்துக்களைச் சேர்த்து ஆறுமுகத்துக்கும் ஆறு அட்சரமாக சரவணபவ வென்னும் பெயரைத் தழையச் சொல்லியருளினர். இச்சடாக்ஷரப் பெயரைச் சங்கரனார் திருவாய்மலர்ந்த தன்மையைக் கேட்ட எழிலுடைய இமாசலையார் மிகவுமகிழ்ந்து, தன் புத்திரனை வெற்றிவேலனுக்கு அக்ஷராப்பியாசஞ் செய்து அரியு

மறைப்பொருளனைத்தும் அருத்திவைக்க வேண்டுமென்று எண்ணங்கொண்டு, எல்லாம் வல்ல பேராண்மை தனக்கிருந்தும் தன்னைத் தானறியாத பெண் தன்மையினாலும், பேதைமையாகிய வறியாமையினாலும் ஓதிமமுயர்த்த பிரம்மாவை நோக்கி, இச்சரவணபவனுக்கு நீர் கல்வி கற்பித்தருளுமென்று உரைத்தார். இப்படி தனது தனயன்பேரிற் சொல்லுதற்கரிய சந்தோஷக் களிப்பினால் உமையவள் சொல்லவும், பிரமன் சற்றேனும் தாட்காமல் உடனே எழுந்து தனது விதி தனக்குத் தெரியாமல் வினைவசப்பட்டு, குமாரதேவனுக்குப் பக்கத்திற் போயிருந்து வேதத்துக்கு மூலமாகிய ஓம் என்னும் விதியை எடுத்துச் சொன்னான்.

அம்மொழியை சண்முகதேவர் தாம்அறியாதவரைப்போல் மிரளமிரள விழித்து இன்னொருக்காற் சொல்லென்று உறுத்திக் கேட்டனர். அதனை மணபொழுது தந்தையானவன் யோசிக்காமல், தாராளமாய் மறுபடியுஞ் சொன்னான். இந்தப் பிரணவத்துக்கு யாது பயன் சொல்லுமென்று குழந்தை வடிவேலர் கேட்டனர். உடனே விஷ்ணு முதலிய தேவர்களும் சிவகாமித்தாயும் மற்றியாவருங் கைகொட்டி நகைத்தார்கள். அப்போது பிரமனவன் உமையைப் பார்த்து, ஓ காதுபரியந்தந் தாவிய கயற்கண்ணம்மே! பார்த்தீரா? உமது திருமகனாகிய பால சுப்பிரமணியர் ஓதாதுணர்ந்து, சுருதியாவுந் தெரிந்து, ஓமென்னும் பொருட்பயனுட் கலந்திருக்கும் உத்தமராயிருக்கின்றார். அவருக்கு என்னைப் போலொத்தவன் ஓதுவைக்குந்தரமோ?என்று இருகரத்தையுங் குவித்து அவ்விசாகப் பெருமானுடைய திருநாமமெல்லாம் விளம்பி, ஓ பஞ்சகிர்த்தியக் கடவுளாயெழுந்த பாக்கியமே! மெய்ஞ்ஞானப் பெருங்கலவியோர் அறியத்தக்க வேதத்தின் மூலத்துக்குப் பயனுணர்ந்து யான் சொல்லுந் தரமுடையவனோ? ஓ தோன்றலே! மேலும் அந்தப் பிரணவத்தின் பொருள் வாக்கினாலுரைக்கத் தக்கதோ? என்று அனந்தமுறை தீர்க்கதண்டஞ்செய்து துதித்தான்.

அக்காலையில் ஆறுமுகக்கடவுள் அவன் மீது அருள்முகமாயிருந்தனர். அப்போது முப்புவனங்களையும் புரக்கும் முகிலூர்தியான தேவேந்திரன் அந்த விடத்துக்கு வந்து, முந்திப் புகுந்து தாழ்ந்து, முப்புவனங்களுக்கும் இறையாகிய ஈசனார் திருவடியில் இருகரத்தையு முகிழ்த்து, ஓ ஏழைபங்காளராகிய எந்தையே! பவளநிறம்போன்ற உருவாய்ந்த கொடிய சூரானுடைய கொடுமைக்கு ஆற்றமாட்டாமலெனது பதவி முதலிய செல்வத்தைவிட்டு வருந்தி அலைகிறேன். அந்தச்சூரர்கள் சம்ஹாரமாகும்படிக்கு இந்தப் பரிசுத்தமாகிய புத்திரனை அநுக்கிரகிப்பீராகில், அச்சூர்ப்பகை வென்று நானுந் தேவர்களுந் துயர் நீங்கித் துன்பம் ஒழிந்திருப்போம். ஓ இன்பசாகரமாகிய ஈசனே! எனது விண்ணப்பத்தைத் தேவரீர் அங்கீகரித்தருளல் வேண்டுமென்றியம்பினான். இப்படியாக தேவேந்திரன் தொழுது சொல்லியதைப் புராரிகேட்டு மகிழ்ச்சியுடன் சொல்லத் தொடங்கினார். ஓ வச்சிராயுதனே! வருந்தாதே: வருந்தாதே? தேவர்களுக்கும் உனக்குஞ் சவுக்கியமுண்டாகும்படிக்கு இந்தக்குழந்தை தேவசேனாபதியாகி, அசுரனையெதிர்த்துப் போர்புரிந்து வெற்றியடைந்து பலாயனஞ்செய்து உனக்குத் தேவேந்திர பட்டமுங் கட்டுவான். நீசுகம் பெற்று வாழலாம் என்று சொல்லவுமிந்தச் சொல்லைக்கேட்ட விண்ணோரெல்லாருஞ் சந்திரோதயங் கண்ட பாற்கடல்போற் களித்து முழங்கி நிகரொருவருமில்லாமல் ஆர்ப்பரித்தார்கள்.

அப்போது ஆகண்டலனானவன் நீலகண்ட நிமலனைப்பணிந்து, ஓ ஆண்டகையே! தேவரீருரைத்த வண்ணம் அரிதாகிய பிள்ளையை எனக்கும் என் சேனைகளுக்குந் தேவசேனாபதியென்று மாட்சிமை தங்கிய தேவர் சந்நிதிதானத்தின் முன்னே மணி மௌலியுடன் பட்டங் கட்டுகிறோமென்று வேண்ட, மங்கை பங்காளன் மனமுவந்து, உங்களன்பின் பிரகாரஞ் செய்யுங்களென்று அருள்செய்தனர். உடனே இந்திரன் அந்த ஐம்முகக் கடவுளைத் தொழுதுபோற்றி, காணபதற்கரிதாகிய பண்ணவர்கள் விண்ணவர்கள் மண்ணவர்கள் முதலிய பேர்கட்கெல்லாந் தெரிவித்தான். உடனே யாவரும் பல உபகரணங்களைக்கொண்டு சூழ்ந்தார்கள். அப்பால், தேவதுந்துபி-பேரி-உடுக்கை-பம்பை-தாரை-பூரி-வீரசின்னம்-மேளதாளம் - சங்கத்தொனி இவைகள் எங்கும் பொங்கி முழங்கும்படியாய் ஆறுமுகக்கடவுளாகிய சரவணபவரை அநேக நவரத்தின மாணிக்கங்களழுத்தி யலங்கரித்திருக்கின்ற ஆசனத்தின் மீதிலேற்றி, வாசனை

தங்கிய பாரிஜாதமலரும் இன்னும் பலவாகிய தெய்வமலரும், வெண்மையாக விளங்கிய சரஸ்வதி தீர்த்தமுங் கலசங்களிற்றாங்கி, மற்றுமுள்ள ஓமத்திரவியங்களெல்லாங் குவித்து அக்கினிவளர்த்தி, திருமால் பக்கத்திலிருந்து மந்திரமியம்ப, பங்கயன் வான்புனலாட்ட, மலைகளுக்குப் பகைவனாகிய இந்திரன் கலச நீரெடுத்துக்கொடுக்க, தேவர்களும் முனிவர்களும் மங்களாசனங் கூறிக் களிக்க, மகத்தாகிய தேவர் தொழும்படியாயிருக்கிற வேதப்பொருளும் உமையவளும் விழிமலர்ந்து அருளுடநோக்க, தெய்வத்தன்மையின் மரியாதை முறைப்படி திருமஞ்சன மாட்டினார்கள்.

உடனே சில தேவர்கள் உயர்ந்த பட்டு வஸ்திரங்களினாற் குளிர்புனல் துவட்ட, சத்தியலோகவாசியாகிய தாமரைத் தவிசான் ஒப்பில்லாத இரத்தினப் பணியணியாடைகள் முதலாகியதுஞ் சாற்ற, மகாவிஷ்ணுவானவர் திருமேனி முழுதுஞ் சந்தனபாளிதங் குங்கும புனுகு-சவ்வாது-பனிநீர் முதலிய கல்வைகள் பூசி, எட்டுதிக்கினு பரிமளிக்கச் செய்தனர். பாதசாலம் தண்டைச்சிலம்பு கிண்கிணி இவை முதலிய திருவடிகளில் அமைத்து, அரைப் பட்டிகை கட்டி, வேதவிதிப்படிக்கு முன்னூலணிந்து, அந்த முப்புரிநூலசையு மார்பில், விளங்கப் பற்பல மணியாரங்கள் விடுத்து, குற்றமற்றமுத்துவடம்-ரத்தினவடம்-மோகன மாலை - தும்பிப்பதக்கம் - முகவாளிப்பதக்கம்- மகரகண்டி-உத்தரசஞ்சம் இவைகளெல்லாம் உதயகிரியில் உதயமான சூரியனைப்போல் விளங்கும்படியாய் அணிந்து, பன்னிரண்டு கரங்களுக்கும் புஜகிர்த்தி மரகதக்கடையம் பாஜிபந்து ஆழி இவைகள் முதலானவைகள் பூட்டி, பாற்கடலில் அமுதங் கடைந்தநாளில், உயர்ந்த மத்தாகிய மந்தரகிரியை வாசுகி பிணித்ததைப்போற் சுடர்வீசிய நாகளுபத் தோள்வலியம் புனைந்து, நெற்றியில் வீரபட்டங்கட்டி, திரிபுண்டரம் அமைத்து செந்தூரத்திலகம் வைத்து, மாசற்ற மணிக்குண்டலங்கள் செவிகளிலணிந்து, முப்பத்து முக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணாயிர முனிவர்களும், மற்றுமுண்டான யாவரும் ஜெயஜெயவென்று மங்களவாழ்த்துகள்கூறி வேதமொழி கோஷிக்க, ஆறுதலையோடு கூடிய அரனும் உமையுந் தேசுற்ற வயிரமுடிகளைச் செங்கரத்தாலேந்திக் களித்து, பாலசுப்பிரமணியருடைய ஆறுதலையிலும் அணிபெறத் தரித்தார்கள்.

இப்பால் இந்திரன் முதலாயினோர் காந்தள் மாலையும், கடப்பமாலையும், மந்தாரமாலையும் இன்னுமுள்ள வாசனையாகிய பல மலர் மாலையும் புனைந்து, உத்தரீயஞ்சாத்தி, ஓமாக்கினி வளர்த்தி, அந்தக் கனலினிடத்தில் வேத முறை குறையாமல் நெய்சொரிந்து, ஆகுதி கொடுத்து, நிவேதனந்தந்து, அட்சதையிறைத்து, பொன்மாரி பூமாரி தூவிச் சொரிந்து, வேதசிங்காதனத்தின்மேலிருத்தி, பழுதில்லா பற்றிருத்திய தாம்பூலம்-சந்தனம்-புஷ்பம்-பனிநீர் முதலாகிய உபசாரம் யாவையும் அளித்து, திருவடியிற் றாழ்ந்தெழுந்து, இரு கரத்தையுஞ் சிரத்திற் கூப்பினவர்களாய், எந்தையே! தேவரீர் தேவசேனாபதியாயிருந்து இராக்கதர் முதலிய பேர்களின் உயிரையகற்றி யாங்கள் பிழைக்கும்படியாகச் செய்து, எங்களைக்காத்து அருள்புரிந்து ரக்ஷிக்க வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்து கொண்டார்கள். பின்பு முத்துச்சுவாமிதேவர் சுந்தரமாகிய திருமுகங்களிற் கருணைக்கடல் சுரந்து, தனது குரவராகிய பரமேஸ்வரருக்கும், பார்வதாதேவியாருக்கும் மலர்க்கரங் குவித்து வணங்கி யிருந்தனர். தேவர்கள் ஸ்படிகமணியினாலாகிய முத்துத் தொங்கட்டங் கட்டிய வட்டக்குடை பிடித்தார்கள். மாசற்ற வெண்சாமரம் இருபுறம் வீசினார்கள். ஆலவட்டம் அசைத்தார்கள். தாலவட்டம் இசைத்தார்கள். அந்தர துந்துபி முழக்கினார்கள். உண்மைஞான விசுவாசநேச நயமுயர்ந்த முனீஸ்வரர்களெல்லோரும் பணிந்து, நிறைந்த மொழிகளுறைந்த வேத மந்திரங்களால் துதித்தார்கள். வித்தியாதரர் யாவருந் தானமுயர்ந்தகானம் பாடினார்கள்.

இதல்லாமலும், ஒருபக்கத்தில் தும்புரு நாரதர் மகதியாழ்மீட்ட, மற்றொரு பக்கத்தில் பேரிகை-சங்கநாதம்-உடுக்கை-இடக்கை-சின்னம்-தாளம்-பூரி-தாரை இவை முதலாகிய பஞ்ச கருவிகளெல்லாம் அமரர் சேனாபதியென்னு மோசையால் முழங்க, அரம்பாஸ்திரீகள் பரத நடனம் புரிய, இவ்விதமாகிய சகல சம்பிரமத்துடன் சுகந்த பரிமளவாசங் கலந்திருந்த இளைய செல்வக் குழந்தையை இமாசலையாகிய ஈஸ்வரி கண்டு ஆனந்தம் பெருக, அருங்கண் களிகூர்ந்து சிறந்த நீராஞ்சனஞ் சுழற்றி, கண்ணேறென்னுந்

திருஷ்டிகழித்து, தீர்க்கமங்களாசனப் பொட்டிட்டு, சத்துரு சம்ஹாரஞ் செய்யக் கடவாயென்று சத்தி யென்னும் வேலாயுதமுங் கொடுத்தருளினுர். இல்லாட நேத்திரராகிய நாதன் ஆசீர்வதித்து, கணக்கில்லாத பூதகணங்களளித்து, அதுவும் போதாதென் றப்போதே மானதமாகச் சிருஷ்டித்து வரவழைத்து எண்ணில்லாத படைவீரர்களையுங்கொடுத்தார். புனிதமாகிய ஏகாதசருத்திராள் ஆயுதங்களாக அமைந்து சண்முகத்தேவருடைய பதினெரு கரத்திலும் பொருந்தினுர்கள். இன்பமாலாகிய விஷ்ணுவானவர் வாகைமாலை யளித்தனர். தேவேந்திரன் விஜயக் கொடி கொடுத்தான். பட்சிகளுக்கு ராஜனுன பலவானுகிய கருடன் மரகதக் கபால மயில் வாகனம் பரிந்தளித்தான். கமல சம்பவனுகிய பிரமாபச்சையாகிய தண்டாயுதம் அளித்தான். கங்காதேவியார் பிரகாசிக்குங் கமண்டலங்கொடுத்தாள். அக்கினிதேவன் மணிமாலிகையளித்தான். யாவரும் புகழும்படியாய் வருணன் வெண்சாமரைஈந்தான். சூரியபகவான் விசால மாகிய குடைகொடுத்தான். மீளவுந் தேவர்கள் பலரும் நல்ல வல்லமையுள்ள திவ்வியாஸ்திரப் படைக்கலங்கள் நல்கி, எங்களையாண்டு அடிமைகொண்டருளு மென்றுர்கள். அண்ணலாகிய அந்திவண்ணனுந் தேவர்களை ரட்சித்திடு வென்றுரைத்து வடிவாள்போன்ற கண்களையுடைய மாதேவியாருடன் கயிலைக்கெழுந்தருளினுர். பிரமாவிஷ்ணு முதலாகிய பேர்களுஞ் சண்முகதேவரிடத்தில் உத்தாரம் பெற்றுக்கொண்டு தங்கள் தங்களுடைய மாநகரம்போய்ச் சேர்ந்தார்கள். மற்றிவ்விடத்திலிருந்த தேவர்களும், மாமுனிவர்களுந் திருவடிதொழுது போற்ற, இளையவராகிய சுப்பிரமணியரானவர் எழுந்தருளி, கந்தமாதன வரையில் வந்துசேர்ந்து சிலது காலந் திவ்விய வைபோக சுகமாக அமர்ந்திருந்தார்.

அப்பால்ஒருநாள் தாருகாசுரனென்னும் அரக்கன் சேனைகளுடன் எழுந்து, தேவர்களுக்கு உபகாரஞ் செய்வதற்கு ஆரோ ஒரு பாலயன் பிறந்திருக்கின்றுனும். அவனை நாம் சற்றே பார்க்கவேண்டி யிருக்கின்றதென்று சினந்து எதிர்த்து தேடிவந்து வலியச் சண்டை விளைத்தான். செவ்வேளானவர் அவன் படைகளை யெல்லாங் கொன்று, பெருமையிற் சிறந்த வேலாயுதத்தால் அவனுயிரையும் போக்கி, தேவேந்திரன் முதலாகிய எல்லா தேவர்களும் உள்ளம் மகிழும்படியாகச் செய்தார். அப்போது இறந்த தாருகனுடைய சகோதரராள் சமுத்திரத்துக்கு மத்தியி லிருக்கிறுரென்று கேட்டு உள்ளமழன்று தேவர்களுடனெழுந்து, அந்த யிடத்துக்குப் போய்ச் சொல்லுதற்கரிய சத்திவேலினுலும், இதரமாகிய ஆயுதங்களினுலும், அவர்களெல்லோரையுந் தொலைத்து, தேவர்கள் புட்பமாரி பொழியும்படியாய் வந்து, இருள் தொலைத்தருளிய இளஞ் சூரியனைப்போல் வீற்றிருந்தருளினர். அச்சமயத்தில் இமயமால்வரைக்கும் ஓர் சார்பினி லிருக்கின்ற கிரவுஞ்சகமென்னும் மாய்கைபெற்ற ஒரு மலையிற் பொருந்திய எண்ணிருந்த ராட்சசாள் தேவர்களை வருத்தப்படுத்தி வருவதை அறிந்து, தமனிய முடிதாங்கிய சண்முகக் கடவுள் அவ்விடஞ் சென்று சத்திவேலையுந்தி அங்குள்ள அசுரர் முதலாகிய யாவரையும் ஒருகணத்திற் சுடலை பொடியாக்கிப் பகையொழித் தருளினர். அக்காலையில், தேவர்களெல்லோரும் எழுந்தளித்து புஷ்பமாரி பொழிந்தார்கள். அப்பால் மூன்றுலகத்திலும் பொருந்திய அசுரரை ஆராய்ந்து தேடி முடித்தபிற்பாடு, இந்திரன் முதலிய தேவர்கள் மகிழ்ந்து, தேவயானையைத் தாராதத்தஞ்செய்து திருமணம் முடிக்க, பாலசுப்பிரமணியதேவர் மாமறைகள் போற்றும்படிக்குப் புகழுடன் வீற்றிருந்தார். கேட்டீரோ! பஞ்சகர்த்தாக்களுக் கொப்பாகிய பாண்டவர்களே! இத்தன்மையாகிய புத்திர பாக்கியத்தையும், புகழ்ப்பிரதாபத்தையுமுடைய பரமசிவனது பஞ்சாட்சர மந்திர ஸ்தவுத்தியத்தால் அவரது பெருவரம் பெற்று, அந்த வுறுதியினுல் அஸ்வத்தாமன் யாவரையுஞ் செபித்தான் என்று அரவணைச் செல்வனுகிய அருளாழி முகுந்தன் கூற, மருவுறுமாலை மார்பினராகிய பாண்டவர்கள் கேட்டு, மனதிற் பதித்துப் பணிந்து, அறிவு தேறி, அதிவியனத்துடன் வியந்து, அஸ்வத்தாமன் செய்த கொடுமைகளைத்தனையும் ஒருவாறு மறந்து, அந்த வரதனேடு இன்னும் பலவாறுன காலக்ஷேபஞ் செய்துகொண்டு அங்ஙனம் பொருந்தியிருந்தார்கள்.

**அஸ்வத்தாமன் சிரோமாணிக்கங்கவர்ந்த சருக்கத்தோடு**

**சவுத்திகபர்வம் முற்றிற்று.**

